

# அகம், புறம், அந்தப்புரம்

இந்திய சமஸ்தானங்களின் வரலாறு

முகில்






## இந்திய சமஸ்தானங்களின் வரலாறு

**முகில்**



**சிக்ஸ்த்சென்ஸ்**

உலக அறிவுச் சுரங்கங்கள் அனைத்தும் உங்களுக்காகத் தமிழில்

10/2 (8/2) போலீஸ் குவார்ட்டர்ஸ் சாலை
(தியாகராயநகர் பேருந்து நிலையத்திற்கும்
காவல் நிலையத்திற்கும் இடைப்பட்ட சாலை)
தியாகராயநகர், சென்னை – 600 017
தொலைபேசி 24342771, 65279654
கைபேசி 7200050073

Publisher
**K.S. Pugalendi**

Editor
**R. Muthukumar**

Managing Editor
**P. Karthikeyan**

Layout
**C. Jaganathan**
**S. Nisha**

Cover Design
**Bhusan**

Title:
**Agam Puram Anthappuram**

Author:
**Mugil**

Address:
**Sixthsense Publications**
10/2(8/2) Police Quarters Road,
( Between Thiyagaraya Nagar Bus Stop & Police Station)
Thiyagaraya Nagar, Chennai - 17
Phone: 24342771, 65279654
Cell: **72**000 **5**00**73**
Sixthsense Publications
6 th sense_karthi
e-mail : sixthsensepub@yahoo.com
Website: ixthsensepublications.com

Edition:
**First** **January, 2014**
**Second** **December, 2014**
**Price** **999**

Cover & Inside Image Courtesy: **Wikimedia Commons, bl.uk**

தலைப்பு
**அகம், புறம், அந்தப்புரம்**

ஆசிரியர்
**முகில்**

பக்கங்கள் 1032

**விலை** **ரூ.999**



முதற்பதிப்பு **ஜனவரி**, 2014

இரண்டாம் பதிப்பு **டிசம்பர்**, 2014

**சிக்ஸ்த்சென்ஸ் பப்ளிகேஷன்ஸ்**
10/2 (8/2) போலீஸ் குவார்ட்டர்ஸ் சாலை,
(தியாகராய நகர் பேருந்து நிலையத்திற்கும் காவல் நிலையத்திற்கும் இடைப்பட்ட சாலை)
தியாகராயநகர், சென்னை – 600 017
தொலைபேசி 24342771, 65279654
கைபேசி: **72**000 **5**00**73**

மின்னஞ்சல்
sixthsensepub@yahoo.com



**அச்சு :**
**கணபதி பிராசஸ்,**
**சென்னை - 5.**



நீங்கள் Smart Phone உபயோகிப்பவராக இருந்தால் QR Code Reader Application மூலம் இதை Scan செய்தால் நேரடியாக எமது இணையதளத்திற்கு சென்று மேலும் எங்கள் வெளியீடுகள் பற்றிய விவரங்களைப் பெறலாம்.

ISBN 978-93-83067-02-2

# பதிப்புரை

சில விஷயங்கள் என்றைக்குமே சலிக்காதவை. அதில் ஒன்று காலம் காலமாக நாம் கேட்டு, படித்துவரும் ராஜா, ராணிக் கதைகள். அவை கற்பனைப் படைப்புகள். சரி, நிஜத்தில் நம் நாட்டில் ஏராளமான ராஜா, ராணிகள் வாழ்ந்து மறைந்திருக்கிறார்களே. அவர்களுடைய வாழ்க்கை எல்லாம் அப்படி சுவாரசியமானதாகத்தான் இருந்ததா? இல்லவே இல்லை, கதைகளைவிட மகாராஜா, மகாராணிகளின் நிஜ வாழ்க்கை பல மடங்கு சுவாரசியமானவை என்று ஆதாரங்களுடன் அடிக்கோடிட்டுக் காட்டுகிறது இந்தப் புத்தகம்.

ஒவ்வொரு சமஸ்தானத்துக்குப் பின்னும், ஒவ்வொரு மகாராஜாவின் வாழ்க்கைக்குள்ளும் புதைந்து கிடக்கும் தகவல்களை, நுணுக்கமான விஷயங்களை அழகாக ஒரு கதைபோலச் சொல்லிச் செல்கிறது - அகம், புறம், அந்தப்புரம். கோமான்களின் வாழ்க்கை, ஆடம்பரக் கோமாளிகளின் வாழ்க்கையை மட்டும் அலங்காரத்துடன் சொல்லாமல், காலத்துக்கும் குருதி சிந்தி உழைக்கும் குடிமக்களின் வாழ்க்கையையும் அதற்குரிய அவலத்துடன் பதிவு செய்திருப்பது இந்தப் புத்தகத்துக்குரிய சிறப்பு. அரண்மனைக்குள்ளும் அந்தப்புரத்துக்குள்ளும் மட்டுமே சுற்றிவராமல், அதைத்தாண்டி வெளியில் பல அரிய வரலாறுகளையும், காலனியாதிக்க இந்தியா குறித்த சரித்திரத்தையும் ஒருங்கே சேர்த்துச் சொல்லும் இந்தப் புத்தகம், நிச்சயம் ஒரு வரலாற்றுப் பெட்டகம்.

இத்தனைப் பெரிய புத்தகமா, இதைப் படித்து முடிக்க இயலுமா என்ற மலைப்பு முதலில் தோன்றலாம். ஆனால், படிக்க ஆரம்பித்த பின், எந்தவொரு இடத்திலும் சலிப்போ, அலுப்போ தோன்றாமல், ஆசிரியரின் எழுத்துகள் நம்மை எங்கெங்கோ அழைத்துச் செல்கின்றன. நவரச அனுபவங்களைத் தருகின்றன. எழுதும் விதத்தில் எழுதினால் சரித்திரத்தைவிட சுவாரசியமான விஷயம் எதுவுமே கிடையாது என்பதை இந்நூல் பறைசாற்றுகிறது. புத்தகப் பிரியர்கள் ஒவ்வொருவருமே தங்கள் சேகரிப்பில் வைத்துக் கொள்ள வேண்டிய புத்தகங்களில் இந்த நூலும் ஒன்று.

ஒவ்வொரு எழுத்தாளர்களுக்கும் அவர்களது படைப்பில் மாஸ்டர் பீஸ் உண்டு. எழுத்தாளர் முகில் இதுவரை எழுதியுள்ள புத்தகங்களில், ‘அகம், புறம், அந்தப்புரம்’தான் அவருடைய மாஸ்டர் பீஸ். தமிழ் வாசகர்களுக்கு அந்த மிக முக்கியமான வரலாற்றுப் பதிவை, அரிய புகைப்படங்களுடன் மாபெரும் புத்தகமாகக் கொண்டு சேர்ப்பதன் மூலம் இந்த 2014ம் வருடத்தைத் தொடங்குவதில் சிக்ஸ்த்சென்ஸ் பெருமகிழ்ச்சி கொள்கிறது.

யாம் பெற்ற பரவச அனுபவம், வாசகர்களுக்கும் கிடைக்கட்டுமென வாழ்த்தி வழிவிடுகிறேன்.

கே. எஸ். புகழேந்தி
சிக்ஸ்த்சென்ஸ் பப்ளிகேஷன்ஸ்

# சரித்திரத்தின் அஞ்சறைப் பெட்டி!

'படிச்சது இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி. ஆனா, சாஃப்ட்வேர்ல வேலை பார்க்காம வரலாற்றுப் புத்தகங்கள் ஏன் எழுத ஆரம்பிச்சீங்க?' - என் சகோதரியின் மகள்கள் முதல் சந்திக்கும் வாசகர்கள் வரை - பலரிடமும் நான் எதிர்கொண்ட கேள்வி இது. 'நீ ஹிஸ்டரியே எடுத்துப் படிச்சிருக்கலாம்' எனக்கு நெருக்கமானவர்கள் என்னிடம் அடிக்கடிச் சொல்வது இது.

நானும் யோசித்துப் பார்த்திருக்கிறேன். ஏன் எனக்கு வரலாற்றின் மீது ஆர்வம் வந்தது? பள்ளி நாள்களில் வரலாற்றை விரும்பிப் படித்திருக்கிறேனா?

நிச்சயமாக இல்லை. அதை ஒரு பாடமாக மட்டுமே நினைத்துப் படித்திருக்கிறேன். சொல்லப்போனால் கொட்டாவி விட வைக்கும் அல்லது மனனம் செய்யும் மனநிலைக்குத் தள்ளும் பள்ளி வரலாற்று நூல்கள்மீது என்னையறியாமலேயே எனக்குள் வெறுப்புதான் வளர்ந்து வந்திருக்கிறது.

பிற மொழிகளில் ஏராளமான வரலாற்றுப் புத்தகங்கள் இருக்கின்றன. தமிழில்? அதுவும் ரசிக்கத் தகுந்த நடையில்? மிக மிக மிகக் குறைவே. எழுத்துதான் என் வாழ்க்கை என்று முடிவு செய்தபின், தமிழில் இதுவரை எழுதப்படாத, முக்கியமான வரலாற்று நூல்களை எல்லோரும் விரும்பி படிக்கும் வகையில் எழுத வேண்டும் என்ற நோக்கத்துடன் செயல்பட ஆரம்பித்தேன்.

ஒரு ஊர்ல ஒரு ராஜா இருந்தாராம் கதைகள் சிறுவயதில் கேட்டதுண்டு, படித்ததுண்டு. பட்டுடையில், படோடோப நகைகளோடு தலையில் கீரிடம்

கவிழ்த்த ராஜாக்களை நாடகங்களில், திரைப்படங்களில் கண்டதுண்டு. 'மனசுல பெரிய மைசூரு மகாராசான்னு நினைப்பு' யாரோ யாரையோ திட்டுவதை ரசித்ததுண்டு. சரி, உண்மையில் நம் மகாராஜாக்கள் எப்படி இருந்தார்கள்? எந்த மாதிரி வாழ்ந்தார்கள்? 'யாரங்கே?', 'மாதம் மும்மாரி பொழிந்ததா?' என்று நிஜமாகவே வசனம் பேசினார்களா? மாறுவேடமணிந்து இரவில் நகர்வலம் வந்தார்களா? குதிரைகள் பூட்டிய ரதத்தில் ராணிகளோடு டூயட் பாடிக்கொண்டு சென்றார்களா? அவர்கள் வேங்கையை வீழ்த்திய வீரர்களா அல்லது வெத்துவேட்டு கோமாளிகளா?

நிஜத்தை அறிந்துகொள்ள இந்தியாவிலிருந்த சமஸ்தானங்களை ஆண்ட மகாராஜாக்கள் குறித்த விஷயங்களைத் தேட ஆரம்பித்தேன். படிக்க ஆரம்பித்தேன். லயித்துப் போனேன். இதைவிட சுவாரசியமான வரலாறு வேறெதுவுமே கிடையாது என்று தோன்றியது. மகாராஜாக்கள் குறித்த புத்தகம் ஒன்றை எழுதிவிட வேண்டுமென்று நினைத்தேன். அதைத் தொடராகவே எழுதும் வாய்ப்பு குமுதம் ரிப்போர்ட்டரில் அமைந்தது.

இது நான் எழுதிய முதல் சரித்திரத் தொடர். ஐம்பது அத்தியாயங்கள் எழுதிவிட முடியும் என்றுதான் ஆரம்பித்தேன். வாசகர்களின் ஏகோபித்த வரவேற்பு என் நம்பிக்கையைப் பிரகாசமாக்கியது. எனது தேடல் அதிகமானது. படிக்கப் படிக்கத் தீராத விஷயங்கள். நான் குதித்திருப்பது சமுத்திரத்தில் என்று உணர்ந்து கொண்டேன். இரண்டு வருடங்கள். வாரம் இரண்டு அத்தியாயங்கள். நிச்சயம் இது ஒரு தவம்தான்.

விரைவிலேயே மகாராஜாக்கள் என மனத்துக்கு நெருக்கமானவர்களாகிப் போனார்கள். மகாராஜாக்களிடம் பிரிட்டிஷார் எப்படி நடந்துகொண்டார்கள்? சமஸ்தானங்களின் அரசியல் நடவடிக்கையில் ஐரோப்பியர்களின் ஆதிக்கம் எவ்வளவு அழுத்தமாக இருந்தது? அன்றைய சமூகத்தில் எப்படிப்பட்ட ஏற்றத்தாழ்வுகள் இருந்தன? அந்தப்புரத்தின் மயக்கத்தினால் சீரழிந்த மகாராஜாக்கள் யார் யார்? அந்தப்புரத்தில் கவனம் செலுத்தாமல் தன் சமஸ்தான மக்களின் வீட்டில் அடுப்பு எரிகிறதா என்று நிஜமாகவே கவலைப்பட்ட மகாராஜாக்கள் இருந்திருக்கிறார்களா? சமஸ்தானங்களின் வரலாறோடும் மகாராஜாக்களின் வாழ்க்கையோடும் நிறுத்திக் கொள்ளாமல் அப்படியே அவற்றோடு தொடர்புடைய பல விஷயங்களையும், மக்களின் வாழ்க்கையையும் பதிவுசெய்யும் வாய்ப்பு அமைந்தது.

மகாராஜாக்களின் வெளிநாட்டுப் பயணங்கள் எப்படி இருந்தன என்று எழுதும்போது அவர்கள் அப்போது சென்ற இடங்கள் குறித்த வரலாற்றையும் கொஞ்சம் பேச முடிந்தது. மகாராஜா போலோ, கிரிக்கெட் விளையாடுவாரா? சரி, இந்தியாவுக்குள் போலோவும் கிரிக்கெட்டும் எப்போது, எப்படி வந்தது, எந்தெந்த சமஸ்தானங்களிலெல்லாம் போலோ அணி இருந்தது, எந்தெந்த மகாராஜாக்களெல்லாம் கிரிக்கெட் வீரர்கள் போன்ற விஷயங்களையும் தொகுத்துத் தர முடிந்தது. மகாராஜா, வேட்டையாடுவதற்கென்றே காட்டுக்குள் அரண்மனை கட்டினாரா? சரி, எப்படி வேட்டையாடினார்கள், எவ்வளவு

வேட்டையாடினார்கள், யாராவது வேட்டையாடுவதைத் தடுக்க விரும்பினார்களா - என்பன போன்ற தகவல்களை அளிக்க முடிந்தது. இப்படி எத்தனையோ உப வரலாறுகளைச் சேர்த்து மொத்தமாகப் பார்க்கும்போது, 'சரித்திரத்தின் அஞ்சறைப் பெட்டி' ஒன்றை உருவாக்கிக் கொடுத்த திருப்தி.

நிறைவு அத்தியாயம் வெளிவந்ததும், 'ஏன் அதற்குள் நிறுத்தி விட்டீர்கள்?' என்று என்னை உரிமையோடு கோபித்துக் கொண்ட வாசகர்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

இனி இவர்களுக்கு என் நன்றிகள். தொடருக்கு 'அகம் புறம் அந்தப்புரம்' என்ற பொருத்தமான தலைப்பை வழங்கிய நண்பர் பாலு சத்யாவுக்கு. குமுதம் ரிப்போர்ட்டரில் எனக்காக இடம் ஒதுக்கிக் கொடுத்த ஆசிரியர் இளங்கோவன் அவர்களுக்கு. தொடருக்காக என்னைப் பல்வேறு விதங்களில் ஊக்கப்படுத்திய பா. ராகவனுக்கு. புத்தகத்தை முதலில் பதிப்பித்த கிழக்கு பதிப்பாளர் பத்ரிக்கு. மேம்படுத்தப்பட்ட பதிப்பாக பிரமாண்டமாக வெளிக்கொண்டு வந்துள்ள பதிப்பாளர் புகழேந்திக்கு.

இவர்களுக்கு என் சிறப்பு நன்றிகள். தொடருக்கான அறிவிப்பு விளம்பரங்களை நயத்தோடு வடிவமைத்துக் கொடுத்த நண்பர் குமரனுக்கு. புத்தக வடிவமைப்பில் உற்சாகமாக ஒத்துழைத்த நண்பர் முத்துகணேசனுக்கு. ரிப்போர்ட்டரில் வெளிவருவதற்கு முன்பாகவே என்னிடமிருந்து அத்தியாயங்களை வாங்கிப் படித்துக் கருத்துகள் சொல்லிய நண்பர்கள் உமா சம்பத், பாலுசத்யா, ஜானகி ராமனுக்கு. அடிக்கடி தொலைபேசியில் வாழ்த்திய ஆடிட்டர் ரவிகுமாருக்கு. மற்றும் இந்தத் தொடரை வாசித்த, நேசித்த முகமறியாத வாசகர்களுக்கு.

அடுத்தடுத்த தலைமுறைகளுக்காக, தமிழில் ஒரு முக்கியமான பதிவைக் கொடுத்ததில் மனநிறைவு. ஆனால், இன்னமும் பதிவு செய்யப்படாத சமஸ்தான வரலாறுகளை நினைக்கும்போது... அகம் புறம் அந்தப்புரம் பாகம் இரண்டுக்கான காலமும் சூழலும் அமையுமென நம்புகிறேன்.

சென்னை. — அன்புடன்

21 டிசம்பர், 2013 — முகில்

# சிம்மாசனம்

## பரத்பூர்



## ஹைதராபாத்



## இந்தூர்



## கபுர்தலா

புதுக்கோட்டை

**மைசூர்**

### பஹவல்பூர்



### ஜோத்பூர்

# இந்திய வரைபடம் சமஸ்தான இணைப்புக்கு முன்

1. உதய்பூர்
2. ஜோத்பூர்
3. பண்டி
4. பிகானிர்
5. பரத்பூர்
6. அல்வார்
7. தோல்பூர்
8. தாரங்கதாரா
9. பரோடா
10. பாலன்பூர்
11. இந்தூர்
12. போபால்
13. ரேவா
14. திவாஸ் சீனியர்
15. பாட்டியாலா
16. ஜிந்த்
17. நபா
18. கபுர்தலா
19. கொச்சின்
20. கோல்ஹாபூர்
21. இடார்
22. வாரணாசி
23. ராம்பூர்
24. கூச் பிகார்



நேரம் காலம் தெரியாமல் ஆறு மணிக்குக் கூவிய கோழியை அடித்துக் குழம்பில் போட்டார்கள் அரண்மனை ஊழியர்கள். அது கூவி ஐந்து மணி நேரம் கழித்துச் சாவகாசமாக எழுந்து உட்கார்ந்தார் மகாராஜா. பொழுது அப்போது விடிந்தது.

கட்டிலைச் சுற்றி ஏழெட்டு அழகிய இளம்பெண்கள் நின்றுகொண்டிருந்தார்கள். கோழி குழம்புக்குப் போவதற்கு முன்னாலேயே வந்துவிட்டவர்கள். முழு ஒப்பனையுடன். முகம் நிறைந்த புன்னகையுடன். நாதெள்ள சம்பத்து செட்டி அண்டு சன்ஸ் விளம்பரத்தில் தோன்றத் தயாரான மாதிரி. அது மகாராஜா ஏற்பாடு. அழகிய இளம்பெண்கள் முகத்தில் விழித்தால் 'இந்த நாள் இனிய நாள்' என்று அரண்மனை ஜோசியர் சொல்லியிருக்கிறார்.

கொட்டாவியுடன் கண்விழித்து, சோம்பல் முறித்தார் மகாராஜா. சுற்றி இருந்த சுந்தரிகளில் ஒருத்திக்கு அவரது முதல் விழிப்பு அதிர்ஷ்டம் அன்றைக்கு அடித்தது. அந்தப் பெண் 'மகாராஜாவுக்குக் காலை வணக்கம்' என்று ஷ்ரேயா கோஷல் குரலில் புன்னகையுடன் சொன்னாள். பதிலுக்கு ஒரு புன்னகை? மகாராஜா யோசித்தார். என்னவோ மூட் சரியில்லை. குப்புறப்படுத்துக் கொண்டார். மீண்டும் ராஜா கண்விழிக்கும் வரை சுந்தரிகள் அங்கேயே அப்படியே சிலையாக நிற்க வேண்டும். மீண்டும் ஒரு காலை வணக்கம் சொல்ல வேண்டிய வேளை வரும்வரை.

பத்து நிமிடம். அரை மணி. நாற்பது நிமிடம். ஒரு வழியாக எழுந்து உட்கார்ந்தார் மகாராஜா. சுற்றி இருந்த பெண்களின் மீது பார்வையை ஜாகிங் விட்டார். ஒருத்தியை விழிகளால் அழைத்தார். அந்தப் பெண் கபாலென்று ஓடி ஒரு தங்கக் கோப்பையில் தயாராக இருந்த திராட்சை ரசத்தை எடுத்து வந்து ஊட்டத் தொடங்கினாள்.

அருந்தி முடித்ததும் 'ஈ...' என்றார் ராஜா. அழகிய விரல்களுடைய பெண்ணொருத்தி, பல் தேய்த்து விட்டாள். கொப்புளித்துத் துப்பும் தண்ணீரைத்

---

முந்தைய பக்கத்தில் இடம் பெற்றுள்ள அரியணை கி.பி. 1850ல் திருவாங்கூர் மகாராஜா, இங்கிலாந்து குயின் விக்டோரியாவுக்குப் பரிசாக அளித்தது.



சில மகாராஜாக்கள்

தங்கக் கோப்பையில் ஏந்தி எடுத்துக் கொண்டு ஒலிம்பிக்கில் ஜெயித்த பரவத்துடன் இன்னொரு அழகி நகர்ந்து போனாள்.

காலைக் கடன். என்னதான் இடது கை என்றாலும், ராஜாவுடையதல்லவா? போயும் போயும் அதற்கு உபயோகப்படுத்த முடியுமா என்ன? ஆனாலும் மகாராஜாவுக்குப் பெண்களின் பெருமையைப் பேணத் தெரிந்திருந்தது. கூப்பிட்ட குரலுக்கு வந்தான் ஒரு கிங்கரன். காரியம் ஆனதும் அவன் நகர்ந்து கொள்ள, ஒரு கட் ஷாட்டில் மீண்டும் சூழ்ந்து கொண்டனர் தேவ கன்னிகள்.

மசாஜ். தோளுக்கு ஒருத்தி. காலுக்கு ஒருத்தி. கிரீடம் சூடும் தலைக்கு ஒருத்தி. கிறுகிறுத்துக் கிடக்கும் விழிகளுக்கு ஒருத்தி. பகுதி பகுதியாகப் பட்டா போட்டுப் பிரித்துக்கொண்டு மகாராஜாவின் உடலில் மந்திர வித்தை செய்ய ஆரம்பித்தார்கள். அ, என்ன சுகம், என்ன சுகம்!

மாமன்னருக்கு மங்களம் உண்டாகட்டும். இன்று எண்ணெய் ஸ்நானம் உண்டா?

மரியாதைக்குக் கேட்டுக்கொண்டார்கள். வாசனைத் திரவியங்கள் கலந்த வெதுவெதுப்பான நீர். புறமுதுகு தேய்த்துவிட ஆள்கள். ராஜாவின் காதுமடல்கள் எப்போதும் சுத்தமாகவே இருக்கும். தாமரை இதழ் மாதிரி. வாரத்தில் ஒருநாள் ஷாம்பெயின் நிரம்பிய தொட்டியில் குளிக்கும் பழக்கமும் உண்டு. குளிப்பதற்கு ஷாம்பெயின், குடிப்பதற்குத் தென்னங்கல். கலாசார ஒருங்கிணைப்புக்கு இதனைக்காட்டிலும் சிறந்த உபாயம் வேறில்லை.

முக்கால் மணி குளித்துவிட்டு கமகமவென்று வெளியே வந்தார் மகாராஜா. அழகிகள் உடை மாட்டிவிட்டார்கள். தினமும் புது உடை. அந்த உடையைத் தயார் செய்துகொடுப்பதற்காகத் தனியாக 'உடைமாற்று வாரிய' அமைச்சர் உண்டு. அரண்மனை மருத்துவர் குழு காத்திருக்கும். வாத, பித்த, சிலேத்தும நாடிகளை எல்லாம் பிடித்துப் பார்த்துச் சில பரிசோதனைகள். பின்பு

சிகை அலங்காரம், நகை அலங்காரம், மிகை அலங்காரம். எல்லாம் செய்து முடிக்கவே அரை மணிக்குமேல் ஆகிவிட்டது.

மன்னர் பெருமானே, உணவு தயார்.

ராஜாவின் மூத்த தாரத்திலிருந்து, கடந்துபோன சுபமுகூர்த்த தினத்தில் தாரமான பெண் வரை, அத்தனை ராணிகளும் உணவு மேசையில் காத்து நின்றார்கள். அது ஒரு சமத்துவபுரம். சக்களத்திச் சண்டைகளுக்கு இடமில்லை.

மந்தகாசப் புன்னகையோடு, மதன நடை நடந்து வந்து அமர்ந்தார் மகாராஜா. இரண்டு அல்லது மூன்று ராணிகளைப் பார்த்துக் கவர்ச்சியாகக் கண்ணடித்தார். அட, அடித்தது அதிர்ஷ்டம். அவர்கள்தான் இன்று பரிமாறவேண்டும். சே, தப்பு. ஊட்டிவிட வேண்டும். ஏவ். ஏப்பத்தில் எழுந்தன ஏழு சுரங்கள்.

உண்ட களைப்பை உருண்டு தீர்த்துவிட்டு, உயர்ஜாதிக் குதிரைகள் பூட்டிய, தங்கச் சக்கரங்கள் பொருத்திய தேரில் ஏறினார் மகாராஜா. புலித்தோல் இருக்கை. அதில் அமர்ந்தால்தான் கொஞ்சம்போல் வீரம் வரும்போலிருக்கிறது. ‘ம்..’ என்று அவரது குரல் கேட்ட மறுநொடி, குதிரைகளின் குளம்படிச் சத்தம் நகரை உலுக்க ஆரம்பித்தது.

மூட் இருந்தால் அப்படியே காட்டுப் பக்கம் தேரை விடச் சொல்லுவார் மகாராஜா. வேட்டைக்காகத்தான். கரடி, கழுதைப்புலி, குறைந்தபட்சம் கட்டெறும்பு எது கிடைக்கிறதோ வேட்டையாட வேண்டியது வீரர்களின் வேலை. மகாராஜா, தேரில் ஒய்யாரமாக ஒயின் அருந்தியபடியே ரசித்தார்.

வேட்டையாடப்பட்ட விலங்கு, செத்துவிட்டது என்று தளபதி இறப்புச் சான்றிதழ் கொடுத்த பின்பு, ராஜா அதன் அருகில் சென்று கம்பீரமாக நின்றார். அவர்களுடனேயே சென்ற ஓவியர், அந்தக் காட்சியை அடுத்த கால் மணி நேரத்தில் கனகச்சிதமாக வரைந்துகொடுக்க வேண்டும். இல்லையேல், ஓவியர் வீட்டில் அவரது ஓவியத்துக்கு மாலை போட்டு, பொட்டு வைத்து, ஊதுபத்தி ஏற்றிவிட வேண்டியதுதான்.

வேட்டை முடிந்ததும் மகாராஜாவுக்குப் பசிக்கத் தொடங்கிவிடும். அரண்மனைக்குத் திரும்பிய உடனேயே சாப்பாடுதான். கைதாக வாய்ப்பே இல்லாத மான்கறி, மயில்கறி விருந்து. குடலின் அடிப்பகுதி முதல் தொண்டைக்குழி வரை நிரம்பச் சாப்பிட்டார். ஜீரணத்துக்கு ? நடனப் பெண்களுக்கு வேறென்ன வேலை ? கண்ணோடு காண்பதெல்லாம் தலைவா... என்று கால்கள் வலிக்க ஆடினர். அதை ரசித்தாலே போதுமே, ஜில்லென ஜீரணமாகிவிடுமே.

உணவுக்குப் பின் உறக்கம். தேர்ந்தெடுக்கப்பட்ட தேவதைப் பெண்கள் கை, கால்கள் அமுக்கி விட, எங்கேயோ ஒலிக்கும் பண்பலை வானொலி போல சன்னமான குரலில் ஒரு பாடகர் அதிராமல் பாட்டுப் பாட, சாமரங்கள் காற்றை உற்பத்தி செய்ய, ராஜாதி ராஜ, ராஜ மார்த்தாண்ட, ராஜ கம்பீர, ராஜ குல திலக... கொர்ர்ர்ர்.

இது பிற்பகல். அடுத்து, மாலை. மாலைப் பொழுதின் மயக்கத்திலே பாராளுமன்றக் கூட்டத்தொடரா நடத்த முடியும் ? சில மகாராணிகள் புடைசூழ தோட்டத்தில் வலம் வந்தார்

மகாராஜா. தோட்டத்தின் மையத்தில் இருந்தது அந்த பிரம்மாண்டமான நீச்சல் குளம். அங்கே பிற மகாராணிகள் காத்திருந்தார்கள். எப்படிப்பட்ட உடைகள் என்பதெல்லாம் அநாவசியம்.

கட்டோடு குழல் ஆட ஆட... ஆட்டம்தான். முங்கு நீச்சல், பாம்பு நீச்சல், மல்லாக்கு நீச்சல், கடப்பாறை நீச்சல் என்று மகாராணிகள் வித்தை காட்டிக் கொண்டிருக்க, ராஜா மதுவில் நீச்சலடிக்க ஆரம்பித்தார்.

கேளிக்கை அறை. ஒருபுறம் நடன மங்கைகள். மறுபுறம் மெல்லிசைப் பாடகர்கள். இன்னொருபுறம் வாத்தியக் கச்சேரி. கலை அங்கே தழையத் தழைய உலா வந்தது. ராஜா வேட்டையாடியதாகக் கூறப்படும் விலங்கின் மாமிசம், விருந்தினர்களுக்கு ஆவி பறக்கப் பரிமாறப்பட்டது. பொதுவாக இரவு நேரத்தில் மகாராஜா, வேறு பல அசைவ காரணங்களைக் கருதி சைவத்துக்கு மாறி விடுவார்.

சீட்டு விளையாடுவதில் அவருக்குப் பிரியம் அதிகம். உடன் விளையாடுபவர்கள் கண்டிப்பாகத் தோற்றாக வேண்டும் என்பது சமஸ்தானச் சட்டம். அதற்கேற்ற அபாரத் திறமையுடையவர்களே ராஜாவுடன் சீட்டு விளையாட அனுமதிக்கப்படுவர்.

அப்புறம் அந்தப்புரம். அதன் வாசலில் 'அந்த' அமைச்சர் மிகவும் படபடப்போடு நின்று கொண்டிருந்தார். அவருக்குக் கொடுக்கப்பட்ட வேலை அப்படி. பக்கத்துத் தெரு, பக்கத்து ஊர், பக்கத்து சமஸ்தானம், பக்கத்து தேசம், பக்கத்து கண்டம் என்று எங்காவது சென்று ராஜாவின் ரசனைக்கேற்ப, புதிய பெண்களைக் கொண்டுவர வேண்டியதுதான் அந்த அமைச்சருடைய வேலை. அடிக்கடியெல்லாம் இல்லை, தினமும். என்ன செய்வது? அமைச்சர் என்றுதான் அழைத்தார்கள்.

அத்தனைபேரும் அதிரூப அழகு சுந்தரிகள். அரண்மனையில் இருக்கிறவர்களை விடவுமா? அது தெரியாது. அவ்வப்போது மாறுபடும் மகாராஜாவின் பார்வையைப் பொறுத்தது அது. மகாராஜா பார்த்தார். அட, பேஷ். இன்றைக்கு இவள் ஓகே.

இது மணிபார்க்கவேண்டிய தருணம். எத்தனை உழைத்துவிட்டார் மகாராஜா! மணி அதிகாலை நான்கு. பிறகு ஆறுமணிக்குக் கோழி கூவினால் குழம்புக்குப் போகாமல் என்னாகும்?

கொஞ்சம் மூச்சைப் பிடித்துக்கொள்ளுங்கள். மேற்கண்ட ஒருநாள் ப்ரோக்ராம் கொஞ்சம் மப்பாக்கியிருந்தால் ஆசுவாசப்படுத்திக்கொள்ளவும். ஒரு மாறுதலுக்கு நான்கைந்து மகாராஜாக்களின் தினசரிக் கடமைகளை ஒருங்கிணைத்துத் தரப்பட்டதுதான் இது. ஒவ்வொருவருக்குமே இவை அத்தனையும் நித்யகர்மமாகவும் இருந்ததுண்டு. எப்போதாவது மனசாட்சி என்கிற கெட்ட ஜந்து குறுக்கிட்டு கொஞ்சம் மக்கள் பணியாற்ற வைத்துவிடும். அது பிரச்னையில்லை. உல்லாசம் முதலில். ஊர்ப்பிரச்னை அப்புறம்.

எல்லாம் நமக்குத் தெரிந்தவர்கள்தான். 1947க்கு முன்னால் இந்தியாவைக் குட்டி குட்டியாகப் பிரித்து ஆண்டு கொண்டிருந்தவர்கள். மொத்தம் 565 சமஸ்தானங்கள். கைக்குட்டை அளவிலும் இருந்திருக்கின்றன. இரண்டு இலங்கைகளை இணைத்தால் கிடைக்கும் அளவிலும் இருந்திருக்கின்றன. சிறியதோ, பெரியதோ ராஜாக்களின் நோக்கம் என்பது 'ஜாலிலோ ஜிம்கானா'வாகத்தான் இருந்திருக்கிறது.

மாதம் மும்மாரி பொழிந்ததா, பூமி விளைந்ததா, மக்கள் சுபிட்சமாக இருக்கிறார்களா இல்லை பஞ்சத்தால் சுடுகாட்டுக்குச் சென்று படுத்துக் கொண்டார்களா... பாவம், இந்த மாதிரி எல்லாம் கவலைப்பட வேண்டும் என்று பெரும்பாலான ராஜாக்களுக்கு யாரும் கற்றுக் கொடுக்கவில்லை.

வியாபாரிகளாக இந்தியாவுக்குள் நுழைந்த பிரிட்டிஷ்காரர்கள், இந்தப் பகட்டான வாழ்க்கையைக் கண்டு, 'அடப்பாவிகளா, இப்படியெல்லாம்கூட வாழ முடியுமா?' என்று மூக்கின்மேல் விரலை வைத்தனர். பின்னர் வியாபார ஒப்பந்தம் என்ற பெயரில் ராஜாக்கள் உள்ளங்கையோடு உள்ளங்கை வைத்துக் குலுக்கினர். பின்னர் நட்பை, உறவை, முடிந்தால் திருமண உறவை வளர்த்துக் கொண்டு, தோள்மீது கை போட்டனர். இறுதியாக அவர்கள் கை வைத்த இடம் அடிமடி.

'மரியாதைக்குரிய மகாராஜாவே, வாழ்க நின் புகழ்! வளர்க நின் கொற்றம்! நீவிர் உம் ஆட்சி அதிகாரத்தை அந்தப்புரத்துக்குள்ளாகவும், மிஞ்சிப்போனால் அரண்மனைக்குள்ளாகவும் வைத்துக் கொண்டால் எங்களுக்கு மிக்க மகிழ்ச்சி. சமஸ்தான வளர்ச்சி, குடிமக்கள் வாழ்வு, வணிகம், விவசாயம், விளக்கெண்ணெய் சமாசாரங்களைப் பற்றியெல்லாம் அநாவசியமாகக் கவலைப்பட்டுத் தங்கள் பொன்மேனியை வருத்திக் கொள்ள வேண்டாம். அவற்றையெல்லாம் நாங்களே பார்த்துக் கொள்கிறோம்.'

அடச்சே, எந்திரிடா சோம்பேறி என்று மீசை துடிக்கக் கோபப்பட்டு மாமன்னர் வாளை உருவியிருந்தால் கதை வேறுமாதிரி போயிருக்கலாம். என்ன செய்ய, ராஜாக்கள் அந்த வாளை வைத்து அழகிய பெண்களுக்கு ஆப்பிள் நறுக்கிக் கொடுக்க மட்டும்தான் முடியும் என்று நினைத்துவிட்டனர். 'அப்படியே ஆகட்டும் துரை' என்று பிரிட்டிஷாரின் கையில் செங்கோலைக் கொடுத்துவிட்டனர். அந்தப்புரத்தில் மட்டும் ஆண்மையை நிரூபித்துவிட்டால் போதும் என்று ஒதுங்கி விட்டனர். எதிர்ப்பு தெரிவித்த ஒரு சில ராஜாக்களைச் சமாளிப்ப தென்பது, பிரிட்டிஷாருக்குப் பெரிய வேலையாகத் தெரியவில்லை. சில ராஜாக்கள், எல்லா வற்றையும் துறந்துவிட்டு வெளிநாடுகளுக்கே சென்றுவிட்டனர்.

இந்தியா சுதந்தரமடைந்தது. வல்லபாய் படேலின் நடவடிக்கையால், சமஸ்தானங்கள் எல்லாம் இந்திய அரசுடன் இணைக்கப்பட்டன. மகாராஜாதி ராஜாக்களெல்லாம் அரசு மானியம் வாங்கிக் கொண்டு பழைய கனவுடா பேராண்டி என்று காலம் தள்ள ஆரம்பித்தனர். எஞ்சி மிஞ்சி நின்ற சமஸ்தானப் பெயர்களும் பெருமைகளும் இந்திரா காந்தியின் காலத்தில் தேய்த்து நசுக்கப்பட்டன.

இப்போதும் அந்த ராஜாக்கள் வாழ்ந்துகெட்ட பல அரண்மனைகள் இருக்கின்றன - காட்சிப் பொருளாக, நட்சத்திர ஹோட்டல்களாக அல்லது சிதிலமடைந்து. சில ராஜாக்களும் அந்த அரண்மனைகளில் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் அமைதியாக ரேஷன் கார்டுடனும், வாக்காளர் அடையாள அட்டையுடனும்.

உல்லாசத்தின் உச்சத்தை மட்டுமே அனுபவித்தவர்கள், உருக்குலைந்து காணாமல் போனபோது 'உச்' கொட்டக் கூடப் பெரும்பாலும் யாருக்கும் தோன்றவில்லை. காரணமா பிரமாதம்? மீண்டும் அத்தியாயத்தின் முதல் வரியிலிருந்து படிக்கவும்.

ஆ, அந்த நான்கைந்து பேர். பாட்டியாலா சமஸ்தானத்தின் மகாராஜா பூபிந்திர் சிங், பரத்பூர் சமஸ்தானத்தின் மகாராஜா கிஷன்சிங், கபுர்தலா சமஸ்தானத்தின் மகாராஜா ஜெகத்ஜித் சிங், ஹைதராபாத் சமஸ்தானத்தின் நிஜாம் ஒஸ்மான் அலி கான், இன்னும் சில (பெயர், ஊர் வெளியிட விரும்பாத!) மகாராஜாக்களின் வாழ்க்கையில் நடந்த சில சம்பவங்களின் காக்டெயில்தான் மேலே பார்த்த மகாராஜா கதை.

இந்த மகாராஜாக்கள் மட்டுமா? இன்னும் உண்டு பட்டியல். ஒவ்வொருவராகப் பார்க்கலாம். ஒவ்வொரு கதையாக ரசிக்கலாம். சமஸ்தானங்களின் அகத்தே நடந்த கதை. புறத்தே வீழ்ந்த கதை. இந்தப் புத்தகம் பல முக்கிய அரண்மனைகளின் கதவுகளைத் திறந்து காட்டப் போகிறது. அவசியப்பட்டால் அந்தப்புரங்கள் உள்பட.

# நபா

● பஞ்சாபிய சமஸ்தானம் ● தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1755
● ஆட்சி செய்தவர்கள் : புல்கியன் பரம்பரை ● முதல் மன்னர் : ஹமீர் சிங்
● மொழி : பஞ்சாபி ● 13 குண்டு மரியாதை.





# கதை திரைக்கதை வசனம் இயக்கம்

அடிக்கடி மர்ம நபர்களால் இளம்பெண்கள் கடத்தப்படும் சம்பவங்கள் தவிர, நபா சமஸ்தான மக்களுக்கு வேறெந்தக் குறையுமில்லை. ஓடும் நதிகளுக்குப் பஞ்சமில்லை. மாதம் மும்மாரியல்ல, நான்மாரி, ஐம்மாரி என்று மாறி மாறிப் பொழிந்து கொண்டிருந்தது. விவசாயம், ஓஹோ.

நபா (Nabha), பஞ்சாப் மாநிலத்தின் பாட்டியாலாவுக்கு அருகில் தனி சமஸ்தான மாக இருந்தது. சீக்கிய மக்கள். சீவித்தள்ளுவதிலும் சேவிப்பதிலும் முதன்மை யானவர்கள்.

'நாளை அருகிலிருக்கும் வனப் பகுதியில் பிரார்த்தனைக் கூட்டம் நடைபெறும்' என்ற செய்தி சமஸ்தானத்தின் எல்லாக் கிராமங்களிலும் அறிவிக்கப்பட்டது. இப்படிப்பட்ட பக்திக் கூட்டங்களைக் கூட்டுவதும், கூட்டுப் பிரார்த்தனைகளை நடத்துவதும் சகஜமான விஷயம். எல்லோரும் கண்டிப்பாகக் கலந்து கொள்ள வேண்டும் என்ற சட்டமெல்லாம் கிடையாது. காலையில் ஆரம்பிக்கும் பிரார்த்தனை, இரவு வரை நீளும். சில சமயங்களில் விடிய விடிய.

வனப்பகுதி. கூட்டம் முடிந்ததும் இரவில் வீடு திரும்புவதென்பது இயலாத காரியம். எனவே, பிரார்த்தனைக் கூட்டங்களை நடத்துபவர்கள், மக்கள் தங்குவதற்கென சிறிய சிறிய கூடாரங்களை அமைத்திருப்பர். ஒரு கூடாரத்தில் ஒரு குடும்பத்தினர் தங்கிக் கொள்ளலாம். பிரார்த்தனைக் கூட்டங்களை நடத்துபவர்களே, அக்கறையுடன் எல்லாக் குடும்பத்தினரும் தங்குவதற்கு ஏற்ற கூடாரங்களைப் பிரத்யேகமாக ஒதுக்கிக் கொடுப்பர். இரவில் தங்கி ஓய்வெடுத்துவிட்டு, விடிந்ததும் வீடு திரும்பி விடலாம்.

வேறு சில வேலைகள் இருந்ததால், மறுநாள் நடக்கும் கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டாமென நினைத்திருந்தார் ராம்சிங். கூட்டத்தை நடத்தும் நபர் ஒருவர், ராம்சிங்கின் வீடு தேடி வந்தார்.

'சகோதரரே, நாளை கூட்டத்துக்கு மறக்காமல் குடும்பத்துடன் வந்துவிடுங்கள்.'

'மன்னிக்க வேண்டும். வயலில் கொஞ்சம் வேலைகள் இருக்கின்றன. அடுத்தமுறை நிச்சயமாகக் குடும்பத்துடன் கலந்து கொள்கிறேன்.'

'என்ன இப்படிச் சொல்லிவிட்டீர்கள்? கூட்டத்தைச் சிறப்பிப்பதற்கெனப் பக்கத்துச் சமஸ்தானத்திலிருந்து குருஜி வருகிறார். இப்போது விட்டால், அந்த குருஜி அடுத்த ஆண்டுதான் வருவார். சிறப்பு வழிபாடுகள் வேறு நடைபெற இருக்கின்றன.'

'ஓ, அப்படியா! நிச்சயமாக வருகிறேன்.'

மறுநாள் காலை. அந்த கிராமத்திலிருந்த மக்கள் குடும்பம், குடும்பமாகக் கூட்டத்துக்குச் சென்று கொண்டிருந்தனர். ராம்சிங்கும் புறப்பட்டார். உடன் மனைவி, யாரையும் திரும்பிப் பார்க்கச் செய்யும் அழகுடைய மகள்.

'ராஸ் மண்டல் கீனோ அகாரா
சக்லோ சாஜ் ரகியோ பாஸாரா...

'இந்த உலகமே கடவுள் படைத்த நாடக மேடை. எல்லாரும் அவரவர் பாத்திரத்தை நடித்துக் கொண்டிருக்கிறோம். கடவுள் நம்மை இயக்கிக் கொண்டிருக்கிறார்...'

அவர்கள் சென்று சேர்வதற்குள் கூட்டம் ஆரம்பமாகியிருந்தது. நெஞ்சை உருக்கும் குரலில் மதப் பாடல் ஒன்றைப் பாடிக் கொண்டிருந்தார் ஒருவர். இன்னொருவர் அதற்கு அர்த்தம் கூறிக் கொண்டிருந்தார்.

ராம்சிங்கை வீட்டுக்கு வந்து அழைத்த நபர் எங்கிருந்தோ ஓடி வந்தார். அவர்களை வரவேற்று ஒரு மரத்தடியில் அமர வைத்தார். ஜப்ஜி சாஹிப், ஜாப் சாஹிப், ஆனந்த் சாஹிப் என்று காலை நேரப் பிரார்த்தனைகள் ஒவ்வொன்றாகப் பாடப்பட்டுக் கொண்டிருந்தன. ராம்சிங், பக்தியில் கரைந்து கொண்டிருந்தார்.

அவரது மகளுக்கும் பக்தி உண்டுதான். இருந்தாலும் இளம் வயதுக்கே உரிய அலைபாயும் மனம் பிரார்த்தனைக்கு உள்ளேயும் வெளியேயும் கபடி ஆடிக் கொண்டிருந்தது. அங்கே கூடி நின்ற கட்டுமஸ்தான இளைஞர்களை நோக்கி அவளது பார்வை நகர்ந்து கொண்டிருந்தது. எனக்கு மாலையிடப்போகும் மணவாளன் யார்?

மூன்று இளைஞர்கள் அவளை வைத்த கண் எடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்ததையும் அவள் கவனிக்கத் தவறவில்லை.

மதியம், மாலை, பக்தி வெள்ளம் முழுவதும் வடிந்து முடிவதற்குள் இரவு ஆகியிருந்தது. இனிமேல் யாரும் வீடு திரும்ப முடியாது. தலைக்கு மேலே நிலா.

குருஜி பாடி, பேசி, பரவசமாகி முடித்திருந்தார். இரவு நேரத்தில் பாட வேண்டிய சொஹில்லா கீர்த்தனைகள் பாடப்பட்டுக் கொண்டிருந்தன.

கூட்டத்துக்கு அழைக்க வந்த நபர், ராம்சிங்கைத் தேடி வந்தார்.

'ராம்சிங். உங்களுக்கான கூடாரம் தயாராக இருக்கிறது. என்னுடன் வாருங்கள்.'

'மிக்க நன்றி. நீங்கள் எதற்குச் சிரமப்படுகிறீர்கள்? எங்கே இருக்கிறது என்று சொல்லுங்கள். நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்.'

'இதிலென்ன சிரமம்? என்னுடனேயே வாருங்கள்.' - ஏன் இந்த நபர் நம்மை மட்டும் சிறப்பாகக் கவனிக்கிறார் என்றெல்லாம் ராம்சிங்குக்குத் தோன்றவில்லை. அந்த மரியாதையில் தடுக்கி விழுந்து, அவர் பின்னாலேயே சென்றார்.

ராம்சிங்குக்கு ஒதுக்கப்பட்டிருந்த கூடாரம், மற்ற கூடாரங்களை விட்டு மிகவும் தள்ளியிருந்தது. சுற்றிலும் வேறு கூடாரங்களே இல்லை.

'நன்றாக ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். காலையில் பார்க்கலாம்.'

'தங்கள் உதவிக்கு நன்றி.' ராம்சிங் குடும்பத்துடன் உறங்கச் சென்றார்.

சுற்றிலும் கேட்டுக் கொண்டிருந்த மக்கள் சத்தம் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கியது. ஆந்தை, வௌவால் மற்றும் சில இரவுப் பூச்சிகளின் ஒலிபரப்பு முழுஅளவில் கேட்க ஆரம்பித்தது. நிலா கொஞ்சம் கொஞ்சமாகத் தரையிறங்கிக் கொண்டிருந்தது.

காலடிச் சத்தம் கேட்டு சடாரென விழித்தாள் ராம்சிங்கின் மகள். கூடாரத்துக்கு வெளியே சில உருவங்கள் நிழலாடின. பயத்தில் எச்சிலை விழுங்கிக் கொண்டாள். தன் தந்தையை அவள் எழுப்ப முற்பட்ட கணத்தில், முகத்தைத் துணியால் கட்டியிருந்த மூன்று குண்டர்கள் கூடாரத்துக்குள் நுழைந்தனர்.

அடுத்த நொடியில் ராம்சிங், அவரது மனைவி, மகள் மூவரின் வாய்களும் கட்டப்பட்டன. அந்த இளம்பெண் கூடாரத்தை விட்டு வெளியே ஓடினாள். ஒரு குண்டன் அவளைத் தரையில் தள்ளிவிட்டு, பிடித்துக் கொண்டான். மற்ற இருவரும் வேகவேகமாக ராம்சிங், அவரது மனைவியின் கை, கால்களைக் கட்டிப் போட்டனர். மூன்று குண்டர்களும் அந்தப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு ஓட ஆரம்பித்தனர். மூன்றே நிமிடத்தில் நடந்து முடிந்துவிட்ட சம்பவம். தூரத்துக் கூடாரத்தில் யாரோ பலமாகக் குறட்டைவிடும் சத்தம் சன்னமாகக் கேட்டது. ராம்சிங் சத்தமின்றி அழுதுகொண்டிருந்தார்.

'என்னை விடுங்கள்...' - தன் வாயில் கட்டப்பட்டிருந்த துணியை அவிழ்த்து எறிந்துவிட்டு, கதற ஆரம்பித்தாள். பலத்தையெல்லாம் திரட்டி, தன்னைத் தூக்கிக் கொண்டு ஓடும் குண்டனின் முதுகில் குத்த ஆரம்பித்தாள். அது அவனுக்கு மசாஜ் செய்வது போலத்தான் இருந்தது. திமிறினாள். அந்த முரட்டுப் பிடியிலிருந்து விடுபடப் பார்த்தாள். ம்ஹூம், முடியவில்லை.

டக்கென ஒரு மரத்தின் கிளையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். அதில் நிலை தடுமாறிய அந்தக் குண்டன், தரையில் விழுந்தான். மரக்கிளையிலிருந்து கீழே குதித்து ஓடத்

தொடங்கினாள். மானின் வேகம். ஆனால் என்ன செய்ய? குண்டர்களுக்கு சிறுத்தையின் வேகத்தில் ஓடத் தெரிந்திருந்தது.

இலகுவாக விரட்டிப் பிடித்தார்கள். கீழே விழுந்து புரண்டாள். அவர்கள் நெஞ்சில் எட்டி உதைத்தாள். நகத்தால் பிராண்டி விட்டாள். கையில் கிடைத்த மரக்கட்டையால் அடித்தாள். தன்னால் ஆனமட்டும் எதிர்ப்புக் காட்டினாள். பிரயோசனமில்லை. குண்டர்கள் பிடித்து இழுத்ததில் அவளது உடைகள் கிழிந்து தொங்கின.

தோளில் புடலங்காயைப் போட்டுக் கொண்டு நடப்பது போல, ஒரு குண்டன் அவளைத் தூக்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். 'யாராவது என்னைக் காப்பாற்றுங்கள்...' - அவளது குரல் காட்டில் எக்கோவுடன் ஒலித்துச் சிதறியது.

சினிமா என்றால் சரி. கதாநாயகன் எங்கிருந்தோ குதிப்பார். அவனது தலையின் மேலிருந்து, பாதம் வரை கேமரா ஏறி ஏறி இறங்கும். பில்ட் அப் பின்னணி இசை பின்னியெடுக்கும். டிஷ்யூம் டிஷ்யூம் சண்டை ஆரம்பமாகும். முடிவில் குண்டர்கள் தெறித்து ஓடுவார்கள் அல்லது எழவே முடியாமல் கவிழ்ந்து கிடப்பார்கள். ஒரு மரத்துக்குப் பின்னால், கதாநாயகி மார்பின் குறுக்கில் கைகளை வைத்துக் கொண்டு நிற்பாள். கதாநாயகன், ஏக உத்தமனாக முகத்தைத் திருப்பிக் கொண்டு, தன் மேல் சட்டையை கழற்றிக் கொடுக்க, அவள் தன் கையை மட்டும் வெளியே நீட்டி, அதை வாங்கி அணிந்துகொள்வாள். நன்றி, அன்பு, காதல், வெட்கம் எல்லாம் சரிவிகிதத்தில் கலந்த ஒரு மசாலாப் பார்வையை வீசுவாள். கதாநாயகனும் அப்படியே.

பின்னணியில் தம்தன தம்தன தம்தன...

அப்போது சினிமா வந்திருக்கவில்லை. இருந்தாலும் அடர்ந்த காட்டில், விழுதுகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டே வந்து குதிக்கும் டார்ஜான் போல, வந்த குதித்தார் அந்தக் கதாநாயகன். நான்காவது கியரில் தறிகெட்டு ஓடிக் கொண்டிருந்த குண்டர்கள், சடன் பிரேக் போட்டுக் குலுங்கி நின்றார்கள்.

அந்தக் கதாநாயகன் அணிந்திருக்கும் டர்பன் அழகா, அல்லது அவர் அணிந்திருப்பதால் டர்பனுக்கு அழகா என்று முடிவெடுக்கவே முடியாத கம்பீரம். கருகரு மீசை. முகம் முழுவதும் பரவிக் கிடக்கும் தாடி. மயிர் போர்த்திய மேலுதடு. மடித்து வைத்த கர்ச்சீப் போல கீழுதடு. பார்வையாலேயே குத்தி ரத்தம் வரவழைக்கக்கூடிய கூர்மையான கண்கள். (ஒரு சீக்கியக் கதாநாயகனின் முகத்தை வேறெப்படித்தான் வருணிக்க முடியும்?)

விரல்களை மடக்கி, முஷ்டியை ஓங்கி, அந்தக் குண்டனின் வயிற்றில் ஒரே குத்து. பெண்ணைக் கீழே போட்டு விட்டு, சரிந்து விழுந்தான். அந்தப் பெண்ணுக்குக் கை கொடுத்துத் தூக்கினார். இழுத்துத் தன் பின்னால் நிற்க வைத்துக் கொண்டார். அடுத்த சில நிமிடங்களுக்கு ராக்கி ராஜேஷ், கனல் கண்ணன், விக்ரம் தர்மா இல்லாமலேயே அங்கொரு சண்டைக் காட்சி நடந்துமுடிந்தது.

குண்டர்கள் அடி தாங்காமல் ஓடி மறைந்தனர். கதாநாயகன், அந்தப் பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தார். எங்கிருந்தோ சில அரண்மனைக் காவலர்களும், இரண்டு பணிப்பெண்களும் எதிரில் வந்தனர்.

‘மகாராஜா வாழ்க!’ வணங்கி நின்றனர்.

‘இந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் செல்லுங்கள்.’ உத்தரவிட்டார். அந்தப் பெண் ஆச்சரியத்தில் திக்குமுக்காடிப் போனாள்.

‘அட, என்ன அதிசயம் இது! நம்மை அந்தக் குண்டர்களிடமிருந்து காப்பாற்றியது மகாராஜாவா? எவ்வளவு வீரம்! அடி ஒவ்வொன்றும் இடி மாதிரியல்லவா இறங்கியது. மகாராஜாவே வந்து காப்பாற்றுமளவுக்கு நான் என்ன பாக்கியம் செய்தேன்?’

அவள் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றாள். அந்தத் தழுதழுத்த பார்வையில் நன்றிக் கணைகள் தவழ்ந்தன. மகாராஜா அமைதியான புன்னகையோடு அதை ஏற்றுக் கொண்டார்.

நபா அரண்மனை. அந்த மூன்று குண்டர்களும் கைகள் கட்டப்பட்ட நிலையில் மகாராஜாவின் முன் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர். மகாராஜா என்ன தீர்ப்பு சொல்லப்போகிறார் என்று மக்கள் எல்லோரும் காத்திருந்தனர். கூட்டத்தில் ராம்சிங்கும் நின்று கொண்டிருந்தார். முகம் முழுக்க மகிழ்ச்சி. காரணம் அவளது மகள் அரண்மனையின் மாடத்தில், தகதக ராஜ உடைகளோடு நின்று கொண்டிருந்தாள்.

‘இந்த மூவருக்கும் ஏழாண்டுகள் கடுங்காவல் தண்டனை விதிக்கிறேன்’ மகாராஜாவின் வார்த்தைகள் முற்றுப்புள்ளியைத் தொட்ட மறுகணம் மூவரும் சிறைக்கு அழைத்துச் செல்லப் பட்டனர்.

‘மகாராஜா வாழ்க! வாழ்க!’

●

சொன்னபடி காரியத்தைக் கனகச்சிதமாக முடித்ததால், அந்த மூன்று குண்டர்களுக்கும் தங்க நகைகளும், வெள்ளிப் பணமும், ஏகப்பட்ட பரிசுகளும் வழங்கப்பட்டன. அவற்றை வாங்கிக் கொண்டு அவர்கள் சிறையிலிருந்து வெளியேறினார்கள்.

இதுவரை நகர்ந்த கதையில், இந்த இடத்தில் ஒரு டைட்டில் கார்டு போட வேண்டியதிருக்கிறது.

கதை

திரைக்கதை

வசனம்

இயக்கம்

மகாராஜா ரிபுதாமன் சிங்



# ஆளுயர அல்லி

போகிறபோக்கில் இருமல் வரலாம், தும்மல் வரலாம், விக்கல்கூட வரலாம். காதல் வந்தால்? அதுவும் அடிக்கடி வந்தால்? நபா மகாராஜா ரிபுதாமன் சிங்குக்கு (Ripudaman Singh) அப்படியொரு நோய்தான் இருந்தது. கண்கவர் பெண்களைக் கண்டவுடன் கடகடவெனப் பரவும் காதல் நோய்.

அதற்கு மருந்து? வேறென்ன காதலிக்கப்படும் பெண்தான். ஜிகுஜிகு உடைகள், தகதக நகைகள் அணிந்து கொள்வார். அந்தப் பெண்ணின் இருப்பிடம் தேடிச் சென்று, அவள் முன் மண்டியிட்டு, ஸ்டைலாக ஒற்றை ரோஜாவை நீட்டுவார். 'ப்ரியசகி, ஐ லவ் யூ!' சொல்வது மகாராஜாவாகவே இருக்கட்டும், எல்லாப் பெண்களும் காதலை ஏற்றுக் கொள்வார்களா என்ன? அதுவும் ஏற்கெனவே திருமணங்கள் ஆனவரைப் போய்க் காதலிக்க எத்தனை பேருக்குத்தான் மனம் வரும்?

காதல் ஏற்றுக் கொள்ளப்படாவிட்டால் வேறு யார் மூலமாவது தூது விடுவார். அந்தப் பெண்ணின் பெற்றோர்களிடம் கரும்புச் சாறு தடவிய சொற்களால் பேசிப் பார்ப்பார். அப்படியும் நடக்காவிட்டால்? வற்புறுத்தி, மிரட்டிப் படிய வைப்பதெல்லாம் மகாராஜாவுக்குப் பிடிக்கவே பிடிக்காத விஷயம். தான் விரும்பும் பெண்ணுக்கு, தன் மீது தானாக ஈர்ப்பு வந்து காதலிக்க வேண்டும் என்பதுதான் அவரது லவ்ஷ்ரென்ஸ் பாலிஸி.

அப்படித் தானாக ஈர்ப்பு வரவழைப்பது எப்படி என்று உப்பரிகையில் உட்கார்ந்து யோசிப்பார். கதை, திரைக்கதை, வசனமெல்லாம் உருவாகும். அதுதான் பார்த்தோமே, காட்டில் கடத்தல் நாடகம் நடத்தி, ஒரு பெண்ணைக் கவர்ந்திழுத்த

கதையை. அப்படி மகாராஜா இயக்கிய படங்கள் பெரும்பாலும் தோல்வி அடைந்ததில்லை. காதலாகி, கசிந்துருகி, அந்தப்புரத்தில் போய்தான் முடிந்திருக்கின்றன.


மகாராஜா ரிபுதாமன் சிங்

அன்று மகாராஜா நகர்வலம் வந்து கொண்டிருந்தார். நாடு நன்றாக இருக்கிறதா, மக்கள் சுபிட்சமாக இருக்கிறார்களா, சந்தோஷமாக இருக்கிறார்களா என்றெல்லாம் நோட்டமிடும் நகர்வலம் அல்ல அது. கண்ணுக்கு லட்சணமாக, புதிய பெண்கள் தென்படுகிறார்களா என்று கண்டுபிடிப்பதற்கான ரோமியோ வலம். அப்போது வீதியில் நடந்து வந்து கொண்டிருந்த ஆளுயர அல்லியைக் கண்டார்.

பெண்களை வருணிப்பதில் எழுத்தாளர்களுக்குப் பிசுனாரித்தனம் வந்துவிட்டது. இமேஜ் பிரச்சனையோ என்ன இழவோ? நமக்கென்ன போச்சு? ஆசை தீர வருணித்துவிடுவோம்.

ஆனால் உச்சியிலிருந்து ஆரம்பிப்பதா, பாதத்திலிருந்து ஆரம்பிப்பதா என்று ஒரு குழப்பம் இருக்கிறது. உங்களுக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம். இரண்டுக்கும் இடையே, இடையிலிருந்து ஆரம்பிக்கலாமா? குடுகுடுப்பைக்காரனின் இரண்டு விரல்களுக்கு இடையே குலுங்கும் சிறு உடுக்கைக்கு வடிவம் கொடுத்த இடை. இடைக்கு மேலே இடைவெளி தெரியவில்லை. இடைக்குக் கீழ் முளைத்திருப்பது கால்களா, கண்ணாடித் தம்ளர்களா? ரசிக்கத் தெரிந்த கண்களுக்கு, கிராஃபிக்ஸ் இல்லாமலேயே அந்தப் பாதம் பதிந்து செல்லும் இடங்களிலெல்லாம் தாமரை பூக்கும். பேரழகு முகத்தைச் சுமக்க மாட்டாமல் சுமக்கிற வழுக்குக் கழுத்து. ஒரு சொட்டுப் பனித்துளியை விட்டுப்பார்க்கத் தோன்றாதுபோனால் பிறவி எடுத்துப் பிரயோஜனமில்லை. சிமிழ்ப் புன்னகை திறக்கும் குமிழ்க் கண்கள், சறுக்கு மரம்போல் சரியும் நாசி. சரியும் இடத்தில் விரியும் இதழ்கள். குளிர் சாதனப் பெட்டியில் வைத்த பால் பாக்கெட் போல பக்கத்துப் பிரதேசங்களான கன்னங்கள். அ, அந்தக் கூந்தல் - வேண்டாம் போதும்.

நமக்கு வரும் அதே பெருமூச்சு சமஸ்தானத்துச் சக்கரவர்த்திக்கு வராதா? 'இதோ வந்து விட்டேன்' என்று காதல் சமிக்ஞை செய்தது. அவரது இதயம் வெளியே குதித்து அந்தப் பெண்ணின் பின்னால் ஓட ஆரம்பித்தது.

'யாரவள்? சம்மதமா என்று கேட்டு வாருங்கள்.'

கட்டளையிட்டார். இப்படித் தனக்குக் காதல் வரும்போதெல்லாம் தூது அனுப்ப தனிப்படை ஒன்றை வைத்திருந்தார். மகாராஜாவின் காதல் நாடக நடவடிக்கைகளை ரகசியமாக நிறைவேற்றுவதற்கென்றே ஏற்படுத்தப்பட்ட படை அது.

'மகாராஜாவுக்கு வணக்கம். அந்தப் பெண்ணின் பெயர் ப்ரீத்தம் கவுர். நம் அரசாங்கத்தில் உயர் அதிகாரியாகப் பணியாற்றும் நபர் ஒருவரின் மகள்தான். மன்னிக்க வேண்டும், அந்தப் பெண் சம்மதமில்லை என்று கூறிவிட்டாள்.'

அடுத்து என்ன செய்யலாம்? மகாராஜாவின் மூளைக்குள் மன்மதன் உட்கார்ந்துகொண்டு யோசித்தான்.

‘அவளிடம் நான் நேரடியாகப் பேச விரும்புகிறேன். அழைத்து வாருங்கள்.’

அந்தத் தூதுவன் மீண்டும் ப்ரீத்தமிடம் சென்று பேசிப் பார்த்தான். மகாராஜா என்ற ஜிகினாவுக்கெல்லாம் மயங்கும் பாமரப் பெண் அல்ல அவள். அந்தக் காலத்திலேயே (1912) பஞ்சாப் பல்கலைக்கழகத்தில் பட்டப்படிப்பு முடித்தவள். ‘முடியவே முடியாது’ என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லிவிட்டாள்.

‘அந்தப் பெண்ணின் தந்தையை அழைத்து வாருங்கள்’ மகாராஜா அடுத்த கட்டளையைப் பிறப்பித்தார். ‘மகாராஜா சந்திக்க விரும்புகிறார்’ என்ற செய்தி மட்டும் ப்ரீத்தமின் தந்தைக்குச் சென்றது.

அவருக்குள் படபடப்பு. என்னவாக இருக்கும்? நம் வேலையில் எதுவும் தவறாகச் செய்து விட்டோமா? வேறு எதுவும் முக்கியமான பொறுப்பு கொடுக்கப் போகிறாரா? இதுவரை அவருடன் நமக்கு நேரடித் தொடர்பு இருந்ததில்லையே? ஏன் ரகசியமாகச் சந்திக்கச் சொல்ல வேண்டும்? எக்கச்சக்கமான கேள்விகள் அவரது ரத்த அழுத்தத்தை அதிகரித்தன.

‘மகாராஜா வாழ்க!’ - வணக்கம் தெரிவித்துப் பணிவாக நின்றார்.

‘ஓ நீங்கள்தான் ப்ரீத்தம் கவுரின் தந்தையா?’

‘ஆமாம்’ இவரென்ன நம் மகளைப் பற்றிக் கேட்கிறார். அவளை இவருக்கு எப்படித் தெரியும்? ஒன்றுமே புரியவில்லையே.

‘உங்களுக்கு ஒரு நல்ல செய்தி வைத்திருக்கிறேன். உங்கள் மகள் விஷயத்தில்தான். ப்ரீத்தம் கவுர், நல்ல வடிவுடைய அழகான பெண். எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. அவளை நான் திருமணம் செய்துகொள்ள ஆசைப்படுகிறேன். இதில் உங்களுக்கு எந்த ஆட்சேபனையும் இருக்காதென்று எண்ணுகிறேன்.’

இப்படிப்பட்ட பட்டாசு வார்த்தைகளை அவர் எதிர்பார்க்கவில்லை. மகாராஜா வாய்விட்டுக் கேட்கிறாரே என்று உணர்ச்சிவசப்பட்டு உருகிப் போகவும் இல்லை. படித்தவர். பணம் காசுக்குப் படியும் நபரல்ல. ஒரு மரியாதைக்காக உடனடியாகப் பதில் சொல்லாமல் நின்று கொண்டிருந்தார். ‘இதில் என்ன யோசிப்பதற்கு இருக்கிறது? சம்மதம் என்று சொல்லுங்கள்’ மகாராஜா அவரது மௌனத்தைக் கிளறிவிட்டார்.

‘கொஞ்சம் கால அவகாசம் கொடுங்கள் மகாராஜா.’

‘சரி. எடுத்துக் கொள்ளுங்கள். சம்மதம் என்ற பதிலை மட்டுமே எதிர்பார்க்கிறேன். இப்போது நீங்கள் போகலாம்.’

ப்ரீத்தமின் தந்தை மிகவும் குழம்பிப் போனார். என்னடா இது தர்மசங்கடம்? இதைப் பற்றி ப்ரீத்தமிடம் பேசலாமா, வேண்டாமா? சம்மதமில்லை என்ற விஷயத்தை எப்படி மகாராஜாவிடம் கூறுவது? அப்படிக் கூறினால் நம் உயிருக்கு ஆபத்தாகி விடுமோ? நம் மகளைக் கடத்திக் கொண்டுபோய்விடுவார்களா?

அவர் வீட்டுக்குள் நுழைந்ததும், ப்ரீத்தமே இந்த விஷயத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். அவள் தைரியமாக 'முடியாது' என்றாள். அவருக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது. ப்ரீத்தமின் தாய் பயத்தில் அழுது கொண்டிருந்தாள்.

மறுநாள் காலை. டொக் டொக். ப்ரீத்தமின் தந்தை கதவைத் திறந்தார். 'மகாராஜா உங்களிடம் இதைக் கொடுக்கச் சொன்னார்' பட்டுத்துணியால் சுற்றப்பட்ட ஒரு பெட்டி ஒன்றைக் கொடுத்துவிட்டு மறைந்தான் ஒருவன். அதனுள் ஒரு காசுமாலை. மறுநாள் வேறொரு நகை. இப்படித் தினமும் ஒரு பரிசுப்பொருள். எதுவுமே ப்ரீத்தமைக் கவரவில்லை. அவளது இதயம் அரண்மனைக்குப் போகாமல், அவளிடமேதான் இருந்தது.

ப்ரீத்தமின் தேஜஸில் தொலைந்துபோன மகாராஜாவுக்கு, நாளாக நாளாக காதல் கந்து வட்டியாக வளர்ந்துகொண்டே போனது. புரவிகள் பூட்டிய தேரில் உருட்டுக்கட்டைகளோடு அடியாள்களை அனுப்பாமலேயே சம்மதம் வாங்கிவிடலாம் என்றே நினைத்தார். ஆனால் ஒரு தலை ராகமாகவே நாள்கள் நகர்ந்தன. ஏற்கெனவே வைத்திருந்ததால், மகாராஜாவால் சோக தாடி கூட வளர்க்க முடியவில்லை. மனம் தளராமல் தூதுகளைத் தொடர்ந்தார்.

ஆனால் இந்த ராஜ தொல்லைகளினால், ப்ரீத்தமுக்கு வெறுப்பும், அவளது தந்தைக்குப் பயமும் வளர்ந்துகொண்டே போயின. எப்படித் தப்பிக்கலாம்? ப்ரீத்தமுக்கு அவளது தந்தை ரகசியமாக வேறு வரன் பார்க்க ஆரம்பித்தார். அந்த ஊர்ப் பெரிய மனிதர்களில் ஒருவரான ஷாம்ஷெர் சிங்கின் மகனுக்கு, ப்ரீத்தமைப் பேசி முடித்தார். திருமண நாள் குறிக்கப்பட்டது.

'அடியேய் ப்ரீத்தம், இவ்வளவு நாள் என் காதல் முகத்தை மட்டும்தான் பார்த்திருக்கிறாய். இனிமேல் பாரடி என் வில்லன் முகத்தை' என்று நம்பியார் வசனத்தை மனத்துக்குள்ளேயே சொல்லிக் கொண்டார் ரிபுதாமன். ஷாம்ஷெர் சிங்கை வரவழைத்தார்.

'ஷாம்ஷெர் சிங், நலமா?'

'நன்றாக இருக்கிறேன் மகாராஜா. என் மகனுக்குத் திருமண ஏற்பாடுகள் செய்துள்ளேன்.'

'உங்கள் மகனுக்கு சுபகாரியம் நடக்க வேண்டுமா? காரியம் நடக்க வேண்டுமா? நீங்களே நன்றாக நிதானமாக யோசித்துச் சொல்லுங்கள்.'

ஷாம்ஷெர் சிங்குக்குத் தொண்டை வறண்டு போய்விட்டது. 'தங்கள் சித்தம் என் பாக்கியம்' என்று அங்கிருந்து கிளம்பி கல்யாண ஏற்பாடுகளை நிறுத்தினார். ப்ரீத்தம் நொறுங்கிப் போனாள்.

'கடவுளே! என்ன செய்வேன்? என் பெண்ணை நல்ல இடத்தில் திருமணம் செய்து கொடுக்க வேண்டுமென்று நினைத்தது தவறா? இனிமேல் வேறு இடத்தில் மாப்பிள்ளை பார்த்தாலும் இதே கதிதான். இனி இந்தச் சமஸ்தானத்தில் நம்மால் வாழவே முடியாது.'

ஊரைக் காலி செய்து, வேறெங்காவது சென்று விடலாம் என்று முடிவு செய்தனர். அதென்ன சாதாரண விஷயமா? 'ப்ரீத்தம் காலையில் பாவ்பாஜி சாப்பிட்டாள். மதியம் இரண்டு மணி அளவில் பலத்த சத்தத்தோடு தொடர்ந்து இரண்டு முறை தும்மினாள். மாலையில் குர்பானி படித்தாள். இரவு குறட்டை விடாமல் தூங்கினாள்' என்று ஒவ்வொரு நடவடிக்கையும் கவனித்து, மகாராஜாவுக்கு அறிக்கை சமர்ப்பிப்பதற்கெனத் தனிப் படையினர் அந்த வீட்டைச்

சுற்றி வலம் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் கண்ணில் மிளகாய்ப் பொடியையோ, மசாலாப் பொடியையோ தூவி விட்டுத் தப்பிக்க வேண்டும். எப்படி?

ஜம்போ சைஸ் லாரி பிடித்து, அலுங்காமல் குலுங்காமல் பொருள்களை ஏற்றி வீட்டைக் காலி செய்வதெல்லாம் முடியாது என்பதால், உடைகளையும் நகைகளையும் பணத்தையும் சிறிய மூட்டைகளாகக் கட்டிக் கொண்டார்கள். எத்தனையோ வருடங்கள் வாழ்ந்து அனுபவித்த வீடு. விட்டுச் செல்வதென்பது நெஞ்சை அழுத்தியது. அந்தப்புரம் மிரட்டியதால், தம்மைத் தாமே தேற்றிக் கொண்டனர். இன்று இரவு தப்பித்துவிடலாம். ஊர் எல்லை தாண்டிவிட்டால் போதும். பிரச்னையில்லை.

ஊர் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கியது. ப்ரீத்தமின் தந்தை வீட்டுக்குள்ளிலிருந்தபடி மெல்ல சன்னலை மட்டும் திறந்து பார்த்தார். யாருமில்லை. மெல்ல வாசற்கதவைத் திறந்து வெளியே எட்டிப்பார்த்தார். வீதிக்கு வந்து சுற்றும் முற்றும் பார்த்தார். தெருநாய் மட்டுமே வாலாட்டிக் கொண்டிருந்தது. வீட்டைப் பூட்டினார்கள். கிளம்பினார்கள். வேகமான நடை. கிட்டத்தட்ட ஓட்டம். அவர்கள் நான்கு தெருக்கள் தாண்டிச் செல்வதற்குள் மகாராஜாவின் காதுகளுக்கு செய்தி சென்று சேர்ந்தது.

'விடாதீர்கள். உடனே அவர்களைக் கைது செய்யுங்கள்.'

தப்பித்துவிடமுடியுமா என்ன? எல்லையில் வைத்துக் கைது செய்யப்பட்டனர். நேரடியாகச் சிறைக்கு அனுப்பப்பட்டனர். மூவரும் ஒரே அறையில் அடைக்கப்பட்டனர் என்பது மட்டுமே ஆறுதல்.

மகாராஜா காதலிக்கும் பெண் என்பதால், ப்ரீத்தமுக்கு ராஜ மரியாதையெல்லாம் கிடைக்க வில்லை. மாறாக, யார் யாரோ வந்து மிரட்டி விட்டுப் போனார்கள். ஏகப்பட்ட விசாரணைகள். கவனிப்புகள். வாயில் வைக்க முடியாத உணவு என்று பல கொடுமைகள். கல் வைத்துப் பழுக்கச் செய்ய காதல் என்ன மாங்காயா? மகாராஜா மீதான வெறுப்பு ப்ரீத்தமுக்குள் அதிகரித்துக் கொண்டே போனது.

அடுத்த நாள். ப்ரீத்தம் தரதரவென இழுத்துச் செல்லப்பட்டாள். தனிச் சிறையில் அடைக்கப் பட்டாள். அவளது தாயும் அப்படியே. மூவரும் ஒருவரை ஒருவர் பார்க்கக் கூட முடியவில்லை. தனித்தனியே அழுது கொண்டிருந்தனர்.

மகாராஜா யோசித்துக் கொண்டிருந்தார். 'என் தேவதையே! உன்னை என் இதயச் சிறைக்குள் அடைக்கத்தான் நினைத்தேன். நீயோ நிஜமான சிறைக்குள் அடைக்க வைத்து விட்டாய். என்ன செய்தால் என் காதலை ஏற்றுக் கொள்வாய்?' மஞ்சத்தில் உட்கார்ந்து மணிக்கணக்கில் யோசித்தார். இனி எந்த ஜென்மத்திலும் மகாராஜாவின் செட்-அப்பில் ப்ரீத்தமின் மனத்தைக் கவர முடியாது என்று மட்டும் அவருக்குப் புரிந்தது.

மறுநாள் காலை. அந்தச் சிறைக்குப் புதிய அதிகாரி ஒருவர் வந்தார். அவர் பெயர் பூட்டா.



# 4

# காதல் பாம்புகள்

கமல்ஹாசனுக்கு மேக்கப் போடும் கலைஞர்களின் தாத்தாக்கள் யாரும் நபா சமஸ்தானத்தில் இருந்தார்களா என்று தெரியவில்லை. ஆனால் மகாராஜா ரிபுதாமன் சிங், மாறுவேடம் போட்டுக் கொண்டு, பூட்டா என்ற பெயரில் அதிகாரியாக அந்தச் சிறைக்கு வந்தபோது அடையாளமே தெரியவில்லை. முக்கியமாக மகாராஜாவின் மனம் விரும்பும் மரிக்கொழுந்து ப்ரீத்தமுக்கும் அவளது பெற்றோருக்கும். என்ன செய்ய ? கடவுள் சிலரைப் பிறவி தத்திகளாகவே படைத்துவிடுகிறார்.

சிறையின் தலைமைக் காவல் அதிகாரி பக்தவார் சிங், பூட்டாவுக்கென தனியாக ஓர் அறையை ஒதுக்கிக் கொடுத்தார். வேறெங்கே, ப்ரீத்தம் அடைத்து வைக்கப் பட்டிருந்த அறைக்குப் பக்கத்து அறைதான். நினைக்கும்போதெல்லாம் பார்த்துக் கொள்வதற்கும், பார்க்கும்போதெல்லாம் நினைத்துக்கொள்வதற்கும் வசதியாக.

‘பெண்ணே, உன் கண்களில் களைப்பு தெரிகிறது. ஆனால், குற்றம் தெரிய வில்லை. உன்னைச் சிறையிலடைக்கும் அளவுக்கு எங்கே சிக்கிக்கொண்டாய் ?’

கம்பிகளுக்கு அப்பால் மௌனமாக அமர்ந்திருந்த ப்ரீத்தம், தலையை நிமிர்த்தி பூட்டாவை அழுத்தமாகப் பார்த்தாள். பதில் எதுவும் பேசவில்லை.

‘சிறைக்குள் சதா சர்வ காலமும் கள்வர்களையும், கல் நெஞ்சம் படைத்தவர் களையும், அயோக்கியர்களையுமே பார்த்துப் பார்த்து பழகிப் போன எனக்கு

உன் முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் அமைதி கிடைக்கிறது. இந்த வாழ்க்கை மேல் தனி விருப்பம் உண்டாகிறது. நான் சொல்வதை நீ எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள். நீ வந்த பின்பு இந்தச் சிறைக்கூடம் அபூர்வமாகப் பூத்துக் குலுங்குவதுபோல் உணர்கிறேன்.'

சாக்லெட் வார்த்தைகளைச் சொல்லிவிட்டு நகர்ந்தார் பூட்டா. மெல்ல மெல்ல ப்ரீத்தமின் மனம் பூட்டாவின் வார்த்தைகளைச் சுவைக்க ஆரம்பித்தது. அவளுடன் பேசுவதற்கான சந்தர்ப்பங்களைத் தேவைப்படும் போதெல்லாம் உருவாக்கினார் பூட்டா.

'நேற்று இரவு முழுவதும் அந்த அறையில் இருக்கும் பெரியவர் காய்ச்சலால் அவதிப்பட்டார். காலையில்தான் வைத்தியம் பார்க்க ஏற்பாடு செய்தேன். இப்போது பரவாயில்லை. நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்கிறார்.'

'எந்த அறை?' என்றாள் ப்ரீத்தம் குழப்பத்துடன்.

'உன் பெற்றோர்கள் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறார்களே அந்த அறை. அவர்தான் உன் தந்தை என்று எனக்குத் தெரியாது. உன் தாய்தான் உன்னிடம் விஷயத்தைச் சொல்ல முடியுமா என்று தயக்கத்துடன் கேட்டார்கள்.'

ப்ரீத்தமுக்கு கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது.

'அய்யோ... பெண்கள் அழுதால் எனக்கும் பூமிக்கும் தாங்கவே தாங்காது. கதவைத் திறந்துவிடச் சொல்லுகிறேன். உன் தந்தையைப் பார்த்துவிட்டு வா.'

கதவைத் திறந்த கரங்களுக்குக் கண்ணீரால் நன்றி சொன்னபடியே ஓடிப்போய்த் தன் பெற்றோருடன் ஆசை தீரப் பேசினாள். 'போதும் நேரமாயிற்று. வா' என்றெல்லாம் யாரும் அவளை அங்கிருந்து கிளம்பச் சொல்லவில்லை. ஒரு மணி நேரம் கழித்து அவளே தன் அறைக்குத் திரும்பினாள். பூட்டா வந்து நின்றார்.

'நன்றி' ப்ரீத்தமின் இதழ்கள் ஒற்றை வார்த்தையைத்தான் உச்சரித்தன. ஆனால் அவளது பார்வையில் ஒரு நன்றிப் பெருங்கடலே தென்பட்டது. பூட்டாவா கொக்கா? பெருந்தன்மைப் பேரொளியை முகத்தில் ஏந்தி அடக்கமுடன் அனைத்தையும் ஏற்றுக்கொண்டார்.

'எனக்கு எப்படிச் சொல்வதென்று தெரியவில்லை. என்னை உன் நெருங்கிய உறவினராக நினைத்துக் கொள். அல்லது உன் உறவுகளுக்கெல்லாம் ஒரு படி மேலே. என்ன உதவி வேண்டுமானாலும் தயங்காமல் என்னிடம் கேள்' என்று கூறிவிட்டுத் தன் கையிலிருந்த ஒரு துணி மூட்டையை நீட்டினார். ப்ரீத்தமின் புருவங்கள் கேள்விக்குறிகளாக வளைந்தன.

'ஆண்கள் என்றால் பிரச்சனையில்லை. ஆனால் உன்னைப் போல் இளம்பெண்கள் இந்த மாதிரி கொடூர சிறைகளில் அடைபட்டிருப்பது என்பது உலக மகாக் கொடுமை. என்ன செய்ய? நல்ல உடைகள்கூட உனக்கில்லை. அதனால்தான் இவற்றை வாங்கி வந்தேன். அணிந்துகொள்.'

ப்ரீத்தம் எந்த மறுப்பும் கூறவில்லை. வாங்கிக் கொண்டாள்.

வார்த்தைகளால், செயல்களால், கவனிப்புகளால் ப்ரீத்தமின் இதயத்தை ஆக்கிரமிக்கத் தொடங்கினார் பூட்டா. நினைத்த நேரமெல்லாம் அவளால் பெற்றோரைப் பார்க்க முடிந்தது. ப்ரீத்தமின் பெற்றோர்களுக்கும் பூட்டாவின் மேல் நல்ல மதிப்பு உருவாகத் தொடங்கியது. அவர்களுக்கு நல்ல உணவு கிடைத்தது.

ப்ரீத்தம், தன் வளையல்களைக் குலுக்கிச் சிணுங்கினால் போதும். பக்கத்து அறையிலிருந்து டொட்டடொய்ங் என்று துள்ளிக் குதித்து வந்துவிடுவார் பூட்டா. சிறை அதிகாரி என்ற பெயரில் வந்த மகாராஜா, ப்ரீத்தமின் அறை அதிகாரியாக மாறிப் போனார். தீவிர நிலக்கடலை சாகுபடி. அமோக விளைச்சல். சில நாட்கள் இரவெல்லாம்கூடப் பேச்சு நீண்டது. 'சங்கீத ஸ்வரங்களுக்குள் ஏழே கணக்கா? இன்னும் இருக்கா? என்னவோ மயக்கம்...'

பேசிக் கொண்டே இருப்பதில் மட்டும் என்ன சுகம்? மங்கையின் மனத்தில் இடம் பிடித்தா யிற்று. அதையும் தாண்டிய ஒரு நெருக்கம் சே, ஸ்பரிசம் தானாக உருவாக வேண்டாமா? 'ஐ லவ் யூ டா' என்று அவள் உதடுகள் கொஞ்சித்தள்ள வேண்டாமா? எல்லாமே தானாக உருவாகுவது போல் உருவாக்குவதுதானே ஜெகஜ்ஜால மகாராஜா ரிபுதாமன் சிங்கின் வாடிக்கை. அவர் மூளைக்குள் திட்டம் ஒன்று வந்து குதித்தது.

பூட்டா ஒரு காவலாளியின் காதில் கிசுகிசுத்தார். உடனே அவன் வெளியே கிளம்பினான். சென்ற இடம் பாம்புகளைப் பிடிக்கும் ஒருவனின் குடிசை.

'இரண்டு பாம்புகள் வேண்டும். சாதாரணமானவை போதும். விஷத்தை எடுத்து விடு. இப்போதைக்கு இதை வைத்துக்கொள். மீதியை வேலை முடிந்ததும் தருகிறேன். இரவு சிறையின் வாசலில் உனக்காகக் காத்திருப்பேன். வந்துவிடு.'

இரண்டு பாம்புகள் பிடிக்கப்பட்டன. பிறகு பிடுங்கப்பட்டன. ப்ரீத்தமின் ஜாதகக் கட்டங்களில் ஜலதோஷம், நாகதோஷம் ஏதும் உண்டா என்று தெரியவில்லை, ஆனால் அன்று இரவு அவளுக்கு அந்தத் தோஷம் காத்திருந்தது.

•

ஆந்தைகளின் ஆலாபனை எங்கோ கேட்டுக் கொண்டிருந்தது. பூட்டா தன் கற்பனைக் காட்சியை நிறைவேற்றுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தார். முழங்கால் வரை நீளும் நல்ல பெரிய, கனமான பூட்ஸ்களை அணிந்து கொண்டார். இரும்புத் தடி ஒன்றும் தயாராக இருந் தது. மெல்ல மெல்ல ப்ரீத்தமின் அறையை எட்டிப் பார்த்தார். ஒரு பூங்கொத்து புரண்டு படுத் தது. 'அடிப்பாவி, என் தூக்கத்தைத் தொலைத்துவிட்டுத் தவிக்கிறேன். நீ மட்டும் நித்திரையில் முத்திரை பதிக்கிறாயா? இருடி, உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்.'

'எல்லாம் தயார்' என்று உணர்த்த, வெளியிலிருந்து அந்தக் காவலாளி விநோத சப்தம் எழுப்பி னான். ப்ரீத்தமின் அறைக்குள் ஜன்னல் வழியாக இரண்டு பாம்புகள் விடப்பட்டன. அந்த அழகிய பெண்ணைத் தழுவ அவற்றுக்கு மட்டும் ஆசையிருக்காதா என்ன?

அலறி எழுந்தாள். எழுந்து பாம்பைக் கண்டதும் மேலும் அலறினாள். 'ஐயோ... பா..' தொண்டைக்குழியிலிருந்து வார்த்தைகள் முழுவதுமாக வெளியே வருவதற்குள் ஒரு பாம்பு

அவள் கழுத்தில் ஏறியது. படபடப்போடு எழுந்து நின்றாள். இடையிலிருந்து நழுவி விழுந்த இன்னொரு பாம்பு, கடகடவென காலைச் சுற்றியது. எந்த நேரமும் முத்தமிடத் தயாராக இருக்கும் காதலன் போல இரண்டு பாம்புகளும் 'உஸ்ஸ்ஸ் உஸ்ஸ்ஸ்...' என்று உதடு குவித்துக் காத்திருந்தன.

சத்தம் கேட்டு மற்ற காவலாளிகள் எல்லாம் ப்ரீத்தமின் அறைமுன் வந்து நின்றனர். ஒரு காவலாளி வேகவேகமாகக் கதவில் போடப்பட்டிருந்த பூட்டைத் திறந்தான். ஆனால் யாரும் அறைக்குள் செல்லவில்லை. கர்ம சிரத்தையாக ப்ரீத்தமின் அலறலுக்கு ஒத்து ஊதினார்கள். தன் அறையை விட்டுப் பாய்ந்து வந்தார் பூட்டா. கையில் இரும்புத் தடியெல்லாம் தயாராகவே இருந்தது.

'என்னாயிற்று? என்ன சத்தம்?' வார்த்தைகளில் படபடப்பு.

'அறைக்குள் பாம்புகள் புகுந்து விட்டன.'

'ஆ... பாம்புகளா? நகருங்கள்' என்று ப்ரீத்தம் அறையின் கதவைத் தள்ளிவிட்டு உள்ளே புகுந்தார். 'பயப்படாதே பெண்ணே... நான் வந்து விட்டேன்' என்றபடி அவளது தோளின் மேலிருந்த பாம்பை அநாயசமாக எடுத்துத் தரையில் போட்டார். தடியால் ஒரே அடி. அந்தப் பிராணி அப்பிராணியாகச் செத்து விழுந்தது. இன்னொரு பாம்பு அவசர அவசரமாகத் தரையிறங்கி ஓடப் பார்த்தது. சர்வ கனம் பொருந்திய பூட்ஸ்களால் மிதி மிதியென்று மிதித்தார் வீரமகாராஜா. 'மன்னரின் காதல் வாழ்க' என்று வாழ்த்திவிட்டு அதுவும் மரித்துப் போனது.

பயத்தில் உறைந்துபோயிருந்த ப்ரீத்தம், தாவி வந்து பூட்டாவை இறுக அணைத்துக் கொண் டாள். அவர் மார்பில் முகம் புதைத்து விம்ம ஆரம்பித்தாள். பூட்டாவின் மனம் ஓர் அழகான டூயட்டுக்கு லொகேஷன் தேடிப் போய்க் கொண்டிருந்தது. அளவுக்கு மீறிப் பயந்ததால் அவள் அப்படியே மயங்கிச் சரிந்தாள்.

'நான் எங்கே இருக்கிறேன்?' என்ற புராதனக் கேள்வியுடன் ப்ரீத்தம் கண் விழித்துப் பார்க்கும் போது மறுநாள் பகல் ஆகியிருந்தது. அவள் இமைகள் விரிந்தன, உடன் இதழ்களும் விரிந்தன. காரணம் கண் முன்னால் பூட்டா நின்று கொண்டிருந்தார். அருகில் மருத்துவர்கள் வேறு. எல்லாமே மாறிப் போயிருந்தன. சிறைக்குள் அடைபட்டிருந்த அவளது பெற்றோர்களும் அங்கே சுதந்தரமாக நின்று கொண்டிருந்தனர்.

'ப்ரீத்தம், உன்னையும், உன் குடும்பத்தினரையும் விடுதலை செய்யச் சொல்லி உத்தரவு வாங்கிவிட்டேன். உன் உடல்நிலை தேறியதும் இங்கிருந்து கிளம்பிவிடலாம்.'

ப்ரீத்தம் உதடுகளால் நன்றியையும் கண்களால் காதலையும் சொன்னாள். அன்றைய தினம் முழுவதும் அவளை விட்டகலாமல் கவனித்துக் கொண்டார் பூட்டா. காதல் அங்கு ஆரஞ்சு ஜூஸ் பிழிந்து கொண்டிருந்தது.

மறுநாள். ப்ரீத்தம் பெற்றோருடன் கிளம்பினாள். பூட்டாவைப் பிரிய முடியாமல் அவளது இதயம் ஏங்கித் தவித்தது. பூட்டா, அவளது காதருகே சென்று கிசுகிசுத்தார். 'கவலைப்படாதே! அருகிலிருக்கும் கிராமத்தில் நீங்கள் தங்க ஏற்பாடு செய்துள்ளேன். எனக்குச் சில வேலைகள்

*இருக்கின்றன. உன்னைக் காணாமல் என்னால் மட்டும் இருக்க முடியுமா அன்பே? ஒரு சில நாள்களில் வந்துவிடுகிறேன்.'*

அவளது வலது புறங்கையை பூட்டாவின் தாடி மயிர்கள் மென்மையாகக் குத்தின. அந்த மாட்டு வண்டி மெதுவாக நகர ஆரம்பித்தது. கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து புள்ளியாகித் தொலைந்து போனது.

'என் பிராணநாதன் இன்றாவது வருவாரா?' வழிமேல் விழி, இதயம், காதல் எல்லா வற்றையும் வைத்துக் காத்திருந்தாள் ப்ரீத்தம். ஒரு சில நாள்களில் அந்த கிராமத்துக்கு வந்து சேர்ந்தார் பூட்டா. ராஜ உபசரிப்பு, ராஜாவுக்கே! மாப்பிள்ளை ஆயிற்றே! கல்யாண ஏற்பாடுகள் கோலாகலமாக நடந்தன. ப்ரீத்தமின் கைகள் மெகந்தியாலும், முகம் வெட்கத்தாலும் சிவந்தன.

'ஆயா ப்ரீத் லகதி
ஏக்கல் ஹோய் மே மெய்ன் கோஸரா ஹை...'

அந்தச் சடங்கின் பெயர் சங்கீத். பெண்கள் எல்லோரும் நாட்டுப்புறப் பாடல்களை மகிழ்ச்சி யாகப் பாடி ஆடினர். ப்ரீத்தமின் உறவுக்கார பெண்கள், அவளுக்குப் பால் கலந்த சாதத்தை ஊட்டினர். அது ஒரு சம்பிரதாயம். வெளியே பாங்ரா நடனம் களைகட்டிக் கொண்டிருந்தது. ஆடலுடன் பாடலைக் கேட்டு ரசிப்பதில்தானே... ஹோய்ய்!

திருமண நாள். சிவப்பு நிறச் சேலையில் ப்ரீத்தம். ரோஸ் நிற தலைப்பாகையுடன் பூட்டா. ப்ரீத்தமின் அப்பா, தன் மகளின் கையைப் பிடித்து பூட்டாவிடம் கொடுத்து 'கன்யாதான்' செய்து வைத்தார். குரு கிரந்த் சாகிப்பை (சீக்கியர்களின் புனித நூல்) நடுவில் வைத்து நான்கு முறை வலம் வந்தனர். பின்பு மோதிரம் மாற்றிக் கொண்டனர். ப்ரீத்தமின் சகோதரி முறையிலுள்ள ஒரு பெண், பூட்டாவின் காலணிகளை எடுத்து ஒளித்து வைத்தாள்.

'காலணிகள் வேண்டுமென்றால் மணப்பெண்ணுக்குப் பணம் கொடுங்கள்' என்று கேட்டாள். சம்பிரதாயம்தான். பூட்டா தங்க, வைர, வைடூரிய நகைகளை வழங்கினார். அனைவரும் வாயடைத்துப் போயினர். ப்ரீத்தமின் பெற்றோர் கண்களில் ஆனந்தக் கண்ணீர். திருமண விருந்து முடிந்தது. மேற்படி சடங்குகளுக்கான விஷயங்களை கவனித்துக் கொண்டிருந்தனர்.

'நாங்கள் கிளம்புகிறோம்' என்றார் பூட்டா. யாருக்கும் ஒன்றும் புரியவில்லை. ப்ரீத்தம் மட்டும், 'எங்கே?' என்று கேட்டாள். 'சொல்கிறேன்' என்ற பூட்டா, அவளது கையைப் பற்றிக் கொண்டு நடக்க ஆரம்பித்தார். அவர்களை ஏற்றிக் கொண்டு அந்தக் குதிரை வண்டி விரைந்தது.



5

# அரியணைக்கு ஆள் தேவை!

திருமணம் முடிந்த கையோடு மணமகன், பெண்ணை அழைத்துக்கொண்டு விறுவிறுவென வெளியே கிளம்பினால் எல்லோருக்கும் குழப்பமாகத்தானே இருக்கும். முக்கியமாக மணமகளுக்கு.

'நாம் எங்கே போகிறோம் என்று சொல்லவே இல்லையே?' - ப்ரீத்தம் தயங்கித் தயங்கிக் கேட்டாள். பூட்டா வார்த்தை விரயம் எதுவும் செய்யவில்லை. மெலிதான புன்னகையோடு நிறுத்திக் கொண்டார். கேள்விகள் எல்லாம் கேட்காமல் குதிரைகள் விரைந்து கொண்டிருந்தன.

நபா நகருக்குள் வண்டி நுழைந்தது. ப்ரீத்தமிடமிருந்து அடுத்த கேள்வி வந்து விழுந்தது. 'இங்கே எதற்கு வந்துள்ளோம்? உங்களுடைய முக்கிய உறவினர்கள் யாராவது இங்கே இருக்கிறார்களா?'

பூட்டா முந்தைய அளவு மாறாமல் புன்னகை செய்தார். பெண்களுக்கும் பொறுமைக்கும் சம்பந்தமுண்டா என்ன? ப்ரீத்தமால் சஸ்பென்ஸைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. கேள்விகளைக் கொட்டிக் கொண்டிருந்தாள். வண்டி அரண்மனைக்குள் நுழைந்தது.

'அய்யோ... இங்கே எதற்கு வந்திருக்கிறோம்? அந்த மகாராஜா... அவர்...' அதற்கு மேல் பேச முடியாமல் தடுமாறினாள். பூட்டா வண்டியிலிருந்து கீழே இறங்கினார். அங்கே சிவப்புக் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது என்றெல்லாம் தனியாகச் சொல்லத் தேவையில்லை. ஐந்தாறு சேவகர்கள் ஓடோடி வந்து, நாற்பத்தைந்து டிகிரி முன்னால் வளைந்து, பின்பு அனிச்சையாக வாழ்த்தினார்கள்.

'மகாராஜா வாழ்க! வாழ்க!'

நடுங்கிப் போனாள் ப்ரீத்தம். ரிக்டர் அளவில் ஐந்து. பூட்டா... இல்லையில்லை, அதுதான் வேஷத்தைக் கலைக்கப் போகிறாரே, மகாராஜா ரிபுதாமன் சிங், ப்ரீத்தமை நோக்கித் தன் கையை நீட்டினார்.

'என் இனிய மகாராணி ப்ரீத்தம், இறங்கி வா!'

ப்ரீத்தம் அசையவில்லை. பயம், அவளை பெவிகால் போட்டு அமர வைத்திருந்தது. வார்த்தைகள் வற்றிப் போயிருந்தன. மகாராஜாவிடம் க்ரீம் தடவிய வார்த்தைகளுக்கா பஞ்சம்? பேச ஆரம்பித்தார்.

'அன்பே! முதலில் என்னை மன்னித்து விடு. நான் உன்னிடம் சில பொய்களைச் சொல்லி விட்டேன். தப்பு தப்பு, சில உண்மைகளை மறைத்துவிட்டேன். காரணம் காதல். உன்மேல் எனக்கு ஏற்பட்டுள்ள தெய்வீகக் காதல். உன்னை அடைய இத்தனைக் கஷ்டங்களையும் அனுபவித்தது நான் அல்ல, என் காதல். இப்படியே, இந்த இடத்திலேயே எவ்வளவு நேரம் தான் அமர்ந்திருப்பாய்? என் இதயத்தில் அமர்ந்திருக்கும் உனக்காகக் காத்திருக்கும் சிம்மா சனம் வேறு. தயவுசெய்து என்னோடு அரண்மனைக்குள் வருகிறாயா?'

வேறு வழி? ப்ரீத்தம் மகாராஜாவுக்குக் கைகொடுத்தாள். கீழே இறங்கினாள். அந்த ஐந்தாறு சேவகர்கள் சுருதி மாறாமல் கூறினர். 'மகாராணி வாழ்க! வாழ்க!'

அரண்மனைக்குள் அவள் கைப்பிடித்து அழைத்துச் சென்றார். மைதான அளவு அறைகள், ஜம்போ சைஸ் தூண்கள், வேலைப்பாடமைந்த சுவர்கள், ஆங்காங்கே ஆயுதங்கள், சுவரிலிருந்து தலை நீட்டிக் கொண்டிருக்கும் பாடம் செய்த விலங்குகள், உத்திரத்தில் தலைகீழாக மலர்ந்திருக்கும் வண்ண விளக்குகள், சொகுசு சிம்மாசனங்கள். ஒவ்வொன்றைப் பார்த்தும் மிரண்டு போனாள் ப்ரீத்தம்.

ஓர் அறை வாசலில் வந்து நின்ற மகாராஜா, தன் கைகளை ஒருமுறை தட்டினார். அந்த ஓசைக்கு அகராதியில் அர்த்தம் தேடிப்பார்த்தால் 'யாரங்கே?' என்ற பொருள் வரும். அரை டஜன் பணிப்பெண்கள் தோன்றினார்கள். 'மகாராணியை அலங்கரித்து, என் அறைக்கு அழைத்து வாருங்கள்.'

மகாராஜா ரிபுதாமன் சிங் தன் ஒப்பனைகளைக் கலைத்துவிட்டு, நிஜ முகத்தோடு மஞ்சத்தில் காத்திருந்தார். 'மணமகளே மணமகளே வா வா... உன் வலது காலை எடுத்து வைத்து வா வா...' பணிப்பெண்கள், ப்ரீத்தமை மகாராணியாக ஒப்பனை செய்து அழைத்து வந்தனர். 'ம்' என்ற ஓர் எழுத்தை அழுத்தி உச்சரித்தார் மகாராஜா. பணிப்பெண்கள், குனிந்த பெண்களாக ரிவர்ஸ் கியரில் அறையை விட்டு வெளியேறினர்.

ப்ரீத்தம் முகத்தில் கலவரம் குறைந்திருந்தது. அச்சம், மடம், நாணம், அந்த இன்னொன்று என்ன, ஆங்.. பயிர்ப்பு எல்லாம் சிட்டிகை அளவு எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது.

'என் மனம் கவர்ந்த மகாராணியே! என் மேல் கோபமா? ஏன் இப்படிச் சிலையாக நிற்கிறாய்? என்னுடன் பேச மாட்டாயா?'

சமயோசிதமாக அவர் வீசிய யார்க்கர் வார்த்தைகளில் ப்ரீத்தமின் மௌன ஸ்டெம்ப் தெறித்து விழுந்தது.

'அய்யோ... அப்படியெல்லாம் இல்லை. நீங்கள் என்மேல் இவ்வளவு காதல் வைத்திருப்பீர்கள் என்று நான் நினைத்துப் பார்க்கவே இல்லை. முதலில் நான் உங்கள் காதலை அலட்சியப் படுத்தியபோது, எவ்வளவு துடித்துப் போயிருப்பீர்கள்? சாதாரணப் பெண் நான், சமஸ்தானத் துக்கே மகாராஜா நீங்கள். எனக்காக எவ்வளவு கஷ்டங்களை...'

டக்கென ப்ரீத்தமின் வாயைப் பொத்தினார் மகாராஜா. 'உன் வார்த்தைகளுக்கு நன்றி. என்னை மன்னித்ததற்கு நன்றி. நான் யார் என்று தெரிந்த பின்பும் என் காதலை ஏற்றுக் கொண்டதற்கு நன்றி. இனியும் உன் இதழ்கள் வெறுமனே பேசிக்கொண்டுதான் இருக்க வேண்டுமா?'

அவசியமில்லை என்பதை அடுத்து வந்தவை தெரிவித்தன.

•

அரண்மனை வாழ்க்கை ப்ரீத்தமுக்கு முற்றிலும் புதிதாக இருந்தது. தன் மகள் மகாராணியாக மாறிப் போனதை நினைத்து அவளது பெற்றோர் புளகாங்கிதமடைந்தனர். மகாராஜா முன் குழைந்து வளைந்து நெளிந்து நின்றனர். மகாராஜாவும் புது மாமனார், மாமியாரை நல்ல படியாகவே கவனித்து அனுப்பினார். நாளொரு லொகேஷன், பொழுதொரு டூயட் என்று ப்ரீத்தமின் தாம்பத்ய வாழ்க்கை கழிந்தது.

சில மாதங்கள் ஓடின. எவ்வளவு நாள்தான் ஒரே பெண்ணைக் காதலிக்க முடியும்? ஒரே பெண்ணுடன் குடித்தனம் நடத்த முடியும்? அதுவும் ஒரு மகாராஜாவால். சமஸ்தானத்தில் வேறு பெண்களா இல்லை. ப்ரீத்தம் பத்தோடு பதினொன்றாக, அரண்மனையில் ஓர் மூலையில் வாழத் தொடங்கினாள். அவளது பெற்றோர்களால் என்ன செய்யமுடியும்? கண்ணீர்விட முடியும். அதன் உச்சபட்சமாக உயிரைவிட முடியும். இரண்டையுமே செய்தனர்.

•

நபா சமஸ்தானத்தை நினைவுக்கூறத் தொடங்கினால் முதலில் சொல்லத்தோன்றுவது இந்தக் காதல் கசுமாலக் கதையைத்தான். என்ன செய்வது? ஆனாலும் நினைவுகூர அங்கு வேறு சிலவும் உண்டு.

1755ம் ஆண்டு நபா சமஸ்தானம் மகாராஜா ஹமீர் சிங்கால் (Hamir Singh) உருவாக்கப்பட்டது. (இப்போது நபா, பஞ்சாபின் பாட்டியாலா மாவட்டத்திலுள்ள ஒரு சிறிய நகரம். பரப்பளவு 928 சதுர கிலோமீட்டர்.) ஹமீர் சிங், புல்கியன் (Phulkian) என்ற பரம்பரையைச் சேர்ந்தவர். அவருக்குப் பின் அவரது வம்சா வழியினர் தொடர்ந்து சமஸ்தானத்தை ஆண்டு வந்தனர்.

1863, நவம்பர் 9 அன்று நபா சமஸ்தான மக்கள் பெரும் துயரத்தில் ஆழ்ந்தனர். மகாராஜா பர்பூர் சிங் (Bharpur Singh) இறந்துவிட்டார். ஏழு வயதிலேயே பதவி ஏற்றவர். இருபத்து மூன்று வயதிலேயே மேலோக பதவியையும் அடைந்துவிட்டார். தானுண்டு தன் படிப்புண்டு என்று புத்தகப் புழுவாக வாழ்ந்துவந்த அவரது சகோதரர் பகவான் சிங் (Bhagwan Singh) மகாராஜாவாகப் பதவியேற்றார்.


நபா அரண்மனை

நல்ல ஆட்சி. மாதம் நாலு அல்லது ஐந்து மாரி. செழிப்பான விளைச்சல். எல்லாம் சுபிட்சம். ஆனால் மகாராஜா பகவான் சிங்குக்கு புத்திர பாக்கியம் இல்லாமல் போனது. அந்தக் கவலையோ என்னவோ, பதவியேற்ற எட்டாவது ஆண்டே (1871) அவரும் இறந்து போனார். அப்போது அவருக்கு வயது இருபத்தி ஒன்பது.

யார் அடுத்த மகாராஜா? நபா சமஸ்தான அரியணையில் ஒரு மிகப்பெரிய கேள்விக்குறி உட்கார்ந்து கொண்டிருந்தது. வம்சாவழியில் இல்லாவிட்டாலும், வேறு யாரையாவது வாரிசாக வளர்த்துவிடும் திராவிடக் கட்சிகள் அங்கு அப்போது இல்லை. யானை தும்பிக்கையில் மாலை கொடுத்து யாரையாவது தேர்ந்தெடுக்கச் சொல்லும் திராபை ஐடியாவெல்லாம் யாருக்கும் தோன்றவில்லை.

அருகிலிருந்த ஜின்ட், பாட்டியாலா சமஸ்தான மகாராஜாக்கள், நபா சமஸ்தான அமைச்சர் பெருமக்களோடு கூடிப் பேசினார்கள். அமரர் பகவான் சிங்கின் பேமிலி சார்ட்டை வரைந்து பார்த்தனர். புல்கியன் பரம்பரையிலேயே வேறு யாராவது நெருங்கிய சொந்தக்காரர்கள், இருக்கிறார்களா என்று தேடிப் பார்த்தனர். அப்போது சேவா சிங் என்பவர் அவர்களை நாடினார்.

'அய்யா, ஜின்ட் சமஸ்தானத்திலுள்ள பத்ருகன் கிராமத்தில் ஹிரா சிங் (Hira Singh) என்றொருவர் இருக்கிறார். என் நெருங்கிய நண்பர். அவர் புல்கியன் பரம்பரையைச் சேர்ந்தவர். ஒருவகையில் மகாராஜா பகவான் சிங்குக்கு உறவினரும் கூட. அவர் அடுத்ததாக அரியணை ஏறத் தகுதியானவராக இருப்பார் என்று நினைக்கிறேன்.'

சேவா சிங் கேட்டுக் கொண்டதன் பெயரில், ஹிரா சிங்கின் குலம், கோத்ரம், நட்சத்திரம், ராசி, தோப்பனார் பெயர், தோப்பனாருக்குத் தோப்பனார் பெயர், அவா தோப்பனார் என மூதாதையர் வரிசை எல்லாம் சரிபார்க்கப்பட்டன. மகாராஜா பகவான் சிங்குக்கு ஹிரா சிங், ஒன்றுவிட்ட உறவா, இரண்டுவிட்ட உறவா போன்ற விவரங்கள் விசாரிக்கப்பட்டன. எல்லாமே திருப்திகரமாக இருந்தது. ஜின்ட், பாட்டியாலா சமஸ்தான மகாராஜாக்கள் ஹிரா சிங்குக்கு அப்பாயின்மெண்ட் ஆர்டர் கொடுக்கச் சம்மதித்தார்கள்.

ஹிரா சிங் தன் கிராமத்தில் காடு கழனி, நஞ்சை புஞ்சை, தோட்டம் துரவு என்று வயலும் வாழ்வுமாக இருந்து கொண்டிருந்தவர். திடீரென மகாராஜா பதவி தேடி வரும் என்று எதிர் பார்க்கவில்லை. தயங்கவுமில்லை. 'மம்பட்டி பிடித்த கையில் செங்கோலைக் கொடுப்பதா?' என்று யாரும் எதிர்க்கவில்லை. பிரிட்டிஷாரின் அனுமதியுடன் ஹிரா சிங் புதிய மன்னராகப் பதவியேற்றார். நன்றிக் கடனாக சேவா சிங்கை, பிரதம அமைச்சராக நியமித்தார்.

ஒரு மகாராஜா வருங்காலப் பாடப்புத்தகத்தில் இடம்பெற என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் ஹிரா சிங் கவனமாகச் செய்தார். உதாரணமாக சமஸ்தான மெங்கும் குளங்களை வெட்டினார், ஏரிகளைத் தூர்வாரினார், மரங்களை நட்டார், அதுவரை பாதைகளே கண்டிராத நகரில் புதிய சாலைகளை அமைத்தார். இப்படிப் பல லட்சங்கள் உருப்படியாகச் செலவு செய்து மக்களின் மனத்தில் புரட்சித் தலைவராகக் குடிகொண்டார்.

ஹிரா சிங்குக்கு அழகுணர்ச்சி அதிகம். குறிப்பாகக் கட்டடங்கள் கட்டுவதில் விருப்பம் அதிகம். சமஸ்தானமெங்கும் பல புதிய மாளிகைகளை உருவாக்கினார். நகரை அழகுபடுத்தினார். படித்தவர். அதனால் 'நபா பப்ளிக் ஸ்கூல்' ஒன்றைக் கட்டினார். (இன்றும் அந்தப் பள்ளி வெற்றிகரமாகச் செயல்பட்டு வருகிறது.)

ஹிரா சிங்கின் வாரிசுப் பிரச்னை 1883ல் தீர்ந்தது. அவரது மனைவி ஜஸ்மீர் கௌர் (Jasmir Kaur) ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார். அந்த இளவரசருக்கு வைக்கப்பட்ட பெயர் ரிபுதாமன் சிங். ஆமாம், நம் காதல் சக்கரவர்த்தியேதான். இளவரசர் புத்தக மூட்டையைத் தூக்கிக் கொண்டு பள்ளிக்கூடம் போக வேண்டுமா என்ன? இளவரசருக்கு விருப்பமான சமயங்களில் ஆசிரியர்கள் அரண்மனைக்கே வந்து பாடம் சொல்லிக் கொடுத்தனர். அவரும் நன்றாகவே படித்தார்.

முப்பத்து மூன்று முடிகள் உதட்டுக்கு மேலும் கீழும் முளைத்த பதினெட்டாவது வயதில் ரிபுதாமன் சிங், ஜெக்திஷ் கௌர் என்ற பெண்ணை (முதல்) திருமணம் செய்து கொண்டார். கல்யாண வாழ்க்கை, பொழுது போக்குக்குச் சில காதல்கள் என்று ரிபுதாமன் சிங் பிஸியாக இருந்த நேரத்தில் Imperial Legislative Council-ன் கூடுதல் உறுப்பினராகப் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது (1906-1908). பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் செயல்பட்ட சட்ட வரைவுக் குழு அது. அதற்காக கல்கத்தா சென்றார். அங்குதான் அவருக்குப் பல தேசியத் தலைவர்களின் பழக்கம் ஏற்பட்டது. முக்கியமாகக் கோபால கிருஷ்ண கோகலேவுடன் நல்ல நட்புறவு ஏற்பட்டது.

அப்போதுதான் ரிபுதாமன் சிங் ஒரு சட்டத்தை நிறைவேற்ற முயற்சி எடுத்தார். அதுகூட திருமணம் சம்பந்தப்பட்ட சட்டம்தான்.



# ‘ஏ அகாலி! வெளியே வா!’

இந்த அத்தியாயத்தில் மகாராஜா ரிபுதாமன் சிங்கின் க்ளைமாக்ஸ் வரப்போகிறது. அதற்கு முன் அவர் தன் வாழ்வில் செய்த உத்தமமான காரியம் ஒன்றைப் பார்த்துவிடலாம்.

சீக்கியர்களின் திருமணம் என்பது எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்ற விதிமுறைகளைச் சட்டமாக நிறைவேற்றப் பெரும் முயற்சிகளை எடுத்தார் ரிபுதாமன் சிங். குருத்வாரா தேவையில்லை. சீக்கியர்களின் புனித நூலான குரு கிரந்த் சாகிப்பும் மணமக்களும் இருந்தால் மட்டும் போதும். நூலை அதற்குரிய மரியாதையோடு ஓர் இடத்தில் வைக்க வேண்டும். அந்த இடம் குருத்வாராவுக்குச் சமம்.

மணமகனின் மேல் துண்டு, மணமகளின் துப்பட்டா நுனியைச் சேர்த்து முடிச்சிட்டு, இருவரும் கையைப் பிடித்துக் கொண்டு, குரு கிரந்த் சாகிப்பை நான்கு முறை சுற்றி வலம் வந்து திருமண உறுதிமொழிகள் எடுத்துக் கொண்டால் போதும். சுபமங்களம்!

ரிபுதாமன் சிங்கின் மங்கள முயற்சிகளால், 1909-ம் ஆண்டில், ஆனந்த் (Anand) திருமணச் சட்டம் என்றழைக்கப்பட்ட இந்த சீக்கிய திருமணச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. சீக்கிய மதத்தை உண்மையாகப் பின்பற்றும் ஆணும் பெண்ணும் மட்டுமே இந்தச் சட்டத்தின் கீழ் கல்யாணம் பண்ணிக்கொள்ளலாம். இதன் கீழ் சீக்கியர்கள், மற்ற மதத்தினரைத் திருமணம் செய்துகொள்வதெல்லாம் சான்ஸே இல்லை. குழந்தைகள் திருமணமும் செல்லாது.

அந்தச் சமயத்தில் ரிபுதாமன் சிங்குக்கு இன்னொரு அதிர்ஷ்டம் அடித்தது. பிரிட்டிஷ் பாராளு மன்றம் இயங்கும் முறையைக் கற்கும் வாய்ப்பு அது. அதற்காக இங்கிலாந்து சென்ற ரிபுதாமன் சிங், அப்படியே ஐரோப்பிய நாடுகளுக்கும் ஜாலி டிரிப் அடித்தார். 1911, டிசம்பர் 25ல் ரிபுதாமனின் தந்தை, மகாராஜா ஹிரா சிங் நோய்வாய்ப்பட்டு இறந்து போனார். ரிபுதாமனால் உடனடியாகக் கிளம்பிவர முடியாத சூழ்நிலையில் இறுதிச் சடங்குகளை, பாட்டியாலா சமஸ்தான மகாராஜாவான பூபிந்தர் சிங் செய்தார். இதென்ன கூத்து என்று கேட்கக்கூடாது. குடும்ப நண்பர். பத்துப் பதினைந்து கிலோமீட்டர் தூரத்து சொந்தம். வேண்டப்பட்டவர். இன்னபிற.

நபா சமஸ்தானத்தில் ஒரு வருட துக்கம் அறிவிக்கப்பட்டது. 1912, ஜனவரி 24-ல் நாடு திரும்பிய ரிபுதாமன், மறைந்த தகப்பனாருக்கு அஞ்சலி மாதிரி என்னவோ செலுத்திவிட்டு, நபாவின் புதிய மகாராஜாவாகப் பதவியேற்றுக் கொண்டார். ரிபுதாமன், சீக்கியர்களின் 'அகாலி' பிரிவைச் சேர்ந்தவர். அகாலியினர் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகப் போராடி வந்தனர். பொது வாழ்க்கையில் பிரிட்டிஷ் எதிர்ப்பாளராகவும், தனிப்பட்ட வாழ்க்கையில் கடத்தல் காதல் மகாராஜாவாகவும் வாழ்ந்து வந்த மகாராஜா ரிபுதாமன் சிங்குக்கு, திடீரென்று ஒரு கஷ்ட காலம் கண்ணடித்தது. சொன்னால் நம்புவார்களா? ரிபுவின் தந்தைக்குக் காரியமெல்லாம் செய்த அதே பிராண சிநேகிதர் பூபிந்தர் சிங்கால்தான்!

பாட்டியாலா மகாராஜாவான பூபிந்தர் சிங்குக்கு (Bhupinder Singh) ரொம்பப் பிடித்த பல காரம், பெண்கள். பெண்ணுரிமைவாதிகள் மன்னிக்க. மன்னரின் பெண்ணாசையை வேறெப்படியும் வருணிக்க முடியாது. 'உலகம் அழகுப் பெண்களால் ஆனது' என்ற பிரமை ஏற்படுமளவுக்கு பாட்டியாலாவின் அந்தப்புரம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது.

ஒருநாள் பூபிந்தர் சிங் மான் வேட்டை ஆடக் கிளம்பினார். (மெய்யாலுமே மான் வேட்டை தான், உருவகம் எல்லாம் இல்லை.) பாட்டியாலா சமஸ்தானத்தில் எல்லைப்புறக் காட்டுப் பகுதியில் சென்று கொண்டிருந்தபோது, தூரத்தில் ஒரு மானைக் கண்டார். 'விடாதே, துரத்து' என்று தன் வாகன ஓட்டுநரை உசுப்பினார். துள்ளத் துள்ளத் துரத்தினார். மான் அங்கிருந்த ஒரு கிராமத்துக்குள் புகுந்தது. விடாமல் துரத்திய மகாராஜா, தன் துப்பாக்கியால் சுட்டார். மான், மகாராஜா கையால் குண்டடி வாங்கிய பெருமையில் வீரமரணம் அடைந்தது.

அது மசனா என்ற நபா சமஸ்தானத்தின் எல்லையோரக் கிராமம். துப்பாக்கி வெடிக்கும் சத்தம் கேட்டு கிராம மக்கள் கூடிவிட்டனர். மக்கள் எல்லோரும் மானைப் பார்த்துக் கொண்டி ருக்க, பூபிந்தர் சிங்கின் கண்ணில் பட்டது அந்த இரண்டு கால் மான்.

தேகமெங்கும் கரைபுரண்டோடும் அழகு. பருவத்துக்கேற்ற பளபளப்பு. பொன் நிறத்தில் வளமையான கூந்தல். காம்பஸ் வைத்து வரைந்த மாதிரி வட்டமான முகம். நீல மற்றும் நீளக் கண்கள்.

துப்பாக்கிச் சத்தம் கேட்டு மிரண்டு ஓடிய தன் வளர்ப்புக் கோழிகளைப் பிடித்துக் கொண்டிருந் தாள் அவள். இரண்டு நிமிடத்தில் ரெடியாகிவிடும் இன்ஸ்டண்ட் நூடுல்ஸுக்கும் மகாராஜா வின் மனத்தில் உதிக்கும் உடனடிக் காதலுக்கும் அதிக வித்தியாசமில்லை.

தன் வாகன ஓட்டுநரை அனுப்பி, அந்தப் பெண் பற்றிய விவரங்களை விசாரித்து வரச் சொன்னார். அவளது பெயரை அறிந்து கொண்டார். ரச்னி. அழகிய பெயரைக் கேட்டதும்




பித்தம் தலைக்கு ஏறியது. 'சம்மதமா?' என்று கேட்டு வரச் சொல்லி மீண்டும் தூது அனுப்பினார்.

இந்த மான், உந்தன் சொந்த மான், பக்கம் வந்துதான் சிந்து பாடும் என்று ரச்னி, தன்னை வந்து கட்டிக் கொள்வாள் என்று எதிர்பார்த்தார். ஆனால் அவளோ லந்து செய்தாள். அப்போது இதயத்தை மட்டும் அங்கேயே விட்டுவிட்டு தன் சமஸ்தானத்துக்குத் திரும்பினார் மகாராஜா பூபிந்தர் சிங்.

ஒரு குடம் தண்ணி ஊத்தி.. ரெண்டு குடம் தண்ணி ஊத்தி.. பதினேழு குடம் தண்ணி ஊத்தி.. ம்ஹூம், ரச்னியின் மனத்தில் காதல் பூ பூப்பதற்கான அறிகுறியே தெரியவில்லை. இனியும் தூது அனுப்பிப் பிரயோசனமில்லை என்று உணர்ந்த பூபிந்தர் சிங், மசனா கிராமத்துக்கு சில ராணுவ வீரர்களை அனுப்பினார். 'ஆபரேஷன் ரச்னி' வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்டது. ரச்னி, பூபிந்தர் சிங்கின் அரண்மனைக்குக் கடத்திக் கொண்டு வரப்பட்டாள். அந்தப்புரத்தில் அடைக்கப்பட்டாள். பூபிந்தர் சிங் ஆத்ம சுத்தியுடன் தன் புதுக் காதலி ரச்னியைக் காதலித்தார். சில நாள்களில் மீண்டும் மான் வேட்டைக்குக் கிளம்பினார்.

விஷயத்தைக் கேள்விப்பட்டதும் நபா மகாராஜா ரிபுதாமன் சிங்கின் தாடி துடித்தது. அன்றுவரை 'முஸ்தபா முஸ்தபா' பாடிக்கொண்டிருந்தவர், அந்தக் கணத்திலிருந்து 'நீயும் நானுமா' என்று பாடத் தொடங்கினார். பின்னே அது என்ன மண்ணாங்கட்டி விஷயமா? பெண்ணை ஆளும் விஷயமல்லவா?

'என்ன கொடுமை இது? எத்தனை முறைதான் சொல்ல முடியும் எங்க ஏரியா உள்ளே வராதே என்று. நான் ஒருவன் இங்கிருக்கும்போது, என்னை மீறி என் சமஸ்தானப் பெண்ணை,

அதுவும் அழகான பெண்ணை எப்படிக் கடத்திக் கொண்டு போகலாம்?' ரிபுதாமன் சிங்கின் மனம் கொதித்தது. ரச்னியை விடுதலை செய்யும்படி பூபிந்தர் சிங்கைக் கேட்டுக் கொண்டார். சரியான பதில் வரவில்லை.

கண்ணுக்குக் கண். பல்லுக்குப் பல். கடத்தலுக்குக் கடத்தல் என்று முடிவெடுத்தார் ரிபுதாமன் சிங். பாட்டியாலா சமஸ்தானத்தில் இருந்த அழகான பெண்களைத் தேடிப்பிடித்து, தேர்ந் தெடுத்துக் கடத்த ஆரம்பித்தார். பூபிந்தர் சிங்கின் கண்கள் சிவந்தன. 'நான் ஒரு பெண்ணைக் கடத்தினால், நீ பல பெண்களைக் கடத்துகிறாயா? இனி பேசுவதற்கு ஒன்றுமில்லை. யாரங்கே...'

போர் முரசு ஒலிக்கவில்லை. தமிழ் முரசில் செய்தி வரவில்லை. ஆனால் அந்தப்புரக் கடத்தல் விவகாரத்துக்காக இரண்டு சமஸ்தானங்களின் படைகள் மோதிக் கொண்டன. இருபுறமும் ஏராளமான உயிரிழப்புகள், உடைமை இழப்புகள். நாளாக நாளாக மோதல் தீவிரமாகிக் கொண்டே போனது. 'அட என்னங்கடா நீங்க, இப்படிச் சின்னப்புள்ளத்தனமா சண்டை போட்டுக்கிட்டு...' என்று பிரிட்டிஷ் நாட்டாமைக்காரர் மூக்கை நுழைத்தார்.

1923 ஜனவரியில், இந்தக் கருமத்தை விசாரிக்க பிரிட்டிஷ் அரசால் ஒரு விசாரணைக் கமிஷன் அமைக்கப்பட்டது. இறுதிக் கட்ட விசாரணைகளில் ரிபுதாமன் சிங் ஆஜராகவில்லை. காரணம், நிலைமை தனக்குச் சாதகமாக இல்லையென்று அவருக்குத் தெரிந்துபோனது. 'அய்யோ... குத்துதே, குடையுதே, தூக்கித் தூக்கிப் போடுதே, குளிர்தாங்க முடியலையே' என்று உடல்நிலை சரியில்லாதவராக அரண்மனைக்குள் டாக்டர்கள் புடைசூழ முடங்கிக் கொண்டார்.

இறுதியாக கமிஷனின் தீர்ப்பு, பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங்குக்குச் சாதகமாக அமைந் தது. அதன்படி நபா மகாராஜா ரிபுதாமன் சிங், பதவி விலக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது (ஜூன் 9, 1923).

அப்போதைய இந்தியாவின் கவர்னல் ஜெனரல் ரூஃபஸ் ஐஸாக்ஸ் (Rufus Isaacs), கர்னல் மின்சினை (Col. Minchin) நபா சமஸ்தானத்துக்குச் சென்று ஆட்சிப் பொறுப்பேற்றுக் கொள் ளும்படி அனுப்பினார். ஏகப்பட்ட போர் வீரர்கள், காவலர்கள், பாதுகாப்புப் படையினருடன் நபா அரண்மனையை அடைந்தார் மின்சின். வெளியில் நின்று கொண்டு, தன்னை வந்து சந்திக்குமாறு மகாராஜாவுக்குத் தகவல் அனுப்பினார்.

ரிபுதாமனும் வரவில்லை, அவரிடமிருந்து பதிலும் வரவில்லை. அரண்மனைக்கு உள்ளே ரிபுதாமன், தன் அமைச்சர்களோடு ரத்த அழுத்தம் எகிற விவாதித்துக் கொண்டிருந்தார். என்ன செய்யலாம்? எதிர்த்துப் போரிடலாமா? சரணடைந்து விடலாமா?

'ஏ அகாலி! வெளியே வா!' - என்று வாசலில் மின்சினின் குரல் கேட்டது. தப்பித்துச் செல்ல எந்தவழியும் இல்லாதபடி, பிரிட்டிஷ் படையினர் அரண்மனையைச் சூழ்ந்திருந்தனர். இனி எந்தப் பருப்பும் வேகாது என்று உணர்ந்து கொண்ட மகாராஜா ரிபுதாமன் சிங், குடும்பத்தோடு சரணடைந்தார். உடனே அங்கிருந்து அழைத்துச் செல்லப்பட்டார். நீர் நிரம்பிய அவரது கண்கள், அத்தனை நாள்கள் வாழ்ந்து தீர்த்த அந்த அரண்மனையை இறுதியாகப் படம்பிடித்துக் கொண்டன.

ரிபுதாமன் குடும்பத்தோடு டெஹ்ரா டூனுக்கு அனுப்பப்பட்டார், கிட்டத்தட்ட ஒரு கைதி போல. ரிபுதாமனுக்கு ஆதரவாகப் பஞ்சாப் முழுவதும் பல குருத்வாராக்களிலிருந்து ஆதரவுக்

குரல்கள் எழுந்தன. ஏற்கெனவே பிரிட்டிஷ் எதிர்ப்புப் போராட்டங்களை நடத்தி வந்த அகாலியினர், ரிபுதாமனுக்கு நிகழ்ந்த கொடுமையைக் கண்டு பொங்கி எழுந்தனர். தொடர் ஆர்ப்பாட்டங்களும், எழுச்சி ஊர்வலங்களும் அரங்கேறின.

இதன் உச்சகட்டமாக, நபா சமஸ்தானத்தின் ஜெய்டோ என்ற இடத்தில், ரிபுதாமன் சிங்கை மீண்டும் மன்னராக்கக் கோரி பிரிட்டிஷ் அரசுக்கு எதிராக மாபெரும் பேரணி நடந்தது (1924, பிப்ரவரி 21). அதனைக் கலைக்க பிரிட்டிஷ் படையினரும், காவல்துறையினரும் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் ஏராளமானோர் உயிரிழந்தனர். சீக்கியர்களின் வரலாற்றில் காணப்படும் முக்கியமான வடுக்களில் ஜெய்டோ மோர்ச்சா (Jaito Morcha) என்றழைக்கப்படும் இந்தச் சம்பவமும் ஒன்று. அகாலியினருக்கு ஆதரவாகப் போராட நபா வந்த ஜவாஹர்லால் நேரு கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். அப்போது நேரு சிறையில் அனுபவித்த கொடுமைகள் எல்லாம் அவரது சுயசரிதையிலேயே உண்டு.

எந்தப் போராட்டத்துக்கும் பிரிட்டிஷ் அரசு அசைந்து கொடுக்கவில்லை. மகாராஜா ரிபுதாமன் சிங்குக்கு பென்ஷனாக, வருடம் மூன்று லட்ச ரூபாய் அறிவித்தது. ரிபுதாமன் அரசின் விதி முறைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கவில்லை எனக்கூறி, சில வருடங்களில் பென்ஷன் ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாயாகக் குறைக்கப்பட்டது. கூடவே 'மகாராஜா' என்ற பட்டமும் பறிக்கப்பட்டது. 1928, பிப்ரவரியில் ரிபுதாமன் சிங்கின் மகனான பிரதாப் சிங் நபாவின் புதிய மகாராஜாவாக, பிரிட்டிஷாரால் நியமிக்கப்பட்டார். ரிபுதாமன், கொடைக்கானலுக்குக் கொண்டு வரப்பட்டார். அங்கே அவருக்கு ஒரு மாளிகையையும், பத்து ஏக்கர் நிலமும் வழங்கப்பட்டன. அந்த எல்லைக்குள் அவர் சுதந்தரமாக இருக்க அனுமதிக்கப்பட்டார். தன் இறுதி வருடங்களை அங்கேயே கழித்த ரிபுதாமன் சிங், அறுபதாவது வயதில் (1942, டிசம்பர் 13) உயிரிழந்தார். இரண்டு லாரிகள் நிறைய சந்தனக் கட்டையைக் கொண்டுவந்து அவரது உடலை எரித்தார்கள்.

அவர் கொடைக்கானலில் வாழ்ந்த பகுதியின் பெயர் 'ராஜமேடு.'

தேசம் சுதந்தரம் அடைந்த அன்றே, நபா சமஸ்தானத்தை இந்தியாவோடு இணைக்கும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார் பிரதாப் சிங்.

# தோல்பூர்

• ராஜபுத்திர சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1806
• ஆட்சி செய்தவர்கள் : பம்ராவ்லியா ஜாட் பரம்பரை
• முதல் மன்னர் : ராணா கிரத் சிங் • 15 குண்டு மரியாதை.



# 7

# குவாக் குவாக் குதூகலம்

அந்தக் காட்டில் புலிகள் உண்டு. புலிகள் என்பதைவிட வளர்ப்புப் புலிகள் என்று சொல்வதுதான் சரியாக இருக்கும். அவை மகாராஜா ரானா உதய் பான் சிங்கின் (Udai Bhan Singh) செல்லப் புலிகள். செல்லம் எந்த அளவுக்கு என்றால், மகாராஜாவே தன் கையால் புலிகளுக்கு 'மம்மு மாமிசம்' ஊட்டி விடும் அளவுக்கு.

புலிகள் மீது மட்டுமல்ல, அந்தக் காட்டில் உள்ள எல்லா விலங்குகள் மீதும் கொள்ளைப் பிரியம் வைத்திருந்தார் மகாராஜா. கொஞ்சம் கற்பனை தூக்கலாகச் சொல்ல வேண்டுமென்றால், 'செண்பகமே செண்பகமே' என்று மகாராஜா ஹம் பண்ணினால் போதும். அங்குள்ள காட்டெருமைகளெல்லாம் தானாகப் பால் கறக்கும்.

அந்தக் காடு தோல்பூர் நகரிலிருந்து பதினெட்டு கிலோ மீட்டர் தொலைவிலிருந்தது. வன் விஹார்* என்று அதற்குப் பெயர். தோல்பூர் (Dholpur) சமஸ்தானத்தின் கடைசி மகாராஜாவான உதய் பான் சிங், வன் விஹாரை ஒரு சரணாலயம் போலத்தான் பராமரித்து வந்தார். வன் விஹாருக்கு அடுத்தபடியாக, உதய் பான் விரும்பிய இடம் தலப்-இ-ஷாகி (Talab-e-Shahi) என்ற ஏரி. இந்த ஏரியின் நீளம் மட்டும் சுமார் பத்து மைல்கள் இருக்கும். மும்தாஜையும், பின்பு தாஜ்மகாலையும்

---

★ 1955-ல் சரணாலயமாக அங்கீகரிக்கப்பட்ட வன் விஹார், தற்போது ராஜஸ்தான் மாநிலத்தில் உள்ள முக்கியமான சுற்றுலாத் தளங்களுள் ஒன்று.



ரானா உதய்பான் சிங்

கட்டினாரே முகலாயப் பேரரசர் ஷாஜகான். அவருடைய ஆட்சிக் காலத்தில்தான் (1617) தோல்பூரிலிருந்து சுமார் நாற்பது கி.மீ. தொலைவில் இம்மாம்பெரிய ஏரி உருவாக்கப்பட்டது.

ஏரியின் கரையெங்கும் செழித்து வளர்ந்த பலவகை மரங்கள். விதவிதமான பறவைகள். அது தோல்பூரின் வேடந்தாங்கல். மழைக்காலங்களில் ஏரி எந்தப் பிரச்னையுமின்றி நிரம்பித் ததும்பும். மற்ற நேரங்களில் ஏரியில் நீர் நிரப்புவதற்காகக் குறிப்பிட்ட இடைவெளிகளில் கால்வாய்கள் அமைக்கப் பட்டிருந்தன.

கரையோரமாக ஆங்காங்கே மார்பிள்கள் பதிக்கப்பட்ட, கலை வேலைப்பாடுகள் செய்யப்பட்ட ஓய்வு மண்டபங்கள். குதூகல மாகப் பயணம் செய்ய மோட்டார் படகுகள். ஐலசா சொல்லிய படி துடுப்புப் போட்டுப் பயணம் செய்ய வாத்து, அன்னம் வடிவிலான படகுகள் என்று சகல வசதிகளையும் பார்த்துப் பார்த்து செய்து வைத்திருந்தார் மகாராஜா. ஏரியையும் ஏரி சார்ந்த விஷயங்களையும் கவனிக்கவே நூற்றுக்கணக்கானோர் நியமிக்கப்பட்டிருந்தார்கள்.

மகாராஜா, தலப்-இ-ஷாகியை ஒட்டி விருந்தினர் மாளிகை ஒன்றைக் கட்டியிருந்தார். 'த்சொ.. த்சொ.. என்னமா இருக்குபா! இதென்ன தங்குற வூடா, இல்லாக்காட்டி இந்திரனோட சொர்க்கலோகமா!' என்று வருபவர்களெல்லாம் வியக்குமளவுக்கு உல்லாசபுரி அது. பௌர்ணமி நிலவொளியில் இந்த மாளிகையில் வந்து தங்கி, அழகின் தித்திப்பைப் பருகுவது மகாராஜாவுக்குப் பிடித்தமான விஷயம்.

இந்த மாளிகையில் மகாராஜா நடத்தும் கேளிக்கை விருந்துகள்... அப்படிச் சொன்னால் கூடப் பொருத்தமாக இருக்காது. 'ஒருவிதமான எக்ஸ்சேஞ்ச் மேளா' என்றுதான் சொல்ல வேண்டும். அந்தச் சமாசாரத்தைப் பற்றிப் பார்ப்பதற்கு முன், தோல்பூர் சமஸ்தானத்தின் வரலாற்றைக் கொஞ்சூண்டு பார்த்து விடலாம்.

தோல்பூரின் ஆதி கால வரலாற்றை எல்லாம் அநாவசியமாக நோண்டிக் கொண்டிருக்க வேண்டாம். பாதியிலிருந்து வரலாம். பதினோராம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட அந்த நகரத்துக்குத் தலைவராக இருந்தவர் ராஜா தோலான். அவரது பெயரைக் கொஞ்சம் மாற்றி 'தோல்தேரா' என்று அந்த நகரத்தின் பெயர் வைக்கப்பட்டது. காலப்போக்கில் தோல்பூர் என்றானது.

1527-ல் அதனை முகலாயப் பேரரசர் பாபர் கைப்பற்றினார். கிட்டத்தட்ட 180 வருடங்கள் தோல்பூர் முகலாயர்களின் குல்லாவுக்குள் இருந்தது. அப்போதுதான் ஷாஜகான், தலப்-இ-ஷாகி ஏரியை உருவாக்கிய சமாசாரமெல்லாம் நடந்தது.

முகலாயர்களின் வீழ்ச்சிக்குப்பின் ராஜா கல்யாண்சிங் தோல்பூரை ஆண்டார். அதற்குப் பின் ஆட்சி பல கைகள் மாறியது. 1805-ல் உதய் பானின் பூட்டன் தாத்தாவான ரானா கிரத் சிங்கின் (Kirat Singh) ஆட்சியின்கீழ் வந்தது. குறிப்பிட்ட கால இடைவெளிகளில் தாத்தா, அப்பா,

அண்ணன் எல்லோரும் வைகுண்ட பதவியை அடைய, உதய் பான் சிங் மகாராஜா பதவியை அடைந்தார் (1911, ஏப்ரல் 2).

தானுண்டு, தான் வளர்க்கும் பறவைகள், விலங்குகளுண்டு என்று ஒரு டார்ஜானாக வாழ்ந்து வந்த உதய் பானின் ஆட்சியில் தோல்பூர் மக்களுக்குக் குத்திக் காட்டும்படியாக எந்தக் குறையும் இல்லை. சொல்லப்போனால், தோல்பூரில் வசித்த மக்களை விட, தலப்-இ-ஷாகியில் வளர்க்கப்பட்ட வாத்துகளின் எண்ணிக்கைதான் அதிகமாக இருந்தது. வாத்துகளை வளமாக வளர்ப்பதற்கென்றே தனிக்குழு இருந்தது. அவற்றை மேய்ப்பதற்கு எக்கச்சக்கமான 'நாடோடித் தென்றல் ரஞ்சிதா'க்களும் இருந்தனர். ஸ்பெஷல் மீன்கள், தக்காளி, மக்காச் சோளம், நத்தை, வேகவைத்த முட்டை என வாத்துகள் சப்புக் கொட்டிச் சாப்பிட்டன. வாத்து களுக்கெனத் தனி மருத்துவரும் இருந்தார். அட, வாத்துகளுக்கு எதுக்குப்பா இவ்வளவு கவனிப்பு என்கிறீர்களா?

துப்பாக்கியால் சுட்டுச் சுட்டு விளையாடத்தான்.

எப்போதெல்லாம் தோன்றுகிறதோ அப்போதெல்லாம் உதய் பான் துப்பாக்கியைத் தூக்கி விடுவார். தான் மட்டும் வேட்டையாட மாட்டார். மற்றவர்களுக்கும் அழைப்பிதழ் அனுப்பு வார். மற்றவர்கள் என்றால், பிரிட்டிஷ் அதிகாரிகள், கவர்னர் ஜெனரல், பக்கத்து சமஸ்தான மகாராஜாக்கள், பெரும் வியாபாரிகள், செல்வந்தர்கள், வெளிநாட்டு விருந்தினர்கள் மற்றும் பலர்.

மகாராஜா உதய் பானிடம் இருந்து அழைப்பு வந்தால் போதும். யாராக இருந்தாலும் சரி, குதூகலமாகக் கிளம்பி வந்துவிடுவார்கள். வரும் விருந்தினர்களை எல்லாம் தனித்தனியாகத் தங்க வைக்கும் அளவுக்கு மாளிகை பெரியது. காலையிலிருந்தே போதையூட்டும் ராஜ கவனிப்புதான்.

உணவுக்குப் பின் விருந்தினர்கள் ஆர்வமாக தலப்-இ-ஷாகியின் படகுத்துறையில் குவிவார் கள். வரிசையாக மோட்டார் படகுகள் காத்து நிற்கும். படகை இயக்க ஒருவர். படகில் பயணம் செய்பவர்களைக் கவனிக்க ஒருவர். கவனிப்பு என்றால் கொறிக்க, குடிக்க, கொப்பளிக்க ஏதாவது தேவைப்பட்டால் அவர் கொடுப்பார். படகுகளிலேயே லோடு செய்யப்பட்ட துப்பாக்கிகளும், கிலோக்கணக்கில் ரவைகளும் தயாராக இருக்கும்.

துடுப்பு படகுகளில் செல்ல விரும்புவோருக்கும் மேற்சொன்ன வசதிகள் டிட்டோ. விருந்தினர்கள் தயாரானதும் படகுகள் எல்லாம் குஷியாகக் கிளம்பும். மகாராஜாவும் தனக்கான படகில் கிளம்புவார். அதே நேரத்தில் வாத்து டிபார்ட்மெண்ட்காரர்கள் இந்தப் படகுகளை நோக்கி சில நூறு வாத்துகளைப் பத்தி விடுவார்கள். அது வாத்து பிடிக்கும் போட்டி. யார் எத்தனை வாத்துகளைப் பிடிக்கிறார்கள் என்பதுதான் கணக்கு. வாத்து பிடிக்கிறேன் பேர்வழி என்று தண்ணீரில் தவறி விழுபவர்களைத் தூக்கிவிடுவதற்கென்றே சில ஊழியர்கள் நீரில் நீந்திக் கொண்டிருப்பார்கள்.

கெக்கேபிக்கே சிரிப்புடன் வாத்து பிடிக்கும் போட்டி முடிந்ததும், அந்த வீர விளையாட்டு ஆரம்பமாகும். அதாவது வாத்து வேட்டை. விருந்தினர்களின் படகுகளை நோக்கி ஆயிரக் கணக்கான வாத்துகளை ஒரே நேரத்தில் பல்வேறு திசைகளிலிருந்து விரட்டி விடுவார்கள்.



தலப்-இ-ஷாகியின் ஓய்வு மண்டபம் ஒன்று

குவாக் குவாக் சத்தத்தால் ஏரி அதிரும். விருந்தினர்கள் தங்கள் துப்பாக்கிகளைத் தயாராக வைத்திருப்பார்கள். டுமீல்... டுமீல்...

ஒரு குண்டுக்குக் குறைந்தது ஒன்றல்ல, மூன்று அல்லது நான்கு வாத்துகள் வைகுண்டம் போவது உறுதி. வேட்டை முடிந்தபின் விருந்தினர்கள் கரையினில் ஆங்காங்கே உள்ள ஓய்வு மண்டபங்களில் அமர்ந்து இயற்கையை ரசித்துக் கொண்டிருப்பார்கள். ஆயுசு கெட்டியான வாத்துகளெல்லாம் கரைக்குத் திரும்பும். செத்த வாத்துகள் சேகரிக்கப்பட்டு மாளிகையின் சமையலறைக்குக் கொண்டு செல்லப்படும்.

மாளிகையில் மதிய விருந்து. சிறிய ஓய்வுக்குப் பின் அருகிலுள்ள வன் விஹாருக்கு கும்பலாக யானைகளில் கிளம்பிச் செல்வர். சஃபாரி. அங்குள்ள தம் வளர்ப்புப் புலி முதல் கிளி வரை மகாராஜா விருந்தினர்களுக்கு அறிமுகப்படுத்துவார். சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பும்போது சாயங்காலம் ஆகிவிடும்.

‘மது வீட்டுக்கும் நாட்டுக்கும் உயிருக்கும் கேடு’ என்ற அரசு அறிவிப்பை இங்கு போட்டுக் கொள்ளலாம். எதற்கு வம்பு? இனி சாராய நெடி கொஞ்சம் தூக்கலாக இருக்கும்.

தலப்-இ-ஷாகி மாளிகையில் விருந்தினர்களுக்கு மகாராஜா கொடுக்கும் இரவு விருந்தில் ஆல்கஹாலே ஆண்டவன். இருள் கவியும் நேரம், விருந்து நடக்கும் பிரம்மாண்ட அறை இசையில் மிதக்க ஆரம்பிக்கும். முதலில் ராஜஸ்தான் நாடோடிப் பாடல்கள். மெதுவாக மெலடியாகத் தொடங்கும் பாடல்கள் நேரம் ஆக ஆக டெம்போ எகிறும். மன்னர் பெருமானைப் புகழும் பாடல்களும் உண்டு. அதற்கு 'மாண்ட்' என்று பெயர்.

நாடோடிப் பாடல்கள் முடிந்தவுடன், வாத்தியக் கச்சேரி ஆரம்பமாகும். விதவிதமான இசைக்கருவிகளின் ஜுகல்பந்தி ரகளை. அதே நேரத்தில் இரவு உணவுக்கான மேசையில் பதார்த்தங்கள் ஆவி இறக்கை கட்டிப் பறக்க பறக்க அடுக்கப்பட்டுக் கொண்டிருக்கும். விஸ்கி, பிராந்தி வகையறாக்கள் கிளாஸ்களில் நிரம்பத் தொடங்கும். மாளிகை ஊழியர்களின் உபசரிப்பு, அதுவரை குடிக்காத மனிதர்களையே தள்ளாடச் செய்துவிடும். எல்லாமே வெளிநாட்டிலிருந்து வரவழைக்கப்பட்டவை. லோக்கல் சரக்கெல்லாம் ஸ்டேட்டஸுக்கு உதவாது.

இரவு உணவை எல்லோரும் சுவைக்க ஆரம்பிக்கும் வேளையில் காக்ரா சோலி பெண்கள் 360 டிகிரி சுழன்று நடனம் ஆட ஆரம்பிப்பார்கள். கிலோ கணக்கில் துணியைச் சுற்றி தலைப்பாகையாக அணிந்திருக்கும் ஆண்கள், ஜம்போ சைஸ் மடல் வாத்தியங்களை உச்சஸ்தாயில் வாசிக்க, விருந்தினர்களும் கூத்தாட ஆரம்பித்திருப்பார்கள்.

இந்த பார்ட்டிகளில் குறிப்பாகச் சொல்லப்பட வேண்டிய விஷயம் ஒன்று உள்ளது. மகாராஜாவால் அழைக்கப்பட்ட விருந்தினர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். இந்தியர்கள், வெளிநாட்டவர்கள். இந்தியர்கள் என்றால் பக்கத்து சமஸ்தான மகாராஜாக்கள், குறுநில மன்னர்கள், வியாபாரிகள், செல்வந்தர்கள். வெளிநாட்டவர்கள் என்றால் கவர்னர் ஜெனரல், பிரிட்டிஷ் உயரதிகாரிகள், பிரிட்டனிலிருந்து வந்திருக்கும் சுற்றுலாப் பயணிகள், பிறநாட்டு சுற்றுலாப் பயணிகள்.

பார்ட்டியின் ஆரம்பத்தில் வெளிநாட்டவர்கள், குறிப்பாக பிரிட்டிஷார்கள், இந்தியர்களோடு கலந்துகொள்ளவே மாட்டார்கள். ஒதுங்கித் தனியாகத்தான் நிற்பர். இந்தியர்களும் அப்படியே. முதல்நாள் மட்டுமே இந்த நிலை.

முதல் நாளா அப்படியென்றால்? ஆமாம், மகாராஜாவுக்கு சும்மா பேருக்கு ஒருநாள் விருந்து வைக்கும் பழக்கமெல்லாம் கிடையாது. விருந்தினர்கள் குறைந்தபட்சம் ஒரு வாரமாவது வந்து தங்கி, வாழ்ந்து, மகிழ்ந்து சென்றால்தான் மகாராஜாவுக்குத் திருப்தியாக இருக்கும்.

முதல் நாள் பார்ட்டியில் இந்தியர்களிடமிருந்து விலகியிருக்கும் பிரிட்டிஷார், அடுத்தடுத்த நாள்களில் மிக மிக மிகவும் நெருங்கிவிடுவர். காரணம்? வேறு யார், பெண்கள்தான். 'எக்ஸ் சேஞ்ச் மேளா' என்ற வார்த்தைகளைப் பார்த்த ஞாபகமிருக்கிறதா? அது நடப்பது அப்போதுதான்.



# 8

# எக்ஸ்சேஞ்ச் மேளா!

தலப்-இ-ஷாகி மாளிகைக்கு விருந்துக்கு வரும் பிரிட்டிஷார் தங்கள் மனைவியரை அழைத்து வர மாட்டார்கள். உல்லாசமாக இருப்பதற்கு அவர்கள் எதற்கு இடைஞ்சலாக என்ற 'உயரிய' நோக்கம்தான் காரணம். கேர்ள் பிரண்ட்ஸை, காதலியை, ஆசை நாயகியை அழைத்து வருவர் அல்லது வருங்காலத்தில் திருமணம் செய்யவிருக்கும் பெண்களை அழைத்து வருவர்.

இந்தியர்களும் அப்படியே. அடுப்பூதும் பெண்களுக்குப் பார்ட்டி எதற்கு என்று வீட்டுக்காரிகளைப் பத்திரமாகப் பூட்டி வைத்துவிட்டு, வேறு பெண்களோடு விருந்தில் கலந்து கொள்வர்.

விருந்தின் இரண்டாவது நாள், மூன்றாவது நாள். பிரிட்டிஷார் இந்தியப் பெண்களைக் கண்டு விலகாமல், பழக ஆரம்பிப்பார்கள். சிநேகம் பிடிப்பார்கள், பின்பு ஏரியில் வாத்து பிடிப்பார்கள். இரண்டு இதயங்களும் எக்ஸ்சேஞ்ச் ஆகும். அப்புறமென்ன, மேளாதான்.

இந்தியர்கள் மட்டும் காதலில் சளைத்தவர்களா என்ன? அமர்சிங் என்ற பெரும் பணக்காரருக்கு, பிரிட்டிஷ் உயர் அதிகாரி எட்வர்ட்டின் கேர்ள் பிரெண்ட் கேத்தலீன் மேல் ஈர்ப்பு வரும். முதல் நாள் பார்ட்டியில் அமர்சிங், கேத்தலீன் கண்ணில் படும்படியாக அங்குமிங்கும் அலைந்தாலும் அவள் கண்டு கொள்ள மாட்டாள். காரணம் எட்வர்ட் உர்ரென்று முறைத்துக் கொண்டிருப்பார்.

அடுத்தடுத்த நாள்களில் எட்வர்டுக்கு, இந்தியப் பெண் ரவாணி மேல் லவ் வரும். வளரும். கேத்தலீனைக் கண்டுகொள்ள மாட்டார். இந்த கேப்பில் அமர்சிங், கேத்தலீன் முன் சென்று அம்சமாக 'ஹலோ' என்பார். அவளும் ஐந்து சென்டிமீட்டருக்குப் புன்னகை செய்வாள்.

'போட்டிங்.. வீ டு?' படகில் நாம் இருவரும் போகலாமா என்பதைத் தனக்குத் தெரிந்த ஒன்றரையணா ஆங்கிலத்தில் அமர்சிங் கேட்பார். கேத்தலீன் படகில் ஏறுவாள். படகு காதலில் மிதக்கும். மொழி புரியாவிட்டாலும் கடலை போட்டுக் கொண்டிருப்பார்கள். இந்தக் காதலுக்கெல்லாம் மொழியா முக்கியம்? மூக்கும் முழியும் மற்றதும்தானே முக்கியம்.

இப்படிப் பல விருந்தினர்கள் காதல் செய்வதில் மும்மரமாக இருப்பதால், டுமீல் டுமீல் சத்தங்கள் குறைந்திருக்கும். அதனால் வாத்துகள் அந்தக் காதலை வாழ்த்தும்.

இதயங்களின் எக்ஸ்சேஞ்ச் மேளா மும்முரமாக நடக்கும். முதலில் இதயம், அப்புறம் இன்னபிற.

சரி, இந்தப் பார்ட்டிகளில் மகாராஜா என்னதான் செய்வார்? அண்டர்லைன் பண்ணி ஒன்றுமே செய்ய மாட்டார்.

ஓர் ஓரமாக உட்கார்ந்து கொண்டு இசையை ரசிப்பார். அவ்வப்போது விருந்தினர்களிடம் வந்து உரையாடுவார். சில சமயங்களில் அவர்களுக்கு ஊற்றியும் கொடுப்பார். மற்றபடி ஒரு பெக் மது கூடக் குடிக்க மாட்டார். யாராவது வெளிநாட்டுப் பெண்கள் வந்து ஆசை ஆசையாக நடனமாட அழைத்தால்கூட, கண்ணியமாக மறுத்து விடுவார்.

சர்வ சித்தி பொருந்திய மகாராஜா ரானா உதய் பான் சிங், நல்லவர். வீரர். வனநேசர். மது ஆகாது. மாது விஷயத்தில், அய்யோ.. ஏக பத்தினி விரதர். தன் மகாராணியைத் தவிர வேறு யாரையும் தவறான எண்ணத்தோடு பார்க்கக் கூட மாட்டார். மொத்தத்தில் மனிதப் புனிதர்.

இதுதான் மகாராஜாவைப் பற்றி விருந்தினர்களிடம் ஏற்படும் இமேஜ். அப்படிப்பட்டதொரு பிம்பத்தைத்தான் பெரும்பாடுபட்டுக் காப்பாற்றி வந்தார். ஆனால்...

மகாராஜாவுக்கு மற்றவர்களோடு சேர்ந்து ஊற்றிக் கொள்வதில் நாட்டம் இருந்ததில்லை. தனக்கு மூட் வரும் நேரத்தில் ஒருவரைப் பார்த்து லேசாகக் கண்ணசைப்பார். அவர் திர்னார் சிங்.

திர்னார் சிங், உடனே மகாராஜாவின் அந்தரங்க அறைக்கு ஓடோடிச் செல்வார். சோம பானங்களைத் தயார் நிலையில் வைப்பார். சிறிது நேரத்தில் மகாராஜா அந்த அறைக்குள் நுழைவார். வேறு யாருக்கும் அந்த அறையில் நுழைய அனுமதி கிடையாது. 'ம்..' என்பார் மகாராஜா. அந்த ஒற்றை எழுத்தின் ஏற்ற இறக்கங்களிலேயே மகாராஜாவின் மனக்குறிப்பு திர்னாருக்குப் புரிந்துவிடும். சரக்கை, கலக்க வேண்டியவற்றோடு கலந்து பவ்யமாகப் பரிமாறுவார் திர்னார்.

மதுவைவிட போதைப்பொருள்களை உபயோகிப்பதிலேயே மகாராஜா பரமானந்தம் கண்டார். அந்தச் சமாசாரங்களை மகாராஜாவுக்குத் தயார் செய்து கொடுப்பதும் திர்னார்தான். எல்லாவற்றையும் குடித்து, புகைத்து முடித்துவிட்டு அந்த அறையிலேயே மகாராஜா

சமர்த்தாகத் தூங்கிவிடுவார். அறைக்கு வெளியே அவரது இமேஜ் கற்பு கெடாமல் அப்படியே இருக்கும்.

மது ரகசியம் இது. மாது?

தோல்பூர் அரண்மனையின் அந்தப்புரம் பெண்களால் நிரம்பி வழியவில்லை. மகாராஜா தொட்டுத் தாலி கட்டிய மகாராணியைத் தவிர வேறு யாருக்கும் அங்கு வேலை இருந்ததே இல்லை. பெரும்பாலான சமயங்களில் மகாராணி மல்வந்தர் கவுருக்கே அங்கு வேலை இருந்ததில்லை. அவர்களுக்கு ஆண் வாரிசு இல்லை. ஒரே ஒரு மகள்தான். பெயர் ஊர்மிளா தேவி. நபா சமஸ்தான மகாராஜா ரிபுதாமன் சிங்கின் மகனான மகாராஜா பிரதாப் சிங்குக்குத் தான் இளவரசி ஊர்மிளா தேவியைக் கட்டிக் கொடுத்தார்கள் என்பதெல்லாம் உபரித் தகவல்.

விஷயத்துக்கு வருவோம். மோகன முகம், மிகை ஒப்பனை, புத்துணர்வூட்டும் புன்னகை, ரம்மியமான உடையோடு ஓர் அழகான பெண் ஒய்யார நடை நடந்து போனால் உதய் பான் சிங் கண்டுகொள்ளவே மாட்டார். முகத்தை வேறுபக்கம் திருப்பிக் கொள்வார். வெகு சாதாரணமான உடை, எண்ணெய் வழியும் முகம், தூங்கி வழிந்த கண்கள், ஒப்பனை ஏதுமின்றி எதிரே வந்தால் போதும். மகாராஜா மதனராஜாவாக மாறிவிடுவார். அவருக்குள் காதல் உணர்வுகள் கொப்பளிக்க ஆரம்பித்துவிடும். 'என்னடி முனியம்மா உன் கண்ணுல மையி..' - என்று அந்தப் பெண்ணை முன்னால் போகவிட்டு, இவர் பின்னாலேயே செல்ல ஆரம்பித்து விடுவார்.



வைஸ்ராய் மயோ

மாண்புமிகு மகாராஜா ரானா உதய் பான் சிங்கின் டேஸ்ட் அப்படித்தான் இருந்தது. ராஜ குடும்பத்தில் பிறந்திருந்தாலும், பெரும் செல்வந்தர்களின் வாரிசுகளோடு அஜ்மீரிலுள்ள மயோ கல்லூரியில்* படித்திருந்தாலும் உதய் பானின் ரசனை அப்படித்தான் இருந்தது. ரசனைக்கும் படிப்புக்கும் சம்பந்தமில்லையே.

தலப்-இ-ஷாகியில் இருக்கிறபோதுகூட உதய் பான் சிங்கின் நினைப்பு எப்போதும் ஆக்ராவுக்கு அருகிலிருக்கும் அந்த பங்களா மேல்தான் குவிந்திருந்தது. அங்குதான் இருந்தாள் அவள். அவரது ஆசைநாயகி. ராம் பியாரி. மேனகையோ, ரம்பையோ, நமீதையோ, இளவரசியோ, பெரும் பணக்காரியோ இல்லை.

அவள் ஒரு சாதாரண வேலைக்காரி.

என்னவோ தெரியவில்லை, சாதாரணப் பெண்களைப் பார்க்கும்போதெல்லாம் சட்டெனக் காதல் வயப்பட்டார் மகாராஜா. எப்படி அந்தப் பெண்ணை வசப்படுத்தலாம் என்று திட்டமிடுவார். செயல்படுத்துவார். அந்தப் பெண்கள் மகாராஜாவைச் சந்தோஷப்படுத்திவிட்டு, கொடுக்கும் பணம், நகைகளை வாங்கிக் கொண்டு, சென்றுவிட வேண்டும். அந்தப்புரத்தில்

---

★ 1869 முதல் 1872 வரை வைஸ்ராயாக இருந்த மயோவால் ராஜபுத்திரர்களுக்கான இந்தக் கல்வி நிறுவனம் உருவாக்கப்பட்டது.

நிரந்தரமாகத் தங்கும் வேலை எல்லாம் வைத்துக் கொள்ளக்கூடாது. இதுபற்றி வெளியில் மூச் விடக்கூடாது.

மகாராஜாவின் இந்த லோ கிளாஸ் திருவிளையாடல்கள், ஒரு சில ராஜவிசுவாச பணியாளர்கள் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

ராம் பியாரியின் கதைக்கு வருவோம். ஒரு சுபயோக சுபதினத்தில், அரண்மனை வேலைக்காரி யான ராம் பியாரி, மகாராஜாவின் கண்களில் பட்டு விட்டாள். கருத்த தோல், பூனைக் கண்கள், தடித்த மூக்கு, அகல வாய், சற்றே பருமனான தேகம், நைந்துபோன உடைகள் இது போதாதா? 'ஓ மேரா பியார், (என்னுயிரே...) கித்னா கூப்ஸூரத் ஹே தூ (நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்)' என்று உருகி மருக ஆரம்பித்துவிட்டார் மகாராஜா.

'ஏ புள்ள, அம்மாம் பெரிய ராசா, போயும் போயும் உன் மூஞ்சப் பாத்து மயங்கிக் கெடக்குறாரு. நீ இன்னாடான்னா யோசிச்சிக்கினு கீற? சட்டுபுட்டுனு ஆசையா நாலு வார்த்த பேசுவியா...' பியாரியின் மனம் ராஜ கவர்ச்சியில் மயங்கி நிற்க, அந்தத் தெய்வீகக் காதல் ஆரம்பமானது.

நிரந்தரக் காதலி ஆக்கிக் கொள்ளுமளவுக்கு பியாரியின் மேல் மகாராஜாவுக்குப் பிரியம் அதிகரித்துக் கொண்டே போனது. எத்தனை நாள்தான் இமேஜ் கெடாமல் அரண்மனையிலும், வேறு இடங்களிலும் திருட்டுத்தனமாகக் காதலிக்க முடியும்?

பியாரிக்கெனத் தனி பங்களா ஒன்று ஒதுக்கப்பட்டது. தோல்பூரிலிருந்து சில மைல்கள் தள்ளி, ஆக்ராவுக்கு வெகு அருகில். வேலைக்காரி என்ற இமேஜுக்கேற்ற, சிம்பிளான, அடிப்படை வசதிகள் மட்டும் கொண்ட மாளிகை. அதன் உள்ளே ஓரளவுக்கு விசாலமான அறை ஒன்று பியாரிக்கென ஒதுக்கப்பட்டது. அறைதான் விசாலமே தவிர, காற்று, ஒளியெல்லாம் நுழைவதற்கு ஜன்னலெல்லாம் கிடையாது.

அங்கே பியாரி கைதியாக.. ச்சீ காதலியாக வாழ ஆரம்பித்தாள். பங்களாவைக் காவலர்கள் பார்த்துக்கொள்ள, அந்த அறையைப் பூட்டு ஒன்று பாதுகாத்துக் கொண்டது.

ஏதாவது தேவையென்றால் பியாரி உள்ளிருந்தபடி கதவைத் தட்ட வேண்டும். காவலர்கள், இரண்டு இன்ச் திறந்து என்னவென்று கேட்பார்கள். தேவையைச் சொன்னால் நிறைவேற்றி வைப்பார்கள். மற்றபடி பியாரியின் முகத்தைக் கூட அவர்கள் பார்க்கக் கூடாது, பியாரியும் காட்டக் கூடாது. இது ராஜ உத்தரவு. அப்படியே நடந்துகொண்டார்கள்.

மகாராஜா அவ்வப்போது பரம ரகசியமாக அந்த மாளிகைக்கு வந்துபோய்க் கொண்டிருந்தார். அரிதாக சில நேரங்களில் பியாரியை, தலப்-இ-ஷாகி உல்லாச மாளிகைக்கு வரவழைக்கும் வழக்கமும் மகாராஜாவுக்கு இருந்தது. அங்கும் அவளுக்கெனத் தனியே தன்னந்தனியே ரகசிய அறை ஒதுக்கப்பட்டிருந்தது. விருந்தினர்கள் யாரும் தப்பித் தவறிக் கூட அந்த அறைப்பக்கம் வரமுடியாதபடிப் பாதுகாவலர்கள் பார்த்துக் கொண்டார்கள்.

அப்படித்தான் ஓர் இரவில் தலப்-இ-ஷாகி மாளிகையில் இரவு விருந்து ஜரூராக நடந்து கொண்டிருந்தது. மகாராஜா விருந்தினர்களை உபசரித்துக் கொண்டிருந்தார். கொஞ்ச நேரம் ஆகட்டும் என்று பொறுமையாகவும் இருந்தார். வேறெதற்கு, பியாரியை தரிசிக்கத்தான்.

விருந்தினர்கள் கொஞ்சம் கொஞ்சமாகப் போதையில் தங்களை மறக்க ஆரம்பித்த சமயத்தில், தன்னுடைய அறைக்குள் சென்றார் மகாராஜா. உடைகளை மாற்றிக் கொண்டு, கொஞ்சம் ஒப்பனையும் செய்து கொண்டார். தனக்குப் பிரியமான பிங்க் நிறத் தலைப்பாகையை அணிந்துகொண்டார். பார்க்கப் போவது தன் ஆசை வேலைக்காரியை அல்லவா? ஆனால் அங்கு பியாரி, ஒப்பனை ஏதும் செய்துகொண்டு தன் அழகைக் கெடுத்துக் கொள்ளமால் இருக்க வேண்டும். மகாராஜாவின் மூட் முக்கியமாயிற்றே.

தலப்-இ-ஷாகி மாளிகையின் வாசலுக்கு வந்தார் மகாராஜா. அவரது ரோல்ஸ் ராய்ஸ் கார் தயாராக நின்றது. காரின் ஓட்டுநர் இருக்கையில் ஏறி அமர்ந்தார். காரின் சக்கரங்கள் அனிச்சையாக பியாரியின் பங்களாவை நோக்கி உருண்டன.

இன்று மகாராஜா வருவாரா, மாட்டாரா என்ற விவரமெல்லாம் பியாரிக்குத் தெரியாது. வேளா வேளைக்கோ அல்லது வேணும் போதெல்லாமோ உணவு வரும். சாப்பிட்டுவிட்டு கட்டையைச் சாய்த்துக் கொள்ள வேண்டியதுதான்.

அந்த இரவில் பியாரிக்குத் தூக்கம் வரவில்லை. அறையில் சன்னல்கள் இல்லாவிட்டாலென்ன, குளிர் நுழையச் சிறு துவாரங்கள் போதாது? ஏகத்துக்கும் குளிரெடுக்க, நெருப்பு மூட்டலாம் என்று அடுப்பை எடுத்தாள் பியாரி. மரக்கரி இல்லை. கதவருகே சென்று குரல் கொடுத்தாள். கதவைத் தட்டினாள். கதவு லேசாகத் திறக்கப்பட்டது.

'நெருப்பு மூட்ட மரக்கரி வேண்டும்.'

கொடுத்தார்கள். பியாரி அடுப்பை மூட்டினாள். நெருப்பு குளிரை எரித்துப் புகையாக வெளிவிட ஆரம்பித்தது.

சில மைல்கள் பயணம் செய்து பங்களாவை அடைந்தார் மகாராஜா. காவலர்கள் வணங்கி நிற்க, காரை விட்டு இறங்கினார். வேகவேகமாக பியாரியின் அறையை நோக்கி நடந்தார். மகாராஜாவின் காலடி ஓசை கேட்டதுமே, இரண்டு காவலர்கள் பியாரியின் அறையை நோக்கி ஓடினர். பூட்டைத் திறந்தனர். பின்பு கதவை. திறக்கப்பட்ட மறுநொடி அறைக்குள்ளிலிருந்து குபீரென்று புகை வெளிவந்து, உதய் பானின் முகத்தில் அடித்தது.

'அய்யோ... ஏன் இவ்வளவு புகை? என் பியாரிக்கு என்ன ஆயிற்று?'



# நீயா? நானா?

ஏதோ விபரீதம் நடந்துவிட்டது. என் அருமைக் காதலி ராம் பியாரிக்கு ஆபத்து. காவலர்கள் ஆபத்தான நேரத்திலும் அந்த அறைக்குள் போகலாமா வேண்டாமா என்று குழம்பி நிற்க, மகாராஜா உதய் பான் சிங் புகைக்குள் பாய்ந்தார்.

அறைக்குள் எதுவுமே கண்ணுக்குத் தெரியவில்லை. புகை சற்றுக் கலைந்ததும், பியாரி மகாராஜாவின் கண்ணில் தென்பட்டாள். மயங்கிக் கிடந்தாள். அடுப்பு புகையைப் பிரசவித்துக் கொண்டிருந்தது.

உதய் பான் அருகிலிருந்த ஜாடி நீரை ஊற்றி அடுப்பை அணைத்தார். நீரைப் பியாரியின் முகத்தில் தெளித்தார். அவளை அணைத்தார். உலுக்கிப் பார்த்தார். முடிந்த மட்டும் எழுப்பிப் பார்த்தார். வாய்விட்டு சத்தமாகப் பெயர் சொல்லிக் கூப்பிட்டும் பார்த்தார். பியாரியிடம் எந்த அசைவுமில்லை.

நாடி பிடித்துப் பார்த்தார். அது பலவீனமாகத் துடித்துக் கொண்டிருந்தது. அவளை அள்ளியெடுத்து இன்னொரு அறைக்குக் கொண்டு சென்றார். கட்டிலில் கிடத்தி விட்டு வெளியே வந்தார்.

'உடனே தலப்-இ-ஷாகி மாளிகைக்குச் சென்று அரண்மனை மருத்துவரை அழைத்து வாருங்கள். சீக்கிரம்...' உத்தரவைக் கேட்ட மறுநொடியில் அரண்மனைப் பணியாளர் ஒருவர், மகாராஜாவின் காரை எடுத்துக் கொண்டு கிளம்பினார்.

அந்தப் பணியாளர் தலப்-இ-ஷாகி மாளிகையை அடைந்தபோது அங்கே பல விருந்தினர்கள் ஏகாந்த நிலையில் கவிழ்ந்து கிடந்தனர். விருந்து நடந்த ஹாலில் மருத்துவர் இல்லை.

வேகவேகமாக மருத்துவரது அறைக்கு விரைந்தார் பணியாளர். அங்கே அவர், கிர்ரடித்துக் கிடந்தார். அவரை எழுப்பி, மகாராஜா அவசரமாக அழைத்திருக்கிறார் என்ற செய்தியைப் புரிய வைத்து, அழைத்து வருவதற்குள் பெரும்பாடாகப் போய்விட்டது.

மருத்துவர் பியாரியைச் சோதனையிட்டார். சில முதலுதவிகளைச் செய்தார். எந்தவித முன்னேற்றமும் இல்லை. 'யார் இந்தப் பெண்? என்ன நடந்தது?' மருத்துவரின் இந்தக் கேள்விக்கு, அந்தச் சமயத்தில் மழுப்பல் பதிலைச் சொல்லமுடியாத மகாராஜா, அவ்வள வற்றையும் கொட்டிவிட்டார்.

'இப்படியா ஒரு பெண்ணை, காற்றே இல்லாத அறையில் அடைத்து வைப்பீர்கள்?' மருத்துவரின் குரலில் தெரிந்த கண்டிப்பு மகாராஜாவுக்குள் நடுக்கத்தைக் கொடுத்தது.

'நீங்கள் என்ன கேட்டாலும் தருகிறேன். இந்தப் பெண்ணை எப்படியாவது உயிர் பிழைக்க வைத்துவிடுங்களேன்.' - கம்பீரக் குரல் கெஞ்சிக் கொண்டிருந்தது. மருத்துவரும் தன்னாலான முயற்சிகளைச் செய்து பார்த்தார். பின்னர் தன் சாலேஸ்வரத்தைக் கழற்றி விட்டு, தலையைக் குனிந்தபடியே 'ஸாரி...' என்றார்.

மகாராஜா தலையைக் குனிந்து உட்கார்ந்தார். உடல்மொழி அவர் அழுவதாகச் சொன்னது.

உண்மையில் அப்போது மகாராஜா அழுது கொண்டிருந்ததற்கான காரணம் அவரை ஆக்கிர மித்திருந்த பயம்.

'அடப்பாவி மக்கா, நாம இம்புட்டு நாளு உத்தமருன்னு நம்பிக்கிட்டிருந்த நம்ம மவராசா, இப்படி ஒரு கேடுகெட்டப் பித்தலாட்டக்காரரா, பொம்பளைப் பொறுக்கியா இருப்பாருன்னு நினைச்சே பார்க்கலை...' - இம்மாதிரியாக மக்கள் எல்லோரும் பேசத் தொடங்கிவிட்டால்?

'என்ன உதய் பான், இப்படி அநியாயத்துக்கு ஒரு பெண்ணைக் கொன்னுட்டீரே? உம்ம அந்தஸ்துக்கு இப்படி ஒரு அவமானம் தேவையா?' - இப்படி அயல் சமஸ்தான மகாராஜாக் களெல்லாம் நாக்கைப் பிடுங்குமாறு கேள்விகள் கேட்டால்?

'உதய் பான்ஜி, நீங்க உங்க சமஸ்தானப் பெண்களையெல்லாம் சித்ரவதை செய்கிறீர்கள். அரசு உங்கள் மேல் சட்டப்படி நடவடிக்கை எடுக்கும்' - இப்படி பிரிட்டிஷ் நாட்டாமைகள் பீதியைக் கிளப்பினால்?

விஷயம் வெளியே தெரிந்துவிட்டால் இதுவரைக் கட்டிக் காத்த இமேஜின் கோவணத்தை உருவி நடுத்தெருவில் நிறுத்தி விடுவார்களே? மானம், மரியாதை, மகாராஜ மமதையை யெல்லாம் விட்டுவிட்டு மருத்துவரின் கால்களில் விழுந்துவிடுவதுதான் ஒரே வழி என்று உதய் பானுக்குத் தோன்றியது. காவலர்களை வெளியில் போகச் சொன்னார். குரலைத் தாழ்த்தி மருத்துவரிடம் பேசினார்.

'இப்படி அசம்பாவிதம் நடக்கும் என்று நான் நினைத்துப் பார்க்கவே இல்லை. விஷயம் வெளியில் பரவிவிட்டால் பெரிய சிக்கலாகிவிடும். அதற்கு நீங்கள்தான் பெரிய மனது வைக்கவேண்டும். தயவுசெய்து யாரிடமும் மறந்தும் சொல்லிவிடாதீர்கள்.'

மகாராஜா கெஞ்ச, மருத்துவரும் அதற்கான உறுதியளித்துவிட்டு அங்கிருந்து கிளம்பினார்.

‘நடந்தது எதுவும் யாருக்கும் தெரியக் கூடாது. உடலை ரகசியமாக எரித்து விடுங்கள்’ அரண்மனைக் காவலர்களுக்கு உத்தரவிட்டார் மகாராஜா. ராம் பியாரியின் முகத்தை இறுதியாக ஒருமுறை பார்த்துக் கொண்டார். அவரது கண்களில் நீர் திரையிட்டது. காவலர்கள் உடலைத் தூக்கிக் கொண்டு கிளம்பினர்.

குடிகாரன் பேச்சுதானே... விடிந்ததால் போய்விட்டது. மருத்துவர் தனக்குத் தெரிந்தவர்களிடமெல்லாம் முந்தைய இரவு நடந்த விஷயங்களை விலாவாரியாகக் கூறிவிட்டார். மகாராஜாவால் ஒன்றும் செய்ய இயலவில்லை. மக்கள் மத்தியிலும் விருந்தினர்கள் மத்தியிலும் உதய் பான் சிங்கின் நல்லவர் இமேஜ் நசுங்கிப் போனது.

மகாராஜா யாரிடமும் பேசவில்லை. தோல்பூர் அரண்மனையில் தன் அறைக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்தார். நான்கு நாள்கள் எதுவும் சாப்பிடவில்லை. தலப்-இ-ஷாகி ஏரியிலும், வன்விஹாரிலும் தான் பாசமாக வளர்க்கும் பறவைகளையும், வனவிலங்குகளையும் கூட அவருக்குப் பார்க்கத் தோன்றவில்லை. பியாரிக்காகச் சோக தாடி வளர்த்தார். இங்கேயே, இப்படியே இருந்தால் சரிப்பட்டு வராது என்று தோன்றியதால் வெளியூர் பயணம் செல்ல திட்டமிட்டார். தன் பாவங்களைக் கழுவக் கோயில் கோயிலாகப் புண்ணிய யாத்திரை செய்ய ஆரம்பித்தார்.

ஹரித்துவார் சென்று அங்கு சில நாள்கள் தங்கினார். அங்கிருந்து அப்படியே சிம்லா மலைப் பகுதியிலுள்ள சோலான் என்ற ஊருக்குச் சென்றார். அங்கே தான் குருவாக நினைக்கும் சாமியார் ஒருவரிடம் சென்று மனம்விட்டுப் புலம்பினார். அழுதார். தெளிவுபெற்ற பின் சமஸ்தானம் திரும்பினார்.

சில மாதங்கள் கழித்து மீண்டும் தலப்-இ-ஷாகி மாளிகை விருந்தினர்களால் நிரம்ப ஆரம்பித்தது. வாத்துகள் தங்கள் விதியை நொந்து கொண்டன.

●

மகாராஜா உதய் பான் சிங்குக்கு பிரிட்டிஷ் ஆதரவாளர் என்ற முத்திரை இருந்து வந்தது. பிரிட்டிஷாரைக் குஷிப்படுத்தும் வகையில் அவர் அடிக்கடி தன் மாளிகையில் உல்லாச விருந்துகள் நடத்தி வந்தது அந்த முத்திரையை அழுத்தமாக்கியது. எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு சம்பவம் நடந்தது.

அது ஒரு தேர்தல் சமாசாரம்.

1921-ல் மன்னர்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு கூட்டமைப்பு (Chamber of Princes) உருவாக்கப்பட்டது. இந்த அமைப்புக்கு வேந்தராக (Chancellor) ஒருவர் இருப்பார் என்றும் அவர் மகாராஜாக்களின் கோரிக்கையை, தேவைகளை வைஸ்ராயிடம் கொண்டு செல்வார் என்றும் கூறப்பட்டது. சாமானியர்களின் மொழியில் சொல்வதென்றால், இந்தக் கூட்டமைப்பு மகாராஜாக்கள் அமைத்த ‘வருத்தமில்லாத வாலிபர் சங்கம்.’ பெரிய அளவில் அதிகாரம் எல்லாம் கிடையாது. எல்லாம் வரையறுக்கப்பட்டவையே.*

---

★ இந்தக் கூட்டமைப்பு குறித்த மேலதிக விவரங்கள் பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங்கின் வரலாற்றில் அத்தியாயம் 129ல் விவரிக்கப்பட்டுள்ளது.



மகாராஜா பூபிந்தர் சிங்

மன்னர்கள் கூட்டமைப்பின் முதல் வேந்தராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் பிகானிர் சமஸ்தான மகாராஜா கங்கா சிங். டெல்லியின் பாராளுமன்ற வளாகத்தில், ஒரு கட்டடம் இந்த அவைக்காக ஒதுக்கப்பட்டது. 108 மகாராஜாக்கள் இதில் உறுப்பினர்களாக இருந்தனர். தவிர, பிற சிறிய சமஸ்தானங்களின் சார்பாக, ராஜாக்கள் 12 பேரும் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இப்போதுள்ள எம்.பி., எம்.எல்.ஏக்களுக்கு முன்னோடிகளாக மகாராஜாக்கள் திகழ்ந்தனர். அதாவது அவைக்கு ஒழுங்காகச் செல்வதெல்லாம் கிடையாது. ஆடிக்கொரு முறை, ஆடித்தள்ளுபடிகொருமுறை சென்றாலே அதிசயம். மைசூர், பரோடா, ஹைதராபாத் போன்ற பெரிய சமஸ்தான மகாராஜாக்களெல்லாம் தங்களுக்குப் பதிலாக, பிரதிநிதிகளையே அனுப்பி வந்தனர்.

பாட்டியாலா சமஸ்தானத்தில் மகாராஜாவான பூபிந்தர் சிங், மன்னர்கள் கூட்டமைப்பின் தலைவராகப் பலமுறை போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டுச் செயல்பட்டு வந்தார்.

1937ல் கூட்டமைப்புக்கான தேர்தல் அறிவிக்கப்பட்டது. வழக்கம்போல பூபிந்தர் சிங் தலைவராக மீண்டும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்படுவார் என்ற எதிர்பார்ப்பு இருந்தது.

பூபிந்தர் சிங், மகாராஜா உதய் பான் சிங்கின் நெருங்கிய நண்பர். இருவரும் அடிக்கடி சந்தித்துக் கொள்வர். ஒருவருக்கொருவர் விருந்துகள் கொடுத்து மகிழ்வர். பல முக்கியமான விஷயங்களில் முடிவெடுப்பது குறித்து கலந்து ஆலோசித்துக் கொள்வர். ஆனால் அப்போது நடைபெற இருந்த மன்னர் கூட்டமைப்புக்கான தேர்தலில் பூபிந்தர் சிங்கை எதிர்த்து வேந்தர் பதவிக்குப் போட்டியிடப் போவதாக உதய் பான் சிங் அறிவித்தார்.

'சேச்சே.. உதய் பான் அப்படிப்பட்டவர் அல்ல, பொய்யான தகவல்' என்றுதான் பூபிந்தர் சிங் நினைத்தார். உதய் பானிடம் விஷயத்தைக் கேட்டுவரச் சொல்லித் தூதுவர்களை அனுப்பினார். அவர்கள் திரும்பி வந்து 'நெசம்தான் மகாராஜா' என்றனர்.

'என்ன ஆயிற்று இவருக்கு?' என்று குழம்பிப் போனார் பூபிந்தர் சிங். உதய் பானைத் தேர்தலில் இருந்து வாபஸ் பெற வைப்பதற்காக, தன் சமஸ்தானத்தில் முக்கியமான அதிகாரிகளைத் தூது அனுப்பினார். தனக்கும் உதய் பானுக்கும் பொது நண்பர்களாக இருக்கும் பக்கத்து சமஸ்தான மன்னர்களைத் தூது அனுப்பினார். ஆனால் உதய் பான் தன் முடிவில் பின்னோ, முன்னோ வாங்குவதாக இல்லை.

பூபிந்தர் சிங்கே நேரில் போய்ப் பேசியிருக்கலாம், ஆனால் என்ன செய்ய? எதிர்த்து நிற்கப் போகிறேன் என்று சவால் விட்ட சிநேகிதரைத் தேடிச் சென்று பேச ஈகோ இடமளிக்கவில்லை. இறுதி முயற்சியாகக் கடிதம் ஒன்றை அனுப்பினார்.

'அன்பு மகாராஜா உதய் பான் சிங் அவர்களுக்கு,

தங்களின் முடிவு எனக்கு மிகுந்த வருத்தத்தையும் ஏமாற்றத்தையும் கொடுக்கிறது. இப்போது நம் இருவருக்குமிடையே இருக்கும் உறவு, எப்போதும் கெடாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத் தாங்கள் போட்டியிலிருந்து விலகிவிடுவீர்கள் என்று எதிர்பார்க்கிறேன். விரும்புகிறேன்.

இப்படிக்கு மகாராஜா பூபிந்தர் சிங்.'

கடிதம் சர்வ ஜாக்கிரதையாகச் சென்று சேர்ந்தது. ஆனால் பதிலுக்கு உதய் பான் சிங்கிடமிருந்து ஒரு அக்னாலெட்ஜ்மெண்ட் கூட வந்து சேரவில்லை. உதய் பான் இவ்வளவு அடமாக இருப்ப தன் பின்னணி என்னவென்று நோண்டித் துருவி விசாரித்தார் பூபிந்தர். பின்னால் பிரிட்டிஷ் அரசு இருப்பது தெரியவந்தது.

'நீயா? நானா? ஒரு கை பார்த்துவிடலாம்' என்று மகாராஜா பூபிந்தர் சிங் தொடை தட்டிக் களத்தில் குதித்தார். மற்ற மகாராஜாக்களிடம் ஓட்டு வேட்டை நடத்துவதற்கென்றே தனிக் கமிட்டி ஒன்றை அமைத்தார். கமிட்டி உறுப்பினர்கள் காஷ்மீர் டூ கன்னியாகுமரி வரை சமஸ்தானம் சமஸ்தானமாகப் பிரித்து அனுப்பப்பட்டனர்.

தேர்தல் செலவுக்கென ஏராளமான நிதி ஒதுக்கப்பட்டது. கமிட்டி உறுப்பினர்களின் தேர்தல் பயணத்துக்கெனச் சிறப்பு வாகனங்கள், ரயில்கள் ஏற்பாடு செய்யப்பட்டன. அவர்கள் சென்று தங்குவதற்கு உயர்தர ஹோட்டல்களில் அறைகள் ஏற்பாடு செய்யப்பட்டன. தண்ணீராகச் செலவளிக்குமளவுக்கு அவர்களுக்குப் பணமும் கொடுக்கப்பட்டது.

கவுன்சிலர் தேர்தல் என்றால் மக்களுக்கு பிளாஸ்டிக் குடம், எவர்சில்வர் தட்டு, அரிசி, நோட்டு புக், சில நூறு பணம் கொடுத்து ஓட்டுகளை வாங்கி விடலாம். மகாராஜாக்களிடம் ஓட்டு கேட்க சும்மா போக முடியுமா என்ன? ஒவ்வொருவருடைய அந்தஸ்துக்கேற்பப் பரிசுப் பொருள்களைக் கொடுத்து அனுப்பினார் பூபிந்தர் சிங்.

பூபிந்தர் சிங்கை எதிர்த்து உதய் பான் நிற்கிறாரா என்று பல மகாராஜாக்களின் கண்கள் சிவந்தன. 'எங்கள் ஓட்டு பூபிந்தருக்கே' என்று உறுதியளித்தனர். சில மகாராஜாக்கள் மட்டும் ஓட்டுக் கேட்டு வந்த உறுப்பினர்களைக் கண்டுகொள்ளவில்லை. அதன்மூலம் அவர்கள் உதய் பான் சிங்குக்கு ஆதரவு அளிக்கப் போகிறார்கள் என்பது வெட்ட வெளிச்சமானது.

ஆனால் பூபிந்தர் சிங்கின் பகீரதப் பிரயத்தனங்களுக்கு முன் உதய் பானின் நாற்காலிக் கனவு தூள் தூளாகிப் போனது. பூபிந்தர் சிங் எளிதாக வெற்றி பெற்று மீண்டும் மன்னர் கூட்டமைப் பின் வேந்தரானார்.

சமஸ்தானத்துக்கென்று, உதய் பான் செய்த உருப்படியான காரியம் என்று சொல்ல வேண்டு மென்றால், மழைநீர் சேகரிப்புக் குளங்களைச் சொல்லலாம். சமஸ்தானம் முழுவதும் ஏகப்பட்ட ஏரி, குளங்களை வெட்டி அருளினார். அவை இன்றுவரை பயன்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இந்திய சமஸ்தான இணைப்பு நடவடிக்கைகளின்போது, உதய் பான் எந்தவிதச் சிக்கலும் கொடுக்கவில்லை. தோல்பூர் இணைப்பு ஒப்பந்தத்தில் மார்ச் 27 (1948) அன்று கையெழுத்திட்டார். 'ராஜ்பிரமுக்'★ (Rajpramukh) என்ற டம்மி பதவியைக் வாங்கிக் கொண்டு கௌரவ நடிகராக ஒதுங்கிக் கொண்டார்.

தோல்பூர் சமஸ்தானத்தின் கடைசி மகாராஜாவான உதய் பான் சிங் பற்றிச் சொல்வதற்கு இன்னும் ஒரு வரி பாக்கியிருக்கிறது.

அக்டோபர் இருபத்திரெண்டு, 1954-ம் ஆண்டு அவர், தன் காதல் வேலைக்காரி ராம் பியாரியிடம் சென்று சேர்ந்தார்.

தோல்பூர் ராஜ குடும்பத்தினர் பற்றி இன்னொரு வரி சொல்லலாம். பிஜேபியின் முக்கியஸ்தர்களுள் ஒருவர் உதய் பானுவின் மருமகள். வேறு யாருமல்ல, ராஜஸ்தானின் முதல் பெண் முதல் மந்திரியும், முக்கிய அரசியல்வாதியுமான வசுந்தரா ராஜே சிந்தியா.

---

★ சமஸ்தானங்கள் இணைப்பின்போது, மகாராஜாக்களைச் சமாதானப்படுத்துவற்காக ஏற்படுத்தப்பட்ட பதவி ராஜ்பிரமுக். அதாவது சில மாகாணங்களின் கவர்னராக அந்தப் பகுதிகளை ஆண்ட மகாராஜாக்களே நியமிக்கப்பட்டனர். 1956ல் மொழி வாரியாக மாநிலங்கள் மறுசீரமைக்கப்பட்டபோது இந்தக் கௌரவப் பதவி ஒழிக்கப்பட்டது.

# அல்வார்

• ராஜபுத்திர சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1775
• ஆட்சி செய்தவர்கள் : நறுகா பரம்பரை
• முதல் மன்னர் : பிரதாப் சிங் பிரபாகர் பகதூர் • 15 குண்டு மரியாதை.






# ஸ்ரீ ஜெய் சிங்க ஜெயம்

குதிரையிலிருந்து கோபமாக இறங்கிய மகாராஜா, தன் கையிலிருந்த போலோ மட்டையால், அதனைக் கண்டமேனிக்கு அடிக்க ஆரம்பித்தார். சுற்றி வேடிக்கை பார்த்தவர்களுக்கே வலித்தது என்றால், குதிரைக்கு எப்படி இருந்திருக்கும்?

வாரம் ஒருமுறையாவது அந்த மைதானத்தில் போலோ விளையாடுவதென்பது அல்வார்★ சமஸ்தான மகாராஜா ஜெய் சிங்கின் வழக்கம்.

பரந்து விரிந்த மைதானம், மரத்தாலான சுத்தியலுக்கு நீண்ட கைப்பிடி போட்டது போல மட்டை, மூன்றரை இஞ்ச் விட்டமுள்ள மரப்பந்து, இரண்டு அணிகளுக்கும் தலா நான்கு குதிரைகள், மொத்தம் எட்டு வீரர்கள். குதிரையை ஓட்டியபடியே பந்தைத் தட்டித் தட்டிச் சென்று கோல் போட வேண்டும். சுக்கா என்பது ஏழு நிமிடங்கள் கொண்ட ஒரு சுற்று. மொத்தம் ஆறு சுக்காக்கள். நாற்பத்தியிரண்டு நிமிடங்கள். அந்த நேரத்துக்குள் எந்த அணியினர் அதிகம் கோல் போடுகிறார்களோ, அவர்களே ஜெயித்தவர்கள். இதுதான் போலோ. பெர்சியாவில், அதாவது இன்றைய இரானில் கண்டுபிடிக்கப்பட்ட விளை யாட்டு.

மகாராஜா ஜெய் சிங், குதிரையில் அமர்ந்து, போலோ விளையாடத் தொடங்கினால் போதும். கோல் கோலாகலமாகப் பறக்கும். எதிரணி வீரர்கள்

★ அல்வாரை ஆண்டவர்கள் ராஜபுத்திரர்களின் நாருகா (Naruka) பிரிவைச் சேர்ந்தவர்கள். ஜெய்ப்பூர் மகாராஜாக்களிடம் பணிபுரிந்தவர்கள். பிரதாப் சிங் என்பவர், ஜாட்களை எதிர்த்து பல வெற்றிகளைப் பெற்றார். 1770ல் தனக்கென ஒரு ராஜ்ஜியத்தை அமைத்து ஆள ஆரம்பித்தார். அதுவே அல்வார். தற்போது அல்வார், ராஜஸ்தானிலுள்ள ஒரு முக்கியமான நகரம்.



மகாராஜா ஜெய் சிங்

திண்டாடிப் போவார்கள். மேட்ச் பிக்சிங்? மூச்.. இப்படியெல்லாம் வெளிப்படையாகக் கேட்கக்கூடாது.

எப்போதாவது குதிரைகளுக்குப் பதிலாக ஒட்டகங் களைப் பயன்படுத்தி போலோ விளையாடுவார் ஜெய் சிங். வேறு சில சமஸ்தான மகாராஜாக்கள், யானை மீதேறி போலோ விளையாடும் பழக்கத்தையும் வைத்திருந்தனர்.

அன்றைக்கும் அப்படித்தான், மகாராஜா ஜெய் சிங், தான் எப்போதும் போலோ விளையாடுவதற்கு உபயோகப் படுத்தும் குதிரையில் ஏறி, மட்டையைச் சுழட்டினார். ம்ஹூம்.. குதிரைக்கு மூட் சரியில்லை போல. நகராமல் சண்டித்தனம் செய்தது. கோபம் வராதா என்ன? அடி பின்னிவிட்டார்.

'இன்னும் இரண்டு நாள்கள், இந்தக் குதிரைக்கு உணவு, தண்ணீர் எதுவும் கொடுக்கக் கூடாது' - சொல்லிவிட்டுக் கிளம்பினார் ஜெய் சிங். பணியாளர்கள் குதிரை போலவே தலையாட்டினார்கள். வலி தாங்காமல் கனைத்துக் கொண்டிருந்த குதிரை, ப்ளூ க்ராஸிடம் புகார் கொடுக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தது.

அந்தக் குதிரைக்கு அன்று நல்ல நேரம் என்றுதான் சொல்லவேண்டும். ஏனென்றால் அதற்கு முன் தான் உபயோகித்து வந்த குதிரை, விளையாட்டில் சரியாக ஒத்துழைக்காத கோபத்தில் மகாராஜா, அதன்மீது பெட்ரோல் ஊற்றி நெருப்பு வைத்துவிட்டார்.

என்ன செய்ய? அல்வார் சமஸ்தானத்தை ஆண்டு வந்த மகாராஜா ஜெய் சிங்குக்கு முன் கோபம், பின் கோபம், நடுக் கோபம் எல்லாமே அதிகமாகத்தான் இருந்தது. மனிதர்களோ, மிருகங்களோ அல்லது அஃறிணைப் பொருளோ, தான் கட்டளையிட்டுவிட்டால், மறு பேச்சோ, மறுமூச்சோ இல்லாமல் அடிபணிந்துவிட வேண்டும் என்று எதிர்பார்ப்பார். இல்லாத பட்சத்தில் வன்முறையில் இறங்கி விடுவார். மகாராஜாவுக்கே உரிய சர்வ கர்வ லட்சணங்கள் பிசகாமல் நடந்துகொள்ள நினைத்தது தப்பா என்ன?

ஏகபத்தினி விரதராக இருக்க முடியாவிட்டாலும் குறிப்பிட்ட இடைவெளியில் நான்கு திருமணங்கள் செய்து கொண்டவர்★. தனக்குப் பச்சை நிற மேனியில்லாவிட்டாலும், கையில் வில் இல்லாவிட்டாலும், லட்சுமணன் போல் தம்பிமார்கள் இல்லாவிட்டாலும், மகாராஜா ஜெய் சிங், கொஞ்சமும் கூச்சப்படவே இல்லை. தன்னை ராமபிரானின் மறு அவதாரமாக அறிவித்துக் கொண்டார்.

---

★ நான்கு மகாராணிகளின் பெயர்கள் தெரியவில்லை. முதல் மகாராணி ராஜஸ்தான் கிஷன்கர் (Kishangarh) சமஸ்தானத்தின் இளவரசி. 1897ல் திருமணம் செய்துகொண்டார். அந்த மகாராணி 1921ல் இறந்துபோனாள். இரண்டாவது திருமணம் 1914ல் நடந்தது. Lady of Rajpura என்று குறிப்பிடப்பட்டுள்ள மூன்றாவது மகாராணியை 1919ல் திருமணம் செய்துகொண்டார். கதியவார் இளவரசி ஒருத்தியை நான்காவதாக மணம் முடித்துக் கொண்டார்.

சமஸ்தான மக்கள் தாராளமாகத் தன்னை வணங்கும்படி செய்து அருள் பாலித்தார். துளசி, தீர்த்தம் எல்லாம் கொடுத்து, ஸ்ரீ ஜெய்சிங்க ஜெயம் எழுதச் சொல்லியிருந்தால்கூட ஆச்சரியப் படுவதற்கில்லை.

ஜெய் சிங் ரொம்ப ஆச்சாரமானவர். தீண்டாமை ஒரு பாவச்செயல், ஒரு பெருங்குற்றம், ஒரு மனிதத் தன்மையற்ற செயல் - இந்த வாசகங்களுக்குப் பின்னால் 'அல்ல' என்று கொட்டை எழுத்தில் போட்டுக் கொள்வார். அவரைப் பொருத்தவரையில் தன்னுடைய புனிதம் எந்த விதத்திலும் கெட்டு விடக்கூடாது என்பதில் படு கவனமாக இருந்தார்.

அரண்மனையில் புனிதத்தைக் குறைக்கும் வகையில் யாராவது வந்துவிட்டுப் போனாலோ அல்லது ஏதாவது பொருளைத் தொட்டு விட்டாலோ அல்லது ஏதாவது தீட்டுச் சமாசாரங்கள் நடந்துவிட்டாலோ அவ்வளவுதான். அரண்மனையின் வாசல் கதவு முதல் கக்கூஸ் வரை 'கங்கா ஜல சுத்தி' செய்யச் சொல்லி ஆணையிடுவார். இண்டு, இடுக்கு விடாமல் பூரண புண்ணியாகவாசனம் செய்து முடித்த பின்னர்தான் அவருக்கு நிம்மதி வரும்.

அடுத்த விஷயம் தோல் பொருள்கள். அவற்றைக் கண்டாலே மகாராஜாவுக்கு மகா அலர்ஜி. அரண்மனையிலோ, அவர் புழங்கும் வேறு இடங்களிலோ அவை இருக்கக் கூடாது. தப்பித் தவறி யாராவது பணியாளர்கள் தோல் பொருள்களை அவர்முன் கொண்டுவந்துவிட்டால் போதும். அவர்களின் தோலை உரித்துவிடுவார்.

கிட்டத்தட்ட அவரது தந்தை மங்கல் சிங்கின் குணநலன்களைத்தான் கொண்டிருந்தார் ஜெய் சிங். அளவுக்கு மிஞ்சினால் ஆல்கஹாலும் நஞ்சு என்று தெரியாத மங்கல் சிங், 1892ல் இறந்து போனார். அப்போது பட்டத்து இளவரசரான ஜெய் சிங்குக்கு வயது பத்து*. அல்வாரின் மகாராஜாவாக ஜெய் சிங் அறிவிக்கப்பட்டார். இருந்தாலும் அவர் வயதுக்கு வரும்வரை (அதாவது மெச்சூரிட்டி அடையும் வரை) பிரிட்டிஷ் அரசாங்கமே சமஸ்தானத்தை ஆட்சி செய்தது. 1903 டிசம்பரில் ஜெய் சிங்கிடம் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

ஜெய் சிங்குக்கு மகாராஜாக்கள் கூட்டமைப்பின் (Chamber of Princess) வேந்தர் (Chancellor) ஆக வேண்டுமென்று ஓர் ஆசை. அதற்கு வாய்ப்பிருக்கிறதா, தன் ஜாதகம் என்ன சொல்கிறது என்று தெரிந்துகொள்ள ஆசைப்பட்டார். அல்வார் சமஸ்தானத்தில் ஜோசிய வேங்கை என்று மார்தட்டிக் கொள்ளுமளவுக்கு என்று யாருமில்லை.

'மன்னர் பெருமானே, பம்பாய் நகரில் ஒரு ஜோதிடர் இருக்கிறார். அவர் சொன்னதெல்லாம் வார்த்தை மாறாமல் பலிக்கிறதாம். தேசம் முழுவதும் அவரது புகழ் கொடி, தோரணம் எல்லாம் கட்டிப் பறக்கிறது. பல சமஸ்தான மகாராஜாக்களின் ஆஸ்தான ஜோதிடர் அவர். வரச் சொல்லலாமா?' அமைச்சர் ஒருவர் யோசனை சொன்னார். ஜெய் சிங் ஒப்புக் கொண்டார். உடனே கிளம்பி வரச் சொல்லி ஜோதிடருக்குத் தகவல் அனுப்பப்பட்டது.

அலாஸ்டார் என்று திருநாமகரணம் சூட்டப்பட்ட அந்த ஜோதிட பாரத ரத்னாவுக்கு, ஜெய் சிங்கின் அழைப்பு சென்று சேர்ந்தது. பம்பாயில் கார், பங்களா, கொழுத்த செல்வத்துடன் வாழ்ந்து வந்த அவருக்கு மகாராஜா ஜெய் சிங்கின் சாத்வீக குணநலன்கள் பற்றி இம்மியளவும்

---

★ மங்கல் சிங்குக்கும் அவரது இரண்டாவது மனைவிக்கும் ஜூன் 14, 1882ல் அல்வாரில் பிறந்தவர் ஜெய் சிங். மங்கல் சிங்கின் ஒரே ஆண் வாரிசு.

தெரியாது. அதனால் தன் ஜோதிட கெத்து, கிஞ்சித்தும் குறையாதபடிக்குப் பதில் கடிதம் ஒன்றை அனுப்பினார்.

'மதிப்புமிகு மகாராஜா ஜெய் சிங் அவர்களுக்கு,

தங்களின் அழைப்பு கிடைக்கப் பெற்றேன். நன்றி. என்னுடைய கட்டண விவரங்களை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன். தினமும் ஆயிரம் ரூபாய் வீதம், நான் அல்வாரில் வந்து தங்கும் ஒவ்வொரு நாளுக்கும் தந்துவிட வேண்டும். பம்பாயிலிருந்து அல்வார் வந்து செல்வதற்கான ரயில் கட்டணம் உங்களுடையதே. நான் தங்குவதற்கு எல்லா வசதிகளும் கூடிய மாளிகை ஒன்றை ஏற்பாடு செய்து தர வேண்டும். உணவுச் செலவும் உங்களுடையதே. அல்வாரில் என் உபயோகத்திற்கென தனி கார் ஒன்றை ஒதுக்கித் தந்துவிட வேண்டும். இதரச் செலவுகளையும் நீங்களே கவனித்துக் கொள்ள வேண்டும் என்று பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன். தங்களைச் சந்திக்கும் நாளுக்காக ஆவலோடு காத்திருக்கிறேன்.

இப்படிக்கு ஜோதிடப் பேரொளி அலாஸ்டர்.'

கடிதத்தைக் கண்டதும் மகாராஜா ஜெய் சிங்கின் கன்னங்கள் கோபத்தால் துடித்தன.

'ங்கொய்யால... நான் எம்புட்டுப் பெரிய ஆளு, எனக்கே நீ ஆர்டர் போடுறியா? வாடி வா... வைச்சுக்கிறேன்' என்று ஜெய் சிங்கின் உள் மனம் உக்கிர தாண்டவம் ஆட, உதடுகள் முகமூடி போட்ட வார்த்தைகளை உதிர்த்தன.

'அந்த ஜோதிடரை வரச் சொல்லித் தகவல் அனுப்புங்கள்.'

ஜோதிடச் சக்கரவர்த்திக்குத் தகவல் போனது. மகாராஜாவைச் சந்திப்பதற்காக புது உடைகளை வாங்கிக் கொண்டார். தன் பவுசைக் காட்டும்படியான நகைகளை எடுத்துக் கொண்டார். எல்லாமே ராஜாவின் செலவுதான் என்றாலும், பந்தாவுக்காகப் பணத்தையும் தேவைக்கதிக மாகவே எடுத்துக் கொண்டார். இத்தனை மணிக்கு ரயிலில் வருகிறேன் என்று மோர்ஸ் தந்திக் கருவி மூலம் அல்வாருக்குத் தகவல் அனுப்பினார். பம்பாயில் தன் பங்களாவிலிருந்து நல்ல நேரத்தில்தான் கிளம்பினார். ஆனால் ராகுகாலம், எமகண்டம் பார்த்தா ரயில்வே அட்டவணை தயாரிக்க முடியும்? அல்வாரை நோக்கி, அந்தப் புகைவண்டி கிளம்பிய நேரம், ஜோதிடருக்குக் கெட்ட நேரமாகத்தான் இருந்திருக்க முடியும்.

தனக்குக் கிடைக்கப் போகும் ராஜ உபசரிப்பு பற்றிய கனவுகள் அவருக்குள் ஓடிக்கொண்டி ருந்தன. ரயில் அல்வாரை அடைந்தது. தன் பெட்டிப் படுக்கையோடு கம்பீரமாக ரயிலை விட்டு இறங்கினார். வலது பக்கம் பார்த்தார். இடது பக்கம் பார்த்தார். அவரை அழைத்துச் செல்ல யாரும் வரவில்லை. சில நிமிடங்கள் அங்கேயே காத்திருந்தார். சரி, வெளியே யாரா வது காத்திருப்பார்கள் என்று தன்னைத்தானே வலிய சமாதானப்படுத்திக் கொண்டு ஸ்டேஷன் வாசலுக்கு வந்தார். ஏமாற்றமே.

அரைமணி நேரமானது. இனிக் காத்துக் கொண்டிருப்பது வீண் என்று தெரிந்ததால், பெட்டிப் படுக்கையோடு நடக்க ஆரம்பித்தார். வெயில் வாட்டியது. இன்றைக்கோ நாளைக்கோ என இழுத்துக் கொண்டிருந்த ஒரு வயதான குதிரை, பாடாவதி வண்டி ஒன்றை இழுத்துவந்து கொண்டிருந்தது.

'விருந்தினர் தங்கும் விடுதிக்குப் போகணும்' என்று சொல்லியபடி அதில் ஏறிக் கொண்டார். அந்தக் கிழக் குதிரை, வண்டியோடு 'கேட் வாக்' செய்ய ஆரம்பித்தது.

விருந்தினர் தங்கும் விடுதி. 'மகாராஜா அழைப்பின் பெயரில் வந்திருக்கிறேன்' என்று அழுத்தம் திருத்தமாகப் பலமுறை கூவியும் யாரும் கண்டுகொள்வதாக இல்லை. அறை எதுவும் ஒதுக்கித் தரவுமில்லை. பசி தாங்கமுடியாமல் ஜோதிடருக்கு அழுகை அழுகையாக வந்தது. எங்காவது வெளியில் சென்று உணவாவது தேடலாம் என்று அங்கிருந்து கிளம்பினார்.

அவர் கையில் கொண்டு வந்திருந்த தண்ணீர்கூட காலியாகி விட்டிருந்தது. எதிரில் யாராவது பெண்கள் தண்ணீர்க் குடத்தைத் தலையில் வைத்துக் கொண்டு வருவார்கள் என்ற நினைப்புடனேயே நீண்ட தூரம் நடந்துவிட்டார். அதற்கு மேல் முடியவில்லை. அந்த இடத்திலேயே, பெட்டிப் படுக்கையை வைத்துவிட்டு, தலையில் கைவைத்து உட்கார்ந்துவிட்டார்.

'அய்யா, நீங்க யாருன்னு தெரிஞ்சுக்கலாமா?' குரல் கேட்டு நிமிர்ந்தார் ஜோதிடர்.

'நீங்க யாரு?'

'நான் இந்த சமஸ்தானத்தின் நிதியமைச்சர் ஆர்.சி. கன்னா'

சனி பகவானுக்கு ஏற்றிய நெய் விளக்குபோல ஜோதிடரின் முகம் ஒளிர்ந்தது.



# ஜோதிடரின் கெட்ட நேரம்

கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வராவிட்டால் என்ன, குறைந்தபட்சம் பூசாரியாவது வந்தாரே என்ற மகிழ்ச்சியில் அந்த பம்பாய் ஜோதிடரின் முகம் மலர்ந்தது.

'வணக்கம் அமைச்சரே. என் பெயர் அலாஸ்டர். மாண்புமிகு மன்னர் ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஜெய் சிங் அவர்கள், ஜோதிடம் பார்ப்பதற்காக என்னை பம்பாயிலிருந்து வரச் சொன்னார். இதோ பாருங்கள். மன்னர் அனுப்பிய கடிதம்..'

அவசர அவசரமாக எடுத்துக் காட்டினார். நிதி அமைச்சர் ஆர்.சி. கன்னா அதை வாங்கி நிதானமாகப் படித்தார்.

'இப்போது தங்களுக்கு என்ன உதவி வேண்டும்?' என்றார் அமைச்சர்.

'ரயில் நிலையத்திலேயே எதிர்பார்த்தேன். என்னை அழைத்துப் போக யாரும் வரவில்லை. இப்போது நான் எங்கு தங்குவது, என்ன செய்வது, ஒன்றுமே புரிய வில்லை. மகாராஜாவின் அந்தரங்க உதவியாளரைத் தொடர்பு கொள்ள நீங்கள் தான் உதவ வேண்டும்.'

கன்னா, கன்னாபின்னாவென யோசித்தார். இவருக்கு உதவலாமா? வேண்டாமா? மகாராஜாதான் வரச் சொல்லியிருக்கிறார். ஆனால் வரவேற்க ஆள் அனுப்ப வில்லை எனில் பின்னால் ஏதோ விபரீதம் இருக்கிறது. வேலில போற ஓணானை எடுத்து எதுக்கு பைஜாமாவுக்குள் விடணும்?

‘ஜோதிடரே, நான் அந்தரங்கச் செயலாளர் மூலமாக மகாராஜாவுக்குத் தகவல் சொல்லிவிடு கிறேன். சரியா?’ என்று கூறிவிட்டு நடக்க ஆரம்பித்தார். ஜோதிடர் பதறிப் போனார். ‘அய்யோ.. நீங்களும் என்னை இப்படியே விட்டுவிட்டுப் போனால் என் கதி? தயவுசெய்து நான் தங்குவதற்கு ஏதாவது ஏற்பாடு செய்யுங்களேன்.’

கண்ணீர் வராத குறையாகக் கெஞ்சினார் ஜோதிடர். பார்க்கப் பாவமாக இருந்ததால், கன்னா, அவரைத் தன்னுடைய கெஸ்ட் ஹவுஸுக்கு அழைத்துச் சென்றார். உணவு கொடுத்தார். இருக்க இடம் கொடுத்த கன்னாவிடம், வேறுவழியில்லாததால் படுக்கப் பாயும் கேட்டார் ஜோதிடர்.

அதற்குள் மகாராஜா ஜெய் சிங்குக்கு ஜோதிடர் வந்திருக்கும் தகவல் தெரிவிக்கப்பட்டிருந்தது. ஆனால் அவர் பதிலுக்கு ‘ம்’ கூட சொல்லவில்லை. அன்றைய பொழுது கழிந்தது.

மறுநாள் அதிகாலையிலேயே டிப் டாப்பாக உடையணிந்து வெளியே கிளம்பிய ஜோதிடர், தட்டுத் தடுமாறி மகாராஜாவின் அந்தரங்கச் செயலாளர் மாளிகையைக் கண்டுபிடித்தார். அவரைச் சந்திப்பதில் ஜோதிடருக்கு எந்தவிதத் தடையும் ஏற்படவில்லை.

‘நான்தான் ஜோதிடச் சூறாவளி ஸ்ரீமான் அலாஸ்டர். பம்பாயிலிருந்து வந்திருக்கிறேன்’ என்று தன் அருமை பெருமைகளை அள்ளிவிட ஆரம்பித்தார். எல்லாவற்றையும் கொட்டாவி விட்ட படியே கேட்டுக் கொண்டிருந்த செயலாளர், ‘ம், மகாராஜாகிட்ட சொல்றேன். பார்க்கலாம்’ என்று அசிரத்தையாகச் சொல்லியபடி உள்ளே சென்றுவிட்டார். ஜோதிடர் முகத்தில் ஈ, உ, ஊ எதுவுமே ஆடவில்லை.

அடுத்தநாளும் அதிகாலையில் அந்தரங்கச் செயலாளர் வீட்டுக்குச் சென்று சுப்ரபாரதம் பாடினார் ஜோதிடர். செயலாளர் நினைத்தால் மகாராஜாவிடம் பேசலாம்தான். ஆனால் ‘நீ என்ன அந்தாளுக்கு சப்போர்ட்டா?’ என்று தனக்கே மகாராஜா ஸ்பெஷல் ஆப்பு அடித்து விடுவாரோ என்ற பயத்தில் ஜோதிடரைக் கண்டுகொள்ளவில்லை. இனியும் இந்தாளை நம்பிப் பிரயோசனமில்லை என்று முடிவுக்கு வந்த ஜோதிடர் நேராக அரண்மனைக்கே சென்றார்.

அந்த அரண்மனையின் பெயர் விஜயா மந்திர். 1918ல் மகாராஜா ஜெய் சிங், அல்வாரிலிருந்து பத்து கிலோமீட்டர் தொலைவில் விஜய்சாகர் ஏரிக்கரையோரமாகப் பார்த்துப் பார்த்துச் செதுக்கிய பிரம்மாண்டமான அரண்மனை. மொத்தம் 105 பெரிய அறைகள். கலை வேலைப் பாடுகள் அமைந்த மெகா சைஸ் ஜன்னல்கள். அரண்மனைக்குள்ளேயே அம்சமாக ஒரு சீதா ராமர் கோவில். சுற்றிலும் சில கிலோமீட்டர் பரப்பளவில் பூங்காக்கள். நிறைய நிறையப் பறவைகள். ஏற்கெனவே தான் இருந்த யஷ்வந்த் நிவாஸ் என்ற அரண்மனை மகாராஜாவுக்குப் பிடிக்கவில்லை என்பதாலேயே விஜயா மந்திரைக் கட்டினார்.

அப்படிப்பட்ட அரண்மனைக்குள் எளிதில் நுழைந்துவிட முடியுமா என்ன? கண்ணைக் கவரும் உடைகள் அணிந்திருந்தாலும், காது, கழுத்து, கைகளில் கற்கள் பதித்த நகைகள் அணிந்திருந்தாலும், ஜோதிடரால் அரண்மனை வாயில் காவலர்களைத் தாண்ட முடிய வில்லை. லஞ்சம் கொடுக்கக்கூட முயற்சி செய்தார். வேலைக்காகவில்லை. அரண்மனைக்குள் வந்து போகும் அதிகாரிகள், அமைச்சர்கள் முதல் சாதாரணப் பணிப்பெண்கள் வரை பேசிப்



அல்வார் அரண்மனை

பார்த்தார். மகாராஜாவைச் சந்திப்பதற்கான வாசல் திறந்தபாடில்லை. அவர் கையில் வைத்திருந்த காசெல்லாம் கரைந்து கொண்டிருந்தது.

அத்தனை நாள்களாக இழுத்துப் போர்த்தித் தூங்கிக் கொண்டிருந்த அவரது தன்மானம் திடீரென்று கண்விழித்தது. 'அடேய் பைத்தியக்காரா, இவ்வளவு கஷ்டப்பட்டு இந்த மகாராஜாவைப் பார்த்து ஒன்றும் ஆகப் போவதில்லை. பேசாமல் பெட்டியைக் கட்டு.'

அடுத்த பம்பாய் ரயில் எப்போது என்று ஸ்டேஷனில் விசாரித்தார். இரவோடு இரவாக எல்லாப் பொருள்களையும் கட்டிவைத்தார். ஆனால் அவரது ஒவ்வொரு நடவடிக்கையையும் மறைமுகமாக போலீஸ் கண்காணித்துக் கொண்டிருந்தது. மகாராஜாவுக்கு டெய்லி ரிப்போர்ட் தவறாமல் போய்க் கொண்டிருந்தது.

மறுநாள் தனக்குத் தங்குவதற்கு இடமளித்த நிதியமைச்சர் கன்னாவிடம்கூடச் சொல்லாமல் கொள்ளாமல் பதுங்கிப் பதுங்கி ரயில் ஏறச் சென்றார் ஜோதிடர். அவர் ஸ்டேஷன் வாசலை அடைவதற்கும் பச்சைக்கொடி காட்டுவதற்கும் சரியாக இருந்தது. டிக்கெட்டெல்லாம் எதற்கு,

ரயிலில் ஏறினால் போதும் என பெட்டிப் படுக்கையோடு ஓட ஆரம்பித்தார் ஜோதிடர். எங்கிருந்தோ வந்த போலீஸ் அவரைத் துரத்த ஆரம்பித்தது. 'கதை கெட்டுப் போச்சே..' என்று கதறி, திரும்பித் திரும்பிப் பார்த்தபடி ஓடினார்.

இயலவில்லை. ரயில் கடந்திருந்தது. போலீஸார் அவரைச் சூழ்ந்திருந்தார்கள். தரதரவென இழுத்துச் செல்ல ஆரம்பித்தனர். ஏன் எதற்கு என்றெல்லாம் கேட்பதற்கு அவருக்கு வாய்ப்பு கொடுக்கப்படவில்லை. அவர் சிறையில் தள்ளப்பட்டார். ஒரு மனிதன் எவ்வளவு நாள்தான் பயப்படாத மாதிரியே நடிக்க முடியும்? கம்பிகளுக்குப் பின்னால் தன் விதியை நொந்தபடி கதறிக் கதறி அழுதார் ஜோதிடர்.

அடுத்த சில நாள்கள் சிறையிலேயே கழிந்தன. யாரும் அவரிடம் எதுவும் பேசவில்லை. அவ்வப்போது உணவு மட்டும் கொடுக்கப்பட்டது. ஒருநாள் தன் தைரியத்தை எல்லாம் திரட்டிக் கொண்டு சிறை அதிகாரியிடம் பேசினார் ஜோதிடர்.

'அய்யா... ஒரு உதவி. நான் புள்ளக்குட்டிக்காரன். என் பொஞ்சாதிங்க எனக்கு என்ன நடந்த துன்னே தெரியாம அங்க பம்பாயில தவிச்சுக்கிட்டுக் கெடப்பாங்க. அவங்களுக்கு, 'நான் இங்க சவுக்கியமா இருக்கேன்'னு ஒரு பொய்த் தந்தியாவது கொடுக்க அனுமதிச்சீங்கன்னா உங்களுக்குப் புண்ணியமாப் போவும்.'

அனுமதி கிடைத்தது. தளதளவென, கொழுக் மொழுக் என அல்வாருக்கு வந்திறங்கிய ஜோதிடரின் உடல் எடை ஏகத்துக்கும் குறைந்து போனது.

குரு பெயர்ச்சி, சனிப் பெயர்ச்சி நடந்ததா என்று தெரியவில்லை. அன்றைய தினம் ஜோதிடருக்கு சிறைப் பெயர்ச்சி நடந்தது. காவல் துறை உயரதிகாரி ராய் பகதூர் கோபால் தாஸ் ஜோதிடரின் சிறைக்கு வந்தார். 'இன்று அரண்மனையில் மகாராஜா உங்களைச் சந்திக்கவிருக்கிறார்' என்று சொல்லி அவரை விடுதலை செய்தார்.

'ஆஹா நமக்கு நல்ல நேரம் ஆரம்பிச்சுருச்சு டோய்..' என்று ஜெயிலிலிருந்து வெளியே வந்த ஜோதிடர், ஓட்டமும் நடையுமாகக் கன்னா வீட்டுக்குச் சென்றார். குளித்துவிட்டு, மகா ராஜாவைச் சந்திப்பதற்காக வைத்திருந்த பிரத்யேக உடையை அணிந்து கொண்டார். இளைத்துப் போனதால் அது தொளதொளவென இருந்தது. ஒரு குதிரை வண்டியை ஏற்பாடு செய்து கொண்டு விஜயா மந்திருக்கு விரைந்தார். எந்தக் கேள்வியுமின்றி உள்ளே அனுமதிக்கப் பட்டார்.

சபை கூடியிருந்தது. அந்த அறைக்குள் கேள்விக்குறி போல் வளைந்து பணிந்து கும்பிட்டபடியே நுழைந்தார் ஜோதிடர். அங்கே நடு நாயகமாக வீற்றிருந்த தங்க முலாம் பூசப்பட்ட சிம்மாசனத்தில் சௌகர்யமாக அமர்ந்திருந்தார் மகாராஜா ஜெய் சிங். பயத்தில் ஜோதிடருக்கு வார்த்தைகள் வரவில்லை. மகாராஜா தன் கண்களால் அமரும்படி சைகை காட்டினார். ஓரமாக இருந்த காலி இருக்கையொன்றில் அடங்கி ஒடுங்கி உட்கார்ந்தார் ஜோதிடர்.

பெரிய நிகழ்வுகள் எதுவும் நடக்கவில்லை. ஒரு மணி நேரம் அமைதியாகக் கழிந்தது. மகாராஜா ஜோதிடரை உற்றுப் பார்த்தார்.

'மேன்மை பொருந்திய மகாராஜா அவர்களே, தங்களின் எதிர்காலத்தைப் பற்றிச் சிறப்பாகக் கணிக்க நான் ஆயத்தமாக உள்ளேன்' அவ்வளவு நேரம் தயார் செய்து வைத்திருந்த வார்த்தைகளை வெளியிட்டார் ஜோதிடர்.

'போதும் நிறுத்து. யார் எதிர்காலத்தை யார் கணிப்பது? உம்முடைய எதிர்காலமே உமக்குத் தெரியவில்லை. தெரிந்திருந்தால் இப்படி இங்கு வந்து வகையாக மாட்டியிருப்பீரா? உம்முடைய ஏமாற்று வேலையை எல்லாம் வேறு யாரிடமாவது வைத்துக் கொள்ளும். இன்னும் ஒரு நிமிடத்தில் நீர் இங்கிருந்து ஓடா விட்டால், உயிர் பிழைக்க மாட்டீர்.'

மகாராஜா பேசி முடிக்கும் முன்னரே பின்னங்கால் விரல்கள் பிடரியில் பட ஓட ஆரம்பித்திருந் தார் ஜோதிடர். ரயில் கட்டணம், வந்து போன செலவு, ஒரு நாளைக்கு ஆயிரம் என்று தான் போட்ட கண்டிஷன்களெல்லாம் அவருக்கு மறந்து போயிருந்தது. அல்வார் ஸ்டேஷனிலிருந்து பம்பாய் ரயில் கிளம்பிய போது, ஜோதிடர் ஒரு பெரிய கும்பிடு போட்டார்.

இப்படி, தன்னைச் சுற்றியிருந்தவர்களுக்கு விதவிதமாகச் சோதனைகள் கொடுத்து வந்த பகவான் ஸ்ரீஜெய் சிங்குக்கு ஒரு சோதனை வந்தது லண்டனிலிருந்து ஓர் அழைப்பிதழ் வடிவில்.

1931-ல் லண்டனில் நடைபெறவிருந்த இரண்டாவது வட்ட மேஜை மாநாடு நடைபெற இருந்தது. அதைத் தொடர்ந்து கிங் ஜார்ஜும் குயின் மேரியும் இந்திய மகாராஜாக்களுக்கு பக்கிங்ஹாம் (Buckingham) அரண்மனையில் விருந்து ஒன்றுக்கு அழைப்பு விடுத்திருந்தார்கள். வட்ட மேஜை மாநாட்டிலோ, அரண்மனை விருந்தில் கலந்து கொள்வதிலோ ஜெய் சிங்குக்கு எந்த விதப் பிரச்னையும் இல்லை. வேறு என்னப்பா பிரச்னை?

விருந்தின் ஆரம்பத்தில் கிங்கும் குயினும் மகாராஜாக்களை வரவேற்கும் விதமாகக் கை குலுக்குவார்கள். அதில்தான் பிரச்னை.

ஸ்ரீராமரின் அவதாரமான ஜெய் சிங், வேற்று மனிதர்களோடு, அதுவும் இந்து அல்லாத ஒருவ ரோடு எப்படிக் கைகுலுக்க முடியும்? அவருடைய புனிதம் கெட்டுப் போய்விடாது? தீட்டு, அபச்சாரம். அவரது இறைத்தன்மை போய்விடுமே!

'என்னால் கைகுலுக்கவெல்லாம் முடியாது. கட்டாயப்படுத்தினீர்கள் என்றால் கையுறை அணிந்து கொள்கிறேன்' என்று அரண்மனைத் தலைமை அதிகாரிக்கு (அந்தப் பதவிக்குரிய பெயர் Lord Chamberlain) கடிதம் எழுதினார் ஜெய் சிங்.

'என்னது கிங், குயினோடு கைகுலுக்கும்போது, மரியாதை கெட்டத்தனமா கையுறை போட்டுக்குவீரா? நான்சென்ஸ். ரொம்ப பண்ணுனா, ப்யூஸ் புடுங்கி விட்டுருவோம்' லண்டனிலிருந்து வந்த பதில் கடிதம் மிரட்டியது.

மகாராஜா பதவியும் நிலைக்க வேண்டும், தம்முடைய புனிதத்துக்கும் பங்கம் வந்துவிடக் கூடாது. என்ன செய்யலாம்? தீவிர யோசனையோடு லண்டன் சென்றடைந்தார் மகாராஜா ஜெய் சிங்.



12

# ஜேம்ஸ்பாண்ட் உத்தி

சிறுவயது முதலே ஆசாரமாக வளர்ந்துவந்தவர். தன் மீது வேற்று மனிதர்கள் கைபட்டால் குற்றம் கால்பட்டால் பெருங்குற்றம் என்பது மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்ட விஷயம். மகாராஜாவாக இருந்ததால் அந்தத் தீண்டாமைக் கலாசாரத்துக்கு எந்தப் பங்கமும் வராமல் வாழ முடிந்தது. அதற்கு லண்டனி லிருந்துதானா இடி விழ வேண்டும்?

'நானும் தெரியாமத்தான் கேக்குறேன், இப்ப நான் வந்து கலந்துக்கலேன்னா, நீங்க என்ன ரெண்டாவது வட்ட மேசை மாநாட்டை நடத்தாம விட்டுடுவீகளா? சரி, வந்துட்டேன்பா. மாநாட்டுலயோ, விருந்துலயோ ஒரு ஓரமா ஒக்காந்துட்டு எந்திரிச்சுப் போறேன்னு சொல்றேன், கேட்க மாட்டீகளே? கிங்கு ஜார்ஜுக்குக் கையைக் கொடுக்கணும், குயின் மேரியோட கட்டாயமா ஹேன்ட் ஷேக்கு பண்ணணும் ரவுசு பண்ணுறீகளே. ஏலேய், மரியாதை மனசுல இருந்தாப் போதாதா? இப்படிக் கையைக் குலுக்கிக் குலுக்கித்தான் காட்டணுமா? அட சரிப்பா, கையில் ஒரு கிளவுசைப் போட்டுக்கிட்டு குலுக்குறேன்னா, பதவில இருந்து தூக்கிப்புடுவோம்னு நெத்தில துப்பாக்கி வைக்கீக. எளவு, நாங்கள்ளாம் ஒண்ணுமண்ணா பழகுன ஊர்க்காரவுக சுண்டு விரலைக்கூடத் தொட்டுப் பேசுனதில்ல. வெளிநாட்டுக்காரவுனுக உள்ளங்கையோட உள்ளங்கையை வெச்சு உரசணுமாமே... என்ன கருமாந்திரம் இது? லண்டன்ல இருந்து திரும்பி ஊருக்குப் போறப்ப மகாராசாவா பதவில இருப்பேனா?'

மகாராஜா மிகவும் குழம்பிப் போயிருந்தார். வேறு வழியில்லை. கிங் உடனும் குயின் உடனும் உறை அணியாமல் கைகுலுக்கித்தான் ஆகவேண்டும்.

ஒழியட்டும். குலுக்கி விடலாம். ஆனால் பக்கத்து சமஸ்தான மகாராஜாக்கள் எல்லாம் வந்திருக்கிறார்களே. தான் வெறுங்கையைக் குலுக்குவதைப் பார்த்தால் இத்தனை நாள் கட்டிக் காத்து வந்த தன்னுடைய புனிதம் எல்லாம் போய்விட்டதாகக் கேலி பேசுவார்களே. எப்படிச் சமாளிக்கலாம்?

மற்றவர்களோடு கைகுலுக்கும்போது உறை வேண்டும். கிங் குயினோடு கைகுலுக்கும் போது வேண்டாம். ஆனால் அப்போது நான் உறை அணியாதது மற்றவர்களுக்குத் தெரியக்கூடாது. மின்னல் வேகத்தில் கையுறையைக் கழற்றி மாட்டிக் கொள்வது எப்படி?

தீவிரமாக யோசித்த மகாராஜாவுக்கு ஜேம்ஸ் பாண்ட்தனமாக ஓர் ஐடியா கிடைத்தது.

உடனே கடை வீதிக்குக் கிளம்பினார். லண்டனிலேயே மிகச் சிறந்த தையல் கடை எங்கே இருக்கிறது என்று விசாரித்தார். அந்தத் தையல் கடையைத் தேடி, அதற்குள் நுழைந்தார்.

'இங்க கையுறை தைத்துக் கொடுப்பீர்களா?'

'நிச்சயமாக. உங்களுக்கா? அளவெடுத்துக் கொள்ளலாமா? எந்த வகைத் துணியில் தைத்துக் கொடுக்க வேண்டும்?'

'கொஞ்சம் பொறுமையாக இருங்கள். என் தேவை வேறு மாதிரியானது. முழுமையாகக் கேட்ட பின்பு இயலுமா இயலாதா என்று கூறுங்கள்.'

'எங்களால் முடியாவிட்டால், இந்த லண்டனில் வேறு யாராலும் முடியாது. உங்களுக்கு என்ன மாதிரியான கையுறை வேண்டும். கூறுங்கள்.'

'என் கைகளை நன்கு மூடுமாறு உறை வேண்டும். ஆனால் கண் இமைக்கும் பொழுதில் அவற்றைக் கழட்டவோ, மாட்டவோ இயல வேண்டும். அதாவது மந்திரம் போட்டால் கையுறை தானாக மாட்டிக் கொள்ள வேண்டும், மீண்டும் மந்திரம் போட்டால் கழண்டு விட வேண்டும். அப்படியொரு மாயாஜால வேலையைச் செய்துதர முடியுமா?'

அந்த டெய்லர் கொஞ்சம் திகைத்துத்தான் போனார். சில நிமிடங்கள் யோசித்தார். பின் மகாராஜாவைப் பார்த்துப் புன்னகை செய்தார்.

'தங்கள் விருப்பத்துக்கேற்பக் கையுறை தயாரித்துத் தருகிறேன். ஆனால் கொஞ்சம் அதிகம் செலவு ஆகும். பரவாயில்லையா?'

'எவ்வளவு ஆனாலும் பரவாயில்லை. எப்போது கிடைக்கும்?'

'நாளை மாலை.'

முன்பணம் கொடுத்துவிட்டு, தையல் கடையிலிருந்து வெளியே வந்தார் ஜெய் சிங். தன் அறைக்குத் திரும்பினார். கையுறை சரியாக அமையுமா? நாளை மாலை கிடைக்காவிட்டால்? இரவெல்லாம் தூக்கம் வரவில்லை.

இரண்டாவது வட்ட மேஜை மாநாடு தொடங்கியது (செப்டெம்பர் - டிசம்பர் 1931). ஒத்துழையாமை இயக்கத்தின் காரணமாக முதலாவது வட்ட மேஜை மாநாட்டில் கலந்து கொள்ளாத காந்தி, இர்வினோடு ஏற்படுத்தியிருந்த ஒப்பந்தத்தினால் இரண்டாவது வட்ட மேஜை

மாநாட்டில் காங்கிரஸின் பிரதிநிதியாக வந்திருந்தார். தாழ்த்தப்பட்டவர்களுக்கும் சம உரிமை கிடைக்க வேண்டும் என்பதற்காக முதல் மாநாட்டிலேயே அழுத்தமாகக் குரல் கொடுத்த அம்பேத்கர், இரண்டாவது மாநாட்டில் காந்தியை முதன் முதலாகச் சந்தித்தார். மாநாட்டில் தாழ்த்தப்பட்டோருக்கான தனி வாக்குரிமைக்காகக் குரல் கொடுத்தார்.

மகாராஜாக்கள், அரசியல்வாதிகள் முதல் பிற்படுத்தப்பட்டோரின் பிரதிநிதிகள் வரை ஐம்பதுக்கும் மேற்பட்டோரின் குரல்கள் ஒலித்தன. பிகானிர் மகாராஜா கங்கா சிங் மன்னர் கூட்டமைப்பின் சார்பில் தலைமையேற்றுப் பேசினார். அல்வார் ஜெய் சிங்குக்கும் பேசும் வாய்ப்பு அமைந்தது. அவர் வலியுறுத்திச் சொன்ன கருத்து இதுதான்.

'நான் விரும்புவது இந்தியக் கூட்டமைப்பு அல்ல, என் விருப்பம் ஐக்கிய இந்திய மாநிலங்கள்.'
(I propose not a Federation of India but the United States of India.)

மாலை. ஜெய் சிங் அவசர அவசரமாகத் தையல் கடைக்கு ஓடினார். புதிதாக தைக்கப்பட்ட அந்தக் கையுறைகளை வாங்கிப் பார்த்தார். டெய்லர், அதை உபயோகிக்கும் முறைகளைச் சொல்லிக் கொடுத்தார். மகாராஜாவுக்கு ஏகப்பட்ட திருப்தி. டெய்லர், கேட்டதுக்கும் அதிகமான பணத்தைக் கொடுத்துவிட்டு, வேகவேகமாக அங்கிருந்து கிளம்பினார்.

தன் அறைக்கு வந்த மகாராஜா, பலமுறை அந்தக் கையுறையை இயக்கிப் பார்த்தார். ஒரு பட்டனை அழுத்தினார். அணிந்திருக்கும் உறை, மணிக்கட்டுப் பக்கமாக சுருண்டு கொண்டது. மீண்டும் அதே பட்டனை அழுத்தினார். நீண்டு கைகளைப் போர்த்திக் கொண்டது.

சின்னப் பேனாவாக இருக்கும், ஆனால் அதிலிருந்து குண்டுகள் பாயும். பல் குத்தும் குச்சியில் இருக்கும் கேமரா வேவு பார்க்கும். கைக்கடிகாரத்திலிருந்து லேசர் கதிர்கள் பாயும். தரையில் ஓடிக் கொண்டிருக்கும் கார், தண்ணீருக்குள் பாய்ந்து படகாகும், அதுவே பெரிய அலை வந்தால் எம்பிக் குதித்து இறக்கைகளோடு விமானமாகப் பறக்க ஆரம்பிக்கும். 1952-ல் பிரிட்டிஷ்காரரான இயன் பிளம்மிங் உருவாக்கிய ஜேம்ஸ் பாண்ட் கற்பனை கேரக்டர் இவ்வளவு சாகசங்கள் செய்யும்போது, அதே பிரிட்டனில் நம் நிஜ மகாராஜாவுக்கு, தானாகச் சுருங்கி விரியும் கையுறை கிடைத்ததில் ஆச்சரியம் ஏதுமில்லைதான்.

மெலிதான காக்கி நிறத்தில் இறுக்கமாக ஒரு பேண்ட். கால் முட்டி வரை நீண்ட அதே காக்கி நிறத்தில் ஒரு பட்டுச்சட்டை, முத்துகளும், வைரங்களும் பதிக்கப்பட்ட வெளிர் பச்சை நிற தலைப்பாகை, கழுத்தில் போதுமான அளவு நகைகள், கையில் அந்த ஆட்டோமேட்டிக் கையுறை மகாராஜா பக்கிங்ஹாம் அரண்மனைக்குக் கிளம்பினார்.

விருந்து இன்னமும் ஆரம்பமாகவில்லை. ஒவ்வொருவராக வந்து கொண்டிருந்தனர். அரண்மனை வெளிப்புறங்கள் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அரண்மனைத் தலைமை அதிகாரியைப் பார்க்கச் சென்றார் ஜெய் சிங்.

'வாருங்கள், மாலை வணக்கம்' என்ற தலைமை அதிகாரி கையைக் கவனித்தார். உடனே 'என்ன மிஸ்டர் ஜெய் சிங், கையுறையோடு வந்திருக்கிறீர்கள்? கடிதத்தில் எச்சரித்த விஷயம் மறந்துவிட்டதா?' கொஞ்சம் கடுமையாகவே கேட்டார்.



பக்கிங்ஹாம் அரண்மனையில் நடக்கும் விருந்தைக் குறிக்கும் ஓவியம்

‘இப்போதைக்கு உறை அணிந்திருக்கிறேன். கிங், குயினுக்கு மரியாதை செய்யும்போது கழட்டி விடுவேன். எந்தத் தவறும் நடக்காது. தாங்கள் என்னை முழுமையாக நம்பலாம்’ என்று அவரிடம் சொல்லிவிட்டு விருந்தில் கலந்துகொண்டார் ஜெய் சிங். கிட்டத்தட்ட ஐநூறு விருந்தினர்கள். அனைவரது கண்களையும் அந்தக் கையுறைகள் உறுத்தின. என்ன நடக்கப் போகிறது என்று அறிந்துகொள்ள ஆவலோடு காத்திருந்தனர்.

அந்நேரத்தில் கிங் ஜார்ஜ், குயின் மேரி விருந்தினர் ஹாலுக்கு வருவதாக அறிவிப்பு வந்தது. இந்தியாவிலிருந்து சென்ற மகாராஜாக்களும், மற்ற முக்கியமானவர்களும் வரிசையாக நின்றனர். ஜெய் சிங்கும் வரிசையில் இணைந்து கொண்டார். விருந்தினர்களை வரவேற்கும் விதமாக கிங்கும் குயினும் ஒவ்வொருவரிடமும் கைகுலுக்கியபடியே வந்தனர்.

அவர்கள் தன்னை நெருங்கி வருகையில், ஜெய் சிங் பட்டனை அழுத்தினார். கையுறைகள் சுருண்டு கொண்டன. கிங்குடனும் குயினுடனும் புன்னகையோடும் கைகுலுக்கினார் மகா ராஜா ஜெய் சிங். ஒரு சில நொடிகளில் அந்த ராயல் கைகுலுக்கல் முடிந்துபோனது. மீண்டும் பட்டனை அழுத்தினார். கைகளில் உறைகள் தோன்றின.

ஜெய் சிங்கின் முகத்தில் வெற்றிக் களிப்பு. ‘அதெப்படி இந்தாளு மட்டும் க்ளவுஸோட கை குலுக்குனாரு?’ விருந்தினர்கள்தான் குழம்பிப் போயினர். அதற்குமேல் அந்த விருந்தில் கலந்து கொண்டு சமாளிப்பதென்பது ஜெய் சிங்குக்குப் பெரிய விஷயமாகப்படவில்லை. யாருடனும் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நின்று கொண்டார். வெள்ளைவெளேர் மாதுக்கள் தேடிவந்து சியர்ஸ் சொல்லி கிளாஸை உரச விரும்பினால்கூட நாசூக்காகத் தவிர்த்தார். சீச்சீ... இங்கெல்லாம் தீர்த்தம் சாப்பிடக்கூடாது என்று கட்டுப்பாட்டோடு இருந்துகொண்டார்.

விருந்து முடிந்தது. அறைக்குச் சென்ற மகாராஜா, கையோடு கொண்டு போயிருந்த கங்கை நீராலோ அல்லது லண்டன் தேம்ஸ் நீராலோ தன் கைகளைக் கழுவிச் சுத்தப்படுத்தியிருக் கலாம்.

இப்படியாக ராஜ பதவிக்கு வந்த லண்டன் கண்டம், சமாளிக்கப்பட்டது. ஆனால் லோக்கலில் ஒரு கண்டம் குத்த வைத்துக் காத்திருந்தது.

அந்த பிரம்மாஸ்திரத்தை ஏவியவர் இந்தியாவின் வைஸ்ராயாக இருந்த லார்ட் வெலிங்டன் (Willingdon).

சிம்லாவில் வைஸ்ராய் தங்குவதற்கென்றே கோடைகால மாளிகை ஒன்று இருந்தது*. அங்கிருந்து மகாராஜா ஜெய் சிங்குக்கு ஒரு விருந்துக்கான அழைப்பு வந்திருந்தது. விருந்து என்றால் ஒரே ஒருநாள் சென்று கைகழுவி சாப்பிட்டுவிட்டு அல்லது சாப்பிட்டுக் கைகழுவிவிட்டு, வெற்றிலைப் பாக்கு போட்டு எடுத்துக் கொண்டு வரும் சமாசாரம் அல்ல. நான்கைந்து நாள்கள் வைஸ்ராயோடு தங்க வேண்டியதிருக்கும். சமஸ்தான நிர்வாக விஷயங்கள் சம்பந்த மாகவும் பேச வேண்டியதிருக்கும். கூடவே கேளிக்கையும் உண்டு.

---

★ ராஷ்டிரபதி நிவாஸ் என்றழைக்கப்படும் இந்த மாளிகையை 1880 கட்ட ஆரம்பித்தவர் வைஸ்ராய் டஃப்ரின் (Dufferin). வடிவமைத்தவர் பிரிட்டிஷ் கட்டடக் கலை நிபுணர் ஹென்றி இர்வின். மின்சார வசதி, டென்னிஸ் மைதானம், குளிர், சூடு நீர் குளியலறைகள், மகா விருந்து அறைகள், பெரிய தோட்டம், பிரம்மாண்ட சமையலறை என 1888ல் கட்டுமானப் பணி நிறைவு பெற்றது.

வைஸ்ராயின் அழைப்பு மகாராஜா ஜெய் சிங்குக்கு எரிச்சலையே உண்டாக்கியது. ஆனால் சென்றே ஆக வேண்டும். அழைப்பை மறுத்தால் அரியணையின் நான்கு கால்களையும் பிடுங்கி விடுவார்கள். சமஸ்தானத்தின் ராணுவச் செயலாளரை அழைத்தார். வைஸ்ராயின் செயலாளருக்கு ஒரு கடிதம் எழுதச் சொன்னார்.

'மாண்புமிகு செயலாளர் அவர்களுக்கு,

தங்கள் அழைப்பு கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி. மேன்மை பொருந்திய மகாராஜா ஜெய் சிங் ஆசார சீலர். முக்கியமாகத் தோல் பொருள்களைத் தொடுவதைத் தவிர்க்க விரும்புவார். மேலும் நாய்கள் என்றால் அவருக்கு ஆகவே ஆகாது. நாய்கள் வளர்க்கப்படும் இடங்களுக்குச் செல்வதைத் தவிர்ப்பார். இவை எல்லாம் அவரது மதக் கொள்கைகளைப் பாதிக்கும் விஷயங்களாகும். மகாராஜாவின் விருப்பத்துக்கேற்ப தங்கள் மாளிகையில் வசதிகளை செய்து கொடுத்தால், விருந்துக்கு வந்து செல்வதற்குச் சௌகரியமாக இருக்கும்.

இப்படிக்கு...'

கடிதம் சிம்லா சென்று சேர்ந்தது. பச்சை மிளகாயைக் கடித்தது போல, வைஸ்ராயின் செயலாளர் முகம் மாறியது.



# 13

# லேடி வெலிங்டனின் நாய்

'பாரபட்சமாக நடந்துகொள்வதில் எனக்கு நிகர் நானே!'

யாருக்குப் பொருந்துகிறதோ இல்லையோ, அல்வார் சமஸ்தான மகாராஜா ஜெய் சிங்குக்கு இந்த வசனம் ஒன்று போட்டு இரண்டு முட்டை போட்டால் என்ன நம்பர் வருமோ அத்தனை சதவிகிதம் பொருந்தும். காலமெல்லாம் அவர் நடந்து கொண்ட விதம், மற்றவர்களை நடத்திய விதம் அப்படி.

பாரபட்சத்தின் உச்சபட்சத்தை அவர் அந்நியர்களுக்குக் கொடுத்த விருந்துகளி லிருந்தே புரிந்துகொள்ளலாம். விருந்துக்கு பிரிட்டிஷ்காரர்களை, அமெரிக்கர் களை அழைப்பார். வேறு நாட்டினர்களையும் அழைப்பார். போனால் போகிற தென்று தன் சமஸ்தான அமைச்சர்களையும், உயர் அதிகாரிகளையும் வரச் சொல்லுவார்.

விருந்து ஆரம்பமாகும். ஆனால் அங்கே கவனிப்பு இரண்டு விதமாகப் பல்லிளிக்கும். சாம்பெய்ன், ஒயின், பிராந்தி, விஸ்கி இன்னபிற உயர்ரக மதுவகைகள் எல்லாம் பிரிட்டிஷ்காரர்களுக்கும், அமெரிக்கர்களுக்கும், மற்ற வெளிநாட்டவர்களுக்கு மட்டுமே பரிமாறப்படும். மகாராஜா கொடுக்கும் சம்பளத்தில் சோறு திங்கும் சமஸ்தான அமைச்சர்களுக்கும், வேறு அதிகாரிகளுக்கும் லோக்கலில் காய்ச்சிய கள்ளச் சாராயத்துக்குக் கூட வாய்ப்பில்லை. அதிகபட்சமாக, ஆல்கஹால் கலக்காத ஹெச்டூஓ கிடைக்கும்.



லேடி வெலிங்டன்

அவர்களுக்குப் பரிமாறப்படும் உணவு வகைகளில்கூட தரம் தத்தளிக்கும். யாராவது வெளி நாட்டவர்கள் தங்களுக்குப் பரிமாறப்படும் ஷாம்பெயினை அவர்களோடு ஷேர் பண்ணிக் கொண்டால் உண்டு.

இப்படி மகாராஜாவால் அடிக்கடி பாரபட்சமாக நடத்தப்பட்ட அமைச்சர்களும், உயர் அதிகாரிகளும் அவர்மேல் பாசத்துடனா இருக்கப் போகிறார்கள்? எப்போது அவருக்கு ஆப்பு வரும் என்று எதிர்பார்த்திருந்தார்கள். அதுதான் சிம்லாவிலிருந்து வைஸ்ராயின் விருந்து அழைப்பிதழாக வந்தது.

'தோல் பொருள்கள் கூடாது. நாயெல்லாம் இருக்கக்கூடாது' என்ற கண்டிஷன்களோடு ஜெய் சிங் வைஸ்ராய் மாளிகைக்கு அனுப்பிய கடிதம், அங்கு பெரும் சலசலப்பை ஏற்படுத்தியது. 'அல்வார் ஆட்டம் ஜாஸ்தியா இருக்கு. அடக்கிடலாமா?' என்று வைஸ்ராய் வெலிங்டனின் செயலாளர் அவரைக் கேட்டார்.

வைஸ்ராய் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை. 'அவர் கேட்கும் ஏற்பாடுகளைச் செய்து கொடுங்கள். வரச் சொல்லி கடிதம் அனுப்புங்கள்' என்று கூலாகச் சொல்லிவிட்டார்.

வைஸ்ராயிடமிருந்து பதில் கடிதம் வந்து சேர்ந்தது. 'அரசருக்கு ஆப்பு வந்திருச்சு டோய்' என்று ஒவ்வொருவரும் எதிர்பார்ப்போடு காத்திருந்தனர். ஆனால் அந்தப் பதில் கடிதம் எல்லாவற்றையும் புஸ்ஸாக்கியது.

சிம்லா வைஸ்ராய் மாளிகையில் மகாராஜா ஜெய் சிங்குக்கெனத் தனி அறை ஒதுக்கப்பட்டது. அந்த அறையின் மூலை முடுக்குகளெல்லாம் பளிச்சோ பளிச்சென சுத்தம் செய்யப்பட்டன. அங்கிருந்த தோல் பொருள்கள் நீக்கப்பட்டன. மாளிகையில் முக்கிய ஹால் மற்றும் உணவு அறைகளிலும் அவை பார்த்துப் பார்த்து நீக்கப்பட்டன. தரை விரிப்புகள், மேசை விரிப்புகள், கதவு, சன்னல் திரைச் சீலைகள் எல்லாம் புதிதாகப் போடப்பட்டன. புதிய அலங்காரப் பொருள்கள் வைக்கப்பட்டன.

செயலாளரின் ஆணைப்படி எல்லாமே நடந்தது. ஆனால் ஒரு விஷயத்தைச் செயல்படுத்த வைஸ்ராயின் செயலாளராலேயே முடியவில்லை. அது ஒரு லொள் லொள் விஷயம்.

வைஸ்ராயின் மனைவியான லேடி வெலிங்டன் (வைஸ்ராயின் மனைவியை வைஸ்ராயின் பெயருக்கு முன் லேடி போட்டு அழைப்பதே வழக்கம்) ஒரு புசுபுசு நாய்க்குட்டி வளர்த்து வந்தார். பெர்கிங்கிஸ் வகையைச் சார்ந்தது. பொமரேனியன் போலத்தான் இருக்கும். நீண்டு வளர்ந்த முடிகளுக்கிடையே கண்ணும் மூக்கும் மட்டும் லேசாக வெளியே தெரியும்.

வைஸ்ராயை விட்டுப் பிரிந்திருக்க முடியும், லேடி வெலிங்டனால் ஒரு நிமிடம்கூட அந்த லொள் லொள்ளைப் பிரிந்திருக்கவே ம்ஹூம். அவ்வளவு செல்லம். அதற்கு உணவு ஊட்டி விடுவது முதல் உச்சா வந்தால் கொண்டு போய் விடுவது வரை எல்லாமே லேடி வெலிங்டன்தான்.

நாய் அலர்ஜி கொண்ட ஒரு ஜென்மம் இங்கே வரப்போகிறது. அவர் வந்துபோகும் வரை இந்த லொள் லொள்ளைக் கட்டிப் போட்டோ அல்லது ஓர் அறையில் வைத்து அடைத்தோ வைத்திருக்க வேண்டும் என்று வைஸ்ராய் தன் மனைவியைக் கேட்டுக் கொண்டார்.

லேடி வெலிங்டன் முடியாது என்று மறுக்கவில்லை, ஆனால் அவரது முகத்தில் அதிருப்தி உட்கார்ந்திருந்தது. ஆனால் வைஸ்ராயால் அதற்கு மேலும் வற்புறுத்த முடியாது. அப்படிச் செய்தால் அது குடும்பப் பிரச்னை ஆகிவிடும்.

தனக்குரிய வசதிகள் எல்லாம் செய்து தரப்படும் என்ற பதில் கடிதம் வந்ததால், மகாராஜா ஜெய் சிங் குஷியோ குஷியாகப் பெட்டி கட்டினார். சிம்லா சென்றடைந்தார்.

வைஸ்ராயின் செயலாளர், மகாராஜாவைத் துப்பாக்கிகள் முழங்க உரிய மரியாதையுடன் வரவேற்றார். மாளிகைக்குள் அவருக்குரிய அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கே செய்யப் பட்டிருந்த ஏற்பாடுகளைக் கண்டு அக, புறமகிழ்ந்து போனார் ஜெய் சிங்.

'என் விருப்பத்துக்கேற்ப அறையை ஏற்பாடு செய்து கொடுத்ததற்கு நன்றி.'

செயலாளர் அதைப் புன்னகையுடன் ஏற்றுக்கொண்டார். ஜெய் சிங் அங்கு நிம்மதியாக ஓய்வெடுத்தார். பின்பு வைஸ்ராயுடனான மரியாதை நிமித்தமான சந்திப்பெல்லாம் சந்திப் பிழையின்றி நடந்து முடிந்தது.

இரவு விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பிரிட்டிஷ் அதிகாரிகள், வேறு சில சமஸ்தான மன்னர்கள், உயர் அதிகாரிகள் பலருக்கும் அழைப்புப் போயிருந்தது. அது வைஸ்ராயும் அவரது மனைவியும் கொடுக்கும் பிரத்யேக விருந்து.

பாவம் லொள் லொள். அதற்கு என்ன தெரியும் ஜெய் சிங்கின் கருமாந்திரக் கொள்கைகள் பற்றி? வைஸ்ராய் கேட்டுக் கொண்டதற்கிணங்க, லேடி வெலிங்டன் அந்த நாய்க்குட்டியைத் தன் அறையிலேயே விட்டுவிட்டு விருந்து நடக்கும் அறைக்கு வந்தார். லொள் லொள்ளால் தன் எஜமானியைப் பிரிந்து இருக்க முடியவில்லை. பூட்டிய அறைக்குள் என்ன செய்வதென்று தெரியாமல் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது.

விருந்துக்கு வந்திருந்தவர்களை வைஸ்ராயும், லேடி வெலிங்டனும் வரவேற்றுக் கொண்டிருந் தார்கள். நம் புனிதர் ஜெய் சிங், ஏகப்பட்ட அணிகலன்களோடும், மினுமினு உடைகளோடும் விருந்து அறைக்குள் பிரசன்னமானார். இங்கே அவருக்குப் வெளிப்படையாகக் கையுறை அணிந்து கொள்வதில் பிரச்னை வரவில்லை.

விருந்து ஆரம்பமானது. அந்த மெகா சைஸ் சாப்பாட்டு மேசையில் எல்லாரும் அமர்ந்தனர். வைஸ்ராய், அவருக்குப் பக்கத்தில் லேடி வெலிங்டன், பக்கவாட்டில் மகாராஜா ஜெய் சிங். நாய்க்குட்டியை விரும்பாத ஜெய் சிங்கை, லேடி வெலிங்டனும் விரும்பவில்லை, எனவே ஒப்புக்குக்கூடப் புன்னகை செய்யவில்லை. ஜெய் சிங்கும் கண்டுகொள்ளவில்லை. பணியாளர்கள் பதார்த்தங்களைப் பக்குவமாகப் பரிமாற ஆரம்பித்தனர்.

அந்த நேரத்தில் பணிப்பெண் ஒருத்தி ஏதோ ஒரு வேலையாக லேடி வெலிங்டனின் அறைக்குச் சென்றாள். அதற்காகவே காத்துக் கொண்டிருந்த லொள் லொள், பாய்ந்து வெளியே ஓடியது. வேகவேகமாக விருந்து அறைக்கு வந்தது. சமர்த்தாக மேசைக்கடியில் சென்று தன் எஜமானி யின் காலடிக்குள் தஞ்சம் புகுந்தது.

லொள் லொள் அங்கு வந்ததில் லேடி வெலிங்டனுக்குப் பரம சந்தோஷம். ஆனால் வெளிக் காட்டிக்கொள்ளவில்லை. அது செல்லமாகக் காலை நக்க ஆரம்பித்தது. மேசைக்குக் கீழேயே அங்குமிங்கும் ஓடியது. பின் வைஸ்ராயின் பாதத்தை நக்கியது. அடுத்து யார்?

என்னடா இது? காலடியில் என்னமோ நடக்கிறதே என்று குனிந்து பார்த்த ஜெய் சிங், மின் சாரம் தாக்கியதுபோல எகிறிக் குதித்தார்.

'அடச்சே.. கருமம் கருமம்' என்று முகத்தை எரிச்சலோடு நவகோணலாக்கிய ஜெய் சிங், அங்கிருந்து விறுவிறுவெனக் கிளம்பினார்.

ஒரு எக்ஸ்க்யூஸ்மீ சொல்லவில்லை, ஒரு ஸாரி சொல்லவில்லை, குத்துக்கல்லாட்டம் உட்கார்ந்திருந்த வைஸ்ராயைக் கூட மதிக்கவில்லை. சபை நாகரிகத்தை எல்லாம் தூக்கிக் கடாசி விட்டு தன் அறைக்கு விரைந்தார்.

'போச்சே.. போச்சே.. புனிதமெல்லாம் நாசமாப் போச்சே. அந்தச் சனியன் நாயோட நாக்கு அழுகிப் போக. இப்படிப் பண்ணிருச்சே. எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் இப்படி நாயை அவுத்து விட்டுட்டாங்களே. இப்ப நான் என்ன பண்ணுவேன்?'

உள்ளுக்குள்ளேயே புலம்பிய மகாராஜா, தன் உடம்பிலிருந்த ஒட்டு மொத்தத் துணிகளையும் நகைகளையும் கழற்றி நீரில் போட்டார். சிம்லா. இரவு. குளிர். எதையும் பொருட்படுத்தவில்லை. புனிதத்தை ரீஇன்ஸ்டால் செய்வதே அவரது நோக்கமாக இருந்தது. பிறந்த மேனியாக உச்சி

குளிரக் குளிர ஸ்நானம் பண்ணிக் கொண்டார். பின் புதிய பளபள உடைகளை அணிந்து கொண்டார். வேறுவிதமான நகைகளை அணிந்து கொண்டார். தன் புனிதத்தை மீட்டெடுத்து விட்டு, மீண்டும் விருந்து அறைக்குள் நுழைந்து அருள்பாலித்தார்.

கூடியிருந்த விருந்தினர்களில் சிலர் முகம் சுளித்தனர். சிலர் கேள்விக்குறியோடு பார்த்தனர். சிலர் அடுத்து என்ன நடக்கப்போகிறதோ என்ற பயத்தோடு காத்திருந்தனர். லேடி வெலிங்டனுக்கு ஜெய் சிங்கைப் பார்க்கப் பார்க்க அருவருப்பாக இருந்தது. ஆனால் ஜெய் சிங் தன் முகத்தில், புதிதாக நடிக்க வந்த நடிகைபோல எந்தவித உணர்வையும் வெளிப்படுத்தவில்லை.

வந்தார். குனிந்து மேசைக்கடியில் பார்த்தார். லொள் லொள் இல்லை. அது வேறு எங்கேயோ போயிருந்தது. தன் நாற்காலியில் உட்கார்ந்தார். எதுவுமே நடக்காதது போல சாப்பாட்டை விட்ட இடத்திலிருந்து தொடர ஆரம்பித்தார். தான் அப்படி நடந்துகொண்டதற்கு ஒரு மன்னிப்பையோ, வருத்தத்தையோ வெளிப்படுத்தவில்லை. சாப்பிட்டு முடித்துவிட்டு ஓர் ஏப்பத்தை மட்டும் சத்தமாக வெளிப்படுத்தினார்.

ஜெய் சிங், இப்படி முறைதவறி நடந்ததற்கு வைஸ்ராய் வெலிங்டன் என்ன செய்தார்?

ஒன்றுமே செய்யவில்லை என்பதே உண்மை. அவரும் எதுவும் நடந்ததுபோல காட்டிக் கொள்ளவில்லை. விருந்து முடிந்து, மகாராஜா ஜெய் சிங் சிம்லாவிலிருந்து கிளம்பிப் போகும் வரைகூட வைஸ்ராய் இந்தச் சம்பவம் பற்றி வாய் திறக்கவேயில்லை. அவர்மேல் எந்தக் கருப்புப் புள்ளியும் வைக்கவில்லை. காரணம்?

மகாராஜா ஜெய் சிங் பிரிட்டிஷ் அரசுக்குக் கொடுத்த வந்த வலுவான ஆதரவு. சுய விஷயங்களில் மகாராஜா ஜெய் சிங் இப்படி அதிகப்பிரசங்கித்தனமாக நடந்துகொண்டாரே தவிர, அவர் பிரிட்டிஷ் எதிர்ப்புக் குரலை எழுப்பவில்லை. எனவே வைஸ்ராயும் அவரது கூத்துகளைச் சகித்துக் கொண்டார்.

ஆட்டமாக ஆடியும் ஆப்பு வாங்காமல் வெற்றிகரமாக சிம்லா சென்று திரும்பிய அல்வார் மகாராஜா ஜெய் சிங், பெண்கள் விவகாரத்தில் எப்படி? மதவாதியா? மிதவாதியா? தீவிர வாதியா? அதிகாரத்தைப் பயன்படுத்தி வரம்பு மீறி நடந்துகொண்டவரா? அந்தப்புரத்திலேயே அடிக்கடி பள்ளி கொண்டிருந்தவரா? மக்களைக் கவனிக்காமல் அந்தப்புரத்துக்கென அள்ளி அள்ளிச் செலவு செய்தாரா? அடுத்தவருக்குச் சொந்தமான பெண்கள் மீது ஆசை கொண்டவரா?

எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள அல்வார் சமஸ்தானத்தின் வருவாய்த் துறை அமைச்சர் கஸன்ஃபார் அலி கானின் கதையைத் தெரிந்துகொள்ள வேண்டியதிருக்கிறது. அவருடைய மனைவிக்கு நேரவிருந்த ஆபத்தைச் சற்று விளக்கமாகவே பார்க்க வேண்டியதிருக்கிறது.



# 14

# இது பொதுவழி அல்ல!

அல்வார் சமஸ்தான மக்களுக்கு அந்த அறிவிப்பு மிகவும் ஆச்சரியம் தரக் கூடியதாகத்தான் இருந்தது.

'நிஜமாவா? அட, சும்மா சொல்லாதப்பா. நல்லாக் கேட்டியா?' என்று சந்தேகம் குறையாமல் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டனர். விஷயம் இதுதான். மகா ராஜா ஜெய் சிங், சமஸ்தானத்தின் பல இடங்களை இணைக்கப் புதிதாகச் சாலைகள் போட உத்தரவிட்டிருந்தார். அதற்காகப் பெருமளவில் நிதி ஒதுக்கியிருந்தார்.

இதில் என்ன ஆச்சரியம்? ஒரு மகாராஜா தன் சமஸ்தானத்துக்குச் செய்வதெல்லாம் பெரிய விஷயமா என்று அ.பி.தனமாக கேட்கக்கூடாது. ஜெய் சிங் சமஸ்தான வளர்ச்சியில் அக்கறை செலுத்துகிறார் என்றால் எலி ஏன் நியூடாக ஓடுகிறது என்றே சந்தேகப்பட வேண்டும். காரணம்...

மகாராஜா ஜெய் சிங், ராஜஸ்தான் மாநிலத்திலுள்ள பணக்காரக் களை நிறைந்த அஜ்மீர் கல்லூரியில் படித்தவர். தன் ஸ்டேட்டஸுக்குச் சரி சமமானவர்களிடம் மட்டுமே பழகி வந்தவர். ஏழைமை, வறுமை, கஷ்டம், பசி, பற்றாக்குறை இம்மாதிரியான சொற்களுக்கெல்லாம் அருஞ்சொற்பொருள் தெரியாமல் வளர்ந் தவர். சமஸ்தான வளர்ச்சித் திட்டங்கள், மக்களின் முன்னேற்றம், அல்வாரின் பொருளாதாரம்?

சேச்சே, மகாராஜாவைப் பொருத்தவரை இவையெல்லாம் அக்மார்க் கெட்ட வார்த்தைகள். அப்படிப்பட்ட மன்னர்பிரான், புதிதாகச் சாலை போட நிதி ஒதுக்குவதாக அறிவித்தபோது மக்களுக்கெல்லாம் அதிர்ச்சியில் ஹார்ட் அட்டாக் வராத குறைதான்.

30 பேர், 10 மைல்கள் உள்ள சாலையை தினமும் 8 மணி நேரம் வேலை செய்து, 15 நாள்களில் போட்டு முடித்தார்கள் என்றால், அதே வேலையை 50 பேர், தினமும் 6 மணி நேரம் வேலை செய்தால் எவ்வளவு நாளில் முடிப்பார்கள் என்றெல்லாம் கணக்குப் போட்டுத் திட்டம் வகுத்தார்கள்.

சாலை போடும் திட்டம் மூலம் மக்களுக்குப் புதிய வேலை வாய்ப்புக் கிடைத்தது. எங்கெங்கே சாலைகள் வரப்போகின்றன என்று தெளிவாக வரைபடங்கள் வரையப்பட்டன. சாலையின் தரம் எப்படி இருக்க வேண்டும் என்று மகாராஜா போட்ட கட்டளைகள் அதிஅற்புதமானவை. தற்கால உவமைகளுடன் கலந்து இப்படிச் சொல்லலாம். மகாராஜாவின் குதிரைகள் சாலையில் கால் எடுத்து வைத்தால், ச்சும்மா நேஷனல் ஹைவேஸில் பிஎம்டபிள்யூவில் பறப்பது போல இருக்கவேண்டும்.

வேலைகள் துரிதமாக நடந்தன. பெரும்பாலும் காட்டுப் பகுதியில் சாலைகள் போட வேண்டியிருந்தது. காடு என்றால் பாரதிராஜாவின் கரிசல் காடு அல்ல, சிங்கம், புலி எல்லாம் சிறப்பாக வாழ்ந்து கொண்டிருந்த அடர்ந்த காட்டுப் பகுதி. அட, காட்டுக்குள் எதற்கு சாலை?

அங்கேதானே இருக்கிறது மகாராஜாவின் சாகச மாளிகையான சரிஷ்கா* (Sariska). அல்வார் நகரத்திலிருந்து இருபது மைல் தொலைவில். ஆரவல்லி மலையடிவாரத்தில். சுற்றிலும் வான் உயர்ந்த மரங்கள். நடுவில் தோட்டாதரணி போட்ட பிரம்மாண்ட செட் போல்.

மாளிகையின் பால்கனியில் உட்கார்ந்து காலாட்டிக்கொண்டே, கழுதைப்புலியைச் சுடலாம். மொட்டை மாடியில் மல்லாக்கப் படுத்துக் கொண்டே கொக்குக்குக் குறி பார்க்கலாம். பெட் ரூமில் தம் அடித்துக் கொண்டே, சும்மா போகும் சிங்கத்தைச் சுட்டு சுட்டு விளையாடலாம். வேட்டையாட அத்தனை வசதி. அத்தனைப் பாதுகாப்பு.

சரி, இப்படிப்பட்டதொரு வேட்டையராஜா அரண்மனையை ஜெய் சிங் கட்டியதன் பின்னணி என்ன? ஒருமுறை பிரிட்டிஷ் மகாராணி விக்டோரியாவின் மூன்றாவது குலக்கொழுந்து இளவரசர் ஆர்தர், அல்வாருக்குச் சுற்றுப்பயணம் வந்தார். அவரை எப்படிக் குஷிப்படுத்தலாம் என்று தாவாங்கட்டையில் ஆள்காட்டி விரலைத் தட்டித் தட்டி யோசித்த மகாராஜா, ஆர்தர் உல்லாசமாகத் தங்கி, வேட்டையாடிச் செல்வதற்காக இந்த சரிஷ்கா மாளிகையைக் கட்டினார். லட்சக்கணக்கில் செலவு. உபயம், மக்களின் வரிப்பணம்.

இளவரசர் வந்துபோனபோது சாலை வசதிகளெல்லாம் கிடையாது. நிரந்தரமாக அப்படியே விட்டுவிடமுடியுமா என்ன? அதற்குத்தான் அப்போது நடந்தது சாலை போடும் வேலை. அல்வார் நகரிலிருந்து தொடங்கும் சாலை அப்படியே காட்டுக்குள் மரங்களைக் கிழித்து நீண்டு கொண்டே வந்து சரிஷ்கா மாளிகையோடு முடிந்துவிடும். அதற்குப் பின் காட்டின் அந்தப் பக்கத்துக்குச் செல்ல? அங்கேதான் மகாராஜா செல்ல மாட்டாரே. பிறகு எதற்குச் சாலை?

---

★ இந்தியாவின் முக்கியமான புலிகள் சரணாலயம். 2004ல்கூட இங்கு புலிகளே இல்லை, புலிகள் இருப்பதற்கான அடையாளங்களும் இல்லை என்ற சர்ச்சை கிளம்பியது.



சரிஷ்கா அரண்மனை

சரிஷ்கா மாளிகைக்கு மட்டுமல்ல, ஜெய் சிங் ஆங்காங்கே கட்டிவைத்திருக்கும் உல்லாச மாளிகைகள் ஒவ்வொன்றுக்குமிடையே சாலைகள் போடப்பட்டன. வேறு எங்கெல்லாம் மகாராஜா அடிக்கடி சென்று வருவாரோ அந்தப் பாதைகளும் புதிய சாலைகளைப் போர்த்திக் கொண்டன.

திட்டமிட்டபடி, சாலை வேலைகளெல்லாம் முடிந்தன. 'என்னமா இருக்கு பார்த்தியா? நடு ரோட்டுல ஒக்காந்து மாவைப் பிசைஞ்சு, உருட்டி, சப்பாத்தியாப் போட்டு, சுட்டுச் சாப்பிட லாம் போல! பளபளன்னு அம்புட்டுச் சுத்தம். நம்ம ராசாவுக்கு இப்பவாவது சமஸ்தானம் மேல அக்கறை வந்திருக்கே. நல்லாருக்கட்டும்.' அல்வார் மக்களுக்கு அலாதி சந்தோஷம். ஆனால் நீடிக்கவில்லை. மகாராஜாவின் ஓர் அறிவிப்பு அந்த சந்தோஷத்தையெல்லாம் சல்லி சல்லியாக்கியது.

அறிவிப்பிலிருந்த விஷயம் இதுதான். அல்வார் சமஸ்தானத்தில் புதிதாகப் போடப்பட்டுள்ள சாலைகள் எதுவும் மக்கள் உபயோகத்துக்கு அல்ல. மன்னர்பிரானும், அவரைக் காணவரும் சிறப்பு விருந்தினர்களும் பயன்படுத்துவதற்காக மட்டுமே. தேவைக்கேற்ப அமைச்சர்கள், தளபதிகள், உயரதிகாரிகள் பயன்படுத்திக் கொள்ளலாம். இவர்களைத் தவிர வேறு யாராவது சாலைகளை உபயோகித்தீர்களென்றால், தண்டனை கடுமையாக இருக்கும்.

அல்சர் இல்லாமலேயே மக்களுக்கு வயிறு எரிய ஆரம்பித்தது. இந்த சுயநலத் திட்டத்துக்காக ஜெய் சிங் செலவழித்த தொகை சில லட்சங்கள் என்று குறிப்பு உண்டு. மக்கள் அதிகம் பயன் படுத்தும் பாதைகளும், சமஸ்தானத்தில் முக்கிய கிராமங்களை இணைக்கும் சாலைகளும் கண்டுகொள்ளப்படவில்லை. 'இந்த ஆளு திருந்தப் போறதில்லை' என்று மக்கள் தங்கள் வயிற்றில் அடித்த மகாராஜாவை நினைத்துத் தலையிலடித்துக் கொண்டனர்.

மகாராஜா மட்டும் தன் காரிலும் தேரிலும் விர்விர்ரென்று விரைந்தார். காட்டுக்குள் செல்லும் வழியிலேயே நடு ரோட்டில் நின்ற விலங்குகளை சல்மான்கான்போல சுட்டார். விருந்தினர்

களை அழைத்துவந்து ரோட்டில் ஊர்வலம் விட்டு பவுசு காட்டினார். மக்கள் ஓர் ஓரமாக நின்ற படியே வேடிக்கை மட்டும் பார்த்தனர்.

இப்படிப்பட்ட மகாராஜா நமக்குத் தேவையா என்று கொதித்தெழுந்து புரட்சி பண்ணவேண்டு மென்றாலும் யாரும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கவில்லை. அப்படிப்பட்ட உத்தம குடிமக்களுக்காக மகாராஜா ஜெய் சிங் ஒரே ஒரு நல்ல காரியம் மட்டும் செய்தார். அதுவும் வருடம் தவறாமல்.

துலாபாரம் கேள்விப்பட்டிருப்பீர்களே? மெகா சைஸ் தராசு. திருப்பதி, குருவாயூர் கோவில் களிலெல்லாம் உண்டே. அதாவது யாராவது எதற்காவது வேண்டிக் கொள்வர். அந்தக் காரியம் வெற்றிகரமாக நடந்தால், வேண்டுதலை நிறைவேற்ற, தம் எடைக்கு எடை ஒரு பொருளைக் (பொதுவாக காசு) கோவிலுக்குக் கொடுப்பார்கள்.

மகாராஜா ஜெய் சிங்குக்கு வேண்டுதல் எல்லாம் இருந்திருக்க வாய்ப்பில்லை. ஏனென்றால் அவரே கடவுளாயிற்றே. அவர் ஒவ்வொரு வருடத்தில் இறுதியிலும் தான் கட்டிய சீதா ராமர் கோவிலில் இருக்கும் துலாபாரத்தின் ஒரு தட்டில் ஏறி உட்கார்ந்து கொள்வார். மறுதட்டில், வெள்ளிக்காசுகளோ அல்லது கட்டிகளோ வைக்கப்படும். முள் சம நிலைக்கு வரும்வரை.

ஜெய் சிங்கின் எடைக்கு எடை வெள்ளி, சமஸ்தான ஏழை மக்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படும். இது வருடம் தவறாமல் நடந்த செயல். மகாராஜா தான் செய்த பாவங்களுக்குத் தேடிக் கொண்ட புண்ணியம் என்று கூடச் சொல்லலாம்.

சரி மறுபடியும் ரோட்டுக்கு வருவோம். உல்லாச மாளிகைகளுக்கெல்லாம் சர்ரென்று போய் வர, மெனக்கிட்டு ரோடு போட்டாரே, அப்படியெனில் மகாராஜா ஜெய் சிங், மன்மத ராஜாவா?

இல்லவே இல்லை. பெண்கள் விஷயத்தில் நாட்டமே இல்லாதவர். தன் நான்கு மனைவிகளைத் தவிர வேறெந்தப் பெண்களையும் சீண்டாதவர். ரம்பா, மேனகா, ஊர்வசி மூன்று பேரும் சேர்ந்துவந்து ஏனோதானோ உடையில் சீனாதானா ஆடினாலும் 'வேணாம் போ' என்று விரட்டியடித்துவிடுவார்.

ஏன்? அவர் ஒன்றும் காதல் கடவுள் மன்மதன் இல்லையே. காதலிக்காத கடவுளாயிற்றே. கண்டவர்களையும் தொட்டுப் பழகினால் தன்னுடைய புனிதத் தன்மை பொசுங்கிவிடும் என்ற எண்ணம் அவருக்குள் விஸ்தாரமாக வேர்விட்டுவிட்டிருந்தது. ஆனால் மற்றவர்கள் அப்படி இப்படி இருந்தால் கண்டுகொள்ளமாட்டார். குறுக்கே வர மாட்டார். கோபப்படவும் மாட்டார். மற்றவர்கள் என்கிற லிஸ்டில் மகாராணிகளும் அடக்கம்.

சாதாரண மனிதனுக்கு உணவு, உடை, உறைவிடம் என்ற மூன்று 'உ'க்கள் போதும். மகாராஜா என்றால் நான்காவதாக உல்லாசம் என்ற ஒன்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். உல்லாசத் துக்காக ஜெய் சிங்கும் தன் அரண்மனையில் முன்னோர்கள் பயன்படுத்தி வந்த அந்தப்புரத்தைச் சீரும் சிறப்புமாகப் பராமரித்து வந்தார். மகாராணிகள் தவிர, அங்கே ஏகப்பட்ட பெண்கள், அழகான பெண்கள், பேரழகுப் பதுமைகள் குடிகொண்டிருந்தனர்.

காலை எழுந்து, கடன்களை முடித்து, குளித்து, சாப்பிட்டு, ஓய்வெடுத்து, மீண்டும் சாப்பிட்டு, பேன் பார்த்து, பரமபதம் ஆடி, குளத்தில் நீராடி, சீவி சிங்காரித்துக் கொண்டு, மறுபடியும் சாப்பிட்டு, கைகழுவி, வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டு, இரவில் உறங்கப் போக

வேண்டியதுதான். தினமும் இதுவே நடைமுறை என்றால் வெறுப்பாகத்தானே இருக்கும். லீலைக்கு வேலை வேண்டாமா?

மகாராஜா ஜெய் சிங்குக்கும் அதுதான் கவலை.

'அந்தப்புரப் பெண்களுக்குத் தண்டத்துக்குச் சோறு போடுகிறோமே. அவர்களுக்கு என்ன வேலை கொடுப்பது? என்னால் தினமும் அங்கு செல்லவெல்லாம் முடியாது. அந்த விருப்பமும் எனக்குக் கிடையாது. எனில்? ம், அதுதான் சரி.'

முடிவெடுத்தார் மகாராஜா. சமஸ்தானத்தின் அமைச்சர்களையும் உயர் அதிகாரிகளையும் அழைத்தார். தன் புதிய திட்டத்தைக் கூறினார்.

எப்படிப் பெரும்பாலான தமிழ்ப்பட இயக்குநர்களுக்கு ஏழை ஹீரோ, பணக்கார ஹீரோயின் கதையைத் தாண்டி யோசிக்கத் தெரியாதோ, அப்படித்தான் பெரும்பாலான மகாராஜாக்களுக்கு 'விருந்து' என்று விஷயத்தைத் தாண்டி யோசிக்க முடியாது போல. திட்டத்தைக் கூறியதும் கூடியிருந்தவர்கள் முகத்திலெல்லாம் ஜொள்ளுடன் கூடிய ஜில் புன்னகை.

மகாராஜா கொடுக்கும் விருந்து என்றால் சும்மாவா? அதில் அந்தப்புரப் பெண்களும் கலந்து கொள்வார்கள் என்றால் சந்தோஷம் பீறிடாதா என்ன! விருந்துகள் வாடிக்கையாக நடக்க ஆரம்பித்தன. அமைச்சர்களும் உயர் அதிகாரிகளும் தளபதிகளும் குஷியாகக் கலந்து கொண்டனர். தம் மனத்துக்குப் பிடித்த பெண்களோடு அவுட்டிங், டேட்டிங் எல்லாம் சென்று மகிழ்ந்தனர். தான் போட்ட சாலைகளின் பயன்பாடு குறித்து மகாராஜா முழுத் திருப்தியடைந்தார்.

ஆனால் அவர் போடாத சாலையில் சைக்கிள் கேப்பில் ரோல்ஸ் ராய்ஸ் ஓட்டிப்போகப் பார்த்தார் ஓர் ஆசாமி. சென்ற அத்தியாயத்தின் இறுதியில் பார்த்தோமே, அந்தப் பிரகஸ்பதி கஸன்ஃபார் அலி கான் தான்!

அன்னாரைப் பற்றி அடுத்த சேப்டரில் விரிவாகப் பார்க்கப் போகிறோம். இங்கே ஒரு சொட்டு அறிமுகம் மட்டும் அவசியமாகிறது. பின்னே, ராஜாவின் ஏக(ப்பட்ட) பத்தினிகளுடனேயே டேட்டிங் செல்ல ஆரம்பித்து வம்பில் மாட்டிக்கொண்டவருக்கு இந்த பில்ட்-அப் கூட இல்லாவிட்டால் எப்படி?



# 15

# பூனைக்கு யார் கொலுசு போடுவது?

திடீரென்று ஒருநாள் மகாராஜா ஜெய் சிங், தான் வைக்கும் விருந்து சம்பந்தமாக ஒரு புதிய அறிவிப்பை வெளியிட்டார். கேட்ட அமைச்சர்களுக்கெல்லாம் தூக்கி வாரிப்போட்டது.

'இதனால் சகலவித அமைச்சர்களுக்கும் அதிகாரிகளுக்கும் இன்னபிற இஷ்ட மித்திர பந்துக்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால் எல்லாம் வல்ல மகாராஜா ஸ்ரீ ஜெய் சிங்கின் திருவருளால், வரும் பௌர்ணமி இரவில் அல்வார் நகர அரண் மனையில் உல்லாச விருந்து நடைபெற உள்ளது. இசை, ஆடல், பாடல், கேளிக்கை எல்லாம் நிறைந்த கோலாகல விருந்து. அவ்வமயம் தாங்கள் தங்கள் குடும்பப் பெண்கள் சகிதம் வந்து கலந்துகொள்ளுதல் அவசியம். அத்தியாவசியம். மீறுதல் ராஜ துரோகம். இது மகாராஜாவின் மேலான உத்தரவு.'

தனிச்சுற்றில் விடப்பட்ட செய்திதான். ஆனால் கேட்ட ஒவ்வொருவருக்குள்ளும் தண்டோரா அதிர்ந்தது. அதாவது விருந்துகளில் அமைச்சர்கள் தங்கள் மனைவி யோடு அல்லது மனைவிகளோடு, மகளோடு அல்லது மகள்களோடு, மச்சினிச்சி களோடு வந்து கலந்துகொள்ள வேண்டும். இப்படி ஒரு புதிய கட்டளை போட வேண்டிய காரணம்?

தன் அந்தப்புரத்தில் உள்ள பெண்களையும், அவ்வளவு ஏன் மகாராணிகளையும் கூட விருந்துகளில் இஷ்டம்போல் இருக்க அனுமதித்திருந்தார் மகாராஜா. அமைச்சர்களும் தளபதிகளும் மீட்டருக்கு மேல் உரிமை எடுத்துக் கொண்டனர்.

ஆனால் இந்த விருந்துகளால் தன் பெயர் கெட்டுபோய் விடக்கூடாதே என்று ஜெய் சிங் யோசித்ததன் விளைவுதான் அந்த அறிவிப்பு.

எல்லோரும் ஒரே குட்டையில் ஊறுகிற மட்டைதான், யாரும் யாரையும் குறைவாகப் பேசி விடக்கூடாது என்பதற்காகப் போடப்பட்ட கொக்கி அது.

'என் பொஞ்சாதிக்கு வவுறு சரியில்ல, அதான் அவ ஆத்தா வூட்டுக்குப் போயிருக்கா', 'என் மவளுக்கு வலது கை சுண்டு விரல்ல நகச்சுத்தி', 'என் மச்சினிய மாடு முட்டிருச்சு' - விருந்து களில் தனிக்கட்டையாக கலந்துகொள்ளும் அமைச்சர்கள் ஓரிருமுறை இப்படிப்பட்டக் காரணங்களைச் சொல்லித் தப்பிக்கலாம். எப்போதும் முடியாது. சிறையில் கம்பி எண்ண வேண்டியது வரும் அல்லது பதவி பறிக்கப்படும் அல்லது சமஸ்தானத்தை விட்டு தலை தெறிக்க ஓட வேண்டியதிருக்கும். எனவே விருந்துகளில் குடும்பப் பெண்களுடன் கலந்து கொண்டனர்.

விருந்து ஆரம்பிக்கும். போதை ஏறும் ஏறும் ஏறிக்கொண்டே இருக்கும். ஒரு கட்டத்தில், அமைச்சர்கள் தாங்கள் அழைத்து வந்த பெண்களை மறந்தே போய்விடுவர். மற்ற அமைச்சர் களின் குடும்பப் பெண்களோடு உரிமையுடன் பழக ஆரம்பிப்பார்கள். சிரித்துப் பேசி மகிழ் வார்கள். நடனம் ஆடுவார்கள். கும்மாளம் போடுவார்கள். மேற்கொண்டு சொல்ல வேண்டுமா என்ன?

இந்த மாதிரியான விருந்துகளுக்காக அழைப்பு விடுப்பது மட்டுமே மகாராஜாவின் வேலை. அவரும் விருந்தில் கலந்துகொள்வார். தள்ளி நின்று பேசுவார். எட்டி நின்று சிரிப்பார். ஒதுங்கி நின்று உணவு அருந்துவார். ஓரமாக நின்று வேடிக்கை பார்ப்பார். மேற்கொண்டு தனக்கு அங்கே வேலை இல்லை என்றுணர்ந்து சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பிவிடுவார். அவ்வளவே!

அவர் கிளம்பினால் பாதகமில்லை. நமக்கு இங்கே அந்த கஸன்ஃபார் அலி கான்தான் (Ghazanfar Ali Khan) முக்கியம். அவர் லாகூரில் அரசுக் கல்லூரியில் படித்தவர். 1923-ல் இந்திய சட்ட வரைவுக் குழுவில் உறுப்பினராக இருந்தவர். அதற்குப் பின் (1928) அல்வார் சமஸ்தானத் தின் நிதி அமைச்சராக நியமிக்கப்பட்டார். இரண்டு ஆண்டுகள் அந்தப் பதவியில் இருந்தார். பின்னாளில் (1937-1944) பஞ்சாப் அரசுக்கான நாடாளுமன்றச் செயலாளராகச் செயல்பட்டார்.

இந்திய-பாக். பிரிவினைக்குப் பின் பாகிஸ்தானின் உள்துறை, உணவு, சுகாதாரம், விவ சாயம் ஆகிய துறைகளின் அமைச்சராகப் பதவியேற்றார். 1948ல் இரான் சென்று பாகிஸ்தானின் தூதுவராக இருந்தார்.

இவ்வளவு நீண்ட ஃப்ரொபைலில், இடையில் இரண்டு ஆண்டுகள் அல்வார் சமஸ்தானத்தின் கணக்குப்பிள்ளையாக இருந்தாரே, அப்போது நடந்ததாகச் சொல்லப்படும் சம்பவத்தைத்தான் இப்போது பார்க்கப் போகிறோம்.

அலி கான், அல்வாரின் நிதி அமைச்சராகப் பதவியேற்ற சில நாள்களில், மகாராஜா ஜெய் சிங் விருந்தொன்றுக்கு ஏற்பாடு செய்தார்.

'அலி கான், நாளை இரவு நம் அரண்மனையில் விருந்து. குடும்பத்தோடு வந்து விடுங்கள்.'

'மன்னிக்க வேண்டும் மகாராஜா. என் மனைவி லாகூரில் இருக்கிறாள்.'

*‘ஓ அப்படியா. சரி, அடுத்தமுறையாவது அழைத்து வாருங்கள்.’*

*‘மீண்டும் மன்னிக்க வேண்டும். எங்கள் மத வழக்கப்படி, பெண்கள் வேற்று மனிதர்களிடம் தங்கள் முகத்தைக் காட்டுவது கூடாது. அந்த விதிகளை என்னால் மீறவும் முடியாது. எனவே என் மனைவியையோ அல்லது உறவுக்காரப் பெண்களையோ நம் அரண்மனை விருந்துகளுக்கு அழைத்து வருதல் என்பது இயலாது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன் மகாராஜா.’*

*ஜெய் சிங்கால் அதற்கு மேல் அவரை வற்புறுத்த முடியவில்லை. விட்டுவிட்டார். அந்த விருந்து எப்படிப்பட்டதென்று அலி கானுக்கு நன்றாகவே தெரியும். அதனால் மகாராஜாவிடம் கலாச்சாரமாகப். பேசித் தப்பித்து விட்டார்.*

*விருந்துகள் நடந்தன. அலி கான் ஒண்டிக் கட்டையாகவே கலந்து கொண்டார். அங்கிருந்த அமைச்சர்களின் குடும்பத்தினரோடு கும்மாளம் போட்டார். நாளடைவில் அந்தப்புரத்திலும் தன் செல்வாக்கை வளர்த்துக் கொண்டார். குறிப்பாக மகாராணிகளிடம். எந்த நேரத்திலும் அந்தப்புரத்தில் நுழைவதற்கும், அரண்மனையில் எங்கு வேண்டுமானாலும் சென்று வருவதற்கும் அதிகாரம் பெற்றார். ஜெய் சிங் தடுக்கவே இல்லை.*

*மற்ற அமைச்சர்கள் என்ன சும்மாவா இருப்பார்கள். ‘நேத்து வந்த பய, ரொம்ப ஆட்டம் போடுறான். இந்த மகாராஜாவும் அவனை வைச்சுத் தாங்கு தாங்குன்னு தாங்குறாரு. நம்மளை யெல்லாம் பார்த்தா இளிச்சவாய் மாதிரி தெரியுதா?’*

*ஒவ்வொரு அமைச்சருக்குள்ளும் இந்த எண்ணம் கும்மிட்டி அடுப்பு போலப் புகைந்து கொண்டிருந்தது. ஒருநாள் மொத்தமாக வெளிப்பட்டது. ரகசியமாகப் பேசித் தீர்வு காணலாம் என்று திட்டம் போட்டனர். மகாராஜா ஊரில் இல்லாத சமயம் பார்த்துக் கூட்டத்துக்கான நாள் குறிக்கப்பட்டது.*

*மாளிகை ஒன்றில் ரகசியமாகக் கூடினர். சமஸ்தானத்தின் பிரதம அமைச்சர் சௌதாரி கிர்தாரி லால், கூட்டத்துக்குத் தலைமை தாங்கினார். ஒவ்வொருவரும் குமுற ஆரம்பித்தனர்.*

*‘இது என்னங்க நியாயம், நாமெல்லாம் பொண்டாட்டி, புள்ளைங்களையெல்லாம் விருந் துக்குச் சகஜமா அழைச்சுக்கிட்டுப் போறோம். அட, மகாராணிகளே வந்து கலந்துக்குறாங்க. ஆனா அலி கான் மட்டும் தன்னோட பொண்டாட்டியை அழைச்சுட்டு வராம ரொம்ப நாளா டபாய்க்குறாரு. இது நியாயமா?’*

*‘அட, தான் பொண்டாட்டியை அழைச்சுட்டு வரலேன்னாப் பரவாயில்லைபா. ஆனா மத்த வங்களோட இன்னாமா கூத்தடிக்குறாரு. நெஞ்சு கொதிக்குதுபா.’*

*‘இப்படியே வுட்டா சரிப்படாது. ஒரு கண்ணுல வெள்ளரிக்காயையும், ஒரு கண்ணுல வெடி மருந்தையும் வைக்குறது நல்லாயில்ல. சமஸ்தானத்துல எல்லா மந்திரிங்களையும் ஒண்ணா நடத்தணும்னு மகாராசாகிட்ட கட் அன்ட் ரைட்டா சொல்லியே ஆவணும். ஆனா பூனைக்கு யாருப்பா கொலுசு போடுறது?’*

*தக்க சந்தர்ப்பம் கிடைக்கையில், மகாராஜாவிடம் பிரதம அமைச்சர் லால், அலி கான் பற்றிப் போட்டுக் கொடுக்க வேண்டும் என்று முடிவெடுக்கப்பட்டது. அந்த தினத்துக்காகக் காத்திருந்தார்கள்.*

தன் சொந்த வேலை காரணமாக வெளியூர் சென்றிருந்தார் அலி கான். அன்றைக்கு மகாராஜா நல்ல மூடில் இருந்தார். லால் தன் தைரியத்தை எல்லாம் படை திரட்டிக் கொண்டு, மகாராஜாவிடம் சென்றார். தயங்கித் தயங்கி விஷயத்தை வெளியிட்டார்.

'நிதி அமைச்சர் அலி கானை எங்கள் சொந்த சகோதரர் போலத்தான் எண்ணுகிறோம். விருந்து களில் எங்கள் குடும்பப் பெண்களோடு அவரைச் சகஜமாகப் பழக அனுமதிக்கிறோம். ஆனால் அவர் மட்டும் ஒருபோதும் தன் குடும்பத்தினரை விருந்துக்கு அழைத்து வந்ததே இல்லை. ஏதேதோ காரணங்கள் கூறிச் சமாளிக்கிறார். தாங்கள் அமைச்சர்களிடையே ஒருபோதும் பாரபட்சம் காட்டியதில்லை. இதுகுறித்து நீங்கள் நடவடிக்கை எடுப்பீர்கள் என்று நம்பு கிறேன்.'

மகாராஜாவின் முகத்தில் கோபம் கொப்பளித்தாலும், மனம் சிந்திக்க ஆரம்பித்திருந்தது. வத்தி வைத்த சந்தோஷத்தோடு திரும்பினார் லால். சில நாள்களில் அலி கான் ஊருக்குத் திரும்பினார். அரசவை கூடியிருந்தது. அமைச்சர்கள் எல்லோரும் குறுகுறுப்போடு காத்திருந்தனர்.

'அலி கான், வருகின்ற தீபாவளிக்கு விருந்தொன்றை ஏற்பாடு செய்திருக்கிறேன். அதற்கு நீங்கள் உங்கள் மனைவியைக் கண்டிப்பாக அழைத்து வரவேண்டும்.'

'மகாராஜா.. நான் ஏற்கெனவே கூறியது போல, எங்கள் மத...'

'இது என் அழைப்பு அல்ல, கட்டளை என்பது உங்களுக்குப் புரியவில்லையா?'

அலி கானுக்குத் தலை சுற்றியது. இனி என்ன கூறினாலும் எடுபடாது என்று புரிந்து போனது.

'மகாராஜா, என் மனைவி லாகூரில் இருக்கிறாள். சென்று அழைத்துவர ஒரு மாதம் அவகாசம் தேவைப்படும்.'

'தாராளமாக எடுத்துக்கொள்ளுங்கள். இந்தாருங்கள், இதை வைத்துக் கொள்ளுங்கள். இப்போதே லாகூருக்குக் கிளம்புங்கள். மனைவியோடு திரும்புங்கள்.'

அலி கான், மகாராஜா கொடுத்த பத்தாயிரம் ரூபாயோடு அல்வாரை விட்டுக் கிளம்பினார். 'மவனே மாட்டுனியா, இப்ப என்ன பண்ணுவேன்னு பார்த்துடலாம்' மற்ற அமைச்சர்கள் கொக்கரித்தனர்.

அலி கான், லாகூருக்குச் செல்லும் வழியில் டெல்லியில் தங்கினார். 'எப்படிச் சமாளிப்பது? மனைவியை அழைத்துக் கொண்டு அல்வாருக்குச் செல்வதெல்லாம் முடியவே முடியாது. அப்படிச் செல்லாமல் தப்பிக்கவும் முடியாது. மகாராஜா ஆளனப்பி, சிறை பிடிப்பார். வேறு வழியே இல்லையா?

டெல்லியில் அலி கானுக்கு ஒரு நண்பர் இருந்தார். அவர் பெயர் ஜே.என். ஷாஹ்னி. அவரிடம் சென்று தன் நிலையைச் சொல்லிப் புலம்பினார்.

'நீ நினைக்குற மாதிரியில்ல, அந்த ஜெய் சிங்கு ரொம்பப் பொல்லாதவன். வசமா மாட்டிக் கிட்டேன். நீதாம்பா ஏதாவது ஐடியா கொடுக்கணும்.'

ஷாஹ்னியும் தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தார். பல மணி நேர யோசனைக்குப் பின் பளிச் சென்று ஓர் ஐடியா தோன்றியது. ஷாஹ்னி சொல்லச் சொல்ல அலி கான் துள்ளிக் குதித்தார்.



# 16

# தாற்காலிக பேகம்

தலைக்கு மேலே பாறாங்கல், நெற்றிப் பொட்டில் துப்பாக்கி, கழுத்துக்கு நேரே திருப்பாச்சி - இப்படிப்பட்டதொரு சூழலில் ஷாஹ்னி சொன்ன அருமையான யோசனையால்தான் அலி கானுக்குப்போன உயிர் U டர்ன் போட்டுத் திரும்ப வந்திருந்தது.

'மகாராஜா உன் மனைவியைத்தானே விருந்துக்கு அழைத்து வரச் சொன்னார்?' - தன் நிலையைச் சொல்லி அலிகான் அழுதபோது அவரது நண்பர் ஷாஹ்னி இப்படித்தான் கேட்டார்.

'அட, அதைத்தானப்பா இவ்வளவு நேரம் சொல்லிக்கிட்டிருக்கேன். திரும்பத் திரும்பக் கேட்டா என்னப்பா அர்த்தம்?'

'முதல்ல நான் கேக்குற கேள்விகளுக்கு எல்லாம் பொறுமையா பதில் சொல்லுப்பா. இதுக்கு முன்னாடி உன் மனைவியை அல்வாருக்கு அழைச்சு க்கிட்டுப் போயிருக்கியா? இல்லை, அங்கிருக்கிறவங்க யாராவது அவளைப் பார்த்திருக்காங்களா?'

'சத்தியமா இல்லை.'

'அப்புறமென்ன, கவலையை விடுப்பா. எத்தனையோ உல்லாச விடுதி இருக்கு. அங்க விதவிதமாப் பெண்கள் கிடைப்பாங்க. யாரையாவது அழகான பெண்ணாப் பார்த்து தற்காலிகமா கல்யாணம் (Mut'a) செஞ்சுக்கோ. அவளையே உன்

மனைவின்னு சொல்லி அல்வாருக்கு அழைச்சுட்டுப் போ. தீபாவளி விருந்துல கலந்துக்கிட்டு ஜமாய். இன்னொரு கல்யாணம் பண்றதுக்கு மத ரீதியாக் கூடச் சிக்கலில்லை. அப்புறம் தேவையில்லைன்னா விவாக ரத்து பண்ணிக்கலாம். என்ன நாஞ்சொல்றது?'

அலி கானும் ஷாஹ்னியும் தங்கள் ஐடியாவைச் செயல்படுத்துவதற்காகக் கிளம்பினர். டெல்லி வீதிகளில் அலைந்து திரிந்தனர். அந்த இடத்தைக் கண்டுபிடித்தனர். உள்ளே நுழைந்தனர்.

'நான் சிரித்தால் தீபாவளி
நாளும் இங்கே ஏகாதசி...'

ஒரு நடனப் பெண் நளினமாக ஆடிக் கொண்டிருந்தாள்.

'அதோ நடனம் ஆடிக் கொண்டிருக்கிறாளே அந்தப் பெண் சரி வருவாளா?'

தன் நண்பர் ஷாஹ்னி கேட்டதற்கு இல்லை என்று உதட்டைப் பிதுக்கினார் அல்வார் சமஸ் தானத்தின் நிதி அமைச்சர் கஸன்ஃபார் அலி கான். அவரது கண்கள் அந்த உல்லாச விடுதி யிலிருந்த வேறு பெண்களை நோட்டமிட்டுக் கொண்டிருந்தன. பல்வேறு விடுதிகளில் அலைந்து திரிந்தும் சரியான பெண் சிக்கவில்லை.

ஹீரோவோடு நாலு லவ் ஸீன், மூன்று டூயட் வந்து போகும்படியாக ஒரு புதிய கவர்ச்சி ஹீரோயினை வடக்கே இருந்து பிடித்துவிடலாம். ஆனால், அந்தப் புது ஹீரோயினுக்கு நடிப்பும் வர வேண்டுமென்றால்? தேடிக் கண்டுபிடிப்பதற்குள் இயக்குநருக்கு விழியில் விட்டில்பூச்சி பறக்கும். அப்படித்தான் இருந்தது அலி கானுக்கும்.

எத்தனையோ நடனப்பெண்களை, விலை மாதர்களைப் பார்த்திருந்தார்கள். ஆனால் அவர் களும் பணத்துக்காக நடிக்கத் தயாராக இருந்தனர். ஆனால் அவர்களுக்கு நடிப்பு வர வேண்டுமே? ஜெகஜ்ஜாலக் கில்லாடியான மகாராஜாவே நம்பும்படியாக நடிக்க வேண்டுமே? ஏதாவது சொதப்பலாகி, குட்டு உடைந்துவிட்டால்... அய்யகோ! நினைத்துப் பார்த்தாலே அலி கானுக்கு அடிவயிற்றில் ஆட்டோ ஓடியது.

மிகவும் களைத்துப் போய் அடுத்த உல்லாச விடுதிக்குள் நுழைந்தனர். பாவாடை ரங்க ராட்டினமாகச் சுழல, நளினமாக இடுப்பை வளைத்து வளைத்து ஆடிக் கொண்டிருந்தாள் அந்தப் பெண். சுண்டினால் ரத்தம் வரும் நிறம். காப்பி நிறக் கண்கள். நடனத்தில் முகம் நவ ரசங்களையும் பொழிந்தது. பார்த்த மறுகணமே அலி கானுக்குப் பிடித்துவிட்டது. 'நல்ல வடிவுடைய பெண். இவள் சரியாக வருவாள் என்று தோன்றுகிறது' என்று ஷாஹ்னியின் காதில் கிசுகிசுத்தார்.

நடனமாடி முடித்த அந்தப் பெண்ணை நோக்கி வேகமாகச் சென்றார் ஷாஹ்னி. அதற்குள் எங்கிருந்தோ முளைத்த ஓர் அம்மணி குறுக்கே வந்து நின்றாள்.

'என்ன வேணும்?'

'அந்தப் பொண்ணு...'

'என் பொண்ணுதான்' என்று ஆரம்பித்தவள் மணிக்கணக்கையும் பணக்கணக்கையும் கூற ஆரம்பித்தாள். அலி கான் குறுக்கிட்டு, அந்த அம்மணியை ஓரமாக அழைத்துச் சென்றார். தன் பிரச்னையை ஃப்ளாஷ்பேக்காக இன்னொரு தடவை ஓட்டினார்.

‘இதெல்லாம் சரிப்படாதுங்க. சிக்கலாயிரும்’ என்று பிடிகொடுக்காமல் பேசியவளின் கண்களில் பணக் கட்டைக் காண்பித்தார். ‘இது உங்க மகள் நடிக்கறதுக்கான அட்வான்ஸ். வேலை கச்சிதமாக முடிஞ்சதுமே மீதிப் பணம் கைக்கு வந்துரும்.’

அந்த அம்மணியின் கண்கள் 70எம்எம் ஆயின. ‘அதுக்கு இல்லீங்க... வம்பு, வழக்கு எதாவது ஆயிருச்சுன்னா...’ பணத்தை விட்டுப் பார்வையை விலக்காமல் இழுத்தாள்.

‘அட, என்னம்மா நீங்க? உங்க பொண்ணு அரண்மனைக்கெல்லாம் போகப் போகுது. மகாராஜா என்னென்ன பரிசெல்லாம் கொடுப்பாரு தெரியுமா? அதெல்லாம் நீங்களே எடுத்துக்கோங்க. மறுக்காமப் பொண்ணை உடனே அனுப்பி வையுங்க.’

அவ்வளவுதான், ஆர்வம் தாங்காமல் குடுகுடுவென தன் மகளிடம் ஓடிப்போனாள் அந்த அம்மணி.

‘ஏட்டி கேட்டியா, நல்ல புளியங்கொம்பு மாட்டிருக்கு புள்ள. விட்டுடாத. அரண்மனைக்கெல்லாம் போவப் போற. மவராசா வரச் சொல்லிருக்காராம். அதிர்ஷ்டக்காரிடி நீ...’ என்று மேற் கொண்டு விஷயத்தைப் புளி போட்டு விளக்கினாள். அந்தப் பெண்ணும் மறுப்புக் கூறவில்லை. அவுட்டோர் ஷூட்டிங் என்று நினைத்திருக்கலாம்.

பேரம் முடிந்தது. பேசியதில் பாதித் தொகையை அந்த அம்மணியிடம் கொடுத்துவிட்டு, கட்டிய சேலையோடு... ச்சீ, மாட்டிய உடையோடு அந்தப் பெண்ணை அங்கிருந்து அழைத்துக் கொண்டு கிளம்பினர். அலி கானுக்கு டெல்லியில் ஒரு வீடு இருந்தது. அங்கு அந்தப் பெண் தங்க வைக்கப்பட்டாள். அலி கான் லாகூருக்குக் கிளம்பினார். உண்மையான மனைவியை உள்ளம் தேடாதா என்ன?

அலி கானின் நண்பர்கள் அந்தப் பெண்ணுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டனர். ‘மக்கா, நீ கவலைப்படாமப் போயி உன் வூட்டுக்காரியைப் பார்த்துக்கினு வா, நாங்க அதுக்குள்ளாற, இந்தப் பொண்ணுக்கு நடிப்புல சாவித்திரி கணக்கா டிரெயினிங் கொடுத்து வெக்கிறோம். வேற என்னன்னா மேட்டரு தேவையோ அத்தினியும் A To Z கத்துக் கொடுத்துடறோம்.’

அலி கான் கவலையில்லாமல் லாகூர் சென்றடைந்தார். டெல்லியின் அந்தப் பெண்ணுக்கு பயிற்சிப் பட்டறை தொடர்ந்து நடந்தது. சொல்லப்போனால், அவளுக்கு எந்தவிதப் பயிற்சியுமே தேவைப்படவில்லை. சொல்லித் தெரிவதா மன்மதக் கலை?

அல்வார் நகர அரண்மனைக்கு ஒரு தந்தி வந்து சேர்ந்தது. லாகூரிலிருந்து.

‘நான் என் பேகத்தோடு அடுத்த சனிக்கிழமை ரயிலில் அங்கு வருகிறேன் - அலி கான்.’

தந்தியைக் கண்ட ஜெய் சிங், சந்தோஷத்தில் கூவினார். ‘பார்த்தீங்களா, நான் அப்பவே சொன்னேன்ல, அலி கான் எல்லா விஷயத்துலயும் உண்மையா இருப்பாருன்னு. பேகத்தோட வர்றாராம். அவர் என் கட்டளை எதையும் மீறுனதே இல்ல, தெரிஞ்சுக்கோங்க..’

சுற்றியிருந்த அமைச்சர்கள் மனத்தில் குஷி குட்டிக்கரணம் போட்டது. ‘வாயா வா, நாங்கள்ளாம் எலிக்கு கூண்டு வைச்சு புலியைப் புடிக்குற ஆளுங்க, பொண்டாட்டியோட வர்றேல்ல, கவனிச்சுக்குறோம்’ என்று தங்களுக்குள்ளேயே கெக்கலித்தார்கள்.



கஸன்ஃபார் அலி கான்

லாகூருக்கு பதில் தந்தி சென்று சேர்ந்தது. 'நீங்கள் வரும் நாளில் உங்களையும் குடும்பத்தினரையும் வரவேற்க எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கும் - இப்படிக்கு மகாராஜா ஜெய் சிங்.'

அலி கான் திருப்தியாக லாகூரிலிருந்து கிளம்பி டெல்லிக்குச் சென்றார். தன் வீட்டுக்கு வந்தார். 'நல்ல பொண்ணா பிடிச்சிருக்கப்பா. செம ஆக்டிங் கொடுக்குறா. பெர்ஃபார்மன்ஸ் தூள். அல்வாருக்கு அல்வா கொடுக்கச் சரியான ஆளுதான்' என்று நண்பர்கள் சர்டிபிகேட் கொடுத்தனர்.

அலி கான் தன்னுடைய ஸ்பெஷல் வகுப்பை ஆரம்பித்தார். முக்கியமாக மகாராஜாவிடம் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்ற பயிற்சி. 'மகாராஜா ஓரமா நின்னு ஒய்யாரமாச் சிரிக்கிறாரேன்னு நினைச்சு அவரு பக்கத்துல போயிராதே. பலி கொடுத்துருவாரு. அவரா வந்து பேசுனா மட்டும் நீ முப்பத்துரெண்டையும் காட்டிப் பேசணும். அப்புறம் பாதுகாப்புத் துறை அமைச்சர் இருக்காரே, அந்த ஆளு...'

அன்று முழுவதும் தியரி  ப்ராடிகல் வகுப்புகள் தொடர்ந்தன. தன் தற்காலிக பேகத்தை அழைத்துக் கொண்டு கடை வீதிக்குக் கிளம்பினார். தேவையான உடைகள், நகைகள், ஒப்பனைப் பொருள்களை எல்லாம் வாங்கிக் கொடுத்தார்.

அல்வாரை நோக்கி அந்த ரயில் சென்று கொண்டிருந்தது. முதல் வகுப்புப் பெட்டியில் அலி கான், பேகத்தோடு உட்கார்ந்திருந்தார். இரண்டாம் வகுப்புப் பெட்டியில் பேகத்தின் உதவியாளர்களாக நியமிக்கப்பட்டவர்கள் இருந்தார்கள். அல்வாரை நெருங்க நெருங்க அலி கானுக்குள் பயம் பரவியது. பேகத்தைக் கொஞ்சினார், கொஞ்சியபடியே கெஞ்சினார், கெஞ்சியபடியே மிரட்டினார்.

'ஏ செல்லம் இங்க பாரு, என் விதி இப்போ உன் கையில. கொஞ்சம் பார்த்து நடிம்மா. ஏதாவது சொதப்பலா நடந்ததுன்னா, அவ்வளவுதான், எனக்கு மட்டுமில்லை, உனக்கும்கூட கழுத்துக்கு மேல தலையிருக்காது. ஞாபகம் வைச்சுக்கோ.'

அல்வார் ரயில் நிலைய வாசலில் ஏற்பாடுகள் தடபுடலாக இருந்தன. அமைச்சர்களும், பாதுகாப்பு அதிகாரிகளும் அலி கானின் மனைவியைத் தரிசிக்க, அம்சமாகத் தங்களை அலங் கரித்துக் கொண்டு வந்திருந்தனர். ரயில் வருவதற்குச் சில நிமிடங்கள் முன்னதாக ஜெய் சிங் நிலையத்துக்கு வந்தார்.

ரயில் வந்து நின்றது. அலி கான் பிளாட்ஃபாரத்தில் இறங்கினார். கூலிகள் அவரது பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டனர். எல்லோருடைய கண்களும் அவரது மனைவியைத் தேடின. பேகம் அல்வார் மண்ணில் கால் பதித்தாள்.

உச்சி முதல் பாதம் வரை மூடிய மெரூன் நிற பர்தா. மெல்லத் திறந்தது கதவு அமலா போல கண்கள் மட்டும் தரிசனத்துக்குக் கிடைத்தன. அலி கான் தன் திருவாய் திறந்தார்.

‘மதிப்பிற்குரிய மகாராஜா அவர்களே, இவள் என் மனைவி…’

பேகம் கைகூப்பி வணங்கினாள். ஜெய் சிங்குக்கு அலாதி மகிழ்ச்சி, வலதுகையைப் பிடித்து முத்தமிடுமளவுக்கு. தன் முக்கியமான அமைச்சர்களை பேகத்துக்கு அறிமுகப்படுத்தினார். அவர்கள் கம்பீரமாக ஜொள்விட்டனர்.

‘அலி கான், நீங்கள் குடும்பத்தோடு தங்குவதற்காக உங்கள் மாளிகையில் எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன. பயணக் களைப்பு தீர நன்றாக ஓய்வெடுங்கள். நாளை தீபாவளி விருந்தில் சந்திக்கலாம். உங்கள் மனைவிக்குத் தனி வாகனம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. கிளம்புங்கள்’

‘மிக்க நன்றி மகாராஜா’ தன் திட்டம் பலித்த மகிழ்ச்சி அலி கானின் புன்னகையில் வெளிப்பட்டது. பேகமும் உதவியாளர்களும் ஒரு மோட்டார் காரில் ஏறிக் கொண்டனர். இன்னொரு காரில் அலி கான் ஏறிக் கொண்டார்.

மறுதினம் நடக்கவிருக்கும் தீபாவளி விருந்து பற்றிய மத்தாப்புக் கனவுகள் அமைச்சர்களின் கண்களில் கித்தாப்பாக விரிந்தன.



# சர்வம் உல்லாச மயம்

மழையில் நனைந்த ஊட்டி கேரட் போல ப்ரெஷ்ஷாக இருந்தது அல்வார் நகர அரண்மனை. எங்கும் தோரணங்கள், வண்ண விளக்குகள், அலங்காரப் பொருள்கள் என்று இரவு நடக்கவிருக்கும் தீபாவளி விருந்துக்கான ஏற்பாடுகள் பிராட்பேண்ட் வேகத்தில் நடந்து கொண்டிருந்தன. அரண்மனையை ஒட்டியிருந்த குளத்தைச் சுற்றியும் அலங்காரங்கள் அசத்திக் கொண்டிருந்தன.

அந்தப்புரப் பெண்களெல்லாம் தங்களை அலங்கரித்துக் கொள்வதில் பிஸியாக இருந்தனர். வாசனைத் திரவியங்களால் காற்றுக்கு மூச்சு முட்டிக் கொண்டிருந்தது. மகாராணிகளின் முகத்தில் மேக்-அப் நான்கைந்து கோட்டிங்குகளைத் தாண்டியிருந்தது. விருந்துக்கான அறை அந்தக்கால பத்மினி போல அழகாகக் காட்சியளித்தது. புண்ணியாத்மாவான ஜெய் சிங்கின் கண்களில் எந்தவித அபச்சாரமும் தென்பட்டுவிடக்கூடாது என்று பார்த்துப் பார்த்து ஏற்பாடுகள் செய்திருந்தனர்.

நிதி அமைச்சர் கஸன்ஃபார் அலி கானுக்கு நேரம் நெருங்க நெருங்க உள்ளுக்குள் பயம் பட்டாசு வெடித்தது. அந்தத் தீபாவளிக்கு, வதம் செய்யப்படுகிற நரகாசுரனாக தான் மாட்டிக்கொண்டுவிடக் கூடாதே என்கிற பீதி அவரது கண்களில் ஓடியது.

‘சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்குல்ல. ரொம்ப ஜாக்கிரதையா நடந்துக்கணும். விஷயம் வெளிய தெரிஞ்சுதுன்னா, சமஸ்தானத்தை விட்டு வெளிய போக முடியாது. அந்த மகாராஜா மனுசனே இல்ல, மகா கெட்டவன். ஏதாவது சந்தேகம்

இருந்தா இப்பவே கேட்டுக்கோ. விருந்து வெற்றிகரமாக முடிஞ்சு, வில்லங்கத்துல மாட்டாம நீ ஊருக்குத் திரும்புறது உன் நடிப்புலதான் இருக்கு.'

பேகம் எல்லாவற்றுக்கும் தலையாட்டிக் கொண்டாள். அவள் முகத்தில் பயமோ, கலவரமோ, பதட்டமோ தம்மாத்துண்டுகூட இல்லை. 'நிதி அமைச்சரின் மனைவியாக நடிக்க வேண்டும். மற்ற அமைச்சர்களுக்குக் கம்பெனி கொடுக்க வேண்டும். அவ்வளவுதானே விஷயம். இதுக்கு ஏன் இவ்வளவு அலட்டிக்கிறாரு? நாம சமாளிக்காத ஆளுங்களா...' தனக்குள்ளேயே நினைத்துக் கொண்டாள்.

அன்று மாலை வேளையில் பிரதம அமைச்சர் சௌதாரி கிர்தாரி லால், இன்னொரு அமைச் சரைச் சந்தித்தார். தீபாவளியும் அதுவுமாகக் கங்கா ஸ்நானம் ஆச்சா என்ற வழக்கமான கேள்விகளெல்லாம் கேட்டுக் கொள்ளவில்லை. நெஞ்சமெங்கும் பேகம் பற்றிய நினைப்புதான்.

'அந்த அலி கான் அவ்வளவு லேசுப்பட்ட ஆளு இல்ல. மகாராஜா சொன்னாரேன்னு பேகத்தை அழைச்சுட்டு வந்து கண்ணு முன்னால இறக்கிட்டான். ஆனா விருந்துக்கு அழைச்சுட்டு வராம ஏமாத்த வாய்ப்பிருக்கே.'

'அட ஆமா! நீர் சொல்லுறது சரிதான். பேகம் வர்றாளா இல்லையான்னு உடனடியா வேவு பார்த்துச் சொல்ல, 'அந்த வாசல்'ல ஒரு ஆளைப் போட்டுடலாம். அப்பத்தான் அடுத்தகட்ட நடவடிக்கை எடுக்கச் சரியா இருக்கும்.'

அந்த வாசல் என்றால்? அதாவது அமைச்சர்களும் தளபதிகளும் வேறு உயர் அதிகாரிகளும் அரண்மனைக்குள் முக்கிய வாசல் வழியாகத்தான் செல்வார்கள். அவர்களது குடும்பப் பெண்கள் உள்ளே வரத் தனியாக ஒரு வாசல், அரண்மனையின் பக்கவாட்டில் இருந்தது. கார்களோ, குதிரை வண்டிகளோ அந்த வாசல் முன் வந்து நிற்கும். பெண்கள் வேக வேகமாக உள்ளே சென்று விடுவார்கள். விருந்து அறைக்குப் பக்கத்து அறையில் அவர்களுக்கான பிரத் யேக விருந்து நடக்கும். இந்த ஆண் - பெண் பாகுபாடு எல்லாம் விருந்தின் ஆரம்ப கட்டத்தில் மட்டுமே. நேரம் ஆக ஆக சமத்துவபுரம் காணக்கிடைக்கும்.

'அந்த வாசலில் பர்தா அணிந்த ஒரு பெண் வந்து இறங்கியதும் எனக்குத் தகவல் வரவேண்டும்' என்று சொல்லி, ஓர் ஒற்றனை நியமித்திருந்தார் பிரதம அமைச்சர் லால். ஒற்றனும் பெண்கள் வாசலுக்கு எதிரிலிருந்த மரம் ஒன்றின் மேல் ஒளிந்தபடி தன் சேவையை ஆற்றிக் கொண்டிருந் தான்.

அரண்மனையினுள்ளே விருந்து அறை கொஞ்சம் கொஞ்சமாக நிரம்பிக் கொண்டிருந்தது. மகாராஜா அங்கு உதிப்பதற்குள் மற்றவர்கள் வந்துசேர்ந்துவிட வேண்டுமென்பது விதி. லேட்டாக வருபவர்களுக்குப் பிரத்யேகமாக மகாராஜாவே பரிமாறுவார், தண்டனைகளை.

அதனால், பங்ச்சுவாலிட்டி பிசகாமல் எல்லா அமைச்சர்களும் ஆஜர் ஆகி இருந்தனர். அவர்களது குடும்பப் பெண்களும் பக்கத்து அறையில் குழுமி குசலம் விசாரிக்கத் தொடங்கியிருந்தனர். அந்த நிமிடம்வரை வராதது அலி கானும் பேகமும்தான். ஜெய் சிங் வருவதற்கான நேரம் நெருங்கிக் கொண்டே இருந்தது.

திரியில் நெருப்பு வைத்த பின்னும் வெடிக்காமல் உஷ் உஷ்ஷென்று ரொம்ப நேரமாக ஆட்டம் காட்டிக் கொண்டிருக்கும் லெட்சுமி வெடி, எப்போது வேண்டுமானாலும் வெடிக்கலாம் என்பது போன்ற சூழ்நிலை. ஒரு காவலாளி தன் கடமை தவறாமல், அடித்தொண்டையிலிருந்து ‘பராக்! பராக்!’ குரலெழுப்ப, மகாராஜா ஜெய் சிங் விருந்து அறைக்குள் காட்சி கொடுத்தார். ‘மாப்பு மாட்டிக்கிட்டான்டா’ என்று மற்ற எல்லோரும் நினைத்துக் கொண்டே பணிவாக வணங்கி தலையை நிமிர்த்தும் வேளையில் வணக்கத்தோடு கலந்து நின்றார் அலி கான்.

மற்ற அமைச்சர்கள் கேட்க நினைத்துக் கொண்டிருந்த கேள்வி மகாராஜாவின் குரலில் வெளி வந்தது. ‘என்ன அலி கான், வீட்டில் அழைத்து வந்திருக்கிறீர்களா?’

‘ஆமாம் மகாராஜா’ என்ற அலி கானின் பவ்யமான பதிலில் எல்லோர் முகமும் ஒளிர்ந்தது. பக்கத்து அறைக்குள் பளபள மேக்-அப்புடன், ஜிகுஜிகு உடையுடன் பேகம் நுழைந்தாள். முதலில் புன்னகை. சில நிமிடங்களிலேயே மற்ற பெண்களிடம் கலந்து பேச ஆரம்பித்து விட்டாள்.

மகாராஜா பணியாளர்களைப் பார்த்துக் கண்ணசைத்தார். விருந்து ஆரம்பமானது. அரண்மனை அறுசுவை அரசர்கள் மாங்கு மாங்கென்று சலித்து, பிசைந்து, பிழிந்து, உருட்டி, அவித்து, வறுத்து, பொரித்து, வார்த்து, சுட்டு, வதக்கி, வெட்டி ஏகப்பட்ட பதார்த்தங்களை அடுக்கியிருந் தார்கள். தீபாவளி விருந்து என்பதால் எக்கச்சக்கமான இனிப்புகள் க்யூ கட்டி நின்றன. அத்த னையும் நெய்யாலே பிறந்து, நெய்யாலே வளர்ந்து, நெய்யிலேயே நீந்திக் கொண்டிருந்தன. இவை போக மற்ற பதார்த்தங்கள், பழவகைகள், உணவு வகைகள்.

அவ்வளவுதானா? சேச்சே, அவை இல்லாமலா. சொர்க்கம் அதில்தானே! ஒய்யாரமாக ஒயின், விஸ்தாரமாக விஸ்கி, ரம்மியமாக ரம், பியூட்டிஃபுல்லாக பிராந்தி, சமத்துவமாக ஷாம்பெயின் அனைவருக்கும் பரிமாறப்பட்டன. அன்லிமிடெட். மகாராஜா தனக்குப் பிடித்த உணவு வகைகளுடன் ஓரமாக உட்கார்ந்துகொண்டார். வழக்கம்போல வாய் பார்க்கத் தொடங் கினார்.

மற்ற அமைச்சர்களின் கண்கள் உள் அறையிலிருந்த பேகத்தைத் தேடின. தன்னைப் பிறர் தேடுவது தெரிந்ததும் பேகமே வெளியே வந்தாள். நிரம்பச் சிரித்தாள். அவளது முகத்தைப் பார்த்த அமைச்சர்களும் மகாராஜாவும் முக்தி நிலையை முகர்ந்தனர். ஒரு ஷாம்பெயின் பாட்டிலை கையில் எடுத்துக் கொண்ட பேகம், அமைச்சர்களுக்கு ஊற்றிக் கொடுக்க ஆரம்பித்தாள். விருந்து களைகட்ட ஆரம்பித்தது.

அவ்வளவு நேரம் பதட்டமாக இருந்த அலி கானுக்கு ரத்த அழுத்தம் சமநிலைக்கு வந்தது. தான் கொடுத்த பயிற்சி, எடுத்த முயற்சி எதுவுமே வீணாகப் போகவில்லை என்ற திருப்தி புன்னகையாக வெளிப்பட்டது. தன் உண்மையான பேகத்தைக் காப்பாற்றிய சந்தோஷத்தில், அங்கே காத்துக் கொண்டிருந்த மகாராணிகளைக் கவனிக்கச் சென்றார். சர்வம் உல்லாச மயம்.

அல்வார் சமஸ்தானத்திலிருந்த சேவல் ஒன்று திடீரென்று எழுந்து மணி பார்த்தது. கூவுவதற்கு இன்னும் ஒரு மணி நேரம் இருப்பதை அறிந்து மீண்டும் இழுத்துப் போர்த்துத் தூங்க ஆரம் பித்தது. அப்போது விருந்து முடிந்தது. பெண்கள் தங்களுக்கான வாசல் வழியே வெளியேறி னர். பேகமும் அப்படியே. கையில் தங்க நகைகளாகவும் வேறு விதமாகவும் பரிசுப் பொருள்

கள் நிறையவே சேர்ந்திருந்தது. அந்தக் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு தவறாத ஒற்றன் அப்போதும் மரத்தின் மேலேயே விடாமல் சேவை ஆற்றிக் கொண்டிருந்தான்.

ஓரிரு நாள்கள் கழித்து அரசவை கூடியது.

'ச்சும்மா சொல்லக்கூடாதுயா. அலி கானுக்கு நாக்கு சுத்தம். வாக்கு பரிசுத்தம். சொன்னபடி செஞ்சுட்டாருயா. நாமதான் அவரைத் தப்பா நினைச்சுட்டோம். விருந்துன்னா அதான் விருந்து' - அமைச்சர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டனர்.

மகாராஜா ஜெய் சிங்கின் முகம் நிறைய பற்பசை விளம்பரப் புன்னகை.

'சொல்லுங்கள் அலி கான். விருந்து திருப்தியாக இருந்ததா?'

'மிகவும் திருப்தி மகாராஜா.'

'தாங்கள் குடும்பத்தோடு வந்து கலந்துகொண்டு சிறப்பித்ததில் எல்லோருக்கும் ஆனந்தம்' என்று சிலாகித்தவர் உடனடியாக ஐம்பதாயிரம் ரூபாயை அலி கானுக்கு வழங்கினார்.

'மகாராஜா தங்கள் அன்புக்கு நன்றி. இந்தப் பணமெல்லாம் எதற்கு?'

'என்ன இப்படிச் சொல்லிவிட்டீர்கள்? இன்னும் அடுத்தடுத்து எத்தனையோ விருந்துகள் நடக்க இருக்கின்றன. அதிலும் நீங்கள் குடும்பத்தோடு கலந்துகொள்ள வேண்டாமா என்ன? பேகத்துக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் வாங்கிக் கொடுங்கள். அவர்களை சந்தோஷப்படுத்துங்கள்.'

'அப்படியே ஆகட்டும் மகாராஜா.'

அலி கான் தன் மாளிகைக்கு வந்தார். வழியெல்லாம் பலத்த யோசனை. அடுத்தடுத்து விருந்துகளா? தாங்குமா? உண்மை வெட்ட வெளிச்சமாகிவிட்டால், தன் வாழ்க்கை இருட்டாகிவிடுமே. அய்யோ, தப்பிக்க ஏதாவது வழி கண்டுபிடித்தே ஆக வேண்டும். மாளிகையில் பேகம் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தாள். 'அய்யோ, இவளைக் கூடிய சீக்கிரத்தில் இங்கிருந்து கிளப்பியாக வேண்டும். நாள்கள் அதிகமானால் நடிப்பதற்கு அதிகப் பணம் கேட்டுத் தொந்தரவு செய்ய ஆரம்பித்து விடுவாள்' பளிச்சென ஒரு யோசனை மூளையில் முளைத்தது.

மறுநாள் ஜெய் சிங்கைச் சந்தித்தார் அலி கான். தயங்குவது போலக் கச்சிதமாக நடித்து, பின் பேச ஆரம்பித்தார்.

'தாங்கள் எனக்கொரு அனுமதி தர வேண்டும்.'

'தயங்காமல் கேளுங்கள் அலி கான்.'

'அடுத்தடுத்த விருந்துகளில் கலந்துகொள்வது குறித்து என் மனைவிக்கும் மெத்த மகிழ்ச்சி. அதற்கான நவநாகரிக உடைகள், நகைகள், ஒப்பனைப் பொருள்கள் எல்லாம் வாங்க ஆசைப் படுகிறாள். நம் நகரில் எதுவும் இல்லை. அவற்றை வாங்க வேண்டுமென்றால் அவளை

*அழைத்துக் கொண்டு பம்பாய்க்கோ கல்கத்தாவுக்கோ செல்ல வேண்டும். அங்குதான் பெரிய பெரிய வணிக ஸ்தாபனங்களெல்லாம் இருக்கின்றன. நினைத்தபடி பொருள்களை வாங்க முடியும். தாங்கள் அனுமதி கொடுத்தால்...'*

*'தாராளமாகச் சென்று வாருங்கள் அலி கான். நாளையே ரயிலில் கிளம்புங்கள்.'*

*'நன்றி மகாராஜா.'*

*மறுநாள், அழைக்காமலேயே அத்தனை அமைச்சர்களும் பேகத்துக்கு டாட்டா காண்பிக்க, ரயில் நிலையத்துக்கு வந்திருந்தனர். அவள் கையசைக்க, ரயிலும் அசைந்து அசைந்து கிளம்பியது.*

*சமஸ்தானத்தின் எல்லையைத் தாண்டிய உடன் அலி கான் ரயில் பெட்டியின் மேற்புறம் தலையில் இடிக்க எகிறிக் குதித்தார். 'அடிப்பெண்ணே, என் உயிரைக் காப்பாற்றி விட்டாய். உன்னை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இனிப் பயமில்லை' உற்சாகத்தில் உரக்கப் பேசினார்.*

*கல்கத்தா சென்றடைந்தனர். மீண்டும் அல்வாருக்குள் பொண்டாட்டியை அழைத்துக் கொண்டு செல்வதற்கு அலி கான் என்ன அரைலூஸா? உட்கார்ந்து யோசித்து ஒரு வழி கண்டு பிடித்தார். இரண்டு நாள்கள் கழித்து அல்வாருக்குத் தந்தி ஒன்றை அனுப்பினார்.*

*அந்தத் தந்தியைப் படித்த மகாராஜாவின் விழியோரத்தில் ஒரு துளி கண்ணீர் ததும்பி நின்றது.*



# மச்சானும் மாமாவும்

தங்கச் சங்கிலி ஒன்றைத் திருட முற்பட்டான் ஒரு சிறுவன். காரணம் வறுமை. போலீஸ்காரர் ஒருவரிடம் மாட்டிக் கொண்டான். அவனைப் பிடித்து அடி பின்னிய அந்தப் போலீஸ்காரர், அவனது கைகளைக் கட்டினார். கயிறின் மறு முனையைத் தன் பைக்கில் கட்டினார். பைக்கை ஸ்டார்ட் செய்து தரதரவென அவனை இழுத்தபடியே போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு சென்றார்.

இது 2007ல் பிகார் மாநிலம் பகல்பூரில் நடந்த சம்பவம். மனித உரிமை அமைப்புகள் இந்த சம்பவத்தைக் கண்டித்துப் போராட்டங்கள் நடத்திக் கொண்டிருக்கின்றன. ஆனால், பாவம் அன்றைய அல்வார் சமஸ்தான மக்கள். அவர்களுக்காகப் போராட அன்று மனித உரிமை அமைப்புகள் எதுவும் இல்லை. காரணம் இந்தப் போலீஸ்காரர் போலத்தான் அன்று நடந்து கொண்டார் மகாராஜா ஜெய் சிங்.

இரண்டு காளை மாடுகள் பூட்டப்பட்ட வண்டி. வண்டியின் பின்னால் ஒரு நீண்ட கயிறால் கட்டப்பட்டிருக்கிறான் ஒரு சிறுவன். கரடு முரடான நிலம். மாடுகள் ஓட ஆரம்பிக்கின்றன. நிலைதடுமாறிக் கீழே விழும் சிறுவன் தரதர வென இழுத்துச் செல்லப்படுகிறான். அவனது ஓலம் காற்றில் அநாமதேயமாகக் கலக்கிறது.

அந்தச் சிறுவன் திருடவில்லை. வேறு எந்தத் தவறும் செய்யவில்லை. அல்வார் சமஸ்தானத்தில் பிறந்தது ஒன்றுதான் அவன் செய்த தவறு. இப்படிச் சிறுவர்கள் வதைபடுவதை உட்கார்ந்து ரசிப்பது ஜெய் சிங்குக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு.

இன்னொரு சமாசாரம் உண்டு. அல்வார் சமஸ்தானத்தைச் சுற்றி ஏகப்பட்ட காடுகள் உண்டல்லவா. எக்கச்சக்கமான புலிகளும் உண்டு. அவற்றை உயிரோடு பிடிப்பதற்காகக் கூண்டுகள் வைப்பார்கள். ஆடோ, மாடோ கூண்டுக்குள் இரையாக வைக்கப்படுவது வழக்கம். ஆனால் ஜெய் சிங் விதவைப் பெண்களை அல்லது ஆதரவற்ற குழந்தைகளை இரையாகப் பயன்படுத்தச் சொல்லி உத்தரவிட்டார்.

கொடூரம் மட்டுமே அவ்வப்போது எட்டிப்பார்க்கும் மகாராஜா ஜெய் சிங்கின் கண்ணில் இருந்து முதல் முறையாக ஒரு துளிக் கண்ணீர். சுற்றியிருந்த மற்ற அமைச்சர்களின் முகத்திலெல்லாம் அதிர்ச்சி.

'மதிப்பிற்குரிய மன்னரே, என்ன ஆயிற்று? யாரிடமிருந்து தந்தி வந்திருக்கிறது?' பிரதம அமைச்சர் லால் கேட்டார். ஒரு நிமிடம் அமைதியாக வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த ஜெய் சிங், மெல்லத் தன் இதழ்களை அசைத்தார்.

'தந்தி... நிதி அமைச்சர் அலி கான் அனுப்பியிருக்கிறார். கல்கத்தாவிலிருந்து. பேகத்துக்கு உடல்நிலை சரியில்லையாம்.'

'அய்யோ, என்ன ஆயிற்று பேகத்துக்கு?' - லால் குரல் நடுநடுங்கக் கேட்டார்.

'வயிற்றில் ஏதோ கட்டியாம்...'

சில நிமிடங்கள் அவை அமைதியாக இருந்தது. யாரும் யாருடனும் பேசவில்லை. எல்லோருடைய மனத்திலும் பேகத்தின் முகம் நிழலாடியது. டாடா, பை பை, சீரியோ எதுவும் சொல்லாமலேயே அங்கிருந்து மௌனமாகக் கலைந்து சென்றனர்.

'பேகத்தின் உடல்நிலையைக் கவனித்துக் கொள்ளவும். என்ன உதவி தேவை என்றாலும் கேட்கவும்' - சில நாள்களில் மகாராஜாவிடமிருந்து அலி கானுக்கு இப்படி ஒரு தந்தி சென்று சேர்ந்தது. 'தங்கள் அன்புக்கு நன்றி. பேகத்துக்கு விரைவில் அறுவை சிகிச்சை நடக்க இருக் கிறது' - என்ற அடுத்த தந்தியைப் பக்குவமாகத் தட்டி விட்டார் அலி கான்.

அந்தத் தந்தி வந்ததும் சிறப்புப் பிரார்த்தனைக் கூட்டம் நடைபெறாத குறைதான். ஆனால் எல்லோரும் தனித்தனியாக வேண்டிக் கொண்டனர். அலி கான் மேலும் சில நாள்கள் பொறுமையாக இருந்தார். இறுதியாக பிரம்மாஸ்திர தந்தி ஒன்றை அனுப்பினார்.

'அறுவை சிகிச்சையில் பேகம் இறந்துவிட்டார்.'

அந்தத் தந்திக் கண்ட அல்வார் சமஸ்தானமே இழவு வீடானது. ஆளாளுக்குப் புலம்பினர். அழுதனர். டூ மச்சாகத் துக்கப்பட்டனர். அன்னாரின் மறைவுக்கு ஆறுதல் சொல்லி அலி கானுக்குக் கடிதங்களை, தந்திகளைக் குவியல் குவியலாக அனுப்பி வைத்தார்கள். மகா ராஜாவும் தன் பங்குக்கு 'வருந்துகிறேன்' என்றொரு தந்தி அனுப்பி வைத்தார்.

'பேஷண்ட் க்ளோஸ்ட், அதனால் ஆபரேஷன் சக்ஸஸ்' என்று அலி கான் மனத்துக்குள் நினைத்துக் கொண்டார். அந்த மகிழ்ச்சியைக் கொண்டாட தன் நண்பர்களுக்குப் பார்ட்டி கொடுத்தார். சில நாள்களிலேயே, அவர் அல்வார் சமஸ்தான நிதி அமைச்சர் பொறுப்பிலிருந்து வேலைமாற்றம் செய்யப்பட்டார் (1929). வேறு அரசாங்கப் பணிகளுக்கு நியமிக்கப் பட்டார்.

பேகத்தின் நினைவுகளோடு சில நாள்கள் முகத்தில் சோகத்தையும் தாடியையும் காட்டிய அமைச்சர்கள், அடுத்த இரவு விருந்து அறிவிக்கப்பட்டதும், மழுமழுவென சவரம் செய்து கொண்டனர்.

'எல்லைகள் மீறுவதற்கே' ரக விருந்துகள் தொடர்ந்தன. வழக்கம்போல ஜெய் சிங் ஓரமாக அமர்ந்து வேடிக்கை பார்த்தார். அமைச்சர்கள் கூத்தடித்தார்கள். ஆனால் ஒரே ஒரு நபருடைய நடவடிக்கைகளை மட்டும் அவரால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. அவர் மகாராஜா வின் மச்சான். ஜெய் சிங்குக்கு நான்கு மகாராணிகள் உண்டென்று பார்த்தோமே, அந்த நால்வ ரில் ஒரு மகாராணியின் சகோதரர்.

அந்த ராஜமச்சான் யாரும் அழைக்காமலேயே விருந்துகளில் கலந்துகொள்வார். மூக்குமுட்ட மது அருந்துவார். வயிறு வீங்கச் சாப்பிடுவார். அதற்குப் பின் தன் ஆலாபனையை ஆரம்பிப்பார்.

'ஏய்... எவன்டா அவன்? என்னை அமைதியா இருக்கச் சொல்லுறது? இது என் மச்சான் கொடுக்குற விருந்துடா! நான் தாறுமாறாத் தண்ணியடிப்பேன். தையத்தக்கான்னு டப்பாங் குத்து ஆடுவேன். நடு ஹால்ல நிலையா நின்னு வண்டி வண்டியா வாமிட் பண்ணுவேன். எனக்கு இல்லாத உரிமை வேற எவனுக்குடா இருக்கு?' இந்த ரீதியில்தான் மச்சானின் போதைப் பிரசங்கங்கள் இருக்கும். ஜெய் சிங்குக்குக் கோபம் வராமலிருக்குமா என்ன? தன் மகாராணியின் கெஞ்சலுக்காக விட்டு வைத்திருந்தார்.

பொறுமைக்கும் எக்ஸ்பயரி உண்டே. நாளடைவில் மச்சானின் குடைச்சல்கள் அதிகரித்துக் கொண்டே சென்றன. குறிப்பாகப் பெண்ணாசை.

'அழகின்னா அழகி, அப்படி ஓர் அழகி. பார்த்தா சுண்டி இழுக்கணும். சுண்டுனா ரத்தம் வரணும். இந்த சமஸ்தானத்துல அப்படி ஒரு தேவதை இருக்காளா? இருந்தா எனக்கு வேணும். நீங்கதான் ஏற்பாடு செஞ்சித் தரணும்' மது தந்த தைரியத்தில் மகாராஜாவிடமே கேட்டுப் பார்த்தார் மச்சான்.

'ம், பார்க்கலாம்' என்றார் ஜெய் சிங். ஏக குஷியோடு மச்சான் வெளியேறினார்.

'நாறப்பயலே, அப்படி இப்படி விஷயங்களை நான் கண்டுக்காம இருந்தா, என்கிட்டயே பொண்ணு கேப்பியோ? நான் உறவுமுறையிலதான்டா உனக்கு மாமா. உனக்குக் கெட்ட நேரம் ஆரம்பிச்சுருச்சு...' - ஜெய் சிங்கின் மனத்துக்குள் சாத்தானின் திட்டம் ஒன்று உருவாகி இருந்தது.

இரவு வேளையில் மச்சானைக் கூப்பிட்டனுப்பினார். கிஞ்சித்தும் போதை தெளியாத மச்சான், தள்ளாடியபடியே வந்து நின்றார்.

'நீ ஆசைப்பட்டபடியே ஒரு பெண் இருக்கிறாள். பேரழகி. நம் அந்தப்புரத்தில் உள்ளவள்தான். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. அவள் இப்போது இருக்கும் அறை இருட்டாக இருக்கும். நீயும் இருட்டில்தான் அவளைச் சந்திக்க வேண்டும். விளக்குகளெல்லாம் கூடாது' மகாராஜா நிபந்தனையுடன் கூடிய உல்லாச வாய்ப்புக் கொடுத்தார்.

'நீங்க சொன்னா சரிதான்...' - அந்த அறையை நோக்கி குதித்து ஓடினார் மச்சான்.


எட்வின் சாமுவேல் மாண்டகு

சிறிது நேரம் கழிந்தது. இருட்டாக இருந்த அந்த அறையில் திடீரென்று விளக்குகள் ஒளிர்ந்தன. வெளிச்சம் வந்த மறுநொடியில் வீறிட்டு அலறினாள் அந்தப் பெண். அதிர்ச்சியால் விக்கித்துப் போனாள். பெண்ணின் முகத்தைக் கண்ட மச்சானும் வெல வெலத்துப் போனார்.

அந்தப் பெண் வேறு யாருமல்ல, மகாராணிதான்.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு, அந்த மகாராணியும், அவரது சகோதரரும் தற்கொலை செய்துகொண் டார்கள்.

இது ஒன்று மட்டுமல்ல, இப்படிப் பல சகிக்கவே முடியாத விஷயங்கள் ஜெய் சிங்கால் அரங்கேற்றப் பட்டிருக்கின்றன. இம்மாதிரி சமாசாரங்கள் வெளியே தெரியும்போது, ஜெய் சிங்கைப் பதவியி லிருந்து தூக்க வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசுக்குக் கோரிக்கைகள், கண்டனங்கள் ஆங்காங்கே கிளம்பும்.

எத்தனை எதிர்ப்புகள் வந்தால் என்ன? எல்லா வற்றையும் சமாளிக்க சக்ஸஸ் ஃபார்முலா ஒன்றைக் கண்டுபிடித்து வைத்திருந்தார் ஜெய் சிங். ஃபார்முலா எட்வின்.

யாரந்த எட்வின்? அவரது முழுப்பெயர் எட்வின் சாமுவேல் மாண்டகு (Edwin Samuel Montagu). பிரிட்டிஷ் இந்தியாவின் செயலாளராகப் பணி யாற்றியவர் (1917-1922). பிரிட்டனின் கேபினட்டில் நுழைந்த இரண்டாவது யூதர்.

குண்டக்கா மண்டக்காவென மாட்டிக் கொள்ளும் போது, துண்டைக் காணும் துணியைக் காணும் என்று மகாராஜா இங்கிலாந்துக்கு ஓடி, எட்வினிடம் சரணடைந்துவிடுவார். அவரோடு கலந்து பேசுவார். தனக்கான ஆபத்தை எடுத்துக் கூறுவார். ஆளும் பிரிட்டிஷ் அரசு பற்றி ஐஸ் வைத்துப் பேசுவார். என்னமோ சமஸ்தானத்தின் மேல் அக்கறை எல்லாம் இருப்பது போல வருங்காலத் திட்டங்களை முன் வைப்பார். அதற்குப் பிரிட்டிஷ் அரசு செய்ய வேண்டிய உதவிகளைக் கோரிக்கையாக வைப்பார். பதவியைத் தக்க வைக்க இவை போதாதா?

எட்வினின் நல்லாசியுடன், மீண்டும் அல்வாருக்கு மகாராஜாவாகவே திரும்புவார். இங்குள்ள பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு விருந்துகள் கொடுத்துச் சரிசெய்வார். குறிப்பாக பிரிட்டிஷ் அதிகாரிகளின் மனைவிகள், ஜெய் சிங் மீது ஒருவித மதிப்பை வைத்திருந்தனர். அந்த மதிப்பை உருவாக்க அவர் பயன்படுத்திய ஆயுதம் ஆன்மிகம். மெஞ்ஞானம், ஆத்மஞானம், பிரம்மஞானம், பக்கத்துவீட்டு ஞானம் என்று எதையாவது பேசித் தன்னை ஒரு ஞானியாகவே அடையாளம் காட்டிக் கொண்டார்.

ஆனால் மக்கள் மத்தியில் அவருக்கு இருந்தது கொடும்பாவி இமேஜ்தான். சமஸ்தானத்தின் பொருளாதாரம் இருளாதாரமாகவே நீடித்தது. கஜானாப் பணமெல்லாம் மகாராஜாவின் கலர் ஃபுல் கேளிக்கைகளுக்கே செலவழிக்கப்பட்டது. எப்படியெல்லாம் உல்லாசத்தை அனுப விக்க முடியும் என்று யோசித்து யோசித்து விதவிதமாகச் செலவழித்தார் அவர். உதாரணத்துக்கு ஒரு சம்பவத்தைச் சொல்லலாம்.

மகாராஜா ஜெய் சிங்கிடம் மொத்தம் நான்காயிரத்து சொச்சம் சூட்கள், இரண்டாயிரத்து சொச்சம் வாக்கிங் ஸ்டிக்குகள் இருந்தன. அவற்றில் ஜெய் சிங்குக்குப் பிடித்தமான ஒரு சட்டையில் ஒரு பட்டன் சரியாகப் போட வரவில்லை. உள்ளூர் தையல்காரர்களை அழைத் தால் கௌரவத்துக்கு இழுக்கல்லவா?

அதனால் பட்டனைச் சரிசெய்ய லண்டனிலிருந்து டெய்லரை வரவழைத்தார். 'மேன்மை பொருந்திய மகாராஜா, இதைச் சரி செய்யச் சிறிது நாள்கள் பிடிக்கும்' என்றார் டெய்லர். ஆடம்பர மாளிகை, சென்றுவர ரோல்ஸ் ராய்ஸ் கார், சேவை செய்யப் பெண்கள் என்று அந்த டெய்லருக்கு அனைத்து வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன.

அந்த பட்டனைச் சரிசெய்ய டெய்லருக்கு ஒரு நிமிடமே பிடித்தது. ஆனால் வேலை முடியாதது போலவே காட்டிக்கொண்டு, பல நாள்கள் அங்கு உல்லாசமாக வாழ்ந்தார். பின் ஒருநாள் சட்டையை ஒப்படைத்துவிட்டு, ஏகப்பட்ட பரிசுப்பொருள்களுடன் லண்டனுக்குத் திரும் பினார்.

சாதாரண மக்கள் வீடுகளில், அடுப்பில் பூனை உறங்கிக் கொண்டிருந்தது. எவ்வளவு நாள்கள் தான் பொறுமையாக இருப்பார்கள். திடீரென ஒருநாள் புரட்சி 'பூம்' என்று வெடித்தது.

அந்த புரட்சிக்காரர்களின் பெயர் மியோ பழங்குடியினர்.



19

# பாரிஸுக்கு ஓடிப் போ!

சோமுகாசூரன் என்ற அரக்கன் நான்கு வேதங்களையும் திருடிக் கொண்டு கடலுக்கடியில் போய் ஒளிந்து கொண்டான். அவற்றை மீட்கத் திருமால் மச்ச அவதாரம் எடுத்தார். நான்கு கைகளுடன் உடலின் மேற்பாகம் மனித உருவத்துடனும், இடைக்குக் கீழே மீனின் உருவத்துடனும் (கடல் கன்னிபோல) எடுத்த தசாவதாரத்தின் முதல் அவதாரம் இது என்கிறது மச்ச புராணம்.

மீனாஸ் (Meenas) என்றழைக்கப்படும் பழங்குடியினர் வடக்கு ராஜஸ்தானில் அதிகமாகவும், வடமேற்கு மத்தியப் பிரதேசத்தில் ஓரளவும் வசிக்கின்றனர். ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவில் பரவி வசிக்கத் தொடங்கியவர்கள் என்று வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. ஒரு காலத்தில் ராஜஸ்தானின் சிலப் பகுதிகளை (குறிப்பாக ஜெய்ப்பூர்) ஆளவும் செய்திருக்கிறார்கள்.

முதல் பாராவுக்கும் இரண்டாவது பாராவுக்கும் ஒரு சம்பந்தம் இருக்கிறது. தாங்கள், திருமாலின் மச்ச (மீன்) அவதாரம் வழி வந்தவர்கள் என்பதுதான் மீனாஸ் பழங்குடியினரின் நம்பிக்கை.

காலம் காலமாகவே மீனாஸ் பழங்குடியினருக்கு எதிரிகள் என்றால் அவர்கள் ராஜபுத்திரர்கள்தான். இரு இனத்தவர்களிடையே வாய்ச் சண்டை, வரப்புச் சண்டை முதல் வாள்வீச்சுப் போர்கள் வரை எல்லாமே நடந்து வந்திருக்கின்றன. ரொம்பப் பின்னால் எல்லாம் போக வேண்டாம். நேராகப் பிரிட்டிஷ் காலத்துக்கு வந்துவிடுவோம்.

ராஜபுத்திரர்களுக்கு ஆதரவாக பிரிட்டிஷ் அரசு இருந்தது என்பதைவிட, பெரும்பாலான ராஜபுத்திரர்கள் பிரிட்டிஷ் அரசுக்குப் பிடித்தமாதிரி எல்லாம் நடந்து கொண்டார்கள் என்று சொல்வதே சரியாக இருக்கும். ஆனால் மீனாஸ் பிரிவினர், பிரிட்டிஷாரை எதிர்த்துக் கலகங்கள் செய்து கொண்டிருந்தனர். குறிப்பாக, பிரிட்டிஷாருக்கு ஜால்ரா போடும் ராஜபுத்திரர்களை எதிர்த்தனர். அதனால் பிரிட்டிஷ் அரசு, அவர்களை 'குற்றப் பரம்பரையினர்' என்றே அழைத்தது.

பதினோறாம் நூற்றாண்டில் மீனாஸ் பிரிவினரில் சிலர் இஸ்லாமிய மதத்துக்கு மாறினர். அவர்கள் மியோ (Meo) என்று அழைக்கப்பட்டனர். இந்த மியோ பிரிவினர் அல்வார் சமஸ் தானத்தில் பெருமளவு வசித்து வந்தனர்.

மேற்கூறிய தகவல்கள் எல்லாம் எதற்கு என்று இப்போது புரிந்திருக்குமே! சர்வ சொகுசுகள் நிறைந்த, ஜல்சா வாழ்க்கை வாழ்ந்துவந்த அல்வார் சமஸ்தான மகாராஜா ஜெய் சிங்கின் அராஜகங்களை ஒரு கட்டத்துக்குமேல் பொறுக்கமுடியாத இஸ்லாமிய மியோக்கள் பொங்கியெழுந்தனர்.

கோவிந்த்கர் (Govindgarh) என்ற இடத்தை மியோக்கள் ஆயுதங்களுடன் சூழ்ந்துகொண்டனர் என்றும், அங்குள்ள இந்து வியாபாரிகளைத் தாக்கினார்கள் என்றும் மகாராஜா ஜெய் சிங்குக்குத் தகவல் போனது.

ஜெய் சிங் நிறையவே யோசித்தார். காரணம் மியோக்கள் உண்மையிலேயே பெரும் வீரர்கள். அவர்களின் ரத்தத்தில் சிவப்பு, வெள்ளை அணுக்களோடு, வீர அணுக்களும் உண்டு. கெரில்லாத் தாக்குதலில் கெட்டிக்காரர்கள். எண்ணிக்கையும் அதிகம். ஆனால் அல்வார் சமஸ் தானத்தின் படையோ பலஹீனமானது. மகாராஜாவின் தலையையும் சேர்த்து எண்ணினால் மொத்தம் ஐநூறு பேர் தேறலாம்.

'நூறு வீரர்களை அழைத்துக் கொண்டு என்னவென்று போய்ப் பாருங்கள்' என்று ஒரு தளபதிக்கு ஒப்புக்குக் கட்டளையிட்டார் மகாராஜா. அந்தப் பலஹீனமான வீரர்களும் சோம்பல் முறித்துக் கொண்டு, மூஞ்சியைக் கூடக் கழுவாமல் கொட்டாவி விட்டபடியே கோவிந்த்கருக்குச் சென்றனர்.

அவர்கள் எதிர்பார்த்த அளவு மியோக்கள் அங்கே இல்லை. கண்ணில் தென்பட்ட இருபத் தைந்து மியோக்களைக் கடமைக்குக் கைது செய்தனர். சில நிமிடங்களில் தூரத்திலிருந்த மலைப்பகுதிகளில் முரசு ஒலிக்கும் சத்தம் கேட்டது. நேரம் ஆக ஆக, சத்தம் அதிகரித்துக் கொண்டே சென்றது.

அங்கு மூவாயிரத்துக்கும் மேற்பட்ட மியோக்கள் ஆயுதங்களுடன் முற்றுகையிட்டனர். சமஸ்தான வீரர்கள் கொல்லப்பட்டுத் தூக்கிலிடப்பட்டனர். அங்கிருந்த இந்து தெய்வங்களின் சிலைகள் உடைக்கப்பட்டதாகவும் குறிப்புகள் உண்டு.

சில நாள்களில் சமஸ்தானமெங்கும் ஆங்காங்கே, பதினைந்தாயிரம் மியோக்கள் ஆயுதங் களுடன் தாக்குதல்களை நடத்த ஆரம்பித்திருந்தனர். ஜெய் சிங்குக்கு பிரிட்டிஷ் அரசின் உதவியை நாடுவதைத் தவிர வேறு வழியே தெரியவில்லை.



**மியோ பழங்குடியினர்**

'அய்யா ஆபத்து. இந்த மியோ பசங்க கொன்னு குவிக்கிறாங்க. எப்போ என்ன நடக்கும்னே தெரியல. திகிலா இருக்கு. படையை அனுப்பி உதவினா உங்களுக்குப் புண்ணியமாப் போவும்' - என்ற ரீதியில் டெல்லிக்குத் தகவல் அனுப்பினார்.

பிரிட்டிஷ் அரசு உடனடியாக நடவடிக்கை எடுத்தது. மூன்று குதிரைப்படைப் பிரிவினர், நான்கு பீரங்கிகள் அடங்கிய படையொன்று அல்வாரை நோக்கி விரைந்தது. அந்தப் படையினர் அல்வாரின் பாதிக்கப்பட்ட இடங்களுக்குச் சென்று சேர்வதற்குள் மியோக்கள் மாயமாக மறைந்திருந்தனர். எவ்வளவோ தேடிப்பார்த்தும் ஒரு மியோகூட பிரிட்டிஷ் படையினரிடம் சிக்கவில்லை.

ஆனால், மகாராஜா ஜெய் சிங் வசமாகச் சிக்கிக் கொண்டார். அதுவும் தான் விரித்த வலை யிலேயே.

சமஸ்தானத்தைச் சுற்றி வந்த படையினருக்கு மக்களின் பரிதாபகரமான நிலைமை முகத்தில் அறைந்தது. சாலைகள் முதற்கொண்டு அடிப்படை வசதிகள் எதுவுமே சரியில்லாதது புரிந்து போனது. எனில் பிரிட்டிஷ் அரசு ஒதுக்கும் பணமெல்லாம் என்ன ஆகிறது? மக்களிடம் பேசிப் பார்த்தபோது மகாராஜா ஜெய் சிங்கின் திருவிளையாடல்கள் வெட்ட வெளிச்சமாகின.

ஜெய் சிங்கின் ஒழுங்கீனங்கள் பற்றியும், சமஸ்தானத்தின் பொருளாதாரச் சீரழிவு குறித்தும் டெல்லிக்கு ரிப்போர்ட் சென்றது. உடனடி பலன் கிடைத்தது. சமஸ்தானத்தின் பொருளா தாரத்தைச் சீர்படுத்த உடனடியாக 375,000 பவுண்ட் ஒதுக்கப்பட்டது. 'ஆஹா, இம்புட்டு துட்டா!' என்று வாய்பிளந்து மகாராஜா சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கும்போதே அடுத்த தகவல் வந்து சேர்ந்தது.

'மகாராஜா ஜெய் சிங், அல்வார் சமஸ்தானத்தில் இருந்து வெளியேற வேண்டும். இந்தியா விலேயே இருக்கக் கூடாது.'

சாமியே சாபம் விட்ட பிறகு பூசாரியால் என்ன செய்ய முடியும்? ஜெய் சிங், இதை எதிர்த்து மேல் முறையீடு எல்லாம் செய்யவில்லை. செய்தாலும் பிரயோசனமில்லை. சரி, இந்தியாவில் இருக்கக்கூடாது என்றால் எங்கே போவது?

அடுத்த இரண்டு வருடங்கள் பாரிஸுக்குச் சென்று வசிக்கலாம் என்று பிரிட்டிஷ் அரசிடம் இருந்து அடுத்த செய்தி வந்தது. அந்த இரண்டு வருடங்களுக்கு ஜெய் சிங்கின் செலவுகளுக்காக அரசு கொடுப்பதாகச் சொன்ன தொகை இரண்டு லட்சம்.

உடனே பாரிஸுக்குக் கிளம்ப வேண்டும் என்ற கட்டளையும் பிறப்பிக்கப்பட்டிருந்தது. அப்போது ஜெய் சிங், தன் இன்னொரு அரண்மனையான விஜயா மந்திரில் இருந்தார். வேக வேகமாக அல்வார் நகர அரண்மனைக்கு விரைந்தார். வாசலை அடைந்தவர், மேற்கொண்டு உள்ளே செல்லாமல் அங்கேயே நின்றார்.

'கங்கை நீரைக் கொண்டு வாருங்கள்.'

அரண்மனைப் பணியாளர்கள், அண்டாக்களில் கங்கை நீரைக் கொண்டு வந்தனர். தலை வழியாக நீரை மொடக் மொடக் என ஊற்றிக் கொண்டார். அப்படியே ஈர உடையுடன் அரண்மனைக்குள் சென்றார். உடை மாற்றிக் கொண்டு, அரண்மனை ஜோதிடரை அழைத்தார். அன்று நல்ல நாளா, வடக்கே சூலம், தெற்கே மூலம், கரிநாள், சிறிய நகசு, கொடிய நகசு போன்ற சமாசாரங்களையெல்லாம் கேட்டறிந்தார்.

'இப்போதைக்கு நாள் நல்லாயில்லை. வர்ற வெள்ளிக்கிழமை நல்லாயிருக்கு. பிரயாணத்துக்கு உகந்த நாள்' ஜோதிடர் சொன்னார். உடனே வைஸ்ராய்க்கு தந்தி ஒன்றை அனுப்பினார் ஜெய் சிங்.

'வெள்ளிக்கிழமை நான் அல்வாரை விட்டுக் கிளம்புவதற்குத் தங்கள் அனுமதி வேண்டும்'

வெள்ளைக்காரனுக்குத் தெரியுமா வெள்ளிக்கிழமை மகத்துவம்? உடனடியாக பதில் வந்தது.

'அதெல்லாம் முடியாது. உடனே இடத்தைக் காலி பண்ணு.'

வேறு வழியில்லாமல் ஜெய் சிங், அந்தத் திங்கள் கிழமையே அல்வாரை விட்டுக் கிளம்பினார். நானூறு பெட்டிகளில் அவரது உடைகள் மற்றும் இதர பொருள்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன. போதாக்குறைக்கு இருபத்தைந்து பேர் பணியாளர்களாக அவரோடு பாரிஸ் கிளம்பினர்.


மகாராஜா தேஜ் சிங்

அந்த இருபத்தைந்து பேரில் ஓர் இசைக்குழுவினரும் அடக்கம். அதற்கெல்லாம் அரசு தடை போடவில்லை. ஆளை அல்வாரை விட்டு வெளியே அனுப்பினால் போதும் என்று விட்டுவிட்டது.

உல்லாச அரண்மனைகளுக்கு செல்வதற்காக, ஜெய் சிங் போட்ட உயர்தர சாலைகள் அவரை வழியனுப்பி வைத்தன. சாலையின் இரண்டு புறங்களிலும் மக்கள் நின்று கொண்டு மகாராஜாவுக்கு மகிழ்ச்சியுடன் டாட்டா காட்டினர். இந்தச் சம்பவம் நடந்த ஆண்டு 1933. மகாராஜா இல்லாத சமஸ்தானத்தின் நிர்வாகப் பொறுப்பை பிரிட்டிஷ் அரசு எடுத்துக் கொண்டது.

ஜெய் சிங்குக்கு ஆண் வாரிசு என்று யாரும் கிடையாது. அதனால் அல்வாரின் அடுத்த மகாராஜாவாக யாரை நியமிப்பது என்று பிரிட்டிஷ் அரசு யோசித்தது. ஜெய் சிங்கின் தூரத்து உறவினரான தேஜ் சிங், 19 மே 1937 அன்று மகாராஜாவாக நியமிக்கப்பட்டார். அவரும் பிரிட்டிஷ் அரசின் அடிவருடியாகவே செயல்பட்டார்.

அதுவே அவருக்கு வினையாக அமைந்தது. சுதந்தரத்துக்குப் பின் ஆட்சிக்கு வந்த காங்கிரஸ் அரசின் பிளாக் லிஸ்டில் தேஜ் சிங்கின் பெயரும் இருந்தது. காந்தி சுட்டுக் கொல்லப்பட்ட வழக்கில் தேஜ் சிங்குக்கும் சம்பந்தமுண்டு என்று குற்றம் சாட்டப்பட்டது. அவர் கைது செய்யப்பட்டார்.

நீதிமன்ற விசாரணைக்குப் பின்பு தேஜ் சிங், 'குற்றமில்லாதவர்' என்று நிரூபிக்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டாலும், அந்த இடைப்பட்ட காலத்தில் அவரது அரண்மனையில் ஏகப்பட்ட சோதனைகள் நடத்தப்பட்டு, பல்வேறு சொத்துகள் முடக்கப்பட்டன.'

( 2009 பிப்ரவரியில் தனது 97வது வயதில் தேஜ் சிங் டெல்லியில் இறந்துபோனார். பிரிட்டிஷ் இந்தியாவில் அதிகாரத்தோடு ஆட்சியில் இருந்து சுதந்தர இந்தியாவில் இறந்துபோன கடைசி மகாராஜா தேஜ் சிங்தான். அவரது பேரனான ஜிதேந்திர பிரதாப் சிங் அல்வாரின் தற்போதைய பெயரளவு மகாராஜா. ஜிதேந்தர், 2009 தேர்தலில் அல்வாரில் காங்கிரஸ் சார்பில் நின்று, தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளுமன்ற உறுப்பினரும்கூட.)

1948 மார்ச்சில், அல்வார் அருகிலுள்ள பிற சமஸ்தானங்களோடு இணைக்கப்பட்டது. பின்பு, 1949 மே 15ல் உருவான ராஜஸ்தான் மாநிலத்தின் ஓர் அங்கமாக அல்வார் மாறிப்போனது.

தேஜ் சிங்கின் குடும்பத்துக்கு, இந்திரா காந்தியின் ஆட்சிக் காலத்திலும் சோதனைகள் தொடர்ந்தன. எமர்ஜென்ஸி காலத்தில் தேஜ் சிங்கின் மகனான இளவரசர் பிரதாப் சிங் மீது பல்வேறு குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டன. மீண்டும் மீண்டும் வருமான வரித்துறையினரின் சோதனைகள் நடத்தப்பட்டன. அவர்களது குடும்பத்தினர் பல்வேறு விதமான துன்பங்களுக்கு ஆளாயினர். உச்சபட்சமாக, 1975ல் பிரதாப் சிங், விசாரணையில் துன்புறுத்தப்பட்டு கொல்லப்பட்டார் என்ற சர்ச்சைக்குரிய தகவல் உண்டு.

*அந்த சமாசாரத்தைப் பற்றிப் பேச ஏகப்பட்ட கருப்புப் பக்கங்கள் இருக்கின்றன. நாம் ஜெய் சிங்கின் அந்திமக் காலத்துக்கு வந்துவிடுவோம்.*

*பாரிஸில் ஜெய் சிங், தனக்கென ஒதுக்கப்பட்ட ஒரு மாளிகையில் சகல வசதிகளுடனும் வாழ்ந்தார். குறிப்பறிந்து பணி செய்ய அல்வாரிலிருந்து அழைத்துவரப்பட்ட பணியாளர்கள் இருக்கிறார்களே வேறென்ன வேண்டும்? சாப்பாடு, ஓய்வு, கேளிக்கை என்று இரண்டு வருடங்கள் ஓடின. மீண்டும் தன்னை அல்வாருக்கு அனுப்புவார்கள் என்று நம்பிக்கையோடு காத்திருந்தார். ஆனால் அதற்கான அறிகுறிகள் எதுவுமே தென்படவில்லை.*

*1937, மே 12 அன்று ஆறாம் ஜார்ஜ், லண்டனிலுள்ள வெஸ்ட்மின்ஸ்டரில் கிங்காகப் பதவி யேற்றுக் கொண்டார். அந்த விழாவுக்குத் தன்னை அழைப்பார்கள் என்று ஜெய் சிங்குக்கு ஒரு நப்பாசை. ம்ஹூம். ஏமாந்து போனார்.*

*மறுநாள் பில்லியர்ட்ஸ் விளையாட்டிவிட்டு மாடிப்படியிலிருந்து கீழே இறங்கிக் கொண்டி ருந்த ஜெய் சிங், தவறிக் கீழே விழுந்தார். தலை குப்புற. இடுப்பெலும்பு, தோள்பட்டை எலும்பு எல்லாம் நொறுங்கிப் போயின. படுத்த படுக்கையாகச் சில நாள்கள் சிகிச்சை. அந்த மே 19 அன்று இறந்து போனார்.*

*அன்னாரின் பூத உடல், அல்வாருக்குக் கொண்டு வரப்பட்டது. சகலவித மரியாதைகள் செய்யப்பட்டன. தங்க முலாம் பூசப்பட்ட லான்செஸ்டர் காரில் ஏற்றப்பட்ட அவரது உடல், ஊர்வலமாகக் கொண்டு செல்லப்பட்டது.*

*பி.கு.1 : அவர் ஜல்சாவுக்காகப் போட்ட அதே சாலையில்தான் இறுதி ஊர்வலம் போனது.*

*பி.கு.2 : அப்போதும் அவரது கைகளில் மறக்காமல் உறைகள் அணிவித்திருந்தார்கள்.*

# பரத்பூர்

- ராஜபுத்திர சமஸ்தானம்
- தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 17-ம் நூற்றாண்டின் முற்பாதியில்
- ஆட்சி செய்தவர்கள் : சின்சின்வால் பரம்பரை
- முதல் மன்னர் : கோகுலா
- குண்டு மரியாதை : சமஸ்தானத்துக்குள் 19, வெளியில் 17.



# நாற்பது சுந்தரிகள்!

முன் காலத்தில் இல்லை என்றாலும் நவீன உலகில் மகாராஜாவாகவே இருந்தாலும் கொலை, குற்றம்தானே. கோபக்காரர், எப்போதுமே ஏறுமாறாக நடந்துகொள்பவர், எதற்கெடுத்தாலும் 'எடுத்தெறிந்து' பேசுபவர் என்று ஏற்கெனவே பெத்தபெயர். கோபத்தில் கத்தும்போது அருகில் கத்தி இருந்தாலும் சுத்தி இருந்தாலும் எடுத்து எறிந்துவிட்டு அப்புறம் பேசுவார். அப்படித்தான் அன்றைக்கும் அந்த அசம்பாவிதம் நிகழ்ந்துவிட்டது.

சவரம் செய்யவந்த பணியாளர், வேலையைக் கச்சிதமாகச் செய்யவில்லை என்ற கோபம். எந்த நேரமும் உயர் ரத்த அழுத்த மண்டலத் தாழ்வு நிலையைத் தன்னுள் நிர்வகித்து வந்த மகாராஜா, சவரத் தொழிலாளியைப் போட்டுத் தள்ளிவிட்டார். இருபத்துநான்கு மணிநேர பரபர நியூஸ் சேனல்கள் இல்லாவிட்டாலும், விஷயம் மடமடவென சமஸ்தானமெங்கும் பரவியது. இத்தனை நாள் அனுபவித்துவந்த கொடுமைகளுக்கெல்லாம் சேர்த்து மக்கள் ஒட்டுமொத்தமாக எதிர்க்குரல் எழுப்பினர். விளைவு?

பிரிட்டிஷ் அரசால் மகாராஜா பதவி நீக்கம் செய்யப்பட்டார், ஆக்ராவுக்குக் கடத்தப்பட்டு அங்கு கண்காணிப்பில் வைக்கப்பட்டார். அந்த முன்னாள் மகாராஜாவின் பெயர் ராம்சிங் பகதூர். ராஜஸ்தானின் பரத்பூர்* (Bharatpur)

★ ராமாயணத்தின்படி பார்த்தால் ராமனின் தம்பியான பரதனின் பெயர் கொண்ட ஊர், பரத்பூர். சின்சின்வால் (Sinsinwal) என்ற பிரிவைச் சேர்ந்த ஜாட் இனத்தவர் பரத்பூரை ஆண்ட ராஜ பரம்பரையினர். முதல் ராஜா கோகுலா. சின்சின் என்ற கிராமத்தின் தலைவர். ஔரங்கசீபின் காலத்தில், முகலாயப் பேரரசுக்கு எதிராகப் போராடியவர். அவர் வம்சத்தில் வந்த பரத்பூரின் மகாராஜா சூரஜ் மால், ஜாட் இனத்தின் முக்கியமான மாவீரர். பரத்பூர் பறவைகள் சரணாலயம் சூரஜ் மால் காலத்தில் உருவாக்கப்பட்டதே. ராம்சிங்கும் அதே பரம்பரையில் வந்தவர்தான்.

சமஸ்தானத்தை 1893 முதல் ஆண்டு வந்தவர். 1900, ஆகஸ்டில் பல் பிடுங்கப்பட்ட பாம்பாகிப் போனார்.

யார் அடுத்த மகாராஜா?

ராம்சிங்குக்கு இரண்டு மனைவிகள். இரண்டாவது மனைவியான மகாராணி கிரிராஜ் கௌருக்கு (Giriraj Kaur) இரண்டு மகன்கள், இரண்டு மகள்கள். வாரிசுகள் எல்லாமே பொடிசுகள். பட்டத்து ராஜாவான இளவரசர் கிஷன்சிங் பகதூர் அம்மா பாலை விட்டுவிட்டு ஆவின் பாலுக்குக் கூட மாறியிருக்கவில்லை. அரியணையிலெல்லாம் உட்கார வைக்க முடியாது. குழந்தை மூச்சா போய்விடும். எனவே மகாராணி கிரிராஜ் கௌரே பதவிக்கு வந்தார். மீனாட்சி ஆட்சி.

அரண்மனையே கிஷன்சிங்கை ஊட்டி ஊட்டி வளர்த்தது. செல்லமோ செல்லம். அவர் கேட்காமலே எல்லாம் கொடுக்கப்பட்டன. தட்டாமலே எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டன. தேடாமலே அனைத்தும் கிடைத்தது. பதினெட்டு வயதானதும் அரியணை ஏற வேண்டியது தான் பாக்கி. இருந்தாலும் மகாராஜா என்ற வெர்ச்சுவல் நினைப்பிலேயே உல்லாசமாக வளர்ந்தார்.

1910, மே 6 அன்று இங்கிலாந்து மன்னர் ஏழாவது எட்வர்ட் இறந்துபோனார். லண்டனில் நடைபெற்ற அவரது ஈமச்சடங்குகளில் கலந்துகொள்வதற்காக இளவரசர் கிஷன்சிங்கும் சென்றார். ஜாலியாக லண்டனைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பினார். 1911-ல் நடந்த டெல்லி தர்பாரிலும் மகாராஜாக்களோடு குட்டி மகாராஜாவாகக் கலந்துகொண்டார்.

பதிமூன்று வயதில் டும்டும்டும். மணப்பெண் ராஜேந்திர கௌர். ஃபரிட்கோட் சமஸ்தான மகாராஜாவின் மகள். ஒரு நாள் திருமணம். பல நாள்கள் கோலாகல விழா.

'அப்பாடா, தலைவலி முடிஞ்சது, இனிமே நிம்மதியா இருக்கலாம்' என்று மகாராணி கிரிராஜ் கௌர் ஓய்வுபெற்ற அரசு ஊழியர் போல சந்தோஷப்பட்டார். அந்தப் பொன்நாள் 1918 நவம்பர் 28. இளவரசர் கிஷன்சிங் பகதூர், முறைப்படி ஸ்ரீ ஸ்ரீ மகாராஜா ப்ரஜேந்திர சவாய் கிஷன்சிங் பகதூராகப் பதவியேற்றார்.

பொறுப்பு - அப்படின்னா என்ன? நிர்வாகம் - சேச்சே. அதெல்லாம் கெட்ட வார்த்தை. மக்கள் நலன் - இருந்துட்டுப் போகட்டும், அதுக்கு நான் என்ன செய்யமுடியும்? சமஸ்தான வளர்ச்சி - தானா வளர்ந்துட்டுப் போகுது என்கிற ரீதியில்தான் கிஷன்சிங்கின் பக்குவம் இருந்தது. எப்போதுமே அவரது நினைப்பில் 'உல்லாச உலகம் எனக்கே சொந்தம் தையடா தையடா தையடா நீ ஜல்சா செய்யடா செய்யடா செய்யடா!'

எப்படியெல்லாம் ஜாலியாக இருக்க முடியும்? இந்தக் கேள்விக்குக் கலர் கலரான விடைகளைத் தேடுவதுதான் கிஷன்சிங்கின் வாழ்க்கை லட்சியமாக இருந்தது. இந்த ஜிப்பா இருக்கே ஜிப்பா, அதுல எங்கங்க வைரக்கல்லு பதிக்கலாம்? அரண்மனை முன்னால நிறைய இடம் சும்மா இருக்கே, அங்க ஏதாவது வசந்த மண்டபங்கள் கட்டலாமா? பக்கத்துல இருக்குற காட்டுக்குள்ள பளபளன்னு ஒரு பங்களா பகுமானமாக் கட்டுனா எப்படி இருக்கும்? தினமும் காலையில எழுந்தவுடனே விரலுக்கெல்லாம் சொடுக்கு எடுத்துவிட ஒரு சொப்பன சுந்தரியை வேலைக்கு வைச்சுக்கலாமா?



மகாராஜா கிஷன்சிங்

இப்படி மகாராஜா செயல்படுத்திய உல்லாச ஐடியாக்களின் லிஸ்ட் பெருசு. செயல்படுத்தத் திட்டமிட்டிருந்த உல்லாச ஐடியாக்கள் லிஸ்ட் ரொம்ப ரொம்ப பெருசு. அதில் ஒன்று தான் அந்த நீச்சல் குள ப்ராஜெக்ட்.

பெரிய குளம். ஆறடிக்கு மேல ஆழம். குளம் முழுவதும் தண்ணீர். உள்ளே தொபுக்கடீரெனக் குதித்து நீந்த வேண்டியது தான். குப்புற நீந்தலாம், மல்லாக்கப் படுத்து நீந்தலாம், வேறு சில வகைகளில் நீந்தலாம். போரடித்தது என்றால் உடன் நீந்த மகாராணியை அழைக்கலாம். மகாராணியும் போரடித்தால் சப்ஸ்டிட்யூட் மங்கைகளோடு முங்கு நீச்சல் அடிக்கலாம். வேறென்னதான் செய்ய முடியும் நீச்சல் குளத்தில்?

யோசித்த மகாராஜாவுக்கு ஜல்சா ஐடியா ஒன்று ஜல்ஜல்லென்று மூளையில் உதித்தது. திட்டம் போட்டார். புதிய நீச்சல் குளம் ஒன்று கட்டவேண்டும், அது எப்படி எப்படியெல்லாம் இருக்கவேண்டும் என்று இன்ச் பை இன்ச்-ஆக வரைபடம் வரைந்து மேஸ்திரிகளிடம் விளக்கினார். சமஸ்தானத்தில் எவ்வளவு நெல் விளைகிறது, வருடாந்திர வருமானம் எவ்வளவு, கஜானாவில் எவ்வளவு பணம் வந்து விழுகிறது, மாதத்துக்கு எவ்வளவு செலவாகிறது என்பது போன்ற அநாவசிய விஷயங்கள் தெரியாதே தவிர, கிஷன்சிங்குக்கு நீச்சல் குளம் போன்ற அத்தியாவசியமான விஷயங்களில் நல்ல அறிவு இருந்தது.

'நான் சொன்ன அளவுக்கு நீள, அகலம் இருக்கணும். உயரம் மட்டும் இரண்டே இரண்டு அடி போதும்.'

'மகாராஜா சொன்னா தப்பா நினைச்சுக்கக் கூடாது. இரண்டு அடி உயரத் தண்ணியில நீச்சல் அடிக்க முடியாதே!' மகாராஜாவின் மண்டை உடைந்துவிடக்கூடாதே என்ற அக்கறையில் ஒரு மேஸ்திரி அப்பாவியாகக் கேட்டார்.

மகாராஜா முறைத்தார். மேஸ்திரி வாயில் பிளாஸ்திரி போட்டுக் கொண்டார். 'ஒருவேளை உள்ளே இறங்கி, போணியால் மொண்டு மொண்டு குளிப்பார் போல! என்று தனக்குள்ளேயே நினைத்துக் கொண்டார். நீச்சல் குளம் கிஷன்சிங் கொடுத்த அளவுகளின்படி தயாராக ஆரம்பித்தது.

குளத்துக்கு இறங்கிவர மொத்தம் இருபது படிகள். அதனைக் கட்ட ஆரம்பித்தார்கள். அதனைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த கிஷன்சிங்குக்குப் புதிய யோசனை ஒன்று உதித்தது. வேலையை அப்படியே நிறுத்தச் சொன்னார். 'இருபது படிகளையும் சந்தன மரக் கட்டைகளால் அமையுங்கள்' உத்தரவிட்டார். அப்படியே அமைக்கப்பட்டன.

'அம்பாஜி ஒயிட், மக்ரனா குமாரி ஒயிட், மக்ரனா அல்பெடா ஒயிட், பாரஸ்ட் கிரீன், பாரஸ்ட் ப்ரௌன், ஜிரி ஒனிக்ஸ், இந்தோ-இத்தாலியன், பாய்ன்ஸ்லனா ப்ளாக்...'

ஸ்டார் ஹோட்டல் பேரர், ஐஸ்கிரீம் வகைகளை வரிசையாகச் சொல்வதுபோல, ஒருவர் கிஷன்சிங் முன் நின்று, மார்பிள் கற்களின் பெயரைச் சொல்லி ஒவ்வொன்றாக எடுத்துக்

காட்டிக் கொண்டிருந்தார். ராஜஸ்தான் மார்பிள் பற்றிச் சொல்ல வேண்டுமா என்ன? இன்றைய தேதியில் இந்தியாவில் தயாராகும் மொத்த மார்பிள் கற்களில் 90% ராஜஸ்தானில் தயாரிக்கப் படுபவைதான்.

கிஷன்சிங்குக்கு எந்தக் கல்லிலும் திருப்தி இல்லை.

'மகராஜ், மக்ரானா கற்கள் நன்றாக இருக்கும். தாஜ்மஹாலில் இருப்பவைகூட மக்ரானா மார்பிள்கள்தான்..' மார்பிள் வியாபாரி மார்கெட்டிங் செய்துகொண்டிருந்தார். கிஷன்சிங் எதுவும் சொல்லவில்லை.

'நான் எதிர்ப்பார்க்கிற நிறமே இதுல இல்லையே? இளஞ்சிவப்பு கலர்ல ஏதாவது மார்பிள் இருக்கா?'

'பாபர்மால் பிங்க், பலோடி பிங்க்னு இரண்டு வகை இருக்கு மகாராஜா.'

கிஷன்சிங் அவற்றில் ஒன்றை ஓகே செய்தார். அவரது விருப்பப்படியே நீச்சல் குளம் தயாரானது. நீச்சல் குளத்தை நிறைப்பதற்காக, சுத்தமான நீரைக் கொண்டுவரும் குழாய்கள் பொருத்தப்பட்டன. நீச்சல் குளம், நீர் அதில் அழகென்ன இருக்கிறது? நீச்சல் குளத்தில் மிதக்க விடுவதற்காகவே வேறு குளங்களிலிருந்து தாமரை மலர்கள் தினமும் கொண்டு வரப்பட்டன. தினமும் அவை மாற்றப்பட்டன.

பகல் இரவு ஆட்டம் நடைபெறும் கிரிக்கெட் மைதானம் போல நீச்சல் குளத்தைச் சுற்றி மின்விளக்குகள் அமைக்கப்பட்டன. யாருக்கும் ஒன்றும் புரியவில்லை. 'என்னடா இது? பச்சைப் புள்ளைங்க குளிக்கிற மாதிரி ரெண்டு அடில ஒரு நீச்சல் குளம், அது நிறைய தாமரைப்பூ, சந்தன மரத்துல படி, பளபளான்னு மார்பிள், பகல்ல குளிக்க எதுக்குயா இவ்வளவு மின்விளக்கு? ஒருவேளை அர்த்தராத்திரியில கூத்தடிக்கப் போறாரோ?' அரண்மனை ஊழியர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.

'சமஸ்தானத்திலிருக்கும் அழகான இளம்பெண்களை எல்லாம் வரச் சொல்லுங்கள். அரண்மனையில் வேலை என்று அறிவிக்கவும். தேவைப்பட்டால் பக்கத்துச் சமஸ்தானங் களிலும் அறிவிக்கலாம்.'

மகாராஜாவின் உத்தரவுப்படி, லீலைக்கு.. சே, வேலைக்கு ஆள்கள் தேவை என்று சமஸ்தானம் முழுக்க அறிவிப்பு வெளியானது. குறிப்பிட்ட சுபயோக சுபதினத்தில் அரண்மனையில் இளம்பெண்கள் நேர்முகத் தேர்வுக்காகக் குழுமினர். எடுப்பான இதழ்கள் போதாதா, சான்றிதழ்கள் எதற்கு? மகாராஜா மிகவும் ஆர்வமாக, சற்றும் களைப்படையாமல் நேர்முகத் தேர்வை நடத்தினார்.

ஒரே ஒரு ரவுண்ட்தான். அதில் கேள்விகள்கூடக் கிடையாது. பார்வை ஒன்றே போதுமே. தேர்வு செய்ய. மொத்தம் நாற்பது கிளிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். என்ன வேலை, ஏது வேலை என்றெல்லாம் தெரிவிக்கப்படவில்லை. 'சொல்லி அனுப்புவோம். வேலைக்கு வந்துவிட வேண்டும்' என்று மட்டும் கூறப்பட்டது.

அடுத்து? மெழுகுவர்த்தி தயாரிக்கும் நபர் வரவழைக்கப்பட்டார். விதவிதமான, கலர்கலரான மெழுகுவர்த்திகள் தயாரிக்க ஆர்டர் கொடுக்கப்பட்டது. 'ஒரு மெழுகுவர்த்தி போல

இன்னொன்று இருக்கக்கூடாது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வடிவத்தில் கலைநயம் மிளிர இருக்கவேண்டும்' என்று மகாராஜா கட்டளையிட்டார். மெழுகுவர்த்திகள் தயாராகின.

நல்லநாள் குறிக்கப்பட்டது. அன்றைய தினத்தில் மகாராஜா கிஷன்சிங் 'குளப்பிரவேசம்' செய்யப்போகிறார் என்று அரண்மனைக்குள் செய்தி பரவியது. நாற்பது சுந்தரிகளுக்கும் செய்தி போனது. அவர்கள் ஒப்பனையுடன் ஒய்யாரமாக அரண்மனைக்கு வந்து சேர்ந்தனர். மெழுகுவர்த்திகளும் தயாராக இருந்தன. நீச்சல் குளம் புத்தம் புதிய நீராலும், தாமரை மலர்களாலும் நிரப்பப்பட்டது. நீச்சல் குளத்தைச் சுற்றியிருந்த மின்விளக்குகள் எல்லாம் சரியாக எரிகின்றனவா என ஒன்றுக்கு இரண்டு முறை பணியாளர்கள் சரி பார்த்துக் கொண்டார்கள்.

சுந்தரிகளின் வேலை என்னவென்று மகாராஜாவிடம் இருந்து தகவல் போனது. என்ன செய்ய வேண்டும், எங்கே நிற்க வேண்டும், எப்படி நிற்க வேண்டும் என்று வேண்டிய தகவல்களெல்லாம் மிகத்தெளிவாகக் கூறப்பட்டன. தங்களின் வேலை பற்றி முழுவதையும் கேட்டுத் தெரிந்துகொண்ட சுந்தரிகள் கிறுகிறுத்துப் போனார்கள்.

'அட என்னதான் நடக்கப்போகிறது இங்கே? நம்மால் பார்க்கமுடியாதே' என்ற ஏக்கத்தோடு சூரியன் மறைந்துபோனது. மின்விளக்குகள் ஒளிர ஆரம்பித்தன. நீச்சல் குளத்தைச் சுற்றிலும் நறுமணப்புகை பரப்பப்பட்டது.

நாற்பது சுந்தரிகளும் குளத்தை நோக்கி அணிவகுத்து வர ஆரம்பித்தார்கள். மொத்தம் இருபது சந்தனப் படிகள். படிக்கு இரண்டு பேர் என்று இருபுறம் இருபது இருபது பேராக நின்றனர். ஒவ்வொருவர் கைகளிலும் ஏற்றப்படாத ஒரு மெழுகுவர்த்தி. எல்லாமே மகாராஜா கிஷன் சிங் கொடுத்த குறிப்புகள்படிதான் நடந்தன. உடைகள்கூட மகாராஜா சொன்னபடியேதான் அணிந்திருந்தனர்.

என்ன உடை?

அட, மீன்கள் எல்லாம் என்ன ஸ்விம்மிங் டிரெஸ் அணிந்துகொண்டா நீந்துகின்றன. அதெல்லாம் எதற்கு அநாவசியமாக!



# 21

# அணையாத மெழுகுவர்த்தி அணைக்கவே!

அப்போதுதான் புதிதாகச் செய்து முடித்த வீணை போல ஒருத்தி, பார்த்த உடனே எடுத்து வாசிக்கத் தோன்றும் வயலின் போல் ஒருத்தி, விரல்களால் விளையாட விளையாட இன்ப இசையைப் பரப்பும் கிடார் போல் ஒருத்தி, இவளைப் பார்த்துதான் தம்புராவையே வடிவமைத்திருப்பார்களோ என்று சந்தேகக் கேள்வியை எழச் செய்யும் ஒருத்தி, கொடியிடை கொண்ட கோட்டு வாத்தியம் போல் ஒருத்தி, சமபங்கு வளைவுகளாலும் சமபங்கு நெளிவுகளாலும் செய்த சாரங்கிபோல இன்னொருத்தி.

நாற்பது சுந்தரிகளில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் அழகு. மகாராஜா வின் வருகைக்காக, அந்த இருபது சந்தனமரப் படிகளில் காத்துக் கொண்டு நின்றனர். ஆடையணியாத மாலை நேரப் பூங்காற்று, தன்னைப்போலவே சுதந்தர மாக நின்று கொண்டிருந்த அந்த இளம்பெண்களைத் தழுவிச் சென்றது. நீச்சல் குளத்தைச் சுற்றி ஒளிர்ந்து கொண்டிருந்த மின் விளக்குகள் அந்தக் காட்சி கண்டு நாணத்தால் சிவந்த ஒளியைப் பரப்பிக் கொண்டிருந்தன.

தூரத்தில் மகாராஜாவின் வருகையை அறிவிக்கும் ‘பராக்! பராக்!’ ஓசை கேட்டது. சுந்தரிகள் சிரித்த சிலையாக மாறினார்கள். மகாராஜா கிஷன்சிங் இதழ்களில் ததும்பி வழியும் புன்னகையுடன் அந்த இடத்தில் உதயமானார். நீச்சல் குளத்துக்குத் தோதான உடை. கொஞ்சம் கொஞ்சம் நகைகள். பேஷியல் செய்த பொலிவுடன் முகம். சத்தம் போட்டுச் சிரித்தார். நீச்சல் குளத்தின் உள்ளேயும் தாமரைகள்,

வெளியேயும் தாமரைகள். அட, அட! என்ன அழகு! அந்தக் காட்சியை, இதமான சூழ்நிலையை நிதானமாகப் பார்த்து ரசித்தார். முதலில் கண்களுக்கு விருந்து.

முதல் படியில் காலை வைத்தார். மன்மதப் பார்வை தெறிக்க இடப்புறமிருந்த சுந்தரியில் கன்னத்தில் கிள்ளினார். சிணுங்கினாள். வலப்புறம் திரும்பி அங்கே நின்ற சுந்தரியின் இடையில் கிள்ளினார். கிலுகிலுப்பை போலச் சிரித்தாள். அடுத்த படிக்கு இறங்கினார். ஒருத்தியைச் செல்லமாகப் பிடித்துத் தள்ளினார், இன்னொருத்தியைப் பிடித்து தன் பக்கம் இழுத்தார். அடுத்த படி. அங்கிருந்த பதுமையின் கையிலிருந்த மெழுகுவர்த்தியைப் பிடுங்கி விளையாடினார். இன்னொருத்தியின் கூந்தலில் விரல்கள் நுழைத்து இசை மீட்டினார். படிப்படியாக இறங்கினார். படிக்குப் படி சில்மிஷங்கள் படிப்படியாக அதிகமாயின.

இருபது படிகளும் இறங்கிய மகாராஜா, அந்த இரண்டு அடி நீச்சல் குளத்துக்குள் அடியெடுத்து வைத்தார். நடுவில் சென்று முட்டளவு நீரில் நின்றார். அங்கிருந்தபடி நாற்பது சுந்தரிகள் மீதும் ஒரு ரொமாண்டிக் லுக்கைத் தெளித்தார். பதிலுக்குப் புன்னகை முத்தங்கள் மிதந்து வந்தன. மகாராஜா தன் கைகளைத் தட்டினார். ஒவ்வொரு மின்விளக்காக அணைய ஆரம்பித்தது.

அந்த விளக்குகள் அணைய அணைய சுந்தரிகளின் கைகளில் இருந்த மெழுகுவர்த்திகள் ஒவ்வொன்றாக ஏற்றப்பட்டன. எல்லா விளக்குகள் அணைக்கப்படவும் நாற்பது மெழுகு வர்த்திகள் ஏற்றப்படவும் மிகச் சரியாக இருந்தது.

அந்த மஞ்சள் ஒளியில் நாற்பது தங்க விக்கிரகங்கள் முளைத்து நின்றது போல இருந்தது. ஒவ்வொரு விக்கிரகமும் மெதுவாக, வரிசையாக நீச்சல் குளத்தில் இறங்க ஆரம்பித்தது. மையப்புள்ளி போல மகாராஜா, சுற்றி வட்டமாக இளம்பெண்கள்.

உல்லாசத்தின் சிரிப்போசை.

ஆட்டத்தின் முக்கியமான கட்டம் ஆரம்பமானது.

'என்ன தயாரா?' மகாராஜாவின் கேள்விக்கு நாற்பது குயில்களும் ஒருமித்த குரலில் 'ம்' என்றன. மகாராஜா சொல்லிக் கொடுத்தபடியே எல்லாப் பெண்களும் தங்கள் மெழுகுவர்த்திகளை இடுப்புக்குக் கீழே பிடித்துக் கொண்டனர் அல்லது வைத்துக் கொண்டனர். ஒவ்வொரு பெண்ணையும் தன் மனம் போன போக்கில் குரலாலும் பின்பு விரலாலும் வருணிக்க ஆரம்பித்தார் கிஷன்சிங்.

'ஆடி வா, பாடி வா, ஆணழகைத் தேடி வா, பேரின்பம் காணலாம் வா!'

கொஞ்ச நேரத்திலேயே குஷி தாளாமல் குத்தாட்டம் போட ஆரம்பித்தார். கூடவே ஆட நாற்பது கதாநாயகிகள். தாமரைகள் தத்தளித்தன.

நீர் தெறித்தோ, தண்ணீரில் மூழ்கியோ, தவறி விழுந்தோ மெழுகுவர்த்திகள் ஒவ்வொன்றாக அணைய ஆரம்பித்தன. அணைந்த மெழுகுவர்த்திக்கு உரிய பெண்கள், ஆட்டத்திலிருந்து அவுட். அவர்கள் நீச்சல் குளத்தின் சுற்றுச் சுவரிலும், சந்தன மரப்படிக்கட்டுகளிலும் சென்று உட்கார்ந்து கொண்டார்கள்.

முப்பத்தெட்டு, இருபத்தியொன்பது, இருபது, பதிமூன்று, ஆறு, மூன்று...

குளத்தின் உள்ளே இரண்டே இரண்டு பெண்கள் மட்டுமே பாக்கி. அவர்களுக்கு மூச்சு வாங்கியது. திரியில் துடித்துக் கொண்டிருந்த தீபம் போல உள்ளே அவர்களின் மனமும் துடித்துக் கொண்டிருந்தது. ஜெயிக்கப் போவது யார்? மஜாராஜாவும் சே, மகாராஜாவும் தன்னைக் கொஞ்சம் ஆசுவாசப்படுத்திக் கொண்டார். சிறிய இடைவேளைக்குப் பிறகு ஆட்டம் மீண்டும் ஆரம்பமானது. சுற்றியிருந்த முப்பத்தியெட்டு பேரும் டென்ஷனில் நகம் கடித்துக் கொண்டிருந்தார்கள். நீர் நெருப்பைத் தேடிக் கொண்டிருந்தது.

இறுதியில் ஒருத்தி அணைந்துபோனாள். அணையாதவளை அணைத்துக் கொண்டார் மகா ராஜா. அன்றைய சாம்பியன் அந்த சுந்தரிதான். சும்மா ஒன்றும் இல்லை. ஏகப்பட்ட பரிசுப் பொருள்கள், நகைகள், பணம். கூடவே அன்றைய இரவின் மகாராணியாக மகாராஜாவுக்குச் சேவகம் செய்யும் வாய்ப்பு போனஸ்.

கிஷன்சிங் அவளை அலேக்காகத் தூக்கிக் கொண்டு கரையேறினார். மற்ற முப்பத்தியொன்பது பெண்கள் விட்ட பெருமூச்சில் நீச்சல் குளம் சூடானது.

எப்போதெல்லாம் தோன்றுகிறதோ அப்போதெல்லாம் இந்த நீச்சல் குள விளையாட்டை ஆடினார் மகாராஜா கிஷன்சிங். யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வரசும் என்ற பெரு நோக்கத்தில் அவ்வப்போது பிரிட்டிஷ் அதிகாரிகளையும் தம் குலப் பெண்களோடு கொஞ்சி விளையாட அழைத்தார். மெழுகுவர்த்தி வியாபாரியின் பிழைப்பு ஓடியது.

அது ஒரு கோடைக்காலம். ராஜஸ்தானில் வெயில் பற்றிக் கேட்க வேண்டுமா? சூரியன் தினமும் செஞ்சுரியைத் தாண்டி அவுட் ஆகாமலேயே விளையாடிக் கொண்டிருந்தது. பகல் நேரத்தில் அரண்மனைக்குள் உட்கார முடியவில்லை. ஏசி என்ற வஸ்து இல்லையே, பாவம் மகாராஜா என்ன செய்வார்?

இரவென்றால் பரவாயில்லை. நீச்சல் குளத்தில் இறங்கிவிட்டு வந்து படுத்தால் சுகமாகத் தூக்கம் வரும். பகலென்றால் அது வெந்நீர்க் குளியல் போலாகிவிடுமே. பெரிய அண்டாவில் கழுத்தளவு நீரில் இறங்கி உட்கார்ந்துகொண்டு குளுகுளுவென யோசித்தார் கிஷன்சிங்.

சிறுவயதில் லண்டனுக்குச் சென்றபோது பார்த்த நீரூற்றுகள் அவரது மனத்தில் நடனமாடின. அண்டாவிலிருந்து துள்ளிக் குதித்தார். அவரது உடலிலிருந்த ஈரத்தைப் பணிப்பெண்கள் ஒற்றி எடுத்து முடிப்பதற்குள் அரண்மனை மேஸ்திரிகள் அங்கு ஆஜராகி இருந்தனர்.

'இன்னும் ஒரு வாரம் அவகாசம் தருகிறேன். அரண்மனையில் பழைய நீரூற்றுகளைப் பழுது பார்க்க வேண்டும். புதிய நீரூற்றுகள் கட்ட வேண்டும்.'

'ஆகட்டும் மகாராஜா.'

'எல்லாம் மேலை நாடுகளில் இருப்பதுபோல அழகாக அமைய வேண்டும். அதிலிருந்து பாயும் நீர் இருபது அடி, முப்பது அடி உயரத்துக்குச் செல்ல வேண்டும். நீர் ஒரு தேர்ந்த நாட்டியக்காரி போல நடனமாட வேண்டும்.'

'ஆகட்டும் மகாராஜா.'

‘அரண்மனையில் மைய அறை இருக்கிறதல்லவா. அங்குதான் கட்டவேண்டும். இடத்தைப் பார்வையிட்டு எங்கெங்கே எத்தனை நீரூற்றுகள் அமைக்க முடியும் என்று தெளிவாகத் திட்டமிட்டு, வரைபடம் தயாரித்துவிட்டு வாருங்கள். மாலை பார்க்கலாம்.’

‘ஆகட்டும் மகாராஜா.’

மேஸ்திரிகள் காலியாக இருக்கும் நெடுஞ்சாலையில் ஓடும் மண்லாரி போலத் தறிகெட்டு ஓடினார்கள். பழைய நீரூற்றுகளில் என்னென்ன பழுதுகள் இருக்கின்றன என்ற விவரங்களும், புதிய நீரூற்றுகளுக்கான வரைபடங்களும் தயாராகின. கிஷன்சிங் அவற்றைப் பார்வையிட்டார். கைதேர்ந்த சிவில் இன்ஜினியர் போலச் சில திருத்தங்களை, பல யோசனைகளைக் கூறினார். அப்போது அவரது முதன்மைச் செயலாளர் கன்வார் பரத்சிங் அங்கு வந்தார்.

‘மகாராஜாவுக்கு வணக்கம். தங்களிடம் ஒரு முக்கியமான விஷயம் பற்றிப் பேசலாம் என்று வந்திருக்கிறேன்.’

‘சொல்லுங்கள் பரத்சிங்.’

‘இந்தக் கோடைகாலத்தில் சமஸ்தானத்தின் சில முக்கியச் சாலைகளைச் சீரமைக்கலாம் என்று ஏற்கெனவே திட்டமிட்டிருந்தோம். அதைப் பற்றி நினைவூட்டிச் செல்லலாம் என்று…’

‘ம்… நிதிநிலைமை சரியாக இருக்கிறதா என்று தெரியவில்லை. எனவே சாலைகள் விஷயத்தைப் பிறகு கவனித்துக் கொள்ளலாம். அரண்மனையில் புதிதாக நீரூற்றுகள் கட்டப் பட இருக்கின்றன. பழைய நீரூற்றுகளிலும் நிறையவே பழுதுபார்க்கப்பட வேண்டியுள்ளது. அதற்கான நிதியை அவசரகதியில் செய்து கொடுங்கள்.’

‘உத்தரவு மகாராஜா.’

பரத்பூர் அரண்மனையின் மைய அறை என்பது விசாலமானது. மிகப்பெரிய முற்றத்தைக் கொண்டது. பெரியது என்றால் சர்வதேச அளவில் கூடைப்பந்துப் போட்டிகள் நடத்தலாம் என்ற அளவுக்கு. மண்தரைதான். பசுமையான புல்வெளி, பூச்செடிகள், மரங்கள் எல்லாம் கொண்ட முற்றம் அது.

அங்கு நீரூற்றுகளின் கட்டுமானப் பணியைத் தினமும் மேற்பார்வையிட்டு வந்தார் கிஷன்சிங். எப்படித் தெரியுமா? இரண்டு மரங்களுக்கிடையேயான தாழ்ந்த கிளைகளில் தொட்டில்போல் கட்டி, அதில் வசதியாகப் படுத்துக்கொண்டே! கோடைக்கு இதமாக மரநிழல், சாமரம் வீச செளந்தர்யமான பணிப்பெண்கள். வேலை ஜரூராக நடந்தது.

பழைய நீரூற்றுகள் புதுப்பொலிவு பெற்றன. மிகப்பெரிய தண்ணீர்த் தொட்டி கட்டப்பட்டது. அதில் முப்பது அடிக்கும் மேலே நீரைப் பீய்ச்சியடிக்கும்படியான தொழில்நுட்பங்களுடன் நீரூற்றுகள் அமைக்கப்பட்டன. சுற்றி மின்விளக்குகளால் அலங்காரங்கள். நீரூற்றுகள் அமைக்கும் பணி இனிதே நிறைவடைந்தது.

இரவு வேளைகளில் மகாராஜா கிஷன்சிங் மைய அறையில் வந்து மஜாவாக ஓய்வெடுத்தார். பெய்யெனப் பெய்யும் பெருமழையாக நீரூற்றுகள் நடனமாடின. அனல் காற்று அரண் மனையைத் தேடிவந்து குளிர்காற்றாக மதம் மாறி வீசியது.

ஒருநாள் முற்றத்தில் மகாராஜா மல்லாக்கப்படுத்துக் கொண்டு மனம்போன போக்கில் யோசித்துக் கொண்டிருந்தார். அவரது தலைக்கு மேலே முழுநிலா சிரித்தது. கிஷன்சிங்கின் மனத்தில் பிறைநிலவாக ஒரு யோசனை வளர ஆரம்பித்தது.

மறுநாளே அதற்கான வேலைகள் ஜரூராக ஆரம்பமாயின. அரண்மனையின் பரந்துவிரிந்த மொட்டைமாடியில் நூற்றுக்கும் மேற்பட்ட வட்டமான டைனிங் டேபிள்கள், அவற்றைச் சுற்றி இருக்கைகள் கட்டப்பட்டன. அடுத்த பௌர்ணமி அன்று பிரிட்டிஷாருக்கு இரவு விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அங்கே மின்விளக்குகள் எதுவும் கிடையாது. மகாராஜாவுக்குப் பிடித்த மெழுகுவர்த்தி வெளிச்ச டின்னர். நிலவொளி, நட்சத்திரங்கள், சோமபானம், இசை, நங்கைகள், நடனம் - கூத்து களைகட்டியது.

இப்படிப் பல வகைகளில் உட்கார்ந்து யோசித்து, உல்லாசங்களை அனுபவித்தார். தேவைக் கேற்ப பிரிட்டிஷாரையும் குஷிப்படுத்தினார். அளவுக்கு மிஞ்சினால் அதுகூட அதுவாகும் என்பார்களே, அது ஆனது.

பிரிட்டிஷ் அரசிடமிருந்து வந்த உத்தரவு ஒன்று, மகாராஜா கிஷன்சிங்கை நிலைகுலைய வைத்தது.



22

# குங்குமப்பூ சீருடைகள்

ஒரேடியாகக் குறையெல்லாம் சொல்லிக் கொண்டு இருக்கக் கூடாது. பரத்பூர் சமஸ்தானத்தின் கஜானாவிலிருந்து பொதுப்பணித்துறைக்கும் ஓரளவு நிதி ஒதுக்கப்பட்டது. ஓரளவு என்றால் ஒரு பேச்சுக்கு ரவுண்டாக நூறு ரூபாய் என்று வைத்துக் கொள்வோமே. அந்தத் தொகை சமஸ்தானத்தின் வளர்ச்சித் திட்டங் களுக்குப் பயன்படுத்தப்பட்டது.

அப்படியென்றால்? கல்விக்கு இருபத்தைஞ்சு ரூபாய், ரோடு போட முப்பது ரூபாய், மருத்துவமனைகள் கட்ட முப்பது ரூபாய், இதர பொதுச் செலவுகளுக்குப் பதினைந்து ரூபாய். கூட்டிப் பாருங்கள். கணக்கு சரியாகத்தான் வரும். அடடே, மகாராஜா கிஷன்சிங் சமஸ்தானத்துக்கு நல்லதுதானே செய்திருக்கிறார் என்று தப்புக் கணக்குப் போட்டுவிடாதீர்கள். ஏனென்றால் பொதுப்பணித்துறைக்கு நூறு ரூபாய் என்பது மொத்த பட்ஜெட்டில் பத்து சதவிகிதம் மட்டுமே. அடங் நொப்புரானே, மீதி தொண்ணூறு?

இதென்ன கேள்வி, மகாராஜா என்றால் ஆயிரத்தொன்பது செலவுகள் இருக்கத் தான் செய்யும். பத்து சதவிகிதம் பொதுப்பணிகளுக்கு ஒதுக்கியதே பெரிய விஷயம்தான். சரி, அப்படி என்னதான் செலவுகள்?

கௌரவச் செலவுகள் என்று சொல்லலாம். அதாவது சமஸ்தானத்தில் மிலிட்டரி என்ற ஒன்றைப் பாலூட்டிச் சீராட்டி பொட்டுவைத்து பூமுடித்து பொம்மை வாங்கிக் கொடுத்து குழந்தைபோலப் பராமரித்து வந்தார் கிஷன்சிங். எதற்கு என்றெல்லாம் கேட்கக்கூடாது. கறுப்புப் பூனைப் படை, இஸட் பிரிவு பாதுகாப்பு

என்றெல்லாம் இப்போது சொல்கிறோமே அதுபோல மகாராஜாவின் பிரத்யேக பாதுகாப்புப் படை ஒன்று இருந்தது. அப்புறம், ஒரு மகாராஜாவாகப்பட்டவர் குதிரைப் படை வைத்துக் கொள்வது தவறில்லைதானே. இப்படி கௌரத்துக்காகச் சில விஷயங்கள்.

தன் பதினோராவது வயதில் லண்டன் சென்ற மகாராஜா கிஷன்சிங்கை மிகவும் கவர்ந்த விஷயம், பக்கிங்ஹாம் அரண்மனையில் நடந்த ராணுவ அணிவகுப்பு. குறிப்பாகக் குதிரைப் படையினரின் பரேட். வாய் பிளந்து பார்த்துக் கொண்டிருந்தார். ‘அடேங்கப்பா, இவ்வளவு பெரிதாக எல்லாம்கூட அரண்மனைகள் இருக்கின்றனவா? அரண்மனையில் பணியாளர் மட்டுமே நானூறுக்கும் மேல் இருக்கிறார்களே!’ ஒவ்வொன்றும் அவருக்கு வியப்புக்கு மேல் வியப்பைத் தந்தது.

வாசலில் காவலுக்கு நிற்கும் பாதுகாவலனிலிருந்து வெளியே தோட்டத்தில் வேலை பார்க்கும் நபர் வரை எல்லோருக்குமே மிக நேர்த்தியாகச் சீருடை அணிந்திருந்தார்கள். இளம் மஞ்சள் நிற தலைப்பாகை, இளம் பச்சை நிற நீண்ட கோட், அதில் தங்க பட்டன்கள் உணவு பரிமாறும் பணியாளர்கள் அணிந்திருந்த உடை இது. பாதுகாவலர்களுக்கு வேறுமாதிரி. இப்படி ஒவ்வொருவிதமான பணியாளர்களுக்கும் வெவ்வேறு மாதிரி. சீருடை விஷயமே கிஷன்சிங்கைத் தூங்கவிடவில்லை.

விருந்தினர்கள் அமரும் நாற்காலி என்பது சுத்தத் தங்கத்தால் செய்யப்பட்டது. எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் தங்கத்தாலான பொருள்கள். அரண்மனை கார் பார்க்கிங்கில் எண்ண முடியாத அளவு வாகனங்கள், குறிப்பாக ரோல்ஸ் ராய்ஸ் கார்கள். பக்கிங்ஹாம் அரண்மனையில் பார்த்த ஒவ்வொரு காட்சியும் கிஷன்சிங்கின் மனத்தில் ஃப்ரேம் ஃப்ரேமாகப் பதிந்திருந்தது.

‘நானும் மகாராஜாதான். என்னிடமும் அரண்மனை இருக்கிறது. நான் ஏன் இப்படி ஒரு பிரம் மாண்டமான, செழுமையான, உல்லாசமான வாழ்க்கையை வாழக்கூடாது?’ அதிகாரம் முழுமையாகக் கையில் வந்தபோது கிஷன்சிங் அந்தக் கேள்விக்கான பதிலைத் தேட ஆரம் பித்தார், முழுவீச்சில்.

முதலில் தனக்காக மிக கம்பீரமான குதிரைப்படை ஒன்றை அமைக்க மெனக்கிட்டார்.

இந்தியாவில் எங்கிருந்தெல்லாம் சிறந்த ஜாதிக் குதிரைகளை வாங்க முடியும் என்று விசாரித் தார். வாங்கினார். அயல்நாடுகளில் இருந்துகூட இறக்குமதி செய்தார். அந்த குதிரைகளைக் கவனிப்பதற்கென்றே ஏராளமான பணியாளர்கள் நியமிக்கப்பட்டனர். குதிரை வீரர்கள் பலர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நல்ல சம்பளத்தில் அவர்களுக்கான எல்லா வசதிகளும் நிறை வாகவே செய்து கொடுக்கப்பட்டன.

பக்கிங்ஹாம் அரண்மனைக் குதிரை வீரர்களைப் போலவே தம் சமஸ்தான வீரர்களுக்கும் சீருடைகள் கொடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார் கிஷன்சிங். வீரர்களுக்கு மட்டுமல்ல, குதிரைகளுக்கான சேணம் முதலிய அணிகலன்களும் விலையுயர்ந்தவையாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். தம் முதன்மைச் செயலாளர் கன்வார் பரத்சிங்கை அழைத்து விவரங்களைக் கூறினார். எவ்வளவு செலவாகும் என்று விழிகள் விரிய ஆர்வமுடன் கேட்டார்.



பரத்பூர் சமஸ்தானத்தின் சின்னம்

பரத்சிங்குக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. தயக்கம். மகாராஜா வற்புறுத்தவே வாய் திறந்தார்.

‘மன்னிக்க வேண்டும் மகாராஜா. தங்கள் விருப்பப்படி செய்யுமளவுக்கு நிதி வசதி இல்லை. அதற்கெல்லாம் லட்சக்கணக்கில்…’

‘ஓ…’ - கிஷன்சிங் யோசிக்க ஆரம்பித்தார். இந்தியாவிலேயே அம்மாதிரியான பொருள்களைத் தயாரிப்பதற்காக ஆள்களைப் பிடிக்கச் சொன்னார்.

மிக உயர்ந்த தோலினால் செய்யப்பட்ட சேணங்கள் தயாரிக்கப்பட்டன. அவற்றில் வண்ண வண்ண பட்டு நூல்கள் கொண்டு எம்ப்ராய்டரி டிசைன்கள் செய்யப்பட்டன. கடிவாளங்கள் செய்யவும் உயர்ரகத் தோல் பயன்படுத்தப்பட்டது. இவைபோக குதிரைகளுக்கென அலங்காரப் பொருள்கள் உலோகங்களால் பிரத்யேகமாகச் செய்யப்பட்டன.

அடுத்து குதிரை வீரர்களுக்கான சீருடைகள். கிஷன்சிங் ஒரு பேஷன் டிசைனராக மாறிப் போனார். அப்போதே எஃப் டிவி இருந்திருந்தால் ஒல்லிக்குச்சி உடம்புக்காரிகளை ஒய்யார மாக நடக்கவிட்டு மாதத்துக்கு ஒரு ராம்ப் ஷோகூட நடத்தியிருப்பார் போல. தான் லண்ட னிலும், பிற ஐரோப்பிய நாடுகளிலும் கண்ட வீரர்களின் சீருடைகளை நினைவில் வைத்து ஆடைகளுக்கான டிசைன்களை வரைந்து வைத்தார்.

‘மகாராஜா, நீங்கள் சொல்வதுபோல உடைகள் தைத்துக் கொடுப்பதற்கு நம் சமஸ்தானத்தில் எந்தத் தையல்காரருக்கும் தெரியாது. இந்தியா முழுக்கத் தேடினால் யாராவது அகப்படுவார்கள். தேடிப் பார்க்கிறேன்’ பரத்சிங் தம் கருத்தைச் சொன்னார்.

‘சரி, இந்தியாவில் தேடிப்பாருங்கள், தேவைப்பட்டால் லண்டனில் இருந்து ஆளை வரவழை யுங்கள் அல்லது லண்டனிலேயே தைப்பதற்கு ஏற்பாடு செய்யுங்கள்’ கிஷன்சிங் உத்தர விட்டார்.

‘சிம்லாவில் Phelps & Co., உங்களுக்குத் தெரியுமே மகாராஜா. அவர்கள் ராணுவ வீரர்களுக்கான உடைகள் தைத்துக் கொடுப்பதில் கைதேர்ந்தவர்கள். அங்கேயே தைத்துக் கொள்ளலாம்.’

'நல்லது. உடனே நம் தேவை என்ன என்று தெளிவாகத் தகவல் அனுப்புங்கள்.'

ஆர்டர் கொடுக்கப்பட்டது. பளபளா சீருடைகள் மளமளவெனத் தயாராகின. மகாராஜாவின் பாதுகாப்புப் படையினருக்கு ஒரு மாதிரி, குதிரைப் படையினருக்கு இன்னொரு மாதிரி, தரைப்படையினருக்கு வேறு மாதிரி, ஊர்வலத்தில் வாத்தியங்கள் வாசித்துக் கொண்டு செல்பவர்களுக்கு வேறொரு மாதிரி  இப்படி ஏகப்பட்ட வண்ணங்களில் சீருடைகள். ஒவ்வொரு சீருடைக்கும் குறைந்தபட்சம் பத்தாயிரம் வரை செலவு. அதிகபட்சம்?

சிம்லாவில் மகாராஜா கிஷன்சிங் கோடைக்காலங்களில் ஓய்வெடுப்பதற்காகவே ஒரு மாளிகை இருந்தது. அங்கு மகாராஜா கையால் இழுத்துச் செல்லப்படும் ரிக்ஷாவில் ஊரைச் சுற்றி வருவார். மொத்தம் ஆறு ரிக்ஷாக்காரர்கள் உண்டு. ஆறு பேருக்கும் தங்கம், வெள்ளி ஜரிகைகளாலான பட்டைகளைக் கொண்ட ஜிகுஜிகு சீருடைகள் வழங்கப்பட்டன. ஒரு சீருடை தயாரிப்பதற்கான செலவு மட்டும் ஐந்து போட்டு பக்கத்தில் நாலு ஜீரோ ரூபாய்.

கிஷன்சிங் அரண்மனையில் ஆறுவிதமான தர்பாரை நடத்தி வந்தார். ஒவ்வொரு தர்பாரும் ஒவ்வொரு பருவநிலைக்கு ஏற்ப நிறம் மாறும். அதாவது வசந்த காலத்தில் மகாராஜா, மந்திரிகள், முக்கிய அதிகாரிகள், பிற பணியாளர்கள் உள்படத் தர்பாருக்கு வரும் எல்லோரும் குங்குமப்பூ நிறத்தில் உடைகள் அணிந்து வரவேண்டும். தலைப்பாகை, மேல்சட்டை, கால் சட்டை, காலணிகள் (உள்ளாடை கூட இருக்கலாம்) என்று எல்லாமே குங்குமப்பூ நிறத்தில் தான் இருக்க வேண்டும் என்பது மகாராஜாவின் உத்தரவு.

மழைக்காலம் என்றால் சிக்னல் சிவப்பு நிறத்தில் எல்லோரும் உடைகள் அணிய வேண்டும். முன்பனிக்காலத்தில் கத்தரிப்பூ கலர் சிங்குச்சா. பனிக்காலத்தில் பச்சை கலர் சிங்குச்சா. கோடைக்காலத்தில் மஞ்சள் கலர் சிங்குச்சா.

மகாராஜா மிகவும் விரும்பிக் கொண்டாடிய பண்டிகைகூட ஹோலிதான். ஹோலி பண்டிகையின் போது சமஸ்தானமே உஜாலாவுக்கு மாறியது போல, தும்பைப்பூ வெள்ளை நிறத்தில் இருக்க வேண்டும். மக்களோடு மக்களாகக் களமிறங்கிவிடுவார் மகாராஜா. குறிப்பாகப் பெண்கள் கூட்டத்தில். வண்ண நீரைப் பீய்ச்சி அடித்து விளையாடுவது, கலர் பொடிகளை கன்னங்களில் தேய்ப்பது என்று ஓடியாடி விளையாடுவார்.

பொதுமக்கள்கூடத் தன்னுடைய விருப்பப்படி உடையணிய வேண்டும் என்று ஆசைப்பட்டார் மகாராஜா. மக்களும் என்ன செய்வார்கள் பாவம், குங்குமப்பூ கலர் கோவணத்தைத் தேடி மெனக்கிட முடியுமா? மகாராஜாவின் கம்பீரமானக் குதிரை ஊர்வலங்களை, பசித்த வயிறோடு பார்த்து ரசிக்க மட்டுமே அவர்களால் முடிந்தது.

குதிரைப் படையைப் பராமரிப்பதற்காக மட்டும் சமஸ்தானத்தின் வருட வருமானத்தில் எழுபத்தைந்து சதவிகிதம் செலவிடப்பட்டது. இருக்கவே இருக்கிறார்கள் இளிச்சவாய் மக்கள். ஏகப்பட்ட வரிகள் மக்கள் மீது திணிக்கப்பட்டன. எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு, கந்தல் உடைகளுடன் குதிரை வீரர்களுக்கு கோட் தைக்க வரி கட்டிக் கொண்டிருந்தனர்.

சமஸ்தான கஜானா திவாலாகிப் போகும் நிலை. பிரிட்டிஷ் அரசின் பார்வைக்கு மகாராஜாவின் செலவுக் கணக்குப் பட்டியல் போனது. ஆராய்ந்த அரசு, கிஷன்சிங்குக்கு ஒரு நோட்டீஸ் அனுப்பியது.

‘தாங்கள் குதிரைப் படைக்காக மிக அதிகமாகச் செலவிடுகிறீர்கள். அது தேவை இல்லை என்று அரசு கருதுகிறது.’

கிஷன்சிங்குக்கு எரிச்சல் வந்தது. எங்கே அரசு, படையைப் பிடுங்கி விடுமோ என்ற பயம் வேறு. உட்கார்ந்து யோசித்து பதில் அனுப்பினார்.

‘குவாலியர் மகாராஜா இரண்டாம் மாதவ்ராவ் சிந்தியா சொந்தமாகக் குதிரைப் படை ஒன்றை வைத்திருக்கிறார். ஜோத்பூர் மகாராஜா உமைத் சிங்கும், ஜெய்ப்பூர் மகாராஜா சவாய் இரண்டாம் மாதோ சிங்கும் தனித்தனியே குதிரைப்படைகளை வைத்திருக்கின்றனர். தெற்கே மைசூர் மகாராஜா நான்காம் கிருஷ்ணராஜ உடையாரும் பிரம்மாண்டமான குதிரைப்படை வைத்திருக்கிறார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இவர்களைப் போலவே நானும் குதிரைப்படை ஒன்று வைத்துக் கொள்வதில் தவறில்லை என்றே கருதுகிறேன்.’

பிரிட்டிஷ் அரசுக்கு கிஷன்சிங்கின் பதில் கோபத்தையே கொடுத்தது.

அடேய் வெண்ணைவெட்டி, அவுக வைச்சிருக்காக, இவுக வைச்சிருக்காகன்னு ராகம் போடாத! அவுகளுக்குத் துப்பிருக்கு வைச்சிருக்காக. உனக்கு இருக்கா? மக்களுக்குச் சோத்தைப் போடுயா முதல்ல. ஜனங்க காசுல மஞ்சக் குளிக்க நெனைக்காத! - என்கிற ரீதியில் அரசிடமிருந்து கண்டனக் கடிதம் வந்தது. அதைத் தொடர்ந்து பரத்பூர் சமஸ்தானத்தின் குதிரைப்படை கலைக்கப்பட்டது. குதிரைகள் பறிமுதல் செய்யப்பட்டன. குதிரைக்காகப் பாடு பார்த்துக் கொண்டிருந்த பணியாளர்கள் தவிர, மற்ற மக்கள் சந்தோஷப்பட்டார்கள்.

கிஷன்சிங் நிலைகுலைந்துபோனார். அவரால் இந்தச் சோகத்தைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. குதிரை லாயத்துக்கெல்லாம் சென்று பழைய நினைவுகளை அசைபோட்டு ஃபீல் செய்தார். குதிரை ஊர்வலங்கள் நடைபெற்ற இடங்களுக்குச் சென்று, கொசுவர்த்திச் சுருளைப் போட்டு, ப்ளாஷ்பேக் ஓட்டி ஓட்டி வருத்தப்பட்டார்.

மனத்தளவிலும், கூடவே உடலளவிலும் பாதிக்கப்பட்டார். லொக்... லொக் லொக் லொக்...



23

# ஷாம்பெயின் கையெழுத்துகள்

அது ஞாயிற்றுக்கிழமை. பிற்பகல் நேரம்.

'என்னடி இன்னமும் நீ தயாராகவில்லையா? மகாராஜா வரும் நேரமாயிற்று.'

'இதோ! நான் தயார். கூந்தல் சிக்காகிவிட்டது. அதைச் சரி செய்யத்தான் இவ்வளவு நேரம். கொஞ்சம் எனக்கு ஜடை போட்டுவிடேன்.'

'நீ என்ன உடை அணியப்போகிறாய்? நீல நிறம்? சரி,நான் கிளிப்பச்சை நிறத்தில் உடை அணிந்துகொள்கிறேன். அடியேய் இவளே, நீ இளஞ்சிவப்பு நிறத்தில் உடுத்திக்கொள். மகாராஜாவுக்குப் பிடித்த நிறம்...' - அந்தப்புர சுந்தரிகள் பரபரப் பாகத் தங்களை அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள்.

காரணம் அது மனுநீதி நாள். அதற்கும் அந்தப்புரப் பெண்களுக்கும் என்ன சம்பந்தம்? பரத்பூர் சமஸ்தானத்தைப் பொருத்தவரை நிறையவே சம்பந்தம் உண்டு.

'இறைவன் முதல் ஆறு நாள்கள் உலகத்தைப் படைத்தார், ஏழாவது நாள் ஓய்வெடுத்துக் கொண்டார். எனவே அன்று அனைவரும் இறை சிந்தனையோடு ஓய்வெடுங்கள்' என்று தேவதூதரான சாலமன் நேரிலேயே வந்து சொன்னாலும் பரத்பூர் சமஸ்தானத்தின் மகாராஜா கிஷன்சிங் சட்டை செய்ய மாட்டார். அவரைப் பொருத்தவரை ஞாயிறு மட்டும் விடுமுறை இல்லை. காரணம் வாரத்தில் ஆறு நாள்கள் கேளிக்கைகளில் ஈடுபட்டு ஈடுபட்டுக் களைத்துப் போன

அவருக்கு, ஒவ்வொரு ஞாயிறன்றும் அரசாங்கப் பணிகளைச் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் அநியாயத்துக்குக் கொப்பளிக்க ஆரம்பித்துவிடும்.

சமஸ்தானத்தின் முதன்மைச் செயலாளர் கன்வார் பரத்சிங் அதற்கான ஏற்பாடுகளை வாரா வாரம் செய்வார். அரண்மனையில் அந்தப்புரத்துக்கு ஒதுக்கிய அறைகள் போக, இம்மாதிரி யான பொது அலுவல்களைச் செய்வதற்கென்றும் ஒரு பெரிய ஹால் போனால் போகிறதென்று ஒதுக்கப்பட்டிருந்தது.

அந்த அறையில் ஒரு நீளமான மேஜை உண்டு. ஒரே நேரத்தில் நூறுபேர் தலைவாழை இலை போட்டு கடா விருந்து சாப்பிடலாம். அந்த அளவுக்குப் பெரியது. அந்த மேசை நிறைய ஃபைல்கள் விதவிதமாகப் பல வண்ணங்களில் அடுக்கப்பட்டிருக்கும். கோரிக்கைகள், மனுக்கள், கடன் வேண்டி விண்ணப்பங்கள், பிரிட்டிஷ் அரசு அனுப்பிய கடிதங்கள், அரசுக்கு எழுதப்பட்ட பதில் கடிதங்கள், வைஸ்ராய் அனுப்பிய அறிக்கைகள், கொலை, கொள்ளை, பலாத்காரம், மோசடி என்று மகாராஜாவின் பார்வைக்கு வரும் சில்லறை வழக்குகள், பஞ்சாயத்துகள், சமஸ்தான வளர்ச்சித் திட்டங்களுக்கான ஒப்புதல் கோப்புகள் என்று எல்லாம் அந்த மேஜையில் ரகம் வாரியாகப் பிரித்து வைக்கப்பட வேண்டும்.

இந்தக் காரியத்தைச் செய்வதற்காகவே பரத்சிங்கும் ஞாயிற்றுக்கிழமை அன்று வீட்டில் பெண்டாட்டி, பிள்ளைகளோடு சந்தோஷமாக இருக்க முடியாமல், மனத்துக்குள் முனகிக் கொண்டே வேலைக்கு வந்துவிடுவார். காலையில் இருந்து ஒவ்வொரு ஃபைலாகப் படித்துப் பார்த்து ரகம் பிரிப்பார்.

எதை எதை மகாராஜாவிடம் காட்ட வேண்டும், எவற்றை அவர் பார்வைக்குக் கொண்டு செல்லாமலேயே கழித்துவிடலாம் என்று முடிவெடுக்கும் அதிகாரம் பரத்சிங்குக்கு இருந்தது. நீண்டநாள்களாகக் கிடப்பில் இருக்கும் பைல்களைத் தேடிக் கண்டிபிடித்து மகாராஜபார்வை படும்படி வைக்க முயற்சிப்பார். ஆனால் எதுவும் அவர் கையில் இல்லையே!

மாலை மயங்கும் நேரத்தில் மகாராஜா கிஷன்சிங் மஜாவாகக் கிளம்புவார். தன் அறையிலிருந்து வெளியேறும் அவர் நேராகச் செல்லுமிடம் அந்தப்புரம். அங்கு சுந்தரிகள் எல்லாம் சொக்க வைக்கும் ஒப்பனையுடன் வரிசையாக நிற்பார்கள். மகாராஜா பிரசன்னமாவார். அணி வகுப்பு மரியாதையைக் கண்களால் அளவெடுப்பார். பின்பு ஆளெடுப்பார்.

'நீ வா, ம்... நீ, நீதான் வா' - அவருடைய கண்கள் பேசும். அவ்வப்போது ஆள்காட்டி விரலும் தேர்ந்தெடுக்கும். இத்தனை பேர் என்றெல்லாம் கிடையாது, மனம் போன போக்கில் ஓர் எண்ணிக்கை. தேர்ந்தெடுக்கப்பட்ட பெண்களோடு அலுவலைக் கவனிக்க வேண்டிய ஹாலை நோக்கி மன்மத நடை நடப்பார் கிஷன்சிங். கால்கள்தானே நடக்கின்றன, மகாராஜா வின் கைகள்? அத்தனை அழகான பெண்கள் புடைசூழ நடக்கும்போது விரல்களுக்கா வேலை யில்லை?

மகாராஜா ஹாலை அடையும் நேரத்தில் இருள் ஆக்கிரமிக்க ஆரம்பித்திருக்கும். அங்கே கிஷன்சிங்கின் அதிகாரபூர்வ மனைவிகளும், அதிகாரபூர்வமற்ற துணைவிகளும் காத்து நிற்பார்கள். கூடவே பரத்சிங். மகாராஜா தலை தெரிந்ததும் ராஜ வணக்கம் ஒன்றை வைப்பார். அது அவரது கடமை. ஏற்றுக்கொள்வதும் கொள்ளாததும் மகாராஜாவின் உரிமை. மேசையில் இத்தனைக் கோப்புகளை ஒருசேரப் பார்க்கும்போது, 'அய்யோ, இவ்வளவு ஹோம்

வொர்க்கா?' என்று முகம் சுளிக்கும் ஸ்கூல் பையன்போல கிஷன்சிங்கின் முகம் மாறும். ஓரக் கண்ணால் பரத்சிங்கை ஒரு லுக் விடுவார். அவர் விஜிபி கோல்டன் பீச்சில் நிற்கும் அசையா மனிதராக மாறியிருப்பார். வேறென்னதான் செய்யமுடியும்?

'சரி, போனாப்போவுது கொஞ்சம் வேலை பார்க்கலாம்' என்று மகாராஜாவின் கடமை தவறாத நெஞ்சம் மணியடிக்கும். தனக்கான நாற்காலியில் அமருவார். ஹாலுக்கு நடந்து வந்த அலுப்பு. அந்த அலுப்பின் பிரதிபலிப்பு முகத்தில் வெளிப்படுவதற்குள் ஒரு பெண், ஷாம்பெயினை அவருக்கு ஊட்டிவிடத் தொடங்குவாள். மதுவும் கிக். மாதுவும் கிக். மாது மது ஊட்டினால்? கிக்கோ கிக்!

ஒவ்வொரு பெண்ணும் போட்டி போட்டுக் கொண்டு மகாராஜாவைத் தழுவியும், அவரது விரல்களுக்குச் சுளுக்கெடுத்தும், நகங்களில் அழுக்கெடுத்தும், உதடுகளுக்கு ஒத்தடம் கொடுத்தும் வேலையில் உதவி செய்வார்கள்.

குறிப்பிட்ட லெவலுக்குப் போதை ஏறியதும் மகாராஜா தன் கடமையைத் தொடங்குவார். தன் மகாராணிகளையோ அல்லது ஆசைநாயகிகளையோ அழைப்பார். மொத்த ஃபைல் களையும் இரண்டே அடுக்குகளாக மாற்றி தன் முன் வைக்கச் சொல்லுவார். அவர்களும் என்ன ஏதென்று பார்க்காமல், குழந்தைகள் டாய்ஸை வைத்து பொம்மைக் கட்டிடம் கட்டு வதுபோல, அடுக்கி வைப்பார்கள்.

ஆசனத்தில் அமர்ந்திருக்கும் மகாராஜாவின் வலதுபுறம் ஓர் அடுக்கு, இடதுபுறம் இன்னொரு அடுக்கு. அந்தச் சமயத்தில் மகாராஜாவின் மனத்துக்குள் மௌனமாக ஒரு போராட்டம் நடந்து கொண்டிருக்கும்.

இங்கி பிங்கி பாங்கி, ஃபாதர் பாட் அ டாங்கி, டாங்கி டைய்ட், ஃபாதர் க்ரைட், இங்கி பிங்கி பாங்கி...

இப்படி ஒற்றையா ரெட்டையா போட்டு ஏதாவது ஒருபுறத்திலிருக்கும் ஃபைல்களைத் தேர்ந் தெடுப்பார். வலதுபுற அடுக்கைத் தேர்ந்தெடுத்தால், இடதுபுற அடுக்கிலுள்ள ஃபைல்கள் எல்லாம் நிராகரிக்கப்பட்ட லிஸ்டில் சேர்ந்துவிடும். வலதுபுற ஃபைல்கள் எல்லாம் ஏற்றுக்கொள்ளப்பட்ட லிஸ்ட்.

ஒரு கடி அப்பளம், ஒரு பிடி சோறு போல, ஒவ்வொரு கையெழுத்துக்குமிடையே ஒருமுறை தொண்டையை ஷாம்பெயினால் நனைத்துக் கொள்வார் மகாராஜா.

கிஷன்சிங்கின் இந்த இங்கி பிங்கி முறையால், நிர்வாகத்தில் ஏகத்துக்கும் குளறுபடிகள் நடந்தன. முக்கியமான பல திட்டங்கள் நிராகரிக்கப்பட்டன. தேவையே இல்லாத விஷயங்கள் செயல்படுத்தப்பட்டன. ஊழல் செய்து மாட்டியவர்கள் உத்தமபுத்திரர்களானார்கள், ஆயிரம் பொய் சொல்லி ஆயிரத்தெட்டு கல்யாணம் செய்த ஏமாற்றுக்காரர்கள் புண்ணிய ஆத்மாவாக மாறினார்கள், ஊரைச் சுரண்டிப் பணம் சம்பாதித்தவர்கள் பெரும் செல்வந்தர்களானார்கள், கடன் கொடுத்த ஏமாளிகள் கட்டையில் போனார்கள். சமஸ்தானத்து நீதி தேவதையின் கண்கள் மட்டுமல்ல, ஐம்புலன்களும் கட்டப்பட்டன.

ஆனால் பிரிட்டிஷ் அரசு விழித்துக் கொண்டது.

‘நாட்டாமை நீதி செத்துப் போச்சு. சமஸ்தானமே சர்வ நாசமாகிக் கெடக்கு. எங்கிட்டும் ரோடே இல்லே, அதெல்லாம் ரிப்பேர் பாத்து பல மாமாங்கம் ஆயிருக்கும்போல. ஆசுபத்திரி பக்கம் போனாலே, நல்லா இருக்குறவனுக்கும் நோய், நொடி வந்துரும். அங்க டாக்டரும் கெடையாது, நர்ஸும் கிடையாது. எங்க பாத்தாலும் குப்பை, சாக்கடை, கப்பு. சுத்திகரிப்பு ஊழியருன்னு யாருமே கிடையாதாம். ஏன்னா அரசாங்க ஊழியருக்கு எல்லாம் சம்பள முன்னு ஒண்ணு உண்டுன்னே மறந்துபோச்சாம். அவ்ளோ பாக்கி. சமஸ்தான கஜானாவுல பூனை இல்ல, யானையே படுத்துக் கெடக்கு. அரசாங்கம் ஒதுக்குன பணத்துல வளர்ச்சித் திட்டமுன்னு ஒரு மண்ணையும் நிறவேத்துன மாதிரி தெரியல. சமஸ்தானத்துல சொல்லிக்குற மாதிரி செழிப்பா இருக்குறது அரண்மனையும், அதுல வாழுற ஆள்களும்தான்.’


மகாராஜா பிரிஜேந்திர சிங்

பரத்பூர் சமஸ்தானத்தின் பேரழிவு நிலைமை பற்றிய அறிக்கை ஒன்றை அரசால் அமைக்கப்பட்ட ஆய்வுக் குழு ஒன்று, வைஸ்ராய்க்குச் சமர்ப்பித்தது.

விளைவு? மகாராஜா கிஷன்சிங் மகாராஜாவாகவே இருந்தார். அவரது பட்டு பீதாம்பர உடைகள், படாடோப நகைகள், பரம்பரைக் கிரீடம் எல்லாம் அப்படியேதான் இருந்தன. ஆனால் அவரது கையில் இருந்த செங்கோல் மட்டும் பறிக்கப்பட்டது. சமஸ்தானத்தின் நிர்வாகப் பொறுப்புகளை எல்லாம் கவனிக்க திவான் (பிரதம மந்திரி) ஒருவர் புதிதாக நியமிக்கப்பட்டார். அதற்குப் பின் சமஸ்தானம் கொஞ்சம் கொஞ்சமாக உயிர் பிழைத்து ஐசியு வார்டிலிருந்து ஜெனரல் வார்டுக்கு வந்தது.

ஆனால் மகாராஜா கிஷன்சிங்கின் உடல்நிலை, ஐசியு வார்டில் சேர்க்கப்படும் அளவுக்கு மோசமாகிப் போனது. லொக்... லொக் லொக் லொக். அவரது உடல்நிலையைத் தொடர்ந்து கவனித்து வந்த அரண்மனை மருத்துவர்கள் காசநோய் என்று உறுதி செய்தார்கள்.

தாம் இறுதி நாள்களில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்று கிஷன்சிங்குக்குத் தெளிவாகவே தெரிந்து போனது. எனவே தன் ஆடம்பரத்தை, உல்லாசத்தைக் கிஞ்சித்தும் குறைத்துக் கொள்ளாமல் தொடர்ந்தார். தொடர்ந்து நீச்சல் குளம் இயங்கி வந்தது. அந்தப்புரப் பெண்களுக்கும் வேலை இருந்துகொண்டேதான் இருந்தது, 27 மார்ச் 1929 வரை.

அன்றுதான் மகாராஜா கிஷன்சிங் கடைசியாக இருமினார்.

கிஷன்சிங் இறக்கும்போது அவருக்கு வயது இருபத்தெட்டு. அவரது வாரிசான பிரிஜேந்திர சிங்* (Brijendra Singh) வயதுக்கு வரவில்லை. எனவே அடுத்த சில வருடங்களுக்கு அரியணையில் ச்சும்மா காற்று வாங்குவதற்காக உட்கார்ந்து கொண்டார். நிர்வாகம்

★ கிஷன் சிங்கின் மூத்த வாரிசு. 1 18, டிசம்பர் 1ல் பிறந்தவர்.

பிரிட்டிஷாரின் அமைத்திருந்த கவுன்சிலின் (Council of Regency) கைகளில் இருந்தது. 1939ல் பிரிஜேந்திர சிங் முறைப்படி பரத்பூரின் மகாராஜாவானார். பத்தே வருடங்கள். மே 15, 1949ல் பரத்பூரும் அருகிலிருந்த பிற சமஸ்தானங்களும் இணைக்கப்பட்டு ராஜஸ்தான் மாநிலம் உருவாக்கப்பட்டது.

உச்சபட்ச உல்லாசத்துக்கு எல்லாம் கிஷன்சிங்கின் காலத்தோடு முற்றுப்புள்ளி வைக்கப் பட்டிருந்தது. ஆனால் அவரது பரம்பரையினரின் ஆதிக்கம் கிழக்கு ராஜஸ்தான் தொகுதிகளில் நடந்துகொண்டுதான் இருக்கிறது.

பிரிஜேந்திர சிங் தன் ஆட்சிக் காலத்தில் பொறுப்பாகவே நடந்து கொண்டிருந்தார். ஆட்சி, அதிகாரம் எல்லாம் கையை விட்டுப் போன நிலையிலும் அவர், பரத்பூர் மக்களிடையே தன் செல்வாக்கு மங்காமல் பார்த்துக்கொண்டார். அரசர் அரசியல்வாதி ஆனார். 1962ல் இந்திய தேசிய காங்கிரஸ் சார்பில் பரத்பூர் நாடாளுமன்றத் தொகுதியில் வெற்றி பெற்றார். அடுத்த பத்து வருடங்கள் (1971 வரை) லோக் சபா உறுப்பினராகப் பதவியாற்றினார். பெரு வாழ்வு வாழ்ந்த அவர் 1995ல் இறந்து போனார்.

கிஷன்சிங்கின் இன்னொரு மகனான பச்சு சிங்கும் எம்.பியாக இருந்தவர்தான். இன்னொரு மகனான மன் சிங், ராஜஸ்தானின் தீக் (Deeg) சட்டசபைத் தொகுதியின் உறுப்பினராக 1952ல் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1985 வரை பலமுறை சட்டமன்ற உறுப்பினராகப் பணியாற்றியிருக்கிறார்.

1985, பிப்ரவரி 21. சட்டமன்றத் தேர்தலுக்காகத் தீக் தொகுதியில் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்தார் மன் சிங். ஓர் இடத்தில் ஜீப்பில் இருந்து இறங்கும்போது, துப்பாக்கிச் சத்தம் தொடர்ந்து கேட்டது. எல்லோரும் என்ன நடக்கிறதென்று உணருவதற்குள் மன் சிங் ரத்த வெள்ளத்தில் இறந்து கிடந்தார். அவரது முதுகில் ஆறு குண்டுகள் பாய்ந்திருந்தன. என்கவுண்ட்டர் என்ற ஒரு வார்த்தையை இப்போது அடிக்கடி புழங்கிக் கொண்டிருக்கிறோமே, அந்தச் சம்பவத் தையும் அப்படித்தான் சொன்னார்கள். இந்தச் சம்பவம் அப்போது ராஜஸ்தானின் முதல்வராக இருந்த காங்கிரஸின் ஷிவ்சரன் மாத்தூரை பதவி இறங்கச் செய்தது.

பிரிஜேந்திர சிங்கின் ஒரே ஆண் வாரிசு விஸ்வேந்திர சிங். முழு நேர அரசியல்வாதி. எம்.எல்.ஏ., எம்.பி. பதவிகள் வகித்தவர். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அரசியல் தொடர்கிறது.

# ஹைதராபாத்

- இந்தியாவின் மிகப் பெரிய சமஸ்தானம்
- தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1724
- ஆட்சி செய்தவர்கள் : அஸஃப் ஜா பரம்பரை
- முதல் நிஜாம் : அஸஃப் ஜா
- பரப்பளவு : 82,698 சதுர மைல்கள்
- 21 குண்டு மரியாதை.



# கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு...

உங்களுக்கு மாட்சிமை பொருந்திய நிஜாம் ஒஸ்மானைத் தெரியுமா? இந்தியாவில் இருந்த சமஸ்தானாதிபதிகள் பலரும் உல்லாசப் பறவைகளாக மட்டுமே இருந்துவிட்டுப் போன நிலையில் இவர் ஒருவர்தான் கவித்துவக் கஞ்சப் பிரகஸ்பதியாக வாழ்ந்து முத்திரை பதித்தவர். அடடா.. ஒரு புதிய மகாராஜாவைப் பார்க்கத் தொடங்கும்போது அவருடைய கஞ்ச குணத்தில் தொடங்கவேண்டியிருக்கிறதே என்றால் வேறு வழியில்லை. நமக்கெல்லாம் பெயருக்கு முன்னால் இனிஷியல். அவருக்கு அவருடைய இந்த ஸ்பெஷல் குணம்! சொல்லித்தான் ஆகவேண்டும்.

இன்னதுதான் என்றில்லை, எது இலவசமாகக் கிடைத்தாலும் டபக்கென்று வாங்கி வைத்துக் கொள்வார். உபயோகிக்கவெல்லாம் மாட்டார். வெறுமனே வாங்கி வைத்து அழகு பார்ப்பார். அவ்வளவே! அவர் வாழ்ந்த காலம் 1886லிருந்து 1967 வரை. ஆனால் இன்று இருந்திருந்தால், நிச்சயமாகத் தமிழ்நாட்டுக்கு வந்து எப்பாடுபட்டாவது அரசு வழங்கும் இலவசக் கலர் டீவியை வாங்கிக் கொண்டு போயிருப்பார். அப்படி ஒரு சம்பவத்திலிருந்தே ஒஸ்மானின் வாழ்க்கையைத் தொடங்கலாம்.

மத்தியப் பிரதேசத்தின் சமஸ்தானமான தட்டியாவை (Datia) ஆண்டு வந்த மகாராஜா கோவிந்த் சிங், ஒஸ்மானுக்கு மிக நெருங்கிய நண்பர். இருவரும் அடிக்கடி சந்தித்துக் கொள்வார்கள். பல விஷயங்களைப் பகிர்ந்து கொள்வார்கள். ஒஸ்மான் வார்த்தைகள் அளவில் மட்டும் பகிர்ந்து கொள்வார். கோவிந்த் சிங் பொருள்கள் அளவிலும்.


நிஜாம் ஒஸ்மான் அலிகான்

ஒருமுறை கோவிந்த் சிங்கைச் சந்திக்க தட்டியா அரண்மனைக்குச் சென்றார் ஒஸ்மான். நல்ல வரவேற்பு. நாக்கை நடனமாடச் செய்யும் விருந்து. ஒவ்வொரு பதார்த்தத்திலும் நெய் வாசனை தூக்கலோ தூக்கல்.

'உணவு வகைகள் எல்லாம் இவ்வளவு ருசியாக இருக்கிறதே, என்ன காரணம்?' - கோவிந்த் சிங்கிடம் கேட்டார் ஒஸ்மான்.

'எல்லாம் நெய்யின் மகிமை.'

'ஓஹோ அப்படியா! எங்கிருந்து நெய் வாங்குகிறீர்கள்?'

'என்ன இப்படிக் கேட்டுவிட்டீர்கள். எங்கள் சமஸ்தானத்தின் முக்கியத் தொழிலே கால்நடைகள் வளர்ப்பதுதானே. அதுவும் அரண்மனையில் உள்ள உயர்சாதிப் பசுக்கள் கொடுக்கும் பாலின் சுவை பற்றிக் கேட்கவா வேண்டும். பாலை சர்ர்ர் சர்ர்ர் என்று கறந்து, சுண்ட சுண்டக் காய்ச்சி, பக்குவமாக ஆற வைத்து, சிறிது தயிரை உறையாக விட்டு, கிடைக்கும் கெட்டித்

தயிரைப் பாற்கடலைக் கடைவது போலக் கடைந்தால் திரண்டு வருமே வெண்ணெய், அட அட... அதை வழித்து எடுத்து இதமான சூட்டில் உருக்கினால் சமஸ்தானமே மணக்கும் போங்கள்!' கோவிந்த் சிங் சொல்லச் சொல்ல ஒஸ்மானின் நாக்கில் எச்சில் நெய் வாசத்துடன் சுரந்தது.

'உங்களுக்கும் கொஞ்சம் அனுப்பி வைக்கின்றேனே...'

'நண்பர் கொடுக்கும் அன்புப் பரிசை வேண்டாம் என்றா சொல்லப் போகிறேன். தாராளமாக நிறையவே அனுப்பி வையுங்கள்' வழிந்தார் ஒஸ்மான்.

'நெய்யாக அனுப்பினால் சரியாக இருக்காது. வெண்ணெயாகவே அனுப்பி வைக்கிறேன். பதமாக உருக்கி உபயோகித்துக் கொள்ளலாம். அடுத்த வாரமே வந்துவிடும் நண்பரே!'

ஒஸ்மான் கொள்ளை மகிழ்ச்சியோடு ஊர் திரும்பினார். கோவிந்த் சிங் சொன்னபடியே பன்னிரண்டு டஜன் டின்களில் (அதாவது பைத் பன்னெண்டு நூத்தியிருவது, பதினொரு பன்னெண்டு நூத்தி முப்பத்திரெண்டு, ப்ளஸ் பன்னெண்டு, ஆங்.. நூத்தி நாப்பத்தி நாலு) வெண்ணையைப் பதமாகப் பேக் செய்து அனுப்பிவைத்தார்.

அவ்வளவு வெண்ணெயை மொத்தமாகப் பார்த்ததும் ஒஸ்மானுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. ஒரு டின்னைத் திறக்கச் சொன்னார். அதனுள் தன் மூக்கை மட்டும் நுழைத்துப் பலமாக நுகர்ந்தார். வாசனை அவரது நுரையீரல்களை நிறைத்தது.

'உடனே உருக்கி நெய்யாக்குங்கள். இன்னும் கொஞ்ச நாள்களுக்கு அரண்மனையில் எண்ணெய்க்குப் பதிலாக நெய்யை உபயோகியுங்கள். வறுக்க, பொறிக்க, தாளிக்க சர்வமும் நெய்தான். நாளை முதல் நான் இந்த ஊத்துக்குளியைத்தான் தொட்டியில் ஊத்திக் குளிக்கப் போகிறேன்' என்று உத்தரவிட்டிருந்தால் பரவாயில்லை. அவருக்குத்தான் அந்த புத்தி ஒரு சிட்டிகை அளவுகூடக் கிடையாதே. கையில் வெண்ணெயை வைத்திருந்தாலும் எக்ஸ்ட்ரா வெண்ணெய் எங்காவது கிடைக்குமா என்று அலையும் அல்பமாயிற்றே.

'இந்த வெண்ணெய் டின்களை பத்திரமாகச் சேகரித்து வையுங்கள். தேவைப்பட்டால் பின்பு உபயோகித்துக் கொள்ளலாம்.'

நூற்று நாற்பத்து நான்கு டின் வெண்ணெயும் வெண்ணெயாகவே குடோன்களில் சேகரித்து வைக்கப்பட்டன. அடுத்த சில நாள்களுக்கு ஒஸ்மான், இலவசமாகக் கிடைத்த வெண்ணெய் நினைப்பிலேயே இருந்தார். அதன் நினைப்பையே சுவையாக்கிக் கொண்டு சாப்பிட்டார், தூங்கினார், கனவு கண்டார். நாளடைவில் அடுத்தடுத்த விஷயங்களுக்குத் தாவி விட்டார். மகாராஜாதான் ஒன்றும் சொல்லவே இல்லையே என்று அரண்மனைப் பணியாளர்களும் வெண்ணெய் பற்றிக் கண்டுகொள்ளவே இல்லை. மறந்தே போய்விட்டனர். கிட்டத்தட்ட இரண்டு வருடங்கள் போயிருக்கும்.

வெண்ணெய் என்ன வெண்ணையா? தன்னை யாரும் கண்டுகொள்ளாமலிருந்தால் அது சும்மா இருக்குமா என்ன? மணத்தைப் பரப்ப ஆரம்பித்தது. தாங்கவே முடியாத அளவு மணம். காற்றில் கலந்து அந்த ஏரியாவையே கலங்கடித்தது. உவ்வே!



யூசுப் அலிகான்

முதலில் யாருக்கும் எதுவும் புரியவில்லை. பின்பு கஷ்டப்பட்டு மோப்பம் பிடித்துக் கொண்டு குடோனுக்குச் சென்றபோது தான், கெட்டுப் போன வெண்ணெய் தன் வேலையைக் காட்ட ஆரம்பித்திருப்பது புரிந்தது. வெண்ணெய்க்கு யாரப்பா விமோசனம் கொடுப்பது? ஊழியர் களுக்குக் குழப்பம். அந்த குடோனுக்கு நிர்வாகி என்று யாரும் தனியாகக் கிடையாது. இருந்தால், ஓஸ்மானுக்குத் தகவல் சொல்லலாம். வேறு யார் மூலமாக மன்னருக்குத் தகவல் சொல்லலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோதே, பிரதம அமைச்சர் யூசுப் அலிகான் (Yousuf Ali Khan என்ற Salar Jung III), குடோனுக்கு வந்தார். வந்த வேகத்திலேயே அங்கு நிற்க முடியாமல் திரும்பிப் போனார்.

யூசுப் அலிகான் தைரியம் மிக்கவர், எதை யும் யாரிடமும் நேருக்கு நேராகப் பேசும் திறமை கொண்டவர். அப்படி இருந்தால் தானே, ஓஸ்மானிடம் குப்பை கொட்ட முடியும். வெண்ணெய்ப் பிரச்சனையை மூக்கில் எடுத்துக் கொண்டு ஓஸ்மானிடம் சென்றார். சுற்றி வளைக்காமல் நேராக விஷயத்துக்கு வந்தார்.

'தட்டியா மகாராஜா கோவிந்த் சிங், இரண்டு வருடங்களுக்கு முன் டின் டின் னாக வெண்ணெய் அனுப்பி வைத்தாரே, ஞாபகம் இருக்கிறதா?'

'ம், அதற்கென்ன?'

'எல்லாம் கெட்டுப் போய்விட்டது. தாங்க முடியாத துர்நாற்றம் வீசுகிறது. தாங்கள் உத்தரவு கொடுத்தால், அவற்றைத் தூக்கிக் கடாசிவிடலாம்' - பட்டர் போலிருந்த ஓஸ்மானின் முகம், யூசுப் அலிகானின் வார்த்தைகளைக் கேட்டதும் ஜாம் ஆகச் சிவந்தது.

'கேக்குறவன் கேனையனா இருந்தா, கேழ்வரகுல நெய் வடியுது, வெறகுக் கட்டையில வெண்ணை வடியுதுன்னு சொல்லுவீங்களே. மொத்தம் நூத்தி நாப்பத்து நாலு டின்னு வெண்ணை. எவனாவது இன்னொரு முறை சும்மா கொடுப்பானா என்ன? அதெல்லாம் கெட்டுப் போயிருக்காது. அப்படிக் கெட்டே போயிருந்தாலும் அதைத் தூக்கியெல்லாம்

போட முடியாது. காசோட அருமை தெரியாம நீர் பாட்டுக்குப் பேசுறீரே. அதை என்ன செய்யணும்னு எங்களுக்குத் தெரியும். நீர் இங்க இருந்து நடையைக் கட்டும்.'

யூசுப் அலிகானுக்கு அவமானமாகப் போய்விட்டது. பதில் எதுவும் பேசவில்லை. 'போடா வெண்ணை' என்று மனத்துக்குள்ளேயே ஒஸ்மானைத் திட்டிவிட்டு வெளியேறினார். உண்மையிலேயே வெண்ணெய் வீணாகப் போய்விட்டதா என்று கேட்டறிந்து கொண்டார் ஒஸ்மான். அதில் நிறையவே வருத்தம். எப்படி அந்த நஷ்டமாகிப் போன வெண்ணெயிலிருந்து லாபம் பார்க்கலாம் என்று உருகி உருகி யோசித்தார். காவல் துறை அதிகாரி ரெட்டியை வரவழைத்தார்.

'மிஸ்டர். ரெட்டி, நமது குடோனில் நூற்று நாற்பத்து நான்கு டின் வெண்ணெய் உள்ளது. என்ன, நாளாகி விட்டதால் கெட்டுப் போய் விட்டது என்று சொல்கிறார்கள். நீங்கள் அதைக் கடைகளில் வைத்துப் பொது மக்களுக்குக் குறைந்த விலையில் கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள்.'

ரெட்டியின் நிலைமை இரண்டு ரொட்டித் துண்டுக்குள் வைக்கப்பட்ட சீஸ் போலானது. ஒஸ்மான் சொன்ன உடனே மறுக்கமுடியாதே. மறுத்தால் வேலை போய்விடும். சரி என்று தலையாட்டிவிட்டுக் கிளம்பினார். மறுநாள் ஒஸ்மானைப் பார்க்க வந்தார்.

'மன்னிக்க வேண்டுகிறேன். குடோனுக்குச் சென்று வெண்ணெய் டின்களைப் பார்த்தேன். அவை விற்பனைக்குரியதாக இல்லை. வெண்ணெய் இப்போது விஷமாக உள்ளது.'

'என்னய்யா நீ, நான் உனக்கு ஒரு வேலை கொடுத்தால் அதைச் செய்ய முடியாததற்கு என்னிடமே காரணம் சொல்கிறாயா? அந்த வெண்ணெயை வேறு எந்தவழியில் உபயோகிக்கலாம் என்றெல்லாம் யோசிக்கவே மாட்டாயா? எல்லாவற்றையும் நானே சொல்ல வேண்டுமா என்ன?'

'ம... மன்னிக்க வேண்...'

'அதெல்லாம் தேவையில்லை. சமஸ்தானத்தில் எத்தனையோ இந்துக் கோயில்கள் இருக்கின்றன. ஒவ்வொரு கோயில் வாசலிலும் பல கடைகள் இருக்கின்றன. அங்கெல்லாம் இந்த வெண்ணெயை விற்பனைக்கு அனுப்புங்கள்.'

ரெட்டி, மறுப்பு எதுவும் கூறாமல் அங்கிருந்து கிளம்பினார். வெண்ணெயைப் பார்க்கப் போகவில்லை, வீட்டைப் பார்த்துப் போனார். அடுத்து ஒஸ்மானிடம் என்ன சொல்லி சமாளிக்கலாம் என்று ஏற்கெனவே யோசித்தும் வைத்திருந்தார். மறுநாளே ஒஸ்மானைப் பார்க்கச் செல்லாமல், அதற்கு அடுத்த நாள் சென்றார்.

'இந்த முறையும் தங்கள் கட்டளையை நிறைவேற்ற முடியாததற்கு மிகவும் வருந்துகிறேன்' குரலில் பவ்யத்தையும் பயத்தையும் சரி விகிதத்தில் கலந்து வெளிப்படுத்தினார்.

'என்னய்யா சொல்ற?' ஒஸ்மான் உறுமினார்.

'கோயில் வாசலில் உள்ள கடைகளில் கெட்டுப் போன வெண்ணெயை வாங்க மறுக்கிறார்கள். பக்தர்கள் சண்டைக்கு வந்துவிடுவார்களாம். மேலும் இது கடவுளை வழிபடப் பயன்படுத்தும்

பொருள் என்பதால் பாவம், புண்ணியம் என்றெல்லாம் ஏதேதோ சொல்கிறார்கள். எனவே கோயில்களில் இதை விற்க முடியாது.'

ஒஸ்மான் முகத்தில் கோபம் கொந்தளித்துக் கொண்டிருந்தது. அவர் ஏதாவது சொல்லி வெடிப்பதற்குள் அங்கிருந்து கிளம்பிவிட வேண்டுமென்று நினைத்த ரெட்டி, படபடவென பேச்சைத் தொடர்ந்தார்.

'தங்களுக்கு அவப்பெயர் வந்துவிடக்கூடாது என்றுதான் நான் அந்த முயற்சியைக் கைவிட்டேன். கோயில்களில் விற்க முடியாவிட்டால், வேறு இடங்களா இல்லை. எல்லா வெண்ணெயையும் விற்றுவிட்டு ஒரு சில நாள்களில் வருகிறேன். தங்களிடம் இதைச் சொல்லி விட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன். உத்தரவு கொடுங்கள்.'

திரும்பிப் பார்க்காமல் அங்கிருந்து வெளியே வந்தார் ரெட்டி. மாட்டு வண்டி ஒன்றைப் பிடித்துக் கொண்டு குடோனுக்குச் சென்றார். பணியாளர்களை வைத்து எல்லா வெண்ணெய் டின்களையும் வண்டியில் ஏற்றச் சொன்னார்.

'ஊருக்கு வெளியே ஓடும் சாக்கடையில் எல்லாவற்றையும் தூக்கிப் போட்டு விடுங்கள். ஒரு டின்கூட இனிக் கண்ணில்படக் கூடாது' என்று பணியாளர்களுக்கு உத்தரவு இட்டார். வாழ்க்கையில் நெய்யே ஆக முடியாத அந்த முதிர்வெண்ணெய்களின் இறுதி ஊர்வலம் ஆரம்பமானது.

மறுநாள் ரெட்டி, மலர்ந்த முகத்தோடு ஒஸ்மான் முன் சென்று நின்றார். 'தங்களின் கட்டளைப் படியே அந்த வெண்ணெய் டின்களை ஒரு வியாபாரியிடம் பேரம் பேசி விற்றுவிட்டேன்.'

'அப்படியா, எவ்வளவுக்கு விலை போனது?' ஒஸ்மான் ஆர்வம் மின்னக் கேட்டார்.

'இருநூற்று ஒரு ரூபாய். அதனைத் தங்கள் வங்கிக் கணக்கில் போட்டுவிட்டேன்.'

'நல்லது மிஸ்டர். ரெட்டி. வீணாகப் போனதை விலைபோக வைத்துவிட்டீர். மிக்க மகிழ்ச்சி.'

அதற்குப் பின் மிஸ்டர் ரெட்டிக்குப் பதவி உயர்வு கிடைத்தது. வெறும் இருநூற்று ஒரு ரூபாய் மொய் எழுதி, பதவி உயர்வைப் பெற்றுக் கொண்ட ரெட்டி, தன் சாதுர்யத்தைத் தானே மெச்சிக் கொண்டார்.

சமஸ்தானங்களிலேயே மிகவும் செல்வச் செழிப்பு மிகுந்தது ஹைதராபாத் சமஸ்தானம். அதன் கடைசி நிஜாம்தான் மிர் ஒஸ்மான் அலிகான் பகதூர். அவரிடமிருந்த அளவுக்குப் பணம் எந்த மகாராஜாவிடமும் கிடையாது. அவர் வைத்திருந்த அளவுக்கு நகைகளை யாராலும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. பின் ஏன் இந்த அல்ப புத்தி? சொல்வதற்குச் சம்பவங்கள் இன்னும் டின் டின்னாக இருக்கின்றன.



# நிஜமாக நிஜாமா?

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு...

அது ஒன்றுமில்லை. ஹைதராபாத்தின் கடைசி நிஜாம் ஒஸ்மான் அலிகான் தன்னிடமிருக்கும் தங்கக் கட்டிகளை எண்ணிக் கொண்டிருக்கிறார். தினமும் எண்ணுவார். பழைய கணக்குகளோடு சரிபார்த்துக் கொள்ளுவார். தானே இடுப்பொடியக் குனிந்து, நிமிர்ந்து, உட்கார்ந்து, படுத்து, விழுந்து, புரண்டெல்லாம் எண்ணி எண்ணிப் பார்ப்பார். இந்த விஷயத்தில் அவருக்கு வேறு யார் மீதும் தம்மாத்துண்டுகூட நம்பிக்கை கிடையாது. சரி, அவர் எண்ணி முடிக்க நிறையவே நேரம் ஆகும். அதற்குள் ஹைதராபாத்தின் பழைய வரலாற்றைக் கொஞ்சம் பார்த்துவிட்டு வந்துவிடலாம்.

முகலாயப் பேரரசர் ஔரங்கசீப்பின் காலத்தில், தக்காண பீடபூமி பகுதியின் முக்கியத் தளபதியாகப் பணியாற்றியவர் கமாருதின் சின் குலிஜ் கான். முகலாய அவையில் அவருக்குச் சூட்டப்பட்ட பட்டம் நிஜாம்-உல்-முல்க். ஔரங்கசீப்புக்குப் பின் முகலாயர்களின் ஆட்சி ஆட்டம் கண்டது. கிட்டத்தட்ட இந்தியா முழுவதை யும் பிடித்திருந்த முகலாயர்கள், சரியான தலைமை இல்லாததால் ஒவ்வொரு பகுதிகளாக இழக்கத் தொடங்கியிருந்தனர். குறிப்பாகத் தென் பகுதிகளில் மராத்தியர்களின் எழுச்சியும் அதிகமாகவே இருந்தது.

ஔரங்கசீப் காலத்துக்குப் பின் நிஜாம்-உல்-முல்க், முகலாயப் பேரரசர் முகம்மது ஷாவின் பிரதம அமைச்சராக இருந்தார் (1722 - 1724). ஆனால் அவரது உள்மனத்தில் இருந்த ஆசை, டெல்லி தலைமையிலிருந்து விடுபட்டு,

தக்காணத்தில் தனியே ஒரு ராஜ்ஜியத்தை அமைத்துக் கொண்டு சுதந்தரமாகச் செயல்பட வேண்டும் என்பதுதான்.

1724ல் அவர் தக்காண கவர்னர் பதவியைக் கேட்டு வாங்கிக்கொண்டார். அங்கே சென்று மேலும் சில பகுதிகளைத் தன் கட்டுப்பாடுக்குள் கொண்டு வந்து சுயாட்சி செய்ய ஆரம்பித்தார். நிஜாம்-உல்-முல்கின் இந்தப் போக்கு டெல்லியில் அதிருப்தியை ஏற்படுத்தியிருந்தது. காந்தேஷ் பகுதியின் கவர்னராக இருந்த முபாரிஷ் கான் என்பவரை, நிஜாமுக்கு எதிராகக் களமிறங்கினார். பேராரின் ஷாகர்கேல்டா (Shakarkhelda) என்ற இடத்தில் இருவருக்கும் போர் நடந்தது. முபாரிஷ் கான் கொல்லப்பட்டார். வெற்றி பெற்ற நிஜாம், முபாரிஷ் கானின் தலையை டெல்லிக்கு அனுப்பி வைத்தார். அதற்கு அர்த்தம், 'ஹைதராபாத் இனி என் ராஜ்ஜியம்.'

வலுவில்லாத முகலாயப் பேரரசர் முகம்மது ஷாவால் என்ன செய்ய இயலும்? ஹைதராபாதின் நிஜாமை வாழ்த்தி அவருக்கு 'அஸஃப் ஜா' என்ற பட்டத்தை வழங்கினார்.

இந்த வெற்றியின் மூலம் ஹைதராபாத், பேரார் பகுதிகளின் நிஜாம் ஆனார் அஸஃப் ஜா. முகலாயர்கள் ஆட்சிக்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட நிஜாம் என்ற பதவிக்குரிய அர்த்தம் சுதந்தரமான ஆட்சியாளர். கிட்டத்தட்ட இருபத்தைந்து வருடங்கள் ஆட்சி செய்த அஸஃப் ஜா, 1748ல் இறந்துபோனார். இடைப்பட்ட காலத்தில் மற்றவர்கள் யாரும் நுழையவோ, சீண்டவோ முடியாதபடி, தன் எல்லையை விரிவாக்கியும் பலப்படுத்தியும் இருந்தார் அஸஃப் ஜா.

அவருக்குப் பின் ஆட்சிக்கு வந்த அவரது மகன்களான நாஸிர் ஜங், முஷாஃபர் ஜங், சலாபத் ஜங் ஆகிய மூவரும் நிஜாமாக அங்கீகரிக்கப்படவில்லை. மூவரும் அரியணையில் ஏறினர். ஆனால் மூன்று பேரின் ஆட்சிக்காலமும் சேர்த்து மொத்தமே பதிமூன்று வருடங்கள்தாம்.

அடுத்ததாக ஆட்சிக்கு வந்தவர் அஸஃப் ஜாவின் நான்காவது மகனான ஆசாத் ஜங். 1762ல் அரியணை ஏறிய அவர், இரண்டாம் அஸஃப் ஜா என்று அழைக்கப்பட்டார். தங்கக் கட்டிகளை மாங்கு மாங்கென்று எண்ணிக் கொண்டிருக்கிறாரே கடைசி நிஜாம் ஒஸ்மான், அவர்தான் ஏழாம் அஸஃப் ஜா.

ஒஸ்மான்தான் ஹைதராபாத்தின் கடைசி நிஜாம் என்பது முதலாம் அஸஃப் ஜா காலத்திலேயே நிச்சயிக்கப்பட்ட ஒன்று என்று கூறுபவர்களும் உண்டு. அதற்கு ஆதாரமாக, ஒரு கதை சொல்வார்கள்.

ஒருமுறை அஸஃப் ஜா வேட்டைக்குச் சென்றபோது, நடுக் காட்டில் துறவி ஒருவரைச் சந்தித் தார். அவருக்குரிய மரியாதைகளைச் செய்தார். அதில் அகமகிழ்ந்த துறவி, 'மகனே, இந்தப் பாத்திரத்திலுள்ள குல்சாக்களை (ஒருவகை ரொட்டி) சாப்பிடு. உன்னால் எத்தனை முடியுமோ அத்தனை சாப்பிட வேண்டும்' என்றார்.

அஸஃப் ஜா, ஏழு குல்சாக்களை உள்ளே தள்ளினார். அதற்கு மேல் அவரால் முடியவில்லை. வாயைத் துடைத்து, பின் ஏப்பம் விட்டுவிட்டுத் துறவியை வணங்கினார்.

'நல்லது மகனே, நீ ஏழு குல்சாக்களை உண்டிருக்கிறாய். எனவே உன்னையும் சேர்த்து மொத்தம் ஏழு தலைமுறைகளுக்கு உன் வம்சத்தினர்தான் இந்தப் பகுதியை ஆள்வீர்கள்'

என்று அருள் புரிந்தார் அந்தத் துறவி. ஏழாவது நிஜாமான ஒஸ்மானின் காலத்தில்தான் ஹைதராபாத் சமஸ்தானம் இந்தியாவுடன் இணைக்கப்பட்டது. எல்லாம் துறவியின் அருளா, முதலாம் அஸஃப் ஜா எட்டு குல்சா சாப்பிட்டிருந்தால் இந்தியாவுக்கு சுதந்தரம் தாமதமாகக் கிடைத்திருக்குமா என்றெல்லாம் குழப்பிக் கொள்ளாமல், ஒஸ்மான் காலத் துக்குத் திரும்பி விடுவோம்.

ஆயிரத்து எழுநூற்று தொண்ணூற்று எட்டு, ஆயிரத்து எழுநூற்று தொண்ணூற்று ஒன்பது, ஆயிரத்து எந்நூறு...

ம்ஹூம், ஒஸ்மான் இன்னும் நிறையவே தங்கக் கட்டிகளை எண்ண வேண்டியது இருக்கிறது. அதனை எண்ணி முடித்துவிட்டு வெள்ளிக்கட்டிகளை வேறு எண்ணுவார். அதற்குள் ஒஸ்மானின் தந்தையான மெஹ்பூப் அலிகானின் கதையைப் பார்த்துவிட்டு வருவோம்.



முதலாம் அஸஃப் ஜா

ஹைதராபாத்தின் ஆறாவது நிஜாமாகப் பதவி யேற்றவர் மெஹ்பூப் அலிகான் (ஆறாம் அஸஃப் ஜா என்று அழைக்கப்பட்டார்). சமஸ்தானத்தின் வளர்ச்சியில் அதிகம் அக்கறை காட்டியவர் அவர். மக்கள் நலத் திட்டங்கள் பலவற்றை நிறைவேற்றினார். அதே சமயம் ஒரு மகாராஜா என்ற லட்சணத்துக்கேற்ப உல்லாசத்தின் உச்சகட்டங்களையும் அனுபவித்தவர்.

ஒருமுறை அணிந்த உடையை அவர் வாழ்நாளில் மறுமுறை அணிந்ததே கிடையாது. அந்த உடைகளைப் பாதுகாப்பதற்காகவே அரண்மனையில் அனகோண்டா போன்று நீண்ட அலமாரிகள் இருந்தன. உலக அளவில் என்னென்ன வாசனைத் திரவியங்கள் இருக்கிறது என்று தேடித் தேடிச் சேகரித்து பூசிக் கொண்டார். டிசைன், டிசைனாகத் தங்க, வைர, இன்னபிற உலோக நகைகளைச் சேகரித்தார். விதவிதமான கார்கள் வாங்கி ஓட்டி மகிழ்ந்தார். மற்ற மனிதர்களைப் போல அவருக்கும் இரண்டே இரண்டு கால்கள்தான் இருந்தன. ஆனால் செருப்புகள் மட்டும் ஆயிரக்கணக்கில் சேகரித்து வைத்திருந்தார். அப்புறம்? அப்புறமென்ன, பெரும்பாலான மகாராஜாக்கள் போலவே அவரும் பெண்கள் விஷயத்தில் பலவீன மானவராகத்தான் இருந்தார். பொழுது போகாதபோதெல்லாம் திருமணங்கள் செய்து கொண்டார்.

அவருடைய முதல் மனைவியின் பெயர் அமத் உஸ் - ஷெஹ்ருன்னிஸா பேகம். அவர்களுக்கு முதலில் பிறந்த மகனான ஃபரூக் அலிகான் சிறுவயதிலேயே இறந்துவிட்டான். இரண்டாவ தாக பிறந்த மகன்தான் ஒஸ்மான் அலிகான் (1886, ஏப்ரல் 6). பிறந்த இடம் ஹைதராபாத்தின் புரானி ஹவேலி அரண்மனை. இது பொதுவாகக் கூறப்படும் தகவல்.

ஆனால் ஒஸ்மான் அலிகான் பட்டத்து இளவரசர்தானா என்பது குறித்து அப்போது சர்ச்சை ஒன்று எழுந்ததாக, 'மகாராஜா' என்ற புத்தகத்தில், திவான் ஜர்மானி தாஸ் குறிப்பிட்டிருக்கிறார். ஜர்மானி தாஸ் இந்தியாவின் சுதந்தரத்துக்கு முன்பு பல்வேறு சமஸ்தானங்களில் பல்வேறு துறைகளில் பணியாற்றியவர்.

சரி, என்ன சர்ச்சை அது?

மெஹ்பூப் அலிகானுக்கு ஒரு மார்வாரியின் மனைவியோடு தொடர்பு இருந்தது. அந்தப் பெண்ணுக்கு ஒரு மகன் பிறந்தான். அந்தப் பையன், பட்டத்து இளவரசாக அறிவிக்கப்பட்டு அரண்மனையிலேயே வளர்க்கப்பட்டான். ஆனால் இளவரசருக்கு இருந்ததெல்லாம் ஒரு மார்வாரிக்குரிய குணங்கள். நடவடிக்கைகள்கூட அப்படித்தான் இருந்தன. வளர வளர அந்தக் குணம் அப்பட்டமாகவே வெளிப்பட்டது. குறிப்பாகப் பண விஷயத்தில்.

நிஜாமுக்கு அதில் நிறைய வருத்தம். திருத்தி விடலாம் என்று எவ்வளவோ முயற்சிகள் செய்து பார்த்தார். எந்தப் பிரயோசனமும் இல்லை. வேறு வழியில்லாமல் பிரிட்டிஷ் அரசுக்குத் தகவல் ஒன்றை அனுப்பினார்.

'ஒஸ்மான் அலிகான் என் சொந்த மகனே இல்லை. எனவே எனக்குப் பின் அடுத்த ஆட்சி உரிமை அவனுக்குக் கிடையாது. என்னுடைய பிற மனைவிகளுக்குப் பிறந்த சலாபத் ஜா, பாஷாலத் ஜாவும்தான் பட்டத்து இளவரசர்கள். அடுத்து நிஜாமாகத் தகுதி உடையவர்கள்.'

இந்த விஷயம் இளவரசர் ஒஸ்மானுக்கும் தெரிய வந்தது. தந்தை இப்படி நினைக்கிறாரே, நாமே விலகிவிடலாம் என்றெல்லாம் தியாகச் சிந்தனை அவருக்கு வரவில்லை. 'அப்பன் எப்ப சாவான்? அரியணை எப்பக் காலியாகும்?' என்று ஆர்வத்துடன் காத்திருக்க ஆரம்பித்தார். அதற்காகப் பிரார்த்தனைகள் செய்துகொண்டார்.

மெஹ்பூப் அலிகான் பக்கவாதத்தால் படுத்த படுக்கையாகிப் போனார். ஒஸ்மான் அவரை ஒருமுறை கூடச் சென்று பார்க்கவில்லை. 1911, டிசம்பர் 12ல் மெஹ்பூப் அலிகான், தனது ஃபலக்நுமா (Falaknuma) அரண்மனையில் இறந்துபோனார். அவரது இறுதிச் சடங்குகள் பிரம்மாண்டமாக நிறைவேற்றப்பட்டன. ஆனால் ஒஸ்மான் அதிலும் கலந்துகொள்ள வில்லை.

சடங்குகள் எல்லாம் முடிந்ததும் கருமமே கண்ணாக ஹைதராபாத்தின் ஏழாவது நிஜாமாகப் பதவியேற்றுக் கொண்டார் ஒஸ்மான் அலிகான். பதவியேற்றதும் செய்த முதல் காரியம், குடும்பத்தில் தனக்கு எதிராக இருந்தவர்களை எல்லாம் அடக்கி ஒடுக்கினார். அரண்மனையிலிருந்து வெளியேற்றினார்.

சலாபத் ஜாவும், பாஷாலத் ஜாவும் சும்மா இருப்பார்களா என்ன? பிரிட்டிஷ் அரசிடம் சென்று முறையிட்டார்கள்.

'இப்போது நிஜாமாகப் பொறுப்பேற்றுள்ள ஒஸ்மான், அதற்கு உரிமை உடையவரே அல்ல. நாங்கள்தான் பட்டத்து இளவரசர்கள். எங்கள் தந்தையே அதைக் கூறியுள்ளார். ஆதாரங்கள் இருக்கின்றன. எனவே அரியணையை மீட்டுத் தருமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள் கிறோம்.'

இந்த விவகாரம், இங்கிலாந்து அரசர் ஏழாம் எட்வர்ட்டின் பார்வைக்குச் சென்றது. எல்லாவற்றையும் ஆராய்ந்த எட்வர்ட், ஒஸ்மானுக்கு எதிராகத் தீர்ப்பளிக்க இருந்தார். ஆனால் ஒஸ்மானுக்கு உலக மகா அதிர்ஷ்டம். இந்த விவகாரம் தொடர்பான தீர்ப்பை அனுப்பும் முன்னரே ஏழாம் எட்வர்ட் பரலோகப் பதவியை அடைந்து விட்டார்.

ஒஸ்மான் பெருமூச்சு விட்டார். அதற்குப் பின் அந்த விவகாரம் கேட்பாரற்றுப் போனது. அந்த இடைவெளியைப் பயன்படுத்திக் கொண்ட ஒஸ்மான், தன் செல்வாக்கையும் செல்வத்தையும் பயன்படுத்தி, பிரிட்டிஷ் அரசின் நம்பிக்கைக்குரியவராகத் தன்னை அடையாளப் படுத்திக் கொண்டார். நிஜாம் பதவி காப்பாற்றப்பட்டது. இவை எல்லாம் திவான் ஜர்மானி தாஸ் கூறும் செய்திகள்.

மெஹ்பூப் அலிகான், தன் மகன் சலாபத் ஜாவுக்கு பம்பாயில் ஓர் அரண்மனையை (ஹைதராபாத் பேலஸ்) ஒதுக்கியிருந்தார். ஒஸ்மான் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி அதைப் பிடுங்கிக் கொண்டார். விஷயம் விவகாரமானது. சலாபத் ஜா, தன் அரண்மனையைத் திருப்பிக் கேட்டார்.

‘அரண்மனைக்குப் பதிலாக அதற்குரிய தொகையைத் தந்து விடுகிறேன்’ என்றார் ஒஸ்மான். கஷ்ட நிலையில் இருந்த சலாபத் ஜா, பணம் கிடைக்கிறதே என்று அதற்கு ஒப்புக் கொண்டார். அரண்மனையை மதிப்பிடப் பம்பாயைச் சேர்ந்த கௌவாஸ்ஜி ஜெஹாங்கிர் என்பவர் வந்தார்.

‘இவரை மடக்கி, அரண்மனையைக் குறைத்து மதிப்பிடச் சொல்லலாம்’ என்று திட்டமிட்டார் ஒஸ்மான். அதற்குரிய முயற்சிகளையும் மேற்கொண்டார். ஆனால் கௌவாஸ்ஜி அநியாயத்துக்கு நேர்மையானவர். ஒஸ்மானின் வலையில் விழாமல், அந்த அரண்மனையின் மதிப்பு பதினேழு லட்சம் என்று மதிப்பிட்டார்.

வேறு வழியில்லாமல் ஒஸ்மான், சலாபத் ஜாவுக்கு பதினேழு லட்சம் கொடுத்து அரண்மனையைத் தனதாக்கிக் கொண்டார். ஒரு விபத்தில் சலாபத் ஜா இறந்துபோனார் (1934, மார்ச்). அப்போது அவருக்கிருந்த சொத்துகளை எல்லாம் கைப்பற்றிக் கொண்டார் ஒஸ்மான். சரி, இன்னொரு சகோதரர் பாஷாலத் ஜா என்ன ஆனார்? அவர் மாதம் ஐயாயிரம் ரூபாய் மானியம் வாங்கிக் கொண்டு, ஒஸ்மானுக்கு அடங்கி வாழ்ந்து கொண்டிருந்தார்.

பத்தாயிரத்து நாலு, பத்தாயிரத்து ஐந்து, பத்தாயிரத்து ஆறு…

அய்யோ, ஒஸ்மான் அலிகான் இன்னமும் தங்கக் கட்டிகளை எண்ணி முடிக்கவே இல்லை. அடுத்து வெள்ளிக் கட்டிகள். பின்பு தன்னிடமிருக்கும் நகைகளை எல்லாம் சரி பார்ப்பார். அதற்குள் சேவல், அடுத்த நாளின் விடியலை அறிவித்துவிடும்.

சரி, நகைகளைச் சரிபார்க்க அவ்வளவு நேரம் ஆகுமா என்ன? ஒஸ்மானுக்கு ஆகத்தான் செய்யும். ஏனென்றால் அவர் ஒரு நகைப் பைத்தியம். எப்படியெல்லாம் நகை சேர்த்தார் என்று தெரிந்தால், ‘அடச்சே’ என்று மட்டுமே சொல்லத் தோன்றும்.



# 26

# துணைவி முப்பது ரூபாய்!

‘எவ்வளவுதான் தரமுடியும்?’

‘முப்பது ரூபாய்’

‘சரி, பணத்தைக் கொடுத்துவிட்டு அழைத்துச் செல்லுங்கள்’ என்று வியாபாரத்தை முடித்தார் ஒஸ்மான் அலிகான்.

பதவிக்கு வந்ததும் அவர் செய்த முக்கியமான காரியமாகச் சொல்லப்படுவது இதுதான். ஆறாவது நிஜாம் மெஹபூப் அலிகான் இறந்த பிறகு அவரது துணைவி களை விற்றுவிட்டார். ‘எனக்கு ஆகவே ஆகாத தந்தை, சேர்த்துக் கொண்ட துணைவிகளுக்கெல்லாம் நான் ஏன் சோறும் சிக்கனும் போட்டுக் கொண்டிருக்க வேண்டும்?’ என்ற எண்ணத்தால் நிகழ்த்தப்பட்ட சிக்கன நடவடிக்கை அது. சில துணைவிகளை விற்று, பணத்துக்குப் பதிலாக மாங்காய்களாகப் பெற்றுக் கொண்டார் என்றுகூடக் குறிப்புகள் இருக்கின்றன.

அநாவசியச் செலவுகளை எப்படியெல்லாம் தவிர்க்கலாம் என்ற சிந்தனையே ஒஸ்மானின் மனத்தில் எப்போதும் ஓடிக் கொண்டு இருக்கும். அதன் மாறுபட்ட பரிமாணங்களே பல விஷயங்களில் கஞ்சத்தனமாக வெளிப்பட்டன.

‘நிஜாம், உங்கள் சால்வை மிகவும் பழசாகிவிட்டது. புதிதாக ஒன்றை எடுத்துக் கொள்ளலாமே?’ என்றார் அமைச்சர் ஒருவர். அதற்கு ஒஸ்மான் அளித்த பதில், ‘எடுக்கலாம். ஆனால் நான் அதுக்குப் பதினெட்டு ரூபாய்தான் ஒதுக்கியிருக்கிறேன். புதிய சால்வை இருபது ரூபாய் ஆகிறதே.’

ஒருமுறை வைஸ்ராய் லின்லித்கோ, ஓஸ்மானைச் சந்தித்தபோது அவரது வாக்கிங் ஸ்டிக்கைக் கவனித்தார். இரண்டாக உடைந்த அது, ஒட்டப்பட்டு நூலால் சுற்றப்பட்டிருந்தது. அதை வைத்துக் கொண்டே எந்தவிதக் கூச்சமும் இன்றி வெளியிடங்களுக்குச் சென்று கொண்டிருந்தார் ஓஸ்மான். தன்னுடன் பேச வரும் ஒரு சமஸ்தானத்தின் நிஜாம், இப்படி ஒடிந்த ஸ்டிக்குடன் வருகிறாரே என்று வைஸ்ராய்க்குத்தான் கூச்சமாகப் போய்விட்டது. அடுத்தமுறை ஓஸ்மானைச் சந்தித்தபோது ஒரு புதிய உயர் தரமான வாக்கிங் ஸ்டிக்கைப் பரிசளித்தார். வாய் நிறையப் புன்னகை வழிய, அதனை வாங்கி வைத்துக் கொண்டார் ஓஸ்மான்.



வைஸ்ராய் லின்லித்கோ

அப்போதைய இந்திய அரசின் ஆலோசகராக வி.பி. மேனன் பணியாற்றிக் கொண்டிருந்தார். அவர் ஒருமுறை ஓஸ்மானைச் சந்திக்கச் சென்றார். பல்வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டு இருந்தனர். ஓஸ்மான் தன் சார்மினார் சிகரெட் பாக்கெட்டை எடுத்தார். மேனனிடம் நீட்டினார். அதுதான் அப்போதைய மலிவான சிகரெட். பாக்கெட் பன்னிரண்டு பைசாதான். பத்து சிகரெட் இருக்கும்.

மேனனுடைய பிராண்ட் வேறு. போயும் போயும் சார்மினாரைப் புகைத்து வாய் நாற்றத்துடனா அலைய முடியும் என்று யோசித்த அவர், 'வேண்டாம்' என்று மறுத்தார். ஓஸ்மான் வற்புறுத்தவெல்லாம் இல்லை. தம் வாயில் ஒரு சிகரெட்டை வைத்துப் பற்ற வைத்தார். மேனனுக்கும் வாய் நமநமத்தது. தன் சட்டைப் பையில் இருந்து விலையுயர்ந்த சிகரெட் பாக்கெட் ஒன்றை எடுத்து உடைத்தார்.

நாகரிகமாக ஓஸ்மானிடம் நீட்டினார். வாயில்தான் புகைந்துகொண்டிருக்கிறதே என்று மறுத்திருக்கலாம். ஆனால் ஓஸ்மான் அதிலிருந்து நான்கைந்தை எடுத்துத் தன் சார்மினார் பாக்கெட்டுக்குள் வைத்துக் கொண்டார். அறையிலிருந்து புகை கலைந்து முடிந்த சில நொடிகளில் அவர்களது சந்திப்பும் முடிந்தது.

சில நாள்களிலேயே இருவரும் மீண்டும் சந்தித்துக் கொண்டனர். பேச்சின் இடையே, ஓஸ்மான் தன் சார்மினார் பாக்கெட்டை எடுத்தார். மேனனிடமிருந்து எடுத்த புதிய பிராண்ட் சிகரெட்டுகள் எண்ணிக்கை குறையாமல் அப்படியே இருந்தன.

அதிகாரிகளோ விருந்தினர்களோ ஓஸ்மானை சந்திக்கச் சென்றால் அவர் உபசரிக்கும் விதமே தனியானது. வருபவர்களை உட்காரச் சொல்லுவார். அவர்கள் தனக்கு ஏதாவது கொண்டு வந்திருக்கிறார்களா என்று பார்ப்பார். எது கொடுத்தாலும் வாங்கி வைத்துக் கொள்வார். பேசத் தொடங்குவார்கள்.

சில நிமிடங்கள் கழித்து அரண்மனைப் பணியாள் கையில் ஒரு தட்டுடன் வருவார். அதில் முக்கால்வாசி நிரம்பிய நிலையில் இரண்டு கோப்பைகளில் டீ, இரண்டு பிஸ்கட்டுகள் மட்டுமே இருக்கும். ஆளுக்கு ஒரு கோப்பை டீ, ஒரே ஒரு பிஸ்கட். அவ்வளவுதான். பெட்டி பெட்டியாக தங்க பிஸ்கட் வைத்திருந்தால் என்ன, சாப்பிடக்கூடிய பிஸ்கெட்டை வீணாக்கக் கூடாது என்பது ஒஸ்மானின் உயரிய எண்ணம்.

இப்படிப் பல விஷயங்களில் கஞ்சத்தனமாக இருந்தார் என்றாலும் உல்லாசமாக இருக்க வேண்டிய நேரங்களில் அளவோடு உல்லாசமாக இருந்தார் ஒஸ்மான். அவர் தங்கியிருந்த கிங் கோதி அரண்மனையில் அவரது ஒவ்வொரு மாலைப் பொழுதும் ஓல்ட் மாங்க் உடன்தான் ஆரம்பிக்கும். அவ்வப்போது ஷாம்பெயின். இருக்கிறதே என்று இஷ்டத்துக்கு ஊத்திக் குடிக்க வெல்லாம் மாட்டார். அளவோடு ஊற்றி, ஆனந்தமாக உறிஞ்சுவார். கிளாஸில் ஒரு சொட்டு கூடத் தேங்கிவிடாமல் பார்த்துக் கொள்வார்.

யார் யாரோ தங்கள் இல்லத் திருமண விழாக்களுக்குப் பத்திரிகை அனுப்புவார்கள், நேரில் வந்தும் அழைப்பார்கள். எல்லாத் திருமணங்களுக்கும் போக முடியுமா என்ன? சிலவற்றைத் தவிர்த்துவிட நேரிடும். சிலவற்றுக்குப் போக முடியாத சூழ்நிலை ஏற்பட்டுவிடும். ஆனால் ஒஸ்மான், இந்த விஷயத்தில் மிகவும் நேர்மையானவர்.

யாராவது திருமணம் என்றோ, நிக்காஹ் என்றோ, வெட்டிங் என்றோ அழைப்பு விடுத்தால் போதும். மகிழ்ச்சியுடன் அவர்களது அழைப்பை ஏற்றுக் கொள்வார். எப்போது, எங்கே, எத்தனை மணிக்கு என்றெல்லாம் தெளிவாகக் கேட்டறிந்து கொள்வார். ஒப்புக்கு அல்ல, ‘கண்டிப்பாகக் கலந்துகொள்கிறேன்’ என்று நிஜமாகவே வாக்களிப்பார்.

திருமண வீட்டுக்காரர்களுக்கும் ஏக குஷியாக இருக்கும். ‘பார்த்தியா, நம்ம வீட்டுக் கல்யாணத் துக்கு நிஜாம் வரப்போறாராம். நாம கொடுத்து வைச்சவங்க. ஏற்பாடு தடபுடலா இருக்கணும். அசத்தோ அசத்துன்னு அசத்திடணும்’ என்று சுறுசுறுப்பாகக் களமிறங்குவார்கள்.

அந்தத் திருமண நாளும் வரும். ஒஸ்மான் தயாராவார். ஒரு கல்யாண வீட்டுக்குச் செல்லப் போகிறோமே, புதிதாக உடை அணியலாமா, ஜிகுஜிகுவென பட்டு உடை அணியலாமா என் றெல்லாம் அவருக்குத் தோன்றவே தோன்றாது. முந்தைய நாள் என்ன உடை அணிந்திருந்தாரோ, அதனுடனேயே கிளம்பிவிடுவார். ஒரு செட் உடையை (பெரும்பாலும் பைஜாமா) அதிகபட்சம் ஒரு வாரத்துக்காவது அணிந்துகொள்வதென்பது ஒஸ்மானின் உன்னதப் பழக்கம்.

திருமணம் நடக்கும் இடத்தில் உற்றார், உறவினர்கள், நண்பர்கள் எல்லோரும் நிஜாமின் வருகைக்காகப் பளபளா உடையில் பல்லிளித்துக் காத்திருப்பார்கள். ஒஸ்மான் தன் காரில் வந்து இறங்குவார். பேண்டு, வாத்தியங்கள் ஸ்பெஷல் உற்சாகத்துடன் முழங்கும். நேராக மணமக்களை நோக்கிச் செல்வார். அவர்கள் நிஜாமின் பொற்பாதங்களை நோக்கி வளைவார்கள்.

‘சொன்ன மாதிரியே நிஜாம் வந்துட்டாரே, கல்யாணப் பரிசா அள்ளிக் கொடுக்கப் போறாரு. ஆனா அவரு கையில ஒண்ணும் கொண்டு வரலையே. ஒருவேளை தான் போட்டிருக்குற நகை எதையாவது கழட்டிக் கொடுத்துடுவாரோ? அவ்வளவு நகைகூட போட்டுட்டு வரலையே. வேற என்னதான் கொடுப்பாரு?’ என்று கூடியிருப்போர் நெஞ்சம் குறுகுறுக்கும்.

‘என்னப்பா எவ்வளவு வரதட்சணை?’ - நிஜாம் மெதுவாக மணமகள் வீட்டாரிடமோ அல்லது மணமகன் வீட்டாரிடமோ கேட்பார். ‘என்னங்க நீங்க? ஏழை வீட்டுக் கல்யாணம். எங்களால முப்பது சவரன்தான் போட முடிஞ்சுது. நிஜாம் வாயால இதையெல்லாம் கேட்கலாமா?’ என்று கூனிக்குறுகிப் பதில் சொல்லுவார்கள்.

‘எங்க இருக்கு அந்த நகைகள் எல்லாம்?’ - ஒஸ்மான் விடாமல் கேட்பார்.

‘எல்லாம் கல்யாணப் பொண்ணு போட்டிருக்கே. அந்த நகைகள்தான்.’

மணப்பெண் அணிந்திருக்கும் நகைகளைத் தம் கண்களால் எடை போடுவார் ஒஸ்மான்.

‘எங்க அந்தக் கழுத்து நெக்லஸ் நல்லாயிருக்கே. கொடு பார்க்கலாம்.’ நிஜாமுக்கே இந்த நகை பிடித்திருக்கிறதாமே என்று மணப்பெண் வேகவேகமாக அந்த நெக்லஸைக் கழட்டிக் கொடுப்பாள். ‘நாலு பவுனுங்க’ என்பார் மணப்பெண்ணின் தந்தை, ஆர்வமுடன்.

நெக்லஸைக் கையில் வாங்கிப் பார்க்கும் நிஜாம், அதை அப்படியே தன் சட்டைப் பைக்குள் போட்டுக் கொள்வார். ‘பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்க!’ மணமக்களை மனதார வாழ்த்துவார். மேற்கொண்டு எதுவும் பேசாமல் அங்கிருந்து கிளம்பி விடுவார். திருமணத்துக்கு அழைத்தவர்கள் தலைசுற்றலோடு நிற்பார்கள்.

நிஜாம் எதற்கு அந்த நெக்லஸை எடுத்துக் கொள்ள வேண்டும்? ஒரு மெகா சமஸ்தானத்தின் நிஜாம், உலகப் பணக்காரர், கௌரவம், கருமாந்திரம் எல்லாம் பார்க்காமல், கூப்பிட்ட மரியாதைக்குத் தேடி வந்து மணமக்களை வாழ்த்தியிருக்கிறார். அதற்குப் பதில் மரியாதையாக ஒரு நகையைக் கூட எடுத்துக் கொள்ளக்கூடாதா? என்ன, இருப்பதிலேயே விலையுயர்ந்த நகையை எடுத்துக் கொள்வார். அப்படி ஒரு பழக்கம் அவருக்கு. இது தப்பா?

இந்த வகையில் ஒஸ்மான் கணக்கில் சேர்ந்த நகைகள் ஏராளம். பாவம், அவரும் என்னதான் செய்வார்? எல்லா விஷயத்திலும் கஞ்சத்தனமாக இருந்த அவரால் பெண்கள் விஷயத்தில் மட்டும் அப்படி இருக்க முடியவில்லை. எண்ணிக்கை ஒன்றில்தான் ஆரம்பித்தது. சச்சின் டெண்டுல்கர் ரன் அடிப்பது போல, மளமளவென நூறையும் தாண்டிச் சென்றுவிட்டது. கிட்டத்தட்ட இருநூறு துணைவிகள் என்றொரு தகவல் உண்டு. எல்லாத் துணைவிகளையும் சந்தோஷமாக வைத்திருக்க வேண்டியது ஒரு நிஜாமின் தார்மீகக் கடமையல்லவா?

கழுத்தை நன்றாக இழுத்துப் போர்த்தும் அளவுள்ள நெக்லெஸ், டஜன் கணக்கில் வளையல் கள், ஏராளமான தோடுகள், கூந்தலில் சூடும் நகைகள், இடுப்பில், கைகளில், கால்களில் அணியத் தேவையான நகைகள் - தங்கம், வைரம், முத்து, பவளம், மரகதம் போன்றவற்றால் ஆனவை இது எல்லாம் சேர்ந்தது ஒரு செட். தன்னுடைய எல்லாத் துணைவிகளுக்கும் தனித்தனியாக ஒரு செட் நகைகளை வழங்கியிருந்தார் ஒஸ்மான். இவைபோக குழந்தை களுக்கான நகைகள் தனி.

இது இது இன்னாருக்குரிய நகைகள் என்று சொல்லியிருந்தாரே தவிர, அவர்கள் ஒஸ்மானை மீறி அந்த நகைகளை அணிந்து அனுபவிக்க முடியாது. ஒவ்வொருத்தருக்கான நகைகளையும் தனித்தனியாகப் பிரித்து, தனித்தனிப் பெட்டிகளில் வைத்துப் பாதுகாத்தார். அவரை மீறி எந்தப் பெட்டியிலிருந்தும் எந்த நகையும் காணாமல் போக முடியாது. பெட்டி மாறிப் போகவும் முடியாது.

'மாம்பழ டிசைன் பச்சைக் கல் நெக்லஸ், அது என் முப்பத்தேழாவது துணைவிக்கானது. அதில் இரண்டு பச்சைக் கற்கள் விழுந்திருக்கும். அதன் எடை இத்தனை கிராம்... அப்புறம் அந்த நெக்லஸ் இருக்குற பெட்டியிலயே ஒரு ஜோடி சிவப்புக்கல் தோடு இருக்கு. அதுல ஒரு தோடுக்கான திருகாணி கொஞ்சம் லூஸா இருக்கும்' - இப்படி ஒவ்வொரு நகை பற்றிய பயோ டேட்டா ஒஸ்மானுக்கு அத்துப்படி.

நிஜாமின் பிரத்யேக நகைகள் என்று பல இருந்தன. வைரம் பதித்த சட்டைப் பட்டனிலிருந்து தங்கத்தால் இழைத்த காலணி வரை அதன் லிஸ்ட் தனி. அவற்றுள் முக்கியமானது தலைப் பாகையோடு பொருத்துவதற்கேற்ற மரகதப் பதக்கம். இன்னொன்று வைரக்கற்கள் பதிக்கப் பட்ட தங்கத்தாலான இடுப்பு பெல்ட். அதன் எடை ஒன்றரைக் கிலோ.

நகைப்பெட்டிகள் இருக்கும் கஜானா அறைக்குச் செல்ல யாருக்கும் அனுமதி கிடையாது. கஜானாவின் பாதுகாப்பு அதிகாரிகூட ஒஸ்மானின் அனுமதி இன்றி உள்ளே நுழைய முடியாது. அத்தனைச் சாவிகளும் ஒஸ்மானிடம்தான் இருக்கும். ஏதாவது ஒரு நகைப்பெட்டி லேசாக நகர்ந்திருந்தால்கூடக் கண்டுபிடித்துவிடுவார். சந்தேகம் சாமியாட, பாதுகாப்பு அதிகாரியைப் போட்டுப் பாடாகப் படுத்திவிடுவார்.

என்னென்ன விதத்தில் எத்தனை எத்தனை நகைகள் இருக்கின்றன, எவை புதிதாக வந்தவை, எவை பரம்பரை நகைகள், முகலாயர் காலத்து நகைகள் என்னென்ன - எல்லாம் அடங்கிய ஒட்டுமொத்த லிஸ்ட், ஒஸ்மானின் சட்டைப் பையில் எப்போதுமே இருக்கும். புதிதாக எதுவும் நகை சேர்ந்தால் உடனுக்குடனே லிஸ்டை அப்டேட் செய்து கொள்வார். நகை விஷயத்தில் அவ்வளவு நேர்த்தியாக இருந்த ஒஸ்மானுக்கும் அடி சறுக்கியது.



# 27

# உலகின் ஏழாவது பெரிய வைரத்தின் கதை

சௌமஹல்லா அரண்மனை. ஒஸ்மானின் தந்தை மெஹபூப் அலிகான் வாழ்ந்து அனுபவித்த இடம். அங்கிருந்து வாக்கிங் போகும் தூரத்தில்தான் ஹைதராபாத்தின் புராதனச் சின்னமான சார்மினார். போகும் வழியிலேயே மெக்கா மசூதி. இப்படிப்பட்ட வசதிகள் கொண்டிருந்ததால், பிற அரண்மனை களைவிட மெஹபூப் கானுக்கு சௌமஹல்லா அரண்மனை மிகவும் பிடித்து இருந்தது.

தம் தந்தையை விரும்பாததாலோ என்னவோ, ஒஸ்மான் அலிகானுக்கு அந்த அரண்மனையில் வாழ விருப்பமில்லை. கிங் கோதி அரண்மனைக்குத் தன் ஜாகையை மாற்றிக் கொண்டார். ஆனாலும் அவ்வப்போது சௌமஹல்லா சென்று உலாத்திவிட்டு வருவார்.

அன்றும் அப்படித்தான் உலாத்திக் கொண்டிருந்தார். ஓர் அறையில் ஓரமாக ஒரு ஜோடி செருப்புகள் கிடந்தன. எந்தப் பொருளும் வீணாகப் போகிறதென்றால் ஒஸ்மானால் தாங்க முடியாதே! அருகில் சென்று பார்த்தார். அவை தம் தந்தையின் செருப்புகள் என்று தெரியவந்தது. தந்தையோடு பொருந்திப் போகாவிட்டால் என்ன, தந்தையின் செருப்பு, தம் கால்களுக்குப் பொருந்திப் போனால் உப யோகித்துக் கொள்ளலாமே என்ற உயரிய எண்ணத்தில், அவற்றை அணிய முற்பட்டார்.

ஒரு செருப்பில் ஏதோ தட்டுப்பட்டது. அந்தச் செருப்பைக் கையில் எடுத்து, தட்டுப்பட்ட பொருளை வெளியே எடுத்துப் பார்த்தார். அது மினுமினுத்தது.


சௌமஹல்லா அரண்மனை

‘என்னடா இது? ஜொலிக்கிறதே, வைரமாக இருக்குமோ? சேச்சே, இருக்காது. அப்படிப்பட்ட பொருளாக இருந்தால், என் தந்தை என்ன செருப்பிலா பதுக்கி வைத்திருக்கப் போகிறார்? வாய்ப்பே இல்லை’ - ஒரு தீர்மானத்துக்கு வந்த ஒஸ்மான், மேற்கொண்டு அலட்டிக் கொள்ளா மல் அதனைத் தன் பைஜாமாவின் பைக்குள் போட்டுவிட்டு நடையைக் கட்டினார்.

அந்தப் பொருள் உண்மையிலேயே வைரம்தானா?

ஆம். உலகின் ஏழாவது பெரிய வைரம். அதன் பெயர் ஜேக்கப் வைரம். எடை 184.5 காரட், அதாவது 36.9 கிராம்.

இந்த இடத்தில் ஒரு ‘டொட்டடொய்ங்’ மியூசிக் போட்டு, காலச் சக்கரத்தைப் பின்னோக்கிச் சுழற்றி, ஜேக்கப் வைரத்தின் பூர்வாங்கக் கதையைப் பார்க்க ஆரம்பிக்கலாம்.

ஆப்பிரிக்காவின் ஒரு சுரங்கத்தில் கண்டெடுக்கப்பட்டது இந்த வைரம். அழகாக வைரத்துக்கே உரிய வடிவத்தில் வெட்டுவதற்கு முன் 400 காரட் இருந்தது. பின் ஐரோப்பாவுக்கு அனுப்பப் பட்டு வடிவமைக்கப்பட்டது. சரி, அதற்கு ஜேக்கப் வைரம் என்ற பெயர் எப்படி வந்தது? ஜேக்கப்தான் அந்த வைரத்தை வெட்டி எடுத்தாரா? இல்லை பெற்றெடுத்தாரா? இல்லை, வடிவமைத்துக் கொடுத்தாரா? சௌமஹல்லா அரண்மனையை நோக்கி ஜேக்கப்பே வந்து கொண்டிருக்கிறார். பார்த்துவிடலாம்.

1891. அது ஒரு கோடைக்காலம். உணவெல்லாம் முடிந்த பகல் நேரம். சூரியன் கொஞ்சம் அதிகபட்சமாகத் திறமைக் காட்டிக் கொண்டிருந்தது. நாக்கு லேசாக வெளியே தள்ள இரண்டு குதிரைகள், சௌமஹல்லா அரண்மனை வாசலில் வந்து நின்றன. அந்த வண்டியிலிருந்து இறங்கினார் அலெக்ஸாண்டர் மால்கன் ஜேக்கப். துருக்கியர். நாற்பதைத் தாண்டிய வயது. ஆள் கொஞ்சம் குள்ளம்தான். கருமையான தலைமுடி. எடுப்பான உடை. மிடுக்காக நடக்க ஆரம்பித்தார்.

அரண்மனைக்கு அடிக்கடி வந்து செல்பவர் என்பதால் வாயிற்காவலர்கள் யாரும் எதுவும் தடுக்கவில்லை, கேட்கவுமில்லை. ஒரு கடல் பயணத்தின் போது, கப்பல் உடைந்துவிட, பம்பாயில் கரை ஒதுங்கியவர் ஜேக்கப். கையில் சல்லிக்காசு இன்றி பம்பாய் நகரில் சுற்றித் திரிந்தார். பின் ஹைதராபாத்துக்குச் சென்று பிழைப்பு நடத்த ஆரம்பித்தார். சின்னச் சின்ன வேலைகள். பின் ஒரு நகை வியாபாரியிடம் வேலை கிடைத்தது. சில வருடங்களில் ராம்பூர் சமஸ்தானத்தின் நிஜாமுக்கு, நகைகள் விற்கும் ஏஜெண்டாகச் செயல்பட்டார். சில காலம் தோல்பூர் சமஸ்தான மகாராஜாவுக்கும் பணியாற்றினார். வாழ்க்கை வசதி மிகுந்ததாக மாறியது.

ஹைதராபாத் நிஜாம் மெஹபூப் அலிகானின் நட்புக் கிடைத்தது. அவருக்கு நகைகள் வாங்கிக் கொடுக்கும் ஏஜெண்டாகப் பணியாற்ற ஆரம்பித்தார் ஜேக்கப். அன்றைய தினத்திலும் அந்த வேலையாகத்தான் வந்திருந்தார். மெஹபூப் வரவேற்றார்.

'என்ன ஜேக்கப், எப்படி இருக்கிறீர்கள்? பார்த்து நீண்ட நாள்கள் ஆயிற்றே! என்ன விஷயம்? வெறும் கையோடு வர மாட்டீர்களே?'

ஜேக்கப் தன் கோட் பாக்கெட்டுக்குள் கையை விட்டார். அந்த வைரக் கல்லை வெளியே எடுத்தார். மெஹபூப் தன் கைகளில் வாங்கிப் பார்த்தார். அவரது கருவிழிகளில் வைரம் ஜொலித்தது.

'நிஜாம், இது மாதிரிக் கல்தான். உண்மையான வைரம் இங்கிலாந்தில் இருக்கிறது. தாங்கள் சரி என்று சொல்லிவிட்டால் வரவழைத்துவிடலாம். விலை நாற்பத்தாறு லட்சம்.'

'அதற்கென்ன, வாங்கிவிட்டால் போயிற்று. முதலில் அசல் வைரக் கல்லை வரவழையுங்கள். பார்த்துவிட்டு, திருப்தியாக இருந்தால் பணம் கொடுக்கிறேன்.'

'வியாபாரி இங்கிலாந்தில் இருக்கிறார். எனவே தொகையில் பாதியை நீங்கள் கட்டி விட்டால், வைரக்கல்லை வரவழைப்பதில் பிரச்னை இருக்காது.'

மெஹபூப் சம்மதிக்க, ஜேக்கப் அங்கிருந்து கிளம்பினார். அவரது முகத்தில் வியாபாரம் வெற்றிகரமாக முடிந்துவிட்ட திருப்தி. இங்கிலாந்து வியாபாரியை உடனே தொடர்பு கொள் வது எப்படி என்ற யோசனையுடன் தன் குதிரை வண்டியில் ஏறினார்.

அவர் அங்கிருந்து வெளியேறியதும், நிஜாமின் உதவியாளர் டெனிஸ் பிட்ஸ்பேட்ரிக் பேச ஆரம்பித்தார். 'நிஜாம், ஒரு விஷயம் சொன்னால் தப்பாக எடுத்துக் கொள்ளக்கூடக் கூடாது. ஏற்கெனவே நம்முடைய கஜானாவில் நகைகள் குவிந்து கிடக்கின்றன. உலகிலேயே நீங்கள் தான் அதிக வைரக் கற்களை வைத்திருக்கிறீர்கள். எதற்காக மேலும் ஒன்றை அநாவசியமாக வாங்க வேண்டும். அதுவும் இவ்வளவு விலை கொடுத்து...'

சிறிது யோசித்த நிஜாம், '..ம், நீ சொல்வதும் சரிதான்' என்று சொல்லிவிட்டு நகர்ந்தார். சில மாதங்கள் ஓடின. ஜேக்கப், நிஜாமின் வார்த்தைகளை நம்பி வைரக் கல்லை வரவழைத்திருந்தார். அதற்காக தன் பணத்திலிருந்து இருபத்து மூன்று லட்சத்தை இங்கிலாந்து வியாபாரியின் கணக்கில் கட்டியிருந்தார்.

செப்டம்பர் மாதம். மழை லேசாகத் தூறிக்கொண்டிருந்தது. சௌமஹல்லா அரண்மனை வாசலில், ஜேக்கப் தன் குதிரை வண்டியில் இருந்து இறங்கினார். உற்சாகமாக உள்ளே

சென்றார். மெஹபூபைப் பார்த்து, பெருமையுடன் அந்த அசல் வைரக் கல்லை நீட்டினார். சுரத்தின்றி அதைப் பார்த்த அவர், என்ன என்று தன் புருவங்களைக் கேள்விக்குறியாக்கினார்.

'நிஜாம், சில மாதங்களுக்கு முன் வந்து காண்பித்தேனே. இது அசல் வைரக் கல். இங்கிலாந்திலிருந்து வரவழைத்துள்ளேன்.'

அதனை அலட்சியமாகக் கையில் வாங்கிப் பார்த்த மெஹபூப், உதட்டைப் பிதுக்கினார். 'இது, நீர் காட்டிய மாதிரி வைரக்கல்லின் வடிவத்திலேயே இல்லையே. வேறு மாதிரியல்லவா இருக்கிறது. எனக்கு வேண்டாம்' - சுருக்கமாக முடித்துக் கொண்டார். ஜேக்கப்புக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்னென்னமோ பேசிப் பார்த்தார். மெஹபூப் சட்டை செய்யவில்லை. காற்று இறங்கிய பலூனாக ஜேக்கப் அரண்மனையிலிருந்து வெளியே வந்தார்.

வேறு வழியில்லை. இங்கிலாந்து வியாபாரியிடம்தான் பேசிப் பார்க்கவேண்டும். 'அய்யா, வியாபாரம் புஸ்ஸாகிவிட்டது. என்னோட பணத்தைத் தயவுசெஞ்சு திருப்பித் தந்துடுங்க. நானும் வைரத்தைத் திருப்பி அனுப்பி வைக்கிறேன்.' சொல்லிப் பார்த்தார். கெஞ்சிப் பார்த்தார். இரண்டு மிமீ அழுதுகூட பார்த்தார். அந்த இங்கிலாந்து வியாபாரி நம்பவில்லை. ஜேக்கப் மீது பிராது கொடுத்துவிட்டார். 'அந்த ஆளு என்னோட வைரக்கல்லை வித்துத் தர்றதா சொல்லிட்டு, இப்போ ஆட்டையப் போடப் பாக்குறான்.'

1891லேயே செப்டம்பர் 11, மோசமான நாளாகிப் போனது ஜேக்கப்புக்கு. அன்று அவர் கைது செய்யப்பட்டார். அவர்மீது மோசடி வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. அந்த வைரம் பறிமுதல் செய்யப்பட்டு, கல்கத்தாவிலுள்ள ஒரு வங்கியில் பாதுகாப்பாக வைக்கப்பட்டது. வழக்கு விசாரணை கல்கத்தா உயர் நீதிமன்றத்தில் விசாரணைக்கு வந்தது. மெஹ்பூப் அலி கானும் விசாரணையில் ஒரு சாட்சியாக, கல்கத்தா வர வேண்டும் என்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

'ஜூஜூபி மேட்டரு, இதுக்கெல்லாம் நான் கோர்ட்டுல கூண்டு ஏறி நிக்கணுமா? என் கௌரதை என்னாவறது? நான் தனி ஆளு அல்ல. நான் கல்கத்தாவுக்கு வரணுமுன்னா, என்கூட மனைவிங்க, துணைவிங்க, சேர்த்துக்கிட்டவங்க, இணைச்சுக்கிட்டவங்கன்னு குத்துமதிப்பா ஆயிரம் தலைங்க வருவாங்க. அதுக்கான செலவெல்லாம் யாராவது கொடுப்பாங்களா?' இந்த ரீதியில் கேள்வி கேட்டார் நிஜாம். தனக்குப் பதிலாக தன் உதவியாளர் டெனிஸை கல்கத்தாவுக்கு அனுப்பினார்.

'எங்க நிஜாமு இந்த கேஸுல கண்டிப்பா சாட்சி சொல்லணும்னா, நீங்க அங்க வந்து விசாரிச்சுக்கோங்க' என்று கல்கத்தா நீதிமன்றத்தில் கேட்டுக் கொண்டார் டெனிஸ். 'The Imperial Diamond Case' என்று பெயரிடப்பட்ட அந்த வழக்கு விசாரணைக்காகச் சிறப்பு கமிஷன் ஒன்று அமைக்கப்பட்டது. அவர்கள் ஹைதராபாத்துக்குச் சென்று, நிஜாமிடம் அப்பாயிண்ட்மெண்ட் வாங்கி, அவரது வாக்குமூலத்தைப் பெற்றுக் கொண்டனர். பின்பு வழக்கு மீண்டும் கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் விசாரணைக்கு வந்தது. பலர் விசாரிக்கப்பட்டனர். ஜேக்கப்பும் விசாரிக்கப்பட்டார்.

'கனம் கோர்ட்டார் அவர்களே! என் கட்சிக்காரர் ஜேக்கப், இதே தொழிலில் பல வருடங்கள் ஈடுபட்டுள்ளார். இதற்கு முன்னர் பலமுறை ஹைதராபாத் நிஜாமுக்கு நகைகள் வாங்கிக் கொடுத்துள்ளார். ஒரு பிரச்னையும் எழுந்ததில்லை. யாரையும் ஏமாற்ற வேண்டிய அவசியம் அவருக்கு இல்லை. அவரே நல்ல வசதியுடன்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அய்யா,


ஜேக்கப் வைரம்

உங்களுக்கே தெரியும். நிஜாமிடம் இல்லாத நகைகளா? உலகின் பெரும் பணக்காரர். அவர் ஒரு வைரம் வாங்குவதாக வாக்கு கொடுக்க மாட்டாரா என்ன?' இப்படி ஜேக்கப்பின் வக்கீல் தன் வாதங்களை வாட்ட சாட்டமாக எடுத்து வைத்தார். அது எடுபட்டது. 1891ன் கிறிஸ்துமஸுக்கு இரண்டு தினங்களுக்கு முன்பாக ஜேக்கப் விடுதலை செய்யப்பட்டார்.

நிஜாம் சாட்சியாக நேரில் ஆஜர் ஆகாததைக் கண்டித்த நீதிமன்றம், அவர் சார்பாக சிறப்பு கமிஷன் சொன்ன வாதங்களைத் தள்ளுபடி செய்தது. மெஹபூப் அதைக் கண்டுகொள்ளவில்லை. 'நீங்க என்னடா எனக்குத் தீர்ப்பு சொல்லுறது? நான் கூட்டுறேன்டா பஞ்சாயத்தை' என்று ஹைதராபாத்திலேயே ஊர்ப் பெருசுகளை எல்லாம் அழைத்து ஒரு கூட்டத்தைக் கூட்டினார்.

அதன்படி, ஜேக்கப்புக்கான நிதீமன்றச் செலவுகளை மட்டும் நிஜாம் ஏற்றுக் கொள்வதாக அறிவிக்கப்பட்டது. வைரம்? அது நிஜாம் மெஹபூப் அலிகானுக்கே சொந்தம் என்று தீர்ப்பு அறிவிக்கப்பட்டது.

வைரத்தின் விலையில் பாதியான இருபத்து மூன்று லட்சத்தை, நிஜாம் அந்த இங்கிலாந்து வியாபாரிக்குச் செலுத்தினார். வைரம் நிஜாமிடம் ஒப்படைக்கப்பட்டது. அதைக் கையில் வாங்கிய மெஹபூபுக்கு மனம் உறுத்தியது.

'என்னடா இது? ராசியில்லாத வைரம். என்மீது வழக்கு தொடுக்க வைத்த வைரம். சனியன். வேண்டாம் என்றாலும் வந்து ஒட்டிக் கொண்டுவிட்டது. தூக்கிப் போட முடியாது. இதை வைத்துக் கொண்டு என்ன செய்ய?' பழைய துணி ஒன்றில் சுற்றி, அழுக்கடைந்த மேசை ஒன்றில் போட்டார். அவர் இறுதி வரை, ஜேக்கப் வைரத்தை தம் கஜானாவில் சேர்க்கவே இல்லை.

தம் வாழ்வில் பல கருப்பு நாள்களைக் கொடுத்த அந்த நிறமில்லாத வைரத்தை ஜேக்கப், அதற்குப் பின் பார்க்கவே இல்லை. ஓரேடியாக நொறுங்கிப் போனார். அவரது வியாபாரம் நொடிந்து போனது. அடுத்த முப்பது ஆண்டுகளுக்கு இந்த அடியில் இருந்து எழவே முடியாத அவர், 1921ல் ஒரேடியாக உறங்கிப் போனார்.

அந்த ஜேக்கப் வைரத்தின் இன்றைய மதிப்பு நானூறு கோடி ரூபாய். இந்திய அரசின் வசம் உள்ளது. ஆனால் குப்பையைக் கூடக் கரன்சியாகப் பார்க்கும் ஒஸ்மானுக்கு, ஜேக்கப் வைரத்தின் உண்மையான மதிப்புத் தெரியவில்லை. செருப்பில் இருந்துதானே எடுத்தோம். ஏதோ சாதாரணக் கல் என்று நினைத்துவிட்டார்.

எனவே உலகின் ஏழாவது பெரிய வைரமான ஜேக்கப் வைரத்தினை, ஒஸ்மான் டேபிள் வெயிட்டாகப் பயன்படுத்தி வந்தார்.



# அன்று இரவு அந்தப்புரத்தில் நடந்தது என்ன?

புரண்டு புரண்டு படுத்தார் ஒஸ்மான் அலிகான். தூக்கம் வரவில்லை. அவரது காதில் தன் செயலாளர் சொல்லிய வார்த்தைகளே மீண்டும் மீண்டும் ரிவைண்ட் ஆகி ரிவைண்ட் ஆகி ஒலித்துக் கொண்டிருந்தன.

'நிஜாம், விஷயம் கேள்விப்பட்டீர்களா? கபுர்தலா சமஸ்தான மகாராஜா ஜெகத்ஜித் சிங் இருக்கிறாரே, அவர் புதிதாக ஒரு பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டிருக்கிறாராம். இந்தியப் பெண் அல்ல, ஸ்பெயின் நாட்டைச் சார்ந்தவள். நடிகையாம். கொள்ளை அழகாம். பனிக்கட்டியால் செய்து வைத்த சிற்பம்போல இருக்கிறாளாம். பார்த்தவர்களெல்லாம் வாய் ஓயாது பேசு கிறார்கள். அவள் அழகைக் காணப் பல மகாராஜாக்கள் கபுர்தலா சென்று வருகிறார்களாம். அவள் பெயர் கூட ஏதோ சொன்னார்களே... ஆங், பிரேம் கவுர்.'

இப்படி அநியாயத்துக்கு வருணிக்கிறானே? நிஜமாகவே அவ்வளவு அழகாக இருப்பாளா? இருக்கலாம். மகாராஜா ஜெகத்ஜித் சிங் ஒன்றும் சாதாரண ஆளில்லையே. தேர்ந்த ரசனைக்காரராயிற்றே. அவர் காதலித்துத் திருமணம் செய்து கொண்டிருக்கிறார் என்றால் நிஜமாகவே பேரழகியாகத்தான் இருப்பாள். எப்படி அவளைப் பார்ப்பது? ஒரு நடை கபுர்தலா சென்று வரலாமா?

கபுர்தலா சமஸ்தானம் பஞ்சாபைச் சேர்ந்தது. வசதியைப் பொருத்தவரை ஹைதராபாத்துக்குச் சற்றும் சளைக்காதது. இந்தியாவிலிருந்த பெரிய



மகாராஜா ஜெகத்ஜித் சிங்

சமஸ்தானங்களுள் ஒன்று. அதன் மகாராஜா ஜெகத்ஜித் சிங்கைப் பற்றி சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால், ஜெமினி கணேசனின் பட்டத்தைப் பறிக்க வேண்டியதிருக்கும். ம்.. அதேதான்.

அனிடா டெல்கடோ (Anita Delgado) என்ற பிரேம் கவுர், ஸ்பெயினைச் சேர்ந்தவள். இரண்டாவது பாராவில் வருணித்தது போலப் பேரழகி. வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவளல்ல. வயிற்றுப் பிழைப்புக்காகத் தன் சகோதரியோடு சேர்ந்து மேட்ரிட் (Madrid) நகரில் ஒரு தியேட்டரில் நடனமாடிக் கொண்டிருந்தாள். அங்கே அவளைக் கண்ட மகாராஜா ஜெகத்ஜித் சிங், லவ் செய்து அவளை இந்தியாவுக்கு அழைத்து கொண்டு வந்து ஐந்தாவது மனைவியாக்கிக் கொண்டிருந்தார்.

•

மகாராஜா ஜெகத்ஜித் சிங்கை, பிரேம் கவுருடன் ஹைதராபாத்துக்கு விருந்துக்கு அழைத்தால் என்ன? இதுதான் ஒஸ்மானின் யோசனை. அவர்கள் இங்கு வந்தால், என் இஷ்டத்துக்குத் திட்டம் போட்டுக் காய் நகர்த்தலாம். படபடவென ஆக வேண்டிய காரியங்களைப் பார்க்க ஆரம்பித்தார். ஜெகத்ஜித் சிங்குக்கு அழைப்பு அனுப்பினார்.

'தாங்களும் தங்கள் புது மனைவியும் ஹைதராபாத் சமஸ்தானத்துக்கு ஒருமுறை வந்து செல்லுங்களேன். எல்லா ஏற்பாடுகளும் செய்தாகிவிட்டது. எப்போது வருகிறீர்கள் என்று மட்டும் தகவல் அனுப்புங்கள்' ஜெகத்ஜித் சிங்குக்கு அப்போது அந்த அழைப்பில் வில்லங்கம் எதுவும் பிடிபடவில்லை.

அழைப்பை ஏற்றுக் கொண்ட அவர், மறு வாரமே ஹைதராபாத் கிளம்பி வந்தார், பிரேம் கவுரோடு. ஒஸ்மானுக்கு உள்ளுக்குள் ஏக குஷி. ஏற்பாடுகளை ஏக தடபுடலாகச் செய்திருந்தார். விருந்தினர்கள் தங்குவதற்குரிய மாளிகை ஆடம்பரமான அலங்காரங்களுடன் தயாராகியது. சர்வலோக கஞ்சப் பிரபு ஒஸ்மான் அலிகானா இப்படி? நெருடலாக இருக்கிறதே என்றெல்லாம் குழப்பிக் கொள்ள வேண்டாம். கஞ்சனாக இருந்தால் வஞ்சியின் நெஞ்சைக் கொள்ளை கொள்ள எந்தக் கொம்பனாலும் முடியாதே. அதற்குத்தான் ஒஸ்மான், தாற்காலிக தாராளப் பிரபுவாக அவதாரம் எடுத்திருந்தார்.

அத்தனை நாள்கள் அவளைப் பார்க்காமலேயே ஒருதலையாகக் காதல் கோட்டை கட்டிய ஒஸ்மான், பிரேம் கவுரைக் கண்ட முதல் நொடியிலேயே உருகிப் போனார். சம்பிரதாய வர வேற்பு, பேச்சுகள் எல்லாம் நிறைவுபெற்றன. 'இரவு உணவில் சந்திக்கலாம்' என்று சொல்லி விட்டு ஜெகத்ஜித் சிங், பிரேம் கவுருடன் ஓய்வெடுக்கச் சென்றார். ஒஸ்மானுக்குள் பிரேம் கவுர் ஜுரம் டிகிரி டிகிரியாக எகிறிக் கொண்டிருந்தது.

எப்படி அவளிடம் பேசலாம்? ஜெகஜ்ஜால ஜெகத்ஜித் அவளை ஒரு நிமிடம்கூடத் தனியாக விடமாட்டார் போலிருக்கிறதே. நேரடியாகப் பேசுவதற்கு வாய்ப்பில்லை. பொன்னுக்கு மயங்காத பெண் உண்டா என்ன? அதுதான் ஒரே வழி. கஜானா பக்கம் போனார் ஒஸ்மான்.

இரவு வேளை. எல்லோரும் வருவதற்கு முன்பாகவே ஒஸ்மான் உணவு அறைக்கு வந்தார். பிரேம் கவுர் உட்கார வேண்டிய இடம், நாற்காலி இதுதான் என்று ஒன்றைத் தேர்ந்தெடுத்தார். கை துடைக்கப் பயன்படுத்தப்படும் நாப்கினை எடுத்தார். அதனுள் ஒரு மரகத மோதிரத்தை வைத்துச் சுற்றினார். அந்த நாற்காலிக்கு நேரே இருந்த தட்டின் பக்கத்தில் அந்த நாப்கினை வைத்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தார்.

அவர்கள் வந்தார்கள். கவனமாக நாற்காலி பார்த்து பிரேம் கவுரை உட்கார வைத்தார் ஒஸ்மான். உணவு வகைகள் பரிமாறப்பட்டன. சாப்பிட்டு முடித்தார்கள். அவள் நாப்கினைத் தொடவே இல்லை. கிளம்பினார்கள். டென்ஷனுடன் அவர்களை வழியனுப்பிவிட்டு வந்து பார்ப்பதற்குள், பணியாளர்கள் உணவு மேசையைச் சுத்தம் செய்து முடித்திருந்தார்கள். அந்த நாப்கின் காணாமல் போயிருந்தது. அந்த இடத்தில் எதுவுமே சொல்ல முடியாத ஒஸ்மான், ரத்தக் கொதிப்புடன் தனது ஓய்வு அறைக்குச் சென்றார்.

மறுநாள். இரவு உணவு வேளை. இந்தமுறை, நாப்கினுக்குள் உள்ளே ஒரு ஜோடி மரகதத் தோடுகள். 'இதனைக் கவனமாக எடுத்துப் பார்க்கவும்' - என்று நாப்கின் மேல் எழுத்துகள்.

திட்டம் பலித்தது. மெல்ல அதனைப் பிரித்துப் பார்த்த பிரேம் கவுர், தோடுகளைக் கையில் எடுத்துக் கொண்டு, ஒஸ்மானைப் பார்த்தாள். அவர் மையமாகப் புன்னகை செய்தார். ஜெகத்ஜித் சிங், ஒரு பெக் அடித்துவிட்டுப் பேச ஆரம்பித்தார். 'நாளை கிளம்பலாம் என்று இருக்கிறோம்.' ஒஸ்மான் விட்டுவிடுவாரா என்ன! 'வாய்ப்பே இல்லை. இன்னும் குறைந்த பட்சம் ஒரு வாரமாவது இருந்துவிட்டுத்தான் போக வேண்டும் நண்பரே' பாசத்தைப் பக்குவமாகப் பிழிந்து சம்மதிக்க வைத்தார்.

மறுநாள். இரவு உணவு வேளை. நாப்கினுக்குள் தலையை அலங்கரிக்கும் ஒரு பதக்கம் இருந்தது. அதற்கடுத்த நாள் நெக்லஸ். ஆயிரம் நகைகள் இருந்தால் என்ன, புதிதாக ஒரு நகை வாங்கிக் கொடுத்தால் பெண்கள் என்ன வேண்டாம் என்றா சொல்லப்போகிறார்கள். இன்று என்ன பரிசு இருக்கப் போகிறதோ என்று ஒவ்வொரு நாளும் பிரேம் கவுருக்கு ஆர்வம் அதிகரித்துக் கொண்டே போனது. ஒவ்வொரு நகையையும் எடுத்துப் பத்திரமாக வைத்துக் கொண்டாள். அவ்வப்போது ஒஸ்மானைப் பார்த்து வசீகரமாகப் புன்னகை செய்து கொண்டாள். அதற்குமேல் ஒஸ்மானால் ஒரு இஞ்ச் கூட முன்னேற முடியவில்லை.

ஜெகத்ஜித் சிங்குக்குள் சின்னதாக சந்தேகம் முளைத்திருந்தது. பிரேம் கவுரைப் பார்க்கும் போதெல்லாம் ஒஸ்மான் வழிகிறார், குழைகிறார், உருகி ஓடுகிறார். எனில்... சேச்சே, அப்படியெல்லாம் இருக்காது. பின் ஏன் அவளுக்கு இவ்வளவு நகைகளை அள்ளிக் கொடுக்க வேண்டும்? இதென்ன கேள்வி. ஒரு நிஜாம், விருந்தினர்களுக்கு நகைகளைப் பரிசாக அளிக்க மாட்டாரா என்ன? ஆயிரம்தான் இருக்கட்டும். பிரேம் கவுருக்கு நான் அளிக்காதா நகைகளா? இந்த பிஸ்கோத்து நகைகளுக்கா அவள் மயங்கப் போகிறாள். பயப்பட வேண்டாம். ஒன்றும் நடக்காது. தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டார்.

அடுத்து என்ன செய்தால் பிரேம் கவுரைக் கவர முடியும் என்று ஆழ்ந்த யோசனையில் ஒஸ்மான் நீந்திக் கொண்டிருந்தார். அவளைத் தனியாகச் சந்தித்துப் பேசினால்தான் சரிப்படும் என்று தோன்றியது. அதற்கு என்ன வழி?

மறுநாள். ஜெகத்ஜித் சிங்குக்கு ஒரு செய்தி வந்தது. நிஜாமின் முதல் மனைவியிடமிருந்து. 'இன்று இரவு கிங் கோதி அரண்மனையில், கபுர்தலாவின் மகாராணியான பிரேம் கவுருக்குப் பிரத்யேக விருந்து அளிக்க இருக்கிறேன். அழைப்பை ஏற்றுக் கொண்ட தகவலைத் தெரிவிக்க வும். இப்படிக்கு துல்ஹான் பாஷா பேகம்.'

ஜெகத்ஜித் சிங்குக்குக் கொஞ்சம் பயம். நான் செல்ல முடியாது. பிரேம் கவுரைத் தனியாக அனுப்பி வைக்கலாமா? பேகம் அளிக்கும் பிரத்யேக விருந்தல்லவா, அனுப்பி வைப்பதுதான் மரியாதை. நிஜாம் இதில் கலந்துகொள்ள மாட்டார் என்றே நம்பலாம். சில நிமிடங்கள் யோசித்தார். பின்பு பிரேம் கவுர் இரவு விருந்தில் கலந்து கொள்வார் என்று பதில் அனுப்பினார்.

மேட்டூர் அணையைத் திறந்துவிட்டது போல ஒஸ்மானுக்குள் உற்சாகம். தன் முதல் மனைவியின் பெயரில் செய்தி அனுப்பியது அவரே.

மாலை இரவாகிக் கொண்டிருந்த தருணம். நீண்ட நேர அலங்காரத்துக்குப் பிறகு பிரேம் கவுர் விருந்துக்குக் கிளம்பினாள்.

'என்ன கிளம்பி விட்டாயா? சரி உன்னுடன் உதவிக்கு மெலி வரட்டும். கூடவே நம் காவலர்கள் இரண்டு பேரையும் அனுப்பி வைக்கிறேன். பத்திரமாகச் சென்று வா. நீண்ட நேரம் ஆக்கி விடாதே. கூடியமட்டும் விரைவாகத் திரும்பி விடு' ஜெகத்ஜித் சிங் வார்த்தைகளில் சில மட்டுமே பிரேம் கவுரின் காதுகளில் நுழைந்தன. அவளது மீதி கவனம் எல்லாம் நகைகளைச் சரி செய்வதிலேயே இருந்தது.

கார் கிளம்பியது. பிரேம் கவுர், உடன் அவளது உதவியாளரான மெலி லூயிஸ் என்ற பிரெஞ்சுப் பெண். கபுர்தலா காவலர்கள் இரண்டு பேர். கிங் கோதி அரண்மனையின் வாசலிலேயே ஒஸ்மான் தயாராக நின்றிருந்தார். வந்து இறங்கிய தன் ஒருதலைக் காதல் தேவதையை மானசீகமாக அணைத்து வரவேற்றார். நிஜத்தில் தள்ளிநின்று புன்னகையுடன் வரவேற்றார். பிரேம் கவுரும் அன்று சுதந்தரமாகவே புன்னகை செய்தாள்.

காத்திருந்த பெண் பணியாளர்கள் இரண்டு பேர், அவர்களை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றார்கள். அவர்கள் சென்ற இடம் அந்தப்புரம். அதன் வாசலிலேயே ஒரு நபர் நின்று கொண்டிருந்தார். பெயர் அப்துல் ரஹ்மான். திருநங்கை. அந்தப்புரத்தின் தலைமைக் காவலாளி.

அப்துல் ரஹ்மான், பிரேம் கவுரை ஆசையாக வரவேற்று உள்ளே அனுப்பினார். அவளது உதவியாளர் மெலியையும் உள்ளே அனுமதித்தார். கபுர்தலா காவலர்களும் உள்ளே நுழைய முற்பட்டனர். 'அய்யோ... என்ன அநியாயம் இது? நிஜாமுக்குத் தெரிஞ்சா என்னை பலி போட்டுருவாரு. சொன்னா கேளுங்க' என்று விடாப்பிடியாகக் கூறினார் அப்துல். 'சரி, நீங்கள் வெளியே காத்திருங்கள்' என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள் மெலி.

பிரேம் கவுரும் மெலியும் உள்ளே ஒரு பிரம்மாண்டமான அறையில் காத்திருந்தனர். அறையில் வேறு யாரும் இல்லை. ஒஸ்மான் அந்தப்புரத்தின் வாசலுக்கு வந்தார். சொன்னபடி

எல்லாவற்றையும் மிகச் சரியாகச் செய்ததற்காக அப்துலுக்குப் பணம் கொடுத்துவிட்டு, பிரேம் கவுர் இருந்த அறைக்குள் நுழைந்தார்.

அவளது முகத்தில் கலவரம்.

'ஹைதராபாத் பிடித்திருக்கிறதா? தங்கியிருக்கும் அரண்மனை எல்லாம் வசதியாக இருக்கிறதா? ஏதாவது வசதிக் குறைவு இருந்தால் சொல்லுங்கள். சரி செய்து விடுகிறேன். கேட்க மறந்துவிட்டேனே. நான் அளித்த பரிசுப் பொருள்கள் எல்லாம் பிடித்திருக்கிறதா?' பேசிக் கொண்டே போனார் ஒஸ்மான்.

'தங்கள் பேகம் எப்போது வருவார்?' என்றாள் பிரேம் கவுர்.

'இதோ சிறிது நேரத்தில் வந்துவிடுவாள்' என்று சமாளித்த அவர், டீ பிஸ்கெட் கொண்டுவரச் சொன்னார். பல்வேறு திசைகளில் உரையாடல் வளர்ந்து கொண்டே சென்றது.

விருந்தினர் அரண்மனை. ஜெகத்ஜித் சிங் ரத்தக் கொதிப்பு ஏற, நகம் கடித்துக் கொண்டிருந்தார். 'அவள் சென்று கிட்டத்தட்ட மூன்று மணி நேரங்களுக்கும் மேல் ஆகிறது. ம்ஹூம், இது என் மனத்துக்குச் சரியாகப் படவில்லை. அவளைத் தனியாக அனுப்பியிருக்கவே கூடாது. தவறு செய்துவிட்டேன். ச்சே...' கோபத்தில் காலால் தரையை எட்டி உதைத்தார்.

நள்ளிரவுக்குப் பின் பிரேம் கவுர் விருந்தினர் அரண்மனையை வந்தடைந்தாள். முகத்தில் கோபம் கொந்தளிக்க அவளை எதிர்கொண்டார் ஜெகத்ஜித் சிங். 'நல்ல வரவேற்பு. பிரமாத மான விருந்து. களைப்பாக இருக்கிறது. உறங்கச் செல்கிறேன்' என்று கூறிவிட்டு படுக்கை அறை நோக்கி விரைந்தாள்.

விடிந்தது. பெட்டிப் படுக்கைகளுடன் கபுர்தலா சமஸ்தானப் பணியாளர்கள், காவலர்கள் கிளம்புவதற்குத் தயாராக இருந்தனர். வேகவேகமாக வெளியே வந்தார் ஜெகத்ஜித் சிங். 'இன்னும் அவள் கிளம்பவில்லையா?' கோபமாகக் கத்தினார். சில நிமிடங்கள் கழித்து வெளியே வந்தாள் பிரேம் கவுர். அதற்குள் ஒஸ்மானுக்குத் தகவல் போயிருந்தது. ஓடோடி வந்தார்.

'என்ன அவசரம்? அதற்குள் கிளம்பிவிட்டீர்கள்? இன்னும் கொஞ்ச நாள்கள்..' என்று வழக்கம் போல ஆரம்பித்தார் ஒஸ்மான். ஜெகத்ஜித் சிங் எதையும் காதினில் வாங்கிக் கொள்ளவில்லை. ஹைதராபாத்துக்கே பெரிதாக ஒரு கும்பிடு போட்டுவிட்டு வண்டியேறினார். ஒஸ்மானும் தன் மனம் கவர்ந்த தேவதைக்கு வேறு வழியின்றி டாட்டா காட்டினார்.

சில மாதங்கள் கழிந்தன. ஒஸ்மானின் மனத்தில் பிரேம் கவுரின் ஞாபகங்கள் மியுச்சுவல் ஃபண்டில் முதலீடு செய்த தொகையாக வளர்ந்திருந்தது. 'தங்களைச் சந்திக்கக் கபுர்தலாவுக்கு வருகிறேன்' என்று ஜெகத்ஜித் சிங்குக்குக் கடிதம் அனுப்பினார்.

'நீங்கள் வருவது பற்றி எனக்கு ஆட்சேபணையில்லை. ஆனால் நான் குடும்பத்தோடு ஐரோப்பியச் சுற்றுப் பயணத்துக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறேன்' என்று அவரிடமிருந்து பதில் வந்தது.

அதற்குப் பின் ஜெகத்ஜித் சிங், ஹைதராபாத் பக்கம் தலைவைத்தோ, கால் நீட்டியோ படுக்க வில்லை. ஒஸ்மானும் அந்த ஸ்பானிஷ் மகாராணியை அதற்குப் பின் சந்திக்கவே இல்லை. அந்த இரவில் ஒஸ்மானின் அந்தப்புரத்தில் நடந்து என்ன என்பது பற்றி மேற்கொண்டு எந்தக் குறிப்புகளும் இல்லை.



# 29

# ஒரு கிளாஸ் கௌரவம், ஒரு லட்சம்!

மகா மேன்மை பொருந்திய ஒஸ்மான் அலிகானின் வாகனம் அந்த வீட்டின் முன்னால் வந்து நின்றது. அதுவரை கனத்த அமைதி நிலவிய அந்த இழவு வீட்டில் அந்த நொடி முதல் சலசலப்பு தொற்றிக் கொண்டது.

வீட்டின் தலைவரும் அங்கு கூடியிருந்த பெரிய மனிதர்களும் வாகனத்தின் முன்னால் வந்து பவ்யமாகப் பணிந்து நின்றனர். ஒஸ்மான், வாகனத்திலிருந்து இறங்கினார். முகத்தில் ரெடிமேட் சோகம்.

'இன்னிக்குக் காலைல கூட நல்லாத்தான் இருந்தாரு. பாவி மனுஷன் என்னிக்கும் இல்லாத திருநாளா இன்னிக்குப் பல்லுத் தேய்க்காமலே மருமககிட்ட, காபித் தண்ணி கேட்டுருக்காரு. அவளும் உள்ள போயி அடுப்பைப் பத்த வைச்சிருக்கா. 'ஆ..'ன்னு ஒரு கூப்பாடு. உள்ள போனவ என்னன்னு வெளிய வந்து பாக்குறப்போ, மனுஷன் நெஞ்சைப் பிடிச்சிக்குனு தரையில விழுந்து கெடந்தாராம். நாக்கெல்லாம் வெளிய தள்ளிருச்சாம். வைத்தியரை வரச்சொல்லிருக்காக. அவரு நாடி பாத்துட்டு எல்லாம் முடிஞ்சு போச்சுன்னு சொல்லிட்டாராம். நல்ல சாவு தான். இருந்து வதைபடாம, யாருக்கும் கஷ்டம் கொடுக்காமப் பொட்டுன்னு போய்ச் சேர்ந்துட்டாரு...'

சுற்றி நிற்கும் ஊர்ப்பெருசுகளில் ஒருவர், இறந்த நபரின் க்ளைமாக்ஸ் காட்சியை விவரிக்க, ஒஸ்மான் அந்த வீட்டின் தலைவர் கையைப் பிடித்துத் துக்கம் விசாரித்தார். அவரது தோளில் மெதுவாகத் தட்டிக் கொடுத்து வழக்கமான ஸ்டீரியோ

டைப் ஆறுதல் வார்த்தைகளைக் கூறிவிட்டு வீட்டின் உள்ளே சென்றார். நிஜாமைக் கண்டதும் பெண்களின் ஒப்பாரி வால்யூம் ஏகத்துக்கும் உயர்ந்தது. இறந்த நபரின் முன் பத்து நொடிகள் மௌனமாக நின்ற ஒஸ்மான், மெலிதாகத் தொண்டையைச் செருமினார். அவருக்குப் பின் நின்று கொண்டிருந்த உதவியாளர் ஒருவர், தன் கைகளிலிருந்த மலர் மாலையை இறந்தவரின் பாதங்களில் வைத்தார்.

ஒஸ்மான் வெளியே வந்தார். முகத்தில் நிறம் மாறாத அதே சோகம். அதிகரிக்கவும் இல்லை, குறையவும் இல்லை. யாரிடமும் எதுவும் பேசாமல் தன் வாகனத்தில் ஏறி அமர்ந்தார். அது கிளம்பியது.

இழவு வீட்டுக்காரர்களுக்குப் பெருமையோ பெருமை. நிஜாம் வந்து இறுதி அஞ்சலி செலுத்தியதால் அன்னாரின் பூத உடல் ராஜ கௌரவம் பெற்ற பிணமாக மிளிர்ந்தது. பெண்களின் ஒப்பாரி காணாமல் போயிருந்தது. அவர்கள் கண்ணீர் விடுவதை மறந்து வந்துபோன நிஜாம் பற்றி சுவாரசியமாகப் பேச ஆரம்பித்திருந்தனர்.

மறுநாள் நிஜாம் தன் உதவியாளரை அழைத்தார். தலைகீழாக வைக்கப்பட்ட 'ட'னா போல வளைந்து வணக்கம் வைத்தார் உதவியாளர்.

'இன்றைய நிகழ்ச்சிகள் என்னென்ன?' ஒஸ்மான் கேட்டு முடிப்பதற்குள் உதவியாளர் ஒப்பிக்க ஆரம்பித்தார்.

'வடக்குத் தெருவில் சல்மானின் வாப்பா வபாத் ஆகிவிட்டார். தெற்குத் தெருவில் ஒரு துக்க வீட்டுக்கு அழைப்பு வந்து இருக்கிறது.'

'ம் சரி. அவர்களிடம் பேச வேண்டியதெல்லாம் பேசியாயிற்றா?'

'எல்லாம் மிகத் தெளிவாகப் பேசியாயிற்று நிஜாம். ஒப்புக் கொண்டார்கள்.'

'நேற்று சென்று வந்தோமே, அங்கிருந்து வர வேண்டியதெல்லாம் வந்துவிட்டதா?'

'இன்று காலையில் கொண்டுவந்து கொடுத்துவிட்டார்கள்.'

'நல்லது. நாளைக்கு ஏதேனும் நிகழ்ச்சிகள் இருக்கின்றனவா?'

'காலையில் முகம்மது ஹனீபாவின் மகளுக்கு நிக்காஹ். மாலையில் ஒரு பிறந்தநாள் விழா இருக்கிறது நிஜாம்.'

'சரி. இன்று மதியம் மூன்று மணிக்கு வாகனம் தயாராக இருக்கட்டும்' சொல்லிவிட்டு ஒஸ்மான் கிளம்பினார். பேசும்போது ஏதோ 'வர வேண்டியதெல்லாம் வந்துவிட்டதா' என்று ஒரு கேள்வி கேட்டாரே அது என்ன? இன்றுகூட பல நடிகர், நடிகைகள், அரசியல்வாதிகள், பெரிய மனிதர்கள் எல்லாம் நடைமுறையில் வைத்திருக்கும் கலாசாரம்தான். அதை ஒரு மாபெரும் சமஸ்தானத்தின் நிஜாமே செய்துவந்திருக்கிறார் என்பதால் சொல்லியாக வேண்டியதிருக்கிறது.

ஒஸ்மான் தன் சமஸ்தானத்தில் பல்வேறு நிகழ்ச்சிகளில் எந்தவித பந்தாவுமின்றி கலந்து கொண்டார். ஆனால் ஒவ்வொன்றுக்கும் கட்டணமாகப் பணமாகவோ, பொருளாகவோ வாங்கிக் கொண்டார். அழைப்பு விடுப்பவர் அந்தஸ்தில் உயர்ந்தவரா, தாழ்ந்தவரா, எந்த

ஜாதிக்காரர், என்ன இனம், மதம் என்றெல்லாம் பேதம் பிரித்துப் பார்க்கவில்லை. சுபகாரியமா, துக்கவீடா, பெரிய நிகழ்ச்சியா, ஒன்றுமே இல்லாத நிகழ்ச்சியா எதையும் கண்டுகொள்ளவில்லை. ஒரே ஒரு நிபந்தனை. தான் வந்து கலந்துகொண்டு கௌரவிக்க வேண்டுமென்றால் ரேட் இவ்வளவு அல்லது தக்க மதிப்புள்ள பரிசுப் பொருளைக் கொடுத்துவிட வேண்டும். அவ்வளவே.

'எங்க அக்காப் பொண்ணுக் காதுகுத்துக்கு நிஜாம் வந்து கலந்துக்கிட்டாரு தெரியுமா', 'என்னோட பாட்டிக்குக் கடைசியா பாலூத்துனது யாரு தெரியுமா? நிஜாமு' என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வதற்காகவே பலரும் செலவு பாராமல் பல்வேறு நிகழ்ச்சிகளுக்கு ஒஸ்மானை அழைத்தனர். நல்ல வரவு. சிரமம் பாராமல் கலந்துகொண்டு முடிந்தமட்டும் சம்பாதித்தார் ஒஸ்மான். காதுகுத்துக்கு இவ்வளவு, கருமாதிக்கு இவ்வளவு என்று அரண்மனைக்கு வெளியிலேயே ரேட் போர்டு தொங்கவிடாததுதான் பாக்கி.

அடுத்த விஷயம் விருந்து சம்பந்தப்பட்டது. பொதுவாக தன் கைக்காசில் விருந்துகள் வைக்கும் சூழ்நிலைகளை இயன்றவரைத் தவிர்த்தார் ஒஸ்மான். அப்படியே விருந்துகள் வைக்கும் நிர்பந்தம் ஏற்பட்டால் வைத்துவிடுவார். ஆனால் என்ன, கலந்து கொள்பவர்களுக்கு அது விருந்தென்ற நினைப்பு மட்டும் எந்தக் கோணத்தில் இருந்துபார்த்தாலும் வராது. அப்படி ஒரு பத்திய விருந்து, பார்த்துப் பார்த்துப் பரிமாறப்படும். மது வீட்டுக்கும் நாட்டுக்கும் உயிருக்கும் கைக்காசுக்கும் கேடு என்பதால் நோ ஆல்கஹால். அதிகபட்சம் பழரசம், அளவோடு ஊற்றிக் கொடுக்கப்படும். விருந்தினர்கள் அரைவயிற்றுக்குச் சாப்பிட்டுவிட்டு, நிறைவான புன்னகையோடு எழுந்து செல்லவேண்டும் என்பது எழுதப்படாத விதி.

ஆனால் அதுவே அரசாங்கச் செலவில் நடைபெறும் விருந்துகள் என்றால் கேட்கவே வேண்டாம். ஒஸ்மான் ஜமாய்த்துவிடுவார். போவோர் வருவோரையெல்லாம் விருந்துக்கு அழைப்பார். தன் கைக்காசுக்குப் பாதிப்பில்லாததால் விருந்து ஏக தடபுடலாக இருக்க வேண்டும் கட்டளையிடுவார்.

நிற்பன, நடப்பன, பறப்பன, நீந்துவன, தவழ்வன, ஊர்வன, உறுமுவன என ஆறறிவுக்குக் குறைவான பலவித ஜீவராசிகள் சமைக்கப்பட்டு உணவு மேசைமேல் பரிமாறப்பட்டிருக்கும். மதுவகைகள் மார்ச் பாஸ்ட் செய்யும். குறிப்பாக மேல்நாட்டு மதுவகைகள் கூடி நின்று கும்மியடிக்கும். இந்த மாதிரியான விருந்துகளில் ஒரு புதிய கலாசாரத்தைக் கண்டுபிடித்து வழக்கத்துக்குக் கொண்டு வந்தார் ஒஸ்மான்.

விருந்து ஆரம்பமாகும். மது வகைகள் பரிமாறப்படும் வேலையில் ஒஸ்மான், தன்னோடு அமர்ந்திருக்கும் பெரிய மனிதர்களில் ஒருவரை நோக்கிப் புன்னகை செய்வார். அதில் எக்ஸ்ட்ரா கனிவும் கவனிப்பும் தூக்கலாக இருக்கும். அந்த மனிதரும் நிஜாமின் நெஞ்சை நக்கும் பார்வையில் உருகிப் போவார்.

ஒரு காலி கிளாஸை எடுக்கும் ஒஸ்மான், அதில் தன் கையாலேயே ஷாம்பெயினை இட்டு நிரப்புவார். மீண்டும் அந்த மனிதரைப் பார்த்து இதழ்கள் விரிப்பார். அந்த மனிதரோ நிஜாமின் கவனிப்புத் தாங்க முடியாமல் வழிவார், நெளிவார். ஒஸ்மான், அந்த ஷாம்பெயின் கிளாஸைக் கையில் எடுத்து, அந்த மனிதரை நோக்கி நீட்டுவார். பரிமாறிக் கொண்டிக்கும் பணியாளர், வேகவேகமாக ஒஸ்மான் அருகில் வந்து, அந்த கிளாஸைப் பக்குவமாக வாங்கி, அந்த மனிதரிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பார்.



நிஜாமின் பரம்பரை நகைகள் சில

பூரிப்பின் உச்ச நிலையில் அந்த மனிதர் பயபக்தியுடன் ஷாம்பெயின் கிளாஸை வாங்கிக் கொள்வார். தன்னால் முடிந்தமட்டும் ஒஸ்மானை நோக்கி வளைந்து வளைந்து கணக்கு வழக்கில்லாமல் வணக்கங்கள் வைப்பார். ஒஸ்மான் ஒற்றைப் புன்னகையில் அத்தனை வணக்கங்களையும் ஒட்டுமொத்தமாக உறிஞ்சிக் கொள்வார். பின்பு அந்த மனிதர் மெதுவாக அந்த கிளாஸில் நிரம்பியிருக்கும் கௌரவத்தை உறிய ஆரம்பிப்பார். விருந்தில் கலந்து கொண்ட சிலர் அந்த மனிதருக்குக் கிடைத்த கௌரவத்தை நினைத்துப் பெருமூச்சு விடுவார்கள். ஆனால் விஷயம் தெரிந்த சிலர், தாங்கள் தப்பித்துவிட்டதை எண்ணி உள்ளுக்குள்ளேயே மகிழ்வார்கள்.

காரணம், நிஜாம் கையால் பரிமாறப்பட்ட அந்த ஒரு கிளாஸ் ஷாம்பெயினின் விலை அன்றைய மதிப்பில் ஒரு லட்சம். தான் பெற்ற அந்த கௌரவத்துக்கான விலையை அந்த மனிதர் மறுநாளே நிஜாமுக்குக் கொடுத்துவிட வேண்டும். இதுதான் நிஜாம் விருந்துகளில் கொண்டுவந்த புதிய கலாசாரம்.

விருந்துக்கும் செலவில்லை. ஷாம்பெயினும் தம் காசில் வாங்கப்பட்டதல்ல. ஆனால் கௌரவம் என்ற வஸ்துவைக் கொண்டு லட்சம் லட்சமாகச் சம்பாதித்தார் ஒஸ்மான். சில விருந்துகளில் ஆறு அல்லது ஏழு நபர்களுக்குக் கூட ஒஸ்மான் தன் கையால் ஷாம்பெயின் பரிமாறியதுண்டு. அடுத்த நாள் வசூல் மகசூல்!

ஒஸ்மான் கடைப்பிடித்த இன்னொரு கலாசாரம் வஞ்சிர மீனை வைத்துச் சுறா மீனைப் பிடிப்பது. அதாவது சமஸ்தானத்தில் யாருக்காவது ஏதெனும் ஒரு சிறிய பொருளைப் பரிசாக அனுப்பிவைப்பார். நிஜாம் பரிசுப் பொருள் அனுப்பி வைத்திருக்கிறார் என்றால் சும்மாவா! பதிலுக்கு அந்த நபர் தனக்கு வந்திருக்கும் பரிசுப் பொருளைவிட இருபது, முப்பது

மடங்கு மதிப்புள்ள ஒரு பரிசுப் பொருளை நிஜாமுக்கு அனுப்ப வேண்டும் என்பது விளம்பரங்களின் ஓரத்தில் கண்ணுக்குத் தெரியாத அளவில் ஸ்டார் வைத்து கன்டிஷன்ஸ் அப்ளை என்று போட்டிருப்பார்களே, அப்படிப்பட்ட ஒரு விதி.

எடுத்ததுக்கெல்லாம் பணம், பொருள், நகை வாங்குவது என்று நாளுக்கு நாள் ஒஸ்மானின் கெட்டப் பழக்கம் அதிகமாகிக் கொண்டே போனது. மருத்துவ அகராதி வார்த்தைகளால் சொல்வதென்றால் கஞ்ச மகாபிரபு ஒஸ்மான், லஞ்சமோமேனியாவால் ஏகத்துக்கும் பாதிக்கப் பட்டிருந்தார்.

ஊர் முழுவதும் அலைந்து திரிந்து அரும்பாடுபட்டு சம்பாதித்தப் பணத்தில் பெரும் பகுதியை, அந்தப்புர முன்னேற்றத் திட்டங்களுக்காகச் செலவு செய்தார். மனைவிகள், துணைவிகள், ஆசை நாயகிகள் மத்தியில் கெத்து குறையாமல் இருக்க வேண்டுமென்றால் அந்தப்புரத்தில் அள்ளி இறைத்தால்தானே முடியும்.

மனம் கவர்ந்த பெண்களை அந்தப்புரத்துக்கு வலுக்கட்டாயமாகத் தூக்கி வந்தார். அவர்கள், பெரிய இடத்துப் பெண்களாக இருந்தால்கூட விட்டு வைக்கவில்லை. அதட்டி, மிரட்டி, அடிபணியவைத்து, அலேக் செய்தார் என்றும் குறிப்புகள் உள்ளன. இப்படி அந்தப்புரத்தில் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே போனால் அவரும் என்னதான் செய்வார் பாவம்? கைக்காசு கரையாமல் செலவழிக்க வேண்டுமே? எனவே எப்படியெல்லாமோ சம்பாதித்தார். இப்படியும் சம்பாதித்தார்.

தம் சொந்தக் காரியங்களில் மட்டுமின்றி, பொதுக் காரியங்களிலும், நிர்வாகம் சம்பந்தப்பட்ட விஷயங்களிலும் பணம், பொருள் வாங்கும் கலாசாரத்தைக் கொண்டுவந்தார் ஒஸ்மான். காரியம் நடக்க வேண்டுமா, காசைக் கட்டு அல்லது காசு மாலையைக் கழட்டி வை. எல்லாமே மிரட்டல் தொனிதான்.

உனக்கு இந்த கான்ட்டிராக்ட் கிடைக்க வேண்டுமா? சரி. கிடைத்துவிடும். கிடைத்தால் நீ நூறு ரூபாய் லாபம் சம்பாதிப்பாய். எனக்கு அதிகமாகவெல்லாம் வேண்டாம், நாற்பது ரூபாய் கொடுத்தால் போதும். சம்மதமென்றால், மேற்கொண்டு ஏற்பாடு செய்கிறேன். இல்லையென்றால் இடத்தைக் காலி செய். வேறு ஆளைப் போட்டுக் கொள்கிறேன்.

இந்த பாணியில் பிரிட்டிஷ் அரசின் கட்டுப்பாட்டிலிருந்த வருவாய், நீதி, காவல் என்று எல்லாத் துறைகளிலும் மூக்கை நுழைத்தார் ஒஸ்மான். தனக்கு வேண்டியவர்கள், குறிப்பாக தன் சொந்தக்காரர்கள் அரசுப் பதவிகளில் இருக்கும்படி பார்த்துக் கொண்டார். சமஸ்தானத்தில் எல்லாத் துறைகளிலும் லஞ்சம் குத்தாட்டம் ஆடியது. ஊழல் உட்கார்ந்து ஆட்சி புரிந்தது. நிர்வாகம் சீர்கெட்டு நிர்வாணமாகக் கூனிக்குறுகி நின்றது.

1920 அக்டோபரில் வெளிவந்த தி இந்து பத்திரிகையும் ஹைதராபாத் சமஸ்தானத்தின் நிர்வாகச் சீர்கேட்டைப் பட்டவர்த்தனமாக இடித்துரைத்தது. தன் நடவடிக்கைகளை பிரிட்டிஷ் அரசு கவனித்து வருகிறது என்பது ஒஸ்மானுக்குத் தெரியும். இருந்தும் அவர் எதற்கும் அலட்டிக் கொள்ளவில்லை. அந்தச் சமயத்தில் அவரது கவனமெல்லாம் புதிய ரகக் கார்கள் மேல் குவிந்திருந்தன. தபால்தலைகள் சேர்ப்பது போல கார்களைச் சேர்க்க ஆரம்பித்திருந்தார்.

குறிப்பாக ரோல்ஸ் ராய்ஸ்.



# ரோல்ஸ் ராய்ஸ் நினைவுகள்

தொடர்ந்து மாராத்தான் ஓட்டம்போல, நிஜாம் ஒஸ்மான் அலிகானின் சர்வ வல்லமை பொருந்திய கஞ்சத்தனத்தையும், அதை முதலீடாகக் கொண்டு அவர் பணம், நகைகள், பொருள்கள் சேர்த்த விதத்தையும் மட்டுமே விதவிதமாகக் கலர் கலராகப் பார்த்துக் கொண்டிருந்தால், ஒரே தியேட்டரில் ஓடும் ஒரே படத்தைத் தொடர்ந்து நான்கு ஷோ பார்ப்பது போன்ற சலிப்புதான் ஏற்படும். எனவே...

ரோல்ஸ் ராய்ஸ் காரின் வரலாற்றையும் அது இந்தியாவுக்குள் டயர் பதித்த கதையையும் அதனை நம் மகாராஜாக்கள் எப்படியெல்லாம் கொண்டாடினார்கள் என்கிற விவரத்தையும் கொஞ்சம் பார்க்கலாம். போகிற போக்கில் ஒஸ்மான் அலிகான் ஓடிவந்து ரோல்ஸ் ராய்ஸில் ஏறிக் கொள்வார்.

பிரட்ரிக் ஹென்றி ராய்ஸ் (Frederick Henry Royce) என்ற பிரிட்டிஷ்காரர், ஏழைமையான குடும்பத்தில் ஐந்தாவது வாரிசாகப் பிறந்தவர். அவருக்கு கணிதத்திலும் மெக்கானிஸத்திலும் நிறையவே ஆர்வம். ஆனால் குடும்பச் சூழ்நிலை படிக்கவிடவில்லை. பல்வேறு வேலைகள் பார்த்தார். எல்லாம் இயந்திரங்கள் சம்பந்தப்பட்ட வேலைதான். தன் இருபத்தோராவது வயதில் சொந்தமாக ஒரு சிறு நிறுவனத்தைத் தொடங்கினார். மோட்டார் வாகனங்களுக்கான சிறு சிறு பாகங்களைத் தயாரித்துக் கொடுக்கும் நிறுவனம் அது. பிழைப்பு ஓடியது.

ராய்ஸ்க்கு நாற்பது வயது ஆன போது (1903), சொந்தமாகக் கார் ஒன்றை வாங்கும் வாய்ப்புக் கிடைத்தது. அது Decauville என்ற பழைய கார். அதை



சார்லஸ் ரோல்ஸ்



ஹென்றி ராய்ஸ்

உபயோகித்துப் பார்த்த ராய்ஸ்க்குக் கோபம்தான் வந்தது. அதிக சத்தம், மிகவும் மெதுவாக இயக்கம், ஸ்டார்ட் செய்வது ரொம்பவே மெனக்கிட வேண்டும் என்று ஏகப்பட்ட குறைகள்.

தானே ஒரு காரைக் கட்டமைத்துப் பார்க்கலாம் என்று முடிவு செய்த ராய்ஸ், படபடவென களத்தில் குதித்தார். ஒரே வருடத்தில் ஒரு புதிய கார் தயாரானது. 1904 ஏப்ரல் 1 அன்று அதை வெள்ளோட்டம் விட்டுப் பார்த்தார். அது ஓட்டுவதற்கு சத்தமின்றி, சிரமமின்றி இருந்தது.

ராய்ஸின் புதிய வெற்றிகரமான கார் பற்றி சார்லஸ் ஸ்டீவர்ட் ரோல்ஸ் (Charles Stewart Rolls) என்பவர் அறிந்தார். ரோல்ஸ் நிறையப் படித்தவர், கார் வியாபாரி, நல்ல வசதி படைத்தவர். ரோல்ஸ், ராய்ஸ் உடன் இணைந்து புதிய ரகக் கார்கள் தயாரிக்க ஒப்பந்தம் செய்துகொண்டார். அவர்கள் தயாரிக்கும் காருக்கு ரோல்ஸ் ராய்ஸ் என்று பெயர் வைக்கலாம் என்று முடிவு செய்தார்கள். வேலைகள் தொடங்கப்பட்டன.

1905ல் முதல் ரோல்ஸ் ராய்ஸ் கார், ஒரு பந்தயத்தில் கலந்து கொண்டு ஓடியது. பின்னர் படிப் படியாக பிரிட்டனில் ரோல்ஸ் ராய்ஸ் கார்களின் பரவல் ஆரம்பித்தது. விற்கப்பட்ட முதல் ரோல்ஸ் ராய்ஸ் காரின் விலை 395 ஸ்டெர்லிங். கோஸ்ட், க்ளௌட், டான், ஷாடோ, பான்டம் என்று பல்வேறு மாடல்களில் வந்து கலக்க ஆரம்பித்தன. பிரிட்டிஷ் காலனி ஆதிக்கம் இருந்த நாடுகளில் எல்லாம் ரோல்ஸ் ராய்ஸ் கார்களும் நுழைய ஆரம்பித்தன.

1908ல் பம்பாய்க்கும் கோலாப்பூருக்கும் இடையே ஒரு கார்ப் பந்தயம் நடைபெற்றது. பந்தயத் தைக் காண குவாலியர் சமஸ்தானத்தின் மகாராஜா இரண்டாம் மாதவ்ராவ் சிந்தியா வந்திருந் தார். அது மேற்குத் தொடர்ச்சி மலையடிவாரத்தில் நடைபெற்ற பந்தயம். சாலைகள், ஏன் சரியான பாதைகள்கூட இல்லாத இடங்களையும் சேர்த்து மொத்தம் 120 மைல்களைக் கடக்க வேண்டும். அதில் ஆறு மலைகளைச் சுற்றி வர வேண்டுமென்பதும் அடக்கம். பந்தயத்தில் ஒரு ரோல்ஸ் ராய்ஸ் கார் சுலபமாக ஜெயித்தது.

Pearl of India என்று பெயரிடப்பட்ட அந்த ரோல்ஸ் ராய்ஸ் காரின் அழகும் கம்பீரமும் வேகமும் சிந்தியாவை அசத்தியது. RR என்று சுருக்கமாவும் கீழே Rolls Royce என்று முழுமையாகவும் பொறிக்கப்பட்ட முத்திரை. முகப்பில் வெள்ளியால் செய்யப்பட்ட சிறகு விரித்துப் பறக்கும் தேவதை. பளபளாவென்று க்ரீம் நிற உடல். உடனே பணம் கொடுத்து அந்த ரோல்ஸ் ராய்ஸ் காரைத் தனதாக்கிக் கொண்டார் சிந்தியா. பெருமை பொங்க அதனைத்

தன் சமஸ்தானமெங்கும் ஓட்டி பவுசு காட்டினார். பிற சமஸ்தான மகாராஜாக்களுக்கும் இந்தச் செய்தி பரவியது.

அது என்ன கார், எங்கு கிடைக்கும், விலை எவ்வளவு இருக்கும் என்று விசாரிக்க ஆரம் பித்தார்கள். 'அதென்ன அவரால மட்டும்தான் வாங்க முடியுமா என்ன? நாங்களும் வாங்கு வோம்ல!' என்று தேடித் தேடி ரோல்ஸ் ராய்ஸ் கார்களை வாங்க ஆரம்பித்தனர். ஒரு கட்டத்தில் சமஸ்தானத்தின் மகாராஜாவாகப்பட்டவர் ரோல்ஸ் ராய்ஸ் கார் வைத்திருந்தால்தான் கௌரவம் என்ற நிலை உருவானது. மகாராஜாக்களைத் தவிர, பணக்காரர்களும் அந்தக் கார் களை வாங்க ஆரம்பித்தனர்.

அதனால் மகாராஜாக்களைத் தவிரவும் ரோல்ஸ் ராய்ஸ் வைத்திருப்பவர்களின் எண்ணிக்கை பெருகியது. என்ன செய்யலாம் என்று யோசித்த மகாராஜாக்கள், ஒன்றுக்கு மேற்பட்ட ரோல்ஸ் ராய்ஸ் கார்களை, தங்கள் விருப்பப்படி வடிவமைக்கச் சொல்லி ஆர்டர்கள் கொடுக்க ஆரம்பித்தார்கள்.

விருப்பப்படியென்றால்? பொதுவாக ரோல்ஸ் ராய்ஸ் கார்கள் அலுமினியத்தால் செய்யப் பட்டன. அலுமினியமா சேச்சே, எனக்கு வெள்ளியால் செஞ்ச கார் வேணும். அந்த மகாராஜா வெள்ளிக் கார் வைச்சிருக்கானா, அப்படின்னா எனக்கு தங்க முலாம் பூசிய கார் வேணும். இப்படி டிசைன் டிசைனாக யோசித்து படு ஆடம்பரமாக, டாம்பீகமாக, தங்கள் விருப்பப்படி, வசதிப்படி ரோல்ஸ் ராய்ஸ் கார்களை இறக்குமதி செய்து, ஃபிலிம் காட்டினார்கள்.

ஒருமுறை லண்டனிலிருந்த ரோல்ஸ் ராய்ஸ் இந்தியப் பிரிவு அலுவலகத்துக்கு ஒரு பார்சல் வந்தது. அதைப் பிரித்துப் பார்த்த ஊழியருக்குக் கொஞ்சம் அதிர்ச்சி. காரணம் அதில் ஒரு செருப்பு இருந்தது. பிங்க் நிற வலதுகால் செருப்பு. கூடவே ஒரு கடிதமும்.

'இந்தச் செருப்பின் நிறத்தில் எனக்கு ஒரு ரோல்ஸ் ராய்ஸ் கார் உடனே தேவை. என் மகா ராணிக்குப் பரிசளிக்க விரும்புகிறேன். எப்போது கிடைக்கும்?'

அனுப்பியிருந்தவர் ஜாம்நகர் சமஸ்தானத்தின் மகாராஜா.

பரோடா சமஸ்தானத்தின் மகாராணி சிம்னா பாயின் விருப்பம் வேறு மாதிரியானது. 'காரில் நான் வசதியாக உட்காரவோ, படுக்கவோ ஒரு கேபின் வேண்டும். குஷன் எல்லாம் மெத் மெத்தென்று இருக்க வேண்டும். ஓட்டுநர் இருக்கையும் அந்தக் கேபினும் கண்ணாடியால் பிரிக்கப்பட்டிருக்க வேண்டும்.'

அல்வார் சமஸ்தானத்தின் மகாராஜா ஜெய்சிங் ஒருமுறை லண்டனில் ரோல்ஸ் ராய்ஸ் ஷோரூமுக்குச் சென்றார். புதிதாகக் கார் வாங்குவதுதான் அவரது எண்ணம். ஆனால் அங்கிருந்த விற்பனைப் பிரதிநிதி அவரைச் சரியாகக் கவனிக்கவில்லை. அவர் மகாராஜா என்று பிரதிநிதிக்குத் தெரியாது. 'இந்த ஆளெல்லாம் எங்க கார் வாங்கப் போறான்' என்ற எண்ணம். ஜெய்சிங்கின் கேள்விகளுக்கு அலட்சியமாகப் பதில் சொன்னான்.

ஜெய்சிங்தான் கடும் கோபக்காரராயிற்றே. விற்பனைப் பிரதிநிதி கூனிக் குறுகி மரியாதை கொடுக்கும்படியாக அந்த இடத்திலேயே ஆறு ரோல்ஸ் ராய்ஸ் கார்களுக்கு ஆர்டர் கொடுத் தார். அவரது சமஸ்தானத்துக்கு ஆறு கார்களும் அனுப்பப்பட்டன. அவற்றை உபயோகப்படுத்த



ரோல்ஸ் ராய்ஸ்

ஜெய்சிங்கின் ஈகோ ஒப்புக்கொள்ளவில்லை. விலை உயர்ந்த அந்த ஆறு ரோல்ஸ் ராய்ஸ் கார்களையும் சமஸ்தானத்தில் குப்பை அள்ளும் வண்டிகளாக உபயோகிக்கச் சொல்லிக் கட்டளையிட்டார். அவை நாறின.

நந்தகான் சமஸ்தான மகாராஜா சர்வேஸ்வர தாஸ் புலி வேட்டைப் பிரியர். அவரது ரோல்ஸ் ராய்ஸ் காரில் அடர்ந்த காட்டுக்குள் பதுங்கியிருக்கும் புலிகளைத் தேடுவதற்கேற்ற சிறப்பு விளக்குகள் பொருத்தப்பட்டிருந்தன. காரின் வெளியே பாதுகாவலர்கள் தொற்றிக் கொண்டு செல்வதற்கென வசதிகள் செய்யப்பட்டிருந்தன. இன்னொரு ரோல்ஸ் ராய்ஸ் காரின் மேற்கூரை வைக்கோலால் வேயப்பட்டிருந்தது.

பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங்கின் ரோல்ஸ் ராய்ஸ் கார்கள், அதி ஆடம்பரமானவை. தங்கம், வெள்ளியால் இழைத்து இழைத்து உருவாக்கப்பட்டவை. ஒவ்வொரு காருக்குமென்றே தனித்தனியாக ஏராளமான நகைகள் இருந்தன. அந்தக் கார்களைச் சர்வீஸுக்கு விடும்போது, அதைச் சுற்றி ஆயுதம் ஏந்திய காவலர்கள் பாதுகாப்புக்கு நின்று கொண்டிருப்பார்கள். அவரது ஒரு ரோல்ஸ் ராய்ஸ் காரின் நம்பர் 0 (பூஜ்ஜியம்).

விஸியநகரம் (Vizianagaram) என்ற சிறிய சமஸ்தானத்தின் மகாராஜா, ஒவ்வொரு ஆண்டும் மக்கள் மத்தியில் பிரம்மாண்டமாக ஊர்வலம் வருவார். நூறு கார்கள் அதில் கலந்து கொள்ளும். ஆனால் அவர் தன் காதல் வாகனமான, முற்றிலும் வெள்ளி முலாம் பூசப்பட்ட



ரோல்ஸ் ராய்ஸின் முகப்பில் பறக்கும் தேவதை

ரோல்ஸ் ராய்ஸ் காரில்தான் கம்பீரமாக பவனி வருவார். அப்போது நூற்றுக்கணக்கான யானைகள் மலர் தூவி வரவேற்கும்.

பஹவல்பூர் சமஸ்தான நவாபுக்கோ ஒரு விநோதப் பழக்கம் இருந்தது. அவர் ரோல்ஸ் ராய்ஸில் சாலைகளில் பவனி வருவதற்கு முன்பாக ஒருவர் இன்னொரு வாகனத்தில் 'நவாப் வருகிறார்' என்று அறிவித்துக் கொண்டே செல்வார். மறுகணமே சாலையிலிருக்கும் மக்களெல்லாம் முதுகைக் காட்டியபடி திரும்பிவிடுவார்கள். நவாப் பவுசாகக் கடந்து சென்ற பின் தங்கள் வேலைகளைத் தொடருவார்கள். கண்பட்டு விடக்கூடாது என்பதால் இந்த ஏற்பாடு.

சைக்கிளின் கேரியரில் பிராய்லர் கோழிகளைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிட்டுச் செல் வார்களே, அதேபோல தன் ரோல்ஸ் ராய்ஸ் காரில் கோழி, ஆடு, மான்களையெல்லாம் இறைச்சிக்காகக் கொண்டு செல்லும் பழக்கம் பம்பாயைச் சேர்ந்த அப்துல் அலி என்ற பெரும் பணக்காரருக்கு இருந்தது.

இப்படி ரோல்ஸ் ராய்ஸ் கார்கள் கௌரவத்தின் சின்னமாகக் கருதப்பட்டாலும் அதனை வைத்துக் கொண்டு நம் மகாராஜாக்கள் செய்த அழிச்சாட்டியங்கள் கொஞ்ச நஞ்சமல்ல.

1907லிருந்து 1947 வரை பிரிட்டனில் தயாரிக்கப்பட்ட ரோல்ஸ் ராய்ஸ் கார்களின் எண்ணிக்கை சுமார் நாற்பதாயிரம். அதில் இந்தியாவில் விற்கப்பட்டவை சுமார் ஆயிரம்.

மைசூர் மகாராஜா வாங்கிய ரோல்ஸ் ராய்ஸ்களின் எண்ணிக்கை முப்பத்தைந்து. பாட்டியாலா மகாராஜாவிடமிருந்த கார்களின் எண்ணிக்கை முப்பத்தெட்டு. முதலிடம்? வேறு யார், நமது நிஜாம் ஒஸ்மான் அலிகான்தான். அவரிடமிருந்த ரோல்ஸ் ராய்ஸ் கார்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட ஐம்பது.

ஹைதராபாத்துக்குள் முதன் முதலில் ரோல்ஸ் ராய்ஸ் வாசம் வீசியது 1912ல். ஒஸ்மானின் தந்தை, நிஜாம் மெஹ்பூப் அலிகான் 1911ல் ஒரு காரை ஆர்டர் செய்தார்.

'மஞ்சள் நிறத்தில் காரின் உடல் இருக்கட்டும், உள்ளே நான் அமருவதற்கேற்ற இருக்கை சிம்மாசனம் போல அமைக்கப்பட்டிருக்க வேண்டும். காரின் முன் பகுதியில் சமஸ்தானத்தின் சின்னம் இருக்க வேண்டும்.' மெஹ்பூபின் விருப்பப்படி கார் பயணத்துக்குத் தயாராகி வந்தது. ஆனால் அதற்குள் அவரது வாழ்க்கைப் பயணம் முடிந்திருந்தது. அந்த மஞ்சள் நிற ரோல்ஸ் ராய்ஸ் ஒஸ்மானிடம் வந்து சேர்ந்தது.

கௌரவமாக அதனை வைத்துக் கொண்டார் ஒஸ்மான். எந்தவிதக் கஷ்டமும் அதற்குக் கொடுக்கவில்லை. அது பாட்டுக்கு அரண்மனை கார் ஷெட்டில் சிலை போல நின்றது. எடுத்து ஓட்டினால் டயர் தேய்ந்து விடுமே. 1947ல் அந்த மஞ்சள் நிற ரோல்ஸ் ராய்ஸ் காரின் ஸ்பீடோமீட்டர் காட்டிய மைல்கள் எவ்வளவு தெரியுமா? வெறும் 347.

அதற்குப் பின்பும் ஒஸ்மான் ஒரு சில ரோல்ஸ் ராய்ஸ் கார்களை வாங்கினார். உபயோகிக்கவில்லை. பிற வகைக் கார்களையும் பல்வேறு மாடல்களில் நூற்றுக்கணக்கில் சேர்த்து வைத்திருந்தார். ஆனால் அவர் தன் பயணங்களுக்கு உபயோகித்ததெல்லாம் ஒரு பாடாவதி போர்டு காரைத்தான்.

சரி, ஒஸ்மானிடம் எப்படிக் கிட்டத்தட்ட ஐம்பது ரோல்ஸ் ராய்ஸ் கார்கள் சேர்ந்தன? மற்ற வகைக் கார்களும் நூற்றுக்கணக்கில்...?

அது தனிக்கதை.



# 31

# கார் காலக் கதாநாயகன்

கிட்டத்தட்ட பத்துப் பதினைந்து நிமிடங்கள் ஆகியிருக்கும். பகிரத பிரயத்தனங் களுக்குப் பின்னர் நிஜாம் ஒஸ்மான் அலிகானின் டப்பா காரான ஃபோர்டு ஸ்டார்ட் ஆனது. கரும் புகையைத் துப்பியபடி கிங் கோதி அரண்மனையிலிருந்து வெளியே வந்தது. காலியாகக் கிடந்த சாலை. ஒஸ்மானின் கார் மட்டுமே உறுமிக் கொண்டு சென்றது.

நிஜாமின் காரைக் கண்டு கொண்டவர்கள் அதற்கு வணக்கம் வைத்தனர். எல்லா வற்றையும் பார்வையிட்டபடியே காரினுள் அமர்ந்திருந்தார் ஒஸ்மான். இரண்டு தெருக்கள் கடந்திருக்கும். எதிர்த்தாற்போல சிவப்பு நிற பேக்கர்ட் (Packard) கார் ஒன்று கடந்து போனது. ஒஸ்மான் தன் தொண்டையைச் செருமினார். காரில் அவரோடு அமர்ந்திருந்த உதவியாளர் அந்தக் காரின் எண்ணைக் குறித்துக் கொண்டார்.

சிறிது நேரம் கடந்திருக்கும். வந்த வேலையை முடித்துவிட்டு, கிங் கோதிக்குத் திரும்பிக் கொண்டிருந்தார் ஒஸ்மான். அரண்மனைக்கு முந்தைய தெருவில் ஒரு புத்தம் புதிய கருப்பு நிற பியட் கார் நின்று கொண்டிருந்தது. ஒஸ்மான் மீண்டும் தொண்டையைச் செருமினார். உதவியாளர் அந்தக் காரின் எண்ணைக் குறித்துக் கொண்டார். ஒஸ்மானின் ஃபோர்டு, கிங் கோதிக்குள் நுழைந்தது.

நிஜாம் எதைச் செய்தாலும் அதற்குப் பின்னர்த்தம் ஒன்று இருக்குமே. இந்தத் தொண்டைச் செருமலின் அர்த்தம்? ஒஸ்மானுக்குக் கார்கள் மேல் அவ்வளவு காதல் என்று பார்த்தோம். தன் ஆளுகைக்குள்பட்ட எல்லைக்குள் எத்தனை

கார்கள் இருக்கின்றன, யார் யார் என்னென்ன ரகக் கார்கள் வைத்திருக்கிறார்கள், எல்லாமே ஓஸ்மானுக்கு அத்துப்படி. சமஸ்தானத்தில் ஏதாவது புதிய காரின் 'பப்பாய்ங்..' சத்தம் கேட்டால் போதும், அதன் எதிரொலி ஓஸ்மானின் மனத்துக்குள் கேட்கும். உடனே காரின் உரிமையாளர் பற்றி விசாரிக்கச் சொல்லுவார்.

அன்று பார்த்த புதிய சிவப்பு நிற பேக்கர்ட், கருப்பு நிற பியட் பற்றிய முழு விவரங்கள் மாலைக்குள் உதவியாளர் மூலம் தெரிய வந்தன.

'நிஜாம், அந்த பேக்கர்ட் கார் நம் சமஸ்தானத்துக்குப் புதிதாகக் குடியேறியுள்ள வைர வியாபாரி ஒருவருடையது. பியட் காரை வாங்கியிருக்கும் நபர் ராஜஸ்தானிலிருந்து வந்திருக்கும் மார்பிள்ஸ் வியாபாரி' - உதவியாளர் சொல்லச் சொல்ல ஓஸ்மான் தன் முகத்தில் எந்தவிதச் சலனத்தையும் வெளிப்படுத்தவில்லை. அவரது உதடுகள் மட்டும் அசைந்தன.

'ஆக வேண்டியதைப் பாருங்கள்.'

பேக்கர்ட் கார்க்காரரை நிஜாமின் உதவியாளரே நேராகத் தேடிச் சென்றார். நிஜாம் அனுப்பி வந்திருக்கிறேன் என்ற சொன்னதும் அவருக்குப் பயங்கரக் கவனிப்பு.

'என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள்?'

'விஷயம் பெரிதாக ஒன்றுமில்லை. நம் மாண்புமிகு நிஜாம் அவர்களுக்குக் கார்கள் என்றால் கொள்ளை இஷ்டம். குறிப்பாக விதவிதமாகக் கார்களை ஓட்டிப் பார்க்க விரும்புவார். அவரிடம் இல்லாத கார்களா? இருந்தாலும் யாராவது புதிய கார்கள் வாங்கினால் அதைத் தானும் ஒருமுறை ஓட்டிப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுவார். அதனால்...'

'இதில் என்ன இருக்கிறது? இந்த மாபெரும் ஹைதராபாத் சமஸ்தானத்தின் நிஜாம், இந்த ஏழை வியாபாரியின் காரை ஓட்டிப் பார்க்க விரும்புகிறார் என்பது நான் செய்த புண்ணியம். அது நடந்தால் நான் தன்யனாவேன். எவ்வளவு பெரிய கௌரவம். நானே காரை எடுத்துக் கொண்டு அரண்மனைக்கு வரவா?'

'அய்யோ... காரின் உரிமையாளருக்குச் சிரமம் கொடுப்பதை நிஜாம் ஒருபோதும் விரும்ப மாட்டார். நான் எதற்கு இருக்கிறேன். நானே தங்கள் அனுமதியுடன் காரை எடுத்துக் கொண்டு செல்கிறேன். நிஜாம் ஓட்டிப் பார்த்ததும், கார் தங்களைத் தேடி வந்துவிடும்.'

'மிகவும் சந்தோஷம். உடனே எடுத்துச் செல்லுங்கள்.'

பேக்கர்ட் கார்க்காரர் தன் காருக்குக் கிடைக்கப் போகும் கௌரவத்தை எண்ணி அதனை வழியனுப்பி வைத்தார். அந்த கருப்பு நிற பியட் கார்க்காரரும் அதையே செய்தார். கார்கள் அரண்மனைக்கு வந்து சேர்ந்தன. ஓஸ்மான் அவற்றைப் பார்வையிட்டார். ஓட்டியெல்லாம் பார்க்கவில்லை. உதவியாளரைப் பார்த்து புன்னகை செய்தார். அவ்வளவே.

'காரைக் கொடுத்து நாலு நாள் ஆச்சே. என்னவாகி இருக்கும்? ஒருவேளை நிஜாம் ஊர்ல இல்லையோ? இல்ல, வேற எதுவும் வேலையில பிஸியா இருப்பாரோ? இருக்கலாம். அதான் ஓட்டிப் பார்த்திருக்க மாட்டாரு. வந்த ஆளு நம்மளை ஏமாத்திட்டானோ? சேச்சே, அப்படியெல்லாம் சந்தேகப்படக்கூடாது. எதுக்கும் அரண்மனை வழியா போற மாதிரி போய், நம்ம காரு அந்த வளாகத்துல தென்படுதான்னு பார்த்துட்டு வந்துடலாமா? அடச்சே, என்ன ஒரு

முட்டாள்தனமான யோசனை. அவ்வளவு பெரிய அரண்மனையில நம்ம காரு எப்படிப் பளிச்சுன்னு தட்டுப்படும்? நாளைக்கு வரைக்கும் பொறுத்துப் பார்க்கலாம்.'

பியட் கார்க்காரர் தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டார். ஆனால் அவரது பியட் காரும், அந்த வைர வியாபாரியின் பேக்கர்ட் காரும், ஒஸ்மானின் கார் கலெக்ஷனில் பத்திரமாகச் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. அவை அதற்குப் பின் அவற்றின் உரிமையாளர்களைச் சேர வில்லை. இந்த விதமாக ஒஸ்மான் சேகரித்து வைத்திருந்த பியட், பேக்கர்ட், ஃபோர்டு, மெர்சிடிஸ், ஜாகுவார்ஸ், கேடில்லெக் மற்றும் ரோல்ஸ் ராய்ஸ் கார்களின் எண்ணிக்கை முந்நூறிலிருந்து முந்நூற்று ஐம்பதற்குள் இருக்கும். எல்லாமே கல்லாகச் சமைந்து நின்றன. உபயோகிக்கப்படவில்லை.

எனில் அந்தக் கார்களை என்னதான் செய்தார் ஒஸ்மான்? அதை ஒஸ்மானின் க்ளைமாக்ஸ்க்கு முன்பாகத் தெரிந்துகொள்ளலாம். வேறு பல விஷயங்களைப் பார்க்க வேண்டியதிருக்கிறது. தொடரலாம்.

ஒஸ்மானின் இந்தப் போக்கு பிரிட்டிஷ் அரசுக்கு மிகவும் வெறுப்பூட்டக்கூடியதாகவே இருந்தது. தனக்கு இருக்கும் அதிகாரத்தை மீறி அரசாங்கத்தின் எல்லாத் துறைகளிலும் மூக்கை நுழைப்பது, லஞ்சம் வாங்குவது, பொதுமக்களின் பொருள்களை அபகரிப்பது, நகை சேர்ப் பது என்று ஒஸ்மான் மீதான கரும்புள்ளிகளை எல்லாம் கணக்கிட்டுக் கொண்டே வந்தார் சார்லஸ் ரஸ்ஸெல் (Charles Russell).

யார் அவர்?

பிரிட்டிஷ் ரெஸிடெண்ட் (Resident). என்ன பதவி அது?

அம்பாஸிடர் என்று சொல்லலாம். வெளிநாட்டுத் தூதுவர். பதவிக்குரிய அர்த்தத்தை நேரடி யாகப் பார்த்தால் அதுதான் பொருள். ஆனால் காலனி ஆட்சியின் முறைப்படி பார்க்கும்போது அதிகார வரம்புகள் எல்லாம் மாறுபட்டது.

பிரிட்டிஷ் அரசாங்கம் தன் ஆட்சியை, அதிகாரத்தை மறைமுகமாக நிலைநாட்ட தனக்கான பிரதிநிதிகளை ஒவ்வொரு பெரிய சமஸ்தானத்திலும் வைத்திருந்தது. அவர்களே ரெஸிடெண்ட் என்று அழைக்கப்பட்டனர். ராணுவ அதிகாரிகள் அல்லது அரசின் பிற உயர் பதவிகளில் இருந்த அனுபவம் வாய்ந்தவர்கள் (ஐரோப்பியர்கள்) அந்தப் பதவியில் நியமிக்கப்பட்டனர். அந்த ரெஸிடெண்ட்கள் பிரிட்டிஷ் அரசின் தூதுவர்களாகவும், அந்தந்த சமஸ்தான மகாராஜாக்களுக்கு அரசியல் ஆலோசகர்களாகவும் பணிபுரிந்தனர்.

எப்போதிலிருந்து இந்த மாதிரியான ரெஸிடெண்ட்கள் இந்தியாவில் நியமிக்கப்பட ஆரம்பித்தார்கள் என்ற விவரத்தைப் பார்க்க நாம் ரிவர்ஸ் கியர் போட்டு, நிறையவே பின்னோக்கிச் செல்லவேண்டியதிருக்கிறது.

பதினேழாம் நூற்றாண்டில் பிரிட்டிஷ்காரர்கள், பிரெஞ்சுக்காரர்கள், டச்சுக்காரர்கள், போர்ச்சுக் கீசியர்கள் என்று வெளிநாட்டவர்கள் இந்தியாவில் திறந்து கிடந்த வியாபார வாசல் வழியாக நுழைந்து ஏகத்துக்கும் பரவியிருந்தார்கள். மகாராஜாக்கள், மன்னர்கள், குறுநில மன்னர்கள்,

ஜமீன்தார்கள் என்று ஒவ்வொருத்தரையும் ஒவ்வொருத்தருக்கும் எட்டப்பர்களாக்கி, பகையை மூட்டிவிட்டு, தங்கள் அதிகார மையத்தை நிலைநாட்ட கடும் முயற்சிகள் எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

நீ கல்கத்தாவில் கொடிநாட்டிவிட்டாயா, இரு நான் பக்கத்திலுள்ள பாட்னாவைப் பிடித்து விடுகிறேன். நீ பம்பாயில் படுத்துக் கொண்டு காலாட்டுகிறாயா, நான் குறைந்தபட்சம் கோவாவையாவது தக்க வைத்துக்கொள்கிறேன் என்று ஒவ்வொரு நாட்டுக்காரர்களும் பகுதி பகுதியாக ஆக்கிரமிக்கும் வேலையில் கடுமையாக ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். அப்படித் தாங்கள் கைப்பற்றிய பகுதிகளில் தங்கள் பிரதிநிதிகளை (ரெஸிடெண்ட்) அமர வைத்தனர்.

ஹைதராபாத் உனக்கா எனக்கா என்று பிரிட்டிஷ்காரர்களும் பிரெஞ்சுக்காரர்களும் நேருக்கு நேர் நின்று உறுமிக் கொண்டிருந்தார்கள். முதல் நிஜாமான முதலாம் அஸஃப் ஜா இறந்து போயிருந்த சமயம் அது. யார் அடுத்த நிஜாம் என்ற வாரிசு உரிமைப் பூசல் களை கட்டியிருந்தது. பிரிட்டிஷ்காரர்களின் ஆதரவில் ஆசாத் ஜங் (இரண்டாவது அஸஃப் ஜா), ஹைதராபாத்தின் இரண்டாவது நிஜாமாகப் பதவியேற்றிருந்தார். அந்த நேரத்தில் பாண்டிச்சேரி பிரெஞ்ச்காரர்கள் வசம் இருந்தது. அருகிலிருக்கும் சென்னையையும் கைப்பற்ற ஹைதராபாத்திலிருக்கும் பிரெஞ்ச் படைகள் பாண்டிச்சேரிக்கு அழைக்கப்பட்டன. இந்த இடைவெளியைப் பயன் படுத்திய பிரிட்டன், தன் அதிகார மையத்தை ஹைதராபாத்தில் வலுப்படுத்தியது. 1779ல் ஹைதராபாத்தில் முதல் பிரிட்டிஷ் ரெஸிடெண்டாக ஜான் ஹாலன்ட் (John Holland) என்பவர் நியமிக்கப்பட்டார். 1790ல் இரண்டாம் அஸஃப் ஜா, பிரிட்டனுடன் செய்துகொண்ட புதிய ஒப்பந்தத்தின்படி, இரண்டு பட்டாலியன் ஆங்கிலேய சிப்பாய்கள் ஹைதராபாத் சமஸ்தானத் தில் நிறுத்தப்பட்டனர். அவர்களைச் சீவிச் சிங்காரித்து, பாலூட்டிப் பராமரித்து சம்பளம் எல்லாம் கொடுக்க வேண்டிய கடமை நிஜாமுடையதே.

இப்படியாக பிரிட்டன், ரெஸிடெண்ட்கள் மூலமாகவும், தங்கள் படைகளைக் கொண்டும் பல்வேறு சமஸ்தானங்களில் தன் அதிகாரத்தை வளர்த்துக் கொள்ள ஆரம்பித்தது. தூதுவர் அளவில் இருந்த ரெஸிடெண்ட்கள், படிப்படியாக உரிமை எடுத்துக் கொண்டு, அதிகாரத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, மன்னர்களையே ஆட்டி வைக்க ஆரம்பித்தனர். அப்படியாக ஒஸ்மான் காலத்தில் ஹைதராபாத்தின் ரெஸிடெண்டாக இருந்தவர்தான் சார்லஸ் ரெஸ்ஸில்.

சமஸ்தானத்தில் லஞ்சம் தலை விரித்தாடுவதைப் பார்த்துக் கொண்டு ரெஸ்ஸிலால் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. நீதி, காவல், வருவாய் என்று எல்லாத் துறைகளிலிருந்தும் ஒஸ்மானுக்கு வருவாய் வந்துகொண்டிருந்தது. ஒவ்வொரு துறையிலும் தனக்கு விசுவாசமானவர்கள் மட்டும் பதவியில் இருக்கும்படி பார்த்துக் கொண்டார். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் பதவிக்கேற்ப வருடத்துக்கு இவ்வளவு கொடுக்க வேண்டும் என்பது எழுதப்படாத உத்தரவு.

சமஸ்தானத்திலுள்ள ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் வருடந்தோறும் ஐந்து ஆடுகள், பத்து சேவல்கள், ஒரு குரூப் பன்றிகள், இரண்டு வண்டி நிறைய புல் கட்டுகள் வந்து சேர வேண்டுமென்பது கட்டளை. சமயம் கிடைக்கும்போது ஏதுமில்லாத சிறு வியாபாரிகளிடமிருந்துகூட எதையாவது கறக்க ஒஸ்மான் தவறவில்லை. ‘அய்யா என்கிட்ட பணம்

இல்ல, நான் சாதாரண மாங்காய் வியாபாரி' என்று தலையைச் சொறிந்துகொண்டு நின்ற குடியானவனிடம்கூட, 'நாலு மாங்காயைத் தந்துட்டுப் போ' என்று கூச்சமில்லாமல் வாங்கிக் கொண்டார்.

ஒஸ்மானின் இந்தப் போக்கைச் சூசகமாகக் கண்டித்தார் ரெஸ்ஸில். ஒஸ்மான் கண்டுகொள்ள வில்லை. கொஞ்சம் டென்ஷனான ரெஸ்ஸில் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி முறைப்படி எச்சரித்துப் பார்த்தார். 'அடப்போப்பா' என்று தன் சொத்துச் சேர்ப்பைத் தொடர்ந்து கவனித்தார் ஒஸ்மான்.

பொறுமை இழந்த ரஸ்ஸெல், 'நிஜாம் அவர்களே, பிரிட்டிஷ் அரசு தங்கள் மீது நல்ல மதிப்பு வைத்துள்ளது. இம்மாதிரியான முறைகேடான செயல்களால் அதை இழந்து விடாதீர்கள்' என்று கடுமையாக எச்சரித்து ஒரு கடிதத்தை அனுப்பினார்.

அதற்கு மிகவும் அலட்சியமாக பதில் அனுப்பினார் ஒஸ்மான்.

'இது எனக்கும், என் சமஸ்தான மக்களுக்கும் இடைப்பட்ட விஷயம். அதில் தலையிட மூன்றாவது மனிதர்களுக்கு எந்தவித அவசியமும் இல்லை. உரிமையும் இல்லை.'

ரஸ்ஸெல் பதவியிலிருந்த வரை ஒஸ்மானை எந்தவிதத்திலும் கட்டுப்படுத்த முடியவில்லை. 1925ல் ஹைதராபாத்தின் புதிய பிரிட்டிஷ் ரெஸிடெண்டாக வில்லியம் பார்ட்டன் (William Barton) நியமிக்கப்பட்டார்.

ஒஸ்மான் நிஜாமாகப் பதவியேற்ற அந்த பதினான்கு வருடத்துக்குள், ரெஸிடெண்டாக இருந் தவர்கள் பட்ட பாடுகள் ஏராளம். காரணம் அவரது தந்திர புத்தி, சாணக்கியத்தனங்கள், அரசியல் காய் நகர்த்தல்களை சமாளிப்பதென்பது சுலபமான விஷயமல்ல. எல்லாவற்றுக்கும் மேலாக அவரிடம் இருந்த பெரிய பலம், சமஸ்தானத்தில் அவர் என்ன சொன்னாலும் கேட்பதற்குத் தயாராக இருந்த அவரது மக்கள்.

ரெஸிடெண்டாகப் பதவியேற்றதும் பார்ட்டனுக்கு, அவரைச் சுற்றியிருந்தவர்கள் கூறிய அறிவுரை, 'வாயை மூடிக் கொண்டு இருந்தால் பிழைக்கலாம்.'

பார்ட்டன், தனக்கு முன் இருந்த ரெஸிடெண்ட்களின் வரலாற்றைப் புரட்டிப் பார்த்தார். ஒஸ்மானின் தகிடு தத்தங்களை எல்லாம் ஆராய்ந்து பார்த்தார். பின்னர் தனக்குள் சொல்லிக் கொண்டார்.

'இவரை எப்படி எதிர்கொள்வதென்று எனக்குத் தெரியும்.'



# 32

# ‘எங்கப்பனைப் பதவியிலிருந்து தூக்குங்க!’

‘கொஞ்சம் மறை கழண்டவர் போலத்தான் தெரிகிறது.’

ஹைதராபாத்தின் புதிய ரெஸிடெண்டாகப் பொறுப்பேற்றிருந்த வில்லியம் பார்டன், நிஜாம் ஒஸ்மான் அலிகான் பற்றி வைஸ்ராய் இர்வினுக்கு அனுப்பிய தன் முதல் ரிப்போர்ட்டை இப்படித்தான் முடித்திருந்தார்.

ஹைதராபாத் சமஸ்தானம் மிகப்பெரியதுதான். ஒஸ்மான் மாபெரும் பணக்காரர் தான். மிகவும் செல்வாக்கு மிக்கவர்தான். அவரைச் சார்ந்திருக்கும் மக்கள் கிட்டத் தட்ட ஒன்றரைக் கோடிப் பேர் இருக்கிறார்கள்தான். இப்படி எத்தனை ‘தான்’கள் வேண்டுமானாலும் இருக்கட்டுமே. அதற்காக அவர் ஆடும் ஆட்டத்தையெல்லாம் சகித்துக் கொண்டு போக வேண்டுமா என்ன? இதுவரைக்கும் ஹைதராபாத்தின் ரெஸிடெண்டாக இருந்தவர்கள் போல நான் கிடையாது. நிஜாமுக்கு சலாம் போட்டு அடங்கி வாழும் அவசியமும் எனக்கில்லை. மேலிடத்துக்கு நிலவரத்தைக் கொண்டு செல்வதே என் பதவிக்கு நான் செய்யும் மரியாதை.

முடிவெடுத்த பார்டன், ஒஸ்மானின் வண்டவாளங்களையெல்லாம், ஒரு கடிதத் தில் தேவையான இடங்களில் மானே தேனே பொன்மானே போட்டு எழுதி வைஸ்ராய் இர்வினுக்கு அனுப்பினார். கடிதத்தின் சாராம்சம் இதுதான்.

ஒஸ்மான், தனக்கு அதிகாரம் கொடுக்கப்படாத இடங்களில்கூடச் செல்வாக்கைப் பயன்படுத்தி நுழைந்து விடுகிறார். பணம், பணம், பணம்! பணமிருந்தால் சமஸ் தானத்தில் எந்த இடத்திலும் எந்தவிதக் காரியத்தையும் சாதித்து விடலாம்போல.



வைஸ்ராய் இர்வின்

அந்த அளவுக்கு லஞ்சம் கூந்தல் விரித்தாடுகிறது. ஐந்தாறு வருடங்களுக்கு முன் நீதித் துறை எப்படி இருந்திருக்கிறது, இப்போது எப்படிச் சீர்கெட்டு இருக்கிறது? வருவாய்த் துறை பற்றிக் கேட்கவே வேண்டாம். காவல் துறைக்குக் காசு கொடுத்துக் களவாணிகள் எல்லாம் சுபிட்சமாக வாழ்கிறார்கள். சுங்கத்துறையில் எங்கு தொட்டாலும் ஊழல். வேலை வேண்டுமா, யார் அதிகம் தொகை தருகிறார்களோ அவர்களுக்கே வேலை என்று பொது ஏலம் நடக்கிறது. சமஸ்தானத்திலிருக்கும் பெரிய மனிதர்களிடமிருந்து அபகரிக்கப்பட்ட நிலங்களின் விவரம் பற்றி சொல்லி மாளாது.

இப்படியாகத் தன் ரிப்போர்ட்டில் குமுறியிருந்த பார்டன், 'லார்டு இர்வின் நிஜாமுக்கு உடனடியாகக் கண்டனக் கடிதம் எழுதி, லஞ்ச லாவண்யங்களைக் குறைத்துக் கொள்ளச் சொன்னால், ஹைதராபாத் சமஸ்தான மக்கள் நமக்கு என்றென்றும் நன்றிக்குரியவர்களாக இருப்பார்கள்' என்றொரு சென்டிமெண்ட் பன்ச் வைத்தார்.

அதற்குப் பலனும் கிடைத்தது. ஒஸ்மான் செய்யக்கூடியவை, கூடாதவை என்று விதிமுறைகளை நிர்ணயித்து, வைஸ்ராய் இர்வின், பார்டனுக்கு ஒரு பதில் கடிதம் ஒன்றை அனுப்பி வைத்தார். பார்டன் முகத்தில் குண்டு பல்பு பிரகாசம். அந்தக் கடிதத்தைத் தன் கையில் ஒரு வாள்போல எடுத்துக் கொண்டு ஒஸ்மானைச் சந்திக்க அரண்மனைக்கு விரைந்தார். நிஜாம் வரவேற்பறையில் உட்கார்ந்திருந்தார்.

'என்னம்மா கண்ணு சௌக்யமா?', 'ஆமாம்மா கண்ணு சௌக்யம்தான்' பாணியில் குசல விசாரிப்புகள். ஒஸ்மானின் வழக்கமான ஒற்றை பிஸ்கட், டீ உபசரிப்பு. எல்லாம் முடிந்ததும் பார்டன் தன் கலாட்சேபத்தை ஆரம்பித்தார். அதைச் செய்யாதே, இதைச் செய்யாதே, இங்கு மூக்கை நுழைக்காதே, அங்கு காதை நுழைக்காதே என்ற ரீதியில் வரிசையாக வைஸ்ராயின் கட்டளைகளை அவிழ்த்துவிட்டார். எங்கெல்லாம் பணம் வாங்கக்கூடாது, எது எதற்கு மட்டும் பணம் வாங்கலாம் என்றும் வரையறைகளை வழிமொழிந்தார்.

ஒஸ்மான் எதுவும் பேசவில்லை. வேறென்ன செய்ய முடியும்? வைஸ்ராயின் கட்டளைகள். தாங்கள் சொல்வதெல்லாம் சரிதான் என்பதுபோல அமைதியாகத் தலையாட்டிக்கொண்டார். சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும் என்று அழுத்தமாக ஒருமுறை சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பினார் பார்டன். ஒஸ்மான் தீவிரமாகச் சிந்திக்க ஆரம்பித்தார்.

என்ன பண்ணலாம்? வெளிப்படையாக எதிர்ப்பைக் காட்டக்கூடாது. அமைதியாக எல்லாவற்றுக்கும் தலையாட்டிவிட்டு 'இயல்பு' வாழ்க்கையைத் தொடர வேண்டியதுதான். இந்த

ஆங்கிலேயர்களின் ஆட்டம் எல்லாம் இன்னும் எவ்வளவு நாளைக்குத் தொடர்கிறது என்று நானும் பார்க்கத்தானே போகிறேன். பிரிட்டிஷ் அரசின் ஆட்சி நம் சமஸ்தானத்தை விட்டு நீங்கிய பின் எல்லாம் சரியாகி விடும்.

ஒஸ்மான் தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டிருந்தார். ஆம், ஒஸ்மானுக்குள் ஓடிக் கொண்டிருந்த எண்ணம் அதுதான். பிரிட்டிஷ் அரசிடமிருந்து விடுபட்ட சுதந்தரமான ஹைதராபாத் தேசம்தான் ஒஸ்மானின் கனவாக இருந்தது.

சரி, கனவு கிடக்கட்டும் கனவு. நிதர்சனம் வேறாயிற்றே. ரெஸிடெண்ட் பார்டன், வைஸ்ராயின் வார்த்தைகளோடு வந்து ஏகப்பட்ட குடைச்சல் கொடுக்கிறாரே. என்ன செய்ய முடியும்? முடிந்தமட்டும் பார்டனைச் சந்திப்பதைத் தவிர்க்க ஆரம்பித்தார் ஒஸ்மான். ஆனாலும் பார்டன் வேதாளமாக விரட்டினார்.

1919ல் இந்தியா முழுவதும் சுயாட்சி (Self Government) பற்றிய குரல்கள் ஓங்கி ஒலித்தபோது, பிரிட்டிஷ் அரசும் அதை ஒப்புக்கொள்வது போன்ற தோற்ற மயக்கத்தை ஏற்படுத்தியது. அந்நேரத்தில் ஒஸ்மான், தன் சமஸ்தானத்துக்கென ஓர் அரசியல் சாசனத்தை உருவாக்கி, அதன்படி இயங்கும் ஒரு நிர்வாக சபையையும் (Executive Council) தோற்றுவித்தார். அதுவரை ஹைதராபாத்தில் திவான் (பிரதம அமைச்சர்) பதவி இருந்தது. முகலாயர்கள் காலத்தில் உருவாக்கப்பட்ட பதவி அது. ஒஸ்மான், திவான் பதவியை ஒழித்தார். நிர்வாக சபையின் தலைவராக பிரஸிடெண்ட் (Sadr-I-Azam) பதவியைக் கொண்டு வந்தார். அலி இமாம் என்பவர் ஹைதராபாத்தின் முதல் பிரஸிடெண்ட்.

அலி இமாம், கொண்டு வந்த முக்கியமான மாற்றமாக இன்றும் குறிப்பிடப்படுவது, நிர்வாகத் துறையிலிருந்து நீதித் துறையைப் பிரித்து அதைத் தனித்து செயல்பட வைத்தது. இந்தியா விலேயே முதன்முதலில் அந்த மாற்றம் ஹைதராபாத்தில்தான் நிகழ்ந்தது.

நிர்வாக சபைக்கான உறுப்பினர்களை நிஜாமே நியமித்தார். உறுப்பினர்களுக்கான அதிகாரம் என்பது வரையறுக்கப்பட்டது. என்னதான் உறுப்பினர்கள் புதிய சட்டங்களைக் கொண்டு வந்தாலும், நிஜாம் அதனை தன் இடதுகை சுண்டு விரலால் நிராகரித்துவிடலாம். என்னதான் மாற்றம் கொண்டுவந்தாலும் நிஜாம் உத்தரவுக்கு (farman) முன் அவை செல்லாமல் போய் விடும். அந்த அளவுக்குத்தான் நிர்வாக சபைக்கு அதிகாரம் கொடுத்து வைத்திருந்தார் ஒஸ்மான்.

இப்போது அந்த அதிகாரத்துக்குப் பூட்டு போட நினைத்தார் பார்டன். நிர்வாக சபையின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பது, நீக்குவது போன்றவற்றுக்கெல்லாம் நிஜாம், ரெஸிடெண்டின் ஒப்புதல் பெற வேண்டும் என்றொரு கொக்கி போட்டார். அது மட்டுமல்ல, நீதித்துறைக்குள் தலையை நுழைத்து நாட்டாமை பண்ணும் வேலையை எல்லாம் விட்டுவிட வேண்டும் என்றொரு ஆப்பையும் முன்வைத்தார். பெரிய மனிதர்களிடம், நிலச்சு வான்தாரர்களிடம் அபகரித்த நிலங்களையெல்லாம் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று ஒஸ்மானை மேலும் கலவரப்படுத்தினார் பார்டன்.

அடுத்து அவர் போட்டது ஒரு குண்டு. வருவாய்த் துறைக்கும், காவல் துறைக்கும் பிரிட்டிஷ் காரர்களே தலைமை அதிகாரிகளாக நியமிக்கப்படுவார்கள். அதற்கு ஒஸ்மான் சம்மதிக்க வேண்டும்.

இதற்கெல்லாம் மிரண்டு போனால் இவ்வளவு பெரிய சமஸ்தானத்தின் நிஜாமாகக் குப்பை கொட்டவும், கொட்டிய குப்பையில் பணம் பார்க்கவும் முடியுமா என்ன? விரைவில் இங்கிலாந்தை இப்போது ஆண்டு கொண்டிருக்கும் கன்ஸர்வேட்டிவ் கட்சியின் அரசு மாறும். லேபர் கட்சி ஆட்சியைப் பிடிக்கும். அந்த நேரத்தில் எல்லாமே மாறிப்போகும். நம் மீது திணிக்கப் பட்ட புதிய சட்டங்கள் எல்லாம் காணாமல் போய்விடும் என்று பொறுமையாக இருந்தார் ஓஸ்மான். அதையும் மீறிப் பிரச்னை வளர்ந்தால், பிற இஸ்லாமிய நாடுகள் எல்லாம் தனக்கு ஆதரவாக அணி திரண்டு ஓ போடுவார்கள் என்றும் நம்பினார்.

பார்டனின் குடைச்சல்கள் தொடர்ந்தன. தொட்டதுக்கெல்லாம் வைஸ்ராயிடமிருந்து மிரட்டல் கடிதங்கள் வரத் தொடங்கின. 'நீர் மட்டும் இதுக்கு ஒத்துக்கலைன்னா, உம்மளோட லஞ்ச, ஊழல் விவகாரங்களையெல்லாம் நேர மக்களாண்ட கொண்டு போயிருவோம்' என்கிற வகை மிரட்டல்கள். ஓஸ்மான் கொஞ்சம் பணிந்து போகத்தான் வேண்டியதிருந்தது.

நிர்வாக சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க, நீக்க ரெஸிடெண்டுக்கு அதிகாரத்தை விட்டுக் கொடுத்தார். நீதித் துறையிலிருந்து விலகினார். இப்படி இன்னும் சில.

இந்த மாதிரியான நடவடிக்கைகளினால் ஓஸ்மானின் மனத்துக்குள் பார்டன் மேல் எக்கச் சக்க கோபம். இருக்காதா பின்னே? இருந்தாலும் ஒரு விஷயத்தில் பார்டனின் உதவியைத் தேடிப் போகும் நிலைக்குத் தள்ளப்பட்டார் ஓஸ்மான்.

என்ன விஷயம் அது?

ஓஸ்மான் அப்போது தனது வாரிசுகளின் திருமணத்தைப் பற்றிய பெருங்கவலையில் இருந் தார். ஓஸ்மானுக்கும் அவரது அதிகாரபூர்வ பேகம் துல்ஹான் பாஷாவுக்கும் பிறந்த ஆண் குழந்தைகள் இரண்டு. முதல் மகன் அஸம் ஜா (Azam Jah), இரண்டாவது மகன் முவாஸம் ஜா (Mu'azzam Jah). இருவருமே ஸாகிப்சதா (Shahibzada) அதாவது பட்டத்து இளவரசர்கள் போல வளர்க்கப்பட்டனர்.

இளவரசர்களாக இருந்து என்ன பயன்? கஞ்சத் திலகம் ஓஸ்மானின் பிள்ளையாக இருக்கும் போது என்ன டாம்பீகமாகவா வாழ முடியும்? இருவருமே தம் தந்தையின் குணம் பிடிக்காமல் தான் வளர்ந்தனர். அவர்கள் தம் தந்தை மேல் கொண்டிருந்த அளவற்ற வெறுப்புக்கு அஸம் ஜா, 1925 மார்ச்சில் ரெஸிடெண்ட் சார்லஸ் ரஸ்ஸெலுக்கு எழுதிய கடிதமே சாட்சி.

'எனக்குப் பதினெட்டு வயதாகிறது. இளவரசர். ஆனால் என் கையில் காசு கிடையாது. எனக் கென்று ஒரு கார் கிடையாது. சுதந்தரமாக, உல்லாசமாக இருக்கும் உரிமையும் கிடையாது. எனக்கு நிர்வாக அனுபவமெல்லாம் கிடையாது. ஆனால் நிஜாமாக பதவியேற்றுக் கொள்ளும் வயது வந்துவிட்டதென நினைக்கிறேன். என் தந்தை, மற்றவர்களைக் கொடுமைப்படுத்து வதைப் போலச் சொந்தப் பிள்ளைகளையும் படுத்துகிறார். அரசு அவர் மேல் நடவடிக்கை எடுக்க வேண்டும் அல்லது அவரைப் பதவியிலிருந்து நீக்க வேண்டும்.

வைஸ்ராய் லார்ட் ரீடிங் பற்றி நான் நிறையப் கேள்விப்பட்டிருக்கிறேன். பொறுப்பில்லாமல் செயல்படும் மகாராஜாக்களை அவர் பதவி நீக்கம் செய்திருக்கிறார். என் தந்தையும் அப்படிப் பட்டவர்தான். ஒவ்வொரு நாளும் அவர் பிரிட்டிஷ் அரசுக்கு எதிராகச் செயல்படுவதையே

தன் வாடிக்கையாகக் கொண்டிருக்கிறார். வைஸ்ராய், அடுத்த முறை இங்கிலாந்துக்குச் செல்லும்போது இது பற்றிப் பேசுவார் என்று நினைக்கிறேன்.'

அஸம் ஜாவின் இந்தக் கடிதத்தை, ரஸ்ஸெல் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. 'சிறு பிள்ளைத்தனமாக இருக்கிறது' என்று எண்ணி தூக்கி ஓரமாக வைத்து விட்டார். ரஸ்ஸெலுக்குப் பின் வில்லியம் பார்டன் ரெஸிடெண்டாக வந்த போதும், அஸம் ஜா தன் தந்தை மீது பிராது கொடுத்தார்.

பார்டனின் எண்ணம் வேறு மாதிரியிருந்தது. இரண்டு இளவரசர்களுக்கும் போதிய கல்வி யறிவு கிடையாது. ஒஸ்மானின் பிள்ளைகள் வேறு. அவர்களும் தம் தந்தையைப் போலவே பணப்பித்தர்களாக இருந்தால்? இவர்களையா அடுத்த நிஜாமாக்க முயற்சி செய்ய வேண்டும்? ஹைதராபாத் மக்களின் நிலைமை என்ன ஆகும்?

தன் இரு மகன்களுக்கும் மாபெரும் செல்வந்தர் ஒஸ்மான் மாதா மாதம் செலவுக்குக் கொடுத்த தொகை வெறும் ஐநூறு ரூபாய். அந்த விஷயத்தில் பார்டனுக்குக் கொஞ்சம் இரக்கம் பிறந்தது. இளவரசர்களுக்கான மாத பாக்கெட் மணியை உயர்த்தச் சொல்லி ஒஸ்மானிடம் பேசினார். 'முடியவே முடியாது. அவர்கள் கெட்டுக் குட்டிச்சுவராகிப் போய்விடுவார்கள்' என்று மறுத் தார் ஒஸ்மான்.

'அய்யா நீங்க உங்க கைக்காசுல இருந்து கொடுக்க வேண்டாம், அரசுப் பணத்துல இருந்து கொடுங்கள்' என்றும் சலுகை கொடுத்துப் பார்த்தார். அப்போதும் ஒஸ்மான் ஒப்புக்கொள்ள வில்லை.

'அது எங்கள் பரம்பரை வழக்கம் இல்லை' என்றார். பின் பார்டனின் நீண்ட நாள் போராட்டத் துக்குப் பிறகு அரசுப் பணத்திலிருந்து பாக்கெட் மணியை உயர்த்திக் கொடுக்க சம்மதித்தார் ஒஃஸ்மான். அஸம் ஜாவுக்கு இருபதாயிரமும், முவாஸம் ஜாவுக்கு பதினைந்தாயிரமும் மாதா மாதம் வழங்க ஆரம்பித்தார்.

தன் இரு மகன்களையும் நிர்வாகம் பற்றித் தெரிந்து கொள்வதற்காக ஐரோப்பிய நாடுகளுக்குப் படிப்புக்காக அனுப்பினார். அந்த ஆலோசனையைச் சொன்னதுகூட பிரிட்டிஷ் அரசுதான். அனுப்பிய பிறகுதான் ஒஸ்மானுக்கு அந்தப் பெருங்கவலை தொற்றிக் கொண்டது. பார்டனின் உதவியை நாடிச் சென்றார்.

'என் மகன்கள் யாராவது ஐரோப்பிய பெண்களைக் காதலித்துத் திருமணம் செய்துகொண்டு வந்துவிடுவார்களோ என்று பயப்படுகிறேன்.'

அதனை மெய்ப்பிக்கும் விதமாக இரண்டு இளவரசர்களும் பிரான்ஸில்...



# துருக்கிப் பேரழகிகள்

பையன்கள் வெளிநாட்டிலிருந்து யாரையாவது இழுத்துக் கொண்டு வந்து விடுவார்களோ என்று தந்தை ஒஸ்மான் பயப்படுகிறார். இது அவரது குடும்ப விஷயம். ஆனால் நிஜாம் மூன்றாவது மனிதரான பார்டனிடம் ஏன் புலம்ப வேண்டும்?

சமஸ்தானத்தின் ரெஸிடெண்ட் என்பவர் தாய்மாமன் மாதிரி. அவரைக் கேளாமல், மதிக்காமல் எந்தக் காரியத்தையும் நிகழ்த்திவிட முடியாது. எந்தவொரு முடிவையும் எடுத்துவிட முடியாது. மகாராஜாவே ஆனாலும் அப்படித்தான்.

அய்யா, என்னோட மூத்த பொண்ணுக்கு மூக்குக் குத்தப்போறேன், அப்படியே எம் பையனுக்கும் காதுகுத்தி மொட்டையடிக்கலாமுன்னு இருக்கேன் இம் மாதிரியான விஷயங்களுக்குக் கூடச் சமஸ்தானத்தின் மகாராஜா, ரெஸிடெண்டிடம் ஒரு வார்த்தை கேட்க வேண்டும். அவர் வைஸ்ராயிடம் சொல்லுவார். வைஸ்ராய் மறுப்புத் தெரிவிக்கவில்லை என்றால் காதோ, மூக்கோ, தொப்புளோ குத்திக் கொள்ளலாம். இப்படிப் பல சமஸ்தானத்தின் மகாராஜாக்கள் ரெஸிடெண்டுக்குக் கட்டுப்பட்டே நடந்தனர்.

பல்வேறு விஷயங்களில் ரெஸிடெண்டைக் கலந்துகொள்ளாத ஒஸ்மான் கூட, தம் மகன்களின் விஷயத்தில் மட்டும் பிரிட்டிஷ் அரசின் கட்டுப்பாடுகளுக்குப் பணிந்து நடந்துகொண்டார். காரணம்? அவரது மகன்கள் இருவரும் எங்க அப்பனைப் பதவியிலிருந்து தூக்குங்க என்று ரெஸிடெண்டிடமே பிராது



சுல்தான் அப்துல்மெஜித்

கொடுத்தவர்கள். எனவே, அந்த ரெஸிடெண்ட் சொன்னால் அவர்கள் கேட்டாக வேண்டும் என்ற நினைப்பு. அப்படி அவர் நாடவே இல்லையென்றாலும் பட்டத்து இளவரசர்கள் பல் தேய்த்தார்களா, பால் குடித்தார்களா, சைட் அடித்தார்களா, சைடில் ஒதுங்கினார்களா என்று கண்ணில் ஆலிவ் ஆயில் விட்டுப் பாலோ செய்ய வேண்டியது ஒரு ரெஸிடெண்டின் கடமை.

'என் மருமகள்களை நான்தான் தேர்ந்தெடுப்பேன். அப்படியே என் மகன்கள் தேர்ந்தெடுத்து விட்டாலும், என் சம்மதம் இருந்தால்தான் அவர்கள் திருமணம் செய்துகொள்ள முடியும். இதை அவர்களுக்குப் புரியவைக்க வேண்டியது உங்கள் பொறுப்பு' - பார்டனிடம் தெளிவாகச் சொன்னார் ஒஸ்மான். அவரது முகத்தில் கவலை ரேகைகள் நெளிந்தன.

இளவரசர்கள் அஸம் ஜா, முவாஸம் ஜாவின் முகங்களில் சந்தோஷ ரேகைகள் மிளிர்ந்தன. ஐரோப்பிய நாடுகளுக்கு வருவது அவர்களுக்கு ஒன்றும் புதிய விஷயமில்லை. சிறு வயதில் இருந்தே அவ்வப்போது வந்து போயிருக்கிறார்கள். கஞ்சத் தந்தையின் பிக்கல், பிடுங்கல் இல்லாத சுதந்தரமான வாழ்க்கை. மகிழ்ச்சியாகக் கூத்தடிக்கத் தேவையான அளவு பணம். நிர்வாகம் பற்றிக் கற்றுக்கொள்ளத்தான் தந்தை இங்கு அனுப்பியிருக்கிறார். அது கிடக்கிறது கழுதை. பிரௌன் நிறக் கூந்தல் அலைபாய, நீலக் கண் தேவதைகள் இடைக்கும் உடைக்கும் போதிய இடைவெளி விட்டு, காற்றாட பூனை நடை நடந்து கொண்டிருக்கிறார்கள். இந்தப் பருவ வயதில் பெண்களை நிர்வகிப்பது எப்படி என்று கற்றுக்கொண்டால் போதாதா என்ன?

பகலெல்லாம் போலோ, இல்லையென்றால் விதவிதமான விலையுயர்ந்த கார்களை எடுத்துக் கொண்டு ஊர் சுற்றுவது என்று அஸம் ஜாவின் பொழுது கழிந்தது. முவாஸம் ஜா ஜவுளிக்கடை விளம்பரத்தில் நடிப்பதுபோல கலர் கலர் உடைகளாகத் தைத்து மாட்டிக் கொண்டு

அலைந்தார். இருவரும் இரவுகளில் கிளப்புகளிலும் கேஸினோக்களிலும் சந்தித்துக் கொண்டனர்.

கட்டழகுப் பெண்ணிருக்க, வட்டமிடும் பாட்டிருக்க, தொட்ட இடம் அத்தனையும், இன்பமின்றித் துன்பமில்லை... ரராராரரீ.. ஓ! கூட்டத்தில் யாராவது ஒருத்தியைப் பார்க்கும்போது அஸம் ஜாவின் மனத்தில் பச்சை பல்பு பளீரிடும். வசீகரமாகப் புன்னகை செய்வார். தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார். 'இந்தக் கூட்டத்தில் இந்த வகை உடை உங்களுக்கு மட்டும்தான் நன்றாக இருக்கிறது.' ஒரு மெல்லிய நட்புணர்வு எட்டிப் பார்க்கும் வேளையில் அடுத்தடுத்த ரெடிமேட் புகழுரைகளை எடுத்து விடுவார். சின்னதாக ஒரு நெருக்கம் உண்டாகும். மேலும் சில நிமிடங்கள் போதும், வார்த்தைகளாலும் உடலசைவு மொழிகளாலும் அந்தப் பெண்ணை மயக்கித் தன் வசப்படுத்திவிடுவார் அஸம் ஜா. ஒவ்வொரு நாளும் விதவிதமான பெண்களுடன் நடனமாடுவதென்பது முவாஸம் ஜாவின் வழக்கம். இளவரசர்கள் இருவரும் அந்தக் கூட்டத்திலேயே தங்களுக்கான மனைவியைத் தேடிக் கொண்டிருந்தனர். இரவுகள் இனித்தன.

பகல் பொழுதொன்றில் ஹைதராபாத்தில் ஒஸ்மான் ஓர் அறிவிப்பை வெளியிட்டார். இதனால் என் இனிய சமூகத்துக்கு நிஜாமாகிய நான் அறிவித்துக் கொள்வது என்னவென்றால், என் புத்திரர்களுக்கு நிக்காஹ் செய்துவைக்க முடிவெடுத்திருக்கிறேன். ஒரே ஒரு நிபந்தனை. மணப்பெண்கள் கண்டிப்பாகப் பிரிட்டிஷ் இந்தியாவுக்குற்பட்ட ராஜ குடும்பத்தைச் சார்ந்தவர்களாக மட்டுமே இருக்க வேண்டும். எனவே வெளிநாட்டு இளவரசிகள் கனவுக் காட்சியில் டூயட் பாட வேண்டாம் என்ற அர்த்தத்தில் இருந்தது அந்த அறிவிப்பு.

கல்யாண விஷயத்தில் ஒஸ்மானுக்கு உதவிக் கொண்டிருந்த பார்டனின் பதவிக்காலம் முடிந்தது. புதிய தாய்மாமனாகப் பொறுப்பேற்றவர் டெரென்ஸ் கீஸ் (Terrence Keys). 'என் விருப்பப்படி முதல் நிக்காஹ் பண்ணிக்கட்டும். அதுக்கப்புறம் அவங்க எத்தனை கல்யாணம் பண்ணிக்கிட்டாலும் நான் என்னன்னு கேட்க மாட்டேன். இதை என் மகனுங்ககிட்ட சொல்லிருங்க' என்று கீஸிடம் கேட்டுக் கொண்டார் ஒஸ்மான்.

ஒஸ்மானின் பேகமான துல்ஹான் பாஷா, தன் உறவுக்காரப் பெண்கள் இருவரைத் தம் மகன்களுக்குத் திருமணம் செய்து வைக்கலாம் என்று முயற்சிகள் எடுத்தார். கீஸ் அந்தப் பெண்களின் பயோ டேட்டாவை விசாரித்தார். உதட்டைப் பிதுக்கினார். 'பொண்ணுங்க படிக்கலை, அவ்வளவா அழகா இல்ல, சரியான பட்டிக்காடாட்டம் தெரியுது. சரிப்படாது.' ரெஸிடெண்ட் சொன்னபின், ஒஸ்மானால் ஒன்றும் சொல்ல இயலவில்லை.

அந்தச் சமயத்தில் இஸ்லாமியர்களின் முக்கியத் தலைவரான மௌலானா ஷௌகத் அலி (Maulana Shaukat Ali) ஒஸ்மானைச் சந்தித்தார். அவர் ஆங்கிலேயர்களுக்கு எதிராகக் கிலாபஃத் இயக்கத்தைத் தோற்றுவித்தவர்களுள் ஒருவர். ஒஸ்மானின் நெருங்கிய தோஸ்த்.

'என்ன ஒஸ்மான், துருக்கி சுல்தான் அப்துல்மெஜித்தின் மகள், இளவரசி துருஹ்ஷேவரை (Durruhsehvar) மறந்துவிட்டீர்களா? நன்கு படித்தவள். நிரம்பிய அழகு கொண்டவள். நாகரிகமானவள். பதினேழு வயதாகிறது. அவள் பியானோ வாசித்து நீங்கள் கேட்டதில்லையே...'

உண்மைதான். இளவரசி துருஹ்ஷேவர் பேரழகி. அவள் வெறுமனே காற்றில் விரல்களை அசைத்தால்கூடப் போதும். இசை சிந்தும். இருந்தாலும் ஒஸ்மான் யோசித்தார்.

‘இளவரசிக்கு நிலோஃபர் (Niloufer) என்றொரு உறவுக்காரத் தங்கை இருக்கிறாள். அவளும் அசத்தும் அழகுடையவள். துருஹ்ஷேவருக்குச் சமமாகப் படித்தவள். முவாஸம் ஜாவுக்குப் பார்த்துவிடலாம். என்ன சொல்கிறீர்கள்?’ விடாது பேசினார் சௌகத் அலி.

‘இதுவரை ஹைதரபாத் நிஜாம் பரம்பரையில் நாடு விட்டு நாடு பெண் எடுத்ததில்லை. அதனால்தான் யோசிக்கிறேன்’ ஒஸ்மான் பின்வாங்கினார்.

‘இதுவரை இல்லாவிட்டால் என்ன, இனிமேல் செய்துவிட்டால் போயிற்று. ஒன்றும் தவறில்லை. சுல்தான் உங்களுக்கு மிகவும் வேண்டப்பட்டவர்தானே. ஆக வேண்டிய காரியத்தைப் பாருங்கள்’ சௌகத் அலி உரிமையுடன் கூறிவிட்டுக் கிளம்பினார். ஒஸ்மானின் மனத்தில் சுல்தான் இரண்டாம் அப்துல்மெஜித் (Abdulmecid II) பற்றிய நினைவுகள் பின்னோக்கி ஓடிக் கொண்டிருந்தன.

முதல் உலகப்போரில் ஜெர்மனியின் கூட்டணி நாடாக இருந்த துருக்கி தோல்வியடைந்தது. பின்பு அங்கு ஏகப்பட்ட அரசியல் குழப்பங்கள். பிரிட்டன் உள்பட நேச நாடுகள் துருக்கியைப் பங்கு போட்டுக் கொண்டன. அறுநூறு வருடப் புகழ் ஒட்டமான் பேரரசின் கதை அத்தோடு (1923) முடிவுக்கு வந்தது. அதன் கடைசி சுல்தானான மெஜித், தன் குடும்பத்தினருடன் துருக்கியைவிட்டு வெளியேற வேண்டிய நிர்ப்பந்தம். பிரான்ஸுக்குச் சென்று தஞ்சம் புகுந்தார்.

துருக்கி சுல்தான் குடும்பத்தினர் மீது ஒஸ்மானுக்கு நிறையவே பாசம் உண்டு. மெஜித்தும் அவரது குடும்பத்தினரும் பிரான்ஸில் சென்று செட்டிலாகி வாழ்வதற்கு ஏகப்பட்ட உதவிகள் செய்தவர் ஒஸ்மான்தான். அதெல்லாம் கிடக்கட்டும், இப்போது அவர் வீட்டில் பெண் எடுக்கலாமா?

‘எங்க உறவுக்கார பொண்ணுங்களை வேணாமுன்னு சொல்லிப்புட்டு, வெளிநாட்டுக் காரிகளை எம்புள்ளைங்களுக்குக் கட்டி வைக்கலாமுன்னு பாக்குறீகளா?’ என்று பொண்டாட்டியான துல்ஹான் பாஷா கோபித்துக் கொண்டால்? நிஜாமாக இருந்தால் என்ன, பொண்டாட்டி பொண்டாட்டிதானே.

அதே சமயத்தில் ‘எம் பொண்ணை எகிப்துல பௌடு ராசா வீட்டுல கேட்காக, இராக்குல பைசல் ராசா வீட்டுல கேட்காக, பெர்சியாவுல ஷா ராசா வீட்டுல கேட்காக’ என்று சொல்லிக் கொண்டிருந்தார் மெஜித். பதவி, ராஜ்ஜியம், எக்கச்சக்கச் சொத்துகள், இஸ்தான்புல் நகர அரண்மனைகள் எல்லாம் பறிபோன பின்பும் மெஜித் குடும்பத்தோடு சம்பந்தம் செய்து கொள்ளப் பல அரச குடும்பத்தினர் போட்டி போட்டார்கள். காரணம் இஸ்லாமியர்களிடையே அவருக்கு இருந்த செல்வாக்கு அப்படிப்பட்டது. அவருக்குப் பின் அவரது பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளும் நபருக்கு உலக அளவில் மரியாதை கிடைக்கும் என்பதே அவர்களது கணக்கு.

ஒஸ்மான் அப்படியெல்லாம் நினைக்கவில்லை. நிறைய யோசித்தார். பின்பு மெஜித் குடும்பத்தோடு சம்பந்தம் வைத்துக் கொள்ளப்போவதாக வெளிப்படையாக அறிவித்தார் (1931 ஏப்ரல்). அவர் சொன்னால் போதுமா? தாய்மாமன் கீஸ், பெரிய மாமனார் வைஸ்ராயிடம் அனுமதி வாங்கித் தரவேண்டுமே?

ஹைதராபாத் நிதியமைச்சர் அக்பர் ஹைதரி தலைமையில் ஒரு குழு லண்டன் சென்றது. எதற்கு? பொண்ணு வீட்டுல எவ்வளவு போடுவாக? கழுத்தை ஒட்டி வைர அட்டிகை உண்டா? கல்யாணச் செலவு எப்படி? விருந்துக்கு ஒட்டக பிரியாணிதானா? மாப்பிள்ளை வீட்டுல இருந்து வரதட்சணை எவ்வளவு கொடுக்கப் போறாங்க? போன்ற திருமண விஷயங்களை இரண்டு குடும்பத்துக்கும் இடையே பேசி ஒரு முடிவெடுத்து, அதற்குப் பிரிட்டிஷ் அரசின் ஒப்புதல் பெறுவதற்காக அந்தக் குழு. அதற்காக லண்டன் பயணம். அட, இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடைப்பட்ட விவகாரத்தில் சம்பந்தமே இல்லாமல் அமெரிக்கா தன் ஜலதோஷம் பிடித்த மூக்கை நுழைத்துக் கேட்கிறோமோ இல்லையோ தன் தீர்ப்பைச் சொல்கிறதல்லவா, அதுபோலத்தான் இதுவும்.

என்னதான் விரும்பிச் சம்பந்தம் செய்தாலும் ஓஸ்மானுக்கே உரிய இயற்கைக் குணங்கள் இருக்கிறதே. இரண்டு கல்யாணத்தையும் ஒரே நாளில், முடிந்தால் ஒரே மேடையில், எளிமையாக நடத்த விரும்புகிறேன் என்றார். செலவு மிச்சம். வேறென்ன? அதுவும் தன் கைக்காசில் அல்ல, அரசுப் பணத்தில்.

கல்யாணச் செலவு பற்றிப் பேச்சு ஆரம்பித்தது. மெஜித், இருபதாயிரம் ரூபாய் கேட்டார். 'அம்புட்டு காசு எதுக்கு? பத்தாயிரம் ரூவா தர்றேன்' என்றார் ஓஸ்மான். லண்டன் குழுவினர், ரெஸிடெண்ட் எல்லோரும் பேசிப்பார்த்தும் பேரம் இழுத்துக் கொண்டே போனது. இறுதியில் உனக்கும் வேண்டாம் எனக்கும் வேண்டாம் பதினைந்தாயிரம் தருகிறேன் என்று ஏறி வந்தார் ஓஸ்மான். அனுப்பினார்.

அஸம் ஜா, முவாஸம் ஜாவுக்கு இந்தத் திருமணத்தில் எந்தவித எதிர்ப்புகளும் இல்லை. பிரான்ஸின் நைஸ் (Nice) நகரில் திருமண ஏற்பாடுகள் நடந்தன. இஸ்லாமிய மதத்தைப் பொருத்தவரை மணமகன்தானே மஹர் (Mahr) கொடுத்து மணமகளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும். நிஜாம் எவ்வளவு கொடுப்பார் என்று அறிய எல்லோருக்கும் ஆவல். நீண்ட பேச்சுவார்த்தைகள், பேரங்களுக்குப் பிறகு அதனைப் பற்றிய செய்திகளும் வெளியாயின. இரண்டு லட்சம் அமெரிக்க டாலர் பணம், ஒரு மில்லியன் அமெரிக்க டாலர் மதிப்புள்ள நகைகள். இரண்டு மகன்களுக்கும் சேர்த்து.

1931, நவம்பர் 12. அன்று ஹைதராபாத் சமஸ்தானத்தில் எல்லோருக்கும் விடுமுறை அறிவிக்கப்பட்டிருந்தது. நியூஸ் பேப்பர்கள் வாழ்த்துச் செய்திகளால் பிதுங்கி வழிய ஸ்பெஷல் எடிஸன்களை வெளியிட்டன. நைஸ் நகரில் இளவரசர்களின் திருமணம் நிகழவிருந்தது.

விடுமுறை அறிவித்ததால், ஓஸ்மான் கிங் கோதி அரண்மனையில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். துல்ஹான் பாஷா பேகமும் வழக்கமான பணிகளை மேற்கொண்டிருந்தார். இருவரும் தம் மகன்களின் திருமணத்துக்குச் செல்லவில்லை. எதற்கு அநாவசியச் செலவு?



# 34

# மோகம் முப்பது ஹவர்! ஆசை அறுபது ஹவர்!

'இந்த நாளை நினைக்கும்போதே என் நெஞ்சம் உற்சாகத்தில் குதூகலிக்கிறது. எங்கள் அஸஃப் ஜா சமஸ்தானமே இந்தத் திருமணத்தினால் மகா பெருமையடைகிறது. இந்தத் திருமண உறவின் மூலம் பழம்பெருமை வாய்ந்த ஒட்டமான் குடும்பத்தினருக்கும், எங்கள் குடும்பத்தினருக்குமிடையேயான உறவு மேன் மேலும் பலப்படும்.'

பெத்த பிள்ளைகளின் திருமணத்துக்குச் செல்லாத ஒஸ்மான், அந்த வைபவம் நடைபெற்ற பிரான்ஸின் நைஸ் நகருக்கு இப்படி ஒரு செய்தியை மட்டும் சர்வ பொறுப்புடன் அனுப்பிவைத்தார். 'இந்தத் திருமணத்தின் மூலம் ஒஸ்மான், சுல்தான் மெஜித்துக்கு ஆதரவு கொடுத்து, துருக்கியில் மீண்டும் அவரை ஆட்சியில் அமர வைக்கத் திட்டம் போடுகிறார்' என்று இந்தியாவில் சில பத்திரிகைகள் தற்காலிகப் பரபரப்பு மூட்டிக் குளிர் காய்ந்தன.

அங்கே நைஸ் நகரில் திருமண ஒப்பந்தம் வாசிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. 'துருஹ்வேஷருக்கு இரண்டு லட்சம் அமெரிக்க டாலர், நிலோஃபருக்கு எழுபத்தைந்தாயிரம் அமெரிக்க டாலர் - வருடந்தோறும் ஒஸ்மான் வழங்க வேண்டும். விவாக ரத்து செய்துகொண்டு போனாலும் சரி, விதவை ஆனாலும் சரி, அவர்கள் உயிரோடு இருக்கும்வரை அந்தத் தொகை அவர்களுக்கு உண்டு.' இதுவே ஒப்பந்தத்தில் அடிக்கோடிட்டுக் காட்ட வேண்டிய பகுதி.

எல்லாச் சடங்குகளும் இனிதே முடிந்தன. அலங்காரங்களால் முகம் மூடப்பட்ட மணமக்கள் போஸ் கொடுக்க, கேமராக்கள் கண் திறந்தன.



இளவரசி நிலோஃபர்

ஒரு வாரம் கழித்து மணமக்கள் பம்பாய் வழியாக இந்தியா திரும்பினர். அன்று இரவு பம்பாயி லேயே தங்கிவிட்டு மறுநாள் ஹைதராபாத் செல்வதாகத் திட்டம். புதுமணத் தம்பதிகள், கொஞ்சம் அப்படி இப்படி... சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் சில்மிஷங்கள், அவ்வப் போது முத்தங்கள். ஆனால் முவாஸம் ஜா, தன் பேரழகு பேகம் நிலோஃபரை ஹோட்டல் அறையில் தனியாக விட்டுவிட்டு இரவுப் பொழுதைக் கழிக்கக் கிளப்புக்குக் கிளம்பிவிட்டார். மோகம் முப்பது ஹவர், ஆசை அறுபது ஹவர்.

மறுநாள் ஹைதராபாத்தில் ஆனந்த வரவேற்பு. காரிலிருந்து இறங்கிய தம் மருமகள்களின் கன்னத்தில் முத்தம் கொடுத்து வரவேற்றார் மாமனார் ஒஸ்மான். உதட்டளவில் கொஞ்சூண்டு சிரித்து, சம்பிரதாயத்துக்கு மருமகள்களின் வணக்கங்களை ஏற்றுக் கொண்டார் மாமியார் துல்ஹான் பேகம்.

அஸம் ஜாவும் முவாஸம் ஜாவும் தங்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த பெல்லா விஸ்டா* (Bella Vista) அரண்மனைக்குச் சென்றனர். மாலையில் அங்கே ஒரு பிரம்மாண்டமான திருமண வரவேற்பு விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தங்கத் தட்டுகளில் விருந்து பரிமாறப்பட்டுக் கொண்டிருக்க, ஒஸ்மான் பேச ஆரம்பித்தார்.

---

★ 1910ல் கட்டப்பட்ட அரண்மனை. அதைக் கட்டிய பிரெஞ்சு கட்டடக்கலை நிபுணர் வைத்த பெயர் அது. அர்த்தம் 'அழகிய தோற்றம்.' இந்திய - ஐரோப்பியக் கலை வடிவங்களோடு பத்து ஏக்கரில் அமைக்கப்பட்ட அரண்மனை அது.

‘இந்த இனிய சந்தர்ப்பத்திலே, என் குடும்பத்தில் சேர்ந்துள்ள இரண்டு புதிய நகைகளை அறிமுகப்படுத்த விரும்புகிறேன். முதல் நகையின் பெயர் பேகம் துருஹ்ஷேவர். புகழ்வாய்ந்த ஒட்டமான் பேரரசின் இளவரசி. இரண்டாவது நகை என் சின்ன மருமகள் நிலோஃபர். ஹைதராபத்துக்குக் கிடைத்துள்ள கோஹினூர் வைரம்’ மருமகள்களின் முகம் சிவக்கச் சிவக்க புகழ்ந்து தள்ளினார் மாமனார் ஒஸ்மான். ஆனால், சில நாள்களிலேயே மாமியார் துல்ஹான் பற்றி ஒரு வதந்தி பரவியது.

‘இந்த அநியாயத்தைக் கேட்டியாடி, அரண்மனைக்கு வந்த புது மருமகள்களைக் கொல்ல மாமியார் விஷம் வைச்சுருச்சாம். அந்த விஷத்தைத் தின்னுப்புட்டு பூனை செத்துக் கிடக்குதாம்!’

வேண்டாதவர்களை விஷம் வைத்துக் கொல்வதென்பது அரண்மனைச் சுவர்களுக்குள் காலம் காலமாக நடந்துவந்த கலாசாரமே. எனவே வதந்தீ குபுகுபுவெனப் பரவியது. அதே வேகத்தில் பிசுபிசுத்தும் போனது. ‘ரெண்டு மகன்களை, மருமகள்களை விஷம் வைச்சுக் கொன்னுட்டு, நிஜாமோட காலத்துக்கு அப்புறம் தானே அரியணையில உட்காரணும்னு எங்க அம்மா திட்டம் போடுறாங்க’ என்று அந்தச் சமயத்தில் வெகு இயல்பாகத் தன் நண்பர்களிடம் ஜோக் அடித்தார் முவாஸம் ஜா.

1933, அக்டோபர் 7. கையைப் பிசைந்தபடி காத்துக் கொண்டிருந்த ஒஸ்மானுக்கு அந்த நல்ல செய்தி வந்து சேர்ந்தது. ‘நைஸ் நகரில் தங்கள் மூத்த மருமகள் துருஹ்ஷேவர், பேரனைப் பெற்றுக்கொடுத்துள்ளார்.’ துள்ளிக் குதிக்காத குறைதான். ‘எனக்குப் பின் சமஸ்தானத்தை ஆளப்போகும் நிஜாம் பிறந்துவிட்டார்’ என்று அகமகிழ்ந்து இனிப்பு சாப்பிட்டார் ஒஸ்மான். ஆம், அடுத்த நிஜாமாக தனது மகன் அஸம் ஜாவை அரியணையில் உட்கார வைக்கும் எண்ணம் ஒஸ்மானுக்கு இருக்கவில்லை.

ஆறு மாதங்கள் கழித்து ஒருநாள். சமஸ்தானத்துக்கு விடுமுறை விடப்பட்டிருந்தது. அன்றுதான் பேரன் மொகரம் ஜா (Mukarram Jah), ஹைதராபாத்துக்குள் பிரவேசம் செய்யும் தினம். ஒஸ்மான், தன் கஞ்சத்தனத்துக்கெல்லாம் தாற்காலிக விடுப்புக் கொடுத்துவிட்டு விமரிசையானக் கொண்டாட்டங்களுக்கு ஏற்பாடு செய்திருந்தார். அரண்மனைகள் அலங்கரிக்கப்பட்டிருந்தன. பொதுமக்களின் கைகளிலும் வாய்களிலும் இனிப்புகள்.

கிங் கோதி அரண்மனை வாசலில் தாத்தா ஒஸ்மான் பரபரப்புத் திலகமாக அலைந்து கொண்டி ருந்தார். கார் மெல்ல மெல்ல அசைந்து வந்து நின்றது. துருஹ்ஷேவர் மஸ்லின் துணியொன்றில் குழந்தையை ஏந்தியபடி இறங்கினாள். தாத்தாவின் கண்களும் பேரனின் கண்களும் கலந்தன. குழந்தையைக் கையில் வாங்கிய ஒஸ்மான் உச்சி முகர்ந்து நெற்றியில் முத்தமிட்டார். ‘ஜுஜ்ஜூஜ்ஜுஜ்ஜூ, என் செல்லம். அப்படியே தாத்தாவை உரிச்சு வைச்சிருக்கான்.’

தன் மனைவிக்கோ, துணைவிக்கோ, ஆசைநாயகிகளுக்கோ பிறக்கும் குழந்தைகளை முதன் முதலில் பார்க்கும்போது உச்சி முகர்ந்து நெற்றியில் முத்தமிட்டு மகிழ்வது ஒஸ்மானின் வழக் கம். அவரது அந்தப்புரத்தில் குழந்தை அழும் சத்தம் கேட்டுக் கிட்டத்தட்டப் பத்து வருடங்கள் ஆகியிருந்தன.

ஒரு பணக்காரத் தாத்தாவின் லட்சணத்துடன் ஒஸ்மான், தன் பேரனைப் படு ஆடம்பரமாகவே வளர்த்தார். துருஹ்ஷேவர் குழந்தையுடன் எங்காவது வெளியூருக்குப் பயணம் செய்தால், ரயில் பெட்டிகளில் பெரிய பெரிய ஐஸ் கட்டிகளை வைத்து அதற்கு ஏசி வசதி செய்து கொடுத்தார். குறிப்பிட்ட ஸ்டேஷன்களுக்கிடையில் ஐஸ் கட்டியை மாற்றவும் ஏற்பாடு செய்திருந்தார். தன் சொந்தக் காரை அவசியத்துக்குக் கூட எடுத்து ஓட்டாத ஒஸ்மான், தன் பேரன் சாலைகளில் பிரயாணம் செய்ய ஏக வசதிகள் கொண்ட கார்களை வழங்கினார். கோடைக்காலத்தில் பிரான்ஸிலும், மற்ற நேரங்களில் ஹைதராபாத்திலும் பேரன் மொகரம் ஜா அமோகமாக வளர்ந்தான்.



பேரன் மொகரம் ஜாவுடன் நிஜாம் ஒஸ்மான்

பேரன் மொகரம் ஜாதான் எட்டாவது நிஜாம் என்று ஒஸ்மான் முடிவு செய்துவிட்டாரென வைஸ்ராய்க்குத் தகவல் போனது. அதற்கு பிரிட்டிஷ் அரசு மறைமுகமாகச் சம்மதம் தெரிவித்தது. அதே சமயத்தில் தனது வாரிசாக மொகரம் ஜாவை அறிவிக்கலாம் என்று துருக்கி தாத்தாவான மெஜித்தும் கணக்குப் போட்டு வைத்திருந்தார். (ஆனால் அதை வெளிப்படையாக அறிவிக்கும் முன்பே மரணம் அவரை உள்வாங்கிக் கொண்டது (1944, ஆகஸ்ட் 23). இரண்டாம் உலகப் போர் சமயம் என்பதால், மெஜித்தின் வாரிசு யார் என்றெல்லாம் யாருக்கும் யோசிக்கத் தோன்றவில்லை.)

சரி, இளவரசர் அஸம் ஜா இதற்கெல்லாம் கிஞ்சித்தும் அலட்டிக் கொள்ளவே இல்லையா? அட, அவருக்கிருந்த ஆயிரெத்தெட்டு உல்லாச ஜோலிகளில் இதற்கெல்லாமா கவலைப் பட்டுக் கொண்டிருக்க முடியும்? புதிதாக ஒரு நடனக்காரியுடன் காதல் வேறு பூத்திருந்தது. அவள் அழகில், குரலின் வனப்பில், நடனத்தில் மிளிர்வில் கிறங்கிக் கிடந்தார் அஸம் ஜா. ஆனால் அந்த உறவு மறைமுகமாகவே இருந்து வந்தது. அதனை வெட்ட வெளிச்சமாக்க வந்து குதித்தான் ஓர் ஒற்றன்.

'அம்மா... அய்யா... பிச்சை போடுங்க!' - அந்த ராப்பிச்சைக்கார ஒற்றன் தெருக்களில் சுற்றிக் கொண்டிருந்தான். பிச்சைக்காரன் என்பதால் யாரும் எந்தக் கேள்வியும் கேட்க மாட்டார்கள். எங்கும் எளிதில் நுழையலாம். அந்தத் தெருவில் ஒரு மாளிகை முன் கார் வந்து நின்றது. நின்ற வேகத்தில் சடாரென இறங்கிய ஒருவர் படாரென மாளிகைக்குள் புகுந்தார். ஒற்றனின் பார்வையாயிற்றே, நுழைந்தவர் இளவரசரென்று கண்டுகொண்டது.

கார் அங்கிருந்து கிளம்பியது. ஒற்றன் அங்கேயே சுற்றிவர ஆரம்பித்தான். சிறிது நேரத்துக்கு மாளிகைக்குள்ளிருந்து எந்தச் சத்தமும் வரவில்லை. ஒரு பெண் குரலில் பாட்டுச் சத்தம்

கசிந்தது. பின்பு நடனமாடும் ஒலி. சிரிப்போசை. சில மணி நேரங்கள் கழித்துக் கார் மீண்டும் வந்து நின்றது. இளவரசர் மின்னலாகக் கிளம்பிச் சென்றார்.

ஒற்றன் அங்கிருந்து நகரவில்லை. மீண்டும் அந்த வீட்டுக்கு யாராவது வருகிறார்களா என்று கடமை, கண்ணியம், கட்டுப்பாடு தவறாமல் வேவு பார்த்துக் கொண்டிருந்தான். நள்ளிரவு நகர்ந்தது.

அதிகாலை நேரம். சமஸ்தானத்தின் காவல் துறை தலைமை அதிகாரியைப் பார்க்க அந்த ஒற்றன் சென்றான். மேலும் சில ராப்பிச்சைக்கார ஒற்றர்கள் அங்கு ஆஜராகியிருந்தார்கள். இரவுகளில் யார் யார் எந்தெந்த வீட்டுக்குச் செல்கிறார்கள், எங்கெங்கு நடமாடுகிறார்கள், எந்தெந்த வீடுகளில் புதிய பெண்களின் நடமாட்டம் இருக்கிறது, எந்தெந்த வீட்டுப் பெண்கள் எங்கெங்கு தென்படுகிறார்கள், பெரிய மனிதர்களின் நடமாட்டம் எந்த ஏரியாவில் இருக் கிறது, அரசு அதிகாரிகள் இரவில் யாராவது முக்கியஸ்தர்களைச் சந்திக்கிறார்களா - என்றெல் லாம் வேவு பார்த்துக் காவல்துறைத் தலைமை அதிகாரியிடம் சொல்ல வேண்டியது ஒற்றர்களின் வேலை. எல்லாம் நிஜாம் ஒஸ்மானின் அமைத்திருந்த ரகசிய நெட்வொர்க்தான். பிச்சைக்கார வேடத்தில் ஒற்றர்கள் வேவு பார்ப்பதென்பது முகலாயர்கள் கால கலாசாரம்.

சமஸ்தானத்தின் ரெஸிடெண்ட் என்றொருவர் எல்லாவற்றிலும் தலையிட்டு, ஆயிரத்தெட்டு தடைகள் போட்டு, குடைச்சல்கள் கொடுத்துக் கொண்டிருந்தாலும், ஒஸ்மான் இப்படி ரகசிய நெட்வொர்க் அமைத்து நிர்வாகத்தைத் தன் கைப்பிடியில் வைத்திருந்தார். பிரிட்டிஷ் அரசின் கட்டுப்பாட்டில்தான் காவல்துறை இருக்க வேண்டும் என்று வைஸ்ராயே ஆர்டர் போட்டிருந்தாலும், அது ஒஸ்மானின் கட்டளைகளின்படியே திரைமறைவில் இயங்கிக் கொண்டிருந்தது.

பொழுது விடிந்தது. ஆறு மணிக்கு எழுந்த ஒஸ்மான் காலைக் கடன்களை முடித்தார். சுடச்சுட பால் சேர்க்காத காப்பி அருந்தினார். அவரது கைவிரல்கள் செய்தித்தாள்களைப் புரட்டிக் கொண்டிருந்தன. பின்பு வெளி அறைக்கு வந்து அங்கிருந்த ஷோபாவில் ஒய்யாரமாகப் படுத்துக் கொண்டார். அங்கே காவல்துறைத் தலைமை அதிகாரி காத்துக் கொண்டிருந்தார். நிஜாமுக்குச் சலாம் போட்டுவிட்டுத் தயக்கத்துடன் பேச ஆரம்பித்தார்.

'நிஜாம்... நேற்று ஒரு நடனக்காரியின் வீட்டுக்கு ஒருவர் சென்று வந்துள்ளார். அவர்.. அவர்...'

'விஷயத்துக்கு வாருங்கள்.'

'அவர் நம் இ.. இளவரசர் அஸம் ஜா..'

ஒஸ்மான் எழுந்து உட்கார்ந்தார். முகத்தில் அதிர்ச்சியெல்லாம் வெளிப்படவில்லை. அதிகாரியிடம் ஏகப்பட்ட குறுக்குக் கேள்விகளைக் கேட்டார். மீண்டும் வேவு பார்க்கச் சொன்னார். தகவல் உறுதிப்படுத்தப்பட்டது. சமாசாரம் ரெஸிடெண்டின் காதுகளையும் சென்றடைந்தது. அப்போது ரெஸிடெண்டாக கீஸ் இல்லை, அவர் மாறி விட்டிருந்தார். புதியவர் பெயர் டன்கன் மெக்கென்ஸி (Duncan McKenzie).

கடும் டென்ஷனில் இருந்தார் மெக்கென்ஸி. சமஸ்தானத்துக்குப் புதியவர். ஒஸ்மானின் தகிடு தத்தங்கள் பற்றி அவ்வளவாக அறியாதவர். ரெஸிடெண்டின் வார்த்தைகளோ, வைஸ்ராயின்

கட்டளைகளோ எல்லாவற்றையும் மீறி லாகவமாக அரசியல் பண்ணும் கில்லாடி ஒஸ்மான் என்பது மெக்கென்ஸிக்குத் தெரியாது; பாவம். ஒஸ்மானிடம் நேராகச் சென்றார்.

'என்ன இது? இளவரசர் அஸம் ஜாவுக்கு இரண்டு வயதில் மகன் இருக்கிறான். இளவரசியோ புகழ் வாய்ந்த ஒட்டமான் பரம்பரையைச் சார்ந்தவர். துருஹ்ஷேவருக்கு இந்த விஷயம் தெரிந்தால் என்ன ஆவது? துருக்கி சுல்தான் என்ன நினைப்பார்? இது மாபெரும் தவறான காரியமல்லவா?' வெகு சீரியஸாக ஒஸ்மானிடம் கேட்டார் மெக்கென்ஸி.

ஒஸ்மான் இத்தூணுண்டுகூட அலட்டிக் கொள்ளவே இல்லை. அவர் அந்தப்புரத்தில் இல்லாத பேரழகிகளா! அமைதியாகப் பதில் கூறினார்.

'இதெல்லாம் இயற்கையானதே. ஓர் இளவரசரின் தேவையை ஒரு பெண்ணால் பூர்த்தி செய்ய முடியுமா என்ன? வேறு ஏதாவது கெட்ட நோய் வந்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். தேவையற்ற கர்ப்பம் உண்டாகி விடக்கூடாது. அதற்கு வேறு வீணாகச் செலவழிக்க வேண்டியதிருக்கும்.'



# உலகின் நெம்பர் ஒன் பணக்காரர்

எத்தனை வயதானால் என்ன, ஐஸ்புரூட்டைப் பார்க்கும்போது நாக்கில் ஜலம் ஜலதரங்கம் வாசிக்கத்தானே செய்யும்.

அப்போது இந்தியாவில் ஐஸ்கட்டி என்பது வெகுஜனம் உபயோகிக்காத பொருள். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலெல்லாம் ஆங்கிலேயர்கள் தங்கள் உபயோகத்திற்காக ஐஸ்கட்டிகளை, ஆஸ்திரேலியாவில் இருந்து கப்பலில் கொண்டு வந்தார்கள். பின்பு ஐஸ்கட்டிகளை உருவாக்கும் இயந்திரங் கள் இறக்குமதி செய்யப்பட்டன. எப்போதாவது வீணாகப் போகும் அல்லது தேவைக்கு அதிகமாக இருக்கும் ஐஸ்கட்டிகளை ஆங்கிலேயர்கள் சாலையில் வீசுவார்கள். அதை உடைத்துத் துண்டு துண்டாக்கி வாயில் போட்டு, பற்கள் கூச 'ஸ்ஸ்...' சொல்லி மகிழும் பழக்கம் இந்தியர்களிடம் இருந்தது.

நாளடைவில் ஐஸ்காரர்கள் முளைத்தார்கள். ஐஸ் வாங்கித் தின்பவர்கள் ஒன்றிரண்டு பேர் இருந்தாலும், ஐஸ்காரர் இனிப்பு ஐஸை உருவாக்கும் வித்தையைக் காண்பதற்காகவே அவ்வளவு கூட்டம் கூடும். மேஜிக் செய்பவர் தொப்பியிலிருந்து முயலை எடுப்பது போல, ஐஸ்காரர் தன்னுடைய மரப்பெட்டி யிலிருந்து துணியால் சுற்றப்பட்ட ஐஸ்கட்டியை எடுப்பார். அதனைக் கேரட் துருவுவது போலத் துருவுவார். சின்ன மரக்குச்சி ஒன்றை எடுப்பார். ஐஸ் துருவலை மரக்குச்சியைச் சுற்றி வைத்து தம் கையால் இறுக அழுத்துவார். அது ஒட்டிக் கொண்டுவிடும். பின் தேன் நிற எசென்ஸ் நிறைந்த பாட்டிலின் மூடியைத் திறந்து, அந்த குச்சி ஐஸ் மேல் ஊற்றுவார். அதுதான் அன்றைய ஐஸ்புரூட்!

ஒஸ்மானும் ஒருநாள் சாலையில் ஐஸ்காரர் ஒருவரைக் கண்டார். நிஜாம் தன்னை நோக்கி வருகிறார் என்றதும் ஐஸ்காரர் உருகிப் போனார். 'ம்..' என்று கையை நீட்டினார் ஒஸ்மான். படபடப்போடு ஐஸ்புரூட் ஒன்றைச் செய்து கொடுத்தார் ஐஸ்காரர்.

புறங்கையெல்லாம் ஐஸ் வழிந்தோட அதனை ருசித்துச் சாப்பிட்டார் ஒஸ்மான். அன்று நல்ல மூடில் இருந்தார் போல, 'எவ்வளவு?' என்று தன் திருவாய் மலர்ந்து கேட்டார். ஆனால் ஐஸ் காரருக்கு மூக்கில் சளி, நாக்கில் சனி போல. நிஜாமே கேட்கிறார், கொஞ்சம் விலை அதிக மாகச் சொல்லிப் பார்ப்போமே என்ற சபலம்.

'ஆறு அணா' என்றார். அதுவரை ஐஸ் சாப்பிட்டுக் குளுகுளுவென இருந்த ஒஸ்மான், சூடா னார். 'நீ விலை அதிகமாகச் சொல்லுகிறாய். அவ்வளவெல்லாம் தரமுடியாது' என்று சொல்லி விட்டு அங்கிருந்து வேகவேகமாகக் கிளம்பினார். அன்று மாலையே அந்த ஐஸ்காரரைத் தூக்கிச் சிறையில் போட்டுவிட்டார்கள்.

இது அன்றைய நாளில் ஒஸ்மானின் புகழை ஓஹோவெனப் பரப்பிய சம்பவம். இன்னொரு ஐஸ் சம்பவமும் உண்டு. ஒருநாள் ரேஸ் கோர்ஸுக்குச் சென்ற ஒஸ்மான், அங்கு ரெஸிடெண்டின் மனைவியைச் சந்தித்தார். சும்மா ஒரு பேச்சுக்கு 'என்ன சாப்பிடறீங்க?' என்று கேட்டார். விவரம் தெரியாத அந்த அம்மணியும் பல்லிளித்துக் கொண்டே 'ஐஸ்கிரிம்' என்று சொல்லித் தொலைத்துவிட்டது. வேறு வழியின்றி ஒஸ்மானும் பக்கத்திலிருந்த ரெஸ்டாரண்டுக்கு ஆளனுப்பி ஐஸ்கிரிம் வாங்கிவரச் சொன்னார்.

நிஜாமே கேட்கிறார் என்பதால் ஒரு பெரிய கப் நிறைய ஐஸ்கிரிம் வந்தது. 'அதிகமாக இருக்கிறது' என்று அதைத் திருப்பி அனுப்பினார். அளவு குறைக்கப்பட்டு மீண்டும் வந்தது. மீண்டும் அதையே சொல்லி திருப்பி அனுப்பினார். அளவு மேலும் குறைக்கப்பட்டு மூன்றாவது முறையும் வந்தது. மிகவும் எரிச்சலுடன் 'இவ்வளவெல்லாம் வேண்டாம். எடுத்துக் கொண்டு போய்விடுங்கள்' என்று கறாராகச் சொல்லிவிட்டார் ஒஸ்மான்.

ரெஸிடெண்ட் மனைவியின் முகத்தில் அருவருப்பு கலந்த அதிர்ச்சி. ஒஸ்மான் அதையெல்லாம் சட்டை செய்யவே இல்லை. 'எவன் அப்பன் காசுல எவ ஐஸ்கிரிம் சாப்பிடுறது' என்று நினைத்துக் கொண்டு ரேஸ் பார்க்கத் தொடங்கினார்.

ஒஸ்மான் செய்த நல்ல காரியங்களில்கூட அவரது பிசினாரித்தனம் பிசின் போல ஒட்டிக் கொண்டிருக்கத்தான் செய்தது. ஒருமுறை தேசிய பாதுகாப்பு நிதிக்காக அரசுக்கு, பெட்டி பெட்டியாகத் தங்கக் காசுகள் வழங்க முடிவு செய்தார். ஒஸ்மானின் மேற்பார்வையில் டிரங்குப் பெட்டிகளில் காசுகள் நிரப்பப்பட்டன. பெட்டிகளை லாரியில் ஏற்றினார்கள். வண்டி கிளம்பத் தயாரானபோது, அங்கிருந்த பாதுகாப்பு அதிகாரி, 'அப்ப நாங்க உத்தரவு வாங்கிக்கட்டுங்களா?' என்று பவ்யமாகக் கேட்டார்.

ஒஸ்மான் வேகவேகமாக, 'அரசுக்கு நான் தங்கக் காசுகளை மட்டும்தான் கொடுக்குறேன். மத்தபடி, அந்த டிரங்கு பெட்டியெல்லாம் எண்ணிக்கை குறையாமத் திரும்ப வந்து சேரணும். புரிஞ்சுதா?' என்றார் அழுத்தமாக.

ரத்தத்தோடு கலந்துவிட்ட குணம் அது. வாழ்நாளில் எந்த நிலையிலும் அவர் தனது குணத்தை மாற்றிக் கொள்ளவே இல்லை. இப்பேர்ப்பட்ட அரிய குணங்கள் நிறைந்த நிஜாம் ஒஸ்மான்

அலிகானைப் பற்றி, டைம் வாரப் பத்திரிகை ஒரு கட்டுரை வெளியிட்டது. அட்டையில் ஒஸ்மானின் ஓவியம் கம்பீரமாகக் காட்சியளித்தது (1937, பிப்ரவரி 22.)

கட்டுரை அவரது கஞ்சத்தனத்தைப் பற்றியல்ல.'உலகின் மாபெரும் பணக்காரர்' என்பதற்காக. HIS EXALTED HIGHNESS THE NIZAM OF HYDERABAD என்று தலைப்பிட்டிருந்தது.

இன்றைய தேதியில் முகேஷ் அம்பானிக்கு அந்த பாக்கியம் கிடைத்ததோ இல்லையோ, அன்றைய தேதியில் நிஜாம் ஒஸ்மான் அலிகானுக்கு அந்தப் பேறு கிடைத்தது. டைம் பத்திரிகை மட்டுமல்ல, உலகில் பல பெரிய பத்திரிகைகள் அப்போது அந்தச் செய்தியை வெளியிட்டு நிஜாமின் சொத்துக் கணக்கை விதவிதமாகக் கூறின.

நிஜாமின் தினப்படி வருமானம் சுமார் ஐயாயிரம் அமெரிக்க டாலர்கள். அவர் கொத்துக் கொத்தாகச் சேர்த்து வைத்துள்ள நகைகளின் மொத்த மதிப்பு குத்துமதிப்பாக பதினைந்து கோடி அமெரிக்க டாலர்கள். அவர் உப்புப் போட்டு கெட்டுப் போகாமல் பாதுகாப்பாக வைத்துள்ள தங்கக் கட்டிகளின் மதிப்பு இருபத்தைந்து கோடி அமெரிக்க டாலர்கள் இருக்கும். அதையும் சேர்த்து நிஜாமின் ஒட்டுமொத்த சொத்தின் மதிப்பு தோராயமோ தோராயமாக நூற்று நாற்பது கோடி அமெரிக்க டாலர்கள் இருக்கலாம் என்று வியந்து எழுதியிருந்தது டைம் பத்திரிகை. இந்தக் கணக்கில் ஒஸ்மான் சேர்த்து வைத்திருக்கும் வைர, மரகதக் கற்களின் மதிப்பு சேர்க்கப்பட்டவில்லை என்பது முக்கியமானது.

சரி, முதலிடம் ஒஸ்மானுக்கு. இரண்டாவது இடம்? வெற்றிகரமாக கார்களைத் தயாரித்து வந்து ஹென்றி ஃபோர்டுக்கு. ஆனால் என்ன, அவரது மொத்த சொத்து மதிப்பு, ஒஸ்மான் சேர்த்து வைத்திருந்த நகைகளின் மதிப்பில் பாதிகூட இல்லை என்பதே உண்மை.

டைம் பத்திரிகை அவரை அட்டையில் வெளியிட இன்னொரு காரணமும் இருந்தது. அது, ஒஸ்மான் ஹைதராபாத்தின் நிஜாமாகப் பதவியேற்ற இருபத்தைந்து வருடங்கள் பூர்த்தி



ஒஸ்மானியா பல்கலைக்கழகக் கல்லூரி

ஆகியிருந்தன. கணக்குப்படி பார்த்தால் 1911ல் நிஜாமாகப் பதவியேற்ற ஒஸ்மான், 1936லேயே வெள்ளி விழாக் கொண்டாடியிருக்க வேண்டும். என்ன, வீட்டில் யாராவது தவறிப் போயிருந்தால் அந்த வருடம் முழுவதும் பண்டிகைகள் கொண்டாடுவதைத் தவிர்ப்போமே, அது போலத்தான் ஒஸ்மானுக்கும் நிகழ்ந்தது. ஆனால் இழவு விழுந்தது இங்கல்ல, இங்கிலாந்தில். 1936ல் மன்னர் ஐந்தாவது ஜார்ஜ் பரலோக ப்ராப்தி அடைந்தார். எனவே வெள்ளி விழாக் கொண்டாட்டங்கள் ஒரு வருடத்துக்குத் தள்ளிப் போடப்பட்டன.



டைம் அட்டை

மற்ற மகாராஜாக்கள் என்றால் கேட்கவே வேண்டாம், தாம்தூம் தையத்தக்காவென்று செலவுக் கணக்கெல்லாம் பாராமல் தங்கள் வெள்ளி விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடித் தீர்த்திருப்பார்கள். உலகின் நெம்பர் ஒன் பணக்காரர் கொண்டாட்டங்களுக்கென இயன்றவரைச் சிக்கனமாக யோசித்தார். பட்ஜெட் போட்டு நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தார்.

கொண்டாட்டத்துக்கு ஏராளமான விருந்தினர்கள் வந்திருந்தார்கள். பல்வேறு சமஸ்தானத்து மகாராஜாக்களும் ஹைதராபாத்தில் குவிந்திருந்தார்கள்.

முக்கிய விருந்தினர்கள் அலே ஷா கானும் அவரது லேட்டஸ்ட் மனைவி தாம்ஸன் லோயலும். முஸ்லீம் லீக்கை உருவாக்கியவர்களுள் ஒருவரான மூன்றாவது அகா கானின் மகன்தான் அலே ஷா கான். தாம்ஸன் லோயல் அப்போதுதான் தம் முதல் கணவரிடமிருந்து சுடச்சுட விவாகரத்து வாங்கிக் கொண்டு வந்திருந்தார். லோயலைத் திருமணம் செய்த கையோடு வெள்ளி விழாக் கொண்டாட்டத்துக்கும் வந்துவிட்டார் இளவரசர் அலே ஷா கான். புதுமணத் தம்பதிகளைக் கண்டு ஒஸ்மானுக்கு ஏக சந்தோஷம். (சில வருடங்களிலேயே அலே, லோயலை விவாகரத்து செய்துவிட்டு ஹாலிவுட் நடிகை ரிட்டா ஹேவொர்த்தை லவ்வ ஆரம்பித்துவிட்டார் என்பதெல்லாம் நமக்குத் தேவையில்லாத விஷயம்.)

மக்களுக்குப் பொது அறிவிப்பு ஒன்றை வெளியிட்டார் ஒஸ்மான். ‘இதற்கெல்லாம் அநாவசிய மாகச் செலவு செய்யாதீர்கள். குறிப்பாக நகரை, தங்கள் வீடுகளை எல்லாம் மெனக்கிட்டு அலங்கரிக்க வேண்டாம்.’ இருந்தாலும் மனசு கேட்காத சிலர் மின்சார விளக்குகளால் தங்கள் இல்லங்களை அலங்கரிக்கவே செய்தனர். ஒஸ்மானிடம் தங்கத்துக்கா பஞ்சம். கொட்டிக் குவிந்து கிடப்பதில் கொஞ்சூண்டு எடுத்து, தனக்காக ஸ்பெஷல் தங்க அரியணை ஒன்றை செய்து கொண்டார். அவருக்கு அவரே கொடுத்துக் கொண்ட வெள்ளிவிழாப் பரிசு அது.

ஜிகுஜிகு உடையெல்லாம் இல்லை, பாரம்பரிய உடையான ஷெர்வானி ஒன்றை அணிந்து (நல்ல வேளை, புதியது) கிங் கோதி அரண்மனையிலிருந்து வெளியே வந்தார் ஒஸ்மான். தோட்டத்தில் புதிதாக ஒரு மேடை கட்டப்பட்டிருந்தது. அதன் மேலேறி நின்று கூடியிருந்தவர்களுக்குக் கம்பீரமாக ஒரு ஹாய் சொன்னார். கார் ஷெட்டிலிருந்து தூசி தட்டி எடுத்துவைக்கப்பட்ட ரோல்ஸ் ராய்ஸ், இன்றாவது ஓடுவோமா என்ற ஏக்கத்துடன் நின்று கொண்டிருந்தது. தாராள மனத்துடன் அதில் ஏறிக் கிளம்பினார். குதிரைப் படைகள் முன்னணி

வகிக்க, ஊர்வலம் ஆரம்பமானது. சாலையின் இருபுறமும் நிஜாமின் ப்ரியத்துக்குரிய மக்கள் மண்டியிட்டு வணக்கம் வைத்தார்கள். மெக்கா மஸ்ஜித்தை அடைந்த நிஜாம், அங்கிருந்த ஆயிரக்கணக்கான மக்களோடு சேர்ந்து தொழுகை நடத்தினார்.

பஃதே மைதானத்தை (இன்றைய லால் பகதூர் சாஸ்திரி ஸ்டேடியம்) நோக்கி ஊர்வலம் தொடர்ந்தது. அங்கு கூடியிருந்தவர்கள் ஆர்ப்பரிக்க, மெல்லிய புன்னகையுடன் கையசைத்துக் கொண்டே சென்றார் ஒஸ்மான். அணிவகுப்பு மரியாதையை ஏற்றுக் கொண்டார். நிஜாமைக் கவுரவிக்கும் வகையில் துப்பாக்கிகள் வானை நோக்கி முழங்க ஆரம்பித்தன. அவ்வளவுதான் பேரன் மொகரம் ஜா, மிரண்டு அழ ஆரம்பித்தான். தாத்தா நெஞ்சு தாங்குமா? 'போதும்' என்று சுடுவதைப் பாதியிலேயே நிறுத்தச் சொன்னார்.

பின்பு அந்த வெள்ளி விழா தர்பாரில் தன் பேச்சைத் தொடங்கினார் நிஜாம்.

'...என் மீதி வாழ்க்கையையும் இந்த சமஸ்தானத்தின் மக்களுக்காக உழைப்பதிலேயே அர்ப்பணிக்க விரும்புகிறேன். நான் மக்களின் வேலைக்காரனாகக் கடவுளால் படைக்கப் பட்டுள்ளேன். அதுவே என் வாழ்வுக்கு கிடைத்துள்ள மதிப்புமிக்க பட்டம்...'

என்னதான் கஞ்சத் திலகமாக இருந்தாலும் ஒஸ்மானின் அந்தப் பேச்சில் உண்மை இருக்கவே செய்தது. தன் இருபத்தைந்து வருட ஆட்சியில் ஒஸ்மான் சமஸ்தானத்தில் நிறைய நல்ல திட்டங்களையும் நிறைவேற்றியிருந்தார். கல்விக்காக ஒஸ்மானியா பல்கலைக்கழகத்தைத் (Osmania University) தொடங்கியிருந்தார். சர்வ வசதிகளுடன் கூடிய ஒஸ்மானியா மருத்துவ மனை தொடங்கப்பட்டிருந்தது. நீதிமன்றம், நூலகக் கட்டடங்கள் கட்டப்பட்டன. சமஸ் தானத்தில் பல பகுதிகளில் ரயிலோசை கேட்கத் தொடங்கியது. மின்சாரமும் அப்படியே. விமானப் போக்குவரத்துகூடத் தொடங்கப்பட்டிருந்தது. முசி (Musi) நதியில் ஒஸ்மான் சாகர் நீர்த்தேக்கத்தைக் கட்டி, நகருக்கு குடிநீர் வசதி செய்து கொடுத்திருந்தார். ஆசியாவின் மிகப் பெரிய அணைக்கட்டான நாகர்ஜுனசாகர், ஒஸ்மான் காலத்தில் கட்ட ஆரம்பிக்கப்பட்டது தான். கலாசாரமும் மாறாமல், அதே சமயத்தில் நவீனக் கட்டமைப்புகளுடன் ஹைதராபாத் நகரம் வளர்ந்தது, ஒளிர்ந்தது.

ஒருபோதும் சமஸ்தானத்தில் நிதிப் பற்றாக்குறை என்ற வாசனையே வரவில்லை. நிதியமைச்சர் அக்பர் ஹைதாரியின் கட்டுக்கோப்பான நிர்வாகத்தில் அடுத்த மூன்றாண்டுகளுக்கான பட்ஜெட் நிதி கைவசமிருந்தது. ஆகவே வெள்ளி விழாவை மக்கள் மனமகிழ்வுடனேயே கொண்டாடினார்கள். கொண்டாட்டங்களின் நிறைவாக நடந்த விருந்துக்காக ஆயிரம் மாடுகள், பத்தாயிரம் ஆடுகள் தங்கள் இன்னுயிர் நீத்தன.

கொண்டாட்டங்கள் முடிந்து, அடுத்தடுத்த நாள்களில் ஒஸ்மான் யாரையும் கண்டுகொள்ளாமல் தான் உண்டு தன் வேலை உண்டு என இருந்தார். என்ன பெரிய வேலை? அதாவது வெள்ளி விழாவுக்கு வந்த பரிசுப் பொருள்களின் மதிப்பு எவ்வளவு இருக்கும் என்று மெனக்கிட்டுக் கணக்குப் போட்டுக்கொண்டிருந்தார். வந்த பரிசுப் பொருள்களின் மதிப்பு மட்டும் சுமார் பத்து லட்சம் அமெரிக்க டாலர்கள்.



# பருத்தி வீரன் அஸம் ஜா!

*அரசியல் கட்சி என்றால் சரி, தந்தை இருக்கும்போது, மகனை இளைஞரணிச் செயலாளராக எத்தனை வருடங்கள் வேண்டுமானாலும் வைத்து இருக்கலாம் மகனுக்கே பேரன்கள் பிறந்து விட்டாலும். சமஸ்தானத்தின் மகாராஜா பதவி என்ன அப்படிப்பட்டதா? அதுவும் பொதுவாக மகாராஜாக்கள் மண்டையைப் போடும் வரை, இளவரசர்கள் அரியணை ஏற முடியாத சூழலே நிலவி வந்தது.*

*வெள்ளி விழா ஆண்டில் ஹைதராபாத் நிஜாம் ஓஸ்மானின் வயது அரைசதம் ப்ளஸ் ஒன்று. சர்வ கம்பீரத்துடன் ஆட்சியைத் தொடர்ந்து கொண்டிருந்தார். ஆனால் இளவரசர் அஸம் ஜா சும்மா இருக்கிறாரே. அவருக்கென்று ஏதாவது பொறுப்புக் கொடுக்க வேண்டுமே. அப்பன் பேச்சைக் கேட்காத பிள்ளை. பொறுப்பு என்றால் அது எப்படி இருக்கும் என்று கேட்பார். உல்லாசம் என்றால் எப்படி எப்படி எல்லாம் அனுபவிக்கலாம் என்று பேருரை ஆற்றுவார். அப்படிப் பட்டவரை நம்பி என்ன பதவியைக் கொடுக்க முடியும்? பிரிட்டிஷ் அரசும் அஸம் ஜா மீது கருப்புப் புள்ளி வைத்திருந்தது. கன்னத்தில் விரல் ரேகைகள் பதிய கை வைத்துக் கவலைப்பட்டார் ஓஸ்மான்.*

*'கல்யாணம் ஆனா சரியாகிடுவான்னு நினைச்சேன். ஆனா ரெண்டு புள்ளைங் களுக்கு அப்பனும் ஆயிட்டான். ஒரு புடலங்காயும் மாறலை. என்னத்தச் செய்ய?' - ரெஸிடெண்ட் மெக்கென்ஸியிடம் புலம்பினார் ஓஸ்மான். 'ஏதாவது*

பதவியை வலுக்கட்டாயமாகக் கொடுத்துட வேண்டியதுதானே. ஒரு யோசனை. ஹைதராபாத் சமஸ்தானத்தின் தலைமை கமாண்டர் பதவியை இளவரசருக்குக் கொடுத்தா என்ன?' மெக்கென்ஸி கேட்டார்.

ஒஸ்மானுக்கு அந்த யோசனை பிடித்திருந்தது. மகனிடம் பேசினார். ஆனால் அஸம் ஜாவோ 'வேணாம் போ' என்று முறுக்கிக் கொண்டார். 'மூத்த பையன் நான் இருக்கேன். அடுத்த நிஜாமா என்னை அறிவிப்பாருன்னு பார்த்தா, எனக்குப் பொறந்த மகனை அறிவிச்சுட்டாரே' - தனக்குள் குமுறிக் கொண்டிருந்தார் அஸம் ஜா. ஒஸ்மானின் எண்ணத்துக்கு பிரிட்டிஷ் அரசும் ஓகே சொல்லவே மிகவும் கடுப்பாகிப் போனார் இளவரசர்.

எதனைக் கொடுத்தால் இளவரசரின் பித்தம் தெளியும் என்று தீவிரமாக யோசித்த ஒஸ்மானுக்கு, பேரார் சமஸ்தானம் நினைவுக்கு வந்தது. அட, பேராரின் இளவரசராக அஸம் ஜாவை உட்கார வைத்துவிட்டால்? நினைத்துப் பார்க்க நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், பேரார் இப்போது நம் கையில் இல்லையே. இந்தப் பாழாய்ப்போன பிரிட்டிஷ் அரசிடமல்லவா சிக்கிக் கொண்டிருக்கிறது. என்ன செய்யலாம்?

ஒஸ்மான் யோசித்துக் கொண்டிருக்கும் வேளையில் ஒரு சின்ன நினைவூட்டல் பேரார் என்பது முதலாம் அஸம் ஜா காலத்திலேயே ஹைதராபாத்தோடு சேர்த்துக் கைப்பற்றப்பட்ட பகுதி. ஹைதராபாத்துக்கு அருகிலுள்ள சிறிய சமஸ்தானம். ஒஸ்மானின் முப்பாட்டன்கள், நாற்பாட்டன்கள் ஆண்டு அனுபவித்த பகுதி. அது இடைப்பட்ட காலத்தில் பிரிட்டிஷ் அரசி டம் கைமாறியிருந்தது. எப்படி?

இந்த இடத்தில் 'சில வருடங்களுக்கு முன்...' என்றொரு டைட்டில் கார்டைப் போட்டு பிளாஷ்பேக்கைப் பார்க்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். பார்க்கலாம்.

பேரார் அன்றும் இன்றும் இந்தியாவின் பருத்திக் களஞ்சியமாக விளங்கிவரும் பகுதி. ஆங், அதென்ன சொல்லுவோம், இந்தியாவின் மான்செஸ்டர், மும்பைக்குச் சற்று அருகில் இருக் கிறது. இன்றைய மகாராஷ்டிராவின் விதர்பா பகுதியில் அமைந்துள்ள பிரதேசம்.

கடந்த சில வருடங்களாகவே இன்றைய விதர்பாவில் தற்கொலை செய்துகொள்ளும் விவசாயிகள் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் அன்றைய நாள்களில் பிரிட்டிஷ் அரசின் கண்களில் செல்வம் கொழிக்கும் பகுதியாக மினுமினுத்தது. இந்தப் பருத்தி பூமியை ஏன் நிஜாம் கையில் விட்டுவைத்திருக்க வேண்டும்? நாம் வளைத்துக் கொண்டால், துட்டு பருத்திபோல் காய்க்குமே! திட்டம் போட்டு காய் நகர்த்த ஆரம்பித்தது பிரிட்டிஷ் அரசு.

அது 1853ம் ஆண்டு. நிஜாமாக ஒஸ்மானின் தாத்தா ஃபர்குன்டா அலி கான் (Farkhunda 'Ali Khan) ஆட்சி செய்து வந்தார். அவரது காலத்தில் எல்லாம் ஹைதராபாத் அம்புட்டுச் செழிப்பாகவெல்லாம் இல்லை. ஏகப்பட்ட கடன்கள், செலவினங்கள். போதாதா, கிழக்கு இந்தியக் கம்பெனியினர் இளித்துக் கொண்டே அவரை அணுகினர்.

'நிஜாமு நிஜாமு, ஒண்ணுக்குள்ள ஒண்ணாப் பழகிட்டு துன்பத்துல உதவலேன்னா அது பாவம். நீங்க கஷ்டத்துல இருக்கீங்க நல்லாத் தெரியுது. ஒண்ணு பண்ணலாம். இந்த பேராரு இருக்கே பேராரு, அதான் அந்தப் பருத்தியெல்லாம் விளையுற வெறுங்காடு, அதை எங்க

கம்பெனிக்குக் கொடுத்துப்புடுங்க. நீங்க கொடுக்க வேண்டிய கடனையெல்லாம் அப்புறம் பாத்துக்கலாம். அட, குத்துமதிப்பாக் குத்தகைக்கு எடுத்துக்கிறோமுன்னு வைச்சுக்கோங்களேன். என்ன சொல்லுறீக?'



நிஜாம் ஃபர்குன்டா அலி கான்

முன் பின் விளைவுகளை யோசிக்காமல் ஒப்பந்தத்தில் நிஜாமும் கையெழுத்திட்டார். பேரார், கிழக்கிந்திய கம்பெனியின் வசமானது.

பறித்து சுத்தம் செய்த பஞ்சை பெரிய பெரிய மூட்டைகளாகக் கட்டி வைப்பார்கள். அந்த மூட்டைகளை மாடுகளின் முதுகில் ஏற்றுவார்கள். அந்தக்கால சரக்கு ரயில் மாடுகள்தான். பேராரிலிருந்து லோடு ஏற்றிய கால்நடைகளோடு கால்நடையாகக் கிளம்பி மேற்குப் பக்கமாக 450 மைல்கள் நடந்தால் பம்பாய், கிழக்குப் பக்கமாக 500 மைல்கள் நடந்தால் கல்கத்தா. அங்கே தான் ஏற்றுமதி செய்யத் துறைமுகங்களும், துணியாக நெய்யப் பருத்தி ஆலைகளும் இருந்தன. போய்வர மாதக்கணக்கில் ஆகும்.

கிழக்கிந்தியக் கம்பெனி யோசித்தது. அந்த ரூட்டில் தண்டவாளங்களைப் பதிக்க ஆரம்பித்தது. பேரார் பகுதியிலிருந்து பம்பாய்க்கும் கல்கத்தாவுக்கும் 'கூ சிக் புக் சிக் புக்' போக்குவரத்து ஆரம்பமானது. புதிய சாலைகளும் போடப்பட்டன. 1861-65க்கு இடையில் அமெரிக்காவில் நடந்த உள்நாட்டுப் போரினால் பருத்தி ஏற்றுமதி உலக அளவில் பாதிக்கப்பட்டது. அந்தச் சமயத்தில் ஐரோப்பிய நாடுகளுக்குப் பருத்தி ஏற்றுமதி செய்யும் முக்கிய நாடாக இந்தியா மாறியது. குறிப்பாகப் பேரார் முக்கியத்துவம் பெற்றது. பிரிட்டனில் மில்கள் நிறைந்த நகரான மான்செஸ்டரும் லங்காஷியரும் (Moncester, Lancashire) இந்தியப் பருத்தியால் புத்துயிர் பெற்றன. இதனால் பொருளாதார ரீதியாகப் பேராரின் சேவை பிரிட்டனுக்குத் தவிர்க்க முடியாத தேவையாகிப் போனது.

1902ல் இங்கிலாந்தின் கிங் ஏழாவது எட்வர்ட், பேராரின் முழு உரிமையை எப்படியாவது வளைத்துப் போட்டுவிடும்படி இந்தியாவின் வைஸ்ராய் லார்டு கர்ஸனுக்குச் சிக்னல் கொடுத்தார். கர்ஸன், அப்போது ஹைதராபாத் ரெஸிடெண்ட் டேவிட் பாரிடம் பொறுப்பை ஒப்படைத்தார். டேவிட், அப்போதைய நிஜாம் மெஹ்பூப் அலிகானோடு (ஒஸ்மானின் வாப்பா) பேச்சு வார்த்தை நடத்தினார். பேரார் பகுதியின் நிரந்தரக் குத்தகை உரிமை பிரிட்டிஷ் அரசையே சாரும், அதற்கு ஈடாக வருடந்தோறும் இருபத்தைந்து லட்சம் ரூபாயை அரசு தந்துவிடும் என்று முடிவானது. ஒப்பந்தம் நவம்பர் 5ல் கையெழுத்தானது.

அத்தோடு விட்டிருந்தால் சரி, ஆனால் பேராரை முழுமையாகக் கையகப்படுத்துவதல்லவா கிங்கின் கட்டளை. டேவிட், மீண்டும் நிஜாமிடம் சர்க்கரை வார்த்தைகளால் பேச்சு வார்த்தைகளைத் தொடர்ந்தார்.

'அதுல பாருங்க, கடந்த ஏழெட்டு வருசமா இந்தப் பாழாப் போன பஞ்சம் பாடாப்படுத்திட்டுது. பேராருல விவசாயம் படுத்துருச்சு. அதை மொத்தக் குத்தகைக்கு எடுத்துக்குறதுல அரசுக்கு

லாபமே இல்ல. நஷ்டம்தான். ஒண்ணு வேணாப் பண்ணலாம். பேசாம பேராரை அரசுகிட்ட கொடுத்துட்டீங்கன்னா உங்களோட சுமை குறையும். என்ன நாஞ்சொல்லுறது?'

நிஜாமும் ஆழமாக யோசிக்கவில்லை. பேரார் மீதான தனது உரிமையை விட்டுக் கொடுப்பதாக ஒரு கடிதம் எழுதி ஒப்படைத்துவிட்டார். விஷயம் ஹைதராபாத்தின் பிரதம மந்திரி கிஷன் பிரசாத்துக்கு (Kishen Prasad) கொஞ்சம் தாமதமாகத்தான் தெரியவந்தது. தனது முறுக்கு மீசை துடிதுடிக்கக் கதறினார் அவர்.

'தப்பு பண்ணிட்டீங்களே எஜமான், தப்பு பண்ணிட்டீங்களே! வானம் பொழியவில்லை, அதனால் பூமி விளையவில்லை, அவனுக்கேன் கொடுக்க வேண்டும் பேராரை. மக்களோடு பருத்தி வயலுக்குச் சென்றானா? பூச்சி மருந்து அடித்தானா? பஞ்சு பறித்தானா? சுத்தம் செய் தானா? அல்லது அங்கு மேய்ந்து கொண்டிக்கும் சமஸ்தான மாடுகளின் சாணி அள்ளிப் போட் டானா? மாமனா? மச்சானா? ங்கொப்பன் மவனே.'

பிரதம மந்திரியின் ரத்தக் கொதிப்பு அநியாயத்துக்கு எகிற, நிஜாமுக்கு என்னவோ போல் ஆகிவிட்டது. சிறிது நேரம் யோசித்த கிஷன் பிரசாத், 'இதுக்கு ஒரு முடிவு கட்டுறேன்' என்று இறுமாப்புடன் சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பினார். ரெஸிடெண்டிடம் அப்பாயிண்ட் மெண்ட் வாங்கிவிட்டு, அவரைச் சந்திக்கச் சென்றார்.

'வாருங்கள் கிஷன், என்ன விஷயம்? நிஜாம் எதுவும் சொல்லி அனுப்பியிருக்கிறாரா?'

இவன் எமகாதகன். நிஜாமின் நிஜாரிலிருந்தே பேராரை நைஸாக உருவி எடுத்தவன். கவன மாகப் பேச வேண்டும் என்று திட்டம் போட்டு வந்திருந்த கிஷன் பிரசாத் புன்னகையுடன் பேச ஆரம்பித்தார்.

'அது ஒன்றுமில்லை. இந்தப் பேரார் விஷயமாக நீங்கள் நல்லதொரு தீர்வை முன் வைத்திருக்கிறீர்கள். மிக்க மகிழ்ச்சி. நான்கூட இதே யோசனையை நிஜாமிடம் கூறலாமா என்றுதான் இருந்தேன். நீங்களே செய்துவிட்டீர்கள்.'

'பின்னே, உங்கள் சுமையைக் குறைப்பது எங்கள் அரசின் கடமையல்லவா.'

'அருமையாகச் சொன்னீர்கள். ஒரு சின்ன விண்ணப்பம். நிஜாம் பேராரை அரசுக்கு விட்டுக் கொடுப்பது சம்பந்தமாகத் தங்களுக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுத்திருக்கிறாரல்லவா. சமஸ் தானத்தின் பிரதம மந்திரி என்ற முறையில் நான் அதனை ஒருமுறை படித்துப் பார்க்க விரும்பு கிறேன். தர முடியுமா?'

'தாராளமாக. ஆனால் எதற்கு என்று தெரிந்துகொள்ளலாமா?'

எல்லாம் முறைப்படி இருக்கின்றனவா என்றொருமுறை சரி பார்க்கத்தான். மேலும், இது அரசுக்கு நிஜாம் கொடுத்துள்ள கடிதம். தங்களிடம் ஒரு பிரதி இருப்பதுபோல, எங்களிடமும் ஒரு பிரதி இருந்தால்தானே நல்லது. அதுதானே முறை. அதனால்தான் கடிதத்தைப் பார்க்க விரும்புகிறேன்.'

சில நொடிகள் யோசித்த ரெஸிடெண்ட், பின்பு கோப்புகளிலிருந்து அந்தக் கடிதத்தை எடுத்து கிஷன் பிரசாத்திடம் கொடுத்தார். அதனை வாங்கிய அவர், நிதானமாகப் படித்துப் பார்த்தார். 'எல்லாம் சரியாக இருக்கிறது' என்று ரெஸிடெண்டைப் பார்த்துச் சிரித்தார்.

மறுநொடியே கையிலிருந்த அந்தக் கடிதத்தைக் கசக்கிச் சுருட்டிய கிஷன் பிரசாத், டக்கென்று அதனைத் தன் வாயில் போட்டு மெள்ள ஆரம்பித்தார். மறுநிமிடம் அதனை விழுங்கியே விட்டார். மேஜை மீதிருந்த தம்ளர் தண்ணீரைக் குடித்துவிட்டு, ரெஸிடெண்டை ஏளனமாக ஒரு பார்வை பார்த்தார். 'இப்ப என்ன செய்வீங்க?' என்று கேட்பது போலிருந்தது. தன் மீசையை ஒருமுறை முறுக்கிக் காட்டிவிட்டு அங்கிருந்து கிளம்பினார். அங்கு என்ன நடந்தது என்று புரிவதற்கே ரெஸிடெண்ட்டுக்கு ரொம்ப நேரம் பிடித்தது. அவரது முறுக்கு மீசை தொங்கிப் போயிருந்தது.



கிங் ஏழாவது எட்வர்ட்

தம் பிரதம அமைச்சரின் சாமர்த்தியத்தை எண்ணி எண்ணி மகிழ்ந்தார் நிஜாம். ஒன்றரை யணாக் கடிதத்தைக் கடித்துத் தின்றுவிட்டால் போன உரிமை திரும்ப வந்துவிடுமா என்ன? ரெஸிடெண்ட், வைஸ்ராய், கிங் எல்லோரும் லேசுப்பட்டவர்கள் கிடையாதே. நிஜாமுக்கு மேலும் மேலும் குடைச்சல் கொடுத்து புதிய கடிதத்தைப் பெற்றுக் கொண்டார்கள்.

ஆகவே ஒஸ்மான் தன் காலத்தில் பேராரை ஆண்டு அனுபவிக்க முடியவில்லை. நமக்கில் லாத பாக்கியத்தை, மகனுக்காவது பெற்றுக் கொடுக்கலாமே என்று நினைத்தார். ரெஸி டெண்ட் மெக்கென்ஸியிடம் கோரிக்கையை முன்வைத்தார். விஷயம் வைஸ்ராய்க்குப் போனது. அவர் வழியாகக் கிங்குக்குச் சென்றது.

உலகின் நெம்பர் ஒன் பணக்காரர், மாபெரும் சமஸ்தானத்தின் இருபத்தைந்து ஆண்டுகளாக ஆளும் நிஜாம், ஏகப்பட்ட பின்புலங்கள் உள்ளவர், தவிர பிரிட்டிஷ் அரசுக்கு ஏகப்பட்ட உதவிகள் செய்தவர், இப்போது பேராரைத் திருப்பிக் கேட்கிறார், அதுவும் பணிவாக. நீண்ட ஆலோசனைகளுக்குப் பிறகு 'ஓகே' என்ற பதில் வந்தது. அதற்கான ஆவணங்களும் கையெழுத்தாயின. பேராரை மீட்டெடுத்த பருத்தி வீரனாக இளவரசர் அஸம் ஜா மகிழ்ந்தார். சௌமஹல்லா அரண்மனையில் நடைபெற்ற கோலாகலமான விழாவில் பேராரின் புதிய இளவரசராக அஸம் ஜா பொறுப்பேற்றுக் கொண்டார்.

'மகனின் பிரச்னையை ஒருவழியாகத் தீர்த்து விட்டோம். நம் கனவை எப்போது நிறை வேற்றப்போகிறோம்?' ஒஸ்மான் யோசித்துக் கொண்டிருந்தார். ஹைதராபாத் என்ற தனி இஸ்லாமிய தேசம் அவரது எண்ணத்தில் உருப்பெற்றுக் கொண்டிருந்தது.



# 37

# ‘ஹைதராபாத் என் தாய்நாடு!’

‘கை நடுக்கம் கூடவே கூடாது. வலது கையை இவ்வளவு வளைக்காதே. குறி பார்க்குறப்போ வேறெந்த நினைப்பும் மனசுல இருக்கக்கூடாது. ம்.. இப்போ சுடு’ - அந்தப் பயிற்சியாளர் அங்கிருந்த டீன் ஏஜ் இளைஞர்களுக்குத் துப்பாக்கிச் சுடப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார். தோட்டாக்களின் ஓசை காற்றை அதிர வைத்துக் கொண்டிருந்தது. அவர்களுக்குத் துப்பாக்கி புதிய வஸ்து. வாள்தான் இத்தனை நாள் அவர்களின் முக்கிய ஆயுதமாக இருந்தது. காலத்தின் தேவை. துப்பாக்கியை ஸ்பரிசிக்க வேண்டியதாயிற்று. சரி, யார் அவர்கள்?

ரஸாக்கர்கள் (Razakars) என்று சொல்லலாம். புரட்சிப் படையினர் என்றும் சொல்லலாம். நிஜாம் ஒஸ்மானுக்கு ஆதரவாகத் திரண்டவர்கள் என்றும் சொல்ல லாம். அவர்களுக்கும் நிஜாம் ஒஸ்மானுக்கும் இருந்தது ஒரே ஒரு கனவுதான். ஹைதராபாத் என்ற தனி இஸ்லாமிய தேசம்.

தற்போது இயங்கிவரும் சில தீவிரவாத இயக்கங்களில் மாணவர் படைகள் இருக் கின்றன. குறிப்பாக ஆப்கனிஸ்தானில் தாலிபன்கள். ஆனால் அறுபது வருடங் களுக்கு முன்பாகவே ஹைதராபாத்தில் ரஸாக்கர்கள், புரட்சிகர இளைஞர் படை ஒன்றை உருவாக்கியிருந்தார்கள். அவர்களுக்குப் போர்ப்பயிற்சி கொடுத்தார்கள். தனிதேசம் என்கிற லட்சியத்தை மனத்தில் விதைத்தார்கள். அதற்காக எதையும் செய்யும்படியாகத் தயார்ப்படுத்தி வைத்திருந்தார்கள். யார் இந்த ரஸாக்கர்கள்?

1927ல் MIM என்றொரு இஸ்லாமிய அமைப்பு தொடங்கப்பட்டது. Majlis Ittehadul Muslimeen என்பது முழுப்பெயர். ஆங்காங்கே சிதறிக் கிடந்த

இஸ்லாமியர்களை ஒருமைப்படுத்துவதற்காக ஆரம்பிக்கப்பட்ட இயக்கம் அது. ஆரம்பித்தவர் பகதூர் யார் ஜங் (Bahadur Yar Jung). அவர்களது முதன்மையான நோக்கம், ஹைதராபாத்தை இஸ்லாமியர்களின் சுதந்தரப் பிரதேசமாக ஆக்க வேண்டும். நிஜாமைத் தக்காண பீடபூமியின் அரசராக பிரிட்டிஷ் அரசு அறிவிக்க வேண்டும்.



பகதூர் யார் ஜங்

இது சம்பந்தமாக இயக்கத்தினர் அடிக்கடி ஒஸ்மானைச் சந்தித்தனர். அவரை உசுப்பேத்தினர். 'எங்களைப் பொருத்தவரை பிரிட்டிஷ் அரசுக்கு என்ன அதிகாரம் இருக்கிறதோ, அதே அளவு அதிகாரம் உங்களுக்கும் வழங்கப்பட வேண்டும். மாபெரும் ஹைதராபாத் சமஸ்தானத்தை ஆள்கிறவர் என்றால் சும்மாவா? இஸ்லாமியர்கள் முழு உரிமைகளுடன் சுபிட்சமாக வாழும் பூமியாக நமது சமஸ்தானம் வருங் காலத்தில் மலரப் போகிறது. அதுவே நம் இயக்கத்தின் கனவு. மதிப்புக்குரிய நிஜாமின் வழிகாட்டுதலில் அந்தக் கனவு நிச்சயமாக நிறைவேறும். புரட்சி ஓங்குக!'

ஹைதராபாத்தைத் தனி நாடாக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் இருந்த ஒஸ்மானுக்கு, ஜங்கின் வார்த்தைகள் ஜாங்கிரியாக இனித்தன. MIM இயக்கத்தின் நடவடிக்கைகளுக்கெல்லாம் தார்மீக ஆதரவு கொடுத்தார். தேவைப்பட்டால் குரல் கொடுத்தார். இயக்கம் புஷ்டியாக வளர்ந்தது.

ஜங்குக்கு பைப் மூலம் புகைப்பிடிக்கும் பழக்கம் இருந்தது. அன்றும் அப்படித்தான் புகையை உள்ளே இழுத்தார். வெளியே வந்தது புகை மட்டுமல்ல, அவரது இறுதி மூச்சும். யாரோ சதிகாரர்கள், பைப்பில் விஷத்தைக் கலந்திருந்தார்கள். இந்தச் சம்பவம் நடந்தது 1944ல்.

இயக்கத்தின் அடுத்த தலைவராக காஸிம் ரஸ்வி (Qasim Razvi) என்பவர் பொறுப்பேற்றுக் கொண்டார். அவர் உத்தரபிரதேசத்தைச் சேர்ந்தவர். வழக்கறிஞராகப் பணியாற்றியவர். ஜங் தன் பேச்சில் எட்டடி பாய்பவரென்றால், ரஸ்வி எட்டெட்டு அறுபத்துநான்கு அடி பாய்பவராக இருந்தார். தலையோடு பிணைந்தது போன்ற தொப்பி, மின்னுகின்ற கண்கள், நீண்ட தாடியைத் தாண்டி வரும் கம்பீரமான குரல் ரஸ்வியின் பேச்சைக் கேட்கக் கேட்கக் கூடியிருப்பவர்களின் உணர்வுகள் எல்லாம் குலுக்கி வைத்த சோடா பாட்டில் போலப் பொங்க ஆரம்பித்துவிடும்.

'தோழர்களே... இந்த பூமி நமக்கென இறைவனால் அளிக்கப்பட்டது. நம் இறுதி மூச்சு உள்ள வரை நம் கனவை நோக்கி நகர்ந்து கொண்டே இருப்போம். அந்த வங்காள விரிகுடாவின் நுரை பொங்கும் நீரை எடுத்து, நம் மேதகு நிஜாமின் பொற்பாதங்களைக் கழுவுவோம். பாபரின் வழி வந்தவர்கள் நாம். முகலாயர்களின் வீரம் நமக்குள் குடிகொண்டு இருக்கிறது.



காந்தி, மௌண்ட்பேட்டன், லேடி மௌண்ட்பேட்டன்

அந்த டெல்லியிலே, செங்கோட்டையிலே, நம் அஸஃப் ஜா பரம்பரையின் புனிதக் கொடியைப் பறக்க விடுவோம். அதுவே லட்சியம். நிறைவேறும் நிச்சயம். இது சத்தியம்.'

ரஸ்வியின் புரட்சிகரப் பேச்சுகளால் கவரப்பட்ட ஆயிரக்கணக்கான இளைஞர்கள் MIM இயக்கத்தில் தம்மை இணைத்துக் கொண்டார்கள். அவர்களை வைத்து ஒரு படையை உருவாக்கினார். அந்தப் படையினரே ரஸாக்கர்கள் என்றழைக்கப்பட்டனர். (MIM தற்போது ஆந்திராவிலிருக்கும் முக்கியமான அரசியல் கட்சி. சர்ச்சை எழுத்தாளினி தஸ்லீமா நஸ்ரினுக்கு எதிராக வீதிக்கு வந்து போராட்டங்களை ஆரம்பித்து வைத்து உ போட்டவர்கள் இவர்களே.)

ரஸ்வியின் கட்டளைப்படி, ரஸாக்கர்கள் அடிக்கடி கலகங்களை மேற்கொள்ள ஆரம்பித்தனர். கலகம் என்றால், இஸ்லாமியர்கள் அல்லாதோர் மீதான தாக்குதல்கள் எனலாம். பின்னணியில் ஒஸ்மானின் ஆதரவும் பலமாகவே இருந்தது.

'எப்படியும் இன்னும் கொஞ்ச நாள்ல இந்த வெள்ளைக்காரப் பயலுக எல்லாம் இந்தியாவைக் காலி பண்ணிட்டுப் போயிடுவானுக. அதற்கான அறிகுறியெல்லாம் பிரகாசமா இருக்குது. அப்புறமென்ன, ஹைதராபாத் நமக்கே நமக்குன்னு ஆகிரும். தனி நாடு. ஒருபயலும் கேள்வி கேட்க முடியாது. பிரச்னையே இல்லை' என்று எண்ணத்துடன் இருந்தார் ஒஸ்மான். ஆனால் அந்த நம்பிக்கையின் நடு மண்டையில் 'நங்கென்று ஒரு குட்டு விழுந்தது. குட்டியவர் அட்லி.

1945ல் இங்கிலாந்தில் ஆட்சி மாற்றம் நிகழ்ந்தது. பிரதமராக லேபர் கட்சியின் கிளமெண்ட் அட்லி (Clement Richard Attlee) பொறுப்பேற்றார். இந்தியாவுக்குச் சுதந்தரம் வழங்குவது தொடர்பான பேச்சுகள் மும்முரமடைந்தன. 'எந்தவொரு சமஸ்தானத்துக்கும் தனித்து இயங்கும் சுதந்தரமெல்லாம் கொடுக்கமுடியாது. இந்தியா அல்லது பாகிஸ்தான், ஏதாவது ஒரு நாட்டுடன், தங்கள் சமஸ்தானத்தை இணைத்துக் கொள்ளலாம்' - அறிவித்தார் அட்லி. ஒஸ்மானின் கனவில் கொள்ளிக்கட்டை விழுந்தது.

1946. சுதந்தரம் நோக்கியும், பிரிவினை நோக்கியும் காய்கள் வேகவேகமாக நகர்த்தப்பட்டுக் கொண்டிருந்தன. அந்த மே 12 அன்று வைஸ்ராய் மௌண்ட்பேட்டனுக்குத் தந்தி ஒன்றை அனுப்பினார் ஒஸ்மான்.

'இந்தியாவுடனோ, பாகிஸ்தானுடனோ - ஹைதராபாத்தை இணைப்பதில் எனக்கு விருப்ப மில்லை.'

இந்தியத் துணைக்கண்டத்தில் பாகிஸ்தானுக்கு அடுத்தபடியாக, பெரிய இஸ்லாமிய நாடாக ஹைதராபாத்தை உருவாக்கிவிட வேண்டுமென்ற வேட்கை அதிகமாகிக் கொண்டே போனதால் அப்படி ஒரு தந்தி அனுப்பினார். ஹைதராபாத்தின் சமஸ்தானப் படை இருக்கிறது, ரஸாக்கர்கள் இருக்கிறார்கள் - எதையும் சமாளித்துவிடலாம் என்கிற தைரியம்.

1947, ஜூன் 3ல் இந்தியா - பாகிஸ்தான் பிரிவினை குறித்த மௌண்ட்பேட்டனின் இறுதித் திட்டம் அறிவிக்கப்பட்டது. எந்தச் சமஸ்தானத்துக்கும் தனிநாடு கோரும் உரிமை கிடையாது என்பது அதன் மூலம் தெளிவானது. கோபத்தில் ஒஸ்மானின் நாடி நரம்புகளெல்லாம் துடித்தன. அவசர அவசரமாக அறிவிப்பு ஒன்றை வெளியிட்டார்.

‘ஆகஸ்ட் 15 முதல் ஹைதராபாத் என்பது சர்வ சுதந்தரமுள்ள தனி நாடு என்பதை இதன் மூலம் அறிவித்துக் கொள்கிறேன். இத்தனை நாள் எங்கள் கோரிக்கையை நிறைவேற்றுவதாகக் கூறிய பிரிட்டிஷ் அரசு இறுதியில் தன் புத்தியைக் காட்டிவிட்டது. அதனை வன்மையாகக் கண்டிக்கிறேன்.’

நள்ளிரவில் சுதந்தரம். ஆடுவோமே, பள்ளுப் பாடுவோமே கொண்டாட்டங்கள். கம்பங் களில் மூவர்ணக் கொடி சிரித்துக் கொண்டிருந்தது. ஆனால் ஹைதராபாத்தில் நிலைமை வேறுமாதிரி இருந்தது. தேசியக் கொடியை ஏற்ற முயன்றவர்களை நிஜாமின் படையினர் அடித்து விரட்டினார்கள். பலரைக் கைது செய்து சிறையில் அடைத்தார்கள். சூட்டோடு சூடாக அங்கு காங்கிரஸ் கட்சியும், கம்யூனிஸ்ட் இயக்கங்களும் தடை செய்யப்பட்டன. எல்லாம் ஓஸ்மானின் உத்தரவுதான். இன்னொருபுறம் ரஸாக்கர்கள் பெருமளவு வன்முறைகளைக் கட்டவிழ்த்து விட்டிருந்தார்கள். வன்முறைகள் என்றால் கொலை, கொள்ளை, தீவைப்பு, கற்பழிப்பு என்ற அனைத்து செக்ஷன்களும் அடக்கம்.

சரி, நிஜாம் கிடக்கட்டும். அந்தச் சூழலில் ஹைதராபாத் மக்களின் மனநிலை எப்படி இருந்தது. அவர்கள் இந்தியாவோடு இணைய விரும்பினார்களா அல்லது தனி நாட்டை எதிர்பார்த்தார் களா?

அப்போது ஹைதராபாத்தில் இஸ்லாமியர் அல்லாதவர்களே பெரும்பான்மையாக (93%) இருந்தார்கள். ஆனால் அரசுப் பதவிகள் முதற்கொண்டு எல்லா இடங்களிலும் ஓஸ்மான் தனக்கு வேண்டியவர்களாகப் பார்த்துப் பணியில் வைத்திருந்தார். நிஜாமின் நடவடிக்கைகள், அவரது படையினர் செய்த கொடுமைகள், கூடுதலாக ரஸாக்கர்கள் நிகழ்த்திய வன்முறைகள் - எல்லாம் சேர்ந்து மக்களை ஓஸ்மானுக்கு எதிராகவே குரல் கொடுக்கத் தூண்டின. Join India என்றொரு இயக்கத்தைத் தொடங்கி, களமிறங்கினார்கள். அவ்வளவு நாள்கள் இந்தியாவின் சுதந்தரத்துக்காக பாடுபட்ட இஸ்லாமியர்களும் அதில் அடக்கம். சுவாமி ராமானந்த தீர்த்தா என்ற காங்கிரஸ்காரர் தலைமையில் ஓஸ்மானுக்கு எதிராகக் குரல்கள் உயர்ந்தன. எனவே தீர்த்தா கம்பி எண்ண அனுப்பப்பட்டார்.

புதிய இந்திய அரசு, ஓஸ்மானுடன் பல பேச்சுவார்த்தைகளை நடத்தி, நவம்பர் 29 அன்று அமைதி ஒப்பந்தம் ஒன்றை ஏற்படுத்திக் கொண்டது. இப்போதைக்கு நானும் பேச மாட்டேன், நீயும் பேசக்கூடாது. எந்த முடிவானாலும் ஒரு வருடம் கழித்துப் பார்த்துக் கொள்ளலாம். அதுவரை சத்தம் போடாதே, முஷ்டி உயர்த்தாதே, வன்முறையை வளர்க்காதே, உஷ்... இதுவே அந்த அமைதி ஒப்பந்தத்தின் (StandStill Agreement) சாராம்சம்.

ஒரு வருட இடைவெளி. ஓஸ்மானுக்குப் புத்துணர்வைக் கொடுத்தது. உட்கார்ந்து யோசிக்க, தீவிரமான திட்டங்கள் போட, தம் படைக்குப் பலம் சேர்க்க அந்த ஒரு வருடத்தை உருப்படி யாகப் பயன்படுத்த நினைத்தார்.

‘ஒரு பத்துப் பன்னெண்டு போர்க்கப்பலை வாங்கிப் போட்டோமுன்னா, இந்திய கவர் மெண்டு மிரண்டு போயிரும்ல’ ஓஸ்மானுக்கு இப்படி ஓர் எண்ணம் தோன்றியது. நல்ல யோசனைதான். ஐரோப்பிய நாடுகளுக்குத் தன் படைத்தளபதியை அனுப்பிக் கப்பல்களை வாங்கிவிடலாம்தான். ஆனால் அவற்றை எங்கே நிறுத்துவது? ஹைதராபாத்தில் கடல் கிடையாதே. கப்பலை விலைக்கு வாங்கலாம், கடலை வாங்க முடியுமா?

முடியும் என்றே தோன்றியது ஒஸ்மானுக்கு. ‘ஆங்கிலேயர்களே ஒட்டுக்க காலி பண்ணிட்டுப் போறோமுன்னு சொல்லிப்புட்டாங்க. இன்னும் இந்தப் போர்ச்சுக்கீசியர்களுக்கு இங்க என்ன வேலை? அதுவும், தம்மாத்துண்டு கோவாவுல உட்கார்ந்துகிட்டு என்னத்த சாதிக்கப் போறா னுங்க?’ யோசித்தார் ஒஸ்மான். ஏதோ லாலா மிட்டாய்க் கடையில் பால்கோவா என்ன விலை என்று விசாரிப்பது போல, போர்ச்சுக்கிசீயர்களிடம் ‘கோவா என்ன விலை?’ என்று பேரம் பேச ஆரம்பித்தார். இப்படி என்னன்னெமோ முயற்சிகள் செய்தார். எல்லாம் சமஸ் தானத்தை இழந்துவிடக் கூடாது என்கிற பயத்தில்.

மறுபுறம் ரஸாக்கியர்களும் தங்கள் பங்குக்குத் தாக்குதல்களைத் தொடர்ந்து நடத்தினார்கள். விளைவு, ஒஸ்மான் மீது மக்களின் வெறுப்பு பல டிகிரி அதிகரித்தது. சூடான மக்கள் எதிர்த் தாக்குதல்களை ஆரம்பித்தார்கள்.

அன்றும் அப்படித்தான் ஒரு தாக்குதலுக்குத் திட்டமிட்டிருந்தார்கள். அவர்களது இலக்கு ரஸாக்கியர்கள் அல்ல, ஒஸ்மான். அவர்தானே காரணம், அவருக்காகத்தானே இத்தனைக் கொடுமைகளும் அரங்கேறுகின்றன. அவரது கதையையே முடித்துவிட்டால்?



# ஆபரேஷன் போலோ – இது இறுதி ஆட்டம்

'வீசப்படவேண்டிய வெடிகுண்டு தயாராக இருக்கிறதல்லவா?'

'ம்... தயாராக இருக்கிறது. நிஜாம் வரும் நேரம் நெருங்கிவிட்டது. இனிப் பேச வேண்டாம். குறி தப்பிவிடக்கூடாது.'

அந்த மறைவிடத்தில் ஒளிந்திருந்த மூன்று பேரும் தாக்குதலுக்குத் தயாராக இருந்தனர். அது நிஜாம் ஒஸ்மான் தினமும் புழங்கும் பாதை. கிங் கோதி அரண் மனைக்கு அருகிலிருப்பது. எல்லாவற்றையும் திட்டமிட்டுத்தான் வந்திருந்தார் கள். ஒஸ்மான் வரும்போது டமார்.

அடுத்த சில நிமிடங்களிலேயே ஒஸ்மான் தன் காரில் அந்தப் பாதை வழியாக வந்தார். மூவரில் நாராயணராவின் கையில் வெடிகுண்டு தயாராக இருந்தது. இதுவரை எத்தனையோ போராட்டங்களில் கலந்து கொண்டிருக்கிறார். ஆனால் முன்னே பின்னே குண்டெல்லாம் வீசியதில்லை. அதனால் கொஞ்சம் நடுக்கம். கார் அவர்களைக் கடக்கும்நேரம். மறைவிடத்திலிருந்து சட்டென எழுந்து வெடிகுண்டை வீசினார். சத்தம்.

ஆனால் காரின் பின்புற டேஞ்சர் லைட்டுக்குக் கூட டேஞ்சராக எதுவும் நடக்க வில்லை. ஒஸ்மான் சௌபாக்யவனாக அந்தக் கண்டத்திலிருந்து தப்பிவிட்டார். என்ன, நடந்த கொலை முயற்சியால் மனத்துக்குள் மிகவும் அதிர்ந்துபோனார். மிகவும் என்றால் ரிக்டர் அளவில் 8.7 என வைத்துக் கொள்ளலாம். இந்தச் சம்பவம் நடந்தது 1947, டிசம்பர் 4ல்.

நாராயணராவும் மற்ற இருவரும் அங்கிருந்து தப்பிக்கவெல்லாம் முயலவில்லை. சம்பவ இடத்துக்கு 'வழக்கம்போல' விரைந்துவந்த போலீஸ் அவர்களைக் கைது செய்தது. விசாரணை நடந்தது. சிறையில் அடைக்கப்பட்டனர். நாராயணராவுக்குத் தூக்குத் தண்டனை என்று அறிவிக்கப்பட்டது. 'ஒழுங்கு மரியாதையா நிஜாம்கிட்ட மன்னிப்பு கேட்டா, தூக்குத் தண்டனையிலிருந்து தப்பிக்கலாம்' என்று அவருக்கு வாய்ப்புக் கொடுத்தார்கள். அதற்குத் தூக்குத் தண்டனையே பரவாயில்லை என்று மறுத்துவிட்டார் நாராயணராவ்.

பெரும்பாலான சமஸ்தானங்கள் இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்துவிட்டன. காஷ்மீர், ஜுனாகத், ஹைதராபாத் சமஸ்தானங்கள் மட்டும் முறுக்கிக் கொண்டு நின்றன. 'கடைசியாகக் கூப்பிடுறோம். இதுக்கு மேலே கூப்பிட மாட்டோம். ஒழுங்கு மரியாதையா வந்து சேர்ந்துருங்க' என்று தன் இறுதி அழைப்பை ஜூன் 15, 1948ல் விடுவித்தது இந்திய அரசு. ஒஸ்மான் சட்டை செய்யவில்லை. தன் லட்சியத்தில் உறுதியாக இருந்தார்.

'ஒன்று இந்திய அரசிடம் சரணடைய வேண்டும் அல்லது இறைவனின் பாதங்களில் சரணடைய வேண்டும். நிஜாமுக்கு வேறு வாய்ப்புகள் கிடையாது' - இந்தியாவின் உள்துறை அமைச்சர் சர்தார் வல்லபபாய் படேல் நேரடி எச்சரிக்கை விடுத்தார். அதற்கும் ஒஸ்மான் சரியான பதில் அளிக்கவில்லை. 'ம்ஹூம், இதெல்லாம் சரிப்படாது, கிளப்புங்கள் படையை' என்று படேல் இந்திய ராணுவத்துக்கு உத்தரவிட்டார். ராணுவம் கொஞ்சம் கொஞ்சமாக ஹைதராபாத்தைச் சூழ ஆரம்பித்தது. 'எல்லாம் அமைதியா நடக்கணும்னுதான் நினைக் கிறேன். ராணுவ நடவடிக்கை எடுக்க வேண்டிய சூழல் வந்தால் வேறு வழியில்லை' என்று பிரதமர் நேருவும், படேலின் எச்சரிக்கையை வழிமொழிந்தார்.

ஒஸ்மானுக்கு டன் கணக்கில் குழப்பம். ரஸாக்கர்கள் பார்த்துக் கொள்வார்கள் என்று அசட்டையாக இருந்துவிட முடியுமா என்ன? 'அய்யா பெரியவங்களே, இந்திய அரசு அமைதி ஒப்பந்தம் போட்டாங்க. ஆனா இப்போ அதை மீறி ராணுவத்தை கொண்டுவந்து தாக்கப் போறதா சொல்லுறாங்க. நீங்கதான் நியாயம் கேட்கணும்' என்று ஐ.நா. பாதுகாப்புச் சபையிலும் பிராது கொடுத்துப் பார்த்தார். நிலைமை மோசமாகிக் கொண்டே போனது. பிரிந்து போன பாகிஸ்தானிடம் ஆதரவு கேட்டுப் பேசிப் பார்த்தார். இருந்தாலும் நிலைமை கைமீறிப் போய்க்கொண்டிருப்பதை அவரால் உணர முடிந்தது.

சமஸ்தானத்துக்குள்ளே தாக்குதல்களை நடத்திக் கொண்டிருந்த ரஸாக்கர்கள், கொஞ்சம் கொஞ்சமாக எல்லைப்பகுதியிலும் தங்கள் வேலையைக் காட்ட ஆரம்பித்தார்கள். குறிப்பாக, சில்லகல்லு என்ற ஹைதராபாத் எல்லையோரக் கிராமத்தில் நடந்த மோதலில் ராணுவம், ரஸாக்கர்களை ஓட ஓட விரட்டியது. 'உடனடியாக ரஸாக்கர்களைத் தடை செய்ய வேண்டும்' என்று இந்திய அரசு அடுத்த மிரட்டலை விடுத்தது. அதையும் ஒஸ்மான் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

செப்டெம்பர் 12, 1948. பாதுகாப்புத் துறை அமைச்சர் பல்தேவ் சிங் (Baldev Singh), ஜெனரல் கே.எம். கரியப்பாவுடனும் (K.M. Cariappa), விமானப்படைத் தளபதி தாமஸ் எல்ம்ர்ஸ்ட் உடனும் (Thomas Elmhirst) வெகு சீரியஸாகப் பேசிக் கொண்டிருந்தார். அதே அறையில் இருந்த தலைமைத் தளபதி ஜெனரல் சர் ராய் புச்சர் (Roy Bucher), உரையாடலில் கலந்துகொள்ளவில்லை. அவரது முகத்தில் அதிருப்தி, ஆசனம் போட்டு உட்கார்ந்திருந்தது. அறைக்குள் நேருவும் படேலும் நுழைந்தனர். முறைப்படி மீட்டிங் ஆரம்பமானது. 'என்ன



வல்லபபாய் படேல்

ஃபைனல் பண்ணிடலாமா?' படேல் கேட்க, ஹைதரபாத் மீதான ராணுவ நடவடிக்கைக்கான ஆக்ஷன் பிளான் ஒப்புதலுக்கு முன் வைக்கப்பட்டது.

'ஜென்டில்மேன், தலைமைத் தளபதியா இந்தச் சமயத்துல நான் எச்சரிக்கை செய்ய கடமைப்பட்டிருக்கேன். ஏற்கெனவே காஷ்மீர் மீது ராணுவ நடவடிக்கை நடந்துக்கிட்டிருக்கு. அதுவே எப்போ முடியும்னு தெரியலை. இந்தச் சமயத்துல ஹைதராபாத் மேலயும் நடவடிக்கை எடுக்கறது நல்லதில்லை' புச்சர் அழுத்தமாகச் சொன்னார்.

ஆனால் அவரது கருத்துக்கு யாரும் செவி சாய்க்கவில்லை. கோபம் பொத்துக் கொண்டுவர, 'அப்போ நான் பதவியை ராஜிநாமா செய்யுறேன்' வெடித்தார் புச்சர். 'நீங்க ராஜிநாமா செய்துகொள்ளலாம். ஆனால் நாளை ஹைதராபாத் மீது ஆபரேஷன் ஆரம்பமாகும்' - படேல் அமைதியாகப் பதிலளித்தார். புச்சர் அதற்கு மேலும் அங்கிருக்க முடியாமல் வெளிநடப்பு செய்தார்.

அதிகாலையிலேயே துப்பாக்கிக் குண்டுகள் வெடிக்கும் சத்தம் கேட்க ஆரம்பித்துவிட்டதால், அன்று ஹைதராபாத் சமஸ்தான சேவல்கள் கூவவில்லை. மிரண்டு போயிருந்தன. மக்களும்தான். அது செப்டெம்பர் 13. 'ஆபரேஷன் போலோ' என்று திருநாமகரணம் சூட்டப் பட்ட ஹைதராபாத் சமஸ்தானம் மீதான இந்திய அரசின் ராணுவ நடவடிக்கை பொழுது புலரும் முன்பே மலர்ந்தது. போலோ மைதானங்கள் நிறைந்த சமஸ்தானம் என்பதால் ஆபரேஷனுக்கு இப்படி ஒரு பெயர்.

இருபத்தைந்தாயிரத்து சொச்சம் நிஜாமின் ராணுவ வீரர்களும் ரஸாக்கர்களும் ஒரு கை பார்த்து விடலாம் என்று எதிர்த்தாக்குதலைத் தொடங்கினார்கள். ஆனால் அவர்கள் கையில் இருந்தது

வாள், வேல் வகையறாக்களும், கற்களுமே. துப்பாக்கியெல்லாம் தொட்டுக் கொள்ள ஊறுகாய் இருக்குமே, அவ்வளவுதான் இருந்தன. ஆனால் இந்திய ராணுவத்தின் டாங்கிகள் தங்கள் குண்டு உடலை அசைத்து அசைத்து வெகுவாக முன்னேறிக் கொண்டிருந்தன.

எல் எட்ரூஸ் (El Edroos) மிகவும் பரபரப்புடன் சுழன்று கொண்டிருந்தார். அவர்தான் நிஜாம் படையின் தலைமைத் தளபதி. ஒருபுறம் ஒஸ்மானிடமிருந்து வரும் கட்டளைகளை வாங்கிக் கொள்ள வேண்டியதிருந்தது. மறுபுறம் அதே கட்டளைப் பிரித்துப் படையின் ஒவ்வொரு பிரிவினருக்கும் கொடுக்க வேண்டியதிருந்தது. பரபரப்புடன் செயல்பட்டாலும் இந்திய ராணுவத்தை எதிர்கொள்ளும் அளவுக்கு அவர்கள் தயாராக இல்லை. அப்படி முன்னேற்பாடுகள் செய்துகொண்டு முஷ்டி உயர்த்தும் அளவுக்கு ஆயுத பலமும் இல்லை என்பதே மெய்.

எனவே முதல் நாள் கொஞ்சம், இரண்டாம் நாள் மேலும் கொஞ்சம் நிறைய, மூன்றாம் நாள் நிறையவே இந்திய ராணுவம் முன்னேறியிருந்தது. ரஸாக்கர்கள் வற்றிக் கொண்டிருந்தார்கள். நிஜாம் படையினர் கைதாகிக் கொண்டிருந்தார்கள். ஒஸ்மான் ஒரு கையைக் கன்னத்திலும், இன்னொன்றைத் தலையிலும் வைத்துக் கொண்டிருந்தார்.

செப்டெம்பர் 16. ஆபரேஷனின் நான்காவது நாள். நம் ஆட்டம் அவ்வளவுதான் என்பது ஒஸ்மானுக்குத் தெள்ளத்தெளிவாக விளங்கியிருந்தது. சிந்தனைக்கு என்னென்னமோ தோன்றின. சிறு வயதில் நடந்த சம்பவம் ஒன்று கூட அநாவசியமாக ஞாபகத்துக்கு வந்து தொலைத்தது.

ஒஸ்மானின் தந்தை மெஹ்பூப் வெள்ளி நாணயத்தை மேலே சுண்டி விடுவார். அதைத் துப்பாக்கியால் குறிபார்த்துச் சுட வேண்டும். இது மெஹ்பூப், ஒஸ்மானுக்கு அளித்த துப்பாக்கிப் பயிற்சி. பலமுறை ஒஸ்மான், நாணயத்தைச் சரியாகச் சுட்டுச் சிதறடித்திருக்கிறார். தந்தை அங்கிருந்து போனபின்பு, சிதறிய வெள்ளித் துண்டுகளையும், குறி தவறிய நாணயங் களையும் மறக்காமல் தேடி எடுத்து சேகரித்து வைத்துக் கொள்வார் என்பது வேறு விஷயம். இன்றைய கதைக்கு வருவோம். இப்போதும் துப்பாக்கிச் சுடுவதற்கு மறக்கவில்லை. குறி தப்பாது. அதற்காக ஒஸ்மான் தெலுங்குப் பட ஹீரோபோல, ஒண்டி ஆளாகச் சென்று ராணுவத்தையே ரணகளமாக்க முடியுமா என்ன? வயது வேறு ஆகிவிட்டது. யதார்த்தமாக யோசிக்க ஆரம்பித்தார். அவரது கண்களில் வெள்ளைக்கொடி தெரிந்தது.

செப்டெம்பர் பதினேழு. ஆபரேஷனின் ஐந்தாவது நாள். மாலை மணி 4:18. ஒஸ்மானின் அறிவிப்பு வானொலி வழியே தவழ்ந்துவந்தது. 'இதற்கு மேலும் ஹைதராபாத் மக்கள் உயிர்த் தியாகம் செய்வதிலும், ரத்தம் சிந்துவதிலும் அர்த்தமில்லை. சமாதானமே ஒரே வழி. இதனை ஒன்றரைக் கோடி ஹைதராபாத் மக்களும் ஏற்றுக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.'

கையோடு ஐ.நா. பாதுகாப்புச் சபையில் கொடுத்த பிராதை வாபஸ் வாங்கினார். ரஸாக்கர்கள் தடை செய்யப்படுவதாக அறிவித்தார். எல் எட்ரூஸ் சரணடைந்தார். ஆறாவது, ஏழாவது நாள்களில் இந்திய ராணுவம், சமஸ்தானத்திலிருந்த ரஸாக்கர்களைத் தேடித் துருவிக் கைது செய்தது. ரஸாக்கர்களின் தலைவர் ரஸ்வியும் கைதானார். மேஜர் ஜெனரல் சௌத்ரி (Chaudhuri), ஹைதராபாத்தில் ராணுவ கவர்னராகப் பொறுப்பேற்றுக் கொண்டார். காங்கிரஸ் காரரான ராமனந்த தீர்த்தரும், கொலை முயற்சியில் கைதான நாராயணராவும் சிறையிலிருந்து மகிழ்ச்சியோடு கையாட்டியபடியே வெளியே வந்தனர். நினைத்துப் பார்க்க முடியாத வேகத்தில் காட்சி மாற்றங்கள்.

இத்தனை வருடங்கள் ஆண்டு வந்திருக்கிறார், படக்கென இம்மாம்பெரிய சமஸ்தானம் கையை விட்டுப்போனால்? உடைந்துவிட மாட்டாரா ஒஸ்மான்? அவரைத் தேற்றுவதற்காகவே ஒரு பதவி காத்திருந்தது. ராஜ்பிரமுக். அதாவது சமஸ்தானத்தின் கவர்னர் மாதிரி. பெயரளவுக்கு. அதைவேறு தனியாகச் சொல்ல வேண்டுமா என்ன? அழுத பிள்ளைக்கு மிட்டாய் கொடுக்கறதில்லையா, அது போலத்தான், பல்வேறு சமஸ்தான மகாராஜாக்களுக்கும் இந்த ராஜ்பிரமுக் மிட்டாய் கொடுக்கப்பட்டது.

எண்ணி எண்ணிச் சேர்த்து வைத்த மாபெரும் சொத்தை இயன்ற வரை காப்பாற்றிக் கொள்ள திட்டமிட்டார் ஒஸ்மான். டிரஸ்ட்டுகளை ஏற்படுத்தினார். நான் சேர்த்து வைத்திருக்கும் நகைகளை எனது மூத்த மகன் அஸம் ஜா, காலம் வரை யாருக்கும் விற்பதற்கு உரிமை கிடையாது என்று அறிவித்தார். பம்பாயிலுள்ள ஹெச்எஸ்பிசி, ப்ளோரா ப்வுண்ட்டெய்ன் கிளையில் நகைகள் பாதுகாப்புடன் வைக்கப்பட்டன.*

1952ல் ஹைதராபாத்தில் பொதுத் தேர்தல் நடைபெற்றது. காங்கிரஸ் தலைமையில் மக்களாட்சி குவா குவா! 1956ல் மொழிவாரியாக மாநிலங்கள் பிரிக்கப்பட்டபோது, அந்த அடிப்படையில் சமஸ்தானத்தில் சில பகுதிகள் கர்நாடகாவுடனும் மகராஷ்டிராவுடனும் சென்று ஒட்டிக் கொண்டன. புதிதாக ஆந்திர மாநிலம் குவா குவா! அதே நேரத்தில் ராஜ்பிரமுக் என்ற ஒப்புக்கு ஏற்படுத்தப்பட்டிருந்த பதவிக்குப் பாடை கட்டப்பட்டது. அடுத்த பதினோரு வருடங்களைப் பழைய நினைவுகளின் சலசலப்போடு கழித்த மாண்புமிகு ஒஸ்மான் அலிகான், 1967, பிப்ரவரி 24ல் வபாத் ஆனார். வயது 81. அடுத்த மூன்று வருடங்களிலேயே அஸம் ஜாவும்...

நகைகள்? ஏலத்துக்கு வந்தன (1979). வெளிநாட்டுக்காரர்களெல்லாம் டெல்லியில் குவிந்தார்கள். ஏலம் தொடங்கியது. க்ளைமாக்ஸில் ஹீரோ முளைத்து வருவது போல வந்தார் லட்சுமி பிரசாத் சிஹாரே (Laxmi Prasad Sihare) என்பவர். அவர் National Gallery of Artsன் தலைவராக இருந்தவர். அவரது கையில் ஏலத்துக்கு எதிரான உச்சநீதிமன்றத்தின் 'ஸ்டே ஆர்டர்.' நிஜாமின் நகைகள் இந்தியக் கலாசாரத்தின் சொத்து. ஏலமிட அனுதிக்க முடியாது - என்பது அவர் வாதம்.

வழக்கு அடுத்த பதினாறு வருடங்களுக்கு நீண்டது. 1995ல் தீர்ப்பு வெளிவந்தது. அதைக் கேட்க சிஹாரே உயிரோடு இருக்கவில்லை என்பது வேறுவிஷயம். 218 கோடி கொடுத்து நிஜாமின் நகைகளை இந்திய அரசு வாங்கிக் கொண்டது. தற்போது அந்த நகைகள் ரிஸர்வ் வங்கியின் பாதுகாப்பில் இருக்கின்றன.

அங்குதான் ஒஸ்மானும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

---

★ ஹைதராபாத், இந்தியாவுடன் இணைக்கப்பட்ட பின்பு, போலீஸ் அரண்மனைக்குச் சென்று பார்வையிட்டது. கார் ஷெட்டில் ரோல்ஸ் ராய்ஸ்களும் பிற கார்களும் நிறைந்திருந்தன. சோதனையிட்டபோது, கார்களில் தங்க, வெள்ளிக் கட்டிகளும், நகைகளும் பதுக்கி வைக்கப்பட்டிருந்தன என்று ஒரு செய்தி உண்டு.

# இந்தூர்

• மத்திய பிரதேச சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1731

• ஆட்சி செய்தவர்கள் : ஹோல்கர் பரம்பரை

• முதல் மன்னர் : மல்ஹர் ராவ் ஹோல்கர்

• குண்டு மரியாதை : சமஸ்தானத்துக்குள் 21, வெளியில் 19.



# அவள் பெயர் மும்தாஜ்!

இப்போது என்ன, பொருளாதார கிளாஸா? வா மச்சி, போய் ஒரு பீர் விட்டுட்டு வரலாம். அடுத்த பீரியட் சரித்திரம்தானே? அதுக்கு சரக்கு அடிச்சிட்டு வந்தாத் தான் சரியா இருக்கும். கடைசி வகுப்பு என்னது? ஆங்கிலமா? அப்போ ஷாம்பெயின்தான் சரியான தேர்வு. கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் இப்படிப் பேசிக் கொண்டால் எப்படி இருக்கும்?

கற்பனைக்குச் சுவையாகத்தான் இருக்கும். ஆனால் அந்தக் காலத்தில் நிஜத்திலும் இப்படிச் சில மாணவர்கள் இருக்கவே செய்தார்கள். அவர்களை மாணவர்கள் என்றும் சொல்லலாம். இந்தியாவில் இருந்த சமஸ்தானங்களின் இளவரசர்கள் என்றும் சொல்லலாம். அவர்கள் படிப்பதற்காகவே சில கல்லூரிகள் பிரிட்டி ஷாரால் நேர்ந்து விடப்பட்டிருந்தன. பட்டியல் இதோ.

இந்தூர் டாலி கல்லூரி, அஜ்மீர் மயோ கல்லூரி, லாகூர் எய்ட்சிஸன் (Aitchison) கல்லூரி, ராஜ்கோட் ராஜ்குமார் கல்லூரி.

கல்லூரி என்று பொதுவான வார்த்தையால் சொல்லலாம். ஆனால் பள்ளிப் படிப்பு முதல் உயர்படிப்பு வரை எல்லாமே அங்கே நடத்தப்பட்டன. இந்தக் கல்லூரிகள் பிரிட்டிஷாரால் நிர்வகிக்கப்பட்டன. கல்லூரியின் முதல்வர், மூத்த விரிவுரை யாளர்கள், துறைகளின் தலைவர்கள் எல்லாமே ஆங்கிலேயர்கள்தான்.

போனால் போகிறதென்று சில இந்தியர்களையும் வேலைக்கு வைத்திருந்தார்கள். அவர்களால் தற்காலிக உபாத்தியார்களாகவும், ஜூனியர் விரிவுரையாளர்களா கவும் மட்டுமே நெடுங்காலம் நாற்காலி தேய்க்க முடிந்தது. மற்றபடி கணக்கு

வழக்கு பார்க்கும் குமாஸ்தா, எடுபிடி வேலைகள் செய்யும் அலுவலக உதவியாளர், ப்யூன், கல்லூரியைக் கூட்டிப் பெருக்கும் பணியாளர்கள் போன்ற உயர்பதவிகளுக்கு இந்தியர்களுக்கே முன்னுரிமை வழங்கப்பட்டது.

சாதாரண மக்களின் புத்திரர்கள் எல்லாம் இந்தக் கல்லூரிகளில் சேரலாம் என்று கனவு, ஆசை, விருப்பம், எண்ணம், அவா - எதுவும் வைத்துக் கொள்ளக்கூடாது. உள்ளே நுழைய வேண்டு மென்றால் கண்டிப்பாக உடலில் ராஜ ரத்தம் ஓட வேண்டும். மகாராஜா தனக்குப் பிறந்த வாரிசு என்று அறிவித்திருக்க வேண்டும். வருங்கால சமஸ்தான மகாராஜாக்களின் வெயிட்டிங் லிஸ்ட்டில் அந்த வாரிசின் பெயரும் இருக்க வேண்டும். அப்போதுதான் அனுமதி கிடைக்கும்.

'மகாராஜாதான் எங்க அப்பா. அவரு ஒருமுறை எங்க ஊருத் திருவிழாவுக்கு வந்துட்டுப் போனாரு. எங்கம்மாவும் திருவிழாவில பஞ்சுமிட்டாய் வாங்கித் திங்கப் போனாங்க. அதுக்கப்புறம்தான் நான் பொறந்தேன்' என்று ராஜாவுக்குப் பிறந்த இதர பிள்ளைகளெல்லாம் போய் ஸீட் கேட்க முடியாது. டிஎன்ஏ டெஸ்ட் செய்யமுடிந்தால் நிரூபிக்கலாம். ஆனால் அதெல்லாம் அப்போது ஏது?

அப்படி இளவரசர்களாக இல்லாத பட்சத்தில், சமஸ்தானத்தின் மந்திரி மகனாகவோ, திவானின் மகனாகவோ, பிரதம அமைச்சரின் மகனாகவோ அல்லது மாபெரும் நிலச்சுவான் தாரின் புத்திரனாகவோ பிறவி எடுத்திருக்க வேண்டும். அப்படியெனில் குல, கோத்திர விவரங்களையெல்லாம் குசலம் விசாரித்து விட்டு, 'போ, நீயும் போய் உள்ளாற குந்திக்கோ' என்று அனுமதி கொடுப்பார்கள்.

ஆனால் இளவரசர்களுக்கு கிடைக்கும் மரியாதை, மந்திரியின் மகனுக்கோ, திவானின் சீமந்த புத்திரனுக்கோ கிடைக்காது. அவர்கள், இளவரசர்கள் வந்தால் எழுந்து நிற்க வேண்டும். வளைந்து வணக்கம் வைக்க வேண்டும். பிரியப்பட்டால் நெடுஞ்சாண்கிடையாக நமஸ்கார மும் செய்யலாம். இளவரசர்களை எதிர்த்துப் பேசக் கூடாது, எதிரில் சிரிக்கக் கூடாது, தோள் மீது கை போடக்கூடாது, அநாவசியமாகத் தொட்டுப் பேசக்கூடாது.

'உங்கப்பா எங்கப்பாவுக்கு அரண்மனையில் காதுதானே குடைஞ்சு விட்டுக்கிட்டிருக்காரு. வா நீயும் வந்து என் காதைக் குடைஞ்சு விடு' என்று ஓர் இளவரசர், மந்திரியின் மகனைத் தாராளமாக வேலை வாங்கலாம். அந்தச் சமயத்தில் இளவரசர் ஒண்ணாங்கிளாஸே படித்துக் கொண்டிருந்தாலும், ஏழாவது ஃபாரம் படிக்கும் மந்திரியின் மகன் காது குடைந்துதான் ஆக வேண்டும். வயசு வித்தியாசமெல்லாம் கிடையாது.

இளவரசர்களுக்கிடையேயும் கௌரவப் போட்டிகள் எக்கச்சக்கமாக நடக்கும். 'உங்கப்பா உனக்குத் தங்க ஸ்கேல் மட்டும்தானே கொடுத்துருக்காரு. இங்க பாரு எங்கப்பா எனக்குத் தங்க ஜியாமெண்ட்ரி பாக்ஸே கொடுத்துருக்காரு. இங்க பார்த்தியா இந்தப் பாகைமானில எவ்வளவு வைரக்கல்லு பதிச்சிருக்குன்னு.

சிறுவயதிலேயே படிப்புக்காக இங்கே அனுமதிக்கப்படும் இளவரசர்கள், உயர்படிப்பு வரை அங்கேயே தங்கிப் படித்தார்கள். இளவரசர்கள் தங்கிப் படிக்கிறார்கள் என்றால் அங்கு வசதிகள் எப்படி இருக்கும் என்று உங்கள் கற்பனை ஒட்டகத்தை ஓட விட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள்.

இந்தப் பள்ளிகளில், கல்லூரிகளில் கல்வி முறைகள் எல்லாம் நன்றாகவே இருந்தன. ஆனால் கண்டிப்பாகப் படித்தே ஆக வேண்டும் என்று கட்டாயமெல்லாம் கிடையாது. இஷ்டமிருந்தால் படி, கஷ்டமாக உள்ளதா. அரண்மனைக்குக் கிளம்பு. மாட்டாயா? இங்கே இருந்து பெஞ்ச் தேய்ப்பாயா? தேய்த்துக் கொள். அது உன் இஷ்டம். அவ்வளவே.

பிரிட்டிஷார் அங்கு மதப் பாடங்களைக் கட்டாயமாக வைத்திருந்தனர். அந்தந்த மதம் சார்ந்தவர்களுக்கு அந்தந்த மதம் சார்ந்த பாடங்கள். கல்லூரி வளாகத்திலேயே இந்துக்களுக்குக் கோயில்கள், கிறித்தவர்களுக்கு சர்ச், இஸ்லாமியர்களுக்கு மசூதி, சீக்கியர்களுக்குக் குருத்வாரா அமைக்கப்பட்டிருந்தன. மதப் பாடங்களை எடுக்க இந்தியர்களே நியமிக்கப்பட்டிருந்தனர். வருங்கால மன்னர்கள் தங்கள் மதம், தங்கள் இனம் சார்ந்த பொறுப்புணர்வோடு ஆட்சி நடத்த வேண்டும் என்று பிரிட்டிஷாரின் எண்ணமே இந்தக் கட்டாய மத வகுப்புகளுக்கான உள்குத்து காரணம். இப்படி பிரிட்டிஷார் தங்களது மாஸ்டர் ஃபார்முலாவான 'பிரித்தாளும் சூழ்ச்சியை' இளவரசர்கள் அளவிலும் கையாண்டார்கள்.

அதுபோக இளவரசர்கள், அவர்களது தந்தைகளைப் போலவே எப்படித் தங்களுக்கு அடி பணிந்து, சொன்ன சொல் கேட்டு சமர்த்துப் பிள்ளைகளாக நடந்துகொள்ள வேண்டும் என்ற பயிற்சிகளையும் மறைமுகமாக அளித்தார்கள். ஆகவே அந்தக் கல்லூரிகளின் படித்த பல இளவரசர்கள், பிரிட்டிஷாரால் புடம் போட்ட தங்கமாக உருவெடுத்தார்கள்.

முதல் பாராவில் ஏதோ சாராய வாடை அடித்ததே, அந்த விஷயத்துக்கு வருவோம். ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும். ம்ஹூம் படவில்லை. எல்லா வசதிகளும் நிறைந்த வாழ்க்கை. யாரும் கேள்வி கேட்க மாட்டார்கள். தந்தை, அரண்மனையில் உல்லாசமாக உழைத்து உழைத்து இவ்வளவு பணம் அனுப்புகிறாரே - அதை என்னதான் செய்ய முடியும்? வேறென்ன செலவுதான்.

இளவரசர்களுக்குச் சிறுவயதிலேயே ஆல்கஹால் அமிர்தங்கள் பழகின. பல இளவரசர்கள் இன்ன பிற போதை வஸ்துக்களுக்கும் அடிமையாகிக் கிடந்தார்கள். பகல் நேரங்களில் வெளியே சுற்றும் இளவரசர்கள், சரக்கு பாட்டில்களையும், சோடா பாட்டில்களையும் வாங்கி வந்து விடுவார்கள். சோடாவில் தேவையான விகிதத்தில் சரக்கைக் கலந்து தோட்டத்தின் புதர்களில் ஒளித்து வைத்து விடுவார்கள்.

இரவில் கண்காணிப்பாளர்கள் கிளப்புகளுக்கும் பார்ட்டிகளுக்கும், வேறு கேளிக்கைகளுக்கும் சென்று விடுவார்கள். அந்தச் சமயத்தில் இளவரசர்களால் பாட்டில்கள் திறக்கப்படும். ஆஹ்ஹா! மது மட்டும்தானா? வேறு என்னென்ன 'நல்ல' பழக்கங்களைக் கற்றுக் கொள்ள முடியுமோ, அத்தனையும் கற்று முக்தி அடைந்தார்கள் இளவரசர்கள்.

இப்படிப்பட்டதொரு மகா உன்னதமான சூழ்நிலையில் படித்து வளர்ந்தவர்தான் நமது இளவரசர் மூன்றாம் துகோஜி ராவ் ஹோல்கர்* (Tukojirao Holkar III). மத்தியப் பிரதேசத்தின் இந்தூர் சமஸ்தான மகாராஜா சிவாஜி ராவ் ஹோல்கரின் மூத்த மகன். அவர் படித்த கல்லூரி, இந்தூர் டாலி (Daly) கல்லூரி. பாடங்களையும், முறைதவறிய பாடங்களையெல்லாம் முறைப் படி கற்றுக் கொண்டார்.

---

★ 26 நவம்பர் 1890ல் மகேஷ்வர் என்ற ஊரில் பிறந்தவர். மகாராஜா சிவாஜி ராவுக்குப் பிறந்த முதல் மகன். மூன்றாவது மனைவி சீதா பாய் மூலமாக.

'மவனே, கடந்த பதினேழு வருடங்களா இந்த சமஸ்தான மக்களுக்குச் சேவை ஆற்றோ ஆற்றென்று ஆற்றிவிட்டேன். போதும். போரடிக்கிறது. இனி நீ ஆற்று. இந்தா வைத்துக்கொள் செங்கோலை' - எந்தப் பிரச்னையும் இன்றி மகாராஜா சிவாஜி ராவ் ஹோல்கர் ஓர் அப்பனாக லட்சணமாகத் தன் அருமைப்புத்திரன் துகோஜிக்கு அரியணையை விட்டுக் கொடுத்தார். அந்தப் பொன்னாள் ஜனவரி 31, 1903. மாதம் மும்மாரி பொழிந்ததா, மந்திரியின் மச்சினிக்குக் குழந்தை பிறந்ததா, வர வேண்டியச் சரக்கு வந்து சேர்ந்ததா என்பது போன்ற அத்தியாவசியக் கவலைகளுடன் ஆட்சியைத் தொடர்ந்தார் துகோஜி.

சந்திராவதி பாய் உடன் துகோஜிக்கு முதல் திருமணம் நடந்தது (1893). இந்திரா பாய் உடன் இரண்டாவது திருமணம் நடந்தது (1913). இதுபோக, அந்தப்புரத்தில் பல்வேறு பெண்களுடன் துகோஜியின் இல்லற வாழ்க்கை இனிதே போய்க் கொண்டிருந்தது.

ஒருமுறை அமிர்தசரஸ் சென்றிருந்தார் துகோஜி. இரவு நேரம். நடன விடுதிக்குள் பொழுதைக் கழிக்க நுழைந்தார். பஞ்சாபின் பாரம்பரிய இசைக்கருவிகள் காற்றோடு பேச ஆரம்பித்தன. வானத்திலிருந்து டபக்கென்று குதித்து ஒரு தேவகன்னிகை ஆட ஆரம்பித்தால் எப்படி இருக்கும்? அப்படித்தான் இருந்தாள் அந்த யுவதி.

விரலாட, விழியாட, இதழ் ஆட, கனிமுகம் ஆட, கழுத்தாட, பின் தோள் ஆட, கரம் ஆட, இருகால் ஆட, கொடியிடை ஆட, பின் அங்கம் மொத்தமும் ஆட, ஆடிப்போனார் துகோஜி. அவளது ஒவ்வொரு அசைவும் துகோஜியின் மனத்தைப் பிசைந்தது. நடனமா அது? நளினத்தின் திருவிழா. அசைவின்றி அவளையே உள்வாங்கிக் கொண்டிருந்தார். அவள் ஆடி முடித்துச் சென்ற பின்பும் துகோஜி பிரமிப்பு மாறாது அப்படியே அமர்ந்திருந்தார். சுய நினைவுக்கு வரச் சிறிது நேரம் பிடித்தது. வேறொரு பெண் ஆட ஆரம்பித்திருந்தாள். பார்க்கப் பிடிக்காமல் வெளியேறினார்.

எதையோ தொலைத்ததுபோல இருந்தது அவர் இதயம். அன்று அவர் அருந்திய மதுவின் அளவு கொஞ்சம்தான். ஆனால் போதை உச்சந்தலைக்கு ஏறியிருந்தது. மஞ்சத்தில் படுத்தார். நெஞ்சமெல்லாம் அவள் நினைப்பு. தூக்கம் வெகுதூரம் விட்டுப் போயிருந்தது. நிசப்தமான சூழ்நிலை. அவரது இதயத் துடிப்பு அவருக்கே கேட்டது. அதுவும் இசையாக. அதற்கு ஆடிக் கொண்டிருந்தாள் அவள்.

விடிந்ததும் பெட் விஸ்கி கூடக் குடிக்காமல், நடன விடுதிக்கு விரைந்தார். என்னென்னமோ அடையாளம் சொல்லி விசாரித்தார். 'மும்தாஜ், இங்க வா' - என்று உரக்க அழைத்தாள் விடுதி நடத்தும் பெண். வந்தது அவளேதான்.

'எவ்வளவு?' என்றார் துகோஜி. 'எதற்கு?' என்றாள் விடுதி நடத்தும் பெண். 'இந்தப் பெண்ணை நான் என்னுடனேயே அழைத்துச் செல்லப் போகிறேன். என்ன விலை?' என்றார். பேரம் நடந்தது. மும்தாஜுக்கு துகோஜியைச் சுத்தமாகப் பிடிக்கவில்லை. சட்டென உள்ளே ஓடினாள். தன் தாய் வாஸி பேகத்திடம் விஷயத்தைக் கூறி அழ ஆரம்பித்தாள். அதனால் எந்தப் பிரயோசனமும் இல்லை. பேரம் முடிந்திருந்தது. தொகை கைமாறியிருந்தது.

'அவள் எங்கே?' என்றார் துகோஜி. மும்தாஜ் கொஞ்சம்கூட இஷ்டமின்றி, அவருடன் கிளம்பினாள். முதல் முறையாக அவள் கரம் பற்றி, அந்த நொடியை அனுபவித்து, பின் அழைத்துச் சென்றார் துகோஜி. அமிர்தசரஸில் அதற்கு மேல் தங்கியிருக்கவில்லை. இந்தூர் வந்தடைந்தார். பையன் ஒரு பெண்ணை இழுத்துக் கொண்டு வந்திருக்கிறான் என்று அதிர்ச்சியடைந்து



இரண்டாவது மனைவி இந்திரா பாய்

குய்யோ முய்யோ என்று அலறுவதெல்லாம் அரண்மனைக்காரர்களின் பழக்கமல்ல. அப்படி இழுத்துக் கொண்டு வராவிட்டால்தான் எதுவும் பிரச்னையோ என்று விசனப்படுவார்கள்.

இந்தூரின் அந்தப்புரத்தில் அந்த செந்தாமரையைக் கொண்டு வைத்தார் துகோஜி. காதல் செய்தார். கவிதை சொன்னார். அன்பு காட்டினார். பாசத்தால் தாங்கினார். பரிசு கொடுத்தார். பின் தன்னையே கொடுத்தார். 'இந்த ஜென்மத்துக்கிட்ட இருந்து எப்பதான் நமக்கு விடுதலை கிடைக்குமோ?' என்று வேண்டா வெறுப்புடன் காத்திருந்தாள் மும்தாஜ்.

அன்றும் அந்தப்புரத்துக்குள் நுழைந்தார் துகோஜி. பிற பெண்களை எல்லாம் கண்டு கொள்ளாமல், நேராக மும்தாஜின் அறைக்குச் சென்றார். கதவைத் தட்டினார். மீண்டும் தட்டி னார். மீண்டும் மீண்டும் தட்டினார். திறக்கப்படவில்லை. காவலர்களை விட்டு உடைக்கச் சொன்னார். உள்ளே நுழைந்தார். மும்தாஜ் வெளியேறி இருந்தாள்.



# 40

# ராத்திரி நேர ரயில்

ஆசை ஆசையாக வாங்கிவந்த நாய்க்குட்டி காணாமல் போய்விட்டால் எப்படி இருக்கும்? பூனைக்குட்டி காணாமல் போனாலும் சோகம்தான். இந்தூர் மகாராஜா துகோஜி ராவின் பிரச்னை வேறு. காணாமல் போனது ஐந்தறிவு குட்டியல்ல, ஆறறிவு பெண்குட்டி. கேட்க வேண்டுமா? அவரால் அந்த ஏமாற்றத்தைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை.

'அடியேய் மும்தாஜ், என்ன குறை வைத்தேனடி உனக்கு? பத்துடை அள்ளிக் கொடுத்தேன். பூவால் அலங்கரித்தேன். பொன்னால் அபிஷேகம் செய்தேன். உன் புன்னகைக்கு என்னையே எழுதி வைத்தேனே... என்னை ஏமாற்றிவிட்டுப் போக எப்படி மனம் வந்ததடி உனக்கு? சண்டாளி!' பாலூட்டி வளர்த்த கிளியைப் பறிகொடுத்த சிவாஜி கணேசன் போலப் புலம்பினார் துகோஜி.

'இன்னும் ஏன் இங்கு நின்று கொண்டிருக்கிறீர்கள்? சமஸ்தானத்தின் எல்லையை விட்டு அவள் தாண்டிச் சென்றிருக்க முடியாது. ஊருக்குள் சந்தேகப்படும்படி எந்தப் பெண் தனியாக நின்றுகொண்டிருந்தாலும் என்முன் இழுத்து வாருங்கள்' - மீசை அதிரக் கட்டளையிட்டார். வீரர்கள் விருட்டென்று வெளியேறினார்கள். 'வரட்டும் அவள். காலை உடைத்து அந்தப்புரத்தை விட்டு வெளியே அடியெடுத்து வைக்கமுடியாமல் செய்துவிடுகிறேன்' உள்ளுக்குள்ளேயே பொருமிக் கொண்டார் துகோஜி.

அடுத்த ஒரு மணி நேரத்தில் சில காவலாளிகள் நான்கைந்து பெண்களைப் பிடித்துக் கொண்டு வந்தனர். மும்தாஜும் அதில் இருந்தாள். துகோஜி மற்ற

பெண்களை விட்டுவிடச் சொன்னார். மும்தாஜ் மட்டும் நின்றுகொண்டிருந்தாள். அவள் முகம் நிறைய பயம். உடலெல்லாம் வியர்வையால் நனைந்திருந்தது. கை, கால்களெல்லாம் நடுநடுங்கின. அவளது கண்களைப் பார்த்தார் துகோஜி. அவ்வளவுதான், கொப்பளித்துக் கொண்டிருந்த கோபமெல்லாம் பறபற!

'செல்லம்... எங்கடா போயிட்ட? வழி தெரியாம வெளிய போய் மாட்டிக்கிட்டியா? இனிமேல் அப்படியெல்லாம் செய்யாதே. நீ தொலைஞ்சு போயிட்டா, நான் யாரை உருகி உருகிக் காதலிக்க முடியும் சொல்லு? உள்ள போய் ஓய்வு எடுத்துக்கோ ராஜாத்தி. நான் அப்புறமா வர்றேன்.'

உயிர் தப்பியதை எண்ணித் திருப்தியடைந்த மும்தாஜ், பதிலேதும் பேசாமல் அறைக்குள் சென்றாள். துகோஜி காவலர்களைப் பார்த்துக் கண்களால் சைகைகள் செய்தார். அந்தப்புரத்துக்கு வெளியே காவல் பலப்படுத்தப்பட்டது.



மகாராஜா துகோஜி ராவ்

உல்லாசக் கட்டிலில் ஓய்வாகப் படுத்திருந்தாள் மும்தாஜ். அரண்மனை வாழ்க்கை என்பது அவள் கனவில்கூட நினைத்துப் பார்க்காத ஒன்றுதான். வாய்த்திருக்கிறது. அனுபவித்துத் தீர்க்கலாம். ஆனாலும் அவளுக்கு அங்கு வாழ விருப்பமில்லை. காரணம் துகோஜியைப் பிடிக்கவில்லை. 'என்ன மனுஷன் இவரு? மகாராஜாவா இருக்கட்டுமே. அதுக்காக அந்த மூஞ்சியைக் காதலிக்க முடியுமா என்ன? எனக்கு அவர் மேல் காதல் வரவில்லை...'

மும்தாஜ் நினைத்துக் கொண்டிருக்கும்போதே வந்து நின்றார் துகோஜி. பளபள பட்டுடை. ஜிகுஜிகு நகைகள். கமகம வாசனைத் திரவியங்கள். கையில் ஒரு பெட்டி. அவர் வாயில் புன்னகை வழிந்தது. அசௌகரியமாக நெளிந்தாள் மும்தாஜ்.

'செல்லம், தூங்கினாயா? சாப்பிட்டாயா? இன்னும் களைப்பாகத்தான் இருக்கிறாய் போலிருக்கிறது. உன் களைப்பைப் போக்குவது எப்படி என்பது எனக்குத் தெரியும்' என்றபடியே அவளைத் தொட வந்தார் துகோஜி. பின் வாங்கினாள் மும்தாஜ்.

'இதோ பார். இத்தனையும் உனக்குத்தான். என்னருகே வா. ஒவ்வொன்றையும் உனக்குச் சூட்டி அழகு பார்க்கிறேன். வா' - தன் கையில் வைத்திருந்த பெட்டியைத் திறந்தார் துகோஜி. தங்க, வைர, மரகத, முத்து நகைகள் கூட்டணி அமைத்து ஜொலித்தன. ஆயினும் மும்தாஜின் முகத்தில் இருளே நீடித்தது. மேலும் நெருங்கினார் துகோஜி. மேன்மேலும் விலகினாள் மும்தாஜ். அவர் நெருங்க, அவள் விலக அந்த அறைக்குள் ஒரு டாம் அன்ட் ஜெர்ரி ஓட்டம் நடந்துகொண்டிருந்தது.




துகோஜிக்கு மூட் கெட்டது. நகைப்பெட்டியை அந்த அறையிலேயே வைத்துவிட்டு அந்தப் புரத்திலிருந்து வெளியேறினார். என்ன செய்து இவளை வசப்படுத்தலாம் என்று வசியக் கணக்கு போட ஆரம்பித்தது அவரது மூளை. எந்த வழியில் இவரிடமிருந்து தப்பிக்கலாம் என்று நழுவல் கணக்கு போட்டுக் கொண்டிருந்தது மும்தாஜின் மூளை.

பொதுவாக அந்தப்புரத்தில் பணிப்பெண்கள் உள்ளே வருவதும், வெளியே போவதுமாக இருப்பார்கள். சென்றமுறை அவர்களோடு கலந்துதான் வெளியே தப்பித்துச் சென்றாள் மும்தாஜ். ஆனால் இப்போது பாதுகாப்பு அதிகமாகிவிட்டதே. வெளியே நிற்கும் காவலாளி களுக்கு அவளை நன்றாகவே அடையாளம் தெரியும். வேலைக்கு ஆகாது. உடல்நிலை சரியில்லாததுபோல நடித்தால்? ம்ஹூம், மருத்துவரை இங்கேயே வரவழைத்துவிடுவார். அரண்மனையில் இல்லாத மருத்துவர்களா என்ன? அடச்சே, ஏன் இப்படி உருப்படியில்லாத யோசனைகளாகவே தோன்றுகிறது. தூக்கம் வராமல் யோசித்துக் கொண்டே இருந்தாள்.

அதே நேரத்தில் தன் அறையில் படுக்கையிலிருந்து துள்ளிக்குதித்து எழுந்தார் துகோஜி. 'ம், அதுதான் சரி. வரவழைத்து விடலாம். நாளைக்கே ஆளனுப்பிவிடலாம்' என்று எண்ணிக் கொண்டார். மும்தாஜின் தாய் வாஸிர் பேகம், அமிர்தசரஸிலிருந்து இந்தூருக்கு வரவழைக்கப் பட்டாள். கூடவே வேறு சில உறவினர்களும். மும்தாஜ் அப்போது சிரிக்க ஆரம்பித்திருந்தாள். எனவே துகோஜிக்கு வசதியாகப் போயிற்று, எல்லாவற்றுக்கும்.

மாதங்கள் ஓடின. துகோஜியின் ஆஸ்தான அந்தப்புர நாயகியாக வாழ ஆரம்பித்திருந்தாள் மும்தாஜ். வயிற்றில் ஐந்து மாதம் வேறு. ஆனால் அவளை அந்தப்புரத்தை விட்டு வெளியே அனுப்பாமல் ஒரு கைதி போலத்தான் நடத்திக் கொண்டிருந்தார் துகோஜி. ஓடப்பார்த்தவளா யிற்றே, அதனால்தான்.

'மகாராஜா, தாங்கள் என் மகளைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும். அப்போதுதான் அவளுக்கு அங்கீகாரம் கிடைக்கும்' சந்தர்ப்பம் அமையும்போதெல்லாம் துகோஜியை வற்புறுத்த ஆரம்பித்தாள் வாஸிர் பேகம். துகோஜி அசைந்து கொடுக்கவில்லை. கொஞ்ச காலம் நச்சரித்துவிட்டு தன் உறவினர்களோடு அமிர்தசரஸுக்குத் திரும்பினாள் வாஸிர்.

பிரசவத்தில் உச்சபட்ச வலியில் அலறி, குழந்தையின் அழுகைச் சத்தம் கேட்டு, பின் மயங்கினாள் மும்தாஜ். பெண் குழந்தை பிறந்திருந்தது. ஆனால் மும்தாஜ் கண் விழிக்கையில் அவளருகில் குழந்தை இல்லை. பதறி விசாரித்தாள். குழந்தை இறந்துவிட்டதாகக் கூறினார்கள் மருத்துவச்சிகள்.

'இல்லை... இல்லை... பொய் சொல்லுறீங்க. என் கண்ணுலகூடக் குழந்தையைக் காட்டாம என்ன செஞ்சீங்க?' - அலறினாள் மும்தாஜ். யாரும் பதில் சொல்லவில்லை. துகோஜியால் அவளைச் சமாதானப்படுத்தவே முடியவில்லை. வாஸிர் பேகம் வரவழைக்கப்பட்டாள். அவளுக்கும் குழந்தை இறந்துபோன விஷயத்தில் பெரும் சந்தேகம் இருந்தது.

'நீ இங்க இருந்து எப்படியாவது தப்பிச்சு அமிர்தசரஸுக்கே வந்துரு. மீதியை நான் பார்த்துக்கிறேன்' - முடிந்த மட்டும் தன் மகளுக்கு எடுத்துச் சொல்லிவிட்டு ஊர் திரும்பினாள் வாஸிர்.

எந்நேரமும் சோகமயமாகவே உட்கார்ந்திருந்தாள் மும்தாஜ். அவளது சோகம் துகோஜியை வெகுவாகப் பாதித்தது. எப்படியாவது அவளைப் பழைய மும்தாஜாக மாற்ற வேண்டும் என்று நினைத்தார். ஏதாவது மலைவாசஸ்தலத்துக்கு அழைத்துச் சென்றால் சரியாக இருக்கும் என்று திட்டமிட்டார். அவர் தேர்வு செய்த இடம் முசௌரி (Mussoorie).

ரயில் பயணம். சித்தூரிலிருந்து ஜெய்ப்பூர் வழியாக டெல்லி சென்று, அங்கிருந்து டெஹ்ராடூன் வழியாக முசௌரி செல்லவேண்டும். பயணத்துக்காகத் தனி ரயில் ஒன்றை ஏற்பாடு செய்திருந் தார் மகாராஜா துகோஜி. சகல வசதிகளும் நிறைந்த ரயில். துகோஜிக்குத் தனி அறை. மும்தாஜுக்குத் தனி. அவைபோகத் தனித்தனியாக அறைகள் இருந்தன. உடன் பணியாளர்கள், காவலாளிகள். ஆனால் எங்கே போகிறோம் என்ற விவரம் மும்தாஜுக்குத் தெரியாது. தப்பித்துவிடு என்று அவளது தாய் சொன்ன வார்த்தைகள் மட்டும் மும்தாஜுக்குள் எதிரொலித்துக் கொண்டிருந்தன. ரயில் இந்தூர் சமஸ்தானத்தைத் தாண்டியிருந்தது.

இரவு, வெளிச்சத்தை விழுங்கிக் கொண்டிருந்தது. மகாராஜா தன் இடத்தில் உறங்க ஆரம் பித்தார். மும்தாஜுக்குப் பாதுகாப்பாக இருந்த காவலாளிகள், கண்கள் சொக்கத் தள்ளாடிக் கொண்டிருந்தனர். தன் வேலையை ஆரம்பித்தாள் மும்தாஜ். தன்னுடனிருந்த பணிப் பெண்ணிடம் பேச்சுக் கொடுத்தாள். அன்பாக, பணிவாக, மிகவும் குழைவாக.

'நாம் எங்கே சென்று கொண்டிருக்கிறோம் என்று உனக்குத் தெரியுமா?' - கேட்டாள் மும்தாஜ். பணிப்பெண்ணோ மேலுதட்டை உள்ளிழுத்து, கீழுதட்டை வெளியே தள்ளினாள்.

'அந்தக் காவலாளிகளுக்குத் தெரிந்திருக்கும். தயவுசெய்து விவரம் கேட்டு வாயேன். நீயே கேட்பதுபோலக் கேள். சரியா?' - மும்தாஜ் கூற அவளும் தலையசைத்துவிட்டுச் சென்றாள். பதிலோடு வந்தாள்.

'முசௌரிக்குப் போகிறோமாம். அது ஒரு மலைவாசஸ்தலம். ரொம்பவே குளிருமாம். இந்த ரயில் டெல்லி வழியாகப் போகுமாம்.' பணிப்பெண்ணின் பதில் மும்தாஜின் தேவைக்கதிகமாக இருந்தது. தன் காதில் விழுந்த டெல்லி என்ற வார்த்தையை அடிக்கோடிட்டுக் கொண்டாள்.

தனது நகைப்பெட்டியைத் திறந்து ஒரு சில நகைகளை மட்டும் வெளியே எடுத்தாள். பணிப்பெண்ணின் உள்ளங்கையில் திணித்தாள். 'அய்யோ, இதெல்லாம் வேண்டாம்' என்று அவள் பதறினாள். 'ப்ச், இதைவிட அதிகமாகவே கொடுப்பேன். என் சொல்பேச்சு கேட் டால்...' மும்தாஜ் அழுத்தமாகக் கூறினாள். நகைகளுக்கு மயங்கா நங்கையுமுண்டோ? சம்மதித்தாள்.

மது எடுத்து வருமாறு பணிப்பெண்ணை அனுப்பினாள். அவளும் எடுத்து வந்தாள். அதைக் காவலாளிகளுக்குப் பரிமாறச் சொன்னாள் மும்தாஜ். காவலாளிகள் பணிப்பெண்ணை முறைத்தார்கள்.

'அட, சாப்பிடுங்கள். எவ்வளவு நேரம்தான் இப்படி விறைப்பாக நிற்பீர்கள்? உங்களைப் பார்த்தால் எனக்குப் பாவமாக இருக்கிறது. உடல் அசதியாக இருக்கும். கொஞ்சம் சாப்பிடுங்கள். உயர்ரக மது இது. வாய்ப்புக் கிடைக்கும்போதே ருசி பார்ப்பவன் புத்திசாலி. என்ன நான் சொல்வது?' - மும்தாஜ் இனிப்பாகப் பேசினாள். நாக்கில் எச்சில் ஊற, மதுவால் தொண்டையை நனைத்தார்கள் காவலாளிகள். பேச்சைத் தொடர்ந்தாள் மும்தாஜ்.

'உங்களுக்கெல்லாம் வருமானம் என்னதான் இருக்கும்? இப்படியே காலம் முழுவதும் காவல் காத்து நிற்பதுதான் உங்களுக்குத் தலையெழுத்தா என்ன? நான் சொல்கிறபடி கேட்டால், வாழ்க்கையில் நீங்கள் நினைத்தே பார்க்கமுடியாத பரிசு உங்களுக்குக் கிடைக்கும். ஆனால் நீங்கள் எனக்கு ஒத்துழைக்க வேண்டும். நான் தப்பித்துப் போக.'

காவலாளிகளின் முகத்தில் மினி கலவரம் மூண்டது. 'அட, பதற்றப்படாதீர்கள். நான் சொல் வதை முழுமையாகக் கேட்டுவிட்டுப் பின்பு யோசியுங்கள்' என்ற மும்தாஜ், நகைப் பெட்டியைத் திறந்து காண்பித்தாள். 'இவை உங்களுக்குத்தான். இவற்றின் மதிப்பு நீங்கள் கற்பனை செய்ய முடியாததாக இருக்கும். விற்றுக் காசாக்கிக் கொண்டால், காலம் பூராவும் காலாட்டிக் கொண்டே சாப்பிடலாம். என்ன சொல்கிறீர்கள்?'

நகைகளே வென்றன. புன்னகை செய்தாள் மும்தாஜ். வெளிச்சம் மெல்ல மெல்ல இருளைத் திங்க ஆரம்பித்திருந்தது. அந்த நேரத்தில் டெல்லி ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்திருந்தது ரயில். அதற்காகவே விழிப்புடன் காத்திருந்த மும்தாஜ், ஒரு நொடியும் தாமதியாமல் ரயிலை விட்டுக் குதித்தாள். அப்போது பணிப்பெண் மட்டும் விழித்திருந்தாள். காவலாளிகள் குறட்டை விட்டுக் கொண்டிருந்தனர்.

துகோஜி இருக்கும் திசைக்கு எதிர்த்திசையில் வேகவேகமாக நடக்க ஆரம்பித்தாள் மும்தாஜ். கொஞ்சம் தூரம் கடந்து வந்தபின், அங்கு தென்பட்ட மறைவிடம் ஒன்றில் பதுங்கிக்

கொண்டாள். நிமிடங்கள் கழிந்தன. ரயில் மெல்ல அசைந்து கிளம்பியது. அது தூரத்தில் புள்ளியாகத் தேய்ந்து மறையும்வரை மும்தாஜ் அந்த மறைவிடத்தைவிட்டு நகரவில்லை.

யாரோ அவளது தோளைத் தொட, திடுக்கிட்டுத் திரும்பினாள்.

'மும்தாஜ்.. ?'

'நீ.. நீங்களா?'

அவர் மும்தாஜின் தூரத்து உறவினர். ஒன்றுவிட்ட சித்தப்பாவாகவோ, இரண்டு விட்ட பெரியப்பாவாகவோ இருந்திருக்கலாம். அவரிடம் நடந்த விஷயங்களைக் கதைச் சுருக்கமாகச் சொன்னாள் மும்தாஜ். அவர், அவளை அழைத்துக் கொண்டு ரயில் நிலையத்தை விட்டு வெளியே வந்தார். மீண்டும் அமிர்தசரஸ் நோக்கி மும்தாஜின் பயணம் ஆரம்பமானது.

அசதி அகன்று, சுள்ளென்று வெயில் விழும் வேளையில்தான் விழித்தார் துகோஜி. ரயில் டெஹ்ராடூனை நெருங்கிக் கொண்டிருந்தது. படுக்கையிலிருந்து எழுந்து சோம்பல் முறித்தார். கொட்டாவி விட வாய் பிளந்தார்.

'மகாராஜா மன்னிக்க வேண்டும். அந்தப் பெண் ரயிலில் இருந்து தப்பித்துவிட்டாள்' காவலாளி ஒருவன் சொல்ல, துகோஜியின் பிளந்த வாய் அதிர்ச்சியில் அப்படியே நின்றது.

கோபத்தில் பொங்கினார், பொருமினார், பொல்லாத வார்த்தைகளால் திட்டினார். என்ன பிரயோசனம்? செய்வதறியாது மீண்டும் இந்தூருக்கே திரும்பினார். அவருடன் ரயிலில் வந்தவர்களெல்லாம் பணிநீக்கம் செய்யப்பட்டார்கள். குறிப்பாகக் காவலாளிகள் சிறையில் கம்பி... ஒண்ணு, ரெண்டு, மூணு...



# 41

# என் ஆசைநாயகிதான் எனக்கு மட்டும்தான்!

'அம்மா, என் குழந்தையைக் கொன்னுட்டாங்கம்மா!' அமிர்தசரஸில் தன் தாயைக் கண்டதுமே குமுற ஆரம்பித்தாள் மும்தாஜ். அவளைக் கட்டியணைத்துக் கொண்ட வாஸிர் பேகம், மெல்ல மெல்ல ஆசுவாசப்படுத்தி, தன் மடியில் படுக்க வைத்தாள். மென்மையாக அவளது தலையை தடவிக் கொடுத்தாள்.

'அங்க இருந்து நீ தப்பிச்சு வந்ததே பெரிசுன்னு நான் நினைக்கிறேன். இறைவ னோட கருணையால நீ பெரிய கண்டத்துல இருந்து மீண்டு வந்திருக்கே. எனக்கு இப்போதான் நிம்மதியா இருக்கு' - வாஸிர் பேகம் பெருமூச்சு விட்டாள்.

'எனக்கு இன்னும் பயமாதான் இருக்கு. எப்ப வேணும்னாலும் மகாராஜா இங்க என்னைத் தேடி வரலாம். அவரோட ஆள்கள் வந்து என்னைக் கடத்திக்கிட்டுகூடப் போகலாம். எப்படிம்மா தப்பிக்க முடியும்?' - மும்தாஜ் கேட்டாள் பயம் கலந்த கண்ணீருடன்.

'நீ கவலைப்படாதே. எல்லாத்துக்கும் நான் ஒரு யோசனை வைச்சிருக்கேன். நீ உள்ள போய் ஓய்வெடு. போம்மா' மும்தாஜை உள் அறைக்கு அனுப்பிய வாஸிர், தீவிரமாகச் சிந்திக்க ஆரம்பித்தாள். வெளியே பாடல் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அந்த நடன விடுதியில் உள்ள மற்ற பெண்கள், வந்தவர்களைக் களிப்பூட்டிக் கொண்டிருந்தார்கள்.

இந்தூர். மும்தாஜ் இல்லாத அந்தப்புரத்துக்குச் செல்ல மகாராஜா துகோஜிக்குக் கொஞ்சம்கூட இஷ்டமே இல்லை. பெரும் கோபத்துடன் தன்னுடைய பிரம்மாண்டமான அறையில் வெறி கொண்ட விலங்குபோல அலைந்து கொண்டிருந்தார்.

'அடியேய் சண்டாளி, என்னை இப்படி ஏமாற்றி விட்டாயே. உன்னைத் திருமணம் செய்து கொள்ளவில்லையே தவிர, என்னுடைய மகாராணிகளுள் ஒருத்தியாகத்தானே நடத்தினேன். எப்படியெல்லாம் உன்னைத் தாங்கினேன். உன் புத்தியைக் காட்டி விட்டாயே. நடனக்காரியின் புத்தி வேறு எப்படி இருக்கும்? ம்ஹூம், விடமாட்டேன். உன்னை என் அந்தப்புரத்துக்கு மீண்டும் வரவழைக்கும்வரைத் தூங்க மாட்டேன்.'

மறுநாள். இந்தூரின் இன்ஸ்பெக்டர் ஜெனரலை அழைத்தார் துகோஜி.

'வணக்கம் மகாராஜா. நானே தங்களைப் பார்க்க அனுமதி கேட்கலாம் என்றிருந்தேன். தாங்களே அழைத்து விட்டீர்கள் நன்றி' இன்ஸ்பெக்டர் பவ்யம் வழியப் பேசினார்.

'என்ன விஷயம்?' துகோஜி புருவங்களை கேள்விக்குறியாக்கிக் கேட்டார்.

'தப்பியோடிய அந்தப் பெண், அமிர்தசரஸில்தான் இருக்கிறார். நேற்றுதான் எனக்குத் தெரிந்த ஆள்கள் மூலம் தகவல் வந்தது.'

'என்னய்யா சொல்கிறீர்? உண்மையாகவா?'

'மிகவும் நம்பகமான தகவல் மகாராஜா.'

'அப்படியென்றால், இங்கே வெட்டியாக என்ன செய்து கொண்டிருக்கிறீர்? தகவல் வந்த மறுகணமே அமிர்தசரஸுக்குக் கிளம்பிச் சென்று, அந்த ஏமாற்றுக்காரியை அள்ளிக் கொண்டு வந்து இந்நேரம் என் காலடியில் போட்டிருக்க வேண்டாமா? உம்மையெல்லாம்...' துகோஜியின் வார்த்தைகள் தடிக்கத் தொடங்க அவசர அவசரமாக அவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு, அமிர்தசரஸுக்குக் கிளம்பினார் இன்ஸ்பெக்டர்.

நடனவிடுதி. பார்வையாளர்போல உள்ளே நுழைந்தார் இன்ஸ்பெக்டர். நல்ல வடிவுடைய பெண் ஒருத்தி சுழன்று சுழன்று நடனமாடிக் கொண்டிருந்தாள். 'வாரே வாஹ்...' சொல்லி சீமான்கள் ரசித்துக் கொண்டிருந்தனர். மனத்தை மயக்கும் நடனம்தான். அப்போதிருந்த சூழ்நிலையில் இன்ஸ்பெக்டரால் ரசிக்க முடியவில்லை. அவரது பார்வை மும்தாஜைத் தேடித் துழாவிக் கொண்டிருந்தது. எதுவும் யோசிக்காமல் உள் அறையில் நுழைந்தார். நடன விடுதி நடத்தும் பெண் அவசர அவசரமாக ஓடிவந்து அவரைத் தடுத்தாள். நேரடியாக மும்தாஜ் பற்றி விசாரித்தார் இன்ஸ்பெக்டர். 'எதுக்குக் கேட்கறீங்க? அதெல்லாம் சொல்ல முடியாது' என்று உஷாரானாள் அந்தப் பெண். இன்ஸ்பெக்டருக்கு வேறு வழி தோன்றவில்லை. டக்கென அவள் கழுத்தில் பிடித்து நெறித்தபடி மிரட்ட ஆரம்பித்தார்.

'இல்லல்ல... நான் சொல்லிடறேன். அந்த மும்தாஜும், அவ அம்மாவும் இங்க இருந்து வெளியூர் கிளம்பிப் போயிட்டாங்க. அவங்க பம்பாய்க்குப் போயிருக்கலாம். எனக்கு உறுதியாத் தெரியாது. என்னை விட்டுருங்க' - அந்தப் பெண் கதறினாள். உள் அறைகளில் எல்லாம் ஒருமுறை நோட்டம் விட்டுவிட்டு அங்கிருந்து வெளியேறினார் இன்ஸ்பெக்டர்.


மும்தாஜ்

'மும்தாஜ் இன்றி வெறுங்கையுடன் அமிர்தசர ஸில் இருந்து இந்தூருக்குத் திரும்பவும் முடியாது. அவள் இங்கிருந்தும் கிளம்பி விட்டாள் என்ற தகவலைச் சொன்னாலும் மகாராஜா என்னைக் காலி செய்து விடுவார். என்னதான் செய்ய?' யோசித்த இன்ஸ்பெக்டர், பம்பாய்க்கு வண்டியேறினார்.

பம்பாய். தனக்குத் தெரிந்த ஒருவரது வீட்டுக்குச் சென்று தங்கியிருந்தார் வாஸிர். தன் சோகம், பழைய வாழ்க்கை எல்லாவற்றிலிருந்தும் மும்தாஜ், கொஞ்சம் கொஞ்சமாக மீண்டு வந்து கொண்டிருந்தாள். ஒரு நடனப் பெண்ணின் தாயாக லட்சணமாக வாஸிர், அடுத்த பெரிய கையைத் தேடிக் கொண்டிருந்தாள். பம்பாயி லுள்ள பெரிய பணக்காரர்கள் யாருக்காவது தன் மகளை 'வைத்து'க் கொடுப்பதே வாஸிரின் திட்டம். அதற்கு மும்தாஜும் எதிர்ப்பு காட்ட வில்லை. தேடல் நடந்துகொண்டிருந்தது.

வந்து மாட்டினார் அப்துல் காதிர் பாவ்லா (Abdul Kadir Bawla). பார்சி இனத்தைச் சேர்ந் தவர். பம்பாயின் பெரும் வணிகர்களுள் ஒருவர். அவருக்குப் பல வியாபாரங்கள். எல்லா வியாபாரத்திலிருந்தும் காசு கொட்டோ கொட். ஒரு சமயத்தில் அண்ணல் பாவ்லாவும் நோக்கினார், அண்ணி மும்தாஜும் நோக்கினார், 'அட இது புளியங்கொம்பா இருக்கே' என்று தாயார் வாஸிரும் நோக்கினார். பின்பு பேசினார். பின்பு சம்மதிக்க வைத்தார். பின் ஒரு சுபயோக சுப தினத்தில் மும்தாஜை அவரிடம் ஒப்படைத்து ஆனந்தக் கண்ணீர் உகுத்தார்.

பம்பாயில் வீதிவீதியாக அலைந்து திரிந்தார் இன்ஸ்பெக்டர். ஆனால் அவர் மும்தாஜைக் கண்டுபிடித்தபோது, அவள் சகல சௌபாக்யங் களுடன் பாவ்லாவுடன் வாழ ஆரம்பித்திருந் தாள். இனி, விஐபி சூட்கேஸைத் தூக்கிக் கொண்டு போவதுபோல அவளைத் தூக்கிக் கொண்டு போய்விட முடியுமா என்ன? பம்பாயில் பாவ்லா சாதாரண ஆள் கிடையாதே. அவரது பாதுகாப்பை மீறி, மும்தாஜை எப்படிக் கடத்திக் கொண்டு போவது? வேறு வழியில்லை, மகாராஜாவிடமே விஷயத்தைக் கொண்டு செல்ல வேண்டியதுதான் என்று முடி வெடுத்த இன்ஸ்பெக்டர், இந்தூர் விரைந்தார்.

இன்ஸ்பெக்டர் சொல்வதையெல்லாம் பொறுமையாகக் கேட்டார் துகோஜி. உள்ளக் கொதிப்பு அதிகரித்தது. மனைவி என்றால் சரி, 'என் ஆசைநாயகிதான் எனக்கு மட்டும்தான்' என்று உரிமை கொண்டாட முடியுமா என்ன?

முடியாதுதான். இருக்கட்டுமே, அந்த பாவ்லாவும் மும்தாஜைத் திருமணம் செய்துகொள்ள வில்லையே. இழுத்துக் கொண்டு வந்தால் தப்பா என்ன? ம்ஹூம், அந்த பாவ்லாவுக்கு பிரிட்டிஷாரிடம் செல்வாக்கு இருக்கிறதாம். அப்புறம் அவர்கள் வேறு அநாவசியமாக அடுத்தவன் 'குடும்ப' விவகாரத்தில் விவஸ்தையின்றி ஐம்புலன்களையும் நுழைப்பார்கள். சமாதானப் பேச்சுவார்த்தையே சிறந்த வழி. முடிவு செய்த துகோஜி மும்தாஜின் தாயாருக்குத் தூது அனுப்பினார்.

'எங்க மகாராஜாவுக்கு அந்த பொம்மைதான் வேணுமாம். தயவுசெஞ்சு திருப்பித் தந்துருங்க. அவர் இனிமே பொம்மைக்கு எந்தத் தொந்தரவும் கொடுக்காமப் பத்திரமா பார்த்துக்குவாரு, சரியா?' என்கிற ரீதியில் தூதுவர்களும் வாஸிரிடம் பேசிப்பார்த்தனர். 'இந்தாங்க, இந்த நகையெல்லாம் உங்களுக்குத்தான். இந்தப் பரிசுப்பொருள்கள் எல்லாம் நீங்க அனுபவிக்கிற துக்குத்தான். பொம்மையை மட்டும் மகாராஜாவுக்குக் கொடுத்துருங்க.' வாஸிர் எந்தவித எக்ஸ்சேஞ்ச் ஆஃபரையும் ஏற்றுக்கொள்வதாக இல்லை.

நாள்கள் ஆக ஆக துகோஜியின் கோபத்தின் சென்செக்ஸ் எக்கச்சக்கமாக உயர்ந்துகொண்டே போனது. அதை மிகத் தெளிவாகவே உணர்ந்திருந்தார் இன்ஸ்பெக்டர். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு நிறைந்த இன்ஸ்பெக்டரது மனம், மகாராஜாவின் கோபத்தைத் தனக்கு எப்படிச் சாதகமாக மாற்றிக் கொள்ளலாம் என்று யோசித்தது.

'எப்பாடுபட்டாவது அந்தப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டால்? அவ்வளவுதான். குதூகலமாகிவிடுவார் மகாராஜா. நம்மைக் கொண்டாடுவார். பணத்தை, பரிசுகளை அள்ளிக் கொடுப்பார். பதவி உயர்வு நிச்சயம். முயற்சி செய்தால் என்ன?' - மனத்துக்குள் யோசனை ஒன்று குடுகுடுப்பை அடிக்கவே, பம்பாய்க்கு விரைந்தார் அவர். உடன் மகாராஜாவின் பாது காவலரையும் அழைத்துக் கொண்டார். வேறு சிலரையும் ஏற்பாடு செய்து கொண்டார்.

பம்பாய் சௌபட்டி (Chowpatty) கடற்கரை அருகே அமைந்திருந்தது அந்த எழில்மிகு பங்களா. தன் புதுநாயகி மும்தாஜுக்குப் பரிசளித்திருந்தார் பாவ்லா. இன்ஸ்பெக்டரும் அவரது குழுவினரும் ரகசியமாக அந்தப் பங்களாவை கண்காணிக்க ஆரம்பித்தனர். எப்போது பாவ்லா உள்ளே வருகிறார்? எப்போது வெளியே செல்கிறார்? எப்போது மும்தாஜையும் அழைத்துக் கொண்டு வெளியே செல்கிறார்? எங்கு செல்கிறார்? தொடர்ந்து ஒரு வாரமாக நோட்டமிட்டனர். சதித்திட்டம் தயாரானது.

சாயங்கால வேளைகளில், பாவ்லா மும்தாஜை அழைத்துக் கொண்டு காரில் மலபார் ஹில்ஸ் பகுதிக்குச் செல்வதை வழக்கமாக வைத்திருந்தார். அந்தச் சமயத்தைத் தேர்ந்தெடுத்திருந்தார் இன்ஸ்பெக்டர். மலபார் ஹில்ஸ் செல்லும் வழியில் கோல்ஃப் மைதானம் ஒன்று இருந்தது. அந்த இடத்தில் இந்தூர் சமஸ்தான வாகனங்கள் இரண்டு காத்துக் கொண்டிருந்தன. இன்ஸ்பெக்டர், மகாராஜாவின் பாதுகாவலர், மேலும் மூன்று பேர் காத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் கையில் துப்பாக்கி, வாள், கத்தி முதலிய ஆயுதங்கள்.

மிதமான வேகத்தில் பாவ்லாவின் கார் தூரத்தில் வருவது தெரிந்தது. ஓட்டுநர் ஒருவர் காரை ஓட்டிக்கொண்டு வந்தார். அந்தச் சாலையில் அப்போது அவ்வளவாக நடமாட்டம் இல்லை.

கார் அவர்களை நெருங்கும் வேளையில், நடுவே பாய்ந்து காரை நிறுத்தினார்கள். மும்தாஜ் அமர்ந்திருந்த பகுதியின் கதவைத் திறந்த இன்ஸ்பெக்டர், சடாரென அவளது கையைப் பிடித்து வெளியே இழுக்க முயன்றார். அலறினாள் மும்தாஜ். பதறிய பாவ்லா, டக்கெனத் தன் துப்பாக்கியை வெளியே எடுத்தார். அவர் சுடுவதற்குள் துப்பாக்கி வெடிக்கும் சத்தம் கேட்டது.

பாவ்லாவின் உடலிலிருந்து ரத்தம் வெளியேறிக் கொண்டிருந்தது. அதன் வழியாக உயிரும். உணர்ச்சிவசப்பட்டு அவர்களைத் தாக்க வந்த பாவ்லாவின் ஓட்டுநரும் குண்டுக்காயத்துடன் சுருண்டு விழுந்தார். கத்துவதற்குக் கூடத் திராணியின்றி, உறைந்து போயிருந்தாள் மும்தாஜ். பளார் பளார் என அவளது முகத்தில் அறைந்தார் இன்ஸ்பெக்டர். பலவந்தமாக அவளை காரிலிருந்து வெளியே இழுத்துப் போட்டார். மற்றவர்கள் அவளை வலுக்கட்டாயமாகத் தூக்கி தங்கள் காரில் போட முயற்சி செய்து கொண்டிருந்தார்கள். அவள் திமிறிக் கொண்டிருந்தாள்.

அதற்குள், துப்பாக்கி சத்தத்தைக் கேட்டு கோல்ஃப் மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்த பிரிட்டிஷ் போலீஸார் சிலர் சம்பவ இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தனர். பம்பாய் போலீஸ்காரர்கள் சிலரும் தூரத்தில் வருவதைப் பார்த்தார் இன்ஸ்பெக்டர். அவ்வளவுதான், இன்ஸ்பெக்டருடன் வந்தவர்கள் மும்தாஜைக் கீழே போட்டுவிட்டு ஓட ஆரம்பித்தனர். கையும் ரத்தமுமாக இருந்த இன்ஸ்பெக்டரும், மகாராஜாவின் பாதுகாவலரும் சுற்றி வளைக்கப்பட்டார்கள். இந்தச் சம்பவம் 1925ல் நடந்தது.

சம்பவ இடத்திலேயே பாவ்லா இறந்துபோயிருந்தார். மும்தாஜும் ஓட்டுநரும் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டார்கள். பட்டப்பகலில் தொழிலதிபர் சுட்டுக்கொலை என்று நாளிதழ்கள் பரபரப்பாக விற்றுத் தீர்ந்தன. ஆசைநாயகிக்காக இந்தூர் மகாராஜா நடத்திய சதி என்று செய்தியைக் கட்டம் போட்டுக் காட்டின. இன்ஸ்பெக்டரும் மகாராஜாவின் பாது காவலரும் சிறையில் அடைக்கப்பட்டார்கள்.

லாடம் கட்டினார்களா அல்லது தலைகீழாகத் தொங்கவிட்டு அடித்தார்களா அல்லது நகத்தில் குண்டூசியை இறக்கிக் கேட்டார்களா என்று தெரியவில்லை, ‘மகாராஜா துகோஜி சொல்லித் தான் நாங்கள் இதைச் செய்தோம்’ என்று இன்ஸ்பெக்டரும் பாதுகாவலரும் வாக்குமூலம் கொடுத்தார்கள்.

தலையில் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் மகாராஜா துகோஜி. நடந்ததை எல்லாம் நினைக்க நினைக்கத் தலையெல்லாம் சுற்றியது. அவரது நினைவில் அப்போது மும்தாஜ் நடனமாடவில்லை. கண்முன்னே அவரது ராஜ பதவி ஊசலாடிக் கொண்டிருப்பது தெரிந்தது.



# 42

# காதலுக்குக் காதில்லை!

'இந்தூரு மவராசாவுக்குக்காகத்தான் இந்தக் காரியத்தைச் செஞ்சோம். இது எங்களைப் பெத்த ஆத்தா மேல சத்தியம்' கொலை செய்த இந்தூரின் இன்ஸ் பெக்டரும், மகராஜா துகோஜி ராவின் பாதுகாவலரும் இப்படி ஒரு வாக்கு மூலத்தைக் கொடுத்த பிறகு, பிரிட்டிஷ் அரசு சும்மா இருக்குமா என்ன?

இன்னென்ன விஷயங்கள், இன்னென்ன மாதிரி நடந்திருக்கின்றன, இன்னென்ன காரணங்களாக இருக்கலாம் என்று இந்தூர் ரெஸிடெண்டிடம் இருந்து ரிப்போர்ட் வைஸ்ராய்க்குப் போனது. வைஸ்ராய் அந்த ரிப்போர்ட்டில் சேர்க்க வேண்டிய எதுகை, மோனை, உவமான, உவமேயங்களை எல்லாம் சேர்த்து இங்கிலாந்து கிங்குக்கு அறிக்கை அனுப்பினார்.

இந்தியப் பத்திரிகைகளும், பிரிட்டன் பத்திரிகைகளும் இந்தூர் மகாராஜாவின் அட்டகாசம், கொலைவெறி, பெண் பித்தால் நடந்த கொடூரச் செயல் என்று பக்கம் பக்கமாக எழுதி நிலைமையைச் சூடாக்கிக் கொண்டிருந்தன. கொல்லப் பட்ட பாவ்லா பார்சி இனத்தவர். மகாராஜாவோ மராத்திய வம்சா வழியில் வந்தவர். மும்தாஜ் யாரென்று எல்லோருக்குமே தெரியும். 'இது துகோஜி திட்ட மிட்டு நடத்திய இனப்படுகொலை' என்று பம்பாய் முழுவதும் எதிர்ப்புக் குரல் எதிரொலித்தது. துகோஜிக்கான எல்லா வாசல்களும் அடைக்கப்பட்டிருந்தன. நடந்த துன்பியல் சம்பவத்துக்குப் பிராயச்சித்தம் தேடும் வகையில் மகாராஜா பதவியை ராஜிநாமா செய்வது ஒன்றே வழியாகத் தோன்றியது.

தன் மந்திரிகளையெல்லாம் அழைத்து, உட்கார வைத்து, கவலை தோய்ந்த குரலில், 'இப்ப என்ன செய்யலாம்?' என்று ஆலோசனை கேட்டார் துகோஜி.



யஷ்வந்த் ராவ் ஹோல்கர்

‘செய்யறதை எல்லாம் செஞ்சிப்புட்டு, கேக்குற கேள்வியைப் பாரு’ என்று மந்திரிகள் உள்ளுக்குள் கருவினாலும், ‘நீங்க எடுக்குற முடிவுக்கு நாங்க தலை வணங்குகிறோம் மகாராஜா’ என்று வருத்தம் தொனிக்கப் பதில் சொன்னார்கள்.

பட்டத்து இளவரசரும் துகோஜியின் மூத்த மகனுமான யஷ்வந்த் ராவ் ஹோல்கருக்கு அப்போது வயது பதினெட்டு. இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் மாணவராக உலாவந்து கொண்டிருந்தார். சரி, மகனுக்கு வழிவிட்டு ஒதுங்கிவிட வேண்டியதுதான் என்று முடிவெடுத்தார். அப்போது துகோஜிக்கு வயது வெறும் முப்பத்தாறு.

பிரிட்டிஷ் அரசும் அதற்கு ஒப்புக்கொண்டது. வைஸ்ராய் ரீடிங், இந்தூர் ரெஸிடெண்ட் ரெஜினால்ட் கிளான்ஸிக்கு ‘துகோஜியிடம் இருந்து முறைப்படி ராஜினாமாக் கடிதத்தை வாங்கி விடுங்கள்’ என்று தகவல் அனுப்பினார். ஒரு சுபயோக சுபதினத்தில் (பிப்ரவரி 26, 1926) அரண்மனைக்குக் கிளம்பிச் சென்றார் ரெஸிடெண்ட் ரெஜினால்ட்.

அரண்மனையில் ஒரு கனத்த அமைதி நிலவியது. சோகமே உருவாக வரவேற்பறைக்கு வந்தார் துகோஜி. ரெஸிடெண்டை சன்னமான குரலில் வரவேற்றார். சுரத்தே இன்றி கைகுலுக்கினார். இருவருமே அருகருமே அமர்ந்திருந்தார்கள். கொஞ்ச நேரத்துக்கு இருவரும் எதுவுமே பேசவில்லை.

‘இளவரசர் யஷ்வந்த் எப்போது இந்தியாவுக்கு வருகிறார்?’ என்று ஒருவழியாகப் பேச்சை ஆரம்பித்தார் ரெஜினால்ட். துகோஜியும் பதில் பேசினார். சில பொதுவான உரையாடல்களுக்குப் பிறகு, தான் கையோடு கொண்டு வந்திருந்த ஆப்பை வெளியே எடுத்து நீட்டினார் ரெஜினால்ட்.

‘இந்தக் கடிதத்தைப் படித்துப் பாருங்கள். தங்களது பதவி விலகல் குறித்த ஒப்புதல் கடிதம். தாங்கள் கையொப்பமிட வேண்டும்.’

ஸ்லோ மோஷனில் அந்தக் கடிதத்தை வாங்கினார் துகோஜி. படித்துப் பார்க்க ஆரம்பித்தார். அவரது கண்களில் நீர்ப்படலம் உருவானது. சிறிது நேரத்துக்கு அசைவின்றி உட்கார்ந்திருந்தார். பின்பு கைவிரல்கள் நடுநடுங்கக் கையொப்பமிட்டார். அந்த நேரத்தில் ரெஜினால்டின் கண்களிலும் கண்ணீர் உருவாகியிருந்தது. மன்னிக்கவும், ரெஜினால்டும் தன் கண்களில் ரெடிமேட் கண்ணீரை உருவாக்கியிருந்தார். அவார்டு சினிமாவில் நடிக்கும் நடிகரைப் போலச் சோக ஆக்டிங் கொடுக்க ஆரம்பித்தார்.

துகோஜியை ஆதரவாக அணைத்து ஆறுதல் சொன்னார். அவரது கண்ணீரைத் துடைத்து விட்டார். ‘நடந்தது நடந்து போச்சு. உங்க மகன்தானே பதவிக்கு வர்றாரு. உங்க பதவிதான் போச்சே தவிர, ‘மகாராஜா’ங்கிற பட்டம் போகலை. நீங்க என்னிக்குமே மகாராஜாதான்’ என்று ஆசுவாசப்படுத்தினார். இருந்தாலும் துகோஜி வாய்பொத்தி அழ, அதைப் பார்த்து ரெஜினால்ட் அழ, அவரைப் பார்த்து இவர் மேலும் அழ, இவருக்கு ஈடுகொடுக்கும் வகையில் அவர் குலுங்கிக் குலுங்கி அழ, அங்கே ஓர் ஒப்பாரிக் கச்சேரி நடந்துகொண்டிருந்தது.

முகத்தில் சோகம் கொஞ்சம்கூடக் கலையாமல் அரண்மனையை விட்டு வெளியே வந்தார் ரெஜினால்ட். உயர்ந்த மதில் சுவரின் மேலே இந்தூர் சமஸ்தானத்தின் கொடி பறந்து கொண்டிருந்தது. அங்கே இருந்த காவலாளியை அழைத்தார்.

‘ஏய், அந்தக் கொடியெல்லாம் பறக்கக்கூடாது. உடனே இறக்கு’ என்று கட்டளையிட்டுவிட்டுக் கிளம்பினார். துகோஜிக்கு பிரிட்டிஷ் அரசு வழங்கி வந்த வருடாந்திரத் தொகை குறைக்கப் பட்டது. துகோஜியின் வேறுசில உரிமைகளும் பறிக்கப்பட்டன. அவரது சில சொத்துகள் பிரிட்டிஷாரால் தாற்காலிகமாக முடக்கப்பட்டன.

1926, மார்ச் 11 அன்று, பிரிட்டிஷ் அரசின் நல்லாசியுடன் இந்தூரின் புதிய மகாராஜாவாக இரண்டாம் யஷ்வந்த் ராவ் ஹோல்கர் (Yeshwant Rao II Holkar) பொறுப்பேற்றுக் கொண்டார். பாவ்லாவின் கொலை வழக்கு விசாரிக்கப்பட்டு, நீதிமன்றத்தில் அந்த இன்ஸ்பெக்டருக்கும், துகோஜியின் பாதுகாவலருக்கும் தூக்குத் தண்டனை தீர்ப்பு வழங்கப்பட்டது. அடுத்தடுத்து எவ்வளவு அதிர்ச்சிகளைத்தான் தாங்குவார் துகோஜி? இந்தூரிலேயே இருந்தால் கவலைதான் அதிகமாகும் என்று எண்ணி வெளிநாட்டுப் பயணத்துக்குத் தயாரானார்.

சரி மும்தாஜ் என்ன ஆனாள்? அவள் அந்த நேரத்தில் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அதைப் பார்க்கக் குழந்தையின் அப்பா பாவ்லாவுக்குக் கொடுத்து வைக்கவில்லையே என்று கொஞ்ச நாள் வருத்தப்பட்டாள். அதற்குப் பின் அவளது தாயார் வாஸிரின் முயற்சிகளினால் மும்தாஜ், சினிமாவில் நடிக்கச் சென்றுவிட்டாள் என்றொரு தகவலும் உண்டு. 1925லேயே பாவ்லாவின் கொலை வழக்கை மையமாகக் கொண்டு ‘குலின் காந்தா’ (Kulin Kanta) என்றொரு இந்திப்படம் வெளியானது என்பது இன்னொரு கொசுறுத் தகவல்.

‘போனால் போகட்டும் போடா’ என்று மனத்தைத் தேற்றிக் கொள்ள துகோஜி சென்ற இடம் சுவிட்சர்லாந்து. அங்கு சென்று கிளப்புகளையும் கேஸினோக்களையும் வலம் வர ஆரம்பித்தார். அன்று அவர் சென்ற கேஸினோவின் பெயர் லி குர்ஷால் (Le Kursall). விடுமுறை தினம் என்பதால் கூட்டம் அதிகமாக இருந்தது. ஒரு மூலையில் சென்று உட்கார்ந்துகொண்டு,

ஷாம்பெயினை உறிஞ்சிக் கொண்டே, வருவோர் போவோரையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். ஏராளமான ஜோடிகள், காதலர்கள் அங்கு உலாவிக் கொண்டும், குலாவிக் கொண்டும் இருந்தனர். அந்த நேரத்தில்...

அழகிய மின்னல், இளமையான இடி, பூவாலான புயல், சொக்க வைக்கும் சூறாவளி, சுந்தர சுனாமி, நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் நிலநடுக்கமாக ஒருத்தி உள்ளே நுழைந்தாள். தோள்களுக்குக் கீழே ஆரம்பித்து முட்டி வரை நீண்ட சிவப்பு கவுன். மிதமான உதட்டுச் சாயம். ஜொலிக்கும் பழுப்பு நிறக் கண்கள். பிரௌன் நிற பாப் கூந்தல். அளவெடுத்துச் செதுக்கியது போல தேகம். அந்தக் கணத்திலிருந்து துகோஜியின் கண்கள் அவள் மீது பதிந்துபோயின. வந்தவள், சில நண்பர்களோடு பேசினாள். இசைக்கு நடனமாடினாள். கொஞ்சம் ஒயின் சுவைத்தாள். அரைமணி நேரத்தில் கேஸினோவிலிருந்து வெளியேறினாள். ஆனால், துகோஜிக்குள் அவள் நுழைந்திருந்தாள்.

என்னவோ சொல்வார்களே, ஆங்.. கண்டதும் காதல். அந்த வியாதி துகோஜிக்குக் கொஞ்சம் அதிகமாக இருந்தது. மும்தாஜையும் இப்படித்தான், பார்த்ததுமே பரவசமடைந்து... இப்போது அந்தப் பெண்ணைப் பார்த்த உடனும், அவருக்குள் காதல் எங்கிருந்தோ கள்ள ரயில் ஏறி வந்திருந்தது.

சரி, யாரவள்? நான்சி அன் மில்லர் (Nancy Ann Miller) என்பது முழுநாமகரணம். வாஷிங்டனில் பிறந்தவள். பத்தொன்பது வயது சிட்டு. அப்பா பெரிய பிஸினஸ்மேன். பெரிய என்றால்? அலாஸ்காவில் ஒரு தங்கச் சுரங்கத்துக்குச் சொந்தக்காரர். அம்மா பியோனா கலைஞர். சுவிட்சர்லாந்தில் நான்சியின் தாத்தாவும் பாட்டியும் வசித்து வந்தார்கள். அவர்களைக் காண அடிக்கடி அங்கு வருவாள். பொழுதுபோக்கக் கேஸினோக்களுக்கு வருவாள். அதுவரை அவள் யாரையும் காதலிக்க ஆரம்பிக்கவில்லை.

அன்று இரவு முழுவதும் இருப்புக் கொள்ளாமல் தவித்த துகோஜி, மறுநாள் காலையிலேயே அந்த கேஸினோவின் வாசலில் வந்து காத்திருக்கத் தொடங்கினார். மெதுவாகத்தான் அதைத் திறந்தார்கள். பின்பு உள்ளே சென்று காத்திருக்க ஆரம்பித்தார். இன்று வருவாளா, மாட்டாளா என்ற தவிப்புடனேயே ஒவ்வொரு நொடியையும் கஷ்டப்பட்டு விழுங்கினார். அந்தக் கேஸினோக்குள் நுழையும் எந்தப் பெண்ணும் அவருக்கு ஒரு கணம் அவள் போலவே தெரிந்தது. தவத்தைத் தொடர்ந்தார். வரம் வந்தது. அன்றும் நான்சி வந்தாள்.

துகோஜி ஒளிர்ந்தார். ஓடிச் சென்று தன் உள்ளக் கிடக்கையை எல்லாம் அவளிடம் ஒரே நொடியில் கொட்டிவிட வேண்டும் போலிருந்தது. இருந்தாலும் மனத்தின் ஈசான மூலையில் ஓர் எச்சரிக்கை மணி ஒலித்தது. 'மவனே அடங்கு, ஏற்கெனவே ஒரு பொம்பளை விவகாரத்தாலதான், பதவியை இழந்து, பவுசெல்லாம் போய், இங்க இப்படி வந்து உட்கார்ந்திருக்க. வந்த இடத்துல ஏழரையை இழுக்காதே.'

அந்த எச்சரிக்கையைக் கேட்டும் கேட்காததுபோல தவிர்த்தார் துகோஜி. காரணம், காதலுக்குக் காதில்லை. நான்சியை நோக்கிச் சென்றார். அழகுப் புன்னகை ஒன்றை உதிர்த்தார். பதிலுக்கு அவளும். தன்னை சுய அறிமுகம் செய்து கொண்டார். அவளது பெயரைக் கேட்டார். 'நான்சி' என்று அவள் சொன்னதும், தனக்குள்ளேயே அந்தப் பெயரைச் சொல்லிச் சொல்லி சுவை கண்டார்.

'உங்களைப் பார்த்தால் சுவிஸ் பற்றி நன்கு அறிந்தவர் போலத் தெரிகிறது. நான் இங்கு பல இடங்களைச் சுற்றிப் பார்க்க விரும்புகிறேன். ஆனால் குறிப்பிடத்தகுந்த நண்பர்கள் என்று எனக்கு இங்கு யாரும் கிடையாது. நீங்கள் உதவ முடியுமா?' - துகோஜி மெல்ல மெல்ல நூல் விட்டுப் பார்த்தார். அவளும் சம்மதித்தாள். முகவரிகள் பரிமாறப்பட்டன.

நாளொரு இடமும், பொழுதொரு கேஸினோவுமாக நான்சியுடன் நட்பு நங்கூரம் பாய்ச்சி னார் துகோஜி. அவளது தாத்தாவும் பாட்டியும்கூட அவருக்கு அறிமுகமாகி இருந்தனர். சில நாள்கள் பாரிஸுக்குச் சென்று சுற்றிப் பார்த்துவிட்டு வந்தனர். இருவருக்குமிடையே புரிதல் பூத்திருந்தது. அடுத்தது என்ன? பொத்தி வைத்த பூனைக்குட்டியை வெளியே எடுத்துவிட வேண்டியதுதான். இருந்தாலும் நான்சியிடம் காதலைச் சொல்லுவதைவிட, முறைப்படி அவளது தாத்தாவிடம் பெண் கேட்பதே துகோஜிக்குச் சரி என்று பட்டது.

'நான் உங்கள் பேத்தியைத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன். என்ன சொல்லுகிறீர் கள்?' - தடுமாறாமல் தாத்தாவிடம் கேட்டார் துகோஜி. தாத்தாவுக்கு துகோஜி பற்றி எல்லாமே தெரியும், பாவ்லா வழக்கு உள்பட. கொஞ்சம் யோசித்தார். பின் ஒரு நியாயமான பதிலைக் கூறினார். 'இந்த விஷயத்தில் நான் சொல்வதற்கு ஒன்றுமே இல்லை. நான்சியின் விருப்பம் தான் முக்கியம்.'

கேள்வி நான்சி முன் சென்று நின்றது. அவள் கண்களில் வெட்கம் விளையாடிக் கொண்டிருந் தது. 'எனக்குச் சம்மதம்' என்றாள் திருவாய்மலர்ந்து. துகோஜி திக்குமுக்காடிப் போனார்.

நான்சி தன் இந்தியப் பயணத்துக்குத் தயாரானாள். அவளுடன் துணைக்கு அவளது பாட்டியும் கிளம்பினார். 1927, கிறிஸ்துமஸுக்கு மறுதினம். அவர்கள் பயணம் செய்த எஸ்.எஸ். ஜெனோவா என்ற கப்பல், பம்பாய் துறைமுகத்தை வந்தடைந்திருந்தது.

அமெரிக்கத் தூதரக அதிகாரிகள், நான்சியை விசாரித்தார்கள். 'நான் மகாராஜா துகோஜியைத் திருமணம் செய்துகொள்வதற்காக இந்தியா வந்திருக்கிறேன்' என்றாள் அவள்.

'முட்டாள்தனமாகப் பேசாதே பெண்ணே. உனக்கு என்ன பைத்தியமா? மரியாதையாக உன் முடிவை மாற்றிக்கொண்டு, திரும்பிச் சென்றுவிடு' எச்சரித்தார்கள் அவர்கள். நான்சி துகோஜியின் திருமணத்துக்கான எதிர்ப்பு அலைகள் கிளம்ப ஆரம்பித்தன.



# பச்சை நிற பனாரஸ் பட்டு

'துகோஜிக்கு என்ன புத்தி கித்தி கெட்டுப்போச்சா? சுவிட்சர்லாந்துக்குப் போனோமா, சுத்திப் பாத்துட்டு வந்தோமான்னு இல்லாம, கூட ஒரு வெள்ளைக் காரக் குட்டியை அழைச்சுக்கிட்டு வந்திருக்கிறாரே. எத்தனை தடவை பட்டாலும் புத்தி வராதா இந்த ஆளுக்கு? பையன் ஆட்சிக்கு வந்ததுக்கு அப்புறம் இவருக்கு என்னாத்துக்குக் கல்யாணம்? பையனுக்கு நாலைஞ்சு கல்யாணத்தை முடிச்சு வைச்சோமா, ஏழெட்டு பேரன், பேத்தி எடுத்தோமான்னு கிடக்க வேண்டியது தானே. பிள்ளை இருக்குற வீட்டுல இந்த அரைக் கிழவன் ஏன் துள்ளி விளையாடுறாரு?'

இந்தூர் மக்களின் பேச்சுப் பொதுவாக இப்படித்தான் இருந்தது. துகோஜியின் மந்திரிமார்களும் தங்களுக்கு உள்ளேயே சலசலத்துக் கொண்டனர். அமெரிக்கப் பெண் நான்சியைத் துகோஜி திருமணம் செய்துகொள்ளப் போகிறார் என்ற செய்தியைப் பிரிட்டிஷாரால் சுத்தமாகச் ஜீரணிக்கவே முடியவில்லை. சூசகமாக, ஜாடை மாடையாக, மறைமுகமாக, மேலோட்டமாக எல்லாம் சொல்லிப் பார்த் தார்கள். துகோஜி கண்டுகொள்ளவில்லை.

'இங்க பாருங்க, நீங்க நான்சியைக் கல்யாணம் பண்ணிக்கறதுல எங்களுக்கு சுத்தமா விருப்பமே இல்லை. அதையும் மீறி நீங்க கல்யாணம் செஞ்சுக்கிட்டீங் கன்னா, அதற்கான விளைவுகளைச் சந்திக்க வேண்டியதிருக்கும்' இந்தூரின் ரெஸிடெண்ட் நேரடியாகவே துகோஜியை எச்சரித்தார்.

'எனக்கு விருப்பம் இருக்கு, நான் கட்டிக்கப் போறேன். இதுல உங்க விருப்பம் எனக்கு எதுக்குய்யா தேவை? வேலையைப் பார்த்துட்டுப் போங்கடா

வெண்ணைணங்களா!' - என்று துகோஜி தனக்குள்ளேயே எதிர்க்குரல் கொடுத்துக் கொண்டார். ரெஸிடெண்டிடம் எந்தப் பதிலும் கூறவில்லை.

'இந்தத் திருமணம் நடந்துவிட்டால், எங்கள் அரசு உங்களுக்குக் கொடுக்கும் வருடாந்திரத் தொகையில் பாதியைக் குறைக்க வேண்டியதிருக்கும். யோசித்துக் கொள்ளுங்கள்' என்று அடுத்த கத்தியை வீசினார் ரெஸிடெண்ட்.

'அடப்போங்கடா, எனக்கு நான்சி செல்லம்தான் முக்கியம். நீங்க கொடுக்குற பிச்சைக் காசு இல்ல' என்ற ரீதியில் ரெஸிடெண்டின் மிரட்டலுக்குப் பதில் சொல்லாமலேயே ஒரு பார்வையை வீசினார் துகோஜி. என்ன எதிர்ப்பு வந்தாலும் அதை எதிர்கொள்ளத் தயாராக இருந்தார் அவர்.

சரி, இந்தத் திருமணத்துக்குத் துகோஜியின் குடும்பத்தினர் என்ன சொன்னார்கள்? படு ஆவேசமாக எதிர்த்தார்கள். அவரது இனத்தைச் சேர்ந்தவர்களெல்லாம் குய்யோ முய்யோ என்று குமுறினார்கள். 'நம்ம இனத்தோட மகாராஜா, எவளோ ஒரு வெள்ளைக்காரியைக் கல்யாணம் பண்ணுறதை ஒத்துக்க முடியாது. அது இனத் துரோகம். மதத் துவேஷம். இதை நாங்க ஒருபோதும் அனுமதிக்க மாட்டோம்.'

பிரிட்டிஷார் எதிர்த்தால் ஓரளவு கண்டுகொள்ளாமல் விட்டுவிடலாம். ஆனால் சொந்தக் காரர்கள் எல்லாம் போர்க்கொடி தூக்கினால்? நான்சியிடம் சென்றார் துகோஜி. நேரடியாகவே கேட்டார். 'நம் திருமணத்தில் சிக்கலை ஏற்படுத்தச் சிலர் முயற்சி செய்கிறார்கள். ஒன்றும் பிரச்னை இல்லை. நீ இந்துவாக மதம் மாறிவிட்டால் போதும். சம்மதமா?' - நான்சி எந்தத் தயக்கமும் காட்டவில்லை. உடனே சம்மதித்தாள். காரணம், இருவருக்குள்ளும் நெடு ஆழத்துக்கு போரிங் போட்டிருந்த காதல்.

துகோஜிக்கு அடுத்த பிரச்னை ஆரம்பமானது. அவரது முதல் மனைவி சந்திராவதி பாயும், இரண்டாவது மனைவி இந்திரா பாயும் அந்தத் திருமணத்தை எதிர்த்து அறவழிப் போராட்டம் ஆரம்பித்தனர். அதாவது உண்ணாவிரதம். 'போராடுவோம் போராடுவோம் இறுதிவரைப் போராடுவோம்! கட்டிக்காதே கட்டிக்காதே, கண்டவளையும் கட்டிக்காதே!' என்று கோஷம் போடாத குறைதான். 'அடப்போங்கடி' என்று துகோஜி அந்தப் போராட்டத்தைச் சட்டை செய்யவே இல்லை. ரத்த அழுத்தம் எகிற, துகோஜியைத் தேடி வந்த மகாராணி இந்திரா பாய், 'இந்தக் கல்யாணம் மட்டும் நடந்ததுன்னா, நாங்க என்ன செய்வோமுன்னு எங்களுக்கே தெரியாது. வீணா அவமானப்படாதீங்க' என்று ஆத்திரம் தெறிக்கக் கத்தினார்.

'என்னையே எதிர்த்துப் பேசற அளவுக்குத் திமிர் ஏறிப் போச்சா? ஒழுங்கு மரியாதையா மகாராணியா லட்சணமா நீயும், உங்க அக்காளும் கல்யாணத்துலக் கலந்துகிட்டு கௌரவத்தைக் காப்பாத்திக்கோங்க. இல்லேன்னா எல்லாத்தையும் இழக்க வேண்டியது வரும். ஜாக்கிரதை' படு ஆவேசமாக மிரட்டி அனுப்பினார் துகோஜி.

நான்சிக்கு இந்த விஷயங்கள் எதுவுமே தெரியாது. அவள் மகாராணிகளைச் சந்திக்கவில்லை. மகாராணிகளும் அவளைச் சந்திக்காதபடி பார்த்துக் கொண்டார் துகோஜி. 'உங்களோட மனைவிகள் நம்ம திருமணத்துக்குச் சம்மதம் சொல்லிட்டாங்களா?' என்று துகோஜியிடம் கேட்டாள் அவள்.



ஷர்மிஸ்தா தேவி

'என்ன நீ இப்படிக் கேட்டுட்ட? என்னோட ரெண்டு பொண்டாட்டிங்களும் என்ன சொன்னாங்க தெரியுமா? உன்னை மாதிரி ஒருத்தி அவங்களுக்குத் தங்கச்சியாக் கிடைக்கக் கொடுத்து வைச்சிருக்கணுமாம்'

செயற்கையாகச் சிரித்தார் துகோஜி. உண்மையாகவே சந்தோஷப்பட்டாள் நான்சி.

அப்போதைய மகாராஜாவான துகோஜியின் மகன் யஷ்வந்த் எதையுமே கண்டுகொள்ள வில்லை. ஏனென்றால் அவருக்கும் தன் தந்தையைப் போலவே, வெளிநாட்டுக் காதலிகள் உண்டு.

துகோஜி நான்சி திருமணத்துக்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. 'யாராவது தப்பித் தவறிக் கல்யாணத்துக்கு போனீங்கன்னா தொலைச்சுப்புடுவோம் தொலைச்சு' என்று பிரிட்டிஷ் அரசு தன் அதிகாரிகளுக்கெல்லாம் மிரட்டல் விடுத்திருந்தது. துகோஜியும் சும்மா இருக்கவில்லை. தன் தரப்பு செ ாந்தக்காரர்களுக்கெல்லாம் ஒரு மிரட்டல் விடுத்தார். 'யாராவது தப்பித் தவறி என் கல்யாணத்துக்கு வராம இருந்தீங்க, அவ்வளவுதான், ஜெயில்ல பிடிச்சுப் போட்டுருவேன்.'

போதாதா. ஆர்ப்பாட்டம் செய்தவர்களெல்லாம் அடங்கிப் போனார்கள். திருமணத்துக்கு என்ன உடை அணிந்துகொண்டு போனால் கௌரவமாக இருக்கும் என்று சிந்திக்க ஆரம்பித்து விட்டார்கள்.

ரெஸிடெண்ட், புதிதாக ஒரு மிரட்டலை முன்வைத்தார். 'துகோஜி, உங்களுக்கும் நான்சிக்கும் பிறக்கும் குழந்தைகளையெல்லாம் ராஜ வாரிசாக அங்கீகரிக்க முடியாது. ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.'

அதுவா இப்போது முக்கியம்? அதெல்லாம் வருங்காலத்தில் எப்போதோ முளைக்கப் போகும் பிரச்னைகள். அதற்கெல்லாம் இப்போது கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியுமா என்ன?

திருமணத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்பாக ஒரு நல்ல நாளில், பூரி சங்கராச்சாரியார் இந்தூருக்கு வருகை புரிந்தார். ஏகப்பட்ட சாஸ்திர, சம்பிரதாய, சடங்குகள் நிறைவேற்றப்பட்டன. நான்சி இந்துவாக மதம் மாற்றப்பட்டாள். தழையத் தழையத் புடைவை, நெற்றி நிறைய குங்குமம், ஜடை நிறைய பூக்கள், உடலெங்கும் துகோஜி பரிசளித்த பரம்பரை நகைகளுடன் ஓர் இந்தியப் பெண்ணாகவே ஜொலித்துக் கொண்டிருந்தாள் ஷர்மிஸ்தா தேவி (Sharmistha Devi). ஆம், அதுதான் நான்சிக்குச் சூட்டப்பட்ட புதிய சமஸ்கிருத நாமகரணம்.

இந்தூர் முழுவதும் திருமணக்கோலம். 'திருமண ஊர்வலத்தில் சமஸ்தானத்தின் யானைகளை, குதிரைகளை, வீரர்களைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறேன்' என்று ரெஸிடெண்டுக்கு ஒரு கால்கடுதாசி போட்டு சம்மதம் கேட்டார் துகோஜி. சம்மதம் வந்தது. ஆனால் சொல்லி வைத்ததுபோலவே ஒரு பிரிட்டிஷ் வெள்ளைக் காக்கா கூடத் திருமணத்துக்கு வரவில்லை.

சில ஐரோப்பியர்களும் அமெரிக்கர்களும் வந்திருந்தார்கள். அவர்கள் நான்சியின் உறவினர்கள். துகோஜியின் உறவினர்கள், நட்பு பாராட்டும் பிற சமஸ்தான மகாராஜாக்கள் என்று ஆயிரத்துக்கும் மேற்பட்ட தலைகள்.

1928, மார்ச் 17. மாலை வேளை. தர்யவா (Daryava) அரண்மனைக் கல்யாணக் களை கட்டியிருந்தது. மராத்திய மங்கள வாத்தியங்களின் இசையும், திருமண விருந்தின் மணமும் காற்றில் சரி விகிதத்தில் கலந்து மிதந்தன. திறந்தவெளி ஒன்றில் மாபெரும் பந்தல் ஒன்றை அமைத்திருந்தார்கள். பந்தலின் மேற்குப் பகுதியிலிருந்து மணப்பெண் வந்தாள். அவள் உடலெங்கும் மஞ்சள் தேய்த்துக் குளித்ததன் அடையாளங்கள் அப்பியிருந்தன. தங்க இழைகளால் ஆங்காங்கே மினுமினுக்க, பச்சை நிற பனாரஸ் பட்டு அணிந்திருந்தாள். பச்சைக் கல் பதிக்கப்பட்ட நகைகள் உடல் முழுவதும் மினுமினுத்தன. கழுத்தில் படு ஆடம்பரமாக மரகத நெக்லெஸ் ஒன்று. இடது நாசியில் ஒரு புல்லாக்கு. மணப்பெண் பச்சை நிற உடையணிவதென்பது மராத்தியர்களின் வழக்கம்.

பந்தலின் கிழக்குப் பகுதியிலிருந்து பவனி வந்தார் துகோஜி. ஒரு மராத்திய வீரனைப் போலக் கம்பீர பட்டுடை, தலையில் கெத்தாக ஒரு தலைப்பாகை. மணமகனும் மணமகளும் எதிரெதிரே அமர்ந்தார்கள். கூடியிருப்போரின் வாழ்த்தொலி அதிர, நான்சியின் கழுத்தில் மங்கள நாணைப் பூட்டினார் துகோஜி. மணமக்கள் இருவரும் நெருப்பைச் சுற்றி வலம் வந்தார்கள். பின் அரண்மனைக்குள் சென்று சகல செல்வமும் சௌபாக்யமும் பெருக வேண்டுமென லட்சுமி பூஜை செய்தார்கள். அனைத்துச் சடங்குகளும் சந்தோஷமாக நடந்துமுடிந்தன.

அரியணையிலிருந்து இறங்கிய பிறகு, தன்னிடமிருந்த அரண்மனைகளையெல்லாம் தன் மகனிடம் கொடுத்துவிட்ட துகோஜி, நான்சியுடன் வாழ்வதற்காக மேனக் என்ற அரண் மனையைத் தேர்ந்தெடுத்திருந்தார். துகோஜியின் மூன்றாவது மகாராணியாக நான்சியின் இல்லற வாழ்க்கை இனிதே ஆரம்பித்தது.

எல்லாமே நான்சிக்குப் பிடித்த மாதிரியாகத்தான் இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக இந்தூரிலேயே பிறந்து வளர்ந்த பெண்போல மாறிப் போனாள் அவள். துகோஜியின் குடும்பத்தினர் ஒவ்வொருவராக நான்சியிடம் நெருங்கிப் பழக ஆரம்பித்தார்கள். மகாராணிகள் இருவரும் தங்களது புதிய தங்கை மேல் எந்தவிதப் பாசமும் காட்டவில்லை, அதே சமயம் வெறுப்பும் காட்டவில்லை. எனவே எந்தவிதப் பிரச்னைகளும் எழவில்லை.

மொழிப் பிரச்னை தவிர மற்றவர்களோடு பேசுவதென்பது நான்சிக்குக் கஷ்டமாக இருந்தது. ஒரு ஹிந்தி வாத்தியாரை நியமித்தார் துகோஜி. அவரும் தினமும் வந்து நான்சியின் நாக்கில் ஹிந்தியை உட்கார வைக்க உழைத்தார். ஆனா, ஆவன்னா எல்லாம் அரும்பாடுபட்டுச் சொல்லிக் கொடுத்தார். இருந்தாலும் நான்சிக்கு ஹிந்தி அவ்வளவாக ம்ஹூம். ஆனால், மற்றவர்கள் நான்சி பேசுவதைப் புரிந்துகொள்ள ஆரம்பித்திருந்தார்கள். விளையாட்டு விழாக்கள், திறப்பு விழா, மற்ற பொது நிகழ்ச்சிகளில் எல்லாம் நான்சி முதன்மை விருந்தினராகக் கலந்துகொண்டு சிறப்பிக்க ஆரம்பித்தாள். இந்தூர் மக்களுக்குப் பிடித்த மகாராணியாகவும் நான்சி மாறிப்போனாள்.

நான்சிக்கும் துகோஜிக்கும் முதல் குழந்தை பிறந்தது. பின்பு இரண்டு, மூன்று, நான்கு. நான்குமே பெண் குழந்தைகள். ஆண் குழந்தை பிறந்தால் வீணாக வாரிசுரிமைப் பிரச்னைதான் வரும் என்பதால் துகோஜியும் பெண் குழந்தைகளை நினைத்துக் கவலைப்படவில்லை.

நான்சியுடன் சந்தோஷமாகவே இருந்தார். நான்சிக்குப் பிறகு அவர் மனத்துக்குள் புதிய காதல் பூ எதுவும் பூக்கவில்லை.

தன் பிள்ளைகளை மட்டுமல்ல, மற்ற மகாராணிகளின் பிள்ளைகளையும் நன்றாகக் கவனித்துக் கொண்டாள் நான்சி. மகாராணி இந்திரா பாயின் மகளான இருபது வயது மனோரமா, காச நோயால் பாதிக்கப்பட்டபோது, உடனிருந்து பணிவிடை செய்தாள் நான்சி. மனோரமாவின் உயிர் நான்சியின் மடியில்தான் பிரிந்தது. அதேபோல மூத்த மகாராணி சந்திராவதி பாய், நோயால் படுக்கையில் விழுந்தபோது நான்சி, உடனிருந்து கவனித்துக் கொண்டாள்.

பிரசவ நேரங்களிலும், இந்தியாவில் கோடைக்காலங்களிலும் துகோஜியும் நான்சியும் தங்கள் குஞ்சு குளுவான்களோடு பாரிஸுக்குச் செல்வதை வழக்கமாக வைத்திருந்தார்கள். அங்கேயும் சொந்தமாக ஒரு பங்களாவை வாங்கிப் போட்டிருந்தார்கள். எந்தப் புயலும் இல்லை. அவர்களது வாழ்க்கை இயல்பாகவே நகர்ந்தது.

எனவே, இந்த இடத்தில் கொஞ்சம் பாஸ்ட் ஃபார்வர்டு செய்துகொள்வோம். சமஸ்தான இணைப்பு ஒப்பந்தத்தில் மகாராஜா யஷ்வந்த் ராவ், ஆகஸ்ட் 11, 1947ல் கையெழுத்திட்டார். ராஜ்பிரமுக் பதவியைப் பெற்றுக் கொண்டார். இனி வரப்போவது தலை நரைத்த துகோஜியும், பாதி நரைத்த நான்சியும்.

தன் வாரிசுகள் ஒவ்வொருவருக்காகத் திருமணம் செய்துவைத்தார் துகோஜி. ஒரு சிறிய விபத்தில் துகோஜியின் இடுப்பு எலும்பு உடைந்துபோனது. அவ்வளவுதான். படுத்த படுக்கை. நான்சி, துகோஜிக்கு செவிலித் தாயாக மாறிப் போனாள். நான்சி பியோனோ வாசிக்க, படுத்துக் கொண்டே ரசிப்பார் துகோஜி. அப்படித்தான் அவரது எண்பத்தெட்டாவது வயதில் மரணமும் நிகழ்ந்தது. 1978, 21 மே அன்று.

துகோஜியின் மரணத்துக்குப் பிறகு, நான்சி அமெரிக்காவுக்குத் திரும்பிச் சென்று விடுவாள் என்று எல்லோரும் நினைத்தனர். 'நான் இந்தூரின் மகாராணி ஷர்மிஸ்தா தேவியாக மாறிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. நான் எதற்கு அமெரிக்கா போக வேண்டும்?' - என்று மறுத்து விட்டாள் அவள்.

பழுத்த கிழவியாகி இருந்தாள் நான்சி. வயது தொண்ணூறைத் தொட்டுவிட்டிருந்தது. பேரன், பேத்திகள், பூட்டன், பூட்டிகள் எல்லாம் பார்த்தாகிவிட்டது. தன்னுடைய மரணத்துக்குப் பின் தனக்கான நினைவிடம் எங்கு அமைய வேண்டும் என்பது முதற்கொண்டு ஏற்பாடு செய்துவிட்டிருந்தாள். மரணத்தைச் சுவைக்க வேண்டியது ஒன்றுதான் பாக்கி. அதுவும் நிகழ்ந்தது (1997).

ஆனால் அவளது மகள்களுக்கிடையே சொத்துச் சண்டை. மகாராணி நான்சியின் இறுதிச் சடங்குகள்கூடச் சரிவர நிறைவேற்றப்படவில்லை. கூடவே ஒரு செய்தியும் உலா வந்தது. நான்சி, இயற்கையாக மரணமடையவில்லை. அவளது உடலில் விஷம் செலுத்தப்பட்டிருக் கிறது.

உண்மையா? அரண்மனைச் சுவர்களுக்குள் ஆயிரமாயிரம் ரகசியங்கள். அத்தனையும் வெளிச்சத்துக்கு வருவதில்லையே.



44

# அந்தப்புரம் – சிறுகுறிப்பு வரைக

ஓர் அரண்மனையின் அந்தப்புரம் என்றால் என்ன? அங்கு யாரெல்லாம் இருப்பார்கள்? யார் வேண்டுமானாலும் அந்தப்புரத்துக்குள் தடையின்றி சென்று வர முடியுமா? அங்குள்ள பாதுகாப்பு எப்படிப்பட்டது? அதன் நிர்வாக முறைகள் எப்படி இருந்தன? அங்கு பெண்கள் சுதந்தரமாக இருந்தார்களா அல்லது அடிமைகளாகவா? அந்தப்புரம் என்பது கேளிக்கைகளின் உச்சபட்ச சொர்க்கலோகமா அல்லது கொடுமைகளும் நிறைந்த நரக உலகமா?

இதுவரை எத்தனையோ மகாராஜாக்களின் அந்தப்புரத்துக்குள் எட்டிப் பார்த்து விட்டு வந்தபிறகும், அதன் நிர்வாக முறைகள் பற்றி முழுமையாக அறிந்து கொள்ளாமல் இருந்தால் ஷேம் ஷேம் பப்பி ஷேம் சொல்லிவிடுவார்கள். எனவே இந்த அத்தியாயம் முழுமையையும் அந்தப்புரத்துக்கு அர்ப்பணம்.

நீண்டு தொங்கும் கனமான திரைகள். அதற்கு அந்தப் பக்கம் இருக்கும் பெண்களை ஆண்கள் யாரும் பார்க்க முடியாது. வைத்தியர் மட்டும் திரைக்கு அருகில் அனுமதிக்கப்படுவார். திரையில் சின்னதாக ஒரு துளை இருக்கும். அதன் வழியாகத் தன் கையை நுழைத்து, அந்தப் பக்கம் இருக்கும் உடல்நிலை பாதிக்கப்பட்ட பெண்ணின் நாடி பிடித்துப் பார்ப்பார். நோயின் தன்மைக்கேற்ப மருந்து கொடுப்பார். மற்றபடி அந்தப் பெண்ணின் முகத்தை எல்லாம் அவர் பார்க்க முடியாது. பார்க்கவும் கூடாது. இது பதினாறாம் நூற்றாண்டுப் பழக்கம்.

திரைக்கு அந்தப் பக்கம் இருக்கும் பெண்கள் நிறைந்த பகுதியைப் பொதுவாக Harem அல்லது Purdah என்பார்கள். முகலாயர்கள் Zenana என்று அழைப்பார்கள்.

இந்தியாவில் இந்து மன்னர்கள் Anduran என்று சொல்லுவார்கள். தமிழில் அதற்கான சுந்தர வார்த்தை அந்தப்புரம்.

பேரரசரோ, சிற்றரசனோ அந்தப்புரம் இல்லாத அரசன் என்று யாரும் இருந்ததில்லை. பெரும் செல்வந்தர்களும் வியாபாரிகளும் முக்கிய மந்திரிகளும்கூடத் தங்களுக்கென அந்தப்புரம் ஒன்றை உருவாக்கி வாழ்ந்து அனுபவித்திருக்கிறார்கள். குறிப்பாகத் துருக்கி ஒட்டமான் பேரரசர்களின் அந்தப்புரம் என்பது பிரம்மாண்டமானது. உலக அளவில் நெம்பர் ஒன் இடத் துக்குத் தகுதியானது. இஸ்தான்புல் (Istanbul) நகர அந்தப்புரங்களின் வசீகரத்தை இன்னொன் றில் பார்க்க முடியாது என்று வரலாற்று ஆய்வாளர்கள் எல்லாம் வரிந்துகட்டிக் கொண்டு எழுதி வைத்திருக்கிறார்கள்.

எனவே முதலில் துருக்கி சுல்தான்களின் இஸ்தான்புல் அந்தப்புரம் எப்படி இருந்தது என்று பார்க்கலாம். இந்தியாவில் முகலாயர்கள், இஸ்லாமிய மன்னர்களின் அந்தப்புரமும் அதே பாணியில்தான் இருந்தது என்பதை நினைவில் வைத்துக் கொள்வது வசதி.

பிரதமர், அமைச்சர், இணை அமைச்சர், துணை அமைச்சர் என்று பல படிகளில் பதவிகள் இருப்பதுபோல அந்தப்புர நிர்வாகத்திலும் பல அடுக்குகள் இருந்தன. எல்லாப் பதவிகளும் கண்டிப்பாகப் பெண்களுக்குத்தான். ஒரு சில பதவிகள் மட்டும் திருநங்கைகளுக்கு.

இஸ்தான்புல் அந்தப்புரத்தின் தலைமைப் பதவியின் பெயர் சுல்தானா. ஆளும் சுல்தானை ஒன்பதரை மாதம் சுமந்து பெற்றெடுத்த ஆத்தாவே அந்த சுல்தானா பதவிக்குரியவர். சுல்தானா வின் நேரடிக் கட்டுப்பாட்டுக் கீழ் சில மேய்ப்பர்கள் பதவி உண்டு. அமைச்சர்கள் என்று வைத்துக் கொள்ளலாம். சுல்தானாவின் கட்டளைகளை நேரடியாகக் கேட்டு செயல்படுத்தக் கூடியவர்கள் அவர்கள்.

அந்த மேய்ப்பர்களின் நேரடிக் கட்டுப்பாட்டுக்குக் கீழ் சில அதிகாரிகள் இருப்பார்கள். துணை அமைச்சர்கள் என்று வைத்துக் கொள்ளலாம். அந்தப்புரத்தின் வரவு செலவுக் கணக்குகளைப் பார்க்க, சமையல் துறையைக் கவனிக்க, மருத்துவ வசதிகளைச் செய்து கொடுக்க, பேர்கால விவகாரங்களைக் கவனிக்க என்று பல்வேறு பொறுப்புகள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே பிரித்து வழங்கப்பட்டு இருக்கும். மத்பக் (Matbakh) என்பது அந்தப்புரச் சமையலறை. அங்கே நீர், பழரசம், உற்சாக பானங்கள் தரும் பணியிலிருப்பவருக்குப் பெயர் அக்பர்கானா (Akbarkhana). கோடைகாலங்களில் குளிர் பானங்கள், குளிர் நீர் எல்லாம் தந்து உபசரிப்பார். பழங்கள் தருபவர் பெயர் மாய்வாகானா (Maywakhana). ரொட்டி முதலில் உணவுப் பொருள் கள் தருபவர் ரிகாப்கானா (Rikabkhana). இவைதவிர உடை, நகை, பிற அலங்காரப் பொருள் கள், அத்தியாவசியப் பொருள்கள் விநியோகம் செய்பவர் கர்கானா (karkhana).

இத்தனை அதிகாரிகளுக்கும் மேய்ப்பர்களுக்கும் கீழ்த் தனித்தனியாக அடிமைகள் உண்டு. ஓர் அதிகாரியின் கீழ் வேலை செய்யக் குறைந்தபட்சம் பத்து அடிமைப் பெண்களாவது இருப்பார்கள். சுல்தானாவுக்கு வேலை செய்ய நூற்றுக்கணக்கான அடிமைகள்கூட இருப்பதுண்டு.

சரி, இவ்வளவு பெண்களை, அடிமைகளை எங்கிருந்து பிடிப்பார்கள்? எந்தெந்த நாட்டை அல்லது இடத்தைக் கைப்பற்றுகிறார்களோ அங்குள்ள பெண்களைக் கடத்திக் கொண்டு வந்துவிடுவார்கள். அழகான, இளமையான, திருமணமாகாத பெண்கள் ஆசைநாயகிகள்



இஸ்தான்புல் அந்தப்புரம்

வரிசையில் சேர்க்கப்பட்டு விடுவார்கள். சுமாரான, மிகவும் சுமாரான பெண்கள் எல்லாம் அடிமைகள். இவர்கள் போக சுல்தானுக்குப் பரிசுப் பொருளாக வரும் பெண்களும் அந்தப்புரத்துக்கே சொந்தம்.

சுல்தானின் முதல் மனைவிக்கு அதாவது முதல் மகாராணிக்கு அந்தப்புரத்தில் ஓரளவு அதிகாரம் உண்டு. அந்த மகாராணிக்கு ஆண் வாரிசு இல்லாதபட்சத்தில், அந்த அதிகாரம், பட்டத்து இளவரசைப் பவுசாகப் பெற்றெடுத்த மகாராணிக்குச் சென்றுவிடும். யாரையெல்லாம் சுல்தான் அதிகாரபூர்வமாகத் திருமணம் செய்து கொண்டிருக்கிறாரோ அவர்கள் மட்டுமே மகாராணிகள் என்ற பட்டத்துக்கு உரியவர்கள்.

அவர்கள் போக வேறு சிலரையும் சுல்தான் திருமணம் செய்திருப்பார் அல்லது மனைவி போல நடத்துவார். அவர்கள் ராணி என்று அழைக்கப்படுவர். மற்றபடி சுல்தானோடு சில மணித்துளிகளோ, சில மணி நேரங்களோ 'வாழ்ந்தவர்கள்' எல்லோரும் ஆசைநாயகிகள் பட்டியலில் சேர்க்கப்படுவார்கள். அதிலும் ஆஸ்தான ஆசைநாயகிகள் என்று ஒரு சிலர் இருப்பார்கள். ஆண் வாரிசு ஒன்றைப் பெற்றெடுக்கும் ஆசைநாயகிகளுக்கு ராணி என்ற பதவி உயர்வுகூடக் கிடைப்பதுண்டு.

சரி, மற்ற அழகிகள்? அவர்களெல்லாம் சுல்தானின் கடைக்கண் பார்வைக்காக ஒவ்வொரு நொடியும் காத்திருப்பவர்கள். அந்தப் பொன்னானத் தருணத்துக்காக எந்த நேரமும் ஏங்கிக் கிடப்பவர்கள். அவ்வளவே.

அந்தப்புரத்துக்குள் நுழையும் உரிமை கொண்ட ஒரே ஆண்மகன் சுல்தான் மட்டுமே. வேறு யாராவது ஆண்கள் அங்கு நுழைந்தால் பெரும்பாலும் தலையை அல்லது வேறு ஏதாவது உடல் உறுப்புகளை வெட்டி விடுவார்கள். சுல்தான் மட்டுமே எந்த நேரம் வேண்டுமானாலும் அந்தப்புரத்துக்கு வரலாம். போகலாம். உள்ளே வரும் சுல்தான் மூட்-அவுட் ஆகாமல், முடிந்த மட்டும் சந்தோஷப்படுத்தி அனுப்புவது அந்தப்புர அழகிகளின் தார்மீகக் கடமை. எனவே அந்த அழகிகளுக்கு சுல்தானைக் குஷிப்படுத்துவதற்கான இசை, ஆடல், பாடல், கூடல் கலைகள் எல்லாம் கற்றுக் கொடுப்பார்கள். அதற்கெல்லாம் தனித்தனி ஆசிரியைகள் உண்டு. அந்த ஆசிரியைகள் பெரும்பாலும் அனுபவம் மிக்கவர்களாகவோ, வயதானவர்களாகவோ இருப்பார்கள்.

அந்தப்புரத்தில் அழகிகளின் ஒரே வேலை, தங்கள் அழகுக்கு அழகு சேர்ப்பது மட்டுமே. எதனைப் பார்த்தால் சுல்தான் சொக்கி விழுவார் என்று யோசித்து யோசித்து ஒப்பனை செய்து கொள்வார்கள். சுல்தான் வருகையில் பேஷன் ஷோதான்.

சுல்தான் வரும் நேரத்தில் அடிமைகள் யாரும் அவர் கண்ணில் படக்கூடாது என்பது மிக முக்கியமான விதி. காரணம், யாராவது அடிமைப் பெண் மீது சுல்தானுக்கு லவ் வந்துவிட்டால்? அப்புறமென்ன, அந்த அடிமைப்பெண், ஆசைநாயகியாகப் பிரமோஷன் பெற்றுவிடுவார். ஒய்யார அழகிகளின் தவம் நீளும்.

அடுத்தது அந்தப்புரத்தின் பாதுகாப்பு பற்றியது. அந்தப்புரத்தின் பெண்களுக்குச் சுல்தான் அல்லது மகாராஜா தவிர வேறு யாராலும் பங்கம் விளைந்துவிடக் கூடாது என்பது விதி. சரி அந்தப் பெண்களுக்குப் பாதுகாப்பு? காவலர்களை வைக்கலாம். ஆனால் வேலிகளுக்கும்



இஸ்தான்புல் அந்தப்புரத்தில் காவல் இருக்கும் கருப்பின திருநங்கை

பயிர் பிடிக்குமே. வேலியும் தேவை, மேயவும் கூடாது என்று யோசித்துத் திருநங்கைகளைப் பாதுகாவலர்களாக வைக்கும் வழக்கத்தைக் கொண்டு வந்தார்கள்.

இஸ்தான்புல் அந்தப்புரத்தைப் பொருத்தவரையில் திருநங்கைகளை இரண்டு பிரிவாகப் பிரித்திருந்தார்கள். கருப்பினம், வெள்ளையினம். கருப்பின திருநங்கைகள் அந்தப்புரத்துக்குள் எடுபிடி வேலைகள் பார்க்கும் அடிமைகளாகவும், ஆயுதமேந்திய பாதுகாவலர்களாகவும் இருந்தார்கள். வெள்ளையின திருநங்கைகள் அந்தப்புரத்துக்கு வெளியே பாதுகாப்புக்கு மட்டும் பயன்படுத்தப்பட்டார்கள். ஏன்? திருநங்கைகளாக இருந்தாலும் சில சமயங்களில் பயிர்களும் வெள்ளை வேலியைப் பார்த்து ஆசைப்படலாமே. அதற்காகத்தான். ஒவ்வொரு திருநங்கையின் பிறப்புறுப்பையும் நீக்கிய பின்பே அவர்கள் பணியில் அமர்த்தப்பட்டார்கள் என்பது குறிப்பிடப்பட வேண்டிய விஷயம்.

கறுப்பினத் திருநங்கைகளுக்கென ஒரு தலைவி உண்டு. அவரது பதவியின் பெயர் Kizlar Agha. பேரரசில் சுல்தான், முதலமைச்சருக்குப் பிறகு அதிக அதிகாரம் கொண்ட பதவி அதுதான். சுல்தான் தன் தலைப்பாகையில் கௌரவத்துக்காக நான்கு மயிலிறகுகளை வைத்திருப்பார். அந்தத் தலைவி மூன்று மயிலிறகுகளை வைத்துக் கொள்ளலாம். அவ்வளவு கௌரவமான பதவி அது. எனவே சுல்தான் தனக்கு மிகவும் நேர்மையாக நடக்கும் கருப்பின திருநங்கையைத்தான் இந்தப் பதவிக்காகத் தேர்ந்தெடுப்பார். அந்தத் தலைவி, எந்த நேரத்தில் வேண்டுமானாலும் சுல்தானைச் சந்திக்கலாம், அவர் அவசரச் ஜோலியாக படுக்கை அறைக்குள் இருந்தால்கூட.

அந்தப்புரத்திலுள்ள ஒவ்வொரு பெண்ணின் தேவைகளையும் கவனித்துக் கொள்வது, அங்குள்ள சிறு சிறு பிரச்னைகளுக்கு நாட்டாமை பண்ணுவது, யாராவது ஓர் அழகி எடக்கு செய்தால் அவள் அடங்கிப் போகும்படி தண்டனை கொடுப்பது, சுல்தானா அனுப்பும் தகவல்களைச் சுல்தானுக்குக் கொண்டு சேர்ப்பது, சுல்தான் செய்யும் திருமணங்களுக்கெல்லாம் சாட்சியாக இருப்பது, எந்தெந்தக் குழந்தை எந்தெந்தப் பெண்ணுக்குப் பிறந்தது என்று கணக்கு வைத்துக் கொள்வது போன்ற பல அதிகாரங்கள் அந்தத் தலைவிக்கு உண்டு. இவைபோக சுல்தானின் அரசியல் விவகாரங்களிலும் தலையிட்டு ஆலோசனை கூறும் அதிகாரமும் உண்டு. ஆனால் வெள்ளை இனத் திருநங்கைத் தலைவியால் (Kapi agha) அந்தப்புரத்தின் வெளிப்புறப் பாதுகாப்புத் தளபதியாக மட்டுமே இருக்க முடியும்.

சுல்தானாவின் அதிகாரம் அந்தப்புரத்துக்குள் மட்டும்தான். ஆனால் கருப்பினத் தலைவியின் அதிகாரம் பேரரசு முழுமைக்குமானது. சுல்தானா இறந்துவிடும் பட்சத்தில் அந்த அதிகாரம் அவரது அந்தரங்கச் செயலாளருக்கு கைமாறுவதுண்டு. சில சமயங்களில் சுல்தானின் வளர்ப்புத் தாயாரும் சுல்தானாவாகப் பதவியேற்பதுண்டு.

இதுவரைப் பார்த்த முறையில்தான் நமது ஹைதராபாத் நிஜாம் ஒஸ்மான் அலிகானின் அந்தப் புரமும் இயங்கி வந்தது. இனி, இந்தியாவின் இந்து சமஸ்தானங்களின் அந்தப்புரங்களுக்குள் செல்வோம். மகாராஜாவின் அதிகாரபூர்வ முதல் மகாராணியே அந்தப்புரத்தின் முதலமைச்சர். அந்த மகாராணிக்கு ஆண் வாரிசு இல்லாத பட்சத்தில், பட்டத்து இளவரசரைப் பிரசவிக்கும் மகாராணிக்குப் பதவி கைமாறுவதுண்டு. மகாராணிகளுக்கு அடுத்தபடியாக வருபவர்கள் ராணிகள், அப்புறமாக ஆசைநாயகிகள்.

மகாராணிகளின் அறைகள் மிக மிகப் பெரியது. அவர்களுக்குச் சேவகம் செய்யவே நூற்றுக் கணக்கான பெண்கள் இருப்பார்கள். ராணிகளின் அறைகள் ஓரளவு பெரியது. மகாராஜாவின் காதலுக்குரிய ஆசைநாயகியாக மாறும் பெண்களுக்கு அந்தப்புரத்தில் சிங்கிள் பெட்ரூம் ஒதுக்கப்படும். மற்ற பெண்களுக்கு? பொது அறைகள்தான்.

உடைகள், நகைகள், உணவு எல்லாமே தராதரம் பார்த்துதான் வழங்கப்படும். மகாராணிகளின் நகைகள், உடைகள் பற்றிக் கேட்கவே வேண்டாம். ராணிகளுக்கும் குறையில்லை. ஆசைநாயகிகளுக்கு? அது மகாராஜா அவர்கள் மேல் வைத்துள்ள தனிப்பட்ட பிரியத்தைப் பொருத்தது. பொதுவாக ஒரு நாளைக்கு அரண்மனையில் ஐம்பது முதல் எழுபது பதார்த்தங்கள் வரை சமைப்பார்கள். மகாராணிகள் தங்களுக்கான தங்கத் தட்டில் விருப்பமானதைக் கேட்டு வாங்கிச் சாப்பிடலாம். ராணிகளுக்கு அதிகபட்சம் முப்பது வகைப் பதார்த்தங்கள் வரை வெள்ளித் தட்டுகளில் பரிமாறப்படும். ஆசைநாயகிகளுக்கு அதிகபட்சம் பத்து பதார்த்தங்கள் தான். அதுவும் அளவுச் சாப்பாடு. பித்தளைத் தட்டு மட்டுமே. ஆகவே பதவி உயர்வுக்காக ஆசைநாயகிகள் தங்கள் திறமையை மகாராஜாவிடம் நிரூபிக்கப் போராடுவது சகஜமானதே.

இஸ்லாமியர்கள் வழக்கப்படி, பிறர் அந்தப்புரம் நோக்குதல் பெருங்குற்றம். அடுத்தவர்களுக் குரிய பெண்களை அபகரிக்க நினைப்பவர்களுக்கு மரண தண்டனை நிச்சயம். அதேபோல அந்தப்புரத்திலிருந்து தப்பித்து வெளியேறும் பெண்கள் பிடிபட்டால் உயிர் போவது நிச்சயம். அந்தப் பெண்கள் பிற ஆண்களோடு தொடர்பு வைத்திருப்பது தெரிய வந்தாலும் அதே கதி தான்.



அந்தப்புரத்தில் ஒரு பெண்

அந்தப்புரப் பெண்கள் பெரும்பாலும் அதனை விட்டு வெளியே செல்லவெல்லாம் முடியாது. எப்போதாவது பிக்னிக்காக ஏதாவது விழாக்களுக்கோ, அல்லது ஆறு, குளத்துக்கு நீராடவோ, கோயில்களுக்கோ மொத்தமாகச் செல்ல அனுமதிக்கப்படுவார்கள். இஸ்லாமியப் பெண்கள் ஹஜ் செல்ல அனுமதிக்கப்பட்டனர். ஓரளவுக்கு வயதான பின், அந்தப் பெண்கள் அந்தப்புரத்திலிருந்து வெளியேற்றப்பட்டு விடுவார்கள். அந்தப்புரத்தில் நிகழும் மகாராணி களின் அல்லது அதிகாரத்தில் இருந்த பெண்களின் மரணங்களுக்கு மட்டும் முறைப்படி துக்கம் அனுஷ்டித்தார்கள். சாதாரணப் பெண்களின் மரணம், கண்டுகொள்ளப் படவில்லை.

சரி, மகாராஜா தவிர, வேறு யாருக்காகவும் திறக்காத கபுர்தலா சமஸ்தானத்தின் அரண்மனை அந்தப்புரக் கதவுகள் நமக்காகத் திறந்திருக்கின்றன. அடுத்த அத்தியாயத்தில்...

# கபுர்தலா

- பஞ்சாபிய சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1777
- ஆட்சி செய்தவர்கள் : அஹ்லுவாலியா பரம்பரை
- முதல் மகாராஜா : ஜஸ்ஸா சிங்
- குண்டு மரியாதை : சமஸ்தானத்துக்குள் 15, வெளியே 13.



# 45

# பக்கிங்ஹாம் பஞ்சாயத்து போர்டு

நாற்காலி ஆசை இல்லாத மனிதர்கள் மிகக் குறைவே. அதுவும் அந்த நாற்காலி, சிம்மாசனமாக இருந்தால் கேட்க வேண்டுமா? ஒரு பட்டத்து இளவரசருக்கு அரியணை ஆசை இருப்பதில் தவறில்லை. ஆனால் அந்த ஆசைக்குத் தந்தையே வில்லனாக வந்தால்?

யார் அந்தத் தந்தை என்று தெரிந்துகொள்வதற்கு முன்னால் கபுர்தலா சமஸ்தானத்தின் வரலாறு கொஞ்சம்.

கபுர்தலா, சுமார் ஆயிரத்து ஐநூறு சதுர கிலோமீட்டர் கொண்ட ஒரு சமஸ்தானம். தற்போது பஞ்சாபில் உள்ள ஒரு மாவட்டம். 1777ல் நடந்த ஒரு சிறு போரில், கபுர்தலாவை இப்ராஹிம் பாட்டி (Ibrahim Bhatti) என்பவரிடமிருந்து கைப்பற்றி னார் சர்தார் ஜஸ்ஸா சிங் (Jassa Singh). அந்த நிமிடத்திலிருந்து கபுர்தலா சீக்கியர்கள் வசம் வந்தது. அப்போது கபுர்தலா ஒரு சிறிய கிராமம்தான். அதற்குப் பின் அதன் சுற்று வட்டாரங்களிலெல்லாம் தன் ஆட்சியைக் கொஞ்சம் கொஞ்ச மாக விரிவுபடுத்தினார் ஜஸ்ஸா சிங். 1783ல் இறந்து போனார். அவரது வாரிசுகள் கபுர்தலாவை ஆட்சி புரிந்தார்கள். விரிவுபடுத்தினார்கள்.

அதே பரம்பரையில் வந்த வாரிசுதான் மகாராஜா நிஹால் சிங் (Nihal Singh). 1837ல் அவரது தந்தையான ஃபதே சிங்கின் (Fateh Singh) மறைவுக்குப் பின் அரியணையில் உட்கார்ந்தார். அப்போது பஞ்சாபின் இன்னொரு பகுதியை ஆண்டு கொண்டு இருந்தவர் மகாராஜா ரஞ்சித் சிங் (Ranjit Singh). பஞ்சாபிய சிங்கம் என்றும் அவரைச் சொல்வார்கள். அவரது ஆட்சிக்காலத்தில்

ஆங்கிலேயர்களால் பஞ்சாப் பகுதியில் அவ்வளவாக வாலாட்ட முடியவில்லை. 1839ல் அவருடைய மறைவுக்குப் பின் ஆங்கிலேயர்களுக்கும் சீக்கியர்களுக்கும் ஆங்காங்கே மோதல் கள் உருவாகின. 1845ல் ஆங்கிலேயர்களுக்கு எதிராக சீக்கியர்கள் போரில் குதித்தார்கள். முதல் சீக்கியப் போர் என்றழைக்கப்படும் இதில் மகாராஜா நிஹால் சிங்கும் பங்கேற்றார் என்ற தகவலோடு நிறுத்திவிட்டு, அவரது குடும்பக் கதைக்கு வருவோம்.

மகாராஜா நிஹால் சிங்குக்கு மூன்று ஆண் வாரிசுகளும் இரு பெண் வாரிசுகளும் உண்டு. அந்த மூன்று ஆண் வாரிசுகளில் மூத்த மகாராணிக்குப் பிறந்த ஆண் வாரிசின் பெயர் ரந்திர் சிங் (Randhar Singh). இரண்டாவது ஆசைராணிக்குப் பிறந்தவர்கள் பிக்ரமா சிங், சச்சேத் சிங் (Bikrama Singh, Suchet Singh). இரண்டு ராணிகளின் பெயர்கள் பற்றிய குறிப்புகள் இல்லை.

மூன்று மகன்களில் பட்டத்து இளவரசராக வளர்க்கப்பட்டவர் மூத்த மகாராணியின் புத்திரரான ரந்திர் சிங்தான். மகாராஜாவுக்கும் முதலில் எந்தவித ஆட்சேபணையும் இருக்கவில்லை. ஆனால் நிஹால் சிங், காதலாகிக் கசிந்துருகிக் கல்யாணம் செய்து கொண்ட இரண்டாவது ஆசைராணிக்கு நாளுக்கு நாள் ரத்த அழுத்தம் எகிறிக் கொண்டே போனது. நிஹால் சிங் மப்பும் மந்தாரமுமாக இருந்த ஒரு நள்ளிரவுப் பொழுதில் தலையணை மந்திரம் ஓதத் தொடங் கினாள் அந்த ஆசைராணி.

‘உங்களுக்கு என் மேல அன்பே இல்லை.’

‘ஏன் அப்படிச் சொல்லுற? நான் உனக்கு எந்தக் குறையும் வைக்கலையே? என்னோட அதிகாரபூர்வ ராணியாத்தானே உன்னை நடத்துறேன்.’

‘இருந்தும் என்ன பிரயோசனம்? வருங்காலத்தை நினைச்சா எனக்குப் பயமா இருக்கு.’

‘என்ன ஆச்சு?’

‘உங்க முதல் மனைவியோட பிள்ளைதான் அடுத்த மகாராஜா. நமக்குப் பிறந்த இரண்டு மகன்களோட நிலைமையை நினைச்சுப் பார்த்தீங்களா? அவங்களையும் இளவரசராத்தான் வளர்க்கறீங்க. பயன் இல்லையே. நாளைக்கு உங்க மூத்த மகன் ஆட்சிக்கு வந்ததுக்கு அப்புறம் என்னோட கதியும் என் பிள்ளைகளோட கதியும் என்ன ஆகும்?’

‘நான் அப்படியெல்லாம் உங்களை நிராதரவா விட்டுட மாட்டேன்.’

‘வார்த்தையா சொன்னாப் போதுமா? நீங்க என்மேல வைச்சிருக்குற இந்த அன்பு நிஜமான துன்னா, நமக்குப் பிறந்த மகன்களையும், உங்களை மாதிரியே மகாராஜாவா ஆக்கணும். செய்வீங்களா?’

‘கண்டிப்பாக’ - ஆசைராணிக்கு வாக்குக் கொடுத்தார் மகாராஜா நிஹால் சிங். அதை நிறை வேற்றவும் செய்தார். எப்படி?

தன் ஆளுகைக்குட்பட்ட சமஸ்தானத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்தார். ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு மகனை மகாராஜாவாக நியமித்தார். தன் ஆசைராணியின் விருப்பத்தை நிறைவேற்றிய திருப்தியில் தன்னுடைய நிஹால் அரண்மனையில் 1852, செப்டெம்பர் 13

அன்று நிம்மதியாக இறந்துபோனார். ஆனால் அதிகாரபூர்வ பட்டத்து இளவரசராக அதுநாள்வரை பெரும் கனவு களுடன் வாழ்ந்த ரந்திர் சிங்கின் நிம்மதி பறிபோனது.


சர் ஹென்றி மாண்ட்கோமெரி லாரன்ஸ்

பங்கு பிரித்துக் கொடுக்க இதென்ன பண்ட, பாத்திரமா? காலம் காலமாக ஆண்டு வந்த என் பரம்பரை பூமியல்லவா? எவன் எவனோ ஆண்டு அனுபவிப்பதற்கு விட்டுவிட முடியுமா என்ன? அந்தச் சண்டாளி ராணியின் மாயப் பிடியில் மயங்கி, மதிகெட்டு இப்படி அநியாயம் செய்து விட்டாரே என் தந்தை. இந்தத் தீர்ப்பு செல்லாது. தீர்ப்பைத் திருத்திச் சொல்லுங்கள் என்று பிரிட்டிஷ் நாட்டாமையிடம் தஞ்சம் புகுந்தார் ரந்திர் சிங். அப்போது கவர்னராக இருந்த சர் ஹென்றி மாண்ட்கோமெரி லாரன்ஸின் (Sir Henry Montgomery Lawrence) உதவியை நாடினார்.

'ஆமாமா. ரந்திர் சிங்தான் கபுர்தலா சமஸ்தானம் முழுமைக்கும் மகாராஜா. முன்னாள் மகாராஜா நிஹால் சிங் எழுதி வைத்ததெல்லாம் செல்லாது' என்று ஆதரவுக் குரல் கொடுத்தார் கவர்னர்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டு பங்காளிகளான பிக்ரமா சிங்கும், சச்சேத் சிங்கும் புளியங்காய் பறித்துக் கொண்டிருப்பார்களா என்ன? நேரடியாக வைஸ்ராயின் முன் சென்று அடிபணிந்து நின்றார்கள். அப்போது வைஸ்ராயாக இருந்தவர் சர் ஜான் லாரன்ஸ் (John Lawrence). கவர்னர் ஹென்றி லாரன்ஸின் சகோதரர்தான் அவர்.

'எங்க அப்பாரு ஆசை ஆசையாத் தன் புள்ளைங்களுக்குச் சமஸ்தானத்தைச் சரிசமமாப் பங்கு போட்டுக் கொடுத்திருக்குறாரு. ஆனா அந்த ரந்திர் சிங்குக்குப் பேராசை. எல்லாத்தையும் தானே அனுபவிக்கணும்னு நினைக்குறாரு. என்னங்க நியாயம் இது? நீங்கதான் நல்ல தீர்ப்பாச் சொல்லணும். உங்க வார்த்தையிலதான் எங்களோட வாழ்க்கையே இருக்கு. எங்க அப்பாவோட கனவைச் சிதைச்சுட மாட்டீங்கன்னு நம்பறோம்.'

ஜான் லாரன்ஸுக்குத் தன் சகோதரர் ஹென்றி லாரன்ஸுடன் என்ன மனஸ்தாபமோ தெரிய வில்லை. அவர் ரந்திர் சிங்குக்கு ஆதரவாக வழங்கிய தீர்ப்பு செல்லாது என்று அறிவித்தார். மகாராஜா நிஹால் சிங் செய்துள்ளது சரிதான் என்றும், மூவரும் அவர்களுக்குரிய பகுதிகளில் ஆட்சி செய்வதே சரியென்றும் தன்னுடைய தீர்ப்பை வழங்கினார். கூடுதலாக, பிரச்னை செய்யும் ரந்திர் சிங்குக்கு எச்சரிக்கை வேறு விடுத்தார்.

ரந்திர் சிங்குக்குக் கொள்ளைக் கோபம். விஷயத்தைத் தனக்குச் சாதகமாக்கும் முயற்சிகளில் இறங்கினார். தந்தை நிஹால் சிங்கின் அமைச்சரவையில் இருந்த முக்கிய அமைச்சர்கள் எல்லாம் தனக்கு ஆதரவாக இருந்தது அவருக்குத் தெம்பளித்தது. குறிப்பாக வருவாய்த் துறை அமைச்சராக இருந்த திவான் ராம்ஜஸ் (Ramjas), இந்தப் பிரச்னைகளிலிருந்து விடுபட்டு மீண்டும் கபுர்தலாவை முழுமையாக ஆள்வதற்காக ஆலோசனைகளை ரந்திர் சிங்குக்கு அள்ளி வழங்கினார்.

‘வேறு வழியே இல்லை. நேரடியாக இங்கிலாந்து செல்லுங்கள். குயின் விக்டோரியாவிடம் சென்று முறையிடுங்கள். அதுபோதும்’ யோசனை கூறினார் ராம்ஜஸ். ஆனாலும் ரந்திர் சிங், தான் நேரடியாகச் சென்று இங்கிலாந்து ராணியிடம் சிரம் தாழ்த்தி உதவி கேட்கத் தயங்கினார். ஏதோ சொல்வார்களே, ஆங்... கௌரவம் - அது தடுத்திருக்கலாம். அதற்கான மாற்று யோசனையையும் ராம்ஜஸே வழங்கினார்.

‘மகாராஜா நீங்கள் நேரடியாகச் செல்லத் தயங்குகிறீர்கள் என்றால் விட்டுவிடுங்கள். பிரச்னை இல்லை. என் மகன் திவான் மாத்ரா தாஸை (Mathra Dass) உங்கள் சார்பாக அனுப்புங்கள். அவர் சென்று விக்டோரியா மகாராணியிடம் சென்று பேசுவார். உங்கள் சார்பாகப் பேச வந்திருக்கும் நபர் என்ற விவரத்தை மட்டும் கடிதமாக எழுதிக் கொடுத்துவிடுங்கள். ‘என் சார்பாகப் பேசும் அதிகாரத்தை நான் இவருக்கு அளிக்கிறேன்’ என்று மட்டும் தெளிவாகக் குறிப்பிட்டு விட்டால் போதும்.’

இந்த யோசனை ரந்திர் சிங்குக்குப் பிடித்திருந்தது. தன் சார்பாகப் பேசும் அதிகாரம் (Power of Attorney) மாத்ரா தாஸுக்கு உண்டு என்று எழுதப்பட்ட கடிதத்தில் கையெழுத்திட்டார்.

‘இந்தப் பயணத்துக்காக உங்களுக்கு என்னென்ன வசதிகள் தேவைப்படும் என்று சொல்லுங்கள். ஒரு குறையுமில்லாமல் செய்து தருகிறேன். செல்கின்ற காரியம் ஜெயம் ஆனால் சரி’ மாத்ரா தாஸிடம் சொன்னார் ரந்திர் சிங். தன் மகனுக்கு என்னென்ன வசதிகளெல்லாம் செய்து கொடுக்க வேண்டும் என்ற பட்டியலை வாசித்தார் ராம்ஜஸ்.

‘அங்குள்ள உணவு வகைகள் ஒத்துவராது. நம் உணவு வகைகள் அங்கு கிடைக்காது. எனவே கையோடு சமையல்காரர்களை அழைத்துச் செல்வது வசதி’ முதல் வேண்டுகோளை வைத்தார் ராம்ஜஸ். ‘அதற்கென்ன, தாராளமாக’ என்று அனுமதி கொடுத்தார் ரந்திர் சிங்.

‘சமையல்காரர்கள் மட்டும் சென்றால் பிரயோசனமில்லை. உணவுப் பொருள்களையும் இங்கிருந்து கொண்டு சென்றால் நமக்கான உணவைத் தயாரிக்க முடியும். அங்கு கிடைக்கும் பொருள்கள் எப்படி எப்படி இருக்குமோ?’ - ராம்ஜஸ் சொல்ல, அதற்கும் தலையாட்டினார் ரந்திர் சிங்.

‘எல்லாவற்றையும் விட முக்கியமான விஷயம் இதுதான். தண்ணீர். இந்திய நதிகளின் நீரே நமக்குப் பழகிவிட்டது. குடிப்பதோ, குளிப்பதோ கங்கை நீருக்கு இணையாக வருமா. அங்கே உள்ள நீரெல்லாம் உடலுக்கு ஒத்துவராது. உடல்நிலையைப் பாதித்துவிடும். மேலும் நம் கங்கை நீருக்கென்று உள்ள புனிதத் தன்மை வேறு எந்த நதிக்கு வரும் சொல்லுங்கள். ஓர் இந்துவாக இந்த வேண்டுகோளை வைக்கிறேன். பயணம் முழுவதும் என் மகன் பயன்படுத்த கங்கை நீரை ஏற்பாடு செய்யுங்கள்’ - வெகு சுலபமாகச் சொன்னார் ராம்ஜஸ். மறுக்கவில்லை ரந்திர் சிங். மேலும் பட்டியலிடப்பட்ட ராம்ஜஸின் அத்தனை கோரிக்கைகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. மாத்ரா தாஸுக்கு பெரும் தொகை செலவுக்காகக் கொடுக்கப்பட்டது. அவர் இங்கிலாந்து கிளம்பினார்.

பிரச்னை, உரிய அதிகாரிகள் மூலமாக குயின் விக்டோரியா முன் கொண்டு செல்லப்பட்டது. இங்கிலாந்திலிருந்த முன்னணி வழக்கறிஞர்களைச் சந்தித்து, ஆலோசனைகள் கேட்டார் மாத்ரா தாஸ். ஒரு குறிப்பிட்ட நாளில் பிரச்னை, பக்கிங்ஹாம் பஞ்சாயத்து போர்டு தலைவி விக்டோரியாவின் தீர்ப்புக்காக வந்து நின்றது. என்ன தீர்ப்பு கிடைக்குமோ என்று மாத்ரா தாஸ் பயபக்தியுடன் நகம் கடித்துக் கொண்டிருந்தார்.

விக்டோரியாவுக்குள் ஓடியதும் ராஜ ரத்தம்தானே. வாரிசுரிமை, ஆட்சி அதிகாரம், அரியணை சுகம் என்பது எவ்வளவு முக்கியமான விஷயம் என்று அவருக்குத் தெரியாதா என்ன? ஒரு பட்டத்து இளவரசரின் வலி, மனவேதனை குயினுக்குப் புரிந்தது. தீர்ப்பு ரந்திர் சிங்குக்குச் சாதகமாகவே அமைந்தது.

மகாராஜா நிஹால் சிங், கபுர்தலா சமஸ்தானம் மூன்றாகப் பிரித்ததும், அதை வழிமொழிந்து வைஸ்ராய் ஜான் லாரன்ஸ் வழங்கிய தீர்ப்பும் செல்லாது என்று விக்டோரியா அறிவித்தார். கபுர்தலா சமஸ்தானம் முழுமைக்குமான மகாராஜாவாக ரந்திர் சிங் அறிவிக்கப்பட்டார். நிஹால் சிங்கின் மற்ற வாரிசுகளான பிக்ரமா சிங்குக்கும், சச்சேத் சிங்குக்கும் வருடத்துக்கு முப்பத்து ஆறாயிரம் ரூபாய் வழங்க வேண்டும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

கபுர்தலாவை மீட்ட சுந்தர திவானாக நாடு திரும்பினார் மாத்ரா தாஸ். சமஸ்தானமே சந்தோஷத்தில் பாங்ரா நடனம் ஆடிக் கொண்டிருந்தது. முன்னாள் மகாராஜா நிஹால் சிங்கின் ஆசைராணியும், அவரது இரண்டு மகன்களும் கபுர்தலாவை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தனர். அவர்கள் வாழ்வதற்கென்று ஜலந்தர் நகரத்தில் ஓர் அரண்மனை ஒதுக்கப்பட்டது.

தன்னைக் காண வந்த மாத்ரா தாஸை எழுந்து நின்று கட்டியணைத்து வரவேற்றார் மகாராஜா ரந்திர் சிங். 'சாதித்து விட்டீர்கள் மாத்ரா தாஸ். உங்களுக்கு என்ன வேண்டுமென்று கேளுங்கள். தருகிறேன்' - ஆனந்த வார்த்தைகளை அள்ளி வீசினார்.

'தங்கள் சித்தம் மகாராஜா' என்று மகன் சார்பாக ராம்ஜஸ் பதில் கொடுத்தார்.

மாத்ரா தாஸ், எதிர்பார்த்ததை விட ஏராளமான பொன், பொருள், பணத்தை வாரிக் கொடுத்தார் ரந்திர் சிங். ஏகப்பட்ட நிலத்தையும் அவருக்குப் பரிசாக ஒதுக்கிக் கொடுத்தார். 'மகாராஜா ரந்திர் சிங் வாழ்க வாழ்க' என்ற கபுர்தலா மக்களின் வாழ்த்து கோஷங்கள் அவரை மேலும் கிறுகிறுக்க வைத்தது.

அமைச்சர்கள் எல்லோருக்கும் சம்பள உயர்வும் பரிசுப் பொருள்களும் வழங்கப்பட்டன. அரசாங்க ஊழியர்களுக்கும் அந்த பாக்கியம் கிடைத்தது. பொதுமக்கள் மீதான வரிச்சுமைகள் குறைக்கப்பட்டன. பல ஏழை விவசாயிகளுக்கு நிலங்கள் அளிக்கப்பட்டன. சிறையிலிருந்து ஏராளமானோர் விடுவிக்கப்பட்டார்கள். அள்ளிக் கொடுத்த வள்ளல் மகாராஜாவுக்காக குருத் வாராக்களில், கோயில்களில், மசூதிகளில், தேவாலயங்களில் சிறப்புப் பிரார்த்தனைகள் நடத்தப்பட்டன.

ரந்திர் சிங் மூன்று திருமணங்கள் செய்து கொண்டார். மூன்று மகன்களையும் நான்கு மகள்களையும் பெற்றுக் கொண்டார். மூத்த மகாராணியின் முதல் மகனான காரக் சிங்கைப் (Kharak Singh) பட்டத்து இளவரசராக அறிவித்தார். 1870ல் தனது நாற்பதாவது வயதில் இறந்து போனார்.

ரந்திர் சிங், அரியணைக் காப்பாற்றிக் கொள்ள, மீட்டெடுக்கப் போராடிய போராட்டங்களை விட, தன் ஆசை மகளைக் கட்டுப்படுத்த நடத்திய போராட்டங்கள்தான் அதிகம். அந்த மகளின் பெயர் கோபிந்த் கவுர். எகிப்தியப் பேரரசி க்ளியோபட்ராவின் காதல் கதைக்கு ஒப்பானது இவளுடையதும்.



# கன்னிமாடத்தில் ராஜகுமாரி

அப்போது கபுர்தலா சமஸ்தானத்தைப் பொருத்தவரையில் குலாம் கிலானி வைத்ததுதான் சட்டம். அவர் 'ம்' என்ற ஓரெழுத்து வார்த்தையைக் கூட உச்சரிக்க வேண்டாம், கண்களின் கருவிழியை இந்தப் பக்கமிருந்து அந்தப் பக்கத்துக்கு சில மில்லி மீட்டர் நகர்த்தினால் போதும். கட்டளைகள் கடகடவென நிறை வேற்றப்படும். அதற்காகவே கைகட்டிக் காத்திருப்பார்கள் காவலர்கள், பணியாளர்கள், அமைச்சர்களும்கூட.

'இவனைக் கொண்டு போய் சிறையில் தள்ளுங்கள்' என்று ஒரு நிரபராதிக்கு எதிராக அவர் அநியாயத் தீர்ப்பளித்தாலும் அதை நிறைவேற்றும் உரிமை மட்டுமே மற்றவர்களுக்கு உண்டு. 'இல்லீங்க ஐயா, அந்தப் பையன் மேல ஒரு குத்தமும் இல்லீங்க. நான் கண்ணால கண்ட சாட்சிங்க' என்று யாரும் எதிர்வாதம் புரியக்கூடாது. புரிந்தால்? அதற்கான வெகுமதி சிறையில் காத்திருக்கும். கொடுங்கோலர்கள் என்று வரிசையாக நாலைந்து பெயர்கள் சொல்லுவார்களே, ஆங்.. ஹிட்லர், முசோலினி, ராஜபக்ஷே, இடி அமீன் - அந்த வரிசையில் கிலானி யின் பெயரையும் தாராளமாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

'தான் பிடித்த பாம்புக்கு இரண்டே கால்' என்று கிலானி சொன்னால், மற்றவர்கள் எல்லாம் அதற்குத் தலையசைத்தே ஆகவேண்டும். மற்றவர்கள் என்ன, மகாராஜா ரந்திர் சிங்கூட, 'கிலானி சொன்னால் சரியாகத்தான் இருக்கும்' என்று வேகவேக மாக ஆமோதிப்பார். இவ்வளவு பில்ட்-அப் கொடுத்த பிறகு எல்லோருடைய மனத்திலும் 'யார் இந்த கிலானி?' என்ற கேள்வி பொறுமையின் விளிம்பில் வந்து நிற்கும்.



மகாராஜா ரந்திர் சிங்

குலாம் கிலானி, கபுர்தலா சமஸ்தானத்தின் பிரதம அமைச்சர். இஸ்லாமியர். அவரது பரம்பரையின் வேர்களைத் தேடிப்போனால் அது அரேபியாவில் சென்று நிற்கும். முகலாயர்களின் காலத்திலேயே அவரது முன்னோர்கள், அரசாங்கப் பணிகளில் இருந்து வந்துள்ளனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெரும்பாலான இந்து சமஸ்தானங்களின் பிரதம அமைச்சராக இஸ்லாமியர்களே (குறிப்பாக முகலாயர்களின் வழி வந்தவர்கள்) இருந்தார்கள். அந்த வரிசையில் கிலானியும் கபுர்தலாவின் பிரதம அமைச்சராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

பெயருக்கு முன் 'மகாராஜா' என்ற கம்பீரமான பட்டம் இருந்தாலும், பெரும்பாலான இந்து சமஸ்தானங்களின் மகாராஜாக்கள், பிரதம அமைச்சர் சொல்பேச்சுக் கேட்டே ஆட்சி நடத்தினார்கள். ம்ஹூம், ஆட்சி நடத்தினார்கள் என்பது கூடத் தவறு. பிரதம அமைச்சர்கள் ஆட்சி நடத்த, அதை மகாராஜாக்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்பதே சரி. அப்படித்தான் கிலானியும் கபுர்தலாவை ஆளும் அதிகாரத்தைத் தன் கைப்பிடியில் வைத்திருந்தார்.

ரந்திர் சிங்கின் மூத்த மகள் பேரழகி. பெயர் கோபிந்த் கவுர் (Gobind Kaur). பஞ்சாபிய பெண்களுக்கே உரிய உயரம், கோதுமை நிறம், சற்றே பெரிய கண்கள், கொஞ்சம் குவிந்த உதடுகள், ஒரு ராஜகுமாரிக்கே உரிய சர்வ சுகங்களுடனும் வளர்ந்தாள். ஒரே பெண் என்பதால் ரந்திர் சிங்குக்கு அவள் மீது பிரியம் எக்கச்சக்கம். கோபிந்த் கவுருக்கும் தந்தை பாசம் ஜாஸ்தி.

எவ்வளவுதான் வேலைகள் இருந்தாலும், மகளோடு கொஞ்ச நேரமாவது கழிப்பதென்பது ரந்திர் சிங்கின் தினப்பழக்கம். போருக்கோ, வெளியூருக்கோ செல்வதாக இருந்தால்கூட, அதற்கு முன்பாக நேரம் ஒதுக்கி, மகளைக் கொஞ்சிவிட்டுத்தான் போவார். ராஜகுமாரியாக இருந்தால் என்ன, 'பொட்டப்புள்ளைக்குக் காலாகாலத்துல கல்யாணம் செஞ்சு வைக்க வேண்டாமா' என்று குடும்பப் பெருசுகள் கேட்கத்தானே செய்வார்கள்.

ரந்திர் சிங்குக்கும் அந்தக் கவலைதான். கல்யாணம் செய்துவிட்டால் எங்கே தனது பாசமகள் தன்னைவிட்டுப் பிரிந்து சென்று விடுவாளோ என்ற கவலை. கல்யாணப் பேச்சுகள் ஆரம் பித்ததும், கோபிந்த் கவுரும் அதே வருத்தத்தில்தான் இருந்தாள். 'நான் உங்களை விட்டு எங்கேயும் போக மாட்டேன்' தந்தையிடம் கெஞ்சலாகக் கூறினாள். ரந்திர் சிங்கின் பாசக்கார நெஞ்சம் தாங்குமா? என்ன செய்தால் மகளைத் தன்னுடனேயே வைத்துக் கொள்ளலாம் என்று யோசிக்க ஆரம்பித்தார்.

அதற்கேற்ப வரன் ஒன்று வந்தது. நல்ல வசதியான மாப்பிள்ளைதான். ஆனால் அழகைப் பொருத்தவரை கோபிந்த் கவுருக்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாதவர். சீக்கியர்களுக்கே உரிய கம்பீரமெல்லாம் இல்லாதவர். நோஞ்சான். புட்டா சிங் என்பது அவர் பெயர். கபுர்தலாவிலிருந்து பத்து மைல் தொலைவிலுள்ள கிராமமான கர்தார்பூரைச் சேர்ந்தவர். இப்படிப்பட்ட ஒரு மாப்பிள்ளையைத்தான் ரந்திர் சிங்கும் தேடிக் கொண்டிருந்தார். அவர், மாப்பிள்ளை வீட்டாரிடம் ஒரே ஒரு விதிமுறையை மட்டும் முன் வைத்தார்.

'என்னால் என் செல்ல மகளைப் பிரிந்திருக்க முடியாது. அவளை என் அரவணைப்பிலேயே வைத்துக் கொள்ள விரும்புகிறேன். எனவே அரண்மனையோடு மாப்பிள்ளையாக இருக்க தங்கள் மகனைக் கொடுக்கத் தயாரா?'

அவர்களுக்கென்ன, தங்கள் மகனுக்கு அரண்மனை வாழ்க்கை கிடைக்கப் போகிறதே என்று சந்தோஷத்துடன் சம்மதித்தார்கள். கபுர்தலாவில் தந்தையுடனேயே இருக்கலாம் என்ற காரணத்தினால் ராஜகுமாரியும் திருமணத்துக்குச் சம்மதித்தாள். எல்லாம் வல்ல குருவின் திருவருளால் கல்யாண வைபோகம் இனிதே நடந்தேறியது.

ரந்திர் சிங், தன் மகளுக்கும் மருமகனுக்குமென தனி அரண்மனை ஒன்றை ஒதுக்கினார். அந்த அரண்மனைக்கு ஒரே ஒரு நுழைவாயில்தான் உண்டு. அதன் வழியேதான் உள்ளே செல்லவோ, வெளியே வரவோ முடியும். அரண்மனைப் பணியாளர்கள், ராஜ குடும்பத்தினர் தவிர வேறு யாரும் உள்ளே செல்ல முடியாது. அமைச்சர்கள்கூட அனுமதிக்கப்பட மாட்டார்கள். வெளியே காவல் அவ்வளவு பலமாகப் போடப்பட்டிருந்தது.

ராஜகுமாரியின் அந்த அரண்மனையிலேயே மிகவும் அழகான இடம் ஷா நிஷீன் (Shah Nisheen). பால்கனி என்றால் எளிதாகப் புரியும். ராஜகுமாரி உபயோகப்படுத்தியதால் கன்னி மாடம் என்றும் சொல்லலாம். பொதுவாக மகாராஜா ரந்திர் சிங், அங்கு நின்றபடி மற்றவர்களுக்குக் காட்சி கொடுப்பார். இப்போது ராஜகுமாரி அதை உபயோகப்படுத்த ஆரம்பித்திருந்தார். ராஜகுமாரி அங்கு வந்து அமருவதால், பால்கனியில் சில திரைச்சீலைகள் தொங்க விடப்பட்டிருந்தன. கீழிருந்து பார்க்கும் யாரும் ராஜகுமாரியைப் பார்க்க முடியாது. ஆனால் அங்கு அமர்ந்து ராஜகுமாரி எல்லோரையும் பார்க்கலாம்.

திருமணமான புதிதில் ராஜகுமாரியின் கணவரும் அங்கு வந்து நிற்பதுண்டு. ஆனால் அவர் எப்போதும் போதையிலேயே இருந்தார். அவரது தாகத்தை எல்லாம் மது தீர்த்துவிட்டது. ஆனால் ராஜகுமாரியின் தாகத்தை அவரால் தீர்க்கமுடியவில்லை★. விளைவு? அவரை வெறுத்து ஒதுக்கத் தொடங்கினாள் கோபிந்த் கவுர். அந்தக் கவலையில் மேலும் மேலும் மது அருந்தத் தொடங்கினார் அவர். தினமும் சண்டை, பிரச்னை.

---

★ இருவருக்கும் பிறந்த குழந்தை ஒன்று உண்டு என்றும் சொல்லப்படுவதுண்டு.

ஒருநாள், பால்கனியில் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டு இருந்தாள் கோபிந்த் கவுர். ஒரு கட்டுமஸ்தான இளைஞன், வெளியில் வாயிற்காவலனிடம் பேசிக் கொண்டிருந்தான். அவனைக் கண்டதுமே, எல்லை மீற அவளது மனம் துடித்தது. தன்னுடைய பணிப்பெண்ணை அழைத்தாள். வாயிற்காவலனுக்கு லஞ்சம் கொடுத்து, எப்படியாவது அந்த இளைஞனை உள்ளே அழைத்துவரும்படி உத்தரவிட்டாள். எல்லாம் அவள் நினைத்தபடியே நடந்தது.

இம்மாதிரியான விஷயங்கள் தொடர்ந்து நடந்தன. ஒருநாள் கொஞ்சூண்டு போதை தெளியவே, அரண்மனை மாப்பிள்ளைக்கு கோபம் பொத்துக் கொண்டு வந்தது. தன் மனைவியிடம் சென்று எகிறினார். ‘போயா, சரிதான்’ என்று அவள் அலட்சியப்படுத்தவே, கொஞ்ச நஞ்சமிருக்கும் தன்மானத்தையும் தக்கவைத்துக் கொள்வதற்காக அரண்மனையிலிருந்து வெளியேறினார் புட்டா சிங். பக்கத்து ஊருக்குச் சென்று தனிக்குடித்தனத்தை ஆரம்பித்தார்.

எல்லா விஷயங்களும் மகாராஜா ரந்திர் சிங்குக்கும் தெரியும். மகள்மீது தப்பில்லை, இப்படி ஒரு மாப்பிள்ளையைக் கட்டிவைத்தது என் தப்புதான் என்று தனக்குள்ளேயே வருத்தப்பட்டு பாரம் சுமந்தார். மகளை நேரடியாகக் கண்டிப்பதற்கு அவருக்கு மனமில்லை. இருந்தாலும் தவறுகள் தொடராமலிருக்க, ராஜகுமாரியின் அரண்மனைக் காவலை மேலும் பலப்படுத்தினார். ருசி கண்ட ராஜகுமாரிப் பூனை சும்மா இருக்குமா என்ன? பல்வேறு விதங்களில் காவலாளிகளின் கண்ணில் மண்ணைத் தூவியும், சில சமயங்களில் அவர்கள் உறுதுணையோடும், வெகுசில சமயங்களில் அவர்களது துணையோடும் தன்னுடைய பசியைச் தீர்த்துக் கொண்டாள் ராஜகுமாரி.

இனி பிரதம அமைச்சர் குலாம் கிலானியின் கதைக்கு வருவோம். கிலானி மற்றவர்களின் பார்வைக்கு சர்வாதிகாரியாக இருந்தாலும், பெண்களின் பார்வைக்கு சர்வ லட்சணமும் பொருந்திய காதல் மன்னனாகத்தான் தெரிந்தார். அவருக்கு ஏகப்பட்ட மனைவிகள். அவரும் அனைத்து வசதிகளும் பொருந்திய அரண்மனை ஒன்றில்தான் வாழ்ந்தார். உல்லாசலோகமாக அந்தப்புரம் ஒன்றும் அதில் இருந்தது. அந்த அரண்மனை தவிர தன் அலுவல்களைக் கவனிக்க தனி அலுவலகம் ஒன்றையும் வைத்திருந்தார். அதனை அலுவலகம் என்றும் சொல்லலாம். மினி அரண்மனை என்றும் சொல்லலாம். அதன் பெயர் திவான் கன்னா அரண்மனை. அங்கிருந்தபடிதான் எல்லா வேலைகளையும் கவனித்து வந்தார்.

ராஜகுமாரியின் அரண்மனைக்கும், கிலானியின் அரண்மனைக்கும் இடைப்பட்ட தூரம் கிட்டத்தட்ட அரை மைல் மட்டுமே. ராஜகுமாரியின் அரண்மனையை அடிக்கடி கடந்து சென்றிருந்தாலும், கிலானி அதுவரை அவளைப் பார்த்தது கிடையாது. ஒருமுறை மகாராஜா ரந்திர் சிங், ராஜகுமாரியைப் பார்க்க அவளது அரண்மனைக்கு வந்திருந்தார். அந்தச் சமயத்தில் கிலானிக்கும் மகாராஜாவிடம் பேச வேண்டிய அவசர ஜோலி ஒன்று இருந்தது. மகாராஜா, ராஜகுமாரியின் அரண்மனையில்தான் இருக்கிறார் என்று தெரிந்துகொண்ட கிலானி அங்கே சென்றார். அதற்குள் மகாராஜா அங்கிருந்து கிளம்பியிருந்தார்.

அப்போது பால்கனியில் நின்று கொண்டிருந்தாள் ராஜகுமாரி. தலைக்குக் குளித்துவிட்டு கூந்தலை உலர்த்திக் கொண்டிருந்தாள். அப்போது பால்கனியில் திரைகள் எதுவுமில்லை. கீழே நின்று கொண்டிருப்பவர்களுக்கும் ராஜகுமாரியின் தரிசனம் கிடைத்தது. கிலானிக்கும்.

‘இவ்வளவு அழகான பெண்ணா ராஜகுமாரி? இத்தனை நாள்கள் ஏன் என் கண்ணில் படவில்லை? அதனால்தான் இந்தப் பதுமையை இப்படியொரு பாதுகாப்பான அரண்மனையில் பதுக்கி வைத்திருக்கிறாரா மகாராஜா. இருக்கட்டும், இருக்கட்டும்.’ தனக்குள்ளேயே நினைத்துக் கொண்டார் கிலானி. அவர் நினைத்தால் அரண்மனைக்குள் அதிரடியாக பிரவேசித்து, ராஜகுமாரியிடம் ரொமான்ஸ் செய்யலாம்தான். வேண்டாம், மகாராஜாவுக்குத் தெரிந்தால் பிரச்னை ஆகிவிடும் என்று நினைத்து அங்கிருந்து கிளம்பினார். எப்படி அவளைத் தனியாகச் சந்திக்கலாம் என்று அவரது மூளை திட்டம் போட ஆரம்பித்திருந்தது.

அந்த நேரத்தில் ராஜகுமாரியின் பார்வையிலும் அந்த வளர்ந்த மனிதர் பட்டிருந்தார்.

‘யாரவர்?’ என்று தன் பணிப்பெண்ணிடம் கேட்டாள் கோபிந்த் கவுர்.

‘அவர்தான் நம் சமஸ்தான பிரதம மந்திரி கிலானி’ என்றாள் பணிப்பெண். எப்படி அவரை நம் அரண்மனைக்குள் வரவழைக்கலாம் என்று யோசிக்க ஆரம்பித்திருந்தாள் ராஜகுமாரி.



# காதல் சுரங்கப்பாதை

கன்னி மாடத்தில் ராஜகுமாரி கோபிந்த் கவுரைப் பார்த்த கணத்திலிருந்து, பிரதம அமைச்சர் குலாம் கிலானிக்கு சோறு, ரொட்டி, ஷாம்பெயின் எதுவுமே உள்ளுக்குள் இறங்கவில்லை. கபுர்தலா சமஸ்தானத்தைப் பொருத்தவரை மகாராஜா ரந்திர் சிங் எடுக்கும் முடிவுகளை மாற்றும் அதிகாரம் கிலானிக்கு உண்டுதான். அது அரசாங்க விஷயங்களில். இது அந்தரங்க விஷயமாயிற்றே.

'மகாராஜா மாமா, மகாராஜா மாமா, நீ பெத்த பொண்ணு பொண்ணே இல்லை, தேவதை! அநியாயத்துக்கு அழகா இருக்குறா. தயவுசெஞ்சு அவளை என்கிட்ட தந்துவிடேன்' - கேட்க முடியுமா என்ன? இனப்பிரச்னை, மதப்பிரச்னை எல்லாம் முட்டிக் கொண்டு நிற்குமே. ராஜகுமாரியோ நெருங்கவே முடியாத அரண்மனை யில் ஏகப்பட்ட காவல்களுடன் வாழுகிறாள். நேரில் சென்றால் பிரச்னை ஆகும். ஆனால் எப்படியாவது விருப்பத்தை மட்டுமாவது செய்தியாகச் சொல்லி விடலாம். சம்மதித்தால் சந்தோஷம். 'அய்யய்யோ, பிரதம அமைச்சர் சண்டாளன் என்னை அபகரிக்கப் பார்க்கிறான்' என்று அவள் விஷயத்தை வெட்ட வெளிச்ச மாக்கிவிட்டால்? பெருத்த அவமானமாயிற்றே. யோசிக்க யோசிக்க கிலானிக்குத் தூக்கமே வரவில்லை.

ராஜகுமாரியும் தனது அரண்மனை மஞ்சத்தில் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தாள். அவளது நினைப்பில் எல்லாம் பிரதம அமைச்சரது முகம் நிழலாடிக் கொண்டிருந்தது. யாருக்கும் தெரியாமல் ரகசியமாக அவளது அறைக்கு ஆண்கள் வந்துபோவது ஒன்றும் புதிய விஷயமில்லை. ஆனால் இவர் பிரதம அமைச்சராயிற்றே. புறத்தோற்றத்தில் வல்லவராக இருக்கிறார்.

அகத்தோற்றத்தில் நல்லவராக இருந்து, ஆசைக்கு அடிபணிய மறுத்துவிட்டால்? விஷயம் மகாராஜாவின் காதுகளுக்குச் சென்றுவிட்டால்? நினைக்க நினைக்க அவளது மனத்தை பயம் சூழ ஆரம்பித்திருந்தது.

கிலானியின் அரண்மனையான திவான் கன்னாவை இதற்கு முந்தைய பிரதம அமைச்சர்கள் யாரும் குடியிருப்பதற்காகப் பயன்படுத்தியதில்லை. அலுவல்களை கவனிக்க மட்டுமே உபயோகித்தனர். ஆனால் கிலானி, அங்கு இரவுகளிலும் தங்க ஆரம்பித்தார். காரணம் ராஜகுமாரி. திவான் கன்னா அரண்மனையின் உப்பரிகையிலிருந்து பார்த்தால், ராஜகுமாரியின் அரண்மனை நன்றாகவே தெரியும். எப்போதாவது ராஜகுமாரி அரண்மனையை விட்டு வெளியே செல்லுகிறாளா என்று கண்காணிப்பதற்காகவே கழுகுபோலத் காத்திருந்தார் கிலானி.

அது ஒரு மாலைப் பொழுது. ராஜகுமாரியின் அரண்மனை வாசலில், இரண்டு குதிரைகள் பொருத்தப்பட்ட வண்டி ஒன்று வந்து நின்றது. சிறிது நேரத்தில் பணிப்பெண்கள் சிலர் வெளியே வந்தார்கள். அவர்களது கைகளில் உயர்த்திப் பிடிக்கப்பட்ட திரை. அதற்குள் யாரோ இருப்பதை கிலானியால் உணர முடிந்தது. வண்டி லேசாகக் குலுங்கியது. திரையைச் சுருட்டி வைத்த பணிப்பெண்கள் வண்டியின் பின்புறத்தில் ஏறிக்கொண்டார்கள். அது கிளம்பியது. சில மணி நேரங்கள் கழித்து மீண்டும் அரண்மனை வாசலில் வந்து நின்றது. பணிப்பெண்கள் மீண்டும் திரையோடு நின்றார்கள். யாரோ இறங்க, வண்டி லேசாக அசைந்தது. திரையை உயர்த்திப் பிடித்தபடியே பணிப்பெண்கள் அரண்மனைக்குள் சென்றார்கள். கிலானி, எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தார்.

மூன்று நாள்கள் தொடர்ந்து வேவு பார்த்தார். கிட்டத்தட்ட அதே நேரத்தில் பணிப்பெண்கள், திரை, குதிரை வண்டி சமாசாரங்கள் தொடர்ந்தன. ராஜகுமாரிதான் தினமும் எங்கேயோ வெளியே சென்று வருகிறாள் என்பதைப் புரிந்து கொண்டார் கிலானி. அவள் செல்லு மிடத்தைத் தெரிந்துகொண்டு அங்கே சென்று பேசலாமா என்று யோசித்தார். இருந்தாலும் நேரடியாக ராஜகுமாரியை அணுகுவது கொஞ்சம் ஆபத்தானதாகவே தோன்றியது. யார் மூலமாவது தூண்டில் போட்டுப் பார்க்கலாமா என்று அவர் யோசித்துக் கொண்டிருந்தபோதே, ராஜகுமாரியின் அரண்மனைக்குள் இருந்து ஒரு பணிப்பெண் வெளியே வந்தாள்.

கிலானி ஒரு நொடிகூடத் தாமதிக்கவில்லை. தன் குதிரையில் ஏறினார். பணிப்பெண் சென்ற பாதையில் குதிரையைச் செலுத்தினார். தூரத்தில் சென்றுகொண்டிருந்த பணிப்பெண்ணை நெருங்கினார். குதிரையிலிருந்து குதித்தார். அவளது கண்களில் மிரட்சி தெரிந்தது. அங்கு வேறு யாருமே இல்லை. எனவே வெளிப்படையாகவே பேச்சை ஆரம்பித்தார் கிலானி.

'உன் பெயரென்ன?'

'மௌலோ.'

'நீ ராஜகுமாரியின் பணிப்பெண்ணா? ராஜகுமாரிக்கு நெருக்கமானவளா? எவ்வளவு நாள்களாகப் பணிபுரிகிறாய்?'

'சிறு வயதிலிருந்தே. நான் ராஜகுமாரியின் நெருங்கிய தோழி' - சொல்லும்போது மௌலோ வின் கண்களில் பெருமிதம் பெருகி நின்றது. கிலானி தனது பையிலிருந்து ஒரு சில தங்க நகைகளை எடுத்து, அவளது கைகளில் திணித்தார். அவள் அதிர்ந்து நின்றாள்.

'பயப்படாதே மௌலோ. எல்லாம் உனக்குத்தான். உன்னால் எனக்கொரு காரியம் ஆக வேண்டும். நான் ராஜகுமாரியைச் சந்திக்க விரும்புகிறேன். ரகசியமாக. தனிமையில். நீதான் இது குறித்து ராஜகுமாரியிடம் பேச வேண்டும். ஏற்பாடு செய்ய வேண்டும். நான் யார் தெரியுமா? சமஸ்தானத்தின் பிரதம அமைச்சர்.'

மௌலோ அதிர்ச்சி குறையாமல் வாயடைத்து நின்றாள். அந்தரங்கத் தோழி என்பதால், அவளுக்கு ராஜகுமாரியின் எல்லா நடவடிக்கைகளும் தெரியும். பல லீலைகளுக்கு இவளே உறுதுணையாகவும் இருந்திருக்கிறாள். மேலும் பிரதம அமைச்சர் குறித்து, சமீபத்திய நாள் களில் ராஜகுமாரி மற்றவர்களிடம் கேட்டறிந்து கொண்டதும் மௌலோவின் ஞாபகத்துக்கு வந்தது.

'காரியத்தைக் கச்சிதமாக முடித்தால் நீ நினைத்தே பார்க்க முடியாத பரிசுகளை உனக்குக் கொடுப்பேன். ஆனால் விஷயம் வெளியே தெரிந்தால், அதற்கும் பரிசுகள் கிடைக்கும். நினைவில் வைத்துக் கொண்டு ஜாக்கிரதையாக நடந்துகொள். நாளை இதே சமயத்தில் இதே இடத்தில் உன்னைச் சந்திக்கிறேன். நல்ல பதிலோடு வா' சொல்லிவிட்டு குதிரையிலேறி விரைந்தார் கிலானி.

மௌலோ, தன் வீட்டுக்குச் செல்லாமல் மீண்டும் ராஜகுமாரியின் அரண்மனைக்கே திரும் பினாள். மௌலோ சொல்லச் சொல்ல ராஜகுமாரியின் முகத்தில் சந்தோஷத்தின் சாரல் மழை. அந்த நொடியே கிலானியைச் சந்திக்க வேண்டுமென்று தோன்றியது அவளுக்கு. ஆனால் சில விஷயங்களில் அவசரப்படுதல் ஆகாதல்லவா. ஒரு பிரதம மந்திரி, ராஜகுமாரியைத் தனியாகச் சந்திக்கும் விஷயம் வெளியே தெரிந்தால், அது பல எதிர்விளைவுகளை உண்டாக்குமே. பயந்தாள். 'சந்திப்பதில் விருப்பம்தான், ஆனால் பயமாக இருக்கிறது' என்று மௌலோவிடம் சொல்லி அனுப்பினாள்.

விருப்பம் என்ற வார்த்தையே கிலானிக்குள் பல நூறு குதிரைகளை உற்சாகமாக ஓட விட்டிருந்தது. மௌலோவின் மூலமாகத் தினம் தினம் பேச்சுவார்த்தைகள் தொடர்ந்தன. இருவரும் சந்திப்பதற்காக புதிய திட்டம் ஒன்று உருவாகியிருந்தது. தனக்கு மிகவும் நம்பகமான வேலையாள்கள் இருவரை வரவழைத்தார் கிலானி. செய்ய வேண்டிய வேலையை விளக்கமாகக் கூறினார். உடனே முடிய வேண்டும் என்று கட்டளையிட்டார். அன்று இரவே வேலை ஆரம்பமானது. என்ன வேலை?

கிலானியின் அலுவல் அறையிலிருந்து, ராஜகுமாரியின் அரண்மனையிலுள்ள அவளது அந்தரங்க அறைக்குச் செல்வதற்கான சுரங்கப் பாதை அமைக்கும் பணி. பொதுவாகவே சுரங்கப்பாதை இல்லாத அரண்மனைகளே கிடையாது என்று சொல்லலாம். அடுத்த இரண்டு நாள்களுக்கு தனது அலுவலகத்துக்கு விடுமுறை அறிவித்தார் கிலானி. எனவே அமைச்சர் களோ, வேறு அதிகாரிகளோ, அலுவலர்களோ கிலானியைத் தேடி அங்கு வரவில்லை. ராஜ குமாரியும் திட்டமிட்டபடியே அந்த இரண்டு நாள்களும் மகாராஜா நிஹால் சிங்கின் அரண் மனைக்குச் சென்று தங்கிக் கொண்டாள். எனவே அவளது அரண்மனையில் பெயருக்கு ஒன்றிரண்டு காவலர்கள் மட்டுமே இருந்தனர். வேலை ஜரூராக நடந்தது. அந்த 'காதல் சுரங்கப் பாதை' சொன்ன நேரத்தில் தயாராக இருந்தது.

மூன்றாவது நாள். தனது மிகப்பெரிய அலுவல் அறையின் மையத்தில் பரந்து கிடக்கும் பெர்சிய மெத்தையில், ஏகப்பட்ட வெள்ளைத் தலையணைகள் மேல் சாய்ந்து

உட்கார்ந்திருந்தார் கிலானி. அருகிலேயே ஹூக்கா என்றழைக்கப்படும் நீண்ட பைப் உடைய புகைபிடிக்கும் கருவி. அந்த அறைக்குள் கிலானி அழைக்காமல் யாருமே நுழையக்கூடாது என்பது விதி. அலுவலகக் கோப்புகள் எல்லாம் பெர்சிய மொழியிலேயோ அல்லது உருது மொழியிலேயோதான் எழுதப்பட்டிருக்கும். முகலாயர் காலப் பழக்கம். எனவே மற்ற அமைச்சர்களும் உருது அல்லது பெர்சிய மொழியை அறிந்துகொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருந்தார்கள்.

கிலானி தன் அறைக்குள் இருந்தபடியேதான் வேலை பார்ப்பார். கட்டளைகளைப் பிறப்பிப்பார். அமைச்சர்களும் அதிகாரிகளும் கிலானியின் அறைக்கு வெளியே நின்று சத்தமாக, அலுவல் விஷயங்களைக் கூறுவார்கள் அல்லது கோப்புகளை வாசிப்பார்கள். அறையின் வாசலில் ஒரு பெரிய மறைப்பு வைக்கப்பட்டிருக்கும். அதனால் அவர்களால் கிலானியைப் பார்க்க முடியாது. அமைச்சர்களின் கேள்விக்கு இஷ்டமிருந்தால் உள்ளிருந்தபடியே பதில் சொல்லுவார் கிலானி. இதுதான் நடைமுறையாக இருந்தது.

அன்றும் அரசாங்க அலுவல்கள் மும்முரமாக நடந்துகொண்டிருந்தன. சில அமைச்சர்கள் வெளியில் நின்றபடியே ஏதேதோ கேட்டார்கள். 'ம்', 'சரி', 'வேண்டாம்', 'ம்ஹூம்' என்ற ஒரு வார்த்தை பதில்களை மட்டும் உள்ளிருந்தபடி கூறிக்கொண்டு இருந்தார் கிலானி. அடுத்ததாக ஒரு காவல் அதிகாரி வந்தார். ஒரு கொலை விவகாரம் பற்றிய வழக்கை விவரமாக எடுத்துக் கூற ஆரம்பித்தார். சிறையில் அடைக்கப்பட்டிருக்கும் ஆள்மேல் தவறில்லை, அவனை விடுதலை செய்துவிடலாமா என்று கேட்டார் அந்த அதிகாரி. அறைக்குள் இருந்து பதிலே வரவில்லை. மேலும் சிறிது நேரம் காத்திருந்தார். அப்போதும் பதில் வரவில்லை. எனவே அந்த ஆளை விடுதலை செய்வதில் பிரதம அமைச்சருக்கு விருப்பமில்லை என்று முடிவுசெய்து கொண்டு அங்கிருந்து கிளம்பினார் காவல் அதிகாரி.

அப்போது உண்மையில் கிலானி தன் அறையிலேயே இல்லை. அவரது அறையின் இருக்கும் ஒரு அலமாரியை நகர்த்தி வைத்துவிட்டு, அதற்குக் கீழ்புறம் இருக்கும் வாசல் வழியாக சுரங்கத்துக்குள் இறங்கியிருந்தார். கையில் ஒரு தீப்பந்தம். அவரது கால்கள் ராஜகுமாரியின் அறை நோக்கி மன்மத நடை போட்டுக் கொண்டிருந்தன. மௌலோ வழியாக ஏற்கெனவே ராஜகுமாரிக்குத் தகவல் சொல்லப்பட்டிருந்தது. அவளும் தனது பிரதமக் காதலருக்காகப் படு ஆவலோடு தனிமையில் காத்திருந்தாள்.

எத்தனை நாள் திட்டம், எவ்வளவு கஷ்டப்பட்டு உருவாக்கிய சுரங்கப்பாதை, இதோ என் ராஜ தேவதை இருக்கும் அறையின் வாசலை நெருங்கிவிட்டேன். என்னுடைய இத்தனை நாள் ஆசை இன்று, இந்தக் கணம் நிறைவேறப்போகிறது. முகமெல்லாம் மகிழ்ச்சி கொப்பளிக்க, சுரங்கத்தின் மறுபுறக் கதவை மெதுவாகத் தட்டினார் கிலானி. சில நொடிகளில் அது திறக்கப்பட்டது. திறந்தவள் ராஜகுமாரிதான். கிலானியைக் கண்டதும் மலர்ந்தாள். வெட்கத்தோடு கையை நீட்டினாள். அவளது கரம் பற்றி மேலே ஏறிய கிலானி, அநாவசியமாக வார்த்தைகளுக்கு வேலை வைக்கவில்லை. அவளை அள்ளினார். நிமிடங்கள் கரைந்தன.

தன் அலுவலக அறைக்குத் திரும்பினார் கிலானி. வெளியே நிதி அமைச்சர் ஏதோ ஓர் அறிக்கையை வாசிக்கும் சத்தம் கேட்டது. 'ம், சரி' என்று குரல் கொடுத்தார் கிலானி. 'மீதி வேலைகளை நாளை பார்த்துக் கொள்ளலாம்' என்று எல்லோரையும் அனுப்பி வைத்தார். கிலானியின் சுரங்கப் பாதை சல்லாபங்கள் தினமும் நடந்தன. வெளிப்பார்வைக்கு அலுவல் வேலை. ஆனால் உண்மையில் ராஜகுமாரிக்கு அந்தரங்க சேவை தொடர்ந்தது.

அன்றும் அப்படித்தான். அலுவல் நேரம் ஆரம்பித்த கணமே கிலானிக்கு ராஜகுமாரி போதை தலைக்கேறியது. எதையும் யோசிக்காமல் அலமாரியைத் தள்ளிவைத்துவிட்டு, சுரங்கப் பாதைக்குள் குதித்தார். ராஜகுமாரி முன் உதித்தார். ஆனால் அவரது அறைக்கு வெளியே அனைத்துத் துறை அமைச்சர்களும் கூடியிருந்தார்கள். அன்று ஒரு முக்கியமான மீட்டிங். எல்லோரும் பேசினார்கள். கேள்விகள் கேட்டார்கள். உள் அறையிலிருந்து பிரதம அமைச்சரின் பதில்தான் வரவில்லை. ஒரு மணி நேரத்துக்கும் இதே நிலை தொடரவே எல்லோருக்குள்ளும் சந்தேகம் சாமியாட ஆரம்பித்தது. ஆனால் யாருக்கும் உள்ளே சென்று பார்க்கும் தைரியம் இல்லை. ஒருவழியாக தன் தைரியத்தை எல்லாம் திரட்டிக் கொண்டு, கிலானியின் அறைக்குள் சென்று பார்க்கலாம் என்று தன் இருக்கையை விட்டு எழுந்தார் நிதி அமைச்சர். அவர் கிலானியின் அறையை நெருங்கும் வேளையில் 'வேறு என்ன செய்தி?' என்று உள்ளிருந்து கிலானியின் குரல் ஒலித்தது. வெலவெலத்துப் போன நிதி அமைச்சர் ரிவர்ஸ் கியரில் தன் இருக்கையில் வந்து விழுந்தார்.

அவை தொடர்ந்து நடந்தது. ஆளாளுக்கு விட்ட இடத்திலிருந்து பேச ஆரம்பித்தார்கள். கிலானியும் அவ்வப்போது பதில் கூறிக் கொண்டிருந்தார். அப்போது கிலானிக்கு ஒரு சத்தம் கேட்டது. சத்தம் அவரது அறையிலிருந்துதான் வந்தது. கூர்ந்து கவனித்தார். அலமாரிக்குக் கீழிருந்துதான் சத்தம். தயங்கித் தயங்கிச் சென்று, அலமாரியை நகர்த்தி வைத்தார். சுரங்கத்தின் வாசலைத் திறந்தார். ராஜகுமாரி கோபிந்த் கவுர் நின்று கொண்டிருந்தார். அவள் கையை நீட்டினாள். இவர் தூக்கிவிட்டார்.

'நீ எதுக்கு வந்த?' - அதிர்ச்சியும் ஆச்சரியமும் கலந்த கிசுகிசுப்பான குரலில் கேட்டார்.

'உங்களைப் பார்க்கணும் போல இருந்துச்சு' கிக்கான குரலில் அவளிடமிருந்து பதில் வந்தது.



# ஜல் ஜல்சா ஜலந்தர்

*‘நீங்கள் மட்டும் நினைத்த நேரத்தில் எல்லாம் என் அறைக்கு வந்து செல்லு கிறீர்கள். நானும் ஒருமுறை உங்கள் அலுவலக அறைக்கு வந்து கலவரப்படுத்த லாம் என்றுதான் இப்போது வந்தேன்’ என்று கண்ணடித்துச் சிரித்தாள் ராஜகுமாரி கோபிந்த் கவுர்.*

*‘அட, இதுகூட நன்றாகத்தான் இருக்கிறது’ என்று கிசுகிசுப்பான குரலில் கூறி விட்டு, ராஜகுமாரியின் கன்னங்களை நோக்கித் தன் உதடுகளை அனுப்பினார் பிரதம மந்திரி குலாம் கிலானி.*

*வெளியே ஓர் அதிகாரி தன் கடமை தவறாமல் ராஜாங்க அறிக்கைகளைச் சத்தம் போட்டு வாசித்துக் கொண்டிருந்தார். அறையின் மையத்தில் பரப்பப்பட்டிருந்த மெத் மெத் பெர்சிய கம்பளத்தின் மீது ராஜகுமாரியை அமர வைத்த கிலானி, அவளது அழகை வாசிக்க ஆரம்பித்தார். கிலானியின் ஹூக்கா பைப்பை எடுத்து புகையை உள்ளிழுத்து, அவரது முகத்தில் ஊதினாள் ராஜகுமாரி. இரண்டு வெள்ளிக் கோப்பைகளை எடுத்து வந்தார். அதில் சோமபானத்தை ஊற்றினார். ராஜகுமாரி தன் சௌந்தர்ய விரல்களால் கோப்பையை எடுத்துக் கிலானிக்கு ஊட்டினாள். கிலானி ராஜகுமாரிக்கு ஊட்டினார். அந்த அறையில் காதலின் போதையும் மதுவின் போதையும் ஒன்றை ஒன்று மிஞ்சியபடியே வலம் வந்தன.*

*உள்ளே கோப்பைகளும் கோப்பைக்காரர்களும் உரசிக் கொண்டிருக்க, பிரதம மந்திரியின் அறைக்கு வெளியே கோப்புகளோடு குத்த வைத்துக் கொண்டு*

இருப்பவர்களுக்கு என்ன தெரியும்? நீண்ட நேரமாக உள்ளிருந்து சிறு சத்தம்கூட வராததால் அமைச்சர்களும் அதிகாரிகளும் குழம்பிப் போனார்கள். 'ஒருவேளை அறையை விட்டு கிளம்பிப் போயிருப்பாரோ?' என்று கிசுகிசுத்தார் ஒருவர். 'ம்ஹூம், தூங்கியிருப்பார்' என்றார் மற்றொருவர். 'அதெல்லாம் இல்லை. போதை ஏறி மயங்கியிருப்பார்' என்று ஆணித் தரமாக மெல்லிய குரலில் சொன்னார் இன்னொருவர். 'நம் தலையெழுத்து. உள்ளே ஆள் இருக்கிறாரா, விழித்துக் கொண்டு இருக்கிறாரா என்றெல்லாம் தெரியாமலேயே இப்படி உட்கார்ந்து வெட்டியாகப் பேசிக் கொண்டிருக்கிறோம். உள்ளிருந்து பதில் வரும்வரை இங் கிருந்து கிளம்பிச் செல்லவும் முடியாது. என்ன பிழைப்பு இது?' - மிகவும் நொந்துகொண்டார் ஓர் அமைச்சர். மற்றவர்கள் அவரது கருத்தை மௌனமாக வழிமொழிந்தார்கள்.

அடுத்த அரைமணி நேரத்துக்கு யாரும் எதுவும் பேசவில்லை. உள் அறையில் இருந்து தப்பித் தவறி ஏதாவது சத்தம் வருகிறதா என்று கேட்பதற்காகக் காதைத் தீட்டி வைத்துக்கொண்டு அமைதியாக இருந்தார்கள்.

'நான் கிளம்புகிறேன். நேரம் ஆகிறது' என்றாள் ராஜகுமாரி. 'கிளம்பத்தான் வேண்டுமா? இன்னும் கொஞ்ச நேரம் இருந்துவிட்டுப் போயேன்' என்று அவள் மடிமீது தலைவைத்துப் படுத்திருந்த கிலானி கொஞ்சல் குரலில் சொன்னார். 'அய்யய்யோ, இன்று என்னைக் காண மகாராஜா வருவார். அந்த நேரத்தில் நான் என் அறையில் இல்லையென்றால் பிரச்னை ஆகி விடும். நாளை மீண்டும் சந்திக்கலாம். இப்போது விட்டுவிடுங்கள். சரியா?' ராஜகுமாரி. மடியில் இருந்து எழாமல் அடம்பிடித்தார் கிலானி. சில நிமிட சில்மிஷ விளையாட்டுகளுக்குப் பிறகு, கிலானியின் பிடியிலிருந்து விடுபட்டு சுரங்கப் பாதையில் இறங்கினாள் ராஜகுமாரி.

'இனி நான் மட்டுமல்ல, நீயும் நினைத்த நேரத்தில் என்னைப் பார்க்க இந்த அறைக்கு வரலாம்' என்றார் கிலானி. புன்னகையைத் தவழ விட்டு, தீப்பந்தத்தோடு நடக்க ஆரம்பித்தாள் அவள். சுரங்கத்தின் வாசலை அடைத்துவிட்டு, கிலானி தன் இருக்கைக்குத் திரும்பினார். 'இறுதியாக வாசித்தீர்களே, அந்த அறிக்கையை மீண்டும் வாசியுங்கள்' என சத்தமாகக் குரல் கொடுத்தார். வெளியே சோர்ந்துபோய் அமர்ந்திருந்தவர்கள், திடீர்க்குரலைக் கேட்டு, உயிர்பெற்று அலுவல்களைத் தொடர்ந்தனர், நொந்த மனத்துடன்.

திங்கள் முதல் ஞாயிறுவரை தன் அலுவலக அரண்மனையிலேயே ஓய்வு ஒழிச்சலின்றி உழைக்க ஆரம்பித்தார் கிலானி. தன்னுடைய பிரத்யேக அரண்மனையையும், அழகு அந்தப் புரத்தையும், அங்கு வாழும் தம் குல மனைவிகளையும் சுத்தமாக மறந்தே போனார். சுரங்கப் பாதையும் அது சார்ந்த இடங்களுமே அவருக்கு சொர்க்கலோகமாகத் தெரிந்தது. ராஜகுமாரியும் வந்துபோக ஆரம்பித்திருந்ததால், இதைவிட வேறென்ன சுகம் வாழ்க்கையில் இருக்கிறது என்று மயங்கிக் கிடந்தார்.

அன்று ராஜகுமாரி, கிலானியின் அறைக்கு வந்திருந்தாள். அலுவலக நேரத்தில்தான். அவளைத் தன் மடிமீது படுக்க வைத்திருந்தார் கிலானி. அவளது விரல்களுக்குச் சொடுக்கு எடுத்துக் கொண்டிருந்தார். 'உங்கள் அறை, என் அறை, சுரங்கப்பாதை. எனக்கு மிகவும் வெறுப்பாக இருக்கிறது.'

'வேறென்ன செய்யலாம் என்கிறாய்?'

'எங்காவது வெளியே செல்ல வேண்டும் போலுள்ளது.'

'ஆபத்தை விலைகொடுத்து வாங்கலாம் என்கிறாயா?'

'உங்கள் அன்புக்காதலி ஆசைப்பட்டுக் கேட்கிறேன். சர்வ அதிகாரம் பொருந்திய பிரதம அமைச்சராக இருந்துகொண்டு என்னுடைய சின்ன ஆசையைக்கூட உங்களால் நிறைவேற்ற முடியாதா என்ன?'

'நீயே வாய்விட்டுக் கேட்டுவிட்டாய். நிறைவேற்றுவது என் கடமை. என்ன செய்ய வேண்டும் என்று சொல்.'

'எத்தனை நாள்கள்தான் அடுத்தவர்களுக்குப் பயந்து பயந்து இப்படித் திருட்டுத்தனமாக சந்தித்துக் கொண்டிருப்பது? என்னைத் தேடி நீங்கள் வந்தாலும் என்னுடன் நீண்ட நேரம் செலவழிக்க முடியவில்லை. உங்களைத் தேடி நான் வந்தாலும் பிரிய மனமில்லாமல் நம் சந்திப்பை அவசரகதியில் முடிக்க வேண்டியதிருக்கிறது.'

'நீ சொல்வது உண்மைதான்.'

'என் ஆசை இதுதான். ஒருநாள் முழுவதும் எந்தப் பயமும் இன்றி, யாருடைய தொந்தரவும் இன்றி பரிபூரண சுதந்தரத்துடன் உங்களுடனேயே நான் இன்பமாகப் பொழுதைக் கழிக்க வேண்டும். அது இங்கு நடக்காது. எங்காவது வெளியே சென்றால்தான் நடக்கும். ஏற்பாடு செய்வீர்களா?'

'என் ராஜகுமாரி வாய்விட்டுக் கேட்டபிறகும் மறுப்பேனா என்ன? எங்கே செல்லலாம்? எப்படிச் செல்லலாம்? நீயே சொல்.'

'உங்களைப் போலச் சாதுர்யமாக யோசிக்கும் திறனெல்லாம் எனக்கில்லை. திட்டமிடுவ தெல்லாம் உங்கள் பொறுப்பு' அவர் மடியிலிருந்து எழுந்து தன் உடையைச் சரிசெய்து கொண்டு சுரங்கப்பாதையை நோக்கிச் சென்றாள் ராஜகுமாரி. அந்த நொடியே திட்டமிட ஆரம்பித்திருந்தார் கிலானி.

ஜலந்தர் நகரத்திலும் பிரதம அமைச்சர் கிலானிக்கு ஒரு வீடு இருந்தது. அந்த வீட்டுக்கும் அவ்வப்போது சென்று வருவார். கபுர்தலாவுக்கும் ஜலந்தர் நகரத்துக்கும் இடைப்பட்ட தூரம் பன்னிரண்டு மைல்கள். தனக்கான குதிரை வண்டியில் செல்வார். சரியான பாதைகள்கூட இல்லாத காலம் என்பதால் ஜலந்தரைச் சென்றடைய இரண்டு மணி நேரங்களாவது பிடிக்கும்.

ஜலந்தருக்கு ராஜகுமாரியை அழைத்துச் சென்றால் என்ன? கிலானிக்கு யோசனை தோன்றியது. எப்போது, எப்படி, எந்த வழியாக அழைத்துச் செல்லலாம் என்று திட்டத்தின் அடுத்தடுத்த படிகளை யோசித்து வைத்துக் கொண்டார் கிலானி. மறுநாள் ராஜகுமாரியை அவளது அறையில் சந்தித்தார். தன் திட்டத்தைக் கூறினார். கேட்டதும் அவளுக்குக் கொள்ளை மகிழ்ச்சி. திட்டத்தை நிறைவேற்றுவதற்கான நாள் குறிக்கப்பட்டது.

அந்த நன்னாளில், தன் பணிப்பெண் மௌலோவை அழைத்தாள் ராஜகுமாரி. 'இதோ பார். நான் யாருக்கும் தெரியாமல் ரகசியமாக வெளியே செல்கிறேன். நாளைதான் திரும்புவேன்.

யார் என்னைப் பார்க்க வந்தாலும் எனக்கு உடல்நிலை சரியில்லை, ஓய்வெடுக்கிறேன், தொந்தரவு செய்ய வேண்டாம் என்று ஏதாவது சொல்லிச் சமாளித்துக் கொள். என் அறையைப் பூட்டியே வைத்திரு. புரிகிறதா?' - வேகவேகமாகத் தலையாட்டினாள் மௌலோ. அவளது உதவியுடன் வேலைக்காரப் பெண் போல உடையணிந்து கொண்டாள் ராஜகுமாரி.

தன்னுடைய அரண்மனை வாசலுக்கு வந்தாள். ராஜகுமாரியை அதற்குமுன் சரிவரப் பார்த்திராததால் காவலாளிகளுக்கு அடையாளம் தெரியவில்லை. வேலைக்காரப் பெண்தான் என நினைத்து எந்தக் கேள்வியும் கேட்காமல் வெளியே அனுப்பினார்கள். மெதுவாக நடந்து பிரதம அமைச்சரின் அரண்மனையை நோக்கி நடந்தாள். அதன் வாசலில் கிலானியின் குதிரை வண்டி நின்று கொண்டிருந்தது. சற்றுத் தள்ளி இரண்டு குதிரைகள் கட்டப்பட்டிருந்தன.

ராஜகுமாரி மெல்ல அந்தக் குதிரைகளின் பக்கம் சென்றாள். கிலானியின் அரண்மனை வாசலில் நின்ற காவலாளிகள் இருவர் 'யாரிவள்? புதிதாக இருக்கிறாளே' என்று குறுகுறுவென பார்த்தனர். எதைப் பற்றியும் கவலைப்படாமல், குதிரைகளின் சாணியை அள்ள ஆரம்பித்தாள் ராஜகுமாரி. பின் அந்த இடத்தைச் சுத்தம் செய்ய ஆரம்பித்தாள். 'புதிதாக வந்துள்ள வேலைக் காரி போல' என்று காவலாளிகள் தங்கள் பார்வையை வேறு பக்கம் திருப்பினார்கள்.

அந்தக் காலத்தில் ஒருவர் உபயோகப்படுத்தும் குதிரை வண்டிகளை வைத்தே அவரது கௌரவத்தைக் கணக்கிட்டுவிடலாம். பிரதம மந்திரியின் வண்டியில் வெளியே வெள்ளித்தகடுகளும், சிலவகைக் கற்களும் பதிக்கப்பட்டிருந்தன. வண்டியின் மையப்பகுதியில் மூடிய அறை ஒன்று இருந்தது. ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களும், மற்ற முக்கிய அமைச்சர்களும் மூடிய வண்டிகளையே உபயோகித்தார்கள். மகாராஜாவின் குதிரை வண்டியில் தங்கத் தகடுகள் பதிக்கப்பட்டிருக்கும். செல்வந்தர்கள், பண்ணையார்கள் எல்லாம் கூரையே இல்லாத குதிரை வண்டியைப் பயன்படுத்தினார்கள். ஓரளவு வசதியானவர்கள் ஒருவர் அல்லது இருவர் அமர்ந்து செல்லக்கூடிய சிறிய வண்டிகளை உபயோகித்தார்கள். யானைகள் இழுக்கும் வண்டிகளைப் பயன்படுத்திய மகாராஜாக்களும் உண்டு. சாமனியர்களின் வாகனம் மாட்டுவண்டி.

மெதுவாக பிரதமரின் குதிரை வண்டியை நெருங்கினாள் ராஜகுமாரி. கையில் வைத்திருந்த துணியைக் கொண்டு, அதனைத் துடைக்க ஆரம்பித்தாள். வண்டியிலிருந்த அறையின் கதவைத் திறந்து உள்ளே ஏறினாள். இருபுறமும் கதவோடு கூடிய இரண்டு ஜன்னல்கள் கொண்ட அறை அது. அவற்றில் அழகான திரைகள் இடப்பட்டிருந்தன. பஞ்சு மெத்தையால் ஆன இருக்கைகள் எதிரெதிரே அமைக்கப்பட்டிருந்தன. அதில் ஓர் இருக்கையைத் தூக்கிப் பார்த்தாள். அதற்குக் கீழே இருந்த பெட்டியில் குதிரைக்கான காய்ந்த புல் நிரப்பப்பட்டிருந்தது. புல்லை எடுத்துக் கொண்டு கீழே இறங்கினாள். குதிரைகளுக்குக் கொடுத்தாள். அந்தச் சமயத்தில் காவலாளிகள் அரண்மனைக்குள் சென்றிருந்தார்கள்.

வேகமாக வண்டிக்குள் ஏறிய ராஜகுமாரி, இருக்கைக்குக் கீழே இருந்த புல் பெட்டிக்குள் இறங்கிப் படுத்துக் கொண்டாள். அவள் மனமெங்கும் பரவியிருந்த பயம், கிலானியை எதிர் பார்த்துக் காத்திருக்க ஆரம்பித்தது.

ஒரு மணி நேரம் ஓடியிருக்கும். மகாராஜா ரந்திர் சிங் கொடுத்த அவசர அலுவல்களை முடித்துக் கொண்டு வந்த கிலானி, தன் வண்டி ஓட்டியிடம் குதிரைகளை வண்டியில் பூட்டச் சொன்னார். வண்டி தயாரான மறுநொடி அதில் ஏறி அமர்ந்தார். 'ஜலந்தருக்குப் போ.

வண்டியை மெதுவாக ஓட்டினால் போதும்' என்று கட்டளையிட்டார். ராஜகுமாரி பெருமூச்சு விடும் சத்தம் அவருக்குக் கேட்டது. இரண்டு குதிரைகளின் எட்டுக் கால்களும் சீராக இயங்க ஆரம்பித்தன.

கபுர்தலாவை விட்டு வெளியேறிய மறுநொடி, பெட்டிக்குள்ளிருந்து வெளியே வந்தாள் ராஜகுமாரி. வியர்வையில் ஊறியிருந்த அவள் முகமெல்லாம் புன்னகை. கிலானி அவளை அணைத்துக் கொண்டார். புகை பிடித்தார்கள். மது அருந்தினார்கள். அவற்றோடு மௌனமாகக் காதலும் செய்தார்கள். அடுத்த இரண்டு மணி நேரத்துக்குப் பயணம் தொடர்ந்தது.

வண்டி, ஜலந்தரை நெருங்கும் வேளையில் மீண்டும் புல் பெட்டிக்குள் இறங்கிப் பதுங்கிக் கொண்டாள் ராஜகுமாரி. வண்டி, கிலானியின் வீட்டை அடைந்தது. அந்த வீட்டில் அப்போது யாரும் இல்லாதபடி பார்த்துக் கொண்டார் கிலானி. சூழ்நிலை பார்த்து யார் கண்ணிலும் படாமல் ராஜகுமாரியைத் தன் வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். மகிழ்ச்சியில் சுதந்தரமாக ஆனந்தக் கூத்தாடியவளை மதுவால் குளிப்பாட்டினார் கிலானி. 'ஓபியம் இருக்கிறதா?' கேட்டாள் அவள். 'உனக்கில்லாததா?' கொடுத்தார் அவர். இருவரும் சந்தோஷத்தின் உச்சத்தை எட்டினார்கள்.

மறுநாள் காலை கபுர்தலாவை நோக்கிய அவர்களது பயணம் ஆரம்பமானது. வேலைக்காரி வேடத்திலேயே மீண்டும் தன் அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள் ராஜகுமாரி. வாரம் ஒருமுறை அவர்களது இந்த ஜலந்தரை நோக்கிய புனிதப் பயணம் அரங்கேறியது. யாருக்கும் சந்தேகம் வரவில்லை. இருந்தாலும் பலநாள் வீரப்பன், ஒருநாள் அகப்பட்டுத்தானே ஆகவேண்டும்.

வினை, வேலைக்காரியின் வடிவில் வந்து சேர்ந்தது.



# 49

# மீண்டும் ஒரு காதல் கதை

பிரதம மந்திரி குலாம் கிலானியின் மேல் வைத்து இருந்த நம்பிக்கையைவிட, தன்னுடைய பணிப்பெண் மௌலோ மீது அதிக நம்பிக்கை வைத்திருந்தாள் கோபிந்த் கவுர். காதல் கண்ணை மறைக்கும்போதெல்லாம் கள்ளத்தனமாகக் கிலானியைச் சந்திக்க உதவியதெல்லாம் மௌலோதான். பல எசகுபிசகான சூழ்நிலைகளில் இருந்து ராஜகுமாரியைக் காப்பாற்றியவளும் மௌலோவேதான். இருக்கட்டுமே. பெண்களிடம் ரகசியம் தங்கியிருக்குமா என்ன?

மௌலோவுக்கு ஒரு காதலன் உண்டு. அவன் பெயர் அமந்த் கான். ராஜகுமாரியின் அரண்மனைச் சமையல்காரன். ராஜகுமாரியின் அரண்மனைக்குள் உலவுபவன் என்பதால் அவ்வப்போது சின்னச் சின்னதாக ராஜகுமாரியைத் தரிசித்தவன். ஒருநாள் வேலைக்காரி வேடமணிந்து ஜலந்தருக்குக் கிளம்பிய ராஜகுமாரி, அமந்த் சிங்கின் பார்வையில் பட்டுவிட்டாள். 'யாரிந்தப் பொண்ணு? பார்த்தா வேலைக்காரி மாதிரியே தெரியலையே. புதுசா வேலைக்குச் சேர்ந்திருப்பாளோ?' - அவனுக்குள் ஏதேதோ கேள்விகள் முளைத்தன.

சிறிது நேரத்தில் தன் காதலனைப் பார்க்க சமையல் கூடத்துக்கு வந்தாள் மௌலோ. பலத்த யோசனையிலிருந்த அவனது முதுகில் தட்டினாள்.

'என்னய்யா யோசிக்கிற?'

'அது ஒண்ணும் இல்லை. நல்ல அழகான ஒரு பொண்ணு. காலையில பார்த்தேன். நம்ம அரண்மனைக்குள்ள. அதான்...'

‘என்ன தைரியம் இருந்தா என்கிட்டயே இன்னொரு பொண்ணைப் பத்தி பேசுவ?’

‘அது இல்லை. அந்தப் பொண்ணைப் பார்த்தா வேலைக்காரப் பொண்ணு மாதிரியே தெரியலை. ஏதோ ரொம்ப வசதியான வீட்டுப் பொண்ணாத் தெரிஞ்சது. நம்ம ராஜகுமாரி மாதிரின்னு வைச்சுக்கோயேன்.’

அமந்த் சிங் அப்படிச் சொன்னதற்குப் பிறகு, மௌலோவின் வாய் சும்மா இருக்கவில்லை. ‘ராஜகுமாரி மாதிரி இல்ல, ராஜகுமாரியேதான்’ என்று சத்தமாகச் சொல்லிவிட்டாள். பின்னர், தன்னைமீறி ரகசியத்தை வெளியிட்டதை உணர்ந்து நாக்கைக் கடித்துக் கொண்டாள். சரி, காதலனிடம்தானே சொல்கிறோம் என்று தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டு, மீதி விஷயங்களையும் அமந்த் சிங்கின் காதுகளுக்குள் கொட்ட ஆரம்பித்தாள். எல்லா வற்றையும் ஒற்றெழுத்துவிடாமல் சொல்லிமுடித்த மௌலோ, ‘யோவ், நான் சொன்னது எதையும் வெளிய சொல்லிடாதே. ஆபத்து. புரிஞ்சுதா?’ என்ற எச்சரிக்கையுடன் முடித்துக் கொண்டாள்.

சத்தமாகப் பேசும் விஷயத்தைவிட, குசுகுசுவெனப் பேசும் விஷயம் வெகு வேகமாகப் பரவு மல்லவா. அமந்த் சிங் அன்று மாலையில் தன் ஆருயிர் நண்பன் அலி முகமதுவைச் சந்தித் தான். காதலி சொன்ன ராஜகுமாரியின் லீலைகளே அவனது நினைப்பில் ஓடிக்கொண்டிருந்தன. தன் ஆருயிர் நண்பனிடம் சொல்லவா, வேண்டாமா என்று தொண்டைக்குழிக்குள் வார்த்தை களை வைத்துக் கொண்டு திணறினான் அமந்த் சிங்.

‘என்னடா நண்பா. ஒரு மாதிரி இருக்கியே. என்ன விஷயம்? என்கிட்ட நீ எதையும் மறைக்க முடியாது’ முகமது தூண்டில் போடவே, அதில் சிக்கினான் அமந்த் சிங்..

‘விஷயம் இருக்குதுதான். ஆனா வெளிய சொல்ல முடியாத விஷயங்கள். ராஜ குடும்பத்து விஷயம். எதையும் யார்கிட்டயும் சொல்ல மாட்டேன்னு நீ எனக்கு சத்தியம் செய்து கொடுத் தேன்னா சொல்லுறேன்.’ - சத்தியம் என்ன புடலங்காய். அனைத்து விஷயங்களையும் கேட்ட முகமது, அதில் நிரம்பியிருந்த கிளுகிளுப்பில் கிறுகிறுத்துப் போனான். ‘நீ என்னை நம்ப லாம்டா. என்னை விட்டு எந்த விஷயமும் வெளிய போகாது. சரியா?’ என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

முகமது சென்ற இடம் சமஸ்தானத்தின் முக்கிய அமைச்சர்களுள் ஒருவரான திவான் ராம் ஜஸ்ஸின் (Ramjas) வீடு. அவரது வீட்டில்தான் வேலைக்காரனாகப் பணியாற்றிக் கொண்டிருந் தான் அவன். ராம்ஜஸுக்கு, மகாராஜா ரந்திர் சிங் மீது ஏகப்பட்ட பிரியம் உண்டு, விசுவாசம் உண்டு. முகமதுக்கு, திவான் ராம்ஜஸ் மீது எக்கச்சக்க அன்பு உண்டு, மரியாதை உண்டு. எனவே எதையும் அவனால் தன் முதலாளியிடம் மறைக்க முடியவில்லை. ‘உனக்கு யார் சொன்னார்கள்?’ என்று கேட்டார் திவான். செய்தியின் வேர்களைச் சொன்னான். மிகவும் நம்பகமான இடத்திலிருந்து வந்த செய்தி. கொதிகொதித்துப் போனார் திவான்.

உடனே வரச் சொல்லித் தனது சக அமைச்சர்களுக்குச் செய்தி அனுப்பினார். தனது வீட்டிலேயே ஒரு ரகசியக் கூட்டத்தைக் கூட்டினார். தான் கேள்விப்பட்ட விஷயங்களை யெல்லாம் பொலபொலவெனக் கொட்டினார். அந்த அறையில் இருந்த எல்லோருக்குமே கோபம் கபாலத்துக்கு ஏறியிருந்தது.

'நம்மளையெல்லாம் என்ன கேணையன்னு நினைச்சுட்டானா அந்தக் கிலானி? தினமும் அவன் அறைக்கு வெளிய பைத்தியக்காரனாட்டம் உட்கார்ந்திருக்கோம். அவன் என்னடான்னா உள்ள குமரிகூட கொஞ்சிக்கிட்டு இருக்கானாம். அதுவும் ராஜகுமாரி கூட. ராஜ துரோகி' ஓர் அமைச்சர் கொந்தளித்தார்.

'இதுக்கு மேல அவனைச் சும்மா விடக்கூடாது. அவனால எத்தனையோ நிரபராதிங்க தண்டிக்கப்பட்டிருக்காங்க. உயிரைக்கூட இழந்திருக்காங்க. இப்படி ஒரு பிரதம அமைச்சரை இத்தனை நாள் விட்டு வைச்சதே பெரிய பாவம். விஷயம் மட்டும் வெளிய தெரிஞ்சா பொதுமக்களே அவனைக் கொன்னு போட்டுடுவாங்க' - இன்னொருவர் குமுறினார்.

'வேண்டாம், ராஜகுமாரியும் இதுல சம்பந்தப்பட்டு இருக்கறதால நாம சத்தம் போடாம அவனைக் காலி பண்ணனும். நம்ம மகாராஜா, கிலானியை ரொம்பவே நம்பிக்கிட்டிருக்காரு. அதனால விஷயம் அவர் காதுக்குப் போக வேண்டாம். கையும் களவுமா அவனைப் பிடிச்சு, மகாராஜா முன்னால கொண்டுபோய் நிறுத்தி அவன் முகத்திரையைக் கிழிப்போம். என்ன சொல்லுறீங்க?' - திவான் அழுத்தமாகக் கேட்டார். எல்லோரும் சரி என்றார்கள். கிலானியை எப்போது, எப்படி மடக்குவது என்று தீவிரமாக ஆலோசிக்க ஆரம்பித்தார்கள். பொறி தயாரானது.

அன்றும் வழக்கம்போல ஜலந்தருக்கு டேட்டிங் போவதாகத் திட்டம். வழக்கம்போல வேலைக்காரியின் வேடத்தில் குதிரைச் சாணி அள்ளக் கிளம்பினாள் ராஜகுமாரி. சமர்த்துப் பையனாகக் குதிரை வண்டியில் ஏறி உட்கார்ந்தார் பிரதம அமைச்சர் கிலானி. குதிரைகள் கிளம்பின. எல்லாவற்றையும் மறைந்திருந்து பார்த்த ஒற்றர்கள் சரசரவெனத் திவானுக்குத் தகவல் அனுப்பினார்கள். கபுர்தலாவுக்கும் ஜலந்தருக்கும் இடைப்பட்ட பகுதியில் குதிரை வீரர்கள் சிலர், கிலானியின் வண்டியைச் சுற்றி வளைத்தார்கள். ராஜகுமாரி நடுநடுங்கிப் போனாள். ஆட்டம் முடிந்தது என்று கிலானியால் உணர முடிந்தது. இருந்தாலும் பதற்றப் படாமல் வண்டியிலிருந்து வெளியே குதித்தார். தப்பித்து ஓடவெல்லாம் முயற்சி செய்ய வில்லை. வீரர்கள் அவரைக் கைது செய்தனர்.

நடந்தவற்றையெல்லாம் கேள்விப்பட்ட மகாராஜா ரந்திர் சிங், அதிர்ச்சியில் வாயடைத்துப் போனார். வேக வேகமாகப் பொதுமக்களிடத்திலும் செய்தி பரவியது. ஆங்காங்கே பிரதம அமைச்சருக்கு எதிராக கோஷங்கள் எழ ஆரம்பித்தன. பதவி நீக்கம் செய்யப்பட்ட கிலானி, சமஸ்தானத்தைவிட்டே துரத்தி அடிக்கப்பட்டார்.

ராஜகுமாரி? அரண்மனையில் கைதி போல வைக்கப்பட்டாள். அவளுக்கான காவல் மேலும் பலப்படுத்தப்பட்டது. அவளுக்காகச் சுரங்கப் பாதை வெட்டிய கலாபக்காதலன் கிலானியின் பிரிவு, ராஜகுமாரியைக் கடுகளவுகூடப் பாதிக்கவில்லை. ஏனெனில் அவளைப் பொருத்த வரையில் கிலானி, அவளது எல்லாவிதமானத் தேவைகளையும் பூர்த்தி செய்த ஓர் ஆண். அவ்வளவுதான். தெய்வீகக் காதலன் எல்லாம் இல்லை. தன் மகள் செய்த துரோகத்தைத் தாங்க முடியாத மகாராஜா ரந்திர் சிங், அவளுடன் பேசுவதை மிகவும் குறைத்துக் கொண்டார். மதுவோடு ஐக்கியமாகி தன் பொழுதையெல்லாம் மப்பும் மந்தாரமுமாகவே கழிக்க ஆரம்பித் திருந்தாள் ராஜகுமாரி.

ராஜகுமாரியின் அரண்மனையைக் காவல் காக்கப் புதிய ராணுவத் தளபதி ஒருவர் நியமிக்கப் பட்டார். அவர் பெயர் வார்யம் சிங் (Waryam Singh). இளம் வயதிலேயே பல போர்க்

களங்களைப் பார்த்தவர். கபுர்தலா சமஸ்தானத்தின் நம்பிக்கைக்குரிய தளபதிகளுள் ஒருவர் என்பதால், மகாராஜா ரந்திர் சிங் அவருக்கு அந்தப் பொறுப்பைக் கொடுத்திருந்தார். பொறுப்பேற்ற முதல்நாளே வார்யம் சிங், ஏற்கெனவே அரண்மனையிலிருந்த பாதுகாப்பு முறைகளையெல்லாம் மாற்றியமைத்தார். அரண்மனைக்கு வரும் பெண்கள் பலத்த விசாரணைகளுக்குப் பின்பே உள்ளே அனுமதிக்கப்பட்டார்கள். அரண்மனையில் பணி செய்யும் ஆண்கள் தவிர வேறுயாரும் உள்ளே அனுமதிக்கப்படவில்லை. அரண்மனைப் பணிப்பெண்களும் பலத்த சோதனைகளைக் கடந்த பிறகே உள்ளேயோ, வெளியேயோ செல்ல முடிந்தது.

தினமும் மாலை வேளையில் ராஜகுமாரி, குதிரை வண்டியில் வெளியே சென்றுவிட்டு வருவ தற்கும் தடை விதிக்கப்பட்டிருந்தது. அந்த அரண்மனையிலிருந்து அருகிலுள்ள குளத்துக்குச் செல்ல ஒரு சுரங்கப்பாதை உண்டு. அதன் வழியாக எப்போதாவது ராஜகுமாரி, நீராடச் செல் லுவாள். அதற்கும் தடா. அரண்மனையாகவே இருந்தால் என்ன, கைதியாக எத்தனை நாள்கள் தான் வாழ முடியும்? தினமும் பார்த்துச் சலித்த அதே முகங்கள். ஒரு புதிய நபரைக்கூடச் சந்திக்க முடியவில்லை. ஆண்வாசமே வீசாத வாழ்க்கை. சலிப்பாக இருக்காதா என்ன? விட்டு விடுதலையாக ஏதாவது கதவு திறக்காதா என்று காத்திருந்தாள் ராஜகுமாரி.

அவளது நெருங்கிய தோழியும் பணிப்பெண்ணுமான மௌலோ, நடந்த அசம்பாவிதங் களுக்குப் பிறகு, பணியிலிருந்து நின்று விட்டிருந்தாள். ராஜகுமாரியின் புதிய அந்தரங்கத் தோழியாக பாஷந்தி என்ற புதிய பெண் வந்திருந்தாள். அவ்வப்போது பால்கனியில் வந்து அமர்ந்து வேடிக்கை பார்க்க மட்டும் ராஜகுமாரிக்கு அனுமதி அளிக்கப்பட்டிருந்தது. அந்தச் சமயத்தில் பாஷந்தி, அவளுக்குத் துணையாக இருந்தாள்.

'ராஜகுமாரி, அங்கே பார்த்தீர்களா? அவர்தான் காவலுக்கு நியமிக்கப்பட்டிருக்கும் புதிய தளபதி. பெயர் வார்யம் சிங்காம். என்ன ஆள் அவர்? ஏகப்பட்ட கெடுபிடிகள் செய்கிறார். தினமும் வந்துபோகும் என்னைக்கூடச் சந்தேகப்பட்டு பலத்த சோதனைகளுக்குப் பிறகே உள்ளே அனுமதிக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்' - பால்கனியில் உட்கார்ந்திருந்த ராஜகுமாரியிடம் சலித்துக் கொண்டாள் பாஷந்தி. அவள் சொன்னபிறகுதான் வார்யம் சிங்கைக் கவனித்தாள் ராஜகுமாரி.

நல்ல உயரம், சீக்கியர்களுக்கே உரிய உடற்கட்டு, கருகருவெனப் பரவிய தாடி, அதிகாரத் தோரணையுடன் கூடிய குரல், வசீகரமான கண்கள். இமைக்காமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். எப்படி இவரை மடக்குவது?

'ரொம்பக் கடுமையானவர் என்றா சொல்கிறாய்? பார்த்தால் அப்படித் தெரியவில்லையே' என்று பாஷந்தியிடம் சொன்னாள் ராஜகுமாரி.

'அட, நீங்க வேற. இன்று காலையில் நான் பட்டபாடு எனக்குத்தானே தெரியும்' என்றாள் பாஷந்தி.

'சரி, நீ சென்று தளபதியிடம் ஏதாவது பேசு. அவர் எப்படி நடந்து கொள்கிறார் என்று நானும் பார்க்கிறேன்' என்று அவளை வார்யம் சிங்கிடம் அனுப்பினாள் ராஜகுமாரி. கட்டளையைத் தட்ட முடியாமல், அவளும் சென்றாள். 'என்ன வேண்டும்?' என்று புருவங்களாலேயே கேட்டார் வார்யம் சிங். 'அது வந்து...' எதுவும் பேசமுடியாமல் திணறிய பாஷந்தி,

பரிதாபமாக ப் பால்கனியைப் பார்த்தாள். அவளது பார்வையைப் பின் தொடர்ந்த வார்யம் சிங்கின் பார்வையும் பால்கனியில் வந்து நின்றது.

வேண்டுமென்றே பால்கனியின் விளிம்பில் வந்து நின்றிருந்தாள் ராஜகுமாரி. பல போர்க் களங்களைக் கண்டவராக இருக்கட்டுமே, பெண் பார்வையின் கூர்மையைச் சந்திக்கும் துணிவு வேண்டுமே. வார்யம் சிங் கொஞ்சம் திக்குமுக்காடிப் போனார். அவர் தடுமாறுவதைக் கண்ட ராஜகுமாரி, மந்தகாசப் புன்னகை ஒன்றை மிதக்க விட்டாள். வார்யம் சிங்கின் வீரம், அந்தப் புன்னகையால் கொஞ்சம் வீரியமிழந்துதான் போனது.

கொஞ்சம் சுதாரித்துக் கொண்ட அவர், டக்கெனப் பார்வையைக் கீழிறக்கினார். அங்கிருந்த பாஷந்தி நழுவியிருந்தாள். உடனே மீண்டும் பால்கனியைப் பார்த்தார். ராஜகுமாரியும் மறைந் திருந்தாள். அவர் இயல்பு நிலைக்குத் திரும்பவதற்குக் கொஞ்ச நேரம் பிடித்தது.

ராஜகுமாரியின் வண்டவாளங்கள் எல்லாம் வார்யம் சிங்குக்குத் தெரியும்தான். இருக்கட்டுமே. சனியன், இப்படி அழகாக இருந்து தொலைக்கிறாளே. அவளது சௌந்தர்யத்துக்கு முன் சகல ப்ளாஷ்பேக்குகளும் மறந்து, மறைந்து போய்விடுகிறதே. அவளுக்குக் காவலாக நான் எங்கே இருக்க ? என்னையே அவளிடமிருந்து தற்காத்துக் கொள்ள வேண்டும் போல ? வார்யம் சிங் குழம்பிப் போயிருந்தார்.

அடுத்த நாள். அதே நேரம். ராஜகுமாரியின் பால்கனி தரிசனம். வார்யம் சிங், அதற்குமேலும் அங்கிருக்க முடியாமல் அந்த இடத்தை விட்டே கிளம்பினார். ராஜகுமாரி அவர் தப்பித்து ஓடுவதைக் கண்டு ரசித்தாள்.

'ஓடவா செய்கிறாய். உன்னை என் வழிக்குக் கொண்டுவருவது எப்படி என்று எனக்குத் தெரியும்.



# 50

# ஓடிப்போகலாமா?

*'அய்யா மகாராஜாவே! என்னய்யா பெண்ணைப் பெற்று வைத்திருக்கிறீர்? காவல் காக்கப் போன என்னையே காதல் வலையில் வீழ்த்திவிடுவாள் போல! எனக்கு இந்த வேலையே வேண்டாம். ஆளை விடும்'* இப்படியெல்லாம் மகாராஜா ரந்திர் சிங் முன்சென்று புலம்பித் தள்ளும் முடிவோடுதான் அவரது அரண்மனைக்குச் சென்றார் தளபதி வார்யம் சிங்.

ஆனால் அரண்மனையை நெருங்க நெருங்க ஏதோ ஒன்று அவரை மேலும் செல்லவிடாமல் தடுத்தது. அவருக்குள் ஒரு கூக்குரல் கேட்டது. 'அடேய் வார்யம் சிங், வீரனா நீ? கேவலம் ஒரு பெண்ணுக்குப் பயந்து மதிப்புமிக்க தளபதி வேலையையே உதறித் தள்ளப் போகிறாயா? அடச்சே, மானங்கெட்டவனே. ஆம்பளையா நீ?' உள்ளுக்குள் ஒலித்த குரலால், தன்னைத்தானே தைரியப் படுத்திக் கொண்டு ராஜகுமாரியின் அரண்மனைக்கே திரும்பினார் வார்யம் சிங்.

முடிந்தமட்டும் பால்கனியின் பக்கம் தன் பார்வை போகாமல் பார்த்துக் கொண் டார். ராஜகுமாரி லேசுப்பட்டவளா என்ன? பால்கனியில் நின்று கொண்டு, வார்யம் சிங்கின் கவனத்தைக் கவர நினைத்தாள். பழரசம் அருந்தும் தங்கக் கோப்பை ஒன்றை எடுத்து வேண்டுமென்றே கீழே போட்டாள். டக்கென மேலே பார்த்தார் வார்யம் சிங். 'கீழே விழுந்த அந்தக் கோப்பையை எடுத்துக் கொண்டு வாருங்கள்' - கட்டளையிட்டாள் ராஜகுமாரி. வேறு வழியில்லாமல் கோப்பை யோடு மேலே சென்றார்.

ராஜகுமாரியின் அறையை நெருங்கிய அவர், அவளைக் கண்டதும் நேருக்கு நேர் பார்க்க முடியாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டார். கோப்பையை மட்டும் நீட்டினார். அவரது கரங்களில் தன் விரல்களால் உரசி, கோப்பையைப் பெற்றுக் கொண்டாள் ராஜகுமாரி. 'நீங்கள் தவறாக நினைத்தாலும் பரவாயில்லை. ஒரு விஷயத்தைக் கூற விரும்புகிறேன். நான் உங்களோடு வாழ ஆசைப்படுகிறேன்' - ராஜகுமாரி படாரெனத் தன் 'காதலை' வெளிப்படுத் தினாள். அப்போது அவளது குரல் கம்மியிருந்தது. கண்கள் லேசாகக் கலங்கியிருந்தன. வார்யம் சிங், ஒன்றும் புரியாமல் சில நொடிகள் அவளது கண்களையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தார். பின்னர் நினைவு மீண்டவராக அங்கிருந்து வெளியேறினார். மீண்டும் மீண்டும் அவளது வார்த்தைகள் அவரது செவிகளில் மறுஒலிபரப்பு ஆகிக் கொண்டிருந்தன. தான் தங்கியிருக்கும் இடத்துக்கு வந்து ஓய்வாகப் படுத்தார்.

என்னை ஏன் காதலிக்கிறாள்? ஏமாற்றுகிறாளா? ஒருவேளை அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? அல்லது மோக நோய் முற்றிவிட்டதா? இருந்தாலும் காதலைச் சொல்லும்போது அவளது கண்களில் ஒருவித ஏக்கம் தெரிந்ததே. அவளது வார்த்தைகளில் பொய் கலந்திருப்ப தாகவும் தெரியவில்லை. உண்மையிலேயே காதலிக்கிறாளோ? அடேய், உனக்கு மூளை கலங்கிவிட்டதா? அவள் ராஜகுமாரி. அவள் தவறு செய்யாமல் கண்காணிப்பதுதான் உனக்குக் கொடுக்கப்பட்ட பொறுப்பு. அவள் செய்யும் தவறுகளுக்குத் துணை போவதல்ல. படுகுழியில் விழுந்துவிடாதே. பிரதம மந்திரிக்கு நேர்ந்த கதியை மறந்துவிட்டாயா என்ன?

அவருக்குள் ஏதேதோ எண்ணங்கள் சடுகுடு ஆட ஆரம்பித்தன. மனசாட்சி அடித்த எச்சரிக்கை மணிகளுக்கு அடிபணிந்து, சலனப்படக்கூடாது என்ற முடிவோடு ராஜகுமாரியின் அரண் மனைக்குச் சென்றார். எவ்வளவோ சொல்லியும் கேட்காமல், அவரது பார்வை பால்கனி யையே அவ்வப்போது நோட்டம் விட்டுக் கொண்டிருந்தது. ஆனால் ராஜகுமாரி அங்கு வந்து நிற்கவில்லை. ஆனால் ஓரமாக ஒளிந்துநின்று, வார்யம் சிங்கின் தவிப்பை ரசித்தாள். இனி அடுத்த கட்டத்துக்குப் போக வேண்டியதுதான் என்று நினைத்துக் கொண்டாள்.

அடுத்தநாள். பணிப்பெண் பாஷந்தி, வார்யம் சிங்கைத் தேடி வந்தாள். 'இன்று ராஜகுமாரி உங்களிடம் பேச விரும்புகிறார்கள். இரவு நேரத்தில் அரண்மனையின் பின்புறம் இருக்கும் கிணற்றுப் பக்கமாக வந்துவிடுங்கள்' படபடவெனக் கிசுகிசுத்தாள் பாஷந்தி.

'அ.. அதெல்லாம் முடியாது. உங்கள் ராஜகுமாரியை நான் எச்சரித்ததாகப் போய்ச் சொல்' பதில் பேசினாரே தவிர, வார்யம் சிங்கின் குரலில் கடுமையெல்லாம் இல்லை. அதைக் கேட்ட பாஷந்தியும் நமுட்டுச் சிரிப்பு ஒன்றை உதிர்த்துவிட்டுக் கிளம்பினாள்.

பகல் பொழுது மஞ்சள் போர்வையைப் போர்த்திக் கொண்டு மாலைப் பொழுதானது. மாலைப் பொழுது கருப்புப் போர்வையைப் போர்த்திக் கொண்டு இரவானது. நேரம் ஆக ஆக வார்யம் சிங்குக்கு ரத்த அழுத்தம் ஏறிக் கொண்டே போனது. அவரால் பிற காவலர்களிடம் கூடப் பேச முடியவில்லை. வார்த்தைகள் தள்ளாடின. இருந்தாலும் அவரது மனம், இரவு ராஜகுமாரியைச் சந்திக்கும்போது என்னவெல்லாம் நடக்கும் என்று கற்பனை செய்ய ஆரம்பித்திருந்தது.

தூரத்தில் எங்கேயோ ஆந்தைகள் அலறும் சத்தம் கேட்டது. எந்தெந்தக் காவலர்கள் எங்கெங்கு நிற்கிறார்கள் என்று பார்த்துக் கொண்டார். அவர்களும் அந்த நடுநிசியில் அரைத்தூக்கத்தில்

இருந்து முக்கால் தூக்கத்துக்கு முன்னேறிக் கொண்டிருந்தார்கள். பரந்து விரிந்த அரண்மனைக்குப் பின்புறம் பெண்கள் புழங்கும் பகுதி என்பதால் காவலர்களுக்கு அனுமதி கிடையாது. எனவே எந்தவிதத் தயக்கமும் இன்றிப் பின்புறக் கிணற்றை நோக்கிக் கிளம்பினார் வார்யம் சிங். எச்சரிக்கை செய்து செய்து பார்த்த அவரது மனசாட்சி, எப்போதோ களைத்துப் போய் தூங்கியிருந்தது. எதற்காகக் கிணற்றின் அருகே வரச் சொல்லியிருக்கிறாள் என்ற விஷயம் மட்டும் அவருக்குப் பிடிபடவில்லை. யோசித்தபடியே நடந்தார்.

இரவு நேரத்தில் அரண்மனைக்குள் ராஜகுமாரியைத் தவிர இரண்டு அல்லது மூன்று பணிப் பெண்கள் மட்டுமே இருப்பார்கள். அவர்களுக்கெல்லாம் தேவையான லஞ்சம் கொடுத்து பேசி வைத்திருந்தாள் ராஜகுமாரி. அரண்மனையின் பின்புறமும் ஒரு பால்கனி உண்டு. அங்கிருந்தபடியே கீழ்த்தளத்தில் இருக்கும் கிணற்றின் நீரை இறைக்கலாம். முழுக்க முழுக்க ராஜகுமாரியின் தேவைகளுக்காக மட்டுமே அந்த நீர் உபயோகப்படுத்தப்பட்டது.

கிணற்றின் அருகே வந்த வார்யம் சிங், மேலே பார்த்தார். அந்தப் பால்கனியில் பாஷந்தி நின்று கொண்டிருந்தாள். அவரைக் கண்டதும் உள்ளே ஓடினாள். சில நிமிடங்களில் ராஜகுமாரியும் பாஷந்தியும் மேலும் இரண்டு பணிப்பெண்களும் அந்தப் பால்கனிக்கு வந்தார்கள். ராஜகுமாரி தன்னை முழுமையாக அலங்கரித்துக் கொண்டிருந்தாள். அதைக் கண்டு தன்னை மறந்து சொக்கி நின்றார் வார்யம் சிங்.

'இந்தாருங்கள். இதில் அமர்ந்து கொள்ளுங்கள்' - பாஷந்தி மேலிருந்து கிணற்றின் கயிறு வழி யாக ஒரு பெரிய பித்தளை வாளி ஒன்றை இறக்கினாள். மறுப்பு எதுவும் சொல்லாத வார்யம் சிங், அதில் ஏறி அமர்ந்தார். பாஷந்தியும், மற்ற இரண்டு பணிப்பெண்களும் அவரை மேலே இழுக்க ஆரம்பித்தார்கள். ராஜகுமாரியும் கைகொடுத்தாள். வார்யம் சிங் மேலே வந்தார். ராஜகுமாரியின் கரம் பற்றி முதல் தளத்தில் குதித்தார். அவளது வாசனை அவரை என்னென்னமோ செய்தது. பணிப்பெண்கள் கிளுகிளுவெனச் சிரிக்க, அவரைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றாள் ராஜகுமாரி.

மாபெரும் அறை. தரையில் பாதிப் பரப்பளவுக்குப் பட்டு மெத்தை விரிக்கப்பட்டிருந்தது. அதன்மேல் மல்லிகைகளும் ரோஜாக்களும் மலர்ந்தும் மலராமல் விரவிக் கிடந்தன. சோம பானங்கள், பழவகைகள் காத்திருந்தன. தன்னை முற்றிலுமாக மறந்திருந்தார் வார்யம் சிங்.

'என்னைக் காதலிக்கிறீர்களா?'- ராஜகுமாரி கேட்டாள். அவருக்குப் பதில் தெரியவில்லை. 'காதலிக்காவிட்டால் இவ்வளவு தூரம் வந்திருப்பீர்களா என்ன? நன்றி' என்று அவளே தொடர்ந்தாள். 'இதுவரை என் வாழ்க்கையில் எதுவுமே சரியாக நடக்கவில்லை. ராஜகுமாரி என்றுதான் பெயர். ஆனால் உரிமைகள் எல்லாம் முடக்கப்பட்ட கைதி நான். என்ன வாழ்க்கை இது? எனக்கும் மற்ற பெண்கள்போல ஆசைகள் இருக்காதா என்ன? உங்களுடனான என் வாழ்க்கையாவது நல்லபடியாக அமைய வேண்டும் என்று விரும்புகிறேன்' - ராஜகுமாரியின் பேச்சில் நெக்குருகிப் போனார் அவர். அவ்வளவு நேரம் வார்த்தைகளைப் பிரசவித்துக் கொண்டிருந்த உதடுகள், அப்போது முத்தங்களைப் பிரசவிக்கத் தயாராகின. நிலவு மேற்குப் பக்கமாக இறங்கிக் கொண்டிருந்தது.

அதிகாலை வேளை. தூங்கிக் கொண்டிருந்த பணிப்பெண்களை எழுப்பினாள் ராஜகுமாரி. அவர்கள் வாளியையும் வார்யம் சிங்கையும் கீழே இறக்கினார்கள்.



இரவில் காதலியைச் சந்திக்கப் போகும் காதலன் - முகலாயர் கால ஓவியம்

அதற்குப் பின் பல நாள்களில் இரவில் வாளியின் துணையுடன் வாலிப விளையாட்டு தொடர்ந்தது. ராஜகுமாரியும் தளபதியும் ஒரு கணவன் மனைவி போலவே வாழ ஆரம்பித்திருந்தார்கள். அவர்களுக்குள் அன்னியோன்யம் அநியாயத்துக்குப் பெருகியிருந்தது. வெளி நபர்கள் யாருக்கும் மூக்கு வியர்க்கவில்லை. தன் வசதிக்கேற்ப இரவில் காவலர்களின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொண்டார் வார்யம் சிங். தன் நம்பிக்கைக்குரியவர்களை, தான் என்ன செய்தாலும் கண்டுகொள்ளாதவர்களை மட்டும் இரவுப் பணியில் அமர்த்தினார். எனவே எந்தவிதப் பிரச்னையும் இன்றி, அவர்களது திருட்டு இல்லற வாழ்க்கை பல மாதங்கள் தொடர்ந்தது.

கபுர்தலா சமஸ்தானத்தின் அப்போதைய உள்துறை அமைச்சராக இருந்த தனிஷ்மந்துக்கு (Danishmand), தளபதி வார்யம் சிங்கோடு பகை உண்டு. எல்லாம் அலுவல் ரீதியாக எழுந்த உரசல்கள். வேறு சில சம்பவங்களால் தீராத பகையாக உருப்பெற்றிருந்தது. எப்போதடா வார்யம் சிங்கைப் போட்டுத் தள்ளலாம் என்று வாய்ப்புக்காகக் காத்திருந்தார் தனிஷ்மந்த்.

ஒருநாள் இரவில், ரோந்துப் படையினர் ராஜகுமாரியின் அரண்மனைக்குச் சென்றார்கள். வெளியில் இருந்த காவலர்களிடம், 'வார்யம் சிங் எங்கே?' என்று கேட்டார்கள். 'அரண்மனைக் குள் இருக்கிறார்' என்ற பதில் வந்தது. இரவு நேரத்தில் தளபதிக்கு ராஜகுமாரியின் அரண் மனைக்குள் என்ன வேலை என்று ரோந்துப் படையினர் சந்தேகத்தின் வாலைப் பிடித்தார்கள். காவலர்களை மேலும் மேலும் கேள்விகளால் மடக்கினார்கள். சந்தேகம் விஸ்வரூபம் எடுத்தது. கொஞ்ச நேரம் காத்திருந்தார்கள். வார்யம் சிங் வெளியே வரவில்லை. தகவல் உள்துறை அமைச்சருக்குப் போனது.

'மாட்டிக்கிட்டான் மாப்ளே' என்று உள்ளுக்குள் சந்தோஷப்பட்ட அவர், மேலும் கொஞ்ச வீரர்களை ராஜகுமாரியின் அரண்மனைக்கு அனுப்பினார். அரண்மனைக்குள் அத்துமீறிச் சென்று இருவரையும் மடக்கிப் பிடியுங்கள் என்று உத்தரவிட்டார். வீரர்கள் எந்த வழியாக அரண்மனைக்குள் செல்லலாம் என்று திட்டமிட ஆரம்பித்தார்கள். வெளியே ஏதோ சலசலப்பு கேட்கிறதே என்று உணர்ந்த பாஷந்தி, பால்கனி வழியாக எட்டிப் பார்த்தாள். விபரீதம் நடக்கப்போகிறது என்று மட்டும் அவளால் உணர முடிந்தது. சற்றும் தாமதிக்காமல் ராஜ குமாரியின் அறைக் கதவைத் தட்டி, தகவலைச் சொன்னாள்.

'வசமாக மாட்டிக் கொண்டோம். தாங்கள் தப்பித்து வெளியே செல்லவும் முடியாது. இந்த ஆபத்தான சூழ்நிலையில் நான் உங்களைப் பிரிய விரும்பவில்லை. எது நடந்தாலும் இருவருக்கும் சேர்ந்தே நடக்கட்டும்' கண்கள் கலங்க ராஜகுமாரி சொன்ன வார்த்தைகள் வார்யம் சிங்குக்குத் தைரியத்தைக் கொடுத்தன.

'இங்கிருந்து இருவருமே ஓடிப்போய்விடலாமா?' - அழுத்தமாகக் கேட்டார்.

ராஜகுமாரி முழு மனத்துடன் ஒப்புக்கொண்டாள். வீரர்கள் கீழ்த்தளத்துக்குள் நுழையும் சத்தம் கேட்டது. ராஜகுமாரி நீராடுவதற்காகக் குளத்துக்குச் செல்லும் சுரங்கப்பாதைக்குள் இரு வரும் ஓட ஆரம்பித்தனர். அதன் வாசலை அவசர அவரசமாகப் பூட்டிய பாஷந்தி, வேக வேகமாக ராஜகுமாரியின் அறைக்கதவையும் உள்புறமாகத் தாழிட்டாள். அதிரடியாக அரண்மனையின் அனைத்து அறைகளில் நுழைந்து தேடியும் வீரர்களுக்கு ஏமாற்றமே மிஞ்சியது. பட்சிகள் சிக்கவில்லை.

குளக்கரை. குளிர் வாட்டியெடுத்தது. நிலவில்லாத இருள் இரவு என்பதால் அந்த நேரத்தில் அங்கிருந்து கிளம்பி வேறு எங்காவது செல்வதும் பாதுகாப்பானதல்ல. கரம் பற்றி நெருக்கமாக உட்கார்ந்திருந்த இருவரும் விடியலுக்காகக் காத்திருக்க ஆரம்பித்தார்கள்.

அதிகாலை நேரம். மெல்ல மெல்ல வெளிச்சம் படர ஆரம்பித்தது. ராஜகுமாரியும் வார்யம் சிங்கும் கைகோர்த்தபடி நடக்க ஆரம்பித்தார்கள். காட்டுப் பகுதியிலேயே நடந்தார்கள். மாலைக்குள் இருபது மைல்களை அவர்களது பாதங்கள் விழுங்கியிருந்தன. சுல்தான்புருக்கு அருகே கல்யான் என்ற கிராமத்தை அடைந்திருந்தார்கள். அது கபுர்தலா சமஸ்தானத்தின் எல்லைக்குள் வராத பகுதி. பிரிட்டிஷாரின் கட்டுப்பாட்டில் இருந்தது.

சுல்தான்புர்தான் வார்யம் சிங்கின் சொந்த ஊர். அவரது பெற்றோர்கள் வசிக்கும் இடம். தன் வீட்டுக்கு மிகுந்த நம்பிக்கையோடு ராஜகுமாரியை அழைத்துச் சென்றார் அவர். ஆனால் புறக் கணிக்கப்பட்டார்கள். கிட்டத்தட்டத் துரத்தி விடப்பட்டார்கள். ராஜகுமாரிக்கு அழுவதற்குக்கூடச் சக்தியில்லை. ஆனால் வார்யம் சிங், நம்பிக்கை இழக்கவில்லை. தன்னுடைய நண்பன் ஒருவனைச் சந்தித்தார். முதலில் உணவு கிடைத்தது.

நண்பனின் உதவியோடு ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அங்கு கூரை வீடு கட்டினார். உறை விடம் தயாரானது. 'இனி நான் ராஜகுமாரி அல்ல, உங்கள் மனைவி. இந்தாருங்கள்' - தன் நகைகளைக் கழட்டிக் கொடுத்தாள் அவள். அப்போது புன்னகையைச் சூடியிருந்தாள்.

தளபதி வார்யம் சிங் விவசாயியாக மாறினார். ராஜகுமாரி கோபிந்த் கவுர்★, இல்லத்தரசியாக மாறிக் கால்நடைகளைப் பராமரிக்க ஆரம்பித்தாள். இத்தனை நாள் அரண்மனை வாழ்க்கையில் உணர முடியாத நிம்மதியை அந்த எளிய வாழ்க்கையில் உணர்ந்தாள் அவள்.

அந்த நிம்மதி அவளது எஞ்சிய வாழ்க்கையிலும் நீடித்தது.

---

★ கோபிந்த் கவுரின் காதல் கதைகள் குறித்துக் கபுர்தலாவில் திவானாக இருந்த ஜர்மானி தாஸ் தன் குறிப்புகளில் எழுதி வைத்துள்ளார். அவரது குறிப்புகளின்படி கோபிந்த் கவுர் என்று குறிப்பிடப்படும் ராஜகுமாரி, மகாராஜா நிஹால் சிங்கின் மகள். மகாராஜா ரந்திர் சிங்கின் மகள் பெயரும் கோபிந்த் கவுர்தான். கபுர்தலா ராஜ பரம்பரை வரைபடத்தின்படி பார்த்தால் இந்தக் காதல் கதைகளுக்குச் சொந்தக்காரி, ரந்திர் சிங்கின் சகோதரி அல்ல, மகள் கோபிந்த் கவுர்தான்.



# 51

# கர்ப்பமில்லை, பிரசவமுண்டு!

கபுர்தலா மகாராஜா ரந்திர் சிங் இறந்தபின்பு பதவிக்கு வந்தவர் அவரது ஒரே வாரிசு காரக் சிங் (1870). இருபது வயதில் அரியணை ஏறிய அவருக்கு பங்காளிப் பிரச்னை எதுவுமில்லை. ஆனால் அவர் தன் மனைவி உள்பட யாரையும் தன் அங்காளி பங்காளியாக நினைத்துப் பழகாததுதான் பிரச்னையாக விடிந்தது.

ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு - கபுர்தலாவின் மகாராஜா காரக் சிங்குக்கு ஒரே ஒரு பெண்டாட்டிதான். அதுகூட அவருக்கு அநாவசியமாகவே தோன்றியது. அவரது பிறவிக் குணம் அப்படி. அந்தப் பரம்பரையில் வந்த எல்லா மகாராஜாக் களும் இரண்டுக்கு மேற்பட்ட மனைவிகளுடனும் வாரிசுகளுடனும் செழிப்போடு வாழ்ந்திருந்தனர். ஆனால் காரக் சிங் இல்லற விஷயத்தில் கொஞ்சம்கூட நாட்டம் செலுத்தவில்லை.

பொதுவாகவே அவருக்குப் பெண்கள் மீது விருப்பம் இல்லாமல் இருந்தது. எந்தக் கட்டழகியைப் பார்த்தும் அவருக்குள் காதல் முளைக்கவில்லை. சிறு வயதிலிருந்தே யாரும் எளிதில் நெருங்கிப் பழகமுடியாத குணத்துடனேயே விளங்கினார். எந்தவிதமான விளையாட்டிலும் அவருக்கு விருப்பம் இருக்கவில்லை. மிகவும் பிடித்தமான விஷயமாக ஒன்றே ஒன்று இருந்தது. அது கோபம்.

எதற்கெடுத்தாலும், யார் மீது வேண்டுமானாலும், எந்தப் பொழுதிலும் சளைக் காமல் கோபப்பட்டுக் கொண்டே இருந்தார். அவ்வளவு இறுக்கமானவராக இருந்ததால் அவருக்கு நெருக்கமானவராக யாராலும் இருக்கமுடியவில்லை.

முசுட்டுக் குணத்தின் மொத்த உருவமாக விளங்கிய தன் மகனைக் கண்டு தந்தை ரந்திர் சிங்குக்கு ஏகக் கவலை. 'ஒரு கால்கட்டு போட்டா எல்லாம் சரியாகிடும்' என்ற ஆதிகால யோசனையை அப்போதும் ஒருவர் ரந்திர் சிங்கிடம் முன்வைத்தார். ஒரு தந்தை, மகனுக் காற்றும் கடமையாகப் பெண் பார்த்துத் திருமணம் செய்து வைத்தார். அந்தப் பெண்ணின் பெயர் ஆனந்த் கவுர்.

எந்தவித எதிர்ப்பும் காட்டாமல் காரக் சிங் திருமணம் செய்து கொண்டார். ஏகப்பட்ட கனவு களுடன் காத்திருந்தாள் ஆனந்த் கவுர். வசீகரப் பார்வை, கலாபக் காதல் முத்தம், சுந்தரத் தழுவல், ஆனந்த சில்மிஷங்கள், ஆச்சர்யப் பரிசுகள் என்று என்னென்னவோ எதிர்பார்த்த அவளுக்கு ஏமாற்றமே வாய்த்தது. காரக் சிங், தன் புதுப் பெண்டாட்டி இருக்கும் திசைக்கே வரவில்லை.

நாட்கள் ஓடின. வாரங்கள், மாதங்கள், வருடங்கள் ஆகின. 'என்னப்பா இது? அரண்மனையில குழந்தை அழுற சத்தத்தைக் கேட்டு ரொம்ப வருசம் ஆச்சே. இன்னும் அந்தப்புரத்துல இருந்து மகாராணி நல்ல செய்தி சொல்லலியே' என்று மக்கள் பரவலாகப் பேச ஆரம்பித்தார்கள். மகாராணி ஆனந்த் கவுர் இந்த விஷயத்தில் மிகவும் மனம் உடைந்து போயிருந்தாள். சமஸ் தானத்தின் அமைச்சர்களுக்கும் அதிகாரிகளுக்கும் இதே கவலைதான். 'என்ன இது? இந்தப் பரம்பரையின் கடைசி மகாராஜா இவர்தானா? அடுத்த பட்டத்து இளவரசராக யாரை அறிவிக்க முடியும்? இப்படி ஆகிவிட்டதே.'

எதைப் பற்றியும் கவலைப்படாத மகாராஜா காரக் சிங், அதைப் பற்றியும் கவலைப்படாமல் தனது இறுக்கமான இயல்பு வாழ்க்கையைத் தொடர்ந்தார். நாள்கள் ஆக ஆக அநாவசியக் கோபத்தால் அவர் எடுக்கும் நடவடிக்கைகள் யாராலும் சகித்துக் கொள்ளமுடியாதபடியாக இருந்தன. 'என்ன இது பைத்தியக்காரன் போல நடந்து கொள்கிறார்' என்றே மற்றவர்கள் நினைத்தார்கள். அவரால் நீண்ட நாள்களுக்கு ஆட்சியில் இருக்க முடியாது என்ற கருத்தே அமைச்சர்களிடையே நிலவியது.

காரக் சிங்கின் நிலை குறித்தும், அவருக்கு வாரிசு பிறக்காத விஷயம் குறித்தும் பங்காளிகள் பெரும் சந்தோஷம் அடைந்தார்கள். பங்காளிகள் என்றால்? அதாவது இதற்கு முன்பு ஆட்சி யிலிருந்த மகாராஜா ரந்திர் சிங்கின் இரண்டாவது மூன்றாவது மனைவிக்குப் பிறந்தவர்கள். அந்தப் பங்காளிகள் கண்கள் மின்ன, சிம்மாசனத்தைக் குறி வைத்து ஆட்சிக் கனவோடு நாக்கைச் சுழட்டினார்கள்.

ஆனால் மக்களுக்கோ, அமைச்சர்களுக்கோ மகாராஜாவுக்குப் பிறந்த நேரடி வாரிசு தவிர மற்றவர்கள் ஆட்சிக்கு வருவதில் கிஞ்சித்தும் விருப்பம் இருக்கவில்லை. மற்ற பங்காளிகள் எல்லாம் அரியணை ஏறத் தகுதியில்லாதவர்களாக, வெறும் பதவி ஆசை உள்ளவர்களாக மட்டும்தான் அவர்களது கண்களுக்குத் தெரிந்தனர். எப்படியாவது மகாராஜாவுக்கு ஓர் ஆண் வாரிசு பிறந்துவிடாதா என்று ஏங்கினர்.

சமஸ்தானத்தின் பிரதம அமைச்சர் திவான் ராம்ஜஸ், தனது அமைச்சரவை சகாக்களையெல்லாம் கூட்டிவைத்து ஆலோசனை நடத்தினார். எல்லோரும் விட்டத்தைப் பார்த்தபடியே தங்கள் ஆள்காட்டிவிரலால் தாவாங்கட்டையைத் தட்டித் தட்டி யோசித்துப் பார்த்தனர். யானை தும்பிக்கையில் மாலையைக் கொடுத்து யாரையாவது தேர்ந்தெடுக்கச் சொல்லலாமா,

மல்யுத்தப் போட்டி வைத்து ஜெயிப்பவரை இளவரசராக்கலாமா என்பது போன்ற உப்புமா யோசனைகளே தோன்றியது தவிர உருப்படியாக எதுவும் தேறவில்லை.

அன்றைய கூட்டம் கலைந்தது. கலையாத கவலை ரேகைகளுடன் உட்கார்ந்திருந்தார் திவான் ராம்ஜஸ். அப்போது அமைச்சர்களுள் ஒருவரான சர்தார் பகத்சிங் மட்டும் அங்கிருந்து வெளி யேறவில்லை. ராம்ஜஸ் அவரைப் பார்த்து பார்வையால் கேள்வி எழுப்பினார்.

'என்னிடம் ஒரு யோசனை இருக்கிறது. சபையில் சொல்ல முடியாத யோசனை அது. சபை கலைவதற்காகத்தான் காத்திருந்தேன்' சொல்லிய பகத்சிங், எழுந்து ராம்ஜஸின் அருகில் சென்றார். அவரது காதில் தன் யோசனையைக் கிசுகிசுத்தார். கேட்கக் கேட்க ராம்ஜஸின் முகத்தில் பிரகாசம் அதிகரித்துக் கொண்டே போனது. அவர் சொல்லி முடித்ததும் உற்சாகமாகத் தன் இருக்கையை விட்டு எழுந்த பிரதம அமைச்சர், 'அருமையான யோசனை' என்று பகத்சிங்கைக் கட்டியணைத்தார்.

'யோசனையை நமக்குள்ளேயே வைத்திருப்போம். வெளியில் தெரிய வேண்டாம். நாளைக்கே இது பற்றி மகாராணியிடம் பேசிவிடுகிறேன்' என்று அழுத்தமாகக் கூறினார் ராம்ஜஸ். மகிழ்ச்சியுடன் அங்கிருந்து கிளம்பினார் பகத்சிங்.

மறுநாள். மகாராஜாவுக்குத் தெரியாமல், மகாராணியைச் சந்திக்கச் சென்றார் ராம்ஜஸ். அவரை மரியாதையுடன் வரவேற்றாள் ஆனந்த் கவுர். நேரடியாக விஷயத்தை ஆரம்பித்தார் அவர்.

'வாரிசுப் பிரச்னை சமஸ்தானத்தில் எவ்வளவு பெரிய கவலையை உண்டாக்கியிருக்கிறதென்று உங்களுக்கு நன்றாகவே தெரியும். அதைத் தீர்ப்பதற்காகத்தான் ஒரு யோசனையுடன் வந்துள்ளேன். ஆனால் இப்படி ஒரு யோசனையைக் கொண்டு வந்ததற்கு முதலிலேயே மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன்.'

மகாராணியால் பொறுமையாக இருக்கமுடியவில்லை. 'விஷயத்தைச் சொல்லுங்கள்' என்றாள் வேகமாக.

கொஞ்சம் சுற்றி வளைத்து, தேவையான அளவுக்கு நீட்டி முழக்கி விஷயத்தை வெளிப்படுத் தினார் அவர். அதிர்ந்துபோனாள் மகாராணி. 'முடியவே முடியாது' என்றாள். அவளது கண்கள் கலங்கிப் போயிருந்தன.

'இந்த சமஸ்தானத்துக்கு, இந்தப் பரம்பரைக்கு விசுவாசம் உள்ள ஊழியனாக நான் என் கடமையைச் செய்வதற்காகத்தான் இப்படி ஒரு யோசனையை முன் வைக்கிறேன். தயவுசெய்து புரிந்து கொள்ளுங்கள். இல்லாவிட்டால், மாபெரும் வீரர்கள் மகாராஜாக்களாக ஆண்ட இந்த பூமியில் யார் யாரோ உரிமை கொண்டாடி ஆட்சிக்கு வந்து அசிங்கப்படுத்திவிடுவார்கள். விஷயம் வெளியே கசியாது. மகாராஜாவையும் மற்றவர்களையும் சமாளிக்க வேண்டியது என் பொறுப்பு. இந்த மாபெரும் காரியத்துக்கு ஒத்துழைக்க வேண்டியது உங்கள் கடமை' - இப்படி ஏகப்பட்ட வசனங்களுக்குப் பிறகு திட்டத்துக்கு அரை மனதுடன் சம்மதம் தெரிவித்தாள் மகாராணி.

மறுநாளே கபுர்தலாவின் அரண்மனையிலிருந்து அந்தக் கல்கண்டு செய்தி வெளியானது. 'மகாராணி ஆனந்த் கவுர் கருவுற்றிருக்கிறார்.'

மக்கள் ஆனந்த தாண்டவம் ஆடினார்கள். கபுர்தலா சமஸ்தானத்துக்கு மீண்டும் நல்லகாலம் பிறந்துவிட்டதாக எண்ணினார்கள். நிச்சயமாக ஆண்குழந்தைதான் பிறக்கும் என்று நம்பினார்கள். செய்தி வெளியான நொடியிலிருந்து மகாராணி தனிமைப்படுத்தப்பட்டாள். அவளுடன் ஒரு சில பணிப்பெண்கள் மட்டும் இருக்க அனுமதிக்கப்பட்டனர். வேறு யாரும் மகாராணியைச் சந்திக்க முடியாதபடியாகக் காவலைப் பலப்படுத்தினார் ராம்ஜஸ்.

ஆனால் மகாராணியின் கர்ப்பச் செய்தியைக் கேட்ட பல அமைச்சர்கள் நிறையவே குழம்பிப் போனார்கள். இதன் பின்னால் ஏதோ திட்டம் இருக்கிறது, எல்லாம் பிரதம அமைச்சரின் லீலையாகத்தான் இருக்கும் என்று தங்களுக்குள்ளேயே பேசிக் கொண்டார்கள்.

தன் மனைவி கர்ப்பமாக இருக்கிறாள் என்ற விஷயம் மகாராஜா காரக் சிங்கின் காதுகளையும் சென்றடைந்தது. ஏற்கெனவே கோபக்காரர். இப்படி ஒரு டூபாக்கூர் செய்தியைக் கேட்டால் சும்மா இருப்பாரா? 'வாய்ப்பே இல்லை' என்று கோபம் பொங்க வாய்விட்டுக் கத்தினார். 'நான் என் மனைவியைச் சந்தித்தே பல மாதங்கள் ஆகின்றன. இது கட்டுக்கதை' என்று வெளிப்படையாகக் குமுறினார்.

மகாராஜாவை எப்படி அடக்கலாம் என்று ராம்ஜஸின் ராஜதந்திர மூளை பரபரவென யோசித்தது. 'நம் லட்சியம் சமஸ்தானத்துக்கான பட்டத்து இளவரசரை உருவாக்குவது. அதற்குத் தடையாக யார் வந்தாலும் போட்டுத் தள்ளிவிட வேண்டியது. அது மகாராஜாவாகவே இருந்தாலும் சரி. பாவ, புண்ணியம் பார்த்தால் பட்டத்து இளவரசர் கிடைக்க மாட்டார்' என்று அவரது சகுனி மனம் சங்கு ஊதியது.

மகாராஜாவின் பேச்சு காற்றில் பரவி சலசலப்பை ஏற்படுத்துவற்கு முன்பாகவே, அவசர அவசரமாக அரண்மனை மருத்துவரை வரவழைத்தார். மருத்துவருக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து கவனித்தார். அவர் சொல்ல வேண்டியதைக் கிளிக்குச் சொல்லுவது போல சொல்லிக் கொடுத்தார்.

'மகாராஜாவுக்கு உடல்நிலை சரியில்லை. அவர் ஏதாவது மலைவாசஸ்தலத்துக்குச் சென்று ஓய்வெடுப்பது நல்லது' - ஒப்பித்தார் மருத்துவர். எனவே மகாராஜா காரக் சிங், வலுக்கட்டாய மாக கபுர்தலாவிலிருந்து வெளியேற்றப்பட்டார். அவர் கபுர்தலாவிலிருந்து நூற்றைம்பது மைல்கள் தொலைவிலுள்ள தர்மசாலா மலைப்பிரதேசத்தில் பாக்ஸு (Bhagsu) என்ற பகுதிக்கு அனுப்பி வைக்கப்பட்டார். கடத்தப்பட்டார் என்பது மிகச் சரியான வார்த்தை. மருத்துவரும் மகாராஜா உடனேயே சென்றார். அங்கே ஒரு மாளிகையில் காரக் சிங் தனிமைப் படுத்தப்பட்டார். மருத்துவரைத் தவிர வேறு யாரும் அவரைப் பார்க்க முடியவில்லை. எப்போதாவது அருகிலிருந்த நீர்விழ்ச்சியில் நீராட அனுமதிக்கப்பட்டார், பித்தம் தெளிய.

காரக் சிங்கை வெளியே அனுப்பிய சில நாள்களில் ராம்ஜஸ், பிரிட்டிஷாருக்கு ஒரு தகவலைக் கொடுத்தார். 'மகாராஜாவுக்கு உடல்நிலை பாதிக்கப்பட்டுள்ளது. அதனால் மனநிலையும் சிறிது பாதிக்கப்பட்டுள்ளது. ஏதேதோ பிதற்றுகிறார். கொஞ்சம் ஓய்வெடுத்துவிட்டு வந்தால் எல்லாம் சரியாகிவிடும்.'

பிரிட்டிஷார் நம்பினார்கள். 'அடச்சே, என்ன சோதனை இது, ரொம்ப வருஷம் கழிச்சு மகா ராணி கர்ப்பமா இருக்குற நேரத்துல மகாராஜாவுக்கு இப்படி ஆகியிருக்க வேண்டாம்' என்று மக்கள் வருத்தத்தில் 'உச்' கொட்டினார்கள்.

அது எட்டாவது மாதம். மகாராணியின் வயிறு தட்டையாகவே இருந்தது. ஆனால் மக்களின் எதிர்பார்ப்பு கர்ப்பிணி வயிறாக உப்பியிருந்தது. ராம்ஜஸ் தேடுதல் வேட்டை நடத்திக் கொண்டிருந்தார். திட்டம் இதுதான். அந்தச் சமயத்தில் ஏதாவது ஓர் உயர்தரக் குடும்பத்தில் பிறக்கும் வாரிசை, மகாராஜா காரக் சிங்குக்கும் மகாராணி ஆனந்த் கவுருக்கும் பிறந்த வாரிசாக அறிவித்து மக்களையும் மற்றவர்களையும் நம்ப வைப்பது.

சமஸ்தானம் முழுவதும் எந்தெந்தக் குடும்பத்தில் யார் யாரெல்லாம் கர்ப்பமாக இருக்கிறார்கள் என்ற செய்தியை ரகசியமாகச் சேகரித்தார் ராம்ஜஸ். அவருக்கு வேலை சுலபமாக அமைந்தது. ராம்ஜஸின் மாளிகைக்கு எதிர் மாளிகையில் லாலா ஹரிசந்த் என்பவர் வாழ்ந்தார். ராம்ஜஸின் நெருங்கிய நண்பர் அவர். ஹரிசந்தின் மனைவி அப்போது கர்ப்பமாக இருந்தாள். அதுவும் எட்டு மாதங்கள்.

போதாதா? ஹரிசந்திடமும் அவரது மனைவியிடமும் ரகசியப் பேச்சு வார்த்தையும் பேரமும் நடத்தினார் ராம்ஜஸ். பிறக்கும் குழந்தை ஆணாக இருக்கும் பட்சத்தில் அதனை அரண் மனைக்கு அர்ப்பணிப்பதாக ஹரிசந்த் ஒப்புக் கொண்டார். அவரது மனைவியையும் சம்மதிக்க வைத்தார்.

1872, நவம்பர் மாதத்தின் ஓர் இரவுப் பொழுதில் ஹரிசந்தின் மனைவிக்குப் பிரசவ வலி வந்தது. விஷயத்தைக் கேள்விப்பட்ட ராம்ஜஸ் நகம் கடிக்க ஆரம்பித்தார். ஏதோ தன் மனைவிக்குப் பிரசவம் என்பதுபோலக் குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்தார். இஷ்ட தெய்வங்களை எல்லாம் வேண்டிக் கொண்டார்.

குழந்தை பிறந்தது. ராஜ யோகத்துடன். ஆம், ஆண் குழந்தைதான். மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்தார் ராம்ஜஸ். ஹரிசந்துக்கும், மயக்கம் தெளிந்து எழுந்த அவரது மனைவிக்கும் உள்ளூர வருத்தம். இருந்தாலும் தன் மகனுக்குக் கிடைக்கப் போகும் ராஜ வாழ்வை எண்ணிப் பார்த்து ஒருவரை ஒருவர் சமாதானப்படுத்திக் கொண்டார்கள்.

மறுநாளே சமஸ்தானத்தில் ஆங்காங்கே ஒரு செய்தி பரவியது. 'மகாராணிக்குப் பிரசவ வலி ஏற்பட்டுவிட்டது.'



# போங்கு ஆட்டம்!

கேசர்தேவி. இதுதான் அந்தப் பெரியம்மாவின் பெயர். கபுர்தலாவில் அப்போதிருந்த நெம்பர் ஒன் பிரசவ ஸ்பெலிஸ்ட், அதாவது மருத்துவச்சி. மிகவும் கைராசிக்காரி என்று பெயரெடுத்தவள். ஊருக்குள் யாராவது முழுகாமல் இருந்தால், நாடி பிடித்துப் பார்த்து அந்தச் செய்தியை உறுதி செய்வதே கேசர்தேவிதான். அவள் இல்லாமல், எந்தப் பெரிய வீடுகளிலும் பிரசவம் நடக்காது.

லாலா ஹரிசந்தின் மனைவிக்குப் பிரசவம் பார்த்தவளும் அவளே. ஆண் குழந்தை பிறந்துள்ளது என்று வெளியே காத்திருந்த ஹரிசந்திடம் சொன்னதும் அவளே. பிரதம மந்திரி ராம்ஜஸின் மூளை, அடுத்து செய்ய வேண்டிய காரியத்தை அவசர அவசரமாகத் திட்டமிட்டது. கேசர்தேவியை எதிர்த்தாற் போலுள்ள தன் இல்லத்துக்கு அவசர அவசரமாக அழைத்துச் சென்றார்.

அவளுக்கோ ஏகக் குழப்பம். இவர் ஏன் இந்த நேரத்தில் தன்னை அழைத்துச் செல்கிறார் என்று.

'பெரியம்மா, அரண்மனை ரகசியம் ஒன்றை உன்னிடம் இப்போது சொல்லப் போகிறேன். யாரிடமும் சொல்லிவிடாதே' என்று மகாராணி ஆனந்த் கவுரின் பொய் கர்ப்பக் கதையை அவிழ்த்துவிட்டார் ராம்ஜஸ். அதைக் கேட்ட கேசர்தேவி முதலில் கொஞ்சம் அதிர்ச்சியடைந்தாலும், பின்பு அலட்சியமாகப் பதில் அளித்தாள்.

‘அதானே பார்த்தேன். ஊருல எந்தப் பொம்பளை கர்ப்பம் ஆனாலும் நான் நாடி பார்த்துச் சொன்னதுக்கு அப்புறம்தான் அதை எல்லாரும் நம்புவாங்க. ஆனா மகாராணியை சோதனை செய்ய எனக்கு ஒருதடவைகூட அழைப்பு வரலையேன்னு சந்தேகப்பட்டேன்.’

சுதாரித்துக் கொண்ட ராம்ஜஸ் தொடர்ந்தார். ‘பெரியம்மா, உன்னால எனக்கு ஒரு காரியம் ஆகணும். நீ என்ன கூலி கேட்டாலும் தரத் தயாரா இருக்கேன். எல்லாம் நம்ம சமஸ்தானத்தோட நன்மைக்காகத்தான்னு நீ முதல்ல தெளிவாப் புரிஞ்சிக்கணும்.’

‘விஷயத்துக்கு வா சாமி.’

‘ஹரிசந்தோட மனைவிக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கே, அதுதான் இளவரசர். புரியுதா?’

‘இல்லையே. குழப்பமா இருக்கே.’

‘அந்தக் குழந்தை ஹரிசந்தோட குழந்தை இல்லை. நிறைமாச கர்ப்பிணியா இருக்குற மகா ராணி ஆனந்த் கவுருக்குப் பிறந்த குழந்தை. அப்படித்தான் சொல்லணும். இதோ இப்பத்தான் அரண்மனையில மகாராணிக்கு பிரசவம் நடந்துச்சு. நீதான் பிரசவம் பார்த்தவ. இப்ப புரியுதா?’ என்று சொல்லியபடியே அவளது கையில் நகைகள் சிலவற்றைத் திணித்தார் அவர்.

‘தெளிவாப் புரியுது சாமி.’

‘குழந்தையை அரண்மனையில் கொண்டுபோய் வைக்குறது உன் பொறுப்பு. நானும் கூட வருவேன். பயப்படாதே. விஷயத்தை எந்தப் பிரச்னையும் இல்லாம சரியா நடந்ததுன்னா, உனக்கு இன்னமும் அள்ளித் தருவேன். ஆனா எந்த வழியிலாவது விஷயம் வெளிய போச்சுன்னு வைச்சுக்கோ, அவ்வளவுதான்’ மிரட்டினார் ராம்ஜஸ்.

கேசர்தேவி, ராம்ஜஸுடன் ஹரிசந்த் வீட்டுக்கு வந்தாள். ஹரிசந்தும் அவரது மனைவியும் குழந்தையை ராம்ஜஸிடம் கனத்த இதயத்துடன் ஒப்படைத்தனர். பட்டுத்துணி ஒன்றைச் சுற்றிக் குழந்தையைக் கையில் ஏந்திக் கொண்ட கேசர்தேவி, ராம்ஜஸின் குதிரை வண்டியில் ஏறினாள். யாரும் பார்க்காத வண்ணம் அரண்மனையின் பின்புறம் வழியாக உள்ளே நுழைந்தார் ராம்ஜஸ். ராம்சந்துக்குப் பிறந்த அந்த ஆண் குழந்தை, 1872, நவம்பர் 26, நள்ளிரவு இரண்டு மணிக்கு இளவரசராகக் கபுர்தலா அரண்மனைக்குள் நுழைந்தது.

அதுவரை அந்தத் திட்டத்துக்கு அரைகுறை மனத்துடன் சம்மதம் சொல்லியிருந்த மகாராணி ஆனந்த் கவுர், கேசர்தேவியின் கைகளிலிருந்த குழந்தையைப் பார்த்ததும் தன்நிலை இழந்தாள். பரவசமானாள். குழந்தை அழுதது. மகாராணி உருகிப் போனாள்.

‘இது எனக்குப் பிறந்த குழந்தைதான்’ ஆனந்த் கவுர் கண்களில் நீர் கசியச் சொன்னாள். ராம்ஜஸின் முகத்தில் புன்னகை பிறந்தது. குழந்தையைப் பரம்பரை பரம்பரையாக உபயோகப்படுத்தி வரும் தங்கத் தொட்டிலில் போட்டனர்.

மறுநாள் அதிகாலையிலேயே சமஸ்தானமெங்கும் அந்த இனிப்புச் செய்தி பரவியது. மக்கள் கொஞ்சம் கொஞ்சமாக அரண்மனை முன் கூட ஆரம்பித்தார்கள். ‘இளவரசர் வாழ்க! வாழ்க!’ கோஷம் எதிரொலிக்க ஆரம்பித்தது.

சிறிது நேரத்தில் அரண்மனை வாசலில் அணிவகுத்து நின்ற படையினர், புதிதாகப் பிறந்த இளவரசருக்கு மரியாதை செய்யும் விதமாக வானத்தை நோக்கித் துப்பாக்கியால் சுட்டார்கள். சமஸ்தான மக்களுக்கெல்லாம் இனிப்பு வழங்குமாறு உத்தரவிட்டார் ராம்ஜஸ். விருந்துக்கும் ஏற்பாடு செய்தார். ஏழைமக்களுக்கு ஏராளமான உதவிகள் குவிந்தன. சிறையிலிருந்து அநேகக் கைதிகள் விடுதலை செய்யப்பட்டார்கள்.

பஞ்சாபின் கவர்னருக்கும் இதர பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும் இளவரசர் பிறந்த செய்தி அனுப்பப்பட்டது. பக்கத்து சமஸ்தானங்களுக்கும் செய்தி பரவியது.

உறவினர்களும் முக்கியஸ்தர்களும் குழந்தையைப் பார்க்க அரண்மனைக்கு வர ஆரம்பித்தார் கள். பல இடங்களிலிருந்து இளவரசருக்கான வாழ்த்துச் செய்திகளும் பரிசுப் பொருள்களும் குவிந்தன.

குவாலியர் மகாராஜா ஜெயாஜிராவ் சிந்தியா, ஜம்மு காஷ்மீர் மகாராஜா ரன்பிர் சிங், பாட்டி யாலா மகாராஜா மகேந்திர சிங் பகதூர் ஆகியோர் நேரடியாகவே கபுர்தலாவுக்குக் கிளம்பி வந்துவிட்டனர். தனதாக்கிக் கொண்ட குழந்தையோடு மகாராணி ஆனந்த் கவுர் அவர்களுக்குக் காட்சி கொடுத்தார். குழந்தையை ஆசிர்வதித்துவிட்டுச் சென்றார்கள்.

வந்து போனவர்களெல்லாம் மகாராஜா காரக் சிங் பற்றியும் விசாரிக்கத் தவறவில்லை. ராம்ஜஸ் தன் முகத்தில் கவலையை ஒட்டி வைத்துக் கொண்டு எல்லோருக்கும் ஒரே பதிலைத் திருப்பித் திருப்பிச் சொன்னார். 'இப்படி ஒரு அழகான மகன் பிறந்த சமயத்தில் மகாராஜாவின் நிலை மோசமாகிவிட்டது. அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாம். நான் சொல்லவில்லை. அவரைக் கவனித்துக் கொள்ளும் மருத்துவர்கள் சொல்கிறார்கள். எல்லாம் தலைவிதி. அதைப் பற்றி நினைத்தாலே நெஞ்சு வலிக்கிறது. அந்த நல்ல மனிதருக்கு இப்படி ஒரு நிலைமை ஏற்பட்டிருக்க வேண்டாம். அவர் குணமாக வேண்டும் என்று இறைவனைப் பிரார்த்திப் பதைவிட நம்மால் வேறு என்ன செய்யமுடியும்?'

பாக்ஸு மலைப்பிரதேசத்தில் அந்த மாளிகைக்குள் பைத்தியக்கார மகாராஜா காரக் சிங், தெள்ளத் தெளிவாகப் புலம்பிக் கொண்டிருந்தார்.

'நம்பாதீங்க. நம்பாதீங்க. அது என் குழந்தை இல்ல. எனக்கும் மகாராணிக்கும் தொடர்பே இல்ல. நான் பைத்தியக்காரன் கிடையாதுடா. அடேய், எவனுக்கோ பொறந்ததை இளவரச ராக்க யாருடா உங்களுக்கு உரிமை கொடுத்தா?'

ஆனால் அந்தக்குரல், மாளிகையில் அவரது அறையைத் தாண்டி வெளியே ஒலிக்கவில்லை. அவருக்குப் பாதுகாப்பாகப் போடப்பட்டிருந்த மருத்துவர்கள், காவலாளிகள் எல்லாம் தேவையான அளவு லஞ்சத்தைப் பெற்றுக் கொண்டு, மகாராஜாவைப் புலம்பவிட்டு நிஜப் பைத்தியமாக்கிக் கொண்டிருந்தார்கள்.

சமஸ்தானத்தின் அடுத்த மகாராஜா ஆகலாம் என்று பகல் கனவு கண்டுகொண்டிருந்த பங்காளிகள் சும்மா இருப்பார்களா என்ன? பிரிட்டிஷ் அரசிடம் சென்று பிராது கொடுத்தார்கள். 'அந்தக் குழந்தை நிஜ வாரிசுதானா என்பதில் எங்களுக்குப் பெரும் சந்தேகம் இருக்கிறது. உண்மை நிலை அறிய வேண்டுகிறோம்.'

இந்தப் பிராது பற்றி விசாரிக்க, சமஸ்தானத்தின் தலைமை மருத்துவ அதிகாரியாக இருந்த கர்னல் வார்பர்ட்டன் (Warburton) நியமிக்கப்பட்டார். அப்போது மரபணுப் பரிசோதனை கிடையாதே. அரண்மனையில் உள்ள பணியாளர்கள், அதிகாரிகள், காவலாளிகள், மகாராணியின் அந்தரங்கப் பணிப்பெண்கள் என ஒவ்வொருவரும் விசாரிக்கப் பட்டனர்.



வைஸ்ராய் தாமஸ் ஜார்ஜ் பேரிங்

மகாராணி கர்ப்பமாக இருப்பதைக் கண்டீர்களா? எந்த தினத்தில் பிரசவம் நடந்தது? பிரசவத்தின்போது யாரெல்லாம் உடன் இருந்தார்கள்? இப்படிப் பல கோணங்களில் பலரிடம் தன் விசாரணையை நடத்தினார் வார்பர்ட்டன். 'மகாராணியை விசாரிக்க வேண்டும்' என்றார். 'அய்யய்யோ, அதெல்லாம் கூடாதுங்க. எங்க கலாசாரப்படி அது தப்பு. மகாராணிங்க எல்லாம் வேற்று நாட்டுக்காரங்ககூட, முக்கியமா ஆம்பிளைங்ககூட பேச மாட்டாங்க' தடுத்தார் ராம்ஜஸ்.

'மகாராணியின் வாக்குமூலம் ரொம்ப முக்கியம். நான் பேசியே ஆகணும்' - அடம்பிடித்தார் வார்பர்ட்டன். 'வேணும்னா ஒண்ணு செய்யுங்க. மகாராணியோட கர்ப்ப காலத்துல அவங்ககூட இருந்து கவனிச்சது கேசர்தேவிங்கிற பெரியம்மா. அவங்கதான் பிரசவமும் பார்த்தாங்க. அவங்களை விசாரிச்சுக்கோங்க' என்று ஆலோசனை சொன்னார் ராம்ஜஸ். அதை ஏற்றுக்கொண்ட வார்பர்ட்டன், கேசர்தேவியை விசாரணை செய்தார். அவளும் வாங்கிய லஞ்சத்துக்கு ஏற்ப பொய்யை உண்மையாக்கினாள்.

முன்னுக்குப் பின் முரணாக இருந்த பலரது வாக்குமூலங்களையும் ஆராய்ந்து பார்த்தபோது வார்பர்ட்டனுக்கு ஒரு விஷயம் தெளிவாகத் தெரிந்தது. 'இவர்கள் ஆடுவது போங்கு ஆட்டம். குழந்தை யாருக்கோ பிறந்தது.'

வார்பர்ட்டன் உண்மையைத் தெரிந்துகொண்டார் என்று உணர்ந்ததும் ராம்ஜஸ் அவரைச் சந்திக்கச் சென்றார். அவர் மனத்தை மாற்றும் வகையில் வார்த்தைகளையும் கூடவே லஞ்சத்தையும் பரிமாறினார். 'பிறந்திருக்கும் குழந்தை மகாராஜா காரக் சிங்குக்கும் மகாராணி ஆனந்த் கவுருக்கும் பிறந்ததுதான் என்பதில் எந்தவிதச் சந்தேகமும் இல்லை' - வாங்கிய லஞ்சத்துக்கு வஞ்சகம் செய்ய விரும்பாத வார்பர்ட்டன், அரசுக்கு அறிக்கை அனுப்பினார். பிரிட்டிஷ் அரசும் ஒப்புக் கொண்டு, அந்தக் குழந்தையைச் சமஸ்தானத்தின் இளவரசராக அங்கீகரித்தது.

பங்காளிகள் நொந்துபோனார்கள். அடுத்து என்ன செய்யலாம் என்று யோசித்து, இந்தியாவின் அப்போதைய வைஸ்ராய் தாமஸ் ஜார்ஜ் பேரிங்கை (Thomas George Baring) நேரடியாக அணுகினார்கள். கபுர்தலாவின் நடக்கும் போங்கு ஆட்டத்தைப் புட்டுப் புட்டு வைத்தார்கள். வைஸ்ராயும் மீண்டும் விசாரிக்கச் சொல்லி, இன்னொரு உயரதிகாரியை அனுப்பினார்.

எவ்வளவோ கிடுக்கிப்பிடிகளைச் சமாளித்து மீண்டு வந்த ராம்ஜஸுக்கு இன்னொரு அதிகாரியைச் சமாளிக்கத் தெரியாதா என்ன? 'இந்த ராஜகுடும்பத்துக்கு வேண்டாத சிலர், தங்களது பதவி ஆசையால் பொய்யைப் பரப்பி வருகின்றனர். நீண்ட நாள் கழித்து தெய்வாதீனமாகப் பிறந்துள்ள இந்த ஆண் வாரிசைப் பற்றி, அவதூறு சொல்லி வருகின்றனர். இது மகாராஜாவையும் மகாராணியையும் அவமானப்படுத்தும் செயலாகும். எனவே அவர்கள் மீது நடவடிக்கை எடுக்குமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்' - என்ற அர்த்தத்தில் கடிதம் ஒன்றை எழுதினார். அதற்கு ஆதரவாக ஆயிரம் பேர்களிடம் கையெழுத்து / கைநாட்டு வாங்கினார். அதனை அரசுக்கு அனுப்பிவைத்தார்.

வைஸ்ராய் சொன்னதற்காக விசாரிக்க வந்த புதிய உயரதிகாரி, ராம்ஜஸை வந்து சந்தித்தார். ராம்ஜஸ் அவருக்கு ஒரு நகைப்பெட்டி ஒன்றைக் கொடுத்தார். உள்ளே வைர நெக்லெஸ் ஒன்று ஜொலிஜொலித்தது. பவ்யமாக அதனை ஏற்றுக்கொண்ட அந்த உயரதிகாரி, 'அந்தக் குழந்தை நிஜமான வாரிசுதான்' என்று திவ்யமாக அறிக்கை கொடுத்தார். வைஸ்ராய் திருப்தி அடைந்தார்.

பங்காளிகளுக்குத் தூக்கம் போனது. ஒவ்வொரு இடமாகச் சென்று முறையிட்டுக் கொண்டே இருந்தார்கள். ஒரு கட்டத்துக்குமேல் பங்காளிகளின் நச்சரிப்பைத் தாங்க முடியாத பிரிட்டிஷ் அரசு, அவர்களை கபுர்தலாவிலிருந்து வெளியேற்றியது. அருகிலுள்ள ஜலந்தரில் குடி வைத்தது. அந்தக் குடும்பத்தில் அடுத்து அரியணை ஏறத் தகுதியான வாரிசுகளுக்கு 'ராஜா' பட்டம் கொடுத்து, வருட மானியத்துக்கு ஏற்பாடு செய்தது.

புலம்பிப் புலம்பி நிஜமாகவே மனநிலை பாதிக்கப்பட்டிருந்த மகாராஜா காரக் சிங், உடல் நிலையும் பாதிக்கப்பட்டு, 1877, ஏப்ரல் 2ல் இறந்துபோனார். மகாராணி ஆனந்த் கவுர் உடைந்துபோனாள். அவளது மன உறுத்தல் அதிகமானது. 'இந்தக் குழந்தை என்னுடையதல்ல' என்று வெளிப்படையாகக் குமுற ஆரம்பித்தாள். ராம்ஜஸ் புதிதாக எதுவும் யோசிக்கவில்லை. அரண்மனை மருத்துவரை விட்டு ஒரே அறிக்கை மட்டும் வெளியிட்டார். 'மகாராஜாவின் இழப்பால் மகாராணியின் மனநிலையும் பாதிக்கப்பட்டுவிட்டது.'

அந்த ஆண் குழந்தைக்கு அப்போது வயது ஐந்து. வைக்கப்பட்டிருந்த திருநாமகரணம் ஜெகத்ஜித் சிங் (Jagatjit Singh). இளவரசர் மேஜர் ஆகும்வரை, சமஸ்தானத்தின் நிர்வாகப் பொறுப்பை பிரதம மந்திரி ராம்ஜஸ் கவனித்துக் கொள்ளலாம் என்று உத்தரவிட்டிருந்தது பிரிட்டிஷ் அரசு. ராம்ஜஸ், தன் நண்பர் ஹரிசந்துக்கு சமஸ்தானத்தின் நிதி அமைச்சர் பதவி கொடுத்தார்.

நிதி அமைச்சர்தான் தன் நிஜ அப்பா என்ற ரகசியம் அறியாமல் அரியணைக் கனவுகளோடு வளர்ந்துவந்தார் இளவரசர் ஜெகத்ஜித் சிங்.



# 53

# யானையின் ஃபார்முலா!

*எப்படி எப்படியோ கபுர்தலா சமஸ்தானத்தின் பட்டத்து இளவரசராகப் பதிய வைக்கப்பட்ட ஜெகத்ஜித் சிங், சீரும் சிறப்புமாக சீக்கிய குணங்களுடன் வளர்க்கப்பட்டார். சிறுவயதிலிருந்தே அவர் பாதங்களைத் தரையில் ஊன்ற அரண்மனை ஊழியர்கள் யாரும் அனுமதிக்கவில்லை. அவர் செல்ல நினைக்கும் இடங்களுக்கெல்லாம் முதலில் பட்டுக் கம்பளம் அனுப்பப்பட்டது. அவர் மேல் வெயில் படக்கூட யாரும் அனுமதிக்கவில்லை. குடையோடு ஒருவர் அவர் பின்னே ஓடிக் கொண்டே இருந்தார்.*

*'இளவரசர் பெரிய பெரிய படிப்பெல்லாம் படிக்க வேண்டும். அதனால் அவரை அஜ்மீருக்கு அனுப்பலாம்' என்றார்கள் சிலர். 'அஜ்மீர் என்ன அஜ்மீர்? லண்டனுக்குச் சென்று படித்தால்தான் கௌரவம்' என்றார்கள் சிலர்.*

*'ம்ஹூம், வாய்ப்பே இல்லை. ஜெகத்ஜித் சிங்கை இளவரசராகக் கொண்டு வர நான் பட்ட பாட்டை நாய் பட்டிருக்குமா? அப்படிப்பட்ட பட்டத்து இளவரசரை வெளியூருக்கோ, வெளிநாட்டுக்கோ அனுப்பிப் படிக்க வைக்க வெல்லாம் முடியாது. ஏதாவது ஆபத்து நேர்ந்துவிட்டால்?' - அப்போது ஆட்சி நிர்வாகத்தை இளவரசரின் சார்பாகக் கவனித்துக் கொண்டிருந்த பிரதம அமைச்சர் ராம்ஜஸ், ஜெகத்ஜித் சிங்கின் கல்வி பற்றி ஒரு தீர்மானமான முடிவை எடுத்திருந்தார்.*

*அரண்மனையிலேயே அனைத்து விதமான கல்விகளையும் இளவரசருக்குக் கற்றுக் கொடுப்பதற்கு தேர்ந்த ஆசிரியர்களைத் தேடிப்பிடித்துக் கொண்டுவந்தார்.*

இளவரசருக்கு இஷ்டம் இருந்தால் பாடம் படிப்பார் அல்லது அடுத்தவர்களை விளையாடச் சொல்லிவிட்டு உட்கார்ந்து வேடிக்கை பார்க்கப் போய்விடுவார். இளவரசர் விளையாடுவது?

அதெல்லாம் கிடையவே கிடையாது. ஓடி விளையாடி கீழே விழுந்து அடிபட்டுவிட்டால்? பொத்திப் பொத்தி வளர்க்கப்பட்டார் ஜெகத்ஜித் சிங். இளவரசர் பசி என்பதை உணர்ந்ததே இல்லை. காரணம்? இளவரசருக்குப் பசிக்குமோ என்று நினைத்து எந்நேரமும் அவருக்கு எதையாவது ஊட்டி விடுவதற்கென்றே பணியாளர்கள் இருந்தார்கள். உணவு அல்லது நொறுக்குத் தீனி. கேட்க வேண்டுமா? சிறுவயதிலேயே ஜெகத்ஜித் சிங் எண்ணெய் பேரல் போல படு குண்டாக மாறிப் போனார்.

அவர் அரண்மனைக்குள் செல்ல நினைக்கும் இடங்களுக்குக்கூட இடுப்பிலோ / முதுகிலோ வைத்துத் தூக்கிக் கொண்டுபோக பயில்வான் பணியாளர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். சதா சர்வ காலமும் இளவரசருக்குப் பலபேர் பணிவிடை செய்துகொண்டே இருந்ததால் அவரது உடல் பெருத்துக் கொண்டே போனது.

சிறுவனாக இருக்கும்வரை இளவரசருக்கு குண்டு உடம்பினால் எந்தவிதப் பிரச்னையும் வரவில்லை. ஆனால்...

பதினான்காவது வயதில் இளவரசருக்குத் திருமணப் பேச்சு ஆரம்பமானது. இந்தியாவிலுள்ள பல சமஸ்தான மகாராஜாக்கள் தங்கள் நாட்டு இளவரசியை ஜெகத்ஜித் சிங்குக்கு மணமுடிக்க வரிசை கட்டி நின்றார்கள். குறிப்பாக ராஜபுத்திர வம்சத்தைச் சார்ந்த பல பெண்கள், மணப் பெண்ணாகத் தங்களை பாவித்து பகல் கனவு காண ஆரம்பித்திருந்தார்கள்.

ஜெகத்ஜித் சிங்கும் தனது குண்டு உடம்பைப் பற்றி அவ்வளவு நாள் அலட்டிக் கொள்ளவே இல்லை. அந்த உடம்பை வைத்துக் கொண்டே ஓரளவு வாள் பயிற்சி, வில் பயிற்சி, துப்பாக்கி சுடும் பயிற்சி போன்ற சில ராஜ கலைகளைத் தன்னால் இயன்ற அளவுக்குக் கற்று வைத்திருந் தார். குதிரையேற்றமும் பழகினார். அதனாலெல்லாம் அவர் இளைக்கவில்லை. குதிரைதான் பாவம்.

பெரும்பாலான ராஜ குடும்பங்களில் ஒரு பழக்கம் உண்டு. இளவரசர்களுக்குக் கல்வி, விளையாட்டு, வீரக் கலைகளோடு மற்றொரு முக்கியமான விஷயத்தையும் கற்றுக் கொடுப்பது பாரம்பரிய வழக்கம். அது வாத்சாயனர் சமாசாரம்.

'பெரிய வீரனா இருந்து என்ன பிரயோசனம்?' என்று மணப்பெண்ணாக வரும் இளவரசி மஞ்சத்தில், இளவரசர் முகத்தில் காறி உமிழ்ந்து விடக்கூடாது என்பதற்காகத்தான் இந்த ஏற்பாடு. காம சூத்திரத்தைத் தியரியாகக் கற்றுக் கொடுப்பதற்கென்று ஓர் ஆசிரியர் வருவார். கல்யாணக் கனவுகளோடு காத்திருக்கும் இளவரசர்களுக்குப் பாடம் நடக்கும்.

'ஸ்ரோத்ர தவக்சக்ஷுர் ஜிஹ்வாக்ராணானாம் ஆத்மசம்யுக்தேன மனசாதிஷ்டிதானாம் ஷ்வேஷு ஷ்வேஷு ஆனுகூல்யதாம் ப்ரவருத்திம் காமம்' என்று காம சூத்திரத்தின் வரிகள் ஒவ்வொன்றாகச் சொல்லி அதற்கான விளக்கத்தையும் கொடுக்க ஆரம்பிப்பார் ஆசிரியர்.

'காமம் என்பது ஐம்புலன்கள், மனம், ஆன்மா ஆகிய அனைத்தின் சங்கமத்தால் உணரக்கூடிய அனைத்து இன்பம் தருபவனவற்றையும் குறிக்கும்.'

சூத்திரத்தின் ஏழு பகுதிகளான சாதாரணம், சாம்பிரயோகிகம், கன்யாசம்பிரயுக்தகம், பார்யாதிகாரம், பாராதாரிகம், வைசிகம், ஔபனிஷாதிகம் என அனைத்தும் தியரி வகுப்புகளில் உண்டு. இளவரசர்களின் ஆர்வத்தைப் பொருத்து வகுப்புகளின் எண்ணிக்கை கூடும் அல்லது குறையும்.

'தியரி மட்டும்தானா?' என்றொரு கேள்வி உங்களுக்கு எழுந்தால் அதற்கான பதில், 'நிச்சய மாக இல்லை.'

இளவரசர்களுக்குப் பயிற்சி கொடுப்பதற்கென்றே தேர்ந்த பெண்கள் நியமிக்கப்படுவார்கள். எல்லா வகுப்புகளும் திருப்தியாக நடந்து முடிந்த பின்னரே, இளவரசரின் டும் டும் டும்.

நமது கபுர்தலா இளவரசர் ஜெகத்ஜித் சிங் கதைக்கு வருவோம். அவருக்கு எப்போதும் எந்தத் தியரி வகுப்புகளிலும் ஆர்வம் இருந்ததில்லை. மிகவும் செல்லமான இளவரசராக வளர்க்கப் பட்டதால் எந்த ப்ராக்டிகல் வகுப்பிலும் அவர் உடலை வளைத்து, வருத்தி பங்கேற்றதும் இல்லை. ஆனால் மேற்கூறிய விஷயம் அப்படிப்பட்டதில்லையே. கலையைக் கற்றே ஆக வேண்டிய கட்டாயத்தில் இருந்தார் இளவரசர்.

இளவரசருக்கு வகுப்பெடுக்கத் தகுதியான, திறமை வாய்ந்த பெண்ணொருத்தியை சமஸ்தானமெங்கும் சல்லடை போட்டுத் தேடினார் பிரதம அமைச்சர். உள்ளூரில் யாருமே சிக்கவில்லை. பக்கத்து சமஸ்தானங்களுக்குச் செய்தியைப் பரப்பி, அங்கு யாராவது கிடைப் பார்களா என்று காத்திருந்தார். லக்னோவில் சகல திறமைகளும் வாய்ந்த பெண்ணொருத்தி இருக்கிறாள் என்று செய்தி அவருக்குக் கிடைத்தது.

ஒரு நிமிடம்கூடத் தாமதிக்கவில்லை. உடனே லக்னோவுக்கு ஆளனுப்பினார். அந்தப் பெண்ணை அழைத்து வருமாறு. வர மறுத்தால் அலேக்காகத் தூக்கிக் கொண்டு வருமாறு.

லக்னோ பெண், கூப்பிட்டனுப்பிய மரியாதைக்கு ஓடோடி வந்தாள். பிரதம மந்திரி அவளிடம் பேச வேண்டியதையெல்லாம் பேசினார். இளவரசரை அறிமுகப்படுத்தி வைத்தார். ஜெகத்ஜித் சிங்கைப் பார்த்த மறுகணமே அவளது முகம் சுருங்கிப் போயிற்று. 'இளவரசர் இவ்வளவு குண்டா?' இருந்தாலும் ஒப்புக் கொண்டு விட்டாளே. கபுர்தலாவிலேயே தங்கி வகுப் பெடுக்க ஆரம்பித்தாள். சில நாள்கள் ஓடின.

'என்னை மன்னிச்சிருங்க. நான் தோத்துட்டேன். என்னால கத்துக் கொடுக்க முடியல' என்று பிரதம அமைச்சரிடம் வெளிப்படையாக மன்னிப்புக் கேட்டுவிட்டு கபுர்தலாவை விட்டுக் கிளம்பினாள் லக்னோ பெண். பிரதம மந்திரி சோர்ந்து போய் உட்கார்ந்து விட்டார். 'அட, இவ போனாப் போகட்டும். எனக்கு ஒரு பெண்ணைத் தெரியும். லாகூர்ல இருக்கா. மன்மதக் கலைகளைக் கற்றுக் கொடுப்பதில் மகா கெட்டிக்காரி' - சக அமைச்சர் ஒருவர் ஆலோசனை கூறினார்.

அடுத்த சில நாள்களிலேயே லாகூர் பெண் வரவழைக்கப்பட்டாள். அவளுக்கும் குண்டு இளவரசரைப் பார்த்ததும் நிறையவே அதிர்ச்சிதான். இருந்தாலும் தன்னால் இயன்றவரை முயற்சிசெய்து பார்த்தாள். பிரயோசனமில்லை. தோல்வி முகத்தோடு லாகூருக்கே திரும்பிப் போனாள்.

1886, ஏப்ரல் 16. கபுர்தலாவில் கல்யாணக்களை கட்டியிருந்தது. அன்று இளவரசருக்கு முதலாவது திருமணம். மணப்பெண்ணின் பெயர், ஹபன்ஸ் கௌர் (Habans Kaur). ரஞ்சித் சிங் என்ற பெரும் பணக்காரரின் மகள். சகலரும் ஆசிர்வதிக்க திருமண விழா இனிதே நடந் தேறியது. அதற்குப் பின்புதான் இளவரசரின் பாடு திண்டாட்டமாகிப் போனது. அந்த குண்டு உடம்பு அவரை ஏகத்துக்கும் படுத்தியது. காரியம் ஆகவில்லை.

வருடங்கள் ஓடின. 1890 நவம்பர் 14. ஜெகத்ஜித் சிங், கபுர்தலாவின் மகாராஜாவாக அதிகார பூர்வமாகப் பொறுப்பேற்றார். தங்கள் வீட்டில் ஆயிரத்தெட்டுக் கவலைகள் இருந்தாலும் அரண்மனையில் எதாவது பிரச்னை என்றால் மக்களின் கவனம் அதில்தானே இருக்கும். அவர்களது அடுத்த கவலை, 'என்னப்பா இது, கல்யாணம் ஆகி நாலு வருஷம் ஓடிப் போச்சு. இன்னும் நம்ம மகாராஜாவுக்கு வாரிசு பிறக்கலையே?'

அரண்மனையிலும் சமஸ்தானத்திலும் படர்ந்த கவலை ரேகைகளை அறிந்தாள் முன்னா ஜன். நடுத்தர வயதையும் தாண்டிக் கொண்டிருந்தவள் அவள். ஆனால் அம்மாதிரியான விஷயங்களில் அனுபவம் மிக்கவளாக, அடுத்தவர்களது அந்தரங்கப் பிரச்னைகளுக்கு ஆலோசனை சொல்லும் கில்லாடி லேடி. பிரதம அமைச்சரைத் தேடி வந்தாள் அவள். தான் வந்த காரணத்தையும் விளக்கினாள்.

'என்னால் இளவரசரின் பிரச்னை என்ன என்பதைக் கண்டறிந்து அதற்கான தீர்வைச் சொல்ல முடியும்' என்றாள். பிரதம அமைச்சர் அவளை ஜெகத்ஜித் சிங்கிடம் அழைத்துச் சென்றார். அந்த நேரத்தில் ஜெகத்ஜித் சிங், மற்றவர்கள் டென்னிஸ் விளையாடுவதை ஓர் ஓரமாக உட்கார்ந்து ரசித்துக் கொண்டிருந்தார். உடலின் மற்ற பாகங்கள் எல்லாம் ஓய்விலிருக்க, கையும் வாயும் மட்டும் வேலை செய்து கொண்டிருந்தன. அவரது தொப்பை நன்றாகப் பரந்து விரிந்து எல்லாவற்றையும் உள்வாங்கிக் கொண்டிருந்தது.

தூரத்திலிருந்தே மகாராஜாவைப் பார்த்த முன்னா, தன் கேள்விகளை ஆரம்பித்தாள். 'மகாராஜா வின் வயது என்ன? எடை என்ன?'

'வயது பத்தொன்பது. எடை இருநூற்று இருபது பவுண்ட்.'

'ஓஹோ. அவரது உடல் எடைதான் பிரச்னைக்குக் காரணம். முக்கியமாக அந்த பெரிய தொப்பை.'

'அது எனக்குத் தெரியாதா என்ன?' பிரதம அமைச்சருக்குக் கோபம் வந்தது.

'இருங்கள். கொஞ்சம் பொறுங்கள். மகாராஜாவால் சட்டென உடல் எடையைக் குறைப்பது இயலாத காரியம். வேறொரு தீர்வு இருக்கிறது. யானைகள் உறவு கொள்வதைப் பார்த்திருக் கிறீர்களா? அதே முறைதான் மகாராஜாவுக்கும். இது என் யோசனை. நிச்சயம் பலன் இருக்கும்.'

பிரதம அமைச்சருக்கு அந்த யோசனை பிடித்திருந்தது. சமஸ்தானத்திலிருந்த யானைகளைக் கவனித்துக் கொண்டிருந்த அதிகாரியான சர்தார் தௌலத் கானை (Daulat Khan) வரவழைத்தார். அப்போது ஜெகத்ஜித் சிங்கும் உடனிருந்தார். யானைகள் பற்றிக் கேட்டறிந்து கொண்டார். 'அதைப் பார்க்க முடியுமா?' என்று கேட்டார் பிரதம அமைச்சர்.

‘இல்லீங்க. யானைங்க மத்தவங்க முன்னாடி... ம்ஹூம். வாய்ப்பு இல்லீங்க’ என்றார் தௌலத். ஆனால் தௌலத்தின் யோசனைப்படி, அவரது மேற்பார்வையில் மகாராஜாவுக்காக ஸ்பெஷல் கட்டில் வடிவமைக்கப்பட்டது. ஜே.ஓ.எஸ். எல்மோர் (J.O.S. Elmore) என்ற ஐரோப்பியர் அந்தக் கட்டிலை வேலை மெனக்கிட்டு, அதிகக் கவனமெடுத்து வடிவமைத்தார். அதாவது யானையின் ஃபார்முலாபடி.

பிரதம அமைச்சரும் அந்த வேலையை உடனிருந்து கவனித்துக் கொண்டார். ஒரே வாரத்தில் அந்த ஸ்பெஷல் கட்டில் தயாராக இருந்தது. ஜெகத்ஜித் சிங்கை, அந்தக் கட்டில் கவர்ந்தது. புதிய காரை டெஸ்ட் டிரைவ் ஓட்டிப் பார்ப்போமே, அதேபோல அவரும் டிரையல் பார்த்தார். அதற்கு அந்தப்புர நாயகிகள் உதவினார்கள். திருப்தியாக இருந்தது.

கட்டில், மலை வாசஸ்தலமான முசௌரிக்கு (Mussoorie) அனுப்பப்பட்டது. தன் மகாராணி யான ஹபன்ஸ் கௌருடன் தேனிலவுக்குக் கிளம்பினார் மகாராஜா ஜெகத்ஜித் சிங்.

அடுத்த பத்தாவது மாதம், கபுர்தலா சமஸ்தானத்தில் மக்கள் ஆனந்தமாகப் பாங்ரா ஆடினார்கள். அவர்கள் வாயிலெல்லாம் இனிப்பு. அரண்மனை அலங்காரங்களால் ஜொலித்தது. ஜெகத்ஜித் சிங் அப்பா ஆனார். ஹபன்ஸ் கௌர் ஆண் வாரிசு ஒன்றைப் பெற்றெடுத்தார்.

முன்னா ஜான் வரவழைக்கப்பட்டாள். அவளை எல்லோரும் ஏகத்துக்கும் புகழ்ந்தார்கள். ஏகப்பட்ட பரிசுப் பொருள்கள் அவளுக்கு வழங்கப்பட்டன. கூடவே மாளிகை ஒன்றும். அவள் வாழ்நாள் முழுவதும் மாதத்துக்கு ஆயிரம் ரூபாய் சன்மானம் வழங்கச் சொல்லி உத்தர விட்டார் ஜெகத்ஜித் சிங்.

முசௌரி மகாராஜாவின் மனத்துக்குப் பிடித்த ஊராகிப் போனது. அங்கு அவருக்கென்று ஒரு காதல் கதையும் காத்திருந்தது.



# 54

# பஞ்சாபின் ஷாஜஹான்

ராஜாதி ராஜ, ராஜ குலோத்துங்க, ராஜ மார்த்தாண்ட, ராஜ குல திலக, ராஜ பராக் கிரம, ராஜ கம்பீர, ராஜ ஒய்யார, ராஜ அதிஅற்புத, ராஜ அஜால் குஜால என்று ஒரு மகாராஜாவின் பெயருக்கு முன்னால் ஒன்றரை மைல் நீளத்துக்கு ஏகப்பட்ட அடைமொழிகள் டிராஃபிக் ஜாம் ஆகி நிற்கலாம். ஆனால் நமது கபுர்தலா மகாராஜாவான மாண்புமிகு ஜெகத்ஜித் சிங்குக்குக் கிடைத்தப் பட்டம் வேறு யாருக்கும் கிடைத்திருக்காது. என்ன அது?

பஞ்சாபின் ஷாஜஹான் ஜெகத்ஜித் சிங்.

காதல் மன்னனா என்று கேட்கலாம். அதுகூட உண்மைதான். கோடையில் ஒருத்தி, பனிக்காலத்தில் இன்னொருத்தி, மழைக்காலத்தில் மற்றொருத்தி, வசந்த காலத்தில் வேறொருத்தி என்று டிசைன் டிசைனாக அவரது வாழ்க்கையில் ஏகப்பட்ட காதல் கதைகள் இருக்கின்றன. ஆனால் இந்தப் பட்டத்துக்கான காரணம் அது அல்ல. அவருக்குக் கட்டடக் கலை மீது ஈடுபாடு அதிகம். அவர் காலத்தில் கட்டப்பட்ட கட்டடங்களே அதற்கான அழகான சாட்சிகள். அதனால் உருவாகிய பட்டமே அது.

ஜெகத்ஜித் சிங், 1893-ல் ஐரோப்பிய நாடுகளுக்குச் சுற்றுப் பயணம் செய்தார். நீண்ட சுற்றுப்பயணம் அது. ஐரோப்பிய நாடுகளின் கலாசாரம் அவரை ரொம்பவே கவர்ந்தது. அவர்களது வாழ்க்கை முறையை உன்னிப்பாகக் கவனித்து உள்வாங்கிக் கொண்டார். அங்குள்ள கட்டடங்களின் கலைநயத்தில் அவரது மனம் லயித்துப் போனது. அந்தக் கட்டடங்கள் கட்டப்பட்ட விதம் குறித்து உரியவர்களிடம் கேட்டு அறிந்து கொண்டார்.

குறிப்பாக பிரான்ஸ், பாரிஸ் நகரத்தில் உள்ள சிலைகள் மீது அவருக்குத் தீராத காதலே வந்து விட்டது. 'இங்குள்ள சிலைகளையெல்லாம் மொத்தமாக அள்ளி எடுத்துச் சென்று, நமது அரண்மனையை அலங்கரித்தால் என்ன' என்று திருட்டுப் புத்தியோடு சிந்தனை செய்யுமள வுக்கு. அந்த பிளாஸ்டர் ஆஃப் பாரிஸ் சிலைகள் எப்படி வடிவமைக்கப்படுகின்றன என்பது பற்றியும் ஆர்வத்துடன் தெரிந்து கொண்டார். தன் சுற்றுப்பயணத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு சமஸ்தானம் திரும்பினார்.

'என் கபுர்தலா சமஸ்தானத்தை எழில் கொஞ்சும் பாரிஸ் நகரம் போல மாற்றிக் காட்டுகிறேன் பார்' என்று தனக்குத் தானே சவால் விட்டுக் கொண்டார். இந்த இடத்தில் அசோகர் சாலை ஓரங்களில் மரங்கள் நட்டினார், குளங்களை வெட்டினார் என்ற ஸ்டைலில் சில விஷயங்களைப் பார்த்து விடுவோம்.

ஜெகத்ஜித் சிங், கபுர்தலா நகரம் முழுவதும் கழிவு நீர்க் கால்வாய் வசதிகள் அமைத்தார். நகரம் முழுவதும் நீர் விநியோகத்துக்குக் குழாய் வசதிகள் செய்து கொடுத்தார். சமஸ்தானத்தின் முக்கியமான பகுதிகளை இணைக்கும் வகையில் தொலைபேசி வசதிகளை அறிமுகப்படுத் தினார். நீதித் துறையில் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தார். புதிய கல்விக் கூடங்களைக் கட்டினார். விவசாயிகளுக்குக் கடன்கள் வழங்க ஏற்பாடு செய்தார். சமஸ்தானத்தி ் போலீஸ் துறையைக் கட்டமைத்தார். வேலை வாய்ப்புகள் பெருகும் விதமாகப் புதிய தொழிற்சாலைகளைக் கட்டினார்.

போதும், ஏதோ வரலாறுப் பரீட்சையில் ஐந்து மார்க் கேள்விக்கு விடை எழுதுவது போல இருக்கிறது. அடுத்த விஷயத்துக்குச் செல்வோம். அவர் தன் கலை ஆர்வத்தால் செய்த சில கட்டடக் காரியங்களைப் பார்க்கலாம்.

பதினேழாம் நூற்றாண்டில் பதினான்காம் லூயிஸ் (Louis XIV) என்ற மன்னர், பாரிஸுக்கு அருகிலுள்ள வெர்ஸெய்ல்ஸ் (Versailles) நகரத்தில் ஒரு பிரம்மாண்டமான அரண்மனையைக் கட்டினார். ஐரோப்பியாவின் கலை நளினமெல்லாம் ஒரே இடத்தில் குவிந்து கிடப்பது போலக் கட்டப்பட்ட காஸ்ட்லி கட்டடம் அது. அரண்மனைக்கு வெளியே ஏக்கர் கணக்கில் மாபெரும் மலர்த்தோட்டம் ஒன்றையும் அமைத்தார். தோட்டத்தில் ஆங்காங்கே மெகா நீருற்றுகள் மிளிர்ந்தன. வெர்ஸெய்ல்ஸ் அரண்மனையில் ஒவ்வொரு இடமும் ஜெகத்ஜித் சிங்கின் மனத்தில் புகைப்படம் போலப் பதிந்திருந்தது.

கபுர்தலாவில் ஜெகத்ஜித் அரண்மனை என்ற ஒன்றைக் கட்ட ஆரம்பித்தார் அவர் (1906). பிரான்ஸிலிருந்து எம். மார்சல் என்ற கட்டடக்கலை நிபுணரை வரவழைத்தார். அரண்மனை யின் ஒவ்வொரு அங்கத்தையும் வெர்ஸெய்ல்ஸ் நகர அரண்மனையை முன் மாதிரியாக வைத்து வடிவமைக்கச் சொன்னார். அறைகளின் மேற்புறச் சுவர்களில் எல்லாம் ஓவியங்கள் இருக்குமாறு பார்த்துக் கொண்டார். அரண்மனையில் ஆங்காங்கே பிளாஸ்டர் ஆஃப் பாரிஸில் செய்யப்பட்ட சிற்பங்கள் நிறுவப்பட்டன. வெளியே தோட்டம், அதில் பேரழகு நீரூற்றுகள் அமைக்கவும் தவறவில்லை. கபுர்தலா முழுவதும் ஆங்காங்கே ஐரோப்பாவின் கலா சாரத்தைப் பிரதிபலிக்கும் பல கட்டடங்கள் ஜெகத்ஜித் சிங்கால் கட்டப்பட்டன. இதனால் கபுர்தலாவுக்கு 'பஞ்சாபின் பாரிஸ்' என்ற பெருமை கிடைத்தது.

கொஞ்சம் பின்னோக்கி வந்து, முசௌரிக்குச் செல்வோம். ஜெகத்ஜித் சிங்குக்கு மிகவும் பிடித்தமான ஓய்வு ஸ்தலம் என்றால் அது முசௌரிதான். அங்கே ஒரு கெஸ்ட் ஹவுஸை

(Chateau de Kapurthala) *1898ல் கட்டினார். திட்டமெல்லாம் போட்டு வடிவமைத்துக் கொடுத்தவர், எல்மோர் (யானை ஃபார்முலாபடி கட்டில் கட்டிக் கொடுத்தவர்தான்). வாட்டி எடுக்கும் கோடைக்காலம் முழுவதும் மகாராஜாவின் டேரா ஜிலுஜிலு முசௌரியில்தான்.*

*வெப்ப நாடான இந்தியாவின் மண்ணின் மைந்தர்களே கோடையில், குளுகுளு பிரதேசத் துக்கு ஓடி வரும்போது, பாவம், பஞ்சம் பிழைக்க வந்து, படோடோப ஆட்சியாளர்களாக மாறிப் போன நயவஞ்சக பிரிட்டிஷார் என்ன செய்வார்கள்? கோடைச் சூரியனின் கிச்சு கிச்சு தாங்காமல், 1864-ல் தங்களது கோடைக்காலத் தலைநகரமாக சிம்லாவை அறிவித்தார்கள். எல்லா உயர் அதிகாரிகளும் சிம்லாவில் அலுவலகங்களை அமைத்துக் கொண்டு இயங்க / ஓய்வெடுக்க ஆரம்பித்தார்கள்.*

*சிம்லா மட்டுமல்ல, கோடைக்காலங்களில் நைனிடால், டார்ஜிலிங், முசௌரி, ஊட்டி, மவுண்ட் அபு போன்ற இந்தியாவிலுள்ள எல்லா மலைவாசஸ்தலங்களும் ஐரோப்பியர்களால் நிரம்பி வழிந்தன.*

*குறிப்பாக பிரிட்டிஷ் ராணுவ வீரர்களும், ராணுவ அதிகாரிகளும் உயர் அதிகாரிகளும் கோடை யில் விடுமுறை எடுத்துக் கொண்டு தங்கள் மனைவியோடு / காதலியோடு மலை வாசஸ்தலங் களுக்கு வந்து தங்கினார்கள். சாதாரண ராணுவ வீரர்களுக்கு, விடுமுறையில் இடைஞ்சல்கள் எல்லாம் பொதுவாக வராது. ஆனால் ராணுவ அதிகாரிகளுக்கு விடுமுறையை நிம்மதியாகக் கழிக்க முடியாதபடி ஏதாவது வேலை வந்துவிடும்.*

*'டார்லிங், கோச்சுக்காதே. நீ இங்கயே இரு. ரெஸ்ட் எடு. நான், சட்டுன்னு போய் வேலையை முடிச்சுட்டு நாலே நாள்ல திரும்பிருவேன்' என்று தங்கள் மனைவியிடம் கெஞ்சிக் கொஞ்சி விட்டு, அவர்கள் கிளம்பிவிடுவார்கள். எனவே அந்த இடைவெளியில் உயர் ராணுவ அதிகாரி களின் திருமதிகளையும் காதலிகளையும் ராணுவ வீரர்கள் தக்க முறையில் பாதுகாத்துக் கொள்வார்கள் என்பது வேறு விஷயம்.*

*சரி, நாம் ஜெகத்ஜித் சிங்கின் முசௌரி அரண்மனைக்குள் நுழைவோம். தான் ஓய்வெடுப்பதற் காகவும், அதே நேரத்தில் அங்கு வரும் பிரிட்டிஷாரைக் குஷிப்படுத்துவதற்காகவும் முசௌரி அரண்மனையைக் கட்டினார் ஜெகத்ஜித் சிங். குளிரைச் சமாளிக்க அரண்மனை முழுவதும் இருபத்து நான்கு மணி நேரமும் வெந்நீர் ஓட்டம் இருக்குமாறு வடிவமைக்கப்பட்டது. அந்த ஐரோப்பிய ஸ்டைல் அரண்மனையில், ஐரோப்பிய ஸ்டைலிலேயே இரவு விருந்துகள் கொடுப்பது ஜெகத்ஜித் சிங்கின் வழக்கம். அதனாலேயே அவரைப் பல பிரிட்டிஷாருக்குப் பிடிக்கும்.*

*அந்த இரவு விருந்திலேயே மிகவும் முக்கியமானது பால் ரூம் டான்ஸ். நடனமாடுவதற்காகவே கட்டப்பட்ட மிகப் பெரிய அறையைத்தான் பால் ரூம்* (Ball room) *என்பார்கள்.* ballare *என்ற லத்தீன் மொழி வார்த்தையிலிருந்து வந்தது அந்தப் பெயர். அதன் அர்த்தம்* 'to dance.'

*பால் ரூம் நடனத்தில் பல வகைகள் இருக்கின்றன. ஆனால் முக்கியமான விதிமுறை, ஓர் ஆணும், ஒரு பெண்ணும் ஜோடியாகச் சேர்ந்து ஆட வேண்டும் என்பதுதான். தமிழ் சினிமா உதாரணத்தோடு சொல்ல வேண்டுமென்றால், பணம் படைத்தவன் படத்தில் வாத்தியார், பியானோ வாசித்துக் கொண்டே பாடுவாரே, 'கண் போன போக்கிலே கால் போகலாமா...' சௌகார் ஜானகி, மனோகரோடு ஆடிக்கொண்டிருப்பாரே, ஆங்.. அதே டான்ஸ்தான்.*

சாதாரணமாக யார் வேண்டுமானாலும் சென்று யாரோடு வேண்டுமானாலும் இடுப்பை வளைத்துப் பிடித்து நடனம் ஆடிவிட முடியாது. இஷ்டத்துக்கு டப்பாங்குத்தும் ஆடக்கூடாது. இசைக்கேற்ப, அசைவுகள் அமைய வேண்டும். முறைப்படி நடனம் கற்றவர்கள்தான் ஆட வேண்டுமென்றில்லை. அங்கே ஆடுபவர்களில் ஒரு ஜோடியினர், தலைவர் - தலைவியாக ஆடுவார்கள். அவர்கள் நடனத்தில் தேர்ச்சி பெற்றவர்கள். அவர்களைப் பார்த்து மற்ற ஜோடியினர், தடுக்கி விழாமல் சமாளித்து ஆட வேண்டியதுதான்.

நடனமாடுவதில் சில பொதுவான விதிகள் உண்டு. ஜோடிகள் பெரும்பாலும் தங்கள் கண்ணோடு கண் பொருத்தி ஆட வேண்டும். அநாவசியமாக அக்கம் பக்கம் வேடிக்கைப் பார்க்கக் கூடாது. நடனமாடத் தெரியவில்லை என்றால் பக்கத்து ஜோடியைப் பார்த்து பிட் அடித்துக் கொள்ளலாம். ஜோடியினுடைய இடுப்பை மென்மையாக வளைத்துப் பிடித்தபடி நடனமாட வேண்டும். ஆண், மங்களகரமாக வலதுகாலை எடுத்துவைத்து நடனத்தை ஆரம்பிக்க வேண்டும். போறபோக்கில், பக்கத்து ஜோடியையெல்லாம் இடித்துத் தள்ளிவிட்டு ஆடக்கூடாது. 'நம்ம ஆளைவிட பக்கத்துல ஆடுற ஃபிகர் பக்காவாக இருக்குதே' என்று பாதியிலேயே நம் ஜோடியைக் கழட்டிவிட்டு, பக்கத்திலிருக்கும் பெண் மீது பாயக்கூடாது. நமது ஜோடி ஆடிக் களைத்து, ஓரமாகச் சென்று உட்காரும் பட்சத்தில், வேறு யாராவது நம்மை ஆட அழைத்தால் செல்லலாம். இப்படிப் பொது நாகரிக விதிமுறைகள் சில உண்டு.

ஜெகத்ஜித் சிங்கின் விருந்துகளில் மேற்கத்திய கலாசாரமான டான்ஸ் கார்டும் இருந்தது. அதாவது எங்கே எப்போது டான்ஸ் நடைபெறுகிறது என்ற விவரமெல்லாம் அதில் இருக்கும். அழைப்பிதழ் என்று சொல்லலாம். அதைக் கையில் வைத்திருப்பவர்கள் மட்டுமே பால் ரூமுக்குள் நுழைய முடியும். டான்ஸ் கார்டில் ஜோடிகளின் பெயரும் அச்சிடப்பட்டிருக்கும். எந்தெந்தப் பெண் எந்தெந்த ஆணுடன் நடனமாடவிருக்கிறாள் என்கிற பட்டியல் அது.

பால் ரூமுக்குள் நுழையும்போதே உரிய ஜோடியுடன்தான் நுழைய வேண்டும். தங்களுக்கான ஆண் ஜோடியைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெண்களுக்கு மட்டுமே இருந்தது. ஓர் ஆண், தனக்கு நடன ஜோடியாக்கிக் கொள்ள விரும்பும் பெண்ணிடம் சென்று, மண்டியிட்டு, மந்தகாசப் புன்னகையுடன் 'என்னோடு ஆட வருகிறாயா?' என்று கேட்க மட்டுமே முடியும். முடிவு, அவள் எடுப்பதுதான்.

இதுபோக டான்ஸ் கார்டில், இசைக்குழுவினர் பற்றிய விவரங்கள், அவர்கள் வாசிக்கப் போகும் இசை பற்றிய குறிப்புகள் இடம் பெற்றிருக்கும். சில டான்ஸ் கார்டுகளில் நடனத் துக்கான டிப்ஸ்களும் இடம்பெற்றிருக்கும். கண்டிப்பாகப் பட்டுநூல் ஒன்று டான்ஸ் கார்டுடன் இணைக்கப்பட்டிருக்கும்.

தான் ஆசை ஆசையாகக் கட்டிய பால் ரூமில் பறந்து பறந்து நடனமாட வேண்டும் என்று நமது மகாராஜா ஜெகத்ஜித் சிங்குக்கும் ஆசைதான். பேராசை என்றுதான் சொல்ல வேண்டும். பின்னே, அம்மாம்பெரிய தொப்பையை வைத்துக் கொண்டு அவரால் ஜோடியை எட்டிப் பிடித்து அணைக்க முடியுமா? இல்லை, ஜோடியால்தான் அவரது பிரம்மாண்ட இடுப்பை சிறிய கையால் வளைத்துப் பிடிக்க முடியுமா? ரெண்டுமே கஷ்டம் என்பதால், ஜெகத்ஜித் சிங், மற்றவர்கள் ஆடுவதை ஓரமாக உட்கார்ந்து ரசித்துக் கொண்டிருப்பார். அவ்வளவே.

அவரது ஆசை கனாரி வந்த பின் நிறைவேறியது. யாரவள்? வேறு யார், அடுத்த சம்சாரம் தான்.



# ராணியின் மீசை!

பார்வதி கவுர் (Parvati Kaur). கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் இரண்டாவது மனைவி அவள். 1891ல் திருமணம் செய்துகொண்டார். ஒரே ஆண்டில் அந்த மனைவி போரடித்துவிடவே, மூன்றாவதாக ஒரு பெண்ணைத் தேடினார். லஷ்மி கவுர் (Lachmi Kaur) வாக்கப்பட்டாள். அடுத்த மூன்று ஆண்டுகளுக்கு ஜெகத்ஜித் சிங்குக்கு கல்யாண மூட் எதுவும் வரவில்லை.

1895ல் மீண்டும் அந்த மூட் வந்தது. அவள் பெயர் கனாரி சாஹிபா (Kanari Sahiba). சிம்லாவின் ஜுபால் (Jubbal) பகுதியைச் சேர்ந்த திவான் ஒருத்தியின் சீமந்த புத்திரி. அழகிதான். ஜெகத்ஜித் சிங்குக்குப் பேரழகியாகத் தெரிந்தாள்போல. அது ஒன்றும் புதிதல்ல. அடிக்கடி இதுபோல அழகான பெண்களிடம் தன் இதயத்தைப் பறிகொடுத்து விடுவார் ஜெகத்ஜித் சிங். பின்பு? வேறென்ன, பறி கொடுத்த இடத்திலேயே, பறிமுதல் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்வார். அவளை முதல்முறையாகக் கண்டதுமே திருமணத்துக்கு ஒப்புதல் கொடுத்து விட்டார்.

மற்ற மூன்று மகாராணிகளை விடவும் கனாரி மேல், ஜெகத்ஜித்துக்கு காதல் கண்மூடித்தனமாகப் பொங்கியது. ஏன்? காதல் பொங்குவதற்கெல்லாமா காரணம் சொல்லிக் கொண்டிருக்க முடியும்? ஏதோ பொங்கிவிட்டது. விட்டு விடலாம். கனாரி கேட்ட வசதிகளையெல்லாம் தன் அரண்மனையில் செய்து கொடுத்தார் ஜெகத்ஜித் சிங். அவள் கேட்காமல் விட்டிருப்பாலோ என்று புதிது புதிதாகப் பல வசதிகளையும் செய்து கொடுத்தார். எந்நேரமும் கனாரியின்

மயக்கத்திலேயே திரிந்தார். மோகம் முப்பது, ஆசை அறுபது நாள்களைக் கடந்தபிறகும் கூட.

'எத்தனை நாள்தான் இந்த அரண்மனையிலேயே அடைந்து கிடப்பது? என்னை வேறு எங்காவது அழைத்துக் கொண்டு செல்ல மாட்டீர்களா?' - ராணி கனாரி, மஞ்சத்தில் வைத்து மகாராஜாவிடம் கேட்டாள். ஊர் சுற்றுவது, உல்லாசமாக இருப்பது இதைத் தவிர வேறு என்ன முக்கியமான வேலை வேண்டியிருக்கிறது ஒரு மகாராஜாவுக்கு.

'நீ கேட்டு இல்லாமலா! கோடைக்காலம் வேறு ஆரம்பிக்கப் போகிறது. அடுத்த மாதம் முசௌரிக்குச் செல்வதாக இருந்தேன். வேண்டாம், இந்த வாரமே கிளம்பலாம். தயாராக இரு' வாக்குக் கொடுத்தார். முதல் மூன்று மனைவிகளையும் கபுர்தலாவிலேயே கழட்டி விட்டுவிட்டு, புதுப்பொஞ்சாதி கனாரியுடன் முசௌரிக்குக் கிளம்பிச் சென்றார்.

அங்கே ஒரு தேன் நிலவு வளர ஆரம்பித்தது. இருவரும் குதிரைகளில் ஏறி, மலைப்பிர தேசத்தை வலம் வந்தார்கள். மனத்துக்குப் பிடித்த இடங்களில் உட்கார்ந்து மணிக்கணக்கில் பேசினார்கள். விருந்தினர் அரண்மனையில் வெளிநாட்டவர்களுக்கு விருந்தளித்து மகிழ்ந் தார்கள்.

தொப்பை பிரச்னை. பால் ரூமில் மற்றவர்கள் நடனமாடுவதை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார் ஜெகத்ஜித் சிங். கனாரி, அவரது ஆசையை நிறைவேற்றினாள். யாரும் இல்லாத தருணத்தில் இருவர் மட்டும் தனியாக பால் ரூமில் நடனமாடி மகிழ்ந்தார்கள். ஜெகத்ஜித் சிங், தன் மீது காட்டிய அன்பில், காதலில், எடுத்துக் கொண்ட அக்கறையில் நெக்குருகிப் போனாள் கனாரி. கோடை முழுவதையும் முசௌரியில் கழித்துவிட்டு, கபுர்தலா வுக்குத் திரும்பினார்கள்.

பொதுவாகக் கோடைக்காலத்தில் முசௌரியிலும், பின் சில மாதங்கள் கபுர்தலாவிலும் இருப்பது ஜெகத்ஜித் சிங்கின் வழக்கம். இவைபோக நினைத்த நேரத்திலெல்லாம் ஐரோப்பிய நாடுகளுக்கோ அல்லது பிற நாடுகளுக்கோ சுற்றுப்பயணம் கிளம்பிவிடுவார்.

அந்த ஆண்டும் ஐரோப்பியச் சுற்றுப் பயணத்துக்காகத் திட்டமிட்டுக் கொண்டிருந்தார் ஜெகத்ஜித் சிங். மகாராஜா மஜாவாக வெளிநாடு கிளம்பிக் கொண்டிருக்கிறார் என்ற செய்தி ராணி கனாரிக்கும் தெரிய வந்தது.

'என் மேல் நீங்கள் வைத்திருக்கும் காதல் அவ்வளவுதானா?' - ஒரு முக்கியமான பொழுதில் மூஞ்சைத் தூக்கி வைத்துக் கொண்டு கேட்டாள் கனாரி. மகாராஜா நிலைகுலைந்து போனார்.

'என்ன குறை உனக்கு? சொல்.'

'தாங்கள் வெளிநாடு கிளம்பிக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அந்தச் செய்தி உண்மைதானா?'

'ஆமாம். நான் வழக்கமாகச் செல்வதுதானே. அதனால் என்ன?'

'அப்படியெனில் என்னை இங்கே தனியே விட்டுவிட்டு நீங்கள் மட்டும் எங்கெங்கோ செல்லப் போகிறீர்கள். அதுவும் என்னை மாதக் கணக்கில் பிரியத் தயாராகி விட்டீர்கள்.

அவ்வளவுதானா உங்கள் அன்பு?' - கனாரி, கண்களில் நீர் உற்பத்தி செய்து கேட்க, ஜெகத்ஜித் தடுமாறிப் போனார். இருந்தாலும் சட்டெனச் சுதாரித்துக் கொண்டார்.

'அடியேய் அசடு, உன்னை விட்டுவிட்டு என்னால் எப்படிப் பிரிந்திருக்க முடியும்? சொல். நீயும்தான் என்னுடன் வரப்போகிறாய். அதிலென்ன உனக்குச் சந்தேகம்? இனிமேல் ஒரு போதும் நீ கண் கலங்கக் கூடாது. சரியா?' - கனாரி பிரகாசமாகச் சிரித்தாள். ஜெகத்ஜித் சிங் சிந்திக்க ஆரம்பித்தார்.

ராணி கனாரியைத் தன்னுடன் அழைத்துச் செல்வதில் அவருக்கு எந்தப் பிரச்னையும் இல்லை தான். ஆனால் அன்றைய சமூக நிலைதான் தெரிந்திருக்குமே. வீட்டு வாசலையே தாண்டிச் செல்ல முடியாத இந்தியப் பெண்களை, எல்லை தாண்டிச் செல்ல விட்டுவிடுவார்களா என்ன? மகாராஜாவாகத் தனது அதிகாரத்தைப் பயன்படுத்தி, தன் காதல் ராணியை ஜெகத்ஜித் சிங் அழைத்துக் கொண்டு செல்லலாம்தான். ஆனால் பிரிட்டிஷார் அனுமதி கொடுக்க வேண்டுமே. அது அவ்வளவு எளிதில் கிடைத்துவிடாது.

இந்தியாவின் வைஸ்ராய்க்கும், சமஸ்தானத்தின் ரெஸிடெண்டுக்கும் மகாராஜாவின் பயணத் திட்டம் குறித்த தகவல்கள் முன்னதாகவே சென்றடைய வேண்டும். மகாராஜாவுடன் எத்தனை பேர் பிரயாணம் செய்கிறார்கள், அவர்கள் யார் யார் என்ற விவரங்களையும் தெரிவித்து அனு மதி பெற வேண்டும். 'மகாராணி'★ அந்தஸ்தில் உள்ளவர்களுக்கு அனுமதி கிடைக்கும். மகா ராஜா எதாவது வெளிநாட்டுப் பெண்ணை டாவடித்துத் திருமணம் செய்து, மனைவி ஆக்கி யிருந்தால் பரவாயில்லை. அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு செல்லலாம். ஆனால் 'ராணி' அந்தஸ்தில் இருக்கும் இந்தியப் பெண்களுக்கு வெளிநாட்டுச் சுற்றுப்பயண அனுமதி கிடையாது. கனாரி, ஜெகத்ஜித் சிங்கின் நான்காவது பத்தினி. வெறும் 'ராணி'தான்.

'எம் பொஞ்சாதி ஆசைப்படுது. ஒரே ஒரு தபா மட்டும் அவளை இஸ்துக்கினு ஈரோப்பாவை ரவுண்டு கட்டிக்கினு வர்றேன். துரை, கொஞ்சம் கண்டுக்காத' என்று ஜெகத்ஜித் சிங், அப்போதைய வைஸ்ராய் கர்ஸனிடம் நேரடியாகப் பேசவும் முடியாது. ஏனென்றால் கர்ஸன் தன் காலத்தில் மகாராஜாக்களின் வெளிநாட்டுப் பயணங்களுக்கு ஏகப்பட்ட கட்டுப்பாடுகளைக் கொண்டு வந்திருந்தார். வைஸ்ராயின் அனுமதி கிடைக்காத பட்சத்தில், ஜெகத்ஜித் சிங் வெளி நாட்டுத் திட்டத்தையெல்லாம் வெளியே தூக்கிப் போட்டுவிட்டு, அரண்மனையிலேயே அமுக்கிக் கொண்டு உட்கார வேண்டிய நிலை. கனாரி ஆசைப்பட்டுவிட்டாளே. என்ன செய்ய? வெறித்தனமாக யோசித்துக் கொண்டிருந்தார் ஜெகத்ஜித் சிங்.

தனது முதன்மை ஆலோசகர் திவான் தௌலத் ராமை (Daulat Ram) அழைத்தார் ஜெகத்ஜித் சிங். சிக்கலைக் கூறினார். 'அட, இதுக்குப் போயா இம்மாம் நேரம் அலட்டிக்கினு இருந்த' என்பது போல ஒரு பளிச் யோசனையைக் கட்டவிழ்த்து விட்டார் திவான். ஜெகத்ஜித்துக்கு சந்தோஷம் பொங்கியது. தம் தொப்பை தடுத்தாலும் திவானைக் கட்டிப்பிடித்துப் பாராட்டி னார். தன்னால் முடிந்த அளவுக்கு வேகமாக அந்தப்புரத்துக்குச் சென்றார்.

ராணி கனாரியின் கூந்தலுக்குச் சிக்கெடுத்துக் கொண்டிருந்தாள் பணிப்பெண். மகாராஜா வருவதைக் கண்டதும் சிரம் தாழ்த்தி வெளியேறினாள். 'நமது பிரான்ஸ் பயணம் உறுதியாகி விட்டது. கிளம்பத் தயாராக இரு' கூறிக் கொண்டே அவளை நெருங்கினார்.

---

★ பொதுவாக ஒரு மகாராஜாவின் முதல் மூன்று மனைவிகளுக்கு 'மகாராணி' (Her Highness) என்ற அந்தஸ்து கிடைத்தது. நான்காவது மனைவிக்கெல்லாம் 'ராணி' என்ற கௌரவத்தோடு சரி.

கனாரி தனது கண்களில் ஆர்வத்தைக் குவித்து அவரை நோக்கினாள். 'ஆனால் நீ என்னுடன் ராணியாக வருவதில் ஒரு சிக்கல் இருக்கிறது.' அவளுக்குச் சுத்த மாகப் புரியவில்லை. குழப்பமாக அவரைப் பார்த்தாள். சிக்கலை விளக்கி னார். தனது திட்டத்தைச் சொன்னார். முழுவதுமாகக் கேட்டு முடித்ததும் அவ ளுக்கு வெட்கம் வெட்கமாக வந்தது.



ஐரோப்பிய உடையணிந்த கனாரியுடன்
மகாராஜா ஜெகத்ஜித் சிங்

'நாளையே உனக்கான புதிய உடைகளைத் தயாரிக்க ஏற்பாடு செய்கிறேன். தலையில் டர்பன் வேறு கட்டிக் கொள்ள வேண்டும். மறந்துவிடாதே' என்றவர் நக்கலாகச் சிரித் தார். 'ஏன் சிரிக்கிறீர்கள்?' என்றாள் அவள் பொய்க் கோபத்துடன்.

'இல்லை, அந்த உடையில் உன்னைக் கற்பனை செய்து பார்க்கவே முடிய வில்லை' - என்றவர் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க ஆரம்பித்தார். 'ச்சீ போங்கள்' செல்லமாக அவரது வயிற்றில் குத்தினாள் கனாரி. சட்டென அவளது தாடையைப் பிடித்து நிமிர்த்தினார். அவளது மேல் உதடுக்கும் நாசிக்கும் இடைப்பட்ட பிரதேசத்தைத் விரலால் வருடினார்.

'இந்த இடத்தில் ஒன்றை ஒட்ட வேண்டும். அது கீழே விழாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பு' என்றார் சிரிப்புக் குறையாமல். அவள் வெட்கம் தாங்காமல் முகத்தைத் தன் இரு கைகளாலும் மூடிக் கொண்டாள். கனாரிக்கு, ஒரு சீக்கிய இளைஞன் போல மாறுவேடமணிந்து, தன்னுடைய பணியாள் போல ஐரோப்பாவுக்கு அழைத்துச் செல்வதே மகாராஜாவின் திட்டம்.

பிரயாணத்துக்கான நாளில் பெட்டிப் படுக்கைகள் எல்லாம் தயாராக இருந்தன. கனாரிக்கு மட்டும் ஆண் உடைகள், பெண் உடைகள் என லக்கேஜ் ஜாஸ்தி. ஜெகத்ஜித் சிங், அவளது அறைக்கு வந்தார். தானே அவளை ஆண்போல அலங்கரிக்க ஆரம்பித்தார். பெண் என்பதால் கொண்டை போடுவதில் பிரச்னையில்லை. அதற்குமேல் குல்லா ஒன்றை அணிவித்து, பின் கனகச்சித்தமாக டர்பன் கட்டி விட்டார். கன்கா என்றழைக்கப்படும் சீப்பை கையோடு வைத்துக் கொள்ளுமாறு அவளிடம் கொடுத்தார். அவளது மணிக்கட்டில் ஒரு வெள்ளி வளையத்தை மாட்டி விட்டார். தோளுக்குக் குறுக்கே கிர்பான் என்றழைக்கப்படும் கத்தியை மாட்டிவிட்டார். நக்கல் புன்னகையுடன் சின்னதாக ஒரு மீசையையும் ஒட்டிவிட்டார். கனாரி என்ற அழகி, அப்போது சீக்கிய அழகனாக மாறியிருந்தாள்.

அப்போதெல்லாம் பாஸ்போஸ்ட், விசா, இத்தனை கிலோ லக்கேஜ், லொட்டு லொசுக்குச் சமாச்சாரங்களெல்லாம் கிடையாதே. அதனால் பிரச்னையில்லை. இந்தியாவைத் தாண்டும்

வரை, யாராவது பிரிட்டிஷார், கனாரியைப் பெண் என்று கண்டுபிடித்துவிடக்கூடாது. அவ்வளவுதான்.

எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று சில முக்கியமான விதிமுறைகளையெல்லாம் சொன்னார் ஜெகத்ஜித் சிங். 'புரிகிறதா?' என்றார். எல்லாவற்றையும் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த அவள், 'புரிகிறது' என்றாள். அப்போதுதான் அவளது குரல் அவரைத் தாக்கி யது. 'அய்யய்யோ, இப்படிப் பெண் குரலில் நீ பேசினால், விஷயம் அம்பலமாகிவிடும். தேவைப்படும் சமயத்தில் மட்டும் குரலை மாற்றி ஆண்போலப் பேசு. முடியாதா, பிரச்னை யில்லை, ஊமை என்று சொல்லி சமாளித்துவிடலாம். சரியா?' என்று கேட்டார் அவர். பலமாகத் தலையாட்டினாள் அவள்.

ஜெகத்ஜித் சிங், சில அமைச்சர்கள், சில பணியாளர்கள் உடன் மாறுவேட கனாரி அரண் மனையை விட்டுக் கிளம்பினார்கள் வழியில் எந்தப் பிரச்னையும் வரவில்லை. நல்லபடியாக பிரான்ஸைச் சென்றடைந்தார்கள். அங்கே அவளுக்கு தனியே ஓர் அறையை ஏற்பாடு செய்தார் அவர். 'அடியேய், என் அருமை மீசை ராணியே! உன் வேஷத்தைக் கலைக்கும் நேரம் வந்தாகி விட்டது. இனி, உன் விருப்பம் போலிருக்கலாம். நம் இஷ்டம்போல் சுற்றிவரலாம். யாராவது பிரிட்டிஷ் அதிகாரிகளைச் சந்திக்கச் சென்றால் மட்டும் நீ மீசைக்கு மாறிவிடு. புரிகிறதா?' என்றார். சிரித்துக் கொண்டே தன் மீசையை உரித்துப் போட்டாள் அவள்.

பாரிஸ், ஜெகத்ஜித் சிங்குக்கு பரிச்சயமான நகரம். கனாரியுடன் கைகோர்த்துக் கொண்டு வலம் வந்தார். அங்குள்ள விதவிதமான கட்டடங்களைச் சுற்றிக் காட்டினார். கட்டடங்கள் பற்றிய ஏராளமான செய்திகளை அவர் சொல்லிக் கொண்டே போக, வாய்பிளந்து கேட்டாள் அவள். ஐரோப்பிய நண்பர்கள் வைத்த விருந்துகளிலும் அவர்கள் ஜோடியாகவே கலந்து கொண் டார்கள். டேரா பல மாதங்கள் நீண்டது.

எந்தவித பிரச்னையும் எழவில்லை. இந்தியாவுக்குத் திரும்ப முடிவெடுத்தார்கள். கனாரி, தனது ஒட்டு மீசையைத் தேடி எடுத்தாள். பம்பாய்க்கு வந்திறங்கும் ஜெகத்ஜித் சிங்கை, வைஸ்ராய் கர்ஸன் சந்திப்பதாகத் திட்டம். மகாராஜாவுக்குள் பயம் பட்டம்விட ஆரம்பித்தது. கனாரிக்கு, தன்னால் முடிந்தவரை ஆலோசனைகள் சொல்லியிருந்தார். ஆனால் அவரது நல்ல நேரம், ஏதோ ஒரு காரணத்தினால் கர்ஸனுடானச் சந்திப்பு ரத்தானது. பம்பாயின் ராணுவச் செயலாளர்தான் மகாராஜாவை வரவேற்றார். பணியாளர்களோடு பணியாளராகக் கலந்து நின்றாள் கனாரி.

அன்று இரவு மட்டும் பம்பாயில் தங்கினார்கள். மறுநாளே கபுர்தலாவுக்குக் கிளம்பினார்கள். அரண்மனையில் தன் அறைக்கு வந்த கனாரி, முதல் வேலையாக மீசையைத் தூக்கி எறிந்தாள்.

இது, ஜெகத்ஜித் சிங் தன் பிரியத்துக்குரிய இந்திய ராணியை, திருட்டுத்தனமாக ஐரோப்பாவுக்கு அழைத்துச் சென்ற சம்பவம். இதேபோல ஐரோப்பியப் பெண்களை, இந்தியாவுக்கு அழைத்துவந்த சம்பவங்களும் இருக்கின்றன.



# 56

# ஒரு மகாராஜாவைத் திருமணம் செய்துகொள்வது எப்படி?

*அனிடா டெல்கடோ (Anita Delgado)- இந்தப் பெயரை எங்கேயோ கடந்து வந்த மாதிரி இருக்கிறதா? பிரேம் கவுர் என்று சொன்னால் நினைவுக்கு வரலாம். ஹைதராபாத் நிஜாம் ஒஸ்மான் அலிகான், ப்ராக்கெட் போட நினைத்தாரே அந்த ஸ்பானிஷ் அழகிதான். எப்படி ஜெகத்ஜித் சிங் அவளைச் சந்தித்தார்? எப்படிக் காதலித்தார்? எப்போது கல்யாணம் கட்டிக் கொண்டார்?*

*1906 மே மாதம், ஜெகத்ஜித் சிங், ஸ்பெயினுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். ஸ்பெயின் கிங் பதிமூன்றாம் அல்போன்ஸோவுக்கும், மகாராணி விக்டோரியா வுக்கும் திருமணம். சும்மாவே வருடத்தில் பாதி நாள்களை ஐரோப்பிய நாடு களில் கழித்தவர் ஜெகத்ஜித் சிங். இப்படி ஒரு ராயல் கல்யாணத்தைத் தவற விடுவாரா என்ன?*

*குஷியாகக் கல்யாணத்தில் கலந்துகொண்டார். விருந்துகளில் திளைத்தார். அப்போது இந்தியாவில் கோடை என்பதால் நாடு திரும்ப மனமில்லை. ஸ்பெயினிலேயே அடுத்த சில மாதங்கள் தங்க முடிவெடுத்தார். அங்கு வேறென்ன வேலை? கிளப், கேஸினோ, தியேட்டர் என்று சைட் அடித்துக் கொண்டே பொழுதைப் போக்கினார்.*

*மாட்ரிடின் தியேட்டர் ஒன்றில், மேடையில் நடனமாடிக் கொண்டிருந்த பதினாறு வயது அனிடா டெல்கடோவைப் பார்த்தார். அவளது அழகை, இளமையைக் கண்டு, ஜெகத்ஜித்துக்குள் தாற்காலிகமாகத் தூங்கிக் கொண்டிருந்த ரோமியோ, படாரெனக் கண்விழித்தான்.*


அனிடா (எ) பிரேம் கவுர்

நாடகம் முடிந்ததும் அவளைப் பற்றி விசாரித்தார். பின்பு அவளது குலம், குடும்பம், கோத்திர விஷயங் களை விசாரித்தார். வசதி குறைந்த குடும்பம்தான். அவள் தந்தை ஏங்கல் டெல்கடோ, ஒரு சிறிய ஹோட்டல் நடத்தி வந்தார். சரியான வருமான மில்லை. அனிடாவும் அவள் சகோதரியும் ஆடிச் சம்பாதிப்பதுதான் குடும்பம் நடத்தப் பெரிதும் உதவியது. மகாராஜா, அனிடாவைத் தனியாக லவட்டிக் கொண்டு சென்று லவ் செய்யத் துடித்தார். ம்ஹூம், அவளது அப்பன்காரன் நந்தியாக நின்றார். வேறு நபர்கள் மூலமாகத் தூது அனுப்பினார். ஆரம்பத்தில் நியூட்டனின் மூன்றாம் விதி பொய்த்துப் போனது. எதிர்வினையே இல்லை.

சில நாள்கள் கழித்து, அனிடா பச்சை சிக்னல் கொடுக்க ஆரம்பித்தாள். அவளது தந்தையிடம் சென்று பெண் கேட்டார் ஜெகத்ஜித் சிங். ‘அஸுக்கு புஸுக்கு.. என்னோட மவ நடிச்சுக் கிடைக்குற சம்பாத்தியத்துலதான் நாங்க எல்லாரும் நாஷ்டா துன்னுக்கிட்டிருக்கோம். அதெல்லாம் வேலைக்கு ஆவாது’ அனிடாவின் தந்தை நேரடியாகவே மறுத்தார்.

மகாராஜாவுக்கு இதெல்லாம் ஒரு பிரச்னையா. அவளது தந்தையை பவுண்டால் குளிப்பாட்டினார். அனிடாவைக் கைப்பற்றினார். முறைப்படி, அவளது கையைப் பற்ற இந்தியாவுக்கு அழைத்து வருவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். சாதாரணப் பெண்ணாகிய தான், ஒரு மகாராஜாவின் மகாராணியாக மாறப் போகிறோம் என்று சந்தோஷக் கனவுகளில் மிதந்தாள் அனிடா. மகாராஜாவின் மனைவிகளில் ஒருத்தியாகப் போகிறோம் என்பதெல்லாம் அவளுக்கு உறுத்தவே இல்லை.

ஆனால் ஜெகத்ஜித் சிங்கின் மற்ற மகாராணிகள் எல்லோருமே மூஞ்சியைத் தூக்கி வைத்துக் கொண்டார்கள். ‘இந்தியாக்காரின்னா பரவாயில்ல, மன்னிக்கலாம். ஆனா, ஒரு ஐரோப்பியச் சிருக்கி, என் புருஷனை பங்கு போட்டுக்க வர்றாளா?’ என்று தங்களுக்குள்ளேயே குமுறினார் கள். பாவம், அவர்களால் வேறு என்னதான் செய்ய முடியும்?

1907 ஆகஸ்டில் அனிடா, கபுர்தலாவுக்குள் காலடி எடுத்து வைத்தாள். பலரது எதிர்ப்புகள். பிரிட்டிஷாரின் ஆட்சேபனைகள். உறவினர்களின் கோபதாபங்கள். எல்லாவற்றையும் மீறி, அனிடாவுடனான தன் திருமணத்துக்கு நாள் குறித்தார் ஜெகத்ஜித் சிங்.

‘என் அறையில் இருந்தேன். இரண்டு பணிப்பெண்கள் வந்தார்கள். என்னைக் குளிப்பாட்ட வந்திருப்பதாகச் சொன்னார்கள். தயாரானேன். ஏதேதோ வாசனைத் தைலங்கள் அவர்கள் கைகளில் இருந்தன. சுகமாக மஸாஜ் செய்தார்கள். பின் வெதுவெதுப்பான நீரில் குளிப்பாட்டி னார்கள். தங்க இழைகளால் எம்ப்ராய்டரி செய்யப்பட்ட கருஞ்சிவப்பு நிற ஜாக்கெட் ஒன்றைக் கொண்டு வந்தாள் ஒருத்தி. அதில் பட்டன்கள், முத்துக்களால் அமைக்கப்பட்டிருந்தன.

வெள்ளை நிறப் பட்டுப் புடைவை ஒன்று தயாராக இருந்தது. அதைப் பார்த்ததுமே எப்படி அணிந்து கொள்வது என்று திகைத்தேன். ஐரோப்பிய பாணி உடைகள்தான் எனக்கு வசதி. அந்தப் பெண்கள் எனக்குச் சேலை கட்டிவிட ஆரம்பித்தார்கள். விதவிதமான நகைகளை எல்லாம் சூட்டினார்கள். ஒப்பனை செய்துமுடிக்க, கிட்டத்தட்ட இரண்டு மணி நேரங்கள் ஆனது. ஆளுயரக் கண்ணாடி முன் சென்று நின்றேன். மிகவும் அழகாகத் தெரிந்தேன். ஆனால் என்ன, எப்போது இந்தச் சேலை நழுவி விழும் என்ற பயம் மட்டும் இருந்துகொண்டே இருந்தது...'

அனிடாவின் டைரிக்குறிப்பில் இருக்கும் வார்த்தைகள் இவை.

ஜெகத்ஜித் சிங், சீக்கிய முறைப்படி, அனிடாவைத் திருமணம் செய்துகொண்டார். அவளுக்குப் 'பிரேம் கவுர்' என்ற லேபிள் ஒட்டப்பட்டது. உள்ளூர் பத்திரிகைகள், வெளிநாட்டுப் பத்திரிகைகள் எல்லாம் திருமணச் செய்தியைப் பல்வேறு கோணங்களில் வெளியிட்டன. ஒரு மகாராஜாவைத் திருமணம் செய்துகொள்வது எப்படி? என்று ஒரு பத்திரிகை கேலி செய்தது.

ஜெகத்ஜித் சிங், அனிடாவோடு அதிகாரபூர்வ ஆத்துக்காரராக வாழ ஆரம்பித்தார். அவரது கட்டடக் கலை ஆர்வம் பற்றித்தான் ஏற்கெனவே பார்த்தோமே. கல்யாணம் செய்து பார், பின் பொண்டாடிக்காக வீட்டைக் கட்டிப் பார் என்பது ஜெகத்ஜித் சிங்கின் பாலிஸி. தம்முடைய மகாராணிகளுக்கு மினி அரண்மனையோ, மாளிகையோ ஆசை ஆசையாகக் கட்டிக் கொடுத்திருந்தார். அனிடாவுக்கும் கபுர்தலாவில் உல்லாச அரண்மனை ஒன்றைக் கட்டிக் கொடுத்தார். முழுக்க முழுக்க ஐரோப்பிய நாகரிகத்தைப் பிரதிபலிக்கும் அரண்மனை அது. ஜெகத்ஜித் சிங்கின் அப்போதைய உற்சவ ஜோடியாக அனிடா மாறிப் போனாள். தான் எங்கு சென்றாலும் உடன் அனிடாவும் இருக்குமாறு பார்த்துக் கொண்டார். முசௌரியில் அவர்களது கோடை நாள்கள் ஜிலுஜிலுவெனக் கழிந்தன.

காலாகாலத்தில் அனிடாவுக்கு முதல் குழந்தை பிறந்தது. ஆண் வாரிசு. வைக்கப்பட்ட பெயர் அஜித் சிங் (Ajit Singh). ஆனால் பிரிட்டிஷ் அரசு, அனிடாவை அதுவரை அதிகாரப்பூர்வ ராணியாகவே அங்கீகரிக்கவில்லை. எனவே அஜித் சிங்குக்கும் அதிகாரப்பூர்வ வாரிசு என்ற உரிமை கிடைக்கவில்லை. ஏற்கெனவே ஜெகத்ஜித் சிங்குக்கு நான்கு ஆண் வாரிசுகள் வேறு இருந்தார்கள்.

பட்டத்து இளவரசராகப் பார்க்கப்பட்ட இளவரசர் பரம்ஜித் சிங் (Paramjit Singh). ஜெகத்ஜித் சிங்கின் முதல் வாரிசு. முதல் மனைவி ஹபன்ஸ் கவுருக்குப் பிறந்தவர்.

இரண்டாவது இளவரசரின் பெயர் மஹத்ஜித் சிங் (Mahijit Singh). மூன்றாவது இளவரசரின் பெயர் அமர்ஜித் சிங் (Amarjit Singh). ஜெகத்ஜித் சிங்கின் இரண்டாவது மகாராணியான பார்வதி கவுருக்குப் பிறந்தவர். நான்காவது இளவரசரின் பெயர் கரம்ஜித் சிங் (Karamjit Singh). மகாராஜாவின் நான்காவது ஆசை மனைவி ராணி கனாரிக்குப் பிறந்தவர்.

முதல் நான்கு இளவரசர்களுக்கும், அஜித் சிங்குக்கும் இடைப்பட்ட வயசு வித்தியாசம் பத்துக்கும் மேல். ஜெகத்ஜித் சிங், தன்னுடைய எல்லா மனைவிகளையும் ஒன்றுபோல்தான் நடத்தினார். எல்லோருக்கும் வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுத்திருந்தார். தன் எல்லா வாரிசுகளையும் ஆடம்பரமாகத்தான் வளர்த்தார். என்ன, இறுதியாகத் திருமணம் செய்துகொண்ட மனைவியை மட்டும் அழைத்துக் கொண்டு ஊர் சுற்றுவார். அதுவும்



கபுர்தலா இளவரசர்கள்

ஸ்பானிஷ் அழகி அனிடா வந்தபின், அவர் செய்யும் வெளிநாட்டுப் பயணங்கள் எல்லாம் அதிகரிக்க ஆரம்பித்தன.

தான் செல்லும் நாடுகளிலெல்லாம் ஏகப்பட்ட கலைப் பொருள்களை, அலங்காரப் பொருள் களை வாங்கிக் குவிப்பது அவரது பழக்கம். அவற்றைக் கொண்டுவந்து தம் அரண்மனையை அலங்கரிப்பார். அவரது அரண்மனையில் சில அறைகளுக்குள் செல்லும்போது, குறிப்பிட்ட நாட்டுக்குள் நுழைந்த உணர்வு ஏற்படும். தனது தர்பாரை மட்டும் கம்பீரமாக இந்தியப் பொருள்களைக் கொண்டு அலங்கரித்திருந்தார். அதில் சுதேசிக் கொள்கை.

My Travels in China, Japan and Java, 1903 என்பது ஜெகத்ஜித்தின் பயண அனுபவங்கள் குறித்த புத்தகம். அவருக்கு பிரெஞ்சு மொழியில் நன்றாகப் பேசத் தெரியும். அட்சர சுத்தமாக எழுதவும் தெரியும். முழுக்க முழுக்க பிரெஞ்சில் எழுதப்பட்ட அவரது டைரிகூட உண்டு. பிரெஞ்சு மொழி, அனிடாவை அணு அணுவாகக் காதலிக்க அவருக்கு உதவியது. ஒரு சீக்கிய ராக அறியப்பட்டதால், பிரெஞ்சு தாடி வைக்கவில்லையே தவிர, அவரது சிந்தனைகள், செயல்களில் எல்லாம் ஐரோப்பியத்தனம் தூக்கலாகவே இருந்தது.

'என்னோட ஆயி, அப்பனைப் பாக்கணும் போல இருக்கு' ஜெகத்ஜித் சிங்கிடம் அனிடா சிணுங்கலாகச் சொல்லிவிட்டாள் போதும். உடனே பெட்டி, படுக்கையைக் கட்டிவிடுவார். ஸ்பெயினுக்கு, பாரிஸுக்குப் போனோமோ, பொண்டாட்டியோட குடும்பத்தைப் பார்த் தோமோ, திரும்பினோமா என்று அந்தப் பயணம் எளிமையானதாக, சிறியதாக இருக்காது.

பயணம் செல்ல வேண்டும் என்ற எண்ணம் வந்துவிட்டால் போதும். மேப்பைக் கொண்டு வரச் சொல்லுவார். தாம் பார்க்காத நாடுகள் இன்னும் என்னென்னவெல்லாம் இருக்கின்றன என்று தேடிப் பார்ப்பார். இந்தர் சிங்கை (Inder Singh) அழைப்பார். ஜெகத்ஜித் சிங்கின் வெளிநாட்டுப் பயணங்களுக்கெல்லாம் அவருக்கு உறுதுணையாக இருந்த மூத்த அதிகாரி அவர். மகாராஜா எங்கெல்லாம் போக வேண்டும் என்று விரும்புகிறாரோ, யாரையெல்லாம் சந்திக்க வேண்டும் என்று நினைக்கிறாரோ அதற்கேற்ப பயணத் திட்டத்தை நாள், நேரக் கணக்கோடு முழுமையாக்கிக் கொடுப்பது இந்தர் சிங் வேலை. அவர் இல்லாமல், கபுர்தலாவை விட்டு வெளியே கிளம்பமாட்டார் மகாராஜா.

அது 1914, ஜூலை. அதுவரை உலகில் நிகழாத கொடுமை முதன் முதலாக நடக்க ஆரம்பித்த சமயம். பொஸ்னியாவுக்கும் செர்பியாவுக்கும் இடையே ஒரு சின்ன எல்லைப் பிரச்னை. அது வளர்ந்து நிலைமை கொஞ்சம் களேபரமாகக் கூடிய சூழல். பிரச்னையைத் தீர்க்க நாட்டாமையாகக் களமிறங்கினார் ஆஸ்திரிய நாட்டின் இளவரசர். உணர்ச்சிவயப்பட்ட செர்பிய இளைஞன் ஒருவன், இளவரசரை டூமில். அது, முதல் மரணம். ஆனால் அதுமுதல் மரண எண்ணிக்கை உயர ஆரம்பித்தது.

ஆஸ்திரியா ஜெர்மனியின் உதவியோடு, செர்பியா மீது போர் தொடுத்தது. செர்பியாவுக்கு உதவ ரஷ்யா வந்தது. நாடுகளுக்கிடையேயான சண்டை, முதல் உலகப் போர் என்ற பெயருடன் விஸ்வரூபம் எடுக்க ஆரம்பித்தது. ஜெர்மனி மேல் பெரும்பகையோடு இருந்த பிரான்ஸ், இதைச் சாக்காக வைத்துக் கொண்டு போரில் குதித்தது. பிரான்ஸுக்கு ஆதரவாக பிரிட்டனும் ஜப்பானும் களமிறங்கின. ஜெர்மனிக்கு பல்கேரியாவும் துருக்கியும் தோள் கொடுத்தன.

உலகமே; சூழப்பட்ட போர் மேகங்களால் இருண்டு கிடக்க, மகாராஜா ஜெகத்ஜித் சிங், தனது அடுத்த உலக சுற்றுப் பயணத்துக்காகத் தீவிரமாகத் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். நண்பர்கள், உறவினர்கள், அதிகாரிகள் எல்லாருமே தயங்கினார்கள்.

'இந்தச் சமயத்துல நீங்க போறது சரியாப்படலை' என்று ஜாடை மாடையாகச் சொல்லிப் பார்த்தார்கள். அவரது பிரியத்துக்குரிய அதிகாரியான இந்தர் சிங்கும் ஏதேதோ சொல்லிப் பார்த்தார். யார் சொல்வதையும் காதில் போட்டுக்கொள்ளவில்லை அவர். எந்த நேரமும் உலகம் சுற்றும் வாலிபனாக இருந்த மகாராஜாவை, கபுர்தலாவில் கட்டிப்போட யாராலும் முடியவில்லை.

1915, மார்ச் 2. பிரிட்டனின் கப்பல்களை ஜெர்மனி குறி வைத்துத் தாக்கத் தொடங்கிய நேரம். பம்பாய் துறைமுகத்தில் இருந்து, எஸ்.எஸ். கலிடோனியா (SS Caledonia) என்ற அந்தக் கப்பல் புறப்பட்டது. கப்பலின் மேல்தளத்தில் இருந்து தன் நண்பர்களைப் பார்த்துக் கையசைத்தார் ஜெகத்ஜித் சிங். ஜோடியாக அனிடா. இந்தர் சிங்கும் இருந்தார். ஐரோப்பிய நாடுகள் சிலவற்றுக்கும் அமெரிக்காவுக்கும் சென்று வரத் திட்டம். பயணம் ஆரம்பமானது.

செல்லும் துறைமுகங்களிலெல்லாம் அச்சமூட்டக்கூடிய விதத்தில் போர்ச் செய்திகள் வந்து கொண்டே இருந்தன. கலிடோனியா செங்கடலில் மிதந்து கொண்டிருந்தது. வெகு பத்திரமாக எகிப்தைச் சென்றடைய வேண்டும். அதற்கு சூயஸ் கால்வாயைக் கடக்க வேண்டும்.

அங்கு...



# உல்லாச உலகப் போர்!

எத்தனை முறைதான் மகாராணிகளின், ஆசைநாயகளின், ஐரோப்பியச் சிட்டு களின் அழகையே வருணித்துக் கொண்டிருப்பது? ஒரு வித்தியாசத்துக்கு சூயஸ் கால்வாயின் வரலாற்றைப் பார்க்கலாம்.

சூயஸ் கால்வாய் என்பது எகிப்தில் வெட்டப்பட்ட செயற்கைக் கால்வாய். மத்தியத் தரைக்கடலையும் செங்கடலையும் இணைப்பதற்காக வெட்டப்பட்டது. இதன் நீளம் 163 கி.மீ. அகலம் 300 மீட்டர். ரிப்பன் வெட்டினார்களா இல்லையா என்று தெரியவில்லை, உபயோகத்துக்கு திறக்கப்பட்ட ஆண்டு 1869. இந்தக் கால்வாய் உருவாக்கப்பட்டதால் ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடையே யான கப்பல் போக்குவரத்து சாத்தியமானது. அதற்கு முன்புவரை ஆசியாவிலிருந்து ஐரோப்பாவுக்குச் செல்லும் கப்பல்கள் எல்லாம் தங்கள் பருத்த தேகத்தை சுமந்து கொண்டு அம்மாம்பெரிய ஆப்பிரிக்கக் கண்டத்தையும் சுற்றியே செல்ல வேண்டியதிருந்தது. சூயஸ் கால்வாய் வந்த பின்பு, பம்பாயிலிருந்து கப்பலில் லண்டனுக்கு மூன்றே வாரங்களில் செல்ல முடிந்தது. இந்தியாவில் பிரிட்டிஷாரின் வியாபாரமும் பெருகியது. பிரிட்டிஷ் ராஜ குடும்பத்தினரது இந்திய விஜயங்களும் ஆரம்பித்தன.

நமது கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங் பிரயாணம் செய்து கொண்டிருந்த கப்ப லான எஸ்.எஸ். கலிடோனியா, சூயஸ் கால்வாயை நெருங்கிக் கொண்டிருந்தது. எப்போது என்ன நிகழும், எங்கிருந்து யார் வந்து தாக்குவார்கள் என்ற பதை பதைப்பான முதல் உலகப் போர் சூழல்.


சூயஸ் கால்வாய்

சூயஸ் கால்வாய் மட்டும் இல்லையென்றால் பிரிட்டனின் கதி பெப்பெப்பேதான். அதன் கடல்வழி நடவடிக்கைகள் எல்லாம் சூயஸ் கால்வாயை மட்டுமே நம்பி இருந்தன. ஆஸ்திரேலியா, நியு ஸிலாந்து, குறிப்பாக இந்தியாவிலிருந்து கப்பல் வழியாக வரும் உதவிப் பொருள்கள் எல்லாம் சூயஸ் வழியேதான் வந்தாக வேண்டும்.

'இந்த சூயஸ் கால்வாயோட சோலிய முடிச்சுப்புட்டோம்னா, பிரிட்டனைப் பிரிச்சுப் பந்தாடிடலாம்' என்று திட்டமிட்டது ஜெர்மனியப் படை. பிரிட்டன் மட்டும் லேசுப்பட்டதா என்ன. முன்கூட்டியே யோசித்து எகிப்தில் தன் படைகளைக் கொண்டு வந்து நிரப்பி யிருந்தது.

'மச்சான், திட்டம் இதுதான். சூயல் கால்வாயை முழுசாக் கைப்பற்றிடணும். இல்லேன்னா, அதை முடிஞ்ச மட்டும் சேதாரப்படுத்திடணும்' தன் கூட்டாளி நாடான துருக்கியுடன் சேர்ந்து திட்டமிட்டது ஜெர்மனி. ஜமால் பாஷா என்ற துருக்கி கடற்படைத் தளபதி, க்ரெஸென்ஸ்டீன் என்ற ஜெர்மானியத் தளபதி ஆகியோர் தலைமையில் சுமார் இருபத்தைந் தாயிரம் வீரர்கள், சூயஸைக் கைப்பற்ற அணிவகுத்தார்கள். சூயஸ் கால்வாய்ப் பகுதியில் எந்த நேரத்தில் வேண்டுமானாலும் அதிபயங்கரப் போர் வெடிக்கும் அபாயம்.

எஸ்.எஸ். கலிடோனியா சூயஸ் கால்வாயைக் கடந்து கொண்டு இருந்தது. பிரிட்டனின் சில போர்க் கப்பல்கள் கால்வாயில் ரோந்து சென்று கொண்டிருந்தன. சில போர்க்கப்பல்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. கால்வாயின் கரையில் ஆங்காங்கே அதி உஷார் நிலையில் பிரிட்டிஷ் படையினர்.

‘ரொம்பத் தப்பான நேரத்துல சுற்றுப் பயணத்துக்குக் கிளம்பி வந்துட்டோமோ? பிரான்ஸுக்குப் போய்ச் சேருவோமா?’ இந்தர் சிங்கின் மனத்தில் பயம் கலந்த குழப்பம். பிரிட்டிஷ் படையினரைத் தாண்டி எதுவும் நடந்துவிடாது என்ற நம்பிக்கை ஜெகத்ஜித் சிங்குக்கு.

எந்தவித பாதிப்புமின்றி, சூயஸைக் கடந்து எகிப்தில் கரையிறங்கினார்கள். அப்போதுதான் இந்தர் சிங்குக்குக் கொஞ்சம் பயம் தெளிந்தது. சூயஸ் கால்வாயை கபளீகரம் செய்ய நினைத்த ஜெர்மனி - துருக்கிப் படையினரின் பாட்ஷா பலிக்கவில்லை என்பதெல்லாம் முதல் உலகப் போர் வரலாறு. அதை அப்படியே விட்டுவிட்டு, மீண்டும் கலிடோனியாவில் ஏறிக் கொள்வோம்.

ஜெகத்ஜித் சிங், எகிப்திலிருந்து கிளம்பி, பாரிஸுக்குச் சென்றார். சொந்த ஊரில் இறங்கியதும் அனிடா பரவசமானாள். அவளது குடும்பத்தினரோடு சில நாள்கள் தங்கினாள். உலகப் போர் உக்கிரமாக நடக்கிறதே, ஓரிடத்தில் பாதுகாப்பாக இருந்துகொள்வோமே என்றெல்லாம் ஜெகத்ஜித் சிங் நினைக்கவே இல்லை. சில நாள்கள் பாரிஸில் இருந்துவிட்டு ஸ்பெயினுக்குக் கிளம்பினார். தன் பயணத்திட்டத்தில் எந்தவித மாற்றமும் இல்லாதபடி பார்த்துக் கொண்டார்.

ஸ்பெயினின் மேப்பைப் பார்த்தால் தெரியும். அதன் மூக்குபோல ஒரு பகுதி நீட்டிக் கொண்டி ருக்கும். அந்த மூக்கின் நுனியில் உள்ளதுதான் கிப்ரல்டர் (Gibraltar). அந்தத் துறைமுகத்திலிருந்து எஸ்.எஸ். பாட்ரியா (S.S.Patria) என்ற பயணிக்கப்பல் நியு யார்க் நோக்கிக் கிளம்பியது. ஜெகத்ஜித் சிங்கின் அமெரிக்கச் சுற்றுப் பயணம் ஆரம்பமானது.

முதல் உலகப்போரில் அமெரிக்காவும் பிரிட்டனின் அணியில்தான் இருந்தது. ஜெகத்ஜித் சிங் நியு யார்க் சென்றார். தங்கினார். ஓய்வெடுத்தார். சுற்றிப் பார்த்தார். ரசித்தார். வாஷிங்டன் சென்றார். அங்கும் அதே. சிகாகோ, டென்வார், சான் ப்ரான்சிஸ்கோ, லாஸ் ஏஞ்சல்ஸ், சான்டா பார்பரா என அவரது அமெரிக்கச் சுற்றுப் பயணம் அடுத்த நான்கு மாதங்களுக்கு நீண்டது.

‘எனக்கு நயாகரா நீர்வீழ்ச்சி பார்க்க ஆசையாக இருக்கிறது’ - அனிடா கேட்டாள். ‘இவ்வளவு தூரம் வந்துவிட்டு அங்கு செல்லாமல் இருப்போமா என்ன? நம் பயணத்திட்டத்தின்படி அடுத்த வாரம் இந்த நேரத்தில் நயாகராவின் சாரலில் நனைந்து கொண்டிருப்போம்’ ஜெகத்ஜித் சிங் புன்னகை செய்தார். அது 1915 மே 13. உலகையே ஒரு செய்தி உலுக்கிக் கொண்டிருந்தது. யு-20 என்ற ஜெர்மானிய போர்க் கப்பல் நடத்திய தாக்குதலில் சிக்கி, லூஸிடானியா (Lusitania) என்ற பிரிட்டிஷ் பயணிகள் கப்பல் நீரில் மூழ்கியது. அயர்லாந்தின் கடல் பகுதியில் இந்தச் சம்பவம் நடந்தது. இறந்தவர்களின் எண்ணிக்கு ஆயிரத்து நூறைத் தாண்டும். இதுவரை உலகில் நடந்துள்ள பயணிகள் கப்பல் விபத்துகளில் இரண்டாவது பெரிய விபத்து இது. முதல் விபத்து டைட்டானிக். அதில் மூழ்கி இறந்தவர்கள் எண்ணிக்கை தோராயமாக ஆயிரத்து ஐநூறு.

கனடாவில் குயின் விக்டோரியாவின் புதல்வரான இளவரசர் ஆர்தர் (Duke of Connaught) முதல் உலகப் போரில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார். கனடாவின் அப்போதைய கவர்னர் ஜெனரலும் அவரே. கனடாவிலுள்ள படைகளுக்குப் போர் பயிற்சி கொடுப்பதிலும், வழி நடத்துவதிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார் அவர்.

கனடாவிலும் சுற்றுப்பயணம் மேற் கொண்டிருந்த ஜெகத்ஜித் சிங், ஒட்டாவா (Ottawa) விமானத்தில் வந்து இறங்கினார். அங்கு இளவரசர் ஆர்தரைச் சந்தித்தார். ஆர்தர், இந்தியாவில் பிரிட்டிஷ் ராணுவத்தில் ஐந்து வருடங்கள் (1886 - 1890) பணியாற்றி யிருக்கிறார். எனவே அவருக்கு இந்திய மகாராஜாக்கள் பலரோடு நட்பு உண்டு. போர் நிலவரங்கள் பற்றி இளவரசரிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட மகாராஜா, அவ ரோடு சேர்ந்து போர் முகாம்களுக்கும் மருத்துவமனைகளுக்கும் விசிட் அடித்தார்.

தனது அமெரிக்க சுற்றுப் பயணத்தை வெற்றிகரமாக முடித்த ஜெகத்ஜித் சிங், 1915 ஆகஸ்டில் இங்கிலாந்துக்குச் சென்றார். அங்கு கிங் ஐந்தாம் ஜார்ஜைச் சந்திப்பதற் கான அனுமதி அவருக்குக் கொடுக்கப்பட் டது. உரிய முறையில் உடையலங்காரம் செய்துகொண்டு, தேவைக்கேற்ப ஆபரணங் கள் அணிந்துகொண்டு, தனக்கு ஒதுக்கப் பட்ட நேரத்தில் அரண்மனைக்குள் நுழைந் தார் ஜெகத்ஜித் சிங்.

அங்கு கிங் ஜார்ஜுடன், குயின் மேரியும் காத்திருந்தார். புன்னகை தவழ வரவேற்றார் கள். உச்சி குளிர்ந்துபோனார் மகாராஜா.

'இப்படி போர் நடக்கும் சமயத்தில் தாங்கள் இங்கு வந்து உதவியாக இருப்பது மகிழ்ச்சி கொடுக்கிறது. நன்றி' - குயின் மேரி சொன் னார். அந்த நன்றியை மிக்க மரியாதையுடன் ஏற்றுக் கொண்டார் ஜெகத்ஜித் சிங். சிறிது நேரம் அவர்களுடன் உரையாடி விட்டு, தாங்க முடியாத மகிழ்ச்சியில் வெளியே வந்தார். லண்டனில் அவரது ஜாகை மேலும் சில நாள்கள் நீடித்தன.

மீண்டும் பாரிஸுக்குச் சென்றார்கள். அனிடாவுக்கு மறுபடியும் தன் குடும்பத்தின ரோடு பொழுதைக் கழிக்கும் வாய்ப்பு


இளவரசர் ஆர்தர்

கிடைத்தது. அங்கு அவர்களது டேரா இரண்டு மாதங்கள் நீடித்தன. ஆனால் ஜெகத்ஜித் சிங்கால் பாரீஸில் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. இந்தர் சிங்கை அழைத்தார்.

'போர் முனைக்குச் சென்று வரலாமா?' கேட்டார். மகாராஜா கேட்டு எதைத்தான் மறுத்திருக்கிறார் இந்தர் சிங். உரியவர்களுடன் பேசி ஏற்பாடு செய்தார். ஒரு நன்னாளில் போர் நடந்து கொண்டிருக்கும் பிரான்ஸ் - ஸ்பெயின் எல்லைப் பகுதிக்கு இந்தர் சிங்குடனும் உரிய பாதுகாப்புகளுடனும் விஜயம் செய்தார் ஜெகத்ஜித் சிங்.

போருக்காக வெட்டப்பட்டிருக்கும் பதுங்கு குழி ஒன்றில் இறங்கிக் கொண்டார். சுற்றிலும் துப்பாக்கி சுடும் சத்தம். அவ்வப்போது குண்டு வெடிக்கும் சத்தம். எப்படிப் போர் புரிகிறார்கள், வெடிகுண்டுகள் வீசப்படுவது எப்படி என்று போர்க்களக் காட்சிகளை நேரடியாகச் சென்று உணர்ந்து கொண்டார். ஆபத்தில்லாத நேரம் பார்த்து, பதுங்கு குழியில் இருந்து உரிய பாதுகாப்புடன் வெளியே வந்தார். பாரிஸுக்குத் திரும்பினார்.

1915 நவம்பர். ஜெர்மனியின் கை ஓங்கியிருந்தது. ஜெர்மானிய, ஆஸ்திரிய கூட்டுப்படைகள் செர்பியாவைக் கைப்பற்றியிருந்தன. போர் மேலும் உக்கிரமடைந்திருந்தது. அதே சமயம் ஜெகத்ஜித் சிங்குக்கு இந்தியாவுக்குத் திரும்பும் எண்ணம் வந்திருந்தது.

'திட்டம் என்ன?' இந்தர் சிங்கிடம் கேட்டார் ஜெகத்ஜித் சிங்.

'டிசம்பரில் ஒரு பயணிகள் கப்பல் இருக்கிறது.'

'எங்கிருந்து?'

'மார்செய்ல்ஸ் துறைமுகத்திலிருந்து. கப்பலின் பெயர் பெர்சியா.'

'நல்லது. அதிலேயே கிளம்பிவிடலாம்.'

அப்போதைக்கு மகாராஜா சொல்வதைக் கேட்டுக் கொண்டாரே தவிர, இந்தர் சிங்கின் மனத்தில் அந்தப் பயணத்திட்டம் உறுத்தலாகவே இருந்தது. 'இந்த நேரத்தில் நாடு திரும்பத்தான் வேண்டுமா? கடல் வழி மிகவும் ஆபத்து வாய்ந்ததாயிற்றே. உயிருக்கு உத்தரவாதம் இல்லாத பயணம் செய்ய மகாராஜாவை அனுமதிப்பது மகா பாவமாயிற்றே' - அவரது மனம் எச்சரிக்கை மணி அடித்துக் கொண்டே இருந்தது.

அந்தச் சுற்றுப் பயணம் முழுவதிலுமே, தான் சென்ற ஒவ்வொரு இடத்திலும் விதவிதமான நகைகளை வாங்கிக் குவித்திருந்தார் ஜெகத்ஜித் சிங். பரிசுப் பொருள்கள், உடைகள், வைரக் கற்கள், பிற விலையுயர்ந்த கற்கள், கலைப் பொருள்கள் எல்லாமே அதில் அடக்கம். பாரிஸில் ஷாப்பிங் செய்வது மட்டுமே பாக்கி. அனிடாவோடு கிளம்பினார். தம் மகாராணிகள் எல்லோருக்கும் ஒரே மாதிரியான நகைகள் வாங்குவதில் அதிக கவனம் செலுத்தினார். ஒரு நகை பிடித்திருந்தால், அதே போல மேலும் பல நகைகளைச் செய்யச் சொன்னார்.

தன்னுடைய வாரிசுகளுக்கும் நகைகள், உடைகள், இன்னபிற வாங்கிக் குவித்தார். கூடவே வந்து கொண்டிருக்கும் அனிடாவைக் கொஞ்சம் ஸ்பெஷலாகவே கவனித்தார். ஜெகத்ஜித் சிங்கின் பரிசு மழையில் படு குஷியாக நனைந்து கொண்டிருந்தாள் அவள்.

பயணத்துக்கான நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. லண்டனிலிருந்து டிசம்பர் 18 அன்று கிளம்பிய எஸ். எஸ். பெர்சியா (S.S. Persia) பயணிகள் கப்பல், மார்செய்ல்ஸ் (Marseilles) துறைமுகத்துக்கு வந்து சேர்ந்திருந்தது. அந்தச் சமயத்தில் இந்தர் சிங்குக்கு அந்த அதிர்ச்சி கரமான தகவல் உளவாளிகள் வழியாகக் கிடைத்தது.

'எஸ்.எஸ். பெர்சியா பயணிகள் கப்பலை, ஜெர்மனி தாக்கத் திட்டமிட்டுள்ளது.'

பதறியடித்து மகாராஜாவிடம் ஓடினார் இந்தர் சிங். மூச்சிரைக்க விஷயத்தை அவரது காதில் கிசுகிசுத்தார். ஜெகத்ஜித் சிங் முகத்தில் அதிர்ச்சியின் அடையாளங்கள்.

'தங்கள் பயணத்தை ரத்து செய்வது நல்லது. அல்லது தள்ளிப் போடுங்கள். மார்செய்ல்ஸிலேயே மேலும் சில நாள்கள் தங்கிவிடுவது பாதுகாப்பு' இந்தர் சிங் படு அக்கறையுடன் எடுத்துக் கூறினார். ஜெகத்ஜித் சிங் பதில் எதுவும் சொல்லவில்லை.

அடுத்த பதினொரு மணி நேரத்தில் நிறைந்த எமகண்டப் பொழுதில் மார்செய்ல்ஸ் துறைமுகத்திலிருந்து பெர்சியா புறப்படுவதாக இருந்தது.



# 58

# இன்னொரு டைட்டானிக் கதை!

மகாராஜா ஜெகத்ஜித் சிங் என்ன முடிவெடுக்கப்போகிறார் என்ற குழப்பத்தில் தவித்துக் கொண்டு இருந்தார் இந்தர் சிங். எஸ்.எஸ். பெர்சியா, மார்செய்ல்ஸ் துறைமுகத்தை விட்டுப் புறப்படுவதற்கு இன்னும் சில மணி நேரங்களே இருந்தன.

'நமக்கான பொருள்களை எல்லாம் கப்பலில் ஏற்றி விட்டீர்களா?' - ஜெகத்ஜித் சிங் கேட்டார்.

'இந்த ரகசியத் தகவல் வருவதற்கு முன்னாலேயே ஏற்றிவிட்டோம் மகாராஜா' சொன்னார் இந்தர் சிங்.

'எல்லாப் பொருள்களையும் ஏற்றிவிட்டீர்கள் என்றால், என்னால் எப்படி கப்பலில் போகாமல் இருக்க முடியும்? கப்பலில் இருக்கும் பொருள்களின் விலைமதிப்பு என்னவென்று தெரியாதா உமக்கு?' ஜெகத்ஜித்தின் வார்த்தைகளில் கோபம் இருந்தது. அதில் காரணமும் இருந்தது. மகாராஜா தனது மனைவிகளுக்காகவும் வாரிசுகளுக்காகவும் தனக்காகவும் வாங்கிக் குவித்த நகைகள், வைரங்கள், மரகதக் கற்கள், மேலும் பல விலையுயர்ந்த பொருள்கள் எல்லாம் கப்பலில் ஏற்றப்பட்டு இருந்தன. மீண்டும் அவற்றை இறக்குவதற்கு அவகாசம் இல்லை.

இந்தர் சிங், தயக்கத்தோடு ஒரு யோசனையை முன்வைத்தார்.



எஸ். எஸ். பெர்சியா

'கப்பலில் உள்ள பொருள்களும் முக்கியம்தான். அதைவிட விலைமதிப்பில்லாதது தங்கள் உயிர். எனவே, தாங்கள் இந்தக் கப்பலில் செல்ல வேண்டாம். நான் மட்டும் செல்கிறேன். பொருள்களைப் பத்திரமாகக் கொண்டு செல்வது என் பொறுப்பு.'

தன்னுடைய நம்பிக்கைக்குரிய அதிகாரி இந்தர் சிங் சொன்ன யோசனை, மகாராஜாவுக்கு நியாயமாகவே தெரிந்தது. நடந்தது எதுவுமே தெரியாத அனிடா, பெர்சியாவில் ஏறத் தயாராக இருந்தாள்.

'என்ன சொல்கிறீர்கள்? நாம் இதில் செல்லவில்லையா? அப்படியெனில் நாம் மீண்டும் பாரீஸ் செல்கிறோமா?' சொந்த ஊர்ப் பாசம் அவளை வேறு மாதிரி யோசிக்க வைத்தது.

1915 டிசம்பர் 26. சுமார் ஐநூறு அடி நீளம் கொண்ட பெர்சியா, மார்செய்ல்ஸ் துறைமுகத்தை விட்டுக் கிளம்பியது. மேல் தளத்தில் நின்றபடி, ரெடிமேட் புன்னகையுடன் கையசைத்தார் இந்தர் சிங். கரையில் நின்றபடி கவலையுடன் டாடா காட்டிக் கொண்டிருந்தார் ஜெகத்ஜித் சிங். இந்தர் சிங்கின் பக்கத்தில் ஒரு வெள்ளைக்காரப் பெண் நின்று கொண்டிருந்தாள். அந்தப் பெண் ஹாலிவுட் நடிகை எலனோர் வெலாஸ்கோ தார்ன்டன் (Eleanor Velasco Thornton).

ரோல்ஸ் ராய்ஸ் கார்களின் முகப்பில், பறக்கும் தேவதைச் சிலை ஒன்று இருப்பதைக் கவனித்திருக்கலாம். அந்த தேவதைக்கு மாடலாக இருந்தவர் எலனோர்தான். பெர்சியாவில் ஏகப்பட்ட ரோல்ஸ் ராய்ஸ் கார்கள் இந்தியாவில் இறக்குமதி செய்யப்படுவதற்காக ஏற்றப் பட்டிருந்தன.

வேளா வேளைக்குச் சாப்பிட்டார். கொஞ்சம் தூங்கினார். சுற்றி ஏதேனும் ஜெர்மனியக் கப்பல் வருகிறதா என்று வேடிக்கை பார்த்தார். இந்தர் சிங்கின் அன்றைய பொழுது, எந்தவித ஆபத்துமின்றிக் கழிந்தது.

அடுத்த மூன்று நாள்களும் அப்படியே கழிந்தன. வெற்றிகரமாக சூயஸ் கால்வாயைக் கடந்துவிட்டால் போதும். அதற்குப் பின் அவ்வளவாகப் பயமில்லை. எப்படியாவது பம்பாய்க்கு இந்தப் பொருள்களை வெற்றிகரமாகக் கொண்டு சேர்த்துவிட்டால், மகாராஜா நம்மைத் தூக்கிவைத்துக் கொண்டாடுவார். இந்தர் சிங்குக்குள் எண்ணங்கள் சிறகடித்துக் கொண்டிருந்தன.

அது டிசம்பர் 30. பெர்சியாவில் காலைப் பொழுது வழக்கம்போலத்தான் விடிந்தது. அப்போது அது மத்திய தரைக்கடலில் கிரீட் (Crete) தீவை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. காலை உணவை முடித்திருந்த பெரும்பாலான பயணிகள், பொழுதுபோக்கிக் கொண்டிருந்தார்கள். இந்தர் சிங்குக்கு கப்பலின் மேல் தளத்தில் நின்றபடி கடலை நோட்டமிட்டுக் கொண்டிருந்தார்.

அதே நேரத்தில் மத்தியத் தரைக் கடலில் யு-38 என்ற ஜெர்மானியப் போர்க்கப்பல் ரோந்து வந்து கொண்டிருந்தது. அதுவும் கிரீட் தீவை நோக்கி. பெர்சியா பயணிகள் கப்பல் அந்தப் பகுதியில்தான் இருக்கிறது என யு-38ன் கமாண்டர் மேக்ஸ் வாலண்டினருக்குத் (Max Valentiner) தகவல் கிடைத்தது.

‘ஓகே. முடித்துவிட வேண்டியதுதான்’ கமாண்டர் மேக்ஸ், தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டார். யு-38, பெர்சியாவைத் தேடி விரைந்தது.

நேரம் நண்பகல் 12.45. பெர்சியாவில் மதிய உணவுக்கான நேரம். சிலர் சாப்பிட ஆரம்பித்திருந்தார்கள். சிலர் சாப்பிடுவதற்காகத் தங்கள் இடத்திலிருந்து கிளம்பிக் கொண்டிருந்தார்கள். ஆனால் கப்பல் கேப்டன்கள் முகத்தில் தெரிந்த கலவரம், இந்தர் சிங்கை மேல்தளம் நோக்கி ஓடச் செய்தது. தூரத்தில் ஜெர்மானியப் போர்க் கப்பல் வருவதைக் கண்டார் இந்தர் சிங். உள்ளுக்குள் உதறலெடுக்க ஆரம்பித்தது.

யு-38ல் கமாண்டர் மேக்ஸின் முகத்தில் போர்வெறி குடி கொண்டு இருந்தது. வீரர்கள் ஆயுதங்களோடு தயாராக இருந்தார்கள். அந்தப் போர்க் கப்பலிலிருந்து பாய்வதற்காகக் குண்டுகள் தயார் நிலையில் இருந்தன. மேக்ஸின் கருவிழிகளில் பெர்சியாவின் உருவம் பெரிதாகிக் கொண்டே வந்தது.

பெர்சியாவில் பயணிகள் ஒவ்வொருவருக்குள்ளும் நடுக்கம் ஆரம்பித்திருந்தது. சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் அப்படி அப்படியே தட்டை வைத்துவிட்டு, தங்கள் உடைமைகளை எடுக்க ஓடினார்கள். ‘யாரும் பயப்பட வேண்டாம்.’ - பெர்சியாவின் கேப்டன் மேஜர் ஜான் லாட்விக் (Major John Lodwick) உரத்த குரலில் பயணிகளிடம் கேட்டுக் கொண்டார். கப்பலின் ஊழியர்கள் அவசர, அவசரமாக உயிர் காக்கும் படகுகளைக் கட்டி வைத்திருந்த கயிறுகளை அவிழ்க்கத் தொடங்கியிருந்தார்கள்.

போர்க் கப்பல்களுக்கென சில விதிகள் உண்டு. எதிரி நாட்டு போர்க்கப்பல்களை எந்தவித முன்னறிவிப்போ, எச்சரிக்கையோ கொடுக்காமல் தாக்கலாம். மூழ்கடிக்கலாம். ஆனால் எதிரி நாட்டுப் பயணிகள் கப்பலைத் தாக்கக் கூடாது. முதலில் எச்சரிக்கை கொடுக்க வேண்டும். பிறகு அவகாசம் கொடுக்க வேண்டும். பயணிகள் தப்பிப்பதற்கு உரிய உயிர் காக்கும் படகுகள் தயாரான பின்னரே பயணிகள் கப்பலைத் தாக்கலாம், மூழ்கடிக்கலாம். இது சர்வதேச போர் விதி.

ஆனால் கமாண்டர் மேக்ஸுக்கு அன்று அந்த விதியெல்லாம் நினைவில் இல்லை. மணி 1.10. அவரது வாயில் இருந்து அந்த வார்த்தை கொதிப்புடன் வெளிவந்தது.


கமாண்டர் மேக்ஸ்

‘ஃபயர்...’

அடுத்த நொடி, குண்டு ஒன்று பாய்ந்து சென்று பெர்சியாவின் முன்பகுதியில் இடது புறத்தைத் தாக்கியது.

என்ன செய்யவென்று தெரியாமல் பலர் கடலில் குதித்தார்கள். என்ன செய்தும் தப்பிக்க முடியாது என்று தெரிந்து பலர் தாங்கள் இருந்த இடத்தையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, மரணத்துக்குத் தயாரானார்கள்.

குண்டு தாக்கிய ஐந்தாவது நிமிடம். பெர்சியா கடலுக்குள் முழுவதுமாக மூழ்கிப் போனது. கூடவே சில நூறு பயணிகளும். மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் அத்தனை உடைமைகளும். ரோல்ஸ் ராய்ஸ் கார்களும். அதற்கு மாடலாக இருந்த நடிகை எலனோரும்.

உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த இந்தர் சிங், உயிர் காக்கும் படகு எங்காவது மிதக்கிறதா என்று தேடித் தவித்தார். தத்தளித்துக் கொண்டிருந்த பலர் படகை நோக்கி விரைந்து கொண்டிருந்தார்கள். நீச்சல் தெரியாத பலர் இந்தர் சிங்கின் கண் முன்னாலேயே விடைபெற்றுக் கொண்டிருந்தார்கள்.

இரண்டு படகுகள்தான் இருந்தன. அவற்றில் ஏற்கெனவே பலர் ஏறியிருந்தார்கள். படகில் ஏற முடியாவிட்டாலும் பரவாயில்லை, அதைப் பிடித்துக் கொண்டாவது நிற்கலாமே என இந்தர் சிங் அதை நோக்கி நீந்தினார். அந்த நேரத்தில் ஒரு பெரிய மரப்பலகை மிதந்து வந்தது. அதில் ஏறிக் கொண்டார். அவரைச் சுற்றிலும் மரண ஓலம் தொடர்ந்து கொண்டிருந்தது.

ஜெகத்ஜித் சிங், அந்தச் சமயத்தில் பெரிய படகு ஒன்றின் மூலம் எகிப்து நோக்கி விரைந்து கொண்டிருந்தார். அங்கிருந்து வேறொரு பயணிகள் கப்பல் மூலம் பம்பாய்க்குச் செல்வதாகத் திட்டம். பெர்சியா கப்பல் மூழ்கடிக்கப்பட்ட சம்பவத்தை, அப்போது உலகம் அறிந்திருக்கவில்லை.

மெல்ல மெல்ல இருள் கவியத் தொடங்கியது. அவ்வளவு நேரம் போராடி உயிரைத் தக்க வைத்துக் கொண்டிருந்தவர்களை குளிர் குறிவைக்கத் தொடங்கியது. இந்தர் சிங் அந்த மரப் பலகையின் மேல் அமைதியாக உட்கார்ந்திருந்தார். மகாராஜாவின் உயிரைக் காப்பாற்றி விட்டோம் என்ற திருப்தி அவருக்கு மேலும் தைரியம் கொடுத்தது. ஆனால் அவரது

உடைமைகள் எல்லாம் தன் கண் முன்னாலேயே நீரில் மூழ்கிப் போனது துயரத்தைக் கொடுத்தது. 'ஹெல்ப்...' - சில நிமிடங்களுக்கு ஒருமுறை யாரோ கத்திக் கொண்டிருந்தார்கள். இந்தர் சிங், நட்சத்திரங்களைப் பார்க்க ஆரம்பித்தார்.

மிகவும் மெதுவாகத்தான் சூரிய ஒளி வெளிவந்தது. இருளும் குளிரும் மேலும் சிலரது உயிர்களைக் குடித்திருந்தன. சம்பவம் நடந்து பதினெட்டு மணி நேரங்கள் ஆகியிருந்தன. அந்தப் பகுதியில் அதுவரை ஒரு கப்பல்கூட வரவில்லை. உதவிகேட்டு குரலெழுப்பக் கூட யாருக்கும் திராணியில்லை. இருந்தாலும் சுவாசித்துக் கொண்டிருந்தார்கள்.

விபத்து முடிந்து இருபத்து நான்கு மணி நேரம் ஆகியிருந்தது. அந்தப் பெரிய மரப் பலகை இந்தர் சிங்கின் உயிரைத் தக்க வைத்துக் கொண்டிருந்தது. கடல் பறவைகள் சில கண்களுக்குத் தெரிந்தன. பக்கத்தில் ஏதாவது நிலப்பரப்பு இருக்கலாம் என்ற நம்பிக்கை வந்தது. ஆனால் இன்று இரவுவரை யாரும் வராவிட்டால்?

இருள் சூழத் தொடங்கிய பொழுதில் ஒளி வந்தது, இன்னொரு கப்பலிலிருந்து. இந்தர் சிங் உள்பட 176 பேர் காப்பாற்றப்பட்டனர். மூழ்கி இறந்து போனவர்களின் எண்ணிக்கை 343.

பெர்சியா தாக்கப்பட்ட செய்தி கொஞ்சம் கொஞ்சமாகப் பரவ ஆரம்பித்திருந்தது. எகிப்தில் அந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட ஜெகத்ஜித் சிங், உடைந்து போனார். அடுத்த சில நாள்களில் கபுர்தலாவுக்கும் செய்தி போனது. மகாராஜா அந்தக் கப்பலில் வரவில்லை என்றறிந்து கபுர்தலா மக்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள். ஆனால் அஜ்லா கிராமம் துக்கத்தில் மூழ்கியது. அது இந்தர் சிங்கின் சொந்த ஊர்.

மருத்துவ சிகிச்சைகள் எல்லாம் எடுத்துக் கொண்ட இந்தர் சிங், தான் உயிர் பிழைத்த விவரம் குறித்து கபுர்தலாவுக்குத் தகவல் அனுப்பினார். அஜ்லா கிராமத்தில் ஒப்பாரியின் ஓசை நின்றது. எகிப்திலிருந்து மதீனா என்ற கப்பலில் கிளம்பிய ஜெகத்ஜித் சிங், ஜனவரி 18, 1916 அன்று வெகு பத்திரமாகப் பம்பாய் வந்தடைந்தார். சில நாள்களிலேயே வேறொரு கப்பலில் இந்தர் சிங்கும் இந்தியா வந்தடைந்தார்.

பெர்சியாவில் தனது விலையுயர்ந்த உடைமைகள் மூழ்கிப் போனது குறித்து, ஜெகத்ஜித் சிங் யாரிடமும் பேசவில்லை. உள்ளுக்குள் நிறையவே பாதிக்கப்பட்டிருந்தார். அவரைச் சந்திக்க வந்த இந்தர் சிங்கிடம்கூட, உடைமைகள் பற்றி பேசவில்லை.

இன்று வரை மத்திய தரைக்கடலில் கிரீட் தீவு கடல் பகுதியில் மூழ்கிய பெர்சியா அப்படியேதான் இருக்கிறது. ஜெகத்ஜித் சிங்கின் உடைமைகளும் அதில் அப்படியே.

டைட்டானிக் திரைப்படத்தின் ஆரம்பக் காட்சிகளில் பார்த்து இருக்கலாம். கேமரா ஒன்று நீருக்குள் புகுந்து டைட்டானிக்கைச் சுற்றி வரும். 2003ல் அதேபோல ஆபரேஷன் ஒன்று, நீருக்குள் இருக்கும் பெர்சியாவிலும் நடத்தப்பட்டது. Moya Crawford என்ற நிறுவனத்தினர் அந்த ஆபரேஷனை நடத்தினார்கள். பெர்சியா கப்பலில் ஒரு சிறிய பகுதியை உடைத்து உள்ளே நுழைந்து சில பொருள்களைக் கொண்டு வந்தார்கள். அதில் ஜெகத்ஜித் சிங்கின் இருநூறு மரகதக் கற்களும் அடங்கும். அப்போது தங்கம் எதுவும் கிடைக்கவில்லை. பெர்சியா வுக்குள் புதைந்து கிடக்கும் ஜெகத்ஜித் சிங் உடைமைகளின் இன்றைய மதிப்பு ஐம்பது மில்லியன் பவுண்ட் இருக்கலாம் என்கிறார்கள்.



# ஒரு மகாராஜா ஏமாந்து போகிறார்!

மன அமைதிக்காக முசௌரிக்கு வந்திருந்தார் கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங். ஒருநாள் மாலையில் அவரும் அனிடாவும் ஆளுக்கொரு குதிரையில் வலம் வந்து கொண்டிருந்தார்கள். அப்போது கார் ஒன்று சற்று தொலைவில் கடந்து சென்றது.

'ஏதோ ஒரு மகாராஜாவின் கார் போலத் தெரிகிறதே. யாராக இருக்கும்?' அனிடா ஆர்வமாகக் கேட்டாள். காரிலிருந்த நம்பர் பலகையைப் பார்த்த ஜெகத்ஜித் சிங் பதில் சொன்னார். 'அது இந்தூர் சமஸ்தானத்தின் கார் போலத் தெரிகிறது.'

அனிடாவின் முகத்தில் அப்படியொரு மகிழ்ச்சி. 'ஓ, மகாராஜா துகோஜி ராவ் வந்திருக்கிறாரா. அப்படியெனில் அவருடன் என்னுடைய தோழி நான்சி மில்லரும் கட்டாயம் வந்திருப்பாள். நான் அவளைச் சந்திக்க வேண்டுமே.'

'ஏற்பாடு செய்கிறேன்' என்றார் ஜெகத்ஜித் சிங். மறுநாளே அனிடாவும் நான்சியும் சந்தித்துக் கொண்டார்கள். அவர்களே எதிர்பாராத விதமாக இன்னொரு ஐரோப்பிய ராணியான ஜோன் ஃபால்கினரும் (John Falkiner) அங்கு வந்தாள். ஜோன், பாலன்பூர் (Palanpur) சமஸ்தான நவாப் தாலே முகம்மது கானின் மனைவி.

மூன்று ஐரோப்பிய ராணிகளும் மனம் விட்டுப் பேச ஆரம்பித்தார்கள். முதலில் அவர்கள் மகாராஜாக்களைக் காதலித்த கதை கேலியும் கிண்டலுமாக ஓடியது.

அடுத்து, அவர்கள் இந்தியாவுக்கு வந்த புதிதில் எதிர்கொண்ட பிரச்னைகளைப் பகிர்ந்து கொண்டார்கள். மெல்ல மெல்லப் பேச்சு மகாராஜாக்கள் அவர்களை எப்படி எப்படியெல்லாம் கவனித்துக் கொள்கிறார்கள் என்பது பற்றி ஆரம்பித்தது.

சாதாரணப் பெண்கள் என்றால் 'எம் புருஷன் என்னை மகாராணியாட்டம் வைச்சிருக்காரு' என்று அசால்ட்டாகச் சொல்லிவிட்டுப் போய்விடுவார்கள். இவர்கள் நிஜ ராணியாயிற்றே. கொஞ்சம் காஸ்ட்லி வார்த்தைகளாகவே பேசினார்கள்.

'என் வாழ்க்கைல இனிமே எந்தப் பிரச்னையும் வராதுன்னு நினைக்கிறேன். என் ஆத்துக்காரரு என்னைத் தங்கத் தட்டுல வைச்சுத் தாங்குறாரு. இங்க பார்த்தியா இந்த நெக்லஸை. அவ்வளவும் வைரம். இதே மாதிரி பெட்டி பெட்டியா நகைகளை எனக்காக வாங்கிக் குவிச்சிருக்காரு' ஜோன் பெருமைப்பட்டுக் கொண்டாள்.

'நான் ஆசைப்பட்ட எதையும் அவர் மறுத்ததில்லை. எனக்காக என்ன வேணும்னாலும் செய்யத் தயாரா இருக்காரு. நான் ரொம்ப அதிர்ஷ்டக்காரி. வேறென்ன சொல்ல?' நான்சி சுருக்கமாக முடித்துக் கொண்டாள். இருவரின் பார்வையும் அனிடா மீது திரும்பியது.

'அவரோட மற்ற இந்திய மனைவிகள் மாதிரியே என்னையும் சமமா நடத்துறாரு. கபுர்தலாவில எனக்காகவே அவரு கட்டிக் கொடுத்திருக்கிற மாளிகைக்கு வந்து பார்த்தா தெரியும். அவர் என் மேல எவ்வளவு பாசம் வைச்சிருக்காருன்னு' - தூரத்தில் வந்து கொண்டிருந்த ஜெகத்ஜித் சிங்கைப் பார்த்தபடியே பேசினாள் அனிடா.

அவர்களது அரட்டை இரவு வரை தொடர்ந்தது. இப்படி முசௌரியில் பிற சமஸ்தான மகா ராஜாக்களைத் திருமணம் செய்து கொண்ட ஐரோப்பிய ராணிகளை அடிக்கடி சந்தித்து மகிழ்ந் தாள் அனிடா. அந்த ராணிகளுக்குள் ஒரு தனி நட்பு வளையமே இருந்தது.

சில நாள்கள் முசௌரியில் தங்கியிருந்த ஜெகத்ஜித் சிங்கும் அனிடாவும் கபுர்தலாவுக்குத் திரும்பினார்கள். அங்கு சில மாதங்கள் வாசம். அதற்கு மேல் ஜெகத்ஜித் சிங்கால் கபுர்தலாவில் இருக்க முடியவில்லை. அவர் கண்களின் உலக உருண்டை சுழன்றது. லண்டனுக்குச் செல்ல பயணத் திட்டம் ஒன்றை உருவாக்கினார்.

சேவோய் (Savoy) ஹோட்டல். இந்தியாவிலிருந்து லண்டனுக்குச் செல்லும் பல மகாராஜாக்கள் தங்கும் ஆஸ்தான ஹோட்டல் இது. 1889-ல் திறக்கப்பட்டது. பெரும் பணக்காரர்கள், முக்கிய வெளிநாட்டு பிரமுகர்கள், ஹாலிவுட் நடிகர், நடிகைகள் எனப் பல தரப்பட்டோர் தங்கும் ராயல் ஹோட்டலாக இன்றும் விளங்கி வருகிறது.

இருநூற்று ஐம்பதுக்கும் மேற்பட்ட வசதியான அறைகள் கொண்ட ஹோட்டல். ஜெகத்ஜித் சிங், லண்டனுக்குச் செல்லத் திட்டமிட்டார் என்றால் முதலில் சேவோய் ஹோட்டலுக்குத்தான் தகவல் அனுப்பச் சொல்லுவார். மகாராஜாவிடம் இருந்து தகவல் வந்ததும், சேவோய் ஹோட்டல் நிர்வாகத்தினர் அவருக்காக வழக்கமாக ஒதுக்கும் ராயல் அறையைத் தயார் செய்து வைத்து விடுவார்கள்.

அதில் இரண்டு தனித்தனிப் படுக்கை அறைகள் உண்டு. இரண்டு படுக்கை அறைகளையும் இணைப்பது போல ஒரு டிராயிங் ரூம் இருக்கும். அதற்கு வெளியே ஒரு வரவேற்பறை



அனிடா - கபுர்தலா பரம்பரை நகைகளுடன்

உண்டு. அறையின் பால்கனியிலிருந்து தேம்ஸ் நதியை ரசித்துக் கொண்டே இருக்கலாம். இந்த ராயல் அறை தவிர வேறு எங்கும் தங்க மாட்டார் ஜெகத்ஜித் சிங். அவர் மட்டுமல்ல, அவரது குடும்பத்தினர், கபுர்தலாவின் இளவரசர்கள் என யார் லண்டனுக்கு வந்தாலும் சேவோய் ஹோட்டலில் தங்குவதையே வழக்கமாக வைத்திருந்தார்கள்.

அவரும் அனிடாவும் லண்டன் வந்தடைந்தார்கள். சேவோய் ஹோட்டலின் வாசலில் அவர்களது கார் வந்து நின்றது. அடிக்கடி வந்து போவதால், ஹோட்டலின் பெரும்பாலான பணியாளர்கள் மகாராஜாவுக்குப் பரிச்சயமானவர்களாகத்தான் இருந்தார்கள். அன்பொழுக அவரை வரவேற்றார்கள். வேகவேகமாக ஜெகத்ஜித் சிங்கின் உடைமைகளை அவரது அறையில் கொண்டுவந்து வைத்தார்கள்.

அனிடா தனக்கான படுக்கை அறைக்கு ஓய்வெடுக்கச் சென்றாள். அனிடாவோடு அவளது செகரெட்டரி போல கூடவே இருக்கும் பிரெஞ்சுத் தோழியும் வந்திருந்தாள். அந்தத் தோழிக்குத் தனி அறை வழங்கப்பட்டது. மகாராஜாவின் பணியாளர்கள் சிலர் வந்திருந்தார்கள். மகாராஜாவோடு வந்திருந்த அவரது முதன்மைச் செயலாளர் திவான் ஜர்மானி தாஸுக்கும்

தனி அறை ஒதுக்கப்பட்டிருந்தது. தனது குறிப்பறிந்து பணிவிடைகள் செய்யும் முதன்மைப் பணியாளர் குஷால் சிங்கை தன்னுடன் அழைத்து வந்திருந்தார் ஜெகத்ஜித் சிங். அன்றைய தினம் பயணக் களைப்பில் யாரும் வெளியே எங்கும் செல்லவில்லை.

மறுநாள் காலையில் அனிடா மட்டும் ஷாப்பிங் சென்று வந்தாள். ஜெகத்ஜித் சிங் தனது அறையிலேயே பொழுதைக் கழித்தார். மாலையில் ஹோட்டலில் நடந்த விருந்தொன்றில் கலந்து கொண்டார்கள். ஷாம்பெயின் கிளாஸ்களின் சிணுங்கல்கள் முடியும்போது நேரம் பதினொன்று ஆகியிருந்தது.

'நான் அறைக்குச் செல்கிறேன். களைப்பாக இருக்கிறது' சொல்லிவிட்டு அனிடா தன் படுக்கை அறைக்குச் சென்றாள். தனது லண்டன் நண்பர் ஒருவரை வழியனுப்பிவிட்டு அடுத்த அரை மணி நேரத்தில் தன்னுடைய படுக்கை அறைக்குச் சென்றார் ஜெகத்ஜித் சிங்.

ஹோட்டலே அமைதியாக இருந்தது. நேரம் நள்ளிரவு ஒன்றைத் தாண்டியிருக்கும். அனிடா, தனது படுக்கை அறையின் நிலைக்கண்ணாடி முன் உட்கார்ந்து கூந்தலைச் சரி செய்து கொண்டிருந்தாள். லேசாக ஒப்பனையும் செய்து கொண்டாள். கட்டிலருகே வந்தாள். தலையணைகளை அடுக்கினாள். அதன்மேல் போர்வையைப் போர்த்தினாள். ஓர் ஆள் மூடிப் படுத்திருப்பது போன்ற தோற்றம் கிடைத்தது. தன் அறையை விட்டு வெளியே வந்தாள். டிராயிங் ரூமில் பூனை போல நடந்தாள். வெளியேறினாள்.

அரைத் தூக்கத்தோடு ஹோட்டலின் வரவேற்பறையில் உட்கார்ந்திருந்தார் முதன்மைப் பணியாளர் குஷால் சிங். யாரோ ஒரு நபரோடு சென்ற அனிடா அவரது பார்வையில் சிக்கினாள். 'இந்தப் பெண்ணை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே? யாராக இருக்கும்?' - அவரது மூளை மப்பு கலையாமல் யோசித்தது. திடீரென்று ஷாக் அடித்தவர் போல எழுந்து நின்றார் அவர்.

'அய்யோ... இங்கே என்னைக் கடந்து போனது மகாராணியா? ஏதாவது கனவா இருக்குமோ? இல்லல்ல, நிச்சயம் அவங்கதான். ஆமா, அவங்களுக்கு இந்த சாமத்துல என்ன வேலை? கூடப் போனது நம்ம மகாராஜா மாதிரி இல்லையே? வேற யாரா இருக்கும்?

அய்யய்யோ, இதை யார்கிட்டப் போய்ச் சொல்லுவேன்? என் மண்டை வெடிச்சிரும்போல இருக்கே. சொன்னாத்தான் நம்புவாங்களா? பொய் சொல்றேன்னு என் நாக்கை இழுத்துவைச்சு வெட்டிருவாங்காளா? இப்ப நான் என்ன பண்ணுவேன்?' - குஷால் சிங் குழப்பத்தின் சிகரத்தில் இருந்தார்.

ரொம்ப நேரம் யோசித்து, தன் தைரியத்தை எல்லாம் ஒன்றாகத் திரட்டிக் கொண்டு மகாராஜாவின் அறைக்குச் சென்றார். வெகு தயக்கத்துடன் மகாராஜாவின் படுக்கை அருகே சென்று நின்றார். எழுப்பலாமா வேண்டாமா என்றொரு குழப்பம். ஜெகத்ஜித் சிங் அரைத் தூக்கத்தில் தான் இருந்தார், குஷால் சிங், அதிராமல் அழைத்ததற்கே விழித்துக் கொண்டார்.

'என்ன இந்த நேரத்தில்?' - ஜெகத்ஜித் சிங் கேட்டதும் குஷால் சிங்கின் உதடுகள் நடுங்க ஆரம்பித்தன. நீண்ட நேரம் தயங்கித் தயங்கி மெதுவாக அந்த வார்த்தைகளை வெளிவிட்டார்.

'ம... மகாராணி, ரூம்ல இல்லைன்னு நினைக்கிறேன்.'

*‘என்ன உளர்ற?’*

*‘இல்ல, அவங்க கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி, வேற யார் கூடவோ, வெளிய போறதை என்னோட ரெண்டு கண்களால பார்த்தேன்.’*

*தூக்கிவாரிப் போட்டது ஜெகத்ஜித் சிங்குக்கு. ஏற்கெனவே அனிடாவின் நடவடிக்கைகள் மேல் அவருக்கு அரசல் புரசலாகச் சந்தேகம் இருக்கவே செய்தது. நள்ளிரவில் இப்படி ஒரு தகவல் வந்ததும் அது கோபமாக வெடித்தது. கட்டிலிருந்து வேகமாக இறங்கிய அவர், மணிக்கு முப்பது மைல் வேகத்தில் அனிடாவின் படுக்கை அறையை நோக்கிச் சென்றார். அவளது கட்டிலைப் பார்த்ததும் ‘அடச்சே.. வீணாகச் சந்தேகப்பட்டு விட்டோமே’ என்று தன்னைத் தானே திட்டிக் கொண்டார்.*

*ஆனால் மறுகணமே அவரது சந்தேக மூளை அலாரம் அடித்தது. கட்டிலின் அருகில் சென்று போர்வையை உருவினார். தலையணைகள் உறங்கிக் கொண்டிருந்தன. ஜெகத்ஜித் சிங்கின் ரத்த அழுத்தம் பெட்ரோல் விலை போலானது.*

*தனது முதன்மைச் செயலாளர் ஜர்மானி தாஸின் அறைக்குச் சென்றார் மகாராஜா. கதவைத் தட்டினார். தூக்கக் கலக்கத்தில் வெளியே வந்தார் அவர். அவரது அறைக்குள் நோட்டம் விட்டார். தன்னுடன் வந்திருந்த ஒவ்வொருவரது அறைக்கும் சென்று பார்த்தார். அதற்குள் என்ன பிரச்னை என்பதைப் புரிந்து கொண்ட ஜர்மானி தாஸ், மகாராஜாவிடம் மெதுவாகப் பேசினார்.*

*‘ஒருவேளை மகாராணி அவர்களது தோழி அறைக்குச் சென்றிருக்கலாம் அல்லவா?’*

*வாய்ப்பு இருப்பதாகத் தோன்றியது மகாராஜாவுக்கு. ஏதோ கொஞ்சம் நம்பிக்கையுடன் தோழியின் அறைக்கும் சென்று கதவைத் தட்டினார். அவரது நம்பிக்கை நசுங்கிப் போனது. கோபம் உச்சந்தலையில் முட்டிக் கொண்டு நின்றது. ஹோட்டலில் இருக்கும் எல்லோருடைய அறைக் கதவையும் தட்டிப் பார்த்துவிடலாமா என்னுமளவுக்குக் கோபம்.*

*ஜர்மானி தாஸ்தான், மகாராஜாவைச் சமாதானப்படுத்தினார். ‘வேண்டாம் மகாராஜா. அது அவ்வளவு நாகரிகமாக இருக்காது. வீணாக விஷயத்தை நாமே பரப்பியது போலாகிவிடும். அதுபோக ஹோட்டலில் பல முக்கியஸ்தர்கள் தங்கியிருக்கிறார்கள். உங்கள் நண்பர் முகமது அலி ஜின்னாகூட இங்கேதான் அவரது மனைவியோடு தங்கியிருக்கிறார். கொஞ்ச நேரம் பொறுமையாக இருக்கலாம். எப்படியும் மகாராணி இங்கே திரும்பி வரத்தானே வேண்டும்.’*

*கொஞ்சம்போல அமைதியடைந்த மகாராஜா, தன் அறையின் வரவேற்பறையில் சென்று அமர்ந்தார். அவரது பணியாளர்களும் அங்கு பவ்யமாகச் சென்று காத்திருக்க ஆரம்பித்தார்கள். குஷால் சிங், மகாராஜாவின் பாதங்களுக்கு அருகில் பவ்யமாக உட்கார்ந்து கொண்டார். கடிகாரம் அதன் வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது.*

*அதிகாலை 3.30. கலைந்த கேசத்துடனும் கொஞ்சம் கசங்கிய உடையுடனும் ஹோட்டலுக்குள் நுழைந்தாள் அனிடா.*



# நாட்டாமை ஜின்னா

'திருடிக்குத் தேள் கொட்டியது போல' என்று சொல்லலாம். மகாராணி அனிடாவின் முகத்தில் வெளிப்பட்ட அதிர்வுகள் அப்படித்தான் இருந்தன. அர்த்த ராத்திரியில் ரகசியமாக வெளியே சென்றுவிட்டு, அதிகாலையில் மீண்டும் ஹோட்டல் அறைக்குத் திரும்பும்வேளையில் எதிரில் புருஷன் அய்யனார் போல் உட்கார்ந்திருந்தால்?

குளிர் நிறைந்த லண்டனிலும் குப்பென்று வியர்த்துவிட்டது அவளுக்கு. முகத்தில் பரவிய அதிர்ச்சியை அவளால் அடக்கியாள முடியவில்லை. சிரமப்பட்டு உதடுகளில் புன்னகையை வரவழைத்தாள். தொண்டைக்குழியினுள் எங்கேயோ சிக்கிக் கொண்டிருந்த வார்த்தைகளை மிகவும் கஷ்டப்பட்டு வெளியே கொண்டு வந்தாள்.

'எ.. என்ன ஆச்சு? உ... உங்களுக்குத் தூக்கம் வரலையா?'

ஜெகத்ஜித் சிங் பதில் எதுவும் பேசவில்லை. அவரது பார்வையில் உஷ்ணம் அதிகமாகிக் கொண்டே போனது. அவரைச் சுற்றியிருந்த பணியாளர்கள் எல்லாம் என்ன நடக்கப் போகிறதோ என்ற பயத்தில் கல்லாகச் சமைந்திருந்தார்கள்.

மகாராஜாவின் மௌனம் அனிடாவுக்குக் கூடுதல் பயத்தை வரவழைத்தது. அடுத்து என்ன சொல்லலாம் என்று யோசிக்கக்கூட முடியாத அளவுக்கு அவளது மனம் நடுங்கிக் கொண்டிருந்தது.

'எனக்குத் தூக்கம் வரலை. அதான்...'

‘அதனால என்ன?’ - சட்டென்று கேட்டார் ஜெகத்ஜித் சிங்.

‘என்னோட தோழியோட அறைக்குப் போனேன். அவகூட ரொம்ப நேரமா பேசிக்கிட்டு இருந்தேன்.’ - சமாளிக்கும்படியான பதிலைச் சொல்லிவிட்ட திருப்தியோடு மகாராஜாவைப் பார்த்தாள் அனிடா.

‘பொய் சொல்லாதே. உன் தோழி அறைக்கு உன்னைத் தேடி வந்தேன்’ ஜெகத்ஜித் சிங் சொல்லவும், அனிடாவின் உதவியாளரும் பிரெஞ்சுத் தோழியுமான அந்தப் பெண், அறைக்குள் நுழைந்தாள். அனிடா, தோழியின் முகத்தைப் பார்த்தாள். கலவரம் நிரம்பியிருந் தது. தான் சொன்ன வார்த்தைகள் அக்மார்க் பொய்யாகிப் போனதில் வெலவெலத்துப் போனாள் அனிடா. அதற்கு மேல் அவளால் ஜெகத்ஜித் சிங்கின் கண்களை நேராகப் பார்க்க முடியவில்லை. தலைகுனிந்தாள்.

‘உண்மையைச் சொல். இந்த நேரத்தில் எங்கே சென்று வருகிறாய்?’ - அறை அதிரக் கத்தினார் ஜெகத்ஜித் சிங்.

உறைந்து நின்றாள் அவள். என்ன பேசுகிறோம் என்று உணராமலேயே அவளது உதடுகள் பேச ஆரம்பித்தன.

‘அ.. அதுவந்து.. தூக்கம் வரலை. குழப்பமா இருந்தது. அதான், திவானைத் தேடிப் போனேன் யோசனை கேட்க. அதுவந்து சில விஷயங்களில அவரோட ஆலோசனை தேவைப்பட்டது. ஜர்மானி தாஸ் அறையிலதான் இவ்வளவு நேரம் பேசிக்கிட்டு இருந்தேன்’ - சொல்லியபின் அனிடா நாக்கைக் கடித்தாள். அதே அறையின் இன்னொரு மூலையில் நின்று கொண்டிருந்த திவானை அப்போதுதான் அவளது கண்கள் கவனித்தன. தன்னுடைய வார்த்தைகள் எதுவுமே இனி எடுபடப்போவதில்லை என்று அவளுக்கு நன்றாகவே புரிந்தது. வேறு வழியில்லை. சரணடைந்துவிடுவதே ஒரே வழி.

அவளது கண்களில் நீர் கசிய ஆரம்பித்திருந்தது.

‘உண்மையை நீயே சொல்லிவிடுவது மரியாதை’ - ஜெகத்ஜித் சிங் கர்ஜித்தார். கணவனிடம் மனைவி, தான் செய்த தவற்றை ஒப்புக் கொள்ளலாம், தனிமையில் அல்லது தனி அறையில். இப்படி நடு அறையில் வைத்து, நான்கு பேர் முன்னிலையில், அதுவும் வேலைக்காரர்கள் மத்தியில் வைத்துக் கேட்டால்? செய்வதறியாது நின்றாள் அவள். அவமானம் அவளைப் பொசுக்கிக் கொண்டிருந்தது.

‘திவான், கர்னல் என்ரிக்வேஸ் இங்கேதானே தங்கியிருக்கிறார்?’

‘ஆமாம் மகாராஜா.’

‘அவர் உடனே இங்கு வந்தாக வேண்டும்.’

‘உத்தரவு மகாராஜா’ சொல்லியபடியே அறையைவிட்டு வெளியேறினார் ஜர்மானி தாஸ். அழுதபடியே நின்ற அனிடா, மகாராஜாவைக் கெஞ்சலாகப் பார்த்தாள். படு உக்கிரமாக இருந்த அவர், முகத்தைத் திருப்பிக் கொண்டார். அடுத்த ஐந்தாவது நிமிடமே, திவானோடு கர்னல் என்ரிக்வேஸ் (Enriquez) அறைக்குள் நுழைந்தார்.

என்ரிக்வேஸூம் மகாராஜாவின் ஊழியர்தான். கபுர்தலாவின் இளவரசர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பவராகவும், லண்டனில் அவர்களது படிப்பைக் கவனித்துக் கொள்பவராகவும் பணியாற்றிக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் சேவோய் ஹோட்டலில்தான் தங்கியிருந்தார். திவான் என்ரிக்வேஸை அவசரமாக அழைத்து வந்தாரே தவிர, விவரம் எதுவும் சொல்லவில்லை. நேரங்கெட்ட நேரத்தில் டிராயிங் ரூமில் கடுகடுப்பாக உட்கார்ந்திருக்கும் மகாராஜா, கண்ணீருடன் நிற்கும் மகாராணி, சுற்றிலும் பீதியுடன் நிற்கும் பணியாளர்கள் - குழம்பிப் போனார் என்ரிக்வேஸ்.

‘சொல்லுங்கள் மகாராஜா. நான் என்ன செய்ய வேண்டும்?’

‘என்ன செய்வீர்களோ, எப்படிச் செய்வீர்களோ எனக்குத் தெரியாது. உடனடியாக நான் சொல்லும் பத்திரங்களைத் தயார் செய்ய வேண்டும்.’

‘செய்துவிடலாம் மகாராஜா’ என்று அவர் உதடுகள் சொன்னதே தவிர, அவரது கண்களில் குழப்ப ரேகைகள். ஜெகத்ஜித் சிங், என்ரிக்வேஸை உற்று நோக்கினார்.

‘என் மனைவி எனக்கு உண்மையானவளாக இல்லை. எனவே நான் அவளுடனான உறவைச் சட்டப்படி கத்தரித்துக் கொள்ள விரும்புகிறேன். இன்றே, இங்கே, இப்பொழுதே. அதற்கான பத்திரங்களுக்கான ஏற்பாடுகளை உடனே செய்யுங்கள்.’

அதுவரை அமைதியாக அழுதுகொண்டிருந்த அனிடா, அந்தக் கணத்தில் வெடித்து அழ ஆரம்பித்தாள். ஜெகத்ஜித் சிங்கைக் கையெடுத்துக் கும்பிட்டாள். அவர் கண்டுகொள்ளவில்லை. சுயகௌரவம், சுயமரியாதை, தன்மானம் எல்லாவற்றையும் தூக்கிக் கடாசிவிட்டு, எல்லோர் முன்னிலையிலும் அவரது கால்களில் விழுந்து கதறினாள். அந்தக் காட்சியைப் பார்க்க முடியாத சில பணியாளர்கள் முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். பிரச்னைக்குப் பிள்ளையார் சுழி போட்ட முதன்மைப் பணியாளர் குஷால் சிங், அதிர்ந்து நின்றார். தான் உரசிய தீக்குச்சி, இப்படி காட்டுத் தீயாக மாறும் என்று அவர் எதிர்பார்க்கவே இல்லை.

‘இன்னும் இங்கு எதற்காக நின்று கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் இன்னும் கிளம்பவில்லையா?’ - என்ரிக்வேஸைப் பார்த்துக் கத்தினார் ஜெகத்ஜித் சிங். அந்த அதிர்வில் பதறி வெளியேறினார் என்ரிக்வேஸ். அறையில் இருந்த மற்றவர்கள்மீது ஒருமுறை பார்வையை ஓட விட்டார். மறுநொடியே அனைவரும் மாயமாகிப் போனார்கள். ஜர்மானி தாஸ் மட்டும் நின்று கொண்டிருந்தார். அதற்குமேல் எதுவும் பேசாத ஜெகத்ஜித் சிங், தனது படுக்கை அறைக்குச் சென்று படாரெனக் கதவைச் சாத்திக் கொண்டார்.

தரையில் துவண்டு கிடந்த அனிடா, விசும்பலுடன் திவானைப் பார்த்தாள். ‘வருத்தப்படாதீர்கள். எல்லாம் சரியாகிவிடும். எதுவென்றாலும் காலையில் பேசிக் கொள்ளலாம்’ என்றார் ஆறுதலாக. தரையிலிருந்து எழுந்த அனிடா, அதற்குமேல் பேசுவதற்கு வார்த்தைகளின்றி, தன் படுக்கை அறைக்குள் நுழைந்தாள்.

விடிந்தது. தன் அறைக்கு வந்த நாளிழதைப் புரட்ட ஆரம்பித்திருந்தார் ஜின்னா. அருகில் ஜின்னாவின் இரண்டாவது மனைவியான ரட்டன்பாய் (Rattanbai) உட்கார்ந்திருந்தார். கதவைத் தட்டிவிட்டு, உள்ளே நுழைந்தார் ஜர்மானி தாஸ்.

‘என்ன ஜர்மானி, காலையிலேயே என்னைப் பார்க்க வந்திருக்கிறீர்கள். ஏதாவது அவசர விஷயமா?’ - ஜின்னா கேட்டார்.




'ஆமாம். ரொம்பவே முக்கியமான விஷயம்தான். நேற்று இரவு நடக்கக் கூடாததெல்லாம் நடந்து விட்டது' என்று ஆரம்பித்து சில மணி நேரங் களுக்கு முன் அரங்கேறிய காட்சிகளையெல்லாம் ஜின்னாவிடம் விவரித்தார் ஜர்மானி. ஜின்னா, மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் குடும்ப நண்பர். இருவருக்குள்ளும் நல்ல உறவு இருந்தது. அனிடாவும் ஜின்னாவின் குடும்பத்தினரோடு நல்ல நட்புறவு வைத்திருந்தாள். விஷயம் அனைத்தையும் கேட்ட ஜின்னா, 'கொஞ்ச நேரம் போகட்டும். நானே மகாராஜாவிடம் வந்து பேசு கிறேன்' என்றார். ஜர்மானி அங்கிருந்து வெளி யேறினார்.

ஜெகத்ஜித் சிங் ஜின்னா சந்திப்பு நடந்தது. தன் முடிவில் பிடிவாதமாக இருந்தார் மகாராஜா. ஜின்னாவின் சமாதானங்கள், வாதங்கள், கேள்வி கள் எதையும் அவர் காதில் போட்டுக் கொள்ள வில்லை.

'யாரோ ஒரு வேலைக்காரன் சொன்ன உறுதி யில்லாத தகவலை வைத்துக் கொண்டு விவாகரத்து கேட்பது நியாயமல்ல. சாட்சிகள் வலுவானதாக இல்லை.'

'அவள் வெளியிலிருந்து வருவதை நானே பார்த்தேனே.'

'அனிடா வெளியே இரவில் சென்று வந்தார் என்று நீங்கள் சொல்லலாம். ஆனால், எங்கு, யாரோடு சென்று வந்தார் என்பதெற்கெல்லாம் சாட்சிகள் இருக்கின்றதா என்ன?'

'நான் என் முடிவை மாற்றிக் கொள்வதாக இல்லை.'

'இப்படித் திடீரென்று உங்கள் திருமண உறவை முறித்துக்கொள்ளவெல்லாம் முடியாது. அதற்கு நீங்கள் இந்தியாவின் கவர்னர் ஜெனரலிடம் முறைப்படி அனுமதி பெற வேண்டும்.'

ஜின்னா தன்னால் முடிந்தமட்டும் அனிடாவுக்காகப் போராடிப் பார்த்தார். அவரது பொறுமை, கொஞ்சம் கொஞ்சமாகக் கோபமாக உருமாறிக் கொண்டிருந்தது. ஆனால் ஜெகத்ஜித் சிங் இம்மி யளவும் இறங்கிவரவில்லை. வேகமாக அந்த அறையை விட்டு வெளியேறினார் ஜின்னா. ஜர்மானி தாஸ், செய்வதறியாது ஜின்னாவின் பின்னாலேயே ஓடினார்.

இந்த நேரத்தில் இன்னொரு கிசுகிசு, விஸ்வரூபமெடுத்து பிரச்னையைப் பூதாகரமாக்கியது. 'அனிடாவுக்கும் இளவரசர் மஹத்ஜித் சிங்குக்கும் தொடர்பு இருக்கிறது' என்பதே அந்தக் கிசுகிசு. மஹத்ஜித் சிங், வேறு யாருமல்ல, ஜெகத்ஜித் சிங்கின் மூத்த தாரத்தின் இரண்டாவது மகன். அனிடாவை விட மூன்று வயது இளையவர்.

ஜெகத்ஜித் சிங் மட்டுமல்ல, கபுர்தலாவின் இளவரசர்களும் பிற உறவினர்களும் அவ்வப்போது வந்து தங்கும் இடமாக லண்டன் சேவோய் ஹோட்டல் இருந்தது. அந்தச் சமயத்தில் மஹத்ஜித்

சிங், அங்குதான் இருந்தார். இந்தக் கிசுகிசு கனன்று கொண்டிருந்த மகாராஜாவின் சந்தேகத்தில், சாம்பிராணியை அள்ளி வீசியது.

'அபாண்டமாகப் பேசாதீர்கள். இப்படிச் சொல்ல உங்கள் நாக்கு கூசவில்லையா? என்னைப் பற்றி இனியும் அவதூறு பரப்ப நினைத்தீர்கள் என்றால், பின்பு நான் உயிரோடு இருக்க மாட்டேன். எச்சரிக்கை' - இளவரசர் மஹத்ஜித் சிங் தற்கொலை மிரட்டல் ஒன்றை தூக்கிப் போட்டார். மகாராஜா உள்பட எல்லோரும் கப்சிப் ஆனார்கள். ஆனால் அனிடாவைத் தூக்கியெறிய ஜெகத்ஜித் சிங்குக்கு இந்தக் கிசுகிசுவே போதுமானதாக இருந்தது. இதற்கு மேல் ஜின்னாவாலும் ஒன்றும் பேச முடியவில்லை.

'ஒரு பைசாகூடக் கொடுக்க மாட்டேன் அவளுக்கு. எக்கேடாவது கெட்டுப் போகட்டும்' என்று பிடிவாதம் பிடித்தார் மகாராஜா. 'ஏதாவது ஜீவனாம்சம் கொடுக்கறதுதான் முறை' மீண்டும் வாதாடினார் ஜின்னா. ஜெகத்ஜித் சிங் இந்தியா திரும்பினார். அதிக மன அழுத்தத்தில் இருந்த அனிடா, முசௌரிக்குச் சென்றாள். சில மாதங்கள் கழித்து கபுர்தலாவுக்குத் திரும்பினாள்.

சமஸ்தானத்தின் மகாராணியாக வாழ்ந்தவள். மகாராஜா அவளுக்கென ஆசை ஆசையாகக் கட்டிக் கொடுத்த பிரெஞ்சு ஸ்டைல் அரண்மனையை ஆண்டு அனுபவித்தவள். ஆனால் அப்போது அவளுக்கான மதிப்பு நிலை குலைந்திருந்தது. கபுர்தலாவுக்கு வெளியே, அவளுக்கென ஒதுக்கப்பட்ட ஒரு மாளிகையில் சென்று வாழ ஆரம்பித்தாள். தனது பெரும்பாலான பொழுதைக் கேளிக்கைகளில் கழித்தாள்.

ஜெகத்ஜித் சிங், அப்போது அவளைக் கண்டுகொள்ளாமல் விட்டிருந்தார். ஆனால் மீண்டும் அனிடாவைப் பற்றிய கிசுகிசுக்கள் அவரது காதுகளுக்கு வர ஆரம்பித்தன. சட்டப்படி விவாகரத்துக்கு ஏற்பாடு செய்தார். கிடைத்தது (1925).

ஜின்னாவின் முயற்சியால் அனிடாவுக்கு ஜீவனாம்சம் வழங்க ஒப்புக் கொண்டார் மகாராஜா. அவளுக்கு வருடத்துக்கு முப்பத்தாறாயிரம் ரூபாயும், அவளது மகன் அஜித் சிங்குக்கு வருடத்துக்கு இருபத்து நான்காயிரம் ரூபாயும் வழங்கினார்.

அனிடா, கபுர்தலாவுக்கும் இந்தியாவுக்கு 'பை பை' சொல்லும் நேரம் நெருங்கிவிட்டதாக உணர்ந்தாள். பாரிஸுக்குச் சென்று வாழ ஆரம்பித்தாள். அவளோடு, ஜெகத்ஜித் சிங்கின் நினைவாக அவர் பரிசாக அளித்த நகைகள் எல்லாம் பத்திரமாக இருந்தன, அவளது இறுதிக்காலம் வரை.

அனிடா குறித்த இரண்டு கொசுறுச் செய்திகள்

அனிடாவின் நகைகளில் சில 2007ல் லண்டனில் ஏலத்துக்கு வந்தன. அதில் நிஜாம் ஓஸ்மான் பரிசாக அளித்த நகைகள்கூட இருந்திருக்க வாய்ப்பிருக்கிறது.

மகாராணி அனிடாவின் கதையைப் படமாக்க இருந்தார்கள். பிரபல ஸ்பானிஷ் நடிகை பெனலோப் குரூஸ், பிரேம் கவுராக நடிக்கவிருந்தார். படத்துக்குச் சூட்டப்பட்ட பெயர் La princesa de Kapurthala. அனிடாவின் வாழ்க்கையைச் சொல்லும் Passion india என்ற Javier Moro எழுதிய புத்தகத்தை அடிப்படையாகக் கொண்டு 2006ல் எடுக்கப்படவிருந்த படம் அது. ஜெகத்ஜித் சிங்கின் பரம்பரையினரிடமிருந்து எதிர்ப்பு வரவே படம் நிறுத்தப்பட்டது.



# டிரவுசர் ஆபிஸர்!

ஒரு மகாராஜாவாகப்பட்டவர் எதற்கு வேண்டுமானாலும் வேலையாள் வைத்துக் கொள்ளலாமே.

மகாராஜாவுக்கு முதுகில் அரிப்பெடுக்கிறதா? சுகமாகச் சொறிந்துவிட ஒரு ஆளைப் போடு. பல் துலக்க சலிப்பாக இருக்கிறதா? பக்குவமாகத் தேய்த்துவிட ஒரு பையனைப் போடு. காலைக் கடனை முடித்த பின்பு இடது கையால் கழுவ எரிச்சலாக இருக்கிறதா? இதமாகக் கழுவி விட ஓர் இளஞ்சிட்டைப் பணியில் அமர்த்து. அட, நீளமான கூந்தலில் பேன் தொல்லையா? தேடிப் பேன் பிடித்து, தீர்த்துக் கட்ட தேர்ந்த வீரன் ஒருவனுக்கு வேலை கொடு. காது குடைவதில் உள்ள சுகம் வேறெதில் கிடைக்கும்? நிஜம்தான். வலது காதுக்கொன்று, இடது காதுக்கொன்றென இரண்டு சுந்தரிகளை இன்றே வேலைக்கு வை.

இப்படி எது எதற்குத்தான் வேலைக்கு ஆள் வைக்க வேண்டும் என்ற விவஸ்தையே இல்லாமல், எதற்கெடுத்தாலும் பிரத்யேகப் பணியாளர்களை நியமனம் செய்திருந்த மகாராஜாக்கள் அநேகம். கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங்கும் அப்படிப்பட்டவரே. சாமரம் வீச, கை, கால்கள் அமுக்கிவிட, உடலை மசாஜ் செய்துவிட, முதுகு தேய்த்துவிட, நகத்தில் அழுக்கெடுக்க, நகம் வெட்டிவிட என ஒவ்வொன்றுக்கும் பணியாளர்களை வைத்து இருந்தார். இவை போக இன்னொன்றுக்கும்.

சிறிய வயதிலிருந்தே மகா 'கணம்' பொருந்தியவராக இருந்ததால், உடைகளை அணிய, கழற்றி மாற்ற பெரும் சிரமப்பட்டார் ஜெகத்ஜித் சிங். குறிப்பாக

பைஜாமா அணியும்போது அவரது பாடு திண்டாட்டமாகிவிடும். பைஜாமா இடுப்பிலிருந்து நழுவிக் கீழே விழுந்துவிடாதபடியாக அதன் நாடாவை எப்படி இறுக்கிக் கட்டவேண்டும் என்ற வித்தை மட்டும் ஜெகத்ஜித் சிங்குக்குப் பிடிபடவே இல்லை.

நாடாவில் முடிச்சுப் போடுவதென்பது அவருக்கு நாடாள்வதைவிடக் கஷ்டமான விஷயமாகத் தோன்றியது. முடிச்சுப் போடுவது மட்டுமல்ல, அதனை அவிழ்ப்பதுகூடத்தான். உலகத்திலிருக்கும் ஒட்டு மொத்தச் சிக்கலும் அவரது பைஜாமா நாடாவின் முடிச்சில் இருப்பதாகவே தோன்றியது. சிறுவனாக இருக்கும்போது பரவாயில்லை. வேலையாள்கள் நாடாவைக் கட்டியோ, அவிழ்த்தோ விடுவார்கள். வளர்ந்த பின்பு?

ஜெகத்ஜித் சிங், அதற்கெல்லாம் கூச்சப்படவே இல்லை. தனக்குப் பைஜாமா நாடாவைக் கட்டி விடுவதற்கென்றும், அவிழ்த்து விடுவதற்கென்றும் தனியாக ஒருவரை வேலைக்கு வைத்துக் கொண்டார். அவர்தான் டிரவுசர் ஆபிஸர்.

அந்த ஆபிஸரின் பெயர் முஷாஹிப் (Musahib). தன் தலையாயப் பிரச்னையை எந்தவிதத் தடங்கலுமின்றித் தீர்த்து வைக்கும் ஆபத்பாந்தவனாக இருந்ததால், ஜெகத்ஜித் சிங்குக்கு முஷாஹிப் மீது பிரியம் அதிகம். தான் எங்கு சென்றாலும் உடன் முஷாஹிப்பும் இருக்கும்படி பார்த்துக் கொள்வார். வெளிநாடுகளுக்குச் சென்றால்கூட. அந்தப்புரத்தில் மட்டும் சேவை செய்ய மற்றவர்கள் இருந்ததால், மகாராஜாவுக்கு முஷாஹிப் தேவைப்படவில்லை.

வெளி நிகழ்ச்சிகளுக்குச் செல்லும்போது, குறிப்பாக பிரிட்டிஷார் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளுக்குச் செல்லும்போது, ஒரு மகாராஜா, தன்னுடன் ஓரளவு ரேங்க் உள்ள அதிகாரிகளை மட்டும் அழைத்து வரலாம் என்பது விதி. எனவேதான் முஷாஹிப்புக்கு ஆபிஸர் ரேங்க் கொடுத்து வைத்திருந்தார் ஜெகத்ஜித் சிங்.

நாடா வேலையைத் தவிர, முஷாஹிப்புக்கு இன்னொரு வேலையும் பார்க்க வேண்டியதிருந்தது. அது, ஜெகத்ஜித் சிங்குக்கு டர்பன் கட்டிவிடும் வேலை. அவரது தலையின் அளவுக்கேற்ப, அழகாக, கச்சிதமாக டர்பனைத் தயார் செய்து வைக்க வேண்டும். அதுவும் பல நிறங்களில். டர்பனுக்கான நகைகளையும் அதில் பொருத்தியிருக்க வேண்டும். மகாராஜா வந்து அன்றைக்கு அவர் அணியப்போகும் டர்பனைத் தேர்ந்தெடுப்பார். அதை எடுத்து அவர் தலையில் பொருத்த வேண்டும்.

வேலைக்கு யார் வந்தாலும் வராவிட்டாலும் கவலைப்பட மாட்டார் மகாராஜா. ஆனால் முஷாஹிப் லீவு போட்டுவிட்டால்? துடிதுடித்துப் போய்விடுவார். பின்னே, முஷாஹிப் வரவில்லை என்பதற்காக, மகாராஜாவுக்கு நெம்பர் ஒன்னோ, நெம்பர் ஒன்னுக்கு மேற்பட்டதோ வராமலா இருக்கப்போகிறது. வேறு பணியாளர்களை வைத்துக் கொள்ளலாம்தான், இருந்தாலும் முஷாஹிப்பின் நாடா லாகவம் மற்றவர்களிடம் இல்லை என்றே தோன்றியது மகாராஜாவுக்கு. பாவம் முஷாஹிப், அவன் வாழ்வில் விடுமுறை என்பது அரிதாகிப் போனது.

இதற்கு என்னதான் தீர்வு என்று அவனும் உட்கார்ந்து யோசித்துப் பார்ப்பான். ‘ஒன்று, மகாராஜா பைஜாமா நாடாவைக் கையாளப் பழகிக் கொள்ள வேண்டும். அதற்கு வாய்ப்பே இல்லை. ஐந்திலேயே வளையவில்லையே. அல்லது, நாடா இல்லாத உடைகளை மகாராஜா அணிய வேண்டும். அய்யய்யோ, அவருக்கு ஆலோசனை சொன்னால் நம் வேலை போய்

பக்கிங்ஹாம் அரண்மனை பால் ரூம்



மகாராஜா ஜெகத்சிங், மூத்த இளவரசருடன், அமைச்சர்களுடன்

விடுமே.' அவனால் தனக்குள்ளேயே யோசித்துப் புலம்புவதைத் தவிர வேறென்ன செய்துவிட முடியும்.

கொஞ்ச நாள்கள் கபுர்தலாவில் இருந்த ஜெகத்ஜித் சிங்கை, லண்டன் 'வா வா' என்று அழைத்தது. பயணத்துக்குத் தயாரானார். மகாராஜாவின் பைஜாமாக்களை தயார் செய்த முஷாஹிப், தானும் அவரோடு கிளம்பினான். வழக்கம்போல, இந்தர் சிங் பிரயாண ஏற்பாடு களைக் கவனித்துக் கொண்டார்.

கபுர்தலாவில் ஏகத்துக்கும் பணி செய்து களைத்துப் போயிருந்த மகாராஜா, லண்டனில் தனது விடுமுறையை அனுபவிக்க ஆரம்பித்தார். ஒவ்வொரு முறை லண்டனுக்குச் செல்லும் போதும், பக்கிங்ஹாம் அரண்மனைச் சென்று கிங்கையும் குயினையும் தரிசித்துவிட்டு வருவது ஜெகத்ஜித் சிங்கின் வழக்கம்.

ஆனால் அந்தமுறை அவருக்குப் பக்கிங்ஹாம் அரண்மனையில் விருந்துக்கான அழைப்பே வந்திருந்தது. லண்டனில் அப்போது டேரா போட்டிருந்த எல்லா மகாராஜாக்களுக்குமான அழைப்பு அது. சில மகாராஜாக்கள் விருந்துக்காகவே லண்டன் வந்திருந்தார்கள்.

இந்தியாவில் நடக்கும் பிரிட்டிஷார் விருந்தென்றால் கெடுபிடி அவ்வளவாக இருக்காது. ஆனால் இது கிங் ஐந்தாம் ஜார்ஜும், குயின் மேரியும் நேரடியாக அளிக்கும் விருந்தென்பதால் ஏகக் கெடுபிடியாக இருந்தது. மகாராஜாக்கள் குறிப்பிட்ட நேரத்துக்குள் வந்துவிட வேண்டும். உடன் தங்கள் மகாராணியை அழைத்து வரலாம். இஷ்டத்துக்கு வேறு யாரையாவது அழைத்து வந்துவிடக்கூடாது. மகாராஜாக்களின் உதவியாளர்களுக்கோ, அந்தரங்கக் காரியதரிசிகளுக்கோ அனுமதி கிடையாது.

விதிமுறைகள் எல்லாம் ஜெகத்ஜித் சிங்குக்குத் தெரியும். இருந்தாலும் எதையாவது சொல்லி சமாளித்து முஷாஹிப்பையும் இந்தர் சிங்கையும் தன்னுடன் அழைத்துச் சென்று விடலாம் என்று நினைத்தார். முஷாஹிப், மகாராஜாவின் பட்டு பைஜாமாவின் நாடாவை இறுக்கமாகக் கட்டி விட்டான். மூவரும் விருந்துக்குக் கிளம்பினார்கள்.

பக்கிங்ஹாம் அரண்மனை. உண்மையாகவே கெடுபிடி அதிகமாக இருந்தது. ஜெகத்ஜித் சிங் மட்டுமே மிகவும் மரியாதையுடன் விருந்து நடக்கும் ஹாலுக்குள் அனுமதிக்கப்பட்டார். வேறு வழியில்லாமல் இந்தர் சிங்கும் முஷாஹிப்பும் தாங்கள் வந்த காரிலேயே காத்திருக்க ஆரம்பித்தார்கள்.

பால் ரூம், வண்ண வண்ண உடைகள் அணிந்த ராயல் விருந்தினர்களால் களை கட்டியிருந்தது. வந்திருந்தவர்களில் பெரும்பாலோனோர் ஜோடியாக இருந்தார்கள். ஜெகத்ஜித் சிங்கின் நினைவில் அனிடா வந்து போனாள்.

அப்போது அந்த அறைக்குள் சுல்தான் முகம்மது ஷா (Sultan Mahommed Shah) நுழைந்தார். உடன் அவரது இரண்டாவது மனைவி க்ளியோப் டெரேசா (Cleope Teresa). மூன்றாவது அகா கான் எனப்படும் முகம்மது ஷா, ஷியா பிரிவு இஸ்லாமியர்களின் நாற்பத்தெட்டாவது இமாமாக இருந்தவர். க்ளியோப் டெரேசா, ப்ரெஞ்சுப் பெண். பிரபஞ்ச அழகிகளில் ஒருத்தி. பாலே நடனத்தில் கெட்டிக்காரி. தன்னுடைய ஆட்டத்தால் புகழ் பெற்றவர்.

முகம்மது ஷாவைத் தேடிச் சென்று வரவேற்றார் ஜெகத்ஜித் சிங். இருவருமே நீண்ட கால நண்பர்கள். பரஸ்பரம் கதை பேசிக் கொண்டார்கள். உரிய நேரத்தில் கிங்கும் குயினும் பால் அறைக்குள் நுழைந்தார்கள். மற்றவர்கள் மரியாதை செய்தார்கள். நடனத்துக்கான இசை ஆரம்பமானது.

அத்தனை பிரம்மாண்டமான பால் ரூமில் நடனமாட ஜெகத்ஜித் சிங்கின் கால்கள் பரபரத்தன. என்ன செய்ய? ஜோடி யாருமில்லையே. அதற்கென்ன, வந்திருக்கும் பெண்களில் யாரை யாவது அழைத்துக் கொண்டால் போயிற்று. அவரது பார்வை, அறை முழுவதும் வலை வீசியது. க்ளியோப் டெரேசா மீது சிக்கிக் கொண்டு நின்றது. அவர்தான் ஐரோப்பிய நாகரிகத் தில் கரை கண்டவராயிற்றே. நேராக டெரேசா முன்பு சென்று பணிவாக நின்றார்.

'என்னோடு ஆட வருகிறீர்களா?' வலது கரத்தை நீட்டினார். டெரேசாவும் ஐரோப்பியப் பெண்தானே. அதுவும் நடனப்பெண். ஒரு மகாராஜா நடனமாட அழைக்கும்போது மறுக்கவா தோன்றும்? எழுந்து வந்தாள். ஜெகத்ஜித் சிங்குக்குள் பூரிப்பு. தன்னுடைய அதிர்ஷ்ட தினமாக அதை எண்ணிக் கொண்டார். கண்ணோடு கண் பொருத்தி, மெல்ல அவளது இடையைப் பற்றி, மெதுமெதுவாக ஸ்டெப் வைக்க ஆரம்பித்தார்.

அப்போது பக்கிங்ஹாம் அரண்மனையின் தலைமை அதிகாரி வேகவேகமாக வந்தார். ஜெகத்ஜித் சிங்கின் காதில் கிசுகிசுத்தார்.

'மகாராஜா, தாங்கள் விதிமுறையை மீறுகிறீர்கள். தயவுசெய்து சென்று அமருங்கள்.' - ஜெகத் ஜித் சிங்குக்கு ஒன்றும் புரியவில்லை. என்னவென்பது போல, அந்த அதிகாரியைக் கடுகடுப் புடன் பார்த்தார்.

'கிங்கும் குயினும் நடனமாடப் போகிறார்கள். அவர்கள் நடனமாடும்போது மற்றவர்கள் யாரும் ஆடக்கூடாது. உட்கார்ந்து பார்க்க மட்டுமே வேண்டும்.'

நிலைமையைப் புரிந்துகொண்ட டெரேசா, தன் இருக்கையில் சென்று அமர்ந்தாள். வேறு வழியில்லாமல் ஜெகத்ஜித் சிங்கும். அருமையான வாய்ப்புப் பறிபோன சோகம். எனவே ஷாம்பெயினை வேகவேகமாகக் குடித்தார். கிங்கும் குயினும் நடனமாடி முடித்தார்கள். பின்பு மற்றவர்கள் ஆட ஆரம்பித்தார்கள்.

ஜெகத்ஜித் சிங்கும் வேறு சில வெளிநாட்டுப் பெண்களுடன் ஆடித் தன் ஆசையைத் தணித்துக் கொண்டார். விதவிதமாகப் பரிமாறப்பட்ட உணவு வகைகள் கண்களின் பசியைத் தூண்டின. அந்தப் பசி மெள்ள மெள்ள வயிற்றுக்கு இறங்கியது. ஜெகத்ஜித் சிங்கின் விரல்கள் பதார்த்தங் களைப் பதம் பார்த்தன. ஷாம்பெயின் வகையறாக்களும் கொஞ்சம் அதிகமாகவே உள்ளே இறங்கின.

பிரச்னை ஆரம்பமானது. ஆத்திரத்தை அடக்கலாம். அய்யய்யோ, அதை அடக்க முடியுமா என்ன? கிங்கின் முதன்மைச் செயலாளர் க்ளைவ் விக்ராம் அங்கிருந்தார். கழிப்பறை எங்கிருக்கிறது என்று அவரிடம் விசாரித்தார் ஜெகத்ஜித் சிங். வழி சொன்னார் க்ளைவ். என்ன பிரயோசனம்? அங்கு சென்று ஜெகத்ஜித் சிங்கால் தனியாக என்னதான் செய்யமுடியும்? நாடா, பாடாகப்படுத்துமே?

அடக்கிக்கொள்ளலாமா? ம்ஹூம், வழியே இல்லை. கிளம்பி விடலாமா? விருந்து முடியாமல், கிங், குயின் இருக்கும்போதே அங்கிருந்து கிளம்பினால் பிரச்னை வரும். விழி பிதுங்கியது மகாராஜாவுக்கு. அவர் அனுபவிக்கும் சகல சங்கடங்களும் முகத்தில் பிரதி பலித்தன. மீண்டும் க்ளைவிடமே சென்றார். வெட்கத்தையெல்லாம் விட்டு, தன் பிரச்னையை முன்வைத்தார்.

'மகாராஜா, தாங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது. அதற்காக விதிமுறையை மீற முடியாது' க்ளைவ் வெகு சாதாரணமாகச் சொன்னார். ஜெகத்ஜித் சிங்குக்கு ஆத்திரத்தையும் அடக்கமுடியவில்லை. ...தையும்.

'கொஞ்சம் தயவு பண்ணுங்க. வெளிய என்னோட உதவியாளர் இருக்கார். பெரிய மனசு வைச்சு அவரை மட்டும் உள்ள அனுமதியுங்க' விஷயம் மிஞ்சி நின்றதால், கெஞ்ச வேண்டியதாகப் போயிற்று. க்ளைவ் வேறு வழியின்றி, அரண்மனையின் தலைமை அதிகாரியிடம் விஷயத்தைக் கொண்டு சென்றார். தலைமை அதிகாரி, மகாராஜாவைப் பார்த்தார். அவர் நிற்கவும் முடியாமல் உட்காரவும் முடியாமல் நெளிந்து கொண்டிருந்தார். புதுவிதமான நடனம் போலிருந்தது அது.

'சரி, சரி. அவரது உதவியாளருக்கு அனுமதி கொடுங்கள்' - தலைமை அதிகாரி சொல்லவும் இந்தர் சிங்கைத் தேடி ஆள் போனது. மகாராஜாவும் கழிப்பறை இருக்கும் திசைக்கு ஓடினார். அனுமதி கிடைத்த இந்தர் சிங்கும் முஷாஹிப்பும் மகாராஜாவின் அவசரம் புரிந்து கழிப்பறைக்குப் பறந்தார்கள்.

'அப்பப்பப்பா...' - கழிப்பறைக்குள்ளிருந்து மகாராஜாவின் நிம்மதிக் குரல் வெளியே வந்தது. சிரமபரிகாரம் செய்துகொண்ட திருப்தி.

'போதுமடா சாமி, நான் பட்ட பாடு. இனிமே உங்களை உள்ளே அனுமதிக்காத விருந்துக்கு நானும் போறதா இல்லை. இதுவே கடைசி' - மகாராஜா சொல்லிக் கொண்டிருக்க, முஷாஹிப் புன்னகையுடன் நாடாவுக்கு முடிச்சுப் போட்டுக் கொண்டிருந்தார்.

மகாராஜா அடித்த கூத்து, கிங் ஐந்தாம் ஜார்ஜின் காதுகளையும் எட்டியிருந்தது. அதைக் கேட்டு சிரித்தபடியே அவர் அடித்த கமெண்ட்.

'கபுர்தலா மகாராஜா சரியான விளையாட்டுப் பிள்ளையா இருக்காரு!'



# 62

# காதலுக்கு முன் கடவுள்!

புண்பட்ட மனத்தைப் புகைவிட்டு ஆற்றலாம், ஃபுல் பாட்டில் விட்டு ஆற்றலாம் அல்லது வேறென்ன வழிதான் இருக்கிறது?

அழகு ராணி அனிடாவை நிரந்தரமாகப் பிரிந்துவிட்டாலும், கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் மனத்தில் அவள் செய்த செயல்கள், மீண்டும் மீண்டும் வலியையே தந்தது. எனவே புண்பட்ட மனத்தை இன்னொரு பெண் கொண்டு ஆற்ற நினைத்தார்.

'அடியேய் அனிடா, உனக்கு இன்னொரு காதலன் கிடைப்பான் எனில், எனக்கு மட்டும் மற்றுமொரு காதலி கிடைக்க மாட்டாளா என்ன? உன் கண் முன்னா லேயே, உன்னைவிட அழகான பெண் ஒருத்தியுடன் வாழ்ந்து காண்பிக்கிறேன் பார்!'

அப்போது தன் மனம் கவர்ந்த பாரிஸில் இருந்தார் மகாராஜா. அங்கே பெண் களுக்கா பஞ்சம்? அதுவும் கரன்சியுள்ள மகாராஜாவைக் காதலிக்கக் கட்டழகி களுக்குக் கசக்கவா செய்யும்? தான் வழக்கமாகச் செல்லும் நைட் கிளப்புகளுக்கும் கேஸினோக்களுக்கும் சென்றார். விழிகளை அகல விரித்துத் தனக்கான அடுத்த காதலியைத் தேடினார்.

என்ன, வயதுதான் ஐம்பதைத் தாண்டி விட்டிருந்தது. கால் மூட்டு இரண்டும் வலிப்பது போலத் தோன்றியது. ஆங்காங்கே வெள்ளிக் கொடிகள் தலையெங்கும் பரவ ஆரம்பித்துவிட்டிருந்தன. கொஞ்ச தூரம் வேகமாக நடந்தால் லேசாக மூச்சு

வாங்கியது. வெளிநாடுகள் எல்லாம் சென்றால், முன்புமாதிரி தொடர்ச்சியாக ஊர் சுற்ற முடிய வில்லை. களைப்பாக இருந்தது. பழைய மாதிரி இல்லை, காலம் ஜெகத்ஜித் சிங்கின் குண்டு உடம்பு கொஞ்சம் கொஞ்சமாகக் கரைத்துவிட்டிருந்தது. குறிப்பாகத் தொப்பைகூட வற்றியிருந்தது. நேராக நின்று தலையைக் குனிந்து பார்த்தால் கால் விரல்கள் தெரிந்தன. மற்றபடி, மனசெல்லாம் அப்படியேதான் இருந்தது. யாரிடம் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும், எத்தனைமுறை வேண்டுமானாலும் 'ஐ லவ் யூ' சொல்லும் இளமையுடன்.

அந்தக் கிளப்புக்கு நடனம் பார்க்க வந்தாள் இளம்பெண் ஒருத்தி. செர்ரிப் பழச் சிவப்பழகி. அவள் பெயர்கூட அர்லெட் செர்ரிதான் (Arlette Serry). உடன் அவளது காதலனும் வந்திருந்தான். அந்தக் காதலன், பாரிஸில் உள்ள ஒரு முன்னணிப் பத்திரிகையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். இருவரும் நடனத்தை ரசித்தபடியே மது அருந்திக் கொண்டிருந் தார்கள். ஜெகத்ஜித்சிங்கின் பார்வையோ, செர்ரியின் அழகை அருந்த ஆரம்பித்திருந்தது.

'இவள்தான், இவளேதான். என் மனம் தேடிக்கொண்டிருந்தவள். யாரவன்? கணவனாக இருக்குமோ? எவனாயிருந்தால் என்ன? இந்த நிமிடம் முதல் அவள் என் காதலி. நான் முடிவு செய்துவிட்டேன்.'

ஜெகத்ஜித் சிங்கின் பொறுமையைச் சோதிக்காமல் அந்தப் பத்திரிகைக் காதலன், அங்கிருந்து வெளியேறினான். செர்ரி மட்டுமே அங்கிருந்தாள். நொடியும் தாமதிக்காத மகாராஜா, அவளிடம் சென்றார். ஆசையைச் சொன்னார். இதயத்தில் இடம் பிடித்தார். எப்படி?

ஐரோப்பிய நாகரிகத்தில் இதெல்லாம் சகஜமப்பா. ஒரு பெண்ணுக்கு குறைந்தபட்சம் மூன்று காதலர்களாவது இருப்பார்கள். அதுவும் மகாராஜா போலொரு டப்புள்ள பார்ட்டி சிக்கினால் விடுவார்களா என்ன? செர்ரிக்கு அந்தப் பத்திரிகைக் காதலன் போல, இன்னொரு காதலனும் இருந்தான். மகாராஜா, செர்ரியின் மூன்றாவது காதலன் ஆனார்.

மகாராஜாவின் வசதி செர்ரியைச் சொக்க வைத்தது. 'டார்லிங், இனிமே நீங்க இல்லாத ஒரு வாழ்க்கையை என்னால நினைச்சுக் கூடப் பார்க்க முடியலை. என்னைக் கைவிட மாட்டீங்க தானே?' - மூக்கோடு மூக்கு உரசி செர்ரி கேட்க, செயலிழந்தார் ஜெகத்ஜித் சிங். அனிடாவைப் பழி வாங்கிவிட்டதாக அவருக்குள் ஒரு பெருமிதம்.

செர்ரி, ஜெகத்ஜித் சிங்கின் எல்லாமும் ஆகிப் போனாள். எந்நேரமும் அவள் நினைப்பிலேயே, முடிந்தால் அவளுடைய நிழலிலேயே கிடக்க ஆரம்பித்தார். அவளை நகைகளாலும் கரன்சி யாலும் மிதமிஞ்சிய அளவுக்குத் திருப்திபடுத்தினார் ஜெகத்ஜித் சிங். ஆனால்...

பாரிஸில் மகாராஜாவின் மாளிகை. அது ஒரு வெள்ளிக்கிழமை. மணி இரவு பத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. மகாராஜாவின் பிரியத்துக்குரிய அதிகாரியான இந்தர் சிங், பிரார்த்தனைக்கான நூலை விரித்து வைத்தபடி தயாராக நின்று கொண்டிருந்தார். ஜெகத்ஜித் சிங், இரவு உடையில் அந்த அறைக்கு வந்தார். மண்டியிட்டு உட்கார்ந்தார். இந்தர் சிங்கும்.

புத்தகத்திலிருந்து ஒவ்வொரு பிரார்த்தனையாகச் சொல்ல ஆரம்பித்தார் இந்தர் சிங். மகாராஜாவும் கண்களை மூடி மனமுருக வேண்டிக் கொள்ள ஆரம்பித்தார். அப்போது அந்த அறைக்குள் திவான் ஜர்மானி தாஸ் நுழைந்தார்.

'என்னடா இது? திடீர்ப் பிரார்த்தனை. அதுவும் நேரம் கெட்ட நேரத்தில். சரி, பக்திக்கு நேரம் ஏது?' - என்று நினைத்துக் கொண்ட அவரும் பிரார்த்தனையில் கலந்துகொண்டார்.




1878ல் பாரீஸ் (ஈபிள் டவர் கட்டுமானப் பணி நடைபெற்ற சமயம்)

ஒரு கிரிக்கெட் வீரன், தான் பேட் பிடிக்கச் செல்வதற்குமுன் பிரார்த்தனை செய்தால் அவனுடைய வேண்டுதல் என்னவாக இருக்கும்? 'இன்னிக்கு நான் நல்லா விளையாடணும். டக் அவுட் ஆகிடவே கூடாது. சொற்ப ரன்கள்ல ஆட்டம் இழந்துடவும் கூடாது. குறைஞ்சபட்சம் அரைசதம் அடிக்கணும். சதம் அடிக்க முடிஞ்சா அதைவிடச் சந்தோஷம் வேற எதுவுவே இல்லை. நீதாம்பா துணை புரியணும்.'

ஜெகத்ஜித் சிங்கின் பிரார்த்தனையும் அப்படிப்பட்டதாகத்தான் இருந்தது. சில நிமிடங்களில் அந்தக் கூட்டம் முடிந்தது. இந்தர் சிங்கும் ஜர்மானி தாஸும் மகாராஜாவிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார்கள். அவர்களை வழியனுப்பிவிட்டு, தனது ஓய்வு அறைக்குச் சென்றார் ஜெகத்ஜித் சிங். செர்ரி உள்ளே இருந்தாள்.

விடிந்தது. முழு சூரியனின் பிரகாசம் மகாராஜாவின் முகத்தில் ஒளிர்ந்தது. முதியோர் கிரிக்கெட்டில், நின்று விளையாடி சதமடித்த வீரரைப் போல அவரது தேகமெங்கும் பெருமிதம் மிளிர்ந்து கொண்டிருந்தது. இந்தர் சிங்கை அழைத்தார். 'இந்தா பிடிச்சிக்கோ' சில ஆயிரம் கரன்சியைப் பரிசளித்தார். பாரிஸில் இருக்கும் தனது ஊழியர்களுக்கெல்லாம் சம்பள உயர்வளித்தார். அந்தச் சந்தோஷமான தருணத்தில் ஜர்மானி தாஸ் அங்கு வந்தார். அவருக்கு பத்தாயிரம் ப்ராங்க் கிடைத்தது. ஏன் எதற்கு என்று கேட்டுத் தெரிந்துகொண்ட ஜர்மானி, மகாராஜா அடிக்கடி சதமடிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டார். அன்று மாலையே, செர்ரிக்குப் புத்தம் புதிய மரகத நெக்லெஸ் ஒன்றைப் பரிசளித்தார் மகாராஜா.

செர்ரியை அழைத்துக் கொண்டு கபுர்தலாவுக்கும் செல்ல ஆரம்பித்தார் ஜெகத்ஜித் சிங். 'மீசை நரைச்சாலும் மகாராஜாவுக்கு ஆசை மட்டும் டை அடிச்சிக்கிட்டுத் திரியுது' கபுர்தலா சமஸ்தானத்தில் பேசிக் கொண்டார்கள். அங்கே செர்ரிக்கென்று ஒரு மாளிகையை ஒதுக்கினார். இந்தியாவின் குளிர்காலங்களில் செர்ரியின் பொழுது கபுர்தலாவிலும் முசௌரியிலும் கழிந்தது. மீதி மாதங்களெல்லாம் ஐரோப்பாவில். வருடத்தில் சுமார் ஆறு மாதங்கள் மகாராஜா பாரிஸில்தானே பள்ளி கொண்டிருந்தார்.

தன் மீது ஜெகத்ஜித் சிங் கொண்டிருந்த போதையை, இம்மியளவும் குறையவிடாமல் பார்த்துக் கொண்டாள் செர்ரி. ஆனால் அவள் பாரிஸில், மகாராஜாவின் மாளிகையில் தங்காமல், தனது சொந்த வீட்டிலேயே தங்கிக் கொண்டாள். வார இறுதி நாட்களை மட்டும் ஜெகத்ஜித் சிங்கின் மாளிகையில் கழித்தாள். ஆனால் மற்ற நாள்களில் இரவு எவ்வளவு நேரம் ஆனாலும், தனது வீட்டுக்கு வந்தே உறங்கினாள் செர்ரி.

ஜெகத்ஜித் சிங், தன்னுடன் ஆனந்த் கான் (Anant Khan) என்ற சமையல்காரரை எப்போதும் அழைத்துச் செல்வார். இந்தர் சிங் போல, ஆனந்தும் மகாராஜாவின் பிரியத்துக்குரியவனாக விளங்கினார். சொந்த விஷயங்கள் சிலவற்றைப் பகிர்ந்து கொள்ளுமளவுக்கு ஆனந்த் மீது மதிப்பு வைத்திருந்தார் ஜெகத்ஜித் சிங். ஐரோப்பியர்களைக் கவரும் வகையில் இந்திய உணவு தயாரித்துக் கொடுப்பதிலும், மகாராஜாவுக்குப் பிடித்த மாதிரி ஐரோப்பிய உணவு வகைகளைச் செய்து கொடுப்பதிலும் ஆனந்த் கில்லாடி. தன் மகாராஜாவின் டேஸ்ட்டைப் போலவே, அவனுக்கும் பிரெஞ்சுப் பெண்கள் என்றால் கொள்ளை இஷ்டம். மகாராஜாவின் வேலைக்கார னாக இருந்ததாலோ என்னவோ, அவனுக்கும் பிரெஞ்சுப் பெண் ஒருத்தி துணைவியாக வாய்த்தாள். அவள் பெயர் அனி (Anie).

ஆனந்த் மீது கொண்ட பாசத்தினால் ஜெகத்ஜித் சிங், அனியை ஆனந்த் உடனேயே தனது மாளிகையில் தங்க அனுமதி கொடுத்தார். அனி, அவ்வப்போது செர்ரியின் வீட்டுக்குச் சென்று அவளுக்கு உதவியாக இருப்பதுவும் உண்டு.

இரவு உணவு வேளைக்கு முன்பு, மகாராஜா செர்ரிக்குப் போன் செய்வதை வழக்கமாக வைத்திருந்தார். போனில் பேசும் முதல் வார்த்தையிலிருந்து விடைபெறும் வார்த்தை வரை ஒரே கொஞ்சல்ஸ்தான்.

உம்மா கொடுக்கல் வாங்கல் எல்லாம் முடிந்தபிறகு, செர்ரிக்கு குட் நைட் சொல்லி போனை வைத்த பிறகே, ஜெகத்ஜித் சிங் சாப்பிடுவார். போன், கிச்சனுக்கு மிக அருகில் இருந்தது. எனவே மகாராஜா பேசும் மொழிகளெல்லாம் ஆனந்துக்குத் தெள்ளத் தெளிவாகவே கேட்டது.

திடீரென ஒருநாள் மகாராஜாவுக்கு மூக்கில் வியர்த்தது. 'இந்த செர்ரி, ஏன் இப்படிப் பண்ணுறா? தினமும் என்கூடத் தங்குனா என்ன? ஏன் நடுராத்திரியில வீட்டைப் பார்த்து ஓடுறா? ஒருவேளை அந்தப் பத்திரிகைக்காரன் அவ வீட்டுக்கு வந்துட்டுப் போறானோ?' ஜெகத்ஜித் சிங்கின் சந்தேக மூளை சலனப்பட ஆரம்பித்தது. அதற்குமேல் அவரால் அமைதியாக இருக்கமுடியவில்லை.

ஆனந்தை அழைத்தார். 'இன்னிக்கு இரவுச் சாப்பாடு சீக்கிரமா செஞ்சு முடிச்சிடு. நான் செர்ரி வீட்டுக்குப் போறேன்' சொன்னார். தலையாட்டினான் அவன். மறு நிமிடமே செர்ரிக்குப் போன் செய்தார் மகாராஜா.

‘என்னோட செல்லக்குட்டி அங்க என்ன பண்ணுறா?’ கொஞ்சினார்.

‘ரெஸ்ட் எடுத்துக்கிட்டு இருக்கேன் டார்லிங். வேற என்ன செய்யப் போறேன்?’

‘ஓகேடா கண்ணு. இன்னிக்கு இங்க ஒரு விருந்துக்கு ஏற்பாடு பண்ணியிருக்கேன். நண்பர்கள் எல்லாம் வர்றாங்க. அதனால நான் இன்னிக்கு உன்னைப் பார்க்க வரமுடியாது. மன்னிச்சுக் கோடா செல்லம்.’

‘சரி டார்லிங். பரவாயில்லை. நானும் தலைவலியிலதான் படுத்திருக்கிறேன். நாளைக்குப் பார்க்கலாம். உம்மா..’

போனை வைத்தார் மகாராஜா. அவ்வளவு நேரம் நடிகையர் திலகமாகப் பேசி கொண்டிருந்த செர்ரியின் முகத்தில் செம சந்தோஷம். உடனே தன் பத்திரிகைக் காதலனையும் வேறு சில நண்பர்களையும் தன் வீட்டுக்கு இரவு விருந்துக்கு அழைத்தாள். அனியும் அன்று அவள் வீட்டில்தான் இருந்தாள். கமகம விருந்து தயாராக ஆரம்பித்தது.

தன் மாளிகையில் இருந்து கிளம்பினார் ஜெகத்ஜித் சிங். உடன் ஜர்மானி தாஸும். மகாராஜா வீட்டைவிட்டு வெளியேறிய சில நொடிகளில் வேக வேகமாக செர்ரி வீட்டுக்குப் போன் செய்தான் ஆனந்த். அனிதான் எடுத்தாள்.

‘ஏ புள்ள ஆபத்து. அங்கதான் மகாராஜா வந்துக்கிட்டிருக்காரு. செர்ரி அம்மாவை ஜாக்கிரதையா இருக்கச் சொல்லு’ - சதியை அம்பலப்படுத்தினான் ஆனந்த். அனி மூலமாக விஷயமறிந்த செர்ரி, திகிலடைந்தாள். அவளது பத்திரிகைக்காரக் காதலன் உள்பட சில நண்பர்கள் அப்போது அங்கு விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

‘ப்ரெண்ட்ஸ் என்னை மன்னிச்சுக்கோங்க. என்னைக் காப்பாத்துங்க. மகாராஜா இப்போ, இங்க வந்துக்கிட்டிருக்காராம். நான் மாட்டிக்காமத் தப்பிக்கணும். என்ன செய்ய?’ - செர்ரி வெளிப்படையாக வேண்டுகோளை முன் வைத்தாள். விருந்துக்கு வந்தவர்கள், மேசையிலிருந்த பதார்த்தங்கள், பாத்திரங்கள் எல்லாவற்றையும் எல்லோரும் கடகடவென எடுத்து, மடமடவென ஒளித்து வைத்துவிட்டு, குடுகுடுவென வீட்டின் பின் வாசல் வழியாக வெளியேறினார்கள். அனி, வீட்டில் கலைந்து கிடந்த பொருள்களை எல்லாம் ச கட்டுமேனிக்குச் சரி செய்தாள். படபடவென இரவு உடைக்கு மாறினாள் செர்ரி. வெளியே கார் சத்தம் கேட்டது.

வீட்டுக்குள் வந்த ஜெகத்ஜித் சிங், யாராவது அந்நியர்கள் இருக்கிறார்களா என்று பார்க்க ஒருமுறை வலம் வந்தார். பின்பு செர்ரியின் படுக்கை அறைக்குச் சென்றார். இருள் அறையைப் போர்த்தியிருந்தது. அவளைப் போர்வை போர்த்தியிருந்தது. மிகவும் மெலிதான குறட்டைச் சத்தம் வேறு. அவள் அருகில் சென்று அமர்ந்த மகாராஜாவின் மனத்தில் படிந்திருந்த சந்தேகப் படலம் வேகவேகமாக விலக ஆரம்பித்திருந்தது.

‘நான் அநாவசியமா சந்தேகப்பட்டுட்டேன். தப்பு. மகா தப்பு. இவளைப் போலொரு உண்மை யான காதலி வேற யாருக்கும் கிடைக்கவே வாய்ப்பில்லை’ செர்ரியின் நடிப்பு தொடர்ந்தது.



# பிருந்தாவிலிருந்து ஸ்டெல்லாவுக்கு

நான்கு மனைவிகள், அதில் குறிப்பாக கனாரி எனும் காதல் மனைவி, அனிடா (எ) பிரேம் கவுர் என்ற ஸ்பானிஷ் பைங்கிளி, பெயர் தெரியாத சில ஐரோப்பியக் காதலிகள், செர்ரி என்ற செல்லக் காதலி... பட்டியல் பெரியதுதான். இன்னும் பார்க்க வேண்டிய காதலிகளின் கதைகள் இருக்கவே செய்கின்றன.

கபுர்தலாவின் ஜெமினி கணேசனாகத் தன் வாழ்க்கையில் ஓய்வே இல்லாமல் காதல் செய்து கொண்டிருந்தார் மகாராஜா ஜெகத்ஜித் சிங்.

போகட்டும். நாம் அவருக்குச் சிறிது ஓய்வு கொடுத்துவிட்டு, அவருடைய பட்டத்துப் புத்திரனின் காதல் கதையை.. ம்ஹூம் கதைகளைப் பார்க்கலாம்.

ஜெகத்ஜித் சிங்கின் மூத்த தாரம் மகாராணி ஹபன்ஸ் கவுருக்குப் பிறந்த (1892, மே 19) முதல் மகனான பரம்ஜித் சிங், சகல சௌபாக்யங்களுடனும் வளர்ந்து வந்தார். முசௌரியில் ஆரம்ப நிலைக் கல்வி கற்றார். பின்பு அவரது கல்வி நாள்கள் இங்கிலாந்திலும் பாரிஸிலும் கழிந்தன. தன் தந்தையைப் போலவே அவருக்கும் ஐரோப்பிய நாகரிகத்தின் மேல் அலாதிப் பிரியம். பாரிஸ் நகரத்து நங்கைகள் மேல் கொள்ளை ஈர்ப்பு.

இருக்கட்டுமே. அதற்காக எந்த ஐரோப்பியக்காரியை வேண்டுமானாலும் கண்ணாலம் கட்டிக்கிட்டு, கபுர்தலாவுக்கு இழுத்துக்கினு வரமுடியாதே. அப்படியே ஐரோப்பியப் பெண்ணை மகாராணியாக்கினாலும், அவளுக்குப் பிறக்கும் வாரிசை, பிரிட்டிஷ் அரசு வாரிசாக ஒப்புக்கொள்ளப் போவதில்லை. இவையெல்லாம் மகாராஜா ஜெகத்ஜித் சிங்குக்குத் தெரியாதா என்ன?

உஷாராக, தன் மகனுக்கு ஒன்பது வயது இருக்கும்போதே பெண் பார்க்க ஆரம்பித்துவிட்டார். குறிப்பாக ராஜபுத்திர வம்ச இளவரசிகளைத் தேடினார். இமயமலை அடிவாரத்திலுள்ள சிறிய சமஸ்தானமான ஜுபாலின் (Jubbal) இளவரசி பற்றிய தகவல் கிடைத்தது. ஜுபால் ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவர் கன்வார் காம்பிர் சந்த் (Kanwar Gambhir Chand). அவருக்கு மூன்று மகள்கள். மூத்தவள் இளவரசி பிருந்தா தேவி (Brinda Devi). வயது ஏழு.

'எம்புள்ளைக்கு, உங்க மூத்த மவளைக் கட்டிக் கொடுக்கப் பிரியப்படுறேன்' காம்பிர் சிங்குக்குத் தூது அனுப்பினார் ஜெகத்ஜித் சிங். ஆனால் காம்பிர் சிங்கின் உறவினர்கள் அதை விரும்பவில்லை. 'அவுக என்ன சாதி. நாம என்ன பரம்பரை. இதெல்லாம் ஒத்துவராது. முடியாதுன்னு சொல்லிப்புடுங்க' என்று காம்பிரை வற்புறுத்தினார்கள்.

ஆனால் அப்போது ஜுபால் சமஸ்தானத்தின் நிதிநிலைமை சரியில்லாததால், தேடி வந்த ராஜ சம்பந்தத்தை ஏற்றுக் கொண்டார் காம்பிர். ஒரு சுபயோக சுபதினத்தில் கபுர்தலா இளவரசர் பரம்ஜித் சிங்குக்கும், ஜுபால் இளவரசி பிருந்தாவுக்கும் நிச்சயதார்த்தம் நடைபெற்றது.

'அதுல பாருங்க சம்பந்தி, நான் என் பொண்ணு பிருந்தாவை ரொம்பச் செல்லமா வளர்த்துட்டேன். அதான்...' - காம்பிர் இழுத்தார்.

'அட, நீங்க கவலைப்படாதீங்க சம்பந்தி. இனிமே அவ என் பொண்ணு மாதிரி' - ஜெகத்ஜித் சிங் சிரித்தார்.

'அவளை நல்லாப் படிக்க வைக்கணும்னு நினைச்சேன்...'

'அட, என்ன நீங்க? என்னோட மருமகளை, இந்த கபுர்தலா சமஸ்தானத்தோட இளவரசியை எப்படி வளர்க்கணும்னு எனக்குத் தெரியாதா என்ன? நான் பிருந்தாவைப் பாரினுக்கெல்லாம் அனுப்பிப் படிக்க வைக்கலாம்னு இருக்கேன். உங்களுக்கு இனிமே அவளைப் பத்தி எந்தக் கவலையும் வேண்டாம்.'

ஜெகத்ஜித் சிங், சொன்னபடியே செய்தார். சிறிது நாள்களுக்கு ஜெகத்ஜித் சிங்கின் அரண்மனையிலேயே வளர்ந்த பிருந்தா, பின்பு பாரிஸுக்கு அனுப்பப்பட்டாள். பிரெஞ்சு மொழி அவளுக்கு செல்லப்பிள்ளை ஆனது. ஆங்கிலமும் நுனி நாக்கில் தவழ்ந்தது. ஐரோப்பிய கலாசாரம் அவளோடு கலந்து போனது. ஜெகத்ஜித் சிங்கும் அதைத்தான் விரும்பினார்.

பிருந்தா, இந்தியாவுக்குத் திரும்பினாள். 1911, ஜனவரி. கபுர்தலாவில் கொஞ்சம் கொஞ்சமாகக் கல்யாணக் களை கட்ட ஆரம்பித்திருந்தது. பல ஐரோப்பிய விருந்தினர்களை ஜெகத்ஜித் சிங் நேரடியாகச் சென்று அழைத்திருந்தார். ஏற்கெனவே நிச்சயிக்கப்பட்ட பெண். பாரிஸில் வேறு அவ்வப்போது சந்தித்திருந்தார்கள். எனவே புதுமாப்பிள்ளைக்குரிய எந்தவிதக் குறுகுறுப்பும் இளவரசர் பரம்ஜித் சிங்குக்கு இல்லை. பிருந்தாவும் ஐரோப்பிய நாகரிகத்தில் ஊறித் திளைத்திருந்ததால், வெட்கி, நாணி, முகம் சிவந்து, தலையை நாற்பத்தைந்து டிகிரி குனிந்து, வலதுகால் கட்டைவிரலால் தரையைப் பிறாண்டவெல்லாம் இல்லை. இயல்பாகவே இருந்தாள்.

பக்கிங்ஹாம் அரண்மனையிலிருந்து கிங்கின் பிரதிநிதி ஒருவர் வந்திருந்தார். சுத்துப்பட்டி பதினெட்டு சமஸ்தானங்களிலிருந்தும், வேறு பல சமஸ்தானங்களிலிருந்தும் மகாராஜாக்கள்



இளவரசி பிருந்தா, இளவரசர் பரம்ஜித் சிங்
திருமணத்தில், நடுவில் மகாராஜா

வந்து இறங்கியிருந்தார்கள். இவைபோக பிரிட்டிஷ் அதிகாரிகள், வேறு பல ஐரோப்பிய சொந்த பந்தங்கள் எல்லாரும் குழுமியிருந்தார்கள். சகலருக்கும் தனித்தனியே தங்குமிடத்தி லிருந்து எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டிருந்தன.

ஜெகத்ஜித் அரண்மனை அந்த அதிகாலை நேரத்திலும் ஜெகஜ்ஜோதியாக ஒளிர்ந்து கொண்டிருந்தது. அது பிப்ரவரி 2. வாத்தியங்கள் முழங்க ஆரம்பித்திருந்தன. அரண்மனைக்கு வரும் விருந்தினர்களை வரவேற்பதற்காக மட்டுமே நூற்றுக்கணக்கான பணியாளர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். பல மணி நேர அலங்காரத்துக்குப் பின் இளவரசர் பரம்ஜித் சிங்கும், இளவரசி பிருந்தாவும் மணமேடைக்கு அழைத்து வரப்பட்டார்கள். சகலரும் வாழ்த்த, சீக்கிய முறைப்படி திருமணம் நடந்து முடிந்தது.

மாலையில் அரண்மனைத் தோட்டத்தில் ஐரோப்பிய ஸ்டைல் திருமண விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நீள நீளமான மேசைகள். பரிமாறுவதற்கு மட்டும் ஒரே மாதிரி சீருடை அணிந்த நூற்றுக்கணக்கான பணியாளர்கள். ஆங்காங்கே ஒளி பாய்ச்சும் விளக்குகள். வண்ண வண்ண உடை அணிந்த விருந்தினர்கள். டாப் ஆங்கிளில் பார்ப்பதற்கு ஏதோ சிண்ட்ரெல்லா கதையில் வரும் மந்திர உலகமாகத் தெரிந்தது அந்த இடம்.

அடுத்த நான்கே மாதத்தில் ஜெகத்ஜித் சிங், துள்ளிக்குதித்தார். 'நல்ல செய்தி சொன்னீர்கள். இந்தாருங்கள். பிடியுங்கள்.' - பிருந்தா கருவுற்றிருக்கும் செய்தியைச் சொன்ன அரண்மனைத் தலைமைப் பெண் மருத்துவருக்குப் பரிசு வழங்கினார் அவர். பொதுமக்களின் வாய்களில் இனிப்புகள் நிரம்பின.

பிருந்தாவின் பிரசவ தேதியை சமஸ்தானமே எதிர்பார்த்துக் காத்திருந்தது. ஜெகத்ஜித் சிங்கும் தன்னுடைய சுற்றுப் பயணங்களை எல்லாம் தள்ளி வைத்துவிட்டு, பிறக்கப் போகும் பேரனை வரவேற்க ஆவலாகக் காத்திருந்தார். 1912, பிப்ரவரி 26. குழந்தை பிறந்தது. அந்தச் செய்தியைக் கொண்டுவந்த அரண்மனைத் தலைமைப் பெண் மருத்துவருக்குப் பரிசு எதுவும் கிடைக்கவில்லை. ஜெகத்ஜித் சிங்கின் அந்த பேத்திக்கு வைக்கப்பட்ட பெயர் இந்திரா தேவி.

இளவரசர் பரம்ஜித் சிங், எந்தவிதப் பொறுப்புகளும் இன்றிச் சுதந்தரமாக வாழ்ந்தார். பெரும்பாலும் ஐரோப்பிய நாடுகளில் தன் பொழுதை ஜாலியாகக் கழித்தார். அதுவும் தனிக்கட்டையாக. பிருந்தாவும் அவரும் அவ்வளவு அந்நியோன்யமாக, ரொமான்டிக்காகவெல்லாம் வாழவில்லை. எப்போதாவது சேர்ந்து சில சுற்றுப்பயணங்கள் செய்தார்கள்.

சரி, போனால் போகிறது. பிருந்தாவுக்கு அடுத்த குழந்தையாவது ஆணாகப் பிறக்கும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தார் ஜெகத்ஜித் சிங். ஆனால் அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு அவருக்குத் தவிப்பு மட்டுமே மிஞ்சியது. பிருந்தாவிடமிருந்து எந்த நல்ல செய்தியும் வரவில்லை.

1918, டிசம்பர் 14, பிருந்தாவுக்கு இரண்டாவது பிரசவ வலி வந்திருந்தது. ஜெகத்ஜித் சிங், அரண்மனையில் தன் அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார். அன்றைய இரவும் அவருக்குத் தூக்கமின்றியே கழிந்தது, இரண்டாவதும் பேத்தியாகப் பிறந்ததால். அந்தக் குழந்தைக்கு வைக்கப்பட்ட பெயர் சுசிலா தேவி.

இந்தமுறை பிருந்தா, ஜெகத்ஜித் சிங்கை அதிக நாள்கள் காக்க வைக்கவில்லை. அடுத்த பதினோராவது மாதத்திலேயே பிருந்தாவுக்கு மூன்றாவது முறையாகப் பிரசவ நாள் வந்தது.

'கவலைப்படாதீர்கள் மகாராஜா. இந்தமுறை நிச்சயமாக உங்களுக்குப் பேரன்தான் பிறப்பான்'

இருப்புக் கொள்ளாமல் திரிந்து கொண்டிருந்த ஜெகத்ஜித் சிங்கிடம் சொன்னார் இந்தர் சிங். மூன்றாவதாகவும் பிறந்தது பெண் குழந்தைதான். சூட்டப்பட்ட பெயர் ஊர்மிளா தேவி.

ஜெகத்ஜித் சிங்கின் மனத்தில் மெகா வருத்தம். தன் பரம்பரையில் தனது முதல் மகன் மூலம் ஆண் வாரிசு இல்லாமல் போய்விடுமோ என்கிற கவலை. 'சின்னப்புள்ளைல இருந்து பொத்திப் பொத்திப் பொக்கிஷமா வளர்த்த மருமக வயித்துல ஒரு ஆம்புளைப் புள்ள உதிக்கலையே' - என்று புலம்பாத குறைதான். அவரைவிட அதிகக் கவலையில் இருந்தார் மூத்த மகாராணியும் மாமியாருமான ஹபன்ஸ் கவுர். மீண்டும் ஒருமுறை பிருந்தாவிடமிருந்து நல்ல செய்தி வரும் என்று காத்திருக்க ஆரம்பித்தார்கள்.

1922. இளவரசர் பரம்ஜித் சிங், தன் மனைவி பிருந்தாவுடன் ஐரோப்பியச் சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்தார். அன்று இரவு ஒரு நடன நிகழ்ச்சி இருந்தது. பாரிஸின் புகழ்பெற்ற கேளிக்கை அரங்கமான Folies Bergere-ல் நடைபெற இருந்த அந்த நடன நிகழ்ச்சியின் முக்கியமான ஆட்டக்காரி ஸ்டெல்லா மட்ஜ் (Stella Mudge).

ஸ்டெல்லா பற்றிக் கொஞ்சம்...

அந்தக் குடும்பத்தில் மொத்தம் ஐந்து குழந்தைகள். மூன்றாவதாக, 1904ல் அக்டோபரில் கெண்டின் கார்ல்டன் (Carlton) நகரில் பிறந்த பெண் குழந்தை ஸ்டெல்லா. அவளது தந்தை ஒரு கழைக்கூத்தாடி. அதாவது கயிற்றின் மேல் நடந்து வித்தை காண்பிப்பவர். பின்பு அதற்கென்று ஓர் அரங்கம் கட்டி, வித்தை காட்டி, வருமானத்தை அதிகரித்துக் கொண்டார்.

ஸ்டெல்லாவுக்குச் சிறு வயதிலிருந்தே பல வகையான நடனங்களைக் கற்றுக் கொள்வதில் ஆர்வம். அடுத்ததாக பியானோ வாசிப்பதிலும், ஓவியம் தீட்டுவதிலும். அவள் விருப்பப்பட்டதெல்லாம் கற்றுக் கொள்ள அவளது தந்தை வழிவகுத்துக் கொடுத்தார். எப்போதும் தன்னை அலங்கரித்துக் கொள்வதில் அதிக நேரத்தைச் செலவிட்டாள் சிறுமி ஸ்டெல்லா.

முதல் உலகப்போர் சமயத்தில், எதிரிப் படைகள் வெடிகுண்டு வீசப் போகிறார்கள் என்ற தகவல் கிடைத்து ஸ்டெல்லாவின் குடும்பத்தினர் வேகவேகமாகத் தங்கள் வீட்டை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஸ்டெல்லா பதறவே பதறாமல், தனது மேக்-அப் பாக்ஸையும் துணிமணிகளையும் ஒழுங்காகப் பேக் செய்து கொண்டிருந்தாள்.

ஸ்டெல்லா, லண்டனில் ஒரு சிறிய நடனக் குழுவில் இணைந்தாள். சிறிய சிறிய வாய்ப்புகள் கிடைத்தன. அந்த நடனக் குழுவினர் பாரிஸுக்குக் கிளம்பினார்கள். ஸ்டெல்லாவின் அம்மா அவளைத் தடுத்தார். ஸ்டெல்லா கேட்கவில்லை. 'போம்மா, எனக்கு டான்ஸ்தான் முக்கியம். நான் பாரிஸுக்குப் போயே தீருவேன்.'

பாரிஸில் பருவ வயது ஸ்டெல்லா சுதந்தரப் பறவையாகத் திரிய ஆரம்பித்தாள். ஒருநாள் நடன நிகழ்ச்சியைப் பார்க்க வந்த மேக்ஸ் ரிவர்ஸ் (Max Rivers) என்பவரை ஸ்டெல்லாவின் நடனத் திறமை கவர்ந்தது. அவளைத் தனியாகச் சந்தித்தார். பேசினார்.

'Folies Bergere-ல் உனக்கு வாய்ப்பிருக்கிறது. இரவு நடனம் ஆட வேண்டியதிருக்கும். சம்மதமா?'

அவர் உச்சரித்த பெயரே ஸ்டெல்லாவைக் கிறங்கச் செய்தது. உடனே தலையாட்டினாள். Folies Bergere-ல் ஸ்டெல்லாவின் நடன நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. அவளுக்கென்று ஒரு ரசிகர் கூட்டமும் உருவாக ஆரம்பித்தது. அவளைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த இளவரசர் பரம்ஜித் சிங், அன்றைய நிகழ்ச்சியைக் காண வந்திருந்தார்.

இசை ஆரம்பமானது. ஸ்டெல்லா ஆட ஆரம்பித்த சில நிமிடங்களிலேயே, அவர் தன்னை முற்றிலும் தொலைத்திருந்தார். பக்கத்தில் கட்டிய மனைவி இருக்கிறாளே என்ற எண்ண மெல்லாம் பரம்ஜித் சிங்குக்குத் துளியும் இல்லை. பிருந்தாவின் கண் முன்பாகவே உருகி உருகி ஸ்டெல்லாவை வருணிக்க ஆரம்பித்தார். நடனம் முடிந்தது. பிருந்தாவைப் பற்றிச் சிறிதும் எண்ணாமல், ஸ்டெல்லாவைத் தேடி மேக்-அப் ரூமுக்குச் சென்றார் இளவரசர்.



# இளவரசியின் நான்காவது பிரசவம்!

'இப்படியொரு நடனத்தை நான் வாழ்நாளில் பார்த்ததே இல்லை. அற்புதம்' - பூங்கொத்து ஒன்றை நீட்டியபடி சொன்னார் பரம்ஜித் சிங்.

நிலைக்கண்ணாடி முன் அமர்ந்து தனது ஒப்பனையைக் கலைத்துக் கொண்டிருந்த ஸ்டெல்லா, புகழ்ச்சி ததும்பும் வார்த்தைகளைக் கேட்டுத் திரும்பினாள். நீட்டப் பட்ட பூங்கொத்தை வாங்கிக் கொண்டாள். சிரித்தாள். பரம்ஜித்துக்கும் பூங்கொத்துக் கிடைத்தது போலிருந்தது.

'எனக்கு ஒரு சந்தேகம். உங்களைப் பார்த்தால் சாதாரண மனுஷி மாதிரி தெரிய வில்லையே. எனக்குத் தெரிந்து, தேவதைகள்தான் உன் போல் மிக அழகாக இருப்பார்கள். இவ்வளவு திறமைகள் அவர்களுக்கு மட்டுமே சாத்தியம்.'

பரம்ஜித் சிங்கின் வார்த்தைகளில் கரைந்து போனாள் ஸ்டெல்லா. அவர் ஓர் இளவரசர் என்று தெரிந்ததும் அவளுக்குள் பூரிப்பு தாண்டவமாடியது. இருவருக்குமிடையான உறவு வளர்ந்தது, வேகவேகமாக. ஸ்டெல்லாவின் நிகழ்ச்சி நடக்கும் இடங்களுக்கெல்லாம் சென்றார். இரவுகளில் ஹோட்டல்களின் உணவு மேசைகளில் அன்பைப் பரிமாறிக் கொண்டார்கள்.

'இன்னும் இரண்டு தினங்களில் என் நடனக் குழுவினரோடு லண்டனுக்குச் செல்கிறேன்' - ஸ்டெல்லா சொன்னாள். 'நீயில்லாத இந்த பாரிஸில் எனக்கென்ன வேலை. நானும் வருகிறேன்' - நாய்க்குட்டி போல அவள் செல்லுமிடங்களுக் கெல்லாம் சென்றார் இளவரசர். உடன் இருக்கும் மனைவி பிருந்தாவைப் பற்றிக்

கொஞ்சம்கூட நினைத்துப் பார்க்கவே இல்லை. (ஐரோப்பிய) நாகரிகம் தெரிந்த பெண் என்பதால் பிருந்தாவும் அவ்வளவாகக் கண்டு கொள்ளவில்லை. லண்டன் ரிட்ஸ் (Ritz) ஹோட்டலில் பரம்ஜித் சிங்கும் ஸ்டெல்லாவும் ஆதர்சக் காதலர்கள் ஆனார்கள். இந்தியாவுக்குச் செல்ல முடிவெடுத்தார்கள்.

விஷயம் அறிந்ததும் கோபத்தில் ரப்பர் பந்தாகக் குதித்தார் மகாராஜா ஜெகத்ஜித் சிங். அந்த அப்பாவின் வாழ்க்கையில் இல்லாத ஐரோப்பியப் பெண்களா! ஆனால், சொந்த மகன், சௌந்தர்யமாக ஓர் ஐரோப்பியப் பெண்ணைக் கபுர்தலாவுக்கு அழைத்து வந்ததை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

இருக்காதா பின்னே? மகனுக்குப் பிறந்தது மூன்றுமே பெண் குழந்தைகள். ஆண் வாரிசு இல்லையே என்ற ஏக்கம். மகனோ அந்தக் கவலை ஏதுமின்றி யாரோ ஒரு ஐரோப்பியக்காரியின் கரம் பற்றி அழைத்துக் கொண்டு வந்து நின்றதால் ஏற்பட்ட கோபம் அது.

‘அந்தப் புள்ளையை என் கண்ணு முன்னால அழைச்சுட்டு வராதே. அவளுக்கு இந்த அரண் மனைக்குள்ள நுழைய எந்த உரிமையும் கிடையாது’ ஜெகத்ஜித் சிங் உச்சஸ்தாயில் கத்தினார்.

‘டார்லிங், நீ வருத்தப்படாதே. உனக்கு இடமில்லாத அரண்மனையில் எனக்கென்ன வேலை? இந்த அரண்மனை இல்லேன்னா என்ன, உனக்காக நான் ஒரு புது அரண்மனையே கட்டித் தர்றேன்’ - பரம்ஜித் சிங் குலாவினார். தன் காதல் அப்சரஸுக்கு முழுக்க முழுக்க ஐரோப்பிய பாணியில் மாளிகை ஒன்றைக் கட்டியும் கொடுத்தார். அது ஸ்டெல்லா காட்டேஜ். இளவரசி பிருந்தா குடியிருந்த மாளிகையிலிருந்து மூன்று மைல்கள் தொலைவில் அமைந்திருந்தது.

இளவரசரின் புதிய காதல், அவரது சொந்த பந்தங்களைக் கொதிப்படையச் செய்தது. குறிப்பாக பரம்ஜித் சிங்கின் மற்ற சகோதரர்களெல்லாம் அவர் மீது கடும் அதிருப்தியில் இருந்தார்கள். பரம்ஜித் சிங், ஸ்டெல்லா காட்டேஜுக்குத் தன் சகோதரர்களை விருந்துக்கு அழைப்பதும், அவர்கள் அதனைக் கண்டுகொள்ளாமல் இருப்பதும் சகஜம்.

கபுர்தலாவில் தனக்கான மாளிகையில் ஸ்டெல்லா சுத்த சுதந்தரத்தை அனுபவித்தாள். ஸ்டெல்லா காட்டேஜில் தோட்டவேலை, வீட்டு வேலை, சமையல் வேலை பார்ப்பதற் கெல்லாம் சேர்த்து மொத்தம் எழுபத்தியிரண்டு பணியாளர்கள் இருந்தார்கள். ‘அந்த எழுபத்தியிரண்டு பேரையும் தன்னுடைய எதிரிகள்’ என்று பரம்ஜித் சிங்கிடம் ஒருமுறை கூறினாள் ஸ்டெல்லா. வேலைக்காரர்கள் தன்னை ஏமாற்றிவிடுவார்களோ, பொருள்களைத் திருடி விடுவார்களோ என்ற சந்தேகத்தில் படு காட்டமாகவே நடந்து கொண்டாள். தனக்குப் பணிவிடைகள் செய்வதற்குக்கூட அவள் பணிப்பெண்களை அனுமதிக்கவில்லை. தானே முதுகு தேய்த்துக் குளித்துக் கொண்டாள். தானே உடைமாற்றிக் கொண்டாள். தானே தனக்கான அலங்காரங்களையெல்லாம் செய்துகொண்டாள்.

கபுர்தலாவில் இருக்கும்போது, முத்துக்கள் பதித்த, தங்க இழைகளால் அலங்காரம் செய்யப் பட்ட பனாரஸ் சேலைகளை விரும்பி அணிந்தாள் ஸ்டெல்லா. பல சமயங்களில் ‘முதல் மரியாதை’ ராதா போல, ஜாக்கெட் இன்றி. அதுதான் பரம்ஜித் சிங்குக்குப் பிடித்திருந்தது.

ஸ்டெல்லாவுக்குத் துணையாக இருப்பதற்காக அவளது சகோதரி எல்சி (Elsie) அவ்வப்போது கபுர்தலாவுக்கு வந்துசெல்ல ஆரம்பித்தாள். ஸ்டெல்லாவை முறைப்படி மனைவி ஆக்கிக் கொள்ளாவிட்டாலும், மகாராணி போலத்தான் வைத்துக் கொண்டார் இளவரசர் பரம்ஜித் சிங். என்ன, சமஸ்தானத்தின் வருமானத்தில் ஒரு பெரும்பங்கு இளவரசருக்குச் செலவளிக்கப் பட்டது. இளவரசர், ஸ்டெல்லாவுக்காகச் செலவளித்தார்.

அவள் அம்மா ஆனாள்.

மன்மோகன் சிங்கோ, ப. சிதம்பரமோ அப்போது கபுர்தலாவின் நிதி அமைச்சராக இருந்திருந் தால், 1924-25ன் அந்த சமஸ்தானத்தின் நிதி நிலை அறிக்கையை இப்படி வாசித்திருப் பார்கள்.

'இந்த நிதி ஆண்டில் சமஸ்தானத்தின் மொத்த வருமானம் ரூ.39,20,306. அதில் முப்பத்துமூன்று சதவீதம் நிதி, ராஜ குடும்பத்துக்காக செலவளிக்கப்பட்டுள்ளது. இருபது சதவிகிதம் நிர்வாகத் துக்காகவும் ராணுவத்துக்காகவும் செலவளிக்கப்பட்டுள்ளது. கல்விக்காக ஐந்து சதவிகிதமும், மருத்துவ வசதிக்காக இரண்டரை சதவிகிதமும்...'

ஸ்டெல்லா அம்மா ஆன செய்தி மகாராஜா ஜெகத்ஜித் சிங்கை ஆத்திரப்பட வைத்தாலும், இன்னொரு செய்தி அவரை ஆனந்தப்பட வைத்தது. அது, இளவரசி பிருந்தா மீண்டும் கரு வுற்றிருக்கும் செய்தி.

'அதுல பாருங்கோ, கிரகங்கள் இருக்குற அமைப்புபடி, இந்தப் பரம்பரையில இப்போ ஒரு ஆண் குழந்தை பிறந்தே ஆகணும். வேற வழியே இல்லைங்கிறேன். நான் சொல்லல. கடவுளோட விருப்பமே அதுதான். அடுத்ததா இளவரசியாருக்குப் பிறக்கப் போற குழந்தை சாட்சாத் ஆண் குழந்தையேதான்.'

அடித்துச் சொன்னார் சமஸ்தானத்தின் ஜோதிடத் திலகம் பண்டிதர் ஸ்ரீராம். நல்ல செய்தி சொன்னதால், தம் ஆத்துக்கு அளவில்லா வெகுமதியை அள்ளிக் கொண்டும் சென்றார். ஜெகத்ஜித் சிங்குக்கு அவர் சொன்ன வார்த்தைகள் நம்பிக்கையூட்டின. தன் மருமகளை, கவனித்துக் கொள்வதற்கென்றே ஏராளமான புதிய பணிப்பெண்களை நியமித்தார். அரண் மனையில் தலைமைப் பெண் மருத்துவரான மிஸ். பெரைரா (Pereira), எப்போதும் பிருந்தா வுடனேயே இருக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். மகாராணி ஹபன்ஸ் கவுரும் அடிக்கடி சென்று பிருந்தாவை நலம் விசாரித்துக் கொண்டாள்.

'வேறு என்ன செய்ய வேண்டும்?' மகாராஜா ஜோதிடரிடம் கேட்டார். இன்னென்ன யாகங்கள், இன்னென்ன பூஜைகள் என்று முழ நீள பட்டியலை ஒப்பித்தார் ஸ்ரீராம்.

'நீங்கள் விரும்பும் பூஜைகளைச் செய்யுங்கள். என் பேரன் நல்லபடியாகப் பிறக்க வேண்டும். யாரங்கே? பிரதம மந்திரியை அழைத்து வாருங்கள்.'

பிரதம மந்திரி எல். ப்ரென்ச் (L. French) வந்தார். 'பண்டிதர் கேட்கும் தொகையை அவருக்கு உடனே அளியுங்கள். அவரது பூஜைகளுக்குத் தேவையான வசதிகளை எல்லாம் உடனடியாகச் செய்து கொடுங்கள்.'

ஹோமம், யாகம், பூஜை, புனஸ்கார வகையறாக்களுக்காக ஸ்ரீராம் கேட்ட தொகை பத்து லட்சம். பூஜைகள் நடந்தன. ஸ்வாகா'. பண்டிதரின் வீடு வளம் பெற்றது.

1926, ஜூலை 16. மாலை மயங்கும் நேரம். டாக்டர் பெரைராவிடமிருந்து மகாராஜாவுக்கு செய்தி ஒன்று வந்தது. 'இன்று இரவில் இளவரசிக்குப் பிரசவம் நடக்க வாய்ப்பிருக்கிறது.' ஜெகத்ஜித் சிங்குக்குள் உற்சாகப் படபடப்பு தொற்றிக் கொண்டது. மளமளவென அவரது மனத்துக்குள் திட்டங்கள் உருவாகின. பிரதம மந்திரியை அழைத்தார்.

'அனைவரையும் வரச் சொல்லுங்கள்.' - ஒரே வரியில் உத்தரவு.

ஒரு மணி நேரத்துக்குள் சமஸ்தானத்தின் அமைச்சர்கள், உயர் அதிகாரிகள், திவான்கள் அங்கே குழுமினார்கள். நெருங்கிய உறவினர்களும் ஒவ்வொருவராக வர ஆரம்பித்தார்கள். பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும் செய்தி போனது. சமஸ்தானத்தின் ரெஸிடெண்டுக்கும் பஞ்சாபின் கவர்னருக்கும் அழைப்பு போனது. செய்தியறிந்த மகாராணி ஹபன்ஸ் கவுர், பிருந்தாவைக் காண விரைந்தார்.

'படைகளைத் தயாராக வைத்திருங்கள்.'

மகாராஜாவிடமிருந்து உத்தரவை வாங்கிக் கொண்ட தலைமைத் தளபதி பக்ஷி பூரண் சிங் பகதூர், வேகவேகமாக அதனைச் செயல்படுத்தக் கிளம்பினார். பிறக்கப்போகும் பேரனை வரவேற்க என்னென்ன ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று பிரதம மந்திரிக்கு ஏகப்பட்ட கட்டளைகளைப் பிறப்பித்தார் ஜெகத்ஜித் சிங். புதிய பட்டத்து இளவரசரின் ஜனன விழாவைக் கொண்டாடுவதற்காக இருபது லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டது.

அரண்மனையின் தலைமை எலெக்ட்ரீசியன் வரவழைக்கப்பட்டார். ஜெகத்ஜித் அரண்மனை, பிருந்தாவின் மாளிகை உள்பட ராஜ குடும்ப அரண்மனைகள், மாளிகைகளை அடுத்த சில மணி நேரத்துக்குள் மின் விளக்குகளால் அலங்கரிக்கும்படி உத்தரவிடப்பட்டது. வாண வேடிக்கைகள் நிகழ்த்த பட்டாசுகள் ஏற்கெனவே கல்கத்தாவிலிருந்து வரவழைக்கப் பட்டிருந்தன. இரவில் ராணுவத்தினர் துப்பாக்கிகளோடு தயாராக அணிவகுத்து நின்றார்கள். பேரன் பிறந்த அறிவிப்பு வெளியானதும் வானத்தை நோக்கிச் சுட வேண்டியதுதான் பாக்கி.

மக்கள் எல்லோரும் தங்களிடமிருந்த ஓரளவு புதிய ஆடைகளை அணிந்துகொண்டு அரண் மனைக்கு வெளியே குவிய ஆரம்பித்திருந்தார்கள். 'ஆம்பளைப் புள்ளை நல்லபடியா பொறக்கணும். அப்படி நடந்துருச்சுன்னா நமக்கெல்லாம் விடுதலைதான்' - சிறையில் இருந்த ஆயுள் தண்டனைக் கைதிகள் உள்பட எல்லோரும் எதிர்பார்ப்புடன் காத்திருந்தார்கள்.

மகாராஜாவுக்கு இரவு உணவு இறங்கவில்லை. ஓரிடத்தில் உட்காரக்கூட முடியவில்லை. நடந்து நடந்து தன் அறையை அளவெடுத்துக் கொண்டே இருந்தார். அவரது முகம் எதிர் பார்ப்பு, பயம், மகிழ்ச்சி மூன்று உணர்வுகளையும் மாறி மாறி பிரதிபலித்துக் கொண்டிருந்தது. ஜெகத்ஜித் அரண்மனையை விட்டுக் கிளம்பி, பிருந்தாவின் மாளிகைக்குச் சென்று அந்த நல்ல செய்திக்காகக் காத்திருக்கத் தொடங்கினார்.

இரவு நள்ளிரவானது. நள்ளிரவு அதிகாலையைத் தொட்டது. சுமார் நான்கு மணி இருக்கும். கொஞ்சம் சோர்ந்து போய் அமர்ந்திருந்த ஜெகத்ஜித் சிங், டாக்டர் பெரைரா வருவதைப் பார்த்ததும் எழுந்து நின்றார். பெரைராவின் நடையில் உற்சாகமில்லை. அவரது கண்கள் கலங்கியிருந்தன.

'பெ.. பெண் குழந்தை.'

விசும்பலுடன் பெரைரா சொல்ல, வெடித்தது மகாராஜாவின் நெஞ்சம். அங்கே கூடியிருந்த சக அமைச்சர்களின், அதிகாரிகளின் முகத்திலும் ஏமாற்றம் படர்ந்தது. மகாராஜா, ஆத்திரம் தெறிக்க உருமினார்.

'எங்கே அந்த ஜோதிடன்...'

விடுதலை கிடைக்கும் என்று எதிர்பார்த்து ஏமாந்துபோன சிறைக் கைதிகள், சிறைக்குக் கொண்டு வரப்பட்ட ஜோதிடரை வெறுப்பாகப் பார்த்தார்கள். எந்தவித விசாரணையுமின்றி அவருக்கு ஒன்பது ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது.

மகாராஜா யாரிடமும் எதுவும் பேசவில்லை. நான்காவதாகப் பிறந்த பேத்தியைப் பார்க்கப் பிடிக்காமல், தனது அரண்மனைக்கு விரைந்தார். அறைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொண்டார். மீண்டும் பெண் குழந்தையைக் கண்ட மகாராணி ஹபன்ஸ் கவுர், கண்ணீரும் கடுப்புமாகத் தனது மாளிகைக்குச் சென்றார். அவரும் பூட்டப்பட்ட அறையிலிருந்து வெளியே வரவில்லை.

அதுவரை ஒளிர்ந்து கொண்டிருந்த அலங்கார மின் விளக்குகள் அணைக்கப்பட்டன. புன்னகையைத் தொலைத்த சொந்தக்காரர்களும், தலையைத் தொங்கப்போட்ட அமைச்சர் களும் அதிகாரிகளும் பேசுவதற்கு ஏதுமின்றி அமைதியாகக் கலைந்தார்கள். துப்பாக்கிகளோடு காத்திருந்த ராணுவ வீரர்கள், முணுமுணுத்துக் கொண்டே நடையைக் கட்டினார்கள். 'இள வரசர் வாழ்க! வாழ்க!' என்று மகிழ்ச்சிக் கோஷம் போடுவதற்காகவே வாசலில் காத்திருந்த மக்கள், சுருதியிழந்து, புலம்பிக் கொண்டே வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

'விதின்னு சொல்லுறதா? கடவுளோட சாபம்னு சொல்லுறதா? நம்ம மகாராஜாவோட வம்சம் தழைக்காது போலிருக்கே.'

'அடுத்த நாப்பது நாளுக்கு நமக்குத் திருவிழா. பண்டிகை, கொண்டாட்டம் எதுவும் கிடையாதுலே. மகாராஜாவும் மகாராணியும் துக்கத்துல இருக்காங்களாம்.'

அன்றைய (1926, ஜூலை 17) விடியலில் யாருடைய முகத்திலும் பிரகாசம் இல்லை. சூரியன், வழக்கம்போல்கபுர்தலாவுக்கு வெளிச்சம் கொடுக்கவில்லை. புதிதாகப் பிறந்த பெண் குழந்தை அழுது கொண்டிருந்தது.



# 65

# நூற்றியொரு ஹல்வா தட்டுகள்!

ஓர் உண்மையான சீக்கியருக்கான அடையாளங்கள் ஐந்து. ஒன்று, நீளமாக வளர்க்கப்பட்ட தலைமுடி (Kesh). இரண்டு, அந்தக் கூந்தலை வாருவதற்கான சீப்பு (Kanga). மூன்று, இடுப்பில் அணியும் ஆடை (Kaccha). நான்கு, கையில் அணியும் வளையம் (Kara). ஐந்து, உடலில் மாட்டப்பட்டிக்கும் உடைவாள் (Kirpan). இந்த ஐந்து K சமாசாரங்களையும் ஒரு சீக்கியர் தன்னுடன் எப்போதும் வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது அவர்களது பத்தாவது மதகுருவான குரு கோபிந்த் சிங் அருளிய விதி.

ஆனால், வாழ்வின் ஒவ்வொரு நிமிடத்தையும் ஐரோப்பியத்தனமாக வாழ்ந்து கொண்டிருந்த கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங் இந்த ஐந்து K சமாசாரங் களையும் கண்டுகொள்ளவில்லை. ஒட்ட கிராப் வெட்டிக் கொண்டு நவநாகரிக மாக வலம் வந்து கொண்டிருந்தார். அவர் மட்டுமல்ல, இளவரசர் பரம்ஜித் சிங்கூட அப்படித்தான். மத விதிகள் எதையும் சட்டை செய்யவில்லை.

'கணவரும் மத விதிகளுக்கு மாறாக நடந்து கொள்கிறார். சொந்தப் பிள்ளையும் அதே போலத்தான் நடந்து கொள்கிறான். அதுதான் குருவின் கோபத்தைத் தூண்டி விட்டுள்ளது. அதனால்தான் இந்தக் குடும்பத்தில் ஆண் வாரிசே பிறப்பதில்லை. ஆம், அதுதான் காரணம்.'

மகாராணி ஹபன்ஸ் கவுரின் மனத்தை இந்தக் குற்ற உணர்வு பிசைந்து கொண்டிருந்தது. அதிகம் எதிர்பார்த்த நான்காவது குழந்தையும் பேத்தியாகப்

பிறந்ததற்குக் காரணம் குருவின் கோபம்தான் என்று நம்பினார் அவர். ஏற்கெனவே ஏகக் குழப்பத்தில் இருந்த மகாராணியின் அறைக்கதவை பணிப் பெண் ஒருத்தி தட்டினாள். கண்களில் வழிந்து கொண்டிருந்த நீரைக்கூடத் துடைக்காமல் அப்படியே சென்று கதவைத் திறந்தார்.


சீக்கிய அடையாளங்களுடன் மகாராஜா ஜெகத்ஜித் சிங்

'மகாராணிக்கு வணக்கம். ஒரு முக்கியமான செய்தி. அரண்மனை ஜோதிடரைக் கைது செய்து சிறையில் அடைத்து விட்டார்களாம்' - அந்த வார்த்தைகள் மகாராணியை மேலும் உலுக்கின.

'தவறு மேல் தவறாக நடக்கிறதே. உடனே திவானை வரச்சொல்' - கட்டளையிட்டார்.

அந்த விடியற்காலை நேரத்திலேயே திவான் ஜர்மானி தாஸின் மாளிகைக் கதவைத் தட்டினான் ஒரு வீரன். இரவெல்லாம் அரண்மனையில் ஆண் குழந்தை பிறக்கும் என்ற எதிர்பார்ப்போடு காத்திருந்துவிட்டு, ஏமாற்றத்துடனும் அதிகக் களைப்புடனும் அப்போதுதான் தன் மாளிகைக்குத் திரும்பியிருந்தார் திவான். கொஞ்சம் தூங்கலாம் என்று கண்களை மூடினார்.

அழைப்பு வந்துவிட்டது. உடைகளை மாட்டிக் கொண்டு, மகாராணியின் எலிஸீ (Elysee) அரண்மனைக்கு விரைந்தார். அடைமழைபோல அழுகையைத் தொடர்ந்து கொண்டிருந்தார் மகாராணி. சைகையால் திவானை உட்காரச் சொன்ன அவர், சிறிது நேரத்துக்கு எதுவுமே பேசவில்லை. ஜர்மானியே மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தார்.

'கவலைப்படாதீர்கள். விரைவில் ஏதேனும் நல்ல வழி பிறக்கும்.'

'இல்லை திவான் இல்லை. மகாராஜா மேலும் மேலும் தவறுகள் செய்து கொண்டிருக்கிறார். அவரோ, இளவரசரோ உண்மையான சீக்கியராக மத விதிகளின்படி நடந்து கொண்டிருந்தால், இந்தப் பரம்பரையில் இத்தனை துர்சம்பவங்கள் நடந்தே இருக்காதே.'

'அதைப் பற்றி அவர்களிடம் பேசும் உரிமை யாருக்கும் கிடையாதே மகாராணி.'

'அரண்மனை ஜோசியரை ஏன் சிறையில் அடைக்க வேண்டும்? ஏற்கெனவே இருக்கும் சாபங்கள் போதாதா? ஒரு அந்தணரைச் சித்ரவதை செய்து அந்தப் பாவத்தை வேறு சம்பாதித்துக் கொள்ள வேண்டுமா? வேண்டாம். இன்றைக்குள்ளாகவே அரண்மனை ஜோதிடர் சிறையிலிருந்து விடுதலை பெற வேண்டும்.'

‘அதற்கு நான் என்ன வேண்டும் என்று சொல்லுங்கள். செய்கிறேன்.’

‘மகாராஜாவின் பிடிவாத குணம் உங்களுக்கு நன்றாகவே தெரியும். நானோ, நீங்களோ பேசினால் எடுபடாது. வேறு வழியில்லை. அவளைப் பேசச் சொல்லுங்கள். அப்போதுதான் காரியம் நடக்கும். நீங்கள்தான் அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். ஜோதிடரை விடுதலை செய்ய வேண்டியது உங்கள் பொறுப்பு.’

உத்தரவை வாங்கிக் கொண்டு அந்த அரண்மனையை விட்டு வெளியேறினார் ஜர்மானி தாஸ். சரி, யார் அந்த அவள்?

ஜெகத்ஜித் சிங்கின் அப்போதைய ஆசைநாயகி செர்ரிதான். அந்தச் சமயத்தில் அவள் ஊதும் மகுடிக்குத்தான் ஜெகத்ஜித் சிங் கட்டுப்பட்டுக் கிடந்தார். அப்போது செர்ரியும் கபுர்தலாவில் தான் இருந்தாள். ஜர்மானி தாஸ், நேராக செர்ரியைப் பார்க்கச் சென்றார். பேசினார்.

‘நடந்த விஷயங்களை எல்லாம் கேள்விப்பட்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன். மகாராஜா, தாங்க முடியாத துக்கத்திலும், அடக்க முடியாத கோபத்திலும் இருக்கிறார். அவரிடம் சொல்லி அரண்மனை ஜோதிடரை விடுதலை செய்ய உத்தரவு வாங்கித் தர வேண்டும். ஏனென்றால்…’

மகாராணியின் மனக்கவலைகள் அத்தனையையும் செர்ரிக்கு விளக்கினார் ஜர்மானி. முத்தாய்ப்பாக ஒரு வரியையும் சேர்த்துக் கொண்டார்.

‘மேடம், உங்களைத் தவிர இந்த விஷயத்தை வேறு யாராலும் செய்ய முடியாது. இது என் கருத்து மட்டுமல்ல, மகாராணியின் நம்பிக்கையும்கூட.’

செர்ரியை அந்த வார்த்தைகள் ஈர்த்தன. செய்வதாக ஒப்புக் கொண்டாள். சிறிது நேரம் கழித்து ஜெகத்ஜித் அரண்மனைக்குக் கிளம்பினாள். அவளுடனேயே சென்ற திவான், வரவேற்பறையில் காத்திருக்க ஆரம்பித்தார். மகாராஜாவின் அறைக்குச் சென்றாள். அங்கு அவர் இல்லை. குளித்துக் கொண்டிருப்பதாகப் பணியாளர்கள் சொன்னார்கள்.

பிரம்மாண்டமான குளியல் அறை அது. நடுவில் வலை கட்டி டென்னிஸ் மேட்ச் விளையாடலாம் என்னுமளவுக்குப் பெரியது. அறைக்கு நடுவில் ரோஸ் நிற மார்பிள்ஸ் பதிக்கப்பட்ட மினி நீச்சல் குளம் போன்ற குளியல் தொட்டி. அதில் வெதுவெதுப்பான நீர். அதனுடன் பக்குவமாக, பதமாகக் கலக்கப்பட்ட ப்ரெஞ்சு வாசனைத் திரவியங்கள். நீரின் மேற்பகுதியில் மிதக்கும் ரோஜா இதழ்கள். அறைக்குள் நுழையும்போதே, சுகந்த நறுமணம் செர்ரியின் நாசியை நிறைத்தது. உள்ளக் கொதிப்பைத் தணிக்க, தொட்டி நீரில் ஊறிக் கொண்டிருந்தார் மகாராஜா.

‘ஓ நீங்கள் இங்கே இருக்கிறீர்களா?’ கேட்டுக் கொண்டே அவர் அருகில் வந்தாள் செர்ரி. அவளது வருகை, ஜெகத்ஜித் சிங்கின் முகத்தில் குட்டியாகப் புன்னகையை வரவழைத்தது. நிறைந்த புன்னகையுடன் குளியல் தொட்டிக்குள் இறங்கினாள் அவள். அப்படியே மகாராஜா வின் மேனியை மஸாஜ் செய்துவிட ஆரம்பித்தாள். கொஞ்சல் உரையாடல்கள் தொடர்ந்தன. அவர் மேல் நீரை ஊற்றி ஊற்றி விளையாட ஆரம்பித்தாள். நிமிடங்கள் கரைந்தன. ஜெகத்ஜித் சிங்கின் தகிப்புத் தணிந்து கொண்டிருந்தது.

‘சரி, இப்போது நான் விரும்பும் விஷயத்தை நிறைவேற்றுவீர்களா?’ செர்ரி விஷயத்துக்கு வந்தாள்.

‘உனக்குச் செய்யாமலா?’

‘ஜோதிடரைச் சிறையில் அடைக்கச் சொன்னீர்களாமே. அது பாவமாம். அது உங்களைத்தான் பாதிக்குமாம். உங்களுக்கு ஏதாவது ஒன்றென்றால் என்னால் தாங்க முடியாது. அப்படியெல்லாம் நடக்க வேண்டாம். அந்த ஆளை விட்டுவிடச் சொல்லுங்களேன். எனக்காக...’

தலையைத் தொங்கப்போட்டபடி, சிறையிலிருந்து வெளியே வந்தார் ஜோதிடர் ஸ்ரீராம். ‘உன்னை வெளிய விடச் சொல்லிட்டாங்க. ஆனா சாயங்காலம் இருட்டுறதுக்குள்ள நீ, உன் குடும்பத்தோட சமஸ்தானத்தை விட்டே எங்கிட்டாவது ஓடிப் போயிருக்கணும். புரியுதா? மசமசன்னு நிக்காத, ஓடு ஓடு!’ - சிறை அதிகாரியின் மிரட்டல் வார்த்தைகள் ஜோதிடருக்குள் ஒலித்துக் கொண்டே இருந்தன. அந்த சுப தினத்தில் அரசாங்கப் பதவியில் இருந்த ஸ்ரீராமின் சொந்தக்காரர்கள் அனைவருக்கும் சீட்டு கிழிந்திருந்தது.

இவ்வளவு களேபரங்கள் நடந்து கொண்டிருக்க, எதையுமே கண்டுகொள்ளவில்லை இளவரசர் பரம்ஜித் சிங். தந்தைக்கு ஒரு செர்ரி என்றால், தனயனுக்கு ஒரு ஸ்டெல்லா. அவளது காட்டேஜிலேயே இளவரசர் கரைந்து கிடந்தார். தனக்குப் பிறந்த நாலாவது பெண் குழந்தையையோ, மனைவி பிருந்தாவையோ பார்க்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்குத் தோன்றவே இல்லை.

சில வாரங்கள் கழிந்தன. கபுர்தலா சமஸ்தானம் துக்கத்தின் நிழலிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சகஜ நிலைக்குத் திரும்பிக் கொண்டிருந்த நேரம். ஜெகத்ஜித் சிங்கின் பிரியத்துக்குரிய அமைச்சர்களுள் ஒருவரான சர்தார் பிரதாப் சிங், தன் இல்லத்திலிருந்து வெளியே ஓடி வந்தார். ஓட்டத்தை நிறுத்தவில்லை. ஜெகத்ஜித் அரண்மனையை நோக்கி அவரது கால்கள் கடும் வேகத்தில் ஓடின. இரண்டு மைல்கள்.

அரண்மனைக்குள் நுழைந்தார். நேராக ஜெகத்ஜித் சிங்கின் அறைக்குச் சென்றார். தூங்கிக் கொண்டிருக்காரே என்றெல்லாம் தயங்கவில்லை, யோசிக்கவில்லை. வேகவேகமாக எழுப்பினார். குழப்பத்துடன் மகாராஜா கண் விழித்தார்.

‘நல்ல கனவு மகாராஜா. நல்ல கனவு. குரு கோபிந்த் சிங் அதில் வந்தார். அதுவும் அவரது வெள்ளைக் குதிரையில். வந்து, உங்களுக்கான செய்தியை என்னிடம் சொன்னார். நீங்கள் உங்கள் பேரனை ஓர் உண்மையான சீக்கியனாக வளர்ப்பதாக உறுதி அளித்தால், அடுத்ததாக ஓர் ஆண் வாரிசு பிறக்குமாம். குருவின் வார்த்தைகள் இவை.’

பிரதாப் சிங்குக்கு மூச்சு வாங்கியது. மகாராஜாவுக்கு மூச்சு வந்தது போலிருந்தது. முகத்தில் உற்சாகம். ‘செய்துவிடலாம் பிரதாப். நல்ல செய்தி சொன்னீர்கள்.’

மறுநொடியே பிரதம அமைச்சர் எல். ப்ரென்சுக்கு தொலைபேசி அழைப்பு சென்றது. மகாராஜாவே பேசினார். ‘உடனே அமைச்சரவையைக் கூட்டுங்கள்.’ கூடியது. பேசினார்கள். மறுநாளே மகாராஜா, இளவரசோடு கபுர்தலாவின் குருத்வாராவுக்குச் சென்று குருவின் கட்டளையை நிறைவேற்றுவதாக பலர் முன்னிலையில் வாக்குக் கொடுப்பதாக ஏற்பாடு.

இளவரசருக்குத் தகவல் போனது. இன்னென்ன மாதிரி விஷயம். இன்னென்ன காரியங்கள் செய்வதாகத் திட்டம். எனவே என்ன, ஏது என்று எதிர்க்கேள்வி கேட்காமல், நாளை குருத் வாராவுக்கு வந்துவிடவும்.

மறுநாள். அரண்மனைப் பணியாளர்கள் நூற்றியொரு தட்டுகள் நிறைய ஹல்வாவை குதிரை வண்டி ஒன்றில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள். குருத்வாரா மலர்களால் அலங்கரிக்கப்பட்டு இருந்தது. தலைமை மதகுரு பாய் ஹர்னம் சிங் (Bhai Harnam singh) தயாராக இருந்தார். பலர் குருத்வாராவை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

தனது அரண்மனையில் இருந்து வெளியே வந்தார் மகாராஜா. புதிய பளபளா ஆடை. ஜொலி ஜொலித்திடும் நகைகள். ஆறு குதிரைகள் பூட்டப்பட்ட தங்க முலாம் பூசப்பட்ட சாரட் ஒன்று தயாராக நின்று கொண்டிருந்தது. ஏறினார். ஏற்கெனவே இளவரசர் அதில் அமர்ந்திருந்தார். கையில் வாளுடன் நீலச்சீருடைப் பாதுகாவலர்கள் சாரட்டின் பக்கவாட்டுப் பகுதிகளில் ஏறி நிற்க, சாரட் கிளம்பியது.

குருத்வாராவை சாரட் வந்தடையும் நேரத்தில் வாழ்க கோஷங்கள் எதிரொலித்தன. மகாராஜாவையும் இளவரசரையும் பிரதம அமைச்சரும், தலைமை மதகுருவும் வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார்கள். ஏற்கெனவே அங்கு மற்ற அமைச்சர்கள், உயர் அதிகாரிகள், முக்கியஸ்தர்கள், பல்வேறு மதத்தைச் சார்ந்த நபர்கள் கூடியிருந்தார்கள். குருத்வாராவின் மைய அறைக்குச் சென்ற ஜெகத்ஜித் சிங், அங்கே வைக்கப்பட்டிருந்த புனித நூல் கிரந்த் சாகிப்பை சிரம் தாழ்த்தி வணங்கினார். இளவரசரும் அப்படியே.

மதகுரு ஹர்னம் சிங், புத்தகத்தை வாசிக்க ஆரம்பித்தார். பிரார்த்தனைகளைச் சொல்ல ஆரம்பித்தார். பின் சத்தமாகப் பேசினார்.

‘எல்லாம் வல்ல குருவே! கபுர்தலாவின் மகாராஜாவாகிய ஜெகத்ஜித் சிங், தன்னுடைய குடும்பத்தினரோடும் அமைச்சர்களோடும் அதிகாரிகளோடும் இங்கே உங்கள் முன் பணிவோடு நிற்கிறார். எல்லோரையும் ஆளும் குருவே, மகாராஜா ஜெகத்ஜித் சிங், தன் பரம்பரையில் ஓர் ஆண் வாரிசு பிறப்பதற்காக தங்கள் கருணையை வேண்டுகிறார். தனக்குப் பிறக்கும் பேரனை ஓர் உண்மையான சீக்கியனாக வளர்ப்பதாக இந்த இடத்திலே உறுதி கூறுகிறார். அன்பு நிறைந்த குருவே, மத விதிகளிலிருந்து மீறி, நீண்ட கூந்தலும் தாடியும் வளர்க்காமல் இருந்ததற்காக மகாராஜா ஜெகத்ஜித் சிங்கையும், அவரது புதல்வர் இளவரசர் பரம்ஜித் சிங்கையும் மன்னித்தருள வேண்டுகிறேன். சர்வ வல்லமை நிறைந்த குருவே, மகாராஜா தனது வேண்டுதலுக்குக் காணிக்கையாகப் பதினோராயிரம் பணத்தையும், நூற்றியொரு தட்டுகள் ஹல்வாவையும் தங்கள் புனிதப் பாதங்களில் சமர்ப்பிக்கிறார்.’

சடங்குகளும் பிரார்த்தனைகளும் நிறைவேறின. மகாராஜாவுக்கு மனபாரம் பஸ்பமாகிப் போனது போலிருந்தது.



# 36-28-36

ஆண் வாரிசு வேண்டும் என்பதற்காக, பிறக்கும் குழந்தையைச் சீக்கிய மதக் கோட்பாடுகளின்படி தாடி, மீசையுடன் வளர்க்கிறேன் என்று குருத்வாரா சென்று மனமாரச் சத்தியம் செய்துவிட்டால் போதுமா? மீண்டும் இளவரசி கருவுற வேண்டுமே? கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங், தீவிர யோசனையில் இருந்தார்.

மூன்றாவதாகப் பெண் குழந்தை பிறந்தபோதே இளவரசர் பரம்ஜித் சிங்கும், அவரது மனைவி இளவரசி பிருந்தாவும் கிட்டத்தட்ட பிரிந்துவிட்டு இருந்தார்கள். ஆண் வாரிசு வேண்டும் என்பதற்காக 'கா' விட்டிருந்த அவர்களைப் 'பழம்' விட வைக்க, படாதபாடுபட்டார் மகாராணி ஹபன்ஸ் கவுர். ஆனால் நான்காவதும் பெண் குழந்தையாகப் பிறந்துவிட வெறுத்துப் போனார். மீண்டும் ஒருமுறை இளவரசரைச் சரிகட்டி மனைவியுடன் 'பழம்' விட வைப்பதெல்லாம் இயலாத காரியமாகவே தோன்றியது.

அதுபோக, பிருந்தாவிடம் சென்று பேசுவதற்கும் மகாராணிக்கு இஷ்டமில்லை. 'நான்கு பெண் குழந்தைகளைப் பெற்ற அவளது வயிற்றிலிருந்து மீண்டும் ஒரு பெண் குழந்தையைத் தவிர வேறெதுவும் பிறக்காது' என்ற எண்ணம்தான் அதற்குக் காரணம்.

'இளவரசருக்கு இரண்டாவது திருமணம் செய்து வைத்தால் என்ன?' யோசிக்க ஆரம்பித்தார் மகாராணி. அதே எண்ணம் மகாராஜாவுக்கும் இருந்தது. ஆனால் அதற்குப் பரம்ஜித் சிங் ஒத்துழைக்க வேண்டுமே. குருத்வாராவுக்கு

தந்தையோடு சென்று சத்தியம் செய்துகொடுத்ததை எல்லாம் இளவரசர் நினைவில் வைத்துக் கொள்ளவே இல்லை. அவரது நினைவின் ஒவ்வொரு அணுவிலும் காதலி ஸ்டெல்லாவே நிறைந்திருந்தாள். ஸ்டெல்லா காட்டேஜ் தவிர உலகில் மற்ற இடங்களெல்லாம் சூன்யமாகி விட்டதால் நினைப்பில் ஸ்டெல்லாதாசன் ஆகியிருந்தார் அவர்.

இளவரசரின் மனம் கவர்ந்த ஸ்டெல்லாவையே முறைப்படித் திருமணம் செய்துவைக்கலாம் தான். பரம்ஜித் சிங் பரமானந்தமாக ஒப்புக் கொள்வார். ஆனால் அவள் மூலமாக டஜன் ஆண் வாரிசு பிறந்தாலும் லார்டு லபக்குதாஸ் வைஸ்ராய், பட்டத்து இளவரசராக ஒப்புக்கொள்ள மாட்டாரே. சிந்தனை செய்து செய்தே களைத்துப் போனார் ஜெகத்ஜித் சிங். ஆசைநாயகி செர்ரியுடன் பாரிஸுக்குச் சென்று ஓய்வெடுத்துக் கொண்டே யோசிக்கலாம் என்று அவரது மனம் கொடி பிடித்தது. ஐரோப்பிய அரிப்பு வந்தபின்பு, அவரால் கபுர்தலாவில் இருக்க முடியவில்லை. பயணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னார்.

ஆனால் அந்த நேரத்தில் வைஸ்ராய் இர்வின், மகாராஜாக்களின் வெளிநாட்டுப் பயணங் களுக்கான கட்டுப்பாடுகளை இறுக்கியிருந்தார். ஜெகத்ஜித் சிங், அதை எல்லாம் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. தான் சென்று நேரடியாகக் கேட்டால், வைஸ்ராய் அனுமதி கொடுத்துவிடுவார் என்று நம்பினார். அவரைச் சந்திக்க நேரம் வாங்கினார். அந்தக் குறிப்பிட்ட நேரத்துக்குச் சரியாக வைஸ்ராயைப் பார்க்கச் சென்றார். வழக்கமான குசல விசாரிப்புகள். தேநீர் உபசரிப்பு.

'அடுத்த வாரம் பாரிஸுக்குச் செல்லலாம் என்று திட்டம் வைத்திருக்கிறேன்' ஜெகத்ஜித் சிங் குழைந்தபடி சொன்னார்.

'புதிய விதிமுறை உங்களுக்குத் தெரியாதா என்ன?' - வைஸ்ராய் இறுக்கமாகக் கேட்டார்.

'தாங்கள் அனுமதி கொடுக்க வேண்டும்.'

'ஒழுங்காகச் சமஸ்தானத்தில் இருந்து நிர்வாகத்தைக் கவனியுங்கள்.' வைஸ்ராயிடமிருந்து இம்மாதிரியான வார்த்தைகளைச் சற்றும் எதிர்பாராத ஜெகத்ஜித் சிங், பதில் பேசச் சிறிது தடுமாறினார். பின்பு சமாளித்துக் கொண்டு பேசினார்.

'என் சமஸ்தானத்தின் நிர்வாகத்தில் எந்தக் குறையும் இல்லை. நான் இல்லாவிட்டால்கூட எல்லாம் ஒழுங்காகவே இயங்கும்.'

வைஸ்ராயின் முகத்தில் ஆத்திரம் அலைபாய்ந்தது.

'ஓஹோ, நீங்கள் இல்லாமலே நிர்வாகம் ஒழுங்காக இயங்கும் எனில், மரியாதைக்குரிய மகாராஜாவே நீங்கள் ஆட்சியில் இருப்பதால் எந்தவிதப் பிரயோசனமும் இல்லை. அப்படித்தானே?'

ஜெகத்ஜித் சிங் வாயடைத்துப் போனார். அவர் உள்ளுக்குள் உறிஞ்சிய தேநீர் தொண்டைக் குழியிலேயே தேங்கி நின்றது. அதற்கு மேல் எதுவும் பேச முடியாமல் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு திரும்பினார். பாரிஸ் சுற்றுப்பயணத் திட்டம் 'பனால்' ஆனது.

வேறு வழியில்லாத ஜெகத்ஜித் சிங், சில நாள்கள் முசௌரிக்குச் சென்று ஓய்வெடுத்தார். டென்னிஸ் விளையாண்டார். விருந்துகளில் கலந்து கொண்டார். குதிரைச் சவாரி செய்தார்.

செர்ரியோடு கொஞ்சம் உலவினார், கொஞ்சிக் குலவினார். பின்பு கபுர்தலாவுக்குத் திரும்பினார். அமைச்சரவையைக் கூட்டினார். எல்லோருடனும் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்தார். 'எப்பாடுபட்டாவது இளவரசருக்கு இந்தியப் பெண்ணொருத்தியை இரண்டாவது திருமணம் செய்து வைத்துவிட வேண்டும்.'

முறைப்பொண்ணு, ஒண்ணுவிட்ட மாமன் பொண்ணு, தூரத்து அக்கா மகள் யாராவது இருக்கிறார்களா என்று யோசித்துப் பார்த்தார். யாரும் இல்லை. அசலில் பார்க்க வேண்டியது தான் ஒரே வழி. உடனே, கல்யாண கமிட்டி ஒன்றைக் கட்டமைத்தார் மகாராஜா. திவான் ஜர்மானி தாஸ், நிதீமன்ற தலைமை நீதிபதி திவான் சுரேஷர் தாஸ் (Surresher Dass), மகாராணி ஹபன்ஸ் கவுரின் முதன்மைச் செயலாளர் சர்தார் பர்பூர் சிங் (Bharpur Singh), பெண் மருத்து வர் பெரைரா, டாக்டர் சோஹன் லால் (Sohan Lal) ஆகியோர் அந்தக் கமிட்டியில் இருந்தார்கள். அந்தக் கமிட்டியினர் முதலில் சமஸ்தானத்தில் ரெஸிடெண்டை அணுகினார்கள்.

'அய்யா, நாங்க எங்க இளவரசருக்கு ஓர் இந்தியப் பெண்ணை இரண்டாவது கல்யாணம் செஞ்சு வைக்கப் போறோம். ஆண் வாரிசுக்காக. உங்க ஆசிர்வாதமும், வைஸ்ராயின் சம்மதமும் தேவை.'

வைஸ்ராய்க்குத் தகவல் சென்றது. 'அதுக்கென்ன, தாராளமா செஞ்சு வையுங்க' - சம்மதித்தார். 'கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங், அவரது மூத்த மகனும் பட்டத்து இளவரசருமாகிய பரம்ஜித் சிங்குக்கு இரண்டாவது திருமணத்துக்காக வரன் தேடிக் கொண்டு இருக்கிறார். இந்த விஷயத்தில் அவருக்குத் தேவையான வசதிகளையும் உதவிகளையும் செய்து கொடுங்கள்' என்று வைஸ்ராயிடமிருந்து பஞ்சாப் கவர்னருக்குக் கடிதமொன்று சென்றது.

பரம்ஜித் சிங்குக்கு மும்மரமாக வரன் தேடிக் கொண்டிருக்கும் விஷயமறிந்தாள் ஸ்டெல்லா. அவளுக்குள் பயம் சூழ்ந்தது. புதிதாக ஒருத்தியுடன் இளவரசர் சென்றுவிட்டால் தன் கதி? இளவரசரின் மனநிலையைச் சோதனை செய்ய நினைத்தாள்.

'உங்களுக்கு ரெண்டாவது கல்யாணம் செஞ்சு வைக்கப் பொண்ணு பார்க்குறாங்களாமே? அப்போ, என்னை மறந்துருவீங்களா? நம்ம காதல் அவ்வளவுதானா?' கண்ணீரைக் கண்களில் தேக்கிக் கொண்டு, பரிதாபமாகக் கேட்டாள். துடித்துப் போனார் இளவரசர்.

'இல்லவே இல்லை டார்லிங். நடக்குற விஷயம் எதுலயும் எனக்கு உடன்பாடு இல்ல. என்னை நீ நம்பலாம். யார் என்ன சொன்னாலும், என் மனைவி நீ மட்டும்தான். வேறொரு பொண்ணுக்கு இனியும் என் வாழ்க்கையில் இடம் கிடையவே கிடையாது. இது சத்தியம்.'

அவரது வார்த்தைகளில் ஸ்டெல்லாவுக்கு நம்பிக்கை கொடுத்தன. அந்த நம்பிக்கையைத் தக்க வைத்துக் கொள்ளத் தனது பாசப் பிடியை மேலும் இறுக்க ஆரம்பித்தாள். கல்யாணக் கமிட்டி படு சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தது. பஞ்சாபின் கவர்னரிடமிருந்து சுற்றி யுள்ள சமஸ்தானங்களுக்கெல்லாம் தகவல் அனுப்பப்பட்டிருந்தது. அந்தந்தப் பகுதி தாசில்தார்களும், அரசு உயரதிகாரிகளும் தண்டோரா போட்டுச் செய்தி பரப்ப ஏற்பாடு செய்தார்கள்.

'இதனால் சகலமானவர்களுக்கும் அறிவித்துக்கொள்வது என்னவென்றால், கபுர்தலா சமஸ்தானத்தின் மகாராஜா மாண்புமிகு ஜெகத்ஜித் சிங்கின் இஷ்ட புத்திரரான மதிப்புக்குரிய

இளவரசர் பரம்ஜித் சிங் பகதூருக்கு இரண்டாவது திருமணத்துக்காக வரன் தேடிக் கொண்டிருக்கிறார்கள். ராஜபுத்திர குடும்பத்தைச் சார்ந்தவர்கள், தங்கள் வீட்டில் திருமண வயதில் பெண் இருந்தால் அணுகலாம். விரைவிலேயே சுயம்வரம் ஒன்று தரம்சாலாவில் (Dharamsala) வைத்து நடைபெற இருக்கிறது. டம் டம் டம்...'

இதே விஷயம் ஆங்காங்கே அறிவிப்புகளாக எழுதி வைக்கப்பட்டிருந்தது. துண்டுப் பிரசுரங்களாகவும் விநியோகிக்கப்பட்டது.

'உன் வீட்டுல கல்யாண வயசுல பொண்ணு இருக்குதே. நீ அழைச்சுட்டுப் போகலாம்பா.'

'என்ன கிண்டல் பண்ணுறியாப்பா. எங்க தகுதி என்ன? அது அரண்மனை சம்பந்தம்பா! நினைச்சே பார்க்கக்கூடாது.'

'அட, பைத்தியக்காரத்தனமாப் பேசாதேப்பா! பொது அறிவிப்புதானே கொடுத்திருக்காங்க. சும்மா போய்ப் பாரு. உம் பொண்ணுக்கே அதிர்ஷ்டம் அடிக்கலாம். அரண்மனை வாழ்க்கை, கசக்குதா என்ன?'

ஆங்காங்கே பொதுமக்கள் கூடிநின்று பேசிக் கொண்டார்கள். ராஜபுத்திர இளம் பெண்கள் பலர், காஸ்ட்லி கனவுக்கோட்டை கட்ட ஆரம்பித்திருந்தார்கள். பல பெண்களின் பெற்றோர் களே, தம் பெண்களுக்குச் சுயம்வரத்தில் எப்படியெல்லாம் நடந்துகொள்ள வேண்டுமென்று பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

ஹிமாச்சலப் பிரதேசத்தின் தரம்சாலா சுயம்வரத்துக்காக ஜரூராகத் தயாரானது. மாபெரும் தோட்டம் ஒன்றில் ஏராளமான வண்ண வண்ணக் கூடாரங்கள் அமைக்கப்பட்டன. கல்யாணக் கமிட்டியினருக்கு உதவுவதற்காக தர்மசாலாவின் உயர் அரசு அதிகாரிகள் முதல் ப்யூன் வரை தயாராக இருந்தார்கள். நான்கு பெண் மருத்துவர்கள், இரண்டு அறுவை சிகிச்சை நிபுணர்கள் கமிட்டியில் இணைந்து கொண்டார்கள். ராணுவ வீரர்கள், கூட்டத்தை ஒழுங்குபடுத்துபவர்கள், சமையல்காரர்கள், உணவு பரிமாறுபவர்கள், எடுபிடி வேலையாள்கள் என்று கமிட்டியினர் தவிர, நூறு பேர் இதர வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள்.

பெற்றோர்களும் உறவினர்களும் தங்கள் வீட்டுப் பெண்களை அழைத்துக் கொண்டு சுயம்வரத்துக்கு வர ஆரம்பித்தார்கள். அவர்களில் குறுநில மன்னர்களின், ஓரளவு பெருநில மன்னர்களின் குமாரத்திகளும் அடக்கம். வருபவர்களுக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது. பின்னர் அவர்களின் கையில் ஒரு நோட்டீஸ் திணிக்கப்பட்டது. அதில் சுயம்வரத்தில் கலந்து கொள்வதற்கான தகுதிகளும் விதிகளும் ஹிந்தியிலும் உருதுவிலும் அச்சிடப்பட்டிருந்தன.

★ மணப்பெண்ணின் வயது 17-க்குள் இருக்க வேண்டும்.

★ மணப்பெண் சராசரி உயரத்தில் இருக்க வேண்டும். ஒல்லியாக இருக்க வேண்டும். கட்டமைக்கப்பட்ட அழகுடன் இருக்கவேண்டும். (36-28-36 என்றால் புரியும்.)

★ மணப்பெண் சார்ந்த குடும்பத்தின் முந்தைய பத்து தலைமுறைக்கான மூதாதையர் விவரங்கள் தெளிவாகச் சொல்லப்பட வேண்டும். அவை சரிபார்க்கப்படும்.

★ மணப்பெண்ணுக்குக் கண்டிப்பாகக் கூடப்பிறந்த அண்ணனோ, தம்பியோ இருக்க வேண்டும். கூடப்பிறந்த சகோதரிகள் மட்டும் இருந்தால் வெளியேறிவிட வேண்டும்.

★ மணப்பெண்ணின் சகோதரருக்குத் திருமணம் ஆகியிருந்தால், அவருக்கு ஆண் வாரிசு இருக்க வேண்டும். வெறும் பெண் வாரிசு மட்டும் இருந்தால் வெளியேறிவிட வேண்டும்.

★ மணப்பெண்ணுக்கு எந்தவிதமான நோய்களும் இருக்கக்கூடாது. மருத்துவப் பரி சோதனையில் பரிபூரணமாகத் தேர்வாக வேண்டும்.

★ பெண் மருத்துவர்கள், மணப்பெண்ணைப் பல்வேறு பரிசோதனைகளுக்கு உட்படுத்துவார்கள். அதில் பாலியல் பரிசோதனைகளும் உண்டு. அதற்கெல்லாம் ஒத்துழைக்கச் சம்மதமிருந்தால் மட்டுமே சுயம்வரத்தில் கலந்துகொள்ளலாம்.

★ தேர்ந்தெடுக்கப்படும் மணப்பெண், கபுர்தலாவின் பட்டத்து இளவரசர் பரம்ஜித் சிங்குக்கு மனைவியாகும் அதிர்ஷ்டத்தைப் பெறுவார். கபுர்தலாவின் வருங்காலப் பட்டத்து ஆண் வாரிசைச் சுமக்கும் பாக்கியத்தைப் பெறுவார்.

★ தேர்ந்தெடுக்கப்படும் மணமகளின் பெற்றோர், மிகச் சிறந்த முறையில் கௌரவிக்கப் படுவார்கள். பெருமளவு சன்மானம் அவர்களுக்கு வழங்கப்படும்.

தேர்வு ஆரம்பமானது. பல கட்டத் தேர்வு. ஒவ்வொருவராக அனுமதிக்கப்பட்டனர். முதல் சுற்றில் நீதிபதி சுரேஷர் தாஸ், வந்திருந்த பெண்ணையும் அவளது பெற்றோர்களையும் குறுக்கு விசாரணை செய்தார். பெரும்பாலும் அவர்களது பரம்பரையில் யார் யாருக்கு எத்தனை ஆண் வாரிசுகள் என்பது சம்பந்தமாகத்தான் கேள்விகள் இருந்தன. சரியாகப் பதில் சொல்ல முடியாமல் தடுமாறியவர்கள் மரியாதையுடன் வெளியேற்றப்பட்டார்கள்.

இரண்டாவதாக இருந்த கூடாரத்தில் மகாராணியில் முதன்மைச் செயலாளர் பர்பூர் சிங், ஆவலோடு காத்திருந்தார். வந்திருந்தவர்களிடம் சில பொதுவான கேள்விகளைக் கேட்ட அவர், பெண்களின் அழகையும் கட்டழகையும் கண்களால் அளவிட்டார். வந்திருந்த பெண் சுமாராக இருந்தால் அவர் யோசிக்கவே இல்லை, உடனடியாக வெளியே அனுப்பினார். ஆனால் ஓரளவுக்கு அழகாக இருந்த பெண்களிடம் சில பொதுவான கேள்விகளைக் கேட்டு கடலை போட ஆரம்பித்தார்.

‘ஏ பொண்ணு, இப்படி வந்து நில்லு.’

உயரத்தை அளந்தார். அந்தப் பெண்கள் சங்கடத்தில் நெளிய ஆரம்பித்தனர்.

‘நீ எவ்வளவு எடை இருப்ப? அங்க அளவுகள் எல்லாம் என்ன? தெரியுமா? அளந்து பார்த்துடலாமா?’

பர்பூர் சிங்கின் அத்துமீறல்களைக் கண்ட சில பெற்றோர்கள் கொதித்துப் போனார்கள். சுயம்வரக் கூடாரங்கள் சலசலத்தன.



# காதல் பேரம்!

'என்னய்யா நடக்குது இங்க? சுயம்வரம்தான் நடக்குதா இல்ல வேற எதுவுமா?'
ஜிலுஜிலு தரம்சாலாவின் அந்தப் பசுமையான தோட்டத்தில் நின்றபடி ஒரு பெண்ணின் தந்தை ஆவேசமாகக் கத்திக் கொண்டிருந்தார். அவரது மகள் ஓரமாக நின்று கண்களைக் கசக்கிக் கொண்டிருந்தாள்.

'என்ன நடந்துச்சுன்னு அமைதியாச் சொல்லுங்க' - கல்யாண கமிட்டி உறுப்பினர் ஒருவர் கேட்டார்.

'அந்த ரெண்டாவது கூடாரத்துல இருக்குற ஆளு யாருயா? அவன் பாட்டுக்கு பொண்ணுங்ககிட்ட எல்லாம் அத்துமீறி நடந்துக்கிட்டு இருக்கான். அந்த ஆளு உடனே இங்க இருந்து வெளிய போகணும்.'

குற்றம் சாட்டப்பட்ட பர்பூர் சிங், கமிட்டியின் மற்ற உறுப்பினர்களால் விசாரிக்கப் பட்டார். ஆனால் அவரது சட்டையைப் பிடித்து உலுக்கி முகரையிலேயே ஓங்கி ஒரு குத்து குத்தி கேள்வி கேட்கும் அதிகாரமெல்லாம் யாருக்கும் இல்லை. காரணம் பர்பூர் சிங், மகாராணி ஹபன்ஸ் கவுரின் முதன்மைச் செயலாளர். அதிகாரத்தை இஷ்டத்துக்கு நீட்டிக் கொள்ளும் அதிகாரம் அவருக்கிருந்தது.

'என்ன பர்பூர் சிங், என்னென்னமோ குற்றச்சாட்டெல்லாம் வருதே' திவான் ஜர்மானி தாஸ் கொஞ்சம் மெதுவாகத்தான் கேட்டார். கடுகடுவென முகத்தை வைத்திருந்த பர்பூர் சிங்கிடம் இருந்து பதிலே வரவில்லை.

‘என்னங்க பதில் சொல்லாமலேயே சும்மா இருக்கீங்க? சுயம்வரத்துக்கு வந்திருக்கிற பெண்களை அளவெடுக்குற அதிகாரத்தை உங்களுக்கு யார் கொடுத்தது? கேட்கறதுக்கு பதில் சொல்லுங்க’ - அங்கிருந்த ஒரு பெண் டாக்டர் ஆவேசப்பட்டார்.

‘மகாராணி என்னென்ன சோதனைகள் எல்லாம் செய்யச் சொன்னாங்களோ, அதைத்தான் நான் செஞ்சேன். இப்படி என்னை நிக்க வைச்சுக் கேள்வி கேட்குற உரிமை உங்க யாருக்கும் இல்லை. புரிஞ்சுதா?’ - பர்பூர் சிங் அங்கிருந்து விருட்டென வெளியேறினார். அதற்குப் பின் சுயம்வரம் தொடர்ந்தது.

மூன்றாவதாக அமைக்கப்பட்டிருந்த கூடாரத்தில் நான்கு பெண் மருத்துவர்கள், அரண்மனைத் தலைமைப் பெண் மருத்துவர் பெரைராவின் தலைமையில் கூடியிருந்தனர். அன்றைய அதி நவீன மருத்துவ உபகரணங்கள் அங்கு இருந்தன. உள்ளே நுழையும் பெண்கள் அவற்றை யெல்லாம் பார்த்து மிரண்டு போனார்கள். சில பெண்கள் அலறி அடித்துக் கொண்டு வெளியே ஓடவும் செய்தார்கள். பெண் டாக்டர்கள் அந்தப் பெண்களை வலுக்கட்டாயமாக இழுத்துவர வேண்டிய நிலைக்கு ஆளானார்கள்.

ஒவ்வொரு பெண்ணுக்கும் உச்சி முதல் பாதம் வரை அணு அணுவாக மருத்துவப் பரி சோதனை நடத்தப்பட்டது. ரத்தம், சிறுநீர், அது, இது, அந்த விஷயம், இந்த விஷயம் என எந்த விஷயத்தையும் விட்டுவைக்கவில்லை. குறிப்பாகக் குழந்தை பெற்றுக் கொள்வதற்கேற்ப அவர்களது கர்ப்பப்பை உறுதியாக இருக்கிறதா என்று பரிசோதனை செய்தார்கள். ஒவ்வொரு பெண்ணுக்கும் எடுக்கப்பட்ட சோதனைகளின் முடிவை, டாக்டர் பெரைரா, டாக்டர் சோஹன் லாலுடன் சேர்ந்து ஆலோசித்தார்.

நூற்றுக்கும் மேற்பட்ட பெண்கள், சுயம்வர முடிவை அறிந்துகொள்ளச் சுற்றி அமைக்கப் பட்டிருந்த பல்வேறு கூடாரங்களில் ஆவலோடு காத்திருந்தார்கள். அவர்கள் ஓய்வெடுப்பதற்கு வசதிகள் செய்யப்பட்டிருந்தது. நல்ல முறையில் உண வும் அளிக்கப்பட்டது. ஒருவழியாக திவான் ஜர்மானி தாஸ், ரிசல்ட்டுடன் வந்தார். வந்து ஒரே ஒரு பெயரை மட்டும் உச்சரித்தார்.

‘கங்ரா ராஜபுத்ர பரம்பரையைச் சேர்ந்த குமாரி லீலாவதி தேவி...’

தரம்சாலாவில் சுயம்வரத்தில் சுமார் இருநூற்றைம்பது பெண்கள் கலந்து கொண்டார்கள். அவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவள் லீலாவதி மட்டுமே. ஆனால் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்தப் பெண் மகாராஜாவுக்கும் மகாராணிக்கும் பிடிக்க வேண்டுமே. ஒரே ஒரு பெண் ணோடு செல்லுதல் ரிஸ்க் ஆயிற்றே. எனவே கல்யாணக் கமிட்டியினர், தங்கள் தேடலை அத்தோடு நிறுத்திக் கொள்ளாமல் வேறு வேறு சமஸ்தானங்களில் சுயம் வரத்தைத் தொடர்ந்தார்கள். ஒவ்வொரு இடத்திலும் நூற்றுக்கணக்கான பெண்கள் கலந்து கொண்டார்கள்.



இளவரசி ஸ்டெல்லா

இறுதியில் லீலாவதியையும் சேர்த்து மொத்தம் நான்கு ராஜபுத்ர மணமகள்களைத் தேர்ந் தெடுத்தார்கள். 'கண்டிப்பா யாராவது ஒருத்தியை மகாராஜாவுக்குப் பிடிக்கும்' என்ற நம்பிக்கை கமிட்டியினர் அனைவருக்கும் வந்தபின்பு தேடலை நிறுத்திக் கொண்டார்கள். அந்த நான்கு பேரழகு மணமகள்களுக்கும் சில பயிற்சிகள் கொடுக்கப்பட்டன. மகாராஜாவிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும், மகாராணியிடம் எப்படிப் பேச வேண்டும், இளவரசரிடம் எப்படிப் பழக வேண்டும் என்பது போன்ற பயிற்சிகள் அவை.

அன்று ஃபைனல். ஏற்கெனவே நான்கு மணமகள்களும் கபுர்தலாவுக்கு வரவழைக்கப் பட்டிருந்தார்கள். ஏராளமான பணிப்பெண்கள், அந்த மணமகள்களை நீராட்டி, சீவிச் சிங்காரித்து, சிறப்பான நகைகளால் அலங்கரித்து விட்டிருந்தனர். நான்கு பேரும் தனித்தனி கார்களில் ஏறினார்கள். கார்கள் ஜெகத்ஜித் அரண்மனையை நோக்கி ஊர்வலம் சென்றன.

கல்யாணக் கமிட்டியினர், மகாராஜாவின் வருகைக்காகக் காத்திருந்தனர். வந்தார். திவான் ஜர்மானி தாஸ், ஒவ்வொரு பெண்ணாக அழைத்தார். அந்தப் பெண் பற்றிய விவரங்களையும் சொன்னார். ஜெகத்ஜித் சிங், நான்கு பெண்களையும் பார்த்தார். சில நிமிடங்கள் எதுவுமே பேசவில்லை. அவர் ஆழ்ந்த யோசனையில் இருக்கிறார் என்பதைக் கண்கள் சொல்லின.

'இவள்தான் புதிய இளவரசி' - மகாராஜாவின் வலக்கரத்தின் ஆள்காட்டி விரல் நீண்ட திசை யில் நின்று கொண்டிருந்தாள் லீலாவதி. உலக அழகிப் போட்டியில் பட்டத்தை வென்ற அழகிகள் எல்லாம் வென்ற பின்பு ஒரே போல முகபாவனைகளைக் கொட்டுவார்களே, லீலாவதி அப்படியெல்லாம் வாய் பிளந்து கன்னங்களில் கைகளை வைக்கவில்லை. தலை குனிந்தாள். காரணம் வெட்க ஈர்ப்பு விசை. மற்ற மூன்று மணமகள்களும் தலையைக் குனிந்து விம்மியபடியே அந்த அரண்மனையை விட்டு வெளியேறினார்கள். சோக ஈர்ப்பு விசை.

தனது புதிய மருமகளைக் காண ஆவலோடு காத்திருந்தார் ஹபன்ஸ் கவுர். லீலாவதி, மகாராணியின் எலிஸீ அரண்மனைக்குச் சென்றாள். மாமியாரின் பாதங்களைச் சரணடைந்தாள். அவளைக் கைப்பிடித்துத் தூக்கி உச்சி முகர்ந்தார் மகாராணி. உடனடியாக திருமணத்துக்கான நாள் குறிக்கப்பட்டது. சமஸ்தானத்தின் ரெஸிடெண்டுக்கும், பஞ்சாப் கவர்னருக்கும், வைஸ்ராய்க்கும் செய்தி தெரிவிக்கப்பட்டது.

'முக்கியஸ்தர்கள் யாரும் விட்டுப் போய்விடக்கூடாது. என் சார்பாக எல்லோரையும் திருமணத்துக்கு அழைத்துவிடுங்கள். வைஸ்ராய், பக்கத்து சமஸ்தான மகாராஜாக்கள் போன்ற ஒரு சிலரை மட்டும் நானே நேரில் சென்று அழைக்கிறேன். மற்ற மன்னர்கள், பிரிட்டிஷ் உயரதிகாரிகள், கவர்னர்கள், அரசியல் தலைவர்கள், தொழிலதிபர்களை அழைக்க வேண்டிய தெல்லாம் உங்கள் பொறுப்பு. திருமணத்துக்கு வரும் யாருக்கும் எந்த ஒரு சிறு குறையும் ஏற் பட்டு விடக்கூடாது.' - ஜெகத்ஜித் சிங் மிகவும் உற்சாக இருந்தார். மகாராஜாவின் கட்டளைப் படி, பிரதம அமைச்சர் திருமணச் செலவுகளுக்காக ஒதுக்கிய தொகை முப்பது லட்சம்.

யாருக்கோ கல்யாணம் என்கிற ரீதியில் இருந்தார் இளவரசர் பரம்ஜித் சிங். ஜரூராக நடந்து கொண்டிருந்த ஏற்பாடுகள் எதையுமே அவர் கண்டுகொள்ளவில்லை. 24X7 மணி நேரமும் தனது காதலி ஸ்டெல்லாவின் மூச்சுபடும் தூரத்திலேயே இருந்தார். ஆனால் திருமணத்துக்கான நாள் நெருங்க நெருங்க ஸ்டெல்லாவுக்குள் நெருப்பு பரவத் தொடங்கியது. எதிர்காலம் சம்பந்தமான கேள்விகள் அவளை வாட்டின. மந்தகாசப் பொழுதொன்றில் வெடித்தாள் அவள்.

‘உங்கள் சம்மதம் இல்லாமலா இவ்வளவு ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருக்கின்றன?’

‘எதைச் சொல்கிறாய் டார்லிங்?’ பரம்ஜித் சிங்கிடமிருந்து பதில் கேள்வி அசிரத்தையாக வந்து விழுந்தது.

‘நடிக்காதீர்கள். நான்கு நாள்களில் நீங்கள் இரண்டாவது திருமணம் செய்து கொள்ளப் போகிறீர்கள். சமஸ்தானமே கோலாகலமாகத் தயாராகி வருகிறது. விருந்தினர்கள் வர ஆரம்பித்துவிட்டார்கள். உங்கள் வேஷத்தை எப்போது கலைக்கப் போகிறீர்கள்?’

‘அய்யோ.. என்ன உளறுகிறாய் நீ? உன்னை விட்டு நான் வேறெங்காவது செல்கிறேனா, நீயே சொல். எனக்கு இன்னொரு திருமணம் செய்து வைத்துவிடலாம் என்று மகாராஜா பகல் கனவு கண்டு கொண்டிருக்கிறார். இதுவரை என்னிடம் ஒரு வார்த்தைகூடக் கேட்கவில்லை. எவளோ ஒருத்தியைத் திருமணம் செய்துகொள்ள நான் என்ன முட்டாளா? என் தந்தை அவமானப்படப் போகிறார். ஸ்டெல்லா, ஒன்றை மட்டும் புரிந்துகொள். இனியும் என் வாழ்வில் திருமணம் என்ற ஒன்று நடக்குமானால் அது உன்னுடன் மட்டும்தான்.’

‘போதும் நிறுத்துங்கள். இதற்கு மேலும் நான் ஏமாறத் தயாராக இல்லை. இந்தத் திருமணத்தில் சம்மதம் இல்லை என்று என்னிடம் மட்டும்தானே சொல்கிறீர்கள். ஆனால் இதுவரை திருமணத்தை நிறுத்த ஏதாவது முயற்சி செய்தீர்களா? இல்லையே. உங்கள் முகத்திரை கிழிந்து விட்டது. சாயம் வெளுத்துவிட்டது. இன்னொருத்தியுடன் வாழத் தயாராகி விட்டீர்கள். இனி நான் எதற்கு அநாவசியமாக? நான் போகிறேன். உங்களை விட்டு. கபுர்தலாவை விட்டு. இந்தியாவை விட்டே செல்கிறேன்.’

அருமைக் காதலியின் அந்த அமில வார்த்தைகளைத் தாங்க முடியாத இளவரசருக்குத் தலை சுற்ற ஆரம்பித்தது. ‘ஸ்டெல்லா, என்னை விட்டுப் போகாதே...’ - தடுமாறிக் கீழே விழுந்தார். தலையில் லேசான அடி. மயக்கம். ஸ்டெல்லா கண்டுகொள்ளவில்லை. உள்ளே சென்று தன் உடைமைகளை பெட்டி கட்ட ஆரம்பித்தாள். குறிப்பாக இளவரசர் காதல் மயக்கத்தில் அளித்த நகைகளை, பரிசுப் பொருள்களை எல்லாம் கவனமாக எடுத்து வைக்க ஆரம்பித்தாள்.

காட்டேஜிலிருந்த பணியாளர்கள், டாக்டர் சோஹன் லாலுக்குத் தகவல் கொடுத்தார்கள். அவர் ஓடோடி வந்தார். நாடித்துடிப்பைப் பார்த்தார். முகத்தில் தண்ணீர் தெளித்துப் பார்த்தார். மயக்கம் தெளிவிக்கும் உப்பை (வேதியியல்தனமாகச் சொன்னால் அம்மோனியம் கார்பனேட்) இளவரசரின் நாசிக்கருகே கொண்டு சென்றார். மயக்கம் தெளியவில்லை. இளவரசர் கிட்டத்தட்ட கோமா ஸ்டேஜுக்குச் சென்றிருந்தார். மகாராஜாவுக்குத் தகவல் போனது. துடிதுடித்துப் போனார். விஷயமறிந்த மணப்பெண் லீலாவதியும் கண்ணீர்க் கோலம் போட்டாள்.

‘ஏன் இப்படிச் சோதனை மேல் சோதனை. மயக்கம் தெளிய வைக்க வேற வழியே இல்லையா?’ டாக்டரிடம் பரிதாபமாகக் கேட்டார் ஜெகத்ஜித் சிங்.

இளவரசரின் மயக்கத்துக்கு முன் நடந்தச் சம்பவங்களைப் பணியாளர்களிடம் கேட்டு தெரிந்து வைத்திருந்தார் டாக்டர். அவற்றை மகாராஜாவிடமும் சொன்னார். ‘ஸ்டெல்லா தன்னை விட்டுப் போறேன்னு சொன்னதை இளவரசரால தாங்கிக்க முடியலை. ஸ்டெல்லா, இள வரசரை விட்டுப் பிரியக்கூடாதுன்னா இந்தத் திருமணத்தை நிறுத்தணும். திருமணம்

நின்னுபோன தகவலை இளவரசருக்கு எப்படியாவது தெரிய வைச்சுட்டோம்னா போதும். அவர் இந்த மயக்கத்துல இருந்து எழுந்துடுவாரு. அதுவும் குறிப்பா ஸ்டெல்லா அவர் காதோரமா அன்பா கொஞ்ச நேரம் சத்தமாப் பேசுனாப் போதும். இளவரசர் பொழைச்சுக்கு வாரு.'

டாக்டரின் வார்த்தைகள் மகாராஜாவுக்கு மயக்கத்தை வரவழைத்தன. 'என்ன சொல்லுறீங்க டாக்டர், எல்லா ஏற்பாடுகளும் செஞ்சு வைச்சாச்சு. எல்லா முக்கியஸ்தர்களுக்கும் அழைப்பு கொடுத்தாச்சு. ஏகப்பட்ட பணம் செலவழிச்சாச்சு. விருந்தினர்கள் வர ஆரம்பிச்சுட்டாங்க. இந்த நேரத்துல திருமணத்தை நிறுத்தணும்னு சொன்னா எப்படி? அது எனக்குப் பெரிய அவ மானம். வாய்ப்பே இல்லை.'

'கோமா மயக்கத்துல இளவரசரும் மணமகனா ஆகறதுக்கு வாய்ப்பு இல்லையே மகா ராஜா.'

ஜெகத்ஜித் சிங் அமைதியானார்.

'கவலைப்படாதீங்க மகாராஜா. முதல்ல இளவரசரோட உயிரைக் காப்பாத்துவோம். அப்புறம், ஸ்டெல்லாவை சரிகட்டற விதத்துல சரிகட்டி, அவளோட சம்மதத்தோடே திருமணத்தை நடத்திடலாம்' - டாக்டர் சொன்ன ஆலோசனை, ஜெகத்ஜித் சிங்குக்கு ஆறுதலாக இருந்தது. திட்டத்துக்குச் சம்மதித்தார்.

ஸ்டெல்லாவின் வேலைக்காரி மூலமாக அவளுக்குத் தூது அனுப்பப்பட்டது. பேச்சு வார்த்தை நடந்தது. பேரம் நடந்தது. 'கல்யாணச் செலவோடு செலவா நினைச்சுக்கோங்க. அவ கேட் குறதைக் கொடுத்துருங்க' டாக்டர் மகாராஜாவிடம் சொன்னார்.

இறுதியில் ரூபாய் பத்து லட்சமும், சில மதிப்புமிக்க ராஜ நகைகளும் ஸ்டெல்லாவிடம் கைமாறின. அவள் மனம் மாறினாள். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை மட்டும் விதித்தாள்.



# 68

# சனி முகூர்த்தம்

‘இளவரசருக்கு இன்னொரு திருமணம் செய்து வைப்பதில் எனக்கு ஆட்சேபணை எதுவும் இல்லை. ஆனால் அந்தத் திருமணத்துக்குப் பிறகும் இளவரசர் எப்போதும் என்னுடன்தான் இருப்பார்’ - ஸ்டெல்லா அழுத்தமாகச் சொன்னாள்.

‘அட, என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? அவருக்கு ஓர் ஆண் வாரிசு பிறக்க வேண்டும் என்றுதானே இந்தத் திருமண ஏற்பாடுகளே நடக்கின்றன. அது உங்களுக்குத் தெரியாதா என்ன?’ டாக்டர் சோஹன் லால் பதறினார்.

‘எல்லாம் தெரியும். அவசரப்படாதீர்கள். நான் சொல்வதைப் பொறுமையாகக் கேளுங்கள். இல்லாவிட்டால் இடத்தைக் காலி செய்யுங்கள்’ எகிறினாள் ஸ்டெல்லா.

‘நீங்களே சொல்லுங்கள்’ என்று வாய் பொத்தி நின்றார் டாக்டர்.

‘இளவரசர் வாரம் முழுவதும் என்னுடன்தான் இருப்பார். வாரத்தில் ஒரே ஒரு நாள், அதுவும் ஒரே ஒரு மணி நேரம் மட்டும் அவருக்கு அனுமதி கொடுப்பேன், புது மனைவியுடன் இருக்க. சனிக்கிழமை என்று வைத்துக் கொள்ளலாம். அந்தப் பெண் கர்ப்பம் தரித்துவிட்டால், அந்த நேர ஒதுக்கீடு கூடக் கிடையாது. சம்மதம் என்றால் சொல்லுங்கள். இளவரசரை உடனே பிழைக்க வைக்கிறேன்.’

எச்சில் விழுங்கினார் டாக்டர். ‘பெண்ணா இவள்? எவ்வளவு வில்லத்தனம்?’ மனத்துக்குள் திட்டினாலும், அவள் அந்த அளவுக்கு இறங்கி வந்ததே



இளவரசர் பரம்ஜித் சிங்

அப்போதைக்குப் போதுமானதாகவும் இருந்தது. ஸ்டெல்லாவின் நிபந்தனை குறித்து ஜெகத்ஜித் சிங்குக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. அவருக்குக் கோபம் மூக்குக்கு மேல் எட்டிப் பார்த்தது. அதனைத் தட்டி விட்டார் டாக்டர்.

'தயவுசெய்து பொறுமையாக இருங்கள் மகாராஜா. கல்யாணம் கெட்டுவிடக்கூடாது என்பதே நம் இப்போதைய நோக்கம். அவளது கேடுகெட்ட நிபந்தனைக்குச் சம்மதம் என்று ஒப்புக்குச் சொல்வதில் எதுவும் குறைந்துவிடாது. இளவரசர் மயக்கத்திலிருந்து மீள வேண்டுமே?'

பல்லைக் கடித்துக் கொண்ட ஜெகத்ஜித் சிங், அமைதி யானார். நிபந்தனைக்குச் சம்மதம் தெரிவிக்கப்பட்டது. ஸ்டெல்லா, இளவரசர் பரம்ஜித் சிங்கின் படுக்கைக்கு அருகே சென்றாள். அவர் அருகில் உட்கார்ந்தாள். மென்மை யாக அவரது தலைமுடியைக் கோதி விட ஆரம்பித்தாள். காதருகே குனிந்து சத்தமாகக் கொஞ்சிப் பேச ஆரம்பித்தாள்.

'டார்லிங்.. என்னோட செல்ல டார்லிங், எழுந்திரிங்க! உங்க ப்ரியமான காதலி ஸ்டெல்லா வந்திருக்கேன். என்னோட அன்பான பரம்ஜித், கண்ணைத் தொறந்து பாருங்க. மகாராஜா, உங்க ரெண்டாவது கல்யாணத்தை நிறுத்திட்டாரு. இனிமே உங்க ஸ்டெல்லா எப்பவுமே உங்க கூடவேதான் இருப்பேன். உங்களை விட்டு எங்கேயும் போக மாட்டேன். எழுந்திருங்க டார்லிங்!'

சில நிமிடங்கள் அவரது காதருகே, சத்தம்போட்டுப் பேசிக் கொண்டே இருந்தாள். பலன் கிடைத்தது. இளவரசரின் உடலில் லேசான அசைவுகள் தெரிய ஆரம்பித்தன. உதடுகள் லேசாக விரிந்தன. மூடிய இமைகளுக்குள் கருவிழிகள் அசைவது தெரிந்தது. மெல்ல கண்விழித்துப் பார்த்தார்.

ஸ்டெல்லாவைத் தரிசித்தார். மறுநொடியே அவரது கண்கள் கலங்கின. ஸ்டெல்லா அவரைத் தேற்றினாள். டாக்டர், அவருக்குச் சில சிகிச்சைகள் கொடுத்தார். இளவரசர் தேறியதும், ஸ்டெல்லா அந்த விஷயத்தைச் சொன்னாள்.

'நீங்க ரெண்டாவது கல்யாணம் செஞ்சுக்கோங்க. எனக்குச் சம்மதம்.'

'என்ன உளறுகிறாய் நீ? நான் உனக்குத் துரோகம் செய்ய மாட்டேன். யாரோ உன்னைக் குழப்பியிருக்கிறார்கள்? சொல், யார் உன்னை மிரட்டியது?' பரம்ஜித் சிங், பதறினார்.

'டார்லிங், எதையும் போட்டுக் குழப்பிக்காதீங்க. யாரும் என்னை மிரட்டல. நானே சொல்லுற முடிவுதான் இது. எல்லாம் உங்களோட ஆண் வாரிசுக்காக நடக்குற ஏற்பாடுதானே. கல்யாணத்துக்கு அப்புறமும் நீங்க என்னோடயே எப்பவும் இருக்கணும். அது போதும் எனக்கு.'

ஸ்டெல்லாவின் வார்த்தைகளுக்குப் பணிந்தார் இளவரசர். சமஸ்தானம் விழாக்கோலம் பூண்டது. லீலாவதி திருமணக்கோலம் பூண்டாள். திருமணத்துக்கு இரண்டு நாள்கள்

முன்பிருந்தே எந்தவித முரண்டும் செய்யாமல் மதச் சடங்குகளில் கலந்து கொண்டார் இளவரசர்.

வைஸ்ராய் வெலிங்டன் தலைமையில் திருமணம் ஜாம்ஜாமென்று நடந்தது (1932). 'சீக்கிரமே ஆண் வாரிசு பிராப்திரஸ்து' என்ற அர்த்தத்தில் வாழ்த்தினார் வைஸ்ராய். ஆயிரக்கணக்கான விருந்தினர்கள். அவர்களுக்கு எல்லாம் ஐரோப்பிய பாணி விருந்து பரிமாறப்பட்டது. பல்லா யிரக்கணக்கான சமஸ்தான பொதுமக்களுக்கு இந்திய பாணி விருந்து அளிக்கப்பட்டது.

யார் யாரோ வந்து கலந்து கொண்ட திருமண விழாவை இருவர் மட்டும் தவிர்த்தனர். ஒருவர், இளவரசரின் முதல் மனைவி இளவரசி பிருந்தா. இரண்டாமவர் ஸ்டெல்லா. அந்தச் சமயத்தில் டெஹ்ராடூனுக்குச் சென்றுவிட்டாள். அங்கே இரண்டு வாரங்கள் உல்லாசமாக ஓய்வெடுத்தாள். அவளுக்கு பாதம் பகதூர் என்பவர் கம்பெனி கொடுத்தார். அவரும் அவளுடைய பாய் ப்ரெண்டுகளில் ஒருவர் என்றொரு செய்தி உண்டு.

சர்வ திருமணச் சடங்குகளும் சிறப்பாக நடந்தன, சாந்தி முகூர்த்தத்தைத் தவிர.

இளவரசர் அதைப் பற்றியெல்லாம் இம்மியளவுகூடக் கவலைப்படவில்லை. ஓய்வெடுக்கச் சென்றுவிட்டார். மகாராணி ஹபன்ஸ் கவுர், தன் புதிய மருமகள் லீலாவதியைச் சமாதானப் படுத்தினார். இருந்தாலும் அவளால் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. சனிக் கிழமைக்காகக் காத்திருக்க ஆரம்பித்தார் மகாராஜா.

ஆனால் சனிக்கிழமையன்று இளவரசர் கபுர்தலாவிலேயே இல்லை. டெஹ்ராடூனிலிருந்து திரும்பினாள் ஸ்டெல்லா. இருவரும் தங்கள் இயல்பு வாழ்க்கையை ஸ்டெல்லா காட்டேஜில் தொடர்ந்தனர். ஆனால் கல்யாணமாகியும் பிரம்மச்சாரினியாக நாள்களைக் கழிக்க ஆரம்பித்தாள் லீலாவதி.

சனிக்கிழமைகள் மட்டும் வந்து போய்க் கொண்டிருந்தன. ஆனால், ஒருமுறைகூட பரம்ஜித் சிங், லீலாவதியைப் பார்க்க வரவில்லை. கடும் மன உளைச்சலில் இருந்த மகாராணி ஹபன்ஸ் கவுர், இளவரசருக்குப் பலமுறை செய்தி அனுப்பிப் பார்த்தார். பதில் வரவில்லை.

'என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாள் அந்த ஸ்டெல்லா? அவள் போட்ட நிபந்தனையை அவளே மீறுகிறாளே? எனக்கு வருகிற ஆத்திரத்துக்கு...' - கொதிப்பில் இருந்த மகாராஜாவைச் சமாதானப்படுத்த வேண்டியிருந்தது. ஸ்டெல்லாவைக் கோபித்துக் கொண்டால், இளவரசரும் கோபித்துக் கொள்வாரே. அமைதியாக மீண்டும் பேச்சுவார்த்தை நடத்தத் தயாரானார்கள்.

'இளவரசர் அங்கே வருவதும் வராததும் அவர் இஷ்டம். ஒவ்வொரு சனிக்கிழமையும் அவர் அங்கே வராவிட்டால் அதற்கு நான் எப்படிப் பொறுப்பாக முடியும்?' ஸ்டெல்லா வாதம் செய்தாள்.

'மேடம், நாங்கள் உங்களைக் குறை கூறவில்லை. நீங்கள்தான் எடுத்துச் சொல்லி அவரை எப்படியாவது அனுப்பிவைக்க வேண்டும். இது எங்கள் வேண்டுகோள்' - டாக்டர் சோஹன் லால் கேட்டுக் கொண்டார். அடுத்த சனிக்கிழமை அனுப்பி வைப்பதாக வாக்குறுதி கொடுத் தாள் ஸ்டெல்லா. மகாராணிக்கும் லீலாவதிக்கும் தகவல் சென்றது. புன்னகை என்பதையே சுத்தமாக மறந்து போயிருந்த லீலாவதி, பல மாதங்கள் கழித்து மகிழ்ச்சியில் உதடுகள் விடுத்தாள்.

'வர்ற சனிக்கிழமை சாயங்காலம் ஏழுல இருந்து எட்டுதானே சொன்னீங்க? அந்த நேரம் பிரமாதமா இருக்கு. கிரகங்களும் சாதகமா இருக்கு. சாந்தி முகூர்த்தத்தை அப்பவே வைச்சுக் கோங்கோ. ஆண் வாரிசு பிறக்க நிறைய வாய்ப்பிருக்கு.' - ஜோதிடர் ஒருவர் கூறினார். மகா ராணியின் அரண்மனையான எலிஸீ, அந்த நிகழ்வுக்காகத் தயார் செய்யப்பட்டது.

சனிக்கிழமை உதித்தது. லீலாவதியை அலங்கரிப்பதற்காகவும், கவனித்துக் கொள்வதற்காகவும் நாற்பது பணிப்பெண்களை நியமித்திருந்தார் மகாராணி.

காலையிலிருந்தே அவர்கள் லீலாவதியைத் தயார் செய்ய ஆரம்பித்தார்கள். நகங்களை வெட்டி சரிசெய்து, விரல்களுக்கு சொடுக்கெடுத்து, உடலெல்லாம் மூலிகை எண்ணெய் தடவி மசாஜ் செய்து, பின் வாசனைத் திரவியங்களால் குளிப்பாட்டி, கூந்தலை அலசி, உலர்த்தி, சிக்கெடுத்து, உடலெங்கும் வாசனைப் புகை போட்டு பலப் பல வேலைகள்.

தங்க இழைகளாலும் வெள்ளி இழைகளாலும் நெய்யப்பட்ட பட்டுச்சேலை கட்டி விடப்பட்டது. அன்றைய தினம் லீலாவதி அணிவதற்காகவே புதிய நகைகளை செய்து வைத்திருந்தார் மகாராணி. சிகையலங்காரம், நகையலங்காரம், உடையலங்காரம் எல்லாம் முடிந்திருந்தன. இளவரசருக்கு ஐரோப்பிய வாசம் பிடிக்குமே. பாரிஸ் நகரிலிருந்து வரவழைக்கப்பட்ட வாசனைத் திரவியங்கள், லீலாவதி மேல் பூசப்பட்டன. ஆறு மணிக்கே அவள் பரிபூரணமாகத் தயாராக இருந்தாள். 'இன்று தேவதையாக ஜொலிக்கும் இவளைப் பார்த்துவிட்டால் போதும். என் மகன் நிச்சயம் கிறங்கி விடுவான்' என்று தோன்றியது மகாராணிக்கு.

ஆனால் இளவரசர்? அவர் ஸ்டெல்லா காட்டேஜில்தான் இருந்தார். அவருக்கும் ஸ்டெல்லா வுக்கும் தீவிர வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது.

'இப்போது நான் போக வேண்டும் என்கிறாயா? இல்லை, வேண்டாம் என்கிறாயா?'

'அது உங்கள் சௌகரியம். ஆனால் உங்கள் குடும்பத்தினர் யாரும் இனிமேல் இதுகுறித்து எனக்குத் தொந்தரவு தரக்கூடாது.'

'ஆம். பெரும் தொல்லைதான். இன்றோடு அதற்கு முடிவு கட்டுகிறேன். கிளம்புகிறேன்.'

'ஞாபகம் இருக்கட்டும். சரியாக இரவு எட்டு மணிக்கு நீங்கள் இங்கே இருக்க வேண்டும்' சொல்லி அனுப்பினாள் ஸ்டெல்லா. எலிஸீ அரண்மனைக்கு இளவரசரின் கார் வந்து நின்றது. அவரது பணியாளர் ஒரு பெட்டியோடு உள்ளே நுழைந்தார். அதில் இரண்டு செட் பைஜாமாக்கள் இருந்தன. பின்னாலேயே இளவரசரும் நுழைந்தார்.

அரண்மனையின் வரவேற்பறையில் மகாராணி, சில அமைச்சர்கள், முக்கிய உறவினர்கள், டாக்டர் பெரைரா உள்பட பலர் காத்திருந்தார்கள். கடுகடுவென அந்த ஹாலைக் கடந்த பரம்ஜித் சிங், யாரையும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. நேராக லீலாவதி காத்திருந்த அறைக்குள் சென்றார். வரவேற்பறையில் இருந்த மதகுருமார்கள், பிரார்த்தனை செய்ய ஆரம் பித்தார்கள். அப்போது மணி சரியாக ஏழு. மகாராணிக்கு நிம்மதியாக இருந்தது. ஜெகத்ஜித் சிங்குக்குத் தகவல் அனுப்பப்பட்டது.

ஏழு ஐம்பத்தைந்துக்கு இளவரசர், வெளியே வந்தார். நடையில் வேகம் குறைந்திருந்தது. 'நான் செல்கிறேன்' என்று கடுகடுப்பு குறையாமல் தன் தாயாரைப் பார்த்துச் சொல்லிவிட்டு வெளியேறினார். மறுநாளே அவரும் ஸ்டெல்லாவும் வழக்கம்போல பிரான்ஸ் சுற்றுப் பயணத்துக்குக் கிளம்பினார்கள்.

அன்றைய தினத்திலிருந்து இரண்டாவது மாதமே நல்ல செய்தி சொன்னாள் லீலாவதி. பூரித்துப் போனார் மகாராணி. புளகாங்கிதமடைந்தார் மகாராஜா. விசுவாசமான சமஸ்தான மக்களும் தங்கள் குல தெய்வங்களைக் கும்பிட்டுக் கொண்டார்கள். பத்தாவது மாதத்தில் லீலாவதி ஏமாற்றவில்லை.

வாக்குக் கொடுத்தபடியே கபுர்தலாவின் குருத்வாராவில் மாபெரும் விழா ஒன்றுக்கு ஏற்பாடு செய்தார் ஜெகத்ஜித் சிங். பத்தாயிரம் பேர் அழைக்கப்பட்டிருந்தார்கள். ஜெகத்ஜித் தாத்தா, தன் பேரனை மடியில் போட்டுக் கொண்டார். பெயர் சூட்டினார். சுக்ஜித் சிங் (Sukhjit Singh). புனித நூலான கிரந்த் சாஹிப் முன் மீண்டும் ஒருமுறை வாக்குறுதி கொடுத்தார். 'நான் என் பேரனை மதக் கட்டுப்பாடுகளின்படி, ஓர் உண்மையான சீக்கியனாக வளர்ப்பேன். ஒரு சீக்கியரின் அடையாளங்களான கேஷ், கன்கா, கரா, கிர்பான், கச்சா - ஆகிய ஐந்தையும் என் பேரன் எப்போதும் கட்டிக் காப்பான்.' பல்வேறு மதச் சடங்குகளுடன் விழா இனிதே நிறை வுற்றது.

ஆனால் பரம்ஜித் சிங், அந்த சனிக்கிழமைக்குப் பிறகு ஒருமுறைகூட லீலாவதியைப் பார்க்க வரவேயில்லை. பிறந்த தன் மகனைப் பார்க்க வேண்டும் என்றுகூட அவருக்குத் தோன்ற வில்லை. அந்தச் சமயத்தில் கர்ப்பமாக இருந்த ஸ்டெல்லாவைக் கவனிப்பதில் பிஸியாக இருந்தார்.

லீலாவதி மனத்தளவில் மிகவும் பாதிக்கப்பட்டாள். கொஞ்சம் கொஞ்சமாக அவளது உடல் நிலை மோசமாகிக் கொண்டே போனது. காசநோய் ஆரம்பித்திருந்தது. இருமல் அவளது உயிரைக் கொஞ்சம் கொஞ்சமாக வெளியேற்ற ஆரம்பித்தது. கபுர்தலா சமஸ்தானத்துக்கு அடுத்ததாக ஓர் ஆண் வாரிசைப் பெற்றுக் கொடுப்பதற்காகவே பிறப்பெடுத்த லீலாவதி, தனது இருபத்தோராவது வயதிலேயே இறந்து போனாள்.

சமஸ்தானம் சின்னதாக துக்கம் கொண்டாடியது. இளவரசர் மட்டும் எதையும் கண்டு கொள்ளவில்லை.



# 69

# முசோலினியிடம் ஒரு கேள்வி

தனக்குப் பின் சமஸ்தானத்தை ஆள மகன் இருக்கிறான். அவனுக்குப் பின் ஆளவும் பேரன் ஒருவன் பிறந்துவிட்டான். இனி தாத்தா ஜெகத்ஜித் சிங்குக்கு என்ன கவலை? இந்த வாரிசுப் பிரச்னையால், பல நாள்கள் கபுர்தலாவிலேயே தங்க வேண்டியதாயிற்று. பொறுத்தது போதும். மீண்டும் உலகம் சுற்றும் வாலிபனாகும் தருணம் வந்துவிட்டது. பிரிட்டிஸாரின் கெடுபிடிகளும் குறைந்திருக்கின்றன. கட்டுங்கள் பெட்டியை!

வேறெங்கே, பாரிஸ்தான். மகாராஜாவுக்கு, நீண்ட மாதங்கள் கழித்து ஐரோப்பியக் காற்றைச் சுவாசிக்கும்போது பரமானந்தமாக இருந்தது. அந்தச் சமயத்தில் எத்தியோப்பிய மாமன்னர் ஹைலெ செலாஸி (Haile Selassie) பாரிஸுக்கு வருகை புரிந்திருந்தார். அரசர்களின் அரசர், ஜுதேயாவின் சிங்கம், கறுப்பின மக்களைக் காக்க வந்த தேவதூதன் என்று அவரது புகழைச் சொல்ல ஏகப்பட்ட விஷயங்கள் உண்டு.

மாமன்னர் ஹைலெ பற்றி மகாராஜா ஜெகத்ஜித் சிங்கும் அறிந்திருந்தார். பாரிஸில் ஜெகத்ஜித் சிங்குக்கு முக்கியமான வேலைகள் என்றால் அது இரண்டே இரண்டுதான். ஒன்று விருந்துக்குச் செல்வது. இரண்டு, விருந்து கொடுப்பது. எனில், ஐரோப்பியப் பெண்களைக் காதலிப்பது? அட, அதெல்லாம் வேலையல்ல, அனிச்சைச் செயல். மாமன்னர் ஹைலெவுக்கு விருந்தளிக்கத் திட்டமிட்டார் மகாராஜா. அழைப்பு விடுக்கப்பட்டது. நேரம் முடிவானது. அவருடன் வந்திருந்த எத்தியோப்பிய முக்கியஸ்தர்களும் அழைக்கப்பட்டனர். இடம், ஜெகத்ஜித் சிங்கின் பாரிஸ் மாளிகை.

தகதகவென தங்கப்பட்டைகள் கொண்ட உடை. கனகச்சிதமான டர்பன், அதன்மேல் முறுக்கு மீசை. கம்பீரமான தாடி. இந்தர் சிங், மாளிகையின் வாசலில் ஹைலெவுக்காகக் காத்துக் கொண்டிருந்தார். ஜர்மானி தாஸும் ஓரளவு நல்ல உடையில் அங்கு நின்று கொண்டிருந்தார். எத்தியோப்பிய மன்னருக்கு அவர்கள் யாரையுமே தெரியாது. ஜெகத்ஜித் சிங்குடனான முதல் சந்திப்பு அது.

குறிப்பிட்ட நேரம் பிசகாமல், ஹைலேவின் கார் மாளிகை வாசலில் வந்து நின்றது. இந்தர் சிங், மிக்க அன்புடன் அந்தக் காரின் கதவைத் திறந்துவிட்டார். மாமன்னர் ஹைலெ இறங்கினார். பின்னாலேயே இன்னொரு காரில் எத்தியோப்பிய அமைச்சர்கள் சிலரும் வந்து இறங்கினார்கள்.

எல்லோருடைய கண்களிலும் இந்தர் சிங், மகாராஜாவாகத் தெரிந்தார். அவருடைய தோற்றம், உடையின் மினுமினுப்பு, அணிந்திருந்த நகைகள் எல்லாம் அப்படி நினைக்க வைத்தன. ஹைலெ, பெருமிதமாக இந்தர் சிங்கின் கையைக் குலுக்கினார். குசலம் விசாரிக்க ஆரம்பித்தார். உடன் வந்திருந்தவர்களும் இந்தர் சிங்கை மகாராஜாவென நினைத்துக் கொண்டு கையைக் குலுக்க ஆரம்பித்தார்கள்.

என்ன செய்வதென்று புரியாமல் வழிய ஆரம்பித்தார் இந்தர் சிங். இருந்தாலும் அவர்கள் அளித்த மரியாதையை எல்லாம் சிந்தாமல், சிதறாமல் அள்ளிக் கொண்டார். அருகில் நின்று கொண்டிருந்த திவான் ஜர்மானி தாஸுக்கு ஏதோ தவறு நடக்கிறது என்பது புரிந்தது.

'அய்யய்யோ, இவரு மகாராஜா இல்ல. கையை விடுங்க' என்று நேரடியாகக் கத்த முடியாதே. எத்தியோப்பிய மன்னருக்கும் தர்ம சங்கடமாகப் போய்விடுமே. படபடவென யோசித்த திவான், ஹைலெவிடம் தன் கையை நீட்டினார். ஹைலெவும் புன்னகை மாறாமல் கை குலுக்க ஆரம்பித்தார்.

'மதிப்புக்குரிய மன்னரே, எங்கள் மகாராஜா உங்களுக்காக வரவேற்பு அறையில் காத்துக் கொண்டிருக்கிறார். உள்ளே வாருங்கள்.'

ப்ரெஞ்சு மொழியில் ஜர்மானி தாஸ் சொன்னார். மாமன்னர் ஹைலெ, தன் முகத்தில் எந்தவித ஏமாற்றத்தையும் வெளிக்காட்டவில்லை. ஆனால் அவர் உடன் வந்திருந்தவர்களின் முகத்தில் அது தெரிந்தது. இந்தர் சிங், அப்போதும் வழிந்து கொண்டிருந்தார்.

உள்ளே சென்றார்கள். ஜெகத்ஜித் சிங், ஹைலெவை முறைப்படி வரவேற்றார். சம்பிரதாய விசாரிப்புகள். மதிய உணவு தயாராக இருந்தது. அந்த அறைக்குச் சென்றார்கள். பேசிக் கொண்டே சாப்பிட ஆரம்பித்தார்கள்.

குதிரை, யானை வளர்க்கும் மன்னர்களின் மத்தியில், மாமன்னர் ஹைலெ செல்லமாகச் சிங்கம் ஒன்றை வளர்த்து வந்தார். அதன் பெயர் டுஜோ (Tojo). ஹைலெ அரியணையில் கம்பீரமாக அமர்ந்திருக்கும் வேளையில், டுஜோ, ஒரு நாய்க்குட்டிபோல, அவரது காலடியில் வந்து அமர்ந்து கொள்ளும். அவரது கட்டளைகளுக்கெல்லாம் கட்டுப்படும். கிட்டத்தட்ட அரண்மனை வளாகத்தில் ஏதோ மான்குட்டி போல சுதந்தரமாக உலா வந்தது அந்தச் சிங்கம். டோஜோவைப் பற்றிக்கொஞ்சம் தெரிந்து வைத்திருந்த ஜெகத்ஜித் சிங், ஹைலெவிடம் அது சம்பந்தமாகப் பேசினார்.


மாமன்னர் ஹைலெ செலாஸி

அவரும் படு ஆர்வமாகத் தன் செல்ல சிங்கத்தின் சேட்டைகளை மகிழ்ச்சியாகச் சொன்னார். 'நல்ல வேளை, அந்தச் சிங்கத்தையும் அழைத்து வராமல் இருந்தாரே. அதோடு கைகுலுக்க முடியுமா என்ன?' - இந்தர் சிங், மிரட்சியுடன் நினைத்துக் கொண்டார். விருந்து முடிந்தது. மகிழ்ச்சியுடன் விடைபெற்றார் ஹைலெ.

அதுவரைப் போகாத தேசத்துக்குப் போக ஆசைப்பட்டார் ஜெகத்ஜித் சிங். அப்போது அவருக்கு பிரமிடுகள் நினைவுக்கு வந்தன. கிளம்புங்கள் எகிப்துக்கு.

கெய்ரோவுக்குச் சென்று இறங்கினார்கள். ஹோட்டல் செமரமிஸில் (Semeramis) அறை எடுத்தார்கள். அங்கே சென்றதும் ஜெகத்ஜித் சிங் செய்த முதல் வேலை, எகிப்து அரசர் ஃபௌட்-ஐச் (Faud) சந்திக்க நேரம் வாங்கியதுதான். ஃபௌட், ஜெகத்ஜித் சிங்கைத் தன்னுடன் மதிய உணவருந்தவும் அழைத்திருந்தார்.

அந்த நன்னாளில் திவான் ஜர்மானி தாஸ், செயலாளர் முகபத் ராய் (Muhabbat Rai) ஆகியோருடன் அப்டைன் (Abdine) அரண்மனைக்குச் சென்றார். எகிப்தின் பிரதம அமைச்சர் ஸாக்லுல் பாஷா (Zaglul Pasha), அவர்களை வரவேற்றார். மற்ற முக்கிய அமைச்சர்கள், உயர் அதிகாரிகள் எல்லாரும் மகாராஜாவுக்காகக் காத்திருந்தார்கள். வரவேற்பறையில் அமர்ந்திருந்த அரசர் ஃபௌட், ஜெகத்ஜித் சிங்குக்கு சலாம் வைத்து வரவேற்பு கொடுத்தார். அங்கே இருந்த இளவரசர் முகமது அலியும் (Mohammed Ali) தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

ஜெகத்ஜித் சிங்குக்கு ஏகப் பெருமை. ஐரோப்பிய பாணி அரண்மனைகளையே அதிகம் பார்த்துப் பழகிய ஜெகத்ஜித் சிங்குக்கு அந்த அரண்மனை படு வித்தியாசமாக, படா ஆடம் பரமாகத் தெரிந்தது. காபி பரிமாறப்பட்டது. அதனைக் கொண்டு வந்த பணியாளரின் உடையைக் கவனித்தார். தங்க இழைகள் அதில் ஜொலித்தன. சிவப்பு நிற துருக்கிய பாணி பட்டு குல்லாக்கள் உள்ளம் கவர்ந்தன. காபி கோப்பைகளின் வெளிப்புறத்தில்கூட வைரம் உள்பட பலவிதமான கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. மகாராஜா ஜெகத்ஜித் சிங்கையே அந்த படாடோபம் மலைக்க வைத்தது. உணவுக்கான மெகா அறைக்குச் சென்றார்கள்.



எகிப்து அரசர் ஃபௌட்

Saumon du Rhin a la Vicoria, Caviar frais Blin de Sarrasin, Poularde de Braise Lambertye, Salade pointes d' Asperge, Mille, Canataloup glace, Yalandji, Dinde de Fayoum rotie மற்றும் பல.

கண்டிப்பாக, படிப்பதற்குக் கஷ்டமாகத்தான் இருந்திருக்கும். சாப்பிடுவதற்கு எப்படியோ? இவை எல்லாமே அப்போது ஜெகத்ஜித் சிங்குக்குப் பரிமாறப்பட்ட எகிப்திய உணவு வகைகள். கூடவே பிரெஞ்சு மது வகைகளும். மகாராஜா ரசித்து ருசித்துப் புசித்தார்.

உணவுக்குப் பின் ஃபௌட், ஜெகத்ஜித்தை அழைத்துக் கொண்டு தனியாக ஓர் அறைக்குச் சென்றார் சில சொந்த, அரசியல் விஷயங்களைப் பகிர்ந்து கொள்ள. ஜர்மானி தாஸும், முகபத் ராயும் அந்த அறைக்கு வெளியில் அமர்ந்திருந்தார்கள். கொஞ்ச நேரம் கடந் திருக்கும்.

வவ்.. வவ் வவ்.. என்று ஒரு சத்தம். ‘என்ன இது நாய் குரைக்குற சத்தம் கேட்குது?’ - முகபத் ராய், ஜர்மானியிடம் கேட்டார். ஜர்மானிக்கும் ஒன்றும் புரியவில்லை. உதட்டைப் பிதுக்கினார். கொஞ்ச நேரத்தில் மீண்டும் அதே வவ் வவ்..

‘உள் அறைக்குள் இருந்துதான் சத்தம் வருகிறது. அரசர் எதுவும் நாய் வளர்க்கிறாரா?’ - முகபத் ராய் கேட்டார்.

‘இருக்காதே. முஸ்லிம்களுக்கு ஆகாத விஷயமாயிற்றே அது. அரண்மனைக்குள் நாய் இருக்க வாய்ப்பே இல்லை.’ - ஜர்மானி திட்டவட்டமாகச் சொன்னார். ஆனாலும் மீண்டும் வவ் வவ் கேட்டது. சந்திப்பை முடித்துக் கொண்டு வெளியே வந்தார் ஜெகத்ஜித் சிங். அரசர் ஃபௌட் அவர்களை வழியனுப்பி வைத்தார்.

ஹோட்டல் அறைக்குத் திரும்பியதும் ஜர்மானி, மகாராஜாவிடம் அந்த வவ் வவ் சத்தம் பற்றிக் கேட்டார். ‘ஓ அதுவா.. அரசர்தான் இருமினார். சில வருஷங்களுக்கு முன்னால தொண்டைல ஏதோ ஆபரேஷன் பண்ணுனாங்களாம். அதுல இருந்து அவரோட இருமல் இப்படி ஆயிருச்சாம்’ ஜெகத்ஜித் சிங் விளக்கம் சொல்ல, முகபத் ராய் அடக்க முடியாமல் சிரிக்க ஆரம்பித்தார்.

மகாராஜா ஜெகத்ஜித் சிங்குக்கு Order of Nile என்ற கௌரவ பட்டத்தை வழங்க முடிவு செய்தார் அரசர் ஃபௌட். விஷயமறிந்த மகாராஜா சோகத்தில் ஆழ்ந்தார். காரணம்? பாரத ரத்னா கிடைக்கும் என்று எதிர்பார்த்துக் காத்திருக்கும் ஒருவருக்கு, அரசு வழங்கும் 'கலைமாமணி' கிடைத்தால் எப்படியிருக்கும்? மகாராஜா எதிர்பார்த்தது 'அப்பாஸ் ஹல்மி' (Abbas Halmi) எனப்படும் எகிப்தின் மிக உயரிய பட்டத்தை.

'நேரில் சென்று பார்த்து ஏற்பாடு செய்யுங்களேன்' என்று ஜர்மானி தாஸை நச்சரித்தார் ஜெகத்ஜித் சிங். இல்லை மகாராஜா, அதெல்லாம் வேலைக்கு ஆகாது. கொடுப்பதை வாங்கிக் கொள்வோம்' என்ற ரீதியில் ஜர்மானி எவ்வளவோ சொல்லிப் பார்த்த பிறகும் அடம்பிடித்தார் அவர். வேறு வழியின்றி ஜர்மானி, எகிப்தின் வெளியுறவுத் துறை அமைச்சர் காலக் பாஷாவைச் (Khalak Pasha) சந்திக்க நேரம் வாங்கினார். என்ன விஷயம் என்பதையும் அப்போதே குறிப் பிட்டிருந்தார்.

ஜர்மானியை வரச் சொன்னார் காலக் பாஷா. ஆனால் சந்திப்பின்போது எதையும் பேச விட வில்லை. இந்தியா, இந்திய மன்னர்கள், இந்தியப் பெண்கள் என தனக்குத் தெரிந்தவற்றை யெல்லாம் சொல்ல ஆரம்பித்தார். ஜர்மானி பேச வாயெடுக்கும் போதெல்லாம் பேச்சைத் திசை மாற்றினார். சந்திப்பு முடிவதற்கான நேரம் நெருங்கிக் கொண்டே போனது. திடீரென தன் மேசைக்குக் கீழிருந்த பெல்லை அழுத்தினார் காலக் பாஷா. பணியாளர்கள் வந்து நின்றார்கள்.

'என்னைச் சந்திக்க வந்ததுக்கு நன்றி. நாம இன்னொரு முறை பார்க்கலாமா? நான் கொஞ்சம் வெளியில கிளம்புறேன்' - என்றார். ஏமாற்றத்துடன் ஹோட்டலுக்குத் திரும்பினார் ஜர்மானி. கொடுத்த பட்டத்தை வாங்கிக் கொண்டு பாரிஸுக்குத் திரும்பினார் ஜெகத்ஜித் சிங்.

அடுத்ததாக இத்தாலி சென்ற ஜெகத்ஜித் சிங்குக்கு ஓர் அரிய வாய்ப்பு கிடைத்தது. அது பெனிடோ முசோலினியைச் (Benito Mussolini) சந்திக்கும் வாய்ப்பு. முசோலினி இத்தாலி அரசை பாசிச அரசாக மாற்றி ஏகபோக சர்வாதிகார ஆட்சியை நடத்திவந்த நேரம். அவரை நேரில் பார்க்க அனுமதி கிடைத்ததுமே பரவசத்தில் தலை கிறுகிறுத்தது மகாராஜாவுக்கு.

முசோலினியின் குணாதிசியங்கள், நிர்வாக முறை, ஆளுமை பற்றியெல்லாம் பல விஷயங்கள் தெரிந்து வைத்திருந்த ஜெகத்ஜித் சிங், அவர் முன் சென்று பரவசத்துடன், கொஞ்சம் பயபக்தி யுடன் நின்றார். உட்கார்ந்து கொஞ்ச நேரம் பேசினார். இத்தாலியின் எழுச்சி பற்றிய தன் பிரமிப்பை வெளிப்படுத்தினார்.

'நான் உங்ககிட்ட ஒரே ஒரு கேள்வி கேட்க ஆசைப்படுறேன்' - கொஞ்சம் தயக்கத்துடன்தான் சொன்னார் மகாராஜா.

'என்ன?' டக்கெனக் கேட்டார் முசோலினி.

'உங்களோட பொழுதுபோக்கு என்ன? தினமும் அரசாங்கப் பணிகள் முடிஞ்சதுக்கு அப்புறமா என்ன பண்ணுவீங்க?' கேட்டுவிட்டு, முசோலினியின் கண்களையே உற்றுப் பார்த்தார். அவை லேசாகச் சிவந்திருந்தன.

'மகாராஜா, என்னோட ஒரே பொழுதுபோக்கு அரசாங்க அமைச்சர்களைப் பதவியை விட்டுத் தூக்குறதும், புதிய அமைச்சர்களை நியமிக்கறதும்தான். அரசாங்க கெஸட்ல, தினசரி



பெனிட்டோ முசோலினி

பத்திரிகைகள்ல புதுப்புது அமைச்சர்களோட பேரைப் பார்க்குறதுல எனக்கு சந்தோஷம்' முசோலினியின் முகம் சிவந்திருந்தது. குரலிலும் கொஞ்சம் அனல் வீசியது.

வாயடைத்துப் போனார் மகாராஜா. இருக்கையை விட்டு எழுந்தார் முசோலினி. 'சந்திப்பு முடிந்துவிட்டது, கிளம்பலாம்' என்று அதற்கு அர்த்தம். வணக்கம் சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்தார் மகாராஜா. முசோலினி சொன்ன பதிலின் அதிர்ச்சி குறையாமல், அறையை விட்டு வெளியேறுவதற்கு முன் ஒருமுறை அவரைத் திரும்பிப் பார்த்தார் மகாராஜா.

ஒரு மிலிட்டரி சல்யூட் அடித்தார் முசோலினி. மகாராஜா பதிலுக்கு என்ன செய்வதென்றே தெரியாமல் படபடப்புடன் வெளியேறினார். மறுநாள் தினசரியில், முந்தைய தினம் நீக்கப்பட்ட இரண்டு அமைச்சர்களின் பெயர்கள் இடம்பெற்றிருந்தன.



# 70

# அவள் பிரிந்து போனாளே!

மௌலின் ரோ (Moulin Rouge) என்பது ப்ரெஞ்சு வார்த்தை. Red Windmill என்பது அதன் ஆங்கில அர்த்தம். இன்றுகூட பாரிஸுக்குச் செல்லும் கேளிக்கைப் பிரியர்கள் தவறாமல் செல்லும் இடம். 1889ல் கட்டப்பட்ட காபரே நடன ஹால் அது. கட்டடத்தின் முகப்பில் சிவப்பு நிறக் காற்றாலை ஒன்று உண்டு. அதனால் இந்தப் பெயர். மௌலின் ரோவைக் கதைக்களமாகக் கொண்டு இதுவரை ஒன்பது திரைப்படங்கள் வெளிவந்துள்ளன.

நூறு வருடங்களுக்கும் மேலாக வெற்றிகரமாக இயங்கும் வயது வந்தவர்களுக் கான கேளிக்கை விடுதியான இதை பாரிஸின் கலாசார அடையாளங்களுள் ஒன்றாகச் சொல்லலாம். காபரே என்றவுடன் ஆடை அவிழ்ப்பு நடனத்தை மட்டும் நினைத்து விடக்கூடாது. பல்வேறு வகை நடனங்கள் மௌலின் ரோ வழியாகத்தான் உலகப்புகழ் பெற்றன. குறிப்பாக கேன்-கேன் (can-can) எனப்படும் நடனம். நீண்ட பாவாடை அணிந்த பெண்கள். கால்களை முழுவதும் தழுவியிருக்கும் மெல்லிய உறை. பெண்கள் தங்கள் கால்களை முடிந்த மட்டும் உயர்த்தி காற்றில் வட்டம் போடுவார்கள். பாவாடை நளினமாகச் சுழலும்.

நடனம் மட்டுமல்ல, இசை, நாடகங்கள், நாட்டிய நாடகங்கள், நகைச்சுவை என்று மௌலின் ரோவில் சகலமும் உண்டு. குறிப்பாக அந்தக் காலத்தில் வாழ்ந்த ஓவியர்களின் வசந்த மாளிகையாக மௌலின் ரோ திகழ்ந்தது. நிகழ்ச்சிகள் நடைபெறும்போதே, அவற்றை ஓவியமாகத் தீட்டிக் கொண்டிருப்பார்கள் ஓவியர்கள்.

நிகழ்ச்சிகளுக்கான செட் என்பது நினைத்துப் பார்க்கவே முடியாத அளவுக்குப் பிரம்மாண்டமாக இருக்கும். மெகா சைஸ் மீன் தொட்டி ஒன்றுக்கும் ஆடும் கடல் கன்னி, வானிலிருந்து இறங்கும் வெள்ளை கவுன் தேவதைகள், அந்தரத்தில் ஆடும் அழகுப் பதுமைகள், மலருக்குள் இருந்து முளைத்து வரும் மங்கைகள் என்று கற்பனையில் மட்டுமே சாத்தியமான காட்சிகள் எல்லாம் அங்கே சர்வ சாதாரணமாக அரங்கேறும். அவ்வளவு ஏன் அரையாடை பதுமைகள் திடீரென யானையோடு மேடையில் தோன்றி நடனமாட ஆரம்பிப்பார்கள். 1907ல் ஜெர்மைன் (Germaine) என்ற நடிகை மூன்றே மூன்று கடல் சிப்பிகளை மட்டும் உடையாக அணிந்து கொண்டு நடனமாட, அது பெரும் பரபரப்பை உண்டு பண்ணியது.

பாரிஸுக்குச் சென்றால் மௌலின் ரோவுக்கு ஒருமுறையாவது செல்லாமல் இருக்க மாட்டார் மகாராஜா ஜெகத்ஜித் சிங். அவருக்கு மட்டுமல்ல, அவரது அப்போதைய காதலி செர்ரிக்கும் மிகவும் பிடித்தமான பொழுதுபோக்கு இடம் அதுவே.

ஒருநாள் இரவில் மௌலின் ரோவில் நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சி ஒன்றை மகாராஜா ரசித்துக் கொண்டு இருந்தார். மேடையில் ஆடிக் கொண்டிருந்த பெண், ஏவாளின் உடைக்கு முன்னேறிக் கொண்டிருந்தாள். ஆனால் செர்ரியின் கண்கள் யாரையோ தேடி அலைபாய்ந்து கொண்டிருந்தன. அவளது முகத்தில் ஒருவிதத் தவிப்பும் பயமும் படர்ந்திருந்தன.

செர்ரிக்கு ஜெகத்ஜித் சிங் மீது பிரியம் இருந்ததுதான். ஆனால் என்ன, அவரைவிட அவர் கொடுக்கும் பணம் மீதும் நகைகள் மீதும் பிரியம் கொஞ்சம் அதிகமாக இருந்தது. அந்த அரைக்கிழவரைத் திருமணம் செய்துகொண்டு கபுர்தலாவின் மகாராணிகளுள் ஒருத்தியாகும் எண்ணமெல்லாம் இருக்கவில்லை. முடிந்தவரை அவரது அன்புக் காதலியாக வாழ்ந்துவிட்டு, இயன்றவரைக் கறக்க வேண்டியதைக் கறந்துவிட்டு, பின்பு யாராவது ஓர் ஐரோப்பியருக்கு மோதிர விரலை நீட்டலாம் என்று திட்டமிட்டிருந்தாள்.

ஏற்கெனவே செர்ரிக்கு ஒரு பத்திரிகையாளன் காதலனாக இருந்தான் என்று பார்த்தோம்.

அதற்குப் பின்பு ஒரு புதிய காதலன் கிடைத்திருந்தான். Mosieur Pierre Lemont என்ற பெயர் கொண்ட பிரான்ஸ் நாட்டுக்காரன். பெரிய வியாபாரி. வசீகரமான இளைஞன். செர்ரியை வெறியோடு காதலித்தான் அவன். ‘செர்ரி இனி என் மனைவியா இருக்கணும், இல்லேன்னா வேற யாரோடயும் வாழக்கூடாது’ என்னுமளவுக்கு வெறி.

செர்ரிக்கும் லீமாண்டைப் பிடித்திருந்தது. ஆனால் மகாராஜாவின் பிடியிலிருந்து அவளால் தப்பிக்க முடியவில்லை. அவ்வப்போது ரகசியமாக லீமாண்டைச் சந்தித்து வந்தாள். ‘ப்ளீஸ், என் நிலைமையைப் புரிஞ்சுக்கோங்க. மகாராஜா என்மேல உயிரையே வைச்சிருக்காரு. அவரைச் சட்டுன்னு கைவிட்டுட்டு என்னால வரமுடியாது. சந்தர்ப்பம் பார்த்து நானே அவர்கிட்ட சம்மதம் வாங்கிட்டு, உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிறேன். என்னை நம்புங்க’ - லீமாண்டிடம் செர்ரி சொல்லி வைத்திருந்தாள்.

அன்றைய தினம் மௌலின் ரோவில் நடைபெறும் நிகழ்ச்சிக்கு, லீமாண்டும் வருவதாகச் சொல்லியிருந்தான். நேரம் ஆக ஆக செர்ரியின் முகத்தில் தவிப்பு அதிகரித்தது. ஏற்கெனவே அவள் மீது சந்தேகத்திலிருந்த ஜெகத்ஜித் சிங், அப்போதைய அவளது முக பாவனைகளைக் கண்டு ஆத்திரமடைந்தார்.

'யாரைத் தேடுற?'

'ஒண்ணுமில்லையே..'

'பொய் சொல்லாத. என்கிட்ட எதையும் மறைக்க நினைக்காத.' - இருவருக்குள்ளும் சண்டை ஆரம்பித்தது. அதற்கு மேலும் மௌலின் ரோவில் இருக்க வேண்டாமென அங்கிருந்து கிளம்பினார்கள். அவளை, வீட்டில் கொண்டு விட்டார் மகாராஜா. அங்கு சண்டை தொடர்ந்தது. உச்சகட்டத்தை அடைந்தது.

'யார் அவன்? நீ எங்க போனாலும் வர்றான். இப்ப சொல்லப்போறியா இல்லையா?' ஜெகத்ஜித் சிங் ஹை-டெசிபலில் கத்தினார்.

'ஆமா. அவர் ஒரு பிஸினஸ்மேன். என்னைக் காதலிக்கிறார். ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கிறதா இருக்கோம்' போட்டு உடைத்தாள் செர்ரி. 'தயவுசெஞ்சு என்னை விட்டுருங்க. நான் அவரோட போயிடுறேன்' - கண்களில் நீர் வழிய, மகாராஜாவைக் கெஞ்ச ஆரம்பித்தாள்.

நிலைதடுமாறிப் போனார் ஜெகத்ஜித் சிங். அவரால் பதில் பேச முடியவில்லை. தனது மாளிகைக்குத் திரும்பினார். ஹாலிலேயே சோகம் கவ்விய முகத்தோடு உட்கார்ந்தார். திவான் ஜர்மானி தாஸ் அங்கு வந்தார். அவர் எதுவும் கேட்காமலேயே புலம்ப ஆரம்பித்தார் ஜெகத்ஜித் சிங்.

'இவளும் என்னை இப்படி மோசம் பண்ணுவான்னு நினைக்கவே இல்லை. நான் எப்படியெல்லாம் இவளைக் கவனிச்சுக்கிட்டேன். கல்யாணம் செஞ்சுக்கலேன்னாகூடக் கபுர்தலாவுல இவளை ஒரு மகாராணி மாதிரிதானே வைச்சிருந்தேன். பாவி. வேறொருத்தனைக் கல்யாணம் பண்ணிக்கப் போறாளாம். அதை என்கிட்டயே முகத்துக்கு நேர சொல்லுற அளவுக்குப் போயிட்டா..' மகாராஜாவின் புலம்பல் பல நிமிடங்கள் தொடர்ந்தது.

எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்ட ஜர்மானி, இறுதியாக மகாராஜாவைச் சமாதானப் படுத்தும் விதமாக ஓர் ஆலோசனையைக் கூறினார்.

'இங்க பாருங்க. அந்த பிஸினெஸ்மேன் பாரிஸ்லதானே இருக்கான். அதே இடத்துல நீங்களும் இருக்க வேண்டாம். மேடத்தை அழைச்சுக்கிட்டு வேற எங்கியாவது போயிருங்க. இங்க இருந்தா மேடத்துக்கு அவன் நினைப்பு இருந்துக்கிட்டேதான் இருக்கும்.'

அது ஜெகத்ஜித் சிங்குக்கு நல்ல யோசனையாகப்பட்டது. பெர்லினுக்குச் செல்ல முடிவெடுத்தார்.

'செர்ரி போற இடத்துக்கெல்லாம் அவனும் வந்துடுறான். இருபத்து நான்கு மணி நேரமும் அவளைக் கவனிச்சுக்கிட்டே இருக்கான். வெளி ஆள்களை வைச்சும் நோட்டம் பார்க்குறான்னு நினைக்கிறேன். இந்த பெர்லின் திட்டம் அவனுக்குத் தெரியக்கூடாது. நான் தனியா அங்க போயிடுறேன். அவன் கண்ணுல மண்ணைத் தூவிட்டு, எப்படியாவது செர்ரியை பெர்லினுக்கு அனுப்பி வைக்கிறது உங்க பொறுப்பு' மகாராஜாவின் வார்த்தைகளைக் கட்டளையாகக் கேட்டுக் கொண்டார் ஜர்மானி.

திட்டமிட்டபடியே தனியாகப் பெர்லினுக்குக் கிளம்பினார் மகாராஜா. செர்ரியிடம் பேச்சு வார்த்தை நடத்த அவளது வீட்டுக்குச் சென்றார் ஜர்மானி.

'மேடம், மகாராஜா ரொம்ப வருத்தத்துல இருக்குறாரு. நான் இப்படி பேசுறதுக்கு மன்னிச்சுக் கோங்க. நீங்க அவரை ஏமாத்திட்டதா நினைக்குறாரு. துக்கம் தாங்க முடியாம, பாரிஸ்லயே இருக்கப் பிடிக்காம பெர்லினுக்குக் கிளம்பிப் போயிட்டாரு. உங்களையும் அங்க அனுப்பி வைக்கத்தான் நான் வந்திருக்கேன்' - அமைதியாகச் சொன்னார் ஜர்மானி.

'திவான், நீங்க என் நிலைமையைப் புரிஞ்சுக்குவீங்கன்னு நம்புறேன். என்னால இப்போ பாரிஸை விட்டு வரமுடியாது. லீமாண்ட், சாதாரண ஆள் இல்லை. ரொம்ப செல்வாக்கு உள்ளவர். என்னைத் திருமணம் செஞ்சுக்கறதுல உறுதியா இருக்கார். நான் அவர் பார்வையிலிருந்து தப்பவே முடியாது' செர்ரியின் கண்களில் பயம்.

'இல்ல மேடம். நான் உங்களைப் பத்திரமா பெர்லினுக்கு ரயில் ஏத்தி விடுறேன். அவ்வளவு ஏன், நாளைக்கு சாயங்காலம் எக்ஸ்பிரஸுக்கு எனக்கும் சேர்த்து டிக்கெட் எடுத்துடறேன். நீங்க தயாரா இருங்க. மகாராஜா உங்களுக்காகக் காத்துக்கிட்டிருக்கார். அவரோட நலன், உங்க கையிலதான் இருக்கு' ஜர்மானி கொஞ்சம் சென்டிமென்டாகப் பேசிக் கவிழ்த்தார்.

பெர்லினுக்கான எக்ஸ்பிரஸ் கிளம்பத் தயாராக இருந்தது. ஜர்மானி, செர்ரியை அழைத்துக் கொண்டு வேகவேகமாக ரயில் பெட்டியை நோக்கி நடந்தார். யாராவது பின் தொடர்கிறார்களா என்று அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டார். செர்ரியின் முகத்தில் சோகம், சோகம் மட்டுமே.

படுக்கை வசதியுடன் கூடிய இரண்டு டிக்கெட்டுகள். லக்கேஜ் எல்லாம் அவ்வளவாக இல்லை. வெறுப்போடு தன் இருக்கையில் அமர்ந்தாள் செர்ரி. அவளது கண்கள் ஜன்னல் வழியாக, லீமாண்டைத் தேடின. செர்ரி மூலமாகவோ அல்லது வேறு யார் மூலமாகவோ லீமாண்டுக்கும் அந்த பெர்லின் பயணம் பற்றித் தகவல் போயிருந்தது. 'அவ பாரிஸைத் தாண்டக்கூடாது. தூக்கிரு. கூட எவன் இருந்தாலும் காலி பண்ணிரு' தன்னுடைய ஆள் ஒருவனை ஏவி விட்டிருந்தான் லீமாண்ட்.

அந்த அடியாள் துப்பாக்கியுடன் ரயில் நிலையத்துக்குள் நுழைந்தான். ரயில் மெதுவாக நகர ஆரம்பித்திருந்தது. அடியாள், செர்ரியைத் தேடியபடியே வேகமாக பிளாட்பாரத்தில் ரயிலுக்கு எதிர்த் திசையில் ஓடிவந்தான். ஜன்னலோரமாக அமர்ந்திருந்த செர்ரியை அவன் பார்த்த நொடியில் ரயில் வேகமெடுத்திருந்தது. அவனது துப்பாக்கிக்கு வேலையில்லாமல் போனது.

அந்தப் பயணம் முழுவதும் அழுதுகொண்டே இருந்தாள் செர்ரி. ஜர்மானியின் சமாதானங்கள் பிசுபிசுத்துப் போயின. பெர்லினை அடைந்தார்கள். மகாராஜா தங்கியிருந்த அட்லான் (Adlon) ஹோட்டலுக்குச் சென்றார்கள். செர்ரிக்கென, தனது அறை பக்கத்திலேயே ஓர் அறையை ஏற்பாடு செய்திருந்தார் ஜெகத்ஜித் சிங்.

இரவில் மகாராஜாவும் செர்ரியும் ஒன்றாக உணவு அருந்தினார்கள். அப்போது மிகவும் கனிவாக, காதலாகப் பல வார்த்தைகளைப் பேசிப் பார்த்தார். ஆனால் செர்ரி சாப்பிடுவதற்கு

மட்டுமே வாய் திறந்தாள். அவரது முகத்தை ஏறெடுத்துக்கூடப் பார்க்கவில்லை. ஜெகத்ஜித் சிங்கால் ஒன்றும் செய்ய இயலவில்லை.

'நீ களைப்பா இருப்ப. போய் ரெஸ்ட் எடு டார்லிங்!'

கொஞ்ச நேரத்தில் அவரும் தன் அறையில் சென்று உறங்க ஆரம்பித்தார். நள்ளிரவு. தன் அறையிலிருந்த தொலைபேசியிலிருந்து ஹோட்டல் ரிசப்ஷனுக்கு டயல் செய்தாள் செர்ரி.

'உடனே பாரிஸுக்குக் கால் ஒண்ணு புக் பண்ணுங்க!'

லீமாண்டுடன்தான் பேசினாள். 'யாராயிருந்தா என்ன? நம்ம காதலுக்கு யாரு தடையா இருக் காங்களோ, அவங்களைக் கொன்னுட்டு நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்' - எதிர் முனையில் லீமாண்டின் குரல் அதிர்ந்தது. கண்ணீரோடு முத்தங்களையும் பரிமாறிவிட்டு, போனை வைத்தாள் செர்ரி.

ஜர்மானி தாஸை அழைத்தாள். 'என்னால முடியல. இந்த ரெண்டு பேருக்கு இடையிலயும் மாட்டிக்கிட்டுத் தவிக்கிறேன். தயவுசெஞ்சு என்னைப் போக விட்டுருங்க. நான் போக லேன்னா, அவர் என்ன பண்ணுவார்னு எனக்கே தெரியல. அவ்வளவு வெறியோட இருக்காரு. என்னால மகாராஜாவுக்கு ஆபத்து வர வேண்டாம். நான் போயிடுறேன். நீங்கதான் எனக்கு இந்த உதவி பண்ணனும்' காலில் விழாத குறையாகக் கெஞ்சினாள். ஜர்மானி, மறுநாள் காலையிலேயே மகாராஜாவைச் சந்தித்தார்.

'மகாராஜா, மன்னிக்கணும். நான் சொல்லுறதைத் தப்பா எடுத்துக்காதீங்க. மேடத்தை பாரிஸுக்கே அனுப்புறது நல்லது. அந்த லீமாண்ட் பைத்தியக்காரனா இருக்கான். கொலை வெறியோட திரியுறான். மேடமும் இங்க நிம்மதியா இல்லை. அதனால உங்க நிம்மதியும் பறிபோயிரும். அனுப்பிடலாமே?'

ஜெகத்ஜித் சிங்கிடமிருந்து பதில் வரவில்லை. செர்ரி பாரிஸுக்குக் கிளம்பினாள். கண்ணீ ருடன் ஜெகத்ஜித் சிங்கிடம் விடைபெற்றாள். அவர் உறைந்துபோய் உட்கார்ந்திருந்தார்.

அவள் சென்ற ரயில் பாரிஸை அடைந்தது. அங்கே அந்த ரோமியோ காத்துக் கொண்டிருந்தான். ப்ரெஞ்சு முத்தங்களால் பேசிக் கொண்டார்கள்.



# 71

# கேன்ஸ் கடற்கரையில் ஒரு சின்ட்ரெல்லா!

கபுர்தலா மகாராஜா டர்பனில் மஞ்சள் நிறக் கற்கள் பதிக்கப்பட்ட பதக்கம் அணிந்திருக்கிறாரா? அது வசந்தகாலம். பிங்க் நிறக் கற்கள் பதிக்கப்பட்ட பதக்கமா? எனில் அது கோடைக்காலம். நீல நிறக் கற்களா? ஓ, அது குளிர்காலம். சிவப்பு நிறப் பதக்கமா? மகாராஜா ஏதாவது திருமணத்துக்கோ (அல்லது தன் திருமணத்துக்கோ) அல்லது பெரிய விருந்துக்கோ கிளம்பிக் கொண்டிருக்கிறார் என்று அர்த்தம்.

இந்தியர்களுக்கான விருந்து என்றால் ஜிகுஜிகு ராஜ உடை. வைரம் பதிக்கப்பட்ட பொத்தான்கள் கண்களைக் கவரும். பளபளா நகைகள், டர்பனிலிருந்து கணுக்கால் வரை ஆங்காங்கே அழகாக மின்னும். குறிப்பாகக் கழுத்தில் பல அடுக்குகளில் அணிவகுத்திருக்கும். இடுப்பில் மெகா சைஸ் ஆபரண பெல்ட் ஒன்று கம்பீரமாக உடையைத் தழுவியிருக்கும். அதற்கும் மேல், வேலைப்பாடுகள் அமைந்த முழங்கால் நீள கோட் ஒன்றை அணிந்திருப்பார். உடைவாள் கண்டிப்பாக இடம் பெற்றிருக்கும். போனால் போகிறதென்று காலில் அணியும் காலணியில்கூட வைர, வைடுரீய, மரகத வகையறாக்களைச் சேர்த்துக் கொள்வார்.

ஐரோப்பியர்களுக்கான விருந்து என்றாலோ, ஐரோப்பிய நாடுகளில் நடக்கும் விருந்து என்றாலோ, மகாராஜாவின் கெட்-அப்பே வேறு. டிப்-டாப் கோர்ட் ஷூட். உடை, நடை, பாவனை எல்லாமே ஐரோப்பியத்தனமாக மாறியிருக்கும். காலில் லெதர் ஷூ. நகைகளைத் தவிர்ப்பார். மகாராஜா என்று அடையாளப்படுத்த

பிரிட்டிஷ் அரசு தனக்கு அளித்த பதக்கங்களை உடையில் மாட்டிக் கொள்வார். உடைவாளுக்குப் பதிலாக, வாக்கிங் ஸ்டிக், ஸ்டைலாகச் சுழலும்.

எங்கெங்கு செல்லும்போது எப்படி எப்படி உடையணிய வேண்டும் என்பதில் எப்போதுமே அவர் வெகு நேர்த்தியாக இருந்தார். பாடி லேங்குவேஜ், பர்சனாலிட்டி, கம்யூனிகேஷன் ஏதேதோ கார்ப்பரேட் வார்த்தைகள் சொல்லுவார்களே அவை எல்லாமே ஜெகத்ஜித் சிங்கிடம் பக்காவாக இருந்தன. அதிலும் குறிப்பாகப் பலர் கூடியிருக்கும் சபையில் பெண் களின் கவனத்தைத் தன் மீது திருப்பும் வித்தையைத் தெரிந்து வைத்திருந்தார். வெகு சாதாரண மான வித்தைதான் அது. ஆனால் பலன் ஓஹோ!

விருந்து நடைபெறும்போது ஜெகத்ஜித் சிங், தன் கோட் பாக்கெட்டிலிருந்து படு ஸ்டைலாக சிகரெட் பெட்டியை எடுப்பார். கூடவே லைட்டரையும். சிகரெட் பெட்டி தங்கத் தகடுகளால் செய்யப்பட்டது, அந்த லைட்டர்கூட அப்படித்தான், அதில் வைரக் கல் ஒன்று ஜொலிக்கும் என்பதையெல்லாம் தனியாகச் சொல்ல வேண்டுமா என்ன? சிகரெட் ஒன்றை எடுத்துப் பத்த வைப்பார். சிகரெட் பெட்டியையும் லைட்டரையும் அசால்ட்டாக மேசை மீது வீசுவார்.

எழும் சத்தத்தில் அங்கிருப்பவர்கள் சின்னதாகத் திரும்பிப் பார்ப்பார்கள். அதே நேரத்தில் மகாராஜாவின் உள்நோக்கம் புரிந்த பணியாள் ஒருவன், 'ஆஹா மகாராஜா, என்னது இது? சிகரெட் பெட்டிதானா? இப்படி மின்னுகிறதே? அவ்வளவும் தங்கமா? பார்க்கவே எவ்வளவு அழகாக இருக்கிறது? நான் எடுத்துப் பார்க்கலாமா?' என்று கேட்பான்.

எல்லோருடைய கவனமும் அந்தப் பெட்டியின் மீது குவியும். அந்தச் சமயத்தில் ஜெகத்ஜித் சிங் தன் பதிலை உதிர்ப்பார். 'தாராளமா எடுத்துப் பாருப்பா. அங்க பாரு, எல்லோரும் ஆசைப்படுறாங்க, அவங்ககிட்டயும் அதைக் கொண்டு போய்க் காண்பி.'

பணியாள், பட்டுத் துணி விரிக்கப்பட்ட டிரே ஒன்றில் அந்த சிகரெட் பெட்டியை பயபக்தி யோடு எடுத்து வைப்பான். அந்த அறையில் உள்ள பெண்களிடம் (மட்டும்) சென்று அதை நீட்டுவான். தங்கத்தில் வெடிகுண்டு செய்யப்பட்டிருந்தால் அதைக்கூடப் பெண்கள் ஆசையோடு எடுத்துப் பார்ப்பார்களே. சிகரெட் பெட்டியைப் பார்க்க மாட்டார்களா என்ன? டிரேயிலிருந்து அதை ஆவலாக எடுப்பார்கள். திருப்பித் திருப்பிப் பார்ப்பார்கள். மெல்ல அதைத் திறப்பார்கள். உடனே அவர்களது முகம் சிவந்துவிடும். உதட்டோரம் வெட்கப் புன்னகை ஒன்று தவழும். டக்கென மகாராஜாவை நோக்கி அவர்களது பார்வை திரும்பும். அவரும் ஹீரோ சிரிப்பு சிரிப்பார்.

அப்படி என்னதான் இருக்கும் சிகரெட் பெட்டியில்?

வேறென்ன, ஏதாவது ஒரு பெண்ணின் புகைப்படம். ஆடையணிய மறந்திருக்கும்.

தன்னைப் பார்த்துச் சிரிக்கும் அல்லது வெட்கப்படும் பெண்ணிடம் சென்று கடலை போட ஆரம்பிப்பார் ஜெகத்ஜித் சிங். கடலை வளர்ந்து வளர்ந்து ஒரு நெருக்கமான நட்பை ஏற் படுத்தும். இந்த யுத்தி மூலம் பல ஐரோப்பியப் பெண்களோடு நட்பு நெட்வொர்க் அமைத் திருந்தார். ஆனால் ஒரே ஒரு பெண் அவரை ரொம்பவே அலைக்கழிக்க வைத்தாள். யாரந்த மோகினி?

பிரான்ஸின் கடற்கரை நகரமான கேன்ஸுக்குச் (Cannes) சென்றிருந்தார் ஜெகத்ஜித் சிங். சுற்றுலாப் பயணிகளின் சூரியக் குளியல் சொர்க்கம். முழு நீள உடையணிந்தாலே விநோதமாக அல்லது கேவலமாகப் பார்ப்பார்கள். டூ பீஸ் அல்லது சிங்கிள் பீஸ்தான் அந்த நகரின் அதிகபட்ச உடை. பல நாட்டு மன்னர்கள், சினிமா நட்சத்திரங்கள், பணக்காரர்கள், தொழிலதிபர்கள் விடுமுறையை நிம்மதியாகக் கழிக்கத் தேர்ந்தெடுக்கும் ஸ்தலம். ஜெகத்ஜித் சிங், ஜூலை அல்லது ஆகஸ்டில் பிரான்ஸில் இருந்தால், கண்டிப்பாக கேன்ஸுக்குச் சென்று விடுவார். அப்போதுதான் அங்கு உச்சபட்ச சீஸன்.

ஒரு மாலை நேரத்தில் திவான் ஜர்மானி தாஸுடன் கேன்ஸ் கடற்கரையில் நடந்து கொண்டிருந் தார் ஜெகத்ஜித் சிங். உலகத்துக்கே நீச்சலுடை மாட்டிவிட்டது போலொரு தோற்ற மயக்கம். எங்கெங்கும் வெள்ளைத் தோல் அம்மணிகள். ஆங்காங்கே வேறு நிற அம்மணிகளும். சூரிய ஒளியே ஆடையாகப் போதும் என்ற முடிவெடுத்துவிட்டு வந்திருப்பார்கள் போல. ஆனால் சூரியன்தான் வெட்கம் தாங்காமல் அவ்வப்போது மேகங்களை எடுத்து முகம் மறைத்துக் கொண்டது.

அங்கு வேறு ஆண்களும் இருந்தார்கள் என்பது ஜெகத்ஜித் சிங்குக்கு நினைவிலிருக்க வாய்ப் பில்லை. மென்மையாக அலைகள் வந்து மோதும் கரையோரமாக, ஐரோப்பிய ஐஸ்கிரிம்கள் உருகுவதைப் பார்த்தபடியே நடப்பதைவிட இன்பம் வேறேது!

'நாமும் சூரியக் குளியல் எடுக்கலாமா?' ஜர்மானிதான் கேட்டார்.

மகாராஜாவுக்கும் சம்மதம்தான். ஆனால் அதற்கான சிற்றுடைகள் அப்போது அவர்கள் வசம் இல்லை. அவற்றை வாங்குவதற்காக அருகிலிருந்த கடைக்குச் சென்றார்கள். சிற்றுடை வாங்கப் போன மகாராஜாவின் கண்களின் அந்த சிற்றிடைப் பெண் சிக்கினாள். அவளும் அங்கு நீச்சலுடை வாங்கத்தான் வந்திருந்தாள். பிங்க் நிற கவுனில் அவளது மேனி அழகு, மகாராஜாவின் மனத்தில் நங்கூரமிட்டது.

ஜெகத்ஜித் சிங், ஜர்மானியைப் பார்த்து அர்த்தத்தோடு புன்னகை செய்தார். அவரும் பதிலுக்கு. அந்த இளம்பெண் கடையில் விற்பனைப் பிரதிநிதியாக இருந்த பெண்ணுடன் உடைகளின் விலையை ப்ரெஞ்சில் விசாரித்துக் கொண்டிருந்தாள். உடனே அவளிடம் பேசி விட வேண்டும் என்று மகாராஜாவின் மனம் துடித்தது.

'அடியேய் கிளியே! உன் சௌந்தர்யத்தில் நான் கவிழ்ந்துவிட்டேன். யார் நீ என்று எனக்கு சத்தியமாகத் தெரியாது. ஆனால் இனி என்னவளாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படு கிறேன்.' - இப்படியெல்லாம் எடுத்த எடுப்பிலேயே மனத்தில் தோன்றியதை போட்டுடைத்து விட முடியுமா என்ன? அந்த இளம்பெண் கடையை விட்டுக் கிளம்புவதற்குள் குறைந்தபட்சம் அவளைப் பற்றிய விவரங்களையாவது சேகரித்துவிடத் துடித்தார். அதற்கு ஏதுவாக அந்தக் கடைக்குள் ஜினைன் டுஜோன் (Jeanine Dujon) என்ற நடுத்தர வயதுப் பெண் நுழைந்தார். ஜெகத்ஜித் சிங்குக்கு ஜினைனைத் தெரியும். ஜினைனுக்கு அந்த இளம்பெண்ணைத் தெரியும்போல. இருவரும் பரஸ்பரம் புன்னகை செய்து கொண்டார்கள்.

'அந்தப் பெண்ணைத் தெரியுமா?' மகாராஜாவின் மனமறிந்த ஜர்மானி, ஜினைனைக் கேட்டார். 'ஓ நன்றாகத் தெரியுமே. மிஸ்டர் ரெஜினால்ட் ஃபோர்ட் (Reginald Ford) என்றொரு பெரும் பணக்காரர் ஒருவர் இருக்கிறார். என் குடும்ப நண்பர். அவரது வீட்டுப் பெண்தான்

இவள். பெயர் மில்லே ஜெர்மைன் (Mlle Germaine). சிறு வயதிலிருந்தே இந்தப் பெண்ணை அவர்தான் வளர்த்துவருகிறார். அவர்தான் படிக்க வைத்திருக்கிறார். பிரான்ஸ் தேசத்துப் பெண்தான். இப்போது கேன்ஸுக்கு விடுமுறைக்காக வந்திருக்கிறாள்.'

ஜினைன் சொன்ன விவரங்களைக் கூர்மையாகக் கேட்டுக் கொண்ட மகாராஜா, உடனே ஒரு விண்ணப்பத்தைத் தட்டி விட்டார். 'அறிமுகம் செய்து வைக்க முடியுமா?'

ஜினைன், மகாராஜாவை ஜெர்மைனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். வாய் நிறையப் புன்னகையைப் பரப்பி வழிந்தார் அந்த ஐம்பத்து மூன்று வயது ரோமியோ. தன்னைப் பற்றிச் சொல்லக்கூடிய விஷயங்களை மட்டும் சுருக்கமாகச் சொன்னார்.

'உங்களைப் பார்த்தால் நன்கு படித்த பெண்ணாகத் தெரிகிறது. நிறையப் பேசத் தோன்றுகிறது. நாளை மாலை என்னோடு தேநீர் அருந்த வருகிறீர்களா?' ஜெகத்ஜித் சிங் கேட்டார். ஒரு மகாராஜாவோடு தேநீர் அருந்துவது கௌரவமான விஷயமல்லவா, ஜெர்மைன் நிச்சயமாக வருவதாகச் சம்மதித்தாள். அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு கடையை விட்டு வெளியே வந்தார் மகாராஜா. கேன்ஸ், வழக்கத்தைவிட மிக அழகாகத் தெரிந்தது.

நெக்ரெகோ (Negreco). ஜெகத்ஜித் சிங் தங்கியிருந்த நட்சத்திர ஹோட்டல். மறுநாள் மாலை ஐந்து மணிக்குச் சென்றாள் ஜெர்மைன். மகாராஜா ஆர்வமாகக் காத்திருந்தார். உரையாடல் தொடங்கியது. பொதுவான விஷயங்களைப் பேச ஆரம்பித்தார்கள். ஜெர்மைனின் குடும்பம் பற்றிப் பேச்சுத் திரும்பியது.

'எனக்கு அம்மாவும் தம்பியும் இருக்காங்க. என்னை வளர்த்தவர் மிஸ்டர் ரெஜினால்ட்தான். அவர்தான் எனக்கு எல்லாம். பல துறைகள்ல எனக்கு அறிவு இருக்குன்னா, அதுக்குக் காரணம் அவர் வாங்கிக் கொடுத்துப் படிக்கச் சொன்ன புத்தகங்கள்தான். வருங்காலத்துல அவரோட பிஸினஸை நல்லபடியா கவனிச்சுக்கிறதுக்காக எனக்கு நல்ல பயிற்சி கொடுத்திருக்காரு. சீக்கிரமாவே எனக்கும் ரெஜினால்டுக்கும் திருமணம் நடக்கப்போகுது.'

ஜெர்மைன் பேசிய கடைசி வரியைக் கேட்டபோது, மகாராஜா தனக்குள் ஏதோ ஒன்று வெடித்ததுபோல உணர்ந்தார். அவர் காதலிக்காத பெண்களா, இல்லை அந்தப் பெண்களுக்கு இல்லாத காதலர்களா? எல்லாம் அவர் கடந்துவந்த விஷயம்தானே. சுதாரித்துக் கொண்டார். எந்தவித அதிர்ச்சியையும் வெளிப்படுத்தாமல் உரையாடலைத் தொடர்ந்தார். தேநீர் மிகவும் சுவையாக இருந்தது.

மறுநாளும் சந்தித்தார்கள். அதற்கு மறுநாளும். பல நாள்கள் சந்திப்பு தொடர்ந்தது. சந்தித்து? ஜெர்மைன் தனக்குத் தெரிந்த உலக அரசியல், பொருளாதாரம், கலாசாரம் என என்னென்னவோ பேசினாள். இந்தச் சின்னப் பெண்ணுக்குள் இத்தனை விஷய ஞானமா என்று ஜெகத்ஜித் சிங் அவள் பேசுவதை ரசித்துக் கொண்டே இருந்தார். இருந்தாலும் அவளது பேச்சில் அடிக்கடி ரெஜினால்ட் என்ற பெயர் வருவதை மட்டும் அவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை. எல்லாவற்றையும் மீறி, அவளது மனத்தில் இடம் பிடித்தாக வேண்டும். அதுவும் காதலனாக. ஐம்பத்து மூன்று வயதில் கொஞ்சம் கடினமான காரியம்தான். வேண்டாத வேலை என்றுகூடச் சொல்லலாம். வேறு வழியில்லை. ஆசை நரைக்கவில்லையே!

என்ன செய்யலாம்?

ஏதாவது திட்டமிட்டு, ஜெர்மைனை இந்தியாவுக்கு அழைத்துச் சென்றுவிட்டால்? அயல் நாட்டு கிரவுண்டில் ஆடுவதைவிட, சொந்த மண்ணில் ஆடுவது சுலபம்தானே. அடுத்த சந்திப்பிலேயே அதுகுறித்து அவளிடம் பேசினார்.

'ஜெர்மைன், உனக்கு எங்கள் இந்தியாவைப் பார்க்க வேண்டும் என்ற விருப்பமிருக் கிறதா?'

'ஹைய்யோ! நிறைய. இந்தியாவைப் பற்றி நான் கேள்விப்படாத விஷயங்களே இல்லை. வாழ்நாளில் ஒருமுறையாவது இந்தியாவுக்குச் செல்ல வேண்டும் என்பது என் கனவு' - அவள் விழிகள் விரிந்திருந்தன.

'நானே அழைத்துச் செல்கிறேன். வருகிறாயா?'

'நிச்சயமாக. ஆனால் ரெஜினால்ட் அனுமதி கொடுக்க வேண்டும். அவர் மறுத்துவிட்டால் நீங்கள் என்னை வற்புறுத்த முடியாது.'

அவளை எப்படியாவது இந்தியாவுக்கு அழைத்துச் சென்றுவிட வேண்டும் என்ற துடிப்போடு, கேன்ஸிலேயே டேராவை நீட்டித்தார் ஜெகத்ஜித் சிங். சில நாள்கள் கழித்து அவரைச் சந்திக்க வந்தாள் ஜெர்மைன். 'மகாராஜா, நான் உங்களோடு இந்தியாவுக்கு வருகிறேன். ரெஜினால்ட் அனுமதி கொடுத்துவிட்டார். எப்போது கிளம்பலாம்?' - ஆர்வத்துடன் கேட்டாள்.

'எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம்' சந்தோஷமாகப் பதில் சொன்னார் மகாராஜா. மறுவாரமே இந்தியாவை நோக்கிய அவர்களது பயணம் ஆரம்பமானது.




# மகாராஜாவின் இறுதிக் காதலி!

> வாருங்கள் குழந்தைகளே!
> நம் சொந்த மண்ணுக்குச் செல்லுவோம்.
> காலம் கனிந்துவிட்டது...

*கபுர்தலாவின் ஜெகத்ஜித் அரண்மனை முன் வரிசையாக நின்ற சீருடை அணிந்த வாத்தியக் குழுவினர், சுருதி பிசகாமல் இந்தப் பாடலை வாசித்தார்கள். இது* La Marseillaise *என்றழைக்கப்படும் பிரான்ஸின் தேசிய கீதம்.*

*ஏற்கெனவே ஒருத்தருக்கு நிச்சயிக்கப்பட்ட பெண்தான் ஜெர்மைன். என்ன செய்ய, காதல் கிழ மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் புத்திக்கு அது புரிகிறது, மனசுக்குப் புரியவில்லையே? ஆசை வந்துவிட்டது. படாரெனக் காதலைப் போட்டுடைக்க முடியாது. மெது மெதுவாக, கொஞ்சம் கொஞ்சமாக அவளது மனத்தை ஆக்கிரமிக்க வேண்டும். தன் காதல் திட்டத்தின் முதல் படியாக ஜெர்மைனை இந்தியாவுக்கு அழைத்து வந்துவிட்டார்.*

*கபுர்தலாவில் காலடி எடுத்து வைக்கும் முதல் நொடியிலேயே, அவள் அசந்து போக வேண்டும். எப்படி வரவேற்பு கொடுக்கலாம் என்று யோசித்தார். பிரான்ஸ் தேசிய கீத ஐடியா கிடைத்தது. விருந்தாளியாக வந்த ஜெர்மைன் புல்லரித்து நின்றாள். கண்களில் ஆனந்தம், கண்ணீராகத் திரண்டு நின்றது. பாசம் பொங்க ஜெகத்ஜித் சிங்கைப் பார்த்தாள். அந்தப் பார்வை, இடைவெளியைக் குறைப்ப தாக இருந்தது. ஐடியா ஜெயித்த திருப்தி, ஜெகத்ஜித் சிங்கின் முகத்தில் சிரிப்பாக வெளிப்பட்டது.*

அது மட்டுமா, வந்த விருந்தாளியைக் கௌரவப்படுத்தும் விதமாக கபுர்தலா படையினரின் அணிவகுப்பு மரியாதை வேறு. அவளுக்குத் தன் அரண்மனையைச் சுற்றிக் காட்டினார். அரண்மனைக்குள் இருந்த ஐரோப்பியத்தனத்தை ரசித்தாள் ஜெர்மைன். ஜர்மானி, மற்ற அமைச்சர்களையும், அப்போது அரண்மனையில் இருந்த மகாராஜாவின் குடும்பத்தினரையும் அவளுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

அந்த அரண்மனையின் மகாராணிகளுக்கான அதிவிசேஷ அறை ஒன்று ஜெர்மைனுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவள், ராஜ சௌகரியங்களைக் கண்டு திகைத்து நின்றாள். அன்று இரவே, சமஸ்தானத்தின் முக்கியஸ்தர்களுக்கு ஜெர்மைனை அறிமுகப்படுத்தும் விதமாக விருந்து ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மகாராஜா தன் மீது வைத்திருக்கும் மதிப்பை முழுமையாக உணரத் தொடங்கினாள் ஜெர்மைன்.

அடுத்தடுத்த நாள்களில் ஜெகத்ஜித் சிங் தன் முழு நேரத்தையும் ஜெர்மைனோடு செலவிடு வதற்காக ஒதுக்கினார். லட்சியத்தை அடைவதைவிட வேறென்ன வேலை? ஜெர்மைனை அழைத்துக்கொண்டு ஊர் சுற்றக் கிளம்பினார். தன் சமஸ்தானத்தின் முக்கியப் பகுதிகளுக்கு, பிற சமஸ்தானங்களுக்கு, வேட்டைக்கு, விருந்துகளுக்கு.

அப்புறம்? எதையாவது செய்து அவளைக் குஷிப்படுத்திக் கொண்டே இருக்க வேண்டும் என்பதே ஜெகத்ஜித் சிங்கின் நோக்கம். சாதாரணமான பெண் என்றால் பரவாயில்லை. ஒரு வைர நெக்லஸை வலது கையில் கொடுத்துவிட்டு, காதல் இதயத்தை இடது கையில் கொடுத்துவிடலாம். மயங்கி மடிசாய்ந்து விடுவாள். ஆனால் ஜெர்மைனோ நன்கு படித்தவள். நாலும் தெரிந்தவள். உலக அரசியல் எல்லாம் அறிந்தவள். விவரக்காரி. கேவலம், நகைக் கெல்லாமா மயங்கப் போகிறாள்?

சமஸ்தானத்தில் அமைச்சரவைக் கூட்டங்களில் அவளைப் பங்கேற்க வைத்தார். மாலை வேளைகளில் அவளோடு உட்கார்ந்து அரசியல் விஷயங்களை, நிர்வாகப் பிரச்னைகளைப் பேசினார். சில நிர்வாகச் சிக்கல்களுக்குத் தீர்வாக பளிச் யோசனைகளையும் சொன்னாள். அவளது மதியூகத்தைக் கண்டு மெய் சிலிர்த்தார் ஜெகத்ஜித் சிங். நாளடைவில் ஜெர்மைன் மகாராஜாவின் எக்ஸ் காதல் கதைகளையும், அந்தப்புரக் கதைகளையும் தெரிந்து கொண்டாள். அவளது மனத்துக்குள் சின்னதாக எச்சரிக்கை உணர்வு பரவியது.

நாள்கள், மாதங்கள் நகர்ந்தன. போரடித்துவிடாதா என்ன? 'சரி மகாராஜா, இந்தியாவைச் சுற்றிக் காட்டியதற்கு நன்றி. நான் பிரான்ஸுக்குக் கிளம்புகிறேன்' என்று ஒருநாள் இரவு உணவு நேரத்தில் சொன்னாள் ஜெர்மைன். போச்சு போச்சு. எல்லாம் போச்சு. இதற்கா இவ் வளவு பாடு? விடமாட்டேன். எப்படியாவது இவளை இங்கேயே தங்க வைக்க வேண்டும். என்ன செய்யலாம்? ஏதாவது ஒரு பதவி கொடுத்தால்?

ஜெகத்ஜித் சிங்கின் மூளை, ஜெகஜ்ஜால திட்டம் ஒன்றைத் தீட்டியது. பதவி ஒன்றைக் கொடுத்துவிட்டால் ஜெர்மைனைக் கௌரவப்படுத்தியது போல இருக்கும். அவளது திறமையைப் பயன்படுத்தக் கிடைத்த வாய்ப்பாக நினைத்து சந்தோஷப்படுவாள். அதுபோக, இங்கேயே தங்கிவிடுவாள். இப்போதைக்கு அதுபோதுமே.

ஜெர்மைனுக்கு 'மாஹான்-சலாகர்' (Mahan Salakar) என்ற பதவி வழங்கினார் மகாராஜா. சமஸ்தானத்தின் முதன்மை ஆலோசகர். அளவில்லா ஆனந்தமடைந்தாள். ஆனால், மற்ற அமைச்சர்களின் காதுகளில் பொறாமைப் புகை. சமஸ்தானத்தின் நிர்வாகத்தில் அதிகம்



காதல் மகாராஜா தனது சில மனைவிகளுடன், பணிப்பெண்களுடன்

பங்கேற்று வந்த ஜெகத்ஜித் சிங்கின் மூன்றாவது மகன் அமர்ஜித் சிங்குக்கு அது பிடிக்கவே யில்லை. சமஸ்தானத்தின் பிரதம அமைச்சர் அப்துல் ஹமிது தனக்குள்ளேயே பொருமிக் கொண்டார். வேறென்ன செய்ய முடியும்? வாய் திறந்து எதிர்ப்பதென்பது மகாராஜாவை அல்ல, அவரது புனிதமான காதலை எதிர்க்கும் செயல் அல்லவா.

ஜெர்மைன், தனக்குக் கொடுக்கப்பட்ட பதவிக்குரியப் பணிகளைச் சர்வ சிரத்தையுடன் சந்தோஷமாகச் செய்தாள். அரசு நிகழ்ச்சிகளில் பங்கேற்க ஆரம்பித்தாள். வைஸ்ராய் தலைமையிலான சந்திப்பு ஒன்றிலும் கபுர்தலா சமஸ்தானம் சார்பாகக் கலந்துகொண்டாள்.

காலம் கரைந்துகொண்டே சென்றது. மகாராஜாவின் காதல் ஒருதலையாக வளர்ந்து கொண்டே சென்றது. ஆனால் அவரது மனம், காதலை வெளிப்படுத்தத் திராணியில்லாத கதாநாயகன் முரளிபோல் ஊமையாகவே இருந்தது. காரணம், ஜெர்மைன் இடைவெளி விட்டே பழகிக் கொண்டிருந்தாள். எல்லை மீற எந்தவித சந்தர்ப்பத்தையும் அளிக்கவில்லை.

தனது அடுத்த ஐரோப்பியச் சுற்றுப் பயணத்துக்குத் தயாரானார் ஜெகத்ஜித் சிங். ஜெர்மைனோடு தான். பாரிஸ் சென்றாவது படாரென தனது இதயத்தைத் திறந்துவிட வேண்டும் என்ற திட்ட மிட்டிருந்தார். பாரிஸிலும் நாள்கள் கழிந்தன. ஜெர்மைன், தன்னை வளர்த்தவரும் வருங்காலக் கணவருமான ரெஜினால்ட் ஃபோர்டுடன் அடிக்கடிச் சந்திக்க ஆரம்பித்தாள்.

‘சரி, மாற்றான் தோட்டத்து மரிக்கொழுந்து. எங்கிருந்தாலும் வாழ்க’ என்று ஜெகத்ஜித் சிங் பெருந்தன்மையாக விலகியிருக்கலாம். ஆனால் அவரால் தாங்க முடியவில்லை. ‘இனியும் பொறுமையாக இருந்தால், அவளது திருமண விருந்துக்குச் சென்று ஷாம்பெயின் சாப்பிட்டு

விட்டு வர வேண்டியதுதான். நான் என்ன ஏமாந்த சோணகிரியா? தைரியமாகக் காதலைச் சொல்லப் போகிறேன்' என்று முடிவெடுத்தார்.

அது பாரிஸின் Bios de Boulogne என்ற பூங்கா. பரப்பளவில் மிகப்பெரியது. பல கேளிக்கைகள் அடங்கிய தீம் பார்க். பகலில் சூதாட்டம், குதிரைப் பந்தயங்கள், யானை விளையாட்டுகள் என என்னென்னமோ நடக்கும். ஆனால் இரவில் சிவப்பு விளக்கைப் பொருத்திக் கொள்ளும். அங்கு, ஒரு பகல் பொழுதில் ஜெகத்ஜித் சிங்கும் ஜர்மானியும் வாக்கிங் சென்று கொண்டு இருந்தார்கள்.

'நான் ஜெர்மைனைத் திருமணம் செய்துகொள்ள நினைப்பது பற்றி உங்கள் கருத்து என்ன?' - ஜர்மானியிடம் கேட்டார் ஜெகத்ஜித் சிங். அது இயலாத காரியம், அந்த நினைப்பை விட்டு விடுங்கள் என்பது போல ஜர்மானியும் ஜாடைமாடையாகச் சொல்லிப் பார்த்தார்.

'அபார அழகு, அற்புதமான அறிவு - இரண்டுமே கொண்ட அபூர்வமான பெண். அவளை என் மகாராணியாக்கிக் கொள்ளும் வாய்ப்பை நழுவ விட மாட்டேன். இப்போதே அவளை இங்கு வரச் சொல்லலாமா? என் ஆசையைச் சொல்லி விடுகிறேன்' - படபடத்தார் மகாராஜா.

'இந்த இடத்தில் வேண்டாம். இன்றைய இரவு உணவு நேரத்தில் சொல்லுங்கள்' - யோசனை சொன்னார் ஜர்மானி.

ரிட்ஸ் ஹோட்டல். உணவு மேசையில் மெழுகுவர்த்தியின் தீபம் சிரிப்பதுபோல் இருந்தது. ஜெர்மைன் அளவான ஒப்பனையோடு அழகாக வந்து உட்கார்ந்தாள். ஷாம்பெயினால் உதடு நனைத்துக் கொண்டார்கள். அந்த வார்த்தைகளை சிலமுறை மனத்துக்குள்ளேயே சொல்லிப் பார்த்துக் கொண்ட ஜெகத்ஜித் சிங், பின் உதடு திறந்தார்.

'உன்னை என் மகர்ராணியாக்கிக் கொள்ள ஆசைப்படுகிறேன். சம்மதமா?'

ஜெர்மைனின் முகத்தில் அக்மார்க் அதிர்ச்சி. சட்டென பின்னால் தள்ளி உட்கார்ந்தாள். சில நொடிகள் மௌனம். கொஞ்ச நேரம் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள். பின் வாய் திறந்தாள்.

'மகாராஜா, அதற்கு வாய்ப்பு இல்லை. நான் ரெஜினால்டைத்தான் திருமணம் செய்து கொள்வேன்.'

மெழுகுவர்த்தி அழுவதுபோல இருந்தது. காதல் தோல்வி அழுத்தவே, சோகம் தாங்க முடியாமல் அங்கிருந்து எழுந்து சென்றார். ஜெர்மைன் அமைதியாகப் பார்த்துக் கொண்டே இருந்தாள். அவரது நடையில் முதுமையின் சுவடுகள் தெரிந்தன.

அசந்து தூங்கிக் கொண்டிருந்தார் ஜர்மானி. தொலைபேசி ஒலித்தது. மறுமுனையில் மகா ராஜா. உடனடியாக வரச் சொல்லி உத்தரவு. மணி அப்போது அதிகாலை நான்கு இருக்கும். ஓடினார் ஜர்மானி. மகாராஜாவின் முகமெல்லாம் சோகம். அத்தனை நேரம் தூங்காமல் இருந்த களைப்பு கண்களில் தெரிந்தது. உடைந்த குரலில் பேச ஆரம்பித்தார்.

'செத்துருவேன் போல இருக்கு. இப்படி ஒரு பதிலை அவ சொல்லுவான்னு நான் எதிர் பார்க்கவே இல்லை. என்னால அவளை மறக்க முடியாது. அவ என்னோட பொக்கிஷம். நான் அவளை இழக்க மாட்டேன். எப்படியாவது சம்மதிக்க வைப்பேன்...'

மகாராஜாவின் புலம்பல் தொடர்ந்தது. வேறு வழியின்றி, ஜர்மானியும் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார். 'வாய்ப்பே இல்லாத விஷயத்துக்கு ஏன் இப்படி வருத்தப்படுறாரு. அப்படியே ஜெர்மைன் இவரைக் கல்யாணம் செஞ்சுக்கிட்டாலும், அந்த வாழ்க்கை, அந்த உறவு கொஞ்ச காலம்தான் நீடிக்கும். அவள் மாட்டேன்னு சொன்னதே நல்லது' என்று தனக்குள்ளேயே நினைத்துக் கொண்டார் ஜர்மானி.

ஜெகத்ஜித் சிங், இந்தியாவுக்குக் கிளம்பினார். ஜெர்மைன் இல்லாத பயணம். வலித்தது. நெருக்கமான ஒன்றை விட்டுவிட்டு வருவது போன்ற வேதனை. கபுர்தலாவுக்கு வந்த பின்பும் ஜெர்மைனின் நினைப்பு அவரை வாட்டியது. எத்தனையோ பேர் இருந்தாலும் அவள் உலவிச் சென்ற அரண்மனை வெறுமையாகத் தெரிந்தது.

'இதை ஜெர்மைனுக்கு அனுப்பி விடுங்கள்' ஜர்மானியிடம் பரம்பரை முத்துமாலை ஒன்றைக் கொடுத்தார் மகாராஜா. அவளது பிறந்தநாள் பரிசாக, தன் சார்பில் அனுப்பச் சொல்லிக் கொடுத்திருந்தார். சில நாள்கள் கழித்து ஜெர்மைனிடம் இருந்து ஒரு கடிதம் வந்து சேர்ந்தது.

'தங்கள் பிரியத்துக்கு நன்றி மகாராஜா. தாங்கள் என் திருமணத்துக்கு அளித்த பரிசாக இதை எடுத்துக் கொள்கிறேன். - அன்புடன் திருமதி. ஜெர்மைன் ரெஜினால்ட்.'

அடுத்த சில நாள்கள் மகாராஜா யாரிடமும் எதுவும் பேசவில்லை. மன அமைதி தேடி முசௌரிக்குச் சென்றார். அவர் மனத்தில் அந்த ஒருதலைக் காதல் ஏற்படுத்திய காயம் ஆறாமலே இருந்தது, அடுத்த பெண்ணைப் பார்க்கும்வரை.

இன்னும் ஒருத்தியா?

ஏற்கெனவே பட்டியல் பெரியது. ஹபன்ஸ் கவுர், பார்வதி கவுர், லஷ்மி கவுர் என்ற மூன்று அஃபிஷியல் மகாராணிகள். நான்காவதாக ஆண் வேஷம் போட்டு ஐரோப்பாவுக்கு அழைத்துச் சென்றாரே, கனாரி சாஹிபா என்ற ஆசை மகாராணி. ஆசைக்காதலியாக, மனைவி யாக வாழ்ந்துவிட்டு பின் நம்பிக்கை துரோகம் செய்த அனிடா டெல்கடோ (எ) பிரேம் கவுர் என்ற ஸ்பானிஷ் அழகி. மகாராஜாவைவிட அவரது பணத்தையே அதிகமாகக் காதலித்து, பின் கல்தா கொடுத்த அட்லெட் செர்ரி. அழகாலும் அறிவாலும் மயக்கிய ஜெர்மைன். இவர்கள் தவிர வேறு சில முகம் தெரியாத காதலிகள். கபுர்தலாவின் அந்தப்புரத்தில் 300 பெண்கள் இருந்தார்கள் என்றுகூட ஒரு குறிப்பு உண்டு.

போதாதா?

இத்தனைக்குப் பிறகும், சஷ்டியப்த பூர்த்தி செய்து கொள்ளும் வயதிலும் ஒரு மனிதனுக்குக் காதல் வருமா என்ன?

ஆனால் ஜெகத்ஜித் சிங்குக்கு வந்தது. அவளது பெயர் Eugenie Grosupova. இந்த இடத்தில் ஒரு நல்ல செய்தியையும் சொல்லியே ஆக வேண்டும். அவள்தான் ஜெகத்ஜித் சிங் கடைசி யாகக் காதலித்த பெண்.



73

# குத்ப் மினாரின் ஐந்தாவது தளத்தில்...

இன்றைய செக் குடியரசின் தலைநகரம் ஃப்ரேக் (Prague). அன்றைய செக்கோஸ்லோவிகியாவின் மிகப் பெரிய நகரமும் அதுதான். கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் கடைசி காதலியான Eugenie பிறந்த ஊர்.

Eugenie தாய் நினா க்ரோஸுபோவா ஒரு நடிகை. நகரத்தின் பெரிய வணிகர் ஒருவரோடு அதிகாரபூர்வமின்றி வாழ்ந்தாள் நினா. Eugenie பிறந்தாள். வசதியாக வெல்லாம் வளர்க்கமுடியவில்லை. ஏதோ பிழைப்பு ஓடியது. தன் தாயைப் போலவே Eugenieம் நடிகையானாள்.

Eugenie, அழகானவள். உயரமானவள். உயரத்துக்கேற்ற உடல்வாகு உடையவள். வசீகரமான நீலநிறக் கண்கள் கொண்டவள். ப்ரௌனும் கொஞ்சம் மஞ்சளும் கலந்தாற்போல இருக்கும் அவளது கூந்தலின் நீளம் குறைவுதான் என்றாலும், சுண்டியிழுக்கும் அழகுடையது. மேடையேறி அவள் நின்றாலே போதும், அந்த அழகை ரசிக்கத்தான் தோன்றுமே தவிர, நடிக்க வருகிறதா இல்லையா என்றெல் லாம் அநாவசியமாகச் சிந்திக்கத் தோன்றாது.

அன்றைய தினம் அவள் நடனமாடிக் கொண்டிருந்தாள். அது ஃப்ரேகிலுள்ள பர்கா (Burga) எனும் தியேட்டர். அந்த அறுபது வயதிலும் (1937) ஜெகத்ஜித் சிங்குக்கு வேறென்ன வேலை? கோட்டை எடுத்து மாட்டினோமோ, வாக்கிங் குச்சியைக் கையில் எடுத்தோமா, ஏதாவது கேளிக்கை நிகழ்ச்சியில் சென்று உட்கார்ந்தோமா, குடித்தோமா, கும்மாளமடித்தோமா வயது என்ன வயது? வாழ்க்கை வாழ்வதற்கே என்ற கொள்கையில் உறுதியாக இருந்தார்.

மகாராஜா பர்கா தியேட்டருக்கு வந்தார். அசத்தலாக ஆடிக்கொண்டிருந்த Eugenieயைப் பார்த்தார். அழகில் மயங்கினார். உடனே காதலிக்க ஆரம்பித்தார் என்பதெல்லாம் வழக்கமாக நடப்பதுதானே.

ஒரு நடிகைக்கு ஆயிரத்தெட்டு காதல் தூது வரத்தான் செய்யும். ஆயிரத்து ஒன்பதாவது ஆளாக ஜெகத்ஜித் சிங்கும் காதல் தூது விட்டுப் பார்த்தார். Eugenie, ரொம்பவே யோசித்தாள்.

'யாரிவர்? இந்தியாவில் இருந்து வந்துள்ளாராமே? மகாராஜாவாம். பெரிய இடம்தான். ஆனால் பெரியவராக இருக்கிறாரே. டை அடித்துகூட முதுமையை மறைக்க முடியாது. முகத்தில் சுருக்கங்கள் தெரிகிறதே. என் அழகென்ன, வயதென்ன, இளமையென்ன? போயும் போயும் ஒரு கிழவரையா.. ச்சே!'

அவளுக்குச் சுத்தமாக விருப்பமே இல்லை. விஷயமறிந்த அவளது அம்மா நினாவும், பாட்டி புராவும் நச்சரிக்க ஆரம்பித்தார்கள்.

'அடியேய், உன் வாழ்க்கையில அதிர்ஷ்ட நேரம் ஆரம்பமாயிருச்சுடி. இந்தியாவோட மகா ராஜான்னா சும்மாவா? நீயும் என்னை மாதிரி கஷ்டப்படக்கூடாது. அதான் என் ஆசை. வய சானவர்தான். இல்லைன்னு சொல்லலை. ஆனா நினைச்சே பார்க்க முடியாத அளவுக்கு வசதியானவர். அசடாட்டம் யோசிக்காத. சம்மதம்னு சொல்லு. போம்மா...'

வற்புறுத்தி அவளைச் சம்மதிக்க வைத்தார்கள். பிறவிப் பயனை அடைந்தது போல உணர்ந்தார் ஜெகத்ஜித் சிங். அப்புறமென்ன, தன் பேத்தி வயதுள்ள பெண்ணை, காதலியாக கபுர்தலாவுக்கு அழைத்துச் சென்றார். இந்தியா, மக்கள், ராஜ குடும்பத்தினர், அரண்மனை வாழ்க்கை, Eugenie-க்கு எல்லாமே புதியதாக இருந்தது, பழைய மகாராஜாவைத் தவிர. அவளால் மனத்தளவில் ஜெகத்ஜித் ஜிங்கை தனது காதலராகவே ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இருந்தாலும் பேய்க்கு வாக்கப்பட்டால் புளியமரம் ஏறித்தானே வேண்டும். அவரது விருப்பங் களுக்கு எல்லாம் தலையாட்டினாள்.

ஜெகத்ஜித் சிங், அவளைத் தாங்கோ தாங்கென்று தாங்கினார். அவளுக்கென ஐரோப்பிய பாணியில் ஒரு மாளிகை அமைத்துக் கொடுத்தார். நினைத்தபோதெல்லாம் புதுப்புது நகைகள் சூட்டி மகிழ்ந்தார்.

ஆனால்?

இளைய வயதில் மகாராஜாவுக்கு குண்டு உடம்பும் ஜம்போ தொப்பையும் பிரச்னையாக இருந்தது. யானையின் ஃபார்முலாவினால் அந்தப் பிரச்னை தீர்ந்தது. சகல சந்தோஷமும் கிடைத்தது. இப்போதைய நிலை வேறு. உடல் பருமன் பிரச்னையில்லை. மெலிந்த தேகம் தான். தொப்பைகூட இல்லை. ஆனால் உடல் உறுப்புகளுக்கெல்லாம் பென்ஷன் வாங்கும் வயதாகிவிட்டது. யானையோ, டைனோசரோ எந்த ஃபார்முலாவும் பிரயோசனமில்லை. பாவம், லாட்ஜ்களில் அருள்பாலிக்கும் பரம்பரை சித்த வைத்தியர்களையும் அவருக்குத் தெரியாது போல. நிறையவே சங்கடப்பட்டார்.

Eugenie, சந்தோஷமோ துக்கமோ எதையும் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. இருந்தாலும் அவள் முகத்தில் எப்போதும் மெலிதாகத் தெரியும் சோக ரேகைகள் ஜெகத்ஜித் சிங்கை

உறுத்தின. அவளை எப்படிச் சந்தோஷப்படுத்தலாம் என்று யோசித்த அவர், ஆனந்த அதிர்ச்சி ஒன்று கொடுத்தார்.

அவளது தாய் நினாவையும், பாட்டி புராவையும் கபுர்தலாவுக்கு வரவழைத்தார். அவளுடனேயே தங்க வைத்தார். Eugenie சிரிக்க ஆரம்பித்தாள். மாதங்கள் ஓடின. எத்தனை நாள்கள் இப்படியே ஆசைநாயகியாக மட்டும் வாழ்வது? அங்கீகாரம் வேண்டாமா? Eugenie-ன் தாயும் பாட்டியும் புலம்ப ஆரம்பித்தார்கள். ஜெகத்ஜித் சிங்குக்கு அவளைத் திருமணம் செய்துகொள்வதில் எந்தவிதச் சிக்கலும் இருக்கவில்லை. அதற்குத் தயாராகவே இருந்தார்.

'சம்மதமா?' என்று அவளிடமே கேட்டார். அவளிடமிருந்துதான் உடனடி பதில் வர வில்லை.

'என் கண்ணு, செல்லம். இந்த அம்மாவும் பாட்டியும் சொல்லுறதைப் புரிஞ்சிக்கோ. இப்படி அங்கீகாரமே இல்லாம ஆசைநாயகியா இருந்தா உன் வருங்காலம் என்ன ஆகுறது? நீ மகாராஜாவைக் கல்யாணம் செஞ்சுக்கோ. அப்பத்தான், பின்னால நீ அவரைப் பிரிஞ்சாலும், இல்ல அவர் உன்னை விட்டுப் பிரிஞ்சாலும் ஜீவனாம்சம் கண்டிப்பாகக் கிடைக்கும். சம்மதம்னு சொல்லுடா என் ராஜாத்தி.'

மிகவும் வற்புறுத்திதான் சம்மதிக்க வைத்தார்கள். சீக்கிய முறைப்படி ஜெகத்ஜித் சிங், Eugenieயைத் திருமணம் செய்து கொண்டார் (செப்டெம்பர் 9, 1942). எளிமையான திருமணம். பெரிய கொண்டாட்டங்களோ, விருந்துகளோ கிடையாது. அவளது பெயர் 'தாரா தேவி' (Tara Devi) என்று மாற்றப்பட்டது.

ஆனால் ஜெகத்ஜித் சிங்கின் சமூகத்தினரே இந்தத் திருமணத்துக்கு எதிராகக் குரல் கொடுத் தார்கள். குறிப்பாக அகாலியினர். பிரிட்டிஷாரும் மகாராஜாவிடம் தமது அதிருப்தியைக் காட்டினார்கள். தாரா தேவிக்கு கபுர்தலாவின் மகாராணி என்ற அங்கீகாரம் கொடுக்க வேண்டும் என்று விண்ணப்பம் வைத்தார் மகாராஜா. வேலைக்கு ஆகவில்லை. குறைந்த பட்சம் ராணி என்ற அங்கீகாரமாவது அளிக்க வேண்டும் என்றும் கேட்டுப் பார்த்தார். வைஸ்ராய் லின்லித்கோ (Linlithgow) மறுத்துவிட்டார். அரசு நிகழ்ச்சிகள் எதிலும் அவள் பங்கேற்க அனுமதி வழங்கப்படவில்லை.

இருந்தாலும் தாரா தேவிக்கு தன் அரண்மனையில் ஒரு மகாராணிக்குரிய அத்தனை உரிமைகளையும் அளித்தார் ஜெகத்ஜித் சிங். அது அவரது குடும்பத்தினர்களிடையே அதிருப்தியை ஏற்படுத்தியது. அமைச்சர்கள், அரண்மனை உயரதிகாரிகளும் தாரா தேவிக்கு எதிரான மனநிலையிலேயே இருந்தனர். சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் அவளைப் பற்றிய அவதூறுகளைப் பரப்புவதில் குறியாக இருந்தனர்.

தன்னைச் சுற்றிப் பின்னப்படும் அரசியல் வலைகள் தாரா தேவிக்குப் பயத்தை ஏற்படுத்தின. இருந்தாலும் மகாராஜா அவள் மீது வைத்திருந்த அன்பு, தைரியமளித்தது. துணையாகத் தாயும் பாட்டியும் கூடவே இருந்தார்கள். தாரா தேவி, சகித்துக் கொண்டு வாழ்ந்தாள்.

அப்போது அவர்கள் அனைவரும் முசௌரிக்குச் சென்றிருந்தார்கள். திடீரென ஒருநாள் அவளது பாட்டி புரா, இறந்துபோனாள். அது இயற்கையான மரணம் போல் தெரியவில்லை.

பெரும் அதிர்ச்சியடைந்தாள் தாரா. அடுத்த சில நாள்களிலேயே அவளது தாய் நினாவும் இறந்துபோனாள். தாரா, மீளவே முடியாத துயரத்தில் சிக்கினாள்.

'உங்க பாட்டியையும் அம்மாவையும் யாரோ விஷம் கொடுத்துக் கொன்னுருக்காங்க. நீங்களும் எச்சரிக்கையா இருங்க. உங்களுக்கு எதிரா பெரிய சதி நடக்குது. ஜாக்கிரதை' தாராவின் நம்பகத்துக்குரிய பணிப்பெண் ஒருத்தி சொன்னாள். அது தாராவின் மனநிலையை மிகவும் பாதித்தது.

எதைப் பார்த்தாலும் சந்தேகம். யாரைப் பார்த்தாலும் பயம். சாப்பாட்டைப் பார்த்தாலே அலறினாள். அதில் விஷம் கலந்திருக்குமோ என்ற அச்சம். தான் வளர்க்கும் நாய்க்குட்டிகளைத் தவிர வேறெதையும் அவளால் நம்ப முடியவில்லை. நாய்க்குட்டிகளிடம் மட்டும் கனிவோடு நடந்துகொண்டாள். கொஞ்சினாள்.

அந்த நேரத்தில், 'சந்தோஷமாகத்தான் இருக்கிறாள். இப்போது செல்லலாம்' என்று ஜெகத்ஜித் சிங் ஆசையோடு நெருங்கினால் கொதித்தாள். கத்தினாள். விலகி ஓடினாள். அவரும் அவளை குஷிப்படுத்த என்னென்னமோ செய்து பார்த்தார். வெளியூர்களுக்கு, வெளிநாடுகளுக்கு அழைத்துச் சென்றார். அவள் மாறவில்லை. நாளாக நாளாக அவளது உக்கிரம் அதிகமாகிக் கொண்டேதான் சென்றது.

ஒரு கட்டத்தில் 'என்னை விட்டு விடுங்கள். நான் இந்தியாவை விட்டே போய்விடுகிறேன்' என்றாள் உறுதியாக. மகாராஜா தவித்துப் போனார். டாக்டர் எம். தாஸிடம் ஆலோசனை கேட்டார். தன்னுடைய பிரச்னைகளை, தாராவினுடைய நடவடிக்கைகளை எல்லாம் சொன்னார். டாக்டரும் தாராவைப் பரிசோதித்தார். பின்பு மகாராஜாவிடம் வந்து பேசினார், மிகவும் வெளிப்படையாக.

'அம்மாவோட, பாட்டியோட மரணங்களால அவங்க மனசளவுல பாதிக்கப்பட்டிருக்கிறது உண்மைதான். ஆனா அதுக்கு முன்னால இருந்தே இந்தத் திருமண வாழ்க்கையில அவங்க சந்தோஷமா இல்லை. அதுக்குக் காரணம் நீங்கதான் மகாராஜா. உங்க வயசுன்னுகூடச் சொல்லலாம்.'

ஜெகத்ஜித் சிங்கால் பதில் எதுவும் பேசமுடியவில்லை. டாக்டரின் முகத்தையே அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.

'தப்பா எடுத்துக்காதீங்க. நான் ஒரு யோசனை சொல்றேன். தாராவை கொஞ்ச நாளைக்கு எங்காவது வெளியூர் அனுப்பி வையுங்களேன். நீங்க போக வேண்டாம். துணைக்கு யாராவது இளமையான பாதுகாப்பு அதிகாரி போகட்டும்.'

ஜெகத்ஜித் சிங் அடைந்த அதிர்ச்சி அவரது முகத்திலேயே அளவுக்கு அதிகமாகத் தெரிந்தது. அவர் பதில் எதுவும் பேசவில்லை. உள்ளுக்குள் ஆயிரம் குழப்பங்கள். பிரச்னை தீர வேண்டும். தாரா இயல்பு நிலைக்கு வர வேண்டும். விவாகரத்து கேட்கும் நிலையில் இருக்கிறாள் அவள். ஏற்கெனவே இளவரசருக்கு இரண்டாவது திருமணம் செய்துவைக்க ஸ்டெல்லாவுக்கு ஏராளமாகக் கொட்டிக் கொடுத்தாகிவிட்டது. இப்போது தாராவுக்கும் ஜீவனாம்சம் கொடுக்க வேண்டுமென்றால் தாங்காது. டாக்டரின் யோசனையை ஏற்றுக் கொண்டால் என்ன?

தாரா தேவி டெல்லிக்கு அனுப்பி வைக்கப்பட்டாள். உடன் சென்ற பாதுகாப்பு அதிகாரியின் பெயர் மேஜர் ஒய்.பி. சிங் (Y. B. Singh). தாராவுக்கு அந்த சிங் மீது ஓர் ஈர்ப்பு உண்டு என்று அரண்மனை வட்டாரத்தில் பேச்சு இருந்தது. டெல்லியில் மெய்டன் (Maiden) ஹோட்டலில் தங்கினார்கள். அங்கும் அவளுக்கு நாய்க்குட்டிகள்தான் சந்தோஷத்தைக் கொடுத்தன. ஒய்.பி. சிங்கூட அதற்கு முயற்சி செய்தார். ஆனால் விளைவுகள் எதிர்மறையாகிப் போனது.

1946, டிசம்பர் 9. மதிய நேரம். மெய்டன் ஹோட்டலில் இருந்து வெளியே வந்தாள் தாரா. கைகளில் நாய்க்குட்டிகள். அவளுடன் வேறு யாரும் வரவில்லை.

'டாக்ஸி..'

ஏறி அமர்ந்தாள். டாக்ஸி சென்று நின்ற இடம் குத்ப் மினார் (Qutab Minar). இந்திய-இஸ்லாமிய கட்டடக்கலைக்குப் பிறந்த (1193) புராதனச் சின்னம். அந்த நேரத்தில் கூட்டம் அவ்வளவாக இல்லை. நிமிர்ந்து பார்த்தாள். 237 அடி உயரம். குத்ப் மினாருக்குள் நுழைந்தாள். ஒவ்வொரு தளமாக ஏற ஆரம்பித்தாள். நிதானமாக.

ஐந்தாவது தளம். அதுதான் இறுதித் தளம். அங்கு அவளைத் தவிர சிலரே இருந்தார்கள். கைப்பிடிச் சுவரின் அருகில் சென்று நின்றாள். காற்று கொஞ்சம் பலமாக வீசியது. நாய்க் குட்டிகள் குரைத்தன. எவ்வளவு உயரம்! என் துயரத்தைவிடவா?

அடுத்த சில நிமிடங்களில் தாராவின் உயிரற்ற உடல் இரண்டாவது தளத்தின் கைப்பிடிச் சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது.

ஜெகத்ஜித் சிங் டெல்லிக்கு வந்தார். வெளியே கொஞ்சமும் உள்ளுக்குள் நிறையவும் அழுதார். டெல்லி, செயின்ட் ஜேம்ஸ் சர்ச்சுக்கு அருகிலுள்ள மயானத்தில் அவளது இறுதிச் சடங்குகள் நிறைவேற்றப்பட்டன. அந்த இடத்தில் கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் கடைசிக் காதலி தாரா தேவிக்கு ஒரு சிறிய நினைவுச் சின்னம் அமைக்கப்பட்டிருக்கிறது.



# 74

# காதல் மகாராஜாவின் கடைசி நாள்கள்

இன்னும் சில வரிகளில் கபுர்தலாவின் ஈடு இணையற்ற காதல் மகாராஜா ஜெகத்ஜித் சிங், மரணத்தைச் சந்திக்கவிருக்கிறார். எனவே அதற்குமுன் (ஜெகத் ஜித் சிங் இருக்கும்போதே) அவர் தன் சமஸ்தானத்துக்கு ஆற்றிய சில நல்ல பணிகளையும் பார்த்துவிடலாம்.

சொன்னதைச் சொன்னபடி கேட்டு சமர்த்தாக நடக்கும் மகாராஜாக்கள் பட்டியல் ஒன்று பிரிட்டிஷாரிடம் இருந்தது. அந்தப் பட்டியலில் முதல் பத்து பெயர்களில் மகாராஜா ஜெகத்ஜித் சிங் பெயரும் இருக்கும். அவர் ஒருபோதும் பிரிட்டிஷாருக்கு எதிராக முஷ்டி உயர்த்தியதில்லை. ஏதாவது ஒன்றிரண்டு விஷயங்களில் எப்போதாவது லேசாக அதிருப்தியை மட்டுமே வெளிப்படுத்தியதுண்டு, அவ்வளவே.

சித்திரைக்கொரு கிளி, வைகாசிக்கொரு மயில், ஆனிக்கொரு அன்னம் என்று எந்தப் பொழுதையும் வீணடிக்காமல் பெண்களும் பெண்கள் சார்ந்த இடமு மாகவே தன் வாழ்க்கையைக் கழித்தவர்தான். ஆனாலும் பிரிட்டிஷாருடன் கொண்டிருந்த நல்லுறவின் மூலம், தன்னால் இயன்றவரை சமஸ்தானத்துக்குத் தேவையான, அத்தியாவசியமான விஷயங்களை நிறைவேற்றவும் செய்து இருக்கிறார்.

எந்தவித அடிப்படை வசதிகளும் இல்லாத, சற்றே பெரிய குக்கிராமமாகத்தான் கபுர்தலா இருந்தது. ஜெகத்ஜித் சிங்கின் ஆட்சிக் காலத்தில் அது அடிப்படை



மகாராஜா ஜெகத்ஜித் சிங் கடைசி காலத்தில்

வசதிகள் எல்லாம் நிறைந்த நவீன நகரமாகப் பொலிவு பெற்றது. பிரெஞ்சு கட்டடக் கலை மீது அவருக்கிருந்த அதீத ஆர்வமே அதற்குக் காரணம்.

அந்த ஆர்வத்தினால், தன்னுடைய அரண்மனையை ஐரோப்பிய நாகரிகத்துக்கேற்ப புதுப் பித்துக் கொண்டே இருந்தார். அந்தந்த நேரத்தில் மனத்துக்குப் பிடித்த பெண்ணாக யார் இருக் கிறார்களோ, அவர்களுக்குப் புதிய மாளிகையைக் கட்டிக் கொடுத்தார். கூடவே, வீடில்லாத தன் சமஸ்தானத்து ஏழை மக்களுக்கும் வீடுகள் கட்டிக் கொடுத்தார்.

மாதம் மும்மாரி பொழிந்ததா என்றெல்லாம் தெரியவில்லை. கபுர்தலா நகரில் பல இடங்களில் குடிநீர்க் குழாய் வந்தது. குழாயில் தண்ணீரும் வந்தது. கழிவுநீர் வெளியேற முறையான வசதிகளும் செய்யப்பட்டன. முதன் முதலாக சமஸ்தானத்தின் பல இடங்களில் மருத்துவ மனைகள் முளைத்தன. அடுத்தது விவசாயம். பஞ்சாபின் உயிர். தனது சமஸ்தானத்தில் விவசாயத்தில் அறிவியல் முறைகளைக் கொண்டு வருவதில் பெரும் ஆர்வம் காட்டினார் மகாராஜா. நவீன ரக விதைகளை விவசாயிகளுக்கு இலவசமாக வழங்க ஏற்பாடு செய்தார்.

அடிப்படை விஷயங்களில் ஏதோ ஒன்று விட்டுப் போனதுபோல் தெரிகிறதே? ஆங்.. கல்வி. அந்த விஷயத்திலும் ஜெகத்ஜித் சிங், தம் மக்களுக்கு எந்தவிதக் குறையும் வைக்கவில்லை. குறிப்பாக, தம் சமஸ்தானத்தில் பெண்களும் படிப்பதற்கு ஏகப்பட்ட வசதிகளைச் செய்து கொடுத்தார்.

மொத்தத்தில் சமஸ்தான மக்கள், மகாராஜாவின் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றிக் கண்டு கொள்ளவில்லை. வருடத்தில் பாதி நாள்கள் சமஸ்தானத்தில் இல்லாமல், உலகம் சுற்றிக் கொண்டிருக்கிறாரே என்று வருத்தப்படவில்லை. எத்தனையோ வருடங்களாக அரியணையை விட்டுத்தராமல் ஆட்சி செய்து கொண்டிருக்கிறாரே என்று சலித்துக் கொள்ளவும் இல்லை. ஜெகத்ஜித் சிங் ‘மக்களின் மகாராஜா’வாகவே தன் இறுதிக் காலம்வரை வாழ்ந்தார்.

*‘வார்டு எண் முப்பத்து மூன்றின் சார்பாக, நமது அருமை மகாராஜா மாண்புமிகு ஜெகத்ஜித் சிங் அவர்களுக்கு ‘உலகம் சுற்றும் உத்தம மகாராஜா’ என்ற சிறப்புப் பட்டத்தை வழங்குகிறேன்’ - இப்படி யாராவது ஏதாவது ஓர் இடத்தில் கூட்டம் கூட்டி, பட்டம் கொடுப்ப தாகச் சொன்னால் போதும். சந்தோஷமாகப் பெற்றுக் கொள்வார் ஜெகத்ஜித் சிங். தன் பெயருக்கு முன்னும் பின்னும் சிறப்புப் பட்டங்கள் டிராஃபிக் ஜாம் ஆகிக் கிடக்க வேண்டும் என்று நினைப்பார் அவர். பொதுவாகவே எல்லா மகாராஜாக்களுக்கும் இந்த வியாதி இருந்தது.*

*ஆஸ்திரேலியா, அண்டார்டிகா தவிர உலகத்திலுள்ள மற்ற கண்டங்களிலெல்லாம் கால் பதித்த பெருமை ஜெகத்ஜித் சிங்குக்கு உண்டு. இரண்டு முறை உலகைச் சுற்றி வலம் வந்திருக் கிறார். அவர் சுற்றிப் பார்த்த நாடுகளின், ஊர்களின் பட்டியலை எழுத ஆரம்பித்தால், அது அனுமார் வாலாக நீண்டுகொண்டே போகும். விட்டுவிடலாம். போகும் இடங்களில் அவ ருக்கு அந்த நாட்டின் உயரிய கௌரவ பட்டம் அல்லது பதக்கம் நிறையவே கிடைத்திருக்கின்றன அல்லது விருப்பப்பட்டு, வெட்கத்தை விட்டுக் கேட்டு வாங்கியிருக்கிறார்.*

*மற்ற மகாராஜாக்களைவிடக் கூடுதலாக ஒரு பட்டமாவது வாங்கிவிட வேண்டுமென்பது ஜெகத்ஜித் சிங்கின் ஆசையாக இருந்தது.*

‘என் தந்தையாரின் காலத்திலிருந்தே நான் கபுர்தலாவின் மகாராஜாவாகச் சிறப்பாக ஆட்சி செய்துவருகிறேன். என்னுடைய ஆட்சியில் பிரிட்டிஷ் அரசுக்கு எந்தவித அதிருப்தியும் இருந் ததில்லை. பதவியிலிருந்த அத்தனை வைஸ்ராய்களும், அரசின் செயலாளர்களும் என் னுடைய பணிகள் குறித்து நல்லவிதமாகவே சொல்லியிருப்பதை அரசாங்கக் கோப்புகளில் காணலாம்.

கடந்த நாற்பது வருடங்களாக நான் வெற்றிகரமாக ஆட்சி செய்து வருகிறேன் என்பதை இந்தியாவில் உள்ளவர்களும், இங்கிலாந்தில் உள்ளவர்களும் நன்றாகவே தெரிந்து வைத்திருப்பார்கள். பஞ்சாபில் உள்ள அரசர்களில் நான்தான் மூத்தவன்.

என்னுடைய சமஸ்தானத்தின் படைகள் பல்வேறு போர்களில் பங்கேற்றுள்ளன. ஆப்கனிஸ்தான், கிழக்கு ஆப்பிரிக்கா, மெசபடோமியா எனப் பல இடங்களுக்கு நடத்தப்பட்ட ஆபரேஷன்களில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

நான் பல்வேறு சர்வதேச மாநாடுகளில் பங்கேற்றுள்ளேன். எனது பணிகளை பிரிட்டிஷ் அரசாங்கம் பலமுறை பாராட்டியுள்ளது. மாண்புமிகு குயின் விக்டோரியா அழைப்பின் பெயரில் நான் பலமுறை அவர்களது விருந்தினராக பக்கிங்ஹாம் அரண்மனைக்கு வந்திருக் கிறேன். மூன்று முறை அரண்மனை விருந்தினராகத் தங்கியும் இருக்கின்றேன்.

இப்போது நான் உங்கள் முன் பணிவுடன் வேண்டுகோள் ஒன்றை வைக்கிறேன். விக்டோரியா மகாராணியின் பெயரால் விளங்கும் கௌரவப் பட்டமான G.C.V.O.வை (Grand Cross of the (Royal) Victorian Order (knight)) தாங்கள் எனக்கு அளித்தால் மிகவும் மகிழ்ச்சியடைவேன். என்னுடைய சக சமஸ்தான மகாராஜாக்கள் சிலருக்கு இந்த உயரிய பட்டம் அளிக்கப்பட்டுள்ளது. ஆனால் அவர்கள் எல்லோரும் என்னைவிட வயதில் குறைந்தவர்கள். அவர்கள் அனைவரையும்விட எனக்கு அனுபவம் அதிகம் என்பதைத்

தெரிவிப்பது என் கடமை. நானும் என்னுடைய சமஸ்தான மக்களும் இப்போதுபோல எப்போதும் தங்களுக்கு உண்மையானவர்களாகவே இருப்போம்.

பணிவன்புடன்
ஜெகத்ஜித் சிங், கபுர்தலாவின் மகாராஜா.'

எப்படியாவது அந்தப் பட்டத்தைப் பெற்றுவிட வேண்டுமென்பது ஜெகத்ஜித் சிங்கின் வாழ் நாள் லட்சியமாக இருந்தது. அதற்காக எங்கெல்லாம் தேவையோ அங்கெல்லாம் தூது அனுப்பிப் பார்த்தார். யார் சொன்னால் காரியம் நடக்குமோ அவர்களையெல்லாம் சென்று சந்தித்தார். வைஸ்ராயைப் பார்க்கும்போதெல்லாம் இதுகுறித்து நினைவுபடுத்திக்கொண்டே இருந்தார். ஆனால் ஜெகத்ஜித் சிங்கின் வேண்டுகோளுக்கு எந்தவித பதிலும் வரவில்லை.

'அடப்போங்கய்யா, உங்களுக்கு வேற வேலை வெட்டியே இல்லையா? இன்னிக்கு உனக்கு அந்தப் பட்டத்தைக் கொடுத்தா, நாளைக்கு உன்னோட பக்கத்து சமஸ்தான மகாராஜா, தனக்கும் கொடுக்கணும்னு எங்க உயிரை வாங்குவான். அதனால யாருக்குமே கொடுக்கறதா இல்லை' இதுவே மறைமுகமாகத் தெரிவிக்கப்பட்ட பதில்.

திருமணம் செய்ய ஆசைப்பட்டு, இறுதிவரை கைகூடாமல் போன ஜெர்மைனைப் போல, அந்த G.C.V.O. பட்டமும் ஜெகத்ஜித் சிங்குக்குக் கிடைக்கவே இல்லை. 1949, ஜூன் 19 அன்று, கபுர்தலாவின் நீண்ட நாள் மகாராஜா ஜெகத்ஜித் சிங், பம்பாயில் இயற்கை மரணம் அடைந்தார். அன்னாருக்கு அப்போது வயது 78. வாழ்வில் அதுவரை கண்கலங்காத முரட்டு தாடி, மீசை ஆண்கள்கூட மகாராஜாவுக்காக அழுததாகச் சரித்திரக் குறிப்புகள் சொல்கின்றன.

மகாராஜாவின் உடல் கிடத்தி வைக்கப்பட்டிருந்த இடத்துக்குத் தள்ளாடித் தள்ளாடி ஒருவர் வந்தார். வயதானவர். சாதாரண உடைகள் அணிந்திருந்தார். யாரும் அவரைத் தடுக்கவில்லை. மகாராஜாவின் உடலின் பக்கவாட்டில் அமர்ந்தார். கதறி அழ ஆரம்பித்தார். அவர் பண்டிதர் ஸ்ரீராம்.

நினைவிலிருக்கிறதா? இளவரசி பிருந்தாவுக்கு நான்காவதாக ஆண் குழந்தை பிறக்கும் என்று சொல்லி, பின் மகாராஜாவால் சிறையிலடைக்கப்பட்டாரே, அதே பண்டிதர்தான்.

மகாராஜாவின் இறுதிச் சடங்குகளை நிறைவேற்றியது ஸ்ரீராம்தான்.

சுதந்தரத்துக்குப் பிறகு சமஸ்தானங்கள் இணைப்பில் கபுர்தலாவிலிருந்து எந்தவித எதிர்ப்பும் வரவில்லை. ஆனால் பாகிஸ்தான் பிரிவினையில் அந்தச் சமஸ்தான மக்கள் பாதிக்கப் பட்டிருந்தார்கள். சமஸ்தானத்தின் அடுத்த மகாராஜாவாக (பெயரளவுக்கு) பல வருடங்கள் காத்திருந்த பரம்ஜித் சிங் பதவியேற்றுக் கொண்டார்.

அந்தச் சமயத்தில் மகாராஜா பரம்ஜித் சிங் உடன் இணையாக மகாராணியாக அமர்ந்தவள் ஸ்டெல்லா மட்ஜ். நீண்ட நாள்களாக காதலித்து, குடும்பம் நடத்தி, குழந்தைகள் எல்லாம் பெற்றுக் கொண்ட பிறகு, ஒருநாள் (1937, ஜூலை) இருவரும் லண்டனில் சீக்கிய முறைப்படி திருமணமும் செய்துகொண்டனர்.

ஜெகத்ஜித் சிங் இருந்த காலத்திலேயே, சமஸ்தானத்தின் வருவாயில் ஒரு பகுதியை தாறுமாறாகச் செலவளித்தார் பரம்ஜித் சிங். எல்லாம் ஸ்டெல்லாவுக்காகத்தான். அவளும்



இளவரசி இந்திரா தேவி



இளவரசர் சுக்ஜித் சிங்

முடிந்தவரைப் பணத்தைக் கறந்து, சுவிஸ் வங்கியில் தனது கணக்கில் நிரப்பிக் கொண்டாள். 'இந்தப் பணப்பேயை எப்படி விரட்டுறதுன்னே தெரியலையே' என்று பரம்ஜித் சிங்கின் குடும்பத்தினரால் புலம்ப மட்டுமே முடிந்தது. அவரது முதல் மனைவியான பிருந்தா, அமெரிக்காவில் சென்று வசிக்க ஆரம்பித்திருந்தார்.

ஸ்டெல்லாவின் அதி ஆடம்பரமான நடவடிக்கைகள் பலமுறை பரம்ஜித் சிங்கையே கோபப் பட வைத்தன. ஐரோப்பிய நாடுகளில் விருந்துகளுக்குச் செல்லும்போதெல்லாம் இருவருக் குள்ளும் பிரச்னைகள் எழுந்தன. 'ஓ, மிஸ்டர் பிலிப், இந்தப் பொண்ணு உங்க மனைவி இல்லையே, யாரு புதுக் காதலியா?' ஸ்டெல்லா இப்படி ஏதாவது குண்டக்க மண்டக்க பேசிவைத்துவிடுவாள். 'ஹலோ மிஸ்டர். பரம்ஜித், உடனே அந்தப் பொம்பளையை வெளிய அழைச்சுக்கிட்டுப் போங்க' என்று அவருக்கு மிரட்டல்கள் வர ஆரம்பிக்கும்.

ஒரு கட்டத்தில் இம்மாதிரியான பிரச்னைகளால், ஸ்டெல்லாவை அவளது அம்மா வீட்டில் கொண்டுபோய் விட்டார் பரம்ஜித் சிங். 'உங்க பொண்ணை நீங்களே வைச்சுக்கோங்க. என்னை ஆளை விடுங்க' என்று கோபமாகக் கத்தியபடி வெளியேறினார். ஆனால் அந்தக் கோபமெல்லாம் நீடிக்கவில்லை. மீண்டும் அவளைச் சேர்த்துக் கொண்டு ஊர் சுற்ற ஆரம்பித்தார்.

பரம்ஜித் சிங், லண்டன் செல்லும்போதெல்லாம் அங்கு படித்துக் கொண்டிருந்த தன் மகள் இளவரசி இந்திரா தேவியைச் (பிருந்தாவின் மூத்த மகள்) சந்திப்பார். ஆனால் அவர் பாசத் துடன் இந்திராவிடம் பழகுவதை ஸ்டெல்லா விரும்பவில்லை. இந்திராவுக்கும் ஸ்டெல்லா வுக்குமே அடிக்கடி உரசல்கள் நிகழ்ந்திருக்கின்றன.

தன் தந்தை ஜெகத்ஜித் சிங்கைப் போல நீண்ட நெடுங்காலம் கபுர்தலாவின் மகாராஜாவாக இருக்கும் பாக்கியம் பரம்ஜித் சிங்குக்கு கிடைக்கவில்லை. 1955ல் உடல்நிலை பாதிக்கப்பட்டு படுத்த படுக்கையாகிப் போன பரம்ஜித் சிங், ஜூலை 19 அன்று இறந்தும் போனார்.

தன் கணவருக்கு இறுதி மரியாதை செய்ய பிருந்தா வந்திருந்தாள். ஸ்டெல்லாவும் அங்கே இருந்தாள். கருப்பு சேலை அணிந்திருந்தாள். எப்போதும்போல உதட்டுச் சாயம் பூசிக்



தன் சொகுசுக் காருடன் ஸ்டெல்லா

கொண்டிருந்தாள். பரம்ஜித் சிங் அவளுக்கு அளித்த வைர நெக்லஸ் கழுத்தில் மின்னிக் கொண்டிருந்தது.

பரம்ஜித் சிங்கிண் இறுதிச் சடங்குகள் எல்லாம் முடிந்தபின், பிருந்தா முதல் காரியமாக, ஸ்டெல்லாவை அங்கிருந்து துரத்தி விட்டாள். பரம்ஜித் சிங்கின் இறப்புக்குப் பிறகு பாரிஸில் இருந்த அவரது சொத்துகள், நகைகள் எல்லாம் இளவரசர் சுக்ஜித் சிங்கிடம் ஒப்படைக்கப் பட்டன. சுக்ஜித் சிங்குக்கு கபுர்தலாவின் மகாராஜாவாகும் வாய்ப்பு கிடைக்கவில்லை. கிடைத்தது அரசின் மானியம் மட்டுமே. சுக்ஜித் சிங், இந்திய ராணுவத்தில் பணியாற்றினார். 1971 இந்திய-பாக். யுத்தத்தில் பங்கு பெற்றார்.

ஸ்டெல்லா பதுக்கி வைத்திருக்கும் பணத்தை, நகைகளை எப்படியாவது மீட்டுவிட வேண்டு மென பரம்ஜித் சிங்கின் குடும்பத்தினர் பலமுறை முயற்சி செய்தார்கள். ஒருமுறை பாரிஸில் ஸ்டெல்லாவின் ஐம்பது டிரங்கு பெட்டிகள் சோதனையிடப்பட்டன. சொல்லிக் கொள்ளு மளவுக்கு எதுவும் கிடைக்கவில்லை. எவ்வளவோ முயற்சி செய்தும் ஸ்டெல்லாவிடமிருந்து அவர்களால் எதையும் கைப்பற்ற முடியவில்லை.

ஸ்டெல்லாவின் மீதி வாழ்க்கை ஐரோப்பிய நாடுகளிலேயே கழிந்தது. அவ்வப்போது சிம்லா வந்து போனாள். தனது அடுத்த வாழ்க்கைத் துணையாக மதுவைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாள். 1984, பிப்ரவரி 23 அன்று மரணம் அவளைச் சந்தித்தது.

இன்றும் சுவிஸ் வங்கியில் ஸ்டெல்லாவின் லாக்கரில் பரம்ஜித் சிங்கின் பணம் கேட்பாரின்றி இருப்பதாகச் செய்திகள் சொல்லுகின்றன. இப்போதும் மகாராஜா ஜெகத்ஜித் சிங்கை நினைவுபடுத்தும் வகையில் அவ்வப்போது ஒரு செய்தி மட்டும் வந்து கொண்டிருக்கிறது. அது, 'மகாராணி அனிடாவின் நகைகள் இன்று லண்டனில் ஏலம் விடப்பட்டன.'



# டுமீல் மரியாதை!

'*ராணுவ வீரர்கள் துப்பாக்கியால் ஒன்பது முறை வானை நோக்கிச் சுட, அன்னாரது பூத உடல் அடக்கம் செய்யப்பட்டது'* இப்படி ஏதாவது செய்தி கேட்டிருப்போம். அது என்ன மரியாதை? வானை நோக்கி டுமில்? யார் கண்டு பிடித்த பழக்கம் அது? மகாராஜாக்களுக்கும் இந்த டுமீல் சமாசாரத்துக்கும் என்ன சம்பந்தம்?

சொல்லச் சொல்ல, தீரவே தீராத சம்பவங்கள் நிறையவே இருக்கின்றன. பார்க்கலாம்.

பதினைந்தாம் நூற்றாண்டின் மத்தியில் ஒரு பழக்கம் ஆரம்பித்தது. அதாவது ஒரு நாட்டின் படையினர், இன்னொரு நாட்டினர் இருக்கும் இடத்துக்கு அருகில் சென்று தங்கள் படைகளையோ, பீரங்கிகளையோ அல்லது கப்பலையோ நிறுத்த நேர்ந்தால், முதல் காரியமாக வானை நோக்கிச் சுடுவர். அதன் அர்த்தம், 'அய்யா பக்கத்து நாட்டுக்காரங்களே, நாங்க இங்க சும்மாத்தான் சாமான்களை கொண்டு வைச்சிருக்கோம். டிஷ்யூம் டிஷ்யூம் போடுறதுக்கெல்லாம் வரலை' என்பதுதான். எந்த நாட்டில் இந்தப் பழக்கம் ரிப்பன் வெட்டி ஆரம்பித்து வைக்கப்பட்டது என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. பல நாடுகளில் கடைபிடிக்கப்பட்ட பொதுவான விதி இது.

அப்போது பீரங்கியில் வெடிமருந்தை நிரப்பி வானை நோக்கிச் சுடுவது வழக்க மாக இருந்தது. பதிலுக்குப் பக்கத்து நாட்டுக்காரர்களும் தங்கள் பீரங்கியால் வானை நோக்கிச் சுட்டுவிட்டால் போதும். எந்தப் பிரச்னையும் இல்லை.

சரி, அது ஏன் ஒருமுறை மட்டும் சுட வேண்டும்? அன்றைய கால கட்டத்தில் அவ்வளவுதான் முடியும். ஒரு முறை சுட்ட பிறகு, அடுத்ததாக வெடி மருந்தை நிரப்பி, இன்னொரு குண்டை உள்ளே போட்டுச் சுடுவதற்கெல்லாம் குறைந்தது அரை மணியாவது பிடிக்கும். அதுபோக இரட்டைப் படை எண்களை அன்றைய மக்கள் அபசகுன எண்களாகவே பார்த்தனர். இரண்டு முறை குண்டு வெடிக்கும் சத்தம் கேட்டால், அந்த சிக்னலுக்கு போரில் தளபதி அல்லது கப்பல் கேப்டன் இறந்துவிட்டதாக அர்த்தம் வேறு உண்டு.

அடுத்த நூற்றாண்டில், குண்டுகள் கொஞ்சம் தொழில் நுட்ப வளர்ச்சி பெற்றதும், ஏழு முறை சுடுவது என்ற வழக்கம் உண்டானது. கடவுள் ஆறு நாள்கள் உலகைப் படைத்து ஏழாவது நாள் ஓய்வெடுத்தார் என்று பழைய ஏற்பாடு கூறும் புனித எண் ஏழு அல்லவா. அதுதான் காரணம். இந்தப் பழக்கத்தை முதலில் ஆரம்பித்து வைத்தவர்கள் பிரிட்டிஷ்காரர்கள், பின்பு அமெரிக்கர்கள். பின்பு உலகம் முழுமைக்கும் பொதுவான வழக்கமாகிப் போனது.

குறிப்பாக பதினெட்டாம் நூற்றாண்டில் உலகிலேயே மிகவும் வலிமையான கப்பல் படை வைத்திருந்த கிரேட் பிரிட்டன், மற்ற சிறிய நாட்டுக் கப்பல்கள் தனக்கு 21 முறை குண்டுகள் முழங்க மரியாதை செய்ய வேண்டும் என்ற வழக்கத்தை ஆரம்பித்து வைத்தது. நீண்ட நாள்களாக அமெரிக்கா, 21 என்ற எண்ணை ஏற்றுக் கொள்ளவில்லை. 1875ல்தான் 21-ஐ அங்கீகரித்தது.

பிரிட்டிஷார், தாங்கள் காலனி அமைத்திருந்த இடங்களிலெல்லாம் இந்தத் துப்பாக்கி மரியாதை முறையைக் கொண்டு சென்றார்கள். மரியாதையைத் தரம் பிரித்ததும் அவர்கள் தாம்.

பிரிட்டிஷாரைப் பொருத்தவரை மிகவும் உயர்வானது இங்கிலாந்து ராஜ குடும்பம்தானே. இருப்பதிலேயே உச்சபட்ச மரியாதை இங்கிலாந்து கிங்குக்கோ அல்லது குயினுக்கோதான். அதாவது 101 துப்பாக்கிக் குண்டுகள் மரியாதை. பிறந்தநாள், பதவியேற்பு போன்ற சில முக்கிய நிகழ்வுகளுக்கு 101 குண்டு மரியாதை. வேறு சில நிகழ்வுகளுக்கு அதைவிடக் குறைவாக.

பிரிட்டிஷ் இந்தியாவைப் பொருத்தவரை முதல் ரேங்கில் வருபவர் வைஸ்ராய். அவருக்கான டுமில்களின் எண்ணிக்கை 37.

ஒரு துப்பாக்கி வெடிப்பதற்கும் அடுத்த துப்பாக்கி வெடிப்பதற்கும் இடைப்பட்ட கால அளவு என்பது ஐந்து நொடிகள். முதலில் நிற்கும் துப்பாக்கி வீரன் வானை நோக்கித் துப்பாக்கியைத் தயார் நிலையில் வைத்த பின் ஒரு வாசகத்தைச் சொல்லுவான். அது If I wasn't a gunner, I wouldn't be here. Fire one.★

அந்த வீரன் சுட்டு முடித்ததும் அடுத்த வீரன் அதே வசனத்தைச் சொல்லுவான். If I wasn't a gunner, I wouldn't be here. Fire two. இப்படியே த்ரீ, ஃபோர் என்று எத்தனை டுமீல்களோ அதுவரை மரியாதை நீளும். இதுதான் துப்பாக்கி மரியாதைக்கான பொதுவான விதிமுறை. ஏழு வீரர்கள், மூன்று முறை துப்பாக்கியில் வானை நோக்கிச் சுட்டு, 21 குண்டுகள் மரியாதை நிறைவேற்றும் வழக்கமும் உண்டு.

---

★ இந்த வசனத்தைச் சொல்ல ஆரம்பித்த பிரகஸ்பதி யாரென்று தெரியவில்லை. காலம் காலமாகச் சொல்லப்பட்டு வந்த வசனம் போல. நெப்போலியனுடைய வீரர்களும் போர்களில் இதைச் சொன்னதற்கான குறிப்புகள் இருக்கின்றன



டூமில்...

இந்தியாவில் இருந்த 565 சமஸ்தான மகாராஜாக்களையும் ராஜாக்களையும் அகர வரிசைப்படி வைத்து, அலுவல் செய்வதென்பது பிரிட்டிஷ் அரசுக்குக் கடும் சவாலாக இருந்தது. எனவே 1870ல் டுமீல் ஃபார்முலாவை இந்தியாவிலும் கொண்டு வந்தார்கள்.

பிரிட்டிஷ் ஆட்சியில் இருந்த இந்திய சமஸ்தானங்கள் இரண்டு வகைகளாகப் பிரிக்கப் பட்டிருந்தன. ஒன்று, துப்பாக்கி மரியாதைக்குத் (Gun Salute States) தகுதி கொண்ட சமஸ் தானங்கள். இரண்டு, துப்பாக்கி மரியாதைக்குத் தகுதியில்லாத (NonSalute States) சமஸ்தானங் கள் (இருநூறுக்கும் மேற்பட்ட இத்தனூண்டு சமஸ்தானங்கள் இருந்தன). இதில் துப்பாக்கி மரியாதை என்பது அந்தந்த சமஸ்தானத்தின் மகாராஜாவுக்குக் கொடுக்கப்படுவது. தகுதி என்பது சமஸ்தானத்தின் பரப்பளவு, பரம்பரை சாதனை வரலாறு, அப்போது சமஸ்தானத்தை ஆளும் மகாராஜாவின் திறமை, அந்தஸ்து ஆகியவற்றைப் பொருத்தது. அதைக் கொண்டு அதிகபட்சம் 21 டுமீல் முதல் குறைந்தபட்சம் 9 டுமீல் வரை குண்டு மரியாதையைத் தரம் பிரித்தார்கள்.

இந்தியாவில் முதன்முதலில் அதிகபட்ச மரியாதையான 21 டுமீல் மரியாதை பெற்ற சமஸ் தானங்கள் மூன்று. ஹைதராபாத், மைசூர், பரோடா. பின்பு இந்தப் பட்டியலில் இணைந்த சமஸ்தானங்கள் ஜம்மு-காஷ்மீர், குவாலியர். (இந்தியாவில் இன்று Protocal என்ற பெயரில் இது நடைமுறையில் இருக்கிறது. நம் ஜனாதிபதி 21 குண்டு மரியாதைக்குரியவர். பதவி, அதிகாரத்துக்கேற்ப தரப்படுத்தி வைத்திருக்கிறார்கள்.)

அடுத்த மரியாதைக்குரிய எண் 19. போபால், இந்தூர், உதய்பூர், திருவாங்கூர் போன்ற சமஸ் தான மகாராஜாக்கள் 19 டுமீல் மரியாதையை அனுபவித்தார்கள். நமக்கு மிகவும் பரிச்சயமான கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங்குக்கு 13 டுமீல் மரியாதை. சரி, துப்பாக்கி மரியாதையை அனுபவிப்பது என்றால் எப்படி?

மைசூர் மகாராஜா, வைஸ்ராயைச் சந்திக்கச் செல்லுகிறார் என்று வைத்துக் கொள்வோம். வைஸ்ராய் மாளிகையில் இருக்கும் பிரத்யேக வீரர்கள், அரசாங்க முறைப்படி, அவரை வரவேற்க வேண்டும். அதாவது 21 முறை வானில் துப்பாக்கியால் சுட்டு. அதேபோல, போபால் மகாராஜா, மைசூர் அரண்மனைக்குச் செல்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அப்போது மைசூர் மகாராஜாவின் துப்பாக்கி வீரர்கள், போபால் மகாராஜாவுக்குரிய 19 டுமீல் மரியாதை கொடுத்து வரவேற்க வேண்டும்.

பிரிட்டிஷார் அதிலேயே இரண்டு விதமான மரியாதை எண்களையும் நிர்ணயித்தார்கள். உதாரணமாக இந்தூர் மகாராஜா, வெளியே செல்லும்போதோ, வெளிநாடுகளுக்குச் செல்லும் போதே, முறைப்படி அவருக்குரிய 19 டுமீல் மரியாதை கிடைக்கும். அதுவே இந்தூர் சமஸ் தானத்துக்குள் அவர், 21 டுமீல் மரியாதையை (21 Local Gun Salute) அனுபவித்துக் கொள்ள லாம். அதாவது, தன் பிறந்த நாள், அரண்மனை விசேஷம், ஆண் வாரிசு பிறந்த சந்தோஷம் போன்றவற்றைக் கொண்டாட, தனக்குத் தானே 21 டுமீல் மரியாதை செய்து கொள்ளலாம்.

மகாராஜா வைஸ்ராய் சந்திப்பில் ஏகப்பட்ட விதிமுறைகள், சட்டதிட்டங்கள் இருந்தன. ஒரு மகாராஜா அரசாங்க ரீதியாகவோ, தனக்கு ஆண் வாரிசு பிறந்துள்ள தகவல் சொல்லவோ, பிறந்தநாள் ஆசி வாங்கவோ வைஸ்ராயைச் சந்திக்கச் செல்லலாம். அப்போது அந்த மகாராஜாவுக்குரிய எண்ணிக்கையில் டுமீல் மரியாதை செய்யப்படும்.

ஆனால் மகாராஜாவின் விருந்தினராகச் சமஸ்தானத்துக்கு வைஸ்ராய் வந்தால் சாஸ்திர சம்பிரதாயங்களே வேறு மாதிரி இருக்கும்.

21 டுமீல் மரியாதை கொண்ட ஹைதராபாத் நிஜாம் ஒஸ்மான் அலிகானை எடுத்துக் கொள் வோம். அவரைச் சந்திக்க ஹைதரபாத்துக்கு வைஸ்ராய் வருகிறார் என்று வைத்துக் கொள் வோம். நிஜாமின் அரண்மனை வாசலில் வைஸ்ராய்க்குரிய மரியாதையாக 37 முறை குண்டு முழங்கும். நிஜாமின் அமைச்சர்கள் வைஸ்ராயை, வாசலில் வரவேற்பார்கள். நிஜாமோ, வைஸ்ராயை தனது வரவேற்பறையில் இருந்து வரவேற்றால் போதுமானது.

19 டுமீல் மரியாதை கொண்ட உதய்பூர் மகாராஜா, வைஸ்ராயை தனது அரண்மனை வாசலில் சென்று வரவேற்க வேண்டும். 17 டுமீல் மரியாதை கொண்ட பரத்பூர் மகாராஜா, வைஸ்ராயை தன் அரண்மனை வெளிவாசலில் காத்திருந்து வரவேற்பதுதான் மரியாதை. அதுவே 15 டுமீல் மரியாதை கொண்ட மகாராஜாவான அல்வார் ஜெய் சிங், வைஸ்ராயை அரண்மனைக்கு சற்று தொலைவிலிருந்து மரியாதையுடன் வரவேற்க விதிக்கப்பட்டவர்.

இப்படி டுமீல் எண்ணிக்கை குறையக் குறைய வரவேற்புக்கான தொலைவு அதிகரித்துக் கொண்டே செல்லும். வெறும் 9 டுமீல் மரியாதை கொண்ட பங்கனபள்ளி மகாராஜா, வைஸ்ராய் வரும் நாளில் தனது பரிவாரங்களுடன் ஊர் எல்லைக்குச் சென்றுவிட வேண்டும். வெயிலோ, மழையோ காத்திருக்க வேண்டும். வைஸ்ராயின் கார், எல்லைக்குள் நுழையும் போதே மரியாதையாக வரவேற்க வேண்டும் என்பது கடைபிடிக்கப்பட்ட விதி. வைஸ்ராய் ரயிலில் வருகிறார் என்றால் ஸ்டேஷனுக்குச் சென்று, சிவப்புக் கம்பளம் எல்லாம் தயாராக விரித்து வைத்துக் காத்திருக்க வேண்டியது 9 டுமீல் மகாராஜாவின் கடமை.

விருந்தினராக வரும் வைஸ்ராய், பெரும்பாலும் மகாராஜா வாழும் அரண்மனையில்தான் தங்குவார். தன் அரண்மனையில் தங்கியிருக்கும் வைஸ்ராயை, மகாராஜாவாகப்பட்டவர் முறைப்படி சென்று பார்க்க வேண்டும் என்றொரு சம்பிரதாயம் உண்டு. அப்போது மகா ராஜாக்குரிய எண்ணிக்கையில் டுமீல் சத்தம் கேட்கும். அதே போல, வைஸ்ராய் அரண்

மனையிலேயே மகாராஜாவைச் சந்திக்க வருவார். அப்போது வைஸ்ராய்க்குரிய டுமீல் மரியாதை செய்யப்படும்.

‘இந்தக் கடிதம் மூலம் நான் உங்களை வேண்டி விரும்பிக் கேட்டுக் கொள்வது என்னவென்றால், என்னுடைய முப்பாட்டன் காலத்திலிருந்தே நாங்கள் வெறும் ஒன்பது குண்டு மரியாதையைத் தான் அனுபவித்து வருகிறோம். அதனை பதினொன்றாக உயர்த்தும்படி மிகுந்த மரியாதை யுடன் கேட்டுக் கொள்கிறேன். இப்படிக்கு மகாராஜா எக்ஸ்.’

இந்த மாதிரி கடிதங்கள் அடிக்கடி வைஸ்ராய்க்குச் செல்லும். கேட்பதற்கு எதுவும் இல்லை என்றால், தங்களுக்குரிய மரியாதையை உயர்த்தும்படி வேண்டுகோள் வைப்பது பல மகாராஜாக்களுக்கு ஒரு வியாதியாகவே இருந்தது. பிரிட்டிஷ் அரசு அதிகாரிகளைக் கவனிக்க வேண்டிய விதத்தில் கவனித்து, குஷிப்படுத்தி, டுமீல் எண்ணிக்கையை உயர்த்துக் கொள்வதுகூட மகாராஜாக்களின் உத்தியாகத்தான் இருந்தது.

‘அய்யா, நான் பல வருஷமா என்னோட டுமீல் மரியாதையை 13-ல இருந்து 15-ஆ ஏத்தும்படி கேட்டுக்கிட்டே இருக்கேன். நீங்க கண்டுக்கல. குறைஞ்ச பட்சம் என்னோட சமஸ்தானத்துக் குள்ளயாவது அதை 15 ஆக்கிப்புட்டீங்கன்னா, எனக்குக் கொஞ்சம் கௌரவமா இருக்கும்’ - என்று நச்சரித்து Local Gun Salutes எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்ட மகாராஜாக்கள் அநேகம்.

தங்களுக்குரிய மரியாதை, தங்களுடைய பாசமிகு மகாராணிகளுக்கும் கொடுக்கப்பட வேண்டும் என்று வேண்டுகோள் வைத்த மகாராஜாக்களும் இருக்கவே செய்தார்கள். பாலன்பூர் நவாப் தாலே முகமது கான் (Taley Muhammad Khan), தனக்குரிய 11 டுமீல் மரியாதை, தனது இரண்டாவது பேகம் ஜஹான் அராவுக்கும் (Jahan Ara) வழங்கப்பட வேண்டும் என்று நச்சரித்துக் கொண்டே இருந்தார். அவரது கோரிக்கை நீண்ட நாள்கள் கிடப்பிலேயே இருந்தது.

அந்த இரவில் வைஸ்ராய் மௌண்ட்பேட்டன், ஒரு ஃபைலை எடுத்தார். அதிலிருந்த கோரிக்கையை வாசித்துப் பார்த்தார். கடிகாரத்தில் நேரத்தைப் பார்த்தார். மணி 11:57.

மெல்லிய புன்முறுவலுடன் கோப்பில் கையெழுத்திட்டார். மணி 12:00. அது ஆகஸ்ட் 15, 1947.

வைஸ்ராயாக மௌண்ட்பேட்டன் கையெழுத்திட்ட கடைசிக் கோப்பு அதுதான். பாலன்பூர் நவாப்புக்கு தன் கோரிக்கை ஏற்கப்பட்ட விஷயம் சந்தோஷத்தைக் கொடுத்தது. என்ன பிரயோசனம்? அதற்குப் பின்தான் சமஸ்தானங்கள் காலாவதியாகி விட்டனவே.

# புதுக்கோட்டை

• தமிழக சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1680
• ஆட்சி செய்தவர்கள் : தொண்டைமான் பரம்பரை
• முதல் மன்னர் : ரகுநாத ராய தொண்டைமான் • 11 குண்டு மரியாதை.



# 76

# கொஞ்சம் புதுக்கோட்டை கொஞ்சம் மெல்போர்ன்

'யாரங்கே? தேர் தயாராக இருக்கிறதா?'

'இருக்கிறது மன்னா!'

'நல்லது. கிளம்பலாம்.'

மன்னனின் தேர் நடுவில் செல்ல, அவனது படை, பரிவாரங்கள் தேருக்கு முன்னும் பின்னும் சென்றன. அந்த மன்னனின் பெயர் முசுகுந்த சக்கரவர்த்தி. திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த சோழ மன்னன். தன் ஆட்சிக்கு உள்பட்ட பிரதேசங்களை எல்லாம் வலம் வருவது அந்த மன்னனின் வழக்கம். அன்றும் அதற்குத்தான் கிளம்பினான்.

'மன்னா, இதற்கு மேல் செல்ல வேண்டாம். இனி அடர்ந்த காட்டுப் பகுதிதான்.'

'அப்படியா, இந்த இடங்களை நான் இதற்கு முன் பார்த்ததில்லை. தொடர்ந்து செல்லலாம்.'

மன்னன் காட்டுப் பகுதிக்குள் நுழைந்தான். எங்கும் பசுமை. வானுக்கு ஏணி போடும் மரங்கள். சலசலத்து ஓடும் ரம்மியமான ஆறு. முசுகுந்த சக்கரவர்த்திக்கு அந்தக் காட்டுப் பகுதி மிகவும் பிடித்துப் போனது. அங்கிருந்து திரும்புவதற்கு மனமில்லை. 'இந்த இடத்தில் நாம் ஒரு சிறிய நகரத்தைக் கட்டினால் என்ன?' மன்னனின் மனத்தில் யோசனை ஒன்று குதித்துக் கொண்டு இருந்தது.

என்ன செய்வதென்றாலும் ரிஷி பராசரரைக் கேட்டுச் செய்வதுதான் மன்னனின் வழக்கம். அவரிடம் தன் ஆசையைச் சொன்னான். ரிஷியும் அந்த வனாந்திரப் பகுதிக்குச் சென்று பார்வையிட்டார். அந்தப் பகுதியில் நகரம் அமைப்பதால் மன்னனுக்கு ஏதும் பிரச்னைகள் வருமா என்று தன் ஞானப் பார்வையால் கிரகித்தார். நகரம் அமைக்க அனுமதி கொடுத்தார். கூடவே எப்படி அமைக்க வேண்டும், எப்போது அமைக்க வேண்டும், நல்ல நேரம் எது என சகல சாஸ்திர, சம்பிரதாயங்களையும் சொல்லி அருளினார்.

ரிஷியின் ஆசியுடன் ஒரு நகரம் உருவானது. மன்னன், அந்த நகரத்தைக் கண்டு ரசித்தான். சரி, அடுத்து? மக்களைக் குடியிருக்க வைக்க வேண்டாமா? பார்த்துப் பார்த்துக் கட்டப்பட்ட அழகான நகரம். சாதாரண குடியானவர்களையா குடிவைக்க முடியும்? யோசித்த மன்னன், குபேரக் கடவுளை அணுகினான்.

'நான் கட்டியுள்ள புதிய நகரத்தில் வசிப்பதற்கு தங்கள் அருள் பெற்ற மக்களை அனுப்பி வையுங்கள்' என்று வேண்டுகோள் வைத்தான். குபேரனும் சம்மதித்தார். சகல செல்வங் களையும் சௌபாக்யங்களையும் பெற்ற ஆயிரத்து ஐநூறு பேரை அந்தப் புதிய நகரத்துக்கு அனுப்பி வைத்தார். புதுக்கோட்டை வணிக நகரமாகச் செழித்து வளர்ந்தது.

இது புதுக்கோட்டை உருவான விதம் பற்றி சொல்லப்படும் (புராணக்) கதை.

ஆதி வரலாற்றுக்குள் அடியெடுத்து வைத்தோமென்றால், கற்கால மனிதன் புதுக்கோட்டைப் பகுதியில் வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் இருக்கின்றன. திருமயம் பகுதியில் கண்டெடுக்கப் பட்டுள்ள பழங்கால ஆயுதம், முதுமக்கள் தாழி உள்ளிட்ட தொல்பொருள்களே அதற்கு ஆதாரம்.

சங்ககால இலக்கியங்களில் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள பல ஊர்களின் பெயர்கள் விரவிக் கிடக்கின்றன. பாடல்களில் 'பன்றிநாடு' என்ற பெயரால் புதுக்கோட்டையைக் குறிப் பிட்டு இருக்கிறார்கள். மேற்குக் கடற்கரைப் பகுதியிலிருந்து கிழக்குக் கடற்கரைப் பட்டிணங் களுக்கு ஏற்றுமதிப் பொருள்கள் புதுக்கோட்டை வழியாகக் கொண்டு செல்லப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

அதிலும் புதுக்கோட்டை வணிகர்கள் ரோமாபுரியுடன் வர்த்தகத் தொடர்பு வைத்திருந்தார்கள் என்பதற்கு ஆதாரமாக ஆலங்குடிக்கு அருகிலுள்ள கருக்காக்குறிச்சியில் பொன்னாலான ரோம நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. கிமு 29க்கும் கிபி 79க்கும் இடையே ரோமாபுரியை ஆண்ட மன்னர்களின் உருவம் பொறிக்கப்பட்ட நாணயங்கள் அவை.

புதுக்கோட்டையின் ஆதி வரலாற்றை எடுத்துக் கொண்டால் பல்லவர்கள், பாண்டியர்கள், சேரர்கள், சோழர்கள், களப்பிரர்கள் என்று நீண்டுகொண்டே போகும். கொஞ்சம் முன்னேறி பதினான்காம் நூற்றாண்டில் புதுக்கோட்டை விஜயநகரப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்த காலத்துக்குத் தாவி விடுவோம். 1565 தலைக்கோட்டைப் போர் வரை புதுக்கோட்டை விஜயநகரப் பேரரசர்களிடம் இருந்தது. பின், தக்காணப் பகுதி சுல்தான்கள், தங்கள் கவர்னர்களை (நாயக்) ஆட்சி செய்ய நியமித்துவிட்டுப் போனார்கள். அதற்குப் பின் பதினேழாம் நூற்றாண்டின் பாதி வரை புதுக்கோட்டை மதுரை நாயக்கர்களின் ஆட்சியின் கீழ் இருந்தது.

ரகுநாத கிழவன் சேதுபதி ராமநாதபுரத்தை ஆண்டு வந்தார். அவரது ஆட்சிக்குள்பட்ட திருமயம் பகுதியின் கவர்னராக, ரகுநாத ராய தொண்டைமான் இருந்து வந்தார். அவர், சேதுபதியின் உறவினர்தான். ரகுநாத தொண்டைமானின் சிறப்பான நிர்வாகத்தைப் பாராட்டும்விதமாக, சேதுபதி ஒரு பகுதி நிலத்தை அவருக்கே பரிசாகக் கொடுத்தார். அங்கே புதிய கோட்டை ஒன்று உருவானது. சுற்றிலும் பல வீடுகள் கட்டப்பட்டன.

வரலாற்றுக் குறிப்புகளின்படி பார்த்தாலும், ஆரம்பத்தில் சொன்ன கதையில் வருவது போல அடர்ந்த காட்டுப் பகுதிக்குள்தான் புதுக்கோட்டை அமைந்திருந்தது. நகரத்தை நோக்கி வடக்கு, தெற்கு, மேற்கு ஆகிய மூன்று திசைகளில் இருந்து சாலைகள் இருந்திருக்கின்றன. ஒவ்வொரு சாலையிலும் ஒரு செக்-போஸ்ட் இருந்திருக்கிறது. வாடி என்று சொல்லலாம். மச்சுவாடி, கும்மண்டான்வாடி, புளியவாடி என்று சொன்னால் புதுக்கோட்டைக்காரர்களுக்குத் தெரியலாம்.

இவ்வாறு புதுக்கோட்டை சமஸ்தானத்தைத் தோற்றுவித்தவர் ரகுநாத ராய தொண்டைமான். அவருக்குப் பிறகு தொண்டைமான்களின் ஆட்சி தொடர்ந்தது. 1844ல் புதுக்கோட்டையின் மகாராஜாவாகப் பொறுப்பேற்றவர் ராமச்சந்திர தொண்டைமான் (Ramachandra Tondaiman). இரண்டு திருமணங்கள் செய்து கொண்டார். பிறந்தது ஒரு மகன், மூன்று மகள்கள்.

ஆனால் துரதிருஷ்டவசமாக, ஆண் வாரிசான சிவராம ரகுநாத தொண்டைமான் மிகச் சிறிய வயதிலேயே இறந்துபோனார்.

எனில் அடுத்து அரியணை ஏற வாரிசு வேண்டாமா? ராமச்சந்திரருக்கு ஏகக் கவலை. இன்னொரு மகன் இல்லாவிட்டால் என்ன? மகள்கள் இருக்கிறார்கள். அவர்களை அரியணையில் ஏற்ற பிரிட்டிஷார் சம்மதிக்க மாட்டார்கள். மகள் வயிற்றுப் பேரன்கள் இருக்கிறார்களே. அவர்களில் ஒருவரைத் தனது வாரிசாக அறிவித்துவிட்டால்?

மகாராஜா ராமச்சந்திர தொண்டைமான், தனது பேரனாகிய மார்த்தாண்ட பைரவ தொண்டைமானை (Martanda Bhairava Tondaiman) தனது வாரிசாகத் தத்தெடுத்துக் கொண்டார் (1877, மார்ச் 2). கிட்டத்தட்ட பத்து மாதங்கள் கழித்து பிரிட்டிஷ் அரசு, மார்த்தாண்ட பைரவரை பட்டத்து இளவரசராக அங்கீகரித்தது. மார்த்தாண்ட பைரவர், ராமச்சந்திரரின் மூத்த மகளாகிய பிரகதாம்பாளின் மூன்றாவது மகன்.

தனது தாத்தா ராமச்சந்திரரின் மறைவுக்குப் பிறகு (1886 ஏப்ரல் 15), மார்த்தாண்ட பைரவர் அரியணை ஏறினார். தனது பதினெட்டாவது வயதில் (1894 நவம்பர்) முழு அதிகாரத்துடன் ஆட்சி செய்ய ஆரம்பித்தார்.

நிற்க.

அதே வருடத்தில் அப்போதுதான் பிறந்திருந்தாள் மோலி ஃபின்க் (Molly Fink). பிறந்த இடம் ஆஸ்திரேலியாவின் மெல்போர்ன். உல்ப் ஃபின்க் (Wolfe Fink), எலிசபெத் (Elizebath) ஆகியோரின் இரண்டாவது புதல்வி அவள்.

உல்ப், அறிவாளி, புத்திசாலி, படித்தவர்கூட. ஆனால் அவருக்கு எந்தத் தொழிலிலும் அவ்வளவாக நாட்டம் இருந்ததில்லை. பணம் சம்பாதித்து என்ன செய்யப் போகிறோம் என்ற மனநிலையில்தான் இருந்தார். எதாவது கொஞ்சம் வேலை பார்ப்பார், கொஞ்சம் பணம் கொண்டு வருவார். பசியைத் தீர்க்க அது போதுமானதாக இருந்தது. குழந்தைகள் வளர்ந்தார்கள்.

பணத்தேவை அதிகமானது. தம் குழந்தைகளுக்கு நல்ல கல்வி கொடுக்க வேண்டும் என்பதில் உல்ப் உறுதியாக இருந்தார். அதற்காக தன் இயல்பை மீறி, கொஞ்சம் அதிகமாகவே உழைக்க ஆரம்பித்தார். மோலி, அவளது மூத்த சகோதரி இடார், இளைய சகோதரன் ஓஸி மூவரும் மெல்போர்னின் லாரிஸ்டன் (Lauriston) பள்ளியில் சேர்க்கப்பட்டார்கள்.

மோலிக்கு படிப்பில் ஆர்வம் அதிகமெல்லாம் கிடையாது. வீட்டில் இருக்க முடியாது. அப்பா திட்டுவார். அம்மா அடிப்பாள். வேறு வழியில்லை. போய்த்தான் ஆக வேண்டும் என்ற கட்டாயத்தில் பள்ளிக்குச் சென்று வந்தாள். அப்போது அவளுக்கு வயது பதினைந்து.

'மோலி என்னோட புக்கை திருடிட்டா' சக மாணவி புகார் கொடுக்க, கோபத்தில் மோலி அந்த மாணவியை அறைந்து விட்டாள். பள்ளி ஆசிரியை மோலியைக் கண்டித்தாள். தண்டித் தாள். அதுவும் எல்லோர் முன்னிலையிலும் வைத்து. அதைவிட அவமானம் வேறென்ன இருக்கிறது?

'நான் பள்ளிக்குப் போக மாட்டேன். யாரும் என்னை வற்புறுத்தாதீர்கள்' - வீட்டுக்குள் நுழை யும்போதே கோபத்துடன் சொன்னாள் மோலி. அன்று இரவு முழுவதும் அழுது கொண்டே இருந்தாள். மறுநாள் யாரும் அவளை வற்புறுத்தவில்லை. பள்ளிக்கூடம் இருக்கும் திசையை மறக்க ஆரம்பித்தாள்.

அவளுக்கு அப்போது நாடகங்கள் மீது ஆர்வம் வந்திருந்தது. அதுவும் இசையும் நகைச் சுவையும் கலந்த நாடகங்கள் மீது கொள்ளைப் பிரியம். மேடையேற வேண்டும் என்பது அடி மனத்தில் ஓர் ஆசை. 'நானும் ஒருநாள் மேடையேறுவேன். தேவதை போல் உடையணிந்து நடனமாடுவேன். என் ஆட்டத்தை எல்லோரும் ரசிப்பார்கள். கைதட்டுவார்கள். இது நடக்கும்' மோலியின் கனவுகள் விரிந்தன.

ஆனால் மோலியின் தந்தை ஃபின்க் திடீரென இறைவனடி சேர்ந்தார். வந்து கொண்டிருந்த கொஞ்ச நஞ்ச வருமானமும் அம்பேல். எதிர்காலம் என்பதற்குப் பக்கத்தில் கேள்விக்குறி வந்து ஒட்டிக் கொண்டது. முதல் உலகப் போர் வேறு ஆரம்பித்திருந்தது. மோலியின் மேடைக் கனவுகள் சிதைந்து போயின.

மோலியின் அம்மா எலிசபெத், கொஞ்சம் பணத்தைச் சேகரித்து வைத்திருந்தார். அதைக் கொண்டு அவ்வப்போதைய பசியைத் தீர்த்துக் கொள்ள முடிந்தது. அது மட்டும் போதுமா என்ன? எலிசபெத் கொஞ்சம் சமயோசிதமாகச் சிந்தித்தாள்.

என்னால் ஓடியாடி உழைத்துச் சம்பாதிக்கவெல்லாம் முடியாது. மகள்களுக்குத் திருமண வயதாகி விட்டது. மகனோ சிறியவன். பணம் வேண்டும். அதுவும் நிறைய. வசதியாக வாழ வேண்டும். நினைக்க நன்றாகத்தான் இருக்கிறது. வழி? இருக்கிறதே. என் மகள்கள் இருக்கிறார்களே. அழகான இரண்டு மகள்கள். எவரையும் திரும்பிப் பார்க்கச் செய்யும் வசீகர இளமை கொண்டவர்கள். அவர்களை நான் வசதியான மாப்பிள்ளைகளுக்குத் திருமணம் செய்து வைக்கப்போகிறேன். அப்புறமென்ன, வாழ்க்கை முழுவதும் கவலையில்லை.

தன்னுடைய எண்ணத்தை மகள்களிடம் சொன்னாள் எலிசபெத். பருவக் கனவுகளுடன் இருந்த அந்தப் பெண்களும் ஒப்புக் கொண்டார்கள். அப்புறமென்ன, விருந்துகளிலும், பொது நிகழ்ச்சிகளிலும் தங்களது வருங்கால புளியங்கொம்பைத் தேட ஆரம்பித்தார்கள்.

நிற்க.

பதினெட்டு வயதைக் கடந்த பிறகும் ஒரு மகாராஜாவுக்குத் திருமணம் நடைபெறாமல் இருக்குமா என்ன? ஆனா மார்த்தாண்ட பைரவர் தன் திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டே சென்றார். காரணம்? காதல்தான்.

ஐரோப்பிய பெண் ஒருத்தியைக் காதலித்தார் அவர். பிரிட்டிஷாருக்குத்தான் பொறுக்காதே. ஆயிரத்தெட்டு முறை எச்சரித்தார்கள். அந்தப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள முடிவெடுத்தார். கூடவே கூடாது என்று தடை போட்டார்கள். பைரவர், வேறு வழியின்றி தன் திருமணத் திட்டத்தையே மொத்தமாகத் தள்ளி வைத்துவிட்டார்.

அவ்வப்போது ஆஸ்திரேலியாவுக்குச் செல்லும் பழக்கம் பைரவருக்கு இருந்தது. ஐரோப்பிய நாடுகளை விட, ஆஸ்திரேலியாவின் அழகு அவரைக் கவர்ந்திருந்தது. குறிப்பாக சிட்னி.

1915லும் சிட்னிக்கு வந்திருந்தார் பைரவர். அங்கு நடக்கும் ரேஸ்களைக் கண்டு களிப்பது அவருடைய முக்கியமான பொழுதுபோக்கு. அப்புறமாக விருந்துகள்.

மெல்போர்னிலேயே மாப்பிள்ளை தேடிக் கொண்டிருந்தால் வேலைக்கு ஆகாது என்று நினைத்த எலிசபெத், தன்னுடைய மகள்களை அழைத்துக் கொண்டு சிட்னிக்கு வந்திருந்தாள். அந்த மெஜஸ்டிக் (Majestic) ஹோட்டலில் அண்ணலும் அவளும் சந்திப்பதற்கான தருணம் காத்திருந்தது.



77

# ஆஸ்திரேலிய மருமகளே வாராய்!

சிட்னி நகரின் மெஜஸ்டிக் ஹோட்டலின் பார்ட்டி ஹாலுக்குள் நுழைந்தார் மார்த்தாண்ட பைரவர். நல்ல உயரம். நாற்பது என்றாலும் முப்பது போலத் தோற்றமளிக்கும் உடல்வாகு. கருப்பு நிற கோர்ட், சூட், டை. அழகாக டிரிம் செய்யப்பட்ட மீசை. சிட்னியைச் சார்ந்த நண்பர் ஒருவரோடு மகாராஜா அங்கு வந்திருந்தார்.

பலரது பார்வை அவர் மீது திரும்பியது. 'யார் இவர்? வேறு இனத்தவர் போலத் தெரிகிறதே?' சிலர் முணுமுணுத்தார். 'மகாராஜாவாம். இந்தியாவிலிருந்து வந்திருக்கிறாராம்' வேறு சிலர் பதில் சொன்னார்கள். அந்தப் பதில் எலிசபெத்தின் காதில் விழுந்தது. வேறெங்கேயோ பார்த்துக் கொண்டு இருந்த தன் மகள் மோலி ஃபின்கின் இடதுபுறத் தோளைத் தன் வலதுபுறத் தோளால் தட்டினாள். மார்த்தாண்ட பைரவர் இருந்த திசையை நோக்கிப் பார்வையால் ஜாடை காட்டினாள்.

'என்னம்மா?' மோலி கிசுகிசுத்தாள். 'அவரைப் பார்த்தியா?' எலிசபெத் கேட்டாள். யாரவர் என்று மோலி கண்களால் கேட்டார். எலிசபெத் பதில் சொன்னாள். மோலி, மார்த்தாண்ட பைரவரை உற்று நோக்க ஆரம்பித்தாள். ஏதோ ஓர் உள்ளுணர்வு. தன்னை யாரோ பார்த்துக் கொண்டே இருப்பதுபோல ஒரு குறுகுறுப்பு. பைரவர், சட்டெனத் திரும்பினார். மோலி மோனாலிசாவாகச் சிரித்தாள். பதிலுக்குப் பைரவரும்.

பரஸ்பர அறிமுகம். புன்னகையுடன் கூடிய விசாரிப்பு. கனிவுடன் கூடிய உபசரிப்பு. நட்பு துளிர்விட்டது. விருந்து முடிந்தது. வந்த இடத்தில் எதையோ விட்டுச் சென்றது போன்ற உணர்வுடனேயே பைரவரும் மோலியும் அங்கிருந்து கிளம்பினார்கள்.

'அடியேய் இவளே, அவர் உனக்குப் பொருத்தமானவரா இருப்பாரு. விட்டுடாதே' - மோலியின் சகோதரி இடார் பூரிப்போடு சொன்னாள். 'ஆமாடி, இந்திய மகாராஜாக்கள் பத்தி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கேன். ஆஸ்திரேலியாவில இருக்குற தங்கம் மாதிரி, அவங்க ஒவ்வொருத்தர்கிட்டயும் தங்கம் கொட்டிக் கிடக்குமாம். உனக்கு அதிர்ஷ்டம் அடிக்குமான்னு தெரியலையே?' எலிசபெத் கொஞ்சம் படபடப்போடு பேசினாள். அந்த வார்த்தைகள் எல்லாம் மோலி செவிகளுக்குள் நுழையவே இல்லை, ஏற்கெனவே பைரவர் அவள் இதயத்தில் நுழைந்திருந்தார்.

அன்று இரவில், பைரவரின் மனத்திலும் மோலிதான் உட்கார்ந்து மணியடித்துக் கொண்டிருந்தாள். 'அழகான பெண்கள் பலரைக் கடந்து வந்திருக்கிறேன். எத்தனையோ வருடங்கள் திருமணமே வேண்டாம் என்று தள்ளிப் போட்டும் இருக்கிறேன். ஆனால் இவள் என் அத்தனை விரதங்களையும் கலைத்துவிடுவாள் போலிருக்கிறதே?'

மீண்டும் மோலியையும் அவளது குடும்பத்தினரையும் பைரவர் சந்தித்தார். சிட்னிக்கு அருகிலுள்ள ஓர் இடத்துக்குச் செல்வதாகச் சொன்னார்கள். நீ போகும் இடமெல்லாம் நானும் வருவேன் போ போ போ என்று பைரவரின் மனம் குதித்தது.

'உங்கள் வாடகைக் காரை அனுப்பி விடுங்கள். வாருங்கள். என்னுடைய காரிலேயே செல்லலாம்' - அன்போடு அழைத்தார். அவர்கள் செல்லும் இடங்களுக்கெல்லாம் சுற்றுலா சென்றுவிட்டு, அவர்களுடனேயே மெல்போர்னுக்கும் சென்றார்.

அந்த நாள்களில் இருவருமே ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்துகொண்டார்கள். காதல் புஷ்டியாக வளர்ந்து கொண்டு இருந்தது. சுமார் ஐந்து மாதங்கள் கடந்திருக்கும். பைரவர் தன் நண்பர் லார்ட் பெண்ட்லேண்டுக்கு (Pentland) கடிதம் ஒன்றை எழுதி அனுப்பினார். பெண்ட்லேண்ட், மெட்ராஸ் மாகாண கவர்னர்.

'அநேக நமஸ்காரங்கள். ஆஸ்திரேலியாவில் நான் நலம். அங்கு உங்கள் நலமறிய அவா. எனது கடந்த கால காதல் வாழ்க்கை பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கும். நாற்பது வயதுவரை நான் திருமணம் செய்து கொள்ளவில்லை என்பதையும் அறிவீர்கள். இங்கு ஒரு பெண்ணைச் சந்தித்தேன். என் எதிர்கால வாழ்க்கைக்குப் பொருத்தமானவளாக இருப்பாள் என்று உறுதியாக நம்புகிறேன். அவளைத் திருமணம் செய்துகொள்வதாக முடிவு செய்துவிட்டேன்...' - என்று மோலி பற்றிய விவரங்கள் அனைத்தையும் அந்தக் கடிதத்தில் விவரமாகக் குறிப்பிடப்பட்டிருந்தார்.

சில வாரங்களில் பெண்ட்லேண்டிடமிருந்து பதில் கடிதம் வந்தது. 'தாங்கள் ஓர் இந்துப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதைத்தான் பிரிட்டிஷ் அரசாங்கம் அனுமதிக்கும்.' பைரவர் எதிர்பார்த்த பதில்தான். ஆகவே வருத்தப்படவில்லை. தன் திருமண நிச்சயதார்த்தத்துக்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தார்.



மகாராஜா மார்த்தாண்ட பைரவர்

ஆஸ்திரேலியாவில் அப்போது White Australia Policy என்ற விஷயம் வெகு பரபரப்பாக அமலில் இருந்து வந்தது. அதாவது வெள்ளையர்களைத் தவிர வேற்று நாட்டினர், வேற்று இனத்தவர் ஆஸ்திரேலியாவில் வந்து குடியேறுவதைத் தடுப்பதற்காக, Immigration Restriction Act என்ற சட்டத்தை 1901ல் கொண்டு வந்திருந்தார்கள். 1915, ஆகஸ்ட் 6 அன்று, மார்த்தாண்ட பைரவர், மோலியுடனான தனது திருமண அறிவிப்பை வெளியிட்டார்.

ஓர் இந்தியர், நம் நாட்டுப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்வதை அனுமதிக்கலாமா என்று விவாதங்கள் எழுந்தன. மோலியின் உறவினர் வட்டத்திலும் எதிர்ப்புகள் கிளம்பின. பைரவர், எதற்கும் தயங்கவில்லை. திருமண ஏற்பாடுகளைச் செய்தார். திருமணம் செய்துகொண்ட கையோடு மோலியை அழைத்துக் கொண்டு அமெரிக்கா செல்வதற்கான ஏற்பாடுகளையும் செய்தார்.

ஆகஸ்ட் 10. மெல்போர்ன் பதிவாளர் அலுவலகம். மோலி, கத்தோலிக்க பிரிவைச் சார்ந்தவள். எனவே இந்து முறைப்படி திருமணம் செய்ய இயலாது. சர்ச்சிலும் வாய்ப்பில்லை. எனவே பதிவுத் திருமணம். பைரவரின் நண்பர்கள் சிலர் வந்திருந்தார்கள். மோலியின் குடும்பத்திலிருந்து ஒரு சிலர் வந்திருந்தார்கள். மகாராஜா, தனக்குப் பழக்கமான ஆஸ்திரேலிய உயர் அதிகாரிகளை அழைத்திருந்தார். யாருமே வரவில்லை. குறிப்பாக, ஆஸ்திரேலியா கவர்னர் ஜெனரல் ரோனால்ட் முன்ரோ (Ronald Munro), அந்தத் திருமணத்தைத் தவிர்த்தார்.

வெள்ளை நிற முழு நீள கவுனில் சிண்ட்ரெல்லாவாகத் தோன்றினாள் மோலி. அவள் கையில் அரிதான ஆர்ச்சிட் மலர்க் கொத்து சிரித்துக் கொண்டிருந்தது. மோலியின் மாமா தியோடோர் (Theodore), அவளை அழைத்து வந்தார். புத்தம் புதிய கோர்ட், ஷூட்டில் புது மாப்பிள்ளை பைரவர் ஜொலித்தார். சுற்றியிருந்தவர்கள் வாழ்த்துகளை முழங்க, திருமணம் இனிதே கையெழுத்தானது.

அன்று மாலையில், மென்ஸிஸ் (Menzies) ஹோட்டலில் திருமண விருந்து நடைபெற்றது. அங்கு வைத்து பைரவர், மோலிக்கு திருமணப் பரிசை அளித்தார். வேறென்ன, நகைகள்தான். அவர் கொடுத்துக் கொண்டே இருக்க, வாங்கி வாங்கி மோலிக்குத்தான் கைவலித்திருக்கும். அவ்வளவு நகைகள். சுற்றியிருந்தவர்கள், நகைகளில் இருந்த வைரங்களின் ஜொலிப்பில் வாயடைத்துப் போனார்கள்.

மார்த்தாண்ட பைரவர் தான் திருமணம் செய்து கொண்ட விஷயத்தை, இங்கிலாந்து கிங் ஐந்தாம் ஜார்ஜுக்குத் தந்தியாக அனுப்பினார். கிங், வேறென்ன செய்வார்? கொதித்தார். 'செல்லாது செல்லாது' என்று இந்தியாவின் வைஸ்ராய்க்குக் கடிதம் அனுப்பினார். பிரிட்டிஷ் பத்திரிகைகளும், ஆஸ்திரேலிய பத்திரிகைகளும் மோலியின் எதிர்காலம் பற்றி ஏகத்துக்கும் கவலைப்பட்டு எழுதின.

‘மோலி என்ற ஆஸ்திரேலிய அழகுப் பெண் இந்திய மகாராஜாவிடம் சிக்கிக் கொண்டாள். பாவம், இனி அவள் வாழ்க்கை முழுவதும் அரண்மனையின் அந்தப்புரத்தில் வேறு ஆண்களின் பார்வை படாதவாறு சிறைபட்டுக் கிடக்க வேண்டியதுதான்’ என்ற ரீதியில்தான் அந்தச் செய்திகள் இருந்தன.


மோலி ஃபின்க்

சிட்னியிலிருந்து சோனோமா (Sonoma) என்ற கப்பல் புறப்படத் தயாராக இருந்தது. 36 பெட்டிகளுடனும் ஒரு பணிப்பெண்ணுடனும் மோலி கப்பலேறினாள். உடன் அவளது அம்மாவும் தங்கையும். சான் பிரான்சிஸ்கோ சென்றார்கள். பைரவருக்கு அது ஒரு தேனிலவுப் பயணம். இரண்டு மாதங்கள் கழித்து மீண்டும் சிட்னிக்கு வந்தார்கள். அடுத்து? சொந்த ஊரை விட்டு வந்து பல மாதங்களாகி விட்டன. ஆஸ்திரேலிய ஆத்துக்காரியை, தமிழ்நாட்டுக்கு மருமகளாக அழைத்துச் செல்ல வேண்டாமா என்ன? புதுக்கோட்டைப் பயணத்துக்குத் திட்டமிட்டார் பைரவர்.

‘ஓய், நம்ம ராஜா வர்றாரு, அதுவும் புது ராணியோட! வரவேற்பு பிரமாதமா இருக்கணும். எல்லா ஏற்பாடுகளையும் ஏக தடபுடலா செய்யுங்க’ - புதுக்கோட்டை மக்கள் சந்தோஷமாகக் காத்திருந்தார்கள்.

நவம்பர் 22. மாலை நேரம். புதுக்கோட்டையின் பிரகதாம்பாள் கோயில் வளாகம் வாழை மரங்களாலும் தோரணங்களாலும் நிறைந்திருந்தது. மனத்துக்கு இனிய நாதஸ்வர இசை ஒலித்துக் கொண்டிருந்தது. சமஸ்தானத்தின் அமைச்சர் பெருமக்களும் உயர் அதிகாரிகளும் குவிந்திருந்தார்கள். கட்டுக்கடங்காத மக்கள் கூட்டம். ரோல்ஸ் ராய்ஸ் காரில் அங்கு வந்து இறங்கிய மகாராஜா, தன் புது மனைவியுடன் கோயிலுக்குள் நுழைந்தார். தரிசனத்தை முடித்து விட்டு வெளியே வந்தார். வாழ்த்து கோஷங்கள் அதிர்ந்தன. மக்களைப் பார்த்துக் கம்பீரமாகக் கையசைத்தார். பளபளா சேலையில் அசத்தலாகக் காட்சியளித்த மோலி, கூடியிருந்தவர்களைப் பார்த்துக் கரம் குவித்தாள்.

இருவரும் தயாராக நின்ற சாரட்டில் ஏறினார்கள். நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட வண்டி அது. தங்கத் தகடுகளாலும் வெள்ளித்தகடுகளாலும் இழைக்கப்பட்டிருந்தது. அரண்மனையை நோக்கி ஊர்வலம் ஆரம்பமானது. வாத்திய கோஷ்டிகளோடு முன்னே அலங்கரிக்கப்பட்ட இரண்டு யானைகள் சென்றன. அதற்குப் பின்னே கையில் வாளேந்திய குதிரைப் படை வீரர்கள். நடுவில் ராஜா, ராணியின் சாரட். அதற்குப் பின் அமைச்சர்கள், ஊர் முக்கியஸ்தர்கள், பொதுமக்கள்.

வழியெங்கும் வாழ்த்தொலிகள். மக்களின் கைகளில் இருந்து இடைவிடாத பூமழை. மின் சாரம் நுழையாத காலம். எனவே பாதையெங்கும் நடப்பட்டிருந்த மூங்கில் கம்புகளில் அரிக்கேன் விளக்குகள், பல வண்ணங்களில் எரிந்து கொண்டிருந்தன. அலங்காரங்களால்

அரண்மனை வளாகம் மெருகேறி இருந்தது. வேட்டுச் சத்தம் பின்னணி இசையாக ஒலிக்க, அரண்மனைப் பெண்கள் ஆரத்தி எடுத்தனர். மகாராஜாவுக்குரிய மரியாதையாக பதினோரு முறை துப்பாக்கிச் சத்தம் கேட்டது.

பைரவர் தம் குடும்பத்தினரைச் சந்தித்தார். மனைவியை அறிமுகப்படுத்தினார். கலை நிகழ்ச்சி கள் ஆரம்பமாயின. அரண்மனை நடனப் பெண்கள் சுழன்று ஆட ஆரம்பித்தார்கள். கொண்டாட்டம் முடியும்போது நேரம் நள்ளிரவை நெருங்கிக் கொண்டிருந்தது.

வெளிநாட்டுப் பெண் என்றெல்லாம் நினைக்கவில்லை, புதிய ராணியை புதுக்கோட்டை மக்கள் மனதார ஏற்றுக் கொண்டிருந்தார்கள். அதில் பைரவருக்கு ஏக சந்தோஷம். எப்படியும் பிரிட்டிஷாரிடம் அங்கீகாரம் வாங்கிவிடலாம் என்று நினைத்தார். மெட்ராஸ் மாகாண கவர்னர் பெண்ட்லேண்டுக்கு கடிதங்கள் எழுதிப் பார்த்தார். தூது விட்டுப் பார்த்தார். தமக்குப் பழக்கமான அதிகாரிகளிடம் பேசிப் பார்த்தார். கோரிக்கை, கிணற்றுக் கல்லாகவே இருந்தது.

அரசாங்க ரீதியான விழாக்களுக்கும் சந்திப்புகளுக்கும் பைரவருக்கு மட்டுமே அழைப்புகள் வந்தன. அதில் மோலியின் பெயர் இணைக்கப்படவில்லை. எனவே விழாக்களைத் தவிர்த் தார். யாராவது கேட்டால், ‘எனக்கு அழைப்பே வரவில்லை’ என்று பதிலளித்தார்.

அன்று அரண்மனையெங்கும் இனிப்புத் திருவிழா நடந்து கொண்டிருந்தது. எல்லோருடைய வாயிலும் இனிப்புகள் திணிக்கப்பட்டன. ஆம், மோலி நல்ல செய்தி சொல்லியிருந்தாள். பைரவர் முகத்தில் பெருமிதம்.

ஐந்து மாதங்கள் போயிருக்கும். மோலிக்கு உடல் நிலை சரியில்லை. ஒரே வாந்தி. மசக்கை யினால் அல்ல. காரணம் தெரியவில்லை. செர்ரி, சாக்லேட், ஷாம்பெயின் என்று எப்போது பார்த்தாலும் எதையாவது வாய்க்குள் போட்டுக் கொண்டிருந்ததால் ஒத்துக்கொள்ளாமல் போயிருக்கலாம் என்று நினைத்தார் பைரவர். மருத்துவம் பார்க்கப்பட்டது. வாந்தி நிற்க வில்லை. தனது திருச்சிராப்பள்ளி மாளிகைக்கு மோலியை அழைத்துச் சென்றார். வைத்தியம் பார்த்தார். ம்ஹூம்.

ஒருவேளை சீதோஷ்ண நிலை பிடிக்கவில்லையோ என்னவோ என நினைத்து அவளை அழைத்துக் கொண்டு உதகமண்டலம் சென்றார். அங்கு ஒரு ஹோட்டலில் தங்கினார்கள். மோலி கொஞ்சம் கொஞ்சமாகக் குணமடைந்தாள். அவள் எடுத்த வாந்தி, பரிசோதனைக்கு அனுப்பப்பட்டது.

அரசு மருத்துவப் பரிசோதகர் மேஜர் ராப், அதனைச் சோதனை செய்து முடிவை அனுப்பினார். அதைப் பார்த்த பைரவர் அதிர்ந்து போனார். காரணம், மோலி, சாப்பிட்ட உணவொன்றில் விஷத்தன்மை மிக்க விதைகள் (அரளி) கலந்திருந்ததாக அந்த அறிக்கை கூறியது.



# 78

# பட்டத்து இளவரசரின் பராக்கிரமங்கள்

நீலகிரி மலையின் நிசப்தமான சூழ்நிலையும் குளுகுளு தட்ப வெப்ப நிலையும் மோலியைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குணப்படுத்தின. புதுக்கோட்டை மகாராஜா மார்த்தாண்ட பைரவர் தொண்டைமான், தனது மனைவி பத்திரமாகப் பிள்ளைப் பெற்றுத் தரும்வரை உதகமண்டலத்திலேயே தங்கிவிடலாம் என்று முடிவெடுத்தார்.

ஆனால் எத்தனை நாள்கள்தான் ஹோட்டலில் தங்கியிருப்பது? சொந்தமாக ஒரு மாளிகை இருந்தால் சகல வசதிகளைச் செய்து கொள்ளலாம். தேவைக்கேற்ப வேலையாள்களை நியமித்துக் கொள்ளலாம். கூடவே ஒரு மருத்துவரையும் மாளிகையில் தங்க வைத்துக் கொள்ளலாம். உதகமண்டலத்திலேயே தனக்கென ஒரு மாளிகையை வாங்க முடிவு செய்தார் பைரவர். தெரிந்தவர்களிடம் சொல்லி சகல வசதிகளும் நிறைந்த, தன் மனத்துக்குப் பிடித்த மாதிரியுள்ள மாளிகை ஒன்றைக் கண்டுபிடித்தும் விட்டார்.

இருக்கட்டுமே. பிரிட்டிஷாரிடம் அனுமதி பெறாமல் சொந்தமாக ஒரு மாளிகை வாங்கிவிட முடியுமா என்ன? அரசுக்குக் கடிதம் ஒன்றை எழுதி அனுமதி கேட்டார் பைரவர். வழக்கத்தைவிட வேகமாகவே பதில் கடிதம் வந்தது. ஆர்வமாகப் பிரித்துப் பார்த்தார்.

'மாண்புமிகு புதுக்கோட்டை ராஜா அவர்களுக்கு வணக்கம்'

தங்கள் விண்ணப்பத்தைப் பரிசீலிக்க முடியாது. தாங்கள் எவ்வளவு சீக்கிரம் உதகமண்டலத்தைக் காலி செய்ய முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் காலி செய்து

விடுவது நல்லது. காரணம், தாங்கள் தங்களுடைய ஆஸ்திரேலியே மனைவியோடு அங்கு தங்கியிருப்பது, சுற்றுப்புறத்தில் இருக்கும் மற்ற ஐரோப்பியர்களைப் பாதிக்கிறது.'

அனுமதி கிடைப்பது கடினம் என்று பைரவருக்கும் தெரியும். ஆனால் உதகமண்டலத்திலேயே இருக்கக்கூடாது என்று சொல்லுமளவுக்கு பிரிட்டிஷார் நடந்து கொள்வார்கள் என்று அவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை. விஷயமறிந்த மோலி, பாரிஸுக்கோ, லண்டனுக்கோ தன்னை அழைத்துச் செல்லும்படி பைரவரை வற்புறுத்தினாள். ஆனால் முதல் உலகப் போர் களேபரத்தில் அப்போது இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்குச் செல்லும் கப்பல் வழித்தடங்கள் அனைத்தும் அடைக்கப்பட்டிருந்தன.

வேறு வாய்ப்பே இல்லையா என்ன? இருக்கவே இருக்கிறது அழகு ஆஸ்திரேலியா. மோலியின் தாய்மண். பைரவருக்கும் தெரிந்த இடம். தன் புள்ளத்தாச்சி சம்சாரத்தை அழைத்துக் கொண்டு சிட்னி சென்றார் மகாராஜா.

அங்கு கடற்கரையோரமாக ஒரு பங்களாவை வாடகைக்கு எடுத்தார். மோலிக்கு சகல வசதி களையும் செய்து கொடுத்தார். நாள்களோடு வயிறும் வளர்ந்தது. 1916, ஜூலை 16 அன்று குழந்தை பிறந்தது. அதுவும் அழகான ஆண் குழந்தை.

பைரவருக்கு மெகா மகிழ்ச்சி. சிவந்த அந்தப் பிஞ்சுப் பாதங்களை வருடினார். குழந்தையின் நெற்றியில் முத்தமிட்டார். மோலிக்கு பிரசவ மயக்கம் தெளியவில்லை. தன் மகனையே உற்றுப் பார்த்துக் கொண்டிந்தார் பைரவர். அத்தனை சந்தோஷத்திலும் அவரது முகத்தில் சின்னதாக ஒரு சோக ரேகை தெரிந்தது. என்ன அது?

குழந்தை தமிழ் மண்ணில், புதுக்கோட்டை அரண்மனையில் பிறக்கும் பாக்கியம் இல்லாமல் போய்விட்டதே என்ற வருத்தம். இந்தக் குழந்தை மட்டும் எனது ஊரில் பிறந்திருந்தால்? அவரது சிந்தனை எங்கெங்கோ சென்றது.

ஒரு மகாராஜாவுக்கு முதல் ஆண் வாரிசு பிறக்கும் நாள் என்பது சமஸ்தானத்துக்கே திருவிழா நாள். கொண்டாடித் தீர்த்துவிடுவார்கள். அதாவது மகாராணிக்கு பிரசவ நேரம் நெருங்க நெருங்க சமஸ்தானத்தின் ஒவ்வொரு மூலையிலும் படபடப்பு அதிகரிக்கும். எப்போது அரண்மனையிலிருந்து அந்த இனிப்பான செய்தி வெளிவரும் என்று மக்கள் காத்திருக்கத் தொடங்குவார்கள். பெரும்பாலும் அரண்மனை முன் கூடி விடுவார்கள்.

ஆண் குழந்தை பிறந்துவிட்டால் போதும். அந்த மகாராஜாவுக்கு எத்தனை துப்பாக்கிக் குண்டு மரியாதை உண்டோ, அத்தனை முறை குண்டுகள் வானை நோக்கிப் பறக்கும். யானைகளில் வீரர்கள் இனிப்புகளோடு கிளம்பிவிடுவார்கள். மக்கள் கைகொள்ளாத அளவுக்கு இனிப்பு களோடு மகிழ்ச்சி ஆரவாரமிடுவார்கள். மகாராஜா உப்பரிகைக்கு வந்து கூடியிருக்கும் மக்களைப் பார்த்து தன் சந்தோஷத்தைப் பகிர்ந்து கொள்வார். 'மகாராஜா வாழ்க! பட்டத்து இளவரசர் வாழ்க! வாழ்க!'

தனக்கு வாரிசு பிறந்த மகிழ்ச்சியில் மகாராஜா, தன் அமைச்சர்களுக்கும் ஊழியர்களுக்கும் வாரி வழங்குவார். அவர்களும் கைநிறைய வெகுமதிகளுடன் வீடு திரும்புவார்கள். குறிப்பாக அன்றைய தினத்தில் சமஸ்தானத்தின் சிறைச்சாலைகள் எல்லாம் காலியாகி விடும். கைதி களுக்கு விடுதலை. முந்தைய தினம் ஆயுள் கைதியாக உள்ளே வந்த கேடி கபாலிகூட ஹாயாக

வெளியே வந்துவிடுவான். கைதிகளை வெளியேற்றிய பின் சிறைச்சாலை முழுவதையும் பாலால் கழுவி விடும் பழக்கம் சில ராஜபுத்திர சமஸ்தானங்களில் இருந்து வந்தது. அதேபோல குழந்தை பிறந்த ஒரு வாரத்தில் அரண்மனையையும் பாலாலும் பசுஞ்சாணத்தாலும் கழுவி விடுவார்கள். எதற்கு? புண்ணியாக வாசனம்.

ஒரு வயதான வேலைக்காரி குழந்தை இருக்கும் இடத்துக்கு வருவாள். அவளது கையில் ஆட்டுக்குட்டி ஒன்று இருக்கும். அந்த ஆட்டுக்குட்டியைக் குழந்தை பெற்ற தாயின் தலைக்கு மேல் சுற்றுவாள். இருபத்தோரு முறை. அதே போல குழந்தைக்கும் சுற்றுவாள். 'நாய்க் கண்ணு, நரிக்கண்ணு, பேய்க்கண்ணு, பிசாசுக்கண்ணு, ஊரார் கண்ணு, உலகக்கண்ணு, எல்லாக் கண்ணும் கழியட்டும்.' அந்த ஆட்டுக்குட்டியை வெளியே எடுத்துச் சென்று யாராவது வேலைக்காரனிடம் கொடுப்பாள் கிழவி. அந்த வேலைக்காரன், எல்லா திருஷ்டியையும் கிரகித்துக் கொண்ட ஆட்டுக்குட்டியை எரித்துவிடுவான், உயிரோடு. இது சில இந்து சமஸ் தானங்களில் இருந்த வழக்கம்.

சில மராத்திய சமஸ்தானங்களில் ஐந்தாவது நாள் இரவு முழுவதும் குழந்தையின் நலனுக்காக அனைவரும் விழித்திருந்து பஜனை பாடுவது வழக்கம். யாரும் தப்பித் தவறிக் கண் அசந்துவிடக்கூடாது என்பதற்காகப் போருக்காக பயன்படுத்தப்படும் முரசுகள் ஒலித்துக் கொண்டே இருக்கும்.

ஆண் குழந்தை பிறந்த பன்னிரண்டாவது நாள் அதற்குக் காது குத்தி பெயர் வைப்பார்கள். அரண்மனைக் குழந்தைகளுக்குக் காது குத்தி விடுவதற்கென்றே பொற்கொல்லர் ஒருவர் இருப்பார். அந்த உரிமை அவரது குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்கு மட்டுமே. பரம்பரை உரிமை. அதேபோல குழந்தையின் காதில் முதன்முதலில் பெயரைச் சொல்லும் உரிமை, அப்பா வழி அத்தைக்கே உரித்தானது.

அரண்மனையின் ஆஸ்தான ஜோதிடர், குழந்தை பிறந்த நேரத்தை வைத்து, ஜாதகத்தைக் கணித்து வைத்திருப்பார். 'மிதுன லக்கினம் ராஜ லட்சணம். இரண்டில் புதன் போடு போடுன்னு போடப்போறார். மூன்றில் கேது, ஐந்தில் சந்திரன், செவ்வாய் ஐஸ்வர்யம் குறையாம இருக்கும். ஏழரையில் ராகு...' - இப்படி தன் பிராண்ட் வசனங்களையும் சேர்த்து சத்தம் போட்டு ஜாதகப் பலன்களைச் சொல்லுவார் ஜோதிடர். பின்பு ஜாதக அமைப்புப்படி தான் யோசித்து வைத்திருக்கும் நான்கு பெயர்களை எடுத்து விடுவார். 'சஞ்சய் ராமசாமி பகதூர், சாதா கோயிந்தசாமி பகதூர், சங்கர சுப்புசாமி பகதூர், சுந்தர கோபால்சாமி பகதூர்.'

இங்கி பிங்கி பாங்கி போட்டு மகாராஜா, நான்கில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பார். அந்தப் பெயரை அத்தையிடம் சொல்லுவார். அத்தையானவர், குழந்தையின் காதில் அந்தப் பெயரை மூன்று முறை ஓதுவார். பின்பு தன் இடுப்பால் தொட்டிலை ஒருமுறை இடிப்பார். சம்பிரதாயம். அன்றைய தினத்திலும் ஆட்டுக்குட்டி ஒன்று உயிர்த்தியாகம் செய்யும்.

சமஸ்தானத்தின் ரெஸிடெண்டுக்கும் இந்தியாவின் வைஸ்ராய்க்கும் ஆண் வாரிசு பிறந்த செய்தி கடிதமாக அனுப்பப்படும். 'வாழ்த்துகள்' என்று வைஸ்ராயிடமிருந்து பதில் வந்து விட்டால் போதும். அந்தக் குழந்தை பட்டத்து இளவரசராக அங்கீகரிக்கப்பட்டு விட்டதென்று அர்த்தம். அதற்கும் தனிக் கொண்டாட்டங்கள் உண்டு.

பிறந்தது ஆண் குழந்தை என்றால் இத்தனைக் கொண்டாட்டங்கள். பெண் குழந்தை என்றால்? எதுவுமே கிடையாது. ஏமாற்றத்தில் துக்கம் கொண்டாடிய சமஸ்தானங்கள்கூட இருக்கின்றன. ராஜஸ்தான் சமஸ்தானங்களில் பெண் குழந்தைக்கு மதிப்பே கிடையாது. சொல்லப்போனால் பிறந்ததும் கொல்லப்பட்ட பெண் குழந்தைகள்தான் ஏராளம். அப்படியே வாழ அனுமதிக்கப் பட்ட பெண் குழந்தைகளுக்கு, தன் தாயிடம் பால் குடிக்கும் பாக்கியம் வழங்கப்படமாட்டாது. அரண்மனையில் யாராவது ஓர் ஆயா அந்தக் குழந்தையை வளர்ப்பார்.

வாரணாசிக்கு அருகே ஜான்பூர் என்ற குட்டி சமஸ்தானத்தின் இளவரசிக்கு பிரசவ நேரம். மக்களும் இளவரசியின் தந்தையாகிய ராஜாவும் படபடப்போடு ஆவலாகக் காத்திருந்தார்கள். பிறந்ததோ பெண் குழந்தை. ராஜாவுக்குப் பெருத்த ஏமாற்றம். சமஸ்தானமே துக்கமயமாகிப் போனது. புண்ணியம் செய்த பெண் குழந்தை போல, யாரும் அதனைக் கொல்லவில்லை. சொல்லப்போனால், அந்தப் பரம்பரையில் அதற்கு முந்தைய இருநூறு வருட வரலாற்றில், வாழ அனுமதிக்கப்பட்ட முதல் பெண் குழந்தை அதுவே.

பெண் குழந்தை விஷயத்தில் கேரளா மட்டும் விதிவிலக்கு. திருவாங்கூர், கொச்சின் சமஸ்தான மக்கள் பெண் குழந்தை பிறந்தால் உற்சாகமாகக் கொண்டாடுவார்கள். அந்த சமஸ்தானங்களைப் பொருத்தவரை மகாராணிக்குத்தான் பவர் அதிகம், சதுரங்கம் போல. மகாராஜாவுக்கு கொஞ்சம் கம்மிதான். மகாராணி முன் மகாராஜாவே கொஞ்சம் பவ்யமாகத்தான் அடங்கி நிற்க வேண்டும். இன்னொரு விஷயம், அங்கு ஆளும் மகாராஜாவின் மூத்த சகோதரிதான் மகாராணி ஆவார். அந்த மகாராணிக்கொரு மகன் பிறந்தால், அந்தக் குழந்தைதான் அடுத்த பட்டத்து இளவரசர். அந்தக் குழந்தையின் ஜனன நாள் அன்று, இருபத்தோரு குண்டுகள் முழங்க மரியாதை செய்யப்படும். பட்டத்து இளவரசியாக ஒரு பெண் குழந்தை பிறந்தால்கூட பதினெட்டு குண்டு மரியாதை உண்டு. சொத்து, அதிகாரம் எல்லாம் பெண் வழி வருவதே.

சரி, குழந்தைப் பேறே இல்லாத மகாராஜாக்கள் என்ன செய்தார்கள்? வேறென்ன, வளர்ப்பு மகன் கலாசாரம்தான்.

‘எத்தனை கண்ணாலம் கட்டியும் பிரயோசனம் இல்ல. பொறக்கறதெல்லாம் பொம்பளப் புள்ளையாவே பொறக்குது. இதுக்கு மேல உடம்புல தெம்பில்ல. தத்தெடுக்கறதா முடிவு பண்ணிட்டேன்’ ஒரு மகாராஜா கட்டக் கடைசியில் எடுக்கும் முடிவு இதுதான். அவரது பரம்பரையிலேயே, சொந்தக்காரர்கள், சொக்காரர்கள் வட்டத்திலேயே தகுதியான ஆண் குழந்தை ஏதாவது இருக்கிறதா என்று தேடிப் பார்த்து வளர்ப்பு மகனாக்குவார்கள்.

அதிலேயே இரண்டு விதங்கள் இருக்கின்றன. வட மாநில மகாராஜாக்கள், எந்தப் பெண்ணைத் தாங்கள் திருமணம் செய்துகொள்ள முடியாதோ, அந்தப் பெண்ணின் மகனை வளர்ப்பு மகனாகத் தேர்ந்தெடுக்க மாட்டார்கள். ஆனால் மராத்தியர்களும் தென்னக ஆட்சியாளர்களும் தம் மகளுக்குப் பிறந்த ஆண் குழந்தையையோ அல்லது சகோதரிக்குப் பிறந்த ஆண் குழந்தையையோ வளர்ப்பு மகனாக சுவிகாரம் செய்து கொள்வார்கள்.

சில ராஜபுத்திர சமஸ்தானங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட வளர்ப்பு மகன்கள் அரண்மனையில் வளர்க்கப்படுவார்கள். அவர்கள் அனைவருக்குமே ராஜாவுக்குரிய அத்தனை மரியாதைகளும் கிடைக்கும். ராஜாவுடன் சேர்ந்து சாப்பிடும் தகுதி பெற்றவர்கள் அவர்கள். ஆனால் யார் அடுத்து அரியணை ஏறப் போகிறவர் என்று தேர்ந்தெடுக்கும் உரிமை ராஜாவுக்கே உண்டு.

திடீரென எட்டாவது வளர்ப்பு மகனுக்குக்கூட அதிர்ஷ்டம் அடிக்கலாம். பிரிட்டிஷ் அரசும் ஒப்புக் கொண்டால் போதும், அந்த எட்டாவது வளர்ப்பு மகன் அரியணை ஏறிவிடலாம்.

சரி மீண்டும் பைரவர் கதைக்கு வருவோம். அடுத்ததாக ஒரு கவலை அவரை வாட்டியெடுக்க ஆரம்பித்தது. கட்டிய ஆஸ்திரேலிய மனைவியையே பிரிட்டிஷ் அரசு அங்கீகரிக்கவில்லையே. அந்த மனைவிக்குப் பிறந்த வாரிசை மட்டும் அங்கீகரித்து விடுவார்களா என்ன? எத்தனையோ சமஸ்தான மகாராஜாக்கள் ஆண் வாரிசு இன்றி தவித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் எனக்கோ சிங்கக் குட்டி போல ஓர் ஆண் மகன் பிறந்திருக்கிறான். இருந்தும் கவலைப்பட வேண்டியதிருக்கிறதே. சரி, மனம் தளர வேண்டாம். முயற்சி செய்து பார்த்துவிடுவோம் என்று முடிவெடுத்தார்.

குழந்தை பிறந்த செய்தியை புதுக்கோட்டையின் ரெஸிடெண்டுக்குத் தெரியப்படுத்தினார். இந்தியாவின் வைஸ்ராய்க்கும் கடிதம் அனுப்பினார். பதில் வரும் என்று காத்திருக்கத் தொடங் கினார். அதே சமயத்தில் பைரவர், தன் மகனை இந்துவாக வளர்க்காவிட்டாலும் சரி, எக்காரணம் கொண்டும் ஒரு கிறித்துவனாக வளர்க்கக் கூடாது என்று ஒரு முடிவு எடுத்திருந்தார். ஏனெனில் புதுக்கோட்டை இந்து சமஸ்தானம். மகனுக்கு ஞானஸ்நானம் செய்து வைத்துவிட்டால் அதைக் காரணம் காட்டியே பிரிட்டிஷ் அரசு அங்கீகாரத்தை மறுத்து விடுமே.

எனவே கவனமாக ஒரு பெயரைத் தேர்ந்தெடுத்தார். தன் பரம்பரைப் பெயரையெல்லாம் இணைத்து, மோலியையும் திருப்திப்படுத்தும் விதத்தில் அவர் குழந்தைக்கு வைத்த பெயர் மார்த்தாண்ட சிட்னி தொண்டைமான் (Martanda Sydney Tondaiman).

சரி, இனிமேலும் சிட்னியில் உட்கார்ந்திருந்தால் வேலைக்கு ஆகாது. புதுக்கோட்டை சென்றால்தான், பார்க்க வேண்டியர்களைப் பார்த்து, பேச வேண்டியவற்றைப் பேசி, சிட்னி தொண்டைமானுக்கு புதுக்கோட்டையின் இளவரசர் என்ற அங்கீகாரத்தைப் பெற்றுக் கொடுக்க முடியும். எனவே பைரவர் மட்டும் புதுக்கோட்டைக்குக் கிளம்பினார்.



# வேண்டாம் அரியணை!

புதுக்கோட்டையில் மார்த்தாண்ட பைரவரின் நாள்கள் எந்தவித சுவாரசியமும் இன்றிக் கழிந்தன. அன்பு மனைவி மோலியும், ஆசை மகன் மார்த்தாண்ட சிட்னியும் ஆஸ்திரேலியக் கண்டத்தில். இங்கே இவர். எத்தனைக் காலம்தான் பிரிந்திருக்க முடியும்?

சிட்னிக்கும் தமிழ்நாட்டுக்கும் சீசன் டிக்கெட் கிடைக்குமா என்ன? அல்லது போய் வரும் தூரத்தில்தான் இருக்கிறதா? புதுக்கோட்டைக்கு அவ்வப்போது வந்து நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டார். சிட்னிக்கும் அடிக்கடி சென்று மனைவியையும் மகனையும் பார்த்துக் கொண்டார். ரேஸ் குதிரைகளையும் கவனித்துக் கொண்டார். ஆம், அப்போது பைரவருக்கு ரேஸ் குதிரைகள் வாங்கி வளர்ப்பதில் ஆர்வம் இருந்தது.

புதுக்கோட்டையில் பைரவர் இல்லாத சமயங்களில், சமஸ்தானத்தின் முதல் அமைச்சராக இருந்த அவரது மூத்த சகோதரர் விஜயரகுநாத பல்லவராயர் துரை ராஜா, நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டார். பைரவரும் சந்தர்ப்பம் அமையும் போதெல்லாம் அல்லது சந்தர்ப்பத்தை அமைத்துக் கொண்டு, தன் மனைவி, மகன் அங்கீகாரத்துக்காக பிரிட்டிஷ் அரசுடன் பேசிப் பார்த்தார். எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை.

என்ன காரணம் என்று தெரியவில்லை, மோலிக்கு அதற்கு மேல் ஆஸ்திரேலியாவில் இருக்கப் பிடிக்கவில்லை. தமிழ்நாட்டுக்கு வரவும் வழியில்லை.

பேசாமல் லண்டனுக்குச் சென்றுவிடலாம் என்று முடிவெடுத்தாள். வருங்காலத்தில் மகன் சிட்னியின் படிப்புக்கும் அது வசதியாக இருக்கும் என்று தோன்றியது.

1919, ஆகஸ்டில் பைரவர் ஆஸ்திரேலியாவுக்கு விடை கொடுத்துவிட்டு, புதுக்கோட்டைக்கு வந்தார். கொஞ்ச நாள்களிலேயே மோலியும் தன் மகனை அழைத்துக் கொண்டு லண்டன் பயணமானாள். அந்த நவம்பரில் பைரவரும் லண்டன் சென்று அவர்களோடு இணைந்து கொண்டார். பார்க் லேன் பகுதியில் ஒரு வீட்டைக் குத்தகைக்கு எடுத்துத் தங்கினார்கள்.

லண்டனில் வைத்து பைரவருக்கு ஒரு யோசனை தோன்றியது. எத்தனை நாள்கள்தான் தனது மனைவியின், மகனின் அங்கீகாரத்துக்காக சமஸ்தானத்தின் ரெஸிடெண்டையும், மெட்ராஸ் மாகாண கவர்னரையும், இந்தியாவின் வைஸ்ராயையும் தொங்கிக் கொண்டிருக்க முடியும். யாரிடமிருந்தும் முறையான பதிலும் வரவில்லை. எப்படியும் இங்கிலாந்து கிங்தான் முடிவு செய்ய வேண்டும். பேசாமல் நேரடியாக அவரையே பார்த்துப் பேசிவிட்டால் என்ன? கடிதங்கள் மூலம் வேண்டுகோள்கள் வைப்பதைவிட, நேரடியாக முகத்துக்கு நேரே பேசும்போது அதற்குரிய பதிலைச் சொல்லித்தானே ஆக வேண்டும் என்று நினைத்தார் பைரவர்.

ஆனால் பைரவர் நினைத்த அளவுக்கு அவ்வளவு எளிதில் கிங்கின் அப்பாயிண்ட்மெண்ட் கிடைக்கவில்லை. 1920, ஜூலையில் ஒருநாள் அவருக்கு நேரம் ஒதுக்கப்பட்டது. கூடவே மோலிக்கும் அனுமதி வழங்கப்பட்டிருந்தது. பைரவருக்குச் சந்தோஷம். முதன்முறையாக மோலிக்குக் கிடைத்துள்ள அனுமதி. அதுவும் கிங் மற்றும் குயினுடனான பிரத்யேகச் சந்திப்புக்கு. எப்படியும் பேசிவிடலாம், அங்கீகாரத்தைப் பெற்றுவிடலாம் என்ற நம்பிக்கையுடன் இருந்தார்.

அந்தச் சந்திப்புக்குத் தயாரானார். இருவருமே புதிய உடைகளை வாங்கினார்கள். குறிப்பிட்ட நாள் வந்தது. தனக்கு பிரிட்டிஷ் அரசு வழங்கிய பதக்கங்களை எல்லாம் வெகு கவனமாக எடுத்து சட்டையில் அணிந்து கொண்டார் பைரவர். தலையில் தலைப்பாகை. உடைக்கு மேல் குறுக்கே கம்பீரமாக ஒரு பட்டை. மோலியின் உடை முற்றிலும் ஐரோப்பியத்தனமானது. பைரவர் அளித்த பலவித நகைகளை அணிந்து கொண்டாள். குறிப்பிட்ட நேரத்தில் இருவரும் பக்கிங்ஹாம் அரண்மனையை அடைந்தார்கள்.

சந்திப்பு நடந்தது. சம்பிரதாய மரியாதை. குசல விசாரிப்புகள். பொதுவான வார்த்தைகள். ராஜ உபசரிப்பு. பைரவர், சந்தர்ப்பம் பார்த்து தனது கோரிக்கையையும் முன் வைத்தார். புகைப் படம் எடுத்துக் கொண்டார்கள். சந்திப்பு நேரம் முடிந்தது. கிளம்பினார்கள்.

அந்த வருடத்தின் இறுதியில், வைஸ்ராயிடமிருந்து பைரவருக்கு ஒரு கடிதம் வந்து சேர்ந்தது. அரசுக் கடிதம் என்பதால் வெகு ஆவலாகப் பிரித்துப் பார்த்தார். அதில், மார்த்தாண்ட சிட்னி தொண்டைமானை வாரிசாக அங்கீகரிக்க முடியாது என்று குறிப்பிடப்பட்டிருந்தது. மனத்தளவில் மிகவும் உடைந்து போனார் பைரவர். தாங்க முடியாத வருத்தம். என் மனைவிக்கும் மகனுக்கும் அங்கீகாரம் இல்லாதபோது எனக்கு மட்டும் பட்டமும் பதவியும் எதற்கு?

அவசர அவசரமாக புதுக்கோட்டைக்குக் கிளம்பினார். அவரது மனம் ஒரு தீர்மானமான முடிவை எடுத்திருந்தது. புதுக்கோட்டைக்கு வந்தபின், தனது சகோதரரும் முதலமைச்சருமாகிய விஜய ரகுநாத தொண்டைமானிடம் கலந்து பேசினார். பின்பு சமஸ்தானத்தின் ரெஸிடெண்டுக்கும் வைஸ்ராய்க்கும் கடிதம் எழுதினார். நான் புதுக்கோட்டையின் நிர்வாகப்

பொறுப்பிலிருந்து விலகுகிறேன். பொறுப்பை என் சகோதரர் விஜய ரகுநாதரிடம் ஒப்படைக்கின்றேன்.

பிரிட்டிஷ் அரசு எந்தக் கேள்வியும் கேட்கவில்லை, சம்மதித்தது. அதாவது பெயரளவில் மார்த்தாண்ட பைரவர்தான் ராஜா. ஆனால் ஆட்சி, அதிகாரம் எல்லாம் விஜயரகுநாதருடையது (Regent). பைரவர், வருடா வருடம் சமஸ்தானத்திலிருந்து குறிப்பிட்ட அளவு தொகையை மானியமாகப் பெற்றுக் கொள்ளலாம்.

அதற்குப் பின், பைரவர் புதுக்கோட்டையில் நேரத்தை வீணடிக்கவில்லை. அவரால் அங்கு இருக்கவும் முடியவில்லை. லண்டனுக்குச் சென்றார். சில நாள்களிலேயே ஓர் அசம்பாவிதம் நிகழ்ந்தது. அவர், மோலிக்குப் பரிசாக அளித்த சில நகைகள் திருட்டுப் போயின (1921). அதில் தங்கம், வைரம், மரகத நகைகள் அடக்கம்.

மனத்துக்குச் சங்கடமாக இருந்தது. லண்டனிலிருந்து கிளம்பிவிடலாம் என்று தோன்றியது. மோலியோடும் சிட்னியோடும் கேன்ஸுக்குச் சென்றார் (1922). அங்கு லா ஃபேவரைட் (La Favorite) என்றொரு அழகான மாளிகையை வாங்கினார். கவலைகளை எல்லாம் மறந்து வாழ முயற்சி செய்தார்.

குதிரை வளர்ப்பது அவருக்கு உற்சாகத்தைக் கொடுத்தது. ஐரோப்பாவுக்குள் சுற்றுப் பயணங் கள். விருந்துகள். சந்திப்புகள். பொழுதுபோக்க இவைதானே வழிகள்.

பல நண்பர்கள் கிடைத்தார்கள். பலவிதமான விருந்துகளில் கலந்துகொண்டார். பைரவரும் பலே விருந்துகள் கொடுத்தார். தாங்கள் கொடுக்கும் விருந்துகளில் பைரவரும் மோலியும் இந்திய உடைகளில் காட்சி கொடுத்தனர். குறிப்பாக மோலி, அணிந்திருக்கும் ஆடம்பரமான சேலையைக் கண்டு வாய் பிளக்காதவர்கள் இருக்கவே முடியாது. தனக்கு நெருக்கமான தோழி களுக்குச் சில சேலைகளைப் பரிசாகவும் கொடுத்தாள் மோலி.

ஒரு ஹோட்டலுக்குச் சென்றிருந்தார் பைரவர். உணவு கொண்டுவர உத்தரவிட்டார். வந்த உணவைப் பார்த்ததும் பைரவரின் முகத்தில் அருவருப்பு, அதிர்ச்சி. அவர் ஓர் இந்து மகாராஜா என்றறியாமல், அவருக்கு ஒரு துண்டு பன்றிக்கறி கொண்டு வந்திருந்தார்கள். கோபம்தான். ஆனாலும் தாம்தூம் என்று குதிக்காமல் கட்டுப்படுத்திக் கொண்டார். அந்த ஒரு துண்டு இறைச்சியை எடுத்து சன்னல் வழியாக வெளியே வீசினார். கைகழுவிவிட்டு வந்து வேறு உணவை ஆர்டர் செய்தார்.

சில நிமிடங்கள் கழிந்தன. பைரவரின் முன் ஒரு வயதானவர் வந்து நின்றார். பாதிரியார். அவர் உடையில் உணவுக் கறை. பைரவருக்கு நடந்தது என்ன என்பது புரிந்து போனது. பவ்யமாக எழுந்து தவறுக்கு வருந்தினார். அந்த பாதிரியாருக்கு ஐநூறு பவுண்டுகள் நிதி உதவி செய் தார்.

வருடங்கள் நகர்ந்தன. பைரவர், ஐரோப்பிய நாடுகளையே வலம் வந்து கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் அவர், குடும்பத்தோடு பாரீஸில் இருந்தார். திடீரென கடுமையான வயிற்று வலி. மோலி, அவரை நியு அமெரிக்கன் மருத்துவமனையில் சேர்த்தாள். பல்வேறு மருத்துவப் பரிசோதனைகள். உடனடியாக இரண்டு அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்றார்கள். சம்மதித்தாள். அறுவை சிகிச்சைகள் நடந்தன. ஆனால் மார்த்தாண்ட பைரவரின் உடல்நிலை யில் முன்னேற்றம் எதுவும் இல்லை.

அவரது கண்கள் ஒளியிழந்து போயிருந்தன. 1927, மே 28. அருகில் நின்று கொண்டிருந்த அன்பு மனைவி மோலியும், ஆசை மகன் சிட்னியும் பைரவரின் பார்வையில் மங்கலாகிக் கொண்டே போனார்கள். அவரது உயிர் பிரிந்தது (வயது 53).

மோலி தன் துக்கத்தை எல்லாம் கட்டுப்படுத்திக் கொண்டாள். உட்கார்ந்து அழ ஆரம்பித்து விட்டால் அடுத்தடுத்த காரியங்களை யார் செய்வார்கள்? ஒரு சமஸ்தானத்தின் மகாராஜா. புதுக்கோட்டை பிரகாதாம்பாளின் பக்தனாக வாழ்ந்தவர். இறுதிச் சடங்கை, சொந்த மண்ணில் சொந்த மக்கள் முன்னிலையில் நடத்துவதுதானே அவருக்குச் செய்யும் உண்மையான மரியாதை.

மோலி உடனடியாக, 'பைரவரின் இறுதிச் சடங்குகளுக்கு உரிய ஏற்பாடு செய்து வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்' என்று புதுக்கோட்டை அரசு அதிகாரிகளுக்கு வேண்டுகோள் அனுப்பினாள். பதில் வந்தது, மறுப்பாக. 'மகாராஜாவின் உடலை புதுக்கோட்டைக்குக் கொண்டுவர அனுமதி அளிக்க முடியாது.'

மோலிக்குப் பேரதிர்ச்சி. மெட்ராஸ் மாகாண கவர்னரிடமும், வேறு சில உயரதிகாரிகளிடமும் கெஞ்சிப் பார்த்தாள். அவர்களும் அனுமதி கொடுக்கவில்லை. காரணம் என்ன என்பதையும் சொல்ல மறுத்துவிட்டார்கள். சரி, என்ன காரணம்?

தங்கள் மதிப்புக்குரிய மகாராஜா மார்த்தாண்ட பைரவர் மீது புதுக்கோட்டை மக்கள் வைத்திருந்த பாசமோ அலாதியானது. அவரது உடலை இறுதி அஞ்சலிக்காக புதுக்கோட்டைக்குள் அனுமதித்தால், மக்கள் கண்ணீரில் கரைந்து போவார்கள். இந்துமத சம்பிரதாயங்களின்படி இறுதிச் சடங்குகளை மகன்தான் நிறைவேற்ற வேண்டும். எனவே சிறுவன் சிட்னி தொண்டைமானையும் புதுக்கோட்டைக்குள் அனுமதிப்பது அவசியமாகிறது. மனைவி மோலியை அனுமதிக்க முடியாது என்று சொல்வதற்கே வழியில்லை. இறந்து போன மகாராஜா, அவர் அருகில் அழுது கொண்டிருக்கும் மனைவி, மகன் - இவர்கள் எல்லோரையும் சேர்த்துப் பார்த்தால் மக்கள் மத்தியில் அனுதாப அலை பெருகிவிடும். அடுத்ததாக சிட்னி தொண்டைமானை வாரிசாக்கியே தீர வேண்டும் என்ற குரல் ஓங்கி ஒலிக்க ஆரம்பித்துவிட்டால்?

தங்களுக்கு இது போல சங்கடங்கள் எதுவும் நேர்ந்துவிடக் கூடாது என்று நினைத்த பிரிட்டிஷ் அரசு, தன் சூழ்ச்சியினால் பைரவரின் உடலை புதுக்கோட்டைக்குக் கொண்டுவர அனுமதி கொடுக்கவே இல்லை. புதுக்கோட்டை மக்களுக்கும் தங்கள் மகாராஜாவுக்கு அஞ்சலி செலுத்தும் பாக்கியம் கிட்டவில்லை.

மோலி, பைரவரின் உடலை லண்டனுக்குக் கொண்டு சென்றாள். அங்கு கோல்டர்ஸ் கிரீன் (Golders Green) மயானத்தில் இந்துமத சம்பிரதாயங்களின்படி, இறுதிச் சடங்குகளுக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சிறிய கூட்டம். வந்திருந்தவர்களில் முக்கியமானவர், பைரவரின் நெருங்கிய நண்பரான கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங். தன் நண்பருக்கு வாய்க்கரிசி போட்டு அஞ்சலி செலுத்தினார் ஜெகத்ஜித் சிங். புதுக்கோட்டை மகாராஜா மார்த்தாண்ட பைரவர் தொண்டைமானின் உடல் தகனம் செய்யப்பட்டது.

மோலி, இந்துமத வழக்கப்படி, அடுத்த ஒரு வருடத்துக்கு வெள்ளைச் சேலை மட்டுமே அணிந்தாள். நகைகளைத் தவிர்த்தாள். பொது நிகழ்ச்சிகளுக்கும் செல்லவில்லை.

அதன் பின்னும் மோலியின் வாழ்க்கை ஐரோப்பிய நாடுகளிலேயே கழிந்தது. கையிலிருந்த பணமெல்லாம் கரைந்துகொண்டே சென்றது. இளவரசருக்குரிய அங்கீகாரம் கிடைக்கா விட்டாலும், சிட்னி ஓர் இளவரசர் போலவே வாழ நினைத்தார். செலவாளியாகவே வளர்ந்தார்.

பின்னாளில் சிட்னியின் இல்லற வாழ்க்கையும் தோற்றுப் போனது. ஒரு விபத்தில் சிக்கியதில் சிட்னிக்கு காலில் பயங்கர அடி. காலமெல்லாம் சிறிது நொண்டி நொண்டி நடக்க வேண்டிய நிலை உண்டானது. அது போதாதென்று, வழக்கு ஒன்றில் சிக்கி, கைதாகி சிறை செல்லும் நிலைமைக்கும் ஆளானார். எங்கே அவர், தப்பித் தவறி இந்தியாவுக்குள் நுழைந்துவிடப் போகிறாரோ என்று பிரிட்டிஷ் அரசு, சிட்னி மீது ஒரு கண் வைத்தபடியே இருந்தது, 1947 வரை.

மோலி, புற்றுநோயால் பாதிக்கப்பட்டாள். பைரவரோடு மகிழ்ச்சியாக வாழ்ந்த கேன்ஸில் தான், தன் இறுதி நொடிகளைக் கழிக்க வேண்டும் என்று விரும்பினாள். விருப்பம் நிறைவேறி யது. 1967, நவம்பர் 20ல் அவளுக்கு மரணம் கிடைத்தது. கோல்டர்ஸ் கிரீன் மயானத்திலேயே அவளது இறுதிச் சடங்குகளும் நடந்தன.

1984, ஜனவரி. புதுக்கோட்டை சமஸ்தானத்தின் வாரிசாகப் பிறந்து, ஆனால் தன் வாழ்நாளின் இறுதிவரை அதற்குரிய அங்கீகாரத்தைப் பெற முடியாத சிட்னி, லண்டனில் ஒரு ஹோட்டல் அறையில் மாரடைப்பால் இறந்து கிடந்தார்.

மார்த்தாண்ட பைரவருக்குப் பின் புதுக்கோட்டையின் மகாராஜாவாகப் பொறுப்பேற்றவர், ராஜகோபால தொண்டைமான் (Rajagopala Tondaiman). பைரவர் பரம்பரையில் வந்த வாரிசு. 1928ல் ஆறு வயதில் அரியணை ஏற்றப்பட்டார். 1944ல் அதிகாரத்துடன் ஆள ஆரம்பித்தார். 1947 ஆகஸ்டில் புதுக்கோட்டை இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். 1948, மார்ச் 3ல் மெட்ராஸ் மாகாணத்துடன் புதுக்கோட்டை இணைக்கப்பட்டது.



# 80

# வேட்டைய மகாராஜாக்கள்!

'என்ன எல்லாம் தயாரா?' - கேட்டபடியே அரண்மனையின் வாசலுக்கு வந்தார் மகாராஜா. அவருக்கு இரண்டு அடி முன்பாகவே அவரது தொப்பை வந்தது.

'சகலமும் தயார். புறப்படலாம் மகாராஜா' - என்றார் வாசலில் காத்திருந்த பாது காப்பு அமைச்சர். பணியாள் ஒருவன், ஏணியைப் பிடித்துக் கொள்ள யானை மேல் ஏறி அமர்ந்தார் மகாராஜா. யானையின் முதுகுமேல் நின்று கொண்டிருந்த இரண்டு பணியாளர்கள், மகாராஜாவுக்கு விசிற ஆரம்பித்தார்கள். அமைச்சர், இன்னொரு யானை மேல் ஏறிக் கொண்டார். அவருடன் வேறு சில அமைச்சர் களும் ஏறிக் கொண்டார்கள். இரண்டு யானைகளும் காட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தன. சில காவலாளிகள் தங்கு தங்கென்று ஓடி வர ஆரம்பித்தார்கள்.

காட்டின் எல்லையில் காத்திருந்த இருவர், மகாராஜாவுக்கு வணக்கம் வைத்தார்கள்.

'என்னென்ன இருக்கு?' மகாராஜா கேட்டார்.

'மகாராஜா, வடக்கால குளத்துப் பக்கம் போனா கரடியைச் சுடலாம். இங்க தெக்கால உள்ள போனா மான் நடமாட்டம் இருக்குது. அதுலயே இன்னும் உள்ளார தள்ளிப்போனா சாயங்கால நேரத்துல புலியைச் சுடலாம். சிறுத்தை எதுவும் கண்ணுல படலீங்க.' - அவர்கள் மெனுவைச் சொன்னார்கள். காட்டில் எங்கெங்கே என்னென்ன விலங்குகளின் நடமாட்டம் இருக்கிறது என்று சொல் லும் அவர்கள், புக்கிகள் என்றழைக்கப்பட்டார்கள்.

'புலி' என்று ஒற்றை வார்த்தையை உதிர்த்தார் மகாராஜா. 'உத்தரவு மகாராஜா' என்று வணங்கிய புக்கிகள் இருவரும், காட்டுக்குள் ஓட ஆரம்பித்தார்கள். யானைகள் அவர்களைப் பின் தொடர்ந்தன. புலிகள் நடமாட்டம் இருக்கும் பகுதியில் ஒரு பெரிய மரத்தின் மேல், மகாராஜாவுக்கான மேடை போடப்பட்டிருந்தது. அந்த மேடையை மச்சன் (Machan) என்றழைப்பார்கள். அதில் மெத்தை விரிக்கப்பட்டிருந்தது. யானையிலிருந்து நேரே மேடைக்குத் தாவினார் மகாராஜா. கூடவே பணியாளர்களும் பாதுகாப்பு அமைச்சரும் தாவினார்கள்.

மூச்சிரைக்க ஓடி வந்த காவலாளிகள் சிலர் மரத்தைச் சுற்றிப் பாதுகாப்பாக நின்று கொண்டார்கள். வேறு காவலாளிகளும் புக்கிகளும் அருகிலிருந்த மரத்தின் மேல் அமைக்கப்பட்டிருந்த சிறிய மேடை மீது ஏறிக் கொண்டார்கள். மகாராஜா புலி வேட்டையாடுவதற்காக மற்ற எல்லோரும் தயாராக இருந்தார்கள்.

அவ்வளவு நேரம், யானை மீது சொகுசாக வந்த களைப்பு. அதைத் தீர்ப்பதற்காகக் கொஞ்சம் சோமபானம் அருந்தினார் மகாராஜா. பசி. பலகாரம் சாப்பிட்டார். பின் ஆனந்த சயனம். எழுந்தார். பாதாம், முந்திரி வகைகள் உள்ளிறங்கின. மீண்டும் சோமபானம். குறட்டையுடன் கூடிய குட்டித் தூக்கம்.

மாலை வேளை. பெண் புலி ஒன்று நெருங்கி வருவதாக புக்கி, சிக்னல் கொடுத்தார். தூங்கிக் கொண்டிருந்த மகாராஜாவின் காதில் பவ்யமாக சுப்ரபாரதம் பாடினார் பாதுகாப்பு அமைச்சர். மெல்ல இமைகள் பிரித்த மகாராஜா, எழுந்து உட்கார்ந்தார். பைனாகுலரால் பார்த்தார். 'ம்ஹூம், சின்னதா இருக்குது' என்று சொல்லிவிட்டு குப்புறப்படுத்துத் தன் குறட்டை வேட்டையைத் தொடர ஆரம்பித்தார்.

சிறிது நேரத்தில் ஒரு பெரிய ஆண் புலி ஒன்று அந்தப் பக்கமாக வந்தது. புக்கிகள் சிக்னல் கொடுக்க, மகாராஜாவை மீண்டும் எழுப்பினார் அமைச்சர். மகாராஜா எழுந்தார். புலியைப் பார்த்தார். 'ம்' என்றார். துப்பாக்கியைத் தயாராக வைத்திருந்த அமைச்சர், அதனை மகாராஜாவிடம் நீட்டினார். கொட்டாவி விட்டுக் கொண்டிருந்த மகாராஜா, பிளந்த வாயுடனேயே மீண்டும் 'ம்' என்றார். அன்றைக்கு அவருக்கு மூட் இல்லை போல. அமைச்சர், புலியைச் சுட்டார். அது செத்து விழுந்தது.

வேட்டை முடிந்தது. யானைகள் கிளம்பின. தலைகீழாக ஒரு கம்பில் தொங்கிக் கொண்டிருந்த புலியை நான்கு பேர் சுமந்து வந்தார்கள். அரண்மனை வாசலில் புகைப்படக்காரர் காத்திருந்தார்.

'புலியோட தலையைக் கொஞ்சம் நிமிர்த்து வைப்பா' சொன்ன மகாராஜா, கையில் துப்பாக்கியுடன், செத்த புலியின் மீது தன் காலை வைத்தபடி கம்பீரமாக போஸ் கொடுத்தார். புகைப்படம் எடுக்கப்பட்டது. 'பார்த்தியா, இன்னிக்கு நான் சுட்ட புலி' என்று மகாராஜா சொல்ல, மகாராணியின் முகத்தில் பெருமிதம்.

வேட்டையாடுதல் என்பது இந்திய மகாராஜாக்களின் பொழுதுபோக்குகளில் முக்கியமான ஒன்று. அதை ஒரு கௌரவமாகக் கருதினார்கள். 'போன வருசம் மட்டும் நான் பதினேழு காட்டுப்பன்றி, ஒன்பது சிறுத்தை, நாலு புலி கொன்னுருக்கேன்' என்று சக சமஸ்தான மகாராஜாக்களிடம் பட்டியலிட்டுப் பெருமைப்பட்டுக் கொள்வார்கள். அத்தோடு தாங்கள் வேட்டையாடிய விலங்குகளை பாடம் செய்துவைத்து ஓர் அறை முழுவதையும் நிரப்பியிருப்பார்கள்.



புலி வேட்டைக்குப் பின்
வைஸ்ராய் கர்ஸனும், லேடி கர்ஸனும்

சமஸ்தானத்தில் வனப்பகுதி இருந்தால் போதும். அதற்குள் சகல சௌபாக்கியங்களும் நிறைந்த ஒரு வேட்டை அரண்மனையைக் கட்டி வைத்திருப்பார்கள். அவ்வப்போது அங்கு சென்று குடும்பத்தோடு தங்கி, டுமீல்.. டுமீல்! இன்றும் குவாலியரில் மாதவ் தேசியப் பூங்காவில், சிவ்புரி (Shivpuri) என்ற வேட்டை அரண்மனை அப்படியே இருக்கிறது. அது மகாராஜா மாதவ் ராவ் சிந்தியா கட்டியது.

சமஸ்தானத்தின் இளவரசருக்கும் சிறு வயதிலிருந்தே துப்பாக்கிப் பயிற்சிகள் ஆரம்பமாகி விடும். வேகமாகக் குதிரையில் செல்வது, குதிரையில் சென்று கொண்டே வாள் வீசுவது, துப்பாக்கியால் சுடுவது, யானையேற்றம் எனப் பலவிதமான வேட்டைப் பயிற்சிகள் இளவரசர்களுக்காக போலோ போன்ற விளையாட்டுப் பயிற்சிகளும், வேட்டைப் பயிற்சிகளும் பிரிட்டிஷ் அரசின் கல்வித் திட்டத்திலேயே சேர்க்கப்பட்டிருந்தன.

'ஐயா, நல்லாயிருக்கீகளா? நம்ம சமஸ்தானத்துப் பக்கம் வந்து நாளாவுது? ஒரு எட்டு வந்துட்டுப் போங்க. காட்டுல ஏகப்பட்ட சமாச்சாரம் திரியுது. வந்தா சுட்டுச் சுட்டு வெளையாடலாம். எப்போ வர்றீகன்னு கடுதாசி போடுங்க' இப்படி மகாராஜாக்கள் வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதி வேட்டை அழைப்பு விடுவதுண்டு. பல பிரிட்டிஷாருக்கும் இந்த வேட்டை அழைப்பு செல்வதுண்டு. வேட்டையாடுவதில் அவர்களுக்கும் குஷி. அவர்களைக் குஷிப்படுத்தினால் மகாராஜாக்களுக்கும் சில காரியங்கள் ஆகுமே.

பொதுவாக வைஸ்ராய், ஒரு சமஸ்தானத்துக்கு வருடத்துக்கு ஒருமுறைதான் செல்லுவார். செல்லும் நேரத்தில் பலே விருந்து உண்டு. அது காட்டை ஒட்டிய சமஸ்தானமாக இருந்தால் வேட்டையும் இருக்கும். ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு வேட்டை பிரசித்தம். உதய்பூர், ஜோத்பூர், குவாலியர், பஞ்சாப் பகுதிகளுக்குச் சென்றால் புலிகளை, புளியங்காய் அடிப்பது போல அடிக்கலாம். தோல்பூர், பரத்பூர் பகுதிகளுக்குச் சென்றால் விதவிதமான பறவைகளையும் கொத்துக் கொத்தாக வாத்துகளையும் அள்ளலாம். குஜராத் வனப்பகுதிகளில் சிறுத்தைகளுக்குக் குறிபார்க்கலாம். இந்தியா முழுவதிலுமே மான்களுக்குப் பஞ்சமிருந்ததில்லை. தெற்கே கேரள வனப்பகுதிகளுக்கு வந்தால் யானை வேட்டை சாத்தியம். இவைபோக கரடி, ஓநாய், மயில், காட்டுப்பன்றி, காட்டெருமை, காண்டாமிருக வேட்டைகளும் நடந்தன.

வைஸ்ராயாக இருந்தவர்கள், அழகாகத் திட்டம் போட்டு, வெவ்வேறு சமஸ்தானங்களுக்குச் சென்று விதவிதமாக வேட்டையாடினார்கள். வைஸ்ராய் லின்லித்கோவுக்குப் பறவைகளைச் சுடுவதில் மிகவும் இஷ்டம். அந்த மூட் வந்துவிட்டால், பிகானீர் சமஸ்தானத்துக்குக் கிளம்பி விடுவார்.

காலை 6.15 மணிக்கு வைஸ்ராய் மாளிகைக்கு தனது ரோல்ஸ் ராய்ஸ் காரில் வருவார் மகாராஜா கங்கா சிங். லின்லித்கோவை அழைத்துக் கொண்டு, ஏரிக்கரையோரம் அமைந்துள்ள கஜ்னீர் (Gajner) வேட்டை மாளிகைக்குச் செல்லுவார்.

'ஐயா வைஸ்ராய் அவர்களே, ஒரு பெக் பிராந்தி சாப்பிட்டுட்டு, துப்பாக்கியைப் புடிச்சுக் குறி பாருங்க, கண்ணு சும்மா பளிச்சுன்னு தெரியும்' - என்பார் மகாராஜா. வைஸ்ராயும் ஒரு பெக் அடிப்பார். இருவரும் மேல் தளத்துக்குச் செல்லுவார்கள்.

சரியாக ஏழு மணிக்கு மாளிகையின் பணியாள் விசில் அடிப்பார். மாளிகையில் சிவப்புக் கொடி ஏற்றப்படும். அதாவது வேட்டை ஆரம்பமாகப் போகிறது. யாரும் ஏரிப்பக்கம் செல்ல

வேண்டாம் என்று அதற்கு அர்த்தம். அடுத்த அரை மணி நேரத்தில், ஏரியில் நீர் அருந்துவதற்காக காட்டுக் கோழிகள் நூற்றுக்கணக்கில் வர ஆரம்பிக்கும். சுமார் எட்டு மணி வாக்கில், அதன் எண்ணிக்கை ஆயிரக்கணக்கில் பெருகும். ஒன்பதரை மணிக்கு அங்கே சுமார் முப்பதாயிரம் காட்டுக் கோழிகள் வரை இருக்கும். துப்பாக்கிகள் முழங்க ஆரம்பிக்கும். மகாராஜாவும் வைஸ்ராயும் மாறி மாறி டுமீல்.

அரைமணி நேரத்துக்கு ஒருமுறை மகாராஜா, வைஸ்ராயிடம் சென்று பணிவாகக் கேட்பார். 'தாங்கள் எவ்வளவு டுமீல்?' வைஸ்ராயிடமிருந்து பதில் வரும், 'ஒரு முப்பத்தஞ்சு, நாப்பது இருக்கும்.' உச்சி வெயில் மண்டையைப் பிளக்கும் வேளையில் மகாராஜாவுக்குப் பசிக்க ஆரம்பித்துவிடும். 'அய்யா, சாப்பிடப் போகலாமா? விசிலை ஊதிடலாமா?' என்று மகாராஜா குழைவார். ஆனால் வைஸ்ராயோ எப்படியும் சதமடித்துவிட வேண்டும் என்கிற வெறியில் தொடர்ந்து டுமீல் டுமீல். அவர் நூறு கோழியைச் சுட்டுவிட்டார் என்று நம்ப வைத்து, மதியச் சாப்பாட்டுக்கு அழைத்துச் செல்வதற்குள் மணி பகல் ஒன்றரையைத் தொட்டிருக்கும்.

பிரிட்டிஷார், புலி வேட்டையாடுவதைக் கௌரவமான ஒன்றாகக் கருதினார்கள். சுட்ட புலியைக் குப்புறப்போட்டு, அதன்முன் லேடி வைஸ்ராயோடு நின்று, துப்பாக்கியுடன் சிரித்தாற்போல புகைப்படம் எடுத்துக் கொள்வது என்பதை அளப்பரிய சாதனையாக நினைத் தார்கள். தாங்கள் சுடும் புலி, குறைந்தபட்சம் பத்து அடி நீளமாவது இருக்க வேண்டும் என்ப திலும் கவனமாக இருப்பார்கள். புலி வேட்டையாடுவதில் மூன்று முறைகளைக் கடை பிடித்தார்கள்.

புலி நடமாட்டமுள்ள பகுதிகளை புக்கிகள் கண்டறிந்து சொல்லுவார்கள். அதற்கு அருகிலுள்ள பகுதியில் மகாராஜா, மரத்தில் மேலேறி மேடையில் துப்பாக்கியோடு காத்திருப்பார். கீழே சற்று தொலைவில் ஓர் ஆடோ, மாடோ, மானோ உயிரோடு கட்டப்பட்டிருக்கும். சாயங்கால வேளையில் புலிக்குப் பசி எடுக்க ஆரம்பிக்கும். தன் இடத்தில் இருந்து எழுந்து, சோம்பல் முறித்து, இரையை மோப்பம் பிடித்து வரும். கட்டப்பட்டிருக்கும் விலங்கு கத்த, புலி பாய, மகாராஜாவின் துப்பாக்கியிலிருந்து குண்டும் பாயும். இது முதல் முறை.

அதிகாலையிலேயே புலிக்கு இரை வைத்துக் காத்திருப்பார்கள். புலி, இரையை அடித்து இழுத்துச் சென்று சாப்பிட ஆரம்பிக்கும். அப்போது யானைமீது சென்று புலியைச் சுற்றி வளைத்துச் சுடுவது இரண்டாவது முறை. இந்த முறையில் மகாராஜாவின் குறி தப்பினால், வேறு யாராவது சுட்டு விடுவார்கள். ஏனெனில் புலி, பூ பறித்துக் கொண்டிருக்காதே.

மூன்றாவது முறை மகாராஜாக்கள் கொஞ்சமும் நோகாமல் நொங்கெடுக்கும் முறை. அதாவது மகாராஜா காட்டில் ஒரு பகுதியில் தனக்கான மேடையில் சௌகரியமாக உட்கார்ந்து கொள்ளு வார். யானைகளோடும் தீப்பந்தங்களோடும் முரசு கொட்டுபவர்களோடும் ஒரு படையினர் புலியின் இருப்பிடத்துக்கே சென்று, அதனை மிரள வைத்து மகாராஜா காத்திருக்கும் பகுதிக்கு ஓட்டி வருவார்கள். மகாராஜா அதை டுமீல் செய்வார்.

ஆனால் ரேவா (Rewa) சமஸ்தான மகாராஜா, புலி வேட்டைக்கு நான்காவதாக ஒரு புதிய முறையை உபயோகப்படுத்தினார். அவரிடம் பழக்கப்படுத்தப்பட்ட குரங்கு ஒன்று இருந்தது. வேட்டைக்கான மேடையில் அவர் இருக்கும்போது, அந்தக் குரங்கு மரத்தின் உச்சியில் இருக்கும். மகாராஜா, ஜாலியாகப் புத்தகங்கள் படித்துக் கொண்டிருப்பார். புலி அந்தப்

பக்கமாக வந்தால், அந்தக் குரங்குக்குத் தெரிந்துவிடும். உடனே இறங்கிச் சென்று மகாராஜாவிடம் சத்தம் எழுப்பும். மகாராஜாவும் புத்தகத்தைக் கீழே வைத்துவிட்டு துப்பாக்கியைத் தூக்குவார்.

இதேபோல சிறுத்தைகளை வளர்த்த மகாராஜாக்களும் இருக்கிறார்கள். சிறுத்தைகளுக்குப் பயிற்சி கொடுப்பதற்காக முஸ்லீம் பயிற்சியாளர்களும் இருந்திருக்கிறார்கள். அந்தச் சிறுத்தை களைக் கொண்டு மான் வேட்டையாடுவது அவர்களது வழக்கம்.

மிரள வைக்கும் வேட்டை புள்ளி விவரங்களில் சில. கூச் பிகார் மகாராஜா நிருபேந்திர நாராயண், தன் வாழ்நாளில் 365 புலிகள், 438 காட்டெருமைகள், 207 காண்டாமிருகங்கள், 311 சிறுத்தைகளை வேட்டையாடியிருக்கிறார். சர்குஜா சமஸ்தான ராஜா, ராமானுஜ் சரன் சிங், தம் வாழ்நாளில் சுட்ட புலிகளின் எண்ணிக்கை மட்டும் ஆயிரத்தைத் தாண்டும். ரேவா சமஸ்தான மகாராஜா குலாப் சிங்கின் புலி ஸ்கோர் தொள்ளாயிரத்துச் சொச்சம்.

1951ல் ரேவா சமஸ்தான மகாராஜா மார்தாண்ட் சிங் (Martand Singh) வேட்டைக்குச் சென்ற போது, வெள்ளைப்புலிக்குட்டி ஒன்றைக் கண்டார். அதன் அம்மா கொல்லப்பட்டிருந்தது. மகாராஜா, முற்றிலும் அழிந்து போகும் நிலையிலிருந்த அந்த இனத்தைக் காப்பதற்கான நடவடிக்கையில் இறங்கினார். வெள்ளைப் புலிக்குட்டியைக் காட்டிலிருந்து மீட்டுக் கொண்டு வந்தார். அதற்கு மோகன் என்று பெயர் வைத்தார். பேகம் என்ற புலியிடம் மோகன் பால் குடித்து வளர்ந்தது. இப்போது இந்தியாவில் இருக்கும் வெள்ளைப்புலிகளுக்கு எல்லாம் மோகன்தான் ஆதாரம்.

புலி வேட்டை என்பது அப்போது எல்லோரும் விரும்பியது, பலருக்கும் வாய்த்த விஷயம். ஆனால் அனைத்து மகாராஜாக்களின், ராஜாக்களின், வைஸ்ராய்களின் வாழ்நாள் கனவாக இருந்தது ஒரு விஷயம். அது சிங்க வேட்டை. ஆனால் அவ்வளவு சுலபமான விஷயம் அல்ல அது.

# ஜுனாகத்

• குஜராத்தின் சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1735
• ஆட்சி செய்தவர்கள் : பாபி பரம்பரை • முதல் நவாப் : ஷேர் கான்
• குண்டு மரியாதை : சமஸ்தானத்துக்குள் 15, வெளியில் 13.



# வேட்டைக்கு சிங்கம் தேவை!

இளவரசர் அல்பர்ட் விக்டர் (Albert Victor), 1889ல் பல நாடுகளுக்குச் சுற்றுப் பயணம் செய்தார். எல்லாம் காரணமாகத்தான். அவரால் அப்போது லண்டனில் வெளியே தலை காட்ட முடியாத சூழ்நிலை. பத்திரிகைகள் வாட்டியெடுத்தன. ஏதோ ஒரு விபசார வழக்கில், குயின் விக்டோரியாவின் தலைச்சன் புள்ளையான அவரையும் இணைத்து செய்திகள் வெளியிட்டுக் கொண்டிருந்தன. எனவே, இளவரசர் அல்பர்ட் விக்டர் உலகம் சுற்ற அனுப்பி வைக்கப்பட்டார்.

அந்த நவம்பரில் இந்தியாவுக்கும் வந்தார், முதன் முறையாக. பம்பாய் வந்து இறங்கினார். ஹைதராபாத் நிஜாமின் விருந்தினராக சில நாள்கள் இருந்தார். விருந்துகளை அனுபவித்தார். கல்கத்தாவில் கிறிஸ்துமஸ் கொண்டாடினார். வேறு சில சமஸ்தானங்களுக்கும் சென்றார். உல்லாசங்களை அனுபவித்தார். நிறைய வேட்டையாடினார். இருந்தாலும் அவருக்கு ஒரு குறை.

'நான் இதுவரை சிங்கத்தை வேட்டையாடியதில்லை. அதற்கு ஏற்பாடு செய்யுங்கள்' - கட்டளையிட்டார் இளவரசர்.

புலி, கழுதைப்புலி, சிறுத்தை, கரடி, மான், காண்டாமிருகம், வாத்து, நரி, நாய், காக்கா - இவற்றில் ஏதாவது என்றால் பரவாயில்லை. உடனே ஏற்பாடு செய்து விடலாம். இளவரசர், காட்டு ராஜாவை அல்லவா வேட்டையாட வேண்டும் என்கிறார். வேட்டையாடுவது சுலபம்தான், ஆனால் வேட்டைக்குச் சிங்கம் கிடைப்பது அவ்வளவு சுலபமில்லையே.

குஜராத், கிர் காடுகள் தவிர இந்தியாவில் வேறெங்கும் சிங்கங்கள் கிடையாது. கிர் காடுகள், ஜூனாகத் (Junagadh) சமஸ்தானத்தில் அல்லவா இருக்கிறது. யாரங்கே? உடனே ஜூனாகத் நவாப்புக்குத் தகவல் அனுப்புங்கள். 'இளவரசர் அல்பர்ட், சிங்க வேட்டைக்கு வருகிறார். நல்ல வாட்டசாட்டமான, அழகான பிடரி கொண்ட ஆண் சிங்கம் ஒன்றைத் தயார் செய்து வைக்கவும்.'

ஜூனாகத் நவாபுக்குத் தகவல் அனுப்பி வைக்கப்பட்டது. இந்த இடத்தில் ஜூனாகத் சமஸ்தானம் பற்றிய கொஞ்சம் தகவல்கள்.

ஜூனாகத்தின் முக்கிய அடையாளம் கிர்னார் (Girnar) மலை. புராணங்களிலெல்லாம் வெவ்வெறு பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ள தொன்மையான மலை. அந்த மலையைச் சுற்றி அமைந்தவை கிர் (Gir) காடுகள். அதாவது சௌராஷ்டிராவின் மையத்தில் அமைந் துள்ளன. ஜூனாகத் நகருக்கும் கிர் காடுகளுக்கும் இடைப்பட்ட தொலைவு ஐம்பது கி.மீ.

ஜூனாகத், மௌரியப் பேரரசர் அசோகர், சாளுக்கிய அரசர்கள் எல்லாம் ஆண்ட பகுதி. பின்பு முகலாயர்கள் வசம் வந்தது. முகலாயர்களின் அந்திமக் காலத்தில் பாபி (Babi) வம்சத்தைச் சேர்ந்த ஷேர் கான் (Sher Khan) என்பவர் ஜூனாகத்தின் கவர்னராக இருந்தார். பின்பு அவரே ஜூனாகத்தை ஒரு சமஸ்தானமாக உருவாக்கி அதன் நவாப்பாகப் பொறுப்பேற்றார் (1735). அதற்குப் பின் அவரது வாரிசுகள் ஆட்சியைத் தொடர்ந்தார்கள்.

ஆசியாவில் சிங்கங்கள் வாழும் முக்கிய பகுதியாகக் காலம் காலமாக கிர் காடுகள் விளங்கி வந்தன. அதனால் சிங்க வேட்டைக்கான பகுதியாகவும் அது இருந்தது. குறிப்பாக இந்திய மகாராஜாக்கள் சிங்க வேட்டையாடுவதை மாபெரும் வீரச் செயலாகக் கருதினார்கள். தக்க பாதுகாப்புகளுடன் காட்டுக்குள் சென்று, சிங்கத்தை அதன் இடத்திலேயே சந்தித்து, அதன் உடலில் குண்டைப் புகுத்தி, உயிரை வெளியேற்றுவது என்பது எவ்வளவு பெரிய சாதனை. செத்த சிங்கத்தை முறையாகப் பாடம் செய்து, அரண்மனையில் கொண்டுவைத்தால் எவ்வளவு மரியாதை. பெருமை. கௌரவம்.

புலி வேட்டை என்பது தேசிய விருது என்றால், சிங்கத்தை வேட்டையாடுவதென்பது ஆஸ்கா ருக்குச் சமம். 'நான் வேட்டையாடிய சிங்கம்' என்று சொல்லிக் கொள்ள அரண்மனையில் ஒரு செத்த சிங்கமாவது மௌனமாக கர்ஜித்துக் கொண்டிருக்க வேண்டும் என எல்லா மகா ராஜாக்களும் ஆசைப்பட்டார்கள். பிரிட்டிஷ் வேட்டைக்காரர்களும் அதே அரிப்பு இருக்கவே செய்தது. ஜூனாகத் அரண்மனைக்குச் சென்று, விருந்தினராகத் தங்கி, பின் நினைத்தபடி வேட்டையாடிவிட்டுத் திரும்பினார்கள். சிங்கம் என்ன, மேட் இன் சீனா சமாச்சாரமா? நாளடைவில் கிர் காடுகளிலுள்ள சிங்கங்களின் எண்ணிக்கை வற்றிப் போனது. (1850 வாக்கில் கிர் காடுகளில் இருந்ததாக சொல்லப்படும் சிங்கங்களின் எண்ணிக்கை சுமார் முந்நூறு.)

1870ல் ஜூனாகத்துக்குச் சென்ற பம்பாய் மாகாண கவர்னர் பிட்ஸ்ஜெரால்டு (Fitzgerald), ஒரே நாளில் ஐந்து சிங்கங்க்ளை வேட்டையாடினார். அதுவரை இருந்த ஜூனாகத்தின் நவாப்புகளே, நினைத்தபோதெல்லாம் சிங்க வேட்டையாடுவதை வழக்கமாக வைத்திருந்தார்கள். 1879ல் ஜூனாகத்தின் நவாப்பாக இருந்த இரண்டாம் மகபத் கான் (Mahabat Khan II), நிலைமை கைமீறிப் போவதை உணர்ந்தார். இந்த சமஸ்தானத்தின், எனது பரம்பரையின் அடையாளமே சிங்கம்தானே. என் கண் முன்னாலேயே என் அடையாளத்தை இழந்துவிடுவேனா என்ன? யோசித்தார். அவர் சார்பாக அறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது (மே 10).

‘இதனால் ஆளும் நவாப் இரண்டாம் மகபத் கான்ஜி சார்பாக, சகல விதமான மக்களுக்கும் தெரிவிக்கப்படுவது என்னவென்றால், இனிமேல் கிர் காடுகளில் சிங்கங்கள் வேட்டையாடப் படக்கூடாது. எங்கே அவை முற்றிலும் அழிந்துபோய்விடுமோ என்று பம்பாய் மாகாண கவர்னர் அச்சப்படுவதன் காரணமான இந்தக் கட்டளை பிறப்பிக்கப்படுகிறது. இதனை ஐரோப்பாவைச் சார்ந்த வேட்டைக்காரர்களும் புரிந்து ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்பு கிறோம்.’

1880ல், கர்னல் வாட்சன் (Col. J.W. Watson) என்பவர் கிர் காடுகளில் எத்தனை சிங்கங்கள் இருக்கின்றன என்று கணக்கெடுக்க ஆரம்பித்தார். சுற்றியுள்ள கிராமங்களைச் சேர்ந்த மக்கள் அதற்கு உதவினார்கள். ஆசியாவில் முதல் முதலாக சிங்கத்துக்கான கணக்கெடுப்பு நடந்தது அப்போதுதான். அதன்படி அவர் வெளியிட்ட அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்த சிங்கங் களின் எண்ணிக்கை வெறும் பன்னிரண்டு.

அது அவ்வளவு துல்லியமான கணக்கெடுப்பு கிடையாது. ஆனாலும் அதிர்ந்துபோனார் நவாப். அய்யோ, என்ன செய்வேன் நான்? ஆசியக் கண்டத்திலேயே இந்தியாவில், அதுவும் இந்தக் காடுகளில் மட்டும்தான் சிங்கங்கள் இருக்கின்றன. அதுவும் இல்லாமல் போய்விடும் போலிருக்கிறதே. விடமாட்டேன். இது என் காடு. இவை என் சிங்கங்கள். என்ன பிரச்னை வந்தாலும் சமாளித்து, சிங்கங்களைப் பாதுகாப்பது என் கடமை. தீர்க்கமான முடிவெடுத்தார்.

அந்தக் கணத்திலிருந்து, நவாப் வேட்டைக்குச் செல்லவில்லை. பறவை வேட்டையோடு நிறுத்திக் கொண்டார். மற்றவர்கள் வேட்டையாடுவதையும் இயன்ற வரை தடுத்துவந்தார். 1882ல் இறந்துபோனார். அடுத்த நவாபாக அவரது மகன் இரண்டாம் பகதூர் கான் (Bahadur Khanji II) பதவிக்கு வந்தார். அவரது ஆட்சிக் காலத்தில்தான் (1890) பிரிட்டிஷ் இளவரசர் அல்பர்ட் விக்டர் வடிவில் சோதனை வந்து சேர்ந்தது.

நவாப்புக்கு உள்ளுக்குள் கடும் கோபம். என்ன செய்ய முடியும்? பிரிட்டிஷ் இளவரசர் ஆசைப்பட்டு விட்டார். நிறைவேற்றியே தொலைக்க வேண்டும். ‘சிங்கமெல்லாம் குறைஞ்சு போச்சு. வேண்டாம். தயவுசெய்து சுடாதீங்க’ என்று இளவரசரிடம் கெஞ்சவோ, கொஞ்சவோ முடியாது. பக்கிங்ஹாம் அரண்மனையிலிருந்து ஆப்பு வந்துவிடும்.

ஜுனாகத்துக்கு வந்த இளவரசரை முகத்தளவில் மகிழ்ச்சி பொங்க வரவேற்றார் நவாப். ‘தாங்கள் சிங்க வேட்டையாடுவதற்குரிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டேன்’ உதட்டளவில் சொல்லி வைத்தார். நவாப்பின் கட்டளையின் பெயரில் புக்கிகள், கிர் காடு களில் சிங்கத்தைத் தேடிச் சென்றார்கள். இளவரசர் வேட்டையாடத் தகுதியான சிங்கமாக இருக்க வேண்டும். ஆண் சிங்கம். அழகிய பிடரியோடு.

ஆனால் எவ்வளவோ தேடியும் ஒரு நோஞ்சான் சிங்கம்கூடச் சிக்கவில்லை. சிங்கங்கள் நடமாடியதற்கான அறிகுறிகள்கூடத் தென்படவில்லை. காட்டிலிருந்து தகவல் எதுவும் வரவேயில்லை. வேட்டைக்காகக் குறிக்கப்பட்டிருந்த நேரம் கடந்து போனது. நவாப்புக்குள் மன நடுக்கம் அதிகரித்துக் கொண்டே போனது. வந்த இளவரசரை வெறுங்கையோடு அனுப்பினால், சிங்கத்தின் மீது பாய வேண்டிய ‘குண்டு தன் பதவி மீது பாய்ந்துவிடுமோ என்ற பயம்.

புக்கிகள், காட்டுப் பகுதியில் உள்ள கிராம மக்களிடம் எல்லாம் சொல்லி வைத்திருந்தார்கள். மறுநாள், கிராமவாசி ஒருவர் சிங்கம் ஒன்றின் இருப்பிடத்தைச் சொல்லி, நவாப்பின் வயிற்றில்




மேலிருந்து கீழ் நவாப் இரண்டாம் மகபத் கான், நவாப் இரண்டாம் பகதூர் கான், நவாப் ரஸூல் கான், மற்ற இருவர் அடையாளம் தெரியவில்லை.

புலிப்பாலை வார்த்தார். இளவரசர் அல்பர்ட்டும் கித்தாய்ப்பாக வேட்டைக்குக் கிளம்பினார். சிங்கத்தைப் பார்த்தார். சுட்டார். பெருமிதம் வழிய வழிய புகைப்படம் எடுத்துக் கொண்டார். பெரும் சந்தோஷத்தோடு ஜுனாகத்திலிருந்து விடைபெற்றார். நவாப்புக்குத்தான் கடும் வருத்தம். சிங்கத்தின் எண்ணிக்கையில் ஒன்று குறைந்துவிட்டதே என்று.

இளவரசர் வந்து சென்ற பிறகு, அக்கம் பக்கத்து சமஸ்தானவாசிகள் என்ன பேசிக் கொண்டார்கள் தெரியுமா? 'பிரிட்டிஷ் இளவரசருக்காக கேட்டப்போ, வேட்டையாடக் கொடுக்க காட்டுல சிங்கமே இல்ல. அப்போ நவாப்பு என்ன செஞ்சாரு தெரியுமா? கிழக்கு ஆப்பிரிக்காவுக்கு ஆளனுப்புனாரு. அங்க இருந்து சிங்கத்தை வாங்கி, கப்பல்ல வரவழைச்சாரு. அதைத்தான் காட்டுக்குள்ள உலவவிட்டாரு. அந்த ஆப்பிரிக்க சிங்கத்தைத்தான் இளவரசர் சுட்டுட்டுப் போனாரு.'

கட்டுக்கதைதான். ஏனெனில் அன்றைய காலகட்டத்தில் அவ்வளவு வேகமாகச் செயல்படுவதற்குரிய எந்த வசதிகளும் நிச்சயமாக இல்லை. 1892-ல் மீண்டும் சிங்கத்துக்கான கணக்கெடுப்பு நடந்தது. இந்த முறை சொல்லப்பட்ட ஸ்கோர் 31.

இதுவும் மிகத் துல்லியமான விவரம் கிடையாது. இருந்தாலும் தன் முயற்சியினால் சிங்கங்களின் எண்ணிக்கை கொஞ்சமாவது உயர்ந்திருக்கிறதே என்ற நிம்மதியுடன், அதே ஆண்டில் நவாப் இரண்டாம் பகதூர் கான் இறந்துபோனார். அவருக்கு வாரிசுகள் இல்லை. எனவே அவரது இளைய சகோதரரான, ரஸூல் கான் (Rasul Khan) புதிய நவாப்பாகப் பொறுப்பேற்றார்.

ரஸூல் கான் வேட்டையாடுவதில் வல்லவர். சிறிய நாணயத்தைச் சுண்டிவிட்டால்கூட குறி தவறாமல் சுட்டுவிடுவார். அவரது துப்பாக்கியிடம் மரணத்தைப் பெற்றுக் கொண்ட சிறுத்தைப் புலிகள் ஏராளம். ஆனால் அவர் ஒருமுறைகூட சிங்கத்தை வேட்டையாடியதில்லை. வாய்ப்புகள் இருந்தும் வேட்டையாட நினைத்ததில்லை. தன் சகோதரர் ஆரம்பித்து வைத்த சிங்க பாதுகாப்பு முயற்சிகளைத் தொடர்ந்தார்.

யாரும் சிங்கத்தை வேட்டையாடக் கூடாது. அப்படி வேட்டையாட நினைப்பவர்கள் முறைப்படி சிறப்பு அனுமதி பெற வேண்டும். அனுமதி கொடுக்கப்பட்டால் மட்டுமே வேட்டையாட வேண்டும். மீறினால் கடும் அபராதம். ரஸூல் கான், இப்படிப் பல விதிமுறைகளைக் கொண்டு வந்தார். சிங்கம் மட்டுமல்ல, மயில் வேட்டையும் அப்போது அதிகமாக இருந்தது. மயில் களைப் பாதுகாக்கவும் முயற்சிகள் எடுக்க ஆரம்பித்தார்.

1899ல் வைஸ்ராயாக கர்ஸன் பதவியேற்றார். பெரும்பாலும் எல்லா முக்கியமான சமஸ்தானங்களுக்கும் வருடத்துக்கு ஒருமுறை சென்று வருவது வைஸ்ராய்களின் வழக்கமல்லவா. 1900-ல் கர்ஸன், ஜுனாகத்துக்குச் சென்றார். சிங்க வேட்டைக்கு அழைப்பதுதானே நவாப்புக்கு மரியாதை. அழைப்பு விடுத்தார். ஆனால் கர்ஸன், ரஸூல் கான் சிங்கத்தைப் பாதுகாப்பதற்காக பாடுபட்டுக் கொண்டிருந்ததை நன்றாகவே அறிந்திருந்தார். எனவே கிர் காடுகளுக்குச் செல்லாமலேயே ஜுனாகத்திலிருந்து கிளம்பினார். ரஸூல் கானுக்கு மனசு கேட்கவில்லை. வந்த வைஸ்ராயை வெறும் கையோடு அனுப்பி விட்டோமே என்ற உறுத்தல். கடிதம் ஒன்றை எழுதினார் (நவம்பர் 27).


இளவரசர் அல்பர்ட் விக்டர்

'தாங்கள் பெருந்தன்மையோடு சிங்க வேட்டையைத் தவிர்த்ததைக் கண்டு புளகாங்கிதமடைந்துள்ளேன். அதே சமயத்தில் தங்களுக்கு அப்படி ஒரு வாய்ப்பு வழங்க முடியாத துர்பாக்கிய நிலையைக் கண்டு வருந்தவும் செய் கிறேன். இந்தியாவிலிருந்து காணாமல் போய்க் கொண்டிருக்கும் சிங்கங்களைப் பாதுகாக்க, வேட்டையாடுதலைத் தடுப்பதைத் தவிர வேறு வழியில்லை.

பெரும் மதிப்புக்குரிய வைஸ்ராய் அவர்கள், தங்களது பதவிக் காலம் முடிந்து இந்தியாவிலிருந்து கிளம்பு வதற்குள், சிங்க வேட்டைக்கான வாய்ப்பை வழங்க முடியும் என்று நம்புகிறேன்.'

கர்ஸன், ரஸூல் கானின் அந்தக் கடிதத்தைக் கண்டு மகிழ்ந்தார். அவரது முயற்சிகளைப் பாராட்டுவதாகவும், தானும் அதற்குத் தோள் கொடுப்பதாக வும் பதில் அளித்தார். ஒரு வைஸ்ராய் சிங்க வேட்டையைத் தவிர்க்கும்போது, மற்றவர்களும் தவிர்ப்பார்கள் என்பதே கர்ஸனின் எண்ணம். ஆனால், வேலைக்கு ஆள் தேவை என்பதுபோல, வேட்டைக்கு சிங்கம் தேவை என்று நவாப்பை மற்ற பிரிட்டிஷ் அதிகாரிகள், நச்சரித்துக் கொண்டேதான் இருந்தார்கள்.

குறிப்பாக, நிலைமையின் தீவிரத்தைப் புரியாமல் அக்கம் பக்கத்து சமஸ்தான மகாராஜாக்கள் வேறு வேறு விதங்களில் நவாப்புக்கு ரோதனை கொடுக்க ஆரம்பித்தார்கள்.



# 82

# ஜூனாகத்தின் டார்சான்

அய்யனாரே ஆடு வேணாம்னு சொல்லிட்டுப் போயிட்டாராம். பூசாரி கொண்டா கொண்டான்னு குதிச்சாராம்.

வைஸ்ராய் கர்ஸனே, ஜூனாகத்துக்கு வந்தும் சிங்க வேட்டையைத் தவிர்த்து விட்டுச் சென்ற நிலையில், நீதித் துறையில் இருந்த பிரிட்டிஷ் அதிகாரி சார்லஸ் அகஸ்டஸ் கின்கெய்ட் (Charles Augustus Kincaid), சிங்க வேட்டையாட விரும்பினார். அதற்காக ஜூனாகத் நவாப் ரஸூல் கானுக்கு தந்தி ஒன்றை அனுப்பினார்.

'என்ன நவாப்ஜி சௌக்யமா? பார்த்து நாளாச்சு. அடுத்த மாசம் உங்களைச் சந்திக்கறதுக்காக வர்றேன். அப்படியே ஒரு சிங்கத்தையும் வேட்டையாடலாம்னு நினைக்கிறேன். ஆம்பளை சிங்கமாப் பார்த்து ஏற்பாடு பண்ணுங்க. ஜமாய்ச்சுடலாம்.'

ரஸூல் கான் யோசித்தார். ஒண்ணே ஒண்ணுதானே என்று அனுமதி கொடுத்தார். தன் மனைவியோடு கிர்ருக்குள் நுழைந்தார் சார்லஸ். ஆனால் அவர் சென்ற நேரத்தில் ஆண் சிங்கம் எதுவுமே தென்படவில்லை. ஆகவே அந்த வழியாக வந்த பெண் சிங்கம் தியாகியானது.

'அய்யா நவாப்பு, ஒரு தப்பு நடந்து போச்சு. ஆம்பளைச் சிங்கத்தைச் சுட அனுமதி கொடுத்தீங்க. ஆனால் பொம்பளைச் சிங்கத்தைச் சுட்டுட்டேன்' சார்லஸ், ரஸூல் கானுக்குத் தகவல் அனுப்பினார். நவாப்புக்கு உள்ளுக்குள் கோபம்தான். வெளிப்படுத்த முடியாதே. வாழைப்பழமாக பதில் அனுப்ப வேண்டிய



வைஸ்ராய் ரீடிங் நேபாளத்தில் வேட்டையாடிய புலிகள்

கட்டாயம். அனுப்பினார். 'நீங்க சுட்ட பொம்பளைச் சிங்கத்தை உங்க வீட்டுக்காரம்மாவுக்குப் பரிசா கொடுத்துருங்க. உங்களுக்கு வேணும்னா அப்புறமா இன்னொரு தபா வர்றப்போ ஒரு ஆம்பளைச் சிங்கத்தைச் சுட்டுக்கோங்க.'

1905ல் மேஜர் கார்னெஜ் (H.G. Carnegie) என்பவர் மீண்டும் சிங்கத்துக்கான கணக்கெடுப்பை நடத்தினார். அறுபதிலிருந்து எழுபது சிங்கங்கள் வரை இருக்கும் என்பது அவரது கணிப்பு. ஆனால், ரஸூல் கான் குறைந்தது நூறு சிங்கங்களாவது இருக்கும் என்று நம்பினார். அவ்வப் போது பிற சமஸ்தான மகாராஜாக்கள் எல்லாம் சிங்க வேட்டைக்காக வந்து இளித்துக் கொண்டு நின்றார்கள். சிங்கத்தின் உயிரை எடுக்க உரிமை கோரி, நவாப்பின் உயிரை எடுத்தார்கள்.

கிர் காடுகளின் எல்லைப் பக்கத்துச் சமஸ்தானங்களான கொண்டல் மற்றும் பவ்நகர் வரை பரந்து விரிந்தது. இரையைத் துரத்திக் கொண்டு வரும் சிங்கங்கள் பக்கத்துச் சமஸ்தான எல்லைக்குள் தலையை நீட்டுவதும், மக்கள் அவற்றைக் கொல்வதும் நடந்து கொண்டுதான் இருந்தன. சிங்கங்களை எப்படிப் பாதுகாப்பது என்ற எண்ணத்திலேயே தம் வாழ்வின் பெரும் பகுதியைக் கழித்த நவாப் ரஸூல் கான், 1911, ஜனவரியில் இறந்து போனார்.

அவருக்கு மொத்தம் நான்கு மகன்கள். மூன்றாவது மகன் சிறுவயதிலேயே இறந்து போனான். முதல் மகனும், இரண்டாவது மகனும் சில வருட இடைவெளியில் இறந்துபோனார்கள்.

மிஞ்சியிருந்தது நான்காவது மகனான மூன்றாம் மகபத் கான் (Mahabat Khan III) மட்டுமே. ரஸூல் கான் இறக்கும்போது, அந்த பட்டத்து இளவரசருக்கு வயது பதினொன்றுதான். பெயரளவில் அடுத்த நவாப்பாக அறிவிக்கப்பட்டார். நிர்வாகப் பொறுப்பை பிரிட்டிஷ்காரரான ரென்டல் (Rendall) ஏற்றுக் கொண்டார்.

'அட நம்மாளுதான் பொறுப்புல இருக்காரு. வா, ஒரு தபா கிர்ருக்குப் போய், சிங்கத்தை வேட்டையாடிட்டு வரலாம்' என்று உரிமையோடு வந்த தனது பிரிட்டிஷ் நண்பர்கள் பலருக்கு, கனிவோடு 'நோ' சொல்லி திருப்பியனுப்பினார் ரென்டல். அதே சமயத்தில், 'பழைய நவாப்புதான் கிர்ருக்குள்ள நுழையவே விடலை. இப்போதான் அவரு போயிட்டாரே' என்ற நினைப்போடு வந்த பிற சமஸ்தான மகாராஜாக்களுக்கும் சிவப்புக் கொடி காட்டினார் ரென்டல்.

கட்ச் மகாராஜா விஜயராஜி, 'ப்ளீஸ்பா, எனக்கு ஒரே ஒரு சிங்கம் தாங்கப்பா' என்று கடிதம் அனுப்பினார். அதற்கு அனுப்பப்பட்ட பதில், 'தற்போதைய நிலைமையில் இரண்டு ஆண் சிங்கங்கள் இருக்கின்றன. ஆனால் அந்த சிங்கங்களும் வேறு மகாராஜாக்களுக்காக ஒதுக்கப்பட்டுவிட்டன. நீங்கள் காத்திருப்போர் பட்டியலில் இருக்கிறீர்கள்.'

1913ல் பிகானிர் மகாராஜா கங்கா சிங், தனது முதன்மைச் செயலாளரை தூது விட்டுப் பார்த்தார். ரென்டல் அசைந்து கொடுக்காமல் பதிலளித்தார்: 'தலைசிறந்த வேட்டைக்காரராகிய தாங்கள், நிலைமையைப் புரிந்து கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.' கிர் காடுகளின் ஒரு சிறு பகுதியைத் தன் சமஸ்தானத்தில் கொண்ட நவ்நகர் மகாராஜா உரிமையுடனேயே கேட்டார். அவருக்கும் வேட்டையாட அனுமதி வழங்கப்படவில்லை. மீதமிருந்த சிங்கங்களின் எண்ணிக்கையை விட, அவற்றை வேட்டையாட வந்த விண்ணப்பங்களின் எண்ணிக்கை பல மடங்கு அதிகம்.

1914ல் வைஸ்ராயின் அலுவலத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. 'பிரிட்டன் அருங்காட்சியகத்தில் வைக்க ஓர் இந்திய சிங்கம் தேவை. ஏற்பாடு செய்யவும்.' ரென்டல் கொஞ்சம்கூடத் தயங்கவே இல்லை. உடனே பதில் எழுதினார். 'ஜுனாகத்தில் சிங்கங்களைப் பாதுகாப்பதற்காக எடுக்கப் பட்டு வரும் நடவடிக்கைகள் குறித்து அரசுக்கே தெரியும். சமீப காலத்தில் யாருக்குமே வேட்டையாட அனுமதி கொடுக்கப்படவில்லை. தாங்கள் கேட்பது அறிவியல் தேவைக்காகத் தான். இருந்தாலும் அதை மற்றவர்கள் தவறான முன்னுதாரணமாக எடுத்துவிடக்கூடாது. அருங்காட்சியத்துகாக சிங்கம் அளிக்க முடியாத இயலாமைக்காக வருந்துகிறேன்.'

ரென்டல் 1912லிருந்து 1920 வரை யாரையுமே சிங்க வேட்டையாட அனுமதிக்கவில்லை. கிர் காடுகளில் சிங்கங்களின் எண்ணிக்கை ஓரளவுக்குப் பெருகின. அதுநாள் வரை சிங்கங்களின் பாதுகாப்புக்காக எடுக்கப்பட்ட நடவடிக்கைகளையெல்லாம் பார்த்து வளர்ந்த மகபத் கான், 1920ல் முழு அதிகாரத்துடன் அரியணையில் அமர்ந்தார்.

அவருக்கும் இயல்பாகவே சிங்கங்களைப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. ஒரு நவாப்பாக இருந்துகொண்டு, வாழ்வில் ஒருமுறையாவது சிங்கத்தை வேட்டையாடா விட்டால் அவமானமில்லையா? அகௌரவமில்லையா? அதுவும் அவர் வேட்டையாடினால் யாரும் கேள்வி கேட்கவும் முடியாது, பிரிட்டிஷார் உள்பட.

மகபத் கானும் ஒவ்வொரு முறையும் தனது பாதுகாப்புக் குழுவினரோடு வேட்டைக்குக் கிளம்புவார். அதற்கு முன்பாகவே புக்கிகள், நல்ல 'நாட்டுக்கட்டை' சிங்கம் எங்கே உலவு கிறது என்று பார்த்து வைத்திருப்பார்கள். காட்டில் அந்த இடத்தில் மரத்தின் மேல் மேடை தயாராக இருக்கும். மகபத் கான் சென்று உட்காருவார். கொஞ்ச நேரத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிங்கம், தரிசனம் கொடுக்கும். சுடுவதற்காகக் குறி பார்த்த நவாப், துப்பாக்கியை மெள்ளத் தாழ்த்துவார். 'ஆண் சிங்கம்தான். நல்லாத்தான் இருக்கு. ஆனா இன்னும் கொஞ்சம் வளர்ந்த துக்கு அப்புறம் சுடலாம்னு நினைக்கிறேன். அடுத்த வெள்ளிக்கிழமை வரலாம். இப்போ கிளம்பலாம்' என்று தோட்டாக்களுக்கு வேலை கொடுக்காமல் கிளம்பி விடுவார்.

ஒருமுறையல்ல, ஒவ்வொரு முறையும் மகபத் கான் இப்படியே வேட்டையாடுவதைத் தவிர்த்தார். கிர் காடுகளுக்குச் சென்று, மறைவாக அமர்ந்து, சிங்கங்கள் சுதந்தரமாக உலவு வதைப் பார்ப்பதிலேயே மகிழ்ச்சியடைந்தார் அவர்.

சுற்று வட்டார மகாராஜாக்களுக்குத்தான் பொறுக்கவில்லை. என்னய்யா ஆளு இவரு, தானும் படுக்க மாட்டேங்குறாரு, தள்ளியும் படுக்க மாட்டேங்குறாரு என்று நினைத்தார்கள். ஜுனாகத் எல்லையோர காட்டுப்பகுதியில் காட்டெருமைகளைக் கட்டி வைத்தார்கள். இரையைக் கண்டு எல்லை தாண்டும் சிங்கங்களை வேட்டையாட ஆரம்பித்தார்கள். சில சமயங்களில் காட்டின் எல்லையோர கிராமங்களில் புகும் சிங்கங்கள், மக்களைக் கொல்ல ஆரம்பித்தன. போதாதா? சிங்கம் பெருகிப் போச்சு. வேட்டையாடினாத்தான் சரி வரும். அப்பாவி மக்கள் உயிரோட நவாப் விளையாடுறாரு என்று குற்றச்சாட்டுகள் எழுந்தன.

மகபத் கானுக்குக் கோபமோ கோபம். பம்பாய் மாகாண கவர்னரின் காரியதரிசியாக இருந்த மெக்கனோகிக்கு (Maconochie) நெடுங்கடிதம் ஒன்றை எழுதினார்.

'கிர் காடுகள் என்பது என் பரம்பரைச் சொத்து. அதிலுள்ள சிங்கம் ஒவ்வொன்றும் எனக்குத் தான் சொந்தம். ஆனால் மற்றவர்கள் என் சிங்கங்களைப் படி தாண்ட வைத்துக் கொன்று

விடுகிறார்கள். இது சட்ட விரோதமான வேட்டை. இதைத் தடுப்பதற்காக நான் அதிகாரத்தைக் கையில் எடுத்துக் கொண்டால், பிற சமஸ்தானங்களுடனான உறவு கெட்டுவிடும்.

அழிந்து கொண்டிருந்த சிங்கங்கள், இப்போது எங்கள் முயற்சியினால்தான் பெருகியுள்ளன. அதன் அருமை புரியாமல், பக்கத்து சமஸ்தான மகாராஜாக்கள் நடந்து கொண்டால், எனது எல்லையிலுள்ள கிர் காடுகளை அழிக்கவும் நான் தயங்க மாட்டேன். காடுகளை அழிப்பதால் சமஸ்தானத்துக்குத்தான் லாபம். நிர்வாகம் செய்வது சுலபமாகிவிடும்.

ஆகவே, அரசாங்கத்தார் இந்த விஷயத்தில் உடனே தலையிட வேண்டும். எல்லைப் பகுதியில் காட்டெருமைகளைக் கட்ட விடாமல் தடுக்க வேண்டும்.'

மகபத் கானின் கடிதத்தைப் படித்த மெக்கனோகி, அதனுடன் தன் கருத்துகளையும் இணைத்து மேலிடத்துக்கு அனுப்பினார்.

'நவாப்பின் கவலையைப் புரிந்து கொள்ள முடிகிறது. சிங்கங்களைப் பாதுகாப்பதற்காக அவர் தனி நபராக எடுத்துக் கொள்ளும் அக்கறையும் புரிகிறது. எப்படி நவாப்புக்கு அவரது எல்லைக்குள் எல்லா உரிமைகளும் இருக்கின்றனவோ, அதேபோல மற்ற மகாராஜாக்களும் அவர்களது எல்லைக்குள் என்ன வேண்டுமானாலும் செய்வதற்கு உரிமைகள் இருக்கின்றன. கிர் காடுகளையே அழித்துவிடப் போகிறேன் என்றெல்லாம் நவாப் கோபமாக எழுதியிருக் கிறார். அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ள வேண்டாம். ஏனென்றால் அப்படிச் செய்தால் அது அவரது சமஸ்தானத்துக்குத்தான் நல்லதல்ல.'

சிங்கங்களைப் பாதுகாக்க பிரிட்டிஷ் அரசின் முழுமையான ஒத்துழைப்பு கிடைக்கவில்லை என்றாலும், மகபத் கான் மனம் தளரவில்லை. யாருக்காகவும் எதற்காகவும் வளைந்து கொடுக்கவில்லை. குறிப்பாக, தம் எல்லைக்குள்பட்ட பகுதியில், எந்தக் காரணத்தைக் கொண்டும் சிங்க வேட்டையை அனுமதிக்கவே இல்லை. 1935ல் எடுக்கப்பட்ட கணக் கெடுப்பின்படி கிர் காடுகளில் இருந்ததாகக் கூறப்பட்ட சிங்கங்களின் எண்ணிக்கை 270. (2005, ஏப்ரலில் எடுக்கப்பட்ட கணக்கின்படி, கிர் தேசிய பூங்காவில் இருந்த சிங்கங்களின் எண்ணிக்கை 359.)

சிங்கம் மட்டுமல்ல, எல்லா விலங்குகளின் மீதும் மகபத் கானுக்கு அளவில்லாத பாசம் இருந் தது. சொல்லப்போனால் ஜுனாகத்தின் டார்சானாகவே விளங்கினார். காதி என்ற குதிரை மேல் அவருக்கு ரொம்பப் பிரியம். தினமும் அதற்கு ஒருவேளையாவது உணவு ஊட்டி விடுவார். அந்தக் குதிரையின் உருவத்தோடு தபால் தலை ஒன்றும் வெளியிட்டுள்ளார். அடுத்தது பசுக்கள். அதிலும் குறிப்பாக காவேரி என்ற பசு. அந்தப் பசுவைத் தரிசிக்காமல் அவரால் ஒருநாள்கூட இருக்கவே முடியாது. எங்காவது வெளியூர் சென்றால்கூட காவேரி யையும் தவறாமல் அழைத்துச் செல்லும் அளவுக்கு பசுப்பாசம்.

ஆகவே, நவாப்பின் சமஸ்தானத்தில் பசுக்களை இறைச்சிக்காகக் கொல்வதற்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது. அடுத்து வருபவை முயல்கள். நிறைய நிறைய முயல்களைக் கண் முன்னால் திரிய விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பது மகபத் கானுக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு. அவ்வப்போது முயல்களுக்காக ரேஸ் நடத்தி ரசிப்பார். சொல்லப்போனால், அவரது அரண்மனையில் ஆறறிவாளர்களைவிட, ஐந்தறிவு ஜீவராசிகளே அதிகம் இருந்தன.

ஒருமுறை நவாப் மகபத் கான், கிர் காடுகளுக்குக் கிளம்பினார். வேட்டைக்கு அல்ல, சிங்கங்களை வேடிக்கை பார்ப்பதற்காக என்று சொல்லலாம். காட்டின் எல்லைப் பகுதி. இந்தப் பக்கம் ஒரு கிராமம். அந்தப் பக்கம் கொஞ்ச தூரம் சென்றால் சிங்கங்கள் நடமாடும் பகுதியை அடைந்து விடலாம். என்ன நினைத்தாரோ தெரியவில்லை, காட்டுக்குள் செல்லாமல் எல்லையோர கிராமப் பகுதிகளிலேயே உலவலாம் என்று முடிவெடுத்தார்.

சில பாதுகாவலர்கள். ஜீப் ஒன்று. கூடவே சில வேட்டை நாய்கள். வலம் வந்தார். கிராம மக்கள் சிலரைச் சந்தித்துப் பேசினார். கொஞ்சம் காட்டுப் பகுதிக்குள் சென்றார். தூரத்தில் சம்பார் மான்கள் தென்பட்டன. வேட்டையாடலாம் என்று தோன்றியது. ஜீப்பை விட்டு இறங்கி சத்தமில்லாமல் நடக்க ஆரம்பித்தார். பாதுகாவலர்களும்தான்.

மகபத் கானின் கவனம் முழுவதும் ஒரு மானின் மீது இருந்தது. திடீரென நாய் ஒன்று நவாப்பின் முன் பாய்ந்து புரண்டது. அதன் வாயில் ராஜ நாகம் ஒன்று சிக்கியிருந்தது. பதறிய பாதுகாவலர்கள், ராஜ நாகத்தைக் கொன்றார்கள். தன் உயிரைக் காப்பாற்றிய நாயை அள்ளி அணைத்தார் மகபத் கான். அவரது கண்களில் நீர் பெருகியிருந்தது.

அன்றைய தினத்திலிருந்து நவாப் மகபத் கானின் வாழ்க்கையில் நாய்கள் தவிர்க்க முடியாதவையாகிப் போயின. ஏராளமான, விதவிதமான நாய்களைப் பல்வேறு இடங்களிலிருந்து வரவழைத்து வளர்க்க ஆரம்பித்தார். நாய்களை விரும்பும் நாயகனாகிப் போனார். நாய்களும் நாய்கள் சார்ந்த இடமுமாகவே அவரது அரண்மனை மாறிப் போனது.

சும்மா சொல்லக்கூடாது, ஒரு கட்டத்தில் நவாப்பின் நாய்ப்பாசமானது, தாய்ப்பாசத்தையும் தாண்டிப் போனது.



# 83

# கல்யாண லொள்ளு!

சிறியதும் பெரியதுமாக. கட்டையும் நெட்டையுமாக. வால் உள்ளதும் இல்லா ததுமாக. குரைப்பதும் குரைக்காததுமாக. வெளிநாட்டில் வாங்கியதும் உள்ளூரில் பிறந்ததுமாக. பல சாதிகளில். பல நிறங்களில். அரண்மனை நிறைய நாய்கள். மொத்தம் எந்நூறு என்று ஒரு தகவல் உண்டு. எல்லாமே ஜூனாகத்தின் கடைசி நவாப்பான மகபத் கான், தன் அரண்மனையில் வளர்த்தவை. அவரைப் பொருத்த வரை நாயுள்ள வாழ்வே குறைவற்ற செல்வம்!

நாய்களைக் கவனிப்பதற்கென்றே அரண்மனையில் புதிது புதிதாக வேலையாள்களை நியமித்தார். எந்த நாயும் எந்த நேரத்திலும் எந்தச் சிறிய விஷயத்துக்காகவும் மனக் கஷ்டப்பட்டுவிடக்கூடாது. நம்ம தலைவிதி, இந்த அரண்மனையில் வந்து மாட்டிக்கிட்டோமே என்று நினைத்து வருந்தி விடக் கூடாது. கவனித்துக் கொள்ள வேண்டியது உங்கள் பொறுப்பு. வேலையாள்களுக்கு நவாப் பிறப்பித்த கட்டளை இதுவே.

நாய்களுக்கென பிரம்மாண்டமான பல அறைகள் அரண்மனையில் ஒதுக்கப் பட்டிருந்தன. இல்லையில்லை, நாய்கள் இருந்த அறைகளைத் தவிர மற்ற அறை களில் மனிதர்களும் வசித்தார்கள். எல்லா நாய்களுக்கும் சரியான நேரத்தில் அவை விரும்பும் உணவளிப்பது, அவற்றை முறையாகத் தூங்க வைப்பது, வாக்கிங் அழைத்துச் சென்று ஒன், டூவுக்கு விடுவது, குளிப்பாட்டி, சீவிச் சிங்கா ரித்து, உடைகள் மாட்டி, நகைகள் மாட்டி விடுவது. நவாப் விரும்பும் நேரத்தி லெல்லாம் அவற்றை பேஷன் பரேட் அழைத்துச் செல்வது - இவையெல்லாமே அந்த வேலைக்காரர்களின் அன்றாடக் கடமைகள்.

நாய்கள் இருந்த எல்லா அறைகளிலும் தொலைபேசி இணைப்பு கொடுக்கப்பட்டிருந்தது. ஏதாவது ஒரு நாய்க்கு உடல் நிலை சரியில்லை என்றால் எந்த நேரத்தில் வேண்டுமென்றாலும் எந்த வேலையாளும் நவாப்புக்குத் தகவல் தெரிவிக்கலாம். தமது நாய்களுக்கு மருத்துவம் பார்ப்பதற்கென்றே தனியாக மருத்துவமனை ஒன்றைக் கட்டியிருந்தார். அதில் ஐரோப்பிய கால்நடை மருத்துவர்களையும் வேலைக்கு வைத்திருந்தார்.

நூற்றுக்கணக்கான நாய்களில் நவாப்புக்குச் செல்லமான நாய்கள் என்று பல உண்டு. பிறந்த தேதி தெரிந்த நாய்களுக்கு வருடா வருடம் தவறாமல் ஹேப்பி பர்த்டே கொண்டாடுவார் மகபத் கான். அன்றைய தினம் அரண்மனையில் எல்லோருக்கும் விருந்துதான். அதனால் வருடத்தில் பாதி நாள்களுக்கும் மேல் கொண்டாட்டத்திலேயே கழிந்தன. நாய்கள் குட்டி போட்டாலும் கொண்டாட்டம் உண்டு.

அதேபோல, ஏதாவது ஒரு நாய்க்கு உடல்நிலை சரியில்லை, கொஞ்சம் சீரியஸ் என்றால் போதும். மகபத் கான் துடிதுடித்துப் போய்விடுவார். அவருக்குச் சாப்பாடு இறங்காது. எந்த முக்கியமான வேலைக்கு இடையேயும் அந்த பேஷண்ட் நாயின் உடல்நிலை பற்றி விசாரித்துக் கொண்டே இருப்பார். நாய் இறந்துவிட்டால் அவ்வளவுதான், வெளிப்படையாகவே கண்ணீர் விட்டு அழுவார்.

அந்த நாய்க்கு இறுதிச் சடங்குகளையும் விமரிசையாகவே நிறைவேற்றுவார். அன்றைய தினம் சமஸ்தானத்தின் துக்க தினமாக அறிவிக்கப்படும். சமஸ்தானத்தின் கொடி அரைக் கம்பத்தில் பறக்க விடப்படும். ஏதேனும் பொது நிகழ்ச்சிகள், கொண்டாட்டங்கள் இருந்தால் அவை ரத்து செய்யப்படும்.

கோடைக்காலங்களில் வைஸ்ராய் சிம்லாவில் இருப்பது வழக்கம். அப்போது பல மகாராஜாக் கள் சிம்லா சென்று வைஸ்ராயைச் சந்திப்பார்கள். மகபத் கான் தனது பல செல்ல நாய்களோடு சிம்லாவுக்குப் படையெடுப்பார். வைஸ்ராயைச் சந்திக்கச் செல்லும்போது, அழகாக உடை யணிந்து கொண்டு கிளம்புவார். அவரைவிட அந்தச் செல்ல நாய்கள் மிக அழகாக உடை யணிந்து இருக்கும்.

வைஸ்ராயின் மாளிகை நோக்கிக் கிளம்புவார். அந்த நாய்கள் ஒன்றிரண்டாக ரிக்‌ஷாவில் ஏறி அமர்ந்து கொள்ளும். நாய்களோடு ஊர்வலமாக நவாப் செல்ல, சிம்லாவே திரும்பிப் பார்க்கும். வைஸ்ராய் மாளிகையில் விருந்துக்காக வந்திருக்கும் வெள்ளைக்காரப் பெண்மணி கள், நாய்களைக் கொஞ்சி மகிழ்வார்கள். வைஸ்ராய்க்குத்தான் கொஞ்சம் தர்ம சங்கடமாக இருக்கும்.

‘என்ன நவாப், நீங்க மட்டும்தான் வருவீங்கன்னு எதிர்பார்த்தேன்’ வைஸ்ராய் கேட்பார்.

‘வைஸ்ராய் சாப், நம்ம நாய்கள் எல்லாம் ரொம்ப சமர்த்து. அதுங்க பாட்டுக்கு அமைதியா இருக்கும். வேலைக்காரங்க பார்த்துக்குவாங்க’ - நவாப் சிரிப்பார். அந்த வைஸ்ராய் மாளிகை யின் தோட்டத்தில், ஜுனாகத் நாய்கள் ஓடிப்பிடித்து விளையாட ஆரம்பித்திருக்கும்.

அவள் பெயர் ரோஸனரா (Roshanara). நவாப் மகபத் கான் வைத்த பெயர்தான். ஜுனாகத் அரண்மனையிலேயே பிறந்த பெண் நாய்க்குட்டி. மகபத் கானுக்கு மிகவும் செல்லமான நாய்க்குட்டி அதுதான். அவர் எங்கு சென்றாலும், ரோஸனராவும் உடன் செல்லும், உச்சா



செல்ல ரோஸனராவுடன் நவாப் மகபத் கான்

சென்றால்கூட. நவாப்பின் படுக்கையிலேயே கூடப் படுத்து உறங்கும் உரிமை பெற்றது அது. சொல்லப்போனால், அவரது பேகம்களைவிட, ரோஸனராவுக்கு நவாப்பிடம் அதிக உரிமை இருந்தது.

தான் ஏதாவது துக்கத்தில் சாப்பிடா விட்டால்கூட, ரோஸனராவுக்கு ஊட்டி விடுவார் நவாப். அதற்கு உடல்நிலை சரியில்லை என்றால், எந்த முக்கியமான வேலையையும் விட்டுவிட்டு கூடவே இருந்து கவனிப்பார். அவர் வெளியூருக்குச் சென்றாலும், வெளிநாட்டுக்குச் சென்றாலும் உடன் ரோஸனராவும் செல்லும்.

1921, ஏப்ரல் 3ல் முனாவர் ஜஹான் (Munawar Jahan) பேகத்தை முதல் நிக்காஹ் செய்து கொண்டார் மகபத் கான். சரியாக இரண்டு வருடம் கழித்து எம்னா (Emna) பீவியை இரண்டாவ தாக நிக்காஹ் செய்து கொண்டார். சில மாதங்களிலேயே நவாப்புக்கு மீண்டும் திருமண மூட் வந்துவிட்டது. 1923, அக்டோபரில் அமன் (Aman) பீவியை மூன்றாவதாக நிக்காஹ் செய்து கொண்டார். அடுத்த இரண்டு வருடம் அமைதியாக இருந்தார். 1925 ஜூலை 8ல் நான்காவதாக மோட்டி (Moti) பிவீயை நிக்காஹ் செய்து கொண்டார்.

‘அட, நாம் மட்டும் எத்தனை திருமணங்கள் செய்து கொண்டிருக்கிறோம். ரோஸனரா பாவ மில்லையா? அவளும் வயசுக்கு வந்துவிட்டாள். பேசும் சக்தியிருந்தால் தனக்கும் திருமணம்

செய்து வைக்கச் சொல்லிக் கேட்டிருப்பாளோ? இருக்கலாம். சரி, நான் முடிவெடுத்துவிட்டேன். என் ரோஸனராவுக்கு வெகு சிறப்பாகத் திருமணம் செய்து வைக்கப் போகிறேன்.'

பிரதம அமைச்சர் அல்லா பக்ஷை (Allah Baksh) அழைத்தார். 'உடனடியாக வரன் தேட வேண்டும்' என்றார். நவாப்புக்குத்தான் என்று நினைத்து, பக்ஷும் தலையாட்டினார்.

'ராஜ குடும்பமாக இருப்பது அவசியம். அரண்மனையிலேயே வளர்க்கப்பட்டதாக இருக்க வேண்டும். எனது ரோஸனராவுக்குப் பொருத்தமான மணமகனாக இருக்க வேண்டும். புரிந்ததா? எல்லா சமஸ்தானங்களுக்கும் உடனே தகவல் அனுப்புங்கள். இன்னும் ஒரு மாதத்துக்குள் மணமகன் முடிவாகிவிட வேண்டும். ஓர் இளவரசியின் கல்யாணத்தைப் போலவே இதை நடத்த வேண்டும்.'

நவாப் சொல்லச் சொல்ல, பக்ஷுக்கு விவரம் புரிந்தது. ஆஹா, நவாப்பின் நாய்ப்பாசம் எல்லை மீறுகிறது என்று உள்ளுக்குள் நினைத்துக் கொண்டார். இட்ட பணியைச் செய்தார். சில நாள்களிலேயே ரோஸனராவுக்குப் பொருத்தமான வரன் அமைந்தது. மங்ரோல்* (Mangrol) என்ற சிறிய சமஸ்தான நவாப்பின் வளர்ப்பு ஆண் நாய். சம்பந்தி நவாப்பும் திருமணத்தைத் தடபுடலாக நடத்த ஒப்புக் கொண்டார். திருமணத் தேதி குறிக்கப்பட்டது.

மகபத் கான், அமைச்சரவைக் கூட்டத்தைக் கூட்டினார். திருமணம் எப்படி நடக்க வேண்டும்? எத்தனை நாள் நிகழ்வு? எவ்வளவு செலவு? யார், யாரையெல்லாம் அழைக்கப் போகிறோம்? மணமகளுக்கு என்ன செய்யப் போகிறோம்? மணமகனுக்கு என்ன கொடுக்கப் போகிறோம்? திருமண நிகழ்ச்சிகள் என்னென்ன? விருந்தினர்களுக்கான கவனிப்புகள் எப்படி? விருந்துக் கான உணவுகள் என்னென்ன? யார் யார் என்னென்ன பணிகளைக் கவனிக்க வேண்டும்? இவை பற்றி எல்லாம் அந்தக் கூட்டத்தில் பேசி முடிவெடுத்தார்கள்.

அழைப்பிதழ்கள் தயாராகின. மகாராஜாக்கள் முதல் குட்டி ராஜாக்கள் வரை, பிற சமஸ்தானங்களின் முக்கியஸ்தர்கள் முதல் பெரும் வியாபாரிகள் வரை, பிரிட்டிஷ் அதிகாரிகள் முதல் பிரிட்டன்வாழ் நண்பர்கள் வரை எல்லோருக்குமே அழைப்பிதழ்களை அனுப்பினார் நவாப். பலருக்கு ஆச்சரியம். சிலருக்குக் கேலி செய்யும் விஷயமாகத் தெரிந்தது. அட, நாய்களுக்கு எப்படித்தான் கல்யாணம் செய்து வைக்கிறார் என்று பார்த்துவிடலாம் என்று நினைத்தார்கள். அந்த அழைப்பிதழைக் கண்டு கோபப்பட்ட ஒரே நபர் அப்போதைய வைஸ்ராய் இர்வின் (Irwin). 'ஏன் இந்த நவாப் பைத்தியக்காரத்தனமாக நடந்துகொள்கிறார். நான் செல்ல மாட்டேன்' என்று தன் மனைவியிடம் சொன்னார். 'அபத்தமான விஷயங்களுக் கெல்லாம் செல்லாமலிருப்பதே நல்லது' என்றார் லேடி இர்வின்.

திருமணத்தை முன்னிட்டு சமஸ்தானத்தில் மூன்று நாள்கள் விடுமுறை அறிவிக்கப்பட்டது. அந்த மூன்று நாள்களுக்கும் மக்கள் தங்கள் வீட்டில் அடுப்பெரிக்கக் கூடாது, திருமண விருந்தைத்தான் அனுபவிக்க வேண்டும் என்ற அன்புக் கட்டளையும் போடப்பட்டது. ஜுனாகத் நகர் முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. வந்து குவிந்த விருந்தினர்களின் எண்ணிக்கை ஐம்பதாயிரத்தைத் தொடும். எல்லோருக்கும் அவரவர் தங்கியிருந்த இடத்துக்கே மூன்று வேளையும் உணவு அனுப்பி வைக்கப்பட்டது. அதற்காக ஏகப்பட்ட டிரக்குகளும், எக்கச் சக்க மாட்டு வண்டுகளும் பிஸியாகத் திரிந்து கொண்டிருந்தன. வந்திருந்த பிற சமஸ்தான

---

★ மங்ரோல், ஜுனாகத்துக்கு அருகிலிருந்த பொடி சமஸ்தானம். ஜுனாகத்தின் கட்டுப்பாட்டில்தான் இருந்தது.

மகாராஜாக்கள் வந்து போவதற்காக சிறப்பு ரயில்கள் விடப்பட்டிருந்தன. அவர்களை மகிழ்விக்க, பம்பாய், பரோடா, இந்தூரிலிருந்து நூற்றுக்கணக்கில் நடன அழகிகள் வர வழைக்கப்பட்டிருந்தார்கள். எங்கும் எப்போதும் ஏதாவது கலை நிகழ்ச்சிகள் நடந்த வண்ணம் இருந்தன.

ஜுனாகத் ரயில் நிலைய வாசல். 'மாப்பிள்ளை வர்ற நேரமாச்சு. எல்லாரும் ரெடியா?' நிலையத்தின் வெளிப்புறத்தில் நாய் மாப்பிள்ளையை வரவேற்பதற்காக இருநூற்றைம்பது ஆண் நாய்கள் காத்திருந்தன. அத்தனைக்கும் ஒரே மாதிரியான உடை, நகை, அலங்காரங்கள். கூடவே வெள்ளி நகைகளால் அலங்கரிக்கப்பட்ட யானைகளும், குதிரைகளும். ஜுனாகத்தின் முக்கியஸ்தர்களும், நவாப் குடும்பத்தினரும் நடைமேடையில் காத்திருந்தார்கள்.

அலங்கரிக்கப்பட்ட ரயிலில் மணமகன் பாபி (Bobby) வந்து இறங்கியது. இசைக் கருவிகள் முழங்கியதில் பாபி கொஞ்சம் மிரண்டுதான் போனது. விரிக்கப்பட்ட சிவப்புக் கம்பளத்தில் மாப்பிள்ளை மிடுக்கையெல்லாம் வெளிக்காட்டத் தெரியாமல் வெகுளியாக நடந்து போனது. யானைகள், பின் குதிரைகள், பின் நாய்கள், பிரத்யேக காரில் பாபி - அரண்மனையை நோக்கி மாப்பிள்ளை ஊர்வலம் ஆரம்பமானது. வழி நெடுகக் குவிந்திருந்த மக்கள், மாப்பிள்ளையின் நாக்கு தொங்கிய அழகை ரசித்தார்கள்.

விடிந்தால் கல்யாணம். தனக்கு அன்று திருமணம் என்றறியாத ரோஸனரா அசந்து தூங்கிக் கொண்டிருந்தது. விடிவதற்கு முன்பாகவே அதை எழுப்பினார்கள். கஷ்டப்பட்டு காலைக் கடன்களைக் கழிக்க வைத்தார்கள். வாசனைத் திரவியங்கள் கலந்த நீரால் குளிப்பாட்டினார்கள். மணமகள் அலங்காரம் ஆரம்பமானது. பட்டு உடை. கழுத்தில் பெரிய நெக்லெஸ். கால்களில் பிரெஸ்லெட். மணமகன் பாபியும் பட்டுச் சொக்கா, கழுத்து நெக்லெஸ் சகிதமாக வந்து நின்றது.

தர்பார் ஹாலில் பிரிட்டிஷ் முக்கியஸ்தர்கள், மகாராஜாக்கள் உள்பட எழுநூறு பேர் அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். அங்குதான் மதகுருக்கள் முன்னிலையில் முறைப்படி நிக்காஹ் நடந்தது. எல்லோரும் மணமக்களை வாழ்த்தினார்கள். மணமக்களும் அதனை ஏற்றுக் கொண்டார்கள். லொள் லொள்!

காத்திருந்த பத்திரிகையாளர்களும் புகைப்படக்காரர்களும் கேமராக்களை இயக்க ஆரம்பித் தார்கள். மாபெரும் அரியணை ஒன்றில் நவாப் மகபத் கான், அவருக்கு வலது புறத்தில் புதுப் பொண்ணு ரோஸனரா, அடுத்ததாக மாப்பிள்ளை பாபி. ஸ்மைல் ப்ளீஸ்!

திருமணத்தின் முடிவில் மாபெரும் விருந்து பரிமாறப்பட்டது. மணமக்களுக்காகப் பிரத்யேக உணவு. மகபத் கானே உடனிருந்து பரிமாறினார். விருந்து முடிந்த பின் நவாப், திருமணத்துக்கு வந்து கௌரவப்படுத்திய அனைவருக்கும் நன்றி தெரிவித்து சிறப்புரை ஆற்றினார்.

'இங்கு நான் பெருமையுடன் அறிவித்துக் கொள்வது என்னவென்றால், மேலும் நூறு புதிய நாய்களை வாங்கி வளர்க்கப் போகிறேன். எண்பது பெண், இருபது ஆண். அவற்றையும் சேர்த்தால் எனது நாய்ப் பண்ணையில் ஆயிரம் நாய்கள் சேர்ந்துவிடும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.'

திருமணக் கூத்துகள் இனிதே நிறைவுற்றன. நவாப், ரோஸனராவையும் பாபியையும் எங்கே யாவது தேனிலவுக்கு அனுப்பினாரா என்பது பற்றி தகவல்கள் இல்லை. ஆனால் ஒன்று,

மணப்பெண் திருமணத்துக்குப் பின்னும் பிறந்த வீட்டிலேயேதான் இருந்தது. பாபி, அரண்மனை மாப்பிள்ளையாகிப் போனது.

எல்லாம் காரியம் ஆகும்வரைதான். அதன்பின் பாபிக்கான மாப்பிள்ளை சிறப்பு அந்தஸ்து அழிந்து போனது. அதுவும் அரண்மனையில் ஆயிரமோடு ஆயிரத்து ஓராம் நாயாக மாறிப் போனது. ஆனால் தன் கடைசிக் காலம் வரை, ரோஸனரா நவாப்பின் செல்ல நாயாகவே சகல வசதிகளுடனும் வாழ்ந்தது, புருஷன் சென்டிமெண்ட் இல்லாமல்.



# ‘பாகிஸ்தானுடன் இணையப் போகிறேன்!’

கிர் சிங்கங்களின் காவல் தெய்வம், நாய்களின் பிரிய நாயகன், ஜுனாகத் நவாப் மகபத் கானுக்கு இன்னொரு முகமும் உண்டு. அவர் அதி தீவிர மாம்பழப் பிரியர். வெறியர் என்றே சொல்லலாம். குறிப்பாக அல்போன்ஸா மாம்பழம்.

மகபத் கான், அகால நேரத்தில்கூட அட்டணக்கால் போட்டுக்கொண்டு மாம்பழத்தை ரசித்துச் சாப்பிடுவார். ஒருபோதும் வேண்டாம் என்று சொல்லவே மாட்டார். சீஸன் இல்லாத நேரத்தில்கூட மாம்பழம் வேண்டுமென அடம் பிடிப்பார். வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்தாவது மாம்பழ மோகத்தைத் தீர்த்துக் கொள்வார்.

அவருக்கெனவே பிரத்யேக தோப்புகள் இருந்தன. அந்த மாமரங்களைச் சிறப்பாகக் கவனிப்பதற்காகவே தனி தோட்டக்காரர்கள், காவலாளிகள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவர் வெளியூருக்குச் சென்றால்கூட ஜுனாகத் மாம்பழங்களைக் கையோடு கொண்டு சென்றுவிடுவார்.

கிர் காடுகளில் சிங்கங்கள், அரண்மனை நிறைய நூற்றுக்கணக்கான நாய்கள், எந்நேரமும் சுவைக்க கூடை கூடையாக அல்போன்ஸா மாம்பழங்கள் இவற்றைவிட வாழ்வில் இன்பம் வேறேதும் உண்டா என்ன? ஆனால் எல்லா இன்பங்களும் வாழ்வின் இறுதிவரை நீடித்திருப்பதில்லையே.

இந்தியாவின் சுதந்தரத்தை நோக்கிக் காய்கள் நகர்த்தப்பட்டுக் கொண்டிருந்தன. 1948ன் மத்தியில் சுதந்தரம் வழங்கப்படுவதற்கான நாள் குறிக்கப்பட்டிருந்தது.



ஷாநவாஸ் புட்டொ

இந்தியா, பாகிஸ்தான் பிரிவினை சம்பந்தமான அறிவிப்பை 1947, ஜூன் 3-ல் வைஸ்ராய் மௌண்ட்பேட்டன் வெளியிட்டார். அதன்படி, 1947, ஆகஸ்ட் 15லேயே இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சுதந்தரம் வழங்குவதாக பிரிட்டிஷ் அரசு முடிவு செய்திருந்தது. சமஸ் தானங்கள், இந்தியாவுடனோ அல்லது பாகிஸ்தான் உடனோ இணைந்து கொள்ளலாம் என்று அறிவிக்கப்பட்டது.

ஜூனாகத் நவாப் மகபத் கான் எடுத்திருந்த முடிவு, பாகிஸ்தானுடன் இணைய வேண்டும் என்பதுதான். ஆனால் அது சாத்தியமில்லாததாகத்தான் தோன்றியது. காரணம் ஜூனாகத்தின் அமைவிடம் அப்படிப்பட்டது. அதற்கும் மேற்கு பாகிஸ்தானுக்கும் எந்தவித எல்லைத் தொடர்பும் கிடையாது. ஜூனாகத்தைச் சுற்றி இருந்த சமஸ்தானங்களான கொண்டல், பரோடா, பவ்நகர் ஆகிய மூன்றின் மகாராஜாக்களும் இந்தியாவுடன் இணைவதற்கு ஒப்புக் கொண்டார்கள். இன்னொரு புறம் அரபிக் கடல்தான்.

ஜூனாகத்தின் முக்கியமான துறைமுக நகரான வெரவாலில் (Veraval) இருந்து கடல் வழியாக கராச்சிக்குச் செல்லலாம். அவ்வளவே. அதுபோக ஜூனாகத்தில் முஸ்லிம் அல்லாதவர்கள்தான் எண்பது சதவிகிதம் இருந்தார்கள். பாகிஸ்தானுடன் இணைய வேண்டுமென்பது நவாப்பின் ஆசையாக இருந்ததே தவிர, மக்களின் ஆசையாக அல்ல.

அப்போது ஜூனாகத்தின் திவானாக இருந்த அப்துல் காதிர் முகமது உசைன் (Abdul Kadir Mohammed Hussain), மகபத் கானிடம் உண்மை நிலையை எடுத்துச் சொன்னார்.

'நவாப், நீங்கள் பாகிஸ்தானுடன் இணைய வேண்டும் என்ற முடிவை மாற்றிக் கொள்ளவில்லை என்றால், சமஸ்தானத்தில் பெரும் குழப்பங்கள் விளையும். கலவரங்கள் உண்டாகும். மக்களின் விருப்பப்படி நடப்பதுதான் வருங்காலத்துக்கு நல்லது.'

திவானின் வார்த்தைகள் நவாப்புக்குக் கோபத்தை ஏற்படுத்தின. முதலில் எடுத்துச் சொன்ன திவானும், பின்பு நவாப்புக்கு எதிராகக் குரல் கொடுக்க ஆரம்பித்தார். எனவே பதவியிலிருந்து தூக்கப்பட்டார். புதிய திவானாக ஷாநவாஸ் புட்டொ (Shahnawaz Bhutto) நியமிக்கப் பட்டார்.



வி.பி. மேனன், மௌன்ட்பேட்டன் உடன்

புட்டொ? ஆம் பெனஷிர் புட்டொவின் தாத்தா. ஷுல்பிகர் அலி புட்டொவின் (Zulfiqar Ali Bhutto) தந்தை. கராச்சியில் முஸ்லிம் லீக் கட்சியின் முக்கிய உறுப்பினராக இருந்த அவரை, நவாப் மகபத் கான் தனது சமஸ்தானத்துக்குக் கொண்டு வந்தார். பாகிஸ்தானுடன் தனது சமஸ்தானத்தை இணைக்க, புட்டொ பொறுப்பில் இருந்தால் வசதி என்பது நவாப்பின் கணிப்பு.

பாகிஸ்தானுடன் இணைய விரும்புவதாக ஜுனாகத்திலிருந்து இந்திய அரசுக்கு தகவல் அனுப்பப்பட்டது (1947, ஆகஸ்ட் 18). தன்னுடன் இணைய விரும்பும் ஜுனாகத்தின் விருப்பத்தை ஏற்றுக் கொள்வதாக, பாகிஸ்தான் அரசு (செப்டம்பர் 13) கடிதம் அனுப்பியது. ஆனால் நவாப்பின் இந்த முடிவால் அதைச் சுற்றியிருந்த மாகாணங்கள் சலசலத்தன. அவருக்கு எதிராகக் கடும் கண்டனங்கள் எழுந்தன. டெல்லியில் எதிர்ப்பு ஊர்வலங்கள்கூட நடந்தன.

அப்போது கவர்னர் ஜெனரலாக பொறுப்பேற்றிருந்த மௌண்ட்பேட்டனுக்கு, நவாப் மகபத் கான் ஒற்றைத் தலைவலியாக மாறிப் போனார். இஸ்மே (Ismay) என்பவரைத் தூதராக கராச்சிக்கு அனுப்பி வைத்தார் மௌண்ட்பேட்டன். அவர் சென்றார், பேசினார், திரும்பினார். ‘ஒன்றும் வேலைக்கு ஆகவில்லை’ என்று அறிக்கை கொடுத்தார்.

சமஸ்தானங்கள் இணைப்பில் மும்மரமாக இருந்த உள்துறை அமைச்சர் வல்லபபாய் படேல், தனது முதன்மைச் செயலாளர் வி.பி.மேனனை ஜுனாகத்துக்கு அனுப்பினார். நல்லபடியாக பேச்சுவார்த்தை நடத்தி, நல்லதொரு பதிலைப் பெறுவதற்காக. ஆனால் உஷாரான நவாப், மேனனைச் சந்திக்க மறுத்துவிட்டார்.

இந்திய ராணுவத்தை ஜுனாகத்துக்கு அனுப்பினால் பிரச்னை தீர்ந்துவிடும் என்ற பேச்சு பல தரப்புகளில் எழுந்தது. இந்திய அரசு ராணுவ நடவடிக்கை எதையும் மேற்கொண்டால், சர்வ தேச அரங்கில் அது பாகிஸ்தானுக்கு எதிராக நடத்தப்படும் போராகக் கருதப்பட்டு விடும் என்று தனது அச்சத்தை வெளிப்படுத்தினார் மௌண்ட்பேட்டன்.

மங்ரோல் என்ற குட்டி சமஸ்தானம் ஜுனாகத்தின் ஒரு பகுதியாக, நவாப்பின் ஆட்சிப் பொறுப்பில் இருந்தது. அதனை ஆண்டு வந்த ஷேக், நவாப்பின் முடிவுக்குக் கட்டுப்பட வில்லை. மங்ரோலை இந்தியாவுடன் இணைப்பதற்குச் சம்மதம் தெரிவித்தார்.

மகபத் கானால் அதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ‘மங்ரோல் என் கட்டுப்பாட்டுக்குள் வரும் பகுதி. அது குறித்து முடிவெடுக்க எனக்குத்தான் அதிகாரம் உண்டு. ஷேக் சொல்வ தெல்லாம் செல்லாது’ என்று எகிறினார். ஆனால் மங்ரோலை இணைக்க இந்திய அரசு ஒப்புக் கொண்டது.

மங்ரோல் மட்டுமல்ல, பாபரியாவாட் (Babariawad), மனவடார் (Manavadar), பண்ட்வா (Bantva), சர்தார்கர் (Sardargarh) ஆகிய நான்கு குட்டி சமஸ்தானங்களும் ஜுனாகத் நவாப்பின் கட்டுப்பாட்டுக்குள் இருந்தவைதான். மங்ரோல் போல் மற்ற குட்டி சமஸ்தானங்களும் ஜுனாகத்தை விட்டு கழன்று கொண்டால்? யோசித்தார் நவாப். அவரது சமஸ்தானப் படை கள் பாபரியாவாட்டுக்குள் நுழைந்தன.

‘மரியாதையாகப் படைகளை விலக்கிக் கொள்ளுங்கள்’ - இந்திய அரசிடமிருந்து நவாப்புக்கு ‘வேண்டுகோள்’ சென்றது. அதே சமயத்தில் இந்தியப் படைகளும் ஜுனாகத்தின் சுற்று வட்டாரப் பகுதிகளில் நிறுத்தி வைக்கப்பட்டன. ‘சும்மா நில்லுங்கள் போதும். உள்ளே நுழையவோ, தாக்கவோ வேண்டாம்’ என்பது ராணுவத்தினருக்குக் கொடுக்கப்பட்டிருந்த குறிப்பு.

இந்நேரத்தில் புட்டொ, இந்திய அரசுக்குத் தந்தி ஒன்றை அனுப்பினார். ‘மங்ரோலும் பாபரியா வாட்டும் ஜுனாகத்தின் அதிகாரத்துக்குட்பட்ட பகுதிகள். எனவே எங்கள் படைகளை விலக்கிக் கொள்ள முடியாது.’ இந்தியா பதில் தந்தி ஒன்றை பாகிஸ்தான் பிரதமர் லியாகத் அலி கானுக்கு (Liaquat Ali Khan) அனுப்பியது. ‘பாபரியாவாட்டிலிருந்து ஜுனாகத் படைகள் உடனே விலக்கிக் கொள்ளப்பட வேண்டும்.’

அடுத்த சில நாள்களில் நேருவும் லியாகத் அலி கானும் டெல்லியில் சந்தித்து ஜுனாகத் விஷய மாகப் பேசினார்கள். ஜுனாகத்தில் பொதுத் தேர்தல் நடத்தலாம், அல்லது மக்களிடையே கருத்துக் கணிப்பு (Referendum) நடத்தலாம். அதற்குப் பிறகு இணைப்பைப் பற்றி யோசித்துக் கொள்ளலாம். இதுவே நேருவின், மௌண்ட்பேட்டனின் யோசனை. ஆனால் லியாகத் அலிகான் ஒப்புக் கொள்ளவில்லை. இந்தப் பேச்சுவார்த்தை நடந்த மறுநாளே நவாப், தனது படைகளை மங்ரோலுக்குள் நுழையச் செய்தார்.

நிலைமை மேலும் மோசமானது. தொடர்ந்து நடந்த பாகிஸ்தானுடனான பேச்சு வார்த்தை களில் எந்த முன்னேற்றமும் இல்லை. நேருவும் படேலும் வேறொரு கோணத்தில் திட்டம் ஒன்றைத் தீட்டினார்கள். அதன்படி இந்தியாவின் ஆதரவுடன் தற்காலிக அரசு (Provisional Government) ஒன்று பம்பாயில் அமைக்கப்பட்டது (செப்டம்பர் 25). அந்த அரசின் பிரசி டெண்டாக சமல்தாஸ் காந்தி (Samaldas Gandhi) நியமிக்கப்பட்டார். அவர், காந்தியின் மருமகன், ஜுனாகத்தைச் சேர்ந்தவர். ஆறு உறுப்பினர்கள் கொண்ட அந்த அரசு, ராஜ்கோட்டில் இருந்து இயங்க ஆரம்பித்தது.

ஜுனாகத் மக்களிடம் அந்த அரசுக்குப் பேராதரவு கிடைத்தது. ஓர் இயக்கமாகத் திரண்ட மக்கள், நவாப்புக்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட ஆரம்பித்தார்கள். ஆயுதங்களோடு கள மிறங்கிய அவர்கள், ஜுனாகத்தில் சுமார் அறுபத்தைந்து கிராமங்களைத் தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தார்கள். நவாப்பின் படையினர் தாக்குதலுக்கு உள்ளானார்கள். நவாப்புக்குச் செல்லும் உதவிகளைத் தடுத்தார்கள்.

நவாப் மகபத் கான், கிட்டத்தட்ட முடக்கப்பட்டார். காட்டு ராஜாவைக் காப்பாற்ற முடிந்த மகபத் கானால், தன் அரியணையைக் காப்பாற்றிக் கொள்ள முடியாத சூழ்நிலை. மக்கள் ஆதரவை இழந்த பின் ஜுனாகத்தில் வாழ்வதும் சாத்தியம் இல்லை. இனி ஜுனாகத்தை பாகிஸ்தானுடன் இணைக்க வேண்டுமென்றால், அதை அப்படியே பிய்த்து எடுத்து, அலேக்காகத் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு சென்று, பாகிஸ்தானோடு ஒட்ட வைக்கத்தான் வேண்டும். நடக்கிற காரியமா அது?

பாகிஸ்தானுக்குக் கிளம்பிவிட முடிவு செய்தார் நவாப். தனது குடும்பத்தினரையெல்லாம் பெட்டி கட்டச் சொன்னார். இறுதியாக ஒரு முறை கிர் காடுகளுக்குச் சென்று தான் வளர்த்த சிங்கங்களை நலம் விசாரித்துவிட்டு வரலாம் என்று தோன்றியது. வாய்ப்பில்லை. வெளியே நிலைமை மோசமாகிக் கொண்டே இருந்தது. குறைந்தபட்சம் தனக்கு மிகவும் பிரியமான நாய்க்குட்டிகள் சிலவற்றையாவது அழைத்துச் செல்லலாம் என்று முடிவெடுத்தார். கூடவே சில கூடைகளில் அல்போன்ஸா. கிட்டத்தட்ட கஜானாவை முழுவதையும் வழித்து எடுத்துக் கொண்டார்.

நவாப், கராச்சி செல்வதற்காக தனி விமானம் ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. 'சீக்கிரம் வாருங்கள், உடனே விமானம் ஏறியாக வேண்டும்' - தனது குடும்பத்தினரை அவசரப்படுத்தினார். அந்த நேரத்தில் அவரது பேகம்களில் ஒருவர், 'அய்யய்யோ விட்டு விட்டேனே' என்று பதறினார்.

நவாப்புக்குக் கோபம். அவர் எதையும் விடவில்லை - நாய்களை, மாம்பழங்களை, நான்கு மனைவிகளை. 'எதை விட்டு விட்டாய்?' - கத்தினார்.

'அவசரத்தில் நம் குழந்தையை மறந்து விட்டேன். அரண்மனையிலேயே விட்டு விட்டேன்.'

நவாப் பதில் எதுவும் சொல்லவில்லை. அந்த பேகம் குழந்தையை அழைத்து வருவதற்காக மீண்டும் அரண்மனைக்கு ஓடினார். மகபத் கானுக்குப் பொறுமையில்லை. காலதாமதம் செய்வது நல்லதல்ல என்றும் தோன்றியது. நாய்களோடு விமானம் ஏறினார். கராச்சி சென்றடைந்தார்.

பொறுப்புகள் எல்லாம் புட்டொவின் கைகளில் வந்து சேர்ந்தன. ஜுனாகத்தின் முஸ்லிம்கள், புட்டொவிடம் பேசினார்கள். அவர்களும் ஜுனாகத், இந்தியாவுடன் இணைய வேண்டும் என்றே வலியுறுத்தினார்கள். மேலும் பிரச்னைகள் வேண்டாம் என்று முடிவெடுத்த ஷாநவாஸ் புட்டொ, ஜுனாகத்தின் நிர்வாகப் பொறுப்பை இந்திய அரசிடம் ஒப்படைக்க விரும்புவதாக அறிவித்தார் (நவம்பர் 7). அதைத் தொடர்ந்து மக்களிடம் கருத்துக் கணிப்பு நடத்தவும் முடிவு செய்யப்பட்டது.

நவம்பர் 9ல் இந்திய ராணுவம் ஜுனாகத்துக்குச் சென்று அமைதியை நிலைநாட்டியது. அதே சமயத்தில் பாகிஸ்தான் அரசிடம் இருந்து அந்த 'வழக்கமான' தந்தி வந்தது, 'ஜுனாகத்தை இந்தியாவிடம் ஒப்படைக்க திவானுக்கு எந்தவித அதிகாரமும் இல்லை. அங்கு இந்தியப் படைகளை அனுப்பியது விதிமுறை மீறல். உடனே அவை விலக்கிக் கொள்ளப்பட வேண்டும்.'

1948, பிப்ரவரி 20ல் இந்திய அரசு, ஜுனாகத் மக்களிடம் வாக்கெடுப்பு நடத்தியது. 'ஜுனாகத் இந்தியாவுடன் இணைய வேண்டுமா? பாகிஸ்தானுடன் இணைய வேண்டுமா?'

ஜுனாகத்திலிருந்த 2,00,000 வாக்காளர்களில் கிட்டத்தட்ட 1,90,000 பேர் வாக்களித்தார்கள். முடிவில் பாகிஸ்தானுக்கு ஆதரவாக விழுந்த வாக்குகளின் எண்ணிக்கை வெறும் 91.

மங்ரோல், பாபரியாவாட், மனவடார், பண்ட்வா, சர்தார்கர் ஆகிய ஐந்து குட்டி சமஸ்தானங்களிலும் வாக்கெடுப்பு நடந்தது. எல்லா இடங்களிலும் சேர்த்து பாகிஸ்தானுக்கு கிடைத்த வாக்குகளின் எண்ணிக்கை 39. இந்தியாவுக்கு முப்பத்தோராயிரத்துக்கும் மேல்.

ஜுனாகத்தை இந்தியாவுடன் இணைப்பதற்கான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட ஷாநவாஸ் புட்டொ, குட் பை சொல்லிவிட்டு பாகிஸ்தானுக்குக் கிளம்பினார். இருந்தாலும் இன்றுவரை, கராச்சியில் வாழும் நவாப்பின் குடும்பத்தினருக்கு ஜுனாகத் மீதான பாசம் குறையவே இல்லை.

'ஜுனாகத், பாகிஸ்தானுக்குச் சொந்தமானது. அதில் நவாப்பின் ஆட்சி மீண்டும் அமைய வேண்டும் என ஜுனாகத் மக்கள் விரும்புகிறார்கள். ஜுனாகத்தை மீட்டுத் தர அதிபர் பர்வேஸ் முஷாரப் உதவ வேண்டும்' - மகபத் கானின் பேரனான ஜஹாங்கீர் கான் 2001ல் அளித்த பேட்டி இது.



# தினம் தினம் அட்சய திருதியை!

'இன்றைக்காவது மகாராஜாவைப் பார்க்க முடியுமா?'

'அவர் வேட்டைக்குப் போகவிருக்கிறார். நாளைக்குக் பக்கத்துச் சமஸ்தான மகாராஜாவின் குதிரைக்குப் பிறந்தநாள். அந்த விருந்துக்குச் செல்லவிருக்கிறார். எப்படியும் ஒரு வாரம் ஆகிவிடும். அடுத்த வெள்ளிக்கிழமை வேண்டுமானால் வாருங்கள். முயற்சி செய்யலாம்.'

'நல்லது. அப்படியே செய்கிறேன்.'

ஒரு வாரம் என்ன, மாதக்கணக்கில்கூட முகம் சுளிக்காமல் காத்திருப்பார்கள் அவர்கள். ஐரோப்பிய நாடுகளில் இருந்து (குறிப்பாக பாரிஸ், லண்டன், அம்ஸ்டர்டாம், சர்ரி) வியாபார விஷயமாகக் கப்பலில் கிளம்பி வந்த நகை வியாபாரிகள். ஏதாவது ஒரு பகுதியில் இருந்து கொண்டு சுற்று வட்டாரத்திலுள்ள மகாராஜாக்களையெல்லாம் சந்திக்க முயற்சி செய்து கொண்டிருப்பார்கள். யாராவது ஒரு மகாராஜாவைச் சந்திக்க நேரம் கிடைத்து விட்டால்கூடப் போதும். வியாபாரிகளுக்குக் குஷிதான்.

'புதிதாக என்ன இருக்கிறது?' - மகாராஜா கேட்பார். வியாபாரியும் தான் கொண்டு வந்திருக்கும் புதிய டிசைன்களை கடை பரப்புவார். மகாராஜா நல்ல மூடில் இருந்தாலோ அல்லது டிசைன்கள் பிடித்துப் போய்விட்டாலோ வியாபாரியே கிறுகிறுத்துப் போகுமளவுக்கு ஆர்டர் கிடைப்பது உறுதி.

'அந்த வைரம் பதித்த நெத்திச்சூட்டில ஒரு டஜன் போட்டுக்கோப்பா. அது என்ன சொன்ன, ஆங், ஏழு அடுக்கு மரகத நெக்லெஸ், அதுல நாலு. முத்து வளையல்ல பதினாறு டஜன், ஒம்போது செட் வங்கி...' இப்படி மளிகைக் கடை பட்டியல்போல ஆபரணப் பட்டியல் நீளும். அதிலும் நம் ஜுனாகத் நவாப் மகபத் கான் போல வளர்ப்புப் பிராணி மேல் அதீத பாசம் கொண்ட மகாராஜாக்களின் ஆர்டர் எல்லாம் படு பேஜாராகத்தான் இருந்திருக்கும். யானைக்கு ஒட்டியாணம், குதிரைக்குக் கொலுசு, நாய்க்குட்டிக்கு ராக்குடி - இப்படி.

வருடம் முழுவதும் ஐரோப்பிய நகை வியாபாரிகளின் படையெடுப்பு தொடர்ந்து கொண்டேதான் இருந்தது. அதேபோல ஐரோப்பாவில் ஒரு புகழ்பெற்ற நகைக்கடையை நோக்கி நம் மகாராஜாக்களும் படையெடுத்துக் கொண்டே இருந்தார்கள். அது சர்ரியில் பாண்ட் சாலையில் உள்ள அஸ்ப்ரே என்ற கடை (House of Asprey, Pond Street, Surrey). 1781-ல் ஆரம்பிக்கப்பட்டது. தங்கத்தினாலான சோப்பு டப்பா முதல், சிகரெட் சாம்பலைத் தட்டும் மரகத ட்ரே வரை எல்லாமே அங்கு உண்டு. எதுவுமே பதினெட்டுக் காரட்டுக்குக் குறையாதது.

பொதுவாக மத்தியான வேளைக்கு மேல், மகாராஜாக்கள் தங்கள் மகாராணிகளுடன் அல்லது காதலிகளுடன் அல்லது ஐரோப்பியப் பெண் தோழிகளுடன் அஸ்ப்ரேவுக்கு வர ஆரம்பிப் பார்கள். நிதானமாகக் கடையையே புரட்டிப் போட்டுவிட்டு, கிலோக் கணக்கில் வாங்கிக் கொண்டும் போவார்கள். அதேபோல, சாயங்கால வேளைகளில் வரும் இளவரசர்களோ, மகாராஜாக்களோ கொஞ்சம் பரபரப்போடுதான் நுழைவார்கள். பார்ட்டிக்குப் போகும் அவசரம். பொக்கே வாங்குவது போல், வைர மோதிரமோ, வைர அட்டிகையோ வாங்கிக் கொண்டு செல்வார்கள், பார்ட்டியில் பைங்கிளிகளுக்குக் கொடுக்க.

1930ல் பஹவல்பூர் நவாப் ஐந்தாம் சாதிக் முகம்மது கான், அஸ்ப்ரேவுக்கு வந்தார். லூயிஸ் என்ற புதிய சேல்ஸ்மேன், இளவரசரைக் கவனித்தார். 'ப்ரெஸ்லெட் எடுப்பா. வைரத்துல. இதுவரைக்கும் இந்த உலகத்துல யார்கிட்டயும் இல்லாத மாதிரியான டிசைன்ல' - இளவரசர் கேட்க, பல்வேறு டிசைன்களைக் காண்பித்தார் லூயிஸ். ஒரு டிசைன் இளவரசருக்கு மிகவும் பிடித்திருந்தது. 'இது ஓகே. ஆர்டர் எடுத்துக்கோங்க' என்றார். அதன் விலை அன்றைய மதிப்பில் ஆயிரம் பவுண்ட்.

'ஆர்டர் எல்லாம் வேண்டாம் இளவரசே. இப்போதே நீங்கள் வாங்கிக் கொண்டு செல்லலாம்' என்றார் சேல்ஸ்மேன் பெருமிதமாக. 'தம்பி அவசரப்படாதே, எனக்கு இதே மாதிரி ஒரு டஜன் வேணும்.' இளவரசரின் பதிலைக் கேட்ட லூயிஸின் கண்கள், உலகம் சுற்றுவதை உணர்ந்தன.

தங்கத்தில் பல்வேறு கற்கள் பதிக்கப்பட்ட ஸ்பெஷலாகப் பின்னப்பட்ட உள்ளாடைகளை தங்கள் மனம் கவர்ந்தவர்களுக்காக, ஆர்டர் செய்த மகாராஜாக்களும் (இளவரசர்களும்) உண்டு. சொல்லப்போனால், அந்தக் காலங்களில் அஸ்ப்ரேவுக்கு தினம் தினம் அட்சய திருதியை வியாபாரம்தான்.

இன்றைக்கு எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பிளாஸ்டிக் போல, அன்றைக்கு அரண்மனை களில் எல்லாப் பொருள்களிலும் தங்கம் கலந்திருந்தது அல்லது எல்லாம் தங்கமாக இருந்தது. இந்துக்களைப் பொருத்தவரை தங்கத்தை, கடவுள் லட்சுமியாகக் கருதுவார்கள். ஆகவே



ஏகப்பட்ட நகைகளுடன் ஜொலிக்கும் ஒரு மகாராஜா (தாரங்தாராவைச் சேர்ந்த ராஜ் சாஹிப்)

கால்களில் தங்கம் அணிவதைத் தவிர்ப்பார்கள். ஆனால் அரண்மனைவாசிகளுக்கு மட்டும் அதிலும் விதிவிலக்கு இருந்தது. உடம்பில் ஓடுவது ராஜ பரம்பரை ரத்தமாக இருந்தால், தங்கத்தால் ஆன செருப்புகள் கூட அணிந்துகொள்ளலாம் என்னுமளவுக்கு.

ஒரு மகாராஜாவையோ அல்லது இளவரசரையோ திருமணம் செய்துகொண்டு ஒரு பெண் புகுந்த அரண்மனைக்கு வருகிறாள் என்றால், அவள் கொண்டுவரும் சீர் என்பது நினைத்தே பார்க்க முடியாததாக இருந்தது. நகைகள், அழகுப் பொருள்கள், உடைகள், வீட்டு உபயோகப் பொருள்கள், அடுப்பூதும் குழல் முதல் அண்டா வரையிலான சமையல் பாத்திரங்கள் வரை எல்லாமே சீரில் அடக்கம். வரதட்சணைப் பணம் என்பது தனி. மாப்பிள்ளை வீட்டிலும் அந்தப் பெண்ணுக்குக் கொடுக்கப்படும் நகைகள், உடைகள் எல்லாம் தனி.

சீர் என்பது கௌரவம் சம்பந்தப்பட்ட விஷயமாக மட்டுமே பார்க்கப்பட்டது. ஒரு மகாராஜா தன் மகளுக்குத் திருமணம் செய்ய நினைத்தால், அந்த சமஸ்தானத்தின் அந்த வருட வருமானத்தில் பாதியையாவது செலவழித்தால்தான் முடியும்.

பணமெல்லாம் காலியாகி, வருமானமில்லாமல் வாடிய சிறிய மகாராஜாக்களும் இருக்கவே செய்தார்கள். அவர்கள் தங்கள் கஜானாவில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் பூனைக் குட்டியை அல்லது புலிக்குட்டியை விரட்ட ஃபார்முலா ஒன்றையும் வைத்திருந்தனர். அது, தங்களது ஆண் வாரிசுகளுக்குத் திருமணம் செய்து வைப்பது. நல்ல வசதியுள்ள ராஜ குடும்பமாகப் பார்த்து பெண் எடுப்பார்கள். வரும் மருமகள் கொண்டு வரும் சீரையும் வரதட்சணையையும் வைத்து கஜானாவுக்குப் புத்துயிர் கொடுப்பார்கள்.

திருமண நாளன்று இளவரசியை அலங்கரிப்பதென்பது பல மணி நேரங்கள் பிடிக்கும் காரியம். அதிகாலையிலேயே அலங்காரத்தை ஆரம்பித்தால்தான் முகூர்த்த நேரத்தில் மணப்பெண்ணை அழைத்து வரமுடியும். உச்சி முதல் உள்ளங்கால் வரை எங்கெல்லாம் வாய்ப்பிருக்கிறதோ அங்கெல்லாம் நகைகளை அப்பி விடுவார்கள். சில நேரங்களில் மணப்பெண்ணின் உடல் எடையைவிட அவள் அணிந்திருக்கும் நகைகளின் எடை கூடுதலாகப் போய்விடும். ஜோத்பூர் இளவரசியின் திருமணத்தில் அப்படி ஆகிவிட்டது. அலங்கரிக்கப்பட்ட இளவரசி, பளு தூக்கும் வீராங்கனை போல அத்தனை நகைகளையும் சுமந்து கொண்டு மணமேடை ஏறுவதற்கு நான்கைந்து பணிப்பெண்களின் உதவி தேவைப்பட்டது.

ஜெய்ப்பூர் மகாராஜா இரண்டாம் மன் சிங், நகைப்பிரியர். எங்கு சென்றாலும் கிலோக்கணக்கில் நகை அணியாமல் கிளம்பவே மாட்டார். அவரது உடைகளின் பொத்தான்கள்கூட வைரம் பதிக்கப்பட்டவையாகத்தான் இருக்கும். தலைப்பாகையிலிருந்து பாதநுனி வரை ஆங்காங்கே அம்சமாக நகைகள் அணிந்து காட்சி கொடுப்பார். 'நான் நிறைய நகைகள் அணிகிறேன் என்பது உண்மைதான். காரணம் என் மக்கள் என்னை இப்படிப் பார்க்கத்தான் விரும்புகிறார்கள். என் மக்களுக்கு விருப்பமானதைத்தான் நான் செய்கிறேன்' இதுவே மன் சிங்கின் வாக்கு மூலம்.

நகைகள் மேல் அவ்வளவு விருப்பம் இல்லாத குறிஞ்சி மலர் மகாராஜாக்களும் இருக்கத்தான் செய்திருக்கிறார்கள். சுகத் (Suket) சமஸ்தான ராஜா லக்ஷ்மன் சென் (Lakshman Shen) உடலில் பொட்டுத் தங்கம்கூட இருக்காது. ஆனால் அவரது டர்பனில் ஒரே ஒரு சிறிய கடிகாரம் மட்டும் தொங்கிக் கொண்டிருக்கும். வைரக்கற்கள் பதிப்பட்ட கடிகாரம். நடமாடும் கிளாக் டவராக அவர் திரிந்தார்.

வைஸ்ராயோ அல்லது வேறு யாராவது மரியாதைக்குரிய பிரிட்டிஷ் விருந்தினரோ அரண் மனைக்கு வருவதாக இருந்தால் போதும். மகாராஜாக்களின் மூளைக்குள் தடபுடல் ஐடியாக் கள் தறிகெட்டு ஓட ஆரம்பித்துவிடும். தங்கள் பவுசை உயர்த்திக் காட்டும்படி டாம்பீகமாக மட்டுமே யோசிப்பார்கள்.

குவாலியர் மகாராஜா மாதவ் ராவ் சிந்தியா மிகவும் வேடிக்கையானவர். விருந்துக்கு வருபவர்களை எப்படியெல்லாம் வாய் பிளக்க வைக்கலாம் என்று விதவிதமாக யோசிப்பார். அவருக்கு ரயில் மேல் தனிப் பிரியம் உண்டு. அதை வைத்து அழகாக ஒரு திட்டம் தீட்டி செயல்படுத்தினார்.

குவாலியர் அரண்மனையில் விருந்தினருக்கான மேசையில் ஒரே சமயத்தில் இருநூறு பேர் உட்கார்ந்து சாப்பிடலாம். அந்த மேசையின் நடுவே சுமார் நூறு மீட்டருக்கு வெள்ளியினாலான சிறிய தண்டவாளத்தை அமைக்கச் சொன்னார். அந்தத் தண்டவாளத்தில் ஓடுகின்ற அளவில் ஒரு வெள்ளி ரயிலையும் உருவாக்கச் சொன்னார். அழகான சிக்கு புக்கு இன்ஜின், அதன் பின்னால் இணைக்கப்பட்டுள்ள நான்கு பெட்டிகள். முழுவதுமே வெள்ளி. மின்சாரத்தால் இயங்கக்கூடிய மினி ரயில் அது.

விருந்து ஆரம்பிக்கும். அந்த ரயில் பெட்டிகளில் மது வகைகள், உயர்ரக உலர் திராட்சை, சிகரெட், பாதாம், பிஸ்தா சமாசாரங்கள் நிரப்பப்பட்டிருக்கும். விருந்து மேசையில் ஒரு முனையில் நடு நாயகமாக உட்கார்ந்திருக்கும் மகாராஜா, தன் கையில் உள்ள பொத்தானை அழுத்துவார். ரயில் 'விசில்' எழுப்பும். இன்னொரு பொத்தனை அழுத்துவார். ரயில் மெதுவாக நகர ஆரம்பிக்கும். மேசையைச் சுற்றிச் சுற்றி வரும். தேவைப்படும் இடங்களில் மகாராஜா ரயிலை நிறுத்துவார். விருந்தினர்கள் தங்களுக்குத் தேவையானவற்றை எடுத்துக் கொள்வார்கள். மகாராஜாவின் இந்த வெள்ளி ரயில் விளையாட்டில் வந்த விருந்தினர்கள் வாயடைத்துப் போவார்கள்.

1905ல் அடுத்து கிங் ஆகும் தகுதியில் இருந்த ஐந்தாம் ஜார்ஜும் அவரது மனைவி மேரியும் குவாலியர் அரண்மனைக்கு விருந்துக்காக வந்தார்கள். அவர்களை முப்பத்தொரு முறை குண்டு முழங்க வரவேற்ற மகாராஜா மாதவ் ராவ், விருந்தினர் அறைக்கு அழைத்துச் சென்றார். மேசையில் எல்லாமே தயாராக இருந்தன.



சிந்தியாவின் வெள்ளி ரயில்

வழக்கம்போல வெள்ளி ரயிலை ஓட்டிக் காட்டி, ஜார்ஜையும் மேரியையும் அசத்திவிட வேண்டும் என்று சிந்தியாவுக்கு ஆர்வம். அது கோளாறு ஆனது. தன் கையிலிருந்த பொத்தானை அழுத்தினார். 'கூக்கூ..' விசில் எழுப்பியது ரயில். அடுத்த பொத்தானை அழுத்தினார். ரயில் மெதுவாகச் சுற்றி வர ஆரம்பித்தது. ஜார்ஜ், மேரியின் புருவங்கள் அனிச்சையாக உயர்ந்தன. மகாராஜாவின் வாய்ப்பிரதேசத்தில் வழிய வழியப் புன்னகை.

கூக்கூ சத்தத்துடன் அந்த வெள்ளி குட்டி ரயில் ஜார்ஜை நெருங்கியது. பாழாய்ப்போன தண்டவாளத்தில் என்ன பிரச்னையோ தெரியவில்லை, ரயில் தடம் புரண்டது. அதில் நிரப்பப் பட்டிருந்த மது முழுவதும் ஜார்ஜின் மடியில் சொட்டிக் கொண்டிருந்தது. அவரது உடை, அதில் அணிந்திருந்த பதக்கங்கள் எல்லாவற்றுக்கும் மது அபிஷேகம். மேரி பதறி எழுந்தார், தன் உடையிலும் பட்டுவிடக்கூடாதென்று.

மகாராஜா மாதவ் ராவ் முகத்தில் அதிர்ச்சிப் பேரலைகள். அவர் ஆயிரம் 'ஸாரி' கேட்டாலும், சமாதானம் சொன்னாலும் ஜார்ஜ் அந்தச் சம்பவத்தைத் தனக்கு நேர்ந்த அவமானமாகக் கருதினார். பல வருடங்களாக அந்தச் சம்பவத்துக்கு பரிகாரம் தேட நினைத்த மாதவ் ராவ், பின்னர் தனக்குப் பிறந்த மகனுக்கு ஜார்ஜ் என்றும், மகளுக்கு மேரி என்றும் கூடுதல் பெயர் சூட்டினார். அதன்பிறகே ஐந்தாம் ஜார்ஜும் மேரியும் ஒருவழியாகச் சமாதானம் அடைந் தார்கள்.

அதே சமயத்தில் கிங்குக்கே கிலுகிலுப்பைக் காட்டிய ஒரு மகாராஜாவும் இருக்கத்தான் செய்திருக்கிறார். உதய்பூர் மகாராஜா ஃபதே சிங், மிகவும் ஆச்சாரமானவர். ராஜபுத்திரர்களைவிட உயர்ந்தவர்கள் யாருமில்லை என்ற வலுவான எண்ணம் கொண்டவர். எந்தச் சமயத்திலும் பிரிட்டிஷ் அரசுக்கு வளைந்து கொடுக்காதவர். அவரை வழிக்குக் கொண்டுவர நினைத்த பிரிட்டிஷார், The Great Commander of the Star of India என்ற இங்கிலாந்து கிங் அளிக்கும் உயரிய பட்டத்தை வழங்க முன் வந்தார்கள்.

'என்னய்யா பெரிய பட்டம்? பதக்கம், நாலைஞ்சு கல்லு பதிச்ச நட்சத்திரம். அவ்வளவுதானே. அதை என்னோட அரண்மனை வேலைக்காரன்தான் குத்திக்குவான். என்னை அவமானப் படுத்தப் பார்க்கறீங்களா?' - என்று எகிறி, பட்டத்தை வாங்க மறுத்துவிட்டார். ஆனால் ஃபதே சிங்கின் மகன் பூபால் சிங்தான், 'எதுக்குப்பா வம்பு? சும்மா வாங்கி வைச்சுக்குவோம்' என்று சொல்லிப் பட்டத்தை வாங்கிக் கொண்டார்.

பின்பு அந்தப் பதக்கம் ஃபதே சிங்கின் குதிரையின் கழுத்தில் அலங்காரமாகத் தொங்கிக் கொண்டிருந்தது.

# பரோடா

• குஜராத்தின் சமஸ்தானம் • இந்தியாவின் பெரிய சமஸ்தானங்களில் ஒன்று
• தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1734
• ஆட்சி செய்தவர்கள் : கெய்க்வாட் பரம்பரை • முதல் மன்னர் : பிலாஜி ராவ்
• 21 குண்டு மரியாதை.



# 86

# பரோடா மகாராஜாவின் கொலை முயற்சிகள்

அன்றும் வழக்கம்போல ஆரஞ்சுப் பழச்சாறு தயாராக இருந்தது. கொஞ்சம் சீக்கிரமாகவே எழுந்து, காலைக்கடன்களை முடித்துவிட்டு, பழச்சாறு அருந்திவிட்டு, பின் ஜாக்கிங் செல்வது பெய்ரேவின் (Phayre) வழக்கம்.

தனக்காக ஊற்றி வைக்கப்பட்டிருந்த பழச்சாறு நிரம்பிய கண்ணாடி தம்ளரைக் கையில் எடுத்தார். அப்படியே ஜன்னலோரமாகச் சென்றார். காலை நேரக் கதிர்கள் அவர் முகத்தில் விழுந்தன. விடியலின் உன்னதங்களை ரசித்தபடியே, தம்ளரை உதடுகளுக்குக் கொண்டு சென்றார். பழச்சாறை உறிஞ்சும் முன்பே ஏதோ பொறி தட்டியது.

தம்ளரை உதடுகளிலிருந்து பிரித்தார். சற்றே தூக்கி வைத்துக் கூர்ந்து பார்த்தார். சூரியக் கதிர்கள் தம்ளரை ஸ்கேன் செய்தன. தம்ளரின் அடியில் ஏதோ துகள்கள் படிந்திருப்பது தெரிய வந்தது. சட்டென, பழச்சாற்றை முகர்ந்து பார்த்தார். அதில் கூடுதலாக ஏதோ ஒரு நெடியும் கலந்திருந்தது.

தனக்கெதிரானச் சதி என்று புரிந்துகொண்ட பெய்ரே, எந்தவித அதிர்ச்சியையும் வெளிக்காட்டவில்லை. தன் அறையில் யாராவது ஒளிந்திருக்கிறார்களா என்று நோட்டமிட்டார். யாரும் தென்படவில்லை. அந்த தம்ளரை அறையில் ஓரிடத்தில் ஒளித்து வைத்தார்.

'மிஸ்டர். சேவார்ட், விஷயம் வெளியில் யாருக்கும் தெரிய வேண்டாம். முடிவை என்னிடம் மட்டும் சொல்லுங்கள், ரகசியமாக.'



மகாராஜா மல்ஹர் ராவ்

ஐரோப்பிய மருத்துவரான சேவார்ட், அந்தப் பழச்சாற்றை வாங்கிக் கொண்டு போனார். சோதனை செய்தார். அன்று மாலையே பெய்ரேவிடம் முடிவைச் சொன்னார். 'அந்தப் பழச் சாற்றில் ஆளைக் கொல்லும் ஆர்சனிக்கும், வைரத் துகள்களும் கலந்திருக்கின்றன.'

வெலவெலத்துப் போனார் பெய்ரே. அவர் பரோடா சமஸ்தானத்தின் பிரிட்டிஷ் ரெஸிடெண்ட். அன்றோடு பரோடாவில் அவரது பதவிக்காலம் முடிவடைகிறது. கிளம்புவதற்கு முந்தைய தினத்தில் இப்படி ஒரு கொலை முயற்சி நடந்தால்?

'சந்தேகமே இல்லை, இது மகாராஜா மல்ஹர் ராவின் சதியாகத்தான் இருக்கும். பேச வேண்டிய இடத்தில் பேசி எடுக்க வேண்டிய நடவடிக்கையை எடுக்கிறேன்' பெய்ரே, எந்தவிதச் சலனத்தையும் ஏற்படுத்தாமல் பரோடாவை விட்டுக் கிளம்பினார்.

பரோடோ சுமார் எட்டாயிரம் சதுர மைல்கள் பரப்பளவு கொண்டது. இந்தியாவின் மிகப்பெரிய சமஸ்தானங்களில் ஒன்று. குஜராத்தின் தோட்டம் என்றொரு செல்லப் பெயர் அதற்கு உண்டு. செல்வச் செழிப்புள்ள மராத்திய வம்சாவளி சமஸ்தானம். இந்தியாவின் டாப் 5 பணக்கார சமஸ்தானங்களில் பரோடா கெய்க்வாட் ராஜ குடும்பத்துக்கான இடம் மூன்று. ஆகவே அதன் மகாராஜாக்கள் இருபத்தியோரு குண்டு மரியாதையை அனுபவித்தார்கள். கம்பு, பருத்தி, சோளம் ஆகியவை முக்கியப் பயிர்கள், அப்புறம் பழ வகைகள். 1877ன் கணக்குப்படி அதன் மக்கள்தொகை இரண்டு லட்சம், ஆண்டு வருமானம் இருபது லட்சம் பவுண்ட்.



ரெஸிடெண்ட் பெய்ரே

முகலாயர் ஆட்சிக் காலத்தில், அதிகாரத்திலிருந்த ஒருவர் பசுக்களை இறைச்சிக்காகத் தன் கோட்டைக்குள் அடைத்து வைத்திருந்தாராம். மராத்தியர் ஒருவர், அந்தக் கோட்டையிலுள்ள சிறு கதவு ஒன்றைத் திறந்துவிட்டு, பசுக்களைத் தப்பிக்க வைத்தாராம். 'கெய்' என்றால் பசு, 'க்வாட்' என்றால் கதவு, அதிலிருந்து உருவான பெயரே 'கெய்க்வாட்.'

அவரது பரம்பரையில் வந்த பிலாஜி ராவ் கெய்க்வாட் (Pilaji Rao Gaekwad) என்ற மராத்திய தளபதி, 1734ல் முகலாயர்களைத் தோற்கடித்து பரோடாவைக் கைப்பற்றினார். அதிலிருந்து அவரது பரம்பரையினரின் ஆட்சி ஆரம்பமானது.

1818 வரை நடந்த பிரிட்டிஷ் மராத்தியர்கள் போர்கள் வரை பரோடாவும் பிரிட்டிஷுக்கு எதிரான நிலைப்பாட்டில்தான் இருந்தது. அதன் பின்னர், வந்த ஆட்சியாளர்கள், பிரிட்டிஷாரின் ஆதரவாளர்கள் ஆகிப் போனார்கள். 1857. சிப்பாய்க் கலகம் ஆரம்பமான சமயம். அப்போது பரோடா சமஸ்தானத்தை ஆண்டு வந்தவர், இரண்டாம் கண்டே ராவ் கெய்க்வாட் (Khande Rao II Gaekwad). அவர் சிப்பாய்க் கலகத்தை ஒடுக்குவதற்காகப் பிரிட்டிஷாருக்குப் பெரிதும் உதவினார். ஆகவே அவர்களது செல்லமாகிப் போனார்.

பிரிட்டிஷ் அரசு அவருக்கு கௌரவப் பட்டங்களையும் பதக்கங்களையும் பரிசுகளையும் வாரி வாரி வழங்கியது. பரோடா சமஸ்தானத்துக்காக ஒதுக்கப்படும் நிதியின் அளவு பெருகியது. கண்டே ராவுக்கு அதுவரை ஆண் வாரிசு பிறக்கவில்லை. அவர் யாரை வேண்டுமானாலும் தத்தெடுத்து தனது வாரிசாக அறிவித்துக் கொள்ளலாம் என்ற உரிமை வழங்கப்பட்டது.

பிரிட்டிஷாரின் ஜால்ராவாக இருந்தாலும் அதன் மூலம் சமஸ்தானத்துக்கு நல்லது செய்ததால், கண்டே ராவுக்கு மக்கள் ஆதரவும் இருந்தது.

எல்லாவற்றையும் மனம் நிறைய வன்மத்துடன் கவனித்துக் கொண்டே இருந்தார் மல்ஹர் ராவ் (Malhar Rao). அவர் கண்டே ராவின் இளைய சகோதரர். ஆண் வாரிசு இல்லாத தன் அண்ணன் இறந்த பிறகு, தான் ஆட்சிக்கு வந்துவிடலாம் என்பது மல்ஹர் ராவின் கனவு. ஆனால் அவர் யார் பெத்த பிள்ளையையோ தத்தெடுத்து, தன் வாரிசாக அறிவித்துவிட்டால் அபாயமாயிற்றே.

வேறு வழியில்லை, எனக்கு அரியணைதான் வேண்டும். அண்ணன் வேண்டாம்.

கண்டே ராவுக்குப் பாசக்கயிறைப் பரிசளிக்கத் திட்டம் தீட்டினார் மல்ஹர் ராவ். உள்ளூர் ஆள்களை காரியத்தில் ஈடுபடுத்தினால் விஷயம் வெட்ட வெளிச்சமாகிவிடும். யாராவது வெள்ளைக்காரனை வைத்துக் கொல்வதுதான் சரி.

ஒரு பிரிட்டிஷ்காரனைப் பிடித்தார். அவன் கை நிறைய நகைகளைத் திணித்தார். மகா ராஜாவைச் சுட்டுக் கொன்று விடு என்றார். அந்தக் கொலைக்கான முகூர்த்த நேரத்தில், துப்பாக்கியுடன் உரிய இடத்துக்கு வந்த அந்த பிரிட்டிஷ்காரன், பரோடாவின் காவலர்களிடம் சிக்கிக் கொண்டான். சதி அம்பலமானது. 'அந்த நாயைத் தூக்கிச் சிறையில் போடுங்கள்' கர்ஜித்தார் கண்டே ராவ்.

அரியணைக்குக் குறி வைத்த மல்ஹர் ராவுக்குத் தனிச்சிறை கிடைத்தது. அதுவும் மிகவும் குறுகலான, வெளிச்சமே இல்லாத கொடுமையான சிறை. இந்தச் சம்பவம் நடந்த ஆண்டு 1863.

நடந்த சதியில் கண்டே ராவ் அதிர்ந்து போனார். பரோடாவின் தட்ப வெப்பநிலையும் அவருக்கு ஒத்துவரவில்லை. ஆகவே, பரோடாவிலிருந்து மூன்று மைல்கள் தொலைவிலுள்ள மகர்புரா (Maharpura) என்ற கிராமத்துக்கு இடம் மாற முடிவு செய்தார். அங்கே அம்சமான ஓர் அரண்மனையைக் கட்டி, குடிபெயர்ந்தார். 1870 வரை அவர் நான்கு பெண்களைத் திருமணம் செய்திருந்தார். ஆனால் பிறந்த ஆண் குழந்தைகள் எதுவும் நிலைக்கவில்லை.

நாளாக நாளாகத் தன் அண்ணனின் உடல்நிலை மோசமாகி வருகிறது என்ற தகவலே, மல்ஹர் ராவுக்கு மன மகிழ்ச்சியைக் கொடுத்தது. எப்போது இழவுச் செய்தி வரும் என்று காத்திருக்க ஆரம்பித்தார், ஆவலாக. 1870, நவம்பர் 28ல் அந்தச் செய்தியும் வந்து சேர்ந்தது.

கண்டே ராவ், இறந்து போனார். அவர் தனது வாரிசாக யாரையும் தத்தெடுக்கவும் இல்லை. அப்போது பரோடாவின் ரெஸிடெண்டாக இருந்த கர்னல் பார் (Col. Barr), சிறைக்குச் சென்றார். ரெஸிடெண்டே தன்னைத் தேடி வந்ததும் மல்ஹர் ராவுக்கு மனம் கொள்ளாத மகிழ்ச்சி. யாருக்குக் கிடைக்கும் இந்த வாய்ப்பு. நேற்று வரை சிறைக்கைதி. இன்று மகாராஜா. அரியணைக்கு ஆசைப்பட்டுக் கொலை முயற்சியில் ஈடுபட்டதால்தான் சிறை தண்டனையே கிடைத்தது. ஆனால் இப்போது வேறு வழியில்லை. தேடி வருகிறது ராஜ பதவி!

குதூகலமாக வெளியே வந்தார். பார், அவரை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றார். பின் பேசினார். 'தங்களைத்தான் பிரிட்டிஷ் அரசு தேர்ந்தெடுத்துள்ளது.'

'நன்றி. நான் எப்போது பதவி ஏற்றுக் கொள்ளலாம்?'

'மன்னிக்க வேண்டும். தாங்கள் தற்சமயத்துக்குப் பரோடாவின் நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்ளும் பிரதிநிதியாக மட்டுமே செயல்பட முடியும். மகாராஜாவாக அல்ல. காரணம், இறந்து போன கண்டே ராவின் மனைவி கர்ப்பமாக இருக்கிறார். அவருக்கு ஆண் குழந்தை பிறந்தால், அதுதான் பட்டத்து வாரிசு.'

கொதிகொதித்துப் போனார் மல்ஹர் ராவ். ரெஸிடெண்டுக்கு விடை கொடுத்துவிட்டுத் தனது ஆதரவாளர்களை வரவழைத்து ஆலோசனை செய்ய ஆரம்பித்தார்.

கண்டே ராவின் மூன்றாவது மனைவியான பதினேழு வயது ஜம்னா பாய்தான் (Jamna Bai) அப்போது கர்ப்பமாக இருந்தார். ஜம்னாவுக்குப் பெண் குழந்தை பிறந்துவிட்டால் எந்தப் பிரச்னையும் இல்லை, ஆனால் தப்பித் தவறி ஆண் குழந்தை பிறந்துவிட்டால்? நான் இத்தனை வருடங்கள் அனுபவித்த சிறைத் தண்டனைக்கு ஓர் அர்த்தம் இருக்க வேண்டாமா?

அரண்மனைக்குள் உணவில் விஷம் கலப்பதென்பது பலசரக்குக் கடையில் சர்க்கரையில் ரவை கலப்பது போல சாதாரண விஷயம். ஜம்னா பாயின் உணவில் விஷம் வைக்க ஏற்பாடு செய்தார் மல்ஹர் ராவ். ஆனால் ஜம்னா பாய் அடுத்தவர்கள் கொடுக்கும் உணவைத் தொடவே இல்லை. தானே சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். விழித்திருக்கும்போது பிரச்னையில்லை, தூங்கும்போது யாராவது வந்து கழுத்தை நெறிக்க வந்தால்? நாய் ஒன்றைத் தன்னுடனேயே வைத்துக் கொண்டார். படுக்கையை அந்த நாய் காவல் காத்தது. எல்லாவித சதிகளையும் கடந்து, நல்ல விதமாக குழந்தையைப் பிரசவிக்க வேண்டும் என்பதில் மிகக் கவனமாக இருந்தார் ஜம்னா பாய்.

பிரசவ நேரம் நெருங்க நெருங்க, மல்ஹர் ராவுக்கு மண்டை காய்ந்தது. 1871 ஜூலையில் பிறந்த அந்தக் குழந்தை பெண் ஜென்மம் எடுத்திருந்தது. இதற்கு மேலும் தான் இங்கிருந்தால் ஆபத்து என்று உணர்ந்த ஜம்னா பாய், குழந்தையோடு பூனாவுக்கு இடம் மாறினார்.

தன் கொண்டாட்டங்களைக் குதூகலமாகத் தொடங்கினார் மகாராஜா மல்ஹர் ராவ். ஆனால் அன்றைய தினத்திலிருந்து பரோடாவில் சீர்கேடுகளுக்கான கொண்டாட்டங்களும் தொடங்கின. மக்கள் நலன் பற்றி அக்கறைப்படாத அவர், தனக்கான சொத்துச் சேர்ப்பில் மட்டுமே கவனம் செலுத்தினார். அவருக்குக் கீழிருந்த அதிகாரிகளும் லஞ்சமே லட்சியமாகக் கொண்டு தங்கள் கடமைகளைச் செய்தார்கள். மக்கள் மீதான வரிச்சுமை அதிகரித்துக் கொண்டே சென்றது.

நகைகள் மீதும் அலங்காரப் பொருள்கள் மீதும் தீராத மோகம் கொண்டிருந்த மல்ஹர் ராவ், தன் அரியணைக்கு இருபுறமும் தங்கத்தாலான இரண்டு மினி பீரங்கிகள் செய்துவைத்துக் கொண்டார். மதீனாவுக்கு அளிப்பதற்காக நெய்யப்பட்ட, முத்துக்கள் பதிக்கப்பட்ட கம்பளம் ஒன்றைத் தானே வைத்துக் கொண்டார். உலகப் புகழ்பெற்ற வைரங்களை வாங்குவதில் ஆர்வம் காட்டினார். இப்படி ஏகப்பட்ட ஆடம்பரச் செலவுகள்.

'இவர் ஆட்சி செய்ய லாயக்கில்லாதவர்' - என்று முடிவு செய்தார் பெய்ரே. கர்னல் பாருக்கு அப்புறமாக பரோடாவின் ரெஸிடெண்டாக வந்தவர்தான் பெய்ரே. ஆரம்பம் முதலே பெய்ரேவுக்கும் மல்ஹர் ராவுக்கும் எந்த விதத்திலும் ஒத்துப் போகவில்லை. ஒரு ரெஸிடெண்டாக பெய்ரே, அரசுக்கு அனுப்பும் அறிக்கைகள் எல்லாம் மல்ஹர் ராவுக்கு எதிராகவே இருந்தன. அதேபோல, மல்ஹர் ராவ் எடுக்கும் முடிவுகள் எதையும் பெய்ரே ஏற்றுக் கொள்ளவில்லை.

மல்ஹர் ராவின் நிர்வாகத்தைப் பற்றி விசாரிக்க, பிரிட்டிஷ் அரசு கர்னல் மேடே (Col. Meade) என்பவரது தலைமையில் கமிஷன் ஒன்றை பரோடாவுக்கு அனுப்பியது. மேடே வந்தார். விசாரித்தார். தனது அறிக்கையையும் கொடுத்தார். 'ம்ஹூம், தேறமாட்டார்' என்று. பிரிட்டிஷ் அரசு மல்ஹர் ராவுக்குக் கடிதம் ஒன்றை அனுப்பியது. 'மதிப்புக்குரிய மகாராஜா, தாங்கள் தங்கள் நிர்வாகத்தை முறைப்படுத்தாவிட்டால், சீர்கேடுகளைக் களையாவிட்டால், நாங்கள் உங்களைக் களைய வேண்டியதிருக்கும்.'

மல்ஹர் ராவுக்கு இரண்டு மனைவிகள். ஆனால் இருவர் மூலமாகவும் பெண் குழந்தைகளே பிறந்திருந்தன. தனக்கு அடுத்த வாரிசு யாரென்ற கவலை மல்ஹர் ராவைப் படுத்தத் தொடங்கியது. ஒருநாள், பரோடாவை வலம் வரும்போது, பார்வதி என்ற பெண்ணைப் பார்த்தார். பிடித்திருந்தது. பிடித்து வரச் சொன்னார்.

பார்வதி, ஏற்கெனவே திருமணமான பெண். ஆனால் மகாராஜா விரும்பிவிட்டார். எனவே யாராலும் எதிர்க்க முடியவில்லை. அந்தப் பெண்ணின் மூலம், மல்ஹர் ராவுக்கு ஓர் ஆண் வாரிசு பிறந்தது. அந்தக் குழந்தைக்கு வேங்கட் ராவ் கெய்க்வாட் என்று பெயர் சூட்டி மகிழ்ந்த மல்ஹர் ராவ், அதனைப் பட்டத்து இளவரசராக அங்கீகரிக்கும்படி ரெஸிடெண்டுக்குக் கோரிக்கை அனுப்பினார்.

'முறையில்லாத திருமணம். முறையற்ற வாரிசு. முடியாது' என்று மறுப்பு தெரிவித்தார் பெய்ரே.

எனவே பரோடோவில் அவருக்கான இறுதி நாளில், ஆர்சனிக்கும் வைரத் துகள்களும் கலந்த ஆரஞ்சு பழச்சாறு காத்திருந்தது.



# மாடு மேய்த்தாலும் இளவரசராகலாம்!

ஒரு சமஸ்தானத்தின் ரெஸிடெண்டைக் கொல்ல முயற்சி நடந்திருக்கிறது, அதுவும் அதன் பின்னணியில் இருப்பது சமஸ்தானத்தின் மகாராஜாவாகவே இருக்கலாம் என்றால், பிரிட்டிஷ் அரசு பியானோ வாசித்துக் கொண்டிருக்குமா என்ன? யாரங்கே உடனே ஒரு விசாரணைக் கமிஷனை அமையுங்கள் என்று ரகசியமாக உத்தரவிட்டது.

தலைமை நீதிபதி ரிச்சர்ட் கௌச்சின் (Richard Couch) தலைமையில் ஒரு கமிஷன் சத்தமில்லாமல் விசாரிக்க ஆரம்பித்தது. அதே நேரத்தில் பெய்ரேவின் இடத்தில் புதிய ரெஸிடெண்டாக லூயிஸ் பெல்லி (Lewis Pelly) என்பவர் பொறுப் பேற்றிருந்தார். பெல்லி, ரிச்சர்ட் கௌச்சின் குழுவினரின் விசாரணைக்குத் தேவையான எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார், யாருக்கும் சந்தேகம் வராமல்.

அதே நேரத்தில் ஒரு ரெஸிடெண்டாக, பரோடா மகாராஜா மல்ஹர் ராவ் கெய்க் வாட்டிடம் மரியாதையாகப் பழகினார். அடிக்கடி அரண்மனைக்குச் சென்றார். நெருக்கமானவராகக் காட்டிக் கொண்டார். 'பெய்ரேவை விட இவர் எவ்வளவு நல்லவராக இருக்கிறார்' மனம் மகிழ்ந்தார் மல்ஹர் ராவ்.

முதல் கட்ட விசாரணையில், பெய்ரேவுக்குப் பணிவிடை செய்த வேலையாள் கைது செய்யப்பட்டு ரகசியமாக விசாரிக்கப்பட்டான். பின்னர் ரெஸிடெண்ட் மாளிகையின் சமையல்காரனும் அங்கிருந்த ஆயாவும் விசாரிக்கப்பட்டார்கள்.

முதலில் தங்களுக்கு எதுவுமே தெரியாது என்று மறுத்தவர்கள், பின்பு வாங்க வேண்டியவற்றை வாங்கிக் கொண்டு, 'ஆமாங்க எசமான், அந்த சர்பத்துல விஷம் கலந்திருந்தது உண்மைதான்' என்று ஒப்புக் கொண்டார்கள்.

'இந்த மாபெரும் சமஸ்தானத்தின் மகாராஜாவாகிய நீங்கள், என்னுடைய மாளிகைக்கு வந்து விருந்து சாப்பிட்டால் எனக்குப் பெருமிதமாக இருக்கும். நாளை காலையில் வருகிறீர்களா? ஏற்பாடுகளைச் செய்துவிடவா?' - பெல்லி, மல்ஹர் ராவிடம் அன்பொழுகக் கேட்டார். ஒரு ரெஸிடெண்ட், அரண்மனை தேடி வந்து விருந்துக்கு அழைக்கிறார். மறுக்க முடியாதே. வருவதாகச் சொன்னார் மல்ஹர் ராவ்.

மறுநாள் காலையில் நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட, முழுவதும் மூடப்பட்ட சாரட் வண்டியில் ஏறி அமர்ந்தார் மகாராஜா மல்ஹர் ராவ். சாரட்டின் பக்கவாட்டுப் பகுதிகளில் பாதுகாவலர்கள், சுற்றிலும் சில குதிரை வீரர்கள் சூழ ரெஸிடெண்டின் அரண்மனையை நோக்கி அந்த வண்டி விரைந்தது.

ரெஸிடெண்ட் பெல்லி, மகாராஜாவை வாசலிலேயே வந்து வரவேற்றார். அந்த மாளிகையைச் சுற்றிலும் வழக்கத்தைவிட அதிகமாக பிரிட்டிஷ் காவலர்கள் தென்பட்டார்கள். மாளிகையின் வரவேற்பறைக்குச் சென்று அமர்ந்த மல்ஹர் ராவ், அருகில் அமர்ந்த பெல்லியிடம் வழக்க மான குசல விசாரிப்புகளை மேற்கொண்டார். அந்த நேரத்தில் சில பிரிட்டிஷ் காவலர்கள் வேகமாக உள்ளே வந்து விறைப்பாக நின்றார்கள். மல்ஹர் ராவுக்கு ஒன்றுமே புரியவில்லை. பெல்லி எழுந்தார். மகாராஜாவின் கண்களை அழுத்தமாகப் பார்த்தார். தனது வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டே பேச ஆரம்பித்தார்.

'சொல்வதற்குக் கஷ்டமாகத்தான் உள்ளது. ஆனால் அது என் கடமை. வலி நிறைந்த கடமை. பிரிட்டிஷ் அரசின் சார்பாக நான் உங்களைக் கைது செய்கிறேன்.'

அதிர்ச்சியில் எழுந்து நின்றார் மல்ஹர் ராவ். 'இதை நான் எதிர்பார்க்கவில்லை. விருந்து என்றுதானே அழைத்தீர்கள். விருந்தினரை நடத்தும் முறையா இது?'

'தாங்கள் சொல்வது புரிகிறது மகாராஜா. வேண்டுமானால் ஒன்று செய்யுங்கள். தாங்கள் தங்கள் வண்டியில் ஏறி சமஸ்தானத்தின் எல்லையைத் தாண்டிச் சென்று நில்லுங்கள். நான் அங்கு வந்து உங்களைக் கைது செய்கிறேன்.'

'எதற்காக என்னைக் கைது செய்யப் போகிறீர்கள்? அதை முதலில் சொல்லுங்கள்.'

'முன்னாள் ரெஸிடெண்ட் பெய்ரேவைக் கொலை செய்ய முயற்சி செய்ததாக உங்கள் மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது.' அதற்கு மேல் மல்ஹர் ராவ் எதிர்த்துப் பேசவில்லை. கண்கள் கலங்க, சூழ்நிலையை சென்டிமென்டாகத் தனக்குச் சாதகமாக மாற்றிக் கொள்ள முயற்சி செய்தார். 'தயவுசெய்து யோசித்துப் பாருங்கள். ஒரு மகாராஜாவாகிய என்னை நீங்கள் கைது செய்து மக்கள் மத்தியில் கொண்டு சென்றீர்கள் என்றால் என் கௌரவம் என்ன ஆவது?' கெஞ்சல் பாணியில் வார்த்தைகளை வெளிவிட்டார்.

'மகாராஜா ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். இது வைஸ்ராயின் உத்தரவு. நான் அதை நிறைவேற்றும் ஊழியன். அவ்வளவே.'

சில நிமிடங்களுக்கு அமைதியாக இருந்தார் மல்ஹர் ராவ். நாற்காலியில் அமர்ந்தார். முகத்தை இரு கைகளாலும் மூடிக்கொண்டு, தலையைக் குனிந்தபடி உட்கார்ந்திருந்தார். பிறகு எழுந்தார். 'வாருங்கள் போகலாம்' என்றபடி விருட்டென வாசலை நோக்கி நடந்தார். தனக்குப் பக்கவாட்டில் வந்த பாதுகாவலனின் காதில் கிசுகிசுத்தார். அவன் ஓடிச் சென்று சாரட் சாரதியின் காதில் சென்று விஷயத்தை ஓதினான். விறுவிறுவென வந்த மல்ஹர் ராவ், சாரட்டில் ஏறியதுமே அது அங்கிருந்து நாலாவது கியரில் கிளம்பியது.

இப்படியெல்லாம் நடக்கும் என்று பெல்லிக்குத் தெரியும். மகாராஜா என்ன சமஸ்தானத்தை விட்டு ஓடியா போய்விடப் போகிறார்? பரோடா நகரம் முழுவதும் தேடிச் சென்று சுற்றி வளைக்கச் சொல்லி, பிரிட்டிஷ் காவலர்களுக்கு உத்தரவிட்டார். தேவைப்பட்டால், பிரிட்டிஷ் படைகளைக் களத்தில் இறக்கவும் தயாராகவே இருந்தார்.

மல்ஹர் ராவால் எங்கும் தப்பிச் செல்ல முடியவில்லை. அடுத்த அரை மணி நேரத்துக் குள்ளாகவே அவரது சாரட் சுற்றி வளைக்கப்பட்டது. அந்த இடத்துக்கு பெல்லி விரைந்தார். 'மகாராஜா வெளியே வாருங்கள்.' மல்ஹர் ராவ் மெதுவாக வெளியே வந்தார். 'வைஸ்ராயின் உத்தரவுப்படி நான் உங்களைக் கைது செய்கிறேன்.'

இந்தமுறை மல்ஹர் ராவால் ஆட்டம் காட்டமுடியவில்லை. அவர், பிரிட்டிஷ் பாதுகாவலர்கள் சூழ, வீட்டுக் கைதியாக காவலில் வைக்கப்பட்டார். 'நம்ம மகாராஜாவை வெள்ளைக்காரனுங்க கைது பண்ணிட்டாங்க' - பரோடாவின் வீதிகளில் சில குதிரை வீரர்கள் செய்தி பரப்ப, ஆங் காங்கே பதற்றம் தொற்றிக் கொண்டது. பரோடா சமஸ்தானத்தின் வீரர்கள் ஆங்காங்கே கூடினார்கள். எப்படியும் கலவரம் ஏற்படும் என்ற சூழல்.

அடுத்த சில மணி நேரங்களில் பிரிட்டிஷ் படை பரோடா நகருக்குள் நுழைந்தது. அரண்மனை உள்பட, முக்கிய இடங்களைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தது. சமஸ்தானத்தின் தலைமைத் தளபதி, மகாராஜாவைச் சந்திக்க அனுமதிக்கப்பட்டார். 'அமைதியாக இருங்கள்' என்று தன் தளபதியிடம் கேட்டுக் கொண்டார் மல்ஹர் ராவ்.

சில வாரங்கள் கழிந்தன. பரோடாவில் வைத்தே மல்ஹர் ராவ் மீதான விசாரணை நடந்தது. ஆறு பேர் கொண்ட விசாரணைக் கமிஷன் அது. ரிச்சர்ட் கௌச், மேடே, சர் பிலிப் மெல்விலே (Philip Melvile) ஆகிய மூன்று ஐரோப்பியர்கள். குவாலியர் மகாராஜா ஜெயாஜி ராவ் சிந்தியா, ஜெய்ப்பூர் மகாராஜா ராம்சிங், பல சமஸ்தானங்களில் பல்வேறு உயர்பதவிகள் வகித்த சர் தின்கர் ராவ் (Dinkar Rao) ஆகிய மூன்று இந்தியர்கள். மல்ஹர் ராவ் சார்பாக வாதாடுவதற்காக பாரிஸ்டர் பேலண்டைன் (Ballantine) என்ற படா வக்கீல் லண்டலிருந்து வரவழைக்கப் பட்டிருந்தார். அவருக்குப் பேசப்பட்டிருந்த பணம் ஐம்பதாயிரம் பவுண்ட். விசாரணை மொத்தம் 19 நாள்கள் நடந்தது.

ரெஸிடெண்ட் மாளிகையின் பணியாளர்கள், பாதுகாவலர்கள் என்று ஒவ்வொருவராக விசாரிக்கப்பட்டார்கள். விசாரணையின் ஐந்தாவது நாளில் முன்னாள் ரெஸிடெண்ட் பெய்ரே கலந்து கொண்டார். கடைசி சாட்சியாக ஆரஞ்சு பழச்சாறைச் சோதனை செய்த மருத்துவர் சேவார்ட், தன் வாக்குமூலத்தைக் கொடுத்தார். முடிவில் விசாரணைக் கமிஷனில் இருந்த ஐரோப்பியர்கள் மூவரும், பெய்ரேவின் கொலை முயற்சியின் பின்னணியில் மல்ஹர் ராவ் இருப்பதாக முடிவுக்கு வந்தார்கள். ஆனால் இந்தியர்கள் மூவரும் மல்ஹர் ராவுக்கு ஆதரவாக இருந்தார்கள்.

இழுபறியான சூழ்நிலையில் வைஸ்ராய் நார்த்ப்ரூக் (Northbrook), தனது இறுதித் தீர்ப்பை அறிவித்தார். அதன்படி, மல்ஹர் ராவின் மகாராஜா பதவி பறிக்கப்பட்டது. பெய்ரேவின் கொலை முயற்சிக்காக அல்ல, அதுவரை அவரது நிர்வாகத்தில் நடந்த சீர்கேடுகளுக்காக.

மல்ஹர் ராவ், வலுக்கட்டாயமாக பரோடாவிலிருந்து வெளியேற்றப்பட்டார். பட்டம், பதவி, அரியணை, அதிகாரம் எல்லாம் பறிக்கப்பட்டு, மெட்ராஸில் ஒரு மாளிகையில் பிரிட்டிஷாரின் மேற்பார்வையில், டம்மியாக வாழ ஆரம்பித்தார்.

மல்ஹர் ராவைப் பதவியிலிருந்து விரட்டியதற்கு எதிராக நாடெங்கும் மராத்தியர்கள் கொந்தளிப்பில் இருந்தார்கள். குறிப்பாக பரோடாவில் சூழல் சூடாகவே இருந்தது. எனவே பூனாவிலிருந்து முன்னாள் மகாராஜா கண்டே ராவின் மனைவியான ஜம்னா பாய் வர வழைக்கப்பட்டார். 'நீங்கள் ஓர் ஆண் வாரிசைத் தத்தெடுத்துக் கொள்ளுங்கள். பட்டத்து இளவரசராக அங்கீகரிக்கிறோம்' என்று பிரிட்டிஷ் அரசு அவருக்கு உரிமை கொடுத்தது.

யாரையாவது தேர்ந்தெடுத்துவிட முடியுமா என்ன? தனது கணவரது கெய்க்வாட் பரம் பரையிலேயே ஆண் வாரிசைத் தேட உத்தரவிட்டார் ஜம்னா பாய். அமைச்சர்கள், பரம்பரை யின் சொந்தக்காரர்கள், சொக்காரர்கள், ஒன்று விட்டவர்கள் என கிளைகளைத் தேடி ஊர் ஊராக, கிராமம் கிராமமாக அலைய ஆரம்பித்தார்கள்.

அந்தச் சமயத்தில் கந்தேஷ் என்ற குக்கிராமத்தில் காசி ராவ் தனது நிலத்தில் வியர்வை சொட்டச் சொட்ட உழுது கொண்டிருந்தார். கூடவே அவரது மனைவியும். அவர்களுக்கு மூன்று ஆண் பிள்ளைகள். இரண்டாவது மகனான கோபால் ராவ் (Gopal Rao), தன் பெயருக்கு ஏற்ப ஆடு, மாடுகளுக்கு கிளை ஒடித்துப் போட்டுக் கொண்டிருந்தான். மற்ற இரண்டு மகன் களும் வீட்டுக்கு வெளியே பானை செய்து கொண்டிருந்தார்கள். மிகவும் ஏழைமையான குடும்பம். தினமும் அரை வயிற்றுக்குச் சாப்பிட்டாலே உத்தமம்.

காசி ராவின் காதுகளுக்கு அரண்மனையில் பட்டத்து வாரிசைத் தேடுகிறார்கள் என்ற செய்தி எப்படியோ வந்து சேர்ந்தது. அவரும் கெய்க்வாட் பரம்பரைதான். அவரது முன்னோர்கள், ராஜ குடும்பத்தினருக்குத் தூரத்துச் சொந்தக்காரர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறார். தனது மூன்று மகன்களில் யாருக்காவது அந்த அதிர்ஷ்டம் அடித்தால் வறுமை எல்லாம் தீர்ந்துவிடும் என்ற நினைப்பில் குடும்பத்தோடு கிளம்பினார். முந்நூறு மைல்கள் செல்ல வேண்டும். ரயிலில் செல்ல பணத்துக்கு எங்கே போவது? எனவே, நடந்தார்கள்.

பரோடா நகரை அடைந்தார்கள். ஊருக்கு வெளியே குளத்தில் குளித்துவிட்டு, அவர்களிட மிருந்த அழுக்கு ஆடைகளைத் துவைத்தார்கள். அவை காயும் வரைக் காத்திருந்தார்கள். பின்பு உடுத்திக் கொண்டு அரண்மனைக்குக் கிளம்பினார்கள்.

அரண்மனையில் கெடுபிடி கொஞ்சம் அதிகமாகத்தான் இருந்தது. காசி ராவ் எப்படியோ போராடி தான் வந்த விஷயத்தை விளக்கினார். அங்கே வந்த அமைச்சர் ஒருவர் காசி ராவின் குடும்ப விவரங்களை, வேர்களை எல்லாம் தெளிவாகக் கேட்டுச் சரி பார்த்தார். காசி ராவ், தான் கெய்க்வாட் பரம்பரைதான் என்பதை நிரூபிக்கும் வகையில் கையில் பரம்பரை வளையம் ஒன்றைக் கொண்டு வந்திருந்தார். அனுமதி கிடைத்தது.

அரண்மனைக்குள் நுழைந்த அந்த ஏழைக் குடும்பத்தினருக்குத் திரும்பிய பக்கமெல்லாம் பிரமிப்பு. பிளந்த வாயை மூட முடியவில்லை. காசி ராவுக்கு உள்ளே நுழைந்ததே பெருமிதமாக இருந்தது. பிரம்மாண்டமான ஓர் அறையில் மகாராணிக்காகக் காத்திருந்தார்கள்.

சில நிமிடங்களில் ஜம்னா பாய் வந்தார். அந்த அமைச்சர், காசிராவின் குடும்ப விவரங்களை விளக்கினார். பின்பு ஜம்னா பாய், மூன்று சிறுவர்களிடமும் ஒரே ஒரு கேள்வியை மட்டும் கேட்டார்.

'எதற்காக பரோடாவுக்கு வந்திருக்கிறீர்கள்?'

'ஊர் சுற்றிப் பார்க்க.' - இது முதல் மகனுடைய பதில்.

'?' - மூன்றாவது மகனுக்குப் பதில் தெரியவில்லை.

'நான் பரோடாவை ஆட்சி செய்ய வந்திருக்கிறேன்' - இது இரண்டாவது மகனான கோபால் ராவின் பதில். அந்தக் கம்பீரமான வார்த்தைகளில் அசந்துபோன ஜம்னா பாய், கோபால் ராவை அள்ளி அணைத்துக் கொண்டார். அரண்மனைப் பண்டிதர்கள் வரவழைக்கப்பட்டார்கள். கோபால் ராவின் பிறந்த நாள், நேரத்தை வைத்து ஜாதகம் கணிக்கப்பட்டது. அலசி ஆராயப் பட்டது. 'யோகமான ஜாதகம்தான். ராஜ அம்சம் ஓஹோ. தாராளமா அரியணை ஏத்தலாம். பல காலம் வெற்றிகரமாக ஆட்சி புரிவார். இவரோட ஆட்சிக் காலத்துல செல்வம் பெருகும், மக்கள் எல்லாம் சுபிட்சமா இருப்பா!'

மாடு மேய்த்துக் கொண்டிருந்த பன்னிரண்டு வயதுச் சிறுவன் கோபால் ராவ், 1875, மே 25 அன்று பட்டத்து இளவரசராக பிரிட்டிஷாரால் அங்கீகரிக்கப்பட்டார்.



# தஞ்சாவூர் ராணி, கும்பகோணம் திவான்

அதிசய உலகத்துக்குப் போன அலிஸ் போல, ஆச்சரியங்களால் திக்குமுக்காடிப் போனான் கோபால் ராவ். இருக்காதே பின்னே? அரை வயிற்றுக்கு கூடக் கஞ்சியில்லாமல், கால்நடைகளோடு காடு, கழனி சுற்றிக் கொண்டிருந்த சிறுவனுக்கு, செல்வச் செழிப்புமிக்க சமஸ்தானத்தின் அரியணையில் அல்லவா இடம் கிடைத்திருக்கிறது. முதல் சில நாள்களுக்கு அவனது முகத்தில் வியப்பு தவிர வேறெந்த உணர்வும் வெளிப்படவில்லை.

அவனது குக்கிராமத்தில் யாருமே அவனை ஒரு பொருட்டாக மதித்தது கிடையாது. 'ஏலே கஞ்சி குடிச்சியாலே?' என்று அவனது பெற்றோர்கள் தவிர வேறு யாரும் கேட்டது கிடையாது. ஆனால் பட்டத்து இளவரசராக பிரிட்டிஷாரால் அங்கீகரிக்கப்பட்டவுடன், அவனால் கற்பனை கூடச் செய்ய முடியாத விஷயங்கள் எல்லாம் சர்வ சாதாரணமாக நடந்தன. தகதகா உடை, அங்கமெங்கும் ஆபரணங்கள், எப்போது வேண்டுமானாலும் கிடைக்கும் மிதமிஞ்சிய உணவு. வெறுமனே கண் சிமிட்டினாலே, முன்னால் வந்து இடுப்பொடிய வணக்கம் வைத்து 'என்ன வேண்டும் இளவரசே?' என்று கேட்கும் பணியாளர்கள். இப்படியெல்லாமா கூட நடக்கும்?

முதலில் மிரட்சியாகத்தான் இருந்தது. நாளடைவில் அதுவே பழகிப் போனது. மகாராணி ஜம்னா பாய், கோபால் ராவைத் தன் வளர்ப்பு மகனாக முறைப்படித் தத்தெடுத்துக் கொண்டார். கோபால் ராவ், மூன்றாம் சாயாஜி ராவ் கெய்க்வாட் (Sayajirao Gaekwad III) என்ற ராஜ பரம்பரைப் பெயர் சூட்டப்பட்டது. பின்னர்

சாயாஜி ராவுக்கு முடி சூட்டு விழா நடந்தது. முன்னின்று நடத்தி வைத்தவர், ரெஸிடெண்ட் மேடே. மக்கள் புதிய மகாராஜாவின் வரவைக் கொண்டாடினார்கள். கைதிகள் விடுதலை யானார்கள். அன்று, ஏழைகளின் வயிறு நிறைந்தது.

சாயாஜி ராவுக்கு அப்போது பன்னிரண்டு வயதுதானே. எனவே நிர்வாகப் பொறுப்பு சமஸ் தானத்தின் பிரதம மந்திரியாக இருந்த சர் மாதவ ராவிடம் ஒப்படைக்கப்பட்டது. மாதவ ராவ் (Madhava Rao), தமிழ்நாட்டில் கும்பகோணத்தில் பிறந்தவர். நன்கு படித்தவர். திறமையான நிர்வாகி. தஞ்சாவூர் சமஸ்தானத்திலும் பின்பு திருவாங்கூர் சமஸ்தானத்திலும் திவானாகப் பல காலம் பணியாற்றியவர். அனுபவசாலி. ஆகவே பரோடாவின் நிர்வாகத்தில் முந்தைய மகாராஜா மல்ஹர் ராவ் செய்திருந்த சீர்கேடுகளைச் சரிப்படுத்தும் காரியங்களில் இறங் கினார்.

சாயாஜி ராவுக்கு அதுவரை படிப்பறிவு, ம்ஹூம். தாய்மொழி என்பதால் மராத்தி தெரியும், அதுவும் பேசுவதற்கு மட்டுமே. அங்கே எத்தனை மாடுகள் இருக்கின்றன என்று கேட்டால், அதை எண்ணிச் சொல்லக் கூடத் தெரியாது. ஆகவே அடுத்த ஆறு வருடங்களுக்குள், அதாவது சாயாஜி ராவ் மேஜர் ஆவதற்குள், கல்வி கொடுத்து, ஒரு மகாராஜாவுக்குரிய தகுதிகளுடன் வளர்த்து, ஆளாக்கும் பொறுப்பும் மாதவ ராவுக்குச் சேர்ந்து கொண்டது.

எலியாட் என்ற ஆங்கில ஆசிரியர் நியமிக்கப்பட்டார். ஏ ஃபார் ஆப்பிளிலிருந்து எஸ் ஃபார் ஷேக்ஸ்பியர் வரை கற்றுக் கொடுப்பதற்கு அவர் பொறுப்பேற்றுக் கொண்டார். கூடவே மராத்தி, குஜராத்தி, இந்தி, உருது வகுப்புகள் தனித்தனியாக நடந்தன. சாயாஜி ராவின் புண்ணி யத்தில் அவரது இரண்டு சகோதரர்களுக்கும் கல்வி கற்கும் வாய்ப்பு கிடைத்தது. எல்லா விதத்திலும் சாயாஜி ராவ் மகிழ்ச்சியாகவே வளர்ந்தார்.

ஆனால் ஒரே ஒரு குறை. முன்புபோல அவரது பெற்றோர்களால் அவரை நெருங்க முடிய வில்லை. தூரத்தில் இருந்தே தங்கள் மகன், மகாராஜாவாக உருமாறும் விதத்தை ஏக்கத்துடன் பார்த்து திருப்தி அடைந்து கொண்டார்கள். ஏன்? பழைய நினைப்போடு ஒட்டி உறவாடினால், வளர்ப்புத் தாயான மகாராணி ஜம்னா பாய். கோபப்பட்டுவிட்டால்? அரண்மனையை விட்டு வெளியேறுங்கள் என்று கட்டளையிட்டுவிட்டால்? ஆகவே விபத்தைத் தவிர்க்க பத்து மீட்டர் இடைவெளி விட்டுக் கொண்டார்கள்.

1875 நவம்பரில், வேல்ஸ் இளவரசர் ஏழாம் எட்வர்ட் இந்தியாவுக்குச் சுற்றுப்பயணம் வருவதாக இருந்தது. பம்பாயில் வேல்ஸ் இளவரசர் காலடி எடுத்து வைக்கும் நேரத்தில் அங்கு சென்று அவருக்குரிய மரியாதைகளைக் கொடுத்து வரவேற்பது என்பது சுற்று வட்டாரத்திலுள்ள அனைத்து மகாராஜாக்களின் கடமை அல்லது தலைவிதி.

ஆகவே, குட்டி மகாராஜா சாயாஜி ராவும் பம்பாய்க்குக் கிளம்பினார். இளவரசரை எப்படி வரவேற்க வேண்டும், அங்கு எப்படி நடந்துகொள்ள வேண்டும், என்ன பேச வேண்டும் என்றெல்லாம் மாதவ ராவ் சொல்லிக் கொடுத்திருந்தார். மற்ற பெரிய மகாராஜாக்களுக்கு இணையாகக் கம்பீரமாக நின்ற பன்னிரண்டு வயது சாயாஜி ராவைப் பார்த்த ஏழாம் எட்வர்ட் அசந்து போனார். 'இத்தனூண்டு வயசில் இப்படி ஒரு மகாராஜாவா?'

பம்பாயில் தங்கியிருந்த எட்வர்டுடன் எல்லா மகாராஜாக்களும் தனித்தனியாகச் சந்தித்து மரியாதை செலுத்தினார்கள். ஆனால் சாயாஜி ராவ் தன்னைச் சந்திக்க வந்தபோது, எட்வர்ட்



மற்ற அமைச்சர்களுடன் மாதவ ராவ் (நடுவில் அமர்ந்திருப்பவர்)

அவரை மடியில் தூக்கி வைத்துக் கொஞ்சாத குறைதான். சாயாஜி ராவும் தான் கற்க ஆரம்பித் திருந்த ஆங்கிலத்தில் அரைகுறையாக, ஆனால் தயக்கமின்றிப் பேசினார். அந்த முயற்சி யைப் பாராட்டினார் எட்வர்ட்.

அரை டஜன் வெள்ளிக் கோப்பைகள். அதில் இந்து மத புராணக் கதைகளின் காட்சிகள் செதுக்கப்பட்டிருந்தன. எட்வர்டுக்குப் பரிசாகக் கொடுத்தார் சாயாஜி ராவ். அந்தக் காட்சி களுக்கான விளக்கங்களையும் குழந்தைகளுக்குக் கதை சொல்வதுபோல எடுத்துச் சொன்னார். எட்வர்டுக்கு சாயாஜி ராவை மிகவும் பிடித்துப் போனது. 'எங்கள் சமஸ்தானத்துக்கு வாருங் களேன். யானைச் சண்டையைப் பார்த்து ரசிக்கலாம். பிரமாதமாக இருக்கும்' அன்பாக சாயாஜி ராவ் அழைப்பு விடுக்க, எட்வர்டால் அதை நிராகரிக்க முடியவில்லை.

பரோடா ரயில் நிலையத்தில் அந்தச் சிறப்பு ரயில் வந்து நின்றது. எட்வர்டும் சாயாஜி ராவும் வந்து இறங்கினார்கள். வெளியே சாயாஜி ராவின் அலங்கரிக்கப்பட்ட பட்டத்து யானை காத்திருந்தது. ஏறுவதற்கு வெள்ளி ஏணி. யானைமேல் தங்கத்தால் ஆன சிம்மாசனம். அதன் இருபுறமும் மயில்தோகை விசிறியால் விசுறுவதற்கு இரண்டு பணியாள்கள். சந்தோஷமாக ஏறி அமர்ந்தார் எட்வர்ட். அதே போலவே அலங்கரிக்கப்பட்ட இன்னொரு யானையில் ஏறி அமர்ந்தார் சாயாஜி ராவ். முன்னும் பின்னும் சில யானைகளும் குதிரைகளும் அணிவகுக்க, அரண்மனையை நோக்கி ஊர்வலம் கிளம்பியது. வழியெங்கும் திரண்டு நின்ற மக்களின் வாழ்த்து கோஷங்கள்.

பரோடாவில் இளவரசர் எட்வர்ட் தங்கியிருந்த ஒவ்வொரு நிமிடமும் கொண்டாட்டம்தான். மிகப் பெரிய மைதானம். சுற்றிலும் மக்கள் கூட்டம். உயரமான மேடை ஒன்றில் சாயாஜி ராவும் எட்வர்டும். சாயாஜி ராவ் தன் கையிலிருந்த கொடியை அசைக்க, எதிரெதிர்த் திசையில் இருந்து வந்த இரண்டு யானைகள் மோதிக் கொள்ள ஆரம்பித்தன. ஒன்றை ஒன்று புரட்டிப் போடும் அளவுக்குக் கடுமையான மோதல். முடிவில் ஒரு யானை எழுந்தரிக்கவே முடியாமல் சுருண்டு விழுந்தது. தொடர்ந்து காளைச் சண்டை, மனிதர்களின் மல்யுத்தம் என விதவிதமான வீரமான கேளிக்கை நிகழ்ச்சிகள். எட்வர்ட் எல்லையில்லா மகிழ்ச்சியுடன் பரோடாவிலிருந்து கிளம்பிச் சென்றார்.

நிர்வாகச் சீர்கேடுகள் நிறைந்த சமஸ்தானம் என்று கருப்புப் புள்ளி வைக்கப்பட்டிருந்த பரோடா, அப்போது தனது அவப்பெயரைத் துடைத்துக் கொண்டது. பிரிட்டிஷ் அரசு, இந்தியாவிலிருந்து குயின் விக்டோரியாவுக்கு அனுப்பிய புதிய அறிக்கையில், பரோடா சமஸ்தானம் பக்கா சமஸ்தானம் என்று குறிப்பிட்டு அனுப்பியது.

சரியான நபரைத்தான் மகாராஜாவாகத் தேர்ந்தெடுத்துள்ளோம் என்று பிரதம மந்திரி மாதவ ராவுக்கும் மகாராணி ஜம்னா பாய்க்கும் ஏக மகிழ்ச்சி. வருடங்கள் வளர்ந்தன. சாயாஜி ராவுக்கு ராஜ தந்திரங்களைக் கற்றுக் கொடுக்க வேண்டிய நேரம் வந்துவிட்டதாகக் கருதினார் மாதவ ராவ். தன் அனுபவங்களைக் கதை போலச் சொல்லி, பல்வேறு கருத்துகளை விளக்கினார். குறிப்பாக, 'ராஜ்புத்ராஸ் உபதேஷ்' என்ற நூலைக் கொடுத்து நிதானமாகப் படிக்கச் சொன்னார். பின்பு அதிலுள்ள பல விஷயங்களைத் தானே விளக்கவும் செய்தார். அவர் சொல்லிக் கொடுத்த முக்கியமான விஷயம் இதுதான்.

'அமைச்சர்கள் யாராவது ஏதாவது ஒரு விஷயத்தை அல்லது பிரச்னையைக் கொண்டு வரும்போது மகாராஜாவானவர், அதைப் பொறுமையாகக் கேட்க வேண்டும். குறுக்குக்



தாரா பாய், ஜம்னா பாய், சாயாஜி ராவ்

கேள்விகள் கேட்கக் கூடாது. தனது சுய உணர்வுகளை வெளிப்படுத்தவும் கூடாது. சொல்லி முடித்த பின், அந்தப் பிரச்னை குறித்த அமைச்சரின் கருத்தை அல்லது நிலைப்பாட்டைக் கேட்டறிந்து கொள்ள வேண்டும். அந்தக் கருத்து தவறாக இருந்தாலும் எதிர்ப்பு காட்டக் கூடாது. 'உங்கள் கருத்துக்கு நன்றி. இது பற்றி நான் யோசிக்கிறேன்' என்று பொதுவாகப் பதிலளிக்க வேண்டும். மகாராஜாவின் மனத்தில் என்ன இருக்கிறது என்பதை மற்றவர்கள் ஒருபோதும் கிரகித்துக் கொள்ள இடம் கொடுக்கக்கூடாது.'

*1881*. சாயாஜி ராவுக்கு வயது பதினெட்டு. ஜம்னா பாய், பெண் தேட ஆரம்பித்தார். மராத்தியர்களின் ராஜ குடும்ப வரன்கள் பல வந்து குவிந்தன. ஜம்னா பாய் எதையும் அவ்வளவு

சீக்கிரமாக ஒத்துக் கொள்ளவில்லை. குடும்பப் பின்னணியைப் பூரணமாக விசாரித்தார். அந்தக் குடும்பத்தின் பெண்களுக்கு ஆண் வாரிசுகள் பிறந்திருக்கிறதா என்று பரம்பரை அட்டவணை யை ஆராய்ந்துப் பார்த்தார். தனக்கோ, தனக்கு முந்தைய மகாராணிகளுக்கோ நடந்ததுபோல, ஆண் வாரிசு இல்லாமல் போய்விடக்கூடாதே என்ற அச்சம்.

இறுதியில் தஞ்சாவூர் மன்னரது மகள் பதினான்கு வயது லஷ்மி பாய்க்கு (Laxmi Bai) அந்த அதிர்ஷ்டம் கிடைத்தது. கோலாகலமான திருமணம் பரோடாவின் நாஸர்பாக் (Nazarbagh) அரண்மனையில் வைத்து நடந்தது. லண்டனிலிருந்து வரவழைக்கப்பட்டிருந்த சார்லஸ் பிளாண்டின் என்ற கயிறு மேல் நடக்கும் வித்தைக்காரர் நிகழ்த்திய சாகசங்களில் தஞ்சாவூர் விருந்தினர்கள், பெரிய கோயில் நந்தி அளவுக்கு வாய் பிளந்தார்கள்.

திருமணத்துக்கு முன் மணமகளின் முகத்தை மணமகன் பார்க்க முடியாது. மணமேடையில் வைத்துத்தான் முதல் பார்வை, முதல் ஸ்பரிசம். பார்த்த கணமே சாயாஜி ராவுக்கு, லஷ்மி பாயை மிகவும் பிடித்துப் போனது. கணவர், தன் புதிய மனைவிக்குப் புதிய பெயர் ஒன்றை வைப்பது மராத்தியர்களின் வழக்கம். சாயாஜி ராவ் அவளுக்கு வைத்த பெயர் சிம்னா பாய் (Chimna Bai).

காதலிப்பது சுகம். அதுவும் மனைவியாக வந்தவள் மனத்துக்குப் பிடித்த மாதிரி இருந்தால் அவளைக் காதலிப்பது சுகமோ சுகம். மனைவியானவள், அந்தப்புரத்தில் அடைப்பட்டு, கணவனைக் கண் கண்ட கஸ்மாளம் என்று அடிமையாக இருக்க வேண்டும் என்று அவர் ஒருபோதும் நினைக்கவில்லை. சிம்னா பாய்க்கு பூரண சுதந்தரம் கொடுத்தார். தன்னுடன் இணைந்து உட்கார்ந்து சாப்பிடுவது முதல் தனக்கு எதிரே உட்கார்ந்து பேசுவது வரை. சிம்னா பாய், வீணை, சித்தார் வாசிப்பதில் கெட்டிக்காரி. அவளது இசை என்னும் இன்ப வெள்ளத் தில், ஓடோடி வந்து தொபுக்கடீர் என்று குதித்து, மூழ்கித் திளைத்தார் சாயாஜி ராவ். 'சிறு வயதிலேயே இங்கு வந்து மாட்டிக் கொண்டோமே என்று எண்ணிவிடாதே. உன் ஆசைகளை உரிமையோடு சொல். அதை நிறைவேற்றுவது என் கடமை.'

சிம்னா பாய், பிரெஞ்சு கற்றுக் கொள்ள விரும்பினாள். சாயாஜி ராவ், உடனடியாக ஏற்பாடு செய்தார்.

திருமணம் முடிந்த ஆறாவது நாளே புதிய அரண்மனை ஒன்றைக் கட்ட அடிக்கல் நாட்டினார். தன் மனைவிக்காக, ஒரு காதல் பரிசாக. லஷ்மி விலாஸ் என்று அதற்குப் பெயர் வைத்து இருந்தார்.

அடுத்த சில மாதங்களில், முழு அதிகாரத்துடன் பரோடாவின் மகாராஜாவாக சாயாஜி ராவ், அரியணையில் அமர்ந்தார். பிரிட்டிஷ் அரசின் பரிபூரண ஆசி அவருக்கு இருந்தது. அந்த நேரத்தில் சாயாஜி ராவின் வாரிசைத் தன் வயிற்றில் சுமந்து கொண்டிருந்தாள் சிம்னா பாய்.

அடுத்த வருடமே, அரண்மனையில் குழந்தையின் அழுகைச் சத்தம் கேட்டது. பெண் குரல். குழந்தைக்கு வைக்கப்பட்ட பெயர் பாஜூ பாய் (Baju Bai). சில மாத இடைவெளியில் மீண்டும் வாந்தியெடுத்தாள் சிம்னா பாய். பத்தாவது மாதம். மீண்டும் பிறந்த குழந்தையின் அழுகைச் சத்தம். மீண்டும் பெண்குரல். வைக்கப்பட்ட பெயர் புட்லா பாய் (Putla Bai).

என்னடா இது, இந்தப் பரம்பரையில் ஆண் வாரிசு பிறப்பதற்கான யோகமே இல்லையா என்று அரண்மனைப் பெருசுகள் எல்லாம் அநியாயத்துக்குப் புலம்பித் தள்ளின. சில

மாதங்களில் மீண்டும் வயிற்றைத் தள்ளியபடி நடக்க ஆரம்பித்தாள் சிம்னா பாய். இந்த முறை பிறந்தது இளவரசர். பஃதேசின் ராவ் (Fatehsinh Rao).

சாயாஜி ராவ் தனக்கு வாரிசு பிறந்த நிகழ்வைத் திருவிழாவாகக் கொண்டாடினார், ஆனால் அவரது மகிழ்ச்சி நீடிக்கவில்லை. லொக்.. லொக்.. விடாமல் இரும ஆரம்பித்தாள் சிம்னா பாய். காசநோய். வைத்தியர்களாலும் மருத்துவர்களாலும் வெறுமனே கைகளைப் பிசைய மட்டுமே முடிந்தது.

சாயாஜி ராவுக்கு வாக்கப்பட்டு நான்கு வருடங்களிலேயே மரணத்துக்கும் வாக்கப்பட்டாள் சிம்னா பாய்.

காதல் மனைவியை இழந்த மகாராஜா சாயாஜி ராவுக்கு உலகமே சூன்யமாகத் தெரிந்தது.



# சைவ டேட்டிங்!

இருள் நிரம்பிய அறை. கதவைத் திறந்துவிட்டால் ஒளிகூட ஒரு கணம் யோசித்துவிட்டுத்தான் உள்ளே புகும் என்னுமளவுக்குக் காரிருள். சாயாஜி ராவ் அந்த அறைக்குள் வந்து முழுதாக இரண்டு நாள்கள் ஆகியிருந்தன. துக்கம். ஆசை மனைவியை அற்ப ஆயுளில் இழந்த பெரும் துக்கம். இனி வாழ்க்கையில் இன்பம் என்று ஏதேனும் இருக்கிறதா?

மனம்விட்டு, வாய்விட்டு அழுதால் துக்கம் கரையலாம். மாபெரும் சமஸ்தானத்தின் மகாராஜாவாக இருந்துகொண்டு கண்ணீரைக் காட்சிப்படுத்த முடியுமா என்ன? அறைக்குள் தனிமைச் சிறை. கண்ணீரைக் காட்டிக் கொடுக்காத இருள் தேவைப்பட்டது. அந்த அறையின் கதவைத் தட்டுமளவுக்கு மன தைரியம் யாருக்கும் இல்லை. கையறு நிலையில் தத்தளித்துக் கொண்டிருந்த சாயாஜி ராவின் கையைப் பிடித்துக் கொண்டு 'நடந்தது நடந்து போச்சு. இனிமே நடக்க வேண்டியதைப் பாருங்க' என்று ஆசுவாசப்படுத்தும் உரிமையையும் யாரும் எடுத்துக் கொள்ளவில்லை. தயங்கினார்கள்.

வளர்ப்புத் தாய் ஜம்னா பாய்க்குத் தகவல் போனது. பதறிப் போய் வந்தார் அவர். சாயாஜி ராவின் அறைக்குள் ஒளியோடு சேர்ந்து நுழைந்தார். 'எனக்கு எதுவுமே பிடிக்கவில்லை அம்மா. என் வாழ்க்கை முழுவதும் இணைந்து வருவாள் என்று நினைத்தேனே..' சாயாஜி ராவ் விம்ம ஆரம்பித்தார். ஜம்னா பாய், அவரைக் கட்டுப்படுத்தவில்லை. நீண்ட நேரத்துக்குப் பிறகு, தன்னைச் சற்றே ஆசுவாசப் படுத்திக் கொண்ட சாயாஜி ராவை, பழச்சாறு அருந்த வைத்தார் ஜம்னா பாய். அன்றைய இரவில் மகாராஜா கொஞ்சம் உறங்கவும் செய்தார்.

'பொண்டாட்டி செத்துப் போன அதிர்ச்சியில மகாராஜாவுக்கு மண்டை குழம்பிப் போச்சுதாம். பைத்தியமாயிட்டாரு. இனிமே அவரோட கதி அவ்ளோதான்' இப்படிப்பட்ட பேச்சுகள் அரண்மனை வட்டாரத்தில் மிதந்தன. மெட்ராஸில் பாதுகாவலில் வைக்கப்பட்டிருந்த முன்னாள் மகாராஜா மல்ஹர் ராவ் 1882ல் இறந்து போயிருந்தார். ஆனால் மல்ஹர் ராவின் ஆதரவாளர்கள் சிலர், பிரிட்டிஷாரால் அங்கீகரிக்கப்படாத அவரது ஆண் வாரிசை இந்தக் குழப்பமான நேரத்தில் அரியணை ஏற்றும் முயற்சியில் இறங்கியிருந்தார்கள். சுற்றிலும் சதிவலை பின்னப்படும் சூழலை உணர்ந்துகொள்ளாமல் சாயாஜி ராவ், துக்கத்திலேயே திரிந்து கொண்டிருந்தார். ஆனால் ஜம்னா பாய் விழிப்போடுதான் இருந்தார்.

வாரங்கள் நகர்ந்தன. சாயாஜி ராவ், கொஞ்சம் கொஞ்சமாக அலுவல்களில் கவனம் செலுத்த ஆரம்பித்தார். முன்பிருந்த உற்சாகம் மட்டும் தொலைந்து போயிருந்தது. இருந்தாலும் அது வரை பரவிய வதந்திகள் அனைத்தும் வாழ்விழந்தன.

'இப்படியே விட்டால் சரிப்படாது. மகாராஜாவுக்கு ஏற்பட்டுள்ள இழப்பை ஈடுகட்ட வேண்டும். மறுமணம்தான் ஒரே தீர்வு' ஆலோசகர்கள், ஜம்னா பாயிடம் தங்கள் யோசனையை முன் வைத்தார்கள்.

'எனக்கும் தாங்கள் சொல்வது புரிகிறது. ஆனால் மகாராஜா ஒப்புக்கொள்ள வேண்டுமே' ஜம்னா பாய் கவலைப்பட்டார்.

'இறந்து போன மகாராணி சிம்னா பாய் போலவே ஒரு பெண்ணைத் தேடலாம். அதே அளவு அழகுடன், திறமையுடன், தகுதியுடன். அப்படி ஒரு பெண்ணைப் பார்த்தால் மகாராஜாவின் மனம் மாற நிறையவே வாய்ப்பிருக்கிறது.'

ஜம்னா பாய்க்கு அந்த யோசனை பிடித்திருந்தது. பெண் தேடும் படலம் ஆரம்பமானது. எட்டுத் திசையிலும் உள்ள மராத்தியர்களின் காதுகளில் செய்தி பரப்பப்பட்டது. பல வரன்கள் தேடி வந்தன. ஜம்னா பாய், தக்க தருணத்தில் சாயாஜி ராவிடம் பேச்சை ஆரம்பித்தார். 'இத்தனை மாதங்கள் யோசித்துப் பார்த்துவிட்டு, ஒரு முடிவெடுத்துள்ளேன். நீ பழையபடி மாற வேண்டும்.'

பதிலாக வறட்டுச் சிரிப்பொன்றை உதிர்த்தார் சாயாஜி ராவ்.

'உனது கவலை இந்தச் சமஸ்தானத்தையே பாதிக்கும். ஒரு மகாராஜா மகிழ்ச்சியாக இருந் தால்தான், மக்களும் மகிழ்ச்சியாக இருப்பார்கள். உன் துன்பத்தை மறப்பதற்காக நீ மறுமணம் செய்து கொள்ள வேண்டும். கோபப்படாமல் புரிந்துகொள்வாய் என்று நம்புகிறேன்.'

அப்போதைக்கு சாயாஜி ராவ் எந்தவித எதிர்ப்பும் சொல்லாததே, ஜம்னா பாய்க்கு போதுமான தாக இருந்தது. ஒரு மாதம் கழிந்தது. ஜம்னா பாய், சில வரன்கள் பற்றிய விவரங்களுடன் சாயாஜி ராவிடம் பேச வந்தார்.

'அம்மா, எல்லாப் பெண்கள் பற்றிய விவரங்களும் எனக்குத் தேவையில்லை. உங்களுக்கு மிகச் சரியாகத் தோன்றும் இரண்டு அல்லது மூன்று பெண்களின் விவரங்களைப் பற்றி மட்டும் என்னிடம் சொல்லுங்கள். நான் அந்தப் பெண்களிடம் நேரடியாகப் பேச விரும்புகிறேன். என்னுடைய மகாராணியாக வரப்போகிறவள் பழைமையில் ஊறியவளாக இல்லாமல், நவீன

எண்ணங்கள் கொண்டவளாக இருக்க வேண்டும். எனது சிம்னா பாய் அப்படிப் பட்டவள் தான். அவளை நான் வரப்போகிறவளிடம் பார்க்க வேண்டும்.'

அந்த பதிலால் குதூகலமடைந்த ஜம்னா பாய், சாயாஜி ராவின் விருப்பப்படி இரண்டு பெண்களை மட்டும் தேர்ந்தெடுத்தார். ஒரு பெண் சிம்னா பாயைப் போலவே தஞ்சாவூர் ராஜ பரம்பரையைச் சேர்ந்தவள். இன்னொரு பெண், திவாஸ் என்ற ஒரு சிறிய சமஸ்தானத்தின் ராஜ பரம்பரையைச் சேர்ந்த பாஜி ராவ் என்பவரின் மகள். பெயர் கரா பாய் (Gara Bai).

சாயாஜி ராவ், இரண்டு பெண்களையும் தனித்தனியாகச் சந்தித்துப் பேசினார். அவருக்கு கரா பாயைப் பிடித்துப் போனது. இருந்தாலும் உடனடியாகத் திருமணத்துக்கு ஒப்புக் கொள்ள வில்லை. பேசினார். பழகினார். யோசித்தார். மீண்டும் பேசினார். சில சைவ டேட்டிங்கு களுக்குப் பிறகு திருமணத்துக்கு சரி என்றார்.

1885, டிசம்பர் 25ல் கரா பாய், மகாராணியாக, 'இரண்டாம் சிம்னா பாயாக' பரோடாவின் மருமகள் ஆனார் (வயது 14). சாயாஜி ராவ் புது மனைவியோடு மலைவாசஸ்தலம் எதற்கும் செல்லவில்லை. முதல் வேலையாக மனைவியை மராத்தி வகுப்புக்கு அனுப்பினார். 'நேரம் ஆயிருச்சு. ஆங்கில வகுப்புக்குப் போ.' 'சாயங்காலம் நாலு மணிக்கு பிரெஞ்சு டீச்சர் வந்துரு வாங்க. தயாரா இரு.' 'மிஸ்டர் எலியாட் இன்னிக்கு ஸ்பெஷல் கிளாஸ் வைச்சிருக்கறதா சொன்னாரே. கிளம்பு கிளம்பு.'

பெண் கல்வி என்பதே பாவமாகப் பார்க்கப்பட்ட காலத்தில், பெண்டாட்டியை மாங்கு மாங்கென்று படிக்க வைத்த சாயாஜி ராவ் மீது, சிம்னா பாய்க்கு அபரிதமான காதல் பெருகியது. இருந்தாலும் சாயாஜி ராவ் விலகியே இருந்தார், மனத்தளவில் - மஞ்சத்தளவில். அவரால் முதல் மனைவியின் ஸ்தானத்தில், புதிய சிம்னா பாயை அவ்வளவு எளிதாகப் பொருத்திப் பார்க்க முடியவில்லை. அப்படியே ஒன்றரை வருடங்கள் ஓடிப்போயின.

'உங்களுக்கு இசை என்றால் பிடிக்கும்தானே? நான் வீணை வாசிக்கட்டுமா?' ஒருநாள் தயங்கித் தயங்கிக் கேட்டாள் சிம்னா பாய். வாசிக்கச் சொன்னார். காற்றில் இசை கலக்க ஆரம்பித்தது. அந்தக் கணத்தில், சாயாஜி ராவ் தனது முதல் மனைவியை, இரண்டாவது மனைவியின் ரூபத்தில் உணர்ந்தார். அவரது கண்கள் கலங்கியிருந்தன.

திருமணமான பெண்கள், வீட்டில் ஓர் அறையில் அடைந்து கிடக்க வேண்டும். வெளியே வரும்போது, வேறு ஆண்களில் கண்களில் பட்டுவிடக் கூடாது. இப்படிப்பட்ட கட்டுப் பெட்டித்தனங்கள் தலைவிரித்தாடிய காலத்தில், தன் மனைவியை அழைத்துக் கொண்டு சுற்றுலாவுக்குக் கிளம்பினார் சாயாஜி ராவ் (1887). அதுவும் ஐரோப்பாவுக்கு.

யாரெல்லாம் மகாராஜாவுடன் செல்லப் போகிறார்கள் என்ற பட்டியல் ஜரூராகத் தயாரானது. ஒரு பண்டிதர், ஒரு தையல்காரர், ஒரு நாவிதர், ஒரு மருத்துவர், ஒரு வைத்தியர், இரண்டு பிராமண சமையல்காரர்கள், மற்ற பணியாளர்கள் என்று மொத்தம் ஐம்பத்தைந்து பேர். கப்பலில் மகாராஜாவின் சமையலுக்காகத் தனி அறை ஒதுக்கப்பட்டது. தங்கு தடையற்ற பால் விநியோகத்துக்காக இரண்டு பசு மாடுகளும் கப்பலில் ஏற்றப்பட்டன. கூடவே மாடுகளுக்கான புல், புண்ணாக்கு வகைகளும்.

சிம்னா பாய்க்குப் பெண் துணையாக, மிஸஸ். எலியாட்டும் மிஸஸ். டெய்லரும் வந்தார்கள். கூடவே அவளது தங்கையும், சில பணிப்பெண்களும். பம்பாயில் கப்பல் ஏறுவதற்கு

முன்பாக, மிஸஸ். எலியாட்டும் மிஸஸ். டெய்லரும் ரகசிய ஷாப்பிங் செய்தார்கள். ஐரோப்பிய பாணி பெண்களுக்கான உடைகளை வாங்கினார்கள். எல்லாம் சிம்னா பாய்க்காகத் தான். மற்ற இந்தியப் பெண்கள் பார்த்துவிட்டால், விஷயத்தை பரோடாவில் பரப்பி விடுவார்களே என்ற பயம்தான்.

மூன்று வாரக் கடல் பயணம். கப்பலின் மேல் தளம். காதலுடன் வீசும் இதமான கடல் காற்று. இருவரும் பேசிக்கொள்ள நிறையவே இனிமையான தருணங்கள் வாய்த்தன. மனம் விட்டுப் பேசினார் சாயாஜி ராவ். அவரது மனத்துக்குப் பிடிக்கும்படி பேசினாள் சிம்னா பாய். கப்பலை விட்டு இறங்கும் வேளையில் அவர்கள் கணவன்-மனைவி ஆகியிருந்தார்கள்.

பாரிஸில் ஒரு மாளிகை எடுத்துத் தங்கினார்கள். சில வாரங்கள் சுவிட்சர்லாந்துக்குச் சென்று காதலுக்குச் சேவை செய்தார்கள். அந்த நவம்பரில் லண்டனை அடைந்தார்கள். டிசம்பர் 2 அன்று குயின் விக்டோரியாவைத் தரிசிக்க நேரம் ஒதுக்கப்பட்டிருந்தது.

சென்றார்கள். சிம்னா பாயின் புடைவை, நகைகள், ஒப்பனை எல்லாவற்றையும் குயின் விக்டோரியா புருவம் உயர்த்தி ரசித்தார். அவள் மராத்திய பாணியில் வெளிர் நீலப் புடைவை அணிந்திருந்தாள். அதாவது இரண்டு கால்களுக்கும் இடையில் கொசுவத்தைச் கொண்டு சென்று, அதை இடையின் பின்புறத்தில் செருகியிருந்தாள். குயினுக்கு அதிபயங்கர சந்தேகம். ‘இவள் அணிந்திருப்பது என்ன, ட்ரௌசரா?’

சிம்னா பாய், குயின் பேசிய ஆங்கிலத்தைப் புரிந்து கொண்டு, அதற்கு ஆங்கிலத்திலேயே பதிலும் கொடுத்தாள். தயக்கமின்றி ஆங்கிலம் பேசும் இந்தியப் பெண்! குயினால் ஆச்சரி யத்தை அடக்க முடியவில்லை. சிம்னா பாயை மிகவும் பிடித்துப் போனது. குயினிடம் தனக்கு கௌரவத்தை ஏற்படுத்திக் கொடுத்த மனைவியால் சாயாஜி ராவின் முகத்தில் பெருமிதம் தாண்டவமாடியது.

ஐந்து மாதங்களை ஐரோப்பிய நாடுகளில் கழித்தார்கள். சும்மா கேளிக்கை விடுதிகளுக்கும் காபரே கிளப்புகளுக்கும் சென்று பொழுதைக் கழிக்கவில்லை. அங்கு செல்வதெல்லாம் அவரது குல தர்மப்படி அபசாரம். அதுபோக, அவர் ஒன்றும் வெள்ளி ஸ்பூனோடு பிறந்தவ ரில்லையே. குக்கிராமத்தில் பெற்றோருக்கும் வறுமைக்கும் பிறந்தவர்தானே. ஐரோப்பிய நாடுகளின் ஒவ்வொரு அம்சங்களையும் வேறு கோணத்தில் பார்த்தார் அவர்.

இந்த ஊர்கள் ஏன் இப்படி மினுமினுக்கின்றன. இங்கும் மக்கள்தானே வாழ்கிறார்கள்? மக்கள் தானே ஆட்சி புரிகிறார்கள்? நமது பரோடாவை இவ்வளவு வசதிகள் நிறைந்ததாக மாற்ற முடியாதா என்ன?

‘உங்க ஊர்ல கழிவு நீரை எப்படி வெளியே அனுப்புறீங்க?’ - கேட்டு, பார்த்து, புரிந்து, குறிப்பு கள் எடுத்துக் கொண்டார். ‘உங்க ஊர்ல சிறை எப்படி இயங்குது?’, ‘இந்த அரண்மனையில் எப்படி மின்சார வசதி செஞ்சிருக்கீங்க?’, ‘இந்த மாதிரி ஒரு தொழிற்சாலை அமைக்கறதுக்கு எவ்வளவு செலவாகும்?’ எதெல்லாம் தன் சமஸ்தானத்துக்குத் தேவை என்று பார்த்துப் பார்த்து கற்றுக் கொண்டு வந்தார். வெற்றிகரமாக ஊருக்குத் திரும்பிய பின், தான் கற்றுக் கொண்ட விஷயங்களை வைத்து பரோடாவின் வளர்ச்சிக்காகப் பல்வேறு புதிய திட்டங்களை ஆரம்பிக்கவும் செய்தார்.

அதற்குப் பின்பு தம்பதி சமேதமாக பல்வேறு பயணங்களை மேற்கொண்டார்கள். குறிப்பாக, பரோடாவின் கோடை வெப்பத்திலிருந்து தப்பித்து வெளியூருக்கோ, வெளிநாடுகளுக்கோ செல்வதை வழக்கமாக்கிக் கொண்டார்கள். சாயாஜி ராவ், தான் சமஸ்தானத்தில் இல்லாத சமயங்களில் நிர்வாகத்தைக் கவனிக்க பிரதம மந்திரியின் தலைமையில் சிறப்புக் குழு ஒன்றை அமைத்திருந்தார்.

1888ல் சிம்னா பாய், தாய் ஆனாள். ஆண் குழந்தை. ஜெயாசின் ராவ் (Jayasinh Rao) கெய்க்வாட். அடுத்த இரண்டு வருடங்களில் இன்னொரு ஆண் குழந்தை. சிவாஜி ராவ் (Sivaji Rao) கெய்க்வாட்.

அதே வருடத்தில், 'லஷ்மி விலாஸ் அரண்மனை' 700 ஏக்கர் பரப்பளவில் முழுவதுமாகக் கட்டி முடிக்கப்பட்டது. அது சாதா அரண்மனையல்ல, பழைமையின் பிரம்மாண்டமும் புதுமையான வசதிகளும் கலந்து உருவாக்கப்பட்ட அதிசய அரண்மனை!



# புது அரண்மனை புகுவிழா!

அன்று பரோடாவில் குதிரைகள், யானைகள் எல்லாம் படு பிஸியாகத் திரிந்தன. பின்னே மகாராஜா சாயாஜி ராவ் கெய்க்வாட், தனது நாஸர் பாக் அரண்மனை யிலிருந்து புதிய லஷ்மி விலாஸ் அரண்மனைக்கு இடம் பெயருகிறார் என்றால் சும்மாவா? ஏகப்பட்ட வண்டிகள் நிறைய நிறைய நகைகள், பட்டு உடைகள் மட்டும் அரண்மனை விட்டு அரண்மனை இடம் மாறின. தட்டு முட்டுச் சாமான்கள்?

அடச்சே, அதெல்லாம் எதற்கு? எழுநூறு ஏக்கர் பரப்பரப்பளவில் பிரம்மாண்ட மான அரண்மனை கட்டிய மகாராஜா, அதற்குரிய தட்டு முட்டுச் சாமான்களைப் புதிதாக வாங்கிப் போட மாட்டாரா என்ன? ஏகப்பட்ட பூஜை, புனஸ்காரங்களுடன் புது அரண்மனை புகுவிழா நடந்தது. தனது முதல் மனைவியின் நினைவுகளுடனும், இரண்டாவது மனைவியின் துணையுடனும் லஷ்மி விலாஸுக்குள் நுழைந்தார் சாயாஜி ராவ்.

தனது ஐரோப்பியப் பயணங்களில் ஆர்வமாகத் தெரிந்துகொண்டு வந்த கட்டடக் கலையின் நுணுக்கமான உத்திகளை எல்லாம் லஷ்மி விலாஸ் அரண்மனையை வடிவமைக்க உபயோகித்தார். முகலாய ஸ்டைல் டூம்கள், வங்காள வடிவமைப் பில் உத்திரங்கள், குஜராத் கோபுரங்கள், ராஜபுத்திரர்களுக்கே உரிய தோரண வாயில் வளைவுகள், இந்திய பாணி வராண்டாக்கள், ஐரோப்பிய பாணி ஹால் கள் என்று லஷ்மி விலாஸ் பல கலாசாரங்கள் கலந்து செதுக்கப்படிருந்தது. அரண்மனைக்கான கட்டமைப்பைத் திட்டமிட்டவர் ஐரோப்பியக் கட்டடக் கலை நிபுணரான மேஜர் சார்லஸ் மன்ட் (Charles Mant).

லஷ்மி விலாஸ் உள்பட மூன்று பெரிய அரண்மனைகளை மன்ட், ஒரே சமயத்தில் கட்டிக் கொண்டிருந்தார். அதிக வேலைப்பளு அவரை அழுத்தியது. எங்கே தன் வேலையெல்லாம் தவறாகப் போய்விடுமோ, கட்டடங்கள் இடிந்து விழுந்து விடுமோ என்றொரு பயம். இந்த மன அழுத்தம் அதிகமானதால், நாற்பது வயதுக்காரரான மன்ட், திடீரென இறந்து போனார். அதற்குப் பின், ராபர்ட் பெல்லோஸ் (Robert Fellowes) என்பவர் பொறுப்பேற்று, கட்டுமான வேலைகளைத் தொடர்ந்தார்.

அரண்மனை முழுவதும் மூலைக்கு மூலை மின்சார வசதி இருக்கும்படி பார்த்துக் கொண்டார் சாயாஜி ராவ். மெகா சைஸ் அலங்கார விளக்குகளை இறக்குமதி செய்து அறைக்கு அறை பொருத்தினார். 'அட மின்சார வசதிதான் இருக்கிறதே. அது என்னப்பா? மேலும் கீழும் தானாக நகரும் கூண்டு ஒன்று உண்டே. ஆங்.. லிஃப்ட். அதையும் பொருத்துங்கள்.'

நடுவில் அரண்மனை. சுற்றிலும் தோட்டம். அதனைச் சாதாரணமாக வடிவமைத்துவிட முடியுமா என்ன? லண்டன் சென்றபோது அங்கு பார்த்த கியு (Kew) தோட்டம் நினைவுக்கு வந்தது. சாயாஜி ராவ், அதன் பராமரிப்பாளரான மிஸ்டர். கோல்டிரிங்கை (Goldring) பரோடா வுக்கு வரவழைத்தார். அவருக்கு முழுச்சுதந்தரம் கொடுத்து பொறுப்பையும் ஒப்படைத்தார். விதவிதமான மரங்களுடன், வித்தியாசமான செடிகளுடன் அசத்தலான தோட்டம் உருவானது. தோட்டத்தில் ஒவ்வொரு இடத்துக்கும் காலாற நடந்து சென்று ரசிக்க பிரத்யேக புல்வெளிப் பாதை. அதுபோக குதிரையில் சுற்றிவர தனிப் பாதை.

ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றபோது சாயாஜி ராவுக்கு கிரிக்கெட் அறிமுகமாகியிருந்தது. அந்த விளையாட்டு மிகவும் பிடித்திருந்தது. நாம் கட்டும் அரண்மனையிலேயே சொந்தமாக ஒரு கிரிக்கெட் மைதானத்தையும் அமைத்துக் கொண்டால்? அருமையான யோசனை. ஐரோப்பியர்களின் விளையாட்டு. நாமும் நினைத்த நேரத்தில் விளையாடலாம். ஐரோப்பி யர்களையும் குஷிப்படுத்தலாம்.

குதிரைகள். மகாராஜாக்களின் வாகனம். குதிரைப் பந்தயம் எவ்வளவு உன்னதமானது. அதற்கு இடம் ஒதுக்காமல் ஓர் அரண்மனை வளாகமா? இரண்டு மைல் தூரத்துக்கு குதிரை பந்தயப் பாதை அமையுங்கள். அந்தப் பாதையை ஒட்டினாற்போலவே, மிகப்பெரிய குதிரை லாயத்தையும் அமையுங்கள். என் குதிரைகளுக்கு எந்தவிதக் கஷ்டமும் இருக்கக்கூடாது. குதிரைகளைப் பாராமரிக்க என்னென்ன தேவையோ எல்லாவற்றையும் கேட்டு பெற்றுக் கொள்ளுங்கள்.

அரண்மனைக்கு வலது புறத்தில் இவ்வளவு பெரிய மைதானம் இருக்கிறதா? இங்கே என்ன செய்யலாம்? சமதளமாக இல்லாமல் கொஞ்சம் மேடு பள்ளங்கள் கலந்த மைதானம். ம், அதுதான் சரி. புல்வெளிகளை உருவாக்குங்கள். இது அரண்மனையின் கோல்ஃப் மைதானம். சாயங்கால வேளைகளில் தேநீரோடு டென்னிஸூம் சேர்ந்தால் எவ்வளவு அருமையாக இருக்கும். ஒன்றல்ல, ஐந்து டென்னிஸ் கோர்ட்டுகளை அமையுங்கள். அரண்மனைக்கு வரும் விருந்தினர்களும் விளையாட வேண்டுமல்லவா.

இந்தப் பகுதியில் தடுப்புச் சுவர்களை இன்னும் கொஞ்ச உயரமாக அமையுங்கள். ஏனென்றால் இங்குதான் துப்பாக்கி சுடுவதற்கான பயிற்சிக்களம் அமையவிருக்கிறது. விஷ்ணமித்ரி (Vishnamitri) நதி அருகில்தானே ஓடிக் கொண்டிருக்கிறது. அதைக் கொஞ்சம் அரண்மனைப் பக்கமாகத் திருப்புங்கள். பெரிய குளம் ஒன்றை வெட்டி அதில் அந்த நதியின் நீரை


லஷ்மி விலாஸ் - வெளிப்புறத் தோற்றம்

நிரப்புங்கள். யாரங்கே? படகுகள் வாங்கச் சொல்லியிருந்தேனே, தயாரா? பௌர்ணமி இரவில் நிலவின் நித்திய ஒளியில் நனைந்து கொண்டே, மகாராணியோடு படகில் பயணம் செய்யும் சுகமே பூரண சுகம்.

வேறென்ன பாக்கி இருக்கிறது? என்னது நீச்சல் குளமா? முழுவதும் மார்பிள் பதிக்கப்பட்ட நீச்சல் குளங்கள் ரம்மியமாக அமைந்துள்ளன. அரண்மனைக்கு வெளியே உள்ள நீச்சல் குளத்தில் இந்துக் கடவுள்களின் அழகிய சிலைகளைப் பொருத்தச் சொல்லியிருந்தேனே. அந்தப் பணி நிறைவடைந்து விட்டதா? அருமை.

ஆஹா, இந்தக் கோயில் நான் நினைத்ததைவிடச் சிறப்பாக அமைந்திருக்கிறதே. இந்த அரண்மனையின் மிகச் சிறப்பான அம்சமாக இந்தக் கோயில்தான் என் கண்களுக்குத் தெரிகிறது. இப்படி ஒரு கோயிலினை அமைத்ததினால் அரண்மனை வளாகமே புனித மடைந்து விட்டது.

அந்நாளில் ஒரு ஒலிம்பிக் போட்டி நடத்துவதற்குரிய சகல வசதிகளுடனும் திகழ்ந்தது லஷ்மி விலாஸ். சுமார் பன்னிரண்டு வருடங்கள் நடந்த அரண்மனையின் கட்டுமானப் பணிகளுக்கு ஆன செலவு மட்டும் அன்றைய இந்திய மதிப்பில் அறுபது லட்சம்.

அரண்மனைக்கு வெளியே நிறையவே சுற்றிப் பார்த்துவிட்டோம். அரண்மனைக்குள் செல்வோம். பொது அறைகள், தர்பார் ஹால், மகாராஜா, மகாராணி மற்றும் ராஜ குடும்பத் தினருக்கான அறைகள் என்று லஷ்மி விலாஸை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். வெனிஸ் நகரில் முரானா கிளாஸ் (Murano Glass) கம்பெனி என்றொரு உலகப் புகழ்பெற்ற நிறுவனத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிபுணர்கள் பரோடாவில் பதினெட்டு மாதங்கள் வந்து தங்கித் தரையைத் தேய்த்தார்கள். ஆம், அவர்கள் தர்பார் ஹாலிலும், மகாராஜா, மகாராணியின்

அறைகளிலும் மொசைக் வேலைகளைச் செய்தார்கள். அரண்மனையில் ஆங்காங்கே, இந்துக் கடவுள்களின் உருவங்களுடன் கூடிய வண்ண வண்ணக் கண்ணாடிகளையும் பதித்தார்கள்.

ஏற்கெனவே பணியில் இருப்பவர்கள், புதிதாக எடுக்கப்பட்டவர்கள் என்று மொத்தம் லஷ்மி விலாஸில் அறுநூறு வேலைக்காரர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். எல்லோருக்கும் ஒரேமாதிரி நீலச் சீருடை. மகாராஜா, குடும்பத்தினரின் பிரத்யேக அறைகளைத் தவிர அரண் மனையில் பெரும்பாலான அறைகளுக்கு வாசல் உண்டே தவிர, கதவுகள் கிடையாது. காரணம் அரண்மனையில் மூலைக்கு மூலை பாதுகாவலர்கள் நிறுத்தப்பட்டிருந்தார்கள்.

தர்பார் ஹாலைப் பற்றித் தனியாக வருணித்தே ஆக வேண்டும். அதன் வாசல் வழியே இரண்டு, மூன்று யானைகள் சேர்ந்தே நுழையலாம். தர்பாரில் யானைகளுக்கான கால்பந்து மேட்சே நடத்தலாம். அவ்வளவு பிரம்மாண்டம். உத்திரத்தில் இருந்து தலைகீழாக மலர்ந்த தாமரைபோல மாபெரும் அலங்கார விளக்குகள், தர்பார் முழுவதும்.

திருவாங்கூர் சமஸ்தானத்தில் பல காலம் பணியாற்றிய பரோடாவின் அப்போதைய திவான் மாதவ ராவ் மூலம், ரவிவர்மாவின் தொடர்பு கிடைத்தது. சாயாஜி ராவ், மகாராஜாவாகப் பதவியேற்றிருந்த சமயத்தில், அரண்மனையை அலங்கரிப்பதற் காகத் தன்னுடைய ஆளுயர ஓவியத்தை வரையச் சொன்னார். ரவிவர்மா வரைந்து கொடுத்த அந்த ஓவியத்தில் அசந்து போனார் சாயாஜி ராவ்.


ரவிவர்மா

'ராஜா ரவிவர்மா அவர்களே, நான் தற்போது கட்டிக் கொண்டிருக்கும் புதிய அரண்மனையின் சுவர்களை அலங்கரிக்கும்விதமாக ஓவியங்கள் வரைந்து கொடுத்தீர்கள் என்றால் அது என் பாக்கியம்'

சாயாஜி ராவின் வேண்டுகோளுக்கு, ரவிவர்மா விருப்பத்துடன் சம்மதம் தெரிவித்தார்.

ரவிவர்மா, திருவாங்கூர் ராஜ குடும்பத்தின் நெருங்கிய உறவினர். அவரது மாமா, ராஜா ராஜவர்மா, தஞ்சாவூர் ஓவியங்கள் வரைவதில் வித்தகர். அவரிடமிருந்துதான் வரையக் கற்றுக் கொண்டார் ரவிவர்மா. சிறுவயதிலேயே அவரது ஓவியத் திறமையைக் கண்டு வியந்துபோன திருவாங்கூர் மகாராஜா ஆயில்யம் திருநாள், ரவிவர்மாவை திருவனந்தபுரத்திலேயே தங்கி, அரண்மனைக்கு ஓவியங்கள் வரையச் சொன்னார். அங்கு ரவிவர்மாவுக்கு பிரபல டச்சு ஓவியரான தியடோர் ஜென்செனின் (Theodore Jensen) அறிமுகம் கிடைத்தது. எண்ணெயோடு வண்ணங்களைக் கலந்து, ஓவியம் வரையும் வித்தையை அவரிடம் கற்றுக் கொள்ள ஆர்வமாக இருந்தார் ரவிவர்மா. ஆனால் ஜென்சென், கற்றுத்தர மறுத்துவிட்டார். ரவிவர்மாவுக்கு பெரும் ஏமாற்றம், கோபம். அதனால் எழுந்த உத்வேகத்தில், 'யாரும் தேவையில்லை, எனக்கென ஒரு புதுபாணியை நானே உருவாக்கிக் கொள்கிறேன்' என்று வண்ணங்களைத் தன் வசப்படுத்த ஆரம்பித்தார்.

பரோடாவில் ரவிவர்மா எந்தத் தொந்தரவுமின்றிச் சுதந்தரமாக வேலை செய்வதற்காகவே, சாயாஜி ராவ் தனி ஸ்டூடியோ ஒன்றை உருவாக்கிக் கொடுத்தார். ரவிவர்மாவும் பரோடா விலேயே தங்கித் தன் பணிகளை ஆரம்பித்தார். உதவிக்கு அவரது சகோதரர் ராஜவர்மாவும், சகோதரி மங்களபாய் தம்புராட்டியும் இருந்தார்கள். கேன்வாஸில் ரவிவர்மாவின் தூரிகை

நர்த்தனமாட ஆரம்பித்தது. பிருந்தாவனத்தில் கிருஷ்ணனுக்காக ராதை காத்திருக்க ஆரம் பித்தாள். நளனும் தமயந்தியும் காதல் செய்தார்கள். விசுவாமித்திரர் தவம் கலைக்க மேனகை நடனமாடினாள். லஷ்மி, சரஸ்வதி என சில இந்துக் கடவுள்கள் உருவம் பெற்றார்கள். ஊர்வசி ஒயிலாகப் படுத்திருந்தாள். சில ராமாயண, மகாபாரதக் காட்சிகளென மொத்தம் பதினான்கு அதிஅற்புத ஓவியங்கள் பிறந்தன.

வருடக்கணக்கில் பரோடாவிலேயே தங்கி, பணியை முடித்துவிட்டுச் செல்லும்போது ரவி வர்மாவுக்கு சாயாஜிராவ் கொடுத்த வெகுமதி அன்றைய மதிப்பில் ரூபாய் ஐம்பதாயிரம்.

ரவிவர்மாவின் ஓவியங்களை ரசிப்பதற்காகவே லஷ்மி விலாஸ் அரண்மனைக்கு வந்து சென்ற ஐரோப்பிய விருந்தினர்கள் உண்டு. தனது விருந்தினர்கள் தங்குவதற்காகவே லஷ்மி விலாஸில் மாபெரும் அறைகளைக் கட்டி வைத்திருந்தார் சாயாஜி ராவ். அவர்களுக்காக பில்லியர்ட்ஸ் விளையாட்டு அறைகளையும் அமைத்திருந்தார். விருந்தினர்களை மகிழ் விக்கும் விதத்தில் அரண்மனையில் பல இடங்களில் மெகா நீரூற்றுகள் பாலே ஆடிக் கொண்டிருந்தன.

'நாளைக்கு நீங்கள் சமஸ்தானத்தை எதில் சுற்றி வர விரும்புகிறீர்கள். ரோல்ஸ் ராய்ஸிலா? யானையிலா? குதிரையிலா?' முந்தைய நாள் இரவே விருந்தினர்களிடம் இந்தக் கேள்வி அடங்கிய ஓர் அட்டை கொடுக்கப்பட்டுவிடும். அவர்களது விருப்பத்துக்கேற்ற வாகனம் மறுநாள் தயாராக இருக்கும். அப்போது பரோடாவில் ப்ளேக் நோய் பீதி நிலவியது. இரவில் விருந்தினர்கள் கொசுக்கடி இன்றி நிம்மதியாகத் தூங்குவதற்காக, பிரான்ஸிலிருந்து வாசனைத் திரவியம் ஒன்றை வரவழைத்திருந்தார் சாயாஜி ராவ். அதனைக் கனலில் கலந்து புகைய விட்டால், கொசு குலைநடுங்க ஓடிவிடுமாம்.

மகாராஜா உணவு அறைக்குள் நுழையும்போது, வயது முதிர்ந்த மூதாட்டி ஒருத்தி சிறிய பூங்கொத்து ஒன்றைக் கொடுப்பாள். அவளிடம் பூங்கொத்தை வாங்குவதை ஒரு செண்டி மெண்டாகவே வைத்திருந்தார் சாயாஜி ராவ். அதற்காக அவளுக்குத் தனி பென்ஷன். விருந் தினர்களோடு சாயாஜி ராவும் சிம்னா பாயும் உணவருந்தும்போது, இந்திய பாணியில், ஐரோப்பிய பாணியில் என இரண்டு வகைகளில் பதார்த்தங்கள் மணம் வீசிக் கொண்டிருக்கும். சிம்னா பாய்க்கு எப்போதுமே இந்திய பாணிதான். ராஜ குடும்பத்தினருக்கு தங்கத் தட்டுகளில் உணவு. விருந்தினர்களுக்கு வெள்ளித் தட்டில். சாப்பிட்டு முடித்ததும் கைகழுவ தண்ணீர், மேசை தேடி வரும்.

அடுத்ததாக சிம்னா பாய் கைமணக்கும் ஸ்பெஷல் பீடா. வைரக்கற்கள் பதிக்கப்பட்ட அந்த தங்க வெற்றிலைப் பெட்டியைத் திறப்பாள். வெற்றிலைக்குள் பாதாம், முந்திரி வகைகளோடு இன்னபிற லாகிரி வஸ்துக்களையும் வைத்து மடித்துக் கொடுப்பாள். அதன் சுவையில் விருந் தினர்கள் கிறுகிறுத்துப் போவார்கள்.

பீடாவுக்குப் பிறகும் சுவைக்க இரண்டு தகவல்கள். ஒன்று, லஷ்மி விலாஸ் அரண்மனை, லண்டன் பக்கிங்ஹாம் அரண்மனையைவிட மூன்று மடங்கு பெரியது. இரண்டு, சாயாஜி ராவ் அரண்மனையில் தனது அறையிலிருந்து, உணவு அறைக்கு வருவதற்காகவே பிரத்யேக இரு சக்கர மோட்டார் வண்டி ஒன்றை வைத்திருந்தார்.



# அபராதம் ரெண்டு அணா!

அரவிந்தர், 'கார்தேஜ்' (Carthage) என்ற அந்த நீராவிக் கப்பலில் ஏறினார். கிட்டத்தட்ட பதினான்கு வருடங்கள் கழித்து இந்தியாவை நோக்கிப் பயணம். ஏழு வயதிலேயே தனது மூத்த சகோதரர்களுடன் இங்கிலாந்துக்கு கல்வி கற்பதற்காக அனுப்பி வைக்கப்பட்டார். இத்தனை வருடங்கள் படிப்பு படிப்பு என்றே ஓடி விட்டன.

இத்தனை வருடங்கள் கழித்து தாய்நாடு நோக்கிப் பயணம். அரவிந்தரின் முகத்தில் துளிகூட மகிழ்ச்சியில்லை. ஓர் அழுத்தமான சோகம் படிந்திருந்தது, தந்தையின் நினைவுகள்.

இங்கிலாந்தில் அரவிந்தர், பள்ளி படிப்பில் நல்ல மதிப்பெண்களுடன் தேர்ச்சி பெற்றார். கேம்பிரிட்ஜ் கிங்ஸ் கல்லூரியில் ஸ்காலர்ஷிப்புடன் இடமும் கிடைத்தது. 'இதுவரை எங்களிடம் படித்த மாணவர்களிலேயே அரவிந்தர் தனித்துவம் மிக்கவன். அவனது திறமையைக் கண்டு வியக்கிறோம்' என்று கல்லூரியின் பேராசிரியர்கள் பலரும் பாராட்டினார்கள். 1890ல் அரவிந்தர், இந்திய சிவில் சர்வீஸ் (ICS) தேர்வு எழுதினார். அதில் வெற்றி பெறவும் செய்தார்.

ஏதாவது ஓர் உயர் பதவி கிடைக்கும் என்று அவர் காத்திருந்த சமயத்தில் குதிரையேற்றத் தேர்வில் கலந்து கொள்ள வேண்டும் என்றார்கள். அரவிந்தருக்கு ஆங்கிலம், லத்தீன், கிரீக், பிரெஞ்சு தெரியும். கவிதை, இலக்கியம் எல்லாம் தெரியும். ஒரு பதவியில் இருந்துகொண்டு நிர்வாகம் செய்வதற்குத் தேவையான அறிவுசார்ந்த விஷயங்கள் எல்லாமே அவரிடம் நிரம்பவே இருந்தன.

குதிரையேறி என்னை எதற்கு நான் நிரூபிக்க வேண்டும்? அதற்கும் எனக்கு வழங்கப்பட விருக்கும் பதவிக்கும் என்ன சம்பந்தம்? முடியாது என்று மறுத்தார் அரவிந்தர். அவரது ICS கனவு பொய்த்தது.

அடுத்து என்ன செய்யலாம் என்று குழம்பிப் போயிருந்த சமயத்தில், ஜேம்ஸ் காட்டன் (James Cotton) ஒரு புதிய வாசலைத் திறந்து வைத்தார். காட்டன், அரவிந்தர் தந்தையான கோஷின் நண்பர். 'பரோடா மகாராஜா லண்டன் வந்திருக்கிறார். இன்று மாலையில் அவரைச் சந்திப்ப தற்காகச் செல்கிறேன். வருகிறாயா?' என்று காட்டன் கேட்டார். அரவிந்தரும் சென்றார்.

சந்திப்பு நடந்தது. மகாராஜா சாயாஜி ராவ், அரவிந்தரின் கல்வித் தகுதியையும், அவரது அறிவாற்றலையும் கண்டு வியந்தார். ஒவ்வொரு முறை ஐரோப்பாவுக்குச் செல்லும்போதும், தான் அங்கு சந்திக்கும் திறமை வாய்ந்தவர்களைத் தன் சமஸ்தானத்துக்கு அழைத்து வந்து பதவி கொடுப்பது சாயாஜி ராவின் வழக்கம். 'பரோடா சமஸ்தானத்தில் அரசாங்க வேலை. வந்து விடுகிறீர்களா?' என்று சாயாஜி ராவ் கேட்க, சம்மதம் சொன்னார் அரவிந்தர்.

பால்ய காலத்திலிருந்து பருவ காலம் வரை இங்கிலாந்திலேயே கழித்தாலும், இந்தியாவுக்குத் திரும்பி வந்து சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணமே அரவிந்தருக்கு இருந்தது. எனவே பரோடா வாய்ப்பை உடனே ஒப்புக் கொண்டார்.

முதலில் அரவிந்தர், 'ருமெனியா' என்ற கப்பலில் கிளம்பி வருவதாகத்தான் இருந்தது. அப்படித்தான் இந்தியாவில் தனது தந்தைக்கும் தகவல் அனுப்பியிருந்தார். ஆனால் இறுதி நேரத்தில் திட்டம் மாறியது. அரவிந்தர், ருமெனியாவில் ஏறவில்லை.

1892, அக்டோபர் 27. மோசமான தட்ப வெப்ப நிலை. கடலில் கடும் புயல் காற்று. போர்ச்சுகல் கடல் பகுதியில் ருமெனியாக் கப்பல் உடைந்து மூழ்கியது. கப்பலில் இருந்த 113 பேரில் ஒன்பது பேர் மட்டுமே உயிர் பிழைத்தார்கள்.

'அய்யய்யோ, உங்க பையன் வந்த கப்பல் நடுக்கடல்ல மூழ்கிடுச்சு. யாருமே உயிர் பிழைக் கலையாம்' - அரவிந்தரின் தந்தையை இப்படி ஒரு தகவல் சென்று தாக்கியது. இதயத்தைப் பிடித்தபிடி விழுந்தார். அன்று இரவே அவர் இறந்து போனார். தந்தை மறைந்த செய்தி அந்த டிசம்பரில் அரவிந்தருக்கும் தெரிய வந்தது. 1893, ஜனவரி 12ல் அரவிந்தர் கார்தேஜ் கப்பலில் ஏறினார். பிப்ரவரி 6ல் அது பம்பாயை வந்தடைந்தது.

பரோடாவுக்குச் சென்ற அரவிந்தருக்கு முதலில் வருவாய்த் துறையில் வேலை ஒதுக்கப்பட்டது. மாதம் இருநூறு ரூபாய் சம்பளம். சாயாஜி ராவ், நாலும் அறிந்த ஒரு செயலாளர் தனக்கு இருந்தால் வசதி என்று நினைத்தார். மறுகணமே அரவிந்தர்தான் அவரது நினைவுக்கு வந்தார். மகாராஜாவின் செயலாளர் என்ற பதவியில் இல்லாமலேயே அரவிந்தர் அந்தப் பணிகளைச் செய்ய ஆரம்பித்தார்.

பரோடா தேசியக் கல்லூரியில் பிரெஞ்சு வகுப்பு எடுக்க ஆள் இல்லாமல் இருந்தது. அரவிந்தர் இருக்கக் கவலை எதற்கு? அவர் பன்மொழி வித்தகராயிற்றே. பகுதி நேர பிரெஞ்சு ஆசிரியர் வேலையும் சேர்ந்து கொண்டது. என்னது, ஆங்கிலம் எடுக்கவும் சரியான வாத்தியார் இல்லையா? மிஸ்டர். அரவிந்தர் அதையும் கொஞ்சம் சேர்த்துப் பார்த்துக் கொள்ளுங்களேன்.

இப்படிப் பகுதி நேர கல்லூரி விரிவுரையாளராக, பின் பேராசிரியராக, பின்பு கல்லூரியின் துணை முதல்வராகவே நியமிக்கப்பட்டார் அரவிந்தர். பல்வேறு பொதுக்கூட்டங்களுக்கும் நிகழ்ச்சி களுக்கும் சிறப்பு விருந்தினராகச் சென்று உரையாற்றுவது மகாராஜாவின் வழக்கம். அதற்கான உரைகளைத் தயாரிக்கும் பொறுப்பும் அரவிந்தருக்குச் சேர்ந்து கொண்டது. அவைபோக அரசாங்க ரீதியான கடிதங்கள் எழுதுவது, அறிக்கைகள் தயாரிப்பது என்று ஏகப்பட்ட உபரி வேலைகள் வேறு. இந்தக் கொசுறு வேலைகளுக்காக அரவிந்தருக்கான சம்பளத்தை அதிகரித்துக் கொடுத்தார் சாயாஜி ராவ்.



இளவயது அரவிந்தர்

இடைப்பட்ட காலத்தில் சாயாஜி ராவ் தம்பதி யினருக்கு கோபால கிருஷ்ண கோகலேவின் நட்பு கிடைத்திருந்தது. இந்திய தேசிய காங்கிரஸின் தொடக்க விழா 1885ல் பம்பாயில் நடந்தபோது, அதில் சாயாஜி ராவ் கலந்து கொள்ளவில்லை. ஆனால் காங்கிரஸை மானசீகமாக ஆதரித்தார்.

முன்னாள் மகாராஜா மல்ஹர் ராவ் காலத்தில் பரோடாவின் திவானாக இருந்த தாதாபாய் நௌரோஜியுடனும் சாயாஜி ராவுக்கு நல்ல உறவு இருந்தது. அவர் 1892ல் இங்கிலாந்து பாராளு மன்றத் தேர்தலில் மத்திய பின்ஸ்பெரி (Finsbury) தொகுதியில் வேட்பாளராக நின்றார். அதற்குரிய தேர்தல் செலவுகளுக்காக சாயாஜி ராவ் ஆயிரம் பவுண்டுகள் அளித்தார். இங்கிலாந்து பாராளுமன்றத்துக்குத் தேர்வான முதல் இந்தியர் தாதாபாய் நௌரோஜிதான்.

பல்வேறு தேசியத் தலைவர்களைத் தன்னோடு உணவருந்த அழைத்து, அவர்களோடு தேசிய விஷயங்கள் பற்றிப் பேசுவது சாயாஜி ராவின் வழக்கம். அரவிந்தருக்குப் பெரும்பாலும் காலை உணவு லஷ்மி விலாஸ் அரண்மனையில்தான். உணவு மேசையில் சென்று காத்திருப்பார். சாயாஜி ராவ் வருவார். கூடவே ஒரு பணியாள் கையில் சிறு நோட்டு மற்றும் பென்சிலுடன் காத்திருப்பான். காரணம் சாயாஜி ராவ், எப்போது வேண்டுமானாலும், ஏதாவது ஒரு வேலை பற்றிச் சொல்லி, 'குறித்துக் கொள்ளுங்கள்' என்பார் அல்லது அந்த நோட்டைப் பிடுங்கி தான் ஏதாவது குறித்து வைத்துக் கொள்வார். ஆகவே அரண்மனையில் மகாராஜாவுக்கான பிரத்யேகப் பணியாளர்கள் அனைவரும் எப்போதும் நோட்டு, பென்சில் உடனேயே திரிவார்கள்.

'என்ன மிஸ்டர். அரவிந்தர், இன்றைய கூட்டத்தில் நான் பேச வேண்டிய உரை தயாராகி விட்டதா? கல்லூரிக்கு புதிய நூல்கள் வாங்க வேண்டும் என்று சொன்னீர்களே, ஏற்பாடு செய்து விட்டீர்களா? புதிய விரிவுரையாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்கான நேர்முகத் தேர்வு எப்போது?'

சாயாஜி ராவ் சாப்பிட்டு முடிப்பதற்குள், அவருடைய அத்தனைக் கேள்விகளுக்கான பதிலையும் அளிக்க வேண்டியது அரவிந்தரின் பொறுப்பு. மற்ற மகாராஜாக்களைப் போல

உணவு வேளையில் ஊட்டுவதற்கு சுந்தரிகளை நியமித்துக் கொள்ளவில்லை சாயாஜி ராவ். அந்த நிமிடங்களையும் வீணாக்காமல் சமஸ்தானத்தின் வளர்ச்சித் திட்டங்கள் பற்றிய திட்டமிடுதலுக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

1901 ஏப்ரலில் அரவிந்தர், மிருனாளினி (Mrinalini) என்ற பெண்ணை மணந்து கொண்டார். பரோடா சமஸ்தானத்தில் பல்வேறு முக்கியப் பொறுப்புகளை வகித்துக் கொண்டிருந்தாலும், அரவிந்தரின் மனத்தில் சுதந்தரப் போராட்ட உணர்வே மிகுந்திருந்தது. 1905ல் வங்கப் பிரிவினை நிகழ்ந்த சமயம். அரவிந்தர் தன் சுதந்தரத்துக்குத் தடையாக இருந்த சமஸ்தானப் பொறுப்புகளைக் கைகழுவிவிட்டு, இந்திய சுதந்தரப் போராட்டத்தில் தீவிரமாக இறங்கினார்.

சாயாஜி ராவால் அரவிந்தருக்கு அணைபோட முடியவில்லை. மிகவும் அடிமட்டத்திலிருந்து வந்தவர் என்பதால் சாயாஜி ராவ், ஒரு விஷயத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந் தார். 'கல்வி. சமுதாயத்தில் உள்ள எல்லாவிதமான பிரச்னைகளையும் ஏற்றத்தாழ்வுகளையும் போக்க வேண்டுமென்றால் அனைவருக்கும் கல்வி அளிப்பது ஒன்றுதான் ஒரே வழி.'

இன்றுகூட 'அனைவருக்கும் கல்வி' என்று கூவிக் கொண்டு மத்திய அரசு போராடிக் கொண்டி ருக்கிறது. ஆனால் 1893லேயே அதற்கான முதல் முயற்சியை சாயாஜி ராவ் மேற்கொண்டார். தன் சமஸ்தானத்தைச் சேர்ந்த அம்ரேலி (Amreli) மாவட்டத்திலுள்ள பத்து கிராமங்களைத் தேர்ந்தெடுத்தார். 6 - 14 வயதுக் குழந்தைகள் எல்லோரும் கண்டிப்பாகப் பள்ளிக்குச் செல்ல வேண்டும் என்று உத்தரவிட்டார். அதற்கேற்ப அந்தக் கிராமங்களில் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினார். ஆசிரியர்களையும் கொண்டு வந்தார். குழந்தைகள் ஒழுங்காகப் படிக்க வருகிறார்களா என்பதைக் கண்காணிக்க கல்வி அலுவலர்களையும் நியமித்தார்.

அந்தப் பிரதேசம் பருத்திக் காடு. குழந்தைகளை எல்லாம் பள்ளிக்கு அனுப்பிவிட்டால், யார் பருத்தி பறிப்பது என்று பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைக் காட்டுக்கே அனுப்பினார்கள். பள்ளிக்கூடங்களில் கரும்பலகைகள் வெறுமையாக இருந்தன. 'மகாராஜா, புள்ளைங்க எல்லாம் கரீக்டா இஸ்கூலுக்கு வருதுங்கோ. அம்சமா படிக்குதுங்கோ' என்று தங்கள் பதவிக்கு ஆபத்து வராதபடியாகக் கல்வி அலுவலர்கள் அவ்வப்போது மகாராஜாவுக்குப் பொய் அறிக்கை அனுப்பிக் கொண்டிருந்தார்கள்.

உண்மை நிலவரம் நீண்ட நாள்கள் கழித்தே சாயாஜி ராவுக்குத் தெரிய வந்தது. அவர் மனம் தளரவில்லை. மேலும் பல கிராமங்களில் புதிய பள்ளிகளை ஏற்படுத்தினார். புதிய விதிமுறை ஒன்றையும் கொண்டு வந்தார். கிராமம் கிராமமாக தண்டோரா ஒலித்தது.

'அருமை மக்களே, மருவாதையா புள்ளைங்கள இஸ்கூலுக்கு அனுப்புங்கோ, இல்லாக்காட்டி ரெண்டு அணா அபராதம் கட்டணும். இது மகாராசாவோட உத்தரவு.'

பள்ளிக்கூடங்களில் மாணவர்களின் வாசம் வீச ஆரம்பித்தது. வருகைப் பதிவை அதிகரிக்க, அபராதக் கட்டணத்தை ஒரு ரூபாய் என்று உயர்த்தினார். அந்நாளில் எவ்வளவு பெரிய தொகை அது? அவ்வளவெல்லாம் அபராதம் கட்ட முடியுமா என்ன? எங்கே மகாராஜாவின் வீரர்கள் வந்து தங்களைக் கைது செய்துவிடுவார்களோ என்று பெற்றோர்கள் பயந்தார்கள். 'ராசா நீ பள்ளிக்கூடத்துக்கே போயிருப்பா' என்று பிள்ளைகளை வலுக்கட்டாயமாக அனுப்ப ஆரம் பித்தார்கள். பள்ளிக்கூட வளாகங்களில் ஓரொன் ஒண்ணு ஓங்கி ஒலிக்க ஆரம்பித்தது.

அடுத்த பிரச்னை. 'பொம்பளப் புள்ளைக்கெல்லாம் படிப்பெதற்கு?' மீண்டும் சாயாஜி ராவ் மிரட்டலைத்தான் முன்வைக்க வேண்டியதிருந்தது. ஆகவே பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலேயே பரோடாவில் பெண் குழந்தைகள் பள்ளிகளுக்குச் செல்ல ஆரம் பித்தார்கள்.

இன்னொரு பிரச்னை. தீண்டாமை. 'ஹரிஜன்களோடு எங்க பிள்ளைங்களும் சேர்ந்து படிக் கிறதா?' சில சாதிக்காரர்கள் கூவ ஆரம்பித்தார்கள். பள்ளிக்கூடம் எல்லோருக்கும் பொதுவான இடம். எல்லாப் பிள்ளைகளும் அங்கு சேர்ந்துதான் படிக்க வேண்டும் என்பதில் தெளிவாக இருந்தார் சாயாஜி ராவ். அவரது பகீரத பிரயத்தனங்களால், 1910ல் பரோடா சமஸ்தானம் முழுவதும் இயங்கிக் கொண்டிருந்த ஆரம்பப் பள்ளிகளின் எண்ணிக்கை 2938.

சாயாஜி ராவ், குஜராத்தி மக்களுக்குப் பயன்படும்படி வங்கி சேவை ஆரம்பிக்கத் திட்ட மிட்டார். அதற்காக பிரிட்டிஷ் அதிகாரிகளிடம் ஆலோசனைகள் செய்து அனுமதியும் பெற்றார். 1897 கம்பெனி சட்டப்படி, 1908 ஜூலை 20ல் பரோடாவில் ஒரு சிறிய கட்டடத்தில் அந்த வங்கி செயல்பட ஆரம்பித்தது. அது பரோடா வங்கி (Bank of Baroda). வங்கிக்கான மூலதனமாகத் தனது சொந்தப் பணத்திலிருந்து ரூபாய் பத்து லட்சத்தை வழங்கினார் மகாராஜா. முதல் உலகப் போர் மற்றும் பல இக்கட்டான சூழ்நிலைகளில் கூட எந்தவித நிதி நெருக்கடிகளிலும் சிக்கிக் கொள்ளாமல் சிறப்பாக இயங்கிய அந்த வங்கி, 2008ல் நூற்றாண்டு விழா கொண்டாடியது.

பரோடா சமஸ்தானம் பல வகைகளில் நிமிர்ந்து நிற்பதற்காக ஏகப்பட்ட திட்டங்களைச் செயல்படுத்திய மகாராஜா சாயாஜி ராவுக்கு, 1911ல் ஒரு தர்மசங்கடம் காத்திருந்தது.



# 92

# டெல்லி தர்பார்!

ஒரு சதுர மைல் என்றால் 640 ஏக்கர். இருபத்தெட்டு சதுர மைல் என்றால்? பெருக்கினால் கால்குலேட்டர் காட்டும் எண் 17920 ஏக்கர். 1911ல் டெல்லியில் நடக்கவிருந்த தர்பாருக்காக அவ்வளவு பெரிய நிலம் ஒதுக்கப்பட்டது.

எதற்காக என்று தெரிந்து கொள்வதற்கு முன்பாக, தர்பார் என்றால் என்ன என்று பார்த்துவிடலாம்.

தர்பார் என்பது பெர்சிய மொழிச்சொல். அரசவை என்று சொல்லலாம். தர்பாரை இந்தியாவுக்கு அறிமுகப்படுத்தியவர்கள் முகலாயர்கள். மாபெரும் சபைதனில் அரசர் தலைமையில் கூடுவார்கள். பொதுவாக அரசரைப் புகழ்ச்சியால் சொறிந்து விடுவார்கள். விருந்தினரைச் சந்திப்பார்கள். ஏதாவது மகிழ்ச்சியான நிகழ்வுகள் என்றால் கேளிக்கையாகக் கொண்டாடுவார்கள். வியாபார விஷயங்களைப் பேசு வார்கள். அவ்வப்போது மக்கள் நலத் திட்டங்கள் ஏதாவது நிறைவேற்றப்படுவதும் உண்டு.

பிரிட்டிஷார், தங்களை இந்திய மக்களுக்கு மிகவும் நெருக்கமானவர்களாகக் காட்டிக் கொள்வதற்காக, இந்த தர்பார் கலாசாரத்தைத் தாங்களும் பின்பற்ற நினைத்தார்கள். மகிழ்ச்சியான விஷயங்களைக் கொண்டாடுவதற்கு மட்டும் இந்தியாவில் தர்பாரைக் கூட்டலாம் என்று முடிவெடுத்தார்கள். 1877, ஜனவரி 1 அன்று, பிரிட்டிஷாரின் முதல் இந்திய தர்பார் டெல்லியில் கூடியது. இந்தியாவின் பேரரசியாக குயின் விக்டோரியா அறிவிக்கப்பட்டார். தர்பாரில் பல மகாராஜாக் களும், சில ராஜாக்களும் கலந்து கொண்டு அந்த நிகழ்வைக் கொண்டாடி னார்கள்.



டெல்லி தர்பார் ஊர்வலம் - 1903

*1903*ன் ஆரம்பத்தில் வைஸ்ராய் கர்ஸன், இரண்டாவது தர்பாரை ஏற்பாடு செய்திருந்தார். அப்போது கிங்காக ஏழாம் எட்வர்டும், குயினாக அலெக்ஸாண்ட்ராவும் பதவி ஏற்றிருந்தார்கள். அவர்களை டெல்லிக்கு வரவழைத்து இங்கொரு பதவியேற்பு விழா நடத்துவதற்கு ஏற்பாடு செய்திருந்தார் கர்ஸன்.

எல்லா மகாராஜாக்களுக்கும் கர்ஸனிடமிருந்து ஒரு கடிதம் சென்றது. கட்டளை என்றே சொல்லலாம். 'அருமை மகாராஜாக்களே, தர்பாருல அசத்தலா ஒரு ஊர்வலம் வைக்கப் போறேன். நீங்க எல்லாருமே அதுல கண்டிப்பாக் கலந்துக்கணும். சும்மா இல்ல, அம்சமா யானைமேல ஏறி வரணும். கிங்குக்கு மருவாதி செய்யணும். என்கிட்ட யானை இல்லைன்னு டபாய்க்கக் கூடாது. பக்கத்துல யார்கிட்டயாவது ஒரு யானையைக் கடன் வாங்கிட்டாவது வந்து சேர்ற வழியைப் பாருங்க.'

பல மகாராஜாக்கள் 'அப்படியே ஆகட்டும்' என்று ஜால்ரா பதில் அனுப்பினார்கள். ஆனால் பரோடா மகாராஜா சாயாஜி ராவுக்கு அதில் விருப்பமில்லை. 'என் உடல்நிலை இருக்கும்



வைஸ்ராய் ஹார்டிங்

நிலையில் என்னால் யானைமேல் உட்கார்ந்து ஊர் வலம் வரமுடியாது என்பதைப் பணிவுடன் தெரி வித்துக் கொள்கிறேன்' என்றொரு கடிதத்தைத் தன் சமஸ்தானத்தின் ரெஸிடெண்ட் மூலமாக கர்ஸ னுக்கு அனுப்பி வைத்தார்.

கர்ஸனுக்குக் கடுப்பு. எப்படியாவது சாயாஜி ராவின் மூக்கை உடைக்க வேண்டும் என்று நினைத்தார். இன்னொரு கடிதத்தை அனுப்பினார். 'தர்பாரில் கலந்துகொள்ளும் தங்கள் சமஸ்தான படைவீரர் களின் சிவப்பு நிறச் சீருடையை நீலமாக மாற்றிக் கொள்ளுங்கள். ஏனென்றால் வைஸ்ராய்க்குரிய பாதுகாவலர்களின் சீருடையும் சிவப்புதான். ஆகவே..'

கர்ஸன் வேண்டுமென்றே படுத்துகிறார் என்று சாயாஜி ராவுக்குத் தெளிவாகப் புரிந்துபோனது. 'பரோடா மகாராஜா தர்பாருக்கு வருவது சந்தேகமே' என்றொரு செய்தி பம்பாய் மாகாண கவர்னரிட மிருந்து கர்ஸனுக்குச் சென்றது. அதே நேரத்தில் சாயாஜி ராவும் கர்ஸனுக்குத் தன் பதிலை அனுப்பி னார்.

'நான் தர்பாரில் கலந்து கொள்கிறேன். சொந்த விருப்பத்தினால் அல்ல. கலந்துகொள்ளாவிட்டால், அவமரியாதை செய்துவிட்டதாக நினைப்பீர்கள். அந்த சங்கடத்தைத் தவிர்ப்பதற்காகத்தான். என் வளர்ப்புத் தாய் ஜம்னா பாய் சமீபத்தில் இறந்துவிட்டார்கள். சமஸ்தானத்தில் துக்கம் அனுஷ்டிக்கிறோம். ஆகவே ஊர் வலத்தில் என்னாலோ, என் படைவீரர்களாலோ கலந்துகொள்ள முடியாது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.'

அதற்கு மேல் கர்ஸனால் எந்த எதிர்வினையும் புரிய முடியவில்லை. கூடவே கிங் ஏழாம் எட்வர்டும் தர்பாருக்கு வராமல் அல்வா கொடுக்க, கர்ஸன் நொந்து போனார். எட்வர்ட்டுக்குப் பதிலாக அவரது சகோதரர் இளவரசர் ஆர்தர் வந்தார். கிங்கின் சார்பில் அவரது பிரதிநிதியாக, கர்ஸனே அனைத்து மரியாதைகளையும் ஏற்றுக் கொண்டார். தர்பாரில், எல்லோர் முன்னிலை யிலும் கர்ஸனை வணங்கினார் சாயாஜி ராவ். பின் தன் இருக்கைக்குச் சென்றார். ஏதோ நினைத்தவராகச் சட்டென்று திரும்பி, 'கிங் ஏழாம் எட்வர்டுக்கு என் மனமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துவிடுங்கள்' என்றார் நக்கலாகச் சிரித்தபடியே. அதாவது என் வணக்கம் வைஸ்ராய்க்கு அல்ல, கிங்குக்கு என்ற அர்த்தத்தில்.

1911ல் அடுத்த தர்பாரைக் கூட்டுவதற்கான சூழ்நிலை வந்தது. புதிய கிங்காக ஐந்தாம் ஜார்ஜும், குயினாக மேரியும் பதவி ஏற்றிருந்தார்கள். அவர்களை இந்தியாவின் பேரரசராக, பேரரசியாக அறிவிக்க வேண்டுமல்லவா. எவ்வளவு கொண்டாட்டமான விஷயம் அது. யாரங்கே, டெல்லியில் அடுத்த பிரம்மாண்டமான பிரிட்டிஷ் தர்பாரைக் கூட்டுவதற்கு ஏற்பாடுகளைச் செய்யுங்கள்.

அப்போது இந்தியாவின் வைஸ்ராயாக ஹார்டிங் (Hardinge) இருந்தார். கிங்கின் இந்தியப் பிரதிநிதியாகப் பொறுப்பில் இருந்த அவர், ஐந்தாம் ஜார்ஜுக்குப் பெரிய அளவில் மரியாதை செய்து தன் 'ராஜ விசுவாசத்தை' அரங்கேற்ற நினைத்தார். 1911, டிசம்பரில் தர்பாருக்கான நாள் குறிக்கப்பட்டது. அந்த ஜனவரியிலிருந்தே அதற்கான வேலைகள் ஜரூராக நடக்க ஆரம்பித்தன.

டெல்லியின் வடக்குப் பகுதியில் மாபெரும் நிலம் ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டது. முதலிலேயே பார்த்தோமே, 17920 ஏக்கர். அப்போதுதான் அங்கு மக்காச்சோள அறுவடை முடிந்திருந்தது. அந்த விளைநிலத்தைச் சமப்படுத்தும் வேலைகள் ஆரம்பமாயின. எங்கெங்கு என்னென்ன எப்படியெப்படி அமைக்க வேண்டும் என்று ஒட்டுமொத்த வரைபடமும் தயாரானது.

தேவையான இடங்களில் தற்காலிகப் பாதைகள் அமைக்கப்பட்டன. நாற்பது மைல்களுக்குத் தார்ச்சாலை போடப்பட்டது. அடுத்ததாக இருப்புப் பாதைகள் முளைக்க ஆரம்பித்தன. பதினாறு குட்டி ரயில் நிலையங்கள் தோன்றின. தேவையான பொருள்களை ஏற்றிக் கொண்டு ரயில்கள் வர ஆரம்பித்தன.

கிங் ஜார்ஜ் தங்குவதற்காகவும், பதவியேற்பு விழா மேடைக்காகவும் தனியாக மையப்பகுதியில் எண்பத்து மூன்று ஏக்கர் நிலம் ஒதுக்கப்பட்டது. அதைச் சுற்றிலும் 233 இடங்களில் தனித் தனியே முகாம்கள் அமைப்பதற்காகத் திட்டமிட்டிருந்தார்கள். பதவியேற்பு விழாவில் கலந்துகொள்ளும் பிரிட்டிஷ் விருந்தாளிகளும், இந்தியாவிலுள்ள அனைத்து சமஸ்தான மகாராஜாக்களும் ராஜாக்களும் குட்டி ராஜாக்களும் தங்குவதற்காக அந்த முகாம்கள்.

அதிலும் ஹைதராபாத், மைசூர், பரோடா போன்ற இருபத்தொரு குண்டு மரியாதை கொண்ட பெரிய சமஸ்தான மகாராஜாக்களுக்குரிய முகாம்கள் என்பது சற்றே பெரியதாக, கிங் முகாமுக்கு அருகிலேயே இருப்பதுபோல அமைக்கப்பட்டிருந்தன. அதேபோல தரம் வாரியாக முகாம்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஆயிரக்கணக்கான கூலியாள்கள், கூடாரங்கள் அமைப்பதற்காக வெட்டவெளி மொட்டை வெயிலில் உழைத்தார்கள்.

ஒவ்வொரு மகாராஜாவும் தங்களுக்குரிய முகாமில் தேவையான வசதிகளைச் செய்துகொள்ள அனுமதி வழங்கப்பட்டிருந்தது. 'ஆளுயரக் கண்ணாடியால் கூடாரம் நிறைந்திருக்க வேண்டுமா? அமைச்சுக்கோ. கூடாரத்துக்குள்ளேயே ரோல்ஸ்-ராய்ஸ் வந்து செல்ல வேண்டுமா? ஓட்டிக்கோ. தங்கத்தாலான டாய்லெட்டில் இரண்டுக்குச் சென்று பழக்கமா? போய்க்கோ.' இவைதவிர மகாராஜாக்கள், தங்கள் சொந்த உபயோகத்திற்காக குதிரைகள், யானைகள், கார்கள் எதுவேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம்.

எல்லா இடங்களிலும் மின்சார வசதி செய்து கொடுக்கப்பட்டது. குறிப்பிட்ட இடைவெளிகளில் மின் கம்பங்கள். அதுபோக முகாமுக்கு முகாம் தனித்தனியே விளக்குகள், அலங்கார விளக்குகள். தர்பார் நடக்கவிருந்த காலம் குளிர்காலம் என்பதால் கிங்கின் கூடாரத்தில் மட்டும் மின்சார ஹீட்டர் பொருத்தப்பட்டிருந்தது. மற்றவர்கள் குளிர்காய, மார்பிள்களாலான கணப்பு அடுப்புகள் அமைக்கப்பட்டிருந்தன. மூலைக்கு மூலை தண்ணீர் வசதி. பைப்பைத் திறந்தால், ஷவரைத் திறந்தால் தண்ணீர் சொய்ங்!

தர்பார் நடக்கும் நாள்களில் ஒட்டுமொத்த முகாமில் இரண்டரை லட்சம் பேர் கூடுவார்கள் என்று கணக்கிடப்பட்டிருந்தது. அத்தனை பேருக்கும் தேவையான உணவுப்பொருள்கள்,



டில்லி தர்பார் அரங்கம்

காய்கறிகள், இறைச்சி, பால், ரொட்டி, பழங்கள், சோமபானங்கள் எல்லாம் ரயிலிலும் மற்ற மோட்டார் வாகனங்களிலும் வந்து இறங்கின. முப்பது இடங்களில் தற்காலிகத் தபால் நிலையங்கள் அமைக்கப்பட்டன. 116 இடங்களில் தபால் பெட்டிகள் தொங்கின. ஆங்கிலம் மற்றும் இந்தியாவின் முக்கியமான இருபது மொழிகளில் தந்தி சேவை ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

கிங்கின் முகாமில் தரையெங்கும் பெர்சிய கம்பளங்கள். கூடாரங்களைச் சுற்றி பூச்செடிகள். உத்தரத்தில் கிரிஸ்டல் அலங்கார விளக்குகள். அந்தக் கூடாரத்தை ஒட்டி, 200 பேர் விருந்து உண்ணும் அளவில் ஒரு டைனிங் கூடாரம். கிங்கின் முகாமிலேயே 120 ஐரோப்பிய முக்கியஸ்தர்கள் தங்குவதற்காகச் சிறப்புக் கூடாரங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. பில்லியர்ட்ஸ் விளையாட தனி கூடாரங்கள்.

பதவியேற்பு விழாவுக்கான மேடை தனியாக பல ஏக்கர் பரப்பளவில் கட்டப்பட்டிருந்தது. நடுவில் ஓர் உயரமான மண்டபம். அதன்மேல் அலங்கரிக்கப்பட்ட தங்க நிற டூம். மண்டபத்தைச் சுற்றி ஷாமியானா. பல்வேறு அலங்காரங்கள். அந்த நவம்பரின் மத்தியில் விழாவுக்கான எல்லா ஏற்பாடுகளும் முடிந்திருந்தன.

நவம்பரின் இறுதி வாரத்தில் இந்தியாவே டெல்லியை நோக்கி நகருவது போலொரு உணர்வு. எல்லா சமஸ்தானங்களிலிருந்தும் மகாராஜாக்களும் ராஜாக்களும் மற்றவர்களும் விழாவில் கலந்து கொள்வதற்காகப் புறப்பட்டார்கள். மாடு, குதிரை, யானை வண்டிகள் முதல் மோட்டார் வண்டிகள் வரை சக்கரங்கள் கிளப்பிய செம்மண் புழுதியில் டெல்லி சிவந்தது.

அந்த மூன்றாவது டெல்லி தர்பாரில் கலந்துகொள்வதில் சாயாஜி ராவுக்கு விருப்பமே இல்லை. பழைய கசப்பு அனுபவங்கள் உறுத்தின. செல்லாமல் இருந்தாலும் பெரும் பிரச்னை ஆகிவிடும். வேறு வழியில்லாமல் சாயாஜி ராவும் தன் குடும்பத்தோடு டெல்லிக்குக் கிளம்பினார்.

கிங்கும் குயினும் படு அமர்க்களமான வரவேற்புடன் இந்தியாவுக்கு வந்திறங்கினார்கள். பம்பாய்க்கும், அப்போதைய தலைநகரமான கல்கத்தாவுக்கெல்லாம் சென்றுவிட்டு, டிசம்பர் 7 அன்று பதவியேற்பு முகாமுக்குள் அடியெடுத்து வைத்தார்கள். வைஸ்ராய் ஹார்டிங்கின் ஏற்பாடுகளைக் கண்டு மனம் குளிர்ந்தார்கள்.

அடுத்த இரண்டு நாள்களில் பூமியும் குளிர்ந்தது. பருவம் தப்பி வந்த மழை. மிஸ்டர். வருணன் வந்து விளையாட்டிவிட்டுப் போனார். பல மாதங்கள் பாடுபட்டு செய்த ஏற்பாடுகள் எல்லாம் பாழ். குறிப்பாகப் போட்டு வைத்திருந்த இருப்புப்பாதையில் பாதி காணாமல் போயிருந்தது. பல கூடாரங்கள் பிய்ந்து தொங்கின. விழா மேடை அலங்காரங்கள் உள்பட அனைத்தும் சர்வ நாசம். விழா நடப்பது சந்தேகம்தான், கிங் கிளம்பிவிடுவார் என்று பேச்சுகள் எழ ஆரம்பித்தன.

வைஸ்ராய் ஹார்டிங், தவிதவித்துப் போனார். விழாவுக்கு மூன்றே நாள்கள்தான் பாக்கியிருந்தன. ஆயிரக்கணக்கான கூலி ஆள்களையும், ராணுவ வீரர்களையும் முடுக்கி விட்டார். 'எல்லாத்தையும் சரி பண்ணுங்க. ஒரு சொட்டுத் தண்ணிகூட உள்ள தேங்கி இருக்கக்கூடாது. எல்லாம் மழைக்கு முன்னாடி எப்படி இருந்துச்சோ, அதேமாதிரி ஆகிடணும். கமான் குவிக்.' கிட்டத்தட்ட மிரட்டத்தான் செய்தார். டிசம்பர் 12ல் தர்பார். அதற்கு முந்தைய நாளே எல்லாம் இயல்பு நிலைக்குக் கொண்டு வரப்பட்டது. வருணன் ரீ-என்ட்ரி கொடுத்துவிடுவாரோ என்று பயந்து ஹார்டிங் அடிக்கடி வானத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தார். வானம் பொய்த்து விட்டது.

இங்கிலாந்து அரச பரம்பரையில் அதுவரை முடிசூட்டு விழா என்பது லண்டனில் மட்டும்தான் நடைபெற்றுவந்தது. ஜார்ஜும் 1911, ஜூன் 22ல் லண்டனில் முடிசூட்டிக் கொண்டார். ஆனால் இந்தியாவின் பேரரசராக இங்கு டெல்லி தர்பாரிலும் தனியாக முடிசூட்டிக் கொள்ள விரும்பினார். அவரது விருப்பத்துக்காக ராஜ பரம்பரை விதிகள் தளர்த்தப்பட்டன. ஜார்ஜுக்காகப் புதிய கிரீடம் ஒன்றைத் தயார் செய்யப்பட்டது.

லண்டனின் பிரபல நகை நிறுவனமான Garrard & Co-வினர் தயாரித்த அந்த கிரீடத்தின் மதிப்பு அறுபதாயிரம் பவுண்ட், எடை சுமார் ஒரு கிலோ. 6100 சிறிய வைரக்கற்களோடு, மரகதம், ரத்தினம், நீலக் கற்களும் பதிக்கப்பட்ட அந்தக் கிரீடத்துக்கு வைக்கப்பட்ட பெயர், Imperial Crown of India. டெல்லி தர்பாருக்காக எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்ட பிறகுதான் ஜார்ஜுக்கு ஒரு விஷயம் உறுத்த ஆரம்பித்தது.

இந்தியா, இந்துக்களும் இஸ்லாமியர்களும் நிறைந்த நாடு. அங்கு சென்று கிறிஸ்துவ மத முறைப்படி முடிசூட்டிக் கொள்வது முறையல்ல. வேறென்ன, செய்யலாம்?

ஒன்றும் செய்ய முடியாது. முடிசூடும் நாளும் வந்தது. டிசம்பர் 12, காலை நேரம். எந்தவித சடங்குகளும் இன்றி, கிங் ஐந்தாம் ஜார்ஜ் தனக்குத் தானே முடிசூட்டிக் கொண்டார்.★ குயின் மேரியோடு தர்பாருக்குக் கிளம்பினார்.

---

★ அந்தக் கிரீடத்தின் எடை அதிகமாக இருந்தது. 'தலை வலிக்குதுப்பா' என்று எரிச்சலடைந்தார் ஜார்ஜ். தர்பார் நிகழ்வுகளுக்குப் பின் ஜார்ஜ், மீண்டும் அந்தக் கிரீடத்தை அணியவில்லை. அவருக்குப் பின்னும் யாரும் அதை அணியவில்லை. Imperial Crown of India - இப்போது லண்டன் டவரில் ஜூவல் ஹவுஸில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.



# 93

# கிங்குனா என்ன, பெரிய கொம்பா?

அந்த நான்கு சிறுவர்களுக்கும் அது விநோதமான வேலையாகத்தான் இருந்திருக்க வேண்டும். 1911, டிசம்பர் 12 அன்று டெல்லியில் கூடியிருந்த மாபெரும் தர்பாரின் மைய மண்டபத்துக்குக் கிளம்பிய கிங் ஐந்தாம் ஜார்ஜும், குயின் மேரியும் தங்களது தகதகா உடைகளுக்கு மேல் முழுநீள புசுபுசு அங்கி ஒன்றையும் அணிந்திருந்தார்கள். மிகவும் நீளமான தரையைப் பெருக்கும் அங்கி.

அந்த அங்கிகளைத் தரையில் புரளவிடாமல் பிடித்தபடியே கிங், குயினுக்குப் பின்னால் செல்லுவதே அந்தச் சிறுவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வேலை. வெவ் வேறு ராஜ குடும்பத்தைச் சேர்ந்த அந்தச் சிறுவர்களும் படு அலங்காரங்களுடன் உடையணிந்திருந்தார்கள். கிங், குயினை நிழலாகத் தொடர்ந்தார்கள்.

நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட, தங்கநிறப் பட்டைகளால் அலங்கரிக்கப்பட்ட சிவப்பு நிற சாரட் ஒன்று காத்திருந்தது. கூண்டுள்ள வண்டி அது. ஜார்ஜும் மேரியும் ஏறி அமர்ந்தார்கள். குதிரைப்படை வீரர்கள் முன்னே அணிவகுக்க, தர்பார் மண்டபத்தை நோக்கி சாரட் நகர்ந்தது.

அப்போதுதான் மைதானத்தில் ஒரு சலசலப்பு எழுந்து அடங்கியிருந்தது. படு அலங்காரங்களுடன் நிறுத்தப்பட்டிருந்த யானை ஒன்றுக்கு அந்த தர்பார் பிடிக்க வில்லை போல, ஆகவே மதம் பிடித்துவிட்டது. அது தறிகெட்டு அங்குமிங்கும் ஓட ஆரம்பிக்க, வைஸ்ராய் ஹார்டிங்கும் கோபத்தில் தன்னிலை இழக்க ஆரம்பித்தார். பாகன்களின் கூட்டு முயற்சியால், யானை கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரப்பட்டது.

மகாராஜாக்கள், ராஜாக்கள், குட்டி ராஜாக்கள், ஐரோப்பிய விருந்தினர்கள், இந்திய பிரிட்டிஷ் அதிகாரிகள் என்று எல்லோருமே தங்களுக்காக 'தரம் பிரித்து ஒதுக்கப்பட்ட' இருக்கைகளில் கிங்குக்காகக் காத்திருந்தார்கள். மண்டபத்தின் முன் அரசுப் படை வீரர்கள் அரைவட்ட வடிவில் அணிவகுத்து நின்றார்கள். அந்த மைதானத்தில் பல சமஸ்தானங்களைச் சேர்ந்த வீரர்கள் வியர்வை வழிய வழிய வரிசை கட்டி நின்றார்கள். டெல்லி, பஞ்சாப் மற்றும் சுற்று வட்டாரப் பகுதிகளிலிருந்து சுமார் ஆயிரக்கணக்கான பொதுமக்களும் 'வரவழைக்கப் பட்டிருந்தார்கள்'. எனவே கூட்டம் ஓஹோ!

சாரட், தர்பார் மண்டபத்தின் அருகில் வந்து நின்றது. அந்த மாபெரும் மைதானமே எழுந்து நின்றது. தனக்குத் தானே முடிசூட்டிக் கொண்ட கிங்கும் குயினும் இறங்கி மண்டபத்திலுள்ள சிம்மாசனங்களை நோக்கி நடந்தார்கள். சிறுவர்களும் வால்போல. கிங்குக்குரிய மரியாதை பதவியேற்பு மரியாதையாக நூற்றியொரு முறை துப்பாக்கி குண்டுகள் முழங்கின. பிரிட்டிஷ் ராஜ பரம்பரைக் கொடி ஏற்றப்பட்டது. "God Save the King' வாழ்த்துகள் ஒலித்தன. முரசொலி முழங்கியது. பிரிட்டிஷாரின் மூன்றாவது டெல்லி தர்பார் இனிதே ஆரம்ப மானது.

அடுத்த நிகழ்ச்சி என்ன? ஒவ்வொரு மகாராஜாவாக தர்பார் மண்டபத்துக்கு வந்து கிங்குக்கும் குயினுக்கும் மரியாதை செய்ய வேண்டும். அதாவது சிரம் தாழ்த்தி வணக்கம் வைக்க வேண்டும் என்று முன்பாகவே வைஸ்ராய் ஹார்டிங்கிடமிருந்து எல்லா மகாராஜாக்களுக்கும் தகவல் அனுப்பப்பட்டிருந்தது. ஆனால் இந்த விஷயத்தில் இருபத்தியொரு குண்டு மரியாதை கொண்ட ஹைதராபாத், பரோடா, குவாலியர், மைசூர், காஷ்மீர் மகாராஜாக்களுக்கு உடன்பாடு இல்லை.

நாங்களும் மாபெரும் சமஸ்தானத்தின் மகாராஜாக்கள்தான். கிங் போலவே எங்களுக்கும் மரியாதை அதிகம்தான். நாங்கள் ஏன் கிங்குக்கு குனிந்து வணக்கம் வைக்க வேண்டும்? சாயாஜி ராவுக்கு மட்டுமே இப்படி கேட்கும் தைரியம் இருந்தது. ஆனால் நேரடியாகக் கேட்காமல் நாகரிகமாக ஒரு கடிதம் எழுதி வைஸ்ராய்க்கு அனுப்பினார். 'ஒரு வேண்டுகோள். எல்லா மகாராஜாக்களும் மரியாதை செய்ய வேண்டும் என்பதற்குப் பதிலாக, சிறிய சமஸ்தான மகாராஜாக்கள் மட்டும் கிங்குக்கு வணக்கம் வைக்க வேண்டும் என்று நிகழ்ச்சியில் மாற்றம் செய்யலாமே.'

ஆனால் சாயாஜி ராவின் அந்த வேண்டுகோள் கண்டுகொள்ளப்படவில்லை. தர்பாருக்கு வந்த மகாராஜாக்களுக்கு 'கிங்குக்கு எப்படி மரியாதை செய்ய வேண்டும்' என்று வகுப்பு எடுக்கப் பட்டது. ஒத்திகை செய்தும் காண்பிக்கப்பட்டது. அதாவது கிங்குக்கு முன் சென்று நின்று மூன்று முறை குனிந்து வணக்கம் வைக்க வேண்டும். கையோடு எடுத்துச் சென்றிருக்கும் பரிசுப் பொருள்களைக் கொடுத்து கௌரவிக்க வேண்டும். பின்பு முதுகைக் காட்டாமல் அப்படியே ரிவர்ஸ் கியரில் கொஞ்ச தூரத்துக்கு கீழே விழாமல் வந்தபின்பே திரும்பிச் செல்ல வேண்டும். சாயாஜி ராவின் கவனத்துக்கு இந்த விதிமுறைகள் எல்லாம் வரவில்லை. அவருக்கு ஒத்திகை பற்றியும் எதுவும் தெரியாது.

தர்பாரில் மரியாதை செய்யும் படலம் ஆரம்பமானது. இந்தியாவின் மிகவும் உயரிய, செல் வாக்கு மிகுந்த சமஸ்தானமான ஹைதராபாத்தின் நிஜாமுக்கு முதல் மரியாதை. அதாவது அவர்தான் முதலில் கிங்குக்கு நலுங்கு செய்ய அழைக்கப்பட்டார். அப்போதுதான்



செங்கோட்டையின் உப்பரிகையில்
கிங்கும் குயினும்

ஹைதராபாத்தின் நிஜாமாகப் பதவியேற்றிருந்த கஞ்ச மகாபிரபு ஒஸ்மான் அலிகான், கிங்கை நோக்கி வந்தார். முறைப்படி மூன்று முறை குனிந்து வணக்கம் வைத்தார். அரை மனத்துடன் மரகத நெக்லெஸ் ஒன்றைப் பரிசாகக் கொடுத்துவிட்டு ரிவர்ஸ் கியரில் கிளம்பினார்.

அடுத்த மரியாதைக்குரியவர் பரோடா மகாராஜாதான். தர்பாருக்காக வந்திருந்த மகாராஜாக் களெல்லாம் உற்சவர் போல ஏகப்பட்ட நகைகளைச் சாத்திக் கொண்டு வந்திருந்தார்கள். படு ஆரம்பரமான உடை வேறு. எல்லோரும் பலவிதக் கற்கள் பதிக்கப்பட்ட உடைவாள் வைத்திருந்தார்கள். ஆனால் மற்றவர்களைவிட சாயாஜி ராவ் மிக எளிமையாக வந்திருந்தார்.

குஜராத் பாணி வெள்ளை நிற பட்டுடை. தலைப்பாகை. சின்னதாக ஒரு வைரப்பதக்கம். கழுத்தில் ஒரு முத்துமாலை. அதைக்கூடத் திடீரெனத் தன் மகனுக்கு அணிவித்துவிட்டார். அவர் இடையில் உடை வாள் இல்லை. தங்கக் கைப்பிடி உடைய கைத்தடி ஒன்றை எடுத்துக் கொண்டு கிங்கை நோக்கிச் சென்றார். தனக்கு முன் சென்ற நிஜாம் எப்படி மரியாதை செய்தார் என்றெல்லாம் சாயாஜி ராவ் கவனிக்கவில்லை.

கிங் முன் சென்று நின்றார். ஒருமுறை குனிந்து வணக்கம் வைத்தார். நகை ஒன்றைப் பரிசாகக் கொடுத்தார். பின் முதுகைக் காட்டியபடி திரும்பி வந்துவிட்டார். வைஸ்ராய் ஹார்டிங்குக்குக் காதில் புகை. நடந்ததை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த பலரும் சாயாஜி ராவ், கிங்கை அவமானப்படுத்திவிட்டதாக நினைத்தார்கள். ஆனால் எதுவும் அறியாதவராகத் தன் இடத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார் சாயாஜி ராவ். விழா மும்முரத்தில் அப்போதைக்கு அதுபற்றிய சர்ச்சை கிளம்பவில்லை.

அடுத்ததாக குவாலியர், மைசூர், காஷ்மீர் மகாராஜாக்கள் மரியாதை செய்தார்கள். அதற்குப் பின் ரேங்க் வாரியாக. அவ்வளவு ஆடம்பரமான உடைகளுடன், நகைகளுடன் மகாராஜாக்கள் கேட் வாக் சென்றதைப் பார்க்கும்போது பேஷன் ஷோ போலத்தான் இருந்தது. பன்னா என்ற சமஸ்தானத்தைச் சேர்ந்த மகாராஜா, கிங்கின் அரியணை மேல் சொருகி வைத்துக் கொள்ள 12 இன்ச் விட்டமுள்ள, ரத்தினக் குடை ஒன்றைக் கொடுத்தார். இப்படி விதவிதமான பரிசுகள் குவிந்து கொண்டிருந்தன.

அடுத்ததாக இந்தூர் மகாராஜா திகோஜி ராவ் கிங்கை நோக்கிப் புயல் வேகத்தில் கிளம்பினார். தங்க, வெள்ளி பட்டைகளுடன் கூடிய பட்டுடை. உடலெங்கும் ஆபரணங்கள். இடையில் வாள். அதுபோகக் கையில் தங்கத்தலான, மரகதக் கல் கைப்பிடி கொண்ட கைத்தடி வேறு. அவ்வளவு உபரி எடையையும் சுமந்து கொண்டு, அந்தப் பளபளா தரையில் கால் பதித்த திகோஜி ராவ், தத்தக்கா பித்தக்காவெனத் தடுமாறி விழுந்தார். கைத்தடி ரெண்டு துண்டாகிப் போனது. நான்கைந்து பணியாளர்கள் வந்து அவரைத் தூக்கிவிடும்படி ஆகிவிட்டது. அதற்குப் பின் திகோஜி, தன்னைச் சரிப்படுத்திக் கொண்டு, வெகு ஜாக்கிரதையாக நடந்து சென்று கிங்குக்குக் கும்பிடு போட்டார்.

இப்படி ஒவ்வொருத்தராக வந்து குனிந்து நிமிர்ந்து சென்று கொண்டே இருக்க, நீண்ட நேரத்துக்கு அசுவாரசியமாகப் போய்க் கொண்டிருந்தது தர்பார். சில சின்ன ராஜாக்கள், கிங்குக்கு கும்புடு போட ஆர்வம் காட்டினார்கள். ஆனால் தகுதியைக் காரணம் காட்டி, அவர் களுக்கு அனுமதி மறுக்கப்பட்டது.

அந்த தர்பாரில் ஐந்தாம் ஜார்ஜ் முக்கியமான அறிவிப்பு ஒன்றை வெளியிட்டார். 'இனி இந்தியாவின் தலைநகரமாக டெல்லி செயல்படும்.'

கல்கத்தா? அது இந்தியாவின் கிழக்கு மூலையில் இருந்தது. எனவே இந்தியாவின் மையத்திலுள்ள டெல்லியைத் தலைநகரமாக வைத்துக் கொள்ளலாம் என்று பிரிட்டிஷ் அரசு முடிவெடுத்திருந்தது. முகலாயர்களின் ஆட்சிக்குப் பின், மீண்டும் டெல்லி தலைநகரமானது.

கிங்கும் குயினும் யானை மேல் ஊர்வலம் வர ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் கிங்குக்கு உள்ளுக்குள் உதறலெடுக்க, மறுத்துவிட்டார். மீண்டும் சாரட் ஏறி ஊர்வலம் போனார்கள். முன்னும் பின்னும் பெரும்படைகள். வழியெங்கும் பொதுமக்களின் உற்சாகக் கையசைப்பு. செங்கோட்டையில் உப்பரிகையில் அமர்ந்து ஜார்ஜும் மேரியும் படை வீரர்களின் அணிவகுப்பு மரியாதையை ஏற்றுக் கொண்டார்கள்.

அன்று மாலை, சாயாஜி ராவ் தன் கூடாரத்திலிருந்து வெளியே வந்து வாக்கிங் கிளம்பினார். அப்படியே நடந்து தன் நண்பர், பம்பாய் மாகாண கவர்னர் ஜார்ஜ் கிளார்க்கின் கூடாரத்தை அடைந்தார். ஆனால் பாதுகாவலர்கள் அவரை உள்ளே நுழைய விடவில்லை. 'கவர்னர் இல்லை' என்று பதில் சொல்லித் திருப்பி அனுப்பினார்கள். ஆனால் கூடாரத்துக்குள்தான் கிளார்க் இருப்பதாக அவருக்குத் தோன்றியது.

மறுநாள் காலை சாயாஜி ராவின் நெருங்கிய நண்பர் கோபால கிருஷ்ண கோகலே, அவரது கூடாரத்துக்கு வேகமாக வந்தார். 'ஜி, நேற்று நீங்கள் கிங்குக்கு ஒழுங்காக மரியாதை செய்யவில்லையாம். கிங்குக்கு நேராக உங்கள் கைத்தடியை நீட்டி விட்டீர்களாம். முதுகைக் காட்டி நடந்து வந்தீர்களாம். கிங்கை நீங்கள் அவமதித்துவிட்டதாக பெரும் சர்ச்சை கிளம்பியுள்ளது.' கோகலே சொல்லச் சொல்ல, சாயாஜி ராவுக்கு நிலைமை புரிந்தது. உடனே பரோடாவின் ரெஸிடெண்ட் இருந்த கூடாரத்துக்கு விரைந்தார்.

'இப்போது என்ன செய்யலாம் சொல்லுங்கள்' என்று ரெஸிடெண்டிடம் ஆலோசனை கேட்டார். அதன்படி வைஸ்ராய் ஹார்டிங்குக்கு தன்னிலை விளக்கக் கடிதம் ஒன்றை எழுதி அனுப்பினார். 'செல்லாது செல்லாது' என்றார் ஹார்டிங். ஒருமுறை அவர் அறைக்குள் நுழைந்தபோது சாயாஜி ராவ் எழுந்து நிற்கவில்லை. அந்தப் பழைய பகையை மனத்தில் வைத்துக் கொண்டு ஹார்டிங், இப்போது குதித்தார்.

கூடவே பிரிட்டன் பத்திரிகைகளும் சேர்ந்து கொண்டன. 'சாயாஜி ராவின் செயல் ஷேம் ஷேம் பப்பி ஷேம்' என்று இஷ்டத்துக்கு எகிறின. 'அவரைப் பதவியிலிருந்து தூக்குங்கப்பா!', 'அந்த ஆளை நாடு கடத்துங்கப்பா!', 'அவருக்கான குண்டு மரியாதையைக் குறைச்சாத்தான் சரிப்படுவாரு!' இப்படி எத்தனையோ குரல்கள்.

ஆனால் இந்திய சுதந்தரப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த தேசியத் தலைவர்களும், தொண்டர்களும் சாயாஜி ராவைக் கொண்டாட ஆரம்பித்தார்கள். 'கிங்குன்னா என்ன பெரிய கொம்பா? குனிஞ்சு கூழைக்கும்புடு போடணுமாமே! சாயாஜி ராவ் பண்ணுனதுதான் சரி. அவரு தைரியம் வேற யாருக்கு வரும்? அவரைப் பார்த்து மத்த மகாராஜாக்களும் திருந்தினா நல்லாயிருக்கும்!'

சாயாஜி ராவுக்கு எதிராகக் கண்டனங்கள் எழுந்ததே தவிர, அவர் மீது நடவடிக்கை எதுவும் எடுக்கப்படவில்லை. காரணம், அவருக்குத் தேசியத் தலைவர்களிடம் இருந்த மதிப்பு அப்படிப் பட்டது. பரோடாவில் அவரது நல்லாட்சியைக் கண்டு பிரிட்டிஷ் அரசே ஆடிப்போய்தான் இருந்தது. சாயாஜி ராவுக்கு எதிராக நடவடிக்கையா? தேன்கூட்டில் தேங்காயை எறிவது புத்திசாலித்தனமா என்ன? தேசமே கொந்தளித்துவிடுமே. பிரிட்டிஷ் அரசு, மீசை மண்ணைத் தட்டிவிட்டுக் கொண்டது.

ஆக மொத்தத்தில் இந்த தர்பாரிலும் சாயாஜி ராவுக்குக் கசப்பான அனுபவங்கள். ஆனால் அவரது மகள் இந்திராவுக்கோ எல்லாமே இனிமையாகத் தெரிந்தது. காரணம், அவள் தர்பாரில் பார்த்த ஒருவரைக் காதலிக்க ஆரம்பித்திருந்தாள். அவளுக்கு வேறொருவருடன் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருந்தது என்பது வேறு கதை.

இந்திராவின் காதல் கதைக்குள் நுழைவதற்கு முன்பாக இதுவரை சொல்லாமல் விடுபட்டுப் போன ஒரு தகவல் ஒன்று. இந்த தர்பாரை நடத்துவதற்காக பிரிட்டிஷ் இந்திய அரசு செலவளித்த நம் பாட்டன் வீட்டுப் பணத்தின் மதிப்பு இரண்டு கோடி அமெரிக்க டாலர்கள்.



94

# குவாலியர் மகாராஜாவின் அந்தப்புர கால்ஷீட்!

*‘அம்மா, இந்தக் கூடாரத்துக்கு உள்ளேயே இருந்து அலுப்பா இருக்குது. நான் ப்ரீத்தியையும் பேபியையும் பார்த்துட்டு வரட்டா?’* இந்திரா கெஞ்சலாகக் கேட்டாள்.

*‘ம்ஹூம், உன் அப்பாவுக்குத் தெரிந்தால் திட்டுவார். பேசாமல் இங்கேயே இரு’* - சிம்னா பாய் கடுமையான குரலில் மறுத்தாள்.

*‘ப்ளீஸ்மா, ஒரே ஒரு தடவை போய்ப் பார்த்துப் பேசிட்டு சீக்கிரமா வந்துருவேன். சரியா?’* - கொஞ்சலாகச் சொல்லிவிட்டு, சிம்னா பாய் பதிலை எதிர்பார்க்காமல், கூடாரத்தை விட்டு வெளியேறினாள் இளவரசி இந்திரா.

பரோடா மகாராஜா சாயாஜி ராவுக்கும், மகாராணி சிம்னா பாய்க்கும் பிறந்த மூன்றாவது குழந்தை (*1892, பிப்ரவரி 19*) இந்திரா ராஜே (Indira Raje). ஒரே செல்ல மகள். அழகி. அறிவிலும் அழகி. அவளுக்கு இரண்டு நெருக்கமான தோழிகள் உண்டு. அவர்கள் கூச் பிகார் சமஸ்தானத்தின் இளவரசிகளான ப்ரதிவா (செல்லப்பெயர் ப்ரீத்தி), சுதிரா (செல்லப்பெயர் பேபி). மூவருமே இங்கிலாந்தில் ஈஸ்ட்பார்ன் போர்டிங் ஸ்கூலில் ஒன்றாகப் படித்தவர்கள். அதன் பிறகு சில வருடங்களாகச் சந்திக்கவே இல்லை.

*1911*, டெல்லி தர்பாருக்கு தந்தை, தாயோடு வந்திருந்த இந்திரா, தன்னுடைய நெருங்கிய தோழிகளும் அங்கு வந்திருப்பதைக் கவனித்தாள். தர்பார் நிகழ்ச்சி களுக்கிடையே அவர்களை நெருங்கிச் சென்று பேச முடியவில்லை. மாலையில்



மகாராஜா சாயாஜி ராவ்

அவர்களது கூடாரத்துக்கு வந்து பார்ப்பதாகச் சைகையிலேயே செய்தி சொல்லியிருந்தாள். ஆகவே தன் தாயிடம் கெஞ்சி, கொஞ்சிக் கேட்டுவிட்டு கூச் பிகார் கூடாரத்தை நோக்கி விரைந்தாள் இந்திரா.

சிம்னா பாய்க்கு, தன் மகள் தனியாக வெளியே செல்வது பிடிக்கவில்லை. காரணம்? பரோடா ராஜ குடும்பத்தினர் மிகவும் ஆச்சாரமானவர்கள். இந்துமதக் கோட்பாடுகளின் மேல் ஆழ்ந்த பற்றுடையவர்கள். பழைமையில் ஊறியவர்கள். கூச் பிகார் ராஜ குடும்பத்தினரும் இந்துக்கள் தான். ஆனால் பிரம்ம சமாஜத்தைத் தழுவியவர்கள். ஆச்சாரங்களை உடைக்க விரும்பியவர்கள். இந்து மதத்தில் இருக்கும் ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிராகக் குரல் கொடுப்பவர்கள். பழைமையை

எல்லாம் தள்ளிவைத்துவிட்டு, மேற்கத்திய கலாசாரப்படி வாழ்வதென்பது கூச் பிகார் குடும்பத்தினருக்கு சௌகரியமானதாக இருந்தது. எனவே அவர்களோடு தன் மகள் பழக்கம் வைத்துக் கொள்வது சிம்னா பாய்க்கு அசௌகரியமாக இருந்தது.

அதுபோக, இந்திராவுக்கு அந்த நேரத்தில் திருமணமும் நிச்சயமாகியிருந்ததால், கெடுபிடியாகவே நடந்து கொண்டாள் சிம்னா பாய். சரி, நிச்சயிக்கப்பட்ட மாப்பிள்ளை யார்?

அரண்மனை உணவு மேசையில் விருந்தினர்களுக்கு வெள்ளி ரயில் விட்டு விளையாட்டுக் காட்டிய குவாலியர் மகாராஜா மாதவ் ராவ் சிந்தியாதான்.

குவாலியர், மராத்தியர்களின் சமஸ்தானம். மகாராஜா மாதவ் ராவ் சிந்தியாவுக்கு சின்கு பாய் ராஜே (Chinku Bai Raje) என்ற பெண்ணுடன் ஏற்கெனவே திருமணம் ஆகியிருந்தது. ஆனால் சின்குவுக்கு ஆண் வாரிசு எதுவும் பிறக்கவில்லை. ராஜ கவலை. தீர்வு? வேறென்ன, இன்னொரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்வதுதான். தன் மனத்துக்குப் பிடித்ததுபோல், தன் பரம்பரை கௌரவத்துக்கு இணையான பெண் ஒருத்தியைத் தேடிக் கொண்டிருந்தார் முப்பத்தெட்டு வயது மாதவ் ராவ் சிந்தியா.

ஒவ்வொரு வருடமும் கோடைக்காலத்தில் ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்வது மாதவ் ராவ் சிந்தியாவின் வழக்கம். 1909ன் கோடையில் சாயாஜி ராவும் தன் குடும்பத்தினரோடு லண்டன் சென்றிருந்தார். அங்கு நடந்த விருந்து ஒன்றில் இரண்டு மகாராஜாக்களும் சந்தித்துக் கொண்டார்கள்.

'இவள் என் மகள் இளவரசி இந்திரா ராஜே.'

மாதவ் ராவ் சிந்தியாவுக்கு வணக்கம் சொன்னாள் இந்திரா. அவரால் பதில் வணக்கம்கூட வைக்க முடியவில்லை. அந்தப் பதினேழு வயது பருவப் புறாவின் முதல் பார்வையில், முதல் வார்த்தையிலேயே தன் மனத்தைப் பறிகொடுத்தார் சிந்தியா. 'எனக்கேத்த ரெண்டாவது சம்சாரம் கிடைச்சிருச்சு டோய்' - அவரது மனத்துக்குள் பட்சி ஒன்று படபடத்தது.

அந்த விருந்திலேயே சிந்தியா, சாயாஜி ராவைத் தனியாக அழைத்துப் பேசினார். தனது திருமண விருப்பத்தைக் கூறினார். 'இரண்டாவது தாரம் என்று தயங்காதீர்கள். உங்கள் மகள் எனக்கொரு ஆண் வாரிசைப் பெற்றுக் கொடுத்துவிட்டால் அவளுக்குத்தான் முதல் மகாராணிக்கான சகல மரியாதைகளும் கிடைக்கும்.' சாயாஜி ராவ், உடனடியாகப் பதில் எதுவும் கூறவில்லை. கொஞ்சம் கால அவகாசம் கேட்டுவிட்டுக் கிளம்பினார்.

இந்தியாவுக்குத் திரும்பிய சாயாஜி ராவ், சில நாள்கள் ஆழ்ந்து யோசித்தார். குவாலியரும் பரோடோவைப் போல் இருபத்தொரு குண்டு மரியாதை கொண்ட சமஸ்தானம்தான். பரோடாவுக்குப் பக்கத்திலேயே இருக்கும் படு பணக்கார சமஸ்தானம் வேறு. மராத்தியர்கள். ஆச்சாரமான இந்துக்கள்தான். அதிலெல்லாம் எந்தக் குறையுமில்லை. ஆனால் இந்த மாதவ் ராவ் சிந்தியா, பிரிட்டிஷாருக்குக் குடை பிடிப்பவராயிற்றே. சுதந்தர உணர்வோடு செயல்படும் எனக்கு, வரப்போகும் மருமகன் பிரிட்டிஷ் அரசின் ஜால்ராவாக இருந்தால் சரிப்பட்டு வருமா?

சாயாஜி ராவுக்குள் ஏகப்பட்ட கேள்விகள். இன்னொரு வலுவான கேள்வியும் முளைத்தது. நன்கு படித்த பெண்ணை, இரண்டாம் தாரமாகக் கட்டிக் கொடுக்க வேண்டிய அவசியம்



மகாராஜா மாதவ் ராவ் சிந்தியா

என்ன? அவள் இதற்குச் சம்மதிப்பாளா? கூடவே ஒரு பதிலும் தோன்றியது. எப்படியும் ஏதோ ஒரு சமஸ்தானத்தின் இளவரசருக்குத்தான் கட்டிக் கொடுக்கப் போகிறோம். அந்த இளவரசர் வருங்காலத்தில் மகாராஜா ஆகுவதற்கு வாய்ப்புகள் இருக்கலாம், இல்லாமலும் போகலாம். ஆனால் மாதவ் ராவ் சிந்தியாவோ, மாபெரும் குவாலியர் சமஸ்தானத்தின் மகாராஜா. திருமணத்துக்குப் பின் இந்திராதான் மகாராணி. இரண்டாம் தாரம் என்பதெல்லாம் ஒரு விஷயமா என்ன? சாயாஜி ராவுக்குத் தெளிவு கிடைத்தது.

சிம்னா பாயிடமும் கலந்து பேசினார். அவளுக்கும் சம்மதம். இதுகுறித்துப் பேசுவதற்காக, குவாலியர் ராஜ தூதுவர்களும் பரோடாவுக்கு வந்துபோக ஆரம்பித்திருந்தார்கள். மாதவ் ராவ் சிந்தியாவின் ஜாதகத்தை வாங்கி, தனது ஆஸ்தான ஜோதிடரிடம் கொடுத்தார் சாயாஜி ராவ். 'பேஷ் பேஷ், ரெண்டு ஜாதகமும் நன்னா பொருந்தியிருக்கு' ஜோதிடரின் வார்த்தைகளில் பச்சை விளக்கு எரிந்தது.

திருமணத்துக்குச் சம்மதம் என்று மருமகன் சிந்தியாவுக்கு நல்ல செய்தி சொன்னார் மாமனார் சாயாஜி ராவ். இந்திரா அப்போது மேஜர் ஆகவில்லை. ஜோதிடரின் ஆலோசனைப்படி, 1912, ஜனவரி 25 என்று திருமணத்துக்கு நாள் குறிக்கப்பட்டது.

இந்திராவுக்கு அந்தத் திருமண ஏற்பாட்டில் முழு அளவில் சம்மதமெல்லாம் இருக்கவில்லை. மாதவ் ராவ் சிந்தியா, அவளைவிட வயதில் இரு மடங்கு மூத்தவர். உடல் எடையிலும் இரு மடங்கு அதிகம். அதிலும் இரண்டாம் தாரம் வேறு. பரோடாவில் அவளது தந்தை அரண்மனையில் அந்தப்புரத்தையே ஒழித்திருந்தார். ஆனால் குவாலியரின் ஜெய் விலாஸ் அரண்மனையின் அந்தப்புரமோ, மாதவ் ராவின் ஆசைநாயகிகளால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. அப்படிப்பட்ட ஸ்தீரிபித்தரைத் திருமணம் செய்து கொண்டால் வாழ்க்கை முழுவதும் அந்தப்புரத்தின் சுவர்களுக்குள் வாழ்ந்து தீர்க்க வேண்டியதுதான். தங்கக்கூண்டு என்பதற்காகச் சிறைப்பட முடியுமா என்ன?

பெற்றோர்களாகப் பார்த்து நிச்சயித்துவிட்ட வரன். அதுவரை இந்திரா தன் பெற்றோர்களை எதிர்த்துப் பேசியது கிடையாது. எனவே மௌனமாக இருந்தாள்.

1911ன் கோடையில் லண்டனுக்கு, தன் பெற்றோர்களுடன் சென்றாள் இந்திரா. அங்கு மாதவ் ராவ், தனது திருமண நிச்சயதார்த்தத்தை முன்னிட்டு மாபெரும் விருந்து ஒன்றை ஏற்பாடு செய்திருந்தார். அங்கு வந்த தன் வருங்கால மனைவியின் அழகைப் பார்வையாலேயே பருகிக் கொண்டிருந்தார். ஆனால் இந்திரா, தப்பித் தவறி கூடச் சின்னப் புன்னகையையோ, செல்லப் பார்வையையோ சிந்தியா மீது வீசவில்லை.

சாயாஜி ராவ் வரதட்சணை, சீர், சடங்குகள் என்று திருமணம் குறித்த சகல விசயங்களையும் தெளிவாகப் பேசியிருந்தார். சிந்தியாவும் தனது அந்தப்புர நிபந்தனைகளைத் தெளிவாக விளக்கியிருந்தார்.

'எனக்கு ஒரு ஆம்பளைப் புள்ளையைப் பெத்துத் தர்றதுதான் உங்க பொண்ணோட முதல் வேலை. அந்தக் காரியம் நடக்குறவரை இந்திரா மட்டும்தான் என்னோட பொஞ்சாதி. அவகூட மட்டும்தான் நான் எந்நேரமும் இருப்பேன். அதுல பாருங்க, என்னோட முதல் பொஞ்சாதி சின்கு மேலயும் எனக்குப் பிரியம் ஜாஸ்தி.

அவ என்மேல உசிரையே வைச்சிருக்கா. அவ கொண்டுவந்த வரதட்சணையும் சீரும் எக்கச் சக்கம். அதனால அவளையும் நான் ஒரேடியா ஒதுக்கிட முடியாது. அந்தப்புரத்துல என்னை நம்பி ஏராளமான ஜீவன் இருக்குதுங்க. அதுங்களுக்கும் என்னால துரோகம் நினைக்க முடியாது. அதனால இப்படி வைச்சுக்கலாம். ஒவ்வொரு திங்கக்கிழமையும் பகல்ல நான் இந்திராகூடத்தான் அரண்மனையில உலாவுவேன். அப்புறம், ஒவ்வொரு வியாழக்கிழமை இரவும் அவளுக்கு மட்டும்தான். மீதி உள்ள நேரத்தை மத்தவங்களுக்குப் பங்கு போட்டுக் கொடுத்துக்கிறேன்.'

எல்லா நிபந்தனைகளும் பேசப்பட்டிருந்தன. திருமணத்துக்கான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. திருமணத்துக்கு ஒரு மாதம் இருக்கும்போது, டெல்லி தர்பார் கூடியது. அங்கு வந்த குவாலியர் அண்ணல் ஆசையோடு நோக்கினார். ஆனால் அவளோ தர்மத்துக்குக் கூட நோக்கவில்லை.

அந்த மாலை நேரத்தில் இந்திரா, ப்ரீத்தி, பேபி மூன்று இளம் இளவரசிகள் சேர்ந்து பேச ஆரம்பித்திருந்தார்கள். அதனால் கூச் பீகார் கூடாரமே சிரிப்பொலியில் குலுங்கிக் கொண்டிருந்தது.

கூச் பிகார் மகாராஜா நிருபேந்திரா (Nripendra), மகாராணி சுனிதி தேவிக்கு (Sunity Devi) ஏழு குழந்தைகள் (ஆண் நான்கு, பெண் மூன்று). அவர்களது இரண்டாவது மகன் இளவரசர் ஜிதேந்திரா (Jitendra, செல்லமாக ஜித்). இருபத்தைந்து வயது இளைஞரான அவர், டெல்லி தர்பாரில் கிங்குக்கும் குயினுக்குமான பிரத்யேகப் பாதுகாப்புப் படையில் முக்கியப் பொறுப்பை ஏற்றிருந்தார். எனவே பம்பரமாகச் சுழன்று பல வேலைகளைச் செய்து கொண்டிருந்தார். தனது சகோதரிகளின் கூடாரத்துக்குள் ஒலித்த கலகல ஓசையைக் கேட்டு உள்ளே நுழைந்தார்.

முதலில் அவரை மிரட்சியுடன் பார்த்தாள் இந்திரா. ஆனால் அவளையறியாமல் அவரழகை, கம்பீரத்தை ரசிக்க ஆரம்பித்திருந்தாள். தன் தங்கைகள் இருக்கிறார்களே என்ற ஞாபகம்கூட இல்லாமல் இந்திராவை இனிக்க இனிக்கப் பார்த்தார் ஜித்.

'என்ன அண்ணா, அப்படிப் பார்க்குற? இவ பரோடா இளவரசி இந்திரா. எங்களோட உயிர்த் தோழி. ஸ்கூல்மேட்' - தங்கை பேபியின் குரல் கேட்டு, ஜித் தன்னிலைக்குத் திரும்பினார். ஆனால் இந்திராவின் எண்ணங்கள் எங்கெங்கோ போயிருந்தன. மாயஜாலக் கதைகளில் எல்லாம் குதிரை மேலேறி வரும் ராஜகுமாரன் இவர்தானா? என்னைத் தூக்கிக் கொண்டு செல்லத்தான் வந்திருக்கிறாரா? என்ன ஒரு வசீகரம்!

இருவரும் சம்பிரதாயமாக சில வார்த்தைகளைப் பரிமாறிக் கொண்டார்கள். அப்போதைக்கு அங்கிருந்து கிளம்பினாள் இந்திரா, எதையோ தொலைத்தவள் போல.

இரவெல்லாம் அவள் கனவில் ஜித், குதிரையோட்டிக் கொண்டிருந்தார். மறுநாளும் இந்திரா, கூச் பிகாரின் கூடாரத்துக்குச் சென்றாள், ஆனால் ரகசியமாக, தன் தாய்க்குத் தெரியாமல். அவளது கண்கள், ஜித்தைத் தேடின. அவரும் வந்தார். கொஞ்ச நேரம் பேசினார்கள். அந்த ஒரு நாளிலேயே பல சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொண்டு, வேறு வேறு இடங்களில் சந்தித்துக் கொண்டார்கள்.

இந்திராவுக்கு நிச்சயமாகியிருந்த திருமணத்தைப் பற்றித் தெரிந்து கொண்டார் ஜித். அவளது கண்களில் மெல்லியதாக இழையோடிக் கொண்டிருந்த சோகம், அவரை உறுத்தியது. கேட்டார்.

‘ஏன் சோகமாக இருக்கிறாய்?’

‘எனக்குத் திருமணம் நிச்சயமாகியிருக்கிறது.’

‘அட, கல்யாணப் பெண் என்றால் இந்நேரம் கனவுகளில் நிலவில் அல்லவா மிதந்து கொண்டிருக்க வேண்டும். ஏன் சோகமாக இருக்கிறாய்?’

‘நடக்கப்போகும் திருமணத்தை நினைத்துத்தான் சோகமாக இருக்கிறேன்.’

சற்றும் தாமதமில்லாமல், ஜித்திடமிருந்து அடுத்த கேள்வி வந்து விழுந்தது. ‘நீ ஏன் என்னைத் திருமணம் செய்துகொள்ளக் கூடாது?’



# 95

# காதல் தர்ணா!

ஏப்ரல் முதல் தேதி வந்துவிட்டால் போதும். குஷியாகிவிடுவார் குவாலியர் மகாராஜா மாதவ் ராவ் சிந்தியா. அன்று அவரது அரண்மனையில் எல்லோருமே 'எப்போது என்ன நடக்கப் போகிறதோ?' என்ற திகிலோடுதான் திரிவார்கள். முடிந்தமட்டும் மகாராஜாவின் கண்களில் பட்டுவிடாமல் பதுங்கி இருப்பார்கள். ஆனால் என்ன, மகாராஜா கூப்பிட்டு அனுப்பினால், செல்லாமல் டபாய்க்க முடியாதே. வசமாக மாட்டிக் கொள்வார்கள்.

உட்காரச் சொல்லுவார் மகாராஜா. ஆனால் நம்பி நாற்காலியில் உட்கார முடியாது. அது எப்போது வேண்டுமானாலும் கவிழலாம் அல்லது உட்காரும்போது பின் பக்கம் கூர்மையாக ஏதாவது இறங்கலாம். 'இதோ அவித்த முட்டை. சாப்பிடு' என்று பாசம் பொங்கக் கொடுப்பார். எடுத்து வாயில் வைத்துக் கடித்தால் பல் நொறுங்கிவிடும். அது முட்டை போலவே இருக்கும் கல். 'சிகரெட் எடுத்துக்கோ' என்பார். வாயில் வைத்துப் பற்றவைத்தால், சிவகாசிச் சத்தம் கேட்கும்.

இப்படி சின்னப்புள்ளத்தனமாக அடுத்தவர்களை ஏப்ரல் முட்டாளாக்கும் சிந்தியாவை, 1912, ஜனவரியில் முட்டாளாக்கத் தயாரானாள் பரோடா இளவரசி இந்திரா.

'நீ ஏன் என்னைத் திருமணம் செய்துகொள்ளக் கூடாது?' என்று கூச் பிகார் இளவரசர் ஜிதேந்திரா (ஜித்) கேட்ட நொடியே, இந்திரா முடிவு செய்துவிட்டாள், அவர்தான் தன் வாழ்க்கைத் துணைவர் என்று. எனில் ஏற்கெனவே நிச்சயமான திருமணம்? இரண்டாம் தாரமாக வாக்கப்பட வேண்டும் என்று தலையெழுத்தா



மகாராணி சிம்னா பாய், இளவரசி இந்திரா

என்ன? பெற்றோர் எப்படி இதை ஏற்றுக் கொள்வார்கள்? குவாலியர் மாப்பிள்ளை குதி குதி யென்று குதிப்பாரே? குல கௌரவம், மானம், மரியாதை, இதர இணைப்புகள் எல்லாம் என்ன ஆவது? - அடச்சே, இதையெல்லாம் யோசித்துக் கொண்டிருந்தால் உலகத்தில் யாருமே காதல் செய்ய முடியாதே.

டெல்லி தர்பார் நாள்களிலேயே இந்திராவும் ஜித்தும் ரகசிய ஆதர்சக் காதலர்கள் ஆகியிருந் தார்கள். தர்பார் கொண்டாட்டங்கள் முடிந்து, கூடாரங்கள் கலைந்து கொண்டிருந்தன. சாயாஜி ராவும் பெட்டி கட்டிக் கொண்டிருந்தார்.

குவாலியர் மாப்பிள்ளை, தான் அங்கிருந்து கிளம்புவதற்கு முன்பாக பரோடா கூடாரத்துக்கு வந்தார். மாமனாரிடம் டாடா காட்டும் சாக்கில், தன் வருங்கால மனைவியை ஓரக்கண்ணால் சைட் அடிப்பதற்காக. ஆனால் இந்திரா அங்கில்லை. 'இன்னும் மூணு வாரத்துல கல்யாணம். வீணா அலையாதீங்க மாப்பிள்ளை. உடம்பைப் பார்த்துக்கோங்க. பரோடாவுல எல்லாம் தயாரா இருக்குது. ஜமாய்ச்சுடலாம்' - மாமனார் சாயாஜி ராவ் சிரித்தார். சந்தோஷமாக விடை பெற்றார் சிந்தியா.

பரோடாவை நோக்கி அந்த ரயில் விரைந்து கொண்டிருந்தது. இடையில் ஒரு ரயில் நிலையம். அவசரமாக ஏறிய ஒருவன், அந்தத் தந்தியை சாயாஜி ராவிடம் கொடுத்தான். சிந்தியாதான் தந்தி அனுப்பியிருந்தார். வேகமாகப் பிரித்துப் படித்தார் சாயாஜி ராவ்.

'உங்கள் மகள் எனக்கு அனுப்பியிருந்த கடிதத்துக்கு அர்த்தம் என்ன?'

என்ன கடிதம்? இந்திரா எதுவும் கடிதம் அனுப்பினாளா என்ன? அதுவும் மாப்பிள்ளைக்கு? சாயாஜி ராவுக்குக் குழப்பமாக இருந்தது. தந்தி டெல்லியிலிருந்துதான் வந்திருந்தது. சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த தன் மகளிடம் அந்தத் தந்தியைக் கொடுத்தார் சாயாஜி ராவ். இந்திராவின்

முகத்தில் சின்னதாகக் கலவரம். 'என்ன நடந்தது சொல்?' அதட்டிக் கேட்டாள் சிம்னா பாய்.

தயங்கித் தயங்கிப் பேச ஆரம்பித்தாள் இந்திரா.

'நான்தான் குவாலியர் மகாராஜாவுக்குக் கடிதம் எழுதினேன். உங்களை என்னால் திருமணம் செய்துகொள்ள இயலாது. இந்தத் திருமணத்தை ரத்து செய்து விடுங்கள் என்று.'

தூக்கிவாரிப் போட்டது சாயாஜி ராவுக்கு. 'ஏன் அப்படி எழுதினாய்?' அதிரக் கேட்டாள் சிம்னாபாய்.

'நான் ஜிதேந்திராவைக் காதலிக்கிறேன். கூச் பிகார் இளவரசர்.'

'என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் நீ? திருமணத்துக்கு ஏற்பாடுகள் செய்துவிட்ட பின் இப்படிப் பிதற்றுகிறாயே? பைத்தியம் பிடித்துவிட்டதா உனக்கு?' - சிம்னா பாய் வார்த்தைகளால் இந்திராவை உலுக்க ஆரம்பித்தாள். கூச் பிகார், வெறும் பதிமூன்று குண்டுகள் மரியாதை கொண்ட சமஸ்தானம். பரோடாவுக்கும் அதற்கும் லிஃப்ட் வைத்தாலும் எட்டாது. ஜிதேந்திரா? சமீபத்தில்தான் கூச் பிகாரில் ராஜ் ராஜேந்திரா (Raj Rajendra) அரியணை ஏறியிருக்கிறார். ஆகவே அவரது இளைய சகோதரர் ஜிதேந்திராவுக்கு இப்போதைக்கு மகாராஜாவாகும் வாய்ப்பே இல்லை. கூடவே, அவர்கள் ஆச்சாரமான இந்துக்களும் கிடையாது. எனவே எக்காரணத்தைக் கொண்டு நான் என் மகளை ஜிதேந்திராவுக்குக் கட்டிக் கொடுக்க மாட்டேன். அப்போதே தீர்மானமாக முடிவெடுத்துவிட்டார் சாயாஜி ராவ்.

பரோடா மக்கள் திருமண விருந்துக்குத் தயாராக இருந்தார்கள். முக்கிய வீதிகள் எல்லாம் வண்ணங்கள் பூசிக் கொண்டும் தோரணங்கள் சூடிக் கொண்டும் மிளிர்ந்தன. விருந்தினர்களை மகிழ்விக்க பல ஊர்களிலிருந்து வந்த பல்வேறு கலைஞர்கள் பரோடாவில் முகாமிட்டிருந்தார்கள். விளையாட்டு, கேளிக்கை நிகழ்ச்சிகள் ஒரு வாரத்துக்கு முன்பாகவே ஆரம்பமாகியிருந்தன.

இந்திரா தன் முடிவில் தீர்மானமாக இருந்தாள். சாயாஜி ராவ் மென்மையாகப் பேசிப் பார்த்தார். சிம்னா பாய் வன்மையாக மிரட்டிப் பார்த்தாள். ஆனாலும் இந்திராவின் பிடிவாதம் குறையவில்லை. திருமணத்துக்குச் சில நாள்கள் முன்பு பரோடா அரண்மனையிலிருந்து ஒரு செய்திக் குறிப்பு வெளியிடப்பட்டது.

'சில சொந்தக் காரணங்களால் திருமணம் தள்ளிவைக்கப்படுகிறது.'

வந்த விருந்தினர்கள் நொந்து, வீடு திரும்ப ஆரம்பித்தார்கள். பத்திரிகைகள் விஷயத்தை வேறுமாதிரி திருப்பிப் போட்டன. 'டெல்லி தர்பாரில் கிங் ஐந்தாம் ஜார்ஜை, சாயாஜி ராவ் அவமரியாதை செய்துவிட்டார். ஆகவே குவாலியர் மகாராஜா, திருமணத்தை ரத்து செய்துவிட்டார்.'

சில வாரங்கள் லஷ்மி விலாஷ் அமைதியாக இருந்தது. சிம்னா பாய், மாபெரும் வேட்டைக்காரி. புலிகளைக் கூட அநாயசமாகச் சுடும் தைரியசாலி. ஆனால் சொந்த மகளின் காதல் விஷயத்தில் கொஞ்சம் பயந்துதான் போயிருந்தாள். மீண்டும் தன் மகளிடம் பேச்சுவார்த்தை நடத்த ஆரம்பித்தாள். 'பழங்காலத்தில் இதுபோல திருமணம் நிறுத்தப்பட்டிருந்தால், குவாலியரிலிருந்து பரோடா மேல் படையெடுத்து வந்திருப்பார்கள். நவீன காலமாக

இருப்பதால் எதுவும் நடக்கவில்லை. இந்திரா, எங்களுக்காக நீ கொஞ்சமாவது விட்டுக் கொடுக்கக் கூடாதா? குவாலியர் மகாராஜா வேண்டாம். நம் சொந்தத்திலேயே வேறு மாப்பிள்ளை பார்க்கிறோம். என்ன சொல்கிறாய்?'

'நீங்கள் வேறு மாப்பிள்ளை பாருங்கள். உங்கள் ஆசைக்காக நான் திருமணம் செய்துகொள்கிறேன். ஆனால் அதே நாளிலேயே அந்த மாப்பிள்ளையைப் பிரிந்து விடுவேன். லண்டனுக்கோ, பாரிஸுக்கோ சென்று விடுவேன். வாழாவெட்டியாக. சம்மதமா?' - இந்திரா அழுத்தமாகக் கேட்டாள். சிம்னா பாயால் பதில் பேச முடியவில்லை.

1912 ஆகஸ்டில் இந்திரா, மாதவ் ராவ் சிந்தியா தனக்கு அணிவித்த நிச்சயதார்த்த மோதிரம், மற்ற பரிசுப் பொருள்களை எல்லாம் ஒரே மூட்டையாகக் கட்டி குவாலியருக்கு அனுப்பி வைத்தாள். கூடவே ஒரு கடிதமும். 'நடந்த விஷயங்களுக்காக மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். உங்களைச் சங்கடப்படுத்தியற்காக மனம் வருந்துகிறேன்.'

மாதவ் ராவ் சிந்தியா, தன் பதிலை சாயாஜி ராவுக்கு எழுதினார். 'என் மீது நீங்கள் காட்டிய அன்புக்கு நன்றி. இளவரசி இந்திராவின் ஆசைப்படியே, அவளை என் நண்பரான கூச் பிகார் இளவரசர் ஜித்துக்கே திருமணம் செய்து வையுங்கள். இது எனது விருப்பம். இப்படிக்கு உங்கள் மகன்.' அடுத்த வருடம் கஜ்ரா பாய்★ (Gajra Bai) என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார் மாதவ் ராவ் சிந்தியா.

நாள்கள் வளர்ந்தன, கூடவே ரகசியக் கடிதங்கள் வழியாக ஜித் - இந்திரா காதலும். ஏதாவது அதிரடி நடவடிக்கை எடுத்தால்தான் தன் பெற்றோர் அசைந்து கொடுப்பார்கள் என்று யோசித்தாள் இந்திரா. லஷ்மி விலாஸ் அரண்மனையில் மஞ்சத்தில் படுத்துக் கொண்டே, தன் தந்தைக்கு கடிதம் ஒன்றை எழுதினாள். 'மார்ச் 18 அன்று நானும் ஜித்தும் திருமணம் செய்துகொள்ளப் போகிறோம். அதற்கு மூன்று நாள்கள் முன்பாக நான் பரோடாவிலிருந்து கிளம்பிவிடுவேன். நீங்கள் சம்மதிப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்.'

சாயாஜி ராவிடமிருந்து எந்த பதிலும் வரவில்லை. அரண்மனையில் அவள் மீதான கண்காணிப்பு அதிகமானது. சிம்னா பாயின் ஐரோப்பியத் தோழியான மிஸ். டூட்டன்ஹாம் (Tottenham), இந்திராவை எல்லா நேரமும் கண்காணிக்க ஆரம்பித்தாள். வேறு எப்படிக் காய் நகர்த்தலாம் என்று திட்டமிட ஆரம்பித்தாள் இந்திரா.

அந்த ஏப்ரலில் சாயாஜி ராவ் ஐரோப்பியப் பயணத்துக்குத் தயாரானார். உடலளவில் அவர் கொஞ்சம் தளர்ந்திருந்தார். சிகிச்சை எடுக்க வேண்டியதிருந்தது. அந்தப் பயணத்துக்குப் பிரிட்டிஷ் அரசும் அனுமதி கொடுத்திருந்தது. இந்திராவையும் அழைத்துக் கொண்டு குடும்பத்தோடு பம்பாய்க்குச் சென்று, அங்கிருந்து கப்பல் ஏறிச் செல்வதாகத் திட்டம். இந்திரா, ஜித்துக்கு ரகசியத் தகவல் அனுப்பினாள். 'ஜித், பம்பாய்க்கு வந்துவிடு. அங்கிருந்து நாம் இருவரும் ஓடிப்போய்விடலாம்.'

தன் திட்டம் நிறைவேறி விடும் என்ற நம்பிக்கையில் இந்திரா, பம்பாய்க்கு சந்தோஷமாகக் கிளம்பினாள். ஆர்வமாகத் தன் உடைகளை, நகைகளை எடுத்து வைத்தாள். பரோடாவிலிருந்து

---

★ கஜ்ரா பாய் மூலமாக மாதவ் ராவ் சிந்தியாவுக்கு ஆண் வாரிசு பிறந்தது. ஜார்ஜ் ஜிவாஜி ராவ் சிந்தியா (George Jivaji Rao Scindia). மேரி கம்பா பாய் (Mary Kamba Bai) என்ற பெண் வாரிசும் பிறந்தது. விருந்துக்கு வந்த ஜார்ஜ், மேரி மீது ரயில் விட்டுக் கவிழ்த்த காரணத்தினால், அவர்களைக் குளிர்விக்கும் வகையில் தன் வாரிசுகளுக்கு ஜார்ஜ், மேரி என்று மாதவ் ராவ் சிந்தியா பெயர் வைத்தார்.

கிளம்பும் நாளில், லஷ்மி விலாஸிலிருந்து கூச் பிகாருக்கு ஒரு தந்தி சென்றது. ஜித்துக்கு. 'திட்டம் மாறிவிட்டது. பம்பாய்க்கு வர வேண்டாம் - இந்திரா.' ஆனால் அது இந்திராவால் அனுப்பப்பட்ட தந்தி அல்ல.

அந்தத் தந்தி அங்கு சென்று சேருவதற்கு முன்பாகவே ஜித் பம்பாயை அடைந்திருந்தார். சாயாஜி ராவ், பம்பாயில் தன் சொந்த மாளிகையான ஜெய மஹாலுக்குள் நுழையும்போது ஜித், அங்கு காத்திருந்தார். சாயாஜி ராவுக்கு அதிர்ச்சி. இருந்தாலும் விருந்தினருக்குரிய மரியாதை கொடுத்தார். பின் பேசினார். 'ஒரு விஷயத்தை உறுதியாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். என் மகளை உங்களுக்குத் திருமணம் செய்து கொடுக்க முடியாது. என் எண்ணம் ஒருபோதும் மாறாது.'

'என் எண்ணமும்தான்' - ஜித் பதில் சொன்னார். சிம்னா பாய் வந்தாள். ஜித்திடம் நீண்ட நேரம் பேசினாள், பணிவோடு. 'நான் இந்திராவைப் பார்க்க வேண்டும். கடைசியாக ஒருமுறை..' ஜித் கெஞ்சலாகக் கேட்டார்

அனுமதி வழங்கப்பட்டது. சந்தித்துக் கொண்டார்கள். சரியாக ஐந்து நிமிடங்கள் மட்டும். அன்று மாலை நேரத்தில் இந்திரா மகிழ்ச்சியாக இருந்தாள். மிஸ். டூட்டன்ஹாமிடம் உற்சாகமாக ஏதேதோ பேசினாள். அவளது வழக்கத்துக்கு மாறான செயல்கள், சந்தேகத்தைக் கிளப்பின. அந்த இரவில் ஜெய மஹாலின் காவலை பலப்படுத்தினார் சாயாஜி ராவ். 'இந்திராவை விட்டு எங்கும் சென்று விடாதீர்கள். ஜாக்கிரதை' - டூட்டன்ஹாமிடம் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருந்தது.

நள்ளிரவு நெருங்கும் வேளையில் இந்திராவின் கால்கள் கட்டிலுக்கும் ஜன்னலுக்கும் படபடப்பாக நடந்து கொண்டிருந்தன. டூட்டன்ஹாம், தூங்குவதுபோல பாவனை செய்து, அவளையே கண்காணித்துக் கொண்டிருந்தாள். திடீரென வெளியில் சலசலப்பு. மஹாலுக்குள் சுவரேறிக் குதிக்க முயன்ற ஜித், காவலர்களால் சுற்றி வளைக்கப்பட்டிருந்தார். யாரும் அவரைத் தொடவில்லை. ஜித்தே, தன் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளும் வகையில் பேசாமல் திரும்பிப் போனார். ஓடிப்போக முடியாததால், ஓடிவந்து தன் படுக்கையில் விழுந்து அழ ஆரம்பித்தாள் இந்திரா.

விடிந்தது. அன்று ஐரோப்பிய சுற்றுப் பயணத்துக்காகக் கப்பல் ஏற வேண்டும். சோகம் அப்பிய முகத்துடன் படகு ஒன்றில் உட்கார்ந்திருந்தாள் இந்திரா. கூடவே டூட்டன்ஹாமும். வேண்டா வெறுப்பாக பத்திரிகை ஒன்றை எடுத்துப் புரட்டினாள். அந்தச் செய்தியைப் பார்த்ததும் இந்திராவின் முகம் மலர்ந்தது.

'திருமண அறிவிப்பு. கல்கத்தாவின் கூச் பிகார் சமஸ்தான மகாராஜாவான ராஜ் ராஜேந்திராவின் சகோதரர், இளவரசர் ஜிதேந்திராவுக்கும், பரோடாவின் மகாராஜாவான சாயாஜி ராவ் கெய்க்வாடின் மகள், இளவரசி இந்திரா ராஜேவுக்கும் திருமணம், அடுத்த திங்களன்று நடைபெற உள்ளது.'

அதே செய்தியைப் பார்த்த அதிர்ச்சியில் இருந்து மீள முடியாமல் சாயாஜி ராவும் சிம்னா பாயும் தவித்துக் கொண்டிருந்தார்கள்.



# அறை எண் 121ல் இருந்து...

இது யார் செய்த வேலையாக இருக்கும்? வேறு யார், கூச் பிகார் இளவரசர் ஜிதேந்திராவின் வேலையாகத்தான் இருக்கும். காதலுக்குத் தடை போட்டவுடன், காயை வேறு மாதிரி நகர்த்திவிட்டானே! தனக்கும் என் மகள் இந்திராவுக்கும் திருமணம் என்று இப்படிப் பட்டவர்த்தனமாகப் பத்திரிகையில் செய்தி வரவழைத்துவிட்டானே! நயவஞ்சகன்!

அதிர்ச்சி தாங்க முடியாமல், பரோடா மகாராஜா சாயாஜி ராவ் உள்ளுக்குள்ளேயே பொருமிக் கொண்டிருந்தார். அருகிலிருந்த மகாராணி சிம்னா பாயோ எப்போது வேண்டுமானாலும் அழுதுவிடும் நிலையில். ஆனால் இளவரசி இந்திரா, பத்திரிகையில் அந்தத் திருமணச் செய்தியைப் படித்ததும் சத்தம் போட்டுச் சிரித்தாள். தன்னுடன் இருந்த டூட்டன்ஹாமை கட்டியணைத்துக் கொண்டாள். தொடர் சிரிப்புக்கிடையே என்னன்னமோ பேசினாள். ஆனந்த உளறல்கள்.

சாயாஜி ராவுக்குத் தலைசுற்றியது. இனியும் இந்தியாவில் இருந்தால் ஆளாளுக்கு விசாரிக்க ஆரம்பித்து விடுவார்கள். 'என்ன ஓய், விஷயம் கேள்விப்பட்டீரா? பரோடா இளவரசிக்குக் கல்யாணமாம். கூச் பிகார் இளவரசர்தான் மாப்பிள்ளை. காதல்ல ஆரம்பிச்சு கல்யாணத்துல வந்து நிக்குது. அதான் குவாலியர் மகா ராஜாவை அம்போன்னு கழட்டி விட்டுட்டாங்க. ராஜ குடும்பத்துல இதெல்லாம் சகஜம்' இப்படியெல்லாம் முதுகுக்குப் பின்னால் இருந்து என்ன வேண்டு மானாலும் பேசுவார்கள். மேலும் தாமதிப்பது நல்லதல்ல என்று முடிவெடுத்த சாயாஜிராவ், புறப்படத் தயாராக இருந்த கப்பலில் குடும்பத்தோடும் பிற

பணியாளர்களுடனும் வேகவேகமாக ஏறினார். டூட்டன்ஹாம், இளவரசி இந்திராவை வலுக் கட்டாயமாகக் கையைப் பிடித்துக் கப்பலுக்கு இழுத்துச் சென்றாள். அவர்களது ஐரோப்பியப் பயணம் பரபரப்பாக ஆரம்பமானது.

சில நாள்கள் பாரிஸ். பின்பு சுவிட்சர்லாந்தில் உள்ள ஏவியன் நகரத்துக்குச் சென்றார்கள். சாயாஜி ராவும் சிம்னா பாயும் தங்கள் மகளை முடிந்தவரை ஹோட்டல் அறைக்குள்ளேயே சிறை வைத்துக் கொண்டார்கள். கூடவே டூட்டன்ஹாம். இருபத்துநான்கு மணி நேர வாட்ச் -உமனாக. ஜித்திடம் இருந்து இந்திராவைப் பல மாதங்களுக்குப் பிரித்து வைத்தால் போதும், காதல் எல்லாம் வற்றிப் போய்விடும் என்பது சாயாஜி ராவின் கணக்கு. தப்புக் கணக்குதான். ஜித்தும் அங்கு வந்து இறங்கியிருந்தார்.

எப்போதெல்லாம் சாயாஜி ராவ், ஐரோப்பியச் சுற்றுப்பயணத்தில் இருக்கிறாரோ, அப்போ தெல்லாம் பிரிட்டிஷ் இந்திய அரசு, ஸ்காட்லாந்து யார்டின் கண்ணில் விளக்கெண்ணெய் ஊற்றிவிடும்.

காரணம்? சாயாஜி ராவ், மற்ற மகாராஜாக்கள்போல, பிரிட்டிஷ் அரசுக்கு பக்க வாத்தியம் வாசிக்கும் ஆள் கிடையாதே. கிங்குக்கே கிலுகிலுப்பை காட்டியவர். வைஸ்ராயின் கட்டளை களோடு வரும் கடிதங்களை காது குடைவதற்குரிய காகிதமாகப் பார்ப்பவர். பரோடா மக்களுக்குப் பரமபிதா. நாட்டுப்பற்று, சுதந்தர உணர்வு, மனோதைரியம் எல்லாம் நிறையவே கொண்ட உத்தம மகாராஜா. கூடவே தேசிய தலைவர்கள் எல்லாருமே கொண்டாடும் செயல் வீரர். இவை போதாதா?

சாயாஜி ராவ், ஐரோப்பிய எல்லைக்குள் காலடி எடுத்துவைத்த நொடிமுதலே, ஸ்காட்லாந்து யார்டின் உளவு வேலை ஆரம்பித்துவிடும். அவர்கள் மாறுவேடத்தில், சாயாஜி ராவைப் பின் தொடருவார்கள். அவர் எப்போது, எங்கு செல்கிறார்? யார் யாரைச் சந்திக்கிறார்? என்னென்ன பேசுகிறார்? எப்படி நடந்து கொள்கிறார்? பிரிட்டிஷுக்கு எதிராக எதுவும் சதித் திட்டங்களில் ஈடுபடுகிறாரா? எல்லாவற்றையும் வைத்த கண் வாங்காமல் கவனித்து, பிரிட்டிஷ் இந்திய அரசுக்கு அறிக்கை அனுப்ப வேண்டியது அவர்கள் பொறுப்பு.

கூடவே சாயாஜி ராவின் புகழைக் குலைக்கும் வேலையை ஐரோப்பியப் பத்திரிகைகள் செவ்வனே செய்தன. 'பரோடா மகாராஜா சாயாஜி ராவின் இளைய மகன் லண்டனில் ஒரு பள்ளியில் படிக்கிறான். மேதகு இங்கிலாந்து குயின், அந்தப் பள்ளிக்குச் சென்றார். அப்போது அந்தப் பையன், குயினுக்குக் குனிந்து வணக்கம் வைக்க மறுத்துவிட்டான்' இப்படி ஒரு டுபாக்கூர் செய்தி பரபரப்பைக் கிளப்பியது. ஆனால் அந்தச் சமயத்தில் சாயாஜி ராவின் இளைய மகன் தைர்யாசில் ராவ் (Dhairyashil Rao), பள்ளிப்படிப்பை முடித்துப் பல வருடங்கள் ஆகியிருந்தன.

கிங்கும் குயினும் டெல்லி தர்பாரில் பங்கேற்ற வீடியோக் காட்சிகளை டாகுமெண்ட்ரிப் போல தியேட்டர்களில் திரையிட்டார்கள். கிங், குயின் சம்பந்தப்பட்ட மற்ற காட்சி களிலெல்லாம் புல்லரித்து ஆரவாரம் செய்த ஐரோப்பிய மக்கள், சாயாஜி ராவ் வணக்கம் வைக்க வரும் காட்சியில் மட்டும் அவருக்கு எதிரான கோஷங்களை எழுப்பினார்கள்.

இப்படிப் பல சம்பவங்கள். சாயாஜி ராவுக்கு தன் மீது ஐரோப்பியர்கள் வைத்திருக்கும் 'பாசம்' பற்றியும் தெரியும். ஸ்காட்லாந்து யார்ட்காரர்கள் தன்னைப் பின் தொடருவதும் தெரியும்.

இருந்தாலும் தன் மகளால் உண்டாகியிருக்கும் தர்ம சங்கடமான சூழ்நிலையில் அவர் இந்தியாவுக்குச் செல்ல விரும்பவில்லை.

ஸ்காட்லாந்து யார்டிலிருந்து, பிரிட்டிஷ் இந்திய அரசுக்குத் தகவல் ஒன்று சென்றது. 'சாயாஜி ராவ் தங்கியிருக்கும் ஹோட்டலில், தாடி வைத்த இளைஞன் ஒருவன் திரிகிறான். அவன் பல சமயங்களில் சாயாஜி ராவையும் அவர்களது குடும்பத்தினரையும் சுற்றிச் சுற்றி வருகிறான்.'

வேறு யாருமல்ல, அந்த தாடி வைத்த ரோமியோ இளவரசர் ஜித்தேதான். இந்திராவை ஐரோப்பாவுக்குக் கடத்துகிறார்களா? கடத்திக் கொள்ளுங்கள். அங்கும் நான் வருவேன். தனி அறையில் அடைத்து வைக்கிறீர்களா? அடைத்துக் கொள்ளுங்கள். அதிலும் நான் நுழைவேன். வேறென்ன செய்ய முடியுமோ செய்து கொள்ளுங்கள். ஆனால் வேரூன்றிவிட்ட எங்கள் காதலை உங்களால் ஒன்றும்...

கடிதங்களாக, தந்திகளாக, பரிசுப்பொருள்களாக தன் காதலை இந்திராவின் அறைக்கு அனுப்பிக் கொண்டிருந்தார் ஜித். இந்திராவும் டூட்டன்ஹாமை தாஜா செய்துவைத்திருந்தாள். ஆகவே காதல் இருபத்துமூன்று அத்தியாவசிய ஊட்டச்சத்துகளுடன் போஷாக்காக வளர்ந்துகொண்டிருந்தது.

அதே சமயத்தில் கூச் பிகாரின் மகாராஜாவும், ஜித்தின் மூத்த சகோதரருமான ராஜ் ராஜேந்திரா லண்டனில் சிகிச்சை எடுத்துக் கொண்டிருந்தார். அதிக மது. படுத்த படுக்கை. ராஜேவைக் கவனிப்பதற்காக, அவரது தாய் மகாராணி சுனிதி தேவியும் அங்கிருந்தார்.

சாயாஜி ராவ், செயின்ட் மோரிட்ஸ் (St. Moritz) என்ற சுவிட்சர்லாந்தின் மலைப் பிரதேசம் ஒன்றுக்கு இடம் மாறியிருந்தார். அப்போது அவரது குடும்ப மருத்துவர் குண்டு ஒன்றைத் தூக்கிப் போட்டார். 'மகாராஜா, கூச் பிகார் குடும்பத்துல உள்ள யாரோ இதே ஹோட்டல்ல தங்கியிருக்காங்களாம்.' பதறிப்போனார் சாயாஜி ராவ். இங்கும் வந்துவிட்டானா அந்த ஜித்?

வேகவேகமாக விசாரிக்கச் சொன்னார். அறை எண் 121ல் கூச் பிகார் ஆள் ஒருவர் தங்கியிருப்ப தாகத் தகவல் வந்தது. அதே நேரத்தில் இந்திராவின் அறைக் கதவு தட்டப்பட்டது. டூட்டன் ஹாம் திறந்தாள். கையில் சிறிய பரிசுப்பெட்டி ஒன்றுடன் நின்றிருந்தான் ஹோட்டல் பணியாளன் ஒருவன். 'இதை வாங்கிக் கொள்ளுங்கள் மேடம்' என்று சொல்லி அதைக் கொடுத்துவிட்டு வேகமாக நடையைக் கட்டினான் அந்தப் பணியாளன்.

'பரோடா இளவரசி இந்திராவுக்கு. அறை எண் 121ல் இருந்து' என்று எழுதப்பட்டிருந்த அந்த பரிசுப்பெட்டியை, டூட்டன்ஹாமிடமிருந்து பறித்துப் பிரித்தாள் இந்திரா. உள்ளே பெண்களுக்கான இரண்டு புதிய உள்ளாடைகள் இருந்தன. அதிர்ந்துபோனாள் டூட்டன்ஹாம். இந்திரா வாய்விட்டுச் சிரித்தாள். அந்த ஆடைகளைக் கையில் எடுத்து நடனமாடியபடியே, 'எனக்கு என்னென்ன தேவை என்பதை என் நண்பரால் மட்டும்தான் உணர முடிந்திருக்கிறது. சுற்றி இருபவர்களிலேயே என்னை மிகவும் பொறுப்பாகக் கவனித்துக் கொள்பவர் அவர் மட்டுதான்' என்றாள்.

சிம்னாபாயும் சாயாஜி ராவும் நீண்ட நேரம் ஒருவரை ஒருவர் மௌனமாக உற்றுப் பார்த்த படியே இருந்தார்கள். அவர்கள் இருவரும் தனித்தனியாக ஆனால் ஒரே முடிவுக்கு

வந்திருந்தார்கள். ‘இதற்கு மேலும் இந்திராவைப் பூட்டி வைப்பதில் அர்த்தமில்லை. எல்லாமே எல்லை மீறி விட்டது. எப்போது வேண்டுமானாலும் அவள், ஜித்தோடு கிளம்பிவிடும் முடிவுக்கு வந்துவிட்டாள். இளவரசி ஓடிப்போய்விட்டாள் என்றொரு கறை, கெய்க்வாட் பரம்பரைக்கு வர வேண்டாம். ஆகவே..’

தேங்காய், பழம், வெற்றிலை, பாக்குடன் கூச் பிகாருக்குச் சென்று, முறைப்படி சுனிதி தேவியிடம் சம்பந்தம் பேசுவதற்கு சாயாஜி ராவ் தயாராக இல்லை. லட்சம் லட்சமாக வரதட்சணை அளித்து, கிலோக்கணக்கில் நகைகளைக் கொடுத்து, டாம்பீகமாகச் செலவளித்து, பரோடா பளபளக்க இந்திராவின் ‘காதல்’ திருமணத்தை நடத்தவும் அவர் விரும்பவில்லை. கூச் பிகாரில் திருமணம் நடந்தால், அங்கு சென்று மகளுக்கு அட்சதை போட்டு வாழ்த்தவும் பிரியப்படவில்லை. மகளே, நீதானே காதலித்தாய். உன் காதலன் உன்னைப் பிரியாமல் சுற்றிச் சுற்றிதானே வருகிறான். அவனே உன்னைப் புகுந்த வீட்டுக்கும் அழைத்துச் செல்லட்டும். போய் வா, மகளே! இந்தப் பெற்றோரின் ஆசிர்வாதம் உனக்கு எப்போதும் உண்டு.

சம்பந்தி சுனிதி தேவி அப்போது லண்டனில்தான் இருந்தார். ஆகவே இந்திராவை, டூட்டன் ஹாமுடன் லண்டனுக்கு அனுப்ப முடிவெடுத்திருந்தார் சாயாஜி ராவ். ஆனால் கூச் பிகார் மகாராஜா ராஜே, தன் இறுதி நாள்களை எண்ணிக் கொண்டிருந்தார். ஆகவே, சுப காரியம் நின்று போய்விடும் என்றொரு நம்பிக்கையும் சாயாஜி ராவின் மனதோரம் இருக்கவே செய்தது.

இந்திரா, தன் பெற்றோரிடம் விடைபெற வந்தாள். பாலூட்டி வளர்த்த கிளியைப் பார்த்துப் பார்த்து அந்தத் தந்தை சிவாஜி கணேசனாக மாறாமல், தன் உணர்வுகளை அடக்கிக் கொண்டு நின்றார். சிம்னா பாயும் அப்படியே. இந்திரா தன் பெற்றோரின் கால்களில் விழுந்தாள். கதறினாள். மன்னிப்புக் கேட்டாள். காதலுக்கு மரியாதை செய்ததற்காக நன்றி சொன்னாள். ஆனால் அவர்கள் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. கண்ணீரோடும் டூட்டன்ஹாமோடும் விடைபெற்றாள் இந்திரா. அவள் சென்ற சில நிமிடங்களில் வாய்விட்டுக் கதற ஆரம்பித்தாள் சிம்னா பாய். வாயைப் பொத்திக் கொண்டு உள் அறைக்குச் சென்றார் சாயாஜி ராவ்.

‘கூச் பிகார் இளவரசர் ஜிதேந்தராவுக்கும், பரோடா இளவரசி இந்திராவுக்கும் லண்டனில் வைத்து திருமணம் நிகழவிருக்கிறது’ என்று ஆகஸ்ட் 23, 1913 டைம்ஸ் இதழ் செய்தி வெளியிட்டது.

திருமணத்துக்கு முந்தைய நாள். இந்திராவுக்கு ஒரு பார்சல் வந்தது. பிரித்துப் பார்த்தாள். ஒரு ஜோடி வைரக் காதணிகள். அன்பு மகளுக்குத் திருமணப் பரிசாக அனுப்பியிருந்தார் சாயாஜி ராவ். கூடவே, இந்திராவுக்கு ஒரு லட்சம் ரூபாய் அன்பளிப்பு வழங்குவதாகவும் அறிவித்திருந்தார். தன் தந்தையிடமிருந்து வந்த ஆசிர்வாதமாக அதைக் கருதி நெக்குருகிப் போனாள் இந்திரா.

ஆகஸ்ட் 25. தன் மாமியார் சுனிதி தேவியின் விருப்பத்துக்கேற்ப, பிரம்ம சமாஜத்தைத் தழுவினாள் இந்திரா. பிரிட்டிஷ் சிவில் சட்டப்படி, ஜித் இந்திரா திருமணம் நடந்தது. அன்றைய தினத்திலும் சாயாஜி ராவ், தன் மகளுக்கு வாழ்த்துத் தந்தி ஒன்றை அனுப்பினார். ஆனால் சிம்னா பாயிடமிருந்து எந்த வாழ்த்தும் வராததால், இந்திராவின் விழியோரம் கண்ணீர்.

டூட்டன்ஹாம் தனக்களிக்கப்பட்ட கடமையை எல்லாம் நிறைவேற்றிவிட்டு, செயின்ட் மோரிட்ஸுக்குத் திரும்பினாள். அவளிடம் தன் மகளைப் பற்றிய தகவல்களையெல்லாம் ஒன்றுவிடாமல் கேட்டறிந்து கொண்டாள் சிம்னா பாய்.

புதுமணத் தம்பதிகள் தேனிலவுக்குக் கிளம்பினார்கள். உடல்நிலை மோசமான நிலையில் மகாராஜா ராஜ், கூச் பிகாருக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு இறந்தார். எனவே தேனிலவு முழுநிலவாக வளரவில்லை. தம்பதிகள் அவசர அவசரமாக கூச் பிகாருக்குத் திரும்பினார்கள்.

அடுத்த மகாராஜா? வேறு யார், ஜிதேந்திராதான். இந்திரா மகாராணியான விஷயம், சாயாஜி ராவுக்கும் சிம்னா பாய்க்கும் ஆறுதல் தருவதாக இருந்தது. பரோடாவுக்குத் திரும்பினார்கள். ஆனால் கூச் பிகாருக்குச் சென்று மகளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையை, ப்ரெஸ்டீஜோ, தன்மானமோ, ஏதோ ஒன்று தடுத்தது.

1914. மீண்டும் உடல்நிலையைக் காரணம் காட்டி சிகிச்சைக்காக ஐரோப்பிய சுற்றுப் பயணத் துக்குக் கிளம்பினார் சாயாஜி ராவ். அங்கு சிம்னா பாய்க்குப் பேராபத்து ஒன்று காத்திருந்தது. முதல் உலகப் போர்.



# இந்தியர்கள் அனைவரும் எதிரிகளே!

இப்படி ஓர் இழவெடுத்த யுத்தம் ஆரம்பிக்கும் என்று முன்பே தெரிந்திருந்தால் பரோடா மகாராணி சிம்னா பாய், 1914ல் அந்த ஐரோப்பியச் சுற்றுப் பயணத்துக்குக் கிளம்பி வந்திருக்கவே மாட்டாள். அப்படியே வந்திருந்தாலும் கணவர் சாயாஜி ராவை சுவிட்சர்லாந்தில் விட்டுவிட்டு, இப்படித் தனியாக, ஆஸ்திரியாவின் கர்ல்ஸ்பெட் (Carlsbad) நகரத்தில் வந்து சிக்கிக் கொண்டிருக்கவே மாட்டாள்.

கர்ல்ஸ்பெட் ஒரு கடற்கரை நகரம். இயற்கை வைத்தியம், மஸாஜ் சமாசாரங்களுக்குப் புகழ் பெற்றது. தனது ஐரோப்பியத் தோழி டூட்டன்ஹாமுடன், அந்த நகரத்துக்கு வந்த சிம்னா பாய், கொஞ்சம் சிகிச்சையும் நிறைய ஓய்வும் எடுத்துக் கொண்டிருந்தாள். சேவோய் (Savoy) நட்சத்திர ஹோட்டலில் வசதியான அறை. பிரத்யேகப் பணியாளர்கள். பெற்ற மகள் இந்திரா கொடுத்துவிட்டுப் போன சோகங்களையெல்லாம் கரைத்துக் கொள்ள நீண்ட ஓய்வு சிம்னா பாய்க்குத் தேவைப்பட்டது. ஆனால் அந்த ஜூன் மாதத்தில் எல்லாமே தலைகீழாக மாறிப் போனது.

'அய்யோ மகாராணி, யாரோ ஒரு செர்பிய ஆசாமி, ஆஸ்திரிய இளவரசர் பிரான்ஸ் பெர்டினாண்டைச் சுட்டுக் கொன்னுட்டானாம். ஊரெல்லாம் ஒரே பரபரப்பா இருக்குது' - டூட்டன்ஹாம் சொன்ன செய்தி, சிம்னா பாய்க்குள் பயத்தைப் பரவ விட்டது.

ஆஸ்திரியா, செர்பியா மீது போர் தொடுக்கத் தயாரானது. செர்பியாவுக்கு ரஷ்யா கைகொடுக்க, ஆஸ்திரியாவுக்கு ஜெர்மனி தோள் கொடுத்தது. அந்த

ஜூலை 28ல் ஆஸ்திரிய-ஹங்கேரி பேரரசர் பிரான்ஸ் ஜோசப், போர் அறிவிப்பை வெளியிட்டார். ஆஸ்திரியப் படைகள், செர்பியாவை முற்றுகையிட ஆரம்பித்தன. தன்னை மாபெரும் சக்தியாக உலகுக்குக் காட்டிக் கொள்ள நினைத்த ஜெர்மனி, ரஷ்யா மீது போரை அறிவித்தது. கூடவே, பழைய கணக்கையெல்லாம் தீர்த்துக் கொள்ளும் விதத்தில் பிரான்ஸையும் வம்புக்கு இழுத்தது.

பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் இடையில் அமைந்த பெல்ஜியம், யார் வம்புக்கும் செல்லா மல் அமைதியாக இருந்தது. ஆனால் ஜெர்மனியோ, தனது படைகளை பெல்ஜியம் வழியாக பிரான்ஸுக்குள் அனுப்பி, அதனை எளிதாக வென்றுவிடலாம் என்று திட்டமிட்டது. அத்து மீறி, பெல்ஜியத்தை ஆக்கிரமிக்க ஆரம்பித்தது ஜெர்மனி. அப்போதைய உலக நாட்டாமை பிரிட்டன், ஜெர்மனியின் கொட்டத்தை அடக்க மார்தட்டிக் களம் இறங்கியது. கனடாவும் அதனுடன் சேர்ந்து கொண்டது. பிரிட்டன் படைகள் பிரான்ஸுக்கு வர ஆரம்பித்தன. இப்படி யாக ஒரு கொலைச் சம்பவம் முதல் உலகப் போரை ஆரம்பித்து வைத்தது.

அது ஆகஸ்ட் மாதம். சிம்னா பாய், தனது கணவர் சாயாஜி ராவைத் தொடர்புகொள்ள முடியா மல் தவித்துக் கொண்டிருந்தாள். தொடர்புகளுக்கான எல்லா வழிகளும் அடைக்கப்பட்டிருந் தன. எப்படியாவது சாயாஜி ராவிடம் சேர்ந்துவிட வேண்டும், மறு நொடியே ஐரோப்பாவில் இருந்து வெளியேறிவிட வேண்டும் என்று தவித்துக் கொண்டிருந்தாள். யுத்த விமானங்கள் பறக்கும் சத்தத்துக்கிடையே சில மணி நேர உறக்கம்கூட மறந்து போயிருந்தது.

அன்று இரவுகூட அப்போதுதான் கண்ணயர்ந்தாள். சிறிது நேரத்திலேயே வெளியே பெரும் கூப்பாடு. டூட்டன்ஹாமின் துணையோடு ஜன்னல் வழியே லேசாக எட்டிப் பார்த்தாள். ஆஸ்திரிய கலகக்காரர்கள் கையில் கட்டைகளோடும் ஆயுதங்களோடும் ஹோட்டலைச் சூழ்ந்திருந்தார்கள். அது பல நாட்டுக்காரர்களும் தங்கியிருக்கும் ஹோட்டல். 'இங்கே வேலை பார்க்கும் பிரெஞ்சு செஃப்களை எல்லாம் வெளியே அனுப்பு. ரஷ்யாக்காரனெல்லாம் விருந் தாளியாகத் தங்கியிருக்கிறானே, அவனை வெளியே தள்ளி விடு. அந்த எதிரிகளையெல்லாம் கொன்றுவிட்டுதான் இங்கிருந்து கிளம்புவோம்.' ஆஸ்திரிய போலீஸார் அந்தக் கலகக் காரர்களை மிகவும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டிருந்தார்கள்.

'நாம் இங்கிருந்து தப்பித்துச் செல்லவே முடியாதா? அவர் அங்கு எப்படி இருப்பாரோ?' சிம்னா பாயின் தவிப்பான கேள்விக்கு டூட்டன்ஹாமிடம் பதிலில்லை.

மறுநாள். சிம்னா பாய், மிகவும் பிரயத்தனப்பட்டு ஆஸ்திரியாவின் வெளியுறவுத் துறை அமைச்சரைச் சந்திக்க முயற்சி செய்தாள். இரண்டு வார அலைச்சலுக்குப் பிறகு, சிம்னா பாய், டூட்டன்ஹாம் மற்றும் அவர்களைச் சார்ந்தவர்கள் எல்லாம் அங்கிருந்து கிளம்பிச் செல்வதற் கான அனுமதி கோப்புகள் கையெழுத்தாயின. ஆனால் அந்த நகரத்தில் முகாமிட்டிருந்த ஜெர்மானிய அதிகாரிகள், அவர்களது பயணத்துக்கு அனுமதி கொடுக்க மறுத்துவிட்டார்கள். காரணம், சிம்னா பாய் இந்திய மகாராணியல்லவா. இந்தியா, பிரிட்டனின் ஆட்சியின் கீழ். எனில் சிம்னா பாயும் பிரிட்டனைச் சார்ந்தவள்தானே. போரில் பிரிட்டன், ஜெர்மனிக்கு எதிரி. ஆகவே இந்தியர்கள் அனைவரும் எதிரிகளே. அனுமதி கிடைக்கவில்லை.

சிம்னா பாய் வெறுத்துப் போனாள். இங்கிருந்து வெளியேறவே முடியாதா? சேவோய் ஹோட்டலின் மேலாளர் ஹேர் ஆலிச் (Herr Aulich), நம்பிக்கை கொடுத்தார். 'இன்னும் சில

நாள்கள் மட்டும் பொறுத்துக் கொள்ளுங்கள். நான் உங்கள் பயணத்துக்குரிய எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிடுகிறேன்.'

பொறுமை கரைந்து கொண்டே இருந்தாலும், வேறு வழியின்றிக் காத்திருந்தாள் சிம்னா பாய். சில வாரங்கள் கழிந்தன. ஆகஸ்ட் 23. ஆஸ்திரியப் படைகள் போலந்தை முற்றுகையிட ஆரம்பித்திருந்தன. பாரிஸின் கிழக்குப் பகுதியில் ஒரே நாளில் ஜெர்மனி, 27000 பிரான்ஸ் வீரர்களைக் கொன்று குவித்தது. ஜெர்மனிக்கு எதிராக ஜப்பான் யுத்தத்தில் இறங்கியது.

ஆலிச், மகாராணியின் அறைக்கு வந்தார். 'நல்ல செய்தி. இரண்டு கார்களையும் ஓட்டுநர்களை யும் ஏற்பாடு செய்து விட்டேன். பயணத்துக்கான அனுமதிக் கோப்புகளும் தயார். நீங்களும் உங்கள் குழுவினரும் சுவிட்சர்லாந்தின் ஜூரிச் (Zurich) நகரத்துக்குச் சென்றுவிடலாம். நாளை காலை தயாராக இருங்கள்.'

மறுநாள் காலை வெகு சீக்கிரமாகவே எழுந்த டூட்டன்ஹாம், மகாராணியின் பொருள்களை எல்லாம் தயாராக எடுத்து வைத்தாள். நகைகள் எல்லாம் ஒரு பழைய தோல் பையிலும், பணம் ஒரு தகர டப்பாவுக்குள்ளும் திணித்து வைக்கப்பட்டன. சிம்னா பாயின் பிரத்யேகப் பணிப்பெண் யமுனாவும், குமாஸ்தா அம்பெர்கோவாகரும் எல்லாப் பொருள்களையும் கார்களில் ஏற்றினார்கள். சிம்னா பாயும் டூட்டன்ஹாமும் காரில் ஏறத் தயாரானார்கள். கையில் ஒப்பனைப் பெட்டி, சின்ன தலையணை, கம்பளி கோர்ட், சோடா பாட்டில்கள், புத்தகங்கள், பத்திரிகைகள். 'போய்விடுங்கள். மீண்டும் வந்துவிடாதீர்கள்' - ஒரு ரோஜாப் பூங்கொத்தை நீட்டியபடியே வழியனுப்பிய ஆலிச்சின் முகத்தில் வறண்ட புன்னகை.

பயணம் ஆரம்பமானது. வழியெங்கும் போர் வாகனங்கள். ஆம்புலன்ஸ்கள் காயமடைந்த வீரர்களை அள்ளிப் போட்டுக் கொண்டு விரைந்தன. ஆங்காங்கே கார்களை வழிமறித்த ஆஸ்திரிய ராணுவத்தினர் அவர்களது அனுமதிக் கோப்புகளையெல்லாம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு, வழிவிட்டார்கள். அவ்வப்போது மேலே பறந்து கொண்டிருந்த போர் விமானங்கள் வயிற்றில் அமிலம் சுரக்கச் செய்தன. நொடிக்கு நொடி பதைபதைப்பு. 'எப்படி யாவது ஆஸ்திரியாவின் எல்லையைத் தாண்ட வேண்டும். என் கணவரைச் சேர்ந்துவிட வேண்டும். சாமி, நீதான் மனசு வைக்கணும்' குலதெய்வங்களிடம் ஆதரவு திரட்டிக் கொண்டிருந்தாள் சிம்னா பாய்.

அன்றைய அஸ்தமனத்தில் ஆஸ்திரியாவின் வடக்குப் பகுதியிலுள்ள லின்ஸ் (Linz) நகரை அடைந்தார்கள். ஆனால் அங்கிருந்து மேலும் பயணத்தைத் தொடர, அனுமதிக்காக நீண்ட நேரம் காத்திருக்க வேண்டியதிருந்தது. 'நீங்கள் முண்டென் நகருக்குச் செல்லலாம்' - அனுமதி கிடைப்பதற்குள் இரவாகியிருந்தது. நான்கு மணி நேரப் பயணம். முண்டென் (Gmunden) நகரத்தை அடைந்தார்கள். ஓய்வெடுக்க இடமேது?

வழியெங்கும் சோதனைச் சாவடிகள். அடுத்த நாள் முழுவதும் இன்ஸ்ப்ரக் (Innsbruck) நகரை நோக்கி, மலைப்பாதையில் பயணம். அந்த நகரத்தை அடைந்துவிட்டால் போதும், அங்கிருந்து சில மணி நேரங்களில் சுவிட்சர்லாந்துக்குள் சென்றுவிடலாம். ஆங்காங்கே போஸ்டர்கள், போர்ச் செய்திகளோடு. 'ரஷ்யாவின் டேனன்பெர்கில் ஜெர்மானியப் படைகள் புகுந்து விட்டன'. 'பெல்ஜியத்தின் நமுர் நகரம் வீழ்ந்துவிட்டது. பாரிஸை நோக்கி ஜெர்மானியப் படைகள் முன்னேற்றம்.'



முதல் உலகப் போரில் பிரான்ஸ் வீரர்கள்

ஆஸ்திரியாவின் வடக்கு எல்லையிலுள்ள டைரோலை (Tyrol) அடைந்திருந்தார்கள். எல்லைப் பகுதி என்பதால் அங்கு ஜெர்மானியப் படைகள் குவிந்திருந்தன. ஜெர்மானிய ராணுவத்தினர் பலத்த சோதனை மேற்கொண்டிருந்தார்கள். 'கடவுளே, எப்படியாவது அனுமதி கிடைச்சுடணும்' சிம்னா பாயின் உதடுகள் இடைவிடாமல் பிரார்த்தித்துக் கொண்டிருந்தன. 'அனுமதி கொடுத்துவிடுவார்களா?' - டூட்டன்ஹாமிடம் மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டே இருந்தாள். நேரம் ஆக ஆக பயம் உயிரைக் கவ்வியது.

இந்தியாவில் பல மகாராஜாக்கள் தங்கள் சமஸ்தானப் படைகளை பிரிட்டன் சார்பில் போருக்கு அனுப்ப ஆரம்பித்திருந்தார்கள். பிகானிர் மகாராஜா கங்கா சிங், 'போர்க்களத்தில் என் வீரர்களோடு களமிறங்கிப் போரிட்டு வீர மரணம் அடைவதே என் லட்சியம்' என்றெல் லாம் வீர வசனம் பேசி, முதல் ஆளாகப் படைகளோடு ஐரோப்பாவுக்குள் நுழைந்தார்.

இடார் இளவரசர் தோலத் சிங் (Daulat Singh), எகிப்துக்குத் தன் படைகளோடு வந்திருந்தார். அவரது ராணுவச் செயலாளருக்கும் போரில் பங்கேற்க ஆசை. அனுமதி கிடைக்கவில்லை. அந்தச் சோகம் தாங்க முடியாமல், தன்னைத் தானே சுட்டு தற்கொலை செய்து கொண்டார் அந்தச் செயலாளர்.

ஜோத்பூர் மகாராஜா சுமெர் சிங்குக்கு (Sumer Singh) அப்போது வயது வெறும் பதினேழு. அவரது தாய் போருக்குச் செல்ல அனுமதி கொடுத்துவிட்டார். ஆனால் வைஸ்ராய் அனுமதி கொடுக்கவில்லை. 'நான் குடும்பத்துல மூத்த பிள்ளை. எனக்கு அப்புறம் மூணு ஆம்பளைப்

புள்ளைங்க இருக்காங்க. அதனால நான் செத்தாக் கவலையில்லை' என்றெல்லாம் முஷ்டி உயர்த்தினார். இருந்தும் அனுமதி கிடைக்கவில்லை.

உதய்பூர் மகாராஜா பஃதே சிங் மட்டும் பிரிட்டிஷாருக்கு எதிராகக் குரல் கொடுத்தார். ‘அடேய் முட்டாள்களே, இந்தியாவில் ஒரு யுத்தம் நடந்தால் எந்த ஐரோப்பாக்காரனாவது நமக்கு ஆதரவா வருவானா? உயிரைக் கொடுப்பானா? இப்போ நடக்குற யுத்தத்துல இந்தியாக்காரன் மட்டும் ஏன் வரிஞ்சு கட்டிக்கிட்டு ஐரோப்பாக்காரனுக்காக உயிரைக் கொடுக்கப் போகணும்?'

சிம்னா பாயின் கார், இன்னமும் அந்தச் சோதனைச் சாவடியில்தான் காத்துக் கொண்டிருந்தது. அவளது நம்பிக்கை முற்றிலும் வடிந்து போயிருந்தது. ஜெர்மானியர்கள் என்னைக் கைது செய்துவிடுவார்கள். பின்பு கொன்று விடுவார்கள். என் உடல்கூட பரோடாவுக்குச் செல்லுமா என்று தெரியவில்லை. அவளது எண்ணங்கள் எப்படி எப்படியோ வளர்ந்து கொண்டிருந்த நேரத்தில், ‘அனுமதி கிடைத்துவிட்டது' என்று சிரித்தபடியே வந்து காரை எடுத்தார் ஓட்டுநர். சிம்னா பாயால் நம்பவே முடியவில்லை. ‘எப்படி?' என்று டூட்டன்ஹாமிடம் கேட்டுக் கொண்டே வந்தாள். அவள் மெலிதான புன்னகையோடு அமைதியாக இருந்தாள்.

ஜெர்மானிய சோதனைச் சாவடிகளை எல்லாம் தாண்டி, சுவிட்சர்லாந்தின் எல்லைக்குள் நுழைந்தவுடன் டூட்டன்ஹாம், அந்த அனுமதிக் கோப்புகளை எடுத்து சிம்னா பாயிடம் காட்டினாள். அதை வாங்கிப் பார்த்த சிம்னா பாய்க்கு லேசாகத் தூக்கிவாரிப் போட்டது.

சிம்னா பாயையும் அவளைச் சார்ந்த இந்தியர்களையும், ‘தென் அமெரிக்காவைச் சார்ந்த மேற்கு இந்தியர்கள்' என்று எழுதிக் கொடுத்திருந்தார் ஹோட்டல் மேலாளர் ஆலிச். அதன்படி எல்லாக் கோப்புகளும் தயாராகி இருந்தன.

‘தென் அமெரிக்கா போரில் பங்கு பெறவில்லை. ஜெர்மானியர்களுக்கு கிழக்கு இந்தியர்களுக்கும் மேற்கு இந்தியர்களுக்கும் வித்தியாசம் தெரியாது. ஆகவே தப்பித்து விட்டீர்கள்' சிரித்தாள் டூட்டன்ஹாம். பெருமூச்சு விட்டாள் சிம்னா பாய்.

சுவிட்சர்லாந்தை அடைந்தார்கள். சாயாஜி ராவ் தங்கியிருந்த ஹோட்டலுக்குள் அவசர அவசரமாக நுழைந்தார்கள். ‘மன்னிக்க வேண்டும். சாயாஜி ராவ் இங்கிருந்து கிளம்பிச் சென்றுவிட்டார். லண்டனுக்குச் செல்வதாகச் சொன்னார்' - வரவேற்பறையில் இப்படி ஓர் அதிர்ச்சி பதில் காத்திருந்தது. ஜெர்மானியப் படைகள் பிரான்ஸுக்குள் நுழைய ஆரம்பித்த நேரம். எனவே அங்கு எல்லாவிதமான போக்குவரத்துகளும் முடக்கப்பட்டிருந்தன.



# இப்படி ஒரு வைஸ்ராய் இனி வரவே கூடாது!

எப்போது வேண்டுமானாலும் ஜெர்மானியப் படைகள் பிரான்ஸைக் கபளீகரம் செய்யலாம் எனும் பதைபதைப்பான முதல் உலகப் போர் சூழல். பிணந்தின்னிப் பறவைகளுக்கு இடைவிடாத விருந்து. இருபத்து நான்கு மணி நேர பண்பலை வானொலி போல துப்பாக்கிக் குண்டுகளின் தொடர் ஒலிபரப்பு. ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் உடல் உறுப்புகள். எங்கு பார்த்தாலும் ரத்தமும் சிவப்பும்.

போரின் அவலங்களை அத்தனை நெருக்கமாகக் கண்டு அதிர்ந்து போயிருந்தாள் சிம்னா பாய். லண்டனுக்குச் சென்றுவிட்ட சாயாஜி ராவை எப்படி அடைவது?

‘பிரான்ஸ் வழியாகத்தான் லண்டன் செல்ல முடியும். எல்லாவிதமான போக்குவரத்தையும் தடைசெய்து விட்டார்கள். கவலைப்படாதீர்கள் மகாராணி. இவ்வளவு தூரம் எல்லா ஆபத்துகளையும் கடந்துவிட்டோம். இனியும் ஏதாவது வழி இருக்கும். நாம் நிச்சயமாக மகாராஜைவைச் சந்தித்துவிடுவோம். இருங்கள், நான் சென்று விசாரித்துவிட்டு வருகிறேன்’ - நம்பிக்கையூட்டிய டூட்டன்ஹாம், அந்த ஹோட்டலின் மேலாளரைத் தேடிச் சென்றாள்.

வழி கிடைத்தது. ‘லயான்ஸ் நகரத்துக்குச் சென்றுவிடுங்கள். அங்கிருந்து இன்னும் ஓரிரு நாள்களில் பாரிஸுக்கு ரயில் இருப்பதாகத் தகவல். முயற்சி செய்து பாருங்கள்.’

லயான்ஸ் (Lyons), கிழக்கு பிரான்ஸில் மத்தியிலுள்ள ஒரு நகரம். எப்படிச் செல்வது? டூட்டன்ஹாம், கார்ல்ஸ்பெட் நகரத்திலிருந்து சுவிட்சர்லாந்துக்கு

அழைத்து வந்த அந்தக் கார் ஓட்டுநர்களிடமே பேசிப்பார்த்தாள். அவர்களும் ஒப்புக் கொண்டார்கள். எந்தவிதத் தடங்கலுமின்றி லயான்ஸை அடைந்தார்கள். ஆனால் பாரிஸ் ரயிலுக்காக ஒருநாள் முழுவதும் காத்திருக்க வேண்டிய சூழல்.

ரயில் நிலையத்தின் ஓய்வு அறையெங்கும் போரில் காயமடைந்த வீரர்கள். பிளாட்பாரம் ஒவ்வொன்றிலும் வீரர்களின் வேதனைப் புலம்பல்கள். ஆங்காங்கே மருத்துவக் குழுவினர் பரபரப்பாகத் திரிந்து கொண்டிருந்தார்கள். அதே இடத்தில் ஓர் ஓரத்தில் மகா கணம் பொருந்திய மகாராணி சிம்னா பாய், தலையைக் கவிழ்ந்து உட்கார்ந்திருந்தாள். அருகில் ஆறுதலாக டூட்டன்ஹாம், பணிப்பெண் யமுனா, குமாஸ்தா அம்பெர்கோவார்கர். ஆச்சார மான உணவுக்கெல்லாம் வழியில்லை. கையில் கிடைத்த பிஸ்கெட், பழங்கள், ரொட்டி. படுத்துத் தூங்கக்கூட இடவசதியில்லாத சூழல். குளிர் உயிரை அச்சுறுத்தியது. அந்த இரவு வேதனைகளுடன் கழிந்தது.

மறுநாள். பாரிஸுக்குச் செல்லும் ரயில் மெல்ல வந்து நின்றது. அங்கிருந்த மொத்தக் கூட்டத்தினரும் ஈ மொய்ப்பது போல ரயிலை நோக்கிப் பாய்ந்தார்கள். பெட்டி, படுக்கை, மூட்டை, முடிச்சுகள் என சிம்னா பாயின் லக்கேஜ் எக்கச்சக்கம். அத்தனையையும் எடுத்துக் கொண்டு, ரயிலில் ஏறி இடம் பிடிப்பது என்பது பணியாளர்களால் இயலாத விஷயம். வேறுவழி தெரியவில்லை. 'தான் ஒரு மகாராணி' என்ற நினைப்பைத் தூக்கியெறிந்தாள் சிம்னா பாய். இரண்டு கைகளிலும் பெட்டிப் படுக்கைகளைத் தூக்கவே முடியாமல் தூக்கிக் கொண்டு, ரயில் பெட்டியை நோக்கித் தட்டுத் தடுமாறி ஓடினாள்.

சில நிமிடங்கள் போராட்டத்துக்குப் பிறகு இடம் கிடைத்தது. நெருக்கிப் பிடித்துதான் உட்கார வேண்டியதிருந்தது. இருந்தாலும் பாரிஸை நோக்கி ரயில் கிளம்பியபோது சிம்னா பாயின் முகத்தில் கொஞ்சம் நிம்மதி. 'மகாராணி எனக்கொரு சந்தேகம்' - டூட்டன்ஹாம் பேச ஆரம் பித்தாள். 'இவ்வளவு கனத்தைத் தூக்கிக் கொண்டு, ரயிலில் இடம் பிடிப்பதற்காக நீங்கள் ஓடிவந்து ஏறிய சம்பவத்தை, பரோடா சமஸ்தானப் பெண்கள் கேள்விப்பட்டால் என்ன சொல்லுவார்கள்?'

'அய்யய்யோ, அவ்வளவுதான். துடிதுடித்துப் போய்விடுவார்கள். மகாராணிக்கா இந்த நிலைமை என்று ஒப்பாரி வைக்க ஆரம்பித்துவிடுவார்கள். அவர்களுக்கெல்லாம் இந்த விஷயம் தெரியாமலிருப்பதே நல்லது' சிம்னா பாய் சிரித்தாள். இட நெருக்கடி தவிர வேறெந்த இடைஞ்சலும் இன்றி பாரிஸைச் சென்றடைந்தது ரயில்.

எப்போதும் ஆட்டம், பாட்டம், கேளிக்கை, கொண்டாட்டமென நிரம்பித் ததும்பும் பாரிஸ் நகரம், அப்போது போர் பீதியைப் போர்த்திக் கொண்டு அமைதியாகக் கிடந்தது. பூனை நடை நடக்கும் ஒய்யாரப் பெண்களின் காலடி ஓசையில்லாத வீதிகள், விதவையாகத் தெரிந்தன. ஆங்காங்கே ராணுவ வண்டிகள் மட்டும் தென்பட்டன. 'ஜெர்மானியப் படைகள் நெருங்கி விட்டன', 'முப்பது மைல் தொலைவில் இருக்கிறார்கள்', 'பிரிட்டன் வீரர்கள் கடுமையாகப் போரிட்டுக் கொண்டிருக்கிறார்கள்' - என்று மணிக்கொரு செய்தி வந்து அச்சுறுத்தியது.

ரிட்ஸ் நட்சத்திர ஹோட்டல். அடிக்கடி வந்துபோகும் வாடிக்கையாளர் என்பதால் பரோடா மகாராணிக்கு அந்த அசாதாரணமான சூழலிலும் அறை கிடைத்தது. பல நாள்களுக்குப் பிறகு நிம்மதியாக ஓய்வெடுக்கும் வாய்ப்பு. உடல் அசதியாக இருந்தாலும் மனம் வசதியாக



லீ ஹவ்வே துறைமுகம்

இல்லை. 'மகாராஜா லண்டனில் பத்திரமாக இருப்பாரா? அவரைச் சென்றடைந்துவிட முடியுமா? அல்லது ஜெர்மானியப் படைகளிடம் சிக்கி..' - உள்ளுக்குள் பயமும் கவலையும் உறுத்தின.

அடுத்தநாள் அதிகாலை. அறைக்குள் பரப்பரப்பாக நுழைந்தாள் டூட்டன்ஹாம். 'மகாராணி சீக்கிரம் கிளம்புங்கள். மதியம் இங்கிலாந்துக்கு ஒரு கப்பல் இருக்கிறதாம். உடனே லீ ஹவ்ரேக்குச் செல்ல வேண்டும்.'

லீ ஹவ்ரே (Le Havre), பிரான்ஸின் வடக்குப் பகுதியிலுள்ள ஒரு துறைமுக நகரம். தெரிந்தவர்கள் மூலமாக கார் ஒன்றை ஏற்பாடு செய்துகொண்டு அத்தனை மூட்டை, முடிச்சு களையும் அள்ளிக்கொண்டு விரைந்தார்கள்.

அந்தத் துறைமுகத்தை அவர்கள் அடையும்போது மணி மதியம் 2.15. உள்ளே நுழையவே முடியாதபடி பெருங்கூட்டம். குறிப்பாக பிரான்ஸ், பிரிட்டன் ராணுவ வீரர்கள். கூட்டம் கூட்டமாக பொதுமக்கள் பலரும் அங்கிருந்து வெளியேறிக் கொண்டிருந்தார்கள். 'இங்கிலாந்து கப்பல் எப்போ கிளம்புது?' டூட்டன்ஹாம் ஒருவரை வழிமறித்துக் கேட்டாள்.

'அதெல்லாம் அப்பவே கிளம்பிப் போயாச்சு.'

'வேற கப்பல் இருக்குதா?'

'இனிமே அடுத்த வாரம்தான்.'

டூட்டன்ஹாமின் முகம் வாடிப்போனது. அதே நேரத்தில் இன்னொரு செய்தி வந்து கிலி யூட்டியது. 'லீ ஹவ்ரே கடல் எல்லைக்குள் ஜெர்மானியப் படைகள் நுழையும் அபாயம்.'

ஏன் விதி இப்படி விளையாடுகிறது? இந்த இடத்தில் போர் தொடங்கிவிட்டால் எங்கே செல்வது? இனி நான் என் கணவரையும் பரோடாவையும் பார்க்கவே முடியாதா? சிம்னா பாய் நொந்துபோய் புலம்ப ஆரம்பித்தாள். அந்தச் சமயத்தில் காயமடைந்த ஏராளமான வீரர்கள் அங்கு தென்பட்டார்கள். அந்த வீரர்கள், அவர்களுடன் பாரிஸுக்கு ரயிலில் வந்தவர்கள்போல இருந்தார்கள். டூட்டன்ஹாமுக்கு ஒரு விஷயம் பிடிபட்டது. மகாராணியை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு, துறைமுக அலுவலகத்தை நோக்கி ஓடினாள். சிறிது நேரம் கழித்து மகிழ்ச்சியுடன் திரும்பி வந்தாள்.

'மருத்துவ சேவை கப்பல் ஒன்று கிளம்புகிறது. அதில் நமக்கு இடம் கிடைத்துவிட்டது.'

மகாராணி, டூட்டன்ஹாமை அணைத்துக் கொண்டாள். லண்டனை அடைந்த சிம்னா பாய், சாயாஜி ராவைக் கண்டாள். கண்ணீர் சிந்தினாள். உணர்வுபூர்வமான நிமிடங்கள். 'உடனே இந்தியாவுக்குத் திரும்பி விடலாம். என்னால் இந்தச் சூழலில் இருக்க முடியவில்லை. எனக்கு பரோடாவை மீண்டும் பார்க்க வேண்டும்போல இருக்கிறது.' சிம்னா பாயின் வேண்டுகோளை, சாயாஜி ராவ் தட்டவில்லை. பயணத்துக்கான தகுந்த ஏற்பாடுகளைச் செய்துகொண்டு, எந்தவிதப் பிரச்னையுமின்றி இந்தியாவை வந்தடைந்தார்கள்.

1915. வைஸ்ராய் ஹார்டிங் பதவிக்காலம் முடிந்து இந்தியாவில் இருந்து விடைபெற வேண்டிய தருணம். இங்கிலாந்துக்குக் கப்பல் ஏறும் முன் வைஸ்ராயை, பம்பாய் சென்று மரியாதையாக, மனமுருக, விசும்பிக் கொண்டே 'டாடா' காட்டி வழியனுப்பி வைக்க வேண்டியது ஒவ்வொரு மகாராஜாவுக்கும் உரிய சடங்கு. பல சமஸ்தான மகாராஜாக்கள் சடங்கு செய்தார்கள்.

டெல்லி தர்பாரில் வைத்து, 'அதைச் செய், இதைச் செய், அப்படிச் செய்யாதே, இப்படிப் பேசாதே' என்று பாடாய்ப்படுத்தியவர்தானே ஹார்டிங். பம்பாய் சென்று அவரை வழியனுப்பு வதற்கெல்லாம் சாயாஜி ராவின் தன்மானம் இடம் கொடுக்கவில்லை. பம்பாய்க்கு தந்தி ஒன்றை அனுப்பினார்.

சாயாஜி ராவிடம் இருந்து தந்தி வந்து இருக்கிறது என்றதுமே எரிச்சலோடுதான் வாங்கிப் பார்த்தார் ஹார்டிங். படித்ததுமே அவரது முகம் கோப ரேகைகள் குறுக்கும் நெடுக்குமாக ஓடின.

'தங்கள் பயணம் இனிதாக அமையட்டும். உங்களைப் போன்றதொரு வைஸ்ராய் இனிமேல் இந்தியாவுக்கு அமைய வேண்டாம்.'

இந்தச் செய்தி பிரிட்டிஷார் மத்தியில் பெரும் சலசலப்பை ஏற்படுத்தியது. இவர் ஏன் மீண்டும் மீண்டும் தன் பெயரைக் கெடுத்துக் கொள்கிறார் என்று பிரிட்டிஷ் ஜால்ரா மகாராஜாக்கள் முணுமுணுத்தார்கள். சாயாஜி ராவ் எதற்கும் பதில் சொல்லவில்லை.

1916. யுத்தம், முற்றுப்புள்ளிக்கான எந்தவித அறிகுறியுமின்றி நீண்டுகொண்டே சென்றது. பல சமஸ்தான மகாராஜாக்கள் தங்கள் படைகளை பிரிட்டனுக்கு உதவியாக அனுப்பி இருந் தார்கள். சில சமஸ்தான இளவரசர்கள், தாங்களே நேரடியாகப் போரில் பங்கேற்றிருந் தார்கள்.

இந்தியா இந்தச் சமயத்தில் பிரிட்டனுக்குப் போரில் உதவ வேண்டும். அவர்களின் அதிகாரத் தின்கீழ்தான் நாம் இருக்கிறோம். எனவே அவர்கள் கஷ்டத்திலிருக்கும் வேளையில்

கைகொடுக்க வேண்டியது நம் கடமை என்பது சில தேசியவாதிகளின் கருத்தாக இருந்தது. பிரிட்டன், போரில் வென்றுவிட்டால், அதற்கு உதவிசெய்த இந்தியாவுக்கு வெகுமதியாக சுதந்தரத்தை வழங்கிவிடும் என்பது அந்த தேசியவாதிகளின் மனக்கணக்கு.

பரோடா மகாராஜா சாயாஜி ராவுக்கும் அந்தக் கருத்தில் உடன்பாடு இருந்தது. ஆகவே, எப்பேர்ப்பட்ட சூழலிலும் ஆளும் பிரிட்டிஷ் அரசுக்கு எதிர்க்குரல் கொடுத்துக் கொண்டிருந்த அவரும், பரோடா படைகளை முதல் உலகப் போருக்கு அனுப்பும் முடிவு எடுத்தார். கூடவே மாதா மாதம் பிரிட்டிஷ் அரசுக்கு பன்னிரண்டாயிரம் ரூபாய் யுத்த நிதி வழங்குவதாகவும் அறிவித்தார். பம்பாயிலிருந்த அவரது மாளிகையான ஜெயா மஹாலை, ராணுவப் பயன் பாட்டுக்காக ஒதுக்கினார்.

அதுவரை சாயாஜி ராவ் மீதிருந்த பிரிட்டிஷாரின் அதிருப்தி எல்லாம் போருக்கு உதவி செய்த விஷயத்தில் அமுங்கிப் போனது. கோபம் கொப்பளிக்க இந்தியாவை விட்டுச் சென்ற முன்னாள் வைஸ்ராய் ஹார்டிங்கூட, சாயாஜி ராவிடம் கடிதங்கள் வழியாக நட்பு பாராட்ட ஆரம்பித்தார்.

அடுத்த வைஸ்ராயாகப் பதவியேற்றிருந்த செம்ஸ்போர்ட் (Chelmsford), பரோடாவுக்கே வந்து, சில நாள்கள் சாயாஜி ராவிடம் உறவு வளர்த்தார். 'வைஸ்ராய் ஒருவர் பரோடாவின் லஷ்மி விலாஸ் அரண்மனையை இப்படி வளைய வளையச் சுற்றி வந்து பத்து வருடங்கள் ஆகிவிட்டன' - என்று பரோடாவின் ரெஸிடெண்ட் கமெண்ட் அடித்தார்.

1918. முதல் உலகப் போர் முடிவை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. உலக அளவில் தன்னைப் பிஸ்தாவாகக் காட்டிக் கொள்ள நினைத்த ஜெர்மனியின் கனவு பிசுபிசுத்துப் போயிருந்தது. கிட்டத்தட்ட ஜெர்மனி தரைமட்டமாகியிருந்தது. 'உன்னால்தான் எல்லாம். நீ சும்மா இருந்திருந்தால், நாங்களும் சும்மா இருந்திருப்போம். இப்போது பார். உன்னால் எங்களுக்கும் நஷ்டம். நீதான் அதையும் ஈடுசெய்ய வேண்டும்' - பிரிட்டன், பிரான்ஸ், ரஷ்யா, அமெரிக்கா ஆகிய நேச நாடுகள் எல்லாம் குற்றுயிராகக் கிடத்த ஜெர்மனியின் கழுத்தைப் பிடித்து நெறித்தன. 1919, மே 7 அன்று வெர்செய்ல்ஸில் போர் நிறுத்த ஒப்பந்தம் கையெழுத்தானது.

நான்கு ஆண்டுகள், அது பல நாடுகளில் போர் நடந்தால் தாங்குமா என்ன? உலக அளவில் மாபெரும் பொருளாதாரச் சீரழிவு. போரில் பிரிட்டனுக்காகக் கலந்துகொண்ட இந்தியாவிலும்தான். எதைக் கொண்டு இந்தச் சீரழிவைச் சரி செய்யலாம் என்று பரோடா மகாராஜா சாயாஜி ராவ் வெகு தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார். அப்போது அவரது நினைவில் அந்தப் பொருள் பளபளத்தது.



# நட்சத்திரம், நிலவு, மர்லின் மன்றோ

அவள் ஓர் அடிமை. பிரேசில் நாட்டைச் சேர்ந்தவள். பெயர் தெரியவில்லை. விடியலில் சுரங்கத்துக்குச் சென்றுவிட வேண்டும். நாள் முழுவதும் வேலையைத் தவிர வேறெதுவும் நினைக்கக் கூடாது. கொஞ்சம் சோர்ந்து உட்கார்ந்தால், சுரங்கக் காவலர்களின் கையில் இருக்கும் தடி பேசும். தாகம், பசி, இயற்கை உபாதைகள் என்றால் மட்டும் கொஞ்சம் கருணை காட்டுவார்கள். அஸ்தமனமாகி சில மணி நேரங்கள் கழிந்த பிறகே சுரங்கத்திலிருந்து வெளியே வர முடியும். அந்த அடிமை வாழ்க்கை அவளுக்குப் பழகிப் போயிருந்தது.

அன்று அவளுக்கு அதிர்ஷ்ட தினம். வழக்கம்போல தோண்டிக் கொண்டிருந்த அவள் கண்களில் அந்தப் பொருள் மின்னியது. வேகமாகத் தோண்டினாள். அந்தப் பளபளா கல்லைக் கையில் எடுத்தாள். வைரம். அதன் மதிப்பு அவளுக்குத் தெரியாது. அப்படியே தெரிந்திருந்தாலும், அவளால் அதைச் சுரங்கத்திலிருந்து வெளியே கொண்டு போய்விட முடியாது. மாட்டிக் கொண்டால் மரணப் பரிசு.

அந்த வைரத்தை எடுத்துக் கொண்டு நேராகக் கண்காணிப்பாளர் கஸிமிரோ டி மோரேஸிடம் (Casimiro de Moraes) சென்றாள். ‘எஜமான், இது நான் தோண்டுறப்போ கிடைச்சுது.’ ஒப்படைத்தாள். அடிபணிந்து நின்றாள். கஸிமிரோவின் முகம் ஒளிர்ந்தது. அவளைப் பார்த்து மகிழ்ச்சியாகப் புன்னகை செய்தார். அதுவே அவளுக்குப் பேரானந்தமாக, போதுமானதாக இருந்தது.

1853ல் பிரேசிலின் பாகாஜெம் (Bagagem) வைரச் சுரங்கத்தில் அந்த அடிமைப் பெண் கண்டெடுத்த வைரம், அவளுக்குச் சுதந்தரத்தைப் பெற்றுக் கொடுத்தது.

அதுவரை அந்தச் சுரங்கத்தில் கண்டெடுக்கப்பட்ட மிகப் பெரிய வைரம் அதுவே. அவளுக்குப் பணம், உடைகள், தங்குவதற்கு வீடு கிடைத்தது. கூடவே வாழ்நாள் பென்ஷன் தருவதாகவும் சொன்னார்கள். தங்கள் கையிலும் அப்படி ஒரு வைரம் சிக்காதா என்று மற்ற அடிமைகள் முனைப்போடு தோண்ட ஆரம்பித்தார்கள்.

தோண்டியெடுக்கப்பட்ட அந்த வைரத்தின் தரம் 261.88 காரட். அது 3000 பவுண்டுகளுக்கு விற்கப்பட்டது. அதை வாங்கிய முதல் நபர், ரியோ டி ஜெனிரோவில் இன்னொரு நபருக்கு முப்பதாயிரம் டாலருக்கு விற்றார். அது ஆம்ஸ்டர்டாமில் மற்றொரு நபரிடம் முப்பத்தைந் தாயிரம் டாலருக்குக் கைமாறியது. அழகாக வெட்டப்பட்டு, தலையணை போல வடிவமைக் கப்பட்டது. வெட்டப்பட்ட பின் அதன் தரம் 128.48 காரட்.

பாரிஸில் புகழ்பெற்ற வைர வியாபாரிகளான ஹால்ஃபென் (Halphen) நிறுவனத்தார், அதை வாங்கிக் கொண்டார்கள். அப்போது அந்த வைரத்துக்கு வைக்கப்பட்ட பெயர் தி ஸ்டார் ஆஃப் தி சௌத் (The Star of the South). கண்காட்சிகள் பலவற்றில் அந்த வைரம் வலம் வர ஆரம்பித்தது.

இந்தியாவில் நடந்த ஒரு வைரக் கண்காட்சியிலும் தெற்கு நட்சத்திரம் மின்னியது. இந்திய மகாராஜாக்கள் பலருக்கும் அதன் மீது இரண்டு கண்களும் இருந்தன. ரெஸிடெண்டுக்கு விஷம் வைத்த பரோடா மகாராஜா மல்ஹர் ராவ் நகைப் பிரியராயிற்றே. அதுவும் வைரம் என்றால் வாய் பிளப்பவர். எப்படியும் வாங்கியே தீருவேன் என்று களமிறங்கினார். ஹால்ஃபன் நிறுவனத்தார், விலை 110000 பவுண்டு என்றார்கள். மல்ஹருக்கு விலையில் உடன்பாடில்லை.

மல்ஹர் ராவ், டிரெஸ்டென் (Dresden) என்ற ஆங்கில வியாபாரியை அழைத்தார். '80000 பவுண்டு தர்றேன். உனக்கும் கொஞ்சம் பணம் அன்பளிப்பா தர்றேன். பேரம் பேசி முடிச்சுடு.' டிரெஸ்டென், சில பல வழிகளைக் கையாண்டு, ஹால்ஃபன் நிறுவனத்தாரிடமிருந்து தெற்கு நட்சத்திரத்தை வாங்கிக் கொடுத்தார். மல்ஹர் ராவ் சொன்ன விலைதான்.

வைரம் வாங்குவதிலும் ஆயிரத்தேழு சாஸ்திர, சம்பிரதாயங்களைச் சொல்லுவார்களே. கடல் கடந்து கொண்டு வரப்பட்ட வைரத்தை வாங்கினால் ஆகாது என்றொரு நம்பிக்கை இருக் கிறது. ரெஸிடெண்டைக் கொலை செய்ய முயற்சித்ததாக மல்ஹர் ராவ், பரோடாவிலிருந்து வெளியேற்றப்பட்டார். அதற்குக் காரணம்கூட, கடல் கடந்த அந்த ராசியில்லாத வைரம்தான் என்ற பேச்சு எழுந்தது. இருந்தாலும் பரோடாவின் கஜானாவில் அது தொடர்ந்து மினு மினுத்தது.

1919. முதல் உலகப் போர் முடிவடைந்த சமயம். உலகமெங்கும் கடும் பொருளாதார நெருக் கடி. பரோடா சமஸ்தானத்தின் நெருக்கடிகளை எப்படித் தீர்ப்பது என்று தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார் மகாராஜா சாயாஜி ராவ். கஜானாவிலுள்ள நகைகளை விற்பது ஒரு வழி. அல்லது நகைகளை விட்டுவிட்டு, சேர்த்து வைத்துள்ள வைரக் கற்களை விற்பது மாற்று வழி. தெற்கு நட்சத்திரம் போக, அந்த கஜானாவில் மேலும் இரண்டு உலகப் புகழ் வைரங்கள் இடம்பெற்றிருந்தன. ஒன்று அக்பர் ஷா வைரம், இன்னொன்று பரோடாவின் நிலவு (The Moon of the Baroda).

அக்பர் ஷா - பெயரே சரித்திரம் சொல்லிவிடுகிறதே. முகலாயப் பேரரசர் அக்பர் காலத்திலுள்ள வைரம். ராஞ்சிக்கு அருகில் குக்ரா என்ற இடத்திலுள்ள ஒரு சுரங்கத்திலிருந்து தோண்டி



மர்லின் மன்றோ கழுத்தில் பரோடாவின் நிலவு

எடுக்கப்பட்டது. ஷாஜஹான், மயிலாசனத்தில் மயிலின் ஒரு கண்ணாக அந்த வைரத்தைப் பதித்து வைத்திருந்ததாகவும் தகவல் உண்டு. அதன் தரம் 116 கேரட்.

முகலாயப் பேரரசின் மீது படையெடுத்து வந்த பெர்சியாவின் நாதிர் ஷா, மயிலாசனத்தைக் கொள்ளையடித்துவிட்டுச் சென்றார். 1747ல் நாதிர் ஷா கொல்லப்பட்டார். அவனுடைய சொத்துக்கள் எல்லாம் கொள்ளையடிக்கப்பட்டன. மயிலாசானம் சிதைக்கப்பட்டது. அதிலுள்ள கற்கள் எல்லாம் திருடப்பட்டன. அப்போது அக்பர் ஷா வைரமும் கொள்ளை யடிக்கப்பட்டிருக்கலாம் என்ற அனுமானங்கள் உண்டு. அதற்குப் பிறகு அந்த வைரம் எங்கே சென்றது, யார் வைத்திருந்தார்கள் என்ற சரித்திரக் குறிப்புகள் எதுவும் இல்லை.

1860களில் துருக்கியில் வைரக் கண்காட்சி ஒன்று நடைபெற்றது. அங்கு அக்பர் ஷா, 'என்னைப் பார், என் அழகைப் பார்' என்று கண் சிமிட்டிக் கொண்டிருந்தது. 1866 பிப்ரவரியில் கான்ஸ்டாண்டிநோபிளில் நடைபெற்ற ஒரு கண்காட்சியில், ஜார்ஜ் ப்ளாக் (George Blogg)

என்ற லண்டனைச் சேர்ந்த வைர வியாபாரி, அக்பர் ஷாவைக் கண்டார். காதல் கொண்டார். ஆட்கொண்டார். அதனை கொஞ்சம் வெட்டி, தட்டி அழகிய வடிவில் மாற்ற நினைத்தார். லெவி மோசஸ் (Levi Moses) என்ற வைர வடிவமைப்பாளரிடம் கொடுத்தார். அவர் வைர வேலையில் பலே கில்லாடி. ஆனால் அக்பர் ஷா விஷயத்தில் கொஞ்சம் சொதப்பி விட்டார். வைரம் கொஞ்சம் அதிகமாகவே வெட்டப்பட்டு தன் அழகிய வடிவைத் தொலைத்தது. ஜார்ஜ் பிளாக், அக்பர் ஷாவை மீண்டும் இந்தியாவுக்குக் கொண்டு வந்தார்.

1867ல் பரோடாவில் அது விலை மூன்றரை லட்சத்துக்கு விலைபோனது. வாங்கியவர் மகாராஜா கண்டே ராவ். பரோடாவின் கஜானாவில் அக்பர் ஷா சேர்ந்தது.

உலகப் போர் பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க எதை விற்கலாம்? அக்பர் ஷாவையா அல்லது தெற்கின் நட்சத்திரத்தையா? சாயாஜி ராவ் ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருந்தார். தெற்கின் நட்சத்திரம் மிகப் பெரியது. பரம்பரையின் மிக முக்கியமான வைர அந்தஸ்தையும் பெற்றிருந்தது. அதை விற்பதற்கு சாயாஜி ராவின் மனம் ஒப்புக் கொள்ளவில்லை. அக்பர் ஷா வைரம் சிறியது. அதை விற்றுவரும் பணம் நெருக்கடியைச் சமாளிக்கப் போதுமானதாக இருக்காது. வேறு வழியில்லை. பரோடாவின் நிலவை விற்கலாம் என்று முடிவெடுத்தார் சாயாஜி ராவ்.

பரோடாவின் நிலவு வைரம் எங்கிருந்து வந்தது, யாரிடமிருந்து வாங்கப்பட்டது போன்ற குறிப்புகள் எதுவும் இல்லை. பரோடாவின் கஜானாவிலிருந்த சீனியர் வைரம் அதுவே. பல நூறு வருடப் பாரம்பரியம் கொண்டது.

பரோடா ராஜ குடும்பத்தினர், ஆஸ்திரிய நாட்டு மகாராணி மரிய தெரஸாவுக்கு (Marie Therese) பரோடாவின் நிலவைப் பரிசுப் பொருளாக அனுப்பி வைத்தார்கள் (1740லிருந்து 1780க்குள் இருக்கலாம்). ஆனால் சில மாதங்களில் அந்தப் பரிசுப் பொருள் பரோடாவுக்கே திரும்பியது. 'சேர வேண்டிய இடத்துக்குச் சென்று சேரவில்லையா அல்லது திருப்பி அனுப்பி விட்டார்கள்? மகாராணிக்கு இந்த வைரம் பிடிக்கவில்லையா?' - ராஜ குடும்பத்தினருக்குக் குழப்பம். அந்த வைரத்தோடு ஒரு கடிதமும் இணைக்கப்பட்டிருந்தது.

'கடல் கடந்து வந்த வைரம் நல்லதல்ல. மகாராணி, தனக்கு ஏதாவது துர்சம்பவங்கள் நிகழ்ந்து விடக் கூடாது என்று பயப்படுகிறார். தங்களது அன்புப் பரிசைத் திருப்பி அனுப்பும் நிலை வந்ததற்கு வருந்துகிறோம்.'

கடல் கடந்து சென்றுவிட்டு வந்த வைரம்தான். அதற்காகப் பரம்பரை வைரத்தை வேண்டாம் என்று ஒதுக்கிவிட முடியுமா என்ன? மீண்டும் கஜானாவில் பரோடாவின் நிலவு தூங்க ஆரம்பித்தது. பின்பு ஒரு நெக்லெஸோடு இணைக்கப்பட்டது. முக்கியமான தருணங்களில் பரோடாவின் மகாராணியாக இருப்பவர்களின் கழுத்தில் ஏறிக் கொண்டிருந்தது அந்த வைர நெக்லெஸ். எல்லாம் 1919 வரைதான்.

மகாராஜா சாயாஜி ராவ், பரோடாவின் நிலவை யாரிடம் விற்றார் என்பது பற்றிய தகவல்கள் இல்லை. ஆனால் ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு அந்த வைரம், லாஸ் ஏஞ்சல்ஸில் ஒரு கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்தது. 1944ல் அமெரிக்காவைச் சார்ந்த சாமுவேல் டெய்ட்சென் (Samuel Deutson), பரோடா நிலவை வாங்கினார். அடுத்த ஆறு ஆண்டுகளில் அது மீண்டும்

கைமாறியது. இந்த முறை வாங்கியவர், ரோஸன்பௌம் (Rosenbaum). டெட்ராய்ட் நகரத்தின் புகழ்பெற்ற மேயர் ஜுவல்லரியின் நிர்வாகி அவர்.

ரோஸன்பௌமுக்கு ஒரு பழக்கம் இருந்தது. அதாவது தன்னிடமுள்ள நகைகளை எல்லாம் சினிமா நட்சத்திரங்களுக்குக் கொடுப்பார். அவர்களும் அதை அணிந்துகொண்டு திரைப்படங் களிலோ, பொது விழாக்களிலோ தோன்றுவார்கள். மேயர் ஜுவல்லரிக்கு விளம்பரம்.

பரோடாவின் நிலவு, அவரை மிகவும் கவர்ந்திருந்தது. அதன் புகழை மேலும் பரப்ப நினைத் தார். ரோஸன்பௌமுக்கு உடனடியாக மர்லின் மன்றோவின் ஞாபகம் வந்தது. சந்திப்பதற்கான அனுமதி வாங்கினார். வைரத்தோடு சென்று சந்தித்தார். 'நீங்கள் இதை அணிந்துகொண்டு நடித்தால், இந்த வைரத்துக்குப் பெருமை. எங்களது மேயர் ஜுவல்லரிக்கும் கௌரவம்.'

ரோஸன்பௌமின் கோரிக்கையை மர்லின் மன்றோ ஏற்றுக் கொண்டார். அப்போது அவர் நடித்துக் கொண்டிருந்த படம் Gentlemen prefer Blondes. அந்தப் படத்தில் ஒரு காட்சியில் மர்லின் மன்றோ, பரோடாவின் நிலவைக் கழுத்தில் அணிந்துகொண்டு, பாட்டு பாடி ஆடுவது போல எடுக்கத் திட்டமிட்டார்கள். அதற்காகவே Diamonds are a girl's best friend என்ற சிறப்புப் பாடல் படமாக்கப்பட்டது. கூடுதலாக, அந்த வைரத்தை அணிந்துகொண்டு பிரத் யேகமாகப் புகைப்படங்களுக்கு போஸ் கொடுத்தார் மர்லின் மன்றோ.

வைரப் பிரியர்கள், வியாபாரிகள், செல்வந்தர்களால் மட்டும் அறியப்பட்டிருந்த பரோடாவின் நிலவு, மர்லின் மன்றோவினால், சாமானியர்கள் மத்தியிலும் பேசப்பட்டது. ஆனால் நெருக் கடிக்காக அந்த வைரத்தை விற்ற சாயாஜி ராவால், மீண்டும் அதை மீட்க முடியவில்லை. 1990ல் நியு யார்க் நகரில் மர்லின் மன்றோ புகழ் பரோடா நிலவு ஏலம் விடப்பட்டது. ஏலம் எடுக்கப்பட்ட தொகை 2,97,000 டாலர்.

2008 ஏப்ரலில் பெல்ஜியத்தின் வைர நகரமான அண்ட்வெர்பில் (Antwerp), 'உலகில் 51 தலை சிறந்த வைரங்கள்' என்ற கண்காட்சி நடந்தது. அதில் கோஹினூர், தி ஹோப், தி ஸ்டார் ஆஃப் ஆப்பிரிக்கா, தி நிஜாம், தி நேபாள், தி கோல்டன் மெட்ராஸ் என்று பல உலகப்புகழ் வைரங் களோடு பரோடாவின் நிலவும் ஜொலித்தது.

எத்தனையோ பேர் அதில் பரோடாவின் நிலவை ரசித்துவிட்டுச் சென்றார்கள். ஆனால், பரோடா ராஜ குடும்பத்தின் தற்போதைய மகாராஜாவான ரஞ்சித் சின் ராவ் கெய்க்வாடுக்கு (Ranjit Sinh Rao Gaekwad), தங்கள் பரம்பரை நிலவை ஸ்பரிசிக்கும் வாய்ப்பு இதுவரை கிடைக்கவில்லை. தற்போது அந்த நிலவின் உரிமையாளர் யார் என்ற தகவல்கூட ரகசியமாகத் தான் உள்ளது.

டெயில் பீஸ் : பரோடாவின் மற்ற இரண்டு முக்கிய வைரங்களான அக்பர் ஷாவும், தெற்கின் நட்சத்திரமும் இன்னமும் சாயாஜி ராவ் வாரிசுகளிடம்தான் இருக்கின்றன.



# வைர விழா!

‘நம்ம மவராசாவுக்கு இப்படிப்பட்ட புள்ளைங்க பொறந்திருக்க வேண்டாம்.’

‘என்ன சொல்லுற நீ? ஒண்ணுமே விளங்கல.’

‘அட, நம்ம மவராசா எங்கிருந்து வந்தாருன்னு உனக்குத் தெரியுமா? பழைய மகாராணி, தத்தெடுத்த புள்ளைதான் அவரு. ஏழைப்பட்ட குடும்பத்துல இருந்து வந்தவரு. வறுமையோட கசப்பு தெரிஞ்சவரு. அதான் தன்னோட சமஸ்தானத்துல ஏழை மக்களெல்லாம் கஷ்டப்படாம இருக்கணும்னு எவ்வளவோ நல்லது செஞ்சிருக்காரு. இப்போ நம்ம புள்ளைங்க எல்லாம் பள்ளிக்கூடத்துக்குப் போயி நாலெழுத்து படிக்குறாங்கன்னா அதுக்கு யாரு காரணம்? மத்த எல்லா மவ ராசாக்களும் வெள்ளைக்காரங்களோட கைத்தடியா இருக்குறப்போ, இவரு மட்டும்தான தைரியமா எதிர்த்துக்கிட்டு இருக்காரு. ஆனா அப்படிப்பட்ட தங்கமான மனுசனோட புள்ளைங்க இப்படி தறிகெட்டு இருக்குறாங்களே நினைக்குறப்போ மனசுக்கு சங்கடமா இருக்குதுப்பா.’

‘அட, விஷயத்தைச் சொல்லுப்பா.’

‘என்னத்த சொல்லுறது? நம்ம மவராசா ஆசை ஆசையா பொண்ணை வளர்த்தாரு. இளவரசி இந்திரா. அந்தம்மா, நம்ம மவராசா மனசு நோகுற மாதிரி, ஓடிப்போயி கண்ணாலம் கட்டிக்கிச்சு. பொண்ணுதான் அப்படின்னா பையன்களும் சரியில்லை. ஒரு இளவரசரு மொடாக் குடிகாரரு. இன்னொருத்தரு ஊரெல்லாம்

சண்டை வளர்த்துக்கிட்டுத் திரியறாரு. கடைசி இளவரசரு, நம்ம மவராசாவை மதிக்கறதே இல்லையாம்!'

'நெசமாவா சொல்லுற?'

'எங்க ஆத்தா மேல சத்தியம்!'

பரோடா பொதுமக்கள் தங்களுக்குள் பேசி வருத்தப்பட்டுக் கொள்ளுமளவுக்கு மகாராஜா சாயாஜி ராவின் வாரிசுகள் நடந்து கொண்டார்கள். மகளுக்கு முடியாவிட்டாலும், தனது மூத்த மகன் பஃதே சிங் ராவுக்கு தான் நினைத்தபடிதான் திருமணம் செய்து வைத்திருந்தார் சாயாஜி ராவ். மருமகள் பெயர் பத்மாவதி. அவர்களுக்கு இரண்டு பெண் குழந்தைகள். ஓர் ஆண் குழந்தை. தன் பேரனுக்கு சாயாஜி ராவ் வைத்த பெயர், பிரதாப் சின் ராவ் (Pratap Sinh Rao).

தனக்குப் பின் பரோடாவை ஆள மகன் பஃதே சிங் இருக்கிறான். அவனுக்குப் பின் ஆள பேரன் ஒருவனும் வந்துவிட்டான் என்ற சாயாஜி ராவின் மகிழ்ச்சி நீடிக்கவில்லை. 1919ல் இளவரசர் பஃதே சிங் நோய்வாய்ப்பட்டு இறந்துபோனார்.

அடுத்த மகனாகிய ஜெயா சிங் ராவை நம்பி ஆட்சியை ஒப்படைக்க முடியாது என்றே தோன்றி யது. அமெரிக்காவின் ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் படித்த ஜெயா சிங், மனத்தளவில் உல்லாச ஐரோப்பியராகவே வாழ்ந்து கொண்டிருந்தார். வாழ்கின்ற ஒவ்வொரு நிமிடமும் மஜாவாக இருக்க முடியாவிட்டால், இளவரசராகப் பிறந்து என்ன பிரயோஜனம் என்பதுதான் ஜெயா சிங்கின் வாதம். ஆகவே எல்லா நேரமும் ஆல்கஹாலை சுவைத்துக் கொண்டும் சுவா சித்துக் கொண்டும் இருந்தார். அவரது உடல்நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே போனது. அத்தனை சின்ன வயதிலேயே அவரது இளமை காணாமல் போயிருந்தது.

ஆனால் சிம்னா பாய்க்கு தனது அடுத்த மகனாகிய சிவாஜி ராவ் மீது அதீத நம்பிக்கை. பாசமும் கூட. எப்போதும் சுறுசுறுப்பாக இருக்கும் சிவாஜி ராவுக்கு மட்டுமே அடுத்து அரியணை ஏறக்கூடிய தகுதி இருப்பதாகக் கருதினாள் சிம்னா பாய். ஆனால் சிவாஜி ராவுக்கு வேகம் இருந்த அளவுக்கு விவேகம் இருக்கவில்லை. தான் செய்வதுதான் சரி என்ற அதிகார மனோ பாவம் மிகுந்திருந்தது. எதிலும் பொறுமை இருக்கவில்லை. வாழ்வதிலும்கூட. பஃதே சிங் இறந்துபோன அதே ஆண்டிலேயே நிமோனியாவால் பாதிக்கப்பட்டு இறந்து போனார்.

அடுத்தடுத்து இரண்டு மகன்களைப் பறிகொடுத்த சாயாஜி ராவ், அகமும் புறமும் நிலை குலைந்து போனார். கடைசி மகனான தைரியாஷில் ராவ், அவருக்குக் கொஞ்சம்கூட நம்பிக்கை கொடுக்கவில்லை. சிறு வயதிலிருந்தே, தன் தந்தையின் சொல்லுக்கு எதிராக நடப்பதுதான் தைரியாஷில் ராவின் வழக்கமாக இருந்து வந்தது. ஆகவே, தன் கடைசி மகனை மனத்தளவில் தள்ளியே வைத்திருந்தார் சாயாஜி ராவ்.

இடைப்பட்ட காலத்தில் சிம்னா பாய்க்கும் அவளது செல்ல மகள் இந்திராவுக்குமான விரிசல் எல்லாம் சரியாக ஆரம்பித்திருந்தது. பின்னே, மகள் வயிற்றுப் பேரப்பிள்ளைகள் மீது தனிப்பிரியம் இருக்கத்தானே செய்யும். திருமணமாகி ஏழு வருடங்களுக்குள் இந்திராவுக்கும் ஜித்துக்கும் ஐந்து குழந்தைகள். இலா, காயத்ரி தேவி, மேனகா தேவி (Ila, Gayatri Devi, Menaka Devi) என மூன்று இளவரசிகள். ஜெகதீப்பேந்திரா, இந்திரஜித் (Jagaddipendra, Indrajit) என்று இரண்டு இளவரசர்கள்.

பாட்டி சிம்னா பாய், தான் நேரடியாகப் போகாவிட்டாலும் தன் மகளது பிரசவ காலங்களில் உதவிக்கு ஆள்கள் அனுப்பி உதவினாள். தாத்தா சாயாஜி ராவும் தனது பழைய இறுமாப்பை யெல்லாம் குறைத்துக் கொண்டார். மகளது குடும்பத்தைப் பற்றி சாங்கோபாங்கமாக அவ்வப்போது குசலம் விசாரித்துக் கொண்டார்.

கூச் பிகார் மகாராஜா ஜித், இந்திராவை எவ்வளவுக்கு எவ்வளவு காதலித்தாரோ, அதைவிட பல மடங்கு மதுவைக் காதலிக்க ஆரம்பித்திருந்தார். ஐரோப்பிய பாணி வாழ்க்கையில் அதிக நாட்டம் கொண்ட இந்திராவும் தன் கணவருக்கு 'சியர்ஸ்' சொன்னாளே தவிர, எச்சரிக்க வில்லை. 1922. ஜித் படுக்கையில் விழுந்தார். லண்டனில் தீவிர சிகிச்சை. ஏற்கெனவே ஆல்க ஹால் அவரது உயிரின் கடைசிச் சொட்டுகளை உறிஞ்சிக் கொண்டிருந்தது. அந்த டிசம்பர் 20ல் ஜித்தின் கதை முடிந்தது.

இளம் வயதிலேயே தனது மகள் விதவையாகிவிட்டாளே என்று வருத்தத்தில் உடைந்து போனார் சாயாஜி ராவ். அவர்தான் அநியாயத்துக்கு நல்லவராயிற்றே. ஆகவே மதுவால் அவருக்கு உதவ முடியவில்லை. ஆறுதல் இன்றி மன அழுத்தத்துக்கு ஆளானார். தங்கள் பிள்ளைகளின் கதி இப்படி ஆகி விட்டதே என்ற வருத்தத்தினால் அவருக்கும் சிம்னா பாய்க்கும் இடையே சிறு சிறு பிரச்னைகள் எழ ஆரம்பித்தன.

அந்த நிலையில் மொடாக்குடி இளவரசர் ஜெயா சிங் ராவின் உடல்நிலையும் கவலைக்கிடமாகிப் போனது. அவர், பெர்லினில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டிருந்தார். நிலைமை கைமீறிப் போயிருந்தது. 1923, ஆகஸ்டில் இதய நோய் முற்றிப் போக ஜெயா சிங் ராவ் இறந்துபோனார். சாயாஜி ராவ் வாய்விட்டுக் கதறியழுதார்.

'கடவுளே! எனக்கு ஏன் இப்படி தண்டனை மேல தண்டனையா கொடுக்குற? என்னோட ஒவ்வொரு மகனையா இழந்துக்கிட்டு இருக்கேனே? என்னுடைய மருமகனையும் இழந்து நிக்குறேனே? ஏன்? நான் என்ன பாவம் செஞ்சேன்?

மறுநாள் செய்தித்தாளைப் பார்த்த சாயாஜி ராவ் வெலவெலத்துப் போனார். அவரது முகத்தில் வெளியான அதிர்ச்சியை உணர்ந்த சிம்னா பாய், என்னவென்று கேட்டாள்.

'இதுல என்னோட இறப்புச் செய்தி வெளியாகியிருக்கு!'

சிம்னா பாய், அந்தச் செய்தித்தாளை வேகவேகமாக வாங்கிப் பார்த்தாள். கோபத்தில் அந்தப் பத்திரிகையைக் கசக்கித் தூக்கி எறிந்தாள். அதில் இப்படி ஒரு செய்தி வெளியாகியிருந்தது. 'ஜெயா சிங் ராவ், பரோடா மகாராஜாவின் இருபத்தெட்டு வயது மகன். அவருக்கு இதய நோய். தன் மகனுடைய பரிதாப நிலையைக் கண்டு மனமுடைந்த மகாராஜா சாயாஜி ராவின் வாழ்க்கை முடிந்துபோனது.'

குடும்பத்தில் ஏகப்பட்ட இழப்புகள். மனத்தளவில் நிம்மதியின்றித் தவித்த சாயாஜி ராவும் சிம்னா பாயும் வருடத்தில் பெரும்பாலான நாள்களை உலகச் சுற்றுப் பயணத்திலேயே கழிக்க ஆரம்பித்திருந்தார்கள். பரோடாவில் அவர்களால் இருக்க முடியவில்லை. இழப்புகளின் நினைவுகள் கழுத்தை இறுக்கின. அத்தனை வருடங்கள் சமஸ்தான வளர்ச்சிக்காக அதீத அக்கறையுடன் பணியாற்றிய சாயாஜி ராவ், அப்போது தன் கடமைகளில் இருந்து விலக ஆரம்பித்திருந்தார். 'மகாராஜா கடமை தவறிவிட்டார். பொறுப்பின்றி இருக்கிறார்' என்று

சில புரட்சிக் குழுவினர் சாயாஜி ராவுக்கு எதிரான கோஷங்களை எழுப்பிக் கொண்டிருந்தார்கள். 'இறுதியாக சாயாஜி ராவும் பிரிட்டிஷாரின் கைப் பொம்மை ஆகி விட்டார்' என்ற கருத்து பரவியது.

*தண்டி யாத்திரை (1930).* ஆங்கிலேயர்கள் உப்பின் மீது போட்ட வரியை எதிர்த்து சத்தியாகிரகத்துக்காக தண்டியை நோக்கி நடைபயணம் கிளம்பினார் காந்தி. பரோடா வழியாகத்தான் அவரது பயணம் அமைந்திருந்தது. காந்தி, பரோடாவைக் கடக்கும்போது, சாயாஜி ராவ் அவரைக் கைது செய்ய வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசு கடிதம் அனுப்பியது. ஆனால் தான் ஒரு தேசியவாதிதான் என்று நிரூபிக்கும் வகையில் சாயாஜி ராவ் எந்த நடவடிக்கையையும் மேற்கொள்ளவில்லை.



ரவிவர்மா வரைந்த
இளமைக்கால சாயாஜி ராவ்

*1936 ஜனவரி.* சாயாஜி ராவ் பரோடாவின் மகாராஜாவாகப் பதவியேற்று அறுபது வருடங்கள் நிறைவுற்றிருந்தன. வைர விழாக் கொண்டாட்டங்கள் விமரிசையாக நடைபெற்றன. பிரிட்டிஷ் அரசு சார்ந்தவர்களிடமிருந்தும், இந்திய தேசியவாதிகளிடமிருந்தும் வாழ்த்துகள் குவிந்தன. உள்ளூர், வெளிநாட்டுப் பத்திரிகைகள் எல்லாம் புகழ்ந்து தள்ளின. தனது வைர விழாக் கொண்டாட்டங்களில் நினைவாக, கீர்த்தி மந்திர் (Kirti Mandir) என்ற கோயிலைக் கட்டினார் சாயாஜி ராவ்.

அப்போது இந்தியாவின் வைஸ்ராயாக இருந்த வெலிங்டன், சாயாஜி ராவோடு நல்லுறவு வைத்திருந்தார். ஆனால் வைஸ்ராயின் பொஞ்சாதி லேடி வெலிங்டனைக் கண்டால்தான் எல்லோருக்குள்ளும் ஒருவித பயம். வெறுப்பு என்றுகூடச் சொல்லலாம். லேடி வெலிங்டனது பழக்க வழக்கங்கள் அப்படிப்பட்டது. 'அட, இதென்ன புது மாடல் நெக்லஸா? நல்லாயிருக்கே! நான் எடுத்துக்கிறேன்', 'இந்த வெள்ளைக் குதிரை அழகா இருக்குது. எனக்குத்தானே?', 'அந்த வெள்ளிக் கோப்பைகளை நீங்க ஏன் எனக்குப் பரிசாகக் கொடுக்கக் கூடாது?' இப்படி வலியச் சென்று அடுத்தவர்களது பொருள்களை 'லபக்' செய்யும் குணம் கொண்டவள்.

அதுபோக பர்ப்பிள் (Purple) நிறப் பைத்தியம் அவள். தான் அணியும் உடை முதல், தன்னைச் சுற்றியிருக்கும் பொருள்கள் வரை எல்லாமே பர்ப்பிள் நிறத்தில் இருப்பதையே விரும்புவாள். தான் விருந்தினராகச் செல்லும் இடங்களிலும் 'எங்கெங்கு காணினும் பர்ப்பிள்' நிறைந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பாள் அல்லது அப்படி மாற்றச் சொல்லி படுத்தி எடுப்பாள்.

பரோடாவுக்கு வைஸ்ராய் வெலிங்டன் வந்து தங்கப் போவதாக சாயாஜி ராவுக்குத் தகவல் வந்தது. அவர்கள் பரோடா வருவதற்கென சிறப்பு ரயில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சாயாஜி ராவ், லேடி வெலிங்டன் பிரயாணம் செய்யும் ரயில் பெட்டியில் எல்லாப் பொருள்களுமே பர்ப்பிள் நிறத்தில் இருக்கும்படி பார்த்துக் கொண்டார்.



வைர விழாக் கொண்டாட்டம் - யானைச் சண்டை

வந்து இறங்கிய வைஸ்ராய் பொஞ்சாதியிடம், 'பிரயாணம் எல்லாம் சௌகரியமாக இருந்ததா?' என்று கேட்டார் சாயாஜி ராவ்.

'எல்லாம் நன்றாகத்தான் இருந்தது. ஆனால் டாய்லெட் பேப்பரையும் பர்ப்பிள் நிறத்தில் வைத்திருக்கலாம்' லேடி வெலிங்டன் அங்கலாய்த்தாள்.

லேடி வெலிங்டன், பரோடா அரண்மனைக்கு வருகிற செய்தி அறிந்த உடனேயே, மகாராணி சிம்னா பாய் உஷாரானாள். வேகவேகமாக சில முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொண்டாள். தான் புழங்கிக் கொண்டிருந்த முக்கியமான நகைகளை எல்லாம் மறைத்து வைத்தாள். குறிப்பாக முத்து மாலை மற்றும் சில முத்து நகைகளை வெல்வெட் பெட்டி ஒன்றில் போட்டு, அரண்மனையில் தோட்டத்தில் புதைத்து வைத்தாள். புன்னகை தவழ, லேடி வெலிங்டனை வரவேற்றாள்.

சிம்னா பாயின் கெட்ட நேரம். பரோடாவை விட்டு வெலிங்டன் தம்பதியினர் கிளம்பும் எண்ணத்திலேயே இல்லை. மழை வேறு தொடங்கியிருந்தது. அவர்களது டேரா நீண்டது. மழைக்காலம் முடியும் நேரத்தில் ஒருவழியாகப் புறப்பட்டுச் சென்றார்கள்.

புன்னகை மாறாமல் அவர்களை வழியனுப்பிய சிம்னா பாய், அவசர அவசரமாகத் தோட்டத் துக்குச் சென்றாள். அந்த இடத்தைத் தோண்டச் சொன்னாள். வெல்வெட் பெட்டி சேதமடைந்து இருந்தது. ஆனால் அதனுள் மழைநீர் இறங்கி முத்துக்களில் பாதி காணாமல் போயிருந்தன. மீதமுள்ளவை வீணாகப் போயிருந்தன. சிம்னா பாய்க்கு, லேடி வெலிங்டன் கைகொட்டி கேலியாகச் சிரிப்பது போலத் தெரிந்தது.



# அரியணையா? ஆசைநாயகியா?

‘ஒரே இடத்தில் இத்தனை புத்தகங்களா? அதுவும் யார் வேண்டுமானாலும் சென்று படிக்கலாம். அறிவியல், வரலாறு, இலக்கியம், மொழி, பத்திரிகைகள் என எது வேண்டுமானாலும் படிக்கக் கிடைக்கிறது. இப்படி ஒரு விஷயத்தை நம்முடைய சமஸ்தானத்திலும் கொண்டுவந்தால் என்ன?’

1906ம் ஆண்டு பரோடா மகாராஜா சாயாஜி ராவ், முதன்முறையாக அமெரிக்கப் பயணம் மேற்கொண்டிருந்தார். அமெரிக்காவில் பல நகரங்களில் பல்வேறு இடங்களில் அமைந்திருந்த பொது நூலகங்கள் அவரைப் பெரிதும் கவர்ந்தன. தன் சமஸ்தானத்தில் அனைவருக்கும் கட்டாயக் கல்வி அளிப்பதில் முனைப்போடு இருந்த அவர், பரோடா முழுவதும் இதுபோன்ற பொது நூலகங்கள் அமைத்தால் மக்களிடையே வாசிக்கும் பழக்கம் உண்டாகும் என்று நினைத்தார்.

அவர், தன் எண்ணத்தைத் தள்ளிப் போடவில்லை. உடனே, தன் சமஸ்தானத்தின் தலைமைக் கல்வி அதிகாரிக்கு தந்தி ஒன்றை அனுப்பினார்.

‘நம் சமஸ்தானத்திலுள்ள ஒவ்வொரு தாலுகாவிலும் பொது மக்களுக்கான நூலகங்கள் அமைப்பது அவசியமாகத் தோன்றுகிறது. அப்படிச் செய்தால் கிராமப்புற மக்களுக்கும் நாளிதழ்கள், பத்திரிகைகள், பிற புத்தகங்களை வாசிப் பதற்கான வாய்ப்பு கிடைக்கும்.’

தலைமைக் கல்வி அதிகாரி, மகாராஜாவின் கட்டளைக்கேற்ப, பொது நூலகங் களை அமைப்பதற்கான ஆரம்பகட்ட வேலைகளை உடனடியாகத் தொடங்கினார்.

நூலகம் எப்படி அமையவேண்டும், அதில் என்னென்ன இருக்க வேண்டும் போன்ற விவரங்களை எல்லாம் தன் அமைச்சர் ஒருவருக்குத் தெரிவித்தார் சாயாஜி ராவ். முதல்கட்டப் பணிகளுக்காக முப்பதாயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. பத்து கிராமங்களுக்கு ஒரு பொது நூலகம் இருக்குமாறு பார்த்துக் கொண்டார்கள். யார் வேண்டுமானாலும் (சாதி, மத வேறுபாடு இன்றி) நூலகங்களை உபயோகிக்கலாம் என்ற செய்தி பொதுமக்களிடம் பரப்பப்பட்டது.

அமெரிக்காவிலிருந்து திரும்பினார் சாயாஜி ராவ். தன் சமஸ்தான பொது நூலகங்களைத் திறந்துவைத்தார். மேலும் பல இடங்களில் நூலகங்கள் அமைக்கத் திட்டமிட்டார். கூடவே நல்ல ஆங்கில நூல்களை, இலக்கியங்களை குஜராத்தியில் மொழி பெயர்ப்பதற்காக இரண்டு லட்சம் ரூபாய் ஒதுக்கினார். பரோடாவில் மட்டுமன்றி மற்ற சில முக்கிய நகரங்களிலும் பொது நூலகங்களை அமைத்தார்.

இப்போது ஒரு பள்ளிக்கூடக் கேள்வியைக் கேட்டால், எல்லோருமே மிகச் சரியான விடையைச் சொல்லி விடுவீர்கள். இந்தியாவின் நூலக இயக்கத்தின் தந்தை என்று போற்றப்படுவர் யார்?

ம், அவரேதான்.

1936. வாழ்க்கை முழுவதுமாக நரைத்திருந்தது. உள்ளம் ஓய்வின்றி சதா ஏதேதோ நினைத்துக் கொண்டிருந்தது. ஆனால் உடலுக்கு அதிக ஓய்வு தேவைப்பட்டது. முற்றிலும் தளர்ந்து போயிருந்தார் சாயாஜி ராவ். அந்தத் தளர்வு நேரங்களில் அவரை தழுவிக் கொண்டிருந்தவை புத்தகங்கள்தான். நிறையப் படித்தார். 'என்னால் இயன்றவரை என் மக்கள் அனைவருக்கும் கல்வியறிவு கொடுத்துவிட்டேன்.' நினைக்கும்போதே இனித்தது.

செல்ல மகள் இந்திராவுடனான மனக்கசப்புகளை எல்லாம் காலம் மறக்கடித்திருந்தது. மகளோடும் பேரப்பிள்ளைகளோடும் இருப்பதற்காக முதல் முறையாக கூச் பிகாருக்குக் கிளம்பிச் சென்றார் தாத்தா சாயாஜி ராவ். பாட்டி சிம்னா பாயும்தான்.

மீண்டும் ஓர் ஐரோப்பியப் பயணம். இந்தமுறை இந்திராவும் உடன் வந்தாள். ஆனால் பயணத் தில் ஆரம்பம் முதலே சாயாஜி ராவின் உடல்நிலை சரியில்லை. நாளுக்கு நாள் நிலைமை மோசமாகிக் கொண்டே சென்றது. படுத்த படுக்கையாகிப் போனார். 'அப்பா, தனது இறுதி நாள்களை பரோடாவில் கழிப்பதைத்தான் விரும்புவார்' இந்திரா சொன்னாள். உடனே சிம்னா பாய், அவரை பரோடாவுக்கு அழைத்துச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தாள். லஷ்மி விலாஸில் சாயாஜி ராவின் ஒட்டுமொத்த குடும்ப உறுப்பினர்களும் குழுமியிருந்தார்கள், சோகம் கப்பிய முகத்தோடு.

பிப்ரவரி 6, 1939. மகாராஜா சாயாஜி ராவ் கெய்க்வாடின் இறுதி நாளாக அமைந்தது. வைரவிழாக் கொண்டாட்டங்களின் நினைவாகக் கட்டப்பட்ட கீர்த்தி மந்திருக்கு அருகிலுள்ள நதிக்கரையில் சாயாஜி ராவின் ஈமச்சடங்குகள் நிறைவேற்றப்பட்டன. சந்தனக் கட்டைகளும் நெய்யும் நெருப்புக்கு உதவி செய்தன. திரண்ட பரோடா மக்களிடம் தீராக் கண்ணீர். அவரது அஸ்தி புண்ணிய நதிகளில் கரைக்கப்பட்டது. அதில் ஒரு பகுதி கீர்த்தி மந்திரில் வைக்கப் பட்டது.

அடுத்த மகாராஜாவாக சாயாஜி ராவின் பேரன் (மூத்த மகனான பஃதே சிங்கின் வாரிசு) பிரதாப் சிங் ராவ் கெய்க்வாட், அரியணை ஏறினார். எஞ்சியிருந்த சாயாஜி ராவின் கடைசி மகனான

தைரியாஷில் ராவும் அடுத்த வருடமே இறந்துபோனார். சிம்னா பாய்க்கு ஒரே ஆதரவாக மகள் இந்திரா மட்டுமே இருந்தாள். பரோடாவில் இருப்பதைப் பெரும்பாலும் தவிர்த்த சிம்னா பாய், மற்ற ஊர்களில் தங்கினாள். மகளோடு அதிக நாள்களைச் செலவளித்தாள்.

அறுபத்து மூன்று வருடங்கள். சாயாஜி ராவால் பரோடாவில் பொற்கால ஆட்சி நடந்தது. ஆனால் அவரது பேரன் பிரதாப் சிங்குக்கு நிர்வாகத்தில் நாட்டமெல்லாம் இல்லை. அவர் மகாராஜாவாக அரியணையை மட்டுமே அலங்கரித்தார். மக்களின் மனத்தை அல்ல. 1908ல் பிறந்த பிரதாப் சிங், வெளிநாடுகளில் படித்தவர். உல்லாசப் பிரியர். அவரது மனைவி சாந்தா தேவி (Shanta Devi). அவர்களுக்கு மூன்று ஆண் வாரிசுகள் பிறந்திருந்தன.

அந்தச் சமயத்தில் பிரதாப் சிங்கின் வாழ்க்கையை மட்டுமல்ல, பரோடா சமஸ்தானத்தையே புரட்டிப் போடும்படி நுழைந்தாள் ஒரு பெண். சீதா தேவி. அந்த அழகியைப் பற்றிப் பார்ப்பதற்கு முன், நாம் கொஞ்சம் அமெரிக்காவுக்கும் இங்கிலாந்துக்கும் செல்ல வேண்டியதிருக்கிறது. இன்னொரு அழகியின் கதைக்காக.

பெஸ்ஸி வாலிஸ் (Bessie Wallis). பென்சில்வேனியாவில் ஒரு சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவள் (1896). ஆனால் ஆடம்பரத்தில் நாட்டம் கொண்டவளாக வளர்ந்தாள். தன்னை மேலும் மேலும் அழகுபடுத்திக் கொள்வதில் அவளுக்கு அலாதி ஆர்வம். 1916ல் மே மாதம் வாலிஸுக்கு முதல் திருமணம் நடந்தது. கணவர், ப்ளோரிடாவைச் சேர்ந்த வின்ஃபீல்ட் ஸ்பென்சர். விமானப்படையில் பணியாற்றிக் கொண்டிருந்தார். மதுப் பிரியர். குடித்துவிட்டு விமானம் ஓட்டி, பெரும் விபத்துகளிலிருந்து உயிர் தப்பிய புண்ணியவான்.

வாலிஸும் ஸ்பென்சரும் ஆதர்ச தம்பதிகளாக வாழவில்லை. முதல் உலகப் போர் சூழல் என்பதால் வேறு வேறு இடங்களுக்குப் பறந்துகொண்டே இருந்தார் ஸ்பென்சர். பல காலம் தனிமையில் இருந்த வாலிஸுக்கு அர்ஜெண்டினாவைச் சார்ந்த ஒருவன், பாய் ஃப்ரண்டாகப் பணியாற்றினான். எப்போதாவது ஸ்பென்சர் வருவார். போவார். 1924ல் வந்த ஸ்பென்சர், வாலிஸையும் அழைத்துக் கொண்டு சீனாவுக்குச் சென்றார்.

அங்கு பெய்ஜிங்கில் வாலிஸுக்கு ஒரு முக்கிய நபரோடு உறவு ஏற்பட்டது. கலீஸோ கியானோ (Galeazzo Ciano). (பின்னாளில் இத்தாலியின் வெளியுறவுத் துறை அமைச்சராகவும், முசோலினியின் மருமகனாகவும் ஆனவர்.) உறவு, கர்ப்பமாக வளர்ந்தது. 'கலைத்துவிடு. அதுதான் நல்லது' - கியானோ கேட்டுக் கொண்டார். குழந்தை பெற்றுக்கொள்வது உல்லாசத்துக்கு உபத்திரவமல்லா. வாலிஸ், கலைத்துக் கொண்டாள்.

1925, செப்டெம்பர். அமெரிக்கா திரும்பிய ப்ளே கேர்ள் வாலிஸும், போதை பார்ட்டி ஸ்பென்சரும் பிரிந்து வாழ ஆரம்பித்தார்கள். அந்த டிசம்பரில் முறைப்படி விவாகரத்தும் செய்து கொண்டார்கள். அதற்குப் பிறகு ஸ்பென்சர் என்ன ஆனார் என்று நமக்கு எதற்கு வீண் கவலை? வாலிஸுக்கு இன்னொரு ஆண் நண்பர் கிடைத்திருந்தார். அல்ட்ரிச் சிம்ப்ஸன். கடல் வணிகர். அவரும் தன்னுடைய முதல் மனைவியிடமிருந்து விவாகரத்து பெற்றிருந்தார். ஆகவே, 1928ல் வாலிஸ், மிஸஸ். சிம்ப்ஸன் ஆனாள்.

சிம்ப்ஸன், பல நண்பர்களை வியாபார நிமித்தமாகச் சந்திப்பதுண்டு. அந்த நண்பர்களது மனைவிகளோடு ஒரு நட்பு வட்டத்தை உருவாக்கி வைத்திருந்தாள் வாலிஸ். அப்படிப்பட்ட ஒரு தோழிதான் தெல்மா (Thelma).


வாலிஸ்

தெல்மாவும் ஒரு ப்ளே கேர்ள்தான். கல்யாணம், விவாகரத்து, மறுகல்யாணம், பாய் ப்ரெண்ட்ஸ் என்று அவளது வாழ்க்கையில் ஏகப்பட்ட திருப்பங்கள். மாபெரும் திருப்பமாக, தெல்மாவுக்கு இங்கிலாந்து இளவரசர் எட்டாம் எட்வர்டின் தொடர்பு கிடைத்திருந்தது. எட்டாம் எட்வர்ட்? டெல்லி தர்பாரில் வந்து முடிசூட்டிக் கொண்டாரே கிங் ஐந்தாம் ஜார்ஜ், அவரது மூத்த புத்திரன். முப்பத்தைந்து வயதைத் தாண்டியும் இளவரசர் திருமணம் செய்துகொள்ளவில்லை. ஆசைநாயகிகளே போதும் என்ற வாழ்ந்துகொண்டிருந்தார்.

தெல்மாவுக்கும் இளவரசரின் ஆசைநாயகி அந்தஸ்து கிடைத்தது. 'ஒருமுறை இளவரசரைச் சந்திக்க விரும்பு கிறேன். ஏற்பாடு செய்கிறாயா?' - தனது தோழி தெல்மா விடம் கேட்டாள் வாலிஸ். அவளது வசீகரப் பிரதாபங்களை அறியாத தெல்மாவும் அந்தச் சந்திப்புக்கு ஏற்பாடு செய்தாள். அதற்குப் பிறகு இளவரசரும் வாலிஸும் பல்வேறு பார்ட்டிகளில் சந்தித்துக் கொண்டார்கள். நாகரிகமான வார்த்தைகளில் சொல்ல வேண்டுமென்றால், 'நட்பு வளர்ந்தது.' நேரடியாகச் சொல்ல வேண்டுமென்றால், 'தெல்மாவின் இடத்தைக் கைப்பற்றியிருந்தாள் வாலிஸ்.'

சிம்ப்ஸனுக்கு வியாபாரத்தில் ஏகப்பட்ட சிக்கல்கள். வாலிஸின் போக்கையும் அவரால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அனுதினமும் பிரச்னை. மண முறிவை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

'கிங், நம்ம இளவரசர் ஒரு பொம்பளைக்கூட.. படுக்கையில..' கிங் ஜார்ஜுக்குப் பிராது போனது. மகனைக் கூப்பிட்டு விசாரித்தார் கிங். 'அப்படியெல்லாம் ஒண்ணுமில்லை' மழுப்பினார் எட்வர்ட். ஆனால் சில மாதங்களிலேயே, வாலிஸை பக்கிங்ஹாம் அரண் மனைக்கு அழைத்துவந்தார் எட்வர்ட். தனது தந்தையிடமும் தாயிடமும் அறிமுகப்படுத்தினார், 'இவள் என் ப்ரியமான தோழி!'

கிங்குக்குக் கடும் கோபம். 'இளவரசருக்குப் புத்தி ஏன் இப்படிப் போகிறது? போயும் போயும் ஏற்கெனவே விவாகரத்தான ஒரு பெண்தான் கிடைத்தாளா?' ராஜ குடும்பத்துக்குள் கடும் எதிர்ப்புகள் எழுந்தன. ஆனால் எட்வர்ட், வாலிஸ் மயக்கம் பல மடங்கு அதிகரித்தது. அவளோடு உல்லாசமாக ஊர் சுற்றக் கிளம்பினார். அவளைப் பணத்தாலும் நகையாலும் குளிப்பாட்டினார். அனுபவசாலியான வாலிஸும் எட்வர்டை முழுவதுமாக தன் வசப் படுத்திக் கொண்டாள். துப்பறியும் நிபுணர்கள் அவர்களைப் பின் தொடர்ந்தார்கள்.

1936, ஜனவரி 20. இங்கிலாந்து ராஜ்யம் கண்ட கிங் ஐந்தாம் ஜார்ஜ், பரலோக ராஜ்யத்தையும் அடைந்தார். அடுத்த கிங்காக எட்டாம் எட்வர்ட் பொறுப்பேற்றார். கிங் எட்வர்ட் செல்லு மிடமெல்லாம் உடன் செல்ல ஆரம்பித்தாள் வாலிஸ். சிம்ப்ஸனிடமிருந்தும் முறைப்படி விவாகரத்து வாங்கிக் கொண்டாள். அவளும் எட்வர்டும் திருமணம் செய்து கொள்ளப்போவதாக செய்திகள் பலமாகக் கிளம்பின.

‘ஏற்கெனவே விவகாரத்து ஆன பெண்ணை கிங், திருமணம் செய்துகொள்வதைச் சட்டம் அனுமதிக்காது. அப்படித் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்றால், கிங் பதவியில் எட்வர்ட் நீடிக்க முடியாது.’ இங்கிலாந்து சட்ட வல்லுநர்கள் பரபரப்பு ஏற்படுத்தினார்கள்.

‘நான் வாலிஸைத் திருமணம் செய்துகொள்கிறேன். நீங்கள் அவளுக்கு குயின் என்ற அங்கீகாரத்தை அளிக்க வேண்டாம்’ - பேசிப் பார்த்தார் எட்வர்ட். யாரும் ஒப்புக்கொள்ளவில்லை. அட, என்ன பெரிய கிங் பதவி? என் காதலி வாலிஸ்தான் முக்கியம். முடிவெடுத்தார் எட்வர்ட். 1936, டிசம்பர் 10 அன்று பதவி விலகுவதாகக் கையொப்பமிட்டார். பின் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பேட்டி ஒன்றும் கொடுத்தார். ‘கிங் பதவியில் இருப்பது மாபெரும் பொறுப்பு. எவ்வளவு கடமைகள்! எவ்வளவு பெரிய சுமை அது. அதை என் காதலியின் துணையின்றி என்னால் நிறைவேற்ற முடியாது.’

அடுத்த கிங்காக எட்வர்டின் சகோதரர் ஆறாம் ஜார்ஜ் பதவியேற்றுக் கொண்டார். எட்வர்டும் வாலிஸும் 1937, ஜுனில் திருமணம் செய்துகொண்டார்கள். ‘ஹேப்பி மேரிட் லைஃப்’ சொல்லத்தான் யாரும் வரவில்லை. தம்பதிகளாக, அவர்களது உல்லாச வாழ்க்கை ஏராளமான சர்ச்சைகளுடன் பல வருடங்களுக்கு நீடித்தது.

நிற்க.

நாம் இப்போது பார்த்தது ஆங்கில வெர்ஸன் காதல் கதை. எட்வர்ட் என்ற இடத்தில் பரோடாவின் மகாராஜா பிரதாப் சிங்கை வைத்துக் கொள்ளவும். வாலிஸின் கதாபாத்திரத்தில் சீதா தேவியை நிரப்பிக் கொள்ளவும். இந்திய வெர்ஸன் ஈஸ்ட்மென் கலர் காதல் கதை அடுத்த அத்தியாயத்தில்.



# ஜமீந்தாரினி, மகாராணி ஆன கதை!

'இனி யாரும் ஒன்றுக்கு மேற்பட்ட திருமணங்கள் செய்துகொள்ளக் கூடாது. அது குற்றமாகக் கருதப்படும். நீ ஒருவன், உனக்கு ஒருத்தி. அவ்வளவே!' - 1942ல் பரோடா சட்டமன்றத்தில் இப்படி ஒரு தீர்மானம் முன்வைக்கப்பட்டது. அதற்கு முழு மனத்துடன் அனுமதி கொடுத்தார் பரோடா மகாராஜா பிரதாப் சிங். ஆனால் அடுத்த சில மாதங்களிலேயே அவரது ஏகபத்தினி விரதம் கலையும் சூழ்நிலை உருவானது.

பிரதாப் சிங்குக்குக் குதிரைகள் மீது எப்போதுமே கொள்ளைப் பிரியம் உண்டு. அதுவும் குதிரை ரேஸ் எங்காவது நடக்கிறது என்று தெரிந்தால் போதும், இரண்டு கால் பாய்ச்சலில் அங்கு ஆஜராகி விடுவார். அப்படித்தான் அந்த ஆண்டு மெட்ராஸுக்குச் சென்றார்.

இந்தியாவில் கல்கத்தா, ஹைதராபாத், பம்பாய், மெட்ராஸ் ஆகிய இடங்களில் ரேஸ் கிளப்கள் இருந்தன. (2008ல் மெட்ராஸ் ரேஸ் கிளப்பின் வயது 230.) பிரிட்டிஷாருக்கு குதிரை, குதிரை சார்ந்த விளையாட்டுகளில் எப்போதுமே ஆர்வம் அதிகம். எல்லா மகாராஜாக்களும் தங்கள் சமஸ்தானங்களில் தனியாகக் குதிரைப் படை ஒன்றைப் பராமரித்து வந்தார்கள். ஆகவே இந்தியா முழுவதும் முக்கிய நகரங்களில் குதிரை சார்ந்த விளையாட்டுகள் பிரபலமாகி இருந்தன. பொதுவாக பிரிட்டிஷ் குதிரைகளை வைத்துதான் முக்கியமான பந்தயங்கள் எல்லாம் நடத்தப்படுவதுண்டு.

1942ல்தான் இந்தியக் குதிரைகளுக்கான தனிப் பந்தயங்கள் நடத்தத் தொடங் கினார்கள். மெட்ராஸ் ரேஸ் கிளப்பில் The Indian 1000 Guineas, The Indian 2000

Guineas, The Indian Derby என்ற மூன்று பந்தயங்கள் நடந்தன. மூன்றிலும் முதலாவதாக வந்தது ஒரு குதிரை. அது பரோடா மகாராஜாவின் செல்லப் பெண் குதிரையான பிரின்ஸஸ் ப்யூட்டி. தன் அழகுக் குதிரை இளவரசியைக் கொஞ்சிக் கொண்டிருந்த மகாராஜாவின் கவனத்தை ஈர்த்தாள் அந்தப் பெண்.

சீதா தேவி. தென்னிந்திய தேவதை. செய்து வைத்தது போல உடற்கட்டு, நெய்து வைத்தது போல முகவெட்டு, எதிரே வருபவரைக் கொய்து செல்லும் கூர்மையான பார்வை, வயதை நிர்ணயிக்க முடியாத வனப்பு. அவளைப் பார்த்ததுமே பல வருடங்களாக உறங்கிக் கொண் டிருந்த மகாராஜாவின் காதல் மனம் கனைக்கத் தொடங்கியது. தன்னை யாரோ குறுகுறுவெனப் பார்ப்பது போல் உணர்ந்த சீதா தேவி, பிரதாப் சிங்கின் பக்கம் பார்வையைத் திருப்பினாள்.

'அட, யாரோ மகாராஜா போல இருக்கிறதே! உடையில் என்ன ஒரு தகதகப்பு. உடலில் என்ன ஒரு மினுமினுப்பு. கழுத்து நகைகளே சொல்லிவிடுகின்றனவே, அவரது செல்வச் செழிப்பை!' சீதா தேவியின் மனம் கணக்குப் போட்டது. எதற்கும் இருக்கட்டுமே என்று அவளது உதடுகள் கள்ளப் புன்னகை ஒன்றை உதிர்த்து வைத்தன. தலையில் போட்டிருந்த முக்காடை நன்றாகவே விலக்கினாள். முழுமுகம் காட்டி அவரை மூச்சுத் திணற வைத்தாள்.

இவ்வளவு வேகமாக எதிர்வினைகள் நிகழும் என்று பிரதாப் சிங் எதிர்பார்க்கவே இல்லை. ஆனந்த அதிர்ச்சியில் அசட்டுச் சிரிப்பு ஒன்றை வழிய விட்டார். 'யாரந்த அம்மணி என்று விசாரித்துவிட்டு வா' தனது பாதுகாவலனது காதில் கிசுகிசுத்தார். பின் அவள் மீது பார்வையைப் படர விட்டார். கொஞ்ச நேரம் கழித்து பாதுகாவலன் வந்தான் பதிலோடு.

'பெயர் சீதா தேவி. பிதாபுரத்தைச் சேர்ந்தவள். இப்போது வய்யூர் ஜமீந்தாரோட சம்சாரம்.'

அவள் திருமணமானவள் என்பதை அவளது உடைகளே சொல்லின. இருந்தாலும் பிரதாப் சிங்கின் பித்துப் பிடித்த மனத்தால் அந்த உண்மையை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. மீண்டும் அவள் இருந்த இடம் நோக்கிப் பார்வையைத் திருப்பினார். அங்கு அவள் இல்லை. கட்டுப்பாடு இழந்தார். அங்கும் இங்கும் அலைந்து அவளைத் தேட ஆரம்பித்தார்.

'அந்த ஜெயித்த குதிரைக்கு சொந்தக்காரார் யார்?' தன் தோழி ஒருத்தியிடம் விசாரித்துக் கொண்டிருந்தாள் சீதா தேவி. 'அவரு பரோடா மகாராஜாவாம்!' - விவரமறிந்ததும் அவளது கண்கள் விரிந்தன. தேடி அலைந்து கொண்டிருந்த மகாராஜா முன் திடீரென பிரசன்ன மானாள்.

'என்னைத்தானே தேடுகிறீர்கள்?' பட்டெனக் கேட்டாள். பதில் சொல்லத் தடுமாறினார் பிரதாப் சிங். 'என்னை உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?' - நேரடியாகவே கேட்டாள் அவள். அந்த வேகத்தை அவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

'அது.. வந்து.. உனக்குத் திருமணம்...'

'நீங்கள் யாரென்று எனக்குத் தெரியாது. ஆனால் உங்களை மிகவும் பிடித்திருக்கிறது. ஏனோ தெரியவில்லை, என்னை நீங்கள் வாழ்க்கை முழுவதும் கனிவோடு நடத்துவீர்கள் என்று என் உள்மனம் சொல்லுகிறது. என்னைத் திருமணம் செய்து கொள்வீர்களா?'



ரவிவர்மா ஓவியமாக வரைந்த சிம்னா பாய்

'உன் முதல் கணவர்?'

'இதுவரை நான் வாழ்க்கையில் அனுபவித்த துன்பங்களுக்கெல்லாம் உங்கள் மூலமாக விடிவு காலம் பிறக்கும் என்று நம்புகிறேன்' - போலியாகக் கண்களைக் கலங்க விட்டாள் சீதா தேவி. அதற்குமேல் பிரதாப் சிங்கால் பேச முடியவில்லை. ஆதரவாக, அழுத்தமாக அவளது கைகளைப் பற்றினார். மெட்ராஸிலிருந்து கிளம்புவதற்குள் பிரதாப் சிங், அவளிடம் தன்னை முற்றிலுமாகத் தொலைத்திருந்தார்.

அந்தப்புரத்தில்கூட தனது மகாராணியைத் தவிர வேறு பெண்கள் இன்றி வாழ்ந்தவர் முன்னாள் மகாராஜா சாயாஜி ராவ். ஒருவனுக்கு ஒருத்தி என்ற கொள்கையில் கெட்டியாக வாழ்ந்தார். அவரது பேரன் பிரதாப் சிங்கும் அப்படிப்பட்டவரே. எல்லாம் அந்த எம காதகியைப் பார்க்கும்வரை.

எப்படி சீதா தேவியைத் திருமணம் செய்துகொள்வது? முதல் மனைவிக்கு வாரிசு இல்லையென்றால் மறுமணத்துக்கு அனுமதி கிடைக்கும். அதற்கும் வழியில்லை. காரணம் பரோடா மகாராணி சாந்தா தேவிக்கு மூன்று ஆண் குழந்தைகள் பிறந்துவிட்டன. சரி, இன்னொரு கல்யாணம் செய்வதில் பிரச்னையில்லை. ஆனால் அவள் அடுத்தவன் பெண்டாட்டியாக இருக்கிறாளே? என்ன செய்யலாம்?

தனது சட்ட ஆலோசகர்களை அழைத்து ஆலோசனை கேட்டார். 'பிரச்னை இதுதான். எந்தவித சிக்கலும் இல்லாம நானும் அவளும் கல்யாணம் பண்ணிக்கணும். வழி சொல்லுங்க' - சட்ட

ஆலோசகர்கள் பக்காவாகத் திட்டம் ஒன்றைப் போட்டுக் கொடுத்தார்கள். என்னென்ன, எப்படியெப்படி, எப்போது செய்ய வேண்டும் என்று சீதா தேவி திட்டம் தெளிவாகத் தெரிவிக்கப்பட்டது. ஆபரேஷன் ஆரம்பமானது.

வய்யூர் ஜமீந்தாரினி சீதா தேவி, ஜமீந்தாரிடம் வந்தாள். சம்பந்தமே இல்லாமல் பேச ஆரம்பித்தாள். 'ஏங்க, நாம ஏன் இஸ்லாமிய மதத்தைத் தழுவக் கூடாது?'

'என்னடி உளர்ற?'

'எனக்கு நம்ம மதத்து மேல இருக்குற நம்பிக்கையெல்லாம் போயிருச்சு. எனக்கென்னமோ அந்த மதத்துக்கு மாறிட்டா நம்ம வாழ்க்கை சந்தோஷமா இருக்கும்னு தோணுது. மாறிடலாமா?'

'வாயை மூடு. இல்லேன்னா கொன்னுருவேன்' ஜமீந்தார் உறுமினார். இதேபோல சில நாள்கள் நச்சரித்த அவள், திடீரென ஒருநாள் இஸ்லாமிய மதமுறைப்படி அந்த மதத்தைத் தழுவினாள். ஜமீந்தாருக்குப் பேரதிர்ச்சி. 'அடியேய், உனக்கென்ன பைத்தியமா? என்ன காரியம் பண்ணிருக்க?' கொந்தளித்தார்.

'இங்க பாருங்க. நீங்களும் இஸ்லாமியரா மாறுற வழியைப் பாருங்க. முடியலேன்னா, என்னோட சுதந்தரத்துல தலையிடாம இருங்க' - அவரது வாயை அடைத்தாள்.

அடுத்த சில வாரங்களில் தன் கணவரிடம் இருந்து விவாகரத்துக் கோரினாள் அவள். 'நான் இப்போது இஸ்லாமியப் பெண். என் கணவர் மதம் மாற மறுக்கிறார். வேற்று மதத்தைச் சார்ந்த கணவரோடு இனி என்னால் வாழ்வது கடினம். எனவே அவரிடமிருந்து எனக்கு விடுதலை கொடுங்கள்.' இஸ்லாமிய முறைப்படி அவளுக்கு வெகு எளிதாக விவாகரத்து கிடைத்தது. வய்யூர் ஜமீந்தார், வழிவிட்டு விலகினார்.

அடுத்தது என்ன? பரோடாவுக்குச் செல்ல வேண்டியதுதான். மகாராஜாவுக்கு வாக்கப்பட வேண்டியதுதான். விவாகரத்தான பெண்ணை ஒரு மகாராஜா திருமணம் செய்துகொள்ள முடியுமா? அதுவும் ஓர் இஸ்லாமியப் பெண்ணை இந்து மகாராஜா திருமணம் செய்யலாமா என்ன? அடச்சே, அவ்வளவுதானே. ஆரிய சமாஜத்தைத் தழுவி மீண்டும் இந்துவானாள் சீதா தேவி.

பிரதாப் சிங், சீதா தேவியைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறார் என்ற செய்தி அரசல் புரசலாக வெளியானதுமே பரோடா படபடத்தது. லஷ்மி விலாஸ் சலசலத்தது. சிம்னா பாய்க்கு அந்தத் திருமணத்தில் சற்றும் விருப்பமில்லை. இருந்தாலும் அவள் எந்தவித எதிர்ப்பையும் வெளிக்காட்டவில்லை. அந்தச் சூழ்நிலையில் பரோடாவிலிருந்து வெளியேறி, தன் மகள் இந்திராவோடு சென்று இருந்துகொண்டாள்.

'என்னய்யா அநியாயம் இது? மகராசியாட்டாம் மகாராணி இருக்கறப்போ, இந்த மகாராஜா ஏன் இப்படி செய்யுறாரு? அதுவும் ஏற்கெனவே கல்யாணம் ஆன பொம்பளை அவ. புள்ளை வேற இருக்குதாம். என்ன கண்றாவியோ?'

எந்தவிதமான எதிர்ப்புகளையும் கண்டுகொள்ளாமல், தான் அனுமதித்த 'ஒருவனுக்கு ஒருத்தி' சட்டத்தை மீறி சீதா தேவியைத் திருமணம் செய்து கொண்டார் பிரதாப் சிங் (1943).

பிரிட்டிஷ் அரசு பேசாமல் பேன் பார்த்துக் கொண்டிருக்குமா என்ன? வைஸ்ராயிடமிருந்தே கடிதம் வந்தது. 'ஓர் இந்து மகாராஜாவாக இருந்துகொண்டு நீர் செய்ததெல்லாம் பரோடாவின் சட்டத்துக்கு விரோதமான செயல். உமது பரம்பரையில் இதுவரை யாரும் இப்படிச் செய்ததில்லை. என்ன பதில் சொல்லப் போகிறீர்?'

பிரதாப் சிங், அசராமல் பதில் கடிதம் அனுப்பினார். 'சட்டமெல்லாம் சாதாரண மனுசனுக்கு. சமஸ்தானத்தையே ஆளுற மகாராஜாவுக்குப் பொருந்தாது. அதுபோக, நான் கல்யாணம் பண்ணிக்கிட்ட பொண்ணு, இந்து மதத்தைச் சேர்ந்தவதான். அதுவும் நான் கல்யாணம் பண்ணிக்கிறப்போ அவளுக்குப் புருஷன்னு யாரும் கிடையாது. என் பக்கம் எதுவுமே தப்பில்லை.'

பிரதாப் சிங்கின் இந்த பதிலில் நியாயம் இருப்பதாக, சட்ட ஆலோசகர்கள் வைஸ்ராயிடம் தெரிவித்தார்கள். ஆகவே அந்தத் திருமணத்துக்கு பிரிட்டிஷ் அரசின் அங்கீகாரம் கிடைத்தது. சீதா தேவி பரோடாவின் மகாராணியாக அதிகாரம் செலுத்த ஆரம்பித்தாள். பிரதாப் சிங், சீதா தேவியின் மயக்கத்திலேயே திரிய, முதல் மனைவி சாந்தா தேவி எதையும் கண்டுகொள்ளாமல் ஒதுங்கிக் கொண்டாள்.

ஒரு சாதாரண ஜமீந்தாரின் மனைவியாக இருந்த சீதா தேவி, ஒரு மகாராணியாக அரண்மனை சுகங்களில் மூழ்கித் திளைத்தாள். படு ஆடம்பரமான வாழ்க்கை. பரோடா பாரம்பரியம், ஓர் இந்து மகாராணிக்கான கலாசாரம் எல்லாம் அங்கு தொலைய ஆரம்பித்திருந்தது. 'உன் சந்தோஷமே என் சந்தோஷம்' என்று அவள் கேட்பதற்கெல்லாம் தலையாட்டிக் கொண்டே இருந்தார் பிரதாப் சிங். ஆகவே கஜானாவும் பரோடாவின் பாரம்பரிய நகைகளும் கொஞ்சம் கொஞ்சமாக அவள் வசமாக ஆரம்பித்தன.

அவ்வப்போது பரோடாவுக்கு வந்துபோய்க் கொண்டிருந்த சிம்னா பாய்க்கு தன் பேரனின் நடவடிக்கைகள் வருத்தமளித்தன. அதுவும் அதிகமாக ஆட்டம்போட ஆரம்பித்திருந்த சீதா தேவியைப் பார்ப்பதற்கே பிடிக்கவில்லை.

'உங்க அப்பாவோ, என்னோட புள்ளைகளோ பதவியில இருந்திருந்தா இப்படியெல்லாம் நடந்திருக்குமா?' - மகள் இந்திராவிடம் புலம்பினாள் சிம்னா பாய். 'அம்மா, நீங்க பரோடா வுல கொஞ்ச நாள்கூட இருக்க வேண்டாம். என்கூடவே பம்பாய்க்கு வந்து இருங்க' வற்புறுத்தினாள் இந்திரா. பம்பாயில் பீடெர்ஸ் சாலையில் வசித்து வந்த இந்திரா, சிம்னா பாய்க்கும் அதே பகுதியிலேயே ஒரு மாளிகையை ஏற்பாடு செய்தாள்.

லஷ்மி விலாஸ். வெறும் அரண்மனையா இது? என் கணவர் சாயாஜி ராவின் மூச்சுக் காற்றும் நினைவுகளும் உலவும் புனிதமான இடமல்லவா! வேண்டாம். அவரே இல்லாத இந்த இடத்தில் நான் மட்டும் இருந்து என்ன செய்யப் போகிறேன். கனத்த இதயத்தோடு லஷ்மி விலாஸை விட்டு நிரந்தரமாக வெளியேறினாள் சிம்னா பாய்.



# கில்‘லேடி’ சீதா தேவி!

ஏழரை அடி நீளமும், ஆறடி அகலமும் கொண்டது அது. எப்படி முகலாயர்களுக்கு மயிலாசனமோ, அதேபோல பரோடா பரம்பரையின் பெருமையைச் சொல்லும் விலையுயர்ந்த கம்பளம் அது. 1865லேயே அதனுடைய மதிப்பு ஆறு லட்சம்.

அப்போது பரோடாவை ஆண்டு கொண்டிருந்த மகாராஜா கண்டே ராவுக்கு ஏன் அப்படி ஓர் எண்ணம் உருவானது என்று தெரியவில்லை. திடீரென ஒருநாள், ‘அழகான கம்பளம் ஒன்றைத் தயார் செய்யுங்கள். இதுவரை உலகில் வேறெங்கும் இப்படி ஒரு கம்பளம் இருந்திருக்கக் கூடாது’ என்று கட்டளையிட்டார். மான் தோல், பட்டுநூல், தங்க இழைகள் எல்லாம் பின்னிப் பிணைய, வைரம், கோமேதகம், முத்து, பவளம், மாணிக்கம், மரகதம் முதலிய கற்கள் எல்லாம் அதில் இணைய, இந்திய-முகலாய கலை நயம் மிளிர அந்தக் கம்பளம் உருவானது.

‘நான் இந்தக் கம்பளத்தை அரேபியாவில் உள்ள மதீனா பள்ளிவாசலுக்கு வழங்கப் போகிறேன்’ என்று அறிவித்தார் கண்டே ராவ்.

‘என்னப்பா இது? நம்ம இந்து மகாராஜா, எங்கியோ அரபு நாட்டுல இருக்குற பள்ளிவாசலுக்கு இம்புட்டு விலையுயர்ந்த கம்பளத்தைக் காணிக்கையா எதுக்குக் கொடுக்கணும்? ம்ஹூம், மகாராஜா பண்ணுறது எதுவுமே சரியில்லை.’



சீதா தேவியும் பிரதாப் சிங்கும்

பரோடாவுக்குள்ளேயே எக்கச்சக்கமான சலசலப்பு. ஆகவே கண்டே ராவ், மதீனாவுக்குக் கம்பளத்தை அனுப்பும் திட்டம் தள்ளிக் கொண்டே போனது. 1870ல் அவர் இறந்துபோனார். அதற்குப் பின்பு ஆட்சிக்கு வந்த வில்ல மகாராஜா மல்ஹர் ராவ், கம்பளத்தை கஜானாவில் பத்திரமாக வைத்துக் கொண்டார். ஏதாவது சில முக்கியமான நிகழ்ச்சிகளுக்காக வெளியே தலைகாட்டிய அந்தக் கம்பளம், மகாராஜா பிரதாப் சிங்கின் காலம் வரை கஜானாவிலேயே சுபிட்சமாக இருந்தது.

சுதந்தரத்துக்கு முன்பு வரை, மகாராஜாக்களோ, மகாராணிகளோ கைகளில் தங்கள் சொத்தை எடுத்துக் கொண்டு நாடு நாடாகத் திரிய எந்தவிதத் தடையும் இருக்கவில்லை. பிரதாப் சிங்கோடு, அடிக்கடி ஐரோப்பியச் சுற்றுப் பயணங்கள் செய்த சீதா தேவி, அங்கு தன் பெயரில் சொத்துகள் வாங்கிப் போட்டாள். அப்படியே பரோடாவின் செல்வங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக வெளிநாடுகளுக்குக் கொண்டு செல்ல ஆரம்பித்தாள்.

இரண்டாம் உலகப் போர் சமயத்தில் அவர்களது ஐரோப்பியப் பயணங்களுக்குக் கெடுபிடி அதிகமாகவே இருந்தது. போர் முடிந்து 1946ல் ஐரோப்பாவுக்கு, பிரதாப் சிங்கோடு கிளம்பினாள் சீதா தேவி. இந்தியா, சுதந்தரத்தை நோக்கி வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தது. சுதந்தரத்துக்குப் பின் என்ன வேண்டுமானாலும் நடக்கலாம் என்ற சூழல். அப்போது பிரதாப் சிங், உலகப் பணக்காரர்கள் வரிசையில் எட்டாவது இடத்தில் இருந்தார். ‘முடிந்தமட்டும்

கஜானாவைக் காலி செய்து, சொத்துகளை ஐரோப்பிய நாடுகளுக்குக் கொண்டுச் சென்று விடலாம்' என்று பிரதாப் சிங்கை நச்சரித்தாள் சீதா தேவி. அப்படியே செய்தார்கள்.

பெட்டிகள் நிறைய நகைகள், குறிப்பாக தெற்கு நட்சத்திரத்துடன் கூடிய வைர நெக்லெஸ், ஏழடுக்கு முத்து மாலை, அப்புறம் அந்த கண்டே ராவின் கம்பளம் உள்பட பல விலையுயர்ந்த பொருள்கள் சீதா தேவியால் மோனாகோவுக்குக் கொண்டு செல்லப்பட்டன. என்னென்ன பொருள்கள் என்ற முழுவிவரம் யாருக்கும் தெரியாது. பிரதாப் சிங்குக்குக்கூட.

1947. சுதந்தரம். பின்பு சமஸ்தானங்கள் இணைப்பு. அந்த ஒப்பந்தத்தில் எந்தவித எதிர்ப்பும் காட்டாமல் சமர்த்தாகக் கையெழுத்துப் போட்டார் மகாராஜா பிரதாப் சிங். அவருக்கு அறிவிக்கப்பட்ட வருட மானியம் 26.5 லட்சம். இணைப்புக்குப் பின் பரோடாவின் பரம்பரைச் சொத்துகளை விட்டுவிட்டு, சமஸ்தானத்தின் சொத்துகளைத் தழுவ வந்த இந்திய அரசுக்குப் பேரதிர்ச்சி. கஜானா காற்றாடிக் கொண்டிருந்தது. 'அரசிடம் ஒப்படைக்க வேண்டியதை எல்லாம் ஒழுங்கு மரியாதையாக ஒப்படைத்து விடுங்கள்' - பிரதாப் சிங்குக்கு அரசு கட்டளையிட்டது. அவரும் சில சொத்துகளுடன் திரும்பினார்.

அத்தனை வருடங்கள் மகாராஜாவாக இருந்த பிரதாப் சிங்குக்கு அதிகாரம் எதுவும் இன்றி, வெறும் பொம்மை ராஜாவாக இருப்பதில் விருப்பம் இருக்கவில்லை. சமஸ்தான இணைப் பில் கையெழுத்துப் போட்டு விட்டாரே தவிர, அவரது மனத்தில் மீண்டும் அரியணை ஏறி ஆட்சி புரிய வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கி இருந்தது. அதை உறுதிப்படுத்தும் வகையில் சர்ச்சை ஒன்றும் கிளம்பியது. 'பிரதாப் சிங், இந்திய அரசியலமைப்பு சட்டத்தின் விதிகளை மீறி நடக்கிறார். மீண்டும் பரோடாவில் அதிகாரம் செலுத்த நினைக்கிறார்.'

'அட, பெரும்பாடுபட்டு, சுதந்தரத்தை வாங்கி இப்பத்தான் ஜனநாயகத்தைக் கொண்டு வந்திருக்கோம். இவருக்குத் திரும்ப மன்னராட்சி வேணுமாமே? மகாராஜாவா இருந்தாத்தானே நீ கேட்ப? ஒழி!'

1951, ஏப்ரல் 13ல் பிரதாப் சிங்கிடமிருந்து மகாராஜா பதவி பறிக்கப்பட்டது. லண்டன் கேம்ப்ரிட்ஜில் படித்துக் கொண்டிருந்த அவரது மூத்த மகன் இளவரசர் ஃபதே சின் ராவ் (Fateh Sinh Rao), அவசரமாக இந்தியாவுக்கு வரவழைக்கப்பட்டார். அந்த டம்மி மகாராஜா பதவியும் வருட மானியமும் அவருக்கு அறிவிக்கப்பட்டது.

பதவி இழந்த பிரதாப் சிங், ஐரோப்பியவாசியாக மாறிப்போனார். சீதா தேவியோடு சேர்ந்து குதிரைப் பந்தயங்கள் நடக்கும் இடங்களில் எல்லாம் ஆஜரானார். புதிது புதிதாகக் குதிரைகள் வாங்க எக்கச்சக்கமாகச் செலவழித்தார். நியு யார்க்குக்கும் பாரிஸுக்கும் இடையே மாறி மாறிப் பறந்து கேளிக்கைகளிலும் விருந்துகளிலும் கலந்து கொண்டார். அந்த நாள்களில் அவரது பல சொத்துகளைத் தன் பெயருக்கு மாற்றிக் கொண்டாள் கில் 'லேடி' சீதா தேவி.

பண ஆசை பிடித்த ஒரு பெண். டாம்பீகமாகச் செலவழிக்கும் ஓர் ஆண். எத்தனை வருடங்கள் தான் சேர்ந்து வாழ முடியும்? சீதா தேவிக்கும் பிரதாப் சிங்குக்கும் இடையே விரிசல் விழ ஆரம்பித்தது. இதற்குமேலும் சுரண்டுவதற்கு இந்த ஆளிடம் ஒன்றுமில்லை என்று உணர்ந்த சீதா தேவி, விவாகரத்து செய்துகொள்ள முடிவெடுத்தாள். விவாகரத்து பெற்றுக் கொண்டாள் (1956). அவளுக்கும் பிரதாப் சிங்குக்கும் பிறந்த மகன் சாயாஜியோடு, பிரான்ஸுக்குச் சென்று குடியேறினாள்.

அதற்குப் பின்பு பிரதாப் சிங்கின் வாழ்க்கையில் குறிப்பிடும்படி எதுவும் சம்பவங்கள் இல்லை. இறுதிவரை ரேஸ், விருந்து, மது என்று ஊதாரியாக வாழ்ந்த அவர், 1968ல் லண்டனில் இறந்து போனார். அதற்குச் சரியாக பத்து வருடங்கள் முன்பு சிம்னா பாய் இறந்திருந்தாள்.

இரவினில் குத்தாட்டம், பகலினில் கும்பகர்ணத் தூக்கமாக சீதா தேவியின் பகட்டு வாழ்க்கை தொடர்ந்தது. பரோடாவிலிருந்து லவட்டிய சொத்துகள் அதற்கு உதவின. பரோடாவின் பல பரம்பரை நகைகளை விற்றுக் காசாக்கிக் கொண்டாள். குறிப்பாக பரோடாவின் மிக முக்கியமான பொக்கிஷமாகக் கருதப்பட்ட அந்தக் கம்பளத்தையும் விற்றுவிட்டாள். ஆனால் யாரிடம் எப்போது விற்றாள் என்ற விவரங்கள் இல்லை. (1994ல் இந்திய, அரபு பத்திரிகை களில் பரோடாவின் கம்பளம் பற்றிய செய்திகள் வந்தன. இப்போது அந்தக் கம்பளம், அரபு நாட்டைச் சேர்ந்த ஒரு படா எண்ணெய் வியாபாரியிடம் இருப்பதாக நம்பப்படுகிறது.)

சீதா தேவி, மதியம் இரண்டு மணிக்குமேல்தான் தன் அறையிலிருந்து வெளியே வருவாள். விரலிடுக்கில் கசியும் புகை. தொண்டைக்குழியை நனைக்க ஷாம்பெயின். மெள்ள சீவிச் சிங்காரிப்பாள். இளமையாகக் காட்டும்படி இறுக்கமான வெல்வெட் பேண்ட், காற்றோட்ட மான மேல் சட்டை. சீதா தேவியின் விருப்பமான உடை அதுதான். ஏழு மணிபோல இரவு விருந்துக்குக் கிளம்பிவிடுவாள். தினமும். விடிய விடிய கூத்து. நள்ளிரவு இரண்டு மணிக்கு மேல் தன் மாளிகைக்குத் தள்ளாடியபடி திரும்புவாள். இந்த படோடோப வாழ்க்கையைக் கண்டு வாய்பிளந்த ஐரோப்பியர்கள் அவளுக்கு வைத்த பெயர், 'இந்தியாவின் வாலிஸ்!'

மேற்கு வாலிஸூம், தெற்கு வாலிஸான சீதா தேவியும் தங்கள் வாழ்க்கையில் ஒரே ஒருமுறை சந்தித்துக் கொண்டார்கள். 1957ல் நியு யார்க் நகரத்தில் நடந்த விருந்து ஒன்றில் அது நிகழ்ந்தது. வாலிஸ், தன் கழுத்தில் அணிந்திருந்த வைர-மரகத நெக்லெஸ் அந்த ஹாலில் இருந்த அனைவரையுமே கவர்ந்தது. பலர் வாய்பிளந்தனர். பலர் வாயாரப் புகழ்ந்தார்கள். 'நீங்களும் அழகு! உங்களுக்காகவே படைக்கப்பட்டிருக்கும் இந்த நெக்லெஸூம் பேரழகு! இந்த விருந்து மண்டபமே உங்களால்தான் ஜொலிக்கிறது.'

இம்மாதிரியான புகழ் வார்த்தைகள் சீதா தேவியின் காதுகளிலும் விழுந்தன. என்னிடம் இல்லாத நகைகள் அவளிடம் என்ன இருக்கப் போகிறது என்ற இறுமாப்போடு வாலிஸின் நெக்லெஸை உற்றுப் பார்த்தாள். சட்டென முகம் மலர்ந்தாள். 1953ல் நியு யார்க்கைச் சேர்ந்த நகை வியாபாரியான ஹாரி வின்ஸ்டனிடம் தனது கால் சிலம்புகளை விற்றிருந்தாள் சீதா தேவி. அந்தச் சிலம்புகளில் இருந்த வைரங்களும் மரகதங்களும்தான் நெக்லெஸாக உருமாற்றம் அடைந்திருந்தன. வின்ஸ்டன், அதை வாலிஸிடம் விற்றிருந்தார்.

சீதா தேவி, அந்த ஹாலின் நடுப்பகுதிக்கு வந்து 'லேடீஸ் - ஜென்டில்மென்' என்று குரலுயர்த் தினாள். 'இப்போது மேடம் வாலிஸோட கழுத்துல அழகா இருக்குற இந்த நெக்லெஸ், ஒரு காலத்துல என் காலுல கிடக்கறப்போகூட இதே அழகோடத்தான் இருந்துச்சு' என்றாள் அலட்சியமான சிரிப்போடு. வாலிஸின் முகம் சுண்டிப் போனது. சபை சலசலத்தது.

நகை வியாபாரி வின்ஸ்டனும் அந்த விருந்துக்கு வந்திருந்தார். வாலிஸ் அவரைத் தனி அறைக்கு அழைத்துச் சென்றாள். சீதா தேவி சொல்வது உண்மையா என்று விசாரித்தாள்.

உண்மை என்று தெரிந்ததும், அந்த நெக்லெஸைக் கழட்டி, ஹாரியின் மீது கோபமாக விட்டெறிந்துவிட்டு, விருட்டென வெளியேறினாள்.

சாயாஜி. சீதா தேவியின் மகன். தாயைப் போலவே வாழ்ந்தான். முறையற்ற நடத்தை. நைட் கிளப் வாழ்க்கை. பாரிஸில் அவர்கள் செய்த ஒரு வருடத்துக்கான செலவு மட்டும் சராசரியாக ஒன்றரை லட்சம் பவுண்ட். சாயாஜி, 1985ல் பிரான்ஸில் ஒரு மாளிகையில் கழுத்தறுபட்டு இறந்து கிடந்தான். போதைக்கு அடிமையாகி தற்கொலை செய்துகொண்டான் என்றது போலீஸ். மறுவருடமே ஆடம்பரக் கிழவி சீதா தேவியும் இறந்துபோனாள்.

போகட்டும். நாம் பரோடாவுக்குத் திரும்புவோம். 1951ல் பதவியேற்ற பஃதே சின் ராவ், காங்கிரஸில் இணைந்தார். 1957, 1962, 1971, 1977 - நான்கு முறை லோக்சபா உறுப்பினர், 1967ல் குஜராத் மாநில சுகாதார அமைச்சர், மூன்று முறை இந்திய கிரிக்கெட் அணி மேலாளர், 1963ல் பிசிசிஐ பிரசிடெண்ட், சாயாஜி ராவ் பல்கலைக்கழகத்தின் வேந்தர் என்று பஃதே சின் ராவின் வாழ்க்கையில் ஏகப்பட்ட பதவிகள். தனது பூட்டன் சாயாஜி ராவ் போலவே வெற்றிகரமாக நிர்வாகம் செய்தார். 1988ல் இறந்து போனார்.

பஃதே சிங்குக்கு வாரிசுகள் கிடையாது. ஆகவே அடுத்த மகாராஜாவாக அவரது சகோதரர் ரஞ்சித் சிங் பொறுப்பேற்றார். இவரும் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்தான். 2012-ல் இறந்துபோனார். தற்போதைய பெயரளவு மகாராஜா, சமர்ஜித்சிங் கெய்க்வாட்.

சங்ராம் சின் ராவ் (Sangram Sinh Rao), இவர் ரஞ்சித் சின் ராவின் இளைய சகோதரர். பல ஆண்டுகளாக இருவருக்குள்ளும் சொத்துத் தகராறு நீதிமன்றத்தில் கடுமையாக நடந்து கொண்டிருக்கிறது. 2004ல் வெளியான செய்திகளின்படி, பரோடா ராஜ குடும்பத்தின் சொத்து மதிப்பு பத்தாயிரம் கோடி. அதில் லஷ்மி விலாஸின் மதிப்பு மட்டும் 3500 கோடி. பல நிறுவனங்களை நிர்வகித்து வரும் சங்ராம் சின் ராவ், மும்பையில் வசிக்கிறார். ரஞ்சித் சின் ராவ், அவரை லஷ்மி விலாஸுக்குள் அனுமதிப்பதில்லை.

தற்போதைய மத்திய அமைச்சர் ஜோதிர் ஆதித்ய சிந்தியாவுக்கும், சங்ராம் சின் ராவின் மகளுக்கும் 1997ல் திருமணம் நடந்தது. அதற்காகக்கூட தன் சகோதரரை லஷ்மி விலாஸுக்குள் அனுமதிக்க மறுத்துவிட்டார் ரஞ்சித் சின் ராவ்.

லஷ்மி விலாஸில் 186 அறைகள் உண்டு. ரஞ்சித் சின் ராவும் அவரது குடும்பத்தினர் நான்கு பேரும் வெறும் இருபது அறைகளை மட்டுமே உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள். மற்ற அறைகள் எல்லாம் சாயாஜி ராவின் நினைவுகளைப் பூட்டிக்கொண்டு கிடக்கின்றன.



# 104

# யாரங்கே?

'உங்க வூட்டுக்காரரு எங்க வேலை பாக்குறாரு?' - இது ஒரு பெண்மணியின் கேள்வி.

'அவரு அரண்மனையில மகாராசாவுக்குப் பக்கத்துல வேலை பாக்குறாரு தெரியுமா!' இது இரண்டாம் பெண்மணியின் பதில். 'அப்படியா!' முதல் பெண்மணியின் வாய் அலிபாபா குகையாகத் திறக்கும். மகாராஜாவுக்கு பக்கத்தில் வேலை என்றால், அது அருகிலேயே நின்று விசிறி விடும் வேலையாகக்கூட இருக்கலாம்.

இருக்கட்டுமே. சமஸ்தானத்தின் திவான் உத்தியோகமோ அல்லது மகாராஜாவுக்கு முதுகில் அரிப்பெடுத்தால் சொறிந்துவிடும் வேலையோ, அரண்மனை வேலை என்பதைத் தனி கௌரவமாகத்தான் அந்தக்கால மக்கள் கருதி வந்தார்கள். அதிலும் பரம்பரை பரம்பரையாக ஒரே அரண்மனையில் ஒரே வேலையை செய்து வந்த குடும்பத்தினர்களும் உண்டு.

'அந்தக் காலத்துல எங்க தாத்தா மகாராசாவுக்கு டர்பன் கட்டி விடுற வேலைல இருந்தாரு. எங்க தாத்தா கையால டர்பனைக் கட்டிக்கிட்ட பிறகுதான் மகாராசா வெளியில கிளம்புவாராம். அதுக்கப்புறம் அதே வேலைல எங்கப்பா சேர்ந்தாரு. முப்பது வருசம் ஆச்சு. இப்போ பட்டத்து இளவரசருக்கு டர்பன் கட்டி விடுற வேலை எனக்கு வந்திருக்கு. அரச குடும்பத்துக்கு டர்பன் கட்டுற பாக்கியம் எங்க பரம்பரையைத் தவிர வேற யாருக்கும் இந்த ஜென்மத்துல கிடைக்கப் போறதில்லை.'

திவானின் மகன் அடுத்த திவான், படைத்தளபதியின் மகன் அடுத்த படைத்தளபதி, சமையல் காரனின் மகனே அடுத்த சமையல்காரன் - இதுபோன்ற வாரிசு அரசியல் எல்லாம் அரண்மனை யில் சர்வ சாதாரணம். சீனியர் மகாராணிக்கு ஒருத்தி அந்தரங்கத் தோழியாக இருந்தால், அந்தத் தோழியின் மகளுக்கு இளவரசியின் அந்தரங்கத் தோழி என்ற அந்தஸ்து எளிதாகவே கிடைக்கும்.

ஒரு வேலையை ஒரு குறிப்பிட்ட வேலையாள் செய்வதே பெரும்பாலான ராஜ குடும்பத் தினருக்கு மனத்திருப்தி கொடுப்பதாக இருந்தது. கைராசி, முகராசி, ஆள்ராசி பார்ப்பதெல்லாம் அவர்களது ரத்தத்திலேயே ஊறிப் போன விஷயம். அந்த வேலைக்காரர் தவறிப்போகும் பட்சத்தில் அவரது வாரிசுகள் அந்த வேலையைத் தொடர்வதையே ராஜ குடும்பத்தினரும் விரும்பினார்கள். 'இந்த அரண்மனை உப்பைத் தின்னு வளர்ந்த உடம்புயா இது' என்று விசுவாசம் பொங்கப் பொங்க வாழ்ந்த வேலைக்காரர்கள் அரண்மனைதோறும் இருக்கவே செய்தார்கள்.

பஞ்சாபின் ஜிந்த் சமஸ்தானத்தைச் சேர்ந்த அறுபத்தைந்து வயது இள மகாராஜா ரன்பிர் சிங் ராஜேந்திர பகதூர், ஓர் இரவுப் பறவை. விடிய விடிய விதவிதமாகக் கூத்தடித்துவிட்டு விடிய லில்தான் கண்ணயர்வார். வெயில் காயும் நேரமெல்லாம் வெறித்தனமாகத் தூங்கிவிட்டு, மாலை நான்கு மணியளவில் மப்பும் மந்தாரமுமாக இமை திறப்பார். அந்த நேரத்தில் இன்னென்ன பணிப்பெண்கள், பதமாக அவரது காலைப் பிடித்து விட்டுக்கொண்டிருக்க வேண்டும். இன்னென்ன பணிப்பெண்கள் அவரது தலைமாட்டில் நின்று கொசுவின் ரீங்காரம் போல சில குறிப்பிட்ட பாடல்களை (மட்டுமே) பாடிக் கொண்டிருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட பணிப்பெண், சூடான தேநீர்க் கோப்பையோடு காத்திருக்க வேண்டும்.

ரன்பிர் சிங், தேநீரை உறிஞ்ச ஆரம்பிக்கும் வேளையில் ஆஸ்தான ஜோதிடர் பண்டிட் கரன் சந்த், தன் தொண்டையைச் செருமிக் கொண்டு, மகாராஜாவுக்கான அன்றைய தினப்பலன்களை வாசிக்க ஆரம்பிப்பார். 'இரண்டில் கேது, எட்டில் ராகு இருவர் பார்வையும் நீசபங்க ராஜயோகப் பார்வையாக இருப்பதால் சத்ரு ஜெயம், ஆரோக்ய விருத்தி, அனுகூலத் திருப்பங்கள் உண்டாகும்...'

மகாராஜா கண்விழிக்கும் வேளையில் மேற்குறிப்பிட்ட நபர்களில் யாராவது இல்லாமல் போனால் அவ்வளவுதான். ரன்பிர் சிங் காச்மூச்சென கத்த ஆரம்பித்துவிடுவார். அவருடைய அன்றைய பொழுதெல்லாம் 'பணால்' ஆகிவிட்டதாகப் பதறுவார். அவ்வளவுதான், அந்த நொடிமுதல் வேலைக்காரர்களுக்குக் கெட்ட நேரம் ஆரம்பித்துவிடும்.

கேரளாவின் திருவாங்கூர் சமஸ்தானத்தில் அரண்மனை வேலைக்காரர்களை 'பட்டக்கார்' என்ற வார்த்தையால் குறிப்பிடுவார்கள். வெள்ளைச் சீருடை, சிவப்புத் தலைப்பாகை அவர்களது சீருடை. ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் வரும்போது பட்டக்கார்கள் வணக்கம் வைக்க வேண்டும். சாதாரணமாக அல்ல, முதலில் ஏழு போல வளைந்து, உள்ளங்கை இரண்டையும் சேர்க்க வேண்டும். பின் அப்படியே முட்டிபோட்டு, முன் நெற்றியால் தரையைத் தொட வேண்டும். மகாராணியோ, மகாராஜாவோ அவர்களைக் கடக்கும் போதெல்லாம் இதேபோல ஏழு முறை செய்ய வேண்டும். ஒரு நாளைக்கு இத்தனைமுறை வணங்கினால் போதுமென்ற கணக்கெல்லாம் கிடையாது.

அதுபோக ராஜ குடும்பத்தைச் சேர்ந்த குஞ்சு, குளுவான்கள் வந்தால்கூட வணக்கம் வைக்க வேண்டியது பட்டக்கார்களின் தலையெழுத்து. ஆனால் அந்தக் குஞ்சு, குளுவான்களுக்கு பட்டக்கார்களின் வணக்கம் விநோதமானதாக, வேடிக்கையானதாக, ஒரு நடனம் போலத்தெரியும். ஆகவே அந்தக் குழந்தைகள் வேண்டுமென்றே பட்டக்காரர்கள் முன் வருவதும் திரும்பிப்போவதுமாக இருப்பார்கள். பட்டக்கார்கள்தான் பாவம், இடுப்பொடிய வணக்கம் வைத்துக் கொண்டே இருப்பார்கள்.

பிகானிர் மகாராஜா கர்னி சிங்கின் அரண்மனையில் ஏராளமான விசுவாசமான வேலைக்காரர்கள் உண்டு. அரண்மனைக்குள் காலாற நடந்து வருவது கர்னி சிங்குக்குப் பிடித்தமான விஷயம். அப்போது ஒரு விசுவாசமான வேலைக்காரர் ஒருவர் கையில் நோட்டுடன் மகாராஜாவின் பின்னாலேயே செல்வார். மகாராஜா என்ன சொன்னாலும் அதைக் குறித்து வைத்துக் கொள்வார். 'இன்று காலையில் சாப்பிட்ட பூரி மசாலா தேவாமிர்தமாக இருந்தது. ஏவ்...' என்று சொல்லி மகாராஜா ஏப்பம் விட்டால்கூட.

பிகானிர் அரண்மனையில் பழங்கால ஓவியங்கள் நிறைய உண்டு. ஆனால் அந்த ஓவியங்கள் பராமரிப்பின்றி இருந்ததால், அவற்றில் கரையான்கள் களமிறங்கி கபடி ஆடிக்கொண்டிருந்தன. மகாராஜா வாக்கிங் வருகையில், அவர் நாசியில் தூசி புகுந்து தும்மல் எதுவும் வந்துவிடக் கூடாதே என்ற அக்கறையில் வேலைக்காரர்கள் அந்த ஓவியங்களைத் துணியால் அவசர அவசரமாக மூடி வைப்பார்கள். கர்னி சிங், ஏதாவது ஓர் ஓவியத்தின் முன் சென்று நிற்பார். துணியை விலக்கச் சொல்லுவார். விலக்குவார்கள். 'அய்யோ, கரையான்கள். இதை உடனடியாகக் கவனியுங்கள்.'

மகாராஜாவின் கட்டளையை பவ்யமாக தன் நோட்டில் குறித்து வைத்துக் கொள்வார் அந்த விசுவாச வேலைக்காரர். அவ்வளவுதான். அந்தக் கட்டளையை யாரும் செயல்படுத்த மாட்டார்கள். கர்னி சிங்கும் அத்தோடு அதை மறந்துவிடுவார்.

பொதுவாக ஒரு மகாராஜா தர்பாருக்கோ, அரண்மனை வாசலுக்கோ, உப்பரிகைக்கோ அல்லது வேறு எங்கேயோ வருகிறார் என்றால் ஆங்காங்கே குரல்கள் ஒலிக்க ஆரம்பிக்கும். 'ராஜாதி ராஜ, ராஜ மார்த்தாண்ட, ராஜ குலோத்துங்க...' இப்படி முழங்கும் கட்டியக்காரர்களுக்கு வட சமஸ்தானங்களில் வழங்கப்பட்ட பெயர், சோப்தார். சில அரண்மனைகளில் முப்பதுக்கும் மேற்பட்ட சோப்தார்கள்கூட இருந்தார்கள். மகாராஜா வரும் பாதையில் குறிப்பிட்ட இடைவெளியில் அவர்கள் அணிவகுத்து நிற்பார்கள். முதல் சோப்தார், மகாராஜா தூரத்தில் வருவது தெரிந்ததுமே அந்தப் பாரம்பரிய ரெக்கார்டை முழங்க ஆரம்பிப்பார். அவர் முடித்ததும், அடுத்தவர். பின்பு அடுத்தவர். மகாராஜா அரியணையில் சென்று அமரும்போது, இறுதியாக நிற்கும் சோப்தார் முழங்கி முடிப்பார். அந்த இறுதி சோப்தார்தான் எல்லோருக்கும் மூத்தவராக இருப்பார். மகாராஜாவுக்கு அருகில் நிற்கும் உரிமை அந்த சீனியர் சோப்தாருக்கு மட்டுமே உண்டு.

பாலன்பூர் அரண்மனையில் மொத்தம் நான்கு சோப்தார்கள் இருந்தார்கள். நவாப்புக்கு அருகில் நிற்கும் சீனியர் சோப்தாருக்கு மற்றவர்களை எல்லாம்விட கணீர்க் குரல். நவாப், பொதுவில் அறிவிக்கவேண்டியதை அந்த சீனியர் சோப்தாரின் காதில் கிசுகிசுப்பார். சோப்தார் அந்தச் செய்தியை உரக்க ஒலிபரப்புவார். அதுபோக, நவாப்பை யாராவது பார்க்க வந்தால் அவர்களது பெயரை உரக்கச் சொல்ல வேண்டியதும் அந்த சோப்தாரின் கடமை. எதைச்

சொல்வதற்கு முன்பும் வளைந்து சலாம் வேறு வைக்க வேண்டும். 'இதோ பாலன்பூரின் மிகச் சிறந்த ஆட்சியாளரான மாண்புமிகு நவாப்பைக் காண நாலாவது தெரு நல்லமுத்து பராக்! பராக்! பராக்!'

இப்படி தர்பார் நடக்கும் நேரத்தில் அந்த சோப்தாரின் குரல் அடிக்கடி முழங்கிக் கொண்டே இருக்கும். வரும் நபர் கிளம்பிச் செல்வதையும் சோப்தார் அறிவிக்க வேண்டும். அப்படி அறிவிக்கும்போது, குர்-ஆன் வாசகம் ஒன்றைச் சேர்த்துச் சொல்லி சலாம் வைத்தால் பாலன்பூர் நவாப் சந்தோஷப்படுவார்.

ஒரு காலத்தில் பரோடாவின் லஷ்மி விலாஸ்தான் மிக அதிகமான வேலைக்காரர்களைக் கொண்ட அரண்மனையாக விளங்கியது. 'யாரங்கே?' என்று மகாராஜா குரல் எழுப்பினால், ஓடிவர நூற்றுக்கணக்கான பணியாளர்கள் அரண்மனையெங்கும் திரிந்து கொண்டிருந்தார்கள். மொத்தம் 600 வேலைக்காரர்கள் என்றொரு குறிப்பு உண்டு. லஷ்மி விலாஸில் இருந்த 186 அறைகளுக்கும் தனித் தனி வேலையாள்கள். அதுபோக, தோட்டத்துக்கு, சமையலுக்கு, அங்கிருந்த மைதானங்களின் பராமரிப்பு பணிகளுக்கெல்லாம் தனி. அரண்மனையில் இருந்த ஒவ்வொரு காருக்கும் தனித்தனியே ஓட்டுநர், மெக்கானிக், கிளீனர் இருந்தார்கள். நீல உடையணிந்த பாதுகாவலர்கள் அரண்மனை எங்கும் அம்சமாக நின்று கொண்டிருந்தார்கள்.

ஆனால் ஒரு கட்டத்துக்கு மேல் மகாராஜா சாயாஜி ராவ், அதிகமாக ஐரோப்பிய பயணங்களை மேற்கொள்ள ஆரம்பித்தவுடன், வேலையாள்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைக்கப் பட்டார்கள். சாயாஜி ராவின் இறுதிக் காலத்தில் லஷ்மி விலாஸின் பணியில் இருந்த வேலையாள்களின் எண்ணிக்கை வெறும் 150 மட்டுமே.

ஒரு சமஸ்தானத்தின் தலையெழுத்தையே மாற்றிய பணியாளர்களும் உண்டு. ராம்பூர், அப்போது வரை முன்னேற்றம் எதுவும் இல்லாத சாதா சமஸ்தானமாகத்தான் இருந்து வந்தது. அதன் நவாப் ரஸா அலிகான் அதைப் பற்றியெல்லாம் கவலைப்படவில்லை. ஆனால் நவாப்பிடம் பணிபுரிந்த கர்னல் சையத் பஷீர் சமஸ்தானத்தின் வளர்ச்சி பற்றி மிகவும் கவலைப்பட்டார்.

ஒருநாள் சையத் நவாப்பிடம், 'நாம் ஏன் ராம்பூரில் தொழிற்சாலைகளைத் தொடங்கக்கூடாது?' என்று கேட்டார். அதற்கு நவாப்பின் பதில், 'அடப்போய்யா, நாம தொழிற்சாலைகளை ஆரம்பிச்சு வைச்சோம்னா எல்லாவனும் அங்க வேலைக்குப் போயிருவான். அரண்மனையில் சமைக்க, துவைக்க, பராமரிக்க ஒரு பயலும் வரமாட்டான். அதெல்லாம் செய்யக்கூடாது.'

சையத்துக்கு என்னவோ போலாகிவிட்டது. தக்க தருணத்துக்காகக் காத்திருந்தார். ஒருமுறை வைஸ்ராய் லின்லித்தோ ராம்பூருக்கு வருகை புரிந்தார். விருந்தெல்லாம் சாப்பிட்டு முடித்து, ஓய்வாக நவாப்பிடம் பேசிக் கொண்டிருந்தார் வைஸ்ராய். அப்போது அங்கே நின்று கொண்டிருந்த சையத், சட்டென திரி ஒன்றைக் கொளுத்திப் போட்டார். 'மாண்புமிகு வைஸ்ராய் அவர்களே, உங்களுக்கு ஒரு நல்ல செய்தி சொல்ல விரும்புகிறேன். எங்கள் மரியாதைக்குரிய நவாப், ராம்பூரை தொழில் நகரமாக மாற்ற விரும்புகிறார்.'

அவ்வளவுதான். வைஸ்ராய் துள்ளி எழுந்தார். நவாப்பை மகிழ்ச்சியாக அணைத்தார். 'நீங்கள் உண்மையிலேயே மிகச் சிறந்த ஆட்சியாளர்' என்று பாராட்டு மழை பொழிந்தார். நவாப்புக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அசட்டுச் சிரிப்பு சிரித்தார். சையத்தின் முகத்தில்

நமுட்டுச் சிரிப்பு. வைஸ்ராய் அங்கிருந்து சென்றதும், நவாப் சையத்திடம் கேட்ட கேள்வி, 'நாம் எப்போது நம் நகரில் தொழிற்சாலை கட்ட ஆரம்பிக்கலாம்?' - அதன்பிறகே ராம்பூரின் புகழ்பெற்ற ராஸா புலந்த் சர்க்கரை ஆலை நிறுவப்பட்டது. அடுத்த பத்து ஆண்டுகளுக்குள் ராம்பூர் தொழில் நகரமாக வளர்ந்தது.

ஐரோப்பியர்கள் பலரும் இந்திய அரண்மனைகளில் வேலை பார்த்திருக்கிறார்கள். ராஜாக்களின் குழந்தைகளுக்குப் பாடம் எடுக்கும் டீச்சர், பாட்டு, நடனம், விளையாட்டு, பிற கலைகள் கற்றுக் கொடுக்கும் மாஸ்டர், போட்டோகிராபர், ஒப்பனையாளர், டெய்லர், டாக்டர் என்று ஐரோப்பியர்கள் வியாபித்திருந்த துறைகள் எக்கச்சக்கம். மகாராஜாக்கள் கொடுத்த சம்பளத்தில்தான் அந்த ஐரோப்பியர்களின் வீட்டில் உலை கொதித்தது.

சரி, பல்வேறு வகையான அரண்மனை வேலைக்காரர்களைப் பற்றிப் பரவலாகப் பார்த்து விட்டோம். அப்படியே கொஞ்சம் திவாஸ் சமஸ்தானத்துக்குச் செல்ல வேண்டியதிருக்கிறது. அங்கு ஒரு வேலைக்காரியைச் சந்திக்க வேண்டியதிருக்கிறது. அவள் சாதாரணமானவள் அல்ல, மகாராணியின் வேலைக்காரியாக வந்து, மகாராணிக்கே உலை வைத்தவள்.



# 105

# அடாவடி மகாராணி! அழகு வேலைக்காரி!

'மாப்ளே, ஒரு சின்ன விஷயம். என் பொண்ணுக்கு பதினாலு வயசுதான் ஆவுது. ரொம்பவே செல்லமா வளர்ந்த பொண்ணு. இன்னும் பக்குவம் வளரல. கொஞ்சம் திமிரா நடந்துக்குவா. நீங்க தயங்காதீங்க. நல்லா அடிங்க. கூரான புலிநகம் பதிச்ச செருப்பால அடிங்க. அப்பத்தான் அடங்கி இருப்பா. சரீங்களா?'

திருமணம் முடித்துக் கொடுத்த கையோடு ஒரு தந்தை, தன் பெண்ணைப் பற்றி இப்படிச் சொன்னால், அதுவும் மாப்பிள்ளையிடமே சொன்னால்? ஆடிப் போனார் அந்த மாப்பிள்ளை.

அந்த மணமகன், மகாராஜா மூன்றாம் துகோஜி ராவ் (Tukoji Rao III). மத்திய பிரதேசத்தின் திவாஸ் சீனியர் சமாஸ்தானத்தை ஆண்டு வந்த மராத்தியர். (அங்கு திவாஸ் ஜூனியர் என்ற இன்னொரு சமஸ்தானமும் உண்டு. இரண்டுமே 15 குண்டு மரியாதை கொண்ட சமஸ்தானங்கள்.) 1888ல் ஆங்கிலப் புத்தாண்டு அன்று பிறந்த துகோஜி ராவ், தனது இருபதாவது வயதில் திருமணம் செய்ய முடிவெடுத்தார். ஏகப்பட்ட ராஜ வரன்கள் வந்தன. இறுதியில் கோல்ஹாபுர் (Kolhapur) மகாராஜாவின் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள முடிவெடுத்தார். மகாராஷ்டிராவின் தென்மேற்குப் பகுதியில் அமைந்த மராத்திய சமஸ்தானம் அது.

கோல்ஹாபுர் மகாராஜா சாகு போன்ஸ்லேயின் (Shahu Bhonsle) மூத்த புத்திரி ராதாபாய்க்கும் துகோஜி ராவுக்கும் சுபயோக சுபதினத்தில் திருமணம் நடந்தது.



துகோஜி ராவ்

ஆனால் தன் மகளைத் தாரை வார்த்துக் கொடுத்த கையோடு மாமனார் சாகு போன்ஸ்லே, 'முதல் பாரா'விலுள்ள எச்சரிக்கையை முன்வைக்கவும், துகோஜி ராவின் முகத்தில் மாப்பிள்ளை களை மடிந்து போனது.

உண்மையிலேயே ராதாபாயின் சுயரூபம் அறியாமல் சிக்கிக் கொண்டார் துகோஜி ராவ். ஆனால் அந்தப் பெண்ணைப் பற்றி லேசாகக் கேட்டால் போதும், கோல்ஹாபுர் சமஸ்தான மக்கள் கதை கதையாகச் சொல்லிப் கண்ணீர் வடிக்க ஆரம்பித்து விடுவார்கள். அச்சம், மடம், நாணம், பயிர்ப்புக்குப் பதிலாக அவளது புத்தியில் அகந்தை, கர்வம், தலைகணம், திமிர் நிறைந்திருந்தன. கோல்ஹாபுரின் இளவரசி என்ற செருக்கில் யாரையும் மதிக்காமல் நடந்தாள். எந்நேரமும் ஏதாவது குறை கண்டுபிடித்து வேலைக்காரர்களை வறுத்தெடுப்பாள். தகுந்த காரணமின்றி பொதுமக்களுக்கும் இஷ்டத்துக்குத் தண்டனைக் கொடுத்தாள். அவளது கையில் எப்போதும் சாட்டை ஒன்று சுழன்று கொண்டிருந்தது.

கோல்ஹாபுரில் பிரசித்திபெற்ற மகாலெட்சுமி கோயில் ஒன்று உண்டு. வாரந்தோறும் வெள்ளிக்கிழமை அங்கு செல்வாள் ராதாபாய். அவள் கோயிலுக்குச் சென்று திரும்பும் வரை சாலையில் மக்கள் நடமாட்டமே இருக்கக்கூடாது. அப்படி அவளது கண்களில் யாராவது பட்டுவிட்டால் சாட்டையடிதான். குழந்தைகள், வயதானவர்கள் என்று பேதம் பார்க்க மாட்டாள். பேயாக மாறிவிடுவாள். கோயிலிலும் அவள் வந்து செல்லும்வரை யாரும் நுழையக்கூடாது, பூசாரிகள் தவிர.

இப்படிப்பட்ட உத்தமமான அடங்காப்பிடாரிதான் தன்னுடைய மகாராணியாக வந்து வாய்த் திருக்கிறாள் என்றறிந்த துகோஜி ராவ், தன் தலையெழுத்தை நொந்துகொண்டு குடும்பம் நடத்த ஆரம்பித்தார். புகுந்த அரண்மனையிலும் ராதாபாயின் அடாவடி தொடரவே செய்தது.

துகோஜி ராவ், ஓரளவு அமைதியான மனிதர்தான். நன்கு படித்தவர். கலைகளில் ஈடுபாடு கொண்டவர். மராத்திய மொழிக் கவிஞர். சௌந்தர்ய உபாசகர். ஆனால் ராதாபாயின் அழகை மட்டும் அவரால் ஆராதிக்க முடியவில்லை. இருந்தும் அவர்களுக்கு ஓர் ஆண் வாரிசு பிறந்தது (1910). விக்ரம் சின் ராவ் (Vikram Sinh Rao).

ராதாபாய் அவ்வப்போது தன் பிறந்தகத்துக்குச் சென்று வருவது உண்டு. ஒருமுறை கோல்ஹா புருக்குச் சென்றபோது, தனக்கு ஒப்பனை செய்துவிடுவதற்காக ஒரு பணிப்பெண்ணை நியமித்துக் கொண்டாள். லஷ்மி. அழகில்லாதவர்களை அழகாக்கும் கலை தெரிந்த இயற்கை யான அழகி அவள். லஷ்மியின் கைங்கர்யத்தால், ராதாபாய் ரதியாக ஜொலித்தாள். அவளுக்கு லஷ்மியை மிகவும் பிடித்துப் போனது. 'நீ என்னுடனேயே வந்துவிடு' என்று அவளை அழைத்துக் கொண்டு திவாஸ் சீனியருக்குக் கிளம்பினாள் ராதாபாய்.

எப்போது வரும், எப்படி வரும் என்று யாருக்கும் தெரியாது. ஆனால் வர வேண்டிய நேரத்தில் கட்டாயம் வருமே. துகோஜி ராவுக்குள் புகுந்து அவரைப் புரட்டிப் போடக் காத்திருந்தது

காதல். பிறந்தகம் சென்று திரும்பிய மகாராணியைப் பார்க்க அறைக்குள் நுழைந்தார் துகோஜி ராவ். ராதாபாய்க்கு ஒப்பனை செய்து கொண்டிருந்தாள் லக்ஷ்மி. ஒப்பனையில்லாத அவளது ரம்யமான முகத்தைப் பார்த்ததுமே துகோஜி ராவுக்குள் இனம்புரியாத சந்தோஷ ஊற்று. 'யாராக இருப்பாள் இவள்? புதிய வேலைக்காரி போல. ம்ஹூம், பார்த்தால் வேலைக்காரி போலவா தெரிகிறது. மகாராணி போலல்லவா மிளிர்கிறாள்! முகத்தில் என்ன ஒரு லட்சணம். இளமையின் இறுமாப்பு அவளது கண்களில் என்னமாய்த் தெரிகிறது. என் அரண்மனைக்குள் இப்படி ஒரு தேவதையா! எனக்கும் மனைவி என்று ஒருத்தி வந்து வாய்த்திருக்கிறாளே, ராட்சஸி!'

அதற்குமேல் அங்கு நின்று வேலைக்காரியின் அழகைப் பருகிக் கொண்டிருந்தால் ராதா, தாதா ஆகிவிடுவாள் என்று உணர்ந்திருந்த துகோஜி ராவ், தன் மனைவியிடம் பொத்தாம் பொதுவாகக் குசலம் விசாரித்துவிட்டு அங்கிருந்து கிளம்பினார். போகிற போக்கில் லக்ஷ்மி மீது ஒரு பார்வையை வீசினார். அவளும் பதிலுக்குக் கண்களாலேயே சிரித்து வைத்தாள்.

அதுவே துகோஜி ராவுக்குப் போதுமான தெம்பைக் கொடுத்தது. 'கிளி சிக்கிவிடும் போலிருக்கிறது. விடாதே, வலைவீசு' என்று அவருக்குள்ளிலிருந்து குரல் கொடுத்தான் மன்மதன். தன் மனைவிக்குத் தெரியாமல் லக்ஷ்மியைச் சந்திப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். சந்தித்தார். சிந்திக்கவே இல்லை. 'தந்துவிட்டேன் என்னை' என்று சரணடைந்தார்.

அந்தக் காதலர்களின் திரைமறைவுச் சந்திப்புகள் தொடர்ந்தன. ராதாபாய் மீது இருந்த வெறுப்பை எல்லாம், லக்ஷ்மி மீது பாசமாகக் கொட்டினார் துகோஜி ராவ். நாளடைவில் லக்ஷ்மியின் நடவடிக்கைகளில் ராதாபாய்க்குச் சந்தேகம் ஏற்படவே, அதிரடியாக விசாரிக்க ஆரம்பித்தாள். அவளது மிரட்டலுக்குப் பயந்த அரண்மனைப் பணியாளர்கள், நடுங்கிக் கொண்டே பூனைக்குட்டியை வெளியே விட்டார்கள்.



கோல்ஹாபூர் மகாராஜாவும், சில வேலைக்காரர்களும்

‘என்ன நினைச்சுக்கிட்டு இருக்கீங்க நீங்க?’ என்று தன் கணவரோடு வார்த்தைகளால் மல்யுத்தம் செய்யக் களமிறங்கினாள் ராதாபாய். ஆனால் துகோஜி ராவுக்கு மனைவியிடம் இருந்த பயத்தைவிட, லஷ்மி மீதிருந்த காதல் அதிதீவிரமாக இருந்தது. ‘இப்ப என்னாங்கிறே? ஆமா, நான் அவளை ஆசைநாயகியா வைச்சிருக்கேன். ஒரு மகாராஜா வாழ்க்கையில் இதெல் லாம் சகஜம்’ என்பதுபோலப் பதிலளித்தார். அடுத்த சில தினங்களில் லஷ்மியைத் திருமணமும் செய்துகொண்டார்.

ராதாபாய்க்கு கோபம் குப்பென்று கூடியது. தான் அழைத்து வந்த வேலைக்காரி, தன் இடத் துக்கே வேட்டு வைப்பாள் என்பதை அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. தன் மகன் விக்ரமை அங்கேயே விட்டுவிட்டு, ராதாபாய் மூட்டை முடிச்சுகளுடன் கோல்ஹாபுருக்குக் கிளம்பி னாள். அங்கு நுழைந்ததுமே ஒப்பாரியை ஆரம்பித்தாள். ‘அடுத்தவர்களை அழவைத்தே பழகியவள், இப்படி அழுது கொண்டிருக்கிறாளே, என்னவாக இருக்கும்?’ என்று அவளது தந்தை சாகு போன்ஸ்லே காது கொடுத்தார். விஷயமறிந்ததும் வீறுகொண்டு எழுந்தார். சாதுர்யமாகக் காய்களை நகர்த்த ஆரம்பித்தார், தன் மருமகனுக்கு எதிராக.

சாகு போன்ஸ்லேவுக்கு பிரிட்டிஷ் அரசு அதிகாரிகளிடம் செல்வாக்கு அதிகம். 19 குண்டு மரியாதை கொண்ட சற்றே பெரிய சமஸ்தானம் என்பதால் அவரது பேச்சுக்கு மதிப்பு சற்றுத் தூக்கலாகவே இருந்தது. ‘திவாஸ் சீனியர் மகாராஜா என் மருமகன்தான். அவர் போக்கு சுத்தமா சரியில்லை. பெண்பித்து பிடிச்சுத் திரியறாரு. நிர்வாகத்துல ஏகப்பட்ட குழறுபடி. சமஸ்தானத்தோட நிலைமை சரிசெய்ய முடியாத அளவுக்குச் சீரழிஞ்சுக்கிட்டு இருக்கு. கொஞ்சம் விசாரிங்க’ போட்டுக் கொடுத்தார் மாமனார் மகாராஜா.

அடுத்த சில தினங்களிலேயே, அரசின் முதன்மைச் செயலாளர் பி.ஜே. கிளான்ஸியிடமிருந்து (B.J. Glancey) துகோஜி ராவுக்குக் கடிதம் ஒன்று சென்றது. ‘உங்கள் நிர்வாகம் குறித்து ஏகப்பட்ட புகார்கள். அரசு அங்கீகரிக்காத உங்கள் இரண்டாவது மனைவிக்கு நீங்களே மகாராணி அந்தஸ்து கொடுத்துள்ளதாகத் தெரிகிறது. அரசின் சட்டதிட்டங்களுக்கு விரோதமாக நடந்து கொண்ட உமக்கு இரண்டே வாய்ப்புகள். ஒன்று, மரியாதையாகப் பதவி விலகிவிடுங்கள், இல்லையென்றால் நாங்கள் அமைக்கும் கமிஷனின் விசாரணைக்கு உட்பட்டு, அது கூறும் முடிவுப்படி நடந்துகொள்ளுங்கள்.’

அதிர்ந்துபோனார் துகோஜி ராவ். சுப்ரீம் கோர்ட் வக்கீலான தாவாக்லே (Tawakkley) என்பவர், உடனே டெல்லியிலிருந்து வரவழைக்கப்பட்டார். திவாஸ் சீனியரில் பிரபா விலாஸ் என்ற மாளிகையில் தங்க வைக்கப்பட்டார். பகல் முழுவதும் மகாராஜாவின் அழைப்புக்காகக் காத்திருந்தார் அவர். இரவு பன்னிரண்டு மணியளவில் தாவாக்லே தறிகெட்டுத் தூங்க ஆரம்பித்திருந்த சமயத்தில் மகாராஜாவிடமிருந்து அழைப்பு வந்தது. தூக்கக் கலக்கத்தோடு அரண்மனைக்குச் சென்றார் அந்த வக்கீல்.

அரண்மனையில் சிறிய அறை ஒன்றில், ஓரமாக ஒடுங்கி உட்கார்ந்திருந்தார் துகோஜி ராவ். தாவாக்லேயிடம் அரசின் கடிதத்தைக் காண்பித்து, தன்னைச் சுற்றி பின்னப்பட்டிருக்கும் சதி வலை பற்றி பக்கம் பக்கமாகப் புலம்பினார். எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட தாவாக்லே, ‘மகாராஜா, கமிஷன் விசாரணைன்னு சொல்லி உங்களைப் படுத்தி எடுப்பாங்க. கடைசியில அவங்களும் பதவி விலகத்தான் சொல்லுவாங்க. அதுக்கு முன்னாடி நீங்களே,

உங்க மகனை ஆட்சியில உட்கார வைச்சிட்டு பதவி விலகிடலாம்னு எனக்குத் தோணுது' என்றார்.

'வக்கீலய்யா, பதவி விலகுறதுல எனக்குச் சம்மதம்தான். ஆனா அந்தச் சண்டாளி ராதா பாய்க்குப் பிறந்த புள்ளை விக்ரம் பதவிக்கு வர்றதுல எனக்கு விருப்பம் இல்ல. என் காலத்துக்குப் பிறகு அவன் அரியணை ஏறுறது பத்தி எனக்கு அக்கறையில்ல. இப்போதைக்குத் தப்பிக்கறதுக்கு ஏதாவது வழி சொல்லுங்க' கேட்டார் துகோஜி ராவ்.

'பாண்டிச்சேரிக்குத் தப்பிச்சுப் போயிருங்க. பிரெஞ்சு அரசாங்கம்தான். நல்லவங்க. கண்டிப்பா அடைக்கலம் தருவாங்க. கொஞ்ச நாள் அங்கேயே இருந்துக்கோங்க.'

அந்த யோசனை துகோஜி ராவுக்குச் சரியாகப்பட்டது. அடுத்த நாளே அறிவிப்பு ஒன்றை வெளியிட்டார். 'என் இனிய மக்களே, தென்னிந்திய புனித யாத்திரைக்குக் கிளம்புகிறேன்.' நிர்வாக கவுன்சில் ஒன்றை உருவாக்கி, சமஸ்தானத்தின் ஆட்சிப் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்தார். கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் மெட்ராஸை நோக்கிக் கிளம்பினார்.

பாண்டிச்சேரியை அடைந்தார். விருந்தினர் மாளிகை ஒன்றில் தங்கிக் கொண்டார். மகாராஜா சார்பாக வக்கீல் தாவாக்லே பாண்டிச்சேரியின் பிரெஞ்சு கவர்னரைச் சந்தித்தார். துகோஜி ராவின் நிலைமையை எடுத்துச் சொன்னார். 'அய்யா, மகாராஜா இங்க தங்குறதுல எதுவும் சட்டச் சிக்கல் வந்துடாதே?'

'அட, அவரு என்ன கொலையா பண்ணிட்டு வந்திருக்காரு? இன்னொரு கல்யாணம்தானே பண்ணிக்கிட்டாரு. எவ்வளவு நாள் வேணும்னாலும் தாராளமாத் தங்கிக்கட்டும். எங்களை மீறி இங்க யாரும் அவரை ஒண்ணும் பண்ண முடியாது. அவருக்குப் பண உதவி வேணும் னாலும் நாங்க பண்ணுறோம்' - கவர்னர் பால் வார்த்தார்.

சில நாள்களில் இந்தியாவின் வைஸ்ராயிடமிருந்து துகோஜி ராவுக்குக் கடிதம் ஒன்று வந்தது. 'ஒழுங்கு மரியாதையாக சமஸ்தானத்துக்குத் திரும்பி வரவும். இல்லையென்றால் பிரிட்டிஷ் அரசு திவாஸ் சீனியரின் நிர்வாகத்தைக் கையில் எடுத்துக் கொள்ளும்.' துகோஜி ராவ் அசர வில்லை. சுடச்சுட பதில் அனுப்பினார். 'என்னால் எப்போது இயலுமோ அப்போதுதான் சமஸ்தானத்துக்குத் திரும்புவேன். நான் இல்லாத சமயத்தில் நிர்வாகத்தைக் கவனிக்க கவுன்சில் அமைத்துவிட்டுத்தான் வந்திருக்கிறேன். ஆகவே என் சமஸ்தானத்தின் ஆட்சி அதிகாரத்தைக் கையில் எடுக்கும் உரிமை யாருக்குமில்லை.'

பிரிட்டிஷ் அரசால் ஒன்றும் செய்யமுடியவில்லை. மூன்று வருடங்களுக்கும் மேலாகப் பாண்டிச்சேரியிலேயே பொழுதைக் கழித்தார் துகோஜி ராவ். 1937 டிசம்பர் 21 அன்று இறந்துபோனார். அதற்குப் பின்புதான் விக்ரமால் அரியணை ஏற முடிந்தது.

1947ல் திவாஸ் சீனியர் இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டது. ஜூன் 27, 1948ல் இந்தியாவுடன் ஒன்றிணைக்கப்பட்டது.



# குயின் விக்டோரியாவும் சில சர்ச்சைகளும்

இந்தியாவின் பேரரசி என்றழைக்கப்பட்ட விக்டோரியா இறந்து போயிருந்தார். லண்டன் அந்த ஒரு வாரமாகத் துக்கம் கொண்டாடிக் கொண்ருந்தது. லட்சக்கணக்கானோர் இறுதி மரியாதை செலுத்திக் கொண்டிருந்தார்கள். அது 1901, பிப்ரவரி 2, சனிக்கிழமை. அன்றுதான் குயின் விக்டோரியாவின் இறுதிச் சடங்குகளுக்கான நாள் குறிக்கப்பட்டிருந்தது.

விக்டோரியாவுக்குப் பொதுவாகக் கருப்பு நிறம் பிடிக்காது. துக்க நிகழ்ச்சிகளுக்காகக் கருப்பு உடை அணிந்து சடங்குகள் செய்வதைக் கூட 'வேண்டாம்' என்பார். ஆகவே இறுதிச் சடங்கில் கலந்து கொள்ள வந்திருந்தவர்கள் வெள்ளை, பர்ப்பிள் நிற உடைகளை அணிந்திருந்தார்கள்.

'இன்றைக்கும் முன்ஷி வந்திருக்கிறார். உங்களைப் பார்க்க வேண்டும் என்று அதிகாலையிலிருந்தே காத்திருக்கிறார்' - ஏழாம் எட்வர்டுக்குத் தகவல் போனது. எட்வர்ட், விக்டோரியாவின் மூத்த மகன். அடுத்து கிங் ஆக அரியணை ஏற இருந்தவர். முன்ஷியின் பெயரைக் கேட்டதுமே எட்வர்டின் முகம் சுருங்கிப் போனது. நீண்ட யோசனைக்குப் பின் 'வரச்சொல்' என்றார்.

அடுத்த சில நிமிடங்களில் முன்ஷி, எட்வர்டின் முன் அடக்கமாக நின்று கொண்டிருந்தார். 'என்ன வேண்டுமாம் இவருக்கு?' எட்வர்டின் குரலில் கடுமை.

'பேரரசியின் முகத்தை இறுதியாக ஒரே ஒருமுறை பார்க்க அனுமதி வேண்டும். கருணை காட்டுங்கள்' முன்ஷி, குரல் உடைந்து அழ ஆரம்பித்தார். 'இவரை



முன்ஷி

அங்கு அழைத்துக் கொண்டு செல்லுங்கள். கவனம்' ஒருவழியாக எட்வர்ட் அனுமதி கொடுக்கவும், விக்டோரியாவின் உடல் வைக்கப்பட்டிருந்த இடத்தை நோக்கி ஓட்டமும் நடையுமாகச் செல்ல ஆரம்பித்தார் முன்ஷி.

யார் இந்த முன்ஷி?

அப்துல் கரீம் என்ற பெயர் கொண்ட இந்தியர். முன்ஷி என்று குயின் விக்டோரியாவால் செல்லமாக அழைக்கப்பட்ட பாசத்துக்குரிய பணியாளர். பக்கிங்ஹாம் அரண்மனையின் வேலைக்காரராக நுழைந்து குயினின் காரியதரிசியாகப் பதவி உயர்வு பெற்ற விசுவாசி. ஆனால் விக்டோரியா தவிர மற்றவர்களுக்கு முன்ஷியைப் பிடிக்காது.

காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் லண்டன், பக்கிங்ஹாம் அரண்மனைக்குள் செல்ல வேண்டும். விக்டோரியாவின் இளவயதிலிருந்தே கதையை ஆரம்பிப்பது வசதி.

1819, மே 24 அன்று லண்டன் கென்ஸிங்டன் அரண்மனையில் புதிதாகப் பிறந்த குழந்தையின் அழுகுரல் சத்தம். பெண் குழந்தை. அலெக்ஸாண்டிரினா விக்டோரியா. கிங் மூன்றாம் ஜார்ஜின் பேத்தி. கிங்கின் நான்காவது மகனான அகஸ்டஸின் மகள். விக்டோரியா பிறந்த அடுத்த வருடமே அகஸ்டஸ் இறந்துபோனார். அதற்கு அடுத்த வாரமே கிங்கும்.

அதைத் தொடர்ந்தும் பிரிட்டிஷ் ராஜ குடும்பத்தில் ஏகப்பட்ட இழப்புகள். மூன்றாம் ஜார்ஜுக்குப் பின் பதவிக்கு வந்த அவரது இன்னொரு மகன் நான்காம் ஜார்ஜும் 1830ல்



குமரி விக்டோரியா

மரணத்திடம் சேர்ந்தார். பிரிட்டிஷ் ராஜ குடும்பத்து வாரிசுகள் பலரும் சிறு வயதிலேயே இறந்து கொண்டிருந்த சமயத்தில், மூன்றாம் ஜார்ஜின் இளைய மகன் நான்காவது வில்லியம், கிங் ஆனார்.

வில்லியமுக்கு ஏகப்பட்ட குழந்தைகள் உண்டு. ஆனால் எல்லாமே அவரது ஆசை நாயகிக்குப் பிறந்தவை. செல்லாத வாரிசுகள். எனவே வில்லியமுக்கு அடுத்த ராஜ வாரிசாக விக்டோரியா மட்டுமே எஞ்சியிருந்தார். வில்லியமும் பெரும் வியாதிகளுடனேயே காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தார். விக்டோரியாவுக்குப் பதினெட்டு வயது ஆகிவிட்டால் பொறுப்பிலிருந்து விடுபட்டுக் கொள்ளலாம் என்பதே அந்தப் பாசாக்கார சித்தப்புவின் நினைப்பாக இருந்தது.

அதேபோல விக்டோரியாவின் வயது பதினெட்டைத் தொட்ட சில வாரங்களிலேயே சித்தப்பு வில்லியம், இதய நோயால் இறைவனடி சேர்ந்தார். துக்கம் எல்லாம் கொண்டாடி முடித்து விட்டு 1837, ஜூன் 28 அன்று குயின் ஆனார் மிஸ். விக்டோரியா.

விக்டோரியாவின் மனத்தில் ஒருவர் இடம் பிடித்திருந்தார். உறவுக்காரர்தான். தாய்மாமன் மகன். இளவரசர் அல்பர்ட். ஒரு வருடத்துக்கு முன் அல்பர்ட்டைப் பார்த்தபோதே, விக்டோரியாவுக்குள் தம்தனதம்தனதம்தன. மீண்டும் அல்பர்ட்டைச் சந்திக்கும் வாய்ப்பு, 1839ல் அமைந்தது. காதலைச் சொல்வதில் ஆண்களைவிடப் பெண்கள்தானே முந்திக் கொள்வார்கள். அல்பர்ட் - விக்டோரியாவின் விஷயத்திலும் அதுதான் நடந்தது. இங்கிலாந்து குயினின் திருமணம் இனிதே நடந்தது.

'இப்படி ஒரு ரம்மியமான மாலைப்பொழுதை நான் இதற்கு முன் அனுபவித்ததே கிடையாது. அவருடன் இருக்கும்போது சொர்க்கத்தை உணர்ந்தேன். அவர் என் கரங்களை இறுகப் பற்றிக் கொண்டார். இருவரும் மாறி மாறி முத்தமிட்டுக் கொண்டே இருந்தோம்' - தினமும் டைரி எழுதும் பழக்கம் வைத்திருந்த விக்டோரியா, தன் முதல் இரவு பற்றி எழுதிய குறிப்புதான் இது.

அப்போதைய ஆளும் கட்சியாக இருந்த விக் (Whig) கட்சியினரால், அனுபவமே இல்லாத விக்டோரியாவை குயினாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இன்னொரு முக்கியக் கட்சியான டோரிஸ் (Tories) கட்சியினருக்கும் குயினுடன் சில விஷயங்களில் மனஸ்தாபம் ஏற்பட்டிருந் தது. இப்படி விக்டோரியாவுக்கு அரசியல் எதிரிகள் அதிகமாகிக் கொண்டே போனார்கள்.

விக்டோரியா, வயிற்றில் தன் முதல் குழந்தையைச் சுமந்து கொண்டிருந்தார். அன்று, அல்பர்ட்டுடன் சேர்ந்து குதிரை வண்டியில் கிளம்பினார். திடீரென்று பாதையில் பாய்ந்து குறுக்கே வந்த ஆக்ஸ்போர்ட் என்ற இளைஞன், விக்டோரியாவை நோக்கி இருமுறை சுட்டான். குறிகள் தப்பின. அதற்குள் ஆக்ஸ்போர்டைக் காவலர்கள் வளைத்திருந்தார்கள். விக்டோரியாவுக்கு பாதிப்பு எதுவும் இல்லை. முதல் குழந்தை பெண் வாரிசாகப் பிறந்தது.

அடுத்த சில வருடங்களில், விக்டோரியா மீது மேலும் சில கொலை முயற்சிகள். எல்லாவற்றி லிருந்தும் தப்பினார். எதற்கும் அலட்டிக் கொள்ளவில்லை. ஒரு குயினாக தன் பணிகளைத் தொடர்ந்தார். ஒரு மனைவியாக, அல்பர்ட்டுடனான அவரது தாம்பத்ய வாழ்க்கையும் தங்கு தடையின்றி நல்லபடியாகவே சென்று கொண்டிருந்தது. திருமணமான பதினைந்து வருடங் களில் ஒன்பது குழந்தைகள்.

இருக்கட்டுமே, தாம்பத்யம் சலிக்கவில்லை. ஆனால் எப்போது பார்த்தாலும் ஏதாவது ஒரு குழந்தை எதையாவது கேட்டு அழுதுகொண்டே இருந்ததால், இரவுகள் இனிமையை இழந் திருந்தன. 'இனியும் கர்ப்பமாவது உங்கள் உடல்நிலையைப் பாதித்துவிடும்' என்று மருத்து வர்களும் குயினுக்கு அறிவுரை சொல்லியிருந்தார்கள். ஆகவே தம்பதிகள் பழைய சந்தோஷங் களைத் தியாகம் செய்ய வேண்டியதிருந்தது.

1861, டிசம்பர். டைஃபாய்டு காய்ச்சல் வந்து அவதிப்பட்ட அல்பர்ட் இறந்துபோனார். விக்டோரியா உடைந்து போனார். பல நாள்கள் யாருடனும் பேசவில்லை. வெளியேவும் வரவில்லை. அந்தச் சமயத்தில்தான் அல்பர்ட்டின் நண்பர்களுள் ஒருவரான ஜான் ப்ரௌன், விக்டோரியாவின் தனி உதவியாளராக வேலைக்குச் சேர்ந்தார். ஜானின் கனிவான பேச்சுகளும் பாந்தமான நடவடிக்கைகளும் விக்டோரியாவுக்கு ஆறுதல் அளிப்பதாக இருந்தது. மீண்டும் குயினாக பழைய கம்பீரத்தைப் பெற்றார். ஆனால் கிசுகிசுக்கள் தினுசு தினுசாகக் கிளம்பின.

'குயினோட புதுப்பேரு என்ன தெரியுமா? மிஸஸ். ஜான் ப்ரௌன். ரகசியமாகக் கல்யாணம் செஞ்சுக்கிட்டாங்களாம்.' விக்டோரியா, ஜானுக்கு அளித்த அதீத சலுகைகளும், சிறப்பு மெடல்களும் இம்மாதிரியான கிசுகிசுக்களை புஷ்டியாக வளர்த்துவிட்டன. தான் எங்கு சென்றாலும் ஜான் ப்ரௌனையும் உடன் அழைத்துக் கொண்டார் விக்டோரியா.

அதே சமயத்தில் பெஞ்சமின் டிஷ்ரேலி (Benjamin Disraeli) இங்கிலாந்தில் பிரதம அமைச்சராகப் பதவியேற்றிருந்தார். பெஞ்சமினையும் விக்டோரியாவுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஏகப்பட்ட பரிசுப் பொருள்களால் பெஞ்சமினைக் கௌரவித்தார். பதிலுக்குப் பெஞ்சமின், விக்டோரியாவின் அழகைப் புகழும் கிளுகிளுக் கவிதைகள் பாடி அசத்தினார். ஆகவே, கிசுகிசுக்கள் மேலும் வளர்ந்தன.

1877ல் விக்டோரியா, இந்தியப் பேரரசியாகப் பதவியேற்றுக் கொண்டார். 1883ல் ஜான் இறந்து போனார். மீண்டும் சோகத்தில் ஆழ்ந்தார் விக்டோரியா. அதுவரை விக்டோரியாவின் அந்தரங்கக் காரியதரிசியாகச் செயல்பட்டு வந்த ஜானின் இடத்துக்கு வேறு யாரைக் கொண்டு வருவது? தன்னைச் சுற்றியிருந்தவர்கள் மேல், குறிப்பாக பிரிட்டிஷார் மேல் விக்டோரியாவுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இந்தியாவிலிருந்து விசுவாசமான வேலைக்காரர்களைக் கொண்டு வருமாறு, இந்தியாவின் முதன்மைச் செயலாளருக்குக் கட்டளையிட்டார். 1887ல் விக்டோரியா குயினாகப் பதவியேற்ற பொன்விழா கொண்டாடப்பட்டது. அதற்குப் பரிசாக இரண்டு இந்திய வேலைக்காரர்கள், பக்கிங்ஹாம் அரண்மனைக்கு அனுப்பி வைக்கப்பட்டார் கள். ஒருவர் முகமது பக்ஷ். இன்னொருவர், ஒல்லியான, உயரமான இருபத்து நான்கு வயது அப்துல் கரீம் (முதலில் பார்த்த முன்ஷி).

1887, ஜூன் 23. புதிய காலைப்பொழுதில் குயினுக்காகக் காத்திருந்தார்கள். குயின் வந்ததும் இருவரும் கால்களில் மரியாதையாக முத்தம் கொடுத்துவிட்டு வேலையை ஆரம்பித்தார்கள். குறிப்பை உணர்ந்துகொண்டு துரிதமாகச் செயல்பட்ட முன்ஷியை விக்டோரியாவுக்கு மிகவும் பிடித்துப் போனது. உணவு பரிமாறுபவராக வேலைக்கு வந்த முன்ஷி, சில மாதங்களிலேயே விக்டோரியாவின் தனி உதவியாளராக மாறிப் போனார்.

இந்தியாவின் பேரரசி என்ற வகையில் விக்டோரியாவுக்கு இந்திய மொழிகள் ஏதாவது தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை வந்தது. ஹிந்தியும் உருதுவும் கற்றுத் தருவதாக

முன்ஷி ஒப்புக் கொண்டார். முன்ஷியிடம் பாடம் படிக்கும்போது குயின், மாணவியாக நடந்து கொண்டார். ஓர் ஆசிரியருக்குரிய மரியாதை கொடுத்தார்.

இப்படி முன்ஷியின் செல்வாக்கு விக்டோரியாவிடம் வளர வளர மற்றவர்களுக்குப் பொறாமை ஏறியது. முன்ஷியின் சொந்த ஊர் ஆக்ரா. அவரது தந்தை ஓர் அரைகுறை வைத்தியர். 'அரசியே, முன்ஷி உங்களிடம் அவனது தந்தை உஸ்ரூதின் ஒரு டாக்டர் என்று சொல்லியுள்ளான். அது பொய். நாங்கள் நேரடியாகப் பார்த்து விசாரித்துவிட்டோம்' என்று போட்டுக் கொடுத்தார்கள். கோபமடைந்த விக்டோரியா, 'நீங்கள் வேறு யாராவது தப்பான நபரைப் பார்த்திருப்பீர்கள்' என்று அந்தக் குற்றச்சாட்டுக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

விரைவில் விக்டோரியாவின் அந்தரங்கக் காரியதரிசியாகப் பதவி உயர்வு பெற்றார் முன்ஷி. தனது குடும்பத்தினரையும் பிரிட்டனுக்கு வரவழைத்தார். அரண்மனை வளாகத்திலேயே அவர்களுக்குத் தங்குமிடம் ஒதுக்கப்பட்டது. குயினுக்கான கோப்புகள் அனைத்தையும் கையாளும் உரிமை பெற்றிருந்தார் முன்ஷி. இந்தியாவில் இந்திய தேசிய காங்கிரஸ் உதயமான பின்பு, பிரிட்டிஷ் அரசுக்கு எதிரான குரல்கள் வலுத்திருந்தன. 'முன்ஷி, ராஜாங்க ரகசியத்தை இந்தியப் பத்திரிகையாளர்களுக்குச் செய்தியாகச் சொல்கிறார்' என்ற குற்றச்சாட்டு சுமத்தப் பட்டது. ஆனால் முன்ஷியின் விசுவாசம் மேல் முழு நம்பிக்கை வைத்திருந்த விக்டோரியா, எந்தவித விசாரணைகளையும் மேற்கொள்ளவில்லை.

தன் காலத்துக்குப் பிறகு முன்ஷி, இந்தியாவில் நிம்மதியாகத் தனதுச் சொந்த மாளிகையில் வாழ வேண்டும் என்று நினைத்தார் விக்டோரியா. ஆகவே, ஆக்ராவிலேயே முன்ஷிக்கென சொந்த வீடு ஏற்பாடு செய்யச் சொல்லி இந்திய வைஸ்ராய்க்குக் கட்டளையிட்டார். நிறை வேற்றப்பட்டது. ஆனால் சலசலப்புகள் எழுந்தன. 'சாதா வேலைக்காரன் ஒருவனுக்கு, அதுவும் இந்தியனுக்கு, குயின் இவ்வளவு சலுகைகள் அளிப்பது சரியே அல்ல.'

விக்டோரியாவின் மகனான எட்வர்ட்டுக்கு, முன்ஷியைச் சுத்தமாகப் பிடிக்காது. எப்படி முன்ஷியை அங்கிருந்து துரத்தலாம் என்று காத்துக் கொண்டிருந்தார். விக்டோரியா படுத்த படுக்கையாகிப் போனார். அப்போதிலிருந்து முன்ஷி விலக்கி வைக்கப்பட்டார். விக்டோரியா எண்பத்தோராவது வயதில் (1901, ஜனவரி 22) இறந்துபோனார். ஆனால் முன்ஷி, விக்டோரியாவுக்கு இறுதி மரியாதை செய்ய, எட்வர்டிடம் போராட வேண்டியதிருந்தது. தனது பிரியத் துக்குரிய எஜமானியின் முகத்தை இறுதியாகப் பார்த்துவிட்டு, மௌனமாகத் திரும்பினார் முன்ஷி.

விக்டோரியா தன் இறுதி ஆசையை எட்வர்ட்டிடம் தெரிவித்திருந்தார். அதன்படி, அவருடைய உடலில் திருமண உடை அணிவிக்கப்பட்டது. கூடவே சவப்பெட்டியில், அல்பர்டின் புகைப் படமும், ஜான் ப்ரௌனின் புகைப்படமும் வைக்கப்பட்டன. (அப்போது விக்டோரியாவின் கையில் இருந்த மோதிரம் ஜானுடைய தாயார் மோதிரம். ஆக, இருவரும் திருமணம் செய்துகொண்டது உறுதி என்று ஒரு சர்ச்சை சமீபத்தில் கிளம்பியுள்ளது.)

முன்ஷி, விக்டோரியாவுக்கும் தனக்கும் இடைப்பட்ட கடிதங்கள், பிற ஆவணங்களை எல்லாம் கொளுத்தி விட்டார். குடும்பத்தோடு ஆக்ரா திரும்பிய முன்ஷி, விக்டோரியா ஏற்பாடு செய்திருந்த வீட்டில் இறுதி நாள்களைக் கழித்தார். விக்டோரியாவுக்கும் தனக்குமான உறவு பற்றி யாரிடமும் வாய் திறக்கவில்லை. 1909ல் இறந்துபோனார்.

# பாட்டியாலா

- பஞ்சாபிய சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1764
- ஆட்சி செய்தவர்கள் : புல்கியான் பரம்பரை
- முதல் மன்னர் : அலா சிங்
- குண்டு மரியாதை : சமஸ்தானத்துக்குள் 19, வெளியில் 17.



# மன்மதனின் விலாசம்!

மன்மதனுக்கு விலாசம் உண்டா?

ஒரு நூற்றாண்டுக்கு முன்பு பஞ்சாப் பக்கம் சென்று கேட்டு இருந்தீர்கள் என்றால் தெளிவாகச் சொல்லியிருப்பார்கள்.

பூபிந்தர் சிங் (எ) மன்மதன்,

மகாராஜா,

லீலா பவன்,

பராதரி தோட்டம் அருகில்,

பூபிந்தர் நகர்,

பாட்டியாலா சமஸ்தானம்.

'வாழ்க்கை, இச்சைகளை எல்லாம் தீர்த்து இன்பமாக வாழ்வதற்கே!' - இதுதான் மகாராஜா பூபிந்தர் சிங்கின் (Bhupinder Singh) கொள்கை, கோட்பாடு, குலவழக்கம் எல்லாம். ஆல்கஹாலையே ஆக்ஸிஜனாகப் பாவித்து வாழ்ந்த அருமையான குடிமகன். அழகான பெண்களை எல்லாம் எப்போதும் ஒரே உன்னத நோக்கத்தில் பார்த்த காதலர். ஒவ்வொரு இரவிலும் உறக்கத்துக்கு முன் உல்லாசத்தின் உச்சத்தை உணரத் துடித்த உத்தமர். மொத்தத்தில் இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இந்திய மகாராஜாக்களில் நெம்பர் ஒன் ப்ளேபாய் இவரே.

தன் இளமைக் காலத்தில் கேளிக்கைகளுக்காகவும் கொண்டாட்டங்களுக்காகவும் பூபிந்தர் சிங் பார்த்துப் பார்த்துக் கட்டிய உல்லாசபுரிதான் லீலா பவன். யாராலும் எளிதாக நுழைந்துவிட முடியாத அளவுக்கு வெளிப்புறத்தில் காவலாளிகளின் கெடுபிடி அதிகம். பாட்டியாலா சாமானியர்களுக்கெல்லாம் எப்போதுமே ஒரு குறுகுறுப்பு உண்டு. 'அப்படி என்னதான் நடக்குது அந்த அரண்மனைக்குள்ள?'

வெளியிலிருந்து எட்டிப் பார்த்தோலோ, அருகிலுள்ள மரத்தில் ஏறிப் பார்த்தாலோ அல்லது முடிந்தமட்டும் எம்பி எம்பிப் பார்த்தாலோ - ம்ஹூம், ஒன்றுமே தெரியாது. அம்மாம்பெரிய இரும்புக் கதவு. அதுவே கண்களுக்குள் அடங்காது. அதுபோக சாமானியர்கள் அந்த இடத்தைக் கடந்துபோக முடியுமே தவிர, நின்று கொண்டிருக்கவெல்லாம் முடியாது. காவலாளிகள் கையிலுள்ள கழியை எறிந்து விரட்டுவார்கள்.

கதவுகளை எப்போதாவது திறக்கும்போது எங்காவது ஒளிந்துகொண்டு பார்த்தாலும் பிர யோசனம் இருக்காது. காரணம், உள்ளே செல்லும் சாலை ஆங்கிலத்தின் கடைசி எழுத்து வடிவில் வளைந்து வளைந்து செல்வது போல அமைக்கப்பட்டிருந்தது. சாலையின் இரு புறமும் சுமார் முப்பது அடிக்கு வளர்ந்து கெட்ட சுவர்கள். சுவரை ஒட்டி, காற்றெங்கும் தைல மணம் பரப்பும் யூகலிப்டஸ் மரங்கள். ஆக, வெளியே நின்று பார்க்கும் யாரும் உள்ளே என்ன என்னவெல்லாம் இருக்கிறது என்று தெரிந்து கொள்ளக்கூடாது என்ற தெளிவான நோக்கத்தில் லீலா பவனின் நுழைவுப் பகுதியை அமைத்திருந்தார் பூபிந்தர் சிங்.

வாசலிலிருந்து உள்ளே நீளும் அந்த வளைவுப் பாதை ஒரு மாபெரும் தோட்டத்தில் சென்று முடியும். பூமணக்கும் மரங்கள், அசத்தும் அரிய தாவரங்கள், சலசலக்கும் நீரோடைகள், ஜிலு ஜிலுக்கும் நீருற்றுகள், சிக்கென்ற சிற்பங்கள், காதல் பேச வசதியாக பெஞ்சுகள், சிறு அறைகள் - காதலர்களுக்கான ஒரு பகுதி எப்படி இருக்க வேண்டுமோ அந்த அம்சம் சற்றும் குறையாமல் செதுக்கப்பட்ட பூங்கா அது. மெத்மெத்தென்ற புல்வெளியைக் கடந்தால், கவித்துவமான ஐரோப்பிய பாணி கட்டடங்கள் கண்ணடித்து வரவேற்கும்.

ஒரு மாளிகை என்றால் வரவேற்பறை, ஹால், உணவு அறை, சமையல் அறை, படுக்கை அறை, படிப்பு அறை, விருந்தினர் அறை, கேளிக்கை அறை என்று சில பல அறைகள் இருக்கும். ஆனால் லீலா பவனை, படுக்கை அறைகளால் நிரம்பிய மாளிகை என்றே சொல்ல லாம். மற்ற அறைகளும் அத்தோடு சேர்ந்து இருந்தன. அதிலும் மகாராஜா பூபிந்தர் சிங்குக்கு என்று தனியே ஒரு பகுதி மாளிகையில் இருந்தது. 'காதல் சேம்பர்' என்றே அதற்குப் பெயர்.

அந்த சேம்பர் என்பது யாரும் எளிதில் நுழைந்துவிட முடியாத பகுதி. அரண்மனைப் பணியாளர்களோ, முக்கிய விருந்தினர்களோகூட அந்தப் பகுதியை நெருங்க முடியாது. பூபிந்தர் சிங், அந்த சேம்பருக்கென நியமித்திருந்த பணியாளர்கள் எல்லாம் நரைகூடிக் கிழப் பருவம் எய்திய பென்ஷன் பார்ட்டிகள். சரியாகக் காது கேட்காது, கண் பார்வை கொஞ்சம்தான் உண்டு, அவ்வளவு வேகமாக நடக்க முடியாது, பேசும்போது வார்த்தை குளறும் - இப்படிப் பட்ட எழுபது ப்ளஸ் தாத்தாக்களையே தேடித் தேடிப் பணியாளர்களாக நியமித்திருந்தார் பூபிந்தர் சிங். காரணம், அங்கு நடக்கும் 'மங்கள காரியங்கள்' எதுவும் வெளியே தெரிந்துவிடக் கூடாது என்ற ஜாக்கிரதை உணர்வு.

எங்கு ஷாப்பிங் சென்றாலும் தனது காதல் சேம்பருக்கென கலைப் பொருள்களைத் தேடித் தேடி வாங்குவது பூபிந்தர் சிங்கின் வழக்கம். பார்த்தாலே உடலுக்குள் பரவச உணர்வைப்

படுவேகமாகப் பரப்பும் சௌந்தர்ய சிலைகள் முதல் ஒய்யார ஓவியங்கள் வரை சலிக்காமல் வாங்குவார். அவற்றைப் பொருத்தமான இடங்களில் வைத்து அழகு பார்ப்பார்.

இப்படியெல்லாம்கூட இருக்கின்றனவா என்று வாய்பிளக்க வைக்கும் வகை வகையான கட்டில்கள் லீலா பவனில் நிரம்பிக் கிடந்தன. தான் புனிதமாக நினைக்கும் படுக்கை அறையின் முக்கியமான பொருளான கட்டிலில் எந்தவித அசௌகரியங்களும் இல்லாமல் பார்த்துக் கொண்டார் பூபிந்தர் சிங். தன் மனத்துக்குத் தோன்றிய விதத்திலெல்லாம் புதிது புதிதாக கட்டில்கள் செய்து அதை உபயோகப்படுத்திப் பார்ப்பதென்பது பூபிந்தர் சிங்கின் பொழுதுபோக்குகளில் ஒன்று. எந்தக் கட்டிலாக இருந்தாலும் சரி, அதில் உபயோகிக்கும் மெத்தை, தலையணைகள், விரிப்புகள் மட்டும் ஒரு குறிப்பிட்ட வண்ணத்தில் இருக்கும்படி பார்த்துக் கொண்டார். வேறென்ன, நீல வண்ணம்தான்.

படுக்கை அறைகளுக்கு அடுத்தபடியாக பூபிந்தர் சிங் பார்த்துப் பார்த்துக் கட்டிய விஷயம் நீச்சல் குளம். தோட்டத்துக்கும் மாளிகைக்கும் இடையே அமைந்த திறந்தவெளி சொர்க்கபுரி. நீச்சல் குளத்தை அமைப்பதற்கு முன்பாகவே அது எப்படியெல்லாம் இருக்கவேண்டும் என்ற தனது கனவைப் பொறியியலாளர்களிடம் விளக்கினார் பூபிந்தர் சிங். அதற்கேற்ப மாதிரி வரைபடங்களை அவர்கள் கொண்டு வந்தார்கள். பின்பு அதில் பல கட்டங்களில் திருத்தங்கள் சொல்லி, பல விஷயங்களை மாற்றி, கூடுதலாகச் சேர்த்து - அய்யோ, அந்தக் குளத்தைக் கட்டி முடிப்பதற்குள் பொறியியலாளர்கள் பொலிவிழந்து போனார்கள். ஆனால் குளம் மிளிர்ந்தது.

எங்கெங்கும் ரகளையான ராஜஸ்தான் உயர்ரக பளிங்குக் கற்கள் பதிக்கப்பட்ட அந்தக் குளத்தில் ஒரே சமயத்தில் நூற்றைம்பது பேர் வரை குளிக்கலாம். சற்று அருகிலேயே உடை மாற்றும் அறைகள். குளத்துக்கு நல்ல நீர் கொண்டு வருவதற்காகப் பிரத்யேகக் கால்வாய். பராமரிப்புப் பணிகளுக்காக டஜன் கணக்கில் வேலையாள்கள். குளத்தின் சுற்றுப் பகுதிகளிலேயே விருந்துகள் நடத்துவதற்காக அனைத்து வசதிகளுடனும் நிறையவே இடம் விடப்பட்டிருந்தது.

குதிக்கலாம். குளிக்கலாம். குடிக்கலாம். கும்மாளமிடலாம். கூத்தடிக்கலாம். எல்லாம் எல்லாம்.

பாட்டியாலாவின் ராஜ பரம்பரையினருக்கான பூர்விக அரண்மனை என்பது தனியாக இருந்தது. அதன் பெயர் மோதி பாக் (Moti Bagh) அரண்மனை. ஆனால் பூபிந்தர் சிங் லீலா பவனைக் கட்டியதன் நோக்கம், தனது மனம்போன போக்கில் எந்தவித இடையூறும் இன்றி வாழ்வதற்காகவும், இஷ்டப்படி விருந்துகள் நடத்துவதற்காகவும் மட்டுமே. அவர் அங்கு நடத்திய விருந்துகளில் பெரும்பான்மையானவை வயது வந்தோர் ரகம்தான்.

எந்தப் பெண்ணாக இருந்தாலும், எப்பேர்ப்பட்ட பெண்ணாக இருந்தாலும் தன் வசப்படுத்தி விடும் கலையில் பூபிந்தர் சிங் கில்லாடி. மகாராஜா என்ற தகுதி போதாதா என்று நினைக்கத் தோன்றும். அந்த அதிகாரத்துக்கு மயங்காத பெண்கள்கூட, பூபிந்தர் சிங்கை நேரில் பார்த்தால் கவிழ்ந்துவிட வாய்ப்புகள் அதிகம். ஆணாக இருந்தால் என்ன, இவரைக் கண்டிப்பாக

வருணித்துத்தான் தீர வேண்டும். கம்பீரமான தலைப்பாகையிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். மிடுக்கான புருவங்கள், சுண்டியிழுக்கும் கண்கள், கிட்டத்தட்ட செங்குத்தாகக் கீழிறங்கும் நீள்மூக்கு, வில்லின் வளைவாக மேலுதடு, நாண் போன்ற கீழுதடு, நிஜமாகவே செவ்விதழ் கள். அந்த உதடுகளின் லட்சணத்தைக் கொஞ்சமும் தொந்தரவு செய்யாத பரிபூரண மீசை. தாடையையும், எழில் கன்னங்களையும் சற்றும் மறைக்காமல் முகத்தில் எல்லையோரப் பகுதிகளில் இருந்து பெருகிப் பரவிய கம்பீர சீக்கியத் தாடி. பெண்கள் விரும்பும் உயரம். உயரத்துக்கேற்ற உறுதியான உடல். நடையிலும் உடையிலும் மிதமிஞ்சிய செருக்கு. இன்ப மான பொழுதில், இளமை ததும்ப ஒரு மகாராஜா நெருங்கிவந்தால் பெண்களின் ஆடாத மனமும் ஆடத்தானே செய்யும்.

ஏராளமான ஆண்கள், அதைவிட அதிகமான பெண்கள், தனது குடும்பத்தினர் சிலர், ஐரோப்பிய விருந்தினர்கள் என்று பூபிந்தர் சிங் அளிக்கும் பொது விருந்துகள் களைகட்டும். இன்னொரு வகை விருந்தும் உண்டு. தான் அந்தச் சமயத்தில் விரும்பும் பெண்ணுக்கென்று தனியாக விருந்து ஏற்பாடு செய்வார் பூபிந்தர் சிங். அந்த விருந்தில் குறிப்பிட்ட பெண்ணோடு, மகாராஜாவுக்கு நெருங்கிய நாலைந்து பேர் மட்டுமே கலந்து கொள்ளுவார்கள். நீச்சல் குளத்தில் ஆரம்பிக்கும் விருந்து எங்கு போய் முடியும் என்று சொல்ல வேண்டுமா என்ன?

கோடை காலத்தில் விருந்து நடக்கும் நாள்களிலெல்லாம் லீலாபவனுக்கு ஐஸ்கட்டி விநியோகம் நடக்கும். தண்ணீர் சூடுமல்லவா. பொது விருந்துகளில் ஐம்பதுக்கும் மேற்பட்ட பெண்கள் ஒயிலான நீச்சல் உடையில் குளத்தில் குளித்துக் கொண்டும், ஐஸ்கட்டிகளின் மேல் அமர்ந்து மது அருந்திக் கொண்டும் இருப்பதை ரசித்துக் கொண்டே இருப்பார் பூபிந்தர் சிங். மிகவும் குஷியாக இருந்தால் தானும் அவர்களோடு சேர்ந்து குளிப்பார். அந்தப் பெண்கள் மீது மது வகைகளை ஊற்றி விளையாடுவார். கரையில் ஒரு பெண்கள் குழுவினர், வாத்தியக் குழுவினர் களோடு சேர்ந்து வாய் வலிக்கப் பாடிக் கொண்டிருப்பார்கள். மேலும் சில சில்க் ஸ்மிதா வகையறா பெண்கள் - வேறென்ன, கெட்ட ஆட்டம்தான்.

மதுவகைகளை, உணவு வகைகளைப் பரிமாறுவதற்குக் கூடப் பெண்களே நியமிக்கப் பட்டிருந்தார்கள். விருந்தினர்கள் என்ற வகையில் மட்டுமே அங்கு ஆண்களுக்கு அனுமதி. மாளிகையின் ஆண் பணியாளர்களும், மற்ற பாதுகாவலர்களும் தோட்டத்துக்கு வெளியே மட்டுமே நிற்க வேண்டும். ஏதாவது அவசரத் தேவை என்றால் பூபிந்தர் சிங், பென்ஷன் பார்ட்டிகளிடம் விஷயத்தைச் சொல்லி அனுப்புவார். பென்ஷன் பார்ட்டிகள், வெளியில் உள்ளவர்களுக்குத் தொலைபேசியில் தகவல் சொல்லுவார்கள். மற்றபடி பிற ஆண்களால் தன்னுயிர்ப் பெண்களுக்கு எந்தவித சேதாரமும் நிகழ்ந்துவிடக் கூடாது என்பதில் பூபிந்தர் சிங் கண்ணும் கருத்துமாக இருந்தார்.

பூபிர்ந்தர் சிங்கைச் சொல்லிக் குற்றமில்லை. எல்லாம் மரபணுக் கோளாறு. அவரது ராஜ பரம்பரையிலேயே பலரும் மன்மத மைனர்களாகத்தான் திரிந்திருக்கிறார்கள். ஆகவே, பூபிந்தர் சிங்கின் பூலோக லீலைகளுக்குள் விலாவாரியாக நுழைவதற்குமுன், அவரது தந்தை ராஜிந்தர் சிங்கின் வரலாற்றைப் பார்த்துவிடுவோம். அவர் வாழ்க்கையிலும் சில தெய்வீகக் காதல் கதைகள் இருக்கின்றன.



# 108

# ‘மதுவும் மாதுவும் என்னிரு கண்கள்!’

பாட்டியாலா என்ற பெயர் எப்படி வந்தது என்று தெரிந்துகொள்ள அந்த வார்த்தையை இரண்டாக உடைக்க வேண்டும். Patti Ala என்றால் Ala's land, அதாவது ‘அலாவின் நிலம்’ என்று பொருள். அலா என்றழைக்கப்படும் அலா சிங்தான் பாட்டியாலா என்ற சமஸ்தானத்தை உருவாக்கியவர்.

புல்கியான் (Phulkian) பரம்பரையைச் சார்ந்த அலா சிங், ஒரு சில கிராமங்களை மட்டும் ஆண்டு வந்த ஜமீந்தார். பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் முகலாயர்களின் இரும்புப் பிடி தளர ஆரம்பித்திருந்தது. தெளிவான சிந்தனையும் தொலைநோக்குப் பார்வையும் கொண்ட அலா சிங், இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு மேலும் சில கிராமங்களைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார். சில சீக்கியர்களோடு கூட்டணி வைத்து தன் எல்லையைக் கொஞ்சம் கொஞ்சமாக விரிவுபடுத்தினார்.

தனக்குப் பின் வரும் சந்ததியினர் நிம்மதியாக, பாதுகாப்பாக வாழ வேண்டும் என்பதற்காக அலா சிங், கோட்டை ஒன்றையும் அதனைச் சுற்றி நகரம் ஒன்றையும் கட்ட ஆரம்பித்தார். 1764ல் உருப்பெற ஆரம்பித்த அந்த நகரம்தான் பாட்டியாலா. அந்தக் கோட்டையின் பெயர் குயிலா முபாரக் (Qila Mubarak). பாட்டியாலா ராஜ பரம்பரையினர் தழைத்தோங்கிய கோட்டை இதுவே.

1765, ஆகஸ்ட் 22 அன்று அலா சிங் காலமானார். அலா சிங்குக்குப் பின் ஆட்சிக்கு வந்தவர் அமர் சிங். அவருக்குப் பிறகு அவரது மகன் சாகிப் சிங். இன்னும் சில பெயர்களை வரிசைப்படுத்திவிடுவது வசதி. கரம் சிங், நரேந்தர்

சிங், மொகிந்தர் சிங். இவர்களெல்லாம் அடுத்தடுத்து பாட்டியாலாவை ஆட்சி செய்தவர்கள். எல்லோருமே நேரடி வாரிசுகள்தான்.

1872, மே 25 அன்று மொகிந்தர் சிங்குக்குப் பிறந்த ஆண் வாரிசு ராஜிந்தர் சிங் (Rajinder Singh). அடுத்த நான்காவது வருடத்திலேயே மொகிந்தர் சிங் கண்களை மூடினார். சொல்லப்போனால் அலா சிங்குக்குப் பிறகு வந்த வாரிசுகள் யாரும் பெருவாழ்வெல்லாம் வாழவில்லை. மொகிந்தர் சிங்கூட இருபத்தைந்தாவது வயதிலேயே இறந்து போனார். மர்மமான முறையில் கொல்லப்பட்டார் என்றுகூட ஒரு சந்தேகம் உண்டு. எது எப்படியோ வாரிசாக அரியணை ஏற இருந்த ராஜிந்தர் சிங்குக்கு அப்போது ஐந்துவயதுகூட ஆகவில்லை. ஆகவே, ஆட்சியைக் கவனித்துக் கொள்ள பிரிட்டிஷ் அரசு நிர்வாகக் குழு ஒன்றை நியமித்தது.

இளவரசர் ராஜிந்தர் சிங், வருங்கால மகாராஜா என்ற செருக்குடனும் அதீத மமதையுடனும் வளர்ந்தார். அதிகாரமும் ஆடம்பரமும் அவரது ரத்தத்திலேயே கலந்திருந்தன. ‘மதுவும் மாதுவும் என்னிரு கண்கள்’ என்று பருவ வயதிலேயே மனத்துக்குள் பதிய வைத்துக் கொண் டார். அந்த இலக்கணம் மீறாமல் உல்லாசமாக வளர்ந்தார். பதினெட்டில் மகாராஜாவாகப் பொறுப்பேற்றுக் கொண்டார்.

ராஜிந்தர் சிங், கல்கத்தாவுக்கு அடிக்கடி செல்லுவார். விருந்துகள், கேளிக்கைகள், விளை யாட்டுகள் எல்லாம் நிரம்பித் ததும்பிய தலைநகரமல்லவா அது. ஒருமுறை அவர் கல்கத்தாவில் ஷாப்பிங்குக்குக் கிளம்பினார். சாதாரணமான உடை. நகைகள்கூட அவ்வளவாக அணிய வில்லை. தோற்றத்தின் டாம்பீகத்தைப் பார்த்து கடைக்காரர்கள் விலையை இஷ்டத்துக்கு ஏற்றிச் சொல்லுவார்கள் என்பதே அந்த எளிமைக்குக் காரணம்.

துணைக்கு யாருமின்றி கடை வீதிக்குள் தனியாக நுழைந்தார். கடை கடையாக ஏறி இறங்கி னார். தனது அரண்மனையில் விதவிதமாக அலங்கார விளக்குளைப் பொருத்தி அழகு பார்க்க வேண்டும் என்பதே அவருடைய ஆசை. ஆனால் அவருக்குப் பிடித்தமாதிரியான விளக்குகள் அதுவரை கண்ணில்படவில்லை. Whitelay Laidlaw & Co., என்ற அலங்காரப் பொருள்கள் விற்கும் கடையைக் கண்டார். பிரிட்டிஷ்காரர் ஒருவரது கடை அது. ஆர்வத்துடன் நுழைந்தார்.

விதவிதமாக கண்சிமிட்டிக் கொண்டிருந்த விளக்குகளைத் தவிர வேறு யாரும் முகம் கொடுத்து வரவேற்கவில்லை. ஆனால் அங்கிருந்த விளக்குகள் எல்லாம் ராஜிந்தர் சிங்கின் மனத்துக்குப் பிடித்த வகையில் இருந்தன. தாமரைபோல மலர்ந்திருந்த விளக்கு ஒன்று மிகவும் பிடித்திருந் தது. தேடிப் பார்த்தார். விலை எதுவும் தென்படவில்லை. சுற்றும் முற்றும் பார்த்தார். பதில் சொல்வதற்கும் யாருமில்லை.

‘யாராவது இருக்கிறீர்களா?’ - கொஞ்சம் சத்தமாகக் கேட்டார். உள்ளிருந்து வெள்ளைக்காரப் பணியாளர் ஒருவர் எட்டிப் பார்த்தார். ‘என்ன வேண்டும்?’ என்பதுபோல லேசாகத் தலை யசைத்தார் அந்தப் பணியாளர்.

‘இந்த விளக்கின் விலை என்ன?’ - ராஜிந்தர் சிங் ஆர்வமாகக் கேட்டார். ஆனால் அந்தப் பணி யாளரின் கண்களுக்கு ராஜிந்தர் சிங், ஒரு சாமானியன் போல தெரிந்தார். ‘இவனெல்லாம் எங்கே வாங்கப் போகிறான். சும்மா பொழுதுபோக்குக்கு உள்ளே வந்து கழுத்தறுக்கிறான்’



மகாராஜா ராஜிந்தர் சிங்

என்று நினைத்துக் கொண்டு பதில் எதுவும் சொல்லவில்லை. கண்டுகொள்ளாமல் உள்ளே சென்றுவிட்டார் அந்தப் பணியாளர்.

ராஜிந்தர் சிங், தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டார். வேறு விளக்குகளைப் பார்வையிட்டார். இன்னொரு விளக்கு அவரைக் கவர்ந்தது. அந்தப் பணியாளர் அங்கே வரவே, 'இதன் விலை என்ன?' என்றார். அந்தப் பணியாளர் அப்போதும் மதிக்கவில்லை. ராஜிந்தர் சிங்கை அலட்சியமாகப் பார்த்துவிட்டு நகர்ந்தார்.

வேகவேகமாகக் கடையின் உரிமையாளரைத் தேடினார் ராஜிந்தர் சிங். அந்த பிரிட்டிஷ் முதலாளி வெளியே கல்லாவில் உட்கார்ந்து இருந்தார். அவரருகே சென்று லேசாகத் தொண்டையைச் செருமிய ராஜிந்தர் சிங், 'என்னைத் தெரிகிறதா?' என்றார்.

'வணக்கம். யார் நீங்கள்?' அமைதியாகக் கேட்டார் அந்த முதலாளி.

'நான் ராஜிந்தர் சிங். பாட்டியாலா சமஸ்தானத்தின் மகாராஜா.'

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அனிச்சையாக எழுந்து நின்றார் அந்த பிரிட்டிஷ் முதலாளி. அவசர அவசரமாக ஒரு நாற்காலியைக் கொண்டு வந்து, ராஜிந்தர் சிங்கை உட்கார வைத்தார். பின்பு 'தங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும் மகாராஜா?' என்றார் பணிவாக.

'உமது கடையிலுள்ள அலங்கார விளக்குகள் எல்லாம் அருமையாக உள்ளன.'

'நன்றி மகாராஜா.'

'இங்கு உள்ள எல்லா விளக்குகளும் எனக்குத் தேவைப்படுகிறது. எல்லாவற்றையும் வாங்கிக் கொள்ளலாம் என்று முடிவெடுத்திருக்கிறேன்.'

'அது என் அதிர்ஷ்டம் மகாராஜா' ஆச்சரியத்தில் முதலாளியின் விழிகளும் அதைவிட அதிகமாக வாயும் விரிந்தன.

'ஆனால்..'

'என்ன வேண்டுமானாலும் கேளுங்கள் மகாராஜா.'

'ஒரே ஒரு நிபந்தனை. உமது கடையில் வேலைக்கு வைத்திருக்கிறீரே ஓர் ஆள். அவன் என்னைக் கொஞ்சமும் மதிக்கவில்லை. மரியாதை தெரியாத அவனை உடனே இங்கிருந்து அடித்துத் துரத்த வேண்டும்.'

'மகாராஜா?'

'நீர் அப்படிச் செய்தால் நான் விளக்குகளை எல்லாம் வாங்கிக் கொள்கிறேன். இல்லையென்றால் இப்போதே கிளம்புகிறேன்.'

'உடனே செய்துவிடுகிறேன் மகாராஜா' - அந்தப் பணியாளர் குனிந்த தலையோடு கடையை விட்டு வெளியேறினார். ராஜிந்தர் சிங் இறுமாப்புடன் மீசையை நீவிவிட்டுக் கொண்டார். கடையிலிருந்த விளக்குகள் எல்லாம் பாட்டியாலா அரண்மனைக்குப் பார்சல் செய்யப்பட்டன. நினைத்ததை முடிப்பதில் அதிரடியான ஆள், ராஜிந்தர் சிங். பெண்கள் விஷயத்திலும் அப்படியே.

ராஜிந்தர் சிங்குக்கு ஜஸ்மீர் கவுர் (Jasmer Kaur) என்ற பெண்ணுடன் முதல் திருமணம் நடந்திருந்தது. 1891, அக்டோபர் 12 அன்று முதல் ஆண் வாரிசும் பிறந்திருந்தது. சென்ற அத்தியாயத்தில் அறிமுகமான பூபிந்தர் சிங்தான். கடமைக்கு ஒரு திருமணம். அந்த மகாராணி மூலம் ஒரு முறையான வாரிசு. ராஜிந்தர் சிங்குக்கு மேற்கொண்டு அந்த மகாராணி மேல் காதலோ கரிசனமோ இருக்கவில்லை. அந்தப்புரத்தை அலங்கரிக்க நிதம் நிதம் புதிய பெண்கள் கிடைக்கும்போது மனைவியை எல்லாம் நினைவில் வைத்திருக்க வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்படவில்லை.

அதுபோக அப்போது அவருக்கு ஐரோப்பியப் பெண்கள் மீது ஆர்வம் முளைத்திருந்தது. அதுவும் குறிப்பாக தனது சமஸ்தானத்தில் சாதாரண வேலை பார்த்துக் கொண்டிருந்த பிரிட்டிஷாரின் குடும்பப் பெண்களுக்கு வலை வீசத் தொடங்கியிருந்தார்.

லாகூர் மத்திய காவல் அலுவலகத்தில் தலைமை குமாஸ்தாவாக வேலை பார்த்தவர் சார்லஸ். அயர்லாந்தைச் சேர்ந்தவர். அவரது மனைவி மின்னி. இருவருக்கும் நான்கு குழந்தைகள். பிரயன் (Bryan) என்ற ஆண் குழந்தை, மூன்று பெண் குழந்தைகள். பிரயனுக்கு சிறு வயது முதலே குதிரைகள் மீது தனி பிரியம். குதிரை வளர்ப்பில், பராமரிப்பில், விளையாட்டுகளில் அனுபவத்தை வளர்த்துக் கொண்ட பிரயனுக்கு பாட்டியாலா சமஸ்தானத்தில் வேலை காத்திருந்தது. பாட்டியாலா குதிரை லாயங்களின் தலைமைக் கண்காணிப்பாளர் பதவி. மாத சம்பளம் ரூபாய் ஐநூறு. தனது மனைவி மற்றும் மூன்று சகோதரிகளுடன் பாட்டியாலாவுக்குக் குடிபெயர்ந்தார் பிரயன் (1890).

பிரயன், குதிரைகளை லாகவமாகக் கையாளும் விதத்தைப் பார்த்த ராஜிந்தர் சிங், ‘எனக்கு போலோ கற்றுக் கொடுக்கிறாயா?’ என்று கேட்டார். சந்தோஷமாகச் சம்மதித்தார் பிரயன். அப்படியே பிரயனிடம் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார். காரணம், பிரயனுக்கு திருமணமாகாத மூன்று சகோதரிகள் இருக்கும் விஷயத்தை மோப்பம் பிடித்திருந்தார் ராஜிந்தர் சிங்.

‘பிரயன், இன்று இரவு நடக்கும் விருந்து பற்றி உனக்குத் தெரியுமல்லவா. உன் மனைவி, சகோதரிகளோடு வந்து விடு’ - ராஜிந்தர் சிங் அன்பொழுக அழைப்பு விடுத்தார். மகாராஜாவின் நேரடி அழைப்பு. மறுக்க முடியுமா? குடும்பத்தோடு விருந்துக்குக் கிளம்பினார் பிரயன். பால் ரூமுக்குள் நுழைந்த பிரயன் வீட்டுப் பெண்கள் மீது பார்வையை ஓடவிட்டார் ராஜிந்தர் சிங். ‘ஓ இவள்தான் அவனது மனைவியா? சுமார்தான். அதோ வெளிர்நீல நிற கவுன் அணிந்து இருக்கிறாளே, யாரவள்? பிரயனின் இரண்டாவது தங்கையா? சரி, அவளது பெயர் என்ன? ஃப்ளோரா. நல்ல பெயர். அவள் மட்டும்தான் ஓரளவு லட்சணமாக இருக்கிறாள். அதனால் என்ன? இளம்பெண்களுக்கு எப்போதுமே என் மனத்திலும் மஞ்சத்திலும் இடமுண்டு.’

பிரயன் இல்லாத சமயம் பார்த்து, ராஜிந்தர் சிங் அவரது வீட்டுக்குள் நுழைந்தார். அவரது மனைவி மட்டுமே வீட்டில் இருந்தாள். இருக்கட்டுமே. அவளும் பெண்தானே. ஆசை வார்த்தைகளை அதிரடியாக எடுத்துவிட்டார். ‘இந்தா வைத்துக் கொள்’ நகைகளையும் பணத்தையும் அள்ளி வீசினார். பிரயனின் மனைவி, அடிபணிய வைக்கப்பட்டாள். அவள் தன் கணவரிடம் விஷயத்தை எடுத்துச் செல்லவில்லை.

ஆகவே மீண்டும் ஒருமுறை சமயம் பார்த்து பிரயன் வீட்டுக்குப் படையெடுத்தார் ராஜிந்தர் சிங். இந்த முறை, அவரது மனத்தில் இருந்த பெண் பிரயனின் மூத்த தங்கை. கல்யாணக்

கனவுகளுடன் இருந்த பெண். ஆசை ஆசையாக ஒரு மகாராஜா நெருங்கினால்? அவளும் அவ்வளவாக எதிர்க்கவில்லை. மகாராஜாவே தன் மணவாளனாக வரும் பாக்கியம் கிடைக்குமென்ற கனவோடு கனிந்தாள்.

பலன் அடுத்த சில மாதங்களிலேயே தெரிந்தது. அவள் கர்ப்பமானாள். 'மகாராஜா, விஷயம் என் புருஷனுக்குத் தெரியாது. நாங்க உங்களைத்தான் நம்பியிருக்கோம். நீங்கதான் இதுக்கு ஒரு தீர்வு சொல்லணும்' - ரகசியமாக ராஜிந்தர் சிங்குக்குத் தகவல் அனுப்பினாள் பிரயனின் மனைவி.

'என்னடா இது வம்பாப் போச்சுது? இதுக்காக அந்தப் பொண்ணை நான் கல்யாணம் பண்ணிக்க முடியுமா என்ன?' தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தார் ராஜிந்தர் சிங். 'அந்த பிரயனுக்கு விஷயம் தெரியாத வரைக்கும் ஆபத்து இல்லை. அவனுக்கு விஷயம் தெரிய வந்துச்சுன்னா, அது பிரிட்டிஷ் அரசுக்கும் தெரிய வரலாம். அவங்களும் என்ன, ஏதுன்னு குடைச்சல் கொடுக்க ஆரம்பிப்பாங்க. எப்படி அதைத் தடுக்கலாம்?'

தனது ஆருயிர் நண்பரும், தோல்பூரின் மகாராஜாவுமான நிஹால் சிங்கின் உதவியை நாடினார். 'நண்பா, அப்படி இப்படி விஷயம், விவகாரம் ஆகிப் போச்சுது. எனக்கு ஒரு யோசனையும் தோணலை. ஏதாவது செஞ்சு, என்னை இந்த பிரச்னையில இருந்து காப்பாத்துப்பா.'

கொஞ்சம் யோசித்த நிஹால் சிங், யோசனை ஒன்றை முன்வைத்தார். ராஜிந்தர் சிங்கின் முகம் பிரகாசமானது.



# பாட்டியாலா ஜீரோ!

'ஒரு பொண்ணு உன்னால கர்ப்பமாகிருச்சு. அது வெளிநாட்டுப் பொண்ணுங்கிறதால எங்க பிரச்னை ஆயிடுமோன்னு பயப்படுற. நம்ம மாதிரி மகாராஜாக்கள் வாழ்க்கையில இதெல்லாம் சகஜம் நண்பா! இதுக்கெல்லாம் ரொம்ப சுலபமா தீர்வு இருக்குது. நான் பார்த்துக்கிறேன். நீ வீணாக் குழப்பிக்காதே.'

தோல்பூர் மகாராஜா நிஹால் சிங்கின் வார்த்தைகள் ராஜிந்தர் சிங்குக்கு ஆறுதல் அளித்தன. 'என்ன தீர்வு?' - ஆர்வமாகக் கேட்டார்.

'அந்தப் பொண்ணுக்கு வேற ஒரு வெளிநாட்டு மாப்பிள்ளையாப் பார்த்துக் கல்யாணம் செஞ்சு வைச்சுடலாம்.'

'அய்யோ, கர்ப்பமா இருக்குற அவளை எவ கட்டிக்குவான்?'

'அட, என்னப்பா பேசுற நீ? கொட்ட வேண்டியதைக் கொட்டுனா, கர்ப்பமானவளைக் கூடக் கட்டுறதுக்கு பல பேரு வரிசையில வந்து நிப்பாங்க!'

'நல்ல யோசனைதான் நண்பா. அப்படிப்பட்ட ஒரு மாப்பிள்ளையையும் நீயே ஏற்பாடு செஞ்சு கொடுத்துட்டா வசதியா இருக்கும்.'

'அவ்வளவுதானே. இப்பவே ஏற்பாடு செஞ்சுடலாம்' - சிறிது யோசித்த நிஹால் சிங், அங்கு மிஸ்டர். வாலஸை (Wallace) வரவழைத்தார். வாலஸ், நிஹால் சிங்கின் அந்தரங்கக் காரியதரிசி. ஐரோப்பியர். அவரிடம் விவகாரத்தை எடுத்துச் சொன்னார் நிஹால் சிங். 'மிஸ்டர். வாலஸ், இந்தாருங்கள். இதில் இருபதாயிரம்

ரூபாய் இருக்கிறது. சந்தோஷமா?' மிகுந்த சந்தோஷத்துடன் வாலஸ் அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டார். பிரயனின் முதல் தங்கைக்கும் வாலஸுக்கும் திருமணம் நடந்தது. 'மகாராஜாவுக்கு எவ்வளவு தங்கமான மனசு. என்னோட தங்கச்சி கல்யாணத்தை அக்கறையோட நடத்தி வைக்குறாரே!' பாசமலராக உருகினார் பிரயன்.

அந்த விவகாரம் முடிவுக்கு வந்தவுடன் பிரயனின் கடைசித் தங்கைக்குத் தூண்டில் போட்டார் ராஜிந்தர் சிங். தனது சகோதரிக்குத் திருமணம் செய்து வைத்தவர் என்ற நல்லெண்ண அடிப் படையில் அந்தத் தங்கையும் மசிந்தாள். மீண்டும் விளைவு விபரீதமாகிப் போனது. அவளும் கர்ப்பமானாள். 'அட, இன்னொரு மாப்பிள்ளைக்கு நான் எங்கே போவேன்?' என்று ராஜிந்தர் சிங், தவித்து நின்ற வேளையில் அந்தச் செய்தி வந்து சேர்ந்தது. 'கர்ப்பம் கலைந்து விட்டது.'

'கவலைப்படாதே, உனக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமைத்துத் தர வேண்டியது என் பொறுப்பு' என்று ஒரு செய்தியை மட்டும் அந்த கடைசித் தங்கைக்கு அனுப்பிவிட்டு, இரண்டாவது தங்கையும் ஓரளவு அழகியுமான ஃப்ளோரியை நோக்கித் தன் பார்வையைத் திருப்பினார் ராஜிந்தர் சிங்.

ராஜிந்தர் சிங், தனது குடும்பத்தில் செய்திருந்த லீலைகள் பற்றி ஃப்ளோரிக்கும் அரசல் புரசலாகத் தெரிந்திருந்தது. இருந்தாலும் தனது சகோதரியின் நலன் கருதி அமைதியாக இருந்தாள். சமயம், சூழ்நிலை, இடமெல்லாம் பார்த்து, ஃப்ளோரியை நெருங்கினார் ராஜிந்தர் சிங். ஒரே ஃபார்முலாதான். நகைகள், பணம், ஆசை வார்த்தைகள், அழகு வருணிப்புகள். கூடவே அவருக்கு ஃப்ளோரி மேல் உண்மையிலேயே கொஞ்சம் காதலும் இருக்கத்தான் செய்தது. ஃப்ளோரி ஆரம்பித்தில் மிரண்டாள். திமிறினாள். கோபப்பட்டாள். குமுறினாள். ஆகவே விலகினார் ராஜிந்தர் சிங்.

மீண்டும் முயற்சி செய்தார். மீண்டும் மீண்டும். ஃப்ளோரி இசைந்தாள். 'நான் உன்னைக் கைவிட மாட்டேன். சமயம் வரும்போது உன்னை பாட்டியாலாவின் மகாராணி ஆக்குவேன்.' ராஜிந்தர் சிங்கின் வார்த்தைகளை பரிபூரணமாக நம்பினாள் ஃப்ளோரி. அவர்களது உறவு வளர்ந்தது. கூடவே ஃப்ளோரியின் வயிறும்.

பலநாள் கள்ளக்காதலனும் ஒருநாள் அகப்பட்டுத்தானே ஆக வேண்டும். ஓர் இரவில் ராஜிந்தர் சிங், அதிக போதையில் நேரம் காலம் தெரியாமல் பிரயனின் வீட்டுக்குள் நுழைந்தார். ஃப்ளோரியாலோ, மற்றவர்களாலோ அவரை வெளியேற்ற முடியவில்லை. தவித்துப் போனார்கள். அத்தனை நாள்கள் தனது குடும்பத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் எதையுமே அறியாத அப்பாவி அண்ணண் பிரயனும் அந்தச் சமயத்தில் வீட்டுக்குள் போதையில் தள்ளாடியபடியே நுழைந்தார். தனது தங்கையின் அறையில் மகாராஜா கிடந்த நிலையைப் பார்த்ததும் பிரயனின் மூளைக்குள் பிரளயம் உருவானது.

அங்கிருப்பது மகாராஜா, தான் அவரிடம் வேலை பார்க்கும் பணியாள் என்பதையெல்லாம் மறந்தார். ராஜிந்தர் சிங்கின் மீது பாய்ந்து அவரது பட்டுச் சொக்காயைப் பிடித்து உலுக்கினார். பதிலுக்கு ராஜிந்தர் சிங்கும் பிரயனின் கழுத்தைப் பிடித்தார். இருவரும் ஒருவரை ஒருவர் சராமாரியாகத் திட்டிக் கொண்டே கட்டிப் புரண்டார்கள். சண்டையிட்டபடியே தெருவுக்கு வந்தார்கள். பிரயனின் குடும்பத்தினர் அவரைப் பிடித்து இழுக்க, தெருவில் உள்ளோர் திமிறிக்

கொண்டிருந்த மகாராஜாவைப் பிடித்துக் கொண்டார்கள். ஒருவழியாகச் சண்டை முடிவுக்கு வந்தது. ராஜிந்தர் சிங்கை அள்ளி அவரது வண்டியில் போட்டு அரண்மனைக்கு அனுப்பி வைத்தார்கள், மரியாதையாக! இதெல்லாம் பிரிட்டிஷ் அரசின் ஒற்றர்கள் வேவு பார்த்துக் கூறிய தகவல்களின்படி, அரசுக் குறிப்பில் பதிவாகியுள்ள தகவல்கள்.

போதை தெளிந்த ராஜிந்தர் சிங், தெளிவாக ஒரு முடிவும் எடுத்திருந்தார். எத்தனை எதிர்ப்பு வந்தாலும் ஃப்ளோரியைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும். அவர் எதிர்பார்த்தது போலவே குடும்பத்தினரும் நெருங்கிய உறவினர்களும் முகம் சுளித்தார்கள். முதலில் ஃப்ளோரி, ராஜிந்தர் சிங்கின் அதிகாரப்பூர்வ ஆசைநாயகி ஆனாள். அரண்மனைக்குள் பிரவேசித்தாள். பிரயனால் தடுக்க முடியவில்லை.

'தன்னோட சொந்தச் சகோதரியை ஏமாத்துன அந்த மகாராஜாவையே கல்யாணம் பண்ணிக்கத் தயாரா இருக்குதே அந்தப் பொண்ணு ஃப்ளோரி, அதைத்தான் புரிஞ்சுக்கவே முடியலை!' பிரிட்டிஷ் வட்டாரங்கள் முணுமுணுத்தன. இருந்தாலும் அவளைத் திருமணம் செய்துகொள் வதற்காக அனுமதி வேண்டி, வைஸ்ராய் லான்ஸ்டௌனுக்குக் (Lansdowne) கடிதம் அனுப்பி னார். ராஜிந்தர் சிங் எதிர்ப்பார்த்தபடியே பதில் வந்தது. 'அனுமதி கிடையாது.'

அடப்போங்கயா உங்கள் அனுமதி யாருக்குத் தேவை. மிஞ்சிப்போனால் என்ன செய்வீர்கள்? திருமணம் செல்லாது என்பீர்கள். அவளுக்கு மகாராணி பட்டம் கொடுக்க மாட்டீர்கள். அவ்வளவுதானே. அந்தப் பட்டத்தைவிட, எனது மனைவி என்ற பட்டம்தான் அவளுக்கு முக்கியம்.

நல்ல நாள் ஒன்றில் ஃப்ளோரிக்கு பஞ்சாபிய பாரம்பரிய உடை உடுத்தப்பட்டது. பாட்டியாலா வின் பரம்பரை நகைகள் சிலவும் அவள் தேகம் ஏறின. சீக்கிய மதச் சடங்குகளின்படி, ஃப்ளோரி மதம் மாறினாள். அவளுக்கு வைக்கப்பட்ட புதிய பெயர் ஹர்மன் கவுர் (Harman Kaur). 1893, ஏப்ரல் 8 அன்று, அவளை சீக்கிய மத முறைப்படியும், இந்து மத முறைப்படியும் ரகசியத் திருமணம் செய்துகொண்டார் ராஜிந்தர் சிங்.

மகாராஜா நிஹால் சிங், தனது ஆருயிர் நண்பருக்காக, தனது தோல்பூர் சமஸ்தானத்தில் தேனிலவு ஏற்பாடுகளைச் செய்திருந்தார். அன்பு மனைவி ஃப்ளோரியுடன், ராஜிந்தர் சிங் பாட்டியாலாவிலிருந்து ரயில் ஏறக் கிளம்பினார். 'அடேய், நம்ம மவராசா, அந்த வெள்ளைக் காரிச்சியைக் கண்ணாலம் கட்டிக்கிட்டாருலே!' செய்தி பாட்டியாலா நகரெங்கும் பரபர வெனப் பரவியது. அவர்கள் ரயில் ஏறுவதற்குள் நிலையத்தில் ஏகக் கூட்டம் கூடிவிட்டது. அப்பாவி மக்கள், வேறென்ன செய்வார்கள்? சந்தோஷமாகக் கையசைத்து மகாராஜாவை வழியனுப்பி வைத்தார்கள்.

ராஜிந்தர் சிங்கின் முதல் மனைவியும் பாட்டியாலாவின் மகாராணியுமான ஜஸ்மீர் கவுர் கடும் வெறுப்பில் இருந்தாள். இருக்காதே பின்னே? கட்டிய கணவன் அந்தப்புரத்தில் ஆயிரத்தெட்டு பெண்களை வைத்திருக்கிறார் என்றால் அதை 'ராஜ மரபு' என்று சகித்துக் கொள்ளலாம். ஆனால் மனைவி ஸ்தானத்தில் இன்னொருத்தியைக் கொண்டு வந்தால் வயிறு எரியாதா என்ன? அதுவும் அந்தப் பெண் வயிற்றை வேறு தள்ளிக் கொண்டு நிற்கிறாள். எங்கே தனது மகனும் இளவரசருமான பூபிந்தர் சிங்குக்கு ஆபத்து வந்துவிடுமோ என்ற நியாயமான பயம் அவளைச் சூழ்ந்து கொண்டது. ஜஸ்மீர் கவுர் தனது எதிர்ப்பைப் பகிரங்கமாகக் காட்டவே,



பாட்டியாலா 0 கார்

அவளை ஓர் அறைக்குள் தள்ளிப் பூட்டினார் ராஜிந்தர் சிங். அவள் வெளியே வரமுடியாதபடி காவலும் பலப்படுத்தப்பட்டது. அல்லும் பகலும் அங்கேயே கண்ணீர் சிந்தி, இடைவிடாது இருமி, காசநோய் முற்றி, முடிவைச் சந்தித்தாள் அவள்.

ஜஸ்மீர் கவுரின் நெருங்கிய உறவினர்கள், இரண்டு வயதுக் குழந்தை பூபிந்தர் சிங்கைத் தமது பாதுகாப்பில் வைத்துக் கொண்டார்கள். இளவரசர். வருங்கால மகாராஜா. யாராலும் எந்த விதத்திலும் ஆபத்து வந்துவிடக்கூடாதே. ஆனால் அந்த ஃப்ளோரிக்கு ஆண் குழந்தை பிறந்துவிட்டால்? அதைத் தனது வாரிசாக மகாராஜா அறிவித்துவிட்டால்? ராஜ குடும்பத்தினர் பயப்படத்தான் செய்தார்கள். ஆனால் ஃப்ளோரியை பிரிட்டிஷ் அரசு எந்தவிதத்திலும் அங்கீகரிக்கத் தயாராகவே இல்லை. அரசு நிகழ்ச்சிகளிலும், மற்ற பொது நிகழ்ச்சிகளிலும் அவள் புறக்கணிக்கப்பட்டாள். அவளுக்கும் அது பெரிய விஷயமாகத் தோன்றவில்லை. காரணம், ராஜிந்தர் சிங் அவளை நெஞ்சாங்கூட்டில் வைத்துத் தாங்கிக் கொண்டிருந்தார்.

கல்கத்தாவில் Granville என்றொரு மாளிகையை வாங்கிப் போட்டார் ராஜிந்தர் சிங். Ceders, Rookwood, Oakover என்று மூன்று மாளிகைகள் சிம்லாவில் அவருக்குச் சொந்த மாக இருந்தன. Oakover மாளிகையின் பால்கனியில் இருந்துகொண்டு பனி படர்ந்த இமய மலையில் அழகை சலிக்காமல் ரசித்துக் கொண்டே இருக்கலாம். சிம்லாவில் இருந்து சற்று தள்ளி சய்ல் (Chail) என்ற இடத்துக்கு அருகில் இன்னொரு அதி ஆடம்பர அழகான மாளிகை யைக் கட்டினார். அந்த மாளிகையை ஒட்டி கிரிக்கெட் மைதானம் ஒன்றையும் உருவாக்கினார். உலகிலேயே மிக உயரமான கிரிக்கெட் மைதானம் அதுவே. இன்றும் அங்கு சிக்ஸர்களும் விக்கெட்டுகளும் புழக்கத்தில் உள்ளன.

இந்தியாவுக்கு முதன் முதலில் மோட்டார் காரை இறக்குமதி செய்த மகாராஜா, ராஜிந்தர் சிங் என்றொரு தகவல் உண்டு. 1892ல் அவர் பவுசாக ஓட்டிய அந்தப் பிரெஞ்சு De boin Bouton காரின் எண் பாட்டியாலா 0. மணிக்கு பதினைந்து கிலோ மீட்டர் செல்லும் திறன் படைத்த அந்தக் காரைப் பார்த்து, பல மகாராஜாக்கள் தேரை விட்டுவிட்டு, காருக்குத் தாவ ஆரம்பித்தார் கள்.

நகைப்பிரியரான ராஜிந்தர் சிங், ஃப்ளோரிக்கு விதவிதமான, ரகரகமான, வகைவகையான நகைகளைத் தேடிப் பிடித்து வாங்கி, சூட்டி அழகு பார்த்தார். அப்படியே அந்த நகைக்கு ஜோடிப் பொருத்தமாகத் தனக்கும் நகைகள் வாங்கிக் குவித்தார். இருவரும் மின்னினார்கள்.

ஃப்ளோரி, பிரசவ நாளுக்காகக் காத்திருந்தாள். தனது அரண்மனையின் அந்தப்புரத்தில் சகல வசதிகளும் செய்து வைத்திருந்தார் ராஜிந்தர் சிங். வெயிலின் சூடு தாக்கக் கூடாது என்பதற்காக அவளது அறையைச் சுற்றிலும் நீர்த் தொட்டிகளை அமைத்துக் கொடுத்தார். தடிமனான பட்டுத் திரைச் சீலைகள் அறையெங்கும் தொங்கின. பிரசவ நாள் நெருங்கியது. ஃப்ளோரியை விரும்பாத அரண்மனைப் பெண்கள் அவளுக்கு ஆண் வாரிசு பிறக்கக்கூடாது என்று வேண்டிய படி இருந்தார்கள். அவர்களது பிரார்த்தனை பொய்த்தது. ராஜிந்தர் சிங்கின் உதடுகளில் பெருமிதப் புன்னகை.

குழந்தை பிறந்த பிறகு ஃப்ளோரியின் நேரமெல்லாம் அதனைக் கவனிப்பதிலேயே கழிந்தது. தனது மகனைக் கவனிக்க புதிய ஆயாக்களை நியமித்தார் ராஜிந்தர் சிங். இருந்தாலும் ஃப்ளோரி, தானே குழந்தைக்கான அனைத்துத் தேவைகளையும் கவனித்துக் கொண்டாள். ஆனால் பால் கொடுப்பதற்கு மட்டும் இன்னொரு பெண்.

ஏழு மாதங்கள் வரை புஷ்டியாக வளர்ந்த அந்தக் குழந்தை, திடீரென நோய்வாய்ப்பட்டது. கடுமையான வயிற்றுப் போக்கு. உடல் மெலிந்தது. பின்பு ஒருநாள் கண் திறக்கவே இல்லை. அவசர அவசரமாக அரசாங்க மருத்துவரை வரவழைத்தாள் ஃப்ளோரி. வந்து பார்த்த மருத்துவர் 'குழந்தை இறந்து பல மணி நேரங்கள் ஆகிவிட்டது' என்றார்.

'அய்யோ, என் குழந்தையை விஷம் கொடுத்துக் கொன்று விட்டார்கள்' - கதற ஆரம்பித்தாள் ஃப்ளோரி.



# 110

# ‘அப்போது’ அவருக்கு வயது பதினைந்து!

பாட்டியாலா சமஸ்தானத்தின் மகாராஜா ராஜிந்தர் சிங்கின் ஆசைக்குரிய மனைவியாக இருந்தாலும் ஃப்ளோரியின் கதறலைக் காது கொடுத்துக் கேட்க யாருமில்லை.

‘எல்லாம் இறந்து போன மூத்த மகாராணியின் சொந்தக்காரர்கள் செய்த சதியாகத் தான் இருக்கும். அந்தச் சதிகாரர்கள்தான் குழந்தைக்குப் பால் கொடுப்பதற்காக நான் நியமித்திருந்த பெண் வழியாகத் திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள். அந்த ராட்சஸி என் செல்லத்துக்குப் பால் கொடுக்கும் முன் தனது மார்புக் காம்பில் விஷம் தடவியிருக்கிறாள். இந்தக் கொடூரமான அரண்மனையில் பிறந்ததைத் தவிர வேறென்ன பாவம் செய்தான் என் மகன்? படுபாவிகள்..’

அத்தனை நாள் அரண்மனையில் நந்தவனமாகத் தெரிந்த அந்தப்புரம், அப்போது மயான பூமியாகத் தெரிந்தது. வேதனை. தனிமை. கண்ணீர். மனத்தளவில் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தாள் ஃப்ளோரி. இளவரசர் பூபிந்தர் சிங்குக்குப் போட்டியாகப் பிறந்த அந்த ஆண் குழந்தை அல்ப ஆயுசில் இறந்தது குறித்து, பாட்டியாலா அரண்மனைவாசிகள் பலர் உள்ளூர சந்தோஷப்பட்டார்கள். அதற்கு முன்பாகவே பூபிந்தர் சிங், பாதுகாப்புக் காரணங்களுக்காக தோல்பூருக்கு அனுப்பி வைக்கப்பட்டிருந்தார். இருந்தாலும் மற்றவர்களுக்கு ஒரு பயம். ஃப்ளோரி இன்னும் அந்தப்புரத்தில்தானே இருக்கிறாள். அவள் மீண்டும் கர்ப்பமாகிவிட்டால்?

ஆனால் அதற்கான வாய்ப்புகளே ஏற்படவில்லை. காரணம் ராஜிந்தர் சிங், ஃப்ளோரிக்கு ஆறுதலாகத் தோள் கொடுக்கவில்லை. அவரையே எப்போதும் இரண்டு பேர் தோள்கொடுத்துத் தூக்கிச் செல்லும் அளவுக்குப் போதையிலேயே ஊறிக் கிடந்தார். தவித்த தனது வாய்க்குக் கூட மது ஊற்றியே பழகிய பரிசுத்தக் குடிமகன் அவர். ஃப்ளோரிதான் அவளது மதுப்பழக் கத்தை ஓரளவுக்குக் கட்டுக்குள் கொண்டு வந்திருந்தாள். ஆனால் அவளே செயலற்றுக் கிடந்த நிலையில் ராஜிந்தர் சிங்கின் உடலுக்குள் மீண்டும் ஆல்கஹால் ஆறு ஓட ஆரம்பித் திருந்தது.

ஃப்ளோரி சில மாதங்கள் சோகம் கப்பிய முகத்தோடு இருந்தாள். அடுத்த சில மாதங்கள் ஏதேதோ உளறிக் கொண்டு இருந்தாள். அடுத்த சில மாதங்கள் மௌனமாகத் திரிந்தாள். பின்பு சித்த பிரமை பிடித்தவள்போல கிடந்தாள். அதற்குப் பின் இறந்தாள்.

முதலில் ராஜிந்தர் சிங்கைத் தெளிய வைத்தார்கள். பின் அவரது ஆசை மனைவியின் இறப்புச் செய்தியைப் புரிய வைத்தார்கள். சோகத்தில் சில கோப்பைகள் அமிர்தம் அருந்திவிட்டு மனைவியின் சடலத்தைப் பார்க்கச் சென்றார். அவளது படுக்கையை மலர்களாலும் நகை களாலும் நிரப்பினார். இறுதிச் சடங்குகளை முறைப்படி நடத்த உத்தரவிட்டார். அப்படியே நடத்தப்பட்டது. ஃப்ளோரி இறந்த துக்கத்தை வெளிப்படுத்தும் விதமாக, ராஜிந்தர் சிங், நூறு வெள்ளை மயில்களைப் பிடித்து பலி கொடுத்தார் என்றும் ஒரு தகவல் உண்டு.

ஃப்ளோரி இறந்த சில தினங்களிலேயே ராஜிந்தர் சிங், அவளது நகைகளை எல்லாம் தோல்பூர் மகாராஜாவிடம் கொடுத்தார். 'இது ஃப்ளோரியின் ஆசை. அவள் விருப்படிதான் செய்தேன்' என்று பிரிட்டிஷாரிடம் விளக்கம் சொன்னார் ராஜிந்தர் சிங். ஆனால் அவர் தோல்பூர் மகாராஜாவிடம் எக்கச்சக்கமாகப் பணம் வாங்கியிருந்ததும், அதற்குப் பதிலாகத்தான் நகை களைக் கொடுத்தார் என்பதும் பின்பு விசாரணையில் தெரிய வந்தது.

ஃப்ளோரி இறந்து ஐந்து வருடங்கள் ஆகியிருந்தன. ராஜிந்தர் சிங்கின் உயிர் கொஞ்சம் கொஞ்சமாக ஆல்கஹாலில் கரைந்து கொண்டிருந்தது. 'மகாராஜா இளவரசரை இங்கேயே அழைச்சுட்டு வந்துடலாமா? தோல்பூர் இந்து சமஸ்தானம். அவங்க கும்புடுற சாமியெல்லாம் வேற. நம்ம சீக்கிய இளவரசரையும் அவங்க மதம் மாத்திருவாங்களோன்னு பயமா இருக்குது. ஏற்கெனவே 'தோல்பூர்ல நம்ம இளவரசோட முடியை வெட்டிட்டாங்க'ன்னு ஆளாளுக்குத் தப்பா பேசிக்கிட்டு இருக்காங்க. அதான்...'

இளவரசர் பூபிந்தர் சிங், மீண்டும் பாட்டியாலாவுக்கு அழைத்து வரப்பட்டார். ஒருநாள் ராஜிந்தர் சிங் குதிரை ஏறி மப்பும் மந்தாரமுமாகக் கிளம்பினார். கொஞ்ச தூரத்திலேயே குதிரை திமிற, அடக்க முடியாமல் தட்டுத் தடுமாறிக் கீழே விழுந்தார். எழ முடியவில்லை. மரண அடி. சில நாள்களில் இறந்துபோனார் (நவம்பர் 1, 1900).

பாட்டியாலா பரம்பரைக்கே உரிய சாபக்கேடு. இளவயதுச் சாவுகள். இறந்தபோது ராஜிந்தர் சிங்கின் வயதுகூட இருபத்தெட்டுதான். பட்டத்து இளவரசர் பூபிந்தர் சிங்கின் வயது வெறும் ஒன்பது. அரியணை ஏறத் தகுதியில்லாத வயது. என்ன செய்ய? யோசித்த பிரிட்டிஷ் அரசு அருகிலுள்ள நபா, ஜிந்த் சமஸ்தான மகாராஜாக்களை அழைத்து ஆலோசனை செய்தது. (பாட்டியாலா, நபா, ஜிந்த் மூன்றுமே சீக்கிய சமஸ்தானங்கள். மூன்று ஆட்சியாளர்களுமே புல்கியான் என்ற பரம்பரையைச் சார்ந்தவர்கள். பாட்டியாலா குறித்து ஏதாவது முடிவெடுக்க

வேண்டுமென்றால், மற்ற இரண்டு சமஸ்தான மகாராஜாக்களை ஆலோசிப்பது பிரிட்டிஷ் அரசின் வழக்கம். மற்ற சமஸ்தானம் குறித்த விஷயங்களுக்கும் அப்படியே.)

மற்ற இரண்டு சமஸ்தான மகாராஜாக்கள் சிபாரிசு செய்த நபர்கள் அடங்கிய நிர்வாக கவுன்சில் ஒன்று பாட்டியாலாவுக்காக அமைக்கப்பட்டது. சரி, தாய் தகப்பன் இல்லாத இளவரசர் பூபிந்தர் சிங்கை எப்படி வளர்க்கலாம்? எஞ்சியிருக்கும் ஒரே வாரிசு. பதினெட்டு வயதில் அரியணை ஏற்ற வேண்டும். அது குறித்தும் தகுந்த ஆலோசனைகள் செய்து உரிய ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

மிஸ்டர். செலிஸ் (Seles). நீங்கள்தான் இனி இளவரசரின் பொறுப்பாளர். அவரது கல்வித் தேவைகளை நிறைவேற்ற வேண்டியது உங்கள் பொறுப்பு. இத்தனை வருடங்கள் வெளி அரண்மனையில் தகுந்த அரவணைப்பு இன்றி வளர்ந்ததால், இளவரசர் போதிய புஷ்டியின்றி இருக்கிறார். உடனே முழுநேர மருத்துவ அதிகாரி ஒருவரை நியமியுங்கள். இளவரசரின் உடல்நிலையைத் தேற்ற வேண்டியதும், அவரது உடலுக்கு எந்தவித நோயும் வராமல் பாது காப்பதும் அந்த மருத்துவ அதிகாரியின் பொறுப்பு.

சர்தார் ஹர்னம் சிங் (Harnam Singh), நீங்கள் இளவரசருக்குப் பணிவிடை செய்வதற்கு எத்தனைப் பணியாளர்கள் வேண்டுமோ அத்தனை பேரை வேலைக்கு எடுத்துக் கொள்ளுங்கள். அந்தப் பணியாளர்களைக் கட்டி மேய்க்க வேண்டியது உங்கள் பொறுப்பு. மேஜர் மிஸ்ட்ரி (Mistri), நீங்கள்தான் இளவரசரின் மெய்க்காப்பாளர். உங்களுக்குக் கீழே வேலை செய்ய தனி யாக வீரர்களை நியமித்துக் கொள்ளுங்கள். மிஸ். ஸ்விஃப்ட் (Swift), நீங்கள்தான் இளவரசருக்கு ஆங்கிலம் கற்றுக் கொடுக்க வேண்டும். நீங்கள் அளிக்கும் பயிற்சி மூலமாகத்தான் இளவரசர், பிற்காலத்தில் பிரிட்டிஷாரிடம் கலந்துபேசி நிர்வாகத்தை நடத்த வேண்டும்.

இப்படிப் பலரது கவனிப்பில், அரவணைப்பில் செல்லமாக வளர்ந்தார் பூபிந்தர் சிங். அப்போது வைஸ்ராயாக இருந்த கர்ஸன், அடிக்கடி பாட்டியாலா நிர்வாகத்தில் தலையிட்டு நிர்வாகத்தைச் சரிபார்த்துக் கொண்டார். குட்டி இளவரசர் பூபிந்தர் சிங் மீது லேடி கர்ஸனுக்கும் தனிப்பாசம் இருக்கத்தான் செய்தது. 1903. இரண்டாவது டெல்லி தர்பார். கிங் எட்வர்டுக் காகவும் குயின் அலெக்சாண்டராவுக்காகவும் தடபுடல் ஏற்பாடுகளைச் செய்திருந்தார் வைஸ்ராய் கர்ஸன். ஆனால் கிங்குக்குப் பதில் அவரது சகோதரர் இளவரசர் ஆர்தர் கலந்து கொண்டார். கர்ஸனே, கிங்கின் பிரதிநிதியாகத் தர்பாருக்குத் தலைமை தாங்கினார்.

பன்னிரண்டு வயது பூபிந்தர் சிங், தனது பாசத்துக்குரிய வைஸ்ராய் கர்ஸனது அழைப்பின் பெயரில் டெல்லிக்குக் கிளம்பினார். இளவரசருக்குப் பாதுகாவலராக அவரது உறவினர் ரன்பிர் சிங், நிர்வாக கவுன்சில் உறுப்பினர்கள், முப்பதுக்கும் மேற்பட்ட ஐரோப்பிய விருந் தினர்கள், ஆயிரத்துக்கும் மேற்பட்ட அதிகாரிகள், வேலையாள்கள் என பெரும் கும்பல் சூழ பூபிந்தர் சிங், டெல்லி சென்று இறங்கினார்.

தகதகா உடை, ஆங்காங்கே தங்க ஜரிகைகள், வெளிர் பழுப்பு நிற டர்பன், வெள்ளைக் கையுறையுடன் தயாரான இளவரசர், வெள்ளை நிறக் குதிரை ஒன்றில் ஏறி அமர்ந்தார். அவரது குதிரை தலைமை தாங்கிச் செல்ல பின்னால் பாட்டியாலாவின் குதிரைப் படை அணிவகுத்து வந்தது. வலது கையால் தனது உறையிலிருந்து வாளை அநாயசமாக உருவி, தாழ்வாகப் பிடித்து கர்ஸனுக்கு மரியாதை செய்தார் பூபிந்தர் சிங்.

தர்பாரில் இரவு விருந்து. அனைத்து சமஸ்தான மகாராஜாக்களும் கர்ஸனின் தலைமையில் கூடியிருந்தார்கள். பாட்டியாலாவிலிருந்து இளவரசரோடு வந்திருந்தவர்களுக்கெல்லாம் படபடப்பு. எப்படிப் பேசப் போகிறாரோ இளவரசர்? அன்றைய விருந்தில் கன்னிப்பேச்சு பேசவிருந்த பூபிந்தர் சிங், பதறவே இல்லை. எல்லோரும் சொல்லிக் கொடுத்திருந்ததைவிட அழகாகவே பேசினார். அதுவும், கர்ஸனைப் பார்த்துபடியே, புன்னகை மாறாமல்.

'இந்த அருமையான நேரத்திலே கிங்குக்கு எனது மனமார்ந்த வாழ்த்துகளைத் தங்கள் மூலமாகக் காணிக்கையாக்குகிறேன். நானும் எனது போர்வாளும் எப்போதும் தங்களுக்குச் சேவை செய்யத் தயாராக இருக்கிறோம் என்பதை உறுதியாகச் சொல்லிக் கொள் கிறேன்.'



இளவரசர் பூபிந்தர் சிங்

டெல்லிக்குச் சென்று தர்பாரில் பொறுப்புடன் நடந்து கொண்டாலும் இளவரசர், பாட்டியாலா மோதி பாக் அரண்மனையில் விளையாட்டுப் பிள்ளையாகவே இருந்தார். ஆயிரம் வாத்தியார் இருந்தாலும் இளவரசரை அதட்டி, முதுகில் இரண்டு சாத்து சாத்திப் படிக்க வைக்க முடியுமா என்ன? அட, அரண்மனைவாசிக்கு வீட்டுப்பாடம்தான் கொடுக்க முடியுமா? முதலாம் பானிபட் யுத்தம் எப்போது நடந்தது என்று கேள்விகூடக் கேட்க முடியாதே.

குதிரையேற்றம், கிரிக்கெட், டென்னிஸ் போன்ற விளையாட்டுகளில் ஆர்வம் செலுத்திய அளவுக்கு, பூபிந்தர் சிங் படிப்பில் கவனம் செலுத்தவில்லை. இளவரசரின் கல்விக்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டிருந்த மிஸ்டர். செலிஸாலும் எதுவும் செய்ய முடியவில்லை. எப்போது பார்த்தாலும் மிதமிஞ்சியப் பாசத்தோடு பணிப்பெண்கள் இளவரசரைக் கவனித்துக் கொண்டே இருந்தார்கள். இப்படியே போனால் இளவரசர் உலக அறிவின்றி முட்டாளாகத்தான் வளருவார் என்று தோன்றியதால் ஓர் அதிரடி முடிவெடுத்தார்கள்.

லாகூர். எய்ட்சிஸன் காலேஜ். அங்கு ஒரு போர்டிங் ஸ்கூலும் இருக்கிறது. ராஜ குடும்பத்தினருக் கானது. அங்கு பூபிந்தர் சிங்கை அனுப்பி வைத்துவிட வேண்டியதுதான். அப்போதுதான் அவருக்கு கல்வியறிவோடு, உலக அறிவும் கிடைக்கும். கொஞ்சமாவது ஒழுக்கத்தோடு வளருவார்.

என்ன, இளவரசரை வெளியே அனுப்பிப் படிக்க வைப்பதா? பைத்தியக்காரத்தனம். இதுவரை பாட்டியாலாவின் பரம்பரையில் எல்லோருமே அரண்மனையில் இருந்துதான்

படித்திருக்கிறார்கள். அதெல்லாம் கூடாது. சொந்தக்காரர்கள் கொதித்தார்கள். ஆனால் பிரிட்டிஷ் அரசு அனுமதி கொடுத்தது (1904). பூபிந்தர் சிங் லாகூர் கிளம்பினார். கூடவே பாதுகாவலர்கள், மத குருக்கள், சமையல்காரர்கள், பணியாளர்கள், குதிரைப் பராமரிப்பாளர்கள் என்று சுமார் ஐம்பது பேர்.

ஆரம்பத்தில் எல்லாம் கொஞ்சம் கட்டுப்பாடோடுதான் இருந்தது. தன் புத்தகத்தைத் தானே புரட்டுவது, தன் பாடத்தைத் தானே படிப்பது, தனக்கான வகுப்பில் தானே பாடம் கேட்பது என இளவரசர் கஷ்டப்படத்தான் செய்தார். விடுமுறை நாள்கள் ஆரம்பித்தன. கட்டுப் பாடுகளெல்லாம் பணால். உள்ளங்கால் அரிப்பது போலுள்ளதே. யாரங்கே? வந்து சுகமாகச் சொறிந்து விடுங்கள். இன்னும் கொஞ்ச நேரத்தில் எனக்குத் தாகம் எடுக்கும். இப்போதே அந்த ஒயினை எடுத்து ஊட்டி விடுங்கள். பொழுது போகவில்லை. உடனே மோட்டார் கார்களைக் கொண்டு வாருங்கள். ஊர்வலம் செல்லலாம்.

போர்டிங் ஸ்கூலிலும் பூபிந்தர் சிங், சர்வ சௌகரியங்களுடனும் வாழ்ந்தார். ஒழுக்கமா? அப்படியென்றால்? பழச்சாறு அருந்திய அவர், ஒயினுக்குத் தாவியிருந்தார். அடுத்து விஸ்கி. அப்புறம் ஒவ்வொன்றாக.

மதுவுக்குப் பழகியாயிற்று. வயதும் பதினைந்தாகி விட்டது. இன்னமும் பெண்களைப் பழக வில்லை என்றால் இளவரசர் என்ற பட்டத்துக்கே இழுக்காயிற்றே. யாரங்கே? இளம் கட்டழகிகளைக் கொண்டு வாருங்கள். இளவரசர் பயிற்சி எடுக்க வேண்டும்.



# இலவச இணைப்புகள்!

எப்போதும் உல்லாசம். இதைத் தவிர ராஜ வாழ்வில் வேறேதும் வேலை உள்ளதா என்ன? பருவ வயதில் பூபிந்தர் சிங்கின் எண்ணம் இப்படித்தான் இருந்தது. அவரது வயது பதினெட்டை நெருங்க நெருங்க, அவருடைய அபிமானிகளுக்கெல்லாம் கவலை ஆலம் விழுதாகப் பரவியது. ஆனால் பூபிந்தர் சிங் அரியணையில் ஏறுவதை விரும்பாத சில அரசியல் எதிரிகள், பிரிட்டிஷ் அரசிடம் புகார் கொடுத்தார்கள். 'இப்படிப் பொறுப்பில்லாம, போக்கிரித்தனமா திரியற ஒருத்தரை அரியணையில ஏத்துனா சமஸ்தானம் எப்படி உருப்படும்?'

அவர்களது புகாரும் பிரிட்டிஷாருக்கு நியாயமாகவே தோன்றியது. ஆகவே அது குறித்துக் கொஞ்சம் யோசிக்கவும் ஆரம்பித்தனர். அது 1905. பூபிந்தர் சிங் மீது ஆரம்பத்திலிருந்தே அக்கறை காட்டிய வைஸ்ராய் கர்ஸனின் பதவிக்காலம் முடிந்திருந்தது. இந்தியாவின் புதிய வைஸ்ராயாக மிண்டோ (Minto) பொறுப் பேற்றிருந்தார். பூபிந்தர் சிங்கின் அபிமானிகளுக்கெல்லாம் மிண்டோ என்ன முடிவெடுப்பாரோ என்று பயம்.

பொறுப்பேற்ற தினத்திலிருந்தே மிண்டோ, பாட்டியாலா குறித்துத் தனிக் கவனம் எடுத்துக் கொண்டார். அதன் நிர்வாக கவுன்சில் உறுப்பினர்களிடம் சமஸ்தானத் தின் நிலைமை குறித்துப் பேசினார். பதினெட்டு வயதை நெருங்கிக் கொண்டு இருந்த பூபிந்தர் சிங் குறித்தும் பல தரப்புகளில் விசாரித்தார். பூபிந்தர் சிங் குறித்து கிடைத்த தகவல்களில் பெரும்பான்மையானவை நல்லவிதமாக இல்லை. இருந் தாலும் மிண்டோவுக்கு பூபிந்தர் சிங் மீது தனிப் பிரியம் இருக்கவே செய்தது.

காரணம்? அது ஒரு நூற்றாண்டுக்கு முன் நடந்ததாகச் சொல்லப்படும் சம்பவம். மிண்டோவுடைய தாத்தாவின் தாத்தா ஒருவர், நூறு ஆண்டுகளுக்கு முன் பாட்டியாலாவில் முக்கியப் பொறுப்பில் இருந்திருக்கிறார். அப்போது பாட்டியாலாவின் மகாராஜாவாக இருந்த சாகிப் சிங்குடன் அவர் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டிருக்கிறார் (1809). அதாவது 'பாட்டியாலாவை சர்வ சுதந்தரமுள்ள தனி சமஸ்தானமாக அங்கீகரிப்பது' என்று. பின்பு அந்த ஒப்பந்தம் காலப்போக்கில் மறக்கப்பட்டது.

இந்த ஒப்பந்தம் குறித்து மிண்டோவுக்கும் தெரியாது, பூபிந்தர் சிங்குக்குத் தெரியவே தெரியாது. ஆனால் தனது முன்னோர் பணிபுரிந்த இடம் என்ற பாசத்தில் பாட்டியாலா மீது தனிக்கவனம் வைத்தார் மிண்டோ. துறுதுறுவென்றிருந்த பூபிந்தர் சிங் மீது அவருக்கு இயற்கையாகவே அன்பு ஏற்பட்டது. பூபிந்தர் சிங்குக்கும் மிண்டோ மீது தனி நேசம் இருக்கவே செய்தது.

பூபிந்தர் சிங் மீது அக்கறை கொண்டிருந்த இன்னொரு ஐரோப்பியர் டன்லப் ஸ்மித். நபா, பாட்டியாலா, ஜிந்த் ஆகிய புல்கியான் பரம்பரைச் சமஸ்தானங்களுக்கான பிரிட்டிஷ் அரசு ஆலோசகராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார் அவர். பாட்டியாவில் பூபிந்தர் சிங்கோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு அவருக்கு இருந்தது. தானாக அக்கறை எடுத்து வருங்கால மகா ராஜாவுக்குப் பல விஷயங்களைக் கற்றுக் கொடுத்தார் டன்லப். அவ்வப்போது அறிவுரைகளை வழங்கவும் தவறவில்லை. மிண்டோ வைஸ்ராய் ஆனவுடன், டன்லப் அவரது அந்தரங்கச் செயலாளராக நியமிக்கப்பட்டார். எனவே, பூபிந்தர் சிங்கின் பலம் பெருகியது.

'பருவ வயசு. அதனால கொஞ்சம் அப்படி இப்படித்தான் இருப்பாரு. ஒரு கால்கட்டுப் போட்டாச்சுன்னா எல்லாம் சரியா வந்துரும்' பாட்டியாலா அரண்மனைப் பெருசுகள் முடிவெடுத்தன. பூபிந்தர் சிங்குக்குப் பெண் தேடும் படலம் பரபரவென நடந்தது. புல்கியான் பரம்பரையைச் சேர்ந்த பெண்ணாக இருக்க வேண்டும். வருங்கால மகாராணி என்பதற்குரிய அத்தனைத் தகுதிகளும் அந்தப் பெண்ணுக்கு இருக்க வேண்டும். சல்லடை போட்டுத் தேடி யதில் வடிகட்டித் தேர்ந்தெடுக்கப்பட்ட பெண், பக்தவார் கவுர் (Bakhtawar Kaur). ஜிந்த் சமஸ்தானத்தைச் சேர்ந்த சர்தார் குர்னாம் சிங் என்பவருடைய புத்திரி. அவள் பூபிந்தர் சிங்கை விடச் சில மாதங்கள் பெரியவள் என்பதை யாரும் பெரிய விஷயமாக எடுத்துக் கொள்ளவில்லை.

திருமணம் நிச்சயம் ஆன உடனேயே ஜிந்த், பாட்டியாலா இரண்டு சமஸ்தானங்களும் உற்சாகமாயின. திருமணத்துக்குப் பல வாரங்கள் முன்பாகவே ஆரம்பித்த கேளிக்கைகள், விருந்துகள், கொண்டாட்டங்கள் எல்லாம் திருமணம் முடிந்த பின்பும் சில வாரங்களுக்குத் தொடர்ந்தன. பக்தவார், பாட்டியாவில் மருமகளாகக் காலடி எடுத்து வைத்தாள் (1908). அரண்மனையில் அவளுக்கு வழங்கப்பட்ட மரியாதைக்குரிய பட்டம், மகாராணி சாகிபா ராஜா-மஜ்ரே-வாலே.

மருமகளாக அரண்மனைக்குள் நுழைபவள், அங்குள்ள மூத்த பெண்களை எல்லாம் தேடிச் சென்று உரிய மரியாதை செய்து, அவர்களுடைய ஆசிர்வாதத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டு மென்பது ஒரு சடங்கு. பாட்டியாலாவின் அரண்மனையில் அப்போது இருந்தவர்களிலேயே மூத்த பெண், 'மாய்' என்று மரியாதையாக அழைக்கப்பட்ட சாகிபா சாகலன்வாலே. பூபிந்தர் சிங்கின் பாட்டிகளுள் ஒருவர்.

பக்தவார், மாயைச் சந்தித்து ஆசிர்வாதம் வாங்கச் சென்றாள். புதிய பேத்தியை உச்சி முகர்ந்து வாழ்த்தினாள் மாய். அவளோடு நான்கு அழகிய பருவப் பெண்களையும் கவனித்தாள்.

'யாரிவர்கள்?' மாய் கேட்க, 'எனக்குரிய பணிப்பெண்கள். பிறந்த வீட்டுச் சீதனம்' என்றாள் பக்தவார். 'ஓஹோ. ஒரு யோசனை சொல்கிறேன். கேட்டுக்கொள். இந்தப் பெண்களையும் உன்னுடனேயே வைத்துக்கொள். அந்தப்புரத்தில். உனக்கு அடுத்தவர்களாக. அதுதான் நல்லது. அதுதான் பாதுகாப்பு. என்ன நான் சொல்வது உனக்குப் புரிகிறதா?'

மாயின் யோசனைக்குத் தலையசைத்துச் சம்மதம் சொன்னாள் பக்தவார். அந்த நான்கு பெண்களும் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் பார்த்தபடி வெட்கச் சிரிப்பைப் பகிர்ந்து கொண்டார்கள். மாய், தனது பேரன் பூபிந்தர் சிங்கின் 'பலவீனம்' பற்றி நன்றாகவே அறிந்து வைத்திருந்தாள். எப்படியும் பூபிந்தர், ஏகபத்தினி விரதனாக இருக்க மாட்டார்* என்பது அவளுக்குத் தெரியும். வெளியில் எங்கெங்கோ அலைய விடாமல், அதற்குரிய ஏற்பாடுகளையும் செய்து வைத்து விட்டால் தனது பேரன் எல்லைமீறிப் போகமாட்டான் என்ற நம்பிக்கையில் அந்த ஏற்பாட்டையும் செய்துவைத்தாள் அந்தக் கிழவி.

ஆனால் திருமணத்துக்குப் பின்பும் பூபிந்தர் சிங்கின் மது-மாது சடங்குகளில் எந்தவிதப் பின்னடைவும் ஏற்படவில்லை. 'பூபிந்தர் சிங்குக்குப் பெண்களை ஏற்பாடு செய்வதற்காக ஒரு காரியதரிசி நியமிக்கப்பட்டிருக்கிறார்' என்றொரு புகார் வரவே, வைஸ்ராய் மிண்டோவும் டன்லப்பும் கன்னத்தில் கை வைத்தனர். 'கொஞ்ச நாள் பூபிந்தர் சிங்கை ஏதாவது ராணுவ முகாமுக்கு அனுப்புங்க. ஏன்னா அங்க கண்காணிப்பு பலமா இருக்கும். தப்புத் தண்டாவெல்லாம் செய்ய முடியாது' - பஞ்சாபின் முதன்மைச் செயலாளர் அரசுக்கு யோசனை சொன்னார். 'பாட்டியாலாவுல இருந்தா அவரு இப்படித்தான் இருப்பார். கொஞ்ச மாசத்துக்கு அவரை சிலோனுக்கு அனுப்பி வையுங்கள்' என்றும் ஒரு யோசனை கூறப்பட்டது.

பலரும் பல்வேறு யோசனைகளை இஷ்டத்துக்குக் கூறிக் கொண்டிருக்க, எல்லோருடைய வாயையும் அடைப்பதுபோல பூபிந்தர் சிங் ஒரே ஒரு பதில் சொன்னார். 'இப்பத்தான் எனக்குக் கல்யாணம் ஆகியிருக்கு. என்னோட புதுப் பொஞ்சாதியை விட்டுட்டு என்னால எங்கேயும் போக முடியாது.'

1909, அக்டோபர் 12ல் பூபிந்தர் சிங், பதினெட்டைத் தொட்டு, முழு அதிகாரத்துடன் மகாராஜாவாகப் பதவியேற்க இருந்தார். ஆனால் அவரது பொறுப்பின்மையைக் காரணம் காட்டி எதிர்ப்பு வலுத்துக் கொண்டே போனது. அந்த ஏப்ரலில், கோடைகாலத் தலைநகரான சிம்லாவுக்குச் சென்றார் வைஸ்ராய் மிண்டோ. அப்போது பூபிந்தர் சிங் பிரச்னை குறித்து பலகட்ட விவாதங்கள் நடந்தன. கோடையின் இறுதியில் முடிவொன்றும் எடுக்கப்பட்டது. 'பூபிந்தர் சிங்குக்கு ஓரளவு அதிகாரம் கொடுத்து மகாராஜா பதவியில் அமர வைப்போம். ஒரு வருடத்துக்கு மட்டும். சோதனை முயற்சி. அதில் அவர் தேறினார் என்றால் முழு அதிகாரத்தோடு பதவியைத் தொடரட்டும்.'

அதன்படி, அந்தப் பிறந்தநாளில் பூபிந்தர் சிங், வரையறுக்கப்பட்ட அதிகாரங்களுடன் மகாராஜா பதவியில் அமர்ந்தார். மனம் நிறைய மகிழ்ச்சியோடு வைஸ்ராய் மிண்டோவுக்கு

---

★ 1910 பிப்ரவரிக்குள் பூபிந்தர் சிங், நான்கு திருமணங்கள் வரை செய்திருந்தார் என்று தகவல்கள் உள்ளன. ஆனால் அதற்குப் பின்பும் வரிசையாக நிறையத் திருமணங்கள் செய்துகொண்டார். ஆதாரபூர்வமாக, அதிகாரபூர்வமாக பத்து திருமணங்கள். போகிறபோக்கில் பல. ஆக, மாண்புமிகு பூபிந்தர் சிங் தனது வாழ்வில் 'உண்மையிலேயே' எத்தனை முறை மாப்பிள்ளைக் கோலம் பூண்டார் என்பது சரித்திரமறியாத ரகசியம்.

நன்றி சொன்னார். எப்படியும் அவர்மீது ஏராளமான கரும்புள்ளிகளை ஏற்படுத்தியே தீர வேண்டுமென்று அரசியல் எதிரிகள் காத்துக் கொண்டிருந்தார்கள். சில மாதங்களிலேயே பிரிட்டிஷ் அரசுக்குப் புகார்கள் குவிய ஆரம்பித்தன.

'பூபிந்தர் சிங் திருந்தப் போவதில்லை. தனது பதவிக்குரிய பொறுப்பை அவர் உணர்ந்து கொண்டதாகத் தெரியவில்லை. எப்போதும் போலோ அல்லது போதை. அவரைச் சுற்றி உள்ளவர்களும் ஆங்காங்கே போதையில் சரிந்து கிடக்கிறார்கள். பெண்கள் விஷயம் பற்றி எழுதவே கூசுகிறது. கூடுதலாகச் சில திருமணங்கள் வேறு செய்து கொண்டார். அரசு உடனே ஒரு முடிவெடுப்பது சமஸ்தானத்துக்கு நல்லது.'

புகார்களில் பல விஷயங்கள் மிகைப்படுத்தப்பட்டிருந்தாலும் ஒரே ஓர் உண்மை இருக்கத்தான் செய்தது. பூபிந்தர் சிங், 1910 பிப்ரவரிக்குள் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது திருமணங்கள் செய்திருந்தார். மிண்டோவுக்குப் பெரும் தலைவலியாகப் போனது. பாட்டியாலாவுக்கு நேரடியாகச் சென்று பூபிந்தர் சிங் நிர்வாகத்தைக் கண்காணிக்கலாம் என்றிருந்தவர், தனது திட்டத்தைக் கைவிட்டார். சிம்லாவுக்கு உடனே வரச்சொல்லி பூபிந்தர் சிங்குக்குத் தகவல் அனுப்பினார்.

மே 25ல் பூபிந்தர் சிங் சிம்லாவுக்குச் சென்றார். வைஸ்ராய் மாளிகையில் அவரை அன்பொழுக வரவேற்று, அமைதியாகப் பேச்சு வார்த்தை நடத்தினார் மிண்டோ. உடன் டன்லப்பும் இருந் தார். பூபிந்தர் சிங் தன் மீதான சில குறைகளை ஒளிவு மறைவின்றி ஒப்புக் கொண்டார். அதே சமயத்தில் தன் மீது அநீதமாகச் சுமத்தப்படும் குற்றச்சாட்டுகள் குறித்தும் வருத்தப்பட்டார். தனக்கு எதிராகப் பின்னப்படும் சதிவலைகள் குறித்து லேடி மிண்டோவிடமும் மனம் திறந்து பேசினார். 'சிறியவன் என்று எனக்குக் கீழுள்ளவர்கள்கூட என் வார்த்தைகளுக்கு மதிப்பளிப்ப தில்லை. நான் என்ன செய்வேன்?' என்று பூபிந்தர் சிங் உருக, லேடி மிண்டோவும் கரைந்தார். பூபிந்தர் சிங்கின் பொறுப்பான பேச்சும் நிதானமான அணுகுமுறையும் மிண்டோவுக்குத் திருப்தி கொடுத்தது. மிண்டோ, அரசுக்குக் கடிதம் ஒன்றை எழுதினார்.

'பூபிந்தர் சிங்கை இதுவரை நடத்திய விதம் குறித்து எனக்கு மிகுந்த அதிருப்தி. பதினெட்டு வயது இளைஞர் குறித்து ஏராளமான புகார்கள். பல வதந்திகள். ஆனால் அவரை நல்ல விதத் தில் நடத்தி, சரியாக வழிகாட்ட வேண்டும் என்று யாரும் நினைக்கவில்லை. இனியாவது முறையான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.'

வைஸ்ராயின் முழு ஆதரவு கிடைத்த பின், வேறு யாரால் என்ன செய்ய முடியும்? 1910, நவம்பர் 3 அன்று, மிண்டோவின் தலைமையில் முழு அதிகாரத்துடன் பாட்டியாலாவின் மகாராஜாவாகப் பொறுப்பேற்றார் பூபிந்தர் சிங்.



112

# கேப்டன் மகாராஜா!

'பூபிந்தர் சிங், முழு அதிகாரத்தோடு உங்களை ஆட்சிப் பொறுப்பில் அமர வைத்துள்ளேன். எனது நம்பிக்கையைக் காப்பாற்றுவீர்கள் என்று நம்புகிறேன். இங்கிருந்து சென்றாலும் நான் எப்போதும் உங்களையும் உங்கள் வளர்ச்சியையும் கவனித்துக் கொண்டே இருப்பேன்.'

வைஸ்ராய் மிண்டோ சொல்லச் சொல்ல, பாட்டியாலாவின் பத்தொன்பது வயது மகாராஜா பூபிந்தர் சிங்கின் விழியோரம் ஈரம். தனது பதவிக்காலம் முடியும் தருவாயில் பாட்டியாலாவுக்குச் சென்ற மிண்டோ, தனது அன்பிற்குரிய பூபிந்தர் சிங்கைப் பார்த்து அக்கறையாக அறிவுரைகள் சொல்லிவிட்டு விடை பெற்றார்.

அடுத்த வைஸ்ராயாக வந்திறங்கியவர் ஹார்டிங். 'பத்தொன்பது வயதுச் சின்னப்பயல் ஒருவன் எப்படி பாட்டியாலா சமஸ்தானத்தையே ஆளமுடியும்?'
ஹார்டிங்கின் மனத்தில் குறுகுறுப்பு. பாட்டியாலாவின் அரசுத் தூதுவராக இருந்த அட்கின்ஸ், சமஸ்தானத்தின் நிலைகுறித்தும், பூபிந்தர் சிங்கின் லீலாவிநோதங்கள் குறித்தும் வாராவாரம் புளகாங்கித அறிக்கை அனுப்பிக் கொண்டிருந்தார். அந்த அறிக்கைகளைப் புரட்டினார் ஹார்டிங். கடைசியாக வந்திருந்த அறிக்கை இப்படிக் கூறியது:

'மகாராஜா நல்லாத்தான் ஆளணும்னு நினைக்குறாரு. ஆனா, அந்த அளவுக்குப் பலம் அவருகிட்ட இருக்கான்னுதான் தெரியல. அவரைச் சுத்தி இருக்குற அதிகாரிகளும் அமைச்சர்களும் வேலைக்கே ஆகாதவங்க. திரும்பவும் அரசு

இந்த விஷயத்துல தலையிட்டு ஆலோசனை சொன்னா, பூபிந்தர் சிங் பாவம், ரொம்ப தர்ம சங்கடமா நினைப்பாரு. மனசு உடைஞ்சு போயிருவாரு. மகாராஜாவே, அவரு போக்குல நிலைமையைச் சரிபண்ணுவாருன்னு நம்புவோம்.'

ஆகவே ஹார்டிங், பாட்டியாலா விஷயத்தைக் கொஞ்ச நாள்களுக்குக் கையில் எடுக்க வில்லை.

1911. இந்த வருடத்தைப் பார்த்ததுமே அந்த பிரம்மாண்டமான விஷயம் நினைவுக்கு வந்திருக்க வேண்டுமே. கிங் ஐந்தாம் ஜார்ஜும் குயின் மேரியும் பதவியேற்ற மகா டெல்லி தர்பார் நடைபெற்ற வருடம். அதே ஆண்டின் ஆரம்பத்தில் பூபிந்தர் சிங்குக்கு இன்னொரு முக்கியமான பொறுப்பு வந்து சேர்ந்தது.

இங்கிலாந்தில் உள்ள பள்ளிகளிலும் கல்லூரிகளும் படிக்கச் செல்லும் ராஜ குடும்பத்து வாரிசுகள், கிரிக்கெட் கற்றுக் கொண்டு, அப்படியே பள்ளி, கல்லூரி அணிகளுக்காக விளை யாடுவதும் உண்டு. திறமையுள்ள சில இளவரசர்கள் கவுண்டி அணிகளிலும் விளையாடி னார்கள். இங்கிலாந்தில் சென்று படிக்கவில்லையே தவிர, பூபிந்தர் சிங்குக்குப் பெண்கள் போல கிரிக்கெட்டும் பிடித்த விஷயமே. தொடர்ந்து பயிற்சி செய்து ஓரளவு திறமையுள்ள வலதுகை ஆட்டக்காரராக வளர்ந்தார். பந்து வீசவும் அப்படி இப்படிக் கற்றுக் கொண்டார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நவாநகர் (Nawanagar) சமஸ்தான மகாராஜா ரஞ்சித் சிங்கும் , கதியவார் (Kathiawar) சமஸ்தானத்தின் ராஜவம்சத்தைச் சேர்ந்த துலீப் சிங் ஜடேஜா*வும் (Duleep Singh Jadeja) இங்கிலாந்துக்காக (English Cricket Team) விளையாடத் தேர்வானார்கள்.

மகாராஜா பூபிந்தர் சிங்குக்கும் மனத்தளவில் அந்த ஆசை இருக்கவே செய்தது. ஆனால் அதிர்ஷ்டம் வேறுவிதமாக அடித்தது. அப்போது இங்கிலாந்தில் சுற்றுப்பயணம் செய்வதற்காக இந்தியர்களை மட்டும் கொண்ட கிரிக்கெட் அணி ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டது. பூபிந்தர் சிங்குக்கும் அந்த அணியில் இடம் கிடைத்தது, அதுவும் கேப்டன் பொறுப்போடு சேர்த்து. அந்த ஏப்ரலில் குஷியாக இங்கிலாந்து பயணத்துக்குத் தயாரானார் பூபிந்தர் சிங்.

'என்னது பூபிந்தர் சிங் இங்கிலாந்துக்குச் செல்கிறாரா? ஆறேழு மாதங்களுக்குப் பிறகுதான் திரும்புவாரா? இந்த வருட இறுதியில் டெல்லியில் தர்பாருக்கான ஏற்பாடுகளெல்லாம் ஜரூ ராக நடந்து கொண்டிருப்பது அவருக்கு நினைவில்லையா? அவர் இஷ்டத்துக்கு கிரிக்கெட் மட்டையைத் தூக்கிக் கொண்டு கிளம்பிவிட்டால், பாட்டியாலாவின் மகாராஜாவாக தர்பாரில் யார் கலந்துகொள்வார்களாம்?' அரசு தரப்பிலிருந்து அடுக்கடுக்கான கேள்விகள் வந்து விழுந்தன.

'அய்யா துரைமார்களே, நான் தர்பார் சமயத்துல இங்கதான் இருப்பேன். அதுக்குள்ள விளையாட்டெல்லாம் முடிஞ்சிரும். இங்கிலாந்துக்குதான் போறேன். அங்கயும் கிங்கைச் சந்திச்சு உரிய மரியாதை செய்யப்போறேன். இங்க தர்பாருலயும் என் பணி என்னவோ அதை முறையா செஞ்சுடறேன்' - தன் தரப்பிலிருந்து தெளிவான விளக்கத்தைக் கொடுத்த பின்னர் இங்கிலாந்துக்குக் கிளம்பினார் பூபிந்தர் சிங். அவரது பிரியத்துக்குரிய டன்லப் ஸ்மித்தும் அரசியல் செயலாளராக உடன் சென்றார்.

---

★ இப்போது நடைபெறும் ரஞ்சி டிராஃபி, துலீப் டிராஃபி எல்லாம் இவர்களுடைய பெயர்களைக் கொண்டவைதான்.

பூபிந்தர் சிங்கின் இந்திய அணிக்கு இங்கிலாந்து அணியுடன் ஒரு பயிற்சி போட்டிகூட கிடை யாது. எல்லாப் போட்டிகளுமே அங்குள்ள கவுண்டி அணிகளுடன்தான். பூபிந்தர் சிங்கும் ஆர்வமாக மட்டையைச் சுற்றோ சுற்றென்னு சுற்றினார். பந்துவீசியும் பார்த்தார். உடலை வளைத்து ஃபீல்டிங்கும் செய்தார். சொகுசாக வளர்ந்த உடம்பு, இத்தனை வேலைகளை ஒரேடியாகச் செய்தால் தாங்குமா?

அந்த கேப்டன் மகாராஜா நோய்வாய்ப்பட்டு, மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். சில வாரங்கள் ஓய்வு. டன்லப் ஸ்மித் செய்த ஏற்பாடுகளின்படி, கிங் ஐந்தாம் ஜார்ஜை பக்கிங் ஹாம் அரண்மனையில் சந்தித்து சலாம் வைத்தார். அந்த நவம்பரின் இந்தியாவுக்குத் திரும்பி னார், சற்றே இளைத்த தேகத்துடன்.

வந்த சில நாள்களிலேயே மீண்டும் பயணம், டெல்லி தர்பாருக்கு. டிசம்பர் 2 அன்று பூபிந்தர் சிங், சிறப்பு ரயிலில் ஏறினார். கூடவே அவரது குடும்பத்தினரும் சில நூறு பேர்களும், குதிரை களும், படை வீரர்களும். ரயில் நிரம்பித்தான் போனது. தர்பார் நிகழ்வில், பத்து குதிரைகள் பூட்டப்பட்ட ரதமொன்றில் முன்னும் பின்னும் படைவீரர்கள் சூழ ஊர்வலமாகச் சென்று கிங், குயினுக்கு மரியாதை செய்தார்.

பெண்கள் விஷயத்தில் கில்லாடியாம், ஆட்சியையே கவனிப்பதில்லையாம், எந்நேரமும் உல்லாசம்தானாம் - என்று இளைஞர் பூபிந்தர் சிங் பற்றி எந்நாளும் விமரிசனங்கள். டெல்லி தர்பாரிலும் பூபிந்தர்தான் கிசுகிசுக்களின் கதாநாயகனாக இருப்பார் என்று பலரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் பரோடா மகாராஜா சாயாஜி ராவ் கிங்குக்கு வணக்கம் வைத்த சர்ச்சையில் மற்ற எல்லாமே அமுங்கிப் போயின. இன்னொரு புறம், போபால் சமஸ்தானத்தை ஆண்டு வந்த பேகம் கைகுஸ்ரவ் ஜஹான், முழு நீள பர்தா அணிந்துகொண்டு தர்பாரில் வலம் வந்தார். கிங்குக்கு நேரடியாகச் சென்று வணக்கம் வைக்கும்போதுகூட பர்தாவை விலக்க வில்லை. தர்பாரில் யாரிடமும் தன் முகத்தைக் காட்டாமலே நடமாடிய பேகம் பற்றி எல்லோருமே முணுமுணுத்தார்கள்.

டிசம்பர் 9 அன்று மாலையில் குயின் மேரி, இந்தியாவின் மகாராணிகளுக்கெல்லாம் தனியாக விருந்து வைத்தார். மகாராணிகளுக்கெல்லாம் தலைமை ஏற்று விருந்தில் கலந்து கொண்டவர் திருமதி பூபிந்தர் சிங்கான பக்தவார் கவுர். அந்த இருபது வயதுப் பெண்ணின் கனிவான பேச்சும், கண்கவர் உடைகளும், கண்ணைப் பறிக்கும் நகைகளும் குயின் மேரியைச் சுண்டி யிழுத்தன. 'மேதகு குயின் அவர்களே, உங்களுக்காகத்தான் இந்தப் பரிசுகளைக் கொண்டு வந்துள்ளேன்' பக்குவமான புன்னகையுடன் சில நகைப்பெட்டிகளை பக்தவார் கவுர் நீட்டினாள்.

அவற்றை வாங்கித் திறந்து பார்த்த குயினுக்குக் கொள்ளை மகிழ்ச்சி. இருக்காதா பின்னே! உள்ளங்கை அளவுக்கு ரம்மியமான மரகதம் ஒன்று, அம்சமாக வடிவமைக்கப்பட்ட சில வைரக்கற்கள், மரகதங்களாலும் வைரங்களாலும் இழைக்கப்பட்ட பேரழகு நெக்லஸ் ஒன்று. 'அருமையான நகைகள். நன்றி. ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் நான் இருந்தாலும், இந்த நகைகளை அணியும்போது நினைவுகளால் நான் இந்தியாவுக்குத் திரும்பிவிடுவேன்' நெகிழ்ந்தார் குயின் மேரி.

பூபிந்தர் சிங், எந்தவிதச் சிடுக்குகளுமின்றி டெல்லி தர்பார் கடமையை நிறைவேற்றிவிட்டு பாட்டியாலா திரும்பினார். நகைகளால் குயின் மேரியைக் குஷிப்படுத்திய பக்தவார் கவுர்,



மகாராணி பக்தவார் கவுர்

அடுத்த சில மாதங்களில் வெட்கத்துடன் தனது வயிற்றைத் தடவியபடியே நல்ல செய்தி சொல்லி தனது கணவரையும் குஷிப்படுத்தினாள். 1913, ஜனவரி 7ல் சந்தோஷத்தில் துள்ளினார் பூபிந்தர் சிங். சமஸ்தானத்தின் ரெஸிடெண்ட், பஞ்சாப் கவர்னர், வைஸ்ராய் ஹார்டிங், கிங் ஐந்தாம் ஜார்ஜ் எல்லோருக்குமே தகவல் அனுப்பப்பட்டது. அந்த இளவரசருக்கு வைக்கப்பட்ட பெயர் யத்விந்த்ர சிங் (Yadvindra Singh).

சில மாதங்கள் கழித்து பூபிந்தர் சிங்குக்குப் புதிய பிரச்னை ஒன்று முளைத்தது. யத்விந்த்ர சிங். அவரது முதல் மகாராணிக்குப் பிறந்த ஆண் குழந்தை. ஆறு மாதங்களுக்கு முன்பாகவே அவருக்கு இன்னொரு மனைவி வழியாக இன்னொரு ஆண் குழந்தையும் பிறந்திருந்தது. அந்தக் குழந்தை பிறந்த தேதி, 1912, ஆகஸ்ட் 11.

வைக்கப்பட்ட பெயர், பிரஜேந்தர் சிங்.

யார் அடுத்த வாரிசு? யத்விந்த்ர சிங்கா? பிரஜேந்தர் சிங்கா? பூபிந்தர் சிங்கின் சொந்தக்கார வட்டாரத்தில் ஏகப்பட்ட விவாதங்கள். மனத்தளவில் பூபிந்தர் சிங், தனது முதல் மகாராணி பக்தவார் கவுருக்குப் பிறந்த குழந்தையைத் தான் பட்டத்து இளவரசராக அறிவிக்க விரும்பினார். அப்படித்தான் பிரிட்டிஷ் அரசுக்கும் தகவல் அனுப்பியிருந்தார். பிரஜேந்தர் சிங், பிறந்த விஷயத்தை அதுவரை அரசுக்குத் தெரிவிக்கவில்லை. ஆனால் வருங்காலத்தில் அந்த விஷயம் வெளியாகிவிட்டால்?

குழப்பத்தில் இருந்த பூபிந்தர் சிங்குக்கு ஆலோசனை சொல்ல வந்தார் அவரது மாமனாரான சர்தார் குர்னாம் சிங் (Gurnam Singh). அதாவது மூத்த மகாராணி பக்தவார் கவுரின் தந்தை. பாட்டியாலாவிலிருந்து சில மைல்கள் தொலைவில் அமைந்து இருந்த ரகுமஜ்ரா என்ற கிராமத்தில் குட்டிப் பண்ணையாராக இருந்தவர் குர்னாம் சிங். அவரது பெண் செய்த பாக்கியம், மகாராஜாவின் மாமனார் என்ற அந்தஸ்து கிடைத்தது. கூடவே மாப்பிள்ளையைப் பேசி மயக்க வேண்டிய விதத்தில் மயக்கிய குர்னாம் சிங், சமஸ்தானத்தின் மந்திரிகளுள் ஒருவராகப் பதவியேற்றார்.

'மாப்ளே, என்னோட பேரன் பிறந்த விஷயத்தை தேதியோட ஏற்கெனவே அரசுக்குத் தெரிவிச்சாச்சு. ஆனா அந்த முதல் குழந்தை பிறந்த விஷயத்துக்கு இதுவரை எந்தப் பதிவும் கிடையாது. பேசாம அந்தக் குழந்தையோட பிறந்த தேதியை மாத்திடலாம். என்ன சொல்லுறீங்க?'

1912, ஆகஸ்ட் 11ல் பிறந்த பிரஜேந்தர் சிங்கின் பிறந்த தேதி 1913, ஆகஸ்ட் 11 என்று மாற்றியமைக்கப்பட்டு ஆவணங்கள் உருவாக்கப்பட்டன. ஆனால் பின்பு, தேதியில் பித்தலாட்டம் செய்த விஷயம் அரசுக்குத் தெரியவந்தது. விளக்கம் கேட்டு பூபிந்தர் சிங்குக்குக் கடிதமும் வந்தது.

இந்தமுறை பூபிந்தர் சிங், அதிகமாகக் குழப்பிக் கொள்ளவில்லை. பிரஜேந்தர் சிங்கின் தாய்க்கும் தனக்கும் நடந்த திருமணம், முறைப்படி அதிகாரப்பூர்வமாக நடக்கவில்லை என்று அறிவித்தார். ஆக, அதிகாரபூர்வ வாரிசு என்ற அந்தஸ்தை பிரஜேந்தர் சிங் இழக்க, யத்விந்த்ர சிங் பட்டத்து இளவரசராக பிரிட்டிஷாரால் அங்கீகரிக்கப்பட்டார்.

குர்னாம் சிங்குக்குக் கொள்ளை மகிழ்ச்சி. அவரது பேரன்தான் அடுத்த மகாராஜா என்றதும் அவரது மவுசு கூடித்தான் போனது. அந்த உரிமையில் ஒரு மப்பும் மந்தாரமுமான நேரத்தில் தனது மாப்பிள்ளைக்கு குல்லா போட்டார் குர்னாம் சிங். ‘மாப்ளே, உங்க ஆட்சிக்குக் கீழே இந்த சமஸ்தானத்தோட பிரதம மந்திரியா வேலை பார்க்குற பாக்கியத்தை எனக்குக் கொடுத்தீங்கன்னா..’

பிரிய மாமனார் கேட்டு மறுக்க முடியுமா? பூபிந்தர் சிங் தலையசைத்தார். குர்னாம் சிங், பாட்டியாலாவின் பிரதம மந்திரி (திவான்) ஆனார். அந்த நொடியிலிருந்து அவரது அதிகாரம் கொடிகட்டிப் பறக்க ஆரம்பித்தது. தனக்கு வேண்டிய சொந்தகார, சொக்காரன்களுக்கெல்லாம் அரண்மனை வேலை கொடுத்தார். முக்கியமான பதவிகளில் இருந்த சிலர் அதிரடியாகத் தூக்கப்பட்டனர். அந்த இடத்தில் குர்னாம் சிங்கின் ஆள்கள் அமர வைக்கப்பட்டார்கள். முடிந்த மட்டும் சொத்து சேர்க்க ஆரம்பித்தார் குர்னாம் சிங். எதுவுமே பூபிந்தர் சிங்கின் கவனத்துக்குக் கொண்டு செல்லப்படாமல் பார்த்துக் கொண்டார் அந்தத் தில்லாலங்கடி திவான்.

குர்னாம் சிங்கின் வார்த்தைகள் அனைத்தும் கட்டளைகளாகத்தான் ஒலித்தன. தனக்கு வேண்டாதவர்கள் மீது அவர் அளித்த தீர்ப்புகள் எல்லாம் தண்டனைகளாகவே இருந்தன. மகாராணியின் தந்தை, மகாராஜாவின் மாமானார், திவான், இளவரசரின் தாத்தா - இத்தனை அதிகாரங்களுடன் விளங்கிய அவரை எதிர்த்து யாராலும் நடக்கமுடியவில்லை.

எல்லா ஆட்டங்களுக்கும் முடிவு ஒன்று இருக்கத்தானே செய்யும்.



# ஒரு மாமனாரின் கதை!

பூபிந்தர் சிங், தன் அருமை மாமனார் குர்னாம் சிங்குக்காகச் சுந்தர மாளிகை ஒன்றை ஒதுக்கியிருந்தார். அதுவும் தனது மோதி பாக் அரண்மனைக்குச் சற்று அருகிலேயே. மாளிகை என்பதுகூடக் குறைவான வார்த்தைதான். மாளிகைக்கும் அரண்மனைக்கும் பிறந்ததுபோல இருக்கும் ஒரு பேரழகு வசிப்பிடம் அது. சுவரெல்லாம் பளிங்குக் கற்கள், சுற்றிலும் மலர்த்தோட்டங்கள், சூட்டைத் தணிக்க நீச்சல் குளம், சொடுக்கு போட்டால் வந்து நிற்கும் பக்காவான பணிப் பெண்கள் என்று சகல சௌந்தர்ய வசதிகளும் அங்கு உண்டு.

பிரதம மந்திரியின் இடத்துக்குள் யாராலும் எளிதாக நுழைந்துவிட முடியாது. சுற்றிலும் எந்நேரமும் ஆயுதமேந்திய பாதுகாவலர்கள் ஷிஃப்ட் போட்டுப் பணி செய்தார்கள். யாராவது குர்னாம் சிங்கைச் சந்திக்க வேண்டுமென்றால், குறைந் தது நாலைந்து முறையாவது அவரது தனிச் செயலாளரிடம் விண்ணப்பம் போட வேண்டும். எதற்காகச் சந்திக்க வேண்டும் என்ற விவரங்களை முன் கூட்டியே சொல்லிவிடுதல் அவசியம். விருப்பமிருந்தால் மட்டுமே அனுமதி கொடுப்பார் குர்னாம் சிங். அனுமதி கொடுத்த நேரத்தில், பிரதம மந்திரிக்கு 'மூட்' சரியில்லை யென்றால் வந்த பார்வையாளர் புறமுதுகு காட்டியபடி திரும்புவதைத் தவிர வேறு வழியில்லை.

காது குத்தல் முதல் கருமாதி வரை குர்னாம் சிங்குக்குப் பல்வேறு வகையான அழைப்புகள் வரும். எல்லா விஷயத்திலும் எக்கச்சக்கமாக கௌரவம் கட்டிக் காத்த குர்னாம் சிங், வெகு சில விசேஷங்களுக்கு மட்டும் 'கௌரவ' நடிகராகத்

தலைகாட்டினார். பிரிட்டிஷாரின் விருந்துகள், நிகழ்ச்சிகளுக்குக் கூட அழைத்ததற்கெல்லாம் செல்லாமல், தரம் பிரித்து, சிலவற்றுக்கு மட்டும் சென்று 'இமேஜ்' வளர்த்தார்.

ஒரு சமஸ்தானத்தின் பிரதம மந்திரியாகப்பட்டவர், அலுவல் விஷயமாக அடிக்கடி தலைநகர் டெல்லிக்குச் சென்று வரவேண்டியதிருக்கும். சமஸ்தானத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் போய்வர வேண்டிய தேவையிருக்கும். ஆகவே குர்னாம் சிங், தான் பாட்டியாலாவில் இல்லாத சமயங்களில் எல்லாம், தனக்கு மிகவும் வேண்டிய நபர்களது கையில் பொறுப்பை ஒப்படைத்துவிட்டுப் போவார். அவர் இல்லாத சமயங்களில் யாராவது அவருக்கு எதிராக பேசுகிறார்களா, நடக்கிறார்களா என்று கண்காணிப்பதற்கு ஐந்தாம் படை ஒன்றையும் வைத்திருந்தார். அப்படி யாராவது மாட்டிக் கொண்டாலோ அல்லது மாட்ட வைக்கப்பட்டாலோ போதும், அந்த நபர் பாட்டியாலாவை விட்டே துரத்தப்படுவார் அல்லது சிறையில் கம்பி 1,2,3...

ரன்வாஸ் முபாரக் இதுதான் மோதி பாக் அரண்மனையின் அந்தப்புரம் அமைந்திருந்த பகுதிக்கு வைக்கப்பட்டிருந்த பெயர். பூபிந்தரின் ஈரிரண்டு மனைவிகளும் துணைவிகளும் ஆசைநாயகிகளும் அழகுராணிகளும் வாழ்ந்த பகுதி. அந்தப்புரத்துக்கு வெளியேயும், அதன் வாசலிலும் காவல் எப்போதுமே பலமாக இருக்கும். அங்கு பணியில் இருக்கும் காவலர்களைக் கண்காணிக்கும் தலைமைக் காவலராக இருந்தவர் சர்தார் பூட்டா ராம் (Buta Ram). தன் வேலையை நிஜமாகவே நேசித்தவர்.

ஒருநாள் அவர் வழக்கம்போல தனது பணிக்குச் செல்லும்போது, அரண்மனை வாசலிலேயே தடுத்து நிறுத்தப்பட்டார். 'பூட்டா ராம். தாங்கள் பணியிலிருந்து நீக்கப்பட்டுள்ளீர்கள். இது மகாராணியாரின் உத்தரவு.' தூக்கிவாரிப் போட்டது அவருக்கு. சோகமாக வீடு திரும்பிய பூட்டா ராம், அந்தப் பதவியில் பிரதம மந்திரிக்கு வேண்டிய ஒருவர் நியமிக்கப்பட்டதை அறிந்துகொண்டார். உடைந்துபோனார்.

துவண்டு அழும் நேரத்தில் தோள் கொடுக்க ஒரு தோழன் இருந்தால், எந்தச் சிக்கலையும் சின்னாபின்னமாக்கலாமே. 'எல்லாவற்றுக்கும் காரணம் பிரதம மந்திரிதான். நீ வருத்தப்படாதே. நான் பார்த்துக் கொள்கிறேன்' - அடிபட்ட மனத்துக்கு ஆறுதல் சொன்னார் கேப்டன் சந்தா சிங் (Chanda Singh). அவர் பூட்டா ராமின் உயிர்த்தோழர். மகாராஜா பூபிந்தர் சிங்கின் முதன்மைப் பாதுகாவலர். பூபிந்தர் சிங்கின் நம்பிக்கைக்குரிய நபர்களுள் ஒருவர். அதாவது பிரதம மந்திரியின் அதிகார வட்டத்துக்கு அப்பாற்பட்டவர்.

'அந்தச் சண்டாளனின் ஆட்டம் நாளுக்கு நாள் எல்லைமீறிப் போகிறது. இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டிய நேரம் வந்துவிட்டது' - சந்தா சிங் ஆவேசப்பட்டார்.

'எப்படி நண்பா? அதிகாரம் அவனது கையில் அல்லவா இருக்கிறது' - பூட்டா ராம் விசனப் பட்டார்.

'நேரடியாக மோதினால் நாம் காணாமல் போய்விடுவோம். அவனுக்கே தெரியாமல் அவனை அழிக்க வேண்டும். அதிகாரங்களை எல்லாம் பிடுங்கி அவனை ஒன்றும் இல்லாதவன் ஆக்க வேண்டும்.'

சந்தா சிங் சொல்லச் சொல்ல பூட்டா ராமுக்குத் தெம்பு வந்தது. 'நீ சொல்வது சரிதான் நண்பா. நான் மட்டுமல்ல, எத்தனையோ பேர் அவனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் நமக்கு உதவி செய்ய ஓடோடி வருவார்கள்.'

‘ம்ஹூம். புஜபலம் தேவையில்லை, புத்தி இருந்தால் மட்டுமே காரியத்தை நிறைவேற்ற முடியும். வா, யோசிக்கலாம்.’

சந்தா சிங்கும் பூட்டா ராமும் அன்று இரவு முழுக்கப் பேசினார்கள். அருமையான சதித்திட்டம் ஒன்று கருவாகி உருவாகி நின்றது. மறுநாள் காலையில் அவர்கள் இருவரும் இன்னொரு நண்பரான டாக்டர் நரன்ஜின் சிங்கைச் (Naranjin Singh) சந்திக்கச் சென்றார்கள். அவர், பூபிந்தர் சிங்கின் அரண்மனை டாக்டர். அவருக்கும் குர்னாம் சிங் என்றால் அலர்ஜிதான். தனது நண்பர்கள் போட்டிருந்த திட்டத்துக்கு முழு ஒத்துழைப்புக் கொடுப்பதாக உறுதியளித்தார் நரன்ஜின் சிங். அந்தச் சர்வாதிகார மாமனாருக்கு எதிரான சதி அப்போது தொடங்கியது.

இரவெல்லாம் ஆட்டம், பாட்டம், கொண்டாட்டமாக இருந்துவிட்டு, பின்பு அசந்து படுக்கை யில் விழுவார் மகாராஜா. அவர் கண்களை அரைகுறையாகத் திறந்து பார்க்கும்போது, சூரியன் உச்சியில் உட்கார்ந்து கொண்டிருக்கும். அந்தச் சமயத்தில் மோதி பாக் அரண்மனைக்கு வருவார் பிரதம மந்திரி. உள்ளூரில் இருக்கும்போது தினமும் மகாராஜாவை ஒருமுறையாவது தரிசிக்க வேண்டியது ஒரு பிரதம மந்திரியின் கடமை, மாமனாராகவே இருந்தாலும்.

அரண்மனைக்குள் வரும் பிரதம மந்திரி, மகாராஜாவின் முதன்மைப் பாதுகாவலரைத் தாண்டிச் செல்ல முடியாது. ‘நான் வந்திருக்கும் விஷயத்தை மகாராஜாவிடம் தெரிவியுங்கள்’ - என்று சொல்லிவிட்டு வரவேற்பறையில் காத்திருக்க வேண்டியதுதான். அந்தப் பாதுகாவலர் மகாராஜாவிடம் சென்று விஷயத்தைச் சொல்லுவார். மகாராஜா வெட்டியாக இருந்தால் பிரதம மந்திரிக்கு அதிர்ஷ்டம். உடனடி தரிசனம். புட்டியோடோ, குட்டியோடோ இருந்தால் அவ்வளவுதான். பிரதம மந்திரி தேமேவென்று காத்துக் கிடக்க வேண்டியதுதான். பொதுவாக பாட்டியாலாவின் பிரதம மந்திரிகள் தேவுடு காக்கப் பழகியிருந்தார்கள்.

ஆனால் பூபிந்தர் சிங்கின் விஷயமே வேறாயிற்றே. பிரதம மந்திரியைக் காத்திருக்க வைக்கலாம், ஆனால் மதிப்பிற்குரிய மாமனாரை? ஆகவே, பொதுவாக குர்னாம் சிங்குக்குக் காத்திருக்க வேண்டிய சூழ்நிலை உண்டானதில்லை. அப்படிப்பட்ட சொற்ப சமயங்களில்கூட அவருக்கு விருந்தளித்து நன்றாகக் கவனிக்கச் சொல்லி உத்தரவிட்டிருந்தார் அந்த மருமகப் பிள்ளை.

அன்றும் வழக்கம்போல குர்னாம் சிங், மிடுக்குடன் மோதி பாக் அரண்மனைக்குள் நுழைந் தார். வரவேற்பறையில் இருந்த கேப்டன் சந்தா சிங், அவரை உட்காரச் சொல்லி உபசரித்தார். ‘என்ன கேப்டன், மகாராஜா துயில் கலைத்துவிட்டாரா?’ - கேட்டார் மாமனார். ‘மன்னிக்க வேண்டும் திவான். மகாராஜா ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார். அவரது உடல்நிலை சரி யில்லை. இப்போதுதான் டாக்டர் வந்துவிட்டுப் போனார். இன்று அவரைச் சந்திப்பது...’

‘சரி, சரி. நான் மகாராஜாவை நலம் விசாரித்ததாகச் சொல்லிவிடவும்’ என்று கூறிவிட்டு குர்னாம் சிங், தன் இல்லத்துக்குக் கிளம்பினார்.

மறுநாள். வழக்கம்போல வரவேற்றார் சந்தா சிங். ‘என்ன மகாராஜா எப்படி இருக்கிறார்?’ கேட்டார் குர்னாம் சிங். ‘இன்னமும் அவரது உடல்நிலை அப்படியேதான் இருக்கிறது திவான். டாக்டர் அவருக்கு மருந்துகள் கொடுத்திருக்கிறார். ஆகவே மகாராஜா நல்ல உறக்கத்தில் இருக்கிறார். மன்னிக்க வேண்டும்.’

‘ஓ, அப்படியா. சரி, பரவாயில்லை. நாளை வருகிறேன். நான் வந்துவிட்டுப் போன தகவலை மகாராஜாவிடம் சொல்லிவிடவும்.’

‘அப்படியே ஆகட்டும் திவான்.’

மறுநாளும் குர்னாம் சிங் வேகவேகமாக வந்தார். ஆனால் சந்தா சிங்கைத் தாண்டிப் போக முடியவில்லை. ‘திவான் அவர்களே, மகாராஜா தங்களைச் சந்திக்க இயலாத சூழ்நிலைக்கு வருத்தம் தெரிவிக்கச் சொன்னார். அவர் இன்றும் ஓய்வில்தான் இருக்கிறார்.’ பிரதம மந்திரி வேறு வழியின்றித் திரும்பிப் போனார்.

இப்படியே ஒரு வாரம் ஓடிப்போனது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு காரணத்தைச் சொல்லி, மகாராஜாவைச் சந்திக்க விடாமல் பிரதம மந்திரியைத் திருப்பியனுப்பினார் சந்தா சிங். பாசக்கார மாமனார், சில நாள்கள் பார்க்க வரவில்லையென்றால் மருமகனால் தாங்க முடியாதே. ‘திவான் எங்கே? சில நாள்களாக வரவே இல்லையே. உள்ளூரில்தானே இருக்கிறார்?’ பூபிந்தர் சிங், சந்தா சிங்கிடம் கேட்டார்.

‘அவருக்கு உடல்நிலை சரியில்லை. அதனால்தான் சில நாள்களாக வரவில்லை. உடல்நிலை சரியான பின்பே தங்களைச் சந்திக்க வர இயலும் என்று இன்று ஒரு செய்தி அனுப்பியிருக்கிறார்’ பவ்யமாகச் சொன்னார் சந்தா சிங். ‘ஓஹோ!’ என்று கேட்டுக் கொண்டார் மகாராஜா.

மறுநாளும் கடமை தவறாமல் அரண்மனைக்கு வந்தார் குர்னாம் சிங். ‘என்ன, இன்றைக்காவது மகாராஜாவைச் சந்திக்க முடியுமா, முடியாதா?’ அவரது கேள்வியில் கொஞ்சம் கோபம் கலந்திருந்தது. ‘மன்னிக்க வேண்டும் திவான். இன்றைக்கும் தங்களை அனுமதிக்க முடியாத சூழலில் இருக்கிறேன்’ பணிந்து நின்றார் சந்தா சிங். ‘ஓகோ. சரி, எப்போது மகாராஜா குணமடைகிறாரோ, சொல்லியனுப்புங்கள். நான் அப்போது வருகிறேன்’ - விறுவிறுவென வெளியேறினார் பிரதம மந்திரி. தினசரி நடக்கும் நிகழ்வுகளை எல்லாம் தனது நண்பர் பூட்டா ராமிடம் சொல்லிச் சொல்லிச் சிரித்தார் சந்தா சிங்.

ஒரு வாரத்துக்கும் மேல் தன் மாமனாரைத் தரிசிக்காத பூபிந்தர் சிங், டாக்டர் நரன்ஜின் சிங்கை அழைத்தார். ‘திவானுக்கு வெகு நாள்களாக உடல்நிலை சரியில்லையாம். என்னவென்று பார்த்துவிட்டு வாருங்கள்.’

பிரதம மந்திரியின் மினி அரண்மனைக்குள் நுழைந்தார் டாக்டர். அவரைப் பார்த்துமே குர்னாம் சிங் படபடத்தார். ‘என்ன ஆயிற்று மகாராஜாவுக்கு? ரொம்ப நாளாகவே உடல்நிலை சரியில்லையாமே? எதுவும் பிரச்னையா?’

‘பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. இன்னும் சில நாள்கள் ஓய்வெடுத்தால் சரியாகிவிடுவார். அதற்குப் பின் உங்களைச் சந்திப்பதாக என்னிடம் சொல்லியனுப்பினார்’ - பதில் சொன்னார் டாக்டர். கொஞ்ச நேரம் பிரதம மந்திரியோடு அளவளாவி விட்டு, அரண்மனைக்குத் திரும்பினார். தனது மாமனாரது உடல்நிலை குறித்து அக்கறையாகக் கேட்டார் பூபிந்தர் சிங். முகத்தைச் சோகமாக வைத்துக் கொண்ட நரன்ஜின் சிங் பேச ஆரம்பித்தார்.

‘இந்தச் செய்தியைத் தங்களிடம் சொல்லுவதற்கு வருந்துகிறேன் மகாராஜா. திவானின் நிலைமை மிகவும் மோசமாக உள்ளது. அவரது மூளையின் நரம்பு மண்டலம் பாதிக்கப் பட்டுள்ளதாகத் தெரிகிறது. அவர் தன்னிலை இழந்து காணப்படுகிறார். இந்த நிலையிலிருந்து மீளுவாரா என்பது சந்தேகமே.’



# 114

# ‘நான் பைத்தியம் இல்லை...’

சில நாள்கள் முன்புவரை சிக்கென்று இருந்த மாமனார் குர்னாம் சிங்குக்கு திடீரென்று சித்தம் கலங்கி விட்டதா? மகாராஜா பூபிந்தர் சிங்கால் தன் காதில் விழுந்த வார்த்தைகளை நம்பமுடியவில்லை, நம்பாமலும் இருக்க முடியவில்லை. ‘நீங்கள் சொல்வதெல்லாம் நிஜம்தானா?’ என்று தனது ஆஸ்தான டாக்டர் நரன்ஜின் சிங்கைப் பார்த்து மீண்டும் மீண்டும் கேட்டார்.

‘தங்கள் மனத்தை வருத்தப்பட வைத்துவிட்டேன். என்னை மன்னியுங்கள் மகாராஜா. இருந்தாலும் இந்தத் துயரமான விஷயத்தை உங்களிடம் இருந்து மறைக்கும் உரிமை எனக்கில்லை. நான் என்ன செய்வேன்?’ - விருதுப் பட நடிகர் அளவுக்கு முகத்தைச் சோகமாக வைத்துக் கொண்டு உணர்வுகளைக் கொட்டினார் அந்த டாக்டர்.

‘இது ஒன்றும் தீராத வியாதி இல்லை. சில நாள்கள் நன்றாக ஓய்வெடுத்தால் திவான் குணமடைந்துவிடுவார். அதுவரை நீங்கள் அவரைச் சந்திக்காமல் இருப்பது நல்லது. மகாராணியாரின் காதுக்கும் இந்த விஷயத்தைக் கொண்டு செல்ல வேண்டாம். தனது தந்தைக்கு இப்படி ஆகிவிட்டதே என்று அவரும் மனமுடைந்து போய்விடுவார். திவானின் நிலை குறித்த விஷயம் வெளியில் யாருக்கும் தெரியாமல் இருப்பதே நல்லது. அப்போதுதான் தேவையில்லாத நிர்வாகச் சிக்கல்களைத் தவிர்க்க முடியும்.’

டாக்டரின் வார்த்தைகளை எல்லாம் மௌனமாகத் தலையசைத்தபடியே கேட்டுக் கொண்டிருந்தார் பூபிந்தர் சிங். ‘தினமும் நான் திவானைச் சென்று

பார்த்துவிட்டு வருகிறேன். உங்களுக்கு தகவல் கொடுத்துக் கொண்டே இருக்கிறேன். வருத்தப்படாதீர்கள்' என்று சொல்லிவிட்டு டாக்டர் கிளம்ப, பூபிந்தர் சிங் கவலையோடு ஷாம்பெயின் கோப்பையைக் கையில் எடுத்தார்.

நாள்கள், வாரங்கள் இப்படியே நகர்ந்தன. பிரதம மந்திரி குர்னாம் சிங்குக்கு மனத்துக்குள் ஏதோ உறுத்தல். 'நடப்பது எதுவுமே சரியில்லை. என்னைச் சுற்றி ஏதோ சதிவலை பின்னப் படுகிறது.' உணர்ந்துகொண்ட அவர், மகாராஜாவுக்குத் தனது நிலை குறித்து கடிதம் ஒன்றை எழுதி அனுப்பினார். பதில் இல்லை. பின் தொடர்ச்சியாகச் சில கடிதங்கள் எழுதி அனுப்பினார். மகாராஜாவின் முதன்மைப் பாதுகாவலர் சந்தா சிங்கைத் தாண்டி ஏதாவது செல்ல முடியுமா என்ன? எல்லாக் கடிதங்களும் கந்தலாகின. தனது கடிதங்களுக்கு மகாராஜாவிடம் இருந்து பதில் எதுவும் வராமலிருக்க, மனமுடைந்து போனார் குர்னாம் சிங்.

'ஏலேய், விஷயம் தெரியுமாலே, மகாராஜாவுக்கும் திவானுக்கும் ஏதோ மனஸ்தாபமாம். மகாராஜா, திவானைப் பார்க்குறது, பேசுறது கிடையாதாம். சீக்கிரத்துலயே திவானோட பதவி பறிபோயிரும்னு பேசிக்கிறாங்க.'

அரண்மனை வட்டாரத்தில் கிசுகிசு கிளப்பப்பட்டது. விஷயம் வெகு வேகமாகப் பரவியது. அதுவரை குர்னாம் சிங்குக்குக் கொடி பிடித்துக் கொண்டிருந்த பலரும், அவரை விட்டு விலக ஆரம்பித்தார்கள். ஏற்கெனவே பிரதம மந்திரி எப்போதடா ஒழிவார் எனக் காத்திருந்தவர்களும் தைரியமாக சந்தா சிங்கோடு கூட்டணி அமைத்துக் கொண்டார்கள். அந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்ட சந்தா சிங், மகாராஜாவின் முக்கிய வேலைக்காரர்கள் சிலரையும் தனது திட்டத்துக்குள் இழுத்துக் கொண்டார்.

உடனடியாக அடுத்த காட்சியையும் அரங்கேற்றினார், டாக்டர் நரன்ஜின் சிங் மூலமாக. 'மகாராஜா, அதை எப்படி உங்களிடம் சொல்வதென்றே தெரியவில்லை. தங்கள் மாமானாருக்கு...'

'பீடிகை போடாதீர்கள். உடனே சொல்லுங்கள்' பூபிந்தர் சிங்கால் பொறுக்க முடியவில்லை.

'அவரது மனநிலை முற்றிலுமாகப் பாதிக்கப்பட்டுவிட்டது. நெருக்கமானவர்களைக்கூட அவரால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. நேற்று நான் அவரைப் பார்க்கச் சென்றேன். கோபமாகக் கத்திக்கொண்டே தாக்க வந்துவிட்டார். எல்லோரிடமும் இப்படித்தான் நடந்து கொள்கிறாராம்.'

'என்ன சொல்லுகிறீர்கள்?' - அந்தப் பாசக்கார மருமகனின் தாடி துடித்தது.

'மாண்புமிகு மகாராஜாவான தங்களைக்கூட அடையாளம் தெரியாமல் தாக்கக்கூடும். மகாராணியாருக்கும் விஷயம் தெரிய வேண்டாம். அவர் தம் தந்தையைப் பார்க்க விரும்புவார். அது பாதுகாப்பானதல்ல. குணப்படுத்த ஏதாவது வழிகள் இருக்கிறதா என்று யோசிப்போம்' டாக்டர் அழுத்தந்திருத்தமாகச் சொல்லிமுடிக்க வெலவெலத்துப் போனார் பூபிந்தர் சிங்.

குர்னாம் சிங்குக்கு எல்லா வாசல்களும் அடைக்கப்பட்டதாகவே தோன்றியது. தனது இல்லத்தில் முடங்கிக் கிடந்தார். பரவிக்கிடந்த வதந்திகளால் அவரால் வெளியே தலைகாட்ட

முடியவில்லை. எல்லா வெடிகுண்டுகளுக்கும் மேலாக அணுகுண்டு ஒன்று வந்து விழுந்தது. 'பாட்டியாலா சமஸ்தானத்தின் புதிய பிரதம மந்திரியாக மேலர்கோட்லாவைச் சேர்ந்த நவாப் ஸுல்பிகர் அலிகான் (Zulfikar Alikhan) தாற்காலிகமாக நியமிக்கப்பட்டுள்ளார். இது மகாராஜா பூபிந்தர் சிங்கின் ஏற்பாடு.'

செய்தி அறிந்தவுடன், குர்னாம் சிங்கால் பொறுக்க முடியவில்லை. திரி கொளுத்தப்பட்ட சரவெடிபோல, விறுவிறுவென அரண்மனையை நோக்கி எழுச்சி நடை போட்டார். கண்கள் இரண்டிலும் கந்தகக் கோபம்.

'முன்னாள் திவான் அரண்மனைக்குள் நுழைந்துவிட்டார். கத்தியபடியே மகாராஜாவின் அறையை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்' - சந்தா சிங்குக்கு அவசரச் செய்தி வந்தது. உடனே குர்னாம் சிங்கைத் தேடி ஓடினார் சந்தா சிங்.

'அவரைப் பிடியுங்கள். உடனே வெளியேற்றுங்கள்' பாதுகாவலர்களுக்கு சந்தா சிங் கட்டளையிட்டார். அந்தப் பேரதிர்ச்சியை முழுவதுமாக உணருவதற்கு முன்பாகவே, அரண்மனை வாசலுக்கு குண்டுக்கட்டாகத் தூக்கிவரப்பட்டிருந்தார் குர்னாம் சிங். அதற்குள் அங்கே கூட்டம் கூடியிருந்தது. அவமானமும் வேதனையும் தலைக்குமேல் உட்கார்ந்து அழுத்த தன் இல்லத்துக்குத் திரும்பினார் அவர்.

'உடனே என்னைச் சந்திக்க வரவும். அவசர ஆலோசனை செய்ய வேண்டியதிருக்கிறது' தனக்கு ஆதரவாக மற்ற மந்திரிகள் எல்லாமே பழைய விசுவாசத்துடன் இருப்பார்கள் என்ற நம்பிக்கையில் குர்னாம் சிங் செய்தி அனுப்பினார். பதவி பறிபோன ஒருவரது சொல், செல்லுபடியாகுமா என்ன? இரண்டே இரண்டு பேர் மட்டுமே குர்னாம் சிங்கைத் தேடி வந்தார்கள்.

'எல்லாம் எல்லை மீறிப் போய்விட்டது. இந்தச் சதிவலையிலிருந்து எப்படி மீள்வதென்றே புரியவில்லை' குர்னாம் சிங் புலம்ப ஆரம்பித்தார்.

'ஒரே ஒரு வழிதான் உள்ளது. மகாராஜாவுக்கு உண்மையைப் புரியவைக்க வேண்டும். ஆனால் அரண்மனையில் மகாராஜாவைச் சந்திக்க முடியாது. ஆனால் அவர் அரண்மனையைவிட்டு வெளியே வரும்போது சந்திக்கலாமே!'

'நல்ல யோசனை. மகாராஜா வேட்டைக்குச் செல்லுமிடத்தில் சென்று சந்திக்கலாம். அவர் அடுத்து எப்போது, எங்கு வேட்டைக்குச் செல்கிறார் என்ற தகவலோடு வருகிறேன்' - அந்த இருவரது யோசனையும் குர்னாம் சிங்குக்குக் கொஞ்சம் தெம்பு கொடுத்தது.

பிஞ்சோர் (Pinjore). பாட்டியாவிலிருந்து 75 மைல்கள் தொலைவில், கல்கா அம்பாலா சாலையில் அமைந்துள்ள அழகான கிராமம். இமயமலை அடிவாரத்தில் வனப்புடன் பரவிக் கிடக்கும் வனப் பிரதேசம். முகலாயர்கள் காலத்தில் அமைக்கப்பட்ட கவின்மிகு தோட்டங் களும் கலைமிகு அரண்மனைகளும் உள்ள ஊர். பூபிந்தர் சிங், வேட்டையாடுவதற்கு அடிக்கடி செல்லும் இடம் அதுவே. அப்போதும் தனது மகாராணிகள், ஆசைராணிகள், பணிப்பெண்கள், மந்திரிகள், வேட்டை அதிகாரிகள், உதவியாளர்கள் மற்றும் ஐரோப்பிய விருந்தினர்கள் என்று சுமார் நூறு பேர் கொண்ட குழுவுடன் பிஞ்சோருக்கு வந்து இறங்கியிருந்தார். மகாராஜா

முகாமிட்டிருந்த பகுதி ஏதோ திருவிழா போலக் களைகட்டியிருந்தது. நாட்டுப்புற பாடகர்களின் இசைக்கு நடன மங்கைகள் நடனமாடிக் கொண்டிருக்க, அங்கே மது சாதகம் செய்து கொண்டிருந்தது.

'நேபாளம் பகுதியிலிருந்து அஞ்சு புலிங்க காட்டுக்குள்ள நுழைஞ்சிருக்கு' புக்கிகளிடம் இருந்து வேட்டைக்குரிய தகவல் வந்து சேர்ந்திருந்தது. 'நாளைக்கே செல்லலாம். வேட்டைக்குரிய ஏற்பாடுகளைச் செய்துவிடுங்கள்' பூபிந்தர் சிங் சந்தோசமாகக் கட்டளை யிட்டார்.

அந்த நேரத்தில் குர்னாம் சிங்கும் தன்னிரு கூட்டாளிகளுடன் பிஞ்சோருக்கு வந்து சேர்ந்திருந் தார். சாமானியர்கள் போல உடை அணிந்திருந்த அவர்கள், மகாராஜாவின் முகாமை நோட்ட மிட்டார்கள். 'ம்ஹூம், உள்ளே செல்வது கடினம். காட்டுக்குள் மகாராஜாவைச் சந்திப்பதும் இயலாது. விலங்குகளின் ஆபத்து இருக்கிறது. ஒரே வழி. மகாராஜா வேட்டையை முடித்து விட்டு பாட்டியாலாவுக்குத் திரும்பும்போது வழிமறித்துச் சந்தித்துவிட வேண்டியதுதான்' கூட்டாளிகளில் ஒருவர் சொன்ன யோசனைக்குத் தலையசைத்தார் குர்னாம் சிங்.

மறுநாள். விருந்தினர்களுடன் காட்டுக்குள் சிறிது தூரம் காரில் சென்றார் மகாராஜா. யானைகள் காத்திருந்தன. அனைவரும் புலிகள் நடமாடும் பகுதியில் அமைக்கப்பட்டிருந்த சிறப்பு மேடையை அடைந்தார்கள். யானைகள் அங்கிருந்து கிளம்பின. தகுந்த பாதுகாப்புகளுடன் பூபிந்தர் சிங், மேடையில் ஆனந்த சயனம் கொண்டிருந்தார்.

புலிகள் இருந்த பகுதியைச் சுற்றிவளைத்த நூற்றுக்கணக்கானோர், முரசு கொட்ட ஆரம்பித்தார் கள். சற்றே கலவரமடைந்த புலிகள், மகாராஜா இருந்த இடத்தை நோக்கி ஓட ஆரம்பித்தன. அந்த நேரத்தில் ஆண் புலி ஒன்று ஒரு முரசுக்காரனைப் பலமாகத் தாக்கிவிட்டு ஓடியது. கீழே விழுந்து உயிருக்குத் துடித்துக் கொண்டிருந்த அவனைக் கவனிக்க மற்றவர்களுக்கு நேரமில்லை. பின்னே, மகாராஜா காத்துக் கொண்டிருக்கிறாரே!

அந்த மேடை இருக்கும் பகுதிக்கு வந்த புலிகளைச் சுட விருந்தினர்களுக்கு வாய்ப்பு கொடுத் தார் பூபிந்தர் சிங். ஐந்தாவதாக மிஞ்சியிருந்த ஆண் புலிக்குத் தன் கையால் மரணமடையும் பாக்கியம் அளித்தார். அப்புறமென்ன, செத்த புலிகளோடு கெத்தாக புகைப்படம் எடுத்துக் கொண்டார்.

வேட்டைத் திருவிழாவை முடித்துக் கொண்டு பிஞ்சோரிலிருந்து மகாராஜா புறப்பட்டுக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் பாட்டியாலாவிலிருந்து சந்தா சிங்குக்கு ஒரு தகவல் வந்திருந்தது. அனுப்பியவர் அவரது நண்பரும் கூட்டுச்சதிகாரருமான பூட்டா ராம். 'பாட்டியாலாவில் குர்னாம் சிங்கைக் காணவில்லை. ஒருவேளை அங்கு வந்திருக்கக் கூடும். ஜாக்கிரதை!'

காரில் ஏறச் சென்ற மகாராஜாவின் காதில் சந்தா சிங் கிசுகிசுத்தார். 'மகாராஜா தங்கள் மாமனாரைக் காணவில்லையாம். அவர் தங்களைத் தாக்குவதற்காக இங்கு வரக்கூடும் என்று ஒற்றர்கள் செய்தி அனுப்பியுள்ளார்கள். வாருங்கள், உடனே கிளம்பலாம்.' படபடப்புடன் பூபிந்தர் சிங் தனது காரில் ஏறினார். உடன் டாக்டர் நரன்ஜின் சிங். 'காரை எங்கேயும் நிறுத்தாதே. வேகமாகச் செல்' என்று ஓட்டுநருக்குக் கட்டளையிட்ட சந்தா சிங்கும் காரில் ஏறிக்கொண்டார். முன்னே பின்னே சில கார்கள். நடுவில் மகாராஜாவின் கார். கிளம்பினார்கள்.

சாலையின் இருபுறமும் ஆலமரங்கள். ஒரு மரத்தின்மீது குர்னாம் சிங்கும் அவரது கூட்டாளி களும் காத்துக் கிடந்தார்கள். தூரத்தில் ஏகப்பட்ட கார்கள் வரவே அவர்களுக்குக் குழப்பம். 'அதோ சமஸ்தானத்தின் கொடி. அது மகாராஜாவின் கார்' சொல்லிய குர்னாம் சிங், தடா லென மரத்திலிருந்து குதித்தார். கத்திக் கொண்டே அந்தக் காரை நோக்கி ஓடினார். 'மகாராஜா, நான் நல்லாத்தான் இருக்கேன். பைத்தியம் இல்ல. எனக்கு எதிரா சதி பண்ணுறாங்க. யாரையும் நம்பாதீங்க.'

எங்கிருந்தோ பாய்ந்து வந்த மாமனாரைக் கண்ட பூபிந்தர் சிங் பயந்துதான் போனார். காரின் இரைச்சலில் அவர் கத்தியது எதுவுமே பூபிந்தருக்குப் புரியவில்லை. 'வேகமாகப் போ' என்று சந்தா சிங் ஓட்டுநரை முடுக்க, கார் விரைவாகக் கடந்தது. 'மகாராஜா.. மகாராஜா.. நான் சொல்வதைக் கேளுங்கள்' என்று கத்தியபடியே காரின் பின் ஓடி வந்தார் மாமனார். மூச்சு வாங்க சுருண்டு விழுந்தார். 'நல்லவேளை தப்பித்துவிட்டோம்' - சந்தா சிங், மகாராஜாவை ஆசுவாசப்படுத்தினார்.

பின்பு, குர்னாம் சிங் தனியாக ஒரு வீட்டில் அடைத்து வைக்கப்பட்டார். எப்போதும் பாது காவலர்கள். அவ்வப்போது கண்காணிக்க மருத்துவக்குழு ஒன்று. குர்னாம் சிங்கின் கூட்டாளி கள் இருவரும் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்கள். குர்னாம் சிங், பாட்டியாலாவில் இருக்கும்வரை ஏதாவது பிரச்னை வந்து கொண்டிருக்கும் என்று நினைத்த சந்தா சிங், மகாராஜாவிடம் அடுத்த வசனத்தை எடுத்துவிட்டார்.

'மகாராஜா இங்கு மருத்துவ வசதிகள் குறைவாக உள்ளன. தங்கள் மாமனாரை டெஹ்ரா டூனுக்கு அனுப்பி வைக்கலாமே.' பூபிந்தர் சிங் சம்மதித்தார். குர்னாம் சிங் பார்சல் செய்யப் பட்டார்.

முழு விரக்தியில் இருந்த அந்த மாமனார், தனது இறுதி நாள்களில் கிட்டத்தட்ட பைத்தியம் போலத்தான் வாழ்ந்தார்.



# 115

# அரண்மனை அஞ்சறைப் பெட்டி!

பல அரண்மனைகளுக்குள் புகுந்து வாசல் முதல் அந்தப்புரம் வழியாக பின்வாசல் வரை பார்த்துவிட்டோம். தவிர அரண்மனைகளின் இண்டு இடுக்கு, சந்து பொந்துகளைக்கூடக் தரிசித்துவிட்டோம். இன்னும் கால்படாத ஒரு முக்கியமான பகுதி இருக்கிறது. சமையல்கட்டு. இந்த அத்தியாயம் நளபாகத்துக்கு அர்ப்பணம்.

சீக்கியர்கள், ராஜபுத்திரர்கள், மராத்தியர்கள், இஸ்லாமியர்கள் என்று அரண்மனை களில் அவரவர் இனத்துக்கேற்ப உணவுப் பழக்க வழக்கங்கள், சமையல் கலா சாரங்கள் இருந்தன. எப்போது ஆங்கிலேயர்கள் அரண்மனைகளுக்குள் புகுந்தார் களோ அப்போதிருந்தே ஐரோப்பிய கலாசாரமும் சமையல்கட்டுகளில் 'டோஸ்ட்' ஆக ஆரம்பித்தது. ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின், ராஜ குடும்பத்தினரின் உணவுப் பழக்க வழக்கங்களிலும் மாறுதல் உண்டானது. அது சமையல்கட்டுகளில் பிரதிபலித்தது.

பொதுவாக அரண்மனைகளில் இந்துக்கள் பாணி சமையல்கட்டுகள் இருந்தன. அதில் சைவமுண்டு, அசைவமுண்டு. அல்லது முகலாயர்கள் பாணி சமையல் கட்டுகள் இருந்தன. பின்பு, பல அரண்மனைகளின் சமையல்கட்டுகள் ஐரோப்பிய பாணியில் மாற்றியமைக்கப்பட்டன அல்லது அரண்மனைகளில் புதிதாக ஐரோப்பிய பாணி சமையல்கட்டுகளும் சேர்ந்து கொண்டன.

ஐரோப்பிய செஃப்கள் பலர் ரூபாய்க் கனவுகளோடு இங்குள்ள அரண்மனைகளில் வேலைக்குச் சேர்ந்தார்கள். சகலவிதமாகச் சமைத்துக் கொடுத்தார்கள்.

மகாராஜாக்களின் நாக்கை அடிமைப்படுத்தி சௌகரியமாகவே வாழ்ந்தார்கள். இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் அந்த சிறப்பு செஃப்கள் பெற்ற மாதச் சம்பளம் ரூ.500. காலை உணவு தயாரிக்க ஒரு குழு. மதிய உணவுக்குத் தனிக்குழு. இரவு உணவுக்கு இன்னொரு குழு. சிறப்பு உணவுகளுக்கு மற்றொரு குழு. விருந்து என்றால் வேறோரு குழு என்று சில அரண்மனைகளில் சமையல்காரர்களின் படையே தனியாக இருந்தது.

ராம்பூர். உத்தர பிரதேசத்தைச் சேர்ந்த இஸ்லாமிய சமஸ்தானம். அதை ஆண்ட நவாப் ஹமித் அலி கான் (Hamid Ali Khan), சாப்பாட்டுப் பித்தர். விதவிதமாகச் சமைக்கப்பட்ட உணவுகளை சப்புக் கொட்டிச் சாப்பிட்டுவிட்டு நிறைகுறைகளைச் சொல்லுவதே அவரது முக்கியமான பொழுதுபோக்கு. அதற்காக ராம்பூரின் காஸ் பாக் அரண்மனையில் அவர் தேடிப்பிடித்து நியமித்திருந்த சமையல்காரர்களின் எண்ணிக்கை ஒரு கட்டத்தில் முந்நூறைத் தொட்டிருந்தது. ஒரு சமையல்காரர் மீன் வறுவல் செய்வதில் கில்லாடி. அது மட்டுமே செய்வார். இன்னொருவர் தலைக்கறியில் நெம்பர் ஒன். அவர் செய்வது அதுமட்டுமே. இப்படி முந்நூறு பேரும் தங்களுக் கான பதார்த்தத்தில் தன்னிகரற்றவர்கள்.

ராம்பூர் நவாப், ஐரோப்பிய பாணி உணவு வகைகளைப் பக்குவமாகச் செய்வதற்கென்றே தனி செஃப் படை ஒன்றையே வைத்திருந்தார். அதற்காகவே வைஸ்ராய், பிரிட்டிஷ் அதிகாரி கள், பிற ஐரோப்பியர்கள் ராம்பூருக்குச் சென்ற வண்ணம் இருந்தார்கள். சும்மா சொல்லக்கூடாது, விருந்தோம்பலைப் பொருத்தவரை ஹமித் அலி கானுக்கு எப்போதுமே முதல் ரேங்க்தான் இருந்தது.

மஹ்முதாபாத் (Mahmudabad, உத்தரபிரதேசம்) என்றொரு குட்டி சமஸ்தானம். அதன் நவாபும் விருந்தோம்பலில் பாசக்காரர்தான். முதலில் விருந்தினர்களுக்கு ஐரோப்பிய பாணி உணவுகள் பரிமாறப்படும். அதுவே கிட்டத்தட்ட நாற்பது பதார்த்தங்கள். தொடர்ந்து முகலாய பாணி பதார்த்தங்கள். அய்யோ, இனிமேல் முடியாது என்று மூச்சு முட்டும் நேரத்தில் இந்திய பாணியில் செய்யப்பட்ட முப்பதுக்கும் மேற்பட்ட இனிப்பு வகைகள் படை யெடுக்கும்.

அந்த நவாப், ஒருமுறை தனது சமஸ்தானத்தில் நடக்கும் புதிய சாலைகளுக்கான பணியைப் பார்வையிடச் சென்றார். அந்த வேலையில் ஈடுபட்டிருந்த பணியாளர்கள், தற்காலிகக் கூடாரங்கள் அமைத்து, அங்கேயே சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள், கும்மட்டி அடுப்பில். குளிர்காயப் பயன்படுத்தப்படும் அடுப்பில் சமையல்கூடச் செய்யலாமா? நவாபுக்கு ஆச்சரியம்.

'எங்கே, நீங்கள் சமைத்ததைத் தாருங்கள். சுவைத்துப் பார்க்கிறேன்' நவாப் கேட்கவும் அங்குள்ளவர்கள் பதறிப் போனார்கள். அவர்களது தயக்கத்தை எல்லாம் கண்டுகொள்ளாமல், உணவைத் தானே எடுத்துச் சுவைத்தார் நவாப். ஆஹா, அபாரம். அடுத்த நாள் முதலாக நவாபின் அரண்மனை அடுக்களையில் கும்மட்டி அடுப்பு சமையல் ஆரம்பமானது.

ஒருமுறை வைஸ்ராய் கர்ஸன், ஹைதராபாத் சென்றிருந்தார். அடுத்த நாள் காலை உணவு நிஜாமோடு என்று முடிவாகியிருந்தது. நிஜாம் என்றால் நமது கஞ்சத் திலகம் ஓஸ்மான் அலிகான் அல்ல. அவராக இருந்தால், இரண்டு சப்பாத்தி, கொஞ்சூண்டு வேகவைத்த பருப்பு

கொடுத்து கர்ஸனை அனுப்பியிருப்பார். அப்போது நிஜாமாக இருந்தவர் ஒஸ்மானின் தந்தை மெஹ்பூப் அலிகான். கர்ஸனை களேபரப்படுத்தி விட வேண்டுமென்று காலைச் சிற்றுண்டிக்கே காடைப் பொறியல், கௌதாரி வருவல், கஸ்தூரி மான் துவையல் என்று சுமார் நூறு சைவ, அசைவ பதார்த்தங்களைத் தயார் செய்யச் சொன்னார். அவை உணவு மேசையில் கமகமத்தன.

கர்ஸன் வந்தார். 'பிரெட் இருக்கிறதா?' கேட்டார். அதை வாங்கி பட்டர், ஜாம் தடவி சமர்த்தாகச் சாப்பிட்டுவிட்டு கிளம்பினார். அறுசுவையோடு காத்திருந்த மெஹ்பூப் அலிகானின் முகம் உப்புச் சப்பின்றிப் போனது.


ராம்பூர் நவாப் ஹமித் அலி கான்

லக்னோ அரண்மனைகளின் அடுக்களைகள் எல்லாம் மருத்துவர்களின் கட்டுப் பாட்டில் இருந்தன. பரம்பரை யுனானி மருத்துவர்கள். அதாவது நவாபின் குடும்பத்தினரின் பூர்வீக ஆரோக்கியம் பற்றி முழுவதுமாக அறிந்த பரம்பரை மருத்துவர்கள். நவாபின் உடல்நிலைக்கு என்னென்ன ஒத்து வரும், என்னென்ன சேராது? நவாப் சனிக்கிழமை புளியோதரை சாப்பிடலாமா அல்லது புலிக் கறி சாப்பிடலாமா? முழுகாமல் இருக்கும் நவாபின் பேகம்கள், எதை எதைச் சேர்த்துக் கொள்ளலாம்? இப்படி மெனு எல்லாவற்றையும் தீர்மானிப்பது அந்த மருத்துவர்களே. 'அந்த' விஷயத்தில் அதி திருப்தியாக செயல்பட உணவில் என்னென்ன சேர்க்க வேண்டும் என்பது முதற்கொண்டு மருத்துவர்கள் பார்த்துக் கொண்டதால் நவாப், பரிபூரண சந்தோஷத்துடன் வாழ்ந்தார்.

கபாப், கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆடோ, மாடோ, மீனோ, மானோ, பாகற்காயோ குச்சி ஒன்றில் சொருகி நெருப்பில் வாட்டி, விதவிதமான மசாலாக்கள் தடவி சமைக்கும் பதார்த்தம் என்று பொதுவாக விளக்கலாம். கபாப், முகலாயர்கள் வழியாக இந்தியாவுக்குள் நுழைந்த பதார்த்தம். நவாபுகளின் தினசரி மெனுவில் ஏதாவது ஒரு கபாப் இருந்தே தீரும். துண்டே கீ கபாப் (Tunde ke Kebab), என்றொரு பதார்த்தம் உண்டு. இதனை கபாப்களின் மகாராஜா என்றுகூடச் சொல்லலாம். திருமணங்கள் மற்றும் இதர முக்கிய விசேஷங்களில் மட்டும் அரண்மனைகளில் இதனைச் செய்வார்கள். அறுபத்து நான்கு விதமான பொருள்களைக் கொண்டு தயாரிக்கப்படும் இந்த கபாப் செய்யப் பல மணி நேரங்கள் பிடிக்குமாம்.

‘அக்பர் சுவைத்த சூப்’ நவாபுகளின் அரண்மனைகளில் அடிக்கடி புழங்கப்படும் வாசகம் இது. அப்படியென்றால்? கதை ஒன்று இருக்கிறது. ஒருமுறை அக்பர், லக்னோவுக்கு வந்தாராம். அங்குள்ள நிர்வாக அதிகாரி ஒருவரைச் சந்தித்தாராம். அந்த அதிகாரி, தனது பேரரசர் சுவைக்க சூப் கொடுத்தாராம். அக்பர் கொஞ்சம் குடித்துவிட்டு வைக்க, அதிகாரி மீதி சூப்பைப் பத்திரப்படுத்தி வைத்தாராம். மறுநாள் சூடாக புதிய சூப் தயார் செய்த அதிகாரி, அக்பர் சுவைத்த பழைய சூப்போடு கலந்து குடித்தாராம். ‘பேரரசர் சுவைத்த சூப்’ என்ற பெருமை வேறு. பின்னாளில் அது ஒரு சடங்காகிப் போனது. நவாபுகள் எச்சில் வைத்த சூப்பை, மறுநாள் மற்றவர்கள் புது சூப்போடு கலந்து சுவைப்பதென்பது பெருமிதமான விஷயமாக மாறிப் போனது.

அரண்மனைப் பெண்களைப் பற்றிய ஒரு சமையல் குறிப்பு. பொதுவாக ராஜபுத்திர இளவரசிகள், தங்கள் தாய்வீட்டில் சமையல்கட்டுக்குள் நுழைய அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் அவர்கள் புகுந்த அரண்மனையின் சமையல்கட்டுக்குள் அனுமதிக்கப்படுவார்கள். காரணம், இளவரசிகள் தாய் வீட்டின் கைப்பக்குவத்தைக் கற்றுக் கொண்டு வந்துவிட்டால், புகுந்த வீட்டின் பக்குவத்தை மாற்றிவிடுவார்கள் என்பதால் இந்த வழக்கம்.

செய்லானா (Sailana), மத்தியப் பிரதேச சமஸ்தானம். அதனை ஆண்ட மகாராஜா துலிப் சிங் பகதூர், சமைப்பதில் நளன். சர்வதேச செஃப்களுக்கே, சமையல் டிப்ஸ் கொடுக்குமளவுக்கு அவருக்குள் சமையல் அறிவு ததும்பிக் கொண்டிருந்தது. தனது அரண்மனையின் அடுக்களையில் அவர் நுழைந்துவிட்டால் போதும், ரகளைதான். இந்தியாவிலுள்ள எல்லா சமஸ்தான அரண்மனைகளுக்கும் சென்று அங்கு சமைக்கப்படும் மிக முக்கியமான பதார்த்தத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்றொரு லட்சியம் துலிப் சிங்குக்கு இருந்தது.

துலிப் சிங்கின் சமையல் கலை பற்றி அறிந்திருந்த பல மகாராஜாக்கள், அவரைத் தமது அரண்மனைகளில் சமையல்கட்டுக்குள் நுழையும் சுதந்தரத்தைக் கொடுத்தார்கள். அங்கு சென்று, பதார்த்தங்களில் பக்குவமறிந்து கொண்டார் துலிப் சிங். ஆனால் அது எல்லா இடங்களிலும் சாத்தியப்படவில்லை.

சில சமஸ்தானங்களின் சமையல்காரர்கள், சமையல் குறிப்பை ஒரு ரகசியம் போலக் கட்டிக் காத்தார்கள். ஆனால் அவர்களது மகாராஜாவின் ஆதரவோடு இன்னொரு மகாராஜா வந்து பக்குவம் கேட்கிறார் என்றால்? தட்டிக் கழிக்க முடியாதே. தர்ம சங்கடத்தில் சிக்கித் தவித்த அந்த சமையல்காரர்கள், பட்டும் படாமலும் அரைகுறைப் பக்குவம் சொல்லி ஒப்பேற்றினார்கள்.

துலிப் சிங்குக்கா தெரியாது. அவர் அதற்காகவே ஒரு திட்டம் போட்டார். உப்பு, பெருஞ்சீரகம், மிளகு, வெந்தயம், கிராம்பு, லவங்கம், குங்குமப்பூ போன்ற மசாலா பொருள்கள் நிறைந்த பெட்டி ஒன்றை உருவாக்கினார். (அஞ்சறைப் பெட்டிபோலப் பல அறைகள் கொண்ட பெட்டி.) அந்த சிறப்பு மசாலாப் பெட்டியைத் தான் செல்லும் அரண்மனைகளுக்கெல்லாம் கொண்டு செல்ல ஆரம்பித்தார்.

‘இந்த பிரியாணி எப்படிச் செய்யணும்?’ மகாராஜா துலிப் சிங் கேட்க, வேறு வழியின்றி சொல்ல ஆரம்பிப்பார் அந்தச் சமையல்காரர். ‘இந்தாங்க. எல்லாவிதமான மசாலா சாமான்

களும் இதில் இருக்கு. இதைப் பயன்படுத்தி செய்யுங்க' என்று அந்த மசாலா பெட்டியை உரிமையோடு வைப்பார் துலிப் சிங். என்னதான் இருந்தாலும் ஒரு பதார்த்தத்தில் உப்பு, காரம், புளி போன்ற மசாலா வகைகளை எவ்வளவு சேர்க்கிறோம் என்பதுதானே முக்கியம். சுவையின் ஜீவனே அதில்தானே இருக்கிறது. அப்படிப்பட்ட மசாலாப் பொருள்களைப் பதார்த்தத்தோடு சேர்க்கும் நேரத்தில் 'இதோ வந்துவிடுகிறேன்' சமையலறையை விட்டு வெளியேறிவிடுவார் துலிப் சிங்.


மகாராஜா துலிப் சிங்

'அப்பாடா, வெளிய போயிட்டாரு. நம்ம சமையல் ரகசியம் அவருக்குத் தெரியப் போறதில்லை' என்று அந்தச் சமையல்காரர் நிம்மதியாகச் சிரிப்பார். துலிப் சிங்கும் அந்தப் பதார்த்தம் தயாரான பின்பே சமையல் கட்டுக்குள் நுழைவார். 'ஆஹா, அருமையாக மணக்கிறது' என்று ஏதாவது பாராட்டியபடி, தனது மசாலா பெட்டியைக் கவனமாக எடுத்துவிட்டுக் கிளம்பிவிடுவார்.

விஷயம் இதுதான். அந்த மசாலா பெட்டியிலுள்ள பொருள்கள் எல்லாம் துலிப் சிங்கால் ஏற்கெனவே துல்லியமாக அளந்து வைக்கப்பட்டிருக்கும். சமைக்கப்பட்ட பின், அதில் எந்தெந்தப் பொருள்களில் எவ்வளவு குறைகிறது என்பதைப் பார்த்து அளவுகளைத் தெரிந்து கொள்வார். பின்பு அதைக் கொண்டு சமையல் குறிப்பை எழுதி விடுவார். இப்படி துலிப் சிங் எழுதிய பல்வேறு சமஸ்தானங்களின் சமையல் பதார்த்தங்களின் செய்முறை விளக்கம், அவரது மகன் திக்விஜய் சிங்கால் தொகுக்கப்பட்டுள்ளது*.

துலிப் சிங், ஒருமுறை பூரி சுட்டார். புஸ்ஸென்று இருந்த அந்தப் பூரியை ஒருவர் உடைக்க, அதனுள்ளிருந்து சிட்டுக்குருவி ஒன்று பறந்து வந்ததாம். 'எப்படி என் வேடிக்கை' என்று சிரித்தாராம் துலிப் சிங். பூரிக்குள் குருவி புகுந்தது எப்படியென்பது இன்றைக்கும் விடை தெரியாத கேள்விதான்.

சரி, பாட்டியாலாவுக்குள் வருவோம். பூபிந்தர் சிங்கும் போஜனப் பிரியர்தான். தனியாகச் சாப்பிடுவதைவிட எல்லோருடனும் சேர்ந்து விருந்து சாப்பிடுவது அவருக்குப் பிடித்தமான விஷயம். மோதி பாக் அரண்மனையில் நூற்றுக்கும் அதிகமான சிறப்பு செஃப்கள் இருந்ததாகக் குறிப்புகள் உள்ளன. ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்லும்போதெல்லாம் தனது பிரத்யேக சமையல்காரர்களை உடனழைத்துச் சென்றுவிடுவது அவரது வழக்கம்.

ஒருமுறை லண்டன் சேவோய் ஹோட்டலில் தங்கியிருந்த பூபிந்தர் சிங்குக்கு கௌதாரிக் கறி சாப்பிட வேண்டுமென்று ஆசை வந்துவிட்டது. 'இன்றே, இங்கே, இப்பொழுதே எனக்கு கௌதாரி வேண்டும்' - கட்டளையிட்டார். தவித்துப் போனது சேவோய் நிர்வாகம். காரணம்,

---

★ இதுபோக ராயல் சமையல் குறிப்புகள் அடங்கிய இன்னொரு முக்கியமான புத்தகம் "Cooking of the Maharajas' - எழுதியவர் இந்தூர் இளவரசி ஷாலினி தேவி (எ) சாலி ஹோல்கர்.



பாட்டியாலா அரண்மனை வெள்ளிப் பாத்திரங்கள்

அவர்களிடம் கைவசம் கௌதாரி இல்லை. ஐரோப்பாவில் அப்போது சீஸனும் கிடையாது. திடீரென்று கேட்டால் எங்கே போவது? நகரத்திலுள்ள இறைச்சி விற்பனையாளர்களிடமும் மற்ற ஹோட்டல்களிடமும் போன் செய்து கேட்டார்கள். ஸ்டாக் இல்லை. தயங்கித் தயங்கி மகாராஜாவிடம் அந்தத் தகவலைச் சொன்னார்கள். 'மன்னிக்க வேண்டும். கௌதாரி கிடைக்கவில்லை.'

லேசில் விட்டுவிடுவாரா என்ன? இங்கே கிடைக்கவில்லையென்றால், அருகிலுள்ள ஊர்களில் கேட்டுப் பாருங்கள். வேறு எங்கே கிடைக்கும் என்று விசாரியுங்கள். நாளை இரவு விருந்துக்கு கௌதாரி கறி வேண்டும்.

ரோதனைதான். இருந்தாலும் தனது ராயல் வாடிக்கையாளரது தேவையை நிறைவேற்றா விட்டால் பெயர் கெட்டுப் போகுமே என்ற பயத்தில் சேவோய் நிர்வாகத்தினர் அடுத்தகட்ட நடவடிக்கையில் இறங்கினார்கள். பல இடங்களுக்குத் தந்தி அடித்து விசாரித்தார்கள். எகிப்தில் கௌதாரி இருப்பதாக பட்சி ஒன்று சொன்னது. அங்கிருந்து கறி அவசர அவசரமாக வரவழைக்கப்பட்டது. பாட்டியாலா சமையல்காரர்கள் அதைச் சமைத்துக் கொடுத்தார்கள். மகாராஜா மகிழ்ந்தார். ஏவ்!



# 116

# சிம்லா, பல குறிப்புகள்!

அதாகப்பட்டது பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே, சிம்லாவிலே இருந்த ஒரே ஓர் அடையாளம் என்றால், அது அந்த ஆஞ்சநேயர் ஆலயம்தான். ஜக்கு மந்திர் என்று பெயர். அந்த மலையின் பெயர்கூட ஜக்குதான். கோயிலுக்கு அருகில் இரண்டு, மூன்று குடிசைகள். சிறு கிராமம் என்றுகூட அதைச் சொல்ல முடியாது. அந்தப் பசுமையான மலைப்பிரதேசத்துக்குச் சரியான பெயர்கூட வைக்கப்படவில்லை. காளியின் இன்னொரு அவதாரமாகக் கருதப்படும் சியாமளா தேவி, அங்கு உதித்ததாக ஓர் ஐதீகம். 'சியாமளா' என்ற பெயரே, பின்னாளில் உருகி, மருகி 'சிம்லா' ஆனதாக நம்பப்படுகிறது.

சாது ஒருவர், எப்போதும் ஜக்கு கோவில் அருகிலேயே உட்கார்ந்திருப்பாராம். அந்தப் பகுதி வழியாக வருவோர் போவோர் எல்லாம் சாதுவிடம் தண்ணீர் வாங்கி தாகசாந்தி செய்துகொள்வார்களாம். 1817ல் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த சில ராணுவ வீரர்கள் அந்தப் பகுதிக்கு வந்திருக்கிறார்கள். சாதுவும் தண்ணீர் கொடுத்திருக்கிறார். அந்த இடம் அவர்களுக்கு மிகவும் பிடித்துப் போகவே, கூடாரமடித்து சில நாள்கள் தங்கினார்களாம். சிம்லாவில் குடியிருப்புகள் தொடங்கியது அப்போதிருந்துதான் என்கிறது பிரிட்டிஷாரின் ஆவணங்கள்.

சிம்லா எப்படி கம்பெனியாரின் கட்டுப்பாட்டுக்குள் வந்தது என்ற கதையும் சற்று விசேஷமானதுதான். அதற்கு நாம் கொஞ்சம் நேபாளம் ஓரமாகச் செல்ல வேண்டியதிருக்கிறது.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் நேபாளத்தை ஆண்டு வந்தவர் கூர்க்காக் களின் அரசராகிய பிரித்வி நாராயண் ஷா. எல்லைப் பிரச்னை ஏகத்துக்கும்

இருந்தது. சிக்கிம், குமான் மற்றும் பல இடங்களை கூர்க்காக்கள் அபகரித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று சிறுசிறு சண்டைகள், சச்சரவுகள். அதிலும் குறிப்பாக கர்வால் என்ற சமஸ்தானம் ரொம்பவே பாதிக்கப்பட்டிருந்தது. டெஹ்ரி கர்வால் (Tehri Garhwal) என்ற முழுப் பெயர் கொண்ட உத்திரப்பிரதேச சமஸ்தானம் அது. கூர்க்காக்களின் தொல்லைகள், ஆக்கிரமிப்புகள் அதிகமாகவே, வேறு வழி தெரியாத கர்வாலின் மகாராஜா கிழக்கு இந்தியக் கம்பெனியாரின் உதவியை நாடினார். பாதிக்கப்பட்டிருந்த வேறு சிலரும் உதவி கேட்டிருந்தார்கள்.

நாடு பிடிக்க வந்த நயவஞ்சகர்கள்தானே அவர்கள். பரவசமாகப் படைகளோடு கிளம்பினார்கள். ஆங்கிலேயர்களும் நேபாளியர்களும் மோதிய கூர்க்கா போர் (Anglo - Nepalese War) ஆரம்பமானது. கம்பெனியின் படைகள் சுமார் 34000 பேர். நேபாளியர்கள் சுமார் 12000 பேர். எண்ணிக்கையில் குறைவுதான் என்றாலும் வீரம் செறிந்த கூர்க்காக்களை அவர்களுக்குப் பழக்கப்பட்ட இடங்களில் எதிர்கொள்ள கம்பெனிப் படை கொஞ்சம் திணறத்தான் செய்தது. கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுகள் (1814 - 1816) நடந்த போரில் கூர்க்காக்களுக்கு தலைமையேற்றிருந்த தளபதி பக்த தாபா கொல்லப்பட்டார். கூர்க்காக்கள் வெள்ளைக் கொடி காட்டித் தோல்வியை ஒப்புக் கொண்டார்கள். இன்னமும் எதிர்த்துக் கொண்டிருந்தால் நேபாளத்தின் தலைநகரான காத்மாண்டுவே பறிபோய்விடும் என்ற நிலை. கம்பெனியாரும் எப்போதடா போர் முடியும் என்றுதான் காத்துக் கொண்டிருந்தார்கள். காரணம் பல ஐரோப்பிய வீரர்களுக்குக் காலரா.

ஆகவே கம்பெனியாருக்கும் நேபாளத்துக்கும் இடையே ஒப்பந்தம் ஒன்று கையெழுத்தானது. 1816, மார்ச் 4. சுகௌலி ஒப்பந்தம் (Treaty of Sugauli). அதன்படி கூர்க்காக்கள் ஆக்கிரமித்திருந்த கர்வால், சிக்கிம், தராய், குமான் பகுதிகள் எல்லாம் இனி கம்பெனியாருக்குச் சொந்தம். அதற்குரிய நிவாரணத் தொகையை நேபாளத்துக்குக் கம்பெனி வழங்கிவிடும். ஆக, உதவிக்கு கம்பெனியாரை அழைத்த நமது ஆள்கள் எல்லாம் நொந்துபோய் தலையில் துண்டைப் போட்டுக் கொண்டார்கள். குறிப்பாக கர்வால் சமஸ்தானத்தின் பெரும்பாலான பகுதிகள் கம்பெனியார் வசமானது. அதில் சிம்லாவும் உண்டு.

இந்த கூர்க்கா போரில், பாட்டியாலா மகாராஜா கரம் சிங் (பூபிந்தர் சிங்கின் பாட்டன்), கம்பெனியாருக்கு ஏகத்துக்கும் உதவி செய்தார். அகமகிழ்ந்த கம்பெனியார், 'சிம்லாவுல உங்களுக்கு எந்தெந்த இடம் பிடிச்சிருக்கோ அதையெல்லாம் வாங்கிப் போட்டுக்கோங்க' என்று அனுமதி கொடுத்தார்கள். கரம் சிங்கும் ஓரளவு வளைத்துப் போட்டார்.

ஆக, அந்தக் காலத்திலிருந்தே பாட்டியாலா பரம்பரையினர் சிம்லாவில் படு உரிமையோடு வலம்வரத் தொடங்கிவிட்டார்கள். மாளிகைகள் கட்டி, கோடையிலும் குளிரிலும் மகோன்னத வாழ்க்கை நடத்தினார்கள். ஆனால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் டங்கென்று வந்து விழுந்தது ஒரு தடை. விதித்தது பிரிட்டிஷ் அரசு. 'பாட்டியாலா மகாராஜா இனிமேல் சிம்லாவுக்குள் காலடி எடுத்து வைக்கக்கூடாது.' என்ன காரணம்?

அந்த விஷயங்களுக்கெல்லாம் செல்வதற்கு முன்பாகவே விட்ட இடத்திலிருந்து சிம்லாவின் வரலாற்றைத் தொடர்ந்து பார்த்துவிடலாம். காரணம், நாடாறு மாதம், காடாறு மாதம் என்பது போல, குளிர்காலத்தில் கல்கத்தா, கோடையில் சிம்லா என்று பிரிட்டிஷாரின் காலத்தில் இந்தியாவின் தலைநகரம் மாறிக் கொண்டே இருந்தது. தலைநகரம் ஆகுமளவுக்கு சிம்லாவில் அப்படி என்ன சிறப்பு?



1890ல் சிம்லா

*1819.* பிரிட்டிஷ் அரசு துணை தூதர் ரோஸ், சிம்லாவுக்கு வந்தார். பார்வையிட்டார். மர வீடு ஒன்றைக் கட்டிக் கொஞ்ச மாதங்கள் இருந்துவிட்டுப் போனார். அவரைத் தொடர்ந்து அந்த இடத்துக்கு அதே பதவியில் வந்தவர் சார்லஸ் கென்னடி. வந்தவர், முதல் வேலையாக நிரந்தரக் கல்வீடு ஒன்றைக் கட்டி வாழ ஆரம்பித்தார். அது கென்னடி ஹவுஸ் என்றழைக்கப் பட்டது.

சிம்லாவின் ஜிலுஜிலு புகழ் கொஞ்சம் கொஞ்சமாக பிரிட்டிஷாரிடையே பரவ ஆரம்பித்தது. வெப்ப நகரங்களான கல்கத்தா, சென்னை, பம்பாயில் தங்கி பணிகளைக் கவனித்துக் கொண்டிருந்த பிரிட்டிஷார் பலருக்கு அந்த சீதோஷ்ண நிலை ஒத்துவரவில்லை. ஏதாவது ஜில் பிரதேசத்துக்குச் சென்று வாழ்க்கையை அனுபவிக்க முடியாதா என்று ஏங்கிக் கிடந்தார்கள். ஆக, 1830ன் கோடையில் சமயத்தில் சிம்லாவின் பக்கம் பிரிட்டிஷாரின் நட மாட்டம் ஆரம்பமானது. ஜக்கு மலையில் மூன்று மைல்கள் அளவுக்குச் சாலைகள் உருவாக்கப் பட்டன. சிம்லாவையும், சோட்டா சிம்லா என்றழைக்கப்படும் ஒரு பகுதியையும் இணைக்க மரப்பாலம் ஒன்று உருவாக்கப்பட்டது. இதெல்லாமே ஆரம்ப கால வளர்ச்சி.

மேலும் சிம்லாவையும் அதைச்சுற்றியுள்ள பகுதிகளையும் மேம்படுத்துவதற்காகச் சில கிராமங்களைத் தன் வசப்படுத்த பிரிட்டிஷார் முடிவு செய்தனர். கெய்ந்து, பக்ஹாக், சியோக், ஐண்டாரி ஆகிய மலைப்பிரதேச கிராமங்கள் பாட்டியாலா வசமிருந்தது. அந்த கிராமங்களி லிருந்து பாட்டியாலாவுக்கு ஆண்டு வருமானம் என ஆயிரத்து சொச்சம் ரூபாயும் வந்து கொண்டிருந்தது. ‘அந்த நான்கு கிராமங்கள் எங்களுக்குத் தேவை. அதற்குப் பதிலாக வேறு

நான்கு கிராமங்களைத் தருகிறோம். எடுத்துக் கொள்ளுங்கள்' பிரிட்டிஷார், பாட்டியாலா மகாராஜாவிடம் சம்மதம் கேட்டார்கள். 'தங்கள் சித்தம் என் பாக்கியம் துரை' என சம்மதம் கொடுத்தார் கரம் சிங்.

இப்படி சிம்லாவைச் சுற்றி பல கிராமங்களை பிரிட்டிஷார் தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்திருந்தாலும், சிம்லாவுக்குச் செல்ல முறையான பாதை என்று எதுவும் இல்லை. கல்காவில் இருந்து சிம்லாவுக்கு வரவேண்டுமென்றால் கல்லும் பனியும் காலுக்கு மெத்தை என்று நடந்து மலையேற வேண்டியதுதான். அடர்ந்த காட்டுப்பகுதி வேறு. விலங்குகள் எல்லாம் விரதம் இருக்குமா என்ன?

பாவப்பட்ட ஏழை கிராம மக்கள்தான் துரைமார்களைப் பல்லாக்குகளில் தூக்கிக் கொண்டு திரிந்தார்கள். கொஞ்சம் குதிரைகளும் அலைந்தன. 1838ல் சிம்லாவுக்கு வந்த கவர்னர் ஜெனரல் ஆக்லண்ட் (Auckland), தனது சகாக்களோடு உட்கார்ந்து யோசித்து மாபெரும் திட்டமொன்றை உருவாக்கினார். 'அப்படியே நம்ம பயலுகளை ஆயுதங்களோட அழைச்சுட்டுப் போயி இந்த ஆப்கனிஸ்தானைப் பிடிச்சுட்டா இன்னும் வசதியா இருக்கும்.'

முதல் ஆங்கிலேய - ஆப்கானிய யுத்தம் ஆரம்பமானது. கிட்டத்தட்ட மூன்றரை ஆண்டுகள் இழுபறியாக நடந்த அந்த யுத்தத்தில் (பெரும்பான்மையான இந்தியர்கள் அடங்கிய) பிரிட்டிஷ் படைக்கு நாயடி, பேயடி. 1842ல் பிரிட்டிஷ் படைகள் கையெடுத்துக் கும்பிட்டு வாபஸ் ஆகின. மீண்டும் சிம்லாவில் கூடினார்கள். 'இந்த அறிவுகெட்ட ஆக்லண்டுதான் எல்லாத்துக்கும் காரணம்' என ஆளாளுக்குப் பழி சுமத்திவிட்டுக் கலைந்தார்கள்.

1837ல் பிரிட்டிஷ் குயினாகப் பதவியேற்றிருந்த விக்டோரியாவைக் கௌரவப்படுத்தும் வகையில் சிம்லாவில் நிகழ்ச்சிகள் நடத்த ஆரம்பித்தார்கள். குறிப்பாக அன்னாண்டாலே (Annandale) என்ற பகுதியில். ('அன்னா' என்ற காதலி கொண்ட ஓர் ஐரோப்பியன், அவளது நினைவாகக் கசிந்துருகி இப்படி ஒரு பெயர் வைத்ததாகச் சொல்லுகிறார்கள்.) எல்லாமே கலை, கேளிக்கை நிகழ்ச்சிகள். அதன் மூலமாக நிதி திரட்டினார்கள். ஏதாவது ஒரு வளர்ச்சித் திட்டத்துக்குப் பயன்படுத்தினார்கள். வேடிக்கை, விளையாட்டு, வேட்டை, நாடகம், ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம் - சிம்லாவில் பெருகியது. கோடையில் அங்கு வரும் ஐரோப்பியர்களின் எண்ணிக்கை வளர்ந்துகொண்டே போனது. 'மச்சான், இப்போ சிம்லாவுக்குப் போனோம்னா, டக்கரான பொண்ணுங்களைப் பார்க்கலாம். அதுல ஒருத்தி நமக்குன்னுப் பொறந்தவளாக் கூட இருப்பா. வர்றியா?' இப்படித் தங்கள் இணையைத் தேடி வரும் ஐரோப்பிய இளசுகளின் கூட்டம் அதிகரித்தது. அவர்களைக் குறிவைத்து வரும் வியாபாரிகளும் அதிகரித்தார்கள். நமது மாண்புமிகு மகாராஜாக்களும் குடும்பத்தோடோ அல்லது ஐரோப்பியப் பெண் தோழிகளுடனோ சிம்லா விஜயம் மேற்கொள்ளத் தொடங்கி யிருந்தார்கள். கோடையில் மட்டும் சிம்லாவின் மக்கள் தொகை பல மடங்கு அதிகமாகிக் கொண்டே போனது.

புதிய சாலைகள் முளைக்கத் தொடங்கின. மலைகள், குகைகளாக வழிவிட்டன.

1851, அக்டோபர். கவர்னர் ஜெனரல் டல்ஹௌசி (Dalhousie). கொதிகொதிக்கும் கல்கத்தாவை விட்டு, சிம்லாவுக்குள் காலடி எடுத்து வைத்தார். பல பார்ட்டிகளில் சமர்த்தாகக் கலந்து கொண்டார். பின்பு டைரியில் குறிப்பு எழுதினார். 'விருந்து, விருந்து, எப்போது பார்த்தாலும்

விருந்து. இங்கு எல்லாம் அளவுக்கு மீறிச் சென்று கொண்டிருக்கிறது. கல்கத்தாவை விட்டு வந்ததற்காக வெட்கப்படுகிறேன்.'

*1857, மே 12.* நாடெங்கும் சிப்பாய்கள் கலகத்தில் குதித்த செய்தி சிம்லாவின் காதுகளிலும் மெல்ல ஒலித்தது. அது கோடை என்பதால் ஐரோப்பியர்கள் கூட்டம் அதிகமாகத்தான் இருந்தது. அங்கே கலகங்கள் ஏதும் வெடிக்கவில்லையென்றாலும், பரவிய வதந்திகளால் சூழ்நிலை களேபரமாகத்தான் இருந்தது. 'சிம்லாவைச் சூறையாட கூர்க்கா படையினர் வந்து கொண்டிருக்கிறார்களாம். எங்காவது ஓடிச்சென்று உயிர் பிழைத்துக் கொள்ளுங்கள்.'

உண்மையில் அந்தச் சமயத்தில் சுற்றியுள்ள சில இடங்களில் கலவரமும் கொள்ளைச் சம்பவங் களும் நடந்ததே தவிர, சிம்லாவில் குறிப்பிடும்படியான கலகங்கள் ஏதும் நடக்கவில்லை. அது பிரிட்டிஷாரை யோசிக்க வைத்தது. 'அட, ரொம்பப் பாதுகாப்பான இடமாகத் தோன்று கிறதே. வருடம் முழுவதும் கல்கத்தாவில் அந்த வறட்டு வெயிலில் கிடந்து கஷ்டப்பட வேண்டுமா? இப்போதே பாதிப்பேர் கோடையில் சிம்லாவுக்கு வந்துவிடுகிறார்கள். பேச ாமல் கோடையில் சிம்லாவை நமது தலைநகரமாக மாற்றிக் கொண்டால் என்ன?' பல தரப்புகளில் இருந்தும் ஆதரவுக் குரல் கிளம்பியது,

அப்போது இந்தியாவின் முதல் வைஸ்ராயாகப் பதவியேற்றிருந்தார் கன்னிங் (Canning). சிப்பாய்க் கலகத்தை அடக்கியதால் அவருக்குக் கிடைத்த பதவி அது. சிம்லா குறித்து யோசித்தார். பெண்டாட்டியோடு சிம்லாவுக்குச் சென்று சில நாள்கள் தங்கி, ரசித்து வாழ்ந்தார். ஆனால் எந்த முடிவும் சொல்லவில்லை. அடுத்து பதவியேற்ற வைஸ்ராய் எல்கின் (Elgin) சிம்லாவுக்குப் பதவி உயர்வு கொடுக்கும் முன்னரே மேலோகப் பதவி பெற்றார்.

பிறகு வைஸ்ராயாக வந்த ஜான் லாரன்ஸ், முனைப்போடு செயல்பட்டார். 'காலரா பாதிப்பு தாங்க முடியல. காசநோயும்தான். கொசுத்தொல்லை அய்யய்யோ. சூடு பத்தி சொல்லவே வேண்டாம். ஆகவே...' - இப்படிப் பல காரணங்களை முன்வைத்து சிம்லாவை இந்தியாவின் கோடைகாலத் தலைநகரமாக அறிவித்தார் (1864).

ஏப்ரல் - செப்டம்பர் மாதங்களில் சிம்லா திருவிழாச் சந்தையாகக் களைகட்ட ஆரம்பித்தது. வைஸ்ராய் முதல் சிறிய அதிகாரி வரை பெட்டியும் மப்ளரும் கட்டிக்கொண்டு சிம்லா வந்திறங்கினார்கள். மகாராஜாக்கள் பலருக்குக் குஷியோ குஷி. உத்தியோக நிமித்தமாக உல்லாசபுரிக்குச் செல்ல வேண்டுமென்றால் கசக்குமா என்ன? பல மகாராஜாக்கள் தமது அமைச்சரவை சகாக்களோடும் அந்தப்புரப் புறாக்களோடும் வந்தார்கள். இன்ப வாழ்க்கையைத் தொடர்ந்தார்கள்.

எல்லாமே எல்லை மீறிப் போனால் ஆள்பவன் சும்மா அண்டங்காக்கா விரட்டிக் கொண்டிருப் பானா என்ன? பிரிட்டிஷ் அரசு, கட்டுப்பாடு என்ற சாட்டையைக் கையில் எடுத்தது.



# 117

# சேலை கட்டும் பெண்ணுக்கொரு...

ஆயிரம்தான் குறை சொன்னாலும் பிரிட்டிஷாரை ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் விட்டுக் கொடுக்கவே முடியாதுதான். தாங்கள் செல்லுமிடமெல்லாம் தண்டவாளத்தையும் தூக்கிக் கொண்டு போகும் அவர்களுடைய குணத்தை. அப்போது செய்ததெல்லாம் அவர்களுடைய சுயநலத்துக்காகத்தான் என்றாலும் இந்தியாவில் இன்று இத்தனை இடங்களில் இருப்புப்பாதைகள் வளைந்து நெளிந்து சென்று கொண்டிருப்பது பிரிட்டிஷாரால்தான்.

1856ல் கல்காவிலிருந்து சிம்லாவுக்குச் செல்ல மலைப்பாதை அமைத்தார்கள். குதிரையில் அல்லது கழுதையில் செல்லலாம். அல்லது அவை இழுத்துச் செல்லும் சிறிய வண்டியில் செல்லலாம். டோலியும் அதைத் தூக்கிச் செல்லச் சில கூலியாள்களும் கிடைத்தால் ஜோராக உட்கார்ந்து செல்லலாம். வேறு வழி கிடையாது. ஆள்களுக்குச் சரி, பொருள்களுக்கு? சிம்லாவில் வாழத் தேவையான முக்கால்வாசிப் பொருள்களை கல்காவிலிருந்துதான் கொண்டு செல்ல வேண்டும். ஆக மலையேற மலையேற பொருள்களின் விலையும் ஏறியது. தபால் வேலைகளுக்காகவே தினமும் இருபதுக்கும் மேற்பட்டவர்களுக்குக் கூலி அழ வேண்டியதிருந்தது.

கட்டுப்படுத்த என்ன செய்யலாம் என்று யோசித்த பிரிட்டிஷாரின் ஞானக் கண்களில் சட்டெனத் தெரிந்த விஷயம் தண்டவாளம்தான். தரை என்றால் சரி, இது மலைப்பாதையாயிற்றே. உடனே திட்டமிட முடியவில்லை. கொஞ்சம் கரடு முரடாகத்தான் யோசிக்க வேண்டியதிருந்தது. தாற்காலிகத் தீர்வாக



சிம்லா வைஸ்ராய் மாளிகை

ஏற்கெனவே இருந்த மலைப்பாதையை அகலப்படுத்தினார்கள். குதிரை வண்டிகள் அதிக மாயின. சிம்லாவுக்குள் கைரிக்‌ஷாக்கள் முளைத்தன.

பல வருடங்களாகத் திட்டமிடப்பட்ட இருப்புப்பாதைப் பணிகளுக்கு, மலைகள் குடைச்சல் கொடுத்தன. பதிலாக மலைகளுக்குக் குடைச்சல் கொடுத்தார்கள். குகைகள் பிறந்தன. அப்படி இப்படிப் பணிகளையெல்லாம் முடிக்கும்போது 1891 வந்திருந்தது. கல்கா - சிம்லா (Kalka Shimla) ரயில் பாதை. மொத்தம் 60 மைல்கள். 103 குகைகள். முதலில் சரக்கு ரயில் போக்கு வரத்து மார்ச் 31 அன்று ஆரம்பமானது. மேற்கொண்டு பல வசதிகளைச் செய்து, வைஸ்ராய் கர்ஸனின் பெருமுயற்சியால் பயணிகள் ரயில் போக்குவரத்தை ஆரம்பித்தார்கள். அது 1903, நவம்பர் 9.

வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்ட திட்டம் என்றாலும், நிதி அளவில் பிரிட்டிஷ் அரசுக்குத் தோல்விதான். காரணம் இந்தத் திட்டத்துக்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ.86,78,500. உண்மையில் ஆன செலவு ரூ.1,71,07,748.

கல்கத்தாவில் இயங்கிக் கொண்டிருந்த ராணுவத் தலைமை முகாம், 1864 முதல் சிம்லாவுக்கு நிரந்தரமாக மாற்றப்பட்டது. சிம்லா வாழ் மக்களுக்கெனத் தனி நீர்த்தேக்கம் அமைக்கப்பட்டது. வசதிகள் பெருகப் பெருக சிம்லாவில் ஜன நடமாட்டமும் பண நடமாட்டமும் தானாகப் பெருகியது. 'கத்திரி வெயில்ல ஊர்ல எவனாவது வாழ முடியுமா? சிம்லா இருக்கறப்போ எதுக்கு கவலை? அங்க ஒரு மாளிகையைக் கட்டிப்போடு. வந்து வாழ்ந்துட்டுப் போ!' மகாராஜாக்களும் மற்ற முக்கியஸ்தர்களும் அதைத்தான் செய்தார்கள்.

குட்டி மகாராஜாக்கள்கூட சிம்லாவில் மாளிகை வைத்திருக்க, மாண்புமிகு வைஸ்ராய்க்கு கௌரவப் பிரச்னை வரத்தானே செய்யும். வைஸ்ராய் டஃப்ரின் (Dufferin) காலத்தில் (1884 1888) மாபெரும் மாளிகை ஒன்று எழுப்பப்பட்டது.

பிரம்மாண்டமான அறைகள், வண்ணமயமான வரவேற்பறை, பளபள பால்ரூம், உன்னத அழகுடைய உணவு அறை, வியக்கவைக்கும் வராண்டாக்கள், விஸ்தீரணமான தோட்டம் என்று அருமையாக எழும்பியது Viceregal Lodge. இந்தியர்கள் அதற்கு வைத்த பெயர் ராஷ்டிரபதி நிவாஸ். இந்தியாவின் சுதந்தரப் போராட்ட வரலாற்றில் பல முக்கியமான முடிவுகள் எடுக்கப்பட்ட இடம் அதுவே.

1888ல் அங்கு மின்வசதி கொண்டுவரப்பட்டது. அறைகள் முதல் தோட்டம் வரை எங்கும் மின் விளக்குகள் ஒளிர, வைஸ்ராய் டஃப்ரினுக்கு பேராச்சரியம். டைரியில் எழுதி வைத்தார். 'ஒரு பொத்தனைத் தட்டுனா லைட்டு வருது டோய்! இதுவும் நல்லாத்தான் இருக்குது.'

அடுத்ததாக வந்த வைஸ்ராய் லான்ஸ்டௌன். அவருக்குக் கொஞ்சம் கடமை உணர்வு அதிகம் போல. பொதுவாக மகாராஜாக்கள் சிம்லாவைக் கோடைகாலத் தலைநகரமாக நினைக்காமல், ஓர் உல்லாசபுரியாக நினைத்து, எப்போது பார்த்தாலும் குடித்துக் கொட்டமடித்ததை அவரால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அதுபோக சிம்லாவில் அப்போதிருந்த மாளிகைகளில் இருபது சதவிகிதத்துக்கும் மேல் ராஜ பரம்பரையினருக்குச் சொந்தமாகத்தான் இருந்தது. அது அதிகரித்துக் கொண்டே போனது. சிம்லாவில் மகாராஜாக்களின் கும்மாளச் செய்திகளை ஐரோப்பியப் பத்திரிகைகளும் அடிக்கடி கடுமையாக விமரிசித்துக் கொண்டிருந்தன. ஆகவே பிரிட்டிஷ் அரசிடமிருந்து சாட்டை வார்த்தைகள் வந்து விழுந்தன.

'என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? இனி யாரும் காரண, காரியமில்லாமல் சிம்லாவுக்கு வந்து ஸீன் போடக் கூடாது. மகாராஜாக்கள், தேவையென்றால் மட்டுமே, அதுவும் அரசிடம் முறையான அனுமதி பெற்ற பின்னரே சிம்லாவுக்கு வந்துபோக வேண்டும்' இப்படி ஒரு கட்டளை மறைமுகமாக விதிக்கப்பட்டது. அந்தச் சமயத்தில் ஹைதராபாத் நிஜாம்கூட மாளிகை ஒன்றை வாங்க நினைத்தார். அனுமதி கிடைக்கவில்லை. இந்த நடவடிக்கைக்குப் பின் பல ராஜ குடும்பத்தினர் தங்களது சிம்லா மாளிகைகளை விற்க ஆரம்பித்தார்கள்.

சரி, பாட்டியாலா மகாராஜாவின் 'சிம்லா துயரக் கதை'க்கு வருவோம். மற்ற மகாராஜாக்களுக்கு சிம்லா மேல் விதிக்கப்பட்ட ரகசியக் கட்டளை பொதுவானது. 'உத்தரவு வாங்கிட்டு உள்ளே வா' என்பதே அது. ஆனால் பாட்டியாலா மகாராஜாவுக்கான தடை என்பது ஸ்பெஷல். 'மவனே, இனிமே நீ சிம்லாவுக்குள்ள காலடி எடுத்து வைச்சே, அவ்வளவுதான்!'

அப்படி என்னதான் பண்ணினார் அவர்? பூபிந்தர் சிங்கின் தந்தையான ராஜிந்தர் சிங்குக்கு நடந்ததாக திவான் ஜர்மானி தாஸ் குறிப்பிட்டுள்ள சம்பவம் இது.

1899ல் வைஸ்ராயாக பம்பாயில் வந்து இறங்கினார் கர்ஸன். வைஸ்ராயைவிட அதிகமாக எல்லோராலும் கவனிக்கப்பட்டவர், அவரது மனைவி மேரி கர்ஸன். கண்டவர் கண்களுக் கெல்லாம் பேரழகியாக ஜொலித்தாள். பிரபலக் கவிஞரான ராம் சர்மா, லேடி கர்ஸனைக் கண்டதும் உருகி கவிதை ஒன்றை வடித்தார். 'பசும்பொன்னில் பதிக்கப்பட்ட வைரமே! தெளிந்த வானில் வலம் வரும் முழு நிலவே!'

கர்ஸனை வரவேற்க வந்திருந்த மகாராஜாக்கள் சிலர் அவள் ரம்மியத்தைக் கண்டு அசடு வழிந்தபடி நின்றார்கள். மேரி கர்ஸனின் அழகுப்புகழ் வெகு வேகமாகப் பரவியது.

கோடைகாலம். கர்ஸன், சிம்லாவுக்குப் பெட்டி கட்டினார். ஏற்கெனவே அங்கு தனது உயிர்த் தோழர்களோடு முகாமிட்டிருந்தார் பாட்டியாலா மகாராஜா ராஜிந்தர் சிங். ஒருவர் தோல்பூர் மகாராஜா நிஹால் சிங். இன்னொருவர் கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங். மூவரும் கூட்டணி அமைக்கிறார்கள் என்றாலே விஷயம் ஏதோ விவகாரமானதாகத்தான் இருக்கும். அந்த முறை அவர்கள் கூட்டணி அமைத்திருந்தது லேடி கர்ஸனுக்காக.

சிம்லாவுக்கு வரும் மேரியோடு நட்பு பிடிக்க வேண்டும். நெருங்கிப் பழக வேண்டும். இதுதான் அவர்களுடைய அஜெண்டா. கர்ஸனை மீறி இதெல்லாம் நடந்துவிடுமா என்ன? எப்படிச் சாத்தியமாக்குவது என்பது குறித்துத் திட்டமிட்டார்கள். விருந்துகள், விழாக்கள், பொது நிகழ்ச்சிகள் என்று வைஸ்ராய் கலந்துகொள்ளும் நிகழ்வுகளிலெல்லாம் தவறாமல் ஆஜரானார்கள். கர்ஸனை மரியாதையாகக் கவனித்தார்கள். மேரியுடன் பேரன்போடு பேசி னார்கள். ஒரு மகாராஜாவாக இருந்து கொண்டு, வைஸ்ராயின் மனைவியோடு அதுவும் மேற்கத்திய நாகரிகத்தில் ஊறிய ஒரு பெண்ணோடு சிநேகம் கொள்வது கஷ்டமாக இருக்க வில்லை. நட்பு வளர்ந்தது.

'வைஸ்ராயை எப்படியாவது கழற்றிவிட்டுவிட வேண்டும். அவருக்கு வேறு ஏதாவது முக்கியமான வேலை இருக்கும் நேரம் பார்த்து அவளுக்கு அழைப்பு விடுக்கலாம். மேரிக்கான பிரத்யேக விருந்து. சரிதானே?'

தக்க தருணம் பார்த்து மூவேந்தர்களும் மேரியிடம் பேசினார்கள். நட்பு வழிய வழிய உரிமை யோடு அழைப்பும் வைத்தார்கள். 'தங்களுக்கெனப் பிரத்யேகமாக விருந்து ஒன்றை ஏற்பாடு செய்துள்ளோம். தாங்கள் வந்து கலந்துகொண்டு எங்கள் அழைப்பைக் கௌரவப்படுத்துவீர்கள் என்று நம்புகிறோம்.' மேரி மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டாள்.

ராஜிந்தர் சிங்குக்குத்தான் சிம்லாவில் Ceders, Rookwood, Oakover என்று மூன்று மாளிகைகள் இருந்தனவே. அதில் ஒன்றில்தான் விருந்துக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. மூன்று மகாராஜாக்களும் ஆவலோடு காத்திருந்தார்கள். எதிர்பார்ப்பு பொய்க்கவில்லை. மேரி, தனியாகத்தான் வந்தாள். அவர்களின் முகத்தில் குஷி குத்தாட்டம் போட்டது. வரவேற்றார்கள். கொஞ்ச நேரம் நட்பான உரையாடல்.

'தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டீர்கள் என்ற தைரியத்தில் ஒன்று கேட்கிறேன். தாங்கள் ஒரு சிறந்த அழகி என்பது உலகறிந்த விஷயம். ஆனால் ஓர் இந்தியப் பெண்போல் உடையணிந்தால் பேரழகியாகி விடுவீர்கள் என்பது எங்கள் கருத்து. ஒப்புக் கொள்கிறீர்களா?'

வைஸ்ராயின் பெண்டாட்டியாக இருந்தாலென்ன, புகழ்ச்சிக்கு மயங்காத பெண் கிடையாதே. வெட்கப்பட்டாள். அந்தச் சமயத்தில் ராஜிந்தர் சிங் கோரிக்கையாகத் தம் உள்ளக்கிடக்கையை

வெளியிட்டார். 'சேலையில் உங்களைத் தரிசிக்க விரும்புகிறோம்.' சிநேகிதர்களின் கோரிக்கை. மேரி மறுக்கவில்லை. படாடோப பட்டுச் சேலை ஒன்று தயாராக இருந்தது.

சேலை கட்டிய லேடி கர்ஸன். கோயில் கட்டிக் கும்பிடலாம் போலிருந்தது. மேரியின் முகம் சிவக்கச் சிவக்க வெளிப்படையாகவே வருணித்தார்கள். 'ஏதோ ஒன்று குறைவது போலிருக் கிறதே?' - என்று ஆளாளுக்கு நகைப்பெட்டிகளைக் கையில் எடுத்தார்கள். எல்லாம் அவரவர் சமஸ்தானத்தின் பரம்பரை நகைகள். இருக்கட்டுமே. அழகுக்கு அழகு சேர்ப்பதைவிட நகை களுக்கு வேறென்ன வேலை? சூட்டி மகிழ்ந்தார்கள். சேலை, நகை, நெற்றியில் திலகம் என்று முழு இந்தியப் பெண்ணாக மாறியிருந்தாள் மேரி.

'அய்யோ, எவ்வளவு அபூர்வமான காட்சி. மீண்டும் கிடைக்குமா என்ன? ஒரு புகைப்படம் எடுத்துக் கொள்ளட்டுமா?' - எடுத்தார்கள். சேர்ந்து நின்று எடுத்துக் கொண்டார்கள். மேரிக்கு அளவில்லா மகிழ்ச்சி. விருந்து முடிந்தது. கிளம்பிப் போனாள். இந்த விஷயங்கள் ஏதுமறியாத கர்ஸனுக்கு சில வாரங்கள் கழித்து ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. பிரிட்டன் பத்திரிகை ஒன்று, லேடி கர்ஸனின் இந்தியக் கோலத்தைப் புகைப்படமாக வெளியிட்டிருந்தது. நடந்ததை யெல்லாம் விசாரித்து அறிந்த கர்ஸனுக்கோ கடுங்கோபம். கட்டளையிட்டார்.

'என்ன தைரியம் இருந்தா, எம் பொண்டாட்டியை அழைச்சுட்டுப் போயி, சேலை கட்டி விட்டுருப்பீங்க. உங்க பரம்பரை நகையை வேற போட்டு விடுவீங்களா? இதுல ஃபோட்டோ வேற! இனிமே நீங்க மூணு பேரும் ஆயுசுக்கும் சிம்லா பக்கம் தலை வைச்சே படுக்கக் கூடாது.'

ராஜிந்தர் சிங்கால் இந்த அவமானத்தைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. சிம்லா இல்லையென்றால் என்ன? நான் எனக்கெனத் தனியாக ஒரு கோடைகாலத் தலைநகரை உருவாக்கிக் கொள்கிறேன் என்று கிளம்பினார். சய்ல் - சிம்லாவிலிருந்து நாற்பது மைல்கள் தொலைவில் உள்ள மலைப்பிரதேசம். அதுவரை அடையாளமின்றிக் கிடந்த அந்த மலைக் கிராமம், பாட்டியாலாவின் கோடைகாலத் தலைநகரமாக வளர்ந்தது. அதற்குப்பின் ராஜிந்தர் சிங், தம் வாழ்நாளில் சிம்லாவுக்குச் செல்லவில்லை.

பாட்டியாலா மகாராஜா தனது கோடைகாலத் தலைநகரை சிம்லாவிலிருந்து சய்லுக்கு மாற்றியது குறித்து இன்றுவரை சரித்திரக் குழப்பம் ஒன்று இருக்கவே செய்கிறது. சில சரித்திர ஆசிரியர்கள், இந்த நிகழ்வு பூபிந்தர் சிங்கின் காலத்தில் நிகழ்ந்ததாக, கற்பூரம் அடித்து சத்தியம் செய்யாமல் எழுதி வைத்துள்ளனர். அதற்குக் காரணமாக அவர்கள் குறிப்பிடும் சம்பவமும் விவகாரமானதுதான்.

சிம்லாவில் இருந்த பிரிட்டிஷ் உயர் அதிகாரி ஒருவரது மகள் மீது பூபிந்தர் சிங்குக்குக் காதல். அடக்கிக் கொண்டு இருக்க முடியுமா என்ன? பொது இடத்துக்கு வந்த அந்தப் பெண்ணைக் கடத்திக் கொண்டு போய்விட்டாராம். திமிறி எழுந்த பிரிட்டிஷ் அரசு, பூபிந்தர் சிங்கின் ஒழுக்க மின்மையைக் காரணம் காட்டி 'சிம்லா தடை'யை விதித்ததாம். அதற்குப் பின்பே சய்ல் உருவானதாக அந்த சரித்திர ஆசிரியர்கள் சொல்கிறார்கள்.

பாட்டியாலா மகாராஜா அந்தப் பெண்ணைக் கடத்தியதாகச் சொல்லப்படும் இடம் சிம்லாவில் இன்றுவரை முக்கியமான டூரிஸ்ட் ஸ்பாட். அதற்கு வைக்கப்பட்டுள்ள பெயர் Scandal Point.



# 118

# அந்தப்புர டாக்டர்கள்!

காலங்கார்த்தாலேயே பாட்டியாலாவின் மோதி பாக் அரண்மனை வாசலில் வந்து நின்றுவிட்டார் அந்த ஆள். என்ன ஏது என்று விசாரித்தார்கள் வாயிற் காவலர்கள். 'மகாராஜாவைப் பார்க்கணும்' என்றார் அவர். தினமும் இப்படி நூற்றுக்கணக்கானோர் வருவது வழக்கம். அதில் தொன்னூறு சதவிகிதம் பேர் உதவி கேட்டு வந்திருப்பார்கள். அந்த ஆளின் கசங்கலான கோலம், அவரை ஒரு பரதேசி என்றே அடையாளப்படுத்தியது.

'இப்பவெல்லாம் பார்க்க முடியாது. போயிட்டு அப்புறம் வா.'

அந்த ஆள் மல்லுக்கு நிற்கவில்லை. அந்த அளவுக்குத் தெம்பும் அவரிடம் இல்லை. அங்கிருந்து கிளம்பி சற்றுத் தள்ளிச் சென்று உட்கார்ந்து கொண்டார். சூரியன் அப்போதுதான் வரலாமா, வேண்டாமா என்று எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. சிறிது நேரம் கழிந்தது. இரவு முழுவதும் பணியிலிருந்த அந்தக் காவலர்கள் கிளம்பினார்கள். புதிய காவலர்கள் வந்து நின்றார்கள். உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்தார் அந்த ஆள். புதிய காவலர்களிடம் சென்றார்.

'நான் ஒரு கவிஞன். மகாராஜாவைப் பார்க்கணும்.'

அந்த வார்த்தைகளுக்கு அங்கே நிறையவே மதிப்பு இருந்தது. ஆகவே காவலர் களிடமிருந்து மரியாதையான பதில் கிடைத்தது.

'அய்யா, மகாராஜாவை இப்போ பார்க்க முடியாது. நீங்க கொஞ்சம் காத்திருக் கணும். உள்ள போய் அப்படி ஓரமா உட்காருங்க.'

கவிஞருக்கு அந்தப் பதில் ஆறுதலாக இருந்தது. காத்திருக்க அவருக்குக் கசக்கவில்லை. அரண்மனையின் வெளிப்புறச் சுவருக்கு அருகே, திண்டு ஒன்றில் உட்கார்ந்துகொண்டார். நேரம் ஆக ஆக அரண்மனைக்கு வருவோரின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே போனது. பஞ்சப் பரதேசிகள், கண்கள் இடுங்கிய சாமானியர்கள், கிழிந்த உடை குசேலன்கள். சிலரைக் காவலர்கள் அந்த இடத்தில் நிற்கவே விடவில்லை. அடிக்காத குறையாகத் துரத்தினார்கள். வெகு சிலருக்கு மட்டும் மரியாதை கிடைத்தது. அந்த வெகு சிலரும், கவிஞரோடு வந்து உட்கார்ந்து கொண்டார்கள். அதில் ஜோசியர், அறிஞர், தத்துவவாதி என்று பல சாதியினர் இருந்தார்கள். ஆனால் எல்லோரிடம் ஒரே ஓர் ஒற்றுமை இருந்தது. ஏழைமை.

காலை, பகலாக மாறியிருந்தது. கவிஞருக்குள் தவிப்பாக சில கேள்விகள் தவில் வாசித்துக் கொண்டிருந்தன. மகாராஜாவைப் பார்க்க முடியுமா? பார்த்தால், பேச முடியுமா? நான் பேசுவதை அவர் காது கொடுத்துக் கேட்பாரா? அவரைப் புகழ்ந்து ஏதாவது கவிதை சொல்ல வேண்டியதிருக்குமா? எனில், கவிதையை எப்படி ஆரம்பிப்பது?

கவிஞர் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தபோதே, அரண்மனைக்குள் இருந்து அழைப்பு வந்தது. பதறி எழுந்து குடுகுடுவென்று உள்புறம் நோக்கி நடக்க ஆரம்பித்தார் அவர். பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங், தனது அரியணையில் அழகாக வீற்றிருந்தார். வந்து நின்றவர் ஆள், கவிஞர் என்று அறிந்ததும் அவருக்கு மகிழ்ச்சி. 'என்னைப் பற்றி அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியப்பாவில் கவிதை ஒன்று பாடுமய்யா' என்று இம்சிக்கவெல்லாம் இல்லை. நேரடியாகக் கேட்டார், 'என்ன உதவி வேண்டும் உமக்கு?'

'நிறையக் கவிதைப் புத்தகங்கள் எல்லாம் போட்டுள்ளேன். ஆனால் இந்த ஏழைக் கவிஞனால் நிதி நெருக்கடியைச் சமாளிக்க முடியவில்லை. என்னுடைய புத்தகங்களை எல்லாம் விற்றுக் காசாக்கி நான் பணம் சம்பாதிக்க வேண்டுமென்றால் குறைந்தது மூன்று மாதங்களாவது ஆகும். ஒரு முந்நூறு ரூபாய் கொடுத்தீர்கள் என்றால் பசியாறிக் கொள்வேன். புத்தகம் போடுவ தற்காக நான் வாங்கிய கடனையும் கொஞ்சம் அடைத்துவிடுவேன். தயவுசெய்து...'

பூபிந்தர் சிங், சற்றும் யோசிக்கவில்லை. தனது நிதிச் செயலாளரான குர்தயால் சிங்கை நோக்கிப் பார்வையைத் திருப்பினார். அவர் விரைவாக வந்து அருகில் நின்றார். பூபிந்தர், சொல்லச் சொல்ல எழுதினார் குர்தயால் சிங். அந்தக் காகிதத்தை வாங்கிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார் பூபிந்தர் சிங். கவிஞரை நோக்கி அந்தக் காகிதமும் கூடவே ஆயிரம் ரூபாயும் நீட்டப்பட்டது.

முந்நூறு கேட்டதற்கு ஆயிரம். திக்குமுக்காடிப் போனார் கவிஞர். அந்தக் காகிதத்தில் இருந்ததைப் படித்துப் பார்த்தார். அவரது ஆயுள்காலம் முழுவதற்கும் மாதந்தோறும் ஆயிரம் ரூபாய் வழங்கச் சொல்லி உத்தரவுக் கடிதம். கவிஞரின் கண்களில், வேறென்ன ஆனந்தக் கண்ணீர்தான்.

மது, மாதுவை எந்த அளவுக்கு நேசித்தாரோ அதற்கு இம்மியளவும் குறையாமல் கவிதை யையும் இலக்கியத்தையும் நேசித்தார் பூபிந்தர் சிங். இலக்கியவாதிகளை மட்டுமல்ல, பல ஜோதிடர்களை, அறிஞர்களை, தத்துவவாதிகளை வாழ வைத்தார். அதுவும் ஏதாவது வெளி யூரிலிருந்தோ, வெளி மாநிலத்திலிருந்தோ, வெளி நாட்டிலிருந்தோ யாராவது கலைஞர்கள் விருந்தினர்களாக வந்துவிட்டால் போதும். பூபிந்தர் சிங் குஷியாகி விடுவார். அவர்களது



மகாராஜா பூபிந்தர் சிங் தனது சில மனைவிகளுடன்

திறமைமயை வெளிப்படுத்தச் சொல்லி ரசிப்பார். சகல வசதிகளுடன் அவர்களைத் தனது விருந்தினராகத் தங்க வைப்பார். விருந்தோம்பல் ஓஹோ!

அறிஞர்களை, தத்துவவாதிகளை, அரசியல் தலைவர்களை எல்லாம் உட்காரவைத்து விவாதங்கள் நடத்துவது பூபிந்தர் சிங்கின் மிக முக்கியமான பொழுதுபோக்கு. இந்து, கிறித்துவம், புத்தம், இஸ்லாம் - போன்ற பிற மதங்களிலுள்ள தத்துவங்களை அந்த மதத்தைச் சார்ந்த அறிஞர்களைப் பேசச் சொல்லி மணிக்கணக்கில் கேட்டுக் கொண்டே இருப்பார்.

வந்தாச்சு, ஒருவாரம் உல்லாச வாழ்க்கை வாழ்ந்தாச்சு என்று விருந்தினர்கள் கிளம்ப எத்தனித்தால் போதும். விடவே மாட்டார். இன்னும் கொஞ்ச நாள்கள் இருக்கச் சொல்லி சற்று மிரட்டலாகவே அன்புக் கட்டளையிடுவார். பூபிந்தரை மீறி யாரும் அரண்மனையை விட்டு வெளியே செல்லவும் முடியாது. ஆக மோதி பாக் அரண்மனைக்குள் விருந்தினராக நுழையும் கலைஞர்கள் பல மாதங்கள் வரை அங்கு தங்கியே ஆக வேண்டும் என்பது அனிச்சையானது. மகாராஜா ஊரில் இல்லாத சமயம் பார்த்து விருப்பப்பட்டு வெளியில் கிளம்பினால் மட்டுமே உண்டு.

விருந்தினர்களுக்கான கவனிப்பு பற்றித் தனியாகச் சொல்லியே ஆக வேண்டும். கேட்டதெல்லாம் கிடைக்கும். உணவு முதல் உடை வரை. கூடவே உல்லாசங்களும். மாதா மாதம் உதவித் தொகையாக பணம் வேறு. கசக்குமா என்ன? ஆக, பூபிந்தர் சிங்கின் ஆட்சிக் காலத்தில், மோதி பாக் அரண்மனையில் எந்த நேரமும் நூற்றுக்கணக்கான விருந்தினர்கள் வாழ்க்கையை அனுபவித்தார்கள்.

பலரது படிப்புச் செலவுக்கும் பூபிந்தர் சிங் உதவி செய்துள்ளார். பல கல்வி நிறுவனங்களுக்காக உதவித்தொகை வழங்கியுள்ளார். ஒருமுறை பிரபல அரசியல் தலைவரான மதன் மோகன் மாளவியா (Madan Mohan Malaviya), பூபிந்தர் சிங்கிடம் சென்றார். பனாரஸ் பல்கலைக் கழகத்தை உருவாக்க நிதி கேட்டார். அவர் எதிர்பார்த்ததோ சில ஆயிரம். ஆனால் பூபிந்தர் சிங், கொடுத்த காசோலையில் எழுதப்பட்டிருந்த தொகை ஐம்பதாயிரம்.

பூபிந்தர் சிங், சிறுவயதில் ஒழுங்காகப் படிக்கவில்லைதான். லாகூர் எய்ட்சிஸன் போர்டிங் ஸ்கூலின் கண்டிப்பான சூழலில்கூட அவர் 'ஓபி' அடித்து உல்லாசமாகவே திரிந்தார். ஆனால் பருவ வயதைத் தாண்டிய பிறகு, நான்கைந்து திருமணங்கள் ஆன பின்பு பூபிந்தர் சிங்குக்கு ஒரு பாடத்தில் அதிபயங்கர ஆர்வம் பிறந்தது. அந்தப் பாடம் செக்ஸாலஜி.

அந்த சப்ஜெக்ட் குறித்து தேடித்தேடிப் படித்தார். அந்தத் துறை அறிஞர்களை, டாக்டர்களைத் தனது அரண்மனையிலேயே தங்க வைத்து அவர்களிடமிருந்து நிறையவே கற்றுக் கொண்டார். உலகத்தில் ஒரு மருத்துவர் 'அந்த' சப்ஜெக்டில் கில்லாடி என்று தெரிந்தால் போதும். எப்பாடு பட்டாவது அந்தக் கில்லாடியைச் சந்தித்துவிட முயன்றார். அல்லது பாட்டியாலாவுக்கு வரவழைத்து தனது அறிவை விஸ்தரித்துக் கொண்டார்.

சப்ஜெக்டில் கில்லாடிகளான ஃபாக்ஸ் (Fox), ஹெய்ஸ் (Hayes) என்ற இரண்டு பிரிட்டிஷ் மருத்துவர்கள், மோதி பாக் அரண்மனையில் தங்க வைக்கப்பட்டிருந்தார்கள். இதில் ஹெய்ஸ், லாகூர் கிங் எட்வர்ட் மருத்துவக் கல்லூரியின் பிரின்சிபாலாகவும் பணியாற்றிக் கொண்டிருந் தார். நரேன் சிங் (Narain SIngh), நரன்ஜின் சிங் (Naranjin Singh) என்ற இரண்டு இந்திய மருத்துவர்களும் பாட்டியாலா அரண்மனையில் நிரந்தரப் பணியில் இருந்தார்கள்.

பிரான்ஸிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் ஒரு கொத்து மருத்துவர்கள் அடிக்கடி பாட்டியாலாவுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களில் முக்கியமானவர் டாக்டர். ஜோசப் டோர் (Joseph Dore). அவர் பிரான்ஸுக்கான கலாசாரத் தூதுவராகவும் இந்தியாவில் பணியாற்றிக் கொண்டிருந்தார். இன்னொருவர் டாக்டர். ப்ளாண்டல் (Blondel). இந்த இரண்டு மருத்துவர்களுக்கும் பாட்டியாலாவில் இருந்தாலும், இல்லாவிட்டாலும் பெரும்தொகை ஒன்றை மாதச் சம்பளமாகப் பெற்றுக் கொண்டிருந்தார்கள்.

போக, பல இந்திய மருத்துவர்கள் பணி நியமனம் செய்யப்பட்டிருந்தார்கள். துறைவாரியாக ஸ்பெஷலிஸ்ட்டுகளும் அரண்மனையில் உலவினார்கள். சிறப்பு மருத்துவர்கள் பலர், அடிக்கடி விருந்தாளிகளாக வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

மகாராஜா, அந்த மருத்துவர்கள் கேட்ட வசதிகளையெல்லாம் தவறாமல் தாமதமின்றி செய்து கொடுத்தார். ஆங்கில மருத்துவர்கள் மட்டுமல்ல. தில்பார் ஹசன்கான் (Dilbar Hassankhan) என்பவரின் தலைமையில் யுனானி மருத்துவர்களும், பண்டிட் ராம்பிரசாத் என்பவரின் தலைமையில் ஆயுர்வேத மருத்துவர்களும்கூட அரண்மனையில் சேவை செய்தார்கள்.

பூபிந்தர் சிங் நாட்டு வைத்தியர்களைக்கூட விட்டுவைக்கவில்லை. அமுக்கரா கிழங்குக்கும் அங்கே மிகுந்த மதிப்பிருந்தது.

டாக்டர் முதல் வைத்தியர் வரை எல்லோரிடமிருந்தும் தனக்குத் தேவையான 'சப்ஜெக்டை' ஆர்வமாகக் கற்றுக் கொண்டார் பூபிந்தர் சிங். தியரியோடு நிறுத்திக் கொள்ளவில்லை. அந்தப்புரம் எதற்கு இருக்கிறது? அங்கு அழகுப் பெண்களும் தண்டத்துக்கா கிடக்கிறார்கள்? ஆக ப்ராக்டிகல் வகுப்புகளும் தவறாமல் நடந்தன. சப்ஜெக்ட் மீதிருந்த அதீத ஆர்வத்தினால் புதிது புதிதாக சோதனைகள் பலவற்றையும் செய்துபார்த்தார்.

நபினா ஷாகிப் (Nabina Sahib) என்று ஒரு யுனானி மருத்துவர் இருந்தார். பல அரண்மனைகளின் அந்தப்புர வைத்தியர் அவர். அடிக்கடி மோதி பாக் அரண்மனைக்கும் வந்து போவார். ஆனால்

அவருக்குக் கண் பார்வை கிடையாது. இருந்தாலும்கூட சில நொடிகள் நாடி பிடித்துப் பார்த்தே உடலிலுள்ள சகல வியாதிகளையும் புட்டுப் புட்டு வைத்துவிடுவார். நமது அந்தப்புரங்கள் ஆச்சாரமானதாயிற்றே. அங்குள்ள பெண்களை யாரும் பார்த்துவிடக் கூடாதே. பார்வையில்லாத நபினா ஷாகிபுக்கும் அதே கட்டுப்பாடுதான்.

எனவே அந்தப்புரப் பெண்களுக்கு நாடிபிடித்துப் பார்ப்பதற்காக தனி முறை ஒன்றை வைத்திருந்தார் அவர். பெண்கள் உள்ளே திரைக்கு அப்பால் பல அடிகள் தள்ளி இருப்பார்கள். அவர்களது மணிக்கட்டில் மெல்லிய நூல் ஒன்று இறுக்கமாகக் கட்டப்பட்டிருக்கும். நூலின் மறுமுனை நபினாவிடம் இருக்கும். நூலை இறுக்கிப் பிடித்து, அதில் எதிரொலிக்கும் துடிப்பை வைத்தே, அந்தப் பெண்களின் நோயை அறிந்து நபினா மருந்து சொல்லிவிடுவார். பெரும்பாலான அந்தப்புரங்களில் ஐரோப்பிய டாக்டர்கள் அனுமதிக்கப்படவில்லை. வைத்தியர்கள்தான் இப்படி நூல்விட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் பாட்டியாலாவின் அந்தப்புரத்தில் டாக்டர்களுக்கு எந்தவிதமான கட்டுப்பாடுகளும் விதிக்கப்படவில்லை. பரிபூரண சுதந்தரம். டாக்டர்கள், பெண்களின் முகம் பார்த்துப் பேசலாம். தொட்டு சிகிச்சையும் செய்யலாம். ஆனாலும் இந்தியப் பெண்களுக்கே உரிய விஷயங்கள் சில உண்டே, என்ன அது? நாணம், வெட்கம், கூச்சம். ஆகவே இந்திய மருத்துவர்களையும் வைத்தியர்களையும் நேருக்கு நேர் சந்திக்கப் பெண்கள் தயங்கினார்கள். ஆனால் ஐரோப்பிய, அமெரிக்க மருத்துவர்கள் என்றால், வெட்கத்தை வெளியே தள்ளிவிட்டு, சிகிச்சைக்கு ஓஹோவென ஒத்துழைத்தார்கள்.

இந்த இடத்தில் ஒரு தகவல். இந்திய மகாராஜாக்களிலேயே மாபெரும் அந்தப்புரத்தைக் கட்டி மேய்த்தவர் என்ற பெருமை நமது ஹைதராபாத் நிஜாம் ஒஸ்மான் அலிகானைச் சாரும். இரண்டாவது, மகாராஜா பூபிந்தர் சிங். அவரது அந்தப்புரத்தில் இருந்த பெண்களின் எண்ணிக்கை சுமார் முந்நூறு.

தனது அந்தப்புரத்தில் வாழும் எந்தப் பெண்ணும் சௌகரியக் குறைவுடன் இருக்கக்கூடாது என்பதில் பூபிந்தர் சிங் கண்ணும் கருத்துமாக இருந்தார். அதற்காகத்தான் மோதி பாக் அரண்மனையில் ஏகப்பட்ட டாக்டர்கள் அடங்கிய குழு ஒன்றை வைத்திருந்தார். அந்த டாக்டர்களின் தினசரிக் கடமைகள் என்னவென்றால்...



# 119

# அள்ளி முடியாத கூந்தலுக்கு அர்த்தம் என்ன?

பாட்டியாலாவின் மோதி பாக் அரண்மனையில் டாக்டர்கள் ஆஜராவதற்காகவே தனிப்பெரும் அறை ஒன்று உண்டு. காலையில் எட்டு மணிக்கெல்லாம் அங்கே வந்துவிடவேண்டும். ஐரோப்பிய டாக்டர்கள், இந்திய டாக்டர்கள், யுனானி மருத்துவர்கள், ஆயுர்வேத மருத்துவர்கள். ஆண்கள் மட்டுமல்ல, நிறையப் பெண் டாக்டர்களும் இதில் அடக்கம்.

யார் யாருக்கு எங்கெங்கே, என்னென்ன வேலை என்று தீர்மானிப்பார்கள். தெளிவாகப் பேசி, வேலைகளைப் பிரித்துக் கொண்டு அவர்களுக்குரிய 'வார்டு களுக்குக்' கிளம்புவார்கள். ஆனால் எல்லா வார்டுகளுமே மோதி பாக் அரண்மனையில் அந்தப்புரத்தில் இருப்பவைதான். எல்லா பேஷண்டுகளுமே பெண்கள்தான்.

சரி, அந்தப்புர வாழ் பெண்களைத் தினமும் கவனிக்க வேண்டிய அவசியம் என்ன? அதுவும் சர்வதேச மருத்துவர்கள் அடங்கிய மாபெரும் குழு ஒன்று தேவையா? கேள்விகளில் நியாயம் இருக்கலாம். மகாராஜா பூபிந்தர் சிங்கும் தனக்கே உரிய நியாயங்களுடன் இதற்குரிய பதில்களை வைத்திருந்தார்.

பாட்டியாலாவின் அந்தப்புரத்தில் மகாராணிகள், ராணிகள், துணைவிகள், ஆசைநாயகிகள், அழகிகள் என்று மொத்தம் முந்நூற்று சொச்சம் பெண்கள் வாழ்ந்தனர். அதுவே தனியொரு காலனி. காய்ச்சல், தலைவலி, வாயு, பித்தம், அஜீரணம், மலச்சிக்கல், கபம், காதுவலி என்று எப்போது பார்த்தாலும் யாருக்காவது, ஏதாவது ஒரு நோய் இருந்துகொண்டே இருந்தது. மகாராஜாவை

குஷிப்படுத்துவதற்காகவே பிறவி எடுத்துள்ள அந்தப் பெண்களின் ஆரோக்கியம் அதிமுக்கிய மல்லவா! ஆகவே பாட்டியாலாவின் அரண்மனைக்குள் டாக்டர் படை அவசியப்பட்டது.

எப்போது பார்த்தாலும் யாராவது சில பெண்கள் மசக்கையில் மாங்காய் கடித்தபடியும், வயிற்றைத் தள்ளிக் கொண்டும் அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருந்தார்கள். மகாராஜாவால் அந்தப் பெரும் பாக்கியத்தைப் பெற்ற பெண்களைக் கவனிப்பதற்கென்றே மகளிர் டாக்டர்கள் குழு ஒன்று நியமிக்கப்பட்டிருந்தது.

முந்நூற்று சொச்சம் பெண்களைக் கவனிப்பது என்பது நிச்சயம் கடினமான காரியம்தான். யார், யாருக்கு என்னென்ன நோய் இருக்கிறது, குறை இருக்கிறது, இதற்கு முன் என்ன சிகிச்சை கொடுக்கப்பட்டிருக்கிறது, இனி என்ன சிகிச்சை கொடுக்க வேண்டும், யாருக்கு என்னென்ன மருந்துகள் சேரும், சேராது - இம்மாதிரியான விஷயங்களை எல்லாம் நியாபகம் வைத்துக் கொள்வது, அய்யய்யோ முடியவே முடியாதே. அத்தனை பேருடைய பெயர்களை நினைவில் வைத்துக்கொள்வதே சாத்தியமில்லாத விஷயமாயிற்றே. 'ப்ரீத்தமுக்கு வயிற்று வலியாம். போய்க் கவனியுங்கள்' என்று தகவல் வந்தால், எந்தப் ப்ரீத்தமைப் போய்க் கவனிப்பது? குறைந்தபட்சம் அந்தப்புரத்தில் ஏழெட்டுப் ப்ரீத்தமாவது இருப்பார்கள்.

இம்மாதிரியான பிரச்னைகள் நிறைய இருந்தன. நோயாளியைத் தேடி சிகிச்சை செய்வதற்குள் டாக்டர்களுக்கு விழிகள் பிதுங்கிப் போயின. இதெல்லாம் சரிப்படாது, முறையான 'டேட்டா பேஸ்' தேவை என்று பூபிந்தர் சிங்கிடம் கலந்து பேசிய டாக்டர்கள், அந்தப்புரத்தில் 'அடை யாள' முறையைக் கொண்டு வந்தார்கள். எப்படி?

பக்தவார் கவுர். பூபிந்தர் சிங்கின் முதல் மனைவி. சமஸ்தானத்தின் முதன்மை மகாராணி. எனில் அவருக்குரிய அடையாள எழுத்து A. பக்தவாருக்கு அடுத்த நிலையிலுள்ள மகா ராணிக்குரிய அடையாள எழுத்து B. அப்படியே C, D, E என்று வரிசை தொடர்ந்தது. அடுத்த நிலையில் உள்ளவர்கள் ராணிகள். அவர்களை அடையாள எண் கொடுத்து வரிசைப்படுத்தி யிருந்தார்கள், 1, 2, 3, 4, 5, 6 - இப்படி. மீதமிருப்பவர்கள் ஆசைநாயகிகள், அழகிகள். அந்த மாதிரிப் பெண்களுக்காகக் கொடுக்கப்பட்டிருந்த அடையாள எண் A1, A2, A3, B1, B2, C1 - இப்படி. இதனால் பெயர்க் குழப்பங்கள் தொலைந்தன. டாக்டர்களால் ஒவ்வொரு பெண்ணைப் பற்றியும் துல்லியமாக விவரங்களைத் திரட்டி வைத்திருக்க முடிந்தது.

'அடையாள எண் C2. பெயர் லஷ்மி. இவளுக்குப் போன வருடம் நான்கு முறை காய்ச்சல் வந்தது. இந்த வருடம் இதுவரை காய்ச்சல் வரவில்லை. இப்போது இருமல் இருக்கிறது. அவள் கர்ப்பமாக இருக்கிறாள். ஏற்கெனவே அவளுக்கு ஒரு குழந்தை இருக்கிறது. ஆண் குழந்தை. இது இரண்டாவது கர்ப்பம். இந்தக் குழந்தையோடு அவளது 'கோட்டா' முடிகிறது. இந்தப் பிரசவத்தோடு, அவளுக்குக் கருத்தடை அறுவை சிகிச்சை செய்துவிட வேண்டும்.'

அந்தப்புரத்தில் கருக்கலைப்புகள் எதுவும் பெரும்பாலும் நடக்கவில்லை. ஒரு பெண்ணுக்கு இரண்டு குழந்தைகள் வரை பெற்றுக் கொள்ள உரிமை வழங்கப்பட்டிருந்தது. இரண்டுக்கு மேல் ம்ஹூம். அந்தப்புரத்தில் அநாவசியமாகக் குழந்தைகள் கூட்டத்தைப் பெருக்கிக் கொள்வதை பூபிந்தர் சிங் விரும்பவில்லை. இருந்தாலும் அதிகாரபூர்வ தகவல்களின்படி பூபிந்தர் சிங்குக்கு அவருடைய மகாராணிகள், ராணிகள், ஆசைநாயகிகள் வழியாகப் பிறந்ததாகச் சொல்லப்படும் குழந்தைகளின் எண்ணிக்கை 88.



பூபிந்தர் சிங்கின் வாரிசுகள் சிலர்

எத்தனைக் குழந்தைகளுக்குத்தான் அவரும் தேடித் தேடி பெயர் வைப்பார். ஒரு கட்டத்தில் ஆங்கிலப் பெயர்களுடன் அவரது வாரிசுகள் திரிந்து கொண்டிருந்தன. வில்லியம், டேவிட், பீட்டர், மிக்கேல், ஜானி, ரூபி இப்படி. வில்லியம் பால்சிங், மிக்கேல் மன்சிங் என்பவை முழுப்பெயர்களாக இருந்தன.

அந்தக் குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதற்கென்றே அரண்மனையில் தனிப் பகுதி ஒதுக்கப்பட்டிருந்தது. ஆயாக்களும் நியமிக்கப்பட்டிருந்தார்கள். குழந்தைகளுக்காகத் தனி மருத்துவக் குழுவும் இருந்தது. குழந்தைகள் குறித்த விவரங்களையும் அந்த மருத்துவர்கள் தனியே பராமரித்தார்கள். குழந்தைகள் 'டேட்டாபேஸ்' குறித்து பூபிந்தர் சிங் கண்டு கொள்ளவில்லை. ஆனால் தனது அந்தப்புரத்திலிருந்த ஒவ்வொரு பெண் குறித்த விவரங் களையும் 'அப்டேட்' செய்துகொண்டார். டாக்டர்களிடம் இருந்த அத்தனை விவரங்களும் பூபிந்தர் சிங்கிடமும் இருந்தன.

அவற்றைக் கொண்டு டாக்டர்களிடம் அடிக்கடி ஆலோசனைகள் நடத்தினார். யாருடைய தேக நிலை எப்படி இருக்கிறது? அவர்களது ஆரோக்கிய விருத்திக்கு மேற்கொண்டு என்ன செய்யவேண்டும்? என்னென்ன சாப்பிடலாம், எவை கூடாது? இந்தப் பெண்ணுக்கு, அந்தப் பிரச்னை பல காலமாக இருக்கிறதா, சரி. தீர்ப்பது எப்படி? இப்படிப் பல்வேறு ஆலோசனைகள்.

அந்தப்புரத்தில் காலையில் ரவுண்ட்ஸ் கிளம்பும் டாக்டர்கள் எல்லோருடைய கையிலும் தனித்தனியாக நோட்டு ஒன்று இருக்கும். அதில், அவர்களிடம் மகாராஜா முந்தைய நாள்

கொடுத்த குறிப்புகள் அல்லது உத்தரவுகள் இருக்கும். அதன்படி சிகிச்சை செய்வார்கள். அன்றைய விசிட்டின்போது யார் யாருக்கு என்னென்ன பிரச்னை என்று நோட்டில் குறித்துக் கொள்வார்கள். அதற்கு சிகிச்சை செய்வார்கள். தங்களுடைய ரிப்போர்ட்டைத் தயார் செய்வார்கள். அது அன்றே மகாராஜாவின் டேட்டாபேஸில் அப்டேட் செய்யப்படும்.

நோட்டுகள் அனைத்தும் படு ரகசியமாகப் பாதுகாக்கப்பட்டன. டாக்டர்கள், மகாராஜா தவிர வேறு யார் கையிலும் இந்த மருத்துவ விவரங்கள் கிடைத்துவிடாதபடி, தனித்தனி லாக்கர் களில் பத்திரமாக வைக்கப்பட்டிருந்தன.

தான் ஆர்வமாகப் படித்த செக்ஸாலஜியில், மேன்மேலும் அறிவை வளர்த்துக் கொள்ள டாக்டர்கள் சூழ விவாதங்களை, கருத்தரங்குகளை நடத்தி இன்புற்றார் பூபிந்தர் சிங். பேச்சளவில் கருத்தரங்குகளில் செயல்பட்டார், செயலளவில் அந்தப்புரங்களில்.

டாக்டர்கள், மகாராஜாவிடம் முக்கியமாகத் தெரிவிக்க வேண்டிய விஷயமாக ஒன்று சொல்லப்பட்டிருந்தது. எந்தெந்த மகாராணிகள், ராணிகள், அந்தப்புரப் பெண்கள் ஆரோக்கிய மாக இருக்கிறார்கள்? யாரெல்லாம் நலமாக இல்லை? அது மிகவும் முக்கியமாயிற்றே. பூபிந்தர் சிங், தன் பாட்டுக்கு குஷியாகப் பாய்ந்து சென்று யாராவது ஓர் ஆசைநாயகியை 'கிக்'காகக் கட்டிப்பிடிக்க, அவளோ லொக்கு லொக்கென்று அவர் மூஞ்சிக்கு நேராக இருமிக் காண்பித்தால், மகாராஜாவுக்கு மூட்-அவுட் ஆகிவிடுமே.

ஆக, பூபிந்தர் சிங் அந்தப்புரத்துக்குள் நுழையும் முன்பாக, உடல்நிலை தகுதியில்லாதவர்கள் குறித்த பட்டியல் அவருக்கு வழங்கப்பட்டது. அதைப் பார்த்து அவர் சுதாகரிப்பாக நடந்து கொண்டார். மகாராணிகள், ராணிகள் என்றால் சரி, பூபிந்தருக்குக் கண்டிப்பாக நினைவில் இருக்கும். ஆனால் அந்தப்புரத்தில் நூற்றுக்கணக்கில் மொய்த்துக் கொண்டிருக்கும் ஆசை நாயகிகளை, அவர்களது அழகுமுகத்தை நினைவில் வைத்துக் கொள்ள முடியாதே. என்ன செய்வது என்று யோசித்த பூபிந்தர் சிங், கட்டளை ஒன்றை இட்டார்.

'உடல்நிலை தகுதியில்லாத பெண்கள் கூந்தலை அள்ளி முடியக்கூடாது. விரித்துப் போட்டபடி வலம்வர வேண்டும்.'

இந்தத் திட்டம் நல்ல பலனைக் கொடுத்தது. பெண்கள், அந்த மூன்று நாள்களிலும் தலைக்குக் குளித்துவிட்டு, கூந்தலை உலர்த்தியபடி உலாத்தினார்கள். ஓரக்கண்ணாலேயே அவர்களைப் பார்த்துவிட்டு ஒதுங்கிப்போனார் மகாராஜா.

மற்ற தகுதியான பெண்களில் அன்று யாரையெல்லாம் மனத்துக்குப் பிடித்திருக்கிறதோ, அவர்களோடு சேர்ந்து உணவு சாப்பிட்டார். மது சாப்பிட்டார். பின்பு...

அந்தப்புரக் கட்டில்கள் ஒவ்வொன்றும் மூன்றடி உயரம் கொண்டவை. நன்கு அகலமானவை. அவற்றின் மேல் விரிப்பதற்காகவே காஷ்மீரிலிருந்தும் இரானிலிருந்தும் வரவழைக்கப்பட்ட கலைநயமிக்க பட்டுக் கம்பளங்கள். ரோஜா, மல்லி, முல்லை - ஆங்காங்கே வாசனை மலர்கள் நிறைந்த தோட்டம். அதுபோக அறைகளின் நறுமணத்துக்காக, லக்னோவில், பாரிஸில் தயாரிக்கப்பட்ட சிறப்பு வாசனைத்திரவியங்கள். கட்டுக் கட்டாக ஊதுபத்திகளைக் கொளுத் துங்கள். பன்னீரில் குளித்து வந்த பெண்களை, சாம்பிராணிப் புகையால் மீண்டும் குளிப் பாட்டுங்கள். நல்ல நறுமணம் இருந்தால்தான் மகாராஜாவால் நன்கு சேவை செய்ய முடியும்.

இருந்தாலும், கோடைக்காலத்தில் பெண்களின் உடலிலிருந்து துர்வாசனை சுரக்கவே செய்தது. அது மகாராஜாவுக்கு மிகவும் எரிச்சலூட்டியது. ஐரோப்பாவிலிருந்து எதற்கு இத்தனை டாக்டர்களை வரவழைத்திருக்கிறேன்? இனி எவள் மீதும் துர்வாசனை வீசக் கூடாது. ஏதாவது கண்டுபிடித்து எதையாவது செய்யுங்கள்.

'உத்தரவு மகாராஜா' என்று புறப்பட்ட ஐரோப்பிய டாக்டர்கள், துர்வாசனையைக் கிளப்பும் துஷ்ட கிருமிகள் பெண்களின் உடலில் 'எங்கிருந்து' கிளம்புகின்றன என்று கண்டுபிடித்தார்கள். ஆராய்ச்சி எல்லாம் செய்தார்கள். அவற்றை நீக்கும் நாசினி கண்டறிந்து ஒரு பெண்ணுக்குக் கொடுத்தார்கள். சிகிச்சை வெற்றிபெறவே, மற்ற பெண்களும் பயனடைந்தார்கள். கிருமி நாசினி? வேறென்ன, காஸ்டிக் சோடாதான்.

புதிதாக யாராவது ஒரு பெண் அந்தப்புரத்துக்குள் நுழைகிறாள் என்றால், அவளுக்கான கவனிப்புகளே தனியானது. அந்தப் பெண்ணை ஐரோப்பிய மருத்துவர்களோ, இந்திய ஆண் மருத்துவர்களோ நெருங்க மாட்டார்கள். பெண் மருத்துவர்கள் அந்தப் புதுப்பெண்ணைப் பரிபூரண பரிசோதனை செய்து, சில சிகிச்சைகள் கொடுத்து, தேவையான 'மருந்துகள்' எல்லாம் கொடுப்பார்கள். அந்தப் பெண் மனத்தளவிலும் உடலளவிலும் தயாரான பின்னர், பூபிந்தருக்குத் தகவல் கொடுக்கப்படும்.

அழகான அந்தப்புரப் பெண்கள் அம்சமாகத் தங்களை அலங்கரித்துக் கொண்டால்தானே ஒரு மகாராஜாவுக்குப் பிடிக்கும். ஆனால் அவர்கள் வீதி வீதியாகத் திரிந்து ஷாப்பிங் எல்லாம் செய்யமுடியாதே. ஆகவே பனாரஸ், பிரான்ஸ் வியாபாரிகளுக்கு மட்டும் அந்தப்புரத்துக்குள் ஓர் எல்லை வரை நுழைய அனுமதி வழங்கப்பட்டிருந்தது. பட்டு உடைகள், நகைகள், அலங் காரப் பொருள்கள், வாசனைத் திரவியங்கள் என்று சகலமும் எவ்வளவு வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம். கட்டுப்பாடே கிடையாது. ஆக, வியாபாரிகள் மகிழ்ந்தார்கள். பெண்கள் மிளிர்ந்தார்கள். 'தனது அந்தப்புரத்துக்காகவும் மற்ற உல்லாச விஷயங்களுக்காகவும் பூபிந்தர் சிங் செலவிட்ட தொகை, சமஸ்தானத்தின் ஆண்டு வருமானத்தில் கிட்டத்தட்ட அறுபது சதவிகிதம்' - என்றொரு தகவல் உண்டு.

சாமுத்ரிகா லட்சணத்தில் பூபிந்தர் சிங்குக்கு ஏகப்பட்ட ஈடுபாடு. தன் அருமை நாயகிகளின் உடலமைப்பு எப்படி எப்படி வளைந்து நெளிந்து இருக்க வேண்டும் என்று அவரே முடிவெடுத்தார். ஐரோப்பிய டாக்டர்களிடம் ஆலோசனை கூறினார். அதன்படி அந்தப் பெண்களின் உடலமைப்பை மாற்ற டாக்டர்களும் அறுவை சிகிச்சை செய்தார்கள். 'ஆப்பிள் போல் வேண்டும்', 'அல்போன்ஸா மாம்பழம் போல் அமைய வேண்டும்', 'நான் வரைந்துள்ள வட்டம்போல் இருக்கவேண்டும்' இப்படி பூபிந்தர் சிங் பெண்களின் மார்பகத்தை வடிவமைப்பதில் அலாதி ஆர்வம் காட்டினார். அந்த மாதிரியான அறுவை சிகிச்சைகளின் போது உடனிருந்து பார்த்து ரசிப்பதும் அவரது வழக்கம்.

இவ்வாறாக மன்மதனே மண்ணைக் கவ்வும் அளவுக்கு இம்மண்ணில் லீலைகள் புரிந்துவந்த மகாராஜா பூபிந்தர் சிங்குக்கு ஒருநாள் 'அந்த' ஞானோதயம் தோன்றியது.



# 120

# பேரின்ப நிலை!

**த**ந்திரம் என்றால் என்ன?

தன் + திரம். தன் என்றால் விருத்தி செய்வது. திரம் என்றால் இனம். தன்னின விருத்தியைக் குறிப்பதே தந்திரம். 'உலகத்தை இறைவன் படைத்தார்' என்பதற்கு எதிரான கோட்பாடு கொண்டது தந்திரம் என்கிறது ஒரு குறிப்பு.

தந்திர முறைகள், இந்தியப் பண்பாடுகளுடன் ஆழமாகக் கலந்துள்ளன. குறிப்பாக இந்து மதத்தில் காலம் காலமாக பின்பற்றப்பட்டு வரும் பல்வேறு சடங்கு, சம்பிரதாயங்கள் எல்லாம் தந்திரங்களை அடிப்படையாகக் கொண்டதே. சிவம், சக்தி என்கிறது இந்து மதம். ஆண், பெண் என்கிறது தந்திரம்.

வேதாந்தம், சித்தாந்தம், மத நூல்கள், தத்துவ விளக்கங்கள் என்று பல விஷயங் களைத் தெரிந்துகொள்வதில் ஆர்வம் கொண்டிருந்த பூபிந்தர் சிங், தந்திரம், தாந்தரீகம் பற்றி எல்லாம் கொஞ்சம் கேள்விப்பட்டார். பாலியல் வாழ்வின் மூலமாகப் பேரின்ப நிலையை அடையலாம் என்று அரசல் புரசலாகத் தெரிந்து கொண்டதுமே அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை.

'என்ன ஒரு தத்துவம் அது? பூமியில் பிறந்த மனிதன் ஒவ்வொருவனும் உணர்ந்து கொள்ள வேண்டிய விஷயமாக அல்லவா தெரிகிறது. எங்கு சென்று, யாரிடம் தெரிந்துகொள்ளப் போகிறேன்?' பூபிந்தர் சிங் தவிதவித்துப் போனார். அந்த வித்தை அறிந்த வித்தகர் யாருமே உடனடியாகக் கிடைக்கவில்லை. தனது சக

மகாராஜாக்கள் எல்லோரிடமும் சொல்லி வைத்திருந்தார். துர்பங்கா (Durbhanga) மகாராஜா நல்ல செய்தி சொன்னார். 'நானறிந்த தாந்தரீக குரு ஒருவர் இருக்கிறார். உடனே அனுப்பி வைக்கிறேன்.'

தாந்தரீக வித்தைகளில் கரைகண்ட பண்டிட் பிரகாஷ் நந்த் ஜா (Praksah Nand Jha), பாட்டியாலாவுக்குள் பாதம் பதித்தார். அவரை பூபிந்தர் சிங், உரிய மரியாதைகளுடன் வர வேற்று உபசரித்தார். அகமகிழ்ந்த தாந்தரீக குரு, வித்தைகள் கற்றுக் கொடுக்க சம்மதம் தெரி வித்தார். பூபிந்தர் சிங் புளகாங்கிதமடைந்தார். பாடங்கள் ஆரம்பமாயின.

புருஷ் என்றால் ஆண் படைப்பின் அடிப்படை. பிரகிருதி என்றால் பெண் படைப்பின் அடிப்படை. வேதாந்தம் ஆணை முன்னிலைப்படுத்துகிறது. தாந்தரீகம் என்பது விவசாய சமூக அடிப்படையைக் கொண்டு பெண்ணை முன்னிலைப்படுத்துகிறது. விவசாயம் அதாவது பயிர் செய்தல் அல்லது விருத்தி செய்தல் என்பதே பெண்ணிலிருந்து கண்டு பிடிக்கப்பட்டதுதான். இதுவே தாந்தரீகத்தின் அடிப்படைக் கோட்பாடு.

குரு சொல்லச் சொல்ல, நல்ல சிஷ்யனாக எல்லாவற்றையும் உள்வாங்கிக் கொண்டார் மகாராஜா. அந்தச் சமயத்தில் மது பரிமாறப் பணியாளர்கள் வந்தார்கள். குருவுக்கு முன் மதுவா? பூபிந்தர் சிங்குக்குக் குழப்பம். 'அருந்துங்கள். மதுவும் மோட்சத்தை அடைவதற்கான வாசலே!' குருவே உற்சாகப்படுத்தினார். வகுப்பு தொடர்ந்தது.

இந்தப் பிரபஞ்சத்தின் உருவாக்கத்துக்கு மூல காரணம் பெண்ணே. கற்கால மனிதன் செய்த பயிர்த்தொழிலுக்கு மந்திரங்களே உறுதுணையாக இருந்தன. விவசாயத்தை மையமாகக் கொண்ட மந்திரச் சடங்குகளே தாந்தரீகர்களின் வழிபாட்டு முறையாக இருந்தது. சமூகத்தில் பெண் தெய்வங்களுக்கே முக்கியத்துவம் வழங்கப்பட்டது. பெண்களின் ஒவ்வொரு செயலும், பெண்களுக்கும் நிகழும் ஒவ்வொரு செயலும் புனிதத் தன்மையோடு மட்டுமே நோக்கப்பட்டன. ஆக மொத்தத்தில் பெண்ணின் ஒவ்வொரு உறுப்புமே வணங்குவதற்குரிய தாகப் போற்றப்பட்டது. வளமான நிலத்தோடு யோனி ஒப்பிடப்பட்டது. புனிதத்தின் ஆதாரப் பகுதியாக அது கருதப்பட்டது.

சில இன மக்கள், பெண்களின் மாதவிடாய் ரத்தத்தைப் புனிதப் பொருளாகக் கருதி, விளை நிலத்தில் கல் ஒன்றை நட்டு அதில் பூசினர். இந்த மாதிரிச் சடங்குகள் ஆசாரியங்கள் என்றழைக்கப்படுகின்றன.

ஆசாரியங்களை இரண்டு பெரும்பிரிவாகப் பிரிக்கலாம். ஒன்று தட்சிணாச்சாரியம், மற்றொன்று வாமாச்சாரியம். தட்சிணாச்சாரியம் என்பதே ஒவ்வொரு பிறப்பின் அடிப்படை. வாமம் என்பது பாலியல் நடவடிக்கைகளைக் குறிப்பது. இந்த வாமத்தின் நடவடிக்கைகளை ஐந்து செயல்பாடுகளைக் கொண்டு விளக்கலாம். '5ம' அல்லது பஞ்ச மகரங்கள் என்றழைக்கப்படும் அந்தச் செயல்பாடுகள் 1. மத்யம் (மது) 2. மாமிசம் 3. மத்சியம் (மீன்) 4. முதிரை (தானியம்) 5. மைதுனம் (கூடல்).

இந்த ஐந்துமே பேரின்ப நிலையை அடைவதற்கான வழிகள். அதாவது கூடலின்போது தானியம், மாமிசம், மீன் சாப்பிடு. மது அவசியம். மது இல்லாமல் போனால் பேரின்பம் அல்ல, சிற்றின்பத்தைக்கூட அடைய முடியாது. ஆகவே ஆணும் மதுவில் மூழ்க வேண்டும்.



அந்தரங்கம் தவிர்த்த பொழுதொன்றில் பூபிந்தர் சிங்

பெண்ணும் மதுவில் திளைக்க வேண்டும். இந்த ஐந்திலும் மூழ்கித் திளைப்பவர்களே இறைவனைக் காண முடியும் என்கிறது வாமாச்சாரியம்*.

குரு அன்றைய வகுப்பை முடித்தார். 'தேவையான' புதிய விஷயங்களைக் கற்றுக் கொண்டதால் பூபிந்தருக்கு பரம திருப்தி.

பாடங்கள் முடிந்தன. அடுத்து செய்முறைப் பயிற்சி. 'வாரம் இருமுறை எல்லோரும் கூடி, பூஜைகள் செய்ய வேண்டும். அரண்மனையின் வடகிழக்கு மூலையில் அறை ஒன்றைத் தயார் செய்யவும்.' குருவின் கட்டளை. பூபிந்தர் சிங், மாபெரும் ஹால் ஒன்றையே தயார் செய்தார். சுவர்களெங்கும் பேரின்ப நிலை ஓவியங்கள். 'பூஜையில் கன்னிப் பெண்கள் கலந்துகொள்ள வேண்டும். இளம் ஆண்களும் கலந்து கொள்ள வேண்டும்.' குருவின் அடுத்தக் கட்டளை இது.

'அதற்கென்ன செய்துவிட்டால் போச்சு' என்று களமிறங்கிய மகாராஜா, தனக்குக் கீழ் பணிபுரியும் ஊழியர்களின் வீட்டுப் பெண்களுக்கு எல்லாம் அழைப்புவிடுத்தார். விவரமாக தனது அந்தப்புர வாழ் மகாராணிகளை, ராணிகளைத் தவிர்த்தார். பிற அந்தப்புரப் பெண்கள் மட்டும் கலந்துகொள்ளும்படி செய்தார். மொத்தமாகக் கலந்து கொண்டவர்கள் இருநூற்றுச் சொச்சம். அதில் மூன்றில் இரண்டு பங்கு பெண்கள்.

---

★ இந்த பஞ்ச மகர வித்தைகள் இன்றுகூட அஸ்ஸாம், கேரளா பகுதிகளில் ரகசியமாகக் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. இந்தத் தாந்தரீகப் பயிற்சியின் பெருமையை விளக்கும் வகையில் அஸ்ஸாமின் கவுகாத்தியில் காமாக்கியா (Kamakhya) என்ற சக்தி கோயிலே இருக்கிறது. பஞ்ச மகர செயல்பாடுகளில் ஒப்புதல் இல்லாத தட்சிணாச்சாரியர்கள், ஆன்மிக வழியிலேயே இறைவனைக் காண முடியும் என்றார்கள். அவர்களில் சைவர், வைணவர், வேதாச்சாரியர் அடக்கம்.

இரவு ஆரம்பித்திருந்தது. மாபெரும் அறையில் ஒரு மூலையில் மேடை ஒன்று அமைக்கப் பட்டிருந்தது. சற்றே மெலிந்த தேகம். சாணக்கிய குடுமி. இடுப்பில் தோலால் ஆன ஆடை. முகமெங்கும் சிவப்பு வண்ணப்பூச்சு. அதில் விரிக்கப்பட்டிருந்த சிறுத்தைத் தோலின் மீது வந்து அமர்ந்தார் தாந்த்ரீக குரு. அவரை வணங்கிவிட்டுத் தன் ஆசனத்தில் அமர்ந்தார் பூபிந்தர் சிங்.

'ம்' - என்று அங்கிருந்த பணியாளர்களைப் பார்த்து ஏதோ சைகையில் சொன்னார் குரு. களி மண்ணும் ஈரமண்ணும் அங்கு வந்து கொட்டப்பட்டன. சில மந்திரங்களைச் சத்தம்போட்டுச் சொன்னபடியே அந்த மண்ணில் சிலை செய்ய ஆரம்பித்தார். பெண் கடவுளின் சிலை. வர்ணங்களை எடுத்துச் சிலை மேல் பூசினார். ஊற்றினார். சிலைக்குக் கண்கள் வரைந்தார்.

பணிப்பெண்கள், கையில் தட்டுகள் ஏந்தியபடி வந்து நின்றார்கள். ராஜ பரம்பரை நகைகள், பூக்கள், மாலைகள். அவற்றை எடுத்து கடவுளின் சிலையை அலங்கரித்தார் குரு. முத்து மாலைகள், வைரக் காப்புகள், மரகதக் காதணிகள். அர்ச்சிக்கத் தங்கக் காசுகள் தனி. எழுந்து நின்று சிலையை வணங்கினார். எல்லோரும் வணங்கினார்கள்.

குரு, பஜனை செய்ய ஆரம்பிக்க, எல்லோருமே அவரைப் பின் தொடர்ந்து பாடினார்கள். சத்தமாக, உற்சாகமாகப் பல பாடல்கள். அக்னி குண்டம் ஒன்று தயாராக இருந்தது. கூடவே மைசூர் சந்தனக் கட்டைகளும், பசும் நெய்யும். குருவின் மந்திர ஓசையில் தீ வளர்ந்தது. அறையின் மூலையில் கட்டி வைக்கப்பட்டிருந்த காளை தனது கடைசி விநாடிகளை அனுபவித்துக் கொண்டிருந்தது. பலியிடப்பட்ட அதன் ரத்தம், பக்த கோடிகளின் மேல் தெளிக்கப்பட்டது.

'கொண்டு வாருங்கள்' என்றார் பூபிந்தர் சிங். வெளியில் காத்திருந்த பணியாளர்கள் பஞ்ச மகரப் பதார்த்தங்களோடு திபுதிபுவென ஹாலுக்குள் நுழைந்தார்கள். மாமிசம், மீன், மற்ற உணவு வகைகள், அப்புறம் மது. அந்த மதுவை ஒயின், பிராந்தி, விஸ்கி, கள் என்று வகைப் படுத்திவிட முடியாது. பல்வேறு ஆல்கஹால் திரவங்கள் கலந்த புனித காக்டெயில் அது.

முதலில் மது பரிமாறப்பட்டது. பெண்களுக்கும். யாரும் அருந்தவில்லை. குரு, முதலில் கண்களை மூடி ஏதேதோ சொல்லி மதுவைச் சுவைத்தார். பின் எல்லோரும். அப்புறம் உணவு வகைகள் அவர்களது வயிற்றை நிறைத்தன.

இவ்வளவுதான் என்று அளவே கிடையாது. எவ்வளவு வேண்டுமானாலும் சாப்பிடு. ஏப்பம் வருகிறதோ இல்லையோ, ஏகாந்தம் கிடைக்கும். குறிப்பாக மது உள்ளுக்குள் இறங்கி உன்னையே கரைக்கும் அளவுக்குக் குடி. உவ்வே. பரவாயில்லை. வெளியேற்றிவிட்டு மீண்டும் உள்ளிறக்கு. மயங்கி விழுந்துவிட்டாயா? சற்றே தெளிந்ததும் மீண்டும் பருகு. சொருகிய கண்களில் கடவுள் தெரிவார். மறுபிறவியை வெல்ல இதுவே வழி. மீன், மாமிசம், தானியம், மது, மைதுனம் இந்தக் கலியுகத்திலே கடவுளைக் காண வேறு வாசல்கள் கிடையாது.

குரு, சைகை காட்டினார். மகாராஜா 'ம்' என்றார். அந்தப்புரத்தில் இருந்து அழைத்து வரப் பட்டார்கள் சில கன்னிப் பெண்கள். முற்றிலும் துறந்த நிலையில். அந்தப் பெண்களை வைத்து சில பூஜைகளைச் செய்யச் சொன்னார் குரு. பயபக்தியோடு செய்தார்கள். பஜனைக் குரல் களும், போதைப் பிதற்றல்களும் கலந்து ஒலித்துக் கொண்டிருந்தன. குரு, தன் இடத்தை

விட்டு எழுந்தார். கையிலிருந்த தங்கக் கோப்பை ஒன்றில் மது. பெண்களின் அருகே சென்றார். பூபிந்தர் சிங்கும் வந்து நின்றார்.

மதுவை அந்தப் பெண்களின் கழுத்துப் பகுதியில் ஊற்றினார். அது தேகத்தில் வழிந்தோடியது. புனிதத்தின் ஆதாரப் பகுதியில் ஓடும் திரவத்தை, சில துளிகள் சுவைத்தால், அதுவே மகா பிரசாதம். மகாராஜா பிரசாதம் பெற்றார். அவருக்குப் பின்னால் வரிசையில் மற்றவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். (இந்தப் பூஜையில் பிரசாதமாகக் கருதப்பட்ட வேறு சில பொருள் களும் இருக்கின்றன. அவை எழுதுவதற்குரிய ஐஎஸ்ஓ 9001 தரத்தில் இல்லாததால்...)

நேரம் நள்ளிரவை நெருங்கிக் கொண்டிருந்தது. உலகை மறந்த நிலையில் ஆட்டமும் பாட்டமும் தொடர்ந்து கொண்டிருந்தது. பூஜைக்காக உறவினர்களோடு வந்திருந்தவர்கள் இருந்தார்கள். ரத்த உறவுகளோடு வந்திருந்தவர்களும் இருந்தார்கள். உன்னத நிலையை நோக்கி உயர்ந்து கொண்டிருக்கும் நேரத்தில் உறவுகளாவது? ஆண்கள், பெண்கள் - அவ்வளவு தான்.

விடிந்தது. களைத்து எழுந்தவர்கள் கலைந்து போனார்கள். கொஞ்ச நேரத்தில் அப்படி ஒரு புண்ணிய பூஜை நடந்ததற்கான அறிகுறி ஏதுமின்றி படு சுத்தமாக மாறியது அந்த ஹால்.

அடிக்கடி இப்படிப்பட்ட பூஜைகளை நடத்த ஆரம்பித்தார் பூபிந்தர் சிங். நோக்கம்? தாம்பத்ய வாழ்க்கையில் எந்தவிதக் குறைகளும் இல்லாமலிருப்பதற்கான வழிபாடு. அதுமட்டுமல்ல, தனது மகாராணி ஒருத்திக்கு மகன் பிறக்க வேண்டுமென ஒருமுறை பூஜைக்கு ஏற்பாடு செய்தார். பிரிட்டிஷ் அரசு ஒரு குறிப்பிட்ட காரியத்துக்குச் சம்மதம் தெரிவிக்க வேண்டுமென்று வேண்டி இன்னொரு முறை. ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு வேண்டுதல். மண வாழ்வில் பிரச்னையா, மகாராஜா நடத்தும் பூஜையில் கலந்துகொண்டால் போதும். எல்லாச் சிக்கல்களும் தீர்ந்துவிடும் என்ற செய்தி பரவியது. அடுத்தடுத்து நடந்த பூஜைகளில் அதிக பட்சம் நானூறு பேர்வரைக் கலந்து கொள்ள ஆரம்பித்தார்கள்.

பூஜையில் கலந்து கொள்ள வைப்பதற்கென்றே, சுற்றுவட்டார பதினெட்டுப் பட்டி கிராமங் களிலிருந்தும் கன்னிப்பெண்கள் தேடி அழைத்துவரப்பட்டார்கள். அந்தப்புரத்திலும் அதற் காகவே சிறுமிகள் சகல உபசரிப்புகளுடனும் வளர்க்கப்பட்டார்கள் என்று பாட்டியாலாவில் பூபிந்தர் சிங்கிடம் திவானாகப் பணியாற்றியுள்ள ஜர்மானி தாஸ் குறிப்புகள் எழுதி வைத்துள்ளார்.

சில முக்கிய அமைச்சர்கள் மகாராஜாவின் இந்தச் செயலை அரசல் புரசலாகக் கண்டித்தார்கள். சில மகாராணிகள் கோபித்துக் கொண்டார்கள். சில நெருங்கிய நண்பர்கள் முகம் சுளித்தார்கள். ஆனால் எதைப் பற்றியும் பூபிந்தர் சிங் கவலைப்படவில்லை. தனது வாழ்நாள் முழுவதும் பஞ்ச மகர வித்தைகளை நேசித்தார். பேரின்ப நிலையை அடைவதைவிட வேறென்ன தேவை வாழ்வில்.



# ஒற்றைத் தண்டவாள ரயில்!

லண்டன் சேவோய் (Savoy) நட்சத்திர ஹோட்டல் ஊழியர்கள் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்கள். அடுத்தநாள் காலையில் பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங் அங்கு வந்து இறங்க இருந்ததால் ஏற்பாடுகள் துரிதகதியில் நடந்து கொண்டிருந்தன. ரத, கஜ, துரக, பதாதி படைகள் என்பார்களே, அதுபோல எப்போதுமே ரதி, ரம்பை, மேனகை, இத்யாதி பெண்கள் பரிவாரங்களுடன் (சுமார் ஐம்பது பேருடன்) கிளம்பி வருவார் அந்த மன்மதன்.

அத்தனை பேரும் சகல வசதிகளுடன் தங்க வேண்டுமே? ஆகவே, சேவோய் ஹோட்டலின் ஐந்தாவது தளம் முழுவதையும், கிட்டத்தட்ட முப்பந்தைந்து ராயல் அறைகள், மகாராஜாவுக்கு என ஒதுக்கப்பட்டிருக்கும். வாடகை? நாளொன்றுக்கு ஆயிரம் டாலர்கள்.

ஹோட்டலில் தங்கும் விருந்தினர்களுக்குரிய பொதுவான விதிமுறைகள் எதுவும் மகாராஜாவுக்குப் பொருந்தாது. முழுக்க முழுக்கத் தன் இஷ்டப்படிதான் நடப்பார் அவர். காசைக் கொட்டும் புண்ணியவான் என்பதால் சேவோய் நிர்வாகமும் அவர் இழுத்த இழுப்புக்கெல்லாம் சாமரம் வீசியது. இமைகளை லேசாக அசைத்தாலே போதும், ஹோட்டல் சிப்பந்திகள் சர்ரென்று வந்து நிற்பார்கள், 'மே ஐ ஹெல்ப் யூ சார்?' இருந்தாலும் ராஜ பவுசைக் காட்ட வேண்டாமா, ஒவ்வொரு முறையும் பூபிந்தர் சிங்குடன் குறைந்தது இருபது வேலைக் காரர்களாவது செல்வார்கள். ஹோட்டல் நிர்வாகம், ஐந்தாவது தளத்தின் வராண்டாக்களில் அந்த வேலைக்காரர்கள் படுத்துறங்க அனுமதி கொடுத்து இருந்தது.



இருப்புப் பாதைப் பணியைப் பார்வையிடும் மகாராஜா பூபிந்தர் சிங்

மகாராஜாவும் அவர் சார்ந்த முக்கியஸ்தர்களும் தங்கும் அறைகளுக்கெனச் சில சிறப்பு வசதிகளைச் செய்து கொடுத்திருந்தது சேவோய் நிர்வாகம். மார்பிள் பாத்ரூம், அதில் வெள்ளி பாத்டப். ஐரிஷ் ஸ்பெஷல் துண்டுகள். பாரிஸ் சோப்புகள், வாசனைத் திரவியங்கள். தங்கமுனை கொண்ட பேனாக்கள். மகாராஜா புழங்கும் பெரும்பான்மையான இடங்களில் அவருக்குப் பிடித்தமான பிங்க் நிற திரைச்சீலைகள், விரிப்புகள். அவருக்கென பிரத்யேக லிஃப்ட். ஐந்தாவது தளத்தின் ஒவ்வொரு அறையிலும் தினமும் புதிய ரோஜாக்கள் கொத்துக் கொத்தாக நிரப்பப்பட்டன.

என்னதான், சர்வதேசத் தரம் வாய்ந்த செஃப்கள் அங்கு வேலை பார்த்தாலும், மகாராஜா அவர்களது கைவண்ணத்தை நுகரக்கூட மாட்டார். பாட்டியாலாவிலிருந்து இரண்டு சமையல்காரர்கள் மகாராஜாவோடு கரண்டி பிடித்தபடியே செல்வார்கள். அவர்கள் சமைப்பதற்கென்றே ஐந்தாவது தளத்தில் அனைத்து வசதிகளுடனும் சமையல் அறை ஒன்று நிர்மாணிக்கப்பட்டிருந்தது. ஜில்லென்று ஒரு கப் வெந்நீர் வேண்டுமென்றால்கூட மகாராஜா தனது சமையல்காரர்களைத்தான் கேட்பார்.

பூபிந்தர் சிங் சேவோய் ஹோட்டலிலிருந்து வெளியே கிளம்புகிறார் என்றாலே, அந்தப் பகுதியில் நிச்சயமாகப் போக்குவரத்து சிக்கல்கள் ஏற்பட்டுவிடும். காரணம், தன் காருக்கு முன்னே ஒன்பது கார்கள், பின்னே பத்துக் கார்கள். ஊர்வலம்போலத்தான் கிளம்புவார். எல்லாமே

ரோல்ஸ் ராய்ஸ். மகாராணிகள் முதல் வேலைக்காரர்கள் வரை எல்லோருமே பூபிந்தரோடு கார்களில் செல்வார்கள். யாரடா இவர் என்று லண்டன்வாழ் சாமானியர்கள் வாய் பிளப்பார் கள். அதுவும் கிரிக்கெட் விளையாட வந்திருக்கிறார் என்றால், கிரிக்கெட் சாமான்களோடு கூடுதலாக ஐந்து டிரக்குகள் அணிவகுக்கும்.

அப்படித்தான் ஒருமுறை பூபிந்தர் சிங், லண்டனிலிருந்த ரோல்ஸ் ராய்ஸ் இந்தியப் பிரிவு விற்பனை அலுவலகத்துக்குச் சென்றார். மேலும் சில ரோல்ஸ் ராய்ஸ் வாங்குவதற்காக. உள்ளே நுழைந்தார். ஏதேனும் புதிய மாடல்கள் வந்திருக்கிறதா என்று விசாரித்தார். சில கார்கள் ஆர்டர் கொடுத்தார்.

'உங்க அட்ரஸ் சொல்லுங்க' - விற்பனைப் பிரதிநிதியிடம் இருந்து இப்படி ஒரு கேள்வி வரும் என்று பூபிந்தர் சிங் எதிர்பார்க்கவே இல்லை. இருபத்தியோரு குண்டுகள் மரியாதை கொண்ட மகாராஜா, அவரைப் பார்த்து யாரும் இதுவரை இப்படி ஒரு கேள்வியும் கேட்டதில்லை. ஆகவே அவரது மீசை வைப்ரேட்டிங் மோடுக்குச் சென்றது. 'நான் இந்தியாவைச் சார்ந்த மாபெரும் சமஸ்தானம் ஒன்றின் மகாராஜா' - அவரிடமிருந்து பதில் வெடித்து வந்தது.

'நல்லது உயர்திரு மகாராஜா அவர்களே. ரோல்ஸ் ராய்ஸ் கார் என்பது மிகவும் கௌரவமான பொருள். அதைச் சரியான நபருக்குத்தான் விற்கிறோமா என்று அறிந்து கொள்வது எங்கள் கடமை' விற்பனைப் பிரதிநிதியின் விளக்கம் பூபிந்தருக்குக் கூடுதல் கோபத்தையே கொடுத்தது.

'எங்கள் பணியாளர் கார்களைப் பராமரிப்பதற்காக உங்களைத் தேடி வருவார். அதற்காகத்தான் முகவரி கேட்டோம்' அவர்களது கேள்விகளுக்கெல்லாம் வேண்டா வெறுப்பாகப் பதில் சொல்லிவிட்டுக் கார்களை ஆர்டர் செய்துவிட்டு வந்தார் பூபிந்தர் சிங். இருந்தாலும் அதைத் தனக்கு நேர்ந்த அவமானமாக மட்டுமே அவரால் பார்க்க முடிந்தது. அதைத் துடைத்தெறிய வேண்டாமா?

சில மாதங்கள் கழிந்தன. மகாராஜா புதிதாக வாங்கிய ரோல்ஸ் ராய்ஸ்களைப் பராமரிப்பதற் காகவே ஓர் ஐரோப்பியப் பணியாளர் பாட்டியாலாவுக்கு வந்தார். மோதி பாக் அரண்மனையில் அவருக்கு அமோக வரவேற்பு. 'முதலில் நன்கு ஓய்வெடுங்கள். பின்பு கார்களைப் பார்த்துக் கொள்ளலாம்' என்று மகாராஜாவிடம் இருந்து அவருக்கு ஓர் அன்புக்கட்டளை. ஆகவே ஒரு வாரத்துக்கும் மேல் உல்லாசமாக இருந்தார் அந்தப் பணியாளர். பின்னொரு நாளில் புதிய கார்களைப் பார்க்கச் சென்றார். அவை அரண்மனை கார் ஷெட்டில் இல்லை. எங்கே என்று விசாரித்தார். 'அதுங்களா, ஏதாவது ஒரு தெருவுல இருக்கும்' என்று அலட்சியமாகப் பதில் வந்தது.

அந்தப் பணியாளரும் வீதி வீதியாகக் கார்களைத் தேடி அலைந்தார். அந்தப் புதிய ரோல்ஸ் ராய்ஸ் கார்கள், சில மாற்றங்கள் செய்யப்பட்டு வீதிகளில் குப்பை அள்ளிக் கொண்டிருந்தன. வெறுத்துப் போன அந்தப் பணியாளர், சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பிப் போனார்.

ரோல்ஸ் ராய்ஸைத் தன் கால்தூசாகக்கூட மதிக்காத பூபிந்தர் சிங், ஒரு வாகனத்தின் மேல் மிகவும் மதிப்பு வைத்திருந்தார். அது ஒரு வெள்ளி சாரட். முழுக்க முழுக்க வெள்ளிப் பட்டைகளால் உருவாக்கப்பட்டது. விலையுயர்ந்த ஆபரணக் கற்கள் பதிக்கப்பட்ட காஸ்ட்லி

சாரட். பூபிந்தரின் விருப்பப்படி கல்கத்தாவில் உருவாக்கப்பட்டது. ஏதாவது முக்கியத் தருணங்களில், விழாக்களில் ஆறு குதிரைகளைப் பூட்டிக் கொண்டு அதில் வலம் வருவார் மகாராஜா. (அந்த நேரத்தில் ஊரு சனமெல்லாம் வாய் பிளந்து ரசிப்பதாக நாட்டாமை பட எஃபெக்ட் கொடுத்துக் கொள்ளவும். சுதந்தரத்துக்குப் பின், இந்தியாவின் முதல் குடியரசுத் தலைவராக டாக்டர் ராஜேந்திர பிரசாத் பதவியேற்க, அந்த வெள்ளி சாரட்டில்தான் ராஷ்டிரபதி பவனுக்கு ஊர்வலமாகச் சென்றார் என்றொரு வரலாற்றுத் தகவலை மனத்தில் போட்டுக் கொள்ளவும்.)

'என் பயணத்துக்குக் கார்கள் இருக்கின்றன, சாரட் இருக்கிறது. என் சமஸ்தான மக்களுக்கு?'

சமூக நோக்கோடு எப்போதாவது தப்பித் தவறி யோசிக்கும் பூபிந்தர் சிங், இதையும் யோசித்தார். அவரது காதில் ரயிலோசை கேட்டது. 'என் அருமை அரசாங்கமே! என்னுயிர் மக்கள் கால்நடையாகவோ அல்லது கால்நடைகளைக் கஷ்டப்படுத்தியோதான் காடு மேடெல்லாம் பயணம் செய்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் இன்புற ரயில் தேவை. ஏற்பாடு செய்யுங்கள்.'

கர்னர் பௌலஸ் என்பவர் பாட்டியாலாவுக்கு வந்தார். இடங்களை ஆராய்ச்சி செய்து திட்டங்கள் வகுத்துக் கொடுத்தார். 1910ல் Patiala State Monorail Trainways (PSMT) உருவானது. ஒரு பெட்டி. ஜோடி தண்டவாளமெல்லாம் கிடையாது. ஒரே ஒரு தண்டவாளம்தான். ரயில் இன்ஜின்கூடக் கிடையாது. அந்தப் பெட்டியை இழுப்பதற்காக மட்டக் குதிரைகள் பயன் படுத்தப்பட்டன. பாட்டியாலாவுக்கும் சுனம் நகரத்துக்கும் இடையே (54 கிலோமீட்டர்) மோனோ ரயில் போக்குவரத்து ஆரம்பமானது. மக்களிடம் அமோக வரவேற்பு. பயணிகள், சரக்குப் போக்குவரத்து இரண்டுமே நடந்தன.

ரயில் இழுப்பதற்காகவே சுமார் 560 மட்டக்குதிரைகளும் சில நூறு காளை மாடுகளும் பராமரிக்கப்பட்டு வந்தன. பின்னர் ரயில் இன்ஜின் வந்தது. பயணம் கொஞ்சம் வேகமெடுத் தது. ஒரே கட்டணம்தான். தலைக்கு ஒன்றரையணா. 36 கிலோ வரை சரக்குக்கான கட்டணம் ஓரணா. உங்கள் பயணம் இனிதாகுக!

பிறகு சாலைகள் வளர்ந்தன. கார்கள், பிற வாகனங்கள் வந்தன. ஆகவே மோனோரயில் மோகம் குறைந்தது. 1927ல் அதற்கு மூடுவிழா நடந்தது என்பதெல்லாம் தனிக்கதை.

ரயில் விட்ட மகாராஜா அடுத்து வானத்தைப் பார்த்தார். 'மக்களுக்காக ரயில் விட்டுள்ளேன். எனக்காக ஒரு விமானம்கூட இல்லாவிட்டால் எப்படி? இங்கே எந்த மகாராஜாவிடமும் விமானம் கிடையாது. நான்தான் அதில் முதலாவது ஆளாக இருக்க வேண்டும். யாரங்கே?'

தனது அரண்மனையின் தலைமைப் பொறியியலாளரை ஐரோப்பாவுக்கு அனுப்பினார். பெலேரியாட் மோனோ (Bleriot monoplane) விமானம் ஒன்றும், ஃபார்மன் பைவிமானம் (Farman biplanes)ஒன்றும் பாட்டியாலாவுக்கு அனுப்பட்டது. 1918ல் நான்கு ரோல்ஸ் ராய்ஸ் இன்ஜின்கள் பொருத்தப்பட்ட பாம்பர் (Bomber) ரக விமானத்தை வாங்கினார் பூபிந்தர் சிங். மேக்லேரன், ஹாலே, மேக் இவான் (Maclaren, Halley, McEwan) ஆகிய மூன்று ஐரோப்பியர் களும் அதை லண்டனிலிருந்து பாட்டியாலாவுக்கு ஓட்டிக் கொண்டு வந்தார்கள். இங்கிலாந்தி லிருந்து இந்தியாவுக்கு முதன்முதலாக விமானத்தில் வந்தவர்கள் அவர்களே. ஆசியாவில் முதலில் சொந்தமாக விமானம் வாங்கியவர் பூபிந்தரே.

இப்படி எல்லாவற்றிலும் பவுசு ஜொலிக்க, அந்தப்புரத்தில் லவ்சு கொழிக்க வாழ்ந்து கொண்டிருந்த பூபிந்தர் சிங், அவ்வப்போது பிரிட்டிஷ் அரசின் கண்டனங்களுக்கும் ஆளானார். அவருக்கு அந்தப்புரத்தில் இருந்த ஆர்வம் அலுவலில் இல்லாதது குறித்து அரசுத் தரப்பில் ஏகப்பட்ட வருத்தம்.

பொறுப்பாக இருக்க வேண்டிய மகாராஜாவே மஜாவே கதி என்று கிடந்தால், அவருக்குக் கீழுள்ளவர்கள் ஒழுங்காக இருப்பார்களா என்ன? அமைச்சர்கள் யாருமே வேலை பார்க்க வில்லை. வேலை பார்ப்பதற்கான நேரத்தையும் அவர்களால் ஒதுக்க முடியவில்லை. யாருக்கா வது பிறந்த நாள் வரும், திருமணம் வரும், பண்டிகை வரும், திருவிழா நடக்கும், வேட்டை, விருந்தெல்லாம் எப்போதாவது தான் இருக்காது. மகாராஜாவுக்கு பல நேரங்களில் ‘கம்பெனி’ வேறு கொடுக்கவேண்டும். இப்படிப் பல லீலைகளுக்கிடையில் வேலையை எங்கே பார்க்க?

நாளடைவில் நிலைமை மோசமாகிக் கொண்டே போனது. கோப்புகள் தேங்கிக் கொண்டே போயின. சமஸ்தானத்தின் நிர்வாகம் குறித்து வைஸ்ராய்க்கு ரிப்போர்ட் அளிக்க வேண்டிய ரெஸிடெண்டுக்கு அழுத்தம் அதிகமானது. உடனே மகாராஜாவைப் பார்க்க வேண்டும். பார்த்து எச்சரிக்க வேண்டும். எச்சரித்து வேலைகளை நடக்கச் செய்ய வேண்டும் என்று கிளம்பி மோதி பாக் அரண்மனைக்குச் சென்றார் ரெஸிடெண்ட். அங்கு பூபிந்தர் இல்லை. ‘மகாராஜா வேட்டைத் திருவிழாவுக்குச் சென்றிருக்கிறார்’ என்று பதில் வந்தது. ரெஸிடெண்டுக்கு ரத்தம் சூடானது.



# 122

# கோப்புகளும் கோப்பைகளும்

பொழுதுபோக்குக்காக ஆரம்பிக்கப்பட்ட விளையாட்டுதான் அது. ஆனால் நாளடைவில் நான்கு சமஸ்தானங்களின் கௌரவத்தைக் கட்டிக் காக்கும் 'வேட்டைத் திருவிழா'வாக மாறிப்போனது. அப்படி என்றால்?

பாட்டியாலா, நபா, சங்ரூர் (Sangrur), பரிட்கோட் (Faridkot) சமஸ்தானங்களுக்கான போட்டி அது. இந்த சமஸ்தானங்களைச் சேர்ந்த வேட்டைக்காரர்கள், போட்டி யில் தங்களது வளர்ப்பு நாய்களோடு மகாராஜாக்களின் சார்பாகக் கலந்து கொள்ளுவார்கள். பறவைகள் நிறைந்த ஏரிக்கரைகள்தான் போட்டிக்கான இடம்.

எல்லா சமஸ்தானங்களின் மகாராஜாக்களும் வசதியான மேடையில் அமர்ந்திருப் பார்கள். அவர்களது வேட்டைக்காரர்கள் களத்தில் துப்பாக்கியோடு தயாராக நிற்பார்கள். அருகே வேட்டை நாய்களும் பாயத் தயாராக இருக்கும். சில நடுவர் களும் அங்கே இருப்பார்கள். போட்டிக்கான நேரம் ஆரம்பமாகும். தோட்டாக் களின் இடைவிடாத ஓசை. கூடவே பறவைகளின் கூக்குரல்கள்.

பறவை ஒன்றைச் சரியாகச் சுட்டவுடன் வேட்டைக்காரர், தனது நாயின் பிடியை விடுவார். அது விரைந்து சென்று அவர் வீழ்த்திய பறவையைச் சரியாகக் கவ்விக் கொண்டு வரவேண்டும். சுட்ட நொடியிலிருந்து, எவ்வளவு குறைவான நேரத்தில் நாய் பறவையைக் கொண்டு வருகிறது என்பதே போட்டி. நாய் வாயில் கவ்வப்பட்ட பறவைக்கு அதன் பற்களால் சேதாரம் ஏற்படக்கூடாது என்பதும் போட்டியின் முக்கிய விதி. வெற்றி பெற்ற நாய்களுக்கும் அந்த சமஸ்தானத்தின் வேட்டைக்காரர்களுக்கும் பரிசுகள், பதக்கங்கள், கோப்பைகள் குவியும்.

ஜெயிப்பது மாபெரும் கௌரவம். ஆகவே தோற்றுப் போகாமலிருக்க நான்கு சமஸ்தான மகாராஜாக்களும் பெரும் போராட்டமே நடத்துவார்கள். முடிவு நாயின் வாயில்.

இதற்காகவே ஏராளமான நாட்டு, வெளிநாட்டு நாய்களைத் தனது அரண்மனையில் வளர்த்து வந்தார் பூபிந்தர் சிங். பாட்டியாலாவின் மோதி பாக் அரண்மனையில் 'நாய்கள் பராமரிப்புக் கூடங்கள்' மூன்று இயங்கி வந்தன. கூடத்துக்கு ஒன்றாக மூன்று பிரிட்டிஷ் லொள் லொள் பயிற்சியாளர்கள் நிரந்தரப் பணியில் இருந்தார்கள். ஜுனாகத் மகாராஜா தனது செல்ல நாய் ரோஸனராவுக்குத் திருமணம் செய்துவைத்ததைத் தொடர்ந்து பூபிந்தர் சிங்கும் தனது பிரிய நாய்கள் சிலவற்றுக்குத் திருமணங்கள் செய்து வைத்ததாகத் தகவல்கள் உண்டு.

பூபிந்தர் போலவே நபா மகாராஜாவும் வெகு சிரத்தையாக நாய்களை வளர்த்து வந்தார். ஆகவே திருவிழாவில் எப்போதுமே நபா நாய்களுக்கும் பாட்டியாலா நாய்களுக்கும் போட்டி கடுமையாக இருந்தது. அன்று நடந்த திருவிழாவில் நபா நாய்கள் வெற்றிகளைக் குவிக்க, பாட்டியாலா நாய்கள் 'நாக்-அவுட்' ஆகின.

கொஞ்சம் சோகமாகத்தான் அரண்மனைக்குத் திரும்பினார் பூபிந்தர் சிங். வந்ததும் வராததுமாக எரிச்சலூட்டும் செய்தி ஒன்று அவருக்காகக் காத்திருந்தது. 'ரெஸிடெண்ட் வந்துவிட்டுப் போனார். மகாராஜாவை உடனே சந்திக்க வேண்டும் என்றார். தாங்கள் இல்லாததால் கொஞ்சம் கோபமாகத்தான் கிளம்பிப் போனார்.'

வந்துவிட்டுப் போகட்டுமே. அதற்கென்ன செய்ய முடியும்? உடனே பூபிந்தர் சிங், ரெஸி டெண்டைத் தேடி ஓடவில்லை. அவருக்கு ஆளனுப்பவும் இல்லை. என்ன விஷயம் என் றாலும் மீண்டும் ஒருமுறை வந்தால் பேசிக்கொள்ளலாம் என்று விட்டுவிட்டார். ஆனால் ரெஸிடெண்ட் விடுவதாக இல்லை. மறுநாளே தேடி வந்தார். அவரை அமோகமாக வரவேற்றார் மகாராஜா. கொதிப்போடு வந்தவரைக் கொடுக்க வேண்டியதெல்லாம் கொடுத்துக் குளிர வைத்தார்.

'மகாராஜா அவர்களே, கொஞ்சம் நிர்வாகத்திலும் கவனம் செலுத்தினால் நல்லது. தாங்கள் பார்த்து முடிவெடுக்க வேண்டிய கோப்புகள் எல்லாம் ஒருபுறம் குவிந்துகொண்டே இருக் கின்றன. என்ன செய்யப்போகிறீர்கள்?'

பூபிந்தர் சிங் கொஞ்சமும் அலட்டிக் கொள்ளவில்லை. 'அய்யோ, தாங்கள் சொல்வது மிகச்சரி. வேலைகள் கொஞ்சம் தேங்கித்தான் போய்விட்டன. ஒன்றும் பிரச்னை இல்லை. மிக விரைவில் முடித்துவிடலாம்.'

'சமஸ்தானத்தில் நிதிநிலைமையும் திருப்திகரமாக இல்லை. வரவு செலவுக் கணக்குகளில் ஏகப்பட்ட குழப்பங்கள். தாங்கள் எல்லாவற்றுக்கும் முறைப்படி உத்தரவும் ஒத்துழைப்பும் கொடுத்தால்தான் தங்களுக்குக் கீழ் பணிபுரியும் ஊழியர்கள் கடமையை ஒழுங்காகச் செய்வார் கள். நிலைமை சீரடையும்.'

'நிச்சயமாக. எல்லாவற்றையும் சரிசெய்துவிடலாம்' - நம்பிக்கை தெறிக்கத் தெறிக்கப் பேசி ரெஸிடெண்டை வழியனுப்பி வைத்தார் பூபிந்தர் சிங். அடுத்த சில நாள்களுக்கு ஏதோ வேலைகள் ஜரூராக நடப்பதுபோலத் தெரிந்தன. தோற்ற மயக்கம். வேறொன்றும் இல்லை. வழக்கம்போல் மோதி பாக் அரண்மனை அந்தப்புரத்தில் வேலைகள் ஜரூராக நடந்துகொண்டு இருந்தன.

ரெஸிடெண்ட் வெறுத்துப் போனார். வைஸ்ராய் அலுவலகத்தில் இருந்து அவருக்குச் சில கட்டளைகள் வழங்கப்பட்டிருந்தன. மீண்டும் மகாராஜாவிடம் பேசுவதற்குச் சென்றார் அவர். 'சமஸ்தானத்தின் நிதி நிலைமை குறித்து வைஸ்ராய் கடும் அதிருப்தியில் இருக்கிறார். இன்னும் கொஞ்ச நாள்களில் வரவு, செலவுக் கணக்குகளைச் சீர்படுத்த முடியாவிட்டால் அரசுத் தரப்பிலிருந்து ஐரோப்பிய நிதி அதிகாரி ஒருவரை நியமிக்கச் சொல்லி உத்தரவு வந்திருக்கிறது. என்ன சொல்கிறீர்கள்?'

'அய்யோ, அதற்கெல்லாம் அவசியமே இல்லை. வேலைகள் நடந்துகொண்டுதான் இருக் கின்றன. எல்லாம் மிக விரைவில் சரியாகிவிடும். வைஸ்ராய்க்கு நம்பிக்கை கொடுக்க வேண்டியது உங்கள் பொறுப்பு. முகத்தில் களைப்பு தெரிகிறதே. பானம் கொண்டுவரச் சொல்லவா?'

அந்தமுறையும் ரெஸிடெண்டைச் பேசிச் சமாளித்து அனுப்பிவிட்டார் பூபிந்தர் சிங். சில வாரங்கள் கழிந்தன. வேலைகளில் எந்த முன்னேற்றமும் இல்லை. அலுவலங்களில் சிறிய பதவிகளில் இருப்பவர்கள் மட்டுமே காணக் கிடைத்தனர். அவர்களும் எந்த வேலையும் கொடுக்கப்படாததால் பட்டப்பகலில் கொட்டாவி விட்டுக் கொண்டிருந்தனர். பெரிய அதிகாரிகளும் அமைச்சர்களும் அலுவலகங்களின் பக்கம் வரவே இல்லை. வைஸ்ராய்க்கு அதிருப்தி அறிக்கை அனுப்பினார் ரெஸிடெண்ட்.

பதிலுக்கு, பாட்டியாலா சமஸ்தானத்தின் புதிய நிதி அமைச்சராக பிரட்ரிக் கௌண்ட்லெட் (Frederick Gauntlet) என்ற ஐரோப்பியரை அனுப்பி வைத்தார் வைஸ்ராய். பூபிந்தர் சிங்குக்குத் தகவல் போனது. மறுநாளே பிரட்ரிக், மோதி பாக் அரண்மனைக்கு மகாராஜாவைச் சந்திக்கச் சென்றார்.

'மகாராஜா தங்களைச் சந்திக்கப் புதிய நிதி அமைச்சர் வந்திருக்கிறார்.'

'இப்போது சந்திக்க முடியாது. பிறகு பார்க்கலாம்' தினமும் இதேபோல அவரைச் சந்திப்பதையே தட்டிக் கழித்தார் பூபிந்தர் சிங். பிரட்ரிக், கோடைகால மாதங்களில் காலை எட்டு மணிக்கெல்லாம் அரண்மனையில் ஆஜரானார். அதேபோல குளிர் மாதங்களில் காலை பத்து மணிக்குத் தவறாமல் சென்றார். மகாராஜா சய்லுக்குச் சென்றாலும் பின்தொடர்ந்து சென்றார். ஆனால் சந்திப்பு நிகழவில்லை. வழியில் எங்காவது தப்பித் தவறிப் பார்த்தால்கூட, 'பிறகு பேசுகிறேன்' என்று சொல்லி நழுவினார் மகாராஜா.

அதேநேரத்தில் ஒரு நிதி அமைச்சருக்குச் செய்ய வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கச் சொல்லி உத்தரவிட்டிருந்தார். பிரட்ரிக்குக்காக தனி மாளிகை ஒதுக்கப்பட்டிருந்தது. பணியாளர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவரது உல்லாசத்துக்கு என்னென்ன தேவையோ எல்லாமே நிறைவேற்றப்பட்டுக் கொண்டிருந்தன. விஸ்கியை விரும்பாத ஐரோப்பியன் உண்டா? பிரட்ரிக்கும் அடிக்கடி கோப்புகளை மறந்தார். கோப்பைகளில் விழுந்தார். அவருக்குச் சீட்டு விளையாட்டில் 'பிரிட்ஜ்' பிடிக்கும் என்ற தகவல் அறிந்துகொண்ட மகாராஜா, பிரட்ரிக்கின் கட்டுப்பாட்டுக்குள் வரும் நிதித்துறை ஊழியர்கள் மூவருக்கு ரகசியக் கட்டளை ஒன்றை இட்டார்.

'அலுவல் நேரத்தில் நிதி அமைச்சரோடு சீட்டு விளையாடுவதுதான் உங்களது முதன்மையான பணி. என்ன புரிகிறதா?'

அப்படியே செய்தார்கள். பிரட்ரிக்கும் இந்த உல்லாசங்களுக்குப் பழகிப்போனார். இருந்தாலும் அவ்வப்போது அவருக்குள் எச்சரிக்கை மணி ஒலிக்கும். உடனே தெளிவாகி, வேலைகளை முடுக்கிவிடுவார். மகாராஜா பார்க்க வேண்டிய கோப்புகளை எல்லாம் தயார்செய்து அரண்மனைக்குக் கொண்டு செல்வார் அல்லது அனுப்பி வைப்பார். மகாராஜா அவற்றைப் பார்த்தாரா, இல்லையா என்ற தகவல் எதுவும் கிடைக்காது. சில கோப்புகளில் 'இந்த விஷயம் குறித்து நான் உங்களுடன் தனியாகப் பேசிப் பின்னர் முடிவெடுப்பது நல்லது' என்று குறிப்புகள் வேறு எழுதி அனுப்புவார். இருந்தும் மகாராஜாவிடமிருந்து எந்த அழைப்பும் வராது.

ஒரு கட்டத்தில் கோப்புகள் தேங்கிக் கொண்டே போவது குறித்து மகாராஜாவுக்கு நெருக்கமான முக்கிய மந்திரிகள் அவரிடம் வருத்தப்பட்டார்கள். 'நிலுவையில் இருக்கும் வேலைகளை எல்லாம் தாங்கள் கொஞ்சம் கொஞ்சமாகப் பார்க்க ஆரம்பித்தால் நல்லது. இல்லையேல் நிலைமை கைமீறிப் போய்விடும். அரசிடம் இருந்து மீண்டும் ஓர் எச்சரிக்கை வருவதற்கு முன்...'

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பூபிந்தருக்குள் கோபம் பொங்கத்தான் செய்தது. நெருக்கமானவர்கள் சொல்லியதால் சற்றே நிதானமாக யோசித்தார். அவரது ஆலோசனையின்படி, வேலைகளைத் துரித கதியில் முடிப்பதற்காக மந்திரிகள், உயர் அதிகாரிகள் அடங்கிய சிறப்புக்குழு ஒன்று உருவாக்கப்பட்டது.

'நான் பார்க்க வேண்டும் என்ற அவசியமில்லாத கோப்புகளை நீங்களே பார்த்து முடிவெடுத்துவிடுங்கள். என் சம்பந்தப்பட்ட கோப்புகளை எல்லாம் நீங்களே சரிபார்த்து என்னிடம் கொண்டுவாருங்கள். இறுதியாகப் பார்த்துக் கையெழுத்து இடுகிறேன். ஏதாவது சில விஷயங்களுக்கு என் வழிகாட்டுதல் தேவைப்படலாம். தினமும் சில நிமிடங்கள் இதற்காக ஒதுக்குகிறேன். அப்போது கலந்து ஆலோசித்துக் கொள்ளலாம். இனியும் தாமதம் வேண்டாம். முடித்துவிடுங்கள்.'

மகாராஜாவின் ரகசியக் கட்டளைப்படி சிறப்புக் குழுவினர் கோப்புகளில் மேய ஆரம்பித்தார்கள். நிதித்துறை சம்பந்தமான கோப்புகளும் அதில் அடக்கம். தனது 'கலை, இலக்கியப் பணிகளுக்கு' இடையே தினமும் சில நிமிடங்கள் அலுவல்களுக்காகவும் ஒதுக்க ஆரம்பித்தார் பூபிந்தர் சிங். இரண்டு வாரங்களிலேயே பணிகள் பெரும்பாலும் நிறைவடைந்திருந்தன. ஆனால் எதுவுமே பிரட்ரிக்குக்குத் தெரியாது.

'மகாராஜா உங்களைப் பார்க்க வேண்டும் என்றார்' எதிர்பாராத சமயத்தில் பிரட்ரிக்குக்கு அரண்மனையிலிருந்து இப்படி ஒரு செய்தி போனது. அடித்துப் பிடித்து மோதி பாக்குக்கு விரைந்தார். பல மாதக் காத்திருப்புக்குப் பின் முதன்முறையாக மகாராஜாவுடனான பிரத்யேக சந்திப்பு. புன்னகை தவழ பிரட்ரிக்கை வரவேற்றார் மகாராஜா. அந்த அறையில் முக்கிய அமைச்சர்களும் இருந்தார்கள்.

'இந்தாருங்கள்' - பூபிந்தர் சிங் ஒரு கோப்பை விஸ்கியை எடுத்து அன்புடன் நீட்டினார். இதுதான் சமயம் என்று பேச ஆரம்பித்தார் பிரட்ரிக். 'மாண்புமிகு மகாராஜா, நான் இந்த விஸ்கியை ஏற்றுக் கொள்ள மாட்டேன். கடந்த ஆறு மாதகாலமாகத் தேங்கிக் கிடக்கும் பணிகளை எல்லாம் தாங்கள் எடுத்து முடிப்பதாக உறுதியளித்தால்தான் நான் இதை

அருந்துவேன். நான் உங்களோடு கலந்தாலோசித்துப் பல விஷயங்களில் முடிவெடுக்க வேண்டும். அதற்கு நீங்கள் நேரம் ஒதுக்க வேண்டும்.'

பூபிந்தர் சிங், பிரட்ரிக்கை அழுத்தமாகப் பார்த்துச் சிரித்தார். பின் தனது பிற அமைச்சர்களைப் பார்த்து, 'நிதி அமைச்சர் என்னவோ சொல்லுகிறாரே, எனக்குத் தெரியாமல் கோப்புகள் எதுவும் மறைந்து கிடக்கிறதா என்ன?' - நக்கலாகக் கேட்டார். 'நேற்றைய தேதிவரை எல்லா கோப்புகளையுமே தாங்கள் சரிபார்த்து கையெழுத்து போட்டுவிட்டீர்கள் மகாராஜா!' திவானிடமிருந்து பதில் வந்தது.

பிரட்ரிக்குக்கு நடப்பது ஒன்றுமே புரியவில்லை. அங்கும் இங்கும் சுற்றிச் சுற்றிப் பார்த்தார். நிதித்துறையில் அவருக்குக் கீழ் வேலை பார்க்கும் அதிகாரிகளும் அங்கு நின்றார்கள். 'எந்தக் கோப்புகளுமே பாக்கியில்லையே. எல்லா வேலைகளுமே முடிந்துவிட்டதே' என்று ஒத்து ஊதினார்கள். சில கோப்புகளை அவர் பார்வைக்கு வைத்தார்கள். படபடவென புரட்டிய அவர், வேலைகள் எல்லாம் முடிந்திருப்பதைப் பார்த்துப் பரவசமடைந்தார்.

'நிதி அமைச்சரே, எந்தக் கோப்புமே நிலுவையில் இல்லையே. நீங்கள் எதை என்னிடம் ஆலோசிக்கப் போகிறீர்கள் என்று புரியவில்லை. இந்தாருங்கள், விஸ்கி சாப்பிடுங்கள்.' அசடு வழிய, விஸ்கிக் கோப்பையை வாங்கி மடக் மடக்கென்று குடித்தார் பிரட்ரிக். 'மன்னிக்க வேண்டும் மகாராஜா. ஏதோ விசாரிக்காமல் உளறிவிட்டேன். தங்களைப் போல ராப்பகலாகக் கடுமையாக உழைக்கும் ஓர் ஆட்சியாளரை நான் கண்டதே இல்லை' கூழைக்கும்பிடு போட்டுவிட்டு, விஸ்கியில் ஐக்கியமாக ஆரம்பித்தார் பிரட்ரிக்.

மறுநாளே அவர் கைப்பட, வைஸ்ராய்க்குக் கடிதம் ஒன்றை எழுதினார். 'பாட்டியாலா போலோரு சிறந்த சமஸ்தானம் இந்தியாவில் கிடையாது. பூபிந்தர் சிங் போலோரு மிகச் சிறந்த மகாராஜா உலகத்திலேயே கிடையாது.'



123

# போலோ போர்!

**1922**ல் டெல்லியில் அந்தப் போலோ போட்டி ஆரம்பமாக இருந்தது. சாம்பியன்ஸ் ஆஃப் ஆல் இந்தியா (Champians of All india) கோப்பைக்கான இறுதிப் போட்டி. வைஸ்ராய், பிரிட்டிஷ் உயர் அதிகாரிகள், ஐம்பதுக்கும் மேற்பட்ட மகாராஜாக்கள் குடும்பத்தோடு குழுமியிருந்தார்கள். ஆக்ரோஷமாக மோதிக்கொள்ள இரண்டு சமஸ்தானத்தின் அணிகள் காத்திருந்தன. ஒன்று ஜோத்பூர் லான்சர்ஸ் (Jodhpur Lancers), மற்றொன்று மகாராஜா பூபிந்தர் சிங்கின் தலைமையிலான பாட்டியாலா டைகர்ஸ் (Patiala Tigers). யாருமே எதிர்பாராத வகையில் கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம் பார்வையாளர்கள் திரண்டிருந்தார்கள். அவர்கள் எழுப்பிய உற்சாகக் குரலில் டெல்லியில் டெசிபல் ரேட் எகிறிக் கொண்டிருந்தது.

இந்தியாவில் அப்போது வேல்ஸ் இளவரசர், எட்டாம் எட்வர்ட் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்தார். அந்த வருங்கால கிங்கைக் கௌரவப்படுத்தும் வகையில் பல மகாராஜாக்கள் பல்வேறு நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருந்தார்கள். அதில் ஒன்றுதான் இந்த போலோ கோப்பை. மைதானத்துக்குள் நுழைந்த பிரின்ஸ், குதிரை மீதேறி, போலோ மட்டையால், சம்பிரதாயமாகப் பந்தைத் தட்டி ஆட்டத்தை ஆரம்பித்து வைத்தார்.

யாரும் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல என்று இரு அணிகளும் பொறி பறக்க ஆட்டத்தை வெளிப்படுத்தின. பாட்டியாலா ஒரு கோல் போட்டால், விட்டேனா பார் என்று அடுத்த சில நிமிடங்களிலேயே ஜோத்பூர் கோல் அடித்து சமன்


போலோ பிரியர் பூபிந்தர் சிங்

செய்தது. ஏழு நிமிடங்கள் கொண்ட ஒவ்வொரு சுற்றாக முடிந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு சுற்றிலும் இரண்டு அணிகளும் கிட்டத்தட்ட சம அளவு கோல்களுடனேயே இருந்தன. களத்தில் பூபிந்தர் சிங், கடுமையாகப் போராடிக் கொண்டு இருந்தார். பத்தொன்பது குண்டு மரியாதை கொண்ட தன்னை, வெறும் பதினேழு குண்டு மரியாதை கொண்ட ஒரு சமஸ்தானத்தின் வீரர்கள் ஜெயிப்பதா? கூடவே கூடாது. இது என் கௌரவப் பிரச்னை. வெற்றி எனதே!

அது கடைசிச் சுற்று. புதிய குதிரை ஒன்றில் ஏறிக் கொண்டார் பூபிந்தர் சிங். அடுத்த ஏழு நிமிடங் களில் முடிவு தெரிந்து விடும். குதிரைகள் பாய, மட்டைகள் சுழல, காற்றில் பந்து பறக்க, நிமிடங் கள் கரைய ஆரம்பித்தன.

ஆட்டம் க்ளைமாக்ஸை அடைவதற்குள், நாம் போலோவின் பூர்வ வரலாற்றையும், அது எப்படி இந்தியாவுக்குள் நுழைந்தது என்பதையும், மகா ராஜாக்களின் ஆஸ்தான விளையாட்டாக உருப் பெற்ற கதையையும் தெரிந்துகொண்டு விடலாம்.

ஆதி விளையாட்டுகளில் ஒன்று போலோ. அதன் வயதைக் குத்துமதிப்பாகச் சொல்வதென்றால் சுமார் 2500 ஆண்டுகள். அப்போதே பெர்சியப் பழங்குடியினரின் விளையாட்டாக அது இருந்திருக்கிறது. சீனப் பழங்குடியினரும் மங்கோலியப் பழங்குடியினரும் போலோ விளையாடியதற்கான சான்றுகள் இருக்கின்றன. மத்திய ஆசியாவில் ஒவ்வொரு பகுதியிலும் கொஞ்சம் கொஞ்சமாகப் பரவிய போலோ, திபெத் வழியாக இந்தியாவுக்குள் வந்திருக்கிறது.

போலோவை வைத்து மகாவீரன் அலெக்ஸாண்டரின் வாழ்வில் நடந்ததாகக் கூறப்படும் ஒரு சம்பவம் உண்டு. பெர்சியாவின் பேரரசர் மூன்றாம் டேரியஸ், அப்போதுதான் பதவியேற்றி யிருந்த மாமன்னன் அலெக்ஸாண்டருக்குப் பரிசு ஒன்றை அனுப்பினார். பிரித்துப் பார்த்தார் அலெக்ஸாண்டர். ஒரு போலோ மட்டையும் பந்தும். கூடவே செய்தி ஒன்றும் இணைக்கப் பட்டிருந்தது. 'இளைஞனே, இந்தப் போர் சமாச்சாரங்களை எல்லாம் விட்டுவிடு. பேசாமல் இந்த போலோ மட்டையும் பந்தையும் வைத்து விளையாடு.'

அலட்டிக் கொள்ளாத அலெக்ஸாண்டர், பெர்சியப் பேரரசருக்குப் பதிலனுப்பினார். 'தாங்கள் அனுப்பிய பரிசு எனது லட்சியத்தின் அடையாளச் சின்னம்போலவே இருக்கிறது. அந்தப் பந்துதான் இந்த உலகம். அதனை என் கையில் இருக்கும் மட்டையினால் ஆளப்போகிறேன்.' பின்பு டேரியஸ், அலெக்ஸாண்டரிடம் போரில் தோற்றுப் போனார்.

சரி, போலோ என்ற வார்த்தை எங்கிருந்து வந்தது? மணிப்புரி மொழியிலிருந்து. மணிப்பூரிலும் போலோ பிரபலம். அவர்கள் பந்தை 'புலு' (Pulu) என்று அழைப்பார்கள். அதன் ஆங்கில ஆக்கமே 'போலோ'வாக உருமாற்றம் அடைந்துள்ளது.

புகழ் பெற்ற சின்னமான குதுப் மினாரைக் கட்டியெழுப்பிய சுல்தான் குதுப் உதின் ஐபெக், லாகூரில் ஒரு மைதானத்தில் போலோ விளையாடும்போது குதிரையிலிருந்து எகிறி விழுந்தார். மரண அடி. இறந்தார். பெர்சியர்களிடமிருந்து வந்த முகலாயர்களுக்கும் போலோ விளையாடும் பழக்கம் இருந்தது. பேரரசர் பாபர், சிறந்த போலோ வீரர். அவர்தான், இந்தியா வில் போலோவுக்கெனச் சில விதிமுறைகளைக் கொண்டுவந்தார். ஆக்ராவுக்கு அருகில் ஓர் இடத்தில் போலோ குதிரைகளுக்கென மாபெரும் லாயம் ஒன்றை உருவாக்கினார். முகலாயர் காலத்தில் தேசிய விளையாட்டாக இருந்த போலோ, பல இடங்களில் பரவியது. குறிப்பாக ராஜ குடும்பங்களில்.

முகலாயர்கள் காலத்தில் போர்கள் வீரத்தின் அடையாளமாகக் கருதப்பட்டன. அதன்பிறகு வீரத்தின் அடையாளமாக எஞ்சி நின்றது வேட்டை. ஆனால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆங்கிலேயர்களிடம் தம்மை அர்பணித்துக் கொண்ட நமது சொகுசு மகாராஜாக் களுக்குப் போரெல்லாம் பரிச்சயமாகவில்லை. வேட்டைக்குக்கூட உரிய பந்தோபஸ்துடன் சென்றார்கள். வீரம் என்பதெல்லாம் மீசை வளர்ப்பதில் மட்டுமே எஞ்சிக் கிடந்தது. ஆனால் அதையும் மீறி சில மகாராஜாக்கள், இளவரசர்கள் வீர, தீர சாகசங்களில் ஆர்வம் கொண்டிருந் தார்கள். அவர்களைப் போலோ கவர்ந்தது.

ஒரு கையால் குதிரையின் வேகத்தையும் அடக்கியாள வேண்டும், மறுகையில் இருக்கும் மட்டையால் அந்தச் சின்னப் பந்தையும் வசப்படுத்த வேண்டும். பாயும் குதிரையிலிருந்து தவறி விழுந்தால் புத்தூர் கட்டு சர்வ நிச்சயம். எல்லாம் தெரிந்திருந்தும் சில மகாராஜாக்களும் இளவரசர்களும் போலோவை பூஜித்தார்கள். அவர்களுள் பாட்டியாலா, அல்வார், ஜோத்பூர், காஷ்மீர், போபால், ஜெய்ப்பூர், ஹைதராபாத் ஆகிய ராஜகுடும்பத்தினர் அடக்கம். நம்மிட மிருந்து ஐரோப்பியர்கள் போலோவைக் கற்றுக் கொண்டார்கள்.

அல்வார் சமஸ்தான போலோ அணிதான், தொடர் வெற்றிகளைக் குவித்த முதல் அணியாக விளங்கியது. 1900-1903 காலகட்டத்தில் கலந்துகொண்ட எல்லாப் போட்டிகளிலும் அல்வார் அணி வென்றது. அதுவும் ஒன்பதே மேட்ச்களில் 79 கோல்கள் அடித்து யாரும் தொடமுடியாத சாதனையை உருவாக்கியது. 1903 டெல்லி தர்பார் கோப்பையை வென்றது அந்த அணியே. ஆனால் அல்வார் அணியில் ஜோத்பூர் வீரர்கள் இடம்பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கது.

1889ல் ஜோத்பூர் மகாராஜாவின் சகோதரரும் சமஸ்தானத்தின் திவானுமாகிய பிரதாப் ரத்தோர், ஒரு போலோ அணியை உருவாக்க விரும்பினார். பெங்கால் லான்சர்ஸ் அணியினர் பயிற்சி கொடுக்க, நான்கே வருடங்களில் பிரதாபின் தலைமையில் ஜோத்பூர் லான்சர்ஸ் அணி உரு வானது. 1897ல் பிரதாப், தன் அணியினரோடு இங்கிலாந்து சென்றார். வெளிநாட்டுக்குச் சென்ற முதல் இந்திய போலோ அணி அது. அங்கு குயின் விக்டோரியா வைரவிழாக் கோப்பைப் போட்டிகளில் பங்கேற்று, பல வெளிநாட்டு அணிகளைத் தோற்கடித்தார். பிரதாபின் தலைமையில் ஜோத்பூர் லான்சர்ஸ் பல வருடங்களுக்கு மிகச் சிறந்த அணியாக விளங்கியது.



ஜோத்பூர் லான்சர்ஸ் வீரர்கள்

*1899.* மெட்ராஸில் இண்டர்-ரெஜிமென்டல் (Inter-Regimental) கோப்பைக்கான போட்டிகள் நடக்கவிருந்தன. ஐரோப்பாவிலிருந்து வந்திருந்த ஃபோர்த் ஹுசர்ஸ் (4th Hussars) என்ற அணி பெங்களூரில் பயிற்சியில் ஈடுபட்டிருந்தது. ஹுசர்ஸ் அணிக்குத் தலைமை ஏற்று வந்திருந்தவர் இளவயது, வின்ஸ்டன் எஸ். சர்ச்சில். 'அடுத்தவாரம் டோர்னமென்டுக்காக மெட்ராஸ் செல்கிறேன். அதற்கு அடுத்த வாரம் ஜோத்பூரில் பிரதாப் என்ற சிறந்த வீரரிடம் பயிற்சி பெறச் செல்கிறேன்' என்று தனது தாய்க்கு ஜனவரி 11 அன்று கடிதம் எழுதினார்.

பிப்ரவரி 9 அன்று அவர் தன் சகோதரருக்கு எழுதிய கடிதத்தில் கண்ணீர் கசிந்திருந்தது. 'நேற்று இரவுவரை எல்லோரும் மகிழ்ச்சியாகத்தான் இருந்தோம். இன்றைய நிலைவேறு. படியிலிருந்து விழுந்துவிட்டேன். மூட்டுகளிலும் வலது தோள்பட்டையிலும் தசைப்பிடிப்பு. ஜோத்பூரில் பிரதாப் உடன்தான் இருக்கிறேன்.' பிரதாப், சர்ச்சிலுக்கு நல்ல சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார். நம்பிக்கையூட்டினார். அதற்குப் பின் நடந்த போலோ ஆட்டத்தில் ஃபோர்த் ஹுசர்ஸ் நான்கு கோல் அடித்து ஜெயித்தது. அதில் மூன்று சர்ச்சில் அடித்தது.

முதல், இரண்டாம் உலகப்போர் சமயங்களில் யாராலும் போலோ மட்டையைத் தூக்க முடியவில்லை. காரணம் பல போலோ அணிகளில் ராணுவ வீரர்களே விளையாடிக் கொண்டிருந்தனர். உலகப்போர்களின் முடிவில் போலோ மீண்டும் புத்துயிர் பெற்றது.

பிரதாப், போலோவில் இருந்து விலகிய பின்பும் அவரிடம் பயிற்சி பெற்ற வீரர்கள், ஜோத்பூர் லான்சர்ஸை முன்னணி அணியாகவே வைத்திருந்தார்கள். ஜோத்பூர் போலோ வீரர்கள் யானைமேல் கம்பீரமாக மட்டையைச் சுழற்றியபடி வந்து கொண்டிருக்க, ஐரோப்பிய அணிவீரர்கள் எல்லாப் பக்கமும் அடிவாங்கியபடி ஓடுவதாக, பிரிட்டன் பத்திரிகை ஒன்று கார்ட்டூன் வெளியிட்டது. ஒருமுறை ஜோத்பூரின் தொடர் வெற்றியைப் பொறுக்க முடியாமல் ஹைதராபாத் நிஜாம் அடித்த கமெண்ட் இது 'அது என்னவென்று தெரியவில்லை, ஜோத்பூரில் மட்டும் மழைக்காளான்கள்போல போலோ வீரர்கள் முளைத்துக் கொண்டே இருக்கிறார்கள்.'

இருந்தாலும் 1920களில் ஜோத்பூர் லான்சர்ஸ் அணிக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கியது பாட்டியாலா டைகர்ஸ் அணி. பாட்டியாலாவில் போலோவை ஆரம்பித்து வைத்தவர், நமது பூபிந்தரின் தந்தையான மகாராஜா ராஜிந்தர் சிங். அரண்மனை குதிரை லாயங்களின் தலைமைக் கண்காணிப்பாளர் பிரயனிடம் போலோ கற்றுக் கொண்டு அப்படியே அவரது தங்கை ஃப்ளோரிக்கும் நூல்விட்டுத் திருமணம் செய்த கதையை ஏற்கெனவே பார்த்து விட்டோமே.

பாட்டியாலா டைகர்ஸ் அணி ராஜிந்தர் சிங் உருவாக்கியதே. அதில் மிகவும் துடிப்போடு செயல்பட்டவர் சந்தா சிங். அவரது தலைமையில் பாட்டியாலா டைகர்ஸ் அணி பல கோப்பைகளைக் கைப்பற்றியது. பூபிந்தர் சிங்குக்குக் கீழ் ஜெனரலாகப் பணியாற்றிய சந்தா சிங்தான் அவருக்குப் போலோ கற்றுக் கொடுத்தார்.

கல்கத்தா கோப்பை உள்படப் பல கோப்பைகளை வென்றிருந்த பூபிந்தர் சிங், சாம்பியன்ஸ் ஆஃப் ஆல் இந்தியா கோப்பையையும் விட்டுவிடக்கூடாது என்ற வெறியோடு அப்போது தனது போலோ மட்டையைச் சுழற்றிக் கொண்டிருந்தார். அதுவே ஆட்டத்தின் இறுதி நிமிடம். இரு அணிகளும் சம கோல்கள், 5-5. ஒவ்வொருவரையும் பரபரப்பு தொற்றிக்கொள்ள, மைதானமே ஆர்ப்பரிப்புடன் அந்தப் போலோ பந்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தது. முன்வரிசையில் 78 வயதுக் கிழவர் ஒருவர், அசைவின்றி உட்கார்ந்திருந்தார். அவர் ஜோத்பூரின் பிரதாப் ரத்தோர்.

இறுதி நொடிகள். பந்தைத் தன் மட்டையால் வசப்படுத்திய ஜோத்பூரின் பிரித்வி சிங் (பிரதாபின் பேரன்), அதனை ஆறாவது கோலாக மாற்றினார். பிரதாப் ரத்தோர், எழுந்து நின்றார், அவரது கண்களில் ஆனந்த நீர்.

தோல்வி. அவமானம். மகாராஜா பூபிந்தர் சிங்கால் மைதானத்துக்குள் ஒருநொடிகூட இருக்கமுடியவில்லை. வேல்ஸ் இளவரசர் இருக்கிறாரே என்றெல்லாம் எண்ணாமல், விருட்டென வெளியேறினார். அவரது அணியினரும் தயங்கித் தயங்கி அவரைப் பின் தொடர்ந்தார்கள். மகாராஜாவின் முகம் முழுக்கக் கோபத்தால் சிவந்திருந்தது. தன் கையிலிருந்த போலோ மட்டையைத் தூக்கித் தரையில் விட்டெறிந்தார். மற்றவர்களையும் எறிய வைத்தார்.

'இந்த மட்டைகளை எறித்துவிடுங்கள். இனி யாரும் போலோ விளையாடக்கூடாது.'

அந்தத் தோல்விக்குப் பின் பூபிந்தர் சிங், போலோ மட்டையைத் தொடவில்லை. அவரது ஆர்வம் முழுக்கக் கிரிக்கெட்டின் பக்கம் திரும்பியது.



# 124

# பேட், பால், ஸ்டெம்ப் மற்றும் சரித்திரம்

எங்கே, எப்படி, எப்போது, எவன் ஆரம்பித்தான் என்று எதுவும் தெரியாது. ஆனால் கிரிக்கெட் இன்றைய உலகின் மிகப்பெரிய விளையாட்டுகளுள் ஒன்று. இந்தியாவைப் பொருத்தவரை அங்கீகரிக்கப்படாத தேசிய விளையாட்டு அதுவே. ஆனால் அது எப்படி உருவானது என்பது குறித்து ஆளாளுக்கு தங்கள் போக்கில் கதை விடுகிறார்கள். உண்மையைச் சொல்ல வேண்டுமானால், கிரிக்கெட் பிறந்த வரலாற்றுக்கு ஆதாரங்கள் எதுவும் கிடையாது.

சில விஷயங்கள் உண்மையாக இருக்கலாம் என்று நம்பப்படுகிறது. அதாவது தென் கிழக்கு இங்கிலாந்தின் சஸக்ஸ் (Sussex), கெண்ட் (Kent) பகுதிகளில் வாழ்ந்த பழங்குடி மக்களுடைய குழந்தைகள், கிரிக்கெட்டை ஒத்த ஏதோ ஒரு விளையாட்டை விளையாடியிருக்கிறார்கள். காலங்காலமாக விளையாடப்பட்டு வந்த அந்த விளையாட்டைப் பதினேழாம் நூற்றாண்டில் பெரியவர்களும் விளையாட ஆரம்பித்திருக்கிறார்கள். குறிப்பாகக் கால்நடைகளை மேய்ச்சலுக்கு விட்டுவிட்டு, பொழுதைப்போக்குவதற்காகக் கிரிக்கெட் மாதிரியான ஒன்றை விளையாடியிருக்கிறார்கள். பௌல்ஸ் (Bowls) என்ற விளையாட்டுபோல.

அதாவது மரத்தாலான அல்லது ஆட்டுத்தோலைச் சுருட்டி உருவாக்கிய பந்து ஒன்றை ஒருவர் இலக்கை நோக்கி வேகமாக உருட்டிவிடுவார். இலக்கு என்றால் ஸ்டெம்பை ஒத்த ஒன்று. அது இலக்கை அடைவதற்குள் இன்னொருவர் புகுந்து மரக்கட்டை ஒன்றால் தடுப்பார். இதுவே கிரிக்கெட்டுக்கு ஐரோப்பிய மூதாதையர்கள் கொடுத்த ஆதி வடிவம்.

கிரிக்கெட் என்ற பெயர் எப்படி வந்தது? டச்சு மொழிக்கு தங்கச்சி மொழி ப்ளெம்மிஷ். பெல்ஜியத்தின் பழைய மொழிகளுள் ஒன்று. அதிலுள்ள ஒரு வார்த்தை Krick, மரக்கட்டை என்று அர்த்தம். இன்னொரு வார்த்தை Ket, துரத்து என்று பொருள். இரண்டையும் இணைத்து ராவாக அர்த்தம் பார்த்தால் கட்டையால் துரத்து என்பது போல அர்த்தம் வரும். இந்த வார்த்தைகளே ஆங்கிலத்தில் Cricket ஆக மாறியிருக்கிறது என்று கூறுகிறார்கள்.

1611ல் முதன் முதலில் கிரிக்கெட் குறித்து ஒரு செய்தி பதிவாகியிருக்கிறது. அதாவது சஸக்ஸில் இரண்டு இளைஞர்கள் நீதி விசாரணைக்கு உட்படுத்தப்பட்டுத் தண்டிக்கப்பட்டார்களாம். காரணம், ஞாயிறு அன்று அந்த இரண்டு பேரும் சர்ச்சுக்குச் செல்லாமல் கிரிக்கெட் விளையாடப் போய்விட்டார்களாம்.

அன்றைய லாலா அமர்நாத், பட்டோடி முதல் இன்றைய தோனி, கோலி வரை கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள். காரணம் இந்தியாவுக்குள் கிரிக்கெட்டை நுழைத்தவர்கள் கும்பெனியாரே. பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இங்கு நுழைந்த அவர்கள், சென்னை, பம்பாய், கல்கத்தா என்று வேர்விட்டு கிளை பரப்பினார்கள், கூடவே கிரிக்கெட்டையும் அறிமுகப்படுத்தினார்கள். 'சீமைக்காரர்கள் ஏதோ புதிய விளையாட்டு விளையாடுகிறார்கள். வா, சென்று வேடிக்கை பார்க்கலாம்' என்று ஆரம்பத்தில் வேடிக்கை மட்டும் பார்த்தார்கள் இந்தியர்கள்.

இந்தியாவில் கம்பெனிக்காரர்கள் விளையாடிய முதல் 'மேட்ச்' 1721ல். பரோடாவுக்கு அருகில் காம்பேயில் (Cambay) அது நடந்ததாக கம்பெனியாரின் குறிப்புகள் உள்ளன. 'வேலைகளுக்குப் பிறகு ஒவ்வொரு நாளும் நாங்கள் கிரிக்கெட்டும் மற்ற விளையாட்டுகளும் விளையாடுவோம்...'

1751ல் பிரிட்டிஷ் ராணுவத்தினருக்கும் மற்ற ஐரோப்பியர்களுக்கும் இடையே ஒரு மேட்ச் நடந்ததாகத் தெரிகிறது. அதில் யார் டாஸ் ஜெயித்தார்கள், டார்கெட் எவ்வளவு, மழையால் ஆட்டம் தடைபட்டதா போன்ற விவரங்களெல்லாம் தெரியவில்லை. 1787ல் உலகின் முதல் கிரிக்கெட் கிளப் லண்டனில், லார்ட்ஸ் மைதானத்துக்கு மிக அருகில் ஆரம்பிக்கப்பட்டது, Marylebone Cricket Club (MCC). 1792ல் கல்கத்தாவில் கிரிக்கெட், புட்பாலுக்கென கிளப் ஒன்று கம்பெனியாரால் ஆரம்பிக்கப்பட்டது. இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்ட முதல் கிரிக்கெட் கிளப் அதுவே. 1799ல் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் (திப்பு சுல்தானின் வீழ்ச்சிக்குப் பிறகு) ஒரு கிரிக்கெட் கிளப்பைக் கம்பெனியினர் ஆரம்பித்தார்கள்.

பெர்க்ஷையரின் (Berkshire) எட்டோன் (Eton) காலேஜின் பழைய மாணவர்கள் அடங்கிய கிரிக்கெட் அணி ஒன்று பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்ப சமயத்தில் இந்தியாவுக்கு வந்துள்ளது. எட்டோனியன்ஸுக்கும் கல்கத்தா கிளப்காரர்களுக்கும் மேட்ச். அதில் எட்டோனியனின் ராபர்ட் என்ற வீரர் சதம் அடித்துள்ளார். இந்திய மண்ணில் அடிக்கப்பட்ட முதல் சதம்.

அதற்குப் பிறகு ஆங்கிலேயர்கள் கல்கத்தா, மெட்ராஸ், பம்பாயில் அவ்வப்போது மேட்ச் ஆட ஆரம்பித்திருக்கிறார்கள். காலப்போக்கில் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் இந்தியர்களுக்குக் கிரிக்கெட் ஆர்வம் பிறந்திருக்கிறது. குறிப்பாகப் பார்சி இனத்தவர்களுக்கு. பம்பாயில் அவர்கள் ஓரியண்டல் கிரிக்கெட் கிளப் என்று ஆரம்பித்து (1848) விளையாட ஆரம்பித்தார்கள். பிறகு இந்துக்களின் ஜிம்கானா கிளப் ஆரம்பிக்கப்பட்டது (1866). ஆட்டங்கள் வளர்ந்தன.

*1864ல் மெட்ராஸ் அணிக்கும் கல்கத்தா அணிக்கும் நடந்த ஆட்டமே இந்தியாவில் முதன்முதலில் நடத்தப்பட்ட முதல் தர கிரிக்கெட். சிலோனிலிருந்தும் ஆஸ்திரேலியாவில் இருந்தும் அணிதிரட்டி வந்து கல்கத்தாவில் விளையாடிவிட்டுப் போனார்கள் (1884). சர்வதேச கிரிக்கெட் வாசம் இந்தியாவில் வீச ஆரம்பித்தது. நாமும் அயல்மண்ணுக்குச் சென்று விளையாடலாமே என்று யோசித்த பார்சி வீரர்கள், 1886ல் இங்கிலாந்துக்குக் கிளம்பினார்கள். கேப்டனாகச் சென்றவர் பெயர் டாக்டர் டி.ஹெச். பட்டேல். முதல் சுற்றுப் பயணத்தில் மீசையில் மண் எக்கச்சக்கம். இரண்டு வருடங்களில் அடுத்த டூருக்குக் கிளம்பினார்கள். நீண்ட நாள்கள் தங்கி நிறையவே விளையாடினார்கள். 12 டிரா, 11 தோல்வி, 8 வெற்றி.*

*1890ல் இங்கிலாந்திலிருந்து ஓர் அணி கிளம்பி வந்தது. நோக்கம், இந்தியாவாழ் பிரிட்டிஷ் வீரர்களை எதிர்த்து ஆடுவது. அப்படியே, பார்சி அணியினருடன் ஒரு மேட்ச் ஆடவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த மேட்சில், பார்சி வீரர்கள், நான்கு விக்கெட் வித்தியாசத் தில் இங்கிலாந்து அணியைத் தோற்கடித்தார்கள். அவ்வளவுதான். பிரிட்டிஷாரின் முகமெல்லாம் கோபத்தில் சிவந்துவிட்டது. 1857 சிப்பாய்க் கலகத்துக்குப் பின், தங்களுக்கு நேர்ந்த பெரும் அவமானமாக, தோல்வியாக பிரிட்டிஷார் கருதியது இதைத்தான்.*

*சரி, ரஞ்சியின் கதைக்கு வருவோம். ரஞ்சித் சிங், கிரிக்கெட்டில் புகழ்பெற்ற முதல் இந்தியர். ராஜ குடும்பத்தில் பிறந்தவர், நவாநகர் மகாராஜா ரன்மால்ஜியால் (Ranmalji) வாரிசாகத் தத்தெடுக்கப்பட்டவர். சிறுவயது முதலே கிரிக்கெட்டில் ஆர்வம் கொண்டிருந்த அவர், லண்டன் கேம்பிரிட்ஜில் படிக்கும்போது (1892) அந்த அணிக்காக விளையாட ஆரம்பித்தார். பின்பு டிரினிடி (Trinity) கல்லூரியில் சேர்ந்தார். அந்தக் கல்லூரிக்காக அவர் ஆடிய ஆட்டத்தைப் பார்த்து அசந்த ஐரோப்பியர்கள், சஸக்ஸ் அணியில் சேர்த்துக் கொண்டார்கள்.*

*சஸக்ஸ் அணிக்காக முதல்தர மேட்சுகள் ஆட ஆரம்பித்த ரஞ்சி, அதன் கேப்டனாக உயர்ந்தார். ஐந்து ஆண்டுகள் அந்தப் பதவியில் இருந்து அடித்து ஆடினார். 1897ல் மட்டும் அவர் அடித்த ஸ்கோர் 1940 ரன்கள். அந்த ஆண்டின் டாப் 5 கிரிக்கெட்டர்களில் ரஞ்சியும் ஒருவர். 1899ல் ஒரே ஆண்டில் 3000 ரன்களைக் குவித்த முதல்வீரர் என்ற ரெகார்டை உருவாக்கினார். 1895லிருந்து 1904வரை ஒவ்வொரு வருடமும் ஆயிரம் ரன்களுக்குக் குறையாமல் குவித்தார் ரஞ்சி. அதில் 2000க்கும் மேல் மூன்று முறை. 3000க்கும் மேல் இருமுறை.*

*இளவரசர் ரஞ்சியின் மணிக்கட்டு அசைவில் மட்டை சுழலும் லாகவத்தை ரசிக்கவே அவருக்கு ஏராளமான ஐரோப்பிய ரசிகர்கள், குறிப்பாக ரசிகைகள் உண்டு. லெக்-க்ளான்ஸ் என்ற வகை ஷாட் அறிமுகப்படுத்தியவர் ரஞ்சியே. இப்படி ரஞ்சி அறிமுகப்படுத்திய விஷயங்கள், ஆரம்பித்து வைத்த ரெகார்டுகள் நிறைய. ரஞ்சியின் கூர்மையான பார்வைக்கு முன் சீறிவரும் பந்து தப்பிக்கவே முடியாது. எந்த ஒரு ஃபாஸ்ட் பௌலருக்கும் ரஞ்சியின் ஸ்டெம்பை பௌல்ட் ஆக்குவதென்பது கடினமான காரியமே.*

*டெஸ்ட் மேட்ச் ஆடிய முதல் இந்தியர் ரஞ்சிதான். ஆஸ்திரேலியாவுடனான முதல் டெஸ்டில் அவர் அடித்த ரன்கள், 62 மற்றும் 154. இது இங்கிலாந்தில் நடந்த ஆட்டம். ஆஸ்திரேலியாவுக்குச் சென்று விளையாடிய முதல் டெஸ்டின் முதன் இன்னிங்ஸிலேயே ரஞ்சி அடித்த ரன்கள் 175. அவ்வளவு அதிகம் ஸ்கோர் செய்த முதல் வீரர் ரஞ்சியே. முதல் தர மேட்சுகளில் அவர் அடித்த செஞ்சுரியின் எண்ணிக்கை 72. இப்படி ரஞ்சியின் சாதனைப் புள்ளி விவரங்களை அடுக்கிக்கொண்டே போனால் திகட்டிவிடும். ஆகவே..*

1907ல் நவாநகர் மகாராஜாவானார் ரஞ்சி. சிலகாலம் தன் சமஸ்தானப் பொறுப்பு களுக்காக சஸக்ஸிலிருந்து ஒதுங்கியிருந்தார். ஆடிய கை சும்மா இருக்குமா? அடுத்த ஆண்டே மீண்டும் களமிறங்கினார். ரன்ரேட் அதிகமானது. டாக்டர் க்ரேஸ், ரஞ்சியோடு இங்கிலாந்து அணியில் விளையாண்ட சூப்பர் கிரிக்கெட்டர். இருவருமே நெருங்கிய தோஸ்துகள். ரஞ்சி, அவ்வப் போது தன் அணி வீரர்களுக்கு டின்னர் கொடுப்பார். விருந்து நேரத்தில், ஐரோப்பிய ஆடைகளை எல்லாம் துறந்துவிட்டு, ஓர் இந்திய மகாராஜாவுக்குரிய உடையோடும் நகையோடும் தரிசனம் தருவார் ரஞ்சி. ஒருநாள் க்ரேஸூம் மற்றவர்களும் விருந் துக்கு வந்தனர். ஆர்தர் என்பவர் மட்டும் வரவில்லை. வந்தவர்களோடு சேர்ந்து ரஞ்சி ஒரு திட்டம் போட்டார்.



இளவரசர் ரஞ்சி

கொஞ்ச நேரத்தில் ஆர்தர் பசியோடு வந்தார். விருந்து அறையில் யாரும் இல்லை. ரஞ்சி மட்டும் சோகமாக. விருந்து மேசையில் காய்ந்துபோன சில ரொட்டித் துண்டுகளைத் தவிர ஒன்றுமே இல்லை, விஸ்கிகூட.

‘என்ன ஆச்சு?’ என்றார் ஆர்தர்.

‘எங்க அரண்மனையில் ஒருவர் இறந்துட்டார். அதான்’ ரஞ்சி சோகமாகப் பேசினார்.

‘ஓகோ. சரி அதுக்காக விருந்தினரைப் பட்டினி போடுவாங்களா என்ன?’

‘ஸாரி ஸ்கிப்பர், இறந்தவர் ரொம்ப நெருங்கிய உறவினர்.’

ஆர்தர் தலையைத் தொங்கப்போட்டபடியே அறையைவிட்டு வெளியேறிய மறுநொடி, அறைக்குள்ளிலிருந்து உற்சாகக் குரல்கள், பாட்டில்களைத் திறக்கும் சப்தம். ஆர்தர் வேகமாகத் திரும்பினார். ரஞ்சி உள்பட எல்லோரும் கேலியாக ஆட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள். மைதானத்தில் மட்டுமல்ல, இயல்பாகவே உற்சாகமானவர் ரஞ்சி. ஆனால் அவரது கிரிக்கெட் வாழ்க்கைக்கு 1915ல் முற்றுப்புள்ளி காத்திருந்தது.

யார்க்ஷையரில் (Yorkshire) ஒருநாள் நண்பர்களோடு வேட்டைக்குக் கிளம்பினார் ரஞ்சி. அப்போது போதையில் துப்பாக்கியைத் தூக்கிய ஒருவர், இஷ்டம்போலச் சுட ஆரம்பித்தார். யாராலும் அவரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவரது துப்பாக்கியிலிருந்து கிளம்பிவந்த குண்டு ஒன்று ரஞ்சியின் முகத்தில் இறங்கியது.

மயக்கத்தில் இருந்து தெளிந்த ரஞ்சியிடம் டாக்டர் அந்த விஷயத்தைக் கூறினார். 'ஸாரி மிஸ்டர் ரஞ்சி, உங்கள் வலது கண்ணை எடுக்க வேண்டிய நிர்பந்தம்.'

'நான் அதிர்ஷ்டம் கெட்டவன்' ரஞ்சி பதில் சொன்னார், விரக்தியாக.

அந்த விபத்துக்குப் பிறகு அதிக நேரம் படுக்கையில் இருந்ததால் அவரது உடல் எடைபோட்டு விட்டது. அதன்பின்னும் அவர் சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் கிரிக்கெட் பயிற்சி எடுக்கவே செய்தார். 1920ல், தனது 48வது வயதில் மீண்டும் சஸக்ஸுக்காக விளையாடக் களமிறங்கினார். ஒற்றைக்கண் பார்வை, பருமனான உடல் விளையாட முடியவில்லை. ரஞ்சியின் அதிகாரபூர்வ கிரிக்கெட் வாழ்க்கை அத்தோடு முடிந்துபோனது. அவரது வாழ்க்கை 1933ல் முடிந்துபோனது.

உலகின் தலைசிறந்த கிரிக்கெட்டர்களுள் ஒருவரான மகாராஜா ரஞ்சி, விளையாடியதெல்லாம் இங்கிலாந்துக்கும் அதன் கிளப்புகளுக்கும்தான். இந்தியாவுக்காக அவர் ஒரு மேட்ச்கூட ஆடியதில்லை.

நமது பாட்டியாலா பூபிந்தர் சிங்கின் தந்தை ராஜிந்தர் சிங், ரஞ்சியின் சமஸ்தானத்துக்கு நிதி உதவிகள் நிறைய செய்ததாகவும், ரஞ்சியும் ராஜிந்தருக்காகப் பணியாற்றியதாகவும் குறிப்புகள் உள்ளன.

இன்றைக்கும் ரஞ்சி நம் நினைவில் இருக்கக் காரணம், அவரது பெயரில் அமைந்த கோப்பை. அதைக் கொண்டு வந்தவர் பூபிந்தர் சிங்தான். 1934-35லேயே ரஞ்சியின் பெயரில் இந்திய உள்ளூர் அணிகளுக்கிடையே போட்டிகள் நடத்த ஏற்பாடு செய்தார். தன் சொந்தச் செலவில் தங்கக் கோப்பை ஒன்றையும் உருவாக்கிக் கொடுத்தார்.

ரஞ்சியின் காலத்திலேயே கிரிக்கெட்டால் உலக அளவில் புகழ்பெற்ற இன்னொருவர் துலிப் சிங். கதியவாரின் ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவர். ரஞ்சித் சிங்கின் உறவினர்தான். இங்கிலாந்து அணிக்காக சர்வதேசப் போட்டிகளில் விளையாடியவர். இவரும் இந்தியாவுக்காக விளையாடியதில்லை.

உலக அளவில் புகழ்பெற்ற முதல் இந்தியராக ரஞ்சி இருந்தாலும் அவர் இந்திய கிரிக்கெட்டுக்கென்று எதுவும் செய்யவில்லை. இந்தியாவைப் பொருத்தவரை கிரிக்கெட்டின் வளர்ப்புத்தாய் என்றால் அது பாட்டியாலாதான். கிரிக்கெட்டில் இந்தியர்களை சர்வதேச அளவில் கொண்டு செல்ல பெரும் முயற்சிகள் செய்ததும் பாட்டியாலா ராஜகுடும்பத்தினர்தான்.

மகாராஜா பூபிந்தர் சிங்கின் துலாபாரத்தில், அந்தப்புரத்தை ஒரு தட்டில் வைத்து, இன்னொரு தட்டில் கிரிக்கெட்டை வைத்தால் முள் சமநிலை அடைந்துவிடும். பிரிட்டிஷாரே பின்னங்கால் பிடரியில்பட ஓடுமளவுக்கு அவர் கிரிக்கெட்டுக்காகச் செய்த 'தில்லுமுல்லு தியாகங்கள்' ஏராளம்.



# 125

# டான் பிராட்மேனின் சறுக்கல்!

ஜெகத்திபேந்தர் நாராயண் சிங்கின் (Jagaddipendar Narayan Singh) வாழ்வில் நடந்த கிரிக்கெட் சம்பவம் இது. யாரவர்? கூச் பிகாரின் மகாராஜா. நாம் நன்கறிந்த ஜித், இந்திரா (பரோடா மகாராஜா சாயாஜி ராவின் மகள்) ஆகியோரின் மூத்த புதல்வர். சிறுவயது முதலே மட்டையும் கையுமாகக் கூச் பிகார் அரண்மனை கிரிக்கெட் மைதானத்தில் ஆட்டம் பழகியவர். ஒருமுறைகூட ஜெகத்திபேந்தர் 'அவுட்' ஆக மாட்டார். அவ்வளவு சிறந்த பேட்ஸ்மேனா என்று கேள்வி கேட்காமல், அவர் மகாராஜா என்று நினைவில் வைத்துக் கொள்ளவும். அவர் பௌலிங் போட்டு 'அவுட்' என்று கையைத் தூக்கிவிட்டால் போதும், பேட்ஸ்மேன் அந்தப் பந்தில் சிக்ஸர் அடித்திருந்தால்கூட வெளியேறிவிட வேண்டியதுதான்.

ஜெகத்திபேந்தர், கோடைகாலங்களில் ஐரோப்பியச் சுற்றுப் பயணத்துக்குக் கிளம்பிவிடுவார். அங்கே அவரது முக்கியப் பொழுதுபோக்கு, ஐரோப்பிய லோக்கல் அணிகள் எதிலாவது இணைந்துகொண்டு கிரிக்கெட் ஆடுவதே. அப்போது அவர் கெண்ட் அருகே இக்தாம் (Ightham) என்ற ஊருக்குச் சென்றிருந்தார். மேஜர் ஜெனரல் மான்க்டென் (Monckton) என்பவரது விருந்தினராக அவரது மாளிகையில் தங்கியிருந்தார்.

மான்க்டென் தலைமையிலான அணிக்கும், உள்ளூர் அணிக்கும் மேட்ச். மைதானத்தில் மக்கள் திரண்டிருந்தார்கள். உள்ளூர் பண்ணையார் ஒருவரது மகளான அவளும் வந்திருந்தாள். மைதானத்துக்குள் மான்க்டென் 'டாஸ்' போட்டுக் கொண்டிருக்க, அவரது அணியில் இடம்பெற்றிருந்த ஜெகத்திபேந்தர்

அவளுக்கு 'ரோஸ்' கொடுக்கலாமா என்று எண்ணிக்கொண்டிருந்தார். டாஸில் வென்ற மான்க்டென், 'பேட்டிங்' என்றார். ஆனால் ஜெகத்திபேந்தரின் கண்களில் 'டேட்டிங்' கனவுகள்.

மான்க்டெனும் இன்னொரு வீரரும் களமிறங்கினார்கள். ஜெகத்திபேந்தர் அணியின் முக்கிய பௌலர். பேட்டிங் வரிசையில் நம்பர் ஒன்பது. ஆகவே மைதானத்தை விட்டு வெளியேறி யிருந்தார். ஒவ்வொரு வீரராக அவுட் ஆகிக் கொண்டிருந்தார்கள். ஓரளவு போராடி ஆடிய மான்க்டெனும் அவுட்டாகி வந்து அமர்ந்தார். நான்கு விக்கெட்டுகள் சரிந்திருந்தன. 'எங்கே கூச்?' (ஜெகத்திபேந்தரை ஐரோப்பியர்கள் செல்லமாக அழைப்பது அப்படித்தான்.) தேடினார் மான்க்டென். 'இங்கேதான் எங்காவது இருப்பார். வந்துவிடுவார்' என்றார் ஒரு வீரர்.

அடுத்தடுத்து இரண்டு விக்கெட்டுகள் விழுந்தன. மான்க்டெனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. தானே கூச்சைத் தேட ஆரம்பித்தார். 'அடுத்து அவர்தானே களமிறங்க வேண்டும். எங்கே போய்த் தொலைந்தார்?' வெளியில் சென்று தேடுவதற்காக சிறுவன் ஒருவனை அனுப்பினார்.

அந்தச் சிறுவன் வருவதற்குள் ஒன்பது விக்கெட்டுகள் விழுந்திருந்தன. கடைசி பேட்ஸ்மேன் கூச்சுக்காக எல்லோரும் காத்திருந்தார்கள். மான்க்டெனுக்கு ரத்தக் கொதிப்பு ஜிவ். 'எங்கடா அவரு?'

பதில் சொல்லத் தயங்கினான் சிறுவன். அவன் முகமெல்லாம் சிவந்திருந்தது. வெட்கம் வழியச் சிரிக்கவேறு செய்தான். 'அவரு அங்க ஒரு வீட்டுல, மேல் மாடியில..'

'மேல் மாடியில?'

'அது வந்து.. அவரு.. பண்ணையாரு பொண்ணுகூட....'

மான்க்டென் தலையிலடித்துக் கொண்டார். ஆற அமர நிதானமாக மைதானத்துக்கு வந்தார் கூச் பிகார் மகாராஜா. ஆனால் நமது பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங் இப்படியெல்லாம் கிடையாது. அந்தப்புரத்திலேயே ஆயுசு முழுவதையும் கழிக்கவேண்டும் என்ற பேரவா கொண்டவர்தான். ஆனால் கிரிக்கெட் என்று வந்துவிட்டால் அந்தப்புரத்தைக்கூட மறந்து விடுவார். மைதானத்துக்குள் இறங்கிவிட்டால் அவர் ஒரு விசுவாசமான வீரர். மேட்ச் சமயத்தில் தனக்கு 'மேட்ச்' பார்க்கும் புத்தி பூபிந்தருக்குக் கிடையாது.

பாட்டியாலாவுக்குள் கிரிக்கெட்டைக் கொண்டுவந்தவர் பூபிந்தரின் தந்தை மகாராஜா ராஜிந்தர் சிங்தான். அதன் பின்னணியில் ஒரு வலுவான காரணமும் இருக்கிறது. கிரிக்கெட், பிரிட்டி ஷாருக்குப் பிடித்த விளையாட்டு. அது பிரிட்டிஷாரின் கௌரவச் சின்னம். பாட்டியாலாவின் ஸ்டேட்டஸும் பிரிட்டிஷார் மத்தியில் உயர வேண்டுமென்றால் கிரிக்கெட் அவசியம். மக்களே, மட்டையைத் தூக்குங்கள்.

ஆனால் ராஜிந்தர் சிங், டாஸ் போட்டு, பேட் கட்டி, பிட்ச் ரிப்போர்ட் எல்லாம் ஆராய்ந்து, மிட்-ஆன், மிட்-ஆஃப் சமாச்சாரங்கள் எல்லாம் முறையாகக் கடைபிடித்து கிரிக்கெட் விளையாடவில்லை. யாரங்கே? நடுவே மூன்று குச்சியை நட்டு வை. எவரங்கே? ஓடிவந்து பந்தைப் போடு. மடார்!

அதுவும் சய்லில் அவர் கட்டிய உலகின் மிக உயரமான கிரிக்கெட் மைதானத்தில் பண்ணாத கூத்துகள் இல்லை. 'நாளை மேட்ச். யார் வேண்டுமானாலும் கலந்துகொள்ளலாம். ஒரே ஒரு நிபந்தனை. யாரும் கிரிக்கெட்டுக்கான உடை அணிந்து வரக்கூடாது. கண்டிப்பாக மாறுவேடமணிந்து வருபவர்கள் மட்டுமே மைதானத்துக்குள் அனுமதிக்கப்படுவர்.'

அப்படி ராஜிந்தர் சிங் நடத்திய பேன்ஸி டிரஸ் கிரிக்கெட் போட்டியில், ரஞ்சியும் ஐரோப்பிய ராணி போல உடையணிந்து விளையாடியிருக்கிறார். சிறுவயது முதலே பூபிந்தர் சிங், தகுந்த கோச்களிடம் முறைப்படி கிரிக்கெட் கற்றுக்கொண்டார். சய்ல் மைதானத்தில் அவர் சிக்ஸரும் ஃபோரும் அடிப்பதற்காக யாரும் மெதுவாகப் பந்துவீசவில்லை. வீசப்படும் பந்துகளை யெல்லாம் வெளுத்துவாங்கும் வித்தையில் ஓரளவு தேர்ச்சி பெற்றிருந்தார். மகாராஜாவாகிய பின் பூபிந்தர் செய்த முதல் காரியங்களுள் ஒன்று பாட்டியாலாவிலிருந்த கிரிக்கெட் அணியை வலுவாக்கியது. அதற்காகவே ஐரோப்பிய கோச்களை வரவழைத்து சிறப்புப் பயிற்சிகள் கொடுத்தார்.

1911ல் இங்கிலாந்தில் சுற்றுப்பயணம் செய்வதற்காக இந்தியர்களை மட்டும் கொண்ட கிரிக்கெட் அணி ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டது. பூபிந்தர் சிங்தான் அதற்கு கேப்டன் என்றெல் லாம் ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். கூடவே ஒரு கொசுறுத் தகவல் அந்தச் சுற்றுப் பயணத்துக்கான ஒரே ஸ்பான்ஸரும் பூபிந்தரே.

உலகின் ஆதி கிரிக்கெட் கிளப்பான Marylebone Cricket Clubல் பூபிந்தர் சிங்கும் உறுப்பினர். அவ்வப்போது அதற்காக மட்டை பிடித்திருக்கிறார். கையைச் சுழற்றி பந்தும் வீசியிருக்கிறார். தனது முதல் ஐரோப்பிய கிரிக்கெட் சுற்றுப்பயணத்துக்குப் பின், MCC அணியை இந்தியாவுக்கு அழைத்துவந்து விளையாட வைக்கப் பெரும் முயற்சிகள் எடுத்தார் பூபிந்தர் சிங். அது உடனடியாக நடக்கவில்லை. பின் முதல் உலக யுத்தம் வேறு ஆரம்பித்து பூபிந்தரின் ஆசையில் குண்டு போட்டது.

அந்த ஆசை 1926ல்தான் நிறைவேறியது. கில்லிகன் (Gilligan) என்பவரது தலைமையில் MCC அணி இந்தியாவுக்கு வந்தது. லோக்கல் இந்திய அணிகள் சிலவற்றுடன் MCC அணி மோதியது. அதில் ஒரு லோக்கல் அணிக்குக் கேப்டனாகப் பொறுப்பேற்ற பூபிந்தர் சிங், MCCக்கு எதிராக விளையாடினார். அடுத்த மேட்சிலேயே MCCன் உறுப்பினர் என்பதால் அதில் இடம்பெற்று, லோக்கல் அணிக்கு எதிராகவும் விளையாடினார். கிரிக்கெட் வரலாற்றில் இப்படி ஒரே சீரியஸில் இரட்டைக் கதாபாத்திரம் ஏற்ற ஒரே வீரர் பூபிந்தரே.

டக்ளஸ் ராபர்ட் ஜர்டைன் (Douglas Robert Jardine). அப்போதைய இங்கிலாந்து அணியின் டெஸ்ட் கேப்டன். வலதுகை ஆட்டக்காரர். கொஞ்சம் பயங்கரமான ஆள்தான். 1932-33ல் இங்கிலாந்து அணி ஜர்டைன் தலைமையில் ஆஸ்திரேலியா டூருக்குச் சென்றது. மொத்தம் ஐந்து டெஸ்ட் மேட்சுகள். தனது சொந்த மண்ணில் ஆஸ்திரேலியா 4-1 என்ற கணக்கில் மண்ணைக் கவ்வியது. காரணம்? மைதானத்தில் ஜர்டைன் நிகழ்த்திய அடாவடிகளே.

பந்தைப் போடாதே. வீசி எறி. அது பேட்ஸ்மேனின் உடலைப் பதம் பார்க்க வேண்டும். ஜர்டைன், தனது அணியின் பாஸ்ட் பௌலர்களான லார்வுட் (Larwood), வோஸ் (Voce) ஆகியோரை உசுப்பேற்றி முடுக்கிவிட்டு ஆஸ்திரேலிய பேட்ஸ்மேன்களை நிலைகுலைய வைத்தார். அடிலெய்டில் நடந்த மூன்றாவது டெஸ்டில் லார்வுட் வீசிய பந்து, பேட்


ஜர்டைன்

செய்துகொண்டிருந்த ஆஸ்திரேலிய கேப்டன் பில் உட்ஃபுல்லின் (Bill Woodfull) நெஞ்சைத் தாக்கியது. காயத்துடன் சுருண்டு விழுந்தார் அவர். மைதானமே அதிர்ந்து நிற்க, ஜர்டைன் அனைவருக்கும் கேட்கும்படி கத்தினார், 'வெல்டன் லார்வுட்!'

பேட்ஸ்மேன்களுக்கு பிபீ எகிறும்படி வார்த்தைகளை விடுவது, பீல்டர்களை மிகவும் நெருக்கமாக நிற்கவைத்து மிரளவைப்பது, இப்படிப்பட்ட அடாவடி நடவடிக்கை களால் ஜர்டைன், ஆஸ்திரேலிய கிரிக்கெட் போர்டின் கடும் கண்டனத்துக்கு ஆளானார். அந்த சீரியஸில் ஜர்டைனால் கடுமையாகப் பாதிக்கப்பட்ட இன்னொரு நபர், கிரிக்கெட்டின் பிதாமகனான டான் பிராட்மேன் (Don Bradman). அந்த ஆஸ்திரேலிய டெஸ்ட் அணியில் இடம் பெற்றிருந்த பிராட்மேனால், நான்கு மேட்சுகளில் 396 ரன்கள் மட்டுமே எடுக்க முடிந்தது. சராசரி வெறும் 56.57. ரன் ஃபேக்டரியாக வாழ்ந்த பிராட்மேனின் கேரியர் சராசரி நூறைவிடக் குறைவானதற்குக் (99.94) காரணம் இந்தத் தொடர்தான்.

அப்படிப்பட்ட முரட்டு கேப்டன் ஜர்டைன், அதே வருடத்தில் இங்கிலாந்து வீரர்களுடன் இந்தியாவுக்குச் சுற்றுப்பயணம் வந்தார். இந்தியா - இங்கிலாந்து மூன்று டெஸ்ட் மேட்சுகள். அப்படியே MCC அணிக்கும் இந்தியாவிலுள்ள கிளப் அணிகளுக்கும் முதல் தர மேட்சுகளுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. நவம்பர் 12-15. பாட்டியாலாவில் வைத்து பாட்டியாலா வுடன் நான்கு நாள் மேட்ச். அதற்கு முன்பாக அமிர்தசரஸில் தெற்கு பஞ்சாப் அணிக்கும் MCCக்கும் மூன்று நாள் மேட்ச்.

இரண்டு அணிக்குமே கேப்டன் பூபிந்தர் சிங்தான். நாள் நெருங்க நெருங்க அவருக்குள் படபடப்பு. 'அய்யோ என்ன செய்யப்போகிறேன் என்று தெரியவில்லையே. அந்த ஜர்டைன் எம்டன் ஆயிற்றே. உள்ளூரில் வெள்ளைக்காரனிடம் தோற்றால் மானம், மரியாதை, கௌரவம் எல்லாம் கவிழ்ந்துவிடுமே. எப்படியாவது வெற்றிபெற்றே ஆகவேண்டும். என்ன செய்யலாம் சொல்லுங்கள்.'

பாட்டியாலா அணியில் இடம்பெற்றிருந்த ஆஸ்திரேலியாவின் முன்னணி பௌலர் ப்ரான்க் டாரண்டிடம் (Frand Tarrant) ஆலோசனை கேட்டார் மகாராஜா. 'இங்கிலீஷ் அணியை ஒப்பிடும்போது நம் அணியின் பலம் குறைவுதான். அமிர்சதரஸில் அவர்கள் எப்படி ஆடுகிறார் கள் என்று பார்ப்போம். அதைவைத்து பாட்டியாலா மேட்சில் நமது வெற்றிக்கான வியூகம் அமைத்துவிடலாம்.'

அமிர்தசரஸில் மூன்றுநாள் மேட்ச் ஆரம்பமானது. பூபிந்தர்தான் டாஸ் ஜெயித்தார். 'பேட்டிங்' என்றார். முதல் சில நிமிடங்களிலேயே முதல் விக்கெட். ஆனால் மறுமுனையில் தொடக்க ஆட்டக்காரராக இறங்கிய லாலா அமர்நாத், செஞ்சுரி போட்டார். இன்னொரு பக்கம், பூபிந்தர்

சிங்கின் புதல்வர், பாட்டியாலா இளவரசர் யத்விந்த்ர சிங், நிதானமாக ஆடி 66 ரன்கள் எடுத்து அவுட் ஆனார். பின் இறங்கிய கேப்டன் மகாராஜா, ஓரளவு சமாளித்து ஆடினார். உதிரி களாக ரன்கள் சேர்ந்தன. 22 ரன்கள் எடுத்திருந்த நிலையில் அவசரப்பட்டு ஓட நினைத்து (அந்தத் தள்ளாத நாற்பது வயதில்) ரன்-அவுட் ஆனார். முதல் நாள் ஆட்ட முடிவில் தெற்கு பஞ்சாப் அணி 9 விக்கெட் இழப்புக்கு 244 ரன்கள் எடுத்திருந்தது.

முழுதாக மூன்று நாள்கள் நடந்த அந்த மேட்ச் டிராவில் முடிந்தது. அடுத்தது பாட்டியாலாவில் மேட்ச். ஜர்டைனும் அணியினரும் பாட்டியாலா வுக்குச் சென்று இறங்கியிருந்தார்கள். 'நம் அணியின் பந்துவீச்சு பலமாக இல்லை. ஆனால் ஜர்டைனின் பௌலர்கள் முரட்டுத்தனமாக வீசினால், நம் அணியினர் தாங்க மாட்டார்களே..' - பிரதம மந்திரி லியாகத் ஹையத் கான் (Liaquat Hayat Khan), பீதியைக் கிளப்பினார். 'என்ன விலை கொடுத்தாவது நாளைய ஆட்டத்தில் நாம் வென்றே ஆக வேண்டும். இது தன்மானப் பிரச்னை' தெற்கு பஞ்சாப் கிரிக்கெட் அஸோசியேஸனின் செயலாளர் Walaiti Ram வீர வசனம் பேசினார்.

ஆழ்ந்த யோசனையில் இருந்த பூபிந்தர் சிங், நீண்ட நேரம் கழித்து முகத் தெளிவுடன் பேசினார். 'இன்று இரவு விருந்து. ஜர்டைனுக்கும் அணிக்கும் என் சார்பாக அழைப்பு விடுங்கள். கிடங்குக்குத் தகவல் சொல்லுங்கள். எல்லாம் தேவைக்கு அதிகமாகவே வந்து இறங்க வேண்டும். 'இதர' சமாச்சாரங்களுக்கும் ஏற்பாடு செய்துவிடுங்கள். விருந்தில் நம் அணியினரும் இடம்பெற வேண்டும்.'



டான் பிராட்மேன்

மகாராஜாவின் கட்டளைப்படி கிடங்குக்குத் தகவல் போனது. அது நெப்போலியன் பிராந்தி, இன்ன பிற ஆல்கஹால் அமிர்தங்களைச் சேகரித்து வைப்பதற்கான மகாராஜாவின் பிரத்யேக குடோன். பாட்டில்கள் அரண்மனைக்கு வேகவேகமாக அனுப்பப்பட்டன.



# விருந்து வை வேலையைக் காட்டு

பாட்டியாலா மூன்று விஷயங்களுக்குப் பிரசித்தி பெற்றது. ஒன்று பாட்டியாலா பக்ரி (Pagri). சீக்கியர்களுக்கான ஸ்பெஷல் தலைப்பாகை. அடுத்தது பாட்டியாலா சல்வார். இன்றைய தேதி வரை இந்தியா முழுக்க பெண்கள் விரும்பும் சல்வார். அடுத்தது சற்றே விசேஷமானது. அந்த விஷயத்தை அறிமுகப்படுத்தியதே நமது செல்ல மகாராஜா பூபிந்தர் சிங்தான். அது பாட்டியாலா பெக்.

ஒரு பெக் என்றால் அளவு என்ன? ஸ்மால் என்றால் 30 மில்லி. லார்ஜ் என்றால் 60 மில்லி. உற்சாகத்தின் உச்சத்தைத் தொட இந்த அளவு போதாது என்று தோன்றியது பூபிந்தருக்கு. அடுத்த நான்கு நாள்கள் கிரிக்கெட் மேட்ச் சொந்த பாட்டியாலா மைதானத்தில். தன்மானம் தவிடுபொடியாகாமல் இருக்க இங்கிலாந்திலிருந்து வந்திருக்கும் MCC அணியை ஜெயித்தே ஆகவேண்டிய கட்டாயம். ஆனால் அந்த அணியின் முரட்டு கேப்டன் ஜர்டைனை நினைத்தால் பூபிந்தர் சிங்குக்குப் பயமாக இருந்தது. மைதானத்தில் வீரம் காட்டி ஜெயிப்பதெல்லாம் ம்ஹூம். ஒரே வழி. விருந்து வை. வேலையைக் காட்டு.

மகாராஜாவின் அழைப்பின் பெயரில், ஜர்டைனும் இதர MCC வீரர்களும் மோதி பாக்குக்கு அந்த இரவு விருந்துக்கு வந்திருந்தார்கள். கலைஞர்கள் பஞ்சாபிய பாரம்பரிய இசையை நிரப்பிக் கொண்டிருந்தார்கள். இளைஞிகள் நளின நடனத்தால் கவனம் ஈர்த்தார்கள். இருபது பணியாள்கள் கையில் தட்டுடன் திரிந்து கொண்டிருந்தார்கள். தட்டிலிருந்த கோப்பைகளில் நெப்போலியன் நிறைந்திருந்தார்.

பூபிந்தரின் கட்டளைப்படி ஒரு லார்ஜ் பெக், 100 மில்லியாக உயர்த்தப்பட்டிருந்தது. கூடவே ரகசியமாக ஒரு கட்டளையும் இட்டிருந்தார். 'ஐரோப்பிய விருந்தினர்களுக்கு ஊற்றிக் கொடுத்துக்கொண்டே இருங்கள். முடிந்தவரை. இடைவிடாமல். அவர்கள் மயங்கிச் சரியும் வரை.' பாட்டியாலா அணி வீரர்களுக்கும் ரகசியச் செய்தி சொல்லப்பட்டிருந்தது. 'நீங்களும் மதுக் கோப்பையைக் கையில் எடுக்கலாம். ஆனால் மறந்தும் வாயில் வைக்கக்கூடாது.'

மோதி பாக் அரண்மனை விருந்துகளில் விருந்தினர்கள் எல்லோருமே பூபிந்தர் சிங்குக்கு மரியாதை செலுத்தாமல், மது அருந்தக்கூடாது. உள்ளூர் ஆள்கள் என்றால், மதுக்கோப்பை யோடு சென்று பூபிந்தரின் காலைத் தொட்டு வணங்கிவிட்டு வரவேண்டும். ஐரோப்பிய விருந்தினர்கள் என்றால் அவர்முன் சென்று, குனிந்து 'சியர்ஸ் மகாராஜா' சொல்லிவிட்டு வரவேண்டும். கொஞ்சம் பெரிய ஆள்கள் என்றால், இருந்த இடத்திலிருந்தே கையிலிருக்கும் கோப்பையை உயர்த்தி 'சியர்ஸ்' சொல்லிவிட்டு வாய் வைக்கவேண்டும். இதுவே சம்பிரதாயம்.

அன்றைய விருந்தில் பூபிந்தர் சிங், சம்பிரதாயத்தையெல்லாம் எதிர்பார்க்கவில்லை. தன் கையிலிருந்த கோப்பையை உயர்த்தி, உரக்க 'சியர்ஸ்' சொன்னார். 'மகாராஜா, என்ன இது, பெக் அளவு அதிகமாக இருக்கிறதே?' கேட்டார் ஜர்டைனின் அணிவீரர் ஒருவர். 'பாட்டி யாலா பெக். அப்படித்தான் இருக்கும்' சிரித்தார் பூபிந்தர். நெப்போலியனும் இன்னபிற சகாக்களும் களமிறங்கி விளையாட ஆரம்பித்தார்கள். MCC வீரர்கள் சரணடைந்தார்கள்.

விடிந்தது. அப்போதுதான் ஒரு வீரர் மெள்ளக் கண் விழித்தார். 'அய்யோ, மேட்சுக்கு நேரமாகி விட்டதே' பதறி எழுந்து சிதறிக் கிடந்த சகாக்களை 'ஏந்திரு மச்சான் ஏந்திரு' என்று உலுக்கி எழுப்ப ஆரம்பித்தார். விருந்தில் நல்ல பிள்ளையாக நடந்துகொண்ட பூபிந்தரும் ஏனைய வீரர்களும் காலையிலேயே பாட்டியாலாவின் துருவே பண்டோவ் மைதானத்துக்கு வந்து பயிற்சி எடுக்க ஆரம்பித்திருந்தார்கள்.

நாணயம் சுழன்றபடி பறந்தது. டாஸ் MCCக்குச் சாதகமாக அமைந்தது. பேட்டிங். அவர்களால் அதிரடியாக ஆடமுடியவில்லை. நாளெல்லாம் ஆடி நத்தை வேகத்தில் ரன் சேர்த்தார்கள். 204/4. அதில் கேப்டன் ஜர்டைன் மட்டும் தெளிவாக ஆடி 80 ரன்கள் எடுத்து அவுட் ஆனார்.

'இரவு அரண்மனைக்கு வந்துவிடுங்கள். பாட்டியாலாவில் நீங்கள் இருக்கும் இரவு உணவு தினமும் என்னோடுதான்' - அன்பொழுக அழைப்புவிடுத்தார் பூபிந்தர் சிங். முந்தைய இரவில் ஏறிய போதை சற்றே தடுத்தாலும், மகாராஜாவே நேரில் அழைத்ததால் MCC வீரர்களால் தட்ட முடியவில்லை. அன்றும் 'பாட்டியாலா பெக்' விளையாடியது. விலக நினைத்த வீரர் களை வஞ்சிகள் கொஞ்சி அழைத்தார்கள். விருந்தோம்பலில் நனைத்தார்கள்.

இரண்டாவது நாள் மேட்ச் ஆரம்பமானது. பாட்டியாலா அணியில் இடம்பெற்றிருந்த ஆஸ்திரேலிய பவுலர் டாரண்ட், MCCன் விக்கெட்டுகளை எளிதாகக் கழற்றினார். 330க்கு ஆல்-அவுட். பாட்டியாலாவின் தொடக்க வீரர்களாக வாஸிர் அலியும் பிரித்விராஜும் இறங் கினார்கள். முதலிலேயே பிரித்வி பெவிலியன் திரும்பினார். லாலா அமர்நாத் வந்தார். ரசிகர்களின் உற்சாகக் கூக்குரல். ஜர்டைன் தனது வியூகங்களை மாற்றிக்கொண்டே இருந்தார். இருந்தாலும் சற்றே களைப்பாக இருந்த அவரது வீரர்களால் முழுஒத்துழைப்பு கொடுக்க முடியவில்லை. அமர்நாத் அரைசதம் அடித்து அவுட் ஆனார். இரண்டாவது நாளின் இறுதியில் பாட்டியாலா 91/2.



பூபிந்தர் சிங் தனது கிரிக்கெட் அணியுடன்

அந்த இரவிலும் அதே விருந்தோம்பல். அன்பில் சிக்கித் தவித்த MCC வீரர்கள் விரைவிலேயே மயங்கி, விடிந்த பின்பே விழித்தார்கள். மூன்றாவது நாளின் ஆட்டத்தில் வாஸிர் அலி மட்டும் வெளுத்து வாங்கினார். 156 ரன்கள். இளவரசர் யத்விந்தர சிங் 37. கொஞ்சம் டென்ஷனாக இருந்ததால் மகாராஜா களமிறங்கவில்லை. மூன்றாவது நாள் ஆட்டத்திலும் ஜர்டைனின் முரட்டு பௌலர்களால் சாதுவாகவே பந்துவீச முடிந்தது. ரசிகர் களின் கொட்டாவிகளுக்கிடையே நகர்ந்த அன்றைய ஆட்டத்தின் முடிவில் பாட்டியாலா 269/4.

'முதல் இன்னிங்ஸில் அவர்களைவிட 61 ரன்கள் பின்தங்கி இருக்கிறோம். இன்னும் ஒருநாள் ஆட்டம்தான் பாக்கி இருக்கிறது. அதில் அதிக ரன்கள் அடித்து டிக்ளேர் செய்து, MCCஐ இரண்டாவது இன்னிங்ஸ் ஆடவைத்து குறைவான ரன்னுக்குள் பத்து விக்கெட்டுகளைக் காலிசெய்வதெல்லாம் இயலாத காரியம். என்ன செய்ய?' லியாகத் கேட்டார். அதற்கு மகாராஜா சொன்ன யோசனையை எல்லோரும் கேட்டுத் தலையாட்டினார்கள்.

இறுதி நாள். பாட்டியாலா 6 விக்கெட் இழப்புக்கு 335 ரன்கள் எட்டியது. டிக்ளேர் செய்வதாக மகாராஜா அறிவித்தார். அப்படியே ஜர்டைனுடன் பேச்சுவார்த்தை நடத்தி மேட்சையும் முடித்துக் கொண்டார். டிரா. சொந்த மண்ணில் தோல்வியில்லை. தன்மானம் தப்பித்தது. ஆனாலும் பாட்டியாலா முதல் இன்னிங்ஸில் MCCன் ஸ்கோரைக் கடந்ததையே பெரும் வெற்றியாகக் கொண்டாட ஆரம்பித்தார் பூபிந்தர் சிங். மைதானத்தில் காத்திருந்த பேண்ட் வாத்தியக்காரர்களைப் பார்த்து கண்ணசைத்தார். 28 வாத்தியக்காரர்கள் இசைக்க ஆரம்பித் தார்கள். அந்தப் பகலில் மைதானத்திலேயே ஆல்கஹால் பதார்த்தங்கள் பரிமாறப்பட்டன. வழக்கம்போல் முதல் பெக்கைப் பருகினார் பூபிந்தர் சிங். மேலும் சில பெக்குகள்.

பேண்ட் வாத்தியக்காரர்கள் சோர்வாக வாசிப்பதுபோலத் தோன்றியது அவருக்கு. உற்சாக மிகுதி. தலைக்கேறிய போதை. 'ஏய் நிறுத்து' என்று கத்தியபடியே களத்தில் குதித்தார் பூபிந்தர் சிங். வாத்தியக்காரர்கள் உறைந்து நின்றார்கள். அந்த வாத்தியக்குழுத் தலைவரது கையிலிருந்த குச்சியைப் பிடுங்கிய மகாராஜா, 'நீ போ' என்றார். 'நான் சொல்லுறபடி வாசிங்க' என்று கச்சேரியை ஆரம்பித்தார். இந்திய, ஐரோப்பிய இசையோடு பஞ்சாபிய பாரம்பரிய இசையும் கலந்த காக்டெயில் ஒலிக்க ஆரம்பித்தது. ரசிகர்களும் விருந்தினர்களும் உற்சாக மிகுதியில் ஓசையிட, பாட்டியாலா வீரர்கள் சந்தோஷ நடனம் ஆட, மகாராஜாவால் குஷியைக் கட்டுப் படுத்த முடியவில்லை.

அப்படியே மைதானத்தில் இறங்கி நடக்க ஆரம்பித்தார். வேறுவழியில்லாத வாத்தியக் காரர்களும் பின்தொடர்ந்தார்கள். கையிலிருந்த குச்சியைச் சுழற்றியபடியே சுற்றிச் சுற்றி வந்தார். பல ரவுண்ட்கள். உற்சாகம் மேலும் ஏற, அப்படியே மைதானத்தைவிட்டு வெளியேறி நடக்க ஆரம்பித்தார். ஐரோப்பியர்களுக்கும் மற்ற விருந்தினர்களுக்கும் என்ன செய்வதென்றே புரியவில்லை. பாட்டியாலாக்காரர்கள் எல்லாம் பாங்ரா ஆடியபடியே ஊர்வலத்தில் கலந்து



லாலா அமர்நாத்

கொண்டார்கள். பூபிந்தர் சிங், மோதி பாக் அரண்மனைவரை நடந்தே சென்று அங்கும் விடாமல் வாத்தியக்காரர்களை வாசிக்க வைத்தார். நீண்ட நேரம் கழித்து சோர்வாக உட்கார்ந்த அவர், தன்னைப் புதுப்பித்துக் கொள்ள அந்தப்புரத்துக்குள் நுழைந்தார்.

பூபிந்தர் சிங் வளர்த்துவிட்ட இந்திய கிரிக்கெட் வீரர்கள் நிறைய. முக்கியமானவர் லாலா அமர்நாத். டெஸ்ட் மேட்சில் சதமடித்த முதல் இந்திய வீரர். 1933, டிசம்பர் 17ல் பம்பாயில் ஜர்டைனின் இங்கிலாந்து அணிக்கு எதிராக அவர் இந்தச் சாதனையைச் செய்தார். 'மகாராஜா பூபிந்தர் சிங் மட்டும் இல்லையென்றால் நான் கிடையாது. அவர் என் வணக்கத்துக்குரியவர்' பாட்டியாலா சமஸ்தானத்தில் பல ஆண்டுகள் பணியாற்றிய லாலா அமர்நாத்தின் வார்த்தைகள் இவை.

முகமத் நிஸார். இந்திய அணியின் ஆரம்பகால ஃபாஸ்ட் பௌலர்களுள் ஒருவர். பூபிந்தர் சிங்கின் பாசத்துக்குரியவர். ஒருநாள் மோதி பாக் அரண்மனை மைதானத்தில் லாலா அமர்நாத் பேட் செய்துகொண்டிருக்க, நிஸார் பந்துவீசத் தயாராக இருந்தார். சோக்ரா (பையன்) என்று லாலாவைப் பிரியமாக அழைக்கும் மகாராஜா மைதானத்துக்கு வந்தார். 'நிஸார், நீ இப்போது பவுன்ஸ் வீசி சோக்ராவின் மண்டையை உடைக்க வேண்டும். செய்துவிட்டால் உனக்கு ஒரு கிராமத்தையே பரிசாகத் தருகிறேன்' என்றார். சீறிவந்த பந்தை, லாலா லாகவமாகத் தடுக்க, நிஸாரின் கிராமம் பறிபோனது.

இன்னொரு சமயம், லாலாவுக்கு ஒரு வாக்குக் கொடுத்தார் பூபிந்தர். 'நீ அடிக்கும் ஒவ்வொரு ரன்னுக்கு ஒரு தங்கக்காசு.' அந்த மேட்சில் லாலா சதமடித்து தங்கத்தை அள்ளினார். இப்படி

பூபிந்தரின் பிரிய வட்டத்துக்குள் இருந்த கிரிக்கெட் வீரர்கள் நிறைய. ஆனால் பூபிந்தரின் கோபத்தால் தனது கிரிக்கெட் வாழ்வையே தொலைத்த ஒரு வீரரும் உண்டு.

1930களில் இந்தியாவின் சூப்பர் பாஸ்ட் பௌலர்களாகத் திகழ்ந்தவர்கள் முகமத் நிஸார், எல். ராம்ஜி. இந்தியா சர்வதேச அளவில் டெஸ்ட் மேட்ச் ஆட தகுதி பெறும் நிலையில், அணியில் கண்டிப்பாக இடம்பெறக்கூடிய தகுதியில் இந்த இருவரும் இருந்தார்கள். அப்போது ஒரு லோக்கல் மேட்சில் ராம்ஜி பந்துவீசத் தயாரானார். பேட் செய்து கொண்டிருந்தவர் பூபிந்தர் சிங். வேகமாகக் கடந்து சென்ற அந்தப் பந்தைப் பூபிந்தரால் தொடமுடியவில்லை. அடுத்த பந்து. மகாராஜாவின் வலதுகாலின் முட்டியில்பட்டது.

'Howzzat...

குதித்தபடியே அம்பயரிடம் சத்தம்போட்டு முறையிட்டார் ராம்ஜி. ஆனால் அம்பயர் எல்பிடபிள்யூ கொடுக்கவில்லை. கோபத்தில் ராம்ஜி மகாராஜாவைத் திரும்பிப் பார்த்தார். அவரது முகத்தில் சிரிப்பு. தன் எல்லைவரை சென்ற ராம்ஜி, அடுத்த பந்தைவீச ஆக்ரோஷமாக ஓடிவந்தார். ஷாட் பிச் ஆகி வந்த பந்து, விர்ரெனப் பாய்ந்துசென்று மகாராஜாவின் வலது தோள்பட்டையைத் தாக்கியது. நிலைகுலைந்து கீழே விழுந்தார் அவர். மற்ற வீரர்கள் சூழ்ந்து கொண்டார்கள். மகாராஜாவின் உதவியாளர்கள், மருத்துவர் எல்லாம் மைதானத்துக்குள் விரைந்தார்கள். சில நிமிடங்கள் கழித்து தன்னிலை அடைந்தார் மகாராஜா.

மறுநாள் ராம்ஜி அங்கு இல்லை. ஊரைவிட்டே ஓடிப்போயிருந்தார். இந்தச் சம்பவத்துக்குப் பின் அவரது கிரிக்கெட் வாழ்க்கையிலும் ஏகப்பட்ட சிக்கல்கள். உருவாக்கியது பூபிந்தர் சிங்தான். சரி, ஒருவரது கிரிக்கெட் வாழ்க்கையையே சீர்குலைக்கும் அளவுக்கு பூபிந்தருக்கு என்ன அதிகாரம் இருந்தது?

1927ல் டெல்லி ரோஸனரா (Roshanara) கிளப்பில் பூபிந்தர் சிங், அப்போதைய MCC கேப்டன் கில்லிகனைச் சந்தித்தார். கிராண்ட் கோவன் (Grant Govan) என்ற ஐரோப்பியத் தொழிலதிபரும் அவரது உதவியாளர் மெல்லோ (Mellow) என்பவரும் அங்கிருந்தார்கள். இந்தியாவுக்கென கிரிக்கெட் போர்டு ஒன்றை உருவாக்குவதே சந்திப்பின் நோக்கம். அப்படி ஒரு போர்டு உருவானால் இந்திய அணிக்கு International Cricket Council-ன் அங்கீகாரம் கிடைக்கும் என்பது பூபிந்தர் சிங்கின் ஆசை.

பலகட்ட முயற்சிகளுக்குப் பிறகு 1928ல் Board of Control for Cricket in India (BCCI) உருவாக்கப்பட்டது. கிராண்ட் கோவன்தான் முதல் பிரஸிடெண்ட். மெல்லோதான் முதல் தலைவர். போர்டை உருவாக்க பலவகைகளில் பின்புலமாக இருந்தவர் பூபிந்தர் சிங்தான். ஆகவே அப்போது அவரது வார்த்தைகள் இந்திய கிரிக்கெட் உலகில் கட்டளைகளாக எடுத்துக்கொள்ளப்பட்டன. ஒரு கிரிக்கெட் தாதாவாக வலம்வந்த பூபிந்தர் சிங்கின் விக்கெட்டை எடுக்க வந்து சேர்ந்தார் அந்த வைஸ்ராய்.



# 127

# மவனே, நீ காலி!

சரத் பவார், ஜக்மோகன் டால்மியா, சீனிவாசன்... அதிகாரத்தை வைத்துக் கொண்டு கிரிக்கெட் விஷயங்களுக்காக எப்படியெல்லாம் அடித்துக் கொண்டு இருக்கிறார்கள் என்பது எல்லோரும் அறிந்ததே. பிரச்னை இன்று நேற்றல்ல, முந்தாநேற்றே ஆரம்பித்துவிட்டது. ஆரம்பித்துவைத்த பெருமை பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங்கையே சாரும். அவரோடு கிரிக்கெட் சமாச்சாரங்களுக்காக மோதிக்கொண்ட நபர் வைஸ்ராய் வெலிங்டன்.

வெலிங்டனுக்கு கிரிக்கெட் விளையாடத் தெரியாது. ஆனால் அரசியலில் விளையாடத் தெரியும். ஆனால் நமது பூபிந்தர் சிங்குக்கு ஓரளவு கிரிக்கெட்டும் விளையாடத் தெரியும், அதைவிட நன்றாக அரசியலிலும் விளையாடத் தெரியும். ஆகவே இருவரும் மைதானத்தில் மோதிக்கொள்ளவில்லை. பெவிலியனுக்கு வெளியே நடந்த அவர்களது உரசல்கள் எல்லாம் செம சூடு.

வெலிங்டனுக்கு முன்பு வைஸ்ராயாக இருந்த இர்வின், கிரிக்கெட் சமாசாரங்கள் எதிலும் பற்று வைக்கவில்லை. ஆகவே மகாராஜா பூபிந்தர் சிங், இந்திய கிரிக்கெட் போர்டை ஆண்டார். இந்திய அணிக்கு சர்வதேச டெஸ்ட் அணி என்ற அங்கீகாரம் பெற்றுத் தந்தது, இங்கிலாந்தின் லார்ட்ஸில் 1932ல் இந்திய அணியின் முதல் டெஸ்ட் போட்டிக்கு ஏற்பாடு செய்தது, ஜர்டைன் தலைமையில் இங்கிலாந்து, MCC அணிகளை இந்திய சுற்றுப்பயணத்துக்கு வரவழைத்தது என்று பூபிந்தரின் சேவைகள் ஏராளம்.

1932ல் லண்டனுக்குச் செல்லவிருந்த முதல் இந்திய டெஸ்ட் அணியின் கேப்டனாக யாரை நியமிக்கலாம் என்ற பேச்சு எழுந்தபோது, எல்லோரும்

'துலிப் சிங்' என்றார்கள். ரஞ்சியின் மருமகன். சிறந்த ஆட்டக்காரர். ரஞ்சியைப் போலவே இங்கிலாந்து அணிக்காக அப்போது விளையாடிக் கொண்டிருந்தவர். கேட்டார்கள். ஆனால் அவர் மறுத்துவிட்டார். 'எங்க மாமா ரஞ்சி வேணாம்னு சொல்லிட்டாரு.'

சர்வதேச அளவில் சிறந்த கிரிக்கெட் வீரர்களாக இருந்த ரஞ்சியும் சரி, துலிப்பும் சரி, இந்திய கிரிக்கெட் வளர்ச்சி குறித்து கிஞ்சித்தும் அக்கறை காட்டாத சமயத்தில் 'நான் இருக்கிறேன்' என்று குதித்தார் பூபிந்தர் சிங். 'கவலையை விடுங்கள். பொறுப்பை நான் எடுத்துக் கொள் கிறேன். நானே கேப்டன். சென்று வருகிறேன், வென்று வருகிறேன்.'

வெலிங்டனுக்குப் பொறுக்கவில்லை. வைஸ்ராயாக நான் ஒருவன் முழுஅதிகாரத்தில் இருக்கும்போது உரிமையைக் கையில் எடுத்துக்கொள்ள பூபிந்தர் யார்? அவருக்கு அணி யிலேயே இடம் கிடையாது. அப்புறமென்ன கேப்டன் பதவி? ஆகவே வெலிங்டன், தன் னிடம் மிகவும் விசுவாசமாக இருந்த விஜயநகரம் (ஆந்திராவின் குட்டி சமஸ்தானம் ஒன்று) இளவரசர் கஜபதியை, பூபிந்தர் சிங்கின் இடத்தில் வளர்த்துவிட நினைத்தார்.

1931ன் நவம்பரில் முதல் இந்திய டெஸ்ட் அணியைத் தேர்வு செய்வது குறித்துப் பேசு வதற்காக BCCIன் கூட்டம் நடந்தது. வெலிங்டன் மீது கடும் அதிருப்தி இருந்தாலும் அதை வெளிக்காட்டாத பூபிந்தர் சிங், 'அணிக்கும், ஆகும் செலவுக்கும் நானே பொறுப்பேற்றுக் கொள்கிறேன்' என்று மட்டும் சொல்லித் துண்டுபோட்டு வைத்தார்.

ஆனால் வெலிங்டன், நேரடியாக இங்கிலாந்து அரசிடம் போட்டுக் கொடுத்தார். 'சென்ற வருடம் இங்கிலாந்துக்கு வந்தபோது பூபிந்தர் சிங் வாங்கிய கடன்களே ஏராளம். இப்போதும் இந்திய அணிக்காக செலவழிக்கப்போகிறேன் என்கிறார். அதெல்லாம் சரிப்படாது.'

அப்போதைய நிலைமை தனக்குச் சாதகமாக இல்லாதது குறித்து பூபிந்தர் சிங்குக்குக் பெரும் வருத்தம். 'எல்லாம் நான் பார்த்து ஏற்பாடு செய்தது. என்னுடைய உழைப்பு. என்னுடைய கிரிக்கெட் கனவு. இப்போது எனக்கே இடமில்லையாம். விடமாட்டேன். எப்பாடுபட்டாவது லண்டனுக்குக் கிளம்பியே தீருவேன்.' ஆனால் துரதிருஷ்டவசமாக அவரது உடல்நிலை ஒத்துழைக்கவில்லை. ஆகவே பிரயாணத்துக்கு இரண்டு வாரங்கள் முன்பாக, தான் விலகிக் கொள்வதாக அறிவித்தார்.

வெலிங்டன் முகத்தில் ஹிஹிஹி. முதல் இந்திய டெஸ்ட் அணியின் கேப்டன் ஒரு மகாராஜா வாக இருந்தால்தான் கௌரவம் என்று நினைத்து போர்பந்தர் மகாராஜா நட்வர்சின்ஜி பவ்சின்ஜியை (Natwarsinhji Bavsinhji) கேப்டனாக அறிவித்தார்கள். துணை கேப்டன் லிம்ப்டி (Limbdi) என்ற குட்டி சமஸ்தானத்தின் மகாராஜா கன்ஷியாம்சின்ஜி (Ghanshyamsinhji). ஏகப்பட்ட பேர் வழியனுப்பி வைக்க, இந்திய அணி லண்டனுக்குக் கிளம்பியது.

ஜூன் 24. லார்ட்ஸில் அடுத்தநாள் டெஸ்ட். நட்வர்சின்ஜிக்கு மனத்துக்குள் உறுத்தல். 'எனக்கு கிரிக்கெட்டெல்லாம் விளையாடத் தெரியாது' என்று அணியிலிருந்து விலகிக் கொண்டார். அவரது உறவினரான கன்ஷியாம்சின்ஜியும் அப்படியே. எனவே சிறப்பாக விளையாடக்கூடிய ஆந்திராவைச் சேர்ந்த வீரரான சி.கே. நாயுடுவுக்கு இந்தியாவின் முதல் டெஸ்ட் கேப்டன் அந்தஸ்து கிடைத்தது. அந்த டெஸ்டில் (1932, ஜூன் 25-28) 158 ரன்கள் வித்தியாசத்தில் இங்கிலாந்து வெற்றிபெற்றது. அந்தச் சுற்றுப் பயணத்தில் போர்பந்தர் மகாராஜா சில முதல்தர


இந்தியாவின் முதல் டெஸ்ட் போட்டி

மேட்சுகளில் கலந்து கொண்டார். மொத்தமாக அடித்த ரன்கள் வெறும் இரண்டு. அதற்கு எழுந்த கமெண்ட், 'மகாராஜா ரன்களைவிட, ரோல்ஸ் ராய்ஸ்களை அதிகம் சேர்த்து உள்ளார்.'

1933ல் இந்தியாவில் டெஸ்ட் மேட்ச் ஆடுவதற்காக வந்திருந்த இங்கிலாந்து வீரர்களுக்கு விருந்துவைத்தார் வைஸ்ராய். அப்போது அவர் காதுக்கு ஒரு விஷயம் அரசல் புரசலாக வந்து விழுந்தது. பூபிந்தர் சிங், இங்கிலாந்து டெஸ்ட் அணியில் இடம்பெற முயற்சி செய்கிறார், இந்தியாவுக்கு எதிராக விளையாடப் போகிறார் என்று. குறுகுறுப்பு தாங்க முடியாத வெலிங்டன், நேரடியாக கேப்டன் ஜர்டைனிடமே விஷயத்தைக் கேட்டார்.

'இங்கிலாந்து அணியில் பதினோரு பேரில் பூபிந்தர் சிங்கும் உண்டா?'

'ஒரு கேப்டனாக, MCCன் உறுப்பினராக இருக்கும் எவரையும் இங்கிலாந்து அணிக்குத் தேர்ந் தெடுக்கும் உரிமை எனக்குண்டு. பூபிந்தர் MCCன் உறுப்பினர் என்பது உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன்.'

ஜர்டைனின் பதில் வெலிங்டனைக் கலவரப்படுத்தியது. 'நான் வைஸ்ராய். எனது அதிகாரத் தின் கீழ்வரும் ஓர் இந்திய மகாராஜா, இங்கிலாந்து அணியில் இடம்பெறுவதை என்னால் அனுமதிக்க முடியாது.'

இந்த விஷயத்தில் முடிவெடுப்பது தன் உரிமை, அதில் யாரும் தலையிட முடியாது என்பது போல பேசிவிட்டு நகர்ந்தார் ஜர்டைன். வெலிங்டன், தனது மனைவியை வைத்தும் ஜர்டைனுடன் பேச்சுவார்த்தை நடத்தினார். ஆனால் ஜர்டைன், லேடி வெலிங்டனையும் பொருட்படுத்தவில்லை.

பம்பாய், கல்கத்தா, சென்னையில் நடக்கவிருந்த டெஸ்ட் மேட்சுகளுக்கு வீரர்கள் தேர்வு செய்யப்படுவதற்கு முன்பாகவே பூபிந்தர் சிங்குக்குக் கடிதம் ஒன்றை அனுப்பினார் வெலிங்டன் (1933, நவம்பர் 25).

'மாண்புமிகு மகாராஜா, இந்தியாவில் கிரிக்கெட்டின் வளர்ச்சிக்காக உங்கள் அளவுக்கு யாரும் எதுவும் செய்ததில்லை. இந்த விஷயத்துக்காக உங்களை என் அளவுக்கு யாரும் பாராட்டிய தில்லை. இத்தனை வயதிலும் நீங்கள் கேப்டன் பொறுப்பை சுமந்து கொண்டிருக்க நினைப் பது எனக்கு ஆச்சரியமளிக்கிறது. வரப்போகும் டெஸ்டில் சுறுசுறுப்பான இளைஞர்களுக்கு வாய்ப்பு கொடுப்பது நல்லது. நான் வெளிப்படையாகச் சொல்லுவதெல்லாம் தங்களது நலனுக்காகவும், இந்திய கிரிக்கெட் அணியின் நலனுக்காகவும்தான். உங்கள் பரம்பரைப் பெருமையைக் காப்பாற்ற யுவராஜ் யத்விந்த்ர சிங் வந்துவிட்டார். வருங்காலத்தில் யுவராஜ், இந்திய அணியின் கேப்டனாக வளர்ந்தால் அதுவே எனக்கு மகிழ்ச்சி.'

கடிதத்தைக் கண்ட பூபிந்தர் சிங், பெரிதாக அலட்டிக்கொள்ளவில்லை. 'மேட்ச் நடத்த துட்டு வேணாமா? அதுக்கு என்கிட்டதானே வருவீங்க' என்று தனக்குள் கொக்கரித்துக் கொண்டார். அந்த டெஸ்ட் தொடரின் கேப்டனாகவும் சி.கே. நாயுடுவே நீடித்தார். பூபிந்தருக்கு அணியில் இடமில்லை. அதற்குப் பதிலாக பாட்டியாலா இளவரசர் யத்விந்த்ர சிங்குக்கு வாய்ப்பு அளித்திருந்தார்கள்.

இப்படி நாளொரு பிரச்னையும் பொழுதொரு சர்ச்சையுமாக வெலிங்டனுக்கும் பூபிந்தர் சிங்குக்கும் பகை வளர்ந்துகொண்டே போனது. தான் வைஸ்ராய் பதவி முடிந்து இந்தியாவில் இருந்து கிளம்புவதற்கு முன்பாக, எப்படியாவது பூபிந்தரை பதவியிலிருந்து தூக்கிவிட வேண்டுமென சபதமேற்றிருந்தார் வெலிங்டன். பூபிந்தர் சிங் மீது இதற்குமுன் என்னென்ன வழக்குகள் இருக்கின்றன என்று பட்டியல் பார்த்தார். பாட்டியாலாவுக்கு அருகே வெடிகுண்டுத் தொழிற்சாலை நிறுவியது, அமர் கவுர் என்ற பெண்ணைக் கடத்தியது, அரசியல் கைதிகளைக் கொடுமைப்படுத்தியது, போர்க்காலக் கடன்களில் மோசடி செய்தது, பச்சிதார் கவுர் என்ற பெண்ணைக் கொலை செய்தது, லால் சிங் என்பவரது அழகான மனைவியை அடைவதற்காக அவரைப் போட்டுத் தள்ளியது  இப்படிப் பல வழக்குகள் நிலுவையில் இருந்தன. பஞ்சாப் மாகாணத்தின் கவர்னராக இருந்த ஜேம்ஸ் பிட்ஸ் பேட்ரிக் (James Fitz Patrick), இந்தக் குற்றச்சாட்டுகளின்மேல் நீண்ட காலமாகக் கண்துடைப்பு விசாரணை நடத்திவந்தார்.

நல்லதாக நான்கைந்து கொலைகள் சம்பந்தப்பட்ட வழக்குகளாக எடுத்துக்கொண்டார் வெலிங்டன். அவற்றைப் பழைய வழக்குகளோடு சேர்த்து பூபிந்தர் சிங் மீதான முழு நீள குற்றப்பத்திரிகையைத் தயார் செய்தார். கதை, திரைக்கதை, வசனம், சாட்சிகள், ஆதாரங்களுடன் அந்த வழக்குகள் குறித்த ஆவணங்கள் முறைப்படி தயாரிக்கப்பட்டன.

பிரிட்டன் அரசாங்கத்துக்குப் பிராது அனுப்பினார். கூடவே கிங் ஐந்தாம் ஜார்ஜுக்கு அனுப்பு வதற்காகத் தனி மடல் ஒன்றை வரைந்து வைத்தார். '...ஆகவே கிங் அவர்களே, இப்படிப்பட்ட ஒரு சமூகவிரோதி அரியணையில் இருக்கத் தகுதியற்றவர். நீக்கிவிட வேண்டுகிறேன்.'

இந்தியாவின் வைஸ்ராய் எட்டடி பாய்கிறார் என்றால், மாபெரும் பாட்டியாலா சமஸ்தானத்தின் மகாராஜா ஏழரை அடியாவது பாயமாட்டாரா என்ன? தனக்கு எதிராக வெலிங்டன் பெரிய அளவில் பூகம்பத்தைக் கிளப்பப்போகிறார் என்பதைத் தனக்குத் தெரிந்த

அரசியல் வட்டாரங்கள் மூலம் மோப்பம் பிடித்துவிட்டார் பூபிந்தர் சிங். இங்கிலாந்து அரசும் சரி, கிங்கும் சரி, வைஸ்ராயின் வார்த்தைகளைத்தான் வலுவாக நம்புவார்கள். நிச்சயம் அரியணைக்கு ஆப்புதான். பிரச்னை சற்றே வளர்ந்துவிட்டது. இனியும் தாமதிக்கக்கூடாது. வேரோடு பிடுங்கி எறிந்துவிட வேண்டியதுதான்.

கிட்டத்தட்ட எல்லா மகாராஜாக்களும் தலைநகர் டெல்லியில் தங்களது ஒற்றர்களை வைத்திருந்தார்கள். பூபிந்தருக்கும் அவரது ஒற்றன் மூலம் டெல்லியில் வைஸ்ராய் வட்டாரத் தில் நடக்கும் விஷயங்கள் குறித்த தகவல்கள் வந்துகொண்டே இருந்தன. பூபிந்தர் சிங்கும் டெல்லி விரைந்தார். அங்கு தனக்கு வேண்டிய அரசியல் நண்பர்களிடம் ஆலோசனை கேட்டார்.

'புதிதாகச் சேர்ந்திருப்பது எந்த மாதிரியான வழக்கு, அதில் உங்கள் பெயர் எப்படி வருகிறது போன்ற விவரங்கள் எதுவும் தெரியாமல் நாம் அடுத்தகட்ட நடவடிக்கையில் இறங்க முடியாது மகாராஜா. எப்படியாவது புதிய வழக்குகள் குறித்த முழு ஆவணங்களையும் வைஸ்ராய் அலுவலகத்திலிருந்து எடுத்துக் கொண்டு வர ஏற்பாடு செய்யுங்கள்.'

மகாராஜா, உடனே தனது நண்பரான ஜே.என். சஹ்னி (J.N. Sahni) என்பவரைச் சந்தித்தார். பல அரசியல் விஷயங்களில் பூபிந்தருக்குப் பயங்கரமான ஆலோசனைகள் சொல்லிக் கைகொடுக்கும் உற்ற தோழர் அவர். 'வைஸ்ராய் அலுவலகத்திலிருந்து ஆவணங்களை நாம் கடத்திக் கொண்டு வருவது பெரிய விஷயமே இல்லை' சாதாரணமாகச் சொன்னார் சஹ்னி.

'எப்படி நண்பரே?' ஆவலுடன் கேட்டார் பூபிந்தர் சிங்.

'எனது பிரிட்டிஷ் நண்பர் ஒருவர் தீயணைப்புத் துறையில் அதிகாரியாக வேலை பார்க்கிறார். அவரது காதலி, வைஸ்ராய் அலுவலகத்தில் வெலிங்டனுக்கு அந்தரங்கக் காரியதரிசியாகப் பணி செய்கிறாள். இருவருமே கொடுக்க வேண்டியதைக் கொடுத்தால், என்ன வேண்டு மானாலும் செய்வார்கள். இம்மாதிரியான வேலைகளுக்கு நம்பிக்கையானவர்கள். விஷயம் வெளியே போகாது.'

பூபிந்தரின் முகத்தில் சந்தோஷத் தாண்டவம். 'செலவைப் பற்றியெல்லாம் யோசிக்க வேண்டாம். உடனே ஏற்பாடு செய்யுங்கள்' என்று படபடத்தார்.

'கொஞ்சம் பொறுமையாக இருங்கள் மகாராஜா. வைஸ்ராயின் அலுவலகத்தில் இருந்து வழக்கு சம்பந்தப்பட்ட ஆவணங்கள் காணாமல் போகிறதென்றால் சட்டென சந்தேகம் உங்கள் மீதுதான் திரும்பும். உங்களது நிலை மேலும் மோசமாகிவிடும்.'

'உண்மைதான். ஆனால் ஆவணங்கள் நம் கைக்குக் கிடைக்கவில்லை என்றால் நம்மால் எதுவுமே செய்ய இயலாதே.'

'கவலைப்படாதீர்கள். வழி இருக்கிறது' - சஹ்னி, சகுனியாக மாறித் திட்டம் ஒன்றை விவரிக்க ஆரம்பித்தார்.



# 128

# மிஸ்டர். ஒய் & மிஸ். இஸட்

சஹ்னி, புதிதாக இரண்டு நபர்களை வரவழைத்திருந்தார். பூபிந்தரிடம் அறிமுகப்படுத்தினார். 'மகாராஜா இவரைத்தான் நான் சொன்னேன். தீயணைப்புத் துறையில் அதிகாரியாக வேலை பார்க்கிறார். நமது ரகசியத் திட்டத் துக்காக இவரது பெயர் மிஸ்டர். ஒய் (Mr. Y). இந்தப் பெண்தான் இவரது காதலி. வைஸ்ராய் அலுவலகத்தில் வெலிங்டனுக்கு அந்தரங்கக் காரியதரிசியாகப் பணி செய்கிறார். நமது திட்டத்துக்காக இவரது பெயர் மிஸ். இஸட் (Ms. Z).'

இருவருமே மகாராஜாவுக்கு மரியாதை செய்தார்கள். சஹ்னி, அவர்களுக்குத் திட்டத்தை விளக்கினார். செய்துமுடிப்பதாக ஒப்புக்கொண்டார்கள்.

'மகாராஜா உங்களுக்குத் தெரியாதது அல்ல. மிகவும் ஆபத்தான வேலைதான். வைஸ்ராய்க்குத் தெரியவந்தால், எனக்கு...' மிஸ். இஸட் சொல்லிக் கொண்டிருக்கும்போதே பூபிந்தர் சிங், சஹ்னியைப் பார்த்துக் கண் அசைத்தார்.

'காரியத்தைக் கச்சிதமாக முடித்தால் இருவருக்கும் சேர்த்து ஒரு லட்சம் கிடைக்கும்' என்று சொல்லி அவர்களை வாய்பிளக்க வைத்தார் சஹ்னி. 'நாளை மறுநாள் இரவு நமது திட்டத்தைச் செயல்படுத்தலாம். வழக்கு குறித்த ஆவணங்கள் அடங்கிய ஃபைல் எத்தனை பக்கங்கள் என்று மட்டும் நாளைக்குத் தகவல் சொல்லிவிடுங்கள். அதற்கேற்ப ஆள்கள் ஏற்பாடு செய்யவேண்டும்' சஹ்னி சொல்லச் சொல்ல தலையாட்டினாள் மிஸ். இஸட்.

‘200 பக்கங்கள் கொண்ட ஃபைல்’ என்று மறுநாள் மிஸ். இஸட்டிடமிருந்து தகவல் வந்து சேர்ந்தது. பக்கங்கள், நேரம் ஆகியவற்றை மனத்தில் வைத்துக் கணக்கு போட்டார் சஹ்னி. ‘உடனே 12 டைப் மிஷின்களையும் 12 ஸ்டேனோக்களையும் ஏற்பாடு செய்யுங்கள். ஒரு நிபந்தனை. அவர்கள் அனைவருக்குமே புயல் வேகத்தில் டைப் செய்யத் தெரிந்திருக்க வேண்டும்.’

வழக்கு குறித்த ஆவணங்கள் வைஸ்ராய் அலுவலகத்திலும் இருக்க வேண்டும். அதே சமயம் அதன் பிரதியும் தேவை. ஜெராக்ஸ், காப்பி என்ற வார்த்தைகள் புழக்கத்தில் இல்லாத காலம். வைஸ்ராய் அலுவலத்தில் வைத்துப் பிரதி எடுக்க முடியாது. வேறெங்காவது வைத்துத்தான் பிரதி எடுக்க வேண்டும். அதை நிறைவேற்றுவதற்காகத்தான் பக்காவாகத் திட்டமிட்டிருந்தார் சஹ்னி.

திட்டத்துக்கான நாள். இரவு பத்துமணி. வைஸ்ராயின் அலுவலகத்திலிருந்து மிஸ். இஸட் வெளியே வந்தாள். அவளது கையில் அந்த ஃபைல். அலுவலகத்திலிருந்து சற்றுத்தள்ளி ஒரு டாக்ஸியில் காத்துக் கொண்டிருந்தார் மிஸ்டர். ஒய். ஃபைலைக் கொடுத்தாள்.

‘சீக்கிரம் வேலை முடியவேண்டும். நள்ளிரவுக்குள் முடிந்துவிட்டால் நல்லது. ஃபைல் பத்திரம்.’

டாக்ஸி கிளம்பியது. டெல்லி காஷ்மீர் கேட்டுக்கு அருகே ஓரிடத்தில் சென்று நின்றது. சஹ்னி அங்கே காத்துக் கொண்டிருந்தார். ஃபைல் அவசர அவசரமாகப் பிரிக்கப்பட்டது. அங்கே இருந்த பன்னிரண்டு புயல் வேக ஸ்டெனோக்களின் விரல்கள் வேகமெடுத்தன. இருநூறு பக்கங்கள். பிரதியாக சுமார் ஒருமணி நேரமே பிடித்தது. நிஜ ஆவணங்களைக் காகிதம்விடாமல் சேகரித்து, பழையபடி ஃபைல் செய்தார் சஹ்னி. அதனை வேகவேகமாக வாங்கிக் கொண்ட மிஸ்டர். ஒய், டாக்ஸி ஏறினார். பூனை நடை நடந்துசென்று, ஃபைல் அதன் இடத்திலேயே வைத்தபிறகு பெருமூச்சுவிட்டாள் மிஸ். இஸட்.

திட்டம் படுவெற்றி. ஆளுக்கு ஐம்பதாயிரம் வாங்கிக் கொண்ட மிஸ்டர். ஒய்யும், மிஸ். இஸட்டும் உதடு விரியச் சிரித்தார்கள். டாக்ஸி டிரைவரிலிருந்து ஸ்டெனோக்கள் வரை எல்லோருக்குமே நல்ல காசு. பின்னே, வாயை வைத்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டுமே.

‘அட, வாழ்நாள் எல்லாம் வைஸ்ராயிடம் வேலை பார்த்தால்கூட இவ்வளவு பணம் கிடைக் காது. இனியும் இந்த வேலை தேவையா? ஊருக்கே திரும்பிச் சென்று ‘செட்டில்’ ஆகிவிட வேண்டியதுதான். முதல்ல ஒரு வீடு வாங்கணும். அப்புறம்..’ மிஸ். இஸட்டின் கனவு வளர்ந்து கொண்டிருந்தது.

இரண்டு நாள்கள் கழித்து, வெலிங்டனிடம் தனது ராஜினாமா கடிதத்தை நீட்டினாள். ‘லண்டன்ல என்னோட அம்மாவுக்கு உடம்பு சரியில்லை. நான் கூட இருக்கணும். அதான் இந்த முடிவு.’ வெலிங்டன் ராஜினாமாவை ஏற்றுக்கொண்டார். மிஸ். இஸட், சற்றும் தாமதிக்கவில்லை. உடனே லண்டனுக்கு எஸ்கேப்.

பூபிந்தர் சிங், பிரதி ஃபைலோடு பாட்டியாலாவுக்குச் சென்றிருந்தார். முக்கிய மந்திரிகள், ஆலோசகர்களுடன் அவசர, ரகசியக் கூட்டம். ஆவணங்களை வாசித்தார்கள். வெலிங்டன்,

வைஸ்ராயிடம் ஒப்படைப்பதாக இருந்த கடிதத்தில் இருக்கும் விஷயங்களை அலசி ஆராய்ந்தார்கள். என்னவெல்லாம் ஆபத்து இருக்கிறது என்று பேசித் தீர்த்தார்கள். என்ன செய்தால் தப்பிக்கலாம் என்று விவாதித்தார்கள்.

'இந்த வழக்கே பொய் என்று கிங்குக்குப் புரியவைக்க வேண்டும். ஏன் வைஸ்ராய் பொய் வழக்குப் போடவேண்டும் என்ற கேள்வி வரும். அதையும் கிங்குக்குத் தெளிவாக விளக்கி விட்டால் வழக்கு நிற்காது' வெளியுறவுச் செயலர் கே.எம். பணிக்கர் (K.M. Panikkar) யோசனை சொன்னார்.

'வெலிங்டனுக்கும் தங்களுக்கும் இத்தனைக் காலமாக நடந்துவரும் பிரச்னைகளைப் பட்டியல் இட்டாலே போதும். அதுவே நமக்கு வலு சேர்க்கும். பணிக்கர், எப்படியாவது கிங்கை நேரடியாகச் சந்தித்து விளக்கினால்தான் நல்லது' பிரதம மந்திரி லியாகத் ஹையத் கான் சொல்ல, ஒப்புக்கொண்டார் பணிக்கர்.

வெலிங்டன் மீதான குற்றப்பத்திரிகை அடங்கிய கடிதம் சமைக்கப்பட்டது. இதைச் சேருங்கள், அதைச் சொல்லுங்கள் என்று ஆளாளுக்கு யோசனைகள் சொல்லி, கடிதத்தைக் காவியமாக்கினார்கள். பலகட்டத் திருத்தங்களுக்குப் பிறகு, பதினாறு பக்கங்கள் கொண்ட கடிதம் தயாரானது. பணிக்கர், இங்கிலாந்துக்குச் செல்ல உடனே ஏற்பாடு செய்யப்பட்டது. அவரும் சென்றார். கிங்கைச் சந்திக்க நேரம் வாங்கினார். சந்தித்தார். உரிய மரியாதை எல்லாம் செய்துவிட்டு, வெலிங்டனின் மானம், மரியாதையையெல்லாம் காலி செய்யும் அந்தக் கடிதத்தை கிங்கிடம் ஒப்படைத்தார்.

பூபிந்தர் சிங் கையெழுத்திட்டு அனுப்பிய அந்தக் கடிதத்தின் சுருக்கம் இதுதான்.

'வைஸ்ராயோடு அவரது மனைவியும் பாட்டியாலாவுக்கு வந்திருந்தார். அரண்மனையில் சில நாள்கள் தங்கியிருந்தபோது, லேடி வெலிங்டன் பாட்டியாலாவின் பரம்பரை நகைகளைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டார். ஆகவே நான் அவற்றைப் பார்வையிட அனுமதி கொடுத்தேன். நகைகளை எல்லாம் எடுத்துப் பார்த்து வியந்த லேடி வெலிங்டன், ஒரு நெக்லஸைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டார். அதுதான் இருப்பதிலேயே விலைமதிப்பு மிக்கது. முப்பது லட்சம். 'எனக்கு இந்த நெக்லஸ் வேண்டும்' என்று லேடி வெலிங்டன் வாய் கூசாமல் கேட்க, நான் அதிர்ந்துபோனேன். 'முடியவே முடியாது' என்று மறுத்துவிட்டேன். இதைப் பார்த்துக் கடும்கோபம் கொண்ட வெலிங்டன், எனக்குப் பாடம் கற்பிப்பதாகச் சொல்லி சவால்விட்டார்.

அதன் விளைவாகத்தான் என்னைப் பற்றித் தவறுதலான செய்திகள் எல்லாம் வெளியாகின்றன. எனக்கு எதிராகப் பொய்யான வழக்குகள் எல்லாம் ஜோடிக்கப்படுகின்றன. எல்லாமே வைஸ்ராய் வெலிங்டன் என்மீது கொண்டுள்ள தனிப்பட்ட விரோதத்தின் காரணமாக நிகழ்த்தப்படும் நாடகங்கள்தான். லேடி வெலிங்டன் குறித்து சொல்லவேண்டாம். அவரது பேராசை குறித்து தாங்களே கேள்விப்பட்டிருப்பீர்கள். கூடவே ஒவ்வொரு சமஸ்தானத்தின் நிர்வாகத்திலும் அவரது தலையீடுகள் அதிகமாகவே இருக்கின்றன.

கிரிக்கெட்மீது அதிக அக்கறை கொண்ட நான், இந்திய அணியின் வளர்ச்சிக்காகச் செய்துள்ள காரியங்கள் எல்லோரும் அறிந்ததே. ஆனால் இந்தியக் கிரிக்கெட் போர்டின் அதிகாரத்திலிருந்து என்னைத் தூக்கியெறிய வைஸ்ராய் வெலிங்டன் செய்த காரியங்கள் நிறைய. அதேபோலவே

இந்த நெக்லஸ் விவகாரத்துக்காக என்னைப் பாட்டியாலாவின் அரியணை யிலிருந்து பதவியிறக்கம் செய்ய அவர் செய்யும் முயற்சிகளும் ஏராளம்.


சாமுவேல் ஹோரே

தங்களுக்கு எனது மேலான வேண்டுகோள். வைஸ்ராய் வெலிங்டனால் இந்தியாவில் ஏற்பட்டுள்ள நிர்வாகச் சீர்கேடுகளைக் கண்டறியத் தாங்கள், பிரிட்டன் பாராளு மன்ற உறுப்பினர்கள் கொண்ட குழுவை அனுப்பி உதவுங்கள். அப்போதுதான், ஒவ்வொரு மகாராஜாவுக்கும், வைஸ்ராய் வெலிங்டனுக்குமான உறவு எந்த அளவுக்கு மோசமாக இருக்கிறது என்பது தெள்ளத்தெளிவாகத் தெரிய வரும்.'

அந்தக் கடிதத்துக்கு மதிப்பு இருந்தது. மேஜர் கோர்டௌல்ட் (Major Courtauld), எட்வர்ட் ரூசெல் (Edward Russel) மற்றும் இரண்டு பிரிட்டன் பாராளுமன்ற உறுப் பினர்கள் அடங்கிய சிறப்பு விசாரணைக் குழு இந்தியாவுக்கு அனுப்பி வைக்கப் பட்டது. பாட்டியாலாவில் குழுவினரை வரவேற்று உபசரித்த பூபிந்தர் சிங், கோடைகாலம் ஆரம்பித்திருந்ததால் தனது கோடைத் தலைநகரமான சய்லுக்கு அழைத்துச் சென்றார். அங்கு அவர்களுக்கு செம கவனிப்பு.

'கிங்கிடம் இப்படி ஓர் ஆலோசனையை எடுத்துவைத்த உங்கள் தைரியத்தைப் பாராட்டு கிறோம்' குழுவினர் புகழ, புன்னகையால் அதை ஏற்றுக்கொண்ட பூபிந்தர். அவர்களிடம் நீளமான பட்டியல் ஒன்றை நீட்டினார். 'இதில் நமது மாண்புமிகு வைஸ்ராய் வெலிங்டனும் அவரது துணைவியாரும் இந்திய மகாராஜாக்கள் யார் யாரிடம் எவ்வளவு பணம், பொருள், நகைகள் கேட்டு வாங்கியிருக்கிறார்கள், மிரட்டி அபகரித்திருக்கிறார்கள் என்ற முழு விவரங் களும் இருக்கின்றன.'

வடக்குப்பட்டி ராமசாமி இருபத்தஞ்சு, கொக்கிப்பட்டி கோயிந்தம்மாள் பதினொன்னு என்று மொய்நோட்டு விவரங்கள்போல நீண்ட அந்தப் பட்டியலில் தாட்டியா, குவாலியர், ராம்பூர் எனப் பல சமஸ்தானத்தைச் சேர்ந்த மகாராஜாக்கள், மற்றவர்களின் பெயர்கள் இடம் பெற்றிருந்தன. சிறப்பு விசாரணைக் குழுவினர் அதிர்ந்து போனார்கள்.

பிரிட்டனுக்குத் திரும்பிய குழுவினர், தங்களது அறிக்கையைத் தயார் செய்தார்கள். 'இந்தியாவில் வைஸ்ராய் வெலிங்டன், அவரது மனைவி ஆகியோரது பெயர் மிகவும் கெட்டுப்போய் இருக்கிறது' என்ற சாராம்சம் கொண்ட கடிதத்துடன், பூபிந்தர் சிங் அளித்த பிரத்யேகப் பட்டியலையும் இணைத்தார்கள். இந்திய வெளியுறவுத் துறைச் செயலர் சாமுவேல் ஹோரேயின் (Samuel Hoare) வழியாக கிங் ஐந்தாம் ஜார்ஜுக்கு அந்த அறிக்கை

சென்றது. ஏற்கெனவே வெலிங்டன் மீது ஏகப்பட்ட புகார்களைக் கேள்விப்பட்டிருந்த கிங், இந்த அறிக்கையைக் கண்டு கடும் அதிருப்தி கொண்டார்.

மீண்டும் பணிக்கர், கிங்கைச் சந்தித்து பூபிந்தர் சிங்கின் கடிதம் ஒன்றைக் கொடுத்தார். அதில் 'நான் என்றும் பிரிட்டிஷ் ராஜ குடும்பத்துக்கு விசுவாசமாக இருப்பேன்' என்பது போன்ற சுந்தர ஜால்ரா வரிகள் நிரம்பிக் கிடந்தன. 'இனி மகாராஜாவின் பதவிக்கு எந்தவித ஆபத்தும் கிடையாது' என்று வாக்குறுதி கொடுத்தார் கிங். பணிக்கர் வழிய வழிய நன்றியைக் காணிக்கையாக்கிவிட்டுக் கிளம்பினார்.

'எல்லாம் சரியாகிவிட்டது. பதவிக்கு ஆபத்தில்லை' - என்ற அர்த்தத்தில் லண்டனிலிருந்து அவசரத் தந்தி பாட்டியாலாவுக்கு வந்தது. பணிக்கர்தான் அனுப்பினார். பல நாள்களாக அழுத்தத்தில் இறுகிக் கிடந்த அரண்மனை வட்டாரம், ஆட்டம், பாட்டம், கொண்டாட்டமென மாறிப்போனது. அன்று பாட்டியாலா நகர மக்கள் விருந்து சாப்பிட்டு மகிழ்ந்தார்கள். தனது பசியைப் போக்குவதற்காக பூபிந்தர் சிங், எங்கு போவார் என்று தெரியாதா என்ன?

அந்தச் சமயத்தில் வெலிங்டனும் தனது பதவிக்காலத்தில் இறுதிக் கட்டத்தில்தான் இருந்தார். கிங்கிடம் தன் பெயர் கெட்டுப்போன விஷயம் அதுவரை அவருக்கு முழுமையாகத் தெரியாது. பூபிந்தர் சிங் ஏதோ காய் நகர்த்துகிறார் என்று மட்டுமே அவரால் உணர்ந்துகொள்ள முடிந்ததேதவிர, விஷயத்தை முழுமையாக மோப்பம் பிடிக்கமுடியவில்லை. தான் முன்பே தயார்செய்து வைத்திருந்த பூபிந்தர் சிங்கைப் பதவிநீக்கம் செய்யவேண்டுமென்ற புகார்க் கடிதத்தைச் சற்றுத் தாமதமாகத்தான் கிங்குக்கு அனுப்பினார். அது குப்பைத் தொட்டிக்கு ஃபார்வேர்ட் செய்யப்பட்டது.



129

# நடிகர் திலகம் பூபிந்தர் சிங்!

மக்களுக்கெல்லாம் ஏதாவது தேவையிருந்தா அல்லது குறையிருந்தா, மகாராஜா கிட்ட போய் சொல்லுவாங்க. ஆனா மகாராஜாக்களுக்கெல்லாம் தங்களோட குறைகளை, தேவைகளை யார்கிட்ட போய் சொல்லுவாங்க? அப்போது பிரிட்டன் வெளியுறவுத்துறை செயலர் மார்லேவின் (Morley) மனத்தில் இப்படிக் கேள்வி வந்து குதித்தது.

'மகாராஜாக்களையெல்லாம் ஒண்ணு சேர்க்குறாப்புல ஒரு கவுன்சிலைக் கொண்டு வந்தா நல்லாருக்கும்' - இப்படி ஒரு கருத்தைப் பொதுவில் விதைத்து விட்டு, பதவிக்காலம் முடிந்து கிளம்பினார்.

1911ல் இந்தியாவின் வைஸ்ராயாகப் பதவியேற்ற ஹார்டிங், மார்லேவின் எண்ணத்தை வழிமொழிந்தார். ஒவ்வொரு ஆண்டிலும் ஒருமுறை மகாராஜாக்கள் எல்லாம் கூடிப்பேசும்படியாக ஒரு கூட்டத்தை அவர் ஏற்பாடு செய்தார். 1913, 1914ல் நடந்த கூட்டங்களில் கலந்துகொண்ட சில மகாராஜாக்கள், 'ஆமாங்க, வருஷா வருஷம் நாம் இந்தமாதிரிக் கூடிப்பேசணுமுங்க, அதுக்காகவாவது நமக்கு ஒரு சங்கம் இருக்கணுமுங்க' என்று வலியுறுத்திப் பேசிவிட்டுக் கலைந்தார்கள்.

அதற்குப் பின் வைஸ்ராயாக வந்த செம்ஸ்ஃபோர்ட், அடுத்த அடியை எடுத்து வைத்தார். முக்கியமான மகாராஜாக்கள், ராஜாக்கள் பலர் கலந்துகொள்ளும் படியாக ஒரு மாநாட்டை டெல்லியில் நடத்தினார் (1916, அக்டோபர் 30). 'சும்மா

அப்பப்போ மீட்டிங் போட்டு பேசிட்டுக் கலையறதுல அர்த்தமில்ல. மகாராஜாக்களுக்குன்னு நிரந்தர சங்கத்தை வைச்சுக்கிட்டோம்னா எல்லாத்துக்கும் வசதியா இருக்கும்' என்று தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

மகாராஜாக்களுக்கு ஒரு கவுன்சில் அமைந்துவிட்டால்? அதற்குத் தலைவராக நான் இருந்தால்? கனவுகளில் மிதந்தார் மகாராஜா பூபிந்தர் சிங். 1917-லிலும் இந்த விஷயம் குறித்து வைஸ்ராயின் தலைமையில் ஒரு கூட்டம் நடந்தது. பூபிந்தர் சிங், தன் பவுசை நிலைநாட்டும்விதமாகத் தானே முன்வந்து சில கருத்துகளைக் கடைபரப்பினார். 'கவுன்சில் அவசியம். ஆண்டின் இறுதியில் நாம் கூடிப்பேசலாம். அவசரத் தேவையென்றாலும் கூடிப்பேசலாம். மகாராஜாக்களின் கவுன்சில் அமைந்துவிட்டால் அது இந்திய வரலாற்றில் நமது மரியாதைக்குரிய பிரிட்டிஷ் அரசாங்கம் தொடங்கும் புதிய அத்தியாயம்.'

இறுதியில் பேசிய செம்ஸ்ஃபோர்ட், 'வெளியுறவுச் செயலாளர் எட்வின் மாண்டேகு இந்தியா வருகிறார். அவர் வந்ததும் முடிவெடுக்கலாம்' என்று முடித்துக்கொண்டார்.

பிறகு, மாண்டேகுவிடம் சமர்ப்பிப்பதற்காக, கவுன்சிலுக்கான நோக்கம், தேவை, அமைப்பு எல்லாம் குறித்து திட்ட அறிக்கையைத் தயார் செய்யும் பொறுப்பு, பாட்டியாலா, பிகானிர், அல்வார், நவாநகர் ஆகிய மகாராஜாக்கள் அடங்கிய நால்வர் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. அந்த வேலையிலும் அதீத ஆர்வம் காட்டியவர் பூபிந்தர் சிங்தான். மதன் மோகன் மாளவியா, எஸ்.பி. சின்ஹா, சீனிவாச சாஸ்திரி போன்ற படா சட்ட வல்லுநர்களையெல்லாம் பிடித்துப் போட்டு வரைவு அறிக்கையை உருவாக்கினார். 'ஹைதராபாத் நிஜாமுக்கு அனுப்பியாச்சா? சரி, அப்படியே குவாலியருக்கும் அனுப்பிடுங்க. மைசூரை மறந்துடாதீங்க' இப்படிப் பரபரவெனச் செயல்பட்டு சுமார் நூறு முக்கிய சமஸ்தானங்களுக்கு அதை அனுப்பினார். சுமார் ஐம்பது பேர், அதற்குரிய முறையான பதில் அனுப்பினார்கள்.

மாண்டேகு வந்தார். அறிக்கை ஒப்படைக்கப்பட்டது. வேலைகள் நடந்தன. 1919, நவம்பரில் வைஸ்ராய் செம்ஸ்ஃபோர்ட், 'நரேந்திர மண்டல்' என்ற சேம்பர் ஆஃப் பிரின்ஸஸ் குறித்த முறையான அறிவிப்பை வெளியிட்டார். அந்த சேம்பரின் அதிகாரங்கள், எல்லைகள், வரை யறைகள், சட்டதிட்டங்கள் குறித்து முறையான முடிவுக்கு வர சுமார் இரண்டு ஆண்டுகள் பிடித்தன. 1921ல் பிப்ரவரி 8, சேம்பர் டெல்லி செங்கோட்டையின் திவான்-இ-ஆமில் ரிப்பன் வெட்டித் தொடங்கிவைக்கப்பட்டது.

சரி இந்த மகாராஜாக்களின் கூட்டமைப்புக்கு என்னென்ன அதிகாரமெல்லாம் உண்டு? பெரிதாக எதுவும் கிடையாது. வைஸ்ராய்தான் சேம்பரின் பிரஸிடெண்ட். மகாராஜாக்களில் ஒருவர் சேம்பரின் வேந்தர் (Chancellor). மகாராஜாக்களின் கூட்டத்துக்குத் தலைமை தாங்குபவர் வேந்தரே. என்ன கோரிக்கை, குறை என்றாலும் அது வேந்தர் வழியாகத்தான் வைஸ்ராய்க்குச் செல்லவேண்டும். ஆனால் இந்தக் கூட்டமைப்புக்கு 'லகான்' போடப்பட்ட பேச்சு உரிமை உண்டே தவிர, முடிவெடுக்கும் உரிமையெல்லாம் கிடையாது. என்ன லகான்?

வேந்தராகப்பட்டவர், சேம்பர் கூட்டத்துக்குச் செல்லும்முன் வைஸ்ராயிடம் அனுமதி பெற வேண்டும். 'அய்யா துரை, கோடைக்காலத்துக்காக யார் யாரு எப்பப்போ சிம்லாவுக்குக் கிளம்பி வரலாம்னு இந்த சேம்பர் கூட்டத்துல பேசலாம்னு இருக்கோம். பேசலாங்களா?' இப்படி வேந்தர் வைக்கும் கோரிக்கைக்கு வைஸ்ராய் ஓ.கே. சொன்னால் அது குறித்த



சேம்பர் ஆஃப் பிரின்ஸஸ் (வட்டத்துக்குள் பூபிந்தர் சிங்)

கருத்துகளை சேம்பர் கூட்டத்தில் மகாராஜாக்கள் பகிர்ந்துகொள்வார்கள். சப்ஜெக்டுக்கு வெளியே அல்லது வேறு சப்ஜெக்ட் எல்லாம் பேசக்கூடாது.

இப்படிப்பட்ட 'சிறந்த அதிகாரங்கள்' கொண்ட அந்த சேம்பர் ஆஃப் பிரின்ஸஸில் முதல் வேந்தராகத் தான் நியமிக்கப்படவேண்டும் என்ற லட்சியத்தோடு திரிந்தார் பூபிந்தர் சிங். ஆனால் அந்த வாய்ப்பு வயதில் மூத்த, அனுபவம் நிறைந்த பிகானிர் மகாராஜா கங்கா சிங்குக்குச் சென்றது. ஹைதராபாத் நிஜாம், மைசூர் மகாராஜா, உதய்பூர் மகாராஜா ஆகியோர் இந்தச் சேம்பரைப் புறக்கணித்தார்கள். ஒரு கூட்டத்தில்கூடக் கலந்துகொள்ளவில்லை. அவர்கள் சொன்ன காரணம், 'எங்களைவிட மதிப்பு குறைவா இருக்குற மகாராஜாக்கள் எல்லாம் எங்களுக்குச் சமமா உட்கார்ந்து பேசுறதை சகிச்சுக்க முடியாது.'

1926 வரை கங்கா சிங், வேந்தராக இருந்தார். அதற்குப் பின் நடந்த வேந்தர் தேர்தலில் பூபிந்தர் சிங்கின் கனவு நிறைவேறியது. மகாராஜாக்கள் கூட்டமைப்பின் வேந்தராகப் பொறுப்பேற்றதும் அவரது தலைக்குமேல் ஓர் ஒளிவட்டம் உதித்ததாக உணர்ந்தார். மகிழ்ந்தார். 1935ல் அந்த ஒளிவட்டத்தில் வெளிச்சம் அதிகரித்ததாக மகிழ்ந்தார். காரணம், லண்டனில் இருந்து வந்த ராஜ அழைப்பு.

டெல்லியில் தர்பார் நடத்தி கிங் ஐந்தாம் ஜார்ஜ் பதவியேற்றுக் கொண்ட நிகழ்வுகள் நினைவிலிருக்கும். 1935ல் அவருக்கு வெள்ளி விழா. லண்டன் நகரம் சீவிச் சிங்காரித்துக் கொண்டிருக்க, பக்கிங்ஹாம் அரண்மனை பவுடர் பூசிக் கொண்டிருந்தது. மகாராஜாக்கள் கூட்டமைப்பின் வேந்தரான பூபிந்தர் சிங்கின் தலைமையில் இந்திய மகாராஜாக்கள், ராஜாக்கள் எல்லோரும் லண்டனை முற்றுகையிட்டிருந்தார்கள். மகாராஜாக்களின் வேந்தராக கிங்குக்கு மரியாதை செய்யும் வாய்ப்பு. பூரித்துப் போயிருந்தார் பூபிந்தர்.

சில முக்கிய மகாராஜாக்களுக்கு பக்கிங்ஹாம் அரண்மனையிலேயே தங்குவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பூபிந்தருக்கும். ஆனால் அவர் அதைப் பணிவுடன் மறுத்துவிட்டார். தெரியுமே, அவர்தான் லண்டனில் சேவோய் ஹோட்டலின் ஐந்தாவது தளத்தைத் தவிர வேறெங்கும் தங்கமாட்டாரே. தனது மகாராணிகள், ராணிகள், அமைச்சர்கள், பாதுகாவலர்கள்,

பணியாளர்கள் படையோடு அந்த ஐந்தாவது தளத்தை அதகளப்படுத்திக் கொண்டிருந்தார். மே 6, அன்று வெள்ளி விழாக் கொண்டாட்டங்கள் இனிதே நடைபெற்றன. கிங் ஜார்ஜும் குயின் மேரியும் ஆறு குதிரைகள் பூட்டப்பட்ட வண்டியில் ஊர்வலமாக வர, வழியெங்கும் திரண்டிருந்த மக்கள் உற்சாகக் குரலெழுப்பினார்கள். 'God Save the King!'

விழா முடிந்தபிறகு ஒருநாள், பூபிந்தர் சிங் கிங்கைத் தனியாகச் சந்திக்க நேரம் கேட்டிருந்தார். மறுநாள் காலையில் பதினோரு மணிக்கு நேரம் ஒதுக்கப்பட்டிருந்தது. 'என்னது காலை பதினோரு மணிக்கா? அந்த நேரத்தில் நான் எழுந்தே இருக்க மாட்டேனே?' முகம் சுளித்தார் மகாராஜா. அது நாளைய பிரச்னை. நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று மதுக் கோப்பையைக் கையில் எடுத்து அன்றைய இரவுக்கான மஜாவை ஆரம்பித்தார்.

விடிந்து சில மணி நேரங்கள் கடந்திருந்தன. பூபிந்தர் சிங், அதுவரை கொர் கொர்ரில்தான் இருந்தார். மெதுவாகக் கண்விழித்தார். மஞ்சத்தில் இருந்த மகாராணியிடம் கொஞ்சல் மொழி களையெல்லாம் பேசிவிட்டு, நிதானமாக மணி கேட்டார். 'பத்து' என்றாள் அவள். அலட்டிக் கொள்ளாமல் எழுந்து ஈ தேய்த்து, காலைக்கடன்களை வட்டியும் முதலுமாக முடித்தபின், நான்கைந்து பெண்கள் முதுகு தேய்க்கக் குளித்துவிட்டு வந்தார். அமிர்தம் அருந்தினார். அளவாகச் சாப்பிட்டார்.

அடுத்ததாக அந்த முக்கியமான வேலைக்காக ஆளுயரக் கண்ணாடி முன் உட்கார்ந்தார். சிகை அலங்காரம். கூந்தலுக்கு சுளுக்கெடுத்து செளந்தர்யக் கொண்டை ஒன்றைப் போடுவதற்கு கால்மணி நேரம். பின்பு மீசையை, தாடியை சீவிச் சிக்கெடுக்க கால்மணி நேரம். அதுவும் தாடி மயிர் ஏதாவது அங்கங்கே நீட்டிக்கொண்டிருக்காமல், பார்த்துப் பார்த்து படிய வாரிமுடிக்கப் பல நிமிடங்கள் பிடித்தன.

இடையிடையே மற்றவர்கள் வந்து, 'மகாராஜா நேரமாகிவிட்டது. கிங் காத்துக் கொண்டிருப் பார்' என்று பதறிவிட்டுப் போனார்கள். ஆனால் பூபிந்தர் சிங் அவசரப்படவில்லை. முழு ஒப்பனையையும் முடித்தபிறகு, அருகிலிருந்த தனது மகாராணி விம்லாவைப் பார்த்து 'போக லாமா?' என்றார். அவளும் சிணுங்கல் சிரிப்புடன் தலையாட்டவே, அன்னநடை நடந்து அருகிலிருந்த அறைக்குச் சென்றார்கள்.

அங்கே மற்ற மகாராணிகளான ஜசோதா தேவி, ரேவ்தி தேவி, ரூப்வந்த் தேவி ஆகியோர் காத்திருந்தார்கள். அந்த அறையில் விஸ்தீரணமாகப் படர்ந்திருந்த பட்டு மெத்தையில் உட்கார்ந்தார். குதூகலப் புன்னகையோடு மகாராணிகளும் உட்கார்ந்தார்கள். அவர்களோடு எந்தக் கவலையும் இன்றி சீட்டு விளையாட ஆரம்பித்தார் மகாராஜா. மணி அப்போதே பன்னிரண்டை நெருங்கிக் கொண்டிருந்தது.

'மகாராஜா கிளம்பிவிட்டாரா?' பக்கிங்ஹாமிலிருந்து சேவோய் ஹோட்டலுக்கு நிமிடத் துக்கு ஒரு போன் வந்துகொண்டிருந்தது. திவான் லியாகத் ஹையத் கான் நடுங்கிப் போனார். 'என்ன ஆனது மகாராஜாவுக்கு? விஷயம் விவகாரமாகிக் கொண்டிருக்கிறதே. கிங், இதை மகாராஜா செய்த அவமரியாதையாக நினைத்துவிட்டால் என்ன ஆகும்? இப்போதுதான் வைஸ்ராய் வெலிங்டன் விரித்த மாயவலையிலிருந்து மீண்டு வந்திருக்கிறார். அய்யோ, என்ன நடக்கப் போகிறதோ?'

அதற்குள் பக்கிங்ஹாமிலிருந்து மகாராஜாவைத் தேடி ஹோட்டலுக்கே ஆள் வந்துவிட்டது. 'மகாராஜா, மிகவும் தாமதமாகிவிட்டது. தயவுசெய்து கிளம்புங்கள்' என்று லியாகத்

கெஞ்சிக் கூத்தாடி, பூபிந்தரைக் கிளம்ப வைத்தார். பக்கிங்ஹாம் அரண்மனையில் பூபிந்தர் சிங் தனது ரோல்ஸ் ராய்ஸில் சென்று இறங்கும்போது மணி பகல் 12.30. கூடவே அவரது மருத்துவர் நரன்ஜின் சிங்கும், அமைச்சர் ஜர்மானி தாஸும் சென்றிருந்தார்கள்.

மகாராஜாவின் வருகைக்காக நீண்ட நேரம் காத்திருந்த கிங்கின் செயலாளர் முகத்தில் சிடுசிடுப்பு. கையைக் குலுக்குவதற்காக நீட்டிய பூபிந்தருக்குக் கைகூட கொடுக்காமல், ‘உள்ளே போகலாமா?’ என்று விறுவிறுவென உள்ளே நடக்க ஆரம்பித்தார். அரண்மனைப் பாது காவலர்கள், நரன்ஜின் சிங்குக்கு அனுமதி மறுத்தார்கள். ‘அவர் என் மருத்துவர். அவரின்றி என்னால் ஒரு நிமிடம்கூட இருக்க முடியாது’ என்று சொல்லிய பூபிந்தர் சிங், சட்டென நரன்ஜின் சிங்கின் கையைப் பற்றிக் கொண்டார். அனுமதி கிடைத்தது. அதுவரை பேஷாக நடந்துவந்த மகாராஜா அந்த நொடிமுதல் பேஷண்ட் ஆகிப்போனார்.

கிங் இருந்த அறைக்குச் சென்றார்கள். கோபத்தில் கிங்கின் முகம் சிவந்திருப்பதைப் பார்த்ததுமே, நரன்ஜின் சிங், ‘ஸ்டார்ட், கேமரா, ஆக்ஷன்’ சொன்னதுபோல தனக்கான டயலாக்கைப் பேச ஆரம்பித்தார். ‘மேதகு கிங் அவர்களே, மகாராஜா இப்போது இங்கு வந்ததே பெரிய காரியம். அவருக்கு Thrombosis. ரத்த நாளங்களில் கட்டிகள் அடைத்துள்ளன. வலியைப் பொறுத்துக் கொண்டு நடப்பதே கஷ்டம். ஆனால் எனது அறிவுரையையும் கேட்காமல் தங்களைச் சந்தித்தே ஆக வேண்டுமெனப் பிடிவாதம் செய்து தன் வாழ்க்கையையே பணயம் வைத்து வந்துள்ளார். தாமதத்துக்கு மன்னிக்கவும்.’

தளர்ந்து நின்ற பூபிந்தர் சிங்கைப் பார்த்த கிங், உருகிப்போனார். தன் ஆசனத்தில் இருந்து பதறி எழுந்துவந்து, பூபிந்தரைக் கைத்தாங்கலாகப் பிடித்து ஒரு சோபாவில் உட்கார வைத்தார். நீர், பானம் எல்லாம் கொடுத்து ஆசுவாசப்படுத்தினார். பூபிந்தரும் தான் ஏற்றிருந்த பேஷண்ட் கதாபாத்திரத்தில் அவார்டு வாங்குமளவுக்கு நடித்தார்.

குயின் மேரி அந்த அறைக்கு வந்தார். நரன்ஜின் சிங், அதுவரை ஓட்டிய ரீலை ரீவைண்ட் செய்து மீண்டும் ஓட்ட ஆரம்பித்தார். குயினும் மருகி நிற்க, கிங்கிடமிருந்து அந்த வார்த்தைகள் வந்து விழுந்தன.

‘நான் பாட்டியாலா மகாராஜாவைப் பார்த்துப் பெருமையடைகிறேன். உங்களது ராஜ விசுவாசத்தைக் கண்டு மெய்சிலிர்த்து நிற்கிறேன்.’



# 130

# ஹிட்லருக்கு ஒரு கடிதம்

இத்தாலியின் வெளியுறவுத் துறை அமைச்சகத்திலிருந்து வந்திருந்த அந்தக் கடிதத்தைக் கண்டதுமே பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங்குக்குக் கொள்ளைக் குஷி. கிரிக்கெட் சச்சரவுகளாலும் வைஸ்ராய் வெலிங்டன் கொடுத்த குடைச்சல் களாலும் சற்றே தளர்ந்திருந்த அவர், குளுக்கோஸ் குடித்ததுபோல் மறுமலர்ச்சி அடைந்தார். இத்தாலியிலிருந்து வந்த செய்தி இதுவே.

இத்தாலிய பிரதமர் பெனிட்டோ முசோலினி (Benito Mussolini), பாட்டியாலா மகாராஜாவைச் சந்திக்க நேரம் ஒதுக்கியிருக்கிறார். நாள், ஏப்ரல் 17, 1935. நேரம், மாலை மிகச் சரியாக 4.14. இடம், ரோம் நகரின் வெனிஸியா (Venezia) அரண்மனை.

பூபிந்தர் சிங்குக்கு முசோலினிமேல் பெரும் மரியாதை உண்டு. பாசிசத்தின் பிதா மகனாக முசோலினி விஸ்வரூபமெடுத்த விதம், இத்தாலியின் பிரதமராக இருந்துகொண்டு அண்டை தேசங்களை அலற வைத்துக் கொண்டிருந்த அவரது அதிகார மிடுக்கு, தோரணை, கொதிகொதிக்கும் பேச்சுகள் எல்லாமே பூபிந்தருக்குப் பிடித்திருந்தது. நாடு பிடிக்கும் வேட்டையில் இருந்த முசோலினி அப்போது எத்தியோப்பியாவைக் கைப்பற்றியிருந்தார். அவருக்கு இந்தியாவின் மீதும் ஒரு கண் இருப்பதை அறிந்திருந்தார் பூபிந்தர் சிங்.

எப்படியாவது முசோலினியைச் சந்திக்க வேண்டும், அவரது மனத்தில் இடம் பிடிக்க வேண்டும் என்பது பூபிந்தர் சிங்கின் நெடுநாள் ஆசை. அதை நிறைவேற்றித் தருவதாக வாக்குக் கொடுத்திருந்தார் அமெடோ ஸ்கார்பா

(Amedao Scarpo), இந்தியாவுக்கான இத்தாலியத் தூதரக அதிகாரி. பூபிந்தர் சிங்கின் படா தோஸ்து. ஸ்கார்பாவும் முசோலினியிடம் மகாராஜா பற்றி நிறையவே நல்லவிதமாகச் சொல்லி வைத்திருந்தார். 'பூபிந்தர் சிங் வல்லவர். நல்லவர். இந்திய மகாராஜாக்களுள் செல்வாக்கு மிக்கவர். நமக்கு உதவக் காத்திருக்கிறார்.'

ஆக, ஸ்கார்பாவின் மேலான சிபாரிசினால் பூபிந்தர் சிங்குக்கு அந்த வாய்ப்புக் கிடைத்தது. 1935ல் கிங் ஐந்தாம் ஜார்ஜின் வெள்ளிவிழாக் கொண்டாட்டத்துக்குச் செல்லும் வழியில், முதலில் ரோம் நகரத்துக்குத்தான் சென்று இறங்கினார் பூபிந்தர் சிங். முன்னதாகவே இத்தாலிக்குச் சென்று பூபிந்தருக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் ஸ்கார்பா செய்து வைத்திருந்தார். ராயல் ஹோட்டல் வெஸ்டின் எக்ஸெல்சியரின் (Westin Excelsior) மெகா அறை ஒன்றில் தங்கினார் மகாராஜா.

சந்திப்புக்கு சில நாள்கள் இருந்தன. ரோம் நகரத்து மக்களை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தார் பூபிந்தர் சிங். சர்வம் முசோலினி மயம். எல்லோர் உதடுகளும் 'முசோலினி' என்ற பெயரை உச்சரிக்கக்கூடப் பயந்து நடுநடுங்கின. விவரமறியாத வெளிநபர்கள் ஏதாவது தப்பித் தவறி முசோலினி பற்றிக் கேட்டால்கூடப் பதறி, விலகி ஓடினார்கள். அப்படிப்பட்ட சர்வாதிகாரச் சக்கரவர்த்தியின் அன்புக்காதலி பற்றிமட்டும் கிசுகிசுவெனப் பேசிக் கொண்டார்கள். பூபிந்தரும் அந்தப் பெண்ணைப் பற்றி விசாரித்தார்.

க்ளரட்டே பெட்டாசி (Clarette Petacci). அந்தப் பெண்ணுக்குச் சிறுவயது முதலே முசோலினி மேல் தனி ஈர்ப்பு. என்ன ஒரு தோற்றம். என்ன ஒரு கம்பீரம். அதென்ன உதடுகளா, துப்பாக்கி முனையா? அவை அசைந்தாலே அனைவரும் வெலவெலத்துப் போகிறார்களே. இவரைப் போலோரு ஆண் கிடையாது. முசோலினி பித்துப் பிடித்துத் திரிந்தாள் அவள்.

பருவ வயதுப் பெண்ணுக்கே உரிய அவசரக் காதலாகத்தான் ஆரம்பித்தது அது. மீசையில்லாத முசோலினியின் புகைப்படம் அவளது தலையணைக்குக் கீழிலிருந்து ஆசை வளர்த்துக் கொண்டிருந்தது. அவளுக்கும் முசோலினிக்கும் வயது வித்தியாசம் கிட்டத்தட்ட முப்பது. எப்படியாவது முசோலினியின் ஆசைநாயகியாக ஆகிவிட வேண்டும் என்பதுதான் அவளது வாழ்நாள் லட்சியமாக இருந்தது.

என்னதான் கொடுங்கோலனாக இருந்தாலும் பெண்கள் விஷயத்தில் முசோலினி, பூபிந்தர் சிங்குக்குச் சற்றும் சளைத்தவரல்ல. முரட்டுக் காதலர். சர்வாதிகார மன்மதன். கோப முத்தங் களை வாரி வழங்கும் வள்ளல். எள்ளும் கொள்ளும் வெடிக்கும் இறுகிய முகத்தோடு இறுக்கி அணைக்கும் ரோமியோ. அவரது படுக்கையறை நடவடிக்கைகள்கூடக் கட்டளைகளாகத்தான் இருக்கும் என்று எழுதி வைத்திருக்கிறார்கள் பலர்.

அழகிய இளம்பெண் க்ளரட்டேவை ஏற்றுக் கொள்வதில் முசோலினிக்கு எந்தவிதத் தயக்க மும் இருக்கவில்லை. உண்மையிலேயே மற்ற பெண்களைவிட, தனது மனைவி டோனா ரச்சேலைவிட (Donna Rachela), க்ளரட்டேமேல் கூடுதல் பிரியம் வைத்திருந்தார் முசோலினி. வெனிஸியா அரண்மனையில் தனது அலுவலக அறைக்குச் சில அறைகள் தள்ளி, அவளுக்கு இடம் ஒதுக்கியிருந்தார். மனத்திலும் நிறையவே. எப்போது தோன்றுகிறதோ அப்போ தெல்லாம் க்ளரட்டேவைத் தேடிவந்து மூர்க்க ரொமான்ஸ் செய்துவிட்டுப் போனார். 'ஒரு முறை அவர் தனது பூட்ஸ்களைக்கூடக் கழட்டவில்லை' என்று டைரியில் குறிப்பெழுதி வைத்திருக்கிறாள் க்ளரட்டே.

ரோம் நகரத்தில் முசோலினியைப் பற்றிக் கேள்விப்பட்ட ஒவ்வொரு விஷயமுமே பூபிந்தர் சிங்குக்கு ஆச்சரியம் கொடுத்தது. ரோமில் பல இடங்களைச் சுற்றிக் காண்பித்த ஸ்கார்பா, ஒருநாள் மகாராஜாவைக் கடற்கரைப் பகுதி ஒன்றுக்கு அழைத்துச் சென்றார். ஒரு சில பிகினி களைத் தவிர வேறு யாருமே அங்கில்லை. சமயங்களில் முசோலினி அங்கு வருவார். தனது தொப்பை உடலைப் பொருட்படுத்தாமல் குட்டி ட்ரவுசர் அணிந்து கொண்டு மணலில் நடக்க ஆரம்பிப்பார். அலைகடலில் ஆனந்தமாக இறங்கி ஒரு குழந்தைபோல விளையாடுவார். நீச்சலடிப்பார். எப்போதாவது அவருடன் ஆசைநாயகி க்ளரட்டேவும் வருவதுண்டு. ஸ்கார்பா சொல்லச் சொல்ல, மகாராஜா ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தார்.

'நாளை மாலையில் சந்திப்புக்குரிய நேரத்தை மறந்துவிடாதீர்கள். தயாராக இருங்கள்' மகாராஜாவுக்கு நினைவூட்டினார் ஸ்கார்பா.

'மறக்கக்கூடிய சமாச்சாரமா இது?' பூபிந்தர் சிங்கின் முகத்தில் பரவசம்.

'ஒரு நொடிகூடத் தாமதம் ஏற்பட்டுவிடக்கூடாது. அதில் அவர் மிகவும் கறார். கவனம். நான் அரண்மனையில் முன்னதாகவே காத்திருக்கிறேன்.'

ஏப்ரல் 17. தூங்கிக் கண்விழித்த கணத்திலிருந்தே முசோலினியைச் சந்திக்கக் கிளம்ப ஆரம் பித்தார் பூபிந்தர் சிங். பொதுவாக நேரத்தின் மீதெல்லாம் அசிரத்தை காட்டும் மகாராஜா, அன்று வெகு சரியாக மாலை நான்கு மணிக்கெல்லாம் வெனிஸியா அரண்மனை வளாகத்தை அடைந்திருந்தார். உடன் பாட்டியாலாவின் திவான் ஜர்மானி தாஸ்.

வெளிநபர். வெளிநாட்டுக்காரர். ஆகவே முசோலினியே அழைப்பு விடுத்திருந்தாலும் பாது காப்புக் கெடுபிடிகளுக்கெல்லாம் குறைச்சல் இல்லை. தலைமைப் பாதுகாவலர் மகாராஜா வையும் ஜர்மானி தாஸையும் உள்ளே அழைத்துச் சென்றார். எல்லாம் பெரிய பெரிய அறை கள். நடக்க நடக்க மகாராஜாவுக்குச் சற்றே மூச்சு வாங்கத்தான் செய்தது. உள்ளே ஓர் அறையில் கொஞ்சம் படபடப்புடன் காத்திருந்தார் ஸ்கார்பா. 'நல்லவேளை. சரியாக வந்துவிட்டீர்கள். சந்திப்புக்கான நேரம் நெருங்கிவிட்டது. சீக்கிரம்' வேகவேகமாக அழைத்துச் சென்றார் ஸ்கார்பா.

சந்திப்புக்கான அறையை அடையும்போது நேரம் மிகச் சரியாக 4.14. அந்த அறையின் நடுவில் அமைந்திருந்த உயரமான ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார் முசோலினி. அவரது அடையாளத் துக்குரிய ராணுவ உடை. எந்தவித உணர்வுகளும் வெளிப்படாத அந்த முகத்தின் கண்களில் மட்டும் சூடான பார்வை.

முசோலினி முன்சென்று மரியாதை செய்த ஸ்கார்பா, விருந்தினர்களை அறிமுகப்படுத்தினார். பூபிந்தரும் ஜர்மானியும் பணிவாக வணங்கினார்கள். அவர்களோடு இறுக்கமாக கைகுலுக் கினார் முசோலினி. அவருக்கு முன் சில அங்குலங்கள் தள்ளி இரண்டே இரண்டு நாற்காலிகள் மட்டும் போடப்பட்டிருந்தன. திரும்பிவந்து உட்காரும் நேரத்தில் அந்த அறையைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டார் பூபிந்தர் சிங். அறையின் பக்கவாட்டுப் பகுதிகளில் சற்றே உயரத்தில் ஏராளமான துளைகள், சிறுமாடங்கள், ஓட்டைகள். ஒவ்வொன்றிலும் தயார்நிலையில் துப்பாக்கியோடு வீரர்கள். வரும் விருந்தினர் முசோலினியைத் தாக்க ஆரம்பித்து விட்டால்?

சர்வாதிகாரி ஏதோ பேச ஆரம்பித்தார். இத்தாலிய மொழி. நிலைதடுமாறிப் போனார் பூபிந்தர் சிங். சட்டென நிலைமையைப் புரிந்துகொண்ட ஸ்கார்பா, அந்த அறையிலிருந்த ஒருவரைத் திரும்பிப் பார்த்தார். அவர் வேகமாக முன்னேவந்து அந்தப் பேச்சை ஆங்கிலத்தில் மொழி மாற்றம் செய்ய ஆரம்பித்தார். பூபிந்தர் சிங்கும் ஆங்கிலத்தில் பதில் பேசினார். அது முசோலினிக்கு இத்தாலியில் மொழிபெயர்க்கப்பட்டது. இந்தியாவைப் பற்றி, பிரிட்டிஷ் அரசின் ஆட்சியைப் பற்றிப் பொதுவான பேச்சுகள்.

அந்தப் பொன்னான தருணத்தில் மகாராஜா பூபிந்தர் சிங் தன்னைப் பற்றிய பராக்கிரமங்கள் எதையும் விட்டுவைக்கவில்லை. ஒவ்வொன்றாக அடுக்கினார். இந்தியாவின் பெரிய சமஸ் தானங்களில் பாட்டியாலாவும் ஒன்று. நான் அங்கு முப்பத்தாறு வருடங்களாக வெற்றிகரமாக ஆட்சிசெய்து வருகிறேன். இந்தியாவில் பல லட்சம் சீக்கியர்கள் இருக்கிறார்கள். நான் அவர்களுடைய தலைவர். என் வார்த்தையை அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். ஒட்டுமொத்த சீக்கியர்கள் ஆதரவும் உங்களுக்கு இருக்கிறது. அதற்கு நான் பொறுப்பு. பல மகாராஜாக்கள் என்னுடைய நெருங்கிய நண்பர்கள். அவர்களிடம் தங்கள் திட்டம் குறித்து ஏற்கெனவே பேசி யிருக்கிறேன். அவர்களும் தங்களுக்கு ஆதரவளிக்கத் தயாராக இருக்கிறார்கள். இந்தியாவி லுள்ள மகாராஜாக்களுக்கெல்லாம் சேர்த்து கூட்டமைப்பு ஒன்று இருக்கிறது. அந்த சேம்பரின் வேந்தரே நான்தான். ஆகவே நான் சொல்லும் சொல்லுக்கு மற்ற மகாராஜாக்கள் எல்லாம் நிச்சயம் ஆதரவு அளித்தே தீர வேண்டும். தங்கள் கனவை நிறைவேற்ற நான் என்றென்றும் பாடுபடுவேன்.

சரியாக நாற்பத்தைந்து நிமிடங்கள் நடந்த அந்தச் சந்திப்பில் முசோலினிக்கு பூபிந்தர் சிங்மீது நம்பிக்கை ஏற்பட்டது. முகத்தில் ததும்பும் மகிழ்ச்சியுடன் கைகுலுக்கினார் மகாராஜா. 'இந்தியத் திட்டம் குறித்து விரிவாகப் பேசுவோம். மீண்டும் சந்திப்போம்' என்று விடை கொடுத்தார் முசோலினி.

பூபிந்தர் சிங்குக்கு அடுத்தடுத்த நாள்களில் மீண்டும் மீண்டும் முசோலினியைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. அப்போது பாதுகாப்புக் கெடுபிடிகளோ, நேர நெருக்கடிகளோ எதுவும் இல்லை. முசோலினி பேசினார். கேள்விகள் கேட்டார். திட்டமிட்டார். விடைகொடுத்தார். மொத்தம் ஆறு சந்திப்புகள்.

தொடர்ந்து பூபிந்தர் சிங் முசோலினியைச் சந்தித்துக் கொண்டிருக்கிறார் என்றதுமே பிரிட்டிஷ் அரசுக்கு உறுத்தல். இத்தாலியிலிருந்த பிரிட்டிஷ் தூதுவர் பூபிந்தர் சிங்கைச் சந்திக்க ஹோட்டலுக்கு வந்தார். 'என்னம்மா கண்ணு, அந்தாளைப் போயி சும்மாச் சும்மா பார்க்குறி யாமே? இன்னொரு தபா, நீ அவரைப் பார்க்கப் போனேன்னு வைச்சுக்கோ, அவ்ளோதான். இதான் கடைசி வார்னிங்!' - என்ற விஷயத்தைச் சற்றே மரியாதையாகத் தெரியப்படுத்தினார் தூதுவர்.

ஆகவே தனது ஆர்வக் கோளாறுகளையெல்லாம் அடக்கிக்கொண்டு கிங்கின் வெள்ளிவிழாக் கொண்டாட்டத்துக்காக லண்டனுக்குக் கிளம்பினார் மகாராஜா. செல்வதற்குமுன் முசோலினிக்குத் தகவல் அனுப்பினார். 'லண்டனில் இருந்து திரும்பும்போது ரோம் வரு கிறேன். திட்டத்தைப் பேசி முடிவு செய்துவிடலாம்.'

முசோலினிக்கு மட்டுமல்ல, அவரது நண்பரான ஹிட்லரின் நாடு பிடிக்கும் கனவுக்கும் பூபிந்தர் சிங் சாமரம் வீசியிருக்கிறார். செப்டெம்பர் 10 அன்று பெர்லினில் ஹிட்லரைச்

*சந்திக்கவும் செய்திருக்கிறார். நேப்பிள்ஸிலிருந்து அவர் ஹிட்லருக்கு எழுதிய ஒரு கடிதம் முக்கியமானது.*

*தேதி, 1935, செப். 27.*

மேன்மைமிக்க தலைவரே,

இன்று இந்த இத்தாலிய மண்ணிலிருந்து கிளம்புவதற்கு முன்னால் உங்களுக்கு நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். ஜெர்மனிக்கு நான் வந்து தங்கியிருந்த போது உங்கள் அரசாங்கத்தினர் என்னை நடத்திய விதம் குறித்துப் பெரு மகிழ்ச்சியடைகிறேன். தங்களைப் பெர்லினில் சந்தித்துப் பேசிய நொடிகள் உன்னதமானவை. என்றும் என் நினைவிலிருந்து அகலாதவை.

உங்கள் கையொப்பமிட்ட புகைப்படத்தைப் பெற்றுக் கொண்டேன். அதைப் பெறுதற்கரிய சொத்தாக நினைக்கிறேன்.

என்றும் மரியாதையுடன்

*தங்கள் உண்மையுள்ள,*

*பூபிந்தர் சிங்.*

*பாசிச முசோலினியின் திட்டப்படி எல்லாம் நடக்கும்பட்சத்தில், இந்தியாவை இத்தாலி கைப்பற்றினால் பூபிந்தர் சிங்கை இந்தியாவின் மகாராஜாவாக உட்கார வைப்பதாக வாக்குறுதி வழங்கப்பட்டிருந்தது என்று திவான் ஜர்மானி தாஸ் எழுதி வைத்திருக்கிறார்.*

*அம்மாதிரியான அசம்பாவிதங்கள் எதுவும் நிகழவில்லை. அதற்குப் பின் பூபிந்தர் சிங், முசோலினியைச் சந்திப்பதற்கான சந்தர்ப்பமும் நிகழவில்லை. ஹிட்லரோடு கூடிக் குலாவவும் முடியவில்லை. பிரிட்டிஷாரின் கண்காணிப்பு அதிகமாகியிருந்ததால் பூபிந்தரால் மீண்டும் அப்படிப்பட்ட வாய்ப்புகளை ஏற்படுத்த இயலவில்லை. இந்தியாவுக்குத் திரும்பிய பிறகு அவரது உடல்நலம் ஒத்துழைக்கவில்லை, அந்தப்புர வாழ்க்கைக்குக்கூட.*



# ‘யுவி, சிக்ஸர் அடிக்காதே!’

சிற்றின்பம் முதல் பேரின்பம் வரை எல்லாவற்றையும் ஆண்டு அனுபவித்தாகி விட்டது. முப்பத்தாறு வருடங்கள் அரியணை சுகத்தையும் ஆசைதீரப் பார்த்தாகி விட்டது. அனுபவிக்காத பதவிகள் இல்லை. வாங்காத கௌரவ மெடல்கள் இல்லை. டெல்லி தர்பார் (1903, 1911) மெடல்கள், Knight Grand Commander of the Order of the Indian Empire (GCIE) 1911, முதல் உலகப் போரில் கௌரவ நடிகராகப் பங்கேற்றதற்காக British War Medal 1918, Grand Cordon of the Order of the Nile of Egypt 1918, Knight Grand Cross of the Royal Victorian Order (GCVO) 1922, Grand Cross of the Legion d'Honneur of France 1930, கிங் ஐந்தாம் ஜார்ஜ் வெள்ளி விழா மெடல்... (இப்படிப் பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங் வாங்கிய, கேட்டு வாங்கிய மெடல்களை அடுக்கிக் கொண்டே போனால் கொட்டாவி வரும், ஆகவே) மற்றும் பல.

அந்த நிமிடம்வரை அனைத்திந்திய மகாராஜாக்களின் சேம்பரில் வேந்தர் அவர்தான். இந்திய ஒலிம்பிக் அசோஸியேஷனை ஆரம்பித்து அதன் முதல் தலைவர் பதவியையும் அனுபவித்துவிட்டார். மைதானத்துக்கு உள்ளேயும் வெளியேயும் ஆடாத ஆட்டங்கள் இல்லை, கிரிக்கெட்டில்கூட. இனி அக்கடா என்று மஞ்சத்தில் படுத்துக்கொண்டு பழைய நினைவுகளை அசைபோட்டுக் கொண்டு கிடக்கலாம்தான்.

அவரது உடல்நிலைகூட ஓய்வைத்தான் விரும்பியது. ஆனால் மனது அடங்க வில்லை, அது அந்த நாற்பத்தாறு வயதிலும் ரோமியாவாகத் திரியவே

நினைத்தது. அடிக்கடி உடலுக்குள் ஏதாவது வியாதிகள் புகுந்து படுத்தியபோதுகூட அந்தப் புரத்தில் சகல வசதிகளுடன் ரகளையாக ஓய்வெடுப்பதையே விரும்பினார் பூபிந்தர் சிங்.

இருந்தாலும் எங்கே பழையபடி 'இயங்க' முடியாமல் போய்விடுமோ என்று அவருக்குள் பயம். தன்னை நம்பி அந்தப்புரத்தில் தேவுடு காத்துக் கொண்டிருக்கும் முந்நூற்றுச் சொச்ச பெண்களை ஏமாற்ற முடியாதே. தனது அரண்மனைவாழ் பிரெஞ்சு டாக்டர்களையும் பிற மருத்துவர்களையும் வைத்தியர்களையும் தினமும் அழைத்து ஆலோசனைகள் கேட்டார்.

'மகாராஜா இது ஒரு புதிய மருந்து. நீடித்த இன்பத்துக்கு உத்தரவாதம். முயற்சி செய்து பாருங் களேன்' பிரெஞ்சு டாக்டர்கள் ஐரோப்பிய வயாகரா சமாச்சாரங்களை விதவிதமாக வர வழைத்து மகாராஜாவின் கவலை தீர்க்க முயற்சி செய்தார்கள். நூறு முதல் அறுபதாயிரம் ரூபாய் வரையிலான சமாச்சாரங்கள் இறக்குமதியாகின. வைத்தியர்களும் தங்கள் பங்குக்கு வேர்களைச் சூரணங்களாகவும், பச்சிலைகளை லேகியங்களாகவும் மாற்றிக் கொண்டிருந் தார்கள். டெல்லியிலிருந்து வரவழைக்கப்பட்ட ஹக்கிம்கள், தங்கம் மற்றும் இதர உலோகங்கள் சேர்த்துத் தயாரிக்கப்பட்ட 'குஷ்தா' தயாரித்து வழங்கினார்கள்.

என்னதான் ஊட்டம் கொடுத்தாலும் அந்நாள்வரை மகாராஜா ஆடிய ஆட்டம் என்பது சாதாரணமானதா என்ன? முதுமை அவரை ஆட்கொள்ள ஆரம்பித்திருந்தது. 'மகாராஜாவின் ஆயுளை நீட்டிக்க வேண்டுமென்றால் வேண்டிய பூசைகளை முறையாகச் செய்து, நல்ல ஆரோக்யமான மனிதன் ஒருவனை நரபலி கொடுக்க வேண்டும். அப்போது அந்த மனித னுடைய ஆயுள் முழுவதும் மகாராஜாவுக்குச் சொந்தமாகிவிடும்' தாந்தரீகத்தில் ஆர்வம் கொண்ட பூபிந்தர் சிங்கிடம் போகிறபோக்கில் மந்திரவாதி ஒருவர் சொல்லிவிட்டுப் போனார்.

மகாராஜாமேல் அதீத அக்கறை கொண்ட சிலர், 'நரபலி கொடுக்கலாமே' என்று வற்புறுத்த ஆரம்பித்தார்கள். தன் வாழ்நாளை எப்படியாவது நீட்டித்துக்கொள்ள வேண்டும் என்ற விருப்பம் இருந்தாலும் பூபிந்தர் சிங்குக்கு நரபலியில் விருப்பம் இருக்கவில்லை. தன் வாழ்நாள் தீருவதற்குள் தனது மகன் இளவரசர் யத்விந்த்ர சிங்குக்கு எல்லா விதத்திலும் உரிய அந்தஸ்து பெற்றுத் தந்துவிட வேண்டும் என்று களமிறங்கினார்.

'இந்தப் பாழாய்ப்போன இந்திய கிரிக்கெட்டுக்கு எவ்வளவோ செய்தும் எனக்குப் பலன் கிடைக்கவில்லை. சர்வதேச அங்கீகாரம் கிடைக்கவில்லை. போகட்டும். என் மகனுக்காவது அந்த அங்கீகாரம் கிடைக்க வேண்டும். இளவரசர் இந்திய டெஸ்ட் அணியில் தொடர்ந்து விளையாட வேண்டும், அதுவும் கேப்டனாக. அதற்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்.'

தன் ஆசையை நிறைவேற்றக் காய்களை நகர்த்தினார். இங்கிலாந்திலிருந்தும் ஆஸ்திரேலியாவி லிருந்தும் வரவழைக்கப்பட்ட கோச்கள் யத்விந்த்ர சிங்கை பெண்டு நிமிர்த்தினார்கள்.

ஆல் இந்தியா ரேடியோ...

மகாராஜாவின் மோதிபாக் அரண்மனைப் படுக்கையறையில் வானொலி ஒலித்தது. படுத்த படியே கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார் பூபிந்தர் சிங். சுற்றிலும் மருத்துவர்கள், நர்ஸ்கள், கூடவே சில முக்கிய அமைச்சர்களும். பம்பாய் பார்போர்ன் மைதானத்தில் அன்று

முதல்தர கிரிக்கெட் மேட்ச், இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும். நமது அணியில் இளவரசர் யத்விந்த்ர சிங்கும் இருந்தார்.

'பாட்டியாலாவின் யுவராஜ் (இளவரசர்) இதோ மட்டை பிடிக்க வருகிறார்' என்று வானொலி வர்ணனையாளர் சொன்னதுமே சட்டென எழுந்து உட்கார்ந்தார் பூபிந்தர். 'மகாராஜா பதட்ட மடைய வேண்டாம். எல்லாம் நம் ஏற்பாட்டின்படியே சரியாக நடக்கும்' ஊக்கமளித்தார் மருத்துவர் நரன்ஜின் சிங்.

'பந்து வீச்சாளர் ஓடி வருகிறார். தாழ்வாக வீசப்பட்ட பந்து, அருமையாகத் தூக்கியடித்தார் யுவராஜ்... சிக்ஸர்!'

படுக்கையிலேயே துள்ளினார் மகாராஜா. சுற்றியிருப்பவர்கள் கைதட்டினார்கள். அரங்கில் பார்வையாளர்களின் ஆரவாரம் வானொலி வழியே இரைந்தது. 'இதோ அடுத்த பந்தை வீச ஓடி வருகிறார். அளவு குறைந்து வந்த பந்து. மிட்-ஆன் திசையில் அழகாகத் தூக்கியடித்தார் யுவராஜ். இன்னுமொரு சிக்ஸர்!'

பூபிந்தரின் துள்ளல், மைதானத்தில் ஆரவாரம். அடுத்த பந்திலும் '...இறங்கி வந்து லாகவமாக அடித்தார் யுவராஜ். மீண்டும் ஆறு ரன்கள்!' இந்தமுறை மைதானத்தில் ஆரவாரம் குறைந் திருந்தது. பூபிந்தர் சிங்கின் முகத்திலும் உற்சாகம் மறைந்து கொஞ்சம் டென்ஷன் ஏறியிருந்தது. அடுத்து வீசப்பட்ட பந்திலும் யுவராஜ் சளைக்காமல் சிக்ஸர் அடிக்க, வாய்விட்டுப் புலம்ப ஆரம்பித்தார் மகாராஜா. 'யுவி, இதுக்கு மேலே சிக்ஸர் அடிக்காதே!'

மைதானத்திலிருந்த ரசிகர்கள் அதற்குமேல் யுவராஜைக் கேலிசெய்து கூச்சல்போட ஆரம்பித்தார்கள். எல்லாம் நாடகம் என்று புரிந்துபோனது எல்லோருக்கும். பந்தை நன்றாகப் போட்டுக் கொடுங்கள். யுவராஜ் முடிந்த மட்டும் அடித்துவிட்டுப் போகட்டும்! அப்போதுதான் அடுத்து இங்கிலாந்துக்கு வரவிருக்கும் இந்திய அணிக்குக் கேப்டனாக யத்விந்த்ர சிங் தேர்வாக முடியும். தனது செல்வாக்கைக் கொண்டு இங்கிலாந்து அணியோடு ரகசிய உடன்படிக்கை போட்டிருந்தார் மகாராஜா. ஆனால் மைதானத்தில் யுவராஜ் அதீத ஆர்வக்கோளாறோடு இறங்கி விளாச, திட்டம் பல்லிளித்தது.

பூபிந்தர் சிங்குக்கு ரத்த அழுத்தம் அதிகமாவதை அறிந்த மருத்துவர்கள், அவரைப் படாதபாடுபட்டுப் படுக்க வைத்தார்கள். மதிய நேரத்துக்குப் பிறகு இங்கிலாந்து அணி மட்டை பிடிக்க ஆரம்பித்தது. பவுண்டரி எல்லையில் ஃபீல்டிங் செய்ய நின்று கொண்டிருந்தார் யுவராஜ். ரசிகர்களில் கேலி, கிண்டல், நக்கல் ஒலிகள், பேச்சுகள். யுவராஜால் முகத்தைத் திருப்பவே முடியவில்லை. அந்த நேரத்தில் யுவராஜின் காதுகளுக்குச் செய்தி ஒன்று வந்து சேர்ந்தது. 'மகாராஜா உங்களை மைதானத்தில் இருக்க வேண்டாம் என்று சொல்லி அனுப்பி யிருக்கிறார்.'

பெவிலியனுக்குத் திரும்பிய யுவராஜ், தனது உடைமைகளை எடுத்துக் கொண்டு வெளியேறி னார். அத்தோடு கிரிக்கெட் வாழ்க்கையிலிருந்தும். எது எதையோ சாதித்த பூபிந்தர் சிங்காலும் தனது மகன் விஷயத்தில் சாதித்துக்காட்ட முடியவில்லை. இந்த இடத்தில் ஒரு புள்ளிவிவரம். யத்விந்தர சிங், 52 முதல் தர போட்டிகளில் 83 இன்னிங்ஸ் விளையாடி எடுத்த மொத்த ரன்கள்

*1629. அதில் ஏழு அரைசதங்கள், இரண்டு சதங்கள். பவுலிங்கில் எடுத்த விக்கெட்டுகள் 50. விளையாடிய ஒரே ஒரு சர்வதேச டெஸ்ட் போட்டியில் மட்டை பிடித்து எடுத்த ரன்கள் 84.*

*கிரிக்கெட் விஷயத்திலும் மற்றும் பல விவகாரங்களிலும் பூபிந்தர் சிங்குக்குப் பெருமளவு குடைச்சல் கொடுத்த முன்னாள் வைஸ்ராய் வெலிங்டன், பதவிக்காலம் முடிந்து இந்தியாவை விட்டுக் கிளம்பியிருந்தார். அந்தப் பெரிய மாமனார் கிளம்பிவிட்டாரே என்று பூபிந்தரால் நிம்மதியாக இருக்கமுடியவில்லை. காரணம், இன்னொரு சின்ன மாமனார் சிடுசிடுவெனக் காத்திருந்தார். அவர் ஹரால்ட் வில்பர்போர்ஸ்-பெல் (Wilberforce-bell). பஞ்சாப் சமஸ்தானங் களின் ரெஸிடெண்டாகப் பதவியில் இருந்த அவர், மஜா பிரியர்களாக இருந்த பாட்டியாலா, கபுர்தலா மகாராஜாக்களைக் கண்ணில் ஆலிவ் ஆயில் விட்டுக் கவனித்துக் கொண்டிருந்தார். நின்னால் குற்றம், படுத்தால் குற்றம் என்று எப்போது பார்த்தாலும் வில்பர் போர்ஸ்-பெல்லிடமிருந்து புகார் அம்புகள் வந்து கொண்டேயிருந்தன.*

*ஒருமுறை லெட்டர்பேட் பிரச்னை ஒன்று கிளம்பியது. யார் என்ன பட்டம் கொடுத்தாலும் அதை வாங்கித் தன் பெயருக்கும் முன்னும் பின்னும் இணைத்துக் கொள்வது பூபிந்தர் சிங்கின் வழக்கம். எப்படித் தன் அந்தப்புரத்துக்குப் பெண்களைச் சேகரித்தாரோ, அதேபோல தனக்குப் பெருமை கொடுக்கும் பட்டங்களையும் வேண்டி விரும்பித் தேடிச் சேகரித்தார். சுமார் நூறு பட்டங்களுக்கு மேல் சேர்ந்துவிட்டது. அத்தனை பட்டங்களையும் நிரப்பி லெட்டர்பேடில் பெயரைப் போட முடியுமா என்ன? அதுவே இலவச இணைப்புப் புத்தகம் போலாகிவிடுமே. யோசித்த பூபிந்தர் சிங், ஒரு முடிவுக்கு வந்தார். தன் பெயருக்கிடையே '108 ஸ்ரீ'க்களைச் சேர்த்துக் கொண்டார். அதாவது பெற்ற நூற்றுக்கணக்கானப் பட்டங்களும் அந்த 108 ஸ்ரீக்குள் அடக்கம்.*

*ஹிஸ் ஹைனஸ் என்று ஆரம்பித்து சில முக்கியமான பட்டங்களுக்குப் பின் 108 ஸ்ரீ, தொடர்ந்து மகாராஜாதி ராஜ் ராஜ் ராஜேஸ்வர் சர் பூபிந்தர் சிங் மகேந்தர் பகதூர், அப்புறம் முதல் பாராவில் பார்த்த ஏபிசிடி மெடல் சமாச்சாரங்கள். இந்த மலைப்பாம்பு நீளப் பெயரோடு லெட்டர்பேடில் கிரீடம் சின்னத்தைப் பயன்படுத்தி வந்தார். அதையே கபுர்தலா மகாராஜாவும் செய்துவந்தார். ரெஸிடெண்டுக்கு அது பிடிக்கவில்லை. இரண்டு மகாராஜாக்களுக்கும் ஒரு கடிதம் அனுப்பினார். 'இங்கிலாந்தின் கிங்கைத் தவிர வேறு யாருக்கும் கிரீடத்தை லெட்டர்பேடில் உபயோகிக்கும் அதிகாரம் கிடையாது. ஆகவே நீக்கிவிட உத்தரவிடுகிறேன்.'*

*கபுர்தலா மகாராஜாவுக்குக் கடும்கோபம். தனது அதிருப்தியைப் பதில் கடிதமாக உடனே அனுப்பினார். 'ஹோட்டல் ஜார்ஜ் ஃபைவ்' என்றொரு லெட்டர்பேடை வேண்டுமென்றே தயாரித்து, அதில் கிரீடம் சின்னத்தை அப்படியே வைத்து, தனது பதிலைக் கோபமாக எழுதி யிருந்தார். பூபிந்தர் சிங் அவசர பதிலெல்லாம் அளிக்கவில்லை. லெட்டர்பேடில் இருந்து கிரீட சின்னத்தைத் தூக்கிவிட்டார். தனது டர்பனுக்குமேல் கிரீடம் ஒன்றை அணிய ஆரம் பித்தார். கூடவே ரெஸிடெண்டைப் பழிவாங்க தக்க சந்தர்ப்பம் வாய்க்கும் என்று காத்திருந் தார். சில தினங்களில் வில்பர்போர்ஸ்-பெல் பாட்டியாலாவுக்கு வருகை புரிந்தார்.*

*ரெஸிடெண்டை வரவேற்க உரிய நபர்கள் வந்திருந்தார்கள். சிவப்புக் கம்பளம் எல்லாம் விரிக்கப்பட்டிருந்தது. வீரர்களும் உரிய முறையில் அணிவகுத்து நின்றார்கள். அடுத்தது ரெஸிடெண்டுக்கே உரிய துப்பாக்கி குண்டு மரியாதையைக் கொடுக்க வேண்டும். வில்பர்*

போர்ஸ்-பெல்லும் அதை எதிர்பார்த்து நிற்க, துப்பாக்கிகளும் வெடித்தன. 'டொம்'மென்று முழங்காமல் 'டுப்'பென்று முனகின.

அவருக்கு அவமானமாகப் போனது. எல்லாம் பூபிந்தர் சிங்கின் ஏற்பாடுதான். உரிய எண்ணிக்கையில் குண்டு மரியாதை செய்யுங்கள். ஆனால் வெடிமருந்தைக் குறைவாக நிரப்பிக் கொஞ்சமாக வெடித்தால் போதும் என்று கட்டளையிட்டிருந்தார்.

நடந்த சம்பவத்தால் வில்பர்போர்ஸ்-பெல் மிகவும் கோபத்தில் இருந்தார். பூபிந்தர் சிங்கே பேச்சை வலுக்கட்டாயமாக ஆரம்பித்தார்.

'தாங்கள் ஏதோ புகார் செய்தீர்களாமே, துப்பாக்கியைச் சரியாக வெடிக்கவில்லை என்று. யாரோ சொல்வதையெல்லாம் நம்பாதீர்கள்.'

'உண்மைதானே அது. நானேதான் கேட்டேனே. அரைகுறையாகத்தானே வெடித்தார்கள்.'

'நானும் என் சமஸ்தானத்தைச் சேர்ந்தவர்களும் எல்லாம் முறைப்படிதான் செய்கிறோம். இப்படி அபாண்டமாகப் பழி சொன்னால் என்ன செய்வது? பிரிட்டிஷாரிடம் இதுதான் பிரச்னை. விசுவாசமாக இருப்பவர்களை நம்பவே மாட்டீர்கள்.'

பூபிந்தர் சிங் சட்டெனப் பொறிந்துதள்ள, வில்பர்போர்ஸ்-பெல் அடங்கிப் போனார்.



# சந்நியாசி பற பற!

‘சுத்தமாக இயலவில்லை. உடலுக்கும் மனத்துக்கும் அடுத்த ஆறு மாதங்களுக்கு முழு ஓய்வு தேவைப்படுகிறது. சமஸ்தானத்தின் நிர்வாகத்தை என் அமைச்சர் குழுவினர் பார்த்துக் கொள்வார்கள். சேம்பர் ஆஃப் பிரின்ஸஸின் பணிகளை எனக்குப் பதிலாக நவாநகர் மகாராஜா திக்விஜய்சின்ஜி பார்த்துக் கொள்வார். மிக்க நன்றி. தங்கள் உண்மையுள்ள...’

பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங்கிடமிருந்து வைஸ்ராய் லின்லித்தோவுக்குக் கடிதம் ஒன்று சென்றது. மறுநாளே ‘கெட் வெல் ஸூன்’ என்று பதில் அனுப்பினார் வைஸ்ராய். எதுவும் நாடகம் எல்லாம் இல்லை, உண்மையிலேயே 1937ன் இறுதியில் மிகவும் தளர்ந்து போயிருந்தார் பூபிந்தர் சிங். மூன்று மாரடைப்புகள் ஏற்பட்டிருந்தன. எந்நேரமும் டாக்டர்கள் கண்காணித்துக் கொண்டே இருந்தார்கள். அந்தப்புரப் பெண்களுக்குத் தங்களை அலங்கரித்துக் கொள்ளவேண்டிய தேவை ஏற்படவில்லை. பாட்டியாலா விசுவாசிகளெல்லாம் மகாராஜாவுக்காகப் பிரார்த்தனை செய்துகொண்டே இருந்தார்கள்.

இத்தூனுண்டு உடை இடுப்பில் மட்டும். சடைபிடித்த முடி. மார்புதாண்டி விழுதுகளாகத் தொங்கும் கருந்தாடி. அழுக்கு படிந்த தேகம். ஒடிசலான உடல்வாகுக்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாத பானைத் தொப்பை. கக்கத்தில் சுருட்டி வைக்கப்பட்ட சிறுத்தைத் தோல். பாட்டியாலாவின் மோதிபாக் அரண்மனை வாசலில் வந்துநின்றார் அந்த சந்நியாசி.




‘மகாராஜாவின் நோய் தீர்க்க வந்துள்ளேன்’ - என்று அவர் கெத்தாகச் சொல்லவும் அடிபணிந்து அரண்மனைக்கு அனுமதித்தார்கள் வாயில்காவலர்கள். முதன்மைக் காவலருக்குச் செய்தி போனது. அவர் ஓடோடி வந்து சந்நியாசியை நேராக மகாராஜாவின் அறைக்கு அழைத்துச் சென்றார். உள்ளே நுழைந்த சந்நியாசி, அந்த சிறுத்தைத் தோலைத் தரையில் விரித்துத் தியான போஸில் அமர்ந்தார். சில நிமிடங்கள் கண்களை மூடியபடியே இருந்தார். என்ன ஏதுவென்று புரியாத பூபிந்தர் சிங், கஷ்டப்பட்டுப் படுக்கையில் இருந்து எழுந்து உட்கார்ந்தார். சுற்றிலும் சில பிரெஞ்சு மருத்துவர்கள் சந்நியாசியை விநோதமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஏதோ மந்திரம் சொல்வதுபோல முனகிய சந்நியாசி, சட்டெனக் கண்களைத் திறந்தார். எழுந்தார். சிறுத்தைத் தோலைச் சுருட்டி மீண்டும் கக்கத்தில் வைத்துக் கொண்டார். மகாராஜாவின் படுக்கை அருகில் வந்தவர், காதருகே சென்று மகாராஜாவுக்கு மட்டும் கேட்கும்படி ஏதோ முணுமுணுத்தார். சட்டெனத் திரும்பி வெளியேறினார், அறையைவிட்டு, அரண்மனையை விட்டு.

நிகழ்ந்ததை எல்லாம் சட்டெனக் கிரகித்துக்கொள்ள முடியாத பூபிந்தர் சிங், எதிர்வினை புரிய சற்றே தாமதமானது. தனது சக்தியை எல்லாம் திரட்டிக் கத்தினார். ‘யாராவது அந்தச் சந்நியாசியைத் தடுத்து நிறுத்துங்கள். அவரை மீண்டும் அழைத்து வாருங்கள். சீக்கிரம்.’

பாதுகாவலர்கள் எல்லாத் திசைகளிலும் ஓடினார்கள். தேடினார்கள். ஒரு மணி நேரத்துக்குப் பிறகு பூபிந்தர் சிங்குக்குத் தகவல் போனது. ‘பாட்டியாலாவில் சந்நியாசியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. பக்கத்து ஊர்களில் எல்லாம் ஆள்கள் தேடிக்கொண்டு இருக்கிறார்கள்.’

பூபிந்தரின் முகத்தில் பெருத்த ஏமாற்றம். ‘அந்த ஆள் என்ன சொல்லிவிட்டுப் போனார் மகாராஜா?’ - அரண்மனை டாக்டர் நரன்ஜின் சிங் கேட்டார்.

‘அவர் ஒரு ஃபகீர். அவருடைய குரு இமயமலையில் வசிக்கிறாராம். அந்த ஃபகீர் தன்னிடம் இருக்கும் விசேஷ சக்தி மூலம் தனது இமயமலை குருவிடம் சென்று எனக்காகப் பேச முடியுமாம். அந்தக் குருவின் ஆசிர்வாதம் கிடைத்தால், எனது உடல்நிலை பூரண குணமடைந்துவிடுமாம்’ பூபிந்தர் சிங்குக்கு மூச்சு வாங்கியது.

‘மகாராஜா அவரது பெயரென்ன? விலாசம் எதுவும் சொன்னாரா?’ - ராஜ வைத்தியர் பண்டிட் ராம்பிரசாத் கேட்டார்.

‘அதெல்லாம் சொல்லவில்லையே. வாரணாசியிலிருந்து வருவதாக மட்டும் சொன்னார்.’

‘எனக்குத் தெரிந்து சுற்றுவட்டாரத்தில் தேடிப் பிரயோசனமில்லை மகாராஜா. வாரணாசியில் தான் தேட வேண்டும்’ திவான் ஜர்மானி தாஸ் சொன்னார். மறுநாள்வரை சந்நியாசி கிடைக்கவில்லை. மகாராஜா ஜர்மானி தாஸிடம் கட்டளையிட்டார், ‘நீங்களும் பண்டிட்டும் உடனே வாரணாசிக்குக் கிளம்புங்கள். உதவிக்கு யாரை வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளுங்கள். தேவையான அளவு நிதி வாங்கிக் கொள்ளுங்கள். என்ன செலவானாலும் சரி, எவ்வளவு நாளானாலும் சரி, அந்தச் சந்நியாசியோடு திரும்பி வந்தால் போதும்.’

ஜர்மானி தாஸ், பண்டிட் ராம்பிரசாத் உள்பட சிலர் அடங்கிய சிறப்புக் குழு அமைக்கப்பட்டது. ‘ஆபரேஷன் சந்நியாசி’க்காக வாரணாசி கிளம்பினார்கள்.

காவி கட்டிய நகரம். திரும்பிய திசைகளெங்கும் கோயில்கள். ஒருபுறம் மணியோசை. மறுபுறம் பிணவாடை. பரந்து விரிந்து ஓடும் கங்கை. கூனிக் குறுகி வளையும் தெருக்கள். நிர்வாணத்தை அணிந்த சாமியார்கள். தலைகீழ் சந்நியாசிகள். முள்படுக்கை சாதுக்கள். பல மொழி யாத்திரிகர்களோடு யாத்திரிகர்களாகத் திரியும் பசுக்கள். ஆங்காங்கே தென்படும் துரைமார்கள். பாவமும் புண்ணியமும் அர்த்தநாரியாகக் கலந்த வாரணாசி, குழுவினரை இனிதே வரவேற்றது. வாரணாசி மகாராஜா ஆதித்யா நாராயண்சிங்கின் முக்கிய மந்திரி ஒருவர், அவர்களை நந்தேஸ்வர் விருந்தினர் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்.

‘பல்லாயிரக்கணக்கான சந்நியாசிகளில் நாம்தேடி வந்த சந்நியாசியை எப்படிக் கண்டு பிடிப்பது? எல்லோரும் ஒரே மாதிரியாக வேறு தெரிகிறார்கள்.’ அலுத்துக் கொண்டார் பண்டிட்.

‘நம்மிடம் உள்ள அடையாளங்களுக்கு ஒத்துப்போகும் சந்நியாசியை எல்லாம் பிடித்து, நீங்கள்தான் பாட்டியாலா மகாராஜாவைக் குணப்படுத்துவதாகச் சொன்னீர்களா என்று கேட்க வேண்டியதுதான். சந்நியாசிகள் பொய் சொல்ல மாட்டார்கள் என்று நம்புவோம்.’

‘தங்களுக்கு என்ன உதவி வேண்டுமானாலும் கேளுங்கள். எங்கள் மகாராஜா உதவக் காத்திருக்கிறார். எங்கள் நபர்களும் உங்கள் தேடலுக்கு உதவுவார்கள்’ - வாரணாசி அமைச்சர் ஆதரவு கொடுத்தார். அன்று ஓய்வெடுத்தார்கள். மறுநாள் தேடுதல் வேட்டை ஆரம்பமானது.

அன்றைய நாள். மறுநாள். அந்த வாரம். அடுத்த வாரம். கழிந்தன. குழுவினருக்கு விழிகள் பிதுங்கின. பண்டிட், தினமும் கங்கையில் குளித்துவிட்டுக் கோயில் கோயிலாகச் சென்று மன முருகப் பிரார்த்தனை செய்து கொண்டார். ஜர்மானி தாஸ், வாரணாசியின் இண்டு இடுக்குகளைக்கூட விட்டு வைக்கவில்லை. சளைக்காமல் தேடி அலைந்தார்.

சில சாமியார்கள் பதில் சொன்னார்கள். சிலர் கோபப்பட்டார்கள். பதிலின்றிச் சிரித்தார்கள். அதுபோக தினம் தினம் புதுப்புது சந்நியாசிகள் வேறு வந்து போய்க் கொண்டிருந்தார்கள். யாரைக் கேட்டோம், யாரிடம் கேட்கவில்லை என்று முடிவெடுப்பதற்குள்ளேயே மூச்சு வாங்கியது. 'நாமெல்லாம் கங்கையில் மூழ்கினாலும் தீராத பாவம் செய்துவிட்டோம்போல. அதான், இப்படி யாரோ ஒரு நிர்வாண சாமியாரைத் தேடி, வாரணாசியில் சுற்றிக் கொண்டிருக் கிறோம்' - குழுவினர் வெறுத்துப் போனார்கள். வாரணாசியிலிருந்து தினமும் பாட்டியாலா வுக்குச் செய்தி மட்டும் போய்க் கொண்டிருந்தது. 'விரைவில் சந்நியாசியைக் கண்டுபிடித்து விடுவோம்.'

ஒருநாள் ஜர்மானி தாஸும் பண்டிட்டும் தாகத்துக்குத் தண்ணீர் தேடிக் குடிசை ஒன்றுக்குள் நுழைந்தார்கள். அங்கேதான் அவர்கள் தேடிவந்த சந்நியாசி இருந்தார். அவர்களைப் பார்த்ததுமே வார்த்தைகள் அதிரப் பேசினார். 'நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். என்னால் உங்கள் மகாராஜாவைக் காப்பாற்ற முடியும்.'

இன்ப அதிர்ச்சியை எதிர்பாராத இருவரும் சட்டெனத் தரையில் விழுந்து வணங்கினார்கள். தாங்கள் இத்தனை நாள்படும் கஷ்டத்தை எல்லாம் சுருக்கமாகச் சொல்லி, அவரை பாட்டியாலாவுக்கு வரும்படி கெஞ்சினார்கள். அந்த நிர்வாண சந்நியாசி சத்தமாகச் சிரித்தார். 'நீங்கள் இங்கே இன்னும் சிலகாலம் தங்கியிருங்கள். நான் உங்கள் மகாராஜாவுக்காக இமயமலைக்குப் பறந்து செல்கிறேன். அங்கே என் குரு கோரக்நாத் வசிக்கிறார். அவர் உங்கள் மகாராஜாவுக்கான செய்தியைச் சொல்லுவார். கேட்டுவந்து சொல்கிறேன்.'

இருவருக்கும் என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொண்டார்கள். சந்நியாசியை அழைத்து வரவேண்டும் என்பதுதானே மகாராஜாவின் உத்தரவு. அவர் பாட்டுக்குப் பறக்கிறேன், இமயமலைக்குப் போகிறேன், செய்தி கொண்டு வருகிறேன் என்றெல்லாம் அடுக்கிக்கொண்டே போகிறார். சொன்னபடி செய்யலாம். ஆனால் அதையெல்லாம் மகாராஜா நம்பவேண்டுமே. எப்படியாவது சந்நியாசியை பாட்டியாலாவுக்கு அழைத்துச் செல்வதைத் தவிர வேறு சிந்தனைக்கே இடமில்லை. ஆகவே அவரிடம் கெஞ்சி னார்கள். சம்மதித்தார்.

பாட்டியாலாவுக்குத் தந்தி பறந்தது. 'கண்டுபிடித்துவிட்டோம். சந்நியாசியோடு சிறப்பு ரயிலில் வருகிறோம்.' அந்தச் செய்தியே துவண்டு கிடந்த பூபிந்தர் சிங்கைச் சற்றே துளிர்க்க வைத்தது.

சந்நியாசி. அவரோடு இரண்டு சுத்த நிர்வாண சாதுக்கள். கூடவே நான்கு அரையாடை சீடர்கள். மொத்தம் ஏழு பேருக்கும் ரயிலில் தனிப்பெட்டி ஒதுக்கப்பட்டிருந்தது. வாரணாசி ரயில் நிலையத்தில் சந்நியாசியைக் காணத் திரண்ட கும்பலால் ரயில் கொஞ்சம் தாமதமாகத்தான் கிளம்பியது. பாட்டியாலாவில் இளவரசர் யத்விந்த்ர சிங் தலைமையில் மகாராஜாவின் குடும்பத்தினரும் மற்ற முக்கிய அமைச்சர்களும் வரவேற்றார்கள். பற்றற்ற

சந்நியாசியை அரண்மனைக்கு அழைத்துச்செல்ல ரோல்ஸ் ராய்ஸ் பக்காவாக நின்று கொண்டிருந்தது.

அரண்மனை, விருந்தினர் மாளிகை என்று சந்நியாசி தங்க ஏகப்பட்ட ஏற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன. 'எல்லாம் துறந்தவனுக்கு மாடமாளிகை எதற்கு?' என்று சிரித்த சந்நியாசி, ஊருக்கு வெளியே தேடிப்பிடித்து பழைய வீடு ஒன்றைத் தேர்ந்தெடுத்தார். 'இந்த ஆள்நட மாட்டமில்லாத அமைதியான இடம் எனக்குப் பிடித்திருக்கிறது.'

நீண்ட வருடங்களாக உபயோகப்படுத்தப்படாத இருளடைந்த பழைய வீடு அது. கீழே பெரிய வராண்டா. உள்ளே பெரிய அறை. அந்த அறைக்குள்ளேயே இன்னொரு சின்ன அறை. மேல்தளத்திலும் அதேபோல். வீடு வேகவேகமாகச் சுத்தப்படுத்தப்பட்டது. 'உதவிக்குப் பணியாளர்கள் எல்லாம் வேண்டாம். வீட்டில் அதிக வெளிச்சம் எனக்குத் தொந்தரவு. நான்கைந்து எண்ணெய் விளக்குகள் போதும். நீங்கள் எல்லோரும் கிளம்பலாம். நான் சொல்கிற நேரத்தில் மகாராஜாவை இங்கே குடும்பத்தோடு வரச் சொல்லுங்கள்.'

சந்நியாசியின் உத்தரவுப்படி நடந்துகொண்டார்கள். எல்லாத் தகவல்களும் மகாராஜாவுக்குத் தெரிவிக்கப்பட்டன. 'இன்று மாலை அஸ்தமனத்துக்குப் பின் மகாராஜா இங்கே வரவேண்டும்' - மறுநாள் சந்நியாசியிடமிருந்து செய்தி சென்றது. மனத்தளவில் உற்சாகமடைந்த மகாராஜா, தனது மகாராணிகள், நெருங்கிய ராணிகள், முதன்மையான வாரிசுகளை எல்லாம் தயாராக இருக்கச் சொன்னார். மாலை ஐந்தரை மணி அளவில் ஏகப்பட்ட ரோல்ஸ் ராய்ஸ்கள், குதிரை வண்டிகள் ஊர்வலமாகக் கிளம்பின. விஷயமறிந்த பாட்டியாலா பாமர மக்களும் வாகனங்களின் பின்னாலேயே ஓடினார்கள்.

குளிர்மாதமாக இருந்ததால் ஆறு மணிக்குள் இருட்டியிருந்தது. வந்து இறங்கிய மகாராணிகள், ராணிகள் கைகளில் தங்க, வெள்ளித்தட்டுகள். அவற்றில் பூ, பணம், பழங்கள், நகைகள். ஒரு தட்டில் மட்டும் ஒரு லட்சத்து இருபத்தோராயிரம் ரூபாய். சந்நியாசிக்குச் சமர்ப்பணம் செய்ய. பூபிந்தர் சிங் முன்னே செல்ல, எல்லோரும் அந்த வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

இருட்டு அறை. உள்ளே மூலையில் சில விளக்குகள் மட்டும் கண்சிமிட்டிக் கொண்டிருந்தன. சிறுத்தைப்புலித் தோலின் மீது கம்பீரமாக உட்கார்ந்திருந்த சந்நியாசி முன் சென்று பவ்யமாக நின்றார் பூபிந்தர் சிங். சந்நியாசி தனது கையை அவரது தலையில் வைத்து ஆசிர்வதித்தார். பின்பு வரிசையாக மகாராணிகள், ராணிகள் தங்கள் கையிலிருந்த சீர்வரிசைத் தட்டுகளை சந்நியாசி முன் சமர்ப்பணம் செய்து ஆசிர்வாதம் பெற்றார்கள். சந்நியாசி, எல்லோரையும் உட்காரும்படி சைகை செய்தார். தரையில் காஷ்மீரத்துக் கம்பளமோ, பட்டுமெத்தையோ கிடையாது. மகாராஜாவுக்குக் குணமாக வேண்டுமே. ராஜ குடும்பத்தினர் பட்டுடைகள் தேயத்தேயக் கட்டாந்தரையில் உட்கார்ந்தார்கள். மகாராஜாவுக்கு மட்டும் ஒரு சிறுத்தைப்புலித் தோல். இரண்டு பேருடைய உதவியோடு மகாராஜா தரையை அடைந்தார்.

'என்னது இது?' தன் முன் வைக்கப்பட்டிருந்த பகட்டான பொருள்களைப் பார்த்துக் கேட்டார் சந்நியாசி.

'தங்களுக்கு நானும் என் குடும்பத்தாரும் அளிக்கும் மரியாதை' பணிவாகச் சொன்னார் பூபிந்தர் சிங்.

‘இந்த உலகத்தின் மீதே பற்று இல்லாத நான், இம்மாதிரியான ஆடம்பரப் பொருள்களை எல்லாம் விரும்புவேன் என்று எப்படி எதிர்பார்க்கலாம்?’ சந்நியாசி குரலை உயர்த்தி கடுமையாகக் கேட்கவே வந்தவர்கள் நடுநடுங்கிப் போனார்கள்.

‘இந்தப் பொருள்கள் எல்லாம் உடனே ஊரிலுள்ள ஏழைகளுக்குத் தானமாகக் கொடுக்கப்பட வேண்டும். அதுதான் எனக்குச் செய்யும் மரியாதை. இந்தப் பொருள்கள் என்னிடமிருந்தால் என் நிம்மதி போய்விடும். இல்லாதவர்களுக்குச் சென்று சேருவதே எனக்குத் திருப்தி.’

சந்நியாசி சொன்ன வார்த்தைகளால் பூபிந்தருக்குப் புல்லரித்தது. இவர் புனிதமானவர். எதன் மீதும் ஆசையில்லாதவர். இவர் நினைத்தால் என்னைக் குணமாக்க முடியும். சந்நியாசியே சரணம். நெக்குருகி அமர்ந்திருந்தார். அந்தச் சீர்வரிசைத் தட்டுகள் எல்லாம் பூபிந்தரின் பணியாளர்களால் அறையிலிருந்து வெளியே எடுத்துச் செல்லப்பட்டன.

‘நான் தியானத்துக்குள் ஆழப்போகிறேன். இமயமலைக்குச் சென்று எனது குரு கோரக்நாத்தைச் சந்திக்கப் போகிறேன். உங்களுக்காகக் குருவின் ஆசிர்வாதத்தைப் பெற்றுத் திரும்புகிறேன். நான் என் குருவிடம் பேசும் வார்த்தைகளை நீங்கள் கேட்கலாம். என் உதவியாளர்கள் அதற்கு உதவுவார்கள். இப்போது நீங்கள் எல்லாம்...’

வெளியே வராண்டாவை நோக்கி சந்நியாசி கையைக் காட்டினார். அரையாடை சாது ஒருவர் மகாராஜாவையும் மற்றவர்களையும் வெளியே காத்திருக்கும்படி பணிவோடு சொன்னார். வெளியேறினார்கள். இமயமலைக்குப் போவாரா? எப்படி? அங்கிருந்து அவர் பேசுவதை இங்குள்ளவர் எப்படிச் சொல்லுவார்? ஏகப்பட்ட கேள்விகளுடன் எல்லோரும் வராண்டாவில் காத்திருந்தார்கள்.

பூபிந்தர் சிங் தன்னருகே நின்ற சாதுவிடம் என்ன நடக்கப்போகிறது, எப்படி நடக்கப்போகிறது என்பதை எல்லாம் வெகு ஆர்வமாகக் கேட்டுத் தெரிந்துகொண்டார்.

ஒரு சாது மகாராணிகளுடன், இன்னொரு சாது மற்றவர்களுடன் நின்று கொண்டார்கள். சந்நியாசியின் சாகசங்களை நேரடி வர்ணனை கொடுக்க இந்த ஏற்பாடு. அறைக்குள் ஓரமாக எரிந்து கொண்டிருந்த நான்கைந்து விளக்குகளின் ஒளியில் சந்நியாசியின் அசைவுகள் நிழல் போலத் தெரிந்தன. முகத்தையே மறைக்கும் அளவுக்குப் புதிதாகத் தலைப்பாகை ஒன்றைக் கட்டியிருந்த சந்நியாசி, தியானத்தில் ஆழ்ந்திருந்தார். முன்பைவிட அறைக்குள் ஒளி குறைந் திருந்தது. நிமிடங்கள் நகர்ந்தன.

‘ஒரு ஸ்தூல வடிவை எப்போதும் அனுசரித்து நிற்பதே மனம். மனமே குரு, மனமே ஜீவன், மனமே சூட்சம சரீரம். மனத்தை அடக்கியாள்வதே தியானம். மந்திரத்தைச் சொல்வதால் மனம் அடங்கும். பின்பு மூச்சு, மனம், மந்திரம் அனைத்தும் ஒன்றாகிப் போகும். யோகம், தவம், மந்திரம், ஜெபம் எல்லாமே ஆத்ம விசாரமே!’

அந்தச் சாது பல்வேறு விளக்கங்கள் கொடுத்துக் கொண்டிருக்கும்போதே அறைக்குள்ளிலிருந்து பெரும்காற்று வீசும் சத்தம் கேட்க ஆரம்பித்தது. ‘இதோ சந்நியாசி ஆழ்நிலையை அடைந்து விட்டார். இன்னும் சற்றுநேரத்தில் இங்கிருந்து தன் பயணத்தை ஆரம்பித்துவிடுவார்.’ காற்றின் பெரும்சத்தம் தொடர்ந்தது. பால்குக்கர்போல் கொஞ்ச நேரம், ரைஸ்குக்கர் போல் கொஞ்ச நேரம், இடையிடையே புயல்காற்றின் ஓசை, புலி உறுமல், சிங்க கர்ஜனை என ஏதேதோ சத்தங்கள். எல்லாம் சந்நியாசியைச் சுற்றித்தான் கேட்டன. இது விந்தையா,

வித்தையா என்று யோசித்து உணருவதற்கு முன்பாகவே விமானம் ஒன்று தரையிலிருந்து எழும்புவதுபோன்ற சத்தம் வர ஆரம்பித்தது. 'அதோ சந்நியாசி கிளம்பிவிட்டார் பாருங்கள்' என்று சாது ஒருவர் பரவசமாகக் கத்தினார்.

தேவதைக் கதைகளில் மந்திரக் கம்பளத்தின் மேல் உட்கார்ந்து பறக்கும் கதாநாயகன் போல், தரையைவிட்டு இரண்டு அடிகள் மேலே எழுந்திருந்தார் சந்நியாசி, சிறுத்தைத்தோலோடு. அடுத்தடுத்த நொடிகளில் உயரம் அதிகமாகிக் கொண்டே போனது. பயத்தோடும் பரவசத் தோடும் மகாராஜா அனிச்சையாகக் கைகளைக் கூப்பியிருந்தார். பலர் வாயைப் பிளந்திருந்தனர். சில பெண்கள் மிரண்டுபோய் கண்களை மூடிக் கொண்டார்கள். அறையின் அரைகுறை வெளிச்சத்தில் தரைக்கும் கூரைக்கும் நடுவே சந்நியாசி மிதப்பதுபோல் தெரிந்தது. மீண்டும் விநோத சத்தங்கள். சில நிமிடங்களில் அறைக்குள் எதுவுமே தென்படவில்லை. 'சந்நியாசி இமயமலையை நெருங்கிவிட்டார்' என்றார் ஒரு சாது.

'அதிசயமா இருக்கே', 'வாசல் இங்கதான இருக்குது. அவரு இப்படி வரவே இல்லையே.', 'கூரையைப் பிச்சுக்கிட்டுப் போயிருப்பாருன்னு நினைக்கிறேன்' பல்வேறுவிதமான சலசலப்புகள். 'உஷ்.. அமைதியாக இருங்கள். இன்னும் சில நிமிடங்களில் குரு கோரக்நாத் திடம் சந்நியாசி பேசப்போகிறார். நாம் கேட்கப் போகிறோம்' - சாது சொல்லவும் சட்டென அமைதி வியாபித்தது.

கொஞ்ச நேரத்தில் ஏதேதோ விநோதமான சத்தங்கள் குறைவான அளவில் கேட்டன. 'குரு கோரக்நாத்துக்கு என் வணக்கங்கள்' - வெகு தூரத்துக்கு அப்பாலிருந்து பேசுவதுபோல் ஒரு வசனம் ஒலித்தது. 'குருவோடு பேசுகிறார். கவனமாகக் கேளுங்கள்' - சாது பயபக்தியோடு சிக்னல் கொடுத்தார். வசனங்கள் தொடர்ந்தன.

'என் குருவே, இந்த உலகை ஆளும் மகாராஜாவுக்காகத் தங்களுக்கு மரியாதை செய்ய நான் இங்கு வந்துள்ளேன். நல்லவர், உண்மையானவர், ஏழைகளுக்கு பெரும் உதவிகள் செய்து கொண்டிருக்கும் அந்த மகாராஜாவுக்கு உள்ள குறைகள், நோய்கள் எல்லாம் தீர நீங்கள் அருள்புரிய வேண்டும்.'

'சிஷ்யா, உன் கோரிக்கையை ஏற்றுக்கொண்டோம். அந்த மகாராஜாவின் நோய்கள் எல்லாம் குணமாகிவிடும் என்று திரும்பிச் சென்று அவரிடம் சொல்லிவிடு.'

அவ்வளவுதான். உணர்ச்சிவசப்பட்ட நிலையிலிருந்த பூபிந்தர் சிங், தட்டுத் தடுமாறித் தரையில் விழுந்து வணங்கினார். மற்றவர்களும். பலர் நன்றிப் பெருக்கோடு கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தார்கள். மேலும் சில காலம் கரைந்த நிலையில் பழையபடியே விநோத சத்தங் கள் கேட்க ஆரம்பித்தன. அறைக்குள் அசைவுகள் தென்பட்டன. சிறுத்தைத்தோலில் அமர்ந்த படியே ஓர் உருவம் கீழிறங்கியது. 'அதோ சந்நியாசி வந்துவிட்டார்' என்று தலைக்குமேல் கைகூப்பினார் சாது. மற்றவர்களும். கொஞ்ச நேரம் கழித்து விநோத சத்தங்கள் நின்றன.

'இனி நீங்கள் உள்ளே சென்று வணங்கலாம்' - சாது சொன்னார். புதுத் தெம்பு பிறந்ததுபோல் உணர்ந்த பூபிந்தர் சிங், உள்ளே சென்று சிலரது உதவியோடு நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். சந்நியாசியின் பாதங்களுக்கு முத்தமிட்டு மரியாதை செலுத்தினார். நன்றியை வார்த்தைகளால் கொட்டினார். குடும்பத்தினர் எல்லோரும் வணங்கிமுடித்த பின்பு அங்கிருந்து கிளம்பினார்கள்.

ஓரிரு நாள்கள் கழிந்தன. பாட்டியாலாவின் காவல்துறை அதிகாரி ஒருவர் அளித்த ரகசிய அறிக்கை, ஜர்மானி தாஸ், லியாகத் ஹையத் கான் உள்ளிட்ட அமைச்சர்களிடம் வந்து சேர்ந் தது. அதைப் பார்க்கப் பார்க்க அவர்களுக்கு அதிர்ச்சி. விஷயம் என்ன?

அந்தப் பற பற சந்நியாசி நிகழ்த்தியதெல்லாம் அற்புதங்கள் அல்ல, அற்பப் பித்தலாட்டம். சந்நியாசி, பாட்டியாலா நகரத்துக்கு வந்த தினம் முதலாகவே அந்தக் காவல்துறை அதிகாரி ரகசியமாக அவரைக் கண்காணிக்க ஆரம்பித்திருந்தார்.

சந்நியாசி அற்புதம் நிகழ்த்துவதாகக் கூறிய மாலைப் பொழுதொன்றில், அதிகாரியும் அங்குதான் பதுங்கி இருந்திருக்கிறார். அதுவும் சந்நியாசி தியானம் செய்யும் அந்தப் பெரிய அறைக்குள்ளேயே இருந்த இன்னொரு குட்டி அறையில். இருளோடு இருளாக, யாருக்கும் தெரியாமல்.

தியான போஸில் உட்காரவைக்கப்பட்ட பிணம் ஒன்று அந்த அறையில் மறைத்து வைக்கப் பட்டு இருந்திருக்கிறது. பிணத்துக்கும் தன் போலவே இடுப்புத்துணி, தலையோடு சேர்த்து முகத்தையே மறைக்கும் அளவுக்குத் தலைப்பாகை. உட்கார சிறுத்தைத்தோல்.

சந்நியாசி தனது வாய்வித்தையின் மூலமாக விதவிதமான சத்தங்களை எழுப்பியுள்ளார். பின்பு இருளையும் சத்தத்தையும் பயன்படுத்திக் கொண்டு தன் உதவியாளர்களோடு சட்டெனத் தன் இடத்தில் பிணத்தை உட்கார வைத்துள்ளார். மேல்கூரையில் தொங்கும் கம்பி, அதிலிருந்து நீளும் ஒரு கயிறு. அது பிணத்தோடு இணைக்கப்பட்டிருந்தது. கயிற்றின் மறுமுனையை சந்நியாசியின் உதவியாளர்கள் மறைந்துநின்று லாகவமாகப் பிடித்து இழுக்க, பிணம் மேலே கிளம்பியது. 'ஆஹா, சந்நியாசி பறக்கிறார்' என்று வெளியிலிருந்த பார்வையாளர்கள் புள காங்கிதமடைந்தார்கள்.

அப்படியே பிணம் கூரைவரை மெள்ள மெள்ள ஏற்றப்பட்டு, இருளில் மறைக்கப்பட்டது. வெளியே 'சந்நியாசி இமயமலைக்குச் சென்று கொண்டிருக்கிறார்' என்றார்கள். ஆனால் சந்நியாசி, உள்ளே இருட்டுக்குள் பதுங்கியிருந்தார். சிறிது நேரத்தில் தனது வாய்வித்தையின் மூலம் வெகுதூரத்திலிருந்து பேசுவதுபோன்ற தொனியில் வசனங்கள் பேசினார். குருவோடு பேசுவதாகப் பக்தர்கள் சிலிர்த்தார்கள். பின்பு பிணம் தரையிறக்கப்பட்டது. அதாவது சந்நியாசி தரையிறங்கினார். சட்டென அங்கிருந்து பிணம் அகற்றப்பட, பழைய நிலையில் அதே தியான போஸில் சந்நியாசி. பக்தர்கள் உள்ளே நுழைய அனுமதிக்கப்பட்டனர். பரவசத்துடன் ஆசிர்வாதம் வாங்கிவிட்டுக் கலைந்தனர். ஆட்டம் முடிந்தது.

ரகசிய அறிக்கையை முழுதாகப் படித்து முடித்த எல்லோர் முகத்திலும் ஏமாற்றம், அதனால் விளைந்த கோபம்.

'ஏன் அந்தச் சந்நியாசி இப்படியெல்லாம் நாடகம் ஆடவேண்டும்? பணமோ நகையோ வேண்டாமென்று சொல்லிவிட்டான். அவன் நோக்கம் என்னவாக இருக்கும்?', 'கண்டிப்பாக ஏதோ சதி இருக்கிறது. இதன் பின்னணியில் யார் இருக்கிறார் என்பதை விசாரித்தே தீர வேண்டும்.' - ஆளாளுக்கு தங்கள் கருத்தைச் சொல்ல, லியாகத் ஹையத் கான் உறுதியாகச் சொன்னார், 'எதைச் செய்தாலும் ரகசியமாகச் செய்வது மகாராஜாவுக்கு நல்லது. ஏற்கெனவே ஒடிந்துபோய் இருக்கும் அவர், சந்நியாசியின் வார்த்தைகளால் மனோதிடம் பெற்றுள்ளார்.

நடந்தது அத்தனையும் பொய் என்று தெரிந்தால் அவ்வளவுதான், அவரது உடல்நிலை மேலும் கவலைக்கிடமாகிவிடும்.'

அமைச்சர்கள் எல்லாம் ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்பாகவே, தங்களது நாடகங்களை எல்லாம் காவல்துறையினர் கண்டுபிடித்துவிட்டார்கள் என்ற செய்தி சந்நியாசியின் உதவி யாளருக்குத் தெரிய வந்திருந்தது. ஆகவே இரவோடு இரவாக அவர்கள் கும்பலாகப் பற பற!

மகாராஜாவிடம் எப்படி விஷயத்தைச் சொல்லுவது? சந்நியாசி கூடவே இருந்து தன்னைப் பூரண குணப்படுத்திவிட்டுத்தான் போவார் என்றல்லவா நம்பிக் கொண்டிருக்கிறார் அவர். வேறு வழியில்லை. ஏதாவது பொய் சொல்லித்தான் ஆகவேண்டும். இன்னொருமுறை இந்தப் போலி சந்நியாசியைத் தேடி அலையும்படி ஆகிவிடக்கூடாது. எனவே சொன்னார்கள்.

'மகாராஜா, உங்களுக்காகத் தன் குருவிடம் பேசி ஆசிர்வாதம் வாங்கிக் கொடுத்த சந்நியாசி, தான் வந்த காரியத்தை முடித்துவிட்டதால் கிளம்பிவிட்டார். யாரிடமும் எதுவும் சொல்ல வில்லை. அப்படியே சொல்லியிருந்தாலும் அந்த மகானைத் தடுத்து நிறுத்தியிருக்க முடியாது என்றே தோன்றுகிறது.'

பூபிந்தர் சிங்கால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. புலம்பினார். 'நான் இன்னும் பூரணமாகக் குணமடையவில்லையே. ஏன் அவர் என்னை விட்டுப் போனார்?' - அந்த நாள்களில் மகா ராஜாவுக்கு உயர் ரத்த அழுத்தம் சற்று அதிகமாகவே இருந்தது. அதைக் கட்டுப்படுத்துவதற்காக பிரெஞ்சு டாக்டர்கள், பிரான்ஸிலிருந்து சிறப்பு மருந்து ஒன்றை வரவழைத்திருந்தார்கள். அது முதுகுத் தண்டுவடத்தில் போடப்படும் ஊசி.

'மகாராஜா, கொஞ்சம் ஓய்வெடுங்கள். தூங்கி எழுந்தால் புத்துணர்வோடு இருப்பீர்கள்' ஊசிபோட்டபடியே டாக்டர் அண்ட்ரே லிச்விட்ஸ் (Dr. Andre Lichtwitz) சொன்னார். டாக்டர் அப்ரமி (Dr. Abrami) பூபிந்தர் சிங்குக்குப் பல அறிவுரைகளையும் வழங்கியிருந்தார். 'உங்களைப் போன்ற மனோதிடம் கொண்டவர்களை இதயநோயால் ஒன்றும் செய்யமுடியாது. ஆனால் என்ன, உடல்நிலை சீக்கிரமாகத் தேற வேண்டும் என்றால் கட்டுப்பாடுகள் அவசியம். உங்களுக்கு ரத்த அழுத்தம் இருக்கிறது. ஆகவே மதுவைத் தொடக்கூடாது. பெண்கள் உறவு கூடவே கூடாது. எல்லாம் கொஞ்ச நாளைக்குத்தான். உடல்நிலை சீரான பின் பழைய வாழ்க்கைக்குத் திரும்பிவிடலாம். சரிதானே?'

பூபிந்தர் சிங் அறிவுரைகளை எல்லாம் இந்தக் காதிலும் வாங்கினார், அந்தக் காதிலும் வாங்கினார். ஆனால் செயல்படுத்தவில்லை. மதுவைச் சுவைக்காமல் அவரது நாக்கால் இருக்கமுடியவில்லை. அதேபோல...



# 133

# கடைசி வாரிசு பிறந்தது எப்போது?

அதிகாலை இரண்டரை மணிக்குத் தொலைபேசி அழைப்பு. பதறி எழுந்தார் திவான் ஜர்மானி தாஸ். அரண்மனையில் இருந்துதான் இருக்கும் என்றது அவர் உள்ளுணர்வு. 'உடனே டாக்டரோட வாங்க. மகாராஜாவுக்கு ரொம்ப உடம்பு முடியல.'

பரபரவெனத் தனது காரில் கிளம்பி, வழியில் டாக்டர் அப்ரமியையும் அழைத்துக் கொண்டார். மீண்டும் மாரடைப்பா? வழக்கமான உயர் ரத்த அழுத்தம்தானா? இரவுதானே எல்லாவற்றையும் சோதித்தோம். சரியாகத்தானே இருந்தது. டாக்டருக்கும் ஜர்மானி தாஸுக்கும் ஏகக் குழப்பம். மோதிபாக்கை அடைந்ததும் இறங்கி மகாராஜாவின் அறையை நோக்கி ஓடினார்கள்.

பிரம்மாண்டமான கட்டிலில் பிரக்ஞை இன்றி அலங்கோலமாகக் கிடந்தார் பாட்டியாலா மகாராஜா பூபிந்தர் சிங். சுற்றிலும் பெண்கள், உடை கசங்கி, அலங் காரம் கலைந்து செய்வதறியாது திகைத்து நின்றார்கள். மது பாட்டில்களும் கோப்பைகளும் சிதறிக் கிடந்தன. ஒன்றும் பேசுவதற்கில்லை. டாக்டர், வேகமாகத் தன் பெட்டியைத் திறந்து மருந்தை ஊசியில் நிரப்பினார். ஜர்மானி தாஸ் பூபிந்தரைச் சற்றே புரட்டிப் போட்டார். தண்டுவடத்தில் அது இறக்கப்பட்டது.

மறுநாள். பூபிந்தரின் அறைக்குள் நுழைந்தபடியே குத்தலாகக் கேட்டார் அப்ரமி, 'என்ன மகாராஜா, நேற்று இரவு சந்தோஷமாக இருந்தீர்கள் போலிருக்கிறது?' கொஞ்சமாகச் சிரித்தார் பூபிந்தர். 'மருந்துகளால் மட்டும் வியாதி குணமடையாது.



யத்விந்த்ர சிங்

நான் சொல்கிறபடியெல்லாம் நீங்கள் கேட்டு நடக்கவேண்டும். எவ்வளவோ சொல்லி விட்டேன். ஒத்துழைப்பைத்தான் காணோம்.'

அன்று சற்றுக் கடுமையாகவே பேசினார் டாக்டர். ஒருபடி மேலே சென்று, 'இனியும் தாங்கள் கட்டுப்பாடோடு இல்லாத பட்சத்தில் என்னால் இங்கிருந்து சிகிச்சைகளைத் தொடர முடியாது. யோசித்து சொல்லுங்கள்.' பூபிந்தர் சிங், பதில் எதுவும் சொல்லவில்லை. பாட்டியாலாவில் அப்ரமியின் சம்பளம் மாதம் ஒரு லட்சத்தைத் தொட்டது. ஆனால் பூபிந்தர் சிங் போன்ற கட்டுப்பாடில்லாத நோயாளியால் எங்கே தனது திறமைக்கு மற்ற மகாராஜாக்கள் மத்தியில் களங்கம் நேர்ந்துவிடுமோ என்று யோசித்தார் அப்ரமி.

பூபிந்தராவது, கட்டுப்பாடாவது? நாள்கள் ரத்த அழுத்தத்தோடு நகர்ந்தன. ஆகவே அப்ரமி பாட்டியாலாவிலிருந்து பாரிஸுக்குக் கிளம்ப முடிவெடுத்தார். மகாராஜா தடுக்கவில்லை. 'பம்பாய்க்குச் சென்று டாக்டரை வழியனுப்பிவைத்துவிட்டு வரவும்' என்று ஜர்மானி தாஸிடம் சொன்னார்.

அப்ரமியோடு ஜர்மானிதாஸ் பம்பாய்க்குச் சென்றார். 'டாடா' சொல்லிவிட்டுத் திரும்பி வருவதற்குள் மகாராஜாவின் நிலைமை மிகவும் மோசமாகிப் போயிருந்தது. தண்டுவடத்தில் ஏற்றிய மருந்துகள் ரத்த அழுத்தத்தைக் கட்டுப்படுத்தினாலும் உடலைப் பாதித்திருந்தன. இந்திய மருத்துவர்கள் தங்கள் சிகிச்சை முறையை, மருந்துகளை மாற்றினார்கள். ஆனால் ரத்த அழுத்தம் கட்டுப்படவில்லை. விளைவு? மகாராஜாவின் பார்வை 'ராஜபார்வை' ஆகியிருந்தது.

அப்போது பாட்டியாலாவில் இருந்த பிரெஞ்சு டாக்டர் அண்ட்ரே லிச்விட்ஸ், பாரிஸிலிருந்த அப்ரமிக்குத் தந்தி ஒன்றை அனுப்பினார். 'இனி இங்கு பிரெஞ்சு டாக்டர்கள் தேவைப்பட மாட்டார்கள். இந்திய டாக்டர்கள்தான் சிகிச்சை கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.'

மகாராஜாவின் நிலையிலும் அரண்மனையிலும் ஏகப்பட்ட குழப்பங்கள். வெளியே மக்களிடமும் வதந்தி ஒன்று வேகமாகப் பரவியிருந்தது. 'மகாராஜாவுக்கு ரொம்ப உடம்பு முடியலை. நல்லாயிருந்த மகாராஜாவுக்கு அந்த பிரெஞ்சு டாக்டருங்கதான் ஏதோ தப்பான ஊசிபோட்டு இப்படி ஆக்கிட்டாங்க. இப்போ நம்ம ஊரு டாக்டருங்க சிகிச்சை கொடுத்துக் கிட்டு இருக்காங்க. அதனால அந்த பிரெஞ்சு டாக்டருங்களை ஒரு அறைக்குள்ள அடைச்சு வைச்சிருக்காங்க.'

பார்வை பறிபோனதைப் பற்றி உள்ளூர நிறைய வருத்தப்பட்டாலும், பூபிந்தர் சிங் அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. ஜர்மானி தாஸிடமும் டாக்டர்களிடமும் தெளிவாகக் கட்டளை ஒன்றைப் பிறப்பித்திருந்தார். 'எனக்குப் பார்வை போய்விட்ட விஷயம் உங்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியக்கூடாது. என் மகாராணிகள், மகன்கள் உள்பட குடும்பத்தின ருக்கு, பணியாளர்களுக்குக்கூடத் தெரிய வேண்டாம். நானும் சொல்லமாட்டேன். அவர்களால் இந்த விஷயத்தைத் தாங்கிக் கொள்ளவே முடியாது.'

சொன்னதோடு மட்டுமன்றி, தனக்குப் பார்வை இருப்பதுபோல இயல்பாகவே நடந்து கொண்டார். கால்கள் பழகிய அரண்மனை என்பது ஒரு வசதி. அதுபோக, உடல் தளர்ந்திருந் ததால் நடப்பதற்கு எப்போதுமே இரண்டுபேர் கைத்தாங்கலாகப் பிடிக்க வேண்டியிருந்தது. வழக்கம்போல் ஒப்பனை செய்ய, நிலைக்கண்ணாடி முன் உட்கார்ந்தார். தெரியாதபோதும் கண்ணாடியின் திசையிலேயே கண்களைத் திறந்து வைத்திருந்தார். வழக்கம்போல மகாராஜாவுக்கு ஒப்பனை செய்யும் பணியாளர் மெஹர் சிங் பிலாவால் மகாராஜாவிடம் எந்தவிதமான வித்தியாசத்தையும் உணர முடியவில்லை. ஒப்பனைக்குப் பின் மகாராஜாவோடு பேசிக் கொண்டிருக்கப் பெண்கள் வந்தார்கள். வேடிக்கைப் பேச்சுகளுக்கு அவர் எந்தவிதத்திலும் குறைவு வைக்கவில்லை. உடல் இயலாமையினால் பெரும்பாலான பொழுதுகள் படுக்கை யிலேயே கழிந்தன. தூங்குவதற்குப் பார்வை எதற்கு? இவ்வளவு ஆன பிறகும் மகாராஜாவால் இச்சைகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை. மதுவின் சுவை மரணம் வரை. மாதுகூட அப்படித்தான்.

அக்கம் பக்கத்துச் சமஸ்தான மகாராஜாக்களெல்லாம் பூபிந்தர் சிங்கைக் காண வந்து கொண்டே யிருந்தார்கள். மிகவும் நெருக்கமானவர்களுக்கு மட்டுமே சந்திக்க அனுமதி கிடைத்தது. மற்றவர்களை யத்விந்த்ர சிங் சந்தித்து அனுப்பினார். ஒவ்வொரு நாடியாகத் தளர ஆரம்பித்தது. படுத்த படுக்கை. மகாராஜா தனது இறுதி நாள்களில் இருக்கிறார் என்பது எல்லோருக்கும் புரிந்துபோனது.

1938, மார்ச் 20. 'ஜான் வந்தானா?' - பாசத்தோடு கேட்டார் பூபிந்தர் சிங். யாருமே சரியாகப் பதில் சொல்லவில்லை. 'ஜான் என்னைப் பார்க்க வருவான். அப்போது அவனைத் தடுக்காதீர் கள். நான் அவனைப் பார்க்க வேண்டும்' பூபிந்தரின் வார்த்தைகளில் ஏக்கம் தேங்கி நின்றது.

ஜான்? 'ஒரு மாமனாரின் கதை' பார்த்தோமே. நினைவூட்டலுக்காக குட்டியாக ஒரு ப்ளாஷ் பேக். குர்னாம் சிங், மகாராஜாவின் மாமனார். பூபிந்தருக்கு முதலில் பிறந்த ஆண் குழந்தை யான பிரஜேந்தர் சிங்கின் பிறந்த தேதியை மாற்றினார் குர்னாம் சிங். ஆறு மாதங்கள் கழித்துத் தன் மகளான பக்தவார் கவுருக்குப் பிறந்த யத்விந்த்ர சிங்கைப் பட்டத்து இளவரசராக அறிவிக்கச் செய்தார்.

'நான் என் மகன் ஜானுக்கு (பிரஜேந்தரின் செல்லப்பெயர்) துரோகம் செய்துவிட்டேனா?' மரணப் படுக்கையில் இருந்த பூபிந்தர் சிங்குக்குக் கடும் மனவேதனை. தனது தந்தை பிரஜேந்தரைத் தேடுகிறார் என்ற விஷயத்தை அறிந்துகொண்ட யத்விந்த்ர சிங்குக்குள் நடுக்கம். 'இறுதி நேரத்தில் தந்தை, ஜானை பட்டத்து இளவரசராக அறிவித்துவிட்டால்?'

ஜர்மானி தாஸிடம் தனியாகப் பேசினார் இளவரசர். 'தாங்கள்தான் எப்படியாவது ஜானை அரண்மனைக்குள் வரவிடாமல் தடுக்க வேண்டும்.' அவர்கள் எண்ணியபடியே பிரஜேந்தர் சிங், மகாராஜாவைக் காண வந்தார். 'தங்களுக்கு மகாராஜா அனுமதி கொடுக்கவில்லை' என்று முதன்மைக் காவலர்கள் தடுத்து அனுப்பினார்கள்.

மகாராஜாவின் நினைவு கொஞ்சம் கொஞ்சமாக மங்கிக்கொண்டே போனது. மார்ச் 23. பகல் 12 மணி. முற்றிலும் நினைவை இழந்திருந்த பூபிந்தர் சிங், கோமா நிலைக்குச் சென்றிருந்தார். அவரருகே அமர்ந்திருந்த தலைமை மகாராணி பக்தவார் கவுர் கண்ணீரோடு கால்பிடித்துக் கொண்டிருந்தாள். கட்டிலைச் சுற்றி மற்ற மனைவிகள், துணைவிகள்.

பழங்காலத்தில் ராஜகுடும்பங்களில் ஒரு பயம் நிலவியது. மகாராஜா மரணப் படுக்கையில் கிடக்கிறார் என்றால் அவரது ஆட்சிக்கு எதிரான கலகக்காரர்கள் தயாராக இருப்பார்களாம். மரணச்செய்தி தெரிந்த உடனேயே அரண்மனைமீது படையெடுத்துச் சென்று கஜானாவையும் ஆயுதக் கிடங்கையும் கைப்பற்றிவிடுவார்களாம். கலகக்காரர்களின் தலைவனுக்கு அரியணை.

எங்கே பிரஜேந்தர் சிங் கலகக்காரர்களோடு வந்து அனைத்தையும் கைப்பற்றிவிடுவாரோ என்ற பயம் யத்விந்த்ர சிங்குக்கு நிறையவே இருந்தது. ஜர்மானி தாஸ், நிதி அமைச்சரோடு கலந்து பேசினார். 'கஜானாவை, ஆயுதக் கிடங்கை ஸீல் வைத்துவிடுங்கள். அரண்மனையின் பாதுகாப்பை அதிகப்படுத்திவிடலாம்.' அவர்கள் ஆலோசனை சொன்னார்கள். அப்படியே செய்தார். அப்படியும் பயம் தீரவில்லை.

'ஜான் வந்துவிடக்கூடாதே. அவன் வந்து தந்தையைப் பார்க்கும் நேரத்தில் அவருக்கு நினைவு திரும்பிவிட்டால்? அவர் ஏதாவது ஏடாகூடமாகச் சொல்லிவிட்டால்?'

சூரியன் அஸ்தமனமாகியிருந்தது. நாற்பத்தெட்டு வருடங்கள் ஆட்டம் போட்டுக் களைத்த பூபிந்தர் சிங், அசைவின்றிக் கிடந்தார். 'நாடித்துடிப்பு குறைந்துகொண்டே வருகிறது' - மருத்து வர்கள் உதட்டைப் பிதுக்கினார்கள். கூடியிருந்த மனைவிகளும் துணைவிகளும் மௌனமாக அழுது கொண்டிருந்தார்கள். மணி ஏழைத் தாண்டியிருந்தது. அன்றுமட்டும் பாட்டியாலாவில் இன்னொருமுறை அஸ்தமனம் நிகழ்ந்தது.

அடங்கி அழுது கொண்டிருந்தவர்கள், வெடித்துக் கதறினார்கள். மகாராணிகள், ராணிகள் அணிந்திருந்த நகைகள் எல்லாம் தரையில் சிதறின. பட்டுடைகள் கிழிந்தன. விஷயம் பிரிட்டிஷ் அரசுக்கு, பஞ்சாப் ரெஸிடெண்டுக்கு, பொதுமக்களுக்கு முறையாக அறிவிக்கப் பட்டது. உயிரற்றவரைக் காண உயிருள்ளவர்கள் மோதிபாக் நோக்கி விரைந்தார்கள். நள்ளிரவு. அந்நேரத்தில் பூபிந்தருக்கு பெண்களின் அழகைப் பருகித்தான் வழக்கம், அழுகையை அல்ல.

அதிகாலை. சீக்கிய மத முறைப்படி பூபிந்தர் சிங்கின் உடல் குளிப்பாட்டப்பட்டது. இதர சடங்குகள் நிறைவேற்றப்பட்டன. தினமும் மகாராஜாவை அலங்கரித்துவிட்ட பணியாளர்

மெஹர் சிங் பிலா வந்தார். அன்றே கடைசி. ராஜ அலங்காரம். முறையாகச் சீவப்பட்டு இழுத்துக் கட்டப்பட்ட தாடி. பரம்பரை நகைகள். டர்பனுக்கு மேல் கிரீடம். மார்பில் பதக்கங் கள். தன் பணியைச் செய்துமுடிக்கும்வரை கட்டுப்பாடோடு இருந்த மெஹர் சிங், பின்பு உடைந்து அழுதார்.

அரண்மனையின் மைய மண்டபத்தில் அரியணையில் வீற்றிருந்தார் பூபிந்தர் சிங். இளவரசர் யத்விந்த்ர சிங் முதலில் மரியாதை செய்தார். பின்பு மகாராணி பக்தவார் கவுர். அடுத்ததாக மற்றவர்கள். சில பெண்களை மகாராஜாவின் காலடியைவிட்டுப் பிரிப்பதற்குள் பெரும் பாடாகிப் போனது. பிரிட்டிஷார், நண்பர்கள், பொதுமக்கள் மூன்று மணி நேரத்திற்குக் கண்ணீர் அஞ்சலிப் படலம். பின் ராணுவ மரியாதையோடு ஊர்வலம். வழியெல்லாம் கதறல். 19 குண்டு முழக்கங்கள். தகனம்.

பாட்டியாலாவின் அடுத்த மகாராஜாவாகப் பதவியேற்பதில் யத்விந்த்ர சிங்குக்கு எந்தப் பிரச்னையும் இருக்கவில்லை. ஆனால் மற்றவர்களுக்குப் பிரச்னை ஆரம்பித்தது. யத்விந்த்ர சிங், தனது தந்தையைப் போல் உல்லாசப் பிரியர் கிடையாது. பதவியேற்றதும் முதல் காரிய மாக, தனது தந்தையின் அதிகாரபூர்வ மனைவிகளைத் தவிர மற்ற பெண்களை, அழகிகளைத் துரத்திவிட்டார். அந்தப்புரம் காலியானது. அவர் விருந்து, வேட்டை என்று பொழுதைக் கழிக்க விரும்பவில்லை. பூபிந்தரின் ஆட்சியில் எந்நேரமும் ஜாலியாகத் திரிந்த அமைச்சர் கள், அதிகாரிகள் ஒவ்வொருவராகப் பதவி நீக்கம் செய்யப்பட்டார்கள். கட்டுப்பாடான ஆட்சி செய்த யத்விந்த்ர சிங்கை பிரிட்டிஷ் அரசு மிகவும் விரும்பியது.

1947. சுதந்தரத்துக்குப் பின் சமஸ்தானங்களை இந்திய யூனியனில் இணைக்கும் திட்டம். வல்லபாய் படேல் முன்வைத்ததும் மனதாரச் சம்மதம் சொல்லி முதலில் கையெழுத்திட்டவர் யத்விந்த்ர சிங்தான். ஆக இந்திய யூனியனில் முதலில் இணைந்த சமஸ்தானம் பாட்டியாலாதான். அதற்குப் பின் பல்வேறு அரசுப் பதவிகளில் இருந்த யத்விந்த்ர சிங் 1974ல் இறந்துபோனார். அவருடைய வாரிசு அம்ரிந்தர் சிங் (முன்னாள் பஞ்சாப் முதல்வர் 1999-2004.)

யத்விந்த்ர சிங்கின் மகளான ஹேமிந்தர் குமாரியைத் திருமணம் செய்துகொண்டவர் நட்வர் சிங் (முன்னாள் வெளியுறவுத் துறை அமைச்சர்.)

பூபிந்தர் சிங்கின் குடும்ப வாரிசுகள் பலர் இன்றும் அரசியலில் வெற்றிகரமாக இயங்கி வருகிறார்கள். மேலும் ஒரு சின்ன விஷயம். பூபிந்தர் சிங் இறந்து ஒன்பது மாதங்கள் கழித்து அவருக்குக் கடைசி ஆண் வாரிசு பிறந்தது.



# எமா எமா ஓடி வா!

சென்ற அத்தியாயத்தில்தான் மேதகு பாட்டியாலா மகாராஜா 108ஸ்ரீ பூபிந்தர் சிங் இறந்துபோயிருக்கிறார். இன்னமும் துக்கம் தீரவில்லை. அனுஷ்டிக்க வேண்டிய விஷயங்கள் ஏராளமாக உள்ளன. ஆகவே அதே சோகத்துடன் பல்வேறு சமஸ்தானங்களுக்குள் நுழைவோம். மகாராஜாக்களின் மரணமும் மரணம் சார்ந்த சடங்குகளுக்கும் இந்த அத்தியாயம் தர்ப்பணம்.

பூபிந்தர் சிங், மரணப் படுக்கையில் இருக்கும்போது அவரைக் காண ஒரு ஜோதிடர் வந்தாராம். 'மகாராஜா, நேரம் சரியில்லை. ஏதாவது இயற்கைச் சீற்றத் தினால் உங்களுக்குப் பேராபத்து நேரலாம். முக்கியமாகப் பூகம்பம். ஆகவே தாங்கள் அரண்மனைக்குள் தங்கியிருப்பது நல்லதல்ல' என்று கிலி ஏற்படுத்தி விட்டுப் போனாராம். ஆகவே பூபிந்தர் சிங் சில நாள்கள் தோட்டத்தில், இலகு வான மரங்களால் அமைக்கப்பட்ட பெரிய கூடாரம் ஒன்றில் தங்கியிருந்ததாகவும் சொல்கிறார்கள். திருவாங்கூர் மாந்தரீகர் ஒருவர் கொடுத்த தாயத்தையும் பயபக்தி யோடு வாங்கிக் கையில் கட்டிக் கொண்டாராம்.

மரணத்தை மன தைரியத்தோடு ஏற்றுக்கொண்ட மகாராஜாக்கள் வெகுசிலரே. எப்படி மரணத்தை வெல்வது, பூஜை செய்யலாமா, பலி கொடுக்கலாமா, காய கல்பம் கிடைக்குமா, சிரஞ்சீவி வரம் அருளப்படுமா என்றெல்லாம் தேடித் தவித்தவர்களே அதிகம். மகாராஜாக்களுக்கு மரணபயமூட்டி, அதற்குத் தீர்வு சொல்வதாக ஏமாற்றிச் சம்பாதித்த ஜோதிடர்களும் சாமியார்களும் எக்கச் சக்கம்.

பொதுவாக அரண்மனை ஜோதிடர்களுக்கு நல்ல செய்தி சொன்னால் வெகுமதிகள் கிடைக்கும். மகாராஜாவுக்கு இழுத்துக் கொண்டிருக்கும் சமயத்தில் 'அரண்மனையில் ஏதோ கெட்டது நடக்கப்போகிறது' என்று சொல்லமுடியுமா என்ன? அப்படியும் 'நேர்மையாக'ச் சொல்லிக் கம்பி எண்ணியவர்கள் உண்டு. அதிகாலையில் ஆந்தை அலறியது, நடுராத்திரியில் நரி சிரித்தது, அரண்மனைக்குமேல் வல்லூறு எட்டுபோட்டது என்று ஏகப்பட்ட சகுனங் களையும் சொல்வார்கள். பூபிந்தர் சிங்கின் சாவில்கூட எழுதி வைத்திருக்கிறார்கள், 'அன்று மதியம் அரண்மனையின் சுற்றுச் சுவர்களில் ஏகப்பட்ட காகங்கள் கரையாமல் அமைதியாக அமர்ந்திருந்தன.'

சீக்கியர்களின் வழக்கப்படி, ஒருவர் மரணப்படுக்கையில் இருக்கும்போது ஐந்தாவது குரு அர்ஜுன் தேவின் சுக்மணி சாஹிபிலிருந்து பாடல்களைப் பாடுவார்கள். இறந்துவிட்டார் என்றால் அந்த உடலை வெறும் தரையிலோ அல்லது காய்ந்த புல்லைப் பரப்பி அதன் மீதோ கிடத்துவார்கள். 'நீ வரும்போதும் எதுவும் கொண்டுவரவில்லை. போகும்போதும் எதையும் கொண்டுசெல்லவில்லை' என்ற தத்துவத்தை இறந்தவருக்கு உணர்த்துவதற்காக இந்தச் சடங்கு. பொதுவாகச் சத்தம்போட்டுக் கதறி அழுவதற்கெல்லாம் சீக்கிய மதத்தில் இட மில்லை.

இறந்தவரது உடலைக் குளிப்பாட்டுவார்கள். அவர் உண்மையான சீக்கியர் என்றால் அதற்குரிய அடையாளங்களான 5கே (கைவளையம், கத்தி, கொண்டை, மரச்சீப்பு, உள்ளே அணியும் கால்சட்டை) இருக்கும்படி அலங்கரிப்பார்கள். பிறகு மதச் சடங்குகள். பின்னர் இடுகாட்டில் உடலை எடுத்துச் செல்வார்கள். எரியூட்டுவதற்கு முன்பாக இறந்தவரைப் பற்றி யாராவது ஒருவர் சுருக்கமாகப் பேசுவார். இறுதியாக மூத்த மகன் (இல்லாதபட்சத்தில் நெருங்கிய உறவினர்) தனது கடமையை நிறைவேற்றுவார். உடலை எரிக்க வசதியில்லாத சீக்கியர்கள், அதைக் கடலில் போடுவதும் உண்டு. வெளியூரில் எரிக்க வேண்டியதுவந்தால், ஊருக்குத் திரும்பி, சொந்த மண்ணில் அஸ்தியைத் தூவுவதும் உண்டு. பொதுவாக சீக்கியர்கள் மதவிதிகளின்படி நினைவு மண்டபங்கள், சின்னங்கள் கட்டக்கூடாது. ஆனால் சில சீக்கிய மகாராஜாக்கள் இந்த விதியைக் கடைபிடிக்கவில்லை.

இறந்துபோன மகாராஜாவின் இறுதிச் சடங்குகளை சூரிய உதயத்திலிருந்து சூரியன் அஸ்த மனம் ஆவதற்குள் நிகழ்த்த வேண்டும் என்பது மட்டும் சீக்கியர்கள், இந்துக்கள், இஸ்லாமி யர்கள் கடைபிடித்த பொதுவிதி.

ராஜஸ்தானின் பரத்பூர் சமஸ்தான ராஜ குடும்பத்தில் மகாராஜா இளவயதிலேயே இறப்ப துவும், வயதுக்கு வராத அவரது வாரிசு பட்டத்துக்கு வருவதும் சகஜம். 1929. ஒரு வயதிலேயே தனது தந்தை ராம் சிங்கை இழந்து, பதினெட்டு வயதில் ஆட்சிக்கு வந்த மகாராஜா கிஷன் சிங், தனது முப்பதாவது வயதில் இறந்தும் போனார். அப்போது அவரது மகன் இளவரசர் பிரஜேந்தர சிங்குக்குப் பத்து வயது.

தனது அறையில் விளையாடிக் கொண்டிருந்த இளவரசரை அழைத்து வந்தார்கள். மகாராஜா இறந்த செய்தி அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. இளவரசரின் தாய் அங்கு வந்தாள். அழ வில்லை, அவளது முகம் இறுக்கமாக இருந்தது. பிரஜேந்தரின் தலையை மொட்டையடிக்கச் செய்தாள். துக்கத்தை வெளிப்படுத்தும்விதமாக எல்லோரும் வெள்ளை உடை அணிந்திருந் தார்கள். இளவரசருக்கு மட்டும் வண்ணப் பட்டுடை உடுத்தப்பட்டது.

மகாராஜா கிஷன் சிங்கின் உடல் அங்கே கிடத்தப்பட்டிருந்தது. அவரது குடும்பத்தினர் யாரும் உடலைத் தொடக்கூட இல்லை. சின்சின்வார் ஜாட் (Sinsinwar Jat) இனத்தவர்கள் வந்தார்கள். மகாராஜாவுக்குச் செய்ய வேண்டிய காரியம் எல்லாம் செய்து உடலை எடுத்துக் கொண்டு போனார்கள். இளவரசருக்குப் பல்லக்குத் தயாராக இருந்தது. ஏறச்சொன்னார்கள். அரண்மனைப் பல்லக்குத் தூக்கிகள் பிரஜேந்தரைத் தூக்கிக் கொண்டு முடிசூடும் இடத்துக்குக் கிளம்பினார்கள், அடுத்த மகாராஜா இவர்தான் என்று உலகுக்கு அறிவித்த சமயத்தில், இடு காட்டில் முன்னாள் மகாராஜாவின் உடல் எரிந்துகொண்டிருந்தது.

அப்பன் ராஜா எப்போ சாவான், அரியணை எப்போது காலியாகும் என்று காத்துக் கொண்டி ருந்த இளவரசர்கள் அநேகப் பேர் உண்டு. பட்டத்து இளவரசர் என்று ஒருவர் அறிவிக்கப்பட்ட பட்சத்தில் அவரைக் காலிசெய்யச் சதிகளும் ஏராளமாக நடக்கும். பட்டத்து இளவரசரின் தம்பி என்று ஒரு பாவப்பட்ட ஜென்மம் உண்டு. அந்தத் தம்பிகள் மட்டும் 'ஆண்டவா எங்கப்பனுக்கு நீண்ட ஆயுளைக் கொடு' என்று மனமுருக வேண்டிக் கொண்டிருப்பார்கள். காரணம், மகாராஜா உயிரோடு இருக்கும்வரை எல்லா இளவரசர்களுக்கும் சம மரியாதை, உரிமை கிடைக்கும். அவர் மண்டையைப் போட்ட மறுநொடியே, பட்டத்து இளவரசர் பங்காளியை அரண்மனையை விட்டுத் துரத்துவதில்தான் குறியாக இருப்பார்.

அதேநேரம் பட்டத்து இளவரசர் சுடுகாட்டுக்குச் சென்று தந்தைக்கு ஆற்ற வேண்டிய காரியங் களைச் செய்துவிட்டு வரும் இடைவெளியில் இளைய சகோதரர்கள் கலகம் செய்து அரியணை யையும் அரண்மனையையும் கைப்பற்றத் திட்டம் போட்டிருப்பார்கள் அல்லது மகாராஜாவின் ஆட்சிக்கு எதிரான கலகக்காரர்கள் அரண்மனைக்குள் புகுந்து ஆட்சியைக் கைப்பற்றும் அபாயமும் இருந்தது.

1400ல் தாரங்கதாரா (Dhrangadhara) என்ற சமஸ்தானத்தில் நடந்த சம்பவமே இதற்குச் சரித்திர உதாரணம். ராஜா ராஜதர்ஜா (Raja Rajadharja) இறந்து போயிருந்தார். முதல் இரண்டு மகன்களான அஜோஜியும் (Ajoji) சஜோஜியும் (Sajoji) கடைசிக் காரியங்களைக் கவனிக்கச் சென்றிருந்தார்கள். முடித்துவிட்டுத் திரும்பும்போது பார்த்தால் கோட்டையின் கதவுகள் அடைக்கப்பட்டிருந்தன. மூன்றாவது மகன் ரஞ்ஜோஜி (Ranjoji), தனது மாமனுடன் சேர்ந்து வீரர்களையெல்லாம் தன் பக்கம் திருப்பி அரியணையைக் கைப்பற்றியிருந்தார். வேறு வழி யில்லாத முதலிரண்டு மகன்களும் மேவார் மகாராஜாவின் உதவியைத் தேடி ஓடினார்களாம். இந்தச் சம்பவத்திலிருந்து தாரங்கதாரா இளவரசர்கள் யாருமே கொள்ளிவைக்கச் செல்வதில்லை.

சௌராஷ்டிராவின் கட்ச் (Cutch) சமஸ்தானத்திலும் அப்படித்தான் ஆகிவிட்டது. மகாராஜா மூன்றாம் கெங்கார்ஜி (Khengarji III) இறந்துவிட்டார் (1942). மூத்த இளவரசர் விஜயராஜி (Vijayaraji) மயானம் சென்று காரியத்தையெல்லாம் முடித்துவிட்டு அரண்மனைக்குத் திரும்பியபோது, அங்கே அரியணையில் அவரது இளைய சகோதரர் காட்ஜி (Godji) அம்சமாக உட்கார்ந்துகொண்டு 'எங்கே வந்தாய்? நான்தான் மகாராஜா' என்றாராம். பின்பு என்ன? பஞ்சாயத்துதான்.

இந்தப் பிரச்னையே வேண்டாம் என்றுதான் ஜெய்ப்பூர் இளவரசர்களும், மராத்திய இளவரசர் களும் இடுகாட்டுக்குச் செல்லும் வழக்கத்தைக் கைவிட்டார்கள். மகாராஜாவின் பூத உடலை அரண்மனை வாசல்வரை சென்று வழியனுப்பிவைத்தால் போதுமானது என்றே நினைத்தார்கள்.

ராஜஸ்தானின் ஜெய்சால்மீர் சமஸ்தான இளவரசர் ஒருவரும் மயானத்துக்குச் செல்லவில்லை. மகாராஜாவுக்கு உரிய அலங்காரம் எல்லாம் செய்துகொண்டு பதவியேற்பு மண்டபத்திலுள்ள, உயரமான மேடைமீது அமைந்த கல் சிம்மாசனத்தில் சென்று அமர்ந்து கொண்டார். மயானத்தில் அவரது தந்தையின் சிதைக்குத் தீ மூட்டப்பட்டவுடன் முரசு ஒலிக்கப்பட்டது. அந்த சிக்னல் கிடைத்த உடனேயே பதவியேற்பு மண்டபத்திலும் முரசு ஒலிக்க ஆரம்பித்தது. பண்டிதர், மந்திரங்கள் எல்லாம் சொல்லி வாளால் தன் கையைக் கீறி இளவரசரின் நெற்றியில் ரத்தத்தால் நீண்ட திலகம் வைத்துவிட்டார். 'புதிய மகாராஜா வாழ்க! வாழ்க!'

ராஜபுத்திரர்களிடையே பல சம்பிரதாயங்கள். இப்பவோ அப்பவோ என்று ஒரு மகாராஜா ரொம்ப நேரம் போக்குக் காட்டிக் கொண்டிருந்தால் அரண்மனை ஜோதிடரோ, வைத்தியரோ சிக்னல் கொடுப்பார்கள். தரையை பசுஞ்சாணத்தால் மெழுகுவார்கள். தர்ப்பைப்புல்லைப் பரப்பி அதில் மகாராஜாவைக் கிடத்துவார்கள். தலைமாட்டில் துளசிச்செடி, கொஞ்சம் தங்கம் வைப்பார்கள். மகனோ அல்லது வேறு முக்கிய உறவினர்களோ மகாராஜாவின் வாயில் கங்கா தீர்த்தத்தை ஊற்றுவார்கள். இவை எல்லாம் எமதர்மனுக்குக் கொடுக்கப்படும் அழைப்புகள். 'எமா எமா ஓடி வா, நில்லாமல் ஓடி வா, எருமைமீது ஏறி வா, பாசக்கயிறு கொண்டு வா!'

பசுமாடு ஒன்றை இழுத்து வருவார்கள். அது மகாராஜாவை வலம்வந்து அவரது தலைமாட்டில் தனது வாலை ஆட்டிக் கொண்டு நிற்கும். இதன் அர்த்தம் - மகாராஜா நீங்கள் இந்த உலகத்தி லிருந்து வேறு உலகத்துக்குச் செல்லப் போகிறீர்கள். இதோ இந்த மாட்டின் வாலைக் கெட்டி யாகப் பிடித்துக்கொள்ளுங்கள். அது உங்களைப் பத்திரமாக அழைத்துச் செல்லும்.

அந்த ராஜபுத்திர மகாராஜா இறந்த பின் ஓலம். ஒப்பாரி. பொன்னான மேனியிலே - பொல்லாத நோய் வந்ததென்ன, தங்கத் திருமேனியிலே தகாத நோய் வந்ததென்ன... இதரச் சடங்குகள்.

'அதோ உன் கணவனின் உடல் எரிந்துகொண்டிருக்கிறது. இனி நீ மட்டும் இங்கே வாழக் கூடாது. போய் வா!' மனைவிகளும் (மகாராணிகளும்) நெருப்பில் குதிப்பார்கள் அல்லது தள்ளப்படுவார்கள். சதி. (ராஜபுத்திர வம்சங்களில் நடந்த சதிக்கொடுமை குறித்து ஜோத்பூர் குறித்த வரலாற்றில் விவரிக்கப்பட்டுள்ளது.) எரிந்து முடிந்தபின் மண்டை ஓட்டை உடைப்பார்கள். அங்குதான் ஆன்மா தங்கியிருக்குமாம். அதற்கு விடுதலை.

மராத்தியர்கள், இறந்தவர்கள் தங்களுடன் வாழ்வதாகவே நினைப்பார்கள். மராத்திய ராஜ குடும்பங்களில் இறந்துபோன மகாராஜாவின் அல்லது மகாராணியின் உருவச்சிலைகளை (பொதுவாக மார்பிளில்) செய்வார்கள். சடங்குகள் எல்லாம் செய்து அந்தச் சிலையை இறந்தவர் வாழ்ந்த அறையிலேயே பிரதிஷ்டை செய்வார்கள். சிலைகளுக்குத் தினமும் உடை அலங்காரம் செய்வது முதல் கை, கால்கள் பிடித்துவிடுவது வரை, பணிவிடைகள் செய்யத் தனியாகப் பணியாளர்களை நியமித்துவிடுவார்கள். மூன்று வேளையும் அந்தச் சிலைக்குத் தட்டில் உணவு வைக்கப்படும். மாலை வேளைகளில் இசைக்குழுவினர் சிலைக்கு முன் அமர்ந்து 'தேமே'வெனப் பாடிக் கொண்டிருப்பதும் நடக்கும்.

சுதந்தரத்துக்குப் பிறகும் பிரிட்டிஷ்காரர்களோடு பழைய பாசத்தைத் தொடர்ந்த மகாராஜாக்கள் நிறைய. ராஜஸ்தானின் ஒரு சமஸ்தானமான பன்டியின் (Bundi) கடைசி மகாராஜா ரகுபிர் சிங்குக்கு (Raghubir Singh), கடைசி வைஸ்ராய் மௌண்ட்பேட்டன் மீது கொள்ளைப் பிரியம்.

1977ல் லண்டனுக்குச் சென்ற ரகுபிர், ப்ராட்லேண்ட்ஸில் (Broadlands) மௌண்ட்பேட்டனைச் சந்திக்கச் சென்றார். மகிழ்ச்சியாகப் பேசினார். சாப்பிட உட்கார்ந்தார்கள். திடீரென நெஞ்சைப் பிடித்துக் கொண்டு கீழே விழுந்த ரகுபிர், இறந்துபோனார். மௌண்ட்பேட்டேனுக்குப் பேரதிர்ச்சி. உடனே இங்கிலாந்து குயினுக்கு போன் செய்தார்.

'பன்டி மகாராஜா இங்கே வந்தார்' - மௌண்ட்பேட்டன் சொன்னதும் குயின் சட்டென இடைமறித்தார், 'ஓ. ரொம்ப சந்தோஷம். அவருக்கு என் வாழ்த்துகளைத் தெரிவியுங்கள்.'



# ராயல் கிசுகிசு!

ஆயிரம்தான் நேரடி விஷயங்கள் பத்திரிகைகளில் இருந்தாலும் 'மிஸ்டர். இஸட்', பூனையார், பருந்தார் போன்ற கற்பனைக் கதாபாத்திரங்கள் சொல்லும் செய்திகள் எப்போதும் சுவாரசியமானதே. மூன்றெழுத்து முக்கோண நடிகை, கதர் கம்பெனி அரசியல்வாதி, பம்பரப் பட இயக்குநரின் சூதாட்டப் பட நிறுவனம் போன்ற இலைமறைவு வார்த்தைகளோடு வரும் செய்திகளை வாசிப்பதிலுள்ள கிக்கே தனி. இன்று நேற்றல்ல. உலகின் மூன்றாவது மனிதன் தோன்றியபோதே கிசுகிசுவும் பிறந்திருக்கக்கூடும். இரண்டு மனிதர்கள் மூன்றாவது ஆள் குறித்து முதுகுக்குப் பின் கிசுகிசுத்திருக்கலாம்.

கிசுகிசுவின் வரலாற்றை அகழ்வாராய்ச்சி செய்துகொண்டே போனால் பாதை மாறி நிறையப் பேச வேண்டியதிருக்கும். அங்கெல்லாம் போகாமல் அரண்மனைக்குள் நுழைந்துவிடுவோம். இன்றைய மக்கள் எப்படி நடிகர், நடிகையர், அரசியல்வாதிகள், பிற விவிஐபிக்களைப் பற்றிய கிசுகிசுக்களை அதிகம் விரும்புகிறார்களோ, அதுபோல அன்றைய மக்கள் ராஜகுடும்பத்தினர் பற்றித் தெரிந்துகொள்ள விரும்பினார்கள். யாராவது ஒருவன் அரண்மனையில் வேலை பார்ப்பவனாக இருந்தால் போதும். அவன் பேச ஆரம்பித்தால் சுற்றி நண்பர்கள் கூட்டம் கூடிவிடும்.

'வெளிநாட்டுக்குப் படிக்கப் போனப்ப, இளவரசர் யாரோ வெள்ளைக் காரச்சியை அழைச்சிட்டு வந்தாருன்னு சொன்னேன்ல. அந்தப் பொம்பளையைத் தான் கண்ணாலம் கட்டிக்குவேன்னு அடம்பிடிச்சாரு. நம்ம மகராசா அதுக்கெல் லாம் ஒத்துவருவாரா என்ன? முடியவே முடியாதுன்னு கறாராச் சொல்லி, அந்த

வெள்ளைக்காரிச்சியை அரண்மனையைவிட்டே துரத்தி விட்டுட்டாரு. நான்தான் அந்தப் பொம்பளையை குதிரை வண்டியில ஏத்தி ரயிலுவண்டி நிலையத்துல கொண்டுபோய் விட்டேன். கோபத்துல இளவரசர் அறைக்குள்ள போய்க் கதவைச் சாத்திக்கிட்டவர்தான். நாலு நாளாச்சு, இன்னும் வெளிய வரலை' - அரண்மனையில் வேலை பார்ப்பவன் சொல்லச் சொல்ல மற்றவர்கள் வாய்பிளப்பார்கள்.

குறிப்பாக அரண்மனைப் பெண்கள் பற்றிய கிசுகிசுவுக்கென்று தனிமதிப்பு உண்டு. அதுவும் அந்தப்புரச் சமாச்சாரங்கள் என்றால் கேட்கவே வேண்டாம். மகாராஜா புதிதாகப் பிடித்து வந்துள்ள பெண் எந்த நாட்டைச் சேர்ந்தவள்? எப்பேர்ப்பட்ட அழகி? மகாராணிக்கு ஆண் குழந்தையே பிறக்கவில்லையே, அதற்காக மகாராஜா இன்னொரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளப்போகிறாரா? போனவாரம் அந்தப்புரத்தில் ராணியின் அறையில் அந்த அமைச்சர் கையும் காதலுமாகப் பிடிபட்டாரே, அப்புறம் என்ன ஆனது? வயதான மகாராஜா தள்ளாமையால் புதிதாகத் திருமணம் செய்துகொண்ட இளம்பெண்ணைச் சுதந்தரமாக விட்டு விட்டாராமே, உண்மையா?

இப்படிக் கிசுகிசுக்களில் சிக்காத அரண்மனைகள் இல்லை, மகாராணிகள், இளவரசிகள் இல்லை, மகாராஜாக்கள், இளவரசர்கள் இல்லவே இல்லை. முக்கியமாக அரண்மனைப் பணியாளர்கள் கிசுகிசுக்களின் கேந்திரமாகத் திகழ்ந்தார்கள்.

ராஜ குடும்பங்களோடு நெருங்கிப் பழகிய சில முக்கிய அமைச்சர்களும் தங்களது அனுபவங் களை, அல்லது தாங்கள் பணியாற்றிய காலத்தில் நிகழ்ந்த சம்பவங்களை நேரடியாகக் குறிப் பிடாமல் கிசுகிசு பாணியிலேயே எழுதி வைத்துள்ளார்கள். அப்படிப்பட்ட ஒரு சம்பவம்தான் நாம் பார்க்கப்போவது. எழுதியர் பாட்டியாலா, கபுர்தலா உள்பட பல்வேறு சமஸ்தானங்களில் ஐம்பது வருடங்களாகப் பணியாற்றிய திவான் ஜர்மானி தாஸ். பல்வேறு ராஜ குடும்பங்களுடன் நெருக்கமாகப் பழகும் வாய்ப்பு பெற்றிருந்த இவர், இந்தச் சம்பவம் எந்தச் சமஸ்தானத்தில், எந்தக்காலத்தில் நிகழ்ந்தது போன்ற விவரங்கள் எல்லாம் சொல்லவில்லை. (விவரங்கள் முழுமையாக இருந்தால் கிசுகிசுவின் புனிதத் தன்மை மரித்துவிடுமே!)

அந்த மகாராஜா தனது மகனுக்குக் கோலகலமாகத்தான் திருமணம் செய்துவைத்தார். எந்த விதத்திலும் குறையில்லை. பெண்ணும் ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவள்தான், அழகிதான். கையில் ஏகப்பட்ட சீர்வரிசைகளுடனும் மனத்திலும் ஏகப்பட்ட ஆசைகளுடனும் புகுந்த அரண்மனை வந்தாள் அந்த இளவரசி. சாந்தி முகூர்த்தம். ஆனால் இளவரசருக்கு உடல்நிலை சரியில்லை. கல்யாணக் களைப்பாக இருக்கும் என்று நினைத்தாள். மருத்துவர்கள் வந்து பார்த்துவிட்டு மருந்து கொடுத்துவிட்டுப் போனார்கள். ஓய்வெடுக்கச் சொன்னார்கள். அவளும் ஓரமாகப் படுத்துத் தூங்கிப் போனாள்.

நாள்கள்தான் முன்னேறின. இளவரசரின் உடல்நிலையில் எந்தவித முன்னேற்றமும் ஏற்படுவதாகத் தெரியவில்லை. ஒரு புது மாப்பிள்ளைக்குரிய கிளுகிளுப்போ, மினுமினுப்போ அவரது தோற்றத்திலும் இல்லை, நடவடிக்கைகளிலும் இல்லை. எந்நேரமும் சோர்ந்து படுத்தே கிடந்தார். ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தாள் இளவரசி.

மகாராஜாவுக்குக் கவலையோ கவலை. உள்ளூர் மருத்துவர்கள் சரிப்பட மாட்டார்கள் என்று தோன்றியது. வெளியிலிருந்து சிறப்பு மருத்துவர்களை வரவழைத்தார். அவர்கள்

இளவரசரை உச்சி முதல் பாதம் வரை நுண்ணாய்வு செய்தார்கள். சில நாள்கள் பரிசோதித்த பிறகு அதை உறுதி செய்தார்கள். சட்டென்று சொல்லிவிட முடியாது. ஆனால் சொல்லித்தான் ஆகவேண்டும். எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு மகாராஜாவின் காதினில் அந்த விஷயத்தைப் போட்டார்கள்.

'இளவரசருக்குப் புற்றுநோய். அவரது வாழ்நாள் இன்னும் கொஞ்ச காலம்தான்.'

மகாராஜாவுக்குப் பேரதிர்ச்சி, கூடவே பெருங்கவலையும். எங்கே தன் வம்சம் தளைக்காமல் போய்விடுமோ என்று. மருத்துவர்களிடம் அதுகுறித்துக் கேட்டார். அவர்கள் உறுதியான குரலில் மறுத்தார்கள், 'இளவரசர் தாம்பத்யத்தில் ஈடுபடுதல் கூடாது.'

விஷயம் மெள்ள மெள்ள இளவரசரிடமும் சொல்லப்பட்டது. ஏற்கெனவே உடலளவில் சோர்ந்து போயிருந்த இளவரசர், மனத்தளவிலும் துவண்டு போனார். கிட்டத்தட்ட படுத்த படுக்கையானார்.

இளவரசிக்கும் நிலையை எடுத்துச் சொன்னார்கள். உள்ளுக்குள்ளேயே உருகிக் கொண்டிருந் தவள், வெடித்து அழுதாள். சில நாள்கள் உணவின்றி, சோக உணர்வுடனேயே நிமிடங்களை விழுங்கினாள். முடிந்தமட்டும் விதியை நொந்துகொண்டாள். பின்பு வெளித்தோற்றத்துக்கு அமைதியானாள்.

தன்னை நம்பி வாழவந்த பெண்ணைப் பற்றி இளவரசர் எந்தவிதத்திலும் கவலைப்படவில்லை, இரக்கப்படவில்லை. 'காசநோய் ஆனாலும் கணவன். புற்றுநோய் ஆனாலும் புருஷன்.' எனக்காக என் காலடியில் வாழவேண்டும் என்பது அவள் விதி. எனக்குப் பின்னும் இதே அரண்மனையில் அந்தப்புரத்தில் நான்கு சுவர்களுக்குள் கிடந்து மடிவதே அவளுக்கு அழகு. பழைமையான ஆணாதிக்கச் சிந்தனை.

ஆனால் இளவரசிக்குள் புரட்சிகரமான பெண்ணியச் சிந்தனை ஓடிக் கொண்டிருந்தது. அவரைத் திருமணம் செய்து கொண்டது ஒன்றுதான் என் குற்றம். எனக்கு எந்தவிதத்திலும் ஒருநொடிகூட எந்தவிதச் சுகமும் தராத ஒருவருக்காக நான் ஏன் என் வாழ்க்கையை அழித்துக் கொள்ளவேண்டும்? அவளுக்குக் கேள்விகள் வேர்விட்டு வளர்ந்திருந்தன. அதற்கான பதிலைத் தேடிக் கொண்டிருந்தாள்.

அப்போது அந்த சர்தார் அவளது கண்ணில்பட்டார். இளைஞர். அழகர். மகாராஜாவின் அந்தரங்கச் செயலாளர். ஆகவே அரண்மனையில் அந்தப்புரம்தவிர, மற்ற இடங்களில் நுழை யும் அதிகாரம் கொண்டிருந்தார். செயலாளர் இளவரசரைக் காணவந்த நேரத்தில் அங்கிருந்த இளவரசி கண்ணில்பட்டார். அவளது கண்ணில் இருந்த ஏக்கத்தைச் சரியாகப் புரிந்துகொண்டார் அவர். அவளது கள்ளப் பார்வைகளும் செல்லப் பெருமூச்சுகளும் செயலாளருக்குப் பல விஷயங்களைக் குறிப்பால் உணர்த்தின.

செயலாளரை மனதார.. இல்லையில்லை, உடலார விரும்ப ஆரம்பித்திருந்தாள் இளவரசி. அவரைத் தனியாகச் சந்திக்க முடியாத சூழ்நிலை. அவளால் அரண்மனையைவிட்டு வெளியே போகமுடியாது. மகாராஜா இளவரசரைப் பார்க்கவந்தால் மட்டுமே அவர்கூட வருவார். அந்த நேரத்தில் அவளும் அங்கு இருக்க வேண்டும். இருந்தாலும் பார்க்கத்தான் முடியும், பேச முடியாது. தன் அறையில் உட்கார்ந்து ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருந்தவளின் கண்களில் தொலைபேசி பட்டது. செயலாளருடைய தொலைபேசி எண் என்னவாக இருக்கும்?

ஓர் இரவில் தன் பணிப்பெண்களை வெளியே அனுப்பினாள். தன் அறைக் கதவை உள்புற மாகத் தாழிட்டுக் கொண்டாள். நடுநடுங்கும் விரல்களுடன் அந்த எண்ணைச் சுழற்றினார். ட்ரிங்.. ட்ரிங்.. எதிர்முனையில் ஒலித்தது ஆண்குரல். தைரியத்தை வரவழைத்துத் தொடர்ந்து பேசினாள். பேசுவது செயலாளர்தான் என்பது உறுதியானது. அன்பொழுகப் பேசினாள். தூண்டிலில் மீன். உரிமையோடு சிரித்துப் பேச ஆரம்பித்தாள். பேரழகு இளவரசியோடு பேரின்ப வார்த்தைகளைப் பேசக் கசக்குமா என்ன? செயலாளரும் அந்த நிமிடங்களை அனுப வித்தார்.

பேசிக் களைத்து தொலைபேசியைக் கீழேவைத்த இளவரசியின் முகத்தில் பூரண சந்தோஷம். வடிகால். அடுத்தடுத்த இரவுகளிலும் இருபுறமும் தொலைபேசிகள் வெட்கத்தால் சிவந்தன. ஏதாவது ஓரிடத்திலிருந்து வில்லன் முளைக்க வேண்டுமே. தொலைபேசித் துறைப் பணியாள ரிடமிருந்து இளவரசருக்கு அந்த ரகசியத் தகவல் சென்றது. 'தினமும் இரவு நேரத்தில் இளவரசியிடமிருந்து மகாராஜாவின் செயலாளருக்கு தொலைபேசி அழைப்பு செல்கிறது. நீண்ட நேரம் பேசுகிறார்கள்.'

தூக்கிவாரிப் போட்டது இளவரசருக்கு. தன் மனைவியிடம் நேரடியாகக் கேட்டு விஷயத்தைப் பெரிதுபடுத்த விரும்பவில்லை. தொலைபேசியில்தானே பேசுகிறார்கள், நேரில் சந்திக்க முடியாதே என்றொரு சின்ன நிம்மதி. அதையும் தடுத்துநிறுத்த விரைவிலேயே வழி கண்டு பிடிக்கலாம் என்று நினைத்துக் கொண்டார்.

மருத்துவர்கள் இளவரசரைச் சிகிச்சைக்காக பாரிஸுக்குப் போகச் சொன்னார்கள். உடனே ஒப்புக்கொண்ட இளவரசர், அவசர அவசரமாகப் பிரயாண ஏற்பாடுகளைச் செய்யச் சொன் னார். இளவரசியை அழைத்துக் கொண்டு பாரிஸ் விரைந்தார். சாம்ப்ஸ் எலிசீஸ் அவென்யூ விலுள்ள ஹோட்டல் க்ளாரிட்ஜெஸ். மருத்துவ சிகிச்சை மேற்கொள்வதற்கேற்ற தனி அறை இளவரசருக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. அருகிலேயே இளவரசிக்கும் தனி அறை. தவித்துப் போயிருந்தாள் அவள்.

ஆனால் செயலாளர் அவளை நீண்டநாள்கள் தவிக்கவிடவில்லை. பின்னாலேயே பாரிஸுக்கு வந்து நின்றார். மகாராஜாவும் பாரிஸில் சில வேலைகளை வைத்திருந்தார். எனவே தனது செயலாளரோடும் சில அமைச்சர்களோடும் அங்கு வந்தார். ஹோட்டல் ஜார்ஜ் ஃபைவ்-ல் அவர்களுக்கு அறைகள் தனித்தனியாகப் பதிவு செய்யப்பட்டிருந்தன. வெறுத்துப் போனார் இளவரசர். பூரித்துப் போனாள் இளவரசி.

இரவு ஹோட்டல் க்ளாரிட்ஜெஸிலிருந்து ஹோட்டல் ஜார்ஜ் ஃபைவ்-க்கு தொலைபேசி அழைப்பு சென்றது. முத்தங்களோடு ஆரம்பித்த பேச்சு வர்ணிப்புகளாகத் தொடர்ந்தது. நான் என்ன நிறத்தில் பைஜாமா அணிந்திருக்கிறேன் தெரியுமா? என் உதடுகள் இப்போது அங்கே உன்மீதுதான் இருக்கின்றன. எங்கே என்று சொல் பார்க்கலாம்? இருபுறமிருந்தும் பச்சை வண்ணம் பூசிக் கொண்ட வார்த்தைகள் அணிவகுத்தன. ஒருகட்டத்தில் கற்பனையில் இரு வருமே அருகருகே இருப்பதாகவே உணர்ந்தார்கள். ஆடைகளுக்குச் சுதந்தரம். உச்சபட்சக் கொஞ்சல் உரைநடை. காதலாகிக் கசிந்துருகினார்கள். தொலைபேசிகளுக்கு ஓய்வு கிடைத்தது.

சில வாரங்கள். இதுவே தொடர்ந்து நடந்தது. தன்னைவிட்டு இளவரசி எங்கும் செல்ல வில்லை, தன் பாதுகாப்பில்தான் இருக்கிறாள் என்று நம்பிக்கையோடு இருந்தார் இளவரசர்.

எவ்வளவு நாள்கள்தான் தொலைபேசிக்கே முத்தம் கொடுத்துக் கொண்டிருக்க முடியும்? ஒருநாளாவது கொஞ்ச நேரமாவது நேரடியாகச் சந்திக்க முடியாதா என்று ‘காதலர்கள்’ தவித் தார்கள். இயலவில்லை.

கேன்சர் முற்றிப்போய் இளவரசர் இறந்தார். அனைவரும் பாரிஸிலிருந்து திரும்பினார்கள். பெயருக்கு ஓரிரு நாள்கள் துக்கம் அனுஷ்டித்தாள் இளவரசி. காத்துக் கொண்டிருந்தார் செய லாளர். எத்தனையோ நாள் தூக்கத்தைத் திருடிய ஏக்கம். சந்தித்துத் தீர்த்துக் கொண்டார்கள்.

விஷயம் மகாராஜாவின் காதுகளுக்கு எட்டியது. செயலாளரைக் கூப்பிட்டுக் கடுமையாகக் கண்டித்தார். ‘இன்னொரு முறை தவறு நிகழ்ந்ததென்றால் உன்னை நான் வேலையிலிருந்து நீக்கிவிடுவேன். இங்கே நீ வாழவேமுடியாது.’ செயலாளர்மீது மட்டும் தவறில்லையே. சொந்த மருமகளை நேரடியாகக் கண்டிக்க முடியாத சங்கடம். இருந்தாலும் குடும்ப கௌரவத்தைக் கட்டிக்காக்கும் விதமாக இளவரசியை அழைத்துப் பேசினார். ‘உனக்குத் தேவைப்படுமென்றால் புதிதாக ஒரு செயலாளரை நியமித்துக்கொள். கஜானாவிலிருந்து சம்பளம் கொடுத்துக் கொள்ளலாம்.’

ஒப்புக்கொண்ட இளவரசி, புதிதாக ஓர் ஆளைப் பிடித்தாள். அந்த புதியவரும் நாளடைவில் இளவரசியின் ‘அந்தப்புரச்’ செயலாளர் ஆனது தனி கிசுகிசு.

# மைசூர்

• கர்நாடக சமஸ்தானம் • இந்தியாவின் மிகப்பெரிய சமஸ்தானங்களுள் ஒன்று

• தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : கி.பி. 1399

• ஆட்சி செய்தவர்கள் : உடையார் பரம்பரை • 21 குண்டு மரியாதை



# மைசூர் சமஸ்தானத்தை ஆட்சி செய்தவர்கள்




(முப்பின்ன தேவராஜர்*)

தேவராஜ உடையார் (1659-1673) (தத்தெடுப்பு)

சிக்க தேவராஜ உடையார் (1673-1704)

இரண்டாம் நரசராஜ உடையார் (1704-1714)

தோடா கிருஷ்ணராஜ உடையார் (1714-1732)

(மகாராணி தேவஜம்மணியால் தத்தெடுக்கப்பட்டவர்கள்)

ஏழாம் சாமராஜ உடையார் (1732-1734)

இம்மடி கிருஷ்ணராஜ உடையார் (1734-1766)

நஞ்சராஜ உடையார் (1766-1770)

எட்டாம் சாமராஜ உடையார்
(1770-1776)

(ஹைதர் அலி தேர்ந்தெடுத்த வாரிசு)

காஸா சாமராஜ உடையார் (1776-1786)

திப்பு சுல்தான் (1786-1799)

மும்மடி கிருஷ்ணராஜ உடையார் (1799-1831)

பிரிட்டிஷ் கமிஷ்னர் ஆட்சி (1831-1868)

சாமராஜேந்திர உடையார் (1868-1894)

நால்வடி கிருஷ்ணராஜ
உடையார் (1894-1940)

(நரசிம்ம ராஜ உடையார்)

ஜெய சாமராஜேந்திர உடையார்(1940-1947)



# 136

# எங்கிருந்தோ வந்தான்!

சூரியக் கதிர்கள் தன்மேல் விழுந்த நொடி, கண்விழித்தார் யாதுரயா. பக்கத்தில் திரும்பிப்பார்த்தார். கிருஷ்ணரயா இன்னமும் விழிக்கவில்லை. எழுந்து நின்றார். அவர்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த இடம் கோடி பைரவர் கோயிலின் வெளி மண்டபம். கோயில் இன்னமும் திறக்கப்படவில்லை. ஆனால் அருகிலிருந்த தேவராஜசாகர குளத்துக்கு மக்கள் வர ஆரம்பித்திருந்தார்கள். விடியலை, சுற்றி லும் தென்பட்ட மகிசூரின் அழகை ரசித்தபடியே மெதுவாகக் குளத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தார் யாதுரயா. அவருக்குள் ஏகப்பட்ட கேள்விகள் ஓட ஆரம்பித் திருந்தன.

‘எனக்கு ஏன் அன்று அப்படி ஒரு கனவு வரவேண்டும்? நான் ஏன் அறிமுகமே இல்லாத இந்த ஊரில் வந்து அலைந்துதிரிய வேண்டும்? என் தந்தையின் விருப்பத்துக்கு எதிராக என்னைச் செயல்பட வைத்த சக்தி எது? வெறுமனே அலைந்து திரிந்துவிட்டு வெறுங்கையோடு திரும்பிச் செல்லும் நிலை ஏற்பட் டால் என் தந்தைக்கு என்ன பதில் சொல்லுவேன்?’

யாதுரயா குளத்தின் கரையை அடைந்திருந்தார். அங்கே அவருக்குச் சில பதில்கள் காத்திருந்தன.

‘கடவுளே, ஏன் எங்களை இப்படிச் சோதிக்கிற?’ - துணி துவைத்துக் கொண்டி ருந்த ஒரு சலவைக்காரப் பெண் புலம்பினாள்.

‘என்னடி ஆச்சு உனக்கு?’ அருகிலேயே துணி அலசிக் கொண்டு இருந்த இன்னொருத்தி கேட்டாள்.

'கெட்ட நேரம் நடக்குதுடி.'

'யாருக்கு உனக்கா? நம்ம ராஜா ஆட்சியில எல்லோரும் நல்லாத்தான இருக்கிறோம். அதுவும் உன் புருஷனுக்கு அரண்மனையில வேலை. உனக்கு என்னடி குறைச்சல்.'

'அடியேய், அறிவுகெட்டவளே, உனக்கு அரண்மனையில என்ன நடந்திருக்குன்னே தெரியாதா? உடம்பு சரியில்லாம இருந்த நம்ம ராஜா சாமராஜ பூபதி நேற்று இரவு இறந்துட்டாருடி!'

'அய்யோ!'

'இன்னும் நிறையப் பேருக்கு விஷயம் தெரியாது.'

'அடுத்ததா அரியணை ஏற ராஜாவுக்கு ஒரு ஆண்வாரிசுகூட இல்லையே. ரொம்பநாளா அதுக்குத்தானே ஏங்கிக்கிட்டு இருந்தாரு. ராணி பாவம். எப்படி துடிச்சுக்கிட்டு இருக்காங்களோ?'

'நடந்த கொடுமையை எல்லாம் நான் உன்கிட்ட சொல்லுவேன். நீ யார்கிட்டயும் சொல்லக் கூடாது. சத்தியம் செஞ்சு கொடு.'

'சத்தியமா சொல்ல மாட்டேன்.'

'இந்தத் தளபதி மாரநாயக்கா இருக்குறானே, அவன் ராத்திரியோட ராத்திரியா ஒருபடையோட அரண்மனைக்குள்ள வந்துட்டானாம். நேரா ராணிகிட்ட போனானாம். ராஜா இறந்துகிடக்குற நேரத்துல அந்தச் சண்டாளன் என்ன கேட்டுருக்கான் தெரியுமா? நம்ம இளவரசி சிக்கதேவரசியைத் தனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கச் சொல்லிக் கேட்டிருக்கான்.'

'படுபாவி.'

'ராணி பதறிப் போயிட்டாங்களாம். அழுதுகிட்டே அவங்களோட அறைக்குப்போய்த் தாழ்ப்பாள் போட்டுக்கிட்டாங்களாம். இளவரசியும் அறைக்குள்ளதான் இருக்காங்க. அந்தத் துரோகி பிடியில்தான் இப்போ அரண்மனை இருக்குது.'

'அம்மா சாமுண்டீஸ்வரி, நீதான் அவங்களைக் காப்பாத்தணும்.'

இரு பெண்மணிகளின் உரையாடல் முழுவதையும் சற்றே மறைந்திருந்து கேட்டு முடித்தார் யாதுரயா. நான் இருக்கும் மகிசூரின் நிலை சரியில்லை. இதற்கும் எனது கனவுக்கும் சம்பந்தம் இருக்குமா? யாதுரயாவுக்குள் புதிய கேள்விகள் முளைக்க ஆரம்பித்தன. யாரோ தன் தோளைத் தொட்டதை உணர்ந்த யாதுரயா திரும்பினார். அங்கே ஒரு சைவத்துறவி நின்று கொண்டிருந்தார். அவரது கையில் காவி நிறத்தில் ஒரு மூட்டை. கண்களில் சாந்தம். மென்மையான குரலில் கேட்டார்.

'தம்பி, நீங்கள் யார்? எங்கே இருந்து வந்திருக்கிறீர்கள்?'

'அய்யா, என் பெயர் யாதுரயா. வடக்கே உள்ள துவாரகாவின் இளவரசன் நான். அதோ அந்தக் கோயில் மண்டபத்தில் உறங்கிக் கொண்டிருப்பது என் சகோதரர் கிருஷ்ணரயா.'

'துவாரகாவின் இளவரசரா நீங்கள்? அங்கிருந்து இங்கு வந்ததன் காரணம்?'

'அதைத்தான் நானும் தேடிக் கொண்டிருக்கிறேன் அய்யா.'

'புரியவில்லையே.'

'உங்களைப் பார்த்தாலே என் மனத்திலுள்ள குழப்பங்களுக்கு எல்லாம் தீர்வுகிடைக்கும் என்று தோன்றுகிறது. சொல்கிறேன்...'

துவாரகா - குஜராத்திலுள்ள ஒரு பகுதி. அதனை ஆட்சி செய்தவர்கள் ஸ்ரீகிருஷ்ணரின் வம்சா வளியில் வந்தவர்களாகக் கருதப்பட்டார்கள். யாதுரயாவின் தந்தை துவாரகாவை வளமாக ஆண்டு வந்தார். பட்டத்து இளவரசரான யாதுரயாவுக்குச் சில தினங்களுக்கு முன் வினோத மான கனவுகள் வந்தன. அவை எதற்குமே அர்த்தம் பிடிபடவில்லை. கடைசியாக வந்த கனவில், ஏதோ ஒரு சக்தி அவரை துவாரகாவிலிருந்து கிளம்பச் சொல்லி வற்புறுத்தியது. அந்தச் சக்தி மகாபாலா மலையைத் தாண்டி, காவிரிக்கும் கபினி நதிக்கும் இடையே இருக்கும் மகிசூருக்குச் செல்லும்படி சொல்லியது.

மிகவும் குழம்பிப்போன இளவரசர், கனவு குறித்து தனது தந்தையிடம் சொன்னார். பதற்ற மடைந்த ராஜா அரண்மனை வைத்தியரை வரவழைத்தார். இளவரசரை முழுமையாகப் பரி சோதித்த வைத்தியருக்கும் எதுவும் விளங்கவில்லை. 'மன்னிக்க வேண்டும் ராஜா. எனது வைத்திய அறிவுக்கு எட்டியவரை இளவரசர் உடலளவில் ஆரோக்கியமாகவும் மனத்தளவில் தெளிவாகவும்தான் இருக்கிறார். நம்மையும் மீறிய சக்திகள் இருக்கின்றன. அவற்றின் செயல் இது. இளவரசரை மகிசூருக்குச் செல்ல அனுமதியுங்கள்.'

ராஜாவின் மனம் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் யாதுரயா கிளம்பத் தயாராக இருந்தார். அதற்கு மேலும் தனது மகனைத் தடுக்க முடியாது என்று உணர்ந்த ராஜா, துணைக்கு இன்னொரு மகனான கிருஷ்ணரயாவையும் அனுப்பிவைத்தார்.

'நானும் என் சகோதரனும் குதிரையில் ஏறிக் கிளம்பினோம். என் கனவில் தோன்றிய எல்லையை அடைந்தோம். சாமுண்டீஸ்வரி அன்னை குடிகொண்டிருக்கும் இந்த மகிசூருக் குள் நுழைந்தோம். இலக்கின்றி நகரைச் சுற்றினோம். இரவில் ஓய்வெடுக்க இங்கே தங்கி னோம். காலையில்தான் மகிசூர் ராஜாவின் மரணச் செய்தியைக் கேள்விப்பட்டேன். எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.'

இளவரசர் சொன்ன விஷயங்களைக் கேட்கக் கேட்க அந்தத் துறவியின் முகத்தில் பரவசம். சாமுண்டி மலையிருந்த திசையை நோக்கித் தலைக்குமேல் கைதூக்கி வணங்கினார். 'அன்னையே போற்றி. நீ எங்களுக்கு வழிகாட்டிவிட்டாய். யாரை எப்போது எங்கே அனுப்ப வேண்டும் என்று உனக்குத் தெரியாதா என்ன? எங்கள் ராஜா சாமராஜா ஆண்ட இந்த போஜ சாம்ராஜ்ஜியம் இனிப் பிழைத்துக் கொள்ளும்.'

யாதுரயாவுக்கு எதுவும் விளங்கவில்லை. 'அய்யா என்ன ஆயிற்று? யாரிடம் நீங்கள் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?'

'அன்னை சாமுண்டீஸ்வரிக்கு நன்றி சொல்லிக் கொண்டிருக்கிறேன் இளவரசே. உங்களுக்கு வந்த கனவுகளுக்கெல்லாம் காரணம் அவளே. உங்களை இங்கே ஈர்த்து வந்த சக்தியும்

அவளே. எல்லாவற்றுக்கும் காரணம் இருக்கிறது. பல நாள்கள் படுக்கையில் கிடந்த ராஜா நீங்கள் மகிசூருக்கு வந்து சேர்ந்த சமயத்தில் ஏன் இறந்துபோகவேண்டும்? அந்தப் பொல்லாத தளபதி மாரநாயக்கா ஏன் அரண்மனையை இரவோடு இரவாகக் கைப்பற்ற வேண்டும்? எல்லாம் அவள் செயல். இந்த மண்ணைக் காக்க வந்த அன்னையின் பிரதிநிதி நீங்கள்.'

யாதுரயாவுக்கு மேலும் குழப்பம். 'எப்படிச் சொல்லுகிறீர்கள் அய்யா?'

'ராஜாவுக்கு ஆண்வாரிசு இல்லை. ஆகவே இளவரசியைத் தனக்குத் திருமணம் செய்துதரும்படி ராணி தேவஜம்மணியை மிரட்டிக் கொண்டிருக்கிறான் மாரநாயக்கா. அவனுக்குப் பயந்து அறைக்குள் முடங்கிக் கொண்ட ராணி, பகவான் ஸ்ரீஹரியிடம் மனம்விட்டு மன்றாடினார்கள். உடனே பகவானிடமிருந்து கட்டளை வந்திருக்கிறது. வேறு ஊரிலிருந்து இரண்டு இளைஞர்கள் இந்த மண்ணுக்கு வருவார்கள். அவர்களே மகிசூரைக் காக்க வந்தவர்கள் என்று. என்னை ரகசியமாகச் சந்தித்த ராணி அந்த இரண்டுபேரைக் கண்டுபிடிக்கச் சொல்லிக் கெஞ்சினார். நானும் தேட ஆரம்பித்தேன். கடவுளின் கருணை. சீக்கிரமாகவே உங்களைக் கண்டுபிடித்து விட்டேன்.'

சொல்லிய துறவி, தன் கையில் இருந்த காவிமூட்டையை இளவரசரின் கையில் அளித்தார். 'இவை ஆயுதங்கள். அரண்மனையின் கிடங்கிலிருந்து ரகசியமாகக் கொண்டுவரப்பட்டவை. உங்களுக்கு உதவும். இனியும் தாமதம் செய்ய வேண்டாம். சாமுண்டீஸ்வரி உங்களுக்குத் துணையிருப்பாள். அன்னையின் கட்டளையை நிறைவேற்றுங்கள்' வாழ்த்திவிட்டு அங்கிருந்து கிளம்பினார் துறவி. நடந்தது நிஜமா, கனவா - யாதுரயாவுக்குக் கொஞ்ச நேரத்துக்குக் குழப்பமாகத்தான் இருந்தது. கிருஷ்ணரயாவை எழுப்பினார். நிகழ்ந்தவற்றைச் சொன்னார். பின் இருவரும் மனத்தளவிலும் உடலளவிலும் தயாராகிவிட்டு, குதிரை ஏறினார்கள்.

'யார் நீங்கள்?' - அரண்மனை வாசலில் மாரநாயக்காவின் ஆள்கள் சகோதரர்களைத் தடுத்தார்கள். யாதுரயாவும் கிருஷ்ணரயாவும் வாயால் பேசாமல் வாளால் பேச ஆரம்பித்தார்கள். ரணகள நிமிடங்கள். பல்வேறு எதிர்ப்புகளை முறியடித்து அரண்மனைக்குள் முன்னேறிய சகோதரர்களை மாரநாயக்கா எதிர்கொண்டார். யாதுரயா அவரது தலையைக் கொய்தார்.

ராணிக்குச் செய்தி போனது. அவள் ஓடோடி வந்து ஆனந்தக் கண்ணீரோடு அந்த ரட்சகர்களை வரவேற்றாள். 'சரியான தருணத்தில் வந்து எங்களையும் மகிசூரையும் அசுர சக்திகளிடமிருந்து மீட்டு விட்டீர்கள். எனக்கு ஆண் வாரிசு இல்லை. அடுத்து மகிசூரின் அரியணை ஏறத் தகுதியானவர் நீங்கள்தான். என் மகளுக்கேற்ற மணமகனும் நீங்கள்தான். இளவரசியைத் திருமணம் செய்துகொள்வீர்களா?'

யாதுரயாவைப் பார்த்து கேட்டாள் ராணி. அழகிய இளவரசி அந்தக் கதாநாயகனைக் காண ஓடோடி அங்கு வந்து நின்றாள். யாதுரயா சம்மதம் சொன்னார். இளவரசி முகம் சிவந்தாள்.

ஆண்டு 1399. வைகாசி மாதம். இளவரசர் யாதுரயா - இளவரசி சிக்கதேவரசியின் திருமணம் சிறப்பாக நடந்தது. பின்பு மக்கள் மனம் குளிர, வேத மந்திரங்கள் முழங்க மகிசூரின் ராஜாவாக அரியணை ஏறினார் யாதுரயா. கிருஷ்ண பக்தரான அவர் மகிசூருக்கு அருகே மலையொன்றில் வலிமையான கோட்டை ஒன்றை எழுப்பினார். உயரமான இடத்தில் அமைந்த கோட்டை என்று பொருளில் அது மேலுகோட் என்றழைக்கப்படுகிறது. சாமுண்டீஸ்வரியை

குலதெய்வமாகக் கொண்டு ஆட்சிபுரிய ஆரம்பித்த யாதுரயா 1423ல் இறந்தார். அவர்மூலம் மகிசூரில் உடையார் பரம்பரை தோற்றுவிக்கப்பட்டது. உடையார் அல்லது வாடியார் என்ற கன்னட வார்த்தைக்கான பொருள் எஜமானன்.

மகிசூரின் பொருள்? மகிசாசூரன் என்ற அரக்கன் ஆண்டு வந்த நிலம் அது. அவனது கொடுமைகள் அதிகரிக்கவே, சாமுண்டீஸ்வரி (துர்க்கையின் ஓர் அவதாரம்) ஒரு மலைமேல் தோன்றி, போரிட்டு, அவனை வதம் செய்தாள் என்பது புராணக் கதை. (அது சாமுண்டி மலை. மகிசூர், ஆங்கிலக் கலப்போடு மைசூர் ஆனது.)

பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் யாதுரயாவின் மகிசூரைப் பிடித்த வரலாறு, புராணக்கதை போலத் தோன்றலாம். நாம் பார்த்து ரசித்த மனோகரா, வஞ்சிக்கோட்டை வாலிபன், மந்திரிகுமாரி போன்ற கருப்பு-வெள்ளைப் படங்களின் கலவைபோலவும் தோன்றலாம். மைசூரில் உடையார் பரம்பரை தோன்றிய விதம் குறித்து பல்வேறு வரலாற்றாசிரியர்கள் எழுதி வைத்துள்ள சம்பவங்கள் இவையே. யாதுரயாவைச் சிலர் விஜயா என்கிறார்கள். சிலர் இளவரசியின் பெயரை தேவஜம்மணி என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். தளபதி மாரநாயக் காவை சிலர், காருகஹல்லி என்ற பகுதியின் ஆட்சியாளராகச் சொல்லியிருக்கிறார்கள். மற்றபடி, சலவைக்காரப் பெண்கள் முதற்கொண்டு எல்லாக் கதாபாத்திரங்களும், சம்பவங்களும் கச்சிதம்.

சொல்லப்போனால் மைசூரின் பழங்கால வரலாறு முழுக்கவே புராணச் சுவை கலந்த ‘மனோகரா’ பாணிக் கதைகள்தாம்.



# வழுக்கை ராஜா!

ஒன்றுக்கு அப்புறம் இரண்டு, அதற்கப்புறம் மூன்று, நான்கு. ராஜ பரம்பரையினர் எல்லாம் தங்கள் வாரிசுகளுக்குப் பெயர் வைக்க மெனக்கிடவே இல்லை. தாத்தா ராஜாவின் பெயர் கோவிந்தனா? பேரனுக்கும் கோவிந்தன் என்றுதான் பெயர் வைத்தாகவேண்டும். பரம்பரைப் பெயர். விட்டுக்கொடுக்கலாகாது. பிற்காலத்தில் பேரனும் அரியணை ஏறும்போது, 'ராஜா கோவிந்தன்' என்று அழைத்தால் தாத்தனா, பேரனா என்று குழப்பம் வருமே? அவ்வளவுதானே, தாத்தன் முதலாம் கோவிந்தன். பேரன் இரண்டாம் கோவிந்தன். பிரச்னை தீர்ந்தது.

மைசூரின் முதல் ராஜா யாதுரயா, தனது மகனுக்கு வைத்த பெயர், ஹிரியா பெட்டாடா சாமராஜ உடையார். (தனது மாமனார் ராஜா சாமராஜ பூபதியின் நினைவாக வைத்த பெயர்.) யாதுரயாவுக்குப் பின் 1423ல் ராஜாவாகப் பதவியேற்ற ஹிரியா பெட்டாடாவுக்கு நிலைத்த பெயர் முதலாம் சாமராஜ உடையார். 'குடும்ப மரத்தை' அப்படியே பார்த்துக் கொண்டே சென்றோமானால் 1459ல் முதலாம் சாமராஜாவின் மகன் திம்மராஜ உடையார் அரியணை ஏறினார். திம்மராஜாவின் மகன் ஹிரியா பெட்டாடா இரண்டாம் சாமராஜ உடையார் 1478ல் ஆட்சிக்கு வந்தார். அப்புறம் 1513ல் ராஜாவானவர் மூன்றாம் விஜய சாமராஜ உடையார். பிறகு இரண்டாம் திம்மராஜ உடையார் (1572 வரை.)

மேலே உள்ள ராஜாக்களைப் பட்டியலிடத்தான் முடியும். மாதம் மும்மாரி. மைசூர் அம்சமாக இருந்தது என்று கூடுதலாக இரண்டு வரிகள் வேண்டுமானால் சேர்த்துக் கொள்ளலாம். மற்றபடி இந்த ராஜாக்களின் ஆட்சியில், (தக்காணப்

பகுதிகளில் வலுப்பெற்றிருந்த விஜயநகரப் பேரரசுடனான சிறுசிறு மோதல்கள் தவிர) பெரும் சம்பவங்கள் சரித்திரத்தில் இல்லை.

இரண்டாம் திம்மராஜ உடையாருக்கு இரண்டு இளைய சகோதரர்கள். மூத்தவர் கிருஷ்ணராஜா. அருமையான வீரர். மைசூரின் ஆட்சி எல்லையை விரிவுபடுத்த வேண்டும் என்ற முனைப்போடு செயல்பட்டு சுற்றியுள்ள சின்னச்சின்னப் பகுதிகளைக் கைப்பற்றினார். இளைய சகோதரரின் பெயர், வேறென்ன, நான்காம் சாமராஜ உடையார்தான். இரண்டு மூத்த சகோதரர் களும் இறந்துபோகவே, நான்காம் சாமராஜருக்கு 1572ல் அரியணை பாக்கியம் வாய்த்தது.

ஒருநாள் அவர் சாமுண்டீஸ்வரியைத் தரிசித்துவிட்டுத் திரும்பும்போது கருமேகங்கள் சூழ்ந் திருந்தன. கண்ணைப் பறிக்கும் மின்னல், காதைப் பிளக்கும் இடி. சாமுண்டி மலையிலிருந்து வேகமாக இறங்கிவிடலாம் என்று அவர் நினைக்கும் நேரத்தில் பளீரென ஓர் ஒளி மலையைக் கவ்வியது. அலறித் தரையில் விழுந்தார் ராஜா. 'ராஜாவை மின்னல் தாக்கிவிட்டது' சுற்றிஇருந்தவர்கள் பதறினார்கள்.

உயிருக்கு எதுவும் ஆபத்து நேரவில்லை. ஆனால் மயிருக்குத்தான். முற்றிலும் கருகிப் போயிருந்தன. மண்டைக்கு வந்தது மயிரோடு போனது என்று பெருமூச்சு விட்டுக் கொண்டார் ராஜா. ஆனால் அதற்குப் பின் மக்களும் மற்றவர்களும் அவரை போலா சாமராஜ உடையார் என்று அழைக்க ஆரம்பித்தார்கள். போலா என்ற கன்னட வார்த்தையின் பொருள் 'வழுக்கை.'

தென்னிந்தியாவில் பெரும்பகுதிகளில் விஜயநகரப் பேரரசின் ஆதிக்கம். அதிலிருந்து விடுபட மைசூர் ராஜாக்கள் முயற்சி செய்துகொண்டேதான் இருந்தார்கள். அவ்வப்போது மோதல்கள் சகஜம். 1574ல் ரெமட்டி வேங்கடராயர் என்ற தளபதியின் தலைமையில் விஜயநகரப் படைகள் மைசூரைச் சூழ்ந்தன. 'வந்து மோது அல்லது சரணடைந்துவிடு.'

சளைக்காத போலா சாமராஜா இரண்டு மாதங்கள் பொறுமையாக இருந்தார். எதிரிப் படைகள் அசைவதாகத் தெரியவில்லை. அவ்வளவு பெரிய படையோடு மோதுவது விவேகமல்ல என்று உணர்ந்திருந்த அவர், எதிரிகளுக்குத் தேவையான உணவு முதல் இதர அத்தியாவசியப் பொருள்கள் வரும் வழிகளைத் தந்திரமாக அடைத்தார். விஜயநகரப் படையினர் தவிக்க ஆரம்பித்தார்கள். முற்றுகையிட்ட மூன்றாவது மாதத்தில் பொறுமை இழந்து, வலிமை குறைந்து திரும்பிப் போனது விஜயநகரப் படை. மைசூர் மக்கள் அந்த வெற்றியைக் கொண்டாடினார்கள்.

1576ல் போலா சாமராஜா இறந்துபோக, அவரது உறவினரான ஐந்தாம் சாமராஜ உடையார் பதவிக்கு வந்தார். இரண்டே ஆண்டுகள். நிர்வாகத் திறமையில்லாததால் கஜானாவில் யானையே படுத்துறங்கும் நிலை. வேறுபல அரசியல் நெருக்கடிகள். போலா சாமராஜரின் மகனான ராஜ உடையார் தலையெடுத்தார். 'எனக்கு வழிவிடுங்க. நான் பார்த்துக்கிறேன்' என்று ஐந்தாம் சாமராஜரை ஓரம்கட்டினார். அவரும் விட்டுக் கொடுத்துவிட்டு அருகேயிருந்த குண்டுலு தெரகணம்பி என்ற கிராமத்துக்குக் குடும்பத்தோடு சென்றுவிட்டார். ராஜ உடையார் 1578ல் மைசூரின் ராஜா ஆனார்.

இந்த இடத்தில் விஜயநகரப் பேரரசு பற்றி சில வரிகள் சொல்ல வேண்டியதிருக்கிறது. (குறிப்பு: எட்டாம் வகுப்பு வரலாறு புத்தகத்தைப் படிப்பதுபோல முகத்தை வைத்துக்கொள்ள

*வேண்டாம்.) 1336ல் ஹரிஹரராயர், புக்கா ராயரால் தோற்றுவிக்கப்பட்ட விஜயநகர அரசு, ஹம்பியைத் தலைநகராகக் கொண்டு அடுத்த இரண்டு நூற்றாண்டுகளில் பேரரசாக வளர்ந்தது. ஹரிஹரராயரும் அவருக்குப் பின் வந்தவர்களும் சங்கம வம்சத்தினர். 1485ல் சங்கமர்களைத் துரத்திவிட்டு சாளுவ வம்சத்தின் நரசிம்ம தேவராயர் ஆட்சிக்கு வந்தார். 1491ல் சாளுவர்களிடமிருந்து அரசைப் பிரித்து, துளுவ வம்சத்தின் நரச நாயக்கர் அரியணை ஏறினார். துளுவ வம்சத்தில் வந்த மூன்றாவது பேரரசர்தான் கிருஷ்ணதேவராயர் (1509-1529). அவரது ஆட்சிக்காலத்தில் விஜயநகரப் பேரரசின் எல்லைகள் விரிவடைந்தன. கிட்டத்தட்ட ஆந்திரா, கர்நாடகா, கேரளா, தமிழகம் முழுவதுமே விஜயநகரப் பேரரசின் கட்டுப்பாட்டில் தான் இருந்தன. ஆகவே மைசூர் ராஜாக்களும் ராயர்களுக்குக் கப்பம் கட்டிக் கொண்டிருந் தார்கள்.*

*கிருஷ்ணதேவராயருக்குப் பின்வந்த அவரது தம்பியான அச்சுதராயர் காலத்தில் இருந்தே விஜயநகரப் பேரரசு பலவீனமடைய ஆரம்பித்தது. அறவிடு வம்சத்தைச் சேர்ந்த ராமராயர் பேரரசைப் பிரித்துக் கொண்டு தனியாக ஆட்சி செய்ய ஆரம்பித்தார். பழைய எதிரிகள் எல்லாம் தலையெடுக்க ஆரம்பித்தார்கள், குறிப்பாக தக்காணத்தின் முஸ்லீம் ஆட்சி யாளர்கள்.*

*1565, ஜனவரி 26. தலைக்கோட்டையில் (கர்நாடகா) மாபெரும் யுத்தம். ராமராயரின் விஜய நகரப் படைகள், தக்காண சுல்தான்கள் மற்றும் பிற ராஜாக்கள் இணைந்த கூட்டணிப் படைக ளுடன் மோதின. அதுவரை விஜயநகரப் படையில் இருந்த முஸ்லிம் தளபதிகளும் வீரர்களும் எதிரணியில் திரண்டிருந்தாலும் இருபக்கமும் சமபலம். ராமராயரின் யானைப்படை எதிரிகளை மிரட்டியது. ஆனால் கூட்டணிப்படை வசமிருந்த துப்பாக்கிகளும் பீரங்கிகளும் விஜயநகரப் படைகளை நிலைகுலைய வைத்தன. ராமராயர் கொல்லப்பட்டார். தோல்வி.*

*அறவிடு வம்சத்தில் மிஞ்சியவர் தளபதி திருமலா தேவராயர். ராமராயரின் இளைய சகோதரர். நிலைமை கைமீறிப் போவதற்கு முன்பாகவே உஷாரான திருமலா, முடிந்தவரை செல்வங் களை எல்லாம் நூற்றுக்கணக்கான யானைகள்மீது (550, 1500 என்று ஒவ்வொருவரும் ஒவ்வொருவித யானைக் கணக்கு சொல்கிறார்கள்) ஏற்றிக்கொண்டு சென்று தலைமறை வானார்.*

*ஆறு வருடங்கள் கழித்து மீண்டும் தலையெடுத்த அவர், (ஆந்திராவின்) பெனுகோண்டாவைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சியில் அமர்ந்தார். இழந்த பேரரசை எல்லாம் மீட்கும் முயற்சி யில் இறங்கினார். சிலகாலம் எந்தவிதப் பிரச்னையும்இன்றி இருந்த மைசூர் ராஜாவுக்கு மீண்டும் விஜயநகர ராயர்களின் குடைச்சல் ஆரம்பமானது. அப்போது மதுரை, தஞ்சாவூர், செஞ்சியை ஆண்டு கொண்டிருந்த நாயக்க ராஜாக்கள் விஜயநகரப் பேரரசில் இருந்து விடுபட்டு தனிஅரசை அமைத்துக் கொண்டிருந்தார்கள். மைசூர் ராஜாவும் அதைத்தான் விரும்பினார். தன்னாட்சி அதிகாரமுள்ள, யாருக்கும் கட்டுப்படாத அகண்ட மைசூர் பேரரசு. அதைநோக்கி சின்னச் சின்னதாக மோதல்கள், உரசல்கள் நடந்தவண்ணம் இருந்தன.*

*இனி மைசூர் ராஜ உடையாரின் கதைக்கு வருவோம். அந்தச் சமயத்தில் விஜயநகர சாம் ராஜ்ஜிய அரசராக இருந்தவர் இரண்டாம் வேங்கட ராயர். பேரரசின் முக்கிய நகரமான ஸ்ரீரங்கப்பட்டணத்தின் ஆளுநராக இருந்தவர் இரண்டாம் திருமலா ராயர். ராஜ உடையா ருக்கும் திருமலா ராயருக்கும் எப்போதுமே ஏழாம் பொருத்தம்.*

‘ஒழுங்கு மரியாதையாகக் கப்பம் கட்டுங்கள்’ - இரண்டாம் திருமலாவிடமிருந்து மைசூருக்கு ஓலைபோனது (1586). ‘பூச்சி, விலங்குகள் தாக்கியதில் ஏகப்பட்ட பயிர்கள் சேதாரம். கப்பம் கட்டமுடியாது.’ - பதில் ஓலை அனுப்பினார் ராஜ உடையார். கூடவே பயிர்களைக் காப்பாற்ற மைசூரைச் சுற்றிக் கோட்டைச்சுவர் எழுப்பப்போவதாகவும் தகவல் அனுப்பினார். சுவர் எழுப்பினார். அப்படியே மைசூருக்கு வரி வசூலிக்க வந்த இரண்டாம் திருமலாவின் ஆள்களை அடித்துத் துரத்தினார். ‘முடிந்தால் மைசூரை வந்து பிடித்துக்கொள்ளுங்கள்’ என்று மறைமுகமாக விடப்பட்ட சவால் அது.

அடுத்த உரசல் சம்பவம் 1590ல் நிகழ்ந்தது. ஸ்ரீரங்கப்பட்டணம் அரசவைக்குச் சென்று ஆளுநர் திருமலாவிடம் அவ்வப்போது ‘உள்ளேன் ஐயா’ சொல்ல வேண்டியது விஜயநகரத்துக்குக் கப்பம் கட்டும் மன்னர்களது கடமை. அரசவைக்கு வரும் மன்னர்களின் அந்தஸ்துக்கு ஏற்ப மேளதாளம், தாரை, தப்பட்டைகளின் இசை முழங்குவார்கள். அது ஒரு சடங்கு. கௌரவம். ராஜ உடையார் அங்கு சென்றார். பலத்த இசை. மகிழ்ந்தார். அதே சமயத்தில் பின்னாலேயே கெம்பல் என்ற பகுதியின் சிறிய அரசரான தீபராஜ உடையாரும் வந்தார். அவருக்கும் அதே அளவு பலத்த இசை வரவேற்பு.

‘நிறுத்துங்கள் இசையை!’- என்று கோபமாக ராஜ உடையார் கத்த, வாத்தியங்கள் செயலிழந்தன. ‘வரவேற்பு இசையில் ஒரு தராதரம் வேண்டாமா? தீபராஜாவையும் என்னையும் எப்படி நீங்கள் ஒரே அந்தஸ்தில் வைக்கலாம்? வேண்டுமானால் தீபராஜாவை என்னுடன் போருக்கு வரச் சொல்லுங்கள். யார் பெரியவர் என்று பார்த்துவிடலாம்.’ அதிரடியாகச் சவால் விட்டார்.

ரத்தம் கொதிக்க தீபராஜாவும் போருக்குச் சம்மதித்தார். போர் நடந்த நன்னாள், தீபராஜாவுக்குக் கெட்டநாளாக அமைந்தது. ராஜ உடையார் கெம்பலை வென்று மைசூருடன் இணைத்துக் கொண்டார். இப்படி இன்னும் சில வெற்றிகள். அவரது ஆட்சியில் மக்கள் ராஜ உடையாரை கடவுளாகவே பாவித்தனர். அதை உணர்த்தும் வகையில் இன்றளவும் சொல்லப்படும் ‘அம்புலிமாமா’ வகைக்கதை ஒன்று உண்டு.

அப்போது திருமலை திருப்பதியில் அந்தணர் ஒருவர் வாழ்ந்துவந்தார். பிறவிக்குருடர். வேங்கடாஜலபதியின் சந்நிதானத்துக்கு தினம் செல்லுவார். மனமுருக வழிபடுவார்.

‘அப்பனே கோவிந்தா! எனக்குப் பார்வைதர மாட்டாயா?’

திருமலையில் பிரம்மோற்சவம். எல்லோரும் திருமாலின் திவ்ய தரிசனத்தைக் கண்டு மெய்சிலிர்க்க, அந்தணர் நொந்துபோனார். ‘என் வாழ்நாளுக்குள் உன்னை ஒருமுறையாவது கண்ணாறக் காணவேண்டும் என்றுதானே மருகுகிறேன். பெருமாளே, உனக்கு இரக்கமே கிடையாதா?’

மறுநாள் அந்தணர் கண் விழித்தார். இருளில்லை. ஒரு கண்கூசியது. மெள்ள மெள்ள காட்சி தெரிந்தது. ‘எனது ஒரு கண்ணில் பார்வை தெரிகிறது. கோவிந்தா! உன் கருணையே கருணை!’ - அந்தணருக்குப் பேரானந்தம். ஏழுமலையானை தரிசித்தார். ஆசைவிடவில்லை. இன்னொரு கண்ணிலும் பார்வை கிடைத்தால் நன்றாக இருக்குமே என்று வேண்டினார். அன்றைய இரவில் அந்தணரின் கனவில் ஏழுகுண்டலவாடா தோன்றினார்.

'மைசூருக்குப் போ. ராஜ உடையாரைப் பார். உனது இன்னொரு கண்ணிலும் பார்வை கிடைக்கும்.'

அந்தணர் பதறி எழுந்தார். விடிந்தும் விடியாத நேரத்தில் மூட்டைகட்டிக் கொண்டு மைசூரை நோக்கி நடக்க ஆரம்பித்தார். பெரும்பாடுபட்டு ராஜாவைச் சந்தித்து விஷயத்தைச் சொன்னார். ராஜ உடையாரால் நம்பவே முடியவில்லை. 'சரி அந்தணரே, நாளை காலையில் லஷ்மிரமணசுவாமி கோயிலுக்கு வந்துவிடுங்கள்' என்றார்.

மறுநாள். பூஜைகளுக்குப் பின் இறைவனை மனமார வேண்டிக்கொண்ட ராஜ உடையார், அந்தணரின் கண்களைத் தொட்டார். டொட்டடொய்ங்! 'எனது இன்னொரு கண்ணிலும் பார்வை வந்துவிட்டது. நன்றி ராஜா! நீவிர் நீடுழி வாழ்க!' குஷியாகக் குதித்த அந்தணர், திருப்பதியை நோக்கி ஓட ஆரம்பித்தார்.

ராஜ உடையார் 'அற்புதம்' நிகழ்த்தியதாகக் கூறப்படும் அரண்மனை வளாகத்திலுள்ள அந்த லஷ்மிரமணசுவாமி கோயிலில்தான் ஒருமுறை அவருடைய உயிருக்கு உலை வைக்கப் பட்டது.



# 138

# தீர்த்தம் சாப்பிடுங்கோ!

'உமக்கு எமன் நான்தான். உமது முடிவு என்னால்தான் நிகழும் ராஜ உடையாரே!' - வீரராஜய்யா தனக்குள் உறுதி எடுத்திருந்தார்.

மைசூருக்குள்பட்ட காருகஹல்லி பகுதியின் தளபதி வீரராஜய்யா. மைசூர் ராஜா ராஜ உடையாருக்கு நெருங்கிய உறவினரும்கூட. ஆனால் பரம்பரைப் பகை தொடர்ந்து கொண்டிருந்தது.

வீரராஜய்யாவின் ஆட்சிக்குள்பட்ட எல்லையில்தான் நஞ்சன்குடி என்ற ஊரும் அங்கு ஸ்ரீகந்தேஸ்வரா ஆலயமும் இருந்தன. பக்திப் பழமான ராஜ உடையார் சுற்றிலுமுள்ள கோயில்களுக்கெல்லாம் அடிக்கடி செல்வார். அப்படித்தான் ஸ்ரீகந்தேஸ்வரா ஆலயத்துக்கும் சென்று வந்தார்.

எதிரி ஒருவர், தன் எல்லைக்குள்ளேயே சாதாரணமாக வந்து சாமி தரிசனம் செய்து விட்டுப் போவதை வீரராஜய்யாவால் பொறுத்துக்கொள்ளமுடியவில்லை. எவ்வளவோ முயன்றும் அவரால், ராஜ உடையார் வந்து செல்வதைத் தடுக்க இயலவில்லை. நேரடியாக மோதி ஜெயிக்கும் அளவுக்கு வலிமை இல்லாத வீரராஜய்யா, சதித்திட்டம் ஒன்றைத் தீட்டினார். அந்தச் சம்பவம் நிகழ்ந்த ஆண்டு 1595.

காலை எழுந்ததும் தரிசனம் என்பது ராஜ உடையாரின் வழக்கம். அதுவும் மைசூரிலிருந்தால் அரண்மனை வளாகத்திலுள்ள லஷ்மிரமணசுவாமியைத் தரிசிக்கத் தவறமாட்டார். பூஜைகள் செய்ய வயதான பூசாரி சீனிவாசய்யா தயாராக

இருப்பார். தரிசனத்துக்குப் பிறகே ராஜ உடையார் அன்றைய வேலைகளைத் தொடங்குவார்.

அன்று பகல் நேரத்தில் சீனிவாசய்யா, கோயிலைச் சாத்திவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்த போது, ஒரு முரடன் அவரை வழிமறித்தான். வீரராஜய்யா அனுப்பிய ஆள். 'என்ன ஓய், எப்படி இருக்கிறீர்?'

'எனக்கென்ன, பகவான் புண்ணியத்துல நன்னாயிருக்கேன்.'

'இந்தாரும். வைத்துக் கொள்ளும்' - முரடன், சீனிவாசய்யாவின் கையில் ஒரு துணிப்பையைத் திணித்தான். அவர் அதைப் பிரித்துப் பார்த்தார். முழுக்க தங்கக்காசுகள். பதறிப்போனார்.

'அய்யா, என்னது இது? ஆலயத்துக்கா? பகவானுக்குக் காணிக்கையா கொடுக்கறேளா?'

'எல்லாம் உமக்குத்தான். வைச்சுக்கும் ஓய்!'

'நீங்க என்ன சொல்றேள்?'

'இது ஆரம்பம்தான். இன்னும் நிறைய செல்வம் உமக்குக் குவியப்போகிறது. நான் காருக ஹல்லி தளபதியோட ஆள். உம்மால் ஒரு காரியம் ஆகணும்.' சொன்னவன், சீனிவாசய்யாவின் காதருகே சென்று திட்டத்தைக் கிசுகிசுத்தான். முழுக்கக் கேட்ட சீனிவாசய்யாவின் முகத்தில் பீதி.

'இந்தப் பாவத்தை செய்ய என்னால முடியாது. என்னை விட்டுடுங்கோ...' பதறிய அவர் அங்கிருந்து ஓட எத்தனித்தார். முரட்டு ஆள், கத்தி ஒன்றை அவரது குரல்வளை அருகே கொண்டுசென்று அழுத்தினான்.

'உமக்கும் குடும்பம் இருக்கிறது. சொன்ன காரியத்தைச் செய்துமுடித்தால் ஆயுசுக்கும் நீர் வசதியாக வாழலாம். இல்லைஎன்றால் இங்கேயே உயிரைவிட வேண்டியதிருக்கும்.'

சீனிவாசய்யாவுக்கு வேறுவழியில்லை. நடுங்கும் கரங்களுடன் அந்த மூட்டையை வாங்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தார். 'ஊரைவிட்டு ஓடிப்போகலாம்னு தப்புக்கணக்குப் போடாதீர். என் கண்ணிலிருந்து தப்பமுடியாது' அந்த முரடன் கடைசியில் சொன்ன வார்த்தைகள் அவரது காதினில் ஒலித்துக்கொண்டே இருந்தன.

மறுநாள். ஏன்தான் விடிகிறது என்றிருந்தது சீனிவாசய்யாவுக்கு. தயங்கித் தயங்கி ஆலயத்தைத் திறந்தார். மனதார இறைவனிடம் மன்றாடி மன்னிப்புக் கேட்டுவிட்டு, தனது தினசரிக் கடமை களை ஆரம்பித்தார். 'இன்று ராஜா கோயிலுக்கு வராமல் இருக்கக்கூடாதா?' அவரது மனம் ஏங்கித் தவித்தது.

வெளியே சலசலப்பு. வழக்கமான நேரத்துக்கு வந்து நின்றார் ராஜ உடையார். பக்தியின்றி பயத்துடன் அர்ச்சனை, தீப ஆராதனை எல்லாம் செய்தார் சீனிவாசய்யா. பூஜைகளை எல்லாம் முடித்துவிட்டுப் பிரசாதத்துடன் ராஜாவை நெருங்கினார். தினமும் சீனிவாசய்யாவை நலம் விசாரிப்பது ராஜாவின் வழக்கம். 'இன்று உங்களுக்கு உடல்நிலை சரியில்லையா?' ராஜ உடையார் கேட்டதும் சீனிவாசய்யாவின் உதடுகள் பயத்தில் ஒட்டிக்கொண்டன.

'ஒண்ணுமில்லை... ஒண்ணுமேயில்லை. நன்னாத்தேன் இருக்கேன். நான்... அது... இன்னிக்கு வழக்கம்போலத்தான் இருக்கேன்.'

‘முகமெல்லாம் ஒருமாதிரி இருக்கிறதே...’

‘அது... வந்து... தூங்கலை. உடம்பு சரியில்லை. சரியாகிருவேன். நான் நல்லாயிருக்கேன்’ என்று சொல்லியபடியே தீர்த்தம் கொடுக்க நினைத்தார்.

‘தங்கள் கைகள் ஏன் இப்படி நடுங்கின்றன?’ ராஜ உடையார் கேட்டார்.

‘ஆமாம். நடுங்கத்தான் செய்கிறது. அது... வயசாகியிருச்சு. தீர்த்தம் சாப்பிடுங்கோ. இதுல ஒண்ணுமில்லை.’

‘ஆமாம். தீர்த்தம். பகவானின் பிரசாதம். அதில் என்ன இருக்கப்போகிறது?’

‘ஆமாம். புனிதமான பிரசாதம்தான். தீர்த்தத்துல ஒண்ணுமில்லை. நான் ஏதோ உளறுகிறேன். நீங்க சாப்பிடுங்கோ ராஜா’ தீர்த்தத்தைக் கொடுக்க முனைந்தார். ஆனால் ராஜ உடையார் உஷாராகி இருந்தார். இரண்டு காவலர்களை அழைத்தார். ‘சீனிவாசய்யாவை விசாரித்து உண்மையை வரவழையுங்கள்.’

ராஜாவின் கட்டளையைக் கேட்டதும் கதறிவிட்டார் சீனிவாசய்யா. அந்தத் தீர்த்தப்பாத்திரத்தை அப்படியே தூக்கி எறிந்துவிட்டு சாஷ்டாங்கமாக ராஜ உடையாரின் கால்களில் விழுந்து கதற ஆரம்பித்தார். ‘தப்பு பண்ணிட்டேன் ராஜா, பகவான் என்னை மன்னிக்கவே மாட்டான். தயவுசெஞ்சு என்னை தண்டிச்சிடாதீங்கோ. நான் உண்மையைச் சொல்லிடறேன். காருகஹல்லி தளபதியோட ஆள் என்னை மிரட்டினான். அதனாலதான் இப்படிச் செஞ்சுட்டேன். அந்தத் தீர்த்தத்துல விஷம் கலந்திருக்குது...’

இயக்கமின்றி உறைந்த ராஜ உடையார், கொஞ்ச நேரம் கழித்துதான் இயல்பானார். அந்தச் சதியில் இருந்து தன்னைக் காப்பாற்றியதற்காக இறைவனுக்கு நன்றி சொன்னார். வயதான சீனிவாசய்யாவுக்குப் பெரும் தண்டனை எதுவும் கொடுக்கப்படவில்லை. அவரைக் கன்னம்பாடி என்ற குக்கிராமத்துக்குக் குடும்பத்தோடு துரத்தியடித்தார்கள். ‘வீரராஜய்யாவை இனியும் விட்டுவைக்கலாகாது. கிளம்புங்கள்.’

பசவன்திட்டு காடுகளில் நடந்த நேரடிச் சண்டையில் வீரராஜய்யாவின் காதுகளும் மூக்கும் வெட்டப்பட்டன. சொத்துகள் சூறையாடப்பட்டன. அவரது கோட்டை அழிக்கப்பட்டது.

ஒருபுறம் உறவினர்கள் பரம்பரைப் பகையுணர்வோடு உரசிக் கொண்டிருக்க, இன்னொருபுறம் விஜய நகர ஆட்சியாளர்களோடு மோதல்கள் தொடர்ந்தன. குறிப்பாக ஸ்ரீரங்கப்பட்டணத்தின் ஆளுநர் இரண்டாம் திருமலாவுக்கும் ராஜ உடையாருக்குமான பகை, எப்போதுமே உறவு என்ற போர்வைக்குள் கனன்றுகொண்டேதான் இருந்தது.

தலைக்கோட்டை யுத்தத்தில் சிதைந்துபோன விஜயநகரப் பேரரசு, இரண்டாம் வேங்கட ராயர் காலத்தில் ஓரளவு பலத்தை மீட்டெடுத்து இருந்தது. அதேநேரத்தில் ராஜ உடையாரும் மைசூரின் பலத்தைப் பெருக்கிக் கொண்டிருக்கவே திருமலாவால் பொறுக்க முடியவில்லை.

1596ல் இரண்டாம் திருமலா ராயரிடமிருந்து அவருக்குக் கீழுள்ள ஆட்சியாளர்களுக்கெல்லாம் ஓலை ஒன்று சென்றது. ‘ஸ்ரீரங்கப்பட்டணத்தில் மகாநவமித் திருநாளை வெகுசிறப்பாகக் கொண்டாடவிருக்கிறோம். அனைவரும் வந்து சிறப்பிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.’



அந்தக்கால ஸ்ரீரங்கப்பட்டணம்

ராஜ உடையார் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் தனக்கென ஒற்றர்களை வைத்திருந்தார். அவர்கள் 'ஆபத்து எதுவுமில்லை' என்று தகவல் கொடுத்ததும் தனது இளைய சகோதரர் தேவராஜ உடையாருடன் ஸ்ரீரங்கப்பட்டணத்துக்குச் சென்றார். நகரெங்கும் தசராக்கோலம். நகருக்கு வெளியே முகாமிட்டிருந்தார் இரண்டாம் திருமலா. சந்திப்பு அங்கே நிகழ்ந்தது. உள்ளுக்குள் ஒருவரை ஒருவர் வீழ்த்த வேண்டும் என்ற வெறி இருந்தாலும் உதட்டளவில் இனிக்க இனிக்கப் பேசினார்கள். பிரச்னை வேண்டாம். சமாதானமாக இருப்போம் என்று நட்போடு கைகுலுக்கிக் கொண்டார்கள்.

கூடாரத்தை விட்டு ராஜ உடையார் கிளம்பப் போகிறார் என்று அறிவிக்க மைசூரின் கட்டியக் காரர் முழங்க ஆரம்பித்தார். ராஜாதிராஜ, ராஜகம்பீர சமாச்சாரங்களோடு 'பிருதென்தெம்பர கண்டா' என்ற உடையார் பரம்பரைக்குரிய உயரிய பட்டத்தையும் சேர்த்து உச்சரித்தார்.

அந்த வார்த்தைகள் திருமலாவின் தன்மானத்தைச் சீண்டின. கொஞ்ச நேரத்துக்குமுன் கூடாரத் துக்குள் மையம் கொண்டிருந்த நேசம், பொசுங்கிப் போயிருந்தது. உடையார் சகோதரர்கள் கூடாரத்திலிருந்து வெளியேற, திருமலாவின் மனத்துக்குள் வெறி குடியேறியிருந்தது. 'என்ன தைரியம் இருந்தால் என் முன்பாகவே பரம்பரைப் பெருமைகளைச் சொல்லிப் பீற்றிக் கொள் வான்?' ராஜ உடையாரைத் தந்திரமாக வளைத்துப் பிடிக்கத் திட்டமிட்டார் திருமலா.

'உடையார் சகோதரர்கள் நாளை ரங்கநாதன் கோயிலுக்குச் செல்கிறார்களாம். இறைவனின் சந்நிதிக்குச் செல்லும்போது நிராயுதபாணியாகத்தான் இருப்பார்கள். நம் வீரர்கள் அங்கே மறைந்திருந்து அவர்களை வளைத்துப்பிடித்துக் கைது செய்ய வேண்டும்.'

திருமலாவின் இந்தச் சதித்திட்டம் ஸ்ரீரங்கப்பட்டணத்துக்காரரான சோமையாஜிக்குத் தெரிய வந்தது. அவர்தான் ராஜ உடையாரின் ஒற்றர். தகவலறிந்துகொண்ட உடையார் சகோதரர்கள் உஷாரானார்கள். 'நாம் நாளை ரங்கநாதன் ஆலயத்துக்குச் செல்லாவிட்டாலும் வேறு எங்காவது மடக்கிப்பிடித்துக் கைது செய்யவே நினைப்பார்கள். இதற்கு மேலும் இங்கிருந்தால் ஆபத்து. கிளம்பு தேவராஜா.' இரவோடு இரவாக உடையார் சகோதரர்கள் ஸ்ரீரங்கப்பட்டணத்தின் பிரமபுரி வாசல் வழியாகத் தப்பிச் சென்றார்கள்.

வெறுத்துப்போன திருமலா வெறியோடு கத்தினார். 'படைதிரட்டுங்கள். அவர்களைச் சின்னாபின்னாமாக்குவோம். மைசூரை நமதாக்குவோம்.' உடனிருந்த மற்றவர்கள் அவரை ஆசுவாசப்படுத்தினார்கள். இதற்கு முன்பு விஜயநகரப் படைகள் மைசூரை முற்றுகையிட்டு அடைந்த தோல்விகளை எல்லாம் விளக்கினார்கள். ஆகவே, மைசூரின் வாசல் எனக் கருதப்படும் கேசரே கோட்டையை லட்சக்கணக்கான வீரர்கள், நூற்றுக்கணக்கான குதிரைகள், யானைகளுடன் முற்றுகையிட்டார் திருமலா. ராஜ உடையாரும் அவரது சகோதரர்களும் மைசூரின் படைகளோடுவந்து சொந்த மண்ணில் எதிரிகளைத் துவம்சம் செய்தனர். நீண்ட போரில் விஜயநகரப் படைகளுக்குப் பெரும் இழப்பு. உயிர்தப்பி ஓடினார் திருமலா.

'இனியும் உன்னை நம்பக்கூடாது. நீ எதற்குமே லாயக்கற்றவன்' - பொரிந்து தள்ளினார் விஜயநகர அரசர் இரண்டாம் வேங்கட ராயர். திருமலா தலைகுனிந்து நின்றார். அந்தத் தோல்விக்குப் பிறகும் திருமலா, ராஜ உடையாரைத் தந்திரமாகக் கொல்ல முயன்ற சம்பவங்கள் உண்டு. எல்லாமே தோல்வியில் முடிந்தன. திருமலா யாரை ஜென்ம விரோதியாகக் கருதினாரோ, அதே ராஜ உடையாரோடு விஜயநகர அரசர் இரண்டாம் வேங்கட ராயர் நட்பு பாராட்ட ஆரம்பித்திருந்தார்.

வேங்கடாவின் தளபதி ஒருவரும் சில வீரர்களும் நரசிபுரம் மன்னரால் சிறைபிடித்து வைக்கப்பட்டிருந்தனர். 'அவர்களை மீட்டுத்தந்து உதவ வேண்டும்' என்று வேங்கடா, ராஜ உடையாரிடம் உதவி கேட்டார். அது திருமலாவுக்குப் பெருத்த அவமானமாகப் போயிற்று. ராஜ உடையாரும் அந்த உதவியை வெற்றிகரமாகச் செய்துமுடிக்கவே, மனத்தளவில் முற்றிலும் முடங்கிப் போனார் திருமலா. வினோதமான நோயொன்று உடலைப் பாதிக்க, ராஜ உடையாரின் நிரந்தர எதிரியான திருமலா, எல்லாப் பொறுப்புகளிலிருந்தும் விடுபட்டு ஒதுங்கினார்.

சில சரித்திர ஆசிரியர்கள் வேறு மாதிரியும் சொல்கிறார்கள். 1610ன் ஆரம்பத்தில் ராஜ உடையாரின் மகனான நரசராஜ உடையார், படை ஒன்றுடன் சென்று திருமலாவைச் சரணடையச் செய்ததாகவும், ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து அவரைத் துரத்திவிட்டதாகவும்.

'உடனே புறப்பட்டு ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு வரவும்' - ராஜ உடையாருக்கு ஓலை அனுப்பியிருந்தார் வேங்கட ராயர். 'எதற்கு வரச் சொல்லுகிறார்? நட்புரீதியான சந்திப்பாகத்தான் இருக்கும், திருமலா முடங்கிப் போனதால் பின்னணியில் சதி எதுவும் இருக்காது என்று நினைக்கிறேன்.' நம்பிக்கையோடு ஸ்ரீரங்கப்பட்டணத்தை அடைந்தார் ராஜ உடையார்.

பிரமாதமான வரவேற்பு. 'எனது தளபதியையும் வீரர்களையும் மீட்டுத் தந்ததுக்கு நன்றி. பதிலுக்கு உங்களுக்குப் பெரும்பரிசு ஒன்றைத் தரப்போகிறேன்.' வேங்கடா சொன்னதும் ராஜ உடையாருக்குள் குறுகுறுப்பு. பின் வேங்கடா சொன்ன வார்த்தைகளை அவரால் நம்பவே முடியவில்லை.

'ஸ்ரீரங்கப்பட்டணத்தை நீங்களே எடுத்துக்கொள்ளுங்கள்.'



# 139

# அலமேலுவின் சாபம்!

'இந்தச் சிம்மாசனத்தை யாரெல்லாம் வைச்சிருந்தாக தெரியுமா? தர்மராசா யுதிர்ஷ்ட்ரர் வெச்சிருந்தாரு. அப்புறம் அவரு பேரப்புள்ள பரிக்ஷிதா வைச்சிருந்தாரு. பாண்டவரு பரம்பரையில பலபேரு வைச்சிருந்தாங்க. அப்புறம் மகத நாட்டு மன்னரு, அதுக்கப்புறம் விக்ராமாதித்யாகிட்ட கொஞ்ச வருசம் இருந்துச்சு...'

- விஜயநகர அரசர் இரண்டாம் வேங்கட உடையார் பல நிமிடங்களுக்குப் பட்டிய லிட்டுக் கொண்டேபோக வியந்து நின்றார் மைசூர் ராஜா ராஜ உடையார்.

'அப்புறம் இந்தத் தங்கச் சிம்மாசனம் விஜயநகர அரசை உருவாக்குன ஹரிஹரா, புக்காகிட்ட கிடைச்சுது. வழிவழியா வந்த இந்தப் பரம்பரைச் சொத்து இனிமே ஸ்ரீரங்கப்பட்டண ராசாவான உங்ககிட்டத்தான் இருக்கோணும்.'

சொல்லிமுடித்துவிட்டு சற்றே மூச்சு வாங்கினார் வேங்கடா. வாஞ்சையுடன் அந்தத் தங்கச் சிம்மாசனத்தைத் தடவிப்பார்த்தார் ராஜ உடையார். மனம் கொள்ளா மகிழ்ச்சி. சிறியதாகச் செய்த ஓர் உதவிக்காக, வேங்கடா ஸ்ரீரங்கப் பட்டணத்தையும், அந்தத் தங்க அரியணைப் பொக்கிஷத்தையும் பரிசாகக் கொடுப்பார் என்று ராஜ உடையார் எதிர்பார்க்கவே இல்லை.

நன்னாள் ஒன்றில் ராஜ உடையார் ஸ்ரீரங்கப்பட்டணத்தை மைசூர் ராஜ்ஜியத்தின் தலைநகராக அறிவித்தார் (1610). அதுநாள்வரை ஸ்ரீரங்கப்பட்டணத்தை ஆண்டு அனுபவித்த இரண்டாம் திருமலா, எல்லாவற்றையும் இழந்து தலக்காடுக்கு


ரங்கநாதசுவாமி கோயில்,
19ம் நூற்றாண்டில்

அருகிலிருந்த மலிங்கி என்ற கிராமத்துக்குச் சென்று ஒரு மாளிகையில் முடங்கியிருந்தார். கூடவே அவரது இரண்டு மனைவிகளான அலமேலு அம்மாளும் ரங்கம்மாளும் இருந்தார்கள். திருமலா 1625வரை உயிர் வாழ்ந்தார் என்கின்றன சில குறிப்புகள். இல்லையில்லை, ஸ்ரீரங்கப் பட்டணத்தைவிட்டு வந்த கொஞ்ச நாள்களிலேயே உடல்நிலை மோசமாகி இறந்துபோனார் என்கிறார்கள் சிலர்.

எது எப்படியோ திருமாலா வைகுண்ட பதவி பெற்றுவிட்டார். அவரது முதல் மனைவி அலமேலுவின் கதைக்கு வருவோம். ஸ்ரீரங்கப்பட்டணத்தில் வாழ்ந்தவரையில் ரங்கநாத சுவாமி உடனுறை ரங்கநாயகி அம்மனைத் தரிசிப்பதில் அலமேலுவுக்கு எந்தவிதச் சங்கடமும் இருக்கவில்லை. ஆனால் மலிங்கிக்கு வந்தபிறகு அதில் சிக்கல் ஏற்பட்டது.

ரங்கநாயகி அம்மனுக்குரிய நகைகளை எல்லாம் அலமேலுதான் பாதுகாத்து வந்தாள். செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் ரங்கநாயகி அம்மனுக்குரிய நகைகளைக் கோயிலுக்கு எடுத்துச் சென்று கொடுப்பது அவளது வழக்கம். மலிங்கியில் இருந்தபோதும் அந்தச் சம்பிரதாயம் குலையாமல் பெரும்பாடுபட்டு ஸ்ரீரங்கப்பட்டணம் போய்வந்தாள்.

‘ஸ்ரீரங்கப்பட்டணமே நம்முடையது. ரங்கநாதரும் நமக்குரியவர்தான். ரங்கநாயகிக்குரிய நகைகளை மட்டும் அலமேலு அம்மாளிடம் ஏன் விட்டு வைத்திருக்க வேண்டும்? போய் வாங்கிவிட்டு வாருங்கள்.’ ராஜ உடையார் தனது வீரர்கள் சிலருக்குக் கட்டளையிட்டார்.

காவிரிக்கரையோரமாக ராஜ உடையாரின் படைவீரர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி அலமேலுவுக்குக் கிடைத்தது. அவசர அவசரமாகத் தனது மாளிகையின் கதவுகளை

எல்லாம் அடைக்கச் சொன்னாள். மாளிகைக்குள் பயம் சூழ்ந்துகொண்டது. சில நிமிடங் களிலேயே வெளியே கதவு தட்டப்படும் சத்தம்.

'யார் நீங்கள்? என்ன வேண்டும்?' - கதவைத் திறக்காமலேயே உள்ளிருந்தபடியே குரலெழுப் பினாள்.

'நமஸ்காரம் அம்மா. எங்களை ஸ்ரீரங்கப்பட்டண ராஜா அனுப்பிவைத்திருக்கிறார். ரங்கநாயகி அம்மனின் நகைகள் உங்களிடம் இருக்கிறதல்லவா. அதைப் பெற்றுக்கொண்டுபோக வந்துள் ளோம். கதவைத் திறங்கள்.'

அலமேலு அம்மாளுக்குள் நடுக்கம். தைரியத்தைக் குரலில் வைத்துப் பேசினாள். 'நான் ஏன் அதைத்தர வேண்டும்? முடியாது.'

'அம்மா, அவை ஸ்ரீரங்கப்பட்டண கஜானாவுக்குச் சேர வேண்டிய நகைகள். தங்களிடம் இருப்பது முறையல்ல. ராஜா சொல்லி அனுப்பியுள்ளார்.'

'உங்கள் ராஜாவை உளறாமல் இருக்கச் சொல்லுங்கள். அவை எங்களது பரம்பரை நகைகள். அதை அபகரிக்கும் எண்ணம் வேண்டாம். தரமுடியாது என்று அவரிடம் போய்ச் சொல்லுங் கள்.'

'அம்மா, அரச கட்டளையை எங்களால் மீறமுடியாது. நகைகளோடுதான் இந்த இடத்தை விட்டுக் கிளம்புவோம். தாங்களாகவே கொடுத்துவிடுவது நல்லது. அதுவரை நாங்கள் இங்கேயே காத்திருப்போம்.'

நீண்ட நேர விவாதத்துக்குப் பின் மாளிகைக் கதவைத் திறந்தாள் அலமேலு அம்மாள். தனது மூக்கில் அணிந்திருந்த பெரிய மூக்குத்தியைக் கழற்றிக் கொடுத்தாள். 'இதை மட்டும்தான் தரமுடியும்.'

வெறும் மூக்குத்தியை மட்டும் சுமந்துவந்த வீரர்களைப் பார்த்து ராஜ உடையாருக்குக் கோபம் உச்சந்தலையில் சென்று உட்கார்ந்தது. 'சிறு படையோடு செல்லுங்கள். முற்றுகையிடுங்கள். வற்புறுத்துங்கள். மிரட்டுங்கள். அத்தனை நகைகளும் வந்தாக வேண்டும்.'

ஒரு படையே திரண்டு வருவதைப் பார்த்த அலமேலு அம்மாள் திகைத்து நின்றாள். மாளிகைக் கதவைத் தட்டித்தட்டியே தகர்த்துவிடுவார்கள் போலிருந்தது. 'நிறுத்துங்கள். அடுத்தவரது நகைகளுக்காக ஏன் இப்படி அலைகிறீர்கள். இவை கடவுளுக்குச் சேர வேண்டியவை. உங்கள் ராஜாவின் அந்தப்புரத்தில் கொஞ்சி விளையாடும் குமரிகளுக்கானது அல்ல.' அலமேலு அம்மாளின் புலம்பல் யாருடைய காதிலும் விழவில்லை.

'அம்மா, பாதாள வழியைத் திறந்து வைக்கிறேன். நகையை எல்லாம் எடுத்துக்கிட்டு அது வழியா தப்பிச்சுப் போயிருங்க.' பணிப்பெண் ஆலோசனை சொன்னாள். கண்ணீர் பெருக நகைகளை மூட்டைகட்ட ஆரம்பித்தாள் அலமேலு. 'அய்யா கொஞ்சம் பொறுமையா இருங்க. அம்மா, உங்ககிட்ட கொடுக்கறதுக்காக நகைகளை எல்லாம் எடுத்துவைச்சுக்கிட்டு இருக்காங்க' பணிப்பெண் சன்னல் வழியாகத் தகவல் சொன்னதும் வீரர்கள் அமைதி யானார்கள்.

'வைதீஸ்வரா என்னைக் காப்பாற்று' - காவிரிக்கரையில் மூச்சுவாங்க ஓடிக்கொண்டிருந்தாள் அலமேலு அம்மாள். கையில் நகை மூட்டை. சிறிது நேரம் மாளிகைக்குள் இருந்து எந்தச்

சத்தமும் வரவில்லை. சந்தேகப்பட்ட வீரர்கள் கதவை உடைத்து மாளிகைக்குள் புகுந்தார்கள். தேடினார்கள். 'அந்த அம்மாள் நம்மை ஏமாற்றிவிட்டாள். விடாதீர்கள், ஊர் எல்லையைத் தாண்டியிருக்க முடியாது.'

காவிரி அலமேலு அம்மாளின் கால் நனைத்துக் கொண்டிருந்தது. நதியைத் தாண்டினால் தலக்காடு. தப்பித்துவிடலாம். ஆனால் பருவமழைக்காலம். வெள்ளம். திரும்பிப் பார்த்தாள். தூரத்தில் வீரர்களின் தலை தெரிய ஆரம்பித்திருந்தது. வேகவேகமாக உயரமான பாறை ஒன்றின் மீது ஏறினாள். வீரர்கள் நெருங்கிஇருந்தார்கள். கேட்பவர்கள் நடுநடுங்கும் குரலில் கதற ஆரம்பித்தாள் அலமேலு அம்மாள்.

'எங்களுக்கு மானம்தான் முக்கியம். உயிர் துச்சம். உங்கள் ராஜாவிடம் போய்ச் சொல்லுங்கள். இந்த நகைகளோ, தலக்காடோ, மலிங்கியோ என்றுமே அவருக்கோ அவரது பரம்பரை யினருக்கோ கிடைக்கவே போவதில்லை. ராஜா மட்டுமல்ல, அவரது பரம்பரையே இனி வாழ்நாளெல்லாம் வருத்தப்படப்போகிறது. மலிங்கியில் வாழும் வைதீஸ்வரா! என்னை உனது மெய்யான பக்தையாக ஏற்றுக்கொண்டால், கணவருக்கு நேர்மையாக வாழ்ந்த எனக்கு உடனடி மரணத்தைக் கொடு. ஸ்ரீரங்கப்பட்டணத்தை ஆளும் அந்தக் கொடுங்கோலனுக்கு இந்தச் சாபத்தைக் கொடு.

தலக்காடு மரலாகலி!

மலிங்கி மதுவாகலி!

மைசூரு தொரகலிகே மக்களாகதே ஹோகலி!'

துடிதுடிக்கச் சபித்துவிட்டு, பாறையிலிருந்து குதித்தாள். காவிரியிடம் சரணாகதி அடைந்தாள். அலமேலு அம்மாளில் அந்த கன்னடச் சாபத்துக்கு கோனார் தமிழுரை அர்த்தம் இதுவே: தலக்காடு மண்ணுள் புதைந்துபோகட்டும். மலிங்கி நீரால் மூழ்கிப்போகட்டும். மைசூர் பரம்பரையில் இனி ராஜாக்களுக்கு வாரிசே இல்லாமல் போகட்டும்!'

நடந்த சம்பவங்களை எல்லாம் வீரர்கள் சொல்லச் சொல்ல நொறுங்கிப் போனார் ராஜ உடையார். கட்டுப்பாடின்றிக் கதறி அழ ஆரம்பித்தார். 'அய்யோ, பெரும்பாவம் செய்து விட்டேனே. ஓர் அப்பாவியை, பத்தினியைக் கொன்றுவிட்டேன். எனக்கு மன்னிப்பே கிடையாது.'

ராஜ உடையாருக்கு வாழும் நிமிடங்கள் நரகமாயின. தூங்க நினைத்து இமைகளை மூடினாலே, தலைவிரிகோலத்தில் அலமேலு அம்மாள் தோன்றி கண்கள் சிவக்கச் சாபம் விடும் காட்சி மீண்டும் மீண்டும் ஓடியது. தவித்துப்போனார். அடுத்த பத்துநாள்களிலேயே தலக்காட்டில் மணல் மழை பெய்தது. வைதீஸ்வரன் கோயில்கள் உள்பட பல ஆலயங்கள் புதைந்துபோயின, காவிரி தன் பாதைமாறி மலிங்கிக்குள் புகுந்தது என்றெல்லாம் வாய்வழிக் கதைகள் இன்றுவரை சொல்கிறார்கள்.

நிம்மதியிழந்திருந்த ராஜ உடையார் ஜோதிடரை வரவழைத்துப் பரிகாரம் கேட்டார். 'பத்தினி சாபம் பொல்லாததுதான் ராஜா. நாகத்தை நாம் கொன்றுவிட்டால் அந்த தோஷம் ஏழுதலை முறையைப் பாதிக்கும். அதற்காக நாகவழிபாடு செய்தால் கொல்லப்பட்ட நாகத்தின் ஆன்மா சாந்தியடையும். தற்போது நிகழ்ந்துள்ளதும் நாகதோஷத்துக்கு ஒப்பானதுதான். பரிகாரமும்

அதுவேதான். அலமேலு அம்மாளுக்குச் சிலை ஒன்றை எழுப்புங்கள். மனமுருக வழிபடுங்கள். அவளது ஆன்மா சாந்தியடைந்தால் தங்கள் பரம்பரைமீது சுமத்தப்பட்ட சாபங்கள் விலகும்.'

ராஜ உடையார் வெண்கலத்தில் அலமேலு அம்மாளுக்குச் சிலை ஒன்று செய்ய உத்தரவிட்டார். பூஜைக்கான முதல் நாளில் அவரால் சிலையின் கண்களை நேருக்கு நேர் பார்க்கமுடியவில்லை. குற்ற உணர்வு. கண்களில் நீர் வழிய, மனமுருக மன்னிப்பு கேட்டு பிரார்த்தனைகள் செய்தார். தன் வாழ்நாளெல்லாம் வேண்டிக்கொண்டே இருந்தார். ராஜ உடையார் தொடங்கி இன்றைய மைசூர் மகாராஜாவான கண்டதத்தா நரசிம்மராஜ உடையார்வரை அலமேலு அம்மாள் வழிபாடு செய்துகொண்டுதான் இருக்கிறார்கள். மைசூரில் கோலாகலமாகக் கொண்டாடப் படும் தசராவின் ஒன்பதாவது நாளில் ராஜ குடும்பத்தினர் மட்டும் கலந்துகொள்ளும் அலமேலு அம்மாள் வழிபாடு நடக்கிறது. எனில் அந்தச் சாபம் பலித்துவிட்டதா?

உணர்வுபூர்வமாக 'ஆமாம்' என்றும், அறிவியல்பூர்வமாக 'இல்லை' என்றும் சொல் கிறார்கள்.

உணர்வுபூர்வமான சில விளக்கங்கள். ராஜ உடையாருடைய நேரடி வாரிசுகளுக்கு அல்ப ஆயுசே கிட்டியது. அவருக்குப் பின் அரியணை ஏறியவர் அவரது பேரனே. அதற்குப் பின்னும் அந்தப் பரம்பரையில் நேரடி வாரிசுகள் அரியணை ஏறுவது அரிதாகத்தான் நிகழ்ந்தது. சகோதரர்களின் மகன்கள், தத்தெடுக்கப்பட்ட உறவுக்காரர்கள் என்றுதான் அரியணை ஏறினார்கள். தத்தெடுக்கப்பட்டு மகாராஜாவானவர்களுக்கும் பின்பு வாரிசு இல்லாமலோ / நிலைக்காமலோ போன சோகக்கதைகள் உண்டு.

சிலருக்குப் பெண்வாரிசுகள் மட்டுமே பிறந்ததுவும் உண்டு. சில மகாராஜாக்களுடைய மகாராணிகளுக்கு ஆண் வாரிசு பிறக்காமல் அங்கீகாரமில்லாத ஆசைநாயகிகளுக்குப் பிறந்த சோகச் சம்பவங்களும் உண்டு. எல்லாவற்றுக்கும் அந்தச் சாபம்தான் காரணம் என்று ராஜ குடும்பத்தினர் உள்படப் பலரும் நம்புகிறார்கள்.

மகாராஜாக்களுக்கு வாரிசுகள் இல்லாமல் போவதும், தத்தெடுப்புகள் நடப்பதும் சகஜம். மைசூரில் மட்டுமல்ல, பல்வேறு சமஸ்தானங்களுக்கும் பொதுவான விஷயம்தான். மைசூர் மகாராஜா பரம்பரையில் ஏன் எப்படி நிகழ்கிறது என்பதற்கு மரபணு ரீதியாகவோ அல்லது வேறு அறிவியல் முறையிலோ ஆராய்ச்சி செய்தால் தெளிவான உண்மைகளைப் பெறலாம் என்பது அறிவியலாளர்களின் வாதம்.

அலமேலு அம்மாளுக்குப் பூஜைகள் செய்யும் பூசாரிகள் பலருக்கும் நேரடி வாரிசு பாக்கியம் கிடையாது என்பது கிளைத்தகவல். ஒரு பூசாரிக்கு நேரடி ஆண் வாரிசு இருந்ததாம். அந்தப் பையனும் தசரா விழாவில் மின்சாரம் தாக்கி இறந்துவிட்டான் என்கிறார்கள். பூசாரிகளும் துக்கத்தை வெளிப்படுத்தும் வகையில் வாயில் துணியைக் கட்டிக்கொண்டே பூஜை செய்கிறார்கள்.

இன்னுமொரு விஷயம், 2013 டிசம்பரில், தன் அறுபதாவது வயதில் இறந்துபோன மைசூரின் கடைசி மகாராஜா கண்டதத்தா நரசிம்மராஜ உடையாருக்கும் குழந்தை பாக்கியம் இல்லை.



# மைசூரின் பி.எஸ். வீரப்பா!

அலமேலு அம்மாளின் சாபத்துக்குப் பிறகு தலக்காடும் மலிங்கியும் என்ன ஆயின? இன்று எப்படி இருக்கின்றன?

மைசூரில் சுமார் ஐம்பது கிலோமீட்டர் தொலைவிலிருக்கும் தலக்காடு கடந்த நானூறு வருடங்களாக 850 ஏக்கர் நிலப்பரப்புக்கு மண்மூடிக் கிடக்கிறது என்கிறார்கள்.

சலசலத்து ஓடும் காவிரியின் கரையில் தலக்காடு அழகான ஒரு கடற்கரை போலத் தான் காட்சியளிக்கிறது. சிவாலயங்கள் நிறைந்த அந்த பூமியில் இன்றுவரை பல கோயில்கள் பெரும்பாலும் மண்ணுக்குள் புதைந்தே கிடக்கின்றன. அலமேலு அம்மாள் வழிபட்ட வைதீஸ்வரன் கோயில் உள்பட.

சில வருடங்களுக்கு ஒருமுறை சில கோயில்கள் மட்டும் (குறிப்பாக பஞ்ச லிங்கங்கள் என்றழைக்கப்படும் ஐந்து சிவன் கோயில்கள்) பாதி மண்மூடிய நிலையில் வெளியே தெரிகின்றன. அந்தச் சமயங்களில் அந்தக் கோயில்களில் மண்ணை அகற்றி பக்தர்களின் தரிசனத்துக்கு வழிசெய்கிறார்கள். சில கோயில்களைச் சுற்றிச் சுவர்கள் எழுப்பி மண்மூடாமல் ஓரளவுக்குத் தடுப்பு ஏற்படுத்தியிருக்கிறார்கள். ‘எல்லாம் அலமேலு அம்மாளோட சாபம்தான் காரணம்’ என்று டூரிஸ்ட் கைடுகள் இன்றும் கதை சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

சரி, இப்படி ஒரு பிரதேசமே மூடிப்போகுமளவுக்கு மண் எங்கிருந்து வருகிறது என்பதற்கான மிகச்சரியான அறிவியல் காரணங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை.

காவிரி நதி தலக்காட்டின் அருகே மாபெரும் கொண்டைஊசி வளைவைக் கொண்டுள்ளது. பதினாறாம் நூற்றாண்டுக்கு முன்புவரை சிறிய வளைவாக இருந்த நதியின் பாதை, அதற்குப் பின்பு பெரிய வளைவாகிவிட்டது என்கிறார்கள்.

பதினான்காம் நூற்றாண்டில் விஜயநகரப் பேரரசினர் காவிரியில் மாதவ மந்திரி அணை கட்டியிருக்கிறார்கள். அதுவே காவிரியின் பாதைமாற்றத்துக்குக் காரணம் என்பது வரலாற்று ஆய்வாளர்களின் கருத்து. இந்தப் பாதை மாற்றத்தினாலும், பருவக்காற்றினாலும்தான் தலக்காட்டில் மண் சேருகிறது என்கிறார்கள் புவியியல் ஆய்வாளர்கள். பாதை மாறியதால்தான் மலிங்கியினுள் நீர் புகுந்ததாகவும், அங்கே பெரும்பாலான பகுதிகள் சதுப்புநிலமாக மாறி விட்டதாகவும் ஆய்வாளர்கள் சொல்கிறார்கள்.

சரி, தற்காலத்திலிருந்து ஒரு U டர்ன் போட்டு மீண்டும் பதினேழாம் நூற்றாண்டுக்கே செல்ல வேண்டியதிருக்கிறது. காரணம் அலமேலுவின் சாபத்துக்குப் பின் அனுதினமும் மனவேதனையோடு வாழ்ந்த மைசூர் ராஜா ராஜ உடையார் இறந்துவிட்டார் (1617). யார் அடுத்த ராஜா என்ற குழப்பமான சூழ்நிலை.

பட்டத்து இளவரசர் என்று அறியப்பட்ட நரசராஜா, தன் தந்தைக்கு முன்பாகவே இறந்து இருந்தார். ராஜ உடையாரின் அடுத்த இரண்டு மகன்களான நஞ்சராஜாவும் பெட்டாட ராஜாவும்கூட மேலோகப் பதவி அடைந்திருந்தனர். 'அந்த அலமேலுவோட சாபம் பழிச் சுடுச்சே. இப்படி வாரிசு இல்லாமத் தவிக்கிற நிலை வந்துருச்சே!' - அரண்மனைப் பெண்கள் ஒப்பாரி வைத்தார்கள்.

மந்திரி ஒருவர் நல்ல யோசனை ஒன்றை முன்வைத்தார். 'மகன்தானே இல்லை. ராஜாவுக்குத்தான் பேரன் இருக்கிறாரே. சிறியவர்தான். பரவாயில்லை. அவர் பெரியவர் ஆகும்வரை ராஜாவின் பிரதிநிதியாக இன்னொருவர் ஆட்சிப் பொறுப்பைக் கவனித்துக் கொள்ளட்டும்.'

பதினான்கு வயது சிறுவனான ஆறாம் சாமராஜ உடையார் மைசூரின் புதிய ராஜாவாக அறிவிக்கப்பட்டார். அவரது பிரதிநிதியாக தளவாய் பெட்டாடா ஆட்சியைக் கவனித்துக் கொண்டார். (தளவாய் என்றால் தளபதி என்று பொருள்.)

ராஜ உடையாரின் ராணிகள் அவரோடு சேர்ந்து நெருப்பு முக்தி அடைந்திருந்தனர். ராணி திம்மஜம்மணி தவிர. அவள் அப்போது ராஜ உடையாரின் கடைசி வாரிசைச் சுமந்து கொண்டிருந்தாள். பிறப்பது ஆண் குழந்தையாக இருந்தால்? எல்லோருக்குள்ளும் எதிர்பார்ப்பு. ஆண் குழந்தைதான் பிறந்தது. வைக்கப்பட்ட பெயர் இம்மடி ராஜ உடையார்.

விஜயநகர அரசர் இரண்டாம் வேங்கட ராயரும் இறந்திருந்தார். அந்த அரசு தனது இறுதிக் காலத்தில் இருந்தது. ராஜ உடையாரின் மறைவால் அருகிலிருந்த எதிரிகளுக்கு எல்லாம் குளிர்விட்டுப் போயிருந்தது. ஆனால் ராஜ உடையார் காலத்திலேயே அவருக்கு மிகவும் விசுவாசமாக இருந்த தளவாய் பெட்டாடா எதிரிகளைத் தலைதூக்க விடவில்லை. அவரால் மைசூர் ராஜ்ஜியம் பிழைத்துக் கொண்டிருந்தது.

ஆறாம் சாமராஜ உடையார் அந்த நம்பிக்கையை எல்லாம் சிதறடித்துக் கொண்டிருந்தார். பருவ வயது. ராஜாவாகப் போகும் தலைக்கனம். கெட்ட நண்பர்களின் சேர்க்கை. உல்லாசமும் சல்லாபமும் அவரது இருகண்களாக இருந்தன. பெண் வாசமின்றி அவரால்

சுவாசிக்கக்கூட முடியவில்லை. உடலில் ரத்தத்துக்குப் பதிலாகச் சோமபானம் ஓடிக் கொண்டிருந்தது. தளவாய் பெட்டாடா நொந்துபோனார். 'ராஜ உடையாரின் பரம்பரையில் இப்படி ஒரு வாரிசா?'

'தளவாய், ராஜாவைச் சொல்லிக் குற்றமில்லை. அவருடனேயே எப்போதும் திரியும் வைத்தியர் பொம்மராஜா, பாடம் சொல்லிக் கொடுக்க நியமிக்கப்பட்ட சோமையாஜி, ரங்கநாதன் ஆகியோர்தான் காரணம். அவர்கள்தான் ராஜாவைக் கெடுத்துக் கொண்டு இருக்கிறார்கள். அதனால்தான் கல்வி கற்கவேண்டிய வயதில் அவர் கலவியில்...'

தளவாய் பெட்டாடா அதிரடி முடிவெடுத்தார். அந்த மூன்று பேரையும் பணிநீக்கம் செய்து புதிய நபர்களை நியமித்தார். நண்பர்களின்றி ராஜா துடிதுடித்துப் போனார். 'யாரங்கே? அந்தத் தளவாயைச் சிறையிலடையுங்கள்.'

அத்தோடு நிறுத்திக் கொள்ளாத ராஜா, பொதுமக்கள் முன்னிலையில் தளவாயின் கண்களைத் தோண்டவும் வைத்தார். தனது ராஜவிசுவாசத்துக்குக் கிடைத்த பரிசை நினைத்து நொந்துபோனார் பெட்டாடா. புதிய தளவாயாக பன்னூர் லிங்கண்ணா நியமிக்கப்பட்டார். அந்தக் கெட்ட நண்பர்களுக்குப் பழைய வேலை மீண்டும் கிடைத்தது.

பெட்டாடாவுக்கு நெருக்கமானவர்கள், ராஜாவைக் கொலை செய்யச் சதி செய்தார்கள். என்ன சதி? வேறென்ன, உணவில் அல்லது பானத்தில் விஷம். அரண்மனைக்காரர்கள் புதிதாக யோசிக்கவே இல்லைபோல. காலம் காலமாக ஒரே பாணி. சதி விவரம் ஒரு வேலைக்காரன் மூலமாக அம்பலமானது. ஆறாம் சாமராஜா அந்த உறவினர்களைப் பிடித்து மனமார மரண தண்டனை கொடுத்தார். 1620ல் ஆறாம் சாமராஜ உடையார் முறைப்படி அதிகாரத்துக்கு வந்தார்.

பக்கத்துப் பிரதேச எதிரிகளோடு அவ்வப்போது மோதல்களுக்குக் குறைவில்லை. எல்லாவற்றையும் தளவாய் லிங்கண்ணா பார்த்துக் கொள்ள, எதைப்பற்றியும் கவலையின்றி உல்லாசத்தில் உழன்றார் ஆறாம் சாமராஜர். ஐந்து பெண்களைத் திருமணம் செய்துகொண்டார். புதிய இடங்களுக்குச் சென்று சுற்றிப் பார்ப்பதிலும் இலக்கியம் எழுதுவதிலும் அவருக்கு நிறைய விருப்பமிருந்தது. கட்டுப்பாடில்லாத வாழ்க்கை. முப்பத்து மூன்று வயதிலேயே அவரது தேகம் களைத்துப்போனது. விடைபெற்றார் (1637).

முட்டாஜம்மணி, தேவிராமம்மணி, சித்தஜம்மணி, சன்னாஜம்மணி, தோடாஜம்மணி ஆறாம் சாமராஜ உடையாருக்கு வாக்கப்பட்டதால் அந்த ஐந்து அம்மணிகளும் நெருப்புக்கும் வாக்கப்பட்டனர்.

பேரனுக்குப் பின் ஆட்சிக்கு வந்தார் மகன். ராஜ உடையாரின் கடைசி வாரிசு. இருபது வயது இம்மடி ராஜ உடையார் (என்ற இரண்டாம் ராஜ உடையார்). அந்தச் சமயத்தில் தளவாயாக இருந்தவர் விக்கிரமராயா. வில்லன் விக்கிரமராயா. பி.எஸ். வீரப்பாபோல என்று கற்பனை செய்துகொள்வது வசதி.

'மது உள்ளே இறங்கிவிட்டால் ராஜா ஒரு ஜடம். அனுபவம், திறமை, புத்திசாலித்தனம் எதுவுமே எப்போதுமே கிடையாது. வீரமா, அப்படியென்றால்? இப்படிப்பட்ட ஒருவருக்கு அரியணையில் அமர என்ன தகுதி இருக்கிறது? அவரை அகற்றிவிட்டு மைசூரின் ராஜாவாக

நான் மாற நினைப்பதில் தவறே இல்லை. இம்மடி ராஜ உடையாரே, எமன் வருகிறான், தயாராக இருங்கள்' கொஞ்சம் கொஞ்சமாகக் கஜானாவைச் சுரண்டிக் கொண்டிருந்த விக்கிரமராயா, ராஜாவைத் தீர்த்துக் கட்ட சரியான தருணத்தையும் எதிர்நோக்கியிருந்தார்.

ஒருநாள் கஜானாவுக்குத் திடீர் விஜயம் சென்ற இம்மடி ராஜ உடையார் அங்கே சம்பந்தமில்லாத நபர்களின் நடமாட்டத்தைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். எல்லோருமே தளவாயின் ஆள்கள் தான் என்றறிந்து அவர்களைக் கைது செய்யச் சொன்னார். விக்கிரமராயா அங்கு வந்தார்.

'என்ன ராஜா? தங்களுக்கு இங்கே என்ன வேலை? எல்லாவற்றையும் நான் பார்த்துக்கொள் கிறேன். எதிலும் தலையிடாமல் இருப்பதே உங்களுக்கு நல்லது. புரிந்துகொண்டு இடத்தைக் காலிசெய்கிறீர்களா?'

அந்த மிரட்டலில் கலங்கிப்போன ராஜா நேராகத் தனது தாயின் அறைக்கு விரைந்தார். தனது மகனது முகம் வெளிறிப்போயிருப்பதைப் பார்த்துப் பதறினார் ராணி திம்மஜம்மணி. 'அய்யோ, அம்மா, தலையே வெடித்துவிடுவதுபோல வலிக்கிறது. நான் இங்கே படுத்துக் கொள்கிறேன்.'

கொஞ்சம் கொஞ்சமாகப் பேச்சுக் கொடுத்து நடந்த விஷயங்களைத் தெரிந்து கொண்டாள் திம்மஜம்மணி. வைத்தியரை வரவழைத்தாள். வைத்தியர்? ஆறாம் சாமராஜாவோடு சேர்ந்து கூத்தடித்த அதே பொம்மராஜாதான்.

'ராஜாவுக்குக் கடும் தலைவலி. உடனடியாக மருந்துகொடுங்கள்' ராணி சொன்ன உடனேயே 'கஷாயம் தயாராக இருக்கிறது அம்மா. இதோ தருகிறேன்' என்று தனது பெட்டிக்குள் கையை விட்டார் பொம்மராஜா. 'மருந்தெல்லாம் எனக்கு வேண்டாம்' ராஜா முரண்டு பிடித்தார். 'அப்படியெல்லாம் சொல்லாதே. முதலில் உடல்நிலை குணமாக வேண்டும். அப்போதுதான் பிரச்னைகளை எல்லாம் தீர்க்கமுடியும். தயவுசெய்து இதைக் குடி!' தாய்ப்பாசத்தோடு ஊட்டினாள் திம்மஜம்மணி.

இரண்டாவது நிமிடம். தொண்டையை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு கதற ஆரம் பித்தார் ராஜா. 'அய்யோ எரிகிறதே! எரிகிறதே! தாங்க முடியவில்லை. அம்மா சாமுண்டீஸ்வரி...'

திம்மஜம்மணி பதறித் துடிக்க, பொம்மராஜா பொம்மையாக நின்றுகொண்டிருந்தார். கண்கள் செருக, வாயில் நுரைவடிய இம்மடி ராஜ உடையார் அடங்கினார். நாடிபிடித்துப் பார்த்துவிட்டு 'மன்னிக்க வேண்டும் ராணி' என்று சொல்லிவிட்டு நடையைக் கட்டினார் பொம்மராஜா. அரண்மனை கண்ணீரில் மூழ்க ஆரம்பித்தது. விக்கிரமராயாவும் அவரது ஆள்களும் அந்த மகிழ்ச்சியைக் கொண்டாட ஆரம்பித்தார்கள்.

இறுதிச் சடங்குகள் எல்லாம் முடிந்தன. சற்றே தன்னிலைக்குத் திரும்பிய திம்மஜம்மணி, தனக்கு விசுவாசமுள்ள வீரர்கள் சிலரை வரவழைத்தாள். 'ராஜாவின் மரணத்தில் எனக்குச் சந்தேகம் இருக்கிறது. வைத்தியரை ரகசியமாக விசாரியுங்கள்.'

வீரர்களிடம் உதைவாங்கத் தெம்பில்லாமல் உண்மையைக் கொட்டினார் பொம்மராஜா. 'அந்தக் கஷாயத்தில் விஷம் கலந்திருந்தது. தளவாய்தான் கலக்கச் சொன்னார். இல்லையேல் என் தலையைச் சீவிவிடுவேன் என மிரட்டினார்.'

திம்மஜம்மணி தன் மார்பில் அடித்து அழ ஆரம்பித்தாள். 'பாலூட்டி வளர்த்த நானே என் மகனுக்கு விஷத்தையும் புகட்டிக் கொன்றுவிட்டேனே. பாவி நான்.'

அரியணை ஏறிய ஒரே வருடத்தில் இம்மடி ராஜ உடையார் இறந்துபோயிருக்க, அடுத்து அரியணை ஏற ராஜ உடையாரின் வாரிசுகள் என்று யாருமில்லை.

'அலமேலு அம்மாள் சாபத்தால உடையார் குடும்பமே ஒண்ணுமில்லாமப் போயிருச்சே. அடுத்து அந்தக் கொலைகார விக்கிரமராயா ஆட்சிக்கு வரப்போறான். இதுவரை நல்லா யிருக்குற மைசூர், இனி நாசமாப் போகப்போகுது. இந்தக் கொடுமைக்கெல்லாம் முடிவுகட்ட ஒருத்தன் எங்கிருந்தாவது வரமாட்டானா?' கதாநாயகனின் என்ட்ரிக்கு முன் யாரோ துணைநடிகர் இப்படி ஒரு பில்ட்-அப் வசனத்தைப் பேசுவது சினிமா சம்பிரதாயம்.

மைசூரைக் காப்பாற்றப் பிறந்த அந்தக் கதாநாயகன் அப்போது திருச்சிராப்பள்ளியில் இருந்தான்.



141

# ஒத்தைக்கு ஒத்தை வர்றியா!

திருச்சிராப்பள்ளிக்குள் நுழையும் ஒரு புதிய மனிதன், உணவில் உப்புப் போட்டுத் தின்பவனாக இருந்தால் அவ்வளவுதான், மீசை துடிதுடித்துவிடும். காரணம் நகரத்தின் வெளிப்புறக் கோட்டைச் சுவரில் தொங்கவிடப்பட்ட அந்தச் சிங்கத்தின் தோல்.

இந்தக் காலத்தில் வேண்டுமானால் ஏதாவது மிருகத்தின் தோல் தொங்கிக் கொண்டிருந்தால் வாய்பிளந்து பார்த்துவிட்டுப் போவோம். ஆனால் அந்தக் காலத்தில் ஊருக்கு வெளியே மிருகத்தின் தோலை, குறிப்பாக சிங்கம் அல்லது புலியின் தோலைத் தொங்கவிடுவதென்பது ஊருக்குள் வரும் புதியவர்களுக்கு அல்லது எதிரிகளுக்குச் சவால்விடும் செயல்.

'மவனே, உன்னைக் காலி பண்ணுறதுக்குன்னே எங்க ஊர்ல ஒருத்தன் இருக்கு றான். தெனாவெட்டு இருந்தா உள்ள காலை எடுத்து வை.'

பிறவி வீரரான ரணதீரா கந்திரவ நரசராஜ உடையாருக்கும் திருச்சிராப்பள்ளியை அடைந்ததுமே கோபத்தில் கண்கள் சிவந்தன. ஆஜானுபாகுவான இளைஞர். ஆகச் சிறந்த மல்யுத்தவீரர். புதிய இடங்களைச் சுற்றிப் பார்ப்பதில் ஆர்வம் கொண்டவர். மைசூர் ராஜ பரம்பரையில் பிறந்தவரும்கூட.

அலமேலுவிடம் சாபம் வாங்கிக் கட்டிக் கொண்டாரே ராஜ உடையார், அவரது சொந்த அண்ணனான ஐந்தாம் சாமராஜ உடையாரின் மகன்தான் இந்த ரணதீரா. அதுதான் பார்த்தோமே, நிர்வாகத் திறமையில்லாத ஐந்தாம் சாமராஜ உடையார்,

தனது தம்பியான ராஜ உடையாருக்குப் பதவியைக் கொடுத்துவிட்டு ஒதுங்கி குண்டுலு தெரகணம்பி என்ற கிராமத்தில் வாழச் சென்றார் என்று. ரணதீரா அங்குதான் பிறந்தார். மைசூரில் அரண்மனைக்காரர்களோடு எந்தவிதமான நெருக்கமான உறவும் ரணதீரா வைத்துக் கொள்ளவில்லை. இருந்தாலும் தனது சித்தப்பா குடும்பத்தில் என்னதான் நடக்கிறது என்று கண்காணித்துக் கொண்டுதான் இருந்தார். அவ்வப்போது அரண்மனை உறவினர்களை எங்கே யாவது சந்தித்துப் பேசுவதுண்டு. அவ்வளவே. மற்றபடி தானுண்டு தனது மல்யுத்தமுண்டு என்று எளிய வாழ்க்கை வாழ்ந்துவந்தார்.

'இந்தத் தம்பியைப் பார்த்தால் ஊருக்குப் புதியவனாகத் தெரிகிறது. மாமிச மலை மஹாமாலா விடம் சிக்கி என்ன ஆகப்போகிறானோ?' உள்ளூர்க்காரர்கள் இருவர் கிசுகிசுத்துக் கொண்டார்கள்.

'யாரய்யா அந்த மஹாமாலா?' - சத்தமாகக் கேட்டார் ரணதீரா.

'சத்தம்போடாதே தம்பி. மஹாமாலா இங்கேயே வந்து உன் இடுப்பெலும்பை உடைத்து விடப்போகிறார். அவர் திருச்சிராப்பள்ளியின் மிகச்சிறந்த மல்யுத்தவீரர். மஹாமாலாவிடம் மோத நினைப்பவர்களுக்கே மரணம் நிச்சயம். உன்னைப்போல வெளியூர்க்காரர்கள் எல்லாம் விவரம் தெரியாமல் மோதி உயிரை விட்டிருக்கிறார்கள். திருச்சிராப்பள்ளியை ஆளும் அரசருக்கு மிகவும் வேண்டியவர். மஹாமாலா சொல்லித்தான் இப்படி சிங்கத்தோலைத் தொங்கவிட்டிருக்கிறார் அரசர். என்னப்பா, சொல்வது புரிகிறதா? உயிர் மேல் ஆசையிருந்தால் இங்கிருந்து ஓடிவிடு.'

ரணதீராவால் பொறுக்க முடியவில்லை. தன் இடைவாளை உருவி அந்தச் சிங்கத்தோல்மீது ஒரு வெட்டு. உள்ளூர்க்காரர்கள் பதறி ஓடினார்கள். எங்கிருந்தோ பாய்ந்துவந்த நான்கைந்து வீரர்கள், ரணதீராவைப் பிடித்துக் கொண்டார்கள். வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்று ஒரு மைதானத்துக்குள் தள்ளினார்கள்.

அசராத ரணதீரா கர்ஜித்தார். 'எங்கே அந்த மஹாமாலா?'

நிலம் அதிர வந்து குதித்தான் மஹாமாலா. மோதத் தயாரானார்கள். கூடிநின்ற கூட்டம் அமைதியாக நின்றது. அதுவரை அவர்கள் மஹாமாலா உதைவாங்கிப் பார்த்ததேயில்லை. அன்று அந்தக் காட்சி கிடைத்தது. ரணதீரா, மஹாமாலாவைத் தலைக்குமேல் தூக்கித் தட்டா மாலை சுற்றி வீசினார். விழுந்து சிரமப்பட்டு எழுந்த மஹாமாலாவால் தனது தோல்வியை ஒப்புக்கொள்ள முடியவில்லை.

எதிரி சற்றே பலம் வாய்ந்தவனாக இருக்கும்பட்சத்தில் மறைத்து வைத்திருக்கும் ஆயுதத்தை வெளியே எடுத்து ரகசியமாகத் தாக்குவான் மஹாமாலா. நிலைகுலையும் சமயத்தில் கொலையும் செய்வான். இதுவே அவனது உத்தி. 'வா, வந்து உன் புஜபலத்தைக் காட்டு' உறுமினான் மஹாபாலா. இருவரும் முஷ்டியை மடக்கிக் கரம் கோர்த்தார்கள். சட்டென ஆயுதத்தை எடுத்துத் தாக்க வந்தான் மஹாமாலா. சுதாரித்துக் கொண்ட ரணதீரா ஆயுதத்தைத் தட்டிவிட்டு எட்டி மிதித்தார். அருகிலிருந்த காவலாளியின் கையிலிருந்த ஈட்டியைப் பிடுங்கி...

முதுகைத் துளைத்து வெளியே வந்திருந்த ஈட்டியில் ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது, அதன் வழியே மஹாமாலாவின் உயிரும். அந்தக் கொடியவனின் அட்டகாசத்தினால்


திருச்சிராப்பள்ளி - 19ம் நூற்றாண்டில்

நொந்துபோயிருந்த திருச்சிராப்பள்ளி மக்கள் ரணதீராவை வியந்து ஒலியெழுப்ப ஆரம்பித்தார்கள். மேற்கொண்டு அங்கேயிருந்தால் வேறுபல புதிய பிரச்னைகளை எதிர்கொள்ள வேண்டியதிருக்கும் என்பதால் ரணதீரா வேகவேகமாக வெளியேறினார்.

கோட்டைச் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த அந்தச் சிங்கத் தோலுக்குக் கீழே இப்படி எழுதி வைத்துவிட்டுப் போனார் உங்கள் ஊர் சூரனைக் கொன்றது மைசூரைச் சேர்ந்த ஒரு நிஜ வீரன்.

அவமானத்தால் உடல்கூச, திருச்சிராப்பள்ளி அரசர் தன்னிலை இழந்து கத்தினார். 'அவனைத் தேடிப்பிடித்து என்முன் உயிரோடு கொண்டு வாருங்கள். குறைந்தபட்சம் அவன் தலையாவது என் காலடியில் உருள வேண்டும்.'

பத்திரமாகத் தனது கிராமமான குண்டுலு தெரகணம்பிக்குத் திரும்பியிருந்தார் ரணதீரா. மைசூரிலிருந்து அவருக்கு ஒரு செய்தி வந்திருந்தது. அனுப்பியவர் தளவாய் விக்கிரமராயா. 'மைசூர் ராஜா இம்மடி ராஜ உடையார் இறந்துவிட்டார். ராஜ குடும்பத்து வாரிசான நீங்கள் தான் அடுத்த ராஜாவாகப் பதவியேற்க வேண்டும்.'

ரணதீராவுக்குப் பெரும் அதிர்ச்சி. இம்மடி ராஜ உடையார் எப்படி இறந்திருப்பார்? நோயா? சின்ன வயதுதானே? போருக்குப் போகும் ஆள் கிடையாதே? அடுத்ததாக என்னை அரியணை

ஏற அழைக்கிறார்கள். ஆனால் அழைப்பு குடும்பத்தினரிடமிருந்து வராமல், தளவாயிடமிருந் தல்லவா வந்துள்ளது. இந்தச் செய்தியில் எவ்வளவு உண்மையிருக்கும்?

கொஞ்ச நேரத்தில் அவரைத் தேடி அந்தணர் ஒருவர் வந்தார். 'இளவரசரே! மைசூர் ராணி திம்மஜம்மணி என்னை அனுப்பினார்கள். அங்கே ராஜா இம்மடி ராஜ உடையாரின் பதவிக்கும் உயிருக்கும் ஆபத்தான நிலை. தாங்கள்தான் தயவுசெய்து வந்து காப்பாற்ற வேண்டும். ராணியார் மிகுந்த கவலையில் இருக்கிறார்கள்.'

குழம்பிப்போனார் ரணதீரா. ராஜா இறந்துவிட்டதாக ஒரு தகவல். ராஜாவைக் காப்பாற்றும்படி இன்னொரு தகவல். 'அந்தணரே! தற்போது மைசூரின் நிலைதான் என்ன? கொஞ்சம் தெளிவாகச் சொல்லுங்களேன்' கேட்டார் ரணதீரா.

அந்தணர் பல வருடங்களாக அரண்மனையில் நடந்த விவகாரங்களை ஒவ்வொன்றாக எடுத்து விட ஆரம்பித்தார். பின் விக்கிரமராயாவின் அராஜகங்களைப் புட்டுப்புட்டு வைத்தார்.

'...ராணி திம்மஜம்மணி தனது மகனைத்தான் முழுவதும் நம்பினார். ஆனால் ராஜாவுக்கு மதுவைத்தவிர வேறெதுவும் முக்கியமானதாகத் தெரியவில்லை. ஒருநாள் குடித்துவிட்டு முழுபோதையில் கிடந்த மகனைப் பார்த்து ராணி கோபத்தில் கடுமையாகத் திட்டித் தீர்த்து விட்டார். அதனால் சற்றே மனம் வருந்திய ராஜா, மறுநாளே கஜானாவுக்குத் திடீர் விஜயம் செய்தார். அங்கே விக்கிரமராயாவின் ஆள்கள் சுதந்தரமாகக் கொள்ளையடித்துக் கொண்டிருந் தார்கள். அந்த நபர்களை ராஜா கைதுசெய்யச் சொன்னார். அதனால் விக்கிரமராயா தங்கள் சகோதரருக்குக் கொலை மிரட்டல் விடுத்ததாகத் தெரிகிறது. எனவே ராணியார், தங்களை உடனடியாக மைசூருக்கு அழைத்துவரும்படி என்னிடம் சொல்லியனுப்பினார்.'

ரணதீராவுக்குப் பல விஷயங்கள் தெளிவாகின. 'இந்த நேரம் விக்கிரமராயா, இம்மடி ராஜ உடையாரைக் கொன்றிருக்கக்கூடும். அதான் இப்படி ஒரு செய்தி அனுப்பியிருக்கிறான். உடையார் பரம்பரையில் மீதமிருக்கும் வாரிசு நான் மட்டுமே. என்னையும் தந்திரமாக வரவழைத்துக் கொன்றுவிட்டால், பரம்பரையே காலி. விடமாட்டேன். எனது முன்னோர்கள் கட்டிக்காத்த ராஜ்ஜியத்தை அந்தக் கயவனிடம் விட்டுக் கொடுக்க மாட்டேன்.'

அந்தணரை வேறுபாதையில் போகச் சொல்லிவிட்டு ஸ்ரீரங்கப்பட்டணத்தை அடைந்தார் ரணதீரா. பாசம் பொங்கப் பொங்க உற்சாகமாக வரவேற்றார் விக்கிரமராயா. தோளில் கை போட்டபடியே அறை ஒன்றுக்கு அழைத்துச் சென்றார். 'தாங்கள் பதவியேற்பதற்காக ஏற்பாடு களைச் செய்துகொண்டிருக்கிறேன். அதற்கு முன்பு தாங்கள் ராஜ குடும்பத்தினரைச் சந்திக்க வேண்டும். கொஞ்சம் ஓய்வெடுங்கள். பிறகு சந்திக்கலாம்.' அந்த அறையை விட்டு வெளியே சென்றார் விக்கிரமராயா. அறையின் வெளிப்பக்கம் பூட்டப்படுவதை உணர்ந்தார் ரணதீரா.

இரவோடு இரவாக ரணதீராவை அந்த அறைக்குள் வைத்துக் கொல்லுவதே விக்கிரமராயாவின் திட்டம். சற்றுநேரம் பொறுமையாக இருந்த ரணதீரா, அறைக்கதவைப் பலமாகத் தட்டினார். காவலர்கள் திறந்தார்கள். அடுத்த நொடியே காற்றில் பறந்தார்கள். வழியில் எதிர்ப்பட்ட சோணங்கி காவலர்களையெல்லாம் தாக்கித் தகர்த்த ரணதீரா, ராணி திம்மஜம்மணியின் அறைக்குள் நுழைந்தார்.

இருளடைந்த ராணியின் முகத்தில் நிம்மதியின் வெளிச்சம். 'சகோதரனுக்கு என்ன ஆயிற்று அம்மா?' - ரணதீரா கேட்கவும் வெடித்து அழ ஆரம்பித்தாள் ராணி. தலைவலியென்று படுத்த

தன் மகனுக்குத் தானே விஷமென்று தெரியாமல் கஷாயம் புகட்டிக் கொன்ற சோகச் சம்பவத்தை ஒப்பாரியுடன் சொல்லி முடித்தாள். அடுத்தது என்ன? ஆம், அதே வீரவசனம் தான். 'பொறுத்தது போதும் ரணதீரா, பொங்கியெழு!'

உடனே விக்கிரமராயா முன்சென்று வாளை உருவி டிங்... டிடிங்... என்று சண்டைபோட்டு ஜெயிப்பதெல்லாம் புத்திசாலித்தனமல்ல என்பது ரணதீராவுக்குத் தெரிந்திருந்தது. 'தளவாய் தனது திட்டப்படியே நடந்துகொள்ளட்டும். நான் அதை முறியடித்து அவன் கதையை முடிக்கிறேன்.'

ராணியின் அறையைவிட்டு வெளியே வந்தார் ரணதீரா. 'அய்யா, தங்களை மகிழ்விக்க மல்யுத்த வீரர்கள் மைதானத்தில் காத்திருக்கிறார்கள். தளவாய் அழைத்துவரச் சொன்னார்' ஒருவன் வந்துசொன்னான். ரணதீரா அவனைப் பின் தொடர்ந்தார்.

மைசூரின் மிகச் சிறந்த மல்யுத்த வீரர்களான சன்னா, ரங்கா களத்தில் நின்று கொண்டிருந்தார்கள். 'ரணதீராவின் கதையை முடித்தால் உங்களுக்கு ராஜ வாழ்க்கை' என்று விக்கிரமராயா அவர்களுக்கு ஆசை காட்டியிருந்தான். இரைக்காகக் காத்திருந்தார்கள் அவர்கள். ரணதீராவைப் பார்த்ததும் துர்சைகைகள் செய்து சீண்டினார்கள். நம்மவர்தான், மல்யுத்தத்தைப் பொருத்த வரை மகாமானஸ்தராயிற்றே.

களமிறங்கினார். சன்னா சின்னாபின்னமானான். ரங்கா தொங்கவிடப்பட்டான். சுற்றிலுமிருந் தவர்கள் மிரண்டு சிதறி ஓடினார்கள். ரணதீராவின் பாதத்தில் ரங்காவின் கழுத்து நெறிபட்டுக் கொண்டிருந்தது. 'எங்கே உங்கள் தளவாய்? இடத்தைக் காட்டுங்கள்.'

எப்படியும் ரணதீராவின் கதையை சன்னாவும் ரங்காவும் முடித்துவிடுவார்கள் என்ற அதீத நம்பிக்கையில் குமரிகளோடு கொஞ்சியபடி மதுவில் ஊறிக் கொண்டிருந்தான் விக்கிரமராயா. சன்னாவும் ரங்காவும் அங்கு வந்து விழுந்தார்கள். தளவாய் பதறி எழுந்த நொடியில் பாய்ந்து வந்தார் ரணதீரா. அதிரடித் தாக்குதல். வதம்.

தளவாயின் ஆள்கள் எல்லோரும் அரண்மனையை விட்டு ஓடிப்போயிருந்தார்கள். ராணி திம்மஜம்மணியைத் தேடிப்போனார் ரணதீரா. 'அம்மா, உங்கள் ஆசிர்வாதம். விக்கிரமராயா வின் கதை முடிந்தது.' ஆனந்தக் கண்ணீர். மகிழ்ச்சிக் கொண்டாட்டங்கள்.

1638ன் கார்த்திகை மாதத்தில் மைசூரின் பன்னிரண்டாவது ராஜாவாகப் பொறுப்பேற்றார் ரணதீரா கந்திரவ நரசராஜ உடையார். ராணியின் மனம் குளிர்ந்தது. 'மகனே, என் கணவருக்குப் பிறகு அன்னை சாமுண்டீஸ்வரியின் துணையால் நான் மைசூரைப் பார்த்துக் கொண்டேன். இனி நீ வந்துவிட்டாய். என் சுமை நீங்கியது. என் இறுதிக் காலத்தை காசியில் கழிக்க விரும்பு கிறேன். இன்றே கிளம்புகிறேன்.' உறுதியுடன் கிளம்பிய திம்மஜம்மணியை ரணதீராவால் தடுத்துநிறுத்த முடியவில்லை.

ராஜா ரணதீராவின் காலம் மைசூரின் பொற்காலம்.



# தலைவிரிகோலத்தில் ஒருத்தி!

அசோகர் சாலைகள் போட்டார். மரம் நட்டார். குளங்கள், கிணறுகள் வெட்டினார். சத்திரங்கள் கட்டினார். இன்னபிற பொதுப்பணிகள் செய்தார். காலம் காலமாகப் படித்துவரும் பாடப் புத்தக வரிகள். அதில் 'அசோகர்' என்ற இடத்தில் 'ரணதீரா' என்ற வார்த்தையைப் போட்டுக் கொள்ளுங்கள்.

பல்வேறு வீரதீர சாகச, சண்டைக்காட்சிகளுக்குப் பிறகு மைசூரின் ராஜாவாகப் பொறுப்பேற்ற ரணதீரா கந்திரவ நரசராஜ உடையார், மக்களை நேசிப்பவராக, மக்களால் நேசிக்கப்படுவராகத் திகழ்ந்தார். அவரது காலத்தில் ஸ்ரீரங்கப் பட்டணமும் மைசூரும் மிளிர்ந்தன.

இருந்தாலும் சுற்றியுள்ள எதிரிகள் ரணதீராவின் பலம் தெரியாமல் திறன் அறியாமல் மைசூரை மடக்கவேண்டும் என்று நாக்கைச் சுழட்டியபடி வரத்தான் செய்தனர். வந்த எதிரிகளுக்கு வாலை நறுக்கினார் அல்லது வாய்க்கரிசி போட்டார் ரணதீரா. ஆக, மைசூர் மக்கள் மனநிம்மதியோடு வாழ்ந்தனர்.

பிஜப்பூர். இன்றைய கர்நாடகாவின் ஒரு மாவட்டம். அன்று தனி ராஜ்ஜியம். பாமினிப் பேரரசில் இருந்து பிரிந்த யூசுப் அடில் ஷா, பிஜப்பூரின் முதல் சுல்தானாகப் பதவியேற்றார் (1489). ரணதீராவின் காலத்தில் பிஜப்பூரின் ஏழாவது சுல்தானாக இருந்தவர் முகம்மது அடில் ஷா. அவருக்கு மைசூரையும் ஸ்ரீரங்கப் பட்டணத்தையும் அடைய வேண்டும் என்றொரு ஆசை. அந்தச் சமயத்தில் பசவப்பட்டணத்தின் ராஜா ஹனுமப்பா நாயக்கர் ஓர் உதவிகேட்டுத் தூது அனுப்பி இருந்தார்.

'சுல்தான், நமக்கும் பக்கத்துல இருக்குற இக்கேரி வீரபத்ர நாயக்கருக்கும் நிதமும் சண்டை. அந்த ஆளைப் போட்டுத் தள்ளுனாத்தான் எனக்கு நிம்மதி. அதுக்குதான் நீங்க உதவணும். கொஞ்சம் குதிரை, கொஞ்சம் வீரர்களைக் கொடுத்தீங்கன்னாப் புண்ணியமாப் போவும். பதிலுக்கு நீங்க என்ன கேட்டாலும் செஞ்சுப்புடறேன்.'

சுல்தானின் மனத்தில் வேறொரு கணக்கு போட்டார். தன்னுடைய வீரத்தளபதி ரனதுல்லா கானை அழைத்தார். 'ஏம்ப்பு, இந்த பசவப்பட்டணத்துக்காரவுக உதவி கேட்டுருக்காக. இக்கேரி நாய்க்கருக்கு நலுங்கு வைக்கணுமாம். அதான். படையோட கௌம்பு. அந்தச் சோலியை முடிச்சுக் கொடுத்துடு. அப்படியே ஹனுமப்பா நாயக்கரையும் அழைச்சுக்கிட்டு ஸ்ரீரங்கப்பட்டணத்துக்குப் போ. உடையாரைக் காலி பண்ணிட்டு அதையும் வளைச்சுப் போட்டுட்டு வந்துடு.'

ரனதுல்லா கான், தக்க படைகளுடன் கிளம்பினார் (1638). ஹனுமப்பா தனது படைகளுடன் காத்திருந்தார். வீரபத்திர நாயக்கருடன் காரசாரமான போர். ரத்தக்களறி. இக்கேரி வீழ்ந்தது. கூடவே புவனகிரி, சிரா, தும்கூர் ஆகியனவும் வசமாயின. அப்படியே பெங்களூருவும். அதை ஆண்டுவந்த மூன்றாம் கெம்பகௌடா தோற்கடிக்கப்பட்டார். போரில் உதவிசெய்த மராத்திய ரான ஷாகாஜி போஸ்லேவிடம் பெங்களூருவின் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப் பட்டது.

அடுத்ததென்ன, ஸ்ரீரங்கப்பட்டணம்தான். எதற்கு வீணாகப் போரிட்டுக் கொண்டு. செய்தி அனுப்பி பிஜப்பூருக்கு அடிபணிந்து செல் என்று சொல்லிவிட்டால் போதாதா. ரனதுல்லா கான், ரணதீராவுக்கு ஓலை அனுப்பினார். 'சுத்துப்பட்டி பதினெட்டு ராஜ்ஜியத்துக்கும் இப்போ பிஜப்பூர் சுல்தான்தான் நாட்டாமை. ஒழுங்கு மருவாதையா அடிபணிஞ்சு போ. கப்பம் கட்டு.'

ரணதீரா, உடனடி பதில் அனுப்பினார். 'அடிபணிய முடியாது. உன்னால முடிஞ்சதைப் பண்ணிக்கோ.'

ரனதுல்லா கானுக்கு ரத்தம் கொதித்தது. பிஜப்பூர் படைகள், உதவி செய்ய ஹனுமப்பாவின் படைகள், கூடவே நாகமங்கலம் சென்னய்யாவின் படைகளும் சேர்ந்துகொண்டன. சுமார் நான்கு லட்சம் தரைப்படை வீரர்கள், ஐம்பதாயிரம் குதிரைப்படை வீரர்கள், நூறு போர் யானைகள். எதையும் எதிர்கொள்ளத் தயாராக இருந்தார் ரணதீரா.

மூன்று பிரிவுகளாக இருந்த எதிரிப் படைகள் வெவ்வேறு திசைகளில் ஸ்ரீரங்கப்பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டன (1639, ஜனவரி 18). தன்னிடமுள்ள சிறுபடையைக் கொண்டு நேரடியாக மோதமுடியாது என்பதால் ரணதீரா இரவு நேரங்களில் எதிரிப் படை முகாம்கள்மீது குறி வைத்தார். அதிரடிக் கெரில்லாத் தாக்குதல்கள். எதிரிகள் நிலைகுலைந்து போனார்கள். ஸ்ரீரங்கப்பட்டணத்தின் நில அமைப்பு பற்றி எதுவுமே எதிரிகளுக்குத் தெரிந்திராததால், அவர்களால் மைசூர் வீரர்களிடம் மல்லுக்கட்ட முடியவில்லை.

தாக்குப்பிடிக்க முடியாமல் முதலில் பின்வாங்கியவர் ஹனுமப்பா. அந்த முற்றுகையில் ரனதுல்லா கானால் வெற்றிபெற முடியவில்லை. இருந்தாலும் அவரால் அந்தப் பின்னடைவை ஒப்புக்கொள்ள முடியவில்லை. அடுத்த வியூகத்தை அமைத்தார். 'ஸ்ரீரங்கப்பட்டணம்

கோட்டைச் சுவரை முற்றுகையிடுங்கள். அதிலுள்ள பாதுகாப்புக் கோபுரங்களைத் தகர்த்தெறியுங்கள்.' பிஜப்பூர் படையினருக்கு உத்தரவிட்டார்.

தான் பதவிக்கு வந்த கொஞ்ச நாள்களிலேயே ஸ்ரீரங்கப்பட்டணத்திலும் மைசூரிலும் கோட்டைச் சுவர்களை எதிரிகள் நெருங்க முடியாதபடி புதிதாக ஆயிரக்கணக்கான பீரங்கிகளை ரணதீரா அமைத்திருந்தார். விஷயமறியாமல் சென்று சிக்கிக் கொண்ட பிஜப்பூர் படையினர் பீதியடைந்தனர். ரணதீராவும் நேரடியாகக் களத்தில் இறங்கித் தாண்டவமாடினார். ரனதுல்லா கான் எஞ்சியிருந்த படைகளோடு உயிர் பிழைத்து ஓடினார்.

தொடர்ந்து வெற்றிகளை மட்டுமே சுவைத்து வந்த ரனதுல்லா கான் அவமானத்தில் குறுகிப் போனார். ஆனால் நாகமங்கலம் சென்னய்யா விடுவதாக இல்லை. மாறுவேடத்தில் ஸ்ரீரங்கப் பட்டணத்துக்குச் சென்றார். தனது வாய்ஜாலத்தால் கோட்டைக் காவலன் ஒருவனுடன் சிநேகம் பிடித்தார். 'வேற எதுவும் எனக்குத் தேவையில்லை. இந்தக் கோட்டைக்குள்ள நுழை யறதுக்கு எங்கெங்க ரகசிய வழி இருக்குதுன்னு சொன்னாப் போதும். இந்தா வைச்சுக்கோ.' கொடுக்க வேண்டியதைக் கொடுத்தார். தேவையான விவரங்களைக் கறந்துகொண்டார்.

தகவல்களைக் கேட்ட ரனதுல்லா கானுக்குப் படு உற்சாகம். மறுநாள் இரவு. பதுங்கிப் பதுங்கி வந்த ரனதுல்லா கான் படையினர், ரகசிய வாசல்களை அடைந்தனர். அதிரடித் தாக்குதல். துப்பாக்கிகள் முழங்க ஆரம்பித்தன. 'துன்பம் நேர்கையில் வாளெடுத்து நீ வந்து தாக்க மாட்டாயா' என்று யாரும் பாடவில்லை. வந்து உதித்தார் ரணதீரா. அடுத்த சில மணி நேரங் களுக்கு அசத்தல் ஆக்ஷன் காட்சிகள்.

இறுதியில்? கதாநாயகன்தான் ஜெயித்தார். பிஜப்பூர் படையினருக்கு இந்த முறையும் கடும் சேதம். மீண்டும் ரனதுல்லா கான் பின்புறஅழகைக் காட்டிக் கொண்டு ஓடவேண்டிய நிலை. தொடர்ந்து பிஜப்பூர் படையினர் தோல்வியடைந்து வருவதைக் கேட்ட சுல்தான் முகம்மது அடில் ஷாவுக்குக் கடும் அதிர்ச்சி. கூடவே ரணதீராவின் வீரதீர பராக்கிரமங்கள் பற்றியும் ஏகப்பட்ட செய்திகள் சென்று சேர்ந்தன.

'திருப்புங்கள் படையை' ரனதுல்லா கானுக்கு சுல்தானிடமிருந்து கட்டளை பறந்தது. கூடவே இரண்டு தூதுவர்களையும் ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு அனுப்பி வைத்தார், ரணதீரா வுடன் சமாதானம் பேச. 'கலகலன்னு ஓடுற காவிரிக்குத் தெக்குப் பக்கத்துல இருக்குற மைசூர் பிரதேசம் உங்களுக்கே உங்களுக்குத்தான். நாங்க உள்ள வரமாட்டோம். அதே மாதிரி காவிரிக்கு வடக்குப் பக்கத்துல இருக்குற பகுதிகள் பிஜப்பூர் சுல்தானுக்கு.' அமைதி ஒப்பந்தம் ஒன்று பேசப்பட்டது.

ஆனால் அந்தச் சமயத்தில்கூட ரனதுல்லா கானுக்கு ஆத்திரம் அடங்கவில்லை. ஸ்ரீரங்கப் பட்டணத்தில் ரணதீரா இருக்கும் சமயத்தில் மைசூர் கோட்டையைக் கைப்பற்றுவதற்காக ரகசியமாகப் படையெடுத்தார். கொஞ்ச நேரத்திலேயே ரணதீராவின் காதுகளுக்கு விஷயம் சென்றது. ரணதீராவின் குதிரை நான்கு கால்களில் பாய்ந்தது.

துப்பாக்கி வெடிக்கும் ஓசையையும், பீரங்கிகளின் முழக்கத்தையும் எதிர்பார்த்து மைசூரை நெருங்கிய ரணதீராவுக்குப் பெரும் ஆச்சரியம். மைசூர் கோட்டையில் அமைதி. சண்டை நடந்துமுடிந்து இருந்தது. அடிபட்டுக் கிடந்த எதிரி வீரர்களின் இறுதி முனகல்கள். மைசூர் கோட்டைக் காவலர்களும் இறந்து கிடந்தார்கள்.

ரணதீராவைக் கண்டதும் காவலன் ஒருவன் ஓடோடி வந்தான். நடந்ததையெல்லாம் விவரித்தான். 'நம்ம காவலர்கள் சிலரை எதிரி ஆளுங்க, கும்பலா சூழ்ந்துகிட்டு தாக்கிக் கொன்னுட்டாங்க. என் கையில ஆயுதம் எதுவும் இல்லை. அதான் நான் ஒரு இடத்துல போயி ஒளிஞ்சுக்கிட்டேன். திடீர்னு பார்த்தா தூரத்துல ஒரு பொண்ணு. ரெண்டு கையிலயும் ஆயுதங்கள். ஆவேசமா எதிரிகளைப் பயங்கரமாத் தாக்குச்சு அந்தப் பொண்ணு. பிஜப்பூர் தளபதி பொம்பளைகூட மோதறது பிடிக்காம, வேற வழியாக் கோட்டைக்குள்ள போகப் பார்த்தாரு. ஆனா அங்கயும் அந்தப் பொண்ணு தலைவிரிகோலமா நின்னு கடுமையாப் போர் செஞ்சுது. எதிரிங்க ஒண்ணும் பண்ணமுடியாம ஓடிட்டாங்க. அந்தப் பொண்ணையும் அதுக்கப்புறம் காணலை. நான் அந்தப் பொண்ணை இதுவரைக்கும் இங்க பார்த்ததில்லை ராஜா.'

அந்தக் காவலன் சொல்லி முடிக்கவும் ரணதீராவின் கண்களில் நீர்வீழ்ச்சி. 'அம்மா சாமுண்டீஸ்வரி. நீதான் இந்த மண்ணை இந்த இக்கட்டான சூழ்நிலையில இருந்து காப்பாத்தி இருக்கேம்மா! உனக்கு நான் எப்படி நன்றி சொல்லுவேன்' - சாமுண்டி மலை இருக்கும் திசைநோக்கி வணங்கினார். மைசூரில் ரணதீரா இல்லாத நிலையில் சாமுண்டீஸ்வரியே நேரில் வந்து ரனதுல்லாவுடன் போராடினாள் என்பது இன்றுவரை சொல்லப்படும் வாய்வழிக்கதை.

பிஜப்பூர் சுல்தான் அதற்குப் பிறகு ரணதீராவிடம் வாலாட்டவில்லை. ஆனால் திருச்சிராப்பள்ளியில் ஒருவர் கொலைவெறியுடன் காத்திருந்தார். அவர் சந்திரமாலா. திருச்சிராப்பள்ளியில் ரணதீரா அநாயசமாகக் கொன்று வீசிய மல்யுத்த வீரர் மஹாமாலாவின் சகோதரர். எங்கே ரணதீரா படையெடுத்து வந்துவிடுவாரோ என்று திருச்சிராப்பள்ளி ராஜாவுக்கும் பயம். அதற்குமுன் ரணதீராவின் கதையை முடிக்க, சேர்ந்து சதித்திட்டம் தீட்டினார்கள்.

இருபந்தைந்து மல்யுத்த வீரர்களுடன் சந்திரமாலா ஸ்ரீரங்கப்பட்டணத்தை அடைந்தார். வில்லன் விக்கிரமராயாவுக்குப் பின் தளவாயாகப் பொறுப்பேற்றிருந்த நஞ்சராஜய்யாவைச் சந்தித்தார்கள். திட்டத்தைக் கூறினார்கள். உதவுவதாக ஒப்புக்கொண்டார். அந்த இரவில் அந்த மாமிச மலைகள் ரகசியமாக ரணதீராவின் அறைக்குள் நுழைய வழிசெய்தார்.

எதிரிகள் நிறைந்த உலகில் உன் நிழலையும் நம்பாதே. தூங்கும்போதுகூட ஒரு கண்ணைத் திறந்து வைத்துக்கொள் என்பதுதானே மாவீரர்களின் சித்தாந்தம். உறக்கத்தில் இருந்த ரணதீரா அந்நியர்களின் மூச்சுக்காற்று தன் அறைக்குள் நுழைந்ததுமே விழித்தார். கையில் குறுவாள்களுடன் ஆவேசமாகக் கொல்லப் பாய்ந்த அந்த மாமிச மலைகளுடன் பல நிமிடங்களுக்கு டிஷ்யூம் டிஷ்யூம். ஓர் ஆள் இருபத்தைந்து பேரை அடித்துச் சாய்ப்பதெல்லாம் ஹீரோக்களின் வாழ்க்கையில் சகஜம்தானே.

சத்தம் கேட்டு அரண்மனை வீரர்கள் சிலரும் ஓடோடி வந்தார்கள். சண்டைக் காட்சியின் முடிவில் பல எதிரிகள் உயிரிழந்தும், சிலர் உடல் உறுப்புகளை இழந்தும் கிடந்தனர். அந்தச் சிலரை மட்டும் திருச்சிராப்பள்ளிக்குத் திருப்பி அனுப்பினார் ரணதீரா. கூட்டுக்கள்ளன் நஞ்சராஜய்யா தலைமறைவானார்.

இப்படி எதிரிகளுக்குச் சிம்ம சொப்பனமாகத் திகழ்ந்த ராஜா ரணதீராவின் காலத்தில் மைசூர் தென்னிந்தியாவின் பலமிக்க ராஜ்ஜியமாகத் திகழ்ந்தது. இருந்தாலும் ரணதீராவுக்கு ஒரு குறை. அயனம்மணி, லஷ்மம்மணி, சன்னஜம்மணி, தோடாநஞ்சம்மணி, முடாஜம்மணி உள்பட பத்து அம்மணிகளைத் திருமணம் செய்துகொண்டார். ஆனால் ஆண் வாரிசு பாக்கியம்

மட்டும் ம்ஹூம். நீண்ட வருடங்கள் கழித்து அயனம்மனி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார். ஆனால் ஐந்தாவது வயதில் அந்தக் குழந்தையும்...

பெரும் கவலை. மனமுடைந்து போன ராஜா ரணதீரா அடுத்த ஐந்தாவது வருடத்திலேயே இறந்துபோனார். பத்து அம்மணிகளும் உடன்கட்டை ஏறினார்கள். மீண்டும் அலமேலு சாபம் குறித்த புலம்பல்கள் தொடர, மைசூரின் அரியணையில் கேள்விக்குறி ஒன்று கால்மேல் கால் போட்டு அமர்ந்திருந்தது.



# 143

# பெங்களூருவின் விலை என்ன?

ரொம்ப நாளைக்கு அரியணையைக் காலியா வைச்சிருக்க முடியாது. என்ன பண்ணுறது? விதி. ராஜா ரணதீராவுக்கும் அவரு வாரிசுக்கும் அல்ப ஆயுசு. கவலைப்பட்டுக்கிட்டு ஒக்காந்திருக்கிறதுல என்ன பிரயோசனம்? சொந்தக் காரங்க, சொக்காரங்க யாராவது இல்லையா என்ன?

ராஜ குடும்பத்தினர் விவாதித்தார்கள். தேடித் திரிய வேண்டிய அவசியமெல்லாம் ஏற்படவில்லை. ராஜ உடையாரின் வழியிலேயே வாரிசு இருந்தது. அவர் தேவராஜர்.

இறந்துபோன மாவீரர் ரணதீரா, ராஜ உடையாரின் அண்ணன் மகன் என்றால், இந்த தேவராஜர் தம்பி மகன். தேவராஜருக்கும் இரண்டு மூத்த சகோதரர்கள் இருந்தார்கள். ஆனால் ரணதீராவின் குடும்பத்தினர் தத்தெடுத்தது தேவராஜ உடையாரைத்தான்.

அதே எதிரிகள், அதே மிரட்டல்கள், தளவாய் பதவியில் இருப்பவர்களின் தகிடு தத்தங்கள், ஏனைய லொட்டு லொசுக்கு அரசியல்கள் - ராஜா தேவராஜ உடையாரின் ஆட்சியிலும் எல்லாமும் இருந்தன. அவர் வரலாற்றில் தன் பெயர் நிலைக்கும்படி செய்துவிட்டுப் போன காரியம், சாமுண்டி மலையில் சாமுண்டீஸ்வரி கோயிலுக்குச் செல்வதற்காக ஆயிரம் படிகள் அமைத்தது. மலையில் பாதி வழியிலேயே ஒரு பெரிய நந்தி சிலையை 'நடுவில்' வைத்தது. 1659லிருந்து 1673 வரை மைசூரை ஆண்ட தேவராஜ உடையாருக்கும் வாரிசு இல்லைதான்.

ஆகவே இறந்துபோயிருந்த தனது அண்ணன் இரு புதல்வர்களை வாரி அணைத்து வளர்த்து வந்தார். அவர்களுக்குப் பாலூட்டி, சோறூட்டி, படிப்பும் ஊட்டி, கல்யாணமும் கட்டி வைத்திருந்தார். அந்த மகன்களில் மூத்தவர் சிக்கதேவராஜர். தேவராஜ உடையார் தனக்கு மரணம் நெருங்குவதாக உணர்ந்த சமயத்தில் சிக்க தேவராஜரைப் பட்டத்து இளவரசராகத் தத்தெடுத்தார்.

1673 பிப்ரவரியின் கடைசி நாளில் அந்த இளவரசர், மகாராஜாவானார். சிக்கதேவராஜ உடையாரின் ஆட்சியில் நிகழ்ந்த மிக முக்கியமான காரியம், பெங்களூரு பேரம். அப்போது பெங்களூரு மராத்தியரான எகோஜி போஸ்லே (மூன்றாம் கெம்பகௌடாவிடமிருந்து பெங்களூருவை அபகரித்த ஷாகோஜி போஸ்லேவின் மகன்) வசமிருந்தது. டெல்லியில் ஔரங்கசீப்பின் ஆட்சி. தக்காணப் பகுதிகளில் மராத்தியர்களைச் சமாளிப்பதே முகலாயர் களுக்குப் பெரும் சவாலாக இருந்தது. பெங்களூரு மீது படையெடுத்து வந்த முகலாயத் தளபதி காஸிம் கான், எகோஜியைக் காலி செய்தார்.

மகாராஜா சிக்கதேவராஜ உடையார் முகலாயர்களோடு பேச்சு வார்த்தை நடத்தினார். 'மேம்சாப், நமக்கு பெங்களூரைக் கொடுத்தீங்கன்னா வசதியா இருக்கும்.'

'என்ன விலை கொடுப்பீங்க?'

'நீங்களே பார்த்து நியாயமா ஒரு விலை சொல்லுங்க.'

'சரி, ஒரே விலை. மூணு லட்சம்.'

பெங்களூரு வாங்கப்பட்டது. மைசூர் சாம்ராஜ்ஜியத்தோடு இணைக்கப்பட்டது. இந்தச் சமயத்தில் ஒரு சுவாரசியக் குறிப்பு. பெங்களூரு என்ற பெயர் எப்படி வந்தது? (தெரிந்து கொள்ள விரும்பாதவர்கள் ஒரு பாரா தாவி விடவும்.)

பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹொய்சால மன்னன் வீரபல்லாலா, ஒரு சமயம் வேட்டைக்குப் போனார். நடுக்காட்டில் வந்த வழியை மறந்துபோனார் அவர். பசி. தாகம். தட்டுத் தடுமாறி யாராவது தென்படுகிறார்களா என்று தேடினார். தூரத்தில் ஒரு குடிசை. ஓடினார். கிழவி ஒருத்திதான் இருந்தாள். பசிக்கு உணவு கேட்டார். 'அவித்த அவரை விதை தான் இருக்கிறது' என்றாள். பரவாயில்லை என்று வாங்கிச் சாப்பிட்டுப் பசி நீங்கினார். கிழவிக்குக் கோடி வந்தனங்கள் வைத்தார். அந்த இடத்துக்கு அவர் வைத்த கன்னடப் பெயர் - பெல்லெ பெண்ட கலு ஊரு. அதாவது அவித்த அவரை விதை தந்த நகரம் என்ற அர்த்தம். அப்படி இருந்த அது, பின் இப்படி (பெங்களூரு) ஆனது.

சிக்கதேவராஜரின் ஆட்சியில் மைசூருக்கு எந்தக் குறையும் இல்லை. இன்னொரு பொற் காலம். சாம்ராஜ்ஜிய எல்லை விரிவடைந்தது. அதில் தமிழகமும் அடக்கம், கிட்டத்தட்ட திருச்சிராப்பள்ளி வரை.

மகாராஜாவின் முதல் மனைவி தேவஜெயம்மணி. அந்த மகாராணியே ஆஸ்திக்கொரு மகனையும், ஆசைக்கொரு மகளையும் பெற்றுக் கொடுத்துவிட்டாள். ஆனால் அந்த இளவரசர் வளர வளரத்தான் அந்தக் குறை வெளிப்பட்டது. அவருக்குக் காது கேட்கவில்லை. வாய்பேச வும் முடியவில்லை. இப்படிப்பட்ட இளவரசரால் எப்படி சாம்ராஜ்ஜியத்தைக் கட்டியாள முடியும் என்று நினைத்தாரோ என்னவோ, மகாராஜா மேலும் ஒன்பது அம்மணிகளைத் திருமணம் செய்துகொண்டார். ஆனால் அவர்கள் யாரும் வாரிசைப் பெற்றுத்தரவில்லை.



சாமுண்டீஸ்வரி கோயில் - 19ம் நூற்றாண்டில்

இளவரசர் தனது குறையைப் பெரிதாக நினைக்கவில்லை. சைகைகள் மூலம் மற்றவர்கள் இளவரசோடு தொடர்பு கொண்டார்கள். நல்லவிதமாகவே அவர் வளர்ந்தார். இருந்தாலும் சிக்கதேவராஜருக்கு நிறையக் குழப்பங்கள். வருங்காலத்தில் என் மகன் இந்தக் குறைகளோடு எப்படி ஆட்சி செய்வான்? எதிரிகள் அவனை வீழ்த்திவிட்டால்? அவனுக்கு ஒரு திருமணமும் செய்துவைத்துவிட்டேன். ஆனால் பிள்ளை பிறக்கவில்லை. என்ன செய்ய? நம்பிக்கைக்குரிய சொந்தங்கள் உடன் இருந்தால் எனக்குப் பின் என் மகன் பயமின்றி ஆட்சி செய்ய வசதியாக இருக்குமோ?

யோசித்த சிக்கதேவராஜர், அப்போது மைசூரின் தளவாயாக பசவராஜய்யாவின் மகளை இளவரசருக்கு இரண்டாவது திருமணம் செய்துவைத்தார் (1693). பசவராஜய்யா கலாலே

என்ற பரம்பரையைச் சேர்ந்தவர். பெண்ணைக் கொடுத்த தளவாய், தனக்கும் தன் மகனுக்கும் விசுவாசமாக இருந்து ஆட்சியைக் கவனிப்பார் என்பது மகாராஜாவின் கணக்கு. ஏற்கெனவே மைசூரில் தளவாய்கள் ஏகோபித்த அதிகாரங்களுடன்தான் வலம் வந்தார்கள். இந்தத் திருமண உறவு வருங்கால மைசூர் தளவாய்களின் சர்வாதிகாரத்துக்குப் போடப்பட்ட உரமாகிப் போனது.

1702ல் தளவாயின் மகளான செல்வஜம்மணி மூலம் சிக்கதேவராஜருக்குப் பேரன் பிறந்தான். 1704 நவம்பரில் சிக்கதேவராயர் நிம்மதியாக மேலுலக அரியணை ஏறினார். இளவரசர் இரண்டாம் நரசராஜ உடையார், மகாராஜாவாக ஆட்சியில் அமர்ந்தார். அதிகமில்லை, பத்தே ஆண்டுகள்தான். 1714ல் மௌனமாக இறந்துபோனார்.

இறந்த மகாராஜாவுக்கு வாரிசுதான் இருக்கிறதே. தோடா கிருஷ்ணராஜ உடையார். பிறகென்ன கவலை? ஆனால் வாரிசுக்கு வயது பன்னிரண்டுதான். அப்போது புதிய தளவாயாகப் பதவி யேற்றிருந்தவர் தேவராஜய்யா. இவரும் கலாலே பரம்பரையைச் சேர்ந்தவர்தான். அரியணை யில் சிறுவன் மகாராஜாவை பொம்மையாக உட்கார வைத்துவிட்டு உண்மையான அதிகாரத் தைத் தன் உள்ளங்கையில் வைத்துக் கொண்டார். உடையார் குடும்பத்தோடு உறவை மேலும் பலப்படுத்த, தனது உரிமையை மேலும் பலப்படுத்த அவர் செய்த காரியங்கள் அசர வைக்கக் கூடியவை.

தனது சொந்த பந்தங்களில் உள்ள சிறு பெண்களை எல்லாம் ஒரு பட்டியலிட்டுக் கொண்டார் (எல்லோருமே கலாலே பரம்பரையைச் சார்ந்தவர்கள்தான்.) அவர்களை ஒவ்வொருவராக மகாராஜாவுக்குத் திருமணம் செய்துவைத்தார். 'மகாராஜா, எங்க குடும்பத்துல இன்னொரு பொண்ணு இருக்குறா. சும்மா லட்டு மாதிரி. கல்யாணம் கட்டிக்கோங்களேன்.'

ஆக தோடா கிருஷ்ணராஜ உடையார், கிட்டத்தட்ட ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு புது மகாராணியுடன் 'தலை தசரா' கொண்டாடிக் கொண்டிருந்தார். அத்தனை மஜாவான வாழ்க்கையிலும் அவருக்கு மகன் பிறக்கவில்லை. மூத்த மகாராணி தேவஜம்மணிக்குப் பிறந்த ஒரே மகனும் நிலைக்கவில்லை. தோடா மகாராஜா, முப்பதாவது வயதிலேயே பூலோக வாழ்விலிருந்து விடுபட்டார்.

தேவஜம்மணி உடன்கட்டை ஏறவில்லை. உகந்த வாரிசுக்கான தேடுதலில் இறங்கினாள். இரண்டு சிறுவர்களைத் தேர்ந்தெடுத்தாள். தூரத்துச் சொந்தம். சாமராஜா (வயது 28), கிருஷ்ணராஜா (வயது 4). சாமராஜா, ஏழாம் சாமராஜ உடையார் என்ற பெயரோடு அரியணை ஏற்றப்பட்டார். பெயரளவுக்குத்தான். அதிகாரமெல்லாம் தளவாய் தேவராஜய்யாவின் கையில்தான் இருந்தது. இன்னொரு பகுதியின் தளவாயாக இருந்த தேவராஜய்யாவின் சகோதரர் நஞ்சராஜய்யாவும் சர்வாதிகாரம் செய்துகொண்டிருந்தார். தளவாய் சகோதரர்கள் ராஜ்ஜியத்தின் வருவாயை எல்லாம் வாயில் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

மகாராஜா ஏழாம் சாமராஜர் ஒருமுறை கஜானாவுக்கு வரவேண்டிய மூவாயிரம் வராகன் வராததைக் கண்டுபிடித்தார். துருவித் துருவி விசாரிக்க மேலும் பல ஊழல்கள் வெளிவந்தன. எல்லாம் தளவாயின் தயவு என்பதும் தெரியவந்தது. ஆகவே தேவராஜய்யாவைக் கையும் களவுமாகப் பிடிக்கத் திட்டமிட்டார். தன் லீலைகள் மகாராஜாவிடம் அம்பலமானதைத் தெரிந்துகொண்ட தேவராஜய்யா, உஷாரானார். தேவஜம்மணியைத் தேடி ஓடினார்.

‘ராஜமாதா… தாங்கள் தத்தெடுத்த வாரிசு, மகாராஜா பதவியைத் தவறாகப் பயன்படுத்திக் கொள்கிறார். குறிப்பாகத் தங்கள் கணவரின் ஆட்சியில் விசுவாசமாக இருந்த அமைச்சர்களை எல்லாம் தேடிப்பிடித்துச் சிறையிலடைக்கிறார். கொல்லவும் உத்தரவிடுகிறார். என் உயிருக்குக்கூட ஆபத்து நெருங்கிவிட்டது. உங்களையும் இங்கிருந்து துரத்திவிட்டு அதிகாரத்தை முழுமையாகப் பறித்துக்கொள்ளத் திட்டமிட்டு இருக்கிறார். நீங்கள்தான் அவரை அடக்கி ராஜ்ஜியத்தைக் காப்பாற்ற வேண்டும்.’

ஆயிரம்தான் இருந்தாலும் தேவஜம்மணி, தேவராஜய்யாவின் நெருங்கிய உறவுதானே. அந்த வார்த்தைகளை அப்படியே நம்பி, கோபத்தில் கொதித்தாள். ‘தளவாய், நான் உங்களுக்கு அனைத்து அதிகாரங்களையும் தருகிறேன். அந்தக் கேடுகெட்டவனைச் சுற்றி வளைத்துப் பிடியுங்கள்.’

தேவராஜய்யா, படையோடு சென்று மகாராஜாவைச் சுற்றி வளைத்தார். தப்பிக்க இயலாது என்று உணர்ந்த ஏழாம் சாமராஜ உடையார், வேறுவழியின்றி அடிபணிந்தார். ‘தளவாய், நீங்கள் என் பிரதிநிதியாக இருந்து ஆட்சியைக் கவனித்துக் கொள்ளுங்கள். தயவுசெய்து என்னைக் கொன்றுவிடாதீர்கள்.’ கெஞ்சினார். தேவராஜய்யா, ஏழாம் சாமராஜரைச் சிறையி லடைத்தார். பின்பு நல்லதொரு பொழுதில் உணவில் நஞ்சு கலந்து ‘காரியம்’ செய்தார் (1734).

‘ராஜமாதா, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. தங்களது இரண்டாவது வளர்ப்பு மகன் கிருஷ்ணராஜரை அரியணை ஏற்றலாமா?’ தேவஜம்மணி சம்மதித்தாள். ஆறு வயது இம்மடி கிருஷ்ணராஜ உடையார், 1734ல் அரியணையில் சொப்பு விளையாட ஆரம்பித்தார். கேள்வி கேட்க ஆளின்றி அந்தத் தளவாய் சகோதரர்கள் அதிகாரத் தாண்டவமாட ஆரம்பித்தார்கள்.

இந்த இடத்தில் 1728ல் நடந்த ஒரு சம்பவம் தேவைப்படுகிறது. அப்போதைய மகாராஜா தோடா கிருஷ்ணராஜ உடையாரின் அரசவைக்கு கண்ணீரோடு வந்து நின்றாள் ஒரு பெண். அவள் கர்நாடகாவின் சிராவைச் சேர்ந்த மஜிதா பேகம். அழைத்து வந்தவர் தேவராஜய்யா. அவள், மகாராஜாவிடம் தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள்.

‘என் புருஷன் (ஃபதே முகம்மது) சிரா நவாப்கிட்ட தளபதியா இருந்தாரு. அவர் அரசாங்கத்துல கொஞ்சம் கடன் வாங்கியிருந்தாரு. சொன்ன நேரத்துல கொடுக்க முடியல. நவாப்போட பேரன் குலிகான், திடீர்னு எங்க வீட்டுக்குள்ள நுழைஞ்சு கடனைத் திருப்பிக் கேட்டாரு. கொஞ்சம் அவகாசம் கேட்டோம். ஆனா குலிகான் என்னையும் என்னோட ரெண்டு ஆம்பளைப் புள்ளைங்களையும் கைது பண்ணிட்டுப் போய், ஒரு பெரிய முரசுல அடைச் சுட்டாரு. நான் எப்படியோ தப்பிச்சு வந்துட்டேன். அய்யா மகாராசா, நீங்கதான் எம்புள்ளைங் களை மீட்டுத் தரணும்.’

தோடா மகாராஜா மனம் இறங்கினார். குலிகானுக்கு பத்தாயிரம் வராகன்களைக் கொடுத்து அந்த இரு சிறுவர்களையும் மீட்டார். தனது இரண்டு மகன்களையும் மைசூர் ராஜ்ஜியப் பணிக்கு அனுப்புவதற்கு ஒப்புக்கொண்டாள் மஜிதா பேகம். அவர்கள் மைசூரிலேயே வளர்ந்தார்கள். ஒரு சிறுவனின் பெயர் ஷாஅபாஸ். இன்னொருவன் ஹைதர் அலி.



# 144

# தடாலடித் தளவாய் ஹைதர் அலி

தளவாய் நஞ்சராஜய்யாவின் மேற்பார்வையில் வளர்ந்த ஹைதர் அலிக்குக் கல்வி பாகற்காயாகவும் மற்ற வீரவிளையாட்டுகள் பால்பாயசமாகவும் இருந்தன. ஆகவே அவர் எழுத, வாசிக்கக் கற்றுக்கொள்ளவில்லை. ஆனால் வெவ்வேறு மொழிகள் பேச மட்டும் கற்றுக் கொண்டார். வளர்ந்தபின் ஹைதரும் அவரது சகோதரர் ஷாஅபாஸும் நஞ்சராஜய்யாவின் படையிலேயே பணிக்குச் சேர்ந்தார்கள்.

1749. தேவனஹல்லி. மைசூர் படைகளின் முற்றுகை சில மாதங்களாகத் தொடர்ந்தது. படையில் ஷாஅபாஸும் இருந்தார். முக்கியமான குதிரை வீரராக ஹைதரும் செயல்பட்டார். அது ஹைதரின் தலைப்போர். எட்டுமாத இழுபறி சண்டைகளுக்குப் பிறகு தேவனஹல்லி மைசூரின் வசம் வந்தது. மேன் ஆஃப் தி போர், ஹைதர்தான். பலன், அவருக்கென 50 குதிரை வீரர்கள், 250 தரைப்படை வீரர்கள் கொண்ட படை அளிக்கப்பட்டது.

அதேசமயத்தில் ஹைதராபாத்தில் நிஜாம் உல் முலிக் இறந்துபோக, அடுத்தது யார் என்று பதவிக்கான மோதல்கள். களத்தில் இருந்தவர்கள் இறந்துபோன நிஜாமின் மகன் நாஸிர் ஜங்கும், பேரன் முஸாஃபர் ஜங்கும். இரண்டு ஜங்குகளும் தத்தமது அளவில் பக்கத்துப் பிரதேச மன்னர்களின் ஆதரவைத் திரட்டிக் களமிறங்கியிருந்தார்கள். மைசூரின் ஆதரவு நாஸிர் ஜங்குக்கு. மைசூர் சார்பாக அனுப்பப்பட்டிருந்த படையில் ஹைதரும் ஒரு தளபதி.

போரில் நாஸிர் ஜங்கின் கூட்டணியில் இருந்த கடப்பா நவாப்பே அவரைக் கொன்றுவிட, காட்சிகள் மாறின. தன் பங்குக்கு ஹைதரும் நிறம் மாறினார்.

நாஸிரின் படைமீதே கைவைத்தார். கொள்ளையடித்தார். நல்ல அறுவடை. அள்ளிய செல்வங்களை மைசூர் மகாராஜா இம்மடி கிருஷ்ணராஜா உடையார் முன் சென்று கொட்டி னார். 'உனது வீரத்தை மெச்சுகிறேன். இதோ உனக்கான சன்மானம்' மகாராஜா பங்கு பிரித்துக் கொடுத்த பொருள்களை ஹைதர் மூன்று ஒட்டகங்களில் சுமந்துகொண்டு போனார். தன்னை ஆளாக்கிய நன்றிக்கடன், நன்றிவட்டிக்காக நஞ்சராஜய்யாவுக்கு ஓர் ஒட்டகத்தைக் கொடுத்தார். அவர் மகிழ்ந்தார்.

ஹைதர் அலிக்குப் பதவி உயர்வு கிடைத்தது. திண்டுக்கல்லின் தலைமைத் தளபதி. 25000 குதிரை வீரர்கள், 3000 தரைப்படை வீரர்களுடன் திண்டுக்கல்லை நோக்கிக் கிளம்பினார் (1755). வழியில் மாட்டிக்கொண்ட பாளையக்காரர்களின் செல்வங்கள் எல்லாம் ஹைதர் அலியின் 'அதிரடிப் படை'யினரிடம் பறிபோயின.

அதிரடிப்படை? இம்மாதிரி செல்வச் சேர்ப்புப் பணிக்காகவே ஹைதர் சில நூறு குதிரை வீரர்களைப் பராமரித்து வந்தார். திடீரெனத் தோன்று. தடாலடியாகத் தாக்கு. அடாவடியாக அள்ளிக் கொண்டு வா - என்பதே அந்தப் படையினரின் ஃபார்முலா. சேர்த்த செல்வங்களுக்கு எல்லாம் ஒழுங்காகக் கணக்கு வழக்கு பார்க்க வேண்டுமே. ஒன்றும் ஒன்றும் ரெண்டா, பதினொன்றா என்பதுகூட ஹைதருக்குத் தெரியாதே. அப்போது கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொண்டவர் ஒரு பிராமணர். கண்டே ராவ். ஹைதரின் நீண்ட நாள் நண்பர். நஷ்டத்தை எல்லாம் லாபமாக்கும் வித்தை தெரிந்தவர். அதேசமயம் வீரரும்கூட. படையில் ஹைதருக்கு அடுத்த இடத்தில் இருந்தவர் கண்டே ராவ்தான்.

ஒருபுறம் ஹைதர் தனது படைகொண்டு தொட்டதையெல்லாம் ஜெயம் ஆக்கிக்கொண்டுவர, இன்னொருபுறம் தளவாய் நஞ்சராஜய்யா, மைசூரின் எதிர்காலத்தையே ஐயம் ஆக்கிக் கொண்டிருந்தார். திருச்சிராப்பள்ளியிலும் அதன் சுற்றுவட்டாரங்களிலும் நான்கு வருடங்கள் அவர் படைகளோடு முற்றுகையிட்டிருக்க, செலவு கட்டுக்கடங்காமல் போனது. கொஞ்சமும் லாபமில்லை. கஜானா கரைந்துகொண்டிருந்தது.

ஆகவே மகாராஜா, நஞ்சராஜய்யா மேல் நடவடிக்கை எடுக்கத் திட்டமிட்டார். விஷயமறிந்த நஞ்சராஜய்யா ஸ்ரீரங்கப்பட்டணம் அரண்மனைக்குள் அதிரடியாக நுழைந்து வாளைச் சுழற்றி னார். எதிர்ப்பட்ட வீரர்களின் மூக்கு, காது எல்லாம் நறுக். மகாராஜா மிரண்டுநிற்க, முறைத்த படி வெளியேறினார் நஞ்சராஜய்யா. 'மடப்பயல், என்ன காரியம் செய்திருக்கிறான்?' கொதித்துப் போனார் நஞ்சராஜாய்யாவின் சகோதரர் தளவாய் தேவராஜய்யா. தளவாய் சகோதரர்களுக்குள் விரிசல்.

சம்பள பாக்கிக்காக வீரர்கள், நஞ்சராஜய்யாவின் மாளிகையைச் சூழ்ந்தார்கள். தர்ணா. கல வரம் பிறக்கலாம் என்ற சூழல். ஹைதர் அலிக்குச் செய்தி போனது. விரைந்து வந்தார். ஓரளவு பணபட்டுவாடா செய்து, வீரர்களைச் சமாதானம் செய்து நஞ்சராஜய்யாவை மீட்டெடுத்தார். ஹைதர் செய்த அடுத்த காரியம் உடைந்த தளவாய் சகோதரர்கள் உறவை ஒட்ட வைத்தது. 'உடன்பிறந்தவங்க ரெண்டுபட்டா ஊரானுக்குக் கொண்டாட்டம். சொன்னாக் கேளுங்க' ஹைதரின் பேச்சு எடுபட்டது. தளவாய் சகோதரர்கள் கட்டிக் கொண்டார்கள்.

தேவராஜய்யா மகாராஜாவைச் சந்தித்தார். 'நஞ்சராஜய்யா செஞ்சது தப்புதான். ஏதோ கோபத்துல அப்படிச் செஞ்சுப்புட்டான். நாமல்லாம் ஒண்ணுக்குள்ள ஒண்ணு. இதைப் போயி

பெரிசா எடுத்துக்கிட்டு...' - தேவராஜய்யாவின் சமாதானத்தால் குளிர்ந்தார் மகாராஜா. நஞ்ச ராஜய்யாவை மீண்டும் அதே பணியில் நீட்டித்தார்.

இப்படி அமைதியின் திருவுருவமாகத் தனது கடைசிக் காலத்தில் மட்டும் திரிந்த தேவராஜய்யா இயற்கை எய்தினார். புதிய தளவாயாகப் பொறுப்பேற்றார் ஹைதர் அலி.

எல்லாவற்றையுமே மௌனமாகக் கவனித்துக் கொண்டுவந்த ராஜமாதா தேவஜம்மணிக்கு ஹைதர் அலியின் அசுர வளர்ச்சி திகிலூட்டியது. 'எங்கிருந்தோ வந்தவன். மகாராஜாவால் பணம் கொடுத்து வாங்கப்பட்ட சின்னப்பயல். இங்கேயே வளர்ந்து இன்று தன்னை உருவாக்கியவர்களையே மிஞ்சி நிற்கிறான். நாளை இவன் நஞ்சராஜய்யாவையே ஒன்றும் இல்லாமல் செய்துவிடுவான். இனி இவன் இருக்கக்கூடாது அல்லது இங்கிருக்கக்கூடாது.'

ராஜமாதா, தனது எண்ணத்தை கண்டே ராவுடன் பகிர்ந்துகொண்டாள். ஹைதருடனான நட்பைவிட, ராஜ குடும்பத்தின் மீதான விசுவாசம் கண்டே ராவுக்கு அதிகம். ஆகவே ஹைதரை ஒழிக்க, ராஜமாதாவுக்குக் கைகொடுப்பதாக உறுதியளித்தார். அவரும் எத்தனை நாள்கள்தான் ஹைதருக்குக் கைகட்டி வேலைபார்க்க முடியும்? தளவாயாகும் ஆசையிருக்காதா என்ன?

வீரர்களின் சம்பள பாக்கிப் பிரச்னை மீண்டும் கிளம்பி விஸ்வரூபம் எடுத்தது. வீரர்களை நஞ்சராஜய்யாவுக்கு எதிராகத் தூண்டிவிடுவது ஹைதர்தான் என்று ஒருபுறம் பேச்சு கசிந்து கொண்டிருக்க, மகாராஜாவைச் சந்தித்தார் ஹைதர். 'எல்லாப் பொறுப்பையும் என்னிடம் ஒப்படைத்துவிடுங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன். நஞ்சராஜய்யாவும் எங்கேயாவது ஒதுங்கி பழைய பதவியிலேயே பெயரளவுக்கு இருக்கட்டும். என்ன சொல்லுகிறீர்கள்?'

கஜானா இருந்தநிலையில் வேறுவழியின்றி மகாராஜாவும் உடன்பட்டார். 'ஸ்ரீரங்கப் பட்டணத்தை விட்டு உடனே கிளம்பவும்' நஞ்சராஜய்யாவுக்கு ஹைதரிடமிருந்து செய்தி போனது. ஏற்கெனவே கொதித்துப் போயிருந்த நஞ்சராஜய்யா, குமுறலாகப் பதில் அனுப்பி னார். 'மகாராஜா சொன்னால் போகிறேன். எனக்கு ஆணையிட நீ யார்?'

ஹைதர் தனது படைகளோடு நஞ்சராஜய்யாவைச் சூழ்ந்தார். அவரது அதிகாரத்தைக் குறிக்கும் முத்திரை மோதிரத்தைக் கைப்பற்றினார். 'தகுந்த மரியாதை'களோடு அவரைத் துரத்தி விட்டார்.

ஹைதரின் அனைத்து நடவடிக்கைகள் குறித்தும் கண்டே ராவ், தேவஜம்மணிக்குத் தெரிவித்து வந்தார். சுற்றுவட்டாரத்தில் ஓர் இடத்தில் பிரிட்டன் படைக்கும் பிரெஞ்சுப் படைக்கும் கசமுசா. ஹைதரின் படையில் பெரும்பகுதியினர் பிரெஞ்சுக்காரர்களுக்கு உதவுவதற்குச் சென்றிருந்தார்கள். அப்போது ஹைதருடன் இருந்தது குறைந்த அளவு படைகளே. இப்படி ஒரு வளமான வாய்ப்புக்காகக் காத்திருந்த ராஜமாதா, மகாராஜாவுக்கு ரகசியச் செய்தி அனுப்பி னாள். 'நாளை காலை ரங்கநாதபெருமாள் கோயிலில் சந்திப்போம். யாருக்கும் தெரிய வேண்டாம்.'

கோயிலின் பாதாள அறை ஒன்றில் ராஜமாதா, மகாராஜா, கண்டே ராவ் மூவரும் சந்தித்தார்கள். '...ஆகவே, அந்த ஹைதரால் ஆட்சிக்கும், நமது உடையார் பரம்பரைக்கேகூட ஆபத்து வரலாம்' - தன் எண்ணங்களை அழுத்தமாக எடுத்துச் சொல்லி எச்சரித்தாள் தேவஜம்மணி.

வலுசேர்த்தார் கண்டே ராவ். வளர்ப்புத்தாய் சொல்லையும் தட்டக்கூடாதல்லவா. மகாராஜா, ஹைதரைத் தீர்த்துக் கட்ட சம்மதித்தார். சதிவலை பின்னப்பட்டது.

திட்டம் இதுதான். அதிகாலையிலேயே படைகளுக்குப் பயிற்சி கொடுக்க ஹைதர், ஸ்ரீரங்கப் பட்டண கோட்டைக்கு வருவார். அந்த நேரத்தில் சில வீரர்கள் கோட்டைச் சுவரிலிருந்து தாக்க வேண்டும். என்ன நடக்கிறது என்று ஹைதர் புரிந்துகொள்வதற்கு முன்பாகவே மராத்தியப்படைகள் ஹைதரைச் சூழ்ந்து காலிசெய்ய வேண்டும். இதற்காகத் தான் நட்பு பாராட்டிக் கொண்டிருந்த மராத்திய தளபதி ஒருவரிடம் படை உதவிகேட்டு ஏற்பாடு செய்திருந்தார் கண்டே ராவ்.

ஆகஸ்ட் 12, 1760. விடியலுக்கு ஒரு மணி நேரத்துக்கும் மேலிருந்தது. ஹைதர் சிறு படையுடன் கோட்டைக்கு வந்தார். ஆனால் அவர் அழைத்தும் கதவு திறக்கப்படவில்லை. பதிலாக சுவர் மேலிருந்து துப்பாக்கி வெடிக்கும் சத்தம். மேலே பார்த்தார். கண்டே ராவ் கட்டளையிட்டுக் கொண்டிருந்தார், 'விடாதீர்கள், சுட்டுத்தள்ளுங்கள்.'

சுதாரித்த ஹைதர், சட்டெனப் பதுங்கி வந்த வழியே ஓட ஆரம்பித்தார். அவரது படைகளும். சொன்ன நேரத்துக்கு மராத்திய படைகள் வந்து சேரவில்லை. கண்டே ராவ் தலை யிலடித்துக் கொண்டார். 'விரட்டிப் பிடியுங்கள். அவனைக் கொல்லுங்கள்.' அவரும் குதிரை ஏறினார்.

கொஞ்சம்கூட யோசிக்காத ஹைதர், காவிரியில் குதித்தார். இப்போதைக்கு உயிர்பிழைக்க வேண்டும். விடாமல் நீந்து. நண்பனாக இருந்த கண்டே ராவ் இப்படி மாறிவிட்டானே. அவனுக்கு என்மீது என்ன கோபம்? எல்லாம் மகாராஜாவின் திட்டமாகவும் இருக்கலாம். இவன் ஒரு கருவி. ஹைதர் மறுபக்கம் கரையேறினார். விடிந்திருந்தது. கண்டே ராவால் ஹைதரின் சில வீரர்களை மட்டுமே பிடிக்க முடிந்திருந்தது. திட்டம் தரைமட்டமாகியிருந்தது.

ஆத்திரமடைந்த கண்டே ராவ், ஹைதரின் மாளிகைக்குள் புகுந்தார். செல்வங்களைச் சூறை யாடினார். ஹைதரது குடும்பத்தினரைச் சிறைப்படுத்தினார். அதில் அவரது மகனான ஒன்பது வயது சிறுவன் திப்புவும் அடக்கம்.

பெங்களூரை அடைந்திருந்தார் ஹைதர். தளவாயாக இனி ஸ்ரீரங்கப்பட்டணத்துக்குள் காலடி எடுத்துவைக்க முடியாது. அடுத்து அங்கு செல்லவேண்டுமென்றால் படைவேண்டும். எதிரி களைத் தகர்த்தெறிய வேண்டும். முடிந்தால் ஆட்சியைக் கைப்பற்ற வேண்டும். இத்தனை வருட என் உழைப்பை, கனவை எளிதில் விட்டுக் கொடுக்க மாட்டேன்.

ஹைதர், தனது அடுத்தகட்டம் குறித்து தெளிவாகச் சிந்தித்தார். நண்பர் ஒருவரிடம் கடன் வாங்கினார். படை திரட்டினார். இருந்தாலும் காவிரியைக் கடக்கத் தயக்கம். காலம் தவறி வந்தாலும், கண்டே ராவ் ஏற்பாடு செய்திருந்த மராத்தியப் படைகள் ஹைதருக்காகக் காத்துக் கொண்டிருந்தன.

ஆகவே பதுங்கியிருந்தார். 'ஏ, சீக்கிரம் கெளம்பி வாங்கப்பு. பானிபட்டுல மூணாவது யுத்தம் ஆரம்பிச்சிருச்சு. ஆப்கன்காரவுகளுக்கு ஆப்படிக்கணும்' - அழைப்பு வரவே (1761) மராத்திய படைகள் வடக்கு நோக்கிக் கிளம்பின.

ஹைதர் நிமிர்ந்தார். பிரெஞ்சுக்காரர்களோடு எப்போதுமே அவருக்கு நல்லுறவு இருந்தது. அவர்களிடம் கொஞ்சம் படைஉதவியைப் பெற்றுக்கொண்டு காவிரியைக் கடந்து ஸ்ரீரங்கபட்டண எல்லைக்குள் புகுந்தார். எதிர்பாராத திசையொன்றில் எமகண்டமாக முளைத்தார் கண்டே ராவ். ஹைதரின் படையினர் ஆயுதங்களை ஓங்குவதற்கு முன்பாகவே அவற்றை இழக்க வேண்டியதிருந்தது, கூடவே உயிரையும்.

தலைதப்பி வந்து ஹைதர் நின்ற இடம், கோனனூர். அங்குதான் இருந்தார் ஹைதரால் பல்பிடுங்கப்பட்ட நஞ்சராஜய்யா.

வழியில்லை, சூழல் அப்படி. ஆனால் ஒரு எதிரிக்குப் பயந்து இன்னொரு எதிரியிடம் மாட்டிக்கொள்வதா? தயங்கித் தயங்கி நஞ்சராஜய்யாவின் மாளிகைக்குள் புகுந்தார் ஹைதர்.



# 145

# கிளிக்கூண்டும் சில கொலைகளும்

பாயும் புலிக்குப் பயந்துகொண்டு நல்ல பாம்பிடம் மாட்டிக் கொண்ட கதைதான். பல்பிடுங்கப்பட்டு விட்டாலும் நல்ல பாம்புதானே நஞ்சராஜய்யா. தன் பல்லைப் பிடுங்கிய ஹைதரைப் பார்த்து சீறத்தான் செய்தார். ஹைதரும் லேசுப்பட்டவர் இல்லையே. காரியத்தை முடிக்க வேண்டுமென்றால் கழுத்தைப் பிடி. காரியம் ஆக வேண்டுமென்றால் காலைப்பிடி.

ஹைதர் காலைப்பிடித்தார். உருக்கமான வார்த்தைகளால் நஞ்சராஜய்யாவைக் கரைக்கப் பார்த்தார். நஞ்சராஜய்யாவும் மனக்கணக்கு போட்டார். நமக்கோ வயதாகிவிட்டது. ஹைதரைப் போலொருவனை அலட்சியப்படுத்துதல் நல்லதல்ல. நாம் நிராகரித்தாலும் வேறு எப்படியாவது மீண்டு வந்துவிடுவான். மறப்போம். மன்னிப்போம்.

'நான் உனக்கு என்ன உதவி செய்யவேண்டும்?'

ஹைதரின் முகம் மலர்ந்தது. நடந்தவற்றையெல்லாம் தேவையான ஏற்ற இறக்கங்களுடன் விவரித்தார். நஞ்சராஜய்யாவின் அனுபவம் ஹைதருக்கு அடுத்த கட்டத்தைத் திட்டமிடப் பெரிதும் உதவியது. சரி படைக்கு எங்கே போவது? நஞ்சராஜய்யாவிடம் அப்போது ஒட்டிக்கொண்டு இருந்த படைவீரர் களின் எண்ணிக்கை வெகு சொற்பமே. 'வேறு வழியில்லை. மைசூரின் படை களையே நம் படைகளாக மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்' - சாதாரணமாகச் சொன்னார் நஞ்சராஜய்யா.



ஹைதர் அலி

ஹைதருக்கு ஒன்றுமே புரியவில்லை. நஞ்சராஜய்யா, தன்னிடமிருந்த போலி ராஜமுத்திரை மோதிரத்தை எடுத்தார். ராஜ கட்டளை போலொன்று தயாரானது.

'இதன் மூலம் மைசூரின் மகாராஜா இம்மடி கிருஷ்ணராஜ உடையாராகிய நான் தெரிவித்துக் கொள்வது என்னவென்றால், மீண்டும் நஞ்சராஜய்யாவை சர்வ அதிகாரமும் கொண்ட தளபதி யாக நியமிக்கிறேன். ஹைதர் அலியே தளவாயாக நீடிப்பார்.'

போலிக் கடிதம் வெளியே பரவவிடப்பட்டது. மைசூர் வீரர்கள் குழம்பி நின்ற சமயத்தில் நஞ்சராஜய்யாவின் முத்திரையோடு இன்னொரு கடிதம் வந்து சேர்ந்தது. 'கண்டே ராவை உடனே கைது செய்யுங்கள்.'

ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து இருபத்தாறு மைல்கள் தொலைவில் கட்டே மல்லாலவாடி என்ற இடத்தில் முகாமிட்டிருந்தார் கண்டே ராவ். வந்த கடிதங்களைக் கண்ட வீரர்கள் மத்தி யில் படபடப்பு. கண்டே ராவ் தவித்துப் போனார். 'இனி இவர்களேகூட என்னைக் கொல்லக் கூடும். மகாராஜாவிடம் சென்று தஞ்சமடைவதைத் தவிர வேறு வழியில்லை' கண்டே ராவ் ஸ்ரீரங்கப்பட்டணத்தை நோக்கித் தன் குதிரையைச் செலுத்தினார்.

ஹைதர், கண்டே ராவின் முகாமுக்குள் அதிரடியாகப் புகுந்தார். கொஞ்சம் கைகலப்பு. கண்டே ராவின் வீரர்கள் மத்தியில் பெரும் குழப்பம். என்ன செய்வது, சண்டையைத் தொடரு வதா? சம்பள பாக்கி விவகாரத்தில் தலையிட்டு ஒரு தீர்வு கொடுத்தவரல்லவா ஹைதர். ஆகவே அவர் பக்கம் சேர்ந்துகொண்டார்கள். 'தளவாய் ஹைதர் வாழ்க! வாழ்க!'

ஹைதர் உடனே படையை அழைத்துக் கொண்டு ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு விரையவில்லை. அங்கேயே இருந்து சில நாள்கள் வேவு பார்த்தார். வீரர்களை முழுமையாகத் தன் கட்டுப் பாட்டுக்குள் கொண்டுவந்து பயிற்சிகள் கொடுத்தார். ஒருவாரம் கழித்து படைகளோடு காவிரியைக் கடந்து ஸ்ரீரங்கப்பட்டணத்துக்குள் நுழைந்தார். 'கண்டே ராவை என்னிடம் ஒப்படைத்து விடுங்கள். எனக்குத் தாங்கள் அளிக்க வேண்டிய பாக்கியை எல்லாம் பட்டுவாடா

செய்துவிடுங்கள். நான் இங்கிருந்து வெளியேறிவிடுகிறேன்' மகாராஜாவுக்குச் செய்தி அனுப்பிவிட்டுக் காத்திருந்தார்.

கையறு நிலை என்று சொல்வார்களே, அப்படிப்பட்ட நிலையில் இருந்தார் மகாராஜா. கஜானா கந்தலாகிப் போனபோதெல்லாம் அதற்கு மறுவாழ்வு கொடுத்ததே ஹைதர்தான். அவர் கேட்கும் பாக்கியும் நியாயமானதுதான். பணம் அருளுபவரே பணம் கேட்டால்? கண்டே ராவ், என்னை மன்னித்துக் கொள்ளும்.

கண்டே ராவை ஒப்படைக்கச் சம்மதித்தார் மகாராஜா. பின்பு ஹைதர் மகாராஜாவை நேரடியாகச் சந்தித்தார். கழுத்தில் கத்தியை வைத்து பணபாக்கியைக் கேட்டால் என்ன செய்வது? மகாராஜாவுக்குள் நடுக்கம். ஹைதர், பாக்கியெல்லாம் கேட்கவில்லை, பதவியைக் கேட்டார்.

மைசூர் ராஜ்ஜியத்தின் ஒட்டுமொத்த நிர்வாகப் பொறுப்பை, ஆளும் அதிகாரத்தை நான் எடுத்துக் கொள்கிறேன். தாங்களும் இங்கேயே இருக்கலாம். அதுவும் மகாராஜாவாகவே. பெயரளவுக்கு மட்டும். பொம்மைபோல.

வேறுவழியின்றி இம்மடி கிருஷ்ணராஜ உடையார் அடிபணிந்தார். ஹைதரை ஆட்சியாளராக நியமிக்கும் ஆணையைப் பிறப்பித்தார். ஹைதர் அலி மைசூரின் சர்வாதிகாரியாகப் பொறுப்பேற்றார் (1761).

'எங்கே அந்த கண்டே ராவ்?'

ராஜமாதா தேவஜம்மணியிடம் அடைக்கலம் புகுந்திருந்த கண்டே ராவைத் தேடி ஹைதர் சென்றார். கைது செய்தார். 'அய்யோ அவரைக் கொன்று விடாதீர்கள், உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறோம்' ராஜமாதா உள்ளிட்ட பெண்கள் கண்ணீர் சிந்தினார்கள்.

'நான் உயிருக்குயிராக ஒரு கிளி வளர்க்கிறேன். அந்தக் கிளிக்கு அடுத்தபடியாக நான் கண்டே ராவை நேசிக்கிறேன். கிளியைப் போலவே பார்த்துக் கொள்கிறேன். கவலைப்படாதீர்கள்' சிரித்தபடியே கண்டே ராவை இழுத்துச் சென்றார் ஹைதர்.

வார்த்தை தவறவில்லை. ஒரு பெரிய கூண்டு. அதனுள் கண்டே ராவ். தினமும் அவருக்கு உணவாகப் பாலும் அரிசியும் மட்டும் வழங்கப்பட்டன, இறக்கும்வரை.

தேவஜம்மணி, இம்மடி கிருஷ்ணராஜர் குடும்பத்தினர் எல்லோருமே ஸ்ரீரங்கப்பட்டணத்திலேயே வாழ்ந்தார்கள், ஹைதரின் கண்காணிப்பில். அவர்களுக்கு வருட மானியமாக மூன்று லட்சம் பகோடாக்கள் (தங்கக்காசு) அளிக்கப்பட்டன. ஹைதர் அலியின் கட்டுக்கோப்பான நிர்வாகத்தில் கஜானா உயிர் பெற்றது. எல்லைகள் வலிமை பெற்றன. மலபார் பக்கம் எல்லையை விரிவாக்குவதில் முனைப்புடன் ஈடுபட்டார் அவர்.

1766. மூன்று மகாராணிகளின் கணவராகிய மகாராஜா இம்மடி கிருஷ்ணராஜ உடையார் மரணப்படுக்கையில். அவரது மூன்றாவது மனைவியாகிய லட்சுமம்மணி மட்டும் அப்போது உயிரோடு இருந்தார். கண்ணீர் விட்டுக் கதறினார் இம்மடி. 'லட்சுமி, சொந்த ராஜ்ஜியத்திலேயே அடிமையா வாழுற என்னோட இந்த நிலைமை வேற யாருக்கும் வரக்கூடாது. இளவரசர் இரண்டு பேரும் சின்னவங்க. நீதான் இந்தப் பரம்பரை அழிஞ்சு போகாம...' - அவருக்குத் தொண்டை அடைத்தது.

'திரும்பவும் உடையார் பரம்பரை அதிகாரத்துக்கு வரும்வரை நான் சாகமாட்டேன். இது சத்தியம்.' லட்சுமம்மணியின் கண்களில் ஆவேசம். சுமையை இறக்கிவிட்டு மகாராஜா இறந்துபோனார். இம்மடியாருக்குப் பிறந்த மூன்று மகன்களில் இருவர் உயிரோடு இருந்தார் கள். பதினெட்டு வயது மூத்த மகன் நஞ்சராஜா உடையார் ஹைதரின் ஆசியோடு அடுத்த மகாராஜாவாக 'சும்மா' பதவியேற்றார்.

இருக்கட்டும். எக்கச்சக்க போர்களை, அரசியல் நிகழ்வுகளைக் கடந்துவந்து விட்டோம். கொஞ்சம் ஆசுவாசப்படுத்திக் கொள்ள ஹைதர் அலியின் அந்தப்புரத்துக்குச் சென்றுவிட்டு வரலாம்.

மைசூர் ராஜ்ஜியம் முழுக்க ஆங்காங்கே நாடோடி மக்கள் வாழ்ந்து வந்தார்கள். விலங்குகள் வைத்து வித்தை காட்டுவார்கள் அல்லது வாத்தியக் கருவிகள் இசைத்து ஆடிப் பாடுவார்கள். வயிற்றுப் பிழைப்புக்கான தொழில் அது. திருமணம் போன்ற விசேஷ நிகழ்ச்சிகளில் விருந் தினர்களைக் குஷிப்படுத்த நாடோடிக் குழுவினரை மக்கள் அழைப்பதுண்டு. நாடோடிக் குழுவினருக்கும் ஹைதரின் சில வீரர்களுக்கும் ரகசியத் தொடர்பு இருந்தது.

'மேலத் தெரு மூணாவது வீட்டுல அம்சமா ஒரு அழகி இருக்குறா', 'பக்கத்து கிராமத்துல பண்ணையார் பொண்ணு அந்தப்புரத்துல வாழுறதுக்குன்னே பொறந்த மாதிரி இருக்குது' இப்படி நாடோடிகள் வேவு பார்த்துக் கொடுக்கும் தகவல்களை வீரர்கள் கவனத்துடன் கேட்டுக் கொள்வார்கள். குதிரையைக் கிளப்பு. கட்டழகியைக் கைப்பற்று. அந்தப்புரத்துக்கு அள்ளி வா. அவ்வளவுதான். பெண்ணின் வனப்புக்கேற்ப துப்புகொடுத்த நாடோடிகளுக்கு வளமான சன்மானம்.

'அழகுப்பதுமையே அழாதே. இனி இதுவே உன் வாழ்விடம். உல்லாசங்களின் உறைவிடம். வாழ்க்கையை அனுபவிக்கத் தயாராகு!'

சிவப்பு, நீலம், பச்சை, வெள்ளை - பெண்களுக்கு அவர்களது அழகின் தரத்துக்கேற்ப ஏதாவது ஒரு வண்ண உடை வழங்கப்படும். ஒவ்வொரு வண்ண உடைப் பெண்களுக்கும் ஒரு தலைவி. அந்தத் தலைவிகளின் தலைவி, பஹ்ருன்னிஸா ஃபாத்திமா பேகம். ஹைதரின் இரண்டாவது மனைவி (திப்புவின் தாய்). அந்தப்புரத்தின் முழுஅதிகாரமும் ஃபாத்திமாவின் கையில்.

ஆயிரம்தான் அதிரடி வீரராக இருந்தாலும் ஹைதருக்கு ஃபாத்திமா மேல் தனி மரியாதை. பயம் என்றுகூடச் சொல்லலாம். ஃபாத்திமா ஏதாவது வாக்குவாதத்தை ஆரம்பித்துவிட்டால் அவ்வளவுதான், ஹைதரால் சமாளிக்கவே முடியாது. ஆகவே அந்தப்புரத்துக்குள் நுழையும் ஹைதர், ஃபாத்திமா இருந்தால் வேறுயாரையும் பார்க்கக்கூட மாட்டார். ஆசையாக ஏதாவது பரிசினைக் கொடுத்துவிட்டு இடத்தைக் காலி செய்துவிடுவார். ஹைதர் ஃபாத்திமாவின் 'அன்புப்பிடியில்' சிக்கிக் கிடந்த சமயங்களில், கடத்திக் கொண்டுவரப்பட்ட கட்டழகிகள் ஆடியும் பாடியும் மகிழ்விக்க மட்டும் பெரும்பாலும் உபயோகப்பட்டனர்.

கிழக்கு இந்தியக் கம்பெனியாகத் தங்கள் அதிகார எல்லையை விரிவுபடுத்திக் கொண்டிருந்த பிரிட்டிஷாருக்கு ஹைதரின் வளர்ச்சி பெரும் உறுத்தலாக இருந்தது. ஆகவே ஹைதரின் எதிரிகளோடு பேச்சுவார்த்தை நடத்திக் கூட்டணி அமைத்தார்கள். 'உங்களுக்கெல்லாம் பெரும் ஆபத்தா வளர்ந்துகிட்டு இருக்குற அந்த ஹைதரை அடக்கலாம் வாரீகளா?'

பிரிட்டிஷார் கேட்டதும் ஹைதராபாத் நிஜாமும் மராத்தியர்களும் கைகோத்தார்கள். 1767ல் (முதல்) ஆங்கிலேய மைசூர் போர் ஆரம்பமானது.

முப்பெரும் படைகளோடு மோதி முட்டியை உடைத்துக்கொள்ள விரும்பாத ஹைதர், தன் வழியில் மராத்தியர்களோடு பேச்சுவார்த்தை நடத்தினார். 'இந்தப் பணம் போதுமா? இன்னும் கொஞ்சம் வேணுமா?' மராத்தியர்கள் போரிலிருந்து சந்தோஷமாக விலகிக் கொண்டார்கள்.

'இந்தந்தப் பகுதிகளை நீங்களே வெச்சுக்கோங்க நிஜாம். நமக்குள்ள எதுக்குச் சண்டை? தேவையைச் சொல்லுங்க. தாராளமா செஞ்சுப்புடலாம்' ஹைதராபாத்தும் கம்பெனியாருக்குக் கடுக்காய் கொடுத்தது. மைசூர் படைகளோடு சுமார் ஒன்றரை வருடங்கள் அநாதையாகப் போரிட்ட பிரிட்டிஷாருக்குப் பலத்த இழப்பு. வெள்ளைக்கொடி காட்டினார்கள். 'உனக்கு உள்ளதை நீ வெச்சுக்கோ, எனக்கு உள்ளதை நான் வெச்சுக்கிறேன்' - என்கிற ரீதியில் பல்வேறு நிபந்தனைகளோடு அமைதி ஒப்பந்தம் ஒன்று கையெழுத்தானது (ஏப்ரல், 1769).

1770 ஆகஸ்ட் 2. லட்சுமம்மணி நெஞ்சில் அடித்துக் கொண்டு அழ ஆரம்பித்தாள். பதவியில் அமர்ந்த நான்கே வருடங்களில் திடீரென்று இறந்து போயிருந்தார் மகாராஜா நஞ்சராஜ உடையார். மகாராஜா குடித்த பாலில் விஷம். எல்லாம் ஹைதரின் சதிதான். ராஜ குடும்பத்தினர் புலம்பித் தீர்த்தார்கள்.

அடுத்த மகாராஜாவாக அவரது சகோதரரான பன்னிரண்டு வயது எட்டாம் சாமராஜ உடையார் உட்கார வைக்கப்பட்டார். அவரது உயிருக்கு எப்போது ஆபத்து வருமோ என்ற பதை பதைப்பிலேயே நாள்கள் கழிந்தன. அந்த ஆபத்து 1776ல் வந்தது. எட்டாம் சாமராஜரும் மர்ம மான முறையில் இறந்துபோனார். (அவர் குளிக்கும்போது ஹைதருடைய ஆள்கள் கழுத்தை நெறித்துக் கொன்றுவிட்டதாகச் சொல்லப்படுவதுண்டு.)

மீண்டும் வாரிசுப் பிரச்னை. லட்சுமம்மணி யாரையாவது வளர்ப்புமகனாகத் தத்தெடுத்து ஆகவேண்டும் என்கிற நிலை. தனது சொந்த பந்தங்களில் வலைவீசித் தேடி இரண்டு பேரைத் தேர்ந்தெடுத்தாள்.

ஹைதர் அதற்கும் முட்டுக்கட்டை போட்டார். 'தங்களுக்கு அந்தச் சிரமம் எல்லாம் வேண்டாம். அடுத்த மகாராஜாவை எப்படித் தேர்ந்தெடுப்பது என்று எனக்குத் தெரியும்.'



146

# திப்புவின் ராக்கெட்!

ஒரு விசாலமான அறை. விளையாட்டுப் பொருள்கள், சிறு ஆயுதங்கள், ஒப்பனைப் பொருள்கள், நகைகள், தங்கக்காசுகள், பழங்கள், பூக்கள், இனிப்பு கள் எதற்கும் உதவாதவை எனப் பல்வேறுவிதமான பொருள்கள் அந்த அறையின் தரைமுழுவதும் விரவிக் கிடந்தன. அறைக்கு வெளியே ராஜ, உயர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஆண் குழந்தைகளோடு வந்து குழுமியிருந்தார்கள். பட்டத்து இளவரசரைத் தேர்ந்தெடுப்பதற்காக ஹைதர் அலி செய்திருந்த ஏற்பாடு அது.

ஒவ்வொரு சிறுவனாக அறைக்குள் விடப்பட்டனர். உள்ளே ஹைதர் அலி உட்கார்ந்திருந்தார். நுழையும் குழந்தைகள் முதலில் என்ன பொருளைக் கையில் எடுக்கிறார்கள் என்று கவனமாகப் பார்த்துக் கொண்டேயிருந்தார். சில குழந்தை களுக்குப் பின் உள்ளே விடப்பட்ட அந்த இரண்டரை வயதுச் சிறுவன் தத்தக்கா புத்தக்காவென்று நடந்துவந்தான். ஒரு கையால் சிறிய கத்தியையும், இன்னொரு கையால் முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்றையும் எடுத்தான். சிரித்தான்.

‘ஆஹா! இந்தச் சிறுவன்தான் அடுத்த மகாராஜா!’ - ஹைதர் உற்சாகமாகக் கத்தி னார். ‘இவன் வீரத்துடன் ராஜ்ஜியத்தையும் கவனித்துக் கொள்வான். அதே சமயத் தில் ஒரு ராஜாவுக்குரிய சுகங்களையும் அனுபவிப்பான்.’

லட்சுமம்மணிக்கு செய்தி போனது. ‘இப்படி ஒரு சிறுவன் தங்களது வாரிசாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளான். தங்களுக்குச் சம்மதமா?’ ஒப்புக்குக் கேட்கப் பட்டது. ஒப்புக்கொண்டாள். 1776, செப்டம்பர் 27 அன்று அந்தச் சிறுவன் மைசூரின் இருபதாவது மகாராஜாவாக முறைப்படி அரியணையில் தூக்கி

உட்கார வைக்கப்பட்டான். சிறுவனுக்கு ஒரு பரம்பரைப் பெயர் வைக்க வேண்டுமே? வேறென்ன, சாமராஜர்தான். முன்பாக ஒன்பதைச் சேர்த்துக் கொண்டார்கள். ஒன்பதாம் சாம ராஜர் என்ற காஸா சாமராஜ உடையார்.

எல்லாம் சரி, லட்சுமம்மணி இருக்கும் இடத்திலேயே இந்தக் குழந்தையையும் வளரவிட லாமா? ஏதாவது ஆபத்து வந்துவிட்டால்? விபரீதச் செய்திகள் ஒன்றிரண்டு ஹைதரின் காதுகளை அடைந்தன. ஆகவே லட்சுமம்மணியை ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து நஸராபாத் என்ற இடத்துக்கு மாற்றினார். மாளிகைக் கைதியாக வாழ மனமுவந்து அனுமதி கொடுத்தார். குழந்தை மகாராஜா ஹைதரிடம் பத்திரமாகவே வளர்ந்தான்.

சரி, ஹைதரின் வாரிசைப் பற்றியும் இங்கே பார்த்துவிடலாம். ஹைதரின் முதல் மனைவி ஷாபாஸ் பேகம் பெண் குழந்தை ஒன்றைப் பெற்றுக் கொடுத்துவிட்டு பக்கவாதத்தில் விழுந்து விட்டாள். ஆண் வாரிசு அதிஅவசியமாயிற்றே. ஃபாத்திமா பேகத்தை இரண்டாவது திரு மணம் செய்துகொண்டார் ஹைதர். வருடங்கள் கழிந்தன. ஃபாத்திமா கர்ப்பம் தரிக்கவே யில்லை.

நொந்துபோன ஃபாத்திமா, தான் வணங்கும் ஃபகீர் ஒருவரிடம் சென்றாள். அவர் பெயர் திப்பு மஸ்தான். அவரிடம் தெய்வீக சக்திகள் இருப்பதாக நம்பினாள். தன் குறையைச் சொல்லி மனமுருகி அழுதாள். 'என் குறை தீரவே தீராதா?'

திருமணமாகி ஐந்தாவது வருடத்தில் பிரசவ வலியை அனுபவித்தாள் ஃபாத்திமா. பிறந்தது ஆண் குழந்தைதான். ஹைதரிடம் உரிமையோடு சொன்னாள், 'இந்த முதல் ஆண் குழந்தைக்கு அந்த ஃபகீரின் பெயரைத்தான் வைக்கப்போகிறேன். திப்பு. இவனை இறைபணிக்குத்தான் அர்ப்பணிக்க வேண்டும். அடுத்து ஓர் ஆண் குழந்தை பிறக்கும். அவனே உங்களுக்கு அடுத்து ஆளும் வாரிசு.' ஹைதர் மௌனமாகத் தலையசைத்துக் கொண்டார். (தேவனஹல்லியில் திப்பு 1750 நவம்பரில் பிறந்திருக்கலாம் என்று நம்பப்படுகிறது.)

தான் நினைத்தபடியே திப்புவை வளர்த்தாள் ஃபாத்திமா, மதபோதனைகளோடு. இரண்டாவ தாகவும் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். கரீம். ஆனால் இரண்டாமவன் நோஞ் சானாக இருக்கவே, ஹைதர் மனம் மாறினார். திப்புவின் மீது போர்த்தப்பட்டிருந்த ஆன்மிகப் போர்வையை உருவி எறிந்து, அவன் கையில் ஆயுதத்தைக் கொடுத்தார். திப்பு, சகல வித்தைகளையும் உள்வாங்கிக் கொண்டு வளர ஆரம்பித்தான்.

மைசூர் ராஜ்ஜியத்தின் சர்வாதிகாரியாகத் திறம்பட செயல்பட்டாலும் ஹைதர் எந்த விஷயத்திலும் யாரையும் முழுதாக நம்பவில்லை. காரணம் மல்லுக்கட்டும் மராத்தியர்கள் ஒருபுறம். எப்போது வேண்டுமானாலும் நிறம்மாறக்கூடிய நிஜாம் மறுபுறம். கைகுலுக்குவது போல் குலுக்கி, கழுத்தை நெறிக்கப்பார்க்கும் பிரிட்டிஷார் இன்னொருபுறம்.

நஸராபாத்தில் ஹைதரின் நேரடிக் கண்காணிப்பிலிருந்து விலகியிருந்த லட்சுமம்மணிக்கு பிரிட்டிஷாரோடு நட்புறவு ஏற்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு கிடைத்தது. ஹைதர் எனக்கு எதிரி. ஹைதருக்கு எதிரி பிரிட்டிஷார். என் எதிரியின் எதிரி, எனக்கு நண்பன். ஹைதரை ஒழிக்க எனக்கு உதவுகிறீர்களா?

யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் எதிரியாகி விடுவார்கள் என்பதில் ஹைதர் தெளிவாகவே இருந்தார். ஆகவே தன் அமைச்சர்களைக் குறிப்பிட்ட காலத்துக்கு

ஒருமுறை மாற்றிக்கொண்டே இருந்தார். அதிலும் குறிப்பாக திவான்களை. அந்த நம்பிக்கை யின்மையையும் மீறி ஹைதரின் மனத்தில் இடம்பிடித்து நீண்ட காலம் பணியாற்றியவர்கள் இருவர். ஒருவர் திவான் மீர் சதக். இன்னொருவர் பூர்ணையா.

கோயம்புத்தூர்க்காரரான பூர்ணையா ஏழை அந்தணர் குடும்பத்தில் பிறந்தவர். சிறுவயதி லேயே சமஸ்கிருதத்தில் தேர்ச்சி பெற்றிருந்த பூர்ணையா, தனது தந்தையின் இறப்புக்குப் பிறகு ஆயுதங்கள் தயாரிக்கும் பட்டறை ஒன்றில் பணிக்குச் சேர்ந்தார். அங்கிருந்துதான் ஹைதரின் ஸ்ரீரங்கப்பட்டண கிடங்குக்கு ஆயுதங்கள் சென்றன. பின் பூர்ணையாவே சுயதொழில் தொடங்கினார். பல்வேறு நபர்களுடன் தொடர்பு கிடைத்தது. பிரிட்டிஷாருடன் பேசிப்பேசி ஆங்கிலத்தைப் புரிந்துகொண்டார். கன்னடம், பாரசீக மொழிகளையும் கற்றுக் கொண்டார். ஆகவே ஸ்ரீரங்கப்பட்டணத்தின் கருவூலத்தில் ஒரு சிறிய வேலை கிடைத்தது.

ஹைதரோடு நேரடியாகப் பழகும் வாய்ப்பு. பூர்ணையாவின் பணி வேகமும், சிந்தனை விவேகமும் ஹைதரை ஈர்த்தன. பலன், பதவி உயர்வு. கருவூலத் தலைமைக் கணக்காளராக. பின்பு ஆயுதக் கிடங்கின் பொறுப்பாளராக. போர்க்களங்களிலும் ஹைதரின் நம்பிக்கையைப் பெற்றார் பூர்ணையா.

1778. கிரேட் பிரிட்டனுக்கு எதிராகக் காலனி தேசங்கள் (பின்னர் அமெரிக்காவாக உருவானது) ஒன்றிணைந்து போர் தொடுத்து இருந்த சமயம். அந்த மக்களுக்கு ஆதரவாக பிரான்ஸ் களத்தில் குதித்தது. பிரிட்டனுக்கு எதிராகப் போரை அறிவித்தது. விளைவு இந்தியாவிலும் விடிந்தது. ‘இந்தியாவின் பிரெஞ்சுக்காரர்கள் ஆக்கிரமித்திருக்கும் பகுதிகளை எல்லாம் கைப்பற்றுங்கள்.’ - பிரிட்டிஷ் அரசிடமிருந்து கிழக்கிந்தியக் கம்பெனியின் முதல் கவர்னர் ஜெனரலான வாரன் ஹேஸ்டிங்ஸுக்குக் கட்டளை வந்தது.

ஆக பிரிட்டிஷார், பிரெஞ்சுக்காரர்களை இந்தியாவிலிருந்து அடித்துத் துரத்தக் கிளம்பினார்கள். முதலில் பிரெஞ்சுக் காலனிப் பகுதியான பாண்டிச்சேரியைக் குறிவைத்துப் பிடித்தார்கள். அடுத்து மலபாரின் மாஹியை நோட்டம் விட்டார்கள். ‘அடேய் ஆட்டைத் தின்னு மாட்டைத் தின்னு அடுத்து எங்க மண்ணையே திங்க வர்றியா. விட மாட்டேன் உன்னை!’ தென்னிந்தியா வில் பிரிட்டிஷாரின் நிழல் படருவதை முளையிலேயே பொசுக்க நினைத்த ஹைதர், பிரெஞ்சுக்காரர்களுக்கு ஆதரவாகப் போர்க்களத்தில் இறங்கினார்.

1780ல் ஆரம்பித்த அந்த யுத்தத்துக்கான திருநாமகரணம் ‘இரண்டாம் ஆங்கிலேய - மைசூர் போர்.’ இந்தப் போர் பானிபட் போலக் காலையில் ஆரம்பித்து மாலையில் முடியவில்லை. இழுஇழுவென இரண்டு வருடங்களுக்கும்மேல் தொடர்ந்தது. காஞ்சிவரம், தஞ்சாவூர், பொள்ளிலூர், மலபாரின் பல பகுதிகளில் மைசூரின் படைகளும் பிரிட்டிஷ் படைகளும் மோதிக் கொண்டன. உண்மையிலேயே ஹைதர், திப்புவின் அதிரடித் தாக்குதல்களைச் சமாளிக்க முடியாமல் பிரிட்டிஷாருக்குப் பேதி ஆகாத குறைதான்.

களத்தில் மைசூர் வீரர்கள் குதிரை ஏறி வாளோடு வருவார்கள், அதிக பட்சம் பீரங்கிக் குண்டு கள் வந்துவிழலாம் என்ற மிதப்பில் பிரிட்டிஷார் தங்களது போர் வியூகங்களை அமைத்திருந் தார்கள். ஆனால் விர்விர்ரெனப் பாய்ந்துவந்து தாக்கின ராக்கெட்டுகள். பிரிட்டிஷ் வீரர்கள் சுதாரித்துக் கொள்ளும் முன்பாகவே அவர்களது பூலோகப் பதவி பறிக்கப்பட்டிருந்தது. இந்தியாவில் முதன்முதலில் போரில் ராக்கெட்டுகள் பயன்படுத்தப்பட்டது இந்த



திப்புவின் ராக்கெட்

யுத்தத்தில்தான். வடிவமைத்துப் பயன்படுத்தியவர் திப்புதான். ஒரு ராக்கெட் சுமார் இரண்டரைக் கிலோ மீட்டர் தூரம் சென்று தாக்கும் திறன் கொண்டது. மைசூரின் படையில் பிரெஞ்சுக்காரர்களிடம் பயிற்சிபெற்ற ஐயாயிரம் ராக்கெட் ஏவும் வீரர்கள் இருந்தார்கள்.

1782ல் சித்தூர் நரசிங்கராயப்பேட்டையில் ஹைதர் இருந்தார். அப்போது போர்க்களத்தில் அவரது உடல்நிலை ஒத்துழைக்கவில்லை. போர் முகாமில் படுக்கையில் விழுந்தார். பரிதவித்துப் போனார் பூர்ணையா. ஹைதர் மரணப்படுக்கையில் படுத்துவிட்டார் என்ற விஷயம் பரவினால், ஆங்கிலேயர்களுக்குக் குளிர்விட்டுப் போய்விடுமே. ஆகவே ரகசியம் காத்தார் பூர்ணையா. சில முக்கியஸ்தர்களிடம் மட்டுமே ஹைதர் குறித்த விஷயங்களைப் பகிர்ந்து கொண்டார். நீண்ட நாள்கள் ஹைதரின் தரிசனம் கிடைக்காததால் மைசூர் வீரர்கள் மத்தியில் சலசலப்பு.

'என்ன கேட்டாலும் பூர்ணையாதான் பதில் சொல்கிறார். ஹைதருக்கு என்ன ஆயிற்று? அவரது கூடாரத்துக்கு அருகே யாரையும் நெருங்க விடுவதில்லையே, ஏன்?' குழப்பம் பரவியது. பூர்ணையாதான் பெரும்பாடுபட்டு நிலைமையைச் சமாளித்தார். 'ஹைதருக்குக் கொஞ்சம் உடல்நிலை சரியில்லைதான். பயப்படும்படி ஒன்றுமில்லை. சில நாள்கள் பரி பூரண ஓய்வுதேவை. உள்ளேதான் உறங்கிக் கொண்டிருக்கிறார். வேண்டுமானால் யாராவது வந்து பார்க்கிறீர்களா?' ஒரு வீரன் உள்ளே சென்று பார்த்தான். வெளியே வந்து 'ஆமாம் தூங்குகிறார்' என்றான். வீரர்கள் நம்பிக்கை பெற்றார்கள்.

'இதற்குமேலும் காலதாமதம் செய்வது நல்லதல்ல. திப்புவுக்குத் தகவல் சொல்லியே ஆக வேண்டும். ஆனால் அவர் இப்போது எங்கே இருப்பார்? மலபார் பகுதிகளில் இருப்பதாக முன்பு தகவல் வந்தது. இன்னமும் அங்குதான் இருப்பாரா?' யோசித்தார் பூர்ணையா. குலாம் முகமது, அமீர்கான், சாதுராம் என்ற தனது மூன்று நம்பிக்கைக்குரிய வீரர்களை அழைத்தார். ஹைதரின் மோசமான நிலையை எடுத்துச் சொல்லும் ரகசியக் கடிதம். ஒவ்வொருவரிடமும் கொடுத்தார்.

'திப்புவைத் தேடிப் பிடியுங்கள். அவரிடம் இந்தக் கடிதத்தை ஒப்படையுங்கள். வழியெங்கும் எதிரிகள். கடிதம் யார் கையிலும் சிக்கிவிடக்கூடாது, ஜாக்கிரதை.'

குதிரையேறிய மூவரும் திப்புவைத் தேடி வேறு வேறு திசைகளில் பறந்தனர். அமீர்கானைப் பாதி வழியிலேயே எதிரிகள் சூழ்ந்துகொண்டார்கள். அவன் கொல்லப்பட்டான். எதிரிகளிடம் சிக்காமல் முன்னேறிய குலாம் முகமது சென்றடைந்த இடம் பெத்னூர். கடிதத்தை ஒப்படைத்தான். திப்புவிடமல்ல.



# அல்லாவின் சாம்ராஜ்ஜியம்!

மலபார் பகுதிகளில் ஹைதர் அலி படையெடுத்துச் சென்றிருந்த சமயம் அது (1766). ஏராளமான கேரள நாயர் இளைஞர்கள் மைசூர் படைவீரர்களால் கைது செய்யப்பட்டு ஸ்ரீரங்கப்பட்டணத்துக்குக் கைதிகளாகக் கொண்டுவரப்பட்டனர். கட்டாய மதமாற்றம். அப்படி மதம் மாறி, தன் பெயரையும் மாற்றிக் கொண்ட ஓர் இளைஞன், ஷேக் அயாஸ்.

'கடுமையாக உழைக்கிறான். நல்ல உடல்வாகு. இவனை ஏன் நம் படையில் சேர்த்துக்கொள்ளக்கூடாது?' - ஹைதரின் கவனம் பெற்ற அயாஸ், படைவீரன் ஆனான். பின்பு சிறிய படை ஒன்றுக்குத் தளபதியாக உயர்ந்தான். போர்க்களங்களில் ஹைதரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு. அவர் மனத்தில் நிரந்தர இடம் பிடித்தான். ஆகவே ஹைதரின் சொத்துக்களில் ஒரு பகுதியைப் பராமரிக்கும் பணி அவனுக்குக் கிடைத்தது. பின்பு பெத்னூர் என்ற மாகாணத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டான்.

திப்புவுக்கு பூர்ணையா அனுப்பிய ரகசியக் கடிதத்தைக் கொண்டு சென்ற குதிரை வீரர்களுள் ஒருவனான குலாம் முகமது, திப்புவைத் தேடிப்போகாமல் நேராக ஷேக் அயாஸிடம் வந்துநின்றான். கடிதம் கைமாறியது. பிரித்துப் படிக்க ஆரம்பித்தான் ஷேக் அயாஸ். எல்லாமே சங்கேதச் சொற்கள். முழுமையான அர்த்தத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. கடிதத்தில் இருந்த சில வார்த்தைகளும் குலாம் முகமது சொன்ன சில தகவல்களும் ஹைதர் மரணப் படுக்கையில் கிடக்கிறார் என்பதை உணர்த்தின.

ஷேக் அயாஸின் முகத்தில் பூரிப்பு. உதட்டில் வில்லச் சிரிப்பு. 'அந்தக் கிழட்டுப் புலிக்கு நேரம் நெருங்கிவிட்டது. என்னை என் மண்ணிலிருந்து பிரித்து கைதியாகக் கொண்டு வந்த வன்தானே. பழைய கணக்கு பாக்கியிருக்கிறது. இது என் தருணம்.'

ஹைதரிடம் விசுவாசமாக இருப்பதுபோல நடித்துவந்த ஷேக் அயாஸ், திரைமறைவில் பிரிட்டிஷாரோடு கைகோர்த்திருந்தான். அயாஸ் மூலமாக ஹைதர் குறித்த அநேக ரகசியத் தகவல்கள் பிரிட்டிஷாரின் காதுகளுக்குச் சென்றுகொண்டிருந்தன. சமீபத்திய தகவலும் சென்றது. கம்பெனிக்காரர்கள் கனவுகாண ஆரம்பித்தார்கள். ஹைதர் இறந்துவிட்டால் தென்னிந்தியாவில் வலுவாகக் காலூன்றி விடலாம். மைசூரையே நமதாக்கிவிடலாம். அதற்குமுன் அந்த திப்புவை முடக்க வேண்டும்.

ஷேக் அயாஸ் வேறு கணக்குப் போட்டு வைத்திருந்தான். எப்போதுமே திப்புவுக்கும் அவனுக்கும் ஆகாது. ஹைதர் அலி, அயாஸை வெளிப்படையாகப் பாராட்டும்போதெல்லாம் திப்புவின் முகம் சுருங்கிப்போவதை அவனே பார்த்திருக்கிறான். அடுத்தது என்ன? நாம் நேரடியாகக் களமிறங்கி அதிகாரத்தைக் கைப்பற்ற முடியாது. 'உதவி வேண்டுமானால் ஒரு குரல் கொடுங்கள். வந்துநிற்கிறோம்' என்று சொல்லியிருக்கிறார்கள் வெள்ளையர்கள். அவர்களது உதவியோடு ஹைதர் அலியின் இரண்டாவது மகனான கரீமை அதிகார பீடத்தில் உட்கார வைத்துவிட்டால் போயிற்று. திப்புவை ஒடுக்கிவிடலாம். அந்த நோயாளி கரீம் என்றும் என் கைப்பொம்மை. நான் மறைமுக சர்வாதிகாரி. நினைத்தாலே சிலிர்க்கிறது. ஆனால் அந்த பூர்ணையா? நிஜவிசுவாசியாயிற்றே. அவன் இருக்கும்வரை எந்தத் திட்டமும் பலிக்காதே. என்ன செய்யலாம்?

ஷேக் அயாஸ் ஒரு வதந்தியைக் கிளப்பிவிட்டான். 'ஹைதர் அலி கொல்லப்பட்டுவிட்டார். உடன் இருந்தே கொன்றவன் அந்தத் துரோகி பூர்ணையாதான். உணவில் விஷம் கலந்து கொடுத்துவிட்டான். காரணம் மதவெறி. ஹைதர் அலி உயிரோடிருப்பதாக நாடகமாடு கிறான்.'

ஹைதரின் போர்முகாமிட்டிருந்த நரசிங்கராயப்பேட்டையில் வீரர்களிடையே சலசலப்பு. 'என்ன ஹைதர் இறந்துவிட்டாரா?' பூர்ணையா பதறவில்லை. கலகத்தில் இறங்கியவர்களைக் கைது செய்தார். சமயோசிதமாக முரசை ஒலிக்கச் செய்தார்.

அதாவது முரசு ஒலித்தால் ஹைதர் வீரர்களிடம் நலம் விசாரிப்பதாக அர்த்தம். 'என் அருமை வீரர்களே! நான் நலம். நீங்கள் நலமா? இறைவன் அருளால் எல்லாம் நல்லதாகவே நடக்கும்.' காலையிலும் மாலையிலும் அது ஒலிக்கும். முரசொலியால் வீரர்கள் அமைதியானார்கள்.

பூர்ணையா அனுப்பிய மூன்றாவது குதிரை வீரனான சாதுராம், மலபாரை அடைந்திருந்தான். திப்புவின் போர் முகாம். பூர்ணையாவிடமிருந்து செய்தி என்றதுமே சந்திக்க அனுமதி கிடைத்தது. கடிதத்தைப் படித்த திப்பு உறைந்து போனார். 'ஹைதர் அலி மரணமடைந்து விட்டார்.'

உடைந்து உட்கார்ந்து வருத்தப்படுவதற்கெல்லாம் நேரமில்லை. மலபார் பிரச்னைகளைப் பிறிதொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம். இனியும் தாமதம் செய்தால் மைசூர் ராஜ்ஜியமே பறிபோய்விடும். திப்புவின் குதிரை எட்டுகால் பாய்ச்சலில் கிளம்பியது.



திப்பு சுல்தான்

எத்தனை காலம்தான் வெறும் முரசொலியை எழுப்பி நிலைமையைச் சமாளிக்க முடியும்? பூர்ணையா உள்ளுக்குள் தவித்துப் போயிருந்தார். இந்த நேரம் திப்புவுக்குச் செய்தி சென்றிருக் குமா? இதற்கு மேலும் ஹைதரின் உடலை இங்கே வைத்திருப்பது நல்லதல்ல. வேறெங்காவது பாதுகாப்பான இடத்துக்குக் கொண்டு சென்றே ஆக வேண்டும். எப்படி?

வெவ்வேறு ராஜ்ஜியங்களைச் சேர்ந்த சுல்தான்கள், மகாராஜாக்கள், கலீஃபாக்கள் ஹைதருக்குப் பரிசுப் பொருள்கள் அனுப்புவதுண்டு. ஹைதர் இருக்கும் இடத்துக்கு அவை கொண்டுவரப்படும். அவற்றைப் பார்வையிட்டுவிட்டு கஜானாவுக்குக் கொண்டு செல்லும் படி உத்தரவிடுவார் ஹைதர். அந்தப் போர் முகாமுக்கும் ஒரு பெரிய மரப்பெட்டி வந்து சேர்ந்தது. 'இஸ்லாமியர்களின் தலைவரான துருக்கிப் பேரரசர் அனுப்பிஉள்ளார். அத்தனையும் நகைகள், வைரக்கற்கள். நமது சர்வாதிகாரி சீக்கிரம் குணமடைவதற்காக இறைவனைப் பிரார்த்திப்பதாக செய்தியும் அனுப்பியுள்ளார்.'

எல்லாம் பூர்ணையாவின் ஏற்பாடுதான். அந்தப் பெட்டி ஹைதரின் கூடாரத்துக்குள் கொண்டு செல்லப்பட்டது. பெட்டியிலுள்ள நகைகள் நீக்கப்பட்டு, ஹைதரின் உடல் அதில் வைக்கப் பட்டது, ரகசியமாக. 'சர்வாதிகாரி பரிசுப்பொருள்களைப் பார்த்துவிட்டார். மிக்க மகிழ்ச்சியில் இருக்கிறார். இதை இங்கிருந்து கொண்டுபோகச் சொன்னார்.'

ஹைதரின் உடல் அடங்கிய பெட்டி தக்க பாதுகாப்புகளோடு அங்கிருந்து கிளம்பியது. கோலாரில் பத்திரமாக வைக்கப்பட்டது. மலபாரிலிருந்து கிளம்பி, ஐந்தாவது நாளில் பூர்ணை யாவைச் சந்தித்தார் திப்பு. பின்பு ஹைதரின் மரணச் செய்தி முறையாக அறிவிக்கப்பட்டது. ஸ்ரீரங்கப்பட்டணத்தில் ஹைதரின் இறுதிச் சடங்குகளைச் செய்தார் திப்பு.

அந்தச் சிறிய துக்க இடைவேளைக்குப் பிறகு திப்பு மீண்டும் களத்தில் இறங்கினார். முதல் குறி. ஷேக் அயாஸ். இனியும் விட்டுவைத்தால் வில்லங்கம். 'போதும். துரோகங்களை நிறுத்திக்கொள். மன்னித்துவிடுகிறேன். மனம்திருந்திவிடு' திப்புவிடமிருந்து ஓர் எச்சரிக்கைக் கடிதம் அயாஸுக்குச் சென்றது.

ஆனால் அவனோ வெள்ளைத் தளபதி மாத்யூஸ் என்பவருடன் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருந்தான். 'திப்புவிடமிருந்து என்னைக் காப்பாற்றுங்கள். படை உதவி செய்யுங்கள்.' மாத்யூஸ் பேரம் பேசினான். 'நல்லது. செய்கிறோம். பதிலுக்குப் பெத்னூரையும் அனந்தபூரையும் கம்பெனிக்குத் தந்துவிடுங்கள். நீங்கள்தான் ஆட்சியாளர். நாங்கள் பாதுகாக்கிறோம். சரியா?'

பெத்னூரை விட்டுக் கொடுத்தான் ஷேக் அயாஸ். அனந்தபூர் கவர்னர் நாராயண ராவுக்கு போலி அரசாணை ஒன்றை அனுப்பினான். 'சில அரசியல் காரணங்களுக்காக அனந்தபூர் ஆங்கிலேயர் வசம் ஒப்படைக்கப்படுகிறது. நிபந்தனையின்றி சரணடைந்துவிடுங்கள்.' மிரண்டுபோன நாராயண ராவ், திப்புவுக்கு அந்த ஆணையை அனுப்பினார். 'சுல்தான், இது நெசம்தானா?'

நிலைமை மோசமாவதை உணர்ந்த திப்பு, உடனே ஒரு படையோடு அனந்தபூருக்குக் கிளம்பினார். ஆனால் அதற்குள் ஷேக் அயாஸின் வழிகாட்டுதலின்படி, மாத்யூஸின் படையினர் அனந்தபூருக்குள் அதிரடியாக நுழைந்திருந்தனர். சரணடைய மறுத்த நாராயண ராவ்தான் முதல் பலி. பின் பல பலிகள். பலாத்காரம். கொள்ளை. பிரிட்டிஷ் படையினரின் ரத்த வெறியாட்டம். ஷேக் அயாஸே மிரண்டுபோனான். 'ஓடிவிடு. இனியும் இங்கிருந்தால் திப்புவின் வாளைச் சந்திக்க வேண்டியதிருக்கும்.' அவன் ஓடி ஒளிந்த இடம் பம்பாய்.

திப்பு அனந்தபூரை அடைந்தபோது அது மரணக்காடாக மாறியிருந்தது. 'ஒரு வெள்ளை யனையும் விடாதீர்கள். வெட்டித் தள்ளுங்கள்.' மாத்யூஸ் சிறைபிடிக்கப்பட்டான். பின்பு சிறையிலேயே கொல்லப்பட்டான்.

அடுத்தது என்ன? மங்களூர். திப்புவின் படைகள் முன்னேறின. மங்களூர் வெள்ளை கேப்டன் கேம்பெல் வசமிருந்தது. 1783ல் பிரிட்டனும் பிரான்ஸும் நட்புறவோடு கைகுலுக்கி வெர்ஸெய்ல்ஸ் அமைதி ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டார்கள். திப்புவுக்கு டாடா சொல்லிவிட்டு பிரெஞ்சுப் படைகள் விலகின. திப்பு திகைக்கவில்லை. என் படையே எனக்குதவி.

மங்களூரில் திப்புவின் படையில் இருந்த ஒருவர் சாமையா. உடையார் பரம்பரையைச் சேர்ந்தவர். அவர் ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்த தனது உறவினர்களான ரங்கையா, நரசிங்க ராவுக்கும், கலாலே பரம்பரையைச் சேர்ந்த சுப்பராஜாவுக்கும் ஒரு செய்தி அனுப்பினார். 'இதுதான் சமயம். மங்களூர்ல போர் முடிய நாளாகும். வெள்ளைக்காரங்க உதவியோட திப்பு வோட ஆள்களை, குடும்பத்தை ஒழிச்சுடுங்க. திப்பு இனிமே அங்க காலடி எடுத்து வைக்கக் கூடாது. திரும்பவும் மைசூர் நம்மவர்கள் வசம் வரணும்.'

ஸ்ரீரங்கப்பட்டணத்தில் கோட்டையைக் கைப்பற்றச் சதித்திட்டம் ஜரூராகத் தயாரானது. பிரிட்டிஷாரிடம் உதவிகேட்டுக் கடிதம் அனுப்பப்பட்டது. மராத்தியர்களுக்குக்கூட. 'திப்புவைத் தீர்த்துக்கட்டணும். அதுக்கு யார் உதவ முன்வந்தாலும் நட்போடு வரவேற் கிறோம்.'

ஆனால் திப்பு ஸ்ரீரங்கப்பட்டண கோட்டைக்குத் தளபதியாக நியமித்துவிட்டுச் சென்றிருந்த அஸத் கான் லேசுப்பட்டவரல்ல. அசகாய சூரர். வெள்ளையருக்கும் வெளியாருக்கும்

அனுப்பப்பட்ட கடிதங்கள் எதுவும் எல்லைதாண்ட முடியவில்லை. 'பிடியுங்கள் அந்தத் துரோகிகளை!' - அஸப் கான் பிளிறினார்.

ரங்கையா, நரசிங்க ராவ், சுப்பாராவ் ஒவ்வொருவரும் பிடிபட்டனர். அவர்களது குடும்பத்தினர், உறவினர்கள் என எல்லோரும் சுற்றி வளைத்துப் பிடிக்கப்பட்டனர். அந்தக் கயவர்களின் ஆடைகளைக் களையுங்கள். தெருத்தெருவாக இழுத்து வாருங்கள். யானைகளில் காலில் கட்டி வையுங்கள். சிறையில் தள்ளி மிளகாய்ப்பொடியால் குளிப்பாட்டுங்கள். கோட்டைச் சுவரில் தூக்கிலிடுங்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான தண்டனை நிறைவேற்றப் பட்டது. சாமையாவும் கொல்லப்பட்டார்.

சாமையா தீட்டிய இந்தச் சதியில் மகாராணி லட்சுமம்மணிக்கு எதுவும் தொடர்பு உண்டா என்பது பற்றிய விவரங்கள் தெரியவில்லை. ஆனால் உடையார் குடும்பத்தின் விசுவாசிகள் என்ற முத்திரை குத்தப்பட்ட ஏறக்குறைய எழுநூறு குடும்பங்களைச் சேர்ந்த உறுப்பினர்கள் கொல்லப்பட்டதாக ஒரு குறிப்பு உண்டு.

மங்களூர். திப்புவின் தீவிரத்தாக்குதலில் தீர்ந்து கொண்டிருந்தது பிரிட்டிஷ் படை. மங்களூர் கோட்டையைத் தவிர மற்றதெல்லாம் திப்புவின் பிடியில் வந்திருந்தன. அருகிலிருந்த கடப்பாவும். மங்களூர் கோட்டைக்குள் இருந்து கடுமையாகப் போரிட்ட கேப்டன் கேம்பெல், பெரும் நெருக்கடி கொடுத்தார். பல மாதங்கள் முற்றுகை. 'கோட்டைக்குள் உணவு, அத்தியாவசியப் பொருள்கள் செல்லும் வழிகளைக் கண்டுபிடித்து அடையுங்கள்.' திப்புவின் உத்தரவு செயல்படுத்தப்பட்டது.

நாக்கு வெளியே தள்ளிய ஒரு நன்னாளில் வெள்ளைக்கொடியோடு வந்து சரணடைந்தார் கேம்பெல். 'போர் போதும். காகிதம் இருக்கிறது. எழுதுகோல் இருக்கிறது. நல்லதா நாலு வார்த்தை எழுதி கையெழுத்து போட்டுக்குவோமே.'

மங்களூர் அமைதி ஒப்பந்தம் கையெழுத்தானது (1784, மார்ச் 11). பிரிட்டிஷாருக்குப் பேரிழப்பைக் கொடுத்த இரண்டாம் ஆங்கிலேய மைசூர் யுத்தம் முடிவுக்கு வந்தது.

கோலாருக்கு அருகே பிட்னாவூர். திப்பு, நிம்மதிப் பெருமூச்சு விட்டபடி அரியணையில் சுல்தானாக அமர்ந்தார் (1784, மே 4). பெருமையோடு அறிவித்தார். 'இனி மைசூர் சுல்தான் எ - குதாதாத்' (அல்லாவின் சாம்ராஜ்ஜியம்.)



# 148

# நெப்போலியனுக்கு ஒரு கடிதம்

அமைதியாம். சமாதானமாம். அந்தத் திப்புவோடு நட்பு பாராட்ட வேண்டுமாம். திப்பு கூட்டணி வைத்துள்ள எல்லா அரசர்களுடனும் உறவு பேண வேண்டுமாம். சிறைக்கைதிகளை எல்லாம் விடுவிக்க வேண்டுமாம். இதுவரை பிடித்த இடங்களை வேறு விட்டுக்கொடுக்க வேண்டுமாம். அடச்சே! பெருத்த அவமானம். கீழே விழுந்து மீசையெல்லாம் மண். அதைத் தட்டிவிடக்கூட அவகாசமில்லை. அமைதி ஒப்பந்தத்தில் கையெழுத்துப்போட வேண்டிய கட்டாயம்.

மங்களூர். கிழக்கிந்தியக் கம்பெனியின் தன்மானத்துக்குச் சமாதி கட்டப்பட்ட இடம். பிரிட்டன் அரசாங்கத்துக்கு என்ன பதில் சொல்வது? குயினை எப்படி எதிர்நோக்குவது? அய்யோ... நினைத்தாலே உடம்பெல்லாம் கூசுகிறதே.

கம்பெனிக்காரர்கள் திப்புவினால் உடைந்து விழுந்த மூக்கை எப்படி ஒட்ட வைப்பது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள். மங்களூர் அமைதி ஒப்பந்தத்துக்குக் கட்டுப்பட்டு நடப்பதுபோல வெளியில் காட்டிக்கொண்டாலும் உள்ளுக்குள் திப்புவை எப்படி ஒழிப்பது என்று மட்டுமே திட்டம் தீட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஒப்பந்தங்கள் மீறுவதற்கே. கிழக்கிந்தியக் கம்பெனியில் புதிய இந்திய கவர்னராக கார்ன்வாலிஸ் வந்து இறங்கினார், வம்பிழுக்கும் எண்ணத்தோடு மட்டும். பிரிட்டிஷாரின் அதிகப்பிரசங்கித்தனங்கள் தலைதூக்கின. திப்பு மீண்டும் பிரெஞ்சுக்காரர்களுடன் உறவைப் புதுப்பித்துக் கொண்டார்.

கார்ன்வாலிஸின் கண்கள் சிவந்தன. கரங்கள் ஹைதராபாத்தை நோக்கி நீண்டன. 'நிஜாம், நலம்தானா? இந்தப் பாலக்காட்டை திப்புவிடம் இழந்துவிட்டீர்களாமே. அவர் இருக்கும் வரை தொல்லைதான். நாங்கள் உதவுகிறோம். பாலக்காட்டை மட்டுமல்ல, மைசூரையும் பிடித்துவிடலாம்.' நிஜாம் இரண்டாம் அஸப் ஜா கைகோர்த்தார். 'அட, யாரது அங்கே? மராத்தியர்களா? நாங்கள் எப்படி உங்களை மறப்போம்? வாருங்கள். இணைந்துபோராடுவோம்.'

1789. திப்பு திருவாங்கூர் மீது படையெடுக்கத் தயாரானார். காரணம்? திருவாங்கூர் மகாராஜா இரண்டாம் ராம வர்மா, டச்சுக்காரர்களிடமிருந்து ஜெய்கோட்டையை வாங்கியிருந்தார். ஜெய்கோட்டை கொச்சின் மாகாணத்துக்குட்பட்டது. கொச்சின், திப்புவின் அதிகாரத்துக்குட் பட்டது. டிசம்பர் 29ல் மைசூர் படைகள், திருவாங்கூரைத் தாக்க ஆரம்பித்தன.

அப்போது திருவாங்கூர் பிரிட்டிஷாரின் நட்பு வளையத்தில்தான் இருந்தது. திப்பு வலிய வந்து வாளைச் சுழற்றியது பிரிட்டிஷாருக்கு வசதியாகப் போயிற்று. மைசூரின் படைகள் திருவாங்கூரைக் குறிவைக்க, பிரிட்டிஷ், நிஜாம், மராத்தியக் கூட்டணிப் படைகள் திப்புவின் ஆளுகைக்குள்பட்ட பிரதேசங்களைக் குறிவைத்தன. திருவாங்கூர் திப்புவுக்கு இடையே ஆரம்பித்த போர், மூன்றாம் ஆங்கிலேய - மைசூர் போராக உருமாறியது.

திண்டுக்கல், அரவக்குறிச்சி, சத்தியமங்கலம், கோயம்புத்தூர் - இவை பிரிட்டிஷார் வசமாயின. கூட்டணிப்படைகள் பெங்களூரை நோக்கி முன்னேறின. திப்புவின் தளபதி ஒருவர், பிரிட்டிஷாருக்குச் செல்லப்பிராணி ஆனார். ஆகவே எந்தவிதப் பெரும் எதிர்ப்புமின்றி பெங்களூர் கோட்டையைக் கைப்பற்றினார் கார்ன்வாலிஸ். திப்பு பாண்டிச்சேரியிலிருந்து எதிர்பார்த்திருந்த பிரெஞ்சுப் படைகள் வரவில்லை. காரணம், பிரான்ஸில் பிரெஞ்சு புரட்சி தீவிரமாகிக் கொண்டிருந்தது.

கார்ன்வாலிஸின் அடுத்த இலக்கு, ஸ்ரீரங்கப்பட்டணம். படைகளோடு கிளம்பினார். நெருங்கி னார். திப்பு, கூட்டணிப் படைகளுக்குரிய அத்தியாவசியப் பொருள்கள் வரும் வழிகளை அடைத்தார். உணவு, தண்ணீர் ஏதும் கிடைக்காமல் எதிரிகள் பின்வாங்கிவிடுவார்கள் என்பது திப்புவின் கணக்கு. கூடவே பருவமழையும் சேர்ந்துகொண்டது. கார்ன்வாலிஸ் பெங்களூ ருக்கே திரும்பினார். ஓய்வெடுத்துவிட்டு நிதானமாக ஸ்ரீரங்கப்பட்டணத்தைத் தாக்க நாள் குறித்தார். 1792, பிப்ரவரி 6.

ஜெனரல் மேடோஸ், கர்னல் ஸ்டூவர்ட், கார்ன்வாலிஸ் மூன்று பேரின் தலைமையில் கூட்டணிப் படைகள் மூன்றுபுறமிருந்து மெள்ளச் சத்தமின்றி பூனைபோல நகர்ந்தன, புலியின் கோட்டையை நோக்கி. தாக்குதல் ஆரம்பித்தது. ஸ்ரீரங்கப்பட்டணக் கோட்டை பீரங்கிகளும் முழங்க ஆரம்பித்தன. கார்ன்வாலிஸ் முடிந்தவரை திப்புவின் ஆள்களை, வீரர்களைத் தம் வசப்படுத்தும் வேலையில் இறங்கினார். எலும்புத்துண்டுகள் நாய்களுக்குப் பிடிக்குமே.

இரண்டு நாள்கள் தீவிரமாக நடந்த தாக்குதலில் திப்புவின் படைகளுக்குப் பேரிழப்பு. ஏறக்குறைய 4000 பேர் உயிரிழப்பு. திப்புவுக்கு இரண்டே வாய்ப்புகள்தான் இருந்தன. ஒன்று இறுதிவரை போராடிப் பார்ப்பது அல்லது சமாதானக்கொடி ஏந்தி, ஸ்ரீரங்கப்பட்டணத்தைத் தக்கவைத்துக்கொள்வது. திப்பு, வெள்ளைக்கொடியைக் கையில் எடுத்தார்.

இதை இதைத்தான் நான் எதிர்பார்த்தேன் என்று நெஞ்சு நிமிர்த்தினார் கார்ன்வாலிஸ். கூடவே ஏகப்பட்ட நிபந்தனைகள். 'நீங்க இந்த முடிவெடுத்ததுல ரொம்ப சந்தோஷம். மைசூர்

ராஜ்ஜியத்துல பாதியைப் பங்கு பிரிச்சுக் கொடுக்கறது உத்தமம். இதுதான் பட்டியல். பிரிட்டிஷுக்கு, நிஜாமுக்கு, மராத்தியர்களுக்கு யார் யாருக்கு என்னென்ன வேணும்னு இதுல இருக்குது. அப்படியே இந்தப் போருக்கு நாங்க செலவழிச்ச வகையில ஒரு மூணு மில்லியன் பவுண்ட் தந்துருங்க. வேற என்ன பெருசாச் கேக்கப்போறோம். உங்க புள்ளைங்க ரெண்டுபேரைப் பணயக்கைதியா அனுப்பி வைச்சிருங்க.'

அப்போதிருந்த நிலைமையில் திப்பு சுல்தானால் அடிபணிய மட்டுமே முடிந்தது. அந்த மார்ச் 19ல் ஸ்ரீரங்கப்பட்டண அமைதி ஒப்பந்தம் கையெழுத்தானது.

திப்புவின் இந்தச் சறுக்கல், நஸராபாத்திலிருந்த மகாராணி லட்சுமம்மணியின் மனத்தில் உற்சாகத்தை ஏற்படுத்தியிருந்தது. ஹைதராலோ, திப்புவாலோ மகாராணிக்கு நேரடிப் பாதிப்பு எதுவும் வரவில்லை. மகாராணிக்கு ஏதுமென்றால் பரம்பரை மைசூர் மக்கள் கொதித்தெழுந்து விடுவார்கள் அல்லவா. ஆனால் மகாராணியின் உற்றார், உறவினர்களுக்கு இன்னல்கள் தொடரவே செய்தன.

நஸராபாத்தில் இருந்துகொண்டே லட்சுமம்மணி, தனது நம்பிக்கைக்குரிய உறவினர்களான திருமலா ராவ், நாராயண ராவ் மூலமாக பிரிட்டிஷாருடன் உறவை பலப்படுத்திக் கொண்டிருந் தாள். திப்புவின் படைகளில் இருந்த லட்சுமம்மணியின் ஆள்கள் மூலமாக திருமலாவுக்கும் நாரயணாவுக்கும் ரகசியத் தகவல்கள் சென்றன. அந்தத் தகவல்கள் பிரிட்டிஷாருக்கும் தெரிவிக்கப்பட்டன. இப்படி திப்புவின் பல போர்த்திட்டங்கள் திரைமறைவில் கசிந்து கொண்டுதான் இருந்தன.

சரி, பொம்மை மகாராஜாவாக ஒருவர் இருந்தாரே. அவர் என்ன ஆனார்? காஸா சாமராஜ உடையார். பாலும் பருப்பும் உண்டு சீரும் சிறப்புமாக வளர்ந்தார். திப்பு, தன்னைச் சுல்தானாக அறிவித்துக் கொண்டபிறகு, மகாராஜா என்ற பெயரளவு பட்டத்தைக்கூட இழந்தார். திரு மணம் செய்துகொண்டார். ஏழு பெண்களை. அதில் ஐந்தாவது மனைவி வெற்றிகரமாக ஓர் ஆண்பிள்ளையைப் பெற்றுக் கொடுத்தாள் (1794).

குழந்தைக்கு வைக்கப்பட்ட பெயர் மும்மடி மூன்றாம் கிருஷ்ணராஜ உடையார். லட்சுமம்மணி பூரித்துப் போனாள். 'அந்தச் சாமுண்டீஸ்வரி கைவிடவில்லை. மீண்டும் மைசூரில் உடையார் ராஜ்ஜியம் மலரத்தான் போகிறது.'

சின்னம்மை என்று சொல்கிறார்கள். இல்லையில்லை திப்புவின் சதிதான் என்றுதான் சொல் கிறார்கள். 1796ல் காஸா சாமராஜ உடையார் இறந்துபோனார் அல்லது கொல்லப்பட்டார். லட்சுமம்மணியின் ஒரே நம்பிக்கையாக இரண்டரை வயது பேரன் மும்மடி மட்டுமே இருந்தான். கூடவே பிரிட்டிஷாரும்.

கிழக்கிந்திய கம்பெனியின் புதிய கவர்னர் ஜெனரலாக வெல்லெஸ்ஸி வந்திருந்தார் (1798.) இந்தியாவில் அங்கொன்றும் இங்கொன்றுமாக பிரிட்டிஷார் அதிகாரம் செலுத்திக் கொண்டி ருப்பதை அவர் மனம் ஒப்புக்கொள்ளவில்லை. முழு இந்தியாவும் பிரிட்டிஷாரின் காலடியில் கிடக்க வேண்டும் என்பதே அவரது லட்சியம். ஆகவே துணைப்படைத் திட்டம் என்ற ஒன்றைக் கொண்டுவந்தார்.

என்னது அது? தேவைப்படும்போதெல்லாம் இந்திய மன்னர்கள் பிரிட்டிஷாரிடம் படை உதவி பெற்றுக்கொண்டுதான் இருந்தார்கள். எல்லாம் தற்காலிகக் கூட்டணி. தற்காலிக

வருமானம். நிரந்தர வருமானம் வேண்டாமா? யோசித்த வெல்லெஸ்ஸி செய்தி அனுப்பினார்.

'மாண்புமிகு மன்னர்களே, உங்களுக்கு உதவுவதற்கென்றே நிரந்தரமாகக் கம்பெனிப் படைகளை அளிக்கின்றோம். உங்கள் நிலப்பகுதியில் எங்களுக்குக் கொஞ்சம் ஒதுக்கிக் கொடுத்து விடுங்கள். எங்கள் துணைப்படை அதிகாரியும் உங்கள் ராஜ்ஜியத்தில் ஒருவர்தான். எங்களைக் கேட்காமல் எந்தப்போருக்கும் நீங்கள் சென்று மூக்கை உடைத்துக் கொள்ளக்கூடாது. ஐரோப் பியர்களுடன், குறிப்பாக பிரெஞ்சுக்காரர்களுடன் ஒட்டோ, உறவோ ம்ஹூம். எங்கள் சேவை தங்களுக்குக் கட்டாயத் தேவை.'

கடிதம் அல்ல, அது கட்டளைதான். வெல்லெஸ்ஸியின் ராஜதந்திரத்தில் முதலில் விழுந்தவர் ஹைதராபாத் நிஜாம். முதன்மையாக எதிர்த்தவர் திப்பு சுல்தான். மூன்றாம் மைசூர் போரின் தோல்விக்குப் பின் தன்னைப் பலப்படுத்திக் கொள்ளவேண்டிய கட்டாயத்தில் இருந்த திப்பு, ஆப்கன் மன்னரின் உதவி கேட்டார். துருக்கி, அரேபியா, மொரிஸியஸுக்கும் உதவிகேட்டுக் கடிதம் அனுப்பினார். நெப்போலியனுக்கும் ஒரு கடிதம் எழுதி பிரான்ஸுக்கு அனுப்பினார்.

நெப்போலியனிடமிருந்து பதில் வந்தது. ஆனால் அந்தக் கடிதம் திப்புவை அடையவில்லை. பிரிட்டிஷாரிடம் சிக்கியதாக ஒரு குறிப்பு உண்டு. திப்பு மீண்டும் பிரான்ஸின் உதவியை நாடுவது தெரிந்ததும் வெல்லெஸ்ஸி வெகுண்டெழுந்தார். 'இனியும் திப்புவை விட்டுவைத்திருந் தால், பிரிட்டிஷ் பேரரசை உருவாக்க முடியாது. தீர்த்துக் கட்டுங்கள் திப்புவை.'

நான்காம் ஆங்கிலேய மைசூர் யுத்தம் ஆரம்பமானது. வேலூரிலிருந்து கிளம்பிவந்த ஒரு பெரும்படையை, பூர்ணையாவின் தலைமையிலான மைசூர் படை ஆம்பூரில் எதிர் கொண்டது. 1799, பிப்ரவரி 21, பம்பாயிலிருந்து வந்த ஜெனரல் ஸ்டூவர்ட் தலைமையிலான பிரிட்டிஷ் படை மைசூருக்கு வடக்கே முன்னேறிக் கொண்டிருந்தது. மத்தூரில் அந்தப் படைகளை எதிர்கொண்டார் திப்பு. ஸ்டூவர்ட் உயிர்தப்பி கள்ளிக்கோட்டைக் காட்டுப்பகுதிக்குள் பதுங்கினார்.

அந்தச் சமயத்தில் மைசூரின் கிழக்கு முனையில் ஜெனரல் ஹாரிஸின் படை முன்னேறிக் கொண்டிருந்தது. பிரிட்டிஷாரும் கூட்டணிப்படைகளும் கொடுத்த பலமுனை நெருக்கடி களைத் திறம்படச் சமாளித்தார் திப்பு. ஆனால் நம்பிக்கைத் துரோகிகளுக்கு என்றும் பஞ்சம் இருந்ததில்லையே. மைசூர் படையைச் சேர்ந்த பல தளபதிகள் பிரிட்டிஷாரோடு சேர்ந்திருந் தனர். ஸ்ரீரங்கப்பட்டணத்தை எப்படி எப்படி எல்லாம் வளைக்கலாம் என்ற போர் ரகசியங் களைப் போட்டுக் கொடுத்தனர். அந்த ஏப்ரலில் பிரிட்டிஷ் படைகள் ஸ்ரீரங்கப்பட்டணத்தை முழுமையாக முற்றுகையிட்டன.

இக்கட்டான சூழல். இன்னொரு முறை சமாதானம் பேசிப் பார்த்தால் என்ன? திப்பு முயற்சி செய்தார். இரண்டுகோடி பகோடாக்கள், பாதிக்கும் மேற்பட்ட மைசூர் ராஜ்ஜியம், திப்புவின் வாரிசுகள் பணயக்கைதி இப்படி ஜெனரல் ஹாரிஸ் ஏகப்பட்ட நிபந்தனைகளைத் திணிக்கவும் பணிய மறுத்தார் திப்பு.

மே 4. திப்பு, அதிகாலையில் கோட்டையைச் சுற்றிப் பார்வையிட்டார். சுவரின் ஒரு பகுதியில் உடைப்பு ஏற்பட்டிருந்தது. உடனே சரி செய்யச் சொல்லி உத்தரவிட்டுச் சென்றார். பணிகள்



திப்புவின் கடைசி யுத்தம்

நடப்பதாகத் தகவல்மட்டும் வந்தது. அன்று மதிய வேளையில் ஹாரிஸின் தலைமையிலான பிரிட்டிஷ் படைகள் கோட்டையைப் பிடிக்க முன்னேறின. கோட்டைச் சுவரிலிருந்து கிளம்பிய பீரங்கிக் குண்டுகளாலும் ராக்கெட்டுகளாலும் அவர்களைத் தடுக்க முடியவில்லை. எதிரிகள் கோட்டைக்குள்ளும் புகுந்தார்கள்.

அந்த துர்பாக்கியச் சூழலில் பூர்ணையா திப்புவோடு இல்லை. திப்புவே அவரை அங்கிருந்து வெளியேறச் சொன்னதாகவும் தகவல் உண்டு. பூர்ணையா பிரிட்டிஷ் பக்கம் சாய்ந்துவிட்டதாகச் சொல்பவர்களும் உண்டு. நம்பிக்கைக்குரிய திப்புவின் தளபதியான சையத் காபர் கொல்லப் பட்டிருந்தார். மதில்மேல் இருந்து எதிரிகளின் நகர்வைக் கவனித்துக் கொண்டிருந்த திப்பு, ஒரு முடிவெடுத்தவராக வாளை உருவினார். களத்தில் குதித்தார்.

இரவு. ஸ்ரீரங்கப்பட்டணம் பிணங்களால் நிரம்பிக் கிடந்தது. வெள்ளையர்கள் வெற்றிக் களிப்பில் வெறியாட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள். கோட்டையின் மேல் யூனியன் ஜாக் கொடி. திப்பு எங்கே? தப்பித்துவிட்டாரா? ஹாரிஸ் மும்முரமாகத் தேடிக் கொண்டு இருந்தார். வீரர்களின் சடலங்களின் மத்தியில் திப்புவின் உடலும் கண்டெடுக்கப்பட்டது.



# 149

# ஆற்றங்கரையில் அவள்

போருக்குப் பின் ஒப்பந்தம். காலம் காலமாக கம்பெனிக்காரர்கள் கட்டிக் காத்த பாரம்பரியம் அது. நான்காவது ஆங்கிலேய - மைசூர் போருக்குப் பின்னும் ஓர் ஒப்பந்தத்தோடு தயாராக இருந்தார்கள் பிரிட்டிஷார். 'மீண்டும் உடையார் பரம்பரையினரை ஆட்சியில் அமரவைப்பதில் எங்களுக்கு எந்தவித மனக்கிலேசமும் இல்லை. கம்பெனியாரின் ஆதரவை என்றும் உங்களுக்கு அருளக் காத்திருக்கிறோம். சில நிபந்தனைகள் மட்டும். ஒரு சில கையெழுத்துகள். அவ்வளவுதான். புதிய மகாராஜா மும்மடி கிருஷ்ணராஜா உடையார் வாழ்க, வாழ்க!'

மாதா மாதம் கம்பெனிக்கு இவ்வளவு பணம் தரவேண்டும், இவ்வளவு பொருள்கள் தரவேண்டும், அப்புறம் படைகள். குறிப்பாகக் குதிரைப்படை. நாலாயிரம் வீரர்கள் போதும். கூப்பிடும்போதெல்லாம் வரவேண்டும் என்ற அவசியமில்லை, நிரந்தரமாகக் கம்பெனிப் படைகளுடன் இருந்தாலே போதுமானது. இவைபோக நாங்கள் அழைக்கும் போதெல்லாம் கொஞ்சம் படை அனுப்ப வேண்டியது தங்கள் கடமை. பிரிட்டிஷார் ஒப்பந்தத்தில் குறிப்பிட்டிருந்த முக்கிய நிபந்தனைகள் இவைதாம்.

மைசூர் ராஜ்ஜியத்தில் இருந்த சில பகுதிகளை பிரிட்டிஷார் மெட்ராஸ் மாகாணத் தோடு இணைத்துக் கொண்டார்கள். போரில் உதவி செய்ததற்காக ஹைதரபாத் நிஜாம் சில பகுதிகளைப் பெற்றுக் கொண்டார். சுருங்கிப் போன மைசூர் ராஜ்ஜியத்தின் அரியணை ஏறக் காத்திருந்த மும்மடி கிருஷ்ணராஜ உடையாருக்கு

வயது ஐந்தைக்கூடத் தொடவில்லை. ஆகவே பிரதிநிதி (Regent) ஒருவரை நியமிக்க முடிவுசெய்தார்கள். கலந்துபேசி பிரிட்டிஷார் அறிவித்த பெயர் பூர்ணையா.

தன்னிகரற்ற விசுவாசத்தோடு ஹைதர் அலியிடம் பணியாற்றியவர். பிரிட்டிஷாருக்குப் பெரும் சவாலாக இருந்த திப்பு சுல்தானோடு இருபது வருடங்கள் இணைந்திருந்தவர். இருந்தும் அவரை பிரிட்டிஷார் நம்பிக்கையுடன் தேர்ந்தெடுக்கக் காரணம்? பூர்ணையாவின் பழுத்த அனுபவம். திப்புவின் வீழ்ச்சிக்குப் பின் அமைதியாகப் பிரிட்டிஷாரோடு அவர் ஏற் படுத்திக் கொண்ட சிநேகம். ஆகவே தேர்ந்தெடுத்தார்கள்.

யார் அடுத்த திவான் என்ற கேள்வி எழுந்தது. மகாராணி லட்சுமம்மணி, தனது உறவினர் திருமாலா ராவை நியமிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனால் பிரிட்டிஷார், பூர்ணையாவை திவானாகவும் அறிவித்தார்கள். ஹைதர் அலி குடும்ப விசுவாசியை எப்படி லட்சுமம்மணியால் ஏற்றுக்கொள்ளமுடியும்? ஆனால் பிரிட்டிஷார் லட்சுமம்மணியின் விருப்பத்தையெல்லாம் கேட்கவில்லை.

சரி, திப்புவின் குடும்பத்தினர் என்ன ஆனார்கள்? திப்புவுக்கு ஏகப்பட்ட மனைவிகள். அதில் மைசூர் ராஜ குடும்பத்தைச் சேர்ந்த பெண்களும் உண்டு. வாரிசுகளுக்கும் குறைவில்லை. பதினாறு ஆண் பிள்ளைகள், எட்டுக்கும் மேற்பட்ட பெண் பிள்ளைகள் என்றொரு கணக்கு சொல்கிறார்கள். திப்புவின் வீழ்ச்சிக்குப் பின் அவரது குடும்பத்தினர், பிரிட்டிஷாரால் வேலூருக்கு அனுப்பப்பட்டார்கள். அவர்களின் கண்காணிப்பில் வாழ்ந்தார்கள்.

1806. பிரிட்டிஷார், இந்தியச் சிப்பாய்களுக்கு மதரீதியான தடைகளை விதித்தார்கள். இந்துச் சிப்பாய்கள் மத அடையாளங்கள் எதையும் அணியக்கூடாது. நெற்றியில் விபூதி வகையறாக் களுக்குத் தடை. இஸ்லாமியச் சிப்பாய்கள் தாடி வைக்கக்கூடாது. தடையை மீறிய வேலூர் சிப்பாய்களுக்குக் கசையடிகள் கிடைத்தன. அதுபோகப் பல்வேறு தண்டனைகள்.

கொதித்தெழுந்த சிப்பாய்கள் வேலூர்க் கோட்டையில் கலகத்தில் ஈடுபட்டார்கள். எதிர்ப்பட்ட பிரிட்டிஷாரெல்லாம் பரலோக ராஜ்ஜியத்தை அடைந்தார்கள். வேலூர் கோட்டை கைப்பற்றப் பட்டது. அதன் ராஜாவாக திப்புவின் இரண்டாவது மகனான பஃதே ஹைதர் அமரவைக்கப் பட்டார். வெற்றிக்களிப்பில் சிப்பாய்கள் மிதந்துகொண்டிருந்த சமயத்தில் ஆற்காட்டிலிருந்து பிரிட்டிஷ் படையினர் அதிரடியாகக் கோட்டைக்குள் நுழைந்தனர். சிப்பாய்கள் வேலூர் கோட்டையையும் இழந்தனர், உயிரையும். அதற்குபின் பஃதே ஹைதரும் ஏனைய குடும்பத் தினரும் பிரிட்டிஷாரால் கல்கத்தாவுக்கு அனுப்பிவைக்கப்பட்டனர்.

பூர்ணையாவின் கதைக்கு வருவோம். திப்புவின் இறுதி நாள்கள் வரை அவரோடு இருந்த பூர்ணையா, பிரிட்டிஷாரோடு கைகோக்கக் காரணம் என்ன? திப்புவின் வீழ்ச்சிக்குப் பிறகும் எப்படி அவரால் எந்தவிதத் தயக்கமும் இன்றி பிரிட்டிஷார் அளித்த பதவியை ஏற்றுக்கொள்ள முடிந்தது? பழைய ஹைதர் விசுவாசம் எங்கே போனது? அதற்குக் காரணமான சம்பவம் ஒன்றையும் வரலாற்று ஆசிரியர்கள் எடுத்துவைக்கிறார்கள். அது திப்புவின் காலத்தில் நடந்தது. பூர்ணையாவின் மனத்தில் திப்பு மீதான மரியாதை குறைந்ததற்குக் காரணமாகக் கூறப்படும் சம்பவம் அது.

திப்புவின் வீரர்கள் சிலர் காவிரியில் குளித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். தூரத்தில் பல்லக்கு ஒன்று வருவது தெரிந்தது. 'ராஜ குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணாக இருக்கலாம்.

ஒளிந்திருந்து பார்க்கலாம்' வீரன் ஒருவன் படபடத்தான். மறைந்திருந்து நோட்ட மிட்டார்கள்.

பல்லக்கு இறக்கப்பட்டது. பல்லக்குத் தூக்கிகள் இடத்தைக் காலி செய்தார்கள். திரையை விலக்கிக்கொண்டு இளம் பெண்ணொருத்தி இறங்கினாள். 'இதற்கு முன்பு நான் இவளைப் பார்த்ததே கிடையாதே? யார் வீட்டுப் பெண் இவள்?' - கேட்டான் ஒரு வீரன். 'பெண்ணல்ல, தேவதை' என்றான் மற்றொருவன்.

'அந்த நாள்கள்' முடிந்தபின் மைசூர் பெண்கள், காவிரியில் குளிப்பது வழக்கம். மீண்டும் தங்களைப் புனிதப்படுத்திக் கொள்வதற்காக அவர்கள் மேற்கொள்ளும் ஒரு சடங்கு. காவிரி அவளைத் தழுவிக் கொண்டிருந்தது. அந்த ரம்மியத்தில் வீரர்களின் நிதானம் நழுவிக் கொண்டிருந்தது. 'இன்று இவளை விடக்கூடாது' - கிளம்பினான் ஒருவன். சிலர் தயங்க, சிலர் அவனைப் பின்தொடர்ந்தார்கள்.

சொட்டச் சொட்டக் கரையேறிய அவள் திகைத்துப் போனாள். சீண்டினார்கள். கதறினாள். கைபிடித்து இழுத்தார்கள். வாய்வலிக்கக் கத்தினாள். ஆபத்பாந்தவன்கள் யாரும் வரவில்லை. ஆற்றங்கரையில் அநாகரிகம் அரங்கேறியது. அலறித் துடித்து அடங்கினாள்.

அவள் வேறுயாருமல்ல, பூர்ணையாவின் புதல்விதான். உடைந்துபோன பூர்ணையா நீதி கேட்டுத் திப்புவிடம் சென்றார். 'இனி என் பெண்ணின் கதி என்னவாகும்? அவளுக்கு யார் வாழ்க்கை கொடுப்பார்கள்?' அந்தக் குற்றத்தில் ஈடுபட்ட வீரர்களுக்கு திப்பு, கடுமையான தண்டனை கொடுப்பார் என்று பூர்ணையா எதிர்பார்த்தார். ஆனால் கிடைத்த பதில் அவரை நிலைகுலையச் செய்தது. 'அந்தப்புரத்தில் வேண்டுமானால் உங்கள் பெண்ணுக்கு இடம் தருகிறேன்.'

இந்தச் சம்பவத்திற்குப் பிறகுதான் பூர்ணையா திப்புவிடமிருந்து மனத்தளவில் விலக ஆரம்பித்தார். பிரிட்டிஷாரோடு அவர் மனமுவந்து இணையக் காரணமும் இதுதான் என்கிறார் கள். இஸ்லாமிய மதத்துக்கு மாறச் சொல்லி பூர்ணையா வற்புறுத்தப்பட்டார். அதுவே பிரதான காரணம். அதனால்தான் நான்காவது மைசூர் போரில், திப்புவுக்கு முடிவு நெருங்கிவிட்டதென உணர்ந்ததும் பூர்ணையா, ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து சிலநாள்களுக்கு முன்பாகவே கிளம்பி விட்டார் என்று வாதிடுபவர்களும் உண்டு.

மகாராஜாவின் பிரதிநிதியாக அதிகாரங்களைத் தன்னகத்தே கொண்டிருந்த பூர்ணையாவால் ராஜ குடும்பத்தினரோடு ஒட்டி உறவாட முடியவில்லை. சற்றே விலகித்தான் இருந்தார். குட்டி மகாராஜா மும்மடி, பூர்ணையாவின் பிடிக்குள் சென்றுவிடாதபடி ஏராளமான சொந்த பந்தங்கள் தடுத்தாட்கொண்டார்கள்.

ராஜ சுகங்களுடன் வளர்ந்தார் மும்மடி. லட்சுமம்மணிக்கு அவசரம். பேரனுக்கு ஒரு திருமணம் செய்து அதைக் கண்குளிரக் காணவேண்டுமென்று. மும்மடியாருக்கு ஏழு வயதிலேயே முதல் திருமணம் நடந்தது (1802). பாவம் அந்தக் குட்டி மகாராணி. சீக்கிரமே இறந்துபோனது. மனைவியைப் பறிகொடுத்த சோகம் எல்லாம் இன்றி மும்மடியார் விளையாடிக் கொண்டிருந்தார்.

பதினொரு வயதில் அடுத்த திருமணம். எப்போது தன் பேரன் முழு அதிகாரத்தோடு ஆட்சிக்கு வருவான், பூர்ணையாவை அடித்துத் துரத்தலாம் என்று ராஜ குடும்பத்தினர் காத்துக்

கொண்டிருந்தார்கள். 1810ல் லட்சுமம்மணியை மரணம் அழைத்தது. உடையார் பரம்பரை மீண்டும் மைசூர் ராஜ்ஜியத்தைக் கைப்பற்றிய திருப்தி. தன் கணவர் இம்மடி கிருஷ்ணராஜ உடையாருக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றிய மனநிம்மதி. கண்மூடினாள்.

இடைப்பட்ட காலத்தில் ராஜ்ஜியத்தின் தலைநகரம் ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து மைசூருக்கே மீண்டும் மாற்றப்பட்டது. பிரிட்டிஷ் வீரர்களின் தற்காலிக வசிப்பிடமாக (Cantonment) பெங்களூரு ஆனது. பதினாறு வயதில் அடியெடுத்து வைத்தார் மும்மடி கிருஷ்ணராஜ உடையார். மேலுதட்டுக்கு மேல் இளமீசை எட்டிப்பார்க்க ஆரம்பித்திருந்தது.

'இனியும் பெயரளவு மகாராஜாவாக வாழ என்னால் முடியாது. அடுத்தவனுக்கு அதிகாரத்தைக் கொடுத்துவிட்டுத் தலையாட்டி பொம்மையாக இருக்க நான் விரும்பவில்லை. என்னைப் பொருத்தவரை பூர்ணையா இனி அநாவசியம்.' மும்மடியாரின் இளரத்தம் சலம்பியது. சுற்றியிருந்தவர்களும் அதற்குத் தூபம் போட்டார்கள். தான் ஆட்சிப்பொறுப்பைக் கையில் எடுத்துக் கொள்ள விரும்புவதாக பிரிட்டிஷாருக்குக் கடிதம் அனுப்பினார் மும்மடி. 'அதற்கென்ன, தாராளமாக' என்று அனுமதி கிடைத்தது.

பூர்ணையாவுக்கு நெருக்கடி. 'அய்யா, எப்போ இடத்தைக் காலி பண்ணுறதா உத்தேசம்?'

உண்மையில் பூர்ணையாவுக்குப் பதவியை விட்டுவிலகுவதில் ஆட்சேபணை இருக்கவில்லை. ஒரு கவலை மட்டும் இருந்தது. 'மும்மடிக்கு ஒரு மகாராஜாவுக்குரிய முதிர்ச்சி இல்லையே. அந்தப் பதவிக்குரிய அர்த்தத்தை விளையாட்டாக நினைத்துக் கொண்டிருக்கிறாரே. உல்லாசத்திலும் சல்லாபத்திலும் மட்டுமே நாட்டம் கொண்டிருக்கும் இவரை நம்பி எப்படி அதிகாரத்தை ஒப்படைப்பது? பிரிட்டிஷார் உத்தரவு போட்டுவிட்டார்கள். வேறு வழியில்லை.'

பூர்ணையா, பிரிட்டிஷாரிடம் ஒரே ஒரு கோரிக்கையை மட்டும் பலகாலமாக வைத்துவந்தார். 'என் சேவையில் தங்களுக்குப் பரம திருப்தி என்று தாங்களே பலமுறை சொல்லியும் இருக்கிறீர்கள். ஆகவே இந்த திவான் பதவியை எனது பரம்பரையில் வரும் வாரிசுகளுக்கு என்று அங்கீகரிக்க வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.'

அந்தக் கோரிக்கை நிறைவேற்றப்படவில்லை. ஆனால் பிரிட்டிஷார் ஏலந்தூர் என்ற பகுதியிலிருந்து வரும் வருமானத்தை அனுபவிக்கும் உரிமையை (Jagir) பூர்ணையாவுக்கு வழங்கினார்கள். பூர்ணையா பதவி விலகினார் (1811). முதுமை. அடுத்த சில மாதங்களில் இறந்தும்போனார்.

புதிய திவானாகப் பொறுப்பேற்றவர் ராமா ராவ். மராத்தியர். பிராமணர். பதவிக்கு வந்த கொஞ்ச நாள்களிலேயே மும்மடியாருடன் நெருக்கத்தை வலுப்படுத்தினார். அதன்மூலம் தன் உற்றார், உறவினர்களையெல்லாம் அரசாங்கப் பதவியில் அமர வைத்தார். மும்மடி அதிகாரத்துக்கு வந்த சில காலத்திலேயே பிரிட்டிஷாருக்கு ஏதோ உறுத்தியது. 'அவசரப்பட்டு அனுமதி கொடுத்துவிட்டோமோ? இன்னும் கொஞ்சம் காலம் கடத்தியிருக்கலாமோ?'

காரணம், பூர்ணையா காலத்தில் புஷ்டியாக இருந்த கஜானா, அப்போது காற்றிழந்த பலூனாகிக் கிடந்தது. சுமார் இரண்டரை வருடங்களில் திவான் மாறினார். அடுத்த சில வருடங்களில் இன்னொருவர். எல்லாம் ராமா ராவின் உற்றார்கள்தான் அல்லது மும்மடியாரின்

உறவினர்கள்தாம். எல்லோருடைய காலத்திலும் வழக்கத்தைவிட வரிவசூல் வளமையாகவே நடைபெற்றது. ஆனால் அவை கஜானாவை அடையவில்லை. நலத்திட்டங்களாகப் பொது மக்களையும் அடையவில்லை. மகாராஜாவின் வாலிபக் களியாட்டங்களுக்குப் பயன்பட்டுக் கொண்டிருந்தன.

மைசூர் ராஜ்ஜியம் பொலிவிழந்து கொண்டிருந்தது. மாட மாளிகைக்காரர்கள் மட்டும் மினு மினுத்துக் கொண்டிருக்க, ஓலைக்குடிசைகளுக்குள் வயிறுகள் வற்ற ஆரம்பித்தன. உடையார் பரம்பரை ஆட்சி மீண்டும் வரவேண்டும் என்று ஏங்கித் தவித்த பெரும்பாலான மக்களே, அதைத் தூக்கியெறியத் தயாராகிக் கொண்டிருந்தார்கள்.

1830ல் அது தொடங்கியது. அது என்றால் புரட்சி.



# 150

# புல்லில்லா காட்டுக்குக் கந்தாயம் மூணுபணம்!

'மகாராஜா, நேற்று இரவு... எப்படி?'

'அசத்திவிட்டீர். பெண்ணா அவள்? பேரழகி. இந்தாரும். வைத்துக் கொள்ளும்.'

நகைகளோ, பணமோ அந்த மாமனுக்கு அள்ளிக் கொடுப்பார் மும்மடி கிருஷ்ணராஜ உடையார். 'ஆமாம், கேட்க வேண்டும் என்று நினைத்தேன். நேற்று வீதியில் உம்முடன் ஒரு பெண்ணைப் பார்த்தேனே. சற்றே பூசினாற் போல...'

'அய்யோ மகாராஜா, அவள் எனது வீட்டுப்பெண்' மாமன் பதறுவார்.

'இன்று இரவு காத்திருக்கிறேன். காலதாமதம் செய்துவிடாதீர்' மும்மடியார் மேலும் கொஞ்சம் பணத்தை விசிறியடிப்பார். அவரது முறைதவறிய நட வடிக்கைகளுக்காகவே வரி வசூல் பணமெல்லாம் விரயமாகின. மகாராஜாவும் அவரைச் சார்ந்த அடிவருடிகள் மட்டுமே வளமாக வாழ்ந்தார்கள். அந்தப்புரம் இன்புற்றுக் கிடந்தது. அதிகார வர்க்கம் வளமாக வாழ்ந்தது. மற்றவர்கள்? கிராமங்கள்? விவசாயிகள்? கேள்விக்குறிகள் விஸ்வரூபமெடுத்துக் கொண்டு இருந்தன. அந்தக் கேள்விக்குறிகளையே கதிர் அரிவாள்களாகச் சாணை பிடித்து, புரட்சி ஒன்றுக்காகத் தயாராகிக் கொண்டிருந்தார்கள் விவசாயிகள்.

மைசூர் ராஜ்ஜியத்தின் மிக முக்கியமான தொழில் விவசாயம். வருமானம் எல்லாம் விவசாயத்தைச் சார்ந்ததுதான். சில கிராமங்கள் சேர்ந்தது ஒரு தாலுகா.

சில தாலுகாக்கள் சேர்ந்தது ஒரு பௌஜுதார் (மாவட்டம்). அதனை ஆள்பவர் பௌஜுதாரி. ராஜ்ஜியம் பல்வேறு பௌஜுதார்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. தாலுகாவை ஆள் பவர் அமில்தார். விவசாயிகளை நேரடியாகத் தொடர்பு கொண்டு அவர்களது பிரச்னைகளை எல்லாம் தீர்த்து நீதி வழங்கும் அதிகாரமெல்லாம் அமில்தாருக்குத்தான். குறிப்பாக வரி வசூல் செய்யும் உரிமை அவருடையதே.


மும்மடி கிருஷ்ணராஜ உடையார்

அமில்தார்கள் பௌஜுதாரிகளுக்குக் கட்டுப்பட்டவர்கள். வசூல் எல்லாம் பௌஜுதாரிகளின் வழியாகத்தான் கஜானாவுக்குச் சென்றாக வேண்டும். அதுபோக, அந்தந்த பௌஜுதார்களைச் சார்ந்த வீரர்களும் பௌஜுதாரிகளுக்குக் கட்டுப்பட்டவர்களே. ஏதாவது கலவரம் வெடித்தாலோ, கலகம் மூண்டாலோ சரிசெய்ய வேண்டிய பொறுப்பு பௌஜுதாரிகளுடையது.

இத்தகைய பலம் பொருந்திய பௌஜுதாரிகளை நியமிக்கும் விஷயத்தில் ஏகப்பட்ட திரை மறைவு வேலைகள் நடந்தன. ராஜ்ஜியத்தின் மந்திரிகள் முதல் மற்ற முக்கியஸ்தர்கள் வரை அந்தப் பணி நியமனத்தில் பலே அரசியல் செய்தார்கள். 'நமக்கு வேண்டிய பய! எங்கிட்டாவது ஒரு பௌஜுதாரி பதவி போட்டுக் கொடுத்தீகன்னா, ரொம்ப விசுவாசத்தோட இருப்பான். இப்போ வர்றதைவிட வசூலைப் பல மடங்கு பெருக்குறதுக்கு நாயா உழைப்பான். மகராசா நீங்கதான் மனசு வைக்கணும்.' ஏகப்பட்ட சிபாரிசுகளுக்கும் சில்லறைகளுக்கும் சில்லுண்டித் தனங்களுக்கும் இடையேதான் பௌஜுதாரிகளின் நியமனங்கள் நடந்தன.

விளையும் பயிரின் மதிப்பில் மூன்றில் ஒரு பங்கை வரியாகச் செலுத்த வேண்டும் என்பது பலகாலமாக பொதுவான நடைமுறையாக இருந்துவந்தது. ஆனால் புதிதாக ஒரு நிர்வாக முறையைக் கொண்டுவந்தார்கள். ஸ்ர்தி. அதன்படி, ஒரு நிலத்தில் எவ்வளவு விளையும், அந்த நிலத்துக்காரர் எவ்வளவு வரிகட்ட வேண்டும் என்று இடம், வளம், சூழல், காலம், பயிர் எல்லாம் பார்த்துத் தொகையை நிர்ணயிக்கும் உரிமை அமல்தாருக்கு வழங்கப்பட்டது. ஒரு வருடத்துக்கு மூன்று அல்லது நான்கு விளைச்சல் என்றால், ஒவ்வொரு விளைச்சலுக்குரிய கந்தாயத்தை (வரித்தொகையை) அமல்தார் நிர்ணயிப்பார். நிலத்துக்காரர் அதனை உரிய காலத்துக்குள் கட்ட வேண்டும்.

ஆனால் அமல்தார்களை நியமிப்பதிலும் முறைகேடுகள்தான். அந்தந்தத் தாலுகாவுக்குரிய அமல்தார்களைத் தேர்ந்தெடுக்க 'குத்தகை' விட்டார்கள். எந்த விண்ணப்பதாரர் அதிக வசூல்தொகை சொல்கிறாரோ அவருக்கே அமல்தார் பதவி. பெரும்பாலும் பௌஜுதாரிகள், முக்கியஸ்தர்களின் சிபாரிசின் பெயரில் அமல்தார்கள் நியமிக்கப்பட்டார்கள்.

பதினெட்டாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் மகாராஷ்டிராவிலிருந்து மைசூருக்குப் பிழைக்க வந்து, பின் ராஜகுடும்பத்துக்கு நெருக்கமாகி, பதவிகளை அடைந்த பிராமணர்கள், அப்போது அதிகார மையமாக வளர்ந்திருந்தார்கள். ஒரு மாவட்டம் என்று எடுத்துக்கொண்டால் அதில் பெரிய, சிறிய பதவிகளில் இருந்தவர்கள் எல்லோருமே ஒருவருக்கொருவர் வேண்டப் பட்டவர்களாக மட்டுமே இருந்தார்கள்.

அமல்தார்கள், பஃஜுதாரிகளுக்குக் கடமைப்பட்டவராக இருந்தார்கள். பஃஜுதாரிகள் மந்திரிகளின் மனம்குளிர நடக்க நினைத்தார்கள். மந்திரிகள் மகாராஜாவின் மஜாவுக்குக் குறைவின்றி கொட்டிக்கொடுக்க முயன்றார்கள். எல்லோரும் எல்லோருக்கும் நன்றி பாராட்டியாக வேண்டிய கட்டாயம். ஆகவே மேலுள்ளவர்கள் தங்களுக்குக் கீழிருப்பவர் களுக்கு அழுத்தம் கொடுத்தார்கள். எல்லோருக்கும் கடமைப்பட்ட அமல்தார்கள் இஷ்டத்துக்குக் கந்தாயத்தை நிர்ணயிக்க ஆரம்பித்தார்கள்.

மவனே, நீ நெல்லு போடுறியோ, எள்ளு போடுறியோ எனக்குத் தெரியாது. மழை பெய்யலை, வெள்ளம் வந்துருச்சு, மாடு செத்துப்போச்சுன்னு ஒப்பாரியெல்லாம் இருக்கவே கூடாது. இன்ன தேதிக்கு இவ்வளவு பணம் எனக்கு வந்தாகணும்.

பெரும்பாலும் அமல்தார்களின் ஒப்பந்தக் காலமும் குறைவாகவே இருந்தது. ஆகவே அவர்கள் அட்டைகளாக மாறி நில உரிமையாளர்களின் ரத்தத்தை உறிஞ்ச ஆரம்பித்தார்கள். மடி கிடைத்திருக்கிறதா, ஒட்டக்கறந்துவிடு. கறந்தபின் மாடு இருந்தாலென்ன, செத்தா லென்ன?

கூடவே சாயர் என்றொரு வரிமுறையும் குடியானவர்களை வாட்டியது. சாலை வரி என்று சொல்லலாம். ஆங்காங்கே சுங்கச் சாவடிகள் நிறுவப்பட்டன. 'நீ வடக்கால போறியோ, தெக்கால போறியோ எனக்குக் கவலையில்லை. வண்டியில வைக்கோல் இருக்குதா, வறட்டி இருக்குதான்னு நான் கேட்க மாட்டேன். இந்தப் பாதையில வந்ததுக்கு மருவாதையா வரியைக் கட்டிட்டுப் போ. அவ்வளவுதான்.'

அந்த சுங்கச் சாவடிகளைக் குத்தகைக்கு எடுப்பதிலும் ஏகப்பட்ட தில்லுமுல்லு. ஆக, மேல்மட்டம் முதல் அடிமட்டம் வரை ஊழல். நிர்வாகச் சீர்கேடு. மும்மடி கிருஷ்ணராஜ உடையாரின் ஆட்சி பல்லிளித்தது. எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு பிரிட்டிஷ் நாட்டாமைகள் சும்மாவா இருந்தார்கள் என்றொரு கேள்வி எழலாம். 1799 ஒப்பந்தப்படி, மைசூர் ராஜ்ஜியத்திலிருந்து இவ்வளவு வரி கட்ட வேண்டும் என்று பிரிட்டிஷார் கட்டளை யிட்டிருந்தார்கள். அது அவர்களுக்குத் தங்கு தடையின்றி வசூலாகிக் கொண்டிருந்தது. ஆகவே துரைமார்கள் பெரும்பாலும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

விளைச்சலுக்கு லாயக்கே இல்லாத நிலத்தை வைத்திருந்த விவசாயிகளுக்குக்கூடக் கந்தாயம் நிர்ணயிக்கப்பட்டது. புல்லில்லா காட்டுக்குக் கந்தாயம் மூணுபணம் என்று கழுத்தில் துண்டைப் போட்டு முறுக்கினால் விவசாயிகள் காலமெல்லாம் பொறுமையாக இருப்பார்களா என்ன?

புரட்சி என்ற ஒன்று வெடிப்பதற்கான நிர்பந்தம் உருவானது. அதை முன்னின்று நடத்தத் தலைவன் என்று யாராவது வேண்டுமே. அதற்கென்றே ஒருவன் கிளம்பினான், சிறையி லிருந்து. சதாரா முல்லா என்பது அவனது உண்மையான பெயராக இருக்கலாம். கொள்கை, கொத்தவரங்காய் எல்லாம் கொண்ட தலைவன் அல்ல. திருடன். பித்தலாட்டக்காரன். அடிக்கடி சிறைக்குச் சென்று திரும்பும் பொறுக்கி. சிறிய திருட்டுகள் அவனுக்குச் சலித்துப் போயிருந்தன. 'அடுத்தமுறை பெரிய அளவில் ஏதாவது செய்து கொள்ளை லாபம் பார்க்க வேண்டும்' திட்டமிட்டிருந்தான். விடுதலையாகி வெளியே வந்த அவனுக்குச் சிவப்புக் கம்பளம் விரித்தது நாகர்.

*பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் பல சிற்றரசர்கள், பாளையக்காரர்கள் முடக்கப் பட்டார்கள். அவர்கள் ஆண்டு வந்த பகுதி மைசூர் ராஜ்ஜியத்தின் நேரடிக் கண்காணிப்பில் கொண்டு வரப்பட்டது. அப்படி ஹைதர் அலியின் காலத்தில் கொண்டு வரப்பட்ட வளமான வியாபார ஸ்தலம்தான் நாகர் (இன்றைய சிமோகா மாவட்டத்தின் ஒரு பகுதி). அதனை ஆண்டு வந்தவர்கள் கலாலே பரம்பரையைச் சார்ந்தவர்கள். பூர்ணையா காலம்வரை கொழித்துக் கிடந்தது நாகர். அடுத்த திவானாக வந்த ராமா ராவின் காலத்தில் நாகரின் அழிவு காலம் ஆரம்பித்தது. ராம ராவுக்கு வேண்டப்பட்டவர்கள் பஃஜுதாரிகளாக, அமல்தார்களாக நாகரைச் சுரண்ட ஆரம்பித்தார்கள்.*

*வரி வரவில்லையா? வாயால் பேசாதே, சாட்டையை எடு. பாக்கி பெருகிவிட்டதா? நிலத்தை எடுத்துக்கொள். கந்தாயத்தை எதிர்க்கிறானா? அவன் குடும்பத்துப் பெண்களைச் சூறையாடு. தலைமறைவாக இருக்கிறானா? தலையை எடுத்துவிடு. நாகரில் அமல்தார்கள், பஃஜுதாரி யின் அராஜகங்கள் மற்ற இடங்களைவிடச் சில மடங்கு அதிகமாக இருந்தன. விவசாயிகள் கொதித்துப் போயிருந்தார்கள். நம்மை ரட்சிக்க ஒருவன் வரமாட்டானா?*

*நாகருக்கு வந்துசேர்ந்தான் சதாரா. அங்கே அவனுக்கு ஒரு பூசாரியின் நட்புக் கிடைத்தது. பூசாரி, நாகரின் முன்னாள் ஆட்சியாளருக்கு மிகவும் நெருக்கமானவர். வலதுகை என்று சொல்லலாம். ஆட்சியாளரின் முத்திரை மோதிரம்கூட மந்திரவாதியிடம்தான் இருந்தது. வயதான மந்திரவாதி இறந்துபோனார். சதாரா, அந்த முத்திரை மோதிரத்தைத் திருடினான். சில போலி ஆவணங்களைத் தயார் செய்தான். தக்க சமயத்தில் மக்களைக் கூட்டினான். முழங்கினான்.*

*'நான் படா பஸவப்பா. நாகரை ஆள வந்திருக்கிறேன்.'*

*முத்திரை மோதிரத்தைக் கண்ட மக்கள் அவனை நம்பினார்கள். தலைமை இழந்து தவித்தவர் கள், அவனை நாயகனாகப் பார்த்தார்கள். வாழ்த்து கோஷமிட்டார்கள். 1830 ஏப்ரலில் நல்ல நாளொன்றில் பெண் ஒருத்தியைத் திருமணம் செய்துகொண்டு, நாகரின் ராஜாவாகத் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டான். தனது தளபதியாக மன்னப்பா என்பவனை நியமித்துக் கொண்டான். மக்களுடைய நீடித்த ஆதரவு கிடைக்க வேண்டுமே. இதோ வைத்துக் கொள்ளுங்கள் வாக்குறுதியை.*

*'உங்களை உய்விக்க நான் வந்துவிட்டேன். இனி நீங்கள் அநியாய வரிகட்டி அவதிப்பட வேண்டாம். அச்சம் வேண்டாம். எல்லா அக்கிரமங்களையும் நான் தட்டிக் கேட்கிறேன். உங்கள் கஷ்ட வாழ்க்கையைப் புரட்டிப் போடுகிறேன்.'*

*தெரிக்கேரி பாளையத்தைச் சேர்ந்த முன்னாள் ஆட்சியாளர் ரங்கப்ப நாயக்கும் விட்டதைப் பிடிக்க படா பஸவப்பாவுடன் கைகோர்த்துக் கொண்டார். புரட்சி ஓங்குக!*

*நாகரில் பல பகுதிகளில் விவசாயிகள் கூட்டம்போடத் தொடங்கினார்கள். 'இதுக்கு மேலயும் பொறுமையா இருந்தா நாமெல்லாம் மனுசப் பிறவியே இல்ல. நம்ம ராசா படா பஸவப்பா உறுதுணையா இருக்காரு. பொங்கியெழுந்தா மைசூரு தாங்காது. விவசாயிகள் ஒற்றுமை வாழ்க! மும்மடியாரின் ஆட்சி வீழ்க!' நாகரின் விவசாயிகள் எழுச்சி, வேகமாக மற்ற பஃஜுதார்களிலும் பரவ ஆரம்பித்தது. எங்கெங்கு காணினும் கூட்டங்கள்.*

அந்த ஆகஸ்ட் 23 அன்று, ஹொசந்தே என்ற கிராமத்தில் படா பஸவப்பாவின் தலைமையில் விவசாயிகளின் மாபெரும் ஊர்வலம். கூட்டத்தின் முடிவில் சில தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

விவசாயிகளின் கூட்டமைப்பு அனைத்து இடங்களிலும் நிறுவப்படவேண்டும். ராஜாங்க அதிகாரிகளைக் கிராமங்களுக்குள் நுழைய விடக்கூடாது. கோரிக்கைகள் நிறைவேறும் வரை போராட்டம் தொடர வேண்டும். அபகரிக்கப்பட்ட நிலங்கள் திரும்ப அளிக்கப்பட வேண்டும். உழுபவனுக்கே நிலம் சொந்தம். அநியாய வரிகளை எல்லாம் திரும்பப் பெற வேண்டும்.

எல்லாவற்றையும் மகாராஜாவின் கவனத்துக்குக் கொண்டு செல்ல வேண்டுமல்லவா. நாகர் தளபதி மன்னப்பாவின் தலைமையிலான குழுவினர் மும்மடியாரைப் பார்க்கச் சென்றார்கள். கோரிக்கைகளை முன்வைத்தார்கள்.

‘வந்தவழியே திரும்பிப் பார்க்காம ஓடுங்கடா!’ கொதித்தெழுந்து கத்தினார் மும்மடியார்.



151

# 1830 – மைசூர் புரட்சி

‘உல்லாசத்திலும் சல்லாபத்திலும் உழன்று திரியும் மகாராஜாவுக்கு உயிர்கரைய உழைத்துத் தேயும் உழவர்களைக் கவனிக்கத் தோன்றுமா என்ன? நமது குறைகளைக் காதுகொடுத்துக் கேட்கக்கூட மகாராஜா மும்மடி கிருஷ்ணராஜ உடையார் விரும்பவில்லை. துரத்திவிடுகிறார். விவசாயிகளின் சக்தி என்னவென்று நாம் புரியவைக்க வேண்டும். வியர்வை சிந்தி உழைப்பவனின் ரத்தம் கொதித்தால் ராஜ்ஜியம் தாங்காது. ஒன்றுபடுவோம். போராடுவோம்.’

நாகர் தளபதி மன்னப்பாவின் தலைமையிலான குழுவினர் கொதித்துப் போயிருந் தார்கள். மகாராஜாவுக்கு எதிரான பிரச்சாரங்கள் வலுப்பெற்றன. அந்தக் குழுவினர் நாகருக்குத் திரும்பும் வழியில், இடையிலிருந்த ஒவ்வொரு ஊர்களிலும் கூட்டம் போட்டு முழங்கினார்கள். அந்த வீராவேச உரைகள் மக்களை உசுப்பேற்றின. ஆதரவு திரண்டது.

படா பஸவப்பாவும் தன்னால் முடிந்தவரை விவசாயிகளை முடுக்கிவிட நாகரின் கிராமங்கள்தோறும் பரபர. விவசாயிகள் அதுவரை நிலத்தில் கருவிகளாகப் பயன்படுத்தி வந்த பொருள்களை முதன்முறையாக ஆயுதங்களாகப் பார்க்க ஆரம்பித்தார்கள். புரட்சிக்குத் தயாரானார்கள். மன்னப்பா இருநூறு பேரைத் திரட்டினான். அவர்களுக்குக் கெரில்லாத் தாக்குதல் நடத்த பயிற்சிகொடுத்து தயார்படுத்தினான்.

வரிவிதிப்பில் அராஜகம் செய்துவந்த அமல்தார்களும், முறைகேடுகளில் ஈடுபட்ட பிற அரசாங்க அலுவலர்களும் விவசாயிகளால் குறிவைத்துத்

தாக்கப்பட்டனர். 'உன்னால் முடிந்தால் தலைதெறிக்க ஓடு. தலைமறைவாகிக் கொள். முடிய வில்லையா, தலைகவிழ்ந்து மன்னிப்புக்கேள்.' 1830ன் இறுதியில் ஒட்டுமொத்த மைசூர் ராஜ்ஜியமும் உஷ்ணமேறிக் கிடந்தது. பஃஜுதாரிகள் பயந்துபோய்க் கிடந்தார்கள்.

எல்லாம் சரி, பஃஜுதாரிகளுக்கென்று வீரர்கள் உண்டே. அவர்கள் என்ன ஆனார்கள்? ஆவது ஆகட்டும் என்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். காரணம் அவர்களுக்கு வரவேண்டிய பல மாத சம்பள பாக்கி. சில இடங்களில் அந்த வீரர்களும் விவசாயிகளோடு சேர்ந்து அரசுக்கு எதிராகக் களமிறங்கினார்கள். குறைவான எண்ணிக்கை கொண்ட வீரர்கள், போதிய ஆயுத பலமும் இல்லை என்பதால் பஃஜுதாரிகள் பரிதவித்துக் கொண்டு இருந்தார்கள்.

நிலைமை சூடாகவே, அமைதிகாத்த வெள்ளை நாட்டாமைக்காரர்கள் தொண்டையைச் செருமினார்கள். ரெஸிடெண்டிடமிருந்து மும்மடியாருக்கு எச்சரிக்கைக் கடிதம் ஒன்று வந்தது. 'என்ன, ஏதுன்னு சட்டுப்புட்டுனு பார்த்து விவகாரத்தை முடிவுக்குக் கொண்டு வாரும். பிரச்னையை இப்படி வளர்த்துக்கிட்டே போறதுக்கா மகராசாவா நீர் இருக்கீர்?'

ரெஸிடெண்டுக்கும் மகாராஜாவுக்கும் இடையே கடிதங்கள் வழியே பேச்சுவார்த்தை நடந் தது. 'மைசூர் திவானை படைகளோடு கலவரப் பகுதிகளுக்கு அனுப்பி அமைதியை நிலை நாட்டவும்' ரெஸிடெண்ட் சொன்னார். 'அய்யா, நீங்க கம்பெனி படைகளை உதவிக்கு அனுப்புங்க' - மும்மடியார் கேட்டார். 'திவானைக் களத்துக்கு அனுப்புங்க. அவரால சமாளிக்க முடியலேன்னா கம்பெனி படை வரும். மகாராஜாவாகிய நீங்களே ஒவ்வொரு இடத்துக்கும் நேர்ல போய், மக்கள்கிட்ட பேசி நிலைமையைச் சரி செய்யறது அவசியம்னு கம்பெனி நினைக்குது.'

தனது நிலைமையும் மோசமாகிக் கொண்டிருப்பதை உணர்ந்த மும்மடியார் கோபமாகக் குதித்தார், 'அங்க அந்த வீரராஜய்யா என்னத்த செஞ்சுக்கிட்டிருக்கான்?'

நாகரின் பஃஜுதாரி வீரராஜய்யா, செய்வதறியாது திகைத்துக் கிடந்தார். மகாராஜாவின் உத்தரவின் பெயரில் அவரது பதவி பறிக்கப்பட்டது. புதிய பஃஜுதாரியாக கிஷன் ராவ் (முன்னாள் திவான் ராம ராவின் மருமகன்) நியமிக்கப்பட்டார். கிஷன் ராவுக்கெனச் சிறப்புப் படை ஒன்று ஒதுக்கப்பட்டது. நாக்கைத் துருத்திக் கொண்டு நாகரை நோக்கிக் கிளம்பினார் கிஷன் ராவ்.

1830, நவம்பர் 16. நாகரின் சின்னாகேரி கிராமம். சுமார் மூவாயிரம் விவசாயிகள் திரண்டிருந்தார் கள். கையில் கம்பு, வேல், அரிவாள் இன்னபிற. தனது படைகளுடன் அங்கே வந்தார் கிஷன் ராவ். பேச்சுவார்த்தை போலொன்று சில நாள்களாக நடந்தது. விவசாயிகள், அந்தப் பகுதியின் அமல்தாரைத் தங்களிடம் ஒப்படைக்கச் சொல்லி வற்புறுத்தினார்கள். எதற்கு? கொடை கொடுக்கத்தான். ஆனால் கிஷன் ராவ் மறுத்துவிட்டார். நிலவரம் கலவரம் ஆனது. விவசாயி கள், கோபம் கொந்தளிக்க அங்கிருந்த கோட்டை ஒன்றைச் சுற்றி வளைத்துப் பிடித்தார்கள் (டிசம்பர் 7).

கிஷன் ராவின் படை வீரர்கள் கடும் தாக்குதலில் இறங்கினார்கள். தங்கள் தரப்பில் உயிரிழப்புகள் அதிகமாவதை உணர்ந்த விவசாயிகள் அப்போதைக்குப் பின்வாங்கினார்கள். கோட்டையைத் தன் வசமாக்கினார் கிஷன் ராவ்.

மீண்டும் அணிதிரண்டார்கள் விவசாயிகள். நாகரின் ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் சாரை சாரையாக வந்துகொண்டே இருந்தார்கள். தெரிக்கேரி பாளையத்தில் முன்னாள் ஆட்சியாளர் ரங்கப்பா நாயக்கும் தன் பங்குக்குப் படை திரட்டினார். நாகரின் ஹொனெல்லி என்ற ஊருக்கு அருகே பல்லாயிரக்கணக்கானோர் (இருபதாயிரம் வரை இருக்கலாம் என்று நம்பப்படுகிறது) திரண்டிருந்தார்கள். மாபெரும் எழுச்சிக்கான கூட்டம் அது.

கிஷன் ராவ் தயங்கவே இல்லை. கூட்டத்தின் மீது குதிரைப் படைகளை ஏவிவிட்டார். ஒட்டிய வயிறு கொண்ட விவசாயிகளால் புஜபலம் கொண்ட வீரர்களைச் சமாளிக்க முடியவில்லை. தப்பி ஓடத்தான் முனைந்தார்கள். காயமடைந்த பலர் சுருண்டு விழுந்தார்கள். அப்பாவிகள் இருபத்தைந்து பேர் கைதிகளாக கிஷன் ராவ் முன் நிற்க வைக்கப்பட்டார்கள். ‘பாவம். விட்டு விடுங்கள். ஆனால் அதற்கு முன்...’ - சைகை காட்டினார் கிஷன் ராவ். அந்த இருபத்தைந்து பேரும் அலறியபடியே ஓட ஆரம்பித்தார்கள். அறுபட்ட அவர்களது காதுகளிலிருந்தும் மூக்கிலிருந்தும் ரத்தம் பெருகிக் கொண்டிருந்தது.

‘அய்யோ, இனிமே ஜாக்கிரதையா இருக்கணும்பா. ராஜாங்க படைகள்கிட்ட சிக்கினவங்க எல்லோரையும் அந்த கிஷன் ராவ் கொன்னுடுறானாம்’ - வதந்தி ஒன்று கிராமங்கள்தோறும் வெகுவேகமாகப் பரவியது. விவசாயிகளிடையே பயம் வளர்ந்தது என்னவோ உண்மைதான். ஆனாலும் கலகங்கள் ஓயவில்லை.

இதற்குமேலும் களமிறங்காவிட்டால் பிரிட்டிஷார் தன்னை அரியணையிலிருந்தே தூக்கி விடுவார்கள் என்ற அச்சத்தினால் மைசூரிலிருந்து படைகளோடு கிளம்பினார் மும்மடியார். ரெஸிடெண்ட் காஸ்மைஜோர், மகாராஜாவுக்கு முன்பாகவே களத்துக்குச் சென்றிருந்தார். மஞ்சர்பாத் பஃஜுதார். நாகருக்குச் செல்லும் வழியிலுள்ள மாவட்டம். அங்கும் பல கிராமங் களில் விவசாயிகளின் கூட்டங்கள் தொடர்ந்து நடந்தன. அமல்தார்கள் குறிவைக்கப்பட்டிருந் தார்கள். கம்பெனி படைகள் சூழ விவசாயிகளிடையே சென்ற காஸ்மைஜோர் பேச்சுவார்த்தை நடத்த ஆரம்பித்தார்.

‘மக்களே, எல்லாரும் கொஞ்சம் பொறுமையா இருங்க. உங்களோட பிரச்னைகளைக் கேட்க மகாராஜாவே நேர வந்துக்கிட்டிருக்காரு. என்ன குற்றச்சாட்டு வேணும்னாலும் நீங்க அவர் கிட்ட சொல்லலாம். கண்டிப்பா அமல்தார்மேல விசாரணை நடக்கும். நடவடிக்கை எடுப் பாங்க.’ பாமர மக்கள்தானே. வெள்ளைதுரையின் வெண்ணெய்ப் பேச்சுக்குச் செவி சாய்த்தார்கள்.

அப்போதைய மைசூர் திவான் வேங்கட ராஜய்யா, மும்மடியார் வரப்போகும் இடங்களுக் கெல்லாம் முன்னதாகவே சென்றார். பிரசங்கம் செய்தார். ‘இதோ மகாராஜா வந்துவிட்டார். பக்கத்து ஊரில்தான் இருக்கிறார். கோரிக்கையெல்லாம் தயாரா? உங்கள் பிரச்னைகள் எல்லாம் தீரப்போகின்றன. வாழ்வில் வசந்தம் வீசப்போகிறது...’

அப்போதைக்குத் தனது கௌரவம், அந்தஸ்தை எல்லாம் சற்றே மறந்திருந்த மும்மடியாரும் எந்தவிதத் தயக்கமும் இன்றி கிராமம் கிராமமாகச் சென்றார், அதுவும் குடும்பத்துடன். நேரடி யாக விவசாயிகளுடன் பேசினார். ‘இதோ, இந்த அமல்தார்தானே அதிகவரி கேட்டுக் கொடுமைப்படுத்தியது. யாரங்கே, இவனைப் பிடித்துச் சிறையில் அடையுங்கள்.’ மக்கள் முன்னிலையிலேயே அமல்தார்களுக்கும் பிற ராஜாங்க அதிகாரிகளுக்கும் தண்டனைகளை

வழங்கினார். உடனுக்குடன் புதிய அதிகாரிகளையும் நியமித்தார். விவசாயிகளோடு சமாதானமாகிவிட்ட வகையில் அவர்களுக்குப் பொருள்கள் வழங்கினார், விதைகள் வழங்கினார்.

ஆனால் வரிவிஷயத்தில் மட்டும் பிடிகொடுக்கவில்லை. 'அதெல்லாம் பலகாலமா கடை பிடிச்சுக்கிட்டு வர்ற நடைமுறை. சட்டுன்னு மாத்த முடியாது. கொஞ்சம் காலம் ஆகும். எல்லாம் செஞ்சுடலாம். எல்லோரும் அவங்கவங்க ஊர்களுக்குத் திரும்பிப்போய்ப் பொழைப்பைப் பாருங்கப்பு!'

டிசம்பர் 18. சென்னராயபட்டணம் என்ற ஊரை அடைந்திருந்தார் மும்மடியார். கூடவே பாது காப்புக்கு ஆயிரக்கணக்கான குதிரை வீரர்கள், இருநூறு மெய்க்காப்பாளர்கள், விவசாயி களுக்குக் கடன் உதவி செய்ய ஆயிரம் சௌகார்ஸ் மற்றும் இதர அமைச்சர்கள். மற்ற ஊர்களை விட அங்கு அதிக அளவிலான விவசாயிகள் திரண்டிருந்தார்கள். மற்ற இடங்களில் பேசியது போலவே அங்கும் பேசினார் மும்மடியார். கூட்டத்தில் சலசலப்பு. கலைந்துபோகும்படி அன்புக் கட்டளையிட்டார். யாரும் செவிசாய்க்கவில்லை.

மாறாக முரசுகளையும் ஊதுகுழல்களையும் ஒலிக்க ஆரம்பித்தார்கள். அவை புரட்சியின் சின்னம். எதிர்ப்பை வெளிப்படுத்தும் அடையாளம். சத்தம் பெருகப் பெருக மும்மடியாரின் முரட்டுமீசை அவமானத்தால் துடிதுடித்தது. அவற்றைப் பறிமுதல் செய்யச் சொன்னார். முரசுகளும் ஊதுகுழல்களும் பிடுங்கப்பட்டன. உடைக்கப்பட்டன. கூட்டத்தில் தலைவர் களாகக் கருதப்பட்டவர்கள் கைது செய்யப்பட்டனர். அந்தப் பரபரப்பான சூழலில் மும்மடியாரைச் சுற்றிப் பாதுகாப்பு வளையம் பலப்படுத்தப்பட்டது. கோரிக்கைகளோடு காத்திருந்த மக்களால் மகாராஜாவை நெருங்கமுடியவில்லை. கோரிக்கைகளை வாங்க, களமிறங்கிய அதிகாரிகளை விவசாயிகள் நம்பவில்லை. வாக்குவாதங்கள் மூண்டன.

கூட்டத்தைக் கலையச் சொல்லி மீண்டும் உத்தரவிட்டார் மும்மடியார். கலைய மறுத்தார்கள். மகாராஜாவின் முன்னிலையிலேயே பெரும் கலவரம் மூண்டது. வீரர்களின் ஆயுதங்கள் வெறித்தனமாக வேலையைக் காட்ட ஆரம்பித்தன. கைது செய்யப்பட்டவர்களில் ஐந்து பேருக்கு அதே இடத்திலேயே மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது. தொடர் வன்முறை. ரத்தவாடை.

நடந்த சம்பவத்தால் கோபமடைந்த மும்மடியார், நாகருக்குச் செல்லாமல், மைசூருக்கே திரும்பினார். அவருக்காகக் கோரிக்கைகளோடு காத்திருந்த நாகர் விவசாயிகள் வெறுத்துப் போனார்கள். நாகரில் மேலும் பதைபதைப்பு. நிலைமையைக் கட்டுக்குள் கொண்டுவர கம்பெனிப் படைகள் முழுவீச்சில் களமிறங்கின. கிஷன் ராவ், மகாராஜாவால் பதவியிலிருந்து தூக்கப்பட்டார். நாகரின் புதிய ஃபௌஜ்தாரியாக அன்னப்பா நியமிக்கப்பட்டார்.

ஏற்கெனவே ஹொனெல்லியில் சூடுபட்டிருந்த விவசாயிகள் மீண்டும் அங்கு பெருமளவில் குவிந்தார்கள். பதட்டம். அங்குள்ள கோட்டையையும் கோயிலையும் கைப்பற்றினார்கள். அன்னப்பா தலைமையிலான மைசூர் படை, கம்பெனிப் படைகளுடன் கைகோர்த்து களமிறங்கியது (1831, மார்ச் 12). கொலை வெறியாட்டம். கூட்டணிப்படையினரின் கண்ணில்பட்ட விவசாயிகளெல்லாம் கண்மூடினர். அந்தக் கிராமத்தின் விளைநிலமெல்லாம் ரத்தம். கொல்லப்பட்ட விவசாயிகளின் எண்ணிக்கை குறித்துப் பல்வேறு விதமான தகவல்கள்

உள்ளன. சம்பவம் குறித்து அன்னப்பா தன் அறிக்கையில் தான் மட்டுமே எழுநூறு பேரைக் கொன்றதாகக் குறிப்பிட்டுள்ளார். நாகர் கலவரம் இன்றுவரை பலராலும் தென்னிந்தியாவில் நடந்த மிகப்பெரிய விவசாயப் புரட்சியாகக் குறிப்பிடப்படுகிறது.

நாகரின் பெரும்பாலான பகுதிகள் கூட்டணிப் படைகளின் கட்டுப்பாட்டுக்குள் வந்தன. ஆரம்பத்திலிருந்தே விவசாயிகளைத் தூண்டி மட்டும் விட்டுக் கொண்டிருந்த திருட்டு ராஜா படா பஸவப்பா, எந்த மோதலிலும் பங்கு பெறவில்லை. ஹைதராபாத் நிஜாமின் எல்லைக் குள் தப்பித்து ஓடிவிட்டான். தெரிக்கேரி ரங்கப்பா நாயக் மோதல் ஒன்றில் இறந்து போனார்.

பிரிட்டிஷார் பிழைத்துக் கிடந்த விவசாயிகளின் தலைவர்களோடு தொடர் பேச்சுவார்த்தை களை நடத்த ஆரம்பித்தார்கள். விவசாயிகளின் கோரிக்கைகளை ஓரளவு ஏற்றும் கொண்டார் கள், சில வரிவிலக்குகள் உள்பட. ‘விளைநிலங்களுக்கு மட்டும் வரி கட்டுனாப் போதும். பொட்டக்காடுக்கெல்லாம் தேவையில்லை. திருப்திதானே.’

நாகரில் நிலைமை சீராகிக் கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் மைசூரில் மும்மடியாருக்குக் கடிதம் ஒன்று வந்தது. ஆப்பு என்றும் அதனைச் சொல்லலாம்.



# இலவு காத்த கிழம்!

தசரா கொண்டாட்டங்கள் களைகட்டியிருந்தன. ஆட்டம், பாட்டம். கூடவே நிறைய பூஜை, புனஸ்காரங்கள். சாமுண்டீஸ்வரி கோயிலெங்கும் விழாக்கோலம். கூட்டம் அலைமோதியது. பெரும் புரட்சி ஒன்று நடந்து முடிந்ததையோ, ஆயிரக் கணக்கான விவசாயிகளின் கொலைகளுக்குக் காரணமான கலகங்களையோ நினைத்துக்கூடப் பார்க்க விரும்பாத மைசூர் மகாராஜா மும்மடி கிருஷ்ணராஜ உடையார் உற்சாகமாகப் பல்வேறு வைபவங்களில் கலந்துகொண்டிருந்தார்.

அன்றைய நிகழ்ச்சிகளுக்காக வண்ண பட்டுடைகள் உடுத்தித் தன்னை அலங் கரித்துக் கொண்டிருந்தார் மும்மடியார். வந்து சேர்ந்தது அந்தக் கடிதம். கம்பெனியார் அனுப்பியிருந்தார்கள். 1831, செப்டெம்பர் 7 என்று தேதியிடப் பட்டிருந்தது. கடிதத்திலுள்ள விஷயங்களை அறிந்ததும் மும்மடியார் உடைந்து போய் உட்கார்ந்தார்.

‘தங்கள் நிர்வாகத்தில் கம்பெனியாருக்குத் திருப்தியில்லை. ஏகப்பட்ட ஊழல் கள், முறைகேடுகள், சீரழிவுகள். சட்டம், ஒழுங்கு காணாமல் போய்விட்டது. எங்கும் கலகங்கள், வன்முறை. அனைத்தும் தங்களது திறமையின்மையையே வெளிக்காட்டுகிறது. ஆகவே கம்பெனி, தங்களைப் பதவியிலிருந்து நீக்குகிறது. மீண்டும் மைசூரில் அமைதி, நல்ல நிர்வாகச் சூழ்நிலை ஏற்படும்வரை கம்பெனியார் நியமிக்கும் கமிஷனர் வசம் ராஜ்ஜியத்தின் அதிகாரங்கள் இருக்கும்.’

உடையார் பரம்பரைக்குக் கஷ்டகாலம், இன்னொருமுறை. அரியணை பறி போன அவல நிலை. மறுபடியும் அதிகாரம் கையில் கிடைக்க ஏதேனும்

வாய்ப்பிருக்கிறதா? அமைதி நிலைநாட்டப் பட்டதாக எப்போது சொல்வார்கள்? நிர்வாகத்தைச் சீரமைக்கப்போவதாகச் சொல்லி அதிகாரத்தை அபகரித்துவிட்டார்களே? மும்மடியாருக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அந்த அக்டோபர் 19, நன்னாளின் சுபபொழுதில் மும்மடியாருக்கு முறைப்படி பதவியிறக்க வைபவம் நடந்தது. மகாராஜா என்ற பட்டமோ, அரண்மனை வாழ்க்கையோ பறிக்கப்படவில்லை. வருட மானியமாக ஒரு தொகை நிர்ணயிக்கப்பட்டது. ஆட்சியும் அதிகாரமும் இல்லாத ஜடமாக வாழவேண்டிய நிர்பந்தம்.


மார்க் கப்பன்

மைசூரின் முதல் கமிஷனராக கர்னல் பிரிக்ஸ் பொறுப்பேற்றுக் கொண்டார். விசாரணைக் கமிஷன் ஒன்று தன் வேலைகளை ஆரம்பித்தது. நாகரில் நடந்த வன்முறைகளுக்கு மூல காரணம் என்ன? யாரெல்லாம் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள்? பல்வேறு தரப்பினரிடம் பல கட்ட விசாரணைகள் நடத்தப்பட்டன. சில வருடங்களுக்குப் பிறகு இறுதி அறிக்கையும் தயாரானது. அதன்படி குற்றமற்றவர் என்று அறிவிக்கப்பட்டார் மும்மடியார்.

தனக்கு மீண்டும் அதிகாரம் கிடைத்துவிடும் என்று மும்மடியார் நினைத்தார். கம்பெனியின் கவர்னர் ஜெனரலாக இருந்த வில்லியம் பெண்டின்கும் ஆதரவுக்குரல் கொடுத்தார். 'சரி, நடந்தது நடந்துவிட்டது. மீண்டும் அவருக்கு அரியணையைக் கொடுத்துவிடலாமே. முழுவதும் கொடுக்காவிட்டாலும் பாதிக்கு மேற்பட்ட மைசூர் ராஜ்ஜியத்தையாவது அவரிடம் திருப்பிக் கொடுத்துவிடலாம்' பெண்டின்க் யோசனை சொன்னார். '1799 ஒப்பந்தத்தை மும்மடியார் மீறிவிட்டார். நிறைய பணபாக்கி வைத்திருக்கிறார். ஆகவே முடியாது' என்று இல்லாத கடன்பாக்கியையெல்லாம் எட்டுக்கட்டி சொல்லிய பிரிட்டிஷார், அந்த யோசனையை ஏறக்கட்டிவிட்டார்கள்.

என்றாவது ஒருநாள் அது நடக்கும். லண்டனிலிருந்தும் சென்னையிலிருந்தும் நல்ல செய்தி வரும் என்று மும்மடியார் மிகவும் பொறுமையாகக் காத்திருக்க ஆரம்பித்தார்.

1834, ஜூன். மைசூரின் புதிய கமிஷனராகப் பதவிக்கு வந்தார் துறுதுறு மார்க் கப்பன் (Mark Cuppon). அதுவரை கம்பெனியார் கடைபிடித்துவந்த நிர்வாக முறைகள் பலவற்றை மாற்றினார். உருப்படியான ஆட்சிமுறைக்கு வழியமைத்தார். மைசூரைவிட பெங்களூரு அவரைக் கவர்ந்து இழுத்தது. குறிப்பாகத் திப்புவின் அரண்மனை. 'ஏன் பெங்களூரைத் தலைநகரமாகக் கொண்டு செயல்படக்கூடாது?' தலைநகரை மாற்றினார். திப்புவின் அரண்மனை தலைமைச் செயலகமாகியது. பெங்களூரு என்ற ஊர், முக்கிய நகரமாக உருமாற ஆரம்பித்த புள்ளி அதுதான். தந்திக்கம்பம் முதல் தண்டவாளம் வரை விதவிதமான வளர்ச்சிகள். பெங்களூரைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் முன்னேற்றத்தின் சுவடுகள்.

வருடங்கள் ஓடிக்கொண்டே இருந்தன. கப்பனின் நிர்வாகத்தில் அமைதிக்குப் பங்கமில்லை. ஆனால் மும்மடியாருக்கும் கப்பனுக்குமிடையே துளி நட்புகூட இல்லை. 'எல்லாம்தான் சரிப்படுத்தியாயிற்றே. இனி இவருக்கு இங்கென்ன வேலை? கிளம்ப வேண்டியதுதானே?' - கப்பனை நினைத்து உள்ளுக்குள்ளேயே புலம்பிக் கொண்டிருந்தார் மும்மடியார். கப்பனின் நினைப்போ வேறுமாதிரியிருந்தது, 'கம்பெனியின் புண்ணியத்தில் எல்லாம் நல்லபடியாக நடக்கிறது. மகாராஜா என்றொரு அநாவசிய கதாபாத்திரம் இனியும் தேவையா என்ன?'

எத்தனைக் காலம்தான் அரண்மனையில் எந்த அதிகாரமும் இன்றி, மல்லாக்கப்படுத்தபடியே காலத்தை ஓட்ட முடியும்? பிரிட்டிஷ்காரர்கள் மனசு வைத்தால்தான் ஏதாவது நடக்குமென்ற நிலை. ஆகவே மும்மடியார், ஒவ்வொரு வருடமும் விமரிசையாகப் பிறந்தநாள் கொண்டாட முடிவெடுத்தார். ஏன்? பிறந்தநாள் என்றால் விருந்து உண்டு. ஐரோப்பிய அதிகாரிகளை அழைக்கலாம். ஐஸ்வைத்துப் பேசலாம். நினைத்த காரியத்தைச் சாதிக்கலாமே.

மூன்றுநாள் கொண்டாட்டங்கள். முதல்நாள் குதிரைப் பந்தயம். இரண்டாவதுநாள் பிறந்தநாள் விழா. மூன்றாவது நாள் பிற கேளிக்கை நிகழ்ச்சிகள். எல்லா நாள்களும் விருந்து. சென்னை மாகாண கவர்னர் உள்பட, ஐரோப்பிய விருந்தினர்கள் உற்சாகமாகக் கலந்துகொண்டார்கள். 'வருடங்கள் ஆகிவிட்டன. எப்போது நான் மீண்டும் ஆட்சிக்கு வருவது?' - சளைக்காமல் கேட்டுக் கொண்டே இருந்தார். பிரிட்டிஷாரும் அலுக்காமல் ஒரே பதிலைச் சொன்னார்கள், 'காலம் இன்னும் கனியவில்லை. கமிஷனர் ஆட்சி தற்காலிகமானதுதான், பயப் படாதீர்கள்.'

அழுதபிள்ளைக்கு மிட்டாய் கொடுப்பதுபோல அவ்வப்போது மும்மடியாரைச் சமாதானப் படுத்தும் விதத்தில் அவருக்கு பிரிட்டிஷ் ராஜாங்கத்தின் பட்டங்கள் ஏதாவது கொடுத்து மகிழ்வித்தனர். 'இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷாரிடம் பேசிப்பேசி எதுவும் நடக்கவில்லை. நேரடியாக குயின் விக்டோரியாவிடமே பேசிவிட வேண்டியதுதான்' முடிவெடுத்தார் மும்மடியார். வைர அட்டிகை உள்ளிட்ட நகைகள், மைசூர் உயர்ஜாதி குதிரைகள், பசுக்கள் என்று பார்த்துப் பார்த்துத் தேர்ந்தெடுத்தார். தனது ஐரோப்பிய மருத்துவர் கேம்பலை அழைத்தார். 'இந்தப் பரிசுப்பொருள்களை குயினிடம் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டியதும் எனக்காகப் பேச வேண்டியதும் தங்கள் பொறுப்பு.' 1861ல் அவை பக்கிங்ஹாமை அடைந்தன.

'அருமை. இப்படிப்பட்ட பரிசுப்பொருள்களை இதுவரை யாருமே அனுப்பியதில்லை. தங்கள் விசுவாசத்தை மெச்சுகிறோம்' - என்கிற ரீதியில்தான் குயினிடமிருந்து பதில் வந்ததே தவிரப் பிடிகொடுப்பது போலத் தெரியவில்லை. கேம்பெல் தன்னால் இயன்றவரை லண்டன் ஆட்சியாளர்களின் காதுகளுக்கு மகாராஜாவின் கோரிக்கைகளைக் கொண்டுபோய்ச் சேர்த் தார். பிரிட்டிஷ் பத்திரிகைகளிலும் கேம்பெல் மூலமாக மும்மடியாரின் பரிதாப நிலை வெளியானது.

வயதும் ஆகிக்கொண்டே போனதால் மும்மடியாரின் மனமெங்கும் பயம் வியாபித்திருந்தது, 'இறுதிவரை அதிகாரத்தைத் திரும்பப் பெறாமலே கண்மூடிவிடுவேனா?'

அதுவரை 'காலம் கனியட்டும்' என்று பொத்தாம்பொதுவாக அருளி வந்த பிரிட்டிஷார் அப்போது, 'அதிகாரம் திரும்பக் கிடைக்குங்கிற நினைப்பை மகாராஜா கைவிடுறது நல்லது'

என்று மிரட்ட ஆரம்பித்தார்கள். அறுபத்தியைந்து வயதான மும்மடியாரை மீண்டும் அதிகாரத்துக்குக் கொண்டுவர வேண்டுமா என்று யோசித்தார்கள். காரணம்? மும்மடியாருக்குப் பின் ஆள அதிகாரபூர்வ ஆண்வாரிசு இல்லை.


இளவரசர் சாமராஜேந்திர உடையார்

மும்மடியாருக்கு அதிகாரபூர்வ மனைவிகள் பதினான்கு. அதிகாரபூர்வமில்லாதவை நிறைய. அதிகாரபூர்வ ஆண் வாரிசுகளாக இருந்த இரண்டு இளவரசர்களும் இளமையிலேயே இறந்திருந்தார்கள். பிறந்த பெண் வாரிசுகளிலும் பெரும்பாலானோர் நிலைக்கவில்லை.

ராணிகளுள் ஒருத்தியான மதன விலாஸாவுக்குப் பிறந்த பெண் குழந்தையான புட்டம்மணி மேல் மும்மடியாருக்குப் பாசம் அதிகம். சீராட்டி வளர்த்தார். உரிய காலத்தில் திருமணம் செய்து கொடுத்தார். புட்டம்மணியும் மூன்றாவதாக ஓர் ஆண்வாரிசைப் பெற்றுக்கொடுத்தாள். சாம ராஜேந்திர உடையார் (1863, பிப்ரவரி 22).

வாரிசு இல்லாததையும் பெரும் பிரச்னையாகச் சொல்லுகிறார்கள். அவ்வளவுதானே. 'நான் வேண்டுமானால் யாரையாவது தத்தெடுத்துக் கொள்ளட்டுமா?' மும்மடியார் தொடர்ந்து கோரிக்கை வைக்க ஆரம்பித்தார். அதற்கு உடனடி அனுமதி வழங்கப்படவில்லை. அவரது எழுபத்தியோராவது வயதில் 'சரி, தத்தெடுத்துக் கொள்ளுங்கள்' என்று திருவாய் மலர்ந்தது பிரிட்டிஷ் அரசு.

யார் வாரிசு? வேறு யார், இரண்டு வயது செல்லப் பேரன் சாமராஜேந்திரன்தான். 1865, ஜூன் 17ல் முறைப்படி தத்தெடுத்தார். பிரிட்டிஷ் அரசு வாரிசை அங்கீகரித்தது. ஆனால் அப்போதும் மும்மடியாருக்கு அதிகாரத்தைக் கொடுக்க முன்வரவில்லை. தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத மும்மடியார், விவகாரத்தை இங்கிலாந்து நீதிமன்றத்துக்கும் பாராளுமன்றத்துக்கும் கொண்டுசெல்லும் முயற்சிகளில் இறங்கினார். எல்லாவற்றையும் முன்நின்று செய்தவர் கேம்பெல்தான்.

விவகாரம் சூடுபிடித்தது. நிறைய கருத்துகள், எதிர்கருத்துகள் வெளிவந்தன. மைசூரின் முதல் கமிஷனர் பிரிக்ஸ் அளித்த அறிக்கைகளை வைத்து அப்போது மைசூரில் நிலவிய நிர்வாகச் சீர்கேடுகளை முன்வைத்து விவாதித்தார்கள். 'பழைய கதை வேண்டாம். இப்போது மைசூரில் எல்லாமே மாறிவிட்டது' என்று எதிர்விவாதம் கிளம்பியது. 'பெண்டின்க் அன்றே சொல்லி விட்டார், மைசூர் ராஜ்ஜிய அதிகாரத்தை மகாராஜாவுக்கே திருப்பி அளித்துவிடலாம் என்று. இன்றுவரை அதை அபகரித்து வைத்திருப்பது குயின் விக்டோரியாவின் நீதிதவறாத ஆட்சிக்குக் களங்கம்போல் அமைந்துவிடும்' என்றொரு கருத்து அழுத்தமாக எடுத்து வைக்கப்பட்டது.

1867 பிப்ரவரி. லண்டனிலிருந்து டாக்டர் கேம்பெல், மைசூருக்கு தந்தி ஒன்றை அனுப்பினார். தகவலறிந்ததும் மகாராஜாவின் முகத்தில் சூரிய பிரகாசம். 'வாழ்த்துகள் மகாராஜா. மைசூர் ராஜ்ஜியம் பிழைத்துவிட்டது. இங்கிலாந்து பாராளுமன்றத்தில் முடிவுசெய்துவிட்டார்கள். தங்களுக்குப் பின் இளவரசர் பதவிக்கு வரலாம்.'

அதாவது மும்மடியாருக்கு அதிகாரம் திரும்பக் கொடுக்கப்படவில்லை. ஆனால் அவரது காலத்துக்குப் பின் சாமராஜேந்திரர் கையில் அதிகாரத்தை ஒப்படைக்க பிரிட்டிஷார் முடிவெடுத்திருந்தார்கள். வேறுவழியின்றி திருப்திபட்டுக் கொண்டார் மும்மடியார். மீதி நாள்களை அமைதியாக, 'இலக்கியச் சேவை' ஆற்றியபடி கழிக்க ஆரம்பித்தார். 1868 மார்ச் 27ன் இரவுவரை சுவாசித்துக் கொண்டிருந்தார்.

பட்டத்து இளவரசர் சாமராஜேந்திரருக்கு அப்போது வயது ஐந்து மட்டுமே. 'பையனுக்குப் பட்டாபிஷேகம் நடத்துங்கள்' என்று பிரிட்டிஷாரிடமிருந்து உத்தரவு வரவேயில்லை. ராஜ குடும்பத்தினர் தவித்துப் போனார்கள். மும்மடியாரின் இரண்டு மகாராணிகளான செல்வஜம்மணியும் தேவஜம்மணியும் வைஸ்ராய்க்கு உருக்கமாகக் கடிதம் ஒன்றை வரைந்தார்கள் (ஆகஸ்ட் 10).

'ஐயன்மீர், எங்க பரம்பரை வழக்கப்படி, மகாராஜா இறந்ததும் அவரது வாரிசு உடனே பதவியேற்க வேண்டும். இளவரசர் சாமராஜேந்திரருக்கு முடிசூட்ட வேண்டும். தங்கள் அனுமதி ஓலைக்காகக் காத்திருக்கிறோம். இன்னும் சில மாதங்களில் தசரா வருகிறது. குலவழக்கப்படி மகாராஜாதான் அந்த வைபவங்களை நடத்தவேண்டும். ஆகவே தங்களது தயவு தேவை.'

செப்டெம்பரில் வைஸ்ராயிடமிருந்து பதில் கடிதம் வந்தது. மும்மடியாரின் அருமை, பெருமைகளையெல்லாம் சிலாகித்துவிட்டு மேற்படி விஷயத்துக்குப் பதிலும் கூறியிருந்தார். 'இளவரசர் சிறுவர். பதினெட்டு வயது ஆகவேண்டும். அப்போதுதான் அரியணை ஏறமுடியும். அதுவரை தற்போதுள்ள நடைமுறைப்படியே ஆட்சி தொடரும்.'

அவ்வளவுதான். வதந்தி ஒன்று வெகுஜோராகப் பரவ ஆரம்பித்தது. 'பிரிட்டிஷ்காரங்க ஏமாத்துறாங்க. உடையார் இளவரசருக்குப் பதவி கிடையாதாம்.'

ராஜ குடும்பத்தினர் திகைத்துப் போனார்கள். தசரா ஆரம்பமானது. ஆகவே இரண்டு மகாராணிகளும் துணிச்சலாக அந்தக் காரியத்தைச் செய்யத் தயாரானார்கள்.



153

# வாத்தியார் சொல்லைத் தட்டாதே!

'குலவழக்கம். அன்னை சாமுண்டீஸ்வரிக்கான காரியம். இதில் தெய்வகுற்றம் நேர்ந்துவிடக்கூடாது. வேறுவழியில்லை. அப்படிச் செய்துதான் ஆக வேண்டும்.'

'பிரிட்டிஷாருக்குத் தெரிந்துவிட்டால்?'

'அரண்மனைக்குள் நம்மவர்கள் மத்தியில் நடக்கப்போகும் விஷயம். வெளியே தெரியாமல் பார்த்துக்கொள்வோம்.'

மும்மடியாரின் மனைவிகளான மகாராணி செல்வஜம்மணியும் தேவஜம்மணியும் துணிந்து செயலில் இறங்கினார்கள். ஐந்து வயது சிறுவன் சாமராஜேந்திரனைப் பரம்பரை தங்க அரியணையில் அமர்த்தி தசராவுக்கான பூஜைகளை நடத்த ஆரம்பித்தார்கள், பரம ரகசியமாக.

தசராவின் மூன்றாவது நாள். கர்னல் எல்லியாட் மைசூருக்கு வந்து நின்றார். எதற்காக இருக்கும்? விஷயம் கசிந்திருக்குமா? இரண்டு மகாராணிகளும் நடுங்கிப் போயிருந்தார்கள். ஆனால் எல்லியாட் நல்ல செய்திதான் கொண்டுவந்திருந்தார். இளவரசருக்கு முடிசூட்டு விழா நடத்துவதற்கான வைஸ்ராயின் அனுமதிக் கடிதம் அவரது கையில் இருந்தது. அதாவது பெயரளவுக்கு மகாராஜாவாக.

'யாரங்கே, ஜோதிடரை வரச்சொல்லுங்கள்.' நாள் குறிக்கப்பட்டது. 1868, செப்டெம்பர் 23.

மைசூர் நகரமெங்கும் பளபளா. புனித நீர் காத்திருந்தது. மகாராணிகள் இளவரசருக்கு ஸ்நானம் செய்துவிட்டார்கள். பட்டுடை. பரம்பரை நகைகள். எல்லியாட், அரண்மனையில் காத்திருந்தார். மலங்க மலங்க விழித்தபடி இருந்த சாமராஜேந்திரனை விழாப்பந்தலுக்கு கைப்பிடித்து அழைத்துவந்தார். தோரணம் ஆயிரமாயிரம். புரவிகள் ஆயிரம். வாரணம் நூறு. கோமாதா ஒன்று. அந்தணர்கள் மந்திரங்களை முழங்கிக் கொண்டிருந்தார்கள். ஒருபுறம் ஐரோப்பிய விருந்தினர்கள் குவிந்திருந்தார்கள். இன்னொருபுறம் சுற்றுவட்டார சமஸ்தானங் களிலிருந்து வந்த ராஜவிருந்தினர்கள்.

விழாப்பந்தலை நோக்கி மக்கள் வந்தவண்ணம் இருந்தார்கள். முதலில் சிம்மாசனத்துக்கான பூஜைகள் நடந்தன. பிறகு உடையார் பரம்பரை சின்னங்களுக்கும் பூஜைகள். ஒருவர் உடையார் பரம்பரையின் முதல் மகாராஜாவான யாதுரயா முதற்கொண்டு மும்மடியார் வரை யிலான பெயர்களை அவர்களுக்குரிய பட்டங்களோடு வாசித்தார். பூமழை தூவி வசந்தங்கள் வாழ்த்த, பத்தாம் சாமராஜேந்திர உடையாருக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. மாபெரும் சமஸ் தானத்தின் மகாராஜாவல்லவா. இருபத்தியொரு குண்டு முழக்கங்கள் அதிர்ந்து அடங்கின. மக்களின் வாழ்த்தொலிகள் வெகுநேரத்துக்குத் தொடர்ந்தன.

குட்டி மகாராஜாவுக்குக் கல்வி கற்றுக்கொடுக்கும் பொறுப்பை பிரிட்டிஷாரே ஏற்றுக் கொண்டார்கள். முதல்வேலை ஆங்கிலம் கற்றுக்கொடுப்பது. பிரிட்டிஷாருக்கு வாக்கப்பட்டு விட்டாய். வா, வந்து வாய் நிறைய இங்கிலீஸ் பேசு. தென்னிந்திய மொழிகளையும் எழுத, பேசத் தெரிந்துகொள்வது அவசியம். அடுத்து அரசியல். அப்புறம் வரலாறு. நான்கு அறை களுக்குள் அடைந்துகிடந்து கற்கும் கல்வியால் மட்டும் பிரயோசனமில்லை. வெளியே வா. கிரிக்கெட். பிரிட்டிஷாரின் புனித விளையாட்டு. விளையாடுவது கௌரவம். குதிரையேறு. போலோ விளையாடு. நீரில் குதி. நீச்சலடி. மல்யுத்தம், வாள்சண்டை எல்லாம் பரம்பரை விளையாட்டா? சரி, கற்றுக்கொள். துப்பாக்கி பிடிக்கவும் தெரிந்துகொள். வேட்டைக்குச் சென்றால் உதவலாம்.

இப்படி எல்லாவற்றையும் சாமராஜேந்திரனுக்குக் கற்றுக் கொடுப்பதற்காக நியமிக்கப்பட்டவர் கர்னல் ஜே.பி. மாலெஸன். 'அரண்மனைக்கு வந்தெல்லாம் கற்றுக்கொடுக்க முடியாது. மகாராஜா பள்ளிக்குத் தினமும் வரவேண்டும்' மாலெஸன் போட்ட முதல் கட்டளை அதுவே. தினமும் சாமராஜேந்திரன் தனது பரிவாரங்கள் சூழப் பள்ளிக்கு ஊர்வலம் செல்ல ஆரம்பித்தார்.

மைசூரின் அமைச்சர்கள் மற்ற முக்கியர்களின் பிள்ளைகள் படிக்கும் 'ராயல் ஸ்கூல்' அது. மாலெஸன் முன்னாள் ராணுவ வீரரல்லவா. எல்லா விஷயங்களிலும் கறாராக இருந்தார். ஆரம்பத்தில் சாமராஜேந்திரன் பள்ளிக்குத் தாமதமாக வந்தான். சில நாள்கள் பொறுமையாக இருந்த மாலெஸன், ஒருநாள் வகுப்பு ஆரம்பிக்கும் நேரம்வரை காத்திருந்தார். எல்லா மாணவர்களும் வந்துவிட்டார்கள். குட்டி மகாராஜா மட்டும் வரவில்லை.

'போய் அந்தக் கதவை அடைத்துவிட்டு வா.' மாணவன் ஒருவனுக்கு உத்தரவிட்டார். வகுப்பு ஆரம்பித்தது. தாமதமாக வந்த சாமராஜேந்திரன், வகுப்பறைக்கு வெளியே திகைத்து நின்றான். உள்ளே மாலெஸன் பாடம் சொல்லும் குரல் மிரட்டியது. கதவைத் தட்டலாமா, வேண்டாமா? பயம். நேரம் கடந்துகொண்டே இருந்தது.

கதவு திறக்கப்படும் சத்தம். மாலெஸன் வெளியே வந்தார். சாமராஜேந்திரன் முகம் சுருங்கிப் போயிருந்தது. கண்களில் மிரட்சி. 'இதுவே கடைசியாக இருக்கட்டும். இனிமேல் தாமதம் கூடாது. உள்ளே போ.' மாலெஸனின் வார்த்தைகளுக்கு வேகவேகமாகத் தலையசைத்து விட்டு உள்ளே ஓடினான் சாமராஜேந்திரன்.

மாணவர்கள் வகுப்புகளுக்கு விடுமுறை எடுப்பதும் மாலெஸனுக்கு ஆகாது. உடல்நிலை மோசமாக இருந்தால் மட்டுமே விடுமுறை கொடுப்பார். மற்ற சிறுசிறு காரணங்களுக்கெல்லாம் ம்ஹூம். அரண்மனையில் ஒரு திருமணம். சாமராஜேந்திரனின் நெருங்கிய உறவினருக்கு. 'ஹைய்யா, இன்னிக்கு ஸ்கூலுக்கு லீவு. ஜாலி' என்று ஜிகுஜிகு உடைகளோடு திருமண வைபவத்தில் வலம் வந்துகொண்டிருந்தான் சாமராஜேந்திரன்.

யாரும் எதிர்பார்க்காத நேரத்தில் மாலெஸன் அங்கு விறுவிறுவெனப் புகுந்தார். சாமராஜேந் திரனைத் தேடினார். பிடித்தார். தரதரவென இழுத்துச் செல்ல ஆரம்பித்தார். பள்ளிக்கூடத் துக்கு. அந்த வாத்தியாருக்குப் பயந்தே பல நல்ல பழக்கவழக்கங்களைக் கற்றுக்கொண்டான் சாமராஜேந்திரன்.

எட்டு வயது சாமராஜேந்திரனை அருகிலுள்ள நந்தி மலைக்கு அவரை அழைத்துச் செல்ல திட்டமிட்டார். கல்விச் சுற்றுலா மாலெஸன். குறிப்பிட்ட இடத்தில் மாலெஸன் காத்திருக்க, சாமராஜேந்திரன் வரவேயில்லை. வெறுத்துப்போன அவர் அரண்மனைக்குச் சென்றார். அரண்மனைப் பெண்களின் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தான் சாமராஜேந்திரன். 'அய்யோ, வேணாமுங்க. சின்னப்புள்ளைங்க. காட்டுல பயங்கரமான மிருகமெல்லாம் இருக்குமுங்க. எங்களுக்குப் பயமாயிருக்குது.' பெண்கள் கெஞ்சினார்கள்.

மாலெஸன் பொருட்படுத்தவில்லை. சாமராஜேந்திரனை அழைத்துச் சென்றார். நடுக்காட்டில் இயற்கையான சூழலில் இரவு தங்கினார்கள். கூடாரத்துக்கு அருகிலேயே விலங்குகளின் ஒலி கிலி ஏற்படுத்தியது. அந்தப் பயணம் சாமராஜேந்திரனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அடுத் தடுத்து நீலகிரி, ஜோக் நீர்வீழ்ச்சி என்று மாலெஸனோடு நிறைய பயணங்கள் கிளம்பினான், மைசூர் சமஸ்தானத்துக்கு உள்ளேயும் வெளியேயும்.

1876ல் பதவி ஓய்வு பெற்றுக் கிளம்பிய மாலெஸன், 'சாமராஜேந்திரர், மைசூரை ஆள்வதற் குரிய எல்லாத் தகுதிகளோடும் இருக்கிறார்' என்று சர்டிபிகேட் கொடுத்துவிட்டுப் போனார். மாலெஸனுக்குப் பிறகும் சிலர் சாமராஜேந்திரருக்குப் பாடங்கள் சொல்லிக் கொடுத்தார்கள். நிறையப் படித்தாயிற்று. வயது பதினாறாயிற்று. அப்புறமென்ன, திருமணம்தான்.

பருவ மகாராஜாவுக்கேற்ற சிட்டு ஒன்றை வலைவீசித் தேட ஆரம்பித்தார்கள். உயர்குடும்பத்துப் பெண்ணாக இருக்கவேண்டும். மைசூர் தளவாய்களின் கலாலே பரம்பரையைச் சேர்ந்த பெண் என்றால் இரட்டைச் சம்மதம். மும்மடியாரின் காலத்தில் சிறிதுகாலம் திவானாகப் பணியாற்றிய நரசராஜய்யாவின் மகளைப் பார்த்தார்கள். கெம்பநஞ்சம்மணி. படித்த பெண். லட்சணமானவள். திறமையானவள். 'இவள்தான் மகாராணி' என்று குடும்பத்தார் மனத்தள வில் முடிவெடுத்திருந்தார்கள். கண்கள் நிறையக் கனவுகளுடன் சாமராஜேந்திரரும் அவளை நோக்கினார். பார்வைகள் நேர்க்கோட்டில் சந்தித்த பொழுதில் வாழ்க்கைக்கான பந்தம் பூத்தது.

1878, மே 23ல் நிச்சயதார்த்தம். பிறகு பல மதச் சடங்குகள். மைசூர் நகரமே கல்யாண வீடாகியிருந்தது. எல்லாத் திசைகளிலிருந்து விருந்தினர்கள் வந்து குவிந்தார்கள். எங்கெங்கும்

உற்சாகம். அந்த நாள்களில் யாருடைய வயிறும் காலியாக இருக்கவில்லை. மே 26ல் நாதஸ்வரம், தவில், எல்லோருடைய வாழ்த்து ஓசைகளுக்கிடையே மாங்கல்யம் தந்துனானே.

சாமராஜேந்திரர் பதினெட்டு வயதை நெருங்கிக் கொண்டிருந்தார் (1881). அதிகாரம் பறிபோய் சுமார் ஐம்பது வருடங்களாகிவிட்டன. இப்போதாவது பிரிட்டிஷார் அதிகாரத்தைத் திரும்பக் கொடுத்துவிடுவார்களா? ராஜகுடும்பத்தினர்கள் தவித்துக் கொண்டிருந்தார்கள். அந்த நாள் வந்தது.

மார்ச் 25. பிரிட்டிஷார், மகாராஜாவுக்கு மைசூரை நிர்வகிக்கும் அதிகாரத்தைத் திரும்பக் கொடுக்கும் நிகழ்வுக்கான தர்பார் கூடியிருந்தது. மைசூரின் கமிஷனர் ஜே.டி. கார்டான், அதிகாரத்தைக் கைமாற்றக் காத்திருந்தார். வைஸ்ராய் ரிப்பனால் வர இயலவில்லை. பதிலாக சென்னை கவர்னர் அடம்ஸ் வந்திருந்தார். குயின் விக்டோரியாவின், வைஸ்ராயின் வாழ்த்துகள், செய்திகளுடன் சாமராஜேந்திரர் அதிகாரம் கொண்ட மகாராஜாவாக அறிவிக்கப்பட்டார். நெஞ்சில் கையை வைத்து உறுதிமொழியைச் சொன்னார், '...பிரிட்டிஷ் ராஜ்ஜியத்துக்கு என்றும் உண்மையானவனாக இருப்பேன்.'

ரிப்பன் சார்பாக மகாராஜாவுக்கான விதிமுறைகள் வாசிக்கப்பட்டன.

'சாமராஜேந்திரரோட புள்ளையோ, வளர்ப்புப்புள்ளையோதான் அடுத்த மகராசா. புள்ளையோ, வளர்ப்புப்புள்ளையோ இல்லியா. அப்பால யாரு மகராசான்னு வைஸ்ராய் பாத்துக்குவாரு. அப்புறம் அரசாங்கத்துக்கோ, குயினுக்கோ ஏதாவது உதவி தேவைப்பட்டா, ஒக்காந்து யோசிக்கக்கூடாது. ஓடியாந்து வணக்கம் வைக்கோணும். அப்புறம் பிரிட்டிஷ் படை ஒண்ணு மைசூர்லயேதான் சுத்திக்கினு கிடக்கும். எல்லாப் பிரச்னைலயும் மூக்கை இல்ல, மூஞ்சையே நுழைக்கும். அதோட செலவுக்கு வருசம் முப்பத்தியஞ்சு லட்சம் மருவாதையாக் கட்டிப்புடணும். அடுத்ததா அரசோட அனுமதி இல்லாம கோட்டை, அரண்மனைன்னு புதுசா கட்டுற வேலையெல்லாம் ஆவாது. வெளிய இருந்து 'பொருளுங்க', அதான் ஆயுதங்க, கொண்டுவர்றதோ, உள்ளுக்குள்ளயே தயாரிக்கறதோ கூடாது. அரசாங்கம் எங்க நினைக்குதோ அங்க தண்டவாளம் போடும். கரைச்சல் பண்ணாம நிலத்தைத் தூக்கிக் கொடுத்துடணும்...'

இப்படிப் பல நிபந்தனைகளுக்குச் சமர்த்தாகச் சம்மதம் தெரிவித்தார் சாமராஜேந்திரர். கமிஷனர் கார்டான், ஒரு விஷயத்தை நிறைவேற்றுவதில் முனைப்போடு இருந்தார். அதாவது மைசூர் சமஸ்தானத்தில் பிரதிநிதிகள் சபை அல்லது சட்டசபை (The Mysore Representative Assembly) ஒன்று அமைக்கப்பட வேண்டும் என்று. அதுவரைக்கும் பிரிட்டிஷ் இந்தியாவில் இல்லாத விஷயம் அது. ஆகவே அரசு தயங்கியது.

ஆனால் சாமராஜேந்திரர், அதிகாரத்துக்கு வந்த சிலநாள்களிலேயே சட்டசபை ஒன்றை அமைக்க அனுமதி கொடுத்தார் (ஆகஸ்ட் 25). சட்டசபை என்றால்? பெரிதாக அதிகாரம் எல்லாம் எதுவும் கிடையாது. சமஸ்தானத்தின் பிரச்னைகளை முன்வைக்கலாம். விவாதிக்கலாம். ஆலோசனைகள் சொல்லலாம். சட்டம் இயற்றும் அதிகாரமெல்லாம் கிடையாது.

யாரெல்லாம் உறுப்பினர்கள்? சமஸ்தானத்தின் பல்வேறு பகுதிகளிலுள்ள பெரிய வியாபாரிகள், நில உரிமையாளர்கள், மக்களிடையே செல்வாக்குள்ள 'நாட்டாமைகள்.' இப்படி முன்னிறுத்தப்பட்ட உறுப்பினர்களை மகாராஜா தேர்ந்தெடுத்தார். பிரிட்டிஷ் இந்தியாவின்

முதல் சட்டசபை அதுவே. 144 உறுப்பினர்கள் கலந்துகொள்ள முதல் கூட்டம் அக்டோபர் 7 அன்று நடந்தது.



திவான் ரங்காச்சார்லு

திவான் ரங்காச்சார்லு, சாமராஜேந்திரருக்கு நிர்வாகத்தில் எந்தவிதச் சிக்கல்களும் வராதபடி பார்த்துக்கொண்டார். சென்னைக்காரரான ரங்காச்சார்லு, கிழக்கிந்திய கம்பெனியில் துணைக் கலெக்டராக பதினெட்டு ஆண்டுகள் பணியாற்றிய அனுபவஸ்தர். நேர்மையானவர். தைரியமானவர். அதிரடி அதிகாரி. திவான் ஆனதும் சமஸ்தானத்தில் எல்லாத் துறைகளிலுள்ள அதிகாரிகள் பற்றியும் விசாரித்தார். நீண்ட பட்டியல் ஒன்றைத் தயாரித்தார். 'நீவிர் செய்த சேவைக்கு நன்றி. வீட்டுக்குப் போகலாம்' ஊழல் அதிகாரிகள் ஒவ்வொருவரையும் தூக்கிக் கடாசினார்.

நிர்வாக விதிகளை மாற்றியமைத்தார். எல்லா மட்டங்களிலும் பயம் பரவியது. அதனால் ஊழியர்கள் உண்மையாக நடக்க ஆரம்பித்தார்கள். தலைகீழ் மாற்றங்கள். வந்த இரண்டே ஆண்டுகளில் சமஸ்தானத்தின் வருமானத்தைக் கணிசமாக உயர்த்திய ரங்காச்சார்லு, 1883ல் இறந்துபோனார். கவலையில் ஆழ்ந்தார் மகாராஜா.



154

# எரிந்தது மைசூர் அரண்மனை!

அந்த யோசனை தோன்றிய நொடிமுதலே உற்சாகமானார் சாமராஜேந்திரர். இறந்துபோன திவான் ரங்காச்சார்லுவின் இடத்தில் சேஷாத்ரி ஐயரைக் கொண்டுவந்துவிடலாம் என்பதே யோசனை. கடந்த பதிமூன்று வருடங்களாக மைசூர் நிர்வாகத்தில் பல பதவிகளில் இருந்தவர். ரங்காச்சார்லுவோடு இணைந்து பல வளர்ச்சித் திட்டங்களைக் கொண்டுவந்தவர். கறைபடாத கரங்களுக்குச் சொந்தக்காரர். அடுப்பூதும் கன்னடத்துப் பைங்கிளிகளும் படிக்க வேண்டும் என்று தனியாகக் கன்னடப் பள்ளிகளை எல்லாம் ஆரம்பித்துவைத்த புண்ணியவான். வேறென்ன வேண்டும்?

சேஷாத்ரி, திவான் பதவியை ஏற்றார் (1883). சுமைகள் பாதியாகக் குறைந்த நிம்மதியில் மகாராஜா பெருமூச்சுவிட்டார்.

சாமராஜேந்திரரின் தாத்தன், பாட்டன்கள் எல்லாம் எண்ணிக்கையில் குறைவில்லாத மனைவிகளோடு நிறைவான அந்தப்புர வாழ்க்கையை வாழ்ந்துவிட்டுப் போயிருந்தார்கள். ஆனால் சாமராஜேந்திரர், அந்தப்புர ஏகாந்தங்களில் ஈடுபாடு காட்டவில்லை. உரிய வார்த்தையில் சொல்லவேண்டுமென்றால், ஏக பத்தினிவிரதர். மகாராணி கெம்பநஞ்சம்மணியே மனைவி. துணைவிகளை விரும்பவில்லை.

சாமராஜேந்திரர் பிரிட்டிஷாருக்கு உண்மையாக, கொஞ்சம் வளைந்துகொடுத்து நடந்துகொண்டாலும், திவானோடு சேர்ந்து மைசூரின் வளர்ச்சிப் பணிகளில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டார். ‘ஆளுபவனுக்கு அரண்மனையில்

என்ன வேலை? வாருங்கள், மக்களைச் சந்தித்துவிட்டு வரலாம்.' தனது அமைச்சர் பெருமக்களோடு மைசூரின் எல்லா பஃஜுதார்களுக்கும் சுற்றுப்பயணம் மேற்கொண்டார். மக்களது குறைகளைக் கேட்டார். தீர்த்துவைத்தார். 'மவராசா, நல்லா இருக்கோணும்.'

1892. நாராயணசாமி சாலையில் உள்ள நிரஞ்சனா மடத்துக்கு 'அவர்' வந்திருப்பதாக மகாராஜாவுக்குத் தகவல் சென்றது. சொன்னவர் திவான். அவரை மைசூருக்கு அழைத்தவரும் திவானே. மாளிகையெல்லாம் எனக்குச் சரிப்படாது என்று திவானின் இல்லத்துக்கு பின்புறமிருந்த மடத்தில் அவர் தங்கியிருந்தார். அவரைப் பற்றி நிறையவே கேள்விப்பட்டிருந்த சாமராஜேந்திரர், உடனே அழைப்பு விடுத்தார், தனது அரண்மனைக்கு, விருந்தினராக. அவரும் மறுக்காமல் வந்தார். விவேகானந்தர்.

ஞானம் நிறைந்த கண்கள். தீர்க்கமான பார்வை. எளிமையின் உச்சம். கையெடுத்து வணங்க வைக்கும் தோற்றம். கண்டதுமே காலில் விழுந்தார் மகாராஜா. விவேகானந்தர் சாமராஜேந்திரரிடம் நிறையப் பேசினார். தத்துவங்கள், வேதாந்தம், மதக்கோட்பாடுகள். கலந்துரையாடவும் செய்தார்கள். (மைசூரில் விவேகானந்தர் பல்வேறு இடங்களில் உரைகள் ஆற்றியதாகவும் செய்திகள் உள்ளன. நவம்பர் 9லிருந்து 24வரை விவேகானந்தர் மைசூரில் தங்கியிருந்ததாகக் குறிப்பு இருக்கிறது.)

விவேகானந்தர், மகாராஜாவிடம் ஆஸ்திரிய இசைக்கலைஞர் ஒருவரை அறிமுகப்படுத்தினார். ஐரோப்பிய இசைவடிவங்கள் குறித்து நீண்ட நேரம் உரையாடினார்கள். அந்தச் சமயத்தில் அரண்மனையில் மின்சார வசதி ஏற்படுத்துவதற்கான வேலைகள் நடந்துகொண்டிருந்தன. அதைத் தலைமை ஏற்று நடத்திக் கொண்டிருந்த மின் பணியாளருக்குத் தன் வேலையில் சந்தேகம். அதைக் கவனித்த விவேகானந்தர், பணியாளரின் சந்தேகங்களைப் போக்கி, புதிய விஷயங்களைக் கற்றுக் கொடுத்தார். விவேகானந்தரின் ஒவ்வொரு நடவடிக்கையிலும் இருந்த எளிமையை, நேர்த்தியைக் கண்டு சாமராஜேந்திரர் சொக்கித்தான் போனார்.

இந்தியாவின் அப்போதைய நிலை என்ன? எந்தெந்தத் துறைகளில் என்னென்ன அறிவியல் பூர்வமாகச் செய்ய வேண்டும்? தென்னிந்தியா எப்படி இருக்கிறது? தேவைப்படும் நிர்வாக மாற்றங்கள் என்ன? விவேகானந்தர், மகாராஜாவுக்கு நிறையவே ஆலோசனைகள் வழங்கினார். ஒருநாள் விவேகானந்தரின் அனுமதியுடன் அவரது உரையை ஒலிப்பதிவு செய்தார் சாமராஜேந்திரர். (மைசூர் அரண்மனைக் குறிப்புகளில் அந்த உரை பற்றிய செய்தி இருக்கிறது. ஆனால் ஒலிவடிவம்தான் இன்று வரை கிடைக்கவில்லை.)

சிகாகோவில் நடக்கவிருந்த மகாசபைக்குச் (the World Parliament of Religions) செல்லவிருப்பது குறித்து மகாராஜாவிடம் தெரிவித்தார் விவேகானந்தர். அதற்குரிய பணவசதி இல்லையென்பதும் பேச்சின்மூலம் மகாராஜாவுக்குத் தெரியவந்தது. 'தாங்கள் தாராளமாகச் சென்று வாருங்கள். அனைத்து வசதிகளையும் நான் செய்து தருகிறேன்.' சாமராஜேந்திரர் உதவிசெய்யத் துடித்தார். ஆனால் விவேகானந்தர் அன்புடன் மறுத்துவிட்டார். மகாராஜாவுக்கு உள்ளூர வருத்தம்தான். ஆனால் வற்புறுத்த முடியாதே.

'புறப்படுகிறேன்' என்றார் விவேகானந்தர். 'இன்னும் ஒருவாரமாவது இருந்துவிட்டுச் செல்லுங்கள். இது என் கோரிக்கை' என்றார் மகாராஜா. விவேகானந்தர் புன்னகையால் மறுத்தார். உயர்தரமான பரிசுப்பொருள்கள் நிரம்பிய பெரிய கடை ஒன்றுக்கு விவேகானந்தரை

அழைத்துச் சென்றார். 'தேவையானவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்.' மீண்டும் விவே கானந்தர் முகத்தில் சிரிப்பு.

'எதுவுமே எனக்குத் தேவைப்படாதே.'

'என் நினைவாக ஏதாவது ஒரு பொருளையாவது தாங்கள் எடுத்துக் கொண்டால்தான் எனக்குத் திருப்தி.'

'சரி, இதை எடுத்துக் கொள்கிறேன்.' விவே கானந்தர் ஹுக்கா ஒன்றை எடுத்துக் கொண்டார். 'கொஞ்சம் பணமாவது பெற்றுக் கொள்ளுங்கள்.' மீண்டும் சாமராஜேந்திரரின் அன்புத்தொல்லை. 'அநாவசியம். அடுத்து கொச்சினுக்குச் செல்கிறேன். கொச்சின் திவானை நான் சந்திக்கத் தாங்கள் ஓர் அறிமுகக்கடிதம் கொடுத்து உதவுங்கள். முடிந்தால் ரயில் பயணச்சீட்டு ஏற்பாடு செய்துதாருங்கள்.'



விவேகானந்தர் (1887)

கடிதத்தையும், கொச்சின் வரை தண்டவாளம் முளைக்காததால் சோரனூருக்கான ரயில் பயணச்சீட்டையும் கொடுத்து விவேகானந்தரை வழியனுப்பி வைத்தார் சாமராஜேந்திரர்.

1894ன் இறுதியில் ஜூன் 23 என்று தேதியிடப்பட்ட கடிதம் ஒன்று மைசூருக்கு மிக மெதுவாக வந்து சேர்ந்தது. அனுப்பியது விவேகானந்தர்தான். சிகாகோவிலிருந்து. அந்தக் கடிதத்தில் அமெரிக்காவின் செழிப்பு பற்றியும், எந்திரமயமான வாழ்க்கை பற்றியும், அமெரிக்காவுடன் ஒப்பிடும்போது இந்தியாவின் ஏழைமை பற்றியும், இங்கு செய்யப்பட வேண்டிய மாற்றங்கள் குறித்தும் விரிவாகவே எழுதியிருந்தார் விவேகானந்தர். கடிதத்தின் இறுதிப்பத்தியில் சாம ராஜேந்திரருக்கெனச் சிறப்புச் செய்தியும் வைத்திருந்தார்.

'என் அருமை மகாராஜாவே, வாழ்க்கை குறுகியது. உலகம் நிலையில்லாதது. பிறருக்காக வாழ்பவர்களே வாழ்கிறார்கள். மற்றவர்கள் இருந்தாலும் இறந்தவர்களுக்குச் சமம். மேன்மை பொருந்திய மண்ணின் மகாராஜாவாக இருக்கும் தங்களால், இந்தியாவை உயர்த்த, இந்திய மக்களின் அறியாமையை விரட்ட முடியும். வருங்காலத்தினர் தங்களை வாழ்த்துவார்கள். இதுவே எனது வேண்டுகோள்!'

எழுச்சிமிக்க சொற்களுடைய அந்தக் கடிதம் சாமராஜேந்திரரை அடையவில்லை. காரணம்...

1894ன் இறுதியில் சாமராஜேந்திரர் கல்கத்தாவுக்குக் கிளம்பியிருந்தார். பயணத்தின் ஆரம்ப மெல்லாம் சௌகரியமாகத்தான் இருந்தது. அங்கு அவர் தங்கிய ஷீல்தா மாளிகையிலும் வசதிகளுக்குப் பஞ்சமில்லை. ஒருநாள், லேசான காய்ச்சல். அசதி. ஓய்வெடுத்தார். ஆனால் உடல் சூடு அதிகமானது. தொண்டையில் வலி. மருத்துவர் ஒருவர் வந்து மருந்து கொடுத்து விட்டுப்போனார்.


கெம்பநஞ்சம்மணியின் வாரிசுகள்

மறுநாள். ஜுரம் குறையவேயில்லை. தொண்டையில் வீக்கம். கடும் தலைவலி. சாம ராஜேந்திரரால் கண்விழிக்க இயலவில்லை. மருத்துவரது மருந்துகள் பிரயோசனப்பட வில்லை. ஆயிற்று இரண்டு வாரங்கள். தொடர் காய்ச்சல். மூச்சுவிடவும் பேசவும்கூடச் சிரமமாக இருந்தது. டாக்டர் மேக்கனெல் வந்தார். சில பரிசோதனைகள் செய்தார். மறுநாள் சொன்னார், 'இது டிப்தீரியா.'

தளர்ந்து போயிருந்தார் சாமராஜேந்திரர். காய்ச்சல், அவரது கம்பீரத்தைக் கபளீகரம் செய்திருந் தது. கண்கள் குறுகிப் போயிருந்தன. 'அய்யோ, இன்று செவ்வாய்க்கிழமையல்லவா?' முனகியபடியே இயலாத நிலையிலும் சிரமப்பட்டு எழுந்து உட்கார்ந்தார்.

'வேண்டாம் மகாராஜா. ஓய்வெடுங்கள். இப்போதுதானே மருந்து சாப்பிட்டிருக்கிறீர்கள்.' மகாராஜா கேட்கவில்லை. எழுந்து நின்றார். 'என்ன வேண்டும் மகாராஜா? எங்கே செல்கிறீர் கள்?' பதிலேதும் சொல்லாமல் நடக்க ஆரம்பித்தார். மற்றவர்கள் வார்த்தைகளைப் பொருட் படுத்தாமல், பெரும்பாடுபட்டுக் குளித்துவிட்டு வந்தார். 'பூஜைக்கு எல்லாம் எடுத்துவைத்து விட்டீர்களா?' கேட்டபடியே சாமுண்டீஸ்வரியை வணங்கத் தயாரானார்.

இப்படிச் சில நாள்கள். பின்பு படுத்தபடுக்கை. 'அம்மா சாமுண்டீஸ்வரி, உனக்கு பூஜை செய்யக்கூட இயலாத நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டேனே...' - சாமராஜேந்தரின் கண்களில் நீர். டிசம்பர் 28, அதிகாலை. விழிகளைத் திறப்பதும் மூடுவதுமாக இருந்த சாமராஜேந்திரர்,

சற்றே பெருங்குரலெடுத்துக் கத்தினார். முற்றிலும் அடங்கிப் போனார். இருபத்தேழு வயதில்.

மகாராணி கெம்பநஞ்சம்மணியை யாராலும் சாமாதானப்படுத்தமுடியவில்லை. வைஸ்ராய் எல்கினுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. விஷயமறிந்த மைசூர் மக்கள், வீதிகளுக்கு வந்து அழுதுபுலம்ப ஆரம்பித்தார்கள், 'மகாராசாவோட முகத்தைக் கடைசியா ஒருவாட்டி பார்க்க முடியாதா?' பலநாள்கள் படுக்கையில் கிடந்த தேகம். ஆகவே இறுதிச் சடங்குகளைக் கல்கத்தாவிலேயே நடத்த முடிவெடுத்தார்கள். வங்காளப் படை ஒன்று அணிவகுக்க, கல்கத்தாவின் லோயர் சர்க்கிள் சாலையில் சாமராஜேந்திர உடையாரின் இறுதி ஊர்வலம் நடந்தது.

அலமேலு அம்மாளின் சாபம், சாமராஜேந்திரரிடம் எடுபடவில்லைபோல. கெம்பநஞ்சம்மணி மூன்று பெண் வாரிசுகளையும் நான்கு ஆண் வாரிசுகளையும் பெற்றுக் கொடுத்திருந்தாள். சிறுவயதிலேயே இறந்துபோன இரண்டு ஆண் குழந்தைகள் தவிர மீதி ஐந்து பிள்ளைகளும் திடகாத்திரமாகவே இருந்தார்கள்.

மூத்த மகன் கிருஷ்ணராஜன். அப்போது வயது பத்து. இரண்டாவது மகன் நரசிம்மராஜன். வயது ஆறு. யாருமே எதிர்பாராத விதத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து உடனடிக் கடிதம் ஒன்று வந்து சேர்ந்தது. 'பட்டத்து இளவரசர் கிருஷ்ணராஜருக்கு முடிசூட்டிக் கொள்ளலாம். அவருக்குப் பதினெட்டு வயது ஆகும்வரை மகாராணி கெம்பநஞ்சம்மணியும் திவான் சேஷாத்ரி ஐயரும் பிரதிநிதிகளாக (Regents) செயல்படலாம்.'

முதன்முதலாக உடையார் பரம்பரையில் ஒரு பெண் அதிகாரத்துக்கு வந்தது அப்போதுதான். கெம்பநஞ்சம்மணிக்கு இரண்டு முக்கியமான பொறுப்புகள். ஆட்சியாளரின் பிரதிநிதியாக மைசூர் நிர்வாகத்தைக் கவனித்துக்கொள்ள வேண்டும். மீண்டும் பிரிட்டிஷாரின் கையில் முழு அதிகாரமும் சென்றுவிடும் நிலையை வரவிடக்கூடாது. கூடவே ஒரு தாயாக ஐந்து பிள்ளைகளையும் அனைத்துத் தகுதிகளுடனும் திறமைகளுடனும் பொறுப்பாக வளர்க்க வேண்டும். பெண் பிள்ளைகளை நல்ல இடத்தில் திருமணம் செய்துகொடுக்க வேண்டும்.

1895, பிப்ரவரி 1ல் மைசூர் மிளிர்ந்தது. பட்டத்து இளவரசர், நான்காம் கிருஷ்ணராஜ உடையாராக அரியணையில் அமர்ந்தார். மக்கள் அவரை அழைத்த பெயர், நால்வடி கிருஷ்ணராஜ உடையார். நாள்கள் நகர்ந்தன. தனது மூத்த மகள் இளவரசி ஜெயலட்சுமம்மணிக்குத் திருமணத்துக்கு வரன் பார்க்க ஆரம்பித்தார் கெம்பநஞ்சம்மணி. மணமகன்? தளவாய்களின் கலாலே பரம்பரையில் இல்லாத மாப்பிள்ளைகளா? அவளது சொந்தத் தம்பியே காத்திருந்தார். முறைமாமன். கந்தராஜய்யா.

ஜோதிடர்களின் பலகட்ட ஆலோசனைகளுக்குப் பிறகு நாள் குறிக்கப்பட்டது. 1897, பிப்ரவரி 19. ஏற்பாடுகள் வெகுவிமரிசையாக நடந்தன. இதற்குமுன் பல திருமணங்கள் அரங்கேறிய மைசூரின் அம்பா விலாஸ் அரண்மனையில்தான் அந்தத் திருமணமும். ஒருவாரத்துக்கு முன்பாகவே விருந்தினர்கள் வர ஆரம்பித்திருந்தார்கள். மைசூர் மக்கள் திருமண விருந்துகளில் திளைத்துக் கொண்டிருந்தார்கள்.

திருமண நாள். அம்பா விலாஸில் ஓரிடத்தில் பற்றிய தீ, திகுதிகுவெனப் பரவ ஆரம்பித்தது.



# 155

# கன்னடர் Vs தமிழர்

தள்ளி நின்று பார்த்தாலும் கண்பார்வைக்குள் அடங்காத பிரம்மாண்டம். கழுத்துவலிக்க அண்ணாந்து பார்க்கும் உயரம். விஸ்தீர வராண்டாக்கள். வாய்பிளக்கவைக்கும் தூண்கள். எல்லாத்திசையிலும் வண்ண வண்ணக் கலைவடிவங்கள். அனைத்துக்கும் கிரீடமாக உச்சியில் தகதகக்கும் தங்கக் கலசம் கொண்ட டூம். இன்று மைசூரில் இருக்கும் அரண்மனையைப் பார்த்து, ரசித்து, வியந்திருப்போம். அந்த அரண்மனை உருவாக்கப்பட்ட வரலாற்றிலும் அநேக சுவாரசியங்கள் உண்டு.

இன்றைய மைசூர் அரண்மனைக்கு வயது சுமார் தொன்னூற்று ஏழு மட்டுமே. எனில் அதற்கு முன்பு? பதினான்காம் நூற்றாண்டில் இருந்தே மைசூரில் உடையார் பரம்பரையினர் இன்றைய அரண்மனை அமைந்திருக்கும் இடத்தில்தான் வாழ்ந்து வந்தார்கள். அப்போதைய மாளிகையின் பெயர், சௌந்தர்ய விலாஸ் அல்லது நாம தீர்த்தம். அது மாளிகைதான் என்றாலும் முழுக்க கல்கட்டிடமல்ல. பெரும்பகுதி மரத்தாலானது.

1638ல் அந்த மாளிகைக்கு முதல் சோதனை வந்து சேர்ந்தது. பருவமழைக் காலத்தில் வானைப் பிளந்து இறங்கிய இடியால் கட்டடத்துக்கு நிறையவே சேதம். அப்போதைய மைசூர் மகாராஜா ‘மல்யுத்த புகழ்’ ரணதீர கந்திரவ நரச ராஜ உடையார், மாளிகையைப் புணரமைத்தார். அந்த மாளிகைக்குத் திப்புவின் காலம்வரைப் பாதிப்பில்லை. இடைப்பட்ட காலத்தில் ராஜகுடும்பத்தினர் பெரும்பாலும் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் வசித்துவந்ததால் மாளிகை அவ்வளவாக உபயோகத்தில் இல்லாமல்தான் இருந்தது.




நால்வடி கிருஷ்ணராஜர் - சிறுவனாக

திப்பு, 1793ல் மைசூரில் அந்த மாளிகை அமைந்த வளாகத்திலிருந்த கோயில்கள் தவிர மற்ற எல்லாக் கட்டடங்களையும் இடித்துவிட்டு புதிய மாளிகைகளைக் கட்டும் பணிகளை ஆரம்பித்தார். அதில் அந்த சௌந்தர்ய விலாஸும் இடிக்கப்பட்டது. பின் ஏகப்பட்ட காட்சி மாற்றங்கள், ஆட்சி மாற்றம். அந்த நூற்றாண்டின் இறுதியில் மீண்டும் உடையார்கள் வசமே அதிகாரம் திரும்பியபோது மும்மடியாருக்கு முடிசூட்டுவிழா நடத்த மாளிகை இல்லை. எனவே பெரிய பந்தல் ஒன்று போட்டு விழாவினை நடத்தியதாகச் சொல்கிறார்கள்.

மைசூரில் அந்த வளாகத்தில் உடையார்களின் பரம்பரை மாளிகையை மறுபடியும் எழுப்ப வேகவேகமாக வேலைகள் நடந்தன. அதுவும் முழுக்கக் கல்கட்டடமல்ல. மரமே பிரதானம். மும்மடி கிருஷ்ணராஜரும் சாமராஜேந்திரரும் ஆண்டு அனுபவித்தது அந்த மாளிகையில்தான் (அம்பா விலாஸ்). நாளடைவில் பலவீனப்பட்டிருந்தது.

இளவரசி ஜெயலட்சுமம்மணிக்கும் கந்தராஜய்யாவுக்குமான திருமண நாளில் அம்பா விலாஸில் தீப்பற்றியது. மாளிகையின் பெரும்பகுதி கருகிப்போனது. விபத்து எப்படி நிகழ்ந்தது என்பது பற்றித் தெளிவாகத் தெரியவில்லை. திருமண வைபவத்தின் இறுதியில் ஒரு சடங்கில் விபத்து நிகழ்ந்ததாகத் தெரிகிறது. (உயிர்ச்சேதம், மற்ற இழப்புகள் குறித்த தெளிவான தகவல்கள் கிடைக்கவில்லை.)

அந்த மாளிகையில்லையென்றால் இன்னொரு மாளிகை. ராஜ குடும்பத்தினர் கவலைப்பட வேண்டுமா என்ன? அருகிலிருந்த ஜெகன்மோகன் அரண்மனைக்குக் குடிபெயர்ந்தார்கள். அது 1861ல் கட்டப்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவின் முதல் சட்டசபைக் கூட்டம் பற்றிப் பார்த்தோமே, அது இந்த ஜெகன்மோகன் அரண்மனையில்தான் நடந்தது.

இடம்பெயர்ந்துவிட்டாலும் மகாராணி கெம்பநஞ்சம்மணிக்கு மனச்சங்கடம் தீரவில்லை. ‘சுபகாரியம் நடந்த தினத்தில் இப்படி ஒரு விபத்து நேர்ந்துவிட்டதே. என்ன செய்ய?’ உரிய பரிகாரங்கள் எல்லாம் செய்து உடையாரின் பரம்பரை மாளிகையைப் புதிதாக, வலுவானதாக, கம்பீரமாக மீண்டும் கட்ட முடிவெடுத்தார்.

பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் அனுமதி கேட்டாக வேண்டுமே. கேட்டார். கிடைத்தது. மைசூரைச் சார்ந்த பொறியியலாளர் ராகவலு நாயுடு கட்டுமானப் பணிகளுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டார். அப்போது பிரிட்டிஷ் அரசில் பொதுப்பணித்துறையில் இருந்த தலைமைப் பொறியியலாளர் ஹென்றி இர்வின் தலைமையில் ஒரு குழு நியமிக்கப்பட்டது. ஹென்றி இர்வின் குறித்து மேலும் சில வரிகள். தேர்ந்த பொறியியலாளர். சிம்லாவில் வைஸ்ராய் மாளிகையைக் கட்டியவர் இவரே. சென்னை உயர்நீதி மன்றம், எழும்பூர் அருங்காட்சியகம், சென்னை சென்ட்ரல் எல்லாம் இவரது கைவண்ணமே.

இன்னொருமுறை விபத்து நேர்ந்தாலும் பாதிப்பு நேராதபடி முழுக்க கல், இரும்பால் கட்ட வேண்டும். மிகப் பெரியதாக. அனைத்து வசதிகளுடனும். ஹென்றி இர்வின் திட்ட வரைபடத்தைத் தயாரித்துக் கொடுத்தார். மொத்தப் பணிகளுக்கும் அவர் சொன்ன மதிப்பீட்டுத் தொகை இருபத்தைந்து லட்சம். திட்டம் போட்டுக் கொடுத்ததற்காக இர்வின் வாங்கிக் கொண்ட தொகை பன்னிரண்டாயிரம். திட்டத்துக்கு அரசின் ஒப்புதல் கிடைத்தது. வேலை அந்த ஆகஸ்டில் ஆரம்பமானது.

சின்னச் சின்னதாகப் பிரச்னைகள். 'கட்டுமானத்துக்குத் தேவையான கற்களை மெட்ராஸிலிருந்து கொண்டு வரலாம்' என்றார் இர்வின். 'கொண்டுவர செலவு அதிகம். மைசூரிலேயே தயாரிக்கலாம்' என்றார்கள் சிலர். 'தரம் இருக்காது' என்று வாதிட்டார் இர்வின். 'ஏன், மெட்ராஸ்காரர்களால்தான் நல்ல கற்களைத் தயாரிக்க முடியுமா என்ன? நாங்களும் தயாரிக்கிறோம்.' இப்படி ஏகப்பட்ட சில்லறைப் பிரச்னைகளுக்கிடையே 'அம்பா விலாஸ் புதிய காப்பி'யானது இந்திய, இஸ்லாமிய, ராஜபுத்திர, ஐரோப்பிய கட்டடக்கலை வடிவங்கள் இணைந்து மெதுவாக வளர்ந்தது.

திவான் சேஷாத்ரி ஐயரின் உறுதுணையுடன் கெம்பநஞ்சம்மணி சமஸ்தான நிர்வாகத்தை எந்தவிதச் சிக்கலுமின்றி கவனித்துக் கொண்டிருந்தார். கெம்பநஞ்சம்மணி தனது இரு மகன்களான நால்வடி கிருஷ்ணராஜரையும், கந்திரவா நரசிம்மராஜரையும் குறைவின்றிப் படிக்கவைத்தார். பிரிட்டிஷ் வாத்தியார்களும் முனைப்புடன் 'எப்படி எப்படியெல்லாம் நடந்துகொள்ள வேண்டும்' என்று எல்லாவிதப் பயிற்சிகளும் கொடுத்தார்கள். நால்வடியாருக்கு பதினாறு வயதில் (1900) திருமண ஏற்பாடுகள் நடந்தன. குஜராத்தின் கதியவாரிலிருந்து பெண் எடுத்தார்கள். ராஜகுடும்பத்துப் பெண்தான். பிரதாபகுமாரி பாய். திருமணத்துக்குப் பின் சூட்டப்பட்ட பெயர் லஷ்மி விலாஸ் சந்நிதானத்தின் மகாராணி.

பிரிட்டிஷார் கொண்டாடும் திவானாக சேஷாத்ரி ஐயரின் நிர்வாக நடவடிக்கைகள் திகழ்ந்தன. 'ராஜதுரந்தரா' என்று பட்டம் பிரிட்டிஷாரால் அவருக்கு வழங்கப்பட்டது. அதற்குரிய அர்த்தம், 'சூப்பர்ஸ்டார் நிர்வாகி.' ஆனால் உள்ளூரில் ஒரு பிரச்னை மட்டும் குமைந்து கொண்டே இருந்தது, சில ஆண்டுகளாக. கன்னடர் Vs தமிழர் பிரச்னை.

பிரச்னைக்குப் பிள்ளையார் சுழி போட்டவர் தாத்தையா. மைசூரைச் சார்ந்த அவர், பள்ளி ஒன்றின் ஆசிரியராகப் பலகாலம் பணியாற்றியவர். குட்டி மகாராஜாவின் அந்தரங்க ஆலோசகராக நியமிக்கப்பட்டிருந்தார். தாத்தையாவுக்கும் சேஷாத்ரி ஐயருக்கும் லடாய்.

'ஐயர் மதராஸி. அவருக்கு வேண்டிய ஆள்களை மட்டும் பல இடங்களில் பதவியில வைச்சுருக்கார். இங்கே மைசூர்ல இருக்கறவங்க யார்கிட்டயும் திறமையே இல்லையா என்ன? ஐயரோட ஒருதலைபட்சமான நடவடிக்கையால உள்ளூர்க்காரங்க எல்லாம் பாதிக்கப் படுறாங்க.' இதுவே தாத்தையாவின் குற்றச்சாட்டு.

சில வருடங்களாகப் புகைந்து வந்த விஷயம், 1901ல் வெடித்தது. திவான் என்ன செய்தாலும் அதற்கு எதிராகக் குரல்கள் எழும்பின. ஆகவே ஏகப்பட்ட மனச்சங்கடங்களுடன் அந்த வருடமே பதவியிலிருந்து ஓய்வுபெற்றார் சேஷாத்ரி. அடுத்த வருடத்தில் உலகத்திலிருந்தும் ஓய்வுபெற்றார். புதிய திவானாகப் பொறுப்பேற்றவர் பூர்ணையாவின் பரம்பரையில் வந்த பி.என். கிருஷ்ணமூர்த்தி.

1902. நால்வடி கிருஷ்ணராஜ உடையார் (பதினெட்டு) வயசுக்கு வந்தார். ஜெகன்மோகன் அரண்மனையில் வைத்து வைஸ்ராய் கர்ஸனின் அநேக ஆசிர்வாதங்களுடன் முறைப்படி மகாராஜாவாக அதிகாரமேற்றுக்கொண்டார் (ஆகஸ்ட் 8). சடங்குகள், சம்பிரதாயங்கள், உறுதிமொழி, இருபத்தொரு குண்டு முழக்கங்கள், இன்னபிற.

ஜெகன்மோகன் அரண்மனையில் அவரது ஆட்சி தொடர, இன்னொருபுறம் புதிய அரண்மனை யில் கட்டுமானப் பணிகள் தொடர்ந்தன. அரண்மனையின் வெளிப்பக்கம் சுற்றிலும்

மூன்றடுக்கு கோபுரங்கள், டூம்கள் மட்டும் பிங்க் கிரானைட்டால் ஆனவை. மத்தியில் 145 அடி உயரத்தில் ஐந்தடுக்கு கோபுரம் ஒன்று. அதன் உச்சியில் தங்க முலாம் பூசப்பட்ட டூம். அலங்கார வளைவுகள் நிறைந்த மாபெரும் தர்பார் (Diwanekhas). யானைகள் ஹாயாகச் சென்றுவரும் அளவிலான வாசல்கள். பழங்காலச் சிலைகள் நிரம்பிய பெவிலியன் (Gombe Thotti). விதவிதமான வண்ணத் தூண்கள் அமைந்த அறைகள். நடுநாயகமாக செல்வத்தின் கடவுளான கஜலட்சுமியின் உருவம். மயிலும் மயில் சார்ந்த பொருள்களின் ஓவியங்கள் நிறைந்த கல்யாண மண்டபம். ராயல் ஓவியர் ரவிவர்மா பிரத்யேகமாக வரைந்து கொடுத்த ஓவியங்கள். அரண்மனையைச் சுற்றி நீண்ட அழகிய தோட்டம்.

சுமார் பதினைந்து வருடங்கள் நடந்த பணிகள், 1912ல் கிட்டத்தட்ட நிறைவுபெற்றன. மொத்தமாக ஆன செலவு ரூ. 41,47,913. மொத்தச் செலவில் அரை சதவிகிதத்தைத் தனதுச் சம்பளமாகப் பெற்றுக்கொண்டார் இர்வின். அந்தப் புதிய மாளிகையை 'மைசூர் அரண்மனை' என்ற பொதுப்பெயரால் அழைக்கப்பட்டது. அம்பா விலாஸ் என்ற பழைய பெயரும் இன்றுவரை ஒட்டியிருக்கிறது.

இந்தப் பெரிய அரண்மனையைத் தவிரவும் மைசூரில் வேறு சில குறிப்பிடத்தகுந்த அரண்மனைகள் உள்ளன. லலித் மஹால் அரண்மனை - இது ஐரோப்பிய விருந்தினர்களுக்காகக் கட்டப்பட்ட அரண்மனை. ராஜேந்திர விலாஸ் மைசூர் நகரத்திலிருந்து ஆயிரம் அடி உயரத்தில் சாமுண்டி மலைமீது கட்டப்பட்ட இந்த மாளிகை, உடையார்களின் கோடைகால வாசஸ்தலமாக இருந்தது. இவைபோக மூன்று மாளிகைகள் முக்கியமானவை - ஜெயலட்சுமி மாளிகை, காரஞ்ஜி மாளிகை, செலுவாம்பா மாளிகை - மூன்றுமே கெம்பநஞ்சம்மணி தனது மூன்று புதல்விகளுக்கும் கட்டிக் கொடுத்தவை, சீதனமாக.

சில அரசியல் காரணங்களால் மைசூரில் திவான்கள் மாறிக் கொண்டே இருந்தார்கள். கிருஷ்ணமூர்த்திக்குப் பின் மாதவ ராவ். அவருக்குப் பின் ஆனந்த ராவ். 1912ல் ஆனந்த ராவும் ஓய்வை அறிவித்தார். யாரை அடுத்த திவானாகப் போடுவது? மகாராஜா நால்வடியார் யோசித்த உடனேயே நினைவில் வந்த பெயர் விஸ்வேஸ்வரய்யா.

மோட்சகுண்டம் விஸ்வேஸ்வரய்யா. கோலாருக்கு அருகிலுள்ள முட்டன்ஹல்லி கிராமத்தில் பிறந்தவர். சிறுவயதிலேயே தந்தையை இழந்து, பின் கஷ்டப்பட்டுப் படித்தவர். மெட்ராஸில் பி.ஏ. மைசூர் சமஸ்தானத்தின் ஸ்காலர்ஷிப் கிடைத்தது. அதனால் புனேவில் சிவில் இன்ஜினியரிங் படித்தார். முடித்ததும் நாசிக்கில் பொதுப்பணித்துறையில் உதவிப் பொறியியலாளர் வேலை.

சவாலான வேலைகள். அவற்றுக்கு எளிமையான தீர்வுகளை வைத்திருந்தார் விஸ்வேஸ்வரய்யா. வெள்ள காலங்களில் அணைகளில் நீர்மட்டத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் தவித்து வந்தனர். அணையை உயர்த்திக் கட்ட ஆகும் செலவு அதிகமாக இருந்தது. விஸ்வேஸ்வரய்யா 'தானியங்கி மதகு' என்ற திட்டத்தைக் கொண்டுவந்தார். அதிகப்படியான நீரைத் தேக்கிக் கொள்ளும் வசதி. வெள்ள நீர் வரம்புமீறும் சமயத்தில் மதகுகளைத் திறந்துவிட்டால் உபரி நீர்மட்டும் வெளியேறிவிடும்.

முதலில் புனேவில் கடக்வாஸா அணையில் இந்த மதகுகள் அமைக்கப்பட்டன. பெரும் வெற்றி. இப்படிப் பல்வேறு புதிய திட்டங்களால் விஸ்வேஸ்வரய்யாவின் புகழ் வளர்ந்தது.

ஆனால் குறிப்பிட்ட காலம் வேலை பார்த்த பிறகும் அவர் எதிர்பார்த்த தலைமைப் பொறியியலாளர் பதவி கிடைக்கவில்லை. அது ஆங்கிலேயர்களுக்கு மட்டுமே என்று சொல்லிவிட்டார்கள். வேலையை உதறினார் விஸ்வேஸ்வரய்யா.

வெளிநாடுகளுக்குச் சுற்றுப்பயணம் மேற்கொண்டார். நிறையப் புதிய தொழில்நுட்ப விஷயங்களைக் கற்றுக்கொண்டார். திரும்பி வந்தவரை நிஜாம் தலைமைப் பொறியியலாளர் பதவிகொடுத்து ஹைதராபாத்துக்கு அழைத்தார் (1909). அங்கே சிலகாலம் பணியாற்றிய விஸ்வேஸ்வரய்யாவுக்கு மைசூரிலிருந்து அழைப்பு வந்தது.



# 156

# விஸ்வேஸ்வரய்யாவின் கோபம்!

மைசூர் சமஸ்தானத்தின் தலைமைப் பொறியாளராகப் பொறுப்பேற்றார் மோட்சகுண்டம் விஸ்வேஸ்வரய்யா. அவர் சந்தித்த முதல் பெரிய பிரச்னை, காவிரிப் பிரச்னை. அப்போது சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியில் இருந்து உற்பத்தி செய்யப்பட்ட மின்சாரம் மூலமாகத்தான் கோலார் தங்கச் சுரங்கம் இயங்கிக் கொண்டிருந்தது. நீர்வீழ்ச்சிக்கும் சுரங்கத்துக்கும் இடைப்பட்ட தூரம் சுமார் எண்பத்தைந்து மைல்கள். கோடைக்காலத்தில் தேவையான மின்சாரம் கிடைக்க வில்லை, அதுபோக மின்சாரத்தைக் கொண்டுசெல்ல ஆகும் செலவும் அதிகமாக இருந்தது.

தீவிரமாக யோசித்த விஸ்வேஸ்வரய்யா, புதிய திட்டமொன்றை வகுத்தார். ஸ்ரீரங்கப்பட்டணத்தில் இருந்து சுமார் ஒன்பது மைல் தொலைவிலுள்ளது கண்ணம்பாடி கிராமம். அங்கே ஓர் அணையைக் கட்டினால் சுற்றுவட்டார விவ சாயிகளுக்கெல்லாம் லாபம். நீர்மின் உற்பத்தி நிலையம் அமைத்தால் கோலார் உள்பட பல பகுதிகளுக்கும் லாபம். வேகவேகமாகத் திட்ட அறிக்கையைத் தயாரித்தார். மைசூர் மகாராஜாவிடம் சமர்ப்பித்தார். நால்வடி கிருஷ்ணராஜ உடையார் வாயடைத்துப் போனார். காரணம், திட்ட மதிப்பீட்டுத் தொகையாக விஸ்வேஸ்வரய்யா குறிப்பிட்டிருந்தது சுமார் இரண்டரைக் கோடி.

அதே சமயத்தில் தமிழ்நாட்டில் மேட்டூரில் அணைகட்டவும் திட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள். மேட்டூர், கண்ணம்பாடியிலிருந்து சுமார் 62 மைல் தொலை விலுள்ளது. 'கண்ணம்பாடி அணை கூடவே கூடாது. பின் மேட்டூருக்குக் காவிரி



விஸ்வேஸ்வரய்யா

நீரே கிடைக்காது.' மெட்ராஸ் மாகாணத்தில் இருந்து ஏகப்பட்ட எதிர்ப்புக் குரல்கள். விஸ்வேஸ்வரய்யா வெறுத்துப் போனார். நீண்ட விடுமுறை எடுத்துக்கொண்டு அமைதியாக இருந்தார்.

நால்வடியார் விஸ்வேஸ்வரய்யாவை அழைத்துப் பேசினார். 'ஐயா, இந்தத் திட்டத்தோட சாதக, பாதகங்களைக் கொஞ்சம் தெளிவா எடுத்துச் சொல்லுங்களேன்.' விஸ்வேஸ்வரய்யாவும் விளக்கினார். 'சாதகங்கள்தான் உண்டு. பாதகமெல்லாம் இல்லை.'

மெட்ராஸ் மாகாண கவர்னர் பிரச்னையைத் தீர்க்கும்விதமாகப் பொதுக் கமிட்டி ஒன்றை உருவாக்கினார். 'கண்ணம்பாடியில அணை கட்டலாமா? கூடாதா? மேட்டூருக்குப் பாதிப்பு இருக்குமா? இருக்காதா? இரண்டு மாகாண மக்களுக்கும் பாதிப்பு இருக்கக்கூடாது. தெளிவா, நடு நிலைமையோட ஆராய்ந்து சொல்லுங்க.'

கமிட்டியினர் சமர்ப்பித்த ஆய்வறிக்கை விஸ்வேஸ்வரய்யாவின் முகத்தில் புன்னகையைக் கொண்டுவந்தது. 'மேட்டூருக்கு வரும் காவிரி நீர் தடைபடாது. கண்ணம்பாடியில் அணைக் கட்டைத் தாராளமாகக் கட்டலாம்.'

கண்ணம்பாடி அணைக்கட்டு வேலைகள் ஆரம்பமாயின. மைசூரை தொழில் வளர்ச்சி மிகுந்த சமஸ்தானமாக மாற்றும் முனைப்போடு செயல்பட்டார் விஸ்வேஸ்வரய்யா. அந்தச் சமயத் தில்தான் அவருக்கு மைசூரின் திவான் பதவி அளிக்கப்பட்டது. மகாராஜா நால்வடியார் வலுக் கட்டாயமாக வழங்கினார் என்றே சொல்லலாம்.

காரணம்? விஸ்வேஸ்வரய்யாவின் திறமை, அனுபவம் என்பது வெளிப்படையான காரணம். இன்னொரு மறைமுகக் காரணம், அவர் ஒரு கன்னட பிராமணர். திப்புவின் காலத்துக்குப் பிறகும் திவானாகப் பதவியில் இருந்த பூர்ணையா, கன்னடரல்ல. அவருக்குப் பின் வந்த பல திவான்களும் தெலுங்கு அல்லது தமிழ் பிராமணர்களாகவே இருந்தார்கள். அந்த (கன்னட ரல்லாத) திவான்கள், தங்களது உறவினர்களையும் வேண்டியவர்களையும் மட்டுமே பிற

பதவிகளில் உட்காரவைத்தனர். 'சொந்த மண்ணில் தாங்கள் ஒட்டுமொத்தமாகப் புறக்கணிக்கப் படுகிறோம்' - என்று கன்னட பிராமணர்கள் பலகாலமாகவே குமுறிக் கொண்டிருந்தார்கள். அந்தச் சூட்டைத் தணிக்கும்விதமாகவே விஸ்வேஸ்வரய்யாவை திவானாக்கினார் நால்வடியார் (1912).

திவான் ஆனபின்னும் விஸ்வேஸ்வரய்யாவுக்கு அந்தப் பதவியில் நாட்டமிருக்கவில்லை. தலைமைப் பொறியாளராக இருந்தால் எந்நேரமும் வளர்ச்சிப்பணிகளைப் பற்றி மட்டுமே சிந்திக்கலாம். செயல்படலாம். அதிலுள்ள சுதந்தரம் வேறு. ஆனால் திவான் என்றால் ஆயிரத் தெட்டு அரசாங்கப் பணிகள் கழுத்தை நெறிக்கும். பிரிட்டிஷாரைத் திருப்திப்படுத்துவதிலேயே காலம் கரையும். சுதந்தரமாக மக்கள் சேவையில் ஈடுபட முடியாது.

முதலில் நிறையவே கவலைப்பட்ட விஸ்வேஸ்வரய்யா, பின் திவான் பதவியையும் ஒரு சவாலாக எடுத்துக்கொண்டு வழக்கம்போலக் களமிறங்கினார். கல்வியை முதலில் கவனித்தார். கல்வி வாசமில்லாத குக்கிராமங்களிலும் பள்ளிக்கூட மணியோசை கேட்க ஆரம்பித்தது. அடுத்தது மகளிர் கல்லூரி. அவைபோக இருந்த மற்ற கல்லூரிகளெல்லாம் மெட்ராஸ் பல்கலைக்கழகத்தின் கட்டுப்பாட்டில்தான் இருந்தன. மைசூருக்கென்று ஒரு பல்கலைக்கழகம் அமைத்தாலென்ன? 1916ல் மைசூர் பல்கலைக்கழகம் பிறந்தது. பெங்களூரில் பொறியியல் கல்லூரி ஒன்றைத் தொடங்கினார்.

புதிய திட்டங்களைக் கொண்டுவருவது விஷயமில்லை, ஆனால் திறமையான பணியாளர்கள் இருந்தால்தானே வளர்ச்சி என்பது சாத்தியப்படும். பலகாலமாக அரசாங்கப் பதவியில் இருந் தவர்கள் தங்களுக்குப் பின் வாரிசுகளுக்கு அதே வேலை கிடைக்கும்படி பார்த்துக் கொண் டார்கள். வேலை உத்தரவாதம். பணியில் மந்தநிலை. அரசாங்கத் துறைகள் தூங்கிவழிந்தன. திறமையான பலர் வேலையின்றி தவித்தனர்.

'தகுதி, திறமையின் அடிப்படையில்தான் இனிப் பணிநியமனம்' அதிரடியாக அறிவித்த விஸ்வேஸ்வரய்யா, அதனை அமல்படுத்தினார். பல மட்டங்களில் சலசலப்பு. கடும் எதிர்ப்பு. ஆனால் விஸ்வேஸ்வரய்யா பின்வாங்கவில்லை. புதியவர்கள் பலன்அடைந்தார்கள். நாளடைவில் எதிர்க்குரல்கள் ஓங்கி ஒலிக்க ஆரம்பித்தன. 'திவானா இருந்துகிட்டு அவர் பண்ற அராஜகம் தாங்கமுடியலை. சர்வாதிகாரம் கொடிகட்டிப் பறக்குது. இவர்தான் மகா ராஜா மாதிரி நடந்துக்கிறார். நால்வடியார் வெறும் தலையாட்டி பொம்மை.'

கடும் விமரிசனங்கள். கூடவே இன்னொரு பிரச்னை பூதாகரமாகக் கிளம்பியிருந்தது. அது இட ஒதுக்கீடு. விஸ்வேஸ்வரய்யாவின் காலத்தில் மைசூர் பிராமணர்கள் எல்லாத் துறைகளி லும் வாய்ப்பு பெற்றார்கள். இதர வகுப்பினர்கள் (லிங்காயத், வீரசைவர், முதலியார், ஒக்கலிகா மற்றும் இஸ்லாமியர்) கொந்தளித்தார்கள். குரல்கள் ஓங்கி ஒலித்தன. 'போதுமான அளவு வாய்ப்புகள் எங்களுக்கும் வழங்கப்படவேண்டும்.'

பலகாலமாகப் புகைந்து கொண்டிருந்த இந்தப் பிரச்னையைச் சமாளிக்கும்விதமாக மகாராஜா நால்வடியாரும் அவ்வப்போது சில காரியங்களைச் செய்துகொண்டுதான் இருந்தார். இதர வகுப்பினர்கள் தங்களுக்கெனப் பள்ளிகள், கல்லூரிகள், விடுதிகள் அமைக்க அனுமதி கொடுத்தார். 1908ல் அரசுக் கல்லூரிகளிலும் விடுதிகளிலும் அசைவ உணவு விடுதிகளைத் திறக்கச்சொல்லி உத்தரவிட்டார். இப்படி இன்னும் சில நடவடிக்கைகள். ஆனால் தகுதி,

திறமையின் அடிப்படையில்தான் வாய்ப்பு என்று விஸ்வேஸ்வரய்யா களமிறங்க, இதர வகுப்பினர்கள் பொங்கிஎழுந்தார்கள். அந்தச் சமயத்தில் கன்னட பிராமணர்களும் இதர பிராமணர்களும் தங்களுக்குள் கைகோர்த்துக் கொண்டார்கள் என்பது தனிக்கதை.

'எல்லா வகுப்பினர்களுக்கும் எல்லா இடங்களிலும் முறையான ஒதுக்கீடு வேண்டும்.' பிற்படுத்தப்பட்டோர் ஒன்றிணைந்து அழுத்தம் கொடுக்கவும் நால்வடியார் ஒரு முடிவுக்கு வந்தார். மைசூர் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி மில்லர் தலைமையில் கமிட்டி ஒன்றை அமைத்தார். 'இதர வகுப்பினர்களின் கோரிக்கைகளை எல்லாம் பரிசீலித்து எந்த அளவுக்குச் சாத்தியப்படும் என்று சொல்லவும்.'

மில்லர் கமிட்டியால் விஸ்வேஸ்வரய்யாவுக்கு மனவருத்தம். 'எல்லா இடங்களிலும் எல்லா மக்களுக்குக் கல்வி வழங்கவேண்டும். தொழிற்சாலைகளில் வளர்ச்சிக்காகப் புதிய உத்திகளைக் கொண்டுவருதல் வேண்டும். அதனால் முன்னேற்றம் சாத்தியப்படும். திறமையானவர்கள் கிடைப்பார்கள். அதைவிட்டுவிட்டு திறமையை, தகுதியைப் புறக்கணித்து செய்யப்படும் நியமனங்களால் வளர்ச்சியில் பின்னடைவுநிலை ஏற்பட்டுவிடும் என்று அச்சப்படுகிறேன்.' (தனது சுயசரிதையான Memoirs of My Working Life-ல் விஸ்வேஸ்வரய்யா கூறியுள்ளது.)

ஆகவே தான் பணியிலிருந்து ஓய்வுபெற விரும்புவதாக மகாராஜாவிடம் தெரிவித்தார் விஸ்வேஸ்வரய்யா. 'மாற்று ஏற்பாடுகள் செய்யவேண்டும். கொஞ்சம் அவகாசம் தாருங்கள்' என்று கேட்டுக்கொண்டார் நால்வடியார்.

முதல் உலகப் போரின் இறுதிநாள்கள். நேச நாட்டுப்படைகளிடம் மைய நாட்டுப்படைகள் சரணடைந்து கொண்டிருந்த சமயம். உலகம் முழுவதும் அந்த வைரஸின் பாதிப்பு விஸ்வரூபம் எடுத்துக் கொண்டிருந்தது. தொடர்ந்து சில வாரங்கள் காய்ச்சல். உடல்வலி. தீராத தலைவலி. வறட்டு இருமல். சுவாசத் திணறல். இவைதான் அறிகுறி. ஒருவருக்கு வந்துபின் எல்லோருக்கும் பரவியது. வயது வித்தியாசம் இன்றி. என்ன நோய் என்று அறிந்துகொள்ளும் முன்னரே பலர் இறந்துபோயிருந்தார்கள்.

மெதுவாகத்தான் தெரியவந்தது. அது ஃப்ளூ காய்ச்சல் (இன்ஃப்ளூயன்ஸா). மைசூருக்குள்ளும் அந்த வைரஸ் வலதுகாலை எடுத்துவைத்தது. முதல் உலகப்போருக்குச் சென்றுவந்த மைசூர் படைவீரர்கள் மூலமாக. மக்கள் கொத்துக் கொத்தாகப் பாதிக்கப்பட்டார்கள். முதலில் பெங்களூர் நகரத்தில். பின் மைசூர் நகரத்தில். சிமோகா, கோலார், தும்கூர் என மெள்ள சமஸ்தானம் முழுவதும். அடுத்ததாக, அந்தப் பக்கம் பம்பாய் மாகாணத்துக்கும், இந்தப் பக்கம் மெட்ராஸ் மாகாணத்துக்கும் கிளை பரப்பியது.

மகாராஜா நால்வடியார் தன்னால் இயன்ற நடவடிக்கைகளை முடுக்கிவிட்டுக் கொண்டுதான் இருந்தார். ஆனால் அப்போது மைசூர் சமஸ்தானத்தில் 32,800 பேருக்கு ஒருவர் என்ற விகிதத்தில்தான் மருத்துவர்கள் இருந்தார்கள். பல மருத்துவர்கள் போர் முனைக்குச் சென்றிருந்தார்கள். களமிறங்கிப் பணிகள் செய்ய வேண்டிய பல அதிகாரிகளும் ஃப்ளூ காய்ச்சலிடம் சரணடைந்திருந்தார்கள். கூடவே மக்களின் அறியாமை.

பாமர மக்கள், ஆங்கில மருந்துகளைக் கண்டு பயந்து நடுங்கினார்கள். கஷாயம் கிடைக்குமா என்று தவித்தார்கள். தன்னார்வத் தொண்டர்கள் கொடுத்த பாலைக்கூட வாங்கிக் குடிக்கத்



நால்வடி கிருஷ்ணராஜ உடையார்

தயங்கினார்கள். 'சர்க்கார் பால் எங்களுக்கு வேணாம். பயமாயிருக்கு.' முதலில் மக்களிடையே நோய் குறித்த விழிப்புணர்வு ஏற்படுத்த கன்னடத்தில் அச்சடிக்கப்பட்ட நோட்டீஸ் விநியோகிக்கப்பட்டது. இருந்தாலும் தகவல் தொடர்பில் அவ்வளவாக முன்னேற்றம் இல்லாத காலம். யுத்த நெருக்கடி. பொருளாதார மந்தம். உயிரிழப்புகள் நிறைய.

சில கிராமங்களில் குடும்பம் குடும்பமாக மடிந்து போயிருந்தார்கள். பிணங்களை அப்புறப்படுத்தக்கூட ஆளில்லை. ஃப்ளூ காய்ச்சலால் 1918ல் மட்டும் மைசூரில் இறந்தவர்களின் எண்ணிக்கை 1,27,651. அதாவது மைசூர் மக்கள்தொகையில் ஆயிரத்துக்கு 22.37 பேர் இறந்துபோயிருந்தார்கள். 1919ல்தான் இந்தத் துன்பங்களிலிருந்து மைசூர் மெதுவாக மீள ஆரம்பித்தது.

1918ன் இறுதியில் விஸ்வேஸ்வரய்யா பணியிலிருந்து விலகியிருந்தார். புதிய திவான், மகாராஜாவின் சகோதரியின் கணவரான கந்தராஜய்யா. திவானாக இருந்த ஆறு வருடங்களில் மைசூரைப் பொருளாதார அளவில் வெகுவாக முன்னேற்றியிருந்தார் விஸ்வேஸ்வரய்யா. மைசூர் சந்தன எண்ணெய் ஆலை, பத்ராவதியில் இரும்புத் தொழிற்சாலை உள்ளிட்ட பல்வேறு புதிய தொழிற்சாலைகளை உருவாக்கியிருந்தார். இருந்தாலும் திவான் பதவியை விட்டு விலகும்போது சற்றும் மனவருத்தம் அடையவில்லை. 'இந்தப் பதவி இல்லாவிட்டால் எனக்குச் சுதந்தரம். இன்னும் அதிகம் உழைக்கலாம்.'

மில்லர், இட ஒதுக்கீடு குறித்த தனது ஆய்வறிக்கையை 1919ல் சமர்ப்பித்தார். அது பிற்படுத்தப் பட்டோருக்கு வெகுசாதகமாகவே இருந்தது.

பிற்படுத்தப்பட்டோருக்கு எழுபத்தைந்து சதவிகித இட ஒதுக்கீடு. ஊக்கத்தொகை, மான்யத் தொகை வழங்கப்படவேண்டும். அவர்களுக்கென பள்ளி, கல்லூரிகள் கட்ட நிலம் வழங்கப் பட வேண்டும். பணி நியமனங்கள் மதிப்பெண்களை வைத்து இருக்கக்கூடாது.

நால்வடியார் மில்லர் கமிட்டியின் கருத்துகளோடு ஒத்துப்போனார். பிற்படுத்தப்பட்டோருக் கான இட ஒதுக்கீட்டுக்குச் சம்மதம் சொன்னார். அதாவது பிராமணர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் தவிர மற்றவர்கள் இதில் அடங்குவர். குறிப்பாக இஸ்லாமியர்களும். 1921ல் மைசூர் சமஸ்தானத்தில் இட ஒதுக்கீடு முறை அமல்படுத்தப்பட்டது. இந்தியாவில் முதல்முறையாக இட ஒதுக்கீடு கொண்டுவரப்பட்டது கர்நாடகாவில்தான். இன்றுவரை இஸ்லாமியர்களுக்கு ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தில் ஒதுக்கீடு வழங்கப்பட்டு வருகிறது.



# 157

# சுல்தான்பேட்டை பிள்ளையார்!

ஒரு மகாராஜாவுக்குத் தம்பியாகப் பிறப்பது பாவமா? புண்ணியமா? என்றாவது ஒருநாள் நாமும் மகாராஜாவாக அரியணை ஏறலாம் என்ற கனவோடு காலமெல் லாம் இளவரசராக இலவு காத்தவர்களும் இருந்தார்கள். அண்ணன் காலியான பின் (அல்லது அண்ணனைக் காலி செய்தபின்) மகிழ்ச்சியோடு பதவிக்கு வந்தவர்களும் இருந்தார்கள். காலமெல்லாம் அண்ணனுக்குச் சேவகம் செய்து மனநிறைவோடு வாழ்ந்த ஒரு சிலரும் இருக்கவே செய்தார்கள்.

மைசூர் மகாராஜா நால்வடி கிருஷ்ணராஜ உடையாரின் தம்பியான கந்திரவா நரசிம்மராஜ உடையார் இதில் எந்தவகை? எதுவுமே இல்லை. மைசூரின் இளவரசரான அவர்தான் நால்வடியாருக்குப் பின் அரியணை ஏறவேண்டும் என பிரிட்டிஷ் நாட்டாமைக்காரர்கள் சொல்லியிருந்தார்கள். ஆனால் நரசிம்மராஜர் அந்தக் கனவுகளோடு இலவு காக்கவில்லை. நால்வடியாரே சரணம் என்றும் கிடக்கவில்லை. ஓர் இளவரசராகத் தனக்குரிய பொறுப்புகளோடு இயல்பாக நடந்துகொண்டார்.

மைசூரிலேயே பள்ளிப்படிப்பு. கல்லூரிப்படிப்புக்காக அஜ்மீரின் மயோ கல்லூரிக்குச் சென்றார். சில நாள்களிலேயே உடல்நிலை ஒத்துவரவில்லை. டைபாய்டு காய்ச்சல். பதறிப்போன ராஜகுடும்பத்தினர், நரசிம்மராஜரை மைசூருக்கே திருப்பி அழைத்து வந்துவிட்டனர். ச்சீ, ச்சீ, இந்த காலேஜ் புளிக்கும். உள்ளூரிலேயே உயர்படிப்புகள். மெட்ராஸுக்கு வந்து கொஞ்சம் சட்டம் படித்துவிட்டுப் போனார். இருபத்திரண்டு வயதில் திருமணம் (1910.)

இளவரசி கெம்பசெல்வஜம்மணி. புதிதாகக் கட்டப்பட்ட மைசூர் அரண்மனையின் கல்யாண மண்டபத்தில் நடந்த முதல் மங்கள காரியம் இதுவே.

இந்தியாவிலேயே மைசூர் சமஸ்தானத்தில்தான் முதன்முதலில் சாரணர் இயக்கம் ஆரம்பிக்கப் பட்டது. அதன் முதல் தலைவர் இளவரசர்தான். 1911ல் பிரிட்டிஷ் அரசு Knight Commander of the Indian&Empire (K.C.I.E.) என்ற கௌரவப்பட்டத்தை வழங்கியது. 1915ல் G.C.I.E. (Grand Cross of the Indian Empire) கௌரவப் பட்டம். சில காலம் மைசூரின் ராணுவச் செயலாளராகப் பணியாற்றிய நரசிம்மராஜர், பின் சுகாதாரத் துறையில் கொஞ்ச காலம் இருந்தார். இப்படிப் பல அரசாங்கப் பதவிகள்.

நிர்வாகத்தில் புதிய விஷயங்களைக் கற்றுக்கொள்வதற்காக அடிக்கடி ஐரோப்பிய சுற்றுப் பயணங்கள் செய்தார். மைசூர் பல்கலைக்கழகத்தை உருவாக்க விஸ்வேஸ்வரய்யாவுக்கு ஏகப்பட்ட யோசனைகள் வழங்கினார். பல்கலைக்கழகத்தின் முதல் வேந்தர் நால்வடியார்தான். ஆனால் 1916லிருந்து 1939 வரை வேந்தராக இருந்தவர் இளவரசரே. இட ஒதுக்கீடு விஷயத்தில் பிற்படுத்தப்பட்டோருக்கு ஆதரவுக் குரல் கொடுத்தார். உல்லாச இளவரசராக இல்லாமல், மக்கள் சேவையில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு பொறுப்புடன் வாழ்ந்த நரசிம்மராஜரின் அமைதியான வாழ்க்கையில் குறுக்கிட்டார் ஒரு நபர். மிர்ஸா இஸ்மாயில்.

நால்வடியாரோடு பள்ளியில் ஒன்றாகப் படித்தவர் மிர்ஸா. சிறு வயதிலிருந்தே நண்பர். 1923ல் மிர்ஸாவைத் தனது முதன்மைச் செயலாளராக நியமித்துக் கொண்டார் மகாராஜா. 1926ல் மிர்ஸாவுக்குத் திவான் பதவி தேடி வந்தது. விஸ்வேஸ்வரய்யாவுக்குப் பின் இரண்டு திவான்கள் வந்துபோயிருந்தார்கள். மிர்ஸா, விஸ்வேஸ்வரய்யா வகுத்துக் கொடுத்த பாதையில் செம்மையாகப் பணியாற்றினார்.

ஒரு பானை, ஒரு சோறு, பதம் ஏதோ சொல்வார்களே. அதன்படி மிர்ஸாவின் புகழைச் சொல்ல ஒரு விஷயம் போதும். பிருந்தாவன் தோட்டம். விஸ்வேஸ்வரய்யா ஆரம்பித்துவைத்த கண்ணம்பாடி அணையின் பணி அப்போது ஓரளவு முழுமை பெற்றிருந்தது. ஆசியாவின் மிகப்பெரிய நீர்த்தேக்கங்களுள் ஒன்றான அதற்கு மகாராஜாவின் பெயரையே வைத்தார்கள். கிருஷ்ணராஜ சாகர் அணை.

அணைக்கட்டின் மறுபுறத்தில் மாபெரும் தோட்டம் ஒன்றை அமைக்கத் திட்டமிட்டார் மிர்ஸா. அரிய மரங்கள், அழகழகு தாவரங்கள், ஓடும் நீரோடைகள், ஆடும் நீரூற்றுகள் நிறைந்த முகலாய பாணி தோட்டம். 1932ல் எல்லாப் பணிகளும் நிறைவடைந்தன. சிமெண்ட், பேப்பர், சர்க்கரை, மின்சாதனப் பொருள்கள், இரும்பு இன்னும் பல புதிய தொழிற்சாலைகள், இந்துஸ்தான் எரோனெட்டிக்ஸ் லிமிடெட், மருத்துவக் கல்லூரி போன்றவை மிர்ஸாவின் காலத்தில் தொடங்கப்பட்டன. விஸ்வேஸ்வரய்யாவுக்கு நிகராக மிர்ஸாவின் சாதனைகளும் தொடர்ந்தன.

ஆனால் இன்னொருபுறம் பெரும்பான்மையான மக்களிடையே அவரது செல்வாக்கு சரிந்து கொண்டிருந்தது. அரசுப்பணிகளுக்காக ஆளெடுத்தார்கள். மிர்ஸா, பிற்படுத்தப்பட்டோருக்கே முன்னுரிமை கொடுக்கிறார் என சர்ச்சை எழுந்தது. பெங்களூரில் சுல்தான்பேட்டையில் ஒரு நடுநிலைப்பள்ளியில் விநாயகர் விக்கிரஹம் இருந்தது. திடீரென அரசுப் பணியாளர்கள் சிலர் வந்து விநாயகரை எடுத்துச் சென்றுவிட்டார்கள் (1928). கொஞ்ச நேரத்திலேயே பரபரப்பு

தொற்றிக் கொண்டது. ‘எல்லாம் அந்த திவான் மிர்ஸா பண்ற வேலைதான். இது நம்ம மத உணர்வுகளை அவமதிக்கிற செயல்.’ இந்து தலைவர்கள் கொதித்தார்கள்.

சுல்தான்பேட்டை சூடானது. இந்து, இஸ்லாமிய மக்களுக் கிடையே மோதல். மைசூர் படை வீரர்கள் வந்து நிலைமையைக் கட்டுக்குள் கொண்டுவந்தார்கள். பலர் கைது செய்யப்பட்டார்கள். அடுத்த ஆண்டில் காங்கிரஸார் கொடி ஏற்றும் நிகழ்ச்சி ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அதற்கு மைசூர் அரசின் அனுமதி மறுக்கப் பட்டது. காங்கிரஸார் மிர்ஸாவை முறைத்தார்கள். காந்தி, நேரு உள்ளிட்ட காங்கிரஸ் முக்கிய தலைவர்களோடு நெருக்கமாக இருப்பேன். அதே சமயத்தில் அரசுக்கு எதிராக காங்கிரஸார் செய்யும் செயல்களுக்கு என் ஆதரவு கிடையாது. மிர்ஸா தன் கொள்கையில் தெளிவாகவே இருந்தார். ஆயிரத்தெட்டு சர்ச்சை களில் மிர்ஸா சிக்கினாலும் அவ ருக்கு மகாராஜா நால்வடியாரின் அமோக ஆதரவு குறையவில்லை.



கெம்பநஞ்சம்மணி பேரன் ஜெய சாமராஜேந்திரனுடன்

நால்வடியாருக்குக் குழந்தை பாக்கியம் இல்லை. அதற்காக அவர் இன்னொரு திருமணம் செய்துகொள்ள விரும்பவில்லை. திருமணம் ஆன எட்டு ஆண்டுகளுக்குமேல் இளவரசர் நரசிம்மராஜருக்கும் புத்திர ப்ராப்தம் இல்லை. அலமேலு அம்மாளின் சாபத்தை நொந்து உடையார் குடும்பத்தினர் புலம்பிக் கொண்டிருந்த சமயத்தில், நரசிம்மராஜரின் மனைவி கெம்பசெல்வஜம்மணி மாங்காய் சாப்பிட்டாள். 1919, ஜூலை 18ல் மகன் பிறந்தான். தன் பேரனுக்குப் பாட்டி கெம்பநஞ்சம்மணி ஆசை ஆசையாக வைத்த குடும்பப் பெயர் சாம ராஜேந்திரன். முதல் உலகப்போரில் பிரிட்டனுக்காகப் பங்கேற்ற மைசூர் படைகள், ஜெயத் தோடு திரும்பியிருந்தன. ஆகவே குழந்தையின் பெயர் ஜெய சாமராஜேந்திரன் ஆனது.

தம்பியின் மகனைத் தன் மகனாகவே வளர்க்க ஆரம்பித்தார் நால்வடியார். நரசிம்மராஜருக்கு அதற்குப் பின் மூன்று பெண் குழந்தைகள் பிறந்தன. அரண்மனை நிறைவாக இருந்தது. 1934ல்

நால்வடியாரின் தாயார் மகாராணி கெம்பநஞ்சம்மணி இறந்துபோனார். ராஜ சகோதரர்களுக்கு மட்டுமன்றி, மைசூருக்கே ராஜமாதாவாக விளங்கிய கெம்பநஞ்சம்மணியின் இறப்புக்கு சமஸ்தானமே துக்கம் கொண்டாடியது. அதுவரை அண்ணன், தம்பிக்குள் பெரிய மனஸ்தாபங்கள் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் அதற்குப் பின் சின்னச் சின்ன உரசல்கள்.

காரணம்? திவான் மிர்ஸா.

மகாராஜாவுக்கு இணையான அதிகாரத்தில் இருந்தவர் திவான் மிர்ஸா. அடுத்த மகாராஜாவாகும் தகுதியிலிருந்தவர் நரசிம்மராஜர். மிர்ஸா கொண்டுவர நினைத்த வளர்ச்சித் திட்டங்களுக்கெல்லாம் நால்வடியார் மறுப்பே சொல்லமாட்டார். ஆனால் நரசிம்மராஜர் அப்படியில்லை. திட்டத்தில் மாற்றங்களைச் சொல்லுவார் அல்லது திட்டத்தையே மாற்றச் சொல்லுவார். இந்தத் தலையீடு, மிர்ஸாவுக்கு உறுத்தலாக இருந்தது. இப்போதே இப்படியென்றால், வருங்காலத்தில் நரசிம்மராஜர் மகாராஜாவாகிவிட்டால்?

ஆகவே நரசிம்மராஜருக்கெதிராக மிர்ஸா சதிவலை பின்னியதாகச் சொல்கிறார்கள். அடிக்கடி வெளிநாட்டுப் பயணங்களுக்குச் செல்லும் நரசிம்மராஜரை, மிர்ஸா சந்தோஷமாக வழியனுப்பி வைப்பார். காரணம், அந்தச் சமயத்தில் இளவரசருடைய பணிகளையும் சேர்த்துக் கவனிக்கும் பொறுப்பு மிர்ஸாவுடையது. அப்படி ஒருமுறை, இளவரசர் நாட்டில் இல்லாத சமயம் பார்த்து, தன் அன்பு நண்பரான நால்வடியாரிடம் வார்த்தைகளை விதைத்தார் மிர்ஸா.

'என்ன சொல்லுறது? சொல்லக் கஷ்டமாத்தான் இருக்குது. இளவரசரோட நடவடிக்கைகள் எதுவுமே சரியில்லை. எக்கச்சக்க ஐரோப்பிய நண்பர்கள். குறிப்பா பெண் தோழிகள். எப்பப் பார்த்தாலும் விருந்து, உல்லாசம்னு ரொம்ப டாம்பீகமா, கணக்கு வழக்கில்லாம செலவு பண்ணுறாரு. நீங்கதான் கொஞ்சம் எடுத்துச் சொல்லணும்.'

நால்வடியாருக்கு அதிர்ச்சிதான். என் சகோதரன் அப்படிப்பட்டவன் கிடையாதே. என்னைப் போல் ஏகபத்தினி விரதனாயிற்றே. ஆனால் நம்பகமான நண்பர் மிர்ஸாவே வருத்தப்பட்டுச் சொல்கிறார். அவருடைய வார்த்தைகளையும் புறக்கணிக்க முடியாதே. மிகவும் குழம்பிப் போனார்.

ஒவ்வொருமுறை இளவரசர் வெளிநாட்டுச் சுற்றுப்பயணத்தை முடித்துவிட்டுத் திரும்பும் போதும் மகாராஜாவுக்கும் அவருக்குமிடையில் கசப்புகள் அதிகரித்தன. உறவில் விழுந்த விரிசல் பெரிதாகிக்கொண்டே சென்றது. 1939ல் தனது குடும்பத்தோடு ஐரோப்பியச் சுற்றுப் பயணம் சென்றிருந்தார் நரசிம்மராஜர். ஆனால் சிலகாலத்தில் இங்கிலாந்து அரசால் இந்தியாவுக்கு வலுக்கட்டாயமாகத் திருப்பி அனுப்பிவைக்கப்பட்டார் (1940). அவர்மேல் பல குற்றச்சாட்டுகள். அவர் நடத்தை குறித்து அயல்தேச தூதரக அதிகாரிகளிடமிருந்து எதிர்மறை அறிக்கைகள்.

பம்பாய் வந்து இறங்கிய நரசிம்மராஜருக்கு மைசூர் செல்ல இஷ்டமில்லை. மனக்கசப்பு. அண்ணனோடு. 'எனக்கு நடந்த அவமானங்களுக்கெல்லாம் நால்வடியார்தான் காரணம். நான் மைசூருக்குச் செல்லப்போவதில்லை.'

பம்பாயில் அப்பல்லோ துறைமுகத்துக்கு அருகில் 'The Anchorage' என்ற மைசூரின் விருந்தினர் மாளிகையிலேயே தங்கிக் கொண்டார். மனமுடைந்துபோயிருந்த அவர்,

உடலளவிலும் தளர்ந்து போயிருந்தார். இதயநோய். அந்தச் சமயத்தில் அவர் உடன் இருந்த உற்ற நண்பர், ஜர்மானி தாஸ். நரசிம்ம ராஜர், நால்வடியாரிடமிருந்து வந்த கடிதம் ஒன்றை ஜர்மானியிடம் வருத்தத்துடன் காண் பித்தார். 1940, பிப்ரவரி 21 என்று தேதியிடப் பட்ட கடிதம் அது.



இளவரசர் நரசிம்மராஜர்

'என் அருமைச் சகோதரனே, பலவிதமான வருத்தங்களோடு நீ இருக்கிறாய் என்று அறிந்தேன். உன்னோடு தெளிவாகப் பேசி நமக்கிடையேயான கசப்புகளையெல்லாம் நீக்கி, நல்ல புரிதலை ஏற்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

உன் குடும்பத்தினரை எல்லாம் சுற்றுப்பயணத் துக்கு அழைத்துச் சென்றதற்கு நான் கோபப் பட்டதாக நீ தவறாகப் புரிந்து கொண்டுள்ளாய். உலகில் பல பகுதிகளில் போர் மேகங்கள் சூழ்ந்துள்ள பாதுகாப்பற்ற சூழலில் ஏன் அழைத்துச் செல்ல வேண்டும் என்றுதான் நினைத்தேன்.

ஐரோப்பிய நாடுகளில் உன் நடத்தை பற்றி ஏகப்பட்ட குற்றச்சாட்டுகள். நீ லண்டனுக்குச் செல்லும்போதே, உன்னைப் பற்றிய எதிர்மறையான அறிக்கை இங்கே வைஸ்ராய்க்கு வந்துவிட்டது. இப்படிப்பட்ட சுமூகமற்ற சூழலில் நீயும் உன் குடும்பத்தாரும் சிக்கலின்றி நாடு திரும்புவதையே விரும்பினேன். சில மாதங்களில் பத்து லட்சம்வரை நீ செலவழித்திருக்கிறாய். எல்லாம் மக்களின் வரிப்பணம். நாம் தனிப்பட்ட நபரல்ல. இத்தனைப் பெரிய பொறுப்பில் இருந்துகொண்டு இப்படி நடப்பது அழகல்ல.

இப்போது நீ மைசூருக்குத் திரும்ப வேண்டும் என்று நான் கட்டாயப்படுத்தவில்லை. அது உன் விருப்பம். ஆனால் செலவுகளை எல்லாம் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள் என்று மட்டும் கேட்டுக்கொள்கிறேன். உனக்குத் தேவைப்படும் பணியாளர்களைத் தவிர மற்ற வர்களை அனுப்பிவிடு. அடுத்தவர்கள் உன்னைப் பற்றிக் குறைசொல்லக்கூடாது. உன் நடவடிக்கைகள் இந்தச் சமூகத்தின் விவாதப்பொருளாகி விடக்கூடாது.

என் வார்த்தைகளைச் சரியான முறையில் புரிந்துகொள்வாய் என்று நம்புகிறேன்.

என்றும் உன்னுடைய கிருஷ்ணராஜ உடையார்.'

இந்தக் கடிதத்தால் மேலும் பலவீனப்பட்டிருந்தார் நரசிம்மராஜர்.



# அண்ணன் என்னடா? தம்பி என்னடா?

*'அன்பு நண்பருக்கு,*

*நான் எங்கு சென்றாலும் தங்களைப் பற்றிய நல்ல செய்திகளும், தங்கள் நற்குணங்கள் பற்றிய புகழ்மொழிகளும் மட்டுமே காதில் விழுகின்றன. தங்களது மேன்மையான வருங்காலக் கனவுகள் எல்லாம் நிறைவேற வேண்டும் என்பதற்காகப் பிரார்த்தனை செய்துகொள்கிறேன்.'*

1927, ஆகஸ்ட் 5 அன்று, மைசூர் மகாராஜா நால்வடி கிருஷ்ணராஜ உடையாருக்கு காந்தி எழுதிய கடிதம் அது. நால்வடியார் பதவியேற்று வெள்ளி விழாக் கொண்டாட்டங்கள் நிகழ்ந்துகொண்டிருந்த சமயம் அது. மைசூரில் மீண்டும் பொற்கால ஆட்சியைக் கொண்டுவந்த நால்வடியாருக்கு காந்தி அன்பாகச் சூட்டிய பட்டம் 'ராஜரிஷி'.

ராஜரிஷி நால்வடியாருக்கு மகரிஷி மேல் அளவு கடந்த அன்பு உண்டு. வாழ்வில் ஒருமுறையாவது ரமண மகரிஷியைத் தனிமையில் சந்தித்து அவரது ஆசியைப் பெறவேண்டும் என்பது மகாராஜாவின் வாழ்நாள் ஏக்கம். அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டார். மகரிஷி எல்லோர் முன்னிலையிலும் பொதுவாகத்தான் பேசுவார். யாரையும் தனியாகச் சந்திக்க விரும்புவதில்லை என்றுதான் பதில் வந்தது.

நீண்ட முயற்சிகளுக்குப் பிறகு நால்வடியாருக்கு அனுமதி கிடைத்தது. 'மகரிஷி நீராடும்போது தாங்கள் அவரைத் தனியாகச் சந்திக்கலாம்.'

பெரும் ஆவலுடன் ரமணர் இருக்குமிடத்துக்குச் சென்றார் நால்வடியார். அவரோடு வந்தவர்கள் எல்லாம் வெளியே நிற்க, மகாராஜா மட்டும் ரமணர் நீராடும் அறைக்குள் நுழைந்தார். நேருக்கு நேர் மகரிஷியைக் கண்ட நொடியில், பரவசத்தில் அப்படியே நெடுஞ்சாண்கிடையாகத் தரையில் விழுந்தார். பத்து நிமிடங்கள் அப்படியே கிடந்தார். நீராடிவிட்டு ரமணர் வந்தார். நால்வடியாரின் கண்ணீரால் நனைந்து கிடந்தது தரை.

நா தழுதழுக்கப் பேசினார் நால்வடியார். 'மகாராஜா பதவி என்ற சுமையை என்மேல் ஏற்றி அரியணையில் உட்கார வைத்துவிட்டார்கள். அந்தப் பாவத்தைச் சுமந்துகொண்டிருப்பதால் என்னால் தங்கள் பாதங்களிலேயே கிடந்து சேவை செய்யும் பாக்கியத்தைப் பெறமுடியவில்லை. என்னால் இங்கேயே தங்க முடியாது. வாழ்க்கையில் மீண்டும் ஒருமுறை தங்களைச் சந்திக்க வாய்ப்பு கிடைக்கப்போவதில்லை. இந்த நிமிடங்கள் மட்டுமே எனக்கானவை. தங்களின் கருணைக்காக மனமுருக வேண்டி நிற்கிறேன்.'

ரமணர் வாய்திறந்தார். 'ஓ, இவர் பழுத்த பழம்!'

நிஜமாகவே மக்களால் பெரிதும் நேசிக்கப்பட்ட மகாராஜாவாகத்தான் வாழ்ந்தார் நால்வடியார். அவரது ஆட்சியில் மைசூர் ஒளிர்ந்தது. (நீரிலிருந்து மின்சாரம் எடுக்கும் திட்டம் மைசூர் சமஸ்தானத்தில்தான் முதன்முதலில் அமல்படுத்தப்பட்டது. ஆசியாவிலேயே முதன்முதலில் பெங்களூரில்தான் தெருவிளக்குகள் சிரித்தன.) நால்வடியாரின் ஆட்சியை எல்லோரும் 'ராமராஜ்ஜியம்' என்றே புகழ்ந்தார்கள். ஆனால் அதில் லட்சுமணனின் நிலைமைதான் சற்றே கவலைக்கிடமாக இருந்தது.

நால்வடியாருக்குப் பிறகு அரியணை ஏறவேண்டிய பட்டத்து இளவரசராக நரசிம்மராஜர்தான் அறிவிக்கப்பட்டிருந்தார். ஆனால் அதற்கும் ஆபத்து வந்தது. 'நரசிம்மராஜரின் நிலைமை சரியில்லை. நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ளும் மனநிலையில் அவர் இப்போது இல்லை' என்று காரணம் கூறிய நால்வடியார், தனது முடிவை மாற்றினார். தனக்கு வாரிசு ஏதும் இல்லாத நிலையில், தம்பியின் மகனான ஜெய சாமராஜேந்திரனைத் தத்தெடுக்க ஏற்பாடு செய்தார். தம்பியின் ஒப்புதல் இல்லாமலேயே தத்தெடுத்தும் விட்டார்.

அதிர்ந்துபோன நரசிம்மராஜர், சட்ட ஆலோசகர்களை நாடினார். 'தர்ம சாஸ்திரத்தின்படி, பெற்ற தந்தையின் ஒப்புதலின்றி மகனை இன்னொருவர் தத்தெடுக்க முடியாது. தந்தைக்கு இறுதிக் காரியங்கள் செய்ய வேறு வாரிசுகள் இல்லாத பட்சத்தில், இந்தத் தத்தெடுப்பு செல்லாது.' ஆலோசகர்கள் சொன்ன பதில், நரசிம்மராஜருக்குச் சற்றே ஆறுதல் அளித்தது.

'எந்த இளவரசருக்கும் என் நிலைமை வரவே கூடாது. இனி நான் மைசூருக்குச் செல்வதாக இல்லை. சென்றாலும் எனக்கு யாரும் அங்கே மதிப்பு கொடுக்கப் போவதில்லை' - பம்பாயில் தன்னுடன் ஆதரவாக இருந்த ஜர்மானி தாஸிடம் மனம்விட்டுப் புலம்பினார் நரசிம்மராஜர்.

'உடன்பிறந்த சகோதரர்தான். என்னைப் பற்றி எல்லாம் அறிந்தவர்தான். கொஞ்சம்கூட யோசிக்காமல் மூன்றாவது நபரான அந்த திவான் மிர்ஸா இஸ்மாயிலின் பேச்சைக் கேட்டு என்மேல் அநாவசியப் பழிகளைச் சுமத்துகிறார். என் அண்ணனாக அக்கறையோடு பேசுவது போலத் தெரியவில்லை. மைசூரின் மகாராஜாவாக அதிகாரத்தோடு குற்றம் சுமத்துவதாகத்தான்

தெரிகிறது.' மனம் வெறுத்துப்போயிருந்த இளவரசரின் கைகளை ஆதரவாகப் பற்றினார் ஜர்மானி.

'நீங்கள்தான் எனக்கு உதவி செய்யவேண்டும். நான் உங்களை மட்டுமே முழுமையாக நம்பி யிருக்கிறேன்.'

'என்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள்.'

'வைஸ்ராயிடமும், பிரிட்டனின் வெளியுறவுத்துறை அமைச்சரிடமும் எனது உண்மையான நிலைமையை எடுத்துச் சொல்வீர்களா? காந்தியிடம் உதவி கேட்கலாம் என்று நினைக்கிறேன். காங்கிரஸ் தலைவர்கள் எனக்கு ஆதரவு கொடுப்பார்கள் என்று நம்புகிறேன்.'

இதயநோயால் பாதிக்கப்பட்டிருந்த நரசிம்மராஜர் உண்மையிலேயே மருத்துவச் செலவுகளுக்குக்கூடப் பணமின்றித் தவித்துவந்தார். அவருக்கு நியாயம் கிடைப்பதற்கு உதவுவதாக ஒப்புக்கொண்டார் ஜர்மானி. டெல்லிக்குச் சென்று வைஸ்ராய் லின்லித்தோவைச் சந்திக்க நேரம் கேட்டுக் காத்திருந்தார். காந்தியைச் சந்திக்கவும் முயற்சி செய்துகொண்டிருந்தார்.

1940, மார்ச் 11. டெல்லி இம்பீரியல் ஹோட்டலில் தங்கியிருந்தார் ஜர்மானி. வானொலியில் செய்திகள் ஒலித்துக் கொண்டிருந்தன. அப்போது காதில் விழுந்த அந்த வார்த்தைகள், ஜர்மானியை அதிர்ச்சியில் உறைய வைத்தன. 'மைசூர் சமஸ்தானத்தின் இளவரசர் ஸ்ரீ கந்திரவா நரசிம்மராஜ உடையார் இன்று பம்பாயில் காலமானார். அவருக்கு வயது ஐம்பத்து மூன்று.'

நரசிம்மராஜரின் உடல் மைசூருக்குக் கொண்டுசெல்லப்படவில்லை. இளவரசருக்கான காரி யங்கள் எளிமையாகத்தான் நடந்தன. சவப்பெட்டி ஒன்று வந்தது. இளவரசரின் உடலைவிடக் குறைவான உயரத்தில். பெட்டிக்குள் உடலைத் திணித்தார்கள். கால்கள் வெளியே நீட்டிக் கொண்டிருந்தன. அப்படியே மயானத்துக்கு எடுத்துச்சென்று இறுதிச் சடங்குகளைச் செய்தார் கள். நரசிம்மராஜரது அஸ்தி மட்டும் பின்பு மைசூருக்குக் கொண்டுசெல்லப்பட்டது.

நரசிம்மராஜரின் மறைவினால் அவரது மகனான ஜெய சாமராஜேந்திரரை பட்டத்து இளவரசராகப் பிரிட்டிஷார் அறிவித்தார்கள். தம்பியின் இழப்பு மகாராஜா நால்வடியாரைப் புரட்டிப் போட்டிருந்தது. அந்த ஆகஸ்டு 3ல் நால்வடி கிருஷ்ணராஜ உடையாரும் உடல்நல மின்றி இறந்துபோனார். மைசூர் கண்ணீரில் மிதந்தது. இருபத்தியொரு முறை குண்டு மரியாதையை இறுதியாக ஏற்றுக்கொண்ட நால்வடியாரின் உடல், சாம்பலாகிப் போனது.

மைசூரின் இருபத்தைந்தாவது மகாராஜாவாக அரியணையில் அமர்ந்தார் ஜெய சாமராஜேந்திர உடையார் (செப்டெம்பர் 8). திவானாக மிர்ஸா இஸ்மாயிலே பணியைத் தொடர்ந்தார். மைசூரின் வளர்ச்சிப்பணிகள் அதுவரைத் தங்குதடையின்றி தொடர்ந்து கொண்டிருந்தன. அப்போதுதான் பெங்களூரில் விமானம் தயாரிக்கும் தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பித்தவர் தொழிலதிபர் வால்சந்த் ஹிராசந்த். உறுதுணையாக நின்றவர் திவான் மிர்ஸா. அமெரிக்க நிறுவனம் ஒன்றின் துணையுடன் ஆரம்பிக்கப்பட்ட அதன் பெயர் இந்துஸ்தான் ஏர்கிராஃப்ட். (இதுவே பின்பு இந்துஸ்தான் ஏரோனெட்டிக்ஸ் லிமிடெட் ஆனது.)

வால்சந்த் ஹிராசந்த், கிறிஸ்லர் (Chrysler) என்ற அமெரிக்க நிறுவனத்துடன் இணைந்து மைசூரில் கார் தயாரிப்பு நிறுவனம் ஒன்றை ஆரம்பிக்கும் முயற்சிகளில் இறங்கியிருந்தார். திவான் மிர்ஸாவும் அதற்குரிய அனுமதிகளைப் பெற்றுத் தருவதில் தீவிரமாகச் செயல்பட்டார்.



மகாராஜா ஜெய சாமராஜேந்திரர்
மகாராணி பிரேம்குமாரி

ஆனால் பிரிட்டிஷ் அரசு அனுமதி மறுத்தது. கூடவே 'கார் தொழிற்சாலை அமைக்க மைசூர் அரசு எந்தவித வசதிகளும் செய்துதரக்கூடாது' என்று நிர்பந்தம் செய்தது. இந்த விவகாரத்தால் மிர்ஸாவுக்கும் ஜெய சாமராஜேந்திரருக்கும் இடையே விரிசல். மிர்ஸா, தனது திவான் பதவியை ராஜினாமா செய்தார். மைசூரை விட்டுக் கிளம்பினார் (1941). புதிய திவான் மாதவ ராவ்.

தன் பெரியப்பா விட்டுச் சென்ற நல்லாட்சியை அவ்வண்ணமே தொடருவதில் ஜெய சாம ராஜேந்திரருக்குப் பெரிதாகச் சிக்கல்கள் எதுவும் இருக்கவில்லை. உடையார் பரம்பரையிலேயே முதல் பட்டதாரி இவர்தான். மைசூர் பல்கலைக்கழகத்தில் பி.ஏ. படித்தார். முடித்தார், அதுவும் ஐந்து மெடல்களோடு. தனது தந்தையைப் போலவே பல நாடுகளுக்குச் சுற்றுப் பயணம் செய்து நிர்வாகத்துக்கான பல்வேறு விஷயங்களைக் கற்றுக் கொண்டார். சிறந்த விளையாட்டு வீரர். குதிரையேறி போலோ விளையாடினால் கோல் மழைதான். டென்னிஸும் விளையாடுவார். (இந்தியாவின் சிறந்த டென்னிஸ் வீரரான ராமநாதன் கிருஷ்ணன், விம்பிள்டன் போட்டியில் கலந்துகொள்ள உதவியிருக்கிறார்.) ஆகச்சிறந்த வேட்டைக்காரர். அடர்ந்த காட்டுக்குள் சென்று ஆபத்தான மிருகங்களைத் தேடிப்பிடித்து டுமீல் செய்வது இவருடைய முக்கியமான பொழுதுபோக்கு.

குறி தவறாமல் சுடக்கூடிய ஜெய சாமராஜேந்திரரால் ஸ்ருதி தவறாமல் பாடவும் முடியும். முறையாக கர்நாடக சங்கீதம் பயின்றவர். கூடவே மேற்கத்திய இசையும். வீணை வித்வான். பியானோ வாசிப்பதிலும் அதீத ஆர்வம். எவ்வளவு பெரிய இசைக்கலைஞராக இருந்தாலும் அவரது இசையில் தவறு இருந்தால் நேரடியாகச் சுட்டிக் காட்டும் நேர்மையான விமரிசகராக வும் இருந்தார். ஆனால் மகாராஜாவின் சொந்த வாழ்க்கையே விமரிசனத்துக்குள்ளாகும் சூழ்நிலை உருவாகியிருந்தது.

கல்லூரிப் படிப்பை முடித்தவுடனேயே ஜெய சாமராஜேந்திரருக்குத் திருமண ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். அப்பா நரசிம்மராஜரும், பெரியப்பா நால்வடியாரும் பார்த்து ஏற்பாடு செய்த வரன். பெண் சத்ய பிரேம்குமாரி. திருமண நாள், 1938, மே 15 என்று குறிக்கப் பட்டிருந்தது. மே 13லிருந்து மே 18வரை, எட்டுநாள்கள் திருமணக் கொண்டாட்டங்களுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

அந்த நாள்களில் இந்தியாவே மைசூருக்குள் குவிந்தது போன்றதொரு பிரமை. எங்கெங்கு காணினும் விருந்தினர்கள். தென்னிந்தியக் கலாசாரம் மணக்கும் கல்யாணத்தைக் காண 'கப்பல்'கட்டி வந்திருந்தார்கள் ஐரோப்பியர்கள். காசி யாத்திரை, கன்னிகா தானம், எண்ணெய் சாஸ்திரம், பாதபூஜை என ஒவ்வொரு சடங்கையும் ஆச்சரியத்துடன் கண்டுகளித்தனர். பல இடங்களில் சமையல் நடந்தது. மூட்டிய அடுப்பை அணைக்க முடியவில்லை. ஓயாத கலை நிகழ்ச்சிகள். எட்டு நாள்கள் மைசூர் கொண்டாட்டங்களால் மிளிர்ந்தது.

ஆனால் ஜெய சாமராஜேந்திரரின் அந்தத் திருமண வாழ்க்கை மிளிரவில்லை. திருமணமான கொஞ்ச காலத்திலேயே மனைவியுடன் மனஸ்தாபம். சமரச முயற்சிகளால் பலன் ஏற்பட வில்லை. பிரேம்குமாரி மைசூரிலிருக்க விருப்பமின்றி ஜெய்ப்பூருக்குச் சென்றுவிட்டாள். இருவருக்குமான வாரிசு என்று எதுவும் பிறக்கவில்லை.

படுஜோராக ஆரம்பித்துப் படுதோல்வியில் முடிந்த தனது திருமண வாழ்க்கையால் மனச் சங்கடத்தில் இருந்தார் மகாராஜா.



# மைசூர் சலோ!

மைசூர் அரண்மனையின் கல்யாண மண்டபம் தன்னை மீண்டும் ஜோடித்துக் கொண்டிருந்தது. நீண்ட நாள்களாக உற்சாகத்தைத் தொலைத்திருந்த மகாராஜா ஜெய சாமராஜேந்திரரின் குடும்பத்தினர் முகத்தில் ஆனந்தம். இரண்டாவது திருமணம் செய்துகொள்ள மகாராஜா சம்மதம் சொல்லிஇருந்தார்.

இந்தமுறை ஜாக்கிரதையாகத் தளவாய்களின் 'கலாலே' பரம்பரையிலிருந்துதான் பெண் எடுத்தார்கள். மைசூர் சமஸ்தானப் படையின் அதிகாரி, பல்நஞ்சராஜய்யா என்பவரது மகள் திரிபுரசுந்தரம்மணி. சுப மங்களம் (1944, ஏப்ரல் 30).

காலம் காலமாக இருந்துவரும் நேரடி வாரிசுப் பிரச்னை. திரிபுரசுந்தரம்மணி சொல்லப்போகும் நல்ல செய்தியை எதிர்பார்த்திருந்தார்கள். இரண்டு வருடங்கள் கழித்துப் பிறந்தது பெண் குழந்தை. காயத்ரி தேவியம்மணி. வழக்கம்போல ஆண் வாரிசுக்காகக் காத்திருந்தார்கள்.

இந்தியா சுதந்தரத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தது. வெள்ளையனே வெளியேறு இயக்கம் தீவிரப்பட்டிருந்த சமயம். தேசிய அளவில் முக்கிய தலைவர்களின் கைதை எதிர்த்து மைசூரும் சூடாகிக் கிடந்தது. முக்கிய தொழிற்சாலைகளில் வேலை நிறுத்தம். மாணவர்கள் பள்ளி, கல்லூரிகளைப் புறக்கணித்தார்கள். தபால் பெட்டிகளும், தபால் அலுவலகங்களும் அடிக்கடி நெருப்பைச் சூடிக் கொண்டன. பிற அரசு அலுவலகங்கள் கலவரக்காடாகின. மைசூர் சமஸ்தானம் முழுவதும் மொத்தமாக இருபத்தைந்து ரயில் நிலையங்கள் தாக்கப் பட்டிருந்தன.

மைசூர் சமஸ்தானத்தில் பதினைந்தாயிரம் பேர் கைதாகியிருந்தார்கள். போராட்டத்தை ஒடுக்க நடந்த துப்பாக்கிச் சூட்டில் நூற்றுக்கணக்கானோர் கொல்லப்பட்டிருந்தார்கள், ஆயிரக்கணக் கானோர் படுகாயமடைந்திருந்தார்கள். பிரிட்டிஷாரின் அடக்குமுறைகளுக்கு ஆதரவாகச் சாமரம் வீசிய திவான் மாதவ ராவ் மீது மைசூர் மக்கள் வெறுப்பிலிருந்தார்கள். ஆகவே மகா ராஜாவுக்கு எதிராகவும் குரல்கள் ஓங்கி ஒலிக்க ஆரம்பித்தன. 'வெள்ளையனே, இந்தியாவை விட்டு உடனடியாக வெளியேறு! மகாராஜாவே, மைசூரில் மக்களாட்சி அமைய வழி விடு!'

1945. மைசூரில் அப்போது சட்டமன்றத்துக்கும், சட்டமன்ற மேலவைக்கும் நடந்த தேர்தலில் பெரும்பான்மையான எண்ணிக்கையில் காங்கிரஸ் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு இருந்தார்கள். 'தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் தலைமையிலான ஆட்சி அமைய வேண்டும்' என்று காங்கிரஸ் கணீர்க்குரல் எழுப்பியது. மாதவ ராவ், திவான் பதவியை ராஜினாமா செய்தார். புதிய இந்திய அரசியல் சட்ட நிர்ணய சபையின் உறுப்பினராகச் சென்றார். மைசூரின் புதிய திவானாக வந்து சேர்ந்தார் ஆற்காடு ராமசாமி முதலியார்.

மைசூர் சமஸ்தானத்தில் பிரிட்டிஷ் அரசு புதிய தொழிற்சாலைகளை வரவிடாமல் தடுக்கிறது. காவிரி நதிநீர் விவகாரத்தில் மெட்ராஸுக்கே பிரிட்டிஷார் கரிசனம் காட்டுகிறார்கள். மைசூர் வளர்ச்சியை ஒடுக்கும்விதமாக பிரிட்டிஷாரின் தலையீடு அதிகமாக இருக்கிறது. இப்படி எதிர்ப்பு அலைகள். மகாராஜாவின் நிலைமைதான் திண்டாட்டமாகப் போயிற்று. மக்களுக் காகக் குரல் கொடுக்கவும் முடியவில்லை. பிரிட்டிஷாரை முழுமையாக எதிர்க்கவும் முடிய வில்லை. பெரும்பாலும் வாயில் கொழுக்கட்டையைத் திணித்துக்கொண்டு இருக்க வேண்டியதிருந்தது. அவரது அமைதி, அவருக்கு எதிராகவே பூகம்பமாக வெடித்தது, சமஸ்தான இணைப்பு சமயத்தில்.

நீண்ட யோசனைக்குப் பின் சமஸ்தான இணைப்புக்குச் சம்மதம் தெரிவித்திருந்தார் ஜெய சாம ராஜேந்திரர். 1947, ஆகஸ்ட் 9ல் இணைப்பு ஒப்பந்தத்தில் நல்லநேரம் பார்த்துக் கையெழுத்துப் போட்டார். ஆனால் மைசூரில் 'மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் தலைமையிலான ஆட்சி' அமைவதில் அவர் விருப்பம் காட்டவில்லை. 'இதுவரை இருந்ததுபோல டம்மியான சட்டப்பேரவை. என் தலைமையிலான ஆட்சி தொடர்வதே க்ஷேமம்' - மகாராஜாவின் நினைப்பு இதுதான்.

காங்கிரஸார், ஆளும் அதிகாரத்தைக் கைப்பற்றுவதில் தெளிவாக இருந்தார்கள். மகாராஜா வுக்கு எதிர்ப்பு வலுத்தது. திவான் ஆற்காடு ராமசாமியும், பிற அமைச்சர்களும் மகாராஜாவை ஆசுவாசப்படுத்தினார்கள். 'நீங்க அலட்டிக்காதீங்க மகாராஜா. இந்த எதிர்ப்பு எல்லாம் மூடுபனி மாதிரி. நீங்க சூரியன் மாதிரி. கொஞ்ச நாள்ல எல்லாரும் காணாமப் போயிருவாங்க. பார்த்துக்கலாம்.'

மகாராஜா தன் முடிவில் உறுதியாக நின்றார். காந்தி வளர்த்த கட்சியல்லவா. காங்கிரஸார் சத்யாகிரகத்தை மீண்டும் கையில் எடுத்தார்கள். 'மக்களே, ஒன்றுபடுங்கள், திரண்டு வாருங்கள். மைசூர் அரண்மனையை நோக்கி வீறுநடை போடுவோம். மகாராஜாவின் ஆட்சியை அகற்றி, மக்களாட்சி அமையக் குரல் கொடுப்போம்!'

சமஸ்தானத்தின் குக்கிராமங்கள் முதற்கொண்டு நகரங்கள்வரை காங்கிரஸார் ஆதரவு திரட்டினார்கள். எங்கெங்கும் ஒலித்த வாசகம், 'மைசூர் சலோ!' (மைசூருக்குப் போகலாம்).

செப்டெம்பர் 14ல் ஆரம்பமான அந்த சத்யாகிரகத்துக்கு அவர்கள் சூட்டிய பெயர், 'அரண்மனை சத்யாகிரகம்.'

'பத்திரிகைகள் சத்யாகிரகம் தொடர்பான எந்தச் செய்தியையும் வெளியிடக்கூடாது' அரண்மனையிலிருந்து கட்டளை வந்திருந்தது. கூடவே போராட்டத்தை முழுமையாக ஒடுக்க, மைசூர் படையினரும் போலீஸாரும் தயாராக இருந்தார்கள். தலைவர்களின் கைது நடவடிக்கைகள் ஆரம்பமாயின. பெங்களூரிலும் மைசூரிலும் காங்கிரஸார் மக்கள் ஆதரவோடு கூடிநின்று கோஷமிட ஆரம்பித்தார்கள், `Arcot Boycott. தன்னார்வத் தொண்டர்கள் பல்வேறு கிராமங்களிலிருந்து மக்களைத் திரட்டி மைசூரை நோக்கி நடக்க ஆரம்பித்திருந்தார்கள்.

பத்திரிகைகள் போராட்டக்காரர்களுக்கு ஆதரவாகவே செயல்பட்டன. கோலார் தங்கவயல், பத்ராவதி இரும்புத் தொழிற்சாலை உள்ளிட்ட முக்கிய தொழிற்சாலைகளின் ஊழியர்களும் களமிறங்கியிருந்தார்கள். பெண்களும் வீதிகளில் இறங்கியிருந்தார்கள். மாணவர்கள் பற்றிக் கேட்க வேண்டுமா என்ன? ஆவேசமாக முழங்கினார்கள், 'திவான் வீழ்க!'

ஊர்வலம் ஒன்றில் படு ஆக்ரோஷமாக மகாராஜாவுக்கு எதிராகக் கோஷமெழுப்பி வந்த ராம சாமி என்ற பள்ளி மாணவன், போலீஸாரின் குண்டுகளுக்குத் தன்னை அர்ப்பணித்தான். இப்படிப் பலர் இறந்துகொண்டிருந்தார்கள். சந்திரசேகர் என்ற மாணவன் துணிச்சலாக அரண்மனைக்குள் புகுந்தான். கையில் தேசியக்கொடி. மைசூர் சமஸ்தானக் கொடியை நீ க்கிவிட்டு அங்கு தேசியக்கொடியைப் பறக்கவிட்டான். கைதானான். இப்படிப் பல கைதுகள்.

பொதுமக்களின் ஏகோபித்த எழுச்சியினால் ஜெய சாமராஜேந்திரர் ஆடிப்போயிருந்தார். அரசு அலுவலகங்களும் சொத்துகளும் எரிந்து கொண்டிருந்தன. வேறுவழி தெரியாமல் மைசூரில் ஊரடங்கு உத்தரவு பிறப்பித்தார் மகாராஜா. கலவரங்கள் அடங்கவில்லை. இறுதியில் காங்கிரஸ் தலைவர்களோடு பேச்சுவார்த்தை நடத்த இணங்கினார். காங்கிரஸார் விட்டுக்கொடுக்காமல் பேசி தாங்கள் நினைத்ததைச் சாதித்தனர். ஒன்பது உறுப்பினர் கொண்ட புதிய மந்திரி சபை அமைக்க மகாராஜாவை ஒப்புக்கொள்ளச் செய்தார்கள். ஒன்பதில் மூன்று பேர் காங்கிரஸ் அல்லாதோர்; மந்திரி சபை திவானோடு இணைந்து பணியாற்றும் போன்ற முடிவுகள் எடுக்கப்பட்டன.

புதிய மந்திரி சபை அமைக்கப்பட்டது. காங்கிரஸின் கே.சி. ரெட்டி, மைசூரில் முதல் முதலமைச்சர் ஆனார் (அக்டோபர் 27). திவான் பதவி 1949ல் ஒழிக்கப்பட்டது. சமஸ்தானங் களின் இணைப்புக்குப் பிறகு அழுது கொண்டிருந்த மகாராஜாக்களுக்கு லாலிபாப் போல 'ராஜ்பிரமுக்' என்ற பதவி அளிக்கப்பட்டது. 1956ல் அந்த லாலிபாப்பும் பிடுங்கப்பட்டது. அதற்குப் பின் ஜெயசாமராஜேந்திரர் மைசூரின் கவர்னராக அடுத்த எட்டு ஆண்டுகளுக்கு இருந்தார். பின் மெட்ராஸின் கவர்னராக (1966 வரை). இடைப்பட்ட காலத்தில் அவருக்கு மேலும் ஆறு குழந்தைகள் பிறந்திருந்தன. 1953, பிப்ரவரி 20ல் ஆண் வாரிசு பிறந்திருந்தது. கண்டதத்தா நரசிம்மராஜ உடையார்.

மன்னர் மானிய ஒழிப்புத் தீர்மானம் இந்திராவால் 1971ல் நிறைவேற்றப்பட்டது. இந்தியா விலேயே இரண்டாவது அதிகத் தொகை (வருடத்துக்கு 24 லட்சம்) பெற்றுக் கொண்டிருந்த



தசரா - யானை மேல் மகாராஜா

ஜெய சாமராஜேந்திரரின் தலையில் இடி. இனி மகாராஜா என்பது வெற்றுப்பட்டம். துளிகூட மதிப்பு கிடையாது என்கிற நிலை. அது தசராவில் பிரச்னையாக வந்து விடிந்தது.

விஜயநகரப் பேரரசர்கள் கொண்டாடி வந்த விழாதான் தசரா. அவர்களிடமிருந்து ஸ்ரீரங்கப் பட்டணத்தைக் கைப்பற்றிய பின் (1610) ராஜ உடையார் தசரா கொண்டாட்டத்தைத் தொடர்ந்தார். பின்பு உடையாரின் பரம்பரைப் பெருமைகளைப் பிரதிபலிக்கும் நிகழ்வாகிப் போனது. திப்புவின் வீழ்ச்சிக்குப் பின் கொண்டாட்டங்கள் மைசூருக்கு மாறின. 1805லிருந்து மும்மடியார் தசராவை ஒட்டி 'ராயல் தர்பாரை' நடத்த ஆரம்பித்தார். அதாவது பரம்பரைச் சிம்மாசனத்தில் அமர்ந்து அருள்பாலிக்கும் மகாராஜாவுக்குப் பல்வேறு தரப்பினரும் வந்து மரியாதை செய்யும் நிகழ்வு. அதில் ஐரோப்பியர்களும் கலந்துகொள்ள ஆரம்பித்தார்கள்.

நால்வாடியார் காலத்தில் (1902 - 1940) தசரா கொண்டாட்டங்கள் மேலும் சிறப்பு பெற்றன. முதல்நாள் சாமுண்டீஸ்வரியின் பூஜைகளோடு ஆரம்பமாகும் விழா, பத்துநாள்களும் பூஜை, தர்பார், வீரவிளையாட்டுகள், கலை நிகழ்ச்சிகள் என்று மேலும் மெருகேறின. ஒன்பதாவது நாள் மகாநவமி. அலமேலு அம்மாளுக்கான வழிபாட்டோடு பூஜைகள் நிறைவு பெறும். பத்தாவது நாள், விஜயதசமி. தசரா ஊர்வலம்.

ஊர்வலத்தில் யானை ஒன்றின்மேல் பரம்பரை அம்பாரியை வைத்து அதில் மகாராஜா உட்கார்ந்து வலம் வருவதே பிரதான நிகழ்ச்சி. அந்த அம்பாரியைச் சுமக்கும் யானையைத்

தேர்ந்தெடுக்க மிகுந்த பிரயத்தனப்பட்டார் நால்வடியார். பல்வேறு யானைகளைப் பார்த்து பின், திருப்பதி கோவிலின் யானையான பட்டாபிராமைத் தேர்ந்தெடுத்தார். அந்த யானையோடு துணைக்கு வர டஜன் யானைகளையும் வாங்கினார். பிரம்மாண்ட ஊர்வலம். கண்கொள்ளாக் காட்சிகள்.

மன்னர் மானிய ஒழிப்புக்குப் பின் யார் தசராவை எடுத்து நடத்துவது என்ற பிரச்னை. சில வருடங்கள் தசராக் கொண்டாட்டங்கள் தடைபடவும் செய்தன. அந்தச் சமயத்தில் (1974, செப்டெம்பர் 23) ஜெய சாமராஜேந்திரர் இறந்துபோனார். அவரது ஒரே வாரிசான இருபத்தொரு வயது மகன் கண்டதத்தா நரசிம்மராஜர், மகாராஜா என்ற பட்டத்தை ஏற்றுக் கொண்டார். தடைபட்டுப் போயிருந்த தசராக் கொண்டாட்டங்களை மீண்டும் நடத்துவதற்காக மக்கள், கமிட்டி ஒன்றை அமைத்து முயற்சி எடுத்தார்கள்.

1975ல் மீண்டும் தசரா கொண்டாட்டங்கள் தொடர்ந்தன. மைசூரின் பல்வேறு முக்கிய பிரமுகர் கள் கைகோர்த்து செலவு செய்தார்கள். பத்துநாள்கள் கொண்டாட்டங்கள் இருந்தாலும், பழைய பொலிவு குறைந்திருந்தது. 1980ல் கர்நாடக முதலமைச்சர் குண்டுராவ், அரசே தசராவை ஏற்று நடத்தும்படியான தீர்மானத்தைக் கொண்டுவந்தார். தசரா பழையபடி உயிர் பெற்றது. உடையார் பரம்பரையினரின் பூஜை, சம்பிரதாயங்களிலோ, மகாராஜாவின் ராயல் தர்பாரிலோ மாற்றம் இல்லை. ஆனால் யானை அம்பாரியில் மட்டும் மகாராஜாவுக்குப் பதிலாக சாமுண்டீஸ்வரியின் விக்கிரஹம் வலம் வர ஆரம்பித்தது.

மைசூரின் கடைசி மகாராஜா கண்டதத்தா நரசிம்மராஜர் பல்வேறு வணிகங்கள் செய்து வந்தார். தசரா நாள்களில் மட்டும் மகாராஜா கெட்-அப்பில் தரிசனம் கொடுத்தார். முக்கியமான அரசியல்வாதியும்கூட. பலமுறை பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டுள்ளார். நான்கு முறை தேர்ந்தெடுக்கப்பட்டார். 2004 தேர்தலில் வேட்பாளராக இவர் காட்டிய சொத்து மதிப்பு 1522.53 கோடி. நரசிம்மராஜர் 2013 டிசம்பர் 10ல் இறந்துபோக வாரிசு இல்லாத மைசூர் அரண்மனை காலியானது.

அலுமேலுவின் சாபம் தொடர்கிறதா?



# 160

# உலகம் சபலங்களால் ஆனது

'அய்யா.. ஏதாவது தர்மம் பண்ணுங்கய்யா.. அம்மா, தாயே இந்த ஏழைக்குக் கருணை காட்டுங்கம்மா! சாப்பிட்டு நாலு நாளாச்சு, ஏதாவது பிச்சை போடுங்கம்மா...'

இரவானால் இந்தக் குரல் கேட்பது ஹிமத் நகரில் (Himat Nagar) சகஜம். ராப்பிச்சைக்காரனின் குரலல்ல. இது மகாராஜாவின் குரல். ஓஹோ, மகாராஜா இரவானால், பிச்சைக்காரன் வேடத்தில் நகரத்தை வேவு பார்க்கச் செல்கிறார் என்றெல்லாம் தப்பாக நினைக்க வேண்டாம். ஹிமத் நகரின் அரண்மனைக்குள்ளி லிருந்தே அவர் எழுப்பும் பிச்சைக்குரல்தான் அது. யார் அந்த மகாராஜா? என்ன பிரச்னை? ஏன் அப்படிச் செய்கிறார்?

இடார் (Idar), குஜராத்திலிருந்த ஒரு சமஸ்தானம். பதினைந்து குண்டு மரியாதை கொண்டது. ஜோத்பூரின் ரதோர் பரம்பரையைச் சேர்ந்த ராஜபுத்திரர்கள் ஆண்டு அனுபவித்தது. 1729ல் ரதோர் பரம்பரையினர் இடார் கோட்டையைக் கைப்பற்றி னார்கள். அதனை ஜோத்பூர் சமஸ்தானத்தோடு இணைத்து ஆண்டார்கள். 1791ல் மகாராஜா சிவ்சிங், ஜோத்பூரிலிருந்து இடாரைப் பிரித்துத் தனிச் சமஸ்தானமாக்கினார். அடுத்த நூற்றிப்பத்து ஆண்டுகளுக்குப் பெரும் பிரச்னை ஏதுமின்றி ரதோர் பரம்பரையினரின் ஆட்சி தொடர்ந்தது.

1901 பிப்ரவரியில் அப்போதைய இடார் மகாராஜா கேசரிசிங், மேலோகப் பதவியை அடைந்தார். அவருக்குப் பிள்ளையில்லை. ஆனால் அவரது மூன்றாவது மனைவி உதய் கன்வர்பா பிள்ளைத்தாச்சியாக இருந்தாள். 'இடாரை

ஆள ஓர் ஆண் வாரிசு பிறக்கவேண்டும்' ஆயிரக்கணக்கானோரின் பிரார்த்தனை. அந்த அக்டோபரில் பையன்தான் பிறந்தான். 'மகாராஜா பிறந்துவிட்டார்' எங்கும் உற்சாகம், கோலாகலம். நவம்பரில் மீண்டும் இடாரை இடர் கவ்வியது. குழந்தை இறந்து போயிருந்தது.

தத்தெடுக்கக்கூட வாரிசுகள் இல்லாத நிலை. பிரிட்டிஷ் அரசு சகோதர சமஸ்தானமான ஜோத்பூர் பக்கமாகப் பார்வையைத் திருப்பியது. துறுதுறு இளவரசர் பிரதாப் சிங் பளீரெனக் கண்ணில்பட்டார். சிறந்த போர் வீரர். காரியங்களைக் கைகூடச் செய்வதில் வித்தகர். குயின் விக்டோரியாவின் நன்மதிப்பைப் பெற்றவர். இவை போதாதா?

அடுத்த பத்தாண்டுகள் பிரதாப் சிங் இடாரை ஆட்சி செய்தார். 1911ல் ஜோத்பூரின் மகாராஜா சர்தார் சிங் இயற்கை எய்தினார். பட்டத்து இளவரசர் சுமெர் சிங்குக்கு அப்போதுதான் மீசை முளைக்கவா, வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தது. ஆகவே பிரதாப் சிங், ஜோத்பூரின் ஆளும் பிரதிநிதியாகச் சென்றார். இடாரின் கதி?

ஏகப்பட்ட திருமணங்கள் செய்துகொண்டிருந்த பிரதாப் சிங்குக்கும் ஆண் வாரிசுகள் நிலைக்க வில்லை. ஆகவே அவர், தனது ஜோத்பூர் ரதோர் பரம்பரையில் இருந்து உறவுக்காரர் ஒருவரை வாரிசாகத் தேர்ந்தெடுத்தார். தௌலத் சிங் (Dowlat Singh). அடுத்த இருபது ஆண்டுகள் இடாரை ஆண்ட தௌலத் சிங்குக்குப் பிறந்தவர்தான் மேலே பிச்சையெடுத்த மகாராஜா. பெயர், ஹிமத் சிங் (Himat Singh).

1899ல் பிறந்தவர். சிறுவயதிலிருந்தே சொகுசாக வளர்ந்த இளவரசர். ஹிமத் சிங்குக்கு கல்வி, விளையாட்டு, பிற விஷயங்களை எல்லாம் கற்றுக் கொடுப்பதற்கு முன்பாகவே கல்யாணம் ஒன்றைச் செய்து வைத்தார்கள். வெறும் ஒன்பது வயதில். ஜெய்ப்பூரின் ராஜ குடும்பத்துச் சிறுமி ஜவஹர் குன்வார்பாதான் (Jawahar Kunwarba) முதல் பெண்டாட்டி. பிறகு படித்தார். கிரிக்கெட், ஃபுட்பால், போலோ உள்பட பல விளையாட்டுகளைத் தக்க பாதுகாப்புகளோடு விளையாடினார்.

சில வருடங்களிலேயே முதல் மனைவியுடனான தாம்பத்ய வாழ்க்கையில் சலிப்பு ஏற்பட்டு விட்டது போல. பதினான்கு வயதில் இரண்டாவது திருமணம் செய்துகொண்டார். மணப் பெண், தேஜ் குன்வார் தேவி (Tej Kunwar Devi). அடுத்த மூன்று வருடங்களில் மூன்றாவது திருமணம். மணப்பெண், மேக் குன்வார் (Megh Kunwar). ஆக, பதின்வயதைத் தாண்டு வதற்குள் மூன்று குன்வார்களோடு டும் டும் டும்.

இடைப்பட்ட காலத்தில் ஐரோப்பிய சுற்றுப்பயணங்கள் செய்யும் வாய்ப்புகள் கிடைத்தன. 'வா மகனே, வந்து வெளியுலக விஷயங்களைத் தெரிந்துகொள்' பாசக்காரத் தந்தை பையனை அழைத்துச் சென்றார், பக்குவப்படுத்த.

சோமபானத்தின் ஐரோப்பிய வடிவம்தான் ஷாம்பெயின் என்று ஹிமத் சிங்கின் உதடுகளும் உள்நாக்கும் உணர்ந்துகொண்ட பொழுதுகள் அவை. வெள்ளைத்தோல் பெண்களின் இடை தழுவி இதழும் இதழும் பற்றிக்கொள்ளும் நெருக்கத்தில் நடனமாடப் பயின்றுகொண்ட இன்பக் கணங்கள். எல்லாப் பெண்களுமே அழகிகளாகத்தான் தெரிந்தார்கள் அவர் கண்களுக்கு. 'கொஞ்சம்கூடக் கூச்சம் இல்லை. எதிலும் வெளிப்படை, உடைகளில்கூட.



மகாராஜா ஹிமத் சிங்

முன்பின் தெரியாத நபர்களிடம்கூட எப்படி இந்தப் பெண்களால் மட்டும் நொடிகளில் நெருக்கமாகிவிட முடிகிறது?' - ஹிமத் சிங் கொஞ்சம் மிரண்டுதான் போயிருந்தார்.

1931ல் தௌலத் சிங் இறக்கவும், ஹிமத் சிங்குக்கு அரியணை கிடைத்தது. இடாரின் தலைநகரத்துக்குத் தன் பெயரையே சூட்டி அழகு பார்த்தார். ஹிமத் நகர்.

லண்டனிலும் பாரிஸிலும் அவருக்கு விதவிதமாகப் பெண் தோழிகள் கிடைத்தார்கள். பேச, பழக, ஊர்சுற்ற, உல்லாசமாக இருக்க. இருந்தாலும் சில கசப்பான அனுபவங்கள். எல்லாம் அந்தத் தோழிகள் கொடுத்தவைதான். 'சீச்சீ, இந்த வெள்ளை திராட்சை புளிக்கும்' என்று அவர் நிரந்தரமாக முடிவெடுக்கும்படி ஆனது. ஆக அந்த விஷயத்தில் சுத்த சுதேசி ஆனார் ஹிமத் சிங்.

சொந்த அந்தப்புரமே சொர்க்கமாகத் தெரிந்தது. அங்கு அவர் பேதம் பார்க்கவில்லை. சகலவித மான இந்தியப் பெண்களும் அந்தப்புரத்தில் அருள்பாலித்தார்கள். மது மகாராஜாவைத் தன் பிடியில் வைத்திருந்தது. மாலை மயங்கும் நேரத்தில் காபி போல, மெல்ல ஒரு வாய் உறிஞ்சுவார். அப்படியே கொஞ்சம் கொஞ்சமாக. நிறைய நிறைய. போதை தலைக்கேறியதும் அவருக்குள்ளிருக்கும் பிச்சைக்காரன் வெளியே குதிப்பான்.

வேகவேகமாக தன் காலணிகளை, பட்டுடைகளைக் கழற்றி எறிவார். தயாராக எடுத்து வைக்கப்பட்டிருக்கும் கிழிந்த துணிகளை அணிந்துகொள்வார். சில சமயங்களில் நல்ல உடைகளையே டர்.. டர்ர்ர். தரையில் படுத்துப் புரளுவார். உடை அழுக்காக வேண்டுமாம். ஓரமாகக் குவித்து வைக்கப்பட்டிருக்கும் மண்ணை நோக்கி ஓடுவார். தலையில் போட்டுக் கொள்வார். உடலில் பூசிக் கொள்வார். அப்புறம்தான் அந்த அமுதகானம் ஒலிக்கும். ஆஸ்கர் நடிப்பு ஆரம்பமாகும்.

'அம்மா.. தாயே...'

சுற்றியிருப்பவர்கள் எல்லாம் இரண்டணா, நாலணா, எட்டணாக்களோடு தயாராக இருக்க வேண்டும். மகாராஜா சடாரெனப் பாய்ந்து வந்து பிச்சை கேட்பார். காசைப் போட வேண்டும். 'மவராசி, நீ நல்லா இருக்கணும்' வாய் குழற வாழ்த்துவார். தர்மம் தர்மஅடியிலிருந்து காக்கும். ஆம், காசு போடவில்லையென்றால் மகாராஜா உதைப்பார். காசுதான் என்றில்லை, சாப்பிட ஏதாவது கொடுத்தால்கூட மிலிட்டரி சல்யூட் அடிப்பார். சில சமயங்களில் பிச்சை யெடுக்காமல் வேறு பல கேணைத்தனங்களையும் அரங்கேற்றுவார்.

அதிகாலை. அப்போதுகூட ஆல்கஹாலால் அடங்காத மகாராஜா, அரண்மனைக்கு வெளியில் வந்து கத்துவார். 'யாரடா அங்கே?' கத்தையாக சில வீரர்கள் வந்து நிற்பார்கள். 'ம்.. ஆரம்பமா கட்டும்.' கட்டளை பறக்கும். சீருடையோடு தூங்கிக் கொண்டு இருக்கும் ராணுவ வீரர்கள் எல்லாம் மாங்கு மாங்கென்று மகாராஜா முன்வந்து 'மார்ச் பாஸ்ட்' செய்ய ஆரம்பிப்பார்கள்.

லெஃப்ட், ரைட். லெஃப்ட், ரைட். அட்டேன்ஷன்!

எப்போது நிறுத்தச் சொல்வார் என்று தெரியாது. மகாராஜா அங்கேயே மயங்கி விழுந்தாலும் வீரர்கள் நடந்துகொண்டே இருக்கவேண்டும், விடியும்வரை.

இப்படிப்பட்ட மகாராஜாவின் மகோன்னத வாழ்க்கையில் நுழைந்தாள் அவள். பெரோஸா (Feroza). பார்ஸி இனத்தவள். பம்பாய்க்காரி. பளபளா அழகுக்காரி. நமது ஜெகஜ்ஜால கபுர்தலா மகாராஜா ஜெகத்ஜித் சிங்கின் அரண்மனைக்கு 'விருந்தினராக' வந்திருந்தாள். ஹிமத் சிங்கும் அங்கு சென்றிருந்தார். அவளை உற்று நோக்கினார். உயரே பறந்தார், காதலால்.

பெரோஸாவின் பொது வாழ்க்கையில் வந்து போனவர்கள் நிறைய. அவர்களிடமிருந்து அவள் கற்றுக்கொண்ட வாழ்க்கைத் தத்துவம் 'உலகம் சபலங்களால் ஆனது.' ஆகவே மகாராஜா ஹிமத் சிங்கைக் காதலனாக வைத்துக்கொள்வதில் அவளுக்கு எந்தவிதச் சங்கடமும் இருக்கவில்லை. 'காசு, பணம் வைத்திருக்கிறாயா? வா, நீயும் என் அருமைக்காதலன் தான்!'

அவளுக்கு ஹிமத் சிங் வைத்த மரியாதை கலந்த செல்லப்பெயர், பஸ்வன்ஜி (Paswanji). தன்னோடு ஐரோப்பியச் சுற்றுப்பயணத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கே அவள் பொழிந்த அன்பு மழையில் நனைந்து ஊறினார். 'உனைப்பிரிந்து என்னால் இனி ஒரு நொடிகூட வாழ இயலாது. என்னுடனேயே வந்துவிடுகிறாயா? நான் உன்னை என் மகாராணியாக்குகிறேன்.' கூடிக்களித்த பொழுதொன்றில் பிதற்றினார் ஹிமத் சிங். அவளுக்கென்ன, கசக்கவா போகிறது?

1934ல் பஸ்வன்ஜியைத் திருமணம் செய்துகொண்டார். பின் ஹிமத் நகருக்கு அழைத்துச் சென்றார். 'மேதகு துரைக்கு, இவளும் என் பெஞ்சாதிதான். மகாராணி அந்தஸ்து அளித் தருள்க!' - பிரிட்டிஷாரிடம் கேட்டுப் பார்த்தார். இடது வலதாகத் தலையசைத்து 'முடியாது' என்று சொல்லிவிட்டார்கள். 'அவர்கள் கிடக்கிறார்கள். நீதான் என் பிரிய மகாராணி' பஸ்வன்ஜியிடம் சரணாகதி அடைந்திருந்தார் ஹிமத் சிங். கிடைத்தவரை லாபம் என்று சுருட்டல்களை ஆரம்பித்திருந்தாள் பஸ்வன்ஜி.

ராமேஸ்வர். மகாராஜா தனக்கெனப் புதிதாக நியமித்திருந்த தனிச் செயலாளர். பஸ்வன்ஜியின் தில்லாலங்கடி வேலைகள் ராமேஸ்வருக்குத் தெரிய வந்தன. அவள் அலட்டிக்கொள்ளவில்லை. ‘ஏய், உனக்கு ஒரு பங்கு வாங்கிக்கோ.’ ராமேஸ்வரும் ஒத்துழைக்க ஆரம்பித்தார்.

ஒரு சமயம், பஸ்வன்ஜிக்கு நகைகள் வாங்க வேண்டியதிருந்தன. அதற்காக அவளை பம்பாய்க்கு ராமேஸ்வரோடு அனுப்பினார் மகாராஜா. இஷ்டம்போல நகைகளை அள்ளினாள். கடைக்காரரிடம் கண் சிமிட்டினாள். ‘மொத்தத் தொகையில ஒரு இருபத்து சதவிகிதம் அதிகமாகப் பில் போட்டுருங்க.’ பின் ராமேஸ்வரின் காதைக் கடித்தாள். ‘உன் பங்கு ஐந்து சதவிகிதம். சரியா?’

ஆனால் பில் தொகையைப் பார்த்த மகாராஜாவுக்குப் பலத்த சந்தேகம். ‘என்னது இது?’ பஸ்வன்ஜியைப் பார்த்து சற்றே குரல் உயர்த்தினார். அந்த நடிகையர் திலகம் சட்டென அவர் காலில் விழுந்து அழ ஆரம்பித்தாள். ‘என்னை மன்னிச்சிருங்க. எல்லாம் ராமேஸ்வர் செஞ்ச ஊழல்தான். உங்ககிட்ட சொல்லக்கூடாதுன்னு சொல்லி என்னை மிரட்டுனாரு.’ கண்கள் சிவக்க, ஸ்காட்சை உள்ளே தள்ளினார் மகாராஜா.

‘நீ அழாதடி செல்லம். உன்னை நான் சந்தேகப்படுவேனா என்ன?’

இரவோடு இரவாக ராமேஸ்வர், ஹிமத் நகரிலிருந்து துரத்தி அடிக்கப்பட்டார். இப்படி பஸ்வன்ஜியின் லீலைகளால் அல்லலுக்குள்ளானவர்கள் பட்டியல் சற்றே நீளமானதுதான். இருந்தாலும் ஹிமத் சிங், அவளைப் பூரணமாக நம்பினார். அவள் மீதான மயக்கம் குறைந்து போன காலத்திலும், மகாராஜாவுக்குப் புதிய தோழிகளை அறிமுகப்படுத்தி தன் இடத்தைத் தக்கவைத்துக் கொண்டாள். ஹிமத் சிங்கும் அவளை மகாராணி ஸ்நானத்திலேயே வைத்துத் தாங்கினார்.

1948. சமஸ்தான இணைப்பு. ஆண்டு அனுபவித்த அத்தனை சுகங்களையும் விட்டுக் கொடுக்க வேண்டிய சூழல். ஜூன் 10ல் இடார், பம்பாயோடு இணைக்கப்பட்டது. ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட மகாராஜாவுக்கு வல்லபபாய் படேல் கையசைத்து விடைகொடுத்தார். கனத்த இதயத்துடன் பஸ்வன்ஜியைத் திரும்பிப் பார்த்தார் ஹிமத் சிங். அவளும் கையசைத்து விடைபெற்றுக் கொண்டிருந்தாள். ஒரு வெள்ளைக்கார கேப்டன் (Stanley Johnstone Thomson) அவளுக்குப் புதிய புருஷனாகியிருந்தான்.



# 161

# அறியாத வயசு! புரியாத மனசு!

தூங்கிக் கொண்டிருந்த குட்டி இளவரசியை வழக்கத்தைவிடச் சீக்கிரமாகவே எழுப்பினார்கள். 'எழுந்துக்கோடா செல்லம். நேரமாச்சு!'

சிணுங்கியபடியே புரண்டுபடுத்த குழந்தையை ஆயா, அலேக்காகத் தூக்கி நிறுத்தினாள். செல்லம் கொஞ்சியபடியே குளிப்பாட்டும் இடத்துக்கு அள்ளிச் சென்றாள். அரைமணி நேரத்தில் இளவரசி தகதகா உடைகளோடு, நகைகளோடு தேவதையாக மாறியிருந்தாள். வழக்கத்தைவிட அரண்மனை ஜொலித்தது. வெளியே வாத்தியங்களின் இசை பெருகிக் கொண்டிருந்தது. பல புதியவர்கள் கண்களில் தென்பட, ஏக்கமாகக் கேட்டாள் இளவரசி, 'இன்னிக்கு நான் விளையாட முடியாதா?'

'விளையாடலாம்டா கண்ணு. அதுக்காகத்தான் புதுசா ஒருத்தர் உனக்காகவே வந்திருக்காரு.' மகாராணி, இளவரசியின் கன்னத்தில் திருஷ்டிப் பொட்டு வைத்தபடியே சொன்னாள்.

'யாரு?' என்று இளவரசி கேட்க, உப்பரிகைக்கு அவளை அழைத்துச் சென்றார்கள். தூரத்தில் படை, பரிவாரங்கள் சூழ ஊர்வலம் வந்து கொண்டிருந்தது. 'அதோ நடுவுல வெள்ளைக்குதிரைமேல பட்டுச்சொக்கா, தலைப்பாகை எல்லாம் போட்டுட்டு ஒருத்தர் வர்றாரே, அவர்தான் இனிமே உன்கூட விளையாடுவாரு. நீயும் சமர்த்தா அவர்கூட இருக்கணும். சரியா?' மகாராணி சொல்வதை மலங்க மலங்க விழித்தபடியே கேட்டுக்கொண்டிருந்தாள் குட்டி இளவரசி. அன்றைய சுபதினத்தில் குதிரைமேல் வந்த குட்டி இளவரசனோடு இளவரசிக்குத் திருமணம் இனிதே நடந்தேறியது.



மைசூர் மகாராஜா நால்வடி கிருஷ்ணராஜ உடையாருக்கு நடந்த இளவயது திருமணம் (1900)

பால்ய விவாகத்தை எங்கே, எப்போது, யார் ஆரம்பித்துவைத்தார்கள் என்றெல்லாம் உறுதியாகச் சொல்ல முடியாது. காலம் காலமாக இந்தியாவில் இருந்துவரும் விஷயம்தான். பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை ராஜ குடும்பங்களில் தொட்டிலில் ஒண்ணுக்கடித்துக் கொண்டு இருக்கும் மணமகனுக்கும், பக்கத்துத் தொட்டிலில் விரல் சூப்பியபடி தூங்கிக் கொண்டு இருக்கும் மணமகளுக்கும்கூட விவாகங்கள் நடைபெற்றிருக்கின்றன. பொதுவாக ராஜ குடும்பத்தினர் இனம், அந்தஸ்து, கௌரவம் இத்யாதி விஷயங்களை எல்லாம் உற்றுநோக்கித் தங்கள் உற்றார், உறவினர்களுக்குள்ளாகவே 'குழந்தைத் திருமணங்கள்' செய்துவைத்துக் கொண்டிருந்தார்கள். டெல்லியில் சுல்தான்களின் ஆதிக்கம் நிலைபெற்றபோது, 'அசல்' திருமணங்கள் ஆரம்பித்தன. அதாவது கலப்புத் திருமணங்கள்.

பலம் வாய்ந்த சுல்தான்களை எதிர்த்துப் பேசும் திராணிகூட இல்லாத சிற்றரசர்கள் நிறையவே இருந்தார்கள். சுல்தான் படையெடுத்து வரப்போகிறார் என்று தெரிந்ததுமே வெள்ளைக்கொடி காட்டுவது தவிர அவர்களுக்கு வேறு விமோசனம் கிடையாது. 'சரி. இனி நீ எனக்குக் கட்டுப்பட்டுதான் நடக்கவேண்டும். என்னைமீறி மூச்சுகூட விடக்கூடாது. வா, என் மதத்துக்கு மாறிவிடு!' சுல்தானிடமிருந்து சூடான கட்டளை வந்துசேரும்.

மதமாற்றத்துக்குப் பயந்தே பல அரசர்கள் தங்களது குட்டி மகள்களை சுல்தானுக்கோ, சுல்தானின் வாரிசுக்கோ, உறவினர்களுக்கோ திருமணம் செய்துவைக்க ஆரம்பித்தார்கள். திருமணத்தின் மூலம் சுல்தானோடு நல்லுறவு. மற்ற நிர்பந்தங்களிலிருந்து தப்பிக்கச் சிறந்த வழியாக அது தெரிந்தது.

இதுபோன்ற குழந்தைத் திருமணங்களுக்கு வேறுபல காரணங்களும் இருந்தன. பக்கத்தில் இருக்கும் ராஜாவோடு திருமண உறவின் மூலம் பெவிகால் பிணைப்பை ஏற்படுத்திக்

கொண்டால், பலம் அதிகரிக்கும். மூன்றாவதாக யாராவது வந்து வாளோ, வாலோ ஆட்டினால் சமாளிக்கலாம் என்பது ஒரு காரணம்.

சமஸ்தானத்தில் நிதிநிலைமை படுமோசம். ராஜகுடும்பத்தில் பிறந்துவிட்டு வயிற்றில் ஈரத்துணி போட்டுக்கொள்ள முடியுமா என்ன? அட, பக்கத்து சமஸ்தான பணக்கார ராஜா வீட்டில் பெண் எடுத்தால், கிடைக்கும் சீர் ஒன்றே போதுமே. கஜானாவுக்குப் புத்துயிர் கொடுப்பதற்காகத் திருமணங்கள் நடத்தினார்கள்.

பக்கத்து சமஸ்தான ராஜாவோடு போர். தோல்வி முகம். சரணடைந்துதான் ஆக வேண்டுமா? வேண்டாம். என்னோடு சம்பந்தம் செய்துகொள்ளுங்கள். ஒன்றல்ல, எனது இரண்டு மகள் களையும் உங்களுக்கே தருகிறேன். இப்படி மீசையில் ஒட்டிய மண்ணைத் தட்டிவிட நடந்த திருமணங்களும் உண்டு.

திருவாங்கூரின் இளவரசி சேது லட்சுமிபாய்க்குப் பத்து வயது (1906). வரன் பார்க்க ஆரம்பித் திருந்தார்கள். ஒருநாள் லட்சுமிபாயை அரண்மனையின் உப்பரிகைக்கு அழைத்துச் சென்றாள் அவளது அம்மா. அங்கிருந்து அரண்மனை வளாகத்தை வேடிக்கை பார்க்கலாம், மற்றவர் களுக்குத் தெரியாமல். சிறிது நேரத்தில் சிலர் மெதுவாகப் பவனி வந்தார்கள். கிளிமன்னூர் ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அதில் இரண்டு சிறுவர்களைக் காட்டி, லட்சுமிபாயின் அம்மா கேட்டாள், 'ரெண்டு பேருல யாரைப் பிடிச்சிருக்கு?'

தன் வயதை ஒத்திருந்த சிறிய இளவரசரை லட்சுமிபாய்க்குப் பிடித்திருந்தது. 'பெரிய இளவரசருக்குத்தான் விவரம் தெரியும். சின்னவர் வேண்டாம்' அம்மா அலறினாள். லட்சுமிபாய் அடம்பிடித்தாள். சிறியவர் ராம வர்மாவையே திருமணம் செய்துகொண்டாள் லட்சுமிபாய்.

தினமும் தனது மனைவியைப் பார்க்க சாயங்கால வேளைகளில் வருவார் ராம வர்மா. இருவரும் சேர்ந்து சொப்பு சாமான் வைத்து விளையாடுவர்கள். அப்புறம் பாண்டி ஆட்டம். சில வேளைகளில் புருஷ சிறுவன், பெண்டாட்டி சிறுமிக்குக் கதை சொல்லுவார். யாராவது ஒரு மூத்த பெண்மணி கூடவே இருந்து 'விளையாட்டு வினையாகிவிடாமல்' கண்காணித்துக் கொண்டே இருப்பார். சரியாக ஒருமணி நேரம்தான். அதற்குமேல் ஒரு நிமிடம்கூட அனுமதி கிடையாது. கிட்டத்தட்ட நான்கு வருடங்கள் அவர்களது இல்லற வாழ்க்கை இப்படித்தான் நகர்ந்தது, சிறுமி குமரி ஆகும்வரை.

காஷ்மீரின் ராஜகுடும்பத்தைச் சேர்ந்த பெண் லஷ்மி கன்வார். செல்லமாக டோலி. வயது பத்தைத் தாண்டியதுமே டோலிக்கான திருமணப் பேச்சுகள் தொடங்கின. காஷ்மீரத்துப் பெண்களின் அழகைப் பற்றித் தனியாகக் கால் பக்கம் சொல்ல வேண்டுமா என்ன? ஏகப்பட்ட வரன்கள் வந்தன. புளியங்கொம்பாகத் தேடினார்கள்.

டோலிக்கு வயது பதிமூன்று ஆகியது. உடலளவில் குமரியாகவும் உள்ளத்தளவில் குழந்தை யாகவும் இருந்தாள். ஜெய்சால்மீர் சமஸ்தானத்தின் இருபத்தியிரண்டு வயது மகாராஜா ஜவஹர் சிங்குக்காக டோலியைப் பார்த்தார்கள். பிடித்துப்போனது. 'உனக்கு ஜெய்சால்மீர் மகாராஜாவோடு திருமணம் செய்துவைக்கப் போகிறோம்' டோலியிடம் சொன்னார்கள். 'நல்லது. எனக்கும் இங்கே பொழுதே போகவில்லை.' சிரித்தபடியே சொன்னாள். அசத்தலான திருமணம் அரங்கேறியது.

பொதுவாகப் பருவ வயது இளவரசர்களுக்கு எந்தவிதப் பிரச்னையும் இருந்ததில்லை. இளவரசர்களுக்கு 'வாழ்க்கைக் கல்வி' நடத்துவதற்கென்றே அந்தப்புரங்களில் சிறப்பு ஆசிரியைகள் இருந்தார்கள். 'இளவரசா வா! தயக்கத்தைத் தள்ளு. வெட்கத்தை விடு. கூச்சத்தைக் கொல்லு. காதலில் நில்லு.' ஆனால் பெண்களுக்கு அப்படியில்லை. குடும்பத்தின் மூத்த பெண்மணி ஏதாவது ஜாடைமாடையாகச் சொல்லிக் கொடுத்தால் உண்டு. இல்லையேல், கண்ணைக் கட்டிக் கட்டிலில் விட்ட கதைதான்.

மகாராஜா ஜவஹர் சிங் நாலும் அறிந்தவர். டோலிக்கு ஓடிப்பிடித்து விளையாடும் விளையாட்டுகள் மட்டுமே தெரியும். கேளிக்கை, உல்லாசம், சல்லாபம் எதன் நிழலும்படியாத 'காத்மண்டு'வில் வளர்ந்த அவள் என்ன செய்வாள் பாவம். 'மண்டு'வாகத்தான் இருந்தாள். அவள் புகுந்தவீட்டுக்குக் கிளம்பும்முன் அத்தைக்காரி ஒருத்தி மட்டும் சில விஷயங்களை மேலோட்டமாகச் சொல்லியனுப்பியிருந்தாள். 'நீ அவர்கூட ஒண்ணாப் படுத்துத் தூங்கினா உனக்கு ஒரு குழந்தை பிறக்கும். ராத்திரில நீ எதுக்கும் பயப்படக்கூடாது. சரியா?'

அவள் அப்பாவியாகத் திருப்பிக் கேட்டாள். 'நான் எதுக்கு ராத்திரில பயப்படணும்? அங்க என்ன பேயா இருக்குது? அவர்தான் என்கூடத் துணைக்கு இருப்பாரே.'

ஆனால் அவளது இல்லற வாழ்க்கையில் ஆரம்ப நாள்கள் மிரட்சி தரக்கூடியதாகவே அமைந்தன. ஆசையோடு அவளைக் காண வரும் மகாராஜாவைப் பார்த்தாலே பயந்து நடுங்கித்தான் போனாள். இரவு நேரத்தில் அவளது அலறல் சத்தம் அரண்மனைப் பணியாளர்களின் உறக்கத்தைத் தொந்தரவு செய்தது. மகாராஜாவுக்குக் கோபம். அவரால் அவளைத் தன் மனைவியாக மட்டுமே நினைக்க முடிந்தது. விவரமறியாத சிறுமி என்றெல்லாம் விட்டுக் கொடுக்க முடியவில்லை. அவரது முயற்சி திருவினையாக்கியது.

தன் வயிற்றில் ஒரு கருவைச் சுமப்பதாகவெல்லாம் டோலியால் உணர முடியவில்லை. வழக்கம்போல அரண்மனை வளாகத்தில் ஓடியாடி விளையாடினாள். ஊஞ்சல் ஆடப் போகிறேன் என்று சொல்லியவள், கீழே விழுந்தாள். கருவை இழந்தாள். ஓரிரு தினங்கள் படுக்கையில் ஓய்வெடுத்தவள், எந்தக் கவலையுமின்றி மீண்டும் விளையாடக் கிளம்பி விட்டாள். மகாராஜாவும் தன் விளையாட்டை நிறுத்தவில்லை. மீண்டும் அவள் கர்ப்பம்.

இந்த முறை காய்ச்சலும் அம்மை நோயும் அவளைத் தாக்கின. இம்முறையும் குழந்தை தங்கவில்லை. சில மாதங்கள் கழிந்தன. அடுத்த கர்ப்பத்தில் அவளுக்குக் 'கட்டாய ஓய்வு' கட்டளையிடப்பட்டது. டோலி, தன் குழந்தைத்தனத்தை முற்றிலுமாகத் தொலைப்பதற்கு முன்பே தாய் ஆனாள்.

டோலியோடு ஒப்பிடுகையில் துங்கார்பூர் இளவரசருக்கு வாக்கப்பட்ட பிரிஜ்ராஜி கன்வாரி ஓரளவு கொடுத்துவைத்தவள்தான். ராஜபுத்திர சமஸ்தானமான துங்கார்பூரின் மகாராஜா பிஜய சிங்குக்கு முதல் உலகப் போரினால் ஏகப்பட்ட பொருளாதார சரிவு. அதனைச் சரிகட்டும் விதமாகத் தன் பத்துவயது மகன் இளவரசர் லஷ்மண் சிங்குக்கு மணம் முடிக்க நினைத்தார். பிங்கா சமஸ்தானத்து ராஜபுத்திரப் பெண் பிரிஜ்ராஜியை 'வரவேண்டிய தட்சணைகளோடு' பேசி முடித்தார் (1917). பின் மகாராஜா இறந்துபோனார். 1919ல் திருமணம் நடந்தது. அப்போது மணப்பெண்ணுக்கு பன்னிரண்டு வயது.

அந்த இளஞ்சிட்டுகளின் இல்லற வாழ்க்கைக்கு இடையூறாக வந்து நின்றார் சமஸ்தானத்தின் ரெஸிடெண்ட். 'தம்பி லஷ்மணா, இந்த வயசுல படிக்கத்தான் செய்யணும். படுத்தக்கூடாது. சமர்த்தா லண்டனுக்குப் போய்ப் படிடா கண்ணு!' எனவே சிறுமி பிரிஜ்ராஜி காசிக்குச் சென்றாள். பத்தொன்பது வயதில் மீசை கொஞ்சமும் ஆசை நிறையவும் வளர்த்திருந்த லஷ்மண் சிங், நாடு திரும்பினார். அதற்குப் பின் பிரிட்டிஷார் அவரது இல்லற வாழ்க்கைக்குப் பச்சை விளக்கு காட்டினார்கள்.

சரி, இந்த மாதிரியான ராஜ குடும்பத்துக் குழந்தைகளின் முதல் திருமணங்கள் எந்த அளவுக்கு வெற்றி பெற்றிருக்கின்றன? பாதிக்கும் சற்றே குறைவுதான். காரணம் மருத்துவ வசதிகள் இல்லாத அந்தக் காலத்தில் குழந்தைகளின் இறப்பு சதவிகிதம் அதிகம். இளவயதில் மனைவியை இழந்த இளவரசர்களுக்குப் பிரச்னை இருக்கவில்லை. ஒருத்தி போனால், இன்னும் பல பேர். ஆனால் தனது பால்ய புருஷனை இழந்த சிறுமிகளின் நிலைதான் பரிதாபத்தின் உச்சம். அதேபோல, குழந்தையின்மை அல்லது பிற அந்தரங்கக் காரணங்களால் ஒதுக்கப்பட்ட இளம் ராணிகளின் கண்ணீர்க் கதைகளைச் சொல்லி மாளாது.

ஜெய்ப்பூரில் நடந்த ஒரு சங்கதியைச் சொல்லி இந்த அத்தியாயத்தை முடித்துக் கொள்வோம். தங்களது ராஜபுத்திர பரம்பரைக்குள் மட்டும்தான் மணம் செய்துகொள்ள வேண்டுமென்பதில் ஜெய்ப்பூர் ராஜகுடும்பத்தினர் படு கறாராக இருந்தார்கள். மகாராஜா இரண்டாம் மதோ சிங் (Madho Singh II) இறந்துபோக, அவரது தத்தெடுக்கப்பட்ட வாரிசு இரண்டாம் மன் சிங் (Man Singh II) ஆட்சியில் அமர்ந்தார். சிறுவன்தான். வயது பன்னிரண்டு.

பையனுக்குத் தங்கள் குடும்பத்திலிருந்தே பெண் ஒருத்தியை நிச்சயம் செய்தார்கள். இருபத்தியொரு வயது மருதர் கன்வார் (Marudhar Kanwar). வயது வித்தியாசமெல்லாம் விஷயமே இல்லை. ஜெய்ப்பூர் ராஜ குடும்பப் பெண். அவ்வளவுதான். திருமணம் நடந்தது. தனது அத்தை மருதரின் திருமணத்தை ஐந்து வயதுச் சிறுமியான கிஷோர் கன்வார் (Kishore Kanwar) பார்த்து ரசித்தாள். ஏழு வருடங்கள் கழித்து கிஷோரே மன் சிங்கின் இரண்டாவது மனைவியானாள். அத்தையையும் மருமகளையும் அக்கா, தங்கையாக்கிய பெருமையோடு இரட்டைக் குதிரையில் சவாரியைத் தொடர்ந்தார் ஜெய்ப்பூர் மகாராஜா மன் சிங்.

# பஹவல்பூர்

- பஞ்சாபிய சமஸ்தானம்
- தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1802
- ஆட்சி செய்தவர்கள் : அப்பாஸி பரம்பரை
- முதல் நவாப் : முகமது பஹவல் கான்
- 17 குண்டு மரியாதை.



162

# தெராவர் கோட்டை மர்மங்கள்!

இந்தப்பக்கம், அந்தப்பக்கம், எந்தப்பக்கம் திரும்பினாலும் மர்மம். கேள்விகள். அனுமானங்கள். இவற்றால் மட்டுமே நிரம்பியதாக ஒரு சமஸ்தானத்தின் வரலாறு இருக்கமுடியுமா? பஹவல்பூரின் (Bahawalpur) வரலாறு அப்படிப் பட்டதுதான். அதிலும் குறிப்பாக பஹவல்பூரின் தெராவர் கோட்டை (Derawar Fort). இன்றுவரை அந்தக் கோட்டை குறித்த வரலாற்றின் பெரும்பகுதி விடை யற்ற கேள்விகளால் கட்டமைக்கப்பட்டதே. ஒட்டுமொத்தக் கேள்விகளின் கருப்பொருள் இதுதான் 'தெராவர் கோட்டையில் புதையல் இருக்கிறதா? இல்லையா?'

பஹவல்பூர், ஒரு காலத்தில் இந்தியாவிலிருந்த பெரிய சமஸ்தானம். இப்போது பாகிஸ்தானிலுள்ள ஒரு மாவட்டம். பழைய மேப்பைத் தூசி தட்டி எடுத்து விரித்துப் பார்த்தால், பஹவல்பூர் பஞ்சாப் மாகாணத்தின் சட்லெஜ் நதிக்குத் தெற்கிலமைந்த பகுதி. சோலிஸ்தான் (Cholistan) பாலைவனத்தில் அமைந்த பிரதேசம். அதாவது ஒட்டகத்தில் ஏறி சோலிஸ்தான் பாலைவனத்தின் தென் கிழக்கு திசையில் பயணம் செய்தோமானால், அது அப்படியே தார் பாலைவனத் தில் கொண்டு சேர்த்துவிடும். அப்படியே பயணத்தைத் தொடர்ந்தால் ராஜஸ்தா னின் பிகானிருக்கோ அல்லது ஜெய்சால்மீருக்கோ வந்துவிடலாம்.

சரி, ஒட்டகத்தில் இருந்து இறங்கிவிடலாம். கால இயந்திரத்தில் ஏறிவிடலாம். மிகவும் பின்னோக்கிச் செல்லவேண்டியதிருக்கிறது. அதாவது கிமு 330க்கு. மாவீரன் அலெக்ஸாண்டர் காலத்துக்கு.


தெராவர் கோட்டை

நீர்கஸ் (Nearchus). அலெக்ஸாண்டரின் முக்கியமான தளபதி. இந்தியா மீதான படை யெடுப்பின்போது, தான் கைப்பற்றிய செல்வங்களில் ஒரு பகுதியை எடுத்துச் சென்று பாது காக்கும் பொறுப்பை நீர்கஸிடம் வழங்கினார் அலெக்ஸாண்டர். பாலைவனத்தில் வட கிழக்குத் திசையில் கிட்டத்தட்ட ஏழு நாள்கள் பயணம் செய்த நீர்கஸ் ஒரு கோட்டையை அடைந்தார். அங்கே பாதாள அறைகளை உருவாக்கி செல்வங்களைப் பாதுகாப்பாக வைத்தார். கட்டிக் காத்தார்.

இதற்கான முறையான சரித்திர ஆதாரங்கள் கிடையாது. நீர்கஸ் எழுதி வைத்துள்ள தன் வரலாற்றுக் குறிப்புகளில்கூட அந்தச் செல்வத்தைப் பற்றிய குறிப்புகள் இல்லை. ஆனால் நீர்கஸ் தங்கியிருந்த கோட்டையானது சோலிஸ்தான் பாலைவனத்தில் உள்ள தெராவர் பகுதி யில்தான் இருந்திருக்கும் என்று நம்பப்படுகிறது.

நிற்க. கிபிக்கு வந்துவிடுவோம். செங்கிஸ்கானின் பரம்பரையில் வந்த மிர்ஸா ஷா ஹஸன் (Mirza Shah Hasan), தெராவரைக் கைப்பற்றினார் *(1526)*. அந்தச் சமயத்தில் பதுக்கி வைக்கப் பட்ட செல்வங்கள் எல்லாம் சிந்துப் பகுதியை ஆண்ட மங்கோலியர்களால் கொள்ளையடிக்கப் பட்டன. இது சிந்துப் பகுதியின் வரலாற்றிலுள்ள உள்ள தகவல். ஆனால் பஹவல்பூரின் வரலாறு முற்றிலும் வேறுமாதிரியான விவரங்கள் கொண்டது.

பஹவல்பூரும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகள் எல்லாம் பலகாலமாக ராஜபுத்திரர்களின் வசம் இருந்தவை. தெரா ராவல் என்ற ஜெய்சால்மீரைச் சேர்ந்த ராஜபுத்திர இளவரசர் சோலிஸ்தான் பாலைவனப் பகுதியில் ஒரு புதிய நகரத்தை உருவாக்கினார். அதுதான் தெராவர்.

பஹவல்பூரை ஒரு தனி சமஸ்தானமாக உருவாக்கியவர்கள், ராஜபுத்திரர்கள் அல்ல. பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் அரபு பின்னணியைக் கொண்ட அப்பாஸி (Abbasi) பரம்பரையினர், பஹவல்பூரின் ஆட்சியாளர்கள் ஆனார்கள். அவர்களே பஹவல்பூரைத் தனி சமஸ்தானமாக்கினார்கள். அப்போது தெராவர், ஜெய்சால்மீர் ராஜ்ஜியத்தோடு இணைந்திருந் தது. 1733ல் ஆட்சியிலிருந்த பஹவல்பூர் நவாப் முதலாம் சாதிக் முகமத் கான் (Sadiq Muhammed Khan), தெராவரைக் கைப்பற்ற முடிவெடுத்தார். அதற்கு காரணமாக ஒரு சுவாரசி யமான 'நம்பிக்கை' சொல்லப்படுகிறது.

அப்பாஸி பரம்பரையினர், மிகவும் மதிக்கும் உயிரினம் சிலந்தி. அதிலும் தங்க சிலந்தியைக் கடவுளாகப் போற்றி வணங்குவார்கள். எல்லாக் கஷ்டங்களிலிருந்து மீளவும் சரியான திசையில் செல்லவும் தக்க சமயத்தில் தங்க சிலந்தி வழிகாட்டும் என்பது அவர்களது நம்பிக்கை. ஒருநாள் நவாப்பின் கனவில் தங்கச் சிலந்தி தோன்றியதாம். அவரை தெராவரின் திசையில் வழி நடத்திச் சென்றதாம். அதனைக் கைப்பற்றினால் பெருமளவு செல்வம் சேரும் என்று சொல்லிவிட்டுச் சென்றதாம். அதன் பின்னரே முதலாம் சாதிக், தெராவர் மீது படையெடுத்ததாகச் சொல்கிறார்கள்.

நவாபின் படைகள் தெராவர் கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்றின. நோக்கம், செல் வங்களை அடைவதுதானே. நவாப்பின் கையில் அந்தப் பெரும் புதையல் கிடைத்ததா? விடையை அறிந்துகொள்வதற்கு முன் ஒரு விளக்கம்.

அத்தனைக் காலம் தெராவரை ஆண்டு அனுபவித்த ராஜபுத்திரர்கள், அந்த 'மர்மப் புதையலை' எடுக்க முயன்றதாகவோ, எடுத்து அனுபவித்ததாகவோ செய்திகள் இல்லை. எனில் அங்கு புதையல் இல்லையா அல்லது அதுகுறித்து ராஜபுத்திரர்கள் அறிந்திருக்கவில்லையா? விடை கிடையாது. ஆனால் ராஜபுத்திரர்களின் வரலாறு ஒரு கதை சொல்கிறது. எந்த உலோகத்தையும் தங்கமாக்கும் ரசவாச வித்தையை யோகி ஒருவரிடமிருந்து கற்றுக்கொண்ட ஜெய்சால்மீர் இளவரசர், பெருமளவு தங்கத்தை உருவாக்கி, அதை தெராவர் கோட்டையில் பதுக்கி வைத்திருந்தாராம். ஆக மொத்தத்தில் புதையல் இருந்ததா, இல்லையா என்பதே சர்ச்சைக் குரியதாக இருக்க, நவாப் புதையலை எடுக்க முயன்றது குறித்த விசேஷமான கதை ஒன்று இன்றுவரை அப்பாஸி பரம்பரையில் சொல்லப்பட்டு வருகிறது.

நவாப், தெராவரைக் கைப்பற்றச் செய்த போரில் ராஜபுத்திரர்கள் பலர் கைதிகளாகி இருந்தார் கள். தெராவர் கோட்டை பற்றிச் சகலமும் அறிந்த ராஜபுத்திர வீரன் ஒருவனும் கைதாகியிருந்தான். புதையல் இருக்கும் இடம் குறித்து அனைத்து விவரங்களையும் அறிந்தவன் அப்போது அவன் மட்டுமே.

'செல்வங்கள் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் இடத்தைக் காட்டப் போகிறாயா, இல்லையா?' அந்த வீரனின் கழுத்துக்குக் கத்தி. அவன் பயப்படவில்லை. தைரியமாகப் பேசினான். 'என்னைக் கொன்றுவிட்டால் உங்களால் ஒருபோதும் புதையலை அடைய முடியாது.'

கழுத்திலிருந்து கத்தி விலகியது. 'உன்னைக் கொல்ல மாட்டோம். புதையல் இருக்கும் இடத்தைச் சொல்.' நவாபின் தளபதி வீரனிடம் வந்தார். 'அந்த இடத்தைக் காட்டுகிறேன். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை.' வீரன் குரல் உயர்த்தினான். 'எதுவானாலும் சரி. தயங்காமல் சொல். காரியத்தை முடித்துக் கொடுத்தால் நீ விரும்பும் பொருளைப் பெற்றுக்கொள்ளலாம்' - தளபதி ஆசை காட்டினார்.

வீரன் அதற்கெல்லாம் மசியவில்லை. தன் நிபந்தனையைத் தெளிவாகச் சொன்னான். 'புதையல் இருக்கும் இடத்துக்குச் செல்வது ஒன்றும் வெகுசுலபமான காரியமல்ல. எனக்கு மட்டுமே அதன் வழி தெரியும். உங்களில் யாராவது ஒருவருக்கு மட்டும் அந்தப் பாதையைக் காண்பித்துக் கொடுக்கிறேன். நிபந்தனைக்கு ஒப்புக்கொள்கிறீர்களா? வார்த்தை மீறக் கூடாது.'

ஒப்புக்கொண்டார்கள். நீண்ட யோசனைக்குப் பிறகு தனது ஆள் ஒருவனைத் தேர்ந்தெடுத்தார் தளபதி. ராஜபுத்திர வீரன், அந்த ஆளைக் கோட்டைக்குள் அழைத்துச் சென்றான். தன்னிடம் இருக்கும் திறவுகோல்களை எடுத்துப் பாதாள அறையின் கதவைத் திறந்தான். 'இவன் மட்டும் வரட்டும். மற்றவர்களெல்லாம் இங்கேயே இருங்கள்.' சொல்லிவிட்டு அந்த ஆளோடு உள்ளே இறங்கினான். நவாப் உள்பட எல்லோரும் அங்கேயே காத்திருக்க ஆரம்பித்தார்கள். நிமிடங்கள் நகர்ந்துகொண்டேயிருந்தன.

ரொம்ப நேரம் கழித்துப் பாதாள அறைக்குள்ளிலிருந்து சத்தம் வந்தது. முதலில் தளபதியின் ஆள் வெளியே வந்தான். அவனது கண்களில் மிரட்சி கலந்த பிரமிப்பு. 'என்ன பார்த்தாய்? சீக்கிரம் சொல்.' தளபதி அவனை உலுக்கினார். 'எவ்வளவு தங்கம்! என் கண்களுக்கே அடங்க வில்லை. எந்த ராஜாவிடமும் இவ்வளவு செல்வம் இருக்காது. எத்தனை விதமான செல் வங்கள் தெரியுமா? பலவற்றை நான் இதற்கு முன் பார்த்ததே இல்லை.' அவன் சொல்வதை எல்லோரும் வாய்பிளந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

பாதாள அறைக்குள்ளிலிருந்து ராஜபுத்திர வீரன் வெளியே வந்தான். வந்த வேகத்தில் அந்தத் திறவுகோல்களைத் தளபதியிடம் ஒப்படைத்தான். 'என் கடமை முடிந்துவிட்டது' என்றவன் வேகவேகமாக வெளிப்பக்கம் நோக்கி ஓட ஆரம்பித்தான். யாராலும் அவனைப் பிடிக்க முடியவில்லை. கோட்டையின் உயரமான பகுதி ஒன்றிலிருந்து குதித்து உயிரை மாய்த்துக் கொண்டான்.

எல்லோரும் கொஞ்ச நேரத்துக்கு அதிர்ச்சியில் உறைந்து நின்றார்கள். தளபதி மட்டும் உறுமினார். 'அவன் சாக வேண்டியவந்தான். போகட்டும். நம்மவனுக்குத்தான் அத்தனைச் செல்வங்களும் இருக்கும் இடத்துக்கு வழி தெரியுமே. வா, வந்து வழிகாட்டு.' சில வீரர்களோடு தளபதி பாதாள அறைக்குள் இறங்கினார்.

சுரங்கப்பாதை, குழிகள், இருள் குகைகள், பல திசைகளில் பாதைகள் பிரிந்து பிரிந்து சென் றன. கொஞ்ச தூரத்துக்கு தளபதியைக் குழப்பமின்றி அழைத்துச்சென்ற அந்த ஆள், பின்பு திணறிப்போனான். 'மன்னிக்க வேண்டும். மீண்டும் பாதாள அறையின் வாசலிலிருந்து வந்தோம் என்றால் சரியாகச் சொல்லிவிடுவேன்.' மீண்டும் வந்தார்கள். தலை சுற்றியது. ஒரே இடத்தில் சுற்றிச் சுற்றி வருவதுபோலத் தோன்றியது.

'இன்னும் ஒரே ஒரு வாய்ப்புக் கொடுங்கள் தளபதியாரே!' கெஞ்சிக் கூத்தாடினான் அந்த ஆள். வெளியே வருவதற்குக்கூட வழி தெரியாமல் திகைத்துப் போயிருந்தார்கள். தளபதிக்குக் கடும்கோபம்.

'நயவஞ்சகா! நாடகமாடுகிறாயா? செல்வத்தை நீ மட்டும் அபகரிக்கப் பார்க்கிறாயா? இவனை விடாதீர்கள். வழியைச் சரியாகச் சொல்லும்வரை அடித்துக்கொண்டே இருங்கள்' - தளபதி சீறினார். அடிதாங்க முடியாமல் சுருண்டு விழுந்தான் அந்த ஆள். 'உண்மையிலேயே

எனக்கு வழி மறந்து போய்விட்டது. என்னை மன்னித்துவிடுங்கள்' கெஞ்சினான். நேரம் கடந்துகொண்டே போனது. தளபதி பொறுமை இழந்தார். 'அவனைத் தூக்கிக் கொண்டு வாருங்கள்.' தளபதியும் மற்ற வீரர்களும் தட்டுத்தடுமாறிப் பாதாள அறையின் வாசலைக் கண்டு பிடித்து வெளியே வந்தார்கள்.

'மன்னிக்க வேண்டும் நவாப். இவன் வழியை மறந்து காரியத்தைக் கெடுத்துவிட்டான்.' தளபதி தலைகுனிந்தார். நவாப், அந்த ஆளின் தலையை எடுக்க உத்தரவிட்டார். அவ்வளவு தான். அதற்குப் பின் தெராவர் கோட்டையை ஆண்ட அப்பாஸி பரம்பரையினரால் அந்தப் புதையலை அடைய முடியவில்லை. காலம் காலமாக அப்பாஸி பரம்பரையினரிடையே சொல்லப்பட்டுவரும் தெராவரின் புதையல் கதை அல்லது வரலாறு இதுதான். இன்றுவரை அங்கு புதையல் எதுவும் இருக்கிறதா, இல்லையா என்பது குறித்த கேள்விகளுக்கு விடை கிடையாது.

ஆனால் தெராவர் கோட்டை மட்டும் நவாப் முதலாம் சாகித் முகமத் கான் காலத்திலேயே மேம்படுத்திக் கட்டப்பட்டது. ஒன்றரைக் கிலோமீட்டர் நீளத்தில், முப்பது அடி உயரத்தில் வட்ட வட்டமாக எண்ணெய் பேரல்களை அடுக்கிவைத்ததுபோன்று கோட்டை வளர்ந்தது. சோலிஸ்தான் பாலைவனத்தில் எங்கிருந்து பார்த்தாலும் தெராவர் கோட்டைகள் தெரியும். அப்படிப்பட்ட அமைப்பு. கோட்டைக்குள்ளேயே மார்பிள்களாலான பெரிய மசூதி ஒன்றும் எழுப்பப்பட்டது.

பஹவல்பூரில் அப்பாஸி நவாபுகளின் ஆட்சி தொடர்ந்தது. புதையல் கனவுகளும் தொடர்ந்தன. ஆனால் எந்த நவாபுக்கும் தங்க சிலந்தி, புதையலை எடுத்துக் கொடுத்ததாகத் தெரிய வில்லை.

1866ல் பஹவல்பூரின் நவாபாக அரியணை ஏறியவர் நான்காம் சாதிக் முகமத் கான் (Sadiq Muhammed Khan IV). இவர் தெராவர் கோட்டைப் புதையலைத் தேடித் தவித்ததாக சரித்திர மில்லை. ஆனால் இவர் சேர்த்த சொத்துகளே பெரும் புதையலுக்குச் சமமானது என்கிறார்கள் வரலாற்று ஆசிரியர்கள். ஆடம்பரப் பொருள்களைச் சேர்க்கும் வகையில் இவர் ஹைதராபாத் நிஜாம் ஒஸ்மான் அலிகானுக்குத் தாத்தா. காதல் செய்யும் கலையிலும், கட்டடக்கலையிலும் இவருக்கு நிலைத்த பெயர் 'பாகிஸ்தானின் ஷாஜஹான்.'



# 163

# ப்ளேபாய் ப்ரெளனி!

பெண்கள் எல்லாம் மெய்யாலுமே தோற்றுப்போய்விடுவார்கள். அவர்களுக்கு நவாப் அளவுக்குப் பொறுமை இருக்குமா என்பது சந்தேகமே. சொன்னால் நம்ப முடியாதுதான். பஹவல்பூர் நவாப் நான்காம் சாதிக் முகமத் கான் ஒப்பனைப் பிரியர், ம்ஹூம், வெறியர். அதுவும் அவர் ஆளுயரக் கண்ணாடி முன்சென்று நின்றுவிட்டார் என்றால் அலங்காரங்கள் முடிய சில மணி நேரங்கள் பிடிக்கும். ஒப்பனை செய்துவிடுபவர்கள்தான் சோர்ந்து மயங்கிவிழும் அளவுக்கு ஆகி விடுவார்கள். நவாப், அசராமல் நிற்பார், அத்தனை அலங்காரங்களையும் ஏற்றுக் கொண்டு.

வெள்ளை நிறத்தில் தகதக மஸ்லின் கால்சட்டைகளும், முட்டிநீளப் பட்டு ஜிப்பாக்களும், பிற வெல்வெட் மேலங்கிகளும் தயாராக இருக்கும். அசங்காமல் கசங்கா மல் உடையலங்காரம் முடிந்த பின்பு, நகையலங்காரம். தன் முன் கடைபரப்பி வைக்கப்பட்டிருக்கும் நகைக்குவியலைப் பார்வையால் மேய்வார்.

'அந்த வைர மோதிரம். இந்த இரண்டடுக்குக் கழுத்து அட்டிகை. அதோ இருக்கிறதே, அந்த மரகதப் பதக்கம்..' பார்த்துப் பார்த்துத் தேர்ந்தெடுப்பார். ஒரு பணியாளர் உடலில் நகைகளை அணிவித்துக் கொண்டிருக்க, இன்னொருவர் உடைகளுக்கான நகைகளை எல்லாம் எடுத்து மாட்டிவிடுவார். மொத்த நகை யலங்காரங்கள் முடிவதற்கு மட்டுமே ஒரு மணிநேரமாவது பிடிக்கும்.

நவாப், தர்பாருக்குச் செல்கிறார் என்றால் ஒன்பது பவுண்ட் எடையுள்ள கிரீடம் சிரமேறும். வைரமும் மரகதமும் பசும்பொன்னில் பதித்துச் செய்யப்பட்ட

பரம்பரைப் பொக்கிஷம் அந்தக் கிரீடம். மற்ற சமயங்களில் தங்க நகைகளாலும் இன்னபிற கல்நகைகளாலும் மெருகேற்றப்பட்ட பட்டுத் தலைப்பாகையைச் சூடிக்கொள்வார்.

அடுத்தது கைக்கடிகாரம். மனிதருக்கு ஒழுங்காக மணி பார்க்கத் தெரியுமா என்று தெரிய வில்லை, ஆனால் கடிகாரம்மேல் கொள்ளைக் காதல். தினமும் காற்று வாங்குகிறாரோ இல்லையோ, புதிதாக ஒரு கடிகாரமாவது வாங்குவது நவாபின் வழக்கம். சாதாரணமானது முதல், தங்கத்தாலான, உயர்ரக கற்கள் பதிக்கப்பட்ட பணக்கார கடிகாரங்கள் வரை, பேத மின்றி வாங்கிக் குவித்தார். தினமும், இந்தக் கையில் ஒன்று, அந்தக் கையில் ஒன்று. முடிந்தால் கைக்கு இரண்டிரண்டு கடிகாரங்கள் எடுத்து கட்டிக்கொள்வார். அவரைக் காணவரும் நபர்கள், கடிகாரத்தைப் பரிசாகக் கொடுத்தால், ஏக குஷியாகிவிடுவார். அவரது சேமிப்பில் இருந்த கடிகாரங்களின் எண்ணிக்கை மட்டும் சுமார் 1700.

அலங்காரங்கள் முடிந்து அறையை விட்டுக்கிளம்புவதற்கு முன், நவாப் தனது ஜிப்பா பையில் தங்கக்காசுகளை (மொஹர்) அள்ளிப் போட்டுக்கொள்வார். எதிரில் வந்து சலாம் வைக்கும் நபர்களுக்கெல்லாம் ஒரு மொஹர். நிறையப் பேர் வலிய வந்து சலாம் வைத்தார்கள். வள்ளலாக வலம் வந்தார் நவாப், காதலிலும்கூட.

தன் மனக்கண்ணுக்கு அழகாகத் தெரியும் பெண்ணை நவாப் கைவிடவில்லை. அவளுடைய தகுதி, தராதரம் எல்லாம் பார்க்காமல் அந்தப்புரத்தில் வாழ இடம் கொடுத்தார். பின்பு வாழ்க்கை கொடுத்தார். அந்தத் திருமணங்களுக்கு பிரிட்டிஷார் அனுமதி கொடுப்பார்களா, மாட்டார்களா என்றெல்லாம் அவர் கவலைப்படவே இல்லை.

தனது பேகம்கள் விரும்பும் விஷயங்களை எல்லாம் எப்பாடுபட்டாவது நிறைவேற்றுவது நவாபின் பழக்கம். ஒருமுறை அவரது மூன்றாவது பேகம் (பெயர் 'நூர்' என்று நம்பப்படுகிறது.) நவாபிடம் தாஜ்மஹால் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஷாஜஹான், மும்தாஜ் காதலைப் பற்றிச் சிலாகித்துக் கொண்டிருந்தாள். அவளது வார்த்தைகள் நவாபுக்கு 'சுருக்'கென்று குத்தியது. 'ஷாஜஹான்தான் காதலில் சிறந்தவரா என்ன? நான் அவரைவிடப் பெரிய காதலன் என்று நிரூபித்துக் காட்டுகிறேன்.' மனத்துக்குள்ளேயே தீர்மானம் எடுத்துக் கொண்டார்.

ஹென்னன் (Hennan) என்ற ஐரோப்பியக் கட்டடக்கலை நிபுணரை வரவழைத்தார். 'செலவைப் பற்றியெல்லாம் கவலைப்படாதீர்கள். தாஜ்மஹாலைவிட சிறப்பான ஒரு மாளிகையைக் கட்டவேண்டும். என் காதல் மனைவிக்காக. வேலையை ஆரம்பியுங்கள்.'

மாளிகைக்கான வடிவமைப்புத் திட்டம் தயாரானது. இடம் முடிவானது. நவாப் கொடுத்த பணத்துக்கேற்ற கட்டடம் ஒன்றை வேகமாகவே எழுப்ப ஆரம்பித்தார் ஹென்னன். 44600 சதுரஅடியில் 32 விஸ்தீரனமான அறைகள், ஆறு நீளமான விராண்டாக்கள், ஐந்து மாபெரும் டூம்களுடன் இஸ்லாமிய கலாசாரப்படி மாளிகை வளர்ந்தது. மொத்தமாகப் பணிகள் முடிய சுமார் மூன்று வருடங்களே பிடித்தன (1875). கட்டடத்துக்குள் புழங்கும் பொருள்கள் எல்லாமே பிரிட்டனிலிருந்தும் இத்தாலியிலிருந்தும் வரவழைக்கப்பட்டன. ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்து அலங்கரித்தார் நவாப்.

தனது கனவு மாளிகைக்கு அவர் வைத்த பெயர், 'நூர் மஹால்.' ஆசை ஆசையாக நூர் பேகத்தை அந்த மாளிகைக்கு அழைத்துச் சென்றார். அவளது காலடி மாளிகையில் பட்ட நொடியில் சிலிர்ப்பாக இருந்தது நவாபுக்கு. ஆச்சரியமும் மகிழ்ச்சியும் பொங்கப் பொங்க மாளிகையைச்



நவாப் ப்ரௌனி

சுற்றிச் சுற்றி வந்தாள் பேகம். காதல் பார்வையால் கணவனுக்கு நன்றி சொன்னாள். நவாபுக்கு உலகை வென்றுவிட்டதுபோல உற்சாகம்.

நூர் மஹாலில் அவர்களுக்கு அன்று முதல் இரவு. நவாப், காதல் மொழிகளை உதிர்த்துக் கொண்டிருந்தார். பேகம், காற்று வாங்குவதற்காக ஜன்னலோரமாகச் சென்றாள். சட்டென அவள் முகம் சுருங்கிப்போனது.

'அய்யோ' என்றாள். 'என்ன ஆயிற்று?' பதறி ஜன்னலுக்கு ஓடினார் நவாப்.

'அங்கே பாருங்கள்.' அவள் காட்டிய திசையில் வெளியே ஒரு கல்லறை தெரிந்தது. 'தினமும் நான் அதைத்தான் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா?' அவளது குரலில் வெறுப்பு. உற்சாகமிழந்து உள்ளேபோய்ப் படுத்துக் கொண்டாள். நவாப், உறைந்து நின்றார்.

மறுநாளே பேகம், நூர் மஹாலை விட்டு வெளியேறினாள். தனது வாழ்நாளில் மீண்டும் அவள் அங்கே வரவேயில்லை. பாகிஸ்தானின் ஷாஜஹானான நவாப்தான் பாவம். தன் 'காதல் பரிசு' கவிழ்ந்ததை எண்ணித் தீராத கவலையுடனேயே எஞ்சிய வாழ்வைக் கழித்தார். 1899ல் இறந்தார். மர்மப் புதையல் கோட்டையான தெராவரில்தான் அவர் புதைக்கப்பட்டார். அவர் மட்டுமல்ல, அப்பாஸி பரம்பரையினரின் பலரது உடல்களும் அங்குதான் புதைக்கப் பட்டுள்ளன.

மூன்றாவது பேகம்மேல் நவாப் கொள்ளை ஆசை வைத்திருந்தார் என்றாலும் அவருக்குப் பின் ஆட்சி செய்வதற்கென ஓர் ஆண் வாரிசைப் பெற்றுக் கொடுத்தது என்னவோ இரண்டாவது

பேகம்தான். அந்த மகனின் பெயர் ஐந்தாம் பஹவல் கான் (Bahawal Khan V). தந்தையின் குணத்துக்கும் இவருக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. உல்லாசியெல்லாம் இல்லை. பெண்கள் விஷயத்திலும் நல்லவரே. ஒருமுறைதான் திருமணம் செய்துகொண்டார். இறை பக்தி மிகுந்தவர். தொழுகை தவறாதவர். தனது தந்தை காதலுடன் கட்டிய நூர் மஹாலில் மசூதி ஒன்றை எழுப்பி, திருப்திபட்டுக் கொண்டார்.

தனது இறைபணியை நிறைவேற்ற, ஹஜ் பயணத்துக்குக் கிளம்பினார். கடமையை முடித்தார். கப்பலில் நாடு திரும்பிக் கொண்டிருந்தார். உடல்நிலை ஒத்துழைக்கவில்லை. நாளுக்கு நாள் நிலைமை மோசமானது. ஏடன் கடல் பகுதியில் கப்பலிலேயே அவரது உயிர் பிரிந்தது.

பஹவல்கானின் ஒரே மகனான ஐந்தாம் சாதிக் முகமது கான் (Sadiq Muhammed Khan V), பஹவல்பூரின் அடுத்த நவாபாக அப்போது அறிவிக்கப்பட்டார் (1907). அதிலெல்லாம் பிரச்னையில்லை. ஆனால் புதிய நவாபுக்குத்தான் என்ன நடக்கிறது என்று ஒன்றுமே புரியவில்லை. காரணம், அவருக்கு வயது வெறும் மூன்று. பிரிட்டிஷாரால் அமைக்கப்பட்ட கவுன்சில் ஒன்று நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்ள, குட்டி நவாப் 'ஏக், தோ, தீன்' படிக்கக் கிளம்பினார்.

கல்லூரிப் படிப்பு லாகூர் அட்சிஸன் (Aitchison) கல்லூரியில். எப்படி ராஜபுத்திரர்களுக்கும் பிற தென்னிந்திய ராஜ குடும்பத்தினருக்கும் மட்டும் உரிய ராயல் கல்லூரியாக அஜ்மீரின் மயோ இருந்ததோ, அதேபோல பஞ்சாப் அதனைச் சுற்றியிருந்த சமஸ்தானங்களின் ராஜ குடும்பத்தினருக்கு அட்சிஸன் கல்லூரி இருந்தது. குறிப்பாக நவாப், அமீர், மாலிக், ஷா, கான்களின் குடும்பத்தினர் எல்லாம் அட்சிஸனையே நாடினார்கள்.

பத்து ஏக்கர் பரப்பளவில் பரந்துவிரிந்து கிடந்த அந்தக் கல்லூரியில் போலோ முதல் பொருளா தாரம் வரை சகலமும் கற்றுக் கொடுக்கப்பட்டன. ராயல் வாரிசுகள் தங்குவதற்கேற்ற விடுதி கள். வளாகத்துக்குள்ளேயே மசூதி. கிரிக்கெட் மைதானம், நீச்சல் குளம், டென்னிஸ் கோர்ட். அந்தப்புரம் தவிர்த்து சகலமும் இருந்தன.

கல்வி கற்பதில் எல்லாம் நவாப் ஐந்தாம் சாதிக் எந்தக்குறையும் வைக்கவில்லை. ஆனால் என்ன, அவருக்கு அப்பன் புத்தி வாய்க்கவில்லை. தாத்தன் புத்தி வளர்ந்திருந்தது. உல்லாசத் தில் ஊறித்திளைக்கவே மனம் விரும்பியது. பருவ வயதுக் கண்களில் எப்போதும் காதல் நிரம்பிக் கிடந்தது.

1921ல் ஐந்தாம் சாதிக், முதல் திருமணம் செய்துகொண்டார். அப்பாஸி பரம்பரையைச் சேர்ந்த பெண்தான். 1922ல் வரையறுக்கப்பட்ட அதிகாரங்களுடன் பஹவல்பூரின் நவாப் பொறுப்பை ஏற்றார். இரண்டு வருடங்கள் பரிசோதனைக் காலம். 1924ல் அவர் கையில் முழு அதிகாரமும் வழங்கப்பட்டது. சுதந்தரப் பறவையாக உணர்ந்தார். அடிக்கடி ஐரோப்பிய சுற்றுப்பயணங்கள் மேற்கொள்ள ஆரம்பித்தார்.

ப்ரௌனி (Brownie). கோதுமை நிற நவாபுக்குச் செல்லமாக அவரது பிரிட்டன் நண்பர்கள் வைத்த பெயர் இது. ப்ரௌனிக்கோ வெள்ளைத்தோல் பெண்கள் மீது அலாதி அன்பு. தாத்தா நவாப், மணிக்கட்டுக்காகக் கடிகாரங்களைச் சேகரித்தார். பேரன் நவாப், பின்கட்டுக்காகப் பெண்களைச் சேகரித்தார். அதிலும் நிறபேதமின்றி ஐரோப்பியப் பெண்களுக்கும் அந்தப்புர வரம் கொடுத்தார்.

பஹவல்பூரின் அந்தப்புரத்தில் வலதுகாலை எடுத்துவைத்த முதல் ஐரோப்பியப் புண்ணியவதி, லிண்டா செய்ஸ் (Linda Sayce). அவளைக் கண்டார். காதல் கொண்டார். அவளொன்றும் மேல்தட்டுப் பெண்ணெல்லாம் அல்ல. எளிதாகவே கனிந்தாள். லிண்டாவைத் தனது இரண்டாவது மனைவியாக்கிக் கொண்டார். ஆரம்ப நாள்களில் காதல் மயக்கத்தால் லிண்டா வுக்கும் பஹவல்பூர் அந்தப்புரம் சிறையாகத் தோன்றவில்லை. நாளடைவில் அவளுக்குச் சிறகுகளை இழந்ததுபோல இருந்தது.

நவாப், அசரவில்லை. அன்பைக் கொட்டினார். ஏழு வருடங்களில் லிண்டாவுக்கு ஐந்து பிரசவங்கள். நான்கு மகன்கள், ஒரு மகள். நல்லபடியாகப் பெற்றுக்கொடுத்து விட்டு இறந்தாள்.

'அய்யோ, லிண்டா சாகவில்லை. கொன்றுவிட்டார்கள்.' அவளது உறவினர்கள் கதறினார்கள். அவளது இறப்புகுறித்த சர்ச்சைகள் எழுந்தன. நவாபுக்கு பிரிட்டிஷாரோடு நல்லுறவு இருந்தது. ஆகவே சர்ச்சைகள் சிறு சிராய்ப்பைக்கூட ஏற்படுத்தாமல் விரைவிலேயே அடங் கின. ப்ரௌனி, தனது அடுத்தகட்ட வேட்டைக்காக லண்டன் கிளம்பினார்.

சொகுசு ஹோட்டல். உல்லாச இரவுகள். விடிந்து வெகுநேரம் கழித்து கண்விழித்த நவாப், ஆரஞ்சு பழச்சாறு பருகியபடியே அந்த நாளிதழைப் புரட்டினார். அவரது பார்வை, மூன்றாவது பக்கத்தில் நிலைகுத்தி நின்றது. அவருக்குள்ளிருந்த ப்ளேபாய் வெளியே துள்ளிக் குதித்தான்.

அட, என்ன அழகு! பார்த்தால் ஐரோப்பியப் பெண் போலத்தான் தெரிகிறது. இதோ பெயர் போட்டிருக்கிறார்களே. கேத்ரீன் ஸ்காட் (Katherine Scott). விளம்பர மாடலாக இருப்பாளோ? ஓ, இது சினிமா விளம்பரமா! இந்தப் படத்தில் நடிப்பதற்காகத் தேர்வாகியிருக்கிறாள் போல. பல ஆயிரம் பேர் ரசிக்க வேண்டியவளல்ல இவள். பஹவல்பூரின் அந்தப்புரத்தில் நான் மட்டும் ரசிக்கப் பிறந்தவள். இவளை விடமாட்டேன்.



# சம்பா, சலோனி, பாஷந்தி!

ஒரு பெண்ணின் புகைப்படத்தைப் பார்த்ததுமே குபுக்கென மனத்தில் தோன்றும் அதீத 'நேசத்தை' என்னவென்று சொல்வது? காதலா? ஈர்ப்பா? காமமா? லண்டனில் மையம் கொண்டிருந்த பஹவல்பூர் நவாப் ஐந்தாம் சாதிக் முகமத் கான் அதையெல்லாம் உட்கார்ந்து யோசிக்கவில்லை. கேத்ரீன் ஸ்காட் புகைப்படத்தைப் பத்திரிகையில் கண்டதும் அவரது இதயம் உள்ளிருந்து வெளியே குதித்து அவளைத் தேடிச் செல்ல ஆரம்பித்தது. பின்னாலேயே அவரும் ஓடினார்.

நவாப் என்ற செல்வாக்கைப் பயன்படுத்தி அவளது விலாசத்தைச் சுலபமாகத் தெரிந்துகொண்டார். கேத்ரீனின் அப்பா ரயில் நிலைய போர்ட்டர். அன்றாடங் காய்ச்சி குடும்பம்தான். அவளது அழகுதான் அவளைக் கொஞ்சம் உயரத்தில் வைத்திருந்தது. ப்ரௌனியின் கார் சக்கரங்கள் அவளது வீட்டை நோக்கி உருண்டு கொண்டிருந்தன.

'கொஞ்சம் நிறுத்துப்பா' பூக்கடை ஒன்றில் இறங்கினார். 'இங்கிருக்கும் அத்தனை ரோஜாக்களும் எனக்கு வேண்டும். என்ன விலை?' ரோஜாப் பூங்கொத்துகள் கார் ஏறின. அவளது வீட்டுக்குள் நுழைந்தார். தரிசனம் கிடைத் தது. ரோஜாக்களைச் சமர்ப்பித்தார். அநாவசியமான வார்த்தைகளையெல்லாம் பேசவில்லை. நேரடியாக, 'கேத்ரீன், ஐ லவ் யூ!'

திக்குமுக்காடிப்போனாள் அவள். ப்ரௌனி, தன்னை 'நவாப்' என சொல்லிக் கொள்ளவில்லை. மற்ற எல்லா விவரங்களையும் சொன்னார். 'எந்தப்பெண்ணும்



இஸ்லாமிய ஆட்சியாளர்களின் அந்தப்புரத்தைக் காட்சிப்படுத்தும் ஓவியம்

என்னை இவ்வளவு அசத்தியதில்லை. உன் அழகுக்கு இனி நான் அடிமை' - வசீகர வசனங்கள் வேறு. கேத்ரீன் யோசித்தாள். குடும்பத்தின் ஏழைமை கண்முன் நிழலாடியது. பசையுள்ளவர் தான். பாசக்காரராகவும் தெரிகிறார். அப்போதுதான் வாய்த்திருந்த சினிமா வாய்ப்பு அவளைத் தடுத்தது. சினிமா நிலையில்லாதது, தேடி வந்த இந்தக் காதல் நிலையானதாக இருக்குமெனத் தெரிகிறது. ஏற்றுக் கொண்டால் என்ன?

கேத்ரீன் மசிந்தாள். அவளது குடும்பத்தினர் எதிர்க்கவெல்லாம் இல்லை. அவர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்தார் ப்ரௌனி. திருமண நாள். 'அய்யா மன்னிக்கணும். எம் பொண்ணு கல்யாணம்தான். ஆனால் அதுக்காக நான் வேலைக்குப் போகாம இருந்தா என் பொழைப்பு நாறிடும். எங்கிருந்தாலும் நல்லாயிருங்க' கேத்ரீனின் அப்பா அலட்டிக் கொள்ளாமல் ரயில் நிலையத்துக்கு வேலைக்குக் கிளம்பினார். திருமணம் முடிந்த கையோடு ப்ரௌனியும் கேத்ரீனை அழைத்துக் கொண்டு பஹவல்பூருக்கு வந்து சேர்ந்தார்.

பஹவல்பூர் அவளை ஏகப்பட்ட மர்மங்களுடன் வரவேற்றது. உண்மைகள் ஒவ்வொன்றாகத் தெரியவரவும் மிரண்டுதான் போனாள் பேகம் கேத்ரீன். 'வர்றியா, வா!' என அவளுக்காக வாசலைத் திறந்து வைத்துக் காத்திருந்தது அந்தப்புரம். அது சொர்க்கபுரியா? கொடும் சிறையா? பொதுவாக இஸ்லாமிய ஆட்சியாளர்களின் அந்தப்புரம் எப்படிப்பட்டதாக இருந்தது?

கண்டிப்பாக விடை தெரிந்துகொள்ளப்பட்ட வேண்டிய கேள்வி இது. கேத்ரீனின் கதையை சற்றே நிறுத்திவைத்துவிட்டுப் பதிலை இப்போதே பார்த்துவிடலாம், கொஞ்சம் பின்னோக்கிச் சென்று.

ஓர் இஸ்லாமியர், மதவிதிகளின்படி நான்கு பேரைத் திருமணம் செய்துகொள்ளலாம். எத்தனைப் பெண்களை வேண்டுமானாலும் அடிமைகளாக வைத்துக்கொள்ளலாம் அல்லவா. ஆகவே சுல்தான்களின், அமீர்களின், பாதுஷாக்களின், நவாப்களின் அந்தப்புரத்தை நிரப்பப் 'பெண்கள்' சேகரிக்கப்பட்டார்கள், பல்வேறு விதங்களில்.

டெல்லி சுல்தான்கள் ஏதாவது ஒரு பகுதியைக் கைப்பற்றிய பின் தம் வீரர்களுக்கு இட்ட முதல் கட்டளை, 'ஆண்களைக் கொன்றுவிடுங்கள். பெண்களையும் குழந்தைகளையும் பிடித்துக் கொண்டுவாருங்கள்.' அழகான, இளமையான பெண்கள் சுல்தான்களின் அந்தப்புரத் தேவைக்கு. வசீகரமற்ற, வயதான பெண்கள் அந்தப்புரச் சேவைக்கு. பெண் குழந்தைகளும் அந்தப்புரத்தில் கவனமாக வளர்க்கப்பட்டார்கள், வருங்காலத் தேவை கருதி. ஆண் குழந்தைகள் அடிமைகளானார்கள்.

'சுண்டினால் ரத்தம் வரும் நிறம். காந்தக் கண்ணழகி. கார்மேகக் கூந்தலழகி. கைபடாத ரோஜா. கட்டுடல் குமரி. யாருக்கு வேண்டும்?' சந்தைகளில் இம்மாதிரியான குரல்கள் கேட்கும். அது பெண்களை விற்கும் சந்தை. பல நூற்றாண்டுகளாக அரேபிய நாடுகளிலும் ஆப்கனிஸ்தானிலும் துருக்கியிலும் ஜெகஜ்ஜோதியாக நடைபெற்று வந்த ஒரு வியாபாரம். அடிமைகளாக விற்கப்படும் அழகிகளை வாங்கி, ஆட்சியாளர்களின் அந்தப்புரத்துக்கு விநியோகம் செய்ய ஏஜெண்டுகள் இருந்தார்கள். சுல்தானின் மனம் மகிழும்படி பேரழகிகளைப் பிடித்துக் கொடுத்தால் 'கமிஷன்' ஓஹோ!

ராஜ குடும்பத்துப் பெண்ணொருத்தி, ஒரு நவாபையோ, சுல்தானையோ கல்யாணம் செய்துகொள்ளும்போது, அவளோடு சீதனமாக ஏகப்பட்ட அடிமைப் பெண்கள் அனுப்பி வைக்கப்பட்டனர், புகுந்த வீட்டு அந்தப்புரத்துக்கு. போரில் தோற்றுப்போன ஆட்சியாளரின் அழகிய மகள், தங்கை, இளம் மனைவிகள்கூட சுல்தான்களின் அந்தப்புரத்துக்குக் கொண்டு வரப்பட்டார்கள். பின் கட்டாய மதமாற்றம், வலுக்கட்டாயத் திருமணம் எல்லாம் நடந்தன.

சுல்தான் இல்துமிஸ் (Iltutmish, 1210 - 1236). துருக்கியைச் சேர்ந்தவர். டெல்லியில் சுல்தான்களின் ஆட்சியைத் தோற்றுவித்த குதுப்-உத்-தீன் ஐபெக்கின் மருமகன். ஒருமுறை தன் அந்தப்புரத்தில் கண்களை மூடிப் படுத்திருந்தார் இல்துமிஸ். துருக்கியைச் சேர்ந்த அடிமைப் பெண் ஒருத்தி அவரது தலையை வாசனைத் தைலத்தால் மசாஜ் செய்துகொண்டிருந்தாள். அவளது விசும்பல் சத்தம் இல்துமிஸுக்குக் கேட்டது. அவளது கண்களில் இருந்து வழிந்த கண்ணீர் அவர்மேல் விழுந்தது. அவளைப் பார்த்தார். 'ஏன் அழுகிறாய்?'

'என் அண்ணன் நியாபகம் வந்துவிட்டது. அவனுக்கும் இளவயதிலேயே தங்களைப்போலவே தலையில் வழுக்கை இருக்கும். நானும் அவனும் சிறுவயதிலேயே சந்தையில் அடிமைகளாக விற்கப்பட்டுவிட்டோம்.'

இல்துமிஸ், அவளது பூர்விகத்தை மேலும் விசாரித்தார். அதிர்ந்துபோனார். சந்தையில் அடிமையாக விற்கப்பட்ட 'அண்ணன்' அவர்தான். பின்பு அந்தப்புரத்தில் ஒரு பாசமலர் காட்சி அரங்கேறியது.

அக்பர் காலத்தில் முகலாய அந்தப்புரங்களை நிரப்புவதற்காகவே நிறையப் பெண்கள் போர்க் கைதிகளாகப் பிடிக்கப்பட்டார்கள். சித்தூர். ராஜபுத்திரர்களின் வலுவான கோட்டை. 1568 பிப்ரவரியில் முகலாயப் படைகள் அரும்பாடுபட்டு சித்தூர் கோட்டையை வீழ்த்தின. எஞ்சியிருக்கும் ராஜபுத்திர ஆண்களைக் கொல்லவும் பெண்களைச் சிறைபிடிக்கவும் முகலாயப் படையினர் கோட்டைக்குள் நுழைந்தார்கள். அதிர்ந்து நின்றார்கள்.

இறந்த ஆண்களின் சடலங்கள் எரியும் தீயில் மனைவிகள் குதித்துக் கொண்டிருந்தார்கள் (சதி). இளம்பெண்கள் எல்லாம் பொதுவாக ஓரிடத்தில் தீ மூட்டி அதற்குள் வரிசையாக விழுந்து கொண்டிருந்தார்கள் (ஜாஹர்). பிடிப்பட்ட பெண்களும் முகலாய வீரர்களை நகத்தாலும் பற்களாலும் தாக்கினார்கள். வெறிகொண்ட முகலாய வீரர்கள், பெண்களைக் கொன்று குவித்தார்கள். மானத்தைப் பெரிதாக எண்ணும் ராஜபுத்திரப் பெண்கள், முகலாய அந்தப்புரத்துக்கு அடிமையாகச் சென்றுவிடக்கூடாது என்ற நோக்கத்திலேயே இப்படியெல்லாம் நடந்து உயிரை மாய்த்துக் கொண்டார்கள். சித்தூரிலிருந்து ஒரு ராஜபுத்திரப் பெண்ணைக்கூட முகலாய வீரர்களால் அந்தப்புரத்துக்கு அடிமையாகக் கொண்டுசெல்ல முடியவில்லை.

சுல்தானா. அந்தப்புரத் தலைவியின் பதவிக்குரிய பெயர். அங்கு புதிதாகக் கொண்டுவரப்படும் அழகிகளுக்கும் அடிமைகளுக்கும் எப்படி நடந்துகொள்ள வேண்டும், எதெல்லாம் செய்யக்கூடாது என்று சுல்தானாதான் வகுப்புகள் எடுப்பார். அழகிகளுக்கு அதுவரை என்ன பெயர் இருந்தாலும் அதை மறந்துவிட வேண்டும். அந்தப்புரத்துக்குள் வந்தபின் சுல்தான் உதடு இனிக்க அழைக்கும்படியான புதிய பெயர்கள் வைக்கப்படும். அப்படிச் சூட்டப்பட்ட



19ம் நூற்றாண்டு அந்தப்புரப் பெண்கள் புகைப்படம்

பொதுவான பெயர்கள் - சலோனி, குலாப், பாஷந்தி, கேட்கி, ஷோஷன், மதுமதி, யாஸ்மின், சுகந்தாரா, குல் அனார், கேசர், கஸ்தூரி, சம்பா, நர்கீஸ்.

அந்தப்புரத்துக்குள் பிடித்துக் கொண்டு வரப்படும் இந்துப் பெண்களுக்கு மதமாற்றம் என்பது கட்டாயம். ஆனால் சின்னதாக ஒரு சலுகை. பெயரை மாற்றிக் கொள்ள வேண்டாம். அடிமைகளுக்கும் 'சாதாரண' பொதுப்பெயர்கள் சூட்டப்பட்டன. நய்கி, சம்பய்லி, சுபாதி, கிஸ்மிஸ், ரங்மாலா, பிஷ்தா, கோய்ல், அகாநக், குலால் - இப்படி.

சுல்தான் ஏதாவது ஒரு தினத்தில் யாராவது ஒரு குறிப்பிட்ட பேகத்தோடு பொழுதைக் கழிக்கச் செல்லுவார். அந்த நேரத்தில் பேகத்தோடு இருக்கும் அடிமைப்பெண்களில் யாராவது ஒருத்தி மேல் சுல்தானின் கடைக்கண் பார்வை படலாம். அது கண நேரத்தில் கடைந்தெடுத்த காதலாகவும் மாறலாம். அந்த அடிமையழகியோடு சுல்தான் கடைவிரிக்க, பேகம் பேச்சு மூச்சற்றுப் போவதுண்டு. அந்தப் பொழுதில் சுல்தானுக்கு 'வாக்கப்பட்ட' அடிமையழகி, பின்னர் பேகத்தால் தண்டிக்கப்படுவதுண்டு. அடிமை சாமர்த்தியசாலி என்றால், சுல்தானின் பேகமாகவோ அல்லது அந்தப்புரத்தின் அதிகார மையமாகவோ ஆன கதைகளும் உண்டு.

ஷா துர்கன். சுல்தான் இல்துமிஸின் அந்தப்புரத்துக்கு அடிமையாக நுழைந்தவள். பின் தனது சாதுர்யத்தால், சுல்தானின் மனம் கவர்ந்து, அடிமைகளின் தலைவியாக மாறிய கில்லாடிப் பெண். அந்தப்புரத்தில் அவள் வைத்ததுதான் சட்டம். முசோலினியின் முப்பாட்டியாகத் திகழ்ந்த ஷா துர்கன், இல்துமிஸின் மறைவுக்குப் பிறகு, அவரது பாசத்துக்குரிய பேகம்களை எல்லாம் அடாவடியாகக் கொடுமைப்படுத்தினாள் என்றும், தனது மகனை அரியணை ஏற்றப் பெரும் முயற்சி செய்தாள் என்றும் செய்திகள் உண்டு.

ஔரங்கசீபின் பேரனான ஜஹந்தர் ஷாவின் அந்தப்புரத்தில் ஒரு சொர்ணாக்கா இருந்தாள். அவள் பெயர் ஷோஹ்ரா (Zohra). தெருவில் பழம் விற்றுப் பிழைப்பு ஓட்டிக் கொண்டு இருந்தவள். வாயாடி. வம்பு பிடித்தவள். ஆண்கள் அவளை எளிதில் நெருங்க முடியாது. தோழி ஒருத்தியின் மூலம் முகலாயர்களின் அந்தப்புரத்துக்குள் நுழைந்தாள். மடக்க வேண்டியவர்களை மயக்க வேண்டியவிதத்தில் மயக்கினாள். அதிகாரத்தைக் கைப்பற்றி ‘அந்தப்புரத் தலைவி’ ஆனாள். அவள் நினைத்தால் வெளியே எங்கு வேண்டுமானாலும் சென்று வரலாம்.

ஒருமுறை அவள் எங்கோ வெளியே சென்றுவிட்டு யானை மீதேறி திரும்பிக் கொண்டிருந்தாள். முன்னேயும் பின்னேயும் அவளுக்கான காவலர்கள். அது ஓர் ஒற்றையடிப்பாதை. எதிரில் ஔரங்கசீபிடம் தளபதியாக இருந்த (ஹைதராபாத் சமஸ்தானத்தை உருவாக்கிய) சின் குலிச் கான் (Chin Qulich Khan), தனது வீரர்களுடன் குதிரையேறி வந்தார். யாராவது ஒருவர் பின்வாங்கி வழிவிட்டாக வேண்டிய சூழல். ஷோஹ்ரா கத்தினாள். ‘அடேய், இப்படி வழியை மரிச்சிக்கிட்டு நிக்குறியே. நீ என்ன குருடனுக்குப் பொறந்தவனா?’

அவ்வளவுதான். குலிச் கான் சீற, அவரது வீரர்கள், ஷோஹ்ராவைப் புரட்டி எடுத்து விட்டார்கள். இஸ்லாமிய அந்தப்புரங்களில் ஷோஹ்ரா, ஷா துர்கன் போல அடாவடிப் பெண்கள் நிறையவே இருந்தார்கள். அவர்களுக்கு எதிர்மறையான பெண்களும் இருந்தார்கள். அதாவது எல்லாத் துன்பங்களையும் ஏற்றுக்கொண்டு, மனத்துக்குள்ளேயே புழுங்கி மன நோயாளியாக இறந்து போனவர்கள். ஓபியத்தில் மூழ்கி கொஞ்சம் கொஞ்சமாகச் செத்த வர்கள், வெறுப்பில் தற்கொலை செய்துகொண்டவர்கள், பயத்தில் தங்களை அகோரமாக்கிக் கொண்டவர்கள் இப்படிக் கொடுமைகள் பலவிதம். சீண்டப்படாத பெண்கள், சக பெண்களையே ஜோடியாக்கிக் கொள்வதும் சகஜமாகவே நடந்தது.

சரி, பஹவல்பூர் அந்தப்புரத்தில் கேத்ரீனை அம்போவென விட்டுவிட்டு நாம் வந்துவிட்டோம். ஆனால் நவாப் ஐந்தாம் சாதிக் முகமத் கான் அவளை விடவில்லை. காதலைக் கொட்டத்தான் செய்தார். ஐந்து பிள்ளைகள் பிறக்கும்வரை. அப்புறம் அவள் என்ன ஆனாள் என்பது குறித்த தகவல்கள் இல்லை. ஆனால் நவாப், புதிதாக இன்னுமொரு ஐரோப்பியப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார், நான்காவதாக. அவரது லீலைகள் அடங்கவில்லை.



# 165

# அந்தப்புர அவுட்டிங்!

'சுற்றுலாவுக்குச் செல்கிறேன். திரும்பிவர சிலநாள்கள் ஆகும்.'

பஹவல்பூர் நவாப் ஐந்தாம் சாதிக் முகமத் கான் இப்படித்தான் தனது முக்கிய மந்திரிகளிடம் பூடகமாகச் சொல்லிவிட்டுக் கிளம்புவார். ஆனால் நவாப் செல்வது வெளியூருக்கோ, வெளிநாட்டுக்கோ அல்ல. அந்தப்புரத்துக்கு.

நவாப், மஜாவாகக் கிளம்பி அரண்மனையின் வாசலுக்கு வருவார். ரோல்ஸ்-ராய்ஸ் தயாராக நிற்கும். காருக்கு முன்னும் பின்னும் ஒட்டகப்படை அணிவகுக்க ஊர்வலம் ஆரம்பமாகும். அந்தப்புரம் ஒன்றும் வெகுதொலைவில் எல்லாம் இருக்கவில்லை. அரண்மனைக்குப் பின்புறத்தில்தான் இருந்தது. அங்கு செல்வதற்குத்தான் இந்த பகுமான ஊர்வலம்.

நவாபின் வருகை அறிந்து அந்தப்புரம் களைகட்டிக் காத்திருக்கும். சுகந்த மணம் காற்றில் மிதந்துவர உள்ளே நுழைவார் நவாப். வெளியே வரக் குறைந்தபட்சம் மூன்று நாள்கள், அதிகபட்சம் ஒருவாரம்கூட ஆகும்.

ப்ரௌனிக்கு ஐரோப்பியச் சிட்டுகள்மீது மோகம் அதிகமல்லவா. ஆகவே அவர்களுக்கென அந்தப்புரத்தில் தனி ஒரு பகுதியைப் பிரித்திருந்தார். அந்தப் பெண்களுக்கான வசதிகள் முதற்கொண்டு வேலையாள்கள் வரை எல்லாமே தனிரகம். அங்கே சிறைபட்டிருந்த ஐரோப்பியப் பெண்கள், பிற பெண்கள் வசிக்கும் அந்தப்புரப் பகுதிகளுக்குள் வர முடியாது. அவ்வளவு பாதுகாப்பு ஏற்பாடுகள்.

ப்ரௌனி லண்டனுக்குச் செல்லும்போதெல்லாம், வியாபாரிகள் அவரைத் தேடிப் படையெடுப்பார்கள். நகைகள், உடைகள், அலங்காரப் பொருள்கள். அப்புறம் அந்தப்புரத்தில் பெண்கள் பயன்படுத்தும் 'சுய உபகரணங்கள்.' எல்லாவற்றையும் வாங்கிக் குவிப்பார். பஹவல்பூருக்கு அவர் திரும்பும்போது எடுத்துவரும் லக்கேஜ்களின் எண்ணிக்கை கணக்கி லடங்காது. அந்தப்புரத்துக்குச் சென்று பெட்டிகளை அடுக்குவார். அவ்வளவுதான் ஆசை நாயகிகள் எல்லாம் பல திசைகளிலிருந்தும் பாய்ந்து வருவார்கள். 'இது எனக்குத்தான்.' 'இதை நான் தரவேமாட்டேன்.' அடி, உதை, தள்ளுமுள்ளு, பிக்கல், பிடுங்கல் சகலமும் நடக்கும்.

ஐரோப்பியப் பெண்களுக்கான மினி உடைகள், இன்ன பிற கவர்ச்சிப் பொருள்களைத் தனி யாக வாங்கி வந்திருப்பார். கொடுத்து மகிழ்வார். நவாபின் பாசமழையில் நனைந்த பேகம்கள், ஒருமுறை அணிந்த உடைகளை மீண்டும் திரும்பிப்பார்த்ததுகூட இல்லை. அந்த உடைகள் எல்லாம் பிற அழகிகளுக்கு அல்லது நடனப்பெண்களுக்கு. அவர்களும் கழித்துக் கட்டிய உடைகள் அடிமைகளுக்கு.

பஹவல்பூர் அடிமைப்பெண்கள் மீதும் நவாப், எப்போதாவது கருணை காட்டியதுண்டு. எப்போதாவது அடிமைப்பெண்களுக்கு நவாபிடம் பேசும் சந்தர்ப்பம் வாய்க்கும். 'பெருமதிப்பிற்குரிய பேரரசரே! தாங்கள் சம்மதித்தால், ஒருவரைத் திருமணம் செய்துகொள்ள ஆசைப்படுகிறேன்.' அடிமைப்பெண்கள் விண்ணப்பம் வைப்பார்கள். நவாப் நல்ல மன நிலையில் இருந்தால் சம்மதம் கிடைக்கலாம்.

சரி, அடிமைப்பெண்களை யார் திருமணம் செய்துகொண்டார்கள்? அடிமைப் பெண்களுக் கென்று பிறக்கும் ஆண் வாரிசுகள். அவர்களும் வளர்ந்து அரண்மனையிலேயே அடிமைகளாக இருந்தார்கள். இப்படி அடிமைகள் தங்களுக்குள்ளேயே மண உறவுகளை ஏற்படுத்திக் கொண்டார்கள். 'அடிமை வாரிசுகளை' உருவாக்கினார்கள்.

நவாப், தனது அன்றைய பொழுதைக் கொண்டாடுவதற்கு, பெண்களைத் தேர்ந்தெடுக்கும் முறை ஒன்றைக் கடைபிடித்தார். அழகிகள் எல்லாம் வரிசையாக நிற்பார்கள். (மொத்தம் 390 பேர் என்றொரு குறிப்பு உண்டு.) நவாப், புன்னகை குறையாமல் சில நிமிடங்கள் நோட்டமிடு வார். பின் கைத்தடி ஒன்றை எடுத்துக் கொண்டு நடக்க ஆரம்பிப்பார். அவர் அருகில் வரும் போது பெண்கள் ஓரடி துள்ளிக்குதித்து அவரை நெருங்கவேண்டும். நவாப், அந்தப்பெண்ணின் மீது இஷ்டமில்லாவிட்டால் கைத்தடியால் விலக்கிவிட்டு விடுவார். விலக்கப்படாத பெண்கள் அன்றைய விளையாட்டுக்கு உண்டு.

வருடம் முழுவதும் தன்னுடன் அந்தப்புரத்துக்குள் 'டேட்டிங்' செய்யும் பெண்களுக்கு வருடத்தில் ஒருநாள் மட்டும் 'அவுட்டிங்' செல்ல அனுமதி அளித்திருந்தார் நவாப். அன்றைய தினத்தில் பஹவல்பூர் மக்களுக்கெல்லாம் திண்டாட்டம்தான். காலையிலேயே முரசு அறிவிப் பாளர்கள் கூவ ஆரம்பித்துவிடுவார்கள். 'இதனால் சகலமானவர்களுக்கும் நவாப் இட்டுள்ள கட்டளை என்னவென்றால், அந்தப்புர பெண்கள் நகர்வலம் வர இருப்பதால் யாரும் வீட்டைவிட்டு வெளியே வரக்கூடாது என்று எச்சரிக்கப்படுகிறார்கள்...'

அந்தப்புரத்திலிருந்து பெண்களை நிரப்பிக் கொண்டு வாகனங்கள் கிளம்புவதற்கு அரைமணி நேரத்துக்கு முன்னதாகவே தெருவெல்லாம் காவலர்கள் விசில் ஊதிக் கொண்டே

செல்லுவார்கள். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உள்பட எல்லோரும் வீட்டுக்குள் புகுந்து கதவு, சன்னலை எல்லாம் சாத்திக் கொள்ள வேண்டும். உள்ளிருந்து இண்டு, இடுக்குகள் வழியாக எட்டிப்பார்க்கவெல்லாம் முயற்சி செய்யக்கூடாது. தரையோடு தரையாகக் கவிழ்ந்து படுத்துக்கொள்ள வேண்டும். மறைவிடத்தில் இருந்துகொண்டு அந்தப்புரப் பெண்களைப் பார்க்க நினைத்து பாதாளச் சிறையில் அடைபட்டவர்கள் ஏராளம்.

சாலையில் வண்டிகள் வரும் வேளையில் காவலுக்கு நிற்பவர்களும் முதுகைக் காட்டிக் கொண்டுதான் நிற்க வேண்டும். என்ன கொடுமை என்றால் வண்டிக்குள்ளிருக்கும் பெண் களும் வெளிப்புறத்தை பார்க்கமுடியாத அளவுக்குக் கனமான திரைச்சீலைகள் தொங்கும். வண்டி ஓட்டுபவர்கூட உள்ளிருக்கும் பெண்களைப் பார்க்கமுடியாது.

வண்டிகள் மெதுவாக உயர்ந்த சுவர்களால் சூழப்பட்ட ரயில் நிலையத்தை அடையும். நேராக நடைமேடையில் சென்று நிற்கும். அங்கு சிறப்பு ரயில் ஒன்று காத்திருக்கும். ஓட்டிகள் வண்டியை நிறுத்திவிட்டு திரும்பிப் பார்க்காமல் கண்காணாத இடத்துக்கு ஓடிவிட வேண்டும். பிறகு அந்தப்புர பெண்கள் மெதுவாக இறங்கி ரயில் பெட்டிகளில் ஏறிக்கொள்வார்கள். கதவு களைச் சாத்திக் கொள்வார்கள். ரயில் கிளம்பும். எங்கே?

அருகிலுள்ள ஓர் ஊருக்கு. அங்கே ஓர் அரண்மனை. அந்த அரண்மனைக்குப் பெண்களை அழைத்துச் செல்வதற்கும் மேற்படி அடாவடி நடவடிக்கைகள் உண்டு. அங்கு சென்று ஓரிரு நாள்களில் தங்கும் பெண்கள், மீண்டும் அதே வழியில் பஹவல்பூர் அந்தப்புரத்துக்குத் திரும்பி விடுவார்கள். இதுதான் நவாப் அனுமதித்த அவுட்டிங்.

மூன்றாவதாக ஓர் ஐரோப்பியப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார் ப்ரௌனி. அப்புற மும் மூன்றோ, நான்கோ செய்துகொண்டதாகச் சொல்லுகிறார்கள். இருந்தாலும் ப்ளேபாய் ப்ரௌனியால் நீண்ட காலத்துக்கு நீடித்து விளையாட முடியவில்லை. முதுமை முழுவதும் ஆட்கொள்வதற்கு முன்பாகவே அவரை 'இயலாமை' சூழ்ந்துகொண்டது. கை, கால் மூட்டு வலிகளோடு சேர்ந்து பலநாள்களாகப் பல்வலியும் படுத்தியது.

விருந்து ஒன்றில் கலந்துகொண்டு ஏடாகூடமாக எதையோ சாப்பிட்டு, பல்வலி பயங்கரமாகப் படுத்தவும், லாகூர் பல் மருத்துவக் கல்லூரி மருத்துவமனைக்கு ஓடினார் (1946). டாக்டர் மன்சந்தா என்பவர், நவாபின் பற்களைச் சோதித்தார். 'இரண்டு பற்களைப் பிடுங்கணும். பயமில்லை. மயக்கமருந்து கொடுத்துக்கலாம்' என்றார்.

நவாப் ஆடிப்போய்விட்டார். என்னது மயக்க மருந்தா? அதுல நான் செத்துப்போயிட்டா என்ன பண்ணுறது? 'அதெல்லாம் முடியாது' என்று மறுத்தவர் ரொம்ப நேரம் யோசித்தார். பின்பு தன் வேலைக்காரன் கீராகான் என்பவனை அழைத்தார். 'டாக்டர், மயக்க மருந்தெல்லாம் கொடுக்காம, இவனுக்கு ரெண்டு பல்லைப் பிடுங்கிக் காட்டுங்க. வலிக்கக்கூடாது. சரியா?' என்றார்.

டாக்டருக்கு அது கஷ்டகாலம். நடுங்கியபடியே இருந்த இருபது வயது வேலைக்காரனின் நல்ல பல் ஒன்றைப் பிடுங்கினார். அவன் அலறித்துடித்தான். அவ்வளவுதான். வெகுண் டெழுந்தார் நவாப். டாக்டரின் பின்புறத்தில் ஒரே உதை. அவர் தள்ளிப்போய் விழுந்தார். 'யோவ், ஒரு வேலைக்காரன் பல்லை வலியில்லாமப் புடுங்கத் தெரியல, நீயெல்லாம் எப்படி ஒரு நவாபோட பல்லைப் புடுங்குவ?' - என்று பிளிறிவிட்டு அங்கிருந்து வெளியேறினார்.



இந்தியப் பிரிவினை

அடுத்த வருடமே நவாபின் அதிகாரப் பல்லொன்று பிடுங்கப்பட்டது. இந்தியாவுக்குச் சுதந்தரம். பிரிவினை பற்றிய பேச்சுகள் நடந்தபோது பஹவல்பூர் இந்தியாவுக்கா, பாகிஸ்தானுக்கா என்ற கேள்வி எழுந்தது. நவாப் தெளிவாகச் சொல்லிவிட்டார். 'பாகிஸ்தான் முன்வாசல் கதவைத் திறந்து வைத்துக்கொண்டு காத்திருக்கிறது. ஒரு நாகரிகமான மனிதன் வீட்டுக்குள் முன்வாசல் வழியாகச் செல்வதையே விரும்புவான்.'

இந்திய சுதந்தரத்துக்குச் சிலமாதங்கள் முன்பே பஹவல்பூரிலிருந்த இந்துக்கள், சீக்கியர்கள் எல்லாம் பஞ்சாபை நோக்கி இடம்பெயர ஆரம்பித்திருந்தார்கள். பஹவல்பூரின் அரண்மனையிலும் அந்தப்புரத்திலும் காவல் பணியில் இருந்த ராஜபுத்திரர்கள் பலரும் பணியிலிருந்து விலகி ராஜஸ்தானுக்கு வந்திருந்தார்கள். பிரிவினை நிகழ்ந்த சமயத்தில் நடந்த கோரச் சம்பவங்களில் பஹவல்பூரிலும் பஞ்சாபின் மேற்குப் பகுதிகளிலும் அறுபதாயிரம் பேர் கொல்லப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்தியாவிலிருந்து இடம்பெயர்ந்த இஸ்லாமியர்கள் பெருமளவு சென்று ஒதுங்கிய இடம் பஹவல்பூர்தான். சுதந்தர பாகிஸ்தானின் இரண்டாவது பெரிய மாகாணமும் அதுவே.

அதுநாள்வரை நவாபாக இருந்த ஐந்தாம் சாதிக் முகமத் கான் அப்போது 'அமீர்' ஆக்கப் பட்டிருந்தார். பஹவல்பூர் பாகிஸ்தானோடு இருந்தாலும் சுயாட்சி அதிகாரம் கொண்ட தனி மாநிலமாக இருந்தது. 1949. ஐந்தாம் சாதிக், அரியணை ஏறிய வெள்ளி விழா ஆண்டு அது. கொண்டாட்டங்களுக்குக் குறைவில்லை.

அமீர் அலங்காரங்களோடு பொதுமக்களுக்குக் காட்சி கொடுத்தார். தங்கம், ப்ளாட்டினம், பிற உயர்ரக கற்களால் செய்யப்பட்ட கீரிடம் ஒன்று அவர் தலையில் மினுமினுத்தது. (அதன்

அன்றைய மதிப்பே முப்பது லட்சம் டாலர்.) பல இடங்களிலிருந்தும் நாடுகளிலிருந்தும் வந்திருந்த பிரமுகர்கள் தங்கக் காசுகளை அமீரின் காலில் சமர்ப்பித்து மரியாதை செய்தார்கள்.

அமீர் ஐந்தாம் சாதிக், வெள்ளி விழா வீர உரையாற்றினார். இந்தியாவோடு இருக்கும்போது அவருக்குப் பிரிட்டிஷார் வழங்கியிருந்த 17 குண்டு மரியாதையை 19ஆக உயர்த்திக் கொண்டார். ஆட்டம் தொடர்ந்தது. அடுத்த சில வருடங்களுக்கு மட்டும்.

1954. ஜெனரல் அயூப் கான் (Ayub Khan), பாகிஸ்தானிலிருந்த சமஸ்தானங்களை இணைப்பதில் தீவிரமாக இறங்கியிருந்தார். 'நீங்களாக வந்து இணைந்துகொள்கிறீர்களா அல்லது ராணுவத்தை அனுப்பவா?' அமீருக்கு மனம் ஒப்புக்கொள்ளவில்லை. அங்கு நடந்துக் கொண்டிருந்த ராணுவ ஆட்சியோடு மல்லுக்கட்டவும் முடியாது. வேறுவழியின்றி இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டார். 1955ல் பஹவல்பூர், மேற்கு பஞ்சாப் மாகாணத்தில் ஒரு பகுதியானது.

அதிகாரமிழந்த ஐந்தாம் சாதிக், பஹவல்பூரை உதறினார். தனது பேகம்கள், ஆசைநாயகிகள், பிள்ளைகளை எல்லாம் விட்டுவிட்டு, முடிந்தவரை செல்வங்களை மட்டும் எடுத்துக்கொண்டு இங்கிலாந்துக்குக் குடிபெயர்ந்தார். 1966 மே 24ல் லண்டனில் இறந்தார். அவரது உடல் தெராவர் கோட்டைக்குக் கொண்டுவரப்பட்டது. அங்குதான் இறுதிச் சடங்குகள் நடந்தன. ஒவ்வொரு வருடமும் பஹவல்பூர் மக்கள் நவாப் ஐந்தாம் சாதிக்கின் நினைவு தினத்தை மறப்பதில்லை. காரணம் அன்று பஹவல்பூருக்குப் பொது விடுமுறை.

தற்போது தெராவர் கோட்டை கொஞ்சம் கொஞ்சமாக சிதைந்து வருகிறது. பாகிஸ்தானின் தாஜ்மஹாலான 'நூர் மஹால்', ராணுவ அலுவலகமாக இயங்குகிறது. வெளி ஆண்களின் மூச்சுக்காற்றுகூட உள்ளே நுழையமுடியாதபடி பாதுகாப்புகளுடன் விளங்கிய பஹவல்பூரின் அந்தப்புரத்துக்குள் 1955ல் ராணுவம் நுழைந்தது. அங்கே வீரர்கள் அதிக எண்ணிக்கையில் கைப்பற்றிய பொருள், பெண்கள் பயன்படுத்திய சுய உபகரணங்கள்தாம்.

# ஜோத்பூர்

• ராஜபுத்திர சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1459
• ஆட்சி செய்தவர்கள் : ரதோர் பரம்பரை • முதல் மன்னர் : ராவ் ஜோதா
• 17 குண்டு மரியாதை.



# கிருஷ்ணகுமாரி, வயது 16!

ராமர் தன் வில்லை எடுத்தார். அம்பைப் பொருத்தினார். எய்தார். சொய்ங் எனக் காற்றைக் கிழித்துக்கொண்டு கிளம்பிய அம்பு, நெருப்பைக் கக்கிக்கொண்டே பயணத்தைத் தொடர்ந்தது. அம்பு சென்று தைத்த இடம் ஒரு கடல். தரம்குல்யா என்று அந்தக் கடலுக்குப் பெயர். அம்பிலிருந்து பரவிய தீ, கடலை எரிக்க ஆரம்பித்தது. நீர் வற்றி, அந்த இடம் பெரும்பாலைவனம் ஆனது.

ராமர் எதற்கு அம்பை எடுத்துவிட்டார்? இதைச் சொன்னது வால்மீகியா? துளசிதாசரா? போன்ற ஆராய்ச்சிக்கெல்லாம் செல்ல வேண்டாம். இது புராணக்கதை. கதையில் சொல்லப்படும் அந்தப் பாலைவனம், இன்றைய ராஜஸ்தானும் அதைச் சுற்றியுள்ள பாலைவனப் பிரதேசங்களும். மருதார், மரு மண்டல், மருவார், மரு தேஷ், மார்வார் இவையெல்லாம் அந்தப் பிரதேசங்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு வழங்கப்பட்ட பெயர்கள். நாம் மார்வாரை மட்டும் எடுத்துக்கொள்வோம். ராஜஸ்தானின் பெரிய சமஸ்தானமான ஜோத்பூரின் இன்னொரு பெயர்தான் மார்வார். இனி, ஜோத்பூர் உருவான வரலாறு.

மண்டூர். ராஜஸ்தானிலிருந்த ஒரு சிறிய பிரதேசம் (ஜோத்பூரிலிருந்து எட்டு கி.மீ. தொலைவிலுள்ளது). 1427ல் அதனை ஆட்சி செய்தவர் ரதோர் பரம்பரையில் வந்த ராவ் ரண்மால் (Rao Ranmal). அருகிலிருந்த இன்னொரு ராஜ்ஜியம், மேவார். அதனை ஆண்டு வந்தவர் ரானா மோகல் (Rana Mokal). ரண்மாலும் மோகலும் நண்பர்கள். மோகலுக்கு நிர்வாகத்தில் உதவிசெய்தார் ரண்மால். அரசியல் சதி ஒன்றில் மோகல் கொல்லப்பட்டார் (1433). மோகலில் மகனான

கும்பா (Kumbha) சிறுவனாக இருந்ததால், ரண்மாலே மேவாரின் ஆட்சிப்பொறுப்பையும் சேர்த்துக் கவனிக்கலானார்.

இளைஞனான பின் கும்பாவுக்கு, தன் தந்தையின் நண்பரது கட்டுப்பாட்டில் இருக்கப் பிடிக்க வில்லை. எங்கே தான் அரியணை ஏற ரண்மால் தடையாக இருப்பாரோ என்ற பயம். சதிவலை ஒன்று பின்னப்பட்டது. சித்தூரில் வைத்து ரண்மால் கொலை செய்யப்பட்டார் (1438). ரண்மாலின் இருபத்துநான்கு மகன்களில் ஒருவரான இளவரசர் ராவ் ஜோதாவும் (Rao Jodha) அப்போது சித்தூரில்தான் இருந்தார். 450 குதிரை வீரர்களுடன் மண்டூரைத் தக்கவைத்துக் கொள்ளக் கிளம்பினார். வழியிலேயே எதிரிகளுடன் மோதவேண்டிய சூழல். பலத்த இழப்பு. ராவ் ஜோதா மண்டூரை அடையும்போது அவருடன் இருந்தவர்கள் ஏழுபேர்தான். கும்பாவின் படைகள் மண்டூரை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தன. ராவ் ஜோதா, வேறுவழியின்றி அங்கிருந்து தப்பித்துச் சென்றார்.

கும்பா, மேவாரின் ராணாவாகப் பதவியேற்றார். கூடவே மண்டூரையும் கைப்பற்றிக்கொண்டார். ராவ் ஜோதாவின் வனவாசம் தொடர்ந்தது. மார்வாருக்கு அருகே ஓரிடத்தில் தலைமறைவாக இருந்தார். மண்டூரைக் கைப்பற்ற அவர் எடுத்த பல முயற்சிகள் தோல்வியை மட்டுமே சந்தித்துக் கொண்டிருந்தன. வருடங்கள் கழிந்தன.

ஓர் இரவில் களைப்புடன் ஒரு விவசாயியின் குடிசை வாசல் முன்சென்று தன் குதிரையை நிறுத்தினார் ராவ் ஜோதா. கடும் பசி. 'ஏதாவது சாப்பிடக் கிடைக்குமா?' பணிவுடன் கேட்டார். விவசாயிக்கும் அவரது மனைவிக்கும் வந்திருப்பவர் யாரென்று தெரியவில்லை. 'கொஞ்சம் நேரம் இருங்க' - என்று சொல்லிவிட்டு விவசாயியின் மனைவி அடுப்பை மூட்டி னாள். கிச்சடி (உப்புமா) தயாரானது.

வட்டு ஒன்றில் அதைக்கொட்டி, ஜோதா முன் நீட்டினாள். கடும்பசியில் இருந்த அவர், வட்டிலிருந்த உப்புமாவின் நடுப்பகுதியில் கையை வைத்தார். கடும் சூடு. அலறி, விரல்களை உதறினார். அந்தப் பெண் தலையிலடித்துக் கொண்டாள். 'என்னப்பா நீ, மண்டூர் இளவரசர் மாதிரியே முட்டாளா இருக்கியே? அவரும் இதே தப்பைத்தான் பண்ணுறாரு. வட்டுல ஓரமா இருக்குற உப்புமாதான் கொஞ்சம் ஆறியிருக்கும். சூடா இருக்குற நடுப்பகுதியில யாராவது கையை வைப்பாங்களா?'

ராவ் ஜோதாவுக்குப் பொட்டில் அறைந்தாற்போல் இருந்தது. அதுவரை அவர் செய்துவந்த தப்புகளை ஒரே வாக்கியத்தில் சுட்டிக்காட்டிய அந்தப் பெண், தெய்வமாகத் தெரிந்தாள். பசியும் ஆறி, மனத்தெளிவும் பெற்று அந்தக் குடிசையிலிருந்து வெளியே வந்தார். மையத்தி லிருந்த மண்டூரைக் கைப்பற்றும் நேரடி முயற்சிகளை விட்டார். கும்பாவின் கட்டுப் பாட்டிலிருந்த மண்டூரைச் சுற்றியிருந்த பிற பகுதிகளைக் குறிவைத்தார். வெற்றிகள் கிடைக்க ஆரம்பித்தன. 1453ல் மண்டூரும், அதைச் சுற்றியிருந்த பகுதிகளும் ராவ் ஜோதா வசமானது.

'இந்த இடம் பாதுகாப்பானதல்ல. உன் தலைநகரை மாற்றிக்கொள். அருகிலுள்ள உயரமான இடத்தில் கோட்டை கட்டிக்கொள்' ரதோர் பரம்பரையினரது குலதெய்வமான சாமுண்டீஸ்வரி தேவி, ராவ் ஜோதாவின் கனவில் கழுகு வடிவில் வந்து செய்தி சொன்னதாகச் சொல்வார்கள். ஆகவே ராவ் ஜோதா அருகிலிருந்து ஒரு பகுதிக்கு இடம்பெயர்ந்தார். அங்கே பரந்துவிரிந்து கிடந்த பாவுர்சீரியா (Bhaurcheeria) என்ற உயரமான மலைமேல் கோட்டை

ஒன்றைக் கட்டும்பணி ஆரம்பமானது. மலையைச் சுற்றிலும் நகரம் ஒன்று உருவானது. அது ஜோதாஹர் என்ற ஜோத்பூர் (1459).

தனது எழுபத்து மூன்றாவது வயது வரை ஜோத்பூரை சுபிட்சமாக ஆண்ட ராவ் ஜோதா, இறந்துபோனார் (1489). கோட்டை கட்டும்பணி அதற்குப்பின்னும் சுமார் இருநூறு ஆண்டுகள் தொடர்ந்தன. ஒவ்வொரு பகுதியாக, கொஞ்சம் கொஞ்சமாகக் கோட்டை வலுப்பெற்றது. அந்தக் கோட்டைக்கு வைக்கப்பட்ட பெயர் மேஹ்ரங்கர் (Mehrangarh) கோட்டை. அங்கு சாமுண்டீஸ்வரிக்குக் கோயில் ஒன்றும் கட்டப்பட்டது.

ஜோதா ராவுக்குப் பின் அவர் மகன் ராவ் சாதெல் ஆட்சிக்கு வந்தார். அதற்குபின் அடுத்தடுத்த வாரிசுகள், சகோதரர்கள், தத்தெடுக்கப்பட்டவர்கள். ஜோத்பூரை ஆட்சி செய்தவர்களை வரிசைக்கிரமமாகப் பார்த்துக்கொண்டே போகலாம். பட்டியல் மிகப்பெரியது. அல்லது சில நூறு வருடக் கதைகளைச் சில வரிகளில் இப்படிச் சொல்லலாம். பங்காளிச் சண்டைகள், கொலை சதிகள், அக்கம் பக்க அக்கப்'போர்கள்', முகலாய மோதல், முகலாய காதல், நல்லுறவுத் திருமணங்கள் அனைத்தும் நிறைந்த (ராஜ) குடும்பச் சித்திரம்.

கொஞ்சம் முன்னேறி பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதிக்கு வந்துவிடுவோம். அப்போது ஜோத்பூரின் மகாராஜாவாக இருந்தவர் பீம் சிங் (Bhim Singh). 1793ல் தனது மாமன், சித்தப்பன், சகோதரன், ஒன்றுவிட்ட தம்பி போன்ற பலருக்கு எதிராகக் கலகம் செய்து அரியணையை அடைந்தார். எந்தச் சொந்தக்காரன் எப்போது கத்தியைத் தூக்குவான் என்று தெரியாத சூழலில் அரியணை முள்நாற்காலியாகத்தான் இருந்தது.

கூடவே அண்டை ராஜபுத்திர சமஸ்தானங்களின் பழம்பகை வேறு செவ்வாழையடி செவ் வாழையாக வளர்ந்து வந்திருந்தது. அருகிலிருந்த ஜெய்ப்பூர், உதய்பூர், ஜெய்சால்மீர் போன்ற ராஜபுத்திர ஆட்சியாளர்கள் ஒருவருக்கொருவர் மோதிக்கொண்டேதான் இருந்தார்கள். உதய்பூர் எனக்குப் பகையாளி. உனக்கும்தானே? வா, நாமிருவரும் சேர்ந்து அதனை வீழ்த்து வோம். ஜெய்ப்பூரும் ஜோத்பூரும் கைகோர்த்துக் கொள்ளும். பிறிதொரு சந்தர்ப்பத்தில் ஜோத்பூர், உதய்பூரோடு சேர்ந்து ஜெய்ப்பூரைப் போட்டுத்தள்ளும். இப்படிப் பல 'சந்தர்ப்ப வாத' கூட்டணிகள் அமைப்பது, ராஜபுத்திர சமஸ்தானங்களிடையே சகஜமான ஒன்றாக இருந்தது.

பீம் சிங்கும் யாரோடு கைகோர்க்கலாம், யாரை எதிர்த்து கைஉயர்த்தலாம் என்று நோட்டம் விட்டுக் கொண்டிருந்தார். உதய்பூரிலிருந்து நல்ல சம்பந்தம் ஒன்று வந்தது. இளவரசி கிருஷ்ணகுமாரி. வயது பதினாறு. உதய்பூர் மகாரானா பீமசிங்கின் மகள். புதுப்பெண் கிருஷ்ணகுமாரிக்கும், ஏற்கெனவே பதினோரு பேரைத் திருமணம் செய்துகொண்டிருந்த பீம் சிங்குக்கும் நிச்சயதார்த்தம் இனிதே நடந்தது. உதய்பூரும் ஜோத்பூரும் கைகோர்க்க, அக்கம் பக்கத்து சமஸ்தானங்களின் காதுகளில் புகை.

திருமணத்துக்கு முன்பாகவே திடீரென இறந்துபோனார் மகாராஜா பீம் சிங். உதய்பூர் மகாரானா ஸ்தம்பித்து நின்றபோது, சுடச்சுட ஜெய்ப்பூர் மகாராஜா ஜெகத்சிங்கிடமிருந்து ஓலை வந்தது. 'நான் ரெடி. நீங்க ரெடியா?' ஜெய்ப்பூர் மகாராஜாவுக்கும் கிருஷ்ணகுமாரிக்கும் திருமணம் பேசி முடிக்கப்பட்டது.

மகாராஜாவை இழந்த ஜோத்பூரின் நிலை கவலைக்கிடமாகத்தான் இருந்தது. அதனை ரட்சித்து மீட்டெடுக்க வந்தார் மன் சிங் (Man Singh). இவரும் ரதோர் பரம்பரையைச் சேர்ந்த

இளவரசர்தான். பீம் சிங்கின் ஒன்றுவிட்ட சகோதரர். ஜோத்பூரில் நடப்பனவற்றையெல்லாம் கவனித்தபடியே ஒதுங்கி வாழ்ந்துவந்தார். தக்க தருணத்தில் வந்து ஜோத்பூர், எதிரிகளின் பிடியில் சிக்கிவிடாமல் தக்கவைத்துக் கொண்டார் (1803).

'உங்க அண்ணனுக்கு நிச்சயம் பண்ணுன ஒரு பொண்ணை இன்னொருத்தன் கல்யாணம் பண்ணிக்கப்போறான். அதுவும் நம்ம பரம்பரை விரோதி ஜெய்ப்பூர்காரன். இதைவிட அவமானம் ரதோர் பரம்பரைக்குக் கிடையவே கிடையாது. நம்ம கைக்குக் கிடைக்காத அந்தப் பொண்ணு, அவன் கைக்கும் கிடைக்கக்கூடாது.'

ஜோத்பூர் ராஜகுடும்பத்தினர் கொதித்துப் போயிருந்தார்கள். மன் சிங்கும்தான். ஓலை ஒன்றும், படை ஒன்றும் தயாராயின. இரண்டுமே உதய்பூரை நோக்கிச் சென்றன. 'ராணா அவர்களே, உங்க மகளை, மரியாதையா மன் சிங்குக்குக் கட்டிக் கொடுங்க அல்லது கொன்னு போடுங்க. மீறி ஜெய்ப்பூரோட சம்பந்தம் பண்ண நினைச்சீங்கன்னா அது உதய்பூரோட அழிவுகாலம். எப்படி வசதி?'

ராணாவுக்குக் கழுத்தில் கத்தி, தலைக்குமேல் பாறாங்கல். ஜெய்ப்பூர், ஜோத்பூர் இரண்டையுமே பகைத்துக்கொள்ள முடியாத சூழல். பிரச்னையின் அடிப்படை என்ன? இளவரசியின் கல்யாணம். அவள் உயிரோடு இருந்தால்தானே முஷ்டி உயர்த்துவார்கள். 'மகளே, என்னை மன்னித்துவிடு. உன் தந்தையை இந்த இக்கட்டுகளிலிருந்து காப்பாற்று. தயவுசெய்து செத்துப் போ என் செல்லமே!'

இளவரசி கிருஷ்ணகுமாரியும் உதய்பூரைக் காப்பாற்றுவதற்காகச் சாகச் சம்மதித்தாள். ராணா நடுங்கும் கரங்களுடன் தனது தளபதியிடம் குறுவாள் ஒன்றைக் கொடுத்து இளவரசியைக் கொல்லச் சொன்னார். 'இந்தக் கொடுமையைச் செய்யச் சொல்லுற அந்த நாக்கை அறுத்துப் போடணும்னு எனக்குத் தோணுது' என்று சீறிய தளபதி, அங்கிருந்து வெளியேறினார். ஆகவே கிருஷ்ணகுமாரி விஷமருந்தத் தயாரானாள். அந்தப்புரத் தோழி ஒருத்தி விஷக் கோப்பையில் தன் கண்ணீரையும் கலந்து கொடுத்தாள்.

கிருஷ்ணகுமாரியின் முகத்தில் எந்தச் சலனமும் இல்லை. மடக் மடக். நிமிடங்கள் கழிந்தன. எந்தவித எதிர்வினையும் இல்லை. இன்னொரு கோப்பை. மடக் மடக். ம்ஹூம். மற்றுமொரு கோப்பை. அப்போதும் எதுவும் ஆகவில்லை. இந்தமுறை சற்றே கொடிய விஷம் ஓபியத் தோடு கலந்து கொடுக்கப்பட்டது. இளவரசி அருந்தினாள். மயங்கினாள். மரித்துப்போனாள். ராணா தேம்பித்தேம்பி அழுதார். தன்னைப் பெரும் இக்கட்டிலிருந்து காத்தருளிய மகளுக்காக சிலை ஒன்றை அமைத்து, 'கிருஷ்ண மஹால்' என்ற ஒன்றைக் கட்டி வணங்கினார்.

விஷயமறிந்த மன் சிங்குக்கு அதிர்ச்சி. அப்புறமென்ன, வேறு எந்த ராஜபுத்திர குடும்பத்தோடு சம்பந்தம் வைக்கலாம் என்று பெண் தேட ஆரம்பித்துவிட்டார். மன் சிங், மாப்பிள்ளையாக மணமேடையில் அமர்ந்தது மொத்தம் பதிமூன்று முறை.

மன் சிங்கின் ஆட்சியில் ஜோத்பூர் மங்களகரமாகத்தான் இருந்தது. குடும்ப சச்சரவுகள், பங்காளிகளின் பகை எல்லாம் தலைதூக்கவிடாமல் பார்த்துக் கொண்டார். ஆனால் எதிர் பார்க்காத ஒருவர் மன் சிங்குக்கு வில்லன் ஆனார். அவர் மன் சிங்கின் குரு.



# சதீ!

அவர் நல்லவர்தான். வல்லவர்தான். நாலும் தெரிந்தவர்தான். சூது, வாது புரிந்தவர்தான். இருந்தாலும் தான் ஒரு சமஸ்தானத்தின் மகாராஜாவாக இருந்துகொண்டு முடிவெடுக்கும் அதிகாரத்தை மட்டும் இன்னொருவரிடம் ஒப்படைத்திருந்தால் சலசலப்புகள், சர்ச்சைகள் ஏற்படாதா என்ன?

ஜோத்பூரின் மகாராஜா மன் சிங், சிறுவயது முதலே தனது குருவாக வணங்கி வந்த அயாஸ் தேவ்நாத்தை (Ayas Devnath) கண் முன்னே உலவும் கடவுளாகத்தான் கருதிவந்தார். தேவ்நாத் சொல்வதே தேவவாக்கு. மறுபேச்சு மூச்சு கிடையாது. ஆக, மன் சிங் மகாராஜாவாக இருக்க, தேவ்நாத் ஆட்சி செய்துகொண்டிருந்தார். குருவின் குடும்பத்தினரும் அதிகார மையத்தை ஆக்கிரமித்திருந்தார்கள்.

பக்கத்து சமஸ்தானங்களான ஜெய்ப்பூர், உதய்பூரோடு அடிக்கடி மோதும் சூழ்நிலை மட்டும் தொடர்ந்து கொண்டிருந்தது. எல்லாம் யார் பெரியவன் என்ற ஆதிக்க மமதைப் போட்டிதான். அது போதுமே? முதலில் மூக்கை, பின் சகலத்தையும் நுழைத்து உள்ளே வந்தது கிழக்கு இந்தியக் கம்பெனி. 'ஏம்பா, ஒண்ணுக்குள்ள ஒண்ணா இருந்துக்கிட்டு சண்டை போடாதீங்கப்பா! சமர்த்தா சமாதான ஒப்பந்தம் போட்டுக்கோங்க' குரல் கொடுத்தது வெள்ளை நாட்டாமை.

மன் சிங் ஒப்பந்தத்துக்குச் சம்மதித்தார். ஆனால் அவரது சமஸ்தானத்தில் உயர் பதவிகளிலிருந்தவர்களுக்கு அதில் விருப்பமில்லை. எதிர்க்குரல்கள் எழுந்தன. மன் சிங், தாற்காலிகமாக தனது மூத்த மகன் சத்தார் சிங்கை (Chattar Singh) அரியணை ஏற்றினார். ஒரு கண்ணில் பார்வையில்லாத சத்தார் சிங்குக்கு



சதியை விளக்கும் ஓவியம்

அப்போது வயது பதினெட்டு ஆகியிருந்தது. ஒப்பந்தம் கையெழுத்தானது. சத்தார் சிங்குக்கு, அரியணையைப் போல வாழ்க்கையும் தாற்காலிகமாகத்தான் வழங்கப்பட்டிருந்ததுபோல. அடுத்த சில மாதங்களிலேயே அவர், நோய்வாய்ப்பட்டு இறந்துபோனார் (1818, மார்ச்).

மீண்டும் குருவின் ஆசியுடன் அரியணையில் அமர்ந்தார் மன் சிங். குருவையும் அவரைச் சார்ந்தவர்களையும் தாங்கிப் பிடிப்பதையே தன் முதல் வேலையாக மன் சிங் மேற் கொண்டிருக்க, ராஜவிசுவாசிகள் எல்லோரும் ஒவ்வொருவராக அவரைவிட்டு விலக ஆரம் பித்தார்கள். அடுத்த இரண்டு தசாப்தங்களுக்குமேல் ஜோத்பூரில் குருவின் 'குடும்ப ஆட்சி' தான். தனது அறுபதாவது வயதில் மகாராஜா மன் சிங், மரணப்படுக்கையில் விழுந்தார். எழ வில்லை.

1843, செப்டம்பர் 4. ஜோத்பூர் துக்கத்தில் மிதந்தது. காரியங்களுக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. சமஸ்தானத்தின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் ஜோத்பூரை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். வழியெங்கும் விசும்பல் ஒலிகள். அந்தப்புரத்துக்குள் ஒப்பாரியின் பேரோசை.

மன் சிங்கின் தர்ம பத்தினிகள் தலைவாரி, பூச்சூடி, தகதக பட்டுடைகளோடு தயாராகிக் கொண்டிருந்தார்கள். சில ஆசைநாயகிகளுக்கும் அலங்காரங்கள் நடந்துகொண்டிருந்தன. புருஷன் செத்த பின்னே, பெண்டாட்டிக்கு இந்தப் பூவுலகில் என்ன வேலை? அவளும் அவ னுடனேயே கிளம்பிவிட வேண்டியதுதான். மேலோகத்தில் போய் அவனுக்குப் பணி விடைகள் செய்வதற்காக. உயிரற்ற உடலோடு, உயிரோடு பல உடல்களையும் காலம் காலமாகத் தின்றுகொண்டிருந்தது தீ. அது சதி.

சதியின் கதை புராணத்திலிருந்தே ஆரம்பமாகிறது. தாட்சாயிணி என்ற சதி தேவிக்கு சிவ பெருமானின் மேல் காதல். அவளது அப்பா தட்சனுக்கோ பேய் உலவும் காட்டில் வசிக்கும் சிவனை மாப்பிள்ளையாக ஏற்றுக்கொள்ளமுடியவில்லை. காதலுக்கு எதிர்ப்பு. தாட்சாயிணி கடும் தவம் செய்து சிவனைக் கவர்கிறாள். அவரும் சோதனைகள் சில செய்து, மாறுவேடத்தில் வந்து மங்கையைக் கவர்ந்து சென்று மணம் முடித்துக் கொள்கிறார்.

தட்சனுக்குக் கடும்கோபம். மாபெரும் யாகம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்கிறார். தேவர்களுக் கெல்லாம் அழைப்பு போகிறது. ஆனால் சிவனுக்கு மட்டும் கிடையாது. தாட்சாயணியால் தன் கணவனுக்கு நேர்ந்த அவமானத்தைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. யாகம் நடக்கும் இடத்துக்குச் சென்று ருத்ர தாண்டவமாடுகிறாள். யாகத்தையே சீர்குலைக்கும்விதமாக யாக நெருப்பில் குதிக்கிறாள். அங்கு வீரபத்ரர் தோன்றி, தட்சனின் தலையை எடுக்கிறார். பெண்கள் கணவருக்காக நெருப்பில் குதிக்கும் பழக்கம் சதி தேவி ஆரம்பித்து வைத்ததுதான் என்பது புராண விளக்கம்.

கிபி 400ல் குப்தர்கள் காலத்தில், கணவருக்காக விதவைப் பெண்கள் உடன்கட்டை ஏறியதற் கான பழைமையான ஆதாரங்களைத் தருகிறது வரலாறு. மத்தியப் பிரதேசத்தின் சாகர் பகுதியில், உடன்கட்டை ஏறிய பெண்களுக்கான நினைவுக் கற்கள் கிடைத்துள்ளன. இந்தியாவில் சதி மரணங்கள் என்பது பத்தாம் நூற்றாண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை இந்துக்களின் பல பிரிவிரினிடையே கட்டாய சம்பிரதாயமாகக் கடைபிடிக்கப்பட்டு வந்திருக்கின்றது. அதேபோல உலகில் பல நாடுகளில் கடைபிடிக்கப்பட்ட ஒரு சம்பிரதாயம், அனுமரணம்.

மிகவும் நேசித்த, உயிருக்கு உயிராகக் கருதிய, தெய்வமாக நினைத்த, மரியாதை வைத்திருந்த ஒரு நபர் (ஆண், பெண் யாராக வேண்டுமானாலும் இருக்கலாம்) இறந்துவிட்டார். அவரோடு சேர்ந்து அவரது உறவினர்கள், விசுவாசிகள், பக்தர்கள், வேலையாள்கள், அடிமைகள் போன்றோரும் சுயவிருப்பத்தோடு தற்கொலை செய்துகொள்வதே அனுமரணம். ஆனால் சதியைப் பொருத்தவரை, சுயவிருப்பத்துக்கெல்லாம் அனுமதி இருந்ததில்லை. பெரும் பாலான பெண்கள் வலுக்கட்டாயமாக நெருப்பில் தள்ளப்பட்டார்கள் என்பதே உண்மை.

கணவனோடு சேர்த்து வைத்து எரித்தது சிலர் வழக்கம். கணவன் இறந்த சில தினங்களில் சுப நாள், நல்ல நேரமெல்லாம் குறித்துவைத்து மனைவியை அனுப்புவது சிலர் கடைபிடித்த சம்பிரதாயம்.

இறந்துபோன கணவனுக்கும் கொல்லப்படவிருக்கும் மனைவிக்கும் அவர்களது திருமண உடைகளை அணிவித்தார்கள், அலங்கரித்தார்கள். திருமணத்தின்போது செய்த சடங்குகளில் சிலவும் செய்யப்பட்டதுண்டு. பிறகு இறுதிச் சடங்கு. திருமணத்தின்போது மனைவி கொண்டு வந்த சீதனங்கள் சிலவற்றையும் நெருப்பில் போடும் வழக்கமும் இருந்தது. அரிசி, பருப்பு, எண்ணெய் போன்றவற்றையும் மனைவியின் கையில் கொடுத்தனுப்பி இருக்கிறார் கள். மேலோகம் சென்று புருஷனுக்குச் சமைத்துக் கொடுப்பதற்காம்.

சதியை நிறைவேற்றுவதில் பல்வேறு முறைகள் இருந்திருக்கின்றன. பெரும்பாலும் நதிக் கரையோரங்களில் சதியை நிறைவேற்றியிருக்கிறார்கள். மகாராணி, மகாராஜாவின் உடலுக்கு அருகில் சென்று கிழக்கு நோக்கி உட்கார்ந்து கொள்ளவேண்டும் அல்லது படுத்துக்கொள்ள



மேஹ்ரங்கர் கோட்டை

வேண்டும். பின் கட்டைகளை அடுக்குவார்கள். கொள்ளி. இது பொதுவான நடைமுறையாக இருந்து வந்திருக்கிறது. பெண்களைக் கணவனின் உடலோடு கட்டி வைத்து எரிக்கவும் செய்திருக்கிறார்கள். மகாராஜாவின் உடலுக்குத் தீ மூட்டப்பட்ட பின், மகாராணி நடந்து சென்று தீக்குள் குதித்ததாகவும் சில வரலாற்றுக் குறிப்புகள் சொல்கின்றன. மகாராஜாவின் உடல் ஒருபுறம் எரிந்துகொண்டிருக்க அதற்குப் பக்கத்திலேயே அடுக்கப்பட்ட கட்டைகளின் மேல் அமர்ந்துகொண்டு மகாராணி தனக்குத் தானே கொள்ளி வைத்துக்கொள்ளும் வழக்கமும் இருந்திருக்கிறது. மகாராஜாவின் பாதத்துக்கு அருகில் உட்கார்ந்துகொண்டு, தனக்கும் அவருக்கும் சேர்ந்துக் கொள்ளிவைத்துக் கொண்ட பதிபத்தினிகளும் இருந்திருக்கிறார்கள்.

செத்துப்போன ஒரு மகாராஜாவுக்காகத் தீக்குளிக்க வேண்டிய பத்தினிகள், பலர் இருக்கும் பட்சத்தில் கடைபிடிக்கப்பட்ட முறை வேறு. முதன்மை மகாராணி மட்டும் மகாராஜாவோடு கைகோர்த்துக் கொள்ள, மற்றவர்கள் தனித்தனியே தீக்குளித்தார்கள் அல்லது பெரிய அளவில் மூட்டப்பட்ட நெருப்பில் குதித்தார்கள்.

சாவைக் கண்டு பயப்படாதவர்கள் எத்தனை பேர் இருக்கமுடியும்? பத்தினியாக இருந்தாலும் பயம் பயம்தானே. பல பெண்களின் கதறல்களை அந்தக்கால மூடர்கள் யாரும் காது கொடுத்துக் கேட்டதில்லை. அவளை இழுத்து வாருங்கள். நெருப்பில் தள்ளுங்கள். ஓடப் பார்க்கிறாளா? கட்டிவைத்து எரியுங்கள். அதையும் மீறி நெருப்புக் காயங்களோடு தப்பி ஓடிய புண்ணியவதிகளும் இருந்திருக்கவே செய்கிறார்கள். பெண்கள் முரண்டுபிடிக்காமல் அல்லது தப்பிப்போகாமல் இருக்க, அவர்களுக்கு மதுவும், போதைப் பொருள்களும் கொடுத்து மயக்கி பின் எரித்ததாகவும் சில வரலாற்று ஆசிரியர்கள் சொல்கிறார்கள். எரியும் பெண்களின் கதறல் வெளியே கேட்காமல் இருக்கும்படியாக முரசுகளைக் கொட்டி முழக்கினார்கள்.

ராஜபுத்திரர்கள் கடைபிடித்த சதியைப் போன்ற இன்னொரு சம்பிரதாயம் ஜாஹர். அதாவது போரில் தோல்வி உறுதிப்படும் பட்சத்தில் எதிரிகளின் கையில் மாட்டி வதைபடாமல் இருப்ப தற்காக ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எல்லோரும் கூட்டம் கூட்டமாக உயிரை மாய்த்துக்

கொண்டார்கள். குறிப்பாக முகலாயர்களின் காலத்தில் அவர்கள் கையில் சிக்கிச் சீரழியாமல் இருப்பதற்காக ராஜபுத்திர மகாராணிகள், இளவரசிகள், பிற அரண்மனைப் பெண்கள் கும்ப லாகத் தற்கொலை செய்துகொண்ட நிகழ்வுகள் இருக்கின்றன. மகனின் உடலோடு தாயையும் வைத்து எரிக்கும் வழக்கமும் இந்தியாவில் இருந்திருக்கிறது. அது தாய் சதி. சகோதரனோடு சகோதரியையும் வைத்து எரித்திருக்கிறார்கள். குஜராத், ராஜஸ்தானில் முதலாளியோடு அடிமைகளையும் வைத்து எரித்திருக்கிறார்கள். சில காதலிகள், தங்களுக்கு நிச்சயிக்கப்பட்ட கணவன் போரில் இறக்கும்பட்சத்தில், அவர்களோடு உடன்கட்டை ஏறியிருக்கிறார்கள்.

ஜெய்ப்பூரில் 1818ல் நடந்த கொடுமை விநோதமானது. அப்போது மகாராஜா இரண்டாம் ஜெகத் சிங் இறந்துபோனார். அவரோடு சேர்ந்து கொளுத்தப்பட்ட பெண்கள் பதினெட்டு. கூடவே பதினெட்டு ஆண் வேலைக்காரர்களும். அதில் ஒரு சவரத்தொழிலாளியும் உண்டு. அதாவது இந்த உலகத்திலிருந்து சொர்க்கலோகத்துக்குச் செல்லும் மகாராஜாவுக்குப் பணி விடை செய்யக் கூடவே அனுப்பினார்களாம்.

பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் அதிக அளவில் சதி சாவுகள் அரங்கேறியதாகக் கூறப்படுவது வங்காளத்தில்தான். இந்தியாவைப் பொருத்தவரை ராஜஸ்தானில். 1813 1828க்கு இடைப்பட்ட காலத்தில் இந்தியாவில் சதியால் இறந்த பெண்களின் எண்ணிக்கை 8135 என்கிறது ஒரு புள்ளிவிவரம். அதேகாலத்தில் இன்னொரு விவரம் 7941 என்று எண் ணிக்கை காட்டுகிறது. சராசரியாக ஆண்டுக்கு சுமார் ஐநூறு பெண்கள் நெருப்பில் தள்ளப்பட் டார்கள் என்கிறது ஒரு குறிப்பு. தீயில் தள்ளிவிட்டு பின் அந்தப் பெண்களைத் தெய்வமாக வணங்கவும் செய்திருக்கிறார்கள்.

சில அந்தப்புரப்பெண்களின் நிலைமை படுசோகம். அவர்களுக்கு மகாராஜாவுடன் திருமணம் மட்டும் நடந்திருக்கும். பத்தோடு பதினொன்றாக அவர்கள் அந்தப்புரத்தில் அடைபட்டுக் கிடந்திருப்பார்கள். மகாராஜா தன்னுடைய பல ஜோலிகளால் அந்த மனைவியின் பக்கமே வந்திருக்கவே மாட்டார். ஆனால் மகாராஜாவின் இறப்புக்குப் பின் அவளும் பத்தினிப் பாசத்துடன் தீக்குளிக்க வைக்கப்பட்டாள்.

வருங்கால ராஜ வாரிசை வயிற்றில் சுமந்து கொண்டிருந்த ராணிகள் மட்டும் சதியிலிருந்து தப்பித்தனர். மகாராஜாவுக்குப் பின் ஆட்சிப்பொறுப்பை ஏற்று நடத்துமளவுக்கு தைரியமிக்க மகாராணிகள் ஒருசிலர் இருந்தார்கள். அவர்களை நெருப்பு சுடவில்லை.

ஜோத்பூர் மகாராஜா மன் சிங்கின் உடல் எரிக்கப்படத் தயாராக இருந்தது. அவரது மகாராணிகள் ஒவ்வொருவராக வரிசையாக வந்தார்கள். மேஹ்ரங்கர் கோட்டைச் சுவரில் பூச்சுக் கலவை பூசப்பட்டிருந்தது. மகாராணிகள் ஒவ்வொருவராக அதில் தங்களது கைரேகையைப் பதித்தார்கள். பின் தீயில் குதித்தார்கள். பின் ராணிகள். பின் ஆசைநாயகிகள். கடைசியாக அடிமைப்பெண்கள். கைத்தடங்கள் பதிந்தன.

இப்போதும் மேஹ்ரங்கர் கோட்டையில் பூஜிக்கப்படும் அந்தக் கைத்தடங்களை வைத்துப் பார்க்கும்போது ஆறு மகாராணிகள், எட்டு ராணிகள், ஒன்பது ஆசைநாயகிகள், எட்டு அடிமை கள் உள்பட மன் சிங்குக்காகத் தீக்குளித்த பெண்களின் எண்ணிக்கை முப்பத்தி ஒன்று.



# 168

# கொளுத்தாதே!

'வேண்டாம். எனது அண்ணி பாவம். விட்டுவிடுங்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன்...'

கதறிக் கொண்டிருந்தார் ராம்மோகன் ராய். திமிறிக் கொண்டிருந்த அவரை நான்கைந்து பேர் பிடித்துக் கொண்டிருந்தார்கள். புரோகிதர்கள் வாசிக்கும் வேதத்தின் சத்தத்திலும் ஒலிக்கும் முரசுகளின் அதிர்விலும் ராம்மோகனில் குரல் நசுங்கித்தான் போனது. அண்ணி அலகாமஞ்சரியை இழுத்துவந்தார்கள். வெள்ளைப்புடைவை. நெற்றி நிறையக் குங்குமம், வகிட்டிலும். போதை மருந்து கொடுத்திருப்பார்கள்போல. தள்ளாடித் தள்ளாடி வந்தாள். கணவன் இறந்த துக்கத்தையும் தாண்டி, கண்களில் மரண பயம்.

சிதையில் அவளது கணவன் ஜக்மோகனின் உடலைக் கிடத்தி வைத்திருந்தார்கள். எரியும் சிதையில் விழுந்தால்தான் அவள் சீதை. கணவனின் உடலோடு சேர்த்து அவளைக் கட்டினார்கள். தீ மூட்டப்பட்டது. அண்ணி அலறினாள். சிதையிலிருந்து எழுந்து ஓடிவர முற்பட்டாள். சுற்றிலும் கம்புகளோடு நின்றுகொண்டிருந்தவர்கள் அவளை அடித்துத் தடுத்தார்கள். 'மகாசதி! மகாசதி!' என்று ம(ா)க்கள் எல்லாம் பரவசக் குரலெழுப்ப அண்ணி அடங்கினாள். சோர்வாகத் தரையில் சரிந்தார் ராம்மோகன்.

இந்தியாவெங்கும் (குறிப்பாக வங்காளத்தில்) கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த சதி நெருப்பை முற்றிலுமாக அணைக்க வேண்டும் என்ற வெறி அப்போதுதான் ராம்மோகனின் மனத்தில் எழுந்தது. முகலாய ஆட்சியாளர்கள்



ராஜா ராம்மோகன் ராய்

அக்பர், ஷாஜஹான் எல்லாம் தங்கள் ஆளுகைக்குள்பட்ட பகுதியில் சதியைத் தடை செய்திருந்தார்கள். அதையும் மீறி அந்தக் கொடுமைகள் நிகழ்ந்து கொண்டுதான் இருந்தன. பிரிட்டிஷாரும் சதியை 'காட்டுமிராண்டித்தனம்' என்று வருணித்தார்களே தவிர, அதை அடக்கி ஒடுக்க எந்தவிதத் தீவிரமான நடவடிக்கையையும் எடுக்கவில்லை.

இந்தியர்களை அடிமைப்படுத்தினால் சந்தோஷமாக அடிபணிந்துவிடுவார்கள், ஆனால் அவர்களது மதநம்பிக்கைகளுக்கு எதிராகப் பேசினால் எங்கே சீறி எழுந்துவிடுவார்களோ என்ற பயம், பிரிட்டிஷாருக்கு. லட்சக்கணக்கான இந்துக்கள் கண்மூடித்தனமாக சதியை ஆதரித்தார்கள். சிலர் மட்டுமே அதை வெறுத்தார்கள், ஆனால் வெளிப்படையாகக் குரல் எழுப்பவில்லை. சதிக்கு எதிராக உக்கிரமாக ஓங்கி ஒலித்த முதல் இந்தியரின் குரல் என்றால் அது ராம்மோகன் ராய் உடையதே.

'மூடர்கள். அறிவிலிகள். சதி சரியான சம்பிரதாயம் என்று எந்த வேதமும் சொல்லவில்லை. ஆறு வயதுச் சிறுமிக்கு, அறுபது வயதுக் கிழவனை மணமுடித்து வைப்பீர்கள். அவன் இறந்ததும் ஏதுமறியா அந்தச் சிறுமியைத் தீயில் தள்ளுவீர்கள். கொடுமை. அரசன் இறந்தால் கூட்டம் கூட்டமாகத் தீக்குளிப்பது எல்லாம் படுகொலைகள்தான். இதை ஆதரிக்கும் ஒவ்வொரு சமஸ்தான அரசர்களும் அறிவில்லாதவர்களே. இந்த மூடத்தனத்தை முற்றிலும் ஒழிக்கும்வரை நான் ஓயமாட்டேன்.'

ராம்மோகனின் முதல் குரலுக்குப் பின், துணைக்குப் பல குரல்கள் சேர்ந்துகொண்டன. பல எஸ்டேட்டுகளின் திவானாக இருந்த அவர், உயர்பதவிகளில் இருந்த தனது பிரிட்டிஷ்

நண்பர்கள் மூலம் ஆதரவு திரட்டினார். 'இங்கிலாந்து அரசரை நான் சந்திக்க வேண்டும். சதியைத் தடுக்கும் விதமாகச் சட்டம் கொண்டுவர வேண்டும்.' சதி ஆதரவாளர்கள் ராம்மோகனைக் கொல்லக்கூட முயற்சி செய்தார்கள். ஆனால் தான் அமைத்த பிரம்ம சமாஜம் மூலம் ஆதரவு திரட்டிக் கொண்டிருந்தார் ராம்மோகன்.

வில்லியம் பெண்டின்க் (William Bentinck). 1827ல் வங்காளத்தின் கவர்னர் ஜெனரலாக இருந்தவர். ஒருநாள் குதிரையேறி கிராமப்பகுதி ஒன்றுக்குச் சென்று கொண்டிருந்தார். ஆங்காங்கே பெண் உருவத்தில் சிறிய கற்சிலைகள் தென்பட்டன. 'இவை என்ன?' கேட்டார். 'எல்லாம் சதியில் இறந்தவர்களுக்கான நினைவுச் சின்னங்கள்' என்றார்கள். அதுவரை சதி பற்றி ஓரளவு கேள்விப்பட்டிருந்த பெண்டின்க், முழு விவரத்தையும் கேட்டு அதிர்ந்துபோனார். இந்தியாவில் சதிக் கொடுமையைத் தடுக்க ஏதாவது செய்தே ஆகவேண்டும் என்று முழு மூச்சில் களமிறங்கிய முதல் ஐரோப்பியர் பெண்டின்க்தான். ஆனால் இந்துக்களின் ஆதரவு வேண்டுமே.

ராம்மோகன் ராய்க்கு பிடி கிடைத்தது. சதியை எதிர்க்கும் இந்துக்களிடம் கையெழுத்து வேட்டை நடத்தினார். கோரிக்கையோடு கவர்னர் ஜெனரலிடம் சமர்ப்பித்தார். பெண்டின்க், சதிக்கெதிரான சட்டத்தை நிறைவேற்றுவதற்கான நடவடிக்கைகளை முடுக்கினார்.

1829, டிசம்பர் 5. அது ஞாயிற்றுக்கிழமை. தனது உதவியாளர் வில்லியம் கேரியிடம் கோப்பு களை நீட்டினார் பெண்டின்க். 'இதை உடனடியாக மொழிமாற்றம் செய்ய வேண்டும்.' கேரியின் முகத்தில் வாட்டம். 'அய்யோ, நான் இன்று சர்ச்சுக்குப் போக வேண்டுமே!' கெஞ்சினார். பெண்டின்க் விடவில்லை. 'இது மிக அவசரம். இந்த வேலையைத் தாமதப் படுத்தும் நேரத்தில் எத்தனை விதவைகளின் உயிர் போகப்போகிறதோ? புரிந்துகொள். சீக்கிரம் முடித்துக்கொடு.'

அன்று மாலை அந்த வேலை முடிந்தது. அடுத்த சில நாள்களில் வங்காளத்தில் சதிக்கு எதிரான சட்டம் கொண்டு வரப்பட்டது (Bengal Sati Regulation XVII Act). சதி, சட்டவிரோதமான நடவடிக்கை. சதியில் பெண்களைக் கொன்றவர்களுக்குப் பத்து ஆண்டு சிறைத்தண்டனை, அபராதம். அதற்கு உடந்தையாக இருப்பவர்களுக்கும் தண்டனை உண்டு. பெண்களைச் சதியில் ஈடுபடுத்த முயல்வோரும் தண்டனைக்குரியவர்களே. வங்காளத்தில் முதல் அமல் படுத்தப்பட்ட சட்டம், விரைவிலேயே மெட்ராஸ், பம்பாய் மகாணங்களிலும் கொண்டு வரப்பட்டது.

இந்து மதவெறியர்கள் கொதித்தெழுந்தார்கள். ராஜபுத்திர, பிற இந்து சமஸ்தானங்களிலிருந்தும் சட்டத்துக்கு எதிரான குரல்கள் அதிர்ந்தன. 'இது எங்கள் மத உணர்வுகளை நசுக்கும் சட்டம். உடனே திரும்பப் பெற வேண்டும்.' சதி ஆதரவாளர்களும் கையெழுத்து வேட்டை நடத்தினார்கள். இந்தப் பிரச்னை குறித்து ஆராய கவுன்சில் ஒன்று அமைக்கப்பட்டது. சதி சட்டத்தை ரத்து செய்யக் கோரும் மனுவை அவர்கள் இங்கிலாந்துக்கு அனுப்பினார்கள். அதற்கான செலவை ஆதரவாளர்களே ஏற்றுக்கொண்டார்கள். நல்ல நேரம் என்றுதான் சொல்ல வேண்டும். அந்த மனுவோடு சென்ற கப்பல் விபத்துக்குள்ளானது. மனுவை கடல் விழுங்கியது.

ராம்மோகன் ராய், முகலாய வம்சத்தின் கடைசிகால மன்னர் இரண்டாம் அக்பர் ஷாவிடம் சென்றார். 'சதிக்கெதிராகச் சட்டத்தை நீக்கக்கூடாது என்பதை வலியுறுத்துவதற்காக

இங்கிலாந்து செல்லவிருக்கிறேன். தாங்கள் உதவ வேண்டும்.' அக்பர் ஷாவுக்கும் அங்கு சில காரியங்கள் ஆக வேண்டியதிருந்தன. ராம்மோகனைத் தனது அயல்நாட்டுத் தூதுவராக்கி, 'ராஜா' என்ற பட்டத்தையும் வழங்கினார். பிராமணன் ஒருவன் கடல்கடந்து மேலைநாடு செல்வதா? மதவாதிகள் வழக்கம்போல மூடக்குரல் எழுப்பினார்கள். ராஜா ராம்மோகன் ராய், எல்லாவற்றையும் மீறி இங்கிலாந்துக்குச் சென்றார் (1831). சதிக்கு எதிரான சட்டத்தைத் திரும்பப் பெறக்கூடாது என்று பாராளுமன்றத்தில் அழுத்தமாகப் பேசினார். ஒப்புக்கொண்டார்கள். இந்திய விதவைகள் காப்பாற்றப்பட்டார்கள்.

எல்லாம் சரி. வெறும் சட்டத்தை வைத்துக்கொண்டு சதியை முழுமையாகக் கட்டுப்படுத்த முடிந்ததா என்ன? ஆரம்ப கட்டத்தில் ஓரளவுதான் முடிந்தது. போகப்போக சதிக்கெதிரான விழிப்புணர்வு வலுப்பெற்றது. 'தீயில் குதிக்க முடியாது. உங்களால் முடிந்ததை செய்து கொள்ளுங்கள்' என்று பெண்களும் எதிர்ப்பைக் காட்ட ஆரம்பித்தார்கள். ராஜபுத்திர சமஸ் தானங்களில் ஜெய்ப்பூர், முதன் முதலில் சதியைத் தடைசெய்து புண்ணியம் தேடிக்கொண்டது (1846). டல்ஹௌசி கவர்னர் ஜெனரலாக வந்தபோது (1850) சதி சட்டத்தைத் தீவிரமாக அமல் படுத்தினார். இருந்தாலும் ராஜபுத்திர சமஸ்தானங்களில் பெண்களின் அவலக்குரல் தொடரவே செய்தது.

சில இடங்களில் 'நான் தீயில் குதித்தே தீருவேன்' என்று பெண்கள் அடம்பிடிக்க பிரிட்டி ஷாருக்குத் தலைசுற்றியது. ஜபல்பூரின் (மத்திய பிரதேசம்) கலெக்டர் வில்லியம் ஸ்லீமெனுக்கு அவசரத் தகவல் ஒன்று வந்து சேர்ந்தது (1850). 'கோபல்பூர் கிராமத்தில் அறுபது வயதுப் பெண்ணொருத்தி பிரச்னை செய்கிறாள். உடனே வரவும்.'

ஸ்லீமென் குதிரையேறி பல மைல்கள் பயணம் செய்து கோபல்பூரை அடைந்தார். அங்கே உடல் ஒன்று எரிந்து சாம்பலாகிக் கிடந்தது. அருகிலேயே அந்த வயதான பெண் அமர்ந்திருந் தாள். சில ஆபரணங்கள், கொஞ்சம் பூக்கள் சூடியிருந்தாள். சிவப்பு உடை அணிந்திருந்தாள். 'துரை, இந்தம்மா புருஷன் உமத்சிங் உபாதயா செத்துட்டாரு. இந்தம்மாவை உடன்கட்டை ஏறவிடாமத் தடுத்து வைச்சிருக்கோம். ஆனா சோறு தண்ணியில்லாம இங்கேயே மூணு நாளாக் கிடக்குது.' அருகிலிருந்தவர்கள் சொன்னார்கள்.

அந்தப் பெண்ணும் வாய்திறந்தாள். 'எம் புருஷன் சூரியன்கிட்ட போயிட்டாரு. மூணு ஜென்மமா நானும் அவரும் சேர்ந்துதான் செத்துட்டு இருக்கோம். இந்த ஜென்மத்திலயும் அவரு எனக்காக மேலோகத்துல காத்துக்கிட்டு இருப்பாரு. நான் போனதும் கல்யாணம் பண்ணிக்குவாரு. நான் தனியா இங்க வாழக்கூடாது. நான் உடனே சாவணும். அனுமதி கொடுங்கப்போறீங்களா, இல்லையா?'

ஸ்லீமென் திகைத்து நின்றார். அந்தப் பெண்ணின் நாடித்துடிப்பைப் பார்த்தார். பலவீனமாகத் தான் இருந்தது. வேறுவழியின்றி சம்மதித்தார். அந்தப் பெண் உற்சாகமாகக் கத்தினாள். சந்தோஷமாகப் புகையிலை போட்டுத் துப்பிவிட்டுச் சிரித்தாள். தீமுட்டச் சொன்னாள். 'என் அருமைக் கணவரே, மூணு நாள் தாமதமாகிருச்சு. என்னை மன்னிச்சுக்கோங்க!' குதித்தாள்.

ராஜபுத்திரர்களின் தலைவர் என்று வருணிக்கப்பட்ட உதய்பூரின் மகாராணா ஸ்வருப் சிங் (Swarup Singh), 1861ல் இறந்துபோனார். கூடிக்குலவி அழுதார்கள். ஒப்பாரிக்குள் கரைந்தார் கள். காரியங்களுக்கும் ஏற்பாடு செய்தார்கள். மகாராணாவின் உடலை உரிய மரியாதைகளுடன்

கொண்டுவந்து இடுகாட்டில் வைத்துவிட்டார்கள். இனி அவரது தர்மபத்தினிகளை அழைத்து வந்து சதி மோட்சம் கொடுக்க வேண்டும்.

ஸ்வருப் சிங்குக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள் உண்டு. ஒவ்வொருவரிடமும் கேட்டார்கள். 'இன்னும் கிளம்பலையா? சீக்கிரம். நேரமாகுது. உடன்கட்டை ஏறணும்.' எல்லா ராணிகளும் 'முடியாது' என்று மறுத்துவிட்டார்கள். சாதாரணப் பெண்கள் என்றால் குண்டுக்கட்டாகத் தூக்கிவந்து நெருப்பில் போட்டுவிடலாம். இவர்கள் ராணிகளாயிற்றே.

சதிப் பிரியர்கள் தவித்துப் போனார்கள். ஸ்வருப் சிங், சிசோதயா என்ற ராஜபுத்திர பிரிவைச் சார்ந்தவர். அவர்களைப் பொருத்தவரையில் சதி என்பது கட்டாயச் சடங்கு. அதுவும் ஒரு மன்னரின் உடலைத் தனியே எரிப்பதென்பது கூடவே கூடாது. மகாபாவம்.

ஒரு வேலைக்காரன் வந்தான். 'என் தங்கச்சி மகாராணாவோட அடிமை. அவருக்கு அவளைப் பிடிக்கும். அவளை வேணும்னா கேட்டுப் பார்க்கவா?' அவனைத் தெய்வமாகப் பார்த்தார்கள். அந்த அடிமைப் பெண்ணிடம் பேசினார்கள். 'யாருக்குமே கிடைக்காத கௌரவம் உனக்குக் கிடைக்கப்போகிறது. மகாராணாவின் மனைவியாகத்தான் நாங்கள் உன்னை வணங்குவோம். ஏற்படவிருந்த பெரும் களங்கத்தைத் துடைக்க வந்த தெய்வம் நீ!'

அவள் சம்மதித்தாள். வாழ்க்கையின் அந்த இறுதி நிமிடங்கள் அவளுக்கு இன்பகரமாக இருந்தன. அதுவரை அணியாத உடை, பார்த்து ஏங்கிய நகைகள், கனவிலும் நினைக்காத ராஜமரியாதை. எல்லாம் கிடைத்தன. ஆனந்தக் கண்ணீரோடு அனைத்தையும் அனுபவித்து விட்டு நெருப்பை ஏற்றுக்கொண்டாள்.

உதய்பூரில் மட்டுமல்ல, ஜோத்பூரிலும்கூட சட்டத்தால் சதியைத் தடுத்து நிறுத்த முடிய வில்லை. பிரிட்டிஷாரின் நேரடிக் கட்டுப்பாட்டில் இல்லாத ராஜபுத்திர சமஸ்தானங்களில் சதி தொடர்ந்து கொண்டுதான் இருந்தது. 1843ல் ஜோத்பூர் மகாராஜா மன் சிங்குக்காக 36 பேர் தீக்குளித்ததுபோல, அவருக்குப் பின்பு இறந்துபோன ஜோத்பூர் மகாராஜாக்களும் ஜோடியாகத்தான் சிதையேறினர். சொல்லப்போனால், சுதந்தரத்துக்குப் பின்புகூட ஜோத்பூரில் சதி இருந்தது.



# 169

# ‘இவ்விடம் பெண்களுக்கு வாழ்க்கை கொடுக்கப்படும்.’

*அப்போது ஜோத்பூரின் அரியணை அனாதையாக இருந்தது. செத்துப்போன மகாராஜா மன் சிங்குக்கு (1843), நான்கு ஆண் பிள்ளைகள் பிறந்திருந்தார்கள். ஆனால் அவருக்கு முன்பே இறந்தும்போயிருந்தார்கள். லேட் மகாராஜாவின் மனைவிகள் பலர் சதியில் கலந்துபோயிருந்தனர். மிச்ச சொச்சம் இருந்தவர்களில் யாரும் மசக்கையோடு இல்லை. என்னதான் செய்வது?*

*‘அக்கம் பக்கத்து ராஜபுத்திர சமஸ்தானங்கள்ல ஆளைத் தேடுங்கப்பா. ரதோர் பரம்பரையா பார்த்துப் புடிங்கப்பா’ ராஜகுடும்பத்துப் பெரிசுகளின் ஆலோசனைப்படி ஆள் பார்த்தார்கள். ஜோத்பூருக்கும் குஜராத்தின் அஹமத்நகருக்கும் பலகாலம் நல்லுறவு நீடித்து வந்தது. அப்போது அங்கு ஆண்டு கொண்டிருந்தவர் தக்த் சிங்* (Takht Singh). *அரியணை ஏறி, இரண்டு ஆண்டுகளே ஆகியிருந்தன. ஜோத்பூரிலிருந்து அழைப்பு வந்தது.*

*‘அய்யா, வர்றீங்களா? அரியணை காத்திருக்குது.’*

*தக்த் சிங் மறுக்கவில்லை. ஆனால் அஹ்மத்நகரின் கதி? அது சின்னஞ்சிறிய சமஸ்தானம்தான். சொல்லப்போனால் இடார் என்ற ஓரளவு பெரிய சமஸ்தானத்தோடு ஒட்டிக் கொண்டிருந்தது. பிரிட்டிஷாரின் ஆசியோடு இடாரோடு, அஹ்மத்நகரை பெவிகால் போட்டு ஒட்டினார்கள். தக்த் சிங், மங்கள நாள் ஒன்றில் ஜோத்பூருக்குள் அடியெடுத்து வைத்தார். மேஹ்ரங்கர் கோட்டை அரண்மனையில் அக்டோபர் 29ல் அரியணை ஏறினார்.*

பிரிட்டிஷார், புதிய என்ஃபீல்டு ரகத் துப்பாக்கிகளை இந்தியச் சிப்பாய்களுக்கு அறிமுகப்படுத்தினார்கள். அதில் பிரச்னையில்லை. அதில் உபயோகப்படுத்த வேண்டிய தோட்டாக்களில்தான் ஒரு மாபெரும் புரட்சி ஒளிந்துகொண்டிருந்தது. சுடும்போது வழுக்கிக்கொண்டு சுலபமாக வெளியேறுவதற்காக தோட்டாக்களில் பன்றி, பசுவின் கொழுப்பு தடவப்பட்டிருந்தது. தோட்டாக்களின் மேல் தகடைப் பல்லால் கடித்து இழுத்துதான் வெளியில் எறிய வேண்டும். இந்து, இஸ்லாமிய சிப்பாய்கள் கொதித்தெழுந்தனர். 1857. சிப்பாய் புரட்சி, மீரட்டில் ஆரம்பமானது.

'டெல்லிக்குச் செல்வோம். இரண்டாம் பகதூர் ஷாவை இந்தியாவின் பேரரசர் ஆக்குவோம்' - எல்லா திசைகளிலும் சிப்பாய்களின் கிளர்ச்சி. பிரிட்டிஷ் தலைகள் உருண்டு கொண்டிருந்தன. ஜோத்பூரிலும் பிரிட்டிஷாருக்கு இக்கட்டான சூழல். தக்த் சிங், தனது ராஜபுத்திர வீரர்களுக்குக் கட்டளையிட்டார். 'பிரிட்டிஷாரோடு நாம் நல்ல நட்புறவோடு இருந்து வருகிறோம். எந்த ஒரு ராஜபுத்திரனும் தனது கடைசி மூச்சு உள்ளவரை நட்பை விட்டுக் கொடுக்காதவனே. நம் மண்ணில் எந்த ஒரு ஐரோப்பியப் பெண்ணுக்கும் குழந்தைகளுக்கும் ஆபத்து நேர்ந்து விடக் கூடாது. உடனே அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுங்கள்.'

தக்த் சிங்கின் பெருமுயற்சியினால் ஏகப்பட்ட ஐரோப்பிய பெண்களும் குழந்தைகளும் மேஹ்ரங்கர் கோட்டையில் பாதுகாப்பாக வைக்கப்பட்டார்கள். ஐரோப்பியர்கள், மகாராஜாவுக்கு மனம் நெகிழ நன்றி சொன்னார்கள். ஐரோப்பிய மக்களைக் காப்பாற்றிய மகாராஜாவால் தம் மக்களைக் காப்பாற்ற முடியாமல் போனது. அது இன்னொரு சம்பவம். அதே ஆண்டில் நடந்ததுதான்.

மேஹ்ரங்கர் கோட்டையின் சாமுண்டீஸ்வரி கோவிலில் அந்த ஆகஸ்ட் 9ல் ஏதோ ஒரு விசேஷம். கூட்டம் அதிகம். தேவியின் தரிசனத்துக்காக வந்துகொண்டே இருந்தார்கள். கோயிலுக்கு வரும் பாதையில்தான் வெடிமருந்துக் கிடங்கும் இருந்தது. மழைவரும் போல இருந்தது. மின்னல் ஒன்று கிடங்கில் இறங்க, தீப்பிடித்தது. பயங்கர வெடிவிபத்து.

'மகாராஜா முந்நூறுபேர் போல இறந்துட்டாங்க' - செய்தி கேட்டு இடிந்துபோய் உட்கார்ந்தார் தக்த் சிங். சாமுண்டீஸ்வரி சிலையும் சேதமடைந்ததாகவும் அதை ராஜகுடும்பத்தினர் புதிதாகப் பிரதிஷ்டை செய்ததாகவும் சொல்வார்கள். (2008, செப்டெம்பர் இறுதியில் நவராத்திரி விழாவில் சுமார் 150 பேர் நெரிசலில் சிக்கி இறந்ததுவும் இங்குதான்.)

இவை தவிர தக்த் சிங்கின் ராஜ வாழ்க்கையில் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமென்றால் அவர் செய்துகொண்ட திருமணங்கள். 'இவ்விடம் ராஜபுத்திரப் பெண்களுக்கு வாழ்க்கை கொடுக்கப்படும்' என்று அரண்மனைக்கு வெளியே அறிவிப்புப் பலகை போட்டிருப்பார் போல. 1862 முதல் 1871 வரை பலமுறை மாப்பிள்ளைக் கோலம் பூண்டிருக்கிறார். எத்தனை என்று எண்ணிச் சொல்ல, நம் கைவிரல்கள், கால்விரல்கள் மட்டும் போதாது. பக்கத்திலிருப்பவரிடமும் உதவி கேட்க வேண்டும். மொத்தம் 29 அதிகாரபூர்வ திருமணங்கள். இதர கொசுறு திருமணங்களுக்குக் கணக்கில்லை.

இறுதி அதிகாரபூர்வ திருமணம் செய்துகொண்ட இரண்டாவது ஆண்டில் இயற்கை எய்தினார். யாரங்கே? தீயை மூட்டுங்கள். ராணிகளெல்லாம் தயாரா? வந்து குதியுங்கள். இப்படி சதிக் கொடுமை நடந்ததாக தக்த் சிங்கின் மரணத்தில் குறிப்புகள் எதுவும் இல்லை. அவருடைய


பிரதாப் சிங்

வாரிசுகளில் இளவரசர்களாக அங்கீகரிக்கப்பட்டவர்கள் பத்து பேர், இளவரசிகள் ஐந்து பேர். அங்கீகாரமில்லாதவர்களை எல்லாம் சேர்த்துப் பெயர்களைப் பட்டியலிட்டால் அது ஜோத்பூரின் வாக்காளர் பட்டியலைவிட நீளமாகப் போகலாம். விட்டுவிடலாம்.

தக்த் சிங்கின் இரண்டாவது மனைவிக்குப் பிறந்த மூத்த மகன் இரண்டாம் ஜஸ்வந்த் சிங் (Jaswant Singh II). அவருடைய வாரிசுகளில் குறிப்பிடத்தகுந்த இன்னொருவர் இளவரசர் பிரதாப் சிங் (Pratap Singh). ஜஸ்வந்த் சிங், ஜோத்பூர் மகாராஜா ஆனார். பிரதாப் சிங், பிரதமர் ஆனார். பொற்காலம், வசந்தகாலம் என்றெல்லாம் சொல்வார்களே. ஜோத்பூருக்கு அப்போது ஆரம்பமானது. இருவரது கூட்டு முயற்சியால் தந்திசேவை முதல் தண்டவாளம் வரை சமஸ்தானம் பலகட்ட வளர்ச்சிகளை அடைந்தது. மேஹ்ரங்கர் கோட்டையைச் சுற்றி ஜோத்பூர் நகரம் நவீனமாக வளர்ந்தது.

மகாராஜா ஜஸ்வந்த் சிங்கைவிட, பிரதாப் சிங்குக்கு ஐரோப்பியர்களிடையே மவுசு அதிகமாக இருந்தது. காரணம் அவரது வேகம், வீரம், தைரியமான செயல்திறன். ராஜபுத்திரர்கள் அவரை மாவீரராகப் போற்றினார்கள். அவர் மகாராஜாவாக இல்லாவிட்டாலும் அனைத்து ராஜபுத்திர சமஸ்தானங்களிலும் பிரதாப் சிங்குக்கென்று தனி மதிப்பு இருக்கவே செய்தது. இரண்டாவது ஆப்கன் யுத்தத்தில் கலந்துகொண்டது உள்பட, பிரதாப் சிங்கின் பல போர் நடவடிக்கைகள் பக்கிங்ஹாம் வரை அவரது புகழ் பரப்பியிருந்தன.

*1887* - குயின் விக்டோரியாவின் பொன்விழாக் கொண்டாட்டத்துக்கான ஆண்டு. ரதோர் பரம்பரையிலிருந்து யாரும் அதுவரை கடல்தாண்டி ஐரோப்பாவுக்குச் செல்லவில்லை. பிரதாப்

சிங்குக்கு அந்த வாய்ப்பு வந்தது. குயின் விக்டோரியாவின் பிரத்யேக அழைப்பு. பிரதாப் சிங், படு டாம்பீகமாகக் கிளம்பினார். போகிற வழியில் கப்பல் விபத்து. உயிருக்கு எதுவும் ஆபத்தில்லை. ஆனால் அவர் கொண்டு சென்ற பெட்டிகளில் பல ஜலசமாதி அடைந்தன. சில நகைப்பெட்டிகளை மட்டும் மீட்டுக் கொடுத்தார்கள்.

லண்டன் சென்று இறங்கியவருக்கு உடுத்துவதற்கு நல்ல உடைகள் இல்லை. அங்கு கிடைத்த உடைகளும் அவருக்கு உகந்ததாகத் தெரியவில்லை. 'ராஜபுத்திர தொளதொள பைஜாமாவுக்கு நான் எங்கே போவேன்?' தெருத்தெருவாக அலைந்து திரிந்தார். குயினைச் சந்திப்பதற்காகவும் நல்ல உடை தேவை. பல தையல்காரர்களைப் பாடாகப்படுத்தி, கடைசியில் ஒரு தையல்கார னிடம் சரணடைந்து தன் மனம் விரும்பும் வகையில் உடையைத் தைத்துக்கொண்டார்.

லண்டன் வந்து இறங்கிய மகாராஜாக்களெல்லாம் சமர்த்தாக சேவோய் ஹோட்டலுக்குச் சென்று கட்டையைச் சாய்த்துக் கொண்டார்கள். ஆனால் பிரதாப் சிங் மட்டும் 'நான் பக்கிங்ஹாம் அரண்மனையில்தான் தங்குவேன்' என்று கெத்தாகச் சொன்னார்.

'அட என்னப்பா நீ, புரியாமப் பேசுற. அங்க எல்லாம் நாம் தங்கறதுக்குப் பிரத்யேக அனுமதி வேணும்' விளக்கினார்கள் சக ராஜகுடும்பத்து நண்பர்கள். பிரதாப் சிங் அசராமல் பதில் கொடுத்தார்.

'இப்போ நான் ஜோத்பூருக்குக் குயினை விருந்தாளியாக் கூப்புடுறேன். அவங்களும் வர்றாங்க. நான் அவங்களை எங்க தங்க வைப்பேன்? விருந்தினர் மாளிகையிலயா? ஹோட்டல்லயா? ரெண்டும் இல்லை. என்னோட அரண்மனையிலதான தங்கச் சொல்லுவேன். அதேமாதிரி இப்போ நான் குயினோட விருந்தாளி. நான், அவங்களோட அரண்மனையில தங்கறதைத்தான் விரும்புவாங்களே தவிர, ஹோட்டல்ல தங்கவிட மாட்டாங்க' என்று சொல்லிபடி விறுவிறு வென பக்கிங்ஹாம் அரண்மனை நோக்கிக் கிளம்பினார்.

பொன்விழா கொண்டாட்டங்களில் மற்ற மகாராஜாக்களுக்குக் கொடுக்கப்பட்ட மரியாதை போல, மகாராஜா அல்லாத பிரதாப் சிங்குக்கும் நிறைவான மரியாதை. குயினிடம் பொன் விழா மெடல் வாங்கி அணிந்துகொண்டார். சந்தோஷமாக ஜோத்பூர் திரும்பினார்.

பிரதாப் சிங்குக்குப் பல ஐரோப்பிய நண்பர்கள் இருந்தார்கள். வேட்டையாடுவதற்காக ஜோத்பூர் வந்துபோவார்கள். அவர்களை காட்டுக்கு அழைத்துச் செல்வது பிரதாப் சிங்கின் பொழுதுபோக்கு. எந்தெந்த மிருகங்களை எப்படி எப்படி வேட்டையாட வேண்டுமென்றும் விலாவாரியாகக் கற்றும் கொடுத்தார். ஒருமுறை பிரதாப் சிங், நான்கு ஐரோப்பிய நண்பர்களைக் காட்டுக்கு அழைத்துச் சென்றிருந்தார்.

காட்டுப்பன்றி வேட்டை. நன்றாகத்தான் போய்க்கொண்டிருந்தது. ஆனால் ஐரோப்பிய நண்பர் ஒருவருக்கு மட்டும் உடல்நிலை சரியில்லை. காய்ச்சல் ஏறிக்கொண்டே போனது. கைவசம் தக்க மருந்துகள் இல்லை. காட்டுக்குள்ளிலிருந்து உடனே வெளிவர முடியாத சூழ்நிலை. அந்த நண்பர் இறந்துபோனார். மூவரும் அதிர்ந்துபோனார்கள். பிரதாப் சிங்தான் அவர்களை ஆசுவாசப்படுத்தினார்.

சடலத்தைக் காட்டுக்குள்ளிருந்து வெளியே கொண்டுவர வேண்டும். தூக்க நான்கு பேர் தேவை. பிரதாப் சிங்கைத் தூக்கச் சொல்ல முடியாது. அவர் ராஜபுத்திரர். இனத்தவர்கள்

கொதித்துவிடுவார்கள். ஒரு கை குறைய, மற்ற மூவரும் செய்வதறியாது விழித்தனர். 'வாங்க தூக்கலாம்' என்று கிளம்பினார் பிரதாப் சிங். 'அய்யோ, நீங்கள் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டாம்' என்று மற்றவர்கள் பதறினார்கள். அதற்குள் பிரதாப் சிங், சடலத்தைத் தூக்கவும் மற்றவர்கள் இணைந்துகொண்டார்கள்.

ஜோத்பூரில் வைத்து இறந்தவரது இறுதிச் சடங்குகள் நடந்தன. பிரதாப் சிங்கின் செயல் அவரது இனத்தவரிடையே அதிர்ச்சி அலைகளை ஏற்படுத்தியிருந்தன. ஆனால் அவரை எதிர்த்துப் பேசும் நாக்கு யாருக்கும் இருக்கவில்லை. மறுநாள் பிரதாப் சிங்கின் இருப்பிடத்துக்குச் சில பிராமணர்கள் வந்தார்கள். என்னவென்று விசாரித்தார் அவர்.

'உங்க இடத்துல தீட்டு பட்டுடுத்து. பாவம் சேர்ந்துடுத்து. புண்ணியாக வாசனம் பண்ணப் போறோம்.'

'நான் சுத்த வீரன். எல்லா இனத்தைவிடவும் உயர்ந்ததா வீரர்களோட இனம் மட்டும்தான் இருக்கமுடியும். நிக்காதீங்க, ஓடிப்போயிருங்க' பிரதாப் சிங்கின் கர்ஜனையில் அவர்கள் காணாமல் போயிருந்தார்கள். இப்படிப்பட்ட வீரதீர பிரதாபங்கள் நிறைந்த பிரதாப் சிங்கின் துணையோடு கவலையின்றி ஆட்சி செய்தார் மகாராஜா இரண்டாம் ஜஸ்வந்த் சிங்.

திருமண விஷயத்தில் ஜஸ்வந்த் சிங், தனது தந்தையைப்போல பெருத்த அநியாயம் எல்லாம் செய்யவில்லை. ஆசைக்கு ஐந்து கல்யாணங்கள், உதிரியாக மேலும் சில. ஐந்து இளவரசர் களைத் தந்துவிட்டு 1895ல் இந்தப் பூவுலகை விட்டு அகன்றார். ஜஸ்வந்த் சிங்குக்காகவும் யாரும் தீக்குளிக்க வைக்கப்படவில்லை என்பது ஓர் ஆறுதல்.

யார் அடுத்த மகாராஜா? எல்லாத் தகுதிகளும் திறமையும் இருந்தும் பிரதாப் சிங்குக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. ஜஸ்வந்த் சிங்கின் பதினைந்து வயது மகன் சர்தார் சிங்கை பிரிட்டிஷார் ஆசிர்வாதம் செய்தார்கள். 'பதவி கிடக்கிறது மண்ணாங்கட்டி, நான் என் சகோதரரின் புத்திரனுக்குப் பிரதிநிதியாக (Regent) இருக்கிறேன்' - பெருந்தன்மையாக விட்டுக் கொடுத்தார் பிரதாப் சிங்.



# போடுங்கம்மா ஓட்டு!

ஆஸ்தான வித்வான், ஆஸ்தான ஜோதிடர், ஆஸ்தான ஆசைநாயகி எல்லாம் கேள்விப்பட்டிருப்போம். ஆஸ்தான ராஜ பிரதிநிதி? சமஸ்தானத்தில் எந்த மகாராஜா செத்துப்போனாலும் அடுத்த மகாராஜா வயசுக்கு வரும்வரை ஆட்சிப் பொறுப்பைக் கட்டிக்காக்க வேண்டிய Regent. ஜோத்பூர் ரதோர் ராஜ குடும்பத்தைச் சேர்ந்த வீரர் பிரதாப் சிங்கின் நிலைமை அப்படித்தான் ஆகிப் போனது.

முதலில் தனது அண்ணன் மகன் சர்தார் சிங்குக்காகப் பிரதிநிதியாக இருந்தார். சர்தார் சிங்குக்கு அற்ப ஆயுசு. அப்புறம் பேரன் சுமெர் சிங்குக்குப் பிரதிநிதியாக. சுமெர் சிங்குக்கும் கொஞ்சூண்டுதான் ஆயுசு. அடுத்து இன்னொரு பேரன் உமைத் சிங்குக்கும் பிரதிநிதியாக இருந்தார். இப்படி வாழ்நாளில் இறுதிவரை ஜோத் பூரின் மகாராஜாவாக ஆக முடியாமல், வெறும் ராஜ பிரதிநிதியாக மட்டுமே வாழ்ந்த பிரதாப் சிங், நரைகூடிக் கிழப்பருவமெய்தி 1922ல் இறந்தார்.

சர்தார் சிங், செய்துகொண்டவை இரண்டே திருமணங்கள் என்பது பதியப் பட்டுள்ள தகவல். ‘அதெல்லாம் இல்லபா. அவரு ஆளு ஒரு மாதிரி. பொம்பள விஷயத்துல பலே கில்லாடி. எக்கச்சக்கமா கல்யாணம் கட்டிக்கிட்டாரு. எசகு பிசகா நிறைய வைச்சிருந்தாரு. அவரு செத்தப்போகூட எழுபத்திநாலு பொம்பளைங்க தீக்குளிச்சாங்க!’ - என்பது வரலாற்றுக் கிசுகிசு.

பிரதாப் சிங்கின் மரணத்துக்குப் பிறகு மகாராஜா உமைத் சிங்குக்கு ஜோத்பூரின் முழு ஆட்சி அதிகாரமும் வழங்கப்பட்டது. மகாராஜா உமைத் சிங் (Umaid

Singh), தன் பரம்பரை முன்னோர்களெல்லாம் வெட்கித் தலைகுனியும்படி ஒரே ஒரு காரியம் செய்தார். வாழ்க்கையில் ஒரே ஒரு கல்யாணம்தான் செய்துகொண்டார். ஏகபத்தினி விரதராக வாழ்ந்தார். இஷ்டத்துக்குப் பெண்களோடு ஜொள்ளுறவு வைத்துக்கொள்ளாமல், இஷ்டப்பட்டு பிரிட்டிஷ் அரசோடு நல்லுறவு வளர்த்துக்கொண்டு ஆட்சியைப் பிரச்னைகளின்றித் தொடர்ந்தார்.

அந்தக்கால ராஜபுத்திர மகாராஜாக்களில் பணக்காரர், நெம்பர் ஒன் என்றெல்லாம் பார்த்தால் அது உமைத் சிங்தான். அவரிடமிருந்த நகைகளின் மதிப்பு மட்டுமே மூன்று மில்லியன் பவுண்ட் இருக்குமென்றார்கள். தன் வாரிசுகளைத் தங்கத் தாம்பூலத்தில் தாங்கித்தான் வளர்த் தார். தொட்டில் முதற்கொண்டு கிலுகிலுப்பைவரை எல்லாமே பசும்பொன்னில் வார்க்கப்பட் டவை. ஓர் இளவரசராக சகல சௌகரியங்களுடனும் வளர்ந்த ஹன்வந்த் சிங் (Hanwant Singh), இங்கிலாந்தில் பள்ளிப்படிப்பை முடித்துவிட்டுக் கிளம்பினார். அந்த வேளையில் தன்னோடு படித்த சக இளவரசரிடம் கேட்டார். 'நீ இங்க வர்றப்போ என்னவெல்லாம் கொண்டு வந்த?'

'ரெண்டு டிரங்கு பெட்டி நிறைய உடைகள், பொருள்கள் எல்லாம் கொண்டுவந்தேன். நீ?' - பதிலுக்குக் கேட்டார் அந்த இளவரசர்.

'கொஞ்சம் குதிரைங்க, கொஞ்சம் வேலைக்காரங்க, முடிவெட்ட ஒரு ஆள், ஒரு தையல்காரர், ரெண்டு கார், அப்புறம் சில துப்பாக்கி.'

உமைத் சிங், தன் மகன் கல்லூரிப் படிப்பை முடித்த சில ஆண்டுகள் கழித்து, திருமண ஏற்பாடு களைச் செய்தார் (1943). தாரங்கதாராவைச் சேர்ந்த ராஜபுத்திர இளவரசி கிருஷ்ண குன்வர்பா (Krishna Kunwarba). இதுவரை எந்த ராஜபுத்திர திருமணமும் இத்தனைக் கோலாகலமாக நடந்ததில்லை என்று எல்லோரும் வியக்குமளவுக்கு ஆடம்பரம். புகுந்த அரண்மனைக்குள் நுழைந்த பதினாறு வயது கிருஷ்ண குன்வர்பாவுக்கு அவளது மாமனார், கட்டுப்பாடுகளெல் லாம் விதிக்கவில்லை. 'நீ முக்காடு போட்டுக்கிட்டுத்தான் இருக்கணும்னு அவசியமில்லை. உன் விருப்பம்போல சுதந்தரமா இருந்துக்கோ.'

இரண்டாம் உலகப்போர் சமயம். புதுமணத் தம்பதியினருக்கு வெளிநாட்டு தேனிலவுக்கு வாய்ப்பின்றிப் போனது. இருந்தாலும் அந்த பாலைவனபூமி பால்நிலா வனமாகத்தான் தெரிந்தது. ஹன்வந்த் சிங், புதிய அவதாரம் ஒன்றை எடுத்தார். கையில் மந்திரக்கோல் ஒன்றை வைத்துக்கொண்டு வித்தைகாட்ட ஆரம்பித்தார். தொப்பிக்குள்ளிருந்து வெள்ளை முயலை வரவழைப்பது, காகிதத்தை எரித்து டப்பாவில் போட்டு அதைப் புறாவாக மாற்றுவது, கைத் தடியை கலர் ரிப்பனாக ஆக்குவது - கிருஷ்ண குன்வர்பா வாய்பிளந்து ரசித்தாள்.

'உங்களால எப்படி இதெல்லாம் செய்ய முடியுது? நீங்க மந்திரவாதியா?' அவளது கேள்வியில் கொஞ்சம் பயமும் கலந்திருந்தது. 'எனக்கு மேஜிக் தெரியும். பல வருஷமா கத்துக்கிட்டு இருக்கேன்' - தன் கையுறையிலிருந்து ரோஜா ஒன்றை வரவழைத்து நீட்டினார் ஹன்வந்த் சிங்.

தன் தந்தையைப்போலன்றி, பிரிட்டிஷாருக்கு எதிரான கருத்துகளைக் கொண்டிருந்தார் ஹன்வந்த் சிங். இந்தியா சுதந்தரத்தை நெருங்கிக் கொண்டிருந்த வேளை. இன்னொருபுறம்



மகாராஜா சர்தார் சிங்

பிரிவினை வாதம் வலுத்துக் கொண்டிருந்தது. சுதந்தரத்துக்குப் பின் சமஸ்தானம், மகாராஜா பதவி என்பதெல்லாம் காணாமல் போய்விடும் என்பதுபோன்ற இக்கட்டான சூழலில், உமைத் சிங் இறந்துபோனார் (1947, ஜூன் 9). கடைசிக்கு முந்தைய ரீலில் ஜோத்பூரின் அரியணை ஏறினார் ஹன்வந்த் சிங்.

இந்தியாவோடு இருப்பதா? பாகிஸ்தானோடு சேருவதா? மகாராஜாக்கள் முன் கேள்விக்குறி ஒன்று விஸ்வரூபம் எடுத்து நின்றது. ராஜபுத்திர சமஸ்தானங்கள் எல்லாம் எந்தவித மறுப்புமின்றி இந்தியாவுடனேயே இருந்துவிடும் என்று இந்தியத் தலைவர்கள் நம்பினார்கள். மற்ற இஸ்லாமிய சமஸ்தானங்களைத் தக்கவைத்துக் கொள்வதில் அதிக அக்கறை காட்டினார்கள். ஜின்னா ஒரு பக்கம் வேறுவிதமாகக் காய் நகர்த்திக் கொண்டிருந்தார். 'நான் எதற்கு இந்தியாவுடனோ, பாகிஸ்தானுடனோ என் சமஸ்தானத்தை இணைக்க வேண்டும்? ஜோத்பூரை சுபிட்சமாக ஆள்வது எப்படி என்று எனக்குத் தெரியும்.' தன்னளவில் முடிவெடுத்திருந்தார் ஹன்வந்த் சிங்.

ஜின்னா, ஹன்வந்த் சிங்கைச் சந்தித்தார். ஒரு வெற்றுக்காகிதத்தையும், பேனாவையும் நீட்டினார். 'தங்களுக்கு என்னென்ன தேவை என்று இதில் எழுதுங்கள். அத்தனையையும் நான் செய்து தருகிறேன். பாகிஸ்தானோடு வந்துவிடுங்கள்.'

மகாராஜா, 'யோசிக்கக் கொஞ்சம் அவகாசம் கொடுங்கள்' என்றார். 'சாதகமான முடிவாகச் சொல்லுங்கள்' என்றபடி ஜின்னா கிளம்பிப்போனார். விஷயம் கேள்விப்பட்ட வி.பி. மேனனுக்கு (இந்திய உள்துறை செயலாளர்) அடிவயிற்றில் கிலி. ஹன்வந்த் சிங்குக்கு அவசர அழைப்பு விடுத்தார். மௌன்பேட்டன் முன்னிலையில் அவர்கள் சந்திப்பு நடந்தது. 'அய்யா, இந்தியாவோட இருக்கிறதைத்தான் உங்க ராஜபுத்திர மக்கள் விரும்புவாங்க. ஜோத்பூர் சமஸ்தானத்துக்குன்னே ரயில்வே திட்டங்கள் முதற்கொண்டு பல திட்டங்களைப் போட்டு வைச்சிருக்கோம். என்ன சொல்லுறீங்க?'

மகாராஜா அமைதியாக இருந்தாரே தவிர, மறுத்து எதுவும் பேசவில்லை. மௌன்ட்பேட்டன் அறையிலிருந்து வெளியேறினார். வி.பி. மேனன், இந்தியாவுடனான இணைப்பு ஒப்பந்தத்தை நீட்டிக் கையெழுத்துப் கேட்டார். ஹன்வந்த சிங், தன் சட்டைப்பையிலிருந்து தங்கப்பேனா ஒன்றை எடுத்தார். கையெழுத்திடுவதுபோலக் காகிதத்தில் வைத்தார். சட்டென நிமிர்ந்து பேனாவை மேனனின் நெற்றிப்பொட்டில் அழுத்தினார். அது துப்பாக்கியாக உருமாறியிருந்தது. மிரட்டலாகச் சொன்னார். 'என் சமஸ்தான மக்களை ஏமாத்த நினைச்சா, நான் உங்களைக் கொன்னுருவேன்.'

அறைக்குள் நுழைந்த மௌன்ட்பேட்டன், மகாராஜாவைச் சமாதானப்படுத்தினார். பெரும் இழுபறிக்குப் பின் ஹன்வந்த் சிங் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார் (ஆகஸ்ட் 11, 1947). எங்கெங்கும் பிரிவினைப் படுகொலைகள் நிகழ்ந்து கொண்டு இருந்த சமயம். ஹன்வந்த் சிங், ஜோத்பூர் முழுவதும் தெருத்தெருவாகச் சென்றார். 'இந்துக்களும் இஸ்லாமியர்களும் என் இரு கண்கள். என் ஒரு கண்ணைக் குருடாக்க நினைக்காதீர்கள். என் அருமை இஸ்லாமிய மக்கள், இங்குதான் தொடந்து வாழவேண்டும். ஜோத்பூரை விட்டுச்செல்ல நினைப்பது என்னை அவமதிப்பது போன்றது.' ஹன்வந்த் சிங்கின் பெருமுயற்சியினால் ஜோத்பூரில் பெரிய அளவில் வன்முறை நிகழவில்லை.



மகாராஜா ஹன்வந்த் சிங்

எல்லாக் களேபரங்களும் சற்றே ஓய்ந்தபோது கிருஷ்ண குன்வர்பா ஆண் வாரிசைப் (இரண்டாம் கஜ் சிங்) பெற்றுக்கொடுத்து ஹன்வந்த் சிங்கை அப்பாவாக்கினாள். ஆனால் அவரோ காதலராக மாறியிருந்தார். பம்பாயில் பார்ட்டி ஒன்றில் புதுப்பெண் ஒருத்தியைக் கண்டு காதல்கொண்டார். சான்ட்ரா மெக்ப்ரைட் (Sandra McBryde). மருத்துவமனை ஒன்றில் நர்ஸாகப் பணிசெய்து கொண்டிருந்தவள். பேசி, பழகி, மனம் மயக்கி தன்னுடன் ஜோத்பூருக்கே அழைத்தும் வந்துவிட்டார். 'என்ன பார்க்கிறீர்கள்? இவள் என் ஆசைநாயகி' மகாராஜா சொல்லவும் யாராலும் மறுவார்த்தை பேசமுடியவில்லை.

'இது ராஜபுத்திரர்களின் கலாசாரத்துக்கு எதிரானது' என முணுமுணுப்புகள் இருக்கவே செய்தன. அவள் ஆரிய சமாஜத்தைத் தழுவினாள். சான்ட்ரா என்ற பெயர் சுந்தரதேவி ஆனது. ஹன்வந்த் சிங், அவளைத் தன் இரண்டாவது மனைவி ஆக்கிக் கொண்டார். ஆரம்ப நாள்கள் இனிப்பாகவே இருந்தன. அரண்மனையில் ராஜகுடும்பத்தினர் யாரும் அவளை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகவே அவளுக்கு எதிர்காலம் குறித்த பயம் இருந்துகொண்டே இருந்தது.

ஐரோப்பியச் சுற்றுப்பயணம். கப்பலில் சென்றுகொண்டிருந்தார்கள். ஹன்வந்த் சிங்குக்கும் அவளுக்கும் கடும் வாக்குவாதம். கோபத்தில் தான் அணிந்திருந்த, வைரம், முத்து உள்ளிட்ட கற்கள் எல்லாம் பதிக்கப்பட்ட மேலாடை ஒன்றைக் கடலில் வீசியெறிந்தாள். பதறிப்போன மகாராஜாவின் உதவியாளர்கள், கடலில் குதித்து அதை மீட்டுக்கொண்டு வந்தார்கள். விரைவிலேயே அவர்கள் விவாகரத்தை நோக்கி முன்னேறினார்கள்.

இடைப்பட்ட காலத்தில் ஒரு நடிகையின் வசீகரத்தில் தன்னை இழந்திருந்தார் ஹன்வந்த் சிங். ஸுபைதா பானு (Zubeida Banu) அவள் பெயர். அவளது எழில் கொஞ்சும் இளமையில் தன்னிலை மறந்து திரிந்தார். மேஹ்ரங்கர் கோட்டை அந்தப்புரத்துக்குள் அடியெடுத்து வைத்தாள் ஸுபைதா. அவள் வித்யாராணி சீதாதேவி ஆனாள், கூடவே திருமதி. ஹன்வந்த் சிங் ஆகவும்.

1952. ராஜஸ்தான் மாநிலத்துக்கான முதல் சட்டசபை, இந்தியாவின் முதல் மக்களவைக்கான தேர்தல்கள் அறிவிக்கப்பட்டன. 'எவனாவது தேர்தல்ல நின்னீங்க, மானியம் கிடையாது' என்று நேரு, முன்னாள் மகாராஜாக்களை மிரட்டியதாக ஒரு தகவல் உண்டு. காங்கிரஸோடு கூட்டணி அமைத்துப் போட்டிபோடப் பாதி தொகுதிகளைக் கேட்டார் ஹன்வந்த் சிங். உடன்பாடு ஏற்படவில்லை. தனித்து நிற்க முடிவு செய்தார்.

காங்கிரஸார் சிரித்தார்கள். 'நான் நிக்கவைச்சா ஒரு கல்லுகூட தேர்தல்ல ஜெயிக்கும்' என்று சவால்விட்டு களமிறங்கினார் ஹன்வந்த் சிங். முப்பந்தைந்து சட்டசபை, நான்கு பாராளு மன்றத் தொகுதிகளில் தனது ரதோர் வேட்பாளர்களை நிறுத்தினார். அவர் ஜோத்பூர் நகர சட்டசபை, பாராளுமன்றம் இரண்டிலும் வேட்பாளராக நின்றார்.

'போடுங்கம்மா ஓட்டு! ஒட்டகத்தைப் பார்த்து!' - ஊர் ஊராகச் சுற்றினார். 'நீங்கள் என் மக்கள். நீங்களே எனக்கான மானியம்!' - ஹன்வந்த் சிங்குக்குச் செல்லுமிடமெல்லாம் படுவரவேற்பு. காங்கிரஸ் கூடாரம் ஆடித்தான் போயிருந்தது. தேர்தல்கள் முடிந்தன. ஓட்டு எண்ணிக்கைகள் ஆரம்பமாயின (ஜனவரி 26). ஆரம்பத்திலிருந்தே ஒட்டகத்துக்கு நல்ல செய்திதான் வந்துகொண்டிருந்தது. ஹன்வந்த் சிங்குக்குக் குஷி தாங்கவில்லை. ஸுபைதாவை அழைத்துக் கொண்டார். இருவர் மட்டும் செல்லும் மினி விமானம் ஒன்றில் ஏறினார். மகிழ்ச்சியாக ஓட்ட ஆரம்பித்தார். விமானம் வானத்தில் சாகசம் செய்துகொண்டிருந்தது.

இரவு. நொறுங்கிக் கிடந்த விமானத்தில் இருந்து ஹன்வந்த் சிங்கின் உடலையும் ஸுபைதா வின் உடலையும் மீட்டெடுத்தார்கள்*. தேர்தல் முடிவுகள் முழுவதுமாக வெளியாகின. ஹன்வந்த் சிங்கின் வேட்பாளர்கள் 31 சட்டசபைத் தொகுதிகளிலும், 4 மக்களவைத் தொகுதி களிலும் வெற்றி பெற்றிருந்தார்கள். அவரும் இரண்டிலும் வெற்றிபெற்றிருந்தார்.

காங்கிரஸின் முதலமைச்சர் வேட்பாளரான ஜெய் நாராயன் வியாஸுக்குப் (Jai Narain Vyas) படுதோல்வி. மகாராஜா இறந்த துக்கம், ஆத்திரம். வியாஸை ஜோத்பூர் மக்கள் நையப்புடைத் திருந்தார்கள். பின்பு இடைத்தேர்தல் ஒன்றில் வெற்றிபெற்றுதான் வியாஸால் முதலமைச்சர் ஆக முடிந்தது.

ஜோத்பூரின் இன்றைய கௌரவ மகாராஜா இரண்டாம் கஜ் சிங். இன்றளவும் உமைத் பவன் அரண்மனையில் இருந்தபடி மக்கள் செல்வாக்கோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

---

★ ஹன்வந்த் சிங் - ஸுபைதாவின் கதை, ஷ்யாம் பெனகலின் இயக்கத்தில் கரிஷ்மா கபூர் நடிக்க 'Zubeidaa' என்ற ஹிந்தித் திரைப்படமாக 2001ல் வெளிவந்தது.



# 171

# ஒரு மகாராணி குளிக்கப் போகிறாள்!

காலை நேரத்திலேயே ராம்பூரின் (உத்திரபிரதேசம்) காஸ் பாக் அரண்மனையில் குதிரை வண்டிகள் குவிய ஆரம்பித்துவிடும். அதிலிருந்து இறங்கும் அமைச்சர்களும் இதர அதிகாரிகளும் அந்த 'அலுவல் அறை'யை நோக்கி குதிரையைவிட வேகமாக ஓடுவார்கள். கால் நிமிடம் காலதாமதம் ஆனால்கூட நவாபுக்குப் பிடிக்காது. காச் மூச்சென்று கத்தவெல்லாம் மாட்டார். சம்பளக்குறைப்பு, சஸ்பெண்ட், சிறைவாசம் என நேரடி தண்டனைகள்தான்.

அலுவல் அறையின் மத்தியில் அங்கபிரதட்சணம் செய்யும் அளவுக்கு நீளமான, விசாலமான மேசை ஒன்று கண்களை மிரட்டும். நூற்றுக்கணக்கானோர் அறைக்குள் இருந்தாலும் நவாபுக்கு முன் உட்காருதல் ஆகாது. எனவே பிரதம அமைச்சர் உள்ளிட்ட சிலருக்கு மட்டும் மேசையைச் சுற்றி நாற்காலிகள் போடப்பட்டிருக்கும். மேசையின் ஒரு மூலையில் மட்டும் விசேஷ நகராத நாற்காலி. நவாப் ஹமீத் அலிகானுக்காக (Hamid Ali Khan) பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்டது.

நவாப் வரிசையாகப் பார்க்கும்விதமாகக் கோப்புகளை எல்லாம் முறைப்படி அடுக்கி வைத்துவிட்டு எல்லோரும் அவர் வருகைக்காகக் காத்திருப்பார்கள், அமைதியாக. அறையின் சிறப்பு வாசல் வழியாக நவாப் உள்ளே நுழைவார். கூடவே அவரது பணியாளர்கள் சிலரும். நவாப், தனக்கான நாற்காலியில் அமர்ந்து சிறிதுநேரம் ஆனபின்னரே, முக்கிய அமைச்சர்கள் தங்களுக்கான நாற்காலிகளை நோக்கிச் செல்வார்கள். நவாபின் உத்தரவுக்குப் பின் அலுவல் ஆரம்பமாகும்.

சரியாக இரண்டு மணிநேரம். அதற்குள் அவர் பார்க்க வேண்டிய கோப்புகளை எல்லாம் நீட்டி, விவரங்களை எல்லாம் எடுத்துச் சொல்லி, கையெழுத்துகளைப் பெற்றுக்கொள்ள வேண்டியது அலுவலர்களின் பொறுப்பு. ஆனால் என்ன, அவ்வப்போது காற்றில் துர்மணம் கமழும். சில சமயங்களில் துர்சத்தங்கள்கூட. காரணம்?

தனது அன்றாட உல்லாச கேளிக்கைகளுக்கிடையே, எப்போதாவது அலுவல்களுக்கும் நேரம் ஒதுக்க நினைத்தார் நவாப். எப்போது ஒதுக்குவது? எல்லாக் கோப்புகளிலும் எளிதாகக் கையெழுத்துபோட்டுவிட முடியாது. ஆயிரத்தெட்டு சிக்கல்கள், பிரச்னைகள், பஞ்சாயத்து கள், சிபாரிசுகள். தீர யோசித்துத் தீர்க்கமான முடிவெடுக்க நேரம் பிடித்தது. அதுபோக, தினமும் நவாபுக்கு 'நம்பர் டூ' விஷயத்தை முடிக்கவும் இரண்டு மணி நேரங்கள் பிடித்தன. கோப்பைப் பார்ப்பதையும் கோப்பைமேல் அமருவதையும் ஒன்றாகச் செய்தால் என்ன?

தனது ஆஸ்தான பொறியியலாளரை அழைத்தார். தனது அலுவல் அறையில் அந்த சிறப்பு 'காலைக்கடன்' நாற்காலியை வடிவமைக்கச் சொன்னார். வயிறும் சுத்தமானது. கோப்புகளும் நகர்ந்தன. ஆனால் மற்றவர்கள்தான் பாவம். மூக்கை மூடிக்கொண்டால் நவாப், கோபப் பட்டுவிடுவாரோ என பயந்து சகித்துக் கொண்டார்கள் சகலத்தையும்.

நவாப் ஹமித் அலிகான் 'கழிப்பதில்' மட்டுமல்ல, உண்டு களிப்பதிலும் ஒரு விநோதமான வழக்கத்தைக் கடைபிடித்துவந்தார். 'அரண்மனை அஞ்சறைப் பெட்டி' அத்தியாயத்தில் நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல ராம்பூரின் சமையலறையில் நூறுக்கும் மேற்பட்ட சமையல் கலைஞர்கள் இருந்தார்கள். முகலாய சமையல், இந்திய சமையல், ஐரோப்பியச் சமையல் என்று தனித்தனிச் சமையல் ஸ்பெஷலிஸ்டுகள். ஆனால் என்ன, ஹமித் அலிகான் ஒருநாளைக்கு ஒரே ஒருமுறைதான் சாப்பாடு சாப்பிடுவார். அதுவும் மிகச்சரியாக மாலை ஏழு மணிக்கு.

'இன்னிக்கு முகலாய வகை சாப்பாடு தயார் செஞ்சுருங்கப்பா' என்று நவாபின் கட்டளை மதிய வேளையில் சமையலறைக்குள் புகும். முகலாய சமையல் கலைஞர்கள் பரபரப்பாவார் கள். ஆறு நாற்பத்தைந்துக்கெல்லாம் சமையல் மேசையில் சாப்பாடு தயாராக இருக்கும். குறைந்தது நூறு பதார்த்தங்கள். ஏழு மணிக்கு வந்து அமரும் நவாப், ஒன்றரை மணி நேரம் உட்கார்ந்து ஆற, அமர அசைபோடுவார். சுமார் இரண்டரை கிலோ சாப்பிடுவார். எதையும் வேண்டாம் என ஒதுக்க மாட்டார். குறைந்தபட்சம் ஒரு கரண்டி பதார்த்தமாவது அவரது நாக்கில் முக்திபெறும்.

சாப்பிட்டு முடித்ததும் நிறைய ஜில் தண்ணி குடிப்பார். ஏப்பம் வந்ததும் அவரது உதடுகள் துருக்கி சிகரெட்டுகளைக் கவ்விக்கொள்ளும். அன்றைய தினத்துக்கான உணவு அவ்வளவே. காலை எழுந்து கடன்களெல்லாம் முடித்தபிறகு பசித்தால்கூடச் சாப்பிடமாட்டார். சிகரெட் மட்டுமே.

காலை எழுந்ததுமே முந்திரி, பாதாம், ஏலக்காய் டீ என்று ஆரம்பித்துவிடுவார் மகாராஜா விபுதி நாராயன் (Vibhuti Narayan). இவர் வாராணாசி சமஸ்தானத்தை ஆட்சிசெய்தவர். விபுதியின் தினசரி காலை டிபன் இனிமையானது. குலோப் ஜாமூன், பர்பி, பாஷுந்தி, ரச குல்லா, ரசமலாய், பேடா - இவை மட்டுமே. ஆனால் என்ன, மகாராஜா அவற்றைச் சப்புக் கொட்டிச் சாப்பிடும் காட்சியை யாரும் பார்க்கக்கூடாது. அவர் மட்டுமல்ல, அவரது பரம்பரை யினரே சுயேட்சையாகத்தான் சாப்பிட்டார்கள்.


ஷேர் முகமது கான்

விபுதியின் பரம்பரையினர் பூமியர் (Bhumiar) என்ற பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்கள். 'சாப்பிடுவதும் பருகுவதும் ஒரு மனிதனின் தனிப்பட்ட, அந்தரங்கமான விஷயம். அதைப் பிறர் பார்க்கக்கூடாது' என்பது அந்தப் பரம்பரையினரது பஞ்சாங்கக் கொள்கை. ஆகவே வாரணாசி ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் சாப்பிடுவதை இன்றுவரை யாரும் பார்த்தது கிடையாது.

அவர்கள் எல்லோரும் தனித்தனியாக ஒளிந்து உட்கார்ந்து கொண்டுதான் சாப்பிட்டார்கள். மகாராஜா செம கட்டு கட்டுவதை மகாராணி பார்த்ததில்லை. இளவரசி பாத்திகட்டி உணவருந்துவதை அவளது தோழிகள் பார்த்ததில்லை. மற்றவர்களாவது கௌரவம் பார்க்காமல் எடுத்துப்போட்டுச் சாப்பிட்டுக் கொள்வார்கள். மகாராஜா என்ன செய்வார்?

அதிலும் ஒருமுறை கடைபிடிக்கப்பட்டது. வாரணாசி அரண்மனையின் சமையலறையில் மொத்தம் முப்பத்து சொச்ச சமையல்காரர்கள் உண்டு. ஆளுக்கொன்றாக சுத்த பத்தமாகச் சமைப்பார்கள். வெங்காயம், வெள்ளைப் பூண்டுக்கு அங்கு தடா. அது ராஜகுடும்பத்தினருக்காக சமைக்கும் பிரசாதம். உப்பு, புளி, காரம் சரியாக இருக்கிறதா என்று சுவை பார்த்தல் கூடாது.

வேலையெல்லாம் முடியப்போகும் நேரத்தில் தலைமை சமையல்காரர் வருவார். மற்ற எல்லோரையும் அங்கிருந்து அனுப்புவார். தலைமுழுகுவார். ஒரு வேட்டி, மேல் துண்டு மட்டும் அணிந்துகொள்வார். சமைத்த பதார்த்தங்களை எல்லாம் ஓரமாக எடுத்துவைத்துவிட்டு, சமையலறையையும் அதை ஒட்டியுள்ள சாப்பிடும் இடத்தையும் கழுவி விடுவார். சாப்பிடும் இடத்தில் சுத்தமான வெள்ளைத்துணி ஒன்றை விரித்து, சாப்பாடு பரிமாறிவிட்டு அங்கிருந்து கிளம்பிவிடுவார். கொஞ்ச நேரத்தில் பூனைபோல வரும் மகாராஜா, சுற்றும் முற்றும் சந்தேகம்தீரப் பார்த்துவிட்டு அப்புறமாகச் சாப்பிட ஆரம்பிப்பார், தன்னந்தனியாக.

எனில், வாரணாசி அரண்மனையில் விருந்து, விழா எல்லாம் மருந்துக்கும் நடந்தது கிடையாதா? அதெல்லாம் பேஷாக நடந்தது. புண்ணிய யாத்திரை வரும் எல்லா மகாராஜாக் களும் வாரணாசி அரண்மனையில்தான் தங்கினார்கள். அவர்களையெல்லாம் விபுதி நாராயன் சிங், வயிறு வீங்க கவனித்துதான் அனுப்பினார். ஆனால் என்ன? பரிமாறச் சொல்லிவிட்டு வாய் பார்த்துக் கொண்டிருப்பார். அவர், மற்றவர்கள்முன் தண்ணீர்கூடக் குடித்ததில்லை. எங்காவது வெளியூர் செல்ல நேர்ந்தால்கூட விபுதி, தன்னோடு சமையல்காரர்களையும் அழைத்துச் சென்றார். கூடவே குடிக்க, சமைக்க கங்கா ஜலத்தையும் கொண்டு செல்ல மறக்க வில்லை. ஆனால் யார் விருந்துக்கு அழைத்தாலும் விபுதி சென்றதில்லை.

'விருந்துக்கு வா' என்று பாலன்பூர் நவாப் யாரையாவது பிரத்யேகமாக அழைக்கிறார் என்றால் அதில் ஏதோ உள்விவகாரம் இருக்கிறது என்றே அர்த்தம். நவாப் ஷேர் முகமது கான் (Sher

Muhammad Khan), பெயருக்கேற்றாற்போல ஆபத்தானவர்தான். ஏதாவது பிரச்னை, பஞ்சாயத்து என்றால் சம்பந்தப்பட்ட நபரைத் தன்னுடன் உணவருந்த அழைப்பது ஷேர் முகமது கானின் வழக்கம். சாப்பிட்டு முடிப்பதற்குள் பிரச்னை தீர்ந்திருக்கும் அல்லது பிரச்னைக்குரியவர்.

சமஸ்தானத்தின் ஒரு பகுதியைச் சேர்ந்த ஜாஹிர்தார் மேல் ஏகப்பட்ட புகார்கள். நவாப் அந்த ஜாஹிர்தாரை வரச்சொன்னார். உணவு மேஜைக்கு அழைத்துச் சென்றார். உட்கார்ந்தார்கள். சாப்பிட ஆரம்பித்தார்கள். நவாப் சட்டெனத் தனது தட்டைத் தூக்கித் தரையில் எறிந்தார். 'எங்கே அந்த சமையல்காரன்?'

சமையல்காரன் வந்து நின்றான். 'இது என்ன சாப்பாடா இல்லை வேறு எதுவுமா?' கடுகடுத்தார். சமையல்காரனும் அஞ்சவில்லை. பதில் சொன்னான். 'தினமும் பண்ணுறதுதானே. இன்னிக்கு என்ன வந்துச்சு? நானும் மனுஷந்தான். தெரிஞ்சுக்கோங்க.'

ஜாஹிர்தாருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அமைதியாக உட்கார்ந்திருப்பதா? சமையல்காரனுக்கெதிராகப் பொங்கி எழுந்தால் நவாபின் கரிசனம் கிடைக்குமோ? ஜாஹிர்தான் தன்னிடம் இருந்த குறுவாளை உருவி சமையல்காரனை நோக்கிப் பாய்ந்தார். ஒரே குத்து. அடுத்தநொடி நவாப், தன் வாளை உருவினார். ஜாஹிர்தாரின் தலை அவரது கழுத்திலிருந்து கழன்றது. உணவு மேசையிலிருந்த வெள்ளித்தட்டுகளில் சிவப்பு ரசம்.

திருவாங்கூர் அரண்மனையில் பின்கட்டில் சிவப்புநிற நீர் கொதிக்கிறதென்றால் மகாராணி குளிக்கப்போகிறார் என்று அர்த்தம். பணிப்பெண்கள் கையில் வெள்ளிக் கிண்ணங்களோடு மகாராணி குளிக்கும் இடம் நோக்கி அணிவகுப்பார்கள். நான்கு பெரிய பித்தளைக் கொப்பரைகளில் நீர் தயாராக இருக்கும்.

கூந்தலை அலச ஒருவித நீர். அலசிய பின் தலைக்கு ஊற்ற ஒன்று. மற்ற இரண்டிலும் உடலுக்கு ஊற்றுவதற்கான வெதுவெது நீர். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையான மூலிகைகள் கலந்து கொதிக்கவைக்கப்பட்டது. உடலுக்கு ஊற்றும் நீரில் மட்டும் குங்குமப்பூவும் நாற்பதுவகை மூலிகைகளும் கலந்திருப்பார்கள். குங்குமப்பூ கேச வளர்ச்சியைப் பாதிக்கும் என்பதால் தலைக்கு ஊற்றும் நீரில் அது கிடையாது.

மகாராணி சேது லட்சுமிபாய் வந்து உட்காருவார். பணிப்பெண்கள் முதலில் கூந்தலைத் தேங்காய் எண்ணெயால் மசாஜ் செய்வார்கள். சிறிது ஊறவைத்த பின்பு, அதன்மேல் சில மூலிகைப் பச்சிலைகளால் தயார் செய்த கலவையைத் தடவுவார்கள். அப்புறம் கொஞ்ச நேரம் கழித்து அலசி விடுவார்கள். பிறகு உடம்புக்கு எண்ணெய் மசாஜ். அடுத்ததாக சீயக்காய் மற்றும் இதர வாசனைப் பொருள்கள் கலந்த பொடியைக் கரைத்து தேகாபிஷேகம். காய வைத்த பீர்க்கங்கூடுகள் சிலவற்றை வெந்நீரில் ஊறவைத்திருப்பார்கள். அவை பஞ்சுபோல மிருதுவாகிக் கிடக்கும். உடலைத் தேய்க்க அதுவே. கிருமிநாசினி.

உடலுக்கு ஊற்றும் அந்த மூலிகை நீருக்கு அரண்மனை வட்டாரத்தில் வழங்கப்பட்ட பெயர் நல்பமரவெல்லம். பார்த்துப் பார்த்துத் தேய்த்துத் தேய்த்துக் குளிரக் குளிரக் குளித்து முடிக்கமட்டும் இரண்டு மணிநேரங்கள் ஆகும். தினமும். உடைமாற்றிவிட்டு வராண்டாவில் வந்து அமருவார் லட்சுமிபாய். பெரிய பெரிய கரண்டிகளில் மரக்கரி கனிந்து தயாராக இருக்கும். பக்கத்திலேயே சாம்பிராணி, குமஞ்சான் உள்ளிட்ட வாசனைப் புகைபொருள்கள்.



மகாராணி சேது லட்சுமிபாய்

மகாராணியின் நான்கடிக் கூந்தலை உலர்த்தும்பணி அடுத்த அரைமணி நேரத்துக்குத் தொடரும்.

திருவாங்கூர் அரண்மனை அந்தப்புரத்தில் மகாராணிக்குக் குளியல் சேவை செய்வதற்கென்றே பிரத்யேக வேலைக்காரப் பெண்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். பொதுவாக மூன்று மணிநேரத்துக்கும் குறையாத குளியல் உற்சவம் நடத்திய லட்சுமிபாய் அதன்பிறகே தனது பிற அலுவல்களை ஆரம்பித்தார்.

இப்படி ஒவ்வொரு ராஜகுடும்பத்திலும் விசித்திரச் சித்தர்கள் நிறையவே இருந்தார்கள். மேலே பார்த்த சித்தர்களுக்கெல்லாம் அப்பன் ஒருத்தர் இருந்தார். அவர் செய்த பல காரியங்களுக்குக் காரணங்களே கண்டுபிடிக்கமுடியாது அல்லது கிடையாது. அந்தச் சித்தரது பெயர் ஹரி சிங். ஊர் காஷ்மீர்.

# ஜம்மு - காஷ்மீர்

• இந்தியாவின் பெரிய சமஸ்தானங்களுள் ஒன்று

• தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1846 • ஆட்சி செய்தவர்கள் : தோக்ரா பரம்பரை

• முதல் மன்னர் : குலாப் சிங் • 21 குண்டு மரியாதை.



# 172

# காஷ்மீரத்து டிரங்கு பெட்டிகள்

ஆதியிலிருந்து ஆரம்பிக்கலாம். பாதியிலிருந்தும் ஆரம்பிக்கலாம். எங்கிருந்து ஆரம்பித்தாலும் காஷ்மீர் மகாராஜாக்களின் கதை, சொல்லில் அடங்கா நீளம் கொண்டதே. நாம் ஜம்மு காஷ்மீர் சமஸ்தானத்தின் கதையை இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து பார்க்கலாம்.

அந்தச் சமயத்தில் ஜம்மு - காஷ்மீர் சமஸ்தான மகாராஜாவாகப் பதவிக்கு வந்தவர் தோக்ரா (Dodra) என்ற இனத்தில் வந்த பிரதாப் சிங் (Pratap Singh). சுமார் நாற்பது ஆண்டுகள் (1885 - 1925) ஆட்சி செய்தார். தான் ஒரு மகாராஜா. எதிலும் தனக்குத் தான் வெற்றிகிட்ட வேண்டும். எங்கும் தனக்கே முதல் மரியாதை கிடைக்க வேண்டும் என்பதில் பிரதாப் சிங் படு உஷார். அதற்காக அவர் செய்த கோமாளித் தனங்கள் எக்கச்சக்கம். குறிப்பாகக் கிரிக்கெட்டில்.

பிரதாப் சிங் ஆள் படுகுள்ளம். பெரும்பாலும் தொளதொள பைஜாமா ஜிப்பா தான் அணிவார். தலைக்குமேல் ஓரடி உயரத்தில் அடர்த்தியான தலைப்பாகை. காதுகளில் எப்போதும் வைரத்தோடுகள். கிரிக்கெட் விளையாடவும் இதே கெட்-அப்தான். கை, காலில் பேடு, வேறு பாதுகாப்பு உபகரணங்கள் எல்லாம் அணிந்துகொள்ள மாட்டார்.

பென்ஷன் வாங்கிக்கொண்டு பெட் ரெஸ்டில் இருக்கவேண்டிய காலத்திலும் 'பேட் பிடிக்கப்போகிறேன், வா வந்து பந்துவீசு' எனப் படுத்தியெடுப்பார். ஆனால் பேட்டை சரியாகப் பிடிக்கக்கூடத் தெரியாது. நினைப்பு மட்டும் அடிச்சா

சிக்ஸர், நின்னா செஞ்சுரி. அந்த நினைப்புக்குப் பங்கம் வராமல் பௌலர்கள் பந்துவீசக் கடமைப்பட்டவர்கள்.

காற்றுக்கு வலிக்காத வேகத்தில் வரும் பந்தைப் பிரதாப் சிங், ஒப்புக்குத் தட்டிவிடுவார். அடுத்து பீல்டர்களின் வேலை ஆரம்பமாகும். அவர்கள் மறந்தும் தங்கள் கைகளால் பந்தைத் தொட்டுவிடக்கூடாது. ஜீவனின்றி உருண்டுவரும் கிரிக்கெட் பந்தை ஃபுட்பாலாகப் பாவித்துக் கொண்டு காலால் உதைக்க வேண்டும், பவுண்டரி லைனை நோக்கி. அந்தப் பந்து எல்லைக்கோட்டைத் தாண்டும் வரை துரத்திச் சென்று உதைத்துவிட்டு வரவேண்டும். ஒவ்வொரு பந்து போட்டபிறகும் அம்பயர் தயாராக இருப்பார், ஃபோர் என்று சைகை காட்ட.

ஒரு பந்தை மகாராஜா பேட்டால் தட்டத் தவறிவிட்டால், அது சரியான பந்து என்றாலும் அம்பயரின் கைகள் வைடாக நீண்டுகொண்டிருக்கும். பௌலர்கள் ஒவ்வொரு பந்தையும் ஸ்டெம்பை விட்டு தள்ளியே வீசவேண்டும். ஏதாவது ஒரு பந்து தப்பித்தவறி, ஸ்டெம்பைக் கவிழ்த்திவிட்டால், அம்பயர் கடமை தவறாது கத்துவார் 'நோ பால்!' அந்தப் பந்தை வீசிய புண்ணியவானுக்கு ஆட்டம் முடிந்தபிறகு 'தக்க சன்மானம்' கிடைக்கும்.

எல்லா ஆட்டத்திலும் பிரதாப் சிங்தான் முதலில் பேட் பிடிப்பார். அவர் மனம் விரும்பும் ரன் எடுக்கும்வரை களத்தில் இருப்பார். விக்கெட்டுகளுக்கு இடையே ஓடி ரன் சேர்க்கவெல்லாம் மாட்டார். அடித்தால் ஃபோர். எப்போதாவது சற்றே முயற்சி எடுத்துத் தூக்கி அடிப்பார். எல்லைக்கோடுகள் மாற்றியமைக்கப்படும். அது 'சிக்ஸர்' என்று பிரகடனப்படுத்தப்படும். பிரதாப் சிங்குக்குப் பின் களமிறங்கும் யாரும் அவரது ஸ்கோரைத் தொட முயற்சி செய்யக் கூடாது. அவுட் ஆகி விடவேண்டும் அல்லது அம்பயர் பார்த்துக்கொள்வார். இவ்வாறு ஒவ்வொரு ஆட்டத்திலும் மேன் ஆஃப் தி மேட்ச் ஆக விளங்கிய ஓல்டு மேன் பிரதாப் சிங் தன் எழுபத்தேழாவது வயதில் இறந்துபோனார், நேரடி வாரிசு ஏதுமின்றி.

அமர் சிங் (Amar Singh), பிரதாப் சிங்கின் இளைய சகோதரர். அவருக்கு ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு என்று பிறந்த பிள்ளைதான் ஹரி சிங் (Hari Singh, 1895). பெரியப்பா பிரதாப் சிங், ஹரி சிங்கைத் தத்தெடுத்திருந்தார். ஹரி சிங், ஜம்மு காஷ்மீரின் மகாராஜாவானார் (1925, செப்டெம்பர் 7).

மகாராஜா ஆவதற்கு முன்பாகவே ஹரி சிங்குக்குக் குறிப்பிட்ட இடைவெளிகளில் மூன்று திருமணங்கள் நடந்திருந்தன. ஆனால் எந்த மனைவியுமே நிலைக்கவில்லை. முதல் மனைவி பிரசவத்திலும் மற்ற இரண்டு மனைவிகள் நோய்வாய்ப்பட்டும் இறந்துபோயிருந்தார்கள். வாரிசும் மனைவிகளும் இல்லாத கொடுமையான சூழலில் அரியணை ஏறியிருந்தார் ஹரி சிங்.

போதிய முதிர்ச்சியைப் பெறுவதற்கு முன்பாகவே பெண்களுக்குத் திருமணம் செய்துவைத்து விடுவதால்தான் அவர்கள் இளவயதிலேயே இறந்துவிடுகிறார்களா? மனைவிகளை இழந்த சோகம் ஹரி சிங்கை யோசிக்க வைத்தது. தன் சமஸ்தானத்தில் குழந்தைத் திருமணங்களுக்கு எதிரான சட்டத்தைக் கொண்டு வந்தார். 'சமஸ்தானத்தில் வாழும் எல்லா மக்களும் எனக்கு ஒன்றுதான். பாரபட்சம் இல்லை. அடிமட்ட மக்களுக்கும் வழிபாட்டு உரிமை உண்டு. அவர்களும் தங்கள் விருப்பப்படி வழிபாட்டுத் தலங்களை அமைத்துக் கொள்ளலாம்' வழி வகுத்தார் ஹரி சிங்.

நிற்க. ஹரி சிங் தெளிந்த நோக்கும் நேர்கொண்ட பார்வையும் உடையவர், அவர் ஆட்சியில் மாதம் மூன்று பனிமாரி பொழிந்தது என்றெல்லாம் கற்பனை அபார்மெண்ட்ஸ் கட்ட வேண்டாம். பல நேரங்களில் மகாராஜா ஹரி சிங் புதிராகத்தான் இருந்தார். அவரது செய்கைகள் விநோதத்தின் உச்சத்தைத் தொட்டன. ஏன் இப்படிச் செய்கிறார் என்று சுற்றியிருப்பவர்கள்தான் குழம்பிப் போனார்கள்.

ஹரி சிங், தன் நண்பர்களைப் பார்க்க அடிக்கடி எங்காவது கிளம்பிப்போவார். ரகசியமாகச் சென்று திடீரென நண்பர்கள் முன் தோன்றி அதிர்ச்சியும் ஆச்சரியமும் கொடுப்பார். 1930ல் அப்படித்தான் பாலன்பூருக்குக் கிளம்பினார். நவாப் தாலே முகமத் கான், ஹரி சிங்கின் நெருங்கிய சிநேகிதர். வழக்கம்போல ஹரி சிங், பாலன்பூருக்குத் தகவல் எல்லாம் அனுப்பவில்லை. தனக்குரிய பிரத்யேக அதிஆடம்பர ரயில் பெட்டியில் ஏறிக் கிளம்பிவிட்டார்.

ரயில் பாலன்பூருக்குச் சில மைல்கள் முன்னால் நின்று கொண்டு இருந்தது. நவாபின் ஆள்கள் அதைக் கவனித்தனர். 'என்னப்பா இது, நம்மூரு ரயிலுல புதுசா ஒரு பெட்டி. யாராவது விருந்தாளு வர்றாங்களா?' விசாரித்தார்கள். விவரம் அறிந்தார்கள். 'நவாப், காஷ்மீர் மகாராஜா ரயிலில் வந்து கொண்டிருக்கிறார்' பாலன்பூர் அரண்மனைக்குத் தகவல் ரயிலைவிட வேகமாகப் போய்ச் சேர்ந்தது.

ரயில் நிலைய மேடை. பேண்டு வாத்தியங்கள். ஆட்டக்காரர்கள். ஒரேமாதிரி உடையணிந்த மிடுக்கான வீரர்கள். குதிரைகள். ரோல்ஸ்-ராய்ஸ் கார். பாலன்பூரின் முக்கிய மந்திரிகள். எல்லோரும் ஹரி சிங்கை வரவேற்கத் தயாராகியிருந்தார்கள். நத்தைபோல மெள்ள ஊர்ந்துவந்து நின்றது ரயில். ஹரி சிங் தனது பெட்டியிலிருந்து இறங்கியதும் அவருக்குரிய இருபத்தியொரு குண்டுமரியாதையைக் கொடுக்கத் துப்பாக்கிகள் தயார்நிலையில் இருந்தன.

அந்த விசேஷ ரயில் பெட்டியின் கதவைத் திறந்துகொண்டு ஹரி சிங்கின் உதவியாளர் இறங்கினார். கொஞ்ச நேரம் கழித்து ஹரி சிங் பெட்டியின் வாசலுக்கு வந்தார். அவருக்குப் பேரதிர்ச்சி. 'நான் வருவது இவர்களுக்கு எப்படித் தெரியும்?' பயத்தில் குழந்தை ஒன்று கத்துவதுபோலக் குரலெழுப்பினார் ஹரி சிங். சட்டெனப் பெட்டியின் கதவை மூடினார். மறுபக்க வாசல் கதவைத் திறந்தார். தண்டவாளத்தில் குதித்தார். அதிலேயே ஓட ஆரம்பித்தார். நிற்கவே இல்லை. வரவேற்கக் காத்திருந்தவர்கள் திண்டாடிப் போனார்கள். பாதிபேர் ஹரி சிங்கின் பின்னாடியே ஓட ஆரம்பித்தார்கள். ஹரி சிங்கின் கால்கள் பாலன்பூரின் அரண்மனையை அடைந்தபிறகுதான் நின்றன.

சரி, ஏன் அப்படி ஓடினார்? அதற்கு ஹரி சிங் எந்தக் காரணமும் யாரிடமும் சொல்லவில்லை. அவர் அப்படித்தான்.

ஒருமுறை ஹரி சிங்கிடமிருந்து பலருக்கு அழைப்பு ஒன்று போனது. இந்த நாளில் இன்ன நேரத்தில் தங்களுக்கு விருந்துகொடுக்கப் பிரியப்படுகிறேன். வந்து கலந்துகொண்டால் மகிழ்ச்சி. கிட்டத்தட்ட ஐநூறு பேருக்கு அழைப்பு. குளுகுளு காஷ்மீருக்குச் செல்லக் கசக்குமா என்ன? விருந்தாளி மகாராஜாக்கள் எல்லாம் குறிப்பிட்ட தினத்தில் காஷ்மீர் அரண்மனைக்கு வந்து சேர்ந்தார்கள். முக்கிய விருந்தினரான ஜம்மு - காஷ்மீர் சமஸ்தானத்தின் ரெஸிடெண்டான ரெஜினால்டும் (Reginald) அவரது மனைவி கிளான்ஸியும் (Glancy) சரியான நேரத்தில் ஆஜர்.


மகாராஜா ஹரி சிங்

அரண்மனையும் விருந்து நடக்கும் அந்தப் பிரம்மாண்ட அறையும் நிறையவே அலங்கரிக்கப் பட்டிருந்தன. ரெஸிடெண்டே வந்துவிட்டார். அவரை முறைப்படி வரவேற்க வேண்டாமா? எங்கே மகாராஜா? அறைக்குள் சலசலப்பு. ஹரி சிங் அங்கு இல்லை.

ஏதாவது முக்கிய வேலையாக இருக்கும். இப்போது வந்துவிடுவார் என்று உள்புறமிருந்த வாசலையே எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். 'மகாராஜா வேட்டைக்குச் சென்றிருக்கிறார். சற்றுநேரத்தில் வந்துவிடுவார்' என்றொரு தகவல் வந்து விருந்தினர்களின் பார்வையை வெளிப்புறமாகத் திருப்பியது. ஒரு மணிநேரம் கழித்து சாவகாசமாக அங்கு வந்து நின்றார் ஹரி சிங். வேட்டைக்காரன்போல உடை. அதில் எங்கும் தூசு. ஷூக்களில் சேறு.

'என் அருமை விருந்தினர்களே, மன்னிக்கவும். கொஞ்சம் தாமதமாகிவிட்டது.' நாகரிகமாக இப்படி வருத்தம் தெரிவிப்பார் என்று அனைவரும் எதிர்பார்த்தார்கள். சொல்லவில்லை. ஒப்புக்கு ரெஸிடெண்டுக்கு மட்டும் கைகொடுத்தார் ஹரி சிங். லேடி ரெஸிடெண்டின் புன்னகைக்குப் பதில் மரியாதைகூட செய்யவில்லை. மற்ற முக்கியஸ்தர்கள் வலிய வந்து மகாராஜாவின் கைகுலுக்கலைப் பெற்றுக் கொண்டார்கள்.

அரண்மனைப் பணியாளர்கள் விருந்தினர்களுக்கு 'பானங்கள்' கொடுத்து உபசரிக்க ஆரம் பித்தார்கள். ஹரி சிங், உடைமாற்றவெல்லாம் செல்லவில்லை. ஓர் ஓரமாகச் சென்றார். தனது அந்தரங்க உதவியாளர்களின் காதுகளில் ஏதோ கிசுகிசுத்தார். சிடுசிடுவெனக் கிடந்தது அவர்

முகம். ரெஸிடெண்ட் பொறுமை காத்தார். அடுத்த சில நிமிடங்களில் விருந்தினர்கள் உணவு மேசைகளுக்கு அழைக்கப்பட்டார்கள்.

நடுவில் ஹரிசிங். அவருக்கு வலது பக்க நாற்காலிகளில் ரெஸிடெண்ட் தம்பதியினர், இடது பக்க நாற்காலிகளில் இந்தூர் மகாராஜா திகோஜி ராவும் அவரது அமெரிக்கப் பெண்டாட்டி நான்ஸி மில்லரும். பணியாளர்கள் தங்க, வெள்ளித் தட்டுகளைக் கொண்டுவந்து வைத்தார்கள். பின் பதார்த்தங்கள் ஒவ்வொன்றாகப் பரிமாறப்பட்டன. சுமார் ஐநூறு பேருக்குப் பரிமாற அரைமணிக்கும் மேல் பிடித்தது.

முதலில் மகாராஜா சாப்பிட ஆரம்பித்த பின்னரே, மற்றவர்கள் தட்டில் கைவைக்க வேண்டும். இதுவே அரண்மனை விருந்து நாகரிகம். எல்லோரும் ஹரி சிங்கின் சிக்னலுக்காகப் பசியோடு காத்திருந்தார்கள். அவரது முகத்தில் இறுக்கம். தட்டையே வெறித்துப் பார்த்துக் கொண்டு இருந்தார்.

'எனக்குச் சாப்பிட விருப்பமில்லை' உரக்கச் சொல்லிவிட்டு, வேகமாக எழுந்து உள்ளே போய்விட்டார். இந்திய விருந்தினர்கள் சிலர் மட்டும் என்னமோ, ஏதோவென்று பதறி மகாராஜாவின் பின்னாலேயே சென்றார்கள். ரெஸிடெண்ட், தன் மனைவியோடு விருட்டென வெளியேறினார். மற்ற விருந்தினர்களும் கைநனைக்காமல் அங்கிருந்து காலி வயிறோடு கிளம்பிப் போனார்கள்.

ரெஸிடெண்ட், மறுநாளே வைஸ்ராயிடம் பிராது கொடுத்தார். அது லண்டன் பக்கிங்ஹாம் வரை ஒலித்தது. வைஸ்ராயிடமிருந்து ஹரி சிங்குக்குக் கண்டனக் கடிதம் சென்றது. 'பிரிட்டிஷ் அரசாங்கத்தையே அவமானப்படுத்தும்விதமாக ஏன் நடந்து கொண்டீர்கள்? விளக்கம் தேவை.'

ஹரி சிங், அந்தக் கேள்விக்குப் பதிலே அனுப்பவில்லை. அவர் அப்படித்தான்.

'ஒருமுறை லண்டனுக்குப் போயி 'அந்த' விஷயத்துல மாட்டிக்கிட்டாரு தெரியுமா! அதுல இருந்து மகாராஜா உஷாராயிட்டாரு. அதான் இப்படி முரட்டுத்தனமா நடந்துக்கிறாரு' என்று சிலர் ரகசிய விளக்கம் சொன்னார்கள். அது 'எந்த' விஷயம்?

இளவரசராக ஹரி சிங் இருந்தபோது நடந்த சம்பவம். ஹரி சிங்கின் பெரியப்பா மகாராஜா பிரதாப் சிங், தன் வளர்ப்பு மகனை ஐரோப்பியச் சுற்றுப்பயணம் அனுப்ப எண்ணினார். 'நாலு இடத்துக்குப் போ. நாலு விஷயங்களைத் தெரிஞ்சுட்டு வா. செலவுக்கு இதை வைச்சுக்கோ' பாசமாகச் சொன்னார் பெரியப்பா. சுமார் நாற்பது லட்சம் டாலர் கொடுத்தும் அனுப்பினார்.

பட்டத்து இளவரசர் ஒருவர் கடல்தாண்டிச் செல்கிறார் என்றால் பிரிட்டிஷ் அரசாங்கம், அவருக்கு எல்லாவிதத்திலும் உதவுவதற்காக ஒரு பாதுகாப்பு அதிகாரியை நியமிக்கும். இளவரசருக்கு என்ன நேர்ந்தாலும் அதிகாரிதான் பொறுப்பு. கேப்டன் சார்லஸ் ஆர்தர் (Charles Arthur) அந்தப் பொறுப்பேற்றுக் கொண்டார்.

சந்தோஷமாகப் பெரியப்பாவுக்கு டாட்டா காட்டிவிட்டு கப்பல் ஏறினார் ஹரி சிங் (1919). ஆர்தர், எல்லா ஏற்பாடுகளையும் கவனித்துக் கொண்டார். குறிப்பிட்ட நாளில், ஒதுக்கப்பட்ட




நேரத்தில் பக்கிங்ஹாம் அரண்மனைக்குச் சென்றார். அரச குடும்பத்தினருடனான சந்திப்பு, விருந்து. மாபெரும் இந்திய சமஸ்தானத்தின் வருங்கால மகாராஜா அல்லவா. நிறைந்த மரியாதை, உபசரிப்பு.

கொஞ்சநாள்கள் லண்டனில் தங்குவதாக ஏற்பாடு. ஹரி சிங் தங்கியிருந்த மாளிகைக்கு ஐரோப்பிய பெண் ஒருத்தி தினமும் வந்துபோனாள். 'தோட்டக்காரி, பெயர் மௌடி (Maudie)' என்றார்கள். ஆனால் அவளோ 'காதலுக்கு' விதைபோட்டாள். எப்போது பார்த்தாலும் ஹரி சிங் பார்வையில்படும்படி அழகுகாட்டி நடமாடுவதும் அவரிடம் வலிய சிரித்துப் பேசுவது மாக. இளவரசர், சபலத்தில் வழுக்கி விழுந்தார்.

ஜோடியாக பாரிஸுக்குச் சென்றார்கள். ஹோட்டல் செயிண்ட் ஜேம்ஸ் அல்பனியில் (St. James - Albany) பிரத்யேக அறை. பூஜை வேளையில் கரடிபோலக் கதவு தட்டப்படும் ஓசை. ஹரி சிங்குக்கு அப்போதே உதறல் ஆரம்பித்துவிட்டது. மௌடி, தன் உடையைச் சரி செய்து கொண்டு சென்று கதவைக் கொஞ்சமாகத் திறந்தாள். வேகமாகத் தள்ளிக்கொண்டு உள்ளே புகுந்தான் ஒருவன்.

'கடைசியா, நான் உன்னைப் புடிச்சுட்டேன். வசமா மாட்டிக்கிட்ட.' மௌடியைப் பார்த்து அவன் சிரித்த வில்லச் சிரிப்பில் ஹரி சிங் நடுங்கிப் போனார். 'நான் இவளோட புருஷன். ராபின்ஸன்' - அவன் இளவரசரின் அருகில் வந்து மிரட்டலாகச் சொல்லவும் அவருக்கு நாக்கு வறண்டது. கண்கள் இருட்டின.

'இது ரொம்பப் பெரிய விவகாரம் ஆயிருச்சுன்னா, பின்னால நீங்க மகாராஜா ஆகுறதுல பிரச்னை வரலாம். பணத்தைக் கொடுத்து விஷயத்தை முடிச்சுருங்க. அதான் நல்லது'

பாதுகாப்பு அதிகாரி ஆர்தர் ஆலோசனை சொன்னார். அவர் சொல்வதற்கெல்லாம் தலையாட்டுவது தவிர, ஹரி சிங்குக்கு வேறுவழி தெரியவில்லை. இரண்டு செக்குகளில் கையெழுத்துபோட்டார். இரண்டுமே ராபின்ஸன் பெயரில். ஒவ்வொன்றின் மதிப்பும் ஏழரை லட்சம் டாலர்.

ஹரி சிங், தன் வக்கீல்களிடம் விஷயத்தைச் சொன்னார். 'அய்யோ, நீங்க ரொம்ப அவசரப் பட்டுட்டீங்க இளவரசரே! உங்களை மிரட்டிப் பணம் பிடுங்கியிருக்காங்க. அந்த செக்கை பேங்க்ல சொல்லி நிறுத்த வழி இருக்குதான்னு பார்க்கலாம்' அவர்கள் படபடத்தார்கள். லண்டனிலிருந்த மிட்லேண்ட் (Midland) பேங்குக்கு முறைப்படி தகவல் கொடுக்கப்பட, ஒரு செக் மட்டும் நிறுத்தி வைக்கப்பட்டது. மற்றொன்று?

அந்த செக் வங்கியில் சேர்க்கப்பட்டுப் பணமாகி இருந்தது. மகாராஜாவிடமிருந்து பறிக்கப்பட்ட பணத்தில் ஒருபகுதி ராபின்ஸனுக்கு. சில பகுதிகள் அவனுக்கு ஒத்துழைத்தவர்களுக்கு. ராபின்ஸன் பணத்தாசையில் புத்தி தடுமாறி, போலி செக்குகள் கொடுத்து பணமோசடி செய்ய முயன்றான். மிட்லேண்ட் வங்கிக்காரர்கள், ராபின்ஸன் மீது கோர்ட்டில் வழக்கு பதிவு செய்தார்கள்.

'வழக்கு விசாரணைக்கு வந்தால் என் பெயர் எட்டுத்திசையிலும் எக்குத்தப்பாகச் சீரழிந்து விடுமே' - ஹரி சிங்குக்குப் பேரதிர்ச்சி. 1924ல் வழக்கு நீதிபதி டார்லிங் (Darling) தலைமையில் விசாரணைக்கு வந்தது. 'அய்யா, இந்த வழக்குல வருங்கால காஷ்மீர் மகாராஜாவுக்கும் சம்பந்தமிருக்கு. அவரோட பேரை இதுமூலமா பகிரங்கப்படுத்தி, களங்கப்படுத்த வேணாம்னு கேட்டுக்கறோம்.'

பிரிட்டன் வெளியுறவுத் துறை அமைச்சர் மூலமாக ரகசியக் கோரிக்கை வைத்தார்கள். ஆக, வழக்கு குறித்த ஆவணங்களில் ஹரி சிங்குக்கு அடையாளப் பெயர் வைத்துக் கொண்டார்கள். 'மிஸ்டர் ஏ' (Mr. A). விசாரணை ஆரம்பமானது. மௌடி கூண்டு ஏறினாள்.

'எனக்கு இந்திய மகாராஜா யாருக்காவது வாக்கப்பட்டு வசதியா வாழணும்னு ஆசை. காஷ்மீர் மகாராஜாவுக்கு என்னைப் பிடிச்சிருந்தது. உடம்புல உள்ள முடியை எல்லாம் மழிக்கணும். காஷ்மீரி பெண்கள் அப்படித்தான் இருப்பாங்கன்னு சொன்னாரு. அவருக்காகச் செஞ்சுக்கிட்டேன்.' அழுதாள். என்னென்னமோ சொன்னாள். இறுதியில் பல விஷயங்கள் வெளிச்சத்துக்கு வந்தன.

எல்லாம் ஹரி சிங்கிடம் இருந்து பணத்தை அபகரிக்க நடத்தப்பட்ட சதி. ராபின்ஸன் என்பவன் மௌடியின் கணவன்தான். ஆனால் ஹோட்டல் அறைக்குள் வந்தவன் உண்மை யான ராபின்ஸன் அல்ல. அவன் அப்படி நடித்தவன். மௌடி, ராபின்ஸன் உள்பட மொத்தம் ஆறுபேர் இந்தச் சதிக்கு உடந்தையானவர்கள். சதிக்கான கதை, திரைக்கதை, டைரக்ஷன் - கேப்டன் ஆர்தர்.

தீர்ப்பு வங்கிக்குச் சாதகமாக அமைந்தது. மிஸ்டர் ஏ-க்கு எந்தப் பாதகமும் இல்லை. ஆர்தர் உள்ளிட்ட வில்லன்கள் தண்டனைக்குள்ளானார்கள். ஹரி சிங்குக்கு, சில வருடங்கள் கழித்து மனநிம்மதி திரும்பியது. மௌடி விஷயத்தை விட்டுவிடுவோம். நிஜமாகவே ஹரி சிங் அநேக மகாராஜாக்கள்போல பெண்பிரியரா? இல்லை. அந்த விஷயத்தில் கட்டுப்பாடானவர்.

ஒருவர் பின் ஒருவராக மூன்று மனைவிகளைப் பறிகொடுத்தபின், நான்காவதாக தாரா தேவி (Tara Devi) என்கிற ஏழைப்பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார் (1928).

கேன்ஸ் நகரின் மார்டினெஸ் ஹோட்டல், அறை எண் 318-19-20. தாரா தேவி ஆண் குழந்தை ஒன்றைப் பிரசவித்தாள். அந்த அறை முழுவதையும் பூங்கொத்துகளால் நிரப்பினார் ஹரி சிங். சில வாரங்கள் கழித்து மனைவியையும் குழந்தையையும் சொகுசுக் கப்பலில் இந்தியாவுக்கு அழைத்துவந்தார். கேன்ஸில் ஆரம்பித்து காஷ்மீர் வரை வழியெல்லாம் கொண்டாட்டங்கள். 'எனக்கு அப்புறம் ஜம்மு  காஷ்மீரை ஆளுறதுக்கு ஒரு சிங்கக்குட்டி பிறந்துட்டான்டோய்!'

'காஷ்மீரில் மன்னராட்சி ஒழிய வேண்டும். சுதந்தர காஷ்மீர் அமைய வேண்டும்'  தேசிய மாநாட்டுக் கட்சியின் தலைவர் ஷேக் அப்துல்லாவின் (Sheik Abdullah) குரல் அப்போதே ஓங்கி ஒலிக்க ஆரம்பித்திருந்தது. 1946ல் அவர் Quit Kashmir Movement என்ற மாபெரும் போராட்டத்தை ஆரம்பித்திருந்தார். ஹரி சிங்குக்குப் பெரும் தலைவலி. ஷேக் அப்துல்லா சிறையில் அடைக்கப்பட்டார். அப்துல்லாவுக்கு ஆதரவாகக் குரல்கொடுக்க காஷ்மீருக்கு வந்த நேருகூடக் கைதாகியது தனிக்கதை.

1947, ஜூன் 3. குலைநடுங்கச் செய்யும் அந்த அறிவிப்பு முறைப்படி வெளியானது. தேச த்தைப் பிளக்கப்போகிறார்கள். ஹரி சிங்குக்குப் பலமுனைகளில் இருந்து நெருக்கடி. காஷ்மீரின் காலைப்பிடித்து இந்தியா கீழே இழுக்க, பாகிஸ்தானோ பக்கவாட்டில் கையைப்பிடித்து இழுத்துக் கொண்டிருந்தது. ஜின்னா, ஹரி சிங்கைத் தேடி நேரே வந்துவிட்டார். வெற்றுக் காகிதம் ஒன்றை நீட்டினார். 'விருப்பங்களை நிரப்பிக்கொடுங்கள். நிறைவேற்றுவது என் கடமை. பாகிஸ்தானோடு வந்துவிடுங்கள்.'

'யோசித்துச் சொல்கிறேன்' - பிடிகொடுக்காமல் பதில் சொன்னார் ஹரி சிங். இந்தியத் தலை வர்களும் மகாராஜாவிடம் தொடர்ந்து பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டே இருந்தார்கள். 'எப்போது இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்து போடப்போகிறீர்கள்?'

இந்தியாவா? பாகிஸ்தானா? தனித்தே இருந்துவிடலாமா? இந்த பிரிட்டிஷ்காரர்கள் இவ்வளவு சீக்கிரத்தில் கிளம்பிவிடுவார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஹரி சிங், நாள்களைக் கடத்திக் கொண்டிருந்த சமயத்தில் மௌண்ட்பேட்டன் காஷ்மீருக்கு வந்தார். 'நன்றாக ஓய்வெடுங்கள். சுற்றுலா செல்ல ஏற்பாடு செய்திருக்கிறேன். சந்தோஷமாக இருந்து விட்டு வாருங்கள்' - மௌண்ட்பேட்டனை எங்கெங்கோ அனுப்பிவைத்துப் போக்குகாட்டி, பேச்சுவார்த்தையைத் தாமதப்படுத்தினார் மகாராஜா. அவர் காஷ்மீரைவிட்டுக் கிளம்புவதற்கு முன்பு பேசுவதற்கான நேரம் அமைந்தது. ஆனால் அந்தச் சமயத்தில் மகாராஜாவுக்கு வயிற்று வலி வந்து மௌண்ட்பேட்டனிடமிருந்து காப்பாற்றியது.

காஷ்மீர், கிழக்கின் சுவிட்சர்லாந்துபோலத் தனித்து இருக்கவேண்டுமென்பதுதான் ஹரி சிங்கின் விருப்பம். ஆனால் அவர் எந்தவித முடிவையும் சொல்லாமல் இழுத்துக்கொண்டே செல்ல, ஜின்னாவின் காதுகள் கோபத்தில் காஷ்மீர் ஆப்பிளாகச் சிவந்தன. பதான் (Pathan) பழங்குடி இனத்தவர் என்ற போர்வையில் பாகிஸ்தானியப் படைகள் காஷ்மீர் சமஸ்தானத்துக்குள் நுழைந்து ஆக்கிரமிப்பை ஆரம்பித்தன (அக்டோபர் 21). தீவைப்பு, படுகொலைகள், சூறையாடல்.

‘அய்யோ, காஷ்மீரை இழந்துவிட்டேனே!’ - ஹரி சிங்கின் கண்ணீர் இளவரசர் கரன் சிங்கையும் (Karan Singh) காயப்படுத்தியது. இந்தியாவுடன் இணைந்துவிடுவதென முடிவெடுத்த ஹரி சிங், அக்டோபர் 27ல் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். நேரு, காஷ்மீருக்குப் படைகளை அனுப்பினார். முதல் இந்திய  பாகிஸ்தான் போர் ஆரம்பமானது.

ஹரி சிங், காஷ்மீரிலிருந்து ஜம்முவுக்கு வந்தார். இழப்புகள் அவரை வாட்டியெடுத்தன. 1951ல் மகாராஜா பதவியும் பறிபோக, பம்பாய்க்குச் சென்று குடியேற முடிவெடுத்தார். எட்டு பெரிய டிரங்கு பெட்டிகள் நிறைய நகைகள். ஜம்மு காஷ்மீர் வங்கியில் பாதுகாப்பாக வைத்தார். பாதுகாப்பாளராக இக்பால் நாத் (Iqbal Nath) என்ற நம்பிக்கைக்குரியவரை வைத்துவிட்டுச் சென்றார். ஹரி சிங் 1961ல் இறந்துபோனார்.

தங்கத்தோடு நவரத்தினங்களும் நிறைந்துகிடந்த நகைகளின் இன்றைய மதிப்பு சுமார் 1400 கோடி. மூன்று, ஐந்தாம் எண் பெட்டிகளில் மட்டும் 717 கிலோ தங்க நகைகள் இந்திய - சீன போர் நிதிக்காக வழங்கப்பட்டன (1963). மற்ற நகைகளையும் காஷ்மீரின் நலத்திட்டங்களுக்காக ஏலம்விட ஷேக் அப்துல்லா அரசாங்கம் முயற்சி எடுத்தது. ஆனால் பிரதமர் நேரு அதைத் தடுத்துவிட்டார்.

1983ல் இக்பால் நாத் பாதுகாப்பாளர் பொறுப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டார். நகைகள் யாருக்கு? ‘எல்லாம் எனது குடும்ப நகைகள். என்னிடம் ஒப்படைக்க வேண்டும்’ - கரன் சிங் (காஷ்மீரின் பெயரளவு மகாராஜா) போராட ஆரம்பித்தார். உயர்நீதி மன்றத்துக்கும், பின் உச்சநீதி மன்றத்துக்கும் அலைய வேண்டிய நிலை. 1989ல் நீதிமன்றம் தீர்ப்பு சொன்னது. ‘பெட்டிகளில் இருக்கும் 993 நகைகளில் 42-க்கு கரன் சிங்தான் சொந்தக்காரர்.’

எனில் மற்ற நகைகள் என்ன ஆயின? காஷ்மீர் பிரச்னை போலவே இன்றைக்கு இதற்கு விடை கிடைக்காது.

# ஜெய்ப்பூர்

• ராஜபுத்திர சமஸ்தானம் • தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1128
• ஆட்சி செய்தவர்கள் : கச்சாவா பரம்பரை • முதல் மன்னர் : துலஹா ராயா
• 17 குண்டு மரியாதை.



# அந்தக் காலத்து ஐஸ்வர்யாராய்!

அந்த இரண்டு சிறுவர்களும் ஜெய்ப்பூர் ராம்பாக் அரண்மனையில் நீண்ட நேரமாக நின்று கொண்டு இருந்தார்கள். 'மகாராஜா வருவார். வந்ததும் இந்த தங்கக்காசை அவருக்குக் கொடுத்து மரியாதை செய்ய வேண்டும்.' பெரியவர்கள் சொல்லிக் கொடுத்திருந்தார்கள். மூத்தவன் கையில் தங்கக்காசை ஏந்தியபடி பொறுமையாக இருந்தான். இளையவன் ஜெய்க்குப் பொறுக்க முடியவில்லை. காசைத் தன் சட்டைப்பைக்குள் போட்டுக்கொண்டு, கைவீசி விளையாட ஆரம் பித்தான்.

தூரத்தில் வந்த ஜெய்ப்பூரின் மகாராஜா இரண்டாம் மதோ சிங் (Madho Singh II), ஜெய்யின் அந்த செய்கையைக் கவனித்திருந்தார். 'சுதந்தர உணர்வு இவனிடம் நிறையவே இருக்கிறது. இவன்தான் சரியாக இருப்பான்.'

நான்கு மாதங்கள் கழித்து ஓர் இரவில் ஜெய்க்கு விழிப்பு வந்தபோது, ஏதோ பயணத்தில் இருப்பதுபோல உணர்ந்தான். 'நாம இப்ப எங்க போறோம்?' கேட்டான். 'ஜெய்ப்பூர் அரண்மனைக்கு.'

1921 மார்ச்சில், மகாராஜா மதோ சிங், பத்து வயது ஜெய்யைத் தன் வாரிசாக தத்தெடுத்துக் கொண்டார். எனில், மதோ சிங்குக்குப் பிள்ளையில்லையா? ஒன்றா, இரண்டா? ஐந்து அதிகாரபூர்வ மகாராணிகளுக்கும் எண்ணற்ற ஆசைநாயகிகளுக் கும் பிறந்தவை என்று அறுபதுக்கும் மேற்பட்ட வாரிசுகள் உண்டு. இருந்தும் மதோ சிங், பட்டத்து இளவரசரைத் தத்தெடுக்கக் காரணம் ஒரு சாமியார் என்று கதை ஒன்று சொல்லப்படுவதுண்டு. 'மகாராஜா, உங்க

வாரிசுங்க யாராவது அடுத்து மகாராஜா பதவிக்கு வந்தாங்கன்னா, அது உங்க பரம்பரைக்கே ஆகாது' ஒரு சாமியார் அவரிடம் கொளுத்திப்போட்டாராம். மூடநம்பிக்கைமீது கிலோக்கணக்கில் நம்பிக்கை வைத்திருந்த மதோ சிங் மிரண்டுபோனாராம். ராஜபுத்திர இனத்தைச் சேர்ந்த ஜெய்யைத் தத்தெடுத்துவிட்டு ஒன்றரை வருடத்தில் இறந்தும்போனார். 1931ல் முழு அதிகாரங்களோடு ஜெய்ப்பூரின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார் மகாராஜா இரண்டாம் மன் சிங் (எ) ஜெய் சிங் (Man Singh (a) Jai Singh).

'போலோ மேட்சுக்காக ஜெய்ப்பூர் மகாராஜா கல்கத்தா வர்றார். உட்லேண்ட்ஸ் ஹோட்டல்ல இடமில்லை. நம்ம மாளிகைல, உங்க அறையிலதான் தங்கப்போறார். அதனால நீங்க அறையைக் காலி பண்ணிக்கொடுத்துடுங்க. சரியா?' - கூச்பிகார் மகாராணி இந்திரா சொல்லி விட்டுப் போனாள். பன்னிரண்டு வயது இளவரசி காயத்ரி தேவிக்கு (Gayatri Devi) தன் அறையை விட்டுக் கொடுப்பதில் பூரண சம்மதமில்லை. அம்மா சொல்லிவிட்டாள். வேறு வழியில்லை. போலோ விளையாட்டில் ஜெய் கில்லாடி என்பதை பத்திரிகைச் செய்திகளில் படித்திருந்தாள். பேரழகர் என்றும் கேள்விப்பட்டிருந்தாள். ஆகவே அவரது வருகையை எதிர்நோக்கினாள் (1931).

மகாராணி இந்திரா யாரென்று தெரிகிறதா? பரோடா மகாராஜா சாயாஜி ராவ், மகாராணி சிம்னா பாயின் மகள். 1911 டெல்லி தர்பாரில் கூச் பிகார் இளவரசர் ஜித்துடன் காதல்கொண்டு பின் ஓடிப்போய் திருமணம் செய்துகொண்ட கதை நினைவிலிருக்கலாம். அவர்களிருக்கும் பிறந்த வாரிசுகள் இலா தேவி, ஜெகத்திபேந்திரா, இந்திரஜிதேந்திரா, காயத்ரி தேவி, மேனகா தேவி.

ஜெய் வந்தார். கூச் பிகார் இளவரசர்களோடு கூடிக் குலாவினார். இளவரசிகளையும் நேர் பார்வையில் நோட்டமிட்டுக் கொண்டார். 'ஆளு அழகாத்தான் இருக்காருடி' - இளவரசிகள் கிசுகிசுத்துக் கொண்டார்கள். 'அவருக்குக் கல்யாணமாயிருச்சு தெரியுமா?'

'தெரியும்டி. மிக்கின்னு ஒரு பொண்ணும், பபிள்ஸ்னு ஒரு பையனும்கூட இருக்காங்க. ஆனா இவரைப் பார்த்தா அப்படியா தெரியுது?' பருவத்தின் வாசலில் நின்று கொண்டிருந்த காயத்ரிக்கு ஜெய்யின் மீது ஒருவித ஈர்ப்பு வந்திருந்தது. மேட்ச் எல்லாம் முடிந்து ஜெய் கிளம்பிச் சென்றிருந்தார். ஆனாலும் அடிக்கடி வந்துகொண்டிருந்தார், காயத்ரியின் நினைவில்.

அடுத்த ஆண்டும் கல்கத்தாவுக்கு வந்தார், போலாவுக்காக. அப்போதுதான் அவருக்கு இரண் டாம் கல்யாணம் நடந்திருந்தது. 'அவரோட புது மனைவி போட்டோவை அனுப்பச் சொல் லேன்' - தனது அம்மாவிடம் நச்சரித்தாள் காயத்ரி. இந்திராவும் ஜெய்யிடம் கேட்டாள். சரி யென்று சொல்லிய அவர், அனுப்பவில்லை.

இந்திரா, குடும்பத்தோடு அவ்வப்போது பரோடாவுக்குச் செல்வாள். தாய் வீட்டுக்கு. அந்த முறை, 'போகும் வழியில் ஜெய்ப்பூருக்குச் செல்லலாம்' என்றாள். காயத்ரியின் மனத்துக்குள் இனம்புரியாத சந்தோஷம். ஜெய்ப்பூரின் அரண்மனை அழகை ரசித்தாள், அவளையறி யாமலேயே ஜெய்யையும். அந்தப்புரம் சென்று அவரது மனைவிகளைச் சந்தித்தாள். குழந்தை களோடு விளையாடினாள்.

'நான் காயத்ரியை வெளியில் அழைத்துக் கொண்டு போகிறேன்' - ஜெய், திடீரென இப்படிக் கேட்டதும் அவளுக்குள் பரவச ஊற்று. மகாராஜா கேட்டு மறுப்பது நாகரிகமில்லையே.



காயத்ரி - சிறுமியாக

இந்திரா சம்மதித்தாள். ஜெய்யோடு காரில் சென்ற நிமிடங்களில் பறப்பதுபோல உணர்ந்தாள் காயத்ரி.

‘நீ கார் ஓட்டுகிறாயா?’

ஓட்டினாள். ஜெய் உதவி செய்தார். வெட்கமும் புன்னகையும் ஸ்பரிசங்களும் கலந்த நொடிகள். அரண்மனைக்குத் திரும்பினார்கள். ‘உங்க பொண்ணு நல்லாத்தான் ஓட்டுறா. ஆனா வண்டி ஓட்டத் தெரிஞ்சவங்க சொல்றதைத்தான் கேக்குறதில்ல’ ஜெய், இந்திராவிடம் சொல்லிவிட்டு நகர்ந்தார். இந்திரா, காயத்ரியைப் பார்த்தாள். ‘நான் அவர் சொல்றபடிதான் ஓட்டினேன். ஆனா அவர்தான் ஒரு நிலையில இல்லை.’ காயத்ரி சிரித்தாள்.

ஜெய்ப்பூரிலிருந்து கிளம்பும்போது எதையோ விட்டுச் செல்வதுபோல உணர்ந்தாள் காயத்ரி. இரவிலும் பகலிலும் அவளது கனவுகளில் ஜெய், போலோ விளையாடிக் கொண்டிருந்தார். ஜெய்யைப் பற்றிப் பத்திரிகைகளில் எந்தச் செய்தி வந்தாலும் அது அவளைக் குதூகலமடைய வைத்தது. அவரது பெயர்மீது விரல்வைத்து ஆசையாக வருடிக் கொடுத்தாள். ஜெய் கழற்றிப் போட்ட ஒரு கையுறையிலிருந்து இரண்டு நூல்களை எடுத்து வைத்திருந்தாள். நூல்களைத் தனது கை பிரெஸ்லெட்டோடு சுற்றிக்கொண்டாள். அழகாகத் தெரிந்தது. ஜெய்யின் முதலிரண்டு மனைவிகள், குழந்தைகள் எதுவுமே காயத்ரிக்கு உறுத்தவில்லை. ‘நான் ஜெய்யைக் காதலிக்கிறேன்’ தனிமையில் சொல்லிப் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டாள். அப்போது அவளுக்கு வயது பதினான்கு.

ஒருநாள் இந்திரா, காயத்ரியை அழைத்துப் பேசினாள். ‘நீ வளர்ந்ததும் ஜெய் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறதா சொன்னார்.’ காயத்ரிக்குள் ஆனந்த தாண்டவம். இந்திரா தொடர்ந்தாள். ‘இந்த மாதிரி உளறலை நான் கேட்டதே இல்லை’ன்னு சொல்லிட்டேன்.

அம்மாவின் பதிலைவிட, ஜெய்யின் வார்த்தைகளே காயத்ரியின் மனத்துக்குள் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தன. பெரிய மகாராஜா, மிகப்பெரிய விளையாட்டு வீரர், மெனக்கிட்டு என்னைப்

பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறாரா? அவரும் என்னைக் காதலிக்கிறாரா? நினைக்கும்போதே இனித்தது.

அடுத்தடுத்த வருடங்களிலும் ஜெய், போலோ விளையாட கல்கத்தாவுக்கு வந்தார். ஆனால் காயத்ரியிடம் தன் காதலை நேரடியாகக் காட்டிக்கொள்ளவில்லை. சொல்லாத காதலிலும் சுகம் உணர்ந்தாள் அவள்.

1936. இந்திரா தன் பிள்ளைகளை மேற்படிப்புகளுக்காக லண்டன் அனுப்பத் திட்டமிட்டாள். அங்கு ஜெய்யைப் பார்க்க முடியுமா? எதிர்பார்ப்போடு காயத்ரி கிளம்பினாள். போலோ மேட்ச்களுக்காக ஜெய்யும் அடிக்கடி ஐரோப்பா வந்துபோய்க் கொண்டுதான் இருந்தார். 'ஹே, உங்க ஆளை ஒருநாள் டின்னருக்குக் கூப்பிடுடி!' காயத்ரியின் தோழிகள் நச்சரித்தார்கள். அவள் செய்யவில்லை. ஜெய்யும் சும்மா இல்லை. அவ்வப்போது அவளைச் சந்திக்க முயற்சி செய்தார். காயத்ரிக்கென நியமிக்கப்பட்டிருந்த பாதுகாவலர்கள் தலைவலியாக இருந்தார்கள்.

காயத்ரி, அங்கு தனது பாட்டி சிம்னா பாயுடன்தான் இருந்தாள். தனி மாளிகையில். அம்மாவை விட, பாட்டி படு கண்டிப்பு. ஆனால் காதல், தகிடுதத்தங்கள் செய்வதற்கான தைரியத்தைக் கொடுத்தது. அவ்வப்போது சந்தித்துக் கொண்டார்கள்.

எதிர்காலத்தைக் கணித்துச் சொல்லும் ஒரு பெண்ணைச் சந்தித்தாள் காயத்ரி. 'அங்குமிங்கும் பறந்துகொண்டே இருக்கும் ஓர் அழகிய இளைஞன்தான் உனக்குப் புருஷனாக வருவான்.' அந்த வார்த்தைகள் ஜெய்யின் சிரித்தமுகமாக அவள்முன் மலர்ந்தது.

மீண்டும் ஒருமுறை ஜெய்யைச் சந்திக்கும் வாய்ப்பு உருவானது. ஆனால் சகோதரிகள் உடன் இருந்தார்கள். 'நீ ஏதாவது என்னிடம் சொல்ல விரும்புகிறாயா?' கண்ணோடு கண்நோக்கிக் கேட்டார் ஜெய். காயத்ரியிடம் சொற்களில்லை. 'நான் பேச வேண்டும்' என்றபடியே அழைத்துச் சென்றார். கார் வளைந்து வளைந்து சென்றது. ஆனால் சுற்றிவளைக்காமல் நேராக விஷயத்துக்கு வந்தார் ஜெய். 'நீ வளர்ந்ததும் உன்னைத் திருமணம் செய்துகொள்வதாக உன் அம்மாவிடம் முன்பே சொல்லியிருந்தேன்.' வெட்கம், காயத்ரியின் முகத்தைத் தரையை நோக்கி இழுத்தது.

'உனக்குப் பதினாறு வயதுதான். உரிய சமயம் வரும்போது இந்தத் திருமணம் நடக்கவேண்டுமென நினைக்கிறேன். அதற்குமுன் உன் சம்மதத்தை அறிய விரும்புகிறேன்.'

'சம்மதம்' - சட்டென உதிர்த்தாள்.

'நிறையக் காலமிருக்கிறது. நன்றாக யோசித்துச் சொல் பெண்ணே. நான் அங்குமிங்கும் அலைந்து திரிபவன். போலோ விளையாடும்போதோ, விமானம் ஓட்டும்போதோ பெரிய விபத்துகளில் சிக்கிக்கொள்ளலாம்.'

'அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. உங்களைத் திருமணம் செய்துகொள்ளவே ஆசைப் படுகிறேன்.' அவளது வார்த்தைகளில் உறுதியிருந்தது. குறிப்பிட்ட இடைவெளிகளில் சந்திப்புகள் தொடர்ந்தன, ரகசியமாக. மற்ற நேரங்களில் கடிதங்கள் முத்தம் சுமந்தன. பணம் சேர்த்து ஜெய்க்கென மோதிரம் ஒன்றை வாங்கினார். மோதிரங்களைப் பறிமாறிக் கொண்டார்கள்.

தன் அம்மாவிடம் ஜெய் பற்றி ஜாடைமாடையாகப் பேசினாள். ‘மூன்றாவது மனைவியாக உன்னைக் கட்டிக்கொடுக்கமாட்டேன். நீ ஜெய்ப்பூரின் அந்தப்புரத்தில் அடைந்துகிடப்பதை நான் விரும்பவில்லை.’ அழுத்தமாகச் சொன்னாள். ஆனாலும் இந்திரா உடனிருந்தபோதும், காயத்ரி ஜெய்யைச் சந்தித்துக் கொண்டுதான் இருந்தாள்.

கேன்ஸ் கடற்கரை. ஜெய், காயத்ரி, அவள் சகோதரி மேனகா மூவருமிருந்தார்கள். குளிக்கப் போவதற்குமுன் ஜெய், காயத்ரி அணிவித்த மோதிரத்தைக் கழற்றி மேனகாவிடம் கொடுத்தார். காயத்ரியால் பொறுக்கமுடியவில்லை. கோபத்தில் ஜெய் தனக்கணிவித்த மோதிரத்தைக் கழற்றிக் கடலில் வீசினாள். அவளை அப்படியே தூக்கிக் கொண்டு சென்று கடலில் போட்டார் ஜெய். பின்பு சமாதானம் பேசினார். ‘எந்தவித எண்ணத்தோடயும் நான் அப்படி நடந்துக்கலை. மேனகா மனசு எவ்வளவு வருத்தப்படும்?’ காயத்ரி சமாதானமாக வெகுநேரம் பிடித்தது.

படிப்பு முடிந்தது. எங்கே இந்தியா சென்றால் அவளுக்கு யாரையாவது நிச்சயம் செய்துவிடு வார்களோ என ஜெய் பயந்தார். ஆகவே ‘வேலைக்குப் போகப்போகிறேன்’ என்று லண்டனில் பாட்டியுடனேயே பொழுதைப் போக்கினாள் குமாரி காயத்ரி. இதுவரை காயத்ரியின் அழகை வருணிக்கவேயில்லை. அதிக வார்த்தைகளைச் செலவழிக்கவேண்டாம். அவள், அந்தக்காலத்து ஐஸ்வர்யாராய்.

1939ல் இந்திரா, அவளை இந்தியாவுக்கு அழைத்துச் சென்றாள். கோடையில் காஷ்மீர் பயணம். ஜெய்யும் அங்கு வந்தார். ‘இப்போதைக்குத் திருமணம் பற்றிப் பேச நேரமில்லை. எப்போது வேண்டுமானாலும் போருக்கு அழைப்பார்கள்.’ ஜெய்யின் கரங்களைக் காயத்ரி அழுத்தமாகப் பிடித்துக் கொண்டாள்.

இரண்டாம் உலகப்போர் ஆரம்பமானது. இந்திராவின் குடும்பத்தினர் காஷ்மீரிலேயே இருந் தார்கள். ஒருநாள் மதியவேளையில் தந்தி ஒன்று வந்தது. படபடப்புடன் பிரித்துப் படித்தாள் காயத்ரி.

‘ஜெய் சென்ற விமானம் விபத்துக்குள்ளாகிவிட்டது. அவர் கவலைக்கிடமான நிலையில் இருக்கிறார்.’

இதயம் துடிதுடியெனத் துடித்து வெளியில் வந்து விழுந்துவிடும்போலிருந்தது அவளுக்கு.



# 174

# தேனிலவும் தேய்பிறையும்

‘ஜெய்யோடு நான் இருக்கவேண்டும். உடனே பம்பாய்க்குக் கிளம்பட்டுமா?’ - தன் தாயிடம் எந்தவிதத் தயக்கமுமின்றிக் கேட்டாள் காயத்ரி.

‘கல்யாணம் ஆகாத சின்னபெண்ணைத் தனியாக எங்கும் அனுப்பமுடியாது’ இந்திரா தீர்க்கமாக மறுத்தாள். குளுகுளு ஸ்ரீநகரில்கூட அன்று இரவுப்பொழுது காயத்ரிக்குத் தகித்தது. மறுநாள். இயக்கமின்றி உறைந்து உட்கார்ந்திருந்தாள். இன்னொரு தந்தி வந்து சேர்ந்தது. என்னவாக இருக்கும்? பிரித்துப் படிப்பதற்கே கைகள் நடுங்கின. ‘ஜெய்யின் உடல்நலம் மோசமாகத்தான் இருக்கிறது. ஆனால் அவர் ஆபத்தான கட்டத்திலிருந்து மீண்டுவிட்டார்.’

மூச்சுவிட்டாள் காயத்ரி. கண்களில் இருந்து நீர் கொட்டிக்கொண்டே இருந்தது. மகள் இருந்த நிலை, இந்திராவை நிறையவே யோசிக்க வைத்தது. தனது பழைய காதல் நிகழ்வுகள், பெற்றோரது எதிர்ப்பைமீறித் திருமணம் செய்துகொண்ட சாக சங்கள் எல்லாம் நினைவுக்கு வந்தன. இதற்கு மேலும் மகளைக் கட்டுப்படுத்த முடியாது என்றுணர்ந்த இந்திரா, ‘வா, கிளம்பலாம்’ என்றாள். காயத்ரி, தாயைக் கட்டியணைத்துக் கொண்டாள். காதலர்கள் சந்தித்துக் கொண்ட பொழுதில் அவர்களுக்கு இதயத்துடிப்பு சீரானது.

உடல் நலம்பெற்ற ஜெய்க்கும் இந்திராவுக்கும் நடந்த பேச்சுவார்த்தையில் முன்னேற்றம். திருமணம் நிச்சயமானது. ஜோதிடர்கள் நாள் பார்த்தார்கள். 1940, ஏப்ரல் 17. அப்போது மூன்றாவது திருமணம் செய்யவிருந்த மாப்பிள்ளை



ராம்பாக் அரண்மனையில் மகாராணி காயத்ரி தேவி

ஜெய்க்கு வயது 29. மணப்பெண் காயத்ரிக்கு 20. 'ஏற்கெனவே ஜெய்ப்பூர் அந்தப்புரம் ஒரு நர்சரி ஸ்கூல் மாதிரிதான் இருக்குது. நீ அதுல புது அட்மிஷன்' சிரித்தாள் இந்திரா.

காயத்ரிக்கு கல்யாணக் கனவுகளோடு காய்ச்சலும் சேர்ந்துகொண்டது. கடுமையான தொண்டைவலி. டாக்டர்கள் வந்துபார்த்துவிட்டு, 'இது டிப்தீரியா. இரண்டு மாதங்கள் ஓய்வு அவசியம்' என்று மிரட்டிவிட்டுப் போனார்கள். ஒருமாத அவகாசம்கூட இல்லாத நிலையில் திருமணத்தைத் தள்ளிவைக்க முடியுமா? இந்திரா யோசித்தாள். அது பிரச்னைகளுக்கு வழிவகுத்து திருமணத்தில் தடங்கல் ஏற்படுத்திவிட்டால்? காயத்ரி பயந்தாள். நம்பிக்கையோடு ஓய்வெடுத்து உடல்நிலை தேறினாள்.

இந்திராவின் தடபுடலான ஆடம்பர நினைப்புகளுக்குத் தடையாக இருந்தது இரண்டாம் உலகப்போர். கூச் பிகாரில் திருமண ஏற்பாடுகளைச் செய்வதற்கு நிறையவே மெனக்கிட வேண்டியதிருந்தது. எல்லாமே தட்டுப்பாட்டிலும் கட்டுப்பாட்டிலும் இருந்தன. ரயில்கள் எல்லாம் போர் சேவையில் இருந்ததால் சில மகாராஜாக்களால் வர இயலவில்லை. 'நீங்கள் உங்கள் குடும்பத்தோடு செல்லுங்கள். இத்தனை வேலைக்காரர்களையெல்லாம் அழைத்துச் செல்லக்கூடாது. ரயிலில் இடமில்லை' என்று ரயில்வே அதிகாரிகள் தடுத்ததால், சில மகா ராஜாக்கள் வரவில்லை. பலர் போர்முனைக்குச் சென்றிருந்தார்கள். ஆக, கூச் பிகார் ராஜ விருந்தினர்களால் திணறவில்லை.

காயத்ரியின் முகம் மஞ்சளாக மலர்ந்தது. தோழிகளின் விரல்கள் அவளது உடலில் வாசனைத் திரவியங்களைத் தோய்த்துக் கொண்டிருந்தன. தங்க இழைகளால் அலங்கரிக்கப்பட்ட கருஞ் சிவப்பு பனாரஸ் பட்டுச்சேலை காத்திருந்தது. வெளியே கூச்-பிகார் படையினர் பத்தொன்பது முறை துப்பாக்கியை ஒலிக்கும் சத்தம். ஜெய் வந்துவிட்டார். அவளது முகத்தில் பிரகாசம்.

எது எது எப்படி எப்படியெல்லாம் நடக்கவேண்டுமென இந்திரா, ஒத்திகை எல்லாம் பார்த்து வைத்திருந்தாள். எல்லாம் நன்றாகவே நடந்தன. ஷெனாய், மங்கள இசையைக் காற்றில் பரப்ப, மாப்பிள்ளை யானையிலிருந்து கீழிறங்கினார். வெள்ளிப் பல்லக்கில் வந்தாள் மணப் பெண். மந்திரங்கள், சடங்குகள், சம்பிரதாயங்கள், வாழ்த்தொலிகள்.

பிறந்தவீட்டிலிருந்து கிளம்பும்போது காயத்ரிக்குப் பேரழுகை எல்லாம் வரவில்லை. லேசாகக் கண்கசிந்தாள். அவளைத் தூக்கி வளர்த்த பணிப்பெண்களும் கூடவே வளர்ந்த தோழிகளும்தான் தேம்பினர். தேனிலவுக்கு சிலோனுக்குப் போவதாகத் திட்டம். போர் தலைவலி. 'ஊட்டிக்கே போய்விடலாம்' என்றார் ஜெய். ஜோத்பூரின் மாளிகை அங்கிருந்தது. ஜெய்யின் முதல் இரண்டு மனைவிகளும் ஜோத்பூர் ராஜ குடும்பத்தைச் சார்ந்தவர்கள்தானே. அந்த மாளிகையில் தனது மூன்றாவது மனைவியோடு தேனிலவை ருசித்தார் ஜெய்.

பெங்களூரில் போலா மேட்ச். அவரது இரண்டாவது மனைவி கிஷோர் கன்வார், குழந்தை களோடு பெங்களூரு வந்திருந்தாள். ஜெய், காயத்ரிக்கு டாட்டா காட்டிவிட்டு விளையாடப் போனார், பெங்களூருக்கு. சில நாள்களிலேயே ஊட்டிக்குத் தந்தி வந்தது. 'டார்லிங், உன்னைப் பார்க்கவேண்டும் போலுள்ளது. உடனே கிளம்பி வா!' காயத்ரிக்குள் பெருகிய உற்சாகத்தை கேள்வி ஒன்று முளைத்து வடிய வைத்தது. 'பெங்களூரில் ஜெய்யின் இரண்டாவது மனைவியை எப்படி எதிர்கொள்ளப்போகிறேன்?'

பெங்களூருவில் ஜெய்யைப் பார்த்த பிறகும் காயத்ரியால் இயல்பாக இருக்க முடியவில்லை. தனது 'அக்கா'வைச் சந்திக்கப்போகும் நிமிடம் குறித்த பயம். அக்கா, தன்னைத் தங்கையாகப் பாவிக்காமல் சக களத்தியாகப் பார்த்துவிட்டால்? அந்தச் சந்திப்பு இதமானதாக அமைந்தது. இரண்டுக்கும் மூன்றுக்கும் ஒத்துப்போனதில் ஜெய்க்குப் பரம சந்தோஷம். 'ஜோ அக்கா' என்று கிஷோரைச் செல்லப் பெயர் வைத்துக்கூப்பிடும் அளவுக்கு காயத்ரி நெருக்கமானாள்.

மகாராணியாக ஜெய்ப்பூரின் ராம்பாக் அரண்மனைக்குள் நுழைந்தாள் காயத்ரி. முதல் 'அக்கா' மருதர் கன்வாரிடம் ஆசிர்வாதம் பெற்றுக்கொண்டாள். ஒன்றாம், இரண்டாம் மகாராணி களுக்குத் தனித்தனி அறைகள், பிரத்யேகப் பணியாளர்கள். காயத்ரி, ஜெய் உடனேயே இருந்துகொண்டாள். 'அரண்மனைக்குள் எங்கு வேண்டுமானாலும் சுதந்தரமாகச் சுற்றிக்கொள். அரண்மனைக்கு வெளியே துணையில்லாமல் போகாதே. எங்கு எப்படி நடக்க வேண்டும், உடுத்த வேண்டும் என்பதை எல்லாம் நான் சொல்லித் தருகிறேன். அதன்படி நடந்துகொள்' பெரியக்காவின் கட்டளை. காயத்ரி கேட்டுக்கொண்டாள்.

ஜெய்யை உலகப்போர் கடமைகள் அழைத்தன. ஜெய்ப்பூர் படைகளோடு மத்திய தரைக்கடல் பகுதிக்குச் சென்றார். அவர் இல்லாத சமயங்களில் ஜோ அக்காதான் காயத்ரியின் உற்ற தோழி. 'அவர் ஒருநாள் திடீரென எனக்கு பார்ட்டி கொடுத்தார். எதற்கு என்று கேட்டேன். 'காயத்ரியைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறேன்' என்று சிரித்தபடியே சொன்னார்' - ஜோ அக்கா சொல்லவும் காயத்ரிக்கு கொஞ்சம் அதிர்ச்சிதான்.

புகுந்த (அரண்)மனையில் அவளுக்குச் சந்தோஷங்களுக்குக் குறைவில்லை. ஜெய், காயத்ரியை அந்தப்புரத்துக்குள் கட்டுப்படுத்தவில்லை. பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள அனுமதித்தார். மகாராணி காயத்ரி தேவி என்ற பெயரில் பள்ளிக்கூடம் ஒன்றையும் ஜெய்ப்பூரில் ஆரம்பித்தார். தங்கள் மகாராஜா மீது ஜெய்ப்பூர் மக்கள் வைத்திருந்த மதிப்பு, காயத்ரிக்குப் பெருமிதம் கொடுத்தது. ஜெய்யின் எளிமையும் அவளை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

தினமும் காலையில் ஜெய் போலோ விளையாடுவதைப் பார்க்க சில சிறுவர்கள் மைதானத்துக்கு வருவார்கள். விளையாடி முடித்தபின் சிறுவர்களைத் தன் காரிலேயே ஏற்றிக்கொண்டு சென்று பள்ளியில் விடுவார். என்றாவது ஜெய் விளையாட வராமல் போக, அதற்கடுத்த நாளில் சிறுவர்கள் உரிமையோடு கோபித்துக்கொள்வதும், ஜெய் அவர்களிடம் மன்னிப்புக் கேட்பதும் சகஜம்.

ஒருநாள் ஜெய்யும் காயத்ரியும் அவர்களது செல்ல நாயுடன் நகருக்குள் சென்று கொண்டிருந் தார்கள். சாலையில் குரங்கு ஒன்று குழந்தை ஒன்றைத் தாக்கிக் கொண்டிருந்தது. காரிலிருந்து பாய்ந்த நாய், குரங்கைத் துரத்திவிட்டது. காயத்தோடு இருந்த குழந்தையைத் தூக்கி, காயத்ரி யிடம் கொடுத்தார் ஜெய். கார் மருத்துவமனைக்கு விரைந்தது. இருவரும் காத்திருந்து குழந்தைக்கு சிகிச்சை எல்லாம் கொடுத்தபின், அதை அழைத்துக்கொண்டு சென்று வீட்டில் விட்டார்கள். இருவரும் மக்களோடு நெருங்கியவர்களாகத் திகழ்ந்தார்கள். ஆனால் ஒவ்வொன்றாக அவர்களைவிட்டு விலகிப்போகும் சூழ்நிலை வந்தது.

சுதந்தரம். அறிவிப்பு வெளியான தினத்தில் சொந்தவேலை காரணமாக ஜெய், லண்டனுக்குச் சென்றிருந்தார். 'சுதந்தரம் நமது தோள்களில் பெரிய பொறுப்பை ஏற்றியுள்ளது. அதை



இரண்டாம் உலகப் போரில் மகாராஜா ஜெய் சிங்

உணர்ந்து ஜெய்ப்பூர் மக்களாகிய நாம் இணைந்து செயல்படுவோம். சுதந்தர நாடுகளில் இந்தியாவையும் உயரத்துக்குக் கொண்டு செல்வோம்' - ஜெய், அங்கிருந்தபடியே ஜெய்ப்பூர் மக்களுக்கான தனது வாழ்த்துச் செய்தியை வெளியிட்டார்.

துண்டு துண்டாகக் கிடந்தால் அது தேசமா? ஒன்றிணைந்தால்தானே வலிமை. ஆள்வதற்கும் வசதி. தேசிய பாதுகாப்பு, வளர்ச்சி, வெளியுறவுக் கொள்கை இப்படி யோசித்துப் பார்த்தால் மத்தியில் அதிகாரம் இருப்பதுதான் சரியான முறை. சிறிய, பெரிய ராஜ்ஜியங்களால் தொந்தரவுதான். பிரதேசங்களைப் பொருத்து சமஸ்தானங்களை எல்லாம் இணைத்து மாநிலங் களாக்குவதே சரிப்படும். வல்லபபாய் படேல் 'இந்தியாவைக் கட்டும்' பணியில் மும்முரமாகக் களமிறங்கியிருந்தார்.

சிறிய சமஸ்தானம் என்றால் அதன் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கு, மானியம். பெரிய சமஸ்தானம் என்றால் எட்டில் ஒரு பங்கு. பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டிருந்தன. ஜெய், ஆகஸ்ட் 12லேயே இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டுத்தான் லண்டனுக்குப் போயிருந்தார். இந்தியாவுடன் இணைந்தாலும் ஜெய்ப்பூரின் ஆட்சி அதிகாரம் தன் கையைவிட்டுப் போகாது என்ற நம்பிக்கை. ஆண்டு இறுதியில் ஜெய்ப்பூரின் மகாராஜாவாக 'வெள்ளி விழா' கொண்டாடவும் செய்தார்.

பிரிவினை நாள்கள். அப்போதைய ஜெய்ப்பூரில் மூன்றில் ஒரு பங்கு இஸ்லாமியர்கள். 'யாரும் ஜெய்ப்பூரை விட்டுச் செல்ல வேண்டாம். உரிய பாதுகாப்பு நான் கொடுப்பேன்' என்று

சொன்னதோடு மட்டுமல்லாமல் இரவு நேரங்களில் பிரச்னைக்குரிய பகுதிகளில் தனது வீரர்களோடு வலம்வந்து காவல் காத்தார். ஜெய்ப்பூரில் வந்து தஞ்சமடைந்த புதியவர்கள் தங்குவதற்குரிய ஏற்பாடுகளையும் செய்தார். இத்தனைப் பிரச்னைகளுக்கிடையில் ஜெய்யின் ஒரே மகளான மிக்கிக்கு திருமண ஏற்பாடுகள் ஆகியிருந்தன. பாரியாவின் (Baria) இளவரசர்தான் மாப்பிள்ளை. ‘உலகின் மிக ஆடம்பரமான திருமணம்’ என்று அப்போது கின்னஸ் புத்தகம் அதைப் பதிந்துகொண்டது.

ராஜஸ்தான், புதிய மாநிலமாக உருவானது. ஜெய்ப்பூர் இனி சமஸ்தானம் கிடையாது. அது ராஜஸ்தானின் தலைநகரம் என்று அறிவிக்கப்பட்டது. ஜெய்யால் அதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. வேறுவழியுமில்லை. மகாராஜா என்பதெல்லாம் பழைய நினைப்பில் மற்றவர்கள் உதடுகள் உச்சரிக்கும் சொல்தான். அரசாங்கம் கொடுத்த பட்டம், ‘ராஜ்பிரமுக்.’ ஜெய்க்குச் சின்னதாக ஓர் ஆறுதல். ராஜஸ்தான் மாநில கவர்னர் பதவி கிடைத்தது. காயத்ரியும் தன் பங்குக்கு ‘நல்ல செய்தி’ ஒன்றைச் சொன்னாள்.

ஏற்கெனவே இருமுறை கரு கலைந்திருந்ததால் அந்தமுறை வெகு ஜாக்கிரதையாக இருந்தார்கள். பையன் பிறந்தான். ஜெகத் சிங் (Jagat Singh). ஜெய்ப்பூர் நகரத்துக்கு அன்று விடுமுறை. 1952. முதல் பொதுத்தேர்தல். ‘ஜெய் களமிறங்குவார்’ என்ற செய்திகளுக்கெல்லாம் அவர் இடம் கொடுக்கவில்லை. களத்தில் கலக்கிய சக ராஜபுத்திரரான ஜோத்பூர் மகாராஜா ஹன்வந்த் சிங்குக்கு ஆதரவுக்குரல் கொடுப்பார் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் ஜெய் அமைதியாக மட்டும் இருந்தார்.

1956ன் அக்டோபரில் மத்திய அரசிடமிருந்து அடுத்த கெட்ட செய்தி வந்தது. ‘ராஜ்பிரமுக் பதவி என்பது நீக்கப்படுகிறது.’ தன் ஆயுள்காலம்வரை அந்தப் பதவியாவது நிலைத்திருக்கும் என்று நம்பிய ஜெய், உடைந்துதான் போனார். ‘இனி அநாவசியச் செலவுகளைக் குறைத்துக் கொள்ளவேண்டும்.’ காயத்ரியிடம் சொன்னார். முதல் காரியமாக சொந்த விமானத்தை விற்றார். அத்தனை நாள் ஆண்டு அனுபவித்த ராம்பாக் அரண்மனையும் அப்போது சுமையாகத் தான் தெரிந்தது.

‘இனி இவ்வளவு பெரிய அரண்மனை நமக்குத் தேவைதானா? இதைப் பராமரிக்க ஆகும் செலவை நினைத்துப் பார்க்க முடியவில்லை. ராம்பாக்கை ஹோட்டலாக மாற்றி விடலாமா?’



# 175

# பூஜ்ஜியம்!

சொகுசு ஹோட்டலாக மாறிய முதல் அரண்மனை ஜெய்ப்பூரின் ராம்பாக்தான். மகாராணி காயத்ரி தேவியும் மற்றவர்களும் எவ்வளவோ கெஞ்சியும் மகாராஜா ஜெய் தன்னுடைய முடிவை மாற்றிக் கொள்ளவில்லை. இரண்டாவது மகாராணியான கிஷோர் கன்வார் இதனால் நொடிந்துபோனாள். 1958ன் கோடைக் காலம். திடீரென நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் விழுந்தாள். டெல்லிக்குச் சென்று சிகிச்சை எடுக்கலாம் என்று எல்லோரும் வலிய அழைத்தார்கள்.

'என் புகுந்த வீட்டைவிட்டு நான் வரமாட்டேன்' - உறுதியாக மறுத்துவிட்டாள். உயிர் அவளைவிட்டுச் சென்றது. ராம்பாக்கை காலி செய்துவிட்டு வெளியேறும் தினத்தில் காயத்ரியால் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. 'பழைய உரிமைகளுடன் இங்கு அடிக்கடி வந்துசெல்வதோ, இங்குள்ள சுகங்களை அனுபவிப்பதோ கூடாது. ஹோட்டலில் தங்க வரும் வாடிக்கையாளர்களுக்கே அனைத்து உரிமைகளும்.' ஜெய் கறாராகக் கட்டளையிட்டிருந்தார்.

அருகிலிருந்த விருந்தினர் மாளிகையைப் புதுப்பித்து, 'ராஜ்மஹால்' என்று பெயரிட்டுக் குடியேறினர். அரண்மனையில் வேலையிழந்த தன் பணியாளர்களின் பணிக்காலத்தைப் பொருத்து நிலமோ, பணமோ வழங்கிக் கைகொடுத்தார் ஜெய். அரண்மனையில் இருந்த பழைய பொருள்கள், ஏலத்தில் விடப்பட்டுக் கொண்டிருந்தன. சில அரிய பொருள்களை இழக்க காயத்ரிக்கு மனமில்லை. அவற்றை மட்டும் தன்னுடன் வைத்துக்கொண்டாள். அரண்மனை வளாகத்தி லேயே அருங்காட்சியகம் ஒன்று எழுந்தது, பொருள்களோடும் நினைவுகளோடும்.




ஜெய், எந்தக் கட்சியிலும் இணையக்கூடாது என்பதில் தெளிவாக இருந்தார். ஆனால் 'காயத்ரி காங்கிரஸில் இணைந்துவிட்டார்' என்ற கிசுகிசு பலகாலமாகவே வலம் வந்துகொண்டிருந்தது. அழைப்பு வந்ததென்னவோ உண்மைதான். ஆனால் காயத்ரி காங்கிரஸில் இணையவில்லை. அதற்கு எதிர்க்கட்சியாக, ராஜாஜியின் தலைமையில் உருவான சுதந்தரா கட்சியில் இணைந்தார் (1960). காரணம்? வலுவான எதிர்க்கட்சி ஏதுமின்றி காங்கிரஸ் அதுவரை செலுத்தி வந்த அதிகாரம் பல மட்டங்களில் அதிருப்தியை உருவாக்கியிருந்தது. ராஜஸ்தான் காங்கிரஸார், முன்னாள் ராஜ ஆட்சியாளர்களுக்கு மதிப்பு கொடுக்காமல் எடுத்திருந்த சில நடவடிக்கைகள் காயத்ரியைக் களமிறங்க வைத்தன.

'அரசியலில் இறங்கி பதவிக்கு வர நினைக்கிற ராஜகுடும்பத்தினருக்கு மன்னர் மானியத் தொகை கிடையாது' என்று சட்டசபையில் திருவாய் மலர்ந்தார் ராஜஸ்தான் காங்கிரஸ் முதல்வர் மோகன்லால் சுகாடியா (Mohanlal Sukhadia). 'அப்படியென்றால் காங்கிரஸில் இருக்கும் மன்னர்களுக்கு?' என்று எதிர்க்கேள்வி எழ, சுகாடியா வாய்பொத்திக் கொண்டார். தங்களுக்குக் கிடைக்கும் மானியத் தொகைக்கு எதுவும் ஆபத்து வந்துவிடக்கூடாது என்றே பல மகாராஜாக்கள், இளவரசர்கள் காங்கிரஸில் அடைக்கலம் புகுந்திருந்தனர். ஆனால் எதிர்க் கட்சிகளில் இருந்த ராஜகுடும்பத்தினருடைய 'மக்கள் செல்வாக்கை' காலிபண்ணும் வேலையைக் காங்கிரஸ் தொடர்ந்தது.

1962 தேர்தல். ராஜாஜி, ஜெய்ப்பூர் நாடாளுமன்றத் தொகுதிக்கு வேட்பாளராகக் காயத்ரியை அறிவித்தார். ராஜ குடும்பத்தினருக்கு ஜெய்ப்பூர் மக்களிடையே இருந்த செல்வாக்கு அவரை



காயத்ரி தேவியின் புலி வேட்டை

வேட்பாளராக நிறுத்தியிருந்தது. ஜெய்யும் சம்மதித்திருந்தார். மொத்தம் ஐந்து நாடாளுமன்றத் தொகுதிகள், நாற்பது சட்டசபைத் தொகுதிகளுக்கான வேட்பாளர்களைத் தேர்வு செய்யும் பொறுப்பையும் ஜெய், காயத்ரியிடம் ஒப்படைத்தார் ராஜாஜி. வேட்பாளர் நேர்காணல், இறுதிப்பட்டியல் அறிவிப்பு எல்லாம் ராஜ்மஹாலில்தான் நடந்தது.

ஜெய்யும் காயத்ரியும் ஜீப்பில் ஏறினார்கள். ஆண்டு அனுபவித்த பகுதியல்லவா. ஜெய்க்கு கிராமங்கள், பட்டிதொட்டிகள் எல்லாமே பரிச்சயமானவைதான். வீடுதேடி ஓட்டுக் கேட்க வந்த காயத்ரியை மனதாரக் கொண்டாடினார்கள் மக்கள். 'மகாராணி நீடுழி வாழ்க!', 'எங்கள் ஓட்டு நட்சத்திரத்துக்கே!' கோஷங்கள் ஓயவில்லை.

'நான் உங்கள் மகாராஜாவின் மனைவி என்பதால் என்னை ஆதரிக்கிறீர்களா?' காயத்ரி மக்களிடம் நேரடியாகவே கேட்டார். பாதிக்கூட்டம் 'ஆம்' என்றது. 'இல்லை, நீங்கள் எங்களுக்கு ஏற்கெனவே நிறையச் செய்திருக்கிறீர்கள். இனியும் செய்வீர்கள்' என்றது மீதிக்கூட்டம். பிரசாரத்தின் இறுதிநாள். ஜெய்ப்பூரில் காங்கிரஸ், ஜனசங்கம், சுதந்தரா - மூன்று கட்சிகளும் ஒரே நேரத்தில் பொதுக்கூட்டம் போட்டன. ஜெய் பேச்சைக் கேட்க திரண்ட சுமார் இரண்டு லட்சம் ஜனங்களைக் கண்டு எதிர்க்கட்சிகளுக்கு மூச்சடைத்தது.

தேர்தலில் ஜெய்ப்பூர் தொகுதியில் பதிவான ஓட்டுகள் 1,92,909. அதில் காயத்ரி வாங்கிய ஓட்டுகள் 1,57,692. கின்னஸ் புத்தகம் புதிய சாதனையைப் பதிவு செய்துகொண்டது. வெற்றி ஊர்வலத்தில் ஜெய்க்கும் காயத்ரிக்கும் பழைய சந்தோஷங்களை எல்லாம் திரும்பப்பெற்றது

போன்ற உணர்வு. ஜெய்க்கு, சுதந்தரா கட்சி சார்பில் ராஜ்யசபா உறுப்பினர் பதவி வழங்கப் பட்டது.

காயத்ரி பொதுவாழ்க்கையில் பரபரப்பானார். டெல்லிக்கும் ஜெய்ப்பூருக்கும் இடையில் அவரது வாழ்க்கை ஓடியது. நேரு இறந்துபோக, லால் பகதூர் சாஸ்திரி பிரதமராகியிருந்தார். ஜெய்க்குப் புதிய பொறுப்பு கிடைத்தது. ஸ்பெயின் நாட்டின் இந்திய தூதுவர். மேட்ரிடுக்கும் ஜெய்ப்பூருக்கும் இடையில் ஜெய்யின் வாழ்க்கை நகர்ந்தது. சாஸ்திரியும் இறந்துபோக, இந்திரா காந்தி பிரதமராகியிருந்தார். காங்கிரஸ் 1967 தேர்தலை இந்திரா காந்தியின் தலைமை யில் சந்திக்கத் தயாராக இருந்தது.

அந்தமுறையும் ஜெய்ப்பூரின் நாடாளுமன்ற வேட்பாளராக காயத்ரி களமிறங்கினார். ஜன சங்கத்தோடு கூட்டணி வைத்திருந்த சுதந்தரா கட்சி, சட்டசபைத் தொகுதிக்காக ராஜஸ்தானின் உள்துறை அமைச்சருக்கு எதிராகவும் காயத்ரியைக் களமிறக்கியது. சென்றமுறை போல சாதனை வெற்றி இல்லையென்றாலும் காயத்ரிக்கு நாடாளுமன்றம் கைகொடுத்தது. சட்ட சபை கைவிட்டது.

ஆறு மாநிலங்களில் காங்கிரஸ் தோல்வியைச் சந்தித்திருந்தது. ராஜஸ்தானில் பெரும்பான்மை கிடைக்கவில்லை. (மொத்தம் 184, காங். 89, எதிர் 95). காங்கிரஸ் ஆட்சியைப் பிடிக்க சித்து வேலைகளை ஆரம்பித்தது. காயத்ரியின் தலைமையில் அதற்கு எதிரான போராட்டங்கள் வெடித்தன. கலவரம், கண்ணீர்ப்புகை, ஊரடங்கு உத்தரவு. ஜெய்ப்பூர் முடங்கிப்போனது. காயத்ரியின் முயற்சிகள் வெற்றிபெறவில்லை. காங்கிரஸ் மீண்டும் ஜெய்ப்பூரை வசமாக்கியது.

1968ல் காயத்ரியின் தாய், கூச் பிகார் மகாராணி இந்திரா இறந்துபோனாள். தொடர்ந்து காயத்ரியின் அண்ணன் ஜெகத்திபேந்திராவும் மறைந்தார். அரசியல் வாழ்க்கையால் ஜெய்யோடு சேர்ந்து இருக்கும் நாள்களே குறைந்துபோயின. 1970, ஜூன் 24. ஜெய், இங்கிலாந்தின் சிர்ரென்செஸ்டரில் (Cirencester) போலோ விளையாடிக் கொண்டிருந்தார். காயத்ரி, மைதானத்துக்கு அருகில் காரிலிருந்தபடியே விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

குதிரையிலிருந்து ஜெய் கீழே விழுந்ததுபோலத் தெரிந்தது. மற்ற வீரர்கள் கூடினார்கள். பதறி, காரிலிருந்து இறங்கி ஓடினார் காயத்ரி. பேச்சு மூச்சின்றிக் கிடந்தார் ஜெய். மருத்துவமனைக்குத் தூக்கிச் சென்றார்கள். உயிர் பிரிந்திருந்தது. தான் மிகவும் விரும்பிய போலோ மைதானத்திலேயே உயிரைவிட்ட மகாராஜா ஜெய்யின் இறுதிச் சடங்குகள் ஜெய்ப்பூரில் நடந்தன.

இந்திரா காந்தி அரசு, மன்னர் மானிய ஒழிப்பில் தீவிரம் காட்டியது. அப்போது அதிகபட்ச ஆண்டு மானியமாக வரிவிலக்கோடு ரூ. 26,00,000 பெற்றவர் மைசூர் மகாராஜா ஜெய சாம ராஜேந்திர உடையார். குறைந்தபட்சமாக சௌராஷ்டிராவிலிருந்த குட்டி சமஸ்தானமான கட்டோடியாவின் (Katodia) ராஜா ரூ. 192 பெற்றுக் கொண்டிருந்தார். எதற்கு அநாவசியச் செலவு என்று இந்திரா காந்தி, மன்னர் மானிய ஒழிப்புத் தீர்மானத்தை அந்த செப்டெம்பரில் பாராளுமன்றத்தில் கொண்டுவந்தார். கீழவையில் நிறைவேறியது. ஆனால் மேலவையில் ஒரு வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது.

‘மானியத்தை மட்டும் ஒழித்தால் போதாது. மன்னர்களின் பின் ஒட்டிக்கொண்டிருக்கும் வெற்றுப்பட்டங்களையும் ஒழிக்கவேண்டும்.’ இந்திரா காந்தி, அவசரச் சட்டம் ஒன்றை

நிறைவேற்ற முடிவுசெய்தார். ஹைதராபாத்தில் சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்த அப்போதைய ஜனாதிபதி வி.வி. கிரி, இந்திராவின் விருப்பத்துக்கேற்ப அரசாணையில் கையொப்பமிட்டார். மன்னர்கள் தரப்பில் நீதிமன்றத்துக்குச் சென்றார்கள். தீர்ப்பு மன்னர்களுக்குச் சாதகமாக அமைந்தது. 'இந்தச் சட்டம் செல்லாது.'

இந்திராவின் அடுத்த காய் நகர்த்தலை யாருமே எதிர்பார்க்கவில்லை. ஆட்சியைக் கலைத்து விட்டுத் தேர்தலை அறிவித்தார் (1971). பங்களாதேஷ் போரில் கிடைத்த வெற்றியினால் இந்திரா வுக்கு அந்தத் தேர்தலில் பூரண ஜெயம். மீண்டும் பிரதமரானார். அந்தத் தேர்தலிலும் ஜெய்ப்பூர் நாடாளுமன்றத் தொகுதியைக் காங்கிரஸால் கைப்பற்ற முடியவில்லை. காயத்ரிக்கே மூன்றாவது வெற்றி.

இந்திய அரசியலமைப்பின் இருபத்தாறாவது சட்டதிருத்தத்தைக் கொண்டு வந்தார் இந்திரா காந்தி. அது மன்னர் மானிய ஒழிப்பு. தீர்மானம் இரு அவைகளிலும் நிறைவேறியது. 1971, டிசம்பரில் அது சட்டமாகியது. மன்னர்களின் பட்டங்களும் பறிக்கப்பட்டன. 'நாங்கள் மன்னர்களில் ஆடம்பரத்தைப் பறித்துவிட்டோம். ஆனால் அவர்கள் மனிதர்களாக வாழ வாய்ப்பு கொடுத்திருக்கிறோம்' இந்திரா காந்தி சொன்னார்.

'சுதந்தரத்தின்போது இந்தியாவைக் கட்டமைக்கும் சக சிற்பிகள் என்று சொன்னீர்கள். இப்போது ஏதுமில்லாதவர்களாக்கி விட்டீர்கள்' - பரோடா மகாராஜா பஃதேசிங் புலம்பினார். 'எங்களைத் தீண்டத்தகாதவர்களாக்கி விட்டீர்கள்' கதறினார் ஜோத்பூர் மகாராஜா கஜ்சிங்.

மன்னர் மானிய ஒழிப்புக்குப் பின்னும் இந்திரா காந்தி, எதிர்க்கட்சிகளிலிருந்த ராஜ பரம் பரையினரை விட்டுவைக்கவில்லை. வருமான வரி சோதனை முதல் பல விஷயங்களில் துன்பத்துக்கு ஆளானார் காயத்ரி. 1975ல் அவசரநிலை பிரகடனம். நாடாளுமன்றத்தின் மழைக்காலக் கூட்டத்தொடருக்குச் சென்ற காயத்ரிக்கு அதிர்ச்சி. அவையில் காங்கிரஸார் மட்டும் இருந்தார்கள். அன்று மதியமே காயத்ரி கைது செய்யப்பட்டு திகார் சிறையில் அடைக்கப்பட்டார். உள்ளே இன்னொரு மகாராணி 'ஹாய்' சொன்னார், குவாலியரின் விஜய ராஜே சிந்தியா.

கொசுக்கடி, எலித்தொல்லை, இருள் அறை இன்னல்கள். ஆறுமாத சிறைவாசத்துக்குப் பிறகு வெளியே வந்த காயத்ரி, தீவிர அரசியலிலிருந்து விலகிக்கொண்டார். ஜெய்ப்பூரின் ராஜமாதாவாக மக்கள் அபிமானத்தோடு வாழ்ந்த அவர் 2009 ஜூலை 29ல் இறந்து போனார்.

வருடம் 192 ரூபாய் மானியமாகப் பெற்றுவந்த கட்டோடியா ராஜா, அதையும் இழந்தபின் சோற்றுக்கு என்ன செய்தார்? ஓர் அலுவலகத்தில் குமாஸ்தாவாக வேலைக்குச் சேர்ந்திருந்தார். ராஜா, தனது ஓட்டை சைக்கிளில் அலுவலகத்துக்குச் செல்லும்போது யாரும் அவருக்கு வணக்கம் வைக்கவில்லை.



